ஸ்ரீ

# திருக்குறள்

## அறத்துப்பால்

## மூலமும்

## பரிமேலழகருரையும்

கும்பகோணம் கவர்ன்மெண்ட்காலேஜ்

தமிழ்ப்பண்டிதராயிருந்து

காலஞ்சென்ற

வை. மு. சடகோபராமாநுஜாசார்ய

ஸ்வாமிகள்

இயற்றிய




குறிப்புரையுடன்

வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யரால்

பார்வையிடப்பெற்று




ஆர். ஜி. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

1937

விலை. 1 - 8 - 0.

# பொருளடக்கம்.

வை. மு. சடகோபராமாநுஜாசார்யர்.

# முகவுரை.

தமிழ்மொழி சிறப்புற்றதாக மதிக்கப்படுவதற்குரிய பல காரணங்களுள் திருக்குறளைப்பெற்றிருப்பதென்பது முதன்மையான காரண மெனின், அது மிகையாகாது. இதன் சிறப்பினைக் கருதியே, இது, பலமொழிகளிலும் உருப் பெயர்க்கப்பட்டுப் பலராலும் அவாவோடு கற்கப்பட்டுவருகின்றது.

ஆயினும், மூலத்தைப் படித்த மாத்திரத்திலேயே எங்கும் இந்நூல் எளிதிற் பொருள் விளங்குவதன்று. ஆகவே, இதற்கு உரை இன்றியமையாததாகும். இந்நூற்குப் பழமையாகவே பல உரைகள் இருக்கின்றன என்று ஏற்படினும், பரிமேலழகருரையும் மணக்குடியருரையுமே அச்சாகி வெளிவந்திருக்கின்றன. மற்றைய உரைகள் இப்போது கிடைப்பதும் அரியன.

வெளிவந்துள்ள இருவுரைகளுள்ளும் பரிமேலழகருரையே யாவராலும் பாராட்டப்படுகின்றது. அவ்வுரை, நூலாசிரியருடைய கருத்துக்கு ஏற்பப் பதப்பொருளை விளக்குவதோடு பல இடங்கட்கும் விசேடமான பதசாரம் இன்றியமையா இலக்கணக்குறிப்பு அணி வேறுவகையானபொருள் பிறவாறுஉரைகூறுவதில்நேர்படும்மாறுபாடு முதலிய பலவிஷயங்களையும் கொண்டது: அவ்வுரையைப் படித்தறிவோர் பலவிஷயங்களையு முணர்ந்த புலவராவ ரென்பது, திண்ணம்.

ஆயினும், படிக்கின்ற நிலையிலிருப்பவர்க்கு அவ்வுரைப்பொருள் முழுவதையும் உள்ளபடியறிதல், முடியாது. அதற்குத்தக்க ஒருகுறிப்புரை யிருப்பின் நலம். பிற்காலத்தில் உரையெழுதிப் பொருளைத் தெரிவிப்பதில் ஒத்தாரு மிக்காரும் இல்லாது தலைசிறந்து விளங்கியவரும் அடியேனுக்குத் தமையன் முறையாகுபவரும் என் ஆசிரியருமான ஸ்ரீ - உ - வே. வை - மு - சடகோப ராமாநுஜாசார்ய ஸ்வாமிகள் திருக்குறளில் அவ்வப்போது யூனிவர்ஸிடியார் பரீட்சைக்குப்பாடமாகவைத்த பகுதிகளைப் பரிமேலழகருரையோடும்

அதற்குத் தாமாக எழுதிய குறிப்புரையோடும் வெளியிட்டிருந்ததுண்டு: அப்பகுதிகள் அறத்துப்பால் முழுதுக்கும், பொருட்பாலில் இறுதியில் இரண்டொருஅதிகாரங்கட்குத் தவிர மற்றைப் பகுதிகட்கும் உள்ளன. அந்தக்குறிப்புரையை அப்பெரியார் எழுதி வெளியிடுதற்குத் துணையாயிருந்தவர், அடியேனுக்குத் தமிழிலக்கணவாசிரியரான ஸ்ரீ - உ - வே. சே - க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிகள் ஆவர். சில சமயத்து நானும் உடனிருந்ததுண்டு.

## IV

அப்பெரியாரின் குறிப்புரையோடு

பரிமேலழகருரையைப் பதிப்பித்தால்,
தமிழ்கற்போர்க்கு மிகவும் பயன்படுமென்று, வித்துவான் -
வேங்கட ராயுலுரெட்டியாரும் மற்றும் சிலஅறிஞர்களும்
வற்புறுத்துக் கூறியதுண்டு. அவர்கள் கூறியதைக்
கடைப்பிடித்து, திருக்குறளைப் பரிமேலழகருரையோடும்,
(கிடைக்கும் பகுதிவரைக்கும்) அப்பெரியாரின் குறிப்புரை
யோடும் (கிடையாதபகுதிக்கு எனது சிற்றறிவிற்குஏற்ப
ஒருகுறிப்புரை யெழுதி அதனோடும்) நூல்முழுவதையும்
பூர்த்திசெய்து வெளியிடும் நோக்கத்
தோடு முதன்முதலில் இந்த அறத்துப்பாலை
வெளியிடுகின்றேன்.

இந்தப்பதிப்பை நடத்தும்போது, தமிழ்லெக்ஸிகன் தலைமைப் பண்டித ராகிய ஸ்ரீ. உ. வே. மு-இராகவையங்கார்ஸ்வாமிகள் பார்வையிட்டு வெளியிட்டுள்ள திருக்குறட் பிரதியையும் வேறு சில பிரதிகளையும் வைத்து ஒப்பு நோக்கிப் பாடபேதங்களைக்குறித்துள்ளேன். குறிப்புரையில் இலக்கணப்பகுதி மிகுதியாகஇருந்ததனால், சிலவற்றைஅடித்து விட்டும், விளங்காதிருக்குமென்று தோன்றிய சில விடங்களை விளக்கியும் இங்ஙனம் சில மாறுதல்கள் செய் துள்ளேன். அங்ஙனம் யான் கைவைத்ததனால் ஒருகால் ஏதேனும் இப்பதிப்பிற் பிழைவந்திருக்குமோ என்று அஞ்சுகின்றேன். என்னுடைய கருத்துக் குறைவினால் பிழை நேர்ந்திருப்பின், அறிஞர் தாம் பொறுத்துக்கொள்வ தோடு அப்பிழையை அடியேனுக்கும் தெரிவித்தால், அவர்கள் திறத்து நன்றியறிதலோடு அப்பிழைகளைத் திருத்திக்கொள்வேன்.

எனது இம்முயற்சியைக் கற்கும் நிலையிலுள்ளோர் ஆதரிப்பின், அஃது மேன்மேலும் யான் முயற்சிசெய்வதற்கு ஊன்றுகோலாகு மென்பதை இங்குத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

எனதுகாலத்தையெல்லாம் வீணாக்காமல் கல்வித்துறையிற் செலுத்தி, எனக்குத் தோன்றாத்துணையாய்நின்று திருவருள்புரியும் அருட்பெருங்கடலை அநவரதமும் எண்ணியெண்ணி வாழ்த்துகின்றேன்.

ஈசுவரஞூ }
ஐப்பசிமீ 15உ }

இங்ஙனம்
வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யன்.

---

# திருவள்ளுவர்

## வரலாறு.

திருக்கு றளின்ஆசிரியரா ன

திரு வ ள் ளுவர் அகத் திய மகாமுனிவ ரது மரபில் தோன்றியவரென்றும், இவரது தாய் ஆதியிற்கருவூரிற்புலையனால்வளர்க்கப் பட்டவ ளென்றும், ஔவை உப்பை உறுவை வள்ளி என்னும் நால்வர் மக ளிரும், அதிகமான் கபிலர் என்னும் இரு வர் ஆடவரும் இவர்க்கு முன்பிறந்த சகோதரிகளும் சகோதரரு மாவ ரென்றும்,இவர்களைத் தாயாகிய ஆதி, தந்தை யாகிய திருவாரூர்ப் பகவனது கட்டளைப்படி பெற்ற அவ்விடத்திலேயே விட் டுச்சென்றன ளென்றும், ஔவை சரசுவதியம்சமானவ ளென்றும், இவரால் சங்கப்புலவர்கள் கருவபங்கப்பட்டன ரென்றும், இவர் ஏலேலசிங்கனைப்

பலவாறு சோதித்து அவனது பக்குவநிலையைக் கண்டு அவனை முதற்சீடனு
கக் கொண்டன ரென்றும், இடைக்காடர் விஷ்ணுவின் அமிச மென்றும்,
வள்ளுவர்க்கு மனைவியாகிய வாசுகி அவர்சொற்படி கற்புமகிமையால் மணலை
அன்னமாக்கிப் படைத்தன ளென்றும்,
ஏலேலசிங்கன் மகனாகிய அழகானந்
தன் சிவனது அமிசமென்றும், கரைதட்டிச்சாய்ந்துபோன
ஏலேலசிங்கனது வர்த்தகக்கப்பல் திருவள்ளுவர்கையால்
தொட்டமாத்திரத்திற் சரிப்பட்டு நின்ற தென்றும், இவர்
பொதியமலைக்குச் சென்று அகத்தியரைக் கண்டு அவர்க்கு
இந்நூலைக் காட்டி அங்கீகரிப்பித்தன ரென்றும்,
இங்ஙனம்
பலவாகச் சரித்திரத்தை விரித்துக் கூறுவர். இவற்றுள், சில, கபிலரகவ லென வழங்குவதிலுங் காணப்படுகின்றன. ஆதிபகவராலே விடப்பட்ட ஏழாவது குழந்தையாகிய இவரை ஒருவேளாளன் கொண்டுபோய்த் தன் மனைவிகையிற் கொடுத்து வளர்த்து வாசுகியென்பவளை மணஞ்செய்வித்துப் பரலோகஞ்சென்றன னென்றும், அக்குமாரர் மயிலாப்பூரில் "உள்ளூரா ரொடுவாழாமல் ஊர்ப்புறஞ்சேரிசார்ந்து, தெள்ளுசொற் புலமைவாய்ந்து சேலைநெய்திருந்தவாற்றால், வள்ளுவனென்றார் பல்லோர் வளமையோனென லோராரே" என்றும் கூறுப.

திருக்குறள் செய்தருளிய தெய்வப்புலவராகிய திருவள்ளுவர் வரலாறு இங்ஙனெல்லாம் கூறப்படினும் இவற்றில் எம்மாத்திரம் உண்மையென்பது ஆராய்ச்சி செய்யவேண்டுவதாகவே யுள்ளது.

கபிலரகவலில் ஆதியென்பவட்கும் பகவனென்பவனுக்கும் புத்திரராகப் பிறந்தவர் திருவள்ளுவ ரென்ற இவர் பிறப்புக் கூறப்படாநிற்க, யாளிதத்த

னென்பானுக்கும் பார்ப்பினியென அவனுற்கருதப்பட்ட ஒரு புலைச்சிக்கும் பிறந்தவர் இவ ரென்று ஞானமிருதம் என்ற தமிழ்நூல் கூறுகின்றது. இங்ஙனம் ஒன்றேடொன்று மாறுபட எழுதி வைக்கப்பட்டிருத்தலால், இன்னதுதான் வாய்மையானது என்று துணிந்துசொல்லத்தக்க பேராதாரம் எதுவும் இன்று.

இங்ஙன் இவருடைய பிறப்பைப்பற்றியானபோது இவருடையகுலந் தான் இன்னதெனத் துணிய வியலுமோ? இனி, ஒருசாரார் வள்ளுவ ரென்று இவர்க்குள்ளபெயரைக் கொண்டு இப்புலவரை வள்ளுவக்குலத்

# VI

தின ரென்பர்: அன்னர் "அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின், திறந்தெரிந்து செப்பிய தேவை - மறந்தேயும், வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற், கொள்ளா ரறிவுடையார்" என்ற திருவள் ளுவமாலையையும், "மெய்த்ததிரு வள்ளுவனுர் வென்றுயர்ந்தார் கல்வி நலந், துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார் சோமேசா - உய்த்தறியின், மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்துங், கற்றூ ரனைத்திலர் பாடு" என்ற சோமேசர்முதுமொழிவெண்பாவையும் தம்கூற்றுக்கு மேற்கோளாகக் காட் டுவர்: அவருரையைமறுப்பார் திருவள்ளுவமாலையிற் கூறிய "வள்ளுவ னென்பானேர் பேதை யவன்வாய்ச்சொற்கொள்ளார் அறிவுடையார்" என் பதே அன்னுரை வள்ளுவக்குலத்தினரென்பது கொள்ளத்தக்கதன்று என மறுக்கின்றதென்றும், சோமேசர்முதுமொழிவெண்பாவிஞசிரியர்

தாம் கர்ணபரம்பரையிற் கேட்டதுமாத்திரத்தைக்கொண்டு சரித்திரவுண்மை

யை யாராயாது குறளுக்குக் காட்டாக ஒருசரிதையைக் கூறுவதென்று அம்

மாத்திரமே கருதிக் கூறினரென்றும், கல்விநலந்துய்த்த என்று அடைமொழிகொடுத்த சங்கத்தாரைக் கல்லாதாரென்று மாறுபடுபொருண்மொழியென்னும் வழுப்படக் கூறியதும் அவர் ஆராய்ந்துகூறுமையைப் புலப்படுத்

தும்என்றும் கூறுவர். (இது வழுவன்று என்று சாதிக்கவேண்டுவார் பெரும்

புலவரான திருவள்ளுவரோடு ஒப்பிட்டுப்பார்க்கின் சங்கத்தார் கல்லாதவராவு

ரென்ற கருத்தாற் கூறியதென்ப.) இனி, மற்றொருசாரார் யானைமேல் முரசறைந்துஅரசாணைதெரிவிக்கும்வள்ளுவக்குலத்தாரால் வளர்க்கப்பெற்றுச் சிறப்படைந்தவ ராதலால், இவர்க்கு வள்ளுவரென்ற அப்பெயர் நிலைத்ததென்பர். வேறுசிலர் வண்மைக்குணமுடையவராதல்பற்றிவந்த பெயரென்பர்: சில உரையாசிரியர்களோ திருவள்ளுவரென்ற பெயரைக் காரணப்பெயராகக் கொள்ளாது இயற்பெயரென்று கூறியுள்ளனர். இங்ஙன் கர்ணபரம்பரையில் தாம் கேள்வியுற்ற வகையாகவும் அவரவர்கட்குத் தோன்றியபடி கற்பனையாகவும் வழங்குவதுகொண்டு, இந்தத் திருவள்ளுவருடைய பிறப்பைப்போலவே இவருடைய குலத்தைப்பற்றியும் யாதொன்றும் துணிந்து எழுத இயலாது.

இனி இவர் பிறந்துவளர்ந்த ஊரைப்பற்றிச் சற்று ஆராய்வோம்:
"உப்பக்கநோக்கி * உபகேசிதோண்மணந்தா, னுத்தரமாமதுரைக்கச்சென்ப - இப்பக்கம், மாதாநுபங்கி மறுவில்புலச்செந்நாப், போதார்புனற்கூடற்கச்சு"

* உபகேசிஎன்பது - நப்பின்னையைக் காட்டுமென்று நேமிநாதவுரையால் விளங்குவதால், இதற்கு வேறு வகையாகப் பொருள்கூறுதல் சிறவாது: கண்ணபிரானை உபகேசி தோண்மணந்தானென்று கூறியதற்கு ஏற்பத் திருவள்ளுவரை மாதாநுபங்கிமருவி என்று கூறியிருக்கின்றதென்றும், இத்தொடர்-மாதாநுபங்கி யென்பாளை மனைவியாகப்பொருந்தியவனென்று திருவள்ளுவனார்க்கு அடைமொழியாக வந்துள்ளதென்றும், ஆகவே இவருடைய மனைவியார்பெயர் மாதாநுபங்கி என்பதாகவேணும் என்றும், 'மாதாநுபங்கி மறுவில்' என்ற பாடம் தவறுனதாக இருக்குமென்றும் ஒருசாரார் ஊகித்துக் கூறுகின்றனர்.

VII

(இதன்பொருள்:—வடதிசையைக்குறித்து நப்பின்னைப்பிராட்டியை மணந்த கண்ணபிரானை வடமதுரைக்கு அச்சுஎன்பர்: இப்பக்கத்தை [தென் திசையை] நோக்கி மாதாநுபங்கியும் குற்றமற்ற செந்நாப்போதாருமாகிய திருவள்ளுவர் தென்மதுரைக்கு அச்சுஆவர் என்பது. அச்சு-ஆதாரம்.) என்று கூறியிருப்பதை நோக்குமிடத்து இவர் பிறந்துவாழ்ந்த இடம் தென்மதுரை யென்று துணியலாகும். ஆனாலும், ஒருசாரார், இப்புலவர் பிறந்த ஊர் மயிலையென்று சாதிக்கின்றனர்: ஆயினும், அதனை நாட்டுதற்குக் காட்டலாகும் பழஞ்சான்று யாதொன்றும் தக்கதாகக் காணப்படவில்லை.

இவரதுதொழில் நெய்தற்றொழி லென்பர். தமிழ்நாவலர்சரிதையில்,

'திருவாலங்காட்டுத் திருநடனங் கண்டீரோ?' என்று முனிவர் கேட்க, வள்ளுவர்பாடியது' என்று "பூவி லயனும் புரந்தரனும் பூவுலகைத், தாவி யளந்தோனுந் தாமிருக்க—நாவி, லிழைநக்கி நூல்நெருடு மேழை யறிவேனோ, குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து" என்ற வெண்பா எழுதப்பட்டுள்ளது.

இச்செய்யுளில் 'நாவிலிழைநக்கி நூனெருடுமேழை' என்று தம்மையே கூறியதாக வருதலாலும், கர்ணபரம்பரைச் செய்தியிலும் இவர் ஆடைநெய்தற் றொழிலைக்கொண்டவ ரென்று கூறப்படுதலாலும், நெய்தற்றொழிலே இவர் கொண்டிருந்த தொழிலாயிருக்கலாம். இப்பாட்டின் வரலாறு வேறுவகையாக இக்காலத்து வழங்கப்படும்.

இவரது மதம் இன்னதென்று எவ்விதத்திலும் நன்கு விளங்கவில்லை. இவர் இந்நூலின் முதலிற் கூறிய கடவுள்வாழ்த்தும், பல சமயங்கட்கும் பொதுவாகவே யுள்ளது; மற்ற விஷயங்களும் பெரும்பாலும் இப்படியே: இவரைச் சைவரென்றாவது வைஷ்ணவரென்றாவது ஒருசார்பாகக் கூறி யாவரும் ஒத்துக்கொள்ளும்படி நிலைநிறுத்துதற்குத் தக்கஆதாரமொன்றுமில்லை. இவர்க்கு நாயனாரென்று வழங்குகிற பெயர்மாத்திரத்தைக் கொண்டு இவரைச் சைவரென்று சாதிக்கலாகாது; நாயனாரென்னும் அச்சொல் சைவசமயத்தில்மாத்திரமேயன்றி வைஷ்ணவசமயத்திலும் ஜைநசமயத்திலும் கடவுளுக்கும் அடியார்கட்கும் பெயராக வழங்குதல் உணர்க: திருக்கோவையாருரையிற் பேராசிரியர் கடவுளை 'நாயனார்' என்றதும், சீவகசிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் தந்தையை 'நாயனார்' என்றதும் பிறவுங்

காண்க. இது நிற்க: இவரது மதம் ஜைநமா யிருக்கலா மென்று சிலர் ஊகிக்கிறார்கள்; அதற்குக்காரணம்-திருக்குறளில், கடவுள்வாழ்த்தில் 'பகவன், அறிவன், மலர்மிசையேகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், இறைவன், ஐந்தவித்தான், அறவாழியந்தணன், எண்குணத்தான்' என அருகக்கடவுளுக்குப்பெயராக வழங்குஞ் சொற்களை உபயோகித்திருத்தலும், அருகசரணம் சித்தசரணம் * சாதுசரணம் தர்மசரணம் என்ற ஜைநசமயக்கடவுள்வணக்கம்

---

* வான்சிறப்புச் சித்தசரணத்துக்கு அறிகுறியாதல், உய்த்துணரத்தகது; எல்லாவுலகத்துக்கும் மேலிடத்திலுள்ளவன் சித்தனென்பது ஜைநசம்பிரதாயம்.

VIII

நான்கிற்கும் ஈடாகக் கடவுள்வாழ்த்து வான்சிறப்பு

நீத்தார்பெருமை அறன் வலியுறுத்தல் என்னும் நான்குஅதிகாரங்களைப் பாயிரமாக நூலின் முதலில் முறையே கூறியிருத்தலும், ஜைநர்க்குச் சிறப்பாகவுள்ள புலால்மறுத் தல் கொல்லாமை என்ற ஒழுக்கங்களை மிகவற்புறுத்திக் கூறுதலும், அதிலும் "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற, னுயிர்செகுத்துண் ணாமை நன்று" என யாகத்தை மறுத்தலும் முதலியன. அந்தத் திருக்குறளில் "உலகியற் றியான்," "அந்தணர் நூல்," "மறப்பினுமோத் துக் கொளலாகும்பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்," "அறுதொழிலோர் நூன்மறப்பர்" "அவியுணவி

ஞன்ஞேர்'' என்பவை முதலாகக் கூறியனகொண்டு இக் கொள்கை மறுக்கப்படும். இவர் வேதம், கடவுள், உயிர், பூதமைந்து, புலால் மறுத்தல், தவம் முதலியன கொண்டிருத்தலால், பௌத்தருமாகார். இனி, "மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான், தாஅய தெல்லாம் ஒருங்கு,"

என்று கூறியிருத்தலாலும், "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல், தாமரைக்கண்ணனுலகு" என்று சிற்றின்பத்தை எல்லாவற்றினுஞ்சிறந்த மோட்சலோகத்துப் பேரின்பத்தினும் சிறந்தது என்று சொல்லவேண்டிய விடத்துத் தாமரைக்கண்ணனுலகு என்று திருமாலினது ஸ்ரீவைகுண்ட லோகத்துஇன்பத்தையே குறித்தலாலும், இவ்வுலகமாகிய லீலாவிபூதிக்கும் ஸ்ரீவைகுண்டமென்கிற நித்தியவிபூதிக்கும் இறைவன் திருமாலே யென்று தெரிவித்த ஆசிரியர் திருமாலுக்குஉரிய அகாரத்தையே முதன் மொழியாகத் தொடங்குதலாலும், இங்ஙன் அகச்சான்று பல இருத்தலால்

இவரை வைஷ்ணவர், தம்மதத்தவரென்று சாதிக்கலாம். ஆயினும், தாமரைக்கண்ணனென்பது "மலர்மிசையேகினன்" என்றாற்போன்று அடியார்களின் இதயகமலத்தின்கணுள்ளானென்ற பொருளைக் காட்டலாமாதலால் திருமாலையே சிறப்பாகக்காட்டுவ தென்று கொள்ளவேண்டியதில்லையென்றும், "அடியளந்தான்றாஅயது" என்று கூறியமாத்திரத்தானே திருமாலினிடத்துப் பக்தியினுற்றான் கூறினாரென்று கொள்ளமுடியாதென்றும், பாணினி பகவான் "அ இ

உண்''என்று தொடங்கினற்போல இந்நூலாசிரியர் மங்கள வெழுத்தாக அகரத்தைத் தொடங்கியிருக்கலாமென்றும், ஆகவே, இந்தஅகச் சான்றுகள் இவரை வைணவரென்று நிலைநாட்டப்போதாஎன்று வைணவர்

கூறுவதற்கு மறுப்புக்கூறவியலும்: இங்ஙனிருத்தலால், இந்தநூலாசிரியரை வேதவேள்விகளையும் சாதிகளையும் உடன்பட்ட வைதிகக் கொள்கையின ரென்றுசொல்லலாவதன்றி, இன்ன மதத்தவர்தாம் என்று உறுதியாகச்சொல்லிநாட்டுதற்குஏற்ற சிறந்தஏது ஒன்றும் காணப்பட்டிலது. இங்ஙன் இருப்பதுகருதியே திருவள்ளுவரின் திருக்குறளைப்பற்றி "ஒன்றேபொருளெனின் வேறென்பவேறெனின்,அன்றென்ப வாறுசமயத்தார்-நன்றென்ன,எப்பாலவருமியைபவே வள்ளுவனார்,முப்பால்மொழிந்தமொழி"என்று கூறியதுமென்க.

இவர் காலம்:—இத்திருவள்ளுவரையும் திருக்குறளையும் பற்றி மணிமேகலையிலும் கல்லாடத்திலும் கூறியிருத்தலாலும், இறையனாரகப்பொருளினது உரையில் திருக்குறட்பாக்கள் எடுத்து ஆளப்பட்டிருத்தலாலும், மணி



மேகலை, அதனோடு சமகாலத்ததாகிய சிலப்பதிகாரம், இறையனாரகப்பொருளுரை, கல்லாடம் என்னும் இவற்றிற்கு முந்தியது இந்நூலென நன்கு அறியப்படுகின்றது. இன்னும் சங்கத்துநூல்கள் பலவற்றிலும் திருக்குறளின் கருத்துக்களும் சொற்பொருள்களும் காணப்படுதலால், திருவள்ளுவரால் சங்கம் அழிக்கப்பட்டதென்பதும், சங்கத்து அரங்கேறிய நூல்களெல்லாவற்றுள்ளும் திருக்குறளே இறுதியானதென்பதும் பொருந்தாவாம். இனி ஒருசாரார், ஆசிரியர் தொல்காப்பியனார் மொழிக்குமுதலாகெழுத்தைக் கூறுமிடத்து ''சகரக்கிளவியுமவற்றோரற்றே, அ ஐ ஔஎனுமூன்றலங் கடையே'' என்று கூறியதற்குஏற்ப, இத்தத் திருக்குறளில் வடமொழியல்லாது அகரத்தை முதலிற்பெற்ற சகரத்தை ஆதியாகக்கொண்ட தமிழ்ச் சொல்லைத் திருக்குறளாசிரியர் தமது நூலகத்து எடுத்தாளாமையால், இந்நூல்

தொல்காப்பியர்காலத்தை ஒட்டியதாக இருக்கலாமென்கின்றனர்: அது பொருந்துவதாகத் தோன்றவில்லை: அகரத்தை முதலிற்பெற்ற சகரத்தைக் கொண்ட சொல் தமிழ்மொழியிலில்லாமையால் அவ்வாறுணசொல் வடசொல்லாகவோ திசைச்சொல்லாகவோ இருக்குமன்றி எவராலும் தம்அறியாமையானன்றித் தமிழ்மொழிச்சொல்லாகப் பிரயோகிக்கமுடியாதன்றோ! இனி, ஐயப்பொருளொன்றே கூறிய கொல் என்னும் இடைச்சொல்லை "என் கொல்"(2)என்று அசைநிலையாகவும்,உநவுவமத்தில்உருபாகவரவேண்டிய 'போல'என்ற சொல்லை"வெயில்போலக்காயும்" (77)என்று வினையுவமவுருபு ஆகவும், மற்று என்னுஞ்சொல்லை "மற்றின்பம்" (173) என்று மற்றையென்னுஞ் சொற்போலப் பிறிது என்ற பொருள்படவும் பிரயோகித்தும், "அதுணர்வார்" (257) என்று குற்றியலுகரம்போல முற்றியலுகரத்தின் மீது உயிரெழுத்தேற்றியும் இங்ஙன் தொல்காப்பியத்திற்குமுரணாக இந்தத் திருக்குறளிற் பல வந்துள்ளதனால், இந்நூலாசிரியர் தொல்காப்பியனார்க்குப் பலநூற்றுண்டுகள் காலத்தினுற் பிற்பட்டவரா யிருக்கவேண்டும். ஆனால், "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின், நஞ்சுமுண்பர்நனிநாகரிகர்" என்ற நற்றிணையடிகளும், "என்றும், பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி அறனறிதல், சான்றவர்க்கெல்லாங் கடனால்", "நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் மறையாவா, நெஞ்சத்திற்குறுகிய கரியில்லையாகலின்" என்ற கலித்தொகையடிகளும்,முறையே "பெயக்கண்டு நஞ்சுண்டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டுபவர்", "அறிவினானாகுவ துண்டோ பிறிதினோய், தந்நோய் போற் போற்றாக்கடை", "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என்ற திருக்குறள்களை அடியொற்றியன: இங்ஙனெல்லாம் வருதலின் நற்றிணைப்பாடல் கலித்தொகைப்பாடல் என்ற இவற்றிற்கெல்லாம் முந்தித் திருக்குறள் தோன்றிப் பரவியிருக்கவேண்டும். இவ்வாறாகவும், கடைச்சங்கநூல்கட்கெல்லாம் குறள் காலத்தாற் பிந்தியது என்று சாதிக்கவேண்டுவோர் நற்றிணை முதலியவற்றிலிருந்தே குறளாசிரியர் கூறினரென்று சொல்லவுங் கூடும்: என்றாலும்,"நிலம்புடை பெயர்வதாயினு மொருவன், செய்தி கொன்றோர்க் குய்தியில்லென, அறம்பாடிற்றே

ஆயிழைகணவ" என்று வரும் புறநானூறு "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற திருக்குறளைக் கருதியே கூறியது எனத் தெற்றென விளங்குதலால், தொகை நூல்களிலும் எடுத்தாளும்படி அத்துணைப் பழமை பொருந்தியது இந்தத் திருக்குறள் என்பதிற் சிறிதும் ஐயம் இல்லை: ஆதலால், கடைச்சங்ககாலத்தில் முற்பட்டிருந்தவர் திருவள்ளுவரென்று கூறுவதன்றி, திருவள்ளுவருடைய காலத்தைக் குறித்து இன்ன நூற்றாண்டினரென்று திண்ணமாகக் குறிப் பிடமுடியாது.

திருவள்ளுவர் பெயர்களும் பெயர்க்காரணங்களும்:—(1) திருவள்ளு வர், (2) தேவர், (3) முதற்பாவலர், (4) மாதாநுபங்கி, (5) தெய்வப்புலவர், (6) செந்நாப்போதார், (7) பெருநாவலர், (8) நான்முகனார், (9) புலவர், (10) பொய்யில்புலவர், (11) நாயனார் என்பன இவர்க்கு வழங்கும் பெயர்கள்.

(1) திருவள்ளுவ ரென்ற பெயரைக் குறித்து முன்னரே எழுதப்பட்டது. (2) தேவர் - தெய்வத்தன்மையயுடையவர்; மனிதரினும் மேலாக நன்கு மதித்துத் தேவர்போல உயர்த்திக் கொண்டாடப்படுபவர்; ஞான அநுட்டானங்களால் விளங்குபவர். "தேவிற் சிறந்த திருவள்ளுவர்"என்று திருவள் ளுவமாலையில் வருவது காண்க. (3) முதற்பாவலர்-முதன்மையுடைய பாவலர்.

என்றது, கவிகளுட் சிறந்தவ ரென்றபடி; [பா வலர் - பாடல்பாட வல்லவர்: பா - செய்யுள்.] அன்றி, முதற்பா வலர் எனப் பிரித்து, நால்வகைப்பாக்க ளுள்ளும் 'முதற்பா' எனப்படுகின்ற வெண்பாவால் நூல்செய்த வல்லமை' யுடையவர் என்றுமாம்; பலவகை வெண்பாக்களுள்ளுங் குறள்வெண்பா முத லாதலுங் காண்க. (4) மாதாநுபங்கி யென்பது இவரது மனைவிக்குப் பெய ரென்று கொள்ளுதலுண்டு என்று முன்னர்க் காட்டப்பட்டது. இனி, இவ் வாசிரியர்க்கே பெயரெனக் கொள்ளின், இது, தாயை நிகராகக்கொண்டு நடக்கின்ற ஒழுக்கின ரென்று பொருள்படுதலால், தாய் பிள்ளையினிடத்து அன்புசெய்தல்போல இவர் உயிர்களிடத் து அருள்செய்பவ ரென்க; ("தாயொக்கு மன்பின்" என்றார் பிறரும்.) மாத்ரநுபங்கி எனப் புணராது மாதாநுபங்கி என நின்றது, பிராகிருதவிலக்கணத்தா லென்ப. இனி, தாயோ வென்னத்தக்கவரென்றும் பொருள்படும். "பெற்றவரு நற்குருவும் பேணி யொருபொருளை, யுற்றிருகா லன்றியுரை செய்யார்—பற்றி, யொரு பொருளைப் பத்துப் பொருளாகச் செப்பித், தருகையால் வள்ளுவரே தாய்" என்பது காண்க. (5) தெய்வப்புலவர் - தெய்வத்தன்மையையுடைய அறிவையுடையவர். அறிவுக்குத் தெய்வத்தன்மை-எல்லாப்பொருள்களையும் உள்ளது உள்ளபடி அறிதல்; "சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும், இயற் பெயர்க் கிளவி முற்படக் கிளவார்" என்ற

தொல்காப்பியச் சூத்திரத்தின் உரையிலே சேனாவரையரும், நச்சினார்க்கினியரும், கல்வியாலாகிய பெயர்க் குப்பின்னே இயற்பெயர் வருதற்கு 'தெய்வப்புலவன் திருவள்ளுவன்' என

XI

உதாரணங்காட்டி யிருத்தலால், திருவள்ளுவர்க்கு 'தெய்வப்புலவர்' என்பது கல்விபற்றிவந்த சிறப்புப்பெய ரென்று தெரிகிறது. (6) செந்நாப்போதார் - கவிக ளாகிய தேனைச் சொரிகிற செவ்விய நாவாகிய மலரை யுடையவ ரென்று பொருள்: "மாதாநுபங்கி மருவிபுலச் செந்நாப்போதார்" என்று வழங்கியிருத்தலும் "என்றும் புலராது" என்ற இறையனார் பாசுரத் தில் திருவள்ளுவர்வாய்ச்சொற்குக் கற்பகத்திருமலர் உவமை கூறப்பட்டவாறும் உணர்க; அன்றி, (திருவள்ளுவமாலையில்) "வள்ளுவன்வாய தென் வாக்கு"என்று நாமகள்தானே கூறியதாக வந்திருத்தற்கு ஏற்பச் (சரசு வதிக்கு இருப்பிடமான) சிவந்த நாவாகிய மலரை யுடையவ ரென்றுங் கொள்ளலாம். (போது - மலர்.) (7) பெருநாவலர்-பெருமையுடைய புலவர்; நாவலருட் பெரியவ ரென்க. நாவலர் - கவிசக்தியும், போதநாசக்தியும், பிரசங்கசக்தியும் முதலிய நாவின் வல்லமை யுடையவர். இப்பெயர், திருவள்ளுவமாலையில்

தொடித்தலைவிழுத்தண்டினார்செய்யுளில் வந்துள்ளது. (8) நான்முகனார் - பிரமதேவனது அமிசமாகப் பிறந்தவர்; (திருவள்ளுவ மாலையில்) "நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத் தோன், தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை, வந் திக்க சென்னி வாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ், சிந்திக்க கேட்க செவி" எனவும், "ஐயாறு நூறு மதிகார மூன்றுமா, மெய்யாய வேதப் பொருள் விளங்கப்—பொய்யாது, தந்தா னுலகிற்குத் தான் வள்ளுவனாகி, அந்தாமரை மேலயன்" எனவும் கூறியன காண்க. (9) புலவர் - புலம் அல்லது புலமை உடையவர்; புலம் - தேர்ந்த அறிவு: புலமை - கல்வித்தேர்ச்சி; அதாவது-பல வேறு வகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம் ஒருங்கே கொண்ட பேரறி வுடைமை, பாண்டித்யம். இப்பொதுப்பெயர், திருவள்ளுவர்க்குச் சிறப்பாக வழங்கும். (திருவள்ளுவமாலையில்) "புலவர் திருவள்ளுவ ரன்றிப் பூமேற், சிலவர் புலவ ரெனச் செப்பல்—நிலவு, பிறங்கொளிமாலைக்கும் பெயர் மாலை மற்றும், கறங்கிருண் மாலைக்கும் பெயர்" என மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார் கூறியதுகொண்டு அறிக. (10) பொய்யில்புலவர் - பொய்மையில்லாதபுலவர்; பொருள்களை உள்ளபடி உணரவும், உணர்ந்த படி உரைக்கவும் வல்ல அறிவை யுடையவரென்றபடி.

சீத்தலைச்சாத்தனார் மணிமேகலையில் "பொய்யில் புலவன் பொருளுரை தேராய்" என்றனர். (11) நாயனார் - தலைமையானவர்: இப்பெயர், நச்சினார்க்கினியருரையிற் பயின்றுள்ளது.

# திருக்குறள் வரலாறு.

திருக்குறளென்ற அரிய பெரிய நூலினது சொற்செறிவு பொருட்பொலிவு முதலிய பெருமைகளை இத்தன்மையன வென்று எடுத்து உரைக்க இயலாமல் "அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்" எனவும், "பழகுதமிழ்ச்சொல்லருமை நாலிரண்டில்" எனவும், "கடு



கைத் துளைத்தேழ்கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்" எனவும் முன்னோர் வியந்து கூறியிருத்தலின், இதன்பெருமை இத்துணைத்தென அளவிடுதற்கு அருமையானது. கபிலர், பரணர், நக்கீரர், மாமூலர், கல்லாடர், நல்லந்துவனார், பாரதம்பாடிய பெருந்தேவனார் முதலிய சங்கப்புலவர் இந்நூலைக் குறித்துச் சிறப்பித்துச் செய்யுள் செய்தனரென்றால், இதன் சிறப்பை எடுத்து உரைக்க வல்லார் யார்? அன்றியும், கடைச்சங்கப் புலவரி லொருவரும், மணிமேகலை நூலாசிரியரும், சங்கத்தி லரங்கேற்றுதற்

பொருட்டு வரும் நூல்களிற் குற்றங்காணுந்தோறும் மனம்பொறாது அப் பிழையைக் கேட்கும்படிநேர்ந்த தம் தலைவிதியை மிகநொந்து தமது தலையி லறைந்துகொண்டேவருகையால் எப்பொழுதும் தலை புண்பட்டுச் சீயோ டிருக்கிற காரணம்பற்றி 'சீத்தலைச்சாத்தனார்' என்று பெயர்பெற்றவருமாகிய மதுரைக்கூலவாணிகன் சாத்தனார், இத்திருக்குறளைக் கேட்டபொழுது, இவ்வொருநூலுமே யாதொருகுற்றமுமில்லா திருந்த தென்று மிகஉவந்து "மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு, மும்முரசு முத்தமிழு முக்கொடியு— மும்மாவுந், தாமுடைய மன்னர் தடமுடிமேல் தாரன்றோ, பாமுறைதேர் வள் ளுவர் முப்பால்" என்று கொண்டாடிப் பாடினர். இம்மகிமை, அவ்ருட னிருந்த மருத்துவன் தாமோதரனார் இந்நூலைச்சிறப்பித்து "சிந்திநீர்க் கண் டந் தெறிசுக்குத் தேனளாய், மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி, மலைக்குத்து மால்யானை வள்ளுவர் முப்பாலால், தலைக்குத்துத் தீர்வு சாத் தற்கு" என்றதனால் தெரிகிறது. "பல்காற் பழகினுந் தெரியா வுளவேல், தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார், மூன்றினு முழங்கும்" எனப் பிற்காலத்தாரும் இதன்பெருமையை ஓதியிருத்தல் காண்க. "ஆலும்வேலும் பல்லுக்குஉறுதி, நாலும்இரண்டும் சொல்லுக்குஉறுதி" (இதில், ஆல் - ஆலம் விழுது. வேல் - கருவேலங்கொம்பு. நால் - நாலடியார். இரண்டு - குறள்) என்ற பழமொழியையும் உணர்க.

இத்திருக்குறள் "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்

பால் கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி
யென்பவே
கைந்நிலையொ டாங் கீழ்க்கணக்கு''

எனக் கூறப்பட்ட சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்குக்களுள் ஒன்று மெனஅறிக. பதினெண்கீழ்க்கணக்குக்களாவன:— க. நாலடியார், உ. நான்மணிக்கடிகை, [நானூற்பது—] ங. இனியவைநாற்பது, ச. இன்னாநாற் பது, ரு. கார்நாற்பது, சு. களவழிநாற்பது, [நால் ஐந்திணை—] எ. ஐந்திணை யைம்பது, அ. ஐந்திணையெழுபது, கூ. திணைமொழியைம்பது, கO. திணை மாலைநூற்றைம்பது, கக. முப்பால் [—திருக்குறள்], கஉ. திரிகடுகம், கங. கோவை [—ஆசாரக்கோவை], கச. பழமொழி, கரு. மாமூலம் [—சிறுபஞ்ச மூலம்], கசு. காஞ்சி [—முதுமொழிக்காஞ்சி], கஎ. ஏலாதி, கஅ. கைந் நிலை என்பன. ('நானூற்பது' என்பதிலுள்ள நால் என்பதை 'ஐந்திணை'

# XIII

என்பதனோடுங் கூட்டுக; கூட்டவே, 'நால்ஐந்திணை' என்பது - ஐந்திணைப் பொருளுணர்த்தும் ஐந்திணையைம்பது முதலிய நான்குநூல்களின்மேல் நிற்கும்.)

கீழ்க்கணக்கு, மேற்கணக்கு என இருவகை; அவற்றில், மேற்கணக்காவது - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா,

வஞ்சிப்பா, மருட்பா என்னும் ஐ வகைப்பாக்களாலும் நாற்பதுமுதல் ஆயிரத்துமுந்நூற்றுமுப்பதாக வருவது: கீழ்க்கணக்காவது - அறம்பொருளின்பங்களைப் பற்றிய வெண்பாக்களினாலும் வெண்பாவினினங்களாலும் அத்தொகைபட வருவது; இதனை, பன்னிருபாட்டியற் சூத்திரங்களால் அறிக. மிக்க அடிகளையுடைய பலவகைப் பாக்களால் வருவதுபற்றி மேற்கணக்கென்றும், குறைந்த அடிகளையுடைய ஒருவகைப்பாவால் வருவதுபற்றிக் கீழ்க்கணக்கென்றுங் காரணக்குறி யமைந்தன வென உணர்க.

திருக்குறளின் பெயர்கள்:—(1) திருக்குறள், 2) முப்பால், (3) பொய் யாமொழி, (4) வாயுறைவாழ்த்து, (5) உத்தரவேதம், (6) தெய்வநூல், (7) திருவள்ளுவர், (8) தமிழ்மறை, (9) பொதுமறை, (10) திருவள்ளுவப் பயன், (11) பொருளுரை, (12) முதுமொழி என்பன.

திருக்குறள் என்ற பெயர்க் காரணம்:—(1) திருக்குறள் - சிறந்த குறள்
வெண்பாக்களினா லாகிய நூல்; அடையடுத்த ஆகுபெயர்.
கலிப்பாவினா
லாகிய நூல் கலி யென வழங்குதல்போல, குறட்பாவினா
லாகிய நூல்
குறள் என வழங்குகின்றது. (2) முப்பால் - அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பால்களை யுடைய நூல்: பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; பால் - பகுப்பு. (3) பொய்யா

மொழி - பொய்யில்லாத சொற்களையுடைய நூல்: உண்மைப் பொருளை யுணர்த்தும் நூல்; பயன் விளைவிலே தவறாத நூல். "பொய்ப்பால பொய்யே யாய்ப்போயின பொய்யல்லாத, மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே-முப்பாலின், தெய்வத் திருவள்ளுவர் செப்பிய குறளால், வையத்து வாழ்வார் மனத்து" என்றதனால், இந்நூலின் மெய்யுணர்வுபயத்தற்சிறப்பை அறிக.
பொய்யாமொழி யென்பது - நூலுக்கு, அடையடுத்த கருவியாகுபெயர். (4) வாயுறைவாழ்த்து—வாயுறை - மருந்து, வாழ்த்து - வாழ்வித்தல்; உடம்புக்குஉறுதிசெய்யும் மருந்துபோல, உயிர்க்கு உறுதிசெய்து உலகத்தை வாழ்விக்கும் நூலென்க: நீதிகளை வற்புறுத்திக்கூறுவதென்றவாறு. "சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய, வந்த விருவினைக்கு மாமருந்து - முந்திய, நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார், பன்னிய வின்குறள் வெண்பா" என்ற பாடலில் இந்நூலை மருந்தென்றவாறு உணர்க. "வாயுறைவாழ்த்தே வயங்க நாடின், வேம்புங் கடுவும் போல வெஞ்சொல், தாங் குதலின்றி வழிநனிபயக்குமென்று, ஓம்படைக்கிளவியின் வாயுறுத் தற்றே" என்றார் தொல்காப்பியனார். 'வாய் - வாய்மொழி, உறை - மருந்து: வாயுறை யென்பது - சொல்மருந்தெனப் பண்புத்தொகையாம். இனி,

வாய்க்கண் தோன்றிய மருந்து என வேற்றுமைத்தொகையுமாம். மருந்து யோறலின், மருந்தாயிற்று' என்றது, தொல்காப்பியவுரை. (5) உத்தர வேதம்-வடமொழிவேதத்தின்பின் தோன்றிய வேதம்; வேதத்தின் பிற்பகுதி யெனப்படுகிற உபநிஷத்துக்களின் கருத்து அமைந்தது. (6) தெய்வநூல் - தெய்வத்தன்மையுடைய நூல்; சங்கமேறியது. (7) திருவள்ளுவர்-திருவள்ளுவராற் செய்யப்பட்ட நூல்; ஆசிரியர் பெயர் நூலை புணர்த்தினமையால், கருத்தாவாகுபெயர். "வள்ளுவர் தொல்காப்பியமே", "தொல்காப்பியர் திரு வள்ளுவர் கோவையார்" என்பன காண்க. (8) தமிழ்மறை - தமிழ்வேதம்; வடமொழிவேதத்தின் பொருளைத் தமிழில் உரைத்தது: வடமொழியில் வேதம்போலத் தமிழ்மொழியில் எல்லாப் பொருள்களுக்கும் சிறந்த பிரமாண மாக யாவராலும் அங்கீகரிக்கப்படுவது; "ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி, வேதப்பொருளாய் மிகவிளங்கித்-தீதற்றோர், உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே, வள்ளுவர் வாய்மொழி மாண்பு" எனவும், "வேதப்பொருளை விரகால் விரித்துலகோர், ஓதத் தமிழா லுரைசெய்தார் - ஆதலால், உள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப, வள்ளுவர் வாய்மொழிமாட்டு" என வும், "அற முப்பத்தெட்டுப் பொரு ளெழுபதின்பத், திற மிருபத்தைந்தாற் றெளிய - முறைமையால், வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளு வனு, ரோத வழுக்கற்ற துலகு" எனவும் கூறியன காண்க. (9) பொதுமறை-வடமொழி வேதம்போ லன்றி

எல்லாச்சாதியார்க்கும் எல்லாச்சமயத் தார்க்கும் பொதுவான வேதம்; "செய்யா மொழிக்குந் திரு வள்ளுவர் மொழிந்த, பொய்யா மொழிக்கும் பொருளொன்றே - செய்யா, அதற்குரிய ரந்தணரே யாராயி னேனை, இதற்குரிய ரல்லாதா ரில்" எனவும், "அரு மறைநக, ளைந்துஞ் சமயநூலாறும் நம் வள்ளுவனார், புந்தி மொழிந்த பொருள்" எனவும் கூறியன காண்க. 'எல்லா நூல்களினும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கு இயல்பு' என்பர் பரிமேலழக ரும். (10) திருவள்ளுவப்பயன்-திருவள்ளுவராற் செய்யப்பட்டதும் "அறம் பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே" என்றபடி எல்லார்க்கும் எல்லாப் பயனையும் அளிப்பது மான தொரு நூல். "அறனறிந்தோம் ஆன்ற பொரு ளறிந்தோம் அன்பின், திறனறிந்தோம் வீடுதெளிந்தோம் - மறனெறிந்த, வாளார்நெடுமாற! வள்ளுவனார் தம்வாயாற், கேளாதன வெல்லாங் கேட்டு" என்றதனாலும், இந்நூல் நான்கு உறுதிப் பொருள்களையும் உணர்த்துதலை அறிக. "எல்லாப்பொருளு மிதன்பா லுள இதன்பா, லில்லாத வெப்பொருளு மில்லையா ல்-சொல்லாற், பரந்த பாவாலென்பயன் வள்ளுவனார், சுரந்தபா வையத் துணை" என்றதும் காண்க. (நச்சினார்கினியர் முதலிய உரையாசிரி யர்களும், திருக்குறளை 'திரு வள்ளுவப்பயன்' என்பர்.) (11) பொருளுரை - பொருள்நிரம்பிய சொல். கபிலர், பெரிய பனைமரத்தின் சாயையையும் தன்னுள் அடக்கிக்காட்டுஞ் சிறு புல்நுனிநீரையும்; பரணரும், பொன்முடி யாரும், இரண்டு

அடிகளால் உலக முழுதையுந் தாவியளந்த திருமாலின் வாமநவடிவத்தையும் இந்நூலுக்கு உவமை கூறியதனால், இந்நூற்பாக்கள்

XV

சூத்திரம்போலச் சில்வகையெழுத்திற் பல்வகைப்பொருளைச் செவ்வனே செறித்து இனிதுவிளக்கித் திட்பநுட்பஞ் சிறந்தனவாதல் விளங்கும். "பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு, தெரிந்து திறந்தொறுஞ் சேரச்-சுருங்கிய, சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல், வல்லாரார் வள்ளுவ ரல்லால்" என்றதும் காண்க. (12) முதுமொழி - பழமையான சொல். பின்னிரண்டடியில் ஒவ்வொரு திருக்குறளையும் முன்னிரண்டடியில் அக்குறளின் நீதிக்குத் திருஷ்டாந்தமாக ஒவ்வொருசரித்திரத்தையும் இடையில் 'சோமேசா' எனச் சிவபிரான்பெயர் முன்னிலையையும் அமைத்துப் பாடப்பெற்றதாகிய 'சோமேசர் முதுமொழிவெண்பா' என்ற நூலின்பெயரில் 'முதுமொழி' என்ற தொடர் திருக்குறளின்மேல் நிற்றல் காண்க.

இங்ஙன் முப்பால் முதலிய சிறப்புப்பெயர்பெற்ற இத்திருக்குறள்
இன்ன நூல்வழியே தோன்றிய தென்று கொள்ள இடமில்லாமையால்,
முதனூலின்பாற்படு மென்பர். இனி, தருமசாஸ்திரம் அர்த்தசாஸ்திரம்
காமசாஸ்திரம் முதலியவற்றின் கருத்தைத் தழுவியது இந்நூலென்பதை
நோக்குமிடத்து வழிநூலெனக் கொள்ளுதலே பொருந்தும். "எல்லா
நூல்களினும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக்கூறுதல் இவர்க்கு
இயல்பு," "வியாழவெள்ளிகள் துணிபு தொகுத்துப் பின் நீதிநூலுடையார்
கூறியவாறு கூறுகின்றமையின்", "ஈண்டுப் பிரிவினை வடநூன்மதம்பற்றிச்
செலவு ஆற்றாமை விதுப்பு புலவி என நால்வகைத் தாக்கிக் கூறினார்"எனப்
பரிமேலழகர் கூறியன இங்குக் கருதத்தக்கன.

இந்தத் திருக்குறள், அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என
மூன்றுபால்களையுடையது: புருஷார்த்தமாகிய அறம்பொருளின்பங்கள்
மூன்றனையும் வழுவாதொழுகவே மோட்ச மடையலா

மாதலால், அதற்காக
வே றுவகுத்து க் கூற வில் லை.
அறந்துப்பால்தானும்,(1)பாயிரம், (2)இல்லறவி
ய ல், ( 3)து ற வ ற வி யல் , ( 4) ஊழ்எ ன் று
நான்குபிரிவினையுடையது: இனி,ஒருசா
ரார் பிரமசரியம் காரு கத்தம் வானப்பிரத்தம் சந்நியாசம்
என் னும் நால்வகை
நிலையுள், பிரமசரியம் சீடனாய் நின்றோதுவதல்லது
செய்வது பிறிதின்
மையின் அதனைப் புதல்வரைப்பெறுதல் என்பதனு
ளடக்கி, காருகத்தம்
இருபததிகாரத்தானும், வானப்பிரத்தம்
பத்ததிகாரத்தானும், சந்நியாசம்
மூன்றதிகாரத்தானும், எல்லார்க்கும் பொதுவாகிய ஊழ்
ஓரதிகாரத்தானு
மாக இங்ஙன் பாயிரம் நான்கதிகாரங்களோடு சேர்த்து
முப்பத்தெட்டதி காரத்தால் அறத்துப்பாலை முடித்தா
ரென்ப. (இவ்வாறான திருக்குறளின்,
பொருட்பால் காமத்துப்பால்களின் அதிகாரங்கள்
முதலியன குறித்து அவ்
வப்பாலின் தொடக்கத்திற் கூறப்படும்.)

இத்திருக்குறள் திருவள்ளுவரால்
வடநூற்பொருளை மேற்கொண்டு
தமிழா ஞேதப்படுகின்றமையான் அறத்துப்பால்

பொருட்பால் காமத்துப் பால் எனப் பகுக்கப்பட்டன. தமிழ்முறையாற் பகுக்கப்பட்டுக் கூறப்படின், புறம் அகம் என்று பகுத்துக்கொண்டு கூறப்பட்டிருக்குமென்ப. இனி, தமி

## XVI

ழிலும் 'அறம்பொருளின்பம்' என்று கூறப்படுவதுண்டு ஆதலால், அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என்று பகுத்துக்கொண்டு கூறினும், இந்நூல் தமிழ்முறையால்தான் கூறப்படுகின்றது என்று வாதித்தாலும், "அறம்பொருளின்பமுயிரச்சநான்கின், திறந்தெரிந்து கூறப்படும்" என்னும் குறளில் உபதைகளைப்பற்றிக் கூறியவை, ஆசிரியர் வடநூற்பொருளை மேற்கொண்டு கூறினரென்பதை வற்புறுத்தும். இந்நூல், தமிழிற்குப் பொருந்தக் கூறப்பட்டுள்ளதென்பதை "அகரமுதல" என்று அகரமுதலாகத்தொடங்கி "கூடி முயங்கப்பெறின்" என்று னகரவிறுதியால் முற்றியது குறிப்பிக்கும்.

இனி, கடவுள்வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார்பெருமை, அறன்வலியுறுத்தல் என்ற நான்கதிகாரமும் பாயிரமாக அமையுமாறு என்னையோ எனின்?—இதற்கு லெக்ஸிகன்ஆபீஸ் தலைமைப்பண்டிதர் ஸ்ரீ. உ. வே. மு. இராகவய்யங்கார் ஸ்வாமிகள் தொல்காப்பியப்பொருளதிகார வாராய்ச்சியென்னும் நூலிற் கூறியிருப்பது வருமாறு:—"தெய்வப்புலமைத் திருவள்ளுவனார், தம் பெருநூற்றொடக்கத்தே கடவுள்வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார்பெருமை, அறன்வலியுறுத்தல் என்ற நான்கதிகாரங்களைப் பாயிரமாகத் தனியே நிறுத்திக் கூறினரன்றோ? இங்ஙனம் இந் நான்கதிகாரங்களை மட்டும் பாயிரமாக வள்ளுவனார் தனியே கொண்டது எக்காரணம்பற்றி என்ற கேள்வி நெடுக நிகழ்ந்து வருவதுண்டு. இதற்குத் தக்கவிடை இதுகாறும் பெறப்பட்டதில்லை. ஆயினும், தொல்காப்பியனார்கூறிய "கொடி

நிலை கந்தழி" என்ற இச்சூத்திரம் அக்கேள்விக்கு ஏற்ற விடை தரவல்ல தென்பதே எங்கொள்கை. அஃதாவது - இச்சூத்திரத்திற் கொடிநிலை கந்தழி வள்ளி என்ற மூன்றும் கடவுள்வாழ்த்தொடு வரும் என, உயர் பின்வழிவரும் ஒருவினையொடுச்சொல்லைக் கடவுள்வாழ்த்துக்குக் கூறுதலால் அவ்வாழ்த்து முதற்கட்கூறுஞ் சிறப்புடைய தென்பதும், மற்றவை அதன்பின்னர் வைத்து வாழ்த்தப்படுதற்கு உரிய வென்பதும் அறியத்தக்கன. இவற்றுட் 'கொடிநிலை' என்பது மேகத்தை உணர்த்தும்; கீழ்த்திசைக்கண்ணே நிலைபெறுதலுடையது, நீடனிலையுடையது என்பன இதன் பொருளாம். [கொடி - கீழ்த்திசை *] நச்சினார்க்கினியரும் இவ்விரு பொருள்களைபற்றிச் சூரியனுக்கு இப்பதத்தை இணக்குதல் காண்க. மேகவாகனாகிய இந்திரனது திசை கிழக்காதலின் அத்திசையே மேகத்துக்கும் உரிய தென்பதும், அங்குநின்றெழுந்த கொண்டல்களே உலகதாபந்தீரப் பெய்வன என்பதும் அறியத்தக்கன. குணக்கினின்று எழுவது பற்றியே மேகம் கொண்டலெனப் பெயர்பெற்றதென்க. "ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு-காலத்திற்றோன்றியகொண்மூப்போல்" என்பதனால்

* கொடி-கீழ்த்திசையாதல், 'குன்றிவர்ந்து கொடிக்கொண்ட கோடையால்' (கஙo), 'கொடிமிசை மையறு மண்டிலம்' (கஅக) என வரும் கலித்தொகையடிகளானும், 'கொடிமுதலா வீங்கிவற்றைக் கொண்டெண்ணுங் காலே' என்னுஞ் சினேந்திரமாலைத்தொடரானும் (ருஎ) அறிக.

# XVII

(கலித். அஉ) கிழக்கிலெழும் கொண்டல்களே பெயலிற் சிறந்ததாதல் அறியப்படும். இவ்வாறன்றி மின்னற்கொடிக்கு நிலைக்களமாதல்பற்றி மேகம் 'கொடிநிலை' எனப்பட்டதெனினும் அமையும். இவற்றால், கொடிநிலை என்பது மேகத்தைக் குறிக்கவல்லதாதல் தெளியலாம். இரண்டாவது கந்தழி

என்பது: கத்து - பற்று, அழி-அழிவு; அஃதாவது பற்றழிந்தார் ஆகிய நீத் தாரதுதன்மை என்றபடியாம். மூன்ருவதான வள்ளி என்பது அறத்தைக் குறிக்கும். என்னை? அவ்வறம் சிறப்பாக வண்மைபற்றியே நிகழ்வதாகலின்; 'ஈதலறம்' என்ருர் ஒளவையாரும். நச்சிஞர்க்கினியர் தங்கொள்கைக்கியை

யச் சந்திரனுக்கு இப்பதத்தை இணக்குமிடத்து, "வெண்கதிர் தேவர்க்கு அமிர்தம்வழங்கலான் வள்ளியென்பதூஉமாம்" என்று கூறுதலின்று, வண்மையடியாகவே வள்ளி என்ற சொல் வழங்கியதென்பது அவர் கருத் தாதல் தெளியப்படும். படவே, வண்மையாகிய அறத்துக்குரியகடவுள் வள்ளி யெனப்பட்ட தென்க. இங்ஙனம் மேகம் நீத்தார் அறக்கடவுள்

என்ற மூன்றும், முதற்கடவுளை முதலாகக்கொண்டு வாழ்த்தப்படுதலும் இப்

பாடாண்பகுதியாம் என்பது, சூத்திரப்பொருளாதல் கண்டுகொள்க. எனவே வள்ளுவஞர்கூறிய பாயிரமும் இவ்விலக்கணம்பற்றியே அமைந்த தென்பது விளக்கமாம்."

இனி, பாயிரமென்பது - கடவுள்வாழ்த்தும் சொலப்படு பொருளும் எய்த வுரைப்பதாகும்; அவ்விலக்கணத்திற்கு ஏற்ப முதலதிகாரத்திற் கடவுள்வாழ்த்துக் கூறிஞர்: இந்நூலுட் கூறப்படுவது அறமே யாதலாலும்

அந்தஅறத்தை வெளிப்படுத்தியவர் நீத்தாரேயாதலாலும் அந்நீத்தாரின் நல்லொழுக்கத்திற்குத் தான் துணையாயிருத்தலோடு கடவுள் தன்மையும் வாய்ந்திருப்பது வான் ஆதலாலும்,
சிறப்பையும் நீத்தார் பெருமையையும்

கடவுள்வாழ்த்துக்குப்பின் வான்
கூறி, அதன் பின்னர் அறன்
வலியுறுத்தலைக் கூறினரென்னலாம்: இந்நூலுள் அறம்பொருளின்பம் என்ற மூன்றும் கூறப்படாநிற்கக் கூறப்படும்பொருள் அறமொன்றே போலப் பாயிரத்தில் அறன்வலியுறுத்தலைமாத்திரம் கூறியது குன்றக் கூறலாகாதோ? எனின், — இந்நூலாசிரியர் அறத்தோடுபொருந்திய பொரு ளின்பங்களையன்றி அறத்திற்குமாறான பொருளின்பங்களை வேண்டாராதலாலும், "சிறப்புடைமரபின் பொருளும் இன்பமும், அறத்தின் வழிப்படூஉந் தோற்றம்போல" என்றபடி பொருளின்பங்கள் அறத்தின் வழிப்பட்டே நிற்பன ஆதலாலும் சொல்லப்படுபொருளைத் தொகுத்துக் கூறும் பாயிரத்தில் அறத்தினைக் கூறி, மற்றைப்பொருளின்பங்களைக் கூறாதது குன்றக்கூறலாகாதென்க.

இத்திருக்குறளுக்கு
தர், பரிதி, திருமலையர்,

உரை செய்தவர்கள் - தருமர், மணக்குடியர், தாமத்
மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர், நச்சர், பரிமே

லழகர் எனப் பதின்மர். இதனை, "தருமர் மணக்குடியர்

பரிதி பரிமேலழகர்—திருமலையர், மல்லர் கவிப்பெருமாள்

3

தாமத்தர் நச்சர்

காளிங்கர் வள்

XVIII

ளுவர் நூற்கு, எல்லையுரை செய்தா ரிவர்" என்ற செய்யுளினால் அறிக. 'மணக்குடியர்' என்ற பெயர் 'மணக்குடவர்' என்றும், 'மணக்குடையர்' என்றும் வழங்கும். இதில், 'நச்சர்' என்பது நச்சினார்க்கினியரையெனக் கொள்ளுதல், தகுதியுடையதாகத் தோன்றவில்லை; ஏனெனில்:—"பாற்கடல் போலப்பரந்த நன்னெறி" என்று தொடங்குகிற நச்சினார்க்கினியருரைச் சிறப்புப்பாயிரச் செய்யுளில் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சிந்தாமணி, குறுந்தொகையில் (பேராசிரியர் உரையெழுதாதுவிட்ட) இருபதுபாட்டு என்னும் இவற்றிற்கு நச்சினார்க்கினியர் உரையெழுதினரெனக் கூறப்பட்டிருத்தலே யன்றி, திருக்குறளுக்கு உரையெழுதினரெனக் கூறப் படாமையாலென்க. "பாரத் தொல்காப்பியமும் பத்துப்பாட்டுங் கலியும், ஆரக் குறுந்தொகையு ளைந்நான்கும்—சாரத், திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும், விருத்தி நச்சினார்க்கினியமே" என்றதும் காண்க. இப்பதின்மருரையுள்ளும் பின்னர்ச்செய்யப்பட்டதும் மிகச்சிறந்ததும் பரிமேலழகருரையே யாதலின், அதுவே இக்காலத்துயாசிரியராகிய மேலாக வழங்கிவருகின்றது. அவ்வுரை

# பரிமேலழகர் வரலாறு.

இவர், தொண்டைநாட்டிற் சிறந்த காஞ்சீபுரத்திற் பிறந்தவர்: இது "திருக்காஞ்சிவாழ் பரிமேலழகன், வள்ளுவனார்க்கு வழிகாட்டினான் தொண்டை மண்டலமே" என்ற தொண்டைமண்டலசதகத்தால் அறியப் படும். இவர் அந்நகரிலுள்ள ஸ்ரீஉலகளந்தப்பெருமாள் கோயில் அருச்சக பரம்பரையிற்சேர்ந்தவர்: இதனை, "நீணிலமளந்தோன் தாடொழுமரபின்" என்ற இவர் உரைச்சிறப்புப்பாயிரத்தால் தெளியலாம். இவர் இளமையிலே வடமொழியில் தருக்கம் வியாகரணம் சாங்கியம் வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களைக் கரைகண்டு உணர்ந்து, தென்மொழியிலும் தொல்காப்பியம் முதலிய நூல்களிற் பல்காற்பயின்று புலவர்திலகராய்ப் புகழ்பெற்றிருந் தனர். இவர் திருக்குறளுரையை யியற்றி யரங்கேற்றியதுகுறித்து வழங்கு வதொரு வரலாறு வருமாறு:—புலவர்திலகரான பரிமேலழகர், தமதுபுலமை புலப்படுமாறு பெரியதோருரை யியற்றக்கருதி, அதற்குத் திருவள்ளுவர் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறளே ஏற்ற தென நன்குஅறிந்து, முன்னரே அந்நூலுக்குத் தருமர்முதலியோர் ஒன்பதின்மரும் இயற்றியுள்ள உரைகளை உற்று நோக்கி, அவற்றின்கண் உளவாய குற்றங் களைந்து குறைபெய்து சிறந்ததோருரை

யியற்றி, அதனைப் பாண்டியனவைக்களத்து அரங்கேற்றச் சென்று, தமதுகருத்தை அரசனுக்கு அறிவிக்க, 'மற்றையோருரைக்கும்

உமது உரைக்கும் உள்ள வாசி விளங்குமாறு அற்புதமொன்று காட்டுவீரா
யின் உமது
கூறியதற்கு,

உரை ஏற்றமுடையதாக அங்கீகரிக்கப்படும்' என இவர் 'அங்ஙனமே ஆகுக' எனச் சம்மதிக்க, அரசன்

வேந்தன்
'மற்றை

யுரைகள்போ லன்றி நுமதுஉரையே நூலாசிரியாது கருத்துக்கு இணங்கி ஏற்றமுடைய தென்பீராயின், நீர் இவ்வெண்கலப்பரியின்மேல் ஏறியிருந்து

# XIX

அரங்கேற்றுவீராக: அப்பொழுது, இப்பரி இடம்பெயர்ந்து இயங்குமாயின், நும் உரை மெய்யுரையாக மெச்சப்படும்' என்று தனதுசபையில் இருந்ததோர் வெண்கலக் குதிரையைக் காட்ட, இவர் அவ்வாறே அப்பரிமேல் இருந்து தமது உரையை அரங்கேற்றின ரெனவும், அப்பொழுது அப்பரி இருப்பிடம்விட்டு இயங்கிய தெனவும்,

அதனுல் இவர்க்கு 'பரிமே லழகர்' எனச் சிறப்புப்பெயர் அமைந்த தெனவும் கூறுகின் றனர். (இப் பெயர், 'பரிமேலழகியார்' என் றும், பரிமேலழகரையன்' என் றும் வழங்கும்.) இவர் திருக்கோவையாரென்கிற சைவ நூலினின் று இலக்கிய இலக்கண விஷயத்திற்கு மேற்கோள் எடுத்து ஆண்டமைபோல வன்றித் திருவாய்மொழியென்னும் வைஷ்ணவதிவ்வியப்பிரபந்தத்தினின் று தத்துவ விஷயத்திற்குப் பிரமாணமாக "அற்றது பற்றெனில், உற்றதுவீடு," "நன்ரு ஞானங் கடந்துபோய் நல்லிந்திரியமெல்லா மீர்த்து, ஒன்ருய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து, சென்ருங் கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்ருல், அன்றே அப்போதே வீடு அதுவே வீடுவீடாமே" என்ற பாசுரங்களை எடுத்துக்காட்டினமையும், அரசனை இறையென்ற கடவுட்பெயராற் குறித்ததற்குத் திருவாய்மொழியி விருந்து ஆதாரங் காட்டுமிடத்து "திருவுடைமன்னரைக் காணில் திருமா லைக் கண்டேனே யென்னும்" என்று 'பெரியாரும் பணித்தார்' என்றதும், பிறநூலாசிரியர்களை அவ்வாறு 'பெரியார்' என்ற சொல்லால் எங்குங் குறி யாமையும், "தாம்வீழ்வார் மென்ரேட் டுயிலி னினிதுகொல், தாமரைக்

கண்ணு னுலகு" என்ற குறளில் நிரதிசயப்பேரின்பத்தைக்குறிக்கிற 'தாம ரைக்கண்ணு னுலகு' என்பதற்கு - 'துறந்த யோகிகள் எய்துஞ் செங்கண் மாலுலகம்' என்று உரைகூறி, 'இந்திரனுலகென்று உரைப்பாருமுளர்: தாம ரைக்கண்ணனென்பது அவனுக்குப் பெயரன்மையின், அஃது உரையன் மையறிக' எனப் பிறர்மதம்மறுத்ததும், "நீணிலங் கடந்தோன் தாள்தொழு மரபிற், பரிமேலழக னுரிமையினுணர்ந்தே" என்ற பரிபாடலுரைச் சிறப்புப் பாயிரமும், இதற்குஏற்ப இவரைக் காஞ்சீபுரத்து உலகளந்தபெருமாள் கோவில் அர்ச்சகர் மரபினரென்பதும்;

"மடியிலாமன்னவன்"என்ற குறளில் 'அடியளந்தான' எனபதற்கு 'தன் அடியளவாமன எலலாவுலகையும அளந்த இறைவன்' என உரைகூறியதும் இவர் வைணவரென்பதை வற்புறுத்தும்.

இவ்வுரைச் சிறப்பை

"திருத்தகுசீர்த் தெய்வத் திருவள்ளுவர்தங்
கருத்தமைதி தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்சேர் பரிமே லழகனெனும்
மன்னு முயர்நாமன் வந்து"

"பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
தெரித்தவுரை யாமோ தெளி"

## XX

"தெய்வப் புலமைத் திருவள் ளுவர்குறளில்
உய்விக்கு
நூலெல்லா முள்ளதெனச்—செய்வித்தான்
தத்துவமெல் லாமுடம்பிற் றந்துணர்வார்
போலுலக
மொத்தபரி மேலழக னோர்ந்து"
"திருந்திய தமிழிற் றெய்வப் புலமை

அருந்திறல் வள்ளுவ னய்ந்துதன் வாக்கால்
அறம்பொரு ளின்பம் வீடென நான்கின்
திறந்தெரிந் துரைத்த செவ்விமுப்பாலுக்கு
ஒருரை யன்றி யொன்பது சென்றும்

ஐயுற வாகக் கையுறு காலை
வள்ளுவன் மீளவும் வந்துதித் துலகோர்க்கு
உள்ளிய பொருளை யுரைத்தன னென்ன
எழுத்து முதல இலக்கண வகையும்

வழுத்தில் வேதாகம வகையதன் பயனும்

தங்கிய குறட்பாத் தமிழ்மனு நூலிற்கு
இதுவே யுரையென் றியாவரும் வியப்பப்
பொழிப்பக லத்தொடு நுட்ப வெச்ச
விழுப்பொருள் தோன்ற விரித்தினி துரைத்தான்
வடநூற் றுறையுந் தென்றிசைத் தமிழும்
விதிமுறை பயின்ற நெறியறி புலவன்
அன்பருள் நாணொப் புரவுகண் ணோட்டம்
நன்றறி வாய்மை நற்றவ முடையோன்
இத்தகை யன்றி யீச னருளால்
உய்த்துணர் வுடையவோ ருண்மை யாளன்
பரிமே லழக னெனப்பெயர் படைத்துத்
தரைமே லுதித்த தலைமை யோனே."

"வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்"

என்ற பழஞ்செய்யுட்கள் தெரிவிக்கும்.

காலம்:—இவர் காமத்துப்பாலின் முதலில் 'இச்சிறப்புப்பற்றி வட நூலுட் போசராசனும்............இதனையே மிகுத்துக்கூறினான்' என்று போசராசனை மேற்கோள்காட்டியிருத்தலால்,

இவர்காலம் போஜராஜன் காலத்துக்குப் பின் என்பது தெளிவாம். போஜராஜன் காலம் 11-ஆம் நூற்றூண்டென்பர். மேற்காட்டிய பாடல்களுள் "வள்ளுவர்சீர்" என்ற பாடல் உமாபதிசிவாசார்யர் செய்ததென்பது நிச்சயமானுல், அவர் பதிஞன்காம்

## XXI

நூற்றூண்டின் தொடக்கத்திலிருந்தவரென்பது

திண்ணமாதலால், இவர் பதிஞேராம் நூற்றூண்டிற்கும் பதிஞன்காம் நூற்றூண்டிற்கும் இடைப்பட்ட காலத்தவரென்பது, தேற்றம்.
சிலாசாசனவாராய்ச்சியாலும் மற்றும் சில காரணத்தாலும் சேனுவரையருடைய சமகாலத்தவரும், அவருக்குப் பிராயத்திஞல் சிறிது குறைந்தவருமாகி கி. பி. 1272 இல் வாழ்ந்திருந்தவர் இவரென்று லெக்ஸிகன் தலைமைப்பண்டிதர் மு. ராகவய்யங்கார்ஸ்வாமிகள் சாஸனத்தமிழ்க்கவிசரிதம் என்ற நூலில் எழுதியுள்ளனர். எட்டுத்தொகையுள் ஒன்றுன பரிபாடலுக்கும் இவர் உரையெழுதியுள் ளார்.
திருமுருகாற்றுப்படைக்குப் பரிமேலழகருரை யென ஒருரை வழங்குகிறது: அது திருக்குறள் பரிமேலழகருரை நடையினும் மிக்க வேறுபாடு டையது; ஆதலின் அது இவர் செய்ததன் றென்பர்.

குடிமையென்ற அதிகாரத்தில்,

"பழங்குடி" என்றஇடத்தில்,'தொன்று தொட்டு வருதல் - சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டுவருதல்' என்று இவர் தமிழ்நாட்டு மூவேந்தர்களைச் சிறப்பித்துக் கூறியிருத்தலால், இவர்க்கு உள்ள தேசாபிமானமும், பாஷாபிமானமும், ராஜாபிமானமும் வெளியாம்.

இந்தப் பரிமேலழகருடைய உரைநடை, செய்யுளுக்குப் * பொழிப்புரை யாக அமைந்துள்ளது; ஓரதிகாரத்திற்கும் மற்றோரதிகாரத்திற்குமுள்ள இயைபை எடுத்துக்காட்டுவது; ஒவ்வோரதிகாரத்துமுள்ள பத்துப்பாடல் களும் இன்ன இன்ன பொருளன என்று சில இடத்துத் தொகுத்தும், சில விடத்துத் தனிப்படவும் எடுத்துக்காட்டுவது; பதசாரத்தை விளக்கிச் செல்வது; பண்டையநூல்களின் சொற்பொருளை ஆங்காங்குத் தழுவியெழுதப்படுவது; வேறுபொருள் தக்கதாயின் அதனை எடுத்துக் காட்டுவதோடு தகாதாயின் அதனைக் காரணங்காட்டி மறுப்பது; நுண்ணிய இலக்கணப் பொருளைத் தெரிவிப்பது; பலஅரிய வடநூற் பொருள்களைத் தமிழர் உணருமாறு தெள்ளிய இனியநடையிற் றெரிப்பது; கற்போர்க்கு விளங்கும் பொருட்டு ஒள்வையுண்டநெல்லிக்கனி இந்திரன்பிறர்மனைநயந்துபெருமை யிழந்தமை என்றாற் போன்றவைகளை உதாரணமாகக் கொண்டது; நுண்ணிதாயாராய்ந்து செல்வதால், மதிநுட்பமுடையவர்க்கே எளிதில் விளங்குவது.

திருக்குறளுக்கு இவர் செய்த இவ்வுரை 'பரிமேலழகியார்விருத்தி' என்ற பெயரால் வழங்கப்பட்டதென்று ஏட்டுப்பிரதிகளினால் தெரிகிறது.

---

* அப்பொழிப்புரை, இடையிடையே பதங்களையமைத்து, பதவுரை யாக இப்பதிப்பில் அச்சிடப்பட்டிருக்கிறது.

அறத்துப்பாலின் இயல் அதிகாரம் என்பவற்றின்

## அட்டவணை.

1. கடவுள்வாழ்த்து
2. வான்சிறப்பு

5. இல்வாழ்க்கை
6. வாழ்க்கைத் துணைநலம்
7. புதல்வரைப்பெறுதல்
8. அன்புடைமை
9. விருந்தோம்பல்
10. இனியவைகூறல்
11. செய்ந்நன்றியறிதல்
12. நடுவுநிலைமை
13. அடக்கமுடைமை
14. ஒழுக்கமுடைமை

## விரதம்:—

25. அருளுடைமை
26. புலான்மறுத்தல்
27. தவம்
28. கூடாவொழுக்கம்
29. கள்ளாமை
30. வாய்மை
31. வெகுளாமை

இல்லறவியல்.



துறவறவியல்.

---

# திருக்குறள்.

'திரு' என்பது சிறப்புப்பொருளுணர்த்தும். சிறுமையுணர்த்துங் குறளென்னும் பண்புப்பெயர் - ஆகுபெயராய், வெண்பாவிற் சிறுமையையுடை யதாகிய இரண்டடிப்பாவை உணர்த்தி,பின் கருவியாகுபெயராய், அக் *குறள் வெண்பாவாலாகிய நூலை உணர்த்தி, இந்நூற்குக் காரணப்பெயராயிற்று; இது - இருமடியாகுபெயர்.

தொல்காப்பியத்திற் செய்யுளியலில் ஆசிரியர், பா நான்கென்றும் அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுக வென்றுங் கூறி, பின்பு அம்மை முதலிய எட்டும் [அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன] தொடர்நிலைச்செய்யுட்கு இலக்கண மென்று கூறுகின்ற இடத்து, "வனப்பியல்தானே வகுக்குங் காலைச், சின்மென் மொழியால் தாய பனுவலோடு, அம்மை தானே அடிநிமிர் பின்றே" என்ற சூத்திரத்தால், 'சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடை யிட்டு வந்த பனுவ லிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம்மையாம்' என்று கூறினமையின், இந்நூல் அங்ஙனங்கூறிய அம்மையா மென்று உணர்க. இன்னும் அச்சூத்திரவுரையில், பேராசிரியர், 'அடிநிமிராது என்றது, ஐந்தடியின் ஏறாது என்றவாறு. தாயபனுவலோடு என்றது, அறம்பொருளின்பமென்னும் மூன்றற்கும் இலக்கணஞ் சொல்லுப: வேறு இடையிடை அவை யன்றியுந் தாய்ச் செல்வது என்றவாறு. அஃதாவது - பதினெண் கீழ்க்கணக்கு என உணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோசெய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம்பொருளின்ப மென அவற்றுக்கு இலக்கணங் கூறிய பாட்டுப் பயின்றுவருமாறும், கார்நாற் பது களவழிநாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டுகொள்க' என்றதும் அறியற்பாலது.

---

* குறள் வெண்பாவாவது-இரண்டு அடியாய், ஈற்றடி

முச்சீரடியாகவும் மற்றையடி நாற்சீரடியாகவும் வரப்பெற்று, காய்ச்சீரும் அகவற்சீரும் வெண் சீர்வெண்டளையும் இயற்சீர்வெண்டளையுங் கொண்டு,மற்றைச் சீருந் தளையும் பெறாமல், காசு பிறப்பு நாள் மலர் என்னும் வாய்பாடுகளில் ஒன்றால் முடிந்து, ஒருவிகற்பத்தாலாயினும், இருவிகற்பத்தாலாயினும் வருவதாம். [அகவற்சீர் என்றது, ஈரசைச் சீர்களை. வெண்சீர் வெண்டளையாவது - காய்முன் நேர் வருவது: இயற்சீர்வெண்டளையாவது - மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது; "காய்முன் நேரும் மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது வெண்டளை." ஒருவிகற்பமாவது - ஓர் எதுகையாய் வருவது; இரு விகற்பமாவது - இரண்டு எதுகை வருவது.]

---

# திருக்குறள்.

## பரிமேலழகருரை.

### அறத்துப்பால.

#### உரைப்பாயிரம்.

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமிலின்பத்து அழிவில்
வீடும் நெறியறிந்து எய்துதற்கு உரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோ
ரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு; அவை - அறம், பொருள், இன்பம்,
வீடு என்பன: அவற்றுள், வீடென்பது - * சிந்தையும் மொழியுஞ் செல்லா
நிலைமைத் தாகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவ தல்லது,
இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன, ஏனை
மூன்றுமேயாம். அவற்றுள், அறமாவது - மனு முதலிய நூல்களில் விதித்
தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம்; அஃது - ஒழுக்கம், வழக்கு,
தண்டம் என மூவகைப்படும். அவற்றுள், ஒழுக்கமாவது - அந்தணர் முத
லிய வருணத்தார் தத் தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைக
ளில் நின்று அவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்; வழக்கா
வது - ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பார் அது
காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேற்

சொல்வது: அது -
கடன்கோடல்முதற் பதினெட்டுப் பதத்ததாம்;
தண்டமாவது - அவ்வொழு
க்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினாரை
அந்நெறி நிறுத்தற்பொருட்டு † ஒப்பநாடி அதற்குத்தக
ஒறுத்தல். இவற்றுள், வழக்குந் தண்டமும்
உலகநெறிநிறுத்தற்பயத்தவாவது அல்லது ஒழுக்கம்போல மக்களுயிர்க்கு
உறுதிபயத்தற் சிறப்பில வாகலானும், அவைதாம் நூலானேயன்றி உணர்வு
மிகுதியானுந் தேயவியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து,
ஈண்டு, தெய்வப்புலமைத் திருவள்ளுவரால், சிறப்புடைய
ஒழுக்கமே அறம்
என எடுத்துக்கொள்ளப்பட்டது. அதுதான்
நால்வகைநிலைத்தாய் வருணந்

---

* தொல்காப்பியச்சிறப்புப்பாயிர உரையில் நச்சினார்க்கினியர் 'வீடுகூறாரோ வெனின்?—அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடுபேற்றிற்கு நிமித்தங்கூறுதலன்றி வீட்டின் தன்மை தமிழாற் கூறாரென்று உணர்க: அஃது, "அந்நிலை மருங்கி னறமுத லாகிய, மும்முதற் பொருட்கு முரிய வென்ப"[3] என்பதனான் உணர்க: இக்கருத்தானே வள்ளுவநாயனாரும் முப்பாலாகக்கூறி
மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறினார்' என உரைத்ததனால், நச்சினார்க்கினியரது கருத்து இவ்விஷயத்தில் வேறுதல் விளங்கும். தொல்காப்பியப் பொருளதிகாரவுரைத் தொடக்கத்தில்
'இந்நிலையாமையானும்
இவற்றானும் வீட்டிற்குக் காரணங் கூறினார்' என்றதுங் காண்க.

† புறநா—10.

Ib

தோறும் வேறுபாடுஉடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து, எல்லார்க்கும் ஒத்தலின் பெரும்பான்மையாகிய பொதுவியல்பு பற்றி, இல்லறம் துறவறம் என இருவகைநிலையாற் கூறப்பட்டது; அவற்றுள், இல்லறமாவது - இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கண் நின்று அதற்குத்துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படுவது ஆதலின், அதனை முதற்கண் கூறுவான் தொடங்கி எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள்வாழ்த்துக் கூறுகின்றார்.

(குறிப்புரை.) அறத்துப்பால்-தருமத்தையுணர்த்தும் பாகம்; இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை. இந்திரன் முதலிய இறையவர் பதங்கள் - போகஸ்தானங்கள்; இறையவர் - தேவர்கள், பதம் - இடம். அந்தமில் இன்பத்து அழிவுஇல் வீடு - நலமந்தமில்லாதோர் நாடு; அந்தம்-முடிவு; அந்தம்இல் இன்பம் - எல்லையில்லாத இன்பம். எய்துதல்- அடைதல். மாந்தர் - மனிதர். உறுதி - நிலையான நன்மை; உறுதிதருவதனை 'உறுதி' என்றது-காரியவாகுபெயர். பொருள்-புருஷார்த்தம்; ஜீவனால் வேண்டப்படும் பயன். அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றை, முறையே, வட

நூலார், தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்பர். சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்து-மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாததன்மையது. நூல்- சாஸ்திரம். அறம்-(இன்னது செய்யத் தக்கது என நூல்களினால்) வரையறுக் கப்பட்டது: அறு - பகுதி, அம் - செயப்படுபொருள் விகுதி; இதற்கு எதிர் மொழி - மறம்: அதருமம்; அதற்கு - (இன்னது செய்யத்தகாதது என நூல்களினால்) மறுக்கப்பட்டதென்பது பொருள். ஒழுக்கம் வழக்கு தண்டம் என்பவற்றை, வடநூலார், முறையே, ஆசாரம் வியவகாரம் பிராயச்சித்தம் என்பர். அந்தணர் - பிராமணர். வருணம் -சாதி. 'முதலிய' என்றதனால், க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் முதலியோரைக் கொள்க. பிரமசரியம்-ஆசிரியனிடத்து ஓதிக் கற்று விரதங்காத்து விவாகமின்றி யிருக்கும் நிலை; நிலை-ஆச்சிரமம். 'முதலிய' என்றதனால், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்பன கொள்க. கிருகஸ்தம் - இல்லறத்தின் வழுவாது மனையாளோடும் இல்லத்திற் கூடி வாழும் நிலை. வானப்பிரஸ்தம்-இல்லந்துறந்து மனைவியோடாயினும் தனித்தாயினும் வனத்தில் தவஞ்செய்யும் நிலை. சந்நியாசம்-முற்றத் துறந்த நிலை. கடன்கோடல் முதற் பதினெட்டுப் பதத்தது-கடன் வாங்குதல், அடைக்கலமாகவைத்த பொருள், உடையனல்லாதவன் விற்றல், கூடிமேம் படுதல்,கொடுத்ததை மீண்டுங்கொடாமை, கூலிகொடாமை, கட்டுப்பாடுகடத்தல், விற்றுங்கொண்டும் உள்ளம் ஒப்பாமை, ஒப்பிப் பணிசெய்யாமை, எல்லை வழக்கு, சொற்கொடுமை,

தண்டக்கொடுமை, திருடு, வன்செய்கை, மாதரைக் கவர்தல், மாதர் ஆடவர் தருமம், தாயபாகம், சூது எனப் பதினெட்டு வகையது. வழீஇயினார் - தவறிநடந்தவர், ஒப்பநாடி-பக்ஷபாதமில்லாமல் ஆராய்ந்து. ஒப்ப-சமமாக, நடுவுநிலைமையாக. அதற்குத் தக ஒறுத்தல்-அந்தந் தக் குற்றத்திற்குத் தக்கபடி தண்டித்தல், உலகநெறி நிறுத்தற்பயத்த ஆவது

ஐ திருக்குறள்

அல்லது - இவ்வுலகவழியிலே உயிர்களை

நிலைநிறுத்துதலாகிய பிரயோசனத்தைக்

கொண்டிருப்பனவாவது அல்லாமல், உறுதிபயத்தற்சிறப்பில - நன்மை தருஞ் சிறப்பை யுடையனவல்ல. தேய இயற்கை - நாட்டுநடத்தை. ஈண்டு- இங்கே, புலமை - அறிவு. முதற்கண் - முதலில். கூறுவான் - சொல்ல. இலக்கியம் - லக்ஷயம்.

அறஞ்செய்தற்குஉரிய இருவகைநிலையுள் இல்வாழ்க்கைநிலை முந்தியதாதலின் முன்பும், அதனைத் துறக்கும்நிலை பிந்தியதாதலின் அதன்பின்பும் வைக்கப்பட்டன வென்க.

"மூன்றுறுப்படக்கிய தன்மைத்தாயின், தோன்றுமொழிப் புலவரது பிண்ட மென்ப" என்னுந் தொல்காப்பியத்துச் செய்யுளியற் சூத்திரத்தின் படி, திருக்குறள், பால் இயல் அதிகாரம் என்னும் மூன்று

உறுப்புக்களையும் அடக்கியதொருபிண்டமாமென்று உணர்க.

# பாயிரம்.

## முதல் அதிகாரம்.—கடவுள் வாழ்த்து.

அஃதாவது-கவி தான் வழிபடுகடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக்கடவுளையாதல் வாழ்த்துதல்; அவற்றுள், இவ்வாழ்த்து-ஏற் புடைக்கடவுளையென அறிக: என்னை?—சத்துவம்முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றான் மூவராகிய முதற்கடவுளரோடு இயைபு உண்டாகலான், அம்மூன்றுபொருளையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமை யாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினா ரென உணர்க.

(கு - ரை.) வழிபடுகடவுள்-குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கப்படுகிற கடவுள்; வைஷ்ணவர்க்கு விஷ்ணுவும், சைவர்க்குச் சிவனும், ஜைநர்க்கு ஜிநனும், பௌத்தர்க்குப் புத்தனும் போல்வன. எடுத்துக் கொண்ட பொருட்கு ஏற்புடைக்கடவுள்-தான் செய்யத்தொடங்கிய நூலிற் சொல்லப்படும் விஷயத்திற்குத் தகுதியுடைய கடவுள்; இராமாயணத்திற்கு இராமனும், பாரத பாகவதங்களுக்குக் கண்ணனும், கந்தபுராணத்துக்குச் சுப்பிரமணியனும் போல் வன. என்னை-என்னவென்றால். சத்துவம் முதலிய குணங்களால் மூன்றாகிய உறுதிப்பொருள்-சாத்துவிக

குணத்தால் அறமும், இராஜசகுணத்தாற் பொரு ளும், தாமசகுணத்தால் இன்பமு மாகிய புருஷார்த்தங்கள். அவற்றுள் மூவ ராகிய முதற் கடவுள்-அக்குணங்களால் விஷ்ணு பிரமன் சிவன் என்னுந் திரி மூர்த்திகளின் சொரூபியாகிய பரபிரஹ்மம். இயைபு - சம்பந்தம்.

அதிகாரம்-அதிகரித்தல்; அது இருவகைப்படும்: அவற்றுள் ஒன்று-அரசன் தான் இருந்த இடத்திலே இருந்து தன் நாடு முழுவதும் தன் கட்டளை

## க - ஆம் அதிகாரம்—கடவுள்வாழ்த்து

ரு

யில் நடக்கச் செய்தல்போல, ஒருசொல் நின்றஇடத்தே நின்று பல செய்யுட்கள் தன் பொருளையே சொல்விரும்படி செய்வது; மற்றொன்று-அங்கங்குச் சென்று கட்டளை நிறைவேற்றும் அதிகாரிகள் போல ஓரிடத்து நின்ற சொல் பல செய்யுட்களோடுஞ் சென்று இயைந்து தன் பொருளையே கூறுவிப்பது: [இவற்றை முறையே வடநூலார் யதோத்தேசபக்ஷ மென்றும், காரியகால பக்ஷ மென்றுங் கூ றுவர்.] அவற்றுள் இங்கு அதிகாரம் என்றது, முதலிற் கூறியவாறு ஒரு பொருளையே குறித்துவரும் பல செய்யுட்களின் தொகுதி யாகிய நூற்கூறுபாட்டை. பால் இயல் என்பவற்றிற்கும் இதுவே பொருளா யினும், இந்நூலில் சங்கேதத்தால், பால்

என்றது-பெரும்பிரிவுக்கும், இயல் என்றது-அதற்கு உட்பட்ட சிறு பிரிவுக்கும், அதிகாரம் என்றது-அதன் உட் பிரிவுக்குமாகக் கொள்ளப்பட்டது. அதிகாரம்-வடசொல். இதற்கு-முறைமை யென்று பொருள்கூறுவர் நச்சினார்க்கினியர்.

கடவுள் - மனமொழிமெய்களைக் கடந்த பரம்பொருள்; கடவுள்-தொழிற் பெயர்: கட - பகுதி, உள் - விகுதி; கடத்தலையுடைய பொருளுக்குத் தொழி லாகுபெயர். வாழ்த்து - பிறவினை முதனிலைத்தொழிற்பெயர். கடவுள்வாழ் த்து நூலிற்கு முதலிலிருத்த ல் அதிகாரமுறைமை என்று அறிக.

பாயிரம், முகவுரை, நூன்முகம், புறவுரை என்பன ஒருபொருட்சொற்கள். பொதுப்பாயிரமென்றும், சிறப்புப்பாயிர மென்றும் பாயிரம் இருவகைப் படும். தன்னாலுரைக்கப்படும் ஒரு நூலுக்கு மாத்திரமே உரியதன்றிப் பலநூல் களுக்கும் பொதுப்பட உரைக்கப்படுவது பொதுப்பாயிரம். அங்ஙனமன்றித் தன்னாலுரைக்கப்படும் ஒருநூலுக்கே உரியதாம்படி உரைக்கப்படுவது சிறப் புப்பாயிரம். இந்நூலின் முதல் நான்கு அதிகாரங்களைச் சிற்சில காரணங்க ளால் இருவகையாகவுங் கொள்ள இடமுண்டாதல்பற்றி, அவை,பாயிரமெனப் பொதுப்படக் கூறப்பட்டன. இப்பாயிரத்தை அறத்துப்பாலினுட்பட்ட தென் பர் ஒருசாரார்; மற்றொருசாரார் அதற்கு வெளிப்பட்ட தென்பர். திருவள் ளுவமாலையில் தொடித்தலை விழுத்தண்டினார் "அறநான்கு"

என்றதனால், அறத்துப்பாலினுட்பிரிவுகள் நான்கு என விளக்கும்; அவை இன்னவை யென்பதை அத்திருவள்ளுவமாலையில் "பாயிரம் நான்கு இல்லறம் இருபான் பன்மூன்றே, தூயதுறவறம் ஒன்று ஊழ் ஆக—ஆய, அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின், திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து" என்று எறிச்சலூர் மலாடனார் கூறியதனால் விளக்கும். இவை, 'அறத்துப்பாலினுட் பட்டது பாயிரம்' என்பதற்கு ஆதாரமாம். அதற்கு வெளிப்பட்டதென்பதற்கு ஆதாரம் - அத்திருவள்ளுவமாலையில், "வீடொன்று பாயிரம் நான்கு விளங்கு அறம், நாடிய முப்பத்துமூன்று ஒன்று ஊழ்" என்று சிறுமேதாவியார் கூறியது காண்க; அதன் உரையில்'அறத்துப்பாலுள் அடங்காது அதனை விட்டு நூற்கெல்லாம் பொதுவாய் நிற்றலின், 'வீடொன்று பாயிரம்' என்று கூறினார்' என்றதும் இங்கு அறியத்தக்கது. ஆகவே, இருவகையும் தொன்று தொட்டவழக்கமென விளங்கும்.

சீ

## திருக்குறள்

க. அகர முதல வெழுத்தெல்லா மாதி

பகவன் முதற்றே யுலகு.

(இ-தன்பொருள்.) அகரம் முதல - அகரமாகிய முதலையுடையன, எழுத்து எல்லாம் - எழுத்துக்களெல்லாம்; (அதுபோல), ஆதி பகவன் முதற்று - ஆதிபகவனாகிய முதலை யுடைத்து, உலகு—; (என்றவாறு.)

இது, தலைமைபற்றி வந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை - விகாரத்தா னன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை - செயற்கையுணர்வா னன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலானுங் கொள்க. தமிழெழுத்திற்கே யன்றி வடவெழுத்திற் கும் முதலாதல் நோக்கி, 'எழுத்தெல்லாம்' என்றார். 'ஆதிபகவன்' என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை, வடநூல்முடிபு. 'உலகு' என்றது, ஈண்டு உயிர்கள்மேல் நின்றது. காணப்பட்ட உலகாற் காணப்படாத கடவுட்கு உண்மைகூறவேண்டுதலின், 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என உலகின் மேல் வைத்துக் கூறினார்: கூறினாரேனும், 'உலகிற்குமுதல் ஆதிபகவன்' என்பது கருத்தாகக் கொள்க. ஏகாரம் - தேற்றத்தின்கண் வந்தது.

இப்பாட்டான், முதற்கடவுளது உண்மை கூறப்பட்டது.

(கு - ரை.) ஆதி பகவன் - முதற் கடவுள். பகவன் - பகவாந் என்னும் வடமொழியின் விகாரம்; நிறைந்த மகிமை, தைரியம், கீர்த்தி, ஐசுவரியம், ஞானம், வைராக்கியம் என்கிற ஆறுகுணங்களுக்கும் 'பகம்' என்று பெயராதலால், பகவானென்பதற்கு,இந்த ஆறுகுணங்களையு முடையவ

னென்றுபொருள். ஆதிபகவன் என்பது-வடமொழிப் புணர்ச்சியாதலால்,வலி மிகவில்லை. உடைத்து - உடையது. எடுத்துக்காட்டுவமையாவது - உபமானத்தையும் உபமேயத்தையும் வேறு வேறு வாக்கியங்களாக நிறுத்தி இன்னது உபமானம்- இன்னது உபமேயம் என்பது தோன்ற இடையில் உவமவுருபு கொடாமற் கூறும் அணி: இதனை உவமையணியில் அடக்குதல் தமிழ்நூலார் கொள்கை: வடநூலாருள் ஒருசாரார் த்ருஷ்டாந்தாலங்கார மென வேறு கக்கூறுவர்; ஆசிரியர் தொல்காப்பியனார் வேறுபடவந்தஉவமத்தோற்றத்தில் அடக்குவர். எடுத்துக்காட்டுவமையில் உபமான உபமேயவாக்கியங்களைத் தனித்தனி நிறுத்தும்போது பொதுத்தன்மை வேறுபட்டிருக்கவேண்டுமாதலாலும், இச்செய்யுளில் பொதுத்தன்மையாகிய முதன்மையாதலென்பது அங்ஙன் வேறுபட்டிராமையாலும், இது எடுத்துக்காட்டுவமையணியன்று: தொடர்முழுதுவமையணியாகுமென்பர், ஒருசாரார்:தண்டியாசிரியர் இதனை, மறுபொருளுவமையென்பர். தலைமை-முதன்மை. விகாரத்தான் அன்றி நாத மாத்திரையான இயல்பாற் பிறத்தல் - ஒலியின் வேறுபாட்டினாற் பிறவாமல் வாய்திறந்துஎழும் ஒலிமாத்திரமாகிய இயற்கையாற் பிறத்தல்.இதுபற்றியே, "மெய்யி னியக்கம் அகரமொடு சிவணும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில்,கடவுள்எல்லாச் சராசரப் பொருள்களிலும் அவற்றின் தன்மையாய் நிற்கு மாறு போல அகரம் எல்லா எழுத்துக்களிலுங் கலந்து அவற்றின்

தன்மை

க - ஆம் அதிகாரம்—கடவுள் வாழ்த்து

ஏ யாய் நிற்கும் என்றது; ஸ்ரீபகவத்கீதையில் கண்ணன் "எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே" எனக் கூறியவாறுங் காண்க. அன்றியும், பாஷையை அமைத்தற்குத் தொடுத்த ஒலிகளுள் அகரம் முதல்நாதம் என்பது, அனுபவ சித்தம். வாமந புராணத்தில் 'அகரம் எல்லாச்சொற்களுக்கும் மூல மாதலாலும், பிரஹ்மம் எல்லாப் பொருள்களுக்கும் மூல மாதலாலும், அ என்று பரபிரஹ்மத்துக்குப் பெயர்' என்று கூறியிருக்குமாறு அறிக. நாதம் - உயிர்முயற்சியா லெழுகிற சமாநவாயுவினுல் ஆவது. செயற்கை யுணர்வான் அன்றி இயற்கையுணர்வான் முற்றும் உணர்தல்-(கல்வி கேள்வி முதலியவற்ருல் ஆகுஞ்) செயற்கை யறிவினு லல்லாமல் இயற்கை யறிவினுல் எல்லாம் அறிதல். இருபெயரொட்டுப்பண்புத்தொகை யாவது'ஆகிய' என்னும் பண்புருபு இடையிலே தொக்கு நிற்கச் சிறப்புப்பெயரும் பொதுப்பெயருமாய் ஒருபொருளைக் குறிக்கிற இருசொற்கள் தொடர்ந்து நிற்பது. ஈண்டு - இங்கே. உலகு என்பது லோகமென்னும் வடமொழியின் திரிபு என்று சேனுவரையர் கொள்கை; தமிழ்ச்சொல்லேயாகு மென்பது, நச்சினர்க்கினியர் மதம்: இது இடத்தை யுணர்த்தும்பொழுதிற் போல உயிர்களை யுணர்த்தும்பொழுதும் ஆகுபெய ரன்று இயற்பெயரே என்பது, இருவர்க்கும் ஒப்பமுடிந்தது: வடநூலார்

கொள்கையும் இதுவே. உலகு என்னும் பலபொருளொருசொல் ஜீவாத்மாக்களை உணர்த்துதலை "உலக முவப்ப வலனேர்பு திரிதரு" என்னுந் திருமுருகாற்றுப் படையிலுங் காண்க. இனி, இங்கே, உலகு என்பது - இரட்டுற மொழிதலால், உலகங்களையும் அவ்வுலகத்துப் பொருள்களையும் உணர்த்திற் றென்று கொள்ளுதலுமாம். உண்மை - இருப்பு. காணப்படும் புகையைக் கொண்டு நெருப்பு உண்டு என அறியும் அநுமானப் பிரமாணத்தால், காணப்படும் உலகத்தோற்றத்தைக் கொண்டு அதற்குக் காரணமாகிய கடவுளொருவருண்டென்று கொள்ள வேண்டுமென்க: இது, நையாயிகர் மதம். தேற்றம் - உறுதி. எல்லா நூல்களும் மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டுதலால், 'அகரம்' என்று தொடங்கினர்; காத்தற்றொழிற்கு உரிய கடவுளாகிய திருமாலின் திருநாமங்களில் அகரம் முதன்மையான நாமமாதலால், மங்கலச்சொல்லாமென்று அறிக. அகரமுதல், பகவன்முதல் - இருபெயரொட்டுப் பண்புத்தொகைகள். முதல - பலவின்பாற் குறிப்பு முற்று; முதல்-பகுதி. இதன் ஒருமை- முதற்று. எழுத்து - எழுதப்படுவதென்னும் பொருளில் செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்ட பெயர்: இனி, பகவன்-ஐந்து ஞானத்துள்ளுஞ் சிறந்த திரிகால உணர்ச்சியாகிய கேவலஞான முடையவனென்று கூறி, அருகக்கடவு ளென்று உரைப்பாருமுளர்; "செறிவன் சினேந்திரன் சித்தன்

பகவன்" என்பர். சிலப்பதிகாரத்தும். இனி, "அந்தமி
லாதியம்
பகவன்" என்று நம்மாழ்வார் அருளிச்செய்திருத்தலால்,
என்றும் பொருள்கொள்ளலாம்.

பகவன் - திருமால்

(௧)

உ. கற்றதனு லாய பயனென்கொல்
னற்று டொழா அ ரெனின்.

வாலறிவ



(இ - ள்.) கற்றதனுல் ஆய பயன் என் -
(எல்லா நூல்களையுங் கற்ற
வர்க்கு) அக்கல்வியறிவான் ஆய பயன் யாது? வால்
அறிவன்-மெய்யுணர்
வினையுடையவனது, நல் தாள்-நல்ல தாள்களை, தொழாஅர்
எனின்-தொழா ராயின்; (எ - று.)

எவன் என்னும் வினைப்பெயர் - என் என்று ஆய்,
ஈண்டு, இன்மை குறித்துநின்றது. கொல்என்பது -
அசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந் தாகலின், 'நற்றாள்'
என்றார்.

ஆகமவறிவிற்குப்பயன் அவன் தாளைத்தொழுது
பிறவியறுத்த லென்பது இதனுற் கூறப்பட்டது.

(கு - ரை.) மெய்புணர்வு-உண்மையறிவு; ஐயம் திரிபு இல்லாத அறிவு: தத்துவஞானம். 'எவன்' என்பது வினைப்பெயர்:இது, அஃறிணை யிருபாலுக் கும் பொது;உயர்திணை யன் று;இதனை, வினைப்பொருளைத் தருங் குறிப்புவினை முற்றுஎனினுமாம். 'எவன் 'என்பது என் என்று ஆனது,தொகுத்தல் விகாரம். இன்மை-இல்லாமை. கொல்-இடைச்சொல். அசைநிலை யாவது-ஒருபொருளை யும் உணர்த்தாமற் பெயர்ச்சொல்லோ டாயினும் வினைச்சொல்லோ டாயினுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்றல். பிறவிப் பிணிக்கு மருந்து - பிறப்புத்துன் பங்களாகிற நோயை ஒழித்தற்கு மருந்து போல்வது. ஆகம அறிவு - சாஸ்திரங்களைக் கற்றதனா லாகிய அறிவு. இதனால் - இப்பாட்டால். ஆய - பெய ரெச்சம். தொழாஅர் - அளபெடை, செய்யு ளோசை நிறைக்க வந்தது. இனி, "அறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்" எனச் சிலப்பதிகாரத்து வருத லால், வா லறிவன்-எல்லாப் பொருளையும் அறியுந் தூய அறிவை யுடையவ னென் று, அருகக்கடவு ளென்பாரு முளர். இனி, "அடலாழி கொண்ட அறி வன்" என்று ஆழ்வார் அருளிச்செய்திருத்தலால், அறிவன் - திருமா லென் றுங் கொ ள் ள லாம்.

(உ)

ரு. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்

நிலமிசை நீடுவாழ் வார்.

(இ - ள்.) மலர்மிசை ஏகினன் - மலரின்கண்ணே

சென்றவனது, மாண் அடி - மாட்சிமைப்பட்ட அடிகளை, சேர்ந்தார்—, —மிசை நிலம்-(எல்லாஉல கிற்கும்)மேலாய வீட்டுலகின்கண், நீடு வாழ்வார்-அழிவின்றிவாழ்வார்;(எ-று.)

அன்பான் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடி
வோடு விரைந்துசேறலின், 'ஏகினான்' என
இறந்தகாலத்தாற் கூறினார்;
என்னை?—"வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும், ஓராங்கு வரூஉம் வினைச்
சொற் கிளவி, இறந்த காலத்துக் குறிப்பொடுகிளத்தல், விரைந்த பொருள
வென்மனார் புலவர்" என்பது ஒத்தாகலின். இதனை, 'பூமேல் நடந்தான்'என்
பதோர் பெயர் பற்றிப் பிறிதொருகடவுட்கு ஏற்றுவாரும் உளர். சேர்தல்-
இடைவிடாது நினைத்தல்.

க - ஆம் அதிகாரம்—கடவுள்வாழ்த்து

கூ

(கு - ரை.) மலரின்கண் - மலரில்: என்றது, இருதய கமலத்தை. மலர்போலும் வடிவமுடைய நெஞ்சை 'மலர்' என்றது, உவமையாகுபெயர். மிசை - ஏழனுருபு. சென்றவன் - விரைந்துவந்துவீற்றிருப்பவன். மாட்சி மைப்பட்ட - பெருமை பொருந்திய. அடி - பாதம். சேர்ந்தார் - மனத் தாற் கிட்டினவர். நிலமிசை - மிசை

நில மென மாறுக. நீடு - நீடித்து; நெடுங்காலம்: பகுதியே வினையுரியாய் நின்றது. நினைவார்-தியானிப்பவர். சேறலின் - செல்லுதலினால். "வாராக் காலத்து" என்னும் தொல்காப்பிய வினையியற் சூத்திரத்துக்குப் பொருள் - எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் ஒருபடியாக வருகிற வினைச்சொல்லாகிய சொல்லின்பொருளை இறந்தகாலத் தாற் குறிப்போடு சொல்லுதல் விரைவுப்பொருளை யுடையன என்று சொல்லுவர் ஆசிரியர் என்பது; நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் விரைவுபற்றி இறந்தகாலமாகச் சொல்லலாமென்பது கருத்து: இது, காலவழுவமைதி; [நன் பொது. ௩௩.] ஒத்து - இலக்கணம். அருகக்கடவுள் தாமரைமலரை வாகன மாகக்கொண்டு அதனை ஊர்ந்து சென்றனனென்று ஜைநநூல்களிற் சொல்லப்படுதலால், 'பூமேல் நடந்தான்' என்று அக்கடவுளுக்கு ஒருபெயர்: அதனை, "தேனவிழ்த் தளிக ளெல்லாஞ் செவ்வழி பாடா நின்ற, பூநகைத் திலங்கு கஞ்சப் பொகுட்டின்மீதே யொதுங்கும், நான்முகக் கடவுள்," "மட லவிழ் கமலவூர்தி வந்த வாமன்," "நாண்மலர்வான்,மீயகத்தே வர மேற்கொ ள்ளுந் தேவர்," "மலரேந்து சேவடிய மால்," "செய்ய தாமரையி,னங்க ணடி வைத் தருளு மாதியாய்," "மலர்மிசை நடந்த மலரடி" என்பன காண்க. எல்லா மலர்களினும் தாமரை சிறத்தல் பற்றி, 'மலர்' எனப்பட்டது; "பூவெனப்படுவது பொறி வாழ் பூவே" என்பது காண்க; (பொறி - இலக்குமி.) "மனனக மலமற மலர்மிசை யெழுதரு, மன னுணர் வளவிலன்" என்று ஆழ்வார் அருளிச்செய்திருத்தலால்,

மலர்மிசை ஏகினான்-திருமால் என்றுமாம்.

௪. வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

(இ - ள்.) வேண்டுதல் வேண்டாமை இலான் அடி - (ஒருபொருளையும்) விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன் அடியை, சேர்ந்தார்க்கு—, யாண்டும் எக்காலத்தும், இடும்பை - பிறவித்துன்பங்கள், இல - உளவாகா; (எ - று.)

பிறவித்துன்பங்களாவன - தன்னைப்பற்றி வருவனவும், பிற வுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவும் என மூவகையான் வருந் துன்பங்கள். அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டும் இன்மையின், அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின.

(கு - ரை.) விழைதல் - விரும்புதல். உளவாகா-இல்லையாம். தன்னைப் பற்றி வருவன - சரீரத்தைப்பற்றி வருந் தலைநோய் முதலியவும், மனத்தைப் பற்றிய காமம் கோபம் முதலியவும்; இவை, ஆத்யாத்மிகம் எனப்படும். பிறவுயிர்களைப்பற்றி வருவன - மனிதர் விலங்கு பிசாசு முதலியவற்றால் நேர் பவை; இவை, ஆதிபௌதிகம் எனப்படும். தெய்வத்தைப்பற்றிவருவன -

காற்று மழை இடி வெயில் முதலியவற்றால் நேர்பவை; இவை, ஆதிதைவிகம் எனப்படும். இவற்றை, வடநூலார் தாபத்திரயமென்பர். அவ்விரண்டும் - வேண்டுதலும் வேண்டாமையும்.

வேண்டுதல்வேண்டாமை-உம்மைத்தொகை.

சேர்ந்தார்க்கியாண்டும் - குற்றியலிகரம், அலகு பெற்றுநின்றது. யாண்டும், உம்மை - முற்றுப்பொருளது. 'யாண்டு மில' என்றதனால், கடவுளைத் தியானித்து மனஞ்சலிப்பின்றி நல்லொழுக்கத்தில் நிற்பவர் இம்மையில் தமக்கு நேருந் துன்பங்களை மனந் தளராமல் பொறுப்பாரென்பதும்; மறுமையில் வீடுபெறுதலால் அத்துன்பம் விட்டகலும் என்பதும் பெற்றாம். "பகை நண்பொடில்லான்" என்று சீவகசிந்தாமணியில் அருகக்கடவுளைக் கூறியிருத்தலால், வேண்டுதல் வேண்டாமையிலான் என்பதற்கு - அருகக்கடவுளென்று கூறுவாருமுளர். "கொள்கை கொளாமை யிலாதான், எள்க விராகமிலாதான்" என்று ஆழ்வார் அருளிச்செய்திருத்தலால், வேண்டுதல் வேண்டாமையிலான் - திருமாலாகவுமாம். (அ)

ரு. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(இ - ள்.) இருள் சேர்-மயக்கத்தைப்பற்றி வரும், இரு வினை உம்-(நல் வினை தீவினை என்னும்) இரண்டுவினையும், சேரா - உளவாகா : இறைவன்-

இறைவனது, பொருள் சேர் புகழ் - மெய்ம்மைசேர்ந்த புகழை, புரிந்தார் மாட்டு - விரும்பினாரிடத்து; (எ - று.)

இன்ன தன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை 'இருள்' என்றும், நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலான் 'இருவினையுஞ் சேரா' என்றுங் கூறினார். இறைமைக்குணங்கள் இலராயினாரை உடையரெனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள்சேரா ஆகலின், அவை முற்றும் உடைய இறைவன் புகழே 'பொருள்சேர் புகழ்' எனப்பட்டது. புரிதல் - எப்பொழுதுஞ் சொல்லுதல்.

(கு - ரை.) மயக்கமாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லை யெனவும், மற்றும் இத்தன்மையனவுஞ் சொல்லும் பொய்ந்நூல் வழக்குக்களை மெய்ந்நூல்வழக்கென்று துணிதல்; குற்றியை மகனென்றும் இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றைப் பிறிதொன்றாகத்துணிதலும், அது: மயக்கம், அவித்யை, விபரீத ஞானம், மருள், இருள் என்பன- ஒருபொருட்சொற்கள். கருமங்களுக்கு அவித்யை காரணமாதலை "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும், மருளானும் மாணாப் பிறப்பு" என மேல் மெய்யுணர்த லென்னும் அதிகாரத்துட் கூறுவதனானும் உணர்க. இங்கே 'நல்வினை' என்றது, அழியுந் தன்மையனவாகிய சுவர்க்க இன்பம் முதலிய காமியங்களைத் தருவனவாகிய யாகம்முதலியவற்றின்

பயனே; இவை, முத்திக்கு
நேரே காரணமாகிய தத்துவஞானத்தை உண்டாக்காமை மாத்திரமேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாமல் தடை செய்து நிற்றலு முடையனவாம்; ஆதலால், இந் நல்வினை தீவினை இரண்டும் ஒரு



வனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துவதிற் பொன்விலங்கும் இருப்பு விலங்கும் போலத் தம்முள் ஒப்பனவா மென்க; ஆனது பற்றியே, 'இரு வினையுஞ் சேரா' என்றார். இறைவன்-தலைவன். இறைமைக் குணங்கள் - தலைவனுதற்கு ஏற்ற முற்றுமறிதல் முதலிய நற்குணங்கள். உடையர்- அக்குணங்களை யுடையவர். சேரா-அஃறிணைப் பன்மை எதிர்மறை முற்று. மாட்டு - ஏழனுருபு. இரு வினையும், உம் - இனைத்தென் றறிபொருளில் வந்தது. சிலப்பதிகாரத்திலே அருகக்கடவுளின் நாமாவளியில் "இறைவன்" என்று ஒரு பெயர் கூறப்பட்டிருத்தலால், இங்கே அருகனென்று உரைப்பாருமுளர். "இருந்தானென்னுள்ளத் திறைவன்" என்று ஆழ்வார் அருளிச்செய்தலால், இறைவன் - திருமாலாகவுமாம்.
(ரு)

சு. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ

ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(இ - ள்.) பொறி-(மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும்ஐம்)பொறி களை, வாயில் - வழியாகவுடைய, ஐந்து - ஐந்து அவாவினையும், அவித்தான்அறுத்தானது, பொய் தீர் ஒழுக்கம் நெறி - மெய்யான ஒழுக்கநெறியின் கண், நின்றார் - வழுவாது நின்றார்,—நீடு வாழ்வார் - (பிறப்பின்றி) எக்காலத்தும் (ஒருதன்மையராய்) வாழ்வார்; (எ - று.)

புலன்கள் ஐந்தாகலான், அவற்றின்கண்செல்கின்ற அவாவும் ஐந்தாயி ற்று. ஒழிக்கநெறி ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமையின், ஆண்டை ஆறனுருபு - செய்யுட்கிழமைக்கண் வந்தது; 'கபிலரது பாட்டு' என்பதுபோல.

இவை நான்குபாட்டானும், இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும் அவன் நெறி நிற்றலுஞ் செய்தார் வீடுபெறுவ ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பொறி - பஞ்சேந்திரியம். அவா - பொருள்களின் மேலே தோன்றும் பற்றுள்ளம். அறுத்தான்-ஒழித்தவன். பொய் தீர் நெறி எனவே, மெய்யான நெறியாயிற்று. அறுத்தானது ஒழுக்க நெறி : அறுத்த கடவு ளாற் சொல்லப்பட்ட வேதம் முதலிய நூல்களிற் கூறப்பட்ட நல்லொழுக்க முறைமை;என்றது,இங்கு, விதிப்படி அருச்சித்தல் பூசித்தல்

முதலியவற்றை. புலன்கள் ஐந்து - ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பன; வடநூலில் ஸ்பரிசம், ரசம், ரூபம், கந்தம், சப்தம் எனப்படும். ஆண்டை ஆறனுருபு - ஐந் தவித்தான் என்ற அவ்விடத்துத் தொக்கு நின்ற ஆறாம் வேற்றுமை யுருபு. செய்யுட் கிழமை, பொருட்பிறிதின்கிழமைப்பொருளில் அடங்கும்; இதனைத் தொல்காப்பியனார் 'தெரிந்து மொழிச் செய்தி' என்பர். மூன்று நான்காம் பாட்டுக்களால் கடவுளை நினைத்தவர் வீடுபெறுவ ரென்றும், ஐந்தாம்பாட்டால் அவனைவாழ்த்தியவர் வீடுபெறுவ ரென்றும், ஆறாம்பாட்டால் அவன் நெறிநின்றவர் வீடுபெறுவ ரென்றுங் கூறப்பட்டது. ஐந்து - அவாவுக்கு, எண்ணலளவையாகுபெயர். அவித்தான், நின்றார் - பெயர்கள். ஒழுக்கம்- தொழிற்பெயர். 'ஐந்தவித்தான்,' 'பொய்தீர்' என்பன -

இயற்கையைச் சுட்ட திருக்குறள்

சொன்னவை. சிலப்பதிகாரத்து "ஐவரைவென்றோன்" என்று அருக

னைக் கூறியிருத்தலால், ஐந்தவித்தான் - அருகக்கடவுள் என்பாரு முளர். 'இருடீகேசன்' என்னுந் திருநாமத்தின் கருத்தால், ஐந்தவித்தான் - திருமால் என்றுங் கொள்ளலாம்; ஹ்ருஷீக ஈசன்-இந்திரியங்கட்குத் தலைவன்.

எ. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்

மனக்கவலை மாற்ற லரிது.

(இ - ள்.) தனக்கு உவமை இல்லாதான்-(ஒருவாற்றானும்) தனக்கு நிக ரில்லாதவனது, தாள் - தாளை, சேர்ந்தார்க்கு அல்லால் - சேர்ந்தார்க்கு அல்லது, மனம் கவலை மாற்றல் - மனத்தின்கண் நிகழுந் துன்பங்களை நீக்குதல், அரிது - உண்டாகாது; (எ - று.)

"உறற்பால, தீண்டா விடுத லரிது" என்றாற்போல, ஈண்டு அருமைஇன்மைமேல் நின்றது. தாள்சேராதார் பிறவிக்கு ஏதுவாய காமவெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின், பிறந்து இறந்து அவற்றான்வருந் துன்பங்களுள் அழுந்துவர் என்பதாம்.

(கு - ரை.) ஒருவாற்றானும் - ஒருவகையாலும். நிகர் - ஒப்பு. தாள் - திருவடி. நிகழும்-உண்டாகிற. "உறற்பால, தீண்டா விடுத லரிது" என்னும் மேற்கோள், நாலடியார் - பழவினை-க ஆம் செய்யுளில் உள்ளது; ஊழ்வினையால் வரத்தக்க நன்மைதீமைகள் அடையாமல் விடுவதில்லை என்று பொருள். அரிது - இல்லை. அவற்றான் - காமம்முதலியவற்றால். உவமை=உபமா: வடமொழி. தனக்கு உவமையில்லாதான் - அருகக்கடவுள் என்பாரும் உளர். "ஒத்தார் மிக்காரை யிலையாயமாமாயா" என்றும், "தன்னொப்பாரில்லப் பன்" என்றும் ஆழ்வார் அருளிச் செய்தலால், தனக்கு உவமையில்லாதான்- திருமா லென்றுங் கொள்ளலாம். ஒப்பில்லாதவனெனவே, உயர்வில்லாதவ னென்பது பெறப்படும்.

(எ)

அ. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்

பிறவாழி நீந்த லரிது.

(இ - ள்.) அறம் ஆழி அந்தணன்-அறக்கடலாகிய அந்தணனது, தாள்- தாளாகிய புணையை, சேர்ந்தார்க்கு அல்லால் - சேர்ந்தார்க்கு அல்லது, பிற ஆழி நீந்தல்-(அதனிற்) பிறவாகிய கடல்களை நீந்தல், அரிது—; (எ - று.)

அறம் பொருள் இன்பம் என உடன் எண்ணப்பட்ட மூன்றனுள் அறத் தை முன்னர்ப் பிரித்தமையான், ஏனைப் பொருளும் இன்பமும் 'பிற' எனப் பட்டன. பலவேறுவகைப்பட்ட அறங்களெல்லாவற்றையும் தனக்கு வடி
வாக உடையனாகலின், 'அறவாழியந்தணன்' என்றார். அறவாழி என்பதனைத் தருமசக்கரமாக்கி, அதனையுடைய அந்தணன் என உரைப்பாருமுளர். அப்புணையைச்சேராதார் கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவா ராகலின், 'நீந்தலரிது' என்றார். இஃது, ஏகதேசவுருவகம்.

க - ஆம் அதிகாரம்—கடவுள்வாழ்த்து

சா

(கு - ரை.) அறக்கடல் என்பது, நீர்நிரம்பிய கடல்போலத் தருமம் நிரம்
பியவ னென்றபடி. அந்தணன் - அழகாகிய தண்மையை யுடையவன்;
தண்மை-அருள். புணை-தெப்பம். பிறவாகிய கடல்கள் - பொருளும் இன்
பமுமாகிய கடல்கள்; அவை, அளவில்லாதனவாதலால்,

கடலெனப்பட்டன.
நீத்தல் - கடத்தல். ஏனை - மற்றை.
தருமசக்கரத்தையுடைய அந்தணன் -
அருகக்கடவுள். அப் புணையை - தாளாகிய புணையை.
அவற்றுள் -பொரு
ளின்பங்களுள். பொருளின்பங்களைக்கடத்தலை ஆழிநீந்த
லென்றதற்கு ஏற்
பத் தாளைப் புணை யென்னுமையால்,
ஏகதேசருபகாலங்காரம்; அதாவது -
ஒருபகுதியை உருவகப்படுத்தி மற்றொருபகுதியை
உருவகப்படுத்தாமல்விடு
வது: உருவகப்படுத்தல் என்பது, உவமானத்தையும்
உபமேயத்தையும்
வேற்றுமை ஒழிவித்து ஒன்றென்பது தோன்ற வைப்பது.
ஆழி - கடலை
உணர்த்தும்பொழுது, ஆழ்ந்திருப்பதென்று பொருள்;
இ - வினைமுதற்
பொருள் விகுதி: சக்கரத்தை உணர்த்தும்பொழுது, ஆழி -
வட்டம்: அதனை
யுடையதென்று பண்பாகுபெயர்; (பகைவரை)
அழிப்பதென்றும் பொரு
ளாம். அறம் என்பதை - அரம்என்பதன் திரிபாகக்
கொண்டால், ஆயிரம்
அரங்களையுடைய சுதரிசனம்என்னுஞ் சக்கரத்தையுடைய
திருமால் என்று
பொருள்படும்; "அறவனை யாழிப்படையந்தணனை" என

ஆழ்வார் அருளிச் செய்தலால், தருமஸ்வரூபியுஞ்
சக்கரபாணியுமான திருமா லென்றுமாம்.
பிற ஆழி - அறத்தின் வேறுபட்டனவான பாவங்களாகிய கட லென்றுங்
கொள்ளலாம். பிற என்பதை முதனிலைத்தொழிற்பெயராகக் கொண்டால், பிறப்புத்துன்பங்களாகிய கடலென்று ஆகும்.

(அ)

கூ. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(இ - ள்.) கோள் இல் - (தத்தமக்கு ஏற்ற புலன்களைக்) கொள்கையில் லாத, பொறியின் - பொறிகள்போல, குணம் இல - பயன்படுதலுடைய வல்ல: எண் குணத்தான் - எண்வகைப்பட்ட குணங்களை யுடையானது, தாளை - தாள்களை, வணங்கா - வணங்காத, தலை - தலைகள்; (எ - று.)

எண்குணங்களாவன-தன்வயத்தனாதல், தூயஉடம்பினனாதல், இயற்கை

புணர்வினனாதல், முற்றும்உணர்தல்,
இயல்பாகவேபாசங்களின்நீங்குதல்,
பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை,
வரம்பிலின்பமுடைமை என
இவை; இவ்வாறு, சைவாகமத்திற் கூறப்பட்டது. அணிமாவை முத
லாகவுடையன எனவும், கடையிலா அறிவை முதலாகவுடையன எனவும்
உரைப்பாருமுளர். 'காணாத கண் முதலியன போல வணங்காத தலைகள்
பயனில' எனத் தலைமேல்வைத்துக் கூறினர்: கூறினரேனும், இனம்பற்றி
வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில என்பதூஉங் கொள்க.

இவை மூன்றுபாட்டானும், அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்
கலுஞ் செய்யாவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.



(கு - ரை.) தன்வயத்தனாதல்-சுவதந்திரத்வம். தூய உடம்பின் னாதல்-விசுத்த தேகத்வம். இயற்கை புணர்வின னாதல் - அநாதிபோதம். முற்றும் உணர்தல் - சர்வஜ்ஞத்வம். இயல்பாகவே பாசங்களின் நீங்குதல் - நிராமயத்வம். பேரருளுடைமை - அலுப்தசக்தி.
முடிவிலாற்றலுடைமை- அநந்தசக்தி.
வரம்பிலின்பமுடைமை-த்ருப்தி. அணிமாவைமுதலாக உடை

யன - அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என இவை. அவற்றுள், மிகவும் நுண்ணியதாதல்-அணிமா. மிகவும் பருத்தல்-மகிமா. மிகவும்கனத்தல்-கரிமா. மிகவும்நொய்தாதல் - லகிமா. வேண்டுவனஅடைதல்-பிராப்தி. குறைவின்றி நிறைவுள்ளவனுதல் பிராகாம்யம். யாவர்க்கும்மேம்பட்டிருத்தல் - ஈசத்வம். எல்லாவற்றையும் தன்வசமாக்க வல்லவனுதல் - வசித்வம். இவை, அஷ்டஐசுவரியங்களெனப் படும். கடையிலா அறிவை முதலாக உடையன - கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுஇன்மை, அழியாஇயல்பு என இவை; வடமொழியில் முறையே அநந்தஞாநம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்கோத்திரம், நிராயுஷ்யம், நிர்நாசம் எனப்படும்: இவ்வாறு ஆருகத நூலிற் கூறப்பட்டது. இனி, அபஹதபாப்மத்வம், விஜாரத்வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விசிகத்ஸத்வம், அபியாஸத்வம், ஸத்யகாமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம் என்றும்; வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஜ்ஞாநம், சக்தி, பிராப்தி, பூர்த்தி என்றும் வைணவ நூல்களுள் எட்டுக் குணங் கூறப்பட்டிருத்தலால், எண்குணத்தான்-திருமாலென்றுங் கொள் ளலாம். வணங்காத தலை என்றது - வாழ்த்தாத நாவிற்கும் உபலக்ஷணம்; உபலக்ஷணமாவது - ஒருமொழி, ஒழிந்த தன் இனத்தையுங் குறிப்பது.

கீழிரண்டுபாட்டுக்களால் கடவுளை நினையாமையா லுண்டாங் குற்றமும், இப் பாட்டால் அவனை வாழ்த்தாமையாலும் வணங்காமையாலு முண்டாங் குற்ற மும் கூறப்பட்டன. கோள்-கொள்கை; விகுதிபுணர்ந்துகெட்டு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பொறியின், இன் - ஐந்தாம்வேற்றுமையுருபு; ஒப்புப் பொருள். ஏ - தேற்றம். உத்தம அங்க மாதலால், தலை என்று சிரசுக்குப் பெயர். பார்வைமுதலிய புலன்களில்லாமற் கண்முதலிய உறுப்புக்கள் இருந்தும் பயன்படாதவாறு போல, கடவுளைவணங்காதவர்கள் மனிதவுடம் பெடுத்திருந்தும் அதன்பயன் பெறுதவரென்பது, இதன்கருத்து. இல் பொறி - பண்புத்தொகை.

(க)

கo. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

(இ - ள்.) இறைவன் அடி - இறைவன் அடியென்னும்புணையை, (சேர்ந்தார்), பிறவி பெரு கடல்-பிறவியாகிய பெரிய கடலை, நீந்துவர்—; சேராதார் - (அதனைச்) சேராதார், நீந்தார்-நீந்தமாட்டாராய் (அதனுள் அழுந்துவர்); (எ - று.)

உ - ஆம் அதிகாரம்—வான்சிறப்பு



காரணகாரியத்தொடர்ச்சியாய்க் கரையின்றி

வருதலின், 'பிறவிப் பெருங்கடல்' என்றார். 'சேர்ந்தார்' என்பது, சொல்லெச்சம்.

உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவி யறுதலும், அவ்வாறன்றி மாறிநினைப்பார்க்கு அஃது அருமையும் ஆகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.

(கு - ரை.) அதனை - அடியென்னும் புணையை. அதனுள்-பிறவிப்பெருங்கடலுள். சொல்லெச்சமாவது - பாட்டில் சொல் குறைந்திருப்பது. காரண காரியத் தொடர்ச்சியாய் - ஒருபிறப்பு மற்றொருபிறப்புக்குக் காரணமாதலும், மற்றொருபிறப்பு அதன்காரியமாதலு மாகிச் சம்பந்தப்பட்டு. உலகியல்பு - இவ்வுலக நடத்தை.

"பிறவிப் பெருங்கடனீந்துவர் நீந்தா, ரிறைவனடி சேராதார்"—'இது, சேர்ந்தார்நீந்துவரென எதிர்மறைகொண்டு முடிதலின், எதிர்மறை யெச்சமாயிற்று' என்பது, நன்னூற் பழைய வுரை. இனி, சேராது ஆர் எனப்பிரித்து, இறைவனடி சேராது ஆர் பிறவிப்பெருங்கடல் நீந்துவர்? (எவரும்) நீந்தார் என்று பொருள்கொண்டால், 'சேர்ந்தார்' என்ற எதிர்நிலை யெழுவாய் வருவிக்கவேண்டிய அவசியம் இல்லையாம். இவ்வுரையில், ஆர் நீந்துவர், நீந்தார் என இரண்டு வந்தது, வற்புறுத்துதற்கு என்க; "உண்டோ உணர்ச்சி மற்றில்லாகும்", "வளம்படவேண்டாதார் யார்

யாருமில்லை'',''முனிவர் சொற் பொய்க்குமோ பொய்யாதே'' என்றாற் போலக் கொள்க. ஆர்-யார் என்பதன் மரூஉ. இறைவன்-எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமியாய்த் தங்குகிறவன்; இறுத்தல் - தங்குதல். ''எங்குமுளன் கண்ணன்'' என்றும், ''உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்'' என்றும் ஆழ்வார் அருளிச்செய்திருத்தலால், இறைவன்-திருமால் என்றுங் கொள்ளலாம்.
பிறவி-'வி'விகுதி பெற்ற தொழிற்பெயர்.

(௧0)

## உ-ஆம்

## அதிகாரம்.—வான்சிறப்பு.

அஃதாவது - அக்கடவுளது ஆணையான் உலகமும் அதற்கு உறுதியாகிய அறம்பொருள்இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகாரமுறைமையும், இதனானே விளங்கும்.

(கு - ரை.) ஆணை - ஆஞ்ஞை; கட்டளை. அதற்கு உறுதியாகிய - உலகத்துக்கு நன்மையைத் தருவதான. கடவுள்வாழ்த்தின் பின் கடவுளின் கட்டளையினாலாகிய மழையினது சிறப்பைக் கூறுதலே, அதிகாரமுறைமை.

௧௧. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

(இ - ள்.) வான் - மழை, நின்று - இடையறாது நிற்ப, உலகம்—, வழங்கி வருதலான் - நிலைபெற்று வருதலான், தான்-அம்மழைதான், அமிழ்தம் என்று - (உலகத்திற்கு) அமிழ்தமென்று, உணரற் பாற்று - உணரும் பான்

மையயுடைத்து; (எ - று.)



'நிற்ப' என்பது, 'நின்று' எனத் திரிந்துநின்றது. 'உலகம்' என்றது, ஈண்டு உயிர்களை. அவை நிலைபெற்றுவருதலாவது - பிறப்பு இடையறுமையின் எஞ்ஞான்றும் உடம்போடு காணப் பட்டு வருதல். அமிழ்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின், 'உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை அமிழ்தமென்று உணர்க' என்றார்.

(கு - ரை.) இடை-நடுவில். அறுதல் நீங்காமல். அமிழ்தம்-அம்ருதமென்னும் வடமொழியின் திரிபு: மரணமில்லாமற்செய்வதென்று பொருள். நின்று-செய வெனெச்சத்திரிபு: 'வழங்கிவருதலால்' என்னும் பிறகர்த்தாவின் வினையைக் கொண்டுமுடிதற்கு ஏலாமையால், 'நின்று' என்பதனை, அதற்கு ஏற்ற செய வெனெச் சத்தின் திரிபாகக் கொண்டார்: [நன் - வினை - உஎ.] எஞ்ஞான்றும்-எப்பொழுதும். பாற்று - ஒன்றன்பாற்குறிப்புமுற்று; பால்-பகுதி. இனி, இக் குறளில், 'வான் ' என்பதில் மூன்றும்வேற்றுமையுருபு

தொக்குநின்றதாக்கி,
வானினுல் உயிர்கள் நிலைபெற்றுத் தொழில்கள் நடந்துவருதலால் அது
அமிழ்தமென்று உணரற்பாற்று என்றுங்கொள்ளலாம். 'நின்று' என்பதை
ஐந்தாம்வேற்றுமை யுருபாகக்கொண்டு உரைத்தல் வேண்டுமென்பது, வீர
சோழிய உரையாசிரியராகிய பெருந்தேவனாரது கொள்கை.
(க)

கஉ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பா யதூஉ மழை.

(இ - ள்.) துப்பார்க்கு-உண்பார்க்கு, துப்பு ஆய துப்பு-நல்லஉணவுகளை, ஆக்கி - உளவாக்கி, துப்பார்க்கு - (அவற்றை) உண்கின்றார்க்கு, துப்பு ஆய தூஉம் - (தானும்) உணவாய் நிற்பதூஉம், மழை—; (எ - று.)

தானும்உணவாதலாவது - தண்ணீராய் உண்ணப்படுதல். சிறப்புடைய
உயர்திணைமேல் வைத்துக் கூறினமையின், அஃறிணைக்கும் இஃது ஒக்கும்;
இவ்வாறு உயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை,
வழங்கிவருதலுடையவாயின என்பதாம்.

(கு - ரை.) துப்பு ஆய-நன்மையாகிய. உயர்திணைமேல்

வைத்துக்கூறின

மையின் - துப்பார்க்கு என உயர்திணைச் சொல்லாற்

சொன்னதனுல். உயர்

திணை - உயர்வா கிய பகுப்பு. அஃறிணை - அல்திணை;

அதுவல்லாத [தாழ்வா கிய] பகுப்பு. நீர்வேட்கை - தாகம்.

அவை - உயிர்கள். துப்பார், து-பகுதி.

துப்பு-நன்மையென்னும் பொருளில், பண்புப்பெயர் ; உணவு

என்னும் பொரு

ளில், தொழிலாகுபெயர். அளபெடை,ஓசை நிறைத்தது.

சொற்பொருட்பின்

வரு நி லைய ணி.

(உ)

கஉ. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர்

வியனுலகத்

துண்ணின் றுடற்றும் பசி.

(இ - ள்.) விண் - மழை, இன்று -

வேண்டுங்காலத்துப் பெய்யாது,

பொய்ப்பின் - பொய்க்குமாயின், விரி நீர் - கடலாற்

சூழப்பட்ட, வியன்-அக

ன்ற, உலகத்துள் - உலகத்தின்கண், நின்று - நிலைபெற்று,

களை) வருத்தும், பசி—; (எ - று.)

உடற்றும்-(உயிர்

உ - ஆம் அதிகாரம்— வான்சிறப்பு

கடலுடைத்தாயினும் அதனாற் பயனில்லை யென்பார், ‘விரிநீர் வியனுலகத்து’ என்றார். உணவின்மையின் பசியான் உயிர்கள் இறக்கும் என்பதாம்.

(கு - ரை.) இன்றி - எதிர்மறைக்குறிப்புவினையெச்சம், இன்று எனத் திரிந்துநின்றது; [நன்-உயிரீற்றுப்புணரியல் - உக.] வியன் - அகலமுணர்த்தும் உரிச்சொல்; “வியலென் கிளவி யகலப் பொருட்டே”. உடற்றும்-உடல் என்பதன் பிறவினையாகிய உடற்று - பகுதி. விண் என்னும் ஆகாயத்தின் பெயர் - அங்குப் பொருந்திய மழைக்கு ஆகுபெயர்: கீழ் ‘வான்’ என்றதும், மேல் ‘விசும்பு’ என்பதும் இவ்வாறே. கடலாற் பயனில்லாமை, உவர்நீருடைத்தாதலால் என்க. பொய்ப்பின் - எதிர்காலவினையெச்சம். உடற்றுமென்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.

(ரு)

கச. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

(இ - ள்.) உழவர்—, ஏரின் - ஏரான், உழாஅர் -

உழுதலைச்செய்யார்:
புயல் என்னும் - மழையென்னும், வாரி-வருவாய், வளம் -
(தன்)பயன், குன்
றிக்கால் - குன்றின்; (எ - று.)
'குன்றியக்கால்' என்பது, குறைந்து நின்றது.
உணவின்மைக்குக் கார
ணங் கூறியவாறு.
(கு - ரை.) உழவர் - உழுதுபயிர்செய்பவர்.
உழு-பகுதி, அ - சாரியை,
வ் - சந்தி, அர் - விகுதி. ஏர் - கலப்பை; இன் -
ஐந்தனுருபு, ஏதுப்பொருள்.
உழார்-எதிர்மறைப்பலர்பால்முற்று. அளபெடை,
செய்யுளோசை நிறைக்க
வந்தது. வருவாய் - வரவுகளுக்கு ஆன ஏது.
வாரி - வரவுக்குக் கருவியானது;
இ - கருவிப்பொருள் விகுதி. குன்றிக்கால்-காலீற்று
எதிர்காலவினையெச்சத்
தின் தொகுத்தல். வருவாயினது வளம் குன்றினால் என
ஆறும்வேற்றுமைத்
தொகையாகவுங் கொள்ளலாம்.

(௲)
கரு. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச்

சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

(இ - ள்.) கெடுப்பதூஉம் -

(பூமியின்கண்வாழ்வாரைப் பெய்யாது
நின்று) கெடுப்பதூஉம்,
கெட்டார்க்கு-(அவ்வாறு)கெட்டார்க்கு, சார்வு ஆய் -
துணையாய்(ப் பெய்து), மற்று ஆங்கே - முன் கெடுத்தாற்
போல, எடுப்ப
தூஉம்—, எல்லாம் - இவையெல்லாம் (வல்லது),

மழை—; (எ - று.)

மற்று - வினைமாற்றின்கண் வந்தது. ஆங்கு
என்பது-மறுதலைத்தொழி
லுவமத்தின்கண்வந்த உவமச்சொல். கேடும்ஆக்கமும்
எய்துதற்கு உரியார்
மக்களாதலின், 'கெட்டார்க்கு' என்றார். 'எல்லாம்'
என்றது - அம்மக்கள்
முயற்சிவேறுபாடுகளாற் கெடுத்தல்எடுத்தல்கள்தாம் பல
வாதல் நோக்கி.
'வல்லது' என்பது, அவாய்நிலையான்
கூறியவாறு.
வந்தது. மழையினது ஆற்றல்

3

(கு - ரை.) எடுப்பது - காப்பது. மற்று, ஆங்கு - இடைச்சொற்கள்.

'பெய்யாமற் கெடுத்து' என்ற வினையை 'பெய்து கெடுக்காமல்' என மாற்றி

யதனால், வினைமாற்று. ஆங்கு என்பது - கெடுத்தாற்போல என எடுத்தற்கு

எதிர்த்தொழிலாகிய கெடுத்தலென்னும் உவமைக்கு உருபாய் வந்தது. கேடு -

வறுமை. ஆக்கம் - செல்வம். மக்கள்-மனிதர். கெட்டார்க்கு என்றார் - உயர்

திணையாகக்கூறினார். எல்லாம் என்றது-இரண்டும் என்னாமல் எல்லாமென்று

சொன்னது. அவாய்நிலை - ஒருசொல் மற்றொருசொல்லை வேண்டிநிற்றல்;

இவ்வாறு வருவித்துமுடிப்பதை வடநூலார் அத்யாஹாரமென்பர். ஆற்றல் -

வல்லமை. கெடுப்பதும், எடுப்பதும் என நிற்பினுஞ் செய்யுளோசை குன்று

தாயினும், இன்னிசை நிறைத்தற்பொருட்டுக் குறில் நெடிலாய் அளபெடுத்

தது. உம் - எண்ணும்மைகள். எல்லாம் என்றது, வியப்புப்பற்றிக் கூறிய

தாகவுமாம். ஆங்கே, ஏ - அசை.

(ரு)

கசு. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(இ - ள்.) விசும்பின் - மேகத்தின், துளி—, வீழின் அல்லால் - வீழின்
காண்பதல்லது, மற்று ஆங்கே - வீழாதாயின் அப்பொழுதே, பசு புல் தலை -
பசும்புல்லினது தலையையும், காண்பு - காண்டல், அரிது—; (எ - று.)

விசும்பு - ஆகுபெயர். மற்று - வினைமாற்றின்கண் வந்தது. இழிவுசிறப்பு
உம்மை, விகாரத்தால் தொக்கது. ஓரறிவுயிரும் இல்லை யென்பதாம்.

(கு - ரை.) விசும்பின், ஐந்தனுருபு நீக்கப்பொருளது. மேகத்தின்-மேக
த்தினின்றும், துளி வீழின் - மழைத்துளிவிழுந்தால். ஆகுபெயர் - இட
வாகுபெயர்; விசும்புஎன்பது அங்குள்ள மேகத்துக்கு ஆகிவந்தது காண்க.
ஆகுபெயராவது, ஒரு பொருளின்பெயர் அப்பொருளுக்குச் சம்பந்தப்பட்ட
வேறொரு பொருளுக்கு வழங்குவது. 'வீழின்' என்ற வினையை 'வீழா
தாயின்' என மாற்றியதனால், மற்று-வினைமாற்று. உம்மை, செய்யுள்விகாரத்
தால் தொக்கது, 'பசும்புற்றலை' என்னுமிடத்தில்; அது, அப்புல்லினது ஸ்ப
ரிசத்தை அறியும் அறிவைமாத்திரம் உடைத்தாயிருக்கும்

தன்மையைத் தெரி
விக்ததனுல், இழிவுசிறப்பாயிற்று; "புல்லு மரனு மோரறி
வினவே" என்
றார் தொல்காப்பியனுர். காண்பு - தொழிற்பெயர்; பு - விகுதி.

(கூ)

கஎ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந்
தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

(இ-ள்.) நெடு கடல்உம் - அளவில்லாத கடலும், தன்
நீர்மை குன்றும் -
தன் இயல்பு குறையும்: எழிலி தான் - மேகந் தான்,
தடிந்து - (அதனைக்)
குறைத்து, நல்காது
ஆகிவிடின் - (அதன்கண்) பெய்யாதுவிடுமாயின்; (எ-று.)

உம்மை - சிறப்பும்மை. தன் இயல்பு குறைதலாவது
- நீர்வாழுயிர்கள்
பிறவாமையும், மணிமுதலாயின படாமையுமாம். ஈண்டு

'குறைத்தல்' என்

உ - ஆம் அதிகாரம்—வான்சிறப்பு

றது, முகத்தலே; அது "கடல்குறைபடுத்தநீர் கல்குறைபட வெறிந்து" என் பதனுலும் அறிக. மழைக்கு முதலாய கடற்கும் மழை வேண்டும் என்பதாம்.

இவையேழுபாட்டானும், உலகம் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.

(கு - ரை.) நெடு - நீண்ட. குன்றும்-குறையும். அதனை-கடலின் நீரை. குறைத்து - மொண்டு. அதன்கண் - கடலில். சிறப்பு - உயர்வுசிறப்பு; மழைக் குக் காரணமாதலாகிய கடலினது உயர்வை விளக்கியதனுல். மணி - முத் தும், பவளமும்: "வைகாசியிலே ஞாயிற்றுச்சோதியின் மழையிலே முத் துக்குக் கரு: ஐப்பசிப்பூசத்து மழையிலே பவளத்துக்குக் கரு" என்பர். படா மை - உண்டாகாமை. முகத்தல் - மொள்ளுதல். "கடல்குறைபட" என்ற மேற்கோள் பரிபாடலில் ௨௦-ஆம் பாடலிலுள்ளது: இதன்பொருள்—கடல் குறைபடுத்த - கடலினின்று முகந்துகொண்ட, நீர் - நீரை, கல் - மலையின் கற்கள், குறைபட - துணிபட, எறிந்து - சிதறி என்பது. முதலாய - காரண மாகிய. எழிலி - எழுச்சியையுடையதென மேகத்துக்குக் காரணப்பெயர். ஆகிவிடின், விடு - துணிவுப்பொருளுணர்த்திவந்த துணைவினை. தடிந்து - குறையச்செய்து; தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது: இதனை வட நூலார் 'அந்தர்ப்பாவித ணிச்' என்பர்; தடித்து என்பதன் மெலித்தல் விகாரமாகவுங்கொள்ளலாம்.

(எ)

கஅ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

(இ - ள்.) வானோர்க்குஉம் - தேவர்கட்கும், ஈண்டு - இவ்வுலகில், சிறப்பொடு-(மக்களாற் செய்யப்படும்) விழவொடுகூடிய, பூசனை-பூசையும், செல்லாது - நடவாது: வானம் - மழை, வறக்கும் ஏல் - பெய்யாதாயின்; (எ-று.)

நைமித்திகத்தோடு கூடிய நித்திய மென்றா ராகலின், 'செல்லாது'என்றார். நித்தியத்தில் தாழ்வுதீரச் செய்வது நைமித்திக மாதலின், அதனை முற் கூறினார். உம்மை - சிறப்பும்மை.

(கு - ரை.) விழவு - திருவிழா: உற்சவம். நைமித்திகம் - யாதாயினுமொரு நிமித்தம்பற்றிச் செய்வது. செல்லாதென்றார் - ஒருமையாக்கூறினார். நித்தியத்தில் தாழ்வு தீரச் செய்வது - நாள்தோறுஞ் செய்யப்படுவதனினும் விசேஷமாகச் செய்யப்படுவது ; பவித்திரஉத்ஸவம் முதலியன. அதனை 'சிறப்பு' என்றதும், இதுபற்றியே. ஏல் - என்னில் என்பதன் மரூஉ. வானோர் - வானுலகத்துள்ளவர். சிறப்பு - உயர்வுசிறப்பு.

(அ)

கக. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(இ - ள்.) வியன் உலகம் - அகன்ற உலகின்கண்,

தானம் தவம் இரண்டும்-தானமுந் தவமும் ஆகிய இரண்டுஅறமும், தங்கா - உளவாகா: வானம் - மழை, வழங்காது எனின் - பெய்யாதாயின்; (எ - று.)



தானமாவது - அறநெறியான்வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகை யோடுங் கொடுத்தல். தவமாவது - மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல்முதலாயின. பெரும்பான்மைபற் றித் தானம் இல்லறத்தின்மேலும், தவம் துறவறத்தின்மேலும் நின்றன.

(கு - ரை.) அகன்ற-விசாலமான. அறநெறியான் வந்த - தருமமார்க் கத்தில் நின்று சம்பாதித்த. தக்கார் - அறிவொழுக்கங்களினால் தகுதியான வர். உவகை - மனமகிழ்ச்சி. தவமாவது - மனம் ஐம்பொறிகளின்வழியே போகாமல் ஒருவழியில் நிற்கும்பொருட்டு நீர்பருகியும் காற்று நுகர்ந்தும் காய் கனிகிழங்குசருகுவருக்கங்களையுண்டும் விரதங்களால் உணவைச் சுருக்கலும், கோடைக்காலத்தில் வெயிலிலும் பஞ்சாக்கினிமத்தியிலும் நிற்றலும், மாரிக்

காலத்தும் பனிக்காலத்தும் நீர்நிலையிற் பாசியேற நிற்றலும் முதலிய செயல்
களை மேற்கொண்டு அவற்றால் வருந் துன்பங்களைப் பொறுத்து உடம்பை
யொறுத்துப் பிறவுயிர்களை ஓம்புதல்; தபஸ்என்னும் வடமொழித்திரிபு. இல்
லறமும் துறவறமும் நடவா வென்பது கருத்து.
(கூ)

உ௦. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(இ - ள்.) யார் யார்க்குஉம்-எவ்வகை மேம்பாட்டார்க்கும், நீர் இன்று-
நீரைஇன்றி, உலகு - உலகியல், அமையாது எனின் - அமையாதாயின்,
ஒழுக்கு - (அந்நீர் இடையறாது ஒழுகும்) ஒழுக்கும், வான் இன்று - வானை
யின்றி, அமையாது—; (எ - று.)

பொருளின்பங்களை 'உலகியல்' என்றார், அவை இம்மைக்கண்ணவாக
லின். இடையறாது ஒழுகல் - எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாகல். நீரின்
றமையாதுலகென்பது எல்லாராலும் தெளியப்படுதலின், அதுபோல ஒழுக் கும் வானின்றமையாமை தெளியப்படு

மென்பார், 'நீரின் றமையா துலகெ னின்' என்றார். இதனை, நீரையின்றி அமையாது உலகாயின் எத்திறத்தார்க்கும் மழையையின்றி ஒழுக்கம் நிரம்பாது என உரைப்பாரும் உளர்.

இவை மூன்றுபாட்டானும், அறம் பொருள் இன்பங்கள் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.

(கு - ரை.)எவ்வகைமேம்பாட்டார்க்கும்-எவ்வளவுபெருமையுடையவர்க்கும். உலகுஇயல் - உலகநடத்தை. அமையாது - நடவாது. இம்மைக் கண்ண - இப்பிறப்புக்கே பயன்படுவன. முதலருத்தத்தில், ஒழுக்கு - ஏரி குளம் முதலியவற்றில் நீர் ஓடி ஒழுகுதல். இரண்டாமருத்தத்தில், ஒழுக்கு- வருணாசிரம தருமத்தில் வழுவாதுநடத்தல். முதலருத்தத்தின் கருத்து - உலகவாழ்க்கைக்கு நீர் அவசியமாதல்போல அந்நீர்ப்பெருக்கிற்கு மழை அவசிய மென்பது; மழையின்றி நீருறா, நீரின்றி உலகுஇயலா என்றதாம். இரண்டாமருத்தத்திற்குக் கருத்து - உலகவாழ்க்கைக்கெல்லாம் நீர் அவசியமாதலால் உலகத்தவரொழுக்கத்திற்கெல்லாம் மழை அவசிய மென்பது.

## ௩ - ஆம் அதிகாரம்—நீத்தார் பெருமை

"மழையின்றி மாநிலத்தார்க்கில்லை" என்றார்

நான்மணிக்கடிகையிலும்.

எனின் என்பது, என்றால் என்னும் பொருளைத் தராமல் தேற்றப்பொருளைத் தந்தது. உம்மை - முற்றுப்பொருளோடு உயர்வுசிறப்புப்பொருளது.

ஒழுக்கு - இருபொருளிலும், முதனிலை திரிந்த தொழிற்பெயர். கீழிரண்டு பாட்டுக்களால் அறம் நடத்தற்கு ஏதுவாதலும், இப்பாட்டால் பொருளின் பங்கள் நடத்தற்கு ஏதுவாதலும் கூறப்பட்டது. (௧௦)

## ௩-ஆம்

# அதிகாரம்.—நீத்தார்பெருமை.

அஃதாவது - முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வற முதற்பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார் அவராகலின், இது, வான்சிறப்பின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) முற்றத்துறத்தல் - (உலகியலையும் இல்லறவாழ்க்கையின் நிலையில்லாமையையும் அறிந்து கடவுளின் தன்மையைத் தெரிந்து மோட்சத்தையடையும் பொருட்டுத் தேகஅபிமானம் முதலிய எல்லாவற்றையும்) முழுவதும்விடுதல். முநி என்னும் வடசொல்லுக்கு-கடவுளையே எப்பொழுதுந் தியானஞ்செய்பவன், அல்லது திரிகால ஞானமுடையவன் என்று பொருள். அவ்வறமுதற்பொருள்கள் - கீழ் 'வான்சிறப்பு' என்னுமிடத்திற் சொல்லப்பட்டபடி உலகத்திற்கு உறுதியாகிய அறம் பொருளின்பங்கள். உலகிற்கு- உயிர்களுக்கு. உள்ள ஆறு உணர்த்துவார் - உள்ளபடி தெரிவிப்பவர். அவர்- துறந்தவர். இது - நீத்தார்பெருமை. உயிர்களும் உயிர்களுக்கு உறுதியான அறம்பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவான மழையின் சிறப்பைக் கூறிய

பின், அறம்பொருளின்பங்களை உயிர்களுக்கு உணர்த்துதற்கு உரிய துறந்தவரது மகிமையைக் கூறுதல், அதிகாரமுறையென்க. நீத்தவர் முத்திமார்க்கத்திற்கு உரிய வழிகளைத் தேடித் தமது இன்பத்தைப் பார்ப்பதேயன்றி, ஜீவகாருணியத்தால் யாவரும் நல்லொழுக்கத்தில் நிற்குமாறு அவரவர்கள் செய்யவேண்டுங் கடமைகள் முதலியவற்றை விவரித்துப் பலநூல்களியற்றுவதும், பிறர்க்கு ஞானோபதேசஞ் செய்வதும் எங்கும் வழக்கமென்க. இனி, மழைக்குக்காரணம் தவம் முதலிய நல்வினைகளாதலால், முனிவரின் பெருமையை மழைச்சிறப்பின்பின் வைத்தா ரென்றுங் கொள்ளலாம்; "மழையுந் தவமிலா ரில்வழி யில்லை" என்பது காண்க.

## உக. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவற் றுணிவு.

(இ - ள்.) ஒழுக்கத்து - (தமக்கு உரிய) ஒழுக்கத்தின்கண்ணே (நின்று), நீத்தார் - துறந்தாரது, பெருமை - பெருமையை, விழுப்பத்து - விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும், வேண்டும் - (இதுவே விழுமிது என) விரும்பும், பனுவல் துணிவு - நூல்களது துணிவு; (எ - று.)

தமக்குஉரிய ஒழுக்கத்தின்கண்ணே நின்று துறத்தலாவது - தத்தம்வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவாது ஒழுக, அறம்வளரும்;



அறம்வளர, பாவந்தேயும்; பாவந்தேய, அறியாமை நீங்கும்; அறியாமைநீங்க, நித்தஅநித்தங்களது வேறுபாட்டுணர்வும், அழிதன்மாலையவாய இம்மை மறுமை இன்பங்களின் உவர்ப்பும், பிறவித்துன்பங்களுந் தோன்றும்; அவை தோன்ற வீட்டின்கண் ஆசை உண்டாம்; அஃது உண்டாக,

பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி, வீட்டிற்குக் காரணமாகிய யோகமுயற்சி உண்டாம்; அஃது உண்டாக, மெய்யுணர்வு பிறந்து, புறப்பற்றாகிய எனதென்பதும், அகப்பற்றாகிய யானென்பதும் விடும்: ஆகலான், இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்துவிடுதல் எனக் கொள்க. 'பனுவல்' எனப் பொதுப்படக் கூறிய அதனான், ஒன்றையொன்று ஒவ்வாத சமயநூல்களெல்லாவற்றிற்கும் இஃது ஒத்த துணிவு என்பது பெற்றாம். செய்தாரது துணிவு, பனுவல்மேல் ஏற்றப்பட்டது.

(கு - ரை.) விழுமிய-சிறப்புடைய. விழுமிது-சிறந்தது. துணிவு-சித்தாந்தம். நித்த அநித்தங்களது வேறுபாட்டுஉணர்வு - என்றும் நிலையாயுள்ள பொருள்கள் இவை, நில்லாத பொருள்கள் இவை, இரண்டுக்கும் உள்ள பேதம் இப்படிப்பட்டது என்று பகுத்தறியும் விவேகம். அழிதன்மாலைய வாய - அழியுந்தன்மையை யுடையனவாகிய. உவர்ப்பு - வெறுப்பு. மெய்யுணர்வாவது - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையால் அறிதல். புறப்பற்றாகிய எனதென்பது - தன்னோடு இயைபில்லாத புறமாகிய பொருளை எனதென்றுகருதி அதனிடத்துப் பற்றுச்செய்தல்; மமகாரம். அகப்பற்றாகிய யானென்பது - தானல்லாத அகமாகிய உடம்பை யானென்று கருதி அதனிடத்துப் பற்றுச்செய்தல்; அகங்காரம். ஒவ்வாத - ஒத்திராத.

சமய நூல்கள்-மதக்கிரந்தங்கள். 'நூல்செய்தார் வேண்டுவர்' என்று சொல்லாமல் அவரது சித்தாந்தத்தை நூலின்மே லேற்றி 'வேண்டும் பனுவற்றுணிவு' எனப்பட்டது. துணிவு - துணியப்பட்டபொரு ளுக்குத் தொழிலாகுபெயர். நூல்கள்சொல்லும் பெருமையான பொருள்க ளுள் நீத்தார்பெருமை சிறந்ததென்பதாம்.

(௧)

௨௨. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

(இ - ள்.) துறந்தார் - (இருவகைப் பற்றினையும்) விட்டாரது, பெரு மை-பெருமையை, துணை கூறின்-(இவ்வளவென்று) எண்ணாற் கூறியறியலு றின், (அளவுபடாமையான்), வையத்து இறந்தாரை - இவ்வுலகத்துப் பிற ந்து இறந்தாரை, எண்ணி கொண்டு அற்று - எண்ணி (இத்துணையர் என) அறியலுற்றாற் போலும்; (எ - று.)—முடியாது என்பதாம்.

கொண்டால் என்னும் வினையெச்சம்,'கொண்டு' எனத்திரிந்துநின்றது. (கு - ரை.) எண்ணாற் கூறியறியலுறின் - அளவிட்டுச்சொல்லி அவ் வழியால் அறியத்தொடங்கினால், இத்துணையரென - இத்தனைபேரென்று. பிறந்து இறந்தவர்களையெல்லாம் எண்ணி அளவிடுதல் முடியாததுபோல,

## ௩ - ஆம் அதிகாரம்— நீத்தார்பெருமை

௨௩

முனிவர்களது மகிமையையெல்லாம் எண்ணி அளவிடுதல் முடியாதென்ற படி. வையம் - எல்லாப்பொருள்களையும் வைக்கும் இடமென்று பூமிக்குக் காரணப்பெயர். கொண்டு - கொண்டால்; எச்சத்திரிபு. அற்று - அன் என்னும் உவமவுருபிடைச் சொல்லடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று; று - விகுதி. பெருமை துணைக் கூறின் - பெருமையது அளவைக் கூறலுறின் என்றுமாம். (௨)

௨௩. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(இ - ள்.) இருமை - (பிறப்பு வீடு என்னும்) இரண்டினது, வகை-துன்ப இன்பக் கூறுபாடுகளை, தெரிந்து - ஆராய்ந்து அறிந்து, (அப்பிறப்பு அறுத்தற்கு), ஈண்டு - இப்பிறப்பின்கண், அறம்-துறவறத்தை, பூண்டார் - பூண்டாரது, பெருமை - பெருமையே, உலகு - உலகின்கண், பிறங்கிற்று - உயர்ந்தது; (எ - று.)

*"தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப் போல, 'இருமை' என்பது ஈண்டு எண்ணின்கண் நின்றது. பிரிநிலை ஏகாரம், விகாரத்தால் தொக்கது. இதனால், திகிரியுருட்டி உலகமுழுதாண்ட அரசர் முதலாயினார் பெருமை பிரிக்கப்பட்டது.

இவை மூன்றுபாட்டானும், நீத்தாரதுபெருமையே எல்லாப் பெருமையினும் மிக்கதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பிறப்பினது துன்பக்கூறுபாடென்றும், வீட்டினது இன்பக் கூறுபாடென்றும் முறையே கூட்டுக. அறுத்தற்கு - ஒழிப்பதற்காக. பூண்டார் - மேற்கொண்ட முனிவர். அறம் பூண்டார் - நல்லொழுக்கத்தை ஆபரணமாகக்கொண்டவர். "தெரிமாண்" என்றுதொடங்கும் மேற்கோளின் பொருள்:—தெரி - ஆராயப்பட்ட, மாண் - மாட்சிமையையுடைய, தமிழ் மும்மை-இயல் இசை நாடகம் என்னும் மூன்று தமிழையுடைய, தென்-தெற்கின்கணுள்ள, அம்-அழகிய, பொருப்பன் - பொதியமலையையுடையவனென்பது. இங்கு, மும்மை-மூன்றின் தன்மையையுணர்த்தாமல் மூன்றை உணர்த்தியதுபோல, இருமை - இரண்டின் தன்மையையுணர்த்தாமல் இரண்டென்னும் எண்ணையே உணர்த்திற்று. இருமையென்பதில், மைவிகுதி - தன்மையை உணர்த்தாமல் தன்மையுடைய பொருளையே உணர்த்தியதனால், பகுதிப்பொருள்விகுதி யென்னும் ஸ்வார்த்தபாவதத்திதப் பிரத்தியயமாம். 'பெருமையே' என்று இருக்கவேண்டிய ஏகாரம், தொகுத்தல்விகாரமாயிற்று. திகிரி உருட்டி-ஆஜ்ஞா சக்கரத்தைச் செலுத்தி. ஆணையைச் சக்கரமென்றுங் குடையென்றுங்கூறுதல், கவிசமயம். அரசர்முதலிய எல்லோர்பெருமையினுந் துறந்தவர்பெருமையே சிறந்துவிளங்கிற்று உலகத்திலே என்பதாம். (௩)

உச. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

---

* இம்மேற்கோள் பரிபாடலிலுள்ளதென்கின்றனர்,



(இ - ள்.) உரன் என்னும் தோட்டியான்-திண்மையென்னுந் தோட்டியால், ஓர் ஐந்துஉம் - (பொறிகளாகிய யானை) ஐந்தனையும், காப்பான் - (தத்தம் புலன்கள்மேற் செல்லாமற்) காப்பான்,—வரன்

என்னும் வைப்பிற்கு -
(எல்லாகிலத்திலும்) மிக்கதென்று சொல்லப்படும் வீட்டுகிலத்திற்கு, ஓர்
வித்து - ஓர் வித்தாம்; (எ - று.)
இஃது, ஏகதேசவுருவகம். திண்மை-ஈண்டு, அறிவின்மேற்று. அக்கிலத்
திற் சென்று முளைத்தலின், 'வித்து' என்றார்; ஈண்டுப் பிறந்து இறந்துவரும்
மகனல்ல னென்பதாம்.
(கு - ரை.) திண்மை - வலிய அறிவு; மனவுறுதி. தோட்டி-மாவெட்டி,
அங்குசம். காப்பான் - அடக்கித் தடுத்து ஆளுபவன். "மெய்வாய்கண் மூக்
குச் செவியெனப் பேர்பெற்ற, ஐவாய வேட்கை யவாவினைக் - கைவாய்க்,
கலங்காமற் காத்து ய்க்கு மாற்ற லுடையான்,விலங்காது வீடு பெறும்" என்
னும் நாலடியாரிலுங் காண்க. புலன் - விஷயம். மிக்கது - சிறந்தது. வித்து-
விதை. நல்லறிவைத் தோட்டியாக உருவகப்படுத்தினதற்கு ஏற்ப, பஞ்சேந்தி
ரியங்களை யானைகளென்னுமையால்,
ஏகதேசவுருவகவணி. அறிவின்மேற்று-
அறிவென்னும் பொருளின்மேலது. முத்தியுலகத்திற்போய் முளைப்பதனால்;

'வித்து' என உருவகப்படுத்தினார். ஈண்டு - இவ்வுலகத்தில். மகன்-மனிதன்.
உரனென்னும் பண்புப்பெயர், அறிவுக்கு ஆகுபெயர். தோட்டியான், ஆன்-
மூன்றனுருபு, கருவிப்பொருள். ஐந்தும், உம்மை - முற்று. வரன் - வரமெ
ன்னும் வடமொழியின் ஈற்றுப்போலி. வைப்பு - வைக்குமிடமாகிய உலகத்
துக்குத் தொழிலாகுபெயர்.

(ரு)

உரு. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

(இ-ள்.) ஐந்து அவித்தான்-(புலன்களிற் செல்கின்ற) அவா ஐந்தனையும் அடக்கினானது, ஆற்றல் - வலிக்கு, அகல் விசும்புளார் கோமான் - அகன்ற வானத்துஉள்ளார்இறைவனாகிய,இந்திரனே--,சாலும் கரி-அமையுஞ்சான்று.

ஐந்தும் என்னும் முற்றும்மையும், ஆற்றற்கு என்னும் நான்கனுருபுஞ் செய்யுள்விகாரத்தால் தொக்கன. தான் ஐந்தவியாது சாபமெய்திநின்று அவித் தானது ஆற்றலுணர்த்தினானாகலின், 'இந்திரனே சாலுங் கரி' என்றார்.

(கு - ரை.) அவா-ஆசை. வலி-சக்தி. அகன்ற வானத்துள்ளார் இறைவன்-பரந்த மேலுலகத்தி லுள்ள தேவர்களுக்குத் தலைவன். அமையுஞ் சான்று-தகுந்த சாக்ஷி. ஐந்து-இனைத்தென்று அறிபொரு ளாதலால், அதில் முற்றும்மை அவசியம் வேண்டியதாயிற்று. 'இந்திரனேசாலுங்கரி' என்பதிலுள்ள கதை:- கௌதமமுனிவரது மனைவியாகிய அகலிகையின்மீது பலநாளாகக் காதல்கொண்டிருந்த தேவேந்திரன் ஒருநாள் நடு ராத்திரியிலே பொழுதுவிடியுங்காலத்துக் கோழிகூவுவதுபோலக் கௌதமராச்சிரமத்துக்கு அருகேவந்துகூவ, அது கேட்ட முனிவர் எழுந்து சந்தியாகாலஞ் சமீபித்ததெனகருதிக் காலைக்கடன்

௩ - ஆம் அதிகாரம்—நீத்தார்பெருமை

உரு

கழித்தற்கு யாற்றிற்கு விரைந்து செல்ல, அப்பொழுது இந்திரன் இதுவே சமயமென்று அம்முனிவருருக்கொண்டு ஆச்சிரமத்துட்சென்று அவளோடு கலக்க, அவளும், 'முனிவரல்லர்: இந்திரன்'என்று உணர்ந்தும் விலக்காமல் உடன்பட்டிருக்க, அதனை ஞானக்கண்ணினால் அறிந்து உடனேமீண்டுவந்த அம்முனிவர் அவளைக் கருங்கல்வடிவமாம்படி சபித்து, இந்திரனையும் உடம்பு முழுவதும் பெண்குறியுடையனும்படியும் ஆண்குறியிழக்கும்படியுஞ் சபித்தன ரென்பதாம். பரிபவம் - வெகுண்டு கூறும் மொழி. கோமான், மான் - பெயர்விகுதி. இந்திரனே, ஏகாரம் - உயர்வுசிறப்பு; இதனால் வேறுகூறுவது அவசியமில்லை யென்பதும் விளங்கும்.

உசு. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(இ - ள்.) (ஒத்த பிறப்பினராய மக்களுள்), செயற்கு அரிய செய்வார்- செய்தற்கு (எளியவற்றைச் செய்யாது) அரியவற்றைச் செய்வார், பெரியர் -; செயற்கு அரிய செய்கலாதார் - (அவ்வெளியவற்றைச் செய்து) அரியவற்றைச் செய்யமாட்டாதார், சிறியர்—; (எ - று.)

செயற்கு எளியவாவன - மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழி களாற் புலன்களிற் செலுத்தலும் வெஃகலும் வெகுளலும் முதலாயின. செயற்கு அரியவாவன - இயமம் நியமம் முதலாய எண்வகை யோக உறுப்புக்கள். நீரிற் பலகால் மூழ்கல் முதலாய ''காலிரு வழக்கிற் ருபதபக்கம்'' என் பாருமுளர்; அவை நியமத்துள்ளே அடங்கலின், நீத்தாரதுபெருமைக்கு ஏலாமை அறிக.

(கு-ரை.) ஒத்த பிறப்பினராய மக்கள்-பிறப்பு ஒத்த மனிதர்கள். அதனை- மனத்தை. வெஃகல் - ஆசையைக்கொள்ளுதல். வெகுளல் - கோபித்தல். எண்வகை யோகஉறுப்புக்கள் - எட்டுவகையோகஅங்கங்கள்; அவை - இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. இவற்றுள், இயமம்-கொல்லாமை, வாய்மை முதலியன. நியமம் - தத்துவநூலாராய்ச்சி,

தெய்வவழிபாடு முதலியன. ஆசனம் - இருப்பு: அது, ஸ்வஸ்திகம்முதலாக எண்வகைப்படும். பிராணாயாமம்-உயிர்நிலை; வளிநிலையெனவும்படும்: அதாவது-பிராணவாயுவை ரேசக பூரக கும்பகஞ்செய்தல். பிரத்தியாகாரம்-மனவொருக்கம்; தொகைநிலையெனவும்படும்: அது, உபாதியைநீக்கி உள்நோக்கல். தாரணை-கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி இவற்றுள் ஒன்றில் எப்பொழுதுஞ் சிந்தையைவைத்தல்; இது, பொறைநிலையெனப்படும். தியானம்-ஐம்புலனடக்கி யோகஞ்சேர்தல்; இது, நினைவெனப்படும். சமாதி-இந்திரியம்முதலிய தத்துவங்களின் சேஷ்டைகளுக்கு ஏதுவாகிய உடம்பினுள் நின்று அவற்றோடு கூடினும் அவற்றிற் பற்றின்றி யிருக்கும் ஆத்மாவாகிய தன்னைத் தான் காண்டல். இவற்றின் பரப்பெல்லாம் இங்கு உரைப்பின் பெருகும்; ஆதலால், யோகநூல்களுட் கண்டுகொள்க.

4



* "பொய் கொலை களவே காமம் பொருணசை,யிவ்வகையைந் தடக்கியது யமம்," "பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல்,கற்பன கற்றல் கழிகடைத் தூய்மை, பூசனைப்பெரும்பயம் ஆசாற்களித்தலொடு, நயனுடை மரபின் நியமமைந்தே", 'நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென்று, ஒத்த நான்கினெல்கா

நிலைமையோடு, இன்பம் பயக்குஞ் சமய முதலிய, அந்தமில் சிறப்பி ஞசன மாகும்," "உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந், தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை," "பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமை, ஒருவழிப்படுப் பது தொகைநிலை யாமே," "மனத்தினை யொருவழி நிறுப்பது பொறை நிலை," "நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற், குறித்த பொருளொடு கொளுத் தல் நினைவே," "ஆங்ஙனங் குறித்த அம்முதற் பொருளொடு, தான்பிற ஞகாத் தகையது சமாதி" என்னுஞ் சூத்திரங்களை யுணர்க. நீரிற் பலகால் மூழ்கல் முதலாய நாலிருவழக்கின் தாபதபக்கம் - தண்ணீரிற் காலந்தோறும் முழுகுதல், நிலக்கிடைகிடத்தல், தோலுடை உடுத்தல், எரி ஓம்புதல், ஊர் அடையாமை, சடைதரித்தல், காட்டிலுண்ணுதல், கடவுட்பூசை என்னும் எட்டுவகை மார்க்கத்துத் தவம்புரியுங் கூறு; † "நீர்பலகான் மூழ்கி நிலத்த சைஇத்தோலுடையாச், சோர்சடை தாழச் சுடரோம்பி-ஊரடையார், கான கத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல், வானகத் துய்க்கும் வழி," * "நீஇ ராடல் நிலக்கிடை கோடல்,தோஒ லுடுத்தல் தொல்லெரி யோம்பல், ஊரடை யாமை யுறுசடை புனைதல், காட்டி லுணவு கடவுட்பூசை, ஏற்ற தவத்தி னியல்பென மொழிப" என்பன காண்க. இவையெல்லாம், தவஞ் செய்து யோகஞ்செய்வார்க்கு உரியன. இனி, தவஞ்செய்வார்க்கு உரியன - ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம்பொறுத்தல், தட்பம்பொறுத் தல்,

இடம்வரையறுத்தல், ஆசனம்வரையறுத்தல், இடையிட்டுமொழிதல், உரையாடாமை என எட்டுவகைப்படும். "நாலிருவழக்கிற் ரூபதபக்கம்" என்பது, தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்தில் புறத்திணையியலில் உ௦-ஆம் சூத்திரத்தில் உள்ளது. ஏலாமை - பொருந்தாமை. செயற்கு - 'கு' விகுதி காலங்காட்டும் எதிர்காலவினையெச்சம்; அல் - சாரியை. அரிய - பலவின்பால் வினையாலணையும்பெயர். இத்திருக்குறளை "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமையான்" என்னுந் திருக் குறளோடு ஒப்பிடுக.

(சு)

உஎ. சுவையொளி யூறோசை நாற்றமென்
வகைதெரிவான் கட்டே யுலகு.

றைந்தின்

(இ - ள்.) சுவை - சுவையும், ஒளி - ஒளியும், ஊறு - ஊறும், ஓசை - ஓசையும், நாற்றம் - நாற்றமும், என்ற - என்று சொல்லப்பட்ட, ஐந்தின் - (தந்மாத்திரைகள்) ஐந்தனது, வகை - கூறுபாட்டையும், தெரிவான்கட்டு ஏ - ஆராய்வான் அறிவின்கண்ணதே, உலகு - உலகம்; (எ - று.)

---

*இச்சூத்திரங்கள்-தொல். பொ. புறத். உ௦-உரையிற்காட்டப்பட்டவை.

† புறப்பொருள் வெண்பாமாலை, வாகைப், கக.

௩ - ஆம் அதிகாரம்—

நீத்தார்பெருமை உள்

அவற்றின் கூறுபாடாவன-பூதங்கட்கு முதலாகிய அவைதாம் ஐந்தும்' அவற்றின்கண் தோன்றிய அப்பூதங்கள் ஐந்தும், அவற்றின்கூறுகியஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆக இருபதுமாம். 'வகை தெரிவான் கட்டு' என உடம்பொடு புணர்த்ததனுல் தெரிகின்ற புருடனும், அவன் தெரிதற் கருவியாகிய மான் அகங்கார மனங்களும், அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் பெற்றும்.*தத்துவம் இருபத்தைந்தனையுந் தெரிதலாவது-மூலப்பகுதி ஒன்றில் தோன்றியது அன்மையின் பகுதியேயாவதல்லது விகுதியாகாதெனவும், அதன்கண் தோன்றிய மானும் அதன்கண் தோன்றிய அகங்காரமும் அதன்கண் தோன்றிய தன்மாத்திரைகளும் ஆகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும் தங்கண் தோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலும் உடைய எனவும், அவற்றின்கண்தோன்றிய மனமும்

ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் பூதங்களும் ஆகிய பதினுறும் தங்கண்தோன்றுவன இன்மையின் விகுதியேயாவதல்லது பகுதியாகாஎனவும், புருடன் தான் ஒன்றில்தோன்றுமையானும் தன்கண்தோன்றுவன இன்

மையானும் இரண்டும் அல்லன் எனவும் சாங்கியநூலுள் ஓதியவாற்றான் ஆராய்தல். இவ்விருபத்தைந்துமல்லது உலகு எனப் பிறிதொன்றில்லையென உலகினது உண்மை அறிதலின், அவன் அறிவின் கண்ணதாயிற்று.

இவை நான்கு பாட்டானும், பெருமைக்கு ஏது ஐந்தவித்தலும் யோகப் பயிற்சியுந் தத்துவவுணர்வும் என்பது

கூறப்பட்டது.

(கு - ரை.) பஞ்சபூதங்களின் காரணம், பஞ்ச தந்மாத்திரைகளெனப் படும்: அவை, ஐம்புலன். தந்மாத்திரை - பூதங்களின் ஸூக்ஷ்மாவஸ்தை என்பர், தத்துவத்ரயத்தில். அறிவின் கண்ணது-அறிவினிடத்தது. பூதங்கள் ஐந்து - நிலம், நீர், தீ, காற்று, வானம். ஞானேந்திரியம்-அறிகருவி; அவை-மெய், வாய், கண், மூக்கு, செவி. கர்மேந்திரியம்-கிரியைக்கு உரிய பொறி;

அவை-உபத்தம், பாணி, பாதம், பாயு, வாக் என்பன. உடம்பொடுபுணர்த்தல் என்பது ஒரு தந்திரவுத்தி; அதாவது - (இலக்கணத்திற்)சொல்லவேண்டும் விதியை வெளிப்படையாகச்சொல்லாமல் ஆசிரியன் பிரயோகத்தின் மூலமாகத் தெரிவித்தல்; அது உயிர்முதல்மொழிவரும்போது

- நன்னூலில் 'குற்றியலுகரஞ் சிறுபான்மை கெடாமல்நிற்கும்' எனச் சொல்லவேண்டியவர் அவ்வாறு விதித்துச்சொல்லாமல் "தன்முக மாகத் தானழைப்பதுவே" எனத் தாம் பிரயோகித்ததன் குறிப்பினால் அவ்விதியைப் பெறவைத்தாற் போல்வது: இங்கே 'ஐந்தின்வகை' என்றதனால் இருபது தத்துவங்களையுங் கூறினாற்போல, புருஷனும் அவன் தெரிதற்குக் கருவியாகிய மானாங்கார மனங்களும் அவற்றிற்குக் காரணமாகிய மூலப்பிரகிருதியும் ஆகிய மற்ற ஐந்தையும் வெளிப்படையாக் கூறாமல் 'தெரிவான்' என உயர்திணை

யாண்பாலாகப் பிரயோகித்ததன் குறிப்பினாற் பெறவைத்ததனால், உடம்பொடுபுணர்த்தலாயிற்று: இது, தொல்காப்பியத்து மரபியலின் இறுதிச் சூத்திரத்தில் 'ஒருதலைமொழிதல்' என்ற உத்திக்கு இனமாகப் பேராசிரியராற் கூறப்பட்டுள்ளது; இதனை வடநூலார் 'ஞாபகம்' என்றுகூறியுள்ளார்: பிரயோகவிவேகத்தின் (சூத். 50.) உரையில் வடநூலார் 'உடம்பொடுபுணர்த்தலை நிபாதமென்பர்' என்று எழுதியுள்ளது. நிபாதமென்பது - சொல்லிய இலக்கணத்தால் அமையாத சொல்லை 'இது அமைக' என்ற குறிப்போடு ஆசிரியன் உச்சரிப்பது. அது, சுழற்சியென்றபொருளில் தெருமரல் அலமரல் என்ற இச்சொற்கள் எவ்வாறு வந்தன என்று காரணம் அறியப்படாமலிருக்கவும், அவை யப்பொருளில் வருக என்றகருத்தோடு ஆசிரியன் "தெருமரலலமரலாயிரண்டுஞ் சுழற்சி" என்று கூறினாற்போல்வது. இங்குக் கூறியவாற்றால் நிபாதமென்பது உடம்பொடு புணர்த்தலாகாதென்பது பெறப்படும். புருடன் - ஆத்மா. தெரிதற்கருவி - தெரிவதற்குக் காரணம். மான் - மஹத்தத்துவம்; மஹத் என்னும் வடமொழி எழுவாயொருமையில் 'மஹாந்' எனநிற்கும்: அது,தமிழில் மான் எனத் தற்பவமாயிற்று. சாங்கிய நூலிலே'மான்' என்றது, புத்தியை. மான் அகங்கார மனங்கள் - மஹாந் அஹங்காரம் மநஸ் என்னும் மூன்றுதத்துவங்கள். மூலப்பகுதி - மூலப்பிரகிருதி; இது, பிரபஞ்சத்திற்குக்காரணம். பகுதி-பிரகிருதி;காரணம். விகுதி-விகிருதி;காரியம். ஒன்றின் தோன்றியது அன்மையின் - ஒன்றினிடத்திலிருந்து தோன்றியதல்லாததனால். முதலாயது - காரணமாகியது. தங்கண்தோன்றுவன-தம்காரியமாகியவை. சாங்கிய நூலுள் ஓதியவாற்றான் - சாங்கியசாஸ்திரத்திற் சொன்னபடியே. நான்கு ஐந்தாம் பாட்டுக்களால் நீத்தார்பெருமைக்கு ஏது ஐந்தவித்தல் என்றும், ஆறும்பாட்டால் யோகப்பயிற்சி என்றும், ஏழாம்பாட்டால் தத்துவஞானம் என்றும் கூறப்பட்டது. என்று என்னும் எண்ணிடைச்சொல்லைச் சுவையென்று, ஒளியென்று, ஊறென்று, ஓசையென்று, நாற்றமென்று என எல்லாவற்றோடுங் கூட்டுக; [நன். இடையியல் - ௧௦.] அவ்வியலில் ௯-ஆம்சூத்திரத்து விதியினால், இது தொகைபெற்று வந்தது. இனி, என்ற என்னும் பெயரெச்சத்து அகரவீறு விகாரத்தால் தொக்கதென்றுங் கொள்ளலாம். கட்டு - கண் என்னும் பெயரடியாகப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; டு - விகுதி. எல்லாவற்றையுங் காணுத

லால், அறிவை 'கண்' என்றார். ஏகாரம் - தேற்றம். இங்கே "மூலப்ரக்ருதி

ரவிக்ருதிர் மஹதாத்யா ஃப்ரக்ருதிவிக்ருதயஸ் ஸப்த, ஷோடஶகஸ்து விகாரோ

நப்ரக்ருதிர் நவிக்ருதி: புருஷ:" என்னும் வடநூல்மேற்கோளின் பொருளை

விசாரித்து அறிக. இனி, இக்குறளுக்கு-ஐம்புலன் களை இன்ன இன்ன இடத்

திற் செலுத்தல்கூடும் இன்னஇன்ன இடத்திற் செலுத்தல்கூடாது என்று

உய்த்துஉணர்ந்துதேர்ந்த ஞானிகளது சொற்படி நடப்பர் உலகத்தார் என்

னும் பொருள்கொள்ளலாம்,

(எ)

உஅ. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

ங - ஆம் அதிகாரம்—நீத்தார்பெருமை

உக

(இ - ள்.) நிறை மொழி மாந்தர்-நிறைந்த

மொழியினையுடைய துறந்தாரது, பெருமை - பெருமையை, நிலத்து-நிலவுலகத்தின்கண், மறைமொழி - (அவர் ஆணையாகச் சொல்லிய) மந்திரங்களே, காட்டிவிடும் - (கண் கூடாகக்) காட்டும்; (எ - று.)

'நிறை மொழி' என்பது, அருளிக்கூறினும் வெகுண்டுகூறினும் அவ் வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி. காட்டுதல் - பயனுன் உணர்த்துதல்.

(கு - ரை.) நிறைந்த மொழி - பழுதுபடாத மொழி; பொருள் நிரம்பிய சொற்கள். ஆணை - கட்டளை. கண்கூடாக - பிரதியட்சமாக. அருளி - கருணைகொண்டு. வெகுண்டு - கோபங்கொண்டு. அருளிக்கூறும்மொழி - அனுக்கிரகவார்த்தை, வெகுண்டுகூறும்மொழி - சாபவார்த்தை. பயந்தேவிடும்தந்தேவிடுகிற. முனிவரது சாப அநுக்கிரகங்களைக் கடவுளரும் தடுக்கும் வன்மையுடையரல்லரென அறிக. மறைமொழி - புறத்தார்க்குப் புலனுகாமல் மறைத்துக் கூறப்படுஞ் சொற்ெறுடர்; எனவே, மந்திரமாயிற்று. மாந்தர் ஒருமையில்லாமல் எப்பொழுதும் பன்மையிலேயே வருஞ் சொல்; தொல் காப்பியத்துச் சொல்லதிகாரத்தில் ''ஆண்மையடுத்த'' என்ற சூத்திரத்தில் ''மாந்தர் மக்களென்னும் பெயரும்,...,அப்பதினைந்துமவற்ருேரன்ன'' என்று கூறியதனுலும் இது அறியப்படும். இவ்வாறு வருவதை வடநூலார் 'நித்யபகு வசனம்' என்பர். துணிவுப்பொருள்தோன்ற, 'காட்டிவிடும்' என்ருர். நிறை மொழி மாந்தர் - சொல்லியசொல்லின்பொருள் எங்குங் குறைவில்லாமற் பயன்தரும்படி சொல்லும் ஆற்றலுடையார். தொல்காப்பியனுர்''நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திர மென்ப'' (செய்-179) என்றதுங் காண்க.

(அ)

உசு. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

(இ - ள்.) குணம் என்னும் குன்று ஏறி நின்றார் - (துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய) நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்ற முனிவரது, வெகுளி—, கணம்ஏஉம்-(தான் உள்ள அளவு)கணமே யாயினும், காத்தல் - (வெகுளப்பட்டாரால்) தடுத்தல், அரிது—; (எ - று.)

சலியாமையும் பெருமையும் பற்றி, குணங்களைக் குன்றாக உருவகஞ் செய்தார். குணம்-சாதியொருமை. அநாதியாய் வருகின்றவாறுபற்றி ஒரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் 'கணமேயும்' என்றும், நிறைமொழிமாந்தராகலின் 'காத்தலரிது' என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும், அவராணை கூறப்பட்டது.

(கு - ரை.) கணமேயாயினும் - க்ஷணப்பொழுதாகவேயிருந்தாலும். சலியாமை - அசையாதிருத்தல். குன்று - மலை. சாதியொருமையாவது - ஒரு சொல் ஒருமையீறு தோன்ற நின்றும் தோன்றாது

நின்றும் பின் ஒருமை பன்மை வினையிருக மேல்வர்து
முடிக்குஞ்சொல்லைப்பெற்றும் பெருதாழ்


தானே பன்மைப்பொரு ளுணர்த்துவது; இதனை
வடநூலார், 'ஜாத்யேக
வசனம்' என்பர். ஒரோவழி - ஒவ்வொருசமயத்தில்.
'காத்தலரிது' என்றார்,
அவர்கள்சாபத்தைச் சகித்தல் கூடாமையால்.
(கூ)
ᇿ௦. அந்தண ரென்போ ரறவோர்மற்
றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.
(இ - ள்.) எ உயிர்க்குஉம்-எல்லா வுயிர்கள்மேலும்,
செம் தண்மை-செவ்
விய தண்ணளியை, பூண்டு ஒழுகலான்—, அந்தணர்
என்போர்-அந்தண
ரென்று சொல்லப்படுவார், அறவோர் -
துறவறத்தில்நின்றவர்; (எ - று.)
பூணுதல் - விரதமாகக் கோடல். 'அந்தணர்' என்பது
- அழகிய தட்பத்
தினை யுடையார் என எதுப்பெயராகலின், அஃது
அவ்வருளுடையார்மே

லன் றிச் செல்லா தென்பது கருத்து.

அவ்வாறு ஆணையுடைய ராயினும் உயிர்கள்மாட்டு அருளுடைய ரென்பது, இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) செவ்விய தண்ணளி-நல்ல குளிர்ந்த கருணை. துறந்தவர்க்கு அருளுடைமை சிறந்த விரதமாம். தட்பம் - தண்மை. ஏதுப்பெயர்-ஒருகாரணத்தால் வந்தபெயர். அந்தணர்—அம் - அழகு; தண் - குளிர்ச்சி; இப்பண்படி, ஆகுபெயராய், அருளை உணர்த்திற்று: அர் - விகுதி. (௰)

௪-ஆம்

# அதிகாரம்—அறன்வலியுறுத்தல்.

அஃதாவது - அம்முனிவரான் உணர்த்தப்பட்ட அம்மூன்றனுள் ஏனைப் பொருளும் இன்பமும் போலாது அறன் இம்மை மறுமை வீடு என்னும்மூன்றனையும் பயத்தலான் அவற்றின் வலியுடைத்தென்பது கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

மும், அறத்து வழிப்படூஉந் தோற்றம்

"சிறப்புடை மரபிற் பொருளு மின்ப

போல'' என்றார் பிறரும்.

(கு - ரை.) போலாது - போலாகாமல். முனிவர் பெருமையைக் கூறிய

பின் அவர்களால் தெரிவிக்கப்பட்ட புருஷார்த்தங்களுள் முதலதாகிய தரு

மத்தின் வலிமையை உறுதியாகக்கூறுதல்

அதிகாரமுறைமை என்க. "சிறப்

புடைமரபின்'' என்னும் மேற்கோள், புறநானூற்றில் ௩௧-ஆம் செய்யுளில்

உள்ளது; இதற்குப் பொருள் - சிறப்பாகிய தன்மையையுடைய காமமுந் தருமத்துக்குப் பிற்படுந் தன்மைபோலஎன்பது. அறன் பதன்போலி.

அருத்தமுங்

- அறமென்

௩௧. சிறப்பீனுஞ் செல்வமு மீனு

மறத்தினூஉங்

காக்க மெவனோ வுயிர்க்கு.

(இ - ள்.) சிறப்பு ஈனும் - வீடுபேற்றையுந் தரும்; செல்வம்உம் ஈனும்-

(துறக்கம் முதலிய) செல்வத்தையுந் தரும்; (ஆதலான்), உயிர்க்கு - உயிர் கட்கு, அறத்தின் ஊஉங்கு - அறத்தின்

மிக்க, ஆக்கம்—, எவனோ - யாது?

ச - ஆம் அதிகாரம்—அறன்வலியுறுத்தல்

௩௧

எல்லாப் பேற்றினுஞ் சிறந்தமையின், வீடு 'சிறப்பு' எனப்பட்டது. "சிறப்பென்னுஞ் செம்பொருள்" 358)என்ற திருக்குறளிலும் சிறப்புஎன்பது வீடுஎன்னும்பொருளில் வந்தது: "சிறந்ததுபயிற்றல்" (கற்-51)எனத் தொல் காப்பியத்து வருதலுங் காண்க. ஆக்கந்தருவதனை 'ஆக்கம்'என்றார். ஆக்கம்- மேன்மேல்உயர்தல். ஈண்டு 'உயிர்' என்றது, மக்களுயிரை; சிறப்புஞ் செல்வமும் எய்துதற்கு உரியது அதுவே யாகலின்.

இதனால், அறத்தின்மிக்க உறுதி யில்லை யென்பது கூறப்பட்டது.. (கு - ரை.) துறக்கம்-சுவர்க்கபதவி. ஆக்கம்-உயர்ச்சிதருவது. சிறப்பு- சிறந்த வீட்டுலகத்துக்கு, பண்பாகுபெயர். அறத்தின் - ஐந்தனுருபு, உறழ் பொருவு; இது. எல்லைப்பொருளில் அடங்கும். அளபெடை, இன்னிசை தருதற்பொருட்டு. ஆக்கம் - காரியவாகுபெயர். ஓ - அசை. 'சிறப்பீனும், செல்வமுமீனும்' என்னும் வாக்கியங்களுக்கு அறமென்பது, தோன்றா எழு வாய். இனி, ஈனுமென்பதைப் பெயரெச்சமாக்கொண்டு, ஒருவாக்கியமாக முடிப்பினும் இழுக்காது. ஊங்கு-உயர்வு இழிவு எல்லைப்பொருளில் வரும் இடைச்சொல். எவன்-இன்மைகுறித்தது. (௧)

௩௨. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(இ - ள்.) (ஒருவனுக்கு), அறத்தின் ஊஉங்கு - அறஞ்செய்தலின் மேற்பட்ட, ஆக்கமும்—, இல்லை—; அதனை—, மறத்தலின் ஊங்கு - (மயக்கத்தால்) மறத்தலின் மேற்பட்ட, கேடு - கேடும், இல்லை—; (எ - று.)

'அறத்தினூஉங் காக்கமு மில்லை' என மேற்சொல்லியவதனையே அனுவதித்தார்; அதனாற் கேடு வருதல் கூறுதற் பயன் நோக்கி.

இதனான், அது செய்யாவழிக் கேடு வருதல் கூறப்பட்டது.

(கு - ரை.) கேடு - தீமைதருவது. அனுவதித்தல் எனினும், வழிமொழிதல் எனினும் ஒக்கும்; அநுவாதமாவது - முன்சொல்லப்பட்டதொன்றையே வேறொன்றுவிதித்தற்பொருட்டுப் பின்னுஞ் சொல்லுதல்: அதனால் அது கூறியதுகூற லென்னுங் குற்றமாகாது வழிமொழித லென்றாயிற்று; வழி மொழிதற்கு முன் கூறப்பட்டதைப் புரோவாதமென்பர் வடநூலார்: இங்கே, புரோவாதம்-"அறத்தினூஉங் காக்க மெவனோ" என்பது. அது-அறம். (உ)

கூங. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

(இ - ள்.) ஒல்லும் வகையான் - (தத்தமக்கு) இயலுந் திறத்தான், அறம் வினை - அறமாகிய நல்வினையை, ஓவாதவ - ஒழியாதே, செல்லும் வாய் எல்லாம்-(அஃது) எய்தும்இடத்தானெல்லாம்,

செயல்-செய்க; (எ-று.)

இயலுந் திறமாவது - இல்லறம் பொருளளவிற்கு ஏற்பவும், துறவறம் யாக்கைநிலைக்கு ஏற்பவுஞ் செய்தல். ஓவாமை - இடைவிடாமை. எய்தும்



இடமாவன - மனம் வாக்குக் காயம் என்பன. அவற்றாற்செய்யும் அறங்களாவன - முறையே நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலும் என இவை.

இதனான், அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) தத்தமக்கு இயலுந் திறத்தான்-தங்கள் தங்களுக்குக் மட்டினால். ஒழியாதே - இடைவிடாமல். அஃது எய்தும் இடத்தா

கூடிய

னெல்

லாம் அவ்வறம் பொருந்துமிடங்க ளெல்லாவற்றாலும். செய்க - செய்யக் கடவன். யாக்கைநிலை - சரீரத்தின்நிலைமை. மனமொழிமெய்கள் - திரிகரணமென ப்படும். திரிகரணங்களாலும் அறஞ்செய்தல் - மனத்தால் நல்ல வற்றை நினைத்தலும், வாயால் நல்லவற்றைச் சொல்லுதலும், உடம்பினால் நற்கருமங்களைச் செய்தலுமாம். ஆறு - விதம். ஓவாது - எதிர்மறைவினை யெச்சம். செயல் - வியங்கோள்.

௩௪. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற.

(இ - ள்.) (அவ்வாற்றான் அறஞ்செய்வான்), மனத்துக்கண் - (தன்) மனத்தின்கண், மாசு இலன் ஆதல் - குற்றமுடைய னல்லனாக; அனைத்து அறன் - அவ்வளவே அறமாவது; பிற - அஃதொழிந்த சொல்லும் வேடமும், ஆகுலம் நீர - (அறமெனப்படா,) ஆரவார நீர்மைய; (எ - று.)

குற்றம் - தீயன சிந்தித்தல். பிறர் அறிதல் வேண்டிச் செய்கின்றன வாகலின், 'ஆகுலநீர' என்றார். மனத்து மாசுடையனாயவழி அதன் வழிய வாகிய மொழிமெய்களாற் செய்வன பயனில வென்பதூஉம் பெறப்பட்டது.

(கு - ரை.) அவ்வாற்றான்-அவ்விதத்தால்: ஒல்லும்வகையா லென்றபடி. வேடம் - வேஷம்; மனத்தில் தருமசிந்தை யில்லாமலே வெளிக்குத் தருமஞ் செய்பவன்போலக் காட்டுவது. ஆரவார நீர்மைய-பலரும் அறியச் செய்யும் ஆடம்பரத்தன்மையையுடையனவாம். அதன் வழியவாகிய - மனத்தின் வழியே நடப்பனவாகிய. ஆதல் - உடன்பாட்டுவியங்கோள். நீர - பலவின் பால் முற்று: நீர்மை-பகுதி. இக்குறள், மூன்று முடிபு. முதல்வாக்கியத் துக்கு, ஒருவன் - தோன்றா எழுவாய். இனி, ஆதல் என்பதைத் தொழிற் பெயராக வைத்து, 'மனத்தில் மாசிலனாத லாகிய அதுவே அறன்: பிற இடம்பத்தன்மையன' என இரண்டுமுடிபாகவுங்

கொள்ளலாம். பிற - இடைச்சொல்லடியாப் பிறந்த பெயர்.

(௪)

௩௫. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு

மிழுக்கா வியன்ற தறம்.

(இ - ள்.) அழுக்காறு - (பிறராக்கம்) பொறாமையும், அவா-(புலன்கண் மேற் செல்கின்ற) அவாவும், வெகுளி-(அவை ஏதுவாகப் பிறர்பால்வரும்) வெகுளியும், இன்னா சொல்- (அதுபற்றி வருங்) கடுஞ்சொல்லும், (ஆகிய), நான்குஉம் - இந்நான்கினையும், இழுக்கா-கடிந்து, இயன்றது-இடையறாது நடந்தது,—அறம் - அறமாவது; (எ - று.)

௪ - ஆம் அதிகாரம்—அறன்வலியுறுத்தல்

௩௫

இதனான், 'இவற்றோடுவிரவி இயன்றது அறமெனப்படாது' என்பது உங் கொள்க.

இவை இரண்டுபாட்டானும், அறத்தினது இயல்பு கூறப்பட்டது.

(கு-ரை.) பிறராக்கம் பொறாமை-அயலார்க்கு உண்டாகும்நன்மைகளைக் கண்டு மனம் பொறாதிருத்தல். கடிந்து - நீக்கி.

இவற்றோடு விரவி இயன்றது - அழுக்காறுமுதலியவற்றோடு கலந்து நடந்தது. அருத்தாபத்தியால், 'பொறுமை முதலியவற்றோடுகூடியது அதருமம்' என்றுங்கொண்டார். அழுக்காறு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர்; அழுக்கறு-பகுதி: இது-ஒருசொல்; இனி, அழுக்கு அறு என்னும் இரண்டுசொற்கள் சேர்ந்து ஒருசொல் தன்மைப்பட்டு, எதிர்மறையிலக்கணையால், குற்றத்தைநீக்கு என்னும்பொருளைத் தராமல் குற்றத்தையுடையவனாகு எனப்பொருள்பட்டு, பொறுமையைக் குறித்ததென்றுங் கொள்ளலாம். அழுக்காறுமுதலியன பெயர்ச்செவ்வெண்ணாதலால், அது, ஈற்றில் 'நான்கு'என்னுந் தொகைபெற்றுவந்தது. இழுக்கா- இறந்தகால வினையெச்சம்; ஆ-விகுதி, காலங்காட்டிற்று. இயன்றது - வினையாலணையும் பெயர். இயன்றதே அறம் என்னும் பிரிநிலையேகாரம் தொக்கது.

(௩௫)

௩௬. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

(இ - ள்.) அன்று அறிவாம் என்னாது - (யாம் இது பொழுது இளையமாகலின்) இறக்கும் ஞான்று செய்து

மெனக் கருதாது, அறம்-அறத்தினை, செய்க - (நாள்தோறுஞ்) செய்க; அது-அவ்வாறு செய்த அறம், பொன்றும் கால் - (இவ்வுடம்பினின்றும் உயிர்) போங்காலத்து, (அதற்கு), பொன்றா- அழிவில்லாத, துணை - துணையாம்; (எ - று.)

'மற்று' என்பது, அசைநிலை. 'பொன்றாத்துணை' என்றார், செய்த உடம்பு அழியவும் உயிரோடு ஒன்றி ஏனையுடம்பினுஞ் சேறலின்.

இதனான், இவ்வியல்பிற்றாய அறத்தினை, நிலையாத யாக்கை நிலையின பொழுதே செய்க வென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) இதுபொழுது இளையமாகலின் - இப்பொழுது இளமைப் பருவத்தை யுடையவராயிருக்கிறோ மாதலால். இறக்கும் ஞான்று செய்தும் - (முதுமைப்பருவம்வந்து) சாம்பொழுது தருமஞ் செய்வோம். பொன்றுதல் - இறத்தல். அதற்கு - உயிருக்கு. செய்த உடம்பு-தருமத்தைச்செய்த சரீரம். ஒன்றி - கூடிநின்று. ஏனை உடம்பினும் சேறலின் - மற்றொரு பிறப்பின் உடம்பிலும் அவ்வறத்தின்பயன் செல்லுதலால்.
இவ்வியல்பிற்று-இப்படிப் பட்டதன்மையையுடையது. நிலையின - இருக்கிற. அன்று - அக்காலத்தில். அறிவாம் - தனித்தன்மைப் பன்மைமுற்று; பார்த்துக்கொள்வோ மென்று பொருள். கால் - காலம் என்பதன் கடைக்குறை. வயதுமுதிர்ந்தவர் மாத்திரமேயன்றி இளையவர்களும் இறத்தலுண் டாதலாலும், மரணம்நேரிடுங் காலம்

இன்னதென்று எவர்க்கும் ஒருதலையாக அறிதல்
5
கூடாமையாலும், ௩௬ திருக்குற
ள்

'அன்றறிவாமென்னு தறஞ்செய்க' என்றார். "மற்றறிவா நல்வினை யாமி
ளைய மென்னது, கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின், முற்றி
யிருந்த கனியொழியத் தீவளியால், நற்கா யுதிர்தலு முண்டு" என்றார், நால
டியாரிலும். 'பொன்றாத்துணை' என்றது, உடம்பு அழியாததனால்.
அழிந்தபின்னும் தான்
(௬)

௩௭. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானொ டூர்ந்தா னிடை.

(இ - ள்.) அறத்து ஆறு இது என -
அறத்தின்பயன் இதுவென்று
(யாம் ஆகமஅளவையான்) உணர்த்தல், வேண்டா—;
சிவிகை பொறுத்தா
னொடு ஊர்ந்தானிடை - சிவிகையைக் காவுவானோடு
செலுத்துவானிடை(க்
காட்சியளவைதன்னானே உணரப்படும்); (எ - று.)
பயனை 'ஆறு' என்றார், பின்னதாகலின். 'என'

என்னும் எச்சத்தால்
சொல்லாகிய ஆகமவளவையும், 'பொறுத்தானொ
டூர்ந்தானிடை' என்றத
னால் காட்சியளவையும் பெற்றும். 'உணரப்படும்' என்பது,
சொல்லெச்சம்.
இதனான், பொன்றாத்துணையாதல்
தெளிவிக்கப்பட்டது.
(கு - ரை.) ஆகமஅளவை - சாஸ்திரப்பிரமாணம்.
சிவிகை - பல்லக்கு;
ஶிபிகா என்னும் வடமொழியின் திரிபு.
காவுவான்-சுமப்பவன். செலுத்து
வானிடை - அதில் ஏறிநடத்துபவனிடத்தில்.
காட்சியளவை-பிரதியக்ஷப்பிர
மாணம். அறஞ்செய்தால் அவ்வழியே அதன்பயன்
அதன்பின் உண்டாத
லால், பயன் 'ஆறு' எனப்பட்டது; ஆறு-வழி. வேண்டா -
வேண்டுமென்ப
தன் எதிர்மறை. இதற்குஎழுவாய் - 'என' என்பது.
'என' என்பதற்கு -
என்று சொல்ல லென்பது பொருளாதலால்
ஆகமப்பிரமாணமும், 'சிவிகை
பொறுத்தானொ டூர்ந்தானிடை' எனக் குறித்துச் சொன்
னதனாற் பிரதி
யக்ஷப்பிரமாணமும், பெற்றுக்கொண்டோம்.

பொருள்முடியாததனால் 'உணரப்படும்' என்று எஞ்சிய சொல் வருவிக்கப்பட்டது: இங்ஙன்வருவிப்பது, சொல்லெச்சம். தருமத்தின்பயன் இப்படிப்பட்டதென்று நூல் களைக்கொண்டு அரிதின் தெரிவிக்கவேண்டிய தில்லை; உலகத்தில் ஒருவன் பல்லக்கைத் தூக்க மற்றொருவன் அதன்மேலேறி வீற்றிருப்பதைக் கண் கூடாகக் காணுதலினாலேயே அறஞ்செய்தவன் இன்பமனுபவிப்பானென் றும், அதுசெய்யாதவன் துன்பமனுபவிப்பா னென்றும் எளிதில் தெரிந்து கொள்ளலாமே யென்பது, கருத்து. இனி, இத்திருக்குறளுக்கு-'துறவறத்தின்பயனாகிய ஆத்மசொரூபஞானம் இப்படிப்பட்டதென்று யாம் இப்பொழுது புதிதாக வகுத்துச் சொல்லவேண்டுவதில்லை; சவ்வீரமகாராஜனுக்குப் பல்லக்கைச்சுமந்த ஜடபரதயோகிக்கும் அந்த ரகூகணமகாராஜனுக்கும் நடந்த சம்பாஷணையாலே அறியப்படும்' என்றும் உரைக்கலாம்; ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் இரண்டாம்அம்சத்தில் இறுதிநான்கு அத்தியாயங்களிற் காண்க.

ங-அ.

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(இ - ள்.) வீழ் நாள் - செய்யாது கழியும் நாள், படாஅமை-உளவாகாமல், ஒருவன்—,நன்று ஆற்றின் - அறத்தைச் செய்யுமாயின், அஃது - அச் செயல், வாழ் நாள் வழி அடைக்கும் கல் - (அவன் யாக்கையோடு) கூடும் நாள்வரும் வழியை (வாராமல்) அடைக்குங் கல்லாம்; (எ - று.)

ஐவகைக்குற்றத்தான் வரும் இருவகைவினையும் உள்ள துணையும் உயிர் யாக்கையோடுங்கூடி நின்று அவ்வினைகளது இருவகைப் பயனையும் நுகருமாகலின், அந்நாள் முழுவதும் 'வாழ்நாள்' எனப்பட்டது. குற்றங்கள் ஐந்தாவன - அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்பன; இவற்றை வடநூலார் 'பஞ்சகிலேசம்' என்ப. வினை இரண்டாவன-நல்வினை, தீவினை என்பன. பயன் இரண்டாவன - இன்பம், துன்பம் என்பன.

இதனன், அறம் வீடுபயக்குமென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) செய்யும் - செய்வான். யாக்கை - உடம்பு. ஐவகைக் குற்றம்- அறுதியாகிய அவித்தையும், அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருளிடத்துச் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலையிடத்துச் செல்லுங் கோபமும் என்பன. இவற்றுள் அகங்காரம் அவிச்சையிலும், அவாவுதல் ஆசையிலும்

அடங்குதலால், தமிழ்நூலார் "காமம்வெகுளி மயக்கம்" எனக் குற்றம் மூன்றென்பர். விழைவு-ஆசை. வெறுப்பு கோபம், கிலேசம்-துன்பந் தருவன. படாமை - எதிர்மறைவினையெச்சம். நன்று-நல்ல அறத்துக்கு; பண் பாகுபெயர். அஃதொருவன் - ஆய்தவெழுத்து மெய்போல ஒலித்து அலகு பெறுதுகின்றது. படாஅமை - அளபெடை ஓசைநிறைத்தது. வாழ்நாள்வழி - பிறப்படையும் வழி.

(அ)

௩௯. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(இ - ள்.) அறத்தான் வருவதுஏ - இல்லறத்தோடு பொருந்தி வருவதே, இன்பம் - இன்பமாவது; மற்று எல்லாம் - அதனோடு பொருந்தாது வருவனவெல்லாம், புறத்த - (இன்பமாயினும்) துன்பத்தினிடத்த; புகழ்உம் இல - (அதுவேயுமன்றிப்) புகழும் உடையவல்ல; (எ - று.)

ஆனுருபு, ஈண்டு உடனிகழ்ச்சிக்கண் வந்தது; "தூங்கு கையா னோங்கு நடைய" என்புழிப்போல. இன்பம் - காம நுகர்ச்சி; அஃதாமாறு, காமத்துப் பாலின் முதற்கட் சொல்லுதும். இன்பத்திற் புற மெனவே, துன்பமாயிற்று. பாவத்தான் வரும் பிறனில்விழைவு முதலாயின அக்கணத்துள் இன்பமாய்த் தோன்றுமாயினும் பின் துன்பமாய்விளைதலின், 'புறத்த' என்றார்; அறத்தோடு வாராதன புகழுமில எனவே, 'வருவது புகழுமுடைத்து' என்பது பெற்றும்.

இதனான், அறஞ்செய்வாரே இம்மையின்பமும் புகழும்

எய்துவ ரென் பது கூறப்பட்டது.

(கு - ரை.) "தூங்கு கையான்" என்னும் மேற்கோள் - புறநானூறு உஉ- ஆம் செய்யுளில் உள்ளது;

இதற்கு-தொங்குகிறகையோடு கம்பீரமான நடை நீக்

திருக்குறள்

யையு முடைய வென்று பொருள். என்புழி - என்றவிடத்தில். மூன்றாம் வேற்றுமையின் உருபுகளுள் ஆனுருபு, பெரும்பாலும் கருவிகருத்தாப்பொருள்களில் மாத்திரமே வரும். காமத்துப் பாலின் முதலில் 'ஈண்டு இன்ப மென்றது - ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத் தாய காமவின்பத்தினை' எனக் கூறுவர், பரிமேலழ கர். பிறனில்விழைவு - அயலான்மனையாளை விரும்புதல். பின் துன்பமாய்விளைதல் - பழியும் பாவமும் ராஜதண்டனையுமாய் முடிதல். அறத்தோடு கூடிவருவது புகழுடையது எனக் கொண்டது, அருத்தாபத்தி. இம்மையின்பம் - இவ்வுலகத்தின்பம். மற்றுஎன்னும் இடைச்சொல், இங்கே, சுட்டியதற்கு இனமான பொருளில் வந்தது. புறத்த - பலவின்பாற் குறிப்புமுற்று; புகழும், உம்மை - இறந்தது தழுவிய எச்சம்.

(௬)

௪௦. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, செயல்பாலது - செய்தற்பான்மை யது, அறனே - நல்வினையே; உயல் பாலது - ஒழிதற்பான்மையது, பழி(ஏ) - தீவினையே; (எ - று.)

'ஓரும்' என்பன இ ரண்டும் - அசைநிலை. தேற்றேகாரம், பின்னுங் கூட்டப்பட்டது. பழிக்கப்படுவதனை 'பழி' என்றார்.

இதனான், செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன.

(கு - ரை.) செய்தற்பான்மையது - செய்யப்படும் உரிமையையுடையது. ஒழிதல் - செய்யாது விடுதல். ஓரும் - இடைச்சொல். 'அறனே' என்பதி லுள்ள ஏகாரம், 'பழி' என்பதனோடுக் கூட்டப்பட்டது. பாவத்தைத் தருவ தாய்ப் பழிக்கப்படுதல்பற்றி, அதருமத்தை 'பழி' எ ன்றார்; காரணக்குறி. (௪௦)

பாயிரம் முற்றிற்று.

---

# இல்லறவியல்.

(கு - ரை.) அறஞ்செய்தற்குஉரிய இல்லறம் துறவறம் என்ற இரு வகை நிலையுள் இல்லறம் முதல னாதலால், இல்லறவியல் முதலில் வைக்கப் பட்டது: இல்லறத்திலிருந்து துறவறத்திற்குச் செல்லலர் மாதலால், இல் லறம் முதலதாம்: இனி, "இல்லற மல்லது நல்லற மன்று" என்று ஔவை யார் கூறினபடி இருவகை

அறத்துள் இல்லறம் தலைமையானதாதலால், அதை முதலில்வைத்தா ரென்றலும் ஒன்று. இந்த இல்லறவியல், இல் வாழ்க்கையென்பது முதல் புகழ் ஈறாகவுள்ள இருபது அதிகாரங்களைக் கொண்டதாகும்.

ரு - ஆம் அதிகாரம்—இல்வாழ்க்கை

ஙஎ

ரு - ஆம்

அதிகாரம்—இல்வாழ்க்கை.

அஃதாவது - இல்லாளோடு கூடி வாழ்தலினது சிறப்பு. இன்னிலை அறஞ் செய்தற்கு உரிய இருவகைநிலையுள் முதலாதலின், இஃது, அறன் வலியுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) இல் - அதற்குஉரிய மனையாளுக்கு, ஆகுபெயர். வாழ்க்கை - தொழிற்பெயர். இன்னிலை-இல்நிலை எனப் பிரிக்க; இல்லறநிலைமை யென்ற பொருள். அறன்வலியுறுத்தலைக் கூறிய பின், அறஞ்செய்வார்க்கு உரிய இருவகைநிலையுள் முதலதான இல்லறநிலைக்கு மனையாளோடுகூடிவாழ்தல் முக்கியமாதல், அதிகாரமுறைமையென்க.

சக. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.

(இ - ள்.) இல் வாழ்வான் என்பான் - இல்லறத்தோடுகூடி வாழ்வா னென்று சொல்லப்படுவான், இயல்பு உடைய மூவர்க்கும் - அறவியல்பினை யுடைய ஏனை மூவர்க்கும், நல் ஆற்றின்-(அவர்செல்லும்) நல்லொழுக்க நெறிக்கண், நின்ற - நிலைபெற்ற, துணை - துணையாம்; (எ - று.)

'இல்' என்பது, ஆகுபெயர். 'என்பான்' என, செயப்படுபொருள் வினை முதல்போலக் கூறப்பட்டது. ஏனையமூவராவார் - ஆசாரியனிடத்தினின்று ஓதலும் விரதங்காத்தலுமாகிய பிரமசரிய ஒழுக்கத்தானும், இல்லைவிட்டுத் தீயோடு வனத்தின்கட் சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கத்தானும், முற்றத் துறந்த யோக ஒழுக்கத்தானும் என இவர். இவருள் முன்னையிருவரையும் பிறர்மதம்மேற்கொண்டு கூறினார். இவர் இவ்வொழுக்க நெறிகளை முடியச் செல்லுமளவும் அச்செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலிய உதவி அவ்வந்நெறிகளின் வழுவாமற் செலுத்துதலான், 'நல்லாற்றி னின்ற துணை' என்றார்.

(கு - ரை.) வினைமுதல் - கருத்தா. 'எனப்படுவான்' என்பது அகரச்சாரியையும் செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் 'படு' விகுதியும் தொக்கு 'என்பான்' என நின்றதாகக் கொண்டார். பிரயோகவிவேக நூலாரும், தொல் காப்பியச்

சூத்திரவிருத்திகாரரும். இல்லிற் செய்யுந் தருமத்தை 'இல்' என்றது - இடவாகுபெயர். தீ - நித்தியாக்கினி. வழிபட - உபசரிக்க. அவ்வாறு தவஞ்செய்யும் ஒழுக்கத்தான் - வானப்பிரஸ்தன். யோக ஒழுக்கத்தான் - சந்யாசி. திருவள்ளுவர் 'இல்லறம்,' 'துறவறம்' என இருவகை ஆச்சிரமமாகவே வகுத்துக்கொண்டாராதலால், மற்றையிரண்டாச்சிரமத்தாரையுங் கூட்டி 'மூவர்க்கும்' என்றது - பிறர்மதத்தை அங்கீகரித்ததாயிற்று; இது 'உடன்படல்' என்னும் மதம். இவர்-மூன்றுச்சிரமத்தார். முடியச்செல்லுமளவும் - நிறைவேற்றுமளவும். அச்செலவுக்கு - அவ்வொழுக்கத்திற்கு. இடையூறு - தடை. உண்டி - உணவு. உறையுள் - இடம். அவ்வந்நெறி - அந்தந்த வழிகள்.



சஉ. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு

மில்வாழ்வா னென்பான் றுணை.

(இ - ள்.) துறந்தார்க்குஉம் (களைகணானவரால்) துறக்கப்பட்டார்க்கும், துவ்வாதவர்க்கு உம் -நல்கூர்ந்தார்க்கும், இறந்தார்க்குஉம்-(ஒருவரும் இன்றித் தன்பால்வந்து) இறந்தார்க்கும், இல்வாழ்வான் என்பான் - இல்வாழ்வானென்று சொல்லப்படுவான், துணை—; (எ - று.)

துறந்தார்க்குப் பாவம் ஒழிய அவர் களைகணுய்நின்று வேண்டுவன செய்

தலானும், துவ்வாதவர்க்கு உணவுமுதலிய கொடுத்தலானும், இறந்தார்க்கு

நீர்க்கடன்முதலியசெய்து நல்லுலகின்கட் செலுத்தலானும், 'துணை' என்றார்.

இவை இரண்டுபொட்டானும், இன்னிலை எல்லாஉபகாரத்திற்கும் உரித்

தாதல் கூறப்பட்டது.

(கு - ரை.) களைகணவரால் துறக்கப்பட்டார் - தஞ்சமாக இருந்தவர்க

ளால் விடப்பட்டுக் கதியற்றவராயினவர். நல்கூர்ந்தார் - தரித்திரர். துவ்வாத

வர்-அனுபவிக்கப்படும் பொருளொன்றையும் அனுபவிக்கப்பெறாதவர்: எனவே,

தரித்திரராயிற்று. தன்பால் - தன்னிடத்தில். பாவம் ஒழிய - தீவினைக்குக்

காரணமாகிய வழிகள் தவிர மற்றவழிகளால். நீர்க்கடன் - தருப்பணம்.

இங்கே, துறந்தார் - சன்னியாசிகளல்ல ரென அறிக. (உ)

சரு. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லொன்றாங்

கைம்புலத்தா றோம்ப றலை.

(இ - ள்.) தென்புலத்தார் - பிதிரர், தெய்வம் -

தேவர், விருந்து-விரு
ந்தினர். ஒக்கல் - சுற்றத்தார், தான்—, என்ற - என்று சொல்லப்பட்ட, ஐம்
புலத்து - ஐந்திடத்துஞ் செய்யும், ஆறு - அறநெறியை, ஓம்பல் - வழுவாமற்
செய்தல்,—தலை - (இல்வாழ்வானுக்குச்) சிறப்புடைய அறமாம்; (எ - று.)
பிதிராவார் படைப்புக்காலத்து அயனாற் படைக்கப்பட்டதோர் கடவுட்
சாதி; அவர்க்கு இடம் தென்திசையாதலின், 'தென்புலத்தார்' என்றார். 'தெய்
வம்' என்பது, சாதியொருமை. 'விருந்து' என்பது - புதுமை; அஃது-ஈண்டு
ஆகுபெயராய், புதியராய்வந்தார்மேல் நின்றது; அவர் இருவகையர்; பண்டு
அறிவு உண்மையின் குறித்து வந்தாரும், அஃது இன்மையின் குறியாது வந்
தாரும் என. ஒக்கல் - சுற்றத்தார். எல்லா அறங்களும் தான் உளனாய் நின்று
செய்யவேண்டுதலின், தன்னை ஓம்பலும் அறனாயிற்று. என்ற என்பது, விகார
மாயிற்று. ஆங்கு - அசை. ஐவகையும் அறஞ்செய்தற்கு இடனாகலின், 'ஐம்
புலம்' என்றார். அரசனுக்கு இறைப்பொருள் ஆறில் ஒன்றாயிற்று, இவ்வைம்
புலத்திற்கும் ஐந்து கூறு வேண்டுதலான் என்பது அறிக.

(கு - ரை.) பிதிரர் - பிதிருக்கள். அயன் - பிரமன். கடவுட்சாதி - தேவ
•சாதி. தென்புலத்தார் - தெற்குத்திக்கிலுள்ளவர். விருந்து - விருந்தினர்க்குப்
பண்பாகுபெயர். பண்டறிவு - முன்பரிசயம்; அறிமுகம். ஓம்பல் - காத்தல்.
என்றுங்கு - அகரம், தொகுத்தல் விகாரம்,

இறைப்பொருள் - வரிப்பணம்.

## ரு - ஆம் அதிகாரம்—இல்வாழ்க்கை

௩௯

'ஐம்புலத்து' என்றஇடத்தில் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. தெய்வம்- தைவம். ஒக்கல் - மனம் ஒருமித்திருக்கும் பந்துக்களுக்குத் தொழிலாகுபெயர்.
தலைமையான அறத்தை 'தலை' என்றது, பண்பாகுபெயர்.
தேவரொழிந்த மற்றைத்தேவர்.

தெய்வம் - பித்ரு

(௩)

௪௪. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

(இ - ள்.) பழி அஞ்சி - (பொருள்செய்யுங்கால்)

பாவத்தை அஞ்சி (ஈட்டி), பாத்து -(அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினோர்க்கும் தென் புலத்தார் முதலிய நால்வர்க்கும்) பகுத்து, ஊண் - (தான்) உண்டலை, வாழ்க்கை - (ஒருவன்)இல்வாழ்க்கை, உடைத்து ஆயின்—, வழி - அவன்வழி, (உலகத்து), எஞ்ஞான்றும்—, எஞ்சல் இல் - (நிற்றலல்லது) இறத்தலில்லை.

பாவத்தான்வந்த பிறன்பொருளைப் பகுத்துஉண்ணின், அறம் பொருளுடையார்மேலும் பாவம் தன்மேலுமாய்நின்று வழி எஞ்சுமாகலின், 'பழியஞ்சி' என்றார். வாழ்வானது உடைமை, வாழ்க்கைமேல் ஏற்றப்பட்டது.

(கு - ரை.) பொருள் செய்யுங்கால் - பணஞ் சம்பாதிக்கும்பொழுது. ஈட்டி - சம்பாதித்து. அவன்வழி - அவனுடைய சந்ததி பகுத்து உண்ணின்- (பிறர்க்குப்) பகுத்துக்கொடுத்துத் தானும் உண்டால். அறம்-பகுத்துக் கொடுத்
தலாலுண்டாகிற அறம்; அது, அப்பணத்துக்கு உடையவரிடஞ் செல்லும். பாவம் - தீய வழியால் அப்பொருளைச் சம்பாதித்ததனா லுண்டான தீவினை. வாழ்வானுக்கும் வாழ்க்கைக்கு முள்ள ஒருமைப்பாடுபற்றி, வாழ்பவனதுஉடைமையை வாழ்க்கையின்மேலேற்றி, 'வாழ்க்கை உடைத்தாயின்' எனக் கூறப் பட்டது. ஒருவனுக்குப் பின் நிற்பதாதலால், 'வழி' என்று சந்ததிக்குப்பெயராயிற்று. உடைத்தாதலின் அருமை தோன்ற, 'உடைத்தாயின்' என்றார். இனி, இக்குறளுக்கு - இல்வாழ்வானொருவனது செல்வம் லோபியென்ப

தனால்வரும்பழிக்குப் பயந்து பிறர்க்குப்பங்கிட்டுக்கொடுத்துத் தானும்உண்ணுதலை யுடையதாமாயின், அச்செல்வம், அவனுக்கு மாத்திரமேயன்றி அவன் சந்ததியார்க்கும் எப்பொழுதுங் குறைவுபடுதலில்லையாம், என்றும் உரைக்கலாம். பாத்து, பகுஎன்பதன் மரூஉவாகிய பா - பகுதி. ஊண்-முதனிலைதிரிந்ததொழிற்பெயர். உடைத்து - குறிப்புமுற்று. இல் - இல்லையென்பதன் விகாரம்.

௪௫. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

(இ - ள்.) இல்வாழ்க்கை - (ஒருவன்) இல்வாழ்க்கை, அன்புஉம்-(தன் துணைவிமேற் செய்யத்தகும்) அன்பினையும், அறன்உம் - (பிறர்க்குப்பகுத்து உண்டலாகிய) அறத்தினையும், உடைத்து ஆயின்—, அது - அவ்வுடைமை, பண்புஉம் பயன்உம் - (அதற்குப்) பண்பும் பயனுமாம்; (எ - று.)

நிரனிறை. இல்லாட்குங் கணவற்கும் நெஞ்சு ஒன்றாகாவழி இல்லறங் கடைபோகாமையின்; அன்புடைமை பண்பாயிற்று; அறனுடைமை பயனாயிற்று.





இவைமூன்று பாட்டானும், இன்னிலையில் நின்றான் அறஞ்செய்யுமாறு

கூறப்பட்டது.

(கு - ரை.) துணைவி-மனைவி. அவ்வுடைமை-அந்த உடைத்தாயிருத்தல். இல்வாழ்க்கைக்கு மனைவிமேலன்பு குணமும், பிறர்க்குப் பகுத்து உண்பது பிரயோசனமுமா மென முறையே சென்று இயைதலால், முறைநிரல்நிறைப்

பொருள்கோள்; அதாவது - வரிசையாகச் சொல்லப்பட்ட பொருள்களுக்குச் சம்பந்தமுள்ளவற்றையும் அம்முறையே சொல்வது. கடைபோகாமை-முடிய டைவாமை; அதனை "மருவிய காதன் மனையாளுந் தானும், இருவரும்பூண் டுர்ப்பி னல்லால் - ஒருவரால், இல்வாழ்க்கையென்னு மியல்புடைய வான்சகடஞ் செல்லாது தெற்றிற்று நின்று" என்னும் அறநெறிச்சாரத்துப் பாட்டினாலும் அறிக.

(ரு)

சுசு. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்

போஒய்ப் பெறுவ தெவன்.

(இ - ள்.) (ஒருவன்), இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையை, அறத்து ஆற்றின் - அறத்தின்வழியே, ஆற்றின் - செலுத்துவனாயின், புறத்து ஆற்றில் - (அவன் அதற்குப்) புறமாகிய நெறியில், போஒய் - போய், பெறுவது-பெறும் பயன், எவன் - யாது? (எ - று.)

'அறத்தாறு' என்பது - பழியஞ்சிப் பகுத்து உண்டலும், அன்புடைமையும் என மேற்சொல்லிய ஆறு. 'புறத்தாறு'-இல்லைவிட்டு

வனத்துச்செல்லும்

நிலை. அந்நிலையின் இது பயனுடைத் தென்பார், 'போஒய்ப் பெறுவதெவன்'

என்றார்.

(கு - ரை.) அதற்குப் புறமாகிய நெறி - வானப்பிரஸ்தம். எவன் என்றத

னால், போய்ப் பயனில்லை யென்பதும், அதனிலுஞ் சிறந்தபயன் இதிலேயே

எய்தும் என்பதும் பெற்றாம். அளபெடை - அசைநிறைக்க வந்தது. (கூ)

சுஎ . இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்

முயல்வாரு ளெல்லாந் தலை.

(இ - ள்.) இல் வாழ்க்கை - இல்வாழ்க்கைக்கண்நின்று, இயல்பினான்- (அதற்கு உரிய) இயல்போடு கூடி, வாழ்பவன் என்பான்-வாழ்பவனென்று சொல்லப்படுவான்,—முயல்வாருள் எல்லாம் - (புலன்களை விட) முயல்வாரெல்லாருள்ளும், தலை - மிக்கவன்; (எ - று.)

முற்றத்துறந்தவர் விட்டமையின், 'முயல்வார்' என்றது மூன்றாம்நிலை யில் நின்றாரை. அந்நிலைதான் பலவகைப்படுதலின் 'எல்லாருள்ளும்' எனவும், முயலாதுவைத்துப் பயன்எய்துதலின் 'தலை' எனவுங் கூறினார்.

(கு-ரை.) விட்டமையின்-ஐம்புலன்களை விட்டதனல். மூன்ருமிநிலையில்
நின்ருர் - வாநப்பிரஸ்தர். மனைவியோடு வனஞ்செல்லுதலும், மனைவியின்றி
அங்குச் செல்லுதலும், வனத்தில்தானே குறித்த ஓரிடம் செல்லுதலும், இன்னவிடஞ் செல்வதென்று குறித்தலின்றிச் செல்லுதலும் என வானப்

ரு - ஆம் அதிகாரம்—இல்வாழ்க்கை.

சுக

பிரஸ்தநிலை பலவகைப்படுதலின், 'அந்நிலைதான் பலவகைப்படுதலின்' என்ருரென்னலாம்.
முயலாதுவைத்துப் பயனெய்துதலின் - முயற்சி செய்யாமல் ஐம்புலன்களோடு கூடிநின்றே மேலான பிரயோசனத்தை அடைவதனல். இயல்பினுன், ஆன் - உடனிகழ்ச்சி. தலை-ஆகுபெயர். (எ)

சஅ. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா
வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

(இ - ள்.) ஆற்றின் ஒழுக்கி - (தவஞ்செய்வாரையும் தத்தம்) நெறியின்
கண் ஒழுகப்பண்ணி, அறன் இழுக்கா - (தானும் தன்) அறத்தின் தவருத,
இல்வாழ்க்கை—,—நோற்பாரின் - அத் தவஞ்செய்வார் நிலையினும், நோன்

மைஉடைத்து - பொறையுடைத்து; (எ - று.)

பசிமுதலிய இடையூறு நீக்கலின், 'ஆற்றினொழுக்கி' என்றார். 'நோற்பார்' என்பது, ஆகுபெயர். நோற்பார்நிலைக்கு அவர்தம்மை உற்றநோயல்லது இல்வாழ்வார்நிலைபோற் பிறரை உற்ற நோயும் பொறுத்தல் இன்மையின், 'நோற்பாரி னோன்மையுடைத்து' என்றார்.

(கு - ரை.) பொறை-பொறுமை. நோற்பார் என்பது-நோற்பாரின் நிலைமைக்கு ஆனது, பொருளாகுபெயர். துறந்துதவஞ்செய்பவர் தமக்குவருந் துன்பங்களை மாத்திரமே பொறுத்துக்கொள்ளுகிறார்கள்; இல்லறத்தவரோ, தமக்குவருந்துன்பங்களைப் பொறுத்துப் பிறர்க்குவருந்துன்பங்களையும் நீக்குகின்றனர்: ஆதலால், இல்லறஞ் சிறந்தது என்றபடி. (அ)

சகூ. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

(இ - ள்.) அறன் எனப்பட்டது - (இருவகை அறத்தினும் நூல்களான்) அறனென்று சிறப்பித்துச்சொல்லப்பட்டது, இல்வாழ்க்கை ஏ - இல்வாழ்

க்கையே; அஃது உம்-ஏனைத்துறவறமோஎனின் அதுவும், பிறன் பழிப்பது

இல் ஆயின் - பிறனாற்பழிக்கப்படுவதில்லையாயின், நன்று - (அவ்வில்வாழ்க்

கையோடு ஒருதன்மைத்தாக) நன்று; (எ - று.)

ஏகாரம், பிரிநிலைக்கண் வந்தது. இதனாற் பிரிக்கப்பட்டது துறவறமாக

லின், 'அஃது' என்னுஞ் சுட்டுப்பெயர் அதன்மேல் நின்றது. 'பிறன் பழிப்

பது' என்றது, கூடாஒழுக்கத்தை. துறவறம் மனத்தையும் பொறிகளையும்

ஒறுத்து அடக்கவல்ல அருமையுடைத்தாயவழியே, அவற்றை ஒறுக்கவேண்

டாது ஐம்புல இன்பங்கள் ஆரத்துய்க்கும் * எண்மையுடைய இல்வாழ்க்கை

யோடு அறமென ஒருங்கு எண்ணப்படுவது என்றவாறாயிற்று.

இவைநான்குபாட்டானும், இன்னிலையே பயனுடைத்தென இதன்

சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) துறவறத்தைப் பிரித்தலினால், ஏகாரம் - பிரிநிலையாயிற்று.

இதனால் - ஏகாரத்தால். அதன்மேல்-துறவறத்தின்மேல். கூடாவொழுக்கம்-

---

* மேன்மையுடைய என்று பிரதிபேதம்,

6



தவத்தோடு பொருந்தாததாகிய தீய ஒழுக்கம். ஒறுத்து-வருத்தி. ஆரத் துய்க்கும்-நிரம்ப அனுபவிக்கிற. எண்மை-எளிமை, சௌகரியம். ஒருங்கு-ஒருசேர. இனி, இக்குறளுக்கு-அறமெனப்பட்டது இல்வாழ்க்கையே; அவ்வில்வாழ்க்கையும் பிறனாற்பழிக்கப்படுவனவான பிறனில்விழைதல்அழுக்காறு பேராசை புறங்கூறல் முதலிய தீக்குணங்க ளில்லாததாயின் நன்று என்றும் உரைக்கலாம். (௯)

௫0. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(இ - ள்.) வாழ்வாங்கு - (இல்லறத்தோடுகூடி) வாழும் இயல்பினால், வையத்துள் - வையத்தின்கண், வாழ்பவன்—, வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும் - (வையத்தானே யெனினும்) வானின்கண் உறையுந் தேவருள் (ஒருவனாக) வைத்து நன்குமதிக்கப்படும்; (எ - று.)

பின் தேவனாய் அவ்வறப்பயன் நுகர்தல் ஒருதலை யாகலின், 'தெய்வத்துள் வைக்கப்படும்' என்றார்.

இதனான், இன்னிலையது மறுமைப்பயன் கூறப்பட்டது; இம்மைப் பயன், புகழ்: அதனை இறுதிக்கட் கூறுப.

(கு - ரை.) வையத்தின்கண் - பூலோகத்தில்.

நன்குமதித்தல்-கௌரவித்தல்.

அறப்பயனுகர்தல் - தருமத்தின்பயனை அனுபவித்தல்.

ஒருதலை-நிச்சயம்.

இறுதிக்கட் கூறுப-இவ்வியலின் முடிவில் உ௫-ஆம் அதிகாரத்திற் கூறுவர். உள் இரண்டும் - ஏழனுருபு. வைக்கப்படும் - செய்யுமென்முற்று ஆண்பாலிற் சென்றது. இல்லறத்தில் முறைதவறாமல்வாழ்பவன் மறுமையில் தேவகதி

யைப் பெறுவான்; அன்றியும், இம்மையில் தேவரைப்போலக் கொண்டாடப்

படுவான் என்பது கருத்து.
(௫0)

௬-ஆம்

## அதிகாரம்—வாழ்க்கைத் துணைநலம்.

அஃதாவது - அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்வாளது நன்

மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) துணை - துணைவிக்குப் பண்பாகுபெயர். நலம்-பண்புப்பெயர்.

௫௧. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்

வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

(இ - ள்.) மனை தக்க - மனையறத்திற்குத் தக்க, மாண்பு - நற்குண நற்

செய்கைகளை, உடையள் ஆகி-உடையளாய், தன் கொண்டான் வளம் தக்காள்-
தன்னைக்கொண்டவனது வருவாய்க்குத் தக்க வாழ்க்கையை யுடையாள், வாழ்க்கை துணை - அதற்குத் துணை; (எ - று.)

நற்குணங்களாவன - துறந்தார்ப்பேணலும், விருந்தயர்தலும், வறியார் மாட்டு அருளுடைமையும் முதலாயின. நற்செய்கைகளாவன - வாழ்க்கைக்கு வேண்டும்பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழில்வன்மை

## ௬ - ஆம் அதிகாரம்—வாழ்க்கைத்துணைநலம்

சா௩

யும்; ஒப்புரவுசெய்தலும் முதலாயின. வருவாய்க்குத் தக்க வாழ்க்கையாவது- முதலை அறிந்து அதற்கு இயைய அழித்தல்.

இதனான், இவ்விரண்டு நன்மையுஞ் சிறந்தனவென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) மனையறம் - இல்லறம். மனை - மனையறத்திற்கு, ஆகுபெயர். மாண்பு - மாட்சிமை; சிறப்பு: இங்கே நற்குணங்களும், நற்செய்கைகளும். கொண்டவன் - விவாகஞ்செய்துகொண்டபுருஷன். வருவாய்க்குத் தக்க

வாழ்க்கை - வரும்பொருளளவுக்குத் தகுந்தபடி சம்சாரகாரியங்களைச் செய்தல். துறந்தார்ப்பேணல் - முனிவர்களை உபசரித்தல். விருந்தயர்தல் - விருந்தாளிகளை உண்பித்தல். வறியார்மாட்டு - தரித்திரரிடத்தில். அருளாவது - ஒருசம்பந்தமுமில்லாமல் இயல்பாகஉண்டாகுங் கருணை. கடைப்பிடித்தல் - அப்பொருள்களை மறவாமற் செவ்வையாய்ச் சேர்த்தல். அட்டில் தொழில் வன்மை - போஜநபதார்த்தங்களை இனியசுவைபடச் சமையல்செய்யுந் திறம்; அட்டில் - சமையலிடம். ஒப்புரவுசெய்தல் - உலகநடையைஅறிந்து அதற்கு ஏற்பச் செய்தல். அழித்தல்-செலவிடுதல். இரண்டுநன்மை-மனைத் தக்கமாண்புடையளாதலும், தற்கொண்டான்வளத்தக்காளாதலும். மாண்பு - பண்புப்பெயர். தற்கொண்டான் - இரண்டனுருபு தொக்கது. (க)

௫௨. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை

யெனைமாட்சித் தாயினு மில்.

(இ - ள்.) மனை மாட்சி - மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள், இல்லாள்கண் - (ஒருவன்) இல்லாளிடத்து, இல் ஆயின்-இல்லையாயின், வாழ்க்கை - அவ்வில்வாழ்க்கை, எனை மாட்சித்து ஆயின் உம்-(செல்வத்தான்) எத்துணைமாட்சிமைத்தாயினும், இல் - (அஃது) உடைத்தன்று; (எ - று.)

'இல்' என்றார், பயன்படாமையின்.

(கு - ரை.) எத்துணை மாட்சிமைத்து - எவ்வளவு பெருமையையுடையது. அஃது உடைத்தன்று - சிறப்புடையதன்று: அவ்வில்வாழ்க்கை மனையாளது தீக்குணந் தீச்செயல்களோடு கூடிநின்று பயன்படாததனால், 'இல்' எனப் பட்டது. மாட்சி - பண்புப்பெயர். எனை - எத்தனை யென்பதன் மரூஉ. மனை மாட்சி - நான்காம்வேற்றுமை யுருபும்பயனும் உடன்தொக்க தொகை. ஆயி னும், உம்மை - உயர்வுசிறப்பு.

(உ)

௫௩. இல்லதெ னில்லவண் மாண்பானா
னுள்ளதெ னில்லவண் மாணாக் கடை.

(இ - ள்.) (ஒருவனுக்கு), இல்லவள் - இல்லாள், மாண்பு ஆனல் - நற் குண நற்செய்கைய ளாயினக்கால், இல்லது - இல்லாதது, என் - யாது? இல்லவள் - அவள், மாணாக்கடை - அன்ன ளல்லாக்கால், உள்ளது—, என்-யாது? (எ று.)

'மாண்பு' எனக் குணத்தின்பெயர், குணிமேல்நின்றது.

இவை இரண்டு பாட்டானும், இல்வாழ்க்கைக்கு வேண்டுவது இல்லாள் து மாட்சியே பிறஅல்ல வென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) அன்ன ளல்லாக்கால்-நற்குண நற்செய்கைகளை யுடையவ ளல்லாவிட்டால், இரண்டுவாக்கியங்களிலும்'ஒருவனுக்கு' என்பது வருவிக்க. விளு, இன்மைகுறித்தது. மாண்பு - பண்பாகுபெயர். குணி-குணத்தையுடையது. குணம் - பண்பென்றும், குணி - பண்பியென்றுங் கூறப்படும். மாணுக்கடை - கடைஎன்ற விகுதி பெற்ற எதிர்மறைவெதிர்காலவினையெச்சம்.

ருச. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) (ஒருவன் எய்தும் பொருள்களுள்),பெண்ணின் பெருந் தக்க- இல்லாளின் மேம்பட்ட பொருள்கள், யா உள - யாவை உள? (அவள்மாட்டு), கற்பு என்னும் திண்மை - கற்பு என்னுங் கலங்காநிலைமை, உண்டாகப்பெறின் —; (எ - று.)

கற்புடையாள்போல அறம் முதலிய மூன்றற்கும் ஏதுவாவன பிற இன்மையின், 'யாஉள' என்றார்.

இதனான், கற்புநலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) அவள்மாட்டு - அவளிடத்தில். கற்பாவது - தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்; பாதிவிரத்தியம்; கொண்டானிற் சிறந்த தெய்வ மில்லை யென்றும் அவனுக்கு இன்னவாறு நீ குற்றேவல்செய்

தொழுகுளென் றும் தாய்தந்தையராலும் பிறராலுங் கற்பிக்கப்படுதலால், கற்பு எனப் பெயர்பெற்றது. 'பெருந்தக்க'

என்பதில், தக்க - இறந்தகாலப்பலவின் பால்வினையாலணையும் பெயர்;'தகு'என்ற பகுதி ஒற்று இரட்டி இறந்தகாலங் காட்டிற்று.யா - அஃறிணைப் பன்மை வினைப்பெயர். திண்மை - உறுதி. (௬)

ருரு. தெய்வந் தொழா அள் கொழுநற்
பெய்யெனப் பெய்யு மழை.

றொழுதெழுவாள்

(இ - ள்.) தெய்வம் தொழா அள் - பிறதெய்வந் தொழாது, கொழுநன்
தொழுது - (தன் தெய்வமாகிய) கொழுநனைத் தொழாநின்று, எழுவாள் - துயிலெழுவாள், பெய் என-பெய்யென்றுசொல்ல, மழை பெய்யும்—;(எ-று.)

தெய்வந் தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங் காலத் தாகலின்,
'தொழுதெழுவாள்' என்றார். 'தொழாநின்று' என்பது, 'தொழுது' எனத் திரிந்து நின்றது. தெய்வந் தான் ஏவல்செய்யும் என்பதாம்.

இதனுன், கற்புடையவளது ஆற்றல் கூறப்பட்டது.

(கு - ரை.) கொழுநன் - கணவன். தொழாநின்று - தொழுதுகொண்டு. துயிலெழுவாள் - தூக்கத்தினின்று எழுந்திருப்பவள். தொழுது - நிகழ்கால வினையெச்சத்தின்

திரிபு. தொழுதெழுவாள் என்றது - *துயிலெழுங்காலத் தல்லது முன்உணர்வு இன்மையான் உணர்வுஉறுங்காலத்து மறவாதுநினை வாள் என்றவாறு.
'பெய்யெனப்பெய்யுமழை' என்றது - கற்புடையவ

* திருக்கோவையார், 118, உரை.
துயில்வதற்குமுன் கணவனைத் தொழுமுணர்வே இருத்தலால், கற்புடையார்க்குத் துயிலொழிய உணர்வுண்டாங் காலத்தும்
அந்தத்தொழுமுணர்வேயுடனுண்டாகுமென்பர்.

சீ - ஆம் அதிகாரம்—வாழ்க்கைத்துணைநலம்.
சரு

ளிட்டகட்டளையைத் தெய்வஞ்செய்யுமென்றபடி;
தெய்வத்திற்குந்தெய்வம் கற்புடையாளென்றவாறு.
"கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன,
செய்வகை செய்வான் தவசி கொடிதொரீஇ,
நல்லவை செய்வகை செய்வா னரச னிவர்மூவர்,
பெய்யெனப் பெய்யு மழை" என்றார், திரிகடுகத்தும்.
ஆற்றல் - மகிமை. இனி, கொழுநற் றொழு தெழு வா ளென்பது - எழுந்துகொழுநற்றொழுவாளென
முன்பின்னாகப் பொருள் படு மென்றார்,
பிரயோகவிவேகநூலார்; அவர்கூறுமாறு:—"கொழுநற்றொழு தெழுவாள்,' 'தொழுதெழுவார்வினைவளநீறெழ'

என்னுந் திருவள்ளுவரினும் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசியரும் 'தொழாநின்றெழு வாள்,' 'தொழாநின்றெழுவார்' என எச்சத்திரிபாய் உரைப்பர்: எழுதல்-துயி லொழிதலாதலின், 'எழுந்து தொழுவாள்,' 'எழுந்துதொழுவார்' என முன் பின்னாகப் பொருள்படுத லன்றி 'நகுபுவந்தான்,' 'ஓடிவந்தான்' என்பனபோ லத் தொழாநின்று துயிலெழுதல் கூடாதென்க. "வைகறை யாமந்துயிலொ ழிந்து தான் செய்யும், நல்லறமும் ஒண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதின்,தந் தையுந் தாயுந் தொழுதெழுக" என்பது துயிலொழிந்து பின் தந்தையுந்தாயுந் தொழுது பின்காரியத்திற் செல்க எனப் பொருள்பட்டு வருதலானும், அவருரை அசம்பாவித மென்க' என்பது. தெய்வந்தொழாளென்பது-கணவனையே தெய்வமாகத்தொழுதலைக் காட்டுவதன்றித் தெய்வந்தொழுதலை விலக்கியதன் றென்றது, ஈண்டுக் கருதத்தக்கது. தொழாள் - முற்றெச்சம். அளபெடை, அசைநிறைத்தது. கொழுநற் றொழுது-உயர்திணையில் இரண்ட னுருபு தொக்கது.

(ரு)

ருக. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித்
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

தகைசான்ற

(இ - ள்.) தன் காத்து - (கற்பினின்றும் வழுவாமல்) தன்னைக் காத்து, தன் கொண்டான் பேணி - தன்னைக் கொண்டவனையும் (உண்டி முதலிய வற்றால்) பேணி, தகை சான்ற சொல் காத்து - (இருவர்மாட்டும்) நன்மை யமைந்த புகழ் நீங்காமற் காத்து, சோர்வு இலாள் - (மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினும்) கடைப்பிடியுடையாளே, பெண்-பெண்ணாவாள்; (எ-று.)

தன்மாட்டுப் புகழாவது-வாழும் ஊர் கற்பால் தன்னைப் புகழ்வது. சோர்வு - மறவி.

இதனான், * கற்புடையாளது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பேணி - உபசரித்து.

இருவர்மாட்டும்-கணவன் தான் என்னும் இருவரிடத்தும். இருவர்மாட்டும் நன்மையமைந்த புகழ் என்றது - இவளைக்கொள்வதற்கு இவள்கணவன் என்ன தவஞ்செய்தானோ எனக் கொண்டவனையும், பதிவிரதைத்தன்மையைக்கண்டு அவன்மனைவியையும் அவர்கள்வாழுமூரிலுள்ளார் யாவரும் புகழ்வது. கடைப்பிடியுடையாள் -

---

* தற்புகழ்தற்சிறப்பு என்று பிரதிபேதம். தற்புகழ்தற்சிறப்பு - கற்புடையாளாகிய தன்னைப் புகழ்தலின் சிறப்பு என்று பொருள்.

மறவாமல் உறுதியாகப்பற்றுதலை யுடையவள்.

மறவி-மறத்தல். கொண்டான்பெயர். தகை - தகுதி; இது, தொழிலடியாப்பிறந்ததாயினும் பொருளாற் பண்புப்பெயர். சான்ற - சால்என்னும் உரிச்சொலடியாப் பிறந்த இறந்த காலப் பெயரெச்சம். சொல்-புகழாதலை "சொன்மாண்பமைந்த குழூ" எனச் சிந்தாமணியிலும் காண்க. சோர்வு - தொழிற்பெயர். இனி, தகை சான்ற சொற் காத்து என்பதற்கு - (கணவனது) நன்மைநிறைந்த சொல்லை (எப்பொழுதும் கடவாமற்) காத்து என்றும் பொருள்கொள்ளலாம். (சு)

௫எ. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

(இ - ள்.) சிறை காக்கும் காப்பு - (மகளிரைத் தலைவர்) சிறையாற்காக்குங் காவல், எவன் செய்யும்-என்ன பயனைச் செய்யும்? மகளிர்-அவர், நிறை காக்கும் காப்பே - (தமது) நிறையாற் காக்குங் காவலே, தலை - தலையாய காவல்; (எ - று.)

சிறை - மதிலும் வாயில்காவலும் முதலாயின. நிறை - நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல். காவலிரண்டினும் நிறைக்காவல் இல்வழி ஏனைச் சிறைக்காவலாற் பயனில்லை யென்பார், 'நிறைகாக்கும் காப்பே தலை' என்றார். ஏகாரம் - பிரிநிலைக்கண் வந்தது.

இதனுன், தற்காத்தற்சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) மகளிர் - மனைவிமார். தலைவர்-கணவர். வாயில்காவல்-காவலாளர்களால் வாயிலைக் காக்கச்செய்தல்.

என்பார்-என்றுசொல்லவந்தவர். சிறைக்காவலைப் பிரித்ததனால், ஏகாரம் - பிரிநிலையாயிற்று. தற்காத்தல்-தன்னைத் தானே கற்பிற் காத்துக்கொள்ளுதல். காப்பு-தொழிற்பெயர். (எ)

ருஅ. பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

(இ - ள்.) பெண்டிர்—, பெற்றான் - (தம்மை) எய்திய கணவனை, பெறின் - (வழிபடுதல்) பெறுவராயின், புத்தேளிர் வாழும் உலகு - புத்தேளிர் வாழும் உலகின்கண், பெரு சிறப்பு பெறுவர்-(அவரால்) பெருஞ்சிறப்பினைப் பெறுவர்; (எ - று.)—'வழிபடுதல்' என்பது - சொல்லெச்சம்.

இதனான், தற்கொண்டாற்பேணிய மகளிர் புத்தேளிரால் பேணப்படுவரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பெண்டிர் - மனைவிமார். வழிபடுதல்-வணங்கி உபசரித்தல். புத்தேளிர் - தேவர்கள். அவரால் - தேவர்களால். பெருஞ்சிறப்பு - மேன்மைப்பாடு. பேணப்படுவர் - மரியாதை செய்யப்படுவர். பெற்றாற்பெறின் - இரண்டனுருபு உயர்திணையில் தொக்கது. புத்தேளிர், இர் - பலர்பால்விகுதி.(அ)

ருகூ. புகழ்புரிந் தில்லி லோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

(இ - ள்.) புகழ் - புகழை, புரிந்த - விரும்பிய, இல்-இல்லாளை, இலோர்க்கு - இல்லாதார்க்கு, இகழ்வார் முன் - (தம்மை) இகழ்ந்துரைக்கும் பகைவர்முன், ஏறு போல் பீடு நடை - சிங்கவேறுபோல நடக்கும் பெருமிதநடை, இல்லை—; (எ - று.)

புரிந்த என்னும் பெயரெச்சத்து அகரம், விகாரத்தால் தொக்கது. பெருமிதமுடையானுக்குச் சிங்கவேறு நடையான் உவம மாகலின், 'ஏறுபோல்' என்றார்.

இதனன், தகைசான்ற சொற் காவாவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) இகழ்ந்து உரைக்கும் - நிந்தித்துப்பேசுகிற. சிங்கவேறு-ஆண் சிங்கம். ஏறு - ஆண்மைப்பெயர். பெருமிதநடை - கம்பீரமானநடை. பெருமிதம் - வீரத்தனம். 'முன்' என்னும் இடைச்சொல், இங்கே இடப்பொருள் குறித்தது. நடை - தொழிற்பெயர்; நட - பகுதி, ஐ - விகுதி. (கூ)

சுO. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல னன்மக்கட் பேறு.

(இ - ள்.) மங்கலம் என்ப-(ஒருவற்கு) நன்மை யென்று சொல்லுவர் (அறிந்தோர்), மனை மாட்சி - மனையாளது நற்குண நற்செய்கைகளை; அதன் நன் கலன் (என்ப) - அவைதமக்கு நல்ல அணிகல மென்று சொல்லுவர், நல் மக்கள் பேறு - நல்ல புதல்வரைப் பெறுதலை; (எ - று.)

'அறிந்தோர்' என்பது, எஞ்சிநின்றது. மற்று - அசைநிலை.

இதனுன், வாழ்க்கைத்துணைக்கு ஆவதோர் * அணிகலங் கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.

(கு - ரை.) அவைதமக்கு - நற்குணங்களுக்கும் நற்செய்கைகளுக்கும். அணிகலம் - ஆபரணம். புதல்வர் - பிள்ளைகள். எஞ்சி - குறைந்து. வாழ்க்கைத்துணைக்கு ஆவதோர் அணிகலம் - மனைவிக்கு ஆபரணம்போலச் சிறந்த தொரு நன்மையை. வருகின்ற அதிகாரம் - புதல்வரைப்பெறுதல். தோற்றுவாய்-தொடக்கம். 'என்ப' என்னும் எதிர்காலப் பலர்பால்வினைமுற்று, பின் வாக்கியத்திலுங் கூட்டியுரைக்கப்பட்டது; என் - பகுதி, ப - விகுதி: இவ் விகுதியே எதிர்காலமுணர்த்திற்று; [நன். பதவியல்-கஅ.] 'அதன்' எனச்சுட்டினது, மாட்சியை. 'நல்மக்கள்' என்றது, குறிப்பால் ஆண்பிள்ளைகளைத் தெரிவித்தது. 'தனிமரந் தோப்பாகாது, தனிப்பிள்ளை பிள்ளையாகாது' என்பது பழமொழியாதலால், 'மக்கள்'எனப் பன்மைப்பாலாற்கூறினுர்; மேல் அதிகாரத்திற்கு 'புதல்வரைப்பெறுதல்' எனப் பெயர் வைத்ததும், இதுபற்றியே. பேறு - முதனிலைதிரிந்ததொழிற்பெயர். (௬௰)

## எ - ஆம் அதிகாரம்—புதல்வரைப் பெறுதல்.

அஃதாவது - இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக

இறுக்கப்படூஉங் கடன் மூன்றனுள் முனிவர்கடன் கேள்வியானும் தேவர்கடன் வேள்வியா

* அணிநலம் என்று பிரதிபேதம்,



னும் தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலானும் அல்லது இறுக்கப் படாமையின், அக்கடனிறுத்தற்பொருட்டு நல்மக்களைப் பெறுதல். அதிகார முறைமை, மேலே பெறப்பட்டது.

(கு - ரை.) இருபிறப்பாளர் மூவர்-உபநயநத்திற்குமுன்பு தேகஉற்பத்தியாகிய ஒருபிறப்பும், உபநயநத்திற்குப்பின்பு அதன் ஸம்ஸ்காரங்களாலாகிய தொருபிறப்பும் ஆகிய இரண்டுபிறப்புக்களை யுடைய பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் என்னும் முதல்மூன்றுவருணத்தவர். இயல்பாக இறுக்கப்படூஉங் கடன்மூன்று-சுபாவமாகக் கொடுத்துக் கழிக்கவேண்டும் மூன்றுகடமைகள். கேள்வி - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார்கூறக்கேட்டல். வேள்வி - யாகம். பித்ருதேவதைகளுக்குக் கொடுக்கப்படுங் கடமைகளைச் செலுத்தும்பொருட்டு நல்லபுத்திரரைப்பெறுதல் அவசியமென்றபடி. பிள்ளையில்லாதவர்கள் அடையத்தக்க 'புத்'என்னும் நரகத்தினின்று தம் தாய்தந்தையரைப் புதல்வர் காப்பதனாலும், புதல்வர்ப்பேறு இன்றியமையாததாயிற்று. மேலே - ''மங்கலமென்ப'' என்னும் பாட்டில்.

சுக. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை
யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(இ - ள்.) பெறுமவற்றுள் - (ஒருவன்) பெறும் பேறுகளுள், அறிவு அறிந்த மக்கள் பேறு அல்ல-அறியவேண்டுவன அறிதற்கு உரிய மக்களைப் பெறுதலல்லது, பிற - பிற பேறுகளை, யாம் அறிவது இல்லை - யாம் மதிப்ப தில்லை; (எ - று.)

'அறிவது' என்பது-அறிதலைச்செய்வது என, அத்தொழின்மேல் நின்றது. காரணமாகிய உரிமை காரியமாகிய அறிதலைப் பயந்தேவிடு மாதலான், அத்துணிவுபற்றி, 'அறிந்த' என இறந்தகாலத்தாற் கூறினார். 'அறிவறிந்த' என்ற அதனான், 'மக்கள்' என்னும்பெயர் பெண்ணொழித்து நின்றது.

இதனான், புதல்வர்ப்பேற்றினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பேறு - பாக்கியம். அறிவது-தொழிற்பெயர்; வினையாலணை யும்பெயராகக் கொள்ளலாகாது: பிறஎன்னும் பன்மையோடு மாறுபடு மாத லால். அறிவதற்குஉரிய மக்களை, 'அறிந்த மக்கள்' என இறந்தகாலத்தாற் சொன்னது, துணிவுபற்றிவந்த காலவழுவமைதி. அறிவறிந்தமக்கள்-ஒன் றொழி பொதுச்சொல். அறிவு - அறியவேண்டு மவற்றிற்குத் தொழிலாகு பெயர். இனி, 'அறியவேண்டுமவற்றை' என வருவித்து 'அறிவினால் அறி

க்த' என்றும் பொருள் கொள்ளலாம். '
'நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும்,
பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே,"
"பேதைமை யென்பதுமாதர்க்கணிகலம்" என்பனபற்றி,
'அறிவறிந்தமக்கள்' என்றது - பெண்மக்களை விலக்கிற்றென்றார். புதல்வர்ப்பேறு-புதல்வரைப்பெறுதல்.

சூஉ. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

## எ - ஆம் அதிகாரம்—புதல்வரைப்பெறுதல்

சூகூ

(இ - ள்.) எழு பிறப்புஉம் - (வினைவயத்தாற் பிறக்கும்) பிறப்பு எழின் கண்ணும், தீயவை தீண்டா - (ஒருவனைத்) துன்பங்கள் சென்று அடையா: பழி பிறங்கா - (பிறரால்) பழிக்கப்படாத, பண்பு உடை - நற்குணங்களை யுடைய, மக்கள்-புதல்வரை, பெறின் - பெறுவானாயின்; (எ - று.)

* அவன் தீவினைவளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரைப் பெறுவனாயின் என்றவாறாயிற்று. பிறப்பு எழாவன - "ஊர்வ பதினொன்றூ மொன்பது மானிடம், நீர்பறவை நாற்காலோர் பப்பத் தாஞ்-சீரிய, பர்தமாந் தேவர் பதினா லயன்படைத்த, வந்தமில்சீர்த் தாவர நாலைந்து". தந்தைதாயர் தீவினை

தேய்தற்பொருட்டு அவரை நோக்கிப் புதல் வர் செய்யுந் தான தருமங்கட்கு அவர்நற்குணங் காரணமாகலின், 'பண்பு' என்னுங் காரணப்பெயர் காரியத்தின்மேல் நின்றது.

(கு - ரை.) வினைவயத்தால் - கருமவசத்தினால். அவன் தீவினை-தந்தை யது பாவம். "ஊர்வ பதினொன்றும்" என்னும் பாட்டிற்குப் பொருள் - ஊர் கிற ஜந்துக்களின் பிறப்புவகைகள் பதினொரு லட்சமாம்: மனிதப்பிறப்புக் கள் ஒன்பதுலட்சமாம்: நீர்வாழ்ஜாதியும் பறவைகளும் தனி பத்துப்பத்துலட்சமாம்: சிறந்தமுறைமையையுடைய

மிருகங்களும் தனித் லட்சமாம்: பிரமனாற்
தேவர்கள் பதினாலு அசையாப்பொருள்கள்

படைக்கப்பட்ட முடிவில்லாததன்மையையுடைய இருபதுலட்சம் எனப்படும் என்பது; 'அயன்படைத்த' என்பதை எல்லாவற்றோடுங் கூட்டுக. இவை - எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேத மெனப்படும். இவ்வெழுவகைத்தோற்றத்துள் தேவர்களை விலக்கிப் பருவதத்தைக் கூட்டி "மக்கள் விலங்கு பறவை யூர்வன, நீருட் டிரிவன பருப்பதம் பாதவம், எனவிவை யெழுபிறப் பாகு மென்ப" என வழங்கும் பழம்பாட்டும் ஒன்று உண்டு. 'பண்புடை மக்கள்' என்பதற்குத்தந்தைதாயரை நோக்கிச் செய்யும் நல்வினைகளையுடைய புத்திரர் என்பது, கருத்து. காரியத்தின்மேல் நின்றது - காரியமாகிய நல்வினையைக் குறித்து நின்றது. உடை - உடைய என்பதன் விகாரம்.

இனி, இக்குறளுக்கு - ஒரு வம்சத்தில் ஒருவன் நல்லபிள்ளைகளைப் பெற்றால் அவ்வம்சத்தில் முன்னேழு பின்னேழு நடுவேழு என்னும் இருபத்தொருதலைமுறையார்க்குந் தீவினைகள் தொடரா வென்றும் பொருள்கொள்ளலாம். (உ)

௬௩. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
ள்தம் வினையான் வரும்.

(இ - ள்.) தம் மக்கள் - தம்புதல்வரை, தம் பொருள் என்ப - தம் பொரு ளென்று சொல்லுவர் (அறிந்தோர்): அவர் பொருள் - அப்புதல்வர் செய்த பொருள், தம் தம் வினையான் - தம்மைநோக்கி (அவர்) செய்யும் நல்வினையானே, வரும் - (தம்பால்) வரும் (ஆதலான்); (எ - று.)

'தந்தம்வினை' என்புழித் தொக்குநின்ற ஆறும் வேற்றுமை-'முருகனது குறிஞ்சிநிலம்' என்புழிப்போல, உரிமைப்பொருட்கண் செய்த மக்களை 'பொருள்' என உபசரித்தார்.

வந்தது. பொருள்*

* இந்தவாக்கியம், ஒருபிரதியிலில்லை.





இவை இரண்டுபாட்டானும், நன்மக்கட்பெற்றார் பெறும் மறுமைப் பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) தம்பால்-தம்மிடம். செய்த-சம்பாதித்த. 'என்ப'என்பதற்கு 'அறிந்தோர்'என்னும் எழுவாய் வருவிக்க. மக்கள்செய்த வினை.

தம்தம்வினை-தம்தமக்குரியனவாக

(ரு)

௬௪. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

(இ - ள்.) அமிழ்தின்உம் ஆற்ற இனிது - (சுவையான்) அமிழ்தத்தி

னும் மிக இனிமையுடைத்து: தம் மக்கள்-தம் மக்களது, சிறு கை - சிறு கை

யான், அளாவிய - அளாவப்பட்ட, கூழ் - சோறு; (எ - று.)

சிறுகையான் அளாவலாவது-"இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்,

நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்"தல்.

(கு - ரை.) சுவை-ருசி. அளாவப்பட்ட-அளையப்பட்ட. "இட்டுந் தொட்

டும்" என்னும் மேற்கோள் - புறநானூற்றில் ௧௮௮ - இல் உள்ளது; நெய்

யோடுகூடிய சோற்றைக் கையாலெடுத்தெறிந்தும் பரிசித்தும் வாயினுற்

கௌவியுங் கையால் அளைந்தும் உடம்பின்கட் படச்சிதறுதல் என்று இதன்

பொருள். கூழ் - இங்கே உணவுப்பொதுவாய் நின்றது; இழிந்த உணவாகக்

கொண்டு, மக்கள் தம்கையாலளைக்த கூழும் அமிழ்தினுமினியதா மெனினும்
அமையும். "பொன்னுடையரேனும் புகழுடைய ரேனுமற், றென்னுடைய
ரேனு முடையரோ - இன்னடிசில், புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ்
செய்யவாய், மக்களையிங் கில்லாதவர்" என்றார் புகழேந்திப்புலவரும். (ச)

சுரு. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

(இ - ள்.) உடற்கு - (ஒருவன்) மெய்க்கு, இன்பம் - இன்பமாவது, மக்
கள் - மக்களது, மெய்-மெய்யை, தீண்டல்-தீண்டுதல்; செவிக்கு—, இன்பம்-
இன்பமாவது, அவர் சொல் கேட்டல் - அவரது சொல்லைக் கேட்டல்; (எ-று.)

மற்று-வினைமாற்று. மக்களது மழலைச்சொல்லே யன்றி அவர் கற்றறி
வுடையராய்ச் சொல்லுஞ் சொல்லும் இன்பமாகலின், பொதுப்பட 'சொல்'
என்றார். 'தீண்டல்', 'கேட்டல்' என்னுங் காரணப்பெயர்கள் - ஈண்டுக் காரி
யங்களின்மேல் நின்றன.

(கு - ரை.) மெய் - உடம்பு. 'மெய்தீண்டல்' என்னும் வினையை ஒழித்து

'சொற்கேட்டல்' என்னும் வினையைக் கூறுமிடத்து வந்ததனால், மற்று-வினை மாற்றுப் பொருளதாயிற்று. தீண்டல், கேட்டல் என்னுங் காரணப்பெயர்கள், அவற்றானுண்டாகும் இன்பமாகக் கூறப்பட்டன. நிலையில்லாமையாற் பொய்யாகிய உடம்பை 'மெய்' என்பது, மங்கலவழக்கு. இனி, மக்கள் மெய் • தீண்டல் - மக்கள் தமதுஉடம்பைத் தழுவுத லென்றுமாம். (௫)

௬௬. குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.



(இ - ள்.) குழல் இனிது - குழலிசை இனிது, யாழ் இனிது - யாழிசை இனிது, என்ப - என்று சொல்லுவர்: தம் மக்கள் - தம் புதல்வருடைய, மழலை சொல் - குதலைச் சொற்களை, கேளாதவர்—; (எ - று.)

குழல், யாழ் என்பன - ஆகுபெயர். கேட்டவர் அவற்றினும் மழலைச் சொல் இனிதென்பர் என்பது, குறிப்பெச்சம். சொல்லைச் சிறப்புவகையானுங் கூறியவாறு.

இனிமைமிகுதிபற்றி, மழலைச்

இவை மூன்றுபாட்டானும், இம்மைப்பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) குழலிசை-ஊதப்படுகிற வேய்ங்குழலின் ஒலி. யாழ் வீணை. 'குழல்,' 'யாழ்' என்னும் இரண்டும் - அவற்றின்ஒலிக்குப் பொருளாகுபெயர். குறிப்பேச்சுமாவது-சொல்வலி பொருள்வலிகளாற் குறிக்கப்படுஞ் சொற்கள் குறைந்து நிற்பது; இது, வடநூலில் அருத்தாபத்தியின்பாற்படும். கீழ்ப்பாட்டில் 'சொற்கேட்டலின்பஞ்செவிக்கு' எனப் பொதுவகையாகச் சொல்லப் பட்டவற்றுள் அடங்கிநின்ற மழலைச்சொல்லை, மிகுந்த இன்பந்தருதல்பற்றித் தனியே இப்பாட்டிற் சிறப்பித்துக் கூறினர். "சொன்ன கலையின் துறையனைத்துந்தோய்ந்தாலும், என்ன பயனுடைத்தா மின்முகத்து-முன்னங், குறுகுதலைக்கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச், சிறுகுதலை கேளாச் செவி" என்றார் புகழேந்தியாரும்.

(௬)

௬எ. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

(இ - ள்.) தந்தை—, மகற்கு - புதல்வனுக்கு, ஆற்றும் - செய்யும், நன்றிநன்மையாவது,-அவையத்து - (கற்றோர்) அவையத்தின்கண், முந்தி இருப்ப- (அவரினும்)

மிக்கிருக்குமாறு, செயல் - கல்வியுடையனுக்குதல்; (எ - று.)
பொருளுடையனுக்குதல் முதலாயின,
துன்பம்பயத்தலின் நன்மையாகா என்பது கருத்து.
இதனுன், தந்தைகடன் கூறப்பட்டது.
(கு - ரை.) அவையத்தின்கண் - சபையில். அவரினும்
மிக்கிருக்குமாறு - அங்குள்ள
படித்தவர்களெல்லாரைக்காட்டிலும் மேம்பட்டிருக்கும்படி.
தந்தை கடன் - பிதா புத்திரர்க்குச்செய்யவேண்டிய கடமை.
தந்தை, தாம் - பகுதி, தை - முறைப்பெயர்விகுதி. நன்றி -
பண்புப்பெயர்; றி - விகுதி. அவை -
கற்றறிவு டையோர்கூட்டம்; ஸபா எ
ன் னும்வடமொழியின் திரிபு. முந்தியிருப்ப-
முதன்மைபெற்றிருக்கும்படி; அதாவது -
தேர்ந்தகல்விகற்பித்து, அவர்களெல்
லாம் மதிக்கும்படி. செல்வப்பொருள் நிலையில்லாததாதலால்,
அதனை ஒழித்
தார். "சான்ருே னுக்குதல் தந்தைக்குக் கடனே" என்ருர்
புறநானூற்றிலும்.

சஅ. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை
மன்னுயிர்க் கெல்லா மினிது.

மாநிலத்து

(இ - ள்.) தம் மக்கள் - தம் மக்களது, அறிவு
உடைமை—, மா நில. த்து மன் உயிர்க்கு எல்லாம் -

பெரிய நிலத்து மன்னுகின்ற உயிர்கட்கெல் லாம், தம்மின் - தம்மினும், இனிது - இனிதாம்; (எ - று.)



ஈண்டு 'அறிவு' என்றது, இயல்பாகிய அறிவோடு கூடிய கல்வியறிவினை: 'மன்னுயிர்' என்றது, ஈண்டு, அறிவுடையார்மேல் நின்றது: அறிவுடைமை கண்டு இன்புறுதற்கு உரியார் அவராகலின்.

இதனான் ,தந்தையினும் அவையத்தார் உவப்ப ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) நிலத்து - பூமியில். மன்னுகின்ற - நிலைபெற்ற. ஒருவன் அறி

வுடையனாயிருத்தல் அவன் தந்தைக்கு எவ்வளவு இனிமையைத்தருமோ அத

னினும் பலமடங்கு பிறர்க்கும் இ னிமையைத்தரு மென்பது கருத்து. பிறர்

கல்வியைக்கண்டு பொறாமைப்படுபவனும் தன்மைந்தன்கல்விமிகுதியைக்கண்டு

களித்தலும், கல்வியறிவில்லாதவனும் தன்மகனுக்குக் கல்விகற்பித்தலும்

காண்க. 'தம், மின்' என்பது, 'இனிது' என்னுங் குறிப்புவினை கொண்டது.

உடம்பிற்கேயன்றி உயிர்க்கு எப்போதும் அழிவில்லையாதலால், 'மன்னுயி

ர்க்கு' என்றார். இன்புறுதல் - மகிழ்தல். அவையத்தார் உவப்பர் - சபையி

லுள்ளோர் மகிழ்வர். இனி, இக் குறளுக்கு - தமது புத்திரர் தம்மைக்காட்

டினும் அறிவுடையராயிருப்பது பெரிய நிலவுலகத்தி லுள்ளார் யாவர்க்கும்

இனிமையைத்தரும் என்றும் பொருள்கொள்ளலாம். (அ)

சுசு. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

தன்மகனைச்

(இ - ள்.) ஈன்ற பொழுதின் - (தான்)பெற்ற பொழுதைமகிழ்ச்சியி

னும், பெரிது உவக்கும் - மிக மகிழும்: தன் மகனை—, சான்றோன் என -

(கல்வி கேள்விகளால்) நிறைந்தா னென்று (அறிவுடையார்) சொல்ல, கேட்

ட—, தாய்—; (எ - று.)

* கவானின்கட் கண்ட பொது உவகையினும் சால்புடைய னெனக் கே

ட்ட சிறப்புஉவகை பெரிதாகலின்'பெரிதுஉவக்கும்'எனவும்,பெண்ணியல்பால்

தானாக அறியாமையின் 'கேட்டதாய்' எனவும் கூறினார்.

'அறிவுடையார்'

என்பது வருவிக்கப்பட்டது; சான்றோ னென்றற்கு உரியவர் அவராகலின்.

தாயுவகைக்கு அளவின்மையின் அஃது இதனாற் பிரித்துக் கூறப்பட்டது.

(கு - ரை.) பெற்றபொழுதை மகிழ்ச்சி - பிள்ளையைப்பெற்றகாலத்தி

லுண்டான சந்தோஷம். கேட்ட - கேள்விப்பட்ட. கவானின்கண் - மடியில்.

சால்பு - கல்வி கேள்விகளாலாகிய நிறைவு. தாயுவகை - தாயின்மகிழ்ச்சி.

'பிரித்துக்கூறப்பட்டது' என்றது, கீழ்ப்பாட்டில் 'தம்மின்' என்றதில் தாயு

வகையும் அடங்கலாமாதலால். பொது உவகை - பிள்ளைபிறந்தது என்பதனாற்

பொதுப்பட உண்டாகும் மகிழ்ச்சி. சிறப்புஉவகை-நமதுமகன் அறிவுமிக்கவனா

னென்று சிறப்பாக உண்டாகும் மகிழ்ச்சி. உவக்கும் - செய்யுமென் முற்று,

பெண்பாலிற் சென்றது. பெரிது - ஒன்றன்பாற்குறிப்புமுற்று, வினையுரியாய்

நின்றது.சான்றோன் - னகரவீற்றயல் ஆகாரம் ஓவாயிற்று.

(க) ௭0. மகன்றந்தைக் காற்று முதவி

யிவன்றந்தை

யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

* கவானின் மகற்கண்டபொ மூதை
யுவகையினும்என்று பிரதிபேதம்.

## ௬ - ஆம் அதிகாரம்---அன்புடைமை

ருங

(இ - ள்.) தந்தைக்கு (கல்வியுடையனுக்கிய) தந்தைக்கு, மகன்—, ஆற்றும் - செய்யும், உதவி - கைம்மாறாவது,—இவன் தந்தை என் நோற்றான் கொல் எனும் சொல் - (தன் அறிவும் ஒழுக்கமும் கண்டார்) 'இவன் தந்தை (இவனைப் பெறுதற்கு) என்ன தவஞ் செய்தான்கொல்லோ?' என்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல்; (எ - று.)

'சொல்' என்பது, நிகழ்த்துதலாகிய தன்காரணந்
நிகழ்த்துதல் - அங்ஙனஞ் சொல்ல ஒழுகுதல்.

தோன்ற நின்றது.

இதனுன், புதல்வன்கடன் கூறப்பட்டது.

(கு - ரை.) கைம்மாறு - பிரதியுபகாரம். நிகழ்த்துதல் உண்டாகச்செய்தல்; அதாவது - நல்லறிவும் நல்லொழுக்கமுமுடையவனுதல். ஒழுகுதல் - நடத்தல். நிகழ்த்துதலாற் சொல் பிறக்குமென்க. புதல்வன்கடன்-புத்திரனது கடமை. கொல் - வியப்பிடைச்சொல். தவத்தின் அளவு தெரியாமையால் ஐயவிடைச்சொல்லாகவுமாம். உதவி -

தொழிற்பெயர். நோற்ருன், நோல் - பகுதி.
"உன்னைக்கண்டார், என்ன நோன்பு நோற்ருள்கொலோ
இவனைப் பெற்ற வயிறுடையாள், என்னும் வார்த்தை
யெய்துவித்த இருடீகேசா",
"செம்மலைப்பயந்த நற்ருய் செய்தவ முடைய
செய்தாள்கொ லெய்துவம் யாமுமென்பார்"

ளென்பார், எம்மலைத் தவஞ்
என்பன காண்க. (கo)

# அ - ஆம்

# அதிகாரம்—அன்புடைமை.

அஃதாவது - அவ் வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கண் காதல் உடையஞதல். அதிகாரமுறைமையும் இதஞனேவிளங்கும். இல்லறம் இனிதுநடத்தலும், பிறஉயிர்கள்மேல் அருள்பிறத்தலும் அன்பு பின்பயஞதலின், இது வேண்டப்பட்டது.

வாழ்க்கைத்துணைமேல் அன்பு இல்வழி இல்லறம் இனிதுநடவாமை, "அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலுந், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர்
கோடலு மிழந்த வென்னை" என்பதஞனும், அதஞன்
ளென்னு மன்பீன் குழவி" என்பதஞனும் அறிக.

அருள்பிறத்தல் "அரு

(கு - ரை.) தொடர்புஉடையார்கண் - பந்துக்களிடத்தில். காதல்-ஆசை. புதல்வரைப்பெறுதலின்பின் அப்புதல்வர்முதலியோரிடத்து அன்புடைமை யை வைத்தார். ஒருசம்பந்தமுமில்லாமலே வருத்தமுற்றவர்களின்மேற்செல்வதாகிய அருள் யாதாயினுமொருசம்பந்தம்பற்றிச்செல்லும் அன்பு முதிர்ந்த விடத்து உண்டாவதை, மேல் 'பொருள்செயல்வகை' என்னும் எசு-ஆம் அதிகாரத்தில் "அருளென்னும் அன்பீன் குழவி" என்பதனால் அறிக; இம்மேற் கோளுக்கு - அன்பினாற் பெறப்பட்ட அருளென்னுங் குழந்தை யென்று பொருள். "அறவோர்க்களித்தல்" என்னும் மேற்கோள் - சிலப்பதிகாரத்துக் கொலைக்களக்காதையில் உள்ளது; இதற்கு - பிரமசாரிகளுக்கு வேண்டுவன கொடுத்தலும், வானப்ரஸ்தரைக் காத்தலும், சந்நியாசிகளை எதிர்கொண்டு உபசரித்தலும், தொன்றுதொட்டுவருஞ் சிறப்பினையுடைய விருந்தினரை எதிர் சென்றழைத்துவந்து உண்பித்தலும் என்னுமிவற்றை இழந்த என்னை என்று



பொருள்: இது, கண்ணகியென்பவள் தன்கணவனாகியகோவலன் தன்னிடத்து முன்னம் அன்பில்லாதிருந்ததனைக் கூறியது. 'அளியாவது - அன்பு

காரணத்தால் தோன்றும் அருள்; அன்பாவது - மனைவியர்கண்ணும் தாய் தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின் கண்ணும் மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்துநிற்கும் நேயம்' என்பது, பொருளதிகாரவுரை.

எக. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா
புன்கணீர் பூச றரும்.

ழார்வலர்

(இ - ள்.) அன்பிற்கும்—, அடைக்கும்-(பிறர் அறியாமல்) அடைத்து வைக்கும், தாழ்—, உண்டுஓ - உளதோ? ஆர்வலர் புல் கண் நீர் - (தம்மால்) (அன்புசெய்யப்பட்டாரது துன்பங் கண்டுழி) அன்புடையார்கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே, பூசல் தரும்-(உள்நின்ற அன்பினை எல்லாரும் அறியத்) தூற்றும், (ஆதலான்); (எ - று.)

உம்மை, சிறப்பின்கண் வந்தது. ஆர்வலரது புன்மை, கண்ணீர்மேல் ஏற்றப்பட்டது. காட்சியளவைக்கு எய்தாதாயினும் அனுமானவளவையான் வெளிப்படு மென்பதாம்.

இதனான், அன்பினது உண்மை * உணர்த்தப்பட்டது.

(கு - ரை.) அடைத்து வைக்கும் - மறைத்துப் பூட்டிவைக்கும். தாழ் - தாழக்கோல். உளதோ - இல்லையென்றபடி; ஓ - எதிர்மறை. ஆர்வலர் - அன்புடையவர்; இதில், ஆர்வு - பகுதி: அல் - சாரியை: அர் - விகுதி. கண்டுழிபார்த்தபொழுது. புல்லிய - துன்பமான; புன்மை - இங்கே, துன்பம். தூற்றும் - வெளிப்படுத்தும். சிறப்பு - உயர்வுசிறப்பு. அனுமான அளவை - அநு

மாநப்ரமாணம்; இது, முதல்திருக்குறளின் குறிப்பில் இன்னதென்று கூறப்பட்டது. இன்பத்தினால் உண்டாகும் ஆனந்தக்கண்ணீரை விலக்குதற்கு, 'புன்கணீர்' எனப்பட்டது. தாழ் என்பதற்கு - சினையாகுபெயராய், தாளிடப்படும் கதவு என்றும் பொருள்கொள்ளலாம். உண்மை - இருத்தல். அன்பென்பது இன்னதென்று பிரதியட்சமாகக் காணப்படுவதன்று, அதனையுடையவரிடத்து உண்டாகுங் கண்ணீர்பெருகல் முதலிய குணங்களால் ஊகித்து அறியத்தக்கதொரு பொருளாமென்பது, கருத்து; இதுபற்றியே தொல்காப்பியனாரும் "ஒப்பு முருவும் வெறுப்பு மென்று, கற்பு மேரு மெழிலு மென்றா, சாயலுநாணு மடனு மென்றா, நோயும் வேட்கையு நுகர்வு மென்றாங், காவயின் வரூஉங் கிளவி யெல்லாம், நாட்டிய மரபி னெஞ்சுகொளி னல்லது; காட்ட லாகாப் பொருள வென்ப" என்றார். பொருளதிகாரவுரையில் 'அன்பென்பது, அருட்கு முதலாகி மனத்தில்நிகழும் நேயம்; அஃ துடையார்க்குப் பிறர்கண் துன்பங்கண்டவழிக் கண்ணீர் விழு மாகலின் அவ்வருளானே அன்புடைமை விளங்கு மென்பது; இவையெல்லாம் தத்தம் மனத்தினிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாகலின் மெய்ப்பாடெனப்பட்டன' என்றும், இறையனாரகப்பொருளுரையில் நக்கீரர் 'குடத்துள் விளக்கும் †தடற்

* கூறப்பட்டதுஎன்று பிரதிபேதம். † தடறு - வாளிடும்உறை.

அன்பென்று தந்து காட்டலாகாது; அன்புடையரான குணங் கண்ட இடத்து இவைஉண்மையான், ஈங்கு அன்பு உண்டெ ன்று அனுமித்துக்கொள்ளற்பாற்று' என்றுங் கூறியவாறு காண்க. (க)

எஉ. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா

ரென்பு முரியர் பிறர்க்கு.

(இ - ள்.) அன்பு இலார் - அன்பிலாதார், எல்லாம் தமக்கு உரியர் - (பிறர்க்குப் பயன்படாமையின்) எல்லாப்பொருளாலும் தமக்கே உரியர்; அன்பு உடையார்—, என்புஉம் பிறர்க்கு உரியர் - (அவற்றானேயன்றித் தம்) உடம்பாலும் பிறர்க்கு உரியர்; (எ - று.)

ஆனுருபுகளும், பிரிநிலையேகாரமும்-விகாரத்தால் தொக்கன. 'என்பு' - ஆகுபெயர். என்பும்உரியராதல், "தன் அகம் புக்க குறுநடைப்புறவின், தபுதி கண்டு அஞ்சிச் சீரைபுக்"கோன் முதலாயினோர்கட் காண்க.

(கு - ரை.) அவற்றானேயன்றி - அப்பொருள்களாலேயல்லாமல். ஆனுருபுகள் - 'எல்லாம்,' 'என்பும்' என்னுமிடங்களில்; எல்லாவற்றானும், என்பி னானும் என விரிக்க. பிரிநிலை ஏகாரம் - 'தமக்கு' என்பதில். என்பு - அதனை யுடைய உடம்புக்குச் சினையாகுபெயர். உம்மை - இறந்தது தழுவியஎச்சப்பொருளது. "தன்னகம்புக்க

குறுநடைப்புறவின்'' என்பது-புறநானூறு சங-இல் உள்ளது; இதற்குப் பொருள் - தன்னிடம் வந்து சரணமடைந்த தளர்ந்த நடையையுடையபுறாவினது கேட்டைக் கண்டு பயந்து (அதனைக்காக்கும்பொருட்டுத் தான்) தராசுத்தட்டில் ஏறின சிபிச்சக்கரவர்த்தி என்பது. சிபியென்னுஞ் சக்கரவர்த்தி அரசாளுகையில் அவனது மேன்மைக்குணத்தைப் பரீட்சிக்கும் படி இந்திரன் பெரும்பருந்தாகவும் யமன் சிறுபுறாவாகவும் வடிவமெடுத்துப் புறாவைப் பருந்து துரத்திவர, அப்புறா சக்ரவர்த்தியைச் சரணமடைய, அரசன் அதற்கு அபயமளிக்க, பின்னேவந்த பருந்து 'என் இரையைக் கொடுத்துவிடு' என்று கேட்க, மன்னவன் 'அடைக்கலம்புகுந்தவரை ஆதரியாதுவிடுதல் அதி பாதகமாதலால் இதையன்றி எதுகேட்டாலுங் கொடுப்பேன்' என்ன, பருந்து 'இந்தப்புறாவின் எடையளவு தசை உன்உடம்பில் அரிந்துகொடு' என்ன, வேந்தன் சம்மதித்து உடனே உடம்பிலுள்ள உறுப்புக்களை யெல்லாம் ஒவ்வொன்றாக அறுத்து வைத்தும் எடைகுறைந்தமையால் தானே தராசு தட்டில் ஏறி எடையை நிறைக்க, உடனே அத்தேவர்கள் பிரத்யக்ஷமாகி மிக வியந்து வேண்டின வரங்களை அளித்துப்போயின ரென்பது கதை. 'முத லாயினார்' என்றது - தமது முதுகெலும்பை இந்திரனுக்கு வச்சிராயுதத்துக் காகக் கொடுத்த ததீசிமுனிவரும், தன்னுடன்பிறந்த கவசகுண்டலங்களை

இந்திரனுக்குத் தானஞ்செய்த கர்ணனும் முதலியோரை உட்கொண்டு.

என்பு - எலும்பு.

(உ)•

எஎ. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.



(இ - ள்.) ஆர் உயிர்க்கு - (பெறுதற்கு) அரிய மக்களுயிர்க்கு, என்போடு இயைந்த - உடம்போடு உண்டாகிய, தொடர்பு-தொடர்ச்சியினை, அன்போடு இயைந்த வழக்கு என்ப-அன்போடு பொருந்துதற்கு வந்த நெறியின் பயனென்று சொல்லுவர், (அறிந்தோர்); (எ - று.)

பிறப்பினது அருமை, பிறந்தஉயிரின்மேல் என்பது, உபசாரவழக்கு. வழக்கு - ஆகுபெயர்.

ஏற்றப்பட்டது. 'இயைந்த' உடம்போடு இயைந்தல்லது

அன்பு செய்யலாகாமையின், அதுசெய்தற்பொருட்டு இத்தொடர்ச்சி உளதா

யிற்று என்பதாம்: ஆகவே, இத்தொடர்ச்சிக்குப் பயன், அன்புடைமை யென்

றாயிற்று.

(கு - ரை.) நெறி-வழி. மனிதப்பிறப்பு அரியதாதலை "அரிதரிது மானி

டராத லரிது" என ஔவையார் கூறியதனாலும் அறிக.

'அன்போடு இயைய

வந்த' என்னும் அருக்கத்தில் 'அன்போடு இயைந்த' என்றது, உபசாரவழக்கு; இதனை வடநூலார் 'ஔபசாரிகப்ரயோகம்' என்பர். வழக்கு - அதன்பயனைக் குறித்ததனால், ஆகுபெயர். அதுசெய்தற்பொருட்டு - அன்புசெய்யுநிமித்தம். இத்தொடர்ச்சி உயிர்க்கு மனிதவுடம்போடு உண்டான சம்பந்தம். இனி, இக்குறளுக்கு - அரிய உயிர்களுக்கு மானிட உடம்புகளோடு உண்டான சம்பந்தத்தை முற்பிறப்புக்களில் அவ்வுயிர்கள் அன்போடு பொருந்திவந்த நெறியின் பயனென்று சொல்வர் அறிந்தோர் என்று உரைப்பாரு முளர். (௩)

எச. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

(இ - ள்.) (ஒருவனுக்கு), அன்பு - (தொடர்புடையார்மாட்டுச் செய்த)

அன்பு, ஆர்வம் உடைமை ஈனும் - (அத்தன்மையாற் பிறர்மாட்டும்) விருப்ப

முடைமையைத் தரும்; அது - அவ்விருப்பமுடைமைதான், நண்பு என்னும்

நாடா சிறப்பு ஈனும்-(இவற்குப் பகையும் நொதுமலும் இல்லையாய்) யாவரும்

நண்பென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத் தரும்; (எ - று.)

உடைமை - உடையனுந்தன்மை. யாவரும் நண்பாதல் எல்லாப்பொரு

ளும் எய்துதற்கு ஏதுவாகலின், அதனை, 'நாடாச்சிறப்பு' என்றார்.

(கு - ரை.)

தொடர்புடையார்மாட்டு-உறவினரிடத்தில். நொதுமல் -
விரோதமுஞ் சிநேகமு மில்லாதிருக்குந் தன்மை; உதாஸீநதை. நாடாச்
சிறப்பு - இவ்வளவென்று மதிக்கக்கூடாத செல்வம். (சு)

எரு. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

(இ - ள்.) அன்பு உற்று - அன்புடையராய், அமர்ந்த - (இல்லறத்தோடு)
பொருந்திய, வழக்கு - நெறியின்பயன், என்ப - என்று சொல்லுவர் (அறிந்
தோர்) : வையகத்து - இவ்வுலகத்து, இன்பு உற்றார்-(இல்வாழ்க்கைக்கண்நின்று)
இன்பம் நுகர்ந்து, எய்தும் - (அதன்மேல் துறக்கத்துச் சென்று) எய்தும்,சிற
ப்பு - பேரின்பத்தினை; (எ - று.)

.வு - ஆம் அதிகாரம்—அன்புடைமை
ருஎ

வழக்கு - ஆகுபெயர், இல்வாழ்க்கைக்கண் நின்று மனைவியோடும் மக்களோடும் ஒக்கலோடுங் கூடி இன்புற்றார் தாம்செய்த வேள்வித்தொழிலால் தேவராய் ஆண்டும் இன்புறுவ ராகலின், 'இன்புற்றாரெய்துஞ் சிறப்பு' என்றார். தவத்தால் துன்புற்று எய்துந் துறக்கவின்பத்தினை ஈண்டும் இன்புற்று எய்துதல் அன்பானன்றி இல்லை யென்பதாம்.

(கு - ரை.) துறக்கத்து - சுவர்க்கத்தில். ஆண்டும் - அவ்விடத்தும்; மறுமையிற் சுவர்க்கத்தும். ஈண்டும் இன்புற்றுஎய்துதல்-இவ்வுலகத்தும் இன்பத் தையனுபவித்து அடைதல். வழக்கு, நீதி, நெறி, முறைமை என்பன - ஒரு பொருட்சொற்கள்.

(ரு)

எசு. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

(இ - ள்.) அன்பு—, சார்பு-துணையாவது, அறத்திற்கே—,என்ப-என்று சொல்லுவர், அறியார் - அறியார் (சிலர்); மறத்திற்குஉம் - ஏனை மறத்திற்கும்; அஃதுஏ - அவ்வன்பே, துணை - துணையாவது; (எ - று.)

ஒருவன்செய்த பகைமைபற்றி உள்ளத்து மறம்நிகழ்ந்துழி அவனை நட்பாகக் கருதி அவன்மேல் அன்புசெய்ய அது நீங்குமாகலின், மறத்தை நீக்குதற்குந் துணையா மென்பார், 'மறத்திற்கு மஃதே துணை' என்றார்; "துன்பத் திற்கியாரே துணையாவார்" என்புழிப்போல.

இவையிரண்டுபாட்டானும், அன்பினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) மறம் - அதருமம். உள்ளத்து மறம் நிகழ்ந்துழி-மனத்திற் கோபம் உண்டானபொழுது. "துன்பத்திற்கு" என்னும் மேற்கோள், திருக் குறள் -

௩௩௦-ஆம் அதிகாரம் - ௬-இல் உள்ளது; இதற்கு-ஒருவர்க்குத் துன்
பம்வந்தவிடத்து அதனைநீக்குதற்கு வேறு துணையாவா ரொருவருமில்லை யென்று பொருள். 'மறத்திற்கு அன்பு துணை' என்றதை'பித்தத்துக்கு இஞ்சி நல்லது' என்பதுபோலக் கொள்க. அறியார்-பெயர். என்ப - பயனிலை. 'அறத் திற்கே' என்பதில், ஏ - பிரிநிலை. மறத்திற்கும், உம் - இறந்தது தழுவிய எச்சம். அஃதே, ஏ - தேற்றம். அஃதே - ஆய்தம், மெய்போல ஒலித்தது.

௭௭. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம். ௭

(இ - ள்.) என்பு இலதனை - என்பில்லாத உடம்பை, வெயில் போல- வெயில் காய்ந்தாற்போல, காயும்—: அன்பு இலதனை-அன்பில்லாத உயிரை, அறம் - அறக்கடவுள் ; (எ - று.)

'என்பிலது' என்றதனான் உடம்பு என்பதூஉம், 'அன்பிலது' என்றதனான் உயிர் என்பதூஉம் பெற்றாம். * வெறுப்பின்றி எங்கும் ஒருதன்மைத்தாகிய வெயிலின்முன் என்பில்லது தன் இயல்பாற் சென்று கெடுமாறுபோல;* அத்தன்மைத்தாகிய அறத்தின்முன் அன்பில்லது தன் இயல்பாற் கெடு

* வேறுபாடின்றி என்று பிரதிபேதம்,

மென்பதாம்: அதனை, 'காயும்' என வெயில் அறங்களின்மேல் ஏற்றினார், அவற்
றிற்கும் அவ்வியல்பு உண்மையின். இவ்வாறு "அல்லவை செய்தார்க் கறங்
கூற்றம்" எனப் பிறரும் கூறினார்.

(கு - ரை.) என்பில்லாத உடம்பு - புழு உடம்பு. காய்தல்-காய்ந்து கொ
ல்லுதல். அறக்கடவுள் - தருமதேவதை. அத்தன்மைத்தாகிய - வெறுப்பில்
லாத. அவ்வியல்பு - காய்தற்றன்மை. "அல்லவை" என்னும் மேற்கோள்,
நான்மணிக்கடிகை - அ0 -இல் உள்ளது; இதற்கு - அதருமங்களைச் செய்தவர்
களுக்குத் தருமதேவதை யமனைப்போலத் துன்பஞ்செய்யும் என்பதுபொருள்.
உவமையணி. ஏகாரம்-கருணையோடுகூடிய இரக்கத்தைக் காட்டும். (எ)

எஅ. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

(இ - ள்.) அகத்து - மனத்தின்கண், அன்பு இல்லா - அன்பில்லாத,
உயிர்—, வாழ்க்கை -

(இல்லறத்தோடுகூடி)வாழ்தல்,—வன்பாற்கண் - வன்பாலின்கண், வற்றல் மரம் - வற்றலாகிய மரம், தளிர்த்தற்று - தளிர்த்தாற்போலும்; (எ - று.)—கூடாதென்பதாம்.

வன்பால் - வன்னிலம். வற்றல் என்பது - பால்விளங்கா அஃறிணைப் படர்க்கைப்பெயர்.

(கு - ரை.) வன் பால் - கடினமாகிய பூமி; பாலைநிலம். 'வன்பார்க்கண்' என்றும் பாடமுண்டு. வற்றலாகிய மரம் - ஈரம் வற்றியதாகிய மரம். 'வற்றல்' என்பதில், அல் - கருத்தாப்பொருள் விகுதி. வற்றல்மரம் - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. பால்விளங்கா அஃறிணைப்படர்க்கைப் பெயராவது- ஒன்றன்பாலைக்காட்டுகிற'து' என்கிற விகுதியையாவது, பலவின்பாலைக் காட்டுகிற 'வை, அ, கள்' என்னும் விகுதிகளுளொன்றையாவது பெறாமல் அவ்விருபால்களுக்கும் பொதுவாய் வருகிற அஃறிணைப் பெயர். தளிர்த்தற்று - தளிர்த்தாலற்று என்பதன் விகாரம். வற்றல் மரம் - ஒருஜாதிமரமுமாம்.

(அ)

எகூ. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

(இ - ள்.) யாக்கை யகத்து - யாக்கையகத்தின்கண் (நின்று), உறுப்பு - (இல்லறத்திற்கு) உறுப்பாகிய, அன்பு—, இலவர்க்கு - உடையரல்லாதார்க்கு, புறத்து உறுப்பு எல்லாம் - ஏனைப் புறத்தின்கண் நின்று உறுப்பாவன வெல்லாம், எவன் செய்யும்-(அவ்வறஞ்செய்தற்கண்) என்ன உதவியைச் செய்யும்?

புறத்துறுப்பாவன - இடனும், பொருளும், ஏவல்செய்வாரும் முதலாயின. துணையோடு கூடாதவழி அவற்றாற் பயனின்மையின், 'எவன் செய்யும்' என்றார். உறுப்புப் போறலின், 'உறுப்பு' எனப்பட்டன. யாக்கையில் கண் முதலிய உறுப்புக்களெல்லாம் என்னபயனைச் செய்யும்? மனத்தின்கண் உறுப்பாகிய அன்பு லறத்தோடு யாதும்

இலாதார்க்கு என்று உரைப்பாருமுளர்; அதற்கு இல் இயைபில்லாமை அறிக.

## ௯ - ஆம் அதிகாரம்— விருந்தோம்பல்

(கு - ரை.) யாக்கை யகத்தின்கண் நின்று - உடம்பினுள்ளேயிருந்து. உறுப்பு - அங்கம். புறத்தின்கண் - வெளியிலே. எவன் செய்யும் - ஒன்றையுஞ் செய்யாதென்பது கருத்து. துணையோடு கூடாதவழி - இல்லறத்திற்குத் துணையாகிய அன்போடு கூடாதவிடத்து; இல்லறவாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியோடு கூடாதவிடத்து எனினுமாம். அவற்றால்-இடம்பொருள் ஏவல்களால். முதலடியில் உறுப்பு - உவமவாகுபெயர். போறலின் - ஒத்திருத்தலால். "இல்லானுக் கன்பில் இடம்பொருளேவல்மற், றெல்லா மிருந் துமவற் கென்செய்யும் - நல்லாய், மொழியிலார்க் கேது முது நூல் தெரியும், விழியிலார்க் கேது விளக்கு" என்பது காண்க. அதற்கு-அவ்வுரைக்கு. இயைபு - சம்பந்தம்.

(கூ)

அ0. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

(இ - ள்.) அன்பின் வழியது - அன்பு முதலாக அதன்வழிநின்ற உடம்பே, உயிர் நிலை - உயிர்நின்ற உடம்பாவது; அஃது இலார்க்கு - அவ்வன் பில்லாதார்க்கு (உளவான), உடம்பு - உடம்புகள், என்பு தோல் போர்த்த - என்பினைத் தோலாற் போர்த்தனவாம்: (உயிர்நின்றனவாகா); (எ - று)

இல்லறம் பயவாமையின், அன்னவாயின.

இவை நான்குபாட்டானும், அன்பில்வழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) அதன்வழிநின்ற - அதன்பின்நின்ற. அன்பில்லாத உடம்பு கள் இல்லறத்தைத் தரமாட்டாமையால், இவ்வாறு கூறினர்; "கெட்டுயிர்ப் போடுற்றபிணம்" என்றாற்போல. அன்ன - அப்படிப்பட்டவை. போர்த்த - பலவின்பால் முற்று. அஃதிலார்க்கு - ஆய்தம் மெய்போல ஒலித்தது. அன்பில்லாவிடின் உடம்பு எடுத்தது பயனற்றதென்பதாம். (௧௦)

## ௯ - ஆம்

# அதிகாரம்.—விருந்தோம்பல்.

அஃதாவது - இருவகை விருந்தினரையும் புறந்தருதல். தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாதாரை நினைந்துசெய் வன வாகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்குரைத லன்மையானும், இடை நின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்று. வேறாகாத அன்புடையிருவர் கூடியல்லது செய்யப்படாமையின், இஃது, அன் புடைமையின் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) இருவகைவிருந்தினர் - ௪௩-ஆம் குறளின் உரையிற் கூறப் பட்டவர். புறந்தருதல் - காத்தல். முன்னைய இரண்டும் - பிதிருக்களை ஓம்ப

லும், தேவரை ஓம்பலும். கட்புலனாகாதார் -
பிரதியக்ஷமாகாதவர். பின்னைய
இரண்டும் - சுற்றத்தாரை ஓம்பலும், தன்னை ஓம்பலும்.
இடை - அந்நான்கிற் கும் நடுவில்.
அன்புடையிருவர்-கணவனும் மனைவியும். அன்பில்லாமல்
விருந் தோம்புதல் கூடாததனால், இதனை
அன்புடைமையின்பின் வைத்தார்.



அக. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம்
விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ - ள்.) இல் இருந்து - (மனைவியோடும் வனத்திற்
செல்லாது) இல்
லின்கண் இருந்து, ஓம்பி - (பொருள்களைப்) போற்றி,
வாழ்வது எல்லாம் -
வாழுஞ்செய்கையெல்லாம்,—விருந்து ஓம்பி -
விருந்தினரைப் பேணி, வே
ளாண்மை செய்தற்பொருட்டு - (அவர்க்கு) உபகாரஞ்
செய்தற்பொருட்டு.

எனவே, வேளாண்மை செய்யாவழி இல்லின்கண்
இருத்தலும், பொ
ருள் * போற்றலுங் காரணமாக வருந்

துன்பச்செய்கைகட்கெல்லாம் பய
னில்லையென்பதாம்.

(கு - ரை.) போற்றி - காத்து. பேணி - உபசரித்து. வாழ்வதெல்லாம்-
ஒருமைப்பன்மைமயக்கம். பொருட்டு - நான்காம்
வேற்றுமைச் சொல்லுருபு.
விருந்தோம்பாவழி இல்வாழ்க்கை பயனற்றதென்பதாம்.

(க)

அ௨. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) சாவா மருந்து எனின் உம் - (உண்ணப்படும் பொருள்) அமுதமே யெனினும், விருந்து - (தன்னை நோக்கி வந்த) விருந்து, புறத்தது ஆ -
(தன் இல்லின்) புறத்ததாக, தான் உண்டல் - தானே உண்டல், வேண்டல் பாற்று அன்று - விரும்புதல் முறைமை யுடைத் தன்று; (எ - று.)

சாவா மருந்து - சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. விருந்தின்றியே ஒருகால் தான் உண்டலைச் சாவாமருந் தென்பார் உளராயினும் அதனை
ஒழிக என்று உரைப்பினும் அமையும்.

இவை இரண்டுபாட்டானும், விருந்தோம்பலின் சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) இப்பாட்டுக்கு இரண்டுஉரை. முதல் உரையில் 'சாவாமருந் து' என்பது - அம்ருதம் என்பதன் மொழிபெயர்ப்பு; கிடைப்பதற்கரியதும்

மிகவினியசுவையுடையது மாகிய அமிருதங் கிடைத்தாலும் அதனையும்விருந் தாளிகளுக்குக் கொடுத்து உண்ணவேண்டுமே யன்றி விருந்தினரைத் தன் வீட்டு வாயிலில் வைத்துவிட்டுத் தான் உண்ணலாகா தென்பது கருத்து. இரண்டாம்உரையில், சாவாமருந்து - ம்ருதசஞ்சீவீ என்பதன் மொழிபெயர்ப்பு; விருந்தினரை வாயிலில் வைத்துவிட்டு ஒருதரம் ஒருவன் உண்டால் அது இறவாமற்சிரஞ்சீவியாயிருத்தற்குரியமருந்தாம் என்று எவராயினுஞ் சொல்லி நிலைநிறுத்தினாலும் அவ்வாறு உண்ணலாகாது என்பது கருத்து: விருந்தினரை உண்பியாமல் தானுண்பது சாதலினும் இன்னாதது என்பதாம். புறத்ததா, ஆ - ஆக என்பதன் தொகுத்தல். வேண்டற்பாற்று-விரும்பப்படுதலாகிய தன்மையையுடையது. பாற்று-ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். 'விரும்பத்தக்கதன்று' என்று சொன்னதனாலே, செய்யத் தக்கதன்றென்று சொல்லவேண்டாதாயிற்று.

(உ)

* செய்தல் என்று பிரதிபேதம்: செய்தல் - சம்பாதித்தல்.

கூ - ஆம் அதிகாரம் — விருந்தோம்பல்

கூக்

அங. வருவிருந்து வைகலு மோம்புவான்

வாழ்க்கை

பருவந்து பாழ்படுத லின்று.

(இ - ள்.) வரு விருந்து - (தன்னைநோக்கி) வந்த விருந்தை, வைகல்உம்- நாள்தோறும், ஓம்புவான் - புறந்தருவானது, வாழ்க்கை - இல்வாழ்க்கை,— பருவந்து - (நல்குரவான்) வருந்தி, பாழ் படுதல்-கெடுதல், இன்று - இல்லை.

நாள்தோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற் பொருள்தொலையாது மேன்மேற் கிளைக்கும் என்பதாம்.

(கு - ரை.) புறந்தருவான் -(உணவுமுதலியகொடுத்துப்) போற்றுபவன். நல்குரவு - வறுமை. பொருள் தொலையாது - பணஞ் செலவழிந்து விடாமல். கிளைக்கும் - வளரும். வைகலும், உம்மை - தொறுப்பொருளது. பருவந்து, பருவா-பகுதி. இப்பாட்டான், விருந்தோம்புதலாற் பொருளழியுமே யென்று ஏக்கங்கொள்ளலாகாது எனத் துணிவு கூறினார்.

(௩)

அ௪. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து

நல்விருந் தோம்புவா னில்.

(இ - ள்.) செய்யாள் - திருமகள், அகன் அமர்ந்து - மனம் மகிழ்ந்து, உறையும் - வாழாநிற்கும்: முகன் அமர்ந்து - முகம் இனியனாய், நல் விருந்து- தக்க விருந்தினரை, ஓம்புவான்-பேணுவானது, இல்-இல்லின்கண்; (எ-று.)

மனம் மகிழ்தற்குக் காரணம், தன்செல்வம் நல்வழிப்படுதல். தகுதி - ஞானஒழுக்கங்களான்உயர்தல்.

பொருள்கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு.

(கு - ரை.) திருமகள் - இலக்குமி.

ஞானஒழுக்கங்களான் உயர்தல்-அறிவினாலும் ஆசாரத்தாலும் சிறத்தல். அகம் என்னும் உள்ளிடத்தின் பெயர், அங்குஉள்ள மனத்துக்கு இடவாகுபெயர். அமர்ந்து -பொருந்தி யென்றுமாம். செய்யாள் - செம்மையையுடையவள்; செம்மை என்பது ஈறுபோய் முன்னின்றமெய்திரிந்த செய் - பகுதி.

(ச)

அரு. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

(இ - ள்.) விருந்து ஓம்பி - (முன்னே) விருந்தினரை மிசைவித்து, மிச்சில் மிசைவான் - (பின்) மிக்கதனை(த் தான்) மிசைவானது, புலம் - விளைபுலத்துக்கு, வித்து இடல்உம் வேண்டும் ஓ - வித்திடுதலும் வேண்டுமோ? வேண்டா; (எ - று.)

கொல்என்பது - அசைநிலை. 'தானே விளையும்' என்பது, குறிப்பெச்சம்.

இவை மூன்றுபாட்டானும், விருந்தோம்புவார் இம்மைக்கண் எய்தும் பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) மிசைவித்து - உண்பித்து. மிசைவான்-உண்பவன். விளை புலம் - கழனி. வித்திடுதல் - விதைவிதைத்தல். வித்து இடலும் என உம்மை மாறுக. ஓ-எதிர்மறை. மிச்சில்-மிஞ்சு என்னும் பகுதியிலிருந்து வந்தது.



அ௬. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பர்
நல்விருந்து வானத் தவர்க்கு.

(இ -ள்.) செல் விருந்து - (தன்கண்) சென்ற விருந்தை, ஓம்பி - பேணி, வரு விருந்து-(பின்) செல்லக்கடவ விருந்தை, பார்த்து —, இருப்பான் - (தான் அதனோடு உண்ண) இருப்பான்,—வானத்தவர்க்கு நல் விருந்து -(மறு பிறப்பில் தேவனாய்) வானினுள்ளார்க்கு நல்விருந்தாம்; (எ - று.)

வருவிருந்து என்பது - இடவழுவமைதி. நல்விருந்து - எய்தாவிருந்து.

இதனான், மறுமைக்கண் எய்தும் பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) சென்ற - வந்த. செல்லக்கடவ - வரத்தக்க. பார்த்து-எதிர் பார்த்து. அதனோடு உண்ண இருப்பான்-அவ்விருந்தாளியோடு புசிக்கக் காத் திருப்பவன். வானினுள்ளார் - தேவர். "தருசொல் வருசொல் லாயிருகிள வியுந், தன்மை முன்னிலை யாயீ ரிடத்த" என்னும்

தொல்காப்பியச் சூத்திரத்தின்படி தன்மைமுன்னிலைகளுக்கு உரிய வருசொல், அதற்கு மாறாக இங்கே படர்க்கையிடத்திற்கு வந்தமையால் இடவழுவாகி, "செலவினும் வரவினும்" என்னுஞ் சூத்திரத்துப் பொதுவிதியால் அமைக்கப்படுதலால் வழுவமைதியாயிற்று. எய்தா விருந்து - பெறுதற்குஅரிய விருந்து. (சு)

அஎ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை
றுணைத்துணை வேள்விப் பயன்.

விருந்தின்

(இ - ள்.) வேள்வி பயன் - (விருந்தோம்பலாகிய) வேள்வியின் பயன், இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை - இன்ன அளவிற்று என்பதோர் அளவுடைத்தன்று: விருந்தின் துணை துணை-(அதற்கு) அவ்விருந்தின் தகுதி யளவே அளவு: (எ - று.)

ஐம்பெருவேள்வியின் ஒன்றாகலின் 'வேள்வி' என்றும், பொருளளவு "தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" ஆகலின், 'இனைத்துணைத்தென்பதொன்றில்லை' என்றும் கூறினார்.

இதனுன், இருமையும் பயத்தற்குக் காரணம் கூறப்பட்டது.

(கு -ரை.) வேள்வி - யாகம். அளவிற்று - அளவையுடையது. அதற்கு - அப்பயனுக்கு. தகுதி - பெருமை. ஐம்பெருவேள்வி - பிரமயஜ்ஞம், தேவயஜ்

ஞும்,மநுஷ்யயஜ்ஞும், பித்ருயஜ்ஞும், பூதயஜ்ஞும் என்னும் பஞ்ச மஹாயஜ்ஞங் கள். அவற்றுள், பிரமயஜ்ஞும் - வேதமோ துதல்; தேவயஜ்ஞும் - ஓமம்வளர்த் தல்; மநுஷ்யயஜ்ஞும் - விருந்தோம்புதல்; பித்ருயஜ்ஞும்-தருப்பணஞ்செய்தல்; பூதயஜ்ஞும் - பலியீதல். "தான்சிறி தாயினும்" என்னும் மேற்கோள்-நாலடி யாரில் நான்காமதிகாரத்தில் எட்டாம் பாட்டிலுள்ளது. இதற்குப்பொருள் - தானஞ்செய்யப்படும்பொருள் தான் மிகச் சிறியதாயிருந்தாலும், தகுதியையுடைய சற்பாத்திரங்களின் கையிற் சேர்ந்தால்,மிகப்பெரிய ஆகாயமுஞ் சிறிய தென்னும்படி தருமத்தின் மேலானபயனைப் பரப்பிவிடும் என்பது. இருமையும் - இம்மைமறுமையிரண்டையும். இனை என்பதை இத்தனையென்பதன் மரூஉ என்பர். விருந்தின் துணைத் துணை என்பதற்கு - தான் விருந்தினர்க்

கூ - ஆம் அதிகாரம்—விருந்தோம்பல்

சாரு

குச்செய்யும் உபசாரத்தின் அளவே அளவாம் என்று பொருள்கொள் வாருமுளர்.

(எ)

அஃபரிந்தோம்பிப் பற்றற்றேமென்பார்
வேள்வி தலைப்படா தார்.

விருந்தோம்பி

(இ - ள்.) பரிந்து ஓம்பி - (நிலையாப்பொருளை) வருந்திக் காத்து(ப் பின் அதனை இழந்து), பற்று அற்றேம் என்பர் - (இதுபொழுது யாம்) பற்றுக்கோடிலமாயினேம் என்று இரங்குவர்: விருந்து ஓம்பி - (அப்பொருளான்) விருந்தினரை ஓம்பி, வேள்வி தலைப்படாதார் - வேள்விப்பயனை எய்தும் பொறியிலாதார்; (எ - று.)

"ஈட்டிய வொண்பொருளைக், காத்தலு மாங்கே கடுந்துன்பம்" ஆக
லின், 'பரிந்தோம்பி' என்றார். வேள்வி - ஆகுபெயர்.

(கு - ரை.) நிலையாப் பொருள் - நிலையில்லாதசெல்வம். இதுபொழுது - இப்பொழுது. பற்றுக்கோடிலமாயினேம் - ஆதரவில்லாதவரானேம். இரங்குவர் - பச்சாத்தாபப்படுவர். பொறியிலாதார் - விதியில்லாதவர். "ஈட்டிய" என்னும் மேற்கோள் - நாலடியாரில் உஅ - ஆம் அதிகாரத்தில் கo - ஆம்
பாட்டிலுள்ளது; இதற்கு, சம்பாதித்த நல்லபொருளைக் காப்பாற்றுவதும்
அப்படியே மிகுந்த துன்பம் என்பதுபொருள். வேள்வி-அதனாற் பெறப்படும்
பயனுக்குக் காரணவாகுபெயர். விருந்தோம்பாதவர் பொருளையிழந்து பரித
விப்பர் என்க.

(அ) அகூ. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

(இ - ள்.) உடைமையுள் - உடைமைக்காலத்து, இன்மை - இன்மை யாவது,—விருந்து ஓம்பல் ஓம்பா மடமை - விருந்தோம்பலை இகழும் பேதைமை; மடவார்கண் உண்டு - (அஃது அறிந்தார்மாட்டு உளதாகாது,) பேதையார்மாட்டே உளதாம்; (எ - று.)

உடைமை - பொருளுடையனுந்தன்மை. பொருளாற்கொள்ளும் பயனை இழப்பித்து உடைமையை இன்மையாக்கலின், மடமையை இன்மையாக உபசரித்தார். பேதைமையான் விருந்தோம்பலை இகழின், பொருள் நின்றவழியும் அதனாற் பயனில்லை யென்பதாம்.

இவை யிரண்டு பாட்டானும், விருந்தோம்பா வழிப் படுங் குற்றம் கூறப் பட்டது.

(கு - ரை.) உடைமைக்காலம் - பொருளுடையனுயிருக்குங்காலம். இன்மை - வறுமை. இகழும் - இகழ்ந்து செய்யாமல்விடும். பேதைமை - அறியாமை. அஃது - அப்பேதைமை. பேதையார் - அறிவில்லாதவர். செல்வத்தால் அடையப்படும் பிரயோசனத்தை அடையாமல் இழக்கச்செய்து அச்செல்வத்.

தை இல்லாததாக்குதலால் இன்மைக்குக்காரணமாகிய விருந்தோம்பா மடமை

யை அதன்காரியமாகிய இன்மையாகச் சொன்னது, உபசாரவழக்கு. பொருள்

நின்றவழியும் - செல்வம் இருந்தபோதிலும். அஃது என்னுஞ் சுட்டுப்பெயர்,



வருவித்து உரைக்கப்பட்டது. 'மடவார்கண்' என்பதில் பிரிநிலைஏகாரம் தொக்கது. மடவார் - மடமையென்னும் பண்பினடியாப் பிறந்த பலர்பாற் பெயர்.

(௯)

௯0. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இ - ள்.) அனிச்சம் - அனிச்சப்பூ, மோப்ப குழையும் - மோந்துழி யன்றிக் குழையாது; விருந்து - விருந்தினர், முகம் திரிந்து நோக்க குழை

யும் - முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர்; (எ - று)

அனிச்சம் - ஆகுபெயர். சேய்மைக்கட் கண்டுழி இன் முகமும், அது

பற்றி நண்ணியவழி இன்சொல்லும், அவைபற்றி உடன்பட்டவழி நன்றாற்ற

லும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்

முகம் இல்வழிச் சேய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், தீண்டியவழியல்லது
வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியர் என்பதாம்.

இதனான், விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டு மென்
பது கூறப்பட்டது.

(கு - ரை.) அனிச்சம் - ஓர்மரம்; அது, அதன்மலர்க்கு முதலாகுபெயர்.
மோந்துழியன்றிக் குழையாது - மோந்துபார்த்தாலன்றி வாடாது. தூரத்தில்
விருந்தினனைப் பார்த்த பொழுதே இனியமுகமும், அதனால் அவன் கிட்டிய பொழுது இனியசொல்லும்,
அவ்விரண்டினாலும், அவன் இணங்கினபொழுது
அவனுக்கு நல்லஉபசாரஞ்செய்தலு மாகிய மூன்றும் விருந்தோம்புவார்க்கு
அவசியமானவையாம்; இவற்றுள் முதலதாகிய இனியமுக மில்லாவிடின்,
வந்தவிருந்தினன் தூரத்திலிருந்தே வாடி விலகிப்போவன்: ஆதலால், மூக்
கினால் தொட்டு மோந்தாலல்லது வாடாத
அனிச்சப்பூவைக்காட்டிலும் கண்ட மாத்திரத்தில் வாடும்
விருந்தினர் மிகமென்மையானவ ரென்பதாம். இது,
குறிப்பினால், உபமானத்தினும் உபமேயம் உயர்ந்ததென்று உயர்வுதோன்ற

கின்ற வேற்றுமையணி.

(௧0)

## ௧0 - ஆம் அதிகாரம்.—இனியவை கூறல்.

அஃதாவது - மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய இனியசொற்களைச் சொல்லுதல். இதுவும் விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதாகலின், விருந்தோம்பலின் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மனத்தின்கண் உவகையை வெளிப்படுப்பனவாகிய-மனத்தி லுள்ளமகிழ்ச்சியை வெளியில் தெரிவிப்பனவாகிய. இதுவும் - இனியவை கூறலும். இன்றியமையாது - இல்லாமல்முடியாதது; அதியவசியமானது. கீழ் அதிகாரத்தின் இறுதியிற் கூறப்பட்ட இன்முகத்துக்கு இனமாதலால், இன் சொல்லை இங்கே கூறுகிறார்.

௧௧௧. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

௧0 - ஆம் அதிகாரம்—இனியவைகூறல்

௬௫

(இ - ள்.) இன் சொல்-இன்சொலாவன,—ஈரம் அளைஇ - அன்போடு கலந்து, படிறு இல ஆம் -

வஞ்சனையிலவாயிருக்கின்ற, செம் பொருள்-அறத் தினை, கண்டார் - உணர்ந்தார், வாய் சொல் - வாயிற்சொற்கள்; (எ - று.)

ஆல் - அசைநிலை. அன்போடு கலத்தல் - அன்புடைமையை வெளிப்படுத்தல். படிறின்மை - வாய்மை. மெய்யுணர்ந்தார்நெஞ்சிற்கெல்லாஞ் செம்மையுடைத்தாய்த் தோன்றலின், 'செம்பொருள்' எனப்பட்டது. இலவாஞ் சொல் என இயையும். 'வாய்' என வேண்டாது கூறினார், தீயசொற் பயிலா என்பது அறிவித்தற்கு.

இதனான், இன்சொற்கு இலக்கணங் கூறப்பட்டது.

(கு - ரை.) ஆல் - 'இன்சொலால்' என்பதில். வாய்மை - உண்மை; சத்தியம். மெய்யுணர்ந்தார் - தத்துவஞானிகள். செம்மை-நன்மை. செம்மையுடையதாய்த் தோன்றுவது - அறம். ஆம் என்னும் பெயரெச்சம்-' செம்பொருள்' என்பதனோடு சேராமல், 'சொல்' என்பதனோடு முடிந்தது. 'சொல்'என் பது - பால்பகா அஃறிணைப்பெயராதலால், 'இலவாஞ்சொல்' எனப் பன்மை விசேஷணங்கொடுத்துக் கூறினார்.
தீயசொற்பயிலா-தருமமறிந்தவர் வாய்கள் ஒருபொழுதும் கெட்டசொற் சொல்லுதலைப் பழகினவல்ல. 'வாய்' என வேண்டாதுகூறினார் - 'செம்பொருள்கண்டார்சொல்' எனவே அமையவும், வாய் என்று அவசியமில்லாமற் சொன்னார். சொன்னதற்குக் காரணம் - விதப்புச் சொல் வேண்டியபொருளை விளக்குமென்பது. அளைஇ - அளைந்து என்னும் வினையெச்சம் விகாரப்பட்டுஅளபெடுத்தது; இது, சொல்லிசையளபெடை.

கூஉ. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

(இ - ள்.) அகன் அமர்ந்து - நெஞ்சு உவந்து, ஈதலின் - (ஒருவர்க்கு வேண்டியபொருளைக்)கொடுத்தலினும், நன்று—: முகன் அமர்ந்து - (கண்டபொழுதே) முகம் இனியனாய், இன்சொலன் ஆக பெறின் - (அதனோடு) இனியசொல்லையும் உடையனாகப்பெறின்; (எ - று.)

இன்முகத்தோடுகூடிய இன்சொல் ஈதல்போலப் பொருள்வயத்ததன்றித் தன்வயத்த தாயினும், அறநெஞ்சுடையார்க்கல்லது இயல்பாக இன்மையின், அதனினும் அரிது என்னுங் கருத்தான், 'இன்சொல னாகப்பெறின்' என்றார்.

(கு - ரை.) பொருள்வயத்ததன்றித் தன்வயத்ததாயினும் - செல்வத்தின் வசத்திலுள்ளதல்லாமல் தன்வசத்திலுள்ளதாயிருந்தாலும்;தானஞ் செய்தல் பொருளுள்ளவர்க்கே கூடும், இன்சொல் அப்படியன்றிப் பொருளில்லாதவர்களுக்குங் கூடியதாயிருந்தாலும். அறநெஞ்சு - தருமசிந்தை. அதனினும் அரிது - தானத்தினும் அருமையானது. 'பெறின்' என்பது - பெறுதலின் அருமையை விளக்கிற்று. 'நன்று' என்னுங் குறிப்புமுற்றுக்கு 'அது' என்னும் எழுவாய் வருவிக்க.

எகாரம் - தேற்றம்.

கூ௩. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானு
* மின்சொ லினதே யறம்.

(இ - ள்.) முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி - (கண்டபொழுதே) முகத்தான்விரும்பி இனிதாகநோக்கி, அகத்தான் ஆம் இன்சொலினதுஎ(பின் நண்ணியவழி) மனத்துடன் ஆகிய இனியசொற்களைச் சொல்லுதலின் கண்ணதே, அறம்—; (எ - று.)

'நோக்கி'என்னும்வினையெச்சம், 'இன்சொல்'என அடையடுத்து நின்ற முதனிலைத்தொழிற்பெயர்கொண்டது. ஈதலின்கண்ணதன்று என்றவாறு.

இவை இரண்டுபாட்டானும், இன்முகத்தோடுகூடிய இன்சொல் முன்னரே பிணித்துக்கோடலின் விருந்தோம்புதற்கட் சிறந்தது என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) நோக்கி - பார்த்து. நண்ணியவழி -கிட்டிச்சென்றபொழுது. அகத்தான், ஆன் - உடனிகழ்ச்சி. அடை - அடுத்துநிற்பது: விசேஷணம். இன்சொல் - இனியசொற்களைச் சொல்லுதல் என விரிக்க. ஈதலின்கண்ணதன்று - தானத்தினிடத்திலுள்ளதன்று. இப்பொருளைத் தந்ததனால்,ஏகாரம்- பிரிநிலை. முன்னரே பிணித்துக் கோடலின் - முன்னே விருந்தாளியை அன்புகாட்டித் தழுவுதலால். சொலினது - குறிப்புவினையாலணையும்பெயர்; முற்றுமாம்.

(௩.)

கூச. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும்
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

யார்மாட்டு

(இ - ள்.) யார்மாட்டுஉம் - எல்லார்மாட்டும், இன்பு உறூஉம் இன் சொலவர்க்கு - இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லை யுடையார்க்கு, துன்பு உறூஉம் துவ்வாமை - துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு, இல் ஆகும் - இல்லையாம்; (எ - று.)

நா முதலிய பொறிகள் சுவைமுதலிய புலன்களை நுகராமை யுடைமை யின், 'துவ்வாமை' எனப்பட்டது. யார்மாட்டும் இன்புறூஉம் இன்சொலவர் க்குப் பகையும் நொதுமலும் இன்றி உள்ளது நண்பேயாம்; ஆகவே, அவர் எல்லாச் செல்வமும் எய்துவர் என்பது கருத்து.

(கு - ரை.) மிகுவிக்கும் - அதிகப்படுத்துகிற. நுகராமை-அநுபவியாமை. துவ்வாமை-உண்ணுதல் முதலியன செய்யப்பெறுமை; எனவே, வறுமையா யிற்று; இது, எதிர்மறைத்தொழிற்பெயர்; து - பகுதி. உறூஉம் - இன்னிசை யளபெடை.

(ச)

கூரு. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, அணி - அணியாவது,—பணிவு உடையன் - (தன்னால் தாழப்படுவார்கண்) தாழ்ச்சியுடையனாய், இன்சொலன்

* இன்சொலினஃதே என்று பிரதிபேதம்.

## கO - ஆம் அதிகாரம்—இனியவைகூறல்

சூஎ

ஆதல் - (எல்லார்கண்ணும்) இனியசொல்லையும் உடையனாதல்; பிற-(இவை யிரண்டு மன்றி மெய்க்கு அணியும்)பிறஅணிகள், அல்ல-அணியாகா; (எ-று.)

இன்சொலனாதற்கு இனமாகலின், பணிவுடைமையும் உடன்கூறினார். மற்று - அசைநிலை. வேற்றுமையுடைமையான் 'பிற' எனவும், இவைபோலப் பேரழகு செய்யாமையின் 'அல்ல' எனவும் கூறினார்.

இவை இரண்டுபாட்டானும், இனியவைகூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) அணி - அணியப்படும் ஆபரணம். தாழப்படுவார் - கீழ்ப் படிந்திருக்கத்தக்க பெரியோர். தாழ்ச்சி - வணக்கம். இவையிரண்டு-தாழ்ச்சியும், இன்சொல்லும். மெய்க்கு - உடம்புக்கு. உடன் - கூட. பிறஎன்பது இனங்குறித்ததனால், மற்று - அசையாயிற்று. வேற்றுமையுடைமை - வணக்கமும் இன்சொல்லும் போலத் தன்னோடு ஐக்கியப்பட்டிராமல் வேறுபட்டிருத்தல். அணி - மத்திமதீபம். உடம்புக்கே அழகு செய்யும் புறத்தணியாற் பயனில்லை, உயிர்க்கும் அழகுசெய்யும் அகத்தணியே

பயனுடையதென்பது கருத்து.

(ரு)

கசு. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

(இ - ள்.) நல்லவை - (பொருளாற் பிறர்க்கு) நன்மைபயக்குஞ்சொற்களை, நாடி - (மனத்தான்) ஆராய்ந்து, இனிய சொலின் - இனியவாக (ஒருவன்) சொல்லுமாயின், (அவனுக்கு), அல்லவை தேய - பாவங்கள் தேய, அறம்—, பெருகும் - வளரும்; (எ - று.)

தேய்தல் - தன்பகையாகிய அறம் வளர்தலின் தனக்கு நிலைஇன்றி மெலிதல். "தவத்தின்முன் னில்லாதாம்பாவம்" என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங் காலும் கடியவாகச்சொல்லின் * அறனுகாது எனபதாம.

இதனுன், மறுமைப்பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) தேய - குறைந்துவர. தன்பகையாகிய - பாவத்திற்குப்பகை யான. நிலையின்றிமெலிதல் - நிற்குமிடமில்லாமல்வாடுதல். "தவத்தின்முன்" என்னும் மேற்கோள், நாலடியார், துறவு முதற்பாட்டில் உள்ளது. இப் பொருட்டு - 'அல்லவை தேய அறம்பெருகும்' என்பதன் பொருளுடையது. கடியவாக - கடுஞ்சொல்லாக. அறமல்லாதவையெனவே, பாவங்களாம். (சு)

கஎ. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(இ - ள்.) நயன் ஈன்று - (ஒருவனுக்கு இம்மைக்கு) நீதியையும் உண்டாக்கி, நன்றி பயக்கும் - (மறுமைக்கு) அறத்தையும் பயக்கும்: பயன் ஈன்று - (பொருளாற் பிறர்க்கு) நன்மையைக் கொடுத்து, பண்பின் தலைப்பிரியா - இனிமைப்பண்பின் நீங்காத, சொல்—; (எ - று.)

* அறனுகாஎன்று பிரதிபேதம்.



நீதி - உலகத்தோடு பொருந்துதல். 'பண்பு' என்பது, ஈண்டு அதிகாரத்தான் இனிமைமேல் நின்றது. தலைப்பிரிதல் - ஒருசொல்நீர்மைத்து.

(கு - ரை.) இனிமைப்பண்பு - இனிமையாகியகுணம். இங்கே 'நயன், நீதி' என்றது - உலகத்தாரெல்லாரோடும் உண்டாகும் ஒற்றுமையை. 'பண்பு' என்னும் பொதுப்பெயர் - இங்கே 'இனியவைகூறல்' என்னும் அதிகாரத்திற்கு ஏற்ப, சிறப்பாய் இனிமையைக்குறித்தது. ஒருசொல்நீர்மைத்து-தலைபிரிதல் என இரண்டுசொற்போலத் தோன்றினும் ஒருசொல்லின்தன்மையையுடையது; தலையென்பது - பொருளில்லாமல் வினைச்சொல்லை அடுத்து வந்த உபசர்க்கம். நன்றி - அறத்துக்குப் பண்பாகுபெயர். (எ)

கூஅ. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(இ - ள்.) சிறுமையுள் நீங்கிய - (பொருளாற் பிறர்க்கு) நோய்செய்யாத, இன்சொல் - இனிய சொல், மறுமைஉம் இம்மைஉம் இன்பம் தரும் - (ஒரு

வனுக்கு) இருமையினும் இன்பத்தைப் பயக்கும்; (எ - று.)

மறுமையின்பம் பெரிதாகலின், முற் கூறப்பட்டது. இம்மையின்பமா வது - உலகம் தன்வயத்த தாகலான் நல்லனஎய்தி இன்புறுதல்.

இவைஇரண்டுபாட்டானும், இருமைப்பயனும் ஒருங்கு எய்துதல் வலி யுறுத்தப்பட்டது.

(கு - ரை.) நோய்செய்யாத - துன்பத்தை உண்டாக்காத. பெரிது-இம் மையின்பத்தினுஞ் சிறந்தது. உலகம்தன்வயத்ததாகலான்-உலகத்தவரெல்லாந் தன்வசப்படுதலால். நல்லன எய்தி இன்புறுதல் - நல்ல பொருள் புகழ் முத லியவற்றை அடைந்து இன்பப்படுதல். ஒருங்கு எய்துதல் - ஒருசேரப் பெறு தல். வலியுறுத்தப்பட்டது - இன்சொற்சொல்லுதலாற் கிடைக்குமென்று துணிவாகச்சொல்லப்பட்டது. சிறுமை - துன்பம்; அது வன்சொல்லின் பய னாதலால் அதனை விலக்கி, 'சிறுமையுணீஇய இன் சொல்' என்றார். உள் - ஐந்தனுருபு, நீக்கப்பொருளது. (அ)

கூ௯. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(இ - ள்.) இன்சொல் - (பிறர்கூறிய) இன்சொல், இனிது ஈன்றல் - (தனக்கு) இன்பம் பயத்தலை, காண்பான்-அனுபவித்து அறிகின்றவன்,—வல் சொல் வழங்குவது -(அதுவிடுத்துப் பிறர்மாட்டு) வன்சொல்லைச் சொல்வது, எவன் - என்னபயன் கருதி? (எ - று.)

இனிது என்றது - வினைக்குறிப்புப்பெயர். கடுஞ்சொல் பிறர்க்கும் இன்னாதாகலின், அது கூறலாகா தென்பது கருத்து.

(கு - ரை.) அதுவிடுக-அவ்வின்சொல்லைப் பேசுத லைத்தவிர்த்து. இனிது இனிமை யென்னும் பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புவி னையாலணையும்பெயர். இன்னாது - இனியதன்று. கொல், ஓ

- அசைகள். வழங்குவதுள திர்காலத்தொழிற்பெயர்; விளையாலணையும்பெயரன்று. (கூ)

## கoo-ஆம் அதிகாரம்—இனியவைகூறல்

சூக்கு

கoo. இனிய வுளவாக வின்னுத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

(இ - ள்.) இனிய - (அறம்பயக்கும்) இனிய சொற்களும், உள ஆக - (தனக்கு) உளவாயிருக்க, (அவற்றைக் கூறாது), இன்னுத - (பாவம்பயக்கும்) இன்னுத சொற்களை, கூறல் - (ஒருவன் கூறுதல்,—கனி - (இனிய) கனிக
ளும், இருப்ப - (தன் கைக்கண்) உளவாயிருக்க, (அவற்றை நுகராது), காய் - (இன்னுத) காய்களை, கவர்ந்து அற்று - நுகர்ந்ததனோடு ஒக்கும்; (எ - று.)

'கூறல்' என்பதனுன், 'சொற்கள்' என்பது பெற்றும். பொருளை விசேடித்து நின்ற பண்புகள், உவமைக்கணுஞ் சென்றன. இனிய கனிகள்என்றது, ஒளவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாவனவற்றை. இன்னுத காய்கள்
என்றது , காஞ்சிரங்காய்போல நஞ் சாவனவற்றை. கடுஞ்சொற்சொல்லுதல்
முடிவில் தனக்கே இன்னுது என்பதாம்.

இவைஇரண்டுபோட்டானும், இன்னாதகூறலின் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) நுகராது - உண்ணாமல். பொருள் - உபமேயம். உபமேயமாகியசொற்களை விசேடித்துநின்ற 'இனிய', 'இன்னாத' என்னும் குணத்தைக் குறித்த விசேஷணங்களை, உபமானமாகிய 'கனி', 'காய்' என்பவற்றோடும் முறையே கூட்டுக. காஞ்சிரங்காய்போல நஞ்சாவன - எட்டிக்காய்போல விஷமாய்க்கொல்லத்தக்கவை. 'இனிய', 'இன்னாத' என்னும் இரண்டுபெயரெச்சங் களும் கொண்டு முடியுஞ்சொல்லை அவாவிநின்றன வாதலால், 'சொற்கள்' என வருவித்தார்; இனி, இவற்றைப் பலவின்பால்வினையாலணையும்பெயராகக் கொள்ளுதலுமாம். ஒளவையார் அதிகமானென்னும் வள்ளலிடத்தினின்று அமிருதத்தின் தன்மையையுடைய இனியதொரு கருநெல்லிப்பழத்தைப் பெற்று உண்டு அவனைப் பாடி அதனாற் பலகாலஞ்சீவித்திருந்தா ளென்பது, கதை: இதனை "மால்வரைக், கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி, யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த, வுரவுச் சினங்கனலு மொளிதிகழ் நெடுவே, லர வக் கடற்றானை யதிகன்" என்னுஞ் சிறுபாணாற்றுப்படையடிகளாலும், "அதி யர் கோமான், *** பெரும நீயே தொன்னிலைப், பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட, சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா, தாத னின்னகத் தடக் கிச், சாத னீங்க வெமக்கீத் தனையே" என்று ஒளவையாரே பாடிய புறநானூற் றுச்செய்யுளாலும் அறிக.

(இதற்கு - நாகலோகஞ்சென்று ஆதிசேஷன்மகளை மணந்து அவனிடத்தினின்று, போர்த்துக்கொண்டால் இளமைமாறுதிருக்கச்
செய்வதொரு பொற்படாமும், உண்டால் நீடூழிகாலம் உயிர்வாழத்தக்கதொரு நெல்லிக்கனியும் பெற்றுத் தனதுகாவிரிப்பூம்பட்டினத்துக்கு மீண்டுவந்த பந்தனென்னும் வணிகன்மீது ஔவை ஒருநவமணிமாலையும் அந்தாதியும் பாடி
அவ்விரண்டையும்பெற்றுப் பழத்தை உண்டு வாழ்ந்தாளென்று ஒருகதை கூறுவாருமுளர்; அது பொருந்துமாயிற் கொள்க.) (௧0)

---



## ௧௧ - ஆம்
## அதிகாரம்—செய்ந்நன்றியறிதல்.

அஃதாவது - தனக்குப் பிறர்செய்தநன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு உய்தியில்குற்றம் செய்ந்நன்றிகோறலே யாகலின், அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட்டு, இஃது, இனியவை கூறலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) செய்ந்நன்றியறிதல் - வடமொழியில் 'க்ருதஜ்ஞதா' எனப் படும். செய்ந்நன்றி -

இறந்தகாலவினைத்தொகை. நன்றி - பண்புப்பெயர்; உபகாரம். அறிதல், மறவாமை என்பன - ஒருபொருட்சொற்கள். இன் சொற்களைச்சொல்லிக்கொண்டு கிருகஸ்தாச்சிரமதருமத்தினின்று தவறுநவர் களுக்குப் பாவத்தை நீக்கும் பிராயச்சித்தமொன்றில்லாத குற்றமாவது செய்த நன்றியைமறத்தலே யாதலால், அக்குற்றத்தைப் பாதுகாத்து விலக்கும் பொருட்டு, செய்ந்நன்றியறிதலென்னும் அதிகாரம் இனியவைகூறலென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டதென்றவாறு. இல்லறத்தார்க்கு இனியவை கூறல்போலச் செய்ந்நன்றியறிதலும் மிகவும் அவசிய மென்க. உய்தி - பாவத்தினின்றுநீங்கும்வழி; இவ்வதிகாரத்தின் பத்தாம்பாட்டைப் பார்க்க. கோறல் - கொல்லுதல்; என்றது - மறத்தல் என்றபடி. அதனைப் பாதுகாத்து - அக்குற்றத்தைத் தம்மிடஞ்சேரவொட்டாமல் தடுத்து; இதனை "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என்பதுபோலக் கொள்க. கடிதற்பொருட்டு - விலக்குதலினிமித்தம்.

க0க. செய்யாமற் செய்த வுதவிக்கு
வையகமும் வானகமு மாற்ற லரிது.

(இ - ள்.) செய்யாமல் - (தனக்கு முன் ஓர் உதவி) செய்யாதிருக்க, செய்த - (ஒருவன் பிறனுக்குச்) செய்த, உதவிக்கு—, வையகம்உம் - மண்ணுலகும், வானகம்உம் -

விண் ணுலகும்; (கை நம்மாறாகக்கொடுத்தாலும்), ஆற் றல் - ஒத்தல், அரிது—; (எ - று.)

கைம்மாறுகளெல்லாம் காரணமுடையன வாகலின், காரணமில்லாத உதவிக்கு ஆற்றாவாயின. 'செய்யாமைச் செய்த வுதவி' என் று பாடமோதி, மறித்துஉதவமாட்டாமையுள்ளவிடத்துச்செய்த உதவி யென் று உரைப்பாருமுளா.

(கு - ரை.) மண் ணுலகு - பூலோகம். விண் ணுலகு - தேவலோகம். கைம்மாறு - பிரதியுபகாரம். ஆற்றுதல் - நிறையொத்தல், ஈடாதல். ஒரு காரணத்தைப்பற்றிச் செய்யப்படுகிற பிரதியுபகாரங்கள் ஒருகாரணமுமில் லாமற்செய்யப்பட்ட முதலுபகாரத்துக்கு ஈடாகா வென்பதாம். 'செய்யா மைச் செய்தவுதவி'என் ற பாடத்துக்கு - பிரதியுபகாரஞ்செய்தற்கு இயலாத வறியவர்கள் விஷயத்திற் செய்த உபகார மென் று பொருள்; அப்பாடத்தில், செய்யாமையென்னும் எதிர்மறைத் தொழிற்பெயர், ஆகுபெயராய்நின் றது. செய்யாமல் - எதிர்ம றைத்தெரிநி லை வி னை யெச்சம். வையகம்-(பொருள்களை) வைக்கும் இடம் எனப் பூமிக்குக் காரணப்பெயர். அரிது - ஒன் றன்பாற்

## கக-ஆம் அதிகாரம்—செய்ந்நன்றியறிதல்

குறிப்புமுற்று: அருமை - பகுதி. முதலிலே தானொருவனுக்குச் செய்த உபகாரத்துக்கும், பிரதியுபகாரத்தைவிரும்பாமல் மிகுந்த ஏழைகளுக்குச் செய்த உபகாரத்துக்கும் எதுவும் ஈடாகாதென்பது, இத்திருக்குறளின் கருத்து. இங்கே "ஏற்றகைமாற்றாமை யென்னுந் தாம்வரையா, ராற்றுவார்க் கீவதா மாண்கட - னாற்றின், மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல், பொலிகட னென்னும் பெயர்த்து" என்னும் நாலடியார்ச் செய்யுள் அறியத்தக்கது.

(க)

கOஉ. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்

ஞாலத்தின் மாணப் பெரிது.

(இ - ள்.) காலத்தினால்-(ஒருவனுக்கு இறுதிவந்த) எல்லைக்கண், செய்த- (ஒருவன்) செய்த, நன்றி - உபகாரம், சிறிது எனின் உம் - (தன்னை நோக் கச்) சிறிதாயிருந்ததாயினும், ஞாலத்தின் மாண பெரிது - (அக்காலத்தை நோக்க) நிலவுலகத்தினும் மிகப்பெரிது; (எ - று.)

அக்காலம்நோக்குவதல்லது பொருள்நோக்கலாகாதென்பதாம். 'காலத் தினால்' என்பது - வேற்றுமைமயக்கம்.

(கு - ரை.) இறுதி - முடிவு, அழிவு; ஆபத்து என்றபடி. எல்லைக்கண் - சமயத்தில். தன்னைநோக்க - அந்தஉபகாரத்தின் அளவைப் பார்க்குமிடத்து. உபகாரஞ்செய்யப்பட்ட சமயத்ினது அருமைபெருமைகளை நோக்கி அவ்

வுபகாரத்தை நன்குமதிக்கவேண்டுமேயல்லாமல் உபகாரஞ்செய்யப்பட்ட பொருளினது சிறுமையை நோக்கி அவ்வுபகாரத்தை அவமதிக்கலாகாதென்பது, கருத்து. 'காலத்தினல்' என்பதில், ஆல்என்னும் மூன்றனுருபு-தனக்குரிய பொருள்களில் வாராமல் காலத்தில் என இடப்பொருளில் வந்ததனுல், வேற்றுமைமயக்கம்:

ஏழாம்வேற்றுமைக்குரிய வேற்றுமைமயக்கம் எனினும், உருபுமயக்கம் எனினும் ஒக்கும்; இதற்கு "யாதனுருபிற் கூறிற்றாயினும், பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்" என்னுந் தொல்காப்பியச்சூத்திரம், விதி. எனினும், உம் - இழிவுசிறப்பு. ஞாலத்தின், இன் - ஐந்தனுருபு, உறழ்பொருவு; ஞாலத்தைக்காட்டிலுமென்று பொருள்: இது, எல்லைப் பொருளின்பாற்படும்; (ஞாலத்தைப்போல என உரைத்தால் உவமப்பொருவு என்னும் ஒப்புப்பொருளாம்.) "பெரிது பெரிது புவனம் பெரிது" ஆதலால், பெருமைக்கு நிலவுலகம் எடுத்துக்கூறப்பட்டது. (உ)

க0௩. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

(இ - ள்.) பயன் தூக்கார் - (இவர்க்குஇதுசெய்தால்) இன்னது * பயக்குமென்று ஆராய்தலிலராய், செய்த—, உதவி - உதவியாகிய, நயன் - ஈரமுடைமையை, தூக்கின் -

ஆராயின், — நன்மை - (அதன்) நன்மை, கடலின் - கடலினும், பெரிது - பெரிதாம்; (எ - று.)

* பயப்பரென்று என்று பிரதிபேதம்.

---



இவைமூன்றுபாட்டானும், முறையே,

காரணமின்றிச் செய்ததூஉம்,

காலத்தினாற் செய்ததூஉம், பயன்தூக்காராய்ச்செய்ததூஉம் அளவிலவாதல்

கூறப்பட்டது.

(கு - ரை.) பயன் தூக்கார்-(இன்னார்க்கு இன்னவுதவிசெய்தால் நமக்கு இன்னநற்பயனுண்டாகுமென்று தமக்கு) ஒருபயனை நோக்காதவர்களாய். நயன் - அன்புள்ள செய்கை. ஈரமுடைமை - அன்புடைமை. அதன்நன்மை- அவ்வுதவியின் நலம். முறையே - வரிசையாய். பயன், நயன் - பயம், நயம் என்பவற்றின் ஈற்றுப்போலிகள்; [நன். எழுத். கூஎ.] தூக்கார் - எதிர்மறைத் தெரிநிலை வினைமுற்றெச்சம்; [நன். வினை. கூ௨.] தூக்கின் - எதிர்காலவினையெச்சம். நிலத்தினும் பெரியதாதலால், இங்கே கடலை எடுத்துக்கூறினார்.

க0ௐ. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

(இ - ள்.) தினை துணை நன்றி செயின் உம்-(தமக்குத்) தினையளவிற்றாய

உபகாரத்தை (ஒருவன்) செய்தானாயினும், பனை துணை ஆ கொள்வர்-(அதனை

அவ்வளவிற்முகக்கருதாது) பனையளவிற்முகக் கருதுவர், பயன் தெரிவார் - (அக்கருத்தின்) பயன் தெரிவார்; (எ - று.)

தினை, பனை என்பன - சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சில அளவை. அக்கருத்தின் பயனாவது - அவ்வனங்கருதுவார்க்கு வரும் பயன்.

(கு - ரை.) தினை - ஒருவகைச்சிறுதானியம். தினையளவிற்று-தினையவ்வளவு சிறியது. கருதாது - நினையாமல். அக்கருத்தின்பயனென்றது - அவ்வாறு நினைப்பதனு லுண்டாகும் புகழ்புண்ணியங்களை. தினை - சிறுமைக்கும், பனை - பெருமைக்கும் எடுத்துக்காட்டப்படும் அளவென்று முறைநிரனிறைப்பொருள்கோளாகக் கொள்க. அளவை - இங்கே, உபமான அளவை.

ஆ - ஆகவென்பதன் தொகுத்தல்.

பனையை எடுத்துக்கூறியது, தினையினது எதுகைக்கு ஏற்றிருத்தலை நோக்கிப்போலும்.

" 'தினை யனைத்தேயாயினுஞ் செய்தநன் றுண்டாற், பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர் - பனையனைத், தென்றுஞ் செயினு மிலங்கரு வி நன்றுட, நன்றில நன்றறியார் மாட்டு" என்னும் நாலடியார்ச்செய்யுளோடு இதனை ஒப்பிடுக. பனை - பனைமரத்தின் உயர்ச்சி. "நன்கொன் றறியவர் நாழி கொடுப்பவர்க்கு, என்று முறுதியே சூழ்க வெறிதிரை, சென்றுலாஞ் சேர்ப்ப வதுபோல நீர்போயும், ஒன்றிரண் டாம் வாணிக மில்" என்னும் பழமொழிப்பாட்டையும் பார்க்க. (௪)

க0ரு. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(இ - ள்.) உதவி - (கைம்மாறான) உதவி, உதவி வரைத்து அன்று(காரணத்தானும் பொருளானும் காலத்தானும் ஆகிய மூவகையானும் முன் செய்த) உதவியளவிற்றன்று; உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து-அதனைச் செய்வித்துக்கொண்டவர்தம் அமைதியளவிற்று; (எ - று.)

கக - ஆம்

அதிகாரம்—செய்ந்நன்றியறிதல் எரு.

'சால்புஎவ்வளவுபெரிதாயிற்று, உதவியும் அவ்வளவு பெரிதாம்' என்பார், 'சால்பின் வரைத்து' என்றார். இவையிரண்டுபாட்டானும், மூன்றுமல்லாத உதவிமாத்திரமும் அறிவார்க்குச் செய்தவழிப் பெரிதாமென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பிறரொருவரால் உதவிசெய்யப்பட்டவர் அவ்வுதவிசெய்தவர்க்குத் தமது மேன்மைக்கு ஏற்றபடி பிரதியுபகாரத்தைச் செய்யவேண்டுமேயன்றி அவ்வுதவியினது காரணம் பொருள் காலம் என்பவற்றிற்கு ஏற்றபடி கைம்மாறு செய்யலாகாதென்பது, கருத்து. மாற்றுதவிக்கு அளவில்லையென்றவாறு. சால்பு, அமைதி, மேன்மை, தகுதி

என்பன - ஒருபொருட்
சொற்களென அறிக. 'உதவிவரைத்தன்று' என்றதனால்,
எழுவாயாகிய மற்
றொரு 'உதவி' என்னுஞ் சொல் பிரதியுதவியாயிற்று.
மூன்றுமல்லாத - கார
ணமில்லாமற் செய்ததும் தக்ககாலத்திற்செய்ததும்
பயனையெதிர்பாராமற்
செய்தது மல்லாத. செய்தவழி - செய்தவிடத்து. வரைத்து
- பெயரடியாகப்
பிறந்த அஃறிணை யொன்றன்பாற் குறிப்புப்பெயர். சால்பு
- பண்புப்பெயர்;
இன் - சாரியை. உதவி என வந்த சொல்லும் பொருளும்
அடுத்தடுத்து வந்த
தனால், சொற்பொருட்பின்வருநிலையணி.
(ரு)

கOசு. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

(இ - ள்.) துன்பத்துள் - துன்பக்காலத்து, துப்பு
ஆயார்- (தனக்குப்)
பற்றுக்கோடாயினாரது, நட்பு - நட்பை, துறவற்க -
விடாதொழிக; மாசு
அற்றார் - (அறிவு ஒழுக்கங்களில்) குற்றமற்றாரது,
கேண்மை - கேண்மை யை, மறவற்க - மறவாதொழிக; (எ
- று.)
கேண்மை - கேளாந்தன்மை. இம்மைக்கு

உறுதிகூறுவார், மறுமைக்கு
உறுதியும் உடன் கூறினர்.
(கு - ரை.) துன்பக்காலம் - துன்பம் வந்த காலம். பற்றுக்கோடாயி
னர் - ஆதாரமானவர்கள்; தளர்ச்சிவந்த சமயத்தில் ஊன்றுகோல்போல உத
வியவர்கள் என்றபடி. நட்பு - சினேகம்; பண்புப்பெயர்: நள் - பகுதி, பு -
விகுதி. கேளாந்தன்மை - சினேகிதனுந்தன்மை. இம்மை - இப்பிறப்பு. மறு
மை-மரணத்தின்பின்வருநிலே. ஞான அனுட்டானங்களே யுடையவர்களது
நட்பு மறுமைக்கு நன்மைதருவதுபோல ஆபத்காலத்தி லுதவுபவர்களதுநட்பு
இம்மைக்கு நன்மைதருவதென்பது, இத்திருக்குறளின் கருத்து. இங்கு 'மற
வற்க மாசற்றூர் கேண்மை' என்றதற்கு ஏற்ப, மேல் நட்பாராய்தலென்னும்
அதிகாரத்தில் ''மருவுக மாசற்றூர் கேண்மை''எனக் கூறுதல் காண்க. மாசற்
றூர் கேண்மை மறுமைக்கு
உறுதிதருவதாதலே ''இம்மையடக்கத்தைச்செய்து
புகழாக்கி, உம்மை யுயர்கதிக் குய்த்தலான்—மெய்ம்மையே, பட்டாங் கறமு
ரைக்கும் பண்புடை யாளரே, நட்டா ரெனப்படு வார்'' என்ற அறநெறிச்

சாரத்தாலும் அறிக. மறவற்க, துறவற்க - எதிர்மறைவியங்கோள். அற்றூர்

என்னும் வினையாலணையும்பெயரில், அறுஎன்னும் குறிவினைப்பகுதி ஒற்று

10



இரட்டி இறந்தகாலங் காட்டிற்று. ஒருவர்க்கொருவர் க்ஷேமசமாசாரங்களைக் கேட்பதனால், கேண்மையென்று நட்புக்குப் பெயர். துப்பு என்பதற்கு-துணையென்றாயினும், வலியென்றாயினும் பொருள்; "அரக்கும் பவளமும் ஆயுதப்பொதுவும், துணையும் வலியும் பொலிவும் நெய்யும், அனுபவமும் தூய்மையும் துப்பெனலாகும்" என்பது நிகண்டாதலின். துன்பத்துள், உள்-ஏழனுருபு.

க0எ. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

(இ - ள்.) தங்கண் விழுமம் துடைத்தவர் - தங்கண் (எய்திய) துன்பத்தை நீக்கினவருடைய, நட்பு - நட்பினை, எழுமை எழு பிறப்புஉம் - எழுமையினையுடைய (தம்) எழுவகைப்பிறப்பினும், உள்ளுவர் - நினைப்பர், (நல்லோர்); (எ - று.)

'எழுமை' என்றது, வினைப்பயன்தொடரும் எழுபிறப்பினை; அது வளையாபதியுட் கண்டது. எழுவகைப்பிறப்பு, மேலேஉரைத்தாம். விரைவு தோன்ற, 'துடைந்தவர்' என்றார். நினைத்தலாவது - துன்பந்துடைத்தலான் அவர்மாட்டுளதாகிய அன்பு பிறப்புத்தோறும் தொடர்ந்து அன்புடையராதல்.

இவையிரண்டுபாட்டானும், நன்றிசெய்தாரது நட்பு

விடலாகாதென் பது கூறப்பட்டது.

(கு - ரை.) தங்கண் எய்திய - தம்மிடத்து சேர்ந்த. எழுமை - ஏழின் தன்மை. ஒருயிர் ஒருபிறப்பிற்செய்த புண்ணியபாவங்களாகிய வினைகள் பின்பு ஏழுபிறப்புவரையில் அவ்வுயிரை விடாமல் தொடர்ந்து தத்தம்பயனை அனுபவிப்பிக்கு மென்கிற கொள்கை; வளையாபதியென்னு ங்காப்பியத்துள் விவரித்துக்கூறப்பட்டிருக்கிற தென்றவாறு. வளையாபதி-பஞ்சகாவியங்களி லொன்று; மற்றவை - சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டல கேசி. மேலே உரைத்தாம் - முன் புதல்வரைப்பெறுதலென்னும் ஏழாமதி காரத்தில் "எழுபிறப்புந் தீயவை தீண்டா" என்னும் இரண்டாவதுதிருக் குறளின் உரையிற் கூறினோம். துடைப்பவர் என எதிர்காலமாகவாயினும் துடைக்கின்றவர் என நிகழ்காலமாகவாயினுங் கூறாமல், 'துடைத்தவர்'என இறந்தகாலத்தாற்கூறியது - விரைவுபற்றியதென்க; "வாராக் காலத்தும் நிக ழுவ் காலத்தும், ஓராங்கு வரூஉம் வி னைச்சொற் கிளவி, இறந்தகா லத்துக் குறிப்பொடுகிளத்தல், விரைந்தபொருள வென்மனார் புலவர்"என்பது தொல் காப்பியம். துன்பந்துடைத்தலான் அவர் மாட்டுஉளதாகிய அன்பு - தமது துன்பத்தை நீக்கினதுகாரணமாக அந்நீக்கினவரிடம் உண்டான அன்பு. தங்கண், தம் - தாம் என்பதன் விகாரம்; கண் - ஏழனுருபு. "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தால், விழுமமென்பது -

துன்பமென்னும் பொருளையுமுணர்த்துவதோர் உரிச்சொல்லாம். இனி, தம் கண் விழும் அம் துடைத்தவர் எனப் பதம்பிரித்து - (துன்பத்தால்) தமது கண்களினின்று பெருகுகின்ற நீரை (அத்துன்பம்நீக்கு தலாற்) போக்கின வரென்று உரைகூறுதலும் அமையும். உள்ளுவர், ஊ -

## கக - ஆம் அதிகாரம்—செய்ந்நன்றியறிதல்

எரு

சாரியை. கஉகூ-ஆம் திருக்குறளை இங்கே நோக்குக. "ஒருமைக்கட்டான் கற்ற கல்வி யொருவற்கு, எழுமையு மேமாப் புடைத்து"என்ற குறளையுங் காண்க.

கoஅ. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

(இ - ள்.) நன்றி மறப்பது - ஒருவன் (முன்செய்த) நன்மையை மறப்பது, நன்று அன்று - (ஒருவற்கு) அறனன்று; நன்று அல்லது அன்றுஏ மறப்பது - (அவன்செய்த) தீமையைச் செய்தபொழுதே மறப்பது, நன்று - அறன்; (எ - று.)

இரண்டும் ஒருவனுற் செய்யப்பட்டவழி மறப்பதும் மறவாததும் வகுத்துக் கூறியவாறு.

(கு - ரை.) அறனன்று - தருமமன்று. இரண்டும் - உபகாரமும், அபகாரமும். மறப்பதும் - மறக்கப்படுவதும். மறவாததும் - மறக்கப்படாததும். வகுத்து - பிரித்துஎடுத்து. மறப்பது - எதிர்காலத்தொழிற்பெயர். நன்று

என்னுஞ்சொல் மூன்றனுள், முதலன இரண்டும் - நல்ல தன்மையை யுடையதாகிய தரும மென்னும் பொருளைத் தந்ததனால், பண்படியாப்பிறந்த குறிப்புவினையாலணையும் பெயர்; பண்பாகுபெயரெனவுமாம். மூன்றாவது- முற்று. அன்று என்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது - எதிர்மறைக் குறிப்புமுற்று; பின்னது - சுட்டடியாப்பிறந்து ஏழாம்வேற்றுமையிடப் பொருளுணரநின்ற இடைச்சொல். ஏகாரம் - தேற்றமும் விரைவுங் குறித்தது.

அல்லது-எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும்பெயர்; அ-சாரியை. நன்மை யல்லதெனவே, தீமை யாயிற்று.

(அ)

கO௯. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

(இ - ள்.) கொன்று அன்ன இன்னா செயின்உம் - (தமக்கு முன் ஒரு நன்மைசெய்தவர் பின்) கொன்றாலொத்த இன்னாதவற்றைச் செய்தாராயினும், (அவையெல்லாம்), அவர் செய்த நன்று ஒன்றுஉம் உள்ள கெடும்-அவர் செய்த நன்மையொன்றனையும் நினைக்க இல்லையாம்; (எ - று.)

தினைத்துணை பனைத்துணையாகக் கொள்ளப்படுதலின், அவ்வொன்றுமே அவற்றையெல்லாங் கெடுக்குமென்பதாம்.

இதனால், நன்றல்லது அன்றே மறக்குந் திறம் கூறப்பட்டது.

(கு - ரை.) இன்னாதவற்றை - இனிமையல்லாத பலவற்றை; வெறுக் கத்தக்க பல துன்பங்களை. ஒருவர்செய்த உபகாரம் தினையளவுசிறியதாயி னும் பனையளவுபெரியதாகப் பயன்தெரிபவராற் கொள்ளப்படுதலால், ஒரு வர் தமக்கு ஒருகாலத்திற் செய்த உபகாரமொன் றுதானே பின் அவர் தமக் குச் செய்த அபகாரங்களையெல்லாம் மறக்கச்செய்யும் என்பது, கருத்து.- "தினைத்துணை நன்றிசெயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்றெரி வார்" என்பதை இங்கேயறிக.

நன்றல்லது அன்றே மறக்குந் திறம்௭௬

திருக்குறள்

அபகாரத்தை அப்பொழுதே மறந்துவிடுவதற்கு அவர்செய்த உதவியை நினைக்கவேண்டுமென்பது. உபாயம்; அதாவது -

"ஒருநன்றிசெய்தவர்க்

கொன்றி யெழுந்த, பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர் - கயவர்க்கு, எழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயின், எழுநூறுந் தீதாய்விடும்" என்ற நாலடியாரைக் காண்க. கொன்று - கொன்றால் என்னும் எதிர்காலவினை யெச்சத்தின்திரிபு; [நன். வினை. உஎ.] இனி, கொன்றன்ன என்பதை -

கொன்றதன்ன எனத் தொழிற்பெயர் விகாரமாகவுங் கொள்ளலாம்.

"சாதலி னின்னாத தில்லை" ஆதலால், 'கொன்றன்னவின்னா செயினும்' என

ப்பட்டது. அன்ன - அன் என்னும் உவமவுருபிடைச்சொல்லடியாப் பிறந்த

குறிப்புப்பெயரெச்சம். இன்றை - இன்றுமையென்னும் எதிர்மறைப்பண்படி

யாப்பிறந்த பலவின்பால்வினையாலணையும்பெயர். உம்-இழிவுசிறப்பு. ஒன்றும்

என் இருந்த உம்மையின் மகரவொற்று "மவ்வீறொற்றழிந்து" என்பதனாற்

கெட்டது: இனி, ஒன்று நன்று - வினைத்தொகையாக, பொருந்தியஉபகார

மென உரைத்தலும் ஒன்று. உள்ள - செயவெனெச்சம்; காரணப்பொருள

தாதலால், இறந்தகாலம்.

(கூ)

கக0. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(இ - ள்.) எ நன்றி கொன்றார்க்குஉம் - பெரிய அறங்களைச் சிதைத்

தார்க்கும், உய்வு உண்டு ஆம் - பாவத்தின் நீங்கும் வாயில் உண்டாம்; செய்

நன்றி கொன்ற மகற்கு - (ஒருவன்) செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு,

உய்வு இல்லை - அஃது இல்லை; (எ - று.)

பெரிய அறங்களைச் சிதைத்தலாவது - ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவுசிதைத்தலும், பார்ப்பார்த்தப்புதலும் முதலிய பாதகங்களைச்செய்தல்.

இதனான், செய்ந்நன்றிகோறலின் கொடுமை கூறப்பட்டது.

(கு - ரை.) எந்நன்றி என்பதில், எகரவினா - சிறப்பை உணர்த்திற்று; எஞ்சாமையுணர்த்தினதாக்கி, எல்லாத்தருமங்களையும் என்றும் உரைகூறலாம். நன்றி - உபகாரத்துக்குப் பண்பாகுபெயர். சிதைத்தல் - அழித்தல். உம்மை - இழிவுசிறப்பு. வாயில் - வழி, உபாயம். பாவத்தின் நீங்கும் வாயில் - பிராயச்சித்தம். மகன் - மனிதன். அஃது - தீவினையொழிவு. ஆன் முலை யறுத்தல் - பசுவின் முலையை அறுத்தல். மகளிர்கருவு சிதைத்தல் - பெண்களது கருப்பத்தை விச்சேதப்படுத்தல். பார்ப்பார்த் தப்புதல் - பிராமணர்க்குப் பிழைசெய்தல். இவை - முறையே கோஹத்தி, சிசுஹத்தி, பிரமஹத்தி என்பனவாம். முதலிய பாதகங்கள் என்றது - பெண்கொலை முதலியவற்றை.

"ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும், மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும், பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்,

வழுவாய் மருங்கிற் "கழுவாயு முளவென, நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்ந்நிகொன் றோர்க்குய்தி யில்லென, அறம்பா டிற்றே ஆயிழை கணவ" என்னும்
புற
நானூற்று(34)ச் செய்யுளின் பொருளை இங்கே நோக்குக.
'கோவதை முத

கஉ - ஆம் அதிகாரம்—நடுவுநிலைமை
என

லாயின வாக்காற் சொல்லவும் படாமையின், ஆன்முலையறுத்த வெனவும், மகளிர்கருச்சிதைத்தவெனவும், பார்ப்பார்த்தப்பியவெனவும் மறைத்துக் கூறப்பட்டன' என்பது, புறநானூற்றின் உரை. உய்வு - பிராயச்சித்தத்துக் குத் தொ ழிலாகுபெயர். உண்டு, இல் லை - இருதிணையைம்பான் மூவிடத்துக் கும் பொதுவான குறிப்பு முற்றுக்கள்; [நன். வினை. உ௦.] ஆம்-அசை. (க௦)

## கஉ - ஆம் அதிகாரம்—நடுவு நிலைமை.

அஃதாவது-பகை நொதுமல் நண்புஎன்னும் மூன்றுபகுதியினும் அறத் தின் வழுவாது ஒப்பநிற்கும் நிலைமை. இது, நன்றிசெய்தார்மாட்டு அந்நன்றி யினை நினைத்தவழிச் சிதையுமன்றே? அவ்விடத்துஞ் சிதையலாகா தென் றற்கு, செய்ந்நன்றியறிதலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) நடுவுநிலைமை - வடமொழியில் 'மத்யஸ்த்ததா' எனப்படும்; அதாவது - பகைவர், அயலார், சிநேகிதர் என்ற இம்மூவகையோரிடத்தும் தருமத்தில் தவறாமல் சமமாகநிற்குந்தன்மை: பக்ஷபாதமில்லாமையென்றபடி. நடுவு, உ - சாரியை. நிலைமை - பண்புப்பெயர். இது - நடுவுநிலைமை. நன்றியைச் செய்தவரிடத்து அன்புபாராட்டவேண்டுவது கடமையாயினும், அவரிடத்தும் பக்ஷபாதமாக ஒழுகுதல்கூடாது என்பதைவிளக்கும்பொருட்டு, நடுவுநிலைமையென்னும் அதிகாரம் செய்ந்நன்றியறிதலென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டதென்க. நொதுமல் - விருப்பு வெறுப்பு இன்மை, உதாசீநதை. இங்கு, பகை நொதுமல் நண்பு என்ற மூன்றும் - ஆகுபெயராய், பகைவர்முதலியோரைக் காட்டும். மூன்றுபகுதி - மூன்றுவகுப்பானவர்.

கக௧. தகுதியென வொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

(இ - ள்.) தகுதி என ஒன்றுஉம்ஏ - நடுவுநிலைமையென்று சொல்லப் படும் ஒ ரறமுமே, நன்று—: பகுதியான் - (பகை நொதுமல் நண்பு என்னும்) பகுதிதோறும், பால் பட்டு ஒழுக பெறின் - தன் முறைமையை விடாது ஒழு கப்பெறின்; (எ - று.)

தகுதியுடையதனை 'தகுதி' என்றார். 'ஊரானோர் தேவகுலம்' என்பது போல, 'பகுதியான்' என்புழி ஆனுருபு

- தோறுமென்பதன் பொருட்டாய் நின்றது. 'பெறின்' என்பது, அவ்வொழுக்கத்து அருமை தோன்றநின்றது.

இதனான், நடுவுநிலைமையது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) ஒழுகப்பெறின் - நடக்கப் பெற்றால். தகுந்த தன்மையை யுடைய நடுவுநிலைமையைத் தகுதியென்றது, பண்பாகுபெயர். ஊரானோர் தேவகுலம் என்பதற்கு-ஊர்தோறும் ஒருதேவாலய மென்று பொருள். என் புழி - என்னுமிடத்து. ஆனுருபு - மூன்றுமுருபு. பொருட்டு - பொருளது. 'நன்றே' என்னும் பிரிநிலையேகாரம், பிரித்து 'ஒன்றும்' என்பதனோடு கூட்டப்பட்டது. ஒன்றும்நன்று என்றவிடத்து, "மவ்வீறொற்றழிந்துயிரீ றொப்பவும்" என்பதனால், மகரவொற்றுக் கெட்டது. 'ஒன்று' - ஓரறத்தை



உணர்த்தியதனால், எண்ணலளவாகுபெயர்; இது போல்வனவற்றை எண்ணுக்கும் எண்ணுடைப்பொருளுக்கும் பொது வென்பாரு முளர். உம் - இழிவுசிறப்பு. பாற்பட்டு - முறைமைப்பட்டு. (க)

௧௧௨. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

(இ - ள்.) செப்பம் உடையவன் - நடுவுநிலைமையுடையவனது, ஆக்கம்- செல்வம்,—சிதைவு இன்றி - (பிறர்செல்வம்போல்)

அழிவின்றி, எசசத

திற்கு ஏமாப்பு
உடைத்து-(அவன்)வழியினுள்ளார்க்கும் வலியாதலையுடைத்து.

விகாரத்தால்தொக்க எச்சவும்மையான்,
இறக்குந்துணையும் அவன் தனக்

கும் ஏமாப்புடைத்தென்பது பெற்றும். அறத்தோடு
வருதலின், அன்னதா

யிற்று. தான் இறந்துழி எஞ்சிநிற்பதாகலின், 'எச்சம்'
என்றார்.

(கு - ரை.) வழியினுள்ளார் - சந்ததியார். இறந்தது
தழுவிய எச்சவும்

மை விகாரத்தால் தொக்கது, 'எச்சத்திற்கு'என்ற விடத்தில்.
இறக்குந்துணை

யும் அவன் தனக்கும் ஏமாப்புடைத்து-சாகிறவரையிலும்
அந்நடுவுநிலைமைய

யுடையவனுக்கும் வலியாதலையுடையது. நடுவுநிலைமையை
யுடையவனது

செல்வம் அவனுக்கும் அவன்சந்ததியார்க்கும்
இன்பந்தருவதாதற்குக்காரணம்

தருமத்தோடுபொருந்திவருத லென்றபடி. அன்னதாயிற்று
- தனக்கும் சந்த

திக்கும் ஏமாப்புடையதாயிற்று. தகப்பன் இறந்தபின்
மிகுந்து நிற்பதாத

லால், எச்சம் என்று சந்ததிக்குப் பெயர்; எஞ்சு-பகுதி, அம் - கருத்தாப்பொருள் விகுதி, மெல்லெழுத்துவல்லெழுத்தானது - விகாரம். நடுவுநிலைமையை யுடையவனது செல்வம் எப்பொழுதும் அழியாதென்பது, இத்திருக்குறளின் கருத்து. செப்பம் - 'பம்' விகுதிபெற்றபண்புப்பெயர். உடையவன் - குறிப்பு வினையாலணையும்பெயர். ஆக்கம் - சம்பாதிக்கப்பட்டதெனக் காரணப் பெயர்; ஆக்கு - பிறவினைப்பகுதி, அம் - செயப்படு பொருள்விகுதி. சிதைவு-தொழிற்பெயர். ஏமாப்பு - தொழிற்பெயர்; ஏமா-பகுதி: இது - அலமா, இறுமா, சோகா என்பனபோல, ஒருசொல். (உ)

கக௩. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

(இ - ள்.) நன்று ஏ தரின் உம் - (தீங்கன்றி) நன்மையே பயந்ததாயினும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை-நடுவுநிற்றலை ஒழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை, அன்று ஏ ஒழிய விடல் - அப்பொழுதே ஒழியவிடுக; (எ - று.)

நன்மைபயவாமையின், 'நன்றேதரினும்' என்றார். இகத்தலான் என்பது, 'இகந்து' எனத் திரிந்துநின்றது.

இவையிரண்டுபாட்டானும், முறையே, நடுவுநிலைமையான் வந்த செல்வம் நன்மைபயத்தலும்,

ஏனைச்செல்வம் தீமைபயத்தலும் கூறப்பட்டன.

(கு - ரை.) தீங்கன்றி - தீமையைத்தாராமல் என்றபடி. பயந்தது-தந் தது. ஒழிய - நீங்கும்படி. 'நன்றேதரினும்' என்ற உம்மை - நன்மையைத்

## கஉ - ஆம் அதிகாரம்---நடுவுநிலைமை

எகூ

தாராமையைத் தெரிவித்ததனுல்,
எதிர்மறைப்பொருளாம்; உயர்வுசிறப்பு
மாம். விடுக - விடக்கடவன். காரணப்பொருளதாகிய
இகக்களென்னும் செய
வெனெச்சம், இகந்து என
இறந்தகாலவினையெச்சமாகத் திரிந்தது; தன்
கருத்தாவின் வினையைக்கொண்டுமுடிதற்குஏற்ற 'இகந்து'
என்னுஞ்செய்தெ
னெச்சம் 'ஆம்' என்னும் வேறுகருத்தாவின்வினையைக்
கொண்டுமுடிந்தத
னுல், அ்தனை வேறுகருத்தாவின்வினையையுங்கொண்டு
முடிதற்குஏற்ற செய
வெனெச்சத்தின் திரிபாகக்கொள்ளவேண்டியதாயிற்று;
[நன். வினை. உ௫,
உஎ.] நடுவுநிலைமையை விட்டதனுல் வருஞ் செல்வமானது
நன்மைதருவதே
யில்லை: அப்பொழுது நன்மைதருவதுபோலத்
தோன்றினும் பின்பு அனுபவ

த்தில் தீமையையே தரும்:
ஆதலால், அதனை விரும்பலாகா தென்பது, இதன்
கருத்து. ஏனைச்செல்வம் -
நடுவுநிலைமையொழிதலால்உ.க்தசெல்வம். நன்றே,
ஏகாரம் - பிரிநிலை. ஆம் - ஆகும்என்னுஞ் செய்யுமெ
னெச்சத்து ஈற்று
உயிர்மெய் சென்றது: [நன். வினை. உஉ.]
ஒழியவென்னுஞ் செயவெனெச்
சம் - காரியப்பொருள தாதலால், எதிர்காலம். விடல் -
'அல்' விகுதிபெற்று
வந்த உடன்பாட்டுவியங்கோள்.
(ந)

கககூ. தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

(இ - ள்.) தக்கார் - (இவர்)
நடுவுநிலைமையுடையவர், தகவு இலர் -
(இவர்) நடுவுநிலைமையிலர், என்பது-என்னும்
விசேடம்,—அவர் அவர் எச்சத்
தால் - அவரவருடைய நன்மக்களது உண்மையானும்
இன்மையானும், கா
ணப்படும் - அறியப்படும்; (எ - று.)

தக்கார்க்கு எச்சமுண்டாதலும், தகவிலார்க்கு
இல்லையாதலும் ஒருதலை
யாகலின், இருதிறத்தாரையும் அறிதற்கு அவை
குறியாயின.

இதனன், தக்காரையும் தகவிலாரையும் அறியுமாறு

கூறப்பட்டது.

(கு - ரை.) விசேடம் - வேறுபாடு. ஒருதலை - நிச்சயம், அவை - நன்மக்கள் உண்டாதலும், இல்லையாதலும். குறி - அடையாளங்கள். அறியுமாறு - அறியும்விதம். நடுவுநிலைமையுடையவர்க்கு நல்லசந்ததியுண்டாகும்; நடுவுநிலைமையில்லாதார்க்குச் சந்ததியே உண்டாகாது: ஒருகால்உண்டாயினும் நற்குணநற்செய்கையுடையதாயிராது என்பது, இதன் கருத்து. தக்கார் - பகுதி ஒற்றிரட்டியது, இறந்தகாலத்தின்குறி. "மகனுரைக்குந் தந்தை நலத்தை," "பழியின்மை மக்களாற் காண்க" என்னும் நான்மணிக்கடிகையையும், "நன்றிப் பயன்தூக்கா நாணிலியும் சான்றோர்முன், மன்றிற் கொடும்பா டுரைப்பானும் - நன்றின்றி, வைத்த தடைக்கலங் கொள்வானு மிம்மூவர், எச்ச மிழந்து வாழ்வார்" என்ற திரிகடுகத்தையும், "மகனறிவு தந்தையறிவு" என்ற பழமொழியையும் நோக்குக. எச்சம் என்பதற்கு - புகழ் என்று பொருள்கூறி னருமுளர்.

(௬)

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.



(இ-ள்.) கேடுஉம்-(தீவினையாற்) கேடும், பெருக்கம்உம்-(நல்வினையாற்)
பெருக்கமும், இல் அல்ல - (யாவர்க்கும்) முன்னே அமைந்துகிடந்தன: நெஞ்
சத்து கோடாமை - (அவ்வாற்றை அறிந்து அவைகாரணமாக)மனத்தின்கட்
கோடாமையே,சான்றோர்க்கு (அறிவான்) அமைந்தார்க்கு, அணி-அழகாவது.

அவைகாரணமாகக் கோடுதலாவது - அவை இப்பொழுதுவருவனவா
கக்கருதிக் கேடுவாராமையைக்குறித்தும் பெருக்கம்வருதலைக்குறித்தும் ஒரு
தலைக்கண் நிற்றல். 'அவற்றிற்குக் காரணம் பழவினையே, கோடுதலன்று' என
உண்மையுணர்ந்து நடுவுநிற்றல் சால்பினை அழகுசெய்தலின், 'சான்றோர்க்
கணி' என்றார்.

(கு - ரை.) கேடு-கெடுதல்; முதனிலைதிரிந்த தொழிற்பெயர்: தொழிற்
பெயர்விகுதி புணர்ந்து கெட்டது.

உம்மைகள்-எண்ணுப்பொருளன. தீவினை
நல்வினைகள் - முற்பிறப்புக்களிற் செய்துவைத்த பாவமும் புண்ணியமும்.
பெருக்கம் - பெருகுதல், தொழிற்பெயர்: பெருகு - பகுதி, அம் - விகுதி,
பகுதி ஒற்றிரட்டினது - விகாரம். இல் - இல்லையென்பதன் விகாரம்.
அல்ல - பலவின்பாற்குறிப்புமுற்று. இல்லல்ல - இரண்டு எதிர்மறை சேர்
ந்து உடன்பாடாயிற்று; உண்டாயுள்ளன என்று பொருள். அவ்வாற்றை
யறிந்து அவைகாரணமாக மனத்தின்கட் கோடாமை - கேடும்பெருக்கமும்
முன்னை வினைப்பயனென்கிற அவ்விதத்தை அறிந்து கேட்டைவிலக்கும்பொ
ருட்டும் பெருக்கத்தையடையும்பொருட்டும் மனத்திற் பக்ஷபாதஞ்செய்யாமை.
கோடாமை - கோணாமை; எதிர்மறைத்தொழிற்பெயர். அமைந்தார் - நிறை
ந்தவர். சான்றோர் என்னும் வினையாலணையும்பெயரில், சால்என்னும் உரிச்
சொல் - பகுதி. அழகுசெய்வதை அழகென்றது, காரியத்தைக் காரணமாகக்
கூறிய உபசாரவழக்கு. ஒருதலைக்கண் நிற்றல் - ஒருபக்கத்தில் அன்பு
கொண்டு நிற்பது. கோடுதலன்றுஎன உண்மையுணர்ந்து -

கெடுதிவாராதி
ருப்பதற்கும் நன்மைவருதற்கும் நடுவுநிலைமைதவறுதல்
காரணமன்றென்று
உண்மையறிந்து. சால்பினை - அறிவினதுநிறைவை. 'கேடும்
பெருக்கமு மில்
லல்ல' என்பதன் உண்மையை "பல்லாவு ளுய்த்து
விடினுங் குழக்கன்று,
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப், பழவினையு
மன்ன தகைத்தே
தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு" என்னும்
நாலடியார்ச்செய்யுளால் அறிக. மனம் மொழி மெய் என்னுந்
திரிகரணங்களுட் சிறந்ததாகிய மனத்தி
னது கோணுதல் மற்றைமொழிமெய்கள் கோணுதற்குக்
காரண மாதலால், 'நெஞ்சத்துக் கோடாமை' என்றார்.

(ரு)

கககூ. கெடுவலியா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்.

(இ - ள்.) (ஒருவன்), தன் நெஞ்சம்—, நடுவு
ஒரீஇ-நடுவுநிற்றலை ஒழிந்து, அல்ல செயின் -
நடுவல்லவற்றைச் செய்யநினைக்குமாயின், (அந்நினை வை),
யான் கெடுவல் என்பது அறிக - யான் கெடக்கடவே
னென்று உணரும் உற்பாதமாக அறிக; (எ - று.)

நினைத்தலும் செய்தலோடு ஒக்கு மாகலின், 'செயின்' என்றார்.

(கு - ரை.) நெஞ்சம் - மனம். 'நெஞ்சம்' என்றதற்கு ஏற்ப, 'செயின்'

என்பதற்கு - 'செய்யநினைக்குமாயின்' என்று உரைக்கப்பட்டதென்க. உற்

பாதம் - பின்நிகழக்கடவதாகிய தீமையை முன்னர்த் தெரிவிக்குந் துர்நிமித்

தம். கெடுவல் - தன்மையொருமைஎதிர்காலமுற்று; அல் - தன்மையொரு

மை விகுதி, வ் - இடைநிலை. கெடுவல் + யான்=கெடுவலியான்; தன்னொழி

மெய்ம்முன் யகரம்வர இகரந்தோன்றிற்று: [நன். மெய். ந.] ஒருவியென்

னும் இறந்தகாலவினையெச்சம், 'ஒரீஇ' என விகாரப்பட்டு அளபெடுத்தது.

மனத்திற்பசுபாதங்கொள்ளுதல் விரைவிற்கெடுதியடைதற்குக் காரணமாம்

என்பது, இதன் கருத்து. என்பது - எதிர்காலவினையாலணையும்பெயர்.

தன்-தான் என்பதன் விகாரம்.

(௬)

கசுஎ. கெடுவாக வையா துலக நடுவாக

நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

(இ - ள்.) நடு ஆக - நடுவாகநின்று, நன்றிக்கண் - அறத்தின்கண்ணே,
தங்கியான் - தங்கினவனது, தாழ்வு - வறுமையை, கெடு ஆக வையாது -
வறுமையென்று கருதார், உலகம் - உயர்ந்தோர்; (எ - று.)
'கெடு' என்பது - முதனிலைத்தொழிற்பெயர். 'செல்வமென்று கொள்
ளுவர்' என்பது, குறிப்பெச்சம்.
இவைமூன்றுபாட்டானும், முறையே கேடும் பெருக்கமும் கோடுதலான்
வாரா வென்பதூஉம், கோடுதல் கேட்டிற்கு ஏதுவா மென்பதூஉம், கோடா
தவன்தாழ்வு* கேடன் றென்பதூஉம் கூறப்பட்டன.

(கு - ரை.) தங்கினவன்-நிலைபெற்றவன். வறுமை - ஏழைமை. முத
னிலைத்தொழிற்பெயராவது - விகுதிபுணர்ந்து கெட்டுப் பகுதிமாத்திரமாய்த்
தொழிலையுணர்த்துஞ்சொல்; முதனிலை - பகுதி, பகுபதங்களின் முதலில்
நிற்பது. கெடு - கெடுதல்: இது - இலக்கணையால், வறுமையை உணர்த்
திற்று. "உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே"

என்பதனை இங்கே உணர்க.

உலகம் - இது பொருளால் உயர்திணையாயினும், சொல்லால் அஃறிணையாத லால், வையாதென்னும் அஃறிணைமுற்றைக் கொண்டது. குறிப்பெச்சமாவது - வெளிப்படையாகவன்றி மறைந்துநின்று வேறொருசொல்லின் குறிப்பினுல் தோன்றும் பொருள்; 'வறுமையென்று கருதார்' என்றதனுல், 'செல்வமென்று கொள்ளுவர்' என்பது குறிப்பிக்கப்பட்டது: குறிப்பெச்சத்தை வடநூலார் அர்த்தாபத்தி யென்பர். நன்றி - அறத்துக்குப் பண்பாகுபெயர்.

நடுவுநிலைமை தவறாமையால் வறுமைவந்த பொழுதிலும் அது உயர்ந்தோராற் செல்வத்தோடொப்ப நன்குமதிக்கப்படும் என்பது, இதன் கருத்து. (எ)

கக௮. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

---

* செல்வமென்பதூஉம் என்று பிரதிபேதம்.

(இ - ள்.) சமன் செய்து -(முன்னே தான்) சமனாகநின்று, சீர் தூக்கும்- (பின் தன்கண்வைத்த பாரத்தை) வரையறுக்கும், கோல் போல் - துலாம் போல, அமைந்து - (இலக்கணங்களான்) அமைந்து, ஒரு பால் கோடாமை- ஒருபக்கத்துக் கோடாமை, சான்றோர்க்கு—, அணி - அழகாம்; (எ - று.)

உவமையடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற்கோடாமையும் உவமைக்கண்ணும் கூட்டி, சான்றோர் சீர்தூக்கலாவது-* தொடைவிடைகளாற் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறு உணர்தலாகவும், ஒருபாற்கோடாமையாவது - அவ் வுள்ளவாற்றை மறையாது பகை நொதுமல் நட்பு என்னும் மூன்றுதிறத் தார்க்கும் ஒப்பக்கூறுதலாகவும் உரைக்க. இலக்கணங்களான் அமைதல்இருவழியும், ஏற்பன கொள்க.

(கு - ரை.) வரையறுத்தல் - இவ்வளவென்று அளவிட்டுக்காட்டுதல்.

துலாம் - தராசுகோல். உபமானமாகிய தராசுகோலினது விசேஷணமாகிய சமன்செய்தலையும் சீர்தூக்கலையும் உபமேயத்தினிடத்தும், உபமேயமாகிய சான்றோரின் விசேஷணமாகிய அமைதலையும் ஒருபாற்கோடாமையையும் உபமானத்தினிடத்தும் கூட்டி, சமன்செய்து சீர்தூக்கி

இலக்கணங்களா

ளமைந்து ஒருபாற்கோடாத துலாக்கோல்போல,
சமன்செய்து சீர்தூக்கி

இலக்கணங்களானமைந்து ஒருபாற்கோடாதவர் சான்றோ ரெனப் பொருள்கொள்க. உவமை யடை - உபமானத்தின் விசேஷணம். பொருள் - உப மேயம். பொருளடை - உபமேயத்தின் விசேஷணம். சீர்தூக்கல் - ஆராய் தல். சான்றோர் ஆராய்தலாவது - ஆக்ஷேபசமாதானங்களால் வாதிப்பிரதி வாதிகளிடங் கேட்ட விஷயங்களை முறைப்படியே உள்ளவிதமாக அறிதல்.

தொடை - ஆட்சேபம், வினா. ஊழான் - முறைமையால். "தொடைவிடை யூழாத்தொடைவிடைதன்னி" என்பது,புறப்பொருள்வெண்பாமாலை(வாகை, 19). இலக்கணங்களான் அமைதல் - தராசுக்கும் சான்றோர்க்கும் இருக்க வேண்டிய லக்ஷணங்களோடு பொருந்தியிருத்தல்: அதிவியாப்தி அவியாத்தி அசம்பவம் என்னும் முக்குற்றங்களினும்நீங்கிய தன்மைகளால் அமைதல் என்றுருமுளர். இருவழியும் - உபமானம் உபமேயம் என்னும் இரண்டிடத் தும்; கோல் சான்றோர் என்னும் இரண்டிடத்தும். ஏற்பன - ஏற்பவற்றை. "துலைநா வன்ன சமநிலை," "துலாக்கோலியல்பே தூக்குங்காலை, மிகினுங் குறையினு நில்லா தாகலும், ஐயந்தீர்த்தலும் நடுவுநிலைமையோ, டெய்தக் கூறுப வியல்புணர்ந் தோரே," "ஐயந் தீரப் பொருளையுணர்த்தலு, மெய்ந் நடு நிலைபும் மிகும் நிறைகோற்கே" என்பவற்றை இங்கே அறிக. முற்றுவ மையணி. சமன் - ஸமம்: வடசொல். 'சமஞ்செய்து'

என்றும் பாடம். (அ)

கககூ. சொற்கோட்ட மில்லது செப்ப

பொருதலையா

வுட்கோட்ட மின்மை பெறின்.

---

* தடை என்று பிரதிபேதம்.

கஉ -ஆம் அதிகாரம்—நடுவுநிலைமை

அங

(இ - ள்.) செப்பம் - நடுவுநிலைமையாவது,—சொல் கோட்டம் இல்லது - சொல்லின்கட் கோடுதலில்லாததாம்; (அஃது அன்னதாவது), உள் கோட்டம் இன்மை - மனத்தின்கட் கோட்டமின்மையை, ஒருதலை ஆ பெறின் - திண்ணிதாகப் பெறின்; (எ - று.)

சொல் - ஊழான் அறுத்துச்சொல்லுஞ் சொல்.

* இவையிரண்டு பாட்டானும், காரணம்பற்றி ஒருபாற்கோடாத மனத்தோடு கூடு மாயின், அறங்கிடந்தவாறுசொல்லுதல் நடுவுநிலைமையாம்: எனவே,அதனோடு கூடாதாயின், அவ்வாறு சொல்லுதல் நடுவுநிலைமையன்று என்பது † கூறப்பட்டது.

(கு - ரை.) அஃது அன்னதாவது - சொல்லிலேகோணலில்லாமல் நிற்பது நடுவுநிலைமை யாவது. கோட்டமின்மை - கோணுதலில்லாமை. திண்ணிதாக - உறுதியுடையதாக; நிச்சயமாக என்றபடி. ஊழான் அறுத்துச் சொல்லுஞ் சொல் - தருமசாஸ்திரமுறைப்படியே வரையறுத்துச் சொல்லுங்

தீர்ப்பு. தருமசாஸ்திரவிதிப்படியே தீர்ப்புச்சொன்னாலும், சொல்பவனது மனத்திற் பக்ஷபாதத்தோடுகூடிய எண்ண மிருக்குமானால், அது நடுவுநிலைமையாக அங்கீகரிக்கப்படா தென்பது, கருத்து. கோட்டம்—கோடு - பகுதி, அம் - தொழிற்பெயர்விகுதி. மத்தியஸ்தனாயிருப்பவன் சொல்லுந் தீர்ப்பு, நீதி நூலுக்கு ஒத்ததாகவும் பக்ஷபாதமில்லாததாகவும் இருக்கவேண்டுமென்பதாம்.

கஉ0. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

(இ - ள்.) பிறஉம்-பிறர்பொருளையும், தம போல் - தம்பொருள்போல, பேணி—, செயின் - செய்யின், வாணிகம் செய்வார்க்கு—, வாணிகம் - (நன்றாய) வாணிகமாம்; (எ - று.)

பிறவும் தமபோற் செய்தலாவது - கொள்வது மிகையும் கொடுப்பது குறையு மாகாமல் ஒப்ப நாடிச் செய்தல்.

இப்பாட்டு மூன்றனுள், முன்னைய இரண்டும் - அவையத்தாரை நோக்கின; ஏனையது - வாணிகரை நோக்கிற்று: அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறாகச் சிறந்தமையின்.

‡ இதனால் நடுவுநிலைமை வகை கூறப்பட்டது.

(கு - ரை.) பேணிச்செய்தல் - பாதுகாத்து வர்த்தகஞ் செய்தல். வாணிகம் - வாணிஜ்யம் என்னும் வடமொழியின் திரிபு; வர்த்தக மென்று பொருள். வாணிகம் என்னுஞ் சொல் இரண்டனுள், பின்னது - பெயர்ப்பயனிலையாய் நின்றது. பிற - இடைச்சொல். உம்மை - எச்சம். தம -

குறிப்புவினையா லணையும்பெயர்; தாம்-பகுதி, குறுகினது-விகாரம், அ-பலவின்பால் விகுதி. கொள்வது மிகை - தாம் கொள்ளுஞ் சரக்குத் தாம் கொடுக்கும்பொருட்கு.

---

* இவையிரண்டுபாட்டானும் என்பது சிலபிரதியிலில்லை. † பெறப் படட்டதுஎன்று பிரதிபேதம். ‡ இத்தவாக்கியம், ஒருபிரதியிலுள்ளது. அச்



மிகுதியாவது. கொடுப்பதுகுறை - தாம் கொடுக்குஞ்சரக்குத் தாம் வாங்கிக் கொள்ளும்பொருட்குக் குறைந்திடுவது: "கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉங்குறைகொடாது" என்பது, பட்டினப்பாலை(உ௧௦). முன்னைய இரண்டும் - "சமன்செய்து" என்னுங் குறளும், "சொற்கோட்டமில்லது" என்னுங் குறளும். அவையத்தார் - நியாயசபையார். ஏனையது - மற்றது: என்றது, "வாணிகஞ்செய்வார்க்கு" என்ற இக்குறளை. அவ்விரு திறத்தார்க்கும் - அவையத்தார் வாணிகர் என்ற இரண்டுபகுப்பார்க்கும். இவ்வறம்-நடுவுநிலைமை. வாணிகர் - வர்த்தகஞ்செய்யும் வைசியரும், சூத்திரரும்; தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்தில் "அறுவகைப் பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்னுஞ் சூத்திரத்தில் "இருமூன்று மரபி னேனோர் பக்கமும்" என்றதன் உரையில், ஆசிரியர்நச்சினார்க்கினியர் இத்திருக்குறளை

'வாணிகச்சிறப்பு இருவர்க்கும் கூறியது' என வரைந்திருத்தல் காண்க. இக்குறளுக்கு - பண்டங்களை மிகக்குறைந்தவிலைக்குவாங்கி மிகஉயர்ந்தவிலைக்குவிற்று வியாபாரஞ் செய்வது வர்த்தகலக்ஷணமன் றென்பதும், அயலார்பொருளையும்வாங்கித் தம்பொருளைப்போலக் கருதி வியாபாரத்தால் விருத்திசெய்துதருவது தரும மென்பதும் கருத்தாகக் கொள்ளலுமாம்.

(௧0)

## ௧௩ - ஆம்

## அதிகாரம்.—அடக்கமுடைமை.

அஃதாவது - மெய்ம்மொழிமனங்கள் தீநெறிக்கட் செல்லாது அடங்குத லுடையனாதல். அஃது எதிலார்குற்றம்போல் தங்குற்றமுங்காணும் நடுவுநிலைமையுடையார்க்குஆதலின்,இது ,நடுவுநிலைமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மெய் மொழி மனங்கள் - மனோ வாக் காயங்கள்; இவை, திரிகரண மெனப்படும். தீநெறிக்கண் செல்லாது - பழியையும் பாவத்தையுந் தருகிற கெட்டவழியிற் செல்லாமல்; எனவே, அடக்கம் - மெய்யடக்கம், மொழியடக்கம், மனவடக்கம் என மூவகையாயிற்று. மெய்யடக்கமாவது - தீயதொழில்களைச் செய்யாமை; மொழியடக்கமாவது - தீயசொற்களைச் சொல்லாமை; மனவடக்கமாவது - தீயஎண்ணங்களை எண்ணுமை. அஃது - அவ்வடக்கமுடைமை: இது, நடுவுநிலைமையையுடையவருக்கே உரியதொரு குணமாதலால், அடக்கமுடைமையென்னும் அதிகாரம் நடுவுநிலைமை யென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டதென்க. எதிலார்குற்றம்போல் தம் குற்றமுங்காணும் நடுவுநிலைமையுடையார்-அயலாரிடத்துள்ள குற்றத்தைப் போலவே தம்மிடத்துள்ள குற்றத்தையும் ஒப்பஅறிகின்ற பக்ஷபாதமில்லாத தன்மையுடையவர். அடக்கம் - தொழிற்பெயர். உடைமை - பண்புப்பெயர்.

கஉக. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

(இ - ள்.) (ஒருவனை), அடக்கம்-அடக்கமாகிய அறம், அமரர் உள்உய்க்கும்-(பின்)தேவருலகத்து உய்க்கும்; அடங்காமை-அடங்காமையாகிய பாவம், ஆர் இருள் உய்த்துவிடும்-(தங்குதற்கு) அரிய இருளின்கட் செலுத்தும்;(எ-று.)

கரு - ஆம் அதிகாரம்—அடக்கமுடைமை

அரு

'இருள்' என்பது - ஓர்நரகவிசேடம். "எல்லாம், பொருளிற் பிறந்து விடும்" என்பதுபோல, 'உய்த்துவிடும்' என்பது - ஒருசொல்லாய்நின்றது.

(கு - ரை.) ஒருவனை - தன்னையுடைய ஒருவனை. பின் - மறுமையில். உய்க்கும் - செலுத்தும். தங்குதல் - தரித்திருத்தல். ஓர்நரகவிசேடம் என்றது - எப்பொழுதும்

மிக்க இருள்நிறைந்துள்ள அந்ததாமிஸ்ரம் என்னும் நரகவகையை. "எல்லாம், பொருளிற்பிறந்துவிடும்" என்னும் மேற்கோள், நான்மணிக்கடிகை - எ - ஆஞ் செய்யுளில் உள்ளது; எல்லாம் பொருளினால் உண்டாகும் என்பது, இதன்பொருள்; 'உய்த்துவிடும்' என்பதை - உய்த்து விடும் என இரண்டுசொல்லாகக்கொள்ளாமல், நின்றுவிடும், ஆகிவிடும் என்பனபோல ஒருசொல்லாகக் கொள்ளவேண்டுமென்க; இதில் விடுஎன்பது துணிவுப்பொருளைக் காட்டிற்று. அமரரென்னும் வடசொல் லுக்கு-(அமிருதத்தையுண்டதனால்) மரணமில்லாதவரென்றுபொருள். இனி, அமர் அருள் எனப் பிரித்து, சிறந்த (கடவுளினது) கருணையிடத்தே செலுத்துமென்றும் பொருள்கொள்ளலாம். ஆரிருள்-அருமையென்னும் பண்புப் பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு இடைநின்ற உகரமும்கெட்டு, இருள்என்பதனோடு புணர்ந்தது. அடக்கமாகிய புண்ணியத்தையுடையார் அந்நல்வினையின் பயனாற் சுவர்க்கவின்பம் பெறுவர்: அடங்காமையாகிய பாவத்தை யுடையார் அத்தீவினையின்பயனால் நரகத்துன்பம் நுகர்வர் என்பது, கருத்து. (க)

கஉஉ. காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூங் கில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) உயிர்க்கு - உயிர்கட்கு, அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை - அடக்கத்தின் மிக்க செல்வமில்லை; (ஆகலான்), அடக்கத்தை - அவ்வடக்கத்தை, பொருள் ஆ - உறுதிப்பொருளாகக்கொண்டு, காக்க - அழியாமற் காக்க;

(எ - று.)

'உயிர்' என்பது - சாதியொருமை: அஃது - ஈண்டு, மக்களுயிர்மேல் நின்றது; அறிந்து அடங்கிப் பயன்கொள்வது அதுவே யாகலின்.

(கு - ரை.) ஈண்டு - இவ்விடத்தில். மக்கள் - மனிதர். அடக்கத்தா லுண்டாகும் நன்மையை அறிந்து அதனுல் தான் அடங்கிச் சுவர்க்கமாகிய நல்லபயனைப் பெறுவதற்குஉரியது மனிதருயிரே யாதலால், இக்குறளில் 'உயிர்' என்பதற்கு - மனிதருயிர்எனப் பொருள் கொள்க. ஒருவனுக்குச் செல்வம்போல அடக்கம் இம்மைமறுமையின்பங்கட்கு ஏதுவாமென்பது, இதன் கருத்து.

(உ)

கஉஙு. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

(இ - ள்.) அறிவு அறிந்து - (அடங்குதலே நமக்கு) அறிவாவதென்று அறிந்து, ஆற்றின் - நெறியானே, (ஒருவன்), அடங்கப் பெறின்—, செறிவு - அவ்வடக்கம், அறிந்து - (நல்லோரான்) அறியப்பட்டு, சீர்மை பயக்கும்-(அவனுக்கு) விழுப்பத்தைக் கொடுக்கும்; (எ - று.)



அறிதலிரண்டனுள், முன்னது-செயப்பாட்டுவினை.

இல்வாழ்வானுக்கு அடங்கும்நெறியாவது - மெய்ம்முதல் மூன்றும் தன்வயத்த வாதல்.

(கு - ரை.) அறிவாவது - அறிவின்பயனுகுவது; உபசாரவழக்கு. நெறி யான்-நல்வழியால். 'செறிவறிந்து' என்பதிலுள்ள 'அறிந்து' என்னும் வினை யெச்சம் - அகரச்சாரியையும் செயப்படுபொருளுணர்த்தும் படுவிகுதியுந்தொக்குநின்ற தென்ருயினும், செயப்பாட்டுவினைப்பொருளில்வந்த செய்வினை யென்ருயினுங் கொள்ளத்தக்கது. விழுப்பம் - புகழ். மெய்ம்முதல்மூன்றும் தன்வயத்தவாதல் - மெய் மொழி மனம் என்னும் மூன்றுகரணங்களும் தனக்கு வசப்பட்டிருப்பன வாகுதல். செறிவு - தொழிற்பெயர். சீர்மை - சீரினது தன்மை. அறிவறிந்து என்பதற்கு - தன் அறிவினல் தான் அறியவேண்டுவனவற்றை அறிந்து என்றும் பொருள்கொள்ளலாம். அடக்கம் புகழுக்குக் காரணமா மென்பது, இதன்கருத்து. பயக்கும், பய - பகுதி. (ந)

கஉச. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது.

(இ - ள்.) நிலையின் - (இல்வாழ்க்கையாகிய தன்) நெறியின், திரியாது-வேறுபடாது நின்று, அடங்கியான்-அடங்கினவனது, தோற்றம்-உயர்ச்சி,— மலையின்உம் - மலையின் உயர்ச்சியினும், மாண - மிக,

பெரிது—; (எ - று.)

திரியாது அடங்குதல் - பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல். மலை - ஆகுபெயர்.

(கு - ரை.) தன்நெறி - தனக்கு உரியநிலைமை. பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல் - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்து இந்திரியங்களாலும், ஸ்பரிசம் ரசம் ரூபம் கந்தம் சப்தம் என்னும் ஐந்து விஷயங்களையும் அனுபவித்துக்கொண்டே அடங்கியிருத்தல். ஐம்புலன்களை அனுபவிக்கவொட்டாமல் ஐம்பொறிகளை அடக்கித் துறவறத்திலேநின்று திரிகரணங்கள் அடங்குதலினும், இல்லறத்திலேஇருந்து எல்லாவின்பங்களையும் அனுபவித்துக்கொண்டே அடங்குதல் மிகச்சிறந்ததென்பதாம். இது பற்றியே, திருமாலையென்னுந் திவ்வியப்பிரபந்தத்தில் "காவலில் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து" என்னும் பாசுரத்துக்கு 'காவலில்லாதபடி இந்திரியங்களை வைத்துப் பாபராசியை வாஸனையோடே போக்கி' என்று வியாக்கியானமருளிச்செய்திருத்தல் காண்க. மலை - அதனது உயர்ச்சியைக் குறித்தலால், பொருளாகுபெயர். நிலையின், ஐந்தனுருபு - எல்லைப் பொருளது. தோற்றம் - தொழிற்பெயர். உம்மை - உயர்வுசிறப்பு. (ச)

கஉரு. எல்லார்க்கு நன்றாம் பணிதலவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(இ - ள்.) பணிதல் - (பெருமிதமின்றி) அடங்குதல், எல்லார்க்கும்—, நன்று ஆம் - (ஒப்ப) நன்றே: (எனினும்),

அவருள் உம் - அவ்வெல்லாருள் ளும், செல்வர்க்குஎ - செல்வமுடையார்க்கே, செல்வம் தகைத்து - வேறொரு செல்வமாஞ் சிறப்பினை யுடைத்து; (எ - று.)

கரு - ஆம்

அதிகாரம்—அடக்கமுடைமை ௭௭

பெருமிதத்தினைச்செய்யும் கல்வியும் குடிப்பிறப்பும் உடையார் அஃதி ன்றி அவைதம்மானே அடங்கியவழி அவ்வடக்கம் சிறந்துகாட்டாதாகலின், 'செல்வர்க்கே செல்வந் தகைத்து' என்றார். 'செல்வத்தகைத்து' என்பது, மெலிந்துநின்றது. பொதுவென்பாரையும் * உடம்பட்டுநின்றே சிறப்பாதல் , கூறியவாறு.

இவையைந்துபாட்டானும், பொதுவகையான், அடக்கத்தது சிறப்புக் கூறபபட்டது.

(கு - ரை.) பெருமிதம் - செருக்கு; கருவம். ஒப்ப நன்றேயெனினும் - ஒருதன்மையாக நல்லதேயானாலும். வேறொருசெல்வம் - அச்செல்வத்தின் மேம்பட்டதொருசெல்வம். உடைத்து - உடையது. கல்வி, குடிப்பிறப்பு, செல்வம் இவற்றால் ஆகுஞ் செருக்குக்களை வித்யாமதம்,

குலமதம், தநமதம்
என்னும் முக்குறும்பு என்பர். அஃது இன்றி -
செருக்கில்லாமல். அவைதம்
மானே-கல்வி குடிப்பிறப்புக்களால்.
செல்வந்தைத்து-மெலித்தல் விகாரம்.
பொது என்பாரையும் உடம்பட்டு நின்றே சிறப்பாதல்
கூறியவாறு - 'கல்வி
யுடையோர், குடிப்பிறப்புடையோர், செல்வமுடையோர்
என்னும் மூன்று
திறத்தார்க்கும் அடக்கமென்பது பொதுவானநற்குணம்'
என்பவர்களின்
கருத்தையும் ஒப்புக்கொண்டே, செல்வமுடையோர்க்கே
அடக்கம் இன்றி
யமையாச்சிறப்புடையதெனத் தமதுகருத்தை
வெளியிட்டபடி. பொரு
ளில்லாத இடத்தில் செருக்கு மிகுதற்குஏது
நிரம்பவில்லையாதலால், செருக்கு
நிரம்புவதற்கு ஏதுவான பொருளையுடையோரிடத்தே
அடக்கம் மேம்பட்டுத் தோன்றுமென்க. இனி, கல்வியும்
செல்வமெனப்படுதலால், செல்வர்க்குஎன் பதற்கு - கல்வி
பொருள் என்னும் இரண்டுசெல்வமு முடையோர்க்கு எனப்
பொருள் கூறுதலும் அமையும். "கல்வி யுடைமை
பொருளுடைமை யென் றிரண்டு, செல்வமுஞ் செல்வ
மெனப்படும் - இல்லார், குறைபிரந்து தம்முன் னர்
நிற்பபோல் தாமும், தலைவணங்கித் தாழப் பெறின்,"

"ஆக்கம் பெரியார் சிறியாரிடைப்பட்ட, மீச்செலவு காணி னளிதாழ்ப" என்னும் நீதிநெறி விளக்கச் செய்யுட்களை இங்கே அறிக. செல்வர்க்கே, ஏ - பிரிநிலை. (ரு)

கஉசு. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

(இ - ள்.) ஆமை போல் - ஆமைபோல, (ஒருவன்), ஒருமையுள் - ஒரு பிறப்பின்கண், ஐந்து - ஐம்பொறிகளையும், அடக்கல் ஆற்றின் - அடக்கவல்லனாயின், (அவ்வன்மை அவனுக்கு), எழுமையும் - எழுபிறப்பின் கண்ணும், ஏமாப்பு உடைத்து - அரணாதலையுடைத்து; (எ - று.)

ஆமை ஐந்துறுப்பினையும் இடர்புகுதாமல் அடக்குமாறுபோல இவனும் ஐம்பொறிகளையும் பாவம்புகுதாமல் அடக்கவேண்டுமென்பார், 'ஆமைபோல்' என்றார். ஒருமைக்கட் செய்த வினையின் பயன், †எழுமைக்கண்ணுந்தொடருமென்பது இதனான் அறிக.

---

* பி - ம்: உடம்பட்டுச்சிறப்பாதல். † பி - ம்: எழுமையும்.



இதனான், மெய்யடக்கம் கூறப்பட்டது.

(கு - ரை.) அரணுதலையுடைத்து - துன்பம்வாராமற் காத்து இன்பந் தருதலையுடையது. ஐந்துஉறுப்பு - கால்கள்நான்கு, தலை ஒன்று ஆக ஐந்து அவயவங்கள். இடர்புகுதாமல் - தனக்குத் துன்பம் நேராமல். ஒருமைக்கண் - ஒருபிறப்பில். எழுமைக்கண்ணும் - பின்பு எழுபிறப்புக்களிலும். ஐந்து - எண்ணலளவாகுபெயர். எழுமையும், உம்மை - முற்று. இங்கே "ஆமை தன்னுறுப்போ ரைந்துந் தன்னுளே யடக்கு மாபோற், றீமைசெய் புலன்க ளைந்துந் தன்னுளே செறியச் சேர்த்தின், வாய்மையுண் ணிகழு மென்னை வழுத்தவும் படகின் ருனேற், றூய்மைசெய்தவர்க ளுளுஞ் சொல்லுவதவன்றன் சொல்லே" என்னுஞ் செய்யுளை உணர்க. "யதாஸம்ஹரதேசாயம் கூர்மோங்காநீவ ஸர்வஶ: | இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்யப்ரஜ்ஞாப்ரதிஷ்டிதா" என்ற கீதை காணத்தக்கது.
(சு)

கஉஎ. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(இ - ள்.) யா காவார் ஆயின்உம் - (தம்மாற் காக்கப்படுவன)எல்லாவற்றையும் காக்கமாட்டாராயினும், நா காக்க - நாஒன்றனையும் காக்க; காவாக்கால் - (அதனைக்) காவாராயின், சொல் இழுக்கு பட்டு - சொற்குற்றத்தின் கட் பட்டு, சோகாப்பர் - (தாமே) துன்புறுவர்; (எ - று.)

'யா' என்பது - அஃறிணைப்பன்மைவினாப்பெயர்; அஃது, ஈண்டு, எஞ் சாமையுணர்கின்றது. முற்றும்மை, விகாரத்தால் தொக்கது. சொற்குற் றம் - சொல்லின்கண் தோன்றும் குற்றம். 'அல்லாப்பர்,' 'செம்மாப்பர்' என்பனபோல, 'சோகாப்பர்' என்பது - ஒருசொல்.

(கு - ரை.) காக்கப்படுவன எல்லாவற்றையும் என்றது - ஐம்பொறி களையும், மனத்தையும். முற்றும்மை, 'யா' என்பதன் பின்தொக்கது. நா - நாக்கு. அதனைக் காத்தலாவது - தீயசொற்களைச் சொல்லாதிருத்தல். பட்டு- அகப்பட்டு. எஞ்சாமை - குறையாமை. 'சோகாப்பர்' என்பதில் உள்ள சோகா என்னும் பகுதியை அலமா, செம்மா, இறுமா என்பனபோல ஒரு சொல்லாகக்கொள்ளவேண்டு மென்பது, பரிமேலழகர்மதம்; இனி, சோகம்ஆ அல்லது சோகம்யா என்பதன் விகாரமாகக் கொள்ளுதலும்ஒன்று. காவாக்கால் - எதிர் மறைவினையெச்சம். "ஆக்கப்படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும், போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும், காக்கப் படுவனவும் இந்திரிய மைந்தினுள், நாக்கல்லதில்லை நனிவெல்லுமாறே" என்பது, வளையாபதி. (எ)

கஉஅ. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய
னுண்டாயி னன்றாகா தாகி விடும்.

(இ - ள்.) தீ சொல் பொருள் பயன் - தீயவாகிய சொற்களின்பொருள் களால் (பிறர்க்கு) வரும் துன்பம், ஒன்று ஆன் உம் - ஒன்றாயினும், உண்டு ஆயின் - (ஒருவன் பக்கல்) உண்டாவதாயின்,—(அவனுக்கு), நன்று - (பிற அறங்களான் உண்டான)நன்மை, ஆகாது ஆகிவிடும் - தீதாய்விடும்;(எ - று.)

கஙு - ஆம்



தீச்சொல்ஆவன - தீங்குபயக்கும் பொய், குறளை,

கடுஞ்சொல் என்

பன. ஒருவன் நல்லவாகச்சொல்லுஞ் சொற்களின்
கண்ணே ஒன்ருயினும்

தீச்சொற்படும் பொருளினது பயன் பிறர்க்கு
உண்டாவதாயின் என்று உரை
பபாரு ருளா.

(கு - ரை.) இக்குறளுக்கு இரண்டு உரை.
முதலுரைக்குக் கருத்து-

பொய், கோள், கடுஞ்சொல் என்னும் மூன்றுவகைத்
தீயசொற்களில் யாதா

யினும் ஒன்றை ஒருவன் சொல்லி அதனுற் பிறர்க்கு
ஒருதுன்பத்தை விளை

விப்பானுயின், அவன் எவ்வளவுதருமசீலனுயிருந்தாலும்,
அவனுக்கு அத்தரு

மங்களினுலுண்டாகிற நன்மையெல்லாம் தீமையாய்முடியு
மென்பது; இரண்

டாமுரைக்குக்
கூருதசொல்,

கருத்து - ஒருவன் தான்சொல்லுகிற மெய்யாகியசொல், புறங்
இன்சொல் என்னும் இந்நல்ல சொற்களினிடையே பொய்,
கோள், கடுஞ்சொல் என்கிற தீயசொற்களுள் ஒன்றைக்
கலந்து சொல்வாறு

னுலும், முன்னும்பின்னுஞ் சொல்கிற
அந்நல்லசொற்களால் வரும் நன்மை

முழுவதும் தீமையா மென்பது. நல்லசொல்லையுந்
தீயபயன் தராமற்சொல்க

என்றவாறு. குறளை, கோள் என்பன - ஒருபொருட்
சொற்கள்; அது-ஒரு

வன்மேற் புறத்தே பழிமொழிகூறுதல். ஆனும் - ஆயினும்
என்பதன் விகா

ரம். ஆகிவிடும் - ஒருசொல். நன்று - பண்புப்பெயர்.
ஆகாது - எதிர்மறை
ஒன்றன்பால் வினையாலணையும் பெயர். முன்னே
பின்னே 'ஆகாது' என்பது தீயதாயிற்று.

'நன்று' என வந்ததனால்,
(அ)

கஉகூ.

தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

(இ - ள்.) தீயினால் சுட்ட புண் - (ஒருவனை ஒருவன்)
தீயினாற் சுட்ட

புண், உள் ஆறும் - (மெய்க்கட் கிடப்பினும்) மனத்தின் கண் (அப்பொழு
தே) ஆறும்; (அவ்வாறன்றி), நாவினால் சுட்ட வடு - (வெவ்வுரையுடைய)நா
வினாற் சுட்ட வடு, ஆறாது-(அதன்கண்ணும் எஞ்ஞான்றும்) ஆறாது; (எ-று.)

ஆறிப்போதலால் தீயினாற் சுட்டதனை 'புண்' என்றும்,
*ஆறாது கிடத்த

லான் நாவினுற்சுட்டதனை 'வடு' என்றும் கூறினர். தீ
யும் வெவ்வுரையும்

சுடுதற்றொழிலான் ஒக்குமாயினும், ஆறுமையால் தீயினும்
வெவ்வுரைகொடி

தென்பது போதரலின், இது - குறிப்பான்வந்த
வேற்றுமையலங்காரம்.

இவைமூன்றுபாட்டானும், மொழியடக்கம்
கூறப்பட்டது.

(கு - ரை.) மெய்க்கட் கிடப்பினும் - உடம்பிலே
காணப்பட்டிருந்தா

லும். வெவ்வுரை - கொடுஞ்சொல். புண் - விரணம். வடு
- தழும்பு. அதன் , கண்ணும்-மனத்தினிடத்தும்.
எஞ்ஞான்றும்-எக்காலத்தும். என்பது போத

ரலின் - என்னும்பொருள் தோன்றுதலினல்.
வேற்றுமையலங்காரத்தி
னது இலக்கணம்-உபமான உபமேயங்களுள் யாதாயினு மொன்றை வெளிப்
படையாகவாவது குறிப்பாகவாவது விசேஷமுடையதாகச் சொல்வது;
இதனை வடநூலார் வ்யதிரேகாலங்கார மென்பர்: இங்கே உபமானமாகிய

* ஆறுமையின்என்று பிரதிபேதம்,.





தீயினும் உபமேயமாகிய கடுஞ்சொல்லுக்கு
எப்பொழுதும் உள்ளாறுமையா
கிய விசேடம் சொல்லப்பட்டது காண்க. தீயினும்

கடுஞ்சொல் கொடியது

என்னும் கருத்தை 'ஆறுதே, நாவினாற்சுட்ட வடு' என்னும் வாக்கியத்தினது

குறிப்பினாற் பெறவைத்ததனால், 'குறிப்பான்வந்த வேற்றுமையலங்காரம்'

எனப்பட்டது. சுட்ட என்பது - சுட்டதனு லாகிய எனப் பொருள்படுத

லால், இறந்தகாலப் பெயரெச்சம் காரணப்பொருளது. ஏகாரம் - தேற்றம்.

"வாயினாற் சுட்ட வடு" எனப் பாடங் கொள்ளுதல், எதுகைத்தொடை

மோனைத்தொடைகளுக்கு நன்குபொருந்து மென அறிக. (கூ)

கஙo. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி

யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

(இ - ள்.) கதம் காத்து - (மனத்தின்கண்) வெகுளி (தோன்றாமல்)

காத்து, கற்று - கல்வியுடையனாய், அடங்கல் - அடங்குதலை, ஆற்றுவான் - வல்லவனது, செவ்வி - செவ்வியை, அறம் - அறக்கடவுள், பார்க்கும்-பாரா

நிற்கும்; ஆற்றின் - (அவனை அடையும்) நெறியின்கண், நுழைந்து-சென்று.

அடங்குதல் - மனம் புறத்துப்பரவாது அறத்தின்கண்ணே நிற்றல்.

செவ்வி-தன் குறைகூறுதற்கு ஏற்ற மனம்மொழிமுகங்களி

ளினியனுக்காலம்.

இப்பெற்றியானை அறம் தானே சென்று அடையு மென்பதாம்.

இதனுன், மனவடக்கம் கூறப்பட்டது.

(கு - ரை.) வெகுளி-கோபம். செவ்வி - சமயம். அறக்கடவுள் - தரும தேவதை. பாராகிற்கும் - பார்க்கும். அடையும் நெறி - அடைவதற்கு ஏற்ற வழி. புறத்துப்பரவாது - தருமமல்லாதவழிகளிற் செல்லாமல். இப்பெற்றி யானை - இக்குணமுடையவனை; மனவடக்கமுடையவனை. "சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும், மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபராயே" என்பதை நோக்குக. கற்று, கல் - பகுதி. (௧௦)

## ௧௪ - ஆம்

# அதிகாரம்—ஒழுக்கமுடைமை.

அஃதாவது - தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத் தினை உடையராதல். இது, மெய்ம்முதலிய அடங்கினார்க்கல்லது முடியா தாகலின், அடக்கமுடைமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) அடக்கமுடைமையின்பின் ஒழுக்கமுடைமையைவைத்தது,

காரணகாரியசம்பந்தத்தா லென்க.
ஒழுக்கம்-தொழிற்பெயர்; ஒழுகு - பகுதி.

கருக.

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

(இ - ள்.) ஒழுக்கம்—,விழுப்பம் தரலான் - (எல்லார்க்கும்) சிறப்பினைத் தருதலான், ஒழுக்கம் பாதுகாக்கப்படும்; (எ - று.)
- அவ்வொழுக்கம்,—உயிரினும்—,ஓம்பப்படும் -

உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் ஒப்ப விழுப்பந்தருதலின்,பொதுப்படக் கூறினர். சுட்டு வருவிக்கப்பட்டது: அதனால், அங்ஙனம் விழுப்பந்தருவதா

கசு - ஆம்
அதிகாரம்—ஒழுக்கமுடைமை சுகக

யது ஒழுக்கமென்பது பெற்றும். உயிர் எல்லாப்பொருளினும் சிறந்ததாயினும் ஒழுக்கம்போலவிழுப்பந்தாராமையின், 'உயிரினுமோம்பப்படும்'என்றார்.

(கு - ரை.) ஒப்ப - சமமாக. சுட்டு வருவிக்கப்பட்டது, இரண்டாவது ஒழுக்கம் என்பதில். அவ்வொழுக்கம் என்பது

- எல்லார்க்குஞ் சிறப்பைத் தருவதாகிய நல்லொழுக்கம் என்றபடி. விழுப்பம் - உரிச்சொல். உயிரினுஞ் சிறந்தது ஒழுக்க மென்பது, கருத்து; உயிரைவிட்டாலும் விடலாம், ஒழுக்க த்தை விடலாகா தென்க: உயிர் நல்வினைக்குப்போலவே தீவினைக்கும் எது வாம்; ஒழுக்கமோ ஒருபொழுதுந் தீவினைக்கு ஏதுவாகாது எப்பொழுதும் நல்வினைக்கே ஏதுவா மென்க.
(க)

கஉ. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந்

தெரிந்தோம்பித்

தேரினு மஃதே துணை.

(இ - ள்.) ஒழுக்கம் - ஒழுக்கத்தினை, ஓம்பி - (ஒன்றுனும் அழிவு படா மல்) பேணி, பரிந்து காக்க - வருந்தியும் காக்க: தெரிந்து - (அறங்கள் பல வற்றையும்) ஆராய்ந்து, ஓம்பி - (அவற்றுள் இருமைக்குத் துணையாவது யா தென்று மனத்தை) ஒருக்கி, தேரின்உம் - தேர்ந்தாலும், துணை-துணையாய் முடிவது, அஃதே - அவ்வொழுக்கமே, (ஆகலான்); (எ - று.)

'பரிந்தும்' என்னும் உம்மை, விகாரத்தால் தொக்கது.

இவையிரண்டு பாட்டானும், ஒழுக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) ஒன்றுனும் - ஒன்றினாலும். பேணி - விரும்பி. ஆதுலர்க் குச்சாலை, ஓதுவார்க்குணவு முதலியவாக முப்பத்திரண்டுஅறங்கள் கூறப் படுவதனுல்

'அறங்கள்பலவற்றையும்' என்றார். இருமை - இம்மை மறுமை என்னும் இரண்டு. ஒருக்கி - அடக்கி. தேர்ந்தாலும் - ஆலோசித்தாலும். பரிந்தும் என்ற உம்மை - உயர்வுசிறப்புப்பொருளது. அஃது என்பதில், ஆய்தம் மெய்போல ஒலித்துநின்றது. ஏ - பிரிநிலை.
(உ)

கஙௗ. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

(இ - ள்.) (எல்லார்க்கும்), ஒழுக்கம் உடைமை - (தத்தம் வருணத்திற்கு ஏற்ற) ஒழுக்க முடைமை, குடிமை - குலனுடைமையாம்; இழுக்கம் - (அவ்வொழுக்கத்தில்) தவறுதல், இழிந்த பிறப்பு ஆய்விடும் - (அவ்வருணத்தில்) தாழ்ந்த வருணமாய்விடும்; (எ - று.)

பிறந்த வருணத்துள் இழிந்தகுலத்தாராயினும் ஒழுக்கமுடையராக உயர்குலத்த ராவ ராகலின் 'குடிமையாம்' என்றும், உயர்ந்தவருணத்துப் பிறந்தாராயினும் ஒழுக்கத்தில்தவறத் தாழ்ந்தவருணத்த ராவ ராகலின் 'இழிந்தபிறப்பாய்விடும்' என்றுங் கூறினார். உள்வழிப்படுங் குணத்தினும்

இல்வழிப்படுங் குற்றம் பெரிது என்றவாறு. பயன் இடையீடின்றி_

எய்துதலின், அவ்விரைவுபற்றி, அவ்வேதுவாகிய வினைகளே பயனாக

ஓதப்பட்டன.

(கு - ரை.) தத்தம் - தங்கள் தங்களுடைய. வருணம் - சாதி. உள்வழிப் படுங் குணத்தினும் இல்வழிப்படுங் குற்றம் பெரிது - ஒழுக்கம் உண்டான பொழுது உண்டாகுங் குணத்தைக்காட்டிலும் ஒழுக்கம் இல்லாதபொழுது உண்டாகுங் குற்றம் அதிகமானது; ஒழுக்கமிருந்தாற் குலம் மேலாம்; ஒழுக் கங்கெட்டாற் சாதியே கீழாம் எனக் காண்க. பயன் இடையீடின்றி எய்து தலின் - குலனுடைமையும் தாழ்ந்த வருணமு மாகிய பிரயோஜனங்கள் கால தாமதமில்லாமல் உடனே உண்டாவதனால். அவ்வேதுவாகிய வினைகளே பய னாக ஓதப்பட்டன - குடிமைக்கும் இழிந்தபிறப்புக்குங் காரணமாகிய ஒழுக்க முடைமையும் இழுக்கமும் ஆகிய தொழில்கள் தாமே குடிமையும் இழிந்த பிறப்பு மாகச் சொல்லப்பட்டன: உபசாரவழக்கு. இனி, இத்திருக்குறளினை - இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடு மாதலால் ஒழுக்கமுடைமை குடிமை என அங்வயித்து, உயர்ந்தசாதியிற் பிறந்தவராயினும் அச்சாதிக்குரியஒழுக்கத்தைக் கைவிட்டால், அது உடனே அச்சாதி தாழ்ந்தசாதியாவதற்குக் காரணமாகு மாதலால், ஒழுக்கமுடைமையே உயர்குடிப்பிறப்பாம் எனப் பொருள்கொள் ளினும் அமையும். இழுக்கம் என்னுந்தொழிற்பெயரில், இழுக்கு-பகுதி. (௩)

கஙசு. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்

பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(இ - ள்.) ஒத்து - (கற்ற) வேதத்தினை, மறப்பின்உம் - மறந்தானாயினும், கொளல் ஆகும் - (வருணம் கெடாமையின் பின்னும் அஃது) ஓதிக் கொளலாம்; பார்ப்பான் - அந்தணனது, பிறப்பு - (உயர்ந்த) வருணம், ஒழுக்கம் குன்ற - (தன்) ஒழுக்கம் குன்ற, கெடும்—; (எ - று.)

மறந்தவழி இழிகுலத்தனு மாகலின், 'மறக்கலாகாது' என்னுங் கருத்தான், 'மறப்பினும்' என்றார். சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின், இஃது, ஏனைய வருணங்கட்கும் கொள்ளப்படும்.

(கு - ரை.) வருணம் - பிராமணசாதி. குன்ற - குறைய. மறந்தவழி - மறந்தால். சிறப்புடை வருணம் -நான்குசாதிகளுள்ளுஞ் சிறந்ததான பிராமண சாதி. ஏனைய வருணம் - மற்றை க்ஷத்திரிய வைசிய சூத்திர சாதிகள். ஓதப்படுவதனால் வேதத்துக்கு 'ஒத்து' என்றும், அவ்வேதங்களின் பொருள் களையே மேற்கொண்டு பார்ப்பதனால் பிராமணர்க்கு 'பார்ப்பார்' என்றும் பெயர். ஓது என்னும் பகுதி செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்டுத் தன் ஒற்றுஇரட்டி 'ஒத்து' என நின்றது. குன்ற என்னும் செயவெனெச்சம் - காரணப்பொருள்தாதலின், இறந்த காலம். கல்வியினும் என்றவாறும்.

ஒழுக்கம் சிறந்தது

(ச)

கரு௫. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன்
றில்லை யொழுக்க மிலான்க ணுயர்வு.

(இ - ள்.) அழுக்காறு உடையான் கண் - அழுக்காறுடையான் மாட்டு, ஆக்கம் போன்று - ஆக்கம் (இல்லாதாப்) போல, ஒழுக்கம் இலான்கண் - ஒழுக்கமில்லாதவன் மாட்டும், உயர்வு - உயர்ச்சி, இல்லை—! (எ - று.)

கசு-ஆம் அதிகாரம்—ஒழுக்கமுடைமை

கூ௩

உவமையான், ஒழுக்கமில்லாதவன் சுற்றத்திற்கும் உயர்ச்சிஇல்லையென்பது பெற்றாம்; என்னை? "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற"மும் நல்கூர்தலின். உயர்வு - உயர்குலமாதல்.

(கு - ரை.) அழுக்காறுடையான்மாட்டு ஆக்கமில்லாதாப்போல-பொறாமையுடையவனிடத்துச் செல்வமில்லாதவாறுபோல. உவமையான் - அழுக்காறுடையான்கண் ஆக்கம் போன்று என்ற உபமானத்தால். "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉ, முண்பதூஉ மின்றிக் கெடும்" என்னும்

கசுசு-வது திருக்குறளால்,
பொறாமையுடையவன்மாத்திரமேயன்றி அவனது பந்துவர்க்கமும் உடுக்கஉடையும் உண்ண உணவு மில்லாமல் வறுமை யடையு மென்பதை அறிக. இங்ஙன் தானேயன்றித் தன்னுடைய சுற்றத்தாரும் உண்ணஉணவும் உடுக்க உடையும் இன்றிக்கெடும் பொறாமைப்படுபவனை உவமைகூறியதனால், ஒழுக்கமில்லாதவனே யன்றி அவனுடைய சுற்றத்தாரும் உயர்ச்சியின்றிக் கெடுவரென்பது பெறப்படு மென்க. என்னை-ஏனென்றால். நல்கூர்தலின் - வறுமையடைதலால். அழுங்காறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்; அழுக்கறு - பகுதி: இது - ஒருசொல்; இனி, அழுக்கு அறுஎன்னும் இரண்டுசொற்கள் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்டு, எதிர்மறையிலக்கணையால், குற்றத்தை நீக்கு என்னும் பொருளைத் தராமல் குற்றத்தையுடையவனுகு எனப் பொருள்பட்டு, பொறாமையைக்குறித்ததென்றுங் கொள்ளலாம். உடையான்கண், இலான்கண்—கண் - ஏழனுருபு. போன்று, போல் - இடைச்சொல், முதனிலை.

(ஈ)

கருசு.

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) ஒழுக்கத்தின் ஒல்கார் -

(செய்தற்குஅருமைநோக்கி)ஒழுக்கத் திற் சுருங்கார், உரவோர் - மனவலியுடையார்: இழுக்கத்தின் - அவ்விழுக் கத்தால், ஏதம் படுபாக்கு - (தமக்கு இழிகுலமாகிய) குற்றம் உண்டாம் ஆற் றை, அறிந்து—; (எ - று.)

ஒழுக்கத்திற்சுருக்கம், அதனை உடையார்மேல் ஏற்றப்பட்டது. கொண்ட விரதம் விடாமைபற்றி, 'உரவோர்' என்றார்.

(கு - ரை.) செய்தற்குஅருமைநோக்கி - செய்வதற்கு அருமையாயிருக் கிறதென்று நினைத்து. அவ்விழுக்கத்தால் - அவ்வாசாரங் குறைதலால். உண் டாம் ஆறு - உண்டாகும்விதம். ஒழுக்கத்தினது சுருக்கத்தை அதனை உடை யவர்மேல் ஏற்றி, எதிர்மறையாக 'ஒழுக்கத்தி னெல்கா ருரவோர்' என்றார். விரதங்களாவன - இன்ன அறம் செய்வேனெனவும், இன்னபாவம் ஒழிவே னெனவும் தமதுசக்திக்குஏற்றபடி ஏற்படுத்திக் கொள்வன. உரவோர் என்ப தில், உரம் அல்லது உரவு - வலிமை. படுபாக்கு - படுதல்; தொழிற்பெயர்; பாக்கு - விகுதி.

(௬)

கஙௗ.

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

(இ - ள்.) (எல்லாரும்), ஒழுக்கத்தின் - ஒழுக்கத்தானே, மேன்மை - மேம்பாட்டை, எய்துவர் —; இழுக்கத்தின்-(அதனினின்று)இழுக்குதலானே, எய்தா பழி-(தாம்) எய்துதற்கு உரித்தல்லாத பழியை, எய்துவர் —; (எ-று.)

பகைபற்றி அடாப்பழி கூறியவழி அதனையும் இழுக்கம்பற்றி உலகம்

அடுக்கு மென்று கொள்ளு மாகலின், 'எய்தாப்பழியெய்துவர்' என்றார்.

இவையைந்துபாட்டானும், ஒழுக்கம் உள்வழிப்படுங் குணமும், இல்

வழிப்படுங் குற்றமும் கூறப்பட்டன.

(கு - ரை.) இழுக்குதல் - தவறுதல். எய்துதற்கு உரித்துஅல்லாத பழி- அடையத்தகுதியுடைய தல்லாத நிந்தை. ஒழுக்கத்திலே தவறினவர்மேல் பகைமையினாலே ஒருவன் அடாதபழியைச் சொல்வானாயினும், அதனையும் உலகத்தார் அவரது அநாசாரத்தைநோக்கி அவரிடத்து அடுக்குமென்று கொள்ளுவரென்க. எய்தா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். (எ)

கஙஅ. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க மென்று மிடும்பை தரும்.

(இ - ள்.) (ஒருவனுக்கு), நல் ஒழுக்கம் - நல்ல ஒழுக்கம், நன்றிக்கு

வித்து ஆகும் - அறத்திற்குக்காரணமாய் இருமையினும் இன்பம்பயக்கும்;

தீ ஒழுக்கம் - தீயஒழுக்கம், என்றூஉம் இடும்பை தரும்-(பாவத்திற்குக்காரண

மாய்) இருமையினும் துன்பம் பயக்கும்; (எ - று.)

'நன்றிக்கு வித்தாகும்' என்றதனால் தீயொழுக்கம் பாவத்திற்குக் காரண

மாதலும், 'இடும்பைதரும்' என்றதனால் நல்லொழுக்கம் இன்பந்தருதலும்

பெற்றும்; ஒன்றுநின்றே ஏனையதை முடிக்கு மாகலின்.

இதனான், பின்விளைவு கூறப்பட்டது.

(கு - ரை.) அறம் - புண்ணியம். பயக்கும் - உண்டாக்கும். 'நன்றிக்கு வித்தாகும்' என்ற காரணத்தால் 'இருமையினும் இன்பம்பயக்கும்' என்கிற காரியமும், 'இடும்பைதரும்'என்ற காரியத்தால் 'பாவத்திற்குக் காரணமாய்' என்கிற காரணமும் வருவித்து உரைக்கப்பட்டன. ஏனையதை-மற்றொன்றை.

முடிக்கும் - சித்திக்கச்செய்யும். பின்விளைவு - நல்லொழுக்கத்தினாலும்

தீயொழுக்கத்தினாலும் மறுமையில்விளையும் பயன். வித்து - விதை; இங்கே,

காரணமென்னும்பொருளில் வந்தது. என்றும் - எப்பொழுதும்; இம்மையி

லும் மறுமையிலும்.

(அ)

கஙௗ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

(இ - ள்.) வழுக்கிஉம் - மறந்தும், தீய -

தீயசொற்களை, வாயால்-(தம்) வாயால், சொலல் -
சொல்லுந்தொழில்கள், ஒழுக்கம் உடையவர்க்கு—,
ஒல்லா - முடியா; (எ - று.)

தீயசொற்களாவன - பிறர்க்குத் தீங்குபயக்கும்
பொய்ம்முதலியனவும், வருணத்திற்கு உரியவல்லனவுமாம்.
அவற்றது பன்மையால், சொல்லுதற் ·



றொழில் பலவாயின. சொலல் - சாதியொருமை. 'சொலல்'

எனவே அமைந்திருக்க 'வாயால்' என வேண்டாது
கூறினார், 'நல்லசொற்கள் பயின்றது' எனத் தாம்
வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு; இதனை வடநூலார்,
தாற்பரியம என்ப.

(கு - ரை.) பொய்ம்முதலியன என்றது -
கோட்சொல்லையும் கடுஞ்சொல்லையும் குறித்து. அவற்றது -
சொற்களது. சொலல் என்பது - சொல்லால் ஒருமைபோலத்
தோன்றினும், பொருளாற் பன்மையாதலால், பால்
பகாவஃறிணையின்பாற்பட்டு, 'ஒல்லா' என்னும் அஃறிணை
யெதிர்மறைப் பன்மை வினைமுற்றைக் கொண்டது. ஏகாரம் -
தேற்றம். தீய - பண்படியாப்பிறந்த பலவின்பாற் குறிப்பு
வினையாலணையும்பெயர். 'வழுக்கியும்' என்ற
இழிவுசிறப்புஉம்மையால், நினைத்துச்சொல்லுதல்
கூடாதென்பது தானே விளங்கும். ஒழுக்கமுடையவர்
மறந்து சொன்னாலும் பிறர்க்கு நன்மைதருஞ் சொற்களையே

சொல்லுவர் என்பது, கருத்து. 'வாயால்' என்னும் அவசிய மில்லாதபதத்தைப் பிரயோகித்ததற்கு, நல்லசொற்கள்பயின்றதென்றலாகிய கருத்தைக் கூறினர்; கஙகூ - ஆம் குறளிலும் இம்மனங் காண்க. தாற்பரியம்= தாத்பரியம். என்ப - என்றுசொல்லுவர். (கூ)

கசுO.

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(இ - ள்.) உலகத்தோடு ஒட்ட ஒழுகல் - உலகத்தோடு பொருந்த ஒழுகுதலை, கல்லார் - கல்லாதார்,—பல கற்றும் - பலநூல்களையும் கற்றாராயினும், அறிவு இலாதார்—; (எ - று.)

உலகத்தோடுபொருந்த ஒழுகுதலாவது - உயர்ந்தோர்பலரும் ஒழுகிய வாற்றான் ஒழுகுதல். அறநூல்சொல்லியவற்றுள் இக்காலத்திற்குஏலாதன வொழிந்து சொல்லாதனவற்றுள் ஏற்பனகொண்டு வருதலான் அவையும் அடங்க 'உலகத்தோடொட்ட' என்றும், கல்விக்குப்பயன் அறிவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமுமாகலின் 'அவ்வொழுகுதலைக்கல்லாதார் பலகற்றும் அறிவிலாதார்' என்றும் கூறினர். ஒழுகுதலைக்கற்றலாவது - அடிப்படுதல்.

இவையிரண்டுபாட்டானும், சொல்லானும் செயலானும் வரும் ஒழுக்கங்களெல்லாம் ஒருவாற்றால் தொகுத்துக்கூறப்பட்டன.

(கு - ரை.) இங்கே, உலக மென்றது-உயர்ந்தவரை.

கல்லாதார் - அறியாதவர். ஒழுகிய ஆற்ருன் - நடந்தவிதத்தால். ஏலாதன ஒழிந்து - பொருந் தாதவற்றை விட்டு. கொண்டு - ஏற்றுக்கொண்டு. அடிப்படுதல் - அப்பியசித் தல். ஒருவாற்ருல் - ஒருவகையால். பல - வினையாலணையும்பெயர். "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையி னானே" ஆதலால், காலத்துக்கு ஏற்றபடி உலகநடையை அனுசரித்து ஒழுகவேண்டு மென்பது, இதன் கருத்து. "உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்,கூம்பலு மில்ல தறிவு" "எவ்வ துறைவ துலக முலகத்தோடு, அவ்வ துறைவ தறிவு" என மேல் அறிவுடைமையென்னும் அதிகாரத்திலும், "உலகத்தா ருண்டென்ப தில்லென்



பான் வையத்து, அலகையா வைக்கப் படும்" எனப் புல்லறிவாண்மையென்னும் அதிகாரத்திலும் வருதல் காண்க. (௫0)

## ௫௫ - ஆம் அதிகாரம்.—பிறனில் விழையாமை.

அஃதாவது - காமமயக்கத்தாற் பிறனுடையஇல்லாளை விரும்பாமை. இஃது ஒழுக்கமுடையார்மாட்டே நிகழ்வ தாகலின், ஒழுக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) இல் - இல்லாளுக்கு ஆகுபெயர்.

காயமயக்கத்தால் - சிற் றின்பத்தை விரும்புதலினுள்ள புத்தியாரூட்டத்தினால். இஃது - பிறனில் விழையாமையென்ற இந்தக்குணம்.
ஒழுக்கமுடையார்மாட்டே - ஒழுக்க முடையாரிடத்திலேயே.

கசுக. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.

(இ - ள்.) பிறன் பொருளாள் - பிறனுக்குப் பொருளாந்தன்மையை யுடையாளை, பெட்டு - காதலித்து, ஒழுகும், ஒழுகுகின்ற, பேதைமை - அறி யாமை,—ஞாலத்து - ஞாலத்தின்கண், அறம் பொருள் கண்டார்கண் - *அற நூலையும் பொருணூலையும் ஆராய்ந்தறிந்தார்மாட்டு, இல் - இல்லை; (எ - று.)

பிறன்பொருள் - பிறனுடைமை. அறம் பொருள் என்பன-ஆகுபெயர். செவ்வெண்ணின்தொகை, † விகாரத்தாற் றொக்குநின்றது. இன்பம் ஒன் றையேநோக்கும் இன்பநூலுடையார் இத்தீயொழுக்கத்தையும் 'பரகீயம்' என்று கூறுவரா கலின், 'அறம்பொருள் கண்டார்க ணில்' என்றார்: எனவே, அப்பேதைமையுடையார்மாட்டு அறமும் பொருளும் இல்லையென்பது பெறப் பட்டது.

(கு - ரை.) மனைவி புத்திரர் பசு வீடுஎல்லாவற்றையும் தலைவனுடைய உடைமையென்றும், தலைவனை உடையவனென்றும் கூறுவது நூல்வழக்கு ஆதலால்,

மனைவியை 'பொருளாள்' என்றது: ஸ்வாமியென்றும் ஸ்வம்அல்லது ஸொத்தென்றும் வழங்குமாறுங் காண்க. பிறன்பொருளாள்-பிறனுக்கு உடைமையானவள்: எனவே, பிறனுடையமனைவியாவள். அறம் பொருள் என்ற காரியப்பெயர்கள் - அவற்றையுணர்தற்குக் கருவியாகிய நூல்களுக்கு ஆகிவந்தமையால், காரியவாகுபெயர்கள்: அறமும் பொருளும் என்று உம்மையை விரித்துக்கூறுது உம்மைதொக அறம்பொருள் எனக் கூறியது செவ்வெண்ணும். (செவ்வெண்ணாவது - எண்ணிடைச்சொற்கள் தொக்கு நிற்ப வருவது.) பெயர்ச்செவ்வெண் ணாதலால், அறம்பொருளிரண்டும்என்று இது தொகைபெற்றே வரவேண்டு மாதலால், அத்தொகை 'அறம்பொருள்' என்ற விடத்துச் செய்யுள் விகாரத்தால் தொக்குவந்ததென்க. இன்பநூல் - காமநூல்: வாத்ஸ்யாயநம் கொக்கோகம் போல்வன: இன்பம் ஒன் றையேநோக்கும் இன்பநூலுடையார் என்றதனால், அவர்கள் அறம்பொருள்

---

* பி - ம்: அறநூலும் பொருணூலுமாகிய இரண்டையும்.

† தொக்குநின்றதுஎன்று பிரதிபேதம்.

கனைச் சிறிதுங் கருதாதவ ரென்றவாறாயிற்று.
இத்தீயொழுக்கத்தைஎன்றது
பிறனில்விழைதலை. பரகீயம்-பிறருக்குஉரியதுஎன்றுபொருள்.
பெண்டிரை- ஸ்வகீயா பரகீயா ஸாதாரணைஎன்று
மூன்றுவகையாகப்பிரித்தலையும், பிறர் மனையைத்தலைப்பற்றி
* பாரதாரிகபிரகரணத்திற் கூறியிருத்தலையும் வாத்
ஸ்யாயநசூத்திரத்திற் காணலாம். அப்பேதைமை - பிறர்
மனையைப்பதாகிய அந்தஅறியாமைக்குணம். பிறர்மனைவியை
விரும்புவார் அறம்பொருள்களை யிழப்ப ரென்றவாறு.

(க)

கசஉ. அறன்கடை நின்றாரு ளெல்லாம்
பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

(இ - ள்.) அறன்கடை நின்றாருள் எல்லாம் - (காமம் காரணமாகப்) பாவத்தின்கண் நின்றாரெல்லாருள்ளும், பிறன் கடை நின்றாரின் - பிறனில்லாளைக்காதலித்து அவன்வாயின்கட்சென்று நின்றார்போல, பேதையார்—, இல் - இல்லை; (எ - று.)

அறத்தின்நீக்கப்பட்டமையின், 'அறன்கடை' என்றார். அறன்கடை நின்ற பெண்வழிச்செல்வாரும் வரைவின்மகளிரோடும் இழிகுலமகளிரோ டுங்கூடி இன்பநுகர்வாரும் போல, அறமும் பொருளும் இழத்தலே யன்றி, பிறன்கடைநின்றார் அச்சத்தால் தாம் கருதிய

இன்பமும் இழக்கின்றாராலின், 'பேதையாரில்' என்றார்; எனவே, இன்பமும் இல்லையென்பது பெறப் பட்டது.

(கு - ரை.) காமங்காரணமாகப் பாவத்தின் கண்நின்றாரெனப்பட்டவர்-பெண்வழிச்செல்வாரும், வரைவின்மகளிரோடும் இழிகுலமகளிரோடுங்கூடி இன்பநுகர்வாரும், பிறனில்விழைவாரும். இந்நால்வருள் முதலிற்கூறிய மூவரும் காமங்காரணமாக அறம்பொருள்களையே முக்கியமாகஇழக்கின்றார்கள்: பிறர்மனைவிழைவாரோ அந்தஇன்பத்தையும் அச்சத்தால் இழக்கின்றார்: இங்ஙன் இவர் பாவத்தைக் கட்டிக்கொள்வதோடு தாம் கருதிய இன்பத்தையும் பெறாது இழக்கின்றதனால், இவரைப்பற்றி, 'பிறன்கடைநின்றாரிற் பேதையாரில்' என்றார். "காணிற்குடிப்பழியாங் கையுறிற்கால்குறையும், மாணின்மைசெய்யுங்காலச்சமாம்—நீணிரயத்,துன்பம் பயக்குமாற் றுச் சாரிநீகண்ட, இன்பமெனக்கெனைத்தாற்கூறு", "புக்கவிடத்தச்சம் போதரும் போதச்சம், துய்க்குமிடத்தச்சம் தோன்றாமற்காப்பச்சம், எக்காலு மச்சந்தரு மாலெவன்கொலோ, உட்கான் பிறனில்புகல்" என்ற நாலடிச்செய்யுள்கள் இங்குக் கருதத்தக்கன.

அறன்கடை-பாவம்: அறத்தினின்று நீக்கப்பட்டு அறத்தின்பின்னே நிற்பதாதலின், பாவம் இப்பெயர் பெற்றதென்க. 'அறன் கடைநின்ற' என்ற அடைமொழி, பெண்வழிச்செல்வார்முதலிய மூன்றோடும் சேர்தற்குஉரியது. பெண்வழிச்செல்வார் - தமதுவழியில்

நடக்கவேண் டியவளான மனைவி செல்லும் வழியே தாம் நடப்பவர். வரைவின்மகளிர் -

---

---

* பாரதாரிகம் - பிறர்மனைவியைப்பற்றியது.

13



தம் இன்பத்தை இன்னார்க்குத்தான் விற்பது என்று வாத மகளிர்: வேசையர்.

ஓர்வரம்புகொண்டுநட

(உ)

கசாரு. விளிந்தாரின் வேறல்லர் மன்ற
தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.

(இ - ள்.) மன்ற தெளிந்தார் இல் - (தம்மை) ஐயுறாதாரில்லாள் கண்ணே, தீமை புரிந்து ஒழுகுவார் - பாவஞ்செய்தலை விரும்பியொழுகுவார்,—விளிந்தாரின் வேறு அல்லர் - உயிருடையரேனும் இறந்தாரேயாவர்; (எ - று.)

அறம்பொருளின்பங்களாகிய பயன் உயிர் எய்தாமையின் 'விளிந்தாரின் வேறல்லர்'என்றும், அவர் தீமைபுரிந்தொழுகுவது இல்லுடையவரதுதெளிவு பற்றியாகலின் 'தெளிந்தாரில்' என்றும் கூறினர்.

(கு - ரை.) ஐயுறுதார்
னிடத்து. பாவஞ்செய்தல்

- சந்தேகியாதவர். இல்லாள்கண் - மனைவியி
- பிறர்மனைவியைச்சேர்தலாகிய பாவச்செய
லைச்செய்தல். பிறனில்லைவிரும்பிப்பாவஞ்செய்வோர் தாம் உயிருள்ளவராக இருந்தும் தம்முயிர் பெறவேண்டிய அறம்பொருளின்பங்களாகிய பயனை அடையாமையால், 'விளிந்தாரின் வேறல்லர்' என்றது. மன்றதெளிந்தார் - சிறிதும்ஐயுறமல் தம்மை நல்லவரென்று நம்பியவர். பிறனில்விழைவார் தாம் தீமைபுரிவது இல்லுடையவரது தெளிவுபற்றியே யென்பதைப் புலப் படுத்த 'தெளிந்தாரில்' என்றார்: ஆகவே, நம்பிக்கைத்துரோகஞ்செய்பவர் இந்தப்பிறனில்விழைவார் என்றுகூறியவாறயிற்று.
மன்றஎன்பது நிச்சய மென்னும் பொருளுணர்த்தும் உரிச்சொல்: "மன்றவென்கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது, தொல்காப்பியம். இது, தெளிந்தார்க்கு அடையாய் [விசேஷணமாய்] வந்தது: மன்றவிளிந்தார் என்று கூட்டுவாருமுளர். (௩)

கசச. எனைத்துணைய ராயினு மென்னாந்
தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்.

(இ - ள்.) எனை துணையர் ஆயின்
உம்-எத்துணைப்பெருமையுடையரா யினும், என் ஆம் -

(ஒருவர்க்கு) யாதாய்முடியும்? (காமமயக்கத்தால்), தினை துணை உம் - தினையளவும், தேரான் - (தம் பிழையை) ஓராது, பிறன் இல் புகல் - பிறனுடைய இல்லின்கட் புகுதல்; (எ - று.)

இந்திரன்போல எல்லாப்பெருமையும் இழ ந்து சிறுமையெய்தல்நோக்கி, 'என்னும்' என்றார். "என்னீரறியாதீர்போல விவைகூறின், நின்னீர வல்ல நெடுந்தகாய்" என்புழிப்போல உயர்த்தற்கட் பன்மையொருமை மயங்கிற்று. 'தேரான்பிறன்' என்பதனைத் தம்மை யையுறாத பிறன் என்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.) பிறனுடையஇல்லின்கட்புகுதல் - பிறர்மனைவியைச்சேர்தல் என்றபடி. பிறர்மனையின்கட்சேர்ந்ததனால் இந்திரன் எல்லாப்பெருமையும் இழந்து சிறுமையெய்திய வரலாறு,"ஐந்தவித்தானாற்றல்"என்ற குறளினுரையிற் காட்டப்பட்டது. என்ஆம் என்பது - என்னநற்பயனைத்தரும்? நற்பய

## கரு - ஆம் அதிகாரம்—பிறனில்விழையாமை

கசக

னைத்தராது மிக்கதீப்பயனைத்தரும் என்பதைக் காட்டிற்று. "என்னீரறியா தீர்" என்ற மேற்கோள் கலித்தொகையில் பாலைக்கலியில் 5-ஆம்பாட்டிலுள்ளது: இந்தமேற்கோளுக்குப்பொருள்:—(என்னை

உடனழைத்துக்கொண்டு செல்லாமற்போனல் யான்
உயிர்தாங்கியிருத்தலாற்ருது இறந்துபடுதலை) நீர்
அறியாதிருந்தீர்போல (உடன் அழைத்துக்கொண்டு
செல்லுதலைமறுத்த) இம் மொழிகளைக் கூறுதலாற்
பெற்றதென்? நெடுந்தகாய்! (இம்மொழிகள்) நினக்கு உரிய
நன்ருகியநீர்மைகளையுடையன அல்ல என்பது.
இம்மேற்கோளுள், 'அறியாதீர்போல' என்று
உயர்த்துச்சொல்லுதற்பொருட்டுவந்த பன்மை 'நின்' என்ற
ஒருமையோடு மயங்கிநின்ருற்போன்று, இந்தக்குறளில்,
'எனைத் துணையர்' என்று
உயர்த்துச்சொல்லுதற்பொருட்டுவந்த பன்மை தேரான்
என்னும் ஒருமையோடு மயங்கிநின்றதென்க.
இவ்வாறுவருவதனை ஒருமைப் பன்மைமயக்கமெனக் கூருமல்
பால்வழுவமைதியென்பர்: நன்னூல்விருத்தி
யுரைகாரர் "எனைத்துணைய
ராயினு மென்னுந் தினைத்துணையும், தேரான்பிற னில்
புகல்—என்பது, செறலின் [கோபத்தினல்] பலர்பால்
ஒருமைப்பாலாயிற்று" என்று கூறியுள்ளார். தேரான் -
எதிர்மறையாண்பால் வினைமுற்று, எச்சப்பொருளில்வந்தது.
இரண்டாமுரைக்கு—தேரான் (தீயகுணத்தை) அறிந்து
(தன்னை) ஐயுருதவனுகிய, பிறன் என்று பொருள்:
இவ்வுரைக்கு, தேரான்என்பது வினையாலணையும்பெயர்:
யாய்நின்றதென்க.

பிறன்என்பதற்கு அடைமொழி

கசரு. எளிதெண வில்லிறப்பா னெய்து
விளியாது நிற்கும் பழி.

மெஞ்ஞான்றும்

(இ - ள்.) எளிது என - (எய்துதல்)
எளிதுஎன்றுகருதி, (பின்விளைவு கருதாது), இல் இறப்பான் - பிறனில்லின்கண்இறப்பான், விளியாது-மாய்தலின்றி, எஞ்ஞான்றும்—, நிற்கும் - நிலைநிற்கும், பழி - குடிப்பழியினை, எய்தும்—; (எ - று.)

இல்லின்கணிறத்தல் - இல்லாள்கண் நெறிகடந்து சேறல்.

(கு - ரை.) எய்துதல் - பிறன்மனைவியையடைதல். பின்விளைவு - பிறன்தாரத்தை எய்தியபின்உண்டாகும் பகை பாவம் அச்சம் பழி என்பன: மேற்குறளைக் காண்க. இல்லாள்கண் நெறிகடந்துசேறல் - பிறன் மனைவியினிடத்து நீதிவரம்பிற்குக் கட்டுப்படுதலின்றி மீறிச்செல்லுதல். இறத்தல் - வரம்புமீறிச்செல்லுதல்.

(ரு)

கசசு. பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

(இ - ள்.) இல் இறப்பான்கண் - பிறனில்லாள்கண் நெறிகடந்துசெல் வானிடத்து, பகை பாவம் அச்சம் பழி என நான்குஉம் - பகையும் பாவமும்

அச்சமும் குடிப்பழியுமென்னும் இந்நான்குகுற்றமும், காலும்) நீங்காவாம்: (எ - று.)
இகவாஆம் - (ஒரு

எனவே, இருமையுமிழத்தல் பெற்றும்.



இவைஆறுபாட்டானும், பிறனில்விழைவான்கட் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) "பிறன்றாரம், நச்சுவார்ச்சேரும் பகைபழிபாவமென்று, அச்
சத்தோடிந்நாற்பொருள்" என்றது, நாலடி. இருமை - இம்மைமறுமை
என்ற இவற்றின் பயன். பகை அச்சம் குடிப்பழிஎன்பனவிளைதலால் இம்
மைப்பயனையிழத்தலும், பாவம்விளைதலால் மறுமைப்பயனையிழத்தலும் நேரு
மென்பதை அறிந்தோமென்க. பிறனில்விழைவான்கட் குற்றம் - பிறன்
மனைவியைவிரும்பிச்செல்வோனிடம் நேர்படுங் குற்றம். (௬)

கசஎ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

(இ - ள்.) அறன் இயலான் இல்வாழ்வான்

என்பான் - அறஞ்கிய
இயல்போடுகூடி இல்வாழ்வானென்று
சொல்லப்படுவான்,—பிறன் இய
லாள் பெண்மை நயவாதவன் - பிறனுக்குஉரிமைபூண்டு
அவனுடையஇயல்
பின்கண்ணேநிற்பாளது பெண்தன்மையை விரும்பாதவன்;
(எ - று.)
ஆனுருபு, ஈண்டு உடனிகழ்ச்சிக்கண்வந்தது.
இல்லறஞ்செய்வானெ
னப்படுவான், அவனே யென்பதாம்.
(கு - ரை.) ஆனுருபு, 'இயலான்' என்ற
இடத்திலுள்ளது. இலட்சு
மணனோடு இராமன்வந்தான் என்றஇடத்து
இராமனுடைய வருதல்தொழி
லில் இலட்சுமணனுக்கும் உடனிகழ்ச்சி யேற்படுதல்போல,
இங்கும் பிறனிய
லாள் பெண்மைநயவாதவனுடைய
வாழ்தல்தொழிலில் அறனியலுக்கும் உட
னிகழ்ச்சி யேற்படுதல் காண்க. ஆகவே, பிறனியலாள்
பெண்மைநயவாதவன்
வாழ்க்கையிலேயே அறன் இயலும்: பிறனியலாள்
பெண்மைநயப்பவன்
வாழ்க் கை யிலோ
அறன் இயலாதென்க:இவ்வாறுஏற்படுவதனால்,இல்லறத்தை
நடத்துபவ னென்பான்,பிறனில்விழையாதவனே யென்பது

பெறப்படும்.(எ)

கசஅ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ வான்ற வொழுக்கு.

(இ - ள்.) பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை - பிறன் மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண்டகைமை, சான்றோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு - சால்புடையார்க்கு அறனுமாம், நிரம்பிய ஒழுக்கமுமாம்; (எ - று.)

புறப்பகைகளையடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குதற்கு அருமையின்; அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மை யென்றார். 'ஒன்றோ' என்பது - எண்ணிடைச்சொல். செய்தற்கு அரிய அறனும் ஒழுக்கமும் இதனைச் செய்யாமையே பயக்கு மென்பதாம்.

(கு - ரை.) உட்கொள்ளாத - மனத்தினால் விரும்பாத. புறப்பகையை வெல்வது ஆண்மை: அகப்பகையாகிய காமத்தை வெல்வதோ பேராண்மை யென்க. உட்பகை - வெளிப்படையாகவுள்ள பகைவர்க்குப் புகுதற்கு இடனை யுண்டாக்கிக்கொடுத்து அப்பகைவெல்லும் வரையிலும் நட்புப்போன்று உட

ஞய்கிற்கும் பகை: அவை காமம் வெகுளி கடும்பற்றுள்ளம் மானம் உவகை

## கரு - ஆம் அதிகாரம்—பிறனில்விழையாமை



மதம் என்று ஆறுவகைப்படும்: இவ்வாறனுள் மற்றவற்றிற்குங் காரணமாய் ஒழித்தற்கு அரிய தாதலால், 'உட்பகையாகிய காமம் அடக்குதற்கு அருமையின்' எனப்பட்டது. அறனொன்றோ என்ற இடத்துள்ள ஒன்றோ என்பது -
அறனுமாம் ஒழுக்கமுமாம் என்று எண்ணுப்பொருள்பட்டு வந்ததனால், எண்ணிடைச்சொல். ஆன்ற - பெயரெச்சம்: இது, சான்ற என்பதன் மரூஉ. இதனை - பிறன்மனையாளை நயத்தலே. பிறர்மனைநயவாமையே அறனையும் ஒழுக்கத்தையும் உண்டாக்கு மென்பதாம். (அ)

கசகூ. நலக்குரியார் யாரெனி னமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

(இ - ள்.) நாம நீர் வைப்பின் - அச்சந்தருங் கடலாற் சூழப்பட்ட உலகத்து, நலக்கு உரியார் யார் எனின் - எல்லாநன்மைகளும் எய்துதற்கு உரி யார் யாவரெனின்,—பிறற்கு உரியாள் தோள் தோயாதார் - பிறனொருவ னுக்கு உரிமையாகியாளுடைய தோளைச் சேராதார்; (எ - று.)

அகலம் ஆழம் பொருளுடைமை முதலியவற்றான் அளவிடப்படாமை யின், 'நாமநீர்' என்றார். உரிச்சொல்லீறு

திரிந்து நின்றது. நலத்திற்கென்பது நலக்கெனக் குறைந்து நின்றது. இருமையினும் நன்மையெய்துவரென்பதாம்.

(கு - ரை.) பொருளுடைமை - சங்கு பவழம் முத்து முதலிய பொருள்களையுடைமை. கடல், அகலம் ஆழம் சங்குமுதலியபலவகைப்பொருள்என்ற
இவற்றையுடைமையால் அச்சத்தைத் தருமென்க.
உங்கிளவி, ஆமுறைநான்கும் அச்சப்பொருள" என்ற

"பேநாமுருமென வரூ
தொல்காப்பியச் சூத்தி
ரத்தின்படி'நாம்'என்று மகரவீருனசொல்'நாம'என அகரவீருக வந்ததனுல், 'உரிச்சொல்லீறு திரிந்து நின்றது'என்ருர். நலம் என்ற மகரவீற்றுச்சொல் வேற்றுமையுருபில் "மஃகான்புள்ளிக்கத்தேசாரியை" என்ற தொல்காப் பியத்தால், நலத்துக்கு என்று அத்துச்சாரியை பெற்று வரவேண்டியதாக இருக்க, அங்ஙன் வராது'நலக்கு'என வந்ததனுல், சாரியை செய்யுள்விகாரத் தால் தொக்கதாகும். 'நலக்குரியார்'எனப் பொதுப்படக் கூறியதனுல், பிறன் மனைநயவாதார் இருமையின்பமும் பெறுவரென்று கூறியவாருயிற்று. (க)

கடு0. அறன்வரையா னல்ல செயினும்
பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

(இ - ள்.) அறன் வரையான் அல்ல செயின்உம் - (ஒருவன்) அறத்தை(த் தனக்கு) உரித்தாகச்செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும்,—(அவனுக்கு), பிறன்

வரையாள் - பிறனெல்லைக்கண் நிற்பாளது, பெண்மை - பெண்மையை, நயவாமை - விரும்பாமை (உண்டாயின்), (அது), நன்று—.

இக்குணமே மேற்பட்டுத் தோன்று மென்பதாம்.

இவை நான்குபாட்டானும் பிறனில்விழையாதான்கட் குணம் கூறப்பட்டது.

(கு - ரை.) வரையாள் - 'வரை' என்ற பகுதியினடியாப்பிறந்த எதிர் மறை முற்றெச்சம். 'அறன்' என்று முதலிற்கூறி, பிறகு 'அல்ல' எனக்



கூறியதனுல், அச்சொல் அறனல்லாதவற்றை [பாவச்செயல்களை]க் காட்டும்: அஃறிணைப்பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். செயினும், உம்மை - இழிவுசிறப்பு. பிறர்மனைநயவாமை யென்ற குணமொன்றுமே பாவச்செயல்களைச் செய்வானுடைய தீக்குணங்களை யெல்லாம் அடக்கித் தான் மேற்பட்டுத்தோன்று மென்றவாறு. விழையாதான்கண் - விரும்பாதவனிடத்தில். (கo)

# கரு - ஆம் அதிகாரம்—பொறையுடைமை.

அஃதாவது - *காரணம்பற்றியாதல் மடமையானுதல் ஒருவன் தமக்கு

மிகைசெய்தவழித் தாமும் அதனை அவன்கட்செய்யாது பொறுத்தலையுடை

யரர்தல். † நெறியினீங்கியசெய்தாரையும் பொறுக்கவேண்டு மென்றற்கு,

இது, பிறனில்விழையாமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மடமையானுதல் - அறியாமையாலாவது. மிகை செய்த வழி - குற்றஞ்செய்தவிடத்து. பொறை - தொழிற்பெயர்; பொறு - பகுதி, ஐ - விகுதி. நெறியின் நீங்கிய - வரம்புகடந்த செயல்களை. 'பிறர்மனையவா தவர் தீயதொழில்களைச் செய்யார்:ஒருகால்செய்யினும் அதனைப் பொறுத்தல் வேண்டும்'என்ற கருத்தால், பிறனில் விழையாமையின்பின் பொறை யுடைமையை வைத்தா ரென்றலும் ஒன்று.

கஙக. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை

யிகழ்வார்ப் பொறுத்த றலை.

(இ - ள்.) அகழ்வாரை தாங்கும் நிலம் போல - (தன்னை) அகழ்வாரை (வீழாமல்) தாங்கும் நிலம்போல, தம்மை இகழ்வார் பொறுத்தல் - தம்மை அவமதிப்பாரைப் பொறுத்தல், தலை - தலையாய அறம்; (எ - று.)

இகழ்தல் - மிகையாயின செய்தலும், சொல்லுதலும்.

(கு - ரை.) அகழ்வார் - தோண்டுகிறவர். தாங்கும் - தரிக்கும். தலை யாய - சிறந்த; உத்தமமான. மிகையாயின - குற்றமானவற்றை. 'அகழ்வாரைத் தாங்கு நிலம்போல' என்ற உவமையால், தம்மைக்

கொலைசெய்வதை

யொத்த குற்றங்களைச் செய்பவர்களையும் பொறுத்துப் பாதுகாத்தல்வேண்டு

மென அறிக. எல்லாவற்றையும் பொறுத்தலில் பூமி மிகச்சிறந்த தாதலை

"ஸர்வம்ஸஹா" என்னும் அதன்வடமொழிப்பெயரானும் உணர்க; "க்ஷமயா

ப்ருதிவீஸம:" என ஸ்ரீவால்மீகிபகவாந் அருளிச்செய்திருத்தலுங் காண்க.

உவமையணி. 'இகழ்வார்ப்பொறுத்தல்' என்றதில், உயர்திணையிடத்து ஐயு

ருபு தொக்கது. "மலை நிலம் பூவே துலாக்கோலென் றின்னர், உலைவி

லுணர்வுடையோர்," "நிலத்தி னியல்பே நினைக்குங் காலைப், பொறையுடை . மையொடு செய்பாங்கமைந்தபின், விளைதல்வண்மையும் போய்ச்சார்ந்தோ

---

* பி - ம்: அறிந்தாதல். † பி - ம்: பிறனில்விழையாமைபோல, ஒரு

தலையாகவேண்டுதலின் இதுவும் அதன்பின் வைக்கப்பட்டது.

## கரு - ஆம்

அதிகாரம்—பொறையுடைமை. க0ாடை, இடுதலு

மெடுத்தலு மின்னண மாக, இயையக் கூறுப இயல்புணர்ந் தோரே," "தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும், பருவ முயற்சி யளவிற் பயத்தலும், மருவிய நன்னில மாண்பாகும்மே" என்பவையும் உணரத்தக்கன. 'பொறுத்தா ரென்று இகழ்வாரில்லை: அதனைத் தலைமையாகக்கொள்வார் உலகத்தார்' என்பது, மணக்குடியருரைவாக்கியம். (க)

கருஉ. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(இ - ள்.) என்றும் இறப்பினை பொறுத்தல் - (பொறை நன்றாகலான்) தாம் ஒறுத்தற்கு இயன்றகாலத்தும் (பிறர்செய்த) மிகையைப் பொறுக்க; அதனை மறத்தல் அதனினும் நன்று - அதனை (உட்கொள்ளாது அப்பொழுதே) மறத்தல் (பெறின்) அப்பொறையினும் நன்று; (எ - று.)

'மிகை' என்றது, மேற்சொல்லிய இரண்டனையும். பொறுக்குங்காலும் உட்கொள்ளப்படுதலின், மறத்தலை 'அதனினும் நன்று' என்றார்.

(கு - ரை.) ஒறுத்தற்கு இயன்றகாலத்தும் - தண்டிக்கக்கூடியகாலத்திலும். அதனை உட்கொள்ளாது - அப்பிழையை மனத்திலே வையாமல். மேற்சொல்லிய இரண்டு - குற்றஞ்செய்தலும், குற்றஞ்சொல்லுதலும். பொறுக்குங்காலும் - பொறுக்கும் போதும். பொறுக்கும்போதும் குற்றத்தை

மனத்திலெண்ணிப்பொறுக்கவேண்டும்: மறந்திட்டாலோ குற்றத்தை மனத்திலும் கொள்ளவேண்டியதில்லை: ஆதலால், பொறுத்தலினும் மறத்தல் நன்றென்றூர். இறப்பு - முறைமையைக்கடந்த ஒழுக்கம்: தொழிலாகு பெயர். பொறுத்தல் - உடன்பாட்டுவியங்கோள். இங்கு 'அதனை, மறத்த லதனினு நன்று' என்பதை, கீழ் ௧௦அ-ஆம் குறளில் "நன்றல்லது, அன்றே
மறப்பது நன்று" என்றதனேடு ஒப்பிடுக.

(உ)

௧௫௩. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்

வன்மை மடவார்ப் பொறை.

(இ - ள்.) இன்மையுள் இன்மை - (ஒருவனுக்கு) வறுமையுள்வைத்து வறுமையாவது,—விருந்து ஒரால் - விருந்ினரை (ஏற்றுக்கொள்ளாது) நீக்குதல்; வன்மையுள் வன்மை - (அதுபோல) வன்மையுள்வைத்து * வன்மையாவது,—மடவார் பொறை - † அறிவின்மையான் மிகைசெய்தாரைப் பொறுத்தல்; (எ - று.)

இஃது, எடுத்துக்காட்டுவமை. அறனல்லாத விருந்தொரால் பொருளுடைமை யாகாதவாறுபோல, மடவார்ப்பொறையும் ‡மென்மையாகாதென் பது, கருத்து.

---

* பி - ம்: வலிமை.

†பி-ம் :

அறியார்மாட்டுக்குற்றம்நிகழ்ந்துழிஅக்குற்றத்தைப்பொறுத்தல்.

‡ பி - ம்: மென்மையாகாதே வன்மையா

மென்பது கருத்து.



(கு - ரை.) வறுமையுள்வைத்து - தரித்திரனுயிருக்குந்தன்மை பலவற்றுள்ளும். வைத்து - வாக்கியாலங்காரமாய்வரும் சொல்விழுக்காடு. வறுமையென்பது ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படும் பொருள்களுள் ஒன்றும் இல்லாமை யாதலால், இன்மையெனப்பட்டது. வன்மை - வல்லமை. விருந்தொரால் - விருந்தினர்களை நீக்குதல். பொருளுடைமைக்குப் பயன் விருந்தோம்புதலாதலாலும், வந்தவிருந்தினரை ஒருவுதல் அறனல்லாததாம் ஆதலாலும், அறனல்லாததான விருந்தொராலைப்புரிபவனுடைய செல்வ முடைமை பொருளுடைமை யெனப்படா: வறுமை யெனப்படும். அது போலவே, மடவார்ப்பொறையும் மென் மையெனப்படா: வன்மையெனப் படும் என்பது கருத்து. இதனால், விருந்துவிலக்குதலின் மேற்பட்ட வறுமையும், ஒருவர்செய்த குற்றத்தைப் பொறுத்து அவரைப் பாதுகாத்தலின் மேற்பட்ட வல்லமையும் உலகத்தில் இல்லையென்பதாம். விருந்தோம் பினவன் வேறுபொருளிலனாயினும் பொருளுடையனாக மதிக்கப் படுவன்; அதுபோலவே, பிழைசெய்தாரைப் பொறுத்தவன்

ஐம்பொறியடக்கல்
முதலிய வேறுவல்லமைகள் இல்லாதவனாயினும் எல்லாவல்லமைகளும்
உடையவனாகவே நன்குமதிக்கப்படுவ னென்க. ஓரால் - தொழிற்பெயர்; ஒருவுஎன்பதன் மரூஉவாகிய ஒரு - பகுதி: ஆல் - தொழிற்பெயர்விகுதி: 'சுற்றந்தழால்' என்பதிற்போல. மடவார் - மடமையுடையார். இன்மையுளின்மை விருந்தொரால்—கீழ் விருந்தோம்பலென்னும் அதிகாரத்தில் "உடை மையு ளின்மை விருந்தோம்ப லோம்பா, மடமை மடவார்க ணுண்டு" என்ற தையும் நோக்குக. இன்மையுள் இன்மை-மிக்கவறுமை; வன்மையுள்வன்மை- மிக்கவன்மை; "செல்வத்துட் செல்வம்," "இன்பத்துள் இன்பம்," "துன் பத்துள் துன்பம்" என்பன போலக் கொள்க.
(ந)

கஙிச. நிறையுடைமை நீங்காமை வேண்டிற்
பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

(இ - ள்.) நிறை உடைமை நீங்காமை வேண்டின்-(ஒருவன்)சால்புடை மை (தன்கணின்று) நீங்காமை வேண்டுவனாயின், பொறை உடைமை போற்றி ஒழுகப்படும் - (அவனால்) பொறையுடைமை (தன்கண் அழியாமல்) காத்து ஒழுகப்படும்; (எ - று.)

பொறையுடையாற் கல்லது சால்பில்லை யென்பதாயிற்று.

இவை நான்குபாட்டானும்,பொறையுடைமையது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) நிறையுடைமை - எல்லா நற்குணங்களுங் குறைவுபடாமல் நிறைந்திருத்தலையுடைமை. நிறை - முதனிலைத்தொழிற்பெயர்; குணபூர்த்தி. பொறுமையுடையவனே எல்லாநற்குணங்களும் நிறைந்தவனென்றுகருத்து. நிறை - உறுதிப்பாடு என்றும் பொருள்கொள்ளலாம். 'நிறையென்பது, காப்பன காத்துக் கடிவனகடிந்து ஒழுகும் ஒழுக்கம்' என்பது; மணக்குடியருரை.

க ருடு.

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.



(இ - ள்.) ஒறுத்தாரை - (பிறன் தமக்குத் தீங்குசெய்தவழிப் பொறாது அவனை) ஒறுத்தாரை, ஒன்றாக வையார் - (அறிவுடையார்) ஒருபொருளாக மனத்துக்கொள்ளார்; பொறுத்தாரை - (அதனைப்) பொறுத்தாரை, பொன் போல் பொதிந்து வைப்பர் - பொன்போற் பொதிந்து கொள்வர்; (எ-று.)

ஒறுத்தவர் தாமும் அத்தீங்குசெய்து அவனோ
டொத்தலின், 'ஒன்றாக
வையார்' என்றார். பொதிந்துவைத்தல் -
நினைத்தல்.
சால்புடைமைபற்றி இடைவிடாது

(கு - ரை.) ஒறுத்தார் - கண்டித்தவர்.
ஒன்றாகவையார்-ஒருபொருளாக
மதியார். பொதிந்து கொள்வர் - பத்திரமாய் மனத்தில்
வைப்பர். அவனோடு-
முதலில்தீங்குசெய்தவனோடு. ஏ - தேற்றம்.
(௫)
கருசு.

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.
(இ - ள்.) ஒறுத்தார்க்கு - (தமக்குத்
தீங்குசெய்தவனை) ஒறுத்தார்க்கு
(உண்டாவது), ஒரு நாளை இன்பம் -
அவ்வொருநாளையின்பமே; பொறுத்
தார்க்கு - (அதனைப்)பொறுத்தார்க்கு, பொன்றும் துணைஉம்
புகழ் - (உலகம்)
அழியுமளவும் புகழ் (உண்டாம்); (எ - று.)
ஒருநாளையின்பம் - அந்நாளொன்றினு ம்

'கருதியதுமுடித்தேம்' எனத் தருக்கியிருக்கும் பொய்யின்பம். ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்று மாகலின், ஏற்புடைய 'உலகு' என்னுஞ் சொல் வருவித்து உரைக் கப்பட்டது.

(கு - ரை.) தருக்கியிருக்கும்-களித்திருக்கின்ற. 'பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும் புகழ்' என்றதனால், 'ஒறுத்தார்க்கொருநாளை யின்பம்' என்ற விடத்து 'பழியொடு பட்ட இன்பம்' என்க. நாளை—ஐ - சாரியை. "ஒன்று வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்" ஆதலால், 'உலகம் பொன்றுந் துணையும் புகழ்'எனப்பட்டது. உண்டாமென்னும் வினை வருவித்து, இரண்டு வாக்கியங்களையும் முடித்தல்வேண்டும். பொன்றுந்துணையும் என்பதற்கு-தாம் இறக்குமளவும் என்று பொருள் கூறுதல் சிறவாமை அறிக.

'ஒருநாளை யின்பம்' என்பதும், 'பொன்றுந் துணையும் புகழ்' என்பதும்-மணக் குடிய ருரையின்பாடம். 'இது, புகழுண்டாம் என்றது' என்பது, மணக் குடியருரை.

(௬)

கடுஎ. திறனல்ல தற்பிறர் செய்யினு
நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(இ - ள்.) திறன் அல்ல - செய்யத்தகாத
கொடியவற்றை, தன் பிறர்
செய்யின் உம்-தன்கட் பிறர் செய்தாராயினும், நோ
நொந்து-(அவர்க்கு அதனுல்
வருந்) துன்பத்திற்கு நொந்து, அறன் அல்ல செய்யாமை -
(தான்) அறனல்
லாத செயல்களைச் செய்யாதிருத்தல்;
நன்று - (ஒருவனுக்கு) நன்று; (எ-று.)

உம்மை - சிறப்பும்மை. துன்பத்திற்கு நோதலாவது -
"உம்மை, யெரி
வாய் நிரயத்து வீழ்வர்கொல்" என்று பரிதல்.



(கு - ரை.) செய்யாமை - அவரிடத்துச்
செய்யாதிருப்பது. சிறப்பும்மை-
இழிவுசிறப்பும்மை. "உம்மை, யெரிவாய் நிரயத்து
வீழ்வர்கொல்" என்னும்
மேற்கோள் - நாலடியாரில் "தம்மை யிகழ்ந்தமை
தாம்பொறுப்ப தன்றிமற்,
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை,
யெரிவாய்நிரயத்து வீழ்வர் கொலென்று, பரிவதூஉஞ்

சான்றோர்கடன்'' என்ற செய்யுளில் உள்ளது; இச் செய்யுளுக்கு-ஒருதீங்குஞ்செய்யாத தம்மைப் பிறர் இகழ்ந்ததைத் தாம் பொறுப்பதுமாத்திரமேயல்லாமல் 'நம்மை நிந்தித்ததனாலாகிய தீவினையின் விளைவினால் மறுமையில் இவர் தீநிரம்பிய நரகத்தில்வீழ்வரே!' என்று இரங்கு வதுஞ் சால்புடையோர்க்குக் கடமையாம் என்று பொருள். நோ - நொ என் னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். 'நோ நொந்து' என்பதற்கு - (தான் செய்யுந் தீங்குகளால் அவர்க்கு உண்டாகுந்) துன்பத்திற்கு வருந்தி என்றும் பொருள்கொள்ளலாம். தன் - ஏழாம் வேற்றுமைத்தொகை. (எ)

கஙஅ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

(இ - ள்.) மிகுதியான் - மனச்செருக்கால், மிக்கவை செய்தாரை - (தங் கண்) தீயவற்றைச்செய்தாரை, தாம் தம் தகுதியான் வென்றுவிடல் - தாம் தம்முடைய பொறையான் வென்றுவிடுக; (எ - று.)

தாமும் அவர்கண் தீயவற்றைச்செய்து தோலாது பொறையான் அவரின் மேம்பட்டு வெல்க வென்பதாம்.

இவைநான்குபாட்டானும், பிறர் செய்தன பொறுத்தல் சொல்லப் பட்டது.

(கு - ரை.) வென்றுவிடுக-ஜயித்துவிடக்கடவர்.

தோலாது - தோற்றுப் போகாமல். மிகுதி - முறைமைகடந்தது. மிக்கவை - முறைமை கடந்தவை. வென்றுவிடல் - 'அல்' ஈற்று உடன்பாட்டு வியங்கோள். தகுதி-தக்ககுணம். தமக்குத் தீங்குசெய்தவர்களுக்குத் தாமுந் தீங்குசெய்தால் தாமும் அவர்களை யொத்துக்கீழ்ப்படுவர்; ஆதலால், அங்ஙனஞ்செய்யாமல் பொறுமையால் அவ ரினும் மேற்பட்டு அவரைவெல்லவேண்டு மென்பது கருத்து; "வெல்வது, வேண்டின் வெகுளி விடல்" என்ற நான்மணிக்கடிகையையுங் காண்க. 'இது, பொறுத்தானென்று தோல்வியாகாது அதுதானேவெற்றியாமென்றது' என்பது, மணக்குடி ய ருரைவாக்கியம் .
(அ)

கடுசு. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா யின்னுச்சொ னோற்கிற் பவர்.

(இ - ள்.) துறந்தாரின் தூய்மை உடையர் - (இல்வாழ்க்கைக்கண் நின்றேயும்) துறந்தார்போலத் தூய்மையுடையார்: இறந்தார் வாய் இன்னு சொல் நோற்கிற்பவர் - நெறியைக்கடந்தார்வாய் இன்னாதசொல்லைப் பொறுப்பவர்.

தூய்மை - மனமாசின்மை. 'வாய்' என வேண்டாது கூறினர், 'தீய

சொற்கள் பயின்றது' எனத் தாம் வேண்டியதன் இழிபு முடித்தற்கு.

கள - ஆம் அதிகாரம்—அழுக்காறுமை

கoள

(கு - ரை.) துறந்தார்-உலகியல்பையும் இல்லறவாழ்க்கையின் நிலையில்லாமையையும் அறிந்து கடவுளின் தன்மையைத்தெரிந்து வீடுஅடையும்பொருட்டுத் தேகஅபிமானம்முதலிய எல்லாவற்றையும் முழுவதும் விட்ட முனிவர். தூய்மை - பரிசுத்தகுணம்; மனத்தில் காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றங்கள் இல்லாத தன்மை. நெறியைக்கடந்தார்வாயின்னாதசொல் - முறைமைதவறினவரது வாயாற் சொல்லப்படுகிற இனிமையல்லாத சொல். நோற்கிற்பவர் - பலர்பால்வினையாலணையும் பெயர். 'இது, பற்றறத்துறந்தவரோடொப்பரென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம். துறந்தாரின், இன் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது: எல்லைப்பொருளதாகக் கொண்டு, துறந்தவரினுந் தூய்மையுடையரென்றலும் ஒன்று. வாய்ச்சொல் - கஙக - ஆம் குறளிலும் காண்க.

(க)

கசுO.

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

(இ - ள்.) உண்ணாது நோற்பார் - (விரதங்களான்) ஊணைத்தவிர்ந்து (உற்றநோயைப்) பொறுப்பார், பெரியர் - (எல்லாரினும்) பெரியர்; பிறர் சொல்லும் இன்னா சொல் நோற்பாரின் பின் - (அவர் பெரியராவது தம்மைப்) பிறர்சொல்லும் இன்னாதசொல்லைப் பொறுப்பாரிற் பின்; (எ - று.)

பிறர் - அறிவிலாதார். நோலாமைக்கு ஏதுவாகிய இருவகைப்பற்றொடு நின்றே நோற்றலின், 'இன்னாச்சொல்நோற்பாரிற் பின்' என்றார்.

இவை யிரண்டுபாட்டானும், பிறர்மிகைக்கச்சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது.

(கு - ரை.) ஊணைத்தவிர்ந்து - போஜனத்தைவிட்டு. உற்ற நோயைபசி, தாகம் முதலியவற்றால் தம்மையடைந்த நோயை. துறந்தவர் யாவரினுஞ் சிறந்தவராதலை "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர், செயற்கரிய செய் கலா தார்" என்பது முதலிய நீத்தார்பெருமையென்னு மதிகாரத்துத் திருக்குறள்களால் அறிக. பொறுப்பாரிற்பின் - பொறுப்பவர்களின்பின். நோலாமைக்கு ஏதுவாகிய இருவகைப்பற்று - பொறுக்கமாட்டாமைக்குக் காரண மான அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப்பற்றுக்கள். அகப்பற்று - அகங்காரம். புறப்பற்று -மமகாரம். நோற்றலின் -

பொறுத்தலால். மிகைக்கச் சொல்லியன - வரம்புகடக்கச் சொன்னவற்றை. இல்லறத்திலிருந்தே பற்றுக்களைவிடாமற் பொறுமையுடையவர், பற்றுக்களை விட்டுத் துறவறத்தை யடைந்து பொறுமையுடையவரினும் மேம்பட்டவ ரென்று கருத்து. "ஆக்க வினைக்குறிப்பு ஆக்கமின்றியலா" என்னும் விதியினால், 'பெரியர்' என்னும் ஆக்கவினைக்குறிப்பு, 'ஆவர்' என்னும் ஆக்கச்சொல்வருவித்துமுடிக்கப்பட்டது. 'இது, தவம்பண்ணுவாரினும் பெரிய ரென்றது' என்பது, மணக்குடியருரை.

## கஎ - ஆம்

## அதிகாரம்—அழுக்காறாமை.

இதனுள் 'அழுக்காறு' என்பது, ஒருசொல். அதற்குப்பொருள் மேலே உரைத்தாம். அச்சொல் - பின், அழுக்காற்றைச் செய்யாமை யென்னும் க௦உ

பொருள்பட, எதிர்மறைஆகாரமும் மகரஐகார விகுதியும் பெற்று, 'அழுக் காறுமை' என நின்றது. இப்பொறாமையும் பொறைக்குமறுதலே யாகலின், இதனை விலக்குதற்கு, இது, பொறையுடைமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) அழுக்காறு என்பதை - அழுக்கு ஆறு என இரண்டுசொல் லாகக் கொள்ளாமல், அழுக்கறு என்னும் முதனிலே திரிந்துவந்த தொழிற் பெயராகவாயினும் பண்புப்பெயராகவாயினும் கொள்ளவேண்டு மென்பார், 'ஒருசொல்' என்றார். மேலே உரைத்தாம் - ''அழுக்கா றவாவெகுளி'' என் னும் ௩௫ - வது குறளிற் கூறினோம்; அங்குக் கூறியபொருள் - பிறராக்கம் பொறாமை யென்பது. ஆக்கம் - செல்வம் முதலியன. அழுக்காறுமை - எதிர் மறைத்தொழிற்பெயர். அழுக்கறுமை யென்றிருப்பது, நலம். மறுதலே - எதிராயுள்ளது.

௧௬௧. ஒழுக்காறுக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்

தழுக்கா றிலாத வியல்பு.

(இ - ள்.) ஒருவன்—,தன் நெஞ்சத்து - தன் நெஞ்சத்தின்கண், அழுக் காறு இலாத - அழுக்காறென்னுங்குற்றம் இல்லாத, இயல்பு - இயல்பினை, ஒழுக்கு ஆறு ஆ கொள்க-(தனக்கு ஒதிய) ஒழுக்கநெறியாகக் கொள்க;(எ-று.)

இயல்பு - அறிவோடுகூடிய தன்மை. அத்தன்மையும் நன்மைபயத்த லின், ஒழுக்கநெறிபோல உயிரினும் ஓம்புக வென்பதாம்.

(கு - ரை.) இயல்பு - குணம்: ஒதிய-௧௪-ஆம் அதிகாரத்திற் சொன்ன. பயத்தலின் - தருதலால். ''ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம், உயிரினு மோம்பப் படும்'' என்பதனை உட்கொண்டு, ஒழுக்கநெறியைப்போல் உயிரைக் காட்டிலுஞ் சிறந்ததாகக்கொண்டு பாதுகாக்க வேண்டு மென்றார். ஒழுக்கு ஆறு என்பதை - ஒழுக்கமாகியவழி எனப் பண்புத்தொகையாகவாயினும்

ஒழுக்கத்தினதுவழியென ஆறும்வேற்றுமைத்தொகையாகவாயினுங்கொள்க. 'இது, அழுக்காறு தவிரவேண்டு மென்றது' என்பது, மணக்குடியருரை. (௧)

௧௬௨. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார்

மாட்டு

மழுக்காற்றி னன்மை பெறின்.

(இ - ள்.) யார்மாட்டும்-யாவர்மாட்டும், அழுக்காற்றின் அன்மை - அழுக் காற்றினின்று நீங்குதலை, பெறின்-(ஒருவன்) பெறுமாயின்,—விழு பேற்றின் அஃது ஒப்பது இல்லை - (மற்றுஅவன்பெறும்) சீரியபேறுகளுள் அப்பேற் றினை ஒப்பது இல்லை; (எ - று.)

அழுக்காறு பகைவர்மாட்டும் ஒழிதற்பாற் றென்பார், 'யார்மாட்டும்' என்றார். அன்மை - வேறுதல்.

இவையிரண்டுபாட்டானும், அழுக்காறின்மையதுகுணம் கூறப்பட்டது.

(கு - ரை.) பெறும் - பெறுவான். மற்று - பின்பு. சீரியபேறுகளுள் - நல்ல பாக்கியங்களுள். அப்பேற்றினை - அழுக்காறில்லாமையை. பகைவர் மாட்டும் - பகைவரிடத்தும். ஒழிதற்பாற்று-நீங்கத்தக்கது. அன்மை - ஒரு

-

## கஎ - ஆம் அதிகாரம்—அழுக்காறாமை

கூ0கூ

பொருளை மறுத்து அதற்குஇனமானதைச் சொல்வதென்றும், இன்மை-இல் லாததைச்சொல்வ தென்றும் வேறுபாடறிக.

சீர்மையென்னும் பொருளுணர்த்துகிற
விழுமமென்னும்உரிச்சொல், ஈறுதொக்கு 'பேறு' என்பதனோடு புணர்ந்தது. பேறு - பெறப்படுவது; செயப்படுபொருள்விகுதி புணர்ந்து
கெட்டுமுதனிலைதிரிந்தபெயர்; இன் - எழனுருபு. அஃதொப்பது-ஆய்தம், மெய்போல ஒலித்தது. ஒப்பது-பெயர். 'இது அழுக்காறு செய்யாமை எல்லா நன்மையினும் மிக்கது என்றது' என்பது, மணக்குடியருரை.
(உ)

கருரு. அறனாக்கம் வேண்டாதா னென்பான்
பேணா தழுக்கறுப் பான்.

பிறனாக்கம்

(இ - ள்.) அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான் - (மறுமைக்கும் இம்மைக்கும்)அறமும் செல்வமும் ஆகிய உறுப்புக்களை(த் தனக்கு) வேண்டா தானென்று சொல்லப்படுவான்,—பிறன் ஆக்கம் பேணாது அழுக்கறுப்பான்- பிறன்செல்வ ம் கண்டவழி (அதற்கு) உவவாது அழுக்காற்றைச் செய்வான்.

அழுக்கறுத்த லெனினும், அழுக்கா றெனினும் ஒக்கும். அழுக்காறு செய்யின், தனக்கே ஏதமா மென்பதாம்.

(கு - ரை.) பொறாமைக்காரன்,
மறுமைக்குப்புண்ணியமும் இம்மைக் குச் செல்வமும் ஆகிய புருஷார்த்தங்களை விரும்பாதவ னென்க. பொறாமைப் படுபவனுக்கு மறுமையிற் பாவமுண் டாவதனோடு இம்மையிற் செல்வமுமழி
யும் என்பது கருத்து. உவவாது-மகிழாமல். ஏதமாம் -

கெடுதியாகும். 'இது, அழுக்காறுடையாற்குப் புண்ணியமில்லையா மென்று கூறிற்று' என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

(ஙு)

கசுசு .

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) அழுக்காற்றின் - அழுக்காறுஏதுவாக, அல்லவை செய் யார் - அறனல்லவற்றைச் செய்யார் (அறிவுடையார்); இழுக்கு ஆற்றின் - அத்தீநெறியால், ஏதம் படுபாக்கு - (தமக்கு இருமையினும்) துன்பம் வருதலை, அறிந்து—; (எ - று.)

அறனல்லவையாவன - செல்வம் கல்வி முதலியன உடையார்கண் தீங்குநினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம்.

(கு - ரை.) அழுக்காற்றின், இழுக்காற்றின் என்ற சொற்களிலுள்ள ஐந்தனுருபுகள், ஏதுப்பொருளன. அறனல்லவை-பாவங்கள். அறிவுடையா ரென்பது - தோன்றாஎழுவாய். இழுக்காகிய ஆறுஎன்க; இழுக்கு - குற்றம்,
ஆறு - வழி. இருமையினுந் துன்பம் வருதல் - மறுமையில் நரகவேதனையும்

இம்மையில் வறுமைத்துன்பமும் உண்டாதல்.
உடையார்கண் - உடையவ
ரிடத்தில். படுபாக்கு, பாக்கு - தொழிற்பெயர்விகுதி.
முதலியன என்ற
தனுல், செல்வாக்கு ஆண்மை அதிகாரம் முதலியன கொள்க. (ச)

கசுரு.

அழுக்கா றுடையார்க் கதுசா லுமொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.



(இ - ள்.) (அழுக்காறு), ஒன்னார் வழுக்கிஉம் - பகைவரை ஒழிந்தும்,
கேடு ஈன்பது - கேடு பயப்ப தொன்று; (ஆகலின்), அழுக்காறு உடையார்
க்கு - அவ்வழுக்காறுடையார்க்கு, அது சாலும் - (பகைவர்வேண்டா, கேடு
பயத்தற்கு) அதுதானே அமையும்; (எ - று.)
'அதுவே' என்னும் பிரிநிலையேகாரம், விகாரத்தால் தொக்கது.
(கு - ரை.) அழுக்காறு பகைவரையொழிந்துங்

கேடுபயப்பதொன் று -
பொறுமையானது பகைவர்களில்லாமலே
கெடுதியைத்தருவதொரு துர்க்
குண மாம்: அதுதானே அமையு ம் -
அவ்வழுக்காறென்றே போதும். பிரி
நிலை ஏகாரம், பகைவர்களைப் பிரித்துநின்றது.
ஒன்னார்-ஒன்றார் என்பதன்
மரூஉ; எதிர்மறைவினையாலணையும்பெயர்: சேராதவ
ரென் று பொருள்;
எனவே, பகைவராயிற்று. உம்மை - சிறப்பு. ஈன்பது -
எதிர்காலவினையா
லணையும்பெயர்; தொழிற்பெயராக்கி, ஈன்பதற்கு
அதுசாலு மெனினுமாம்.
'இது, உயிர்க்கேடுவருமென்றுகூறிற்று' என்பது,
மணக்குடிய ருரை. (ரு)

கசுசு. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற
முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் -
(ஒருவன் பிறர்க்குக்)
கொடுப்பதன்கண் அழுக்காற்றைச்செய்வானது சுற்றம்,
உடுப்பது உம் உண்
பதுஉம் இன்றி கெடும் - உடுக்கப்படுவதும்
உண்ணப்படுவதும் இன்றிக்
கெடும்; (எ - று.)

கொடுப்பதன்கண் அழுக்கறுத்தலாவது -
கொடுக்கப்படும்பொருள்களைப்
பற்றிப் பொறுமைசெய்தல். 'சுற்றம் கெடும்' எனவே,
அவன்கேடு சொல்லா
மையே பெறப்பட்டது. பிறர்பேறுபொறுமை
தன்பேற்றையேயன்றித்
தன்சுற்றத்தின் பேற்றினையும் இழப்பிக்குமென்பதாம்.
(கு - ரை.) சுற்றம்-பந்துவர்க்கம்; (சுப அசுப
காலங்களில் ஒருவனைச்)
சுற்றி நிற்பது: அம் - கருத்தாப்பொருள் விகுதி.
உடுக்கப்படுவது - உடை,
உண்ணப்படுவது - உணவு. இவ்விரண்டுமில்லாம
லெனவே, மற்றைச் செல்
வங்களை யிழத்தல் கூறவேண்டாதாயிற்று. ஒருவன்
மற்றொருவனுக்கு ஒரு
பொருள் கொடுப்பதைக்குறித்துப்
பொறாமைப்படுபவனது சுற்றங் கெடு
மெனவே, அவன்கெடுதல் அருத்தாபத்தியாற்
பெறப்பட்டது. கொடுப்
பது -செயப்பாட்டுவினைப்பொருளில்வந்தசெய்வினை
வினையாலணையும்பெயர்;
உடுப்பது, உண்பது என்பனவும் இவ்வாறே:
இவையெல்லாம் - சாதியொ
ருமை. உடுப்பதூஉ முண்பதூஉம்என்ற இடத்து

இன்னிசை நிறைத்தற்
பொருட்டுக் குறில்நெடிலாய் அளபெடுத்தது;
இன்னிசையளபெடை. இக்
குறளின் கருத்தைப்பின் பற்றி, கம்பராமாயணத்தில்
வேள்விப்படலத்தில்
"எடுத்தொருவ ருக்கொருவ ரீவதனின் முன்னே,
தடுப்பதுநி னக்கழகி
தோதகைவில் வெள்ளி, கொடுப்பது
விலக்குகொடியோயுனது சுற்ற,
முடுப்பதுவு முண்பதுவுமின்றிவிடுகின்றாய்" என்றது.
"ஈவது விலக்கேல்"

## கஎ-ஆம் அதிகாரம்—அழுக்காறுமை

ககக

என்னும் ஔவையார் வார்த்தையையும் அறிக. 'இது,
றது' என்பது, மணக்குடிய ருரைவாக்கியம்.
'நல்குரவுதருமென்

(௬)

கசு எ .

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்.

(இ - ள்.) அழுக்காறு உடையானை - (பிறராக்கங்கண்டவழிப்) பொறாமையுடையானை, செய்யவள் - திருமகள், அவ்வித்து - (தானும்) பொறாது, தவ்வையை காட்டி விடும் - (தன்) தவ்வைக்குக் காட்டிநீக்கும்; (எ - று.)

தவ்வை - மூத்தவள். 'தவ்வையைக்காட்டி' என்பது, "அறிவுடையந் தண னவளைக்காட் டென்றானோ" என்பதுபோல, உருபுமயக்கம். மனத்தைக் கோடுவித்து அழுக்காறுடையனாயினானை யென்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.) திருமகள் - இலக்குமி. தன்தவ்வை - தனது தமக்கை. திருப்பாற்கடல் கடைந்தகாலத்து மூதேவி இலக்குமிக்கு முன்னே பிறந்தாள்; அதனால், இவர்களுக்கு முறையே மூத்தவளென்றும், இளையவளென்றும் பெயர். "அறிவுடைடந்தண னவளைச்காட் டென்றானோ" என்னும் மேற்கோள் - கலித்தொகை, மருதம், எ - இல் உள்ளது; இதற்கு - அறிவுடைய அந்தணன் அவளுக்குக் காண்பியென்று கூறினானோவென்று பொருள். 'தவ்வையைக் காட்டி' என்பதில், ஐயென்னும் இரண்டனுருபு - தனக்குரிய செயப்படுபொருளைத் தராமல், நான்காம்வேற்றுமைக்குஉரிய கோடற்பொருளைத் தந்ததனால், உருபுமயக்கம். அவ்வித்து - அவ்வியமென்னும் பெயர்ச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம்; பொறாமல் என்று பொருள். அவ்வியம் - ஔவியம்என்பதன்போலி. அவ்வியம் என்பதற்கு - மனக்கோட்டமென்றும் பொருள் உண்டு ஆதலால், இரண்டாம்உரையில்

அவ்வித்து - தன்மனத்தைக் கோணச்செய்து எனப்பட்டது. 'ஒளவித்து' என்றும், 'தௌவை' என்றும் போலியில்லாமலும் பாடமுண்டு. செய்யவள் - செம்மைநிறமுடையவள்; செம்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் முன்னின்றமெய்திரிந்த செய் - பகுதி. காட்டிவிடும் என்பன - இருசொல். உடையானை என்பதை உருபுமயக்கமாக்கி, பொறாமையுடையவனுக்கு இலக்குமி தன்னைக்காட்டாமல் மூதேவியைக் காட்டிவிடுவ ளென்றும் பொருள்கொள்ளலாம். 'தவ்வையைக் காட்டி விடும்' என்பதற்கு - 'தன் தவ்வையாகிய மூதேவியைக் காட்டி இவன்பாற்செல்லென்று போம்' என் பதும், 'இது, நல்குரவிற்குக் காரணங் கூறிற்று' என்பதும் - மணக்குடிய ருரைவாக்கியங்கள். (எ)

கசுஅ. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

(இ - ள்.) அழுக்காறு என ஒரு பாவி - அழுக்காறென்று (சொல்லப் பட்ட) ஒப்பில்லாத பாவி, திரு செற்று - (தன்னை உடையானை இம்மைக் கண்) செல்வத்தைக் கெடுத்து, தீ உழி உய்த்து விடும் - (மறுமைக்கண்) நர கத்திற் செலுத்திவிடும்; (எ - று.)



பண்பிற்குப் * பண்பு இல்லையேனும், தன்னை ஆக்கினானை இருமையும் கெடுத்தற்கொடுமைபற்றி, அழுக்காற்றினை 'பாவி' என்றார்; கொடியானை 'பாவி' என்னும் வழக்கு உண்மையின்.

இவை ஆறுபாட்டானும், அழுக்காறுடைமையது குற்றம் கூறப்பட்டது

(கு - ரை.) பாவியென்பது - கொடியதென்ற கருத்தைக் கொண்டது. பாவமுடையதெனப் பொருள் கூற லாகாது: ஏனெனில்?—அழுக்காறென்

பது - பண்பு: அப்பண்பை 'பாவம்' எனப் பண்பாகக் கூறவேண்டும்: 'பாவி' எனப் பண்பியாகக்கூறின் அதற்கு ஒருபண்பு இருப்பதாய்விடும்: அங்ஙன் பண்புக்குஒருபண்பு ஒப்புக்கொள்வது நூல்வழக்கில் இல்லையென்க. பண்புக்கும் ஒரு பண்பு உண்டு எனக் கொள்ளின், முடிவின்மை [அநவஸ்தா] என்ற குற்றம் வருமென்பது, நூற்கொள்கை. எனஎன்னுஞ் செயவெனெச்சத் துக்கு-சொல்லப்பட்ட என முடிக்குஞ்சொல் வருவிக்கப்பட்டது. சாதாரண மான பாவம் இம்மையிற் பயனைப் பயவாது: மிகக்கொடியபாவமோ இம்மை யில்தானே பயனைப் பயக்கும்: ஆதலால், 'ஒருபாவி' என்றதற்கு-'ஒப்பில்லாத பாவி' என்றார்; அழுக்காறு இம்மையிலும் செல்வத்தைக் கெடுக்குந் தீவினை யாதலால். "அத்யுத்கடைஃ புண்யபாபைஃ இஹைவபலமஶ்நுதே" என்ற வட நூல்மேற்கோள் இங்குக் காணத்தக்கது. பண்பு - குணம். தன்னை ஆக்கி னானை - பொறாமையைச் செய்தவனை. உண்மையின் - இருத்தலால். பாவி - பாபீஎன்னும் வடமொழியின் திரிபு. செற்று - செறுஎன்னும் பகுதியடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். தீயுழி - கொடியஇடம்; எரிவாய் வெம்மைகூர் நரகம். 'இது, செல்வங் கெடுத்தலேயன்றி நரகம்புகுவிக்கு மென்றவாறு' என்பது, மணக்குடியருரைவாக்கியம். (அ)

கசுசு. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்

கேடு நினைக்கப் படும்.

(இ - ள்.) அவ்வியம் நெஞ்சத்தான் ஆக்கம்உம் - கோட்டத்தினைப் பொருந்திய மனத்தையுடையவனது ஆக்கமும், செவ்வியான் கேடுஉம் - ஏனைச் செம்மையுடையவனது கேடும், (உளவாயின்), நினைக்கப்படும் - (அவை) ஆராயப்படும்; (எ - று.)

கோட்டம் - ஈண்டு அழுக்காறு. 'உளவாயின்' என்பது, எஞ்சிநின்றது. ஆக்கக்கேடுகள் கோட்டமும் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின், அறிவுடையரால் 'இதற்கு ஏதுவாகிய பழவினை யாது?' என்று ஆராயப்படுதலின், 'நினைக்கப்படும்' என்றார். "இம்மைச் செய்தன யானறி நல்வினை, யும் மைப் பயன்கொலொருதனி யுழந்தித், திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" என நினைக்கப்பட்டவாறு அறிக.

(கு - ரை.) கோட்டம் - கோணுதல். ஆக்கம்-ஐசுவரியம். ஏனை - மற்றை. செம்மையுடையவன் - மனத்திற் கோணலில்லாமையையுடையவன். கேடு -

---

* பி - ம்: பண்பி.



கெடுதி. ஈண்டு - இவ்விடத்தில். உளவாயின் - உள்ளனவானல். எஞ்சி - குறைந்து. இது, சொல்லெச்சம். பொருமையுடையவனுக்கு ஐசுவரியமும்,

அது இல்லாத நடுவுநிலைமையுடையவனுக்குத் தீமையும் உண்டாகாவாம்: ஒரு கால் உண்டாயின், முற்பிறப்பிற்செய்த ஊழ்வினையால் உண்டானவையாக அறியவேண்டு மென்பது, கருத்து. "இம்மைச் செய்தன" என்னும் மேற்கோள், சிலப்பதிகாரத்தில் மதுரைக்காண்டத்தில் அடைக்கலக்காதையில் 91-93 அடிகளாக உள்ளது; இதற்கு - யானறிய இப்பிறப்பில் நீ செய்தன வெல்லாம் நல்வினையாயிருக்கவும், அழகு மிக்க சிறந்த மாணிக்கக்கொழுந்து போன்ற மனைவியுடனே நீ இங்கே வந்து ஒருதுணையுமில்லாமல் தனியே அலைந்தது முற்பிறப்பிற்செய்த தீவினையின் பயன்தானோ? என்று பொருள்: உழந்து போந்ததுஎன்பன, போந்து உழந்ததுஎன விகுதி பிரித்துக் கூட்டப் பட்டன. இது, மாதவியென்னும் வேசியைக் கூடிச் செல்வமனைத்தையும் இழந்து மனைவியாகிய கண்ணகியுடனே காவிரிப்பூம்பட்டினத்தினின்றும் மதுரைக்குவந்த கோவலனை நோக்கி அவனதுநண்பனாகிய மாடலனென்னும் அந்தணன் கூறியது. "இந்த வூனெடுத்த, பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு, முன்செய்த தீவினையோ விங்ஙன்வந்து மூண்டதுவே" என்ற பட்டணத்துப் பிள்ளையார்பாடலையுங் காண்க. இவை யிரண்டும், செவ்வியான்கேடு ஆராயப்பட்டதற்கு உதாரணமாம்; அவ்விய நெஞ்சத்தானுக்கம்

ஆராயப்பட்டதற்கு உதாரணம் வந்தவிடத்துக் காண்க. செவ்வி - பண்புப்பெயர். நினைக்கப்படும் என்பதற்கு - 'விசாரிக்கப்படும்' என்பது, மணக்குடியருரை.

(கூ)

கஎ0.

அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(இ - ள்.) அழுக்கற்று - அழுக்காற்றைச்செய்து, அகன்றார்உம் - பெரியராயினாரும், இல்லை—; அஃது இல்லார் - அச்செயலிலாதார், பெருக்கத் தின் தீர்ந்தார்உம் - பெருக்கத்தின் நீங்கினாரும், இல் - இல்லை; (எ - று.)

இவையிரண்டுபாட்டானும், கேடும் ஆக்கமும் வருதற்கு ஏது ஒருங்கு கூறப்பட்டது.

(கு - ரை.) அச்செயல் - அழுக்காறு. பெருக்கத்தின் - அபிவிருத்தியினின்றும், பொறாமையுடையவர் அழிவர், அது இல்லாதவர் விருத்தியடைவர் என்பது, கருத்து. உம்மைகள்இரண்டும் - முறையே உயர்வுசிறப்புஇழிவு சிறப்புக்களோடு எச்சப்பொருளன.

"அழுக்காறுடையான்கண்" என்று ஆராய்தலின் முன்புசொன்னதே பொருள்: இப்பொருள் கேடுண்டாகா தென்றது' என்பது, மணக்குடியருரை.

(க0)

## கஅ-ஆம் அதிகாரம் -
வெஃகாமை.

அஃதாவது - பிறர்க்கு உரிய பொருளை வௌவக்கருதாமை. பிறருடை மை கண்டவழிப் பொறுமையேயன்றி அதனைத் தான் வௌவக் கருதுதலும் குற்ற மென்றற்கு, இஃது, அழுக்காறுமையின்பின் வைக்கப்பட்டது.

15



(கு - ரை.) வௌவ - கைக்கொள்ள; அபகரிக்க. வெஃகல் - ஆசைப்பெருக்கம். 'வெஃகாமையாவது பிறர்பொருளை விரும்பாமை' என்பது, மணக்குடியருரை.

கஎக. நடுவின்றி நன்பொருள் வெஃகிற்
குற்றமு மாங்கே தரும்.

குடிபொன்றிக் (இ - ள்.) நடு இன்றி - (பிறர்க்கு உரியனகோடல் நமக்கு அறனன் றென்னும்) நடுவுநிலைமை இன்றி, நல் பொருள் வெஃகின்-(அவர்) நன்பொருளை (ஒருவன்) வெஃகுமாயின், (அவ்வெஃகுதல்),—குடி பொன்றி-(அவன்) குடியைக் கெடச்செய்து, குற்றம் உம் ஆங்குஎ தரும் -

பலகுற்றங்களையும் அப்
பொழுதே (அவனுக்குக்) கொடுக்கும்; (எ - று.)
குடியைவளரச்செய்து பலநன்மையும் பயக்கும்
இயல்புபற்றிப் பொருள்
வெஃகின் என்பார், 'நன்பொருள் வெஃகின்' என்றார்.
பொன்ற என்பது,
'பொன்றி'எனத் திரிந்துநின்றது; 'செய்து' என்பது,
சொல்லெச்சம்.

(கு - ரை.) பிறர்க்குஉரியனகோடல் -
அயலார்க்குஉரிய பொருள்களைக்
கொள்ளுதல். நன்பொருள் - தருமவழியாற்
சம்பாதிக்கப்பட்ட பொருளுமாம்.
பொன்ற - எச்சத்திரிபு; [நன். வினை. உஎ.] இதன்பின்
'செய்து' என்பது
எஞ்சிநின்றது. சொல்லெச்சமாவது - சொல் குறைந்துநிற்பது. இங்கே,
'பொன்றுவித்து' என்பது-பிறவினைப்பொருளுணர்த்தும் வில்விகுதிதொக்கு
'பொன்றி'என நின்றதாகக்கொண்டார்,தொல்காப்பியச்சூத்திர விருத்திகாரர்;
பிறவினைப்பொருளில்வந்த தன்வினை யென்க: இங்ஙனம் வருவனவற்றை
வடநூலார் 'அந்தர்ப்பாவிதணிச்' என்பர். 'இது,
சந்தானநாசமுண்டா மென்
றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

(க)

களஉ. படுபயன் வெஃகிப் பழிப்படுவ
செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

(இ - ள்.) படு பயன் வெஃகி - (பிறர்பொருளை வௌவினால் தமக்கு) வரும் பயனை விரும்பி, (அது வௌவுதற்கு), பழி படுவ செய்யார் - பழியின் கண்ணே படுஞ் செயல்களைச் செய்யார்; நடு அன்மை நாணுபவர் - நடுவு நிலைமையன்மையை அஞ்சுபவர்; (எ - று.)

நடு - ஒருவன்பொருட்குப் பிறன் உரியனல்ல

னென்னும் நடுவு.

(கு - ரை.) பயன்-சுகாநுபவம் முதலியன. பழியின்கண்ணேபடுஞ் செயல்கள் - நிந்திக்கப்படுவனவற்றின்பாற் சேருந் தொழில்கள். நாணுதல்-அஞ்சுதல், செய்யக்கூசுதல். படுபயன் - எதிர்காலவினைத்தொகை. படுவ-பலவின் பால் வினையாலணையும்பெயர். 'இது, நடுவுநிலைமை

வேண்டுபவர் செய்யா
ரென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

(உ)

கள௩. சிற்றின்பம் வெஃகி யறனல்ல

செய்யாரே

மற்றின்பம் வேண்டு பவர்.

(இ - ள்.) சிறு இன்பம் வெஃகி - (பிறர்பால்

வெளவிய பொருளால்
தாம் எய்தும்) நிலையில்லாத இன்பத்தை விரும்பி, அறன்

அல்ல செய்யார்ஏ-

கஎ - ஆம் அதிகாரம்—வெஃகாமை

கக௫

(அவர்மாட்டு) அறனல்லாத செயல்களைச் செய்யார்: மற்று இன்பம் வேண்டு பவர் - (அறத்தான்வரும்) நிலையுடைய

இன்பத்தைக் காதலிப்பவர்; (எ - று.)

பாவத்தான் வருதலின் அப்பொழுதே அழியு மென்பார், சிற்றின்பம்' என்றார். 'மற்றையின்பம்' என்பது, 'மற்றின்பம்' என நின்றது.

(கு - ரை.) இங்கே, நிலையுடைய இன்பம் - சுவர்க்க சுகஅநுபவம்; தாம் உள்ள அளவும் அழியாத ஸம்ஸாரசுகமுமாம். காதலிப்பவர் - விரும்புபவர். இக்குறளுக்கு - பேரின்பமாகிய மோக்ஷசுகத்தை அடைய விரும்புபவர் சிற்றின்பமாகிய காமசுகத்தைப் பெற விரும்பிப் பாவத்தொழில்களைச் செய்யார் எனப் பொருள்கொண்டால், 'பிறனில்விழையாமை,' 'வரைவின்மகளிர்', 'அவாவறுத்தல்' என்னும் அதிகாரங்களுள் ஒன்றுக்கு உரியதாகி, இவ்வதிகாரத்தோடு பொருந்தா தாகலின், அங்ஙனம் பொருள்கூறலாகா தென அறிக. "மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை, யப்பாலிரண்டென மொழிமனார் புலவர்," "மற்றைய தென்னுங் கிளவிதானே, சுட்டுநிலையொழிய வினங்குறித் தன்றே" என்னுந் தொல்காப்பியச்சூத்திரங்களினால், மற்றுஎன்னும் இடைச் சொல்லுக்குப் பிறிதென்னும் பொருள் இல்லை யென்றும், அப்பொருள் மற்றை யென்னும் இடைச்சொல்லுக்கே உண்டென்றுந் தெரிதலால், 'மற்றையின்ப மென்பது மற்றின்பமென நின்றது' என்றார்; பின்னூல்செய்தவராகிய நன்னூலாசிரியர் "வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே" எனச் சூத்திரஞ்செய்தது புதியனபுகுதலா மென்று உணர்க. ஏ-தேற்றம்; அசையுமாம். 'இது, வீடுபெற வேண்டுவார் செய்யா ரென்றவாறு' என்பது, மணக்குடியருரைவாக்கியம். (௩)

களச. இலமென்று வெஃகுதல் செய்யார்
புன்மையில் காட்சி யவர்.
புலம்வென்ற

(இ - ள்.) இலம் என்று - (யாம்) வறியம் என்று கருதி, வெஃகுதல் செய்யார் - (அது தீர்தற்பொருட்டுப் பிறர்பொருளை) விரும்புதல் செய்யார்: புலம் வென்ற புன்மை இல் காட்சியவர் - ஐம்புலன்களையும் வென்ற குற்றமில்லாத காட்சியினையுடையார்; (எ - று.)

வெல்லுதல்-பாவநெறிக்கட் செல்லவிடாமை. புலம்வென்ற புன்மையில் காட்சியவர்க்கு வறுமை இன்மையின், வெஃகுதலும் இல்லையாயிற்று. புன்மை யில் காட்சி - பொருள்களைத் திரிபின்றி உணர்தல்.

(கு - ரை.) யாம் வறியம்-நாம் ஏழைமையுடையோம்; நுகரப்படும் பொருளொன்றும் உடையோமல்லோம். அது - வறுமை. காட்சி - அறிவு; தொழிற் பெயர். ஐம்புலன்களையும் பாவவழியிற்செல்லவிடாமல் அடக்கியவர்க்கு, அப் புலன்கள் அநுபவிக்கும்பொருள்கள் இல்லாமையாகிய வறுமை தோன்றாதென்க. திரிபின்றி-மாறுபாடில்லாமல்; மாறுபாடாவது,பழுதையைப் பாம்பென்றும், கானலை நீரென்றும், சிப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றை மற்றொன்றாக அறிதல். ஐம்புலன்கள்-சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம்; இவை, முறையே ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனப்படும்: இவை - செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐம்பொறிகளின் விஷயங்களாம்.

இங்கே பொறி புலனெனப்பட்டது. இலம் - எதிர்மறைத் தன்மைப்பன்மை முற்று. புலம்வென்றகாட்சி,புன்மையில் காட்சி யென்க. புலம்வென்ற காட்சி என்னுமிடத்து, புன்மையில் என்றது - இடைப்பிறவரல். இனி, புலம் வென்ற புன்மையில் காட்சி என்பதற்கு - ஐம்புலன்களாலும் வெல்லப்படுத லாகிய இழிவை உடைத்தாகாத அறிவென்றும் பொருள் கொள்ளலாம். 'இது, தெளிவுடையார் செய்யா ரென்றது' என்பது, மணக்குடியருரை.

கஎரு. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(இ - ள்.) அஃகி-நுண்ணிதாய், அகன்ற-எல்லா நூல்களினுஞ் சென்ற, அறிவு - (தம்) அறிவு, என் ஆம் - என்னபயத்ததாம்? வெஃகி - (பொருளை) விரும்பி, யார்மாட்டுஉம் - யாவர்மாட்டும், வெறிய-அறிவோடுபடாத செயல் களை, செயின் - (அறிவுடையார்) செய்வாராயின்; (எ - று.)

யார்மாட்டும் வெறியசெய்தலாவது - தக்கார்மாட்டும் தகாதார்மாட்டும்
இழிந்தனவும் கடியனவும் முதலியன செய்தல்.
செய்யாமை யாகலின், 'அறிவென்னும்' என்றார்.

அறிவிற்குப் பயன் அவை

(கு - ரை.) நுண்ணிதாய் - நுட்பமானதாய்; சூட்சுமமாய். நூல்கள் - சாஸ்திரங்கள். சென்ற - சென்றுவிசாலித்த. என்ன பயத்ததாம் - என்ன பயனை உடையதாகும்? படாத - பொருந்தாத. வெறிய -

வெறுமையுடையவை: அறிவுடன் கூடாதவை. இனி மயக்கத்தோடுகூடியவையெனினுமாம்: வெறி - மயக்கம். தக்கார் - மேன்மக்கள், யோக்கியர். தகாதார் - கீழ்மக்கள், அயோக்கியர். கடியன - வெறுக்கத்தக்கவை. யார்மாட்டு, மாட்டு - ஏழனுருபு. உம்மை - முற்று. வெறிய - பெயர். நுண்ணிதாகிப் பரந்த அறிவுடையானாயினும் அதனாற் பயன் யாதாம்? எல்லார்மாட்டும் பொருளை விரும்பி ஈரமில்லாதனசெய்வனாயின் என்றவாறு. 'இது, அறிவுடையார் செய்யாரென்றது' என்பது, மணக்குடியருரை. (ரு)

௧எ௬. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(இ - ள்.) அருள் வெஃகி - அருளாகிய அறத்தை விரும்பி, ஆற்றின் கண் - (அதற்கு) வழியாகிய இல்லறத்தின்கண், நின்றான் - நின்றவன்,— பொருள் வெஃகி - (பிறர்) பொருளை அவாவி, பொல்லாத சூழ - (அதனை வருவிக்கும்) குற்றநெறிகளை எண்ண, கெடும்—; (எ - று.)

இல்லறநெறியால் அறிவுமுதிர்ந்துழியல்லது துறக்கப்படாமையின், அதனைத் துறவறத்திற்கு 'ஆறு' என்றார். கெடுதல் - இரண்டுஅறமும் சேர இழத்தல். சூழ்ந்ததுணையானே கெடு மெனவே, செய்தாற்கெடுதல் சொல் லாமையே பெறப்பட்டது.

(கு - ரை.) அருளாவது - ஒருசம்பந்தமுமில்லாமல் இயல்பாக எல்லா வுயிர்களின் மேலும் செல்வதாகிய கருணை. அருளாகியஅறம் என்றது, துற வரத்தை. துறவரத்திற்கு

அருளுடைமை மிகச்சிறந்த விரத மாதலால், துற

க௩ - ஆம் அதிகாரம்—வெஃகாமை

ககள்

வறம் 'அருள்' எனப்பட்டது; மேல் துறவறவியலின் முதலில் அருளுடைமை

கூறப்படுமாறு அறிக. அதற்கு வழியாகிய - துறவறத்தையடைதற்கு மார்க்க

மாகிய. அவாவி - விரும்பி. வருவிக்கும் - அபகரிக்கிற. கெடும்-கெடுவான்.

முதிர்ந்துழியல்லது - முதிர்ந்தாலல்லாமல். துறக்கப்படாமையின் - பொருட்

பற்றைவிடமுடியாதாதலால். அதனை-இல்லறத்தை. இரண்டுஅறமுஞ் சேர

இழத்தல் - துறவறம் இல்லறம் என்னும் இரண்டுதருமங்களையும் ஒருங்கே

இழப்பது. சூழ்ந்த துணையானே - ஆலோசித்த மாத்திரத்திலே. இனி, அருள்வெஃகி

யாற்றின்கணின்முன் என்பதற்கு - (கடவுளின்) கருணையை விரும்பி அதனைப் பெறும் வழியாகிய அறநிலையில் நின்றவன் என்றும் பொருள் கொள்ளலாம். பொல்லாத - பெயர். சூழ -'காரணப்பொருளில் வந்த செய வெனெச்சம். 'இது, அருளுடையானுங் கெடுவ னென்றது' என்பது மணக்குடியரு ை ரவாக்கியம்.

(௩)

கஎஎ. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்

மாண்டற் கரிதாம் பயன்.

(இ - ள்.) வெஃகி ஆம் ஆக்கம் - (பிறர்பொருளை) அவாவி(க்கொண்டு) அதனுலாகின்ற ஆக்கத்தை, வேண்டற்க - விரும்பாதொழிக: விளை வயின் - (பின்) அனுபவிக்குங்கால், பயன் - (அவ்வாக்கத்தின்) பயன், மாண்டற்கு அரிது ஆம் - நன்றாத லில்லை யாகலான்; (எ - று.)

விளை, என்பது - முதனிலைத்தொழிற்பெயர்.

இவையேழுபாட்டானும் வெஃகுதலின் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) அவாவி - விரும்பி. கொண்டு - கவர்ந்து. கால்-காலத்தில். மாண்டற்கு அரிதாம் - மாட்சிமைப்படுவதற்கு அரியதாம். விளை-பயன்விளை தல்; தொழிற்பெயர். விளை வயின் - நான்காம் வேற்றுமையுருபும் பயனு

முடன்றொக்கதொகை: பயன் விளைதற்கு உரிய காலத்தில் எனவிரியும். இனி, விளைவயின் என்பது - விளையும்வயின் என எதிர்காலவினைத்தொகை யாகவுமாம். வேண்டற்க - எதிர்மறைவியங்கோள். அரிதுஎன்பதில், அரு

மை - இன்மை குறித்தது; "உறற்பால, தீண்டா விடுத லரிது" என்ற இடத்

திற்போல. காரணங்காட்டி விலக்கியதனுல், இப்பாட்டு 'ஏதுவிலக்கு' என்

னும் அலங்காரத்தின்பாற் படு மென்பர்.
(எ)

கஎஅ. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

(இ - ள்.) செல்வத்திற்கு - (சுருங்கன்மாலைத்தாகிய) செல்வத்திற்கு,
அஃகாமை - சுருங்காமைக்காரணம், யாது எனின் - யாதென்று (ஒருவன்)
ஆராயின், பிறன் வேண்டும் கை பொருள் வெஃகாமை - (அது) பிறன்வேண்டுங் கைப்பொருளை (த் தான்) வேண்டாமையாம்; (எ - று.)

அஃகாமை-ஆகுபெயர். வெஃகாதான்செல்வம் அஃகாதென்பதாயிற்று.

(கு - ரை.)
சுருங்கன்மாலைத்தாகிய-குறையுந்தன்மையையுடையதான.
சுருங்காமைக்காரணம் - குறையாதிருத்தற்கு ஏது. அது - அக்காரணம். கக்டு திருக்குறள்

பிறன்வேண்டும் கைப்பொருளை - அயலானது அதீனமாயுள்ளதும் அதுபற்றி அவனால் விரும்பப்படுவதுமான திரவியத்தை.
அஃகாமைஎன்னும் எதிர் மறைத்தொழிற்பெயர், அதன்காரணமென்னும்பொருளைத் தந்ததனால், காரிய

வாகுபெயர். வெஃகாதான்செல்வம் அஃகாது - பிறன்பொருளை விரும்பாதவனது செல்வம் குறையாது.

இனி, இக்குறளுக்கு - ஒருவன் தனதுசெல்வம் சுருங்காமலிருக்கும்பொருட்டுச் செய்யவேண்டுவது என்னவென்றால் அயலானுக்கு உரிய பொருளைத் தான் விரும்பாதிருத்தல்வேண்டும் என்று உரை கூறினுமாம். செல்வத்திற்கு + யாது = செல்வத்திற்கியாது; குற்றியலிகரம்; [நன். எழுத்து. ௯அ, உயிரீறு. ௧௪.] 'இது, செல்வமழியாது என்றவாறு' என்பது, மணக்குடியருரை ரவாக்கியம். (அ)

௧௭௯. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

(இ - ள்.) அறன் அறிந்து - (இஃது) அறனென்று அறிந்து, வெஃகா - (பிறர்பொருளை) விரும்பாத, அறிவு உடையார் - அறிவுடையாரை, திரு - திருமகள், திறன் அறிந்து - (தான் அடைதற்கு ஆம்) கூற்றினை அறிந்து, ஆங்கே - அக்கூற்றானே, சேரும் - சென்று அடையும்; (எ - று.)

அடைதற்கு ஆம் கூறு - காலமும் இடனும் செவ்வியும் முதலாயின.

இவையிரண்டுபாட்டானும் வெஃகாமையின் குணம் கூறப்பட்டது.

(கு - ரை.) இஃது - விரும்பாமை. அடைதற்கு ஆம் கூறு - அடைவதற்குஏற்ற உபாயம். அக்கூற்றானே சென்றுஅடையும் - அவ்வுபாயத்தாலே போய்ச் சேர்வன்.

செவ்வி - மனமகிழ்ச்சியும், முகமலர்ச்சியும், இன்சொல்லும் உடையனா யிருக்குஞ் சமயம். ஆங்கே - அப்பொழுதே யென்றும் பொருள்கொள்ளலாம். 'இது, செல்வமுண்டாமென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

(கூ)

கஅ 0.

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) எண்ணாது - (பின்விளைவது) அறியாது, வெஃகின் - (ஒருவன் பிறன்பொருளை) வெளவக்கருதின்,—(அக்கருத்து),—இறல் ஈனும் - (அவனுக்கு) இறுதியைப் பயக்கும்; வேண்டாமை என்னும் செருக்கு - (அப் பொருளை) வேண்டாமை யென்னுஞ் செல்வம், விறல் ஈனும் - வெற்றியைப் பயக்கும்; (எ - று.)

பகையும் பாவமும் பெருக்கலின் 'இறலீனும்' என்றும், அப்பொருளை வேண்டி உழல்வோர்யாவரையுங் கீழ்ப்படுத்தலின் 'விறலீனும்' என்றுங் கூறினார். செருக்கு - ஆகுபெயர்.

இதனான், அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன.

(கு - ரை.) பின்விளைவது -பின்புஉண்டாகும் பயனாகிய தீமை. இறுதி- நாசம்; இம்மையிற் பகைவராலும், மறுமையிற் பாவத்தாலும் எனக் காண்க.

கககூ

பயக்கும் - தரும். உழல்வோர் - அலைபவர். செருக்கு - மனக்களிப்புக்குக் காரணமான செல்வத்தைக் குறித்ததனால், காரியவாகுபெயர். அவ்விருமை யும் - வெஃகுதலின் குற்றமும், வெஃகாமையின் குணமும். ஒருங்கு-ஒருசேர. இறல் - தொழிற்பெயர்; இறு - பகுதி. 'வேண்டாமையென்னுஞ் செருக்கு' என்றது, காரியத்தைக் காரணமாக உபசரித்தபடி. 'இது, உயிர்க்கேடுதரு மென்றவாறு' என்பது, மணக்குடயருரைவாக்கியம். (௧௦)

கசு - ஆம்

## அதிகாரம்—புறங்கூறாமை.

அஃதாவது - காணுதவழிப் பிறரை இகழ்ந்துஉரையாமை. மொழிக் குற்றம் மனக்குற்றமடியாக வருதலான், இஃது, அழுக்காறாமைவெஃகாமை களின் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) காணுதவழி - காணுதஇடத்தில். அழுக்காறும், வெஃகா

மையும் - மனக்குற்றம். புறங்கூறல் - மொழிக்குற்றம். மனக்குற்றங் காரண மாகச் சொற்குற்றம் உண்டாவது, அதிகாரமுறைமைக்குக் காரணம்.

கஅக. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

(இ - ள்.) ஒருவன்—, அறம் கூறான் - அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது, அல்ல செயின் உம் - பாவங்களைச் செய்யுமாயினும், புறங்கூறான் என்றல் இனிது - (பிறனைப்) புறங்கூறானென்று (உலகத்தாரால்) சொல்லப் படுதல் நன்று; (எ - று.)

புறங்கூறாமை, அக்குற்றங்களான் இழிக்கப்படாது மேற்பட்டுத்தோன்று மென்பதாம்.

இதனன், அவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) அக்குற்றங்கள் - தருமமென்பதை வாயினாற் சொல்லுவதுஞ் செய்யாமற் பாவஞ்செய்தலினு லாகிய குற்றங்கள். இழிக்கப்படாது - கீழ்ப் படுத்தப்படாமல். அவ்வறம் - புறங்கூறாமை. புறங்கூறாமை எல்லாக்குற் றங்களையும் அடக்கிவிடும் என்பது, கருத்து. அறங்கூறான் என்பதில், கூறான்-

வினைமுற்றுவினையெச்சம். என்றல் - செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. 'இது, பாவஞ்செய்யினும் நன்மை பயக்கு மென்றது' என்பது, மணக்குடயருரைவாக்கியம். இனி, நல்ல எனப் பதம்பிரித்து, இக்குறளுக்கு-
ஒருவன் (எவராலும்) ஒருதருமமும் (தனக்குச்) சொல்லவேண்டாதவனாய்(த் தானே எல்லாத்தருமங்களையும் அறிந்து) நல்வினைகளையே செய்துவந்தானாயி
னும் (அவனுக்கும் பிறனைப்) புறங்கூறு னென்பது (அவ்வெல்லாத் தருமங் களினும்) நன்மைதருவதாம் என்றும் உரைகூறவும்இடமுண்டு: "தீய, புறங் கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாதும், அறங்கூற வேண்டா வவற்கு" என்னும் நாலடியார்ச்செய்யுளை நோக்குக.
(க)

கஅ௨.

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.



(இ - ள்.) அறன் அழீஇ - அறனென்பதொன்று (இல்லையென) அழித்
துச்சொல்லி, அல்லவை செய்தலின் - (அதன்மேற்)

பாவங்களைச் செய்தலி
னும், தீது - தீமையுடைத்து: புறன் அழீஇ - (ஒருவனைக்) காணாதவழி (இக
ழ்ந்துரையால்) அழித்துச்சொல்லி, பொய்த்து நகை-(கண்டவழி அவனோடு)
பொய்த்து நகுதல்; (எ - று.)

உறழ்ச்சி - நிரனிறைவகையாற் கொள்க. அழித்தல்-ஒளியைக்கோறல்.

(கு - ரை.) இகழ்ந்துரையால் அழித்துச்சொல்லி - நிந்தைமொழியால்
அவன்பு கழைக்கெடுத்துப்பேசி. பொய்த்துநகுதல்-பொய்யாய்நகைத்து வெளி
யன்பு பாராட்டுதல். செய்தலின் என்பதிலுள்ள இன் என்னும் ஐந்தனுருபு-
காட்டிலும்என்னும் உறழ்ச்சிப்பொருள்பட நின்றது. அறனையழித்துச்சொல்
லுதலினும் ஒருவனைப்புறங்கூறுதல் தீயதென்றும். அதன்மேற்பாவஞ்செய்
தலினும் அதன்மேல் அவனோடு பொய்த்துநகுதல் தீயதென்றும் முறையே
இயைத்துக் கருத்துக்கொள்க: முறைநிரல்நிறைப்பொருள்கோள்: அதனிலக்
கணம் - வரிசையாகச்சொல்லப்பட்ட பொருள்களுக்குச் சம்பந்தமுள்ளவற்

றையும் மூறையே சொல்லுதலாம். ஒளியைக்கோறல் - பெருமையைக்
கெடுத்தல். அழியென்னும் பகுதி, அழித்து என்னும் வினையெச்சத்தின்
பொருளைத் தரும்பொருட்டு, நீண்டு அளபெடுத்ததனுல், சொல்லிசையள
பெடை. ஏ - தேற்றம். நகை - தொழிற்பெயர்; நகு - பகுதி, ஐ - விகுதி:
நகை - பகுதியாயின், முதனிலைத்தொழிற்பெய ரெங்க.
அறனழீஇ என் பதற்கு - (பிறர்செய்யுந்) தருமங்களை அழித்து என்றும் பொருள் கொள்ள லாம். 'இது, பாவத்தினும் மிக்கபாவ மென்றது' என்பது, மணக்குடியருரை.

கஅரு. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

(இ - ள்.) புறம் கூறி - (பிறனைக்) காணுதவழி இகழ்ந்துரைத்து, பொய்த்து - (கண்டவழி அவற்கு இனியனுகப்) பொய்த்து, உயிர் வாழ்தலின்-(ஒருவன்) உயிர்வாழ்தலின், சாதல் - (அதுசெய்யாது) சாதல்,—அறம் கூறும் ஆக்கம் தரும் - (அவனுக்கு) அறநூல்கள்சொல்லும் ஆக்கத்தைக் கொடுக்கும்.

பின், புறங்கூறிப்பொய்த்தல் ஒழிதலின், 'சாதல்

ஆக்கந்தரும்' என்றார்.
ஆக்கம் - அஃதொழிந்தார் மறுமைக்கண் எய்தும் பயன்.
தருமென்பது, இடவழுவமைதி.

அறம்-ஆகுபெயர்.

(கு-ரை.) உயிர்வாழ்தலின்-ஜீவித்தலைக்காட்டிலும்.
பின்-இறந்தபின்பு.
ஆக்கமாவது
- புறங்கூறாமலிறந்தவர் மறுமையில் அடையும் இன்பம்.
அறம்- தருமசாஸ்திரத்தை உணர்த்தலால், காரியவாகுபெயர்.
'அவனுக்குக் கொடுக்கும்' என்னாமல்,
"அவனுக்குத்தரும்" என்றது, இடவழுவமைதி; தொல்காப்பியத்துச் சொல்லதிகாரத்தில் கிளவியாக்கத்தில் "அவற்றுள், தருசொல்வரு சொல் லாயிரு கிளவியுந், தன்மைமுன்னிலை யாயீரிடத்த" என்னுஞ் சூத்திரத்தின்படி தன்மைமுன்னிலைகளுக்கு உரிய தருசொல், அதற்குமாறாக இங்கே படர்க்கையிடத்துக்கு வந்தமையால் இடவழுவாகி, "செலவினும் வர

கக - ஆம் அதிகாரம்—புறங்கூறாமை

சஉக வினுந்தரலினுங் கொடையினும், நிலைபெறத்

தோன்று மந்நாற் சொல்லுந், தன்மை முன்னிலை படர்க்கை யென்னும், அம்மூ விடத்து முரிய வென்ப" என்னும் பொதுவிதியால் அமைக்கப்படுதலால், வழுவமைதியாயிற்று: "எனை யிரண்டு மேனை

யிடத்த" என்னுஞ் சூத்திரத்தால், 'செல்' என்னும்வினையோடு 'கொடு' என்னும் வினையே, படர்க்கைக்கு உரியதாமாறு உணர்க. வழு வமைதியாவது - இலக்கணக்குற்றமுள்ளதாகக் காணப்பட்டாலும் முன்னோரால் அங்கீகரித்து அமைக்கப்பட்டது. அது செய்யாது-அங்ஙனம்வாழாமல். இனி, இக்குறளுக்கு - தற்கொலை செய்தலினும் புறங்கூறுதல் தீயதென்று கருத்து உரைத்தலுமாம். (கூ)

கஅச. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

(இ - ள்.) கண் நின்று-(ஒருவன்) எதிரே நின்று, கண் அற சொல்லின் உம் - கண்ணோட்டமறச் சொன்னாயினும், முன் இன்று-அவனெதிரின்றி, பின் நோக்கா சொல் - பின்வருங்குற்றத்தை நோக்காத சொல்லை, சொல் லற்க - சொல்லாதொழிக; (எ - று.)

பின் - ஆகுபெயர். சொல்வான்தொழில், சொல்மேல் ஏற்றப்பட்டது.

இவை மூன்றுபாட்டானும், புறங்கூற்றினது கொடுமை கூறப்பட்டது.

(கு - ரை.) கண்ணோட்டமறச் சொன்னாயினும் - தாட்சிணியமில்லாமற் பேசினாலும். பின்னோக்காச்சொல் - நிந்தைமொழி. பின் என்பது - பின் காலத்தில் உண்டாகும் குற்றத்தைக் குறித்தலால், காலவாகுபெயர். பிற் பயனைநோக்காதவனது சொல்லை 'பின்னோக்காச்சொல்' என்றது - உபசார வழக்கு; 'பின்னோக்காச்சொல்

என்பது-ஒருபொருளின்வினை மற்றோர்பொருளின்வினையான இலக்கணை' என்று பிரயோகவிவேகநூலாசிரியர்கூறியிருக்குமாறு அறிக. புறங்கூற்று - புறங்கூறுதல். கண் - ஒருவர்மேற் கண் சென்ற விடத்து உண்டாகிற முகதாட்சிணியத்தை இலக்கணையாற் குறித்தது. தன்னை வைபவனைப் பொறுமல் தான் வைவதாயிருந்தாலும் எதிரிலே வைய வேண்டுமேயன்றிப் புறத்தே வசைகூறலாகாதென்பது, இதன்கருத்து. இன்று - எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம், ஈறுதிரிந்தது. இனி, இக்குறளுக்கு, முன் நின்று - தன்எதிரில் நின்று, (ஒருவன்), கண் இன்று - தாட்சிணியம் இல்லாமல், கண்அற - (தன்) பெருமை கெடும்படி, சொல்லின் உம் - பேசினாலும், பின் - (அவனது எதிரிலேயன்றிப்) புறத்தே, நோக்கா சொல் - ஆராய்ச்சியில்லாதசொற்களை, சொல்லற்க-சொல்லாதொழிக என்று உரை கூறினும் அமையும். ஒருவன்கண்ணெதிரிலேநின்று தாட்சிணியமின்றிக் கடுஞ்சொற் கூறினலுங் கூறலாம்: அவனெதிரிலேயன்றிப் புறத்திலே பழிச்சொற் கூறலாகாது என்று இக்குறட்குப் பொருள்கூறவும் இடமுண்டு. / 'இது, புறங்கூறுதல் தவிர்கவென்றது. இதனல், கடியசொற்கூறலும் ஆகாதென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம், (௬)

கஅரு. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை
புறஞ்சொல்லும்

புன்மையாற் காணப் படும்.

(இ - ள்.)
வாறெறுவன்)

அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை - (புறஞ்சொல்லு
அறனை (நன்றென்று சொல்லினும் அது தன்மனத்தாலுய்ச்)
சொல்லுகின்றானல்ல னென்பது, புறம் சொல்லும்
புன்மையால் காணப் படும் - (அவன்)
அறியப்படும்; (எ
புறஞ்சொல்லுதற்குக் காரணமான மனப்புன்மையானே
- று.)

மனம் தீதாகலின், அச்சொல் கொள்ளப்படா
தென்பதாம்.

(கு - ரை.) மனப்புன்மை - மனக்குற்றம். ஒருவனைக் கண்டவிடத்துப் புகழ்ந்துபேசிக் காணுதவிடத்து இகழ்ந்துபேசுபவன் 'தருமம் நல்லது' என்று பிரசித்தமான விஷயத்தைப் பிறனொருவனேடு எடுத்துச்சொன்னாலும், கேட்பவன் இவனதுதன்மையை உள்ளபடி தெரிந்தவனுக இருந்தால், அவ்வார்த்தையைத் தனது முகமலர்ச்சியின்பொருட்டுக் கூறுவதாக நினைப்பானேயன்றி மனப்பூர்வமாகச்சொன்ன தென்று நினைக்கமாட்டா னென்பது, கருத்து. அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் - தருமத்தை நல்லதெனச் சொல்ல வேண்டுமென்னும் மனமுடையவன்.
வான்' என விகுதிபிரித்துக் கூட்டுவர்,

இதனை 'நெஞ்சொ டறஞ்சொல்
பிரயோகவிவேகநூலார். இனி, இக்
குறளுக்கு, புறங்கூறுபவனைத் தரும சிந்தையில்லாதவனாக
அறியவேண்டு மென்று கருத்துப்பட உரைத்தலுமாம்.
'இதனைச்சொல்லுவார் அறம் அறி யா ரென்றது' என்பது,
மணக்குடியருரைவாக்கியம். (௫)

கஅசு. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

(இ - ள்.) பிறன் பழி கூறுவான் - பிறனொருவன்பழியை (அவன்புற த்து)க் கூறுமவன், — தன் பழியுள் உம் திறன் தெரிந்து கூறப்படும் - தன்பழி பலவற்றுள்ளும் உளையுந்திறமுடையவற்றைத் தெரிந்து (அவனுற்) கூறப் படும்; (எ - று.)

'புறத்து' என்பது, அதிகாரத்தாற் பெற்றாம்; இது, வருகின்றவற்றிற் கும் ஒக்கும். திறன் - ஆகுபெயர். தன்னைப் புறங்கூறியவாறு கேட்டான் அக்கூறியாற்கு அவ்வளவன்றி அவன் இறந்துபட்டுஉளையுந்திறத்தனவாகிய பழிகளை நாடி எதிரேகூறு மாகலின், 'திறன்றெரிந்து கூறப்படும்' என்றார்.

(கு - ரை.) உளையுந்திறமுடையவை - வருத்தப்படுத்தும் வலிமையுடை யவை. தெரிந்து - ஆராய்ந்தறிந்து எடுத்து. புறங்கூறுமையென்னும் அதி

காரத்துக்கு ஏற்ப, கூறுவான் என்றவிடத்து 'புறத்து' என்னுஞ்சொல் வரு விக்கப்பட்டது; அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை 'ஆநுஷங்கிகம்' என்பர், வடநூலார். வருகின்றவற்றிற்கும் என்றது, மேல் "பகச் சொல்லி", "தூற்றுமரபினுர்"என்றவை முதலிய இடங்களுக்கும். திறன் - வலிமையு டைய பழிச்சொற்களுக்குப் பண்பாகுபெயர். ஒருவனை மற்றொருவன் ஒரு கக - ஆம்

அதிகாரம்---புறங்கூறுமை கஉரு

காற் புறங்கூறினுல் அக்கூறப்பட்டவன் கூறியவன்மேல் பெரும்பழிகள் பல
கூறி அவனுக்குப் பெருந்துன்பங்களை உண்டாக்கிவிடுவா ளுதலாற் புறங்கூற
லாகாதென்பது, கருத்து. இனி, இக்குறளுக்கு - பிறன்பழியைப் புறங்கூறு
பவன் (அப்புறங்கூறுதலாகிய) தன்பழியை(ப் பெரியோர்யாவரும்) வினைக்
குந்தன்மையை ஆராய்ந்து கூறவேண்டுமென்றும் உரைகூறலாம்; இவ்வாறு
தன்பழியை ஆராய்வானுயின் தானே புறங்கூருனுகி நிற்பா னென்பது, கரு
த்து: புறங்கூறுதலாகிய தன்பழியைத் தானறிவானுயின் அவனுக்குத் தன்
பழியே உயர்ந்துகாணப்படுமாதலாற் பிறன்பழியைக் கூறவேமாட்டா னெ

ன்க; இவ்வுரையில், உள்ளு மென்பது - எதிர்காலப்பெயரெச்சம். இக்குற ளில், எதிர்மறைமுகத்தால், பிறனைப் புறத்தேபழிகூறுதவன் தானும் பிறராற் பழிகூறப்படான் என்னுங் கருத்துத் தோன்றுதல் காண்க. (சு)

கஅஎ. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர்.

(இ - ள்.) பக சொல்லி - (தம்மைவிட்டு) நீங்குமாற்றாற் புறங்கூறி, கேளிர் பிரிப்பர் - (தம்) கேளிரையும் பிரியப்பண்ணுவர்: நக சொல்லி நட்பு ஆடல் தேற்றாதவர் - கூடிமகிழுமாறு (இனியசொற்களைச்) சொல்லி (அய லாரோடும்) நட்பாடலை அறியாதார்; (எ - று.)

சிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. 'கேளிரையும் பிரிப்பர்' என்ற கருத்தான், 'அயலாரோடும்' என்பது வருவித்து உரைக்கப்பட்டது. அறி தல்-தமக்கு உறுதியென்று அறிதல். "கடியுமிடந்தேற்றாள் சோர்ந்தனள்கை" என்புழிப்போல, தேற்றுமை - தன்வினையாய் நின்றது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவ ரென்பது கருத்து.

(கு - ரை.) நீங்குமாற்றால் - பிரியும்படி.

கேளிர்-சிநேகிதரும், சுற்றத்தா
ரும்: க்ஷேமசமாசாரங்களைக் கேட்பவராதலால், 'கேளிர்' என்
றுபெயர்: கேள்-
பகுதி; இதனைக் கேண்மைபென்னும்
பண்புப்பெயரின் அடி யென்றுங்
கொள்ளலாம்; இர் - பலர்பாற்பெயர்விகுதி. நட்பாடல் -
சிநேகஞ் செய்தல்.
கேளிர் என்றவிடத்துத் தொகுத்தல்விகாரம் பெற்ற
உம்மை - உயர்வு சிறப்
புப்பொருளது. உறுதியென்று - நன்மையென்று. "கடியு,
மிடந்தேற்றாள்
சோர்ந்தனள் கை"என்னும் மேற்கோள் கலித்தொகை,
மருதக்கலி, உஎ-இல்
உள்ளது; இதற்கு - (வண்டுகளை) ஓட்டுமிடம்
அறியாளாய்க் கைசோர்ந்தா
ளென்று பொருள். தேற்றாமை யென்பதைத்
தன்வினைக்கும் பிறவினைக்கும்
பொது வென்றாயினும், தன்வினைப்பொருளில்வந்த
பிறவினை யென்றா .யினும், தேறாமை யென்பதன்
விரித்தல்விகார மென்றாயினுங் கொள்க; "தே
ற்றாய் பெரும நின்பொய்யே"எனப் புறநானூற்றிலும்,
"வாயினாற் பேசினல்
லால் வாயினாற்பேசல் தேற்றேன்" எனச்
சிந்தாமணியிலுங் காண்க. இது
'நட்டவரையிழப்பரென்றது' என்பது,
மணக்குடியருரைவாக்கியம். (எ)

கஅஅ. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு.



(இ - ள்.) துன்னியார் குற்றம்உம் தூற்றும் மரபினர் - (தம்மொடு) செறிந்தாரது குற்றத்தையும் (அவர்புறத்துத்) தூற்றும் இயல்பினையுடையார், ஏதிலார்மாட்டு என்னை கொல்-அயலார்மாட்டுச் செய்வது யாதுகொல்லோ?

தூற்றுதல் - பலரும்அறியப் பரப்புதல்.
அதனிற்கொடியது பிறிதொ
ன்று காணாமையின், 'என்னைகொல்' என்றார். செய்வது
என்பது, சொல்லெ
ச்சம். 'என்னர்கொல்' என்று பாடமோதி,
எவ்வியல்பினராவ ரென்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.) செறிந்தார் - கலந்தவர்; நண்பரும்,
உறவினரும். அதனிற்
கொடியது பிறிதொன்று காணாமையின் - புறத்தே
பழிகூறுதலினுங் கொடு
மையுடையது வேறொன்று காணப்படாமையால்.
அயலாரிடத்திற் செய்த்
தகாதது இதுவென்று அவரால் நினைக்கப்படுவதொன்றும்
இல்லையென்பார்
'என்னைகொல்' என்றா ரென்றுங் கொள்ளலாம்.

எவ்வியல்பினராவர் - எந்
தக்குணத்தை யுடையவராவர்? குற்றமும், உம்மை -
உயர்வுசிறப்பு. 'என்னர்'
என்ற பாடத்திற்கு, அச்சொல் வினைவடியாப்பிறந்த
பலர்பாற் குறிப்புமுற்று;
ன் - சாரியை, மற்றொரு ன் - சந்தி: அன்னர்,
இன்னர்என்பவற்றிற்போல.
ஏதிலார் - யாதொருசம்பந்தமுமில்லாதவர். புறங்கூறுபவர்
மற்றெந்தத் தீவி னைக்கும் அஞ்சா ரென்க. 'இது,
யாவரோடும்பற்றில ரென்றது' என்பது,
மணக்குடி யருரைவாக்கியம்.

(அ)

கஅக. அறனோக்கி யாற்றுங்கொல் வையம்
புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(இ - ள்.) புறன் நோக்கி - (பிறர்) நீங்கின அளவு
பார்த்து, புல் சொல் உரைப்பான் - (அவர்)*பழிப்புரையை
உரைப்பானது, பொறை-உடற்பாரத்தை, வையம் - நிலம்,
அறன் நோக்கி-(இக்கொடியதுபொறுத்தலே எனக்கு)
அறமாவதென்று கருதி, ஆற்றும் கொல் -
பொறுக்கின்றதுபோலும்; (எ-று.)
எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும் இது
பொறுத்தற்கரிது

என்னுங் கருத்தால், 'அறனேக்கி யாற்றுங்கொல்' என்றார்.

இவை யைந்துபாட்டானும், புறங்கூறுவார்க்கு எய்துங் குற்றம் கூறப் பட்டது.

(கு - ரை.) நீங்கின அளவு - நீங்கியசமயமாத்திரத்தை. அவர் பழிப் புரை - அவர்களுடையகுற்றங்களைக்காட்டுகிறநிந்தைச்சொல். உடற்பாரம் - உடம்பின்சுமை. இயல்பு - ஸர்வம்ஸஹையான பூமிக்குச் சுபாவகுணம்.

கஙஎ - ஆம் திருக்குறள் காண்க. பாவிகளுடைய உடம்பைப் பூமி தேவிக்குப் பார மென்பது, நூற்கொள்கை; "பேயிசேர் தடங்கையிறனை - நினைப்பிலாவலிநெஞ்சுடைப், பூமிபாரங்கள்" என்பது முதலியவற்றால் அறிக. கொல் என்னும் இடைச்சொல், இங்கே தற்குறிப்பேற்றவணிக்கு உறுப்பாய் நின்றது. பொறை - பொறுக்கப்படுவது: பொறுத்தல் - சுமத்தல், ஐ - செயப்படுபொருள்விகுதி. புறங்கூறுவானுடம்பு பூமிக்குப் பாரமென்க.

* பி - ம்: பழித்துரையை.

## உ0 - ஆம் அதிகாரம்—பயனிலசொல்லாமை கஉ௫

ககஅ0. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு.

(இ - ள்.) ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கிற்பின் - (ஏதி லாரைப்புறங்கூறுவார் அதற்கு)

அவர்குற்றம் (காணுமாறு) போல(ப் புறங் கூறலாகிய)தம் குற்றத்தையும் காணவல்லராயின், மன்னும் உயிர்க்கு (அவர்)
நிலைபேறுடைய உயிர்க்கு, தீது உண்டு ஒ - வருவதொரு துன்பமுண்டோ?

நடுவுநின்று ஒப்பக்காண்ட லருமைநோக்கி 'காண்கிற்பின்' என்றும், கண்டவழிஒழிதலின் டாவம்இன்று மாகவே வரும் பிறவிகளிலுந் துன்பமில்லை யென்பதுநோக்கி 'உயிர்க்குத் தீதுண்டோ' என்றும் கூறினர்.

இதனான், புறங்கூற்றொழிதற்கு உபாயம் கூறப்பட்டது.

(கு - ரை.) நடுவுநின்று ஒப்பக்காண்ட லருமை - நடுவுநிலைமையிலே நின்று சமனாகக்காண்பதன் அருமை. ஒழிதலின்-புறங்கூறுதலை நீங்குதலால். 'காண்கிற்பின்' என்னும் எதிர்காலவினையெச்சம், 'உண்டோ' என்கிற ஓகாரத்தைஈற்றிலேகொண்ட குறிப்புவினையைக் கொண்டுமுடிந்தது. ஜீவாத் மாவும் பரமாத்மாவைப்போல நித்தியமாதலால், 'மன்னுமுயிர்' எனப்பட்டது.

## ௨0-ஆம்

# அதிகாரம்—பயனிலசொல்லாமை.

அஃதாவது - தமக்கும் பிறர்க்கும் அறம் பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ் சொல், பயனில்சொல் என வாக்கின்கண் நிகழும் பாவம்நான்கனுள், பொய் - துறந்தார்க்கல்லது ஒருதலையாகக் கடிய லாகாமையின், அஃதொழித்து, இல் வாழ்வாராற் கடியப்படும்

ஏளைமூன்றனுள், கடுஞ்சொல் இனியவைகூறலா னும், குறளை புறங்கூருமையானும் விலக்கி, நின்ற பயனில்சொல் இதனுன் விலக்குகின்ரு ராகலின், இது, புறங்கூருமையின்பின் வைக்கப்பட்டது.

(கு-ரை.) பயவாத-தராத. நிகழும் - உண்டாகும். சொல்லிற்ருேன்றும் தீவினை பொய்முதலாக நான்குவகைப்படு மென்பது, "பொய்யேகுறளைகடுஞ் சொற்பயனில், சொல்லெனச் சொல்லிற் ருேன்றுவ நான்கும்"என்னும் மணி மேகலையிலுங் காணலாம்.பொய் துறந்தார்க்கல்லது ஒருதலையாகக்கடியலாகா மையின்-பொய்யானது துறவறத்தார்க்கேயல்லாமல் இல்லறத்தார்க்கு முழுவ தும்விலக்கப்படாமையால்; மணங்கூட்டுவிக்கும் பொருட்டும், ஊடலைத்தீர்த் தற்பொருட்டும், உயிர்க்கொலையைவிலக்கும் பொருட்டும், எல்லாப்பொருளை யும் இழத்தலினின்றும் நீங்கும் பொருட்டும், மற்றுஞ்சில நன்மையின்பொருட் டும் இல்லறத்தவர் பொய்சொன்னலுஞ் சொல்லலாமென்பது, நூல்துணிபு. இதுபற்றியே இந்நூலாசிரியர் வாய்மையென்னும் அதிகாரத்தை இல்லற வியலில் வையாமல் துறவறவியலில்வைத்தது. ஏளைமூன்று - குறளை, கடுஞ் சொல், பயனில்சொல். இனியவைகூறல் - கீழ்ப் பத்தாமதிகாரம். இது - இவ்வதிகாரம். மொழிக்குற்றங்களுள் பயனில சொல்லுதல் புறங்கூறுதலுக்கு இணமாதலால், அதன்பின் வைக்கப்பட்டதென்க. பயன் பயம்

என்பதன் ஈற்



றுப்போலி. இல - எதிர்மறைப் பலவின்பாற் பெயர்.
பயனில்லாத என்றால்,
இன்மை - செயப்படுபொருள் குன்றியதும், பயனை
யுடைத்தாகாத என்றால்,
இன்மை - செயப்படுபொருள் குன்றாததுமாம்.
பயனில்லாத சொற்களைச்
சொல்லுங் காலத்திலே, பயனுடையசொற்களைச்சொ
ல்லுதலும் பயனுடைய
தொழில்களை யியற்றுதலுஞ் செய்தால், மிக்க
புகழ்புண்ணியங்களை அடை
யலா மாதலால்,அதற்கு விலக்கான பயனிலசொல்லுதல்
குற்றமாயிற் றென்க.

கக௯க. பல்லார் முனியப் பயனில
சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.

(இ - ள்.) பல்லார் முனிய -
(அறிவுடையார்)பலருங்கேட்டு வெறுப்ப,
பயன் இல சொல்லுவான் - பயனிலவாகியசொற்களைச்
சொல்லுவான், எல்
லார்உம் எள்ளப்படும் - எல்லாராலும் இகழப்படும்; (எ - று.)
அறிவுடையார்பலரும் * வெறுப்பவே, ஒழிந்தாரா
லும் இகழப்படு

தலின், 'எல்லாருமெள்ளப்படும்' என்றார். மூன்றனுருபு, விகாரத்தால் தொக்கது.

(கு - ரை.) பயனை ஆராய்தற்குஉரியவர் அறிவுடையவராதலால், இங்கே 'பல்லார்' என்றது, அவர்மேல்நின்றது. ஒழிந்தாரானும் - அறிவில்லாதவர்களாலும். ஆன் என்னும் மூன்றனுருபு தொக்கது, 'எல்லாரும்' என்றவிடத்தில். 'இது, பிறரால்இகழப்படுவனென்றது' என்பது, மணக்குடியருரை.

கஙூ௨. பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

(இ - ள்.) பயன் இல-பயனிலவாகிய சொற்களை, பல்லார் முன் சொல்லல் - (அறிவுடையார்) பலர் முன்பே (ஒருவன்) சொல்லுதல்,—நயன் இல - விருப்பமிலவாகிய செயல்களை, நட்டார்கண் செய்தலின் - (தன்) நட்டார் மாட்டுச் செய்தலினும், தீது—; (எ - று.)

விருப்பமில - வெறுப்பன. இச்சொல் அச்செயலினும் மிக இகழ்ப்படு பயக்கு மென்பதாம்.

(கு - ரை.) நட்டார் - நண்பர்; நள் - பகுதி. பயனில்லாதவற்றைச் சொல்லுதல் நண்பர்க்குத் தீங்குசெய்தலினும் அதிகதீங்கைத் தரு மென்பது, கருத்து. இல - பெயர். முன் என்னும் இடைச்சொல் -

இங்கே, இடப்பொருளது. 'இம்மை மறுமை யிரண்டி
ன்கண்ணும் தீமைபயக்குமாறுயிற்று' என்பது,
மணக்குடியருரைவாக்கியம்.
(உ)

கககூ. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

(இ - ள்.) பயன் இல - பயனிலவாகிய பொருள்களை,
பாரித்து உரைக்கும் - (ஒருவன்) விரித்து உரைக்கும், உரை
- உரைதானே,— நயன் இலன் என்பது சொல்லும் - (இவன்)
நீதியில னென்பதனை † உரைக்கும்; (எ - று.)

---

* பி - ம்: கேட்டு வெறுப்பவே. † பி - ம்:
உணர்த்தும்.

உ0 - ஆம்
அதிகாரம்—பயனிலசொல்லாமை. கஉஎ

உரையால் இவன் நயனிலனென்பது அறியலா
மென்பார், அதனை
உரைமே லேற்றி 'உரைசொல்லும்' என்றார்.

(கு - ரை.) பொருள்கள் - விஷயங்கள். விரித்து
உரைக்கும் உரை -
விவரித்துச் சொல்லுஞ் சொல். சொல்லும் - அறிவிக்கும்.
'இம்மையின்கட்
பிறரால் விரும்பப்படா ரென்று கூறப்பட்டது' என்பது,

மணக்குடியாருரை.

கக௯ச. நயன்சா ரா நன்மையி னீக்கும் பயன் சாராப்

பண்பில்சொற் பல்லா ரகத்து.

(இ - ள்.) பயன் சாரா - பயனோடுபடாத, பண்பு இல் சொல் - பண்பில் சொற்களை, பல்லாரகத்து - (ஒருவன்) பலரிடை(ச் சொல்லுமாயின்), (அவை), நயன் சாரா - (அவர்மாட்டு) நீதியோடுபடாவாய், நன்மையின் நீக்கும் - (அவனை) நற்குணங்களின் நீக்கும்; (எ - று.)

பண்பு - இனிமையும் மெய்ம்மையும் முதலாய சொற்குணங்கள். 'சொல்லுமாயின்' என்பதும், 'அவர்மாட்டு' என்பதும் எச்சமாக வருவிக்கப்பட்டன.

(கு - ரை.) பயனோடுபடாத - பிரயோஜனத்தோடு கூடாத. பண்பில் சொற்கள் - குணமில்லாத வார்த்தைகள். பலரிடை-பலபேர்நடுவில். நீதி- முறைமை. படா ஆய் -பொருந்ாதனவாய்.மெய்ம்மை - உண்மை. 'முதலாய' என்றதனால், தீமைபயவாமை கேட்டாரைத்தன்வசப்படுத்தல் முதலியன கொள்க. எச்சம் - சொல்லெச்சம். சாரா என்னுஞ்சொல் இரண்டனுள் முன்னதை - எதிர்மறைப்பலவின்பால் முற்றெச்சமாகவாயினும், ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமாகவாயினுங் கொள்க. பின்னது - பெயரெச்சம். 'பல்லா ரகத்து' என்பதில் 'அகத்து' - எழனுருபு; "உள் அகம் புறம் இல் இடப்பொரு ளுருபே"

என்பது காண்க. 'இது விரும்பப்படாமையுமன்றி நன்மையும் பயவாது என்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம். (௬)

கசுசு. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

(இ - ள்.) பயன் இல - பயனிலவாகிய சொற்களை, நீர்மை உடையார் - இனியநீர்மையுடையார், சொலின் - சொல்லுவராயின்,—சீர்மை - (அவரது) விழுப்பமும், சிறப்பொடு - (அதனால்வரும்) நன்குமதிக்கற்பாடும், நீங்கும் - (உடனே) நீங்கும்; (எ - று.)

நீர்மை - நீரின்தன்மை. 'சொலின்' என்பது, சொல்லாமையை விளக்கிற்று.

(கு - ரை.) விழுப்பம் - புகழ். நன்கு மதிக்கற்பாடு - நன்றாகமதிக்கப்படுதல்: கௌரவம். "விழுமம் சீர்மையும் சிறப்பு மிடும்பையும்" என்னுஞ் சூத்திரத்தைக்கொண்டும், சீர்மையும் சிறப்பும் வேறாதலை அறிக. 'சிறப்பொடு' என்பதிலுள்ள 'ஒடு' என்னும் எண்ணிடைச்சொல்லை எடுத்துச் சீர்மையென்பதனோடுங் கூட்டுக. 'இது, நீர்மையுடையராயினும் எல்லாநன்மையும் போமென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம். 'நீர்மை-நீரின்

தன்மை' என்றவிடத்து "தாழ்ந்து,சொற்படு சீதத்தொடு சுவையுடைத்தாய்,
இழிநிலஞ்சேர்ந் தாழ்வது நீர்" என்ற மணிமேகலையும், "தீ முரணிய நீரும்
என்றாங், கைம்பெரும் பூதத்
தியற்கைபோல,......அளியு முடையோய்"
என்ற புறநானூறும் அறியத்தக்கன. தண்மைக்கும், இனிமைக்கும், மிக
வுதவுதற்கும் நீர் எடுத்துக்காட்டாம்.
(ரு)
ககரு. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனன்
மக்கட் பதடி யெனல்.
(இ - ள்.) பயன் இல் சொல் பாராட்டுவானை - பயனில்லாத சொற்க
ளைப் பலகாலுஞ்சொல்லுவானை, மகன் எனல் - மகனென்று சொல்லற்க;
மக்கள் பதடி எனல் - மக்களுட் பதரென்று சொல்லுக; (எ - று.)
'அல்' விகுதி வியங்கோள், முன் எதிர்மறையினும், பின் உடம்பாட்டி
னும் வந்தது. அறிவு என்னும் உள்ளீடு இன்மையின், 'மக்கட்பதடி' என்றார்.
இவையாறுபாட்டானும், பயனில்லாதசொற்களைச் சொல்லுதலின் குற்

றம் கூறப்பட்டது.

(கு - ரை.) பாராட்டுதல்-மிகப்பயிலுதல். பலகாலும்-பலதரமும். மக
னென்று சொல்லற்க - மனிதனென்று சொல்லவேண்டாம். மக்களுள்-மனி
தர்களுள். பதர்-உள்ளீடில்லாத தானியம்; இங்கே, அதுபோலச் சாரமான
அறிவு இல்லாதவன். எனல் என்னும் சொல்லெச்சம் - என்று சொல்க என,
சொல்என்னும் தன்னெச்சத்தைக் கொண்டது. இனி, ஒருவன் பேசும் பய
னில்லாத சொற்களைக் கொண்டாடுபவனை மனிதனென்று எண்ணவேண்
டா என்றும் உரைக்கலாம். 'இது, மக்கட்பண்பில னென்றவாறு' என்பது,
மணக்குடியருரைவாக்கியம். (கூ)

கககூ.

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

(இ - ள்.) நயன் இல - நீதியோடு படாத சொற்களை, சான்றோர்—,
சொல்லின்உம் - சொன்னாராயினும், சொல்லுக-அஃது அமையும்;பயன் இல சொல்லாமை - (அவர்)

பயனில்லவற்றைச் சொல்லாமை (பெறின், அது), நன்று—; (எ - று.)

'சொல்லினும்' எனவே, சொல்லாமை பெறப்பட்டது. நயனிலவற்றி னும் பயனில தீய வென்பதாம்.

(கு - ரை.) அமையும் - பொருந்தும். அநீதியானவார்த்தைகளினும் பய னில்லாதவார்த்தைகள் கொடியன என்பது கருத்து. இனி, இதற்கு, கடுஞ் சொற் சொல்லினும் பயனில்சொல் தீயதென்றுங் கருத்துக்கொள்ளலாம்; கடுஞ்சொல்லுஞ் சிறபான்மை நன்மைபயக்கு மாதலின். 'இது, சான்றோர்க்கு ஆகா தென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

(எ)

ககஅ. அரும்பய னாயு *மறிவினர் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

---

* பி - ம்:—அறிவுளர்.

௨௦ - ஆம் அதிகாரம்—பயனிலசொல்லாமை

க௨கூ

(இ - ள்.) அரு பயன்-(அறிதற்கு) அரிய பயன்களை, ஆயும்-ஆராயவல்ல அறிவினர் - அறிவினையுடையார்,—பெரு பயன் இல்லாத சொல் - மிக்க பய னுடைய வல்லாத சொற்களை, சொல்லார்—; (எ - று.)

அறிதற்கு அரிய பயன்களாவன - வீடுபேறும், மேற்கதிச்செலவும் முதலாயின. 'பெரும்பயனில்லாத' எனவே, பயன் சிறிதுடையனவும் ஒழிக்கப்பட்டன.

(கு - ரை.) மிக்கபயனுடையவல்லாத - பெரும்பிரயோசனத்தை உடைத்தானவையல்லாத. வீடுபெறு - முத்திபெறுதல். மேற்கதிச்செலவு - சுவர்க்கம் முதலிய மேலானபதவிகளிற் செல்லுதல். முதலாயின என்றது, புகழ் முதலியவற்றை. 'வேறு கூறிய குற்றமெல்லாம் பயத்தலின், இதனை அறிவுடையார் கூறாரென்றது' என்பது, மணக்குடியருரை. (அ)

கககூ. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

(இ - ள்.) பொருள் தீர்ந்த - பயனின் நீங்கிய சொற்களை, பொச்சாந்து உம் - மறந்தும், சொல்லார்—; மருள் தீர்ந்த மாசு அறு காட்சியவர் - மயக்கத்தின் நீங்கிய தூய அறிவினையுடையார்; (எ - று.)

தூய அறிவு - மெய்யறிவு. 'மருடீர்ந்த' என்னும் பெயரெச்சம், 'காட்சியவர்' என்னுங் குறிப்புப்பெயர் கொண்டது.

இவைமூன் றுபாட்டானும்,
பயனிலசொல்லாமையின் குணம் கூறப்
பட்டது.

(கு - ரை.)

தூய - குற்றமற்ற. மெய்யறிவாவது - பிறப்பு முத்திகளையும் அவற்றின்காரணங்களையும் சந்தேக விபரீதங்களின்றி உண்மையாக அறிதல்; இதனை வடநூலார் 'தத்வஜ்ஞானம்' என்பர். மயக்காவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மையனவுஞ் சொல்லும் மயக்கநூல்வழக்குகளை மெய்ந்நூல்வழக்கென்று துணிதல்; குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளியென்றும், இவ்வாறே ஒன்றைப் பிறிதொன்றாகத்துணிதலும், அது; மயக்கம், மருள், விபரீதவுணர்வு, அவித்யை என்பன - ஒருபொருட்சொற்கள். மாசு அறு காட்சி என்றது, கேவல அறிவை. மேல் மெய்யுணர்தலென்னும் அதிகாரத்தில் "மருணீங்கி, மாசறு காட்சி யவர்க்கு" என வருதலுங் காண்க. தீர்ந்த காட்சியவர் என்க. தீர்ந்த என்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது - பெயர். பின்னது - பெயரெச்சம். தீர்ந்த என்பது காட்சியவர்க்கு விசேஷணமே யன்றி, காட்சிக்கு விசேஷணமன்றென்க. குறிப்புப்பெயர் - குறிப்புவினையாலணையும் பெயர். பொச்சாந்து, பொச்சா - பகுதி; ஒருசொல். 'இது, தெளிவுடையார் கூறு றென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

(க)

௨00. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.
17



(இ - ள்.) சொல்லில் - சொற்களில், பயன் உடைய - பயனுடைய சொற்களை, சொல்லுக—; சொல்லில் - சொற்களில், பயன் இலா சொல் பயனில்லாத சொற்களை, சொல்லற்க - சொல்லா தொழிக; (எ - று.)

'சொல்லில்' என்பது - இருவழியும் மிகையாயினும், சொற்பொருட்பின் வருநிலை யென்னும் அணி நோக்கி வந்தது; "வைகலும் வைகல் வரக்கண்டும்" என்பதுபோல.

இதனால், சொல்லப்படுவனவும், படாதனவும் நியமிக்கப்பட்டன.

(கு - ரை.) இருவழியும் மிகையாயினும் - இரண்டுவாக்கியங்களிலும் அவசியமில்லாமல் அதிகமாயிருப்பதானாலும்: ஓரிடத்து இருந்தாற்போதுமானாலும் என்றபடி. வந்த சொல்லும் பொருளும் பின்னும் பலமுறை வருதல், சொற்பொருட்பின்வருநிலையணியாம்; "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார், வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர், வைகலும் வைகற் றம் வாழ்நாண்மேல் வைகுதல், வைகலை வைத்துணரா தார்"என்னும் நாலடியார்ச்செய்யுளில், வைகலென்னுஞ்சொல் பலதரம்வருதல்

காண்க. நியமிக் கப்பட்டன-வரையறுத்துச்சொல்லப்பட்டன. இனி, சொல்லின் என்று எடுத்து - சொல்லவேண்டுமாயின் என்றும், சொல்லுதலினால் என்றும் பொருள் கூறினும் அமையும். உடைய-பெயர். படாதன-சொல்லப்படாதவை. 'சொல்லின்' என்பதற்கு - 'சொல்லுவனாயின்'என்பது, மணக்குடியருரைவாக்கியம்.

## உக - ஆம்

## அதிகாரம்—தீவினையச்சம்.

அஃதாவது - பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனான், மெய்யின்கண்நிகழும் பாவங்களெல்லாந் தொகுத்து விலக்குகின்றா ராகலின், இது பயனிலசொல்லாமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) வினை - தொழில், கருமம்; அது - நல்வினை, தீவினை என இருவகைப்படும்: தீவினையச்சம் - பாபபயம். பாவங்களாயின - பாவத்தைத் தரக்கூடிய கொடுந்தொழில்களை. "அச்சக் கிளவிக்கு ஐந்து மிரண்டும், எச்சமிலவேபொருள்வயினான" என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய விதி பற்றி, தீவினையச்சம் என்பதை - தீவினையினின்று அஞ்சுதல் என ஐந்தாம் வேற்றுமையாகவேனும், தீவினையைஅஞ்சுதல்என இரண்டாம்வேற்றுமை யாகவேனும் விரிக்கலாம்; தீவினைக்குஅஞ்சுதல் என நான்காம்வேற்று மையாகவிரித்தல்,உலகவழக்காம். தீவினை-தீமையாகிய செயலெனப் பண்புத்தொகை. இதனான் - இவ்வதிகாரத்தால். மெய்யின்கண் நிகழும் - உடம்பினாற்செய்யப்படுகின்ற.

பயனிலசொல்லாமை, கீழ் இருபதாம் அதிகாரம். பய னிலசொல்லாமையென்னும் அதிகாரத்தின்பின் தீவினை யச்சமென்னும் அதி • காரத்தை வைத்ததற்குக் காரணம்,மனத்தின்குற்றத்தைக் கீழ் அழுக்காறாமை வெஃகாமை என்னும் இரண்டுஅதிகாரங்களாற் கூறி, அதன்பின் வாக்கின் குற்றத்தைப் புறங்கூறாமை, பயனிலசொல்லாமை என்னும் இரண்டு அதிகா ரங்களாற் கூறியவர், அதன்பின் மிச்சமாய்நின்ற காயத்தின்குற்றத்தைக் கூறவேண்டுவது முறைமை யாதலா லென்க.

உக - ஆம் அதிகாரம்—தீவினையச்சம் கருக

உ0க. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) தீவினை என்னும் செருக்கு - தீவினையென்றுசொல் லப்படும் மயக்கத்தை, தீவினையார் - (முன்செய்த) தீவினையுடையார், அஞ்சார்—; விழுமியார் - (அஃதுஇலராகிய) சீரியார், அஞ்சுவர்—; (எ - று.)

'தீவினையென்னுஞ்செருக்கு' என, காரியம் காரணமாக உபசரிக்கப் பட்டது. மேற்றொட்டுச்செய்து கைவந்தமையான் தறியாமையான் 'அஞ்சுவர்' என்றும் கூறினர்.

'அஞ்சார்' என்றும், செய்

(கு - ரை.) 'தீவினையென்னுஞ்செருக்கு'

என்பதற்கு - பாவமாகிய அவித்யை யென்று பொருள்; இதிலே, தீவினை - அவித்யையின் பயனாதலால், காரியம். செருக்கு - அவிச்சை [மனமயக்கம்]; இது-காரணம்: காரியமாகிய தீவினை, காரணமாகிய செருக்காகக் கூறப்பட்டது.
இனி, தீவினை
யென்னுஞ் செருக்கு என்பதற்கு -
கொடுந்தொழில்செய்தலினால் வரும் களிப்பு எனப் பொருள்கொண்டு, தீவினையென்னுங் காரணம் செருக்கென்னுங் காரியமாகக் கூறப்பட்டதென்றார், பிரயோகவிவேகநூலுடையார்; அதனை, அந்நூலில் "மருளறு காரணம்" என்னுஞ் செய்யுளின் உரையிற் காண்க. இவையெல்லாம் இலக்கணநூலில் உபசாரவழக்கு எனப்படும். (உப சாரவழக்காவது - காரணம் காரியமாகவும், காரியம் காரணமாகவும், குணம் குணியாகவும்,குணி குணமாகவும்,ஒருபொருளின்வினை மற்றொருபொருளின் வினையாகவும், இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேலாகவும், சினைவினை முதல்வினையாகவும், முதல்வினை சினைவினையாகவும் இவ்வாறு ஒன்றன்தன்மை மற்றொன்றில் ஏற்றிக் கூறப்படுதல்: இது, ஆகுபெயரென்கிற இலக்கணைக்கு இனமாம்;) இதனை வடநூலார் ஔபசாரிகப்ரயோகம் என்பர். அஃது இலர்-முன்செய்த தீவினையில்லாதவர். சீரியார்-சிறப்புடையவர். மேல்தொட்டுச் செய்து கைவந்தமையான்-முற்பிறப்புக்களில் தொடங்கிச்செய்து பழக்கமாயிருத்தலால். விழுமியார் - விழுமம்

என்னும் உரிச்சொல்
லடியாகப்பிறந்த பலர்பாற்பெயர்: பகுதி, அம் கெட்டு 'விழும்'என நின்றது;
இ - சாரியை, ய் - சந்தி, ஆர் - விகுதி. அஞ்சார், அஞ்சுவர் என்னும் இர
ண்டுமுற்றுக்களுக்கும் செருக்கு என்னுஞ் செயப்படுபொருளை எடுத்துத்
தனித்தனிச் சேர்த்துக்கொள்க. இது, கடைநிலைத்தீவகம். ஒருவன் ஒருபிறப் பிற் செய்யும் நல்வினைக்கு அவன் முற்பிறப்பிற்செய்துள்ள நல்வினையே
காரணமாவதுபோல, ஒருவன் ஒருபிறப்பில்
தீவி னைசெய்தற்கும் அவன் முற் பிறப்பிற்செய்துள்ள தீவினையே காரணமாம்; நல்வினை செய்தற்கு முன்னைத்
தீவினை காரணமாகாதவாறுபோல, தீவினைசெய்தற்கும் முன்னை நல்வினை காரணமாகாது என்பது கருத்து. இது, நூல்வழக்குக் கூறியது. இனி, இக் குறளுக்கு - 'கொடுந்தொழில்செய்பவர் பாவத்துக்கு அஞ்சார்; நற்றொழில் செய்பவர் அதற்கு அஞ்சுவர்' என, உலகவழக்கை
கக் கூறியதாகவும் பொருள் கொள்ளலாம். இதனால், விழுமியாரது குணமாகிய தீவினையச்சமே சிறப்பு கூஉ

## திருக்குறள்

டைய தென்றதாயிற்று. முதலடியில் 'தீவினையார்' 'விழுமியார்' எனவும், 'அஞ்சார்' 'அஞ்சுவர்' எனவும் மாறுபட்டசொற்கள் வந்தது, முரண்தொடை.

உ0உ. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

(இ - ள்.) தீயவை - (தனக்கு இன்பம்பயத்தலைக் கருதிச் செய்யுந்) தீவினைகள், தீய பயத்தலான் - (பின் அஃது ஒழித்துத்) துன்பமே பயத்தலான்,—தீயவை-(அத்தன்மையவாகிய) தீவினைகள்,தீயின் உம் அஞ்சப்படும்- (ஒருவனால்) தீயினும் அஞ்சப்படும்; (எ - று.)

பிறிதொருகாலத்தும் பிறிதொருதேயத்தும் பிறிதோருடம்பினுஞ் சென்று சுடுதல் தீக்கு இன்மையின், *'தீயினும் அஞ்சப்படும்' என்றார்.

(கு - ரை.) தீவினைகள் - கொடுஞ்செயல்கள். தீய-கெட்டபயன்களை.
பயத்தல் - தருதல். பின் - மறுமையில். அஃது - இன்பம். தீயினும்-அக்கினியினும் அதிகமாக. நெருப்பு எந்தக்காலத்தில் எந்த இடத்தில் எந்த உடம்பிற் படுமோ, அந்தக்காலத்தில் அந்த இடத்தில் அந்த உடம்பில்மாத்திரமே சுடும்; தீவினையோ, மறுமைக்காலத்திலும் வேறோர்உலகத்திலும் மற்றொரு சரீரத்திலும்போய் உயிரை வருத்தும்: ஆதலால், தீவினை

தீயினும் கொடிது
என்பது கருத்து. இனி, அகமாகிய உயிரை வருத்துகின்ற தீவினைகள் புற
மாகிய உடம்பை வருத்துகின்ற நெருப்பினும் பயங்கரமானவை என்றுங்
கருத்துக்கொள்ளலாம். 'தொடிற்சுடுமென்று தீக்குஅஞ்சுதலினும் மிக அஞ்
சப்படும்' என்பர் மணக்குடியர். உம்மை - இழிவுசிறப்பு. அஞ்சப்படும் -
செய்யுமென்னும்வாய்பாட்டுச் செயப்பாட்டுவினைமுற்று; இது - இங்குப் பலவின்பாலுக்கு வந்தது.
இரண்டாவதாய்நின்ற 'தீயவை' என்பது, அவசியமில்லாமல் அதிகமாயிருப்பதாயினும், வந்த சொல்லும் பொருளும் பின்
னும் பலமுறை வருகிற சொற்பொருட்பின்வருநிலையென்னும் அணியை
நோக்கி வந்தது. 'தீயவை தீயினு மஞ்சப்படும்' என்பது, பிரதான வாக்கி
யம்; 'தீயவை தீயபயத்தலான்' என்பது, காரணவாக்கியம்: ஏதுவணி. (உ)

உ0௩. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

(இ - ள்.) அறிவினுள் எல்லாம் - (தமக்கு உறுதிநாடும்) அறிவுகளெல்லாவற்றுள்ளும், தலை என்ப - தலையாய அறிவென்று சொல்லுவர், (நல்லோர்): செறுவார்க்குஉம் - (தம்மைச்) செறுவார்மாட்டும், தீய தீவினைகளை, செய்யா

விடல் - செய்யாது விடுதலை; (எ - று.)

விடுதற்குக்காரணமாகிய அறிவை 'விடுதல்' என்றும், 'செய்யத்தக்குழி யுஞ் செய்யாதொழியவே தமக்குத் துன்பம் வாராது' என உய்த்துணர்த லின், அதனை 'அறிவினுளெல்லாந் தலை' என்றுங் கூறினார். 'செய்யாது' என் பது, கடைக்குறைந்து நின்றது.

---

* பி - ம்: தீயினுமஞ்சப்படுவதாயிற்று.

## உக - ஆம் அதிகாரம்---தீவினையச்சம்

கநந

இவைமூன்றுபாட்டானும், தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது கூறப் பட்டது.

(குறை: உறுதிநாடும்-நன்மையைத்தேடுகின்ற; 'எல்லாவறங்களையும் அறியும்' என்பர் மணக்குடியர். தலைஆய - முதன்மையான. செறுவார் மாட் டும் - வருத்துபவரிடத்திலும்; தமக்குத் தீமைசெய்தார் விஷயத்திலும் என்ற படி. செய்யாதுவிடுதலை என்பது-செய்யாது விடுதற்குக்காரணமாகிய அறிவை

என்றபடி; இங்கே காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது: ஆனதுபற்றியே,
செய்யாதுவிடுதலை 'சிறந்த அறிவின்பயன்' என்னாமல் 'அறிவினுளெல்லாந்
தலை' என்றார். செய்யத்தக்குழி - செய்யத்தக்க இடம்; அதாவது - தம்மை
வருத்துபவர்பக்கல். செய்யா-ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்; (இவ்
வாய்பாட்டுச்சொல் - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமும், உடன்பாட்டு
இறந்தகால வினையெச்சமும், அஃறிணை யெதிர்மறைப் பலவின்பால்முற்
றும், அத்தன்மைய வினையாலணையும்பெயரும், அம்முற்றெச்சமும், ஈறு
கெட்ட எதிர்மறை ஒன்றன்பால்முற்றும் ஆகவும் வரும்: இங்குக்காட்டிய
ஏழுவகைகளுள் முதல்மூன்றிலும் வருமொழிமுதல்வலி மிகும்; மற்றையவற்
றில் மிகாது: இவையெல்லாம் இடம்நோக்கியும் பொருள்நோக்கியும்உணர்க.)
தலைமையானதைத் தலையென்றது - பண்பாகுபெயர். தலை - உத்தமம்; உத்
தம அங்கமாகிய சிரசுபோலச் சிறந்த தென்றுங் கொள்ளலாம். தீய-பெயர்.
நான்காம்வேற்றுமையின் பொருளாகிய

ஏற்றுக்கொள்ளுதலும் ஏழாம்வேற்
றுமையின் பொருளாகிய இடனாய்நிற்றலும்
ஒருசாரொத்திருத்தலை நோக்கி,
செறுவார்க்கும் என்னும் நான்காம்வேற்றுமையை
'செறுவார்மாட்டும்' என
ஏழாம்வேற்றுமையாக விரித்தார்; இதனை
உருபுமயக்கமெனினும் அமையும்:
கொடைப்பொருளில் அல்லது பகைப்பொருளில் வந்த
நான்காம்வேற்றுமை
யெனினும் இழுக்காகாது. உம் - இழிவுசிறப்பு:
இறந்ததுதழுவிய எச்சவும்
மையாகக் கொண்டு, தம்மை வருத்துபவரல்லாதார்க்குச்
செய்யாதொழிதலை
யும் உடனமைத்தலும் ஒன்று. 'நல்லோர்' என்றது,
தருமநூலுணர்ச்சியோடு
உலகவழக்கறிதலு முடையாரை; இது, தோன்றா
எழுவாய். (ங)

உ0சு. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(இ - ள்.) (ஒருவன்), பிறன் கேடு - பிறனுக்குக்
கேடுபயக்கும் வினை
யை, மறந்துஉம்—, சூழற்க - எண்ணொழிக; சூழின் -
எண்ணுவனாயின்,— சூழ்ந்தவன் கேடு - தனக்குக்
கேடுபயக்கும்வினையை, அறம் - அறக்கடவுள்,
சூழும் - எண்ணும்; (எ - று.)

'கேடு' என்பன - ஆகுபெயர். சூழ்கின்றபொழுதே தானும் உடன்
சூழ்தலின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படும் என்பது பெறப்பட்
டது. அறக்கடவுள் எண்ணுதலாவது - அவன்கெடத் தான் நீங்க நினைத்தல்.
தீவினை யெண்ணலும் ஆகா தென்பதாம்.



(கு - ரை.) கேடுபயக்கும் வினை - கெடுதியைத்தருந் தீத்தொழில். தன க்கு - எண்ணினவனுக்கு. அறக்கடவுள் - தருமதேவதை. கேடு-கெடுதியைத்
தரும் வினைகளைக் குறித்தலால், காரியவாகுபெயர். ஒருமனிதன் மற்றொருவனுக்குத் தீங்குசெய்யநினைத்தால், நினைத்த அம்மனிதனுக்குத் தீங்குசெய்யத்
தருமதேவதை கூடவே நினைக்கும்; இவற்றுள்
மனிதனது முயற்சி இடையூற்றின் மிகுதியால்
நிறைவேறாதாயினும், அல்லது நிறைவேறக் காலஞ்செல்லுமாயினும், தேவதையினது முயற்சி அங்ஙனந் தடைப்படாமல் உடனே நிறைவேறிவிடும். ஆதலால், ஒருவன் பிறனுக்குத் தீங்குநினைத்தமாத்திரத்திற் பாவம் உண்டாகி அதனால் தான் தீங்கையடைவா னென்பது தாற்பரியம். அவன் கெடத் தான் நீங்க - எண்ணியவன் கெடும்படி அவனைவிட்டுத் தான்
விலக. எண்ணலுமாகாது என்றதனால், சொல்லுதலும் செய்தலு மாகாமை பெறப்பட்டது. 'மறந்தும்' என்றதனால், மறவாதிருக்கையில் எண்ணுதொழிய வேண்டுமென்பது தானே பெறப்படும். மறந்தும், உம் - இழிவுசிறப்பு. 'சூழ்' என்ற

வினை, ஒருபொருளிலேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின் வருநிலை. 'கெடுவான் கேடுநினைப்பான்' என்ற பழமொழி, இங்குக் கருதத்தக்கது. 'சூழ்வனாயின், அவனாற்சூழப்பட்டவன் அதன்மாறாகக் கேடுசூழ்வதன் முன்னே சூழ்ந்தவனுக்குக்கேட்டைத் தீமைசெய்தார்க்குத் தீமைபயத்தலாகிய அறம் தானே சூழும் என்றவாறு; இது, தீமைவினையினும் கேடுதருமென்றது' என்பது, மணக்குடியருரை.

(௪)

உ0௫. இலனென்று தீயவை செய்பற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) இலன் என்று - (யான்) வறியன் என்று கருதி, தீயவை செய்யற்க-(அது தீர்தற்பொருட்டுப் பிறர்க்குத்) தீவினைகளை (ஒருவன்) செய்யாதொழிக; செய்யின் - செய்வனாயின், பெயர்த்துஉம் இலன் ஆகும் - பெயர்த்தும் வறியனாம்; (எ - று.)

அத்தீவினையாற் பிறவிதோறும் இலனா மென்பதாம். 'அன்'விகுதி-முன் தனித்தன்மையினும், பின் படர்க்கையொருமையினும் வந்தது. தனித்தன்மை - "உளனா வென்னுயிரை யுண்டு" என்பதனானும் அறிக. மற்று - அசைநிலை. 'இலம்' என்ற பாடமோதுவாரும் உளர். 'பொருளான் வறியனெனக் கருதித் தீயவை செய்யற்க; செய்யின், அப்பொருளானேயன்றி நற்குணநற்செய்கைகளானும் வறியனாம்' என்று உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) வறியன் - தரித்திரன். அது - வறுமை. பெயர்த்தும்-மறுபடியும். பிறவிதோறும் - அடுத்துவருகிற சன்மங்களிலெல்லாம்; ஒருபிறப் 'பிலே செய்த வினை ஏழேழு பிறப்புந் தொடருமென்க. 'இலன்' என்னும் எதிர்மறைக்குறிப்பு வினைப்பகுபதங்கள் இரண்டனுள், முன் னது - தன்மை யொருமை: 'அன்' விகுதி தன்மையொருமைக்குவருதல், புதியனபுகுதல்; இதற்கு விதி, தொல்காப்பியத்தில் இல்லை: உரையாசிரியர்கள் எதிரதுபோற்ற லென்னும் உத்தியால் அமைத்திருக்கிறார்கள்; அவர்கருத்துப்பற்றி, பின்

உக - ஆம் அதிகாரம்—தீவினையச்சம்

கரு௫

னூலாராகிய நன்னூலார் விதி கூறினர்: அருமையாகவருவதற்கு இலக்கியத்தினின்று உதாரணங்காட்டுகிறார், "உளனு" என்று தொடங்கி; இம்மேற் கோள் - கலித்தொகை, குறிஞ்சிக்கலி, உஉ - ஆம் செய்யுளில் உள்ளது: இதற்குப் பொருள் – 'யான் சிறிது உயிருடனேயிருக்கும்படி என் உயிரை வாங்கிக்கொண்டு'என்று உரைத்தார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். உளனு-உள்ளேனாக; 'இலன்' என்று எதிர்மறையில் தன்மையொருமையில்'அன்'வந்தது போல, உடன்பாட்டில்வந்ததற்கும் ஆசிரியவசனம் எடுத்துக்காட்டியவாறு. இலன் ஆகும் - இல்லாதவனுவன்; இங்கே இலன் என்பது - ஆண்பாற் படர்க்கையொருமை.

பெயர்த்து என்பது - மீண்டு என்னும் பொருளைத் தந்ததனால், மற்று என்பது அசைநிலையாயிற்று; 'மற்று' என்றதிலுள்ள உம்மையை எடுத்து 'பெயர்த்து' என்பதனோடு கூட்டுக. மற்றும்பெயர்த்து என்பதை ஒருபொருட்பன்மொழி யாகவுங் கொள்ளலாம். 'மற்றும் - மீண்டும், பெயர்த்து - வேறுபட்டு, இலன் ஆகும்' என்று பொருளுரைத்தார், இராமாநுசகவிராயர். 'தனித்தன்மை' என்ற வாக்கியத்தின்பின் எழுதாமல் 'மற்று- அசைநிலை' என்றதன்பின் 'இலம்என்று பாடமோதுவாருமுளர்' என்றெழுதியதனால், இரண்டடியிலும் 'இலம்' என்றுபாடமெண அறிக. (இந்தப்பாடம் மணக்குடவருரையிலுள்ளது.) அப்பாடத்தில் முதலடியில் 'இலம்' என்பதற்கு - யாம் பொருளில்லோம் என்று பொருள்; இலம் - தனித்தன்மைப் பன்மை: ஒவ்வொருவனும் தன்னைப்பற்றித் தான் நினைக்கும்பொழுது பன்மையாக நினைத்தல் இயல்பு; இதனை நினைத்துப்பார்த்து அறிக. இரண்டாம் அடியில், இலம் ஆகும் என்பதற்கு - வறுமை உண்டாம் என்று பொருள்; இலம் - வறுமையுணர்த்தும் உரிச்சொல்: "இலம்பாடொற்க மாயிரண்டும் வறுமை" என்றார் தொல்காப்பியனார்; இச்சூத்திரத்தில் 'இலம்' என்பது உரிச்சொல்லேயொழிய 'இலம்பாடு' என்பது உரிச்சொல்லன்று என்பதை, இச்சூத்திரத்தின் உரையைக்கொண்டும், எழுத்ததிகாரத்தில் 'இலமென் கிளவிக்குப் படுவரு காலை" என்ற சூத்திரத்தைக்கொண்டும் உணர்க. பெயர்த்து- இறந்தகால வினையெச்சம். இனி, 'இலனென்று' என்பதையும் படர்க்கை யொருமையாகவே

கொண்டு, இவன் பொருளில்லாதவனென்று அலட்சியஞ் செய்து வறியவனுக்குத் தீயவை செய்யற்க என்று உரைத்தலும் அமையும்.

உ0சு. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னையடல் வேண்டா தான்.

(இ - ள்.) நோய் பால - துன்பஞ்செய்யுங் கூற்றவாகிய பாவங்கள், தன்னை—, அடல் - (பின் வந்து) வருத்துதலை, வேண்டாதான் - வேண்டாதவன்,—தீ பால - தீமைக்கூற்றவாகிய வினைகளை, தான்—, பிறர்கண் - பிறர் மாட்டு, செய்யற்க - செய்யாதொழிக; (எ - று.)

செய்யின், அப்பாவங்கள் அடுதல் ஒருதலை யென்பதாம்.

(கு - ரை.) கூற்ற - பகுதியுடையன. பின் - மறுமையில். அடுதல்-வருத்துதல். ஒருதலை - நிச்சயம். பால - பால் என்னும் பகுதியின் மேற் பிறந்த



பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். "மூழ்க்க பிணிகவிய முன் செய்த வினையென்றே முனிவார் தாமும்" என்னும் இலக்கியத்தை நோக்கி, நோய்ப்பால என்பதற்கு - 'வியாதியின்பகுதியினாலாந் துன்பங்கள்' என்று பொருள்கொள்ளுதலும் அமையும்; 'இது, நோயுண்டாமென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம். அடல் -

தொழிற்பெயர். வேண்டாதான் - எதிர்மறை வினையாலணையும்பெயர்; இதுவும், மேல் ஒன்பதாங்கவியும் ஒருகருத்
தின் வகைப்பட்டன .

(௯)

உ0எ. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

(இ - ள்.) எனை பகை உற்றார்உம் - எத்துணைப் பெரிய பகையுடையா ரும், உய்வர்-(அதனை ஒருவாற்றால்) தப்புவர்; (அவ்வாறன்றி), வினை பகை - தீவினையாகிய பகை, வீயாது - நீங்காது, பின் சென்று அடும் - புக்குழிப் புக்குக் கொல்லும்; (எ - று.)

"வீயா, துடம்பொடு நின்ற வுயிரு மில்லை" என்புழியும், வீயாமை - நீங் காமைக்கண் வந்தது.

(கு - ரை.) அதனை - அப்பகையை. ஒருவாற்றால் - ஒருவிதத்தால்; ஒரு ஆறு எனப்பிரிக்க. புக்குழிப்புக்கு - சென்றவிடத்திற் சென்று; சன்மந் தோறும் பின்தொடர்ந்து. வீயாது பின்சென்றடுதற்கு மேற்பாட்டில் உவமை கூறுவர். 'பல்லாவுளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப், பழவினையு மன்னதகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக்கொளற்கு" என்னும் நாலடியாரையும் அறிக. 'வீயாது' என்றுதொடங்கிய மேற்கோள் - புறநானூறு, ௩௬௩ - ஆஞ் செய்யுளில்

உள்ளது; அதற்கு நீங்காமல் உடம்புடனே எப்பொழுதுங்கூடிநின்ற உயிர் ஒன்றும் இல்லை என்று பொருள். நீங்காமைக்கண் - நீங்காமையென்னும் பொருளில். எனை எத்தனை யென்பதன் மரூஉ. பகுதல்-மனம்வேறுபடுதல் என்ற காரணத்தால் பகை என வந்ததென்பர். உற்றார் - பெற்றவர்; உறு என்னுங் குறிவினைப் பகுதி, ஒற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று. உம் - இழிவுசிறப்பு. வீயாது - வீ என்னும் வினைப்பகுதியடியாப்பிறந்த எதிர்மறைவினையெச்சம். புறப் பகைகளினும் உட்பகையாகிய வினைக்கு உள்ள உறுதியை இதனாற் கூறினார். அடும் - வருத்துமென்றபடி.

(எ)

உ0அ. தீயவை செய்தார் கெடுத
னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

(இ - ள்.) தீயவை செய்தார் - (பிறர்க்குத்) தீவினைகளைச் செய்தார், கெடுதல் - (தாம்) கெடுதல், (எத்தன்மைத்தெனின்),—நிழல் - (ஒருவன்) நிழல், தன்னை வீயாது-(கெடிதாகப்போயும்) அவன்தன்னை விடாது (வந்து), அடி உறைந்தற்று - அடியின்கண் தங்கிய தன்மைத்து; (எ - று.)

இவ்வுவமையைத் தன்காலம்வருந்துணையும் புலனாகாது உயிரைப்பற்றி நின்று அதுவந்துழி உருப்பதாய தீவினையைச்செய்தார் பின் அதனாற் கெடு

தற்கு உவமையாக்கி உரைப்பாரு முளர்; அஃது உரையன் றென்பதற்கு, 'அடியுறைந்த நிழல் தன்னை வீந்தற்று' என்றோது 'வீயாதடியுறைந்தற்று'
என்ற பாடமே சரியாயிற்று. மேல் "வீயாது பின்சென் ஈண்டு அதனை உவமையான் விளக்கினர்.

றடும்" என்றார்,

(கு - ரை.) அடியின்கண் - (நிழலுக்குரியவனது) பாதத்தில். ஒருவனது நிழல் அவன் எவ்வளவுதூரஞ்சென்றாலும் தான் எவ்வளவுநீண்டுசென்றாலும் அவனைவிடாமல் அவன்சென்றவிடமெல்லாந் தானுஞ்சென்றுகொண்டே வந்து அவனடியில்தங்குதல் தவறாததுபோல, ஒருவன்செய்ததீவினை அவனு யிர் எவ்வளவுதூரஞ்சென்றாலும் தான் எவ்வளவுவிலகியதாகத் தோன்றி ஞலும் அவ்வுயிரைவிடாமல் அதுசென்றவிடமெல்லாஞ் சென்றுகொண்டே வந்து அவ்வுயிரைவருத்துதல் தவறாது என்பது, பரிமேலழகருரையின் கருத்து. வருந்துணையும் - வருமளவும். புலனாகாது - வெளிப்படாமல். அது வந்துழி - அக்காலம் வந்தவிடத்து. உருப்பது ஆய - வெளித்தோன்றுவதா கிய. பிறருரையின் கருத்து:—ஒருபொருளினது நிழல், வெயில்

நிலா விளக்கொளி முதலியன வருமளவும் வெளிப்படாமல் அப்பொருளின் அடியைப் பற்றியிருந்து அச்சுடர்கள் வந்தவளவில் அதனைவிட்டு வெளிப்பட்டுத் தோன்றுதல்போல, ஒருவன் செய்த தீவினை பலித்தற்கு உரிய காலம் வருமட்டும் வெளிப்படாமல் உயிரைப்பற்றியிருந்து அக்காலம் வந்தபொழுது வெளிப் பட்டு அழிக்குமென்பதாம்; இங்ஙனம் உரைப்பதற்கு 'அடியி, லுறைந்த நிழல் தன்னை வீந்தற்று' எனப் பாடமிருந்தாலொழியப் பொருந்தாதென்று மறுத்தார் பரிமேலழகர்; 'அடியுறைந்தநிழல் தன்னைவீந்தற்று' என்பதற்கு -
ஒருவனது பாதத்தின்கண் தங்கிய நிழல் அப்பாதத்தைவிட்டு வெளிப்பட்ட
தன்மையது என்று பொருளாம். கரி - சாட்சி. 'மேல்' என்றுதொடங்கிய
வாக்கியம், முதலுரைக்குச் சாதகமானது. உறைந்தற்று - உறைந்த அற்று எனப் பெயரெச்சவிகாரமாக வாயினும், உறைந்தால் அற்று என வினையெச்
சத்திரிபாகவாயினும், உறைந்ததற்று எனத் தொழிற்பெயர்விகாரமாகவாயி
னுங் கொள்க. இத்திருக்குறளைத் தர்க்கத்தில் எடுத்துக்காட்டுப்போலிக்கு
உதாரணமாகக்காட்டினர், வீரசோழியவுரையாசிரியர். கீழ்வந்த "எனைப்

பல க'' என்ற குறளில்''தீவினை வீயாது
பின்சென்றடும்'' என்றதனை, இத்திருக்
குறளில் உவமையால் விளக்கினரென் க. உவமையணி.
(அ)

உ0க. தன்னைத்தான் காதல னாயி
னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

(இ - ள்.) (ஒருவன்), தன்னைத் தான் காதலன் ஆயின் - தன்னைத் தான் காதல் செய்த லுடையனாயின், தீவினை பால் - தீவினையாகிய பகுதி, எனைத்து ஒன்றுஉம் - எத்துணையுஞ் சிறிதொன்றாயினும், (பிறர்மாட்டுச்) செய்யாதொழிக; (எ - று.)

துன்னற்க -

நல்வினை, தீவினை என வினைப்பகுதி இரண்டாகலின், 'தீவினைப்பால்'
என்றார். பிறர்மாட்டுச்செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம்பயத்தல் விளக்
கினராகலின், 'தன்னைத்தான் காதலனாயின்' என்றார்.

18



இவை ஆறுபாட்டானும், பிறர்க்குத் தீவினைசெய்யின் தாம் கெடுவ
ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) காதல்செய்தல் - விரும்புதல். 'தன்னைத்தான்காதலனாயின்' என்றது - தனக்கு ஒன்றுந் துன்பம்வராமல் இன்பமே வந்தடைய விரும்புவனாயின் என்றபடி. பகுதி - பகுப்பு. தன்மாட்டுத் துன்பம் பயத்தல் விளக்கியமை, கீழ் ஐந்துபாட்டுக்களிற் காண்க. காதலன் - குறிப்புவினையாலணையும் பெயர்; காதலன் என்பது, விரும்புபவனெனப் பொருள்பட்டு, 'தன்னை' என்பதற்கு முடிக்குஞ்சொல்லாய் நின்றது. தன்னைக்காக்கவிரும்பினாற் பிறனுக்குத் தீமைசெய்யலாகாது என்பது கருத்து. (கூ)

உகo. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

(இ - ள்.) மருங்கு ஓடி தீவினை செய்யான் எனின் - (ஒருவன் செந்நெறிக்கண் செல்லாது) கொடுநெறிக்கண் சென்று (பிறர்மாட்டுத்) தீவினைகளைச் செய்யானாயின்,—அருங் கேடன் என்பது அறிக-(அவனை) அரிதாகிய கேட்டை யுடைய னென்ப தறிக; (எ - று.)

அருமை - இன்மை. அருங்கேடன் என்பதனை

"சென்று *சேக் கல்லாப்
புள்ள வுள்ளி, லென்றாழ் வியன்குளம்" என்பதுபோலக்
கொள்க. 'ஓடி'
என்னும் வினையெச்சம், 'செய்யான்' என்னும்
எதிர்மறைவினையுட் செய்த
லோடு முடிந்தது.

இதனன், தீவினைசெய்யாதவன் கேடில னென்பது
கூறப்பட்டது.

(கு - ரை.) செந்நெறிக்கண் செல்லாது
கொடுநெறிக்கண் சென்று-சன்
மார்க்கத்திற்போகாமல் துன்மார்க்கத்திற் போய்;
'மருங்கு'என்பதற்கு - 'பக்
கத்திலே' என்று பொருளாதலால், 'நேர்வழியைவிட்டு
விலகிக் கோணல்
வழியிற் சென்று'என்று இங்ஙனம் உரைத்தார். நடுவுநிலை
தவறி ஒருசார்பிற்
சென்று என்றும் உரைக்கலாம்; 'ஒருமருங்கு ஓடி'
என்பர் மணக்குடியர்.
ஓடுதல் - விரைந்து செல்லுதல். மருங்கோடுதல்
தீவினைசெய்தற்குக்காரண மாதலின், 'ஓடி' என்பதற்கு
'செய்' என்னும் பகுதி முடிக்குஞ்சொல்லாம்.
என்பது அறிக - என்பதாக அறிக: என்று அறிக
என்றபடி. அரிதாகிய -
இல்லாத; அருமை - இன்மையாதலை "உறற்பால,
தீண்டாவிடுத லரிது"

என்ற நாலடியாரிலுங் காண்க.

"சென்றுசேக்கல்லா" என்னும் மேற்கோள்-
அகநானூறு சஉ-ஆம்செய்யுளி லுள்ளது; அதற்கு
நீரில்லாமையாற் சென்று
தங்காத பறவைகளையுடையவையாய் வெயிலினால்
உள்ளேஒன்றுமில்லாத
பெரிய குளங்க ளென்று பொருள் காண்க; என்றாழ் - வெயில். 'அருங் கேடன்,' 'சென்றுசேர்கல்லாப் புள்ள' இவை-வடமொழிநடை. ('வீதராகஃ,' 'ஜிதேந்த்ரியஃ' என்றவற்றைக் காண்க.) இனி, இதனை 'கேடரியன்' என விகுதி பிரித்துக்கூட்டுவர், பிரயோக விவேகநூலார். (கo)

* பி - ம்: சேர்கல்லாப்.

உஉ - ஆம் அதிகாரம்—ஒப்புரவறிதல்
கங்கூ

## உஉ - ஆம்
## அதிகாரம்—ஒப்புரவறிதல்.

அஃதாவது-உலகநடையினை அறிந்து செய்தல்.
உலகநடை வேதநடை போல அறநூல்களுட்
கூறப்படுவதன்றித் தாமே அறிந்துசெய்யுந் தன்மைத்
தாகலின், 'ஒப்புரவறிதல்' என்றார். மேல் மன
மொழிமெய்களால் தவிரத்தகுவன கூறினார், இனிச்
செய்யத்தகுவனவற்றுள் எஞ்சிநின்றன கூறுகின்றா

ராகலின், இது தீவினையச்சத்தின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) உலகநடை - லோகத்திலுள்ள சனங்களினது நடத்தையின் இயற்கை: லௌகிகவியவகாரம். செய்தல் - உபகாரஞ்செய்தல். வேதநடை - வேதங்களிற்கூறிய வழிகளிலே நடத்தல்; வைதிகவொழுக்கம். அறநூல்களுள்-தருமசாஸ்திரங்களில். 'ஒப்புரவுசெய்தல்' என்னுமல் 'ஒப்புரவு அறிதல்' என்றதற்குக் காரணங் கூறுகிறார், 'உலகநடை வேதநடைபோல' என்று தொடங்கி. ஒப்புரவு என்பதை ஒப்பு உரவு எனப்பிரிக்க; உலகத்தாரோடு ஒத்துச்செய்யுஞ் சிறந்ததொழி லென்றபடி. மனம்மொழி மெய்களால் தவிரத் தகுவன கூறினார் - மனோவாக்குக் காயமென்னும் மூன்றுகரணங்களாலுஞ் செய்யத்தகாத [விலக்கத்தக்க] தொழில்களைக் கீழ் ஐந்து அதிகாரங்களாற் சொல்லியவர். எஞ்சிநின்றன - மிகுந்துநின்றவை; சொல்லவேண்டியவை யாய்ச் சேஷித்தவை: மிச்சம். விதி விலக்கு என்னும் இரண்டில், முன்னே விலக்கைக்கூறிவிட்டுப் பின்பு விதியைக் கூறுதல், அதிகாரமுறைமைக்குக் காரணம்.

'ஒப்புரவறிதலாவது-இல்லென' இரந்து வந்தார் யாவர்க்கும் வரையாது கொடுக்கும் ஆற்றலிலரெனினும் தம் அளவிற்கும் தம் வருவாயளவிற் கும் ஒக்கத் தக்கார்க்குத் தக்கன அறிந்து கொடுத்தல்' என்பர் மணக்குடியர்.

உகக. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்

டென்ஞற்றுங் கொல்லோ வுலகு.

(இ - ள்.) மாரிமாட்டு - (தமக்கு நீர் உதவுகின்ற) மேகங்களினிடத்து, உலகு - உயிர்கள், என் ஆற்றும் - என்ன கைம்மாறு செய்யாநின்றன? (ஆக லான்), கடப்பாடு - (அம்மேகங்கள்போல்வார் செய்யும்)ஒப்புரவுகளும், கைம் மாறு வேண்டா - கைம்மாறு நோக்குவனவல்ல; (எ - று.)

'என்ஆற்றும்' என்ற வினு 'யாதும்ஆற்ரு'என்பதுதோன்ற நிற்றலின், அது வருவித்து உரைக்கப்படும். தவிருந்தன்மையஅல்ல என்பது, 'கடப்பாடு' என்னும் பெயரானே பெறப்பட்டது. செய்வாரது வேண்டாமையைச் செய் யப் படுவனமேல் ஏற்றிஞர்.

(கு - ரை.) கைம்மாறு செய்யாநின்றன - பிரதியுபகாரம் பண்ணுகின் றன.

கைம்மாறுநோக்குவனவல்ல - எதிருதவியை விரும்பாவாம். யாதும்

ஆற்ரு - ஒன்றையுஞ்செய்கின்றனவில்லே. அது - யாதும்ஆற்ருஎன்பது. தவிருந்தன்மைய அல்ல-ஒழிக்கத்தக்கனவல்ல;அவசியஞ்செய்யவேண்டும் கட மையுடையவை. கடப்பாடு கைம்மாறுவேண்டா என்றது - பிறர்க்கு உபகா ரஞ்செய்பவர்கள் தாம்

இது, உபசாரவழக்கு.

பிரதியுபகாரத்தைப்பெற அபேக்ஷியார் என்றபடி; கடப்பாடு - கடமைப்படுதல்; கடம்படு என்னும் இர

ண்டுசொற்கள் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்ட 'கடப்படு' என்னும் பகுதி விகாரமடைந்த தொழிற்பெயர். கைம்மாற்றை எதிர்பார்த்துச்செய்யும் உதவியைக் கடப்பாடென்று பெயரிட்டுவழங்குதல் கூடாதென்க. கைம்மாறு - தாம் ஒருவர்க்குச்செய்த உபகாரம் அவர்கையினின்று மீண்டுந் தம்கைக்கு மாறுவது என்பதுபற்றி வந்த பெயர். 'என்' - இது வினைப்பொருளைக் காட்டிவிட்டதனால், கொல் ஓ என்னும் இரண்டும் - அசைநிலை. உலகு என்னும் பலபொருளொருசொல் சீவான்மாக்களை உணர்த்துதலை "உலகமுவப்ப வலனேர்பு திரிதரு" என்ற திருமுருகாற்றுப்படையிலுங் காண்க. கைம்மாறு வேண்டாகடப்பாடு என்ற பொதுப்பொருளை, மாரிமாட்டென்னாற்றுங் கொல்லோஉலகுஎன்ற சிறப்புப்பொருள் சமர்த்தித்து நின்றதனால், இது, வேற்றுப்பொருள்வைப்பணி. ஒப்புரவுசெய்யுங்கால் கைம்மாறுகருதிச் செய்யவேண்டா: எல்லார்க்கும் நல்வழிசுரக்கின்ற மாரிக்கு உலகம் கைம்மாறு செய்தலுண்டோ? என்றவாறு; 'கடப்பாடு-ஒப்புரவு. ஒப்புரவாவது - கைம்மாறுகருதாத கொடை என்றுகூறிற்று' என்பது, மணக்குடியருரை. (க)

உகஉ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந்

தக்கார்க்கு

வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ - ள்.) தக்கார்க்கு - தகுதியையுடையார்க்குஆயின், தாள் ஆற்றி

தந்த பொருள் எல்லாம் - முயறலைச்செய்து ஈட்டிய பொருள்முழுதும்,

வேளாண்மை செய்தற் பொருட்டு - ஒப்புரவு செய்தற் பயத்தவாம்; (எ - று.)

பிறர்க்குஉதவாதார்பொருள்போலத் தாமே உண்டற்பொருட்டும்

வைத்து இழத்தற்பொருட்டும் அன்றென்பது தாயிற்று.

(கு - ரை.) தகுதி - கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களினுலாகிய

யோக்கியதை. ஆயின்-ஆனுல்: இது வருவிக்கப்பட்டது. முயறல் - முயற்சி:

பிரயத்தினம்; தொழிற்பெயர். ஈட்டிய - சேர்த்துவைத்த. பொருள் - செல்

வம். வேளாண்மை, ஒப்புரவு, உதவி, உபகாரம் என்பன - ஒருபொருட்

சொற்கள். செய்தற்பயத்தவாம் - செய்தலாகிய பிரயோசனத்தை யுடை

யனவாம். 'பொருட்டு' - பொருள் என்னும் பகுதியின்மேல் வந்த ஒன்

றன்பாற் குறிப்புமுற்று: நான்காம்வேற்றுமைச்

சொல்லுருபாக வைத்து,
செய்தவினிமித்தம் என்றலுமாம்.
பாடுபட்டுத்தேடியபொருளைப் புதைத்து
வைத்து இழந்துபோகாமலும், தாம் மாத்திரமே
அனுபவியாமலும் பிறர்க்கு
உபகரிப்பவரே மேலோரென்று கருத்து. இனி,
தக்கார்க்கு வேளாண்மை
செய்தற்பொருட்டு என இயைத்து, ஒருவன்
முயற்சியைச்செய்து தொகுத்த
பொருள் முழுவதும் சான்றோர்க்கு உதவி
செய்தற்காகவே என்றும் ஓர்
உரை கூறலாம்: 'ஒருவன் முயன்று
பொருளீட்டியதெல்லாம் தகுதி
யுடையார்க்கு உபகரித்தற்காக என்றவாறு;
பொருளுண்டானால், ஒப்புரவு
செய்க என்றது' என்பது, மணக்குடியருரை.
வேளாண்மை - பண்புப்பெயர்.

உகரு. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

உ௨ - ஆம் அதிகாரம்—ஒப்புரவறிதல்

க௺க

(இ - ள்.) புத்தேள் உலகத்துஉம் - தேவருலகத்தும்,

ஈண்டூ-ம் - இவ் வுலகத்தும், ஒப்புரவின் - ஒப்புரவுபோல, நல்ல பிற - நல்லன பிறசெயல் களை, பெறல் - பெறுதல், அரிது—; (எ - று.)

ஈவாரும் ஏற்பாரும் இன்றி எல்லாரும் ஒருதன்மைய ராகலின், புத்தே ளுலகத்து அரிதாயிற்று; யாவர்க்கும் ஒப்பது இதுபோற் பிறிதொன்று இன்மையின், இவ்வுலகத்து அரிதாயிற்று. 'பெறற்கரிது' என்று பாடமோதி, 'பெறுதற்குக்காரணமரிது' என்று உரைப்பாரு முளர்.

இவை மூன்றுபாட்டானும், ஒப்புரவினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பெறுதல் - (ஒருவன்) அடைதல். அரிது - அருமையானது. ஈவாரும் ஏற்பாரும் இன்றி-தானஞ்செய்பவர்களும் அதனைப் பெற்றுக்கொள் பவர்களும் இல்லாமல். யாவர்க்கும் - எல்லார்க்கும். ஒப்பது - உடன்படத் தக்கதாயிருப்பது. இதுபோல் - ஒப்புரவுபோல. ஈண்டு - சுட்டுநீண்டபெயர். ஒப்புரவின், இன் - ஐந்தனுருபு: உவமப்பொருவு; உறழ்பொருவாயின், ஒப் புரவினும் நல்ல என்று பொருள்படும். ஒப்புரவுக்கு ஒப்பில்லை யெனவே, உயர்வில்லையென்பது தானே விளங்கும்.

நல்ல-பலவின்பால்வினையாலணை யும்பெயர். பிற - சுட்டடியாப்பிறந்த பலவின்பாற்பெயர்; விகுதிபுணர்ந்து கெட்டது. உம்மைகள் - எண்ணுப் பொருளன.

தேவலோகத்திற் கொடுப்ப வரும் வாங்குபவரும் இல்லாமல் எல்லாரும் ஒருதன்மையராதலை "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்கணவர்" எனப்

பிறர் கூறியவாற்றானும் அறிக. இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் ஒப்புரவின் நல்லபிறஇல்லையென்பது, கருத்து. பெறற்கரிதுஎன்ற பாடத்திற்கும் கருத்து இதுவே. பெறற்குஎன்ற நான்கனுருபிற்குப் பொருட்டுப் பொருள் என்பார் 'பெறுதற்குக்காரணம்' எனப் பொருள் விரித்தார்: இலக்கணக் கொத்துக்காரர், இவ்வாறுவருமிடங்களிலெல்லாம் கருத்தாப்பொருள் என்று கொண்டு "ஒன்று மூன்று நான்காறெனு முருபொடு, வருமே வினைமுத லென வகுத்தனரே" என்று சூத்திரஞ்செய்துள்ளார். (ந)

உகச.

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

(இ - ள்.) உயிர் வாழ்வான் - உயிரோடுகூடி வாழ்வானாவான், ஒத்தது அறிவான் - உலகநடையினை அறிந்து செய்வான்; மற்றையான் - அஃது அறிந்து செய்யாதவன், செத்தாருள் வைக்கப்படும் - (உயிருடையனே யாயினும்) செத்தாருள் ஒருவனாகக் கருதப்படும்; (எ - று.)

உயிரின் அறிவுஞ் செயலுங் காணாமையின், 'செத்தாருள்வைக்கப்படும்' என்றார்.

இதனுன், உலகநடைவழு
வேதநடைவழுப்போலத் தீர்திறனுடைத்தன் றென்பது
கூறப்பட்டது.

(கு - ரை.) வாழ்வான் - வாழ்பவன். ஒத்தது -
உலகத்தார் சம்மதித்து
ஒழுகும் ஒழுக்கம்; "ஒப்புரவொழுகு",
"தேசத்தோடொத்துவாழ்" என்றார்



ஔவையாரும்: "உலகத்தோடொட்ட வொழுகல்
பலகற்றுங், கல்லா ரறி விலாதார்", "உலகந் தழீஇய
தொட்பம்" என்ற திருக்குறளையும் காண்க. அறிதல் -
அறிந்து செய்தலைக் குறிக்கும்; காரணம் காரியத்தின்மேல்
நின்ற உபசாரவழக்கு. வைதிககாரியங்களில் வழுவினுல்
அவ்வழுத்தீர்ந்து உய்தற்கு யாதாயினும் ஒருபிராயச்சித்தம்
உண்டு; உலகநடையை வழுவினுலோ அவ்
வழுத்தீர்தற்கு ஒருவழியுமில்லை என்பது தாற்பரியம். உயிரின் அறிவும் செய
லும் - உயிர்க்கு உரிய உணர்வும் செய்கையும். தீர்திறன் - தீரும் வழி. அறி
வான், வாழ்வான், மற்றையான் - பெயர்கள். செத்தார், சா
- பகுதி; உள்ஏழனுருபு. 'ஒப்புரவறியாதார் பிணத்தோடு
ஒப்பரென்றது' என்பது, மணக்குடியருரை வாக்கியம்.
(௩)

உகரு. ஊருணி நீர்நிறைந் தற்றே
யுலகவாம் பேரறி வாளன் றிரு.

(இ - ள்.) உலகு அவாம் - உலகநடையை விரும்பிச் செய்யும், பேர் அறிவு ஆளன்-பெரிய அறிவினையுடையவனது, திரு-செல்வம்,—ஊருணி- ஊரின் வாழ்வார் தண்ணீருண்ணுங் குளம், நீர் நிறைந்து அற்று - நீர்நிறைந்தாற்போலும்; (எ - று.)

நிறைதலென்னும் இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேல் ஏற்றப்பட்டது. பாழ்போகாது நெடிதுநின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாது உதவு மென்பதாம்.

(கு - ரை.) உலகு - உலகநடைக்குப் பொருளாகுபெயர். அவாம்-அவாவும் என்னும் செய்யுமெனெச்சம், ஈற்றுயிர்மெய்கெட்டு நின்றது; [நன். வினை. உஉ.] அறிவாளன் - அறிவையாள்பவன். ஊருணி - காரணப்பெயர்; 'ஊர்' - ஊரிலுள்ளார்க்கு இடவாகுபெயர்: உண் என்பது - உண்பன தின்பன பருகுவன நக்குவன எனப் பிரித்துக்கூறுமிடத்துச் சிறப்புவினையும், அங்ஙனங்கூறாதவிடத்துப் பசி தாகந் தீர வாயால் உண்ணப்படும்பொருளெல்லாம் உணவெனப்படுமாதலின் பொதுவினையுமா மாதலால், 'ஊர்பருகி' என்னமல் 'ஊருணி' எனப்பட்டது: உண்ணப்படுவது என்று பொருளாதலால், இ - செயப்படுபொருள்விகுதி. 'ஊருணியில்நிறைந்த நீரற்று' என்னாது 'ஊருணிநீர்நிறைந்தற்று' என்றதில், குளமென்னும் இடத்து நிகழ்கின்ற நீரென்னும்பொருளின் நிறைதலாகிய தொழில் அதற்குஇடமாகிய குளத்தின்மேல் நின்றது காண்க. நெடிதுநின்று - நெடுங்காலம் நிலைபெற்று.

பெருமை + அறிவு—பேரறிவு. உபமானம் உபமேயம் உவமவுருபு பொதுத் தன்மை என்னும் நான்கனுள் பொதுத்தன்மை தொக்கு வந்ததனால், **தொகை யுவமையணி;** வருமிரண்டுபாட்டுக்களும் இவ்வணியே. 'ஊருணிகின் றகேணி நீர்நிறைந்தாலொக்கும் உலகத்தாரெல்லாராலும் நச்சப்படுகின்ற பெரிய ஒப்புரவறிவானது செல்வம் என்றவாறு. இது, ஒப்புரவறிவார்க்கு உளதாகிய செல்வம் நச்சிச்சென்றூர்க்கு வேண்டியவாறு முகக்கலாமென்றது' என்பது, மணகுடியருரை.

## (ஞ) உஉ - ஆம் அதிகாரம்—ஒப்புரவறிதல்

கசஙு

உகசு. பயன்மா முள்ளூர்ப்
பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யானகட படின.

(இ - ள்.) செல்வம்—,நயன் உடையான்கண் படின் - ஒப்புரவுசெய்வான்கண்ணே படுமாயின், (அது),—பயன் மரம் - பயன்படுமரம், உள்ஊர்- ஊர்நடுவே, பழுத்து அற்று - பழுத்தாற்போலும்; (எ - று.)

உலகநீதிபலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின், அதனையே 'நயன்' என்றார். எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுக்கு

மென்பதாம்.

(கு - ரை.) படுமாயின் - உண்டானால். பயன் - பிரயோசனம். 'நயன்'
என்பது, இங்கே ஒப்புரவை உணர்த்திற்று. ஊருள் என்பது உள்ளூர் என
முன்பின்னாகத்தொக்குவந்த ஆறும்வேற்றுமைத்தொகை; இலக்கணப்போலி
யென்பர். ஆல் - ஈற்றசை. நயனுடையான் என்பதற்கு - நீதியை யழியான்
என்றும் பொருள்கொள்ளலாம். ''நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க,
படுபனை யன்னர் பலர்நச்சவாழ்வார், குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்
துண்ணா மாக்க, ளிடுகாட்டுளேற்றைப் பனை'' என்னும் நாலடியார்ச் செய்யு
ளிலும் இக்கருத்துக் காண்க. இவ்வதிகாரத்தில் முதல் ஐந்து ஆறு இம்
மூன்றுபாட்டுக்களின் கருத்தைத் தொகுத்துக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்
பர் இராமாயணத்தில் "ஊருணி நிறையவு முதவுமாடுயர், பார்கெழு பயன்
மரம் பழுத்தற் றாகவும், கார்மழை பொழியவுங் கழனி பாய்நதி, வார்புனல்
பெருகவு மறுக்கின் றார்களியார்'' எனக் கூறியவாறு உணர்க. ''கற்றையஞ்
சுடர்மணி கனக மேனைய, பிற்றையென் றுதருள் பெரியர்

வண்மைபோன்,
மற்றவ னுள்ள பன்மரமூர் தம்பய, னெற்றையு
மூலப்புரு தீகை சான்
றவே'' என்னுங் கந்தபுராணச்செய்யுளேயும் அறிக.
(சு)

உகஎ. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற்
பெருந்தகை யான்கட் படின்.

செல்வம்

(இ - ள்.) செல்வம்—, பெருந்தகையான்கண் -
(ஒப்புரவுசெய்யும்)
பெரியதகைமையையுடையான்கண்ணே, படின் -
படுமாயின், (அஃது),—
மருந்து ஆகி தப்பா மரத்து அற்று - (எல்லாவுறுப்பும்
பிணிகட்கு) மருந்தா
ய்த் தப்பாத மரத்தை ஒக்கும்; (எ - று.)
தப்புதலாவது - கோடற்குஅரியஇடங்களில்நின்றுதல்,
மறைந்து நின்
றுதல், காலத்தான்வேறுபட்டாதல் பயன்படாமை.
தன்குறைநோக்காது
எல்லார்வருத்தமுந் தீர்க்கு மென்பதாம்.
இவைமூன்றுபாட்டானும், கடப்பாட்டாளனுடைய
பொருள் பயன்படு
மாறு கூறபபடடது.
(கு - ரை.) தகைமை - தன்மை. எல்லாவுறுப்பும் -

கொழுந்து, இலை,
பூ, பட்டை, வேர், காய், கனி, கொட்டை, கட்டை முதலியன. எல்லா
வுறுப்பும் பிணிகட்குமருந்தாம் மரம் - வேம்புமுதலியன சில. தப்புதல்-பயன்
படுவதில் தவறுதல். கோடற்கு அரிய இடங்களில் நிற்றல் - சென்று கொள்
ளுதற்கு அருமையான செங்குத்தான மலை முதலிய இடங்களில் இருத்தல்.



மறைந்துநிற்றல் - சென்று கொள்ளுதற்கு அரியதல்லாத புழைக்கடைமுத லிய இடங்களிலிருந்தும் வேறுபொருள்கள் மறைக்க மறைந்துநிற்றல். காலத்தான் வேறுபடுதல் - ஒருகாலத்திலிருந்து மற்றொருகாலத்தில் இல்லா மற்போதல். யாதொருமாறுபாடுமில்லாமல் வெளிப்பட்டுநின்று, யாவரும் தனது கிளை இலை முதலிய உறுப்புக்களை முறித்தும் பறித்துஞ் செய்கின்ற தனதுகுறையையும் வருத்தத்தையும் நோக்காமலே அவர்களது நோய்களை மருந்துமரம் தீர்ப்பதுபோல, பெருந்தகையாளனுடைய செல்வமும் மாறுபா டொன்றும் இல்லாமல் எளிதாகவெளிப்பட்டுநின்று, கொடுக்கக்குறைவுபடுத லும் வருத்தமும் நோக்காமலே அனுபவித்தற்குஉரிய பற்பலபொருள்களை யும் உதவுதலில்

தப்பாமல் அடைந்தவர்வருத்தங்களை யொழிக்கு மென்க. கடப்பாட்டாளன் - பிறர்க்கு உதவிசெய்பவன். பெருந்தகை - பெருமையாகிய தகையென விரியும்; பண்புத்தொகை. தகை - தகுதி, சற்குணம்: தகு-பகுதி, ஐ - விகுதி; இது - தொழிலடியாகப் பிறந்ததாயினும், பொருளாற் பண்புப் பெயர். "அல்லலொருவர்க் கடைந்தக்கால் மற்றவர்க்கு, நல்லகிளைக ளெனப் படுவார் நல்ல, வினைமரபின் மற்றதனை நீக்கு மதுவே, மனைமரமாய மருந்து" என்ற பழமொழிச்செய்யுள் இங்கு உணரத்தக்கது. ஆல் - அசை. (அ)

உகஅ. இடனில் பருவத்து மொப்புரவிற்
கடனறி காட்சி யவர்.

ஒல்கார்

(இ - ள்.) இடன் இல் பருவத்தும் - செல்வம் சுருங்கியகாலத்தும், ஒப் புரவிற்கு - ஒப்புரவு செய்தற்கு, ஒல்கார்-தளரார்: கடன் அறி காட்சியவர் - செய்யத்தகுவனவற்றை அறிந்த இயற்கையறிவுடையார்; (எ - று.)

பிறவெல்லாம் ஒழியினும் இஃது ஒழியார் என்பதாம்.

(கு - ரை.) பிறஎல்லாம் ஒழியினும் இஃது ஒழியார் - இடம்பொரு ளேவல்கள்யாவும் ஒழிந்தாலும் ஒப்புரவுசெய்தலை ஒழியார். கடன்-முறைமை. இடம் - செல்வம்; அது, 'இடன்' என நின்றது.

இடமென்பது - செல்வ
மென் னும் பொருளதாதலை மேல் இரவச்சமென்னு ம்
அதிகாரத்தில் 'இடமில்
லாக், காலு மிரவொல்லாச் சால்பு'' என்றவிடத்தும் காண்க.
இல்பருவம் -
பண்புத்தொகை. பருவத்தும், உம் - இழிவுசிறப்பு. ஒல்கார்,
ஒல்கு - பகுதி.
கண் பொருள்களை எதிரிற் பார்த்தல்போல, அறிவு
பொருள்களை ஊகித்துப்
பார்த்தலால், 'காட்சி' யெனப்பட்டது. 'செல்வம்
விரிவில்லாத காலத்தினும் ஒப்புரவுசெய்யவேண்டு மென்றது'
என்பது, மணக்குடிய ருரை. (அ)

உகக.

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

(இ - ள்.) நயன் உடையான் - ஒப்புரவுசெய்தலை
யுடையான், நல்கூர்
ந்தான் ஆதல் - நல்கூர்ந்தானாதலாவது,—செயும் நீர
செய்யாது அமைகலா
ஆறு - (தவிராது) செய்யும் நீர்மையையுடைய
ப்பெறுது வருந்துகின்ற இயல்பாம்; (எ - று.)

அவ்வொப்புரவுகளைச் செய்ய

தான் நுகர்வன நுகரப்பெறுமை யன்று என்பதாம்.

## உஉ - ஆம் அதிகாரம்—ஒப்புரவறிதல்

கசரு

இவையிரண்டுபொட்டானும், வறுமையான் ஒப்புரவு ஒழிதற்பாற்றன்று என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) நல்கூர்ந்தானுதல் - தரித்திரப்பட்டவனுதல்; நல்கு ஊர் என்னும் இரண்டுசொற்கள் நல்கூர் என ஒருசொல்லின் தன்மைப்பட்டுப் பகுதி யாய் நின்று, பிறன் கொடுத்ததைப் பெற்றுக்கொள்ளச்செல் என்னும் பொருளதாய், வறுமைப்படுஎன்ற பொருளைக் குறித்தது. தவிராதுசெய்யும் நீர்மை யையுடைய - தவறுமற்செய்யப்படுந் தன்மையையுடைய. அமைகலாஆறு - மனம் திருப்திப்பட்டிராத தன்மை. தான் நுகர்வன நுகரப்பெறுமையன்று - ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படும் பொருள்களுள் ஒன்றையுந் தான் அனுபவிக்கப்பெறுமை அவனுக்கு வறுமையன்று. ஒழிதற்பாற்று அன்று - நீங்குந் தன்மையையுடையதன்று. பிறர்க்கு உதவிசெய்பவன் அதனல் தனக்கு வறுமைநேர்ந்தாலும் அதற்கு வருந்தான்; பிறர்க்கு மீண்டும் உதவிசெய்தற்கு இல்லையேயென்று வருந்துவான் என்று கருத்து. 'இது, செல்வம் குறைபடினும் ஒப்புரவுசெய்வரென்றது' என்பது, மணக்குடியருரை வாக்கியம். செயும் - தொகுத்தல். நீர - பலவின்பாற்பெயர்; நீர்மை - பகுதி. நீரசெய் யாது -

இரண்டாம்வேற்றுமைத்தொகை. அமைகலா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்,

(கூ)

உ உ0 .

ஒப்புர வி னுல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

(இ - ள்.) ஒப்புரவினுல் - ஒப்புரவுசெய்தலான், (ஒருவனுக்கு) கேடு வரும் - பொருட்கேடு வரும், எனின் - என்பா ருளராயின், அஃது - அக்கேடு, ஒருவன் விற்று கோள் தக்கது உடைத்து - தன்னை விற்றுயினும் கொள்ளுந் தகுதியை யுடைத்து; (எ - று.)

தன்னை விற்றுக்கொள்ளப்படுவதொருபொருள் இல்லையன்றே: இஃதா யின் அதுவுஞ் செய்யப்படும்: என்றது, புகழ்பயத்தல் நோக்கி.

இதனுன், ஒப்புரவினுற் கெடுவது கேடன்று என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) என்பார் உளராயின் - என்று சொல்பவர் உண்டானால். விற்ருயினும் - விலையாகக் கொடுத்தாயினும். கொள்ளும் - வாங்கும். இல்லையன்றே, அன்றே - தேற்ற மூணர்த்திற்று. இஃதாயின் - ஒப்புரவினால் வருங் கேடாயின். அதுவும் செய்யப்படும் - தன்னை விற்றுங் கொள்ளப்படும். இவ்வனங்கூறியது, அவ்வொப்புரவுசெய்தலினாலுண்டாகும் பெரும் புகழைக் கருதி யென்க. 'விற்று' என்பதற்கு ஏற்ப, ஒருவன் என்பதற்கு - 'தன்னை' எனச் செயப்படுபொருளாக உரைகூறினர்: தன்னினுஞ் சிறந்த தொருபொருள் இல்லை யாதலின்; இதனால், பிறவற்றைவிற்றல் கூருதே பெறப்பட்டது. கீழ் "கெடுவாகவையா துலகம் நடுவாக, நன்றிக்கட் டங்கி யான் ருழ்வு" என்றது, இங்கு உணரத்தக்கது. 'எனின்' என்றதனால், ஒப்புரவினாற் கெடுதிவாரா தென்பதும், அதனாற் கெடுதிவரு மென்பார் உலகத்தில் இல ரென்பதும் பெறப்படும். 'கேடன்று' என்றதனால், செல்வ





மென்று கருதப்படும் என்க. 'அஃதொருவன்' என்றவிடத்து - ஆய்தம் மெய் போல் ஒலித்தது. கோட்டக்கது - கொள்ளுதற்குத் தக்கது என நான்காமுருபு விரிக்க. தக்கது - இறந்தகாலத்தொழிற்பெயர். 'ஒப்புரவுசெய்து அதனாலே பொருட்கேடு வந்ததென்றுசொல்லினால் அக்கேட்டைக் கேடாகச் சேர்த்துக் கொள்ளப்படாது: ஒன்றைவிற்று ஒன்றைக்கொள்கின்ற வாணிகமாகக்கொள்ளுந் தகுதியுடைத்து என்றவாறு. கெட்டானாயினும்

அதனை ஆக்கமாகக்
கொள்ளப்படும்: என்றது, பிறபயப்பன நன்மையாதலான்'
என்பது, மணக்
குடியருரை.
(௧0)

## உ௬ - ஆம்

## அதிகாரம்—ஈகை.

அஃதாவது - வறியராய் ஏற்றார்க்கு
மாற்றாதுகொடுத்தல். இது மறுமை
நோக்கிய தாகலின், இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின்
வைக்கப்பட்டது.

(கு - ரை.) வறியராய் - தரித்திரராய்.
ஏற்றார்க்கு-யாசித்தவர்களுக்கு.
மாற்றாது - இல்லையென்று சொல்லாமல்;
கைம்மாறுநோக்கியல்லாமல் என்
றும் பொருள்படும். இம்மையைக் குறித்த ஒப்பு
ரவறிதலின்பின் மறுமையை
க்குறித்த ஈகையைவைத்தல், அதிகார அடைவுக்கு ஏது.
ஈகை - தொழிற்
பெயர்; ஈ - பகுதி, கை - விகுதி. "ஈ தா கொடு வெனு
மூன்று முறைறயே,
இழிந்தோ னேப்போன் மிக்கோ னிரப்புரை"
என்றதனாலும், ஈதல் - தன்
னினுமிழிந்த பொருளில்லாதவனுக்கு அவனினுமுயர்ந்த
பொருளுடையோன்

ஒன்றைத் தானஞ்செய்தலாம் என்றறிக; 'ஈகையாவது - இல்லென இரந்து
வந்தார்யாவர்க்கும் வரையாதுகொடுத்தல்' என்பர், மணக்குடியர்.

உஉக. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

(இ - ள்.) வறியார்க்கு - ஒருபொருளும் இல்லாதார்க்கு, ஒன்று-(அவர்
வேண்டியது) ஒன்றை, ஈவதுஏ - கொடுப்பதே, ஈகை - (பிறர்க்குக்) கொடுத்
தலாவது; மற்று எல்லாம் - அஃது ஒழிந்த எல்லாக்கொடையும், குறி எதிர்
ப்பை நீரது உடைத்து - குறியெதிர்ப்பைகொடுக்கும் நீர்மையை யுடைத்து.

ஒழிந்தகொடைகளாவன - வறியரல்லாதார்க்கு ஒருபயன்நோக்கிக்
கொடுப்பன. குறியெதிர்ப்பையாவது-அளவுகுறித்துவாங்கி அவ்வாங்கியவா
றே எதிர்கொடுப்பது. 'நீரது'என்புழி, 'அது'என்பது-பகுதிப்பொருள்விகுதி.
பின்னும் தன்பால் வருதலின், 'குறியெதிர்ப்பை நீரது உடைத்து' என்றார்.

இதனான், ஈகையது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) ஒன்றை - ஒருபொருளை. அஃது ஒழிந்த - அம்மனங் கொடுத்தல் தவிர்ந்த. நீர்மை - தன்மை. நீர் - நீர்மையென்னும் பண்புப் பெயரின் விகாரம்: 'அது' என்பது, வேறுபொருளைத்தாராமல், மைவிகுதி போல அப்பகுதியின்பொருளையே தந்ததனால், பகுதிப்பொருள்விகுதியாம். பின்னும் தன்பால் வருதலின் - மீண்டும் தன்னிடத்து வருதலால். "குறி யெதிர்ப்பையென்பது - இறந்தகால வினைத்தொகைத்தொடர்மொழி. எதிர் காலத்திலே பெறும்படியாகக் குறித்த எதிர்ப்பை என விரியும்; எதிர்ப்பை

## உரு - ஆம் அதிகாரம்—ஈகை

கசஎ

என்பதனுள், எதிர்-எதிர்காலம்: அது தொழிற்பெயராங்கால் இறப்பு, நிகழ்பு என்றாற்போலப் பகுதிப்பொருள்விகுதியோடுநின்று விகாரப்பட்டு "ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே" என்னுஞ் சூத்திரத்தால் ஐ காரத்தை ஈற்றிலே பெற்று, எதிர்காலத்திலே பெறும்படியாகக் குறித்து நிகழ்காலத்திலே இடப் படுகின்றதற்குப் பெயராய் வழங்கிவருகின்றது; 'அவன் எதிர்ப்பையிட்டு உறவாடினான்' என வழங்கிவருவதைச் செந்தமிழ்நாட்டு வழக்குநோக்கிக் காண்க: இது - கடன்கொடுத்தலினின்றும் வேறுபாடுடையது; இதனை இக்காலத்து 'வரிசை' என்றும் வழங்குவர்"—இது, இராமாநுசகவிராய ருரை. இரவல், கடன், எதிர்ப்பை என்பன ஒன்றேயொன்று பொருளிற் சிறிது வேறுபாடுடையன வென அறிக. செய்த உபகாரத்துக்குப் பிரதியுபகாரம் வரவேண்டுமென்று

கினைத்தால், கடன்கொடுத்து வாங்குகிறதுபோலே யாகுமென்க. 'இது, கொடுக்குங்கால் இல்லாதார்க்குக் கொடுக்கவேண்டு மென்றது' என்பது, மணக்குடியருரைவாக்கியம். இத்திருக்குறளிற்கூறிய கருத்தை "ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம் வரையா, ராற்றாதார்க் கீவதாமாண்கடன் - ஆற்றின், மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல், பொலிகடனென்னும் பெயர்த்து" என நாலடியாரிலும் காண்க. வறியார் - பண்படியாகப்பிறந்த பலர்பாற்பெயர். ஒன்று-எண்ணலளவாகுபெயர். ஈவது- எதிர்காலத்தொழிற்பெயர். ஏ - பிரிநிலை. மற்றையெல்லாம் என்பது, மற் றெல்லாம் என விகாரப்பட்டுநின்றது. எல்லாம் உடைத்து - பன்மையொரு மையமயக்கம்; [நன். பொது. 29.] வறியரல்லாதார் - செல்வமுடையோர். குறியெதிர்ப்பை நீர் - குறியெதிர்ப்பையினது நீர்மை; ஆறும்வேற்றுமைத் தொகை. குறியெதிர்ப்பையென்பது - குறித்த எதிர்ப்பையென இப்பொரு ளில்வருதலை "நெடுங்குறி யெதிர்ப்பை நல்கியோர்க்கும், எல்லோர்க்குங் கொடு" எனப் புறநானூற்றிலுங் காண்க. (க)

உஉஉ. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக

மில்லெனினு மீதலே நன்று.

(இ - ள்.) கொளல்-ஏற்றல், நல் ஆறு எனின் உம் - (வீட்டுலகிற்கு) நல்ல நெறி யென்பா ருளராயினும், தீது -

(அது) தீது; மேல் உலகம் இல் எனின் உம் - (ஈந்தார்க்கு) அவ்வுலகெய்துதல் இல்லையென்பாருளராயினும், ஈதலே நன்று—; (எ - று.)

'எனினும்' என்பது, இருவழியும் அங்ஙனங் கூறுவாரின்மை விளக்கி நின்றது. பிரிநிலையேகாரத்தால், பிறவறங்களின் ஈதல் சிறந்ததென்பது பெற்றாம். நல்லதுகூறுவார் தீயதும் உடன்கூறினார்.

(கு - ரை.) ஏற்றல் - யாசித்தல். அவ்வுலகு எய்துதல் - முத்தியுலக மடைதல். இருவழியும் - இரண்டிடத்தும்; இரண்டு வாக்கியங்களிலும். பிரிநிலைஏகாரம் - பலவற்றினின்று ஒன்றைப் பிரித்துக்காட்டிநிற்றற்பொருள தான ஏகாரம். தீயதை விளக்கினாலல்லது நல்லது விளங்காதாதலால், இரண்டையும் உடன் கூறினார். யாசித்தல் தீயதாதலே, மேல் 'இரவச்சம்'

என்னும் அதிகாரத்தில் விரித்துக்கூறுவர். ஈதலே என்ற பிரிநிலை யேகாரத்தை எடுத்து 'கொளல்' என்பதனோடும் இயைத்தால், கொடியவையெல்லாவற்றினும் இரத்தல் கொடியதா மென்பதும் பெறப்படும்; "இன்னுமை வேண்டி னிரவெழுக," "இலமென்னும், வன்மையின் வன்பாட்டதில்," "இரத்தலி னின்னாத தில்லை" என்பன காண்க. 'இச்செய்யுளில் தீதென்றும் நன்றென்றும் வந்தமையான் முரணென்னும் அலங்காரமாயிற்று' என்பது, வீரசோழியவுரை. "இன்னுயிரேனுங், கொள்ளுதல்தீது கொடுப்பது நன்றால்" என்பது கம்பராமாயணம். (உ)

உஉங. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

(இ - ள்.) இலன் என்னும் எவ்வம் உரையாமை - '(யான்) வறியன்' என்று (இரப்பான்) சொல்லும் இளிவரவை(த் தான் பிறர்கட்) சொல்லாமையும், ஈதல் - (அதனைத் தன்கட் சொன்னார்க்கு மாற்றாது) ஈதலும், (இவையிரண்டும்), உள - உளவாவன,—குலன் உடையான்கண்ணே - குடிப்பிறந்தான்கண்ணே; (எ - று.)

மேல் "தீது" என்றது ஒழிதற்கும், "நன்று" என்றது செய்தற்கும் உரியவனை உணர்த்தியவாறு. இனி, 'இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்' என்பதற்கு - அவ்விளிவரவை (ஒருவன் தனக்குச்) சொல்வதற்கு முன்னே (அவன்குறிப்பறிந்து) கொடுத்தல் எனவும், அதனை(ப் பின்னும் பிறனொருவன்பாற் சென்று அவன்)உரையாவகையாற் கொடுத்தல் எனவும், (யான் இதுபொழுது ) பொருளுடையேனல்லேனென (க் கரப்பார்)சொல்லும் இளிவரவைச் சொல்லாதுகொடுத்தல் எனவும் உரைப்பாருமுளர்; அவர், 'ஈதல்' என்பதனைப்

பொருட்பன்மைபற்றிவந்த பன்மையாக உரைப்பர்.

(கு - ரை.) இப்பாட்டிற்கு நான்கு உரை. இளிவரவு - துயரமொழி. அதனை - அவ்விழிமொழியை. குடிப்பிறந்தான்கண்ணே - உயர்குடியிற் பிறந் தவனிடத்தே. முந்தினபாட்டில் 'தீது'என்ற யாசகத்தை நீங்குதற்கும், 'நன்று'என்ற தானத்தைச் செய்தற்கும் உரியவன் யாரெனில்?—உயர்குடிப் பிறந்தவ னென இதிற் கூறினர். இலன் என்பதற்கு இலக்கணம் - கீழ் உ0ரு-ஆங்கவியின் கீழ்க் காண்க. எவ்வம்-துன்பம்; அதனை உணர்த்தும்மொழி க்கு ஆகுபெயர். உரையாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். உரையாமை,

ஈதல் என்பன, உள என்னும் அஃறிணைப்பன் மைக்குறிப்புமுற்றைக்கொண்

டன. குலன் - குலம்என்பதன்போலி: னகரமே மகரத்தோடு மயங்கிவரு

மென்பது ஒருசாரார்கொள்கை. பொதுப்படக் கூறியதனால், நல்லகுலத்தை உணர்த்திற்று; (குணம், ஒழுக்கம், அறிவு முதலியவை பொதுப்படக்கூறினால்,

பெரும்பாலும் நல்லவற்றையே குறிக்கும்.) ஏகாரம்-பிரிநிலை: ஆதலால், உயர் குடிப்பிறவாதானிடத்து இவ்விரண்டுகுணங்களுள் ஒன்று உண்டாயினும் உண்டாகுமேயன்றி இரண்டு முண்டாவது அருமை

யென்பது கருத்தாம்.

குலனுடையான் - சாதியொருமை, இரண்டாவது உரைக்க-இல்லேனென்னும் வார்த்தையைத் தன்முன் ஒருவன்சொல்லாதபடி அவன்சொல்லுதற்கு முன்னே அவன்கருத்தைக் குறிப்பாலறிந்து கொடுத்த லென்றும், மூன்றுமுரைக்க - இல்லேனென்னும்வார்த்தையை யாசகன் தன் னிடந் தானம்
வாங்கினபின்பும் வேறொருவனிடம்போய்ச் சொல்லாதபடி அவனது வறுமை நீங்கவும் அவனுக்குச் செல்வம்நிரம்பவுந் திருப்தியுண்டாகவும் கொடுத்த லென்றும், நான்காமுரைக்க - இல்லே னென்று (இயல்வது கரப்பாராய) உலோபிகள் சொல்லும் வார்த்தையைத் தான் சொல்லாமற் கொடுத்த லென் றும் பொருள்; இவ்வுரைகளுக்கு, ஈதல் என்பது - பலர்க்குப் பலபொருளைத் தானஞ்செய்தல் பற்றிவந்த பன்மையை யுணர்த்தும் பால்பகாவஃறிணைப் பெய ராதலால், உள என்னும் பன்மைமுற்றைக் கொண்ட தென்க. உரை யாமை - எதிர்மறைவினையெச்சம். இதுபொழுது - இப்பொழுதில். கரப்பார்- கொடுக்கக்கூடியபொருளைக் கொடாமல்மறைப்பவர். தன்னிடம் வந்து யாசித்தவன் இல்லேன் என்னும் இழிமொழியை அவனிடம்வந்து யாசிப்ப வர்க்குச்சொல்லாமல் அவர்வேண்டுவனவெல்லாம் கொடுக்கும்படி அவனுக்கு நிரம்பப்பொருள்கொடுத்த லெனவும் பொருள்கொள்ளலாம். இனி, ‘இலன்’ என்பதை ஆண்பாற்படர்க்கை யொருமைவினைமுற்றாகக் கொண்டால், இவன் இல்லாதவனென்னும் நிந்தைச்சொல்லை

யாசகனைக்குறித்துத் தான் சொல்லாம லீதலென்றும், இவன் இல்லாதவனென்னும் இகழ்சொல் லேத் தன்னைக்குறித்து யாசகனுவது பிறராவது சொல்லாதபடி யீதலென் றும், தன்னிடம் வந்துபோன யாசகனைக்குறித்துப் பிறர் இவன் இல்லாதவ னென்று சொல்லாமற்
பொருளால்மிக்கவனென்று சொல்லும்படி யீத லென்றும், இவன் நமது இல்லினிடத்தே [வீட்டில்]
வந்துள்ளானென்று இகழ்ந்து கூறும லீத லென்றும் பொருள்படும். இன்னோரன்ன விசேஷார்த் தங்கள் பலவற்றையும் ஒருங்கே தருகின்ற சிறப்புப்பற்றி யன்றே, "கடு
கைத்துளைத் தேழ்கடலைப்புகட்டிக், குறுகத் தறித்த குறள்" என இந்நூலின் சொற்சுருக்கமும் பொருட்பெருக்கமும் விளங்கச் சிறப்பித்துக் கூறியது.

குலனுடையான்என்பதில் - குலத்தைஉடைமையாகப் பெற்றவ னென்னும்
பொருளுந் தோன்றும். ஈதல்தொழில் ஒன்ருயினும் ஈயப்படும் பொருள்கள்
பல வாதலால், அப்பொருளின்பன்மைபற்றி ஈதலும் இங்கே பலவாயின;
அன்னதானம், கன்னிகாதானம், சொன்னதானம், பூதான ம், கோதானம்,
வித்யாதானம் முதலிய பலவகைத்தானங்க ளென்றபடி. இலன் என்னுஞ் சொல்லை எவ்வமென்றது, அதனைச்சொல்வோருங் கேட்போருந் துன்புறு
தலா லெனக் காண்க. முதலுரைக்கு 'உரையாமையீதல்'

என்னுஞ் செவ்
வெண்ணின் ஈற்றில் 'இரண்டும்'என்னுந் தொகை விகாரத்தால் தொக்கது.
"சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால், நீதி வழுவா நெறிமுறை
யின் - மேதினியி, லிட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர், பட்டாங்கி
லுள்ள படி" என்னும் ஔவையார்பாடலுக்கும் இக்குறளுக்கும் உள்ள ஒற்
றுமை வேற்றுமை நயங்களை உய்த்து உணர்க.



இவ்வருமைத்திருக்குறளினது கருத்தின்பெருக்கத்தைத் தொகுத்துத் திருவாவடுதுறையாதீனத்துக் கச்சியப்பமுனிவர் விநாயகபுராணத்தில் அரசியற்கைப்படலத்திற் கூறியுள்ள செய்யுட்களைக் கீழே காண்க:—

நஅ. "இரப்பவன் வாளா தேக விலனெனு மெவ்வங் கூறு
திரப்பினை யிரப்ப னன்று மதனினன் றுவ தாகு
மிரப்பவ னிலனென் றாற வியம்பிய வெவ்வஞ் சொல்லென்
றிரப்பினும் பிறர்பாற் கூறு திரக்கமோ டிதன் மைந்தா.

ந௯. அருத்தியி னிலனென் றுமு னளித்தலு மிலனென் றப்பா
லுரைத்தில னுகச் சால வுதவலு மேற்கின் றானும்
வருத்துற விலனென் றமை வழங்கிட வரைவில் செல்வம்
பொருத்தலு மொன்றி னென்று புகழ்மிக விளங்கி நிற்கும்.
சுo. நலமிகு செல்வம் பெற்றும் நல்குர வினரைக் காத்த
விலனற மாதி சீர்த்தி யிலனெனப் பிறர்சொ லெவ்வ
வலனுரைக் கஞ்சி யேனும் வறியனை யிலனென் றெள்ளா
தலர்புகழ் பயனும் வேண்டி னுக்கையு மளிக்க மைந்தா." (ந)

உஉச. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

(இ - ள்.) இரக்கப்படுதல் - (இரத்தலேயன்றி) இரக்கப்படுதலும், இன்னாது - இனிதன்று; இரந்தவர் இன் முகம் காணும் அளவு - (ஒருபொருளை) இரந்தவர் (அது பெற்றதனால்) இனிதாகிய(அவர்)முகங் காணுமளவும்.

எச்சவும்மையும் முற்றும்மையும், விகாரத்தால் தொக்கன. இரக்கப் படுதல் - இரப்பார்க்கு ஈவலென்று இருத்தல். அதனை 'இன்னாது' என்றது,

"எல்லா, மிரப்பார்க்கொன் றீயாமை" கூடுங்கொல்லோ என்னும் அச்சம் நோக்கி: எனவே, எல்லாப்பொருளும் ஈதல்வேண்டு மென்பது பெறப்பட்டது.

(கு - ரை.) 'இரக்கப்படுதலும்' என்கிற

இறந்தது தழுவிய எச்சவும்மை யும், 'காணுமளவும்' என்கிற முற்றும்மையுந் தொக்கது - விகாரம். ஈவல் - (அவர்வேண்டுவதைக்) கொடுப்பேன். அதனை - இரக்கப்படுதலை. எல்லா மிரப்பார்க்கு ஒன்றீயாமை கூடுங்கொல்லோ என்னும் அச்சம் - 'தமக்கு வேண்டும் பலபொருள்களை இரப்பவர்கட்கு அப்பொருள்கள்பலவற்றுள் யாதாயினுமொன்றைக் கொடுக்கக்கூடாதிருக்கும்படியாய்விடுமோ?' என்று அதற்குக் குடிப்பிறந்தார் அஞ்சுதல். இம்மேற்கோள் - நாலடியாரில் ''கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சம், சொல்லாமை யுள்ளுமோர் சோர் வச்சம்—எல்லாம், இரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம், மாணாக் குடிப்பிறந்தார்'' என்பதி லுள்ளது. திருப்தியுண்டாகக் கொடுத்தல்வேண்டு மென்பது இதன்கருத்து. 'இது கொடுக்குங்கால் தாழாது கொடுக்கவேண்டு மென்றது' என்பர் மணக்குடியர். இப்பாட்டில் 'இரக்கப்படுதல்' என்பதைச் செயப்பாட்டுவினைத்தொழிற்பெயர்க்கு உதாரணங்காட்டினர் இலக்கணக் கொத்துநூலாசிரியர். (௬)

# உரு - ஆம் அதிகாரம்—ஈகை

கருக

உஉரு. * ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

(இ - ள்.) ஆற்றுவார் ஆற்றல் - (தவத்தான்) வலியார்க்கு வலியாவது, பசி ஆற்றல் - (தம்மைஉற்ற) பசியைப் பொறுத்தல்: (அவ்வலிதான்), அ பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்-அங்ஙனம் பொறுத்தற்கு அரிய பசியை (ஈகையான்) ஒழிப்பாரது வலிக்குப் பின்; (எ - று.)

தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதா ராற்றலின், தாமும் பசியாது பிறரையும் அதுதீர்ப்பா ராற்றல் நன்று என்பதாம்.

(கு - ரை.) வலி - புலம்; வல்லமை. உற்ற - அடைந்த. அது-பசியை. ஆற்றலின்-வலிமையினும். ஆற்றல் - ஆற்றுஎன்னும் பகுதியின்மேல் வந்த தொழிற்பெயர். தவஞ்செய்பவர் உண்டிசுருக்கல் முதலியவற்றால் தமக்கு வருந் துன்பங்களைப் பொறுத்தலை, மேல் "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறு கண் செய்யாமை, யற்றே தவத்திற் குரு" என்பதனாலும், துறவறத்தார்க்கு இல்லறத்தார் உண்டிமுதலியன உதவிப் பசிமுதலிய இடையூற்றினை ஒழித்தலை, கீழ் "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும், நல்லாற்றி னின்ற துணை" என்றதனாலும் அறிக. "இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார், பெருமை பிறங்கிற் றுலகு" என்றது முதலாகக் கீழ் 'நீத்தார்பெருமை' என்னும் அதிகாரத்திற் கூறிய முற்றத்துறந்தமுனிவரது பெருமையினும் தானஞ்செய்வாரதுபெருமையே மிக்கது என்பது கருத்து; எனவே, எல்லாப்பெருமையினும் இது சிறந்ததென்பதாம். 'நான்கு ஆச்சிரமிகளுள் வேதம்முதலியவற்றிற் சொல்லுகிற கர்மாநுஷ்டானஞ்செய்கிற கிருகஸ்தன் மற்றை மூவரையும் பிக்ஷைகொடுத்துக்காக்கிறபடியால் உயர்ந்தவனென்று சொல்லப்படுகிறான்' என்பது மநுதருமசாஸ்திரம். இது, புனைந்துரைவகையால் ஈகைச்சிறப்புரைத்த தாதலின், "துறந்தார்பெருமை துணைக்கூறின் வையத்து, இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று", "செயற்கரிய செய்வார் பெரியர்", "தவஞ்செய்வார் தங்கருமஞ்செய்வார்", "துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல், மற்றையவர்கள் தவம்" என முன்னும் பின்னும் கூறுகிற நீத்தார்பெருமையோடு மாறுகொளக்கூறலாகாது. (ரு)

உஉசு. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(இ - ள்.) அற்றார் - வறியாரது, அழி பசி - மிக்க பசியை, தீர்த்தல் - (அறன்நோக்கித்) தீர்க்க: பொருள் பெற்றான் ஒருவன் - பொருள் பெற்றானொருவன், வைப்பு உழி - (அதனைத் தனக்கு உதவ)வைக்கும்இடம், அஃது - அவ்வறம், (ஆகலான்); (எ - று.)

எல்லாநன்மைகளும் அழியவருதலின், 'அழிபசி' என்றார். 'அறன்நோக்கி' என்பது, எஞ்சிநின்றது. அற்றாரழிபசிதீர்த்த பொருள் பின் தனக்கே வந்து உதவுமென்பதாம்.

(கு - ரை.) அற்றார் - பொருள்களில்லாதவர். அழி பசி - எல்லா நன்மைகளையும் அழிக்கின்ற பசி: வினைத்தொகை; இங்கே பிறவினைப்பொருளது; அன்றிக்கே, எல்லாநன்மைகளும் அழிதற்குக்காரணமான பசி யென்று காரியப்பொருளில்வந்த வினைத்தொகையெனவுங் கொள்ளலாம். பசி எல்லாநன்மைகளையும் அழித்தலை "மானங் குலம் கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவ முயர்ச்சி தாளாண்மை - தேனின், கசிவந்த சொல்லியர் மேற் காமுறுதல் பத்தும், பசி வந்திடப் பறந்து போம்" என்பதனாலும் அறிக. அழிக்கும்பசி எனவே, மிக்கபசியென்றாயிற்று; அழித்தல் - வருத்துதலுமாம்; கொடும்பசி யென்க. அறன் நோக்கி - தருமத்தைப்பார்த்து; இது தருமமென்று எண்ணி. தீர்க்க - நீக்குக. தீர்த்தல் - வியங்கோள் வினைமுற்று. அதனை - அப்பொருளை. 'அறநோக்கி' என்ற சொல்லெச்சம், வருவித்து முடிக்கப்பட்டது. பின் - மறுமையில். ஏழைகட்குப் பொருளைத் தானஞ் செய்தவன் அதன்பயனால் மறுமையில் இன்பமும் வருபிறப்பிற் பொருளுந் தவறாமற்பெறுவா னென்பது கருத்து. அஃதொருவன் - ஆய்தம் உயிர்போல ஒலித்தது. வைப்பு -

வைத்தல்; தொழிற்பெயர். வைப்புழி என்பதை-வைத்தற்கு உரிய இடம் என நான்காம்வேற்றுமைத்தொகையாக விரிக்க. இனி, இக் குறளை ஒருவாக்கிய மாகக்கொண்டு,வறியவரது பசியை யொழித்தலாகிய அத் தருமத்தை ஒருவன் பெற்றானாயின் அவன் பொருளைச்சேமித்துவைக்கும் இடம்பெற்றான் என்றும் உரைக்கலாம். "வைத்ததனை வைப்பென் றுணரற்க தாமதனைத், துய்த்து வழங்கி யிருபாலும்—அத்தகத், தக்குழிநோக்கி யறஞ் செய்யினஃதன்றே, எய்ப்பினில் வைப்பென்பது" என்ற பழமொழிச்செய்யு ளோடு இத்திருக்குறளை ஒப்பிடுக. 'பொருளற்றார தூ குணங்களையழிக்கும் பசி யைப்போக்குவதுசெய்யா ஒருவன் தான் தேடினபொருளை வைத்தற்குஇடம் பெற்றானும் என்றவாறு: இது, பகுத்துண்ணப் என்பர், மணக்குடியர்.
பொருளழியா தென்றது'

(௬)

உஉஎ.

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

(இ - ள்.) பாத்து ஊண் மரீஇயவனை - (எஞ்ஞான்றும்) பகுத்துஉண்டல் பயின்றவனை, பசி என்னும் தீ பிணி - பசி யென்று சொல்லப்படும் தீய நோய், தீண்டல் அரிது - தீண்டுதல் இல்லை; (எ - று.)

இவ்வுடம்பில்நின்று ஞானஒழுக்கங்களை அழித்து அதனால் வருமுடம்புகட்குத் துன்பஞ் செய்தலின், 'தீப்பிணி' எனப்பட்டது. தனக்கு மருத்துவன் தானாகலின், பசிப்பிணி நணுகாது என்பதாம்.

இவை யாறுபாட்டானும், ஈதலின்சிறப்புக் கூறப்பட்டது. (கு - ரை.)

எஞ்ஞான்றும் - எப்பொழுதும். பகுத்து உண்டல் - பிரமசாரி வானப்பிரஸ்தன் சன்னியாசி என்னும் மூன்று ஆச்சிரமத்தார்க்கும், அதிதி தரித்திரன் முதலானவர்க்கும், பித்ருக்கள் தேவர் விருந்தாளிகள் உறவினர் முதலியோர்க்கும் தான் சம்பாதித்த பொருளைப் பங்கிட்டுக்கொடுத்துத் தானும் உண்ணுதல்; கீழ் 'இல்வாழ்க்கை' என்னும் அதிகாரத்தில் "பழியஞ்



சிப் பாத்தூணுடைத்தாயின் வாழ்க்கை, வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" என்றார். பயிலுதல் - பழகுதல். தீய - கொடிய. பசியென்கிற நோய்க்குத் தீமை - பலநன்மைகளையும் அழித்து, இம்மை மறுமை என்னு மிரண்டுக்குந் துன்பஞ்செய்வதாதல். மருத்துவன் - வைத்தியன்; மருந்தின்தன்மையை அறிந்து கொடுப்பவன். பிறர்க்கு இட்டு உண்ணும் ஈகையுடையானுக்கு எப்பொழுதும் வறுமைநோய் சேராதென்பது கருத்து. பாத்துஇறந்தகாலவினையெச்சம்: பகு என்பதன் மரூஉவாகிய பா - பகுதி. ஊண் - உண் என்னும் முதனிலைதிரிந்ததொழிற்பெயர். மருவியவன் என்பது, மரீஇயவன் என விகாரப்பட்டு அளபெடுத்தது;

சொல்லிசையளபெடை. தீப் பிணி - பண்புத்தொகை;
தீமையாகிய பிணியென விரியும்: தீயோடொத்த பிணி
யென விரித்து, உவமைத்தொகையெனவுங் கொள்ளலாம்:
ஜாடராக் கினி எனப் பசிக்குப் பெயராதலால்.
தன்பசிநோயை எப்பொழுதும் ஒழித்தற்கு
வேறொருவைத்தியனைத் தேடாமல் தானே
ஒழித்துக்கொள்ளுதலால், கொடையாளியைக்குறித்து
'தனக்கு மருத்துவன் தானுகலின்' என்றார். "பிறர்க்குப்
பிறர்செய்வதுண்டோ மற்றில்லை, தமக்கு மருத்துவர் தாம்"
என்
பது, பழமொழி. பிறர்பசிபை ஒருபிறப்பில்ஒழித்தல்,
பிலும் ஒழிக்கும் மருந்தா மென்க.

தன்பசியை எப்பிறப்

(எ)

உஉஅ.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(இ - ள்.) தாம்—, உடைமை - உடைய பொருளை,
வைத்து - (ஈயாது) வைத்து, இழக்கும் - (பின்)
இழந்துபோம், வன்கணவர் - அருளிலாதார், ஈத்து -
(வறியார்க்கு வேண்டியவற்றைக்) கொடுத்து, உவக்கும் -
(அவர்) உவத்தலான் (அருளுடையார்) எய்தும், இன்பம் -

இன்பத்தினை, அறியார் கொல் - (கண்டு) அறியார்கொல்லோ? (எ - று.)

'உவக்கும்' என்பது, காரணத்தின்கண்வந்த பெயரெச்சம்; அஃது, 'இன்பம்' என்னுங் காரியப்பெயர் கொண்டது. அறிந்தாராயின், தாமும் அவ்வின்பத்தை எய்துவதல்லது வைத்திழவார் என்பது கருத்து.

(கு - ரை.) வன்கண்மை-கொடுமை, அருளின்மை: அதனையுடையவர்- வன்கணவர். அவர் உவத்தலான் - யாசகர் மகிழ்தலால். எய்தும் - அடைகிற. உவக்கும் இன்பம் - உவத்தலாற்பெறும் இன்பம்; பெயரெச்சம் - காரணப் பொருளது. உடைமை - உடைத்தாயிருக்கும் பொருளுக்குப் பண்பாகு பெயர். பொருளைத் தேடி வைத்து இழப்பவர் கொடுத்துமகிழும் இன்பத்தை அறியாரென்பது கருத்து; இதனால், திரவியஞ் சம்பாதித்தற்குப்பயன் பிறர்க்குத் தானஞ்செய்தலே யென்றும், அதனாலாகுமின்பம் மற்றையெல்லா வின்பங்களினுஞ் சிறந்த தென்றும், தானஞ்செய்யாதவர்கட்கு ஈட்டல் காத்தல் முதலிய துன்பங்கள்மாத்திரம் உள்ளனவேயன்றி இன்பமென்பது சிறிதும் இல்லை யென்றும் அறிக. தாம் உடைமைவைத்து இழக்கும் வன்கணவர்—"உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங், கெடாஅத நல்லறமுஞ் செய்யார் - கொடாஅது, வைத்தீட்டினா ரிழப்பர் வான்றோய்மலை

நாட, வுய்த்தீட்டுந் தேனீக் கரி," "ஈயார்தேட்டைத் தீயார்கொள்வர்" என் பண காண்க. 'இது, இடார் இழப்பர் என்றது' என்பர் மணக்குடியர். (அ)

உஉகூ. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

(இ - ள்.) நிரப்பிய - (பொருட்குறை) நிரப்பவேண்டி, தாமே தமியர் உணல் - (வறியார்க்கு ஈயாது) தாமே தனித்துஉண்டல்,—இரத்தலின் இன்னாது - (ஒருவர்க்குப் பிறர்பாற்சென்று) இரத்தலினும் இன்னாது: மன்ற -
ஒருதலையாக; (எ - று.)

பொருட்குறை நிரப்பலாவது - ஓரோ
ஈட்டுதும் என ஈட்டத்தையே மேற்கொண்டு

எண்களைக் குறித்து அத்துணை
இவறிக் கூட்டுதல். தனித்தல்-
பிறரை ஒழித்தல். இரத்தற்குஉள்ளது அப்பொழுதைஇளிவரவே, பின் நல்குரவு இல்லை: தமியருண்டற்கு அவையிரண்டும் உளவாம் ஆகலின், 'இரத்தலின் இன்னாது' என்றார். 'நிரப்பிய' என்பதற்கு 'தேடிய உணவுகளை' என்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) பிறர்பால் - அயலாரிடத்தில். இன்னாது - துன்பந்தருவது; இனிதாகாதது. ஒருதலையாக - நிச்சயமாக. ஓரோ எண்கள் - சிலதொகைகள்; ஆயிரம், பதினாயிரம், லட்சம் முதலிய கணக்குக்கள். அத்துணை ஈட்டு தும் என

ஈட்டத்தையே மேற்கொண்டு இவறிக்கூட்டுதல் - அவ்வளவு சம் பாதிப்போமென்று சம்பாதித்தலையேமுக்கியமாகக்கொண்டு பேராசைப்பட் டுப் பிறர்க்குக்கொடுக்கக்கூடியதையுங் கொடாமல் உலோபஞ்செய்து பொருள் சேர்த்தல். இளிவரவு - ஈனத்தனம். நல்குரவு - வறுமை. அவைஇரண்டும்- ஈனத்தனமும், வறுமையும். 'இரத்தல் போல மெய்யாக இன்னாதாம், தேடின உணவைத் தாமே தமியராயிருந்து உண்டல் என்றவாறு' என்பர் மணக்குடியர். நிரப்பிய-செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம்; நிரம்பு என்பதன் பிறவினையாகிய நிரப்பு - பகுதி, இய - வினையெச்ச விகுதி. சம்பாதித்து நிறைத்துவைத்த உணவுகளை என்கிற இரண்டாவது உரையில், நிரப்பிய - இறந்தகாலப்பலவின்பால்வினையாலணையும்பெயர் நிரப்பியவுணல்இரண்டாம்வேற்றுமைத்தொகை. இனி, நிரப்பிய - இறந்தகாலப்பெயரெச்ச மெனக்கொண்டு, பொருள்களை நிறைத்துவைத்த தாம்மாத்திரமேஎன்றும் உரைக்கலாம். 'தாமே' - பிறரையொழித்தலால், ஏ - பிரிநிலை. தமியர் - தமி என்பதனடியாப் பிறந்த பலர்பாற்குறிப்புமுற்றெச்சம். மிகத் துன்பந்தருவதாகிய யாசித்தலினுந் துன்பந்தருவது; தானஞ்செய்யாமல் தானே தனித் துண்பது என்று கருத்து. "மருந்தே யாயினும் விருந்தோ டுண்" என்றதனாலும் தனித்து உண்பது தவறுதல் பெறப்படும். இரப்பவர்க்குச் செல்வமில்

லையாயினும் சுற்றத்தா ருண்டு; பொருள்தேடிப் புதைப்பவர்க்குச் செல்வமுள தாயினும் இல்லாமையேற்படுவதோடு சுற்றத்தாருமில்லை யென்பது காண்க.

உங0. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீதலியையாக் கடை.

## உச - ஆம் அதிகாரம்—புகழ் 

(இ - ள்.) சாதலின் இன்னாதது இல்லை - (ஒருவர்க்குச்) சாதல்போல இன்னாதது (ஒன்று) இல்லை; அதூஉம்-அத்தன்மைத்தாகிய சாதலும், ஈதல் இயையாக்கடை-(வறியார்க்கு ஒன்று) ஈதல் முடியாதவழி, இனிது—; (எ-று.)

பிறர்க்குப் பயன்படாத உடற்பொறை நீங்குதலான், 'இனிது' என்றார்.

இவை மூன்றுபாட்டானும், ஈயாமையின் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) உடற் பொறை - உடம்பாகிய பாரம். பாவிகளுடைய உடம்பைப் பூமிபாரமென்பது, நூற்கொள்கை; "முற்றுமற்றொரோவழி" என்ற விதியால் அதுஎன்னும் முற்றியலுகரத்தின்மேல் இழிவுசிறப்பும்மையின் உயிர் ஏறி அதும் என நின்று, பின் இன்னிசை நிறைக்கவேண்டிக் குறில் நெடிலாய் 'அதூஉம்' என அளபெடுத்தது. இயையாக்கடை-'கடை' என்னும் விகுதிபெற்றஎதிர்மறைஎதிர்காலவினையெச்சம்: இயையா கடை என இருசொல்லாகவைத்து ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சத்தொடராகக் கொள்ளலும் ஒன்று. ஒருபொருளைக் கேட்டவர்க்கு வைத்துக்கொண்டே கொடாமற்போவது மரணவேதனையினும் மிகக்கொடிதென்பது தாற்பரியம். 'ஈயாது வாழ்தலிற் சாதல் நன்று என்றது' என்பர், மணக்குடியர். (கo)

# உச - ஆம் அதிகாரம்—புகழ்.

அஃதாவது - 'இல்வாழ்க்கை' முதல் 'ஈகை' ஈறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி. இது, பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) இல்வாழ்க்கை என்பது, இந்நூலின் ஐந்தாம் அதிகாரம்: அதுமுதல் இதுவரையிற் பத்தொன்பது அதிகாரங்களில் இல்லறவொழுக்கம் கூறப்பட்டது. வழுவாதார் - தவறாமல் நடந்தவர்கள். இம்மைப்பயன் - இப்பிறப்பிலடையும் பிரயோசனம். இவ்வுலகின் கண் நிகழ்ந்து - இந்தவுலகத்திற் பொருந்தி. இறவாதுநிற்கும் - என்றும் அழியாமலிருக்கிற.

உநக. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) ஈதல் - (வறியார்க்கு) ஈக; இசைபட வாழ்தல் - (அதனால்) புகழ் உண்டாக வாழ்க: அது அல்லது - அப்புகழல்லது, உயிர்க்கு - (மக்கள்) உயிர்க்கு, ஊதியம்-பயன், இல்லை (பிறிதொன்று)இல்லை,(ஆகலான்); (எ-று.)

இசைபட வாழ்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிறகாரணங்களும் உளவேனும், "உணவின்பிண்டம் உண்டி முதற்று" ஆகலின், ஈதல் சிறந்தது என்பதற்கு ஞாபகமாக, 'ஈதல்' என்றார். 'உயிர்க்கு' என்பது, பொதுப்படக் கூறினாரேனும் விலங்குயிர்கட்கு ஏலாமையின், மக்களுயிர்மேல் நின்றது.

(கு - ரை.) ஆண்மை - வீரத்தன்மை, பராக்கிரமம், பௌருஷம். "உண்டி முதற்றே யுணவின் பிண்டம்" என்பது, புறநானூறு - கஅ - ஆஞ் செய்யுளில் உள்ளது; பரிமேலழகர், அந்வயத்தின்படி மாற்றிக்கூறினார். உட



லில் உயிர்நிலைத்திருத்தற்குக் காற்று முதலியவாகப்

பலகாரணங்களிருப்பி
னும், சோறும் நீருமே சிறப்பானவை: "உண்டிகொடுத்தோ ருயிர்கொடுத்
தோரே", "உணவெனப்படுவது நிலத்தொடுநீரே" என்பன காண்க: ஆகவே,
அவ்வுண்டிக்குத் தட்டுதலுண்டாகாதபடி பொருளையீதலே, கல்விமுதலிய
மற்றையவற்றைக் காட்டிலும், புகழுண்டாதற்குச் சிறந்தகாரணமா மென்க.
ஞாபகம் - நினைப்பு ஊட்டுவது. விலங்கு - மிருகம். ஏலாமையின் - ஈதலும்
இசைபடவாழ்தலும் பொருந்தாமையால். மனிதசன்மத்திற் பிறந்ததற்குப்
பயன் ஈந்துபுகழ்பெறுதலேயா மென்பது இதன்கருத்து. 'இது, புகழுண்டா
மாறு கூறிற்று' என்பர் மணக்குடியர். ஈதல், வாழ்தல் - 'தல்' ஈற்று உடன்
பாட்டு வியங்கோள்கள். இவற்றுக்கு - 'மனிதர்' எனத் தோன்றாஎழுவாய்
வருவிக்க. இப்பாட்டு, பரிமேலழகர்கருத்தின்படி மூன்றுவாக்கியம். இதனை
ஒரேவாக்கியமாகக்கொண்டு, பிறர்க்கு ஈதலினாற் புகழ்பெறவாழ்தலாகிய
அத்தொழிலல்லது உயிர்க்கு லாபம் வேறில்லையென்றும் உரைக்கலாம். (க)

உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.

(இ - ள்.) (உலகத்து), உரைப்பார் - (ஒன்று) உரைப்பார், உரைப்பவை எல்லாம் - உரைப்பனவெல்லாம்,—இரப்பார்க்கு - (வறுமையான்) இரப் பார்க்கு, ஒன்று - (அவர் வேண்டியது) ஒன்றை, ஈவார்மேல் - ஈவார்கண், நிற்கும்—, புகழ் - புகழாம்; (எ - று.)

புகழ்தான், உரையும் பாட்டும் என இருவகைப்படும்; அவற்றுள் 'உரை ப்பாருரைப்பவை' என எல்லார்க்கும் உரிய வழக்கினையே எடுத்தாராயினும், இனம்பற்றி, புலவர்க்கே உரிய செய்யுளும் கொள்ளப்படும்: படவே, 'பாடு வார்பாடுவனவெல்லாம் புகழாம்' என்பதூஉம் பெற்றும். ஈதற்காரணஞ்சிறந் தமை, இதனுள்ளுந் காண்க. இதனை 'பிறர்மேலும் நிற்குமென்பார்தாம் எல் லாஞ் சொல்லுக; புகழ் ஈவார்மேல் நிற்கும்' என்று உரைப்பாரு முளர்; அது புகழதுசிறப்பு நோக்காமை யறிக.

(கு - ரை.) உரைப்பார் உரைப்பவை - சொல்லுவார் சொல்லுவன. வழக்கு - உலகவழக்கு; அதாவது உரை. இனம் - ஒருவருக்கமாயிருத்தல். "ஒருமொழி யொழி தன்னினங் கொளற்குரித்தே" என்ற உபலக்ஷண விதியை இங்கே அறிக. ஈதற்காரணம் சிறந்தமை-புகழின்காரணமாகிய கல்வி

முதலிய பலவற்றுள் ஈதலாகியகாரணம் சிறந்ததாதல். இதனுள்ளும்-மேற் பாட்டில்மாத்திரமேயன்றி இப்பாட்டிலும். இரண்டாமுரையில்-'உரைப்பாரு ரைப்பவையெல்லாம்' என்றது வரையில் ஒருவாக்கியமும், மற்றது ஒருவாக் கியமு மெனக் காண்க: சொல்லுகஎன்று முற்றுவருவிக்க. பிறர்மேலும் - கல்வி ஆண்மைமுதலியனவுடைய மற்றையார்மீதும். அவ்வுரை புகழின்சிறப் பைக் குறியாமல் ஈகையின்சிறப்பையே குறித்தலாற் பொருந்ாதென்றார், 'உரைப்பவையெல்லாம் புகழ்' என்பதில் புகழுக்குச் சிறப்பும், 'ஈவார்மேல் தான் புகழ் நிற்கும்' என்ற உரையில்

ஈவாரின்மேன்மையைத் தெரிவித்தல் உச -



மூலமாக ஈகைக்குச் சிறப்பும் தோன்றுதல் காண்க. 'இரப்பார்க்கொன் றீவார்மேனிற்கும்' என்ற இடைப்பிறவரல், புகழ்க்குச் சிறந்தகாரண மின்ன தென்பதை நன்குவிளக்க வந்தது. உலகத்தில் பேசுவார் பேசுபவையும், பாடுவார் பாடுபவையும், கொடையாளிகளின் புகழே என்பது கருத்து.

புகழ் உரையும் பாட்டுமென இருவகைப்படுதலை "வேற்றுமை யில்லா விழுத் திணைப் பிறந்து, வீற்றிருந்தோரை யெண்ணுங் காலை, உரையும் பாட்டு முடையோர் சிலரே, மரையிலைபோல மாய்ந்திசினோர் பலரே" என்னும் புறநானூற்றைக்கொண்டும் அறிக.

(உ)

உ௲௲. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

(இ - ள்.) ஒன்று ஆ - (தனக்கு) இணை இன்றாக, உயர்ந்த - ஓங்கிய, புகழ் அல்லால் - புகழல்லது, உலகத்து—, பொன்றாது நிற்பது - இறவாது நிற்பது, ஒன்று - பிறிதொன்று, இல் - இல்லை; (எ- று.)

இணை இன்றாக ஓங்குதலாவது - கொடுத்தற்கு அரிய உயிர் உறுப்புப் பொருள்களைக் கொடுத்தமைபற்றி வருதலால் தன்னோடொப்பதின்றித் தானே உயர்தல். அத்தன்மைத்தாகிய புகழே செய்யப்படுவதென்பதாம். இனி, 'ஒன்றா' என்பதற்கு - ஒருவார்த்தையாக(ச் சொல்லின் ) எனவும், ஒரு தலையாகப்பொன்றாது நிற்பது எனவும் உரைப்பாருமுளர்.

இவை மூன்றுபாட்டானும், புகழது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) ஒன்றா - ஒப்பற்றதாக. ஆ - ஆகவென்பதன்விகாரம். இறவாது - அழியாமல். உயிரைக்கொடுத்ததற்குத் ததீசிமுனிவரும், உறுப்பைக்கொடுத்ததற்குச் சிபிசக்கரவர்த்தியும், பொருளைக்கொடுத்ததற்குக் கர்ணனும் முதலியோரை உதாரணமாகக்கொண்டு, அவர்கள்புகழ் இப்பொழுதும் எங்கும் பிரசித்தமாய் வழங்கிவருவதைக் காண்க. செய்யப்படுவது - சம்பாதிக்கத்தக்கது. உலகத்து அழியாதுநிற்பது புகழே என்று கூறியதனால் அதுவே தேடுதற்கு உரியதாமென்றவாறு: "சாதல்வந் தடுத்தகாலுந்

தனக் கொருசாதலின்றிப், பூதலமிறக்குங்காறும் புகழுடம்பிருக்கும்'' என்றது காண்க. இரண்டாம்உரையில். சொல்லின் என்பது - இசையெச்சம். மூன் றம்உரையில், ஒன்ரு - நிச்சயமாக என்று பொருள். முதலுரைக்கு, ஒன்ரு உயர்ந்த என இயையும். ஒன்று - ஏகம், அத்விதீயம். இனி, ஒன்ரு என் பதை - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சமாகக்கொண்டு, உலக மென்பத னோடு இயைத்து, எப்பொருள்களும் நிலைத்தலில்லாத இவ்வுலகத்திலே புக ழல்லது நிலைத்துநிற்பது வேறில்லை யென் றும் உரைக்கலாம். ஆதாரமாகிய உலகம் அழிய ஆதேயமாகிய புகழும் அழிதல் கூடு மாதலால், 'உலகத்துநிற் பது' என்ருர். புகழினது அழிவின்மையை ''இந்நிலத்து, மன்னுதல் வேண்டி னிசைநடுக'' எனப் பிறர்கூறியவாற்ருலும் அறிக. அல்லால்-எதிர் மறைவினையெச்சம். நற்கருமங்களின் பயனுய் மறுமையிலுண்டாகின்ற இன்பங்கள் அழிந்தாலும் இம்மையிலுண்டாகிற புகழ் அழியாமை காண்க. உயர்



ந்த புகழல்லது இணையின்ருக உலகத்துக் கெடாது நிற்பது பிறிதில்லை என்ற வாறு. இது, மற்றுள்ள பொருள்போலன்றி அழியாதுநிற்கு மென்றது' என்பது, மணக்குடியருரை. (௩)

௨௩௪. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்

போற்றாது புத்தே ளுலகு.

(இ - ள்.) (ஒருவன்), நிலம் வரை - நிலவெல்லைக்கண்ணே, நீள் புகழ்-பொன்றாதுநிற்கும் புகழை, ஆற்றின் - செய்யுமாயின், புத்தேள் உலகு - புத்தேளுலகம், புலவரை போற்றாது - (அவனையல்லது) தன்னை எய்திநின்ற ஞானிகளைப் பேணாது; (எ - று.)

புகழுடம்பான் இவ்வுலகும், புத்தேளுடம்பான் அவ்வுலகும் ஒருங்கே எய்தாமையின், 'புலவரைப்போற்றாது' என்றார். அவன் இரண்டு உலகும் ஒருங்கு எய்துதல், "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவனேவா வானவூர்தி, யெய்துபவென்ப தஞ் செய்வினை முடித்து" எனப் பிறராலுஞ் சொல்லப்பட்டது.

(கு - ரை.) நிலவரை - நிலஎல்லைக்கண்: நிலத்தின் எல்லையென உடைமையும் உடையதும் வேறாகாத ஒற்றுமைக்கிழமைப்பொருளில்வந்த ஆறும் வேற்றுமைத்தொகை: பூமியினிடத்தில். நீள்புகழ் - நீளும்புகழ் என எதிர்காலவினைத்தொகை; நெடுங்காலம் நிற்கும் புகழ் என்றவாறு: இனி, நீட்சியாகிய புகழ்எனப் பண்புத்தொகையாகக் கொண்டால், பெருங்கீர்த்தியென்று ஆகும். செய்யுமாயின் - உண்டாக்குவனானால், சம்பாதித்தால். புத்தேள் உலகு - தேவலோகம். ஞானிகளைப் பேணாது - தத்துவஞானமுடையவரை விரும்பிக்கொண்டாடாது; என்றது - இம்மையிற் புகழையீட்டாமல் அறிவை மாத்திரம்பெற்று யோகமுயற்சியால் மறுமையில் தேவசரீரத்தைப் பெற்றவர்களினும் இம்மையிற் புகழையும் ஈட்டித் தானம்முதலியவற்றின்பயனால் மறுமையில் தேவசரீரத்தையும் பெற்றவர்கட்குச் சுவர்க்கலோகத்தில் மிக்க சிறப்பு நடக்குமென்பது கருத்து. இம்மையில், உடம்பு இரண்டு: பூதவுடம்பும் புகழுடம்பும் என: பூதவுடம்பாவது - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களின் சேர்க்கையா லுண்டான சரீரம்; புகழுடம்பாவது - கீர்த்தியால் என்றும் பெயர்நிலைபெற்றிருத்தல்: பூதவுடம்புக்கு அழிவு

உண்டு; புகழுடம்புக்கோ அது இல்லை. தேவவுடம்பு - தேஜோமயமானது; இதற்கும் அழிவுஉண்டு. இவற்றள் பூதவுடம்பைமாத்திரம் பெற்றுநின்ற மண்ணுலகத்தாரினும், தேவவுடம்பை மாத்திரம் பெற்றுநின்ற விண்ணுலகத் தாரினும், புகழுடம்பு தேவவுடம்பு என்னும் இரண்டையும் இரண்டுஉலகத் திலே ஏககாலத்திற் பெற்றவர்களின் பெருமை சிறந்ததாதல் காண்க.ஒருங்கே எய்தாமையின் - தத்துவஞானிகள் ஒருசேர அடையாமையால். "புலவர்பாடும்" என்னும் மேற்கோள் - புறநானூறு, உஎ - ஆம் பாட்டில் உள்ளது: 'புல' வராற்பாடப்படும் புகழையுடையோர் ஆகாயத்தின்கண் பாகனுற் செலுத்தப் படாத விமானத்தைப் பொருந்துவார் என்று சொல்லுவார் அறிவுடையோர்,

## உச - ஆம் அதிகாரம்—புகழ்

கரு௬௯

தாம்செய்யும் நல்வினையை முடித்து' என்று உரை; தாஞ்செய்வினை முடித்து வானவூர்தியெய்துப என்று அந்வயம். இதனுல், புகழுடையவன் தேவலோக த்தையும் அடைதல் விளங்குகின்றது. பிறர்என்றது - அப்பாட்டுப்பாடிய உறையூர் முதுகண்ணன் சாத்தனுரை. புலம் அல்லது புலமை - அறிவு; அதனையுடைய ஞானிகள், புலவர்; இது - விபுதர் என்னும் வடசொல்லின் பொருள் கொண்டது. 'புலவர் என்றூர், தேவரை; அவர் புலனுடையராதலால். இது தேவருலகம் போற்றுமென்றது'

என்பது, மணக்குடியருரை.(௩)

௨௩௫. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

(இ - ள்.) நத்தம் (ஆகும்) கேடுஉம் - (புகழுடம்பிற்கு) ஆக்கமாகுங் கேடும், உளது ஆகும் சாக்காடுஉம் - (புகழுடம்பு) உளதாகுஞ் சாக்காடும்,—வித் தகர்க்கு அல்லால் - சதுரப்பாடுஉடையார்க்கல்லது, அரிது - இல்லை; (எ-று.)

நந்து என்னுந் தொழிற்பெயர், விகாரத்தால் 'நத்து' என்று ஆய், பின் 'அம்' என்னும் பகுதிப்பொருள்விகுதிபெற்று, 'நத்தம்' என்று ஆயிற்று. 'போல்' என்பது - ஈண்டு உரையசை. 'ஆகும்' என்பதனை முன்னும் கூட்டி, 'அரிது' என்பதனைத் தனித்தனிக் கூட்டி உரைக்க. ஆக்கமாகுங் கேடாவது- புகழுடம்பு செல்வமெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல். உளதாகுஞ் சாக்காடாவது-புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தல். நிலையாதனவற்றான் நிலையின எய்துவார் வித்தகராகலின், 'வித்தகர்க்கு அல்லால் அரிது' என்றார்.

இவையிரண்டுபாட்டானும், புகழுடையாரெய்தும் மேன்மை கூறப் பட்டது.

(கு - ரை.) புகழுடம்பிற்கு ஆக்கமாகுங் கேடு-கீர்த்தி விருத்தியடைதற் குக் காரணமான செல்வச்செலவு. புகழுடம்பு உளதாகுஞ் சாக்காடு - கீர்த்தி நிலைத்திருக்க மரணமடைதல். சாக்காடு - சாவு; தொழிற்பெயர்: காடு-விகுதி. சதுரப்பாடு உடையார் - சாமர்த்தியமுடையவர்.

தொழிற்பெயர் - வினைப் பகுதி யென்றபடி; விகாரம் - இங்கே, வலித்தல். பொருந்து திருந்து என்னும் பகுதிகள் பொருத்தம் திருத்தம் என நிற்றல்போல, நந்து என்னும் பகுதி நத்தம் என நின்றது: பகுதியே தொழிற்பெயர்ப்பொருளதாதலால், அம் - பகுதிப்பொருள்விகுதி யென்றார். ஈண்டு - இங்கே. 'போல்' - ஒப் பில்போலி; உவமைப்பொருளுணர்த்தாத 'போல்' என்னுஞ் சொல்; "ஒப் பில் போலியு மப்பொருட் டாகும்" என்னுந் தொல்காப்பியத்தால் இது உரையசைப்பொருளாய்நின்றது: உரையசையாவது-சிறிதுபொருளுணர்த்தி வாக்கியத்தை அலங்கரித்துநிற்பது: வாக்கியாலங்கார மென்பர் வட நூலார். "நெருப்பழற்சேர்ந்தக்கால் நெய்போல்வதூஉம், எரிப்பச்சுட் டெவ்வ நோயாக்கும்" என்பது காண்க. நத்தம்போற் கேடு - வளர்தல்போலக் கெடுதல்; புகழ்வளரச் செல்வங்குறைத லென்றபடி. செல்வமெய்த - சிறப்பையடைய. நல்கூர்தல் - வறுமைப்படுதல். நிலையில்லாத செல்வத்தையும் உடம்பையுங் கொண்டு நிலையான புகழைப் பெறுவது மிக்க சாம



ர்த்திய மென்பது கருத்து. "வீந்தவரென்பவர் வீந்தவரேனும், ஈந்தவரல்ல திருந்தவர் யாரே" என்பர் கம்பரும். வித்து - ஞானம்; அது - வித் என்னும் வடமொழியின் திரிபு: அதனை மனத்தி லுடைய வர் , வித்தகர்: விதக்தர்

என்ற வடசொல்லின் திரிபு என்பாருமுளர். (௫)

உ௩௬. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(இ - ள்.) தோன்றின் - (மக்களாய்ப்) பிறக்கின், புகழொடு தோன்றுக- புகழ்க்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க; அஃது இலார் - அக்குணம் இலா தார், தோன்றலின் - (மக்களாய்ப்) பிறத்தலின், தோன்றாமை-விலங் காய்ப் பிறத்தல், நன்று—; (எ - று.)

புகழ் - ஈண்டு, ஆகுபெயர். 'அஃதிலார்' என்றமையின் 'மக்களாய்,'என்பதூஉம், 'மக்களாய்ப்பிறவாமை' என்ற அருத்தாபத்தியான் 'விலங்காய்ப் பிறத்தல்' என்பதூஉம் பெற்றாம். இகழ்வார் இன்மையின், 'நன்று' என்றார்.

(கு - ரை.) பிறக்கின் - பிறந்தால். புகழ் என்பது - இங்கே, புகழ்க்குக் காரணமான நற்குணத்தைக் குறித்ததனால், காரியவாகுபெயர். 'அஃதிலார்' என உயர்திணைப்பலர்பாலாற் கூறினமையால், 'தோன்றின்' என்றவிடத்து 'மக்களாய்' என வருவித்து உரைக்கப்பட்டது. அருத்தாபத்தியாவது-இன்னபடியில்லாவிட்டால் இன்னபடிகூடாது என்ற வாய்பாடுதோன்ற, வெளிப் படையாகவன்றிச் சொல்லின் குறிப்பினால் பொருள் தோன்றுவது: இது குறிப்பெச்சத்திலடங்கும். 'மக்களாய்ப்பிறவாமை' என்றதனால் மக்களினும் வேறான 'விலங்காய்ப்பிறத்தல்' என்பது குறிப்பிக்கப்பட்டவாறு

காண்க. தொல்காப்பியனர் "எடுத்த மொழியினஞ் செப்பலுமுரித்தே" என்று கூறி யதில் இது அடங்குமென்பர், சிலர். 'பிறக்கின் புகழுண்டாகப் பிறக்க, அஃதிலார் பிறக்குமதிற் பிறவாமை நன் று என்றவாறு. இது, புகழ்பட
வாழவேண்டு மென்றது' என்பது, மணக்குடயருரை. அஃதிலார் என்றதில், ஆய்தம் மெய்போ லொலித்தது. மனிதனை நற்குணமில்லாவிட்டால் இகழ்ந்து பேசுவார்கள்; விலங்குசாதியாய்ப்பிறந்தால் இகழார்களென்றவாறு.

உ௩௭. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

(இ - ள்.) புகழ் பட வாழாதார் - (தமக்குப்) புகழுண்டாக வாழமாட் டாதார், (அதுபற்றிப் பிறர் இகழ்ந்தவழி), தம் நோவார் - (இவ்விகழ்ச்சி நம்
மாட்டாமையான் வந்ததென்று) தம்மை நோவாதே,
தம்மை இகழ்வாரை
நோவது—, எவன் - என்கருதி? (எ - று.)

புகழ்பட வாழலாயிருக்க அதுமாட்டாத குற்றம்பற்றிப் பிறர் இகழ்தல்
ஒருதலை யாகலின், 'இகழ்வாரை' என்றார்.

(கு - ரை.) புகழ்படவாழாதார் - தருமமார்க்கத்திலேநின்று முயற்சி செய்து தொகுத்துவைத்த நற்பொருளினாலே தென்புலத்தார்முதல் இறந்தார் கடையாக மேலே சொல்லப்பட்டவர்களைப் பாதுகாத்து அதனாலே

தமக்குப் புகழுண்டாக இல்லறத்திலே இனிதுவாழாதவர்.
பிறர் இகழ்ந்தவழி - அப்படிவாழ்வார் கண்டு
நிந்தித்தபொழுது. இவ்விகழ்ச்சி நம்மாட்டாமையான்
வந்ததென்று தம்மை நோவாதே - இந்தநிந்தை நாம்
புகழ்பட வாழாததனாலே வந்ததென்று தம்மை
நொந்துகொள்ளாதவர்களாய்.நோவது- வெறுப்பது.
என்கருதி - யாதுபயனை யுத்தேசித்து? என்றது, பேதைமை
யென்றபடி. நோவார் - எதிர்மறைமுற்றெச்சம். இகழ்வார் -
இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமாகவந்த
வழுவமைதி. புகழ்பெறாதவர் தம்மைப் பிறர் இகழ்ந்தால்
அவர் இகழ்ந்தது பிழையன்றெனக் கருதி அதற்கு ஏது
தமது குற்றமேயென அறிந்து தம்மைத் தாம்
வெறுத்துக்கொள்ளவேண்டும்; அதனோடு, அவர்
தம்மைநிந்தித்தது தாம் இனியாயினும் புகழ்படவாழ்தற்கு
ஏதுவாகிய உபதேசமாமெனக் கொள்வது, விசேஷம்:
அம்மனங்கருதாது அவரையிகழ்வது, தாம் புகழ்படவாழாத
குற்றத்தின்மேலும் தம்மை நிந்தித் துப் புத்திசொன்னவரை
நொந்துகொண்ட குற்றமும் வருதற்கு ஏதுவென்க.
'புகழ்படவாழமாட்டாதார் இகழப்படுவர் என்றவாறு'
என்பர் மணக்குடியர்.

உருஅ. வசையென்ப வையத்தார்க் கெல்லா
மிசையென்னு

மெச்சம் பெறாஅ விடின்.

(இ - ள்.) இசை என்னும் எச்சம் பெறாஅ விடின் -

புகழென்னும் எச்சம் (பெறலாயிருக்க, அது)
பெறுதொழிவாரர்யின், வையத்தார்க்கு எல்லாம் -
வையகத்தோர்க்கெல்லாம், வசை என்ப - (அதுதானே)
வசையென்று சொல்லுவர், (நல்லோர்); (எ - று.)

'எச்சம்' என்றார், செய்தவர் இறந்துபோகத் தான் இறவாதுநிற்றலின். இகழப்படுதற்குப் பிறிதொரு குற்றம் வேண்டா வென்பது கருத்து.

(கு - ரை.) புகழ் என்னும் - புகழென்று சிறப்பித்துச்சொல்லப்படும். எச்சம் - சேஷித்திருப்பது; எஞ்சு - பகுதி, அம் - கருத்தாப்பொருள் விகுதி, வலித்தல் - விகாரம். வையகத்தோர்க்கெல்லாம் - நிலவுலகத்திலுள்ளவரெல் லார்க்கும். வசை - நிந்தை. புகழ்ச்சியைப் பெறுமற்போனாலும் இகழ்ச்சியைப்பெறுதிருத்தல் கூடாதோ எனின், ஒளியின்மையே இருளாய் முடிதல் போலப் புகழ்ச்சியின்மையே பெரியஇகழ்ச்சியாதலின் கூடாது என்பது கருத்து. பெறுஅ - மொழியிறுதியிற் செய்யுளோசை நிறைத்தற்கு வந்த அளபெடை; ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். இனி, இசை யென்னுமெச்சம் பெறுவிடின் என்பதற்கு - (இல்வாழ்க்கையென்னும் மனைவியைத் தழுவிப்) புகழ் என்னும் பிள்ளையைப் பெறுவிட்டால் என்றும் பொருளுரைக் - கலாம். வையத்தார்க்கெல்லாம்வசை யென்பதற்கு - உலகத்தார்க்கெல்லாம் நேரும் நிந்தை யென்றும், உலகத்தாரெல்லாராலுஞ் சொல்லப்படும் நிந்தை யென்றுங் கருத்துக்கொள்க. 'உலகத்தார்க்கெல்லாம் புகழாகியஒழிபு பெறுவிடின் அப்பெருமைதானே வசையாமென்றுசொல்வர்

என்றவாறு. மேல் 'புகழில்லாதாரை இகழ்ப' என்றார்; 'அவர் குற்றமில்லாராயின் இகழப்படுவரோ?' என்றார்க்கு, 'வேறு குற்றம் வேண்டா: புகழின்மைதானே அமையும்' என்றது' என்பது, மணக்குடியருரை.

21

(அ)



உ௩௯. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

(இ - ள்.) இசை - புகழ், இலா - இல்லாத, யாக்கை - உடம்பை, பொறுத்த - சுமந்த, நிலம்—,—வசை இலா - பழிப்பில்லாத, வள் - வளப்பத்தையுடைய, பயன் - விளையுள், குன்றும்—; (எ - று.)

உயிர் உண்டாயினும் அதனாற் பயன் கொள்ளாமையின் 'யாக்கை' எனவும், அது நிலத்திற்குப் பொறை யாகலின் 'பொறுத்த' எனவுங் கூறினார். விளையுள் குன்றுதற்கு ஏது, பாவயாக்கையைப் பொறுக்கின்ற வெறுப்பு. 'குன்றும்' என, இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேல் நின்றது.

இவை நான்குபாட்டானும், புகழில்லாதாரது தாழ்வு

கூறப்பட்டது.

(கு - ரை.) விளையுள்-நெல் முதலியவற்றின் விளைவு. குன்றும்-குறையும். பொறை - பாரம். நிலமென்னும் இடத்திற் பொருந்திய பயனென்னும் பொருளினது குன்றுதல் என்னுந் தொழிலை அந்த நிலமென்னும் இடத்தின்மேலேற்றி 'நிலம் பயன்குன்றும்' எனப்பட்டது; நிலத்திற் பயன் குன்றும் என்று சொல்வது, நேர். வண்பயன் - வண்மையாகிய பயன் எனப் பண்புத்தொகை. யாக்கை - ரஸம், ரக்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை என்னும் ஏழுதாதுக்களாலும் யாக்கப்பட்டது என உடம்புக்குக் காரணப்பெயர்; யாத்தல் - கட்டுதல். புகழ்க்குக் காரணமான நற்குணநற் செய்கைகளில்லாதவர்களுள்ளவிடத்தில் பூமி வளங்குறைவுபடுதலை "மழை யின்றி மாநிலத்தார்க் கில்லை மழையுந், தவமிலா ரில்வழி யில்லை," "நிலத் தியல்பு, வானமுரைத்து விடும்" என்பன கொண்டும் அறிக. 'இது புகழில்லாதான் இருந்த விடம் விளைவு குன்றும் என்றது' என்பர் மணக்குடியர்.(௬)

௨௪0. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

(இ - ள்.) வசை ஒழிய வாழ்வாரே - (தம்மாட்டு) வசை உண்டாகாமல் வாழ்வாரே, வாழ்வார் - உயிர்வாழ்வாராவார்; இசை ஒழிய வாழ்வாரே - புகழ் உண்டாகாமல் வாழ்வாரே, வாழாதவர் -

இறந்தாராவார்; (எ - று.)

'வசையொழிதலாவது - இசையென்னும் எச்சம் பெறுதல்' ஆயினமை யின், இசை யொழிதலாவது - வசைபெற தலாயிற்று. மேல் 'இசையிலா யாக்கை' என்றதனை விளக்கியவாறு.

இதனுன், இவ்விரண்டும் உடன்கூறப்பட்டன.

மறுமைப்பயன், "வானுறையுந், தெய்வத்துள் வைக்கப்படும்'' என

மேலே கூறப்பட்டது. படவே, இல்லறத்திற்கு இவ்வுலகிற் புகழும், தேவ

ருலகிற் போகமும் பயனென்பது பெற்றாம்.

இனி, மனுமுதலிய அறநூல்களாற் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங் ' களெல்லாம், இவர் தொகுத் துக்கூறிய இவற்றுள்ளே அடங்கும்; அஃது

அறிந்து அடக்கிக்கொள்க: யாம் உரைப்பிற் பெருகும்.

உ௪ - ஆம் அதிகாரம்—புகழ்

கசுரு

(கு - ரை.) வசை - இகழ்ச்சிச்சொல். 'இசைபெற', 'வசைபெற' என்றுசொல்லவந்தவர் அருத்தாபத்தியால் 'வசையொழிய', 'இசையொழிய' என்றாரல்லது அவையிரண்டும் முன்புஉளவாய்ப் பின்புநீங்க என்றாரல்லர். 'வசையொழிதலாவது' என்ற வாக்கியத்தின் கருத்தைக் கீழ் "வசையென்ப வையத்தார்க் கெல்லாம்'' என்னுந் திருக்குறளைக்கொண்டு அறிக; புகழ்

பெறுதலே பழியின்மை, புகழ்பெருமையே பழி என்றவாறும். "இசையொழிய வாழ்வாரே வாழாதவர்" என்றதனுல், 'புகழில்லாதவர் உற்றறிபுலனென்றுமில்லாத ஜடப்பொருளோடு ஒப்பர்' என்று கூறி, கீழ்ப்பாட்டில் 'இசையிலாயாக்கை' என்றதன் இகழ்ச்சியை வெளிப்படுத்தினர். 'இது, புகழில்லார் பிணத்தோடொப்பர் என்றது' என்பர் மணக்குடியர். இவ்விரண்டும் - புகழுடையாரதுமேன்மையும், புகழில்லாதாரது கீழ்மையும்.

இவ்வதிகாரத்தால், இல்லறத்திற்கு இம்மைப்பயன் புகழ் எனப்பட்டது; . இல்லறத்திற்கு மறுமையிலடையும் பயன், கீழ் இல்வாழ்க்கையென்னும் அதிகாரத்தில் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந், தெய் வத்துள் வைக்கப்படும்" என்றதனுல், இல்லறத்தோடுகூடிவாழுமியல்பினுல் நிலவுலகத்தில் வாழ்பவன் பின் அவ்வறப்பயனைச் சுவர்க்கத்தில் அனுபவித் தல் நிச்சயமாதலின் தேவலோகத்தில் வசிக்குந்தேவருளொருவனுக வைத்து நன்குமதிக்கப்படுவா னென்று கூறப்பட்டது: அப்பாட்டின் உரையில் 'இதனுன் இல்நிலையது மறுமைப்பயன் கூறப்பட்டது; இம்மைப்பயன் புகழ்: அதனை இறுதிக்கட் கூறுப' என்று கூறிப்போந்ததை இங்கே அநுவதித் தார். போகம் - சுகாநுபவம்.

மனு - அவராற் செய்யப்பட்ட தருமசாஸ்திரத்துக்குக் கருத்தாவாகு பெயர். அறநூல்-தருமசாஸ்திரம். இல்லறங்கள்-கிருகஸ்தாச்சிரமதருமங்கள். மற்றொன்றுவிரித்தல்என்னுங்குற்றம் சேருமென்று அஞ்சி இங்ஙனங்கூறினர்.

இல்லறவியல் முற்றிற்று.

---

இரண்டாவது
## துறவறவியல்.

இனி,
மேற்கூறிய

முறையானே துறவறங்கூறிய தொடங்கினர். துறவறமாவது - இல்லறத்தின் வழுவாது ஒழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடுபேற்றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற்பொருட்டு அவராற் காக் கப்படும் விரதங்களும், அவற்றான் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞான மும் என இருவகைப்படும்.

### விரதம்.

அவற்றுள் விரதங்களாவன - இன்ன அறம் செய்வல் எனவும், இன்ன பாவம் ஒழிவல் எனவும் தம்ஆற்றலுக்குஏற்ப வரைந்துகொள்வன. அவை தாம் வரம்பிலவாகலின் பெருகு மென்று அஞ்சி, அவைதம்முள்ளே பலவற்



றையும் அகப்படுத்து நிற்குஞ் சிறப்புடையன சிலவற்றை ஈண்டுக் கூறுவர்.

தொடங்கி, முதற்கண் அருளுடைமை கூறுகின்றார்.

(கு - ரை.) முறையானே - இல்லறம் துறவறம் என முன்னேசொல்லி நிறுத்திய கிரமத்தின்படியே. கூறிய - சொல்ல. அறிவுடையராய் - உலகிய லையும் இல்லறவாழ்க்கையின் நிலையில்லாமையையும் கடவுளின் தன்மையை யும் அறிந்து. பிறப்பினை அஞ்சி - மீண்டும் சன்மமெடுத்தற்குப் பயப்பட்டு. வீடுபேற்றின் பொருட்டு - முத்தியையடையும்பொருட்டு. துறந்தார் - தேக அபிமானம் முதலிய எல்லாப்பற்றுக்களையும் முழுவதும்விட்டவர். வினைமாசு தீர்ந்து-கருமசம்பந்தத்தாலாகிய குற்றம் நீங்கி; விரதங்களின் பயன், கருமந் தொலைத்தலும் ஞானம்உதித்தலு மென்க. அந்தக்கரணம் - அகத்து உறுப்பு; அது, மனம் புத்தி சித்தம் அகங்கா ரம் என நால்வகைப்படுதலால், பன்மை யாகக் கூறினார். தூயவாதற்பொருட்டு-பரிசுத்தியுடையனவாதற்கு. காக்கப்ப டும்-தவறாமலநுட்டிக்கப்படும். அவற்றான்-விரதங்களால். அவை-அந்தக் கரண ங்கள். தூயவாயவழி-பரிசுத்தியுடையனவானபோது. உதிப்பது-உண்டாவது.

செய்வல் - செய்வேன். ஒழிவல் - நீங்குவேன். தம்

ஆற்றலுக்கு ஏற்ப

வரைந்துகொள்வன - தமதுசக்திக்குத் தக்கபடி ஏற்படுத்திக்கொள்பவை.

வரம்புஇல - அளவில்லாதன. பெருகும் - அவற்றையெல்லாங்கூறின் நூல் விரிந்துபோம். அகப்படுத்து - உள்ளடக்கி. கூறுவான் - சொல்ல. முதற் கண் - முதலில். இதுமுதற் பதின்மூன்று அதிகாரங்களில் துறவறம் கூறப் படுகின்றது; அவற்றில் இதுமுதல் ஒன்பது அதிகாரங்களில் விரதங்களும், அடுத்த நான்கு அதிகாரங்களில் ஞானமும் கூறப்படும்.

## உரு - ஆம்

# அதிகாரம்— அருளுடைமை.

அஃதாவது - தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கள்மேலுஞ் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமைபோல இது துறவறத் திற்குச் * சிறத்தலின், முற்படக் கூறப்பட்டது.

(கு - ரை.) தொடர்பு (மனைவி மக்கள் பந்து மித்திரர் என்றாற்போன்ற) சம்பந்தம். இல்லறத்திற்கு அன்புடைமை சிறந்த குணமாதலை முன்கூறிப் போந்தா ராதலால், அதனை இங்கு உவமையாக்கினர். இது-அருளுடைமை. முன் - முதலில். 'அருளுடைமையாவது - யாதானும் ஓர் உயிர் இடர்ப்படின் அதற்குத் தன்னுயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்துமாறுபோல வருந் தும் ஈரமுடைமை' என்பர் மணக்குடியர்.

உசக. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்

பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

(இ - ள்.) செல்வத்துள் செல்வம் - செல்வங்கள்பலவற்றுள்ளும் (ஆரா ய்ந்தெடுக்கப்பட்ட) செல்வமாவது,—அருள் செல்வம்-அருளான்வருஞ் செல் வம்: பொருள் செல்வம் - (அஃது ஒழிந்த) பொருளான்வருஞ் செல்வங்கள்,, பூரியார்கண் உம் - இழிந்தார்கண்ணும், உள - உளவாம், (ஆகலான்); (எ-று.)

* பி - ம்: சிறந்தமையின், முன்.

உரு - ஆம் அதிகாரம்—அருளுடைமை

கக௫

அருளான்வருஞ் செல்வமாவது - உயிர்களை ஓம்பி அவ்வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார்கண்ணேயல்லது இல்லாத அருட்செல்வமே சிறப்புடைய செல்வம்; ஏனை நீசர்கண்ணும் உளவாம் பொருட்செல்வங்கள் சிறப்பில என்பதாம்.

(கு - ரை.) அருளான்வருஞ் செல்வம் - அருள் காரணமாகத்தோன்றும் மேம்பாடு. இழிந்தார்கண்ணும் - கீழ்மக்களிடத்தும். ஓம்பி - பாதுகாத்து. அவ்வறத்தான்மேம்படுதல் - அங்ஙனம்பாதுகாத்தலாகிய

தருமத்தாற் சிறப் படைதல். நீசர் - தாழ்ந்தவர். அருளாகிய செல்வம் அறிவுமுதலியவற்றால் உயர்ந்தோரிடத்துமாத்திரமே உண்டாகி அவருயிரையும் பிறவுயிர்களைத் தையும் பாதுகாத்தற்கு ஏதுவாம்; பொருளாகிய செல்வம் அறிவுமுதலியன இல்லாத தாழ்ந்தோரிடத்தும் உண்டாகி அவர்களுயிரையும் பிறவுயிர்களையும் பாதுகாக்க உதவாமற்போம்; ஆதலால், பொருளினும் அருளே சிறந்தது என்பது கருத்து. உம் - இழிவுசிறப்பு. இத்திருக்குறளை 'இன்னதல்லதிது வெனமொழிதல்' என்னுந் தந்திரவுத்திக்கு உதாரணமாகக்காட்டினர், வீரசோழியவுரைகாரர்.

(௧)

௨௪௨. நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை.

(இ - ள்.) நல் ஆற்றான் நாடி - (அளவைகளானும் பொருந்துமாற்றானும்) நன்றான நெறியிலே (நின்று நமக்குத்துணையாம் அறம் யாதென்று) ஆராய்ந்து, அருள் ஆள்க - அருளுடையராக; பல்

ஆற்றான் - (ஒன்றை
ஒன்று ஒவ்வாத) சமயநெறிகள் எல்லாவற்றானும்,
தேரின்உம் - ஆராய்ந்தா
லும், துணை - துணையாவது, அஃதுஎ - அவ்வருளே,
(பிறிதில்லை); (எ - று.)

அளவைகளாவன - பொறிகளாற் காணும் காட்சியும்,
குறிகளான் உய்த்துணரும் அநுமானமும்,
கருத்தாமொழியாகிய ஆகமமும் என மூன்று;
ஒப்புப்பற்றி உணரும் உவமையும்,
இஃதனம்அன்றாயின் இது கூடாது
என்று உணரும் அருத்தாபத்தியும், உண்மைக்கு மாறாய
இன்மையும் என
இவற்றையுங் கூட்டி ஆறென்பாரும் உளர்: இவையும்
ஒருவாற்றான் அவற்
றுள்ளே அடங்குதலின், மூன்றென்றலே கருத்து.
பொருந்துமாறாவது - 'இது கூடும், இது கூடாது' எனத்
தன்கண்ணே தோன்றுவது; இதனை வட நூலார் 'யுக்தி'
என்ப. 'ஆற்றான்' என்பது - வேற்றுமைமயக்கம். ஒன்றை
ஒன்று ஒவ்வாமையாவது - மதவேறுபாட்டான் அளவைகளும் பொருள்களும்
தம்முள்மாறுகோடல். அன்னவாயினும், அருள் துணை யென்றதகண் ஒக்கு
மென்பதாம். உயிரைவிட்டுநீங்காது இருமையினும் உதவலின், 'துணை' என்றார்.

இவை யிரண்டுபாட்டானும், அருளினது சிறப்புக்
கூறப்பட்டது.

(கு - ரை.) நன்றான நெறி - சன்மார்க்கம்.
அளவைகளானும் பொருந்து மாற்றானும் ஆராய்ந்து என

இயையும். ஆராய்தல் - ஆலோசித்து அறிதல். நமக்குத் துணையாம் அறம் - நமது உயிர்க்கு உதவியாகுந் தருமம். அருள் ஆள்க - அருளுடைமையென்னும் விரதத்தையே உறுதிப்பொருளாகக்



கொண்டு காக்க. சமயநெறிகள் - மதவழிகள்.

அளவைகள் - ஒருபொருளின் உண்மையை அளவிட்டறிதற்குக் கருவியான பிரமாணங்கள்: அவை எட்டுவகைப்படும்; அவையாவன - பிரதியட்சம், அநுமானம், உபமானம், ஆகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதிகம், சம்பவம் என்பன. அவற்றுள், காணல் - பிரதியட்சம்; புகையைக் கண்டு நெருப்பு உண்டெனல் - அநுமானம்; மரை பசுப்போல் எனல் - உபமானம்; பெரியோர்வாய்ச்சொல் - ஆகமம்; 'பகலுண்ணான் பருத்திருப்பான்' என்றவிடத்து 'இரவில் ஒளித்துஉண்பான்' என உணர்தல் - அருத்தாபத்தி; 'முன்னுமில்லை, பின்னுமில்லை, ஒன்றிலொன்றில்லை, ஒருகாலத்தும்இல்லை' எனல் - அபாவம்; இம்மரத்திற் பேயுளதென்பது - ஐதிகம்; ஆயிரத்தில் நூறு உண்டெனல் - சம்பவம்; இவற்றுள் ஐதிகம், சம்பவம் என்பவற்றைப் பலர் வேறுபிரமாணங்களாகக் கொள்ளார். இவைஎட்டையும் காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் மூன்றில் அடக்குவர்; உபமானம் பிரதியட்சத்திலும், அருத்தாபத்தியும் சம்பவமும் அநுமானத்திலும், ஐதிகம் ஆகமத்திலும், அபாவம் மூன்றிலும் அடக்கப்படும்: இதன்விரிவைத் தருக்கநூல்களிற் காணலாம். பொறிகளாற் காணும் காட்சி - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் பஞ்சஇந்திரியங்களினாலும் அறியும் அறிவு; இது, பிரதியட்சமெனப்படும். குறிகளான் உய்த்து உணர்தல் - அடையாளங்களால் ஆராய்ந்து அறிதல். கருத்தாமொழி - கடவுளின் வாக்கியம். ஆகமம் என்றது - கடவுளால்

கேரேவெளிபிடப்பட்ட வேதங்களும், அவனருள்வழிப்பட்டோரால் வெளிபிடப்பட்ட ஸ்மிருதி இதிகாச புராணங்களும் முதலியவற்றை; இது, சப்தப்பிரமாணமெனவும் படும். மா றுஆய - எதிரான. இன்மை-அபாவம்.

ஒருவாற்றான் - ஒருவகையால். கருத்து - சித்தாந்தம். ஆற்றான் - ஆற்றில்என்று பொருள்: மூன்றும்வேற்றுமையுருபு ஏழாம்வேற்றுமையிடப்பொருளில்வந்ததனால் உருபுமயக்கம். பொருள்கள் - பதார்த்தங்கள்; இவை, பிரமாணங்களைக்கொண்டு அளவிட்டு அறியப்படுதலால், பிரமேயமெனப்படும். மாறுகோடல் - பேதங்கொள்ளுதல். அன்னவாயினும் - அப்படிப்பட்டவை யானாலும். இருமை மயினும் - இம்மை மறுமை யென்னும் இரண்டிடத்தும். எவ்வளவு ஆலோசித்துப்பார்த்தாலும் எல்லாச்சமயத்தாராலும் உயிர்க்கு இம்மைமறுமைகளில் உறுதிதருவதாகவிரும்பி யொப்புக்கொள்ளப்படுவது அருளே யாதலால், உயிர்க்கு உறுதி வேண்டுபவர் அருளுடையராக என்பது கருத்து. 'நல்வழியாலேநாடி அருளையுண்டாக்குக: பல்வழியினும் ஓடி ஆரா யினும் தமக்கு அருளே துணையாம் என்றவாறு. 'நல்வழியால்' என்றது, அருளுடைமையுண்டாகப் பலஅறங்களையுஞ் செய்க என்றவாறு. இது அருளுடைமை வேண்டு மென்றது' என்பது, மணக்குடியருரை. 'அஃதே' என்

னும் பிரிநிலையேகாரத்தால், வேறில்லையென்பது ஆய்தம் இங்கு மெய்போல நின்றது.

பெறப்பட்டது. அஃது -

உசாங. அருள்சேர்ந்த நெஞ்சினார்க்
கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

## உரு - ஆம் அதிகாரம்—அருளுடைமை

கசுஎ

(இ - ள்.) இருள் சேர்ந்த-இருள்செறிந்த, இன்னா உலகம் - துன்பவுல கத்துள், புகல் - சென்றுபுகுதல்,—அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு-அருள்செறிந்த நெஞ்சினையுடையார்க்கு, இல்லை—; (எ - று.)

'இருள்செறிந்த துன்பவுலகம்' என்றது, திணிந்த இருளையுடைத்தாய்த் தன்கட் புக்கார்க்குத் துன்பஞ்செய்வதோர் நரகத்தை; அது கீழுலகத்துள் ஓரிடமாகலின் 'உலகம்' எனப்பட்டது.

(கு - ரை.) செறிந்த - நிறைந்த. துன்பவுலகம் - நரகம். திணிதல்-நிறைந்து அடர்தல். இருள்செறிந்த இன்னாவுலகம் - எப்பொழுதும் மிக்க இருள் நிறைந்து அதிபயங்கரமாகவுள்ள அந்ததாமிஸ்ரம் என்னும் நரகபேதம். கீழ் அடக்கமுடைமை யென்ற அதிகாரத்தில் "ஆரிருளுய்த்துவிடும்" என்பதற்கு—'தங்குதற்கரிய இருளின்கண் செலுத்தும்' என்று பொழிப்புரையும், 'இருள் என்பது - ஓர்நரகவிசேடம்' என்று விசேடவுரையும் உரைத்தவாறும் காண்க. அருளுடையார்க்கு நரகவேதனையில்லை யென்பது கருத்து. 'இது, நரகம்புகார்

என்றது' என்பர். மணக்குடியர்.

(௩)

உசச. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப

தன்னுயி ரஞ்சும் வினை.

(இ - ள்) மன் - நிலைபேறுடைய, உயிர் - உயிர்களை, ஓப்பி - பேணி, அருள் ஆள்வாற்கு - (அவற்றின்கண்) அருளுடையனுவானுக்கு, தன் உயிர் அஞ்சும் வினை - தன் உயிர் அஞ்சுதற்கு ஏதுவாகிய தீவினைகள், இல்-உளவாகா, என்ப - என்று சொல்லுவர், (அறிந்தோர்); (எ - று)

உயிர்களெல்லாம் நித்தமாகலின், 'மன்னுயிர்' என்றார். அஞ்சுதல் - துன்பம்நோக்கி அஞ்சுதல். அன்ன அறத்தினோன் கொலைமுதலிய பாவங்கள் செய்யா னெனவே, மறுமைக்கண் நரகம்புகாமைக்கு ஏது கூறியவாறாயிற்று.

(கு - ரை.) பேணி - பாதுகாத்து. நித்தம் - நித்தியம்; என்றும் ஒருபடிப்பட இருப்பது. பரமாத்மாவைப் போலவே ஜீவாத்மாவும் நித்தியமென்பது நூல்துணிபு. வினையென்னும் பொதுமொழி, 'தன்னுயி ரஞ்சும்' என்ற விசேஷணத்தால், தீவினையெனச் சிறப்பை யுணர்த்திற்று. அஞ்சும் வினை - அஞ்சுதற்குக் காரணமாகிய வினை யெனப் பொருள்படுதலால், பெயரெச்சம் காரியப்பொருளது. தன்னுயிர் - உடைமையும் உடையதும் வேறாகாத ஒற்றுமைக் கிழமைப்பொருளில் வந்த ஆறாம்வேற்றுமைத்தொகை. அன்ன அறத்தினோன் -

அருளுடைமையாகிய அந்தத்தருமத்தை யுடையவன். மன்உயிர் - இரண்டனுருபும் பயனுந் தொக்கதொகை. நிலைபெற்றஉயிர் என வினைத்தொகையுமாம். 'என்ப' என்னும் பலர்பால்முற்றுக்கு, 'அறிந்தோர்' என்பது, தோன்றுஎழுவாய். அருளுடையார் தீவினைசெய்யா ரென்பது இதன்கருத்து. கீழ்ப்பாட்டிற் கூறிய சித்தாந்தத்துக்கு இப்பாட்டு ஏது. இவை யிரண்டு பாட்டுக்களாலும், அருளுடையார்க்கு மறுமையில் துன்பமின்மை கூறப்பட்டது; இம்மையில் துன்பமின்மை அடுத்தபாட்டாற் கூறப்படும். 'இது, தீமைவாரா தென்றது' என்பர் மணக்குடியர். (ச)



உசரு.

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

(இ - ள்.) அருள் ஆள்வார்க்கு - அருளுடையார்க்கு, அல்லல் இல்லை - (இம்மையினும்) ஒருதுன்பம் உண்டாகாது; (அதற்கு), வளி வழங்கும் மல்லல் மா ஞாலம் - காற்று இயங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞால

த்து வாழ்வார், கரி - சான்று; (எ - று.)

சான்றுவார் - தாம் கண்டு தேறிய பொருளைக் காணுதார்க்குத் தேற்றுத ற்கு உரியவர். அருளாள்வார்க்கு அல்லல்உண்டாக ஒருகாலத்தும் ஓரிடத் தும் ஒருவரும் கண்டறிவார் இன்மையின், இன்மைமுகத்தான் ஞாலத்தார் யாவருஞ் சான்று என்பார், 'வளிவழங்கு மல்லன் மா ஞாலங் கரி' என்றார்: எனவே, 'இம்மைக்கண் என்பது' பெற்றும். ஞாலம் - ஆகுபெயர்.

இவை மூன்றுபாட்டானும், அத்துணையுடையார்க்கு இருமையினுந் துன்பமில்லாமை கூறப்பட்டது.

(கு - ரை.) அதற்கு-இம்மையினும் ஒருதுன்பம் உண்டாகாதென்பதற்கு. ஞாலம் - நிலவுலகம். இயங்குகின்ற - சஞ்சரித்தற்கிடமான. சான்று - சாட்சி யாவர். தேறிய - ஐயந்திரிபில்லாமல் அறிந்த. தேற்றுதல் - அங்ஙனம் அறி வித்தல். இன்மைமுகத்தான் - இல்லாமைவாயிலாக: அருளுடையார் (துன்ப மடைந்ததாக எப்போதும் எங்கும்காணப்படாமையையே) காரணமாகக் கொ ண்டு, ஞாலம் கரியென்று ரென்க. ஞாலம் - பூமியில் வாழ்வார்க்கு இடவாகு பெயர். ஞாலம் கரியாவது, இம்மைக்கண்ணேயா மென்க. அத்துணையுடையார் க்கு - அருளாகிய துணையை யுடையவர்களுக்கு. வளிவழங்கும் ஞாலம் - பெயரெச்சம் இடப்பெயர்கொண்டது. வழங்கும் மல்லல் மா என்னும் மூன் றும் ஞாலத்துக்கு அடைமொழி. அத்துணை - அருளாகிய அந்தத் துணை. 'அரு ளுடையார்க்கு அல்லலின்மை உலகத்தார்மாட்டே காணப்படுமென்றது' என் பர், மணக்குடியர். (௫)

உ௪௬. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

(இ - ள்.) அருள் நீங்கி - (உயிர்கள்மாட்டுச் செய்யப்படும்) அருளைத் தவிர்ந்து, அல்லவை செய்து ஒழுகுவார் - (தவிரப்படுங்) கொடுமைகளைச்

செய்து ஒழுகுவாரை, பொருள் நீங்கி பொச்சாந்தார் என்பர் - (மூன்னும்)

உறுதிப்பொருளைச் செய்யாது (தாம் துன்புறுகின்றமையை)

மறந்தவர் என்று
சொல்லுவர், (நல்லோர்); (எ - று.)

உறுதிப்பொருள் - அறம். துன்புறுதல் - பிறவித்துன்பம் மூன்றனையுட அனுபவித்தல். மறந்திலராயின் அவ்வாறு ஒழுகாரென்பது கருத்து.

(கு - ரை.) உயிர்கள்மாட்டு - பிராணிகளிடத்து முன்னும் - முற்பிறப் பிலும். உறுதிப்பொருள் - புருஷார்த்தம்; இங்கே, அவைநான்கனுள் முதலா வதான தருமம். துன்புறுகின்றமையை - வருத்தமடைகின்றதை. பிறவித்துன் பம் மூன்று முன்னர்க்கூறப்பட்டன. மறந்திலராயின் - உறுதிப்பொருளைச்

உரு - ஆம்

அதிகாரம்—அருளுடைமை கஞகூ

செய்யாது தாம் துன்புறுகின்றமையை மறவாதவரா யிருந்தால். அவ்வாறு ஒழுகார் - அருளைத்தவிர்ந்து தவிரப்படுங் கொடுமைகளைச்செய்யார். பொச் சாந்தார், பொச்சா - பகுதி. 'முன்னே அருள்' என்றதனால், பின்னே 'அல்லவை' என்றது-கொடுந்தொழில்களாயிற்று. தாம் அனுபவிக்கும் பிறவி த்துன்பத்தை அறியாதவர்களே பிறவு யிர்களிடத்து அருளின்றியொழுகு வார்: அறிந்தவர்களோ அத்துன்பம் ஒழியும்பொருட்டு

அருளுடையராவ ரென்றதாம். 'என்பர்' என்னும்வினைமுற்றுக்கு, 'நல்லோர்' என்பது தோன்றாஎழுவாய்; 'ஒழுகுவார்' என்பது, செயப்படுபொருள்: இதில் உயர்திணையில் இரண்டாம்வேற்றுமையுருபு இறுதியில் தொக்கது. இனி, 'என்பர்' என்பதைச் செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினையாகக் கொண்டு, அருளினின்று நீங்கி அறமல்லவற்றைச் செய்தொழுகுபவர் முற்பிறப்பிலும் உறுதிப்பொருளினின்று நீங்கி மறந்தவரெனப்படுவர் என்றும் உரைக்கலாம். 'முற்பிறப்பின்கண் அருளினின்று நீங்கி அல்லாதவற்றைச் செய்தொழுகின் அவர்கள் இப்பிறப்பின்கண் பொருளினின்று நீங்கி மறவியுமுடையவ ரென்று சொல்லுக என்றவாறு. இது, பொருளில்லையா மென்றது' என்பது, மணக்குடியருரை.

(௬)

உ௪எ. அருளிலார்க் கவ்வுலக மில்லைப் பொருளிலார்க்

கிவ்வுலக * மில்லாகி யாங்கு.

(இ - ள்.) அருள் இலார்க்கு - (உயிர்கள்மேல்) அருளில்லாதார்க்கு, அ உலகம் - வீட்டுலகத்து இன்பம், இல்லை—; பொருள் இலார்க்கு - பொருளில்லாதார்க்கு, இ உலகம் - இவ்வுலகத்து இன்பம், இல் ஆகி ஆங்கு - இல்லையாயினாற்போல; (எ - று.)

'அவ்வுலகம்,' 'இவ்வுலகம்' என்பன - ஆகுபெயர்.

இவ்வுலகத்து இன்
பங்கட்குப் பொருள் காரணமானாற்போல, அவ்வுலகத்து இன்பங்கட்கு அருள் காரண மென்பதாயிற்று.

(கு - ரை.) பொருள் - செல்வம். அவ்வுலகம் இவ்வுலகம் என்பவை - அந்தந்த வுலகத்து அனுபவிக்கப்படும் இன்பங்களைக் குறித்தலால், இடவாகு பெயர்; அ, இ என்னும் சுட்டிடைச்சொற்கள் முறையே தூரத்திலும் சமீபத் திலு முள்ள பொருள்களைக் குறிப்பனவாதலால், முத்தியையும் பூமியையும் உணர்த்தின. "பொருளுடையான் கண்ணதே போகம் அறனும், அருளு டையான் கண்ணதே யாகும்" என்றதனோடு இக்குறளினை ஒப்பிடுக. 'ஆனல்' என்னும் எதிர்காலவினையெச்சம், 'ஆகி' என இறந்தகாலவினையெச்ச மாகத் திரிந்தது: எச்சத்திரிபு. ஆங்கு - உவமவுருபு. 'இல்லாகியாங்கு, என் பதுவே சரியான பாடமாதலை, இலக்கணக்கொத்தில் "பகுபதத்திலக்கணம்" என்னுஞ்சூத்திரத்தில் ' ஆகியாங்கு' என இதனை யேஉதாரணமெடுத்துக்காட்

*'இல்லாதியாங்கு' என்று சிலர் கூறும் பாடத்துக்கு - இல்லையாயினாற் போல என்று பொருள்படாமையும், நிலைமொழிவருமொழிகள் ஏற்படாமை யும் முதலிய குற்றங்களை உய்த்து உணர்ந்து அதனை விலக்குக.

22

டியிருத்தலாலறியலாம். இத்திருக்குறளினைப்
பொருட்படலத்தில் முதுமை
யென்னுங் காஞ்சித்திணைப்பொருள் துறைக்கும்,
அலங்காரப்படலத்தில் தர்க்
கத்திவெடுத்துக்காட்டுப்போலிக்கும் உதாரணங் காட்டினர்
வீரசோழியவுரை
காரர். உவமையணி. 'அருளில்லாதார் சுவர்க்கம்புகார்
மணக்குடியர்.
என்றது' என்பர்
(எ)

உஅஅ. பொருளற்றார் பூப்ப ரொருகா
லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

(இ - ள்.) பொருள் அற்றார் - (ஊழான்)
வறியராயினோர், ஒரு கால் பூப்
பர் - (அது நீங்கிப் பின்
ஒருகாலத்து(ச் செல்வத்தாற்)பொலிவர்; (அவ்வாற
ன்றி), அருள் அற்றார் அற்றார் - அருளிலாதார் (பாவம்
அறுமையின்) அழிந்
தாரே; மற்று ஆதல் அரிது - பின் ஒருகாலத்தும் ஆதல்
இல்லை; (எ - று.)

மற்று - வினைமாற்றின்கண் வந்தது. மேல்
பொருளின்மையோடு ஒரு
வாற்றான் ஒப்புமைகூறினாராகலின்,

அதுமறுத்து, பிறவாற்றான் அதனினும் கொடிதென்பது கூறியவாறு.

(கு - ரை.) ஊழான்-விதியால். ஊழாவது-நல்வினையின் பயனாகிய இன்பமும், தீவினையின்பயனாகிய துன்பமும் அவ்வினைகளைச் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதி. அது - வறுமை. பொலிவர் - விளங்குவர். அவ்வாறன்றி - வறியராயினர் வறுமைநீங்கி ஒருகாலத்திற் செல்வத்தாற் பொலிவதுபோலல்லாமல். அருமையின் - நீங்காமையால்.

ஆதல் இல்லை - விருத்தியடைத லில்லை. 'மற்று' என்னும் இடைச்சொல், 'அற்றார்' என்னும் வினையை மாற்றி 'அழியாமல்' என்னும் பொருளைத் தந் ததனால், வினைமாற்றாயிற்று. மேல் - முந்தின குறளில். 'அற்றார்' என்னுஞ் சொல்மூன்றனுள், முன்னது இரண்டும்-வினையாலணையும்பெயர்; பின்னது-வினைமுற்று. வினைமுற்றாகிய 'அற்றார்' என்பது - தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி: [நன். பொது. ௩௩.] முன்செய்த தீவினையால் தரித்திரரானவர்கள் அந்தத்தரித்திரம்போய்ப் பிறகு ஒருகாலத்திலே ஐசுவரியவான்களாகக்கூடும்; அருளில்லாதவர்களோ, பாவம் தொலையாமல் அழிந்து நரகத்திலே போகிறதல்லாமல் பின்னையொருகாலத் தும்

பாவம்போய்ப் புண்ணியவான்களாகிற தில்லை யென்றவாறு. ஒருகால் மீண்டும் ஆக்கம்பெறும் பொருளின்மையினும், எக்காலமும் ஆக்கம்பெறாத அருளின்மை மிகக்கொடிய தென்க: வேற்றுமையணி. பொருளில்லாதார் ஒருகாலத்தே பொருளுடையவராகவுங் கூடும்; அருளில்லாதார் கெட்டால் பின்பு ஆக்கமுண்டாகாது என்றவாறு. 'இது' பொருளின்மையே யன்றி எல்லாக்கேடும் உண்டாம் என்றது' என்பது மணக்குடியருரை. (அ)

உசகூ. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

(இ - ள்.) அருளாதான் செய்யும் அறம் - (உயிர்கள்மாட்டு) அருள்செய்யாதவன் செய்யும் அறத்தை, தேரின் - ஆராயின், தெருளாதான் மெய்



பொருள் கண்டு அற்று - ஞானமில்லாதவன் (ஒருகால்) மெய்ப்பொருளை உணர்ந்தாற்போலும்; (எ - று.)

மெய்ப்பொருள் - மெய்ந்நூலிற்சொல்லும் பொருள். நிலைபெற்றஞானமில்லாதவன் இடையே மெய்ப்பொருளை யுணர்ந்தால் அதனைத் தன்ஞானமின்மையால் தானே அழித்துவிடும்; அதுபோல, அருளாதான் இடையே

அறஞ்செய்தால் அதனைத் தன் அருளாமையால் தானே அழித்துவிடுமென்ப தாயிற்று: ஆகவே, பிற அறங்கட்கெல்லாம் அருளுடைமை மூலமென்பது பெற்றும்.

இவை நான்குபாட்டானும், அத்துணையில்லாதார்க்கு வருங் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) மெய்ப்பொருள் - தத்துவசாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட உண்மையான விஷயம். நிலைபெற்ற - திடமான. இடையே - நடுவிலே. அருளாதான் - அருளிலாதான். அத்துணை - அருளாகியதுணை. நூற்பொருளை அறிதற்கு அறிவுபோல, அறஞ்செய்தற்கு அருள் இன்றியமையாக் காரண மென்பது கருத்து. உவமையணி. 'அறஞ்செய்யவும் மாட்டார் என்றது' என்பர், மணக்குடியர்.

(கூ)

உ௫௦. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்

மெலியார்மேற் செல்லு மிடத்து.

(இ - ள்.) வலியார்முன் தன்னை நினைக்க - (தன்னின்) வலியார் (தன்னை நலியவரும்பொழுது) அவர்முன் தான் அஞ்சிநிற்கும் நிலையினை நினைக்க:

தன்னின் மெலியார்மேல் தான் செல்லும் இடத்து - (அருளில்லாதவன்) தன்னின் எளியார்மேல் தான் (நலியச்) செல்லும்பொழுது; (எ - று.)

'மெலியார்' எனச் சிறப்புடைய * உயர்திணைமேற் கூறினா ராயினும், ஏனை அஃறிணையுங் கொள்ளப்படும். அதனை நினைக்கவே, இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சமாமென்று அறிந்து அதன்மேல் அருளுடையனாமென்பதுகருத்து.

இதனான், அருள்பிறத்தற்கு உபாயம் கூறப்பட்டது.

(கு - ரை.) தன்னின் வலியார் - தன்னைக்காட்டிலும் பலசாலிகள். நலிய - வருத்துதற்கு. "ஒருமொழி யொழி தன் னினங் கொளற்கு உரித்தே" என்ற சூத்திரத்திற் கூறிய உபலக்ஷணவிதியால், 'மெலியார்மேல்'என்பதற்கு, " மெலியவற்றின்மேல் என்றுங் கருத்துக்கொண்டார்; இதனால், மேல் 'புலான் மறுத்தல்' என்னும் அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்கிறார். எவ்வுயிர்க்குந் தீங்குசெய்யாமையே அருள் என்றபடி. அதனை-வலியார்முன் தான் அஞ்சிநிற்கும் நிலையை. அதன்மேல் - அந்தப்பிராணியினிடத்து. இவ்வுயிர்க்கும் - நாம் வருத்தப்புகும் இந்தப்பிராணிக்கும். முன் - இடமுன். (கo)

* பி-ம்: உயர்திணையே.



உசா - ஆம்

அதிகாரம்.—புலான்மறுத்தல்.

அஃதாவது - ஊனுண்டலை ஒழிதல். *
கொலைப்பாவத்தைப் பின்னும் உளதாக்கலின் அதற்குக் காரணமாதலையும், முன்னும் அதனான் வருதலின் அதன்காரியமாதலையும் ஒருங்கு உடைத்தாய ஊனுண்டல் அருளுடையார்க்கு இயைவதன்றாதலின், அதனை விலக்குதற்கு, இஃது, அருளுடைமையின்பின் வைக்கப்பட்டது.
*

(கு - ரை.) ஊனுண்டல்-மாமிசபோசனம். ஒழிதல்-நீக்குதல்; செய்யா திருத்தல்: விலக்குதல். கொலைப்பாவம் - பிராணிகளைக்கொல்லுதலால் வருந் தீவினை. அதற்கு - கொலைப்பாவத்துக்கு. அதனான் - கொலைப்பாவத்தால். அதன் - கொலைப்பாவத்தின். ஒருங்கு உடைத்துஆய - ஒருசேரஉடைய தான. இயைவது அன்று - பொருந்துவதன்று. ஒருவன் இறைச்சியை யுண்ணுவானாயின் அது, மீண்டும் பலபிராணிகளை வதைத்தற்குக் காரணமும், முன்னே சில பிராணிகளை வதைத்ததனாலாகிய காரியமும் ஆமெனக் காண்க. இவ்வதிகாரத்தை அருளுடைமையின்பின் வைத்ததற்குக் காரணம் - அருளுடையவர் பிராணிகளைக்கொன்று ஊன் தின்னார்; அருளில்லாதவரோ கொன்றுதின்பர்: ஆதலால், அருளுடைமையின் பயன் புலான்மறுத்தல் என்பதுபற்றியாகும். புலால் - ஊன். மறுத்தல் - உண்ணாதுதவிர்தல்.

உறுக. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ

ஹுண்பா

னெங்ஙன மாளு மருள்.

(இ - ள்.) தன் ஊன் பெருக்கற்கு - தன் உடம்பை வீக்குதற்பொருட்டு, தான் பிறிது ஊன் உண்பான் - தான் பிறிதோருயிரின் (உடம்பைத்) தின்பவன்,—எங்ஙனம் - எவ்வகையான், ஆளும் - நடத்தும், அருள் - அருளினை?

பயனில்லாத ஊன்பெருக்கலைப் பயனெனக் கருதி இக்கொடுமைசெய் வானே அறிவில்லாதகொடியோன் என்றவாறாயிற்று. 'எங்ஙன மாளு மருள்' என்பது, ஆளானென்பது பயப்ப நின்ற இகழ்ச்சிக்குறிப்பு.

(கு - ரை.) வீக்குதல் - பருக்கச்செய்தல். ஊன் - உடம்பு. எங்ஙனம் என்னும் வினா, இங்கு எதிர்மறை குறித்துநின்றது. ஊன், ன் - சாரியை; "ஊவெ ஒருபெயர் ஆவொடு சிவணும்" என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. பெருக்கற்கு - 'கு' விகுதிகாலங்காட்டும் எதிர்காலவினையெச்சம்; பெருக்கல் என்னுந் தொழிற்பெயரின்மேல் வந்த நான்காம்வேற்றுமையெனினும் தவறாகாது. "ஆத்மவத் ஸர்வபூ தாநி" என்றபடி தன்னுயிரைப்போலவே எல்லாவுயிர்களையும் கருதவேண்டுவது கடமையாயிருக்க அது செய்யாமல், தன்னுயிரையே தான் விரும்பி அதனைப்போஷித்தற்காகப் பிறவுயிரை வதைப்பவன் ஒருகாலும் அருளுடையவனென்று சொல்லத்தக்கவனல்ல

னென்பது கருத்து. 'ஊனுண்ண அருள்கெடுமோ? என்றார்க்குக் கூறப்பட்

---

* பி - ம்: அருளுடைமைக்கு மாறுங் கொலைபிறத்தலுந் தூய்தன்மையும் நோக்கிப் புலாலுணவு மறுத்தல் கூறினார்; விளங்கும்.

அதிகாரமுறைமையும் இதனானே

## உசு - ஆம் அதிகாரம்—புலான்மறுத்தல்



டது' என்பர், மணக்குடியர். ''ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே'' என்றது, இனியவைநாற்பது. (க)

உருஉ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(இ - ள்.) பொருள் ஆட்சி - பொருளாற் பயன்கோடல், போற்றாதார்க்கு - (அதனைப்) பாதுகாவாதார்க்கு, இல்லை—; ஆங்கு - அதுபோல, அருள் ஆட்சி - அருளாற் பயன்கோடல், ஊன் தின்பவர்க்கு - ஊன் தின்பவர்க்கு, இல்லை—; (எ - று.)

பொருட்பயன் இழத்தற்குக் காரணம் காவாமைபோல, அருட்பயன் இழத்தற்கு ஊன்தினல் காரண மென்பதாயிற்று.

* ஊன்தின்றாராயினும் உயிர்கட்கு ஒருதீங்கும்வினையாதார்க்கு அருளாடற்கு இழுக்கில்லை யென்பாரை மறுத்து, அஃது உண்டென்பது இவையிரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) கோடல் - கொள்ளுதல். அதனை - பொருளை. பொருட்பயன் - பொருளாலடையும் பயன். அருட்பயன் - அருளாலடையும் பயன். அருளாடற்கு இழுக்குஇல்லை - அருளுடையராதற்குத் தடையில்லை. அஃது-

இழுக்கு; குறைவு. மாமிசபோசனஞ்செய்பவர் பிறவுயிர்களிடத்து அருளு டையவராக வெளிக்குக் காட்டினாலும் உண்மையாக உள்நோக்குமிடத்து அவர்கட்கு அருளென்பது சிறிதுமில்லை யென்பது கருத்து. உவமையணி. ஆங்கு - உவமவுருபு. 'ஊனுண்ண அருட்கேடு வருமென்றார்' என்பர், மணக்குடியர். பிராணிகளைக் கொல்லாமல் மாமிசம் கிடையாது: பிராணிகளைக் கொல்லுகிறவர்கட்குத் தயையில்லை: தயையில்லாதவன் என்ன தருமஞ்செய்தாலும் தவஞ்செய்தாலும் ஒருபயனுமில்லாமல் சாம்பலிலேவார்த்த நெய்போலவா மென்க.

உருஉ. படைகொண்டார் நெஞ்சம்போ
னன்றூக்கா தொன்ற
றுடல்சுவை யுண்டார் மனம். (உ)

(இ - ள்.)
(த் தம் கையிற்)
படை கொண்டார் நெஞ்சம் போல் - கொலைக்கருவியை கொண்டவர்மனம் (அதனாற்செய்யுங் கொலையையே நோக்கு வதல்லது அருளை நோக்காதவாறு) போல, ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம் - பிறிதோருயிரின் உடலைச் சுவைபட உண்டவர் மனம், நன்று ஊக் காது - (அவ்வூனையே நோக்குவதல்லது) அருளை நோக்காது; (எ - று.)

சுவைபட உண்டல் - காயங்களான் இனியசுவைத்தாக்கி உண்டல்.

இதனான், ஊன் தின்றார்மனம்
த்து மேலது வலியுறுத்தப்பட்டது.
தீக்குறினைத்தல் உவமவளவையாற் சாதி

(கு - ரை.) கொலைக்கருவி - ஆயுதம். சுவைபட -

இனியருசிஉண்டாக.
காயங்கள் - இன்சுவையை உண்டாக்கித்தரும்பொருட்டுச் சேர்க்கப்படுகிற பலபொருள்கள்; காரசாரங்கள். உவம வளவை - உபமானப் பிரமாணம்;

மேலது - முன்னே சொன்ன அருளில்லாமை. படை-படுத்தற்குக்கருவி
* பி-ம்: இவை யிரண்டுபாட்டானும், அருளுக்குமாறுதல் கூறப்பட்டது.



யானது; படுத்தல் - கொல்லுதல், ஐ - கருவிப்பொருள் விகுதி.
நன்று - நல்ல குணமாகிய அருள்: ஒன்றன்பாற்குறிப்பு
வினையாலணையும்பெயர். ஊக்குதல் - முக்கியமாகக்கருதுதல்.
ஒன்று - எண்ணலளவாகுபெயர்; ஒருபிராணியைக்
குறித்தலால். மனம் - மநஸ். வடசொற்றிரிபு.
ஊன் தின்பவரதுமனம் அருளை நினைத்தலுஞ் செய்யாதென்பது
கருத்து. உவமையணி. (ந)

உடுச. அருளல்லதி யாதெனிற் கொல்லாமை
பொருளல்ல தவ்வூன் றினல்.

கோறல்

(இ - ள்.) அருள் யாது எனின் கொல்லாமை—; (அருள்) அல்லது (யாது எனின்) கோறல்—; (ஆகலான்), அ ஊன் தினல் - அக்கோறலான் வந்த ஊனைத் தின்கை,

பொருள் அல்லது - பாவம்; (எ - று.)

உபசாரவழக்கால் 'கொல்லாமை, கோறல்' ஆகியகாரியங்களை 'அருள், அல்லது' எனக் காரணங்களாக்கியும், 'ஊன்தின்கை' ஆகிய காரணத்தை 'பாவம்' எனக் காரியமாக்கியுங் கூறினார். அருளல்லது - கொடுமை. சிறப்பு பற்றி அறமும் பொருளெனப்படுதலின், பாவம் 'பொருளல்லது' எனப்பட்டது. 'கோறல்' என முன் நின்றமையின், 'அவ் வூன்' என்றார். இனி, இதனை இவ்வாறன்றி 'அருளல்லது' என்பதனை ஒன்றாக்கி, 'கொல்லாமை கோறல்' என்பதற்கு, 'கொல்லாமையென்னும் விரதத்தை அழித்தல்' என்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) அருளல்லது - கருணைப்பண்பல்லாதது.

கோறல் - கொல்லுதல். யாதெனின் என்னும் வினாவைப் பின்னும் எடுத்துக்கூட்டுக; அன்றி,

அருளும் அல்லதும் யாதெனில், முறையே
கொல்லாமையும் கோறலுமாம்

என இயைக்கவுமாம்: இது, முறைநிரனிறைப்பொருள்கோளாம். 'அருளின் காரியம் - கொல்லாமை; அருளில்லாமையின் காரியம் - கொல்லுதல்: ஆதலால், மாமிசபோசனம் பாவத்துக்குக் காரணம்' என்று சொல்லவேண்டியவர் இங்ஙனஞ் சொன்னது, காரியத்தைக் காரணமாகவுங் காரணத்தைக்

காரியமாகவும் கூறுவதோர் உபசாரவழக்கென்னும் இலக்கணம்பற்றி

யென்க. அறம்பொருளின்பம்வீடென்னும் புருஷார்த்தங்கள் நான்கும் உறு

திப்பொருளெனப்படு மாதலால், இங்கே அறத்தைப் பொருளென்றாரெனக்

கொள்ளினும் அமையும்; கீழ் அதிகாரத்தின் ஆரும்பாட்டிலுங் காண்க.

பொருளல்லது - தருமமல்லாதது; எனவே, தீவினையாயிற்று. அவ்வூன்

என்பது - அந்தக்கோறலான்வந்த ஊன்என்ற பொருளை யுணர்த்திற்று. அல்

லஃது யாது குற்றியலிகரம். கோறல் தொழிற்பெயர். 'அருளல்லது யாதெனில்

கொல்லாமையைச் சிதைத்தல்: பொருளல்லது யாதெனில் அவ்வூனைத் தின்

றல் என்றவாறு: இது, அருள்கெடுத்தலேயன்றி அதனையுண்டதனுற் பெறுவ

தொரு பயனுமில்லை என்றவாறு' என்பது, மணக்குடியருரை. (௪)

உருரு. உண்ணுமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணுத்தல் செய்யா தளறு.

(இ - ள்.) உயிர் நிலை - ஒருசாருயிர்.

(உடம்பின்கண்ணே) நிற்றல்,
(ஊன்) உண்ணாமை உள்ளது - ஊனுண்ணாமையென்கின்ற அறத்தின்கண்



ணது; ஊன் உண்ண - (அந்நிலைகுலைய ஒருவன்) அதனை உண்ணுமாயின், அளறு அண்ணாத்தல் செய்யாது - (அவனை விழுங்கிய) நிரயம் (பின்உமிழ்தற்கு) அங்காவாது; (எ - று.)

உண்ணப்படும்விலங்குகள் அதனால் தேய்ந்து சிலவாக, ஏனைய பலவாய் வருதலின், 'உண்ணாமையுள்ள துயிர்நிலை' என்றார். 'உண்ணின்' என்பது, 'உண்ண' எனத் திரிந்துநின்றது. ஊனுண்டவன் அப்பாவத்தான் நெடுங்காலம் நிரயத்துள் அழுந்து மென்பதாம்.

'கொலைப்பாவம் கொன்றார்மேல் நிற்றலின், பின் ஊனுண்பார்க்குப் பாவமில்லை' என்பாரை மறுத்து, அஃதுஉண்டென்பது இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) ஒருசார்உயிர் - மிருகங்கள், பட்சிகள், நீர்வாழ்வன என்ற இவற்றுட் சிலவகைகள். அந்நிலைகுலைய - அங்ஙனம் உயிர் உடம்பில்நிற்றல் அழியும்படி. அதனை - அவ்வுடம்பை. விழுங்கிய-மறுமையிலுட்கொண்ட. நிரயம் - நரகம். பின்உமிழ்தற்கு அங்காவாது - பின்பு அவனை வெளிவிடுதற்கு வாய் திறவாது. ஊன்தின்பவன், ஆழ்வயிற்றடக்கி

மீட்டுமிழ்கலா வெரிவாய் வெம்மைகூர்நரக மடைவனென்பது கருத்து. தேவர், மக்கள், விலங்கு, நரகர் என்னும் நால்வகைக்கதிகளுள் விலங்கிலே பறவைகளும் நீர்வாழ்வனவும் அடங்குதலால், 'உண்ணப்படும் விலங்குகள்' என்றார். ஏனைய பலவாய் வருதல் - மற்றையனவாகிய மனிதருடம்புகள் அதிகமாய்வளர்ந்து மிகுதல்.

உண்ணுமையுள்ளதுயிர்நிலை யென்பதற்குக் கருத்து, மாமிசபோசனஞ்செய்தல் கொலைத்தொழிலின்றி முடியா தென்பது; உயிர் நற்கதியடையும் நிலைமை ஊனுண்ணுமையினுள்ளது என்றும் உரைக்கலாம். உண்ண - எச்சத் திரிபு; [நன். வினை. உஎ.] தாவேகொன் றுதின்னுமற்போனாலும் பிறன் கொன்று தந்ததை யுண்பதும் பாவமே; அவன்கொல்லுதற்கு இவன்போலியர் தின்பரென்னும் உறுதியானஎண்ணமே காரணமாதலின், என்பது இதன் பயன். இது பற்றியே "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம், விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ், சொலற்பால வல்லாத சொல் லுதலுங் குற்றங், கொலைப்பாலுங் குற்றமே யாம்" என்றார், நான்மணிக்கடிகையிலும். அஃது - கொலைப்பாவம். நிலை - தொழிற்பெயர்; நில் - பகுதி. ஐ - விகுதி. இப் பாட்டில் இடையிலேநின்ற 'ஊன்' என்ற சொல் 'ஊனுண்ணுமை, என முன்னும் 'ஊனுண்ண' எனப் பின்னுஞ் சென்றுகூடுதலால், தாப்பிசைப்பொருள்கோள்; இதனை மத்திமதீபமென்றுங் கூறுவர். அண்ணுத்தல், அண்ணு - பகுதி; இது, ஒருசொல்: இறுமா, சோகா என்பன போல. அளறு - நரகக்குழி.

(ரு)

உருகூ. தினற்பொருட்டாற் கொல்லா
துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

(இ - ள்.) தினல் பொருட்டால் -
(பேதைமைகாரணமாக வல்லது) ஊன் தின்கைகாரணமாக,
உலகு - உலகம், கொல்லாது எனின் - கொல்லா களகூ

தாயின், விலை பொருட்டால் ஊன் தருவார் - பொருள்
காரணமாக ஊன்
விற்பார், யார்உம் - யாவரும், இல் - இல்லை; (எ - று.)
'உலகு' என்பது - ஈண்டு, உயிர்ப்பன்மைமேல்
நின்றது.
'பின்நிகழுந் தின்கை முன்நிகழுங் கொலைக்குக்
காரண மாகாமையின், தின்பார்க்குக் காரணத்தான் வரும்
பாவம் இல்லை' என்ற வாதியை நோக்கி,
அருந்தாபத்தியளவையாற் காரணமாதல் சாதித்தலின்,
இதனுன் மேலது
வலியுறுத்தப்பட்டது.
(கு - ரை.) பேதைமை காரணமாகவல்லது
ஊன் தின்கை காரணமாக
உலகம் கொல்லாதாயின் - அறியாமைபற்றிக்
கொன்றற்கொன்ற தல்லது மாமிசபோசனத்திற்காக
உலகத்திலுள்ளோர் பலஉயிர்களைக் கொலைசெய்யா

ராயின். விலைப்பொருட்டு - கிரயமாகக்கொடுக்குந் திரவியத்திற்காக. உயிர்ப்
பன்மைமேல் - பல உயிர்களென்னும்பொருளில். 'காரணம் காரியம் என்
னும் இரண்டனுள் காரணம் முற்பட்டிருப்பதுங் காரியம் பிற்பட்டிருப்பதும்
யாவரும் ஒப்புக்கொள்ளு மிலக்கணமா மாதலால், ஒருவன் முன்னே செய்
கிற கொலைத்தொழிலுக்கு மற்றொருவன் பின்னே ஊன்தின்பது காரணமா
காது; ஆதலால், கொலைப்பாவம் கொன்றவனைச் சேருமே யல்லது பின்பு அதனிறைச்சியைத் தின்றவனைச் சேராது: ஆதலின், தானே கொன்றுதின்
னக்கூடாதேயல்லது பிறன் கொன்று விற்றதை விலைகொடுத்துவாங்கித் தின் னத் தடையில்லை' என்று வாதஞ்செய்பவனை நோக்கி, 'இவன்வாங்குவான்
என்னும் நம்பிக்கை கயே கொலைஞன் கொல்வதற்குக் காரணமாதலால்,கொலைப் பாவம் ஊன்தின்பவனையுஞ் சேரும்' என்று நியாயங்காட்டித் தம்கருத்தை நிலைநிறுத்தினர். இவன் தின்னுதற்கு வாங்குவா னல்ல னாயின் அவன் கொன்றுவிற்றல்செய்யான் என்றது , அருத்தாபத்திப் பிரமாணம். 'ஆல்' இரண்டும் - அசைகள். யாரும், உம் - முற்றப்பொருளது. மேலது - முன்னிரண்டு பாட்டுக்களிற் சொன்னது; பாவமுண்டென்பது. ஊனை வாங்குவா ரில்லையாயின் விற்பாரில்லை யென்று கருத்து .
'கொன்றுதின்னுது விலைக்குக் கொள்வார்க்குக்

குற்றமென்னை? என்றார்க்கு, 'அதனாலும் கொலைப்பாவம் வரும்' என்று கூறப்பட்டது' என்பர், மணக்குடியர். (கூ)

உருஎ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) புலால் - புலாலாவது, பிறிது ஒன்றன் புண் - பிறிதோருடம்பின் புண்; அது உணர்வார் பெறின் - அது (தூய்து அன்மை) அறிவாரைப் பெறின், உண்ணாமை வேண்டும்-(அதனை) உண்ணொழியல்வேண்டும்.

'அஃது' என்னல்வேண்டும் ஆய்தம், விகாரத்தால் தொக்கது. அம் மெய்ம்மை உணராமையின் அதனை உண்கின்றாரென்பதாம்.

பொருந்துமாற்றானும் புலாலுண்டல் இழிந்ததென்பது, இதனாற் கூறப் பட்டது.

(கு - ரை.) அது தூய்து அன்மை - அவ்விறைச்சி சுத்தமுடையதல்லாமை. அறிவாரைப்பெறின் என்றதனால், அவ்வுண்மையையறிந்தால் உண்

உகூ - ஆம் அதிகாரம்—புலால்மறுத்தல்
கஎஎ

ணாரென்பது கருத்து. அறிதலின் அருமை தோன்ற, 'பெறின்' என்றார். அஃது இஃது உஃது என ஆய்தத்தொடர்க்குற்றியலுகரமாகவருஞ் சுட்டுப் பெயர்

வேறென்றும், அது இது உது என முற்றியலுகரமாகவருஞ் சுட்டுப் பெயர் வேறென்றும், அவற்றுள் அது என்பது அதனை அதனொடு என இவைமுதலாக அன்சாரியை வருமிடத்துமாத்திரமே உக ரங்கெடு மென்றும், சிறப்புவிதியிற்சொல்லாத மற்றை உயிர்முதல்மொழிகள் வந்து புணரும் போது உகரங்கெடாமல் உடம்படுமெய்பெற்றேவரு மென்றும், அஃது என்பது குற்றியலுகரமாதலால் வருமொழிமுதலிலுயிர்வரும்பொழுது ஆய்தங் கெடாது குற்றியலுகரம் வருமொழியுயிரேற இடங்கொடுக்குமென்றும், வரு மொழிமுதலில் மெய்யெழுத்து முதன்மொழி வரும்பொழுது மாத்திரமே ஆய்தங்கெட்டு அது என நிற்கு மென்றும், தொல்காப்பியத்தின் எழுத்ததி காரச் சூத்திரங்களினாலும் அவற்றின்உரை யினாலும் விளங்குதலால், இங்கே 'அதுணர்வார்'என்னுந் தொடரில் அஃதென்பது அதுவெனநின்றது,தொகுத் தல் என்னுஞ் செய்யுள் விகாரம் எனக் கொண்டார்; இங்ஙனன்றி அது என்று முற்றியலுகரமாகக்கொண்டால் 'அதுவுணர்வார்' என வரவேண்டுதலாலும், அஃதென்பது உயிர்முதல்மொழிப்புணர்ச்சியில் ஆய்தங்கெடுதற்கு விதி யின்மையாலும், இது, புணர்ச்சிவிகாரத்தில் அடங்காதாகும்: இனி, "முன் னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி, மன் னல் வேண்டு மல்வழி யான" என் னுஞ் சூத்திரத்து இலேசினால் அஃது என்பது அது என நின்றதென்று கொள்ளு தலும் ஒன்று.

பொருந்துமாற்றானும் - யுக்தியினாலும். அளபெடை, செய்யுளோசைநிறைக்க வந்தது. 'இது, புலால்மறுத்தல்வேண்டுமென்பதூஉம், அது தீயதாமென்பதூஉம் கூறிற்று' என்பர் மணக்குடியர். (எ)

உருஅ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(இ - ள்.) செயிரின் - (மயக்கமாகிய) குற்றத்தின், தலைப்பிரிந்த - நீங்கிய, காட்சியார் - அறிவினையுடையார், — உயிரின் தலைப்பிரிந்த ஊன் - ஓர் உயிரின் நீங்கிவந்த ஊனை, உண்ணார் —; (எ - று.)

தலைப்பிரிவு என்பது - ஒருசொல். பிணம் என ஊனின்மெய்ம்மை தாமே உணர்தலின், 'உண்ணார்' என்றார்.

(கு - ரை.) மயக்கம் - விபரீதஞானம். மெய்ம்மை - உண்மையான தன்மை. ஐயம் திரிபு அறியாமை யென்னும் மூன்றுகுற்றங்களும் நீங்கிய பரிசுத்தமான புத்தியையுடையவர்கள் பிணந்தின்னாரென்பது இதன் கருத்து. 'தலை' என்பது - உபசர்க்கமாய், 'பிரி' என்னும் வினைச்சொல்லோடு வந்தது; கைகூடல், கால்சீத்தல், கண்ணுறுதல், மேற்கொள்ளுதல் என்பனவற்றில் கை, கால், கண், மேல் என்பனபோல. 'மேற்கூறிய குற்றமெல்லாம் பயத்தலின், அதனைத் தெளிவுடையாருண்ணாரென்றது' என்பர் மணக்குடியர்.

உருகூ. அவிசொரிந் தாயிரம் வேட்டலி

றொன்ற

னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

23



(இ - ள்.) அவி சொரிந்து - (தீயின்கண் நெய்ம்முதலிய) அவிகளைச்
சொரிந்து, ஆயிரம் வேட்டலின் - ஆயிரம்வேள்விவேட்டலினும், ஒன்றன்
உயிர் செகுத்து உண்ணாமை - ஒரு விலங்கின் உயிரைப் போக்கி (அதனின்ற
ஊனை) உண்ணாமை, நன்று—; (எ - று.)
அவ்வேள்விகளான்வரும் பயனினும் இவ்விரதத்தான்வரும் பயனே
பெரிது என்பதாம்.

(கு - ரை.) தீயின்கண் - நெருப்பிலே. அவி - மந்திரபூர்வமாகத் தேவர்
க்கு இடும் உணவு; ஹவிஸ்என்னும் வடமொழியின் திரிபு. சொரிந்து -
பெய்து; போகட்டு. வேள்வி - யாகம். ஆயிரம் என்பது, பலவென்னுமாத்
திரையாய் நின்றது; இவ்வெண்ணுப்பெயர், இவ்வெண்ணுடைய யாகங்களைக்
குறித்தலால், எண்ணலளவாகுபெயர். வேட்டலினும் - ஓமஞ்செய்தலினும்.
செகுத்தல் - உடம்பினின்று ஒழித்தல். 'நூறுவருஷகாலம்

வருஷந்தோறும்
அசுவமேதயாகஞ்செய்த பயனும் மாமிசபோசனஞ் செய்யாத பயனும் சமம்'
என்றும், 'காய் கிழங்கு முதலியவற்றை உண்டு விரதங்காக்கிறதனாலும்
அடையப்படமாட்டாது, புலால்மறுத்தலாலுளதாம்பயன்' என்றும் மநுதரும
சாஸ்திரத்திற் கூறியுள்ளவற்றைக் கருதி இங்ஙனங் கூறினார். 'நன்றாகிய
வேட்டலினும் உயிர்செகுத்துண்ணாமை நன்று' என்று கூறியதனால், இவ்
வாசிரியர் வேள்வியை உடன்பட்டவரேயன்றி, விலக்கியவராகார்: வேள்வி
நன்று என்று உடன்படாராயின், ஆயிரம்வேட்டலின் உயிர்செகுத்துண்ணாமை
நன்று என்று கூறுரெனக. நல்லதொன்றைக் கூறி அதைக்காட்டிலும் இது
நன்று என்று கூறுதல் முறையேயன்றி, தீயதொன்றைக் கூறி அதைக்
காட்டிலும் இது நன்று என்று கூறுதல் வழக்கமில்லை யென்பதறிக. (கூ)

உகூ0. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

(இ - ள்.) கொல்லான் - (ஒருயிரையும்) கொல்லாதவனுமாய், புலாலை

மறுத்தானை - புலாலையும் உண்ணாதவனை, எல்லா உயிரும்—, கைகூப்பி -
கைகுவித்து, தொழும்—; (எ - று.)

இவ்விரண்டு அறமும் ஒருங்கு உடையார்க்கு அல்லது ஒன்றே உடையார்க்கு அதனாற் பயனில்லையாகலின், கொல்லாமையும் உடன்கூறினார். இப் பேரருளுடையான் மறுமைக்கண் தேவரின்மிக்கானாமெனஅப்பயனது பெருமை கூறியவாறு.

இவைமூன்றுபாட்டானும், ஊனுண்ணாமையது உயர்ச்சி கூறப்பட்டது.

(கு - ரை.) தொழும் - வணங்கும்.
இவ்விரண்டறம்-கொல்லாமையும், புலான்மறுத்தலும். தானே கொன்று தானே தின்னுதல், பிறர்கொன்றதைத் தான்தின்னுதல், தான்தின்னாமல் பிறர்க்குத் தின்னக்கொன்று கொடுத்தல் என்னும் இம்மூன்றும் குற்றமாமென்பதை இதனாலறிக. தேவரின்
மிக்கான் - தேவர்களினுஞ் சிறந்தவன். பிறவுயிர்களுக்குத் தீங்குசெய்யாத
வனை அந்நன்றியைக்கருதி அவ்வுயிர்கள் தொழவேண்டுவது முறைமையேயாம். கூப்பு - கூம்பு என்பதன் பிறவினை; குவியச்செய் என்று பொருள்.

உஎ - ஆம் அதிகாரம்—தவம் கஎகூ
கீழ்ப்பாட்டில் புலான்மறுத்தல் என்னும் விரதத்துக்குத் தேவர்களைநோக்கிச் செய்யுங் கருமத்தினுஞ் சிறப்புக்கூறி, இப்பாட்டில் அவ்விரதமுடையானுக்கு அக்கருமத்தைப்பெறுந் தேவர்களினுஞ் சிறப்புக் கூறுகின்றாரென்க. எல்லா வுயிரில்

தேவரும் சேர்வ ராதலால், தேவரும் புலாலுண்ணானைத் தொழுவ ரென்பது, கூறியவாறாயிற்று.
(௩௦)

## ௨௭ - ஆம் அதிகாரம்—தவம்.

அஃதாவது - மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலைநிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம் உயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறஉயிர்களை ஓம்புதல். புலால்மறுத்து உயிர்கள்மேல் அருள்முதிர்ந்துழிச் செய்யப்படுவ தாகலின், இது, புலான்மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) தவம் - தபஸ்: வடமொழி. பொறிவழி - மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பஞ்சஇந்திரியங்களின் வழியாக ஸ்பர்சம் ரஸம் ரூபம் கந்தம் சப்தம் என்னும் பஞ்சவிஷயங்களிலே. உண்டி-உணவு. கோடைக்கண் - கிரீஷ்மகாலத்தில்; ஆனிமாதமும் ஆடிமாதமுமாகிய முதுவேனிற்பருவத்தில். கோடை - கடுவெயிற்காலம். வெயில்நிலை - சூரியகிரணம் படுமிடம். மாரி - மழை. நீர்நிலை - ஏரி, ஆறு, குளம், மடு, கிணறு, வாவி முதலியன. முதிர்ந்துழிச்

ஓம்புதல் - பாதுகாத்தல்; துன்பஞ்செய்யாதிருத்தல். அருள் செய்யப்படுவது - கருணைமிகுந்தபொழுது தவம் செய்தற்குஉரியது. உண்டிசுருக்கல் - காய் கனி கிழங்கு

சருகுவருக்கங்களை உண்டும்,
ஒருகா லன்னம்புசித்தும், நீர்பருகியும், காற்றுநுகர்ந்தும்,
லும் எனக் காண்க.

ஒன்றும் உண்ணும

உசுக. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண்
யற்றே தவத்திற் குரு.

செய்யாமை

(இ - ள்.) தவத்திற்கு உரு - தவத்தின் வடிவு,

உற்ற நோய் நோன்
றல் - (உண்டிசுருக்கல் முதலியவற்றால் தம்உயிர்க்கு) வருந் துன்பங்களைப் பொறுத்தலும், உயிர்க்கு உறுகண் செய்யாமை - (தாம் பிற) உயிர்கட்குத் துன்பஞ்செய்யாமையும், (ஆகிய), அற்று - அவ்வளவிற்று; (எ - று.)

மற்றுள்ளனவெல்லாம் இவற்றுள்ளே அடங்குதலின், 'அற்றே' எனத் தேற்றேகாரங் கொடுத்தார். 'தவத்திற்கு உரு அற்று' என்பது, 'யானையது கோடுகூரிது' என்பதனை 'யானைக்குக் கோடு கூரிது' என்றாற்போல ஆறாவ தன்பொருட்கண் நான்காவது வந்த மயக்கம்.

இதனான், தவத்தினது இலக்கணங் கூறப்பட்டது.

(கு - ரை.) உரு—ரூபம்: வடமொழி.

மற்றுள்ளன-தவத்தின் அங்கங்கள். தேற்றேகாரம் - நிச்சயப்பொருளைத்தரும் ஏ என்னும் இடைச்சொல்.

கோடு-தந்தம். ஆறும்வேற்றுமையுருபுக்கு
நான்காம்வேற்றுமையுருபு வந்தது, உருபுமயக்கம்.
ஆறுவதன்பொருள் - கிழமைப்பொருளென்னும் சம்பந்தப்
பொருள். நோன்றல், நோல் அல்லது நோன் - பகுதி.
(க)

உகூஉ. தவமுந் தவமுடையார்க் காகு
மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

(இ - ள்.) தவம்உம் தவம் உடையார்க்கு ஆகும் -
(பயனையன்றித்) தவம்தானும் உண்டாவது
முன்தவமுடையார்க்கே; (ஆகலான்), அதனை
அஃது இலார் மேற்கொள்வது அவம் (ஆகும்) -
அத்தவத்தை அம் முற்றவ
மில்லாதார் முயல்வது பயனில்முயற்சியாம்; (எ - று.)
பரிசயத்தால் அறிவும் ஆற்றலும் உடையராய்
முடிவுபோக்கலின் 'தவ
முடையார்க்கு ஆகும்' என்றும், அஃது இலாதார்க்கு
அவை இன்மையான் முடிவுபோகாமையின் 'அவமாம்' என்றுங்
கூறினர்.

(கு - ரை.) பயனை அன்றி-பலனையல்லாமல்.
முன் தவம் உடையார்க்கேமுற்பிறப்பிற்செய்த தவத்தை
யுடையவர்கட்குமாத்திரமே. முற்பிறப்பில்
தவஞ்செய்யாமல் இப்பிறப்பில் தவத்திற்கு உரிய
முயற்சிசெய்யத் தொடங்
கியவர்கட்குத் தவம் கைகூடாது. உண்டாவது -
இடையூறில்லாமல்

நிறைவேறுவது. மேற்கொள்வது - பூண்டுகொள்வது.
அவம்-வீண். முயல்
வது - யத்தனிப்பது. பரிசயத்தால் - முற்பழக்கத்தினால்.
அறிவு - ஞானம்.
ஆற்றல் - வல்லமை. முடிவு போக்கலின் - (தவத்தை)
நிறைவேறச் செய்தலினால். அஃது இலாதார்க்கு -
அந்தமுன் தவமில்லாதவர்கட்கு. அவை இன்மையான் -
அறிவு ஆற்றல் என்னும் இரண்டும் இல்லாமையால்.
முடிவு போகாமையின் - தவம் நிறைவேறாமையால்.
அஃதிலார் - ஆய்தம் மெய் போல ஒலித்தது.
பயனேயன்றித் தவந்தானும் என நிற்றலால் தவமும் என்ற
உம்மை - இறந்தது தழுவியது; இழிவுசிறப்புமாம்.
நன்மைசெய்தற் குப் பாவம் காரணமாகமாட்டாமையால்,
நன்மையே காரணம் என்பதாம். (உ)

உசஙரு. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி
மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

(இ - ள்.) மற்றையவர்கள் - இல்லறத்தையே
பற்றிநிற்பார்,—துறந் தார்க்கு துப்புரவு வேண்டி -
துறந்தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவலை
விரும்பி, தவம் மறந்தார் கொல் - (தாம்) தவஞ்செய்தலை
மறந்தார் போலும்; (எ - று.)

துப்புரவு - அனுபவிக்கப்படுவன.
வேண்டியவேண்டியாங்கு எய்தற் பயத்த தாகலின்
யாவாராலுஞ் செய்யப்படுவதாய தவத்தை, தாஞ் செய்யும்
தானத்தின்மேல் விருப்பமிகுதியான் மறந்தார்போலும்;
எனவே, தானத்தின் தவம் மிக்க தென்பது பெற்றாம்.

(கு - ரை.) பற்றி - விடாமற்பிடித்து. துறந்தார்க்கு - புறமாகிய செல்வத்தினிடத்து உண்டாகிற எனதென்னும் புறப்பற்றையும் [மமகாரத்தையும்] அகமாகிய உடம்பினிடத்து உண்டாகிற யானென்னும் அகப்பற்றையும்

## உஎ - ஆம் அதிகாரம்—தவம்

கஅக

[அகங்காரத்தையும்] விட்டவர்கட்கு; சன்னியாசிகட்கு. உண்டியும் - உணவும். மருந்தும் - ஔஷதமும். உறையுளும் - இருப்பிடமும். உதவல் - கொடுக்கவேண்டுதல். துப்புரவு-பஞ்சஇந்திரியங்களினுலுங் கொள்ளப்படுபவை. வேண்டியவேண்டியாங்கு எய்தற் பயத்ததாகலின் - விரும்பினவையெல்லாவற்றையும் விரும்பியபடியே பெறுதலாகிய பயனையுடையதாதலால். ''வேண்டியவேண்டியாங்கெய்தலால்'' என்பது - இவ்வதிகாரத்தில் ஐந்தாம்பாட்டு. மறந்தார்கொல், கொல் - தற்குறிப்பேற்றவணியின் உருபு. பலவகைக் கைங்கரியங்களைச் செய்து உபசரிப்பவர் இல்லறத்தாரும், அங்ஙனம் உபசரிக்கப்படுபவர் துறவறத்தாருமாதலால், இல்லறத்தினும் துறவறம் சிறந்தது என்பது இதன்கருத்து. உபகாரஞ்செய்வது இல்லறத்தார்க்குக் கடமையாதல்போலத் துறவறத்தார்க்குத் தவஞ்செய்வது கடமையாமென அறிக.

உகூசு. ஒன்னார்த் தெறலு முவந்தாரை
மெண்ணிற் றவத்தான் வரும்.

யாக்கலு

(இ - ள்.) ஒன்னார் தெறல்உம் - (தம் அறத்திற்குப்) பகையாய் அழிவு செய்தாரைக் கெடுத்தலும், உவந்தாரை ஆக்கல்உம் - (அதனை) உவந்தாரை உயர்த்தலும், (ஆகிய இவ்விரண்டையும்), எண்ணின் - (தவஞ்செய்வார்) நினைப்பாராயின்,—தவத்தான் வரும்-(அவர்)தவவலியான் (அவை அவர்க்கு) உளவாம்; (எ - று.)

முற்றத்துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமையின், தவத்திற்கு ஏற்றி உரைக்கப்பட்டது. 'எண்ணின்' என்றதனான், அவர்க்கு அவை எண்ணுமை இயல்பென்பது பெற்றும். ஒன்னார் பெரியராயினும் உவந்தார் சிறியராயினும் கேடும் ஆக்கமும் நினைத்த துணையானே வந்துநிற்குமெனத் தவஞ்செய்வார்மேலிட்டுத் தவத்தினது ஆற்றல் கூறியவாறு.

(கு - ரை.) தம்அறம் - துறவறத்தின் அங்கங்கள். பகை-விரோதம். அதனைஉவந்தார் - துறவறமாகிய தமதுஒழுக்கத்தைக் கண்டு மகிழ்ந்தவர். உயர்த்தல் - விருத்திசெய்தல். தவவலி - தபோபலம். தெறல் உவந்தாரையாக்கல் ஆகிய அவ்விரண்டும்.

அவை - ஒன்னார்த்.
ஒன்னார் - பகைவர்.
உவந்தார் - நண்பர். உண்மை - இருத்தல்.
ஒன்னார்என்பதற்கு - தமக்குப் பகைவரென்று

பொருள்கூறுமல் தம் அறத்திற்குப்பகைவ ரென்றும், உவந்தார்என்பதற்கு - தமக்குஉகந்தவரென்று பொருள்கூறுமல் தம்அறத்தை உவந்தா ரென்றும் பொருள்கூறியதற்குக் காரணங் கூறியது, 'முற்றத்துறந் தார்க்கு' என்று தொடங்கிய வாக்கியம். அவர்க்கு - துறந்த வர்க்கு. அவை எண்ணுமை - சாபஅநுக்கிரகங்களைக் கருதாமை. ஆற்றல் - பெருமை. எண் ணின் - ஆலோசிக்குமிடத்து, இவ்விரண்டும் தவத்தால் வரும் என்றும் உரைக்கலாம். தன்னினும் மிகமேம்பட்டவர்களைச் சினந்து வேரோடழித் *தலும் தன்னினும் மிகக்கீழ்ப்பட்டவர்களை விரும்பி மிகவிருத்திசெய்த லும் ஆகிய மேன்மை துறவறத்தார்க்கே யன்றி தென்பது கருத்து. இல்லறத்தார்க்குக் கிடையா

(அ)



உசுரு. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(இ - ள்.) வேண்டிய வேண்டியஆங்கு எய்தலால் - (முயன்றால் மறு மைக்கண் தாம்) வேண்டியபயன்கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால்,

செய் தவம் - செய்யப்படுவதாய தவம், ஈண்டு முயலப்படும் - இம்மைக்கண் (அறிவுடையோரான்) முயலப்படும்; (எ - று.)

'ஈண்டு' என்பதனான், 'மறுமைக்கண்' என்பது பெற்றும். மேற்கதி வீடுபேறுகள் தவத்தானன்றி எய்தப்படா என்பதாம்.

இவை நான்கு பாட்டானும், தவத்தினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) முயன்றால் - தவத்தைத்தொடங்கிச்செய்தால். ஈண்டு-இவ்வுலகத்தில். மேற்கதி - சுவர்க்கம்முதலிய உயர்ந்த பதவிகள். வீடுபேறு - முத்தியடைதல். எய்தப்படா - அடையப்படமாட்டா. வேண்டிய - பலவின்பா விறந்தகால வினையாலணையும்பெயர். வேண்டியவாங்கு - வேண்டியாங்கு எனப் பெயரெச்சவீறு தொகுத்தல்விகாரம். செய்தவம் - செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த வினைத்தொகை. இல்லறத்தார்க்கு இம்மைப் பயனாகிய புகழ் எளிதிற் கைகூடுமே யல்லது மறுமைப்பயன்கள் துறவறத்தார்க்குப்போல நினைத்தபடி பெறமுடியா வென்பது இதன்கருத்து. "ஆக்கமுந் திறனுஞ் சீரு மாயவு நலனு மேலா, மூக்கமும் வீடு மெல்லாந் தவத்தினா றற மன்றே, நோக்குறுமிந்நாள் காறு நோற்கலா தினைய வெல்லாம்,

போக்குவ தென்னை
கொல்லோ புகலுதி யிகலும் வேலோய்'' என்னுங்
கந்தபுராணச்செய்யுளை
இங்கே அறிக. இத்திருக்குறள், இறையனு
ரகப்பொருளுரையில் முதற்
சூத்திரவுரையில் எடுத்தாளப்பட்டுள்ளது.

(ரு)

உருரு. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற்
றவஞ்செய்வா ராசையுட் பட்டு.

றல்லா

(இ - ள்.) தம் கருமம் செய்வார் - தம்கருமஞ்
செய்வாராவார், தவம் செய்வார் - (துறந்து) தவத்தைச்
செய்வார்; மற்று அல்லார் - அவரை ஒழி
ந்த பொருளின்பங்களைச் செய்வார், ஆசையுள் பட்டு -
(அவற்றின்கண்)
ஆசையாகிய வலையுட்பட்டு, அவம் செய்வார் - (தமக்குக்)
கேடுசெய்வார்.

அநித்தமாய் மூவகைத்துன்பத்ததாய் உயிரின்வேறாய
உடற்கு வருத்
தம் வரும் என்று ஒழியாது தவத்தினைச் செய்ய,
பிறப்புப்பிணிமூப்பு இறப்
புக்களான் அநாதியாகத் துன்பமெய்திவருகின்ற உயிர்
ஞானம்பிறந்து வீடு

பெறு மாதலின் தவஞ்செய்வாரை 'தங்கருமஞ் செய்வார்'
என்றும், கணத்
துள் அழிவதாய சிற்றின்பத்தின்பொருட்டுப் பலபிறவியுந்
துன்புறத்தக்க
பாவஞ் செய்துகோடலின் அல்லாதாரை 'அவஞ்செய்வார்'
என்றும் கூறினார்.
மற்று - வினைமாற்றின்கண் வந்தது.

(கு - ரை.) கருமம் - தொழில். பொருளின்பங்கள் -
அர்த்தகாமங்கள்.
வலையுட்பட்டு - வலையிலே அகப்பட்டுச் சிக்கிக்கொண்டு.
தமக்குக் கேடுசெய்
வார் - தங்கட்குத் தாங்களே கெடுதி
செய்துகொள்பவர்கள். அநித்தம் -

## உ௭ - ஆம் அதிகாரம்—தவம்

கசுரு

நிலையில்லாதது; நித்யம் என்பதன் எதிர்மறை.
மூவகைத்துன்பத்ததாய் - தன்னைப்பற்றி வருவனவும்,
பிறவுயிர்களைப்பற்றிவருவனவும், தெய்வத்தைப்
பற்றிவருவனவும் என்ற
மூன்றுவகைப்பட்டதுன்பங்களையுடையதாகி. ஒழியாது -
விடாமல். பிணி - நோய். மூப்பு - முதுமை, கிழ
த்தனம். இறப்பு - மரணம். அறுதியாக - முடிவில்லாமல்;
நெடுங்காலமாக. ஞானம் பிறந்து - தத்துவஞானம்
உண்டாகப்பெற்று. கணத்துள் - க்ஷணப்பொழுதிலே.
சிற்றின்பம் - மனைவியர்முதலியோரால்

இம்மைமறுமைகளில் வருகிற அற்பசுகம்; பரமபதத்துப் பெறும் நிரதிசயப்பேரின்ப மல்லாதது. பல பிறவியும் - அனேகம்பிறப்புக்களிலெல்லாம், செய்துகோடலின் - செய்துகொள்ளுதலால். அல்லாதார் - தவஞ்செய்யாதவர். பிறவித்துன்பத்தை யொழித்துப் பேரின்பத்தைத் தருதலால் தவஞ்செய்தலைத் தங்கருமஞ்செய்த லென்றும், மற்றைப் பொருளின்பங்களைக்குறித்த முயற்சிகளெல்லாம் அத் துன்பத்தை மிகுமாறுசெய்து கேடுதருதலால் தவஞ்செய்யாமையை அவஞ் செய்தலென்றுங் கூறினார். கருமம் - கர்மம்; வடசொல். தவஞ்செய்தலென்னும் வினையை மாற்றித் தவஞ்செய்யாதஎன்னும்வினையைத் தந்ததனால், மற்று என்னும் இடைச்சொல் - வினைமாற்றுப்பொருளது. ஆசையுள், உள் ஏழனுருபு. தவஞ்செய்பவர் நித்தியப்பொருளையடைவ ரென்பது கருத்து.

உசஎ. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்

சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(இ - ள்.) சுட (சுட) சுடரும் பொன் போல் (தீயின்கண் ஓடும்) பொன்னுக்கு (அது) சுடச்சுட (த் தன்னோடுகலந்த குற்றம் நீங்கி) ஒளிமிகுமாறு போல,—நோற்கிர்பவர்க்கு - தவஞ்செய்யவல்லார்க்கு, துன்பம் - (அதனான் வருந்) துன்பம், சுட சுட - வருத்த வருத்த, ஒளி விடும் - (தம்மோடுகலந்த பாவம் நீங்கி) ஞானம் மிகும்; (எ -

று.)

'சுடச்சுடரும் பொன்போல்' என்றாராயினும், கருத்துநோக்கி, இவ்வாறு உரைக்கப்பட்டது. ஒளிபோலப் பொருள்களை விளக்கலின், 'ஒளி' * என்றார்.

(கு - ரை.) ஓடும்-உருக்கிப் புடம்வைக்கப்படுகிற. அது சுடச்சுட-நெருப்புத் தபிக்கத் தபிக்க. குற்றம் - மாசு. அதனான்வருந் துன்பம் - உண்டி சுருக்கல் முதலியன. சுடச் சுடரும் பொன்போல் - நெருப்புத் தபிக்க அதனால்விளங்குஞ் சுவர்ணம்போல. ஒளி - ஞானவொளி. விடுதல் - வெளிவீசுதல்; விளங்குதல். ஒளி - பிரகாசம். பொருள்கள் - பதார்த்தங்கள். 'சுடச்சுட' எனப் பின் உபமேயத்திலே அடுக்கிநிற்பதனால், முன் உபமானத்திலும் 'சுட' என ஒன்று வருவித்து 'சுடச்சுட' என அடுக்காக உரைக்கப்பட்டது. நோற்கிற்பவர், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. புடம் அதிசமாக அதிசமாகப் பொன் மாற்றுயர்ந்து பிரகாசிப்பதுபோலத் தவவருத்தம் அதிகமாக அதிமாகப் பெருமையுயர்ந்து மனிதர் ஞானம்பெறுவரென்பது இதன்கருத்து. உவமையணி; ஒளி என்பதிற் சிலேடையை அங்கமாகக் கொண்டு

* பி - ம்: எனப்பட்டது.



வந்தது. மநுஸ்மிருதியில் ஆறாவது அத்தியாயத்தில் எக - வது சுலோகத்தில் 'நெருப்பிலெரிக்கப்படுகிற பொன் முதலியவற்றின்

மாசுகள் ஒழிவது

போல இந்திரியங்களின் குற்றங்கள் பிராணாயாமத்தால் ஒழிகின்றன' என

இக்கருத்துக் கூறப்பட்டிருத்தல் காண்க.

(எ)

உசுஅ. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய

மன்னுயி ரெல்லாந் தொழும்.

(இ - ள்.) தன் உயிர் - தன் உயிரை, தான் —, அற-(தனக்கு) உரித்தாக,

பெற்றானை - பெற்றவனை, ஏனைய மன் உயிர் எல்லாம் - அது பெறாதனவாகிய மன்னுயிர்களெல்லாம், தொழும்—; (எ - று.)

தனக்கு உரித்தாதல் - தவமாகிய தன்கருமஞ் செய்தல். அதனினுங்குப் பெறுதற்கரியது இன்மையின், 'பெற்றானை' என்றார். 'அதுபெறாதன'

என்றது, ஆசையுட்பட்டு அவஞ்செய்யும் உயிர்களை. சாபமும் அருளும் ஆகிய

இரண்டு ஆற்றலும் உடைமையின், 'தொழும்' என்றார்.

(கு - ரை.) அறப் பெறுதல் - ஸ்வாதந்திரியம் நீங்கி ஐம்பொறி முதலியபிறவற்றுக்கு அதீனமாகாமல் முழுவதும் தனக்கே அதீனமாகப் பெறுதல். உரித்தாக - உரியதாக. அது பெறாதனவாகிய - தன்

னுயிரைத் தான்

அறப்பெருக. எனைய - மற்றைய. மன் உயிர்-நிலைபெற்ற பிராணிகள். அத

னின் ஊங்கு - அத்தவஞ்செய்தலினும் மேலாக. பாவஞ்செய்த எல்லாவுயிர்

களையும் விருத்த அதிகாரிகள் உளராதலால், அந்த உயிர்களெல்லாம் அவ்வதி

காரிகட்கு உரிமைபூண்டுநிற்கும்; தன்கருமஞ்செய்யுந் துறவறத்தானுக்கோ

பாவமில்லை யாதலால், தன் உயிர் தனக்கேஉரிலமபூண்டுநிற்கு மென்க.

எல்லாவுயிர்களும் தன்னைபேதொழத்தக்க சாயாநுக்கிரக சக்தி தவமுடையா

னுக்கு உண்டா மென்பதாம்.

(அ)

உசுசு. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட்ட வர்க்கு.

(இ ள்.) கூற்றம் - கூற்றத்தை, குதித்தல்உம் - கடத்தலும், கைகூடும்-

உண்டாவதாம்: நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு - தவத்தான் வரும்

ஆற்றலைத் தலைப்பட்டார்க்கு; (எ - று.)

சிறப்பும்மை, அதுகூடாமை விளக்கிற்று; 'மன்னுயி

ரெல்லாத் தொழு
தலேயன்றி இதுவுங் கைகூடும்' என, எச்சவும்மையாக
உரைப்பினும் அமை
யும். ஆற்றல் - சாப அருள்கள்.

இவை நான்குபாட்டானும், தவஞ்செய்வாரது உயர்ச்சி
கூறப்பட்டது.

(கு - ரை.) கூற்றத்தைக் கடத்தலும் - யாவராலுங்
கடக்கமுடியாத யம
னையும் அதிக்கிரமித்து விடுதலும். ஆற்றல் - திறமை.
தலேப்பட்டார்-மேற்
கொண்டவர்; கூடியவர். 'குதித்தலும்' என்ற
உயர்வுசிறப்பும்மை, கூற்றங்
கடத்தல் கைகூட லரி தென்பதை விளக்கிநின்றது.
கூற்றம் - பிராணிக
ளுடைய உயிரையும் உடலேயும் வேறுபிரித்துக்
கூறுபடுத்துங் கடவுள். எச்ச
வும்மை - எஞ்சிநின்ற [சொல்லப்படாமற் குறைந்துநின்ற]
பொருளேத் தரு

உ௭ - ஆம் அதிகாரம்—கூடாவொழுக்கம்
கஉரு

கிற 'உம்' என்னும் இடைச்சொல்; இது - இங்கே,
இறந்ததுதழுவிய எச்சம். சாப அருள்கள் - சபிக்கவும்
அநுக்கிரகிக்கவும் உள்ள சக்திகள். தவத் தில்
தலேமைபெற்றவர்க்கு யமனைவெல்லுதலுங் கூடுதலே,
மார்க்கண்டேயன் சுவேதன் முதலியோரது வரலாறுகளிற் க

உஎ0. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(இ - ள்.) இலர் பலர் ஆகிய காரணம் - (உலகத்துச் செல்வர்கள்சில ராக) நல்கூர்வார் பலராதற்குக் காரணம் (யாதெனின் அது),—நோற்பார் சிலர் நோலாதவர் பலர் - தவஞ்செய்வார்சிலராக அதுசெய்யாதார் பல ராதல்; (எ - று.)

செல்வம் நல்குரவு என்பன - ஈண்டு, அறிவினது உண்மை இன்மைகளையுங் குறித்துநின்றன; என்னே? "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" என்றாராகலின். 'நோற்பார் சிலர்' எனக் காரணங்கூறினமையான், காரியம் வருவித்துஉரைக்கப்பட்டது.

தவஞ்செய்யாதார்க்கு இம்மையின்பமும் இல்லை என, இதனான் அவ

ரது தாழ்வு கூறப்பட்டது.

(கு - ரை.) நல்கூர்வார் - வறுமையாளர். இப்பாட்டினுரையிற் காட்டிய மேற்கோள் - நாலடியாரில் அறிவின்மையென்னும் அதிகாரத்தில் முதற்பாட்டி லுள்ளது; நுட்பமான அறிவில்லாமையானது தரித்திரமாம்: அப்படிப்பட்டஅறிவை யுடைமைமிகவும் வளர்ந்த பெரிய சம்பத்தாம் என்பது இதன்பொருள். 'நோற்பார் சிலர்' என்றதனால், செல்வர்சில ரென்பது வருவிக்கப்பட்டது. ஆகிய - செய்யியவென்னும் வினையெச்சம். இக்குறள் எதுவின்முடித்தலென்னுந் தந்திரவுத்திக்கு உதாரணமா மென்பது; வீரசோழியவுரை. ஒருபிறப்பில் தவஞ்செய்தவர்களே மறுபிறப்பிற் செல்வமுடையவ ராவர்: அப்பிறப்பில் தவஞ்செய்யாதவரோ மறுபிறப்பிற் செல்வமுடையவராகாரென்பது கருத்து. மறுமைப்பேரின்பத்தைமாத்திரமேயன்றி இம்மைச்சிற்றின்பத்தையுந் தரவல்ல பெருமை தவத்திற்கு உண்டென்பது, இதனாற் கூறப்பட்டது. (௧0)

## உஅ - ஆம் அதிகாரம்—கூடாவொழுக்கம்.

அஃதாவது - தாம் விட்ட காமஇன்பத்தை * உரனின்மையின் பின்னும் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாய தீயவொழுக்கம். அது விலக்குதற்கு, இது, தவத்தின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) கூடாவொழுக்கம்-தகாதநடத்தை. விட்ட-நீக்கின. உரன் இன்மையின் - மனவுறுதி யில்லாமையினால். பின்னும்விரும்புமாறு தோன்ற- மீண்டும் விரும்பும்படிதோன்ற. இக்கெட்டவொழுக்கம் தவத்திற்குத் தகாததாதலால், இவ்வதிகாரம் தவமென்பதன்பின் வைக்கப்பட்டது.

---

* பி - ம்: வாதனையின்.

௨௪



உஎக. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம்

பூதங்க

ளைந்து மகத்தே நகும்.

(இ - ள்.) வஞ்சம் மனத்தான் - வஞ்சம்பொருந்திய

மனத்தையுடைய வனது, படிறு ஒழுக்கம் - மறைந்த ஒழுக்கத்தை, பூதங்கள் ஐந்துஉம்-(உடம்பாய் அவனோடுகலந்து நிற்கின்ற) பூதங்களைந்தும், (கண்டு), அகத்துஏ நகும் - தம்முள்ளே நகும்; (எ - று.)

காமம் தன்கண்ணேதோன்றி நலியாநிற்கவும் அதனது இன்மை கூறிப் புறத்தாரை வஞ்சித்தலின் 'வஞ்சமனம்' என்றும், அந்நலிவு பொறுக்க மாட்டாது ஒழுகுங் களவொழுக்கத்தை 'படிற்றொழுக்கம்' என்றும், உலகத்துக் களவுடையார் பிறர்அறியாமற்செய்வனவற்றிற்கு ஐம்பெரும்பூதங்கள் சான்றாகலின் அவ்வொழுக்கத்தையும் அவன்மறைக்கின்ற ஆற்றையும் அறிந்து அவன் அறியாமல் தம்முள்ளே நகுதலின் 'அகத்தேநகும்' என்றுங் கூறினார். செய்த குற்றம் மறையா தாகலின், அவ்வொழுக்கம் ஆகாது என்பது கருத்து.

(கு - ரை.) வஞ்சம் - தன்னை உண்மையான தவவொழுக்கமுடைய வனாகப் பிறரை யெண்ணுவிக்கவேண்டுமென்னும் எண்ணம். படிற்றொழுக்கம்-படிறாகிய வொழுக்க மென இருபெயரொட்டு; திருட்டுத்தனமான நடத்தை யென்க: படிற்றோடுகூடிய வொழுக்கமென்றால், மூன்றும் வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்க தொகையாம். பூதங்கள் ஐந்து - நிலம், நீர் முதலியன. "வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும், வஞ்சித்தோ மென்று மகிழன்மின் - வஞ்சித்த, எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி, அங்கங் குலைவ தறிவு" எனப் பின்னோர் கூறியவாறுங் காண்க. நலியாநிற்கவும் -

வருத்தவும். அதனது இன்மை - அவ்வாசையினது இல்லாமை. அங்கலிவு - காமவருத்தம். களவுடையார் - வஞ்சகர். ஐம்பெரும் பூதங்கள் - பஞ்சமகாபூதங்கள். நகும் - பரிகசித்துச்சிரிக்கும். ஐந்தும், உம்முற்றும்மை; இறந்ததுதழுவியஎச்சவும்மையாகக்கொண்டு, புறத்துள்ளார் வெளிப்படையாக நகைசெய்வதுமன்றி யென்பது குறைந்துநின்றதெனினும் அமையும். பஞ்சபூதங்களும் அறிந்திடச் செய்யுந் தீமையைப் பிறரறியாரென்று கருதும் பேதைமையை நோக்கி அப்பஞ்சபூதங்கள் அவன் தானும் அறியாவகை தமக்குள்ளே நகுமென்க.
'அஞ்சும்'என்று போலியான பாடம், எதுகைநயத்துக்குச் சிறக்கும். (க)

உஎஉ. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

(இ - ள்.) வான் உயர் தோற்றம் எவன் செய்யும் - (ஒருவனுக்கு) வான்போல் உயர்ந்த தவவேடம் என்னபயனைச் செய்யும்? தான் அறி குற்றம் - தான் குற்றமென்று அறிந்த அதன்கண்ணே, தன் நெஞ்சம் - தன் நெஞ்சு, படின் - தாழுமாயின்; (எ - று.)

உஎ - ஆம் அதிகாரம்—கூடாவொழுக்கம்
கஉள

'வானுயர்தோற்றம்' என்பது, "வான்றோய்குடி" என்

ழுற்போல இலக் கணைவழக்கு. அறியாதுசெய்த குற்றமல்லது அறிந்துவைத்துச் செய்த குற்றம் கழுவப்படாமையின், நெஞ்சு குற்றத்ததாயே விடும்; விடவே, நின்ற வேடமாத்திரத்திற்குப் புறத்தாரை யென்பதாம்.

வெருட்டுதலேயல்லது வேறுபயனில்லை

(கு - ரை.) வான்போல் உயர்ந்த - ஆகாயம்போல உயர்ச்சிபெற்ற. தவ வேடம் - தவத்துக்கு உரிய வேஷம்; வேடம் - வெளிக்கோலம். அதன்கண்கூடாவொழுக்கத்தில்; காம வின்பத்தில். தாழும்-இறங்கும்: தங்கும்; இழிவு பெறும். இலக்கணைவழக்கு-லக்ஷணப்ரயோகம்; அஃதாவது-ஒருசொல் உரிய பொருளைவிட்டு அப்பொருளுக்கு இனமானபொருளை உணர்த்துவது: இங்கே 'வானுயர்தோற்றம்' என்பது - ஆகாயத்தின்உயர்ச்சிபோல மேன்மைபெற்ற காட்சி யெனப் பொருள்பட்டதனால், இங்ஙனங் கூறப்பட்டது. "வான் தோய்குடி'' என்னும் மேற்கோள், நாலடியாரில் குடிப்பிறப்பு என்னும் அதி காரத்தில் இரண்டாஞ்செய்யுளில் உள்ளது; அதற்கு - உயர்ச்சியால் ஆகா யத்தை அளாவிய நற்குலமென்று பொருள்; கீர்த்தியால் மேலுலகத்தை அளாவிய குடியென்றும் பொருள்கொள்ளலாமாதலால், இங்கே 'வானுயர் தோற்றம்' என்பதற்கும் - புகழினால் தேவலோகமட்டுமுயர்ந்த துறவறவடிவ மென்றுமாம். கழுவப்படாமையின் - பிராயச்சித்தம் முதலியவற்றால் ஒழித் து ப் பரிசுத்தமாகச் செய்யப்படாமையால். புறத்தார் - அயலார். வெருட்டு தல் - அஞ்சச்செய்தல்.

'தெரியாமற்செய்த குற்றத்திற்குமாத்திரமே பரிகாரம் உண்டு;

தெரிந்துசெய்ததற்கோ அது இல்லை' என்பது, தருமசாஸ்திரக் கொள்கை. அறிகுற்றம், உயர்தோற்றம் - வினைத்தொகைகள். (உ)

உளரு .

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

(இ - ள்.) வலி இல் நிலைமையான் வல் உருவம் - (மனத்தைத் தன் வழிப்படுத்தும்) வலியில்லாத இயல்பினையுடையான் வலியுடையார்வேடத் தைக்கொண்டு (தான்) அதன் வழிப்படுதல், பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்து அற்று - பசு(காவலர் கடியாமல்)புலியின் தோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற்போலும்; (எ - று.)

இல்பொருளுவமை. "வலியினிலைமையான்" என்ற அடையானும், 'மே ய்ந்தற்று' என்னுந் தொழிலுவமையானும், 'வல்லுருவத்தோடு மனவழிப் படுதல்' என்றது பெற்றும். காவலர் கடியாமை - 'புலி புல் தின்னாது' என் . பதனாலும், அச்சத்தானுமாம்; ஆகவே, வல்லுருவங் கோடற்குப் பயன், அன்னகாரணங்களான் உலகத்தார் அயிராமை யாயிற்று. இவ்வாறு தனக்கு உரிய இல்லாளையுந் துறந்து வலியுமின்றிப் பிறர் அயிராத வல்லுருவமுங் கொண்டு நின்றவன் மனவழிப்படுதலாவது - தன்மனம் ஓடியவழியே ஓடி ம்மறைந்து பிறர்க்குஉரிய

மகளிரை விழைதலாம்; அவ்வாறுதல், 'பெற்றம் தனக்கு உரிய புல்லை விட்டுப் பிறர்க்கு உரிய பைங்கூழை மேய்ந்தாற்போலும்' என்ற உவமையான் அறிக.

கஉஅ திருக்குறள்

(கு - ரை.) வலி - இந்திரியநிக்கிரகசக்தி. இல்நிலைமை - பண்புத் தொகை. அதன் வழிப்படுதல் - (த வநெறியைவிட்டு விலகி) மனம் போன வழியிலே நடத்தல். வலிமையுடையாரது உருவம், இங்கு 'வல்லுருவம்' எனப்பட்டது. உருவம் - ரூபம் என்ற வடமொழியின் திரிபு. பசு, இயற்கை யில் வலிமையில்லாதது. காவலர் கடியாமல்-பயிரைக்காத்துக்கொண்டிருப்ப வர்கள் தன்னை அதட்டி ஓட்டாமல் அஞ்சிஓடிப்போம்படி. புலி, இயற்கை யில் வலிமையுடையது. அடை - விசேஷணம்; அடுத்துவருவது: இதனால் அடுக்கப்படும் மொழி, அடைகொளி எனப்படும்; அது - விசேஷ்யம். தொழி லுவமை - செய்கை பற்றிவந்த உபமானம். 'புலி பசித்தாலும் புல்லைத்தின்னாது' என்பது, பழமொழி; "பல்பொறிய, செங்கட் புலியே றறப்பசித்தாங் தின்னுவாம், பைங்கட் புனத்த பைங்கூழ்", "இடுக்கண் தலைவந்தக் கண்ணு மரிமா, கொடிப்புற் கறிக்குமோ மற்று" என்பனவு ங் காண்க. அன்ன-அத் தன்மையனவான. அயிராமை - (தவத்தவர் காமம்நுகரா ரென்பதனாலும், அவர்களிடத்துப் பயத்தாலும் அவர்களது ஒழுக்கவிஷயத்திற்) சந்தேகப்

படாமை. இல்லாள் - மனைவி. விழைதல் - விரும்புதல். இவ்வாறுகூறவே, மனமடங்கப்பெறுதவன் மனமடங்கினவர்வேடத்தைப் பூண்டு அவர்க்குஉரிய விரதாநுஷ்டாநங்களை விட்டு இல்லறத்தார்க்கு உரிய சிற்றின்பங்களை அநுபவித்தல், பசு புலித்தோலைப்போர்த்து அதற்குஉரியஊனைத் தின்னுமல், பிறர்க்குஉரிய பயிரை மேய்த்ததுபோலு மென்பதாம். பசுவை 'பெற்றம்' என்பது - கொடுந்தமிழ்நாடுபன்னிரண்டனுள் தென்பாண்டிநாட்டினின்று செந்தமிழில்வந்துவழங்கிய திசைச்சொல். இவ்வுவமையை மாற்றி வில்லிபுத்தூராழ்வார் "நின்று பெருந் தவமுயல்வோர் தாங்கள் கொண்ட நினைவொழியப் புறத்தொன்று நினைவரோசொல், பொன்றிடினு மீயறியப் பசுத்தோல் போர்த்துப் புலிப்பாய்ச்சல் பாய்வரோ புரிவி லாதாய்" எனக் கூறியிருக்கு மாற்றையும் அறிக. (௮)

௨௭௪. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(இ - ள்.) தவம் மறைந்து அல்லவை செய்தல் - (அவ்வலியில்நிலைமை யான்) தவவேடத்தின்கண்ணே மறைந்துநின்று தவமல்லவற்றைச் செய்தல்,—வேட்டுவன் புதல் மறைந்து புள் சிமிழ்த்து அற்று - வேட்டுவன் புதலின்கண்ணே மறைந்துநின்று புட்களைப் பிணித்தாற்போலும்;

(எ - று.)
தவம் - ஆகுபெயர்.
தவமல்லவற்றைச் செய்தலாவது - பிறர்க்கு உரிய மகளிரைத் தன்வயத்து ஆக்குதல்; இதுவும், இத்தொழிலுவமையான் அறிக.
(கு - ரை.) வலியில்நிலைமையான் - மனமடங்காதவன். தவமல்லவற்
றை - பாவத்தொழில்களை. வேட்டுவன் - வேடன்; வேடுஎன்னுந் தொழி
லையுடையவன்: வேடு, வேட்டை, வேட்டம் என்பன - ஒருபொருளன; அஃ
தாவது - மிருகங்களையும் பறவைகளையும் பிடித்தலும் கொல்லுதலும். புதல்-
செடியடர்த்தி; இதுவே ஈற்றுப்போலியாய்ப் புதர் எனவும் வழங்கும். புட்



கள் - பறவைகள். பிணித்தல் - பிடித்தல். தவம் - தவவேடத்தை யுணர்த் தியதனால், ஆகுபெயர்; ஒன்றன்பெயர் மற்றொன்றற்கு ஆகுகிற பெயர், ஆகுபெயர்.
தன் வயத்து ஆக்குதல் - தன்வசப்படுத்திக்கொள்ளுதல்.
"கேட் டியா லந்தணர் கேடிலா வெம்பி ரான்றன்,
மாட்டொருசிறிதுமன்பு மனத் திடை நிகழ்ந்த தில்லை,
காட்டுறு புள்ளின் சூழல் கவருவான் புதன்மேற்
கொண்ட, வேட்டுவ னியல்போன் மேலோன்

வேடீகொண்டதன்மை" என்னுங்
கந்தபுராணச்செய்யுளுக்கு ஏற்ப, புதல் மறைந்து
என்பதற்குதான் மேற்கொண்ட புதரிலே மறைந்திருந்து
என்றுங் கருத்துக்கொள்ள
லாம்; தழைகளை அடர்த்தியாகக் கூண்டுபோலக் கட்டி
அதனுள்ளே தான் மறைந்து நின்று அதனைச்சுமந்துசென்று
அதனை உண்மையான புதலென்று கருதி அதில்வந்துசேரும்
பறவைகளைப் பிடித்தல் வேடரியல்பு. (௪)

உ௭௫. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க
மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) (தம்மைப் பிறர் நன்குமதித்தற்பொருட்டு),
பற்று அற்றேம்
என்பார் - (யாம்) பற்று அற்றேம் என்று சொல்வாரது,
படிறு ஒழுக்கம் - மறைந்த ஒழுக்கம்,—(அப்பொழுது
இனிதுபோலத் தோன்றுமாயினும்),
எற்று எற்று என்று - (பின்) 'என்செய்தேம்!
என்செய்தேம்!!' என்று(தாமே)
இரங்கும்வகை, (அவர்க்கு), ஏதம் பலஉம் தரும் -
பலதுன்பங்களையும்
கொடுக்கும்; (எ - று.)

சொல்லளவல்லது பற்று அறுமையின் 'பற்றற்றே
மென்பார்' என்றும்,
சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாய
இன்பத்தின்பொருட்டுப் பெரிதாய்
நெடுங்காலம் நிற்பதாய பாவத்தைச் செய்வார்

அதன் விளைவின் கண் 'அந்தோ! வினையே' என்று * அழுவா ராகலின் 'எற்றெற்று' என்றுங் கூறினர்.

இவையிரண்டு பாட்டானும், கூடாவொழுக்கத்தின் இழுக்கங் கூறப்பட்டது.

(கு - ரை.) பற்று அற்றேம் - ஆசைகளை முழுதும் நீங்கினேம். படிற்றொழுக்கம் - திருட்டுநடத்தை. எற்று - எப்படிப்பட்டது; வினாவடியாப் பிறந்த ஒன்பான்பாற்குறிப்புமுற்று; அடுக்கு, இரங்கல்பற்றியது. அதன் விளைவின்கண் - அப்பாவத்தின்பயனை அநுபவிக்கநேருங்காலத்து. அந்தோ - ஐயோ! வினையே - கருமமே. "அந்தோவினையேயென் றழுவாட்கண்டும், நண்ணான் மின்செல்வ நமரங்காணல்லறமே வினைமின்கண்டீர்" என்பது, சீவகசிந்தாமணி, முத்திஇலம்பகம், உஎ. இழுக்கம் - குற்றம். கூடாவொழுக்கம் தாமே அநுதாபப்படுவதற்குக்காரணமாமாதலால், விலக்கத்தக்கது என்றவாறு.

உஎகூ. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

(இ - ள்.) நெஞ்சின் துறவார்-நெஞ்சால் பற்றறுதலைத்து, துறந்தார்

போல் - பற்றற்றார்போன்று, வஞ்சித்து - (தான
ஞ்செய்வாரை) வஞ்சித்து,

* பி - ம்: அழுங்குவார்.



வாழ்வாரின் - வாழுமவர்போல, வன்கணார் - வன்கண்மையை யுடையார், இல் - (உலகத்து) இல்லை; (எ - று.)

தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது - 'யாம் மறுமைக்கண் தேவராதற் பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்னது ஈதும்' என்று அறியாதீந்தாரை அதுகொண்டு இழிபிறப்பின ராக்குதல். அவர் இழிபிறப்பினராதல்
"அடங் கலர்க் கீந்த தானப் பயத்தினா லலறு முந்நீர்த்,
தடங்கட னடுவுட் டீவு பல வுள வவற்றுட் டோன்றி,
யுடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர்,
மடங்கலஞ் சீற்றத்துப்பின் மானவேன்மன்னரேறே"
என்பதனான் அறிக. தமக்குஆவன செய்தார்க்கு ஆகாதன விளைத்தலின், 'வன்கணாரில்' என்றார்.

(கு - ரை.) நெஞ்சின் - ஐந்தாம்வேற்றுமை, கருவிப்பொருள்; கருவிப் பொருளும் ஏதுப்பொருளி லடங்கும்: இனி, ஏழாம்வேற்றுமைச் சினை யிடமான பிறிதின்கிழமையாக்கொள்ளினும் அமையும்.
தானஞ்செய்வார் - இல்லறத்தார். வஞ்சித்து - மயக்கி. வன்கண்மை - கொடுமை. இவ்வருந்தவர் - பிறர்செய்தற்குஅருமையான தவத்தைச் செய்துள்ள

இவர்கள். இன்னது ஈதும் - இப்பொருளைத் தானஞ் செய்வோம். அதுகொண்டு - அதனால்; அல்லது, அவர்கொடுத்த அப்பொருளைத் தாம் பெற்றுக் கொண்டு. இழிபிறப்பினராக்குதல் - அவர்கட்கு ஒருநற்பயனுமில்லாமற்செய் தலுமன்றி அவர்களை இழிவான பிறப்பை அடைபவராகவுஞ் செய்தல். "அடங்கலர்க்கு" என்னும் மேற்கோள் - சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம், தானப்பயன், பதினான்காம்பாட்டு: இது, கொடியவர்க்கீந்த தானத்திற்குப் பயன்கூறுகிறது: இதற்குப் பொருள் - சிங்கம்போன்ற கோபத்தையும் வலி மையையும் பெருமையையுடைய வேலாயுதத்தையு முடைய அரசர்கட்குச் . சிங்கம்போன்றவனே! ஐம்பொறிகளுமடங்காதவர்கட்கு ஒருவர் தானஞ்செய் தால் அவர்கள் கொடுத்த தானத்தின் பயனாலே ஒலிக்கின்ற மூன்று நீரை யுடைய பெரிய கடலினிடையே யுள்ள பலதீவுகளிலே மக்களுடம்பும் விலங் கின்முகமுமாய் உருவேறுபட்டுத் தோன்றி உதிர்கிறகனியையுண்டு வாழ்வ ரென்பதாம். ஆவனசெய்தார்-உபகாரஞ்செய்தவர்கள். ஆகாதன விளைத்தல் - அபகாரஞ்செய்தல். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு"என்றதில் நன்றிமறத்தலின் கொடுமை கூறப் பட்டுள்ளது: 'அந்நன்றிமறத்தலோடு நன்மைசெய்தார்க்குத்தீமையுஞ் செய் கின்ற இவர்கள்கொடுமைக்கு எல்லையில்லை'என்பார் 'வன்கணாரில்' என்றார்.

உஎஎ. புறங்குன்றி கண்டனைய ரேனு

மகங்குன்றி

மூக்கிற் கரியா ருடைத்து.

(இ - ள்.) குன்றி புறம் கண்டு அனையர் என்உம்-குன்றிமணியின் புறத்தைக் கண்டாற்போல வேடத்தாற் செம்மையுடைய ராயினும், குன்றி மூக்கின் அகம் கரியார் - அதன் மூக்குப்போல மனம் இருண்டிருப்பாரை, உடைத்து—, (உலகம்); (எ - று.)

உ௪ - ஆம்

அதிகாரம்—கூடாவொழுக்கம் கக௯க

குன்றி - ஆருபெயர். செம்மை, கருமை என்பன - பொருளின்கண்
நிறத்தைவிட்டுச் செப்பத்தினும் அறியாமையினும் சென்றனவாயினும், பண்
பாதல் ஒத்தலின், இவை பண்புவமை; "கூழின் மலிமனம் போன்றிரு ளா
நின்ற கோகிலமே" என்பதும் அது.

(கு - ரை.) புறம் மேலிடம். குன்றியென்னுங் கொடியின்பெயர், அதன்
மணியைக் குறித்ததனால், பொருளாகுபெயர். பொருளின்கண்-உபமேயத்தில்;
தவநெறிநின்றவர்கள்பக்கல். செப்பம் - நல்லொழுக்கம். பண்பு - குணம்.
"கூழின்மலிமனம்" என்னும் மேற்கோள் - திருச்சிற்றம்பலக்கோவையார்,
௩உஉ - ஆஞ் செய்யுளி லுள்ளது; (பரமசிவனது திருச்சிற்றம்பலத்தை

விரும்பாத) உணவாற் செருக்கும் மனம்போல ஒருகாலைக்கொருகால் நிறம்
பெற்று இருளுகின்ற குயில்களென்று பொருள். மேற்கோளில்'இருளாகின்ற'
என்பது-உபமானத்திற்கு அஜ்ஞானமடைகின்ற என்றும், உபமேயத்திற்குக்
கறுக்கின்ற என்றுஞ் சிலேடையாகப் பொருள் தந்ததுபோல, இப்பாட்டில் 'கரியார்' என்பது - உபமானத்துக்குக் கருநிறம்படைத்தவரென்னும் பொரு
ளையும், உபமேயத்துக்கு அஜ்ஞானமடைந்தவரென்னும் பொருளையுங்
கொடுத்தது; சிலேடைபற்றி வந்த உவமையணி. உலகத்தில் உள்ளும் புற
மும் ஒத்த துறவறத்தவர் சிலரே, வெளியிற் காஷாய தண்டமுதலிய வேஷங்
களோடு கூடி மனத்திற் கெட்ட எண்ணமுடையவர்களோ பலர் என்பது
இதன் கருத்து. எனும் - எனினும் என்பதன் மரூஉ. (எ)

உஎஅ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(இ - ள்.) மாசு மனத்தது ஆக-மாசு (தம்) மனத்தின்கண்ணதாக, மாண்
டார் - (பிறர்க்குத் தவத்தான்) மாட்சிமையுடையராய், நீர் ஆடி - நீரின் மூழ்கிக்காட்டி, மறைந்து ஒழுகும் - (தாம் அதன்கண்ணே) மறைந்து செல்
லும், மாந்தர்—, பலர் - (உலகத்துப்) பலர்; 'எ - று.)

மாசு - காம வெகுளி மயக்கங்கள்:
அவைபோதற்கு அன்றி மாண்டா
ரென்று பிறர்கருதுதற்கு நீராடுதலான், அத்தொழிலை
அவர்மறைதற்கு இட
னாக்கினர். இனி, 'மாண்டார்நீராடி' என்பதற்கு,
மாட்சிமைப்பட்டாரது நீர்
மையையுடையராய் என்று உரைப்பாரு முளர்.

இவை மூன்றுபாட்டானும் அவ்வொழுக்கமுடையாரது
குற்றமும், அவ
ரை அறிந்து நீக்கல்வேண்டு மென்பதும் கூறப்பட்டன.

(கு - ரை.) மாசு - குற்றம்.
மாண்டார்-மாட்சிமையுடையோர் என்னும் பொருளில்,
மாண் என்னும் பண்படி - பகுதி. நீர்
ஜலத்தைக்குறிக்கும்
போது, நீரம் என்னும் வடமொழியின் திரிபென்ப;
குணத்தைக் குறிக்கும்
போது, நீர்மையென்னும் பண்புப்பெயரின் விகாரம்.
அதன்கண்ணே - அத்
தவவேஷத்திலே. மயக்கம் - அவித்யை. அவை போதற்கு
அன்றி - அக்குற்
றங்கள் நீங்குதற்கு அல்லாமல். மாண்டாரென்று -
சிறந்ததவவொழுக்கத்தா
ரென்று. மாட்சிமை - பெருமை. நீர்மை - குணம்.
மனத்தது - ஒன்றன்பாற் கூஉ

# திருக்குறள்

குறிப்புவினையாலணையும்பெயர். உள்ளத்திலழுக்கிருக்க

அதனை யொழிக்கா

மல் மறைக்கும்பொருட்டு உடலழுக்கைக் கழுவி வெளிவேஷம் போடுஞ்

சந்நியாசிகள் பலரென்பது, இதன்பொருள்;

மென்பது, கருத்து.

அன்றுரையறிந்து நீக்கவேண்டு

(அ)

உஎகூ. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன

வினைபடு பாலாற் கொளல்.

(இ - ள்.) கணை - அம்பு, கொடிது - (வடிவாற் செவ்விதாயினும் செயலாற்) கொடிது: யாழ் கோடு செவ்விது - யாழ் கோட்டால் (வளைந்ததாயினும் செயலாற்) செவ்விது; ஆங்கு அன்ன - அவ்வகையே தவஞ்செய்வாரையும் கொடியர் செவ்வியர் என்பது, வினை படு பாலால் கொளல் - (வடிவாற் கொள்ளாது அவர்)செயல் பட்ட கூற்றானே அறிந்து கொள்க; (எ-று.)

கணைக்குச் செயல் - கொலை. யாழுக்குச் செயல் - இசையால் இன்பம் பயத்தல். அவ்வகையே செயல் பாவமாயின் கொடியரெனவும், அறமாயின் செவ்வியரெனவும் கொள்க என்பதாம்.

இதனான், அவரை அறியுமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) அம்பு - பாணம்.

வடிவால்-உருவத்தினால். செவ்விது நேர்

மையுடையது; கோணுதலில்லாதது. கொடிது - பிறர்க்குத்துன்பத்தருவது.

யாழ் - வீணை. கோடு - வீணைதண்டம். செவ்விது - பிறர்க்குஇன்பந்தருவது. அன்ன - கொடுமையுடையராதலும் செம்மையுடையராதலு மாகியவற்றை. அவர்செயல்பட்டகூற்றான் - அவர்களது தொழில்நடந்தவகையால். உலகத்தில் வேஷத்தால் நல்லவர்களாய் ஒழுக்கத்தால் தீயவர்களும், வேஷத்தால் தீயவர்களாய் ஒழுக்கத்தால் நல்லவர்களும் இருத்தல் கூடும்; ஆதலால், அவரவரது செய்கையைக்கொண்டல்லாமல் வேஷத்தைக்கொண்டே உயர்வு தாழ்வுகளை நிச்சயிக்கலாகாது என்பது, இதன்கருத்து. இதனை 'கணைகொடிது யாழ்கோடு செவ்விது' என்னும் உவமையால் விளக்கினார். கொடிது, செவ்விது என்பவற்றில் இரண்டுபொருள் கொள்ளப்பட்டன: சிலேடை. கொடிதியாழ்-குற்றியலிகரம். செவ்விது-ஒன்றன்பாற்குறிப்புமுற்று. ஆங்கு-உவமவுருபு; இடைச்சொல். அன்ன - பலவின்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். கொளல் - உடன்பாட்டு வியங்கோள். (௯)

உ௮0. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

(இ - ள்.) (தவஞ்செய்வார்க்கு),—மழித்தல்உம் - (தலைமயிரை) மழித்தலும், நீட்டல்உம் - சடையாக்கலும், (ஆகிய வேடமும்), வேண்டா—:உலகம் பழித்தது ஒழித்துவிடின் - உயர்ந்தோர் (தவத்திற்கு ஆகாது என்று) குற்றங் கூறிய ஒழுக்கத்தைக் கடிந்துவிடின்; (எ - று.)

* பறித்தலும் மழித்தலுள் அடங்கும். 'மழித்தல்' என்பதே தலைமயிரை

உணர்த்தலின், அது கூறாராயினர்.

* பறித்தலும் மழித்தலுளடங்குமென்றவாக்கியம் சிலபிரதியிலில்லை.

## உ௯ - ஆம் அதிகாரம்—கள்ளாமை

க௯ரு

இதனுள், கூடாவொழுக்கம் இல்லாதார்க்கு வேடமும் வேண்டா என அவரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) மழித்தல் - மொட்டையடித்தல்;

சிரைத்தல். உலகம்பழித் தது - காமம். கடிந்துவிடின் - நீக்கிவிடுவாராயின். துறவடையுங்காலத்துத் தலைமயிரைச் சிரைப்பித்துக்கொள்ளாமல் ஒவ்வொன்றாகப்பிடுங்கியெடுக்கச் செய்தல், ஜைநமதசம்பிரதாயம்; இதனையும் அடக்கும்பொருட்டு, 'பறித் தலும் மழித்தலுள் அடங்கும்' என்றார். அவர்கள் மயிர்பறித்தலை "மணியி யல் சீப்பிடச் சிவக்கும் வாணுத, லணியிருங் கூந்தலை யெளவை மார்கடாம், பணிவிலர் பறித்தனர் பரமன் சொன் னூற், றுணிபொருள் சிந்தியாத் துற த்தல் மேயினர்" என்னுஞ் சீவகசிந்தாமணியாலும் அறிக. வேண்டா - வேண் டும் என்னும் வியங்கோளின் எதிர்மறை; செய்வினை செயப்பாட்டு வினைப் பொருளில்வந்த எதிர்மறைப்பலவின்பால் வினைமுற்றெனவுங் கொள்ளலாம். பழித்தது - இறந்தகாலவினையாலணையும்பெயர். தவவிரோதமானசெயல் களை அகத்தில் விட்டிட்டவர்க்குப் புறத்தில் வேடம் வேண்டுவதில்லை யென் பது, இதன் கருத்து. மழித்தலும் நீட்டலும் என்பன - காஷாயம் தண்டம் முதலிய மற்றைத்தவவேடங்கட்கும் உபலக்ஷணம்.
(௩0)

## உ௯ - ஆம்

# அதிகாரம்—கள்ளாமை.

அஃதாவது - பிறருடைமையாயிருப்பதியாதொருபொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை. கருதுதலும் செய்தலோடொத்தலின், 'கள் ளாமை' என்றார். இல்வாழ்வார்க்காயின் தமரோடு விளையாட்டுவகையான் அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த பொருள்களை

அங்ஙனம் கொள்ளினும் அமையும்; துறந்தார்க்காயின், அதனைக் கருதியவழியும் பெரியதோர் இழுக்காம் ஆகலின், இது, துறவறமாயிற்று. புறத்துப்போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர்மனம் அஃதொழிந்து புறத்தேபோந்து * பஃறலைப்பட்டு உடம்பின்பொருட்டுப் பொருளை நோக்குதலேயன்றி அதுதன்னையும் வஞ்சித்துக் கொள்ளக்கருதுதல் அவர்க்குப் பெரியதோர் இழுக்காதல் அறிக. இவ்வாறு 'வாய்மை' முதல் 'கொல்லாமை' ஈறாய நான்குஅதிகாரத்திற்கும் ஒக்கும். பொருள்பற்றிநிகழுங்குற்றத்தை விலக்குகின்றதாகலின், இது, காமம்பற்றிநிகழ்வதாய கூடாவொழுக்கத்தின்பின் வைக்கப்பட்டது.

(கு-ரை.) கள்ளாமை-திருடநினையாமை. தமரோடு-தம்மவர்களுடன்; சுற்றத்தார் நண்பர் முதலியோருடனே. கோடற்கு - கொள்ளுதற்கு. அங்ஙனங் கொள்ளினும்-வஞ்சித்துப்பெற்றாலும். அதனை-களவை. புறத்து-வெளியில்; தவத்தையொழிந்த விஷயாந்தரங்களில். ஒருதலைப்பட்டு-ஒன்றினிடத்தேபற்றியிருந்து. நோக்கற்பாலதாய-கருதவேண்டுவதான. அஃது ஒழிந்து - அந்நெறியைவிட்டு. புறத்தே போந்து - வெளியிலே சென்று. பஃறலைப்பட்டு -

* பி - ம்: பலதலைப்பட்டு.





பலவிஷயங்களிலும் அகப்பட்டுக்கொண்டு.

உடம்பின்பொருட்டுப் பொருளை நோக்குதல் — தம்முடலைப்பாதுகாக்கும்பொருட்டுச் செல்வத்தை வேணு மென்று கருதுதல்: இங்ஙன்பொருளை வேண்டுமென்று கருதுதலே, இழுக்காம். அதுதன்னையும் - தம்முடம்பைக் காக்கும்பொருட்டு வேணுமென்று கருதவுங் கூடாத அப்பொருளையும். பெரியதோர் இழுக்கு - பெருங்குற்றம். வாய்மைமுதல் கொல்லாமையீறாய - வாய்மை வெகுளாமை இன்னா செய்யாமை கொல்லாமை என்கிற. களவு, பொய்பேசுதல், வெகுளுதல், கொடுந்தொழில், கொல்லுதல் என்னுமிவற்றைச் செய்தவிடத்து இல்லறத் தார்க்குக் குற்றமுண்டாம்; துறவறத்தார்க்கோ இவற்றை நினைத்தமாத்திரத் தில்தானே பெருங்குற்றம் நேரும்; அதனால்,கள்ளாமைமுதலிய இவ்வதிகாரங்கள் இல்லறவியலில் வைக்கப்படாமல் துறவறவியலில் வைக்கப்பட்டன என் றும்,இவற்றுக்கு இக்குற்றங்களைச் செய்ய நினையாமையென்று பொருள்கொள்ளவேண்டியதாயிற்று என்றுங் கூறியதாயிற்று. ஒருவன் உறவினருடனே சண்டையிட்டு விடமுண்டுசாவேன் என்னும் மனமுடையவனாய் நஞ்சுகூட்டி வைத்து விலக்குவாரில்லாதபொழுது உண்பேனென்று நின்றவிடத்து அருளுடையானொருவன் அதனைக்கண்டு இவன் இதனையுண்டு இறவாதபடி கொண்டுபோய்க் கொட்டிவிடுவேனென்று அவன்காணாமல் கொண்டுசொரிந் திட, அவனும் ஜனநீக்கத்தில்நஞ்சுண்டுசாகச்சென்றவன் அதுகாணுனாய்ச் சாவுநீங்கினனாகு மாதலால், அவன் அக்களவினாற் பிறனைப்பிழைப்பித்தமை யால் நற்கதியிற் செல்வான்; இதுபோன்ற களவுகள்

இல்லறத்தார்க்காயின் நன்மை பயப்பனவாம்: ஆதலால், கள்ளாமை துறவறத்தில் வைக்கப்பட்டதென்க.

உஅக. எள்ளாமை வேண்டுவா னென்பா
னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

(இ - ள்.) எள்ளாமை வேண்டுவான் என்பான் - (வீட்டினை) இகழாது விரும்புவான் (இவன்) என்று (தவத்தோரான்) நன்குமதிக்கப்படுவான், — எனைத்து ஒன்றும் கள்ளாமை - யாதொருபொருளையும் (பிறரை) வஞ்சித்துக் கொள்ளக்கருதாவகை, தன் நெஞ்சு காக்க - தன் நெஞ்சினைக் காக்க; (எ - று.)

'எள்ளாது' என்னும் எதிர்மறைவினையெச்சம், 'எள்ளாமை' எனத் திரிந்துநின்றது. வீட்டினை இகழ்தலாவது - காட்சியே அளவையாவது என்றும், நிலம் நீர் தீ வளி எனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றிப் பிரிவால் மாய்வதாய உடம்பின்கண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப்போல வெளிப்பட்டு அழியுமென்றும், இறந்த உயிர் பின்பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவனாற் செய்யப்படுவன வென்றுஞ் சொல்லும் உலோகாயதம் முதலிய சமயத்து மயக்கநூல்களைத் தெளிந்து அவற்றிற்கு ஏற்ப ஒழுகுதல். ஞானத்திற்கு ஏதுவாய மெய்ந்நூற் பொருளையேனும் ஆசிரியனை வழிபட்டுஅன்றி அவனை வஞ்சித்துக்கொள்ளின், அதுவும் களவாம் ஆகலின், 'எனைத்தொன்றும்' என்றார். 'நெஞ்சு கள்

ளாமற் காக்க' எனவே, துறந்தார்க்கு விலக்கப்பட்ட
தல் என்பது பெறும்.
கள்ளுதல் கள்ளக்கருது

(கு - ரை.) வீட்டினை - முத்தியுலகத்தை. காக்க -
பாதுகாக்கக்கடவன்:
அடக்கக்கடவன். 'இப்பாட்டில் எள்ளாமை யென்பதை,
தன் கருத்தாவின் வினையையும்
பிறகருத்தாவின்வினையையும் கொண்டு முடிதற்கு ஏற்ற
முக்காலத்துக்கும்பொதுவான எள்ளவென்னுஞ்
செயவெனெச்சத்தின்
எதிர்மறையாகக் கொள்ளலாகாது; தன்கருத்தாவின் வினையைமாத்திரமே
கொண்டு முடிதற்கு ஏற்ற இறந்தகால மாகிய எள்ளி என்னுஞ் செய்தெ
னச்சத்தின் எதிர்மறையாகக் கொள்ளவேண்டும்: ஏனெனில், வேண்
டுவா னென்னும் தன்கருத்தாவின்வினையைக்
கொண்டுமுடிதலால்' என் பார், 'எள்ளாது என்னும்
எதிர்மறைவினையெச்சம் எள்ளாமை யெனத்
திரிந்துநின்றது' என்றார்;
கிளவியும், எதிர்மறுத்து
தொல்காப்பிய வினையியற்

இதனை "பெயரெஞ்சுகிளவியும் வினையெஞ்சு
மொழியினும் பொருள்நிலை திரியா" என்னுஞ்
சூத்திரத்துச் சேனவரையருரையை நோக்கி
உணர்க: இதனால், எள்ளாமை யென்பது

தன்வினைமுதல்வினையையும், கள்ளாமை யென்பது பிறவினைமுதல்வினையையுங் கொண்டு முடிதலாகிய வேறுபாட்டையுங் காண்க. இனி, இவற்றை எதிர்மறைத் தொழிற் பெயராகக் கொண்டு, பிறராலிகழப்படாமையைவிரும்புபவனென்பவன் யாதொன்றையுங் களவுசெய்யாமையாகிய அறத்திலே தன்மனத்தை நிலை நிறுத்துக என்று பொருள்கொள்ளலுமாம். எள்ளாமை என்னும் வினைக்கு, வீட்டினை என்னும் செயப்படுபொருள் வருவித்துக்கொண்டார். வேண்டுவான் - வகரவிடைநிலை, காலமுணர்த்தாமல் தன்மையுணர்த்திற்று. என்பான் என்ற பெயர், சிறப்புத்தோன்ற நின்றது. காக்க - வியங்கோள். 'காட்சியே' என்பதுமுதல் 'சொல்லும்' என்றதுவரையில் லோகாயதமதசித்தாந்தம்: லோகாயதம் என்பது, புறச்சமயங்களுள் ஒன்று. அம்மதத்தார்க்குச் சார்வாகர் என்றும், பார்ஹஸ்பத்யர் என்றும் பெயர்கள் உண்டு. அவர்கள் மதத்தில் பிரதியக்ஷமொன்றே பிரமாணமாக அங்கீகரிக்கப்படுகிறது; மற்றை அநுமானம்முதலியன ஒப்புக்கொள்ளப்படுகின்றனவில்லை. அவர்களுட் பெரும்பாலார் ஆகாயத்தைத் தனியே ஒருபூதமாக எண்ணுவதில்லை; மற்றைநான்கு பூதங்களின் அபாவத்தையே ஆகாசமாகக்கருதுவர். வெற்றிலைபாக்குச் சுண்ணாம்புகளின் சேர்க்கையால் ஒருவகைச்செம்மைநிறம் உண்டாவது போலப் பிருதிவிமுதலிய நான்குபூதங்களின்

சேர்க்கையாலே அவற்றின் -காரியமாகிய உடம்பில் உணர்ச்சி உதிக்குமென்பார்கள்; அதுவே அவர்கட்கு ஆத்மாவாகும். இங்ஙனம் உயிர் உடம்பினின்றும் வேறுபடாததாகையாலே, பிராணவாயு பிரிதலா லிறந்து எரிக்கப்பட்டாவது புதைக்கப்பட்டாவது அழிந்துபோன உடம்பு மீண்டும் பிறக்கமாட்டாது என்று கூறி, மறுபிறப்பைமறுப்பார்கள்;மயில்கள் இயற்கையிலே அழகியனவாயிருப்பனபோலவும், குயில்கள் இயல்பிலே இனிமையாக்கூவுவனபோலவும் பிராணிகட்குச் சுவபாவத்திலேயே இன்பம் ஏற்படுகின்றது என்பதும், துன்பமும் இப் க்கூகூ

திருக்குறள்

படிப்பட்டதேயென்பதும்அவர்கொள்கை. அவர்கள்சித்தாந்தத்தில் சுவர்க்கம் நரகம் பரமபதம் முதலிய பரலோகங்கள் கிடையா; இவையெல்லாம் மூடர் களாற் பிறரை மயக்கும்பொருட்டு ஏற்படுத்திக்கொள்ளப்பட்டன என்பர். வயிறுநிரம்பத் திருப்தியாக நல்லுணவுகளை உண்பதும், பதினாறு பிராய முள்ள இளமங்கையரைச் சேர்தலும், முடிப்பமுடித்துப் பூசுவபூசி உடுப்ப உடுத்தலுமே அவர்கட்குச் சுவர்க்கம்; சத்துருக்களாலும் வியாதி முதலியவற்

றூலும் வருத்துவதே நரகம்; மரணமே மோக்ஷம். இவ்வாறு யாவரும் எளிதில்
இனியதென்று ஒப்புக்கொள்ளும்படி சொல்லி லோகத்திற் பரவிய மதமா
னதுபற்றியே, இதற்கு, லோகாயதமென்று பெயர். 'முதலிய' என்றதனால்,
ஜைநம், பௌத்தம், நையாயிகம், வைசேடிகம், சாங்கியம், மாயாவாதம், பாஸ்
கரம், ஏகாநயம் முதலியன கொள்க. இம்மதங்களின் சொரூபம் இத்தன்மை
யதென்பதை வடமொழியிற் பிரமசூத்திரபாஷ்யங்களிலும், சங்கராசாரியரால்
இயற்றப்பட்ட ஸர்வஸித்தாந்தஸங்க்ரஹமென்னும் நூலிலும் பரக்கக்காண
லாம். தமிழிற் சிவஞானசித்தியாரும், அதனுரையும் முதலியவற்றிற் சுருக்க
மாகக் கூறப்பட்டுள்ளன. நம்பிள்ளையென்கிற பூர்வாசாரியர் முப்பத்தாறாயிரப்
படியென்கிற திருவாய்மொழிவியாக்கியானத்தின் முதலில் "லோகாயதிகன்,
'ப்ருதிவ்யாதிபூதங்கள் நாலினுடைய கூட்டரவாலேசைதந்யமென்று ஒரு
தர்மம் பிறக்கும்; அதுக்கு உண்டான சுகதுக்கங்கள் ஸ்வர்க்கநரகங்கள்; அவற்
றினுடைய பிரிவிலே சைதந்யம் நசிக்கும்; அவ்வருகு ஒன்றுமில்லை' (என்றான்) என்பது அவனுடையசித்தாந்தம்"

என்று தொடங்கிச் சுருக்கமாகவும் தெளி வாகவும் அருளிச்செய்திருக்கிறார். காட்சியே அளவையாவது - பிரதியக்ஷம் ஒன்றே பிரமாணமாகுவது. வளி - காற்று. அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றி - பூதங்களின் ஒருவகைக்கூட்டத்தா லுண்டாகி. பிரிவால் மாய்வதாய - அவை தனித்தனிபிரிதலினால் ஒழிவதான. மதுவின்கண் களிப்புப்போல - கள்ளினிடத்தே மதர்ப்புத்தன்மை போல. "கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்புகா, உடைந்தசங்கி லோசையும் உயிர்களும் முடல்புகா, வடிந்தவேரடியினி லுதிர்ந்தபூ மரம் புகா, இறந்துபோன மானிடரினிப்பிறப்ப தில்லையே" என்னும் பாட்டு, இறந்தஉயிர் பின்பிறவாமை யைக் கூறும். ஒருவனாற் செய்யப்படுவது - தெய்வத்தாற்செய்யப்படுவதன்று. தெளிந்து-மெய்ந்நூல் வழக்கென்று நம்பி. மெய்நூற்பொருள் - தத்துவசாஸ் திரஅர்த்தம். ஆசிரியன் - குரு. வழிபட்டு அன்றி - உபசரித்தல்லாமல். (க)

உஅஉ. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் * கொள்வே மெனல்.

(இ-ள்.) உள்ளத்தால் உள்ளல்உம்-(குற்றங்களைத் தன்) நெஞ்சால் கருதுதலும், தீது - (துறந்தார்க்குப்) பாவம்; (ஆதலால்), பிறன் பொருளை - பிறனொருவன்பொருளை,

கள்ளத்தால் - (அவன்) அறியாவகையால், கொள்வேமெனல் - வஞ்சித்துக்கொள்வேம் என்று கருதற்க; (எ - று.)

* பி - ம்: கள்வேமெனல்.

## உகூ - ஆம் அதிகாரம்—கள்ளாமை

ககூஎ

'உள்ளத்தால்' என வேண்டாதுகூறினர், அவருள்ளம் ஏனையோருள் ளம்போலாது சிறப்புடைத்து என்பது முடித்தற்கு. 'உள்ளலும்' என்பது, இழிவுசிறப்புஉம்மை. 'அல்' விகுதி-வியங்கோள் எதிர்மறைக்கண் வந்தது.

இவை யிரண்டுபாட்டானும், இந்நடைக்குக் களவாவது இதுவென்ப தூஉம், அது கடியப்படுவ தென்பதூஉம் கூறப்பட்டன.

(கு - ரை.) கருதற்க - எண்ணுதொழிக. ஏனையோருள்ளம் போலாது - மற்றை இல்லறத்தார்மனம்போ லாகாமல். 'உள்ளத்தால்' என்னும் அவசிய மில்லாத பதத்தைப் பிரயோகித்ததற்கு, 'அவருள்ளம் ஏனையோருள்ளம் போலாது சிறப்புடைத்து' என்றலாகிய கருத்தைக் கூறினர். உள்ளம் - ஒன்றை நினைத்தற்குக் கருவியாதலால், மூன்றுருபு - கருவிப்பொருளது. "பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்" என்பதிற்போல, எனல் - எதிர்மறைவியங்கோள். இந்நடை - துறவறநடத்தை. கடியப்படுவது-விலக் கத்தக்கது. நினைத்தற்கருவியா தலாலும், அகத்து றுப்பாதலாலும், உள்ள மென்று மனத்திற்குப்

பெயர். ஏ - தேற்றம். கள்ளம்-தொழிற்பெயர்: வஞ்சனை. இனி, இத்திருக்குறளுக்கு—பிறன்பொருளை யென்பதை மத்திம தீபமாகக்கொண்டு, தவஞ்செய்வோர் தம்உயிரை நாடாமல் பிறன்பொருளை நினைப்பதுங் குற்றம்; அதன்மேலும் அதனை வஞ்சனையாற் கவர்தற்கு உடன்பட்டு வாயாற்சொல்லுதல் பெருங்குற்றம்: ஆதலால் அவ்வாறு சொல் லாதொழிக என்று பொருள்கொள்ளினும் அமையும். இனி, இதனை ஒரு வாக்கியமாகவே கொண்டு, 'எனல்'என்பதைத் தொழிற்பெயராகவைத்து, பிறன்பொருளைக் கள்ளத்தாற்கொள்வே மென்பதை தலுந் தீது என்று முடித்தலும் ஒன்று.

உள்ளத்தால் எண்ணு

(உ)

உஅங. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

(இ - ள்.) களவினால் ஆகிய ஆக்கம்- களவினால் உளதாகிய பொருள்,— ஆவது போல - வளர்வதுபோலத் தோன்றி, அளவு இறந்து - (தன் )எல்லை யைக்கடந்து, கெடும்—; (எ - று.)

ஆக்கத்திற்கு ஏதுவாகலின், 'ஆக்கம்' எனப்பட்டது. எல்லையைக்கட ந்து கெடுதலாவது - தான் போங்கால், பாவத்தையும் பழியையும் நிறுத்திச் செய்த அறத்தையும் உடன்கொண்டு போதல். 'அளவறிந்து' என்று பாட மோதி, (அவர் பயன்கொள்ளும்)அளவு அறிந்து (அவ்வளவிற்கு உதவாது) கெடும் என்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) களவினால் - திருடுதலால். பொருள் - செல்வம். ஆக்கம்- ஆகுதல், அபிவிருத்தி, மேன்மைபெறுதல்; அதற்குக் காரணமான செல்வத்தை ஆக்கமென்றது, காரியவாகுபெயர். இனி, சம்பாதிக்கப்பட்டதெனச் செல்வத்திற்கு ஆக்கமென்பது காரணப்பெயரெனினும் அமையும். போங்கால் - அழியும்பொழுது. நிறுத்தி - வைத்துவிட்டு. செய்த - முன்செய் துள்ள. அவர் - களவுசெய்தவர்.



உஅச. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

(இ - ள்.) களவின்கண்-(பிறர்பொருளை) வஞ்சித்துக் கோடற்கண்ணே, கன்றிய - மிக்க, காதல் - வேட்கை,—(அப்பொழுது இனிதுபோலத் தோன்றி), விளைவின்கண் - (தான்) பயன்கொடுக்கும்பொழுது, வீயா விழுமம் தரும் - தொலையாத இடும்பையைக் கொடுக்கும்; (எ - று.)

* கன்றியகாதல் என்ஞான்றும் அக்களவையே பயில்வித்து அதனாற் பாவமும் பழியும் பயந்தே விடுதலின், 'வீயாவிழுமந்தரும்' என்றார்.

இவையிரண்டுபாட்டானும், அது கடியப்படுதற்குக் காரணங் கூறப் பட்டது.

(கு - ரை.) கோடல் - கொள்ளுதல். மிக்க வேட்கை - மிகுந்த ஆசை. தொலையாத இடும்பை - நீங்காத துன்பம். பயில்வித்து - பழகச்செய்து. அது கடியப்படுதற்கு - களவு நீக்கப்படுதற்கு. விளைவு - விளைதல்: விளையுங் காலத்துக்கு ஆகுபெயர். அவனுக்குக் கொடுக்கும் என்னாது அவனுக்குத் தரும் என்றது, இடவழுவமைதி யென்னலாம்; இது, கீழ்ப் புறங்கூறாமை என்ற அதிகாரத்தில் "அறங்கூறுமாக்கந்தரும்" என்றதன் விசேடவுரையில் விவரிக்கப்பட்டது.

(ச)

உஅரு. அருள்கருதி யன்புடைய ராதல்
பொருள்கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(இ - ள்.) அருள் கருதி - அருளினது உயர்ச்சியை அறிந்து, அன்பு உடையர் ஆதல் - (அதன்மேல்) அன்புடையராய் ஒழுகுதல்,—பொருள் கருதி பொச்சாப்பு பார்ப்பார்கண் இல் - பிறர்பொருளை (வஞ்சித்துக்கொள்ள)க்கருதி (அவரது) சோர்வுபார்ப்பார்மாட்டு உண்டாகாது; (எ - று.)

தமக்குஉரியபொருளையும் அதனதுகுற்றம்நோக்கித் துறந்துபோந்தவர் பின் பிறர்க்குஉரியபொருளை நன்குமதித்து அதனைவஞ்சித்துக்கோடற்குஅவரதுசோர்வுபார்க்கும் மருட்கிய ராதல், அவர்மாட்டு, உயிர்கள்மேல் அருள் செய்தல் நமக்குஉறுதி யென்றுஅறிந்து

அவ்வருளின் வழுவாது ஒழுகுந் தெருட்சி கூடாதென்பதாம்.

(கு - ரை.) உயர்ச்சி - மேன்மை. அதன்மேல் - அருளின்மேல். சோர்வு - மறந்திருக்குஞ் சமயம். பார்ப்பார் - எதிர்பார்ப்பவர்கள். அதனதுகுற்றம் - நிலையாமை, ஈட்டுதல்முதலியதொழில்களினல் துன்பமுடைமை முதலிய அந்தச்செல்வத்தினிடமுள்ள குறைகள். மருட்சியர் - அறிவு மயக்கமுடையவர். வழுவாது - நீங்காமல். தெருட்சி - தெளிந்த அறிவு. பொச்சாப்பு என்னுந் தொழிற்பெயரில், பொச்சா - பகுதி, பு - விகுதி. (ரு)

உஅசு. அளவின்கணின்றொழுக லாற்றார்
கன்றிய காத லவர்.

களவின்கட்

---

* பி - ம்: கன்றுதலான். (ஆசை) அதிகப்படுதலினல் என்று இதன் பொருள்.

உகூ - ஆம் அதிகாரம்—கள்ளாமை

கககூ

(இ - ள்.) அளவின்கண் நின்று - (உயிர்முதலியவற்றை) அளத்தலாகிய நெறியின்கணின்று, ஒழுகல் ஆற்றார் - (அதற்குஏற்ப) ஒழுகமாட்டார், களவின்கண் கன்றிய காதலவர் - களவின்கண்ணே மிக்க வேட்கையை யுடையார்; (எ - று.)

உயிர்முதலியவற்றை அளத்தலாவது - காட்சிமுதலாகச் சொல்லப்பட்ட அளவைகளான், உயிர்ப்பொருளையும், அதற்கு அனாதியாய்வருகின்ற நல்வினை தீவினைக் குற்ற விளைவுகளையும், அவற்றான் அது

நாற்கதியுட் பிறந்து இறந்து * வருந்தலையும், அதுசெய்யாமல் அவற்றைக்கெடுத்தற்கு உபாயமாகிய யோகஞானங்களையும், அவற்றான் அஃது எய்தும் வீட்டினையும் அளந்து உள்ளவாறு அறிதல்; ‡ இதனை ஆருகதர் 'தருமத்தியானம்' என்ப. அதற்குஏற்பஒழுகுதலாவது - அவ்வளக்கப்பட்டனவற்றுள் தீயனவற்றின் நீங்கி நல்லனவற்றின்வழி நிற்றல்.

(கு - ரை.) அளத்தல் - ஆராய்ந்துவரையறுத்துஅறிதல். நெறியின் கண் - ஞானவழியில். அதற்குஏற்ப - ஞானநெறிக்குப் பொருந்த. ஒழுகல் - நடத்தல். அளவைகளான் - பிரமாணங்களைக்கொண்டு. உயிர்ப்பொருளையும் - ஆத்மாவாகியபதார்த்தத்தையும். நல்வினை தீவினைக் குற்றவிளைவுபுண்ணியபாவங்களாகிய கொடிய கருமங்களின் நிகழ்ச்சி; நல்வினை தீவினைக்கு உற்ற விளைவு என்றும் பிரிப்பர். அது - அவ்வுயிர். நாற்கதி - மக்கள், தேவர், நரகர், விலங்கு என்னும் நால்வகைப்பிறப்புக்கள். எழுவகைப் பிறப்புக்களுள் ஒழிந்த மூன்றும் விலங்குகதியில் அடங்குமென அறிக. அது செய்யாமல் - பிறந்திறந்துவருந்தாமல். அவற்றை - கருமங்களை. யோகம் - யமம் நியமம் முதலிய எட்டு உறுப்புக்களோடு கூடிய தவம். அவற்றான் - யோகஞானங்களால். அஃது - உயிர். எய்தும் - அடையும். ஆருகதர் - அருகனைத்தெய்வமாகக்கொண்டமதத்திலிருப்பவர்; சமணர்: ஜைநர். என்ப - என்று சொல்வர். களவிற் கருத்துடைய துறவறத்தார் ஞானநெறியிலொழுகாரென்பது இதன்கருத்து.

உஅஎ. களவென்னுங் காரறி வாண்மை
யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

(இ - ள்.) களவு என்னும்-களவு என்று சொல்லப்படுகின்ற, கார் அறிவு ஆண்மை - இருண்ட அறிவினை யுடையராதல்,—அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் இல்-(உயிர் முதலியவற்றை) அளத்தலென்னும் பெருமையை விரும்பினோர்கண் இல்லை; (எ - று.)

இருள் - மயக்கம். காரியத்தைக் காரணமாக உபசரித்து 'களவென்னுங் காரறிவாண்மை' என்றும், காரணத்தைக் காரிய மாக்கி 'அளவென்னு மாற்றல்' என்றுங் கூறினார்.

களவும் துறவும் இருளும்ஒளியும்போலத் தம்முள் மாறுகலின் ஒருங்கு நில்லா என்பது, இவைமூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.

* பி-ம்: வருதல். ‡ 'இதனை ஆருகதர் தருமத்தியானமென்ப' என்ற இவ்வாக்கியம், சிலஏட்டுப்பிரதிகளி லில்லை.



(கு - ரை.) காரறிவாண்மை - அஜ்ஞானத்தை ஆளுகை. ஆண்மை - ஆளுந்தன்மை. அளத்த லென்னும் பெருமை - ஆராய்தலென்கிற வல்லமை. 'களவென்னுங் காரறிவு' என்றதில், காரறிவு - காரணம்: களவு - காரியம்; அளவென்னு மாற்றல் என்றதில், அளவு - காரணம்; ஆற்றல் - காரியம்:

எவ்வாறெனில், காரறிவினாற் களவுசெய்தலும், அளத்தலினாற் பெருமையுண்டாதலுங் கூடுதலா லென்க. களவுக்குக்காரணமான காரறிவாண்மையைக் களவென்னுங்காரறிவாண்மை யென்றும், அளத்தலினாலாகிய ஆற்றலை அளவென்னுமாற்ற லென்றுங் கூறியது, உபசாரவழக்கு. தம்முள் மாறு - தமக்குள் விரோதி. ஒருங்குநில்லா - ஓரிடத்திற் சேர்ந்துநிற்கமாட்டா. (எ)

உஅஅ. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

(இ - ள்.) அளவு அறிந்தார் நெஞ்சத்து - அவ் வளத்தலையே பயின்றவர் நெஞ்சத்து, அறம் போல - அறம் (நிலைபெற்றாற்) போல, நிற்கும் - நிலைபெறும்: களவு அறிந்தார் நெஞ்சில் - களவையே பயின்றவர் நெஞ்சத்து, கரவு - வஞ்சனை; (எ - று.)

உயிர்முதலியவற்றை அளந்து அறிந்தார்க்குத் துறவறஞ் சலியாதுநிற்கு மென்பது இவ்வுவமையாற் பெற்றாம்.

களவோடு மாறின்றி நிற்பது, இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) அவ்வளத்தலையேபயின்றவர்நெஞ்சத்து - தத்துவஆராய்ச்சியையே பழகியவரது மனத்தில். அறம் - துறவறம். சலியாது - அசையாமல்; மாறுபடாமல். இவ்வுவமையால் - அறம்போல என்ற உவமையால். மாறின்றி

நிற்பது - வேறுபடாமற் கூடியிருப்பது; அது, வஞ்சனை. உவமையணி. (அ)

உஅசு. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்:

(இ - ள்.) அளவு அல்ல-அவ் வள வல்லாத தீய நினைவுகளை, *செய்து-நினைத்து, ஆங்கே - அப்பொழுதே, வீவர் - கெடுவர்: களவு அல்ல மற்றைய தேற்றாதவர் - களவல்லாத பிறவற்றை அறியாதவர்; (எ - று.)

தீய நினைவுக ளாவன - பொருளுடையாரை வஞ்சிக்குமாறும், அவ்வஞ் சனையால் அது கொள்ளுமாறும், கொண்டவதனால் தாம் புலன்களை நுகருமாறும் முதலாயின. நினைத்தலும் செய்த லாகலின் 'செய்து' என்றும், அஃது உள்ள அறங்களைப்போக்கிக் கரந்த சொற்செயல்களைப் புகுவித்து அப் பொழுதே கெடுக்கு மாகலின் 'ஆங்கேவீவர்' என்றுங் கூறினார். மற்றைய வாவன - துறந்தார்க்கு உணவாக ஓதப்பட்ட காய் கனி கிழங்கு சருகு முதலாயினவும் இல்வாழ்வார்செய்யுந் தானங்களுமாம். தேற்றாமை-அவற்றையே நுகர்ந்து அவ்வளவால் நிறைந்திருத்தலை அறியாமை.

---

* செய்தாங்கேஎன்பதற்கு, நினைத்தபொழுதேஎன்று ஒருபிரதியிலுரை

காண்கின்றது.

உகூ - ஆம் அதிகாரம்—கள்ளாமை உ0க

இதனுன், கள்வார் கெடுமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) அவ்வளவல்லாத - காட்சிமுதலியஅளவைகளான் உயிர்முதலியவற்றை ஆராய்ந்து உள்ளவாறுஅறிதலை ஒழிந்த. பிறவற்றை - மற்றை நல்வழிகளை. அது - அப்பொருளை. கொண்டவதனுல் தாம் புலன்களை நுகருமாறும் - அப்படிக் கொள்ளையிடப்பட்டபொருளினுல் தாம் பஞ்சேந்திரியவிஷயசுகங்களை அனுபவிக்கும் விதமும். நினைத்தலென்பது சிறப்புவினையும் செய்தலென்பது பொதுவினையுமாதல்பற்றி நினைத்தலிலும் செய்தலுள்ளதனுல், 'நினைத்தலும் செய்தலாகலின்' என்ருர்: இனி, நினைத்தலும் செய்தலாகலின் என்பதற்கு - நினைத்தலும் செய்தலோடொக்குமாகலின் என்று பொருள் விரிப்பாருமுளர். அஃது-அந்தத்தீயநினைப்பு. கரந்த சொற்செயல்களைப் புகுவித்து - வஞ்சனையான சொல்லையுந் தொழிலையும் உண்டாகச்செய்து. கெடுக்கும் - அந்நினைவுடையாரை அழிக்கும்.

அவற்றையே நுக
ர்ந்து - காய்கனிமுதலியவற்றையேஉண்டு. அவ்வளவால் -
காட்சிமுதலியன
கொண்டு உயிர்முதலியவற்றை ஆராய்ந்தறிதலாகிய
நல்வழியால்: அம்மாத்
திரத்தால் என்றலுமுண்டு நிறைந்திருத்தல் -
திருப்தியடைந்திருத்தல்.
கள்வார் - திருடுபவர். களவல்ல மற்றைய தேற்றாதவர் -
களவொன்றையே
அறிந்தவ ரென்றபடி. அளவல்ல என்றது -
அக்களவின் உபாயம் வழி
பலன் முதலிய வகைகளை. ஆங்கே என்ற ஏகாரம்,
தவறாமல் வீவரென்பதை
விளக்கிற்று. அல்ல என்னுஞ்சொல் இரண்டனுள்,
முன்னது - வினையா
லணையும்பெயர்; பின்னதைக் குறிப்புப்
பெயரெச்சமாகவேனும், வினையா
லணையும்பெயராகவேனுங் கொள்ளலாம்.

(௯)

௨௯0. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை
தள்ளாது புத்தே ளுலகு.

கள்ளார்க்குத்

(இ - ள்.) கள்வார்க்கு-களவினைப் பயில்வார்க்கு,
உயிர்நிலை - (தம்மின்

வேறல்லாத)உடம்பும், தள்ளும் - தவறும்; கள்ளார்க்கு - அதுசெய்யாதார்க்கு,
புத்தேள் உலகு - (நெடுஞ்சேணதாகிய) புத்தேளுலகும், தள்ளாது - தவறாது.
உயிர் நிற்றற்கு இடனாகலின், 'உயிர்நிலை' எனப்பட்டது. சிறப்பு உம்
மைகள் இரண்டும், விகாரத்தால் தொக்கன. இம்மையினும் அரசனால் ஒறு
க்கப்படுதலின் 'உயிர்நிலையுந் தள்ளும்' என்றும், மறுமையினும் தேவராதல்
கூடுதலின் 'புத்தேளுலகுந் தள்ளாது' என்றுங் கூறினார். "மற்றது, தள்ளி
னுந் தள்ளாமை நீர்த்து" என்புழியும் தள்ளுதல் இப்பொருட்டாதல் அறிக.
இதற்குப் பிறவாறு உரைப்பாருமுளர்.
இதனான், இருவர்பயனும் ஒருங்கு கூறப்பட்டது.
(கு - ரை.) களவினைப்பயிலும் அஜ்ஞானிகட்கு ஆன்மா வேறு உடல்
வேறு என்கிற உணர்ச்சி யில்லாமையால், 'தம்மின்வேறல்லாத உடம்பும்'
என்றார். தவறும் - பயனின்றிஒழியும். அது - களவு. நெடுஞ்சேணதாகிய -
(தம்மின்வேறுபட்டு) வெகுதூரத்திலிருக்கிற. புத்தேளுலகு - தேவலோகம்.
உயிர்நிலை - உடம்பு. சிறப்பு உம்மைகள் - உயிர்நிலையும்,

புத்தேளுலகும் என
26



முறையே இழிவுஉயர்வுசிறப்புப்பொருள்களைத் தரும் உம்மைகள். அவை தொக்கது, செய்யுள்விகாரம். இம்மையினும் - இப்பிறப்பிலும். ஒறுக்கப் படுதலின் - தண்டிக்கப்படுதலால். "மற்றது" என்னும் மேற்கோள் - இந் நூலின் அறுபதாம்அதிகாரத்தில் ஆறும்பாட்டி

லுள்ளது; உயர்ச்சி (விதி வசத்தால் கைகூடாமல்) தவறிப்போனாலும், (அவ்வுயர்ச்சியைப் பெறவேண்டு மென்னும் எண்ணம்) தவறாமைத்தன்மையுடையது என்று பொருள். என்

புழியும் - என்னுமிடத்தும்.
இப்பொருட்டு - தவறுதலென்னும் இப்பொருளை யுடையது. இருவர்பயன் - கள்வாரது பயனும், கள்ளாதவரது பயனும். களவுசெய்யக்கருதுபவர் இம்மையில் இராசதண்டனையையும் மறுமையில் நரகவேதனையையும் பெறுவர்; கள்ளாதவர் அவற்றைப்பெறாமல் இராசமரியாதை யையும் சுவர்க்க வின்பத்தையும் பெறுவரென்பது இதன் கருத்து. 'கள்வார்க் குத் தள்ளும் உயிர்நிலை' என்றதனால் 'கள்ளார்க்கு உயிர்நிலை தள்ளாது'என்பதும், 'கள்ளார்க்குத் தள்ளாது புத்தேளுலகு' என்றதனால் 'கள்வார்க்குப் புத் தேளுலகு தள்ளும்' என்பதும் அருத்தாபத்திவகையால் அமைக்கப்பட்டன. 'இதற்குப் பிறவாறு உரைப்பாரு முளர்' என்றதனால், கள்வார்க்கு உயிர்நிலை தள்ளும் என்பதற்கு -

திருடுமவர்கட்குப் புகழுடம்பு விட்டுவிலகு மென்றும், திருடர்க்குப் பிராணாயாமமுதலிய யோகவுறுப்புக்கள் கைகூடாவென்றும், கள்ளர்க்கு இம்மையிற் சீவனம்மாத்திரமே இயலினும் இயலும் [மறுமை யின்பமோ இயலாது] என்றும், கள்ளார்க்குத் தள்ளாது புத்தேளுலகு என்பதற்கு - திருடாதவர்கட்குப் புண்ணியம் ஒழியாதாதலால் அவர்களைத் தேவலோகம் ஒருபொழுதும் நீக்காது என்றும் உரைகொள்ளலாம். (௩௦)

## ௩௦ - ஆம் அதிகாரம்—வாய்மை.

அஃதாவது-மெய்யினது தன்மை. பெரும்பான்மையும் காமமும் பொருளும்பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கவின், இது, கூடாவொழுக்கங் கள்ளாமைகளின் பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) வாய்மை-பண்புப்பெயர்: சத்தியம்.

நிகழ்வது-உண்டாவது. காமம்பற்றிய கூடாவொழுக்கமும் பொருள்பற்றிய களவும் ஆகிய இரண்டின் குற்றத்தையும் கூறியபின், அந்தக் காமம் பொருள் என்னும் இரண்டுபற்றியும் உண்டாகிற பொய்யின் குற்றத்தைக் கூறுவது அதிகாரமுறைமை.

உ௯௧. வாய்மை யெனப்படுவதி யாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

(இ - ள்.) வாய்மை எனப்படுவது யாது எனின் - மெய்ம்மை யென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்று வினவின், (அது),—தீமை யாது ஒன்றும் இலாத சொலல் - (பிறிதோருயிர்க்குத்) தீங்கு சிறிதும்பயவாத சொற்களைச் சொல்லுதல்; (எ - று.)

தீமை யாதொன்றும் இலாத என இயையும். 'எனப்படுவது' என்பது, "ஊரெனப்படுவது உறையூர்" என்றாற்போல நின்றது. இதனான், நிகழ்ந்தது



கூறலென்பது நீக்கப்பட்டது; அதுதானும், தீங்குபயவாதாயின் மெய்ம்மை யாம், பயப்பின் பொய்ம்மையா மென்பது கருத்து.

(கு - ரை.) வினவின் - கேள்விகேட்டால். பயவாத - தராத. நின்றதுசிறப்புத்தோன்றநின்றது. பயப்பின் - தீங்குவிளைத்தால். உள்ளதை உள்ள படி சொல்லுதல் மாத்திரமே மெய்ம்மையாகாது; பிறர்க்கு நன்மைபயக்கும் நிகழ்ந்ததுகூறலும் தீங்குதராத நிகழாததுகூறலுமே மெய்ம்மையா மென்ற படி. இலாத - பெயர். நிகழ்ந்ததுகூறல் - யதார்த்தவாதம். (க)

உகூஉ. பொய்ம்மையும் வாய்மை யிடத்த
நன்மை பயக்கு மெனின்.

புரைதீர்ந்த

(இ - ள்.) (பிறர்க்கு), புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின் - குற்றந் தீர்ந்த நன்மையைப் பயக்கு மாயின், பொய்ம்மைஉம் - பொய்ம்மைச் சொற் களும், வாய்மை இடத்த - மெய்ம்மைச்சொற்களின்பாலவாம்; (எ - று.)

குற்றந்தீர்ந்த நன்மை - அறம்.

அதனைப்பயத்தலாவது - கேடாதல் சாக்காடாதல் எய்த நின்றதோர் உயிர்*சொற்களின் பொய்ம்மையானே அதனின்நீங்கி இன்புறுதல். நிகழாததுகூறலும், நன்மை பயவாதாயிற் பொய்ம் மையாம், பயப்பின் மெய்ம்மையாம் என்பது கருத்து.

இவையிரண்டுபாட்டானும், 'தீங்குபயவாத நிகழ்ந்தது கூறலும்,நன்மை பயக்கும் நிகழாததுகூறலும்-மெய்ம்மை' எனவும், 'நன்மைபயவாத நிகழா
தது
றது

கூறலும், தீங்குபயக்கும் நிகழ்ந்ததுகூறலும்-பொய்ம்மை' எனவும் இலக்கணங் கூறப்பட்டது.

அவற்

(கு - ரை.)

குற்றந்தீர்ந்த நன்மையைப்பயக்கும்-பழிபாவங்களைத் தராத தருமத்தைக் கொடுக்கும். மெய்ம்மைச்சொற்களின்பால -

சத்தியவார்த்தைகளிற் சேர்ந்தன. கேடாதல் சாக்காடாதல் எய்தகின்றது-கெடுதியையாவது மரணத்தையாவது அடையகின்றதாகிய. அதனின் - அத்துன்பத்தினின்றும். நிகழாததுகூறல் - நடவாததைச்சொல்லுதல்.
நிகழாததுகூறுதல்மாத்திரமே பொய்ம்மையாகாது; பிறர்க்குத் தீமைபயக்கும் நிகழ்ந்தது கூறலும், நன்மைபயவாத நிகழாததுகூறலுமே பொய்ம்மையா மென்றபடி: இவற்றிற்கு மாறானவை மெய்ம்மையென்க. இங்ஙனங் கூறியது, 'மணங்கூட்டுவித்தல் முதலிய சில நன்மையின்பொருட்டுப் பொய்சொன்னாலுஞ் சொல்லலாம்' என்னும் நூற்றுணிபை யுட்கொண்டு. "மெய்ம்மையே யொருவர்க் குற்ற விபத்தினை மீட்கு மாயிற், பொய்ம்மையு மெய்ம்மை போலப் புண்ணியம் பயக்குமாதோ" என்னும் மகாபாரதத்தையும் அறிக. இறையனாரகப்பொருளுரையில் நக்கீரர், பழியும்பாவமும் பயவாத பொய் பொய் யாகா தென் பதற்கு இத்திருக்குறளையே மேற்கோளாகக் காட்டினர். பொய்ம்மையென்னும் பால்பகாவஃறிணைப்பெயர், 'இடத்த' கொண்டது.

என்னும் பலவின்பால்முற்றைக்

(உ)

உகூந. தன்னெஞ் சறிவது பொய்யற்க
றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

பொய்த்தபின்

* பி - ம்: அச்சொற்களின்.



(இ - ள்.) (ஒருவன்), தன் நெஞ்சு அறிவது - தன்நெஞ்சு அறிவது ஒன்றனை, பொய்யற்க - (பிறர் அறிந்திலரென்று) பொய்யாதொழிக; பொய்த்த பின் - பொய்த்தானாயின், தன் நெஞ்சுஏ-(அதனை அறிந்த) தன்நெஞ்சே, தன்னை சுடும்-(அப்பாவத்திற்குக் கரியாய்நின்று) தன்னை (அதன்பயனாய) துன்பத்தை எய்துவிக்கும்; (எ - று.)

நெஞ்சுகரியாதல் "கண்டவ ரில்லென வுலகத்து ளுணராதார், தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள், நெஞ்சறிந்த கொடியவை மறைப் பவு மறையாவாம், நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின்" என்பதனானும் அறிக.

பொய் மறையாமையின் அதுகூறலாகாதென்பது, இதனாற்கூறப்பட்டது.

(கு - ரை.) பொய்யாது - பொய்சொல்லாமல். பொய்த்தானாயின் பொய்சொன்னால். கரி - சாட்சி. எய்துவிக்கும் - அடையச்செய்யும். சுடும்வருத்து மென்றபடி. "கண்டவரில்லென" என்னும் மேற்கோள் - கலித் தொகை, நெய்தற்கலி, அ-ஆம் பாட்டிலுள்ளது; (இதற்குப்பொருள் ):—உண ராதார் -

அறியாதவர்கள்,—தங்காது - (தம்மனம் இது செய்யலாகாதென்று) மீளாதே, தகைவு இன்றி - வேறுவிலக்குவாருமில்லாமல், உலகத்துள் கண்டவர் இல் என - உலகத்திற் கண்டவர்களும் இல்லையென்று கருதி, தாம் செய்யும் - தாங்கள் செய்கிற, வினைகளுள் - தீவினைகளுள், நெஞ்சு அறிந்த கொடியவை - (தாம்) நெஞ்சறியவேசெய்த கொடிய தீவினைகளை, மறைப்ப உம் - (பின்பு பிறரறியாமல்) மறைத்தார்களாயினும், மறையா ஆம் - (அவை) மறையமாட்டாவாகும்: (ஏனெனின்),—நெஞ்சத்தின் குறுகிய கரி இல்லை - (தாம்செய்தமையை அறிந்திருக்கின்ற தம்முடைய) நெஞ்சத்திற்காட்டில் அணுகிய சாட்சி வேறு இல்லை, ஆகலின்-ஆகையினால்; (என்றவாறு.)'மறையா வாம்' என்றவிடத்து 'அறிபவர்' என்று கலித்தொகை நச்சினார்க்கினியருரை யின் பாடம். ஒருவன் தன் மனச்சாட்சிக்கு மாறாகப் பொய் கூறலாகாது; கூறினால், பின்பு தானே பச்சாத்தாபமடைதற்குக் காரணமாகுமென்பது கருத்து.

"தன்னைத் தானெஞ்சங்கரியாகத்தானடங்கின், பின்னைத் தானெய் தாப்பயனில்லை" என்றது, பழமொழி.

(ரு)

உகூச.

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

(இ - ள்.) (ஒருவன்), உள்ளத்தால் - (தன்) உள்ளத்திற்குஏற்ப, பொய் யாது - பொய்கூறாது, ஒழுகின் - ஒழுகுவானாயின், (அவன்),—உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் - உயர்ந்தோர் உள்ளத்தின்கணெல்லாம், உளன் - உளனாம்; (எ - று.)

'உள்ளத்தால்' என்பது,
லாவது-மெய்கூறி ஒழுகுதல்.

வேற்றுமைமயக்கம். பொய்கூறாது ஒழுகுத
அவனது அறத்தினது அருமைநோக்கி உயர்ந்
தோர் எப்பொழுதும் அவனையே நினைப்ப ரென்பதாம்.
இதனான், இம்மைப்பயன் கூறப்பட்டது.



(கு - ரை.) உள்ளம் - மனம். உள்ளத்தால் என்பதில், கருவிகருத்தாப்
பொருள்களில்
வருதற்குஉரிய'ஆல்'என்னும்மூன்றாம்வேற்றுமையுருபு,கொள்
ளுதற்பொருட்குரிய நான்காம்வேற்றுமையின் பொருளில் வந்ததனால், வேற்
றுமைமயக்கம். மெய்ம்மையே பேசுபவ ன்
உயர்ந்தோரெல்லாராலும் நன்கு

மதிக்கப்படுவானென்பது இதன்கருத்து. இம்மைப் பயன் - இம்மையிலடை
யும் பயன். 'உள்ளத்தாற் பொய்யாது' என்றதனால், துறவறத்தார்க்கு
வாய்மை பொய்சொல்லக்கருதாமை யென்று ஆகும். (௪)

உகூரு. மனத்தொடு வாய்மை மொழியிற்
தானஞ்செய் வாரிற் றலை.
றவத்தொடு

(இ - ள்.) மனத்தொடு வாய்மை மொழியின் - (ஒருவன் தன்)மனத்
தோடு (பொருந்த) வாய்மையைச் சொல்வானாயின், (அவன்),—தவத்தொடு
தானம் செய்வாரின் தலை - தவமுந் தானமும் (ஒருங்கு)செய்வாரினுஞ் சிறப்
புடையன்: (எ - று.)

மனத்தொடு பொருந்துதல் - மனத்திற்கு ஏறுதல். புறமாகிய மெய்
யாற் செய்யுமவற்றினும் அகமாகிய மனமொழிகளாற் செய்யுமது பயனுடை
த்து என்பதாம்.

(கு - ரை.) ஏறுதல்-ஒத்திருத்தல். புறமாகிய மெய்யால் செய்யுமவை -
வெளியாகிய உடம்பினாற்செய்யப்படுவனவாகிய தவமும் தானமும். அகமா
கிய - உள்ளுறுப்பாகிய. செய்யுமது-மெய்மையைப்

பொருந்தப் பேசுவது. அற வறத்திற்குச் சிறத்தலால் தவமும், இல்லறத்திற்குச் சிறத்தலால் தானமும் கூறினொன்று கொண்டு, மனப்பூர்வமாக மெய்யையே பேசுபவன் இல்லறத் தார் யாவரினும் துறவறத்தார் யாவரினும் உத்தம னென்பது கருத் தென் னலுமாம்.

(ரு) உகூசு.

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

(இ - ள்.) பொய்யாமை அன்ன புகழ் இல்லை - (ஒருவனுக்கு இம்மைக் குப்) பொய்யாமையை ஒத்த புகழ்க்காரணம் இல்லை; எய்யாமை எல்லா அறம் உம் தரும் - (மறுமைக்கு) மெய்வருந்தாமல் (அவனுக்கு) எல்லா அறங்களை யும் (தானே) கொடுக்கும்; (எ - று.)

புகழ் - ஈண்டு, ஆகுபெயர். இல்லறத்திற்குப் பொருள்கூட்டல் முதலி யவற்றானும், துறவறத்திற்கு உண்ணாமை முதலியவற்றானும் வருந்தல் வேண்டுமன்றே, அவ்வருத்தங்கள்புகுதாமல் அவ்விருவகைப்பயனையுந் தானே தரு மென்பார், 'எய்யாமை யெல்லாவறமுந் தரும்' என்றார்.

(கு - ரை.) புகழ்க்காரணம் - புகழுக்கு ஏது. புகழ் என்பது - அதன் ஏதுவாகிய பொய்பேசாமையைக் குறித்தலால், காரியவாகுபெயர். மெய் - உடம்பு. ஈண்டு - இங்கே. பொருள்கூட்டல் - திரவியசம்பாதனம். அன்றே - தேற்றம். பொய்யாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். எய்யாமை - எதிர் மறைவினையெச்சம். உம்மை - முற்றுப்பொருளது. இனி, "எய்யாமையே



அறியாமையே" என்று தொல்காப்பியனர் 'எய்யாமையென்னும் உரிச்சொல் அறியாமையையுணர்த்தும்' எனக் கூறியிருத்தலால், பொய்யாமையாகிய அறம் ஒன்றுதானே ஒருவனுக்கு மற்றைஅனைத்தறங்களின் பயனையும் எவரு மறியாதபடி தானே கொணர்ந்துகொடுக்கு மென்றுமாம். (ஈ)

உகூஎ. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(இ - ள்.) பொய்யாமை பொய்யாமை ஆற்றின் -

(ஒருவன்) பொய்யா

மையையே பொய்யாமையையே செய்யவல்லனாயின், பிற அறம் செய்யாமை

செய்யாமை நன்று - (அவன்) பிறஅறங்களைச் செய்யாமையே செய்யா

மையே நன்று; (எ - று.)

அடுக்கு இரண்டனுள், முதலது - இடைவிடாமைமேற்று; ஏனையது -

துணிவின் மேற்று. 'பல அறங்களையும் மேற்கொண்டு செய்தற்கு அருமை

யாற் சிலதவறிற் குற்றப்படுதலின், அவையெல்லாவற்றின்பயனையுந் தானே

தரவற்றாய இதனையே மேற்கொண்டு தவறாமற்செய்தல் நன்று' என்பார்,

'செய்யாமைசெய்யாமை நன்று' என்றார். இதனை இவ்வாறு அன்றி, 'பொய்

யாமையைப் பொய்யாமற்செய்யின் பிறஅறஞ்செய்கை நன்று' எனப்

பொழிப்பாக்கி, 'பொய்கூறிற் பிறஅறஞ்செய்கை நன்றாகாது' என்பது அத

னாற்போந்த பொருளாக்கி உரைப்பாருமுளர்.

பிறஅறங்களெல்லாந் தரும் பயனைத் தானேதரும் ஆற்றலுடைத்து என

மறுமைப்பயனது மிகுதி, இவைமூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) பொய்யாமை - பொய்கூறாமை.
முதலது - பொய்யாமை
பொய்யாமை என்றஅடுக்கு. மேற்று - அப்பொருளின்
மேலது· ஏனையது -
மற்றையது; செய்யாமைசெய்யாமை என்பது.
மேற்கொண்டு - செய்யத்
தலைப்பட்டு. தரவற்றாய - கொடுக்கவல்லதான. பொ
ய்யாமல் - தவறாமல்.
இரண்டாமுரைக்கு; செய்யாமை
செய்யாமை-செய்யாமையைச் செய்யாமை:
செய்தல் என்று பொருள்: இரண்டுஎதிர்மறை,
உடன்பாடுஉணர்த்தின.
பொழிப்பு - தொகுதிப்பொருள். போந்த - கிடைத்த.
(எ)

உகூஅ. புறந்தூய்மை நீரா னமையு
மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

(இ - ள்.) புறம் தூய்மை - (ஒருவனுக்கு) உடம்பு
தூய்தாந்தன்மை,
நீரான் அமையும் நீரானேஉண்டாம்: (அதுபோல), அகம்
தூய்மை - மனம்
தூய்தாந்தன்மை, வாய்மையான் காணப்படும்-வாய்மையான்
உண்டாம்; (எ - று).
காணப்படுவது உள்ளதாகலின், 'உண்டாம்' என்று
உரைக்கப்பட்டது.

உடம்பு தூய்தாதல் - வாலாமைநீங்குதல். மனம்தூய்தாதல் - மெய்யுணர்தல்.
புறந்தூய்மைக்கு நீரல்லது காரணம் இல்லாதாப்போல அகந்தூய்மைக்கு
வாய்மையல்லது காரணம் இல்லை * யென்பதாம்.
இதனானே, துறந்தார்க்கு
இரண்டுதூய்மையும் வேண்டு மென்பதூஉம் பெற்றாம்.

* பி - ம்: என்றவாறுயிற்று.

## ௩௦ - ஆம் அதிகாரம்—வாய்மை ௨௦௭

(கு - ரை.) தூய்தாந்தன்மை - பரிசுத்தமாகுதல்.
உள்ளதே காணப்படுவ
தன்றி இல்லாதது காணப்படாதாதலால்,
உளதாமென்னவேண்டியஇடத்துக்
காணப்படுமென்றார். வாலாமை - அசுத்தி; அழுக்கு. மனம் தூய்தாதல் - அறி
யாமை நீங்குதல். மெய்யுணர்தல் - தத்துவஞானம்.
இரண்டு தூய்மை-புறந்
தூய்மையும், அகந்தூய்மையும்.
எடுத்துக்காட்டுவமையணி. "சேய்மையண்
மையிலுயிர்க்கொருதுணை யெனச் சிறந்த, வாய்மையாலகந்தூய்மையா மற்றி
லைபுறத்தைத், தூய்மைசெய்வது நீரலாற்சொல்லின்
வேறுளதோ"என்று இச்
செய்யுளையொட்டிஅரிச்சந்திரபுராணச் செய்யுள்
வந்துள்ளது. (அ)

உகூகூ. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

(இ - ள்.) எல்லா விளக்குஉம் - (புறத்திருள்கடியும்) உலகத்தார்விளக்குக்களெல்லாம், விளக்கு அல்ல - விளக்காகா; சான்றோர்க்கு - (துறவான்) அமைந்தார்க்கு, விளக்கு - விளக்காவது,—பொய்யா விளக்குஏ - (மனத்து இருள்கடியும்) பொய்யாமையாகிய விளக்கே; (எ - று.)

உலகத்தார்விளக்காவன - ஞாயிறு, திங்கள், தீ என்பன. இவற்றிற்குப் போகாத இருள் போகலின், 'பொய்யாவிளக்கே விளக்கு' என்றார். அவ்விருளாவது - அறியாமை. 'பொய்யாதவிளக்கு' என்பது, குறைந்துநின்றது; பொய்கூறாமையாகிய விளக்கு என்றவாறு. இனி, இதற்கு - கல்வி முதலியவற்றான் வரும் விளக்கமெல்லாம் விளக்கமல்ல; அமைந்தார்க்கு விளக்கமாவது, பொய்யாமையான்வரும் * விளக்கமே என்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.) புறத்து இருள் கடியும் - வெளியிருளைப்போக்குகின்ற. உலகத்தார் விளக்குக்கள் -சூரியன், சந்திரன், அக்கினி

யென்னும் முச்சுடர்கள்;
பொருள்களை விளங்கச்செய்வதனால், விளக்கு என்று
பெயர். துறவான்
அமைந்தார் - துறவறவொழுக்கத்தான் மிக்கவர். மனத்து
இருள் - அஜ்ஞா
னம். ஞாயிறு - சூரியன். திங்கள் - சந்திரன்.
மனத்திருளை 'அவ்விருள்'
என்று சுட்டினார். பொய்யா-ஈறுகெட்ட
எதிர்மறைப்பெயரெச்சம். விளக்கம்-
ஒளி, புகழ், தெளிவு. வீரசோழியவுரையில்,
இடையினவெதுகைக்கு இக்
குறள் உதாரணம்.
(கூ)
௩௦௦. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை
யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.
(இ - ள்.) யாம் மெய் ஆ கண்டவற்றுள் - யாம்
மெய்ந்நூல்களாகக் கண்ட நூல்களுள், எனைத்து ஒன்றும் -
யாதொருதன்மையானும், வாய்மை
யின் நல்ல பிற - வாய்மையின்
மிக்கனவாகச்சொல்லப்பட்ட பிற அறங்கள்,
இல்லை—; (எ - று.)
மெய் உணர்த்துவனவற்றை 'மெய்' என்றார்.
அவையாவன - தங்கண் மயக்கமின்மையின் பொருள்களை
உள்ளவாறுஉணரவல்லராய்க் காம வெகு

ளிகளின்மையின் அவற்றை உணர்ந்தவாறே உரைக்கவும்வல்லராய இறைவர்

* பி - ம்: விளக்கமே விளக்கம்.



அருளான் உலகத்தார் உறுதியெய்துதற்பொருட்டுக் கூறிய ஆகமங்கள். அவையெல்லாவற்றினும் இஃது ஒப்பமுடிந்தது என்பதாம்.

இவை மூன்றுபாட்டானும், இவ்வறத்தினது தலைமை கூறப்பட்டது.

(கு - ரை.) தத்துவமுணர்த்தும் நூல்களை 'மெய்' என்றது, காரியவாகு பெயர். அவற்றை உணர்ந்தவாறே உரைக்கவும் வல்லராய்என்றஇடத்து,

நீத்தார்பெருமையென்ற அதிகாரத்திலே 'அவ்வறமுதற்பொருளை உள்ளவாறுணர்த்துவார் அவராகலின்' என்று பரிமேலழகருரைத்தது காணத்தக்கது. இறைவர் - கடவுள்போல்வார்: தத்துவஞானிகள். உறுதியெய்துதற்பொருட்டு - நன்மைபெறும்பொருட்டு. அவை எல்லாவற்றினும் இஃது ஒப்ப முடிந்தது - அந்த ஆகமங்களெல்லாவற்றிலும் வாய்மையே மிக்கநலமுடையதென்பது ஒத்திருந்தது. இவ்வறம் - மெய்ம்மை. தலைமை - உயர்வு. (கO)

---

## ௩௧ - ஆம்

## அதிகாரம்—வெகுளாமை.

அஃதாவது - சினத்தைச்செய்தற்குக்காரணம்

ஒருவன்மாட்டு உளதாய விடத்தும் அதனைச் செய்யாமை. இது, *பொய்ம்மை முதலியனபற்றி நிகழ்வ தாய வெகுளியை விலக்கலின், வாய்மையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.)

சினம் - கோபம்.

வெகுளாமை - கோபியாமை; எதிர்மறைத்தொழிற்பெயர்.

அதனை - கோபத்தை. பொய்ம்மைமுதலியனபற்றி நிகழ் வதாய வெகுளியை விலக்கலின் - பிறரிடத்துப் பொய் முதலிய குற்றங்க ளைக் கண்டபொழுது அவைகாரணமாக அவர்மேலுண்டாகும் கோபத்தை நீக்கவேண்டுமென்று கூறுதலால். இது - இவ்வதிகாரம். பிறனொருவன் சத் தியம் முதலிய விரதங்களைத் தவறக் கண்டாலும் அக்குற்றங்காரணமாக அவன்மேற் கோபித்து அதனால் தனது சாந்தகுணத்தைத் தவிரக்கூடா தென்பதற்கு, இவ்வதிகாரம் வாய்மையின்பின் வைக்கப்பட்டதென்க.இங்கே வெகுளாமை என்பதற்கு - கோபங்கொள்ளக்கருதாமையென்றுபொருள் கொள்க; மேலதிகாரங்களாகிய 'இன்னாசெய்யாமை', 'கொல்லாமை' என்ப வற்றிற்கும் - துன்பந்தருங்காரியங்களைச் செய்யக்கருதாமை, கொல்லக்கரு தாமை என்றே பொருள். கள்ளாமை என்னும் அதிகாரத்தில் அதன் பொருளை விவரிக்குமிடத்துப் பரிமேலழகர் கூறியிருப்பது காண்க. களவு, பொய்பேசுதல், வெகுளுதல், கொடுந்தொழில், கொல்லுதல் என்னும் இவற் றைச்செய்தவிடத்தே இல்லறத்தார்க்குக் குற்றமுண்டாம்: துறவறத்தார்க்கோ இவற்றை நினைத்தமாத்திரத்திலும் பெருங்குற்றம் நேரும்; அதனால், கள்ளா மை முதலிய இவ்வதிகாரங்கள் இல்லறவியலில் வைக்கப்படாமல் துறவறவிய லில் வைக்கப்பட்டன வென்க. இதனால், கீழ் இல்லறவியலிற்

து றவ் றவிய
கூறப்பட்ட
'பொறையுடைமை' என்னும் அதிகாரத்தோடு,
இவ்வதிகாரத்துக்கு, கோபஞ் செய்யாமையும் சினத்தையே
அடியோடு நினையாமையுமாகிய பொருள்வேறு பாடு காண்க.
கீழ் 'அறன்வலியுறுத்தல்' என்னும்அதிகாரத்தில் "அழுக்கா

* பி - ம்: பொய்ம்மைபற்றி.

ருக - ஆம் அதிகாரம்—வெகுளாமை

உ0கூ

றவா வெகுளி யின்னுச்சொல் நான்கும்,
இழுக்காவியன்ற தறம்" என்ற
தனுல், இருவகையறத்திற்கும் பொதுப்பட வெகுளி
பெருங்குற்றமாத லறிக.

ருOக. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா
னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்.

(இ - ள்.) சினம் செல் இடத்து காப்பான் - (தன்)
சினம் பலிக்கு மிட
த்து (அதனை எழாமல்) தடுப்பானே,—காப்பான்-(அருளால்)
தடுப்பாளுவான்;
அல் இடத்து - (அஃது) பலியாதவிடத்து, காக்கின் என்
- (அதனைத்) தடு
த்தாலென்? காவாக்கால் என் - தடாதொழிந்தாலென்? (எ

- று.)

'செல்விடம்', 'அல்விடம்' என்றது - தவத்தால் தன்னின்மெலியாரை
யும், வலியாரையும். 'வலியார்மேற் காவாவழியும் அதனான் அவர்க்கு வருவ
தோர்தீங்கு இன்மையின், காத்தவழியும் அறனில்லை' என்பார், 'காக்கி
னென் காவாக்காலென்' என்றார்.

இதனான், வெகுளாமைக்கு இடம் கூறப்பட்டது.

(கு - ரை.) எழாமல் - உண்டாகவொட்டாமல். ஏனை - மற்றை. செல்
விடம் - எதிர்காலங்கருதிய வினைத்தொகை. காப்பான் என்னும் வினையா
லணையும்பெயர் இரண்டனுள், முன்னது - எழுவாய்; பின்னது - பயனிலை.
அல்விடம் - பண்புத்தொகை. முன் 'செல்விடம்' என வந்ததனால், அல்வி
டம் - செல்லுதலல்லாதவிட மென்றபடி. 'காக்கினென் காவாக்காலென்'
என்பதிலுள்ள 'என்' என்னும் பயனிலைகளுக்கு, முறையே, வருவதோர்அற
மும், வருவதொருதீங்கும் என எழுவாய் வருவிக்க.

(க)

௩௦௨. செல்லா விடத்துச் சினந்தீது

செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.
(இ - ள்.) சினம் - (ஒருவன்) வெகுளி, செல்லா இடத்து - தன்னின்
வலியார்மேல், (எழின்), தீது-(தனக்கே) தீதாம்; செல் இடத்துஉம்-(மற்றை)
எளியார்மேல் எழினும், அதனின் தீய பிற இல் - அதனின் தீயன பிறஇல்லை.

செல்லாவிடத்துச் சினம் பயப்பது இம்மைக்கண் அவரான்வரும் ஏதமே:
ஏனையது இம்மைக்கட்பழியும் மறுமைக்கட் பாவமும் பயத்தலின், 'அத
னிற்றீயனபிறஇல்லை' என்றார். ஓரிடத்தும் ஆகாது என்பதாம்.

(கு - ரை.) தீதாம் - கொடியபயனை விளைப்பதாம். இம்மைக்கண் -
இப்பிறப்பில். அவர் - தன்னின் வலியார். ஏதம் - தண்டனைமுதலிய துன்பம். ஏனையது - மற்றது;
மெலியாரிடத்துச்செய்த கோபம். மறுமைக்கட் பாவமும்பயத்தலின் - இவ்வுடம்புநீங்கினபின்வரும்நிலையில் அனுபவிக்கு
மாறு பாவத்தையுந் தருதலால். செல்லிடத்தும், உம்மை - இறந்தது தழுவிய
எச்சப்பொருளது. இல்என்னும்பயனிலைக்குத் தீயஎன்பது

- எழுவாய்; பிற
என்பதுஎழுவாய்எனின், தீயஎன்பதைப்
பெயரெச்சமாக்கொள்ளலாம். (உ)

௩0௩. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.





(இ-ள்.) யார்மாட்டுஉம்-யாவர்மாட்டும், வெகுளியை
மறத்தல்-வெகுளி
யை ஒழிக: (ஒருவனுக்கு), தீய பிறத்தல் - தீயன
(எல்லாம்) உளவாதல்,
அதனான் வரும்—: (ஆகலான்); (எ - று.)

வலியார், ஒப்பார், எளியார் என்னும் மூவர்மாட்டும்
ஆகாமையின் 'யார்
மாட்டும்' என்றும், மனத்தால் துறந்தார்க்கு
ஆகாதனவாகிய தீச்சிந்தைக
ளெல்லாவற்றையும் பிறப்பித்தலின் 'தீயபிறத்தல்
அதனான் வரும்' என்றுங்
கூறினார்.

(கு - ரை.) யாவர்மாட்டும் - எல்லோரிடத்தும்.
மறத்தல் - நினையா
தொழிக; 'தல்'விகுதிபெற்ற வியங்கோள். அதனான் -
அக்கோபங்காரண

மாக. மூவர்மாட்டும் - முத்திறத்தாரிடத்தும். இச்சை - நினைப்பு. "பெரிய
வர்தம்மைக்காய்ந்தான் பிறங்கல்கல்லியகோவொப்பான்,
புரிவனபுரியப்பட்டு
ப்புலம்புவன் ஒத்தார்க்காய்ந்தான்,
எரிநரகத்தில்வீழ்வன் இழிந்தவர்க்
காய்ந்தானென்றால், ஒருவர்தம்மிடத்துஞ்
சிற்றமுறுமையே நன்றுமாதோ"
என்பதனால், வலியார் ஒப்பார் எளியார்
என்னும் மூவரிடத்துஞ் செய்யுங்
கோபத்தா லுண்டாகும் பலன்களை அறிக.
நியம் காரணம்.
முன்வாக்கியத்துக்குப் பின்வாக்

(ஈ)

ஈ0௪. நகையு முவகையுங் கொல்லுஞ்
பகையு முளவோ பிற.

சினத்திற்

(இ - ள்.) (துறந்தார்க்கு), நகைஉம் உவகைஉம்
கொல்லும் சினத்தின்-
(அருளான்உளவாய முகத்தின்கண்) நகையையும்
(மனத்தின்கண்) உவகை
யையும் கொன்றுகொண்டெழுகின்ற சினமேயல்லது,
பிற பகைஉம் உள

ஓ - (அதனிற்) பிறவாய பகைகளும் உளவோ? [இல்லை]; (எ - று.)

துறவால் புறப்பகையிலராயினும் உட்பகையாய்நின்று அருள்முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித்துன்பமும் எய்துவித்தலான், அவர்க்குச் சினத்தின்மிக்க பகை இல்லையாயிற்று.

இவைமூன்றுபாட்டானும், வெகுளியது தீங்கு கூறப்பட்டது.

(கு - ரை.) உளவாய - உள்ளனவான. முகத்தின்கண் நகை-முகமலர்ச்சி. உவகை - மகிழ்ச்சி. கொன்றுகொண்டு - அழித்துக்கொண்டு. புறப்பகை- வெளியேசூழ்ந்துநிற்கும்பகைவர். காமம், கோபம் முதலிய ஆறுதீக்குணங்களும் உட்பகையெனப்படும். உட்பகை - மனத்திலிகழுங் கொடுங்குணம். நட்பு - சினேககுணம். எய்துவித்தல் - அடைவித்தல். பகையுமுளவோ, உம்மை - இழிவுசிறப்பு. ஓ - எதிர்மறை. (சு).

ருO௫. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க
றன்னையே கொல்லுஞ் சினம்.

காவாக்காற்

(இ - ள்.) தன்னை தான் காக்கின்-தன்னைத் தான் (துன்பம்எய்தாமல்) காக்கநினைத்தானாயின், சினம் காக்க - (தன்மனத்துச்) சினம் (வாராமல்) காக்க; காவாக்கால் - காவானாயின், சினம் - அச்சினம், தன்னை கொல்லும் - தன்னையேகெடுக்குங் கடுந்துன்பங்களை எய்துவிக்கும்; (எ - று.)

ந௩க - ஆம் அதிகாரம் —வெகுளாமை

௨கக்

வேண்டிய வேண்டியாங்குஎய்தற்பயத்ததாய தவத்தைப் பிறர்மேற்சாபம் விடுதற்காக இழந்து அத்தவத்துன்பத்தோடு பழைய பிறவித்துன்பமும் ஒருங்கு எய்துதலின், 'தன்னையே கொல்லும்' என்றார். "கொல்லச் சுரப்பதாங் கீழ்" என்புழிப்போல, கொலைச்சொல்-ஈண்டு, துன்பமிகுதிஉணர்த்திநின்றது.

(கு - ரை.) எய்தாமல் - அடையாமல். காக்க - காக்கக்கடவன்; வியங் கோள் வினைமுற்று. "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப்படும்" என்றார், கீழ் 'தவம்' என்னும் அதிகாரத்தில்: "ஆக்கமுந் திற லுஞ்சீரு மாயுவு நலனு மேலா, மூக்கமும் வீடு மெல்லாந் தவத்தின தாற்ற மன்றே" என்பது கந்தபுராணம். கோபங்கொண்டு சாபங்கொடுத்தால் செய்த தவம் அழிந்துபோ மென்பது நூற்றுணிபு: " தீபமொத்தொளிர் தபோதனர்களுஞ் சினமெனும், பாவமுற்றயலுளோர் பதைபதைத்துயிரிறச், சாபமிட்டனையர் தம்தவமும் விட்டிடுவரே" என்ற பிரபோதசந்திரோதயம் இங்குக் காணத்தக்கது. 'அத்தவத்துன்பம் எய்துதலின்' என்றது, தவஞ் செய்கையில் பசிமுதலியவற்றைப் பொறுத்து அடைந்த துன்பமெல்லாம் வீணாதலின். 'பழையபிறவித்துன்பமும் எய்துதலின்' என்றது, பிறவித் துன்பத்தை யொழிக்கக்கூடிய தவத்தைப் பிறன்மேற்சாபமிட்டதனால் இழந்துவிடவே, அப்பிறப்புத்துன்பம் ஒழிக்கப்படாமையின். ஒருங்கு - ஒரு

சேர. ''கொல்லச்சுரப்பதாங்கீழ்'' என்பது - நாலடியாரில் ஈயாமைஎன்ற அதிகாரத்தில் ''இரவலர்கன்றாக'' என்ற செய்யுளில் உள்ளது: தன்னை மிகவுந்துன்பப்படுத்தப் பயன்தருவது கீழ்மக்களின்தன்மையாமென்பது, இம்மேற்கோளின் பொருள். தன்னையே - சினத்தைச்செய்த தன்னையே; ஏ- உயர்வுசிறப்பு.

(௫)

௩0௬. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு

மேமப் புணையைச் சுடும்.

(இ - ள்.) சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி-சினமென்னும் நெரு ப்பு, இனம் என்னும் ஏமம் புணையை சுடும் - (தனக்குஇடமானவரையே யன்றி) அவர்க்கு இனமாகிய ஏமப்புணையையுஞ் சுடும்; (எ - று.)

'சேர்ந்தாரைக்கொல் லி' என்பது - ஏதுப்பெயர்; தான் சேர்ந்தவிடத் தைக் கொல்லுந்தொழிலது என்றவாறு. 'சேர்ந்தாரை' என உயர்திணைப் பன்மைமேல்வைத்து, ஏனைநான்குபாலும் தம்கருத்தோடுகூடிய பொரு ளாற்றலாற் கொண்டார்; ஈண்டு உருவகஞ்செய்கின்றது துறந்தார்சினத் தையேயாகலின். 'சினமென்னும்நெருப்பு' என்ற விதப்பு - 'உலகத்து நெரு ப்புச் சுடுவது தான் சேர்ந்த இடத்தையே: இந்நெருப்புச் சேராத இடத்தை யுஞ் சுடும்'என்னும் வேற்றுமை தோன்ற நின்றது. ஈண்டு 'இனம்' என்றதுமுற்றத் துறந்து தவஞானங்களாற் பெரியராய்க்

கேட்டார்க்கு உறுதிபயக்கும் மொழிகளை இனியவாகச்சொல்லுவாரை. உருவகம் நோக்கி 'சுடும்' என்னுந் தொழில் கொடுத்தாராயினும், 'அகற்றும்' என்பது பொருளாகக் கொள்க. ஏமப்புணை-ஏமத்தையுபதேசிக்கும் புணை. 'இனமென்னு மேமப்புணை' என்ற உகஉ

திருக்குறள்

ஏகதேச வுருவகத்தால், 'பிறவிக்கடலுளழுந்தாமல் வீடென்னுங்கரை ஏற்றுகின்ற' என வருவித்து உரைக்க. எச்ச வும்மை, விகாரத்தால் தொக்கது; தன்னையும் வீழ்த்து எடுப்பாரையும் அகற்றும் என்பதாம்.

(கு - ரை.) இடமானவரையேயன்றி - தனக்குஆதாரமாக இருப்பவரான கோபங்கொண்டவரை(ச் சுடுவது)மாத்திரமே யல்லாமல். இனம் - சுற்றவருக்கம். ஏமப்புணை - இரட்சகத்தோணி. சேர்ந்தாரைக்கொல்லி என் பது-'ஆஸ்ரயாஸன்' என்னும் (அக்கினியின்) வடமொழிப்பெயரின் பொருள் கொண்டது. ஏதுப்பெயர் - காரணம்பற்றிவரும்பெயர். சேர்ந்தாரை'என்ற பலர்பால், மற்றை நான்குபால்களுக்கும் உபலக்ஷணம். செய்பவன்கருவி'', "செய்வதாதி,'' 'நஞ்சுண்டவன் சாவான் ' என்றவிடங்களிலும், ஒருபால் ஒழிந்த தன்இனமாகிய பால்களைக் கொள்வது காண்க; [நன். பொது. எ.] உயர்திணைப்பன்மை - பலர்பால், ஏனைநான்குபால் - ஆண் பெண் ஒன்று பல என்னும் மற்றைப்பால்கள். தம்கருத்தோடுகூடியபொருளாற்றல் - தம் மனத்திற்கொண்ட

பொருளைக் குறிப்பிக்குஞ் சக்தி உருவகஞ்செய்தல் - ஒரு பொருளினிடத்து மற்றொரு பொருளின் தன்மையை ஏற்றிக்கூறுதல். 'ஈண்டு உருவகஞ்செய்கின்றது துறந்தார்சினத்தையே யாகலின்' என்பது, உயர்திணைப்பன்மைமேல்வைத்து 'சேர்ந்தாரை'என்று கூறியதற்குக்காரணம்: இனி 'சினமென்னும்நெருப்பு' என்று தொடங்கும் பின்வாக்கியத்திற்குக் காரணம் என்றும், 'சேர்ந்தாரை' என்று தொடங்கின முன்வாக்கியத்துக்குக் காரண மன்று என்றுங் கொள்வாருமுளர். விதப்பு - புதுமைதோன்ற எடுத்துக் கூறு வது. வேற்றுமை - வேறுபாடு. முற்றத் துறந்து - எல்லாப்பற்றுக்களையும் அற விட்டு. உருவகம் - ரூபகாலங்காரம். அகற்றும் - நீக்கும், விலக்கும். ஏமத்தை- இதமான பொருள்களை; பேரின்ப நிலையைப்பற்றியவற்றை. புணை - தெப் பம். ஞானோபதேசிகளைமட்டும் புணையென்று உருவகப்படுத்தி, பிறவியைக் கடலாகவும், மோட்சத்தைக் கரையாகவும் உருவகப்படுத்தாதது, ஏகதேச வுருவகம்; இதனால் வருவிக்கப்பட்ட தொடர் - 'ஏமப்புணை' என்பதற்கு அடைமொழி. இறந்ததுதழுவிய எச்சவும்மை தொகுத்தலென்னுஞ்செய்யுள் விகாரப்பட்டது, 'ஏமப்புணையை' என்பதன் இறுதியில். கோபம், தன்னைக் கொண்டவரை இம்மை மறுமைத் துன்பங்களில் அடைவித்து அழிப்பதோடு, அவர்க்கு இதமொழியெடுத்துக்கூறி அவரையீடேற்றவல்ல நல்லோரை அவரிடத்தினின்று நீங்குவித்தலுஞ் செய்யு

மென்பது கருத்து. நெருப்பிற்குச் சேராதவிடத்தையுஞ் சுடுதலையும், மரக்கலத்திற்கு இதோபதேசஞ்செய்தலையும் அதிகமாகச்சொல்லுதலால், மிகையோற்றுமையுருவங் வணி. சேர்ந்தாரைக்கொல்லி என்பதில், இ - கருத்தாப்பொருள்விகுதி; "நூற்றுவரைக்கொல்லி" என்னுஞ் சிந்தாமணியிற்போல. ஏமம் - இன்பம்; இன்பத்தைத்தரும் மொழிக்குக் காரியவாகுபெயர்: இதனை ஹேமம் என்னும் வடசொல்லின் திரிபாக் கொண்டு, உவமவாகுபெயராய், பொன்போலரிய மொழி யென்றுங் கொள்ளலாம். புணை - மரப்பலகைகளைக்கொண்டு புணைக்கப்படுவ தெனக் காரணப்பெயர். சினமென்னுஞ் சேர்ந்தாரைக்கொல்லி, ௩௧

- ஆம் அதிகாரம்—வெகுளாமை ௨௧௩

இனமென்னு மேமப்புணை என, உருவகப்பொருளை விளக்கும் 'என்னும்'
என்கிற உருபு விரிந்துநின்றமையின், இது - விரியுருவகமெனப்படும். (சு)

௩௦எ. சினத்தைப் பொருளென்று கொண்டவன்
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

கேடு

(இ - ள்.) சினத்தை பொருள் என்று கொண்டவன் - சினத்தை(த் தன்
ஆற்றல் உணர்த்துவதோர்) குணம் என்று (தன்கட்) கொண்டவன், கேடு -

(அவ்வாற்றல்) இழத்தல், நிலத்து அறைந்தான் கைபிழையாத அற்று -
நிலத்தின்கண் அறைந்தவன்கை (அந்நிலத்தையுறுதல்) தப்பாத ஆறுபோலத்
தப்பாது.
வைசேடிகர்-பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்
பனவற்றை 'அறுவகைப்பொருள்' என்றாற்போல, ஈண்டு, குணம் 'பொருள்'
எனப்பட்டது. * 'பிழையாதவற்று' என்பது, குறைந்து நின்றது.
இவைமூன்றுபாட்டானும், வெகுண்டார்க்குவருந் தீங்கு கூறப்பட்டது.
(கு - ரை.) ஆற்றல் உணர்த்துவது - வல்லமையைத் தெரிவிப்பதாகிய.
கேடு - (பின்பு அதனாற்) கெடுதல். அறைந்தவன் கை - அடித்தவனது கை.
உறுதல் - அடைதல். வைசேடிகர் - தர்க்கநூலார். வைசேடிகம் - வைதிக
சாஸ்திரம் ஆறனுள் ஒன்று; அவை - மீமாம்ஸை, நியாயம், வைசேடிகம்,
சாங்கியம், யோகம், வேதாந்தம் எனப்படும். பொருள்-வஸ்து. பண்பு-குணம்.
தொழில் -செய்கை. சாதி - இனம், பொதுமை. விசேடம்-சிறப்பு. இயைபு -
ஒற்றுமை, சம்பந்தம். 'திரவியம், குணம், கருமம்,

சாமாகியம், விசேடம், சம
வாயம் எனப் பதார்த்தங்கள் ஆறு' என்பது வைசேடிகர் கொள்கை; (இவ்
வாறனவயே பொருள்முதலிய என இங்குக்குறித்தது.) இனி, இவற்றின் எதி
ராகிய இன்மையென்கிற அபாவத்தையும் கூட்டிப் பதார்த்தங்கள் ஏழென்
பர், ஒருசார் நியாயநூலார். பொருளெனினுந் திரவியமெனினும், தொழி
லெனினுங் கருமமெனினும், சாதியெனினுஞ் சாமானியமெனினும், இயை
பெனினுஞ் சமவாயமெனினும் ஒக்கும். ஈண்டு - இங்கே. குணம் - சினமாகிய
பண்பு. பிழையாதற்று - பிழையாதவற்று: தொகுத்தல்விகாரம்; இனி,
பிழையாது அற்று என்றே கொண்டு, பிழையாது என்பதை எதிர்மறைத்
தொழிற்பெயராகவைத்து,தவறாமைபோலும்என்று உரைத்தலும்பொருந்தும்.

௩0அ. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

(இ - ள்.) இணர் எரி தோய்வு அன்ன-பலசுடரையுடைத்தாய பேரெரி (வந்து) தோய்ந்தாலொத்த, இன்னா-இன்னாதவற்றை, செயின் உம்-(ஒருவன்) செய்தானாயினும், வெகுளாமை - (அவனை) வெகுளாமை, புணரின் - (ஒருவற்குக்) கூடுமாயின், நன்று - (அது) நன்று; (எ - று.)

இன்னாமையின் மிகுதி தோன்ற 'இணரெரி' என்றும், அதனை மேன் மேலுஞ் செய்தல் தோன்ற 'இன்னா' என்றும், அச்செயல் முனிவரையும் வெகுள்விக்கு மென்பது தோன்ற 'புணரின்' என்றுங் கூறினர்.

* பி - ம்: 'பிழையாததற்று'



இதனான், வெகுளாமையது நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) இணர் - பூங்கொத்து; இங்கே சுவாலைத்தொகுதியை இலக்கணையால் உணர்த்திற்று. உடைத்தாய - உடையதான. தோய்ந்தால்-மேற் படிந்தால். இன்னாதவற்றை - துன்பங்களை. அச்செயல் - கொடுஞ்செய்கைகள். முனிவரையும் வெகுள்விக்கும் - பொறுமைமிகுந்த தவத்தோரையுங் கோபிக்கச்செய்யும். எரிவது, எரி; வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்து கெட்ட காரணப்பெயர். செயினும், உம்மை - இழிவுசிறப்பு. புணரின்என்பது, அப்பெருங்குணம்பொருந்துதலின் அருமைதோன்ற நின்றது. (அ)

௩0௯. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
னுள்ளான் வெகுளி யெனின்.

(இ - ள்.) (தவஞ்செய்யுமவன்), உள்ளத்தால் - (தன்) மனத்தால், வெகுளி - வெகுளியை, உள்ளான் எனின் - (ஒருகாலும்) நினையானாயின், உள்ளிய எல்லாம் - (தான்) கருதிய பேறுஎல்லாம், உடன் எய்தும்-ஒருங்கே

பெறும்; (எ - று.)

'உள்ளத்தால்' என வேண்டாது கூறிய அதனான், அருளுடையுள்ள மென்பது முடிந்தது. அதனான் உள்ளாமையாவது - அவ்வருளாகியபகையை வளர்த்து அதனான் முற்றக்கடிதல். இம்மை, மறுமை, வீடு என்பன வேறு வேறு திறத்தனவாயினும் அவையெல்லாம் இவ்வொன்றுனே எய்து மென்பார், * 'உள்ளியவெல்லா முடன்எய்தும்' என்றார்.

இதனான், வெகுளாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) ஒருகாலும் - ஒருபொழுதிலும். பேறு எல்லாம் - பாக்கியங்களெல்லாம். பெறும் - பெறுவான். வேண்டாதுகூறிய அதனான் அவசியமில்லாமற்சொன்ன அக்காரணத்தால். பொருள்நிரம்பினபாடல்களில் ஏதாவது ஒரு அவசியமில்லாத பதம் காணப்பட்டால், அதனால் யாதாயினும் ஒருவிசேஷஅருத்தங் கொள்ளுதல், மரபு; அந்தப்படி 'உள்ளுதல்' என்ற வினைக்கு அவசியமில்லாது முன்வந்த 'உள்ளத்தால்'என்ற சொல் லுக்கு - அருளுடையஉள்ளமென்ற விசேஷப்பொருள் கொண்டார்; கீழ் "தீய, வழுக்கியும்வாயாற்சொலல்", "இறந்தார்வா, யின்னுச்சொல்நோற்கிற் பவர்" என்ற விடங்களில், 'வாய்' என்றதற்கு இங்ஙனமே விசேடப்பொருள் கொண்டவாறு காண்க. முடிந்தது - ஏற்பட்டது. அதனான் உள்ளாமை - அம்மனத்தால்நினையாமை. பகை - சினத்திற்குப் பகையாயுள்ளது. அதனான் முற்றக் கடிதல் - அவ்வருளால்

அச்சினம்முழுவதையும் நீக்கிவிடு தல். வேறுவேறுதிறத்தன - வெவ்வேறுவகையையுடையன. இவ்வொன்றுனே எய்தும் - வெகுளாமையென்னும் இவ்வொருகுணத்தாலே அடைவான். வெகுளாதார் - கோபியாதவர். எய்தும் - செய்யுமென்முற்று ஆண் பாலுக்குவந்தது. உள்ளம்என்பது - உள்ளிடத்தேயுள்ள உறுப்பென்றுவது,

---

* பி - ம்: உள்ளியதெல்லாம்.

## ௩௨ - ஆம் அதிகாரம்— இன்னுசெய்யாமை

உகரு

உள்ளுதற்குக் கருவியான தென்றுவது, காரணப்பெயராம்; உள்ளுதல் - நினைத்தல். உள்ளான் - எதிர்மறையாண்பால்வினைமுற்று. (க)

௩௧௦.

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

(இ - ள்.) இறந்தார் - (சினத்தின்கண்ணே) மிக்கார், இறந்தார் அனையர் - (உயிருடையராயினும்)செத்தாரோடு ஒப்பர்; சினத்தை துறந்

தார்—, துறந்தார் துணை - (சாதல்தன்மையராயினும் அதனை) ஒழிந்தா

ரளவினர்; (எ - று.)

மிக்கசினத்தையுடையார்க்கு ஞானம்எய்துதற்குஉரிய உயிர் நின்றதாயி

னும் கலக்கத்தான் அஃது எய்தாமை ஒருதலையாகலின், அவரை 'இறந்தா

ரனையர்' என்றும்; சினத்தைவிட்டார்க்குச் சாக்காடுஎய்துதற்குஉரியயாக்கை

நின்றதாயினும் ஞானத்தான் வீடுபெறுதல் ஒருதலை யாகலின், அவரை

* 'வீடுபெற்றாரோடொப்பர்' என்றும் கூறினார். துறந்தார்துணை - பன்மை

யொருமைமயக்கம்.

இதனான், அவ்விருவர்பயனும் ஒருங்கு கூறப்பட்டது.

(கு - ரை.) அதனை ஒழிந்தா ரளவினர் - மரணத்தை ஒழிந்தவர் [முத்தி

பெற்றவர்] போன்றவர். கலக்கத்தான் அஃது எய்தாமை ஒருதலையாக

லின் - மனக்கலக்கத்தால் அந்தஞானத்தை அடையாமை நிச்சயமாதலால்.

அவரை - சினம்மிக்கவரை. சாக்காடு - மரணம். யாக்கை - உடம்பு. சாக்

காடுஎய்துதற்குரியயாக்கை - நிலையில்லாதஉடம்பு. வீடுபெறுதல் - முத்தி

யடைதல். முத்திபெற்றவர்க்குப் பிறப்பு இறப்புக்கள் இல்லை யாதலின்,

அவரை '(இறத்தலைத்)துறந்தார்' என்றது. துறந்தார்துணையென்பதன் கருத்

துப்பொருள், வீடுபெற்றவரோடொப்பரென்பது. இவ்வுடம்பு இருக்கையி

லேயே வீடுபெற்றவரோடொப்பரென்றது, ஜீவன்முக்திநிலைய ராவர் என்ற

வாறு. துறந்தார்என்னும் பன்மைவினையாலணையும்பெயரோடு துணை என்

னும் ஒருமைப்பெயர் தழுவக்கூறப்பட்டது,பன்மையொருமைமயக்கம் என்க;

[நன். பொது. உக.] அவ்விருவ. ர்பயனும்-வெகுண்டவர்பயனும், வெகுளாதார்

பயனும். செய்யுளிலுள்ள இறந்தார் என்ற சொல் இரண்டனுள், முன்னது -

மிக்காரென்றபொருளது. அனையர்என்னுங் குறிப்புமுற்றில், ஐ -சாரியை.

இத்திருக்குறளை "அடுக்கல்லவையு மடுக்கவைபோல்வரும், அவ்வடுக்கணியி

னுளவிலையென்க" என்றதற்கு உதாரணமெடுத்துக்காட்டினர், இலக்கணக்

கொத்துநூலுடையார்.

(௩0) ௩௨ -

## ஆம் அதிகாரம்—இன்னாசெய்யாமை.

அஃதாவது - தனக்கு ஒருபயன்நோக்கியாதல், செற்றம்பற்றியாதல்,

சோர்வானாதல் ஒருயிர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை. இன்னாசெய்தல்

வெகுளியொழியவும் நிகழும் என்பது அறிவித்தற்கு, இது, வெகுளாமையின்

பின் வைக்கப்பட்டது.

---

* பி - ம்: 'துறந்தார்துணை'



(கு - ரை.) இன்னாசெய்யாமை - இரண்டனுருபுத்தொகை. கீழ் இருபத்தொன்பதாம் அதிகாரத்தின் முதலில் பரிமேலழகர் கூறியபடி, இதற்கு-ஒருபிராணிக்குந் தீயவற்றைச்செய்ய நினையாமை யென்று பொருள். கோபத்தைவிட்ட முனிவர்களும் யாதாயினும் ஒருபிரயோசனத்தைக் கருதியாவது, முன்னே மனத்திற்பொருந்தியுள்ள வைரத்தைப்பற்றியாவது, அஜாக்

கிரதையினுலாவது பிறிதோருயிர்க்குத் துன்பத்தைச்செய்தல் கூடும்; அதனை விலக்கும்பொருட்டு இவ்வதிகாரம் 'வெகுளாமை' என்னும் அதிகாரத்தின் பின் நிறுத்தப்பட்டது. இன்னதுன்பம் எனக் குறியாமையின், 'இன்னு' எனப் பன்மையாக்கூறினது; ஒன்றைத்துணியாதவிடத்துப் பன்மையாக் கூறுதல், ஒருமரபு: இதனைச் சீவகசிந்தாமணியில் காந்தருவதத்தையாரிலம்பகத்தில் "செருநிலத்திவனைவென்றீர் திருவினுக்குரியீரென்றான்" என்றதன்பின் "தனிக்கயத்துழக்கிவென்றீர் தையலைச்சார்மினென்றான்" என்றவிடத்து 'துணியலாகாமையின் பன்மையாற் கூறினுன்' என ஆசிரியர் நச்சினர்க்கினியருரைத்ததனு லறிக. செற்றம் - வைரம். சோர்வு - மறதி.

௩௧௧. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னு
செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) சிறப்பு ஈனும் - (யோகமாகிய) சிறப்புத் தரும், செல்வம்- (அணிமா முதலிய) செல்வங்களை, பெறின்உம் - (பிறர்க்குஇன்னுசெய்து) பெறலாமாயினும், பிறர்க்கு இன்னு செய்யாமை - அதனைச்செய்யாமை, மாசு அற்றார் கோள்-(ஆகமங் கள்கூறியஆற்றான்) *மனந்தூயாரது துணிவு; (எ-று.)

உம்மை, பெருமைமேற்று. சிறப்புடையதனை 'சிறப்பு' என்றும், அதன் பயிற்சியான் வாயுவைவென்று எய்தப்படுதலின் எட்டுச்சித்திகளையும் 'சிறப் பீனுஞ்செல்வம்'

என்றும், காமம் வெகுளி மயக்கம் என்னுங் குற்றங்கள் அற்றமையான் 'மாசற்றார்' என்றுங் கூறினார்.

இதனான், தமக்குஒருபயன்நோக்கிச்செய்தல் விலக்கப்பட்டது.

(கு - ரை.) யோகமாகிய சிறப்புத் தரும் - சிறப்பையுடைய யோக நிலையிற் பயில்வதனாற் கொடுக்கப்படுகிற. பிராணவாயுவையடக்கி வசப்படுத்திச் சிறத்தலையுடைய யோகத்தைச் சிறப்பென்றது, தொழிலாகுபெயர். அணிமாமுதலிய எட்டுச்சித்திகள் இவையென்பதும், அவை இன்னபடியின என்பதும், "எண்குணத்தான்" என்றதன்குறிப்பிற் கூறப்பட்டன. இவை - யோகத்தின்பயனாக வருவன வாதலால், சிறப்பீனுஞ்செல்வமெனப்பட்டன. ஆகமங்கள் கூறிய ஆற்றான் - சாஸ்திரங்கள் சொன்ன வழியால். மனந்தூயார் - நெஞ்சம் பரிசுத்தியடைந்தவர். துணிவு - சித்தாந்தம்; தேர்ந்த கருத்து. கோள் - கொள்கை. பெறினும் என்றதிலுள்ள உம்மை - உயர்வு சிறப்பு; அது - இன்னாசெய்தலால் சிறப்பீனுஞ் செல்வங்களைப் பெறுதல் முடியாதென்ற எதிர்மறைக்கருத்தை விளக்கும். அதன்பயிற்சி - யோகப் பழக்கம். வாயுவைவென்று - பிராணாயாமத்தால் சுவாசபந்தஞ்செய்து.

---

* பி - ம்: மாசற்றார்யாவர்க்கும்.

சிறப்பு ஈனும் செல்வம் - சிறப்பைத்தருஞ் செல்வ
மென்றுமாம். எய்தப்
படுதலின் - அடையப்படுதலால். மாசு அற்றார் - குற்றம்
நீங்கியவர். செய்
தல் - தீங்குசெய்தல். ஈனும்என்ற
எதிர்காலப்பெயரெச்சத்தில், ஈன் -
பகுதி. பிறர்க்குஎனச் சிறப்புடைய உயர்திணைமேல்
வைத்துக்கூறினாராயி
னும், உபலக்ஷணத்தால், மற்றைய அஃறிணையுயிர்களுங்
கொள்ளப்படும். (க)

௩௧௨. கறுத்தின்னா செய்தவக் கண்ணு
மறுத்தின்னா

செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) கறுத்து - *(தம்மேல்) செற்றங்கொண்டு,
இன்னா செய்த அக்
கண் உம் - (ஒருவன்) இன்னாதவற்றைச் செய்தவிடத்தும்,
மறுத்து - மீண்டு,
இன்னா செய்யாமை - (தாம் அவனுக்கு) இன்னாதவற்றைச்
செய்யாமையும்,
மாசு அற்றார் கோள் - அவரது துணிவு; (எ - று.)

இறந்ததுதழீஇயஎச்சவும்மை, விகாரத்தால்
தொக்கது. அவ்வின்னாத
வற்றை உட்கொள்ளாதுவிடுதல் செயற்பாலதென்பதாம்.

(கு - ரை.) செற்றம் - கோபம். கறுத்து - கோபித்து:
கறுத்தல்-கோப

மாகிய குறிப்புப்பொருளையுணர்த்தும் உரிச்சொல்: பிறவேறுபாட்டையுணர்த்
தும் கருமைசெம்மையென்னும் பண்புப்பெயர்கள் விகாரப்பட்டுக் கறுத்தல்
சிவத்தல் எனத் தொழிற்படும்பொழுது அக்குணப்பொருளோடு இக்கோபப்
பொருளையுங் குறிக்குமென அறிக. அவரது - ஆகமங்கள் கூறியவாற்றான்
மனந்தூயாரது. உம்மை தொகுத்தல்விகாரப்பட்டது, 'மறுத்தின்னா செய்
யாமை' என்றதன்பின்; அது, "சிறப்பீனுஞ் செல்வம்பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை"யேயன்றி, எனக் கீழ்க்கவியை நோக்கியதனால், இறந்தது
தழுவியஎச்சவும்மையாயிற்று. "நன்றல்ல, தன்றேமறப்பது நன்று" என்ற
படி அவன் செய்த தீங்குகளை மனத்தில்வையாமல் மறந்துவிடுதலே செய்
யத்தக்க தென்க. செய்த அக்கண்ணும் - பண்ணின அவ்விடத்தும்;
உம்மை - இழிவுசிறப்பு. இதனால், கறுத்து இன்னா செய்யாதவிடத்து
இன்னா செய்யாமை மாசற்றார்கோளென்பது தானே விளங்கும். மறுத்து -
செய்ததீங்கிற்கு எதிர்த்தீங்காய். "உபகாரஞ் செய்ததனையோராதே தங்

கண், அபகார மாற்றச்செயினும்—உபகாரம்,
தாஞ்செய்வதல்லால் தவற்றி
னல் தீங்கூக்கல், வான்றோய் குடிப்பிறந்தார்க் கில்''
என்றது நாலடியார்.

௩௧௩. செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
ன்னுய்யா விழுமந் தரும்.

(இ - ள்.) செய்யாமல் செற்றார்க்கு உம் - (தான் முன்பு ஓர்இன்னாமை)
செய்யாதிருக்க(த் † தன்மேல்) செற்றங்கொண்டவர்க்கும், இன்னாத செய்த
பின் - இன்னாதவற்றை(த் துறந்தவன்) செய்யுமாயின், (அச்செயல், அவ னுக்கு), உய்யா விழுமம் தரும் -
கடக்கமுடியாதஇடும்பையைக்கொடுக்கும்.
அவ்விடும்பையாவது - தவம்இழந்து பழியும் பாவமும் எய்துதல்.

---

* பி - ம்: தம்மொடு



† பி - ம்: தன்னைச்செற்றார்க்கும்

(கு - ரை.) துறந்தவன் - துறவறத்தான். அச்செயல் - தீங்குசெய்த

அச்செயல். அவனுக்கு - துறந்தவனுக்கு. கடக்கமுடியாத இடும்பை -

நீக்கக்கூடாத துன்பம். செற்றார்க்கும், உம்மை - இழிவுசிறப்பு. இதனால்,

செறுதவர்க்கு இன்னாதசெய்தல் உய்யாவிழுமந்தரு மென்பது தானே விளங்

கும். இன்னாத - எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும்பெயர். செய்த

பின் - எதிர்காலவினையெச்சம்; பின் - காலங்காட்டும்விகுதி. தரும் என்

பது - இடவழுவமைதி. செற்றார் - இறந்தகாலப்பலர்பால்வினையாலணையும்

பெயர்; செறுஎன்ற பகுதி யொற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று. 'தரும்'

என்னும்பயனிலைக்கு 'இன்னாசெயல்' என்பது தோன்றாஎழுவாய். (கூ)

நூகசு.

இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

(இ - ள்.) இன்னா செய்தாரை - (தமக்கு) இன்னாதவற்றைச்செய்தாரை,

ஒறுத்தல் - (துறந்தோர்) ஒறுத்தலாவது, அவர் நாண நல் நயம் செய்து
விடல் - அவர்தாமே நாணுமாறு (அவர்க்கு) இனியஉவகைகளைச் செய்து
(அவ்விரண்டனையும்) மறத்தல்; (எ - று.)

மறவாவழிப் பின்னும்வந்து இளைக்கு மாகலின், மறக்கற்பால வாயின.

அவரை வெல்லும்உபாயம் கூறியவாறு.

இவைமூன்றுபாட்டானும், செற்றம்பற்றிச்செய்தல் விலக்கப்பட்டது.

(கு - ரை.) ஒறுத்தல் - தண்டித்தல். அவர் தாமே நாணுமாறு - அவ்
வின்னு செய்தவரே வெட்கம் அடையும்படி. உவகைகள் - சந்தோஷகர
மான செய்கைகள். அவ்விரண்டனையும் - அவர்செய்த இன்னுதன, தாம்
செய்தஇனியன என்னும் இரண்டையும். இவ்விரண்டையும் மறவாவிட்டால்
மறுபடி மறுபடி கோபம் மூண்டு வளரும். மறக்கற்பால - மறக்கத்தக்கவை.
இந்தநீதிபற்றியே நான்மணிக்கடிகையில் "வெல்வது, வேண்டின் வெகுளி
விடல்" என்றது. அவரை - இன்னுசெய்தவரை. நாணஎன்னுஞ் செயவெ
னெச்சம் - காரியப்பொருளதாதலின், எதிர்காலத்தது; நாணுதல் - காரிய

மும், நன்னயஞ்செய்தல் - காரணமுமாம். நயம் - நன்மை; நல்லனவற்றிற்குப்
பண்பாகுபெயர். செய்துவிடல் என்ற தொடர் - செய்து விடல் என
இரண்டாகக் கொள்ளப்பட்டது. ஒறுத்தல், விடல் என்னுந் தொழிற்பெயர்
களுள், முன்னது - எழுவாயும், பின்னது - பயனிலையுமாம். விடல் -
நெஞ்சினின்று போகுமாறு செய்தல்.

(சு)

௩கரு. அறிவினா லாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

•.

(இ - ள்.) (துறந்தார்க்கு), அறிவினான் ஆகுவது உண்டோ - (உயிர் முத
லியவற்றை உள்ளவாறு அறிந்த) அறிவினான் ஆவதொருபயன் உண்டோ?
பிறிதின் நோய் தம் நோய் போல் போற்றாக்கடை - பிறிதோருயிர்க்கு வரும்
இன்னாதவற்றைத் தம்உயிர்க்குவந்தன போலக் (குறிக்கொண்டு) காவா
விடத்து; (எ - று.)

௩௨ - ஆம்
அதிகாரம்—இன்னாசெய்யாமை ௨கக

குறிக்கொண்டுகாத்தலாவது - நடத்தல், இருத்தல், கிடத்தல், நிற்றல்,
உண்டல் முதலிய தம்தொழில்களானும் பிறவாற்றானும் உயிர்கள் உறுவன
வற்றை முன்னேயறிந்து உறாமற்காத்தல். இது பெரும்பான்மையும் அஃ
றிணைக்கண் நுண்ணியஉடம்புடையவற்றைப்பற்றி வருதலின் பொதுப்பட
'பிறிதினோய்' என்றும், மறப்பான் அது துன்புஉறினும் நமக்கு இன்னாசெய்
தலாம் என்று அறிந்து காத்தல்வேண்டுமாகலின் 'அதுசெய்யாவழி அறிவாற்
பயனில்லை' என்றுங் கூறினார்.

இதனான், சோர்வாற்செய்தல் விலக்கப்பட்டது.

(கு - ரை.) உயிர்முதலியவற்றை - ஜீவான்மா பரமான்மா முதலிய தத்
துவப்பொருள்களை. உள்ளவாறு - உள்ளபடி, ஐயந்திரிபில்லாமல். அறிந்த
அறிவு-தத்துவஞானம். குறிக்கொண்டு - கவனம்வைத்து. பிறவாற்றானும்-
வேறுவகைகளாலும்; வேறுவகைகள் - அவ்வவ்வுயிர்களின் பகையுயிர்கள்
முதலியவற்றால் ஆகுவன. உறுவனவற்றை - அடையுந் தீங்குகளை. உறாமல்-
அடையாதபடி. காத்தல் - இரட்சித்தல். அஃறிணைக்கண் -

விலங்கு பறவை
முதலிய தாழ்ந்த பகுப்புஉயிர்களுள். நுண்ணியஉடம்பு உடையவற்றை-சிறிய
வுடம்புள்ள எறும்பு, ஈ புழு முதலிய பிராணிகளை. மறப்பான்-நமதுசோர்வால்.
நமக்கு இன்னுசெய்தலாம் - இன்னுசெய்தலாலாம் பழியாவங்கள் நமக்கு
நேரும். அறிவினுன், ஆன் - மூன்றனுருபு, இன் - சாரியை. ஆகுவது-எதிர்
காலவினையாலணை யும்பெயர்: இதில், ஆகு - பகுதியென்ருவது: ஆ - பகுதி,
கு - சாரியை யென்ருவது கொள்க. ஓ - எதிர்மறை. பிறிது - பிறஎன்னும்
இடைச்சொல்லடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினை யாலணையும்பெயர்:
இது சாதியொருமை. பிறிதினேய் - ஆரும்வேற்றுமைத் தொகை; இன் -
சாரியை. போற்ருக்கடை - எதிர்மறை யெதிர்காலவினையெச்சம். "என்றும்,
பிறர்நோ யுந் தந்நோய்போற் போற்றியறனறிதல், சான்றவர்க்கெல்லாங்
கடன்" என்ற கலித்தொகையில் இக்குறளின்பொருள் காணத்தக்கது. (ரு)

௩௧௬. இன்னு வெனத்தா னுணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கட் செயல்.

(இ - ள்.) இன்னு என தான் உணர்ந்தவை-(* இவை மக்கட்கு) இன்னு
தன என (அனுமானத்தால்) தான் அறிந்தவற்றை, பிறன்கண் செயல்-பிறன்
மாட்டுச் செய்தலை, துன்னுமை - மேவாமை, வேண்டும் - (துறந்தவனுக்கு)
வேண்டும்; (எ - று.)

இன்பத்துன்பங்கள் உயிர்க்குணமாகலின், அவை † காட்சியளவையான்
அறியப்படாமை அறிக. அறமும் பாவமும் உளவாவது மனம்உளனுயவழி
யாகலான், 'உணர்ந்தவை' என்ருர்.

(கு - ரை.) அனுமானம் - புகையைக்கணடு நெருப்புஉண்டென்பது
போல, ஒன்றைக்கொண்டு ஊகித்தறிதல். பிறன்மாட்டு - அயலானிடத்தில்.

---

* பி - ம்: மக்கள்தமக்கு இன்னுதனை என மனத்தாற் ருனறிந்தவற்றை.

† பி - ம்: காட்சியளவையானறிக.

மேவாமை - பொருந்தாமை. காட்சியளவை - பிரதியட்சப்பிரமாணம்; அதர்
வது - கண்ணாற் காணுதல். உயிரினது குணமாகிய இன்பமுந் துன்பமும்
பிரதியட்சத்தி லறியப்படாதனவாதலால், துன்பந்தரும் தீவினைச்செயல்களை 'உணர்ந்தவை' என்றார். அறமும் பாவமும் - நல்வினை தீவினைகள். உளவாவது - உள்ளனவாவது. மனம் உளாயவழி என்பதற்கு - நெஞ்சறிந்து செய்தவிடத்து என்று கருத்துக்கொள்க. உணர்ந்தவை - பலவின்பால்
வினையாலணையும்பெயர். துன்னாமை - எழுவாய்; வேண்டும் - பயனிலை. (சு)

நகஎ. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு
மாணாசெய் யாமை தலை.

மனத்தானா
(இ - ள்.) மனத்தான் ஆம் மாணா - மனத்தொடு உளவாகின்ற இன்னாத செயல்களை, எ
ஞ்ஞான்றுஉம்-எக்காலத்தும், யார்க்குஉம்-யாவர்க்கும், எனைத்து ஆன் உம் - சிறிதாயினும், செய்யாமை—, தலை - தலையாயஅறம்; (எ - று.)

ஈண்டு, மனத்தான் ஆகாதவழிப் பாவமில்லையென்பது பெற்றாம். ஆற்ற லுண்டாயகாலத்தும் ஆகாமையின் 'எஞ்ஞான்றும்' என்றும், எளியார்க்கும் ஆகாமையின் 'யார்க்கும்' என்றும், செயல்சிறிதாயினும் பாவம் பெரிதாகலின் 'எனைத்தானும்' என்றும் கூறினார்.

(கு - ரை.) மனத்தோடு உளவாகின்ற -
நெஞ்சறிந்துசெய்யப்படுகிற.
தலையாய அறம் - முதன்மையான தருமம். ஈண்டு -
இவ்விடத்தில்: 'மனத்
தானுமாணு' என்றதில். ஆற்றல் - வல்லமை.
ஆகாமையின் - செய்யலா
காமையின். ஆனும் - ஆயினும் என்பதன் விகாரம்; உம்
- இழிவுசிறப்பு.
எஞ்ஞான்றும், யார்க்கும் என்றவற்றில், உம்மைகள் -
முற்றுப்பொருளன; இச்சொற்களில், எகரவினவும்,
யாவினவும் - எஞ்சாமையுணர்த்தும். மனத் தான், ஆன் -
மூன்றனுருபு. மாணு - எதிர்மறைப்பலவின்பால்வினையா
லணையும்பெயர். மனத்தானும்
மாணுதனசெய்யலாகாதெனக் கருத்துக் காண்டலும்ஒன்று.

(எ)

௩௧அ. தன்னுயிர்க் கின்னுமை தானறிவா
மன்னுயிர்க் கின்னு செயல்.

னென்கொலோ

(இ - ள்.) தன் உயிர்க்கு இன்னுமை அறிவான் -
(பிறர்செய்யும் இன்னுதன) தன்உயிர்க்கு
இன்னுவாந்தன்மையை அனுபவித்து அறிகின்றவன், மன்
உயிர்க்கு தான் இன்னு செயல் - நிலைபேறுடைய (பிற)
உயிர்கட்குத் தான் அவற்றைச்செய்தல், என்கொல்ஓ -
என்னகாரணத்தான்? (எ - று.)

இவ்வாறே இவை பிறஉயிர்க்கும்இன்னா என்பது * அனுமானத்தான் அறிந்துவைத்துச் செய்கின்ற † யாவம் கழுவப்படாமையின், 'இன்னாதன' யான் வருந்தப் பின்னேவந்து ‡ வருத்தும்' என்பது ஆகமத்தானும் அறிந்து ஒழியற்பாலன் என்பது தோன்ற 'தான்' என்றும், அத்தன்மையான் ஒழியா மைக்குக் காரணம் மயக்கம் என்பதுதோன்ற 'என்கொலோ'என்றும் கூறினர்.

---

* பி - ம்: அனுமானத்தானும்.

‡ பி - ம்: உருத்தரும்.

† பி - ம்: இப்பாவம்.

௩௨ - ஆம்

அதிகாரம்—இன்னாசெய்யாமை ௨௨௧

இவைமூன்றுபாட்டானும், பொதுவகையான் விலக்கப்பட்டது.

(கு - ரை.) இன்னாவாந்தன்மை-துன்பந்தருதல். நிலைபேறு-நிலைபெறுதல். அவற்றை - இன்னாதவற்றை. அறிந்துவைத்துச் செய்கின்ற - அறிந்தும் செய்யப்படுகிற. கழுவப்படாமையின் - பிராயச்சித்தங்களாற் போக்கப் படாமையால்; அபுத்திபூர்வமாகச்செய்த தீவினைக்குப் பிராயச்சித்தம் உண்டு, புத்திபூர்வமாகச் செய்ததற்குப் பிராயச்சித்தமில்லை யென்க. பிராயச்சித்தத்திற்குக் கழுவாய் என்று ஒருபெயர் உள்ளதாதலின்,

'கழுவப்படாமையின்'
எனப்பட்டது. இன்னுதன யான் வருந்தப் பின்னே
வந்து வருத்தும் -
யான் பிறர்க்குச்செய்த தீங்குகள் யானே வருந்தும்படி
மறுமையில்வந்து
என்னை வருத்தப்படுத்தும். ஆகமத்தானும் -
சாஸ்திரக்கொள்கையாலும்.
ஆகமம் - பிரமாணங்களில் ஒன்று.
ஒழியற்பாலன்-நீக்கத்தக்கவன். மயக்கம்-
நல்லுணர்வின்மை, அவித்யை. பொதுவகையான் -
பயன்நோக்கிச்செய்தல்,
வைரம்பற்றிச் செய்தல், சோர்வாற்செய்தல் என்னும்
மூவகைக்கும் பொதுப்
பட. அறிவான் - வினையாலணையும்பெயர்.
என்-எவன்என்னும் அஃறிணைப்
பொதுக்குறிப்புமுற்றின் விகாரம்; இதுவே வினுப்பொரு
ளுணர்த்தியதனுல்,
கொல் ஓ இரண்டும் - அசை: ஓகாரத்தை
இரக்கப்பொருளதாகவுங் கொள்ள
லாம். மன்னுயிர் - வினைத்தொகை; நிலைபெறும் உயி
ரென்க. "இன்
சொலினிதீன்றல் காண்பானெவன்கொலோ,
வன்சொல்வழங்குவது" என்
றதனேடு இதனை ஒப்பிடுக. தன்னுயிரைப்போலவே
பிறவுயிர்களையும்

பாவிக்கவேண்டு மென்பது, நூற்றுணிபு. இத்திருக்குறளை நவரசங்களுள் சாந்தமென்னும் ரசத்திற்கு உதாரணமெடுத்துக்காட்டினர் வீரசோழிய வுரை யாசிரியர். "தன்னுயிர்தான்பரிந்தோம்புமாறுபோல், மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமே, லின்னுயிர்க்கிறைவனு யின்பமூர்த்தியாய்ப், பொன்னுயி ராய்ப் பிறந்துயர்ந்துபோகுமே" என்னுஞ் சீவகசிந்தாமணியை இங்கே அறிக.

௩௧௯. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற்
தமக்கின்னா பிற்பகற் றாமே வரும்.

(இ - ள்.) (துறந்தவர்), பிறர்க்கு இன்னா முன் பகல் செய்யின் - பிறர்க்கு இன்னாதனவற்றை ஒருபகலது முற்கூற்றின்கட் செய்வராயின், தமக்கு இன்னா பின் பகல் தாமே வரும் - தமக்கு இன்னாதன அதன்பிற்கூற்றின்கண் (அவர்செய்யாமல்) தாமே வரும்; (எ - று.)

'முற்பகல்', 'பிற்பகல்' என்பன - பின்முன்னாகத்தொக்க ஆறாம்வேற்றுமைத்தொகை. தவம் * அழிதலின், அங்ஙனம் கடிதினும் எளிதினும் வரும்; அதனால் அவைசெய்யற்க என்பதாம்.

இனி, 'தானேவரும்' என்பது பாட
மாயின் அச்செயல்தானே தமக்கு இன்னாதனவாய்வரும்
என உபசாரவழக்
காக்கி, ஆக்கம் வருவித்து உரைக்க.

(கு - ரை.) முற்கூற்றின்கண் - முன்பாகத்தில்.
பகல்முன், பகற்பின்
என்னும் ஆறும்வேற்றுமைத்தொகைகள் - முற்பகல்
பிற்பகல் என முன்பின்

---

* பி - ம்: இழத்தலின்.



னுகத் தொக்கன; இது, இலக்கணப்போலியெனப்படும். இங்கு முற்பகல்
பிற்பகல் என்பன - சரியாக அந்தக்காலத்தையே குறிப்பனவல்லாமல் பக

லென்பதுபொழுது குறிப்பது: என்றாலும், முன் பின்என்பன ஒன்ற
னுடைய முற்கூறு பிற்கூறு என்றே பொருள்படுதலறிக. "முற்பகற் செய்
யிற் பிற்பகல் விளையும்" என்பது ஔவையார் அமுதமொழி; "நெடியது
காண்கலாய் நீயளியை நெஞ்சே, கொடியது கூறினாய்
மன்ற - அடியுளே முற்பகற் செய்தான் பிறன்கேடு
தன்கேடு, பிற்பகற் கண்டு விடும்" என்பது பழமொழி:
"முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு, பிற்
பகற்காண்குறூஉம்" என்பது சிலப்பதிகாரம். தவம்
அழிதலின் - இன்னாதன செய்தகாரணத்தால்

தன்னுடையதவம் அழிந்துவிடுதலால். கடிதினும் வரும் - விரைவிலும்வரும். அதனுன் அவைசெய்யற்க-ஆதலாற் பிறன்கேடு செய்யாதிருக்க. 'தானேவரும்' என்ற பாடத்துக்கு - பிறர்க்கு இன்னு முற்பகலிற் செய்யின் அச்செயல்தானே பிற்பகலில் தமக்கு இன்னு தனவாய் வரு மென்க. இங்கே 'தானேவரும்' என்ற பாடத்துக்கு உபசார வழக்கு என்றது - பிறர்க்கு இன்னுசெய்தல் தனக்கு இன்னுதவற்றிற்குக் காரணமா மென்று சொல்லவேண்டியதை அங்ஙனஞ் சொல்லாமல், பிறர்க் கின்னு செய்தல்தானே தமக்கு இன்னுதனவாய் வரு மெனக் காரணத்திடத்தில் காரியத்தின் தன்மையை ஏற்றிக்கூறியதை. ஆக்கம் வருவித்தல் - 'தமக்கின்னு' என்றதில்; [நன் - வினை - உ.அ]: ஆய் என்பது - ஆக்கச் சொல். இனி, முன் உரைக்கு - "தமக்கின்னு' என்பதிலுள்ள இன்னுஎழுவாய்; வரும் - பயனிலை. பின் உரைக்கு - செய்யின் என்கிற எச்சத்தினின்று கொள்ளப்பட்ட செய்தல் - எழுவாய்; இன்னுவாய்வரும்என்பது - பயனிலை. இக்குறளை 'பிறநூன்முடிந்தது தானுடன்படுதல்' என்னுந் தந்திரவுத்தி யென்பர் வீரசோழியவுரைகாரர். 'பகலினுடைய முன் - முன் பகல்; இது - முன்பதம் எழுவாய்வேற்றுமையாதலின், எழுவாய் வேற்றுமைத் தற்புருடனும்' என்பதும் அவ்வுரையிற் கண்டது. இக்குறளில் 'இன்னு தாமேவரும் எனச் செயப்படுபொருள் தேற்றத்தோடு வினை முதலாய்ச்

செயப்படுபொருள்குன்றியவினைகொண்டது' என்பது இலக்கணக்கொத்துஉரை. இதில் 'இன்னா தாமே வரும்' எனச் செயப்படுபொருள்

குன்றிய வினைமுற்றுச்சொல்லோடு வருங் கருமத்தைக் கருமகர்த்தாவென்பர், என்பது பிரயோகவிவேகவுரைகாரர்: முற்பகல், பிற்பகல் என்பன - பிரதமாதற்புருடனெனவும் அதில் வரும். (௯)

௩௨௦. நோயெல்லா நோய்செய்தார் மேலவா
நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

(இ - ள்.) நோய் எல்லாம் - இன்னாதன எல்லாம், நோய் செய்தார்மேல ஆம் - (பிறிதோருயிர்க்கு) இன்னாதனசெய்தார்மேலவாம்; (அதனால்), நோய் இன்மை வேண்டுபவர் - (தம்உயிர்க்கு) இன்னாதன வேண்டாதார், நோய் செய்யார் - (பிறிதோருயிர்க்கு) இன்னாதன செய்யார்; (எ - று.)

உயிர்நிலத்து வினைவித்து இட்டார்க்குவிளைவும் அதுவேயாகவின், 'நோ யெல்லா நோய்செய்தார்மேலவாம்'என்றார். இது-சொற்பொருட்பின்வருநிலை.

## ௩௩ - ஆம் அதிகாரம்—கொல்லாமை

௨௩.

இ வையிரண் டு பா ட் டா னு ம் , அதுசெய்தார்க்குவருந்தீங்கு கூறப்பட்டது.

(கு - ரை.) இன்னாதனஎல்லாம் பிறிதோருயிர்க்கு இன்னாதனசெய்தார் மேலவாம் - வேறொருபிராணிக்குத் தீங்குசெய்தவர்க்கே பலவகைத் தீங்குகளும் வரும்.

உயிர்நிலத்து வினைவித்திட்டார்க்கு விளைவும்அதுவே - உயிராகியநிலத்தில் வினை யாகிய விதையை இட்டார்க்கு அதற்குஏற்ற விளைவே விளையும் என்பது பொருள்; உவர்நிலத்து விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவே என்ற பிரதிபேதத்துக்கு - உவர்க்களத்தில் உப்புவிளையமுயற்சி செய்தவர்க்குப் பயன் உப்பாகவேயிருக்கும்; இவ்வாறே பிறர்க்குத் தீங்கு செய்தவர்க்குப்பயனும் தீங்காகவேயிருக்கும் என்பது, பொருள். சீவகசிந்தா மணியில் முத்தியிலம்பகத்தில் "வெவ்வினை செய்யுமாந்த ருயிரெனு நிலத்து வித்தி,யவ்வினை விளையு ளுண்ணு மவ்விடத்தவர்கள் துன்பம்"என 'தீவினையைச் செய்யும் மாந்தர் தமது உயிரென்னும் நிலத்தே அத்தீவினையை விதைத்து அத்தீவினையின் பயனை நுகரும் அந்நரகத்திடத்தே அந்நரகர் படுந் துன்பம்' என்று கூறியுள்ளதனால், 'உவர் நிலத்துவிளைவித்திட்டார்க்கு' என்றதனினும் 'உயிர்நிலத்து வினைவித்திட்டார்க்கு' என்பது சிறக்கு மென அறிக. **சொற்பொருட்பின்வருநிலையணியாவது** - பொருள்வேறுபடாது ஒரு சொல் மீண்டும் மீண்டும் ஒருசெய்யுளில் வருவது; இதனை வடநூலார் உபயாவ்ருத்திதீபக மென்பர் : இக்குறளில் நோய் என்ற ஒரு சொல், இன்னாதன என்ற பொருளிற் பலகால்வந்தது காண்க. அது செய் தார்க்கு - தீங்குசெய்த வ ர்க்கு. நோய் என் பது - பால்பகா வஃறிணைப்பெய ராதலால், எல்லாம் என்னும் பன்மைப்பெயரோடு தொடர்ந்தது. மேல - ப ல வி ன் பாற்குறிப்பு வினை யா லணை யு ம்பெய ர்.

பின்வாக்கியத்திற்கு முன் வாக்கியம் காரணம். கீழ் 'தீவினையச்சம்' என்னும் அதிகாரத்தில் "தீயவை தீய பயத்தலாற்றீயவை, தீயினுமஞ்சப்படும்", "தீப்பாலதான்பிறர்கட் செய் யற்கநோய்ப்பால, தன்னையடல்வேண்டாதான்", "தன்னைத்தான் காதலனு யினெனைத் தொன்றுந், துன்னற்க தீவினைப்பால்" என்ற குறள்களோடு இதனை ஒப்பிடுக.

(௩௦)

## ௩௩ - ஆம்

## அதிகாரம்—கொல்லாமை.

அஃதாவது - ஐயறிவு டை டய னமுதல் ஓரறிவுடையன ஈறாய உயிர்களைச் சோர்ந்தும் கொல்லுதலைச் செய்யாமை. இது, மேற்கூறிய அறங்களெல்லா வற்றினுஞ் சிறப்புஉடைத்தாய், கூறுத அறங்களையும் அகப்படுத்துகிற்றலின், இறுதிக்கண் வைக்கப்பட்டது.

(கு - ரை.) ஐயறிவு டையனமுதல் ஓரறிவுடையன ஈறுய உயிர்கள்- ஐயறிவுடையனவும், நாலறிவு டையனவு ம், மூவ றிவு டையன வு ம், ஈரறிவுடையனவும், ஓரறிவுடையனவும் ஆகிய பிராணிகள். ஓரறிவுயிர்கள்-முறையே மெய், வாய், மூக்கு, கண், செவி என்னும் ஐம்பொறிகளின் உணர்ச்சியாகிய ஊறு, சுவை, நாற்றம், ஒளி, ஓசை ஆகிய ஐம்புலன்களில் ஸ்பரிச அறிவை மாத்திரமுடைய புல், மரம், புதல், கொடி, புழு முதலியன.

ஈரறிவுயிர்கள்-



ஸ்பரிசம், ரசம் என்னும் இரண்டு அறிவையுடைய சிப்பி, சங்கு, கிளிஞ்சில் முதலியன. மூவறிவுயிர்கள் - ஸ்பரிசம், ரசம், கந்தம் என்னும் மூன்று அறிவையுடைய செல், எறும்பு, ஈசல், அட்டை முதலியன. நாலறிவுயிர்கள் - ஸ்பரிசம், ரசம், கந்தம், ரூபம் என்னும் நான்குஅறிவையுடைய தும்பி,வண்டு, நண்டு, தேனீ முதலியன. ஐயறிவுயிர்கள் - கீழ்க்கூறிய நான்கோடு சப்தமும் ஆகிய ஐந்து அறிவையுமுடைய தேவர், மனிதர், நரகர், மிருகம், பறவை,பாம்பு முதலியன. "ஒன்றறிவதுவே யுற்றறிவதுவே, இரண்டறிவதுவே யதனொடு நாவே, மூன்றறிவதுவே யவற்றொடுமூக்கே, நான்கறிவதுவே யவற்றொடு கண்ணே, ஐந்தறிவதுவே யவற்றொடுசெவியே, ஆறறிவதுவே யவற்றொடு மனனே, நேரிதினுணர்ந்தோர் நெறிப்படுத்தினரே", "புல்லுமரனு மோரறி வினவே, பிறவுமுளவே யக்கிளைப்பிறப்பே", "நந்துமுரணுமீரறிவினவே, பிறவுமுளவேயக்கிளைப்பிறப்பே", "சிதலுமெறும்பு மூவறிவினவே, பிறவு முளவே யக்கிளைப்பிறப்பே", "நண்டுந்தும்பியு நான்கறிவினவே, பிறவு முளவேயக்கிளைப் பிறப்பே",

"மாவுமாக்களுமையறிவினவே, பிறவுமுளவே யக்கிளைப்பிறப்பே", "மக்கள்தாமேயாறறிவுயிரே, பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே"
என்றார், ஆசிரியர் தொல்காப்பியனார்.

ஓரறிவுடையன முதலாக வன்றி ஐயறிவுடையன முதலாகக் கூறினர், சிறப்புநோக்கி. சோர்ந்தும் - மறந்தும்; துறவறத்துக்குரிய விரதங்க ளெல்லாவற்றுள்ளுஞ் சிறப்புடைய தாதலின்; கொல்லாமையை இறுதியில் வைத்தார். கூறுத அறங்களையும் அகப்படுத்துநிற்றலின் என்றது - இந்தக் கொல்லாமை யென்னும் அற மொன்று ஒருவனிடத்து உள்ளதாயின் அவனிடத்து மற்றையதருமங்கள் இல்லாவிடினும் குற்றமில்லை யென்பதும், இவ்விரதமொன்று இல்லையாயின் மற்றையறங்கள் இருந்தும் னுதசெயல்களுள் கொலை

பயனில்லை என்பதும் நூற்றுணிபாதலால். இன் முதன்மையான தாதலின், இன்னாசெய்யாமை

என்னும் அதிகாரத்தின்பின் பட்டதென்றுங் கூறலாம்.

கொல்லாமையென்னும்அதிகாரம் வைக்கப்

௩உ௧. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(இ - ள்.) அறம் வினை யாது எனின்-அறங்களெல்லா மாகிய செய்கை யாதென்று வினவின், கொல்லாமை - (அஃது ஒருயிரையும்) கொல்லாமை யாம்; கோறல் - (அவற்றைக்)கொல்லுதல், பிற வினை யெல்லாம் தரும் - பாவச்செய்கைகளெல்லாவற்றையும் (தானே) தரும் (ஆதலான்;) (எ - று.)

அறம் - சாதியொருமை. விலக்கியதொழிதலும் அறஞ்செய்தலா மாக. வின், கொல்லாமையை 'அறவினை' என்றார். ஈண்டு 'பிறவினை' என்றது, அவற்றின் விளைவை. கொலைப்பாவம் விளைக்குந் துன்பம், ஏனைப்பாவங்க ளெல்லாங் கூடியும் விளைக்கமாட்டா * என்பதாம். கொல்லாமைதானே பிற அறங்களெல்லாவற்றின்பயனை யுந்தரும் என்று மேற்கோள் கூறி, அதற்கு ஏது எதிர்மறைமுகத்தாற் கூறியவா றாயிற்று.

---

* பி - ம்: என்றவாறு.

௩௩ - ஆம் அதிகாரம்—கொல்லாமை

உஉ௫

(கு - ரை.) அறம்என்பது - ஈறுதோன்றாத சாதியொருமை. 'அறமாவது - மனுமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலு மாம்' என்று உரைப்பாயிரத்தில் அறத்திற்கு இலக்கணங்கூறியதற்கு ஏற்ப, 'விலக்கியதொழிதலும் அறஞ்செய்தலாமாகலின்'

என்றார். கீழ் அறவினை என வந்ததனால்,
பிறவினையென்றது - நல்வினையினும் வேறாகிய தீவினை களையுணர்த்தும். அவற்றின்விளைவை -
அந்தத்தீயகாரியங்களின்பயனாகிய பாவங்களை:
பிறவினையென்றது - அவற்றின்விளைவுக்கு, ஆகுபெயர்.
ஏனைப் பாவங்கள் - கொலையொழிந்த மற்றையனவான
பிறர்மனைநயத்தல், கள் பருகுதல், திருடுதல், சூதாடல்
முதலிய பாவச்செயல்கள். அறவினை கொல் லாமை
யென்பதற்கு - கொல்லாமைதானே
பிறவறங்களெல்லாவற்றின் பயனையுந் தருமென்று
கருத்தாதலால், 'கொல்லாமை தானே பிறவறங்க
ளெல்லாவற்றின் பயனையுந்தருமென்று மேற்கோள் கூறி'
என்றது. மேற் கோள் - சித்தாந்தம்: பட்சமெனினுமாம்.
'அறவினையென்பது கொல்லாமை' என்ற
இந்தக்கொள்கையைச் சாதிக்கும்படி ஏது
கூறவேண்டுமிடத்து, 'கோறல் பிறவினையெல்லாந் தரும்'
என்று, கொல்லாமைக்கு எதிர்மறை யான கோறலென்பது
தீவினைப்பயனை விளைத்தலைக் கூறியது காண்க; பட்சத்தை
ஏதுவால் சாதித்தல், தருக்கநூல்முறை. எதிர்மறையேது
- வியதிரேகவேது எனப்படும்.
"ஆனையடியுளடங்காவடியில்லை, தானதுபோ
னிற்கின்றதன்மைதான்—ஊனுயிரைக், கொல்லாவறத்தின்
கொழுநிழற்கே யுள்ளடங்கு, மெல்லாவறமுமிசைந்து!"
என்றது காண்க. 'கோறல் பிற வினையெல்லாந்தரும் -
இது, பாவகருத்தா' என்பது பிரயோகவிவேகம்.

இக்குறளை 'தொகுத்துக்காட்டல்' என்னுந் தந்திரவுத்திக்கு உதாரணங் காட்டினர், வீரசோழியவுரைகாரர். 'கொல்லாமை அறவினையெல்லாந் தரும், கோறல் பிறவினையெல்லாந்தரும் - இவை, தொழிற்பெயர்க் கருத்தா' என்பது - இலக்கணக்கொத்துஉரை.
(க)

௩௨௨. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத லூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(இ - ள்.) பகுத்து உண்டு - (உண்பதனைப் பசித்தஉயிர்கட்குப்) பகுத்துக் கொடுத்து உண்டு, பல் உயிர் ஓம்புதல்-ஐவகையுயிர்களையும் ஓம்புதல், நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை - அறநூலுடையார் (துறந்தார்க்குத்) தொகுத்த அறங்களெல்லாவற்றினுந் தலையாய அறம்; (எ - று.). 'பல்லுயிரும்' என்னும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. ஓம்புதல் - சோர்ந்தும் கொலைவாராமற் குறிக்கொண்டுகாத்தல். அதற்குப் பகுத்துண்டல் இன்றியமையாவுறுப்பாகலின், அச்சிறப்புத் தோன்ற அதனை இறந்தகாலவினையெச்சத்தாற் கூறினர். எல்லாநூல்களிலும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக்கூறுதல் இவர்க்கு இயல்பாகலின், ஈண்டும் பொதுப்பட 'நூலோர்'என்றும்; அவரெல்லார்க்கும் ஒப்பமுடிதலான், 'இது தலையாய அறம்' என்றுங் கூறினர்.

(கு - ரை.) "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங், கைம்புலத்தாறோம்பல்தலை" என்கிற நீதி இல்லறத்தார்க்கே யாதலின், இங்கே 'பகுத்துஉண்டு' என்பதற்கு - துறவறவியலுக்குஏற்ப 'பசித்தவுயிர்கட்குப் பகுத்துக்கொடுத்துஉண்டு' என்று உரைக்கப்பட்டது. பல்லுயிர் - ஐவகை யுயிர்: ஓரறிவுயிர்முதல் ஐயறிவுயிரீறானவை; ஈற்றில், முற்றும்மைதொக்கது விகாரம். ஓம்புதல் - காத்தல். அறநூலுடையார் - தருமசாஸ்திரத்துக் குரியவர். தொகுத்த - திரட்டிக்கூறின. அதற்கு - காத்தற்கு. இன்றியமை யாஉறுப்பு - இல்லாமல்முடியாத [இருந்தேதீரவேண்டிய] அவயவம்; அவசிய மான அங்கம். "உண்பொழுது நீராடி யுண்டலும்" என்னுமிடத்து 'நீராடி' என்னும் இறந்தகாலவினையெச்சம் 'உண்டல்' என்னும்வினைக்கு அவசியமான அங்கமாவதுபோல, இங்கே 'பகுத்துண்டு' என்னும் இறந்தகாலவினையெச் சம் பல்லுயிரோம்புதல் என்னும்வினைக்கு அவசியமான அங்க மென அறிக. எல்லார்க்கும் - எல்லாமதத்தார்க்கும். "ஒன்றே பொருளென்பவேறென்ப வேறெனின், அன்றென்ப வாறுசமயத்தார்-நன்றென, வெப்பாலவருமியைய பவேவள்ளுவனார், முப்பால்மொழிந்தமொழி" என்னுக்

திருவள்ளுவமாலைச் செய்யுளாலும்,
எல்லார்க்கும்பொதுப்படக்கூறுதல் இவர்க்கு இயல்பாதல்
அறிக. அவர்எல்லார்க்கும் ஒப்ப
முடிதலான்-வெவ்வேறுவகைப்பட்ட அந்த
எல்லாமதத்தார்க்கும் இக்கொல்லாமையாகியவிரதம்
வேறுபாடின்றி உடன்பாடாயிருத்தலால்.
(உ)

கூஉகூ.

ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

(இ - ள்.) ஒன்று ஆக நல்லது கொல்லாமை - (நூலோர்தொகுத்த அறங்களுள் தன்னோடு இணையொப்பதின்றித்) தானேயாக நல்லது கொல்லாமை; மற்று பொய்யாமை அதன்பின் சார நன்று - அஃது ஒழிந்தால் பொய்யாமை அதன்பின்னே நிற்க நன்று; (எ - று.)

'நூலோர்தொகுத்த அறங்களுள்' என்பது, அதிகாரத்தான் வந்தது. அதிகாரம் கொல்லாமையாயினும், மேல் "பொய்யாமை பொய்யாமை யாற்றின்" எனவும், "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை" எனவுங் கூறினாராக லின், இரண்டுஅறத்துள்ளும் யாதுசிறந்தது என்று ஐயம் நிகழுமன்றே: அது நிகழாமைப்பொருட்டு, ஈண்டு

'அதன்பின்சாரப் பொய்யாமைநன்று'என்றார்; முற்கூறியதிற் பிற்கூறியது வலியுடைத்தாகலின். அதனை 'பின்சாரநன்று' என்றது, நன்மைபயக்கும்வழிப் பொய்யும் மெய்யாயும் தீமைபயக்கும்வழி மெய்யும் * பொய்யாயும் இதனைப்பற்ற அது திரிந்துவருதலான் என உணர்க.

இவைமூன்றுபாட்டானும், இவ்வறத்தினதுசிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) நூலோர் - தருமசாஸ்திரமுடையோர். தன்னோடு இணையொப்பது இன்றி - தனக்குச் சமானமாகச்சொல்லுமாறு ஒத்திருப்பது வேறொன்று மில்லாமல். அஃது ஒழிந்தால் - அதனைவிட்டு இரண்டாவதை

* பி - ம்: பொய்யாயும் திரிந்துவருதலான்.

௩௩ - ஆம் அதிகாரம்—கொல்லாமை

௨௨௭

ஆர்யத்தொடங்கினல். பொய்யாமை - பொய்கூறாமை. கீழ்ச்செய்யுளில் வந்த தொடரே இங்கே வருவிக்கப்பட்டதனல், 'நூலோர்தொகுத்த அறங்க ளென்பது அதிகாரத்தான் வந்தது' என்றார். "பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற, செய்யாமை செய்யாமை நன்று", "யாமெய்யாக்கண்ட வற்றுளில்லை

யெனத்தோன்றும், வாய்மையினல்லபிற" என்பன - முன் வாய்மையென்னும் அதிகாரத்திற் கூறியவை. இரண்டு அறத்துள்ளும் - கொல்லாமை, பொய்யாமை என்னும் இரண்டுதருமங்களுள். ஐயம் நிகழு மன்றே - சந்தேகந் தோன்றுமன்றோ? மாறுகொளக்கூறலென்னுங் குற்றம் நூலில்வாராதிருக்குமாறு இங்ஙனங் கூறினாரென்க. முன்சொன்ன விதியி னும் பின்சொல்லும் விதி சிறப்புடைய தென்பது நூற்கொள்கை. "வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந், தீமையிலாத சொலல்," "பொய்ம்மையும்வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மைபயக்குமெனின்"என்ற படி நிகழாதது கூறுதலும் நன்மைதந்தால் உண்மையாகவும், நிகழ்ந்தது கூறு தலுந் தீமைதந்தால் பொய்ம்மையாகவும் பயனைநோக்கி இங்ஙனம் வாய்மை யின் தன்மை மாறுபடும்; கொல்லாமையோ, அங்ஙனம் மாறுபடாது: ஆதலின், பொய்யாமையினுங் கொல்லாமை மேலானது எனக் காண்க. பொய்போலக் கொலை நன்மைபயந்தாலும் குணமாகாது, குற்றமேயாம்; கொல்லாமை தீமை தந்தாலுங் குற்றமாகாது, குணமேயா மென்க. இதனைப்பற்ற அது திரிந்து வருதலான் - கொல்லாமையோடு ஒப்பிட்டுப்பார்க்குமிடத்துப் பொய்யாமை மாறுபட்டுவருதலால்: பயனைநோக்கக் காரணத்தின் தன்மை மாறுபடுதலா லென்றலும் உண்டு. இவ்வறத்தின து - கொல்லாமையின து. ஒன்று - ஒப் பற்றது. மற்று - வினைமாற்று. "கொல்லா நலத்தது நோன்மை"

என்பர், மேல் 'சான்றாண்மை' என்னும் அதிகாரத்தும்.

(௩)

௩௨௪. நல்லா றெனப்படுவதி யாதெனின்
கொல்லாமை சூழு நெறி.

யாதொன்றுங்

(இ - ள்.) நல் ஆறு எனப்படுவது யாது எனின் - (மேற்கதி வீடுபேறு கட்கு) நல்லநெறியென்று சொல்லப்படுவது யாதென்று வினவின், (அஃது), யாது ஒன்றூஉம் கொல்லாமை சூழும் நெறி-யாதோருயிரையுங் கொல்லாமை யாகிய அறத்தினைக் காக்கக்கருதும் நெறி; (எ - று.)

'யாதொன்றும்' என்றது, ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு. காத்தல் - வழுவாமற் காத்தல்.

இதனான்,இவ்வறத்தினையுடையதே நன்னெறியென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) மேற்கதி - சுவர்க்கம் முதலிய மேலான பதவிகள். வீடு பேறு - முத்தியையடைதல். நெறி - வழி. வினவின் - கேட்டால். அஃதுநல்லநெறி. கருதும் - எண்ணும். ஓரறிவுயிரையும் அகப்படுத்தற்கு-புல் மரம் முதலியவற்றையும் உள்ளிடுதற்பொருட்டு. வழுவாமல் - தவறாமல். எனப்படுவது + யாது = எனப்படுவதியாது; குற்றியலிகரம்: அலகுபெறவில்லை. யாதொன்றும், உம்மை - இழிவுசிறப்பு. (௪) ௨௨௭

௩உ௫. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

(இ - ள்.) நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம் - (பிறப்புநின்ற) நிலையை அஞ்சி(ப் பிறவாமைப்பொருட்டு மனைவாழ்க்கையை)த் துறந்தாரெல்லாருள்ளும், கொலை அஞ்சி கொல்லாமை சூழ்வான் - கொலைப்பாவத்தை அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன், தலை - உயர்ந்தவன்; (எ - று.)

பிறப்புநின்றநிலையாவது - இயங்குவ நிற்பஎன்னும் இருவகைப்பிறப்பினும் இன்பமென்பதொன்றின்றி உள்ளனவெல்லாந் துன்பமேயாய நிலைமை. துறவு ஒன்றேயாயினும், சமயவேறுபாட்டாற் பலவா மாகலின், 'நீத்தாருளெல்லாம்' என்றார்.

இதனான், இவ்வறம்மறவாதவனுயர்ச்சி கூறப்பட்டது.

(கு - ரை.) மனைவாழ்க்கை - இல்லறவாழ்வு. இயங்குவ - சஞ்சரிக்குமுயிர்கள்; இவை - ஜங்கமமெனவும், சரமெனவும்படும். நிற்ப - சஞ்சரித்தலில்லாத உயிர்கள்; இவை - ஸ்தாவரமெனவும், அசரமெனவும்படும். நால்வகைத்தோற்றத்து எழுவகைப் பிறப்பின் ஐவகை யுயிர்களும் இந்தச் சரம் அசரம் என்னும் இருவகையில் அடங்குதலால், 'இருவகைப்பிறப்பு' என்றார். "தேவரேதாமுமாகித் தேவரால் தெழிக்கப்பட்டும், ஏவல்செய்திறைஞ்சிக் கேட்டு மணிகமாப்பணிகள்செய்தும், நோவதுபெரிதுந்துன்பம்

நோயினுட் பிறத்தல் துன்பம், யாவதுந்துன்பம்
மன்னுயாக்கைகொண்டவர்கட்கென் றூன்'' என்ற
சிந்தாமணிச்செய்யுளாலும் எல்லாப்பிறப்புந்
துன்பமேதருவன வாதல் காண்க. சமயவேறுபாடு -
மதபேதம். குடீசகம் வெகூதகம் ஹம் ஸம் பரமஹம்ஸம்
என்று ஏகதண்ட சந்நியாசம் திரிதண்ட சந்நியாசமென்று
துறவில் பலவகைக் கூறப்படுவதால், துறவு
ஒன்றேயாயினும் சமயவேறு
பாட்டாற் பலவா மென்றூ ரென்னலாம்.

(ரு) ௩௨௬. கொல்லாமை மேற்கொண்
டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண் ணுங் கூற்று.

(இ - ள்.) கொல்லாமை - கொல்லாமையை, மேற்கொண்டு - (விரத மாக) மேற்கொண்டு, ஒழுகுவான் - ஒழுகுவானது, வாழ்நாள்மேல் - வாழ் நாளின்மேல், உயிர் உண்ணும் கூற்று செல்லாது—; (எ - று.)

மிகப்பெரியஅறஞ்செய்தாரும் மிகப்பெரியபாவஞ்செய்தாரும் மூறை யானன்றி இம்மைதன்னுள்ளே அவற்றின்பயன் அனுபவிப்பாரென்னும் அற நூல் துணிபுபற்றி, இப்பேரறஞ்செய்தான்தானும் கொல்லப்படான்; படானே - கவே, அடியிற் கட்டிய வாழ்நாள் இடையூறின்றிஎய்து மென்பார், 'வாழ்நாள் மேற் கூற்றுச் செல்லாது' என்றூர்; செல்லாதாகவே, காலம் நீட்டிக்கும்: நீட்டித்தால், ஞானம்பிறந்து உயிர் வீடுபெறும் என்பது

கருத்து.

இதனான், அவர்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) ஒழுகுவானது - நடப்பவனுடைய. வாழ்நாள்-ஆயுள்நாள். உயிர்உண்ணும்கூற்று செல்லாது - உயிரை உடம்பினின்று கவருந்தன்மை

## ௩௩ - ஆம் அதிகாரம்—கொல்லாமை

உஉ௬

யுள்ள யமன் கொலைகுறித்துச் செல்லான். 'தேவர்களை இருதிணையாலுஞ் சொல்லலாம்' என்பது இலக்கணமாதலால், 'கூற்று செல்லாது' என இங்கு அஃறிணையாற்கூறினர். முறையானன்றி என்பதற்கு - மறுமையிலல்லாமல் என்று கருத்து. 'அதிக நல்வினையாலும், அதிகதீவினையாலும் இம்மையிலேயே பயன் அனுபவிக்கப்படும்' என்பது-தருமசாஸ்திரக்கொள்கை. இப் பேரறஞ்செய்தான் தானும்-கொல்லாவிரதம்மேற்கொண்டவனும். கொல்லாமையைச்செய்தல் - நிவ்ருத்திதர்மம்.

அடியிற்கட்டியவாழ்நாள் - படைப்புக் காலத்தில் இவ்வளவென்று வரையறுத்த சீவகாலம். இடையூறின்றி எய்தும் - தடையின்றி [நடுவிற்குறைதலில்லாமல்] நிலைபெறும். காலம் - ஆயுட் காலம். நீட்டிக்கும் - வளரும். அவர்க்கு - கொல்லாவிரதத்தார்க்கு. "வேள்வி வாய்க்கண்படுத்தும் வெவ்வினைசெயாடவர்கை, வாளின்வாய்க்கண்படுத்தும் வாரணத்தினீருரிபோல், கோளிமிழ்ப்புநீள்வலைவாய்க் கண்படுத்து மின்னணமே,

நாளுலப்பித்திட்டார் நமரலாதாரெல்லாம்'' என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளிலும் இக்கருத்து விளங்குதல் காண்க. (கூ)

௩௨௭. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி

தின்னுயிர் நீக்கும் வினை.

(இ - ள்.) தன் உயிர் நீப்பின்உம் - (அதுசெய்யாவழித்) தன்உயிர் (உட ம்பின்) நீங்கிப்போமாயினும், தான் பிறிது இன் உயிர் நீக்கும் வினை செய் யற்க - தான் பிறிதோர்இன்னுயிரை (அதனுடம்பின்) நீக்குந்தொழிலைச் செய்யற்க; (எ - று.)

'தன்னை அது கொல்லினும் தான் அதனைக் கொல்லற்க'என்றது, பாவம் கொலையுண்டவழித் தேய்தலும் கொன்றவழி வளர்தலும் நோக்கி. இனி, 'தன்உயிர்நீப்பினும்' என்றதற்கு - (சாந்தியாகச்செய்யாதவழித்) தன்உயிர் போமாயினு மென்று உரைப்பாரு முளர்; பிறர்செய்தலும் ஆகாமையின், அஃது உரையன்மை அறிக.

(கு - ரை.) அது செய்யாவழி - கொலையைச் செய்யாதபொழுது.உடம் பின் - உடம்பினின்று. பிறிதோர்இன்னுயிரை - மற்றொருபிராணியின் இனியஉயிரை. எந்தப்பிராணிக்கும் உயிரினும்இனியது வேறின்றாதலால், இன்னுயி ரென்றார். அது -

பிறிதொருபிராணி. கொலையுண்டவழி-தான் ஒன்றினாற்கொல்லப்பட்டு இறந்தவிடத்து. தேய்தல் - குறைதல். கொன்றவழி - தான் ஒருபிராணியைக் கொன்றபொழுது. தன்னைக்கொல்லவரும்.உயிரையுந் தான் கொல்லலாகா தென்பது, முதலுரைக்குக்கருத்து. இரண்'டாமுரைக்குக்கருத்து - தன்உயிரை இறவாமற் காக்கும்பொருட்டுத் தோஷ சாந்தியாக வேறொருபிராணியைக்கொன்று பலியிடுதலும் ஆகா தென்பதாம்; இங்ஙனம் பொருள்படவேண்டுமானால், 'தான்' என்ற சொல் இருத்தல்கூடாது. ஏனென்றால், 'தன்னுயிர்போகாதிருத்தற்காகத் தான் பிறிதின் னுயிர்நீக்கும் வினைசெய்யற்க' என்ற இதில்,
தன்னுயிர்போகாதிருத்தற்காகப் **பிறர்** பிறிதின்னுயிர்நீக்கும் வினைசெய்யலா மென்பது ஏற்படுமன்றே? அங் உ௩௦

திருக்குறள்

மனம் தன்பொருட்டாகப் பிறர் பிறிதின்னுயிர்நீக்கும் வினைசெய்தலும் ஆசிரியர்க்கு உடன்பாடு அன்று: ஆதலால், அங்ஙனம் பொருள்கூறுதல் ஆசிரியர்க்கு உடம்பாடன்று என்று மறுத்தார், பரிமேலழகர். நீப்பின்என்னும் எதிர்காலவினையெச்சத்தில், நீ - பகுதி. உம்மை - இழிவு சிறப்பு. இத்திருக்குறளை 'மறுத்தல்' என்னும் மதத்திற்கு உதாரணங்காட்டினர் வீர சோழியவுரைகாரர்.
(எ)

ருஉஅ. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ்
சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(இ - ள்.) நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனின்உம் - (தேவர்பொருட்டு வேள்விக்கட் கொன்றால்) இன்பம்மிகுஞ் செல்வம் பெரிதா மென்று (இல் வாழ்வார்க்குக்) கூறப்பட்டதாயினும், சான்றோர்க்கு கொன்று ஆகும் ஆக்கம் கடை - (துறவான்) அமைந்தார்க்கு (ஓருயிரைக்) கொல்ல வருஞ் செல்வம் கடை; (எ - று.)

இன்பம்மிகுஞ் செல்வ மாவது - தாமுந் தேவராய்த் துறக்கத்துச் சென்று எய்துஞ் செல்வம். அது சிறிதாகலானும், பின்னும் பிறத்தற்கு ஏதுவா கலானும், வீடாகிய எறிலின்பமெய்துவார்க்குக் கடையெனப்பட்டது. துறக்க மெய்துவார்க்கு ஆமாயினும் வீடெய்துவார்க்கு ஆகா தென்றமையின், விதி விலக்குக்கள் தம்முள் மலையாமை விளக்கியவா றாயிற்று. இஃது, இல்லற மன்மைக்குக் காரணம்.

இவையிரண்டுபாட்டானும், கொலையது குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) வேள்விக்கண் - யாகத்தில். இன்பம்மிகுஞ் செல்வம் - சிற்றின்பவனுபவம் மிகுதற்கிடமான செல்வம். துறவான் அமைந்தார் - துறவறத்துக்குரிய இலக்கணத்தால் நிறைந்தவர். கொல்லவரும்செல்வம்-கொல் லுதலால் உளதாகுஞ் செல்வம். கடை - இழிவானது. துறக்கத்துச்சென்று எய்தும் - சுவர்க்கத்திற் போயடையும். அது சிறிதாகலானும் - அச்செல்வம் சிற்றின்பத்தையே

தருவதாய் அற்பமாதலாலும். பின்னும் - மறுபடி. ஏது- காரணம். இருவினையுமற்று முத்திபெற்றவர்க்குமாத்திரம் பிறப்புஇன்றேயொழிய வினைப்பயன்களால் சுவர்க்க நரக மடைபவர்க்கு மீண்டும் இங்குப் பிறத்தல் உண்டுஆதலால், 'பின்னும்பிறத்தற்கு ஏதுவாகலானும்' எனப்பட்டது. இங்குச்செய்த புண்ணியத்தால் மேலுலகஞ்சென்று தேவகதியை யடைந்து இன்பமனுபவிப்பவர், அப்புண்ணியம் முடிந்தவாறே தேவகதியை யிழந்து மீண்டும் இங்குப் பிறப்ப ரென்க. வீடாகிய ஈறில்இன்பம் எய்து வார்க்கு - முத்தியாகிய அழிதலில்லாதபேரின்பத்தை அடையுந் துறவறத் • தார்க்கு. 'எவ்வுயிரையுங் கொல்லுதலாகாது' என்ற பொதுவிதியின்மேற் சிறப்புவிதியாக 'யாகத்திற் பசுவைக் கொல்லலாம்' என்று தருமசாஸ்திரங்களிற் கூறப்பட்டிருப்பதோடு, இங்குத் துறவறவியலில் 'எவ்வுயிரையுங் கொல்லலாகாது' என்ற விலக்குப் பொருந்துமாறு என்னையெனின்,—யாகத் திற் பசுவைக்கொல்லுதல் சுவர்க்கச்சிற்றின்பமடையக்கருதும் இல்லறத்தார்

## ௩௩ - ஆம் அதிகாரம்—கொல்லாமை

௨௩க

க்கு ஒக்குமாயினும், முத்திப்பேரின்பமடையக்கருதுந் துறவறத்தார்க்கு ஒவ்

வாது என ஒன்றோடொன்று மாறுபடாதபடி கூறியவாறு. இது, இக்குற

ளில் 'சான்றோர்க்கு' என்ற சொல்லால் விளக்கப்பட்டது.

இஃது - கொல்

லாமை. கீழ்க்குறித்த காரணம்பற்றியே இக்கொல்லாமை யென்னும் அதி

காரம், இல்லறவியலில் வைக்கப்படாது துறவறவியலில் வைக்கப்பட்டது.

நன்று - நல்லது: இன்பம்: ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்.

நன்றாகும் ஆக்கம் - பெயரெச்சம் காரியப்பொருளது; 'நோய்தீருமருந்து'

என்றவிடத்துப்போல. காரணப்பொருளதாகிய கொல்லவென்னுஞ் செய

வெனெச்சம், கொன்றெனத் திரிந்து நின்றது. (அ)

௩௨௯. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்

புன்மை தெரிவா ரகத்து.

(இ - ள்.) கொலை வினையர் ஆகிய மாக்கள் - கொலைத்தொழிலையுடைய

ராகிய மாந்தர், புன்மை தெரிவார் அகத்து புலை வினையர் - (அத்தொழிலின்)

கீழ்மையை (அறியாத நெஞ்சத்தராயினும்) அறிவார்நெஞ்சத்துப் புலைத்தொ

ழிலினர்; (எ - று.)

'கொலைவினையர்' என்றதனுன், வேள்விக்கட் கொலையன்மை அறிக.

'புலைவினையர்' என்றது - தொழிலாற் புலைய ரென்றவாறு. இம்மைக்கட்
கீழ்மையெய்துவர் என்பதாம்.

(கு - ரை.) கீழ்மை - இழிவானதன்மை. புலைத்தொழிலினர் - சண்டா
ளர்க்குரிய இழிதொழி லுடையவர். இங்கேகுறித்தது யாகத்தில் ஒவ்வொரு
சமயத்தில்நேரும் கொலையன்று என்பதை 'கொலைவினையர்' என அதனையே
தொழிலாகவுடையவ ரென்பதனால் விளக்கினர். தொழிலாற்புலையர்-கரும
சண்டாளர். கொல்லுதல்செய்பவர் மறுமையில் நரகத்துன்பமடைவரென்
பது மாத்திரமே யன்றி இம்மையிலுங் கீழ்ச்சாதிப்பண்படைவர் என்பது,
இக்குறளில் விளக்கப்பட்டது. 'மாக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வு
மாத்திரமேயுடையராய் மனவுணர்ச்சியில்லாத விலங்குபோன்ற அவிவேகி
களான ஒருசார் மானிடங்கள்' என்பதாதலால் 'கொலைவினையராகியமாக்கள்'
என ப்பட்டது .

(க)

௩௩௦. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்

செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

(இ - ள்.) செயிர் உடம்பின் செல்லா தீ வாழ்க்கையவர் - (நோக்க லாகா) நோயுடம்புடனே வறுமைகூர்ந்த இழிதொழில்வாழ்க்கையினை யுடையாரை, உயிர் உடம்பின் நீக்கியார் என்ப - (இவர் முற்பிறப்பின்கண்) உயிர்களை (அவை நின்ற)உடம்பினின்று நீக்கினவரென்றுசொல்லுவர் (வினை விளைவுகளை அறிந்தோர்); (எ - று.)

செல்லாவாழ்க்கை, தீவாழ்க்கை எனக் கூட்டுக. செயிருடம்பினராதல்

"அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித், துக்கத்தொழுநோ யெழுபவே"

என்பதனானும் அறிக. மறுமைக்கண் இவையும் எய்துவ ரென்பதாம்.

உகூஉ திருக்குறள்

இவையிரண்டுபாட்டானும், கொல்வார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

அருளுடைமை முதற் கொல்லாமை ஈறுகச்சொல்லப்பட்ட இவற்றுள்ளே சொல்லப்படாத விரதங்களும் அடங்கும்; அஃது அறிந்து அடக்கிக்கொள்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்.

(கு - ரை.) நோக்கலாகா - பார்க்கவுங்கூடாமல் அருவருப்பைத்தருகிற. நோயுடம்பு - வியாதியையுடைய சரீரம். வறுமைகூர்ந்த - தரித்திரத் தன்மைமிகுந்த.

இழிதொழில்வாழ்க்கையினை யுடையார் - இழிவான வேலை செய்து சீவிப்பவர். செயிர் - குற்றம்; நோய். இங்கு, செயிருடம் பின் என்பதை மூன்றாம்வேற்றுமையுடனிகழ்ச்சிப்பொருளில் வந்த ஐந் தாம்வேற்றுமையென்றாவது, இன்சாரியைபெற்ற மூன்றாம்வேற்றுமைத் தொகையென்றாவது கொள்க; இது-'வாழ்க்கையவர்' என்பதில் விரிக்கப்பட்ட'உடையார்' என்பதைக் கொண்டுமுடியும். செல்லாமை என்றது-வறுமை யையும், இதனுடன்பாடா கியசெல்லுதல்என்பது - செல்வத்தையும் உணர்த் தும்; இதனை "செல்லாவிடத்துங் குடிப்பிறந்தார் செய்வன, செல்விடத்துஞ் செய்யார் சிறியவர்" என நாலடியாரிலுங் காண்க. தீவாழ்க்கை - தீமையைத் தரும்வாழ்வு. "அக்கேபோல்" என்னும் மேற்கோள் - நாலடியார் 'தீவினையச்சம்' என்னும் அதிகாரத்தில் உள்ளது; இதன்பிற்பாகம் "அக்கால், அலவனைக்காதலித்துக்கான் முரித்துத்தின்ற, பழவினைவந்தடைந்தக்கால்" என் பது: முற்பிறப்பில்நண்டைவிரும்பிக் காலையொடித்து அதனைத் தின்றதனு லாகிய பழையகருமம் வந்துசேர்ந்தால் அதன்பயனுல் அவர் பிற்பிறப்பில் சங்கு மணிபோல உள்ளங்கைமாத்திரம்நிற்க விரல்களெல்லாம் அழுகிவிழுந்து இவ் வாறு துக்கத்தைத்தருகிற குட்டநோயுண்டாகப்பெறுவர் என்பது-பொருள்.
என்பர் என்பதற்கு - 'வினைவிளைவுகளையறிந்தோர்' என்ற எழுவாய் வரு விக்க; இனி, என்பர் என்பதைச் செயப்பாட்டு

வினைப்பொருளில்வந்த செய்
வினையாக் கொண்டு, செயிருடம்பிற்செல்லாத்
தீவாழ்க்கையவர் உயிருடம்பி
னீக்கியார் எனப்படுவர் எனினுமாம். ஈண்டு உரைப்பிற்
பெருகுமென விடுத் தது, 'மிகைபடக்கூறல்' என்னும்
குற்றத்திற்கு அஞ்சி யென்க. (கo)

## ஞானம்.

இனி, அவற்றின் பயனாகிய ஞானங் கூறிய
தொடங்கினார். ஞான
மாவது - வீடுபயக்கும்உணர்வு. அது, நிலையாமை முதல்
அவாவறுத்தல் இறு
தியாக நான்கு அதிகாரத்துள் அடக்கப்பட்டது.

(கு - ரை.) ஜ்ஞாநம் - வடசொல். அவற்றின் -
கள்ளாமை முதலிய
அந்த விரதங்களின். கூறிய - சொல்ல. நான்கு
அதிகாரம்-நிலையாமை,
துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்பன.
விரதங்களால் வினைமாசு
தீர்ந்து அந்தக்கரணங்கள் பரிசுத்தமானவிடத்து ஞானம்
உதிப்பதாதலால்,
இது விரதத்தின்பின் வைக்கப்பட்டது; விரதம்
காரணமாய்முந்தினதும்,
ஞானம் காரியமாய்ப் பிந்தினதுமாம்.

## ௩௪ - ஆம் அதிகாரம்—நிலையாமை.

அஃதாவது - நிலையாமையாவது - தோற்றமுடையன யாவும் நிலையுதலில வாந்தன்மை. மயங்கியவழிப் பேய்த்தேரிற்புனல்போலத்தோன்றி மெய்யுணர்ந்தவழிக் கயிற்றில் அரவுபோலக் கெடுதலிற் பொய்யென்பாரும், நிலை வேறுபட்டுவருதலாற் கணந்தோறும் பிறந்து இறக்குமென்பாரும், ஒருவாற்ருன்வேறுபடுதலும் ஒருவாற்ருன்வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும்நிலையாமையும் ஒருங்கேயுடைய வென்பாரும் எனப் பொருட்பெற்றிகூறுவார் பலதிறத்தராவர்; அவரெல்லார்க்கும் அவற்றதுநிலையாமை உடம்பாடாகலின், ஈண்டு அதனையே கூறுகின்ருர். இஃது உணர்ந்துழியல்லது பொருள்களிற் பற்றுவிடா தாகலின், இது முன் வைக்கப்பட்டது.

(கு - ரை.) தோற்றமுடையன யாவும் - கண்ணுக்குத்தோன்றும் பொருள்களெல்லாம்; அவை செல்வம், உடம்புமுதலியன. தோற்றம் - உண்டாதலுமாம். நிலையுதல் இலவாம் - நிலைபெறுதலில்லாதனவாம்: அழியுந்தன்மையனவாகும். "இளமையுநில்லா யாக்கையுநில்லா, வளவியவான் பெருஞ் செல்வமுநில்லா" என்பது மணிமேகலை. மயங்கியவழி - அவித்தையினுல்

அறிவுமயக்கமடைந்தவிடத்து.
பேய்த்தேரிற் புனல்போலத் தோன்றி-கானலி னிடத்து
நீரின்தன்மைபோலப் பிரமத்தினுற் காணப்பட்டு; கானல் -
நீர் போலுதலே "கானகத்தியங்கிய கழுதின் தேர்த்துலம்,
தானகத்தெழுதலால் தலைக்கொண் டோடிப்போய், மேனியிர்ந்
தெழுந்திடின் விசும்பும் வேமெனு,
வானவர்க்கிரங்கிநீர்வளைந்த தொத்ததே" என்னும்
கம்பராமாயணத்தாலு மறிக: சிலப்பதிகாரத்தில் கானலை
"நிறைநீர்வேலி" எனக் கூறியிருத்தலும் காண்க.
மெய்யுணர்ந்தவழி - தத்துவஞானமுண்டானவிடத்து.
கயிற்றில் அரவுபோலக் கெடுதலின் - கயிற்றினிடத்தில்
பிரமத்தால்தோன்றும் பாம்பின்தன்மைபோல அழிதலால்.
மதிமயக்கத்தால் கானல் நீராகக்காணப்படுவதுபோல,
அவித்தையினுலே பரமான்மா ஒன்றே
பலசீவான்மாக்களும் அவற்றுக்கு ஆதாரமான பிரபஞ்சமு
மாகக் காணப்பட்டு, விபரீதஞானத்தாற் கயிற்றினிடத்துத்
தோன்றிய பாம்பின்தன்மை அவ்விபரீதஞானமொழிந்து
ஆய்ந்து நோக்கியவிடத்து மாறிக் கயிறு கயிறேயாய்
விளங்குவதுபோல, அவித்தை யொழிந்து
தத்துவஞானம்பெற்றவிடத்துப் பிறதோற்றங்கள்மறைந்து
பரமான்மாஒன்றே இயற்கையாய்க் காணப்படுதலின்,
கட்புலப்படும் பிரபஞ்சத்தோற்றங்கள்யாவும் பொய் யென்பது
- அத்துவைதசமயக்கோட்பாடு; "சீர்பூத்தபரஞ்சுடராய்ச்
சித்தாகிக் கானலிடை, நீர்பூத்ததென வுலகம் நிறைந் தொளிர்
தன்பாற் றேன்ற" என்ருர் பாகவதநூலுடையாரும்.
வளர்ச்சி முதலிய நிலைமைகள் பேதப்படுதலால்

எல்லாப்பொருளும் ஒவ்வொருகணத்திலும் பிறந்து இறந்துவரு மென்பது - பௌத்தசமயத்துள் ஒருசாரார் கொள்கை. ஒருவாற்றான் - ஒருவகையால்; ஒரு ஆறு எனப்பிரிக்க. மண் குடமாகுந் தன்மையால் வேறுபடுதலையும் நிலையாமையையும், மண்ணாயிருக்குந் தன்மையால் வேறுபடாமையையும் நிலைத்தலையும் தன்னில் ஒருங்கே





யுடையதாம்; இங்ஙனமே எல்லாப் பொருள்களும் என்பது - ஒருசார் ஆருகத சமயக்கொள்கை. பொருட்பெற்றிகூறுவார் - பொருள்களின் தன்மையைச் சொல்லுபவர். பலதிறத்தார் - பலவகையர். அவற்றது - அப்பொருள்களின். இஃது உணர்ந்துழி அல்லது - இந்நிலையாமையை அறிந்தவிடத்தல்லாமல். பற்றுவிடாது - ஆசைநீங்காது. இறுதிவாக்கியம் - ஞானம்என்னும்தலைப்பின் முதலில் துறவு என்னும் அதிகாரத்தின் முன் நிலையாமையென்னும் இவ்வதிகாரத்தை வைத்ததற்குக் காரணம்;இங்ஙனமே நாலடியாரிலும் அறத்துப் பாலில் துறவறவியலின் முதலில் செல்வம் இளமை உடம்பு இவற்றின் நிலை யாமையைக்கூறும் அதிகாரங்களை வைத்தவாறுங் காண்க. உடம்பாடெனினும், உடன்பாடெனினும் ஒக்கும்; சம்மதமென்று பொருள்.

௩௩௧. நில்லா தவற்றை நிலையின
வென்றுணருந்

புல்லறி வாண்மை கடை.

(இ - ள்.)

நில்லாதவற்றை-நிலையுதலிலவாகியபொருள்களை, நிலையின என்று-நிலையுதலுடையவென்று, உணரும்-கருதுகின்ற, புல் அறிவு ஆண்மை- புல்லிய அறிவினை யுடையராதல், கடை - (துறந்தார்க்கு) இழிபு; (எ - று.)

தோற்றமுடையவற்றைச் சேடிலவென்று கருதும் புல்லறிவால் அவற் றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித்துன்பத்திற்கு ஏதுவாகலின், அது வீடெய்து வார்க்கு இழுக்கென்பது இதனாற்கூறப்பட்டது. இனி, புல்லறிவாளர் பெரும் பான்மையும் பற்றுச்செய்வது சிற்றின்பத்திற்கு ஏதுவாகிய செல்வத்தின் கண்ணும் அதனை அனுபவிக்கும் யாக்கையின்கண்ணு மாகலின், வருகின்ற பாட்டுக்களான் அவற்றதுநிலையாமையை விதந்துகூறுப.

(கு - ரை.) புல்லிய-இழிவான. இழிபு-தாழ்வு. தோற்றம் - உண்டாகை. இழுக்கு-குற்றம். யாக்கை - உடம்பு. வருகின்ற பாட்டுக்களான் - இவ்வதிகாரத்தின் மற்றைஒன்பதுபாடல்களாலும். அவற்றுள் முந்தியஇரண்டுபாடல்கள் செல்வநிலையாமையையும், பிந்திய ஏழுபாடல்கள் யாக்கைநிலையாமையை யுங் கூறும். உடம்புக்கு வயது இவ்வளவென்று ஒருகாலநியமமுள்ளதனாலும், அப்படிப்பட்டநியமமுஞ் செல்வத்திற்கு இல்லாமையினாலும், செல்வநிலை யாமை முன்னும், யாக்கைநிலையாமை பின்னுங் கூறப்படும். விதந்துகூறுப-

பிரித்தெடுத்துக்கூறுவர். புல்லறிவு - சிற்றுணர்வு, அற்பபுத்தி. (க)

௩௩௨. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(இ - ள்.) பெருஞ் செல்வம் - (ஒருவன்மாட்டுப்)பெரிய செல்வம் (வருதல்), கூத்து ஆட்டு அவை குழாத்து அற்று - கூத்தாடுதல்செய்கின்ற அரங்கின்கட் காண்போர்குழாம் வந்தாற்போலும்; போக்குஉம் - (அதனது) போகலும், அது விளிந்து அற்று - (அக்கூத்தாட்டு முடிந்தவழி) அக்குழாம் போயினாற்போலும்; (எ - று.)

பெருஞ்செல்வ மெனவே, துறக்கச்செல்வமும் அடங்கிற்று. 'போக்கும்' என்ற எச்ச வும்மையான், வருதலென்பது பெற்றாம். அக்குழாம் கூத்தாட்டுக்



காரணமாக அரங்கின்கண் பஃறிறத்தால் தானே வந்து அக்காரணம் போயவழித் தானும் போமாறுபோல, செல்வமும் ஒருவன்நல்வினைகாரணமாக அவன்மாட்டுப் பஃறிறத்தால் தானே வந்து அக்காரணம்போயவழித் தானும் போமென்றதாயிற்று.

(கு - ரை.) ஒருவன்மாட்டு - ஒருவனிடத்து. கூத்தாடுதல்செய்கின்ற அரங்கின்கண் - நாடகசாலையில்.

குழாம் - கூட்டம். அதனதுபோகலும் - செல்வம் அவனை விட்டு ஒழிதலும். அக்குழாம் போயிளுற் போலும் - அவ் விடத்தைவிட்டு அக்கூட்டம் கலைந்தாற்போலும். எச்சவும்மை - இறந்தது தழுவிய எச்சப்பொருள் தரும் 'உம்' என்னும் இடைச்சொல். பஃறிறத்தால்- பலவழியால்: பல் திறம் எனப்பிரிக்க. அக்காரணம் - கூத்தாட்டு. பஃறிறத் தால் - பலவகையால். அக்காரணம் - நல்வினை. கூத்து - தொழிலுணர்த்தும் பகாப்பதமாகிய பெயர். ஆட்டு - ஆடுஎன்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். அவை - ஸபா: வடமொழித் திரிபு. ஆட்டவை - ஆடுதலை யுடைய அவை யென இரண்டனுருபும்பயனுமுடன் தொக்கதொகையாகப் பொருட்புணர்ச்சியுரைக்க; ஆடுதற்குஇடமான அவை யென்பது கருத்து. குழாம் + அத்து = குழாத்து; "அத்தினகரமகரமுனையில்லை" என்றதன் உப லட்சணத்தால், மவ்வீறொற்றழிந்துநின்ற ஆகாரத்தின்முன்னும் அத்துச்சாரி யையின் முதல்அகரங் கெட்ட தென்க. ஏ - தேற்றம்; அசையுமாம். விளிந் தற்று - விளிந்தால்என்னும் எதிர்காலவினையெச்சம் விளிந்துஎன இறந்த காலவினையெச்சமாத்திரிந்தது; விளிந்ததற்று எனத் தொழிற்பெயர் தொகுத் தல்விகாரப்பட்டதாகவுங் கொள்ளலாம். இக்கவி - உவமையணி. (உ)

௩௩௩. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா

லற்குப வாங்கே செயல்.

(இ - ள்.) அற்கா இயல்பிற்று செல்வம் - நில்லாத இயல்பினையுடைத் து செல்வம்; அது பெற்றால் - அதனைப் பெற்றால், அற்குப - (அதனாற்) செய்யப்படும் அறங்களை, ஆங்கே - அப்பெற்றபொழுதே, செயல் - செய்க.

அல்கா என்பது, திரிந்துநின்றது. ஊழ் உள்வழியல்லது துறந்தாராற் பெறப்படாமையின் 'அதுபெற்றால்' என்றும், அஃதுஇவ்வழி நில்லாமையின் 'ஆங்கே' என்றுங் கூறினார். அதனாற்செய்யப்படும் அறங்களாவன - பயன்நோக்காது * செய்யப்படுங் கடவுட்பூசையும், தானமும் முதலாயின. அவை ஞானவேதுவாய் வீடு பயத்தலின், அவற்றை 'அற்குப' என்றும், 'செய்க' என்றுங் கூறினார்.

இவையிரண்டுபாட்டானும், செல்வநிலையாமை கூறப்பட்டது.

(கு - ரை.) அப்பெற்றபொழுதே-செல்வம்பெற்ற அப்பொழுதே. 'ஊழ் உள்வழியல்லது துறந்தாராற் பெறப்படாமையின்' என்றது - துறந்தவர்க்குப் பொருள்வருவாய்க்கு வேண்டும் முயற்சி யின்றாதல்பற்றி விதிவசத்தால் மாத்திரமே அவர்க்குச் செல்வம்வருதல் கூடுமாதலின். அதுபெற்றால் என்

* பி - ம்: செய்யும்.

றது, செல்வம்பெறுதலின் அருமை தோன்றநின்றது. அஃது இவ்வழிநில் லாமையின் - அந்நல்வினைப்பயன் நீங்கியவிடத்துப் பொருள் நில்லாது நீங்குமாதலின். பயன்நோக்காது - காமியமாக வல்லாமல். கடவுட்பூசை - தேவ தாராதநம். அற்கா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்; அல்குஎன்பது திரிந்த அற்கு - பகுதி. அற்குப - அல்குப: நிலைத்திருப்பவை: பலவின்பாலெதிர்காலவினையாலணையும்பெயர்; ஆங்கே, ஏகாரம் - தாமதிக்கக்கூடாமையைக் குறிக்கும். செயல் - உடன்பாட்டுவியங்கோள். (௩)

௩௩௪. நாளென வொன்றுபோற் காட்டி

யுயிரீரும்

வாள துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) நாள் என ஒன்று போல் காட்டி - நாளென்று அறுக்கப்படுவதொரு காலவரையறைபோல (த்தன்னை)க் காட்டி, ஈரும் - ஈர்ந்துசெல்கின்ற, வாளது - வாளினதுவாயது, உயிர் —: உணர்வார் பெறின் - (அஃது) உணர்வாரைப் பெறின்; (எ - று.)

காலமென்னும் அருவப்பொருள் உலகியல் * நடத்தற்பொருட்டு ஆதித்தன்முதலிய அளவைகளாற் கூறுபட்டதாக வழங்கப்படுவதல்லது தானாகக் கூறுபடாமையின் 'நாளெனவொன்றுபோல்' என்றும், அதுதன்னை வாளென்றுஉணரமாட்டாதார்

†தமக்குப்பொழுதுபோகாநின்றதென்று இன்புறுமாறு நாளாய்

மயக்கலின் 'காட்டி' என்றும், இடைவிடாது ஈர்தலான் 'வாளின் வாயது' என்றும், அஃதுஈர்கின்றமையை உணர்வார் அரியராகலின் 'உணர் வார்ப்பெறின்' என்றுங் கூறினார். 'உயிர்' என்னுஞ் சாதியொருமைப்பெயர், ஈண்டு உடம்பின்மேல்நின்றது: ஈரப்படுவது அதுவே யாகலின். வாள் என்பது, ஆகுபெயர். இனி, இதனை - நாளென்பது ஒருபொருள்போலத்தோன்றி உயிரைஈர்வதொருவாளாம் என்று உரைப்பாரு முளர்; என என்பது பெயரன்றி இடைச்சொல்லாகலானும், ஒன்றுபோற்காட்டி யென்பதற்கு ஓர்பொருட்சிறப்பு இன்மையானும், அதுவென்பது குற்றியலுகரமன்மையானும், அஃதுஉரையன்மை அறிக.

(கு - ரை.) அறுக்கப்படுவது - பிரித்துஎண்ணப்படுவது. ஈர்ந்துசெல்கின்ற - அறுத்துக்கழிகின்ற. வாளினதுவாயது - வாளின்வாயிலுள்ளது. அஃது - அந்நிலைமையை. அருவப்பொருள் - ரூபமில்லாத பதார்த்தம். உல இயல்நடத்தற்பொருட்டு - உலகத்துநிகழ்ச்சிகள்நடக்கும்பொருட்டு. ஆதித் தன்முதலிய அளவைகளால் - சூரியன்முதலான அளக்குங்கருவிகளால்.. சூரியன்காலத்தையளக்குங்கருவியாதலை "வாழ்நாட்கலகாவயங்கொளிமண் டிலம், வீழ்நாட்படாஅதெழுதலால்", "தோற்றஞ்சால்ஞாயிறு நாழியா வைகலுங், கூற்றமளந்துநுந்நாளுண் ணும்'

'என்றவற்றிலுங் காண்க. ஒருசூரியோதயந்தொடங்கிப் பின்வருஞ் சூரியோதயமளவிற் கழிந்த காலம் ஒருநாளென்றும், அப்படிப்பட்டநாள் முப்பதுகொண்டது ஒருமாதமென்றும், அம்

* பி - ம்: நடாத்தற்பொருட்டு † பி - ம்: நமக்கு

ந௩ - ஆம் அதிகாரம்—நிலையாமை

௨௩௪

மாதம்பன்னிரண்டுகொண்டது ஓர்வருடமென்றும் இவ்வாறு சூரியன்கருவியாக எண்ணி நாள்கணக்கிட்டு அகண்டமாகிய காலத்தைக் கூறுபடுத்திவழங்குமாறு காண்க. முதலிய என்றது - மற்றைக்கிரகங்களையும், நட்சத்திரங்களையும். கூறுபட்டது - பகுப்புக்கொண்டது. இனி, நாளெனவொன்றுபோற் காட்டி என்பதற்கு - நாளென்று ஒன்றாகத் தன்னைக்காட்டி யென்று உரைத்து, போல் என்பதை ஒப்பில்போலியாய் உரையசையெனவுங் கொள்ளலாம். அதுதன்னை - காலத்தை. அவிவேகிகள் நாட்கழிவுக்குவருந்தாமல் மகிழ்தலை "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார், வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர், வைகலும் வைகற்றம் வாழ்நாள் மேல் வைகுதல், வைகலை வைத்துணரா தார்" என்னும் நாலடியாராலும் உணர்க. ஈர்தல் - அறுத்தல். அஃது - காலமாகிய வாள். உடம்புக்கு அழிவு உண்டேயொழிய உயிருக்கு அழிவுஇல்லையாதலால், இங்கு உயிர் என்றது - உடம்பிற்று இலக்கணையென்க; இது -தானியாகுபெயர்: "அச்சேத்யோயம் [இந்தஆன்மா அறுக்கமுடியாதது]"

என்றது, ஸ்ரீபகவத்கீதை. ஈரப்படுவது அதுவே-அறுக்கப் படுவது உடம்பே. வாள் என்பது - வாளின்வாய்க்கு, முதலாகுபெயர். முத லுரைக்கு, உயிர்-எழுவாய்; வாளதுஎன்னும் ஒன்றன்பாற்குறிப்புமுற்று - பய னிலை; என என்னும் இடைச்சொல், காட்டியென்னும் வினையெச்சத்தைக் கொண்டது. பிந்தின உரைக்கு, எனஎன் பது - எழுவா யும் ,வா ள் எ ன் ப து- வி னை முற்றுமாதல்வேண்டும். அவ்வுரையைப் பல காரணங்காட்டி மறுக்கிறார்: என என்பது-இடைச்சொல்வாதலால், பெயர்ச்சொல்போல வாள்என்பதற் குக் கருத்தாவாகநில்லாதென்பது, முதற்காரணம். இரண்டாவது காரணம் - முதலுரையில் நாளெனவொன்றுபோற்காட்டி என்பதற்கு விசேடவுரை இருப்பதுபோல் விசேடவுரையில்லாமை: இது,வெளிப்படை. மூன்றாவதுகார ணம் - அதுஉணர்வார்ப்பெறின் என எடுத்து, அதனையறிவாரைப்பெற்றால் என்னவேண்டும்: 'அது உணர்வார்'என்று எடுக்குமிடத்து அது என்பது முற்றியலுகரமாதலின், உயிர்முதல்மொழிப்புணர்ச்சியில் அதுவுணர்வார் என உடம்படுமெய்பெற்றுவரவேண்டுமேயன்றி அதுணர்வார் என வருதற்கு விதி யில்லாமை என்பது. முதலுரைக்கு-வாளது என்பது ஒருசொல்லாய் உயிர்த் தொடர்க்குற்றியலுகரமாதலால், உயிர் வரக் குற்றியலுகரத்தின்மேல் அவ்வுயிர் சேர்ந்திடுதற்குத் தடையில்லையென்க. ஒன்று-ஒருகாலவரையறையைக் குறித் தலால், எண்ணலளவையாகுபெயர்.

உணர்வார்ப்பெறின்-உயர்திணையிடத்து இரண்டனுருபு

தொக்கது. ஆராய்ந்து உண்மைநோக்குமிடத்து, காலத்துக்கு வசப்பட்டுள்ளது உயிருடம்பின்வாழ்க்கையென்பது விளங்குமென்று கருத்து. திருச்சந்தவிருத்தத்தில் திருமழிசையாழ்வாரும் "வாள்களாகி நாள்கள் செல்ல" என இங்ஙனம் நாளை வாளாக உருவகப்படுத்தி அருளிச்செய்திருத்தல் காண்க. இக்குறளால், உடம்புகளுக்கு அளவுசெய்யப்பட்ட நாள் கழிகிற விதம் சொல்லப்பட்டது.

(௪)

௩௩௫. நாச்செற்று விக்குண்மேல் வாராமு
மேற்சென்று செய்யப் படும்.

னல்வினை



(இ - ள்.) நா செற்று - (உரையாடாவண்ணம்) நாவை அடக்கி, விக்குள் மேல்வாரா முன் - விக்குள் எழுவதற்கு முன்னே, நல் வினை - (வீட்டிற்கு ஏதுவாகிய) அறம், மேற்சென்று செய்யப்படும் - விரைந்து செய்யப்படும்.

மேல்நோக்கிவருதல் ஒருதலையாகலானும் வந்துழிச் * செய்தலேயன்றிச் சொல்லலும் ஆகாமையானும் 'வாராமுன்' என்றும், அதுதான் இன்னபொழுது வருமென்பதின்மையின் 'மேற்சென்று' என்றுங் கூறினார். மேற்சேறல் - மண்டுதல். நல்வினைசெய்யுமாற்றின்மேல்வைத்து நிலையாமை கூறியவாறு.

(கு - ரை.) உரையாடாவண்ணம்-வார்த்தையெழாதபடி. நாவை-நாக்கை. விக்குள் - விக்கல்; தொழிற்பெயர். எழுதல்-மேல்நோக்கிவருதல். வீட்டிற்கு ஏதுவாகிய அறம் - துறவறம். ஒருதலை - நிச்சயம். வந்தழி - விக்கல்வந்த பொழுது. செய்தலேயன்றிச் சொல்லலும் ஆகாமையானும் - அறஞ்செய்தல் அசாத்தியமென்பதுமாத்திரமே யன்றி அறஞ்செய்யவேண்டுமென்று வாயாற்சொல்லுதலும் அசாத்தியமாதலாலும். நாச்செற்று விக்குள் மேல்வாரா முன் - மரணவேதனை வருதற்குமுன் என்றபடி. அதுதான் - அம்மரண வேதனைதான். இன்மையின் - தெரியாதாதலால் என்றபடி. மேற்சேறல், மண்டுதல் - துரிதப்படுதல். இங்கே நல்வினையென்றது, அழியுந்தன்மையன வான சுவர்க்கவின்பம் முதலிய காமியபலன்களைத் தரும் யாகம்முதலியவற்றை யன்று; முத்தியடைதற்கு நேரேவழியாகிய யோகஞானங்களை யென்க. செய்யும்ஆறு - செய்யும்விதம். நிலையாமை - யாக்கைநிலையாமை. "மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினை யுள்ளெழவாங்கிக், காலுங்கையும்விதிர்விதிர்த்தேறிக்கண்ணுறக்கமதாவதன்முன்னம், மூலமாகிய வொற்றையெழுத்தை மூன்றுமாத்திரையுள்ளெழ வாங்கி, வேலைவண்ணனை மேவுதிராகில்விண்ணகத்தினில்மேவலுமாமே" என்றார் பெரியாழ்வாரும். இக் குறளால், ஆயுள்நாள்கழியுங்காலத்து உண்டாகும் நிலைமை சொல்லப்பட்டது.

௩௩௬. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்

பெருமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) 'ஒருவன் நெருநல் உளன்-ஒருவன் †
நெருநல்உளனாயினான், (அவனே) இன்று இல்லை - இன்று
இல்லையாயினான்', என்னும் - என்றுசொல்லும், பெருமை -
நிலையாமைமிகுதி, உடைத்து—: இ உலகு - இவ்வுலகம்.

ஈண்டு, உண்மை-பிறத்தலையும்,
இன்மை-இறத்தலையும் உணர்த்திநின்
றன. அவை பெண்பாற்கும் ‡ உளவாயினும், சிறப்புப்பற்றி
§ ஆண்பாற்கே.
கூறினார். இந்நிலையாமையே உலகின் மிக்க தென்பதாம்.

(கு - ரை.) நெருநல் - நேற்றைத்தினம். இன்று -
இன்றைத்தினம். 'உளனொருவன்' என்ற ஆண்பால் -
மற்றைப்பால்களுக்கும் உபலக்ஷணம்.
பெருமையென்பது அதிகாரத்தால், நிலையாமைமிகுதியைக்
குறித்தது.

---

* பி - ம்: செயலே † பி - ம்: நெருநற்றுளனாயினான்,
‡ பி - ம்: உரிய
§ பி - ம்: ஆண்பாலையே.

## ௩௪ - ஆம் அதிகாரம்—நிலையாமை

௨௩௬

உண்மை - உளன்என்பதன் பகுதி. இன்மை -
இல்லைஎன்பதில் உள்ளது. அவை - பிறத்தலும் இறத்தலும்.
நெருநல், இன்று - ஏழாம்வேற்றுமைப் பொருளுணர்கின்ற
இடைச்சொற்கள். "புன்னுனிமே னீர்போ னிலையாமை

யென்றெண்ணி, இன்னினியேசெய்க வறவினை - இன்னினியே, நின்றா னிருந்தான்கிடந்தான் தன்கேளலறச், சென்றா னெனப்படுதலான்" என்னும் நாலடியையும், "காலைச்செய்வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச், சாலச்செய்வாரேதலைப்படுவார் - மாலை, கிடந்தானெழுதலரிதான்மற்றென் கொ, வறங்காலைச்செய்யாதவாறு" என்னும் அறநெறிச்சாரத்தையும் இங்கே அறிக. யாக்கைநிலையாமைகூறியது, இது. "மின்னின்னிலையில, மன்னுயி ராக்கைகள்" என்றார் பெரியாரும்.
(சு)

௩௩௭. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

(இ - ள்.) ஒரு பொழுதஉம் - ஒருபொழுதளவும், வாழ்வது - (தம்உட ம்பும் உயிரும்)இயைந்திருத்தலை, அறியார் - தெளியமாட்டார்; (மாட்டாது வைத்தும்), கோடிஉம் அல்ல பல - கோடியளவுமன்றி அதனினும்பலவாய நினைவுகளை, கருதுப - நினையாநிற்பர், (அறிவிலாதார்); (எ - று.)

இழிவுசிறப்பும்மையால், பொழுதென்பது - ஈண்டுக் கணத்தின்மேல் நின்றது. காரணமாகியவினையின் அளவே வாழ்தற்கும் அளவாதலின், அஃது அறியப்படாதாயிற்று. பலவாயநினைவுகளாவன - பொறிகளால் நுகரப்படும் இன்பங் கள் தமக்குஉரியவாமாறும், அதற்குப் பொருள் துணைக்காரணமாமாறும், அது தம்முயற்சிகளான் வருமாறும், அவற்றைத் தாம் முயலுமாறும், அவற்றிற்குவரும்

இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், நீக்கி அப்பொருள் கடைக்கூட்டுமா றும், அதனைப்பிறர்கொள்ளாமற்காக்குமாறும், அதனான் நட்டாரை ஆக்குமாறும், நள்ளாரை அழிக்குமாறும், தாம் அவ்வின்பங்கள் நுகருமாறும் முதலாயின. அறிவிலாரது இயல்பின்மேல்வைத்து நிலையாமைகூறியவாறு.

இனி,'கருதுப'என்பதனை அஃறிணைப்பன்மைப்பெயராக்கி உரைப்பாருமுளர்.

(கு - ரை.) இயைந்திருத்தல் - கூடியிருத்தல். வாழ்வது - சீவித்திருப் பது. தெளியமாட்டார் - உண்மையாய் அறியமாட்டார். கோடி - நூறுலட்சம். "எண்பதுகோடிநினைந்தெண்ணுவன"என்றார் ஒளவையாரும். கணம்-க்ஷணம். வினை - ஊழ்வினை. அஃது - வாழ் நாளின்அளவு. ' 'வினைப்போகமே யொரு தேகங்கண்டாய் வினைதானொழிந்தால், தினைப்போதளவு நில்லாதுகண்டாய்'' என்ற பட்டினத்தடிகள்வாக்கு இங்கே காணத்தக்கது. பொருள் - செல்வம். அவற்றைத் தாம் முயலும் ஆறும் - அம்முயற்சிகளைத் தாம் செய்யும் விதமும். இடையூறு-தடை, விக்கினம். பொருள் கடைக்கூட்டும் ஆறும்-செல்வத்தைச் சேர்க்கும்விதமும். அதனான் நட்டாரை ஆக்கும் ஆறும் - அச்செல்வத்தால் சினேகிதர்களை வளர்க்கும் விதமும். நள்ளாரை - பகைவர்களை. பரிமேலழக ருரைக்கு 'அறிவிலாதார்' - தோன்றாஎழுவாய்; அறியார், கருதுப - உயர் திணைப்பலர்பால்முற்றுக்கள்; பயனிலை; வாழ்வது, பல - செயப்படுபொருள். உசo

பிறருரைக்கு, எதிர்காலப்பலவின்பால்வினையாலணையும்பெயரான கருதப - எழுவாய்; பல - வினைமுற்று. கருதப - எண்ணுவன என்க. கோடியும், உம்மை - உயர்வுசிறப்பு; எண்ணின்பெருமையைக் குறித்தலால். அல்ல, பல - பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்கள். இக்குறளால், உடம்புகள் ஒருகணமாயினும் நிற்குமென்பது நம்பப்படாமை சொல்லப்பட்டது. (எ)

௩௩௮. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே

யுடம்போ டுயிரிடை நட்பு.

(இ - ள்.) குடம்பை தனித்து ஒழிய-(முன் தனியாத) முட்டை தனித்து க்கிடப்ப, புள் - (அதனுள்இருந்த) புள்ளு, பறந்து அற்று - (பருவம்வந்துழிப்) பறந்துபோந் தன்மைத்து: உடம்போடு உயிரிடை நட்பு - உடம்பிற்கும் உயிர்க்கும் உளதாய நட்பு; (எ - று.)

'தனித்தொழிய' என்றதனுன்,முன்தனியாமை பெற்றும்: அஃதாவது- கருவுந் தானும் ஒன்றாய்ப்பிறந்து வேறாந்துணையும் அதற்கு ஆதாரமாய் நிற் றல்: அதனால், அஃது உடம்பிற்கு உவமையாயிற்று. அதனுள் வேற்றுமை யின்றிநின்றே பின் புகாமற் போகலின், புள் உயிர்க்கு உவமையாயிற்று. மூட் டையுட்பிறப்பன பிறவும் உளவேனும்,புள்ளையே கூறினர்,பறந்துபோதற்றொ ழிலான் உயிரோடொப்புமையெய்துவது அதுவேயாகலின். 'நட்பு'

என்பது ஈண்டுக் குறிப்புமொழியாய், நட்பின்றிப்போதலுணர்த்தி நின்றது. சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும், அசேதனமாய் உருவாய் அநித்தமாய உடம்பும் தம்முள் மாறாகலின், வினைவயத்தாற்கூடிய தல்லது நட்பிலவென்பது அறிக. இனி, 'குடம்பை' என்பதற்கு - கூடென்று உரைப்பாரு முளர்; அது புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டுபுகுதலுடைமையானும், உடம்பிற்கு உவமையாகாமை அறிக.

(கு - ரை.) முன் தனியாத - முன்னே தனித்திராத. அதனுள் - முட்டையினுள். புள்ளு-பறவை. பருவம் - காலம். கரு - முட்டையினுட்பொருள். அஃதாவது - தனியாமையாவது. தானும் என்றது-முட்டையை. கரு ஐந்து வாகவெளிப்படும் வரையும் அந்தக்கருவுக்கு முட்டை யாதாரமாகு மென்க. அதற்கு - கருவிற்கு. உள்ளிருக்குங் கரு - உடம்பினுள்ளிருக்கும் உயிருக்கும், கருவுக்கு ஆதாரமாகும் முட்டை-உயிருக்குஆதாரமான உடம்புக்கும் உவமை யாம். அதனுள்வேற்றுமைஇன்றிநின்றே - அம்முட்டையினுள் பேதமில்லாமல் வாழ்ந்திருந்தே. பின் புகாமற்போகலின் - பின்பு பறவை முட்டையினுள் நுழையாமற் போவதனால். பிறவும் - வேறுபிராணிகளும். அதுவே -. பறவையே. நட்பு என்பது - ஈங்கு நட்பில்லாமையைக் குறிப்பித்தல், முதலடியில்வந்த உபமானத்தினாற் பெறப்படு மென்க; இது - எதிர்மறை யிலக்கணை. சேதனம் - அறிவுடையது. அரு - அரூபம்;

வடிவில்லாதது. நித்தம் - நித்யம்: என்றும் ஒருபடியாய் அழிவில்லாம லுள்ளது. அசேதனம்அறிவில்லாதது. உரு - ரூபம்; வடிவுள்ளது. அநித்தம் - அநித்யம்; நிலையில் லாதது. தம்முள் மாறு - ஒன்றோடொன்று மாறுபாடுடையது. வினவயத்

## ௩௪ - ஆம் அதிகாரம்— நிலையாமை

௨௪௧

தால் - விதிவசத்தால். அது - கூடு. அதன்கண் - கூட்டினுள். அது-பறவை.

மீண்டுபுகுதல் - மறுபடி நுழைதல். "குடம்பை முட்டையுங் கூடுமாகும்"

என்ற பிங்கலந்தையால், குடம்பையென்பது இருபொருளதாதல் பெறப்

படும். ஒருசாரார், முட்டையின்நீங்கிய பார்ப்பு உடனே பறவாமையாலும்,

யாக்கை உருச்சிதையாததுபோலாது முட்டை உருச்சிதைதலாலும், சாவித்

திரியின்வரத்தாற் சத்தியவானுயிர்போலச் சிறுயான்மை நீங்கியவுயிர் யாக்

கையிற் சேர்தலாலும், "கூடுவிட்டிங்காவிதான் போயினபின்" என்றவிடத்

துக் கூடுஎன்று யாக்கையையே வழங்கியிருத்தலாலும் இங்குக் குடம்பை

யென்பதற்குக் கூடு என்றே பொருளென்றுசாதிப்பர்; அன்னார், "கேளாதே

வந்து கிளைகளாயிற்றேன்றி, வாளாதேபோவரான் மாந்தர்கள் - கேளாதே,

சேக்கைமரனொழியச் சேணீங்குபுட்போல, யாக்கைதமர்க்கொழியநீத்து"

என்ற நாலடியாரைத் தம்முரைக்கு மேற்கோளாகக் காட்டுவர். உவமை

யணி. இக்குறளால், உடம்புகள் உயிர்நீங்கியவிடத்துக் கிடக்குமாறு சொல்

லப்பட்டது.

(அ)

௩௩௬. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(இ - ள்.) சாக்காடு - (ஒருவனுக்குச்) சாக்காடு(வருதல்), உறங்குவது

போலும் - உறக்கம்வருதலோடு ஒக்கும்; பிறப்பு - (அதன்பின்) பிறப்பு (வரு

தல்), உறங்கி விழிப்பது போலும் - உறங்கிவிழித்தல் வருதலோடு ஒக்கும்.

உறங்குதலும் விழித்தலும் உயிர்கட்குஇயல்பாய்க் கடிதின் மாறிமாறி

வருகின்றாற்போலச் சாக்காடும் பிறப்பும் இயல்பாய்க் கடிதின் மாறிமாறி

வருமென்பது கருத்து. நிலையாமையே நிலைபெற்றவாறு அறிவித்தற்குப்

பிறப்பும் உடன்கூறப்பட்டது.

(கு - ரை.) சாக்காடு-இறத்தல். கடிதின் - விரைவில்.

நிலையாமையென்

னும் இவ்வதிகாரத்திற் கூறத்தக்க இறத்தலோடு பிறத்தலையும் உடன்

கூறியது, நிலையாமையே நிச்சயமாகுந்தன்மையை அறிவித்தற்பொருட்டு.

உவமையணி. இக்குறளால், இறப்பும் பிறப்பும் மாறிமாறிவருதல் சொல்லப்

பட்டது. இக்குறளை "பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலு, முறங்கலும்

விழித்தலும் போன்ற துண்மையின்" என்ற ஒப்பிடுக.

மணிமேகலையடிகளோடு

(கூ)

௩௪0. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்

டுச்சி லிருந்த வுயிர்க்கு.

(இ - ள்.) உடம்பினுள் -

(வாதம்முதலியவற்றின் இல்லாய) உடம்புகளுள், துச்சில் இருந்த-ஒதுக்கிருந்தேபோந்த, உயிர்க்கு,—புக்கில் அமைந்தின்று

கொல்-(எஞ்ஞான்றும்) இருப்பதோரில் (இதுகாறும்) அமைந்ததில்லைபோலும்.

அந்நோய்கள் இருக்கஅமைதஞான்று இருந்தும் வெருண்டஞான்று

போயும் ஒருடம்பினும் நிலைபெறாது வருதலால்,

'துச்சிலிருந்த' என்றார். பின்
புறப்படாது புக்கேவிடும்இல் அமைந்ததாயின் பிறிற்களுள் * ஒதுக்கிரா

* பி - ம்: துச்சில்.





தென்பதாம்; ஆகவே, உயிரோடுகூடிநிற்பது ஒருடம்புமில்லை யென்பது பெறப்பட்டது.

இவையேழுபாட்டானும், முறையே, யாக்கைகட்கு வரைந்தநாள் கழி இன்றவாறும், கழிந்தால் உளதாம் நிலைமையும், அவை ஓரோவழிப் பிறந்த வளவிலே இறத்தலும், ஒருகணமாயினும் நிற்குமென்பது தெளியப்படாமையும், உயிர்நீங்கியவழிக் கிடக்குமாறும், அவற்றிற்கு இறப்பும் பிறப்பும் மாறிமாறிவருமாறும், அவைதாம் உயிர்க்கு உரியஅன்மையும் என்றிவற்றால் யாக்கைநிலையாமை கூறியவாறு கண்டுகொள்க.

(கு - ரை.) வாதம் - வாயு. முதலிய என்றது - பித்தம், சிலேட்டுமம் என்றவற்றை; மேல் 'மருந்து'என்னும் அதிகாரத்தில் "நூலோர், வளிமுதலா வெண்ணிய மூன்று" என்றது காண்க. இல் - இடம். துச்சில் - ஒதுக்கிடம். இதுகாறும் - இதுவரையிலும். அந்நோய்கள் இருக்க

அமைந்தஞான்று இருந்தும் - வாதம் பித்தம் முதலியவற்றாலாகும் நோய்கள் தான் உடம்பினுளிருக்க உடன்பட்டிருக்குமளவும் உயிராகிய தான் அங்குக் குடியிருந்தும். வெகுண்டஞான்று போயும் - அந்நோய்கள் அங்கிருக்க உடன்படாமற் கோபித்தபொழுது தான் அங்கிருந்து குடிநீங்கிப்போயும். வெகுண்டஞான்று- தத்தம் நிலையில்நில்லாதனவாய் வருத்தும்பொழுது. பின் புறப்படாது புக்கேவிடும் இல் - பின்புகுடிநீங்கவேண்டாமல் எப்பொழுதுங் குடிபுகுந்தே யிருக்கத்தக்கதொரு வீடு. பிறர் இற்கள் - வாதம்முதலியவற்றின் வீடுகள். இக்குறளால், எவ்வுடம்பும் உயிருக்குச்சொந்தமானதன் றென்பது சொல்லப்பட்டது.

ஏழுபாட்டானும் - "நாளெனவொன்றுபோல்" என்ற செய்யுள்முதல் முறையே இச்செய்யுள்வரையில். யாக்கைகட்குவரைந்த நாள் - உடம்புகளுக்கு இவ்வளவென்று அளவுசெய்யப்பட்ட நாள். ஒரோவழி - சிலவிடத்து. தெளியப்படாமை - நம்பப்படாமை. கிடக்கும்ஆறு-இருக்கும் நிலைமை. அவை தாம் உயிர்க்குஉரிய அன்மை-உடம்புகள்தாம் உயிருக்குச் சொந்தமானவை யல்ல என்பது. புக்கில்என்பதைப் புக்கவில் என்பதன் தொகுத்தலாகவாயினும், புகில்என்பதன் விரித்தலாகவாயினுங் கொள்க. அமைந்தின்று-அமைந்த தின்று என்பதன் விகாரம். "கொல்லே ஐயம்" என்ற சூத்திரத்தின் ஒன்றென முடித்தலால் "இதனளவுண்டுகொல் மதிவல்லோர்க்கே" எனத் துணிவின்

கண்ஐயம்சிறிதுநினைத்தலும் கொல்என்னும்
இடைச்சொற்குக் கொள்ளப் பட்டவாறு காண்க; இங்கு,
கொல் - அப்பொருளது. ஓ - அசை. துச்சில்துச்சவில்:
துச்சம் - அற்பம், நிலையற்றது: வடசொல். துஞ்சுஇல்
என்பதன். வலித்தலாகக்கொண்டு,
அழியுந்தன்மையதானவீடெனினும் அமையும். (௧௦)

## ௩௫ - ஆம் அதிகாரம்—துறவு.

அஃதாவது-புறமாகிய செல்வத்தின்கண்ணும்
அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாய பற்றினை
அவற்றதுநிலையாமைநோக்கி விடுதல். அதிகாரமுறைமையும்
இதனானே விளங்கும்.

௩௫ - ஆம் அதிகாரம்—துறவு

உ௫௩.

(கு - ரை.) புறமாகிய செல்வத்தின்
கண்ணும்-வெளிவளமாகிய செல்வ
த்தினிடத்தும். அகமாகிய யாக்கையின்கண்ணும் -
உள்வளமாகிய உடம்பி
னிடத்தும். பற்று - ஆசை. முன்னது-புறப்பற்றென்றும்,
மமகாரமென்றும்;
பின்னது - அகப்பற்றென்றும், அகங்காரமென்றும்
கூறப்படும். அவற்றது -
செல்வம் யாக்கைகளின். நிலையாமையையுணர்ந்தால்
பற்றுவிடுதல் கூடுமா

தலின், நிலையாமை யென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

துறவுஎன்னும் அதிகாரம்

௩௪௧. யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

(இ - ள்.) யாதனின் யாதனின் நீங்கியான் - (ஒருவன்) யாதொரு பொருளின் யாதொருபொருளின் நீங்கினான்: அதனின் அதனின் நோதல் இலன் - (அவன்) அப்பொருளால் அப்பொருளால் துன்பமெய்துத லிலன்.

அடுக்குக்கள் பன்மைகுறித்துநின்றன. நீங்குதல் - துறத்தல். ஈண்டு 'துன்பம்' என்றது - இம்மைக்கண் அவற்றைத் தேடுதலானும் காத்தலா னும் இழத்தலானும் வருவனவும், மறுமைக்கண் பாவத்தான் வருவனவு மாய இருவகைத் துன்பங்களையுமாம். எல்லாப்பொருளையும் ஒருங்கேவிடுதல் *தலைமை: அஃதன்றி ஒவ்வொன்றாகவிடினும் அவற்றான் வருந் துன்பம் இலனாமென்பது கருத்து.

(கு - ரை.) யாதொருபொருளின் - எந்தப்பொருளினின்றும். யாதனின் என்றவிடத்து, இன்னுருபு - நீக்கப்பொருளையும், அதனின் என்றவிடத்து, இன்னுருபு - ஏதுப்பொருளையும் உடையது. அடுக்குக்கள் - யாதனின் யாதனின், அதனின் அதனின் என்றவிடத்து உள்ளவை. அவற்றை - அப்பொருள்களை.

"ஈட்டலுந் துன்பமற் றீட்டியவொண்பொருளைக், காத்தலுமாங்
கே கடுந் துன்பம்—காத்தல், கு
றைபடிற் றுன்பங்கெடிற் றுன்பந் துன்பக், குறை
பதிமற்றைப்பொருள்" என்றார் பிறரும். விடுதல் -
துறத்தல். அஃதன்றி - அவ்வாறல்லாமல். இவ்வதிகாரத்தில்
முதல்நான்குகவிகள், பொருளிற் பற்று விடுதலைக் கூறும்.

(க)

௩௪௨. வேண்டி னுண் டாகத் துறக்க
ணீண்டியற் பால பல.

துறந்தபி

(இ - ள்.) துறந்தபின் - (எல்லாப் பொருள்களையுந்)
துறந்தால், ஈண்டு இயல் பால - (ஒருவர்க்கு)
இம்மைக்கண்ணே உளவாம்முறைமையையுடைய இன்பங்கள்,
பல—; வேண்டின் - (அவ்வின்பங்களை) வேண்டின்,
உண்டாக துறக்க - (அவற்றைக் காலம்) பெறத் துறக்க; (எ -
று.)

அவ்வின்பங்களாவன - அப்பொருள்கள்காரணமாக
மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும்; அவை
நன்னெறிக்கட் சேறலானும் வருவன.
இளமைக்கண் துறந்தான்
அவற்றைநெடுங்காலம்எய்துமாகலின், 'உண்டாகத் துறக்க'
என்றார். இன்பங்க ளென்பதும், கால மென்பதும்,
வருவிக்கப்

* தலை: அஃதன்றி ஒரோவொன்றாக.



பட்டன. இம்மைக்கண் துன்பங்களிலவாதலேயன்றி இன்பங்களுளவாதலு
முண்டு என்பதாம்.

(கு - ரை.) துறந்தபின் - பற்றறவிட்டால்; இது - ஒருவகை எதிர்
காலவினையெச்சம். உளவாம்முறைமையையுடைய - உண்டாகுங் கிரமத்தை
யுடைய. வேண்டின் - விரும்பினல். காலம்பெற - இளமையிலேயே. துறக்க -
விடக்கடவன். அவை நன்னெறிக்கட்சேறலானும் - அம்மூன்றுகாரணங்களும்
சன்மார்க்கத்திலே செல்லுதலாலும். இளமைக்கண் துறந்தான் அவற்றை நெடு
ங்காலம் எய்தும் - இளம்பிராயத்திலேயே பொருள்களிற் பற்றுவிட்டுத் துற
வறத்தை யடைந்தவன் அவ்வின்பங்களை வெகுகாலம் அடைவான். இன்பங்
கள் என்பது வேண்டின்என்பதன் முன்பும், காலம்என்பது - உண்டாக என்ப
தன் முன்பும் வருவிக்கப்பட்டன. இயற்பால -இயலும்பான்மையுடையன; இய
லுதல் - உண்டாதல். பால - பலவின்பாற்

குறிப்புவினையாலணையும் பெயர்.
"நரைவருமென்றெண்ணி நல்லறிவாளர்,
குழவியிடத்தே துறந்தார்," "மற்
றறிவாநல்வினை யாமிளையமென்னது,
கைத்துண்டாம்போழ்தே கரவாதறஞ்
செய்ம்மின்" என்னும் நாலடியாரினும்
இளமையில்துறத்தல் சிறப்பென்ப
தறிக. துறவினால் துன்பம் நீங்குவதன்றி இம்மையிலும்
இன்பங்களுளவா
மென்றவாறு.
(உ)

௩௪௩. அடல்வேண்டு * மைந்தன் புலத்தை
விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

(இ - ள்.) ஐந்தின் புலத்தை அடல் வேண்டும் -
(வீடெய்துவார்க்குச்
செவிமுதலிய ஐம்பொறிகட்கு உரியவாய ஓசைமுதலிய)
ஐம்புலன்களையுங் கெடுத்தல் வேண்டும்; வேண்டிய எல்லாம்
ஒருங்கு விடல் வேண்டும் -
(கெடுக்குங்கால் அவற்றை நுகர்தற்பொருட்டுத்) தாம்
படைத்தபொருள்
முழுதையும் ஒருங்கேவிடுதல் வேண்டும்; (எ - று.)

'புலம்' என்றது, அவற்றைநுகர்தலை. அது மனத்தைத்
துன்பத்தானும் பாவத்தானுமன்றி வாராத
பொருள்கள்மேலல்லது வீட்டுநெறியாகியயோக ஞானங்
களிற் செலுத்தாமையின், அதனை அடல்வேண்டுமென்றும்;
அஃது அப்பொருள்கள்மேற் செல்லின் அந்நுகர்ச்சி

விறகுபெற்றதழல்போல் முறுகுவதல்லது அடப்படாமையின், வேண்டியவெல்லாமொருங்குவிடல் வேண்டுமென்றுங் கூறினர்.

(கு - ரை.) வீடுஎய்துவார்க்கு - முத்திபெறவேண்டுபவர்களுக்கு. செவி முதலிய ஐம்பொறிகள் - செவி, மெய் (தோல்), கண், வாய், மூக்கு என்னும் பஞ்சேந்திரியங்கள். இவற்றிற்கு உரியவாய ஓசைமுதலிய ஐம்புலன்கள் - முறையே சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பன. கெடுத்தல்வேண்டும் - அடக்குதல்தகுதி. கெடுக்குங்கால் - அங்ஙனம் அடக்கும்பொழுது. அவற்றை நுகர்தற்பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுதையும் - அந்த ஓசைமுதலிய ஐம்புலன்களையும் அனுபவிப்பதற்காகத் தாம் விரும்பிச்சேர்த்த

---

* பி - ம்: ஐந்தின்.

## ௩௫ - ஆம் அதிகாரம்—துறவு

௨௪௫

எல்லாப்பொருள்களையும். அது-அந்தவிஷயாநுபவம். அது, மனத்தை, பிறர்க்குத்துன்பஞ்செய்தலானும் தீவினைகளானுமே அடையக்கூடிய பொருள்களின்மேலே செலுத்துமே யொழிய, முத்திவழியாகிய யோகப்பயிற்சியிலும் ஞானநிலையிலுஞ் செலுத்தாது. அதனை - ஐம்புலநுகர்ச்சியை. அஃது - மனம். அந்நுகர்ச்சி - அவ்விஷ பாநுபவம். முறுகுவ தல்லது -மேன்மேல் வளர்

வதேயொழிய. அடப்படாமையின் பின்பு அழிக்கப்படாமையால். ஐந்துஐம்பொறிக்கு எண்ணலளவையாகுபெயர்; ஒருங்கு - எஞ்சாமைப்பொருள் குறிக்கும் இடைச்சொல். விறகை எடுத்துவிட்டால் நெருப்புத் தானே அடங்குதல்போல, பொருள்களைத் துறந்தால் ஐம்புலநுகர்ச்சி தானே அழியு மென்ற கருத்து விளங்கும். வீடுபெறவிரும்புவார்க்கு ஐம்புலநுகர்ச்சியொழியவேண்டு மென்றது, இது.

(௩)

௩. ௪௪.

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) ஒன்று இன்மை - (பற்றப்படுவது) ஒருபொருளும் இல்லாமை, நோன்பிற்கு - தவஞ்செய்வார்க்கு, இயல்பு ஆகும் - இயல்பாம்; உடைமை பெயர்த்து மற்றுஉம் மயல் ஆகும் - (அஃதன்றி ஒன்றுயினும்) உடைமை (அத்தவத்தைப்) போக்குதலான் மீண்டும் மயங்குதற்கு ஏதுவாம்.

இழிவுசிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. நோன்பு என்பதூஉம், மயல் என்பதூஉம் - ஆகுபெயர். 'பெயர்த்தலான்' என்பது, திரிந்துநின்றது. நோன்பைப்பெயர்த்தலான் என வேற்றுமைப்படுத்துக்

கூட்டுக. எல்லாப் பொருள்களையும்விட்டு ஒருபொருளை விடாதவழியும், அதுசார்பாக விட்டன வெல்லாம் மீண்டுவந்து தவத்திற்குஇடையீடாய் மனக்கலக்கஞ்செய்யு மென்பது கருத்து.

இவைநான்குபாட்டானும்,எனதென்னும்புறப்பற்றுவிடுதல் கூறப்பட்டது.

(கு - ரை.) பற்றப்படுவது - விரும்பப்படுவது. இயல்பு - சுபாவகுணம். அஃதன்றி - அப்படியல்லாமல். ஒன்றுயினும் உடைமை - ஒருபொருளை யாயினும் யற்றுவிடாமலுடைத்தாயிருத்தல். போக்குதலான் என்பதை 'பேர் க்குதலான்'என்று படித்தும் பொருள்கொள்ளலாம். மீண்டும்மயங்குதல் - மறு படியும் அவித்யைக்கு உட்படுதல். இழிவு சிறப்பும்மை தொகுத்தல்விகாரப்பட் டது, 'ஒன்று' என்பதன் இறுதியில்; அது, அவ்வெண்ணினது சிறுமையை விளக்கிற்று. நோன்பு என்பது - தவத்தையுடையார்க்குப் பண்பாகுபெய ரும், மயல் எ ன்பது-மயங்குதற்குக்கா ரணமாயிருப்பதற்குக் காரியவாகுபெ யரு மாம்.இனி, 'நோ ன்பிற்கு இயல்பாகும்'என்பதற்கு-தவத்திற்கு இலக்கணமாகு மென்றுமாம். பெயர்த்து-பெயர்க்க: செயவெனெச்சத்தின் திரிபென்பார், 'பெயர்த்தலான்என்பது திரிந்துநின்றது.' என்று ரெனக. மயலாதற்குக் காரணம், பெயர்த்தல். பெயர்த்தலெ ன்னும்வினைக்கு 'நோ ன்பை' என்று செயப்படுபொருள் சேர்க்க. நோன்பிற்கு என்பதனை

மீட்டுங்கூட்டுகையில், இரண்டனுருபுகொடுத்துக்கூட்டுக என்பார், 'வேற்றுமைப்படுத்துக்கூட்டுக' என்றுரெண்க, அதுசார்பாக - அந்தப்பொருள் ஆதாரமாக. விட்டனஎல்



லாம் - விட்டபொருள்கள்யாவும். இடையீடாய் - தடையாகி. எனதென்னும் புறப்பற்று - புறமாகியசெல்வத்தை என்னுடையதென்று அபிமானிக்கிற ஆசை. ஒன்று - எண்ணலளவாகுபெயர். ஒன்றென்பதனை உடைமையென்பதனோடு கூட்டுக. மற்றுஎன்னும் இடைச்சொல், இங்கே பின் என்னும் பொருளது. நோன்பு - (எல்லாத்துன்பங்களையும்) பொறுத்தலையுடைய தெனத் தவத்திற்குக் காரணப்பெயர்.
(௪)

௩௪௫. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

(இ - ள்.) பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு - பிறப்பு அறுத்தலை மேற்கொண்டார்க்கு, உடம்புஉம் மிகை - (அதற்குக்கருவியாகிய) உடம்பும் மிகையாம்; (ஆனபின்), மற்றுஉம் தொடர்ப்பாடு எவன் - அதற்குமேலே இயைபில்லனவுஞ் சில தொடர்ப்பாடுஉளவாதல் என்னும்? (எ - று.)

'உடம்பு' என்ற பொதுமையான், உருவுடம்பும் அருவுடம்புங் கொள்ளப்படும்; அவற்றுள், அருவுடம்பாவது - பத்துவகையிந்திரியவுணர்வோடும்

ஐவகைவாயுக்களோடும் காமவினைவிளைவுகளோடுங் கூடிய மனம்: இது, நுண்ணுடம்பெனவும்படும். இதன்கட்பற்று நிலையாமையுணர்ந்த துணையான் விடாமையின், விடுதற்குஉபாயம்முன்னர்க்கூறுப. இவ்வுடம்புகளால் துன்பம்

இடையறுதுவருதலைஉணர்ந்து இவற்றான் ஆய கட்டினை இமைப்பொழுதும் பொறுது வீட்டின்கண்ணே விரைதலின், 'உடம்பும்மிகை' என்றார். இன்பத் துன்பங்களான் உயிரோடு ஒற்றுமை யெய்தலின், இவ்வுடம்புகளும் யானெனப்படும்.

இதனுன், அகப்பற்றுவிடுதல் கூறப்பட்டது.

(கு - ரை.) பிறப்பு அறுத்தலை மேற்கொண்டார்க்கு - மறுபடியும் பிறப்புத் தமக்கு இல்லாதபடி ஒழித்து முத்திபெறவேண்டுமென்னும் எண்ணத்தை முக்கியமாக ஏற்றுக்கொண்ட துறவறத்தார்க்கு. அதற்குக் கருவியாகிய - பிறப்பறுத்தற்குக் காரணமான; பிறப்பிற்குக் காரணமான என்றுங்கொள்ளலாம். மிகையாம் - மிகுதியாம்: அவசியமானதன்றாம். அதற்குமேலே - அவ்வுடம்புமாத்திரமேயன்றி மேலும். இயைபில்லனவுஞ் சிலதொடர்ப்பாடு - சம்பந்தமில்லாத சிலபொருள்களும் விடாது தொடர்ந்து நிற்றல். என்னும் - தகுதியன்று என்றபடி. 'உடம்பு' என்ற 'உடம்பு' எனப் பொதுப்படக்கூறியதனுல். உருவுடம்பு -

பொதுமையான் -

ரூபமுள்ள சரீரம்;

அது-பஞ்சபூதசம்பந்தத்தாலாகி இருபத்துநான்குதத்துவங்களை யுடைய இவ்வுடம்பு: ஸ்தூலசரீர மெனப்படும். அருவுடம்பு - அரூபமானசரீரம்; ஸூக்ஷ்ம சரீரமெனப்படும்: அந்த அருவுடம்பில் பத்துவகையிந்திரியவுணர்வோடு மனமும் ஆன்மாவைப்பற்றியிருக்குமென்க. பத்துவகை இந்திரியவுணர்வு - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஞானேந்திரியமைந்து, வாக்கு பாணி பாதம் பாயுர் உபத்தம் என்னுங் கருமேந்திரியமைந்து இப்பத்தின் அறிவுகள்.

ஐவகை வாயுக்கள் - பிராணன், அபானன், வியானன்,
உதானன், சமா னன் என்பன. "சரீரத்தினகத்துச்
சஞ்சரிக்கும் வாயு பிராணனெனப்படும்:



அஃது ஒன்றாயினும் உபாதிவேறுபாட்டால் பிராணன்
அபானன் முதலிய
பெயர்பெறும்" என்றது, தருக்கசங்கிரகம்.
காமவினை விளைவுகள் - ஆசையும்
கருமபலன்களும். நுண்ணுடம்பு - சூக்குமசரீரம்.
"ஞானேந்திரியகர்மேந்திரி
யங்கள் பத்து, பிராணன் ஐந்து, மனம் புத்தி இந்தப்
பதினேழுடன்கூடியது
சூட்சுமதேகம்" என்கின்றது, சாரீர கோபநிஷத்து.
இதன்கட் பற்று - இந்த
நுண்ணுடம்பினிடத்து ஆசை. நிலையாமை யுணர்ந்த
துணையான் விடாமை
யின் - யாக்கைநிலையாமையை அறிந்தமாத்திரத்தாலே
நீங்காதாதலால்.
விடுதற்குஉபாயம் முன்னர்க்கூறுப - இவ்வுடம்பினிடத்தும்
பற்றுநீங்குதற்கு
உபாயத்தை முன்னே சொல்லுவர். 'முன்னர்' என்றது;
இவ்வதிகாரத்திற்
பத்தாம்பாட்டை; அதில் இவ்வகப்பற்றுவிடுதற்கு
உபாயங் கூறப்படுதல்
காண்க. புறப்பற்றுவிடுதற்குஉபாயம் இவ்வதிகாரத்தின்
மூன்றாம்பாட்டிற்

கூறப்பட்டது. இடையறாது - நடுவில்நீங்காமல்.
இவற்றான் ஆய கட்டினை -
இவ்விருவகையுடம்புகளாலும் ஆகிய பந்தத்தை.
வீட்டின்கண்ணே விரை
தலின் - முத்திநெறியிலே துரிதப்பட்டுச்
செல்லவேண்டுதலால். இன்ப
துன்பங்களான் உயிரோடு ஒற்றுமையெய்துதலின் -
இன்பத்தையுந் துன்பத்
தையும் அநுபவித்தலில் உடம்பு உயிருடன்
ஒருமைப்பட்டிருத்தலால்.
தொடர்ப்பாடு - தொடர்ப்படு என்னும் முதனிலை
திரிந்த தொழிற்பெயர்.
உடம்பும், உம்மை - உயர்வுசிறப்பு. மிகுதலையுடையது,
மிகை. (ரு)

நஉசசு. யானென தென்னுஞ்
செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(இ - ள்.) யான் எனது என்னும் செருக்கு
அறுப்பான் - (தானல்லாத
உடம்பை) யானென்றும்
(தன்னோடுஇயைபில்லாதபொருளை) எனதென்றுங்
கருதி (அவற்றின்கண்) பற்றுச்செய்தற்கு ஏதுவாகிய
மயக்கத்தைக் கெடுப்
பான், வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும் -
வானோர்க்கும் எய்தற்கரிய
வீட்டுலகத்தை எய்தும்; (எ - று.)

மயக்கம் - அறியாமை. அதனைக் கெடுத்த லாவது - தேசிகர்பாற்பெற்ற
உறுதிமொழிகளானும் யோகப்பயிற்சியானும் அவை யான் எனது அன்மை
தெளிந்து அவற்றின்கட்பற்றை விடுதல். சிறப்பும்மைவிகாரத்தால்தொக்கது.
இதனுன், இருவகைப்பற்றினையும்விட்டார்க்கே வீடுஉளதென்பது கூற
ப்பட்டது.
(கு - ரை.) இயைபு - சம்பந்தம். எனது - என்னுடையது. அவற்றின்
கண் - உடம்பினிடத்துஞ் செல்வத்தினிடத்தும். மயக்கம் - அறிவுமயங்கு
தல். கெடுப்பான் - ஒழிப்பவன். வானோர்க்கும் எய்தற்கு அரிய - தேவர்களுக்கும் அடைதற்குமுடியாத. எய்தும் - அடைவான். புகும் - செய்யுமென்
னும்முற்று, இங்கு ஆண்பாலுக்கு வந்தது. தேசிகர்பாற்பெற்ற உறுதிமொழி
களானும் - சிறந்தஞானசார்யர்களிடங்கேட்ட உபதேசவார்த்தைகளாலும்.
யோகப்பயிற்சி - யோகாப்பியாசம். அவை யான் எனது அன்மை தெளிந்து -
அவ்வுடம்பும் செல்வமும் முறையே யானும் எனதும் ஆகாமையை ஐயந்திரி
பில்லாமல் அறிந்து. சிறப்பும்மை - உயர்வுசிறப்பும்மை. அது தொகுத்தல்

விகாரப்பட்டது, 'வானோர்க்கு' என்னுமிடத்தில். இருவகைப்பற்று - அகப்பற்றுப் புறப்பற்றுக்கள். "நீர்நுமதென்றிவை, வேர்முதன் மாய்த்திறை, சேர்மினுயிர்க்கத, னேர்நிறையில்லே" என்னும் பாசுரத்தின்பொருளை இங்கே உணர்க. எனது - குறிப்புவினையாலணையும்பெயர். (சு)

௩௪௭. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(இ - ள்.)
விடாஅதவர்க்கு

பற்றினை - இருவகைப்பற்றினையும், பற்றி - இறுகப்பற்றி, - விடாதாரை, இடும்பைகள் - பிறவித்துன்பங்கள்; பற்றி - இறுகப்பற்றி, விடாஅ—; (எ - று.)

இறுகப்பற்றுதல் - காதல்கூர்தல்.
'விடாஅதவர்க்கு' என்பது, வேற்

றுமைமயக்கம்.

இதனன், இவைவிடாதார்க்கு வீடில்லை யென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) இறுகப்பற்றி - உறுதியாகப் பிடித்துக்கொண்டு. காதல்கூர்தல் - மிகுதியாக ஆசைசெய்தல். விடாதவர்க்கு - 'விடாதாரை' என இரண்டாம் வேற்றுமைக்குரிய செயப்படுபொருள்கொண்டது, உருபுமயக்கம்; இவை- இருவகைப் பற்றுக்கள். அளபெடைகள், செய்யுளோசைநிறைக்கவந்தன. (எ)

௩௪௮. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி

வலைப்பட்டார் மற்றைய வர்.

(இ - ள்.) தீர துறந்தார் - முற்றத்துறந்தார், தலைப்பட்டார் - (வீட்டினைத்) தலைப்பட்டார்; மற்றையவர் - அங்ஙனந்துறவாதார், மயங்கி வலைபட்டார் - மயங்கி(ப் பிறப்பாகிய) வலையுட்பட்டார்; (எ - று.)

முற்றத்துறத்தலாவது -பொருள்களையும் இருவகையுடம்பினையும் உவர்த்துப் பற்றறவிடுதல். அங்ஙனந் துறவாமையாவது - அவற்றுள் யாதானு மொன்றின்கட் சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றி 'தலைப்பட்டார்' என்றும், பொய்ந்நெறிகண்டே பிறப்புவலையுள் அகப்படுதலின் 'மயங்கி' என்றுங் கூறினார்.

(கு - ரை.) முற்றத் துறந்தார் - பற்றுக்களை முழுவதும் விட்டவர். வீட்டினைத்தலைப்பட்டார் - முத்தியை அடைந்தவராவர். மயங்கி - அவிச்சைக்கு உட்பட்டு. பிறப்பைவலையென்றது, உயிரை நீங்காமல் தன்னுள்ளே பந்தப்படுத்தலால். வலையுட்பட்டார் - வலையினுள் அகப்பட்டவராவர். இருவகையுடம்பு - உருவுடம்பும் அருவுடம்பும். உவர்த்து - வெறுத்து. தலைப்படுவாரென எதிர்காலத்தாற் சொல்லவேண்டியதை இறந்தகாலத்தாற் சொன்னது, தெளிவு

[நிச்சயம்] பற்றிவந்த காலவழுவமைதி. தீர -
மிச்சமில்லாமல் ஒழிய; நீங்க
என்றுங் கொள்ளலாம். பொய்ந்நெறிகண்டே -
பொய்வழியென்று அறிந்தே.
பொய்ந்நெறி யென்றது, முத்திக்கு வழியல்லாததனை.
(அ)

ந௩சசு. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

ந௩ரு - ஆம் அதிகாரம்—துறவு

உ௪சுகூ

(இ - ள்.) பற்று அற்றகண் ஏ - (ஒருவன்)
இருவகைப்பற்றும் அற்றபொ
ழுதே, பிறப்பு அறுக்கும் - (அப்பற்றறுதி) அவன்பிறப்பை அறுக்கும்; மற்று நிலையாமை காணப்படும் - அவை யறுதபொழுது(அவற்றாற் பிறந்திறந்துவரு கின்ற) நிலையாமை காணப்படும்; (எ - று.)
காரணம் அற்றபொழுதே காரியமும் அற்றதாம்
முறைமைபற்றி, 'பற்
றற்றகண்ணே' என்றார்; "அற்றது பற்றெனி, லுற்றது
வீடு" என்பதூஉம்
அதுபற்றி வந்தது.
இவையிரண்டுபொட்டாலும், அவ்விருமையும்
ஒருங்கு கூறப்பட்டன.
(கு - ரை.)

அற்றபொழுதே-நீங்கின அக்காலத்திலேயே. அப்பற்றறுதி- அந்தப் பற்று நீங்குதல். அவன்பிறப்பை அறுக்கும் - அவனே முத்தி

யடைவிக்கும் என்றபடி. மற்று - இங்கே,

எதிர்மறையானதை யுணர்த்திய

தனுல், வினைமாற்றுப் பொருளது. அவை -

இருவகைப்பற்று. அவற்ருல் -

பற்றுக்களால். காணப்படும் - தோன்றும். நிலையாமை -

யாக்கைநிலையின்மை.

காரணம் பிறப்புக்குக்காரணம், பற்று. காரியம் -

பற்றின்காரியமான பிறப்பு.

"அற்றதுபற்றெனில், லுற்றதுவீடுயிர்" என்னும்மேற்கோள்

- திருவாய்மொழி,

முதற்பத்து, இரண்டாவது திருவாய்மொழியின்

ஐந்தாம்பாட்டி லுள்ளது;

பற்றுஅற்றதெனில் உயிர் வீடுஉற்றது-பற்றுநீங்கிற்ருயின்

உயிர் முத்தியடைந்

தது என்பது பொருள். அதுபற்றி - அம்முறைமைபற்றி.

அவ்விருமையும் -

பற்றுவிட்டார்க்கு வீடு உண்டென்பதும்,

பற்றுவிடாதார்க்கு வீடு இல்லை

யென்பதுமாகிய அவ்விரண்டுதன்மையும். அற்றகண் -

பெயரெச்சத்தொடர்:

அதனுல், அற்றக்கண் என வலி மிகவில்லை. கண் - இடம்;

இடத்தையுணர்த்

துஞ் சொற்களெல்லாம், வேண்டியபோது
காலத்தையும் உணர்த்தும்.
ஏகாரம் - விரைவுவிளக்கிகின்றது. 'மற்று நிலையாமை
காணப்படும்' என்ற
இரண்டாம்வாக்கியத்துக்கு - பற்றறுவிட்டாற்
பிறப்பொழியா தென்பது கரு
த்து. முதல்வாக்கியத்தில், அறுக்கும் பயனிலை, பிறப்பு
- செயப்படுபொருள்,
பற்றறுதி - தோன்றாஎழுவாய்.
(க)

ருடுO. பற்றுக பற்றற்றான் பற்றினை
பற்றுக பற்று விடற்கு.

யப்பற்றைப்

(இ - ள்.) பற்று அற்றான் பற்றினை பற்றுக - (எல்லாப்பொருளையும் பற்றிநின்றே) பற்றற்ற இறைவன் (ஓதிய) வீட்டுநெறியை (இதுவேநன்னெறியென்று) மனத்துக்கொள்க; அ பற்றை பற்றுக பற்று விடற்கு - (கொண்டு)
அதன்கண் உபாயத்தை அம்மனத்தாற்செய்க
(விடாதுவந்த)பற்று விடுதற்கு. • கடவுள்வாழ்த்திற்கு
ஏற்ப, ஈண்டும் பொதுவகையால் 'பற்றற்றான்'
என்றார். 'பற்றற்றான்பற்று' என்புழி, ஆறாவது -
செய்யுட்கிழமைக்கண்
வந்தது. ஆண்டு 'பற்று' என்றது - பற்றப்படுவதனை.
அதன்கண் உபாய மென்
றது - தியான சமாதிகளை. விடாதுவந்த பற்று என்பது,

அநாதியாய்வரும் உடம்பிற்பற்றினை.

அகப்பற்றுவிடுதற்கு உபாயம் இதனாற் கூறப்பட்டது.

32



(கு - ரை.) எல்லாப்பொருளையும் பற்றிநின்றே பற்றற்ற இறைவன்உடம்பினு ளிருந்து தொழில்செய்விக்கின்ற உயிருக்கு அவ்வுடம்பின் குணமான கருமை செம்மை பெருமை சிறுமை வளர்ச்சி தேய்வு முதலிய வற்றின் தொடர்ச்சி இல்லாதவாறுபோல, அச்சீவான்மாவினு ளிருந்து தொழில் செய்விக்கின்ற பரமான்மாவுக்கும் அவ்வுயிரின் குணங்களாகிய நல்வினை தீவினை முதலியவற்றில் யாதொருசம்பந்தமு மில்லை யென அறிக; இவ்வுண்மை, "யாவையும் யவருந்தானா யவரவர் சமயந்தோறும், தோய் விலன் புலனைந்துக்குஞ் சொலப்படா னுணர்வின்மூர்த்தி, யாவிசேருயிரி னுள்ளா லாதுமோர்பற்றிலாத, பாவனை யதனைக்கூடி லவனையுங்கூடலாமே" என்ற திருவாய்மொழிப்பாசுரத்தாலும் விளங்கும்: "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாதுநின்ற சுடரே" எனக் கூறுவர் கம்பரும். இறைவன் ஓதிய - கடவுள் கூறின. வீட்டுநெறி - மோட்சமார்க்கம். அதன் கண் உபாயத்தை - அவ்விறைவனூலிற்கூறிய முத்தியடையும் வழியை. இந்நூலின் முதலிற் கடவுள்வாழ்த்து

எல்லாமதங்களுக்கும் பொதுவாகக் கூறப்பட்டதனை அவ்வதிகாரத்தில் வந்த "ஆதிபகவன்", "வாலறிவன்" முதலிய கடவுளின் திருநாமங்களாலும், அவற்றின் உரையாலும் அறிக. பற்றற் றான்பற்று என்றவிடத்துத் தொக்குநின்ற ஆறும்வேற்றுமை - செய்யுட்கிழமையாகிய பிறிதின்கிழமைப்பொருளது; 'கபிலரகவல்', 'கம்பராமாயணம்' என்றவற்றிற்போல. இறைவனோதிய வீட்டுநெறி - வைஷ்ணவத்திற் பாஞ்சராத்திரமும், சைவத்தில் ஆகமங்களும், ஜைனத்தில் பரமாகமமும் போல்வன. 'அப்பற்று' என்பதிலுள்ள பற்று - பற்றப்படுவதாகிய முத்திநெறியைக் குறிக்கும். தியானம் - கடவுளை இடையறாது சிந்தித்தல். சமாதி - யோகத்தில் அசைவறநிற்றல்; இவை - யோகத்தின் எட்டு அங்கங்களிற் சேர்ந்தவை. ஐம்புலனடக்கி யோகஞ்சேர்தல்-தியானம்: இந்திரியம்முதலிய தத்துவசேஷ்டைகட்கு ஏதுவாய யாக்கையுள்நின்று அவற்றோடுகூடினும் அவற்றிற்பற் றின்றியிருக்கும் ஆன்மாவாகிய தன்னைக் காண்டல் - சமாதி என்பர். அநாதியாய்வரும்-பழைமையாய்வருகிற. பரிமேலழகருரைப்படி இக்குறளில் அகப் பற்றுவிடுதற்குமாத்திரமே காரணங்கூறப்படுதலை, 'பற்றுவிடற்கு' என்பதற்கு-அநாதியாய்வரும் உடம்பிற்பற்றுவிடுதற்கு என்று உரைத்ததனாலறிக. ஆகவே, அகப்பற்றுஎன்றவிடத்து அப்பற்று என்றபாடம் சிறவாது. பற்றுவிடுதற்கு உபாயமாக அடையத்தக்கவன் என்ற கருத்துப்படக் கடவுளைப் பற்றற்றான் என்றது -

கருத்துடையடைகோளியணி. இச்செய்யுளில், 'பற்று' என்ற ஒரு சொல் பலமுறை வந்தது, சொற்பின்வருநிலையணி. விடற்கு - எதிர்காலவினையெச்சம்: இதனைத் தொழிற்பெயர்மேல் வந்த - நான்கனுருபாகக்கொள்ளலாகாது: ஒருகாலத்தைக் காட்டுதலால். பற்று என்றது - முத்திநெறியைக் குறிக்கும்போது, செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர்;விருப்பத்தைக்குறிக்கும்போது, முதனிலைத்தொழிற் பெயர். இக்குறளைச் சொற்செறிவுடைமையாற் சிலிட்டமென்னும் உயிருக்கு உதாரணங் காட்டினர், வீரசோழியவுரைகாரர்.

(௩௦)

௩௬ - ஆம் அதிகாரம்—மெய்யுணர்தல்

உ௫௧

## ௩௬-ஆம்
## அதிகாரம்—மெய்யுணர்தல்.

அஃதாவது பிறப்புவீடுகளையும் அவற்றின்காரணங்களையும் விபரீத ஐயங்களா னன்றி உண்மையான் உணர்தல்; இதனை வடநூலார் 'தத்துவ ஞானம்' என்ப. இதுவும் பற்றற்றான்பற்றினைப் பற்றியவழி உளதாவதாகலின், அக்காரணவொற்றுமைபற்றி, துறவின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) பிறப்பு வீடுகள் - ஜந்மமும், முக்தியும். அவற்றின்காரணம்- பிறப்புக்குக்காரணமாகிய அவித்தையும்,

முத்திக்குக் காரணமாகிய ஞானமும். விபரீத ஐயங்களான் அன்றி - திரிபுசந்தேகங்களினு லல்லாமல்: திரிபு - ஒன்றை மற்றொன்றாக மாறுபடஅறிதல்: ஐயம் - இதுவோ அதுவோ என ஒருபொருளில் துணிவுபிறவாம விருத்தல்.

இது-மெய்யுணர்ச்சி. பற்றற்றான் பற்றினைப் பற்றியவழி உளதாவது - கடவுள்கூறின முத்திநெறியை விடாது கொண்டவிடத்து உண்டாவது. மெய்யுணர்தலாகியஇதுவும் துறவினைப்போ லவே பற்றற்றான்பற்றினைப் பற்றுதலின் காரியமே[பயனே] யாதலால், இது அதன்பின் வைக்கப்பட்டதென்க. மெய்யுணர்தல்-மெய்யால்உணர்தல் என மூன்றும்வேற்றுமைத்தொகையாகவாவது, மெய்யாகியஅறிவு எனப் பண்புத்தொகையாகவாவது கொள்க;மெய்யையுணர்தல் என இரண்டாம்வேற்றுமைத்தொகையாகவுங் கொள்ளலாம்.

காரணவொற்றுமை- துறவுக்குப்போலவே மெய்யுணர்தலுக்கும் பற்றற்றான்பற்று காரணமாயிருக்கின்ற ஒற்றுமை: காரணமென்றது-இங்கே, மூவகைக்காரணங்களுள் நிமித்தகாரணத்தை.

௩௫௧. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

(இ - ள்.) பொருள் அல்லவற்றை - மெய்ப்பொருளல்லவற்றை, பொருள் என்று உணரும் - மெய்ப்பொருளென்று உணரும், மருளான் - விபரீதவுணர்வானே, ஆம் - உளதாம்: மாணா பிறப்பு - இன்பமில்லாத பிறப்பு.

அவ்விபரீதவுணர்வாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும்இத்தன்மையவுஞ்சொல்லும் மயக்கநூல்வழக்குகளை மெய்ந்நூல்வழக்கெனத் துணிதல்; குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது: மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சை என்பன - ஒருபொருட் கிளவி. நரகர், விலங்கு, மக்கள், தேவர் என்னும் நால்வகைப்பிறப்பினும் உள்ளது துன்பமே யாகலின், 'மாணாப்பிறப்பு' என்றார்.

இதனான், பிறப்புத் துன்பமென்பதூஉம், அதற்கு முதற்காரணம் அவிச்சையென்பதூஉங் கூறப்பட்டன.

(கு - ரை.) விபரீதவுணர்வானே - திரிபறிவால். மயக்கநூல்வழக்குகள்-அறிவுக்கு மயக்கத்தைத் தரும் நூல்களின் கொள்கைகள். இத்தன்மையவும் என்று கூறியதில், 'ஆகாயமென்பது ஒன்றில்லையெனவும், பூதங்களின் கூட்டரவால் உயிரென்பதுஒன்றுதோன்றி அவற்றின்பிரிவாலழியுமெனவும், காட்சியன்றி வேறுஅளவை யில்லை யெனவும் பிறவும் கூறுதல் அடங்கும். ௨௫௨

திருக்குறள்

மெய்ந்நூல் வழக்கு-தத்துவசாஸ்திரசித்தாந்தம். குற்றி-மரக்கட்டை. மகன்மனிதன். ஒருபொருட்கிளவி - ஒருபொருளையே புணர்த்துஞ்சொல். நரகர்-

பாதாளலோகத்தில் நரகத்தில் வசிப்பவர். விலங்கு - மிருகங்கள்; இதில்-பறப் பன, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பனவும் அடங்கும். அதற்கு முதற் காரணம் - பிறப்புக்குப் பிரதானமான காரணம். மயக்க நூல் வழக்குக்கள் - உலோகாயுதம் முதலிய பொய்ம்மதங்களின்சம்பந்தமான சாஸ்திரங்களின் கொள்கைகள். 'திரிபுணர்வும் உணர்வேயெனப்படும்: உணர்வென்னும்பொது மைநோக்க; சந்தனமுங்காஞ்சிரையும் மரமெனப்பட்டதுபோல'என்பது நூற் கொள்கையாதலால், விபரீதவுணர்வெனப்பட்டது. "திரிவாக்கோடலொன் றையொன்றென்றல், விரிகதிரிப்பியைவெள்ளியென்றுள்ளல், தேராது தெளிதல்செண்டுவெளியில், ஓராதுதறியைமகனெனவுணர்தல்" என்பது, மணிமேகலை.

(க)

௩௫௨. இருணீங்கி யின்பம் பயக்கு
மாசறு காட்சி யவர்க்கு.

மருணீங்கி

(இ - ள்.) மருள் நீங்கி - அவிச்சையின் நீங்கி, மாசு அறு காட்சியவர்க்கு - மெய்யுணர்வுடையராயினூர்க்கு, (அம்மெய்யுணர்வு); இருள் நீங்கி இன் பம் பயக்கும் - பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும்; (எ - று.)

இருள் - நரகம்; அஃது - ஆகுபெயராய்,

காரணத்தின்மேல் நின்றது. 'நீங்கி' எனத் தொடைநோக்கி மெலிந்துநின்றது; நீங்க என்பதன் திரிபெனி னும் அமையும். 'மருள்நீங்கி' என்னும் வினையெச்சம், 'காட்சியவர்' என்னுங் குறிப்புவினைப்பெயர் கொண்டது. 'மாசறுகாட்சி' என்றது, கேவலவுணர்வினை.

இதனுன், வீடாவது நிரதிசயவின்ப மென்பதூஉம், அதற்கு நிமித்த காரணம் * கேவலப்பொருளுணர்வென்பதூஉங் கூறப்பட்டன.

(கு - ரை.) அவிச்சையின் - விபரீதஞானத்தினின்று. இருள் - அந்தகாரமயமான அந்ததாமிஸ்ரம் எனப்படும் நரகம்: இக்குறளில், இருள் - நரகத் துக்குக் காரணமான பிறப்பிற்குக் காரியவாகுபெயர். நீங்கி - நீக்கியென் பதன் மெலித்தல்; இதனை நீங்கவென்னும்வினையெச்சந் திரிந்ததாக் கொள் ளின், அச்செயவெனெச்சம் உடனிகழ்ச்சிப்பொருள தென்க. 'தொடை நோக்கி' என்றது, "இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி" என்றவிடத்து "ஒரூஉவாமிருசீரிடையிட்டது" என்றபடி இருசீரிடையிட்டு முதற்சீரும் நான்காஞ்சீரும் எதுகைவரத்தொடுத்த ஒரூஉவெதுகைத்தொடை யா மாதலா லென்க. மாசு அறு காட்சி - குற்றமில்லாத அறிவு. 'மருணீங்கி' என்பதில், நீக்கி என்பதற்கு முடிக்குஞ்சொல் - 'காட்சியவர்' என்பதில் விரிகிற உடையவர் என்பது; இனி, 'மாசறு' என்பதிலுள்ள அறு என்றலுமாம். கேவல வுணர்வு - பரம்பொருளறிவு. நிரதிசய வின்பம் - தனக்குமேம்பட்டதோரின் பத்தையுடைத்தாகாத பேரின்பம். நிமித்தகாரணம் - குடத்திற்குக் குயவன்

போலக் காரியத்தில் அனுவர்த்தியில்லாத காரணம். கேவலப்பொருள்-பரம் பொருள். 'பயக்கும்' என்பதற்கு மாசறுகாட்சியவர் என்னும் குறிப்புவினை யாலணையும்பெயரினின்று எடுத்துக்கொள்ளப்பட்ட மாசறுகாட்சியென்பது-

---

* பி - ம்: கேவலப்பொருளென்பதூஉம்

## ௩௬ - ஆம் அதிகாரம்—மெய்யுணர்தல்

௨௫௩

எழுவாய். 'முதனிலையுமன்றித் தொழிற்பெயர் பிரிந்து வினைமுதலாதலுங் கொள்க; அது "இருணீங்கியின்பம்பயக்குமருணீங்கி, மாசறுகாட்சியவர்க்கு"—'அக்காட்சி' என்பதனாற் காண்க' என்பது இலக்கணக்கொத்துரை. (௨)

௩௫௩. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

(இ - ள்.) ஐயத்தின் நீங்கி - ஐயத்தினின்று நீங்கி, தெளிந்தார்க்கு - மெய்யுணர்ந்தார்க்கு, வையத்தின் வானம் நணியது உடைத்து - (எய்தி நின்ற)நிலவுலகத்தினும் (எய்தக்கடவதாய) வீட்டுலகம் நணித்தாதலுடைத்து.

ஐயமாவது - பலதலையாய உணர்வு; 'அஃதாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் உளவோ இலவோ?'என ஒன்றில் துணிவுபிறவாது நிற்றல்: 'பேய்த்தேரோ புனலோ? கயிறோ அரவோ?' எனத்

துணியாதுநிற்பதும் அது. ஒருவாற்றாற் பிறர்மதம் களைந்து தம்மதநிறுத்தல் எல்லாச்சமய நூல்கட்கும் இயல்பாகலின், அவை கூறுகின்ற பொருள்களுள் யாதுமெய்யென நிகழும் ஐயத்தினை யோகமுதிர்ச்சியுடையார் தம்அனுபவத்தால் நீக்கி மெய்யுணர்வா ராகலின், அவரை 'ஐயத்தின்நீங்கித்தெளிந்தார்' என்றும்; அவர்க்கு அவ்வனுபவவுணர்வு அடிப்பட்டுவரவரப் பண்டையுலகியலுணர்வு தூர்ந்துவரு மாகலின், அதனைப் பயன்மேலிட்டு 'வையத்தின்வானநணிய துடைத்து' என்றுங் கூறினார்; கூறவே, ஐயவுணர்வும் பிறப்பிற்குக்காரண மாதல் கூறப்பட்டது.

(கு - ரை.) ஐயம் - சந்தேகம். எய்தி - அடைந்து. எய்தக்கடவதாய - அடையப்போவதாகிய. நணித்தாதல் உடைத்து-சமீபத்தில் இருத்தலுடையது. பலதலையாய உணர்வு - பலவகைப்பட்ட அறிவு. 'ஐயம் என்பது - ஒருபொருள்மேல் இருபொருள் தன்மை கருதிவரும் மனத்தடுமாற்றம்' என்பர். ஒருவாற்றால் பிறர்மதம் களைந்து தம் மதம் நிறுத்தல் - ஒருவகை யாலே அயலார்கொள்கையை மறுத்துத் தமது கொள்கையை நிலைநிறுத்து தல். எல்லாச் சமய நூல்கட்கும் - மதக்கிரந்தங்களெல்லாவற்றிற்கும். அவை- அந்தந்தச் சாஸ்திரங்கள். பொருள் - அர்த்தம். யாது மெய் என நிகழும் - 'எது உண்மையோ?'என்று உண்டாகிற. யோகமுதிர்ச்சியுடையார் - யோகப் பயிற்சியில் முதிர்ந்தவர். தம் அனுபவம் - யோகநிலையின் முதிர்ச்சியில் தாம் கண்ட

காட்சி. அவரை - யோகமுதிர்ச்சியுடையாரை. அவர்க்கு - யோகமுதிர்ச்சியுடையார்க்கு. அடிப்பட்டுவரவர - நிலையூன்றி வரவர. பண்டையுலகியலுணர்வு - பழைமையான உலகநடவடிக்கையறிவு. தூர்ந்து வரும் - குறைவுபட்டுவரும். அதனைப் பயன்மேலிட்டு - முத்திஞானம் மிகுந்து இவ்வுலகஞானங் குறைதலே அதன்பயனாகிய இவ்வுலகம் தூரமாதலும் முத்திசமீபமாதலும் என்பதன்மே லேற்றி. ஐயத்தின் - இன்னுருபு, நீக்கம். வையத்தின் - இன்னுருபு, எல்லை. நணியது-ஒன்றன்பால் வினையாலணையும்பெயர். "ஐய மென்ப தொன்றைநிச்சயியாது, மையிற் றறியோ மகனே வென்றல்" என்பது மணிமேகலை. (௩)

௩௱௫௪. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.



(இ - ள்.) ஐ உணர்வு - (செல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டான்) ஐந்தாகிய உணர்வு, எய்தியக்கண்உம் - (அவற்றைவிட்டுத்) தன்வயத்ததாய வழியும், பயம் இன்றுஏ - (அதனாற்) பயன் இல்லையேயாம்: மெய் உணர்வு இல்லாதவர்க்கு - மெய்யினை உணர்தல் இல்லாதார்க்கு; (எ - று.) ஐந்தாகிய உணர்வு - மனம்; அஃது எய்துதலாவது - மடங்கி ஒருதலைப் பட்டுத் தாரணைக்கண் நிற்றல். அங்ஙனம் நின்றவழியும் வீடுபயவாமையின், 'பயமின்று' என்றார். சிறப்பும்மை, எய்துதற்கருமை விளக்கிநின்றது.

இவையிரண்டுபாட்டானும், மெய்யுணர்வுடையார்க்கே வீடு உளதென மெய்யுணர்வின் சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) செல்லப்படுகின்ற -
மனத்துக்குவிஷயமாய் அனுபவிக்கப் படுகிற. புலன்கள்
வேறுபாட்டால் ஐந்தாகிய - ஓசைமுதலிய விஷயபேதங்க
ளால் ஐந்துவகைப்பட்ட. அவற்றைவிட்டுத்
தன்வயத்ததாயவழியும் - அப் புலன்களுக்கு வசப்படுதலை
யொழிந்து தனக்கு வசப்பட்டதான விடத்தும். அஃது -
மனம். மடங்கி ஒருதலைப்பட்டு - விஷயங்களிற் செல்லாமல்
மீண்டு ஒருவழிப்பட்டு. தாரணை - யோகத்தின் ஒரு அங்கம்;
அது - கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி இவற்றுள்
ஒன்றில் எப்பொழுதுஞ் சிந்தையைத் திருத்தல்.
மெய்யுணர்வில்லாவிடின் மனம் வசப்படுகின்றாலும்
முத்தியுண்டாகா தென்க. சிறப்பும்மை - 'எய்தியக்கண்ணும்'
என்பதிலுள்ளது. எய்துதற்கு அருமை - மனம்வசப்படுவது
அருமை யென்பதை. உணர்வு-அறிதலையுடைய
மனத்திற்குத் தொழிலாகுபெயர். எய்தியக்கண் -
எதிர்காலவினை யெச்சம். பயம்—பயன். ஏ - தேற்றம்.
(௮)

௩௫௫. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

மப்பொருண்

(இ - ள்.) எப்பொருள் எத்தன்மைத்து ஆயின் உம் -
யாதொருபொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றினும்,
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது -

(அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது)
அப்பொருளின்கணின்று மெய்யாகியபொருளைக் காண்பதே,
அறிவு - மெய்யுணர்வாவது; (எ - று.)
பொருள்தோறும் உலகத்தார்
கற்பித்துக்கொண்டுவழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து
நின்றஉண்மையைக் காண்பது என்றவாறாயிற்று; அஃதா
வது - 'கோச்சேரமான் யானைக்கட்சேஎய்
மாந்தரஞ்சொலிரும்பொறை' என்றவழி, அரசனென்பதோர்
சாதியும், சேரமானென்பதோர் குடியும்,
வேழநோக்கினையுடையானென்பதோர் வடிவும்,
சேயென்பதோர் இயற்பெயரும்,
மாந்தரஞ்சொலிரும்பொறையென்பதோர் சிறப்புப்பெயரும்
ஒரு பொருளின்கட் கற்பனையாகலின், அவ்வாறு
உணராது நிலம்முதல் உயிரீறாகிய தத்துவங்களின்தொகுதி
யென உணர்ந்து அவற்றை நிலமுதலாகத்
தத்தங்காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டு சென்றால்
காரணகாரியங்களிரண்டு மின்றி முடிவாய்நிற்பதனை
உணர்தலாம். 'எப்பொருள்' என்ற பொதுமையான்,
இயங்குதிணையும் நிலைத்திணையு மாகிய பொருள்களெல்
லாம் இவ்வாறே உணரப்படும்.



இதனான், மெய்யுணர்வினது இலக்கணங்

கூறப்பட்டது.

(கு - ரை.) யாதொருபொருள் - ஏதேனும் ஒருபொருள். யாதோர் இய ல்பிற்றாய்த்தோன்றினும் - எந்தத்தன்மையுடையதாய்க் காணப்பட்டாலும். அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது-அத்தோற்றத்தைக்கண்டு நீங்காமல். கற்பனை - இல்லதைஉள்ளதாய் உண்டுசெய்தல். கழித்து - ஒழித்து. கோ-க்ஷத்திரியசாதியான். சேரமான் - சேரர்குலத்திற்பிறந்தவன். யானைக் கட்சேஎய் - யானையினது கண்ணோக்கம்போலுங் கம்பீரமான பார்வையை யுடைய சேயென்னும்பெயருடையான். மாந்தரஞ்சொலிரும்பொறை-மக்கள் புகழும் அழகியபுகழ்ச்சொல்லின் பெரியசுமையையுடையவன். 'மாந்தரஞ் சேரவிரும்பொறை' எனவும் படிக்கலாம்: அப்பொழுது மாந்தரஞ்சேரலென்றும், இரும்பொறையென்றும் இரண்டுபெயராக எடுக்கவேண்டும்; மாந்தரஞ் சேரல் என்பதற்கு - மனிதர்க்குள் அழகையுடைய சேர னென்பதும், இரும்பொறை என்பதற்கு - மிக்கபெருமைக்குணமுடையவனென்பதும் பொருள்போலும். சேரன்என்பது சேரல் என வழங்குதலை''குடக்கோச்சேர லிளங்கோவடிகட்கு''எனச் சிலப்பதிகாரத்திலுங் காண்க.இரும்பொறையென்பது சேரரில்ஒருசாரார்க்குவழங்குதலையும் அறிக.''வேழநோக்கின் விறல்வெஞ் சேஎய்'' என்றும், ''ஓம்பாவீயுமாற்றலெங்கோ, மாந்தரஞ்சொலிரும்பொறை''

என்றும் புறநானூற்றிற் காண்க. ஒருபொருளின்கண் - ஒருயிரோடுகூடிய ஒருடம்பினிடத்து. நிலம் முதல் உயிர் ஈறாகிய தத்துவங்கள் - நிலம் நீர் தீ காற்று வானம் என்னும் பஞ்சபூதங்கள் முதலிய இவ்விருபத்தைந்து தத்துவங்கள்; இருபத்தைந்து மல்லது உலகெனப் பிறிதொன்று இல்லையென்பது உண்மையென்பார், 'தத்துவங்களின்தொகுதி யென உணர்ந்து' என்றார்; இதுபற்றியே, "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின், வகைதெரி வான் கட்டே யுலகு" எனக் கீழ் 'நீத்தார்பெருமை' என்னும் அதிகாரத்திற் கூறியதும். ஆதியிற் பரமாத்மாவினிடத்தினின்று பிரகிருதியும் புருஷனும் உண்டாகிச் சேர, அப்பொழுது பிரகிருதியினின்று மகத்தத்துவமும், பின்பு அதினின்று அகங்காரமும், பின்பு அதினின்று சப்தமும், சப்தத்தினின்று ஆகாசமும், ஆகாசத்தினின்று ஸ்பர்சமும், ஸ்பர்சத்தினின்று வாயுவும், வாயுவினின்று ரூபமும், ரூபத்தினின்று அக்கினியும், அக்கினியினின்று ரச மும், ரசத்தினின்று ஜலமும், ஜலத்தினின்று கந்தமும், கந்தத்தினின்று பூமி யும் உண்டாயினவென்றும், அகங்காரம்—சாத்துவிகம் ராஜஸம் தாமஸம் என மூவகைப்படுமென்றும், தந்மாத்திரைகளும் பூதங்களும்—தாமசாகங்காரத் .·தின் காரிய மென்றும், மனம்—சாத்துவிகாகங்காரத்தினின்று உண்டான தென்றும், பஞ்சஞானேந்திரியங்களும் பஞ்சகருமேந்திரியங்களும்—ராஜசா கங்காரத்தில் தோன்றியவை யென்றும் அறிக. இங்ஙனம் எந்தப்பொருளி

னின்று எந்தப்பொருள் உண்டாயிற்றோ அந்தக் காரியப்பொருளைக் காரணப் பொருளில் அடக்கிக்கொண்டே சென்றால் எல்லாத்தத்துவங்களும் நீங்க, பெயர் சாதி முதலான கற்பனைக ளில்லாமல் எப்பொழுது மிருத்தலையே சுபாவமாக்கொண்டதாய், அறிதற்குரியதாய், ஞானசொரூபியாய், ஜீவாத்மா



வுக்கு மேற்பட்டதாய், எல்லாவற்றிற்கும் ஆதாரமான பரமாத்மாவின் சொரூபம் விளங்கக் காணலாம். இக்குறளை மேல் 'அறிவுடைமை' என்னும் அதிகாரத்தில் "எப்பொருள் யார்யார்வாய்க்கேட்பினு மப்பொருள், மெய்ப் பொருள் காண்ப தறிவு" என்பதனோடு ஒப்பிடுக. இக்குறளை, 'விழுமியதுபயத்தல்' என்னும் அழகுக்கு உதாரணங் காட்டினர், வீரசோழியவுரைகாரர். அறிவுக்கு மேற்கோளாகக்காட்டினர், இறையனாரகப்பொருளுரையில் நக்கீரர். ஜங்கமம் - இயங்குதிணை. (ரு)

௩௫௬. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(இ - ள்.) ஈண்டு - இம்மக்கட்பிறப்பின்கண்ணே, கற்று - (உபதேச மொழிகளை அனுபவமுடையதேசிகர்பால்) கேட்டு, மெய் பொருள் கண்டார் - (அதனான்) மெய்ப்பொருளை உணர்ந்தவர், மற்று ஈண்டு வாரா நெறி தலைப்படுவர்-மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர்; (எ - று.)

'கற்று' என்றதனால் பலர்பக்கலினும் பலகாலும் பயிறலும், 'ஈண்டு'

என்றதனால் வீடுபேற்றிற்குரியமக்கட்பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்

றும். ஈண்டுவாராநெறி - வீட்டுநெறி.

வீட்டிற்குரிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்தற்கு உபாயம்

மூன்று; அவை - கேள்வி, விமரிசம், பாவனை என்பன: அவற்றுள் கேள்வி

இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) இம்மக்கட்பிறப்பின்கண்ணே - இந்தமனித சன்மத்திலேயே.

அனுபவம்-தாம் கண்டு பழகுதல். தேசிகர்பால் - ஆசிரியரிடத்தில். இப்பிறப்

பின்கண் வாராத நெறி-முத்திவழி. கற்று என்றதனால்-கற்று எனப் பொதுப்

படக் கூறியதனால். பலர்பக்கலினும் - பலரிடத்தும். பயிறலும் - நூற்பொரு

ளைக்கேட்டுப் பழகுதலும். "அரிதரிதுமானிடராதலரிது" என்றார் ஒளவை

யாரும். "அரிதாற்,பெரியயோனிகள் பிழைத்திவண்மானிடம்பெறலே," "அரு

மையினெய்தும்யாக்கையும்" என்ற சிந்தாமணியாலும் மக்கட்பிறப்புப் பெற

லரியதாத லுணர்க. முதற்பொருள் - தலைமைப்பொருள். கேள்வியெனினும்,

சிரவணமெனினும் ஒக்கும். விமரிசம்-ஆராய்ச்சி.

பாவனை-கண்டுதெளிதல்.(சு)

௩ருள. ஓர்த்துள்ள முள்ள துணரி
னொருதலையாப்

பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(இ - ள்.) உள்ளம் ஒருதலை ஆ ஓர்த்து உள்ளது
உணரின் - (அங்ஙனங்
கேட்ட உபதேசமொழிப்பொருளை) ஒருவனுள்ளம்
(அளவைகளானும் பொரு.
ந்துமாற்றானுங்) தெளிய ஆராய்ந்து (அதனான்)
முதற்பொருளை உணரு
மாயின், பேர்த்து பிறப்பு உள்ள வேண்டா-(அவனுக்கு)
மாறிப் பிறப்பு(உள
தாக) நினைக்கவேண்டா; (எ - று.)

ஒருதலையா ஓர்த்து என இயையும். அளவைகளும்
பொருந்துமாறும்
மேலே உரைத்தாம்.

இதனான், விமரிசம் கூறப்பட்டது.

௩௬ - ஆம் அதிகாரம்—மெய்யுணர்தல்
உருள

(கு - ரை.) உள்ளம் - மனம், அளவைகளானும் -
பிரதியக்ஷம் முதலிய பிரமாணங்களாலும். பொருந்துமாற்றானும்
யுக்தியினாலும். அதனான் - அவ்வாராய்ச்சியால். மாறி -

மீண்டு. ஒருதலையா ஓர்த்து - நிச்சயமாக அறிந்து. இயையும் - தொடரும். 'அளவைகளும் பொருந்துமாறும் மேலேயுரைத்தாம்' என்றது - கீழ் 'அருளுடைமை' என்னும் அதிகாரத்தில் "நல்லாற்றானாடி யருளாள்க" என்றதன் உரையில். ஓர்த்து - இது, ஓர்ந்து எனவும் வரும். உள்ளது - அழிவற்றது; முதற்பொருள்; ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும் பெயர். உள்ள - செயவெனெச்சம். 'உள்ளவேண்டா' என்பதை ஒருசொல்லாகக்கொண்டு பிறப்பு என்பதை எழுவாயாக் கொள்க: இனி, உள்ள ென்னும் வினையெச்சத்தைத் தொழிற்பெயர்போலப் பாவித்து, 'வேண்டா' என்பதற்கு எழுவாயாக்கினுமாம். விமரிசமெனினும், சிந்தித்தலெனினும், மநநமெனினும் ஒக்கும்.

(எ)

ருடுஅ. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) பிறப்பு என்னும் பேதைமை நீங்க - பிறப்பிற்கு முதற்காரண மாய அவிச்சை கெட, சிறப்பு என்னும் செம் பொருள் காண்பது - வீட்டிற்கு நிமித்தகாரணமாய செவ்விய பொருளைக் காண்பதே, அறிவு - (ஒருவர்க்கு) மெய்யுணர்வாவது; (எ - று.)

'பிறப்பென்னும்பேதைமை'எனவும்'சிறப்பென்னுஞ்செம்பொருள்' எனவும் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக்குற்றங்களுள் அவிச்சை

ஏனையநான்கிற்குங் காரணமாத லுடைமையின்,
அச்சிறப்புப்பற்றி அதனையே பிறப்பிற்குக்
காரணமாக்கிக்கூறினார். எல்லாப்பொருளினுஞ்சிறந்ததாக
லான், வீடு 'சிறப்பு' எனப்பட்டது. தோற்றக்கேடுகள்
இன்மையின் நித்தமாய், நோன்மையால்
தன்னைஒன்றுங்கலத்தல் இன்மையின் தூய்தாய், தான்
எல்லாவற்றையுங் கலந்துநிற்கின்ற முதற்பொருள்,
விகாரமின்றி எஞ்ஞான்
றும் ஒருதன்மைத்தாதல்பற்றி, அதனை 'செம்பொருள்'
என்றார்; மேல்
'மெய்ப்பொருள்' எனவும், 'உள்ளது' எனவும் கூறியதூஉம்
இதுபற்றியென
உணர்க. அதனைக் காண்கையாவது - உயிர்
தன்அவிச்சைகெட்டு அதனோடு
ஒற்றுமையுற இடைவிடாதுபாவித்தல்; இதனைச்
சமாதியெனவும், சுக்கிலத்
தியானமெனவும் கூறுப. 'உயிர் உடம்பின்நீங்குங் காலத்து
அதனுன் யாதொ
ன்று பாவிக்கப்பட்டது,அஃது
அதுவாய்த்தோன்றும்'என்பது எல்லாஆகமங் •கட்குந்
துணிபாகலின், வீடெய்துவார்க்கு அக்காலத்துப்
பிறப்பிற்கேதுவாய
பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப்பொருளையே
பாவித்தல்*வேண்டும்:

அதனான்,
அதனை முன்னேபயிறலாய இதனின் மிக்க உபாயமில்லை
யென்
பது அறிக.
இதனான், பாவனை கூறப்பட்டது.

* பி - ம்: வேண்டுதலான், அதனை




(கு - ரை.) சிறப்பு - எல்லாவற்றினுஞ்
சிறந்தலையுடைய வீட்டுக்குத் தொழிலாகுபெயர்.
பிறப்பென்னும்பேதைமை - பிறப்பிற்குக் காரணமான
பேதைமை, சிறப்பென்னுஞ்செம்பொருள் -
சிறப்புக்குக்காரணமான செம்பொருள். இவற்றில், பிறப்பு
சிறப்புக்கள் - பேதைமை செம்பொருள்களின் பய னாதலால்
காரியம்: பேதைமையும் செம்பொருளுங் காரணம்: காரிய
மாகிய பிறப்புக் காரணமாகிய பேதைமையாகவும்,
காரியமாகியசிறப்புக் காரணமாகிய செம்பொருளாகவும்
கூறப்பட்டன. குற்றங்கள் ஐந்து, கீழ் அறன்வலியுறுத்தலில்
"வீழ்நாள்" என்ற குறளினுரையிற் கூறப்பட்டன.
இவற்றுள், அவிச்சை மற்றைநான்கிற்கும் காரணமாதல்,
மேல் "காமம் வெகுளி மயக்கம்" என்ற குறளினுரையில்
விளங்கும்; மற்றைநான்கு - அகங்காரம், அவா, விழைவு,
வெறுப்பு என்பன. தோற்றக்கேடுகள் - பிறப்பு

இறப்புக்கள். மேன்மை - அளவிறந்தபெருமை. முதற்பொருள்பரம்பொருள். விகாரமின்றி - வேறுபடுதலில்லாயல். மேல் - முன்னிரண்டு பாடல்களில், உயிர் - ஜீவான்மா. அதனோடு - பரமான்மாவோடு. பாவித்த லெனினும், பாவனையெனினும், தெளிதலெனினும், நிதித்தியாசநமெனினும் ஒக்கும். "இணைஎரிமுழக்கமன்ன சுக்கிலத்தியானமென்னும், கணையெறிந்துகைப்ப வீழ்ந்து காற்படைசூழப்பட்டார்" என்ற சீவகசிந்தாமணி காண்க. பாவிக்கப்பட்டது - இடைவிடாது எண்ணப்பட்டதோ. அஃது - அவ்வுயிர். அதுவாய் - அந்தப் பாவிக்கப்பட்டபொருளாய். ஆகமம் - கடவுள்வாக்காகிய சாஸ்திரங்கள். அக்காலத்து - மரணகாலத்தில். பிறப்பிற்கேதுவாகிய பாவனை - பிரபஞ்சநினைவு. கேவலப்பொருளையேபாவித்தல் - பரமாத்மாவினையே தியானித்தல். அதனை - அப்பிரஹ்மபாவனையை. பயிறல்-பழகுதல்.

நடுகூ. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்
சார்தரா சார்தரு நோய்.

மற்றழித்துச்

(இ - ள்.) (ஒருவன்), சார்பு உணர்ந்து - (எல்லாப்பொருட்குஞ்) சார்பாய அச்செம்பொருளை உணர்ந்து, சார்பு கெட - இருவகைப்பற்றும் அற, ஒழுகின்-ஒழுகவல்லனாயின்,—சார்தரும் நோய்-(அவனை முன்)சாரக்கடவன

வாய்நின்ற துன்பங்கள்,—அழித்து மற்று சார்தரா - ங்களை) அழித்துப் பின் சாரமாட்டா; (எ - று.)

(அவ்வுணர்வொழுக்க

ஆகுபெயரால், சாரும்இடத்தையும், சார்வனவற்றையும் 'சார்பு' என்றார். ஈண்டு, ஒழுக்கமென்றது - யோகநெறியொழுகுதலே; அஃது - இயமம், நியமம், இருப்பு, உயிர்நிலை, மனவொருக்கம், தாரணை, தியானம், சமாதி என எண்வகைப்படும்: அவற்றின்பரப்பெல்லாம், ஈண்டு உரைப்பிற் பெரு . கும்: யோகநூல்களுட் காண்க. மற்றுச்சார்தரா என இயையும். சாரக்கடவனவாய்நின்ற துன்பங்களாவன - பிறப்புஅநாதியாய்வருதலின் உயிரான் அளவின்றிஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்தஉடம்புகளான் அனுபவித்தனவும் பிறந்தஉடம்பான்முகந்துநின்றனவும் ஒழியப் பின்னும் அனுபவிக்கக்கடவனவாய்க் கிடந்தன. அவை விளக்கின்முன் இருள்போல ஞானயோகங்களின்முன்னர்க் கெடுதலான், 'அழித்துச்சார்தரா' என்றார்; இதனை

ருசு - ஆம் அதிகாரம்—மெய்யுணர்தல்

உருகூ

ஆருகதர் உவர்ப்பென்ப. பிறப்பிற்குக்காரண மாகலான், நல்வினைப்பயனும் நோயெனப்பட்டது.

மேல் மூன்றுஉபாயத்தானும் பரம்பொருளை உணரப் பிறப்புஅறு மென் றார்; அஃதுஅறும்வழிக் கிடந்ததுன்பங்களெல்லாம் என்செய்யு மென்னுங் கடாவை ஆசங்கித்து, அவை ஞானயோகங்களின்

முதிர்ச்சியுடையஉயிரைச் சாரமாட்டாமையானும், வேறுசார்பின்மையானுங் கெட்டுவிடு மென்பது இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) சார்பாய - ஆதாரமான. அச்செம்பொருளை - அந்தப்பிரஹ்மத்தை. அற - நீங்க. முன் - இனி. பின் - பின்பு. சார்பு என்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது - சார்தற்குரிய இடமாகிய பரம்பொருளையும், பின்னது - ஒருயிரைச்சார்தலையுடைய இருவகைப்பற்றுக்களையும் குறித்தன; தொழிலாகுபெயர். யோகநெறியாகிய இயமம் முதலியவற்றைப்பற்றி "செயற்கரிய" என்ற குறளினுரைக்குறிப்பிற் கூறப்பட்டன: ஆங்குக் காண்க. இருப்பு ஆசனம் என்பனவும், உயிர்நிலை வளிநிலை பிராணயாமம் என்பனவும், மன வொருக்கம் தொகைநிலை பிரத்தியாகாரம் என்பனவும், தாரணை பொறை நிலை என்பனவும், தியானம் நினைதல் என்பனவும் ஒருபொருளன. அளவின்றி ஈட்டப்பட்ட - அளவில்லாமற்செய்து சேர்க்கப்பட்ட. இவை - சஞ்சிதகர்ம மெனப்படும். முகந்துநின்றன - அனுபவிக்க ஏற்றுக்கொள்ளப்பட்டு நின்றவை; இவை - பிராரப்தகர்மமெனப்படும். பின்னும் - இனிவரும் உடம்புகளால். ஆருகதர் - அருகனைத்தெய்வமாகவுடையவர். இதனை - மெய்ப்பொருளை யறிந்து இருவகைப்பற்றுங்கெட ஈட்டப்படுவனைப் பிராரப்தகர்மமொழிந்த கர்மங்கள் அணுகாதநிலையை. இங்கே நல்வினையென்றது, சுவர்க்க வின்பம் முதலிய காமியபலன்களைத் தருவனவான யாகம்

முதலியவற்றை. அந்த நல்வினை யும் தீவினை யும் ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதலில், பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முள் ஒப்பனவா மென்க. நோய் என்பதில், புண்ணியம் பாவம் என்னும் இரண்டின்பயனும் அடங்கும். மேல் - முன்னையமூன்றுபாடல்களில். மூன்று உபாயம் - கேள்விமுதலியன. அஃது-பிறப்பு. கடாவை - வினவை. ஆசங்கித்து - தாயாக எழுப்பி. சார் பின்மையா னும் - ஆதாரமில்லாமையாலும். இச்செய்யுளில் மற்றென்னும் இடைச்சொல், பின் என்னும் பொருளது.

(கூ)

௩சஂ0. காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
னாமங் கெடக்கெடு நோய்.

(இ - ள்.) காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின் நாமம் கெட - (ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையார்க்கு) விழைவு வெறுப்பு அவிச்சை என்னும்இக்குற்றங்கள் மூன்றனுடைய பெயருங்கூடக் கெடுதலான், நோய் கெடும் - (அவற்றின்காரியமாய) வினைப்பயன்கள் உளவாகா; (எ - று.)

அநாதியாய அவிச்சையும்,அதுபற்றி யான்என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி
எனக்கு இதுவேண்டும்என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்

கட் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன்மறுதலைக்கட்செல்லும் கோபமும் என வடநூலார் குற்றம்ஐந்தென்றார்; இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும் அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான், மூன்றென்றார். இடையறாத ஞானயோகங்களின் முன்னர் இக்குற்றங்கள்மூன்றும் காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய் போலு மாகலின், அம்மிகுதிதோன்ற, 'இவைமூன்றின்நாமங்கெட' என்றார். இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

கெட என்பது - எச்சத்திரிபு. நோய் என்பது - சாதியொருமை.

காரணமாய * குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய வினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவ துன்பங்களும் இல்லையென்பது இதனாற் கூறப்பட்டது. முன்கிடந்த துன்பங்களும் மேல்வரக்கடவ துன்பங்களும் இலவாகல் மெய்யுணர்வின்பய னாகலின், இவையிரண்டுபாட்டும் இவ்வதிகாரத்த வாயின. இவ்வாற்றானே, மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்தஉடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களுமே யென்பது பெற்றாம்.

(கு - ரை.) விழைவு - விருப்பு. அவற்றின் - இக்குற்றங்களின். அவா - விருப்பம். அதன் மறுதலைக்கண் - தான்விரும்பியதற்கு எதிராயிருப்பதில். இக்குற்றங்கள் - முறையே வடமொழியில் அவித்யா, அஸ்மிதா, ராகம், அபிநிவேசம், த்வேஷம் என்னும் பஞ்சகிலேச மெனப்படும். காமம், ஆசை, அபிநிவேசம் என்பனவும், வெகுளி கோபம் த்வேஷம் என்பனவும், மயக்கம், அவித்தை என்பனவும் - ஒருபொருளன. பஞ்சுத்துய் - பஞ்சிற்றொடர் நுனி. அம்மிகுதி - ஞானயோகங்களின் சிறப்புமிகுதியும், குற்றங்களின் இழிவுமிகுதியும். இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது, நாமம் என் பதன் இறுதியில். கெட்டால்என்பது கெட எனத் திரிந்தது என்பார், 'கெட என்பது எச்சத்திரிபு' என்றார். வரக்கடவ துன்பங்கள், ஆகாமியமெனப்

படும். இவையிரண்டுபாட்டும் - கூ, ௬௦ - ஆம் பாடல்கள்.
இவ்வாற்றானே - இந்தவழியால். நிற்பன - இப்பிறப்பில்
அனுபவிக்கக்கடவனவாய்நிற்பன. அது - உடம்பு.
அதுகொண்ட வினைப்பயன்களுமே - பிராரப்தகர்மபயனும்
மாத்திரமே. மெய்யுணர்ந்தவர் இப்பிறப்பில் இனிக்
கருமஞ்செய்யார்; அவர்க்கு மீண்டும் பிறப்பில்லை;
முந்தியசன்மங்களிற் செய்த கருமங்களுள் முந்தின
பிறப்புக்களில் அனுபவித்தவை முன்னமே கழிந்தன;
அவைபோக மிச்சமாகவுள்ளவற்றுள் இப்பிறப்பில்
அனுபவிக்க ஏற்பட்டவற்றில் மெய் யுணர்தற்குமுன்
கழிந்தவைபோக மற்றவைமாத்திரமே மெய்யுணர்ந்தபின்பும்
இப்பிறப்பில் அனுபவிக்கக்கடவனவாய்நிற்கும்; மற்றை யாவும்
ஒழியும் எனக்
கருத்தைத் தெளிக: (ஒழிவது, நல்வினை அவருடைய நண்பரையும் தீவினை.
அவருடைய பகைவரையுஞ் சேர்தலாலென்ப.) எனவே,
சஞ்சிதம்கழிய, ஆகாமியம் இன்றாக, பிராரப்தம்மாத்திரமே
நிற்கும் என்பது-தேர்ந்தபொருள். காமம் வெகுளி மயக்கம் -
பெயர்ச்செவ்வெண்; இது, மூன்று என்னுந் தொகை
பெற்றுவந்தது. காரணகாரியசம்பந்தம்பற்றி, மயக்கம் காமம்
வெகுளி
யென்பதே முறையாயினும், இங்குச்செய்யுள்நோக்கிப் பிறழவைத்தார். (௬௦)

* பி - ம்: அக்குற்றங்களைக்...இருவினைகளை.

## ௩௭ - ஆம் அதிகாரம்—அவாவறுத்தல்

௨௬௧

## ௬எ - ஆம்

## அதிகாரம்—அவாவறுத்தல்.

அஃதாவது - முன்னும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு நடுவு நின்றவுடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றமையின், வேதனை பற்றி ஒரோவழித் துறக்கப்பட்டபுலன்கள்மேற் பழையபயிற்சிவயத்தான் நினைவு செல்லுமன்றே: அந்நினைவும் அவிச்சையெனப் பிறவிக்கு வித்தா மாகலின், அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) முன்னும் பின்னும் வினைத்தொடர்பு அறுத்தார்க்கு - சஞ்சிதமும் ஆகாமியமுமாகிய கருமங்களின் சம்பந்தத்தை யொழித்தவர்க்கு. நடுவு நின்றவுடம்பும் அதுகொண்டவினைப் பயன்களும்-மெய்யுணர்ந்தகாலத்துள்ள இப்பிறப்பும், அதில் அனுபவிக்கவேண்டிய பிராரப்தகருமப் பயன்களும். வேதனை பற்றி-தீவினைப்பயனை யனுபவித்தலினுலான துன்பத்தினால். வேதனை பற்றி நினைவுசெல்லும் என இயையும். ஒரோவழி - சிலசமயத்தில். பழைய பயிற்சிவயத்தான்-பழமையான பழக்கவசத்தால்; இது, வாசனையெனப்படும்.

அவிச்சையென-அவித்தையின்பாற்பட்டு. பிறவிக்கு வித்தாம்-பிறப்பிற்கு மூல காரணமாம். மெய்ப்பொருளுணர்வு - பரம்பொருளைத் தியானித்தல். மெய்யுணர்தல்

அவாவறுத்தற்குக் காரண மாதலின், அக்காரணகாரியமுறைபற்றி மெய்யுணர்வின்பின் அவாவறுத்தல் வைக்கப்பட்டதென்க. அவாவறுத்தல் - இரண்டாம்வேற்றுமைத்தொகை.
'அவாவாவது-பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல்நிகழும் ஆசை' என்பர்.

௩௬௧. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(இ - ள்.) எல்லா உயிர்க்குஉம் எஞ்ஞான்றுஉம் தவாஅ பிறப்பு ஈனும் வித்து - எல்லாவுயிர்கட்கும் எக்காலத்துங் கெடாதுவருகின்ற பிறப்பினை விளைக்கும் வித்து, அவா என்ப - அவா என்றுசொல்லுவர், (நூலோர்).

உடம்புநீங்கிப்போங்காலத்து அடுத்த வினையும், அதுகாட்டுங் கதிநிமித்தங்களும், அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துஉதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டு செல்லு மாகலான், அதனை 'பிறப்பீனும்வித்து' என்றும்; கதிவயத்தானுளதாய அவ்வுயிர்வேறுபாட்டினும் அவை தன்மைதிரியும் உற்சர்ப்பிணி அவசர்ப்பிணி என்னுங் காலவேறுபாட்டினும் அது வித்தாதல் வேறுபடாமையின், 'எல்லாவுயிர்க்குமெஞ்ஞான்றும்' என்றும்; இஃது எல்லாச்சமயங்கட்கும் ஒத்தலான், 'என்ப' என்றுங் கூறினார்.

இதனான், பிறப்பிற்கு அவா வித்ாதல் கூறப்பட்டது.

(கு - ரை.) விளக்கும்வித்து - உண்டாக்குகிற விதை; மூலகாரணம். 'ஞாலோர்' - தோன்றுஎழுவாய் அடுத்த வினையும் - வரும்பிறப்பில் அனுபவி



க்கவேண்டிய கருமமும். அது காட்டுங் கதிநிமித்தங்களும் - அக்கருமம் காண் பிக்கிற மக்கட்கதி, விலங்குகதி முதலியனவும், அவற்றையடையுங்காரணங் களும். கதிக்கண்-கதியினிடத்து. முறையே - ஒன்றன்பின் ஒன்றாய். உதிப்ப- உண்டாக. மோகம் - இது, பொருளின்உண்மையைமறைத்து விபரீதஞான முண்டாக்குவது. "ஆர்வவேராரிங் தச்சணங்திபோய்" எனச் சிந்தாமணியாரும் ஆசையைப் பிறப்பிற்கு வேர் எனக் கூறியிருப்பதை அறிக. கதிவயத்தான் உளதாய அவ்வுயிர்வேறுபாட்டினும் - மக்கட்கதி முதலிய பலவகைப்பிறப்புக் களை யடைதலாற் பலவகைப்பட்ட எல்லாவுயிர்களினிடத்தும். அவை - அக் கதிகள். தன் மைதிரியும் - குணம்மாறுபடும். உற்சர்ப்பிணியாவது - உலகம் வாழ்நாள் போகம் முதலானவற்றால் வளர்பிறைபோலப் பெருகுங்காலம். அவ சர்ப்பிணியாவது-அவற்றால் தேய்பிறைபோலச் சுருங்குங்காலம். 'காலம் நித் தியமாகையால் அழியாமலிருக்கும் இயல்பினையுடையதாகி உத்ஸர்ப்பிணிஅவ ஸர்ப்பிணிஎன்று இருவகைப்படும்; இவற்றுள், அவஸர்ப்பிணிகாலம்-நன்னற்கா

லம்,நற்காலம்,நற்றீக்காலம், தீநற்காலம், தீக்காலம்,தீத்
தீக்காலம் என்றுசொல்லப்பட்ட ஆறுவகையினை யுடையது;
இப்படியே, உத்ஸர்ப்பிணிகாலமும் இந்த ஆறுவகையினைக்
கீழ்மேலாகவுடையது; இந்த உத்ஸர்ப்பிணிகாலம்,
தீத்தீக்காலந்தொடங்கி நடக்கும்; இந்தக்காலத்தில்
பிராணிகளுக்கு ஆயுளும் சரீரவுயர்வும் முதலியன
சுக்கிலபட்சத்துச் சந்திரன்போல வளர்ந்துகொண்டேவரும்;
நன்னற்காலந் தொடங்கி நடக்கும்
அவஸர்ப்பிணிகாலத்திலோ வெனின், பிராணிகளுக்கு
ஆயுளும் சரீரவுயர்வும் முதலியன அபரபட்சத்
துச் சந்திரன்போலக் குறைந்துகொண்டேவரும்;
இப்பொழுது நடக்கிறது, "அவஸர்ப்பிணியின்
ஐந்தாங்காலமாகிய தீக்காலம்; உத்ஸர்ப்பிணி யென்பதற்கு-
வளருங்காலமென்றும், அவஸர்ப்பிணியென்பதற்கு -
குறையுங்காலமென்றும் அருத்தமாம்; இவ்விரண்டுகாலமும்
ஒருதரம் நடந்துமுடிந்தால், அதுஓர்யுகமாம்' என்பது -
ஜைநசமயக்கொள்கை. அதுவித்தாதல்-அவா பிறப்பிற்குக்
காரணமாதல். வேறுபடாமையின் - வித்தியாசப்படாததனால்.
இஃது-அவா பிறப்பிற்குவித்தென்பது. உம்மைகள் இரண்டும்
- முற்றுப்பொருளன. தவா-
ஈறுகெட்டஎதிர்மறைப்பெயரெச்சம்; அளபெடை
ஓசைநிறைத்தற்குவந்தது. அவாவைமாத்திரம்
வித்தாகஉருவகப்படுத்தி, பிறப்பைப்பயிராக உருவகப்
படுத்தாதது - ஏகதேசவுருவகவணி.

(௧)

௩௬௨. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை

மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

(இ - ள்.) வேண்டுங்கால் பிறவாமை வேண்டும் - (பிறப்புத் துன்பமாத லறிந்தவன் ஒன்றை) வேண்டிற் பிறவாமையை வேண்டும்; அது வேண்டாமை வேண்ட வரும் - அப்பிறவாமைதான் (ஒருபொருளையும்) அவாவா மையை வேண்ட (அவனுக்குத் தானே) உண்டாம்; (எ - று.)

அநாதியாகத் தான் பிறப்புப்பிணிமூப்புஇறப்புக்களால் துன்பமுற்றுவரு கின்றமையை உணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின்கண்ணே யாகலின் 'பிற


வாமையைவேண்டும்' என்றும், ஈண்டைச் சிற்றின்பங்கருதி ஒருபொருளை
அவாவின் அது பிறப்பினும்வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே
விளைத்தலின் 'அது வேண்டாமைவேண்ட வரும்' என்றுங் கூறினார். பிற
வாமையின் சிறப்புக்கூறிப் பின் அது வரும்வழி கூறத் தொடங்குகின்றமை

யின், மற்று - வினைமாற்றின்கண் வந்தது.

(கு - ரை.) வேண்டும் - விரும்புவான். அவாவாமை - ஆசைப்படாமை.
இன்பத்தின்கண்ணே - இன் பத்தினிடத் திலேயே (உண்டாம்). ஈண்டைச் சிற்றின்பம்கருதி - இவ்வுலகத்து அற்பசுகத்தை ஒருபொருளாகநினைத்து. அவாவின் - விரும்பினால். விளைத்தலின் - உண்டாக்குதலால். அதுவரும்வழி - பிறவாமையுண்டாகும் உபாயம். கால்-காலம் என்பதன் கடைக்குறை. 'வேண்டும்' என்னுஞ் செய்யுமென்முற்றுக்கு - 'பிறப்புத்துன்பமாதலறிந்தவன்' என்பது- தோன்றா எழுவாய். சொற்பொருட்பின்வருநிலை.
(உ)

ந௩ந. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

(இ - ள்.) வேண்டாமை அன்ன விழு செல்வம் - (ஒருபொருளையும்) அவாவாமையை ஒக்கும் விழுமிய செல்வம், ஈண்டு இல்லை - (காணப்படுகின்ற) இவ்வுலகின்கண் இல்லை; (இனி, அவ்வளவேயன்றி), ஆண்டுஉம் - (கேட்கப்படு

இன்ற) துறக்கத்தின்கண்ணும், அஃது ஒப்பதுஇல் - அதனைஒப்பது இல்லை.
மக்கள்செல்வமும்
தேவர்செல்வமும் மேன்மேல்நோக்கக் கீழாதலுடை
மையின், தனக்குமேவில்லாத வேண்டாமையை
'விழுச்செல்வம்' என்றும்,
அதற்கு இரண்டுஉலகினும் ஒப்பதில்லை யென்றுங்
கூறினர். ஆகமவளவை
போலாது காட்சியளவை எல்லாரானுந்
தெளியப்படுதலின், மக்கள்செல்வம்
வகுத்து முற்கூறப்பட்டது.
பிறவாமைக்குவழியாமெனவும்
விழுச்செல்வமாமெனவும், வேண்டா
மையின்சிறப்பு, இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.
(கு - ரை.) விழுமிய - சிறப்புடைய.
கேட்கப்படுகின்ற - காணப்படாத
என்றபடி. அதனை ஒப்பது - அவாவாமையையொக்கும்
வேறுசிறந்தபொருள்.
மேன் மேல் நோக்க-ஒன்றுக்குமேல்ஒன்றாகப்
பார்த்துக்கொண்டேபோக. கீழா
தல் உடைமையின்-தனக்குமேற்பட்டதற்குத் தான்
கீழ்ப்படுத லுடைமையால்.
இரண்டுஉலகினும் - பூலோகத்திலும்,
சுவர்க்கலோகத்திலும். ஆகமவளவை
போலாது - சாஸ்திரப்பிரமாணம்போலாகாமல்.

காட்சியளவை - பிரதியட்சப் பிரமாணம். தெளியப்படுதலின் - சந்தேகமில்லாமல் அறிந்துகொம்பப்படுதலால்.

வகுத்து - பிரித்து. 'முற்கூறப்பட்டது' என்றது, 'ஈண்டில்லை' என்றதை.

ஆண்டும், உம்மை - இறந்ததுதழுவிய எச்சம்; உயர்வு சிறப்பாகவுங் கொள்ள

லாம். அஃது என்பதன் ஆய்தம், அங்கு உயிர்போல ஒலித்தது. (௩)

௩௬௪. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது

வாஅய்மை வேண்ட வரும்.



(இ - ள்.) தூஉய்மை என்பது அவா இன்மை-(ஒருவர்க்கு) வீடென்று சொல்லப்படுவது அவாவில்லாமை; அது வாஅய்மை வேண்ட வரும் - அவ்வவாவில்லாமைதான் மெய்ம்மையைவேண்டத் தானேயுண்டாம்; (எ - று.)

வீடாவது உயிர் அவிச்சைமுதலிய மாசுநீங்குதலாகலின் அதனை 'தூய்மை' என்றும், காரணத்தைக் காரியமாக உபசரித்து 'தூய்மை யென்ப தவா

வின்மை' என்றும், மெய்ம்மையையுடைய பரத்தை ஆகுபெயரான் 'மெய்
ம்மை' என்றுங் கூறினர். மற்று - மேலையதுபோல வினைமாற்றின்கண்வந்
தது. வேண்டுதல் - இடைவிடாதுபாவித்தல். அவாவறுத்தல்
வீட்டிற்குப்பரம்பரையானன்றிநேரேஏதுஎன்பதூஉம்,
அது வரும் வழியும் இதனாற் கூறப்பட்டன.
(கு - ரை.) தூய்மை - பரிசுத்தத்தன்மை; அதனையுடைய முத்திக்குப்
பண்பாகுபெயர். வாய்மை, மெய்ம்மை - உண்மை; இவையும், உண்மையான
தன்மையையுடைய பரம்பொருளுக்குப் பண்பாகுபெயர். வேண்ட - விரும்
புதலால். தூய்மை - காரியம், அவாவின்மை - காரணம். 'தூய்மைக்குக்கார
ணம் அவாவின்மை' என்று சொல்லவேண்டுவதை 'தூய்மையென்ப தவா
வின்மை' எனக் காரணம் காரியமாகவே சொல்லப்பட்டது - உபசார
வழக்கு. பரம் - கடவுள். மேலையதுபோல - இவ்வதிகாரத்தில் இரண்டாம்
பாட்டிலுள்ளதுபோல. முதல்வாக்கியத்தில் முத்திக்குக்காரணம் இன்ன
தென்றுகூறி, பின்வாக்கியத்தில் அக்காரணமுண்டாகும்

உபாயம் கூறத்
தொடங்குகின்றமையின், இடையில்வந்த மற்று என்னும்
இடைச்சொல் -
வினைமாற்றுப்பொருளதாம். பரம்பரையானன்றி -
முறையே காரணமாவ
தல்லாமல். அதுவரும்வழி - அவாவின்மையுண்டாகும்
உபாயம். என்பது -
செயப்படுபொருள் கருத்தாப்போலக் கூறப்பட்டது:
செய்வினை செயப்பாட்டு
வினைப்பொருளில்வந்ததென்க. இது "ஊரெனப்படுவது
உறையூர்" என்பது
போலச் சிறப்புத்தோன்ற நிற்கும். அளபெடை -
இரண்டடியிலுஞ் செய்யு
ளோசைநிறைப்பது: எதுகையில் அளபெடைவந்தது,
அளபுத்தொடையாம்.

௩௬௫. அற்றவ ரென்பா ரவாவற்றார்
மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(இ - ள்.) அற்றவர் என்பார் - (பிறவி)
அற்றவரென்று சொல்லப்படு
வார்,—அவா அற்றார் - (அதற்கு நேரேதுவாகிய)அவா
அற்றவர்கள்; மற்
றையார் - (பிறஏதுக்களற்று) அஃதொன்றும் அறாதவர்கள்,
அற்று ஆக அற்
றது இலர் - (அவற்றாற் சிலதுன்பங்கள் அற்றதல்லது)

அற்றிலர்; (எ - று.)

அவர்போற் பிறவி

இதனான், அவாவறுத்தாரது சிறப்பு விதிமுகத்தானும் எதிர்மறைமுகத் தானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) அதற்கு - பிறவிக்கு. பிற எனுக்களற்று - மற்றை மண் பெண் பொன் முதலிய அவாவப்படும்பொருள்களொழிந்து; வெகுளிமுதலிய பிற



உகூடு குற்றங்களொழிந்தென்றுங் கொள்ளலாம். அஃதொன்றும் - பொருள்களில் ஆசைமாத்திரம். அற்று ஆக - அவர்வற்றவரைப்போன்ற அப்படிப்பட்ட தன்மை தம்மிடத்திலுள்ளதாக. அற்றது இலர் - பிறவியற்றதில்லாதவராவர். விதிமுகத்தானும் - உடன்பாட்டுவகையாலும். விதிமுகத்தாற் கூறினது - "அற்றவரென்பா ரவாவற்றார்" என்ற முதல்வாக்கியம். எதிர்மறைமுகத்தாற் கூறினது - "மற்றையா ரற்றாகவற்றதிலர்" என்ற இரண்டாம்வாக்கியம். அற்ற வர் என்பது - தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. அற்றதிலர் - உயர்திணை தொடர்ந்த அஃறிணைத்தொழிற்பெயர் அவ்வுயர்திணைமுடிபையே கொண்டது, திணைவழுவமைதி; [நன். பொது. உகூ.] அற்று - அவ்வளவினது: சுட்டடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். (ரு)

௩௬௬. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(இ-ள்.) ஒருவனை-(மெய்யுணர்தல் ஈறாகிய காரணங்களெல்லாம் எய்தி அவற்றான் வீடெய்தற்பாலனாய) ஒருவனை, வஞ்சிப்பது - மறவிவழியாற்புகுந்து (பின்னும் பிறப்பின்கண்ணே வீழ்த்துக்)கெடுக்கவல்லது, அவா—; அஞ்சுவதுஏ அறன் - (ஆகலான், அவ்வவாவை) அஞ்சிக்காப்பதே துறவறமாவது.

'ஓரும்' என்பன - அசைநிலை. அநாதியாய்ப் போந்த அவா, ஒரோவழி வாய்மைவேண்டலை ஒழிந்து பராக்காற் காவானாயின், அஃது இடமாக அவன் அறியாமற் புகுந்து, பழையஇயற்கையாய்நின்று, பிறப்பினை உண்டாக்குதலான், அதனை 'வஞ்சிப்பது' என்றார். காத்தலாவது - வாய்மைவேண்டலை இடைவிடாதுபயின்று, அதுசெய்யாமற் பரிகரித்தல்.

இதனான், அவாவின்குற்றமும், அதனைக்காப்பதே அறமென்பதூஉம் கூறப்பட்டன.

(கு - ரை.) மெய்யுணர்தல் ஈறாகிய காரணங்களெல்லாம் எய்தி - நிலையாமையறிதல், துறவு, மெய்யுணர்தல் என்கிற முத்திபெறுதற்குரிய காரணங்கள்யாவும் பொருந்தி. மறவிவழியாற் புகுந்து - (அவன்) சோர்ந்திருக்கிறசமயம்பார்த்து நுழைந்து. காப்பதே - தடுப்பதே. ஓரும் என்பது அசைநிலையாய்வருதல், "கிளந்தவல்லவேறுபிறதோன்றினுங், கிளந்தவற்றியலா னுணர்ந்தனர் கொளலே" என்னுங்

தொல்காப்பிய விடைச்சொல்லியற்புற னடைச்சூத்திரத்து உரையில் அமைக்கப்பட்டது. போந்த - வந்த. வாய்மை வேண்டலை ஒழிந்து - பரம்பொருளை விரும்புதலை விட்டு. பிரபஞ்சவிஷயத்தில் அறிவுசெலுத்துதல், பராக்கு எனப்படும்: 'பராக்கால்'என்பதற்கு-கருத்து ப்பொருளாக, சோர்வினால் அல்லது அஜாக்கிரதையினாலென்று உரைப் பர். காவானாயின் - அவ்வாசையைத் தடுக்காமற்போவானானால். அஃது இட மாக - அதுவேவழியாக. பழைய இயற்கையாய்நின்று - முன்னையபடியாய் நின்று. அதனை - அங்ஙனம் அவா ஒருவனைக்கெடுக்கும்நிலையை. பயின்றுபழகி. அது செய்யாமல் பரிகரித்தல் - ஆசை தன்னைக்கெடாதபடி நீக்குதல். அதனைக்காப்பதே - ஆசையைத்தடுப்பதே. பிரிநிலையோடு தேற்றப்பொரு





ளுணர்த்தும் 'அறனே' என்னும் ஏகாரம், பிரித்து 'அஞ்சுவது' என்பதனோடு கூட்டப்பட்டது. இப்பாட்டில் முன்வாக்கியத்திற்கூறிய சித்தாந்தத்திற்குப் பின் வாக்கியம் காரணம். (௬)

௩௬௭. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(இ - ள்.) அவாவினை ஆற்ற அறுப்பின்-(ஒருவன்) அவாவினை (அஞ்சி

த்) துவரக்கெடுக்கவல்லனுயின், தவா வினை தான் வேண்டும் ஆற்ருன்
வரும் - (அவனுக்குக்) கெடாமைக்கு ஏதுவாகிய வினை தான் விரும்புநெறி
யானே உண்டாம்; (எ - று.)

கெடாமை - பிறவித்துன்பங்களான் அழியாமை. அதற்கு ஏதுவாகிய
வினை என்றது, மேற்சொல்லிய துறவறங்களை. வினை - சாதியொருமை. தான் விரும்புநெறி-மெய்வருந்தாநெறி. அவாவினை முற்ற அறுத்தானுக்கு
வேறு அறஞ்செய்யவேண்டா, செய்தனவெல்லாம் அறமாமென்பது கருத்து.

இதனுன், அவாவறுத்தற்சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) துவர-முழுவதும். கெடாமை - அழியாது முத்திபெறுதல்.
தான்விரும்புநெறியானே-அவன்வேண்டியவழியால்: மிகஎளியவழியாய் என்
றபடி. துறவறங்கள்-விரதமும் ஞானமும். மெய்வருந்தாநெறி-உடம்புவருந்த
வேண்டாதவழி. முற்ற - முழுவதும். ஆற்ற - நன்ருய். (எ)

௩௬அ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ தூண்டேற்
றவா அது மேன்மேல் வரும்.

(இ - ள்.) அவா இல்லார்க்கு - அவா இல்லாதார்க்கு, துன்பம் இல்

ஆகும் - (வரக்கடவதொரு) துன்பமும் இல்லை; அஃது உண்டேல் - (ஒருவற்குப்

பிறகாரணங்களெல்லாம்இன்றி) அஃதுஒன்றும் உண்டாயின், தவா அது மேல்மேல் வரும் - (அதனானே

எல்லாத்துன்பங்களும்) முடிவின்றி இடை விடாமல் வரும்; (எ - று.)

உடம்பு முகந்துநின்ற துன்பம் முன்பே செய்துகொண்ட தாகலின், ஈண்டு 'துன்பம்' என்றது - இதுபொழுது அவாவாற் செய்துகொள்வன வற்றை. 'தவா அது மேன்மேல் வரும்' என்றதனான், மூவகைத்துன்பங்களு மென்பது பெற்றும்.

இதனான், அவாவே துன்பத்திற்குக்காரணமென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பிறகாரணங்கள் - கோபம்முதலிய மற்றைப்பிறவிக்கார - ணங்கள். அஃதுஒன்றும் உண்டாயின் - ஆசையொன்றுமாத்திரம் இருக்குமானுல். முடிவின்றி - ஒழிதலில்லாமல், எல்லையில்லாமல். முகந்துநின்ற துன்பம் - இப்பிறப்பில் அனுபவிக்கக்கடவதாக அமைந்த பிராரப்த கருமப் பயனுகிய துன்பம். முன்பே - முற்பிறப்பிலே. முன்பேசெய்துகொண்டதாக லின் - சஞ்சிதகருமத்திலிருந்து எடுத்துக்கொண்டதாதலால் என்றபடி. இது

பொழுது - இப்பிறப்பில்.
இதுபொழுதுசெய்துகொள்வன, ஆகாமியகர்மமா
கும். மூவகைத்துன்பங்கள் என்றது சஞ்சிதம், பிராரப்தம்,
ஆகாமியம் என்ப
வற்றை. மூவகைத்துன்பம் என்பதற்கு ஆத்யாத்மிகம்
முதலிய மூன்றுவகைப்
பிறவித்துன்பங்களென்றலு முண்டு. அஃது - இங்கு
ஆய்தம் மெய்போல்
ஒலித்தது. தவாஅது - அளபெடை, செய்யுளோசை
நிறைப்பது. மேன்
மேல் - அடுக்கு, இடைவிடாமை குறிக்கும். இ
ரண்டாம்வாக்கியத்திலுள்ள
'வரும்' என்பதற்கும், முதல்வாக்கியத்திலுள்ள
'துன்பம்'என்பதே எழுவாய்

நூசுசு. இன்ப மிடையறா தீண்டு
மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(இ - ள்.) அவா என்னும் - அவா என்று
சொல்லப்படுகின்ற, துன்
பத்துள் துன்பம் - மிக்கதுன்பம், கெடின் -
(ஒருவற்குக்) கெடுமாயின்,
ஈண்டும் இன்பம் இடை அறாது - (அவன்
வீடுபெற்றவழியேயன்றி)
உடம்போடு நின்றவழியும் இன்பம் இடையறாது; (எ - று.)

துன்பத்துள் துன்பம் - ஏனைத்துன்பங்களெல்லாம் இன்பமாக வருந் துன்பம். விளைவின் கண்ணேயன்றித் தோற்றத்தின் கண்ணுந் துன்பமாகலின், இவ்வாறு கூறப்பட்டது. காரணத்தைக் காரியமாக உபசரித்து 'அவாவென்னுந் துன்பத்துள் துன்பம்' என்றும், அதுகெட்டார்க்கு மனந் தடுமாருது நிரம்பிநிற்றலான் 'ஈண்டுமின்பமிடையருது' என்றுங் கூறினர்.

இனி, 'ஈண்டும்' என்பதற்கு - பெருகும் என்று உரைப்பாரும் உளர்.

இதனன், அவாவறுத்தார் வீட்டின்பம் உடம்பொடுநின்றே எய்துவரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) ஈண்டும் - இம்மையிலும் என்றபடி. இடையருது - நடுவில் நீங்காது. ஏனை - மற்றை. இன்பத்துக்குந் துன்பத்துக்கும் அனுபவத்தில் எவ்வளவு வித்தியாசமுண்டோ, அவ்வளவுபேதம் மற்றைத் துன்பங்களினும் இவ்வவாவாந்துன்பத்துக்குக் கொடுமையி லுள்ள தென்க. துன்பத்துள் துன்பம் - துன்பங்களுள்ளுங் கொடிய துன்பம். விளைவின்கண்ணே யன்றி - பயனனுபவிக்குமிடத்துமாத்திரமே யல்லாமல்.

தோற்றத்தின்கண்ணும்-தோன்
றும்பொழுதும். மற்றையபிறவிக்காரணங்களெல்லாம்
அப்பொழுதே [இம்மை
யிலே] துன்பந்தருவன வாகாமல், பின்பு [மறுமையில்]
பயன் தரும்பொழுது
துன்பமாய் முடியும்; இவ்வவாவோ தோன்றினதுமுதல்
இம்மையிலேயே துன்பந்தருவ தென்க. இங்கு
அவாவாகியகாரணம் துன்பமாகியகாரியமாக
அபேதப்படக்கூறப்பட்டது, உபசாரவழக்கு. அது
கெட்டார்க்கு-அவா அற்ற
வர்க்கு. தமொருது - கண்டபொருள்களிலும் அலையாமல்.
நிரம்பிநிற்றலான் -
திருப்தியடைந்துநிற்பதனால். முதலுரைக்கு, அருது -
எதிர்மறைவினை
முற்று: ஈண்டு - இகரச்சுட்டடியாப்பிறந்து
ஏழாம்வேற்றுமையிடப்பொருள்
குறிக்கும் இடைச்சொல்; உம்மை - எச்சப்பொருளது. இ
ரண்டாமுரைக்கு,
அருது-எதிர்மறைவினையெச்சம்; ஈண்டும் -
செய்யுமென்முற்று. வீட்டின்பம்

உகூ௩ திருக்குறள்

உடம்பொடு நின்றே எய்துவர் - முத்தியுலகத்து
நிரதிசயப்பேரின்பத்தை

இவ்வுடம்போடு கூடிநின்றபோதும் [இம்மையிலும்]
அடைவர். துன்பத்துள்
துன்பம் - "இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்,
துன்பத்துள் துன்பங்
கெடின்" என்பதிற்போலக் காண்க.
(க)

௩௭௦. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

(இ - ள்.) ஆரா - (ஒருகாலும்) நிரம்பாத,
இயற்கை - இயல்பினை
யுடைய, அவா - அவாவினை, நீப்பின் - (ஒருவன்)
நீக்குமாயின், அ நிலை
பேரா இயற்கை தரும் - (அந்நீப்பு அவனுக்கு)
அப்பொழுதே (எஞ்ஞான்
றும்) ஒருநிலைமையனும் இயல்பைக் கொடுக்கும்; (எ -
று.)

நிரம்பாமையாவது - தரமேயன்றித் தம்பயனும்
நிலையாமையின் வேண்
டாதனவாய பொருள்களை வேண்டி
மேன்மேல்வளர்தல். அவ்வளர்ச்சிக்கு
அளவின்மையின், நீத்தலே தக்கதென்பது கருத்து.
களிப்புக்கவர்ச்சிகளும்
பிறப்புப்பிணிமூப்புஇறப்புக்களும் முதலாயின இன்றி
உயிர் நிரதிசய இன்
பத்ததாய் நிற்றலின், வீட்டினை 'பேராவியற்கை'
என்றும்;அஃது அவா நீத்த

வழிப்பெறுதல் ஒருதலை யாகலின், 'அந்நிலையேதரும்'
என்றுங்கூறினார்; "நன்
றுஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லா நீத்,
தொன்றாக்கிடந்தவரும்
பெரும்பா ழுலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து,
சென்றாங்கின்பத்துன் பங்கள்
செற்றுக்களைந்துபசையற்று, லன்றேயப்போதேவீடு
மதுவே வீடு வீடாமே"
என்பதூஉம் இக்கருத்தேபற்றிவந்தது:
இந்நிலைமையுடையவனை வடநூலார்
சீவந்முத்த னென்ப.
இதனான்,வீடாவது இது வென்பதூஉம், அஃது
அவாவறுத்தார்க்கு அப்
பொழுதே உளதா மென்பதூஉங் கூறப்பட்டன.
(கு - ரை.) ஒருகாலும் நிரம்பாத -
எப்பொழுதுந் திருப்தியடையாத.
நீக்குமாயின் - நீக்குவானானால். அந்நீப்பு - ஆசையைநீங்கி
நின்ற அந்நிலைமை.
எஞ்ஞான்றும் ஒருநிலைமையனும் இயல்பை -
எப்பொழுதும் மாறுபடாது
அழிவின்றியிருக்கும் முத்திநிலையை. தாமே யன்றித்
தம்பயனும் நிலையாமை
யின் வேண்டாதனவாய - செல்வந் தாமேயல்லாமல்
அவற்றின்பயனான
சிற்றின்பங்களும் நிலைத்திராவாதலால்

விரும்பத்தகாதவையான. பொருள்
களில் ஆசைவைத்துக்கொண்டேபோனல்
எவ்வளவுபொருள் கிடைப்பினும்
திருப்தியுண்டாகாதபடி அவ்வாசை
மேன்மேல்வளர்தல்பற்றி அவ்வாசையின்
முடிவு எப்பொழுதும் அத்ருப்தியே யாதலால்,
ஆசையை முதலிலேயே.
விட்டுவிடவேண்டு மென்பதாம். "களிப்புங்கவர்வு
மற்றுப் பிறப்புப்பிணி
மூப்பிறப்பற்று, ஒளிக்கொண்டசோதியமா யுடன்கூடுவ
தென்றுகொலோ"
(திருவாய்மொழி, 2, 3, 10) என்றது கொண்டு
"களிப்புக்கவர்ச்சிகளும்"
என்ற வாக்கியம் தொடங்கியுள்ளது. களிப்பு -
கருதிய விஷயம் கிடைத்த
தனாலான மகிழ்ச்சி. கவர்ச்சி - அதுகிடையாதபோது
மனத்தைக்கவர்ந்த
நிலை: துன்பமென்றபடி. பிறப்பு -
களிப்புக்கவர்வுகட்கு காரணமான ௩-வது - ஆம்



பிறவி. நிரதிசய இன்பத்ததாய் - தனக்குமேம்பட்ட
இன்பமொன்றில்லாத பேரின்பத்தையுடையதாய்.
பேராவியற்கை - மாறுபடாத இயல்பு. அஃது -
அம்முத்தியை. "நன்றுஞானங்கடந்து" என்னும்
மேற்கோள் - திருவாய்மொழி, 8, 8, 6.

அறிவுக்குப்புலப்படுகிற ஐம்புலன்களையும் நன்றாகக்கழித்துச் சென்று அவற்றிற்குக்காரணமான ஐம்பொறிகளையும் தலையெடாதபடிசெய்து ஆன்மாவோடொற்றுமைப்பட்டுள்ள கடத்தற்கரிதான பரப்பையுடைய அழிதலில்லாத பிரகிருதியின்சொரூபத்தை மிக அறிந்து அதற்கும்அப்பாற்சென்று இன்பதுன்பங்களுக்குக்காரணமான புண்ணியபாப கருமங்களை விட்டொழித்து அவற்றிலுண்டான ருசிவாசனைகளும் ஒழிந்தால், அந்நாளிலே அம்முகூர்த்தத்தில்தானே முத்தியும் உண்டாய்விடுவது; அந்தப் பற்றறுதியே ஆத்மானுபவரூபமான மோக்ஷமும், பகவதநுபவரூபமான மோக்ஷமுமாகும் என்பது இதன்பொருள். சீவன்முக்தன் - பிழைத்திருக்கையிலேயே முத்திபெற்றவன்; துறந்துஞானமடைந்து பிறப்பறுகிறவன். இது- இன்னது. அஃது - வீடு. அப்பொழுதே - அவாவறுத்தபொழுதே. அந்நிலையே, ஏகாரம் - காலதாமசமின்மையை விளக்கும்; தேற்றப்பொருளதாகவும், பிரிநிலைப்பொருளதாகவுங் கொள்ளலாம். (௬௦)

துறவறவியல் முற்றிற்று.

---

இவ்வாற்றான், இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனையும் பயத்தற் சிறப்புடைத்தாய அறம் கூறினார்; இனி, பொருளும் இன்பமும் கூறுவார், அவற்றின் முதற்காரணமாகிய ஊழின்வலி கூறுகின்றார்.

(கு - ரை.) இவ்வாற்றான் - கீழ் முப்பத்தைந்து அதிகாரங்களிற் கூறிய இவ்வகையால். மறுமை - இறந்தபின்வரும்நிலை. பயத்தல்- தருதல். கூறுவார்-

சொல்லுபவர். அவற்றின் - பொருளின்பங்களின். ஊழ் - சங்மாந்தாகர்மம், பழவினை. வலி - உறுதி.

"வீடொன்றுபாயிரநான்குவிளக்கறம், நாடியமுப் பந்து மூன்றேன்றூழ்-****வள்ளுவர்சொன்னவகை" என்று திருவள்ளுவமாலையிற் கூறிபிருத்தலால், கீழ் அதிகாரத்தோடு அறத்துப்பால் முற்றுப் பெற்றதென்றும், ஊழ் என்னும் இவ்வதிகாரம் அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் சேராமல் இடையில் தனியேசிற்பதென்றும் அறியப்படுகிறது; இனி, அந்நூலிலேயே ." அறநான்கறிபொருளேழொன்று காமத், திறமூன் றெனப் பகுதிசெய்து" என்று கூறினபடி பாயிரம், இல்லறம், துறவறம், ஊழ் என அறத்துப்பாலினுட்பிரிவுகள் நான்காகக் கொள்ளுதலு மொன்று. இந்த ஊழ் என்ற அதிகாரம் அறத்துப்பாலிற்சேர்ந்த தென்பதே பரிமேலழகர் கொள்கையென்பது, மேற் பெறப்படும்.

## ௩அ - ஆம்

அதிகாரம்.—ஊழ். அஃதாவது-இருவினைப்பயன் செய்தவனையேசென்று அடைதற்கு எதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன- ஒருபொருட்கிளவி. இது - பொருளின்பங்க ளிரண்டற்கும் பொதுவாய் உ௭0 தி

ருக்குறள்

ஒன்றனுள் வைக்கப்படாமையானும், மேற்கூறிய

அறத்தோடு இயைபுடை
மையானும், அதனது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

(கு - ரை.) இருவினைப்பயன் - புண்ணியம் பாவம் என்னும் இரண்டு வகைக்கருமங்களின் பலன். அது செய்தவனையே விடாது சென்று அடைதலை "பல்லாவுளுய்த்துவிடினுங்குழக்கன்று, வல்லதாந் தாய்நாடிக்கோடலைத் - தொல்லைப், பழவினையுமன்னதகைத்தே தற்செய்த, கிழவனைநாடிக் கொளற்கு" என்னும் நாலடியாரினாலும் அறிக. நியதி - தவறுமுறைமை. இது - ஊழ். இயைபு - சம்பந்தம். இறுதிக்கண் - முடிவில். ஒருவன்செய்த அறத்தால் விளையும் பயனும் ஊழ்வினை யாகுதலால், 'அறத்தோடு இயைபுடைமையானும்' என்றது.

௩௭௧. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

(இ - ள்.) (ஒருவற்கு), கை பொருள் ஆகு ஊழால் - கைப்பொருள் ஆதற்குக்காரணமாகிய ஊழால், அசைவு இன்மை தோன்றும் - முயற்சி உண்டாம்; போகு ஊழால் - (அஃது) அழிதற்குக்காரணமாகிய ஊழால், மடி தோன்றும் - மடிஉண்டாம்; (எ - று.)

ஆகூழ், போகூழ்என்னும் வினைத்தொகைகள் - எதிர்காலத்தான்விரிக்கப்பட்டுக் காரணப்பொருளவாய் நின்றன. அசைவு - மடி. பொருளின் ஆக்க அழிவுகட்குத் துணைக்காரணமாய முயற்சிமடிகளையும் தானே தோற்றுவிக்குமென்பது கருத்து.

(கு - ரை.) கைப்பொருள் ஆதற்கு - கையிற்பொருளுண்டாகி வளர்தற்கு. அஃது - கைப்பொருள். மடி, சோம்பல், அசைவு என்பன - ஒரு பொருட்சொற்கள். ஆகுஊழ் - ஆகுதற்குக் காரணமாகும் ஊழ், போகுஊழ் - போகுதற்குக்காரணமாகும் ஊழ் என விரியும். ஆகூழ் - நல்வினைப்பயன். போகூழ்-தீவினைப்பயன். அசைவின்மை-சோம்பலில்லாமை. கைப்பொருள் என்பது, மத்திமதீபமாய் இரண்டுவாக்கியத்திலுஞ் சென்றுதொடரும். "புத்திః கர்மாநுஸாரிணீ" என்றபடி அவ்வவ்வினைப்பயன்படி மடிமையின்மையிலும் மடிமையிலும் அறிவுசெல்லுமென்க. பொருளின் ஆக்க அழிவுகட்குத் துணைக்காரணமாகிய முயற்சி மடிகளையும்-பொருளின் ஆக்கத்துக்குக் காரணமான முயற்சியையும், பொருளின் அழிவுக்குக்காரணமான மடியையும் என்க. தானே - ஊழ்வினைதானே.

(க)

௩௭௨. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று

மாகலூ ழுற்றக் கடை.

(இ - ள்.) இழவு ஊழ் (உற்றக்கடை) - (ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவாயினும்) கைப்பொருளிழத்தற்கு ஏதுவாகிய ஊழ் வந்தவிடத்து, அறிவு பேதைப்படுக்கும் - (அஃது) அதனைப் பேதையாக்கும்; ஆகல் ஊழ் உற்றக்

கடை- (இனி அவன
றிவு சுருங்கியிருப்பினும்) கைப்பொருள் ஆதற்கு ஏதுவாகிய
ஊழ்வந்தவிடத்து, (அறிவு) அகற்றும் - (அஃது)
அதனை விரிக்கும்; (எ - று.)

'கைப்பொருள்' என்பது, அதிகாரத்தான் வந்தது.
'இழவூழ்,' 'ஆகலூழ்' என்பன
இரண்டும்-வேற்றுமைத்தொகை. 'உற்றக்கடை' என்பது,
மூன்னுங் கூட்டப்பட்டது. இயற்கையாறுய அறிவினையும்
வேறுபடுக்குமென்பதாம்.

(கு - ரை.) அஃது அதனைப்
பேதையாக்கும்-அத்தீயூழ் அந்நல்லறிவை மந்தமாகச்செய்யும்.
அஃது அதனைவிரிக்கும் - அந்நல்லூழ் அச்சிற்றறிவைப்
பெருகச்செய்யும். இவ்வதிகாரத்தின் முதற்பாட்டிலிருந்து
'கைப்பொருள்' என்பது, இரண்டாம்பாட்டிற்கு
வருவிக்கப்பட்டது. இழவூழ், ஆகலூழ் -
நான்காம்வேற்றுமை யுருபும்பயனுந்தொக்கதொகைகள்.
மூன்னும் கூட்டப்பட்டது - 'இழவூழ்' என்பதன்
இறுதியிலும் எடுத்துச்சேர்க்கப்பட்டது. அறிவு -
மத்திமதீபம். உற்றக்கடை - எதிர்காலவினையெச்சம்.
அகற்றும் - பரவச்செய்யும்: அகற்று - 'அகல்' என்பதன்
பிறவினை. (உ)

௩௭௩. நுண்ணிய நூல்பல கற்பினு
மற்றுந்தன்

னுண்மை யறிவே மிகும்.

(இ - ள்.) நுண்ணிய நூல் பல கற்பின் உம்-

(பேதைப்படுக்கும்ஊழுடையான் ஒருவன்) நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல் பலவற்றையுங் கற்றானாயினும், மற்றுஉம் தன் உண்மை அறிவே மிகும்-(அவனுக்குப்) பின்னர் தன்ஊழானாகிய பேதைமையுணர்வே மேற்படும்; (எ - று.)

பொருளின் நுண்மை, நூலின்மே லேற்றப்பட்டது. மேற்படுதல்-கல்வி யறிவைப் பின்னிரங்குதற்கு ஆக்கிச் செயலுக்குத் தான் முற்படுதல். "காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா, வாதல் கண்ணகத் தஞ்சனம்போலுமால்" என்பதும் அது. செயற்கையான் ஆயஅறிவையுங் கீழ்ப்படுத்து மென்பதாம்.

(கு - ரை.) பேதைப்படுக்கும் ஊழுடையான் ஒருவன் - அறிவில்லாதவனாகச் செய்யும்விதி வந்து அடுத்தவனாகிய ஒருவன். பேதைமையுணர்வு-அறி வின்மை. மேற்படும் - அதிகப்பட்டுநிற்கும். நுண்ணிய நூல் - பொருள்கள் நுட்பமாயிருக்கப்பெற்ற நூல்: இடத்துநிகழ்பொருளின் குணம் இடத்தின் மேலேற்றிக் கூறப்பட்டது. பின் இரங்குதற்கு ஆக்கி - ஒருகாரியத்தை ஆராயாது செய்துவிட்டபின்பு அதன் தகுதியின்மையை நினைத்து அறிந்து 'அந்தோ! இதுசெய்தோமே!' என்று மனந்தவித்தற்கு உபயோகப்படச்செய்து. பின் இரங்குதல் - கழிவிரக்கம்; பச்சாத்தாபம். செயலுக்குத் தான் முற்படு தல் - தொழில்செய்வதற்கு விதியறிவே காரணமாதல். "காதன்மிக்குழி" என்னும் மேற்கோள் - சீவகசிந்தாமணி,

கனகமாலையாரிலம்பகம், எசு - ஆம் கவியிலுள்ளது;
ஆசையிக்கவிடத்து(த் துன்பத்திற்குத் துணையென்று) கற்ற
கல்வியும் (பிறர்குற்றம் நீக்குதற்கு உதவுதலன்றி
என்குற்றம் நீக்குதற்கு) உதவாதொழிதல்
கண்ணினுட்கிடந்த அஞ்சனத்தை யொக்கும் என்று
பொருள்: கண்ணினுட்கிடந்த அஞ்சனம் அதற்குப் பயன்
கொடாததுபோல, உஎஉ

திருக்குறள

கல்வி நெஞ்சிற்கிடந்தும் பயன்தந்ததில்லை
யென்க. இம்மேற்கோளில், காதலா

கிய விதியறிவு முற்பட்டுக் கல்வியாகிய செயற்கையறிவு
பிற்பட்டவாறு

காண்க. செயற்கையானுகிய
அறிவு-கல்வியறிவு. கற்பினும், உம்மை-உயர்வுசிறப்பு. மற்றும்,
உம்மை - இறந்தது தழுவியஎச்சம்; படித்தற்கு முன்
னல்லாமற் பின்புமென்க. அறிவே, ஏ - பிரிநிலையோடு
தேற்றம். மேல் கல்வியென்னும் அதிகாரத்தில்
"தொட்டனைத்தூறு மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத்
தூறு மறிவு" என்பது ஊழ் மாறுகொள்ளாதபொழு
தாகலின், அதனோடு இது முரண்படாதாம்.

(௩)

௩எச. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

(இ - ள்.) உலகத்து இயற்கை - உலகத்து (ஊழினுடைய) இயற்கை, இரு வேறு - இரண்டுகூறு; (ஆகலான்), திரு வேறு தெள்ளியர் ஆதல்உம் வேறு - செல்வமுடையராதலும்வேறு அறிவுடையராதலும்வேறு; (எ - று.)

செல்வத்தினைப் படைத்தலும் காத்தலும் பயன்கோடலும் அறிவுடையார்க்கல்லது இயலாவன்றே; அவ்வாறன்றி அறிவுடையார் வறியராகவும் ஏனையார் செல்வராகவுங் காண்டலான், அறிவுடையராதற்கு ஆகும் ஊழ் செல்வமுடையராதற்கு ஆகாது, செல்வமுடையராதற்கு ஆகும் ஊழ் அறிவுடையராதற்கு ஆகாது: என்றதாயிற்று. ஆகவே, செல்வஞ்செய்யுங் கால் அறிவாகிய துணைக்காரணமும் வேண்டா வென்பது பெற்றாம்.

(கு - ரை.) கூறு - பகுப்பு. பயன்கோடல் - செல்வத்தாலாகும் பயனைக் கொள்ளுதல். அறிவுடையார்க்கல்லது இயலா அன்றே - அறிவுடையார்க்கு மாத்திரமே கூடிய காரிய மன்றோ? வறியர் - பொருளில்லாதவர். ஏனையார்- மற்றையோர்; இங்கு அறிவில்லாதவர். காண்டலான் - காணுதலால். செய்யுங்கால் - சம்பாதிக்குமிடத்து. அறிவுவேண்டாமை நல்லூழுடையானுக் கென்க. ஆதலும் என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சப்பொருளது. (௪)

௩௭௫. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு

நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(இ - ள்.) செல்வம் செயற்கு - செல்வத்தை ஆக்குதற்கு, நல்லவை எல்லாம் தீயஆம் - நல்லவையெல்லாம் தீயவாய்அழிக்கும்; தீயஉம் நல்லஆம்- (அதுவேயன்றித்) தீயவைதாமும் நல்லவாய் ஆக்கும்: (ஊழ்வயத்தான்).

நல்லவை, தீயவை என்பன - காலமும், இடனும், கருவியும், தொழி லும் முதலாயவற்றை. 'ஊழான்' என்பது, அதிகாரத்தாற் பெற்றும். அழிக் குமஊழ் உற்றவழிக் காலம்முதலிய நல்லவாயினும் அழியும்: ஆக்கும்ஊழ் உற்றவழி அவை தீயவாயினும் ஆகு மென்ப தாயிற்று. ஆகவே, காலம்முதலிய துணைக்காரணங்களையும் வேறுபடுக்கு மென்பது பெற்றும்.

(கு - ரை.) ஆக்குதற்கு - சம்பாதித்தற்கு. ஊழ்வயத்தான் - விதிவசத் தால். அதிகாரத்தால்-இது ஊழ்என்னும் அதிகாரமாதலால். வேறுபடுக்கும் -



பேதப்படச்செய்யும். பெற்றும் - பெற்றோம். அளபெடை, செய்யுளோசை நிறைப்பது. உம்மை-இறந்ததுதழுவியஎச்சம்.

(ரு)

௩எசு. பரியினு மாகாவாம் பாலல்ல

சொரியினும் போகா தம.

வுய்த்துச்

(இ - ள்.) பால் அல்ல பரியின் உம் ஆகா ஆம் - (தமக்கு) ஊழல்லாத பொருள்கள் வருந்திக்காப்பினும் (தம்மிடத்து) நில்லாவாம்; தம உய்த்து சொரியின்உம் போகா - (ஊழால்)தமவாகியபொருள்கள் (புறத்தே) கொண்டு போய்ச் சொரிந்தாலும் (தம்மைவிட்டுப்) போகா; (எ - று.) பொருள்களின் நிலேயும் போக்கும் ஊழினுன் ஆவதல்லது காப்புஇகழ்ச்சி களான் ஆகா என்பதாம். இவை ஆறுபாட்டா னும்,பொருட்குக்காரணமாயஊழின்வலிகூறப்பட்டது.

(கு - ரை.) தமவாகிய - தமக்குஉரியனவான. புறத்தே - வெளியிலே. சொரிந்தாலும்-கொட்டிவிடப்பட்டாலும். நிலேயும் போக்கும்-நிற்பதும் நீங்கு வதும். காப்பு - காத்தல். இகழ்ச்சி - காத்தலேயிகழ்தல்; காவாமை. பரியினும் என்ற உம்மை - உயர்வுசிறப்பு. சொரியினும் என்ற உம்மை - இழிவுசிறப்பு. பின்னே ஆம் என வந்ததனுல், ஆகா என்பது -

வினையாலணையும் பெயர். போகா என்பது - வினைமுற்று. தம - பலவின்பாற்குறிப்பு வினையாலணை யும்பெயர். அல்ல - பெயர்.

(கூ)

௩ளஎ. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி

தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(இ - ள்.) கோடி தொகுத்தார்க்குஉம் - (ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள்) கோடியை (முயன்று) தொகுத்தார்க்கும், வகுத்தான் வகுத்த வகை அல்லால் துய்த்தல் அரிது - தெய்வம்வகுத்தவகையானல்லது நுகர்தல் உண்டாகாது; (எ - று.)

ஒருயிர்செய்த வினையின் பயன் பிறிதோருயிரின்கட் செல்லாமல் அவ் வுயிர்க்கே வகுத்தலின், 'வகுத்தான்' என்றார். "இசைத்தலுமுரியவேறிடத் தான"என்பதனுன் உயர்திணையாயிற்று. படையாதார்க்கேயன்றிப் படைத்தார்க்கும் என்றமையான், உம்மை - எச்சவும்மை. வெறுமுயற்சிகளால் பொருள்களைப் படைத்த லல்லது நுகர்தலாகாது, அதற்கு ஊழ் வேண்டுமென்பதாயிற்று.

(கு - ரை.) கோடியை முயன்று தொகுத்தார்க்கும் - மிகப்பலவற்றை முயற்சிசெய்து சேர்த்து வைத்தவர்களுக்கும். தெய்வம் வகுத்தவகையா னல் லது - விதிஏற்படுத்தினபடியா லல்லாமல், 'கைக்கெட்டினதும் வாய்க்கெட்

டாது' என்றபடி. "இசைத்தலும்" என்னும் இலக்கணவிதி, தொல்காப்பியத்துச் சொல்லதிகாரத்துக் கிளவியாக்கத்திலுள்ளது; "காலமுலகமுயிரே யுடம்பே, பால்வரைதெய்வம் வினையேபூதம், ஞாயிறு திங்கள்சொல்லென வரூஉம், ஆயீரைந்தொடு பிறவுமன்ன, ஆவயின் வரூஉங்கிளவியெல்லாம், பால்பிரிந்திசையாவுயர்திணைமேன" என்ற சூத்திரத்தால், காலம் முதலாகப் பால்வரைதெய்வம் இடையாகச் சொல் இறுதியாக இச்சூத்திரத்துக் கூறப் பட்ட பத்தும் அத்தன்மையன பிறவும் உயர்திணைப்பொருளின்மேல் நிற்பன வாயினும் சொல்லின்தன்மைபற்றி அஃறிணைப்பாலாயிசைக்கு மென்று பொதுவிதிகூறி, "இசைத்தலுமுரிய வேறிடத்தான" என்னும் இப்புறனடைச்சூத்திரத்தால், இச்சொற்கள் ஈறுதிரிந்துவாய்பாடுவேறுபட்டவிடத்து உயர்திணையாயிசைத்தலுமுரிய என்று கூறப்பட்ட சிறப்பு விதியின்படி, இங்கே விதித்தெய்வம் அஃறிணையாச்சொல்லப்படாமல், 'வகுத்தான்' என

உயர்திணையாண்பாலாற் கூறப்பட்டதென்க.
தொகுத்தார்க்கும் என்ற இடத்து உம்மை - இறந்தது தழுவிய எச்சவும்மை; இனி, உயர்வுசிறப்பாகவுங்கொள்ளலாம். பிரயத்தினமாத்திரத்தால் திரவியம் சம்பாதித்தல் மாத்திரம் ஒருகால் கூடினுங் கூடும்; அதனையனுபவித்தலோ ஊழாலன்றிக் கூடாது என்பது கருத்து.
இங்கே, 'பரிமேலழகர் பயன்வினை வெறுவினை என இரண்டுகொண்டு, பயன்வினையைப் பலவிடத்தினும் பலவாக விரித்து, வெறுவினையை "வகுத்தான் வகுத்த வகையல்லாற்கோடி" என்பதனுட் கொண்டார்' என்ற இலக்கணக்கொத்து உரையை அறிக. (எ)

௩எஅ. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
ஊட்டா கழியு மெனின்.

(இ - ள்.) துப்புரவு இல்லார் - (வறுமையால்) நுகர்ச்சியில்லாதார், துறப்பார் - துறக்குங் கருத்துடையராவர்: உறற்பால ஊட்டா கழியும் எனின் - (ஊழ்கள்) உறுதற்பாலவாய துன்பங்களை உறுவியாதொழியுமாயின்.

'துறப்பார்' என்பது, ஆரீற்று எதிர்காலமுற்றுச்சொல். தம்மால்விடப் பெறுவன தாமே விடப்பெற்றுவைத்துங் கருத்துவேறுபாட்டால் துன்பமுறுகின்றது ஊழின்வலியானென்பது எஞ்சி நிற்றலின், மன் -

ஒழியிசைக்கண் வந்தது.

(கு - ரை.) வறுமையான்
நுகர்ச்சியில்லாதார்-இல்லாமையாற் பொருளை
யனுபவிக்குந்தன்மை யில்லாதவர். துறக்கும் -
துறவறமடையும். உறுதற் பால வாய -
அடைந்தேதீரவேண்டுவனவான. உறுவியாதொழியுமாயின்
அடைவிக்காமல் நீங்குமானால். எஞ்சிநிற்றலின் - குறைந்து
நிற்றலால். தம் மால் விடப்பெறுவன - தாமே

விடவேண்டியவையான செல்வம்முதலியபடியு - ஆய
அதகாரய—உளுழ உளரு

பொருள்கள். தாமே விடப்பெற்றுவைத்தும் - வறுமையால்
தாமேநீங்கியிருந்தும். கருத்து வேறுபாட்டால் -
துறக்குங்கருத்து உண்டாகாமையால். துன் பம்
உறுகின்றது - பிறவித்துன்பமடைவது. உலகத்தில்
பொருளுள்ளவர்கள் அப்பொருளினிடத்திற்பற்றும்
அப்பொருளாற் பயனனுபவித்தலில் விருப்ப மும்
உடையவர்களாயிருந்தாலும், இயற்கையிற்
பொருளில்லாதவர்கள் அப் பொருளிற் பற்றும்
இன்பநுகர்ச்சியில் விருப்பமுமில்லாமல் துறவறத்தை
யடைந்திருத்தல் கூடுமன்றோ? அங்ஙனம் உலகத்தில்
வறியவரெல்லாரும் துறவாமைக்குக்காரணம் அவர்களறிவை

அவர்கள்விதியானது துறவிற் செல்லவொட்டாது தடுத்துப்
பொருட்பற்றிற் செலுத்தி அவர்களைப் பிறவித்
துன்பமடைவிக்கின்ற தென இங்ஙனம்
ஒழியிசைப்பொருளின்கருத்தை
யுணர்க. ஒழியிசைக்கண்-ஒழியிசைப்பொருளில்.
துப்பு-அனுபவித்தல், உரவு-
வலிமை; இவ்விருசொற்கள், வேற்றுமைத்தொகையால்
தொடர்ந்து, துப்புரவு
என ஒருசொல்தன்மைப்பட்டு, அனுபவித்தற்கேற்ற
சிறப்புடையபொருள்க
ளெனக் காரணக்குறியாய்நிற்கும்; ஊட்டா -
ஊட்டாதனவாய்: எதிர்மறைப்
பலவின்பால்வினைமுற்றுவினையெச்சம்.
(அ)

௩௭௬. நன்றாங்கா னல்லவாக் காண்பவ
ரன்றாங்கா
வல்லற் படுவ தெவன்.

(இ - ள்.) நன்று ஆம் கால் நல்ல ஆ
காண்பவர்-நல்வினை விளையுங்கால்
(அதன்விளைவாய இன்பங்களைத் துடைக்குந் திறன்
நாடாது இவை) நல்ல
வென்று இயைந்து அனுபவிப்பார், அன்று ஆம் கால்
அல்லல் படுவது-எனைத்
தீவினை விளையுங்கால் (அதன்விளைவாய துன்பங்களையும்
அவ்வாறு அனுபவி

யாது துடைக்குந்திறன்நாடி) அல்லலுழப்பது, எவன் - என்கருதி? (எ - று.)

தாமே முன் செய்துகொண்டமையானும், ஊட்டாது கழியாமையானும்'

இரண்டும் இயைந்து அனுபவிக்கற்பால; அவற்றுள் ஒன்றற்கு இயைந்து

அனுபவித்து ஏனையதற்கு அதுசெய்யாது வருந்துதல் அறிவன்று என்பதாம்.

இவைமூன்றுபாட்டானும்,
இன்பதுன்பங்கட்குக்காரணமாய ஊழின்
வலி கூறப்பட்டது.

(கு - ரை.) விளையுங்கால் - பயன்தருமிடத்து.

அதன்விளைவாய - அந்

நல்வினைப்பயனை. துடைக்குந்திறன் நாடாது -

போக்கும்வகைதேடாமல்.

இயைந்து-சம்மதித்து. அவ்வாறு-துடைக்குந்திறன்நாடாது இயைந்து. அல்ல

லுழப்பது-மிகுந்ததுன்பப்படுவது. தாமே

முன்செய்துகொண்டமை யானும்-

நல்வினைபோலத் தீவினையும் முன் தம்மாலேசெய்து வைக்கப்பட்டதாதலா

லும். ஊட்டாது கழியாமையானும்-விதிகள்

தத்தம்பயன்களை அனுபவிப்பியா

மல் நீங்காவாதலாலும். இரண்டும் -

இருவகைவினைப்பயனும். அனுபவிக்கற்

பால - அனுபவிக்கத்தக்கன. ஒன்றற்கு - நல்வினைப்பயனுக்கு. ஏனையதற்கு -

தீவினைப்பயனுக்கு. அது செய்யாது - இயைந்து அனுபவியாமல். (௯)

௩அ0. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) மற்று ஒன்று சூழின்உம் - (தன்னைவிலக்குதற்பொருட்டுத்

தனக்கு) மறுதலையாவதோருபாயத்தைச் சூழினும், தான் முந்துறும் - தான்

(அவ்வுபாயமேயானும் பிறிதொன்றானும் வழியாக வந்து அச்சூழ்ச்சியின்)

முற்பட்டுநிற்கும்; (அதனான்), ஊழின் பெரு வலி யா உள - ஊழ்போல மிக்க

வலியுடையன யாவையுள? (எ - று.)

பெருவலி - ஆகுபெயர். சூழ்தல் - பலருடனும் பழுதற எண்ணுதல்.

செய்தற்கேயன்றிச் சூழ்தற்கும் அவதி கொடாதென்றமையின், உம்மை-எச்

சவும்மை. எல்லாம்வழியாக வருதலுடைமையின், ஊழே

வலியதென்பதாம்.

இதனுன், அவ்விருவகைஊழின்வலியும் பொதுவாகக் கூறப்பட்டது.

(கு - ரை.) தன்னை - ஊழை. தனக்கு - ஊழுக்கு. மறுதலையாவது -
எதிராகுவது. சூழினும் - ஆராய்ந்துசெய்தாலும். தான் - அவ்வூழ்தான்.
பிறிதொன்ருனும் - வேருெருகாரியமாயினும். அச்சூழ்ச்சியின் - அவ்வாலோ
சனையின். யாவுள - எவையுமில்லையென, எதிர்மறைப் பொருள்குறிக்கும்.
பெருவலி - பெரியவலியை யுடையவற்றைக் குறித்தலால், அடையடுத்த
பண்பாகுபெயர்; பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யெனினும் இழுக்காகாது:
ஒருவகையால்அன்மொழித்தொகை ஆகுபெயரில்
அடங்குவதுபற்றி, 'பெருவலி - ஆகுபெயர்' என்ருர். சிலப்பதிகாரவுரையில்
அடியார்க்குநல்லார் 'அருந்திறல்-[இராமன்] அன்மொழித்தொகையாகுபெயர்'
என்பதூம் இதுபற்றியேயாதல்வேண்டும். பலருடனும் - உயர்ந்தவர்பலரோ
டும் என்க. பழுதற - குற்றமில்லாமல், ஐயந்திரிபொழிய வென்க, செய்
தற்கேயன்றிச் சூழ்தற்கும் அவதி கொடாது - அதைவிலக்கும் உபாயத்தைச்

செய்வதற்குமாத்திரமே யல்லாமல் எண்ணுவதற்குஞ் சமயங்கொடாது. எச்ச
வும்மை-இறந்தது தழுவிய எச்சப்பொருள்தரும் உம்மை. எல்லாம் வழியாக - .
எல்லாவழியாலும். யா - அஃறிணைப்பன்மைவினைப்பெயர். ஊழின் - ஐந்தாம்
வேற்றுமை, ஒப்புப்பொருள். ஒன்று - ஆகுபெயர். இருவகை ஊழ் - பொரு
ட்குக்காரணமான ஊழும்,
இன்பத்துன்பங்கட்குக்காரணமான ஊழும். (௩௦)

அறத்துப்பால் முற்றிற்று.

---

# திருக்குறள் அறத்துப்பாலின் செய்யுண் முதற்குறிப்பகராதி.

[எண் - பக்கவெண்.]

உள்ஞ்

# செய்யுண் முதற்குறிப்பகராதி

# திருக்குறள் அறத்துப்பால்மூலமும் பரிமேலழகருரையும்

என்ற இவற்றின்

## அரும்பதம் முதலியவற்றின் அகராதி.

[எண் - செய்யுளினெண்.]

அரும்பதவகராதி முதலியன

உ_ழுக

அரும்பதவகராதி முதலியன

௨௯௩

அளவை,

## அரும்பதவகராதி முதலியன

பக்கம் 7 வரி 36

| | |
|---|---|
| என்பர். | என்பர் |
| (இவ்வளவென்று) | இவ்வளவென்று |
| 'தம்,மின்' | 'தம்மின்' |
| நூல்ளுக்கு | நூல்களுக்கு |
| பபனில் | பயனில் |
| கருத்து | கருத்து. |
| சேர்கல்லா | சேக்கல்லா |
| (ஒருவனுக்கு) | (ஒருவனுக்கு), |
| முன் - | முற்பட - |
| சக்தி | சக்தி. |
| என்பது | |
| என்று | |
| உயிர்க்கு,— | உயிர்க்கு—, |

மற்றும் காணப்படினும் திருத்திக்கொள்க.

இதனடியிற் குறித்துள்ள புத்தகங்கள் வை. மு. கோபாலக்ருஷ்

ணமாசார்யர், 17 -

தெளிசிங்கப்பெருமாள்கோயில்தெரு, திருவல்லிக்

கேணி என்ற விலாசத்திற் கிடைக்கும்.

கம்பராமாயணம்:—

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| பாலகாண்டம் | உரையுடன் ... | 5 | 0 | 0 |
| அயோத்தியாகாண்டம் | ,, ... | 5 | 0 | 0 |
| ஆரணியகாண்டம் | ,, ... | 4 | 0 | 0 |
| கிட்கிந்தாகாண்டம் | ,, ... | 4 | 8 | 0 |
| சுந்தரகாண்டம் | ,, ... | 5 | 0 | 0 |
| யுத்தகாண்டம் 2-வால்யூம் | ,, ... | 10 | 0 | 0 |

பத்துப்பாட்டு:—

| | | | | |
|---|---|---|---|---|
| திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி யுரையுடன் | ... | 0 | 4 | 0 |
| பொருநராற்றுப்படை | ஷை ... | 0 | 4 | 0 |
| சிறுபாணாற்றுப்படை | ஷை ... | 0 | 4 | 0 |
| பெரும்பாணாற்றுப்படை | ஷை ... | 0 | 12 | 0 |
| முல்லைப்பாட்டு | ஷை ... | 0 | 3 | 0 |
| நெடுநல் வாடை | ஷை ... | 0 | 4 | 0 |
| பட்டினப்பாலை | ஷை ... | 0 | 4 | 0 |
| நாலடியார் உரையுடன் | ... | 2 | 0 | 0 |
| சிலப்பதிகாரம் அடைக்கலக்காதை உரையுடன் | ... | 0 | 2 | 0 |
| நன்னூற்காண்டிகையுரை | ... | 1 | 8 | 0 |

திருக்குறள் பொருட்பால் பரிமேலழகருரையுடனும் குக் குறிப்புரையுடனும்

வில்லிபாரதம்:—

அதற்

சபாபருவம் உரையுடன் ..

. 3 0 0

வீட்டும துரோண கர்ண பருவங்கள் உரையுடன் ...

3 8 0

சல்லியசௌப்திக பருவங்கள் உரையுடன்

... 1 8 0

சடகோபரந்தாதி உரையுடன்

... 0 12 0

திருப்பாவை உரையுடன்

... 0 6 0

சரசுவதியந்தாதி உரையுடன்

... 0 3 0

திருவேங்கடத்தந்தாதி உரையுடன்

... 0 12 0

திருவேங்கடக்கலம்பகம் உரையுடன் ..

. 0 10 0

அழகர்கலம்பகம் உரையுடன் ...

0 10 0

மதுரைக்கலம்பகம் உரையுடன் ..

. 0 10 0

அஷ்டப்ரபந்தம், விரிவுரையுடன்

... 3 8 0

நாலாயிர திவ்யப்ரபந்தம் ..

. 3 8 0

தனித்தனியாயிரமும் கிடைக்கும்.

பெரியபுராணத்துக் கண்ணப்பநாயனூர்

புராணவுரையும்,

கந்தபுராணத்து

வள்ளியம்மைதிருமணப்படலவுரையும் 0 8 0

வசனம்.

உதயணன் சரிதை ... ...

0 12 0

சந்திராபீட சரிதம் ... ...

0 5 0

---

ஸ்ரீ

# திருக்குறள்

## பொருட்பால்

## காமத்துப்பால்களின்

மூலமும்

## பரிமேலழகருரையும்

# பொருளடக்கம்.

என்பவற்றின்

XIX

XX

5. திருக்குறள் பொருட்பால் மூலமும் பரிமேலழக
ருரையும் குறிப்புரையும்.

க

6. பொருட்பாலின் செய்யுண்முதற்குறிப்பகராதி.

ருoஅ

7. பொருட்பாலின் அரும்பதவகராதி முதலியன.

ருகரு

8. காமத்துப்பாலின் இயல் அதிகாரம் என்பவற்றின்

அட்டவணை.

9. காமத்துப்பாலின் பிழைத்திருத்தம்.

10. காமத்துப்பால் மூலமும் பரிமேலழகருரையும்

குறிப்புரையும்.

க

11. காமத்துப்பாலின் செய்யுண்

முதற்குறிப்பகராதி. கருஉ

12. காமத்துப்பாலின் அரும்பதவகராதி

முதலியன. கருச

13. திருவள்ளுவமாலை உரையுடன்.

1

---

# முகவுரை.

அருந்தமிழன்பர்களே! சென்றயாண்டில் திருக்குறள்

அறத்துப்பாலைப் பரிமேலழகருரையுடனும் (அடியேனுக்குத் தமிழாசிரியரான ஸ்ரீ.உ.வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமிகள்) குறிப்புரையுடனும் வெளியிட்ட போது, பொருட்பால் காமத்துப்பால்களுள் அப்பெரியாரின் குறிப்புரை கிடைக்கு மிடங்களில் அந்தக் குறிப்புரையோடும், கிடையாத பகுதிக்கு எனது சிற்றறிவிற்கு எட்டியமட்டில் உழைத்து ஓர் குறிப்புரையெழுதி அதனோடும் நூல் முழுவதையும் பூர்த்திசெய்து வெளியிடும் நோக்கமுடையே னென்பதை வெளியிட்டுள்ளேன். கடவுளருளால் அந்நோக்கம் முற்றுப்பெற் றுப் பொருட்பால் காமத்துப்பால்களும் வெளிப்படுங் காலம் நேர்பட்டது.

'திருவள்ளுவனார் நால்வகைப்பேறுகளுள் அறம்பொருளின்பம் என்ற மூன்று பேறுகளையே முப்பாலாகக்கூறி, நான்காவது பேருகிய வீட்டினைப் பற்றிக் கூறாததற்கு யாதுகாரணம்?' என்று முப்பால்களைக் கற்போர்க்கு ஓ ரையந்தோன்றலாம். அங்ஙனம் தோன்றும் ஐயத்தைப் போக்க உரையாசிரியர்கள் பிறிதுகாரணம் கூறினும், எனக்குத் தோன்றுவது ஒன்று: அதாவது—ஒவ்வொருசமயத்தவரும் வீட்டினைப்பற்றியும் அதனைப் பெறும் வாயிலைப்பற்றியும் ஒருநிறப்பட்டுக்கூறாது மாறுபட்டுப் பிணங்குவதனாலும்; கூடியவரையில் பொதுநோக்கம்படக் கூறும் அந்தத் திருக்குறளாசிரியர்க்கு அந்தப்பிணக்கிற் சிக்கிக்கொள்ள விருப்பமிராதாகையாலும், யாவர்க்கும் ஒப்ப முடியுமாறு அவாவறுத்தல் மெய்யுணர்தல் என்ற அதிகாரங்களால் வீடுபேற்

நிற்கு நிமித்தத்தைக் குறிப்பிட்டுவிட்டு அம்மட்டோடு நின்றனரென்பது:

அறம்பொருளின்பம் வீடடைதல் நூற்பயனாயிருக்கவும், தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் புறத்திணையில் அறம்பொருள்களையும் அகத்திணையில் இன்பத்தையும் கூறி, நான்காவதுபேறாகவுள்ள வீட்டைப்பற்றி "பாங் கருஞ்சிறப்பிற் பலவாற்றானும்,நில்லாவுலகம் புல்லியநெறித்தே" என்று வீடு பேற்றுக்கு நிமித்தமாகிய பல்வேறு நிலையாமையைக் கூறி, "காமஞ்சான்ற கடைக்கோட்காலை, யேமஞ்சான்ற மக்களொடுதுவன்றி, யறம்புரிசுற்றமொடு கிழவனுங்கிழத்தியுஞ், சிறந்ததுபயிற்ற லிறந்ததன்பயனே" என்பதனால் இல்லறநிகழ்த்துவதன்பயன் வீடுபேறே என்றுங்கூறி அம்மட்டோடு நிறுத்திய ஆசிரியர் தொல்காப்பியனார் இவர்க்கு வழிகாட்டியாவார். தம் நூல் பலர்க்கும் பயன்படவேண்டுமென்று கருதுவோர் பிணக்குள்ள கூறுகளில் தலையிடாது பொதுநோக்கம்படக் கூறுவதையே ஏற்பரென்பது சிறிது ஆராய்வோர்க்கும் புலனாகும். இது நிற்க.

உலகத்திற்கேகண்ணெனத்தகுந்த திருக்குறளென்ற நிகரற்ற உயரிய நூல் தக்க அறிஞர்களால் பலபட வெளியிடப்பட்டிருப்பினும், அவையாவும் கற்ற அறிஞர்க்கு அன்றிக் கற்கும்மாணவர்க்குப் பரிமேலழகருரையை உள்ள

II

படி முற்றும் உணர்வதற்கு ஏற்றனவாகா வென்பதைப் பலரும் நன்கறிவர். பரிமேலழகருரையையோதி அதன்பொருளைக் காணமாட்டாது இடர்ப்படும் பலமாணவர்களைக் கண்டுள்ளேன். அங்ஙன் இடர்ப்படாது

பரிமேலழகருரை யின் நுட்பமான கருத்துக்களையெல்லாம் அறியவேணுமென்னும் ஆர்வமுள்ளோர் யாவரும் இனிது கண்டறியவேணுமென்னும் நோக்கம் பெரிதுந் தூண்ட, யான் இத்துறையில் இயன்றமட்டும் வருந்திமுயன்று இப் பதிப்பை முற்றுவித்து வெளியிடலானேன். இப்பதிப்பு, தான் அமைந்திருக் கிற நிலையில், பரிமேலழகருரையின் நுண்ணியகருத்துக்களை அறியவேணு மென்னும் விருப்புடைய மாணவர்க்குக் கைகொடுத்து உதவுமென்றே நம்புகின்றேன். இத்தப்பதிப்பைப் படிக்க விரும்புவோர் முதலில் இதிற்காட்டியுள்ள பிழைத்திருத்தங்களைக் கவனத்தோடு பார்த்துத் திருத்திக்கொண்டு பிறகு படிக்கப்புகின் நலமாகு மென்று தெரிவித்துக் கொள்கின்றேன்.

பொருட்பாலில் முதல் தொடங்கி, இடையிலுள்ள பெண்வழிச்சேறல், வரைவின்மகளிர் என்ற இரண்டு அதிகாரங்கள் நீங்கலாக ௭0௧ - ஆம் அதி காரம் நன்றியில்செல்வம் இறுதியாக, அறுபத்தோரதிகாரங்கட்கு ஸ்ரீ.உ.வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமிகளுடைய குறிப்புரை இருந்தது: அந்தக்குறிப்புரையில் இலக்கணப்பகுதி மிகுதியாக இருந்தவற்றையடித்திட்டும்,விளங்காதிருக்குமென்று தோன்றிய சிலஇடங்களை விளக்கியும், இங்ஙனம் சிலமாறுதல்களை அறத்துப்பாலிற் செய்ததுபோலவே இந்தப்பொருட்பாலிலும் செய்துள்ளேன். அந்த ஸ்வாமியின்குறிப்புரைகள் கிடைக்காதன வான ஒன்பது அதிகாரங்களும்,

காமத்துப்பால் இருபத்தைந்து அதிகாரங்களுமாகிய
முப்பத்துநான்கு அதிகாரங்கட்கும் புதிதாகக் குறிப்புரை
எழுதிச்
சேர்த்துள்ளேன். அறத்துப்பாலுக்குப்போலவே, பொருட்பாலினிறுதியிலும் காமத்துப்பாலினிறுதியிலும் செய்யுண் முதற்குறிப்பகராதி, அரும்பதவகராதி முதலியனவும் சேர்க்கப்பட்டுள்ளன. அன்றியும், திருக்குறளின்பாயிர மென்னத்தக்க திருவள்ளுவமாலையும் இரண்டொரு திருத்தஞ்செய்யப்பெற்று, திருவாளர் சரவணப்பெருமாளையரவர்கள் உரையுடன் ஈற்றில் பதிப்பிக்கப் பட்டுள்ளது.

இத்தக் குறட்பகுதியைப் பதிப்பிக்கும்போதும்,
பிக்கும்போது உதவிய பிரதிகளையெல்லாம்கொண்டு

அறத்துப்பாலைப்பதிப்
ஒப்புநோக்கிப் பாட

பேதங்களைப் பெரும்பாலும் குறித்துள்ளேன். ௩௦௰-ஆம் குறளுக்குப் பரிமேலழகர் கூறியுள்ள விசேடவுரையில் 'இனி, முற்றத் துறத்தலாவது-துப்புர
வில்லாமையின் ஒருவாற்றாற் றுறந்தாராயினார்
பின் அவற்றை 'மனத்தாற் - றுறவாமை' என்றே
எல்லாப்பிரதிகளிலும் காணப்பட்டமையால், அங்ஙனமே
பதிப்பித்துள்ளேன்: அந்தப்பாடம் பொருளமைதிக்கு
ஏலாமையால், குறிப் புரையில், மனத்தாற்றுறத்தல்'
என்று இருக்கவேண்டுமென்று காட்டி யுள்ளேன்.
௧௩௦௬ - ஆம் திருக்குறளின் விசேடவுரையில்,
'மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு
மிகவுமினிமைசெய்தலில்' என்றே பல

பிரதிகளிற் காணப்படினும், அது பொருளமைதிக்கு ஏற்றிராமையால், அந் தப்பாடத்தைப் பிரதிபேதமாகக் காட்டிவிட்டு, எமக்குக்கிடைத்த ஒருபிரதியி லுள்ளவாறு, 'மிகமுதிர்ந்திறமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவும் இனிமைசெய்யாமையில்' என்ற பாடத்தைப் பிரதானமாகக் கொண்டுள் ளேன். பலவிடங்களிலும் நன்குபொருந்தும் பாடங்களையே தலைமையன வாகக் கொள்ளவேணுமென்று கருதி, மற்றைப்பாடங்களைப் பிரதிபேதமாகக் குறித்துள்ளேன்.

இங்ஙனம் பதிக்கப்பெற்ற இந்தப்பதிப்பில் என்னுடைய அறியாமை யாலும் அறி வின் சோர்விலுைம் குற்றங்குறைகள் நேர்ந்திருக்கும். அங்ங னம் நேர்ந்திருப்பின், அறிஞர் அவற்றைத் தம்முடைய இயற்கைக்குணத்தி னுற்பொறுத்துக்கொள்வதன்றி அடியேனுக்கும் தெரிவித்தால் அவர்கள் திறத்து நன்றியறிதலோடு அப்பிழைகளையுந் திருத்திக்கொள்வேன்.

இந்தத்திருக்குறளின் பொருட்பால் காமத்துப்பால் பதிப்புநடக்கும் போது உடனிருந்து ஒத்துப்பார்த்து உதவியவர் சிரஞ்சீவி. நூசி. கோ. ஜகந் நாதாசார்யர் M. A. என்பவர்: அன்னார்க்கு இறைவன் அறிவையும் ஆயுளை யும் மற்றும் வேண்டும் நலன்களையும் அளிப்பானுக. அன்றியும்

காமத்துப் பால் பதிப்பிக்கும்போது ஹிந்து ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர், ஸ்ரீ. உ. வே. வித்வான் - கோ. அரங்கசாமியையங்கார்ஸ்வாமிகள் ஒருமுறைபார்த்து உதவினார்கள்: அவர்திறத்து என்பணிவு உரியதாகுக. இப்பதிப்பிற்கு உதவு மாறு தம்முடைய புத்தகங்களையளித்தும் எனக்கு ஊக்கமளித்தும் என்முயற்சிக்குத் தூண்டுகோலாக இருந்த நண்பர்கட்கெல்லாம் என் மனமார்ந்த பணிவு உரியதாகுக.

அடியேனைக்கொண்டு திருக்குறளைப் பரிமேலழகருரையுடனும் குறிப்புடனும் பதிப்பித்துவெளியிடுதலாகிய இந்தப்பெரும்பணியை முற்றுவிக்கத் தோன்றாத்துணையாயிருந்து அருள்சுரந்த எம்பெருமான் திருவடிகளை இடைவிடாது ஏத்துவேனாக.

பகுதானியவருஷம் }
கார்த்திகைமீ }

இங்ஙனம்
வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யன்,
17-தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி.

---

# பரிமேலழகருரைத்தன்மை.

திருக்குறளுக்குப் பதின்மர் உரைகண்டாரென ஏற்படினும், எங்கும் பரவித்திகழ்வது பரிமேலழகருரையே யென்பது, யாவரும் அறிந்தஉண்மை யாகும். இவர், பரிபாடலுக்கு உரைகண்டதுபோல அருந்தொடர்க்குப் பொருள்காண்பது என்ற முறையைத் திருக்குறளுக்குக் கொள்ளவில்லை. திருக்குறளில் ஒவ்வொருபாடலுக்கும் பதத்தின்மேற் பொருள் விளங்குமாறு பொழிப்புரைகூறிப் பின்னர் அருந்தொடரைவிரித்தல் முதலியன செய்து போவர்: இப்போது அச்சிட்டபலபிரதிகளிலும் காணப்படுவதுபோலச் சொற் பொருளைப் பதவுரையாக அன்னார் கூறிற்றிலர்: பொழிப்புரையாகத்தான் சொற்பொருளைக்கூறினர்: ஆயினும், பின்புள்ளார்பலரும், கற்பார்க்குவிளங்க வேண்டிப் பதவுரையாக வெளியிடலாயினர். அம்முறையே எம்முடைய பதிப்பிலும் மேற்கொள்ளப்பட்டது.

பொழிப்புரைகூறியபின் விசேடவுரையில்தான், இந்தப்பரிமேலழகி யாரின் அறிவின் நுண்மையும், ஆழ்ந்து நோக்கும் மதிவன்மையும், தமிழ் மொழியிலும் வடமொழியிலுமுள்ள தேர்ந்தஅறிவும், பலபொருள்களையும் சீர்தூக்கிஆராயும்பண்பும், பசுமரத்துஆணிபோலத் தமதுகொள்கை கற்போருள்ளத்துப்பதியுமாறு ஏற்ற சொற்கொண்டு அமைக்குந் தன்மையும், முன் பின் முரணுதவாறு குறிக்கொண்டு நோக்குதலும், தொடர்ச்சிபடப் பொரு ளமைத்தலும் முதலிய திறனெல்லாம் இனிது விளங்கும். ஒன்றின் தன்

மையை ஒன்றின்மேலேற்றிக் கூறுதல் முதலிய ஔபசாரிக பிரயோகங்களையும், இலக்கணவழக்குக்களையும், ஏ, ஓ, உம், மன் முதலிய இடைச்சொற்களின் பொருளையும் இவ்வுரையாசிரியரைப்போல் கூர்ந்து ஆராய்ந்து கூறுபவர் எவருமிலர்: அன்றியும், சுருங்கச்சொல்லல்

விளங்கவைத்தல் முதலிய நூலழகுகளையும், பண்டைக்காலச் செய்யுள்களைத் தம்முடைய உரைநடையி லமைத்து எழுதுதலையும் இவருரையிற் காண்பதுபோல் வேறெவருரையி லும் காணவியலாது.

பரிமேலழகரின் விசேடவுரையிலிருக்கும்

கூறுபாடுகள்—விளக்கவேண் டிய அருந்தொடரை விளக்கல், அங்ஙன் விளக்குமிடத்து அதனைநிலைநாட் டற்குவேண்டிய மேற்கோள்களை உரியவிடத்து அமைத்தல், தாம்கூறிய சொற்பொருளைப்பற்றிப் பிறர் ஐயங்கொள்ளக்கூடியஇடத்து அந்தச்சொற் பொருளை நிலைநாட்ட ஏற்ற மேற்கோள்காட்டுதல், இன்றியமையாவிடங்களி லெல்லாம் கருத்துக்கூறல், சிலவிடத்து ஒத்தபகுதிகாட்டல், உரியவிடத்து வருவித்தசொல் இன்னகாரணத்தால் வந்ததென்று நிரூபித்தல், வருவித்த சொல் விளக்கவேண்டியதாயின்

அதனையும் விளக்குதல், சொல்லுக்கு இன் .

V

னது பொருள்என்று விளங்காவிடத்துச் சொற்பொருளை

விளக்கிக்காட்டு தல், சொல்லுக்கு
நேர்பொருள்கொள்வதில்முட்டுப்பாடிருப்பின் சொல்லுக் குத்
தாம் கூறும்பொருள் வந்தவழி புலப்படுமாறு
காட்டுதல்,சொற்பிரயோகத் துக்குப்பயன் கூறல்,
அரியவிடத்து முடிபுகாட்டுதல், தாம் கூறுவது விளங்க
வேண்டிச் சிற்சிலவிடத்து ஏற்றஉபமானங்களையமைத்தல்,
ஆசிரியர் காட்டிய உபமானங்களை
விரித்துரைக்கவேண்டிய விடத்து விரித்துரைத்தல்,
பொருளுரைக்கையில் அதிகாரத்திற்கு ஏற்பச்
சொற்களைவருவித்தல், கூறும் பொருள் அவ்வதிகாரத்துக்கு
ஏற்றிருக்கின்றதா என்பதைக் கவனித்தல், முன்பின்
முரணின்மையைக் காட்டல், சிலவிடத்து நூலாசிரியர்
உட் கொண்டுகூறிய சரிதையைக்
காட்டுவதன்றிப் பொருள்விளங்கவும் சரிதை காட்டல்,
பிறருரையைக்காட்டல், பிறர்கூறும் உரை
பொருத்தமற்றதாயின் காரணங்காட்டிக்கண்டித்தல்,
பிறருடைய பாடங்களைக்காட்டுதல், பிறர் கொள்ளும்
பாடத்தில் தவறு இருப்பதாகத்தோன்றின் காரணத்துடன்
அந் தப்பாடத்தைக்கண்டித்தல், பிறிதுமொழிதல் உருவகம்
எடுத்துக்காட்டுவமை சொற்பொருட்பின் வருநிலை
என்றாற்போன்ற பொருளணிகளைக் காட்டுதல், காட்சி மடல்
தழிஞ்சி நூழிலாட்டு என்றாற்போன்ற அகத்துறை
புறத்துறைகளை ஏற்றவிடத்துக் காட்டுதல்,
இந்தக்குறளால் இந்தப்பொருள் கூறப்
பட்டதுஎனத்தனியாகவேனும்
சிலபாடல்கட்குச்சேர்த்தேனும் கூறப்படும் பொருள்களைக் கா
ட்டுதல், முதலியனவாம்.

இனி, இங்குக் காட்டிய கூறுகள், இந்தப் பரிமேலழகியாரின் விசேட வுரையில் அமைந்திருக்கின்றன என்பதை உதாரணங்கள்கொண்டு விளக்குவோம்:

விளக்கவேண்டிய அருந்தொடரை விளக்கல்:—387 - ஆங் குறளில் ''இன்சொலாலீத்தளிக்கவல்லார்க்கு'' என்றுஉள்ளது: இத்தொடரில், இன்சொல்என்றால் இனியசொல் என்றுதெரியும்: ஆனால், 'சொல்லுக்கு இனிமை எவ்வகையான்வரும்' என்று கற்போர்க்கு ஆசங்கைநிகழும்: ஆதலால், இங்குக் கேள்வியினும் விளைவினும் இனியவானசொல் என்று பொருள்விளக்கினர். அடுத்து உள்ள ஈத்து என்பதற்கு - கொடுத்து என்று பொருள் என்பதும் தெரியும்: ஆனால், 'யாருக்கு எதைக்கொடுப்பது?' என்பது விளங்காது: ஆகவே, 'ஈதல் - வேண்டுவார்க்கு வேண்டுவனகொடுத்தல்' என்றுவிளக்கினர்: இங்ஙனமே உரிய இடங்களிலெல்லாம் விளக்கிச்செல்வர்.

பொருள்விளக்கி ஏற்ற மேற்கோளைக் காட்டுதல்:—477 - ஆங் குறளி னுரையில், அளவறிந்தீக என்ற தொடருக்குப் பொருள்கூறுமிடத்து எல்லை யறிந்து அதற்கேற்ப ஈக என்று உரைத்து, பிறகு, 'எல்லைக்கேற்ப ஈதலாவது ஒன்றனை எல்லையை நான்குகூறாக்கி, அவற்றுள் இரண்டனைத் தன் செலவாக்கி, ஒன்றனை மேல்இடர்வந்துழி அதுநீக்குதற்பொருட்டு வைப்பாக்கி,

நின்ற ஒன்றனை ஈதல்' என்றார்: இங்கு நான்கில் ஒருபகுதி கொடுக்க

# VI

வேண்டுமென்று தாம் கூறியது மேற்கோள்கொண்டுதான் என்பது கற்பார்க்
குத் தெரியுமாறு "வருவாயுட்கால்வழங்கிவாழ்தல்" என்ற திரிகடுகத்தைக்
காட்டினார்: இங்ஙனம் எற்றபெற்றி மேற்கோளமைப்பர். இங்ஙன் ஒரு
பொருளைச்சொல்லி அதனைநாட்ட மேற்கோள் காட்டுவ தன்றி, மேற்
கோளின் மூலமாகவே பொருளை விளக்கிக்காட்டுவதும் உண்டு: "அற
னிழுக்காது" என்றுதொடங்குங் குறளில், குற்றமாய மானத்தினீக்குதற்கு
மறனிழுக்காமானமென்றார் என்று உரைத்து, அஃதாவது "வீறின்மையின்
விலங்காமென மதவேழமுமெறியான், எறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சி
லென்றெறியான், மாறன்மையின்மறம்வாடுமென் றிளையாரையுமெறியான்,
ஆறன்மையின் முதியாரையு மெறியானயிலுழவன்" எனவும் "அழியுநர் புறக்கொடை யயில்வாளோச்சான்"எனவும் சொல்லப்படுவது என்று மறனி

மூக்கா மாணத்தை மேற்கோளின் மூலமாகவே விளக்கியிருத்தல் காண்க.

தாம் கூறும் சொற்பொருளை நிலைநாட்ட மேற்கோள் காட்டுதல்:— 401 - ஆம் குறளில் "அரங்கின்றிவட்டாடியற்றே" என்று வருகின்றது: இங்குள்ள அருஞ்சொற்களுக்கு எளிதிற்பொருள் விளங்காமையால் ஆசிரியர் பரிமேலழகர் 'அரங்கு-வகுத்ததானம்: வட்டாடல்-உண்டையுருட்டல்'என்று விளக்கி, இச்சொற்களுக்கு இப்பொருள்தான் என்று நிலைநாட்டவேண்டி "கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக் கல்லாச்சிறுஅர் நெல்லிவட்டாடும்" என்று மேற்கோள் காட்டியமையும் காண்க.

தேர்ந்தகருத்தை விரித்தல்:—இதனைப் பலஇடத்துங் காணலாம்: ஆயினும் "பானைச்சோற்றுக்குச் சிலஅவிழேபதம்"என்றமுறைபற்றி [தாலீபுலாக நியாயத்தால்]இரண்டு இடம் காட்டுகின்றோம். "உவப்பத்தலைக்கூடி" (394) என்று தொடங்குந் திருக்குறளில் 'நல்லொழுக்கங் காண்டலானும், தமக்கு மதுரமும் உறுதியுமாய கூற்றுக்கள் கிகழ்வெதிர்வுகளின் இன்பம் பயத்தலானும் கற்றூர்மாட்டு எல்லாரும் அன்புடையராவர்' என்று கருத்துக் கூறியதும்; "செவிகைப்ப" (389) என்று தொடங்குந் திருக்குறளில், 'அறநீதிகளிற்றவறுமையின் மண்முழுதும் தானேயாளுமென்பதாம்' என்று கருத்துக்கூறியதுங்காண்க. இன்னும் வேறுவகையாகவும் கருத்துரைப்பதை இவ்வுரையாசிரியரின் உரையிற்காணலாம்: அவற்றுட்சில:—509 - ஆங் குறளில் 'தேறற்கஎன்ற பொதுமையான்,ஒருவினைக்கண்ணுந் தெளியலாகாதென்பது பெற்றும். ஈண்டுத்தேறுக என்றது தாற்பரியத்தால் ஐயுறவினது விலக்கின் மேல்நின்றது' என்றாற்போல உரைப்பது ஒருவகை: 707-ஆம்குறளில் 'உயிர்க்கேயறிவுள்ளது, ஐம்பூதங்களானியன்ற முகத்திற்கு இல்லை என்பாரைநோக்கி,உயிரதுகருத்து அறிந்து அஃது உவக்குறின்மலர்ந்தும் காய்வுறின் கருகியும்வரலான் உண்டு என மறுப்பார்போன்று குறிப்பறிதற்குக்கருவிகூறியவாறு'என்றாற்போல உரைப்பது வேறொருவகை: 918-ஆங்குறளில் 'இவ்வுருவகத்தான் அம்மயக்கம் முன் இனிதுபோன்று பின் உயிர்கோடல் பெற்றும்:

இது நூலோர் துணிவு என்பதுதோன்ற அவர்மேல்வைத்து கூறினர்' எனவும், 931 - ஆங்குறளினுரையில் 'எய்தியபொருள் சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் தீலையென்பதூஉம், அதனால் பின் துயருழத்தலும் உவமையாற் பெற்றாம்' எனவும், இங்ஙன் கூறுவது மற்றொருவகை. இங்ஙன் பலவாறாகத் தேர்ந்த கருத்து விரிக்கப்படும்.

ஒத்தபகுதிக்கு மேற்கோள் காட்டுவது என்று இந்த உரையாசிரியர் எங்கும் தாம்வைத்துக் கொள்ளவில்லை: பெரும்பாலும் பொருள் நேரேவராது தாற்பரியத்தாற் பொருளைக் கொள்ளும்போது சிலவிடத்து அதுதான் அவ்விடத்துக்குப் பொருளென்று கற்போர் தெளியுமாறு மேற்கோள் காட்டுவர்: “வேலன்று வென்றி தருவது மன்னவன், கோலதூஉங் கோடா தெனின்” என்ற குறளில், மன்னவன் செங்கோல் கோணுதலில்லாதிருப்பின் அதுவே வெற்றிதருவது என்று கூறியிருப்பதற்கு அன்னவன் அறநெறிவழுவாது அரசுபுரிவானாயின் அவனது அந்தஅறநெறியே கொற்றம்விளைக்கு மென்று கருத்துப்பொருளாக ஏற்படுவதனால், அதற்குஏற்ப, “மாண்டஅறநெறி முதற்றே யரசின்கொற்றம் என்றார் பிறரும்” என்று மேற்கோள்காட்டினார். இங்ஙனமே “எண்பதத்தாலோரா முறைசெய்யாமன்னவன், தண்பதத்தாற் றானேகெடும்” என்ற திருக்குறளில் முறைவேண்டினார்க்குக் காண எளியனாய் அவர்வேண்டும் முறையை நூலோரோடும் ஆராய்ந்து உண்மையறிந்து எவன் நீதி நடத்தவில்லையோ அவ்வரசன்கெடும் என்றுகூறி, அதன்கருத்து அறம் குறைவறநடவாது அறத்திற்குமாறான தீச்செயலைநடக்க இடங்கொடுக்கும் மன்னவன் கெடுப்பாரின்றித் தானே கெடுமென்பது ஆதலால், அக்கருத்தை விவரிக்குமிடத்து, “அல்லவைசெய்தார்க்கு அறங்கூற்றம் ஆகலின், பகைவரின்றியும் கெடுமென்றார்” என்று மேற்கோள் கொடுத்துக் கூறியிருப்பதுங் காண்க.

வருவித்துச்சொல்லைக் காரணத்தோடு சேர்த்துக்கூறலும் வருவித்த சொல்லை விளக்கலும்:—௩௮௯-ஆங் குறளில் “செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்” என்று உள்ளது: இதனில், செவிகைப்பச் சொல்லும் சொல்லைப் பொறுக்கவேண்டுமென்று கூறியிருப்பதனால், ‘அப்படிப்பட்டசொல்லைச் சொல்லுபவர் யாவர்?’ என்று ஓதுவார் மனத்து ஓராசங்கை நிகழுமன்றோ? அதனை மனத்துட்கொண்டு உரையாசிரியர் ‘செவிகைப்ப’ என்றதற்கு ஏற்ப இடிக்குந்துணையாரென்பது வருவிக்கப்பட்டதென்று கூறியிருத்தல் காண்க. ௩௯௦-ஆங் குறளில் “கொடையளி

செங்கோல் குடியோம்பல்'' என்று வந்துள்ளது: அரசனது தொழில பாது காப்பதென்பது வெள்ளிடை மலையானபொருள்: அங்ஙனிருக்க, 'குடியோம் பல்' என்று கூறுவானேன்? குடியோம்பல் என்பதற்கு ஒவ்வொரு குடியை யும் ஓம்புதல் என்று கொள்வோமென்றால், ஒவ்வொருகுடியையும் போய்க் கவனித்து ஓம்புதலென்பது முடியுமோ? முடியாதே: இங்ஙன் கற்பார்க்கு

2

# VIII

ஆசங்கை தோன்றுவண்ணம் குடியோம்பல் என்பதற்குத் தளர்ந்த குடியை யோம்பல் என்று வருவித்துப் பொருளுரைத்து, 'குடியோம்பலென எடுத் துக்கூறினமையால் தளர்ச்சிபெற்றாம்' என்ற விசேடவுரையும் கூறினர்: பிறகு, தளர்ந்தகுடியை யோம்புவது எவ்வாற்றாலென்ற ஆசங்கை தோன்று வண்ணம் 'அஃதாவது ஆறிலொன்றாய பொருடன்னையும் வறுமைநீங்கிய வழிக் கொள்ளல்வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல்வேண்டின் இழத்தலுமாம்' என்று விளக்கியிருத்தலுங் காண்க.

சொல்லுக்குப்பொருள் இன்னது என்று விளங்காவிடத்து விளக்கிக் காட்டுதல்:—௪௯௪-ஆங்குறளில் இளிவு என்பதற்கு-இளிவரவுஎன்றுபொருள் கூறி, அதுவிளங்காமையின் 'தொடங்கின வினையாற் பின் அழிவு எய்திய வழி அதன்மேலும் அறிவும் மானமும்இலரென்று உலகத்தாரிகழும் இகழ்ச்சி' என்று விவரித்ததும், ௪௯௫-ஆம் திருக்குறளில், 'உம்மை - சாகாட்டதுவலிச் சிறப்பேயன்றிப் பீலியது நொய்ம்மைச்சிறப்பும் தோன்றநின்றது' என்று கூறியதுங் காண்க.

சொல்லுக்கு நேர்பொருளைக்கொள்ளாவிடத்துப் பொருள்வந்தவழி புலப்படக்காட்டல்:—௫௨௫-ஆங்குறளில் மலர்தலும் கூம்பலும் இல்லதறிவு என்றவிடத்து அறிவுக்குப்பயன் மலர்தலும் கூம்பலு மில்லாதிருத்தலன்றி அறிவே மலர்தலும் கூம்பலுமில்லாத தாகாதாதலால் அறிவு என்பதற்கு அறிவின்பயன் என்று பொருள்கொண்டார்: அது அச்சொல்லுக்குச் செம்

பொருளல்லாமையால், மலர்தலும் கூம்பலுமில்லதறிவு என்ற தொடரை உபசரித்துக்கூறியது என்றதும், சகூ0 - ஆங்குறளில் அல்லற்படுப்பது என்பதற்குப் பகையென்று பொருள்கூறி ஏதுப்பெயரென்று கூறியதும்முதலியன காண்க. சஉஅ - ஆங்குறளில் "அஞ்சுவதஞ்சாமை பேதைமை யஞ்சுவதஞ்சலறிவார்தொழில்" என்றவிடத்து, அஞ்சாமையென்பதற்கு இடத்திற்கு ஏற்ப எண்ணாதுசெய்துநிற்றல் எனவும், அஞ்சுதல் என்பதற்கு எண்ணித் தவிர்தல் எனவும் பொருள்விரித்தது எத்துணை நுட்பமாகவுள்ளது! சகக - ஆங் குறளில் வாய்என்பதற்குப் பணிமொழியென்று பொருள்கூறி, 'வாய்' என்பது ஆகுபெயர் என்று அப்பொருள் கண்டதற்குக்காரணக்கூறியவாறுங் காண்க.

சொற்பிரயோகத்துக்குப் பயன்கூறுதலைப்பற்றிய உதாரணங்களைப் பலவிடத்துங்காணலாம்: ஆதலால், அதற்குஉதாரணம் காட்டவில்லை.

இந்தப் பரிமேலழகியார் சொற்பொருளை விளக்குவதிலும், நேரிதாகப் 'பொருள்சிறவாவிடத்து அச்சிறப்புப்பொருள் வந்தவழிதோன்றப் பொருளை விளக்குவதிலும், பதசாரம்கூறுவதிலும் மிக நுண்ணிதாகச் செல்லுகின்றவ ரென்பதும், மற்ற எந்தஉரையாசிரியரும் இந்தக் கூறுபாடுகளில் இவ்வளவு நுண்ணியராகச் செல்லவில்லை எவர்க்கும் செவ்வனே புலனாகும்.

யென்பதும் அழுக்காறின்றிக் காண்பார்

முடிபுகாட்டுதல்:—சுசுங - ஆங் குறளினுரையில், கருதியென்னும் வினையெச்சம் இழக்குமென்னும் பெயரெச்சவினை கொண்டது என்றதும், ருசஅ - ஆங் குறளினுரையில் 'எண்பதத்தான் என்னும் முற்றுவினையெச்ச மும், ஓரா என்னும் வினையெச்சமும், செய்யா வென்னும் பெயரெச்சவெதிர் மறையுள் செய்தல் வினைகொண்டன' என்றதும், இத்தகையபிறவும், இலக்கணநெறியில் முடிபுகாட்டுதற்கு உதாரணங்களாம்.

ஏற்ற உபமானங்களை அமைத்தல்:—(ருகக-குறளில்) கரும்பயிறற்குக் கூலிபோல என்றும், (சOச - இல்) ஏரெலழுத்துப்போல என்றும், (சுதசு - இல்) மழைத்துளிபோல என்றும், (சஉஉ - இல்) குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல என்றும், (சஉரு-இல்) கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூப்போல என்றும், (சசஅ-இல்) பாகனில்லாதயானைபோல என்றும், (ருஎக - இல்) புலியையடைந்த புல்வாயினம்போல என்றும், (சுகங - இல்) கடன்கொண்டான்தோன்றக் கடன்தோன்றுமாறுபோல என்றும், (எருரு - இல்) பசுமட்கலத்துள்நீர்போல என்றும், (எகள இல்) வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோல என்றும்,

(௯௦௦-இல்) திரிபுரம்
போல என்றும் இவ்வாறெல்லாம் தாம் கூறும்விஷயம் விளங்க உபமான
மமைத்தலேயன்றி, (௫௩௪ - இல்) கட்டியங்காரன்போல அரசவின்பத்தினை
வெஃகி விகாரப்படுவதல்லது அதனைக் குற்றமென்றொழிந்து தம்மியல்பில்
நிற்பார் அரியராகலின் என்றும், (௯௦௨-இல்) நெருப்பிற்கொடியது பிறிதின்
மைபற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக என்றாற்போல என்றும், (௯௫௫-
இல்) சேரசோழபாண்டியர் என்றாற்போலப் படைப்புக்காலந்தொடங்கி மேம்
பட்டுவருதல் என்றும் இவ்வாறாகக் குறட்பாவிற்கு ஏற்ப உபமானமமைத்த
லும் இவருரையிற் பலவிடத்துங் காணத்தக்கன.

இனி, ஆசிரியர் காட்டிய உபமானத்தின்கருத்தை விளக்கநற்த உதா
ரணம்:—௫௦௯ - ஆங்குறளில், களர் தானும் பேணற்பாடுஅழிந்து உயிர்கட்
கும் உணவுமுதலிய உதவாதனபோல, தாமும் நன்குமதிக்கற்பாடு அழிந்து
பிறர்க்கும் அறிவுமுதலிய உதவாரென்பதாம் என்றதும், ௫௭௩ - ஆங்குறளில்
துன்பமறியாமையால் தேவரோடொப்பரென்றதும்

முதலியன.

அதிகாரத்திற்கு

ஏற்பச்சொற்களைவருவித்தல்:—டுஉங - ஆங்குறளில்
அளவளாவில்லாதான் என்பதற்குப்பொருள்
கூறுமிடத்து, சுற்றத்தோடு
நெஞ்சுகலத்தலில்லாதவன் என்றும், கூசக-ஆங்குறளில்,
அருமையுடைத்து என்பதற்கு நாம்இவ்வினைமுடித்தல்
அருமையுடைத்து என்றும் அதிகாரத்
துக்கு ஏற்பவருவித்து உரைத்ததும் இவைபோல்வன
பிறவுங்காண்க.

அதிகாரத்துக்குந் தாம் கூறிய பொருள்
ஏற்றிருக்குமாறு பொருத்திக்
காட்டுதல்:—சகு௫-ஆங் குறளில்
வருமுன்னர்க்காவாதான் வாழ்க்கை என்ப
தற்கு-குற்றம்வரக்கடவதாகின்ற முற்காலத்திலே
அதனைக்காவாத அரசன்

X

வாழ்க்கையெனப்பொருள்கூறி, தாம் அவ்வாறு
பொருள்கூறியது அதிகாரத் திற்குஏற்பதாகுமென்பது விளங்க
'குற்றமென்பது அதிகாரத்தான் வந்தது' என்று கூறியதும்,
கூ௫௫ -ஆங் குறளில், எற்றென்றிரங்குபவற்றை ஒருகால்
மயங்கிச்செய்தானாயின் பின் இரங்காமைநன்று

என்றுகூறியது வினைத் தூய்மையென்ற அதிகாரத்துக்குஎவ்வாறு பொருந்துமென்ற ஐயம் தோன்றுமைப்பொருட்டு 'இதுவும் வினைத்தூயார் செயலாகலின் உடன்கூறப்பட்டது' என்றுஉரைத்ததும், முதலியன காண்க.

முன்பின்முரண்படாமையைக் காட்டுதல்:—௩௬௬-ஆம் குறளினுரையில் "மாந்தர்க்குக்கற்றனைத்தூறுமறிவு" என்றார்: அவ்விடத்து "நுண்ணிய நூல் பலகற்பினுமற்றுந்தன், னுண்மையறிவேமிகும்" என்று கீழ்க்கூறியதோடு இது மாறுகொளக்கூறலாகாதோ? (௩௭௩) என்று கற்போர்க்கு ஐயைரயந் தோன்றுவண்ணம் 'இஃது ஊழ் மாறு கொள்ளாவழியாகலின் மேல் உண்மை யறிவேமிகு மென்றதனோடு மலையாமை யறிக' என்றதும், இறைமாட்சி யென்ற அதிகாரத்தில் "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று, நீங் காநிலனாள்பவற்கு" என்று கூறியஆசிரியர் வினைசெயல்வகையென்ற அதிகாரத்தில் "தூங்குக தூங்கிச்செயற்பால" என்றார் : இங்ஙன்கூறியது ஒன்றோ டொன்றுமாறுகொளக் கூறலாகுமேயென்று கற்போர்கருதாமைப் பொருட்டு 'மேல்தூங்காமையென்றார்: ஈண்டு அதனைப்பகுத்துக்கூறினர்' என்றதும் முதலியன காண்க.

நூலாசிரியர் உட்கொண்டுகூறிய சரிதையைக்காட்டுதல்:—"ஏந்திய கொள்கையார்" என்று தொடங்கும் அ௯௯ -

ஆவதுகுறளிலும், "கவறும்"
என்றுதொடங்கும் கூஉ - ஆங்குறளிலும்காண்க: இனி,
குறளின்கருத்து
விளங்க வேண்டிச் சரிதைகாட்டுதலை "பேராண்மை"
(எஎஙு) என்று தொடங்குங் குறளினுரையிலும்,
"புணர்ச்சிபழகுதல்" (எஅடு) என்ற குறளி
னுரையிலுங் காணலாம்.

பிறருரைகாட்டுதலை 602, 606, 627, 635, 645,
703, 799, 830, 887, 990, 1006,
என்ற குறள்களினுரை முதலியவற்றிலும், தவறான உரை
யைக்கண்டித்தலை, 576, 632, 636, 660, 1043, என்ற
குறள்களினுரை முதலியவற்றிலும், தவறானபாடத்தைக்
கண்டித்தலை 662, 979, 1011, 1058, என்ற
குறள்களினுரை முதலியவற்றிலும், பாடாந்தரங்காட்டு
தலை 419, 420, 437, 500, 539, 546, 639, 710, என்ற
முதலியவற்றிலும் காணலாம்.

குறள்களினுரை

உருவகத்தை, 505, 555, 567, 615, 627, 753, 796, 918, 919, 983, 989, 1030, 1032, 1068, 1147, 1227, முதலிய குறள்களி னுரையிலும், பிறிதுமொழிதலை, 475,476,495,496,500,599 முதலிய குறள்களினுரையிலும், எடுத்துக்காட்டுவமையை, 452, 481, 798-முதலிய குறள்களினுரை

யிலும், சொற்பொருட்பின்வருநிலையை, 320, 623, 645 முதலிய குறள் களினுரையிலும், சொற்பின்வருநிலையை 965 முதலிய குறள்களினுரையி லுங் காணலாம்.

அகத்திணைத்துறைகளாகிய காட்சிமுதலியனவும், புறத்திணைத்துறை களாகிய குழிஞ்சி முதலியனவும் உரையாசிரியராற் காட்டப்பெற்ற இடங் கள்; 'அரும்பதவகராதி முதலியன' என்பவற்றிற் காட்டப்பட்டுள்ளன.

அவ்வக்குறளிற் கூறப்பட்ட பொருளை, ஒவ்வோரதிகாரத்திலும் சில விடத்துத் தொகுத்தும் சிலவிடத்துத் தனித்துங் கூறியிருப்பதை எங்குங் காணலாம்.

அன்றியும், ஒருபாலோடுமற்றொருபாலுக்குள்ள தொடர்பையும், அவ் வப்பாலுள் ஓரியலோடு மற்றோரியலுக்குள்ள இயைபையும், அவ்வவ்விய லுள் ஓரதிகாரத்தோடு மற்றோரதிகாரத்திற்குள்ள பொருத்தத்தையும் காட் டிச்செல்வதையும், ஆங்காங்குக் காணலாம்.

இங்ஙன், உரைவகுக்குமிடத்துப் பலவிடங்களிலும் தமது அறிவின் நுட்பமும் திட்பமும் பல்கலைப்பயிற்சியும் தெளிவும் மிளிர்ந்து விளங்குமாறு எழுதப்பெற்ற பெரியாரான பரிமேலழகியார்மீது தமதுகருத்துக்கும்

கொள்கைக்கும் இணங்க வலிந்தும் நலிந்தும் தவறாகப் பொருள்கூறுகின்றா ரென்றுசில ஆராய்ச்சியாளர் குறை கூறுகின்றனர்.பரிமேலழகியார்மீது குறை கூறுவது பெருந்தவறு என்று கொள்ளுங் கொள்கையுடையேனல்லேன். தமதுகொள்கை எப்படிப்பட்டவர்க்கும் தம்மை அறியாதும் வந்திடுமென்பதும் யான் அறிந்த உண்மையே:அங்ஙனாகவும்,குறைகூறுமவர்கள் தமிழ்மொழியின்மீது தமக்கு உள்ள அன்பினால் கூறவந்தவரென்பது கருதும்போது மகிழ்வுண்டாகுமெனினும், அவர் கூறும்வகையை நோக்குமிடத்து மனத்தில் ஒருவகைமாசுகொண்டு கூறுகின்றனரோ என்று அதை வெறுக்கின்றேன்: இனி,அவர் கூறும் வகைகளுட் சிலகாட்டி அவை எத்துணை யேற்புடையன என்பதைச் சிறிது ஆராய்வேன்:

தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் கூறும் அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் என்பன வடநூல்வழக்குப் பற்றியது என்பதும், தமிழுக்கே சிறப்பியல்பாகிய வழக்கினாற் கூறின் அகம் புறம் என்று பகுக்கப்பட்டிருக்கு : மென்பதும், வடநூல்வழக்கையும் அறிந்து தமிழ்வழக்கையுந்தழுவி யாவர்க் கும் நல்லனவும் இனியனவுமானவற்றைத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் திருக்குறளிற் கூறுகின்றாரென்பதும் பரிமேலழகர் கொள்கையாகக் கண்டவை: இவற்றால், தமிழ்மொழிக்கேனும் திருவள்ளுவர்க்கேனும் இழுக்கு ஏற்படுமோ?

நூலாசிரியரொருவர் பலமொழிகளையும் கற்றுத்தேர்ந்து அந்தப் பிறமொழிகளிலுள்ளவற்றையும் தம்மொழிக்கும் கொள்கைக்கும் ஏற்ப அமைத்தாரெனின், அவ்வாசிரியர் இணற்றகத்துத்தேரைபோலாகாது பரந்த

# XII

அறிவினராய் மிகச்சிறப்புறப் பொருளைக்கூறியுள்ளாரென்று கற்போர்மனத்துப் பதிவதன்றி, அந்நூலாசிரியரைப் பற்றியாவது அவரியற்றிய நூலைப் பற்றியாவது குறைவான எண்ணம் உண்டாகாதென்றே நினைக்கின்றேன். கம்பர் தாம் வால்மீகிகூறிய இராமாயணத்தைப் பின்பற்றிக் கூறினேனென்றால், அதனால் கம்பர் பெருமையாவது, அவரியற்றிய இராமாயணத்தின் பெருமையாவது குறைவுள்ளனவாகக் கருதப்படுமோ? இயற்கையான மனோபாவமற்றவர் கம்பரென்றாவது எவரேனும் கருதுவரோ? 'ஷேக்ஸ்பியர் மில்ட்டனர் கூறியமுறை கம்பரிடத்திலுள்ளது, காளிதாசரிடத்திலுள்ளது' என்று ஆங்கிலமறிந்த அறிவாளிகள் கூறினால், அதற்காக எவரேனும் புக்கொள்பவருண்டோ?

இவ்வுரைகாரர் திருக்குறளாசிரியரைப்பற்றி வடநூலிலுள்ளவற்றை அவ்வாறே மொழிபெயர்ப்பாகக் கூறியுள்ளாரென்று சொல்லவில்லையே: சிற்சிலவிடத்து வடநூற்பொருளைத் தம்கொள்கைக்கும் உலகநிலைக்கும் ஏற்பமாற்றிக்கூறியுள்ளாரென்று எழுதியிருப்பதையும் காணலாமே. இப்பரிமேலழகர் அறத்தின்பகுப்பைக்கூறி, 'இவற்றுள் வழக்குந்தண்டமும் உலகநெறிநிறுத்தற்பயத்தலாவதல்லது ஒழுக்கம்போல மக்களுயிர்க்கு உறுதிபயத் தற்சிறப்பிலவாதலானும்,......அவற்றை யொழித்து ஈண்டுத் தெய்வப்புலமைத்திருவள்ளுவராற் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது: அதுதான் நால்வகை

களிலத்தாய் வருணந்தோறும் வேறுபாடு உடைமையின் சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து, எல்லார்க்கு மொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி இல்லறம் துறவற மென இரு வகைநிலையாற்கூறப்பட்டது' எனவும், பின்னர் ஓரிடத்து 'இறப்ப வருவழி இளிவந்தனசெய்தாயினும் உய்க என்னும் வடநூல்முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவைசெய்யற்க என்பதாம்' எனவும், இங்ஙன் எழுதியுள்ளாரே: இதனால், தமிழுலகுக்கு வேண்டுமவற்றையேயாராய்ந்து வடநூலிலுள்ள பல பொருள்களையும் விட்டிட்டு ஏற்றவற்றைக்கைக்கொண்டும் தம்மறிவாற்கண்டவற்றை உடன்சேர்த்தும் இந்தத்திருக்குறள்நூலைத் தெய்வப்புலவர் யாத்திருக்கின்றாரென்பதே பரிமேலழகர் கொள்கை யென்பது அறிஞர்க்கெல்லாம் நன்குபுலனுமன்றோ.

ஊன்றியறியும்

"இன்பமும் பொருளு மறனு மென்றாங்,
கன்பொடுபுணர்ந்தவைந் .

திணை" "அந்நிலைமருங்கின றம்முதலாகிய, மும்முதற்பொருட்குமுரிய வென்ப", என்று தொல்காப்பியத்திலும், "ஆன்றசிறப்பின றம்பொருளின்ப மென, மூன்றுவகைநுதலிய துலகம்" என்று பன்னிருபடலத்தும் வந்திருக்க, ஆசிரியர் திருவள்ளுவநாயனார் அறம்பொருளின்பம் என்று பாகு

பாடுசெய்து கொண்டு கூறியது தமிழ்நூல்வழக்குப்பற்றியேயன்றி வட நூல்வழக்குப்பற்றியன்றே. ஆகவே, வடநூல்வழக்குப்பற்றி முப்பாலாகப்

# XIII

பிரித்தாரென்றல் தவறன்றோ? எனின்,—தமிழுக்குஉரிய சிறப்பு வழக்கு - அகம் புறம் என்றபாகுபாடு என்பதும், அறம்பொருளின்பம் என்ற பாகுபாடு தமிழ்மொழியிலும் ஏனைமொழியிலும் பயிலும் வழக்கமென்பதும், யாவர்க்கும் ஒப்பமுடிந்தபொருளாம். தமிழுக்கே சிறப்பான முறையிலுள்ள பாகுபாட்டை நூலாசிரியர் கைக்கொள்ளாது வடமொழியிலுமுள்ளபாகுபாட்டைக் கைக்கொண்டாரெனிற் குற்றமென்னோ? தமிழ்மொழிக்குச் சிறப்பு வகையான அகம்புறம் என்ற பாகுபாடு இருக்கையில் அறம்பொருளின்பம் என்ற பாகுபாடும் தொல்காப்பியம் முதலிய நூல்களில்தான் ஏன் அமைந்தது? தொல்காப்பியர்காலத்திற்கு முன்னரே தமிழ்மொழியில் வடமொழிப் பழக்கமும், வடநூலார்கொள்கையும் கலந்துள்ளன என்பது நடுவுநிலைமை யோடுநோக்குவார்யாவரும் கண்ட மெய்ம்மைப்பொருளாகும். இக்கொள்கையை உடன்படுதற்கு விருப்பமில்லாத சிலர், "தொல்காப்பியத்தில் இடைச் செருகலாய்ப் பலசூத்திரங்கள் வடமொழியாளராற் புகுத்தப்பட்டன" என்றாற்போன்று கூறுகின்றனர். இது நிற்க.

பரிமேலழகர் தாம்கூறிய உரைக்கு ஏற்ப, 501-ஆங்குறளில், நாயனூர் உபதையைப் பற்றிக்கூறுகின்றாரென்றார்: அங்ஙனம் கூறுமிடத்து அறவுபதை முதலியன இன்னவென்று மாணாக்கர்க்கு மனத்திற் பதியுமாறு முன்னோர் கண்டமுறையை யொட்டிப்பேசினூர்: பரிமேலழகருரையைத்தவறென்னுங் கோட்டியைச் சேர்ந்தவர் இங்ஙனம் சோதிக்குமுறை முற்காலத்து இருந்ததாகத் தெரியாமையால், தமிழ்மக்களால் அவைகொள்ளத்தக்கன அல்ல என்கின்றனர்: ஆனூல், அவரும் சோதிக்கும் முறையுண்டென்று ஒப்புக்கொள்கின்றனர்: அங்ஙனம் ஒப்புக்கொள்பவர் தாமே ஒருமுறை கூறுகின்றனர்: அன்னூர் தாம் கூறியமுறையால் பண்டைக்காலத்துச் சோதனைகள் நிகழ்ந்தன என்ற தம்கொள்கையைப் பண்டைநூல்களைக் கொண்டு நிலைநாட்டாமலே இந்தப் பரிமேலழகர்மீது குற்றங்கூறுகின்றனர்: அன்னூர் அங்ஙனமே கூறிக்கொண்டு அகமகிழ்க.

காமத்துப்பாலில், 'ஐந்திணையாற் கூறுவது சிறப்புமுறையாயிருக்க, வடநூல் வழக்கையொட்டியும், தமிழ்நூல்களோடு பொருந்தவும் ஸம்யோகம் விப்ரயோகம் எனப்படும் புணர்வுபிரிவுகளைக் களவு கற்புஎனப் பகுத்துக்கொண்டு ஆசிரியர் கூறியுள்ளார்' என்று பரிமேலழகர் கூறுகின்றனர்: இங்ஙனம் கூறியதில் என்ன தீமை வந்திட்டதோ? 'களவு கற்பு என்பது தமிழர்க்கே சிறந்தனவாயிருக்க, வடநூல்முறையையும் ஒட்டி எனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்?' என்னலாம்: களவு கற்பு என்பன தமிழ்மொழியே யாயினும், புணர்வுபிரிவுகள் என்று வடமொழியாளர் பகுத்ததும் களவுகற்பு என்ற பாகுபாடும் ஒத்திருப்பனவென்பதையும், இவற்றிற் கூறப்படும் பொருள்களும் பெரும்பாலும் யாவர்க்கும் ஒத்தவையே யென்பதையும் கற்றறிந்தாராயின், அவ்வாறு அவர்கள் கூறுவதற்கு இடமிராது. தொல்

## XIV

காப்பியனாரே "பிரிவொடுபுணர்ந்த கற்பெனப்படுமே" என்று கூறியது இங்குக் கருதத்தக்கது.

இன்னும் அன்னர், பரிமேலழகர் தாம் கொண்டிருக்கும் சாதிப் பிரிவைத் திருவள்ளுவனுர் திருக்குறளிலேறிட்டு, அதனுல் பலதிருக்குறட்பாக்களுக்கும் ஆசிரியர்கொள்கைக்கு முரணுகப் பொருள் எழுதியுள்ளாரெனப் பரிமேலழகரைக் குற்றவாளியாக்குகின்றனர்: இக்காலத்துச் சில அறிஞர் பிரசங்கமேடையிலிருந்துகொண்டு, "சிலகுறுகிய அறிவாளிகள் பரந்த நோக்கமில்லாமையினுல் பண்டைநூல்களிற் காணப்படும் பாக்களுக்குச் சாதிப்பிரிவினை தோற்றப் பொருளுரைக்கின்றனர்" என்று வசைமொழி கூறுவதையும் செவியேற்றுளேன். அங்ஙனம் கூறுபவர்கள், ஒருநூலாசிரியரின் கொள்கையைப்பற்றிக் கூறும்போது நூலாசிரியர் தாம்வாழ்ந்தகாலத்தில் எந்தக்கொள்கையினரா யிருந்தனரென்பதையும், அவர்காலத்து உலகம்எவ்வாறு இருந்ததென்பதையும், முதன்முதலிலாராய்ந்து கொள்ளவேண்டும். காலத்திற்கு ஏற்ப, இக்காலத்தார் பலர் 'ஒற்றுமையுடனிருக்கவேண்டும்: சாதிப்பிரிவினை கூடாது'என்ருற்போல வாயினுற் சொல்லிக்கொண்டு, பிறசாதியாரிடத்துப் பகைமையும் பாராட்டுகின்றனர்: மிகச்சிலரே உள்ளும் புறமும் ஒத்துள்ளார்: முற்காலத்திலோ சாதிப்பிரிவினையிருந்தபோதிலும், கற்ருர்பலரும் மிகநட்புக்கொண்டு ஒருவயிற்றிற் பிறந்த சகோதரராகப்பாவித்து இகலற்றிருந்தனரென்பது பெறப்படுகின்றது: ஒருபால் சாதிப்பிரிவும், ஒருபால் சமரசமும் தோன்றக் கூறுவதைத் திருக்குறளாசிரியர் கைக்கொண்டாரென்பதில் யாதோரிழுக்குமில்லை: தெய்வப்புலமைத் திருவள்ளுவனுர் காலத்துச் சாதிப்பிரிவினையிருந்ததென்பதை "மறப்பினுமோத்துக்கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்", "மேற்பிறந்தாராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்தும், கற்ருரனைத்திலர்பாடு", "ஆபயன்குன்றுமறுதொழிலோர் நூன்மறப்பர்" என்று இங்ஙனம்வரூஉங் குறள்பாக்கள் தெரிவிக்கும். ஆகவே, சாதிப்பிரிவினை திருக்குறளிற் பெறப்படாததென்றும், திருவள்ளுவர் காலத்தில் சாதிப்பிரிவினை இருந்ததில்லை யென்றும் ஒருசாரார் கூறுவது, தமது கருத்தை வலியத் திருவள்ளுவர் திருக்குறளில் அவர்கள் நுழைக்கப்பார்க்கின்றன ரென்றுசொல்ல இடங்கொடுக்குமேயன்றிப் பரிமேலழகர்மீது குற்றங்கூறச்

சிறிதும் இடன் தராது.

இனி, பரிமேலழகருரையிற் குற்றங்கூறும் ஒருசாரார் புதல்வரைப் பெறுதல் என்று தலையங்கமுள்ள அதிகாரத்தைக் குறித்துப் பின்வருமாறு குறைகூறுகின்றனர்:—

அவர்கள் 'ஒவ்வோரு அதிகாரத்திலும் தலைப்பெயராய் அமைத்தசொற்களை அவ்வதிகாரத்திற் பல இடங்களில் அமைத்துச்சொல்லுதல் ஆசிரியரது இயற்கை; திருக்குறளில் எவ்வதிகாரத்தை எடுத்து ஆராய்ந்தாலும் அவ்வதிகாரத்தின் தலைப்பெயர் பலகுறட்பாக்களில் ஆளப்பட்டிருக்குந் தன்மை

XV

நன்கு அறியப்படும்' என்று இங்ஙன் கூறி, இம்முறையிலே மக்கட்பேறு என்று ஆசிரியர் பெயரிட்டதை மாற்றிப் பரிமேலழகர் அமைவுடையதல்லாத 'புதல்வரைப்பெறுதல்'என்ற பெயரை யிட்டனர் என்று தோன்றுமாறு எழுதுகின்றனர்: மக்கட்பேறு என்றுதான் ஆசிரியரிட்ட பெயராயிருக்கவேண்டு மென்பதைச் சாதிக்கக் கருதிக் காட்டிய இந்த முதற்காரணம் எவ்வளவு உண்மையென்று கற்றறிந்தோர் காணக்கடவர்.

திருக்குறளிற் பல அதிகாரங்கட்குத்
தலைப்பெயராயமைந்தவை, அவ்வவ்வதிகாரத்து ஓரிடத்தோ
பலவிடத்தோ அமைந்த சொல்லைக்கொண்டவை யென்பது
கற்றுணர்ந்தவர் கண்ட பொருளாகும். அத்துணையேதவிர,

திருக்குறளைக்
அதிகாரத்தின்
தலைப்பெயராயமைந்தவற்றை ஆசிரியர் அவ்வதிகாரத்துப்
பலவிடத்திலும் எல்லா வதிகாரங்களிலும்
அமைத்துள்ளாரென்பது, வானமலர் நறுமணம்
வீசுகின்றதென்பதுபோலும். திருக்குறளைமுழுதுஞ்
செம்மையாகப்படித்தவர் இந்தக் காரணத்தை யேற்பரோ?
திருக்குறளின் முதலதிகாரத்தின் தலைப் பெயர்
கடவுள்வாழ்த்து என்பது. அந்த முதலதிகாரத்திற்குள்
கடவுள் என்ற சொல்லாவது வந்துள்ளதோ?
கூடாவொழுக்கம் வினைத்தூய்மை படைச்செருக்கு
பொழுதுகண்டிரங்கல் என்றாற்போன்ற பல அதிகாரங்களில்
அத்தொடர்கள் அவ்வவ்வதிகாரத்து எந்தக்குறளிலும்
வந்தில என்பதை யாவருங்காணலாம். நீத்தார்பெருமை
யென்ற அதிகாரத்தில் அத் தொடர் ஒருகுறளில்தான்
வந்துள்ளது: மன்னரைச்சேர்ந்தொழுகல் என்ற
தலையங்கம்பெற்ற ஓரதிகாரம் திருக்குறளில் உள்ளது:
அவ்வதிகாரத்தின் முதற்குறள் "அகலாதணுகாது
தீக்காய்வார்போல்க, விகல் வேந்தர்ச்சேர்ந்
தொழுகுவார்"என்பது: இந்தக்குறளில் வேந்தர்ச்

சேர்ந்தொழுகுதல் என்பது வந்துள்ளது: அடுத்தகுறள் "மன்னர்விழைப விழையாமை மன்னரான், மன்னியவாக்கந்தரும்" என்பது: இக்குறளில் மன்னர் என்பது இருமுறை வந்தபோதிலும் சேர்ந்தொழுகுதல் என்பது காணோம்: இவ்வதிகாரத்தில் இவ்விரண்டு குறள்களில் தவிர, மற்றைக்குறள்களில் வேந்தர் மன்னர் என்ற பெயர்கள்தாமும் இல்லே: இவ்வதிகாரத்திற்கு மன்னரைச்சேர்ந்தொழுகல் என்ற தலேயங்கம் எவ்வாறுவந்தது? குறள்முழுவதையும் ஒவ்வோரதிகாரத்தையும் ஊன்றிப்பார்த்தவர் தலேயமைப்புச்சொல் அவ்வவ்வதிகாரத்துக் குறள்களில் வந்திடுவதாக எங்ஙனே கூற இயலும்?

"நன்கலநன்மக்கட்பேறு" என்றுகீழதிகாரத்தில் தோற்றுவாய்செய்தவர் · அடுத்த இந்தப்புதல்வரைப்பெறுதல் என்று பரிமேலழகர்கூறும் அதிகாரத் துக்கு அப்பெயரையேயிட்டாரென்றலே இயல்பு என்று வாதிக்கின்றனர்: அங்ஙனம் தோற்றுவாய்செய்த சொல்லேயே யடுத்துவரும் அதிகாரத்திற்குத் தலேயங்கமாகக்கொள்ளுதல் இயல்பாயின், "இருமனப்பெண்டிருங் கள்ளுங் கவறும்" என்று தோற்றுவாய்செய்த ஆசிரியர், கள்ளுண்ணுமைக்குப் பின் வரும் அதிகாரத்திற்கு 'கவறு' என்று ஏன் தலேயங்கம் அமைக்கவில்லே? அன்றியும், புதல்வரைப்பெறுதல் என்ற அவ்வதிகாரத்தில் மக்களென்று

ஆசிரியர்கூறும் இடங்களிலெல்லாம் பரிமேலழகர் ஆண்மக்கள்என்று வலிந்து பொருள் கூறுகின்றாரென்றும் "அமிழ்தினுமாற்றவினிதேதம் மக்கள், சிறுகையளாவியகூழ்", "மக்கள்மெய்தீண்டலுடற்கின்பம்மற்றவர், சொற் கேட்டலின்பம்செவிக்கு", "குழலினிதுயாழினிதென்பதம்மக்கள், மழலைச் சொற்கேளாதவர்" என்று இவ்வாறு நாயனார் புனைந்துரைத்த நலமெல்லாம் ஆண்மக்களிடமே அமைந்தனவாகக் கருதுவதற்குச் சிறிதும் இடமில்லை என்றும்கூறி, அறிவு என்ற ஒருபொருளைப் பெற்றிருப்பவன் கனவிலும் சொல்ல மாட்டாத பொருள்களைப் பரிமேலழகர் கூறியனவாகச் சொல்லுகின்றனர். பரிமேலழகர் இவ்வதிகாரத்தில் மக்கள் என்று வருமிடங்களிலெல்லாம் ஆண் மக்கள் என்று எழுதியதாகத்தெரியவில்லை: அங்ஙனம் பரிமேலழகர் எழுதிய தாகக்கூறுவது அப்பெரியார்மேல் வீண்பழியைச்சுமத்துவதேயாகும்: ஆனல், அறிவறிந்த மக்கட்பேறு என்ற இடத்தில் மாத்திரம் ஆண்மக்களென்றே யுரைத்தனர். புதல்வரைப்பெறுதல் என்ற அதிகாரத்தின்பொருளை விவரிக்குமிடத்துத் தென்புலத்தார் கடனிறுத்தற்பொருட்டு நன்மக்களைப்பெறுத லென்று உரைத்தமையால், புதல்வரென்பது ஆண்மக்களையே காட்டுமன்றோ எனின்?—தென்புலத்தார் கடனையிறுப்பது ஆண்மக்களாலன்றிப் பெண்மக்களாலும் தம்வழியால் இயலுமாதலாலும், இக்கருத்துப்பற்றியே வேதத்திலும் "ப்ரஜயாபித்ருப்யஃ"என்று ஆண்பெண்மக்களைக்காட்டவல்ல பொதுச்சொல்லாகிய ப்ரஜயா என்ற சொல்லாற் கூறியிருத்தலாலும், பரிமேலழகியாரும் 'அக்கடனிறுத்தற்பொருட்டு நன்மக்களைப்பெறுதல்' என்று பொதுவாகவே கூறினர்.

பரிமேலழகர் புதல்வரைப்பெறுதலென்ற

அதிகாரத்தின் முதற்குறளில்

மக்கள் என்பதற்கு ஆண்மக்களென்று பொருள் கொண்டதற்குக் காரணம்

என்னையெனின்?—'அறிவறிந்த' என்ற தொடரேயாகும்.

நாயனுர் பொது

வறிவுள்ளாரைக் கூறவேண்டினராயின், அறிந்தமக்கள் என்று கூறியிருப்பர்: அங்ஙனன்றி, அறிவு அறிந்த என்றனர். இங்கு அறிதலுக்குச் செயப்படு பொருளாக அமைந்த அறிவு என்பது அறியவேண்டுவனவான சிறந்த நூல் கள் என்ற பொருளது: ஆகவே, அறிவு அறிந்த என்றதொடர் அவ்வாறுள்ள

நூல்களை யோதுதற்கு ஏற்ற அறிவுபடைத்த என்றபொருளது; அவ்வாருன நூல்களை யோதுதற்கேற்ற நுண்ணறிவாகியஉரிமை ஒருவரிடத்து அமைந்து இருக்குமாணுல் அவ்வறிவு அதன்பயனைத் தவருதளிக்குமென்ற உண்மை காட்சியளவைக்கு மாறுபடாததே. உலகத்திலே பெண்கல்வியைப் பெரிதும் போற்றும் இக்காலத்திலும் கல்வியறிவு சிறந்து மேம்படுவோர் பெண்மக்களி னும் ஆண்மக்களே மிகப்பலரென்பதில் ஐயமுண்டோ? இக்காலத்தில் தானே இவ்வாருணல் அக்காலத்தில் அறிந்த பெண்மக்கள் மிகவும் அருகியேயிருப்ப ரென்பது திண்ணமே: உலகத்து அக்காலத்து நிகழ்வையொட்டியே நாயனுர் நூலியாத்திருப்பரென்பதும் ஏற்றுக்கொள்ளவேண்டிய உண்மையே. 'பேதை மையென்பதுமாதர்க்கு அணிகல மென்றும், பெண்மக்கள் அறியாமையென்



னும் இருளிலேயே ஆழ்ந்துகிடக்கவேணுமென்றும் வழங்குகின்ற கொள்கை கள்எல்லாம் பிற்காலத்தில் தமிழ்நாட்டிற்புகுந்த கொள்கைகளேயன்றி ஆசிரி யர் திருவள்ளுவநாயனுர்க்கு உடம்பாடான கொள்கைகள் அல்ல' னர். எக்காலத்தில் ஆண்மக்கள்போலவே பெண்மக்களெல்லாம்

என்கின்ற
ஒத்த அறி
வினராயிருந்தனர்? இரண்டொரு
பெண்புலவரிருந்தமையாலேயே பெண்

மக்களெல்லாம் புலவராயிருந்தாரென்று சொல்லஇயலுமோ! இரண்டொரு புலவர்பெயர்
தமிழ்ப்பண்டை நூலிலிருப்பதுகொண்டு பண்டைக்காலத்தில் ஆண்மக்களெல்லாம் புலவராகத்திகழ்ந்தனரென்றுதான் சாதித்துவிடமுடியுமோ? 'முற்காலத்து ஆண்மக்களவ்வளவு பெண்டிர்களும் கற்றவராயிருந்தனர். பிற்காலத்திலேதான் அங்கிலைமாறியிட்டது' என்று சிலர் வாதிக்கின்றனரே: இந்தவாதம் சரிதவாராய்ச்சிகொண்டு மெய்ப்பித்தாலன்றி வலிவுறுமோ! இவ்வாறு இருப்பதுபற்றி, ஆசிரியர் தாம் இருந்தகாலநிலையையொட்டி அக்காலத்து மக்கட்குஏற்ப நூல்யாத்துள்ளாரென்றும், அதற்குஏற்பப்பரிமேலழகர் உரை கூறுகின்றாரென்றும் யாம் கூறுகின்றோம். இதனால் பரிமேலழகர் பெண்கல்விவேண்டாம்: பெண்கள் அறியாமையிருளிலேயே மூழ்கியிருக்கவேணுமென்ற கொள்கையுள்ளாரென்றாவது,நாயனார் பெண்கல்வியை மறுத்தோ அல்லது பெரிதும் போற்றியோ இருக்கின்றாரென்றாவது சொல்ல இடமில்லை. திருவள்ளுவனார்காலத்துப் பெண்கல்வி மிக்கிருந்ததாயின் "ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச், சான்றோனெனக்கேட்டதாய்", "தந்தைமகற்காற்றும் நன்றி அவையத்துமுந்தியிருப்பச்செயல்" என்று கூறிய அந்நாயனார் "தன்மகளைச்சான்றோளெனக் கேட்டதாய்"என்றும், "மகட்காற்றும் நன்றியவையத்து முந்தியிருப்பச் செயல்" என்றும் இவ்வண்ணமாக ஏன்கூறவில்லை? இந்தப் புதல்வரைப்பெறுதல் என்ற அதிகாரத்தில் அறிவினால் மேம்பாடு கூறுமிடம் நான்கு: அவற்றுள் இரண்டு இங்குக் காட்டியவை அவ்விரண்டில் நூலாசிரியர் மகனோடு அறிவைத்தொடர்புபடுத்திக் கூறியுள்ளார். மற்றொன்று "அறிவறிந்த மக்கட்பேறல்லபிற"என்பது: அங்கு 'அறிவு அறிந்த' என்று வருவதுபற்றியும், "தந்தைமகற் காற்றும் நன்றி" என்றும் "தன்மகனைச்சான்றோனெனக்கேட்டதாய்" என்றும் பின்னே வருபவற்றையொட்டியும், அக்காலத்தையநுசரித்து அறிவுநூல்களைக் கற்றல் ஆண்பாலாரிடத்தே மிகுதியாகக்காணப்பட்டிருக்கு மென்பதுபற்றியும் இவ்வோரிடத்து மக்கள்என்பதற்கு ஆண்பாலாரென்றனர்: பிறிதோரிடமாகிய "தம்மிற்றம்மக்களறிவுடைமை" என்றவிடத்து மக்களென்பதைப்பற்றி உரைகாரர்வேறுபடுத்துக் கூறவில்லை இதில் என்னதவறு?

அன்றியும், இத்தப்புதல்வரைப்பெறுதல் என்ற அதிகாரத்து "சான்றோனெனக் கேட்டதாய்" என்பதற்கு, பெண்ணியல்பால் தானாக அறியாமையின் 'கேட்ட' என்றாரென்று பரிமேலழகியார் கூறுவது பெருந்தவறு என்கின்றனர். இக்காலத்திலுங்கூட, தந்தையினும் மகனைச்சான்றோனெனத் தாய் தானே கண்டுஉவப்பதைவிட கேட்டு உவப்பதே இயற்கையாதலைக்

# XVIII

கண்கூடாகக் காணலாமே: இந்த உண்மையைப் பரிமேலழகர் கூறியது எங்ஙனம் தவறாகும்?

புதல்வரைப்பெறுதல் என்றது அமைவுடையதாகாது என்றும், மக்கட் பேறு என்பது அமைவுடைய தாகுமென்றும் அன்னார் கூறுகின்றனரே: இது எவ்வாறுஎன்பது விளங்கவில்லை. மக்கள்என்பதும் புதல்வர் என்பதும் பரியாயச்சொல் ஆகாது என்று அவர்கள் கருதுகின்றார்களா? புதல்வர் என் பது ஆண் பெண் என்ற இருபாலாருங் குழுவிய கூட்டத்தை ஏன் காட் டாது? இங்குக் கூறியவாற்றால் பரிமேலழகர் தாம் கூறிய பொருட்காகத் தலையங்கத்தை மாற்றிக்கொள்ளவேண்டிய காரணமேயில்லையென்பது போதரும்.

இனிஒருசாரார் திருவள்ளுவர் ஜை னராதலால் அந்தக்கொள்கையையே திருக்குறளிற் கூறியிருக்க, பரிமேலழகர் அக்கொள்கைக்கு மாறாக உரைகூறியுள்ளாராதலால், பரிமேலழகருரை

ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று என்று கூறுகின்றனர். திருக்குறளாசிரியர் எந்தமதத்தவராகவேனும் இருக்கட்டும், பெரும்பாலும் பலர்க்கும் பயன்படுமாறு தமிழுலகத்துத் தமது நூலையாத் திருத்தலால், பொதுவாக உரைகூறுவதே ஆசிரியர்கருத்திற்கு ஏற்குமன்றி, ஒருசார்மதத்தார்க்கு ஏற்ப வலிந்துபொருள்கூறுதல் ஆசிரியர்கருத்தினோடு மாறுபடுமென்பது வெளிப்படை:
அன்றியும்,ஜைனமதக்கொள்கைக்கு மாறான சிலபொருள்கள் திருக்குறளிற்காணப்படுகின்றன என்பது, அறத்துப்பாலின் முகப்பிற் காட்டப்பட்டது: ஆகவே, அவர்களுரைப்பதைத் தனியேமறுத்துக் கூறுதற்கு இங்கு அவகாசமெடுத்துக்கொள்ளவில்லை.

இப்போது ஒருகோட்டியார் பரிமேலழகருரையைத் தவறென்று கூறுவது பற்றிச் சில எழுதியது அன்னாரோடு வாதிக்க வேண்டுமென்ற கருத்தினாலன்று: அங்ஙன்குறைகூறுவார் தம் மனத்தில் வேறு என்னவோ எண்ணிக்கொண்டு எழுதுவதாகத் தோன்றுவதால், அவர்கள் அவ்வாறிருப்பின் அவர்கள்கருத்தை மாற்ற யான் வல்லேனல்லேன்: கல்விகற்கும் மாணாக்கர் அவ்வாறான கட்டுரைகளைப் படிப்பதனால் பரிமேலழகருரையைக் கற்பதற்கு முன்னரே அவ்வுரைமீது வெறுப்புக் கொண்டு நீங்காது, கற்றுப் பிறகு அவ்வுரையின்மீது ஒருசாரார்கூறும் குற்றம் எவ்வளவு அமைவுடைத்து என்று ஆராயவேண்டு

மென்னுங்கருத்தே யான் இப்போது சிறிது எழு
தியதற்குக்காரணம்: பரிமேலழகருரையிற் குற்றங் கூறுவோர்
இன்னும்பல கூறியுள்ளாரெனினும் அவற்றுள்
தலைமையானசிலவற்றைக் குறித்தே · யெழுதி
மற்றவற்றை விரிவஞ்சிவிட்டிட்டேன். அடியேன்
விரிவஞ்சிச் சிறிதுஎழுதியதையும் மிகையென்று சிலஅறிஞர்
மும் அடியேனுக்கு உள்ளது.
கருதுவரோ என்ற அச்ச

திருக்குறள்

வாழ்க: பரிமேலழகருரைவாழ்க.

---

# பொருட்பாலின் இயல் அதிகாரம் என்பவற்றின்

# அட்டவணை.

## அரசியல்.

39. இறைமாட்சி
40. கல்வி
41. கல்லாமை

அங்கவியல்.

ஒழிபியல்.



பக்கம்.

## பொருட்பாலின் பிழைத்திருத்தம்.

| வரி. | | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 37 | | கடிவாய |
| 38 | 21 | | முற்றவறிதால் |

41 13 உண்டங்

கடியவாய
முற்றவறிதலால்
உண்டாங்

45 27
47 16

அவற் அவ்வாற்
(வரக்கடவதாகிய அதனை) வரக்கடவதாகிய அதனை
முன் (முன்

| | | |
|---|---|---|
| 48 | 19 | என்னும் |
| 49 | 36 | "என்றிவற்றை" |
| 60 | 38 | முதலியவற்றிக்கு |
| 89 | 39 | சிறிதாயிற்றனும் |
| 104 | 10 | தழுவியதும்; |
| 108 | 2 | தெளிப்படுவா |
| 110 | 2 | பிழைப்பை |
| 111 | 11 | உள்ளீட் |
| 155 | 2 | ௫௬௬ |
| 164 | 21 | உவமவுருபு.) |
| 169 | 28 | முன்னிதே" |
| 175 | 29 | மிக்கத் |
| 184 | 31 | ஒருமையாக |
| 194 | 23 | மடுத்து |

| | | |
|---|---|---|
| 214 | 25 | மாக்குந் |
| 216 | 33 | பன்மையா, |
| 266 | 14 | என் றஇடத்து, 'தாம்' |
| 283 | 9 | ப்டுபவ து |
| 303 | 13 | தொலைவுடம் |
| 304 | 18 | பட்டதாய் |
| 309 | 6 | கருத்தாவன |
| 310 | 2 | எகக |
| 343 | 37 | வேற்றுமைத் |
| 351 | 20 | கருங்குளைமா" |
| 361 | 3 | லாதார்க்கு |
| 396 | 8 | காப்பார்) |
| 404 | 30 | ஆயண் |
| 413 | 11 | வான, |
| 426 | 20 | கவில்' |
| 434 | 33 | செய்பவன்: வைத்தியன் |
| 439 | 23 | இழிக்கு |
| 444 | 3 | (சின் று) |
| 454 | 34 | உயர்ந்தவ |
| 473 | 25 | தற்றுதல் |
| 478 | 30 | கடைகே |

# திருத்தல் கடைக்கே

| | | | |
|---|---|---|---|
| 489 | 23 | நூரத் | நூறத் |

409 - ஆம்பக்கத்து 26 - ஆம் வரியிலிருந்து 28 - ஆம் வரியில் இன் என்பது என்றவரையில், 'என்பது வெளிப்பட்டிருப்பதுபோலப் பொருள் என்பதன் பின்னும் ஏதுப்பொருளைக் காட்டும் 'இன்' என்பது வெளிப்பட்டுநின்று பொருளின்விழையும் என்று இருந்தால்தான்' என்று திருத்துக.

# திருக்குறள்.

## பரிமேலழகருரை.

## பொருட்பால்.

முதலாவது

## அரசியல்.

இனி, இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவான் எடுத்துக்கொண்டார். அது-தன் துணைக்

காரணமாய அரசனீதி கூறவே அடங்கும்.

அரசனீதியாவது-காவலைநடாத்தும் முறைமை. அதனை அரசியல், அங்கவியல், ஒழிபியல் என மூவகைப்படுத்து, மலர்தலையுலகிற்கு உயிரெனச்சிறந்த அரசனது இயல்பு இருபத்தைந்து அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்.

(குறிப்புரை.) பொருட்பால்-பொருளையுணர்த்தும் பாகம்; வேற்றுமைப் புணர்ச்சி, இரண்டனுருபும்பயனும் உடன்தொக்க தொகை. இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் - இருவகை அறப்பகுதிகளுள் இல் லறப்பகுதியிற் சேர்வனவான பொருள் இன்பம் என்னும் இரண்டு புருஷார்த்தங்களுள். பொருளின்பங்களிற் பற்றுவிடுதலே துறவாதலால், இவை-துறவறத்தின் வழிப்படுவன வல்ல. இருமையும் பயப்பதாய-இம்மை மறுமை யென்னும் இரண்டையுந் தருவதான. தன் அனுபவத்தால் இம்மையையும் தானம் முதலியவற்றால் மறுமையையும் பொருள் கைகூட்டு மென்க. தன் - செல்வத்தின். அரசனீதி - ராஜதருமம். காவலை-குடிகளைக் காக்குந்தொழிலை. அரசியல் - அரசனது தன்மையைக் கூறும்பாகம். அங்கவியல் - அரசனுக்கு அங்கமாகிய மந்திரிமுதலியோரின் தன்மையைக் கூறுவது: ஒழிபியல் - இவ்விரண்டு இயல்களிலும் அடங்காமல் ஒழிந்தவற்றது தன்மையைக் கூறு
வது: இவையும், இரண்டாம்வேற்றுமையுருபும் பொருளு முடன்தொக்க தொகையே. மலர்தலையுலகிற்கு - பரந்த இடத்தையுடைய உலகத்திற்கு. மலர்தலையுலகிற்கு உயிரெனச்சிறந்த

அரசன்—"நெல்லுமுயிரன்றே நீருமுயிரன்றே,
மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம், அதனால்,
யானுயிரென்ப தறிகை, வேன்மிகுதானை
வேந்தர்க்குக்கடனே" என்பது, புறநானூறு.
அறம்-இம்மைமறுமைவீடென்னும் மூன்றையுந் தருவதும்,
பொருள் இம்மை மறுமை இரண்டையுந் தருவதும்,
இன்பம்-இம்மையொன்றையே தருவதும்
ஆகிய சிறப்பின் தகுதிபற்றி, அறம் முதலிலும், அதன்பின்
பொருளும், அதன் பின் இன்பமும் கிறத்தப்பட்டன:
இவற்றுள் இரண்டாவதாகிய பொருள் முதலதான
அறத்துக்கும் மூன்றாவதான இன்பத்துக்கும்
காரணமாதல்பற்றிச் சிங்கநோக்காய் அவ்விரண்டனிடையில்
வைக்கப்பட்டதென்க.

1



## ருகூ - ஆம்
# அதிகாரம்.—இறைமாட்சி.

அஃதாவது - அவன்தன் நற்குண நற்செய்கைகள். உலகபாலருருவாய் நின்று உலகங்காத்தலின், 'இறை' என்றார்; "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார்.

(கு - ரை.) இறை - தலைவன், அரசன். மாட்சி - பெருமை. இறை மாட்சி - ஆறும்வேற்றுமைத்தொகை. அவன் தன் - அவ்வரசனுடைய. உலக பாலர் - உலகத்தை ஆள்பவர், அரசர். "காத்தற்றொழிற்குரிய கடவுளாகிய திருமால்தானே திக்பாலகர் வடிவமாகவும், அரசர்கள்வடிவமாகவும் நின்று, பிராணிகளைக் காத்தலாகிய தனதுதொழிலை நடத்துகின்றனன்" என்பது நூற்றுணிபாதலால், இறை என்னும் கடவுளின் பெயர், இங்கே, உபசார வழக்காய் அரசன்மேல் நின்றதென்க. இனி, உலகபாலர் உருவாய் நின்று - உலகபாலகரின் அமிசத்தைப் பெற்று நின்று என்பாருமுளர்: "அஷ்டாபிர் லோகபாலாநாம் மாத்ராபிர்நிர்மிதோ ந்ருபஃ [அரசன் திக்பாலகரின் எட்டு அமிசங்களால் நிருமிக்கப் பட்டுள்ளான்]" என்றது காண்க. "திருவுடைமன்னரை" என்னும்மேற்கோள், திருவாய்மொழி - நாலாம்பத்து - நான்காந்திரு

மொழி எட்டாஞ்செய்யுளி லுள்ளது; இதற்கு - செல்வத்தையுடைய அரசர்களைக் கண்டால் திருமகள்கொழுநனை நாராயணமூர்த்தியையே கண்டே

னென்று கூறுவள் (இம்மகள்) என்று பொருள். (இங்கு"நாவிஷ்ணுः ப்ருதிவீபதிः" என்னும் வடநூல் மேற்கோளின் கருத்தையும் அறிக.) பெரியார்

என்றது - திருவாய்மொழி நூலாசிரியராகிய சடகோபரென்னும் நம்மாழ்

வாரை; இவர், மயர்வறமதிநலம் அருளப்பெற்ற பிரபந்நஜந கூடஸ்தராதலால்

'பெரியார்' என்ற திருநாமத்தாற் சிறப்பித்துக் கூறப்பட்டனரென்க; இத

னல், பரிமேலழகர்க்கு ஆழ்வார்பக்கலுள்ள அன்புமிகுதி புலப்படும். பணித்

தார் - அருளிச்செய்தார். இறை - இறைவனுக்குப் பண்பாகுபெயர். மாட்சி -

பண்புப்பெயர்: மாண்புடைய நற்குண நற்செய்கைகட்கு

ஆகுபெயர்.

நூருக. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.

(இ - ள்.) படை - படையும், குடி - குடியும், கூழ்-கூழும், அமைச்சு -
அமைச்சும், நட்பு - நட்பும், அரண் - அரணும், ஆறுஉம் - (என்றுசொல்லப்
பட்ட) ஆறு அங்கங்களையும், உடையான்-உடையவன், அரசருள் ஏறு-அரச
ருள் ஏறுபோல்வான்; (எ - று.)

•

ஈண்டு, 'குடி' என்றது - அதனையுடைய நாட்டினை. 'கூழ்' என்றது -
அதற்கு ஏதுவாய பொருளை. அமைச்சு, நாடு, அரண், பொருள், படை,
நட்பு என்பதே முறையாயினும், ஈண்டுச் செய்யுள்நோக்கிப் பிறழவைத்தார்.

'ஆறுமுடையான்' என்றதனால், அவற்றுள் ஒன்று இல்வழியும் அரசனிற் செல்லாதென்பது பெற்றும்; வடநூலார் இவற்றிற்கு 'அங்கம்' எனப் பெயர் கொடுத்ததூஉம் அதுநோக்கி. 'ஏறு' என்பது - உபசாரவழக்கு.

நூகூ - ஆம் அதிகாரம்.—இறைமாட்சி

இதனன், அரசற்கு அங்கமாவன இவை யென்பதூஉம், இவைமுற்று முடைமையே அவன்வெற்றிக்கு ஏது வென்பதூஉங் கூறப்பட்டன.

(கு - ரை.) படை - சேனே. குடி - குடியிருக்குஞ் சனங்களே யுடையநாடு: தானியாகுபெயர். கூழ் - உணவுக்குக்காரணமான செல்வம்: காரியவாகுபெயர்; என்றது, தனதானியங்களே. அமைச்சு - மந்திரித் தன்மை; மந்திரிக்குப் பண்பாகுபெயர். நட்பு - சிநேகம்; தொழிற் பெயர். இங்கே சிநேகிதர்க்குத் தொழிலாகுபெயர். அரண்-நாட்டிற்குக் காவலாகிய மதில் முதலியன: ஶரணம் என்ற வடசொல்லின் சிதைவு. ஏறு-ஆண்சிங்கம். சிங்கம் மிருகங்களுட் சிறந்த தாதல்போல, இவன் அரசருட் சிறந்தவ னென்க.

காத்தல்தொழில்நடத்துவதில் அமைச்சன் அரசனுக்கு இணையாகின்றவ னுதலால், அவனே ஆறுஅங்கங்களுள் முதலிலும், அவ்வரசனுலும் அமைச்சனுலுங் காக்கப்படுவதாய் மற்றை அரண்முதலிய அங்கங்கள் நான்கிற்கும் ஆதாரமாகிற நாட்டை அதன்பின்னும், அந்நாட்டிற்கு உறுப்பாய்க் காவல்செய்வதான அரணை அதன்பின்னும், அந்நாட்டாலும் அரணுலும் ஆக்கவுங் காக்கவும் படுவதாய பொருளை அதன்பின்னும், அப்பொருளால் வளர்வதாகிய படையை அதன்பின்னும், அப்படைபோல அரசனுக்குத் தொழிலில் உதவுவதான நட்பை அதன்பின்னும் வைத்துக்கூறுதல் முறையாமாறு காண்க; இம்முறைப்படியே மேல் அங்கவியலில் அதிகாரங்களை

அடைவுசெய்து கூறுமாற்றையும் அறிக. செய்யுள் நோக்கி - பாட்டின் இலக்கணத்துக்கு முரண்படாதபடி பொருத்தமாயிருத் தற்கு. அங்கம் - உறுப்பு. ஏறுபோல்பவனை ஏறு என, உபமேயத்தினிடத் தில் உபமானத்தின் தன்மையை ஏற்றி உபசரித்துக் கூறியபடி; இது உவமவாகுபெயரின்பாற் படும். ஏறு - ஆண்மைப்பெயர். படைமுதலிய பெயர்ச்செவ்வெண், இறுதியில் ஆறு என்னுந் தொகை பெற்றுவந்தது; உம்மை - இனைத் தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. இவை முற் றும் உடைமை - இவ்வங்கங்கள் ஆறையும் உடைத்தாயிருத்தல். இக்குறளில் 'உடையான்' என்பது - உயர்திணைச்சாதியொருமை யென்பர், இலக்கணக் கொத்து உரையில்.

(க)

௩௮௨. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

(இ - ள்.) வேந்தற்கு - அரசனுக்கு, இயல்பு - இயல்பாவது,—அஞ் சாமை - திண்மையும், ஈகை - கொடையும், அறிவு - அறிவும், ஊக்கம் - ஊக்கமும், இ நான்குஉம் - (என்னும்) இந் நான்கு குணமும், எஞ்சாமை - இடைவிடாதுநிற்றல்; (எ - று.)

ஊக்கம் - வினைசெய்தற்கண் மனவெழுச்சி.

இவற்றுள் அறிவு, ஆறு அங்கத்திற்கும் உரித்து; ஈகை, படைக்குஉரித்து; ஏனைய, வினைக்குஉரிய.

உயிர்க்குணங்களுள் ஒன்றுதோன்ற ஏனைய அடங்கிவரும்;

அவற்றுள் இவை அடங்கின் அரசற்குக் கெடுவன பலவாம்; ஆகலின், இவை எப்பொழுதுந்



தோன்றிநிற்றல் இயல்பாகவேண்டு மென்பார், 'எஞ்சாமை வேந்தற்கு இயல்பு' என்றார்.

(கு - ரை.) திண்மை - மனவுறுதி; அஞ்சாதநெஞ்சுபடைத்தல். ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சி; உற்சாகம். எஞ்சாமை - குறையாமை, ஒழியாமை. வினைசெய்தற்கண் - ராஜாங்ககாரியம்நடத்துவதில். ஆறு அங்கத்திற்கும் உரித்து - ஆறுஅங்கங்களையுங்கையாடுதற்குஉரியது. படைக்கு-சேனையைக் கையாளுதற்கு. வினைக்கு - போர்முதலிய தொழிற்கு. "அறிவருளாசை யச்சமானம், நிறைபொறையோர்ப்புக் கடைப்பிடிமையல், நினைவு வெறுப்புவப்பிரக்க நாண்வெகுளி, துணிவழுக்காறன் பெளிமை யெய்த்தல், துன்பமின்ப மிளமைமூப்பிகல், வென்றி பொச்சாப்பூக்க மறமதம், மறவியினையவுடல்கொளுயிர்க்குணம்", "துய்த்தல் துஞ்சல் தொழுதலணிதல், உய்த்தலாதியுடலுயிர்த் தொழிற்குணம்"என்று உயிர்க்குணம் கூறப்பட்டிருத்தல், இங்குக் கருதத்தக்கது. தோன்ற - தலையெடுக்க. கெடுவனபலவாம் - அநேககாரியங்கள் கெட்டுவிடும். இவை - அஞ்சாமை முதலிய இந்நான்கு குணங்களும். ஊக்கம்-தொழிற்பெயர்; ஊக்கு-பகுதி, அம்-விகுதி. (உ)

௩௮௩. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

(இ - ள்.) நிலன் ஆள்பவற்கு - நிலத்தினை ஆளுந் திருவுடையாற்கு,—தூங்காமை - (அக்காரியங்களில்) விரைவுடைமையும், கல்வி-(அவை அறிதற்கு ஏற்ற) கல்வியுடைமையும், துணிவு உடைமை - ஆண்மையுடைமையும், இ மூன்றும் - (ஆகிய) இம்மூன்றுகுணமும், நீங்கா - (ஒருகாலும்)

நீங்கா; (எ - று.)

கல்வியது கூறுபாடு, முன்னர்க் கூறப்படும். ஆண்மையாவது - ஒன்றனையும் பாராது கடிதிற்செய்வது ஆகலின், அஃது ஈண்டு உபசாரவழக்கால் 'துணிவு' எனப்பட்டது. உம்மை - இறந்தது தழீஇய எச்சவும்மை. இவற்றுள், கல்வி, ஆறு அங்கத்திற்கும் உரித்து; ஏனைய, வினைக்கு உரிய. 'நீங்கா' என்பதற்கு, மேல் எஞ்சாமைக்கு உரைத்தாங்கு உரைக்க.

(கு - ரை.) நிலத்தினை ஆளுந் திருவுடையாற்கு - பூமியை அரசாளுஞ் செல்வத்தையுடைய அரசனுக்கு. அக்காரியங்கள் - ராஜாங்கத் தொழில்கள். அவை - அக்காரியங்களை. துணிவு - தைரியம். ஆண்மை - பௌருஷமெனப்படும். கல்வியது கூறுபாடு-படிப்பின்பகுப்புக்கள். முன்னர்-இனியென்றபடி; இங்கே இடமுன். 'முன்னர்க்கூறப்படும்'என்றது, அடுத்த 'கல்வி' என்னும் அதிகாரத்தின் தொடக்கத்தில், 'கற்றற் குரிய நூல்களாவன - அறநூலும், நீதிநூலும், யானை குதிரை தேர் படைக்கலம் என்றிவற்றின் நூல்களும் முதலாயின' என உரைப்பதை; அங்கு 'மேல் "தூங்காமைகல்வி" எனத் தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக்கூறுகின்றமையின்' என இதனோடு சம்பந்தப்படுத்துவதுங் காண்க. ஒன்றனையும் பாராது - எந்தத்தடையையும் லக்ஷியஞ்செய்யாமல். கடிதின் - விரைவாக.

---

௩௯ - ஆம் அதிகாரம்.—இறைமாட்சி

௫ துணிதலின்பயனாகிய ஆண்மையை இங்கே

'துணிவு' என்றது, காரியத்தைக் காரணமாக உபசரித்துக் கூறியதாம்; இதனைக் காரணவாகுபெயரென்னலாம். மூன்றும் என்றஉம்மை - முற்றுப்பொருளோடு, (கீழ்க்கவியிற் கூறிய குணங்களைத் தழுவுதலால்) இறந்ததுதழுவிய எச்சப்பொருளையுமுடையது. கல்வியுடைமை, அங்கங்களாறையும்

ஆளுதற்குப் பயன்படுவது; மற்றைத் தூங்காமையும், துணிவுடைமையும் - தொழில்செய்தற்குப் பயன்படுவன வென்க. மேல்எஞ்சாமைக்கு உரைத்தாங்கு - முன்பாட்டில் 'எஞ்சாமை' என்னுஞ் சொல்லுக்குப் பயன்கூறினதுபோல. 'உயிர்க்குணங் களுள் ஒன்றுதோன்ற ஏனைய அடங்கிவரும்; அவற்றுள் இவையடங்கின், அரசற்குக் கெடுவன பலவாம்; ஆகலின், தூங்காமை முதலிய இம்மூன்று குணங்களும் எப்பொழுதும் தோன்றிநிற்றல் இயல்பாகவேண்டு மென்பார் 'நீங்கா நிலனாள்பவற்கு' என்றார் என உரைக்க. மூன்றுஎன்னும் பெயர், பன்மைகுறிப்பதாதலால், நீங்காஎன்னும் பன்மைமுற்றைக்கொண்டது. (௩)

௩௮௪. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா

மான முடைய தரசு.

(இ - ள்.) அறன் இழுக்காது - (தனக்கு ஓதிய) அறத்தின் வழுவாது ஒழுகி, அல்லவை நீக்கி - அறனல்லவை (தன் நாட்டின்கண்ணும் நிகழா மற்)கடிந்து, மறன் இழுக்கா - வீரத்தின்வழுவாத, மானம் - தாழ்வின்மை யினை, உடையது - உடையான்,—அரசு - அரசன்; (எ - று.)

அவ்வறமாவது - ஓதல் வேட்டல் ஈதல் என்னும் பொதுத்தொழிலி

னும், படைக்கலம்பயிறல் பல்லுயிரோம்பல் பகைத்திறந்தெறுதல் என் னுஞ் சிறப்புத்தொழிலினும் வழுவாது நிற்றல்; "மாண்ட, அறநெறிமுதற் றே யரசின்கொற்றம்" என்பதனால், இவ்வறம் பொருட்குக் காரணமாதல் அறிக. அல்லவை - கொலை, களவு முதலாயின. குற்றமாய மானத்தின் நீக்குதற்கு, 'மறனிழுக்கா மானம்' என்றார்; அஃதாவது - "வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியா, னேறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சி லென் றெறியான், மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியா; னறன்மையின் முதியாரையு மெறியா னயிலுழவன்" எனவும், "அழியுநர் புறக்கொடை யயில்*வா ளோச்சா"ன் எனவுஞ் சொல்லப்படுவது. அரசு - அரசனது தன்மை; அஃது - உபசாரவழக்கால், அவன்தன்மேல் நின்றது.

(கு - ரை.) ஒழியஅறத்தின் கூறப்பட்ட தருமவழியில். அறனல்லவை- அதருமங்கள். இகழாமல் கடிந்து - நடவாதபடி நீக்கி. 'மானம்' என்னும் அதிகாரத்தில் அதன்தன்மை கூறப்படும். வேட்டல் - யாகஞ்செய்தல். ஓதல், வேட்டல், ஈதல் என்பவற்றைப் பொதுத்தொழில் என்றது, அவை அரசர்க்கு மாத்திரமே யன்றி அந்தணர்க்கும் வைசியர்க்கும் உரிய அறுதொழில்களிற் சேர்ந்தனவாதலின். படைக்கலம் பயிறல் - ஆயுதப்பயிற்சி. பல்

* பிரதிபேதம்: வேலோச்சான், வாளோச்சா.

உயிரோம்பல் - பலபிராணிகளையும் பாதுகாத்தல். பகைத்திறந்தெறுதல் - பகைவர்களின் பகுப்பைப் போர்செய்து அழித்தல். இவற்றைச் சிறப்புத் தொழில் என்றது, இம்மூன்றும் பிறர்க்கு உரியனவல்லாமல் அரசர்க்கேயுரியன வாதலால். இங்குக் காட்டிய ஆறும், அரசரது தொழிலாம். "மாண்ட, அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" என்ற மேற்கோள், புறநானூறு - ருரு - ஆம் பாட்டிலுள்ளது; மாட்சிமைப்பட்ட தருமவழியைக் காரணமாக வுடையது அரசனதுவெற்றி என்பது, இதன்பொருள்: மேல் 'செங்கோன்மை' என்னும் அதிகாரத்தில் "வேலன்று வென்றி தருவது மன்னவன், கோலதூஉங் கோடாதெனின்" என்றதனுலும், அரசனது செங்கோலின் முறைமையே வெற்றிக்குக் காரணமாத லறியப்படும். குற்றமாய மானம் - துரகங்காரம். அஃதாவது - மறனிழுக்காமானமாவது. "வீறின்மையின்" என்னும் மேற்கோள், சீவகசிந்தாமணி - மண்மகளிலம்பகம் - கசு௦ - ஆம் பாட்டு; '(தனக்கு எதிர்ப்பாரின்மையின்)

வேலுழவன் மதவேழத்தை யெறிந்தாலும்

விலங்கையெறிந்தானென்பர் என்று நினைத்து அதனுலே

வெற்றியின்மையின் வேழத்தையும் வெட்டானய்,

முன்புவெட்டுண்டவர் தனக்கு ஒப்பாராயினும் பிறர்படை

தீண்டின எச்சிலென்று அவரையும் வெட்டானய், தனக்கு

இளையாரையும் நிகரன்மையின் மறம்வாடுமென்று

வெட்டானய், அறமன்மையின் தன்னின்மூத்தோரையும்

வெட்டானய் நின்ருனென்க' என்பது,

நச்சினர்க்கினியருரை. "அழியுநர் புறக்கொடை யயில்வா ளோச்சா" என்ற மேற்கோள், புறப்பொருள் வெண்பாமாலை-வஞ்சிப்படலம் - உ௦-ஆம் பாட்டு; (தழிஞ்சி.)

"அழியுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக்,

கழிதறுகண்மை காதலித்துரைத்தன்று" என்பதில்

உள்ளது; (ஒருவீரன்) தனக்குக்கெட்டோடுவார் முதுகுபுறத்துக் கூரியவாளோச்சாத மிக்கமனப்பண்பை விரும்பிச்சொல்லியது என்று இதன்பொருள்: "கான்படு தீயிற்கலவார் தன்மேல்வரினும், தான்படை நீண்டாத் தறுகண்ணன்-வான் படர்தல், கண்ணிய பின்னன்றிக் கறுத்தார்மறந்தொலைதல், எண்ணியபின் போக்குமோ வெஃகு" என்பது - இதற்கு உதாரணம்.

"இன்றுபோய்ப் போர்க்கு, நாளைவாவெனநல்கினன் நாகிளங்கமுகின், வாளை தாவுறுகோசல நாடுடைவள்ளல்" என்னுங் கம்பராமாயணமும் இதன்பாற்படும். அவன்தன் மேல் - அவன்மேல். அரசு - பண்பாகுபெயரென்க. முன்னே 'அறன்' என வந்ததனுல், அல்லவை - பாவமாயிற்று. மேல் 'குற்றங்கடிதல்' என்ற அதிகாரத்தில் 'மாட்சியான மானத்தின் நீக்குதற்கு, மாண்பிறந்த மான மென்றார்; அஃதாவது-அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர். தந்தை தாய் என்றிவரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது

முடித்தேவிடுதலும் முதலாயின' என உரைப்பதை இங்கே யறிக. "அடிநிழ லரசரை யளிக்கு மாய்கதிர், முடிநிழல் முனிவரர் சரண மூழ்குமே" என்ற இதுபோல்வன, மறனிழுக்கா மானத்தின்பாற்படு மென்க. (௪)

௩௮௫. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த வகுத்தலும வல்ல தரசு.

௩௯ - ஆம் அதிகாரம்.—இறைமாட்சி

(இ - ள்.) இயற்றல்உம் - (தனக்குப் பொருள்கள் வரும்வழிகளை மேல் மேல்) உளவாக்கலும், ஈட்டல்உம் - (அங்ஙனம்வந்தவற்றை) ஒருவழித்தொகுத்தலும், காத்தல் உம்-(தொகுத்தவற்றைப் பிறர்கொள்ளாமற்) காத்தலும், காத்த வகுத்தல்உம் - காத்தவற்றை (அறம்பொருளின்பங்களின் பொருட்டு) விடுத்தலும், வல்லது - வல்லவனே,—அரசு - அரசன்; (எ - று.)

ஈட்டல், காத்தல், வகுத்தல் என்றவற்றிற்கு ஏற்ப, இயற்றலென்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பொருள்களாவன - மணி, பொன், நெல் முதலாயின. அவைவரும் வழிகளாவன - பகைவரை அழித்தலும், திறைகோடலும், தன் நாடு தலையளித்தலும் முதலாயின. 'பிறர்' என்றது - பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினர். கடவுளர் அந்தணர் வறியோர் என்றிவர்க்கும் புகழிற்குங் கொடுத்தலை அறப்பொருட்டாகவும், யானை குதிரை படை நாடு அரண் என்றிவற்றிற்கும் பகையொடுகூடலிற்பிரிக்கப்படுவார்க்கும் தன்னிற்பிரிதலிற் கூட்டப்படுவார்க்குங் கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும், மண்டபம் வாவி செய்குன்று இளமரக்கா முதலிய செய்தற்கும் ஐம்புலன்களால் நுகர்வனவற்றிற்குங் கொடுத்தலை இன்பப்பொருட்டாகவுங் கொள்க. இயற்றல் முதலிய தவறுமற் செய் தல் அரிதாகலின், 'வல்லது' என்றார்.

இவை நான்குபாட்டானும், மாட்சியே கூறப்பட்டது.

(கு - ரை.) ஒருவழித் தொகுத்தல் - ஒருங்கு சேர்த்துவைத்தல். விடுத் தல் - செலவுசெய்தல். செயப்படுபொருள் - 'தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை' என்பது. மணி - இரத்தினம். திறைகோடல்-கப்பங்கொள்ளுதல். நாடு

தலையளித்தல்-நாட்டிலுள்ள குடிகளை நன்றாகப்பாதுகாத்தல். வினைசெய் வார் - தொழில்செய்யும் பரிவாரங்கள். கடவுளர் - தேவர். வறியோர்-ஏழைகள். படை-காலாட்சேனை; ஆயுதமென்றுங் கொள்ளலாம். பகையொடு கூடலின் பிரிக்கப்படுவார் - பகைவரோடு கூடியிருத்தலால் அங்ஙனங் கூடாதபடி பிரிக்கப்படுதற்கு உரியவர். தன்னிற்பிரிதலின் கூட்டப்படுவார்-தன்னை விட்டுநீங்குதலால் அங்ஙனம் நீங்காதபடி சேர்க்கப்படுதற்குஉரியவர். ("பகை யுடன்கிடந்த நிலைபிரிவழக்கினைப், பொருத்தலும் பிரித்தலும் பொருபகை காட்டலும்" என்பது, கல்லாடம்.) வாவி-நீர்நிலை. செய்குன்று-செயற்கை மலை; இயற்கைமலைகள்போலப் படைப்புக்காலத்திற் படைக்கப்பட்டன வல்லாமல் இடையிலே விளையாட்டின் பொருட்டு மலைபோலச் செய்யப் படுவது. இள மரக் கா - இளமையான மரங்களையுடையசோலை; உத்தியானவனம்: சிங்காரப்பூந்தோட்டம். ஐம்புலன்களான் நுகர்வன - சுவையினியநல்லுணவு, சுகந்த பூச்சு, இசைக்கருவி, பஞ்சணை, கண்ணுக்கினிய பொருள்கள் முதலியன. மாட்சியே - இறைமாட்சிமாத்திரமே; இவ் வேகாரம் - மேல் ஐந்துகவிகளில் பயனும் உடன்கூறப்படுவதின்றி நீக்குதற்கு வந்தது. இயற்றல் - இயலச் செய்தல்; இயலுதல்-உண்டாதல். காத்த- பெயர். அரசு என்பது - பொருளால் உயர்திணையாயினும், சொல்லால் அஃ

றிணையாதலால், வல்லது என்னும் அஃறிணைப்பயனிலை கொண்டது; இனி, உடையதும் வல்லதும் அரசிலக்கணம் எனவுங் கூறலாம்.

"ஐவகை மரபி னரசர் பக்கமும்" எனத் தொல்காப்பியப் பொருளதிகாரத்துப் புறத்திணையியலிற் கூறியதும், உரையும் இங்கே அறியத்தக்கன: "அலப்தஞ்சைவலிப்ஸேத லப்தம்ரக்ஷேத்ப்ரயத்நதஃ—ரக்ஷிதம்வர்த்தயேச்சைவ வ்ருத்தம்பாத்ரேஷு நிக்ஷிபேத் [அரசன் அடையப்படாதபொருளை அடைய விரும்புக: அடைந்தபொருளை முயற்சியோடு காக்க: காத்தபொருளை வளர்க்க: வளர்த்தபொருளைச் சற்பாத்திரத்து வைக்க]" என்ற மநுதர்மசாஸ்திரம் இக்குறளோடு ஒப்புநோக்கத்தக்கது. (ரு)

ருஅசு. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல
னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

(இ - ள்.) காட்சிக்கு-(முறைவேண்டினோர்க்கும் குறைவேண்டினோர்க்கும்) காண்டற்கு, எளியன் - எளியனும், (யாவர்மாட்டும்), கடுஞ் சொல்லன் அல்லன் எல் - கடுஞ்சொல்ல னல்லனுமாயின்,—மன்னன்-அம்மன்னனது, நிலம்-நிலத்தை, மீக்கூறும்-(எல்லாநிலங்களினும்) உயர்த்துக்கூறும், (உலகம்).

முறைவேண்டினோர் - வலியரால் நலிவெய்தினோர். குறைவேண்டினோர் - வறுமையுற்று இரந்தார். காண்டற்கு எளிமையாவது - பேர் அத்தாணிக் கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல். கடுஞ்சொல் - கேள்வியினும் *வினையினும் கடியவாய சொல். நிலத்தை மீக் கூறுமெனவே, மன்னனைமீக்கூறுதல் சொல்லவேண்டாவாயிற்று. மீக் கூறு

தல் - இவன்காக்கின்ற நாடு பசி பிணி பகை முதலிய இன்றி யாவர்க்கும் பேரின்பந்தருதலின் தேவருலகினும் நன்றென்றல். 'உலகம்' என்னும் எழு வாய் வருவிக்கப்பட்டது.

(கு - ரை.) முறை வேண்டினர் - முறைசெய்ய விரும்பி வந்தவர். காண்டற்கு எளியனாய் - எளிதிற் காணத்தக்கவனாய். யாவர்மாட்டும் - மந்திரி முதலிய தனது பரிவாரங்களிடத்தும், குடிகள் முதலியோரிடத்தும் என்றபடி.

கடுஞ்சொல்ல னல்லன் - கடுமையான சொற் சொல்லாதவன். நிலத்தை - இராச்சியத்தை. எல்லாநிலங்களினும் உயர்த்துக் கூறும் உலகம் - மற்றை எல்லா விராச்சியங்களினும் மேம்படுத்திக் கூறுவர் உயர்ந்தோர். வலியரால் நலிவுஎய்தினர் - தம்மினும் பலசாலிகளால் வருத்தமடைந்து வந்தவர். வறுமையுற்று இரந்தார் - தரித்திரத்தன்மை யடைந்து யாசிக்கவந்தவர். பேர் அத்தாணிக்கண் - பெரிய அரசாட்சிமண்டபத்திலே. அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு - பிராமணர் மற்றைச்சாதியிலுள்ள அறிவால் நிறைந்தவர் முதலியோரோடு. செவ்வியுடையனா யிருத்தல்-யாவரும் வந்து தடையின்றித் தன்னைக்கண்டு பேச அவகாசமுடையவனாயிருத்தல். கேள்வியிற் கடியவாய சொல் - கேட்பதற்கு இனியவல்லாத சொல்; வினையிற் கடியவாய

* பி - ம்: விளைவினும்.

ருசு - ஆம் அதிகாரம்.—இறைமாட்சி

கூ சொல்-தொழிலில் தீமை பயப்பனவான சொல்: இப்படிப்பட்ட குற்றமற்ற

அரசனது ராச்சியத்தை உயர்ந்தவர் மேம்படுத்துச்சொல்வர் என்றதனால்,

அவ்வரசனை மேம்படுத்துச்சொல்லுதல் அருத்தாபத்தியால் தானே பெறப்படு தல் காண்க. முதலிய - முதலானவை. உலகம் - தோன்றா எழுவாய். (சு)

௩௮௭. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்

றான்கண் டனைத்திவ் வுலகு.

(இ - ள்.) இன் சொலால் - இனியசொல்லுடனே, ஈத்து - ஈதலைச் செய்து, அளிக்க வல்லாற்கு - அளிக்கவல்ல அரசனுக்கு,—இ உலகு - இவ் வுலகம்,—தன் சொலால் - தன்புகழோடு மேவி, தான் கண்ட அனைத்து - தான் கருதிய அளவிற்றாம்; (எ - று.)

இன் சொல் - கேள்வியினும் *வினையினும் இனியவாய சொல். ஈதல்- வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தல். அளித்தல் - தன்பரிவாரத்தானும் பகைவரானும் நலிவுபடாமற் காத்தல். இவை அரியவாகலின் 'வல்லாற்கு' என்றும், அவன் மண்முழுதும் ஆளுமாகலின் 'இவ்வுலகு'

என்றுங் கூறி

ஞர். கருதிய அளவிற்றாதல் - கருதியபொருளெல்லாஞ் சுரத்தல்.

(கு - ரை.) அளிக்க - அருள்செய்ய, காக்க. மேவி - பொருந்தி. தான் கருதிய அளவிற்றும் - தான்நினைத்த அளவினையுடையதாம். இன்சொல் - கேட்பதற்கு இனியதும் நன்மைப்பயனை விளைப்பதுமான சொல். தன்பரிவாரம் நலிவுபடுத்தின் அகப்பகையும், பகைவர்நலிவுபடுத்தின் புறப்பகையுமாம். நலிவுபடாமல்-துன்பப்படாமல். மண்முழுதும்-பூலோக முழுவதையும். ஆளும் - ஆள்வான். சொல்லால் என்றவிடத்து, ஆல் உருபு - ஒடுவுருபின் பொருளது; "தூங்குகையா லோங்குநடைய" என்றவிடத்துப் போல. கண்டனைத்து - கண்டவனைத்து என்றதன் தொகுத்தல். சுரத்தல் - மேன்மேலுண்டாதல். (எ)

ரு௪௭.

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(இ - ள்.) முறைசெய்து - (தான்) முறைசெய்து; காப்பு ஆற்றும் - (பிறர் நலியாமற்) காத்தலையுஞ் செய்யும், மன்னவன் - அரசன், மக்கட்கு இறை என்று வைக்கப்படும் - (பிறப்பான் மகனேயாயினும் செயலான்) மக்கட்குக் கடவுளென்று வேறுவைக்கப்படும்; (எ - று.)

முறை - அறநூலும் நீதிநூலும் சொல்லும் நெறி. பிறர் என்றது, மேற் சொல்லியாரை. வேறுவைத்தல் - மக்களிற்பிரித்து உயர்த்துவைத்தல்.

(கு - ரை.)

புறப்பகைவரும்.

முறை செய்து - நீதியை நடத்தி. பிறர் - அகப்பகைவரும்

பிறப்பான் மகனேயாயினும் - ஜந்மத்தால் மனிதனேயாறு லும், செயலான் - தொழிலால். மக்கட்கு-மனிதர்க்கு. வேறுவைக்கப்படும்-

தனியே சிறப்பித்து மதிக்கப்படுவான். அறநூல் - தருமசாஸ்திரம். நீதிநூல்-

* பி - ம்: விளைவினும்,

2

௧0

திருக்குறள்

நீதிசாஸ்திரம். மேற்சொல்லியாரை என்றது,'தன்பரிவாரத்தானும் பகைவரா னும்' என முன்பாட்டிற் கூறப்பட்டவரை. காப்பு ஆற்றும் - காத்தலைச் செய்யும். "அனைவோர்க்குந் தெய்வம், இலைமுகப் பைம்பூணிறை" எனப் பின்னுள்ளார்கூறியதுங் காண்க. இக்குறளின்கருத்து கௌடில்யர் அர்த்தசாஸ் திரத்தில் வந்துள்ளது.

(அ)

௩௮௯. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(இ - ள்.) சொல்-(இடிக்குந் துணையாயினர்)சொற்களை, செவி கைப்ப- (தன்) செவி

பொறுதாகவும், பொறுக்கும் - (விளைவுநோக்கிப்) பொறுக்கும், பண்பு உடை - பண்புடைய, வேந்தன் - அரசனது, கவிகை கீழ் - குடைநிழற்கண்ணே, தங்கும்—, உலகு - உலகம்; (எ - று.)

'செவிகைப்ப' என்றதற்கு ஏற்ப, 'இடிக்குந்துணையார்' என்பது வருவிக் கப்பட்டது. நாவின் புலத்தைச் செவிமேல் ஏற்றி, 'கைப்ப' என்றார். பண்புடைமை - விசேடவுணர்வினனாதல். *அறநீதிகளில் தவறாமையின், மண்முழுதுந் தானே ஆளும் என்பதாம்.

(கு - ரை.) இடிக்குந் துணையாயினார் சொற்களை - தன்னை நெருக்கித் தனக்கு அறிவுகூறுந் துணைவரான அமைச்சர் புரோகிதர் முதலிய பேரறிவுடையார் சொல்லும் வார்த்தைகளை; "இடிக்குந்துணையாரை யாள்வாரை யாரே, கெடுக்குந் தகைமை யவர்" என்பர், மேல் பெரியாரைத்துணைக்கோடல் என்னும் அதிகாரத்தும். தன் செவி பொறுதாகவும் - தன்காது கேட்கச் சகியாததாகவும். விளைவுநோக்கிப் பொறுக்கும் - அவற்றாலுண்டாகும் நற்பயனை நோக்கிக் கேட்டுப் பொறுக்கிற; இதனால், "இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார், கனியுமொழியுங் கடுவே—அனல் கொளுந்தும், வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச், சிங்கி குளிர்ந்துங்கொலும்"என்றபடி இதமானவார்த்தை அப்ரியமாயிருப்பினும் அதனைக்கொள்ளல் வேண்டுமென்க.

பண்பு - நற்குணம். குடைநிழற் கண் 'என்றது, அரசாட்சியின்கீழென்றபடி. உலகம்-உலகமுழுவது மென்க. இடிக்குந்துணையார் - உறுதிகூறுவோர். செவி வெறுப்ப என்ன வேண்டியவிடத்துச் செவிகைப்ப என்றது, ஒருவகை உபசாரவழக்கு. இதனால், செவிபொருதாக எனப்பட்டது. புலத்தை-உணர்ச்சியை. அறநீதிகளில் - தருமத்திலும் நீதியிலும். கவிகை - கவிதலையுடையது; குடைக்குத் தொழிலாகுபெயர். அரசாட்சியைக் குடையென்பது, கவிமரபு. 'மருளறு காரணங் காரியம் பேரொடு வந்துறழும், இருளறுமொண்குணப்பேர் குணிப்பேர் * வினையோடியையும், பொருள்வினை மற்றோர்பொருளினுந் தோன்றும் புலத்தொடுமாம், தெருளுறு பண்பு புலனிவை மாறியுஞ் சேர்ந்திடுமே'' என்னும்

* பி - ம்: அறநீதிகளில் தவறுமையானும் இடிக்குந்துணையாயினர் துணையுடைமையானும்.

ட௯ - ஆம் அதிகாரம்.—இறைமாட்சிக்க்

பிரயோகவிவேகவிதியையும், 'இன்சொல், வன்சொல், மதுரகவி, செவி கைப்பச் சொற்பொறுக்கும் என்னும் உபசாரங்களெல்லாம் பண்பு புலன்மாறி வந்தன' என்ற அதன் உரையின் பகுதியையும் இங்கே யுணர்க. ''நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பது'', ''மைத்தாரை மாரி

யொப்பார் மானுட னாற் றங் கேட்டு'' என்பனவும் இதன் இனமாம். (௬) ௩௯௦.

கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.

(இ - ள்.) கொடை - (வேண்டுவார்க்கு வேண்டுவன) கொடுத்தலும், அளி - (யாவர்க்குந்) தலையளிசெய்தலும், செங்கோல் - முறைசெய்தலும், குடி ஓம்பல் - (தளர்ந்த) குடிகளைப் பேணலும், நான்கு உம் - (ஆகிய) இந் நான்குசெயலையும், உடையான் - உடையவன்,—வேந்தர்க்கு ஒளி ஆம்-வேந் தர்க்கெல்லாம் விளக்காம்; (எ - று.)

தலையளி - முகமலர்ந்து இனியகூறல். செவ்விய கோல் போறலின், செங்கோ லெனப்பட்டது. குடியோம்பல் என எடுத்துக் கூறினமையால், தளர்ச்சிபெற்றும்; அஃதாவது-ஆறில் ஒன்றாய பொருள்தன்னையும் வறுமை நீங்கியவழிக் கொள்ளல்வேண்டின் அவ்வாறு கோடலும், *இழத்தல் வேண்டின் இழத்தலுமாம். சாதிமுழுதும் விளக்கலின், 'விளக்கு' என்றார். ஒளி - ஆகுபெயர்.

இவையைந்துபாட்டானும், மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன.

(கு - ரை.) தலையளி - மிக்க அன்பு. முறை செய்தல் - நீதி தவறாது ஆளுகை செலுத்துதல். பேணல்-விரும்பிப்பாதுகாத்தல். பெயர்ச்செவ்வெண் நான்கு

என்ற தொகை பெற்றது; உம்மை-முற்றுப்பொருளது. ஒளி-ஒளியை யுடைய விளக்குக்குப் பண்பாகுபெயராய், விளக்குப்போன்றவ னென்ற பொருளில் உபசாரவழக்காம். விளக்கு பொருள்களைவிளங்கச்செய்வது போல, இவன் அரசச்சாதிமுழுவதையும் விளங்கச்செய்வ னென்க. இனிய - நல்வார்த்தைகளை. செவ்விய கோல் போறலின் - கோணலில்லாத கோல்போல இருத்தலால். செங்கோல் - உவமவாகு பெயர்; இதன் எதிர் மொழி - கொடுங்கோல்: அது - கோணியகோல் போல நீதி தவறுவது. 'செங்கோன்மையாவது - அரசனாற்செய்யப்படும் முறையினது தன்மை; அம்முறை, ஒருபாற்கோடாது செவ்வியகோல் போறலின் செங்கோ லெனப் பட்டது; வடநூலாரும் தண்டம் என்றார்' எனவும், 'கொடுங்கோன்மை யாவது - அம்முறையினது கோடுதற்றன்மை; ஈண்டும் உவமையின் பெயர் பொருள்மே லாயிற்று'எனவும், மேல் 'செங்கோன்மை', 'கொடுங்கோன்மை' என்னும் அதிகாரங்களில் உரைப்பவற்றை அறிக. குடிகொண்டு பாது காத்தற்குரியது தளர்ந்த குடியே யாதலால், அவ்வடைமொழி வருவிக்கப்பட் டது. கீழ் 'இல்வாழ்க்கை' என்னும் அதிகாரத்தில் ''தென்புலத்தார்

---

* பி-ம்: வறுமை நீங்காவழி இழத்தல் வேண்டின்.

தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு, ஐம்புலத்தாறு ஓம்பல் தலை'' என்றபடி பிதிருக்கள், தேவர்கள், விருந்தாளிகள், சுற்றத்தார், தான் என்று சொல்லப்பட்ட ஐவர்க்குஞ் செய்யத்தக்க கடமைகளைச் செய்வதற்கு ஐந்துபாகம் வேண்டுதலால், குடிகளது வருவாய்ப்பொருளுள் ஆறிலொரு பாகமே அரசனுக்கு இறைப்பொருளாயிற்று; 'அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று, இவ்வைம்புலத்துக்கும் ஐந்துகூறுவேண்டுதலான் என்பதறிக' என்று அங்கு உரைத்துப்போந்தார். இங்கே "ஆறிலொன் றற மெனவருளினல்ல தொன்று, ஊறுசெய் துலகினுவப்பதில்லையே'' என்ற சூளாமணியையும் உணர்க. "குடிதளர்வுற்றகாலைக் கொள்பொருளாறிலொன்றும், விடுவது செய்து'' என்றது, விநாயக புராணம். கோடல்- கொள்ளுதல். மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன - இறைமாட்சியும் அதனாலாகும் பிரயோசனமும் ஒருங்கு சொல்லப்பட்டன. (௩0)

# ச0 - ஆம்

## அதிகாரம்.—கல்வி.

அஃதாவது - அவ்வரசன் தான் கற்றற்குஉரிய நூல்களைக் கற்றல். அவையாவன - அறநூலும், நீதிநூலும், யானை குதிரை தேர் படைக்கலம் என்றிவற்றின் நூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையனுயக்கால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல்நோக்கி இஃது அரசியலுள் வைக்கப்பட்ட தாயினும், யாவர்க்கும் உறுதிபயத்தற் சிறப்புடைமையின் பொதுப்படக் கூறுகின்றார். மேல் "தூங்காமை கல்வி'' எனத் தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக்கூறுகின்றமையின், இஃது இறைமாட்சியின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) ஆயக்கால்-ஆனால். மன் உயிர்க்கும்-(உலகத்தில்) நிலைபெற்ற பிராணிகட்கும். உறுதிபயத்தற் சிறப்பு-நன்மை விளைத்தலாகிய பெருமை. மேல் - முன்னதிகாரத்தில் மூன்றுஞ்செய்யுளில். தோற்றுவாய்-தொடக்கம்.

ருகூக. கற்க கசடறக் கற்பவை கற்றபி
ணிற்க வதற்குத் தக.

(இ - ள்.) (ஒருவன்),—கற்பவை - கற்கப்படும் நூல்களை, கசடு அற -
யழுதற, கற்க—; கற்றபின்-(அங்ஙனம்) கற்றால், அதற்கு தக-அக்கல்விக்குத்
தக, நிற்க - (அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே) நிற்க; (எ - று.)

'கற்பவை'என்றதனன், அறம் பொருள் இன்பம் வீடுஎன்னும் உறுதிப் பொருள் உணர்த்துவனவன்றிப் பிறபொருளுணர்த்துவன சின்னாட்பல் பிணிச்சிற்றறிவினர்க்கு ஆகாவென்பது பெற்றும். கசடறக்கற்றலாவது - விபரீதஐயங்களைநீக்கி மெய்ப்பொருளை நல்லோர்பலருடனும் பலகாலும்பயிறல். நிற்றலாவது - இல்வாழ்வுழி "கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத், தருமமுந் தக்கார்க்கே செய்"தலினும், துறந்துழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும் வழுவாமை.

## சுo - ஆம் அதிகாரம்.—கல்வி கரு

சிறப்புடைமகற்காயின் கற்றல்வேண்டு மென்பதூஉம், அவனற்கற்கப் படும் நூல்களும் அவற்றைக் கற்குமாறும், கற்றதனற் பயனும் இதனற் கூறப்பட்டன.

(கு - ரை.) கற்கப்படும் - கற்றற்குரிய. பழுது அற - குற்ற மில்லாமல். கற்க - படிக்கக்கடவன்; வியங்கோள். அக்கல்விக்குத்தக - அந்தக்கல்வியறி விற்குப் பொருந்த; அக்கல்வி ஏட்டுச்சுரைக்காயாய்விடாமலென்றபடி. அவை - அந்தச்சாஸ்திரங்கள். நெறிக்கண்ணே - சன்மார்க்கத்தில். உறுதிப் பொருள் - புருஷார்த்தம்.

பிறபொருளுணர்த்துவன - உறுதிப்பொருளை யுணர்த்தாத களவு நூல் காமநூல்போல்வன. சில் நாள் பல் பிணிச் சிற்றறி வினர் - சில வாழ்நாளையும் அவற்றிற் பலவகை நோய்களையும் குறைவான அறிவையுமுடையவர். இங்கே "கல்விகரையில கற்பவர்நாள்சில, மெல்ல நினைக்கிற் பிணிபல - தெள்ளிதி, னாராய்ந்தமைவுடைய கற்பவே நீரொழி யப், பாலுண்குருகிற் றெரிந்து" என்ற நாலடியார்ச்செய்யுளை யறிக. விபரீதம் - திரிபுணர்வு: ஒன்றைமற்றொன்றாகமாறுபடஅறிதல். ஐயம் - சந்தேக வுணர்வு. பயிறல் -பயிலுதல், பழகுதல்.

இல்வாழ்வுழி-இல்லறத்தில்வாழ்கிற பொழுது. "கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத், தருமமுந் தக்கார்க்கே செய்யா" என்பது - நாலடியாரில் 'அறிவுடைமை' என்னும் அதிகாரத்தி லுள்ளது. (அறம் பொருள்களுக்குக் காரணமான) முயற்சிகளையும் உடன்பட்

டுச் செய்து (அவற்றா லுள்ளனவாகும்) இவ்வுலக இன்பங்களையும் அனுபவித்து (த் தானம்முதலிய) அறத்தொழில்களையும் (அறிவொழுக்கங்களால்) தகுதியுடையவர்க்கேசெய்து என்பது, முன்னிரண்டடியின் பொருள். துறந்துழி - இல்வாழ்க்கையைத் துறந்தபொழுது. மெய் உணர்தல் - பிறப்பு

வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களால் அன்றி உண்மையால் உணர்தல்; இதனை, வடநூலார் 'தத்த்வஞானம்' என்பர். அவா அறுத்தல்-அத்தத்துவஞானத்தால் ஆசையை யொழித்தல். சிறப்பு உடை-பெருமையுடைய: முத்தியடைதற்குஉரிய என்பாருமுளர். மகற்கு ஆயின்-மனிதனுக்காஞல். கற்கும் ஆறு - படிக்கும் வழி; 'கசடற' என்றது. கற்றதனுற்பயன்- அறமாதியான உறுதிப்பொருளை யுணர்த்தும் நூல் கூறும் வழியிலே நிற்றல்.

௩௯௨.

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(இ - ள்.) (அறியாதார்), எண் என்ப-எண்ணென்று சொல்லுவனவும், ஏனை எழுத்து என்ப - மற்றையெழுத்தென்றுசொல்லுவனவும், இ இரண்டு உம் - ஆகிய கலைகளிரண்டனையும்,—(அறிந்தார்),—வாழும் உயிர்க்கு - சிறப் புடையுயிர்கட்கு, கண் என்ப - கண்ணென்று சொல்லுவார்; (எ - று.)

எண் என்பது-கணிதம்; அது-கருவியும், செய்கையும் என இருவகைப்படும்; அவை ஏரம்பம் முதலிய நூல்களுட் காண்க. எழுத்து எனவே, அதனோடு ஒற்றுமையுடைய சொல்லும் அடங்கிற்று. இவ்விருதிறமும் அறமுதற் பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின், கண்ணெனப்பட்டன. அவை

கருவியாதல் "ஆதி முதலொழிய வல்லாதன வெண்ணி,
வீதிவழுவா தில்
மையவான் - மாதே, யறமார்பொருளின்பம்
வீடென்றிவற்றின், றிறமாமோ
வெண்ணிறந்தாற் செப்பு," "எழுத்தறியத்தீரு
மிழிதகைமை தீர்ந்தான்,
மொழித்திறத்தின் முட்டறுப்பானகு-மொழித்திறத்தின், முட்டறுத்த நல்
லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடுபெறும்" இவற்றான்
அறிக. 'என்ப' என்பவற்றுள், முன்னைய இரண்டும் - அஃறிணைப்பன்மைப்
பெயர்; பின்னது - உயர்திணைப்பன்மைவினை.
அறியாதார், அறிந்தார் என்
பன - வருவிக்கப்பட்டன. சிறப்புடையுயி ரென்றது,
மக்களுயிருள்ளும்
உணர்வு மிகுதியுடையதனை.
இதனுன், கற்கப்படும் நூல்கட்குக் கருவியாவனவும்
அவற்றது இன்றி
யமையாமையுங் கூறப்பட்டன.
(கு - ரை.) அறியாதார் - ஆய்ந்து உணராதார்.
இப்படிப்பட்டவர்களுக்
கும் எண்ணும் எழுத்தும் பிரசித்தமாகத்தெரியு
மென்பதை விளக்குதற்கு,

இதனை வருவித்தார். கலைகள் - சாஸ்திரங்கள், அறிந்தார் என வருவித்தது, அவர்கள்வார்த்தை ஏற்றுக்கொள்ளத்தக்க தென்பதற்கு. கருவி - காரணமாவது. செய்கை - காரியப்படுவது. இவ்விருதிறமும் அறமுதற்பொருளைக் காண்டற்குக் கருவியாகலின்-என்னும் எழுத்தும் தருமம் முதலிய புருஷார்த்தங்களைக் கண்டறிதற்கு உதவுதலால். "கண்ணிற் சிறந்தவுறுப்பில்லை" ஆதலால், கண்ணையே கூறினர். அவை-எண்ணும் எழுத்தும். மேற்கோட் செய்யுளிரண்டனுள், முதற்செய்யுளுக்கு - பெண்ணே! ஆதிப் பொருளால் [கடவுளால்] வெளியிடப்பட்ட முதனூலை [வேதத்தை]த் தவிர மற்றவற்றை யாராய்ந்தால் அவை நியாயத்தவறுருந் தன்மையுடையன; ஆதலால், (முதனூலை ஆராயுமிடத்து) எண்ணென்கிற சாஸ்திரத்தை விட்டால் வேறுவழியால் தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்னும் இவற்றின் நிறைந்த பகுப்புக்களை அறிய முடியுமோ? சொல்லு' என்று பொருள். மாதே - மகடூஉமுன்னிலை. ஓ-எதிர்மறை; அறியமுடியா தென்றபடி. இரண்டாஞ் செய்யுளுக்கு - 'எழுத்தென்னுஞ்சாஸ்திரத்தை யறிய அறியாமை நீங்கும், நீங்கினல் சொற்பகுப்புக்களின் குற்றத்தை யொழித்தவனவன்; அங்ஙனம் சொற்பகுப்புக்களின்குற்றத்தையொழித்த நல்லறிவுடையவன்,ஆதியான வேதாகமங்களின் பொருளையறிந்து பாசபந்தத்தையொழித்து முத்திபெறுவான்' என்று பொருள்.முதலடியில்என்ப-பலவின்பால் வினையாலணையும்பெயர். இரண்டாமடியில் என்ப-பலர்பால்வினைமுற்று. மக்கள் - மனிதர். இன்றியமையாமை- இல்லாமல் முடியாமை; அவசியமாதல். ஏனை-வேறென்னும் பொருள்தரும் இடைச்சொல். எண்என்பது - தருக்கநூலுக்கும், எழுத்தென்பது-இலக்கண நூலுக்கும் பெயராம்; (அதனை "எண்ணு மெழுத்துங் கண்ணிவை யாய்ந் திந் நூற்பயனைக், கண்ணுக காண்பார்நற்கதி", "காண்டலனுமானங் கதையருத் தாபத்தியிவை, யீண்டிசைத்த வெண்ணெனவேயெண்," வழுப்பதத்தை வாக்கினுக்கு மாற்றி வரமாக்கும், எழுத்தெழுவாயைந்து மெழுத்து என்னும்

பரமதிமிரபானுத்திருக்குறள்களா னுணர்க.) "காணதம் பாணிீயஞ்ச ஸர்வ ஶாஸ்த்ரோபகாரகம்" என்னும் வடநூன்மேற்கோளாலும், தர்க்கவியாகரணங்கள் கற்கும் நூல்களெல்லாவற்றிற்கும் கருவியாதலே விளங்கவறிக.

இங்ஙன் தருக்கமே பிரதானமாக இருப்பதால் தருக்கத்தைக் கணிதத்திலடக்கி, எண்ணென்பது கணிதம் என்றாரென்க. எண் - ஆராய்ச்சி, முதனிலைத்தொழிற்பெயர்: இது - ஆராய்தலேயுடையநூலுக்கு ஆகுபெயர். எழுதப்படுவது, எழுத்து; இதுவும் - அதனிலக்கணத்துக்கு ஆகுபெயராம். காண்பது, கண். "எண்ணெழுத்திகழேல்", "எண்ணுமெழுத்துங் கண்ணெனத் தகும்" என்பன, ஔவையார் அமுதமொழி.

(உ)

௩௯௩. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(இ - ள்.) கண் உடையர் என்பவர் - கண்ணுடையரென்று உயர்த்துச்

சொல்லப்படுவார், கற்றோர் - கற்றவரே; கல்லாதவர் - (மற்றைக்) கல்லாத
வர், முகத்து-முகத்தின்கண், இரண்டு புண்
உடையர்—[கண்ணிலர்]; (எ-று.)
தேயமிடையிட்டவற்றையுங்
காலமிடையிட்டவற்றையுங் காணும்
ஞானக்கண்ணுடைமையிற் கற்றாரை
'கண்ணுடையரென்பவர்' என்றும்,
அஃதின்றி நோய் முதலியவற்றால் துன்பஞ்செய்யும் ஊனக்கண்ணே
யுடைமையிற் கல்லாதவரை 'புண்ணுடையர்' என்றும் கூறினார்.
மேல் கண்ணன்மைஉணரநின்ற ஊனக்கண்ணின் மெய்ம்மை கூறிய
வாற்றான், பொருள்நூல்களையுங் கருவிநூல்களையுங் கற்றாரது உயர்வும் கல்
லாதாரது இழிவும் இதனான் தொகுத்துக்கூறப்பட்டன.
(கு - ரை.) தேயம் இடையிட்டவற்றையும்- தாம் இருக்கும் இவ்விடத்தி
லில்லாமல் வெவ்வேறிடத்தி லுள்ளவற்றையும்; எல்லாவிடத்துப்பொருள்
களையும் என்றபடி. காலம் இடையிட்டவற்றையும் - தாமுள்ள இக்காலத்தி
லல்லாமல் வெவ்வேறு காலத்திலுள்ளவற்றையும்; எல்லாக்காலத்திலுள்ள
வற்றையும் என்றபடி. ஊனக்கண், வடமொழியில்

மாம்ஸசக்ஷுஸ் எனப்
படும். மேல் - முன்பாட்டில். கண்ணன்மை உணர
நின்ற - கண்ணல்லாத
தன்மை தெரியநின்ற. மெய்ம்மை - உண்மையான
தன்மை. பொருள் நூல்
கள் - அறநூல் முதலியன. கருவி நூல்கள்-தருக்கம்
முதலியன. தொகுத்து-
சுருங்கச்சேர்த்து. என்பவர் என்பது, உயர்வுதோன்ற
நின்றது. (ங)

ஙகூச. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(இ - ள்.) உவப்ப - (யாவரையும்) அவர்
உவக்குமாறு, தலைக்கூடி -
தலைப்பெய்து, உள்ள-(இனி இவரை யாம் எங்ஙனங்
கூடுதும் என) நினைய
மாறு, பிரிதல் - நீங்குதலாகிய, அனைத்து -
அத்தன்மைத்து, புலவர்
தொழில் - கற்றறிந்தாரது தொழில்; (எ - று.)

தாம்நல்வழியொழுகல், பிறர்க்குஉறுதிகூறல் என்பன இரண்டும் தொழில்என ஒன்றாய் அடங்குதலின், 'அத்தன்மைத்து' என்றார். அத்தன்மை - அப்பயனைத்தருந்தன்மை. நல்லொழுக்கங்காண்டலானும், தமக்கு மதுரமும் உறுதியுமாய கூற்றுக்கள் நிகழ்வு எதிர்வுகளின் இன்பம்பயத்தலானும், கற்றார்மாட்டு எல்லாரும் அன்புடையராவ ரென்பதாம்.

இதனான், கற்றாரதுஉயர்வு வகுத்துக்கூறப்பட்டது.

(கு - ரை.) அவர் உவக்குமாறு தலைப்பெய்து - அவர்கள்மகிழும்படி கலந்து அளவளாவி. எங்ஙனம் கூடுதும் - எவ்வாறு சேர்வோம்? எங்ஙனம் - எவ்விடத்தில், எப்பொழுது என்றுமாம். தாம்-(கற்றறிந்தாரான)தாம். உவப்பத்தலைக்கூடுதல் உள்ளப்பிரிதல் என்ற இரண்டும் தொழில் என ஒன்றில் அடங்குவதனால், அதற்கு ஏற்ப அனைத்து என ஒருமைமுடிபு கொடுக்கப்பட்டது. நல்லொழுக்கங் காண்டலானும் - (அவரது) நல்லொழுக்கத்தைக் காணுதலாலும். கூற்றுக்கள் - சொற்கள். பிரியமானவார்த்தை அப்பொழுது இன்பந்தரும்: இதமானவார்த்தை பிற்காலத்தில் இன்பந்தரும். வகுத்து - பிரித்தெடுத்து. உவப்ப, உள்ள என்னும் வினையெச்சங்கள் - காரியப்பொருளன வாதலின், எதிர்காலத்தன. ஏ - ஈற்றசை. தலைக்கூடி யென்பதில், 'தலை' என்பது - தமிழுபசர்க்கம்.

(சு)

௩௯௫. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(இ - ள்.) ("பிற்றைநிலைமுனியாது கற்றல் நன்று" ஆதலால்), உடையார்முன் - செல்வர்முன், இல்லார்போல் - நல்கூர்ந்தார்(நிற்குமாறு)போல, ஏக்கற்றுஉம் - (தாமும் ஆசிரியர்முன்) ஏக்கற்றுநின்றும், கற்றார்—, (தலையாயினார்); கல்லாதவர் - (அந்நிலைக்குநாணிக்) கல்லாதவர், கடையர்ஏ-(என்ஞான்றும்) இழிந்தாரேயாவர்; (எ - று.)

உடையார், இல்லார் என்பன - உலகவழக்கு.

ஏக்கறுதல் - ஆசையால்

தாழ்தல். 'கடையர்' என்றதனன், அதன் மறுதலைப்பெயர் வருவிக்கப்

பட்டது. பொய்யாய மானம் நோக்கி மெய்யாய கல்வி யிழந்தார் பின் ஒரு

ஞான்றும் அறிவுடைய ராகாமையின், 'கடையரே' என்றார்.

இதனன், கற்றாரதுஉயர்வும் கல்லாதாரதுஇழிவும் கூறப்பட்டன.

(கு - ரை.) "பிற்றைநிலை முனியாது கற்றல் நன்று" என்னும் மேற்கோள் - புறநானூறு, கஅங - ஆம் பாட்டி லுள்ளது; 'வழிபாட்டுநிலைமை

யைவெறுது கற்றல் (ஒருவர்க்கு)

நல்கூர்ந்தார் - வறியவர். ஏக்கற்று

அழகிது' என்பது - இதன்பொருள்.

- விரும்பிக் கீழ்ப்படிந்து; ஏக்கறு என்

னும் பகுதி தன்னொற்றிரட்டி இறந்தகாலங்காட்டிய வினையெச்சம். அந்நிலைக்கு - வழிபாடுசெய்யும்நிலைமைக்கு. நாணி - வெட்கமுற்று. உலகவழக்குப்

பற்றி, உடையார்என்பது - பொருளுடையவர்மேலும், இல்லார் என்பது - பொருளில்லாதவர்மேலும் நின்றதென்க. 'கடையர்' என்றதனன்-பின்வாக்கி

யத்தில் 'கடையர்' என வந்ததனுல் என்றபடி; அதன்மறுதலைப்பெயர் வருவிக்கப்பட்டது - அதன்எதிர்மொழியாகிய தலையாயினுரென்பது முன்வாக்கியத்தில் வருவித்து முடிக்கப்பட்டது; இங்ஙனம் மறுதலைப்பெயர் வருவிக்கும் மரபை "பிறவிப்பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடிசேராதார்" என்ற குறளில் 'சேர்ந்தார்'என வருவித்ததனுலுங் காண்க. இது, சொல்லெச்சத்தின்பாற்படும். கற்றூர் தலையாயினுரென்ற விடத்து "கடைநிலத்தோராயி னுங் கற்றுணர்ந்தோரைத், தலைநிலத்து வைக்கப்படும்", "வேற்றுமைதெரிந்த நாற்பாலுள்ளும், கீழ்ப்பாலொருவன் கற்பின், மேற்பாலொருவனுமவன்கட்படுமே" என்பன காண்க. பொய்யாய - நிலையில்லாத. மெய்யாய - நிலையான. ஏ - தேற்றம். ஏக்கற்றும், உம் - இழிவுசிறப்பு. இனி, உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றூலும், கற்றூர் கடையராவரோ? ஆகார்; ஏனைக் கல்லாதவரே கடையர் என்ற கருத்துப்பட உரைத்தலும் ஒன்று. "இல்லார், குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றூமுந், தலைவணங்கித் தாழப்பெறின்" என்றதை இக்குறளோடு ஒப்பிடுக. இக்குறளில் முரண்தொடை காண்க. (ரு)

௩௯௬. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

(இ - ள்.) மணல் கேணி - மணலின்கட் கேணி, தொட்ட அனைத்து ஊறும் - தோண்டிய அளவிற்றூக ஊறும்; (அதுபோல),

மாக்தர்க்கு அறிவு -
மக்கட்குஅறிவு, கற்ற அனைத்து ஊறும் - கற்ற
அளவிற்ருக ஊறும்; (எ-று)

எண்டு, 'கேணி' என்றது, அதன்கண் நீரை.
'அளவிற்ருக' என்றது
அதனளவுஞ்செல்ல என்றவாறு. சிறிதுகற்றதுணையான்
அமையாது, மேன்
மேற் கற்றல்வேண்டுமென்பதாம். இஃது ஊழ்
மாறுகொள்ளாவழியாகலின்,
மேல் "உண்மையறிவே மிகும்" என்றதனேடு மலேயாமை

அறிக.

(கு - ரை.) கேணி-சிறுகுளம்;
சிறுகுளத்தைக்கேணியென்பது, கொடுந்
தமிழ்நாடு பன்னிரண்டனுள் அருவாநாட்டில்வழங்குந்
திசைச்சொல் என்
பர்; [நன். பெயர். கரு.] ஊறும்-நீர்சுரக்கும். இங்கே
கேணியென்பது-அதனி
டத்திலுள்ள நீருக்கு இடவாகுபெயர்.
அதனளவுஞ்செல்ல-அந்தத்தோண்டிய
வரையும் பொருந்த. தோண்டிய அளவுக்கேற்ப மணலில்
நீர்சுரப்பதுபோல,
படித்தவளவுக்கேற்ப மனிதரிடத்து அறிவு வளருமென்க.
இதனை ஒருசாரார்
எடுத்துக்காட்டுவமையணி யென்ப;

தொடர்முழுதுவமையணி அல்லது மறு
பொருளுவமையணி என்ப மற்றொருசாரார்.
சிறிதுகற்றதுணையான் அமை
யாது-கிஞ்சித்துப்படித்தமாத்திரத்தாற்போதாது.
அமையாது-திருப்திப்படாமல் எனினுமாம். கீழ்
"நுண்ணியநூல்பலகற்பினுமற்றுந்தன், உண்மை
யறிவே மிகும்" என்ற குறளில் எவ்வளவுபடித்தாலும்
விதிவசத்தாலாகிய
அறிவே மேற்படும் என்று கூறியதனோடு, இங்கே
படிக்கப்படிக்க அறிவு
வளருமென்று கூறியது, மாறுகோளக்கூற லென்னுங்
குற்றத்தின்பாற்
படாது பொருந்துமாறு எங்ஙனமெனின்,—ஊழ்வினை
3
நல்லதாகவிருக்கிற



வரையில் படிப்புக்கேற்ப அறிவுவளர்தலைக்கூறியது இதுவென்றும், முன்
கூறியது ஊழ் நல்லதல்லாவிடத்து உள்ளநிலைமை யென்றும் வேறுபாடு
அறிக. இஃது - கல்வியறிவுமிகுதல். ஊழ்மாறுகொள்ளாவழி - விதிவித்தி
யாசப்படாதபோது. மேல் - ஊழ் என்னும் அதிகாரத்தின்
மூன்றாம் பாட்டில். மலையாமை - மாறுபடாமை.
தொட்டனைத்து, கற்றனைத்து என்பவை-அகரம்
தொக்கன. "தாங்கற்ற, நூலளவே யாகுமா நுண்ணறிவு"

என்பதனோடு இக்குறட்பாவை ஒப்பிடுக.

(ரு)

௩௯௭. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(இ - ள்.) (கற்றவனுக்குத் தன்நாடும் தன் ஊருமேயன்றி), யாது ஆன் உம் நாடு ஆம் ஊர் ஆம் - யாதானும் ஒருநாடும் நாடாம் யாதானும் ஒரூரும் ஊராம்; (இங்ஙனமாயின்), ஒருவன்—, சாம் துணை உம் - (தான்) இறக்கு மளவும், கல்லாத ஆறு - கல்லாதுகழிகின்றது, என் - என்கருதி? (எ - று.)

உயிரோடு சேறலின், 'சாந்துணையும்' என்றார். பிறர்நாடுகளும் ஊர் களும் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்துசெய்தற்கு ஏதுவாகலின், கல்விபோலச்சிறந்தது பிறிதில்லை, அதனையே எப்பொழுதுஞ் செய்க என்பதாம்.

(கு - ரை.) ஆனும் - ஆயினும் என்பதன் விகாரம். நாடாம் - சொந்த நாடாகும். ஊராம் - சொந்த ஊராகும். இங்ஙனம் ஆயின் - இப்படியிருக்கவும் என்றபடி. கல்லாதுகழிகின்றது - படியாமற்செல்கின்றது. உயிரோடு சேறலின் - கல்வியறிவு உயிருடன்செல்லுமாதலால்; செல்வப்பொருள் போலக் கல்விப்பொருள் உயிருடன்செல்லாமல் இங்கே தனித்துநிற்பதன் றென்க. தமபோலஉற்று - தம்முடையன போல இருந்து. பொருட்கொடை யும் - செல்வங்கொடுத்தலையும். பூசையும் -

உபசாரணையையும். உவந்து-மன மகிழ்ந்து. அதனையே செய்க - படித்தலையே செய்க. ஆல்இரண்டும் - அசை கள். என் - எவன்என்பதன்விகாரம். சாம்-சாகும்
என்னுஞ்செய்யுமெனெச் சத்து ஈற்றுயிர்மெய் கெட்டது. சாந்துணையும் என்றஉம்மை - இழிவையும் விளக்கும். 'உயிரோடுசேறலின்' என்றதன் கருத்து, அடுத்த கவியில் நன்கு விளங்கும். "ஆற்றவுங்கற்றா ரறிவுடையா ரஃதுடையார், நாற்றிசையுஞ்
செல்லாத நாடில்லை -
றுணை வேண்டுவதில்,"

அந்நாடு, வேற்றுநா டாகா தமவேயா மாயினு, லாற்
"மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின், மன்ன னிற் கற்றோன் சிறப்புடையன் - மன்னனுக்குத், தன்றேசமல்லாற் சிறப் பில்லை கற்றோற்குச், சென்றவிடமெல்லாஞ் சிறப்பு" என்பவற்றோடு இக் குறட்பாவை ஒப்பிடுக. இக்குறளை 'விறுதல்' என்னுந் உதாரணங்காட்டுவர், வீரசோழியவுரைகாரர்.

தந்திரவுத்திக்கு
(எ)

௩௯௮. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, தான்—, ஒருமைக் கண்-ஒருபிறப் பின்கண், கற்ற—, கல்வி—, எழுமைஉம் - எழுபிறப்பினும் (சென்று), ஏமாப்பு - உதவுதலை, உடைத்து—; (எ - று.)

வினைகள்போல உயிரின்கட்கிடந்து அது புக்குழிப் புகுமாகலின், 'எழு மையு மேமாப்புடைத்து' என்றார். எழுமை, மேலே கூறப்பட்டது. உதவு தல் - நல்நெறிக்கண் உய்த்தல்.

(கு - ரை.) வினைகள்போல - கருமங்கள்போல. அது புக்குழிப் புகும்- உயிர் சென்றவிடத்துத் (தானும் விடாது) தொடர்ந்துசெல்லும்; கருமம் உயிர்புக்குழிப்புகுதலை "எனைப்பகையுற்றாரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" என்ற குறளாலும் அறிக. 'மேலே கூறப்பட்டது' என்றது- "எழுபிறப்புந் தீயவைதீண்டா" (62) என்ற இடத்துக் கூறப்பட்டதனை: இனி, ஒருசாரார் 'செய்ந்நன்றி' என்னும் அதிகாரத்தில் "எழுமை யெழுபிறப்பு முள்ளுவர்" என்றவிடத்து 'எழுமையென்றது - வினைப்பயன் தொடரும் எழுபிறப்பினை; அது-வளையாபதியுட்கண்டது' என்று உரைத்துப் போந்ததனை யென்ப. இதனால், ஒருவன் ஒருசன்மத்திற் செய்த கருமம் பின் ஏழுசன்மம்வரையிலுந் தான் அவனுயிரைத் தொடர்தல்கூடும் எனஅறிக. உய்த்தல்-செலுத்தல்.

எழுமையும், உம்மை - முற்றும்மை. இங்கே எழுமை என்றது - ஏழின் தன்மையைக்குறியாமல் ஏழென்னும் எண்ணையே குறித்தத

னல், இதிலுள்ள மைவிகுதி-தன்மைப்பொருள்விகுதியன்று; பகுதிப்பொருள் விகுதியாம்: இது-ஏழுபிறப்புக்கு எண்ணலளவையாகுபெயர்; ஒருமையென் பதும் இவ்வாறே. ஏமாப்புஎன்னுந் தொழிற்பெயரில், ஏமா - பகுதி; இது - அலமா, செம்மா, இறுமா, சோகா என்பனபோல ஒருசொல். இனி, ஏமம்ஆ அல்லது ஏமம்யா என்பது ஒருசொல்தன்மைப்பட்டு ஏமா என நின்றதென்றுங் கொள்ளலாம். ஏமமாதல் - உதவியாதல்.

ஏமம்யாத்தல்-உதவிபொருந்து தல். இக்குறட்பாவைக் கீழ் "ஒருமையுளாமைபோ லைந்தடக்கலாற்றின் எழுமையுமேமாப்புடைத்து" என்றதனோடு ஒப்பிடுக; 'ஒருமைக்கண் செய்த வினையின்பயன் எழுமைக்கண்ணுந்தொடருமென்பது இதனானறிக' என்று அங்கு உரைத்தார்.

(அ)

ருகூகூ. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(இ - ள்.) தாம் இன்பு உறுவது-தாம் இன்புறுதற்குஏதுவாகிய கல் விக்கு; உலகு இன்புற - உலகம்இன்புறுதலால், கண்டு - (அச்சிறப்பு) நோக்கி, கற்றறிந்தார்—, காமுறுவர் - (பின்னும் அதனையே)விரும்புவர்; (எ - று.)

தாம் இன்புறுத லாவது - நிகழ்வின்கண் சொற்பொருள்களின்சுவை நுகர்வானும், புகழ்பொருள்பூசை பெறுதலானும், எதிர்வின்கண் அறம் வீடுபயத்தலானும், அதனுன் இடையறாத இன்பம் எய்துதல். உலகுஇன்புறு தலாவது - இம்மிக்காரோடுதலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்



றேமென்றும், "யாண்டுபலவாகநரையிலமாயினேம்"என்றும் உவத்தல். 'செல்வமாயின், ஈட்டல் காத்தல் இழத்தல் என்றிவற்றால் துன்புறுதலும் பலரையும் பகையாக்கலும் உடைத்து'என அறிந்து அதனைக் காமுறாமையின் 'கற்றறிந்தார்' என்றும், கரும்பயிறத்குக் கூலிபோலத் தாமின்புறுதற்கு உலகின்புறுதல் பிறவாற்றான் இன்மையின் 'அதனையே காமுறுவர்' என்றுங் கூறினார்.

(கு - ரை.) தாம் - கற்றறிந்தாராகிய தாம். இன்புறுதற்கு - மகிழ்ச்சி யடைதற்கு. அதனையே - அக்கல்வியையே. 'தமதுமனத்தை மகிழ்விக்குங் கல்வியைத் தாம் கற்றதுகுறித்து உலகம்மகிழும் உயர்வை உணர்ந்து' என்பது - முதலடியின் கருத்து. நிகழ்வின்கண் - இம்மையில் என்றபடி. சொற்பொருள்களின் சுவை நுகர்வானும் - சொல்லின் இனிமையையும் பொருளின் இனிமையையுங் கண்டறிதலாலும். புகழ் பொருள் பூசை - கீர்த்தியையுஞ் செல்வத்தையும் மரியாதையையும். இங்கே "அறம்பொருளின்பமும் வீடும்பயக்கும், புறங்கடை நல்லிசையுநாட்டும் - உறுங்கவலொன், றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லை, சிற்றுயிர்க்குற்றதுணை" என்றதன்பொருளை யறிக. எதிர்வின்கண்-மறுமையில் என்றபடி. அறம்வீடுபயத்த லானும் - புண்ணியத்தையும் முத்தியையுங்

தருதலாலும். அதனுன்-அக்கல்வி யினுல். எய்துதல் - அடைதல். இம்மிக்காரோடு தலைப்பெய்து - இந்த மேம் பட்டவருடன் கூடி. யாண்டுபலவாக நரையிலமாயினேம் - பிராயங்கள் மிக் கனவானபின்பும் மூப்பில்லாதவராஞேம்; என்றது, கல்வியறிவுடையாரோடு கலந்ததனு லுண்டாகும் உற்சாகம்பற்றிய தென்க. மகிழ்ச்சியால் நரை யிலவாதல் நிகழ்தலையறிக.

"யாண்டுபலவாக நரையிலவாகுதல், யாங்காகிய ரெனவினவுதிராயின், மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர், யான்கண்டனைய ரென்னிளையரும் வேந்தனு, மல்லவைசெய்யான் காக்கு மதன்றலை, யான் றவிந்தடங்கியகொள்கைச், சான்ருேர்பலர்யான்வாழு மூரே" என்பது, புறநானூற்றுச்செய்யுள்; [இது, கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச் சென்ற பிசிராந்தையாரை 'கேட்குங்காலம் பல வாலோ? நரை நுமக்கு இல்லையாலோ?' என்ற சான்ருேர்க்கு அவர் சொற்றது.] அதனைக் காமுருமையின் - செல்வப்பொருளை விரும்பாமையால். கரும்பு அயிறற்குக் கூலிபோல - தாம் கரும்பைத்தின் றுமகிழ்தற்குப் பிறர் கூலியுங்கொடுத்தால் அதுபோல. பிறஆற்ருன் - வேறுஎந்தவகையாலும். இன்புறுவது என்ற இது - கல்வியாகிய காரணத்தின்மேல் நின்றது. உலகு- உலகத்தவர். காமுறு - காமமுறு என்பதன்விகாரம்.

(கூ) ௫00.

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு

மாடலல மறறை யவை.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, கேடு இல் விழு செல்வம் - அழி வில்லாத சீரிய செல்வமாவது, கல்வி—; மற்றையவை-அஃதொழிந்த மணி யும் பொன்னும் முதலாயின, மாடு அல்ல - செல்வமல்ல; (எ - று.)

சக - ஆம் அதிகாரம்.—கல்லாமை உக

அழிவின்மையாவது - தாயத்தார், கள்வர், வலியர், அரசர் என்றிவராற் கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம். சீர்மை-தக்கார்கண்ணே நிற்றல். மணி பொன் முதலியவற்றிற்கு இவ்விரண்டும் இன்மையின், அவற்றை 'மாடல்ல' என்றார். இவையிரண்டுபாட்டானும், கல்வியது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) சீரிய - சிறப்புடைய. தாயத்தார் - பங்காளிகள். வழிபட்டார்க்கு - தம்மைஅனுசரித்தவர்க்கு. கொடுத்துழி - கற்றுக்கொடுத்தவிடத்து என்றபடி. "வைப்புழிக்கோட்படா

வாய்த்தீயிற்கேடில்லை, மிக்கசிறப்பி
னரசர்செறின் வவ்வார், எச்சமெனவொருவன்
மக்கட்குச்செய்வன, விச்சை
மற்றல்லபிற", "இம்மையயக்குமாலீயக்குறைவின்றால்,
தம்மைவிளக்குமால்
தாமுளராக்கேடின்றால், எம்மையுலகத்தும் யாங்காணேங்
கல்விபோல், மம்ம
ரறுக்கு மருந்து" என்னும் நாலடியார்ப்பாடல்களை
இங்கேயறிக. தக்கார்கண்
ணேநிற்றல் - தகுதியுடையவரிடத்தில்
உண்டாகிநிலைபெறுதல். செல்வப்
பொருள்—பங்காளிகளாற் பகுத்துக்கொள்ளப்படும்,
திருடராற் கவர்ந்து
கொள்ளப்படும், வலியபகைவர்களாற்
பகுத்துக்கொள்ளப்படும், கோபங்
கொண்ட கொடுங்கோல்மன்னர்களால்
எடுத்துக்கொள்ளப்படும், அனுசரித்த
வர்க்குக் கொடுத்தாற் குறைவுபடும், பெரும்பாலும்
யோக்கியரிடத்து உண்
டாகி நிலைபெறாது; ஆதலால், 'மணி பொன்
இவற்றிற்கு இவ்விரண்டும்
இன்மையின்' என்றார். இவ்விரண்டும்-அழிவின்மையும்,
சீர்மையும். கேடு-
கெடு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். விழு -
விழுமம் என்னும்
உரிச்சொல்லின் விகாரம். மற்றையவை -

மற்றையென்னும் இடைச்
சொல்லடியாப் பிறந்த பலவின்பாற்
குறிப்புவினையாலணையும்பெயர்; "மற்
றையதென்னுங்கிளவிதானே, சுட்டுநிலையொழிய
இனங்குறித்தன்றே"
என்பது தொல்காப்பியம். 'பொருளென்னும்பெயர்
பொதுவாயினும், கல்
விப்பொருளினைமாத்திரம் அங்ஙனம் கூறாது,
நற்பொருள்***விழுமிய
பொருள் முதலாக யாதானும் ஓரடை கொடுத்தே கூறுவர்:
"கேடில் விழுச்
செல்வங் கல்வி" எனச் சிறுபான்மை
பலவடையுங்கொடுத்துக் கூறுவர்:
அக்கருத்துப் பண்டைநூல்களெல்லாவற்றுள்ளுங் காண்க'
என்பது இலக்
கணக்கொத்து. கலித்தொகையில் மருதக்கலியில் (உக)
ஒருகாரணம்நோக்கி,
செல்வப்பொருள் "வீதலறியாவிழுப்பொருள்" என்று
கூறப்பட்டுள்ளது:
அங்கு நச்சினார்க்கினியர் அதனை வழுவமைத்துள்ளார்.
(௧0)

சஉ - ஆம்

## அதிகாரம்.—கல்லாமை.

அஃதாவது - கற்றலைச் செய்யாமை; என்றது,
அதனின் ஆய இழி

பினை. கல்விச்சிறப்பு மேல் விதிமுகத்தாற் கூறிய துணையான் முற்றுப்
பெருமை நோக்கி, எதிர்மறைமுகத்தானும் கூறுகின்ற தாகலின், இது,
கல்வியின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) 'கல்லாமை'என்றது - படித்தற்குஉரிய நூல்களைப் படியா
மையினு லாகிய இழிவைக் கூறுவ

தென்றபடி. கல்வியைக் கீழ் அதிகாரத் உஉ

## திருக்குறள்

தில் உடன்பாட்டுவழியால் கற்கவேண்டுவது அவசிய மென்று கூறி, அத்னுேடு அக்கல்விச்சிறப்பு முடியாமையால், எதிர்மறைவழியால் கற்காமலிருப்பது தகுதியன்றென இவ்வதிகாரத்திற் கூறுகிறுர். கல்லாமை - கல்வியென்பதன் எதிர்மறை; அதனின் ஆய இழிபு - கல்லாமையினுலாகிய இழிவு. மேல் விதிமுகத்தாற் கூறிய துணையான் முற்றுப்பெருமை நோக்கி - முன் உடன்பாட்டு வழியாற் சொன்னமாத்திரத்தால் முடிவு பெருமையைக்கருதி. இது - கல்லாமை.

௪0௧. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(இ - ள்.) அரங்கு இன்றி-அரங்கினை இழையாது, வட்டு ஆடி அற்று- வட்டாடினுற்போலும்:—நிரம்பிய நூல் இன்றி - தான் நிரம்புதற்கு ஏதுவா கிய நூல்களைக் கல்லாது, கோட்டி கொளல் - (ஒருவன்) அவையின்கண் ஒன்றனைச்

சொல்லுதல்; (எ - று.)

அரங்கு - வகுத்த தானம்;

வட்டாடல்-உண்டையுருட்டல்: இவை "கட் டளை யன்ன வட்டரங்கிழைத்துக், கல்லாச் சிறுஅர் நெல்லிவட்டாடும்" என் பதனுன் அறிக.

நிரம்புதல்-அறியவேண்டுவனவெல்லாம்அறிதல். 'கோட்டி' என்பது - ஈண்டு, ஆகுபெயர்; "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங் கோட்டி" என்புழிப்போல. சொல்லும் பொருளும் நெறிப்படா வென்பதாம்.

(கு - ரை.) அரங்கினை இழையாது - உருட்டப்படுங்காய் சென்று நிற் றற்குஉரிய அறைகளை அமைக்காமல். அவையின்கண் - சபையிலே. ஒன் றனை - ஒருவிஷயத்தை. வகுத்ததானம் - உருட்டியகாய் சென்றுநிற்குமாறு குறிக்கப்பட்டஇடம்."கட்டளையன்ன"என்னும் மேற்கோள்-நற்றிணைநாற் றில்(௩) "ஈன்பருந் துயவும்வான்பொருநெடுஞ்சினைப், பொரியரைவேம்பின் புள்ளி நீழற், கட்டளையன்ன வட்டரங் கிழைத்துக், கல்லாச்சிறுஅர் நெல்லி வட் டாடும், வில்லேருழவர் வெம்முனைச் சீறூர்ச், சுரன் முதல்வந்த வுரன் மாய்மாலை, யுள்ளினெ னல்லனோ யானேயுள்ளிய, வினைமுடித்தன்னவினி யோண், மனைமாண் சுடரொடு படர்பொழுதெனவே" என்பதி லுள்ளது; 'அரசனது கட்டளைபோலத் தவறாத உருட்டிய உண்டை போய்நிற்றற்கு உரிய இடத்தை அமைத்துப்

படிப்பில்லாதசிறுபிள்ளைகள் நெல்லிக்காய்களைக் கொண்டு உண்டையுருட்டுதலாகிய விளையாட்டைச் செய்து வீண்காலங் கழிக்கும்' என்பது இம்மேற்கோளின்பொருள். இங்குக் கூறிய விளையாட்டு, கோலியாட்டம் போன்ற ஓர்விளையாட்டுஎன்க. கோட்டி - அங்குச்சொல்லப் படுஞ் சொல்லுக்கு, இடவாகுபெயர்; "புல்லா வெழுத்தின்" என்னும் மேற்கோள் - நாலடியாரில் 'மேன்மக்கள்' என்னும் அதிகாரத்தில் (ரு) உள்ளது: 'இலக்கணநூலோடு பொருந்தாததும் பொருட்சிறப்பில்லாமற்பாழ் பட்டதுமாகிய சபையிற் சொல்லும் ஒருவிஷயத்தை' என்று இம்மேற்கோளின் பொருள். ஈண்டு - இங்கு. என்புழி-என்றவிடத்து. சொல்லும் பொருளும் நெறிப்படா

- படியாதவன்சொல்லும்வார்த்தையில் சொல்லும் சரியா



யிராது, பொருளும் சரியாயிராது என்க. அரங்கின்றி வட்டாடுதல்போல, நிரம்பியநூலின்றிக் கோட்டிகொளல் தகாதென்பது கருத்து. வட்டாடுதற்கு அரங்கு இன்றியமையாதவாறுபோல, சபையில் ஒன்றைச் சொல்லு தற்கு நூலறிவு இன்றியமையாததென்க: தொழிலுவமையணி. அரங்கு - ரங்கம், கோட்டி - கோஷ்டீ; இவை-வடமொழித்திரிபுகள். ஆடினல் என்னும்

எதிர்காலவினையெச்சம், ஆடஎன இறந்தகாலவினையெச்சமாத் திரிந்து நின்றது; "சொல்திரியினும் பொருள்திரியா வினைக்குறை" என்றவிதியால். இனி, ஆடியதற்று என்பது, ஆடியற்றுஎனத் தொகுத்தல்விகாரப்பட்டதென்றுங் கொள்ளலாம். அற்று - அன்என்னும் உவமவுருபிடைச் சொல்லடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று, ஏ - ஈற்றசை. நிரம்பிய நூல் - பெயரெச்சம், காரியப்பொருளது; "நோய்தீர்ந்தமருந்து" என்பதிற் போல. நூல் - உவமவாகுபெயர். நூலின்றி - நூலறிவில்லாமல் என்றபடி. இன்றி - எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம்; இன்மை - இல்லாமையெனக் கொண்டால், செயப்படுபொருள் குன்றியவினையும்; உடைத்தாகாமை யெனக்கொண்டால் செயப்படுபொருள் குன்றாதவினையும் ஆகுதலால், அரங் கின்றி, நூலின்றி என்பவற்றிற்கு - அரங்கினையிழையாது, நூல்களைக்கல்லாது எனச் செயப்படுபொருள் உள்ளவினையாக உரைக்கப்பட்டது. கோட்டியென்பது - ஆகுபெயராய்ச் சொல்லை யுணர்த்தினதனால், அதற்கு ஏற்ப, கொளல் என்பது - இலக்கணையாய்ச் சொல்லுதலாயிற்று. இங்ஙனஞ்செய்தல், சிறுவர்க்குரிய பேதைமையாகுமென்க. "கல்லாதுநீண்ட வொருவ னுலகத்து, நல்லறிவாளரிடைப்புக்கு—மெல்ல, இருப்பினு நாயி ருந்தற்றே யிராஅ, துரைப்பினு நாய் குரைத்தற்று" என்பது நாலடியார். வட்டு-உருட்டும்

உண்டையாதலே, "வட்டுஞ் சூதும் வம்பக்கோட்டியும்" என மணிமேகலையிலுங் காண்க. "தவலில்தண் கழகத்துத் தவிராது வட்டிப்ப" என்ற கலித்தொகையடியில் 'வட்டிப்ப' என்றதற்கு - உருட்டஎன்பது உரையாதலேயும் காண்க. கோட்டிகொளல் - சபையில் ஒன்றைச்சொல்லுதலாதலே மேல் 'அவையஞ்சாமை' என்னும் அதிகாரத்தில் "தங்கணத்த ரல் லார்முற் கோட்டி கொளல்" என்னுமிடத்துங் காணலாம். இத்திருக்குறளே விகற்பக்குறள்வெண்பாவுக்கு உதாரணங்காட்டினர் வீரசோழியவுரைகாரர்.

சOஉ. கல்லாதான் சொற்கா முறுதன் முலேயிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

(இ - ள்.) கல்லாதான்-கல்வியில்லாதான் ஒருவன், சொல்-(அவையின் கண் ஒன்று) சொல்லுதலே, காமுறுதல் - அவாவுதல்,—முலே இரண்டும் இல்லாதாள்-(இயல்பாகவே) முலேயிரண்டும் இல்லாதா ளொருத்தி, பெண்-பெண்மையை, காமுற்று அற்று - அவாவிஞற்போலும்; (எ - று.)

"இனேத்தெனஅறிந்த சினே" ஆகலின், தொகையொடு முற்றும்மை கொடுத்தார். சிறிதும் இல்லாதாள் என்பதாம். அவாவியவழிக் கடைபோகாது: போகினும் நகைவிளேக்கும் என்பதாயிற்று.

(கு - ரை.) அவாவுதல்-விரும்புதல். பெண்மையை-பெண்தன்மையை. "இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியினும்மை வேண்டும்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தால், 'இத்தனையென்று அறியப்பட்ட சினைப்பொருளுக்கும், முதற்பொருளுக்கும், முடிக்குஞ்சொல்லோடு படுக்தொகுதியில் முற்றும்மைகொடுத்துச் சொல்லவேண்டும்' என்பது விதியாமாறு அறிக; இரண்டு - தொகை. "கண்ணுந் தோளு முலையும் பிறவும், பன்மை சுட்டிய சினை நிலைக்கிளவி, பன்மைகூறுங் கடப்பாடிலவே, தம்வினைக்கியலு மெழுத்தலங்கடையே" என்ற தொல்காப்பிய விதியால், கண்முதலியவை பலவாயினும் பன்மையாற்கூறப்படவேண்டு

மென்னும் நியதி யில்லை யென அறிக; இது - பால்பகா வஃறிணைப்பெயரில் அடங்கும். சிறிதுமில்லாமையென்ற கருத்து, முற்றும்மையாற் கொள்ளப்பட்டது. தனஞ்சிறிதுமில்லாதவள் பெண்தன்மையை விரும்பினால் அவ்விருப்பங் கடைகூடாது; கடைகூடினும் அது டாக்கும்: அதுபோல, படிப்புச் சிறிதுமில்லாதவன்

பரிகாசத்தை யுண்

சபையிற்பேசுதலை

விரும்பினால், அவ்விருப்பம் முடிவுபெறாது; முடித்தாலும் பரிகாசத்தை யுண்டாக்குமென்பதாம்: தொழிலுவமையணி. உவமை கூறியது, கல்வியின் இன்றியமையாச்சிறப்பை விளக்குதற்பொருட் டென்க. முலையிரண்டு மில்லாதாள்-ஆணுறுப்புக்குறைவுபட்டுப் பெண்ணுறுப்புச் சிறிதுள்ள பேடி.

அவளது பெண்மை இகழப்படுவதாதலை "வேயே திரள்மென்தோள்வில்லே

கொடும்புருவம், வாயேவளர்பவளம் மாந்தளிரேமாமேனி, நோயேமுலைசுமப்ப தென்றூர்க்கு அருகிருந்தார், ஏயேயிவளொருத்தி பேடியோ வென்றூர் எரி மணிப்பூண் மேகலையாள் பேடியோ வென்றூர்'' என்ற சிந்தாமணிச்செய்யு ளாலும் அறிக. இங்ஙனம் பேடியை கல்வியறிவில்லாத பேதையனுக்கு உவமை கூறியவதனல், அவன் பிறப்பில் ஆடவனுக இருப்பினும் குணஞ் செயல்களால் ஆடவனுக மதிக்கத்தக்கவனல்லன்: பெண்ணிலுங் கடைப்பட்டவனுகக் கருதத்தக்கவன் என்ற கருத்துப் போதரும். இனி, முலையிரண்டு மில்லாதாள்-தனம் உண்டாகப்பெருத பேதைப்பருவத்தாளென்று கொள்வாரும் உளர். சொல் - சொல்லுதல்: முதனிலைத்தொழிற்பெயர். காமுறுதல்- காமமுறுதல் என்பதன் விகாரம்; காமம் - ஆசையை, உறுதல் - அடைத லென்க. பெண் - பெண்தன்மைக்கு முதலாகுபெயர். காமுற்றற்று என்ப தற்கு, கீழ் ஆடியற்று என்பதற்கு எழுதிய இலக்கணமே கொள்க. பெள் என்னும்பகுதி-ஈறுதிரிந்து பெண் என்று ஆகி விரும்பப்படுந் தன்மையை யுடைய மகளுக்குக் காரணப்பெயரா மென்றும், இங்ஙனமே ஆண் என்பதும் ஆள் என்னும் பகுதி ஈறுதிரிந்த காரணக்குறி யென்றுங் கூறுவர். "கானமயி லாடக்கண் டிருந்த வான்கோழி, தானுமதுவாகப்பாவித்துத் - தானுந்தன், பொல்லாச்சிறகை விரித்தாடினற்போலுமே, கல்லாதான் கற்றகவி'' என்பர் ஔவையாரும்.

௪0௫. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

சக - ஆம் அதிகாரம்.—கல்லாமை

உ௫

(இ - ள்.) கல்லாதவர்உம் - கல்லாதாரும், நனி நல்லர் - மிகநல்லரா வர்:—(தாமே தம்மைஅறிந்து), கற்றார்முன் - கற்றாரவையின்கண், சொல் லாது இருக்க பெறின்-(ஒன்றையுஞ்) சொல்லாதிருத்தல் கூடுமாயின்; (எ-று.)

உம்மை - இழிவுசிறப்பும்மை. தம்மைத் தாம் அறியாமையின் அது கூடாது என்பார் 'பெறின்' என்றும், கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத் தாமையானும், பின் கல்வியை விரும்புவ ராகலானும் 'நனிநல்லர்' என்றுங் கூறினர்.

இவை மூன்றுபாட்டானும், கல்லாதார் அவைக்கண் சொல்லுதற்கு உரியரன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) தம்மை - தமது திறமையின்மையை. தம்மைத் தாம் அறி யாமையின் அது கூடாது-(படியாதவர்

)தமதறிவிலமையைத் தாம் அறியாமையால்
படித்தவர்சபையில் யாதொன்றையுஞ்சொல்லாதிருத்தல்
அரிது. பெறின் என்பது - பெறுதலின் அருமை தோன்ற
நின்றது. கூடின் - அப்படி சொல்லாதிருந்தால். ஆண்டுத்
தம்மை வெளிப்படுத்தாமையானும் - அங்குத் தமது
அறியாமையை வெளிப்படுத்தாததனாலும். "கற்பனவூழற்
றார் கல்விக்கழகத்தாங், கொற்கமின்றாத்தைவா யங்காத்தல்
- மற்றுத்தம், வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை,
புல்லுரு வஞ்சுவபோல்", "வாக்குநயத்தானறிக கற்றவரை
மற்றவரை, யாக்கைநயத்தாலறியலா காதே -
காக்கையொடு, நீலச்சிறுகுயிலை நீடிசையாலன்றியே,
கோலத்தறி வாரோ கூறு" என்றபடி, படியாதவன்
சபையிற் பேசாமல் வாய்மூடியிருந் தால் இவனது
உடம்பினமைதி உடையழகு என இவற்றைமாத்திரங் கண்
டவர் இவனைக் கற்றவனாகவே கருதி இவனது
அறிவின்மையை அறியாமல் இவனை நன்கு மதிக்கக்கூடும்:
மௌனமாகஇராமல் ஏதாவதொன்றை உளறு வானானால்
இவனது மடமையை எல்லோரும் விளங்க அறிந்து
அவமதிப் பர்; இங்ஙனம் படித்தவர்க்கும் படியாதவர்க்கும்
பேதம் வாயினின்று சொல் வெளிப்பட்டால்மாத்திரமே
விளங்கும் ஆதலால், 'கூடின் ஆண்டுத் தம்மை
வெளிப்படுத்தாமையானும்' எனப்பட்டது. 'பின் கல்வியை
விரும்புவராக லானும்' என்றது - அறியாதவர் தாம் சபையில்
ஒன்றை முதலில் எடுத்துச் சொல்லி அதை
ஆபாசப்படுத்தாமல் அடங்கியிருந்து அங்குப் பிறர் சொல்லுந்

தக்கவிஷயங்களைக் கேட்டு நெஞ்சில் ஊன்றவைப்பராயின், பின்பு தாமும் அவர்போலவே ஆகவேண்டுமென்று படிப்பை விரும்பக்கூடும் என்பதுபற்றி. நனி - மிகுதிப்பொருளுணர்த்தும் உரிச்சொல்; இங்கே நல்லர் என்னும் வினையை விசேடித்தது. நல்லர் - பண்படியாய்ப் பிறந்த குறிப்புமுற்று. சொல்லாதிருக்க-ஒருசொல் தன்மைப்பட்டது. இருக்க என்பதைத் தொழிற் பெயராக்கி, அதனைப் பெறின் என்பதற்கு எழுவாயாக் கொண்டார்.

(ந)

சாOச. கல்லாதா ளெட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.



(இ - ள்.) கல்லாதான்-கல்லாதவனது, ஒட்பம்-ஒண்மை; (ஓரோவழி),
கழிய - மிக, நன்று ஆயின் உம் - நன்றாயிருப்பினும், அறிவு உடையார்—,
கொள்ளார் - (அதனை ஒண்மையாகக்) கொள்ளார்; (எ - று.)

ஒண்மை-அறிவுடைமை. அது நன்றாகாது;

ஆயிற்றாயினும், *ஏரலெழுத்

துப்போல்வதோர் விழுக்காடு: ஆகலின், நிலைபெற்ற நூலறிவுடையார்

அதனை மதியா ரென்பதாம்.

(கு - ரை.) ஒரோவழி-ஒரோவிடத்து; இது-அருமைவிளக்கும். அதனை-

அக்கல்லாதவனறிவுடைமையை. கொள்ளார்-ஏற்றுக்கொள்ளார். ஏரலெழு

த்து-நந்து வயலில் ஊர்ந்துசெல்லும்போது சிலவேளையில் கீற்றில் அ ஆ என்

றாற்போலத் தோன்றும் வடிவெழுத்து:(ஏரல்-நத்தை.)''நந்து நாகுநீர் வண்டு

சென் னடைவழியெழுத்தாய், வந்துவீழினும் வீழும்''என்றது இங்குக் காண

த்தக்கது.ஏரலெழுத்து வடமொழியில் குணாக்ஷரமெனப்படும்.விழுக்காடு-வகை

யுடையது. மதியார் - கௌரவிக்கமாட்டார். ஒட்பம் - பண்புப்பெயர். கழிய-

கழிஎன்னும் உரிச்சொல்லடியாப்பிறந்த குறிப்புவினையெச்சம்; அவ்வுரிச்சொல் - மிகுதிப்பொருளுணர்த்துதலை ''கூர்ப்புங்கழிவும் உள்ளதுசிறக்கும்'' என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. ஆயினும் என்ற உம்மை - ஆகாமை

குறித்தலால், எதிர்மறைப்பொருளதாம்; உயர்வுசிறப்பெனினும் அமையும்.

உடையார் - பலர்பாற்குறிப்புவினையாலணையும் பெயர். நன்று - ஒன்றன்

பாற்குறிப்புமுற்று. ஒண்மை - அறிவாதலை, மேல் 'புல்லறிவாண்மை' என்னும் அதிகாரத்தில் "ஒண்மையுடையம்யாமென்னுஞ்செருக்கு" என்பதிலுங் காண்க.

(சு)

சு0ரு. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து

சொல்லாடச் சோர்வு படும்.

(இ - ள்.) கல்லா ஒருவன் - (நூல்களைக்) கல்லாத ஒருவன், தகைமை- (யான் அறிவுடையேன் எனத் தன்னை மதிக்கும்) மதிப்பு, (அவற்றைக் கற்றவன்), தலைப்பெய்து - கண்டு, சொல் ஆட-உரையாட, சோர்வுபடும்-கெடும்.

'கற்றவன்' என்பது, வருவிக்கப்பட்டது. யாதானுமோர் வார்த்தை சொல்லுந்துணையுமே நிற்பது: சொல்லியவழி வழுப்படுதலின், அழிந்துவிடுமென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், கல்லாதாரது

இயற்கையறிவின் குற்றம்
கூறப்பட்டது.

(கு - ரை.) அவற்றை - நூல்களை.
கண்டுஉரையாட-சந்தித்துவார்த்தை
சொல்ல. கற்றவன்என்றசொல், தகுதிபற்றி
வருவிக்கப்பட்டதென்க. சொல் •
லியவழி - சொன்னபோது. வழுப்படுதலின் - தவறு
வருதலால். படியாத வன் தான் அறிவுடையவனென்று
தன்னைத் தானே மதிக்கும் மதிப்பு, தன்
னைவந்துகண்ட அறிவுடையவனொருவனோடு தான் ஏதாவது ஒருவார்த்தை

* நீர்மேலெழுத்து என்ற பாடம் சிறவாது.



சொல்லும் வரையிலுமே நிற்கும்; சொன்னால் தனது
அறியாமை வெளிப்
பட்டு அம்மதிப்புத் தவறிவிடு மென்பதுகருத்து. ‘
‘எழுத்தறியார்கல்விப்பெரு
க்கமனைத்தும், எழுத்தறிவார்க்காணி னிலையாம் -
எழுத்தறிவார், ஆயுங்
கடவுளவிர்சடைமுன் கண்டளவில், வீயுஞ்சுரநீர்மிகை’’
எனப் பின்னூலார்
கூறியதுங் காண்க. கற்றவன் சொல்லுஞ் சொல்லுக்குக்
கல்லாதவன் ஏற்ற

உத்தரஞ்சொல்ல அறியாது விழிப்ப னென்க.
ஆடஎன்னுஞ்செயவெனச்
சம் - காரணப்பொருளதாதலின், இறந்தகாலம்.
சோர்வுபடும் - தானேதளர்
நிலை யடையும்.
(௫)

௭௦௬. உளரென்னு மாத்திரைய ரல்லாற்
பயவாக்
களரனையர் கல்லா தவர்.

(இ - ள்.) கல்லாதவர்—,—(காணப்படுதலான்),
உளர் என்னும் மாத்
திரையர் அல்லால் - (இலரல்லர்) உளர் என்று (சிலர்)
சொல்லுமளவின
ராதலன்றி, (தமக்கும்பிறர்க்கும் பயன்படாமையால்),
பயவா களர் அனையர்-
விளையாத களர்நிலத்தோடு ஒப்பர்; (எ - று.)
களர் தானும் பேணற்பாடு அழிந்து உயிர்கட்கும்
உணவுமுதலிய உதவா
ததுபோல, தாமும் நன்குமதிக்கற்பாடுஅழிந்து
பிறர்க்கும் அறிவுமுதலிய
உதவா ரென்பதாம்.
இதனான், கல்லாதாரது பயன்படாமை
கூறப்பட்டது.

(கு - ரை.) காணப்படுதலான்-(உலகத்தில்
வடிவத்தோடு) பார்க்கப்படு

தலால்; இதுவே, இலரல்லரென்பதற்கும் உளரென்பதற்குங் காரணம். இல ரல்லர் - இல்லாதவரல்லர். உளர் - உள்ளார். அவரதுவாழ்க்கையைப் பலர் ஒருவாழ்க்கையாகக் கருதா ராதலால், 'சிலர்' என ஏற்றசொல் வருவிக்கப் பட்டது. களர்நிலம் - விளைவுக்குஏலாதநிலம்; விதைத்தவிதையை முளைக்க வொட்டாமற்செய்யும்நிலம்: சவட்டுநிலம்; ஊஷரபூமி. பேணற்பாடழிந்து - உழுதல்முதலிய தொழில்களால் விரும்பிச் சிறப்பிக்கப்படுதலில்லாமல். தாமும் - கல்லாதவரும். நன்குமதிக்கற்பாடு - கௌரவம். மாத்திரை-மாத்ரா என்னும்வடமொழியின் திரிபு. அல்லால் - எதிர்மறைக் குறிப்புவினையெச்சம். பயனுவமையணி. கல்லாதவர்பிறப்பு எவ்விதத்திலும்பயனற்றதென்பதாம்; "பிறந்தும் பிறவாதாரில்" என்பதுபோலக் கொள்க. (சு)

௪0எ. நுண்மா ணுழைபுல மில்லா னெழினல

மண்மாண் புனைபாவை யற்று.

(இ - ள்.) நுண் - நுண்ணிதாய்,

மாண்-மாட்சிமைப்பட்டு, நுழை-(பல நூல்களினுஞ்)
சென்ற, புலம்-அறிவு, இல்லான்-இல்லாதவனுடைய, எழில்
நலம்-எழிச்சியும் அழகும்,—மண் மாண் புனை
பாவைஅற்று-சுதையால் மாட்
சிமைப்படப் புனைந்த பரவையுடைய எழுச்சியும் அழகும்
போலும்; (எ - று.)

அறிவிற்கு மாட்சிமையாவது-பொருள்களைக்
கடிதிற்காண்டலும், மற
வாமையும் முதலாயின. பாவை - ஆகுபெயர்.

"உருவின்மிக்கதோருடம்பது



பெறுதலுமரிது" ஆகலான், எழில்நலங்களும் ஓர்பயனே யெனினும், நூலறிவு இல்வழிச் சிறப்பில என்பதாம்.

இதனான், அவர்வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) நுண்ணிதாய் - சூட்சுமமானதாய். மாட்சிமைப்பட்டு - சிறப்புப்பெற்று; பக்குவமாய் என்றபடி. எழுச்சி - உடம்பின்வளர்ச்சி. சுதையால்- சுண்ணச்சாந்தினால். மண் - சுதையாகுதலை "மண்ணீட் டாளரும்" என்ற சிலப்பதிகாரத்தாலும், மேல் "மண்ணோ டியைந்த மரத்தனையர்" என்ற குறளினாலுங் காண்க. "நெடுநிலை மண்ணீடு நின்றவாயிலும்", "பாங்குற மண்ணீட்டிற் பண்புற வகுத்து" என்ற மணிமேகலையடிகளிலும் மண் என்பது சுதையென்னும் பொருளதாம். புனைந்த - அலங்கரித்துச் செய்யப்பட்ட. பாவையுடைய - சித்திரப்பிரதிமையினுடைய. பொருள்களைக் கடிதின்காண்டல் - விஷயங்களை விரைவாக அறிதல். மறவாமை என்பதற்கும், பொருள்களை யென்பதே செயப்படுபொருள். 'முதலாயின' என்றதனால், பிறர்க்குக்கற்பித்தல் பயன்றரும்நூல்களியற்றல் முதலியன கொள்க. பாவை என்பது - அதன்எழுச்சியழகுகளுக்கு முதலாகுபெயர். "உருவின் மிக்கதோருடம்பது பெறுதலுமரிது" என்ற மேற்கோள், சீவகசிந்தாமணி - முத்தியிலம்பகம் - (பெறுதற்கருமை), (கூ௰௬) "கருவிமாமழை கனைபெயல் பொழிந்தெனவழிநாள், அருவிபோற்றொடர்ந் தருதனவரும்பிணியழலுட், கருவிற்காய்த்திய கட்டளைப்படிமையிற் பிழையாது, உருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே" என்ற செய்யுளில் உள்ளது; நல்வினைப்பயனால் உறுப்புக்குறையின்றி அழகினால்மிக்கதோ ருடம்பைப் பெறுதலும் அருமையானது என்பது, இம்மேற்கோளின் பொருள். எழில் நலங்களும் - எழுச்சியும் அழகும். இல்வழி - இல்லாதபொழுது. சிறப்பில - அவ்வெழில்நலங்கள் சிறப்புடையனவாகா. அவர் - கல்லாதவரது. "குஞ்சியழகுங் கொடுந்தானைக்கோட்டழகும், மஞ்சளழகு மழகல்ல - நெஞ்சத்து, நல்லம்யாமென்னும் நடுவுநிலைமையாற், கல்வியழகேயழகு", "மயிர்வனப்புங் கண்கவரு மார்பின்வனப்பும், உகிர்வனப்புங் காதின்வனப்பும் - செயிர்தீர்ந்த, பல்லின்வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த, சொல்லின் வனப்பே வனப்பு" என்பவற்றை இங்கே அறிக. நுண்புலம், மாண்புலம், மாண்பாவை - பண்புத்தொகைகள். நுழைபுலம், புனைபாவை - வினைத்தொகைகள். இல்லாரெழினலம் - ஆறும்வேற்றுமைத்தொகை.

எழில் நலம் -

உம்மைத்தொகை. மண்புனே -
மூன்றும்வேற்றுமைத்தொகை. பாவை

யற்று - இரண்டாம்வேற்றுமைத்தொகை. 'எழிலாவது -
வளர்ந்தமைந்த பரு

வத்தும் இதுவளர்ந்துமாறியதன்றி இன்னும் வளரு
மென்பது போன்று

காட்டுதல்' என்றார், பொருளதிகாரவுரையில். எழில் -
தொழிற்பெயர்.

''கவையாகிக்கொம்பாகிக் காட்டகத்தேநிற்கும்,
அவையல்ல நல்லமரங்கள் -

சவைநடுவே, நீட்டோலைவாசியாநின்றான் குறிப்பறிய,
மாட்டாதவ னன்

மரம்'' என்பது, மூதுரை. 'மண்மாண்புனே' என்றதில்,
மாண் என்றது -

## ௪க - ஆம் அதிகாரம்:—கல்லாமை

உகூ மாட்சிமைப்படவென்று பொருள்பட்டு, பகுதி

வினையெச்சமானது' என் பர், இலக்கணக்கொத்துடையார்.

(எ)

௪௦௮. நல்லார்கட் பட்ட வறுமையி
னின்னாதே

கல்லார்கட் பட்ட திரு.

(இ - ள்.) நல்லார்கண் - கற்றார்மாட்டு, பட்ட - நின்ற, வறுமையின் - வறுமையினும், இன்னாது—: கல்லார்கண் - கல்லாதார்மாட்டு, பட்ட நின்ற, திரு - செல்வம்; (எ - று.)

இழிவுசிறப்புஉம்மை, விகாரத்தால் தொக்கது. தத்தம்நிலையினன்றி மாறிநிற்றலான் தாம் இடுக்கட்படுதலும், உலகிற்குத்துன்பஞ்செய்தலும் இரண்டற்கும் ஒக்கு மாயினும், திருக் கல்லாரைக் கெடுக்க, வறுமை நல்லாரைக் கெடாதுநிற்றலான், 'வறுமையினுந் திரு இன்னாது' என்றார்.

இதனான், அவர் திருவின் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) கற்றார்மாட்டு - படித்தவரிடத்தில். வறுமையின் -தரித்திரத் தன்மையினும். வறுமையாவது - அனுபவிக்கப்படும் பொருள் ஒன்றுமில்லாமை. இன்னாது - துன்பந்தருவது. இழிவுசிறப்பும்மை தொகுத்தல் விகாரப்பட்டது, வறுமையின் என்பதன் இறுதியில்; அது, செல்வமின்மையின்

இழிவை விளக்கும். தத்தம்நிலையினன்றி மாறிநிற்றலான் - செல்வம் தனக்கு உரிய கற்றவரை விட்டு உரியரல்லாத கல்லாதவரிடத்திலும், வறுமை தனக்குஉரிய கல்லாதவரைவிட்டு உரியரல்லாத கற்றவரிடத்திலும் ஆக மாறி

நிற்பதனால். தாம் இடுக்கட்படுதல் - செல்வமும் வறுமையும் துன்பப்படுதல். செல்வம் கல்லாதாரிடத்திலிடுக்கட்படுதல் - பிறர்க்கு உபகாரஞ் செய்தற்கு உரித்தாகாது போதல். வறுமை கற்றாரிடத்து இடுக்கட் படுதல் - கற்றார் வருந்திச்செய்கின்ற பிறர்க்குஉதவி முதலியவற்றால் வருத்தமுறுத லென்பர். இரண்டற்கும் - செல்வத்திற்கும், வறுமைக்கும். கல்லாதாரது செல்வம் உலகிற்குத்

தீங்குசெய்தல் வெளிப்படை. கற்றாரது வறுமை உலகிற்குத் தீங்கு செய்தலாவது - ஐயோ! இக்கற்றவர் பிறர்க்குதவி முதலியவற்றைத் தம்விருப்பின்படி செய்யவொட்டாது வறுமை இவரை வாட்டுகின்றதே என்று உலகோரை மனவருத்தங் கொள்ளுமாறு செய்தல். அவர்-கல்லாதவரது. நல்லார் - குறிப்புவினையாலணையும் பெயர். இன்றே, ஏ - தேற்றம்; ஈற்றசையுமாம். செல்வத்தை ஈட்டலுங் காத்தலும் பயன் கொள்ளுதலும் அறிவுடையார்க்கே இயல்வனவாதலால் கற்றவரே செல்வத்திற்கு உரியவரும், ஈட்டுதல்முதலியன அறிவிலார்க்கு இயலாவாதலால் அவரே வறுமைக்கு உரியவரும் ஆவரென்க. அங்ஙனமன்றிக் கற்றார் வறியராயினும் ஒழுக்கம் முதலிய எவ்வகையிலுங் கெடார்; கல்லாதவரோ செல்வ முடையராயின் செருக்கு முதலியவற்றாற் பலவகையிலுங் கெடுவரென்பதாம். இத்திருக்குறளை

“வள்ளன்மையில்லாதான் செல்வத்தின் மற்றை யோன், நல்குரவே போலு நனிநல்ல” என்பதனோடு ஒப்பிடுக.

“பல்லான்ற



கேள்விப்பயனுணர்வார் பாடழிந்து, அல்லலுழப்பதறிதிரேல் - தொல்சிறப்பின், நாவின்கிழத்தி யுறைதலாற் சேராளே, பூவின்கிழத்தி புலந்து” என்னும் நாலடியார்ச்செய்யுளோடு இதற்கு உள்ள ஒற்றுமைவேற்றுமை நயங்களை உய்த்துணர்க. (அ)

௪௦௯. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்

கற்றூ ரனைத்திலர் பாடு.

(இ - ள்.) கல்லாதார் —, மேல் பிறந்தார் ஆயின்உம் - உயர்ந்தசாதிக் கட் பிறந்தாராயினும், கீழ் பிறந்துஉம் - தாழ்ந்த சாதிக்கட் பிறந்துவைத் தும், கற்றார் - கற்றாரது, அனைத்து பாடு இலர் - பெருமையளவிற்றாய பெருமையிலர்; (எ - று.)

உடலோடுஒழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடுசெல்லுங் கல்வி யுயர்ச்சி சிறப்புடைத்து என்பதாம்.

இதனன், அவர்சாதியுயர்ச்சியாற் பயனின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) பிறந்துவைத்தும்-பிறந்திருந்தாலும். பெருமையளவிற்றாய பெருமையிலர் - மகிமையவ்வளவு மகிமையுடையவரல்லர். சாதி - உடற் குணமும், கல்வி - உயிர்க்குணமுமாம். உடலின்கண் வினைவயத்தால் வருகின்ற சாதி அவ்வுடலொழிந்தபோது தான் ஒழிவதன்றி உயிரோடுசெல்லா தாதலால் 'உடலோடொழியுஞ் சாதியுயர்ச்சியினும்' என்றார். கீழ்க் கல்வியென்னும் அதிகாரத்தில் "ஒருமைக்கண்தான் கற்றகல்வி யொருவற்கு, எழுமையுமேமாப்புடைத்து" என்ற குறளால், கல்வி உடலோடு

ஒழியாமல் உயிரோடுசெல்வதாதலை யறிக. அவர் - கல்லாதவரது. மேல்,

கீழ் என்பன - மேன்மையையும் கீழ்மையையு முடைய சாதிகளைக் குறிப்

பதனால், பண்பாகுபெயர். ஆயினும், உம்மை - உயர்வுசிறப்பு. பிறந்தும்,

உம்மை - இழிவுசிறப்பு. பிறந்தும் என்பது, கற்றார் என்பதனைக் கொள்ளும்.

கல்வியில்லாத வெறுஞ்சாதியுயர்வு பயனற்றதென்பதாம். "கடைநிலத்தோ

ராயினுங் கற்றறிந்தோரைத், தலைநிலத்துவைக்கப்படும்," "தோணியியக்கு

வான்தொல்லைவருணத்துக்,
காணிற்கடைப்பட்டானென்றிகழார் - காணாய்,

அவன்றுணையா வாறுபோயற்றே நூல்கற்ற,
மகன்றுணையா நல்லகொளல்"

என்னும் நாலடியாரையும்,
"வேற்றுமைதெரிந்தநாற்பாலுள்ளும், கீழ்ப்பா

லொருவன் கற்பின், மேற்பாலொருவனு
மவன்கட்படுமே"என்ற புறநானூற்

றையும், "நாற்பாற்குலத்தின் மேற்பாலொருவன், கற்றிலனாயிற் கீழிருப்ப

வனே," "எக்குடிப்பிறப்பினும் யாவரேயாயினும், அக்குடியிற் கற்றோரை

வருகவென்பார்" என்னும் நறுந்தொகையையும்,
"ஆக்குமறிவானலது பிறப்
பினால், மீக்கொளுயர் விழிவுவேண்டற்க"
என்னும் நன்னெறியையும் இங்கே
அறிக.

(கூ)

௪௧0. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

௪௧ - ஆம் அதிகாரம்.—கல்லாமை ௯௧

(இ - ள்.) விலங்கொடு - விலங்கோடுநோக்க, மக்கள் அனையர் - மக்கள் எத்துணைநன்மையுடையர் அத்துணைத்தீமையுடையர்: இலங்கு நூல் கற்றாரோடு - விளங்கிய நூலைக் கற்றாரோடு(நோக்க), ஏனையவர் - கல்லாதவர்.

*விலங்கு, நூல்-சாதிப்பெயர். விளங்குதல் - மேம்படுதல். விலங்கின் மக்கட்கு ஏற்றமாய உணர்வுமிகுதி காணப்படுவது கற்றார்கண்ணே யாதலின், கல்லாதாரும் அவரும் ஒத்த பிறப்பின ரல்லரென்பதாம். மயக்கநிரனிறை.

இதனான், அவர் மக்கட்பிறப்பாற் பயனெய்தாமை கூறப்பட்டது.

(கு - ரை.) விலங்கோடு நோக்க - மிருகங்களோடு

ஒப்பிட்டுப்பார்க்க.

மக்கள் - மனிதர். சாதிப்பெயர் - சாதியைக்காட்டும்பெயர்: சாதியொருமைப்

பெயரென்பாருமுளர். (சாதியொருமையாவது - ஒருசொல் ஒருமையீறு

தோன்றநின்றும் தோன்றாதுநின்றும் பின் ஒருமைவினையீறாக மேல்வந்து

முடிக்குஞ்சொல்லைப்பெற்றும் பெறாதும் தானே பன்மைப்பொருளுணர்த்து

வது; இதனை வடநூலார் ஜாத்யேகவசநம் என்பர்.) இங்கே விலங்கு,

நூல் என்பன தாமே விலங்குச்சாதியையும் நூற்சாதியையும் உணர்த்

துதல் காண்க. மேம்படுதல் - (நூல்களுட்) சிறத்தல். அவரும் - கற்றவரும்.

மிருகங்களுக்கும் மனிதர்க்கும் உணவு தூக்கம் பயம் ஆசை முதலியபல

பொதுப்பட்ட குணங்களாக இருப்பினும், மிருகங்களினும் மனிதர் சிறந்தவ

ரென்றற்கு ஏற்ற விவேகமுதிர்ச்சி கல்விகற்றவர்க்கே உளதாவது என்க. ஒத்தபிறப்பின ரல்லர்-சமமானபிறப்புடையவராகார். படியாத மனிதர் மிருகத்தன்மையராய்நிற்க, படித்தவர் மனிதருட்சிறந்து விளங்குவ ரென்பதாம்.

மயக்கநிரனிறையெனினும் எதிர்நிரனிறையெனினும் ஒக்கும். இது - எட்டு வகைப்பொருள்கோள்களுள் நிரனிறைப்பொருள்கோளின்வகையிலொன்று; (மற்றொருவகை - முறைநிரனிறை யெனப்படும்.) முன்வைத்தசொற்களின்

முறைமைக்கு மாறுபாடாக அதனோடுசம்பந்தப்பட்ட சொற்களைப் பின்னர்

அடுக்கிவைப்பது, இதன் இலக்கணமாம்; "மனிறுவ் கந்தும்போல நளிகடற்,

கூம்புங் கலனுந் தோன்றும்" என்பது - இதற்கு உதாரணம்: [நன்-பொது - சுரு.] இக்குறளில் உபமானத்தில் விலங்கு மக்கள் என்ற முறைமைக்கேற்ப, உபமேயத்தில் கல்லார்

காண்க. அவர்-கல்லாதவர்.

கற்றூர் என நிறுத்தாது மாறுபடநிறுத்தியமை

மக்கட்பிறப்பால் - மனிதசன்மத்தால். பயனெய் தாமை - பிரயோசனமடையாமை. விலங்கு - குறுக்காக நிற்பதெனக் காரணப்பெயர்; இது - திர்யக் என்னும் வடமொழிப்பெயரின் கருத்துக்கொண்டது.

• மாம்.

இலங்குநூல் - 'விளங்கவைத்தல்' முதலிய அழகுடையநூ லென்று ஏனையவர் - வேறுஎன்னும் பொருள்தரும் ஏனையென்னும் இடைச் சொல்லடியாப் பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர். மிருகங்களினும் மனிதர் சிறப்படைதல்போல, கல்லாதமனிதரினும் கற்றமனிதர் சிறப்ப

---

* இலங்குநூல் என்பது - சாதியொருமைப்பெயர்

என்ற பாடம் சிற

வாது.

டைவ ரென்பது கருத்து.

'விலங்கொடுமக்களனையர்' என்பதை 'ஒப்பொ ப்பு' என்பர், இலக்கணக்கொத்துடையாரும், பிரயோகவிவேகத்தாரும். (௧0)

## ௪௨ - ஆம்

## அதிகாரம்.—கேள்வி.

அஃதாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல். கற்றவழி அதனின் ஆய அறிவை வலியுறுத்தலானும், கல்லாதவழியும் அதனை உண்டாக்குதலானும், இது - கல்வி கல்லாமைகளின்பின் வைக்

. . .

கபபடடது.

(கு - ரை.) கேட்கப்படும் - கேட்கத்தக்க. நூற்பொருள்களை - சாஸ்திரங்களின் சாரமான விஷயங்களை. கற்றறிந்தார்கூற-படித்தறிந்தவர்சொல்ல.

கற்றவர்க்குக் கேள்வி அக்கல்வியாலாகிய அறிவை அபிவிருத்திசெய்யும், கல்லாதவர்க்குக் கல்வியறிவைப் புதிதாகஉண்டாக்கும் என்க. கேள்வி-தொழிற்

பெயர். வலியுறுத்தல்-உறுதிப்படுத்தல். "கற்றிலனுங் கற்றார்வாய்க்கேட்டானு

மில்லாதார், தெற்றவுணரார்பொருள்களை" என்ற பழமொழியினாலும் கல்

விக்குங் கேள்விக்கு முள்ள சம்பந்தத்தை அறிக.

சகக. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்

செல்வத்து ளெல்லாந் தலை.

(இ - ள்.) செல்வத்துள் செல்வம் - (ஒருவற்குச்) சிறப்புடைய செல்வ

மாவது, செவி செல்வம் - செவியான்வருஞ் செல்வம்: அச் செல்வம்—,

செல்வத்துள் எல்லாம் - பிறசெல்வங்களெல்லாவற்றினும், தலை—: (ஆக

லான்); (எ - று.)

செவியான்வருஞ்செல்வம் - கேள்வியான் எல்லாப்பொருளையும் அறி

தல். பிறசெல்வங்கள் - பொருளான் வருவன. அவை நிலையாவாதலானும்,

துன்பவிளைவினவாகலானும், இது-தலையாயிற்று. 'அவற்றையொழிந்து இதனை

யே செய்க' என்பது - குறிப்பெச்சம்.

(கு - ரை.) செல்வத்துள் செல்வம் - மற்றைச்செல்வங்களெல்லாம்

வறுமையாமாறு வருஞ் செல்வம்:
செல்வங்களெல்லாவற்றினுஞ் சிறந்த செல்
வம். கீழ் 'அவாவறுத்தல்' என்னும் அதிகாரத்தில்
''துன்பத்துள் துன்பம்''
என்பதற்கு - 'ஏனைத்துன்பங்களெல்லாம் இன்பமாக
வருந் துன்பம்' என்று
உரைத்து மிக்கதுன்பமெனப்
பொருள்கொண்டாற்போல, இங்கும் பொருள்
கொள்க. தலை - மேலானது. பிறசெல்வங்கள்-உண்டி
உடை பசு புலம் முத
லாகப் பலபடியாக வுள்ள பொருட்செல்வங்கள்.
நிலையில்லாதனவும், துன்
பத்தைவிளைப்பனவுமாகிய
பொருட்செல்வங்களெல்லாவற்றினும், நிலைபேறு
டையதும் இன்பம் விளைப்பதுமாகிய கேள்விச்செல்வம்
சிறந்தது: ஆதலால்
பொருட்செல்வங்களிற் பற்றைவிட்டு இக்கேள்விச் செல்
வத்தையேவிரும்பிச்
சம்பாதிக்கவேண்டுமென்க. குறிப்பேச்சம் -
ஒருசொல்லின் குறிப்பால்
வேறு சிலசொற்களை வருவித்துமுடிப்பது; இது -
எஞ்சிநின்றதனால், எச்ச
மெனப்பட்டது: எஞ்சுதல் - குறைந்துநிற்றல். தலை -
தலைமையையுடைய

தென்றுவது, உத்தம அங்கமான தலைபோலப் பிரதானமானதென்றுவது பொருள்கொள்க. 'செல்வத்துளெல்லாந்தலை' - செல்வமெல்லாவற்றுள்ளுந் தலை என இதனை உருபுபிரித்துக்கூட்டலுக்கு உதாரணங்காட்டினர், பிரயோகவிவேக வுரையிலும், இலக்கணக்கொத்துரையிலும். (க)

சுகஉ. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(இ - ள்.) செவிக்கு உணவு இல்லாத போழ்து - செவிக்குஉணவாகிய கேள்வி இல்லாதபொழுது, வயிற்றுக்குஉம் சிறிது ஈயப்படும் - வயிற்றுக்குஞ் சிறிதுஉணவு இடப்படும்; (எ - று.)

சுவைமிகுதியும் பிற்பயத்தலுமுடைய கேள்வி உள்ளபொழுது வெறுக்கப்படுதலான் 'இல்லாதபோழ்து' என்றும், பெரிதாயவழித் தேடற்றுன்பமேயன்றி நோயுங் காமமும் பெருகுதலான் 'சிறிது' என்றும், அதுதானும் பின் இருந்து கேட்டற்பொருட் டாகலான் 'ஈயப்படும்' என்றுங் கூறினர். ஈதல்வயிற்றது இழிவு தோன்ற நின்றது.

இவையிரண்டுபாட்டானும் கேள்வியது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) செவிக்குஉணவாகிய-காதினுல்

உட்கொள்ளப்படுவதாகிய. சுவைமிகுதி - மிகுந்த ரசம்.
பிற்பயத்தல் - பின்பு பலபயன்களைத் தருதல்.
வெறுக்கப்படுதலால் - வாயுணவு வெறுக்கப்படுதலால்.
பெரிதாயவழி - அவ் வாயுணவு அதிகப்பட்டபொழுது. தேடற்றுன்பமேயன்றி - அவ்வுணவுக்குஉரிய பொருள்களைச் சம்பாதிக்குந் துன்பம்மாத்திரமே யல்லாமல். உணவுமிகுதியால் நோய்மிகுதலை, மேல் 'மருந்து'என்னும் அதிகாரத்தில்
"தீயளவன்றித் தெரியான்பெரிதுண்ணின்,
நோயளவின்றிப்படும்" என்பதனாலும் அறிக. அதனாற் காமம்பெருகுதல், வெளிப்படை;
"துயிற்சுவையுந்தூநல்லார்தோட் சுவையுமெல்லாம்,
அயிற்சுவையினாகுவவென்றெண்ணி—அயிற்சுவையும்,
பித்துணாக்கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்,
மொத்துணாமொய்ம்பினவர்" என்ற நீதிநெறிவிளக்கத்தையுங் காண்க. அதுதானும் - அச்சிறிதுணவும்.
பின் இருந்துகேட்டற்பொருட்டு - இன்னுஞ் சிலகாலம் வாழ்ந்திருந்து நூற் பொருள்களைக் கேட்பதற்கு.
அறவறத்திலுள்ளார் தவஞ்செய்தற்கு வேண்டிய இவ்வுடம்பு சீவித்திருத்தற்குப் போதுமான அளவே உணவுகொள்ளுதல் மரபாதல்போல, மனிதர் நூற்பொருள்கேட்டற்பொருட்டுத் தாம் உயிர்வாழ்ந்திருத்தற்கு வேண்டுமளவே உணவுகொள்ளவேண்டும் என்க.
"ஈயென்கிளவி இழிந்தோன்கூற்றே" என்ற தொல்காப்பியத்தால் ஈ என்னும் வினைப்பகுதி

இழிந்தோனேற்றற்குஉரிய சொல்லாத லறிக. 'ஈதல் வயிற்றது இழிவுதோன்ற நின்றது' என்ற பரிமேலழகருரைநடையால், 'முன்னிலைச்சொல்லாய் வருவழியல்லது பிறண்டு இன்னசொல் இன்னார்க்கு உரித்தென்னும் வரையறையில்லென்பது உணர்த்துதற்கு, ஈ தா கொடு என முன்னிலைவாய்பாடுபற்றி யோதினார்' என்ற சேனாவரையரது கொள்கை தகுதியன்றென

5

அறியப்படும். உணவு - உண்ணப்படும் பொரு



ளுக்குத் தொழிலாகுபெயர். செவிக்கு உணவுஎன நாவின்புலத்தைச் செவிமேலேற்றிக் கூறினார்; கீழ் "செவிகைப்ப" என்றாற்போல. இது - "உண்டற்குரியவல்லாப்பொருளை, உண்டனபோலக்கூறலுமரபே" என்ற வழுவமைதியில் அடங்கும். போழ்து - பொழுது என்பதன் மரூஉ; போது என்றும் வரும். வயிற்றுக்கும், உம்மை-இழிவுசிறப்பும்மை; எச்சப்பொருளதென்றுங் கொள்ளலாம். வயிற்றது இழிவு - "ஒருநாளுணவை யொழியென்றாலொழியாய், இருநாளைக்கேலென்றாலேலாய் - ஒருநாளும், என்னோவறியா யிடும்பைகூரென்வயிறே, உன்னோடுவாழ்தலரிது" என்பதிலும் விளங்கும். கீழ்ப்பாட்டில், கேள்வி - அற இன்பங்களுக்குக் காரணமான செல்வத்தினுஞ் சிறந்த தென்று கூறி, இப்பாட்டில் உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாதஉணவினும் அது சிறந்ததென்றார்:

ஒருவன் உணவைவிட் டாயினும் நூலைக்கேட்க என்றபடி.

"பருகுவனன்னவார்வத்தனாகிச், செவி வாயாக

நெஞ்சுகளாக" உட்கொள்ளப்படுவதாதலின், கேள்வி செவிக்கு உண வெனப்பட்டது.

(உ) சகரு. செவியுணவிற் கேள்வி
யுடையா ரவியுணவி
ஞன்றாரோ டொப்பர் நிலத்து.

(இ - ள்.) செவி உணவின் - செவியுணவாகிய, கேள்வி - கேள்வியினை, உடையார்—, நிலத்து - நிலத்தின்கண்ணராயினும், அவி உணவின் - அவியுணவினையுடைய, ஆன்றாரோடு - தேவரோடு, ஒப்பர்—; (எ - று.)

செவியுணவு - செவியான் உண்ணும்உணவு. அல்வழிக்கண் வந்த இன் சாரியையது னகரம், வலிந்துநின்றது. அவியாகியஉணவு-தேவர்க்குவேள்வி த்தீயிற் கொடுப்பன. அறிவால் நிறைந்தமையான் 'ஆன்றார்' என்றும், துன்பம்அறியாமையான் 'தேவரோடொப்பர்' என்றுங் கூறினார்.

இதனான், அதனையுடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (கு - ரை.)
நிலத்தின்கண்ணராயினும்-பூலோகத்திலுள்ளவ ராஞலும். அவியுணவினையுடைய - அவிசைஉண்ணுதலையுடைய. அவி - தீயிற்பெய் யும் நெய் பொரி சமித்து முதலியன: இது - ஹவிஸ் என்ற வடசொல்லின் திரிபு. அல்வழியில் வந்த இன்சாரியை யென்றது, உணவிற்கேள்விஎன்ற

இருபெயரொட்டுப்பண்புத்தொகையின் இடையி
லுள்ளதை. வலித்து - மெல்லெழுத்து வல்லெழுத்தாய்;
இங்கே றகரமெய்யாய். "ணஃகான் றஃ கான்
நான்கனுருபிற்கு", "னகார விறுதிவல்லெழுத்தியையின்,
றகாரமா கும் வேற்றுமைப்பொருட்கே"என்ற
தொல்காப்பியச்சூத்திரங்களால் வேற் றுமைப்புணர்ச்சியிலே
யன்றி, அல்வழிப்புணர்ச்சியில் இன்சாரியையின் னகரம்
றகரமாதற்கு விதியின்மையால், 'உணவிற்கேள்வி'
என்றவிடத்துத்

திரிபு வலித்தல்என்னுஞ் செய்யுள்விகாரமாகக்கொள்ளப்பட்டது. வேள்வித்
தீயில் - யாகத்துஓமஅக்கினியில். கொடுப்பன - கொடுக்கப்படும்நெய்முதலி
யன. அதனை - கேள்வியை. நூற்பொருள்களைக் கேட்டவர்
யம் போன்ற இன்பத்தை இவ்வுலகிற்பெறுவரென்பதாம்.

தேவலோகத்தின்
"தவலருந்தொல்

# சுஉ - ஆம் அதிகாரம்.—கேள்வி

ரு.டு

கேள்வித்தன்மையுடையார், இகலிலரஃகுடையார்
தம்முட்குழீஇ, நக
வினினிதாயிற்காண்பா மகல்வானத், தும்பருறைவார்பதி"
என்னும் நாலடி
யார்ப்பாட்டை இங்கே அறிக.

சகச. கற்றில னாயினுங் கேட்க
வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

(இ - ள்.) கற்றிலன் ஆயின் உம் - (உறுதிநூல்களைத்
தான்) கற்றிலனா
யினும், கேட்க - (அவற்றின் பொருள்களைக்
கற்றறிந்தார் சொல்லக்)
கேட்க: அஃது-அக்கேள்வி, ஒருவற்கு - ஒருவனுக்கு,
ஒற்கத்தின் - தளர்ச்சி
வந்துழி, ஊற்று ஆம் துணை-பற்றுக்கோடாந் துணை,
(ஆகலான்); (எ - று.)

உம்மை, கற்கவேண்டும் என்பது பட நின்றது.
தளர்ச்சி - வறுமையா
னாதல், அறிவின்மையானாதல் இடுக்கண்பட்டுழி
மனந்தளர்தல். அதனைக்
கேள்வியின் ஆய அறிவு நீக்கு மாகலின், 'ஊற்றாந்துணை'
என்றார். 'ஊன்று'
என்னும் ஆகுபெயரின் னகரம், திரிந்துநின்றது.

(கு - ரை.) உறுதிநூல்களை-அறம் பொருள் இன்பம்
வீடு என்னும் புரு
ஷார்த்தங்களைப்பற்றிக் கூறும் சாஸ்திரங்களை. கேட்க -
கேட்கக்கடவன்;
வியங்கோள்வினைமுற்று; வந்துழி - வந்தவிடத்து.

பற்றுக்கோடாம் துணை-

ஆதாரமாகுந் துணையாயிருப்பது. உம்மை - இழிவுசிறப்பு. வறுமையானு

தல்-பொருளில்லாமையாலாவது. இடுக்கண்பட்டுழி-துன்பமடைந்தவிடத்து.

கேள்வியின் ஆய - கேள்வியினுலாகிய. ஊன்றுதலென்னும்பொருளைத்தரும்

ஊன்றுஎன்னும் முதனிலைத்தொழிற் பெயர், இங்கு ஆகுபெயராய், ஊன்

றப்படுங்கோலை உணர்த்திற்று. இதன் னகரம் றகரமானது-மென்றொடர்வன்

றொடரான புணர்ச்சிவிகாரமென்றாவது, மெலிவலியான செய்யுள்விகார

மென்றாவது கொள்க. கற்றிலன் - ஆண்பால் எதிர்மறை இறந்தகாலமுற்று.

அஃதொருவற்கு - இங்கே ஆய்தம் உயிர்போல் ஒலித்தது; மெய்போல் ஒலி

யாமையை அலகிட்டுக் காண்க. ஒற்கம்-தொழிற்பெயர்; ஒல்கு - பகுதி.

கற்றிலனாயினுங் கேட்க என்றதற்குக் காரணம், 'கல்லாதவழியும் அதனை

உண்டாக்குதலானும்' என இவ்வதிகாரத்தின் அவதாரிகையில் விளக்கப்

பட்டது. ''முற்றப்பகலு முனியாதினிதோதிக், கற்றலிற்

என்றூர் பழமொழியிலும்.
கேட்டலே நன்று"

(௬)

௪௧௫.

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்.

(இ - ள்.) இழுக்கல் உடை உழி - வழுக்குதலையுடைய சேற்றுநிலத்து (இயங்குவார்க்கு), ஊற்றுக்கோல் அற்று - ஊன்றுகோல்போல உதவும்: (காவற்சாகாடு உகைப்பார்க்கு): ஒழுக்கம் உடையார் வாய் சொல் - ஒழுக்க முடையார்வாயிற்சொற்கள்; (எ - று.)

அவாய்நிலையான்வந்த உவமையடையால், பொருளடை வருவிக்கப் பட்டது. ஊற்றுகியகோல்போல் உதவுதல் - தளர்ந்துழி அதனை நீக்குதல்.



'கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின், அவர்வாய்ச் சொல் கேட்கப்படாது' என்பதுதோன்ற, 'ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்' என்றூர். 'வாய்' என்பது, தீச்சொல்அறியாமையாகிய சிறப்புஉணரநின்றது. 'அவற்றைக் கேட்க' என்பது - குறிப்பெச்சம்.

(கு - ரை.) வழுக்குதல் - சறுக்குதல். சேற்றுநிலம் - சேறுபட்ட தரை. இயங்குவார்க்கு - நடப்பவர்க்கு. காவற் சாகாடு உகைப்பார்க்கு - இராச்சியத்தைக்காத்தற்றொழிலாகிய வண்டியைச் செலுத்துபவர்களுக்கு; அரசர்க்கு. காவற்சாகாடு கைப்பார்க்கு என்றும் பிரிக்கலாம்: பொருள் இதுவே. சாகாடு-சகடம், பண்டி. உகைத்தல், கைத்தல் - செலுத்தல். ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் - நல்லொழுக்கத்தை யுடையவர்களது வாயிலிருந்து வருஞ் சொற்கள். அவாய்நிலை - ஒருசொல் மற்றொருசொல்லை வேண்டிநிற்றல்; அவாய் - அவாவி. அவாய்நிலையால் வருவித்துமுடிப்பதனை, அத்யாஹார மென்பர். 'இழுக்கலுடையுழியூற்றுக்கோல்' என்ற வடநூலார் உபமானத்தினிடையில் அவசியமாக வேண்டியதாதலால் வருவிக்கப்பட்ட 'இயங்குவார்க்கு' என்ற அடைமொழிக்கு ஏற்க, 'ஒழுக்கமுடையார்வாய்ச்சொல்' என்ற உபமேயத்திற்கும் 'காவற்சாகாடு உகைப்பார்க்கு' என்ற அடைமொழி வருவிக்கப்பட்டது; இவ்வதிகாரம் அரசியலாதலால், இதுவே வருவிக்கவேண்டியதாயிற்று. உவமை உபமானம் என்பனவும், அடைமொழி விசேஷணம் என்பனவும், பொருள் உபமேயம் என்பனவும்-ஒருபொருளன. அடை-முன்னே அடுத்துவருஞ் சொல். ஊற்றாகிய கோல்-ஊன்றப்படுவதாகிய கோல். தளர்ந்

துழி - (வறுமையினலாவது) அறிவில்லாமையினலாவது துன்பம்நேர (அத

ஞல்) மனம்தளர்ந்தபோது. அதனே - அத்தளர்ச்சியை. கல்விக்குப்பயன் நல்

லொழுக்கமாதலே "கற்ககசடறக்கற்பவை கற்றபின், நிற்க வதற்குத் தக"

என்ற குறளாலும், கல்வியுடையோரும் ஒழுக்கமிலராயின் அறிவிலராதலே

"உலகத்தோடொட்ட

வொழுகல்பலகற்றுங்,கல்லாரறிவிலாதார்" என்ற குற

ளாலும் அறிக. ஒழுக்கமுடையார் வாய்ச்சொற்கள் யாவையும் நல்லவையாதலே

"ஒழுக்கமுடையவர்க்கொல்லாவேதீய,
வழுக்கியும்வாயாற்சொலல்" என்ற

குறளால் அறிக. கீழ் 'ஒழுக்கமுடைமை' என்னும் அதிகாரத்தில் "ஒழுக்க

முடையவர்க்கு" என்ற குறளினுரையில், 'சொலல்-சாதியொருமை; சொலல்

எனவே அமைந்திருக்க, வாயால் என வேண்டாதுகூறினர், நல்லசொற்கள்

பயின்றதெனத் தாம் வேண்டிய தன்சிறப்புமுடித்தற்கு: இதனைவடநூலார்

தாற்பரியமென்ப' எனக்கூறியதை இங்கே அறிக. அவற்றைக்கேட்க - ஒழுக்க

முடையார் வாய்ச்சொற்களை விடாமற்கேட்கவேண்டும்.

இழுக்கல் - தொழிற்

பெயர். உழி - இடத்து. ஊற்றுக்கோல்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை;

சொல் சாதியொருமையாதலின், அற்று என்னும் ஒன்றன்பால் முற்றைக் கொண்டது. ஏ-ஈற்றசை, தேற்றமுமாம். பயனுவமை:பணி. காவற் சாகா டுகைப்பார்—"கால்பார் கோத்து ஞாலத்தியக்கும, காவற்சாகாடுகைப்போன் மாணின், ஊறின்றாகியாறினிதுபடுமே,

உய்த்தல்தேற்றானாயின் வைகலும்,

சஉ - ஆம் அதிகாரம்.—கேள்வி ௩௭

பகைக்கூழள்ளற்பட்டு, மிகப்பஃறீநோய் தலைத்தலைத்தருமே" என்பது புற நானூறு.

(௫)

௪௧௬. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு மான்ற பெருமை தரும்.

(இ - ள்.) (ஒருவன்), எனைத்து ஆன் உம் - சிறிதாயினும், நல்லவை கேட்க-உறுதிப்பொருள்களைக் கேட்க; (அக்கேள்வி), அனைத்து ஆன் உம்-அத் துணையாயினும், ஆன்ற பெருமை தரும் -

நிறைந்தபெருமையைத் தரும்,
(ஆகலான்); (எ - று.)
'எனைத்து,' 'அனைத்து'
என்பன-கேட்கும்பொருள்மேலும், காலத்தின் மேலும் நின்றன. அக்கேள்வி மழைத்துளிபோல வந்தீண்டி எல்லா

அறிவு
களையும் உளவாக்கலின், சிறிது என்று இகழற்க

என்பதாம்.
(கு - ரை.) அத்துணையாயினும் - அவ்வளவானாலும்.
எவ்வளவுசிறிது
பொருள் எவ்வளவு சிறிதுபொழுதிற் கேட்கப்பட்டாலும்
அவ்வளவுக்கும்
ஏற்ற பயனுண்டு என்க. மழைத்துளிபோல வந்தீண்டி
- மழைநீர்த்துளி
சிறிதுசிறிதாகச்சேர்ந்து பெருவெள்ளமாய்ப் பயன்தருதல்
போல,இக்கேள்வி
களும் சிறிதுசிறிதாகச்சேர்ந்து வளருமென்க. உள
ஆக்கல் - உள்ளன
வாகச்செய்தல். இகழற்க - இகழ்ச்சிசெய்யாதொழிக.
எனைத்து, அனைத்து -
எத்தனைத்து, அத்தனைத்து என்பவற்றின் மரூஉ. ஆனும்
- ஆயினும் என்பதன் விகாரம். எனைத்து என்பதில்,

வினா - சிறுமைப்பொருள் குறித்தது.
உம்மைகள் - இழிவுசிறப்புப்பொருளன.

ஆனற, ஆன - பகுதி; ஆன றல -
நிறைதல். இங்குத் தரும் என்பது
படர்க்கையிடத்துக்கு வந்தமையின்,
இடவழுவமைதி. பெருமை - பண்புப்பெயர்.

(கூ)

சகஎ. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா
ரிழைத்துணர்ந்
ந்தீண்டிய கேள்வி யவர்.

(இ - ள்.) பிழைத்து உணர்ந்தும் - பிறழ
உணர்ந்த வழியும், பே
தைமை - (தமக்குப்) பேதைமை பயக்குஞ் சொற்களை,
சொல்லார்—:
—இழைத்து உணர்ந்து - (பொருள்களைத் தாமும்) நுண்
ணிதாக ஆராய்ந்து
அறிந்து, ஈண்டிய - (அதன்மேலும்) ஈண்டிய,
கேள்வியவர் - கேள்வியினை
யுடையார்; (எ - று.)

'பிழைப்ப' என்பது, திரிந்து நின்றது. பேதைமை -
ஆகுபெயர். ஈண்
டுதல்-பலவாற்றான் வந்துநிறைதல். பொருள்களின்
மெய்ம்மையைத் தாமும்
அறிந்து அறிந்தாரோடு ஒப்பிப்பதுஞ் செய்தார்
தாமதகுணத்தான் மயங்
கினராயினும் அவ்வாறல்லது சொல்லா ரென்பதாம்.

இவைநான்குபாட்டானும், கேட்டார்க்குவரும்
நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) பிறழ உணர்ந்தவழியும் - மாறுபாடாக அறிந்தபொழுதும்.
தமக்குப் பேதைமை பயக்கும்-தமக்கு அறிவின்மையைக் கொடுக்கும். பொருள்
களை - நூற்பொருள்களை. நுண்ணிதாக-நுட்பமுடையதாக. அதன் மேலும்-



அதுவேயுமன்றி. ஈண்டிய - கூடின.
பிழைத்து என்னுஞ் செய்தெனெச் சம் - உணர்ந்து என்னும் வேறுகருத்தாவின் வினையைக் கொண்டு முடி தற்குஏலாத தாதலால், அதனைப்பிறகருத்தாவின் வினையையுங் கொண்டு முடிதற்குஏற்ற'பிழைப்ப'என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபாகக்கொள்ள
வேண்டியதாயிற்று; [நன் - வினை - உகூ, உஎ.] பேதைமை - மடமையைத் தருஞ்சொற்களுக்குக் காரியவாகுபெயர். பலஆற்றான் - பலவழிகளால்: தன் ஞெடொத்தார் ஆசிரியன் பெரியோர் இவர்களோடு பழகுதலால் வந்தகேள்வி யறிவுகளால். அறிந்தாரோடு ஒப்பிப்பதும் செய்தார் - கற்ற பெரியோரிடம் நூற்பொருள்களைக் கேட்டு அவற்றுடன் தாம் முன் அறிந்த நூற்பொருள்களை ஒத்திட்டுப்பார்த்தலுஞ் செய்தவர். கடவுள் ஒருவரொழியப் பிறரெல்லாம் முக்குணவசப்பட்டவராதலின், 'தாமதகுணத்தான் மயங்கினராயினும்'எனப் பட்டது. தாமசம் - கோ ம்

முதலியவற்றிற்குக் காரணமாகுந் தீக்குணம். அவ்வாறல்லது சொல்லார் - அப்படி மயங்கினமாத்திரமேயொழிய நூற் பொருள்களுக்கு மாறுபாடானதைச் சொல்லமாட்டார். "பொய்ம்மை மொழி புகன்றறியேம் புகலமனமெண்ணுகினும், மெய்ம்மையலதுரையாநா வேத நவில்பயிற்சியால்" என்றாற்போல, கல்வி கேள்வி யறிவுகளையுடையவரது மனம் தமோகுணவசத்தால் ஒருகாலத்திற் சிறிது மாறுபட்டாலும் அப்பொழுதும் அவர்வாயிலிருந்து அறிவுகேடான வார்த்தைகள் வாரா; முன் பயிற்சியினால் நல்லுறுதிமொழிகளே வெளிப்படு மென்பதாம். "இம்மூவுலகி லிருள்கடியு மாய்கதிர்போல், அம்மூன்று முற்றவறிதால் - தம்மின், உற ழாமயங்கியுறழினுமென்றும், பிறழாபெரியோர் வாய்ச்சொல்" என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுவதும் காண்க. உணர்ந்தும், உம்மை - இழிவு சிறப்பு.

(எ)

சகஅ. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

(இ - ள்.) கேட்பின்உம் - (தம்புலமாய ஓசைமாத்திரத்தைக்) கேட்கு மாயினும், கேளா தகைய - செவிடாந் தன்மையவேயாம்:—கேள்வியால்—, தோட்கப்படாத - துளைக்கப்படாத, செவி - செவிகள்; (எ - று.)

ஏகாரம் - தேற்றத்தின்கண் வந்தது.
ஓசைமாத்திரத்தான் உறுதியெய் தாமையின் 'கேளாத்தகைய'
என்றும், மனத்தின்கண் நூற்பொருள் நுழை தற்கு
வழியாக்கலின் கேள்வியைக் கருவியாக்கியுங் கூறினர்;
பழைய துளை துளையன்று என்பதாம்.

(கு - ரை.) தம் புலமாய-தமது [காதுகளின்]
உணர்ச்சியாகிய. செவிடு- ஓசையறியும்புலனற்றது.
துளைக்கப்படாத - தடையின்றி நன்றாய் நுழை • யப்படாத.
தேற்றத்தின்கண் - உறுதிப்பொருளில்.
உறுதியெய்தாமையின் -
சிறப்படையாததனால். வழியாக்கலின் - வழியை உண்டுபண்ணுதலால்.
தோட்கப்படாத என்ற வினைக்கு ஏற்பக் கேள்வியை ஊசிமுதலிய துளைக்
குங்கருவியாகக் கூறுமையால், இது ஏகதேசவுருவகம். பழையதுளை துளை


யன்று - காதில் இயற்கையாகவுள்ள துவாரம்,

நூற்பொருள்நுழைதற்கு வழியாகாத பொழுது
துளையெனச் சிறப்பித்துக்கூறத்தக்கதன்று என்க.
கேட்பினும் என்றஉம்மை - உயர்வுசிறப்பு. தகைய -
முற்று. தோட்கப்படாத என்பதில், தோள் - பகுதி.

பலவின்பாற் குறிப்பு
செவி-பால்பகா அஃறிணை

றிணைப்பெயர். செவிபடைத்ததற்குப் பயன் நூற்பொருள்கேட்டலே யென்பதாம். "இருடீர்விளக்கத்திமிழிசையார்கோவே, குருடேயுமன்றுநின்குற் றம்-மருடீர்ந்த, பாட்டு முரையும்பயிலாதனவிரண்டு, ஓட்டைச்செவியுமுள" என்ற ஔவையார் பாட்டையும், "இரும்பிற்போர்த்த, பழுதெண்ணும்வன் மனத்தா ரோட்டைமாச்செவியர் கேளார்" என்னுஞ் சிந்தாமணியையும், "திருமால்சீர்கேளாத செவியென்னசெவியே"என்ற சிலப்பதிகாரத்தையும் இதனோடு ஒப்பிடுக. "கேள்வியாளரிற், றோட்டசெவியைநீயாகுவையாமெனின்," "அறச்செவிதிறந்துமறச்செவியடைத்து" என்ற மணிமேகலையடிகளில் இக்குறளின் பொருள் அமைந்திருத்தலுங் காண்க. (அ)

சகசூ. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

(இ - ள்.) நுணங்கிய கேள்வியர் அல்லார் - நுண்ணிதாகிய கேள்வியுடையரல்லாதார், வணங்கிய வாயினர் ஆதல்-பணிந்தமொழியினை யுடையராதல், அரிது - கூடாது; (எ - று.)

கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை, கேள்விமேல் ஏற்றப்பட்டது. வாய் - ஆகுபெயர். பணிந்த மொழி - பணிவைப் புலப்படுத்திய மொழி. கேளாதார் உணர்வின்மையால் தம்மை வியந்துகூறுவரென்பதாம். 'அல்லால்' என்பதூஉம் பாடம்.

(கு - ரை.) பணிந்த மொழி - விநயத்தோடுகூடின சொல். கேட்கப்படுகின்ற பொருளினது நுட்பத்தைக் கேள்வியின் மேலேற்றி 'நுணங்கிய கேள்வி' என்றது - உபசாரவழக்கு. வாய்-வாயாற்சொல்லுஞ்சொல்லுக்குக் கருவியாகுபெயர். பணிவைப் புலப்படுத்திய - வணக்கத்தைத் தெரிவிக்கிற. கேளாதார் உணர்வின்மையால் தம்மை வியந்துகூறுவர்-நூற்கேள்வியில்லாதவர் அறிவில்லாமையால் தம்மைத்தாமே சிறப்பித்துப் புகழ்ந்துபேசுவார்கள்.

"அல்லார்" என்ற இடத்து 'அல்லால்' என்பது பாடமாயின். 'பிறர்' என்பது வருவிக்கவேண்டும்; நுணங்கியகேள்வியர் வணங்கிய வாயினராதல் எளிதேயல்லாமல், பிறர் வணங்கியவாயினராதல் அரிதென்க. தமது நிலையையும் பிறரது நிலையையும் அறிவிக்கும் கல்விகேள்விகளையுடையவர் பிறரிடத்து வணக்கமாகப் பேசுவர்; அப்படிப்பட்டவரல்லாதவர் அங்ஙனம் பேசார் என்றபடி. "கற்றறிவார்கண்டதடக்க மடங்காதார், பொச்சாந்துந் தம்மைப் புகழ்ந்துரைப்பார் - தெற்ற, அறைகல்லருவியணிமலைநாட, நிறைகுடநீர்தளும்பலில்" என்னும் பழமொழிச்செய்யுள் இங்கே அறியத்தக்கது. அரிது, அருமை - இன்மைமேல் நின்றது.

(௯)



௪௨௦. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க

ளவியி னும் வா ழி னு மென்.

(இ - ள்.) செவியின் சுவை உணரா - செவியால் நுகரப்படுஞ்சுவைகளை உணராத, வாய் உணர்வின் மாக்கள் - வாயுணர்வினையுடைய மாந்தர், அவியின்உம் வாழின்உம் - சாவினும் வாழினும், என் - (உலகிற்குவருவது) என்னை? (எ - று.)

செவியால் நுகரப்படுஞ்சுவைகளாவன-சொற்சுவையும், பொருட்சுவையும்: அவற்றுள்,

சொற்சுவை-குணம், அலங்காரம் என இருவகைத்து; பொருட்சுவை - காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு,

சாந்தம் என ஒன்பதுவகைத்து: அவையெல்லாம் ஈண்டுஉரைப்பின் பெரு

கும். 'வாயுணர்வு' என்பது - இடைப்பதங்கள் தொக்குநின்ற மூன்றாம் வேற்றுமைத்தொகை; அது-வாயால்நுகரப்படுஞ்சுவைகளை உணரும் உணர்வு என விரியும்: *அவை-கைப்பு, †கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என ஆறும். செத்தால் இழப்பதும் வாழ்ந்தாற்பெறுவதும் இன்மையின்,

இரண்டும்ஒக்கும் என்பதாம். 'வாயுணவின்' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

இவை மூன்றுபாட்டானும், கேளாதவழிப்படுக்குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) செவியால் நுகரப்படும் சுவைகள் - காதினாற் கேட்டு அனுபவிக்கப்படும் ரசத்தையுடைய நூற்கேள்விகள். வாயுணர்வினையுடையமாந்தர்-

வாயாலுண்ணப்படும் பொருள்களின் ருசிகளை மாத்திரமே அறிதலையுடைய

மனிதர். அவியினும் வாழினும் - இறந்தாலும் வாழ்ந்தாலும். இப்படிப்பட்

டவர் இறந்தால்வரும் நஷ்டமும், வாழ்ந்தால்வரும் இலாபமும் உலகத்திற்கு

ஒன்றுமில்லை யென்க. 'என்' என்ற குறிப்புமுற்று, இன்மைகுறித்து நின்றது;

"கற்றதனாலாயபயனென்கொல்" என்றதிற்போல. குணம்-செறிவு, தெளிவு சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில்பொருண்மை, காந்தம், வலி, சமாதி எனப் பத்தாம். இவற்றுள், செறிவு-சொற்கள்நெகிழ்ச்சிபெறாது

கட்டாயிருத்தல். தெளிவு - பொருள் வெளிப்படையாகத் தோன்றுவது.

சமநிலை - எல்லாத்தொடர்களும்

ஒருபடிப்படத்தொடுப்பது. இன்பம்-சொல்

விற் சுவைதோன்றுவது. ஒழுகிசை - வெறுப்பாயிராமற் பிரியமாயிருக்கும்

படியான ஓசை. உதாரம் - குறிப்பினால் ஓர்சிறப்புப்பொருளை விளைப்பது.

உய்த்தலில்பொருண்மை - கருதியபொருள் புலப்படுதற்கு வேண்டியசொல்

லுடைமை. காந்தம் - உலகஇயற்கைக்கு ஒத்துக்கூறுவது. வலி - தொகை

நிலைத்தொடர்கள் மிகுதியாய்வருவது. சமாதி - ஒருபொருளில் மற்றொன்

றன் தன்மையை ஆரோபித்தல். அலங்காரம் - பிராசம், மடக்குமுதலிய *

சொல்லணிகள். பிராசம் - வந்தஎழுத்தே மீண்டும்வருவது. மடக்கு [யமகம்]- எழுத்தின்கூட்டம் இடைவிட்டேனும் இடைவிடாதேனும் பொருள் வேறு பாட்டால் மீண்டுவருவது. தன்மை உவமை உருவகம் முதலாகப்பொருளணி

---

பி-ம்: சுவை. † காழ்ப்பு,

களும் பல உண்டு. குணத்துக்கும் அலங்காரத்திற்கும் வேறுபாடு யாதோ வெனின்;—'தொடைகளைப்பற்றிநின்று காப்பியத்திற்கு அழகுசெய்வது - குணம்: சொல்லையும் பொருளையும் பற்றிநின்று அழகுசெய்வது-அலங்காரம்' என்றும், குணங்கள்-இளமை முதலியனபோல ஒற்றுமைநயத்தில் நின்று அழகுசெய்வன: அலங்காரங்கள் - கடகுண்டலாதிகளைப்போல வேற்றுமை நயத்தில் நின்று அழகுசெய்வன' என்றும், 'காப்பியத்திற்கு அழகுசெய்வன - குணங்கள், அதிசயத்தைச்செய்வன - அணிகள்' என்றுங் கூறுவர். பொருட்சுவை-ரஸம். சிருங்காரம், ஹாஸ்யம், கருணம், வீரம், ரௌத்திரம், பயாநகம், பீபத்ஸம், அத்புதம், சாந்தம் என்னும் நவரஸங்களுக்கும்-உவகை, நகை, அழுகை, பெருமிதம், வெகுளி, அச்சம், இளிவரல், மருட்கை, சமநிலை என்ற ஒன்பதும் முறையே காரணமாம். சிருங்காரம் - சிற்றின்பவிருப்பம். ஹாஸ்யம்-அங்கவிகாரம் முதலியவற்றைக்காணுதலால் உண்டங் களிப்பு. கருணம் - இஷ்டஜந மரணம் முதலியவற்றால் ஆகும் விசனம். வீரம்-செய்வினையில் மனத்துணிவு. ரௌத்திரம் - பிறர்செய்யுந் தீங்கினாலாகும் மனக்கொதிப்பு. பயாநகம்-எந்தக்காரணத்தினாலாவது பயந்தோன்றுதல். பீபத்ஸம்-அருவருப்புத்தோன்றுதல். அத்புதம் - அதிசயத்தைக்கண்டதனாலாகும் மனப்பரப்பு. சாந்தம் - பொருள்களிற் பற்றற்றுநிற்கும் நிலை. இவற்றின் வகைகளையும் விரிகளையும் இலக்கணங்களையும் உதாரணங்களையும் தண்டியலங்காரம் முதலிய அணிநூல்களிலும், வடநூல்களிலும் பரக்கக் காணலாம்; தொல்காப்பியத்துப்பொருளதிகாரத்தில் "நகையே யழுகை யிளிவரல் மருட்கை, அச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்று, அப்பாலெட்டே மெய்ப்பா

டென்ப" என்பது முதலாக மெய்ப்பாட்டியலிலும், உவமவியலிலும் சுருக்கமாக்கூறப்படுவதுங் காண்க. ஈண்டு - இங்கு. உரைப்பின் - யாம் சொல்லப் புகுந்தால். விரியும் - உரைவளர்ந்துபோம். 'மற்றொன்றுவிரித்தல்' என்னுங் குற்றத்திற்கு அஞ்சி, இங்ஙனங் கூறினர். தொக்குநின்ற இடைப்பதங்கள் -

'நுகரப்படுஞ் சுவைகளை யுணரும்' என்பன. வாயுணர்வு - மூன்றனுருபும் பொருளும் தொக்கதொகை. கார்ப்பு-காரம், உறைப்பு. உவர்ப்பு-உப்பு. கைப்பு முதலிய இவை அறுசுவையெனப்படும். இரண்டும் - இறப்பும் வாழ்க்கையும். 'வாயுணவின்' என்ற பாடத்துக்கு-வாயினல் உணவுகொள்ளுதலைமாத்திரமே யுடைய என்று பொருள். உம்மைகள் - எண்ணுப்பொருளன. செவியிற்சுவை யுணரா வாயுணர்வினர் மக்களெனப்படாது மாக்களெனப்பட்டார். வாயு ணர்வின் மாக்களென்பதை மத்தியமபதலோபனுக்கு உதாரணங் காட்டினர் பிரயோக விவேகத்தார்.

(௪0)

சங - ஆம்

## அதிகாரம்.—அறிவுடைமை.

அஃதாவது-கல்விகேள்விகளின் ஆய அறிவோடு உண்மையறிவு உடைய ஞதல். அதிகாரமுறைமையும், இதஞனே விளங்கும்.

(கு - ரை.) உண்மையறிவு - நிச்சயஞானம்: ஐயந்திரிபில்லாதது: விவேகம். 'அறிவாவது - நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உள்ளவாறு உணர்

தல்' என்றார், பொருளதிகாரவுரையில். அதிகாரமுறைமை - கேள்வியென்னும் அதிகாரத்தின் பின்னே அறிவுடைமையென்னும் இவ்வதிகாரத்தை வைத்ததற்குக் காரணம். இதனானே - இங்குக் கூறியவாற்றால். கீழ்க்கூறிய கல்விகேள்விகள் காரணமும் அறிவு அவற்றின் காரியமுமாதல், அதிகார முறைமைக்குக் காரணம். அறிவுடைமை இரண்டாம் வேற்றுமைத்தொகை.

கஉக. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
உள்ளழிக்க லாகா வரண்.

(இ-ள்.) (அரசர்க்கு), அறிவு-அறிவென்பது,—அற்றம் காக்கும் கருவி-இறுதிவாராமற்காக்குங் கருவியாம்; (அதுவேயுமன்றி), செறுவார்க்கு-பகைவர்க்கு, அழிக்கல் ஆகா - அழிக்கலாகாத, உள் அரண் உம் - உள்ளரணுமாம். காத்தல் - முன் அறிந்து பரிகரித்தல். உள் அரண் - உள்ளாய அரண்: உள்புக்கு அழிக்கலாகா அரண் என்றுமாம்.

இதனான், அறிவினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) இறுதி - கெடுதி; அழிவு. உள்ளரண்-உட்கோட்டை. முன்னறிந்துபரிகரித்தல்-(வருகிறதீமையை) முன்னமே அறிந்துவரவொட்டாமற் செய்தல். உள்புக்கு - உள்ளேபிரவேசித்து. செறுவார்க்கும் என்றவிடத்து உம்மையை எடுத்து அரண் என்பதனோடு கூட்டுக: அது - இறந்ததுதழுவிய எச்சவும்மை; உயர்வுசிறப்பு மாகலாம். அறிவுஎன்னும் எழுவாய்க்கு, கருவி, அரண் என்பன-பெயர்ப்பயனிலைகள்; இவற்றை வடநூலார் காரகக்கிரியை யென்பர். அற்றம் - தொழிற்பெயர். கருவி - உபகரணம்,

உபாயம். அறிவா
கிய ஒருபொருளினிடத்தில், கருவியும் அரணுமாகிய பலபொருள்களின்
தன்மையை ஏற்றிக்கூறியதனால், பலபடப்புனைவணி; வடநூலார் உல்லே
காலங்கார மென்பர்.

(க) சஉஉ. சென்ற விடத்தாற் செலவிடாத்

தீதொரீஇ

நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(இ - ள்.) சென்ற இடத்தால் செல விடா - (மனத்தை) அது சென்ற
புலத்தின்கண் செல்லவிடாது, தீது ஒரீஇ-(அப்புலத்தின் நன்மை தீமைகளை
ஆராய்ந்து) தீயதனின் நீக்கி, நன்றின்பால் உய்ப்பது - நல்லதன்கண்
செலுத்துவது, அறிவு—; (எ - று.)
வினைக்குஏற்ற செயப்படுபொருள், வருவிக்கப்பட்டது. ஓசை, ஊறு,
ஒளி, சுவை, நாற்றம் எனப் புலம்ஐந்தாயினும், ஒருகாலத்து ஒன்றின்கண்
அல்லது செல்லாமையின், 'இடத்தால்' என்றார். 'விடாது' என்பது, கடைக்
குறைந்துநின்றது. குதிரையை நிலமறிந்து செலுத்தும்

வாதுவன்போல.

வேறுக்கி மனத்தைப் புலமறிந்துசெலுத்துவது அறிவு என்றார், அஃது

உயிர்க்குணமாகலின்.

(கு - ரை.) அதுசென்ற புலத்தின்கண் - அம்மனம்போன ஓசை ஊறு

முதலிய ஐம்புலவழிகளிலே, வினைக்கு-செலவிடுதல் என்னுந் தொழிலுக்கு.



ஏற்றசெயப்படுபொருள்-மனத்தையென்பது. ஓசை - சப்தம், செவிப்புலன்; ஊறு - ஸ்பரிசம், மெய்ப்புலன்; ஒளி-ரூபம், கட்புலன்; சுவை-ரஸம், வாய்ப் புலன்; நாற்றம் - கந்தம், நாசிப்புலன். புலன்கள் ஐந்தாயிருக்கவும், இடத்தால்என ஒருமையாக்கூறியது, மனம் ஒருகாலத்திலே ஒருபுலத்திலேயே ஊன்றுமாதலின். விடா - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்; இதன்முன் பொதுவிதியால் வலிமிகு மாதலால், 'விடாதீதொரீஇ' என்ற இயல்பான பாடம் பொருந்தாது: வலிமிகாமைக்குச் சிறப்புவிதியின்மையை யுணர்க. வாதுவன் - குதிரைப்பாகன். வேறுக்கி - தன்விருப்பின்படி செல்லாதவாறு வேறுபடுத்தி. அஃது - அறிவு. இடத்தால் என்பதில், ஆல்என்னும் மூன்றனுருபு - ஏழாம்வேற்றுமை இடப்பொருளைத் தந்ததனால், வேற்றுமை மயக்கம். செல -

தொகுத்தல். தீது - ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்; நன்று என்பதும் இவ்வாறே. ஒரீஇ—ஒருவி.

(உ)

௪உ௩. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) எ பொருள் - யாதொருபொருளை, யார் யார் வாய் கேட்பின் உம் - யாவர்யாவர்சொல்லக் கேட்பினும், அ பொருள் - அப்பொருளின், மெய் பொருள்-மெய்யாயபயனை, காண்பது-காணவல்லது, அறிவு-; (எ-று.)

குணங்கள்மூன்றும் மாறிமாறிவருதல் யாவர்க்கும்உண்மையின், உயர்ந்த பொருள் இழிந்தார்வாயினும் இழிந்தபொருள் உயர்ந்தார்வாயினும் உறுதிப் பொருள் பகைவர்வாயினும் கெடுபொருள் நட்டார்வாயினும் ஒரோவழிக் கேட்கப்படுதலான், 'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்' என்றார். அடுக்கு-பன்மைபற்றிவந்தது. 'வாய்' என்பது, அவர் அப்பொருளின்கண் பயிலாமை உணர்கின்றது. மெய்யாதல்-நிலைபெறுதல். சொல்வாரது இயல்பு நோக்காது அப்பொருளின் பயன்நோக்கிக் கொள்ளுதல் ஒழிதல் செய்வது அறிவு என்பதாம்.

(கு-ரை.) காணவல்லது-ஆராய்ந்தறியவல்லது. குணங்கள் மூன்று-சத் துவம், ரஜசு, தமசு என்பன.

"சத்துவம் ஞானமாம் தமம் அஞ்ஞானமாம், மத்திமம் [இராசசம்] கலப்பதாம்" என்றது ஈசுவரகீதை.
யாவர்க்கும் உண்மை யின்-(கடவுள் ஒருவரன்றி மற்றை) எல்லார்க்கும் உள்ளதனுல். உறுதிப்பொருள்-நன்மைதரும் விஷயம். கெடுபொருள் - தீமைதரும் விஷயம். நட்டார்- சிநேகிதர். ஓரோவழி - சிலவிடத்து. அடுக்கு - யார்யார் என்னும் அடுக்குத் தொடர்: அவர் அப்பொருளின்கண் பயிலாமை - அவ்விழிந்தார் முதலியவர் உயர்ந்தபொருள் முதலியவற்றில் இயற்கையிற் பழகியிராமையை. கொள்ளு தல் ஒழிதல் செய்வது-நல்லபயன்தருவதை அங்கீகரித்தலும், தீயபயன்தருவ தைத் தவிர்தலுஞ் செய்வது. கேட்பினும், உம்மை-சிறப்புப்பொருளது: முற் றுப்பொருளதென்பாருமுளர். கீழ் 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தில் "எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்றதனேடு

இதனை ஒப்பிடுக. யார்-வினவடியாப்பிறந்த பெயர்.(௩) ௬௭

## திருக்குறள்

௩௨௪. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) தான் —, (சொல்லுஞ்சொற்களை), எண் பொருள ஆக - (அரியபொருளவாயினும் கேட்பார்க்கு) எளிய பொருளவாமாறு, செல - மனங் கொள, சொல்லி —, — பிறர் வாய் நுண் பொருள் - பிறர்வாய் (க்கேட்குஞ் சொற்களின்) நுண்ணியபொருள், (காணவரிதாயினும்), காண்பது - (அதனைக்) காணவல்லது, அறிவு —; (எ - று.)

உடையவன்தொழில், அறிவின்மேல் ஏற்றப்பட்டது. 'சொல்லுவன வழுவின்றி இனிதுவிளங்கச் சொல்லுக' என்பார் சொல்மேல்வைத்தும், 'கேட்பன வழுவினும் இனிதுவிளங்காவாயினும் பயனைக்கொண்டொழிக' என்பார் பொருள்மேல்வைத்தும் கூறினர்.

(கு - ரை.) அரியபொருளஆயினும் - அறிதற்குஅருமையான விஷயங்களை யுடையவையானாலும். மனங்கொள - கேட்பவர்மனம் அறிந்துகொள்ளும்படி. உடையவன்தொழில் - அறிவுடையவனது தொழிலாகிய சொல்லுதலும் காணுதலும்; இதனை அறிவின்மேலேற்றியது, குணிவினையைக் குண வினையாகக்கூறிய உபசாரவழக்கு. சொல்லுவன - சொல்லும்வார்த்தைகளை, வழுஇன்றி - தவறுகளில்லாமல். 'செலச்சொல்லி' எனச்சொல்மேல்வைத்தது. கேட்பன - பிறர்சொல்லத் தான்கேட்கும் பொருள்கள். வழுவினும் - தவறுபட்டாலும். பயனைக்கொண்டு ஒழிக - அச்சொற்களின் பயனைமாத்திரம் எடுத்துக்கொண்டு அச்சொற்களை நீக்குக. 'நுண்பொருள்' எனப்பொருள்மேல் வைத்தது. எளிமைப்பொருளுணர்த்தும் எண்மையென்னும் பண்புப்பெயர், ஈறு போய் 'எண்' என நின்றது. பொருள - பலவின்பாற் குறிப்பு வினையாலணை

யும்பெயர். "வேட்பத்தாஞ்சொல்லிப் பிறர்சொற்
பயன்கோடல், மாட்சியின் மாசற்றார்கோள்" என்பர், மேல்
'சொல்வன்மை' என்னும் அதிகாரத்தும்.
'உடையவன்தொழில் அறிவின்மேல் ஏற்றப்பட்டது'
என்றதனால், இங்ங
னம் காண்பவன் அறிவுடையவனென்பதாம்.
(ச)

சஉரு. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(இ - ள்.) உலகம் - உலகத்தை, தழீஇயது -
நட்பாக்குவது, ஒட்பம் (ஒருவனுக்கு) ஒட்பமாம்;
மலர்தல்உம் கூம்பல்உம் இல்லது - (அந்நட்பின் கண்) முன்
மலர்தலும் பின் கூம்புதலும் இன்றி ஒருநிலையனவது, அறிவு
- அறிவாம்; (எ - று.)
'தழீஇயது,' 'இல்லது'
என்பன-அவ்வத்தொழில்மேல் நின்றன. 'உல கம்' என்பது
- ஈண்டு, உயர்ந்தோரை. அவரொடு கயப்பூப்போல வேறு
படாது கோட்டுப்பூப்போல ஒருநிலையே நட்பாயினன்
எல்லாவின்பமும் எய் தும் ஆகலின், அதனை 'அறிவு'என்றார்.
காரியங்கள் காரணங்களாக உபசரிக் கப்பட்டன. இதனைச்
செல்வத்தின்மலர்தலும் நல்குரவிற் கூம்பலும் இல்
லது என்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்ப ஆகலால், உலகம் உயர்ந்தோரைக்காட்டிற்று. ஒட்பம்-ஒண்மை, அறிவுடைமை.மலர்தல்-முகம் மலர்தல். கூம்புதல்-முகம் வாடுதல். ஒருநிலையனாவது - எப்பொழுதும் ஒரேநிலைமையையுடையவனாயிருத்தல். தழீஇயது-தழுவியது;தொழிற்பெயர். இது-இங்கே இறந்தகாலங்குறியாமல் தன்மைகுறித்தது. இல்லது - இல்லாதிருத்தல். இல்லது என்னும் ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர், இங்கே தொழில்மாத்திரத்தை யுணர்த்திநின்றது. அவரொடு - உயர்ந்தாரோடு. கயப்பூப்போல வேறுபடாது - நீர்நிலையிலுண்டாகுந் தாமரைமுதலிய பூக்கள் ஒருகால் மலர்தலும் மீண்டுங்குவிதலுமாகத் தாம் அழிகிறவரையில் நிலைமாறுதல்போல, ஒருகால் முகமலர்தலும் மீண்டும் முகம்வாடுதலும் இல்லாமல், கோட்டுப்பூப்போல ஒருநிலையே நட்பாயினன் - மரக்கிளையிலுண்டாகும் புன்னைமுதலிய பூக்கள் ஒருகால் மலர்ந்தது மீண்டுங்குவியாமலே கழிதல்போல, ஒருகால் மலர்ந்தமுகம் மறுபடிவாடாமல் ஒரேநிலைமையனாய்ச் சினேகித்தவன். "கோட்டுப்பூப்போல மலர்ந்து பிற்கூம்பாது, வேட்டதே

வேட்டதா நட்பாட்சி - தோட்ட,
கயப்பூப்போல்முன்மலர்ந்து பிற்கூம்பு
வாரை, நயப்பாரு நட்பாருமில்" என்னும் நால
டியார்ச்செய்யுளை இங்கே
அறிக. எல்லா இன்பமும் எய்தும் -
இன்பங்களெல்லாவற்றையும் அடை
வான். உலகந் தழுவுதலாகிய ஒட்பத்தின்பயன்
அதன்காரணமான ஒட்ப
மாகவும், மலர்தலுங் கூம்பலுமில்லாதிருத்தலாகிய
அறிவின்பயன் அதன்

காரணமான அறிவாகவும் கூறப்பட்டது,
உபசாரவழக்கு. செல்வம் வந்த
காலத்து மகிழ்ந்திருத்தலும்,
வறுமைவந்தகாலத்து வருந்தியிருத்தலும் இல்லா
தது அறிவென்பது, இரண்டாமுரையின் கருத்து.

(ரு)

சஉரு. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(இ - ள்.) உலகம்—, எவ்வது-யாதொருவாற்ருன்,
உறைவது-ஒழுகுவ
தாயிற்று, உலகத்தோடு-அவ்வுலகத்தோடு (மேவி),
(தானும்), அவ்வது-அவற்
ருன், உறைவது - ஒழுகுவது,—அறிவு - (அரசனுக்கு)
அறிவு; (எ - று.)

'உலகத்தை யெல்லாம் யான் நியமித்தலான்
என்னை நியமிப்பாரில்லை'
எனக் கருதித் தான் நினைத்தவாறே ஒழுகின் பாவமும்
பழியுமாம் ஆகலான்,
அவ்வாறு ஒழுகுதல் அறிவன்று என
விலக்கியவாருயிற்று.

இவையைந்துபாட்டானும், அதனது இலக்கணம்
கூறப்பட்டது.

(கு - ரை.) யாதொருவாற்ருன் - எந்தவழியால்.
ஒழுகுவது - நடப்பது.

மேவி - ஒத்து. அவ்வாற்றான் - அவ்வழியால்.
நியமித்தலான் - கட்டளை
செய்தாளுதலால். ஒழுகின் - நடந்தால்.
அதனது - அறிவினது. கீழ் 'ஒழுக்க
முடைமை' என்னும் அதிகாரத்தில்
"உலகத்தோடொட்டவொழுகல் பலகற்
றும், கல்லா ரறிவிலாதார்" என்ற குறளேயும், அதன்
விசேடவுரையையும்
இங்கே உணர்க. எவ்வது, அவ்வது
- ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்
பெயர்கள்; இவற்றில், எ என்னும்
வினவிடைச்சொல்லும், அ என்னும் சுட்



டிடைச்சொல்லும் முறையே பகுதிகள்; உறைவது என்னுஞ்சொல் இரண்ட
னுள், முன்னது - எதிர்காலவினையாலணையும்பெயர்; பின்னது-எதிர்காலத்
தொழிற்பெயர். (ச)

சஉஎ. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

(இ - ள்.) அறிவு உடையார் - அறிவுடையராவார்,
ஆவது அறிவார் -
வரக்கடவதனை (முன்) அறியவல்லார்; அறிவு இலார்
- அறிவிலராவார்,

அஃது அறிகல்லாதவர் - அதனை (முன்)
அறியமாட்டாதார்; (எ - று.)
முன் அறிதல் - முன்னே எண்ணி அறிதல். அஃது
அறிகல்லாமையா
வது - வந்தால் அறிதல். இனி, 'ஆவது அறிவார்'
என்பதற்கு - (தமக்கு)
நன்மைஅறிவார் என்று உரைப்பாரும் உளர்.
(கு - ரை.) அறிய-ஆராய்ந்தறிய.
அதனை-இனிவரப்போவதை. முன் -
வரும்முன்னமே. எண்ணி - ஆராய்ந்து. அஃது
அறிகல்லாமை - அதனை
அறியமாட்டாமை. இக்குறளில் ஆய்தம் மெய்போல
ஒலித்தது; அலகிட்டுக்
காண்க. இரண்டாமுறையில், அஃதறிகல்லாதவர்
என்பதற்கும் - (தமக்கு)
நன்மையை யறியாதவரென்று பொருள் கொள்க.
(எ)

சஉஅ. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை
யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

(இ - ள்.) அஞ்சுவது - அஞ்சப்படுவதனை,
அஞ்சாமை—, பேதைமை -
பேதைமையாம்; அஞ்சுவது-அவ்வஞ்சப்படுவதனை,
அஞ்சல்-அஞ்சுதல், அறி
வார் தொழில் - அறிவார் தொழிலாம்; (எ - று.)

பாவமும் பழியும் கேடும் முதலாக அஞ்சப்படுவன பலவாயினும், சாதி பற்றி 'அஞ்சுவது' என்றார். அஞ்சாமை - எண்ணாதுசெய்துநிற்றல். அஞ்சுதல் - எண்ணித்தவிர்தல். அது காரியமன்று என்று இகழப்படாது என்பார், 'அறிவார்தொழில்' என்றார். அஞ்சாமை இறைமாட்சியாகச் சொல்லப்பட்டமையின், ஈண்டு, அஞ்சவேண்டுமிடம் கூறியவாறு. இவையிரண்டுபாட்டானும், அதனை உடையாரது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) "அச்சக்கிளவிக்கு ஐந்தும் இரண்டும், எச்சமிலவேபொருள் வயினான" என்னுந் தொல்காப்பியவிதியால், அஞ்சுவதுஎன்பது - அஞ்சுவதை என இரண்டனுருபால் விரிக்கப்பட்டது; அஞ்சுவதனினின்று என்று ஐந்தனுருபாலும் விரிக்கலாம்: இது - வடநூல்வழக்கைத் தழுவியது; அஞ்சுவதற்குஎன நான்கனுருபாகவிரித்தல், உலகவழக்காம். அஞ்சப்படுவதனை - பயப்படத்தக்க விஷயத்திற்கு என்றபடி. பேதைமை - அறிவின்மை. அறிவார்தொழில் - விவேகிகளது செய்கை. சாதிபற்றி - சாதியொருமையால்.

எண்ணாது செய்துநிற்றல் - ஆலோசியாமல் தகாத அக்காரியங்களைச்
செய்துநிற்பது. எண்ணித் தவிர்தல் - ஆலோசித்து அக்காரியங்களைச் செய்
யாதுவிலகல். அது - அஞ்சுவதஞ்சல். காரியமன்று -

செய்யத்தக்கதன்று.

௪௨௮ - ஆய

அதிகாரம்.— அறிவுடைமை

கீழ் 'இறைமாட்சி' என்னும் அதிகாரத்தில் "அஞ்சாமையீகையறிவூக்கமிந் நான்கும், எஞ்சாமைவேந்தற்கியல்பு" என்ற குறளில், அஞ்சாமையென்பது அரசனுக்குரிய நற்குணநற்செய்கைகளுள் ஒன்றாகப்பொதுப்படச் சொல்லப்பட்டது - பழிபாவங்களையும் கேடுதியையும் தராதவழியால் பகைவர்பக்கல் அஞ்சலாகாது என்றகருத்துப்பற்றிய தென்றும், இங்கே அஞ்சலறிவார்தொழில் என்று சிறப்பாகக் கூறியது - பழிமுதலியவற்றைத் தரும் காரியங்களில் அஞ்சவேண்டு மென்பதுபற்றிய தென்றும் கொண்டு,
இரண்டும் மாறுகொளக்கூறலாகாமை காண்க. அதனை - அறிவை. அஞ்சு
வது - செய்வினை செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த ஒன்றன்பால்
வினையாலணையும் பெயர். 'இக்குறள், வருமொழியைநோக்காமலேதனக்கு உரிய ஒருமைப்பாலைவிட்டுப் பன்மைப்பாலையே விளக்குதலால், அஃறிணைச் சாதியொருமையாயிற்று' என்பர், இலக்கணக்கொத்து உரையில். (அ)

௪௨௯. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

(இ - ள்.) எதிரது ஆ - (வரக்கடவதாகிய அதனை)

முன் (அறிந்து),

காக்கும் - காக்கவல்ல, அறிவினார்க்கு - அறிவினையுடையார்க்கு, அதிர வரு

வது - (அவர்) நடுங்கவருவது, ஓர் நோய்-ஒருதுன்பமும், இல்லை—; (எ-று.)

'நோய்' என வருகின்றமையின், வாளா 'எதிரதா' என்றார். இதனான்,

காக்கலாங்காலம் உணர்த்தப்பட்டது. காத்தல்-அதன்காரணத்தைவிலக்குதல்.

அவர்க்குத் துன்பமின்மை இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) வரக்கடவதாகிய அதனை-இனி வரவிருக்குந் தீங்கை. காக்க

வல்ல - வராதபடி தடுத்து அதனினின்றுந் தம்மைப்பாதுகாத்துக்கொள்ள

வல்ல. நடுங்க - அச்சத்தால் மனமும் உடம்பும் பதைக்கும்படி. வாளா எதி

ரதாஎன்றார் - நோய்எதிரதா என்னமல் 'எதிரதா'என்றார் என்க. காத்தற்கு

ஏற்ற காலம்-தீங்குவருவதற்குமுந்திய காலம். அதன் - துன்பத்தின். அவர்க்கு-

அறிவுடையார்க்கு. எதிரது - எதிர்காலத்தது. ஆ - ஆக என்பதன்விகாரம்.

அதிர்வென்பது - நடுங்குதலென்னும்பொருளுணர்த்தும் உரிச்சொல்லாதலை

"அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ்செய்யும்" என்ற
தொல்காப்பிய உரிச்சொல்

வியற்சூத்திரத்தால் உணர்க. அங்கு,
'அதிரவருவதோர்நோய்' என்ற இத

னையே உதாரணங்காட்டிப்போந்தனர்,
தொல்காப்பியவுரையாசிரியர்கள். (க)

சுஙo. அறிவுடையா ரெல்லா முடையா
ரறிவிலா

ரென்னுடைய ரேனு மிலர்.

(இ - ள்.) அறிவு உடையார்—, எல்லாம் உடையார்
- (பிறிதொன்றும்

இலராயினும்) எல்லாம்உடையராவர்; அறிவு இலார் -
அறிவிலாதார், என்

உடையர் ஏனும் - எல்லாம்உடையராயினும், இலர் -
(ஒன்றும்) இலராவர்.

செல்வங்களெல்லாம் அறிவாற்
படைக்கவுங்காக்கவும்படுதலின், அஃது

உடையாரை 'எல்லாமுடையார்' என்றும்,

அவையெல்லாம் முன்னே அமை சுறு

திருக்குறள் ந்து கிடப்பினும்

அழியாமற்காத்தற்கும் தெய்வத்தான் அழிந்தழிப் படைத்

தற்குங் கருவியுடைய ரன்மையின், அஃது இல்லாதாரை 'என்னுடைய ரேனுமிலர்' என்றுங் கூறினர். 'என்னும்' என்புழி, உம்மை - விகாரத்தால் தொக்கது.

இதனுன், அவரது

பட்டன.

உடைமையும், ஏனையாரது இன்மையும் கூறப்

(கு - ரை.) பிறிதொன்றும் இலராயினும் - அறிவொழிந்த பிறபொருள்களுள் ஒன்றையும் உடையவரல்லராயினும். எல்லாம் - எல்லாப்பொருள் களையும். படைக்கவும் - சம்பாதிக்கவும். அவையெல்லாம் - அச்செல்வங்கள் யாவும். அமைந்துகிடப்பினும் - பொருந்தி யிருந்தாலும். தெய்வத்தான் அழிந்துழி - விதிவசத்தால் அச்செல்வங்கள் அழிந்துபோனவிடத்து. படைத் தற்கும் - மீண்டுஞ்சம்பாதித்தற்கும். இவற்றிற்கு ஏற்ற கருவி, அறிவு. என வென்னும்வினைப்பெயரின் விகாரமாகிய என்னென்பது - இங்கே எஞ்சாமை குறித்தது: அதன் இறுதியில் தொகுத்தல்விகாரப்பட்ட உம்மை - முற்றுப் பொருளது. என் - எந்தப்பொருளும். இனி, என்னென்பது அச்செல்வத்தின் உயர்வுதோன்ற நின்றதென்றுங் கொள்ளலாம். அவரது - அறிவுடையாரது. உடைமை-செல்வம். ஏனையாரது -மற்றையாரது; அறிவிலாதாரது. இன்மை- பொருளின்மை, வறுமை. ஏனும் - என்னும் என்பதன் மரூஉ: இதில்,

உம்மை - உயர்வுசிறப்பு. இக்குறட்பாவை
"நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை,
பண்ணப்பணைத்தபெருஞ்செல்வம்" என்ற நாலடியார்ப்
பாட்டோடு ஒப்பிடுக.

(௧0)

## சுசு - ஆம்

## அதிகாரம்.—குற்றங்கடிதல்.

அஃதாவது - காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறனையும் அரசன் தன்கண்நிகழாமற் கடிதல். இவற்றை வடநூலார் '*பகைவர்க்கம்'என்ப. †இவை குற்றமென்று அறிதலும் கடிதலும் அறிவுடையார்க்கல்லது கூடாமையின், அதன்பின் வைக்கப் பட்டது.

(கு - ரை.) குற்றங் கடிதல்-இரண்டாம்வேற்றுமைத்தொகை. இங்கே, காமம் - வரம்புகடந்த சிற்றின்பவிருப்பம். வெகுளி - காரணம்பற்றியாவது மடமையினாலாவது ஒருவன் தமக்குத் தீங்குசெய்தவிடத்து உளதாகத்தக்க கோபத்தை வரம்பின்றி
மிகுதியாகக்கொள்வது. கடும்பற்றுள்ளம்-செல்வத்தை அவசியம் செலவிடவேண்டிய விஷயங்களிலும் செலவுசெய்யாமல் அப் பொருளினிடத்து மனத்தில்

மிகுதியான பற்றுவைத்து இறுகப்பிடிப்பதா *
கிய லோபம். மானம் - மாத்ஸர்யம்; அதாவது - எப்பொழுதுந் தான் தாழா மல் பிறரையே தான் தாழ்த்தவேண்டு மென்னுங் கொடுங்கொள்கை. உவகை-

மோகம்; அதாவது - மகிழத்தக்கனவல்லவற்றிற்கும் ராஜஸகுணத்தால் மிக

பி-ம்: * அரிவர்க்கம். † இவற்றை.



மகிழ்தல். மதம் - செல்வம் அதிகாரம் முதலிய சிறப்புக்களாலாகும் பெருஞ் செருக்கு. தன்கண் நிகழாமல் கடிதல் - தன்னிடத்துத் தோன்றுதபடி யொழித்தல். இவை-'அரிஷட்வர்க்கம்' எனப்படும். என்ப - என்று கூறுவர். அறிவுடைமையின்பின் குற்றங்கடிதலை வைத்ததற்குக் காரணம், அறிவுடைமையின்பயன் குற்றங்கடிதல் என்னுங் கருத் தென்க.

சஙக. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்

பெருக்கம் பெருமித நீர்த்து.

(இ - ள்.) செருக்குஉம் - மதமும், சினம்உம்-வெகுளியும், சிறுமைஉம்-காமமும், (ஆகிய குற்றங்கள்), இல்லார்-இல்லாதஅரசரது, பெருக்கம்-செல்வம்,—பெருமிதம் நீர்த்து - மேம்பாட்டுநீர்மையினையுடைத்து; (எ - று.)

மதம் - செல்வக்களிப்பு. சிறியோர்செயலாகலின், அளவிறந்தகாமம் 'சிறுமை' எனப்பட்டது. இவை நீதியல்லன செய்வித்தலான், இவற்றைக் கடிந்தார்செல்வம் நல்வழிப்பாடும் நிலைபேறுமுடைமையின் மதிப்புடைத்து என்பதாம். மிகுதிபற்றி, இவை மூற்கூறப்பட்டன.

(கு-ரை.)
மேம்பாட்டுநீர்மையினையுடைத்து-மேன்மைப்படுந்தன்மையை
யுடையது. சிறியோர்செயல் - அறிவிலும்
ஒழுக்கத்திலும் பெருந்தன்மை
யில்லாதவரும் பிராயத்திலும்முதிர்ந்தவரல்லாதவருமான
இளையவரது செய்
கை. அளவிறந்த - வரம்புகடந்த.
நல்வழிப்பாடு சன்மார்க்கத்திற்செலவாதல்.
நிலைபேறு - அழியாமல் நிலைத்திருத்தல்.
மதிப்பு-கௌரவம். மிகுதிபற்றி -
காமம்முதலியவான ஆறுதுர்க்குணங்களுள்
செருக்குமுதலியஇத்துர்க்குணங்
கள் பெரும்பாலும் அரசரிடத்தில் உண்டாகிமிகுதலால்.
உய்மைகள் மூன்
றும் - எண்ணுப்பொருளன.
பெருக்கம் - பெருகுதலையுடைய செல்வத்துக்
குத் தொழிலாகுபெயர். 'எல்லாரோடும் ஒப்பசில்லாது
பேரெல்லையாக நிற்
றல் பெருமிதமெனப்படும்' என்பது, பொருளதிகாரவுரை.
பெரு மிதம்-பெரி
தாகிய அளவு. செருக்கு - நமதம்.

(க)

சாடுஉ. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு.

(இ - ள்.) இவறல்உம் - வேண்டும்வழிப் பொருள்கொடாமையும், மாண்பு இறந்த மானம்உம் - நன்மையின்நீங்கியமானமும், மாணா உவகைஉம் - அளவிறந்த உவகையும்,—இறைக்கு - அரசனுக்கு, ஏதம் - குற்றம்; (எ - று.)

மாட்சியான மானத்தின் நீக்குதற்கு,
'மாண்பிறந்தமானம்' என்றார்;

அஃதாவது - "அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர்
தம்முன்னோர், தந்தை
தாய் என்று இவ"ரை வணங்காமையும்,
முடிக்கப்படாதாயினும் கருதியது

முடித்தேவிடுதலும் முதலாயின. அளவிறந்த உவகையாவது - கழிகண்ணோட்டம். பிறரும், "சினனே காமங் கழிகண்ணோட்டம் "என்றிவற்றை" அறந்

தெரி திகிரிக்கு வழியடையாகுந் தீது" என்றார்.

இவையிரண்டுபாட்டானும், குற்றங்களாவன இவையென்பதுகூறப்பட்டது. 7

(கு -ரை.) வேண்டும்வழி - அவசியங் கொடுக்கவேண்டியவிடத்திலும். வேண்டும்வழிப் பொருள்கொடாமை-லோபம். பொருள்கொடுத்தற்கு இன்றியமையாத இடம் - யானை குதிரை படை நாடு அரண் என்ற இவற்றிற்கும்; பகையொடுகூடலிற் பிரிக்கப்படுவார்க்கும் தன்னிற்பிரிதலிற் கூட்டப்படுவார்க்கும் அவசியம் கொடுக்கவேண்டுதல் போல்வனவாம். கீழ் 'இறைமாட்சி' என்னும் அதிகாரத்தில் "காத்த, வகுத்தலும் வல்ல தரசு", "கொடையளிசெங்கோல் குடியோம்பல்நான்கும், உடையானும் வேந்தர்க்கொளி" என்றவற்றால் கொடுத்தல் இறைமாட்சி யாகுதலால், அதற்கு எதிரான இவறல் குற்றமாம். "மயிர்நீப்பின்வாழாக்கவரிமாவன்னார், உயிர்நீப்பர் மானம்வரின்", 'இளிவரின்வாழாத மான முடையா, ரொளிதொழுதேத் துமுலகு" என்பன இறுதியாக மேல் 'மானம்' என்னும் அதிகாரத்தில் குடிப்பிறந்தார்க்கு உரிய குணங்களுள் முதலதாகக்கூறப்பட்ட நன்மைதரும் மான மன்று இது என்பார், 'மாண்பிறந்தமானம்' என்றார்; இதனால் கீழ் 'இறைமாட்சி' என்னும் அதிகாரத்தில் "மறனிழுக்காமானமுடையதரசு" எனக் கூறியதனோடு இது மாறுபடாமையறிக. அங்குப் பரிமேலழகர் 'குற்றமாயமானத்தின் நீக்குதற்கு மறனிழுக்கா மான மென்றார்' என்று உரைத்துப்போந்ததையுங் காண்க. மாநம் - வடசொல். மாணுவகை-மோஹம். மாட்சியான-இறைமாட்சியின் பாற் பட்ட. "அந்தணர் சான்றோரருந்தவத்தோர் தம்முன்னோர், தந்தை தாயென்றிவர்க்குத்தார் வேந்தே - முந்தை, வழிநின்று பின்னை வயங்கு நீர்வேலி, மொழிநின்ற கேட்டன்முறை" என்பது, புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், ௩௩. அந்தணர் - பிராமணசாதியார். சான்றோர் - பலநற்குணநற்செய்கைகளால் நிறைந்தவர். அருந்தவத்தோர் - பிறராற்செய்தற்கு அரிய தவத்தைத் தாம் செய்துள்ளவர். தம்முன்னோர் - தமக்குமுன்பிறந்த தமையன்மார்களும், தம்மினும்பிராயத்தின்மூத்த வயோவ்ருத்தரும். முடிக்கப் படாதாயினும்-நிறைவேற்றத் தகாத காரியமானாலும். கருதியது - செய்து முடிக்க எண்ணிய அக்காரியத்தை. "சினனேகாமங் கழிகண்ணோட்டம், அச்சம்பொய்ச்சொலன்பு மிகவுடைமை, தெறல் கடுமையொடு பிறவுமிவ்வுலகத்து, அறந்தெரிதிகிரிக்கு வழியடையாகும், தீதுசேணிகந்து நன்றுமிகப்புரிந்து" என்று பதிற்றுப்பத்தில் (22) வருகின்றது. கழிகண்ணோட்டம் - (அளவுக்கு) விஞ்சின தாக்ஷிண்யம். சினனே காமம் கழிகண்ணோட்டம் என்றிவற்றை-கோபமும் காமமும் மோகமும் எனப்

பட்ட இவற்றை. அறிந்தெரிதிகிரிக்கு வழியடையாகும் நீத - தருமத்தை

யாராய்கின்ற ஆஜ்ஞாசக்கரத்தைக்கொண்ட
அரசனுக்குச் செல்லும்வழியை

மறுத்துத்தடுப்பதான குற்றம். இவறல்
என்னுந்தொழிற்பெயரில், இவறு -.

பகுதி. உம்மைகள் - எண்ணுப்பொருளன.
"அடிநிழலரசரையளிக்கு மாய்

கதிர், முடிநிழல் முனிவரர் சரணமூழ்குமே" என்ற
சூளாமணியாலும், செங்

கோல்மன்னனுக்கு மாண்பிறந்தமான மின்மை காண்க.
(உ)

சஙஙு. தினைத்துணையாங் குற்றம் வரினும்
கொள்வர் பழிநாணு வார்.

பனைத்துணையாக்

(இ - ள்.) பழி

நாணுவார்-பழியை அஞ்சுவார்,—தினை துணை ஆம் குற்

றம்
வரின் உம்-(தங்கண்) தினையினளவாங்குற்றம் வந்ததாயினும்,
பனை துணை

ஆ கொள்வர்-(அதனை அவ்வளவாகவன்றிப்)
பனையின் அளவாகக் கொள்வர்.

'குற்றம்' - சாதிப்பெயர். தமக்கு ஏலாமையின்,
சிறிதென்று *பொருர்;

பெரிதாகக் கொண்டுவருந்திப் பின்னும்
அதுவாராமற் காப்பரென்பதாம்.

(கு - ரை.) பழியை அஞ்சுவார்-தமக்கு

நிந்தனைநேருமேயென்று அதற்

குப் பயப்படுபவர். தங்கண் - தம்மிடத்து. தினை - ஒரு
வகைச்சிறுதானியம்.

அவ்வளவாக அன்றி - மிகச்சிறிதாக்கொள்ளாமல்.
பனையினளவாகக்கொள்

வர் - மிகப்பெரியதாகக் கருதுவரென்றபடி. கீழ்
"தினைத்துணை நன்றிசெயி

னும் பனைத்துணையாக் கொள்வர் பயன்றெரிவார்"
என்றகுறளில் 'தினை

பனை என்பன - சிறுமை பெருமைகட்குக் காட்டுவன
சிலஅளவை' என்று

கூறிப்போந்தார் பரிமேலழகர். காமம் முதலிய
குற்றங்களாறையும் உட்படுத்

துதற்கு, 'குற்றம் - சாதிப்பெயர்' என்றார்;
அந்தவகைக்கெல்லாம் பொது

வானபெய ரென்றபடி. தமக்கு ஏலாமையின் -
தமக்குத்தகாததனால். சிறி

தென்று பொறார் - சிறியதென்றுகருதிப்
பொறுக்கமாட்டார்கள். அது - குற்

றம். காப்பர்-தடுத்துத்தம்மைப் பாதுகாப்பர். வரினும்,
உம்மை-இழிவுசிறப்பு.

௪௩௪. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை.

(இ - ள்.) அற்றம் தரூஉம் - (தனக்கு) இறுதிபயக்கும், பகை—, குற்றமே—: (ஆகலான்), குற்றமே-அக்குற்றம் தன்கண் வாராமையே, பொருள் ஆக - பயனாகக்கொண்டு, காக்க - காக்கவேண்டும்; (எ - று.)

'இவைபற்றியல்லது பகைவர் அற்றந் தாராமையின், இவையே பகையாவன்' என்னும் வடநூலார்மதம்பற்றி 'குற்றமே, அற்றந்தரூஉம் பகை' என்றும், 'இவற்றது இன்மையே குணங்களது உண்மையாகக்கொண்டு' என்பார் 'பொருளாக' என்றுங் கூறினர். 'குற்றமேகாக்க' என்பது, "அரும்பண்பினாற் றீமை †காக்க" என்பதுபோல நின்றது.

(கு - ரை.) இறுதிபயக்கும் பகை - தீங்கைவிளைக்கும் விரோதி. இவைபற்றியல்லது - தம்மிடத்து மிகும் காமம் முதலிய குற்றங்கள் காரணமாகவல்லாமல். அற்றம் தாராமையின் - கெடுதிவிளையாராதலால். மதம் - கொள்கை. இவற்றது இன்மையே குணங்களது உண்மையாகக்கொண்டு-இக்குற்றங்கள் இல்லாதிருந்தால் அதுவே பெருங்குணமுடைமையா மென்று கருதி. "அரும்பண்பினால் தீமைகாக்க" என்னும் மேற்கோளுக்கு - தன்னிடம் தீங்குநேராதபடி அதனை அருமையானவகையால்தடுத்துத் தன்னைத் தான் பாதுகாத்துக்கொள்க என்று பொருள்; அருமையான நற்குணநற்செயல்களையுடைமையால் தீமைவாராதபடி காக்க வென்றும் பொருள்கொள்ளலாம். ஏகாரம் - இரண்டிடத்தும் பிரிநிலை. தரூஉம் - தரும்என்பது குறில் நெடிலாய்ச் செய்யுளோசைநிறைக்கவந்த அளபெடை. புறப்பகைவர் ஒரு

பி-ம்: * தேரார் † காத்தவன்



வர்க்குத் தீங்கு செய்தற்குக் காரணம் அவரிடத்துநிகழும் மதம் மாற்சரியம் முதலிய அகப்பகைகளைக் கண்டவழியே என்னுங் கருத்துக்கொண்ட 'குற்றமேயற்றந்தரூஉம் பகை' என்ற இரண்டாம்வாக்கியம், 'குற்றமேகாக்கபொருளாக' என்ற முதல்வாக்கியத்துக்குக் காரணம்; ஆதலால், ஏதுவணி. (௪)

சநடு. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(இ - ள்.) வரும் முன்னர் காவாதான் வாழ்க்கை - (குற்றம்) வரக்கடவதாகின்றமுற்காலத்திலே (அதனைக்) காவாத அரசன்வாழ்க்கை,—(அது வந்தால்), எரி முன்னர் - எரிமுகத்து (நின்ற), வை தூறு போல-வைக்குவை போல, கெடும் - அழிந்துவிடும்; (எ - று.)

'குற்றம்' என்பது, அதிகாரத்தான் வந்தது. 'முன்னர்' என்றதன் ஈற்றது-பகுதிப்பொருள்விகுதி. 'வரும்' என்னும் பெயரெச்சம், 'முன்னர்' என்னுங் காலப்பெயர் கொண்டது; அதனால், காக்கலாங்காலம் பெறப்பட்டது. குற்றம் சிறிதாயினும் அதனாற் பெரியசெல்வம் அழிந்தேவிடுமென்பது உவமையாற் பெற்றாம்.

(கு - ரை.) வரக்கடவதாகின்ற முற்காலத்திலே - வருதற்கு முந்தியே என்றபடி.
அதனைக்காவாத-அக்குற்றத்தைப் பரிகரித்தல்செய்யாத.
அரசன் வாழ்க்கை - அரசனது செல்வவாழ்வு. அதுவந்தால் - குற்றம்வந்தால். எரி முகத்துநின்ற வைக் குவை போல - நெருப்பின்முன்பட்ட வைக்கோலின் போர்போல.
அதிகாரத்தான் - இது 'குற்றங்கடிதல்' என்னும் அதிகாரமாதலால். என்றதன் ஈற்றது-என்றசொல்லின் இறுதியிலுள்ள 'அர்' என்பது: பகுதிப்பொருள்விகுதி - தனக்கு என்று வேறுஒருபொருளைத்தராமல் பகுதியின்பொருளையே யுணர்த்தும் விகுதி; முன்என்னும் இடைச்சொல், இங்கே

காலப்பொருளதாய்ப் பெயர்ச்சொல்தன்மைப்பட்டு 'வரும்'என்னும்பெயரெச்சத்திற்கு முடிக்குஞ்சொல்லாயிற்று. அதனால் - வருமுன்னர் என்பதனால், தாக்கலாங்காலம் குற்றம்வருதற்குமுந்தினபொழுது என்றபடி. சிறுகாரணத்தாற் பெரும்பொருளழிதலாகிய பயன்பற்றி வந்தது உவமையணி யென்க. நெருப்புச்சிறிதாயிருந்தாலும் அதனால் பெரிய வைக்கோற்போர் அழிந்து விடுவதுபோலக் குற்றஞ்சிறிதாயிருந்தாலும் அதனாற்பெரியசெல்வமும் அழிந்து விடுமென்க. காவாதான்வாழ்க்கை, எரிமுன்னர், வைத்தூறு - ஆறும்வேற்றுமைத்தொகைகள்.

(௫)

௪௩௬. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங்
காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

(இ - ள்.) (முன்னர்), தன் குற்றம் நீக்கி - தன்குற்றத்தைக் (கண்டு) கடிந்து, (பின்னர்), பிறர் குற்றம் காண்கிற்பின் - பிறர் குற்றங் காணவல்லனாயின், இறைக்கு - அரசனுக்கு, ஆகும் குற்றம் - ஆகக்கடவ குற்றம், என் - யாது? (எ - று.)



'அரசனுக்குத் தன்குற்றங்கடியாவழியே பிறர்குற்றங்கடிதல் குற்றமாம்; அதுகடிந்தவழி முறைசெய்தலாம்' என்பார், 'என்குற்றமாகும்?'என்றார்;எனவே, தன்குற்றங்கடிந்தவனே முறைசெய்தற்கு உரியவனென்பதாயிற்று.

இவைநான்குபாட்டானும், அவற்றது கடிதற்பாடு பொதுவகையாற்

கூறப்பட்டது; இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(கு - ரை.) காணவல்லனாயின் - அறிந்து ஒழிக்க வல்லவனானால். ஆகக்கடவ - வரக்கடவதான. அரசனுக்காகக்கடவ என்றவிடத்து - 'அரசனுக்குக் காக்கக்கடவ' என்றும் பிரதிபேதம்; அதற்கு - அரசனுக்கு ஒழிக்கத்தக்க என்று பொருள். அது கடிந்தவழி - தன்குற்றத்தை ஒழித்தவிடத்து. முறைசெய்தலாம் - அரசன் பிறர்குற்றத்தையொழித்தல் நீதிநடத்துதலாம். அவற்றது கடிதற்பாடு - காமம் வெகுளிமுதலிய அக்குற்றங்களின் ஒழிக்கவேண்டுந்தன்மை. பொதுவகையால் - பலகுற்றங்களுக்கும் பொதுப்பட. சிறப்புவகையால் - தனித்தனி ஒவ்வொருகுற்றத்துக்கு உரியதாக. கூறுப - சொல்லுவர். குற்றம் ஆகும்என்பது - ஆகுங்குற்றம் என மொழிமாற்றப்பட்டது.

இங்கே "மன்னிய பகைக்குழாமாறும் வையகம், துன்னியவரும்பகைத்

தொகையுமின்மையால், தன்னையும் பிறரையுங்காக்கு மென்பதம், மன்ன

வன்றிறத்தினிமருளவேண்டுமோ" என்ற சூளாமணிச்செய்யுளை உணர்க. (சு)

சநு எ. செயற்பால செய்யா திவறியான் செல்வ

முயற்பால தன்றிக் கெடும்.

(இ - ள்.) செயல் பால - (பொருளால் தனக்குச்) செய்துகொள்ளப்படு

மவற்றை, செய்யாது - செய்துகொள்ளாது, இவறியான் - (அதன்கண்) பற்

றுள்ளஞ்செய்தானது, செல்வம்—,—உயல்பாலது

அன்றி - (பின்)உளதாம்

பான்மைத்தன்றி, கெடும் - (வறிதே) கெடும்; (எ - று.)

செயற்பாலவாவன - அறம்பொருள் இன்பங்கள். பொருளாற் பொருள்

செய்தலாவது-பெருக்குதல்; அது "பொன்னி னாகும் பொருபடை யப்படை,

தன்னி னாகுந் தரணி தரணியிற், பின்னையாகும் பெரும்பொரு ளப்பொ

ருள், துன்னுங் காலைத் துன்னாதன வில்லையே" என்பதனான் அறிக. அறஞ்

செய்யாமையானும் பொருள்பெருக்காமையானும் 'உயற்பாலதன்றி' என்றும்,

இன்பப்பயன் கொள்ளாமையின் 'கெடும்' என்றுங் கூறினார். 'உயற்பால

தின்றி' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(கு - ரை.) பொருளால் - செல்வத்தைக்கொண்டு. பற்றுள்ளஞ் செய்

தான் - உலோபஞ்செய்தவன். பின் உளதாம் பான்மைத்தன்றி-பின்பு இருக்

கும் தன்மையுடைய தல்லாமல் [லோபஞ் செய்தவுடனே அழிதலுற்று]. வறிதே - வீணாய், பயனில்லாமல். செயற்பால என்றதனாற் குறிக்கப்பட்ட மூன்றுபுருஷார்த்தங்களுள் பொருளும் அடங்குதலால், பொருளாற் பொருள் செய்தலாவது இன்னதுஎன்று விளக்கினார். பெருக்குதல்-விருத்திசெய் தல். "பொன்னினாகும்" என்ற மேற்கோள் - சீவகசிந்தாமணி - விமலையாரிலம்பகம் - ௩௰; இதற்குப் பொருள் வருமாறு:—பொன்னின் - செல்வத்

தால், பொரு படை - போர்செய்தற்குரிய சேனை, ஆகும்-அபிவிருத்தியாம்; அப் படைதன்னின் - அந்தச்சேனையினால், தரணி-இராச்சியம், ஆகும் - அபி விருத்தியாம்; தரணியின் - அவ்விராச்சியத்தால், பின்னை - அதன்பின்பு, பெரும் பொருள் - மிகுந்த செல்வம், ஆம் - திரளும்; அப் பொருள் துன்னும் காலை - அந்தப்பெரும்பொருள் ஒருவனுக்குக் கிடைக்கும்பொழுதில், துன்னா தன இல்லை - அவனுக்குக் கிடையாதன எவையுமில்லை என்பதாம். அறஞ் செய்யாமையானும் பொருள்பெருக்காமையானும் உயற்பாலதன்றி என்றும்- "தன்னோடுசெல்வது வேண்டினறஞ்செய்க" என்றபடி மறுமைக்கு உதவுவ தான தருமத்தைப் பொருள்படைத்ததன்பயனாகச் செய்யாமையாலும் பொ ருளை அபிவிருத்தி செய்யாததாலும் உளதாம்பான்மைத்தன்றி என்றாரென்க.

இன்பப்பயன் கொள்ளாமையின் - இவ்வுலகத்துஇன்பமாகிய பிரயோசனத் தையுங் கொள்ளாமையால். 'உயற்பாலதன்றிக்கெடும்' என்றதனால், அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுபுருஷார்த்தமும் லோபிக்குக் கைகூடா என்க. செயற்பால - செய்தலாகிய தன்மையை யுடையன;

இவறியான் - இறந்தகாலவினையாலணையும்பெயர். பாலது - ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். உயல், உய் - பகுதி.

'உயற்பாலதின்றி'

என்றபாடத்துக்கு - தப்பும்வழி யாவதொன்றுமில்லாமல் என்று பொருள்.

முதலுரையில், உயல் - வாழ்தல் என்றும், இரண்டாமுரையில், உயல்-தவறு தல் என்றும் பொருள். அன்றி, இன்றி என்பவற்றில் முறையே பகுதிகளாகிய அன்மை இன்மை என்பன - ஒருபொருளைமறுத்து அதற்குஇன'மான தைச் சொல்லுதலும், ஒருபொருளின் இல்லாமையைச்சொல்லுதலும் ஆகிய பொருள்வேறுபாடு உடையன.

(எ) சஅ௫. பற்றுள்ள மென்னு
மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று.

(இ - ள்.) பற்று உள்ளம் என்னும்-(பொருளை விடத்தகுமிடத்துவிடாது) பற்றுதலைச்செய்யும் உள்ளமாகிய, இவறன்மை-உலோபத்தினது தன்மை,— எற்றுள் உம் - (குற்றத்தன்மைகள்) எல்லாவற்றுள்ளும்வைத்து, எண்ணப்படுவது ஒன்று அன்று - எண்ணப்படுவதொன்றன்று: [மிக்கது]; (எ - று.)

இவறலது தன்மையாவது - குணங்களெல்லாம் ஒருங்கு உளவாயினும் அவற்றைக்கீழ்ப்படுத்துத் தான் மேற்படவல்ல இயல்பு; ஒழிந்தன அதுமாட்டாமையின், 'எற்றுள்ளுமெண்ணப்படுவதொன்றன்று' என்றார். 'எவற்றுள்ளும்' என்பது, இடைக்குறைந்துநின்றது.

இவையிரண்டுபாட்டானும், உலோபத்தின் தீமை கூறப்பட்டது.

(கு - ரை.) பொருளை விடத்தகுமிடத்து விடாது பற்றுதலைச்செய்யும் உள்ளம் - செல்வத்தைச் செலவிடுதற்கு அவசியமானவிடத்திலுஞ் செலவு

செய்யாமல் அதனை மிகவிரும்பி இறுகப்பிடித்தலைச்செய்யும் கருத்து. இத னால், பற்றுள்ளமென்பது - காரணப்பெயரென்றும், வினைத்தொகைநிலைத் தொடர்மொழியென்றும், இதில் பற்றுதல் என்னும் வினைக்குப் பொருளை



யென்னுஞ் செயப்படுபொருள் வருவித்தல்வேண்டுமென்றும் அறிக. ஒன்ற ன்று, மிக்கது - சாதாரணமான ஒருகுற்றமன்று, எல்லாக் குற்றங்களினும் மிகப்பெரிதான குற்றம். இவறலது-லோபஞ்செய்தலின். ஒருங்கு உளவாயி னும் - ஒருசேர உள்ளனவானாலும். ஒழிந்தன - அரிஷட்வர்க்கங்களுள் உலோபம் ஒழிந்த மற்றைக்குற்றங்கள். அது மாட்டாமையின்-பிறகுணங்களை யெல்லாங் கீழாக்கித் தானே மேலாகமாட்டாமையால். எற்றுள்ளும் என்பது- எவற்றுள்ளும் என்பதன் விகாரம்.

உம்மை-முற்றுப்பொருளது. இவறன்மை- இவறல்என்னுந் தொழிற்பெயரின்மேல், மை - தன்மைப்பொருளுணர்த்தும் விகுதி. எண்ணப்படுவது - சமமாகக் கணக்கிட்டு மதிக்கப்படுவது. (அ)

சஙகூ. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(இ - ள்.) எஞ்ஞான்றும் - (தான்) இறப்ப உயர்ந்தஞான்றும், தன்னை வியவற்க - (மதத்தால்) தன்னை நன்குமதியாதொழிக; நன்றி பயவா வினை - (தனக்கு) நன்மைபயவாவினைகளை, நயவற்க-(மானத்தால்) விரும்பாதொழிக.

தன்னைவியந்துழி இடமும் காலமும் வலியும் அறியப்படாமையானும், அறனும் பொருளும்

இகழப்படுதலானும் 'எஞ்ஞான்றும் வியவற்க' என்றும், 'கருதியதுமுடித்தேவிடுவல்' என்று அறம்பொருள் இன்பங்கள்பயவா வினை

களை நயப்பின் அவற்றால் பாவமும் பழியும் கேடும் வருமாகலின் 'அவற்றை நயவற்க' என்றுங் கூறினார்.

இதனன், மத மானங்களின் தீமை கூறப்பட்டது.

(கு - ரை.) இறப்ப உயர்ந்த ஞான்றும் - எல்லாரினும் மிக அதிகமாக மேன்மையடைந்தபொழுதும். தன்னை நன்குமதியாது ஒழிக - தன்னைத் தானே மேன்மையாக எண்ணுதிருக்கக்கடவன்.

"தன்னைவியப்பிப்பான்தற் புகழ்தல் தீச்சுடர்,
நன்னீர்சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை, வியவாமை
யன்றே வியப்பாவ தின்பம், நயவாமையன்றேநலம்" எனப்
பின்னூலாரும்

இக்கருத்தை விளங்க உரைத்திருத்தல் காண்க. நன்மைபயவா வினைகளை - நன்மையைத்தராத காரியங்களை. வியந்துழி-(தன்னை) நன்குமதித்தவிடத்து.

இடமும் காலமும் வலியும்-தான் வெல்லக்கூடிய இடமும் தன்னைப்பகைவன் வெல்லக்கூடும் இடமும், தான்வெல்லக்கூடிய காலமும். தன்னைப்பகைவன் வெல்லக்கூடுங் காலமும், சேனைமுதலிய தனது பலமும் பகைவனது அப் பலமும். தன்னைத் தானே நன்குமதித்தால், இடம்முதலியனவெல்லாம் தன் னிடம் குறைவாகவும் பிறரிடம் அதிகமாகவும் இருந்தாலும், அவ்வுண்மை தோன்றாமல் எப்பொழுதுந்தன்னிடத்திலே சிறந்திருப்பனவாகவும் பகைவர் முதலிய பிறரெல்லாரிடத்துங் குறைந்திருப்பனவாகவுந் தோன்றுமாதலால் 'அறியப்படாமையானும்' என்றார்.

துரகங்காரமுடையவர் தரும அர்த்தங்களை எப்பொழுதும் அலட்சியஞ்செய்வராதலால், 'அறனும் பொருளும் இகழப்படுதலானும்' என்றது.

எஞ்ஞான்றும் - எப்பொழுதும். கருதியது முடித்தே

விடுவல் - எண்ணின காரியத்தை

நிறைவேற்றியேவிடுவேன். அறம்



பொருள் இன்பங்கள் பயவா வினைகளை - திரிவர்க்கத்தில் ஒருபுருஷார்த்தத்தையாயினுங் கொடுப்பதல்லாத காரியங்களை. நயப்பின்-விரும்பினால். பழி - நிந்தனை. கேடு-செல்வம்முதலியன அழிதல். மதமானங்களின்-மதம் மானம் என்பவற்றின். வியவற்க, நயவற்க-எதிர்மறைவியங்கோள்; விய, நய - பகுதிகள். (௯)

௪௪௦. காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்.

(இ - ள்.) காதல - (தான்) காதலித்த பொருள்களை, காதல் அறியாமை - (அவர்) அக்காதலறியாமல், உய்க்கிற்பின் - அனுபவிக்கவல்லனாயின், ஏதிலார் நூல் - பகைவர் (தன்னை வஞ்சித்தற்கு எண்ணும்) எண்ணம், ஏதில - பழுதாம்.

அறிந்தவழி அவைவாயிலாகப் புகுந்து வஞ்சிப்பராகலின், அறியாமல் உய்த்தால், வாயிலின்மையின் வஞ்சிக்கப்படானென்பதாம்.

காமம் வெகுளி உவகை என்பன முற்றக்கடியுங் குற்றமன்மையின், இதனான், பெரும்பான்மைத்தாகிய காமம்நுகரும்ஆறுகூறி, ஏனைச்சிறுபான்மைய வற்றிற்குப் பொதுவகைவிலக்கினையே கொண்டொழிந்தார்.

(கு - ரை.) காதலித்தபொருள்கள் - விரும்பின

விஷயங்கள். அவர் அக்
காதலறியாமல் - பகைவர் அந்தத் தனது
விருப்பத்தை அறியவொண்
ணுதபடி. பழுதாம் - பயன்படாமல் வீணுகும்.
அறிந்தவழி - தான் விரும்
பியபொருளைப் பகைவர் அறிந்த விடத்து.
அவைவாயிலாகப் புகுந்து -
அவ்விரும்பியபொருள் வழியாகப் பிரவேசித்து.
உய்த்தால் - அனுபவித்
தால். வாயில் இன்மையின் - அவர்நுழைதற்கு வழியில்லாமையால். முற்றக்
கடியும்குற்றம் அன்மையின் - அரசர்க்கு முழுதும்ஒழிக்கத்தக்க குற்ற மாகா
ததனல். பெரும்பான்மைத்தாகிய காமம் நுகருமாறு - பெரும்பாலும்
அரசர்க்கு உளதாவதான காமத்தைப் பகைவர்க்குத்
தெரியாதபடி மறை வேறச்செய்து கொள்ளவேண்டும்
வழி. ஏனைச்சிறுபான்மையவற்றிற்கு -
அரசரிடம்சிறுபான்மையுண்டாகும் வெகுளி
உவகை என்னும் மற்றைறக்குற்
றங்களுக்கு. பொதுவகைவிலக்கு -
கீழ்ஆறுபாடல்களிற்கூறப்பட்ட விலக்கு.
விலக்கு தகாதென்பது:
இதன்உடன்பாடு-விதியெனப்படும். காதல - காதல்
என்னும் பெயரினடியாப் பிறந்த பலவின்பாற்
குறிப்புவினையாலணையும்
பெயர். காமம் வெகுளி உவகையென்பன அரசருக்கு
அடியோடுஒழிக்கவேண் டியகுற்றங்களல்லாமையால்,

இக்குறளால் அரசர்க்குப் பெரும்பான்மையான காமத்தைப் பகைவரறியாமல் நுகரும் வகையைக்கூறி மற்றைச்சிறுபான்மை யான வெகுளிஉவகைகட்கு "தினைத்துணையாம் குற்றம் வரினும்" என்ற குறள்முதல் நான்குகுறளாற் கூறிய பொதுவகைவிலக்கினையே கொண்டார்: இங்குக் கூறிய வகையால், அரசர் பகைவரறியாமற் காமத்தை நுகரவேண்டு மென்பதும், வெகுளிஉவகைகளைப் பெரும்பாலும் நீக்கவேண்டுமென்பதும் பெறப்படும். ஏதில-ஏது இல: யாதும்பயனுடையன அல்ல. ஏதிலார்-ஏது இலார்; யாதொருசம்பந்தமு மில்லாதவர்; எனவே, பகைவராம். நூல் -

## சரு - ஆம் அதிகாரம்.—பெரியாரைத் துணைக்கோடல் ருள

முதனிலைத் தொழிற்பெயர்; நூற்றல் - மிகுதியாக எண்ணுதல். பிறர்க்குத் தெரியாமல் ஏகாந்தமாகத் தாம் விரும்பின பொருள்களைப் பெற்று அனுபவிக்க வல்லாரைப் பகைவரால் வெல்லமுடியா தென்பது இதன்கருத்து. (௧0)

## சரு - ஆம் அதிகாரம்.—பெரியாரைத் துணைக்கோடல்.

அஃதாவது - மூவிருகுற்றமும் முறைமையிற்கடிதலின் காவற்சாகாடு உகைத்தற்குஉரியனான அரசன் நீநெறிவிலக்கிநன்னெறிச்செலுத்தும்பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக்கோடல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். பேரறிவுடையராவார்-அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத் தெய்வக்குற்றங்கள்வாராமற் காத்தற்குஉரிய அமைச்சர், புரோகிதர்.

(கு - ரை.) மூவிரு குற்றமும் - காமம் முதலிய ஆறு குற்றங்களையும். முறைமையின் கடிதலின் - நீதிநூல்முறைமைப்படி ஒழித்ததனால். காவற் சாகாடு உகைத்தற்கு உரியன் ஆய - இராச்சியத்தை ஆளுதற்றொழிலாகிய வண்டியைச் செலுத்துதற்கு உரியவனான. சாகாடு-சகடம், பண்டி. பேரறிவு-சிறந்தபுத்தி. கோடல் - கொள்ளுதல், தொழிற்பெயர். அதிகாரமுறைமை - கீழ் 'குற்றங்கடிதல்' என்னும் அதிகாரத்தின்பின் இவ்வதிகாரத்தை வைத்ததற்குக் காரணம். இதனானே-இங்குக்கூறியவிதத்தால்.

குற்றங்களையொழித்து

ஆளுகைநடத்தும் அரசன் அதற்கு உதவியாகப் பெரியாரைத் துணைக்கொள்

ளவேண்டுமாதலால், குற்றங்கடிதலின் பின் பெரியாரைத்துணைக்கோடல் வைக்கப்பட்டது. அங்கங்கட்கும்-நாடுமுதலிய ஐந்திற்கும், மானுடத்தெய்வக்

குற்றங்கள்—மானுடக்குற்றம் - பகைவர் கள்ளர் முதலியோரால் நேர்வன;

தெய்வக்குற்றம் - மிக்கமழை மழையின்மை முதலியவற்றால் நேர்வன:

அவற்றை இவ்வதிகாரத்தின் இரண்டாம்பாட்டின் உரையில் விரித்துக்கூறு

வர். அமைச்சர் - மந்திரிகள். புரோகிதர்-வருங்காரியஞ் சொல்பவரும், கிருத்

தியஞ்செய்விப்பவருமாகிய பிராமணர். மந்திரியர், புரோகிதர், சேனுபதியர்

தூதர், ஒற்றர் என்பவர் - அரசர்க்கு 'ஐம்பெருங்குழு' எனப்படுவர். இனி,

பெரியார் என்பதில் - பொதுவாக அறிவு, பிராயம், ஒழுக்கம் இவற்றில்

முதிர்ந்த ஞானவ்ருத்தர், வயோவ்ருத்தர், சீலவ்ருத்தர் என இவர் என்னும்

பொருளும் அமையும்.

சசக. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை

திறனறிந்து தேர்ந்து கொளல்.

(இ - ள்.) அறன் அறிந்து-அறத்தினது நுண்மையை அறிந்து, மூத்த-
(தன்னின்) மூத்த,அறிவு உடையார் - அறிவுடையாரது, கேண்மை - கேண்
மையை, (அரசன்), தேர்ந்து - (அதனது அருமையை) ஓர்ந்து, திறன் அறிந்
து - (கொள்ளும்) திறம்அறிந்து, கொளல் - கொள்க; (எ - று.)

அறநுண்மை நூலானேயன்றி உய்த்துணர்வானும் அறியவேண்டுத
லின், 'அறனறிந்து' என்றார். மூத்தல்-அறிவானும், சீலத்தானும், காலத்தா
னும் முதிர்தல். அறிவுஉடையார்-நீதியையும்

8

உலகியலையும் அறிதலை யுடை



யார். திறன் அறிதலாவது -

நன்குமதித்தல், உயரச்செய்தல், அவர்வரைநிற் றல் என்பன முதலாக அவர்பிணிப்புண்ணும் திறன் அறிந்து செய்தல்.

(கு - ரை.) அறத்தினது நுண்மையை

அறிந்து-தருமத்தினது சூட்சுமத் தைச்சாஸ்திரவிதியாலும்

உலகநடையாராய்ந்தறியும்பயிற்சியாலும் உணர்ந்து.
மூத்த - மேம்பட்ட.
கேண்மை - துணைமை; (ஒருவர்க்கொருவர் யோக க்ஷேமசமாசாரங்களைக்) கேட்குந்தன்மையுடைமையால், கேண்மையென்று துணைமைக்குப்பெயர்; இதனை - வினைப்பகுதியடியாப்பிறந்த பண்புப்பெயராகக் கொள்ளவேண்டும். அதனது அருமையை ஓர்ந்து - அப்படிப்பட்டபெரியவர்சிநேகம் கிடைப்பதற்கருமையானதென்று அறிந்து.
கொள்ளுந்திறமறிந்து கொள்க - பெறும்வழியறிந்து பெறுக.
அறநுண்மை-தருமசூட்சுமம். நூலானேயன்றி - சாஸ்திரங்களினால் மாத்திரமேயல்லாமல். உய்த்துணர்வானும் - ஊகித்தறியும்விதத்தாலும். சீலம் - நல்லொழுக்கம். காலம் - பிராயம். அறிவுமுதலியவற்றால் முதிர்தல் - ஞானவ்ருத்தரும், வயோவ்ருத்தரும், சீலவ்ருத்தருமாதல். உலகியலையும் - உலகநடக்கையையும். நன்குமதித்தல் - அவர்கள்பெருமையைத் தான் நன்றாகஅறிதல்.
உயரச்செய்தல்-அவர்களைத் தான் மேன்மைப்படுத்தி உபசரித்தல். அவர்வரைநிற்றல் - அவர்கள் கூறியஎல்லையில் தான் நிற்பது. 'முதலாக' என்றதனால், தவறியபோது கண்டிக்கப்பட்டாலும்பணிந்திருத்தல் முதலியன.
அவர்பிணிப்புண்ணுந்திறன் அறிந்து செய்தல் - அவர்கள் தன்பக்கல் அன்புகொண்டு தன்னைவிட்டுநீங்காமற் கட்டுப்பட்டிருக்கும்வழியை அறிந்து செய்தல். அறன், திறன் - மகர னகரம் மாறிவருஞ் சொற்கள்.

'அறிந்து'என்னும் வினையெச்சம் இரண்டனுள் முன்னது -'மூத்த' என்பதை யாவது, 'உடையார்' என்பதை யாவது கொள்ளும்; பின்னது -'கொளல்' என்பதைக் கொள்ளும். திறனறிந்து தேர்ந்து - தேர்ந்து திறனறிந்து என மொழிமாற்றுக. கொளல் - வியங்கோள்.

சிறந்தஅறிவுடைய அமைச்சர் புரோகிதர் என்பவர் எந்தவழியால் தன்னிடம் பாசபந்தங்கொண்டு தன்னின் நீங்காதிருப்பரோ, அந்தவழி யால் அவர்தொடர்ச்சியை அடையவேண்டு மென்பது கருத்து. (க)

சசஉ. உற்றநோய் நீக்கி யுறாஅமை
முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(இ - ள்.) உற்ற நோய் - (தெய்வத்தானும் மக்களானுந் தனக்கு) வந்த துன்பங்களை, நீக்கி - (நீக்கும்ஆறுஅறிந்து)நீக்கி, உறாமை - (பின்அப் பெற்றியன)வாராவண்ணம், முன் காக்கும் - முன் (அறிந்து)காக்கவல்ல, பெற்றியார் - தன்மையினையுடையாரை, (அரசன்), பேணி கொளல் - அவர்உவப்பனசெய்து (துணையாகக்) கொள்க; (எ - று.)

தெய்வத்தான்வருந் துன்பங்களாவன - மழையினது இன்மைமிகுதிக ளானும், காற்றுத் தீப் பிணி என்றிவற்றானும் வருவன: அவை-கடவுளரை யும் தக்கோரையும் நோக்கிச் செய்யுஞ் சாந்திகளால் நீக்கப்படும்.

மக்களான் வருந் துன்பங்களாவன - பகைவர், கள்வர்,

சுற்றத்தார், வினைசெய்வார்

## சஉ - ஆம் அதிகாரம்.—பெரியாரைத் துணைக்கோடல் ருக

என்றிவர்களான் வருவன; அவை - சாமபேத தான தண்டங்களாகிய நால் வகை உபாயத்துள் ஏற்றதனால் நீக்கப்படும். முற்காத்தலாவது - தெய்வத் தான்வருவனவற்றை உற்பாதங்களான் அறிந்து அச்சாந்திகளாற்காத்தலும், மக்களான்வருவனவற்றை அவர்குணம் இங்கிதம் ஆகாரம் செயல் என்பவற் றான் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாற் காத்தலுமாம்: ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையுங் கூறியவாறாயிற்று. இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில். ஆகாரம் - குறிப்பின் றிநிகழும் வேறுபாடு. உவப்பனகன்குமதித்தல் முதலியன.

இவை யிரண்டுபாட்டானும், பெரியாரது இலக்கணமும், அவரைத் துணையாகக்கோடல்வேண்டு மென்பதூஉம், கொள்ளுமாறும் கூறப்பட்டன.

(கு - ரை.) தெய்வத்தானுக மக்களானுக - தெய்வத்தாலாவது, மனித ராலாவது. நீக்கும்ஆறு-ஒழிக்கும்வழி. பின்பு

அப்பெற்றியனவாராவண்ணம் - பின்பு அவ்வகைப்பட்ட தீங்குகள் வராதபடி. முன் - அவைவருதற்குமுன். அவர்உவப்பனசெய்து-அப்பெரியோர்கள்விரும்பிமகிழத்தக்க காரியங்களைச் செய்து.மழையினது இன்மைமிகுதிகள்-அநாவிருஷ்டியும் அதிவிருஷ்டியும், மழையில்லாமை முதலிய தெய்வக்குற்றங்கள் அத்தேவர்களைக் குறித்தும் அந்தணர்முதலிய சான்றோரைக்குறித்துஞ் செய்யும் யாகம் திருவிழா விசேட பூசை தானம் முதலிய சாந்திகளால் ஒழிக்கப்படு மென்பது நூற்கொள்கை, கடவுளர் - தேவர். தக்கோர்-தகுதியுடையவர், சான்றோர். சாந்தி-தீவினைப் பரிகாரத்தின் பொருட்டுச்செய்யும் வைதிகச்சடங்கு. சுற்றத்தார்-உறவினர். வினைசெய்வார் - தொழில்செய்யும் பரிவாரசனங்கள். சாமம் - சமாதானத் தாற்காரியங்கொள்ளுதல். பேதம் - பிறரைப் பிரித்துக் காரியங்கொள்ளுதல். தானம் - பொருள்கொடுத்துக் காரியங்கொள்ளுதல். தண்டம் - சேனையையும் ஆயுதங்களையும் உபயோகித்துக் காரியங்கொள்ளுதல். இந்நான்குஉபாயமும் அரசர்க்கு இன்றியமையாதனவாம். ஏற்றதனால் - இடத்திற்கும் காலத்திற்கும் காரியத்திற்குந் தக்க உபாயத்தால். உற்பாதம் - உத்பாதம்: பின் நிகழஇருக்குந் தீங்கை முன்அறிவிக்குந் துர்நிமித்தம். தெய்வத்தால்வருந் துன்பங்களைச் சாந்திசெய்துநீக்குபவர் புரோகிதராயும், மக்களால்வருந் துன்பங்களை நால்வகை யுபாயங்களுள் ஒன்றால் நீக்குபவர் அமைச்சர்களாயும் இருத்தலால் 'ஆகவே அமைச்சரையும் புரோகிதரையும் கூறியவாறாயிற்று' என்றது. குறிப்பால்

கிகழும் உறுப்பின்தொழில் - முகம் கண் கை முதலிய உறுப்புக்களின் செய்கையால் குறிப்பாகத் தெரிவிப்பது. ஆகாரம்-அவரவருடைய குறிப்பில்லாமலே தானுகவே முகத்திலும் உடம்பிலும் தோன்றும் வேறுபாடு. இங்கிதமறிதலினும் ஆகாரமறிதல் அரிது. நன்குமதித்தல் முதலியன-கீழ்க்கவியுரையிற்கூறியவை. கொள்ளும்ஆறு - கொள்ளும் வழி. உரூஅ மையென்னும் எதிர்மறைவினையெச்சம், செய்யுளோசை நிறைத்தற்கு அளபெடுத்தது. முன்-காலமுன். பெற்றியார்ப்பேணி-உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது. லாம்.

திறனறிதலில் நன்குமதித்தல்இதனுற்கூறப்பட்டதென்ன (௩)



திருக்குறள்

சசரு. அரியவற்று ளெல்லா
மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(இ - ள்.) பெரியாரை - அப்பெரியவர்களை, பேணி - அவர் உவப்பன

அறிந்துசெய்து, தமர் ஆ கொளல் - தமக்குச்
சிறந்தாராகக்கொள்ளுதல்,—

அரியவற்றுள் எல்லாம் அரிது-(அரசர்க்கு)அரியபேறுகள்
எல்லாவற்றுள்ளும்

அரிது; (எ - று.)

உலகத்து அரியனஎல்லாம் பெறுதற்குஉரிய
அரசர்க்கு இப்பேறு சிறந்

தது என்றது, இதனால் அவையெல்லாம் உளவாதல்
நோக்கி.

(கு - ரை.) சிறந்தாராக-மேம்பட்ட துணைவராக.
அரியபேறுகள்-கிடை

த்தற்கு அருமையான பாக்கியங்கள்.
அரிது-அருமையானது. உலகத்து அரி

யனவெல்லாம் - உலகத்திலே பிறர்க்குப்
பெறுதற்கருமையான பொருள்க

ளெல்லாவற்றையும். இப்பேறு - பெரியாரைப்பேணித்
தமராக்கொளலாகிய

இந்தப்பாக்கியம். பெரியாரைப்பேணித் தமராகக்
கொண்டால், கொள்வார்

க்கு, உலகத்து அரிய பொருள்களெல்லாம் எளியனவாகு
மென்பதாம். இக் குறளை 'நவின்றோர்க்கினிமை'
என்னுந் தந்திரகுணத்துக்கு உதாரணங்

காட்டினர், வீரசோழியவுரையில். திறனறிதலில்,
உயரச்செய்தல் இதனாற்

கூறப்பட்டதென்னலாம்.

சசச. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) தம்மின் பெரியார் - (அறிவு முதலியவற்றால்) தம்மின்மிக்கார், தமர் ஆ - தமக்குச்சிறந்தாராக, ஒழுகுதல்-(தாம் அவர்வழிநின்று) ஒழுகுதல்,—வன்மையுள் எல்லாம் தலை - (அரசர்க்கு)எல்லாவலியுடைமையினுந் தலை; (எ - று.)

பொருள் படை அரண்களான்ஆய வலியினும் இத்துணைவலி சிறந்தது என்றது, இவர் அவற்றால் நீக்கப்படாத தெய்வத்துன்பம் முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின்.

(கு - ரை.) தம்மின்மிக்கார் - தம்மைக்காட்டிலும் மேம்பட்டவர். சிறந்தாராக - சிறந்ததுணைவராகும்படி. அவர்வழிநின்றுஒழுகுதல் - அவர்கூறிய நல்வழியில் நடத்தல். வலியுடைமை - பலமுள்ள பொருள்கள். தலை - மேலானது. பொருள் - செல்வம். படை - சேனை;

ஆயுதமுமாம். அரண் -

கோட்டை மதில் அகழி முதலிய காப்புக்குஉரியன.

இத்துணைவலி - பெரி

யாரைத் துணைக்கொள்ளுதலால் உள்தாகும்

இவ்வலிமை. இவர் - பெரியார்.

அவற்றால் - பொருள்முதலியவற்றால்.

மனிதராலுண்டாந்துன்பங்களைமாத்

திரமே ஒழித்தற்குரிய பொருள்முதலியவற்றினும்

தெய்வத்தாலுண்டாந்துன்

பங்களையும் ஒழித்தற்குரிய பெரியவர் சிறந்தவரென்பதாம்.

அத்துன்பங்கள்,

௬௪௨ - ஆஞ் செய்யுளுரையிற் கூறப்பட்டன. வன்மை - வலிமையுடைய பொருள் முதலியவற்றிக்குப் பண்பாகுபெயர். இதனால், திறனறிதலில் அவர்வரைநிற்றல் கூறப்பட்டதென்னலாம். (௩)

## ௪௫ - ஆம்

## அதிகாரம்.—பெரியாரைத் துணைக்கோடல் ௬௧

௪௪௫. சூழ்வார்கண்

சூழ்வாரைச்

ணாக வொழுகலான் மன்னவன்

சூழ்ந்து கொளல்.

(இ - ள்.) சூழ்வார் கண் ஆக ஒழுகலான் - (தன்பாரம்) அமைச்சரைக் கண்ணாகக்கொண்டு நடத்தலான்,—மன்னவன் - அரசன்,—சூழ்வாரை - (அத்தன்மையராய) அமைச்சரை, சூழ்ந்து - ஆராய்ந்து, கொளல் (தனக்குத் துணையாகக்) கொள்க; (எ - று.)

இரண்டாவது, விகாரத்தால் தொக்கது. தானே சூழவல்லனாயினும் அளவிறந்தொழில்களான் ஆகுலமெய்தும் அரசன்பாரம் அதுவே தொழிலாய அமைச்சரா னல்லது இனிதுநடவாமைபற்றி, அவரைக் கண்ணாகக் கூறினார். ஆராய்தல்-அமைச்சியலுட் சொல்லப்படும் இலக்கணத்தினரென்ப தனை ஆராய்தல்.

இவைமூன்றுபாட்டானும், பெரியாரைத்துணைக்கோடலின் சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) தன்பாரம் - தனதுராச்சியபாரம், அரசாட்சிப்பொறுப்பு. அத்தன்மையராய - எல்லாவுறுப்புக்களினுஞ்சிறந்த கண்போல எல்லா அங்கங்களுள்ளுஞ் சிறந்தவராய்த் தனக்கு இன்றியமையாத. இரண்டாம் வேற்றுமையுருபு தொகுத்தல் விகாரப்பட்டது, இக்குறளின்முதலில் 'சூழ்வார்' என் னும்உயர்திணைப்பெயரின் இறுதியில்: இனி, இதனை முதல்வேற்றுமையாகவேகொண்டு, சூழ்பவர்கள் தனக்குக் கண்ணாக இருக்கத் தான் நடத்தலால் என்றும் உரைக்கலாம். பிராணிகள் வழிமுதலியன அறிந்துநடத்தல்முதலிய தொழில்செய்தற்குக் கண்ணே சிறந்ததுணையாக இருத்தல்போல, அரசர் சாமம் முதலிய எற்றவுபாயமறிந்து பொருதல் அமைச்சரே சிறந்த துணைவ ரென்க. "ஒற்றர்

முதலிய தொழில் செய்தற்கு
தங்களை யொற்றறிஞய்தலும்,
கற்றமாந்தரைக்கண் ணெனக்கோடலும், சுற்றுஞ்
சூழ்ந்து பெருக்கலுஞ் சூதரோ,
கொற்றங்கொள்குறிக்கொற்றவர்க்கென்பவே" என்பர்
சிந்தா மணியாரும். கண் தன்னை யுடைய பிராணியின்
உடம்பைக் காத்தலில் மிக்க கவனமுடைத்தா
யிருத்தல்போல, அமைச்சர் தம்மையுடைய அரசனைக்
காத்தலில் மிக்கக்கருத்துடையவ ரென்க.
சூழ-ஆலோசித்தறிய. அளவிறந்த தொழில்களான் ஆகுலம்
எய்தும் அரசன் பாரம் - அளவில்லாத பல வேலை களாற்
கவலையடைகிற அரசனது இராச்சிய பாரம். அதுவே
தொழிலாய அமைச்சரான் அல்லது - ஆலோசித்தலையே
தமக்கு வேலையாகவுடைய மந்திரிகளா லல்லாமல். அவரை
- மந்திரிகளை. அமைச்சியல் - மேல் கூற - ஆம்
அதிகாரம்முதல் பத்துஅதிகாரங்கள். இலக்கணம் "கருவியுங்
காலமுஞ்செய் கையுஞ் செய்யும், அருவினையு மாண்ட
தமைச்சு" என்றது முதலியன. அவரை அரசர்
ஆராயும்விதம், மேல் (குக) 'தெரிந்துதெளிதல்'என்னும் அதி
காரத்திற் கூறப்படும். 'தெரிந்துதெளிதலாவது - அமைச்சர்முதலாயினரைப்
பிறப்பு குணம் அறிவு என்பனவற்றையும், செயலையும், காட்சி கருத்து ஆக
மம் என்னும் அளவைகளான் ஆராய்ந்துதெளிதல்'என்று உரைப்பர். சூழ்வார்-

ஆலோசிப்பவர்கள் என மந்திரிகளுக்குத் தெரிநிலைவினையாலணையும்பெயர்ச் கிய காரணக்குறி. 'இக்குறளில், சூழ்வார்கண்ணாக ஒழுகலேபொருளாகச் சூழ்வாரைச் சூழ்ந்துகொள்ள என்று ஏதுநாட்டிச்சொன்னமையால், ஏது அலங்காரமாயிற்று; ஏதுவென்னும் அலங்காரமாவது - கூறியபொருளுக்குக் காரகம் ஞாபகம் ஆதியான ஏதுச்சொல்லுதல்: "இப்படியாதலின் இப்படி யாயிற்று, என்னக்கிளப்பது ஏதுவாகும்" எனக்கொள்க' என்பது, வீர சோழியவுரை. (௫)

சசசு. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) தக்கார் இனத்தன் ஆய் - தக்காராகிய இனத்தையுடைய னாய், தான் ஒழுகவல்லானை - தானும் (அறிந்து) ஒழுகவல்ல அரசனை, செற்றார் - பகைவர், செய கிடந்தது - செய்யக்கிடந்தது ஒரு துன்பமும், இல் - இல்லை; (எ - று.)

தக்கார் - அறிவுஒழுக்கங்களால் தகுதியுடையார். ஒழுகுதல் - அறநீதிக ளின் நெறி வழுவாமல் நடத்தல். 'வஞ்சித்தல், கூடினரைப்பிரித்தல், வேறு பகைவிளைத்தல் என்றிவற்றானும் வலியானும் பகைவர் செய்யுந்துன்பங்கள் பலதிறத்தவாயினும், தானும் அறிந்து அறிவார்சொல்லுங்கொண்டு ஒழுகு வான்கண் அவற்றுள்ஒன்றும் வாராது' என்பார், 'செற்றார்செயக்கிடந்தது இல்' என்றார்.

(கு - ரை.) தக்காராகிய இனம் - தகுதியுடையவராகிய துணைவர். செற்றார் என்பதில், செறு - பகுதி: செறுத்தல் - பகைத்தல். அறநீதிகள் - தருமமும் நீதியும். நெறி வழுவாமல் - முறைமை தவறாமல். வஞ்சித்தல் - தமதுபொருள் ஆநிரை முதலியவற்றை வஞ்சனையாற் கவர்ந்துகொள்ளுதல். கூடினரைப் பிரித்தல் - தம்மோடுசேர்ந்து உதவியாகுபவரைத் தம்மைவிட் டுப் பிரியச்செய்தல்; பாரதத்திலே பாண்டவர்க்குப் அவர்மாமனான சல்லியனைத் துரியோதனன் தான்

போர்த்துணையாகவந்த
வஞ்சனையாக அன்ன

மிட்டு
வன.

அவரினின்று பிரித்துத் தனக்குத் துணையாக்கிக்கொண்டதுபோல்
வேறுபகைவிளைத்தல் - வேறுசில பகைவர்களை யுண்டாகச்செய்தல்;
துரியோதனன் பாண்டவர் கரந்துறைதலையறிதற்
பொருட்டுப் போர்செய்யு
மாறு திரிகர்த்தரைத்தூண்டியது போல்வன. வலி -
தேகபலம், ஆயுதபலம்,
சேனைபலம், வரபலம், சகாயபலம் முதலியன.
பலதிறத்த - பலவகைப்பட்
டன. அறிவார்சொல்லும் கொண்டு ஒழுகுவான்கண் -
நுண்ணறிவுடையபெ
ரியாரதுசொல்லையுங்கேட்டு அங்கீகரித்துநடக்கும்
அரசனிடத்து. அவற்றுள் -
அத்துன்பங்களுள். (க)

சசள. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(இ - ள்.) இடிக்கும் துணையாரை - (தீயனகண்டால்) நெருங்கிச்சொல்லுந் துணையாந்தன்மையையுடையாரை, ஆள்வாரை - (இவர் நமக்குச்சிறந்

தாரென்று) ஆளும்அரசரை, கெடுக்கும் தகைமையவர் - கெடுக்கும் பெருமை
யுடையபகைவர், யார் - (உலகத்து) யாவர்? (எ - று.)
தீயன - பாவங்களும், நீதியல்லனவும். துணையாந்தன்மையாவது - தம
க்கு அவையின்மையும், அரசன்கண் அன்புடைமையுமாம். அத்தன்மையுடை
யார் நெறியின் நீங்கவிடாமையின் அவரைஆளும்அரசர் ஒருவரானுங்கெடுக்
கப்படாரென்பதாம். 'நெருங்கிச்சொல்லும் அளவினோரை' என்று உரைப்
பாரும்உளர்.
இவையிரண்டு பாட்டானும், அதன்பயன் கூறப்பட்டது.
(கு - ரை.) நெருங்கிச்சொல்லும் - வற்புறுத்திக்கூறும். ஆளும் - தமக்கு
வேண்டியவராகக்கொள்ளும். தமக்கு அவையின்மை - தம்மிடம் அத்தீய
வற்றை உடைத்தாகாமை. நெறியின் நீங்கவிடாமையின் - அரசரைச் சன்

மார்க்கத்தினின் று நீங்கும்படி விட்டிடாராதலால். முதல் உரையில் 'துணை' என்பதற்கு உதவியென்ற பொருளும், இரண்டாம்உரையில் 'துணை'என்பதற்கு - அளவுஎன்றபொருளுமாகிய வேறுபாட்டைஅறிக. நெருங்கிச்சொல்லும் அளவினேரை - உறுதிஉறுதிமொழி கூறுதல்மாத்திரத்தையுடையவரை யென்றுபொருள்; இப்பெரியார் வேறுஓர் உதவியும் தம்செயலால் அரசர்க்குச்செய்யாராயினும், இங்ஙனம் சங்கடகாலத்தில் இடித்துக்கட்டுரைகூறுதல் மாத்திரமே அவரை காத்தற்கு அமையு மென்பார், 'அளவினேரை' என்றுரென்க. உரைப்பாரும் உளர்-உரைசொல்பவர்களும்உண்டு;என்றது,பிறஉரையாசிரியரை. அதன்பயன்-பெரியாரைத் துணைக்கொள்ளுதலின் பிரயோசனம். மேல் 'அமைச்சு'என்னும் அதிகாரத்தில் ''அறிகொன் றறியானெனினு முறுதி, யுழையிருந்தான்கூறல்கடன்'' என்பதனாலும், அரசன் அறிந்தார் சொல்லையுங்கேளாது தானும்அறியாதவனாயிருந்தாலும் அமைச்சர் விடாது உறுதியாயினகூறவேண்டுதல் முறைமையாதலே அறிக. யானை மதக்களிப்பு உடையதாய்த் தீவழிச்சென்றால் அதனை அங்குசம்இடித்து அவ்வழிவிலக்கி நல்வழிச்செலுத்தல்போல, அரசன் செல்வச்செருக்குடையனாய்க் கொடுநெறியொழுகினால் அவனை அமைச்சர் இடித்துப்புத்திசொல்லி அவ்வழிவிலக்கி நல்லநெறிச்செலுத்த வேண்டு மாதலால், 'இடிக்குந்துணையாரை' எனப்பட்

டது. யார் என்ற வினாவினைக்குறிப்புமுற்று, பொருள்விளக்கிற்று.

எவருமில்லையென எதிர்மறைப்
(எ)

சசஅ. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(இ - ள்.)
இடிப்பாரை - கழறுதற்குஉரியாரை, இல்லாத-(தனக்குத்) துணையாகக் கொள்ளாமையின், ஏமரா - காவலற்ற, மன்னன் - அரசன்,
கெடுப்பார் இல் ஆன்உம்-(பகையாய்க்) கெடுப்பார் இல்லையாயினும், கெடும் -
(தானே) கெடும்; (எ - று.)
இல்லாத, ஏமரா என்பன - பெயரெச்சவடுக்கு.

கெடுப்பார்உளராவர்
என்பது தோன்ற, 'இலானும்' என்றார். தானே கெடுதலாவது - லாத யானைபோல நெறியல்லாநெறிச்சென்று கெடுதல்.

பாகனில்

(கு - ரை.) கழறுதற்கு உரியார் - நெருக்கி உறுதிச்சொல் உரைக்கத் தக்க பெரியோர். காவலற்ற - தன்னைக்காவல்செய்பவ ரில்லாத. இல்லாத, ஏமரா என்னும் எதிர்மறைப்பெயரெச்சங்கள் இரண்டும், அடுக்கி, 'மன்னன்' என்னுங் கருத்தாப்பெயர் கொண்டன; "மூவா முதலா வுலகம்" என்னுஞ் சிந்தாமணியிற்போல. 'கெடுப்பாரிலானும்' என்றஉம்மை உயர்வுசிறப்புப் பொருள்வகையால், இப்படிப்பட்டவனுக்குக் கெடுக்கும்பகைவர் பலர் உள் ளவராவரென்னும்எதிர்மறைக்கருத்தை விளக்கிற்று. அரசனுக்கு யானையை யும் மந்திரிகளுக்குப் பாகனையும் உவமைகூறியதனால், மந்திரிகள் அரசனைத் தம்வழித்திருப்புதற்குக் கூறும் இடித்துரையைப் பாகன் யானையைத் தன் வழிப்படுத்தற்குஉபயோகிக்கும் அங்குசமாகக் கொள்க. நெறியல்லாநெறிச் சென்றுகெடுதல்- நல்வழியல்லாத கெட்டவழியிலே சென்று(பிறரையுங்கெடு த்துத்) தானும்அழிதல். இன்மை - செயப்படுபொருள்குன்றாவினையு மாகுத லால், 'இடிப்பாரையில்லாத' எனப்பட்டது. ஏமா என்னும் வினைப்பகுதியி னின்று ஏமராத என்னும் எதிர்மறைப்பெயரெச்சம் பிறந்தது: ஏமாத்தல் - காவலுடைத்தாதல்; ஏமம் மருவு என்பன ஏமரு என மரூஉவிப் பகுதியாயிற் றென்றலும் உண்டு. 'இடிப்பாரையில்லாதவேமராமன்னன்' என்பதை மறை யாயடுக்கலுக்கு உதாரணங்காட்டினர், இலக்கணக்கொத்து உரையில். (அ)

## சசகூ. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ் சார்பிலார்க் கில்லை நிலை.

(இ - ள்.) முதல் இலார்க்கு-முதற்பொருள் இல்லாத வணிகர்க்கு, ஊதி யம் இல்லை-(அதனால் வரும்) ஊதியம் இல்லையாம்; (அதுபோல), மதலை ஆம் சார்பு இலார்க்கு - தம்மைத்தாங்குவதாந் துணையில்லாத அரசர்க்கு, நிலை இல்லை - (அதனால்வரும்) நிலையில்லை; (எ - று.)

முதலைப்பெற்றே இலாபம் பெறவேண்டுமாறுபோலத் தாங்குவாரைப் பெற்றே நிலைபெறவேண்டுமென்பதாம். நிலை - அரசர் பாரத்தோடு சலியாது நிற்றல்.

(கு - ரை.) முதற்பொருள் - மூலதனம்: வியாபாரஞ்செய்தற்குமுதலிற் கொள்ளும் பொருள். வணிகர் - வியாபாரஞ்செய்பவர். அதனால் வரும் ஊதியம் - அம்முதற்பொருள் காரணமாக உண்டாகும் பொருளிலாபம். மதலை

யென்றசொற்கு - தூணென்பது பொருள். அது இங்கே, இலக்கணையால் அதுபோலத் (தம்மைத்) தாங்குவ தென்றபொருளை உணர்த்திற்று. அதனான் வருநிலை - அத்துணைவலியால் உளதாகும் உறுதிப்பாடு. இலாபப்பொருளுக்கு முதற்பொருள் இன்றியமையாத காரண மாமாறுபோல, அரசர்நிலைக்குப் பெரியார் துணை இன்றியமையாதகாரணமென்க. பாரத்தோடு சலியாது நிற்றல் - இராச்சியபாரத்தைத்தாங்குதலுடனே சோர்வின்றிநிற்பது. சார்பு - சார்வதாகிய துணைக்குத் தொழிலாகுபெயர்; இதில், பு - தொழிற்பெயர் விகுதி. நிலை - நில்என்பதன்மேல் 'ஐ' விகுதி பெற்ற தொழிற்பெய ரென்று வது, நிலைமை யென்னும் பண்புப்பெயரின்விகாரமென்றாவது கொள்க.

சரு - ஆம் அதிகாரம்.—பெரியாரைத் துணைக்கோடல் கூரு

இப்பாட்டில், உபமானத்தையும் உபமேயத்தையுந் தனித்தனி வேவ்வேறு வாக்கியங்களாகக் கூறிநிறுத்தி இடையில் 'போல' முதலிய உவமவுருபு கொடாமற் கூறியது - எடுத்துக்காட்டுவமையணி. இப்பாட்டில்,

உபமானத் தால், வணிகர் இலாபத்தினும் முதலைப் பிரதானமாகக் கருதவேண்டுதல் போல, அரசர் தம்நிலையினுந் துணைவலியைப் பிரதானமாகக் கருதவேண்டு மென்னுங் கருத்துத் தொனிக்குமாறுங் காண்க.
(கூ)

சஉ0. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

(இ - ள்.) பல்லார் பகை கொளலின் - (தான் தனியனாய்வைத்துப்)பல ரோடும் பகைகொள்ளுதலின், பத்து அடுத்த தீமைத்து-பதிற்றுமடங்குதீமை யுடைத்து:—நல்லார் தொடர் கைவிடல் - (அரசன்) பெரியாரோடு நட்பி னைக் கொள்ளாதொழிதல்; (எ - று.)

பலர் பகையாயக்கால் "மோதி முன்னொடு முட்பகைகண் டிடல், பேதி செய்துபிளந்திடல்" என்பவையல்லது*ஒருங்குவினையாக்குறித்துச் செய்தா லும், ஒருவாற்றான் உய்தல்கூடும்; நல்லார்தொடர்கைவிட்டால் ஒருவாற்றா னும் உய்தல் கூடாமையின், இதுசெய்தல் அதனினுந் தீது என்பதாம். இவைமூன்றுபாட்டானும், அதுசெய்யாதவழிப் படுங்குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) தனியனாய்வைத்து - துணையொருவருமில்லாமல் தனிப்பட் டவனாயிருந்து. பதிற்றுமடங்கு - பத்துப்பங்கு அதிகமான. பலர் பகையா

யக்கால் - அநேகர் ஏககாலத்தில் விரோதிகளானால்.
"மோதிமுள்ளொடு" என்ற மேற்கோள் - சீவகசிந்தாமணி,
விமலையாரிலம்பகம், (௩௨) "நீதியா லறுத்தந்நிதியீட்டுதல்,
ஆதியாயவரும்பகைநாட்டுதல், மோதிமுள்ளொடு
முட்பகைகண்டிடல், பேதுசெய்துபிளர்திடல்பெட்டதே"
என்ற செய்யுளி லுள்ளது; 'முள்ளைக்கொண்டு
முள்ளைக்களையுமாறுபோலத் தமக்குப் பகைவ ராய்
அவர்க்குள் ஒருவரோடு ஒருவர் உறவாயிருப்பவ
ரிருவரை மித்திர பேதஞ்செய்து அவர்களில்
ஒருவரைக்கொண்டு மற்றொருவரை அழித்திடுத லும்,
ஒருவரோடொருவர் கூடிவந்து தம்முடன்
எதிர்க்கத்தக்கவரைப் பிரித் துத்
தம்மோடுசேர்த்துக்கொள்ளுதலும் அரசர் விரும்புங் காரியம்'
என்பது, இம்மேற்கோளின்பொருள். என்பவையல்லது -
என்கின்ற இவ்வகைகளா வல்லாமல். ஒருங்கு வினை ஆக்
குறித்துச்செய்தாலும்-ஒரேசமயத்தில் அந்தப்
பகைவரெல்லாரோடும் போர்த்தொழில் நடக்க
ஆலோசித்துச் செய்தாலும். ஒருஆற்றான் உய்தல்கூடும் -
ஒரு வகையால்தப்பிப்பிழைக்கக்கூடும். இது செய்தல் -
நல்லார்தொடர்கைவிடல். அதனினும் தீது -
பல்லார்பகை கொளலினும் மிகத்தீயது. அதுசெய்யாத வழிப்
படும் குற்றம்-பெரியாரைத் துணைக்கொள்ளாதவிடத்து
உண்டாகுங்குற்றம். பகை - பகைமை என்னும் பண்பினடி;
தொழிற்பெயராய், பகு ஐ எனப் பிரித்து, பகுதல் -

மாறுபடுத லென்றுங் கொள்ளலாம். பத்துஎன்றது, இங்கே பலவென்றமாத்திரமாய்

* பி - ம்: ஒருங்குவினையாக்குதல் தீது: செய்தாலும்

9



நின்றது. தொடர்-தொடர்ச்சி: முதனிலைத்தொழிற்பெயர். கைவிடல், கை தமிழ்உபசருக்கம். (௫௦)

## சகூ - ஆம் அதிகாரம்.—சிற்றினஞ்சேராமை.

அஃதாவது - சிறியஇனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது - நல்லதன்நலனும் தீயதன்தீமையும் இல்லென்போரும், விடரும், தூர்த்தரும், நடரும் உள்ளிட்ட குழு. அறிவைத் திரித்து இருமையுங்கெடுக்கும் இயல்பிற்றாய அதனைப் பொருந்தின் பெரியாரைத்துணைக்கோடல் பயனின்றாஎன்பது உணர்த்தற்கு இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

மை.

(கு - ரை.) சிறியஇனத்தைப் பொருந்தாமை – அற்பசகவாசஞ்செய்யா

நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல் என்போர் - இயற்கையில்

நல்லதாயுள்ள பொருளின் நன்மையையும் தீயதாயுள்ளபொருளின் தீமையையும் இல்லையென்று எண்ணுபவரும் சொல்லுபவரும். "நல்லத னலனுந் தீயதன்றீமையும், இல்லையென்போர்க்கினனாகிலியர்" என்பது, புறநானூறு, 29-இல் வருவது. விடர் - தீயொழுக்கமுடைய காமுகர். தூர்த்தர் – வஞ்சகர். நடர் - கூத்தர். உள்ளிட்டகுழு-இவர்களைஉட்கொண்ட கூட்டம்; இவர்களை முதலாகவுடைய சமூகமென்றபடி. அறிவைத் திரித்து - தமது நல்ல புத்தியைக் கெட்டபுத்தியாக வேறுபடுத்தி. இருமையும் கெடுக்கும் இயல்பிற்றாய - இம்மைமறுமை யென்னும் இரண்டிடத்தும் தம்மைத் தீமையடையச்செய்யுந் தன்மையுதான. அதனை -

அத்தியகூட்டத்தை. ஒருவன் பெரியாரைத்துணை வராகக்கொண்டாலும் ஒருபக்கத்தில் சிறிய இனத்தாரையுஞ் சேர்ந்திருப்பா

னாயின் அப்பெரியாரைத்துணைக்கொண்டதனாலுண்டாகும்பயன் இல்லையா மென்பதை அறிவித்தற்கு, சிற்றினஞ்சேராமையென்னும் இவ்வதிகாரத்தைப் பெரியாரைத்துணைக்கோடலென்னும் அதிகாரத்தின் பின் வைத்தார். கீழ் அதிகாரத்தில் 'தக்காரினம்' என்றதற்கு இது எதிராம். மேல் "நகைவகைய ராகிய நட்பிற்பகைவராற், பத்தடுத்த கோடி யுறும்" என வரும் குறளில் 'அந் நட்பாவது - விடமருந் தூர்த்தரும் வேழம்பரும் போன்று பலவகையால் நகு வித்துத் தாம் பயன்கொண்டு ஒழிவாரோடு உளதாயது' எனப் பரிமேலழகர் உரைப்பதும் அறிக. சிறுமை + இனம்=சிற்றினம்; பண்புப்பெயர், ஈறு போய்த் தன்னொற்றிரட்டிற்று.

சஉக. சிற்றின மஞ்சும் பெருமை
சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(இ - ள்.) பெருமை - பெரியோரியல்பு,—சிறு இனம்-சிறியஇனத்தை, அஞ்சும் - அஞ்சாநிற்கும்; சிறுமை - (ஏனைச்) சிறியோரியல்பு,—தான் சுற்றம் ஆ சூழ்ந்துவிடும் - (அதுசேர்ந்தபொழுதே அதனைத்) தனக்குச் சுற்றமாக எண்ணித்துணியும்; (எ - று.)

தத்தம்அறிவுதிரியுமாறும் அதனால் தமக்குவருந்துன்பமும் நோக்கலின் 'அறிவுடையார் அஞ்சுவர்' என்றும், அறிவொற்றுமையாற்பிறிதுநோக்காமை

யின் 'அறிவிலாதார் தமக்குச்சுற்றயாகத்துணிவர்'
ளின் தொழில்கள், பண்பின்மேல் நின்றன.

என்றும் கூறினர். பொரு

இதனுன், சிறியஇனம் பெரியோர்க்குஆகாது

என்பது கூறப்பட்டது.
(கு - ரை.) ஏனை - மற்றை. அது - அச்சிறியஇனம்.

அதனை - அச்சிற்
றினத்தை. சுற்றமாகஎண்ணித்துணியும் -

இஷ்டபந்துவர்க்கமாக நிச்சயமாக்
கருதும். அற்பசகவாசத்திற்கு அறிவுடையார் அஞ்சுதற்குக்காரணம், அவர்க ளறிவுகெட்டதும் தமது அறிவுநல்லதுமாய் வித்தியாசப்படுதலையும், அதனல் தமதுநல்லறிவு மாறிப்போகுமென்பதையும், அதனல் தமக்குத்துன்பமுண் டாகுமென்பதையும் அறிதல். அவ்வற்பசகவாசத்திற்கு அறிவிலாதார் அஞ் சாமைக்குக் காரணம், தமது அறிவும் அவர்களது அறிவும் இரண்டுங் கெட்ட தேயாய்ப் பேதப்படாதிருத்தலும், அதனல் பேரினத்தின் பெருமையை அறி யாமையும், சிற்றினச்சேர்க்கையாலுண்டாகும்

குற்றத்தை யுணராமையும்.
பெருமையுடையாரது தொழிலாகிய சிற்றினமஞ்சுதலைப்
பெருமைமேலேற் றியும், சிறுமையுடையாரது இயல்பாகிய
சுற்றமாச்சூழ்ந்து விடுதலைச் சிறுமை
மேலேற்றியும் இங்ஙனம் பண்பியின்தொழில்
பண்பின்மேல்வைத்து உபசார

வழக்காகக் கூறப்பட்டதை 'பொருளின்தொழில்கள்
பண்பின்மேல் நின்றன'
என்றார். சிற்றினம் என்பதை எடுத்துப்
பின்வாக்கியத்திலுங் கூட்டுக. சுற்
றம்-உரியகாலங்களில் வந்து ஒருவனைச் சுற்றிநிற்பது என பந்துஜாத்திற்குக் காரணக்குறி: அம்-கர்த்தாப்பொருள்விகுதி. சூழ்ந்துவிடும்-ஒருசொல்; இதில், 'விடு' என்னுந் துணைவினை - துணிவுப்பொருளை விளக்கிற்று. சூழ்ந்து விடும் என இரண்டாப் பிரித்து, விடும் - பெரியோர்சேர்க்கையை நீங்கும் என்றும் உரைக்கலாம்.

(க)

சஉ௨. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு
கினத்தியல்ப தாகு மறிவு.

மாந்தர்க்

(இ - ள்.) நிலத்து இயல்பான் - (தான் சேர்ந்த)
நிலத்தினது இயல் பானே, நீர்—,
திரிந்து-(தன்தன்மை)திரிந்து, அற்று ஆகும்-அந்நிலத்தின்
தன்மைத்தாம்; (அதுபோல),மாந்தர்க்கு—,
இனத்து இயல்பு-(தாம் சேர்ந்த)
இனத்தினது இயல்பானே, அறிவு - அறிவும், அது
திரிந்து) அவ்வினத்தின் தன்மைத்தாம்; (எ - று.)

ஆகும் - (தன்தன்மை

எடுத்துக்காட்டுவமை. விசும்பின்கண்

தன் தன்மைத்தாய நீர் நிலத்தோடு சேர்ந்தவழி நிறம்
சுவை முதலிய பண்புகள் திரிந்தாற்போல, தனி நிலைக்கண்
தன் தன்மைத்தாய அறிவு பிறஇனத்தோடு
சேர்ந்தவழிக் காட்சிமுதலிய தொழில்கள் திரியும் என,
இதனான், அதனது காரணம் கூறப்பட்டது.

(கு - ரை.) தன்மை - குணங்கள். திரிந்து-மாறி.
மாந்தர்-மனிதர், விசும்பின்கண் - மேகத்தில்.
தன் தன்மைத்தாய - நிலத்தின் சம்பந்தமின்றித்
தன்னியற்கையாகவேயிருந்த. சுவை-உருசி. முதலிய
என்றதனால், தண்மை,
வெம்மை, ஆரோக்கியம், ஆரோக்கியமின்மை
இலேசு கனம்முதலியன கொள்க.

"அப்பென்றும் வெண்மையதாயினுமாங்கந் நிலத்தியல் பாய்த், தப்பின்றியே குணவேற்றுமை தான்பலசார்தலினால்" என்றார் பட்டினத்தடிகள். தனிநிலைக்கண் - ஒருவரோடுஞ் சேராமல் தனித்திருக்கும்பொழுது. பிறஇனத்தோடு சேர்ந்தவழி - வேறுகூட்டத்தோடு சேர்ந்தவிடத்து. காட்சிமுதலிய தொழில்கள் - பொருள்களின் இயற்கையைக் காணுதல் கருதுதல் முதலிய தொழில்கள். திரியும் - மாறுபடும். இதனான் - இக்குறளால். அதனது காரணம் - சிற்றினஞ்சேர்தல் ஆகாதென்றதன் ஏது. இனி, இப்பாடலை ஒருவாக்கியமாகவேகொண்டு, மனிதர்க்குத் தாம்சேர்ந்த இனத்தின்தன்மையால் அப்படிப்பட்டதாக மாறுபடும் அறிவு தான்சேர்ந்தநிலத்தினது தன்மையால் நீர்மாறுபட்டாற்போன்றதா மெனஉவமையணியாகவும் உரைக்கலாம். (உ)

சஉரு. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல்.

(இ - ள்.) மாந்தர்க்கு—, உணர்ச்சி - பொதுவுணர்வு, மனத்தான்-(தம்) மனங் காரணமாக, ஆம் - உண்டாம்; இன்னான் எனப்படும் சொல்-(இவன்) இத்தன்மைய னென்று (உலகத்தாரால்) சொல்லப்படுஞ் சொல், இனத்தான் - இனங்காரணமாக, ஆம் - உண்டாம்; (எ - று.)

இயற்கையாய புலனுணர்வுமாத்திரத்திற்கு இனம் வேண்டாமையின் அதனை 'மனத்தானாம்' என்றும், செயற்கையாய விசேடவுணர்வுபற்றி நல்லனென்றாகத் தீயனென்றாக நிகழுஞ் சொற்கு இனம் வேண்டுதலின் அதனை 'இனத்தானாம்' என்றும் கூறினார்.

உவமையளவைகொள்ளாது 'அத்திரிபும் மனத்தானாம்' என்பாரை

நோக்கி, இதனுன், அது மறுத்துக்கூறப்பட்டது.

(கு - ரை.) பொதுஉணர்வு - இயற்கையறிவு: ஐம்பொறியுணர்வு. சேர்க்கையாலுண்டாகும் விசேடவுணர்வினும் வேறுபடுத்தற்கு, பொதுவுணர்வு என்றார். புலனுணர்வு-பஞ்சஇந்திரிய விஷயங்களையறிதல். நல்லன்என்றாகத் தீயன் என்றாக நிகழும்சொல்-இவன்நல்லவனென்றாவது தீயனென்றாவது உலகத்துவழங்கும் வார்த்தை. உவமையளவை கொள்ளாது - கீழ்ப்பாட்டில் "நிலத்தியல்பால் நீர்திரிந்தற்றாகும்" என உபமானமுகத்தால் விளக்கியதை அங்கீகரியாமல்;சிலமதத்தவர் உபமானப்பிரமாணத்தைச் சிறப்பாகக்கொள்வதில்லை. அத்திரிபும் மனத்தான் ஆம்-(சிற்றினஞ்சேர்தலாலுண்டாகும்) அக்குணவேறுபாடும் மனநிலையினாலேயே உண்டாகும். இதனுன் - இக்குறளால். அது - அக்கொள்கை. (௩.)

சருச. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

(இ - ள்.)
அறிவு-அவ்விசேடவுணர்வு,—ஒருவற்கு—, மனத்து உளது போல காட்டி - மனத்தின்கண்ணே உளதாவதுபோல(த் தன்னை)ப் புலப்படுத்தி, இனத்து உளது ஆகும் - (அவன்சேர்ந்த) இனத்தின் கண்ணே உளதாம்; (எ - று.)

௫௯ - ஆம்

அதிகாரம்.—சிற்றினஞ்சேராமை ௬௬

மெய்ம்மைநோக்காமுன்
மனத்துஉளதுபோன்றுகாட்டியும் பின் நோக்கியவழிப் பயின்றஇனத்து உளதாயும் இருத்தலின்,

'காட்டி' என இறந்த காலத்தாற் கூறினர்.

'விசேடவுணர்வுதானும் மனத்தின்கண்ணேயன்றே உளதாவது' என்பாரை நோக்கி, 'ஆண்டுப் புலப்படுந்துணையே உள்ளது: அதற்குமூலம் இனம்' என்பது இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) புலப்படுத்தி-வெளிக்காட்டி. மெய்ம்மை நோக்காமுன்-உண்மையை ஆராய்ந்துபாராதவிடத்து. பின் நோக்கியவழி-பின்பு ஆராய்ந்துபார்த்தபொழுது. பயின்ற இனத்து உளதாயும்-பழகிய கூட்டத்தினாலுண்டாகியும். விசேடவுணர்வுதானும் மனத்தின்கண்ணேயன்றே உளதாவது-விசேடவுணர்வும் பொதுவுணர்வுக்குக் காரணமானமனத்தில்தானே உண்டாவதன்றோ? ஆண்டு-அவ்விடத்தில்; மனத்தில். புலப்படுந் துணையே -(விசேடவுணர்வு) வெளிப்படுகிற அவ்வளவு மாத்திரமே: உணர்வு வெளிப்படும்வாயில் மனமாதலால், பொதுவுணர்வு போலவே இவ்விசேடவுணர்வும் மனவாயிலாகவே

வெளிப்படுகின்றதென்றவாறு. அதற்கு
மூலம்-அவ்விசேடவுணர்வுக்குக் கார
ணம்: இனம்-சேர்க்கை. சிறப்புணர்வுக்குக்காரணம் இனம்:
அது வெளிப்படும்
வாயில் மனமென்க. இதனால் - இக்குறளால்.
இக்குறட்பாவை "நாளென
வொன்றுபோற் காட்டியுயிரீரும்,
வாளதுணர்வார்ப்பெறின்" என்ற குறளின்
வாய்பாடு கொண்டதெனக் காண்க.

(ச)

சஉடு.

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு

மினந்தூய்மை தூவா வரும்.

(இ - ள்.) மனம் தூய்மை - (அவ்விசேடவுணர்வு
புலப்படுதற்கு இட
னாய) மனந்தூயனாதல் தன்மையும், செய் வினை
தூய்மை - செய்யும்வினை
தூயனாதல்தன்மையும், இரண்டும் - (ஆகிய)
இரண்டும்,—இனம் தூய்மை
தூ ஆ வரும் - (ஒருவற்கு) இனந்தூயனாதல்தன்மை
பற்றுக்கோடாக உள
வாம்; (எ - று.)

மனந்தூயனாதலாவது - விசேடவுணர்வு

புலப்படுமாறு இயற்கையாய
அறியாமையின் நீங்குதல். செய்வினை தூயனாதலாவது - மொழி மெய்களாற்
செய்யும் நல்வினை உடையனாதல். 'தூ'என்பது அப்பொருட்டாதல் "தூவறத்
துறந்தாரை" என்பதனானும் அறிக.

'ஒருவன் இனந்தூயனாகவே, அதனோடு பயிற்சிவயத்தான் மனந்தூய
னாய் அதன்கண் விசேடவுணர்வு புலப்பட்டு, அதனாற் சொல்லும் செயலும்
தூயனாம்' என, இதனான், இனத்துஉள்ளவாமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) தூயன் - பரிசுத்தன். வினை - தொழில். இனம்தூயனாதல்
தன்மை-நல்லசேர்க்கையை யுடையவனாயிருக்குந்தன்மை. பற்றுக்கோடாக -
ஆதாரமாக. உளவாம் - உள்ளனவாம். மொழி மெய்களால் - வாக்கு, காயம்
என்பவற்றால். தூவென்பது அப்பொருட்டாதல் - தூ என்னும்சொல் பற்றுக்



கோடென்னும் பொருளுடையதாதலை. "தூவறத்துறந்தாரை" என்னும்

மேற்கோள் - கலித்தொகை, செய்தற்கலி முதற்பாட்டி லுள்ளது; இம்மேற் கோளுக்கு - 'நமக்கு ஒருபற்றுக்கோடும் இல்லையாம்படி நம்மைவிட்டுப்பிரிந்த கொழுநரை' என்று பொருள். (அங்கு நச்சினார்க்கினியர் 'தாவற' என்ற பாடங்கொண்டு,நமக்குவலியில்லையாம்படி யென்று பொருளுரைத்துள்ளார்.) "தூயது ஊற்றம் பகை தசையுந் தூவே" என்னும் பிங்கலந்தையையுங் காண்க. அதனோடு பயிற்சிவயத்தான் - அப்பரிசுத்தமான நல்வினத்தோடு பழக்கஞ்செய்த காரணத்தால். அதன்கண் - மனத்தில். இதனான் - இக்குற

ளால். இனத்துஉள்ளவாமாறு - விசேடவுணர்வு இனத்தினாலுள்ளனவாகுந்

தன்மை. மனந்தூய்மை செய்வினை தூய்மை யென்னும் பெயர்ச்செவ்வெண்,

'இரண்டும்' எனத் தொகையோடு முற்றும்மை பெற்றது. செய்வினை -

வினைத்தொகை. மனம் வாக்கு உடம்பு என்னுந் திரிகரணங்களுள் வாக்கி

னது தன்மையாகிய சொல்லுதலையும் வினையில்அடக்கி 'மனந்தூய்மை செய்

வினை தூய்மை யிரண்டும்' என்றாரென்க; அல்லது, முன்னதாய்க் காரண

மாகிற மனமும் பின்னதாய்க் காரியமாகிற செயலுந் தூயனவல்லாவிட்டால் வெறுஞ்சொல் தூய்மைமாத்திரம் பயன்தராது என்ற கருத்தால், அதனை இங்கு ஒழித்ததாகவும் கொள்ளலாம். (௫)

சருகூ. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்

கில்லைநன் றாகா வினை.

(இ - ள்.) மனம் தூயார்க்கு - மனந்தூயராயினோர்க்கு, எச்சம் நன்று ஆகும் - மக்கட்பேறு நன்றாகும்; இனம் தூயார்க்கு - இனந்தூயராயினோர்க்கு, நன்று ஆகா வினை - நன்றாகாதவினை, இல்லை - (யாதும்) இல்லை; (எ - று.)

காரியம் காரணத்தின் வேறுபடாமையின் 'எச்சம் நன்றாகும்'என்றும், நல்லினத்தோடு எண்ணிச் செய்யப்படுதலின் 'எல்லாவினையும் நல்லவாம்' என்றும் கூறினர்.

(கு - ரை.) மக்கட்பேறு - புத்திரபாக்கியம். 'மக்கட்பேறு நன்றாகும்' என்பதற்கு - நல்மனமுடையோர்க்குப் பிறக்கும் பிள்ளைகள் தமக்குக்காரணமான தந்தைதாயர்போலவே தாமும் நற்குணநற்செய்கையுடையவராயிருப்பரென்றும், நல்மனமுடையோர்க்குச் சந்ததி அழியாது நிலைபெறுமென்றுங் கருத்துக்கொள்ளலாம்; "மகனுரைக்குந் தந்தைநலத்தை," "பழியின்மை மக்களாற் காண்க" என்பன முதற்கருத்துக்கும்,

"செப்பமுடையவனுக்கஞ்
சிதைவின்றி, யெச்சத்திற்கேமாப்புடைத்து,"
"நன்றிப்பயன் றூக்கா நாணி
லியுஞ் சான்றோர்முன், மன்றிற்கொடும்பா
டுரைப்பானும் - நன்றின்றி,
வைத்ததடைக்கலங்கொள்வானு மிம்மூவர்,
எச்சமிழந்துவாழ்வார்" என்பன
இரண்டாவதுகருத்துக்கும் மேற்கோளாம்.
"தக்கார்தகவில ரென்பதவரவர்,
எச்சத்தாற்காணப்படும்" என்ற குறள் - (அதனுரையிற்
பரிமேலழகர் 'தக்
கார்க்கு எச்சமுண்டாதலும், தகவிலார்க்கு
இல்லையாதலும் ஒருதலையாக
லின், இருதிறத்தாரையும் அறிதற்கு அவை குறியாயின'
என்று உரைத்



திருந்தாலும்,) இரண்டுகருத்துக்கும் மேற்கோளாகலாம்.
இன்னும், நன்றாகும் என்பது -
"பித்துமலடூமைமூடம்பேய்குருடுகூன்செவிடு" என்னும்
மெய்த்துயர்நோயொன்றும் இன்றி வாழும் என்ற
கருத்துடைய தெனவுங் கொள்ளலாம். நன்றாகாதவினை
யாதும் இல்லை - எல்லாக்காரியங்களும் நல்லனவாகவே

முடியும். காரியம் - பிள்ளைகள். காரணம் - தாய்தந்தையர். தந்தைதாயர் குணத்தினின்றும் மக்கள்குணம் வேறுபடாதிருத்தலே, காரணமாகிய பொன்வெள்ளிகளின் தன்மையினின்று காரியமாகிய ஆபரணங்களின் தன்மை வேறுபடாதவாறுபோலக் கொள்க. எண்ணி - ஆராய்ந்து. நல்ல - நல்லவை. எச்சம் என்பதற்கு - (தாய்தந்தையரின்பின்) சேடித்து நிற்பதென்று பொருள்; எஞ்சு - பகுதி, அம்-கர்த்தாப்பொருள்விகுதி, வலித்தல் - விகாரம்; எஞ்சுதல் - சேஷித்தல்.

"எச்சத்திற்கேமாப்புடைத்து" என்றவிடத்துப் பரிமேலழகர் 'தான் இறந்துழி எஞ்சிநிற்பதாகலின் எச்சமென்றார்' என உரைத்ததனாலும் அறிக.

(௬)

௨௫௭. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

(இ - ள்.) மன் உயிர்க்கு - நிலைபெற்ற உயிர்கட்கு, மனம் நலம் - மனத்தது நன்மை, ஆக்கம்-செல்வத்தை, (தரும்)-கொடுக்கும்; இனம் நலம்-இனத்தது நன்மை, எல்லாம் புகழ்உம் தரும் - (அதனோடு) எல்லாப்புகழையுங் கொடுக்கும்; (எ - று.)

'மன்னுயிர்' என்றது - ஈண்டு, உயர்திணைமேல்நின்றது. 'தரும்' என்னும் இடவழுவமைதிச்சொல், முன்னும் கூட்டப்பட்டது.

உம்மை-இறந்தது தழீஇய எச்சவும்மை. மனம் நன்றாதல்தானே அறமாகலின் அதனை 'ஆக்கந் தரும்' என்றும், புகழ்கொடுத்தற்கு உரிய நல்லோர்தாமே இனமாகலின் 'இனநலம் எல்லாப்புகழுந் தரும்' என்றும் கூறினார்.

மேல் 'மனநன்மை இனநன்மைபற்றி வரும்' என்பதனை உட்கொண்டு 'அஃது இயல்பாகவே உடையார்க்கு அவ்வினநன்மை வேண்டா' என்பாரை நோக்கி, 'அதுவேயன்றி அத்தன்மையபலவற்றையுந்தரும்' என அவர்க்கும் இது வேண்டு மென்பது, இவ்விரண்டுபாட்டானும் கூறப்பட்டது.

(கு - ரை.) உயிர்கட்கு - பிராணிகளுக்கு; என்றது, இங்கே சிறப்பாய் மனிதரை உணர்த்தும். மன்னுயிர்-வினைத்தொகை. அதனோடு - ஆக்கந்தருத லோடு. மனத்தினது நன்மையையும் இனத்தினது நன்மையையும் உடைத் தாயிருத்தல் அஃறிணையுயிர்க்குஇல்லாமையால், மன்னுயிரென்பது உயர் திணைமேனின்ற தென்றார். "மக்கள் தேவர் நரகர் உயர்திணை". தரும் என்னுஞ்சொல் இடவழுவமைதியாதலைக் கீழ் ௬௧௬ - ஆம் செய்யுளினுரையிற் காண்க. 'கொடுக்கும்' என்பது இங்குவழாநிலையானசொல். தருமென்பது முன்கூட்டப்பட்டது, ஆக்கம் என்ற சொல்லுட னென்க. ஆக்கந் தருதலோடு என்னும் பொருளை விளக்கியதனால், புகழும் என்ற உம்மை-இறந்ததுதழுவிய

எச்சப்பொருளதாயிற்று. மனம்நன்றுதல்தானே

அறமாகலின் - திரிகரணங்



களுள் மற்றைக்கரணங்களின் செய்கைகளுக்கு மூலமாகிய மனம் பரிசுத்தமாயிருப்பதுவே தருமமாதலால். ஸீழ் அறன்வலியுறுத்த லென்ற அதிகாரத்தில் "மனத்துக்கண் மாசிலனாத லனைத்தறன், ஆகுலநீர பிற" என்றதும், "மநஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோட்சயோ:" என்றதும் காண்க. புகழ்கொடுத்தற்குரியநல்லோர்தாமே இனமாகலின் - தம்மாற்சேரப்பட்டவர்களுக்குநற்குணநற்செய்கைகளை அபிவிருத்திசெய்து அதனால் அவர்களுக்குக்கீர்த்தியை உண்டாக்குதற்குஉரிய நற்குணநற்செய்கையையுடையவர்களே இனமெனச்சேரத்தக்கவ ராதலால். மேல் - இவ்வதிகாரத்து ஐந்தாங்குறளில். உட்கொண்டு - கருத்திற்கொண்டு. அஃது - மனநன்மையை. அதுவேயன்றி அத்தன்மைய பலவற்றையுந் தரும் - அம்மனநன்மையைத் தருதல்மாத்திரமேயல்லாமல் அப்படிப்பட்ட பலசிறப்புக்களையுங் கொடுக்கும். அவர்க்கும் - மனந்தூயார்க்கும். இது - இனநன்மை. ஆக்கம் - செல்வத்துக்குவழங்குகிற இப்பெயர், இங்கேஇலக்கணையாய்ச் சிறந்தஅறத்தைக் குறித்தது. எல்லாப்புகழும் என்றஉம்மை - எஞ்சாமைகுறித்தலால், முற்றுப்பொருளு மாகலாம். "இம்மையடக்கத்தைச் செய்துபுகழாக்கி, உம்மையுயர்கதிக்குய்த்தலான் - மெய்ம்மையே, பட்டாங்கறமுரைக்கும் பண்புடையாளரே, நட்டாரெனப்படுவார்" என்ற அறநெறிச்சாரச் செய்யுளாலும், இனநலம் எல்லாப்புகழும் தருவ தாதல் அறிக. (எ)

சருஎ. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்

கினநல மேமாப் புடைத்து.

(இ - ள்.) மனம் நலம் - மனநன்மையை, நன்கு - (முன்னை) நல்வினையால், உடையர் ஆயின் உம் - (தாமே) உடையராயினும், சான்றோர்க்கு - அமைந்தார்க்கு, இனம் நலம் - இனநன்மை, ஏமாப்பு உடைத்து - (அதற்கு) வலியாதலையுடைத்து; (எ - று.)

'நன்கால்' என்னும் மூன்றனுருபு, விகாரத்தால்தொக்கது. அந்நல்வினை உள்வழியும் மனநலத்தை வளர்த்துவருதலின், அதற்கு ஏமாப்புடைத் தாயிற்று.

(கு - ரை.) "தவமுந் தவமுடையார்க்காகும்" என்றபடி ஒருவர்க்கு மனத்திற் பரிசுத்தமுண்டாதற்குக் காரணம் அவர் பூர்வசன்மத்திற்செய்த புண்ணியமேயாதலால், 'மனநன்மையை முன்னை நல்வினையால்தாமே உடையராயினும்' எனப்பட்டது. நன்குஉடையர் - மூன்றாம்வேற்றுமைத்தொகை; தொக்குநின்ற மூன்றாம்வேற்றுமை கருவிப் பொருளது. 'நன்கு' என்னும் பண்புப்பெயர்-இங்கே ஆகுபெயராய், நல்வினையைக் குறித்தது. தாமேஉடையர் - நல்வினத்தோடு சேர்தற்குமுன்னமேயுள்ளவர். அமைந்தார்-பலகுணங் களாலும் நிறைந்தவர். சான்றோர்என்ற இறந்தகாலவினையாலணையும்பெய ரில், மிகுதற்பொருளுணர்த்தும் சால்என்ற உரிச்சொல் - பகுதி. 'பலகுணங் களாலும்' என்பது, சாலுதற்றொழிலாற் பெறப்பட்டது. இச்சொல்லில் விகுதியீற்றயல் ஆகாரம் ஓவாயிற்று; [நன். பொது. உ.] அதற்கு - மனநலத்

## சசு - ஆம் அதிகாரம்.—சிற்றினஞ்சேராமை

எரு திற்கு. வலியாதலையுடைத்து -

உறுதிதருவதாதலையுடையது. உள்வழியும் - உள்ளபொழுதும். ஆயினும், உம்மை - உயர்வுசிறப்பு. மனநலத்தைவளர்த்து வருவது, இனநலம் என்க. நன்கு - மிகவும் என்றுமாம். (அ)

சருகூ. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

(இ - ள்.) (ஒருவற்கு),—மனம் நலத்தின்-மனநன்மையானே, மறுமை- மறுமையின்பம், ஆகும்

- உண்டாம்; மற்று அஃதுஉம் - அதற்கு அச்சிறப்புத் தானும், இனம் நலத்தின் - இனநன்மையான், ஏமாப்பு உடைத்து - வலி பெறுதலை யுடைத்து; (எ - று.)

'மனநலத்தின் ஆகும் மறுமை' என்றது, 'மறுமைபயப்பது மனநன்மை தானே, பிறிதொன்றன்று' என்னும் மதத்தை உடம்பட்டுக் கூறியவாறு. மற்று - வினைமாற்று. உம்மை - இறந்ததுதழீஇயஎச்சவும்மை.

ஒரோவழித் தாமதகுணத்தான் மனநலந் திரியினும், நல்லினம் ஒப்ப நிறுத்தி மறுமை பயப்பிக்கு மென நிலைபெறச்செய்யுமாறு கூறப்பட்டது.

இவையிரண்டுபாட்டானும், சிற்றினஞ்சேராமையது சிறப்பு நல்லினஞ் சேர்தலாகிய எதிர்மறைமுகத்தாற் கூறியவாறு அறிக.

(கு - ரை.) மறுமை - இறந்தபின்வரும்நிலை. மறுமையின்பம் என்றது, சுவர்க்கம்முதலிய சிறந்தபதவிகளிற் புண்ணியவசத்தால்அடையும் இன்பத்தை; மறுபிறப்பிலடையும் இன்பத்தையு மாகலாம். அதற்கு - மனநலத்திற்கு. அச்சிறப்பு - மறுமையின்பம்பயக்கும் மகிமை. உடம்பட்டு - அங்கீகரித்து. முன்வாக்கியத்தில் ஒருவினையைக் கூறிப் பின்வாக்கியத்தில் மற்றொரு வினையைக் கூறுமிடத்துவந்ததனால், மற்றுஎன்ற இடைச்சொல் - வினைமாற்றுப்பொருளது. உம்மை-அஃதும் என்பதில் உம்மை; இது - முன்வாக்கியத்தின் பொருளைத் தழுவுதலால், இறந்ததுதழுவிய எச்சப்பொருளதாயிற்று. ஒரோவழி - ஒவ்வொருசமயத்தில். திரியினும் - வேறுபடுவதானாலும். ஒப்ப நிறுத்தி - (அங்ஙனந்திரியாதபடி மனநலத்தைச்) சரியான நிலையிலே சலி

யாது நிற்கச்செய்து. மறுமைபயப்பிக்கும் -
மனநலமூலமாக மறுமையின்ப முண்டாகச்செய்யும். அது -
இனநலம். நிலைபெறச்செய்யும்ஆறு - (மன
நலத்தை) நிலைநிறுத்தும்விதம். 'நிலைபெறச்செய்யுமாறு'
என்பதன்பின் 'இவ்
விரண்டு பாட்டானும்' என்று சேர்க்க.
சிற்றினஞ்சேராமை என்கிற அதி
காரம் எதிர்மறையாதலால், நல்லினஞ்சேர்தல்
என்னும்உடன்பாடு அதற்கு
எதிராயிற்று. இச்செய்யுளில், அஃது என்பதில்
ஆய்தம் - மெய்போல்
ஒலித்தது; அலகிட்டுக் காண்க.

(கூ)

சகூ0. நல்லினத்தி னூங்குந் துணையில்லை
தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்.

(இ - ள்.) (ஒருவற்கு), நல் இனத்தின்—, ஊங்கு
- மிக்க, துணை
உம்—, இல்லை—; தீ இனத்தின் (ஊங்கு) -
தீயஇனத்தின் மிக்க, அல்லல்
படுப்பதூஉம் - பகையும், இல் - இல்லை; (எ - று.)

10

ஐந்தனுருபுகள், உறழ்பொருவின்கண் வந்தன. 'ஊங்கு' என்பது பின்னுங்கூட்டி, உம்மை மாற்றி உரைக்கப்பட்டது. நல்வினம் அறியாமையின் நீங்கித் துயருறுமற்காத்தலின் அதனை 'துணை' என்றும், தீயினம் அறிவின் நீக்கித் துயருறுவித்தலின் அதனை 'பகை' என்றுங் கூறினர். 'அல்லற்படுப்பது' என்பது - ஏதுப்பெயர்.

இதனுன், விதி எதிர்மறைகள் உடன்கூறப்பட்டன.

(கு - ரை.) உறழ்பொரு - ஒன்றுக்குஒன்று ஒப்பிட்டுக்கூறுமிடத்தில் வரும்எல்லைப்பொருள்; இது - உறழ்பொருவு எனவும்படும். ஐந்தனுருபுகள்- நல்வினத்தின், தீயினத்தின் என்றவற்றிலுள்ள 'இன்' என்னும் உருபுகள். ஊங்குஎன்பது பின்னுங்கூட்டப்படுதல், 'தீயினத்தின்'என்பதனுடன் என்க. உம்மை மாற்றி உரைக்கப்பட்டது - 'நல்வினத்தினூங்கும்'என்ற உம்மையை எடுத்து 'துணையும்' எனச் சேர்க்கப்பட்டது. அறியாமையின் நீக்கித் துயருறுமற்காத்தலின் - (தம்மாற்சேரப்பட்டவரை) அறியாமையினின்றுவிலக்கி (இம்மைமறுமைகளில்) துன்பமடையாதபடி பாதுகாத்தலால். இதற்குஎதிர்மறை-'அறிவின்நீக்கித் துயர்உறுவித்தலின்' என்றது. அல்லற்படுப்பது என்பது-துன்பப்படுத்துவது என்ற காரணத்தாற் பகையைக்குறித்தலால், ஏதுப்பெயரெனப்பட்டது. ஏதுப்பெயர் - ஒருகாரணத்தால் வரும் பெயர். விதி எதிர் மறைகள்-தீயினஞ்சேர்தலாகாதென்ற உடன்பாடும், நல்வினஞ்சேர்தலென்ற எதிர்மறையும். நல்வினஞ்சேர்தல்என்பது விதியும், தீயினஞ்சேராமை என்பது எதிர்மறையுமாம் எனப்படாமையை, கீழ்ப்பாட்டி னுரையில் 'நல்வினஞ்சேர்தலாகிய எதிர்மறைமுகத்தால்' எனக் கூறியதனுல் அறிக. படுப்பதும்என நிற்பினும் வெண்டளைதவறுமல் செய்யுளோசைகுன்றுதாயினும் அளபெடுத்தது, இன்னிசையளபெடை. (௪௦)

## ௭௭ - ஆம் அதிகாரம்.—தெரிந்துசெயல்வகை.

அஃதாவது-அரசன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்துசெய்யுந்திறம். அச்செயல் பெரியாரைத்துணைக்கோடல் பயனுடைத்தாயவழி அவரோடும் செய்யப்படுவ தாகலின், இது - சிற்றினஞ்சேராமையின் பின் வைக்கப்

பட்டது.

(கு - ரை.) சிற்றினஞ்சேராமையென்னும் அதிகாரத்தின்பின் தெரிந்து செயல்வகைஎன்னும் அதிகாரம் வைக்கப்பட்டதற்குக் காரணம், அதற்கு முன் கூறப்பட்ட பெரியாரைத்துணைக்கோடல் சிற்றினஞ்சேராமையி னாற் பயன்பட்ட பொழுதே அப்பெரியாருடன் காரியங்களையாராய்ந்து செய்யக்கூடுதல். செயல்வகை - செய்தலினது வகை யென்க.

சசுக.

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

(இ - ள்.) அழிவது உம் - (வினைசெய்யுங்கால் அப்பொழுது அதனால் அழிவதனையும், ஆவதுஉம் - (அழிந்தால் பின்) ஆவதனையும், ஆகி - ஆய்

## சஎ - ஆம் அதிகாரம்.—தெரிந்துசெயல்வகை.

எரு

நின்று,
சூழ்ந்து

வழி பயக்கும் - பிற்பொழுது தரும், ஊதியம்உம் - ஊதியத்தையும், - சீர்தூக்கி, செயல் - (உறுவதாயிற்) செய்க; (எ - று.)

உறுவதாவது - நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது

மிக்கு, எதிர்வினும்
அது வளர்ந்துவருதல். அழிவதின்மையின் எதிர்வின்கண் வரும் ஆக்கத்தை 'ஊதியம்'என்றார். எனவே, அவ்வூதியம் பெறின் நிகழ்வின்கண் அழிவதும் ஆவதும் தம்முள் ஒத்தாலும் ஒழிதற்பாற்றன்றென்பது பெற்றாம். இரண்டு காலத்தும் பயனுடைமை தெரிந்து செய்க என்பதாம்.

(கு - ரை.) அரசன் ஒருதொழிலைச் செய்யத்தொடங்குகையில், அச் செயலால் முதலில்உண்டாகும் செலவையும், அங்ஙனஞ்செலவுசெய்தபிறகு உண்டாகும் வரவையும், அப்படி வரவாய்நின்று பிற்காலத்து அச்செயல் கொடுக்கும் இலாபத்தையும் ஒப்பிட்டு ஆராய்ந்துபார்த்துத் தக்கதாயிருந்தாற் செய்யவேண்டு மென்பது - இப்பாட்டின்பொருள். தக்கதாயிருத்தலாவது - தற்காலத்திலே செலவினும் வரவு அதிகமாய்ப் பிற்காலத்திலும் அவ்வரவு அபிவிருத்திப்பட்டுவருதல்; இப்படிப்பட்டது, உத்தமமானகாரியம். ஊதிய மும் ஆவதாயிருந்தாலும் இக்குறளில் 'ஆவது'எனவும், 'ஊதியம்' எனவும் தனித்தனிச் சொல்லப்பட்டஇரண்டுக்கும் ஒன்றோடொன்று வேறுபாடு என்னவெனில்,—செலவு செய்ததற்கு ஈடாய்ச் செலவுசெய்தகாலத்தில் தானேவருவது - ஆவது என்றும், செலவுசெய்ததற்குமேல் பிற்காலத்தில் வருவது - ஊதியமென்றும் அறிக. ஆய்நின்று - செலவுசெய்தது வந்திட்டு என்றபடி. அழிவதின்மையின் எதிர்வின்கண்வரும் ஆக்கம் - செலவு செய்தது அழியாமல் வந்துவிட்டதனால் அதன்மேல் பிற்காலத்தில் உண்டாகும் வரவு; இதற்காக வேறு செலவு இல்லையென்க. இது ஊதியம் என்ற சொல்லின் பொருளை விளக்கக்கூறியது. பிற்காலத்தில் லாபம்உண் டாவதாயிருந்தால், தற்காலத்திலே செலவும் வரவும் சமமாயிருந்தாலும் அக் காரியம் விடத்தக்கதன்று; இப்படிப்பட்டது மத்திமமான காரியம். தற் காலத்திலே செலவினும் வரவுகுறைவுபடுவது-அதமமானதாம்; இது விடத் தக்கதென மேல் மூன்றாம்பாட்டில் விளங்கும். இரண்டுகாலத்தும் - நிகழ் காலத்திலும், எதிர்காலத்திலும். நிகழ்காலத்துப் பயனுடைமை-செலவினும் வரவுமிகுதலும், செலவும் வரவும் ஒத்தலும். எதிர்காலத்துப் பயனுடைமை- வரவு மேன்மேலும் அதிகப்படுதல்; இலாபம். தெரிந்துசெய்க - இவற்றை ஆராய்ந்து பின்பு காரியத்தைத் தொடங்குக. மேல் வினைசெயல்வகை

யென்னும் அதிகாரத்தில் (6) "முற்றியாங்கெய்தும், படுபயனும் பார்த்துச் செயல்" என்பர். அழிவதூஉம், ஆவதூஉம்

என்பன-இன்னிசையளபெடை.

உம்மைகள் மூன்றும் - எண்ணுப்பொருளன.

வழி - அக்காரியத்தைச் செய்து

முடித்தபின்பு என்க. செயல் - வியங்கோள்.

பிற்காலத்தில் லாபமில்

லாமல் தற்காலத்தில் வரவுஞ்செலவும் ஒத்து முடியுங் காரியம் - பயனற்ற தாய் வீண்சிரமமாத்திரமாய் முடிதலால் அது செய்யத்தக்கதன்றென்றும், பிற்காலத்தில் லாபமில்லாததாயிருந்தாலும் தற்காலத்திற் செலவினும் வரவு



அதிகப்படுங் காரியமும் தற்காலத்திற் செலவினும் வரவு குன்றலதாயிருந்தா லும் பிற்காலத்தில் லாபந்தருங்காரியமும் வணிகர்க்குச் செய்யத்தக்கனவா யினும் அரசர்க்குச் செய்யத்தகாதனவாம் என்றும் இப்பொருள்களை இக் குறளினின்று போந்த கருத்துக்களாகத் தொனிவகையாற் கொள்க. "செய் யும் பொழுதே யழிபொருளிற் சிறப்பதொப்பதிரண்டனு ளொன்,றுய்யவுதவி வழிபயக்கு மொண்மைவினையைத் தேர்ந்துளத்தில், ஐயமகன்ற வினத்தோடு மாய்த்துந் தனித்தும் புரிந்திடுக, வெய்யவாக்கங்கருதி முதல் விளிக்கும் வினையைப் புரியற்க" என்றது, இங்கே காணத்தக்கது. (க)

௪௬௨. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

(இ - ள்.) தெரிந்த - (தாம்) தெரிந்துகொண்ட, இனத்தொடு - இனத் துடனே, தேர்ந்து - (செய்யத்தகும்வினையை) ஆராய்ந்து, எண்ணி - (பின் தாமேயும்) எண்ணி, செய்வார்க்கு - செய்துமுடிக்கவல்ல அரசர்க்கு,—அரும் பொருள் - (எய்துதற்கு) அரிய பொருள், யாது ஒன்றூஉம் இல் - யாதொன்

றும்இல்லே; (எ - று.)

ஆராயப்படுவனஎல்லாம் ஆராய்ந்துபோந்த இனமென்றுமாம். செய்வார்க்கு என்றதனுல்,'வினை'என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. வினையாவது - மேற்சேறல் முதல் வேறல் ஈருய தொழில். பொருள்கட்கு ஏதுவாய அதனில் தவருமையின், அரியபொருள்களெல்லாம் எளிதின் எய்துவரென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், செய்யத்தகும்வினையும், அதுசெய்யுமாறும் கூறப்பட்டன.

(கு - ரை.) தாம் தெரிந்து கொண்ட இனம் - தம்மால்ஆராய்ந்து சேர்த்துக்கொள்ளப்பட்ட நல்லினத்தவராகிய மந்திரிகளும், புரோகிதரும். இனத்துடனே ஆராய்ந்து என இயையும். பின் தாமேயும் எண்ணி - பின்பு தாம் தனித்தும் ஆலோசனைசெய்து. செய்துமுடிக்கவல்ல என்பதற்கும், செய்யத்தகும்வினையை யென்றதே செயப்படுபொருள். எய்துதற்குஅரிய - அடைவதற்கு அருமையான; பெறுதற்குக் கூடாத: கஷ்டசாத்தியமும் அசாத்தியமுமான. 'தெரிந்த' என்பதற்கு இருவகை உரை. முதலுரைக்கு, தெரிந்த - செயப்பாட்டுவினைப்பொருளில்வந்த செய்வினை; தெரியப்பட்ட இன மென்க. இரண்டாவதுஉரைக்கு, தெரிந்த என்பது - செய்வினை; எல்லாவற்றையும் ஆராய்ந்தறிந்த இன மென்க. செய்வார்க்கு என்றதனுல் வருவிக்கப்பட்ட செய்யத்தகும் செயப்படுபொருள். மேற்சேறல்

வினையென்பதே, எண்ணிஎன்பதற்கும் - பகைவர்மீது வெல்லுதற்குச்செல்லுதல். வேறல் - பகைவரை வெல்லுதல். ஈறு - முடிவு. முதல்என்றது - தன் அரண் காத்தல், பகையரண்வளைத்தல், பகைவரை யெதிர்த்தல், பொருதல், இடை யிற்சாமதானபேததண்டங்களை உபயோகித்தல்

ஏதுவாய அதனில்
தவறுமையின்-பொருள்களைப்பெறுதற்குக்காரண மான
பகைமேற்செல்லுதல் முதலிய தொழிலை
ஒழுங்காகச்செய்தலில் தவ ருததனுல். எளிதின்-சிரமமின்றி.
அதுசெய்யும் ஆறும்-அத்தொழிலைச் செய் யும் வழியும்.
(உ)

சகூங.

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

(இ - ள்.) ஆக்கம் கருதி - (மேல்எய்தக்கடவ)
ஊதியத்தினை நோக்கி, முதல்
இழக்கும்-(முன்எய்தினின்ற)முதல்தன்னையும் இழத்தற்கு
ஏதுவாய, செய் வினை-செய்வினையை, அறிவு உடையார்—,
ஊக்கார்-மேற்கொள்ளார்.

'கருதி' என்னும் வினையெச்சம், 'இழக்கும்'
என்னும் பெயரெச்சவினை கொண்டது. எச்சவும்மை,
விகாரத்தால்தொக்கது. ஆக்கமேயன்றிமுதலையும் இழக்கும்
வினைகளாவன - வலியும் காலமும் இடனும் அறியாது பிறர்

மண் கொள்வான்சென்று தம்மண்ணும் இழத்தல்போல்வன. முன் செய்து போந்த வினையாயினும் என்பார், 'செய்வினை' என்றார்.

(கு - ரை.) மேல் எய்தக்கடவ ஊதியத்தினை நோக்கி - இனி வரத்தகுவதான லாபத்தை யெதிர்பார்த்து.
முன்எய்திநின்ற முதல்தன்னையும் - முன்னே தன்னிடம்பொருந்தியிருந்த முதற்பொருளையும்.
மேற்கொள்ளார் - தொடங்கமாட்டார்; முன் தொடங்கியிருப்பினும் மேல் நடத்தமாட்டார்.
முதல் என்பதன் இறுதியில் மாத்திரமேயன்றி என்னும்

தொக்குநின்ற உம்மை-இனிவரும் இலாபத்தை பொருளைத் தருதலால், எதிரதுதழுவிய எச்சமாம்; இவ்வும்மையை உயர்வுசிறப்புப்பொருளதாகவுங் கொள்ளலாம். ஆக்கமேயன்றி - இலாபத்தைமாத்திரமேயல்லாமல். வலி கால இடங்களையறிதல்,மேல் மூன்று அதிகாரங்களிற் கூறப்படும்.
பிறர்மண்கொள்வான்சென்று- வேற்றரசரது இராச்சியத்தைத் தாம் கைக்கொள்ளுதற்பொருட்டுப் போய்.
செய்துபோந்த-செய்துவந்த.
வினையென்றாலே அமையுமாயினும், செய்வினை யென்றது - ஏற்கவேசெய்துவந்த தொழிலென்றற்கு.
ஊக்குதல்-முயலுதல். இங்கே "வாணிகமொன்றுக்தேற்றாய் முதலொடுங்கேடுவந்தால், ஊணிகக்

தீட்டப்பட்ட வூதியவொழுக்கினெஞ்சத்து,
எணிகந்திலேசுநோக்கி யிருமுதல் கெடாமைகொள்வர்,
சேணிகந்துய்யப்போகின்செறிதொடியொழிய வென்றூர்''
என்ற சிந்தாமணிச்செய்யுளின்பொருளை யுணர்க.

(ரு)

சகூச. தெளிவி லதனைத் தொடங்கா
ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.

(இ - ள்.) தெளிவு இலதனை தொடங்கார் - (இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து) துணிதலில்லாத வினையைத் தொடங்கார்:—இளிவு என்னும் ஏதம் பாடு அஞ்சுபவர் - (தமக்கு) இளிவரவென்னுங்குற்றம் உண்டாதலை அஞ்சுவார்; (எ - று.)

தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின், 'தொடங்கார்' என்றூர். இளிவரவு - அவ்வினையாற்

பின் அழிவுஎய்தியவழி, அதன்மேலும், அறிவும் ஏது

திருக்குறள்

மானமும் இலரென்று உலகத்தார் இகழும் இகழ்ச்சி; அஃதுஉண்டார்தல் ஒரு தலையாகலின், தெளிவுஉள்வழித் தொடங்குக என்பதாம்.

(கு - ரை.) துணிதலில்லாத - நிச்சயிக்கப்படாத. இளிவரவு - அவமா

னம். தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின் - ஒருகாரியத்தைச் செய்யத்தொடங்கிவிட்டால் அக்காரியம்முடிதற்குமுன்பு நடுவிலே அதனை விட்டு மீளுதல் தகாதாதலால். பின் அழிவெய்தியவழி - பின்பு தாம் நஷ்டமடைந்த பொழுது. அதன்மேலும் - அந்நஷ்டத்தின்மேலும். அறிவும்மானமும் இலர் - காரியத்தை ஆராய்ந்துதொடங்கிநடத்திமுடிப்பதற்கு ஏற்ற அறிவும், எப்பொழுதும் தம்நிலையினின்று தாழாமையாகிய மானமும்இல்லாதவர். அஃது உண்டாதல்

கினவர்க்கு)

ஒருதலையாகலின் - (ஆராய்ந்து நிச்சயியாது தொழில் தொடங் அவ்வவமானம் வருவது நிச்சயமாதலால். தெளிவு உள்வழித் தொடங்குக (ஆராய்ந்து செய்பலாமென்று) நிச்சயமுண்டானபொழுதுஆரம்பிக்கக்கடவர். தக்க காரியத்தைத் தொடங்காதிருத்தலும், தொடங்கிச்செய்கையில் இடையில்விடுதலும் தவறும்:

தகாதகாரியத்தையோ தொடங்கா திருத்தலே மேல் என்க.

இளிவு—இழிவு. ஏதப்பாடு - ஏதத்தினது படுதல்;

பாடு - படு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

(௬)

௪௬௫. வகையறச் சூழா தெழுதல்

பகைவரைப்

பாத்திப் படுப்பதோ ராறு.

(இ - ள்.) வகை-(சென்றால்நிகழ்ந்) திறங்களை யெல்லாம், அற சூழாது -முற்ற எண்ணாது, எழுதல் - (சிலஎண்ணிய துணையானே அரசன் பகைவர் மேற்)செல்லுதல்,—பகைவரை - அவரை, பாத்தி படுப்பது ஓர் ஆறு-வளரும் நிலத்திலே நிலைபெறச்செய்வதொரு

நெறியாம்; (எ - று.)

அத்திறங்களாவன - வலி காலம் இடன் என்றிவற்றால் தனக்கும் பகைவர்க்கும் உளவாம் நிலைமைகளும், வினைதொடங்குமாறும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும், அதனாற் பெறும் பயனும் முதலாயின. அவற்றுள் சிலஎஞ்சினும் பகைவர்க்கு இடனாமாகலான், முற்றுப்பெற எண்ணவேண்டு மென்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், ஒழியக்கரும் வினையும், ஒழியாவழிப் படும் இழுக்கும் கூறப்பட்டன.

(கு - ரை.) ஒருவன் தான் பகைவர்மேல் வெல்லுதற்குச்சென்றால் உண்டாகும் விதங்களெல்லாவற்றையும் முழுவதும் ஆலோசியாமல் சிலவிதங்களை மாத்திரமே ஆலோசித்து அவ்வளவோடு பகைவர்மீது செல்லுதல்,பகைவரை அழிக்கமாட்டாமையோடு அவர்களை விருத்திசெய்யும்வழியுமாமென்பது இக் குறளின்பொருள்; எனவே, சும்மா இருந்தபகைவர்களைச் சிறிதுஎழுப்பிவிட்டால், அவர்கள் ஜாக்கிரதைப்பட்டுச் சேனைமுதலியவலிமைகளைச் சேர்த்துத் தம்மைத் தாம் அபிவிருத்திசெய்துகொள்வ ரென்பதாம். அவ்வாறு பகைவரை விருத்தியடையத் தூண்டுதற்குக் காரணம்

இவ்வரசனுடைய வகை

யறச் சூழாதெழுதலே யாதலால், அதனை
எழுவாயாக்கிக் கூறினர். அதனல்-
வெற்றியால். அவற்றுள் சில எஞ்சினும்-வலி காலம் இடன்முதலிய அத்திறங்
களுள் சிலகுறைபட்டாலும். மூற்றுப்பெற எண்ணவேண்டும் - முழுவதும்
ஆலோசிக்க வேண்டும். பகைவர்க்கு இடனும் - பகைவர்க்குத் தம்மைவெல்ல
இடங்கொடுக்கும். ஒழியத்தகும்
வினை-செய்யாதுநீங்கத்தக்க காரியம். ஒழியா
வழிப் படும் இழுக்கு-அவ்வினையை நீங்காதுசெய்தால் உண்டாகுங் குற்றம்.
வகை-வகுப்பு; தொழிலாகுபெயர். அற - மிச்சமில்லாமல்; முற்றும் என்ற
படி. பாத்தி - வளரும்நிலம்.

(ரு)

சகூகூ. செய்தக்க வல்ல செயக்கெடுஞ்

செய்தக்க

செய்யாமை யானுங் கெடும்.

(இ - ள்.) (அரசன்), செய்தக்க அல்ல - (தன்வினைகளுள்) செய்யத்
தக்கனவல்லவற்றை, செய - செய்தலான், கெடும்—; (இனி அதனேயன்
றி), செய்தக்க - செய்யத்தக்கனவற்றை,

செய்யாமையான்உம் - செய்யாமை
தன்னுனும், கெடும்—; (எ - று.)
செய்யத்தக்கனவல்லவாவன -
பெரியமுயற்சியினவும், செய்தாற்பய
னில்லனவும், அதுசிறிதாயினவும், ஐயமாயினவும்,
பின் துயர்விளேப்பனவும்
என இவை.
செய்யத்தக்கனவாவன-அவற்றின்மறுதலேயாயின.
இச்செய்தல்
செய்யாமைகளான், அறிவு ஆண்மை பெருமை என்னும் மூவகை ஆற்றலுள் பொருள் படை என இருவகைத்தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனு மாகலான், இரண்டும் கேட்டிற்கு எதுவாயின.

இதனுன், செய்வனசெய்து ஒழிவன ஒழிக என இருவகையனவும் உடன் கூறப்பட்டன.

(கு - ரை.) கெடும் - கெடுவான்; செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தது. இதற்கு 'அரசன்' என்பது - தோன்றுஎழுவாய்.
அதனுனேயன்றி-
தகாதகாரியங்களேச் செய்தலால்மாத்திரமே யல்லாமல்.
பெரியமுயற்சியின -
தமது நிலைமையினும் அதிகமான பிரயத்தனம்
வேண்டியவை. அதுசிறிதா
யின - பயன்குறைபட்டவை. ஐயமாயின - பயன்உண்டோ
இல்லேயோஎன்று
சந்தேகத்துக்கு இடமானவை. அவற்றின்
மறுதலேயாயின - சிறியமுயற்சி
யினவும், செய்தாற்பயனுள்ளனவும்,

பயன்பெரிதாயினவும், பயனில் ஐயமற்றனவும், பின் இன்பம்விளைப்பனவும் என இவை.

மறுதலை - எதிர். மூவகை ஆற்றல் - மூன்றுவிதமான சக்தி. பொருள் படை - செல்வமும் சேனையும்.

இரண்டும்-செய்தக்கவல்ல செய்தலும், செய்தக்க செய்யாமையும். செய்தக்க- செய்தற்குத் தக்கன;

முதனிலைத்தொழிற்பெயரின்மேல்வந்த நான்காம்வேற்றுமைத்தொகை: செய்யாமையானும், உம்மை - முன்வாக்கியத்தைநோக்குதலால், இறந்தது தழுவியஎச்சம். செய் என்னும் பகுதி செய்யவெனப் பொருள்பட்டு வினையெச்சமானதற்கு இக்குறளை உதாரணங்காட்டினர், இலக்கணக்கொத்துடையார். (௬)



௪௬௭. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

(இ - ள்.) கருமம் - (செய்யத்தக்க) கருமமும், எண்ணி - (முடிக்கும் உபாயத்தை) எண்ணி, துணிக - தொடங்குக:—துணிந்த பின் எண்ணுவம் என்பது - தொடங்கிவைத்துப் பின் எண்ணக்கடவேமென்று ஒழிதல், இழுக்கு - குற்றம், (ஆதலான்); (எ - று.)

துணிவுபற்றி நிகழ்தலின், 'துணிவு' எனப்பட்டது. சிறப்புஉம்மை,

விகாரத்தால்தொக்கது. 'உபாயம்' என்பது, அவாய்நிலையான் வந்தது; அதுகொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என நால் வகைப்படும்: இவற்றை வடநூலார் தான சாம பேத தண்டம் என்ப. அவற்றுள், முன்னையஇரண்டும் - ஐவகைய; ஏனைய - மூவகைய: அவ்வகைகளெல்லாம் ஈண்டுஉரைப்பின் பெருகும். இவ்வுபாயமெல்லாம் எண்ணாது தொடங்கின் அவ்வினை மாற்றாரால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையின் ஒழிதலாகாமையானும், அரசன் துயருறுதலின், அவ்வெண்ணாமையை 'இழுக்கு' என்றார்.

குக என்பதாம்.

செய்வனவற்றையும் உபாயமறிந்தே தொடங் (கு - ரை.)

கருமமும் - காரியத்தையும். பின் எண்ணக்கடவேம் என்று ஒழிதல் - தொடங்கினபின்பு ஆராய்ந்துகொள்வோமென்று முன் ஆராயாது விடுதல். முன்வாக்கியத்துக்குப் பின்வாக்கியம் காரணம். காரியத்தைக் காரணமாக உபசரித்து, துணிதலின்பயனாகிய தொடங்குதலை இக்குறளில் 'துணிதல்' என்றார். துணிவுபற்றி நிகழ்தலின் - துணிதல்பற்றித் தொடங்குதல் உளதாதலால். சிறப்பும்மை - உயர்வுசிறப்புஉம்மை; அது தொகுத்தல்

விகாரப்பட்டது, கருமம் என்ற சொல்லின் இறுதியில். 'துணிக' என்ற பயனிலைக்கு 'ஒருவன்' என்றாற்போன்ற எழுவாய் வருவிக்க. அவாய்நிலை

யான் - எண்ணி என்ற வினை ஒருசெயப்படுபொருளை வேண்டிநிற்றலால்.

அது - அவ்வுபாயம். வேறுபடுத்தல் - ஒருமிக்க சேர்ந்துவரும் பகைவரை அங்ஙனஞ் சேரவொட்டாதபடி பிரித்தல். ஒறுத்தல் - போரில் அழித்தல். 'சாமம் - இனிதாகக்கூறல், பேதம் - மென்மையானும் வன்மையானும் மனத்தினைப் பேதித்தல், தானம் -
பகைவர்மனமகிழக்கொடுத்தல், தண்டம்- பின்பு அவர்
ஆகாமல் அழித்தேவிடுதல்' எனஉரைத்தனர்,
நச்சினார்க்கினியர், சிந்தாமணியில். ''தண்ணிய சிறிய
வெய்ய சழற்சொலாற் சாற்றுகின் றான்'' என்றவிடத்தில்.
முன்னையஇரண்டு - தானமும், சாமமும். ஏனைய - பேதமும்,
தண்டமும். கிடைத்தற்குஅரியபொருளைக் கொடுத்தல்,
தனக்குத் தரும்பொருளை வாங்காதுவிடுதல்,
கொடுக்கவேண்டியபொருளைக் கொடுத் தல்,
பிறன்பொருள்கொண்டு கொடுத்தல்,
கப்பம்வாங்காதொழிதல் எனத் தானத்தின் வகைஐந்து.
வணங்குதல், புகழ்தல், எதிர்கொள்ளல், நட்புக் கூறல்,
உறவுகூறல் எனச் சாமத்தின் வகை ஐந்து.
நட்புஒழிதல், கூடி னரைப் பிரித்தல், வேறுபகைவிளைத்தல்

எனப் பேதத்தின் வகை மூன்று.

௬எ - ஆம்

அதிகாரம்.—தெரிந்துசெயல்வகை ௪க

துன்பஞ்செய்தல், பொருள்கவர்தல், கொல்லுதல் எனத் தண்டத்தின் வகை மூன்று. இவ்வகைகளெல்லாம் காமந்தகம் சுக்கிரநீதி முதலிய வடநூல்களுள் விரிவாகக் காண்க. மாற்றுனல்-பகைவனுல்.

ஒழிதலாகாமை-விடக்கூடாமை.

துயர்உறுதலின் - துன்பமடைதலால். துணிந்தபின் - பின் என்னும்விகுதி பெற்றுவந்த எதிர்காலவினையெச்சம்; இதனை "பின்முன் கால்கடைவழியிடத்தென்னும், அன்னமரபிற்காலங்கண்ணிய, என்னகிளவியுமவற்றியல்பின வே." என்னும் தொல்காப்பியத்து வினையியற்சூத்திரத்தா லறிக. (எ)

சகூ௩. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

(இ - ள்.) ஆற்றின் - முடியும் உபாயத்தால், வருந்தா - (கருமத்தை) முயலாத, வருத்தம் - முயற்சி,—பலர் நின்று போற்றின் உம் - (துணைவர்) பலர் நின்று (புரைபடாமற்) காப்பினும், பொத்துப்படும் - புரைபடும்; (எ-று.)

முடியும் உபாயத்தான் முயறலாவது - கொடுத்தலைப் பொருள் நசையாளன்கண்ணும்; இன்சொல்லைச் செப்பமுடையான், மடியாளன், முன்னே பிறரோடு பொருதுநொந்தவன் என இவர்கண்ணும்; வேறுபடுத்தலைத் துணைப்படையாளன், தன்பகுதியோடு பொருந்தாதான் என இவர்கண்ணும்; ஒறுத்தலை இவற்றின்வாராதவழி இவர்கண்ணும், தேறப்படாத கீழ்மக்கள்கண்

னும் செய்து, வெல்லும் ஆற்றன் முயறல்.
புரைபடுதல் - கருதியநன்மை யன்றிக் கருதாத தீமை
பயத்தல். உபாயத்தது சிறப்புக் கூறியவாறு.

(கு - ரை.) முடியும் - நிறைவேறும்.

துணைவர் - உதவியானவர். நின்று - உடனிருந்து.
புரைபடாமல் - கெடுதியுண்டாகாதபடி;
ஜாக்கிரதையுடையரா யென்றபடி. காப்பினும் -
பாதுகாத்தாலும். முயறல் — முயலுதல். நால்வகை
உபாயங்களுள், தானத்தை உபயோகித்தற்கு
இடமாகுபவன் - செல்வத்திலாசையுடையவன்
என்றும்; சாமத்திற்கு இடமாகுபவர் - மனந்திருந்தக்
கவனும், சோம்பலுடையவனும், முன்
னும் என இவரென்றும்; பேதத்துக்கு

பிறருடன்போர்செய்து வருந்தியவ
இடமாகுபவர் - மூலபலம் முதலிய
சொந்தச்சேனைகளைத் தனக்கென்று உடையவனல்லாமல்
பிறரிடத்தினின்று துணையாய்வருஞ் சேனையையே
எதிர்பார்ப்பவனும், மந்திரி சேனாதிபதி முதலிய தனது
பரிவாரங்களோடு ஒற்றுமையில்லாதவனும் என
இவரென்றும்; தண்டத்துக்கு உரியவர் - கீழ்க்கூறிய
பொருளாசையுள்ளவன் முதலியோர் தானம்
முதலிய முதல்மூன்றுஉபாயங்களால் தனக்கு

வசப்பட்டுக் கீழ்ப் படிந்து வாராதவிடத்து அவர்களும், எவ்விதத்திலும் நம்பத்தகாத கீழ்மக்களும் என இவரென்றும் அறிக. வெல்லும் ஆற்றான்-சத்துருக்களை ஜயிக்கும் வழியால். கருதிய நன்மை அன்றி-எண்ணி எதிர்பார்த்த நன்மையைத்தராததோடு. கருதாத தீமை பயத்தல்-எண்ணி எதிர்பாராத தீமையையுண்டாக்குதல். உபாயத்தது - நால்வகையுபாயங்களின். போற்றினும், உம்மை-உயர்வு சிறப்பு. இதனால், பலர்நின்று போற்றுவிடத்துப் பொத்துப்படுதல் தானே

11



விளக்கும். மனம்மெலிதலில்லாமல் தொழில் செய்தலில் சிரமப்படுவது முயற்சியாதலால், 'வருந்தாவருத்தம்' எனப்பட்டது. (அ)

௪௬௯. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

(இ - ள்.) நன்று ஆற்றலுள் உம் - (வேற்றுவேந்தர்மாட்டு) நன்றான உபாயம் செய்தற்கண்ணும், தவறு உண்டு - குற்றம்உண்டாம்:—அவர் அவர் பண்பு அறிந்து ஆற்றாக்கடை - அவரவர் குணங்களை ஆராய்ந்து அறிந்து (அவற்றிற்கு இயையச்) செய்யாவிடின்; (எ - று.)

நன்றான உபாயமாவது - கொடுத்தலும் இன்சொற் சொல்லுதலுமாம். அவை யாவர்கண்ணும் இனியவாதற் சிறப்புடைமையின், உம்மை - சிறப்பும்மை. அவற்றை அவரவர் பண்பு அறிந்து ஆற்றாமையாவது - அவற்றிற்கு உரியரல்லாதார்கண்ணே செய்தல். தவறு - அவ்வினைமுடியாமை.

(கு - ரை.) வேற்றுவேந்தர்மாட்டு - பகையரசரிடத்து. அவற்றிற்கு இயைய - அக்குணங்களுக்குத் தக்கபடி. யாவர்கண்ணும்-எல்லோரிடத்தும். இனியவாதற்சிறப்பு-நல்லனவாகும் உயர்வு. சிறப்பும்மை-உயர்வுசிறப்பும்மை. எந்தஎந்தஉபாயத்தை உபயோகித்தற்குயார்யார்உரியவரோ, அவரவரிடத்து அந்தந்தஉபாயத்தைத் தகுதியறிந்துஉபயோகியாவிட்டால்,காரியம் முடியாது கெடுமென்பதாம். இன்னாரின்னாரிடம் இன்ன இன்னஉபாயஞ் செய்யவேண்டு மென்று கீழ்க்குறளினுரையில் காட்டப்பட்டது: ஆற்றல் - தொழிற்பெயர். ஆற்றுக்கடை - 'கடை' விகுதிபெற்ற எதிர்மறை எதிர்காலவினையெச்ச மென்றாவது, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தொகாநிலைத்தொட ரென்றாவது கொள்க. அவரவர் - அடுக்கு, வகைபற்றியது. (கூ)

சஎ0. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

(இ - ள்.) (அரசர் வினைமுற்றுதற்பொருட்டு), தம்மொடு கொள்ளாத - தம்நிலைமையோடுபொருந்தாத உபாயங்களை(ச்செய்வராயின்), உலகு கொள்ளாது - உலகம் (தம்மை) இகழாநிற்கும்: (ஆகலான்), எள்ளாத - (அஃது) இகழாஉபாயங்களை, எண்ணி செயல் வேண்டும் - நாடிச்செய்க; (எ - று.)

'தம்' என்பது - ஆகுபெயர். தம்நிலைமையோடுபொருந்தாத உபாயங் களைச் செய்தலாவது - தாம் வலியராய்வைத்து மெலியார்க்குஉரிய கொடுத் தல்முதலிய மூன்றனைச் செய்தலும், மெலியராய்வைத்து வலியார்க்குஉரிய ஒறுத்தலைச் செய்தலுமாம். இவையிரண்டும் அறிவிலார்செய்வனவாகலின், 'உலகங்கொள்ளாது' என்றார். அஃது எள்ளாதனசெய்தலாவது-அவற்றைத் தத்தம் வன்மை மென்மைகட்கு ஏற்பச் செய்தல். மேல் இடவகையான் உரிமைகூறிய உபாயங்கட்கு வினைமுதல்வகையான் உரிமைகூறியவாறு. இவைநான்குபாட்டானும், செய்வனவற்றிற்கு உபாயமும், அதனது உரிமையும் கூறப்பட்டன.

(கு - ரை.) தம்மை இகழாநிற்கும் - அவ்வரசரைப்
பழிக்கும். அஃது
இகழா - அவ்வுலகத்தவரால் இகழப்படாத.
நாடிச்செய்க - ஆராய்ந்தறிந்து
செய்யவேண்டும். தம்என்பது - தமதுநிலைமையைக்
குறித்ததனால், பொரு
ளாகுபெயர். வலியராய்வைத்து - பகைவரினும் மிக்கவலிமையுடையவரா
யிருந்து. கொடுத்தல்முதலிய மூன்று - தான சாம பேதம். ஒறுத்தல் - தண்
டோபாயம். இவையிரண்டும் - வலியரான தாம் மெலியார்செய்யவேண்டும்
உபாயங்களைச் செய்தலும் மெலியரான தாம்
வலியார்செய்யவேண்டும்
உபாயத்தைச் செய்தலும். உலகம் கொள்ளாது -
உயர்ந்தோர் அங்கீகரியார்.
மேல் - இவ்வதிகாரத்து எட்டாங்குறளில்.
இடவகையான் உரிமைகூறிய -
இன்ன இன்ன உபாயம் உபயோகிக்கப்படுதற்கு இடமாகுபவர் இன்னார்
இன்னாரென்று இடம்வகுத்துக்கூறப்பட்ட. வினை முதல்வகையான் உரிமை-
இன்ன இன்ன உபாயத்தை இன்னாரின்னார் செய்தற்குரியவரென்ற தகுதி.
வினைமுதல் - கருத்தா, செய்பவன். செய்வனவற்றிற்கு
- செய்யத்தக்ககாரி
யத்திற்கு. அதனதுஉரிமை-அவ்வுபாயத்தினது
இடத்தகுதியும், வினைமுதல்

தருதியும்.
எள்ளாத,கொள்ளாத-எதிர்மறைறவினையாலணையும் பெயர்கள்.(௪0)

## ௪அ - ஆம்

## அதிகாரம்.—வலியறிதல்.

அஃதாவது - *அவ்வுபாயங்களுள் ஒறுத்தல்குறித்த அரசன் நால்வகை வலியையும் அளந்து அறிதல். அதிகாரமுறைமையும், இதனானே விளங்கும்.

(கு - ரை.) ஒறுத்தல் குறித்த - தண்டமென்னும் உபாயத்தை நடத்தக் கருதிய. நால்வகைவலி - இவ்வதிகாரத்தின் முதற்பாட்டிற் கூறப்படுவது. அளந்து - வரையறைசெய்து. கீழ் அதிகாரத்தில் அரசன் தொழில்களை ஆராய்ந்துசெய்யும் உபாயங்களின் வகைகளைப் பொதுப்படக் கூறி, இவ்வதி காரத்தில் அவ்வுபாயங்களுள் ஒன்றை [ஒறுத்தலை] உபயோகித்தற்கு வேண்டிய இலக்கணங்களைச் சிறப்பாகக் கூறத்தொடங்குதலால், இவ்வதிகாரம் தெரிந்து செயல்வகையென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

மெலியார்க்குஉரிய முதல் மூன்று உபாயங்களை விட்டு, வலியார்க்குஉரிய

இறுதி உபாயத்தையே விவரிக்கத்தொடங்குகிறார்; சிறப்புப் பற்றியும்,
அருமைபற்றியுமென்க.

சஎக. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

(இ - ள்.) வினை வலிஉம் - (தான் செய்யக்கருதிய) வினைவலியையும்,
தன் வலிஉம் - (அதனைச்செய்துமுடிக்குந்) தன்வலியையும், மாற்றான் வலி
உம் - (அதனை விலக்கலுறும்) மாற்றான்வலியையும், துணை வலிஉம் - (இரு
வர்க்குந்) துணையாவார் வலியையும், தூக்கி - சீர்தூக்கி,—செயல் - (தன்வலி
மிகுமாயின் அவ்வினையைச்) செய்க; (எ - று.)

---

* பி - ம்: அத்திறமுணர்ந்து வினைசெயக்குறித்த.



இந்நால்வகைவலியுள், வினைவலி - அரண்முற்றலும் கோடலும் முத வியதொழிலானும், ஏனைய - மூவகையாற்றலானும் கூறுபடுத்துத் தூக்கப் படும். 'தன்வலிமிகவின்கண்செய்க' என்ற விதியான், தோற்றல் ஒருதலை

யாய குறைவின்கண்ணும், வேறல் ஐயமாய ஒப்பின்கண்ணும் ஒழிக என்பது பெற்றும்.

(கு - ரை.) விலக்கலுறும்-நீக்கவரும். மாற்முன்வலி-பகைவனது பலம். இருவர்க்கும் - தனக்கும் பகைவனுக்கும். சீர்தூக்கி - மதிப்பிட்டுப்பார்த்து. அரண்முற்றல் - பகைவர்கோட்டையை வளைத்தல். கோடல் - அங்குள்ள ஆநிரைமுதலிய பொருள்களைக் கவர்தல். முதலிய என்றதனால், தம்மதிலைக் காத்தல் பகைவர்சூழ்ச்சிதலையெடுக்காவண்ணஞ்செய்தல் முதலியன. ஏனைய-மற்றைத் தன்வலிமுதலிய மூன்றும். மூவகையாற்றலான் - அறிவு [மந்த்ர சக்தி] ஆண்மை [உற்சாகசக்தி] பெருமை [ப்ரபுத்வசக்தி] என்னும் மூன்று சக்திகளால். கூறுபடுத்து - பகுப்பிட்டு. தூக்கப்படும் - ஆராய்ந்து மதிக்கப் படும். தன்வலிமிகவின்கண் செய்க - தனதுவலிமை அதிகமானபொழுது பகைவர்மேல் வெல்லுதற்குச்செல்லுதல் முதலிய தன்தொழிலைச் செய்ய வேண்டும். விதி-கட்டளை. தோற்றல் ஒருதலையாய - (தான்) தோல்வியடைதல் நிச்சயமான. குறைவின்கண்ணும் - (தன்வலிமை) குறைவுபட்டபொழுதும். வேறல் ஐயமாய - ஜயம் உண்டாகுமோ உண்டாகாதோ வென்று சந்தேகத்திற்கிடமான. ஒப்பின்கண்ணும் - தன்வலிமையும் பகைவன்வலிமையுஞ் சமமாகவுள்ளபொழுதும். ஒழிக-தான் செய்யக்கருதிய போர்வினையைச் செய்யாதுவிடுக. உம்மைகள் - எண்ணுப்பொருளன. செயல் - உடன்பாட்டு வியங்கோள். (க)

சஎஉ. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

(இ - ள்.) ஒல்வது-(தமக்கு) இயலும்வினையையும், அறிவது-(அதற்கு) அறியவேண்டுவதாய வலியையும், அறிந்து—, அதன்கண் தங்கி-(எப்பொழு

தும் மனமொழிமெய்களை) அதன்கண் வைத்து, செல்வார்க்கு - (பகைமேற்) செல்லும்அரசர்க்கு, செல்லாதது - முடியாதபொருள், இல் - இல்லை; (எ-று.)

'ஒல்வது' எனவே வினைவலிமுதலாய மூன்றும் அடங்குதலின், ஈண்டு 'அறிவது' என்றது - துணைவலியேயாயிற்று. எல்லாப்பொருளும் எய்துவர் எனபதாம.

இவையிரண்டுபாட்டானும், வலியின் பகுதியும், அஃது அறிந்து மேற்செல்வார் எய்தும் பயனும் கூறப்பட்டன.

(கு - ரை.) இயலும் வினை - செய்யத்தக்ககாரியம்.

அதற்கு-அத்தொழிலுக்கு. வலி - இருவர்க்குந் துணையாவார்வலிமை. மன மொழி மெய்கள் - திரிகரணம். அதன் கண்வைத்து - அந்நால்வகை வலியின்மேற்செலுத்தி. பகை மேல்-பகைவர்மேல். மனமொழிமெய்களை அதன்கண்வைத்தல் - அவ்வலிமைகளைப்பற்றிச்சிந்தித்தும்

நல்லினத்தோடு கலந்துபேசியும் காணுதல்முதலியன

சஅ - ஆம்

அதிகாரம்.—வலியறிதல் ருரு

செய்தல்.
ஒல்வது-செய்யத்தக்க தொழில்; இச்சொற்பொருளில்,

தொழில்
என்றதில் வினைவலியும், செய்யத்தக்கவென்றதில்
தன்வலிமாற்றான்வலிகளும்
இங்ஙனம் மூன்றும் அடங்குதல் காண்க. ஈண்டு - இங்கே. பகுதி - பகுப்பு.
'அதன்கண்' என்றது, சாதியொருமையால்.

(உ)

சஎரு. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி
னிடைக்கண் முரிந்தார் பலர்.

னூக்கி

(இ - ள்.) உடை - (கருத்தாவாதலை) உடைய, தம்வலி - தம்வலியின்
அளவு, அறியார் - அறியாதே, ஊக்கத்தின் - மனவெழுச்சியால், ஊக்கி -
(தம்மின்வலியாரோடு) வினைசெய்தலைத்தொடங்கி, இடைக்கண் முரிந்தார் -
(அவர் அடர்த்தலான் அது செய்துமுடிக்கப்பெறாது) இடையேகெட்ட
அரசர், பலர் - (உலகத்துப்) பலர்; (எ - று.)

'உடைய' என்பது அவாய்நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்
கப்பட்டது. மூவகைஆற்றலுள்ளுஞ் சிறப்புடைய

அறிவு உடையார் சில

ராதலின், 'முரிந்தார்பலர்' என்றார்.

'அதனால், தம்வலி அறிந்தே தொடங்குக'

என்பது எஞ்சிநின்றது.

(கு - ரை.) கருத்தாவாதலையுடைய தம் வலியின் அளவு அறியாதே -

தொழில்களைச் செய்பவராகிய தமது வலிமையின் அளவை ஆராய்ந்தறியா

மலே. மனவெழுச்சியால் - உற்சாகத்தால். வினைசெய்தல் -போர்செய்யுந்தொழில். அவர் அடர்த்தலான் - அவ்வலியபகைவர்கள் மேலிட்டுப்பொருது முரி

ய அடிப்பதனால். அதுசெய்துமுடிக்கப்பெறாது - தாம்தொடங்கிய போர்வினையை வெற்றிபெறச் செய்துமுடிக்கக்கூடாமல். இடையே கெட்ட - தொடங்கி

யதை முடிப்பதற்குமுன்னமே அழிவடைந்த.

உடையவென்னுங் குறிப்புப்

பெயரெச்சம் தொகுத்தல்விகாரப்பட்ட

உடையென்னும்பண்படி, ஒரு செயப்

படுபொருளை வேண்டிநின்றதனால், 'கருத்தாவாதலை'

என்பது வருவிக்கப்

பட்டது. அறிவு ஆண்மை பெருமைஎன்ற

மூவகையாற்றலுள்ளும் சிறப்

புடைய அறிவு-மூவகைச்சக்திகளிற் சிறந்ததான

மந்திரசக்தி. எஞ்சிநின்றது-

குறைந்தது; இது - குறிப்பெச்சம்.

(௩)

சஎச.

அமைமந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(இ - ள்.) ஆங்கு - அயல்வேந்தரோடு, அமைந்துஒழுகான் - பொருந்தி ஒழுகுவதுஞ் செய்யாது, அளவு அறியான் - (தன்) வலியளவு அறிவதுஞ் செய்யாது, தன்னை வியந்தான் - தன்னை வியந்து (அவரோடு) பகைத்த அரசன், விரைந்து கெடும் - விரையக் கெடும்; (எ - று.)

காரியத்தைக் காரணமாக உபசரித்து, 'வியந்தான்' என்றார். 'விரைய' என்பது, திரிந்துநின்றது. நட்பாய்ஒழுகுதல், வலியறிந்துபகைத்தல் என்னும் இரண்டனுள் ஒன்றன்றே அயல்வேந்தரோடுசெயற்பாலது? இவையன்றித் தான் மெலியனாய்வைத்து அவரோடுபகைகொண்டானுக்கு ஒருபொழுதும் நிலைஇன்மையின், 'விரைந்துகெடும்' என்றார்.



இவையிரண்டுபாட்டானும், தன்வலியறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

(கு - ரை.) பொருந்தி ஒழுகுவதும் செய்யாது - சமாதானமாயிருத்தலுஞ்செய்யாமல். தன்வலியளவு அறிவதுஞ் செய்யாது - தனதுபலத்தின்

வரையறையை ஆராய்ந்து அறிவதுஞ்செய்யாமல். தன்னை வியந்து - (தான் மற்றையரசரெல்லாரினும் மேம்பட்டவனாகத்)தன்னை (த்தானே)மெச்சி நன்கு மதித்து. அவரோடுபகைத்த - அயலரசர்களுடன் விரோதித்த. விரையக் கெடும் - விரைவிலே அழிவான். காரியம் - பகைத்தல்; காரணம் - வியத் தல்: தன்னைத் தானே சிறந்தவனாக மதித்துச் செருக்குக் கொள்ளுதலினால்

வேற்றரசருடன் பகைகொள்வானை, அதற்குக்காரணமாகிய 'தன்னை வியந் தான்' என்ற சொல்லாற் கூறியது - உபசாரவழக்கு. இங்கே விரைதல் கெடுதல்வினைக்கு உடன்நிகழ்கிறதாதலால், 'விரைந்து' என்னும் இறந்த காலவினையெச்சத்தை அங்ஙனமே கொள்ளாமல், முக்காலத்துக்குமுரிய 'விரைய' என்னுஞ் செயவெனெச்சந் திரிந்ததாகக் கொள்ளவேண்டியதா யிற்று. நட்பாய் ஒழுகுதல் - சமாதானமாயிருத்தல். வலியறிந்துபகைத்தல் -

(வினைவலி முதலிய நான்குவலியையும் ஆராய்ந்து தன்) வலிமிகுதியாயிருத் தலை அறிந்து (வேற்றரசனுடன்) பகைத்தல். ஒன்றன்றே செயற்பாலது - ஏதாவதுஒன்றே செய்யத்தக்கது. அன்றே - அன்றோ; இது, தேற்றமுணர் த்திற்று. இவையன்றி - இவ்விரண்டனுள் ஒன்றுமல்லாமல் வேறாக. தான் மெலியனாய்வைத்து - தான்வலியற்றவனாயிருக்கையில். அவரோடு - தன் னின்வலிய அயல்வேந்தருடன். ஒருபொழுதும் நிலை இன்மையின் - சிறிது

போதுகூட (அழியாது) நிற்றல் இல்லாமையால்.

தன்வலியறியாவழிப் படும்

இழுக்கு - தனதுபலத்தை(த் தான்) அறியாதிருந்தால் உண்டாகுங் குற்றம்.

ஒழுகான், அறியான் - வினைமுற்று வினையெச்சங்கள்.

(ச)

சஎரு.

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(இ - ள்.) பீலி பெய் சாகாடுஉம்-பீலி ஏற்றிய சகடமும், அச்சு இறும்-
அச்சு முரியும்:—அப் பண்டம்-அப் பீலியை, சால மிகுத்து-அது பொறுக்கு
மளவன்றி மிகுத்து, பெயின் - ஏற்றின்; (எ - று.)
உம்மை-சாகாட்டது வலிச்சிறப்பேயுமன்றிப் பீலியதுநொய்ம்மைச்சிறப்
புந் தோன்ற நின்றது. 'இறும்' என்னும் சினைவினை, முதல்மேல்நின்றது.
'எளியரென்று பலரோடுபகைகொள்வான் தான் வலியனேயாயினும் அவர்
தொக்கவழி வலிஅழியும்' என்னும் பொருள் தோன்ற நின்றமையின், இது-
'பிறிதுமொழிதல்'என்னும் அலங்காரம்; இதனை

'நுவலா நுவற்சி' என்பாரும்,
'ஒட்டு' என்பாரும் உளர்.

'ஒருவன் * தொகுவார்பலரோடு பகைகொள்ளற்க' என்றமையின், இத

* பி - ட: ஒருவன் பலரொடு

சஅ - ஆம் அதிகாரம்.—வலியறிதல்

௭௱

ஞன், மாற்றான்வலியும் அவன் துணைவலியும்
அறியாவழிப் படும் இழுக்குக்
கூறப்பட்டது.

(கு - ரை.) பீலியேற்றியசகடம் -
மயிற்றோகைக்கண்களை நிரம்பஏற்றப்
பெற்ற வண்டி. அச்சு - சக்கரங்கோக்கப்படுகிற
வண்டியின் அடிமரம்;
'அச்சு - உருள்கோத்தமரம்' என்பர், மேல் "அச்சாணியன்னா ருடைத்து" என்னுமிடத்துப் பரிமேலழகர். அதுபொறுக்குமளவன்றி மிகுத்து ஏற்றின் - எவ்வளவு ஏற்றினால் அவ்வண்டி சுமக்கக்கூடுமோ அவ்வளவல்லாமல் அதனினும் மிகுதியாக ஏற்றினால். சாகாடும் என்றஉம்-ஒருபால் உயர்வுசிறப்போடு ஒருபால் இழிவுசிறப்புப்பொருளுமுடையது. சாகாட்டதுவலிச்சிறப்பேயுமன்றி-வண்டியின் வலிமைமிகுதியாகிய உயர்வுசிறப்புமாத்திரமே யல்லாமல். பீலியது நொய்ம்மைச்சிறப்பும் - மயிற்பீலியின் கனமில்லாமல் இலேசாயிருக்குந்தன்மையாகிய இழிவுசிறப்பும். சினை-ஒன்றற்கு உறுப்பாயுள்ளது. முதல்-சினையையுடையது. சினை உறுப்பு அவயவம் என்பனவும், முதல் உறுப்பி

அவயவி என்பனவும்-தனித்தனி ஒருபொருளன. அச்சுஎன்னுஞ்சினையினது

வினையாகிய இறுமென்பது, சாகாடு என்னும் முதலின்மேல் நின்றமை

காண்க. அவர்தொக்கவழி வலிஅழியும் - அவர்கள் ஒருங்குசேர்ந்த விடத்

துத் தான் வலிமையழிவான். உபமேயத்தைக்கூறாமல் உபமானத்தை மாத்திரங்கூறி அதனால் உபமேயத்தைப்பெறவைத்தல், 'பிறிதுமொழிதல்' என்னும் அணியின் இலக்கணம்; இதனை வடநூலார் 'அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்காரம்' என்பர். 'ஒட்டெனினும், உள்ளுறையுவமமெனினும், உவமப்போலியெனினும், பிறிதுமொழிதலெனினும், நுவலாநுவற்சியெனினும் ஒக்கும்' என்பது, இலக்கணவிளக்கவுரை. இவ்வலங்காரத்தைச் சுருக்கணியென்பர், வீரசோழியநூலுடையார். வலிமையற்றவரேனும் பலர் ஒருங்குசேர்ந்தால் அவர்க்கு வலிமையுள்ளவனொருவன் ஈடுகொடுப்பது அரிதென்பதை விளக்கவந்தது, இவ்வுவமை. ஒருவன் தொகுவார்பலரோடு பகைகொள்ளற்க-தனியே ஒருத்தன் ஒருங்குகூடும்பலருடன் விரோதங்கொள்ளாதிருக்கக் கடவன். என்றமையின் - என்றபொருளை விளக்கியதனால். இதனான் - இக்குற

ளால். சாகாடு, அச்சு - முகடம், அக்ஷம் என்னும்

வென்பர். மிகுத்து - மிகுந்துஎன்பதன்பிறவினை.

வடசொற்களின் சிதை

(ரு)

௬௭௫. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந்

தூக்கி

னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(இ - ள்.) கொம்பர் நுனி - (ஒருமரக்) கோட்டினது நுனிக்கண்ணே,

ஏறினர் - ஏறிநின்றார், (தம்ஊக்கத்தால்), அஃது இறந்து - அவ்வளவினைக்

கடந்து, ஊக்கின் - (மேலும் ஏற) ஊக்குவராயின், (அவ்வூக்கம்), உயிர்க்கு

இறுதி ஆகிவிடும் - அவருயிர்க்கு இறுதியாய்முடியும்; (எ - று.)

'நுனிக்கொம்பர்' என்பது-'கடைக்கண்' என்பதுபோலப் பின்முன்னாக

த்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை. பன்மை, அறிவின்மைபற்றி இழித்

தற்கண்வந்தது. இறுதிக்கு ஏதுவாவதனை

'இறுதி'என்றார். 'பகைமேற்செல்



வான்தொடங்கித் தன்னாற்செல்லலாமளவுஞ் சென்றுநின்றான் பின் அவ்வளவில்நில்லாது மனவெழுச்சியால் மேலுஞ்செல்லுமாயின், அவ்வெழுச்சி, வினைமுடிவிற்கு ஏதுவாகாது அவனுயிர்முடிவிற்கு ஏதுவாம்' என்னும் பொருள்தோன்ற நின்றமையின், இதுவும் - மேலையலங்காரம்.

'அளவறிந்துசிற்றல்வேண்டும்' என்றமையின், இதனான், வினைவலியறி

யாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.

(கு - ரை.) மரக்கோட்டினது-மரத்தின்கிளையினது. நுனிக்கண்ணே-நுனியிலே. ஊக்கம் - உள்ளக்கிளர்ச்சி. அவ்வளவினைக்கடந்து - எவ்வளவுவரையில் ஏறிச்சென்றால் அக்கிளை தன்வலியால் தம்மைத் தாங்கக்கூடுமோ அவ்வளவை மீறி. மேலும்ஏறஊக்குவராயின் - அதன்மேலும் ஏறுதற்குத் தைரியங்கொள்வராயின். இறுதியாய் - அழிவைச்செய்வதாய். கண்ணின்கடையென்னும் ஆறும்வேற்றுமைத்தொகை கடைக்கண்எனப் பின்முன்னாகமாறினாற்போல, கொம்பரின்நுனியென்னும் ஆறும்வேற்றுமைத்தொகை நுனிக்கொம்பர்எனப் பின்முன்னாக மாறிற்று; இது இலக்கணப்போலி. பன்மை, 'ஏறினார்' என்ற சொல்லில் உள்ளது. இழித்தற்கண் - கீழ்ப்படுத்திக்கூறும்பொருளில். "ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியும், ஒன்றனைக் கூறும் பன்மைக்கிளவியும், வழக்கினாகிய வுயர்சொற்கிளவி, இலக்கணமருங்கிற்சொல்லாறல்ல" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் 'தாம்வந்தார்தொண்டனார் என்பது உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று' என இதனை அடக்கியவாறு காண்க. உறுதியைத்தருவதை உறுதியென்பதுபோல, இறுதியைத்தருவதை இறுதியென்றது-காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கு. பகைமேற்செல்வான் தொடங்கித் தன்னாற் செல்லலாமளவுஞ் சென்று நின்றான் - பகைவர்மேல் அவரை வெல்லுதற்பொருட்டு எதிர்த்துச் செல்லத்தொடங்கித் தன்னால் அத்தொழிலில் எவ்வளவுசெல்லக்கூடுமோ அவ்வளவும் போய்நின்றவன். பின் அவ்வளவில்நில்லாது மனவெழுச்சியால் மேலும் செல்லுமாயின் - பின்பு அவ்வெல்லையிலே நின்றிடாமல் உற்சாகத்தால் மேலும் மேலும் வரம்புகடந்து போய்க்கொண்டே யிருப்பானானால். அவ்வெழுச்சி - அச்செல்லுதல்தொழில். வினைமுடிவிற்கு ஏதுவாகாது - தொழில்நிறைவேறுதற்குக் காரணமாகாமல். உயிர்முடிவு-உயிர் உடம்பைவிட்டு ஒழிதல்: மரணம். மேலையலங்காரம்-பிறிதுமொழிதல். என்றமையின் - என்றபொருளை விளக்கியதனால். வினைவலியறியாவழி - தொழிலின்வலிமையை அறியாவிட்டால். கொம்பர் - கொம்பு என்னும் மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு அர் போலி. அஃது என்பதன் ஆய்தம், இங்கு மெய்போலொலித்தது. (சு)

சஎஎ. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(இ - ள்.) ஆற்றின் - (ஈயும்) நெறியானே, அளவு அறிந்து - (தமக்கு

உள்ளபொருளின்) எல்லையை அறிந்து, ஈக - (அதற்கு

ஏற்ப) ஈக; அது -

சஎ௭ -

ஆம் அதிகாரம்,—வலியறிதல் ௪௬௯

அம்மனம் ஈதல், பொருள் போற்றி - பொருளைப் பேணிக்கொண்டு, வழங்கும் - ஒழுகும், நெறி - நெறியாம்; (எ - று.)

ஈயும்நெறி - மேல் இறைமாட்சியுள் "வகுத்தலும் வல்லதரசு" என்புழி உரைத்தாம். எல்லைக்கு ஏற்ப ஈதலாவது - ஒன்றான எல்லையை நான்கு கூறாக்கி அவற்றுள் இரண்டனைத் தன்செலவாக்கி, ஒன்றனை மேல் இடர் வந்துழி அது நீக்குதற்பொருட்டு வைப்பாக்கி, நின்றஒன்றனை ஈதல்; பிறரும் "வருவாயுட் கால்வழங்கிவாழ்தல்" என்றார். பேணிக்கொண்டொழுகுதல் - ஒருவரோடு நட்பில்லாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக்கொண்டு ஒழுகுதல். முதலிற் செலவுசுருங்கின் பொருள் ஒருகாலும் நீங்காது என்பதாம்.

(கு - ரை.) ஈயும் நெறியானே -

கொடுக்கவேண்டும்வழியாலே. எல்லை- அளவு. அதற்கு ஏற்ப ஈக - அந்த அளவிற்குத் தக்கபடி கொடுக்கக்கடவன்.
பொருளைப் பேணிக்கொண்டு ஒழுகும் நெறி - செல்வத்தைப் பாதுகாத்துக் கொண்டு நடக்கும்வழி.
"இயற்றலுமீட்டலுங்காத்தலும் காத்த, வகுத்தலும் வல்லதரசு" என்பது - கீழ் இறைமாட்சி என்ற அதிகாரத்தின் ஐந்தாம்பாட்டு. என்புழி - என்னுமிடத்து.
ஒன்றன எல்லையை நான்குகூறாக்கி - தமக்கு வருவாயாக உள்ள
பொருளின் கூட்டுத்தொகையைநான்குபாகமாகப்பகுத்து.
அந்நான்கு பகுதியுள், இரண்டுபகுதி - தற்
காலத்தில் தன்வாழ்க்கைமுதலிய
வற்றிற்குவேண்டியசெலவிற்கும், ஒருபகுதி - பின்பு
எக்காலத்திலாவது தமக்குப் பொருள்வரவிற்குத்
தடையுண்டானபொழுது அத்தடையை இல்லை யாக்குதற்கு (ஆஸ்தியாக)வைப்பதற்கும், மற்றொருபகுதி -
பிறர்க்குக்கொடுத் தற்கும் உரியவா மென்க. வைப்புஆக்கி - ஆஸ்தியாக்கி. "வருவாயுள்" என்ற மேற்கோள் -
திரிகடுகத்தில் (உக) "வருவாயுட்கால்வழங்கிவாழ்தல்
செரு வாய்ப்பச், செய்தவைநாடாச் சிறப்புடைமையெய்தப்,

பலநாடிநல்லவைகற்ற லிம்மூன்றும்,

நலமாட்சிநல்லவர்கோள்" என்ற செய்யுளி லுள்ளது.
தமக்கு வருகிறபொருளில் நாலிலொருபாகத்தைப்
பிறர்க்குத் தானஞ்செய்துவாழ்த லென்பது,
இம்மேற்கோளின் பொருள். 'பிறரும்' என்றது,

திரிகடுகநூலாசிரியராகிய நல்லாதனுரை. ஒருவரோடு நட்பில்லாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக்கொண்டு ஒழுகுதல் - எவருடனும் சினேகமாய் ஒற்றுமைப்பட்டு விட்டுநீங்காமல்நிலைத்திராத இயல்பினதாகிய செல்வத்தைத் தம்மோடு சினேகமாய் ஒற்றுமைப்பட்டு விட்டுநீங்காமல் நிலைத்திருக்கச்செய்தல். முதலிற் செலவு சுருங்கின் - முதற்பொருளினுஞ் செலவாகும்பொருள் குறைவாகவிருந்தால். இங்கு முதற்பொருளென்றது - வருவாயாகவுள்ள பொருள். ஆற்றின் - ஐந்தாம்வேற்றுமை: ஏதுப்பொருள். முன்வாக்கியத்திற்கூறிய காரியத்தின் பயனைத் தெரிவிப்பது, பின்வாக்கியம்.

(எ)

சஎ௪. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(இ - ள்.) ஆகு ஆறு - (அரசர்க்குப் பொருள்) வருகின்ற நெறி, அளவு இட்டிது ஆயின் உம் - அள


வுசிறிதாயிற்றாலும், கேடு இல்லை - (அதனாற்) கூo

திருக்குறள்

கேடில்லையாம்:—போகு ஆறு - போகின்ற நெறி, (அளவு) அகலாக்கடை - (அளவு அதனிற்)பெருகாதாயின்; (எ - று.)

'இட்டிது' எனவும், 'அகலாது' எனவும் வந்த

பண்பின் தொழில்கள், பொருள்மேல் நின்றன. 'பொருள்' என்பது அதிகாரத்தான் வருவித்து, 'அளவு' என்பது பின்னுங்கூட்டி உரைக்கப்பட்டன. முதலும் செலவும் தம் முள் ஒப்பினும் கேடு இல்லை என்பதாம்.

(கு - ரை.) பொருள்வருகின்ற நெறி - செல்வம்வருதற்குக் காரணமாயுள்ள வழி. அளவு சிறிதாதல் - அவ்வழியின் அளவு சிறியதாகுதல். கேடு - தீங்கு. போகின்ற - (செல்வஞ்) செலவாகிற. அதனிற்பெருகாதாயின் - பொருள் வரும்வழியினும் அதிகப்படாதானால். அளவு என்னும் பண்பின் தொழிலான சிறிதாதல் பெரிதாதல் என்பவை, அத்தொழில் களுக்கு உடைய தான ஆறு என்னும் பொருட்பெயரின்மேலேற்றிக் கூறப்பட்டன; இது - பண்பின்தொழிலைப் பண்பியின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்கு. அதிகாரத் தான் - இப்பாட்டையுடைய அதிகாரம் பொருட்பாலினுள்ளதாதலா லென்க. அளவென்பது பின்னுங்கூட்டி யுரைக்கப்பட்டது, 'போகா று அளவு அகலாக் கடை' என. தம்முள் - தமக்குள்; ஒன்றோடொன்று. ஒப்பினும் - ஏற்றத்தாழ் வில்லாமற் சமமாயிருந்தாலும். இட்டிது - இட்டிமையின்மேற்பிறந்த ஒன்றன் பாற்குறிப்பு வினையாலணையும்பெயர்.

(அ) ௪௭௯. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல

வில்லாகித் தோன்றாக் கெடும்.

(இ - ள்.) அளவு அறிந்து - (தனக்கு உள்ளபொருளின்)எல்லையை அறிந்து, வாழாதான் - (அதற்கு ஏற்ப) வாழமாட்டாதான், வாழ்க்கை-வாழ்க்கைகள்,—உள போல - உள்ளனபோல (த் தோன்றி), இல் ஆகி - (மெய்ம்மையான்) இல்லையாய், தோன்றா - (பின்பு) அத்தோற்றமும் இன்றி, கெடும் - கெட்டுவிடும்; (எ - று.)

அவ்வெல்லைக்குஏற்ப வாழ்தலாவது - அதனின்* சுருக்கக் கூடாதாயின் ஒப்பவாயினும் ஈத்தும் துய்த்தும் வாழ்தல். தொடக்கத்தில் கேடு வெளிப் படாமையின், 'உளபோலத்தோன்றி' என்றார். முதலின் செலவு மிக்கால் வரும் ஏதம் கூறியவாறு.

(கு - ரை.) தனக்குஉள்ளபொருள் - தனக்குவருவாயாகவுள்ள செல்வம். அதற்குஏற்ப - அவ்வளவிற்குஏற்றபடி (பிறர்க்குக்கொடுத்தும் தான் அனுபவித்தும்). வாழமாட்டாதான்வாழ்க்கைகள் - வாழத்திறமையில்லாதவனது வாழ்வுகள். தோன்றி - வெளிக்குக்காணப்பட்டு. மெய்ம்மையான் - உண்மையாகநோக்குமிடத்து. அத்தோற்றமும் - உள்ளதாகத்தோன்றும் அந்தத் தோன்றற்பாடும். அதனின்-வருவாயைக்காட்டிலும். சுருக்க-செலவுகுறைக்க. ஒப்பவாயினும் - வரவும் செலவும் ஒத்திருக்கும்படியாவது. ஈத்தும் - பிறர்க்

* பி - ம்: சுருங்கக்.

கூக

குக்கொடுத்தும். துய்த்தும் - தான் அனுபவித்தும்.
தொடக்கத்தில்-பொருட்
செலவின்ஆரம்பகாலத்தில். வெளிப்படாமையின் -
விளங்கக்காணப்படா
மையால். முதலின் - வருவாயைக்காட்டிலும். ஏதம் -
தீங்கு. இங்கே "ஆன
முதலின திகஞ்செலவானன், மான
மழிந்துமதிகெட்டுப்—போனதிசை, எல்
லார்க்குங் கள்ளனு யேழ்பிறப்புந் தீயனாய், நல்லார்க்கும்
பொல்லனு நாடு"
என்ற ஔவையார்பாடலை உணர்க.

(க)

சஅ0. உளவரை தூக்காத வொப்புர
வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(இ - ள்.) உள வரை - (தனக்கு) உள்ளஅளவு,
தூக்காத- தூக்காமைக்கு
ஏதுவாய, ஒப்புரவு ஆண்மை-ஒப்புரவாண்மையால்,—வளம்
வரை-(ஒருவன்)
செல்வத்தின்எல்லை, வல்லை கெடும் - விரையக் கெடும்; (எ
- று.)

'ஒப்புரவேயாயினும் மிகலாகாது' என்றமையான், இதுவும் அது.

இவைநான்குபாட்டானும், மூவகை ஆற்றலுள் பெருமையின் பகுதியாய பொருள்வலியறிதல் சிறப்புநோக்கி வகுத்துக்கூறப்பட்டது.

(கு-ரை.) தனக்குஉள்ள அளவு தூக்காமைக்கு ஏதுவாயஒப்புரவாண்மையால் - தனக்கு வருவாயாக இருக்கிற செல்வத்தின் அளவை ஆராய்ந்து நோக்காமைக்குக் காரணமான பிறர்க்கு உபகாரம் மிகுதியாகச்செய்யுந்தன்மையால். ஒப்புரவு - உலகநடையை அறிந்து உதவிசெய்தல். ஒப்புரவு ஆண்மை- ஒப்புரவை ஆளுந்தன்மை. ஆண்மை - ஆள் என்னும் வினைப்பகுதியின்மேல் வந்த பண்புப்பெயரென்றுவது; ஆள்என்னும்முதனிலைத்தொழிற்பெயரின் மேல்; மை - தன்மைப்பொருளுணர்த்தும் விகுதியென்றுவது கொள்க. ஒப்புரவேயாயினும் - உபகாரஞ்செய்தலே யானலும், மிகலாகாது - அளவுக்குமிஞ்சுதல் தகாது. 'இதுவும் அது' - கீழ்ப்பாட்டைப்போல இப்பாட்டும் முதலின்செலவுமிக்கால்வரும் ஏதங்கூறியவாறு.

பெருமை - பிரபுசக்தி.
பகுதியாய - பகுப்பாகிய. பெருமையின்பகுதி, பொருளும் படையும். சிறப்பு
நோக்கி சிறப்புடைத்தாயிருத்தல்பற்றி. வகுத்து-விவரித்து.
உள-உள்ள. உள
வரை - குறிப்புப்பெயரெச்சத்தொடர். வளவரை - ஆறும்வேற்றுமைத்
தொகை.

(௪0)

## சகூ - ஆம் அதிகாரம்.—காலமறிதல்.

அஃதாவது - வலியான் மிகுதியுடையனாய்ப் பகைமேற்சேறலுற்ற அர
சன் அச்செலவிற்குஏற்ற காலத்தினை அறிதல்.
அதிகாரமுறைமையும், இத
னானே விளங்கும்.

(கு - ரை.)

வலி - வினைவலி தன்வலி துணைவலி என்ற மூவகையான
வலிமை. சேறலுற்ற - செல்லத்தொடங்கின.
அச்செலவிற்குஏற்ற - அங்ங
னம் பகைவர்மேல் செல்லுதற்குத்தக்க.
தொழில்செய்பவன் வலியறிந்தபின்

காலமறியவேண்டுவனாதல், இங்கு

அதிகாரமுறைமைக்குக் காரணம்.



சஅக. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

(இ - ள்.) கூகையை - (தன்னின் வலிதாய) கூகையை, காக்கை—, பகல் - பகற்பொழுதின்கண், வெல்லும்-வெல்லாநிற்கும்; *(ஆதலான்), இகல் வெல்லும் வேந்தர்க்கு - (பகைவரது)இகலை வெல்லக்கருதும் அரசர்க்கு, பொழுது வேண்டும் - (அதற்குஏற்ற) காலம் இன்றியமையாது; (எ - று.)

எடுத்துக்காட்டுவமை, காலமல்லாவழி வலியாற்பயனில்லை யென்பது விளக்கிநின்றது. இனி, காலமாவது - வெம்மையுங் குளிர்ச்சியுந் தம்முள் ஒத்து நோய்செய்யாது தண்ணீரும் உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாதுசெல்லும் இயல்பினதாம்.

இதனான், காலத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.)

இருவர் தம்முட்

கூகை - கோட்டான். இகலை-மாறுபாட்டை. 'இகலாவது - பொருது வலிதொலைதற்கு ஏதுவாய மாறுபாடு' என உரைப்பர், மேல் 'இகல்' என்னும் அதிகாரத்திலும்; இனி, இகல் என்பதற்கு- போர்என்றும், வலி என்றும் பொருள்கொள்ளலாம். அதற்குஏற்ற - அவ் வெற்றிக்குத் தக்க. இன்றியமையாது - இல்லாமல்முடியாது; மிகஅவசிய

மாம். எடுத்துக்காட்டுவமை - இங்கு, எடுத்துக்காட்டிய உபமான மென்ற

படி; திருஷ்டாந்தாலங்காரமேன்பதன்று. 'பகல்வெல்லுங் கூகையைக்காக்கை'

என்ற இவ்வுபமானமே 'வலியற்றவனும் தன்னுடைய பகைவனை அவனுக்குத்

தக்ககாலமில்லாதபோது வெல்லவல்லவனுவான்' என்ற உபமேயக் கருத்தை

விளக்குவது, பிறிதுமொழிதலேன்னும் அலங்கா ரம்; இது - பின்இன வாக்

கியத்துக்கு ஏது. காலமல்லாவழி - தக்ககாலமல்லாதவிடத்து. தானை -

சேனை. ஐப்பசி கார்த்திகை மாதங்களாகிய சரற்காலத்திலும், சித்திரை வைகாசிமாதங்களாகிய வசந்தகாலத்திலும் பெரும்பாலும் அரசர் பகைவர்மீது பொருதற்குச் செல்லுதல், மரபு; இது, "கூதிர் வேனி லென்றிரு பாசறை"

என்ற தொல்காப்பியங்கொண்டும் உய்த்துணரப்படும். கோட்டானுக்கு

இரவில்மாத்திரங் கண்தெரியப் பகலிற் கண்தெரியாமையும், காக்கைக்குப்

பகலில்மாத்திரங் கண்தெரிய இரவிற் கண்தெரியாமையும்

காக்கைக்குக் கூகையை வெல்லுதற்கு ஏற்ற நல்லசமயம்

இயல்பாதலால், பகலேயாயிற்று.

கூகை, காக்கை - கூகம், காகம் என்னும்

வடமொழிகளின் திரிபுகள்; கூ

என்றும், கா என்றும் கத்துவ தென்னுங் காரணம்பற்றிவந்த பெயர்கள்.

"இடத்தொடு பொழுதுநாடி யெவ்வினைக் கண்ணுமஞ்சார், மடப்படலின்றிச் சூழுமதிவல்லார்க் கரியதுண்டோ, தடத்திடைக் காக்கையொன்றே யாயிரங் கோடிகூகை, யிடத்திடையழுங்கச் சென்றாங்கின்னுயிர் செகுத்ததன்றே"

என்ற சீவகசிந்தாமணி இங்குக் காணத்தக்கது.

(௧)

சஅ௨. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

* பி - ம்: (அதுபோல),

ச்௲ - ஆம் அதிகாரம்.—காலமறிதல்

கூ௺

(இ - ள்.) பருவத்தோடு ஒட்ட ஒழுகல் - (அரசன்) காலத்தோடு பொருந்த (வினைசெய்து) ஒழுகுதல்,—திருவினை - (ஒருவர்கண்ணும் நில்லாது நீங்குஞ்) செல்வத்தை, தீராமை ஆர்க்கும் - (தன்னின்)

நீங்காமற் பிணிக்கும்,

கயிறு - கயிறும்; (எ - று.)

காலத்தோடுபொருந்துதல் - காலந்தப்பாமற் செய்தல். 'தீராமை'என்றதனுன், தீர்தல்மாலையதென்பது பெற்றும். வினை வாய்த்துவருதலான், அதனின் ஆகுஞ் செல்வம் எஞ்ஞான்றும் நீங்காதென்பதாம்.

(கு - ரை.) பிணிக்கும்-கட்டிவைக்கும். தீர்தல்மாலையது என்பது பெற்றும் - நிலையில்லாமல் நீங்குந்தன்மையது செல்வம் என்ற பொருளைப் பெற்றேம்; "கூத்தாட்டவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம், போக்குமதுவிளிந் தற்று," "அற்காவியல்பிற்றுச்செல்வம்" என்றார், கீழ் நிலையாமையென்னும் அதிகாரத்தில். வினை வாய்த்துவருதலான் - செய்யத்தொடங்கியதொழில் தவறாமற் பயன்பட்டுவருமாதலால். அதனின் ஆகும் செல்வம் - அத்தொழிலால் உண்டாகிவளரும் பொருள். தீராமை - எதிர்மறைவினையெச்சம். இப்பாட்டில் உபமேயத்தை உபமானமாகவேகூறியது, காட்சியணி. இக்குறள் -

ஒழுகல் என்பதை உடன்பாட்டுவியங்கோளாகத் தொழில்செய்துகட்கவேண்டு

மென்று பொருளுரைத்து, கீழ் அதிகாரத்தில்வந்த "ஆற்றினளவறிந்தீக

வதுபொருள், போற்றிவழங்குநெறி" என்ற குறளின் வாய்பாட்டோடு ஒப்புடைய தென்றலு மொன்று. பர்வம் - வடசொல். (உ)

சஅரு அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(இ - ள்.) அரு வினை என்ப - (அரசராற் செய்தற்கு) அரிய வினைக

ளென்று சொல்லப்படுவன, உள ஓ—? கருவியான் - (அவற்றைமுடித்தற்கு

ஏற்ற) கருவிகளுடனே, காலம் அறிந்து - (செய்தற்குஆங்) காலம் அறிந்து,

செயின் - செய்வராயின்; (எ - று.)

கருவிகளாவன-மூவகை ஆற்றலும், நால்வகை உபாயங்களுமாம். 'அவை

உளவாயவழியும் காலம்வேண்டும்' என்பது அறிவித்தற்கு, "கருவியான்' என்

றார். எல்லாவினையும் எளிதின்முடியு மென்பதாம்.

(கு - ரை.) உளவோ - இல்லை யென்றபடி; ஓ - எதிர்மறை. அவற்றை முடித்தற்கு ஏற்ற கருவிகள் - அத்தொழில்களை நிறைவேற்றுதற்கு ஏற்றவையாயமைந்த உபகரணங்கள். மூவகையாற்றல் - அறிவுமுதலாகவும், நால்வகையுபாயம் - தானம் முதலாகவும் கீழ்த் தெரிந்துசெயல்வகையிற் கூறப்

பட்டவை. உளவாயவழியும் - உள்ளனவானபொழுதும். அரு வினை-பண்புத்தொகை. கருவியான் என்பதில் - ஆனென்னும் மூன்றனுருபு, ஒடுஉருபின் பொருளது; அடுத்த கவியில் 'இடத்தான்' என்பதிலும் இவ்வாறே. (௩)

* பி - டீ: கருவியாற் காலமறிந்துசெயின்



௪௮௪. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(இ - ள்.) ஞாலம் கருதின் உம் - (ஒருவன்) ஞாலம் (முழுதும் தானே ஆளக்) கருதினானாயினும், கைகூடும்-(அஃது அவன்)கையகத்ததாம்:—(அதற்குச் செய்யும்வினையை), காலம் கருதி - காலம் அறிந்து, இடத்தான் - இடத்தோடு (பொருந்த), செயின் - செய்வானாயின்; (எ - று.)

'இடத்தான்' என்பதற்கு மேல் 'கருவியான்' என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க; கைகூடாதனவும் கைகூடு மென்பதாம்.

இவை மூன்றுபாட்டானும், காலம் அறிதற்பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) ஞாலம் முழுதும் - பூலோகம் முழுவதையும். அஃது - அந்நிலவுலகம். அவன்கையகத்ததாம் - அவனதுகையிடத்திலுள்ளதாம்; தவறாது வசப்பட்டதாகும் என்றபடி. அதற்குச்செய்யும்வினையை - அங்ஙனம் உலகமுழுவதையும் வென்று தனதாக்கி ஆளுதற்குச் செய்யவேண்டுஞ்

தொழிலே. இடத்தோடு பொருந்த - தான் வெல்லுதற்குஏற்ற நிலத்துடனே

பொருந்தும்படி. இதன்விவரத்தை, அடுத்துவருகிற 'இடனறிதல்' என்னும்

அதிகாரத்திற் காண்க; அந்த அதிகாரத்துக்கு இவ்வதிகாரத்தில் தோற்று

வாய் செய்தவாறு. மேல் 'கருவியான்' என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க -

மூந்தினகுறளில் 'கருவியான்' என்னுஞ் சொல்லுக்கு உரைத்ததுபோல

உரைக்கவேண்டும்; அதனைமுடித்தற்காம் இடத்தோடு எனப் பொழிப்புரை

கூறி, 'இடம் உள்ளதானவழியும் காலம்வேண்டு மென்பது அறிவித்தற்கு

இடத்தான் என்றார்' என விசேடவுரையுங் கூறுக வென்றபடி. இங்ஙனங்

கூறின இவ்விரண்டுபாடல்களாலும், முன் அதிகாரத்தில்வந்த வலிமைக்கும்

பின் அதிகாரத்தில் வரும் இடத்திற்கும் இந்த இடையதிகாரத்திற் கூறப்பட்ட

காலம் இன்றியமையாத தென்றும், அதுபற்றியே இது சிங்கநோக்காக

இடையில் நிறுத்தப்பட்ட தென்றும் உணர்க.

அறிதற்பயன் - அறிதலா

லுண்டாகும் பிரயோசனம். கருதினும் என்ற
உம்மை - உயர்வுசிறப்பு;
அதனுடைய ஆற்றலால், ஞாலமென்பது முழுதுமாயிற்று.

(௪)

௪௮௫. காலங் கருதி யிருப்பர் கலங்காது

ஞாலங் கருது பவர்.

(இ - ள்.) கலங்காது - தப்பாது, ஞாலம் -
ஞாலமெல்லாம், கருதுபவர்-
(கொள்ளக்)கருதும் அரசர்,—காலம் கருதி
இருப்பர்-(தம்வலி மிகுமாயினும்
அதுகருதாது அதற்குஏற்ற) காலத்தையே கருதி
(அதுவருந்துணையும்) பகை
மேற் செல்லார்; (எ - று.)

தப்பாமை - கருதியவழியே கொள்ளுதல். வலிமிகுதி, 'காலங்கருதி' என்றதனாற் பெற்றும். அதுகருதாதுசெல்லின் இருவகைப்பெருமையுந் தேய்ந்து வருத்தமும் உறல ராகலின், 'இருப்பர்' என்றார். இருத்தலாவது-நட்பாக்

௪௯ - ஆம் அதிகாரம்.—காலமறிதல்

௯௫

கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல்,
கூட்டல் என்னும்

அறுவகைக்குணங்களுள் மேற்செலவிற்கு மாறுயது.

இதனுன், காலம் வாராவழிச் செய்வது கூறப்பட்டது.

(கு - ரை.) தப்பாது - தவறுமல். ஞாலமெல்லாம் கொள்ளக் கருதும் -
பூமிமுழுவதையும் கைக்கொள்ள நினைக்கும். அதுகருதாது -தம்வலிமிகுதியை
முக்கியமாக நினையாமல். அதற்கு எற்ற - ஞாலங்கொள்ளுதற்குத்தக்க.
அது வருந்துணையும் - அந்த நற்காலம் வருமளவும். பகைமேல் செல்வார் -
பகைவர்மேல் வெல்லுதற்குப் புறப்பட்டுச்செல்லாமற் காத்திருப்பர்.
கருதியவழியே - நினைத்தபடியே. வலியறிதலின்பின் அறியவேண்டிய கால
மறிதல் 'காலங்கருதி' என்பதனுற் கூறப்படுதல்பற்றி, அதற்கு முன்னமே
வலிமிகுதி அவரிடம் அமைந்துகிடந்த தெனப்பெறப்பட்டது. அதுகருதாது
செல்லின் - காலத்தைப்பொருளாக நினையாமல் வேண்டியபொழுது வினை
செய்தற்குச் சென்றுல். இருவகைப்பெருமை - பொருளும் படையும் எனக்
கீழ்த் தெரிந்துசெயல்வகையிற் கூறப்பட்டவை. தேய்ந்து

- குறைந்து. உறுவர் - அடைவர். நட்பாக்கல் -சிலரைச்சினேகிதராகச்சேர்த்தல். பகையாக்கல்- சிலரைப் பகைவராகப்பிரித்தல். மேற்சேறல் - பகைவர்மீது வெல்லுதற்குச் செல்லுதல். இருத்தல்-அங்ஙனஞ் செல்லவேண்டிக் காலத்தைநோக்கிக் காத்திருத்தல். பிரித்தல் - தன்னிற்சேர்ந்தவருள் தகாதவரை நீங்கச்செய்தல். கூட்டல்-தன்னிற்சேராதவருள் தக்கவரைக் கூடச்செய்தல். இந்தஆறு குணங்களுள், நட்பாக்கலுக்குப் பகையாக்கலும், மேற்சேறற்கு இருத்தலும், பிரித்தலுக்குக் கூட்டலுமாக இங்ஙனம் இவ்விரண்டு ஒன்றற்கொன்று மறுதலையானது. இங்கே மேற்செலவிற்கு மாறுயது, இருத்தல். வாராவழி - வாராத பொழுது. செய்வது - செய்யவேண்டுவது; காத்திருக்கவேண்டுமென்பது.

இங்கு "சீலமல்லனநீக்கிச் செம்பொற்றுலைத், தாலமன்ன தனிநிலைதாங்கிய, ஞாலமன்னற்கு நல்லவர்நோக்கிய, காலமல்லது கண்ணுமுண்டாங்கொலோ" என்ற கம்பராமாயணச்செய்யுளை அறிக.

(௫)

௬௭௩.

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(இ - ள்.) ஊக்கம் உடையான் - வலிமிகுதியுடைய அரசன், ஒடுக்கம் -
(பகைமேற்) செல்லாது (காலம்பார்த்து)

இருக்கின்ற இருப்பு,—பொருதகர்-
பொருகின்ற தகர், தாக்கற்கு-(தன் பகைகெடப்)
பாய்தற்பொருட்டு, பேரும்-
பின்னே கால்வாங்கும், தகைத்து - தன்மைத்து; (எ - று.)

உவமைக்கண் 'தாக்கற்கு' என்றதனான், பொருளினும் 'வென்றிஎய்தற்
பொருட்டு' என்பது கொள்க.

இதனான், அவ்விருப்பின் சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பொருகின்ற தகர் - சண்டைசெய்கின்ற ஆட்டுக்கடா. தன்
பகை கெட - தனக்குப் பகையாயிருக்கும் மற்றொன்று

அழியும்படி. உவமைக்

கண் - உபமானத்தில். பொருளினும் - உபமேயத்திலும். வென்றிஎய்தற் பொருட்டு - சயமடையும்பொருட்டு. அவ்விருப்பு - காலத்தை எதிர்நோக்கிக்காத்திருத்தல். பேரும் - பெயரும் என்பதன் மரூஉ. உவமையணி. இவ்வுபமானத்தால், பின்புவெற்றியெய்துதல் தவறாதென விளங்கும். (சு)

சஅஎ. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(இ-ள்.) ஒள்ளியவர்-அறிவுடைய அரசர், *ஆங்கே-பகைவர் மிகைசெய்த பொழுதே, பொள்ளென - விரைவாக, புறம் வேரார்-(அவர் அறியப்)புறத்து வெகுளார்; காலம் பார்த்து - (தாம் அவரை வெல்லுதற்கு ஏற்ற காலத்தினை அறிந்து, (அது வருந்துணையும்), உள் வேர்ப்பர்-உள்ளே வெகுள்வர்; (எ-று.)

'பொள்ளென' என்பது, குறிப்புமொழி. 'வேரார்,' 'வேர்ப்பர்' எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். அறிய வெகுண்டுழித் தம்மைக் காப்பராகலின் 'புறம்வேரார்' என்றும், †வெகுளிஒழிந்துழிப் பின்னும்மிகைசெய்யாமல் அடக்குதல் கூடாமையின் 'உள்வேர்ப்பர்' என்றும் கூறினார்.

(கு - ரை.) மிகை - குற்றம். புறத்து வெகுளார்-வெளியிற்கோபங்காட்டார். உள்ளே வெகுள்வர் - மனத்திலேயே கோபத்தை வைத்திருப்பர். பொள்ளென-விரைவுக்குறிப்பு; இது இடைச்சொல்லாம். வேர்த்தல்-உடம்பு வியர்வையடைதல்: இது - கோபத்தின் காரியமாம்: இங்கே வேர்த்தலுக்குக்காரணமான கோபித்தலை வேர்த்தல்என்ற காரியச்சொல்லாற் கூறியது - உபசாரவழக்கு. அறியவெகுண்டுழி-(பகைவர்) அறியும்படி வெளிப்படையாகக் கோபங்கொண்டால். தம்மைக் காப்பர் - (பகைவர் முன்ஜாக்கிரதைப்பட்டுத்) (தம்மைத் தாம்) பாதுகாத்துக்கொள்வர். மனத்திலும் கோபங்கொள்ளாமல் அரசர் கோபத்தைநீக்கியேயிருந்தால் பகைவர் அடங்காமல் மேல்மேலும் குற்றஞ்செய்துகொண்டேபோவதைத் தடுக்க வேறுவழியில்லாமையால், உள் வேர்த்தல் அவசியமாயிற்று. ஆங்கு-அங்கு என்பதன் நீட்டல். ஒள்ளியவர் - அறிவுடையார். (எ)

சஅஅ. செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(இ - ள்.) (தாம் வெல்லக்கருதிய அரசர்), செறுநரை காணின் சுமக்க -

பகைவ(ர்க்கு இறுதிக்காலம் வருந்துணையும் அவ)ரைக் கண்டாற் பணிக;

(பணியவே), இறுவரை காணின்-(அக்காலம்வந்து) இறும்வழி, தலை கிழக்கு

ஆம் - (அவர் தலைகவின்றி இறுவர்; (எ - று.)

பகைமைஒழியும்வகை மிகவுந்தாழ்க வென்பார் 'சுமக்க' என்றும், அங்

ஙனந்தாழவே அவர் தம்மைக் காத்தலிகழ்வ ராகலின் தப்பாமற்கெடுவ

ரென்பார், 'அவர்தலை கீழாம்'என்றும் கூறினர். தலைமேற்கொண்டதொரு

* பி - ம்: பொள்ளென ஆங்கே - பகைவர் மிகை செய்தபொழுதே

† பி - ம்: ஒன்றுஞ் செய்யாமலடக்குதல்.

சசூ - ஆம் அதிகாரம்.—காலமறிதல் கூள

பொருளைத் தள்ளுங்கால் அது தன்தலைகீழாக விழு பெறப்பட்டது.

மாகலின், அவ்வியல்பு

இவையிரண்டுபாட்டானும், இருக்கும்வழிப் வென்பது கூறப்பட்டது.

பகைமைதோன்றாமலிருக்க

(கு - ரை.) இறுதிக்காலம்-ஒடுங்குதற்கு ஏற்ற சமயம். வருந்துணையும் - வருமளவும். பணிக - மிகவும் தாழ்ந்திருக்கக்கடவர். பணியவே - அங்ஙனந் தாழ்ந்திருக்கவே. இறும்வழி - அழியும்பொழுது. அவர் - பகைவர். தகைவின்றி இறுவர் - தடையில்லாமல்அழிவர். பகைமை ஒழியும்வகை - (தமக்கு அவர்மேற்) பகைமை சிறிதுமில்லை யென்று (அவர்கள் தம்மை) நம்பும்படி. சுமத்தல் - தலைமேற்கொள்ளுதல்; இங்கே, மிகவணங்கியிருத்தற்கு இலக்கணை. தம்மைக் காத்தல்இகழ்வர் - பகையில்லை யெனக்கருதித் தம்மைத் தாம் பாதுகாக்குந் தொழிலில் அஜாக்ரதைப்படுவர். ஒருசுமையை அப்புறப்படுத்த வேண்டியவன் அதனைத் தலைமேற்சுமந்துகொண்டுபோய் அதற்குஏற்ற இடத்தையடைந்தபொழுதில் அதனைத் தலைகீழாகத்தள்ளுதல்போல, பகைவரை அழிக்கவேண்டியவர் அதற்குஏற்றகாலம் வாய்க்குமளவும் அவர்களைத் தலைமேற்கொண்டு கௌரவித்துக் காலம்வாய்க்கையில் அவரைத் தலைகீழாகத் தள்ளியழிப்ப ரென்க. இங்குப் பஞ்சதந்திரக்கதையில்வரும் நாகமொன்று தவளைகளைச் சுமந்துசென்றகதை கருதத்தக்கது. செறுநர் - பகைக்குத்தன்மையர். இறு வரை காணின் - அழியும்எல்லை தோன்றினால். கிழக்குஎன்பது - இங்கே திசையையுணர்த்தாமல் கீழ்என்னும்பொருளையுணர்த்திற்று; ('மேற்கு' என்பதும் இவ்வாறு திசையையுணர்த்தாமல் மேலென்னும்பொருளை உணர்த்துவதுஉண்டு.) தலைகிழக்காம் - தோல்வியடைவ ரென்றபடி; தலைகீழாக அழிக்கப்பட்டு விழுந்து உருள்வ ரென்பதுமாம். (அ)

௪௮௯ எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(இ - ள்.) (பகையைவெல்லக்கருதும் அரசர்),—எய்தற்கு அரியது - (தம்மால்) எய்தற்கு அரிய காலம், இயைந்தக்கால் - வந்து கூடியக்கால், அந்நிலையே - அதுகழிவதற்குமுன்பே, செய்தற்கு அரிய - (அதுகூடாவழித் தம்மாற்) செய்தற்கு அரிய வினைகளை, செயல் - செய்க; (எ - று.)

ஆற்றல்முதலியவற்றால் செய்துகொள்ளப்படாமையின் 'எய்தற்குஅரியது' என்றும், அது தானேவந்துஇயைதல் அரிதாகலின் 'இயைந்தக்கால்' என்றும், இயைந்தவழிப் பின்நில்லாது ஓடுதலின் 'அந்நிலையே' என்றும், அது பெறுவழிச் செய்யப்படாமையின் 'செய்தற்குஅரிய' என்றும் கூறினர்.

இதனான், காலம்வந்துழி விரைந்துசெய்க வென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) கூடியக்கால் - அடைந்தால். அது - அக்காலம். அது கூடாவழித் தம்மாற் செய்தற்கரிய வினைகள் - அக்காலம் வந்துகூடாதபொழுது தாம்செய்துமுடித்தற்குக்கூடாத காரியங்கள். ஆற்றல்முதலியவற்றாற்செய்து

13



கொள்ளக்கூடாமையின் - தமதுவலிமைமுதலிய காரணங்களாற் காலமென்பது வருவித்துக்கொள்ளக்கூடாததாதலால். அது - அக்காலம். இயைந்தக் கால் என்பது, அக்காலம்வந்துஇயைதலின் அருமை தோன்ற நின்றதென்க. இயைந்தவழி - கூடியபொழுது. பின் நில்லாது ஓடுதலின் - காலம் என்பது நீடித்துநில்லாமல் விரைந்துசெல்லுந்தன்மையதாதலால். அதுபெறுவழி - அக்காலத்தை அடையாதவிடத்து. வந்துழி - வந்தபொழுது. எய்தற்கு - எதிர்காலவினையெச்சம். எய்து - பகுதி. அந்நிலையே - அப்பொழுதே. ஏகாரம் - சிறிதுந்தாமதஞ்செய்யலாகாமையை விளக்கும். அரிய-பெயர். செயல் - உடன்பாட்டு வியங்கோள்.

(௬)

## சகூO. கொக்கொக்க கூம்பும் பருவத்து குத்தொக்க சீர்த்த விடத்து.

மற்றதன்

(இ - ள்.) கூம்பும் பருவத்து - வினைமேற்செல்லாதிருக்குங்காலத்து, கொக்கு ஒக்க - கொக்குஇருக்குமாறுபோல இருக்க; மற்று சீர்த்த இடத்து - மற்றைச் செல்லுங்காலம் வாய்த்தவழி, அதன் குத்து ஒக்க - அதுசெய்து முடிக்குமாறுபோலத் தப்பாமற் செய்துமுடிக்க; (எ - று.)

மீன்கோடற்கு இருக்கும்வழி அதுவந்துஎய்துந்துணையும் முன் அறிந்து தப்பாமைப்பொருட்டு உயிரில்லதுபோன்றிருக்கு மாகலானும், எய்தியவழிப்

பின்தப்புவதற்குமுன்பே விரைந்து குத்து மாகலானும், இருப்பிற்கும் செயலிற்கும் *கொக்கே உவமையாயிற்று. 'கொக்கொக்க' என்றாராயினும் 'அது கூம்புமாறுபோலக் கூம்புக' என்றும், 'குத்தொக்க' என்றாராயினும் 'அது குத்துமாறுபோலக் குத்துக' என்றும் உரைக்கப்படும்; இது தொழிலுவம மாகலின். உவமைமுகத்தான் இருப்பிற்கும் செயலிற்கும் வாறாயிற்று. இலக்கணம்கூறிய (கு - ரை.)

வினைமேல்-போர்செய்தல்தொழிலின்மேல். வாய்த்தவழி-கிடைத்தபொழுது. அதுசெய்து முடிக்குமாறுபோல - கொக்குத் தன்தொழிலைச்செய்துமுடிக்கும்விதம்போல. மீன் கோடற்கு இருக்கும் வழி - மீனைப் பிடித்துக்கொள்ளும்பொருட்டுக் காத்திருக்கும்பொழுது.

அதுவந்து எய்துந் துணையும் - அம்மீன் வந்து சேருமளவும்.
வந்தெய்துந் துணையும் உயிரில்லது
போன்றிருக்கு மென இயையும். முன் அறிந்து தப்பாமைப்பொருட்டு - (அதனைப்பிடிக்குந்தன்மையதான தான் இருத்தலை அம்மீன்) முன்னதாக அறிந்து
(ஜாக்கிரதைப்பட்டுத்) தப்பியோ
டிப்போய்விடாமலிருப்பதற்காக. உயிரில்லது
போன்றிருக்கும் - அசைவற்று நிற்கும். "மடைத்தலையி,
லோடுமீனோடவுறு மீன்வருமளவும், வாடியிருக்குமாங்கொக்கு"
என்றார் ஔவையாரும். எய்திய வழி -
மீன்வந்துசேர்ந்தபொழுது. தப்புவதற்கு -
தப்பியோடிப்பிழைத்தற்கு.
இருப்புக்குக் கொக்குவமை - முதல்வாக்கியம். செயலுக்குக் கொக்குவமை - இரண்டாம்வாக்கியம். அது கூம்புமாறுபோலக் கூம்புக - கொக்கு ஒடுங்கியிருத்தல்போல ஒடுங்கியிருக்க. ஒக்க - வியங்கோள்முற்று. குத்துக - தப்ப

பி - ம்: * கொக்கு



வொண்ணுதபடி விரைந்து அழிக்க. தொழிலுவமம் -
செயல்பற்றிவந்த உபமா
னம். உவமைமுகத்தான் - உபமானங்காட்டுகிற மூலமாய்.
செயல்-பகைமேற்
சென்று போர்புரிதலாகிய தொழில். மற்று -
ஒன்றோடொன்று மாறுபட்ட
வினைகளினிடையில் நின்றதனால்,
வினைமாற்றுப்பொருளது. குத்தொக்க -

சூத்தையொத்திருக்க. சேர்த்தல் - சிறப்புப்பெறுதல்;
இங்கே, அதிகாரத்துக்கு
ஏற்ப, செல்லுங்காலம் வாய்த்த லாயிற்று.
குத்து-முதனிலைத்தொழிற்பெயர்.

## ருO - ஆம்

## அதிகாரம்.—இடனறிதல்.

அஃதாவது - வலியும் காலமும் அறிந்து
பகைமேற்செல்வான் தான்
வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதல்.
அதிகாரமுறைமையும், இதனானே
விளங்கும்.

(கு - ரை.) நிலத்தினை இடத்தை.
வலிமையையாராய்ந்து அறிந்துதொ
ழில்செய்யத் துணிபவன் அதன்பின் காலத்தை
யறியவேண்டுதலும், அங்ங
னங்காலத்தையும் ஆராய்ந்தறிந்து துணிந்தவன்
அதன்பின் இடத்தையறிய
வேண்டுதலும் இங்கே அதிகாரமுறைமைக்குக் காரணம்.

சகூக. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க
முற்று

மிடங்கண்ட பின்னல் லது.

(இ-ள்.) முற்றுஉம் இடம் கண்டபின்

அல்லது-(பகைவரை) முற்றுதற்கு
ஆவதோ ரிடம் பெற்றபின் அல்லது, (அவர்மாட்டு), எ
வினைஉம்-யாதொரு

வினையையும், தொடங்கற்க - தொடங்காதொழிக:
எள்ளற்க-(அவரைச் சிறிய
ரென்று) இகழாதொழிக; (எ - று.)

முற்றுதல்-வளைத்தல். அதற்கு ஆம் இடமாவது
-வாயில்களானும் நுழை
களானும் அவர் புகவொடு போக்கு ஒழியும்வகை
அரணினைச்சூழ்ந்து ஒன்ற
ற்கு ஒன்று துணையாய்த் தம்முள்நலிவில்லாத பலபடை
இருப்பிற்கும்,மதிலும்
அகழும் முதலிய அரண் செய்யப்பட்ட அரசிருப்பிற்கும்
ஏற்ற நிலக்கிடக்கை
யும் நீரும் உடையது. அது பெற்றால் இரண்டுஞ் செய்க
என்பதாம்.
(கு - ரை.) முற்றுதற்கு ஆவதோர்இடம்
- வளைத்தற்குத் தக்கதோர்
இடத்தை. பகைவரைவளைத்தல் - முற்றுகைசெய்த
லெனப்படும். பெற்றபின்
அல்லது - பெறுதற்குமுன்பு என்றபடி.
அவர்மாட்டு - அப்பகைவரிடத்து.
சிறியர் என்று - வலிமையிற்குறைந்தவரென்று.
எவ்விதத்திலும் வெளியிற்
போகாதபடி பகைவரை
வளைத்துக்கொள்ளுதல், முற்றுகையெனப்படும்.
வாயில் - வாசல்: பலரும் வெளிப்படையாகக்

கோட்டையினுட் போக்குவரவு

செய்யும் வழி. நூழை - அந்தரங்கமாகவுள்ள சுரங்கவழி; கீழறை யென்பர்.

அவர் புகலொடு போக்கு ஒழியும் வகை - பகைவர்கள் வெளியே போதலும்

உள்ளே புகுதலும் இல்லையாம்படி. அரணினைச் சூழ்ந்து - பகைவரது கோட்

டையை முற்றுகைசெய்து. தம்முள் நலிவில்லாத

பலபடை இருப்பிற்கும்-தம

க்குள் ஒன்றையொன்று நெருக்குதலில்லாத தம் நால்வகைச்சேனையும்ஒருங்கு

கூடித் தங்குதற்கும். அகழ் - அகழி.

அரண்செய்யப்பட்ட - காப்புஅமைக்கப்



பட்ட. அரசிருப்பு - அரசனிருக்குமிடம். நிலக்கிடக்கை - இடத்தின் அமைதி; நிலப்பரப்பென்றுங் கூறுவர். நீர் என்றது, நீரவு கிணறு சிறுகுளங்களை. சூழ்ந்துஎன்னும் வினையெச்சம், இருப்பிற்கு என்றதில் 'இரு' என்ற முதனிலையோடு இயையும். "மணிநீரு மண்ணுமலையுமணிநிழல், காடுமுடையதரண்" என மேற்கூறுவ ராதலால், மதிலும் அகழும் முதலிய அர ணெனப்பட்டது. அதுபெற்றால் - அப்படிப்பட்ட தகுதியுள்ள இடத்தைப் பெற்றால் அதன் பின்பு. இரண்டும் செய்க-பகைவர்மேல் வினைதொடங்குதல், இகழ்தல் என்ற இரண்டையுஞ் செய்யவேண்டும். தொடங்கற்க, எள்ளற்க - எதிர்மறைவியங் கோள். முற்றும் - பெயரெச்சம்.

சகூஉ. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு

மரண்சேர்ந்தா

மாக்கம் பலவுந் தரும்.

(இ-ள்.) முரண் சேர்ந்த-மாறுபாட்டோடுகூடிய. மொய்ம்பினவர்க்குஉம்- வலியினையுடையார்க்கும்,—அரண் சேர்ந்து ஆம் ஆக்கம் - அரணைச்சேர்ந்து ஆகின்ற ஆக்கம்,—பலஉம் தரும் - பலபயன்களையுங் கொடுக்கும்; (எ - று.)

மாறுபாடாவது ஞாலம்பொதுவெனப்பொரு அரசர்மனத்தின்கண்நிகழ்வ தாகலானும், வலியுடைமைகூறிய அதனானும், இது-பகைமேர்சென்ற அரசர் மேற்றாயிற்று. உம்மை-சிறப்பும்மை. அரண்சேராது ஆம் ஆக்கமும் உண்மையின், ஈண்டு ஆக்கம் விசேடிக்கப்பட்டது. 'ஆக்கம்' என்றது - அதற்கு ஏது வாய முற்றினை. அதுகொடுக்கும் பயன்களாவன-பகைவரால் தமக்கு நலிவின் மையும்; தாம் நிலைபெற்றுநின்று அவரை நலிதலும் முதலாயின.

(கு - ரை.) மாறுபாடு - மனம்வேறுபடுதல்; விரோதித்தல். மாறுபாட்டோடுகூடிய வலியினையுடையார் - பிறஅரசர்களோடு விரோதித்தலையும், அவரினும் தாம் அதிகவலிமையையும் உடையவர். அரணைச்சேர்ந்து ஆகின்ற ஆக்கம் - தக்ககாவலுள்ள இடத்தைத் தாம் அடைதலால் உண்டாகிற

செல்

வம். ஞாலம்பொதுவெனப் பொரு அரசர் மனத்தின்கண் நிகழ்வது - நில வுலகம்முழுவதும் பலஅரசர்க்கும் பொதுவாகவன்றித் தம்முடையதாகவே [தமக்குச் சிறப்பாகவே] இருக்கவேண்டும் எனக் கருதுகிற அரசர்களது மனத்திலுண்டாவது. வலியுடைமை - பிற அரசரினும் மிகுந்த பலத்தை யுடைத்தாயிருத்தல். இது - இக்குறளிற் சொன்னமுற்றுகை. பகைமேற்சென்ற அரசர்மேற்று ஆயிற்று - பகைவர்களின்மேல் வெல்லுதற்குப் படையெடுத்துச்செல்லுகிற அரசர்கள்விஷயமாயிற்று. மொய்ம்பினவர்க்கும் என்ற 'உம்' - உயர்வுசிறப்புப்பொருளது. தாம் தகுதியான இடத்தில் இல்லாமலே தமது வலிமையாற் பகைவர்மேற் சென்று முற்றுகைசெய்தலும் உலகத்தில் உள்ளதாதலால், அதனை விலக்குதற்பொருட்டு, 'அரண்சேர்ந்தாமாக்கம்' என ஆக்கத்திற்குத் தக்க அடைமொழி கொடுத்துக் கூறினர். செல்வ

மென்னும் பொருளைத் தரும் 'ஆக்கம்' என்பது-இங்கே, அதற்குக்காரணமான பகைவரைமுற்றுகைக்குக் காரியவாகுபெயர். அதற்கு - செல்வத்திற்கு. முற்றினை - வளைத்தலை, அது - தாம் அரண்சேர்ந்து பிறரை வளைத்தல். நலிவு



இன்மை - வருத்தம் உண்டாகாமை. அவரை - பகைவரை.

நலிதல் - வருத்து

தல். மொய்ம்பினவர்க்கும் என்ற உம்மையால்,
மொய்ம்பில்லாதவர்க்கு இவ்

வரண்சேர்ந்தா மாக்கம் இல்லாமல்முடியாது என்பது
தானே பெறப்படும்.

சேர்ந்து - காரணப்பொருளதாய்ப்
பிறகருத்தாவின்வினையைக் கொண்டுமுடி

தற்குஏற்ற செயவெனெச்சத்தின் திரிபு.

(உ)

சஙரு. ஆற்றரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

(இ - ள்.) ஆற்றாருஉம்-வலியரல்லாதாரும், ஆற்றி -
வலியராய், அடுப -

வெல்வர்:—இடன் அறிந்து - (அதற்குஏற்ற)இடத்தினை
அறிந்து, போற்றி -

(தம்மைக்)காத்து, போற்றார்கண் - பகைவர்மாட்டு, செயின்
- (வினை) செய்வ

ராயின்; (எ - று.)

'வினை' என்பதூஉம், 'தம்மை' என்பதூஉம்,
அவாய்நிலையான் வந்தன.

காத்தல் - பகைவரான் நலிவுவாராமல் அரணானும்
படையானுங் காத்தல்.

* இவ்வாற்றான் வினைசெய்வராயின், மேற்சொல்லிய வலி
இன்றியும் வெல்வ

ரென்பதாம்.

(கு - ரை.) அதற்கு-அவ்வனம்ஜயித்தற்கு.

போற்றுதல், செய்தல் என்ற

வினைகள யாதாயினும் ஒருசெயப்படுபொருளை

வேண்டிநின்றதனால், தம்மை

யென்றும் வினையென்றும் இடத்திற்கேற்ற செயப்படுபொருள்கள் வருவிக்கப் பட்டன. அரணுனும் படையானும் காத்தல் - மதில்முதலிய காப்புக்களாலும் சேனைகளாலுர் தம்மைத் தாம் பாதுகாத்தல். இவ்வாற்றான் - இவ்வழியால்;

இடமறிந்து தம்மைக்காத்துச்செய்யும் வழியால்.

மேற்சொல்லிய வலி - மூந்

தின குறளில் "மூரண்சேர்ந்தமொய்ம்பினவர்"

எனத்தொகுத்துக் கூறப்பட்

டது; கீழ் 'வலியறிதல்' என்னும் அதிகாரத்தில்

வகுத்துக்கூறப்பட்டவாறுங்

காண்க. இதனான் வலிமையினும் இடம் முக்கியமென

விளங்கும். ஆற்றாரும்,

உம்மை - இழிவுசிறப்பு. ஆற்றுதல் -

வலிமையுடைத்தாதல். அடுப - (பகை

வரை) அழிப்பரென்றபடி.

போற்றார்-(தம்மை)வணங்கிப்புகழாதவர்; எனவே,

பகைவராயிற்று.

(௩)

௪௯௪.

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து

துன்னியார் துன்னிச் செயின்.

(இ - ள்.) இடன் அறிந்து துன்னியார் - (தாம்

வினைசெய்தற்கு ஏற்ற)
இடத்தினை அறிந்து சென்ற அரசர், துன்னி
செயின்-(அரணைப்) பொருந்தி
நின்று (அதனைச்) செய்வராயின்,—எண்ணியார் -
(அவரை வெல்வதாக)
எண்ணியிருந்த பகைவர், எண்ணம் இழப்பர் -
அவ்வெண்ணத்தினை இழப்பர்.
'அரண்'என்பது அவாய்நிலையான் வந்தது.
'எண்ணம்'என்றது,எண்ணப்
பட்ட தம்வெற்றியை. 'அதனை இழப்பர்' என்றார், அவர்
வினைசெய்யாமல்
தம்மைக் காத்தமையின். இதனான், அவர்பகைவர் தோற்ப
ரென்பதாயிற்று.

---

பி-ம்: * இவ்வாறு.



இவைநான்குபாட்டானும்,
பகைவரரணின்புறத்துஇறுப்பார் அதற்கு
ஆம் இடம் அறிதல் கூறப்பட்டது.

(கு - ரை.) சென்ற - பகைமேற்சென்ற. அரணைப் பொருந்தினின்ற - தாம் தக்கபாதுகாப்புள்ளஇடத்தை அடைந்திருந்த. அதனை-அவ்வினையை. துன்னியார் என்பதற்கு 'அரண்' என, இடத்திற்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. எண்ணமென்னுந் தொழிற்பெயர் - எண்ணப்படுவதாகிய வெற்றிக்குத் தொழிலாகுபெயர். அவர் - இடனறிந்து துன்னியவர். வினை செய்யாமல் - பகைவர் தம்மேல் போர்முதலிய தொழில் செய்யக்கூடாதபடி. தம்மைக்காத்தமையின் - தம்மைத்தாம் பாதுகாத்துக்கொள்ளுதலால். இத னுன் - 'எண்ணியாரெண்ணமிழப்பர்' என்றதனுல்.
அவர்பகைவர் தோற்பர்-

இடனறிந்து துன்னியவராதுவிரோதிகள்
தோல்வியடைவர். வெல்லுமெண்

ணத்தை யிழப்பதற்குக் காரணம், வந்தவர் தக்க
காப்புடையவராயிருத்தல்.

வெல்லுமெண்ணத்தை யிழப்பர் என்றதனுல்
தோல்வியடைவரென்றகருத்

துக்கொண்டது, அருத்தாபத்திவகையா லெனக் காண்க.
பகைவர் அரணின்

புறத்து இறுப்பார் - பகைவர்களது கோட்டையின்
வெளியிற் படையுடன்

சூழ்ந்துதங்குபவர். அதற்கு ஆம் இடம்
அறிதல்-அம்முற்றுதற்கு ஏற்றதான

இடத்தை அறிதல். எண்ணியார்,
பெயர்கள்.

துன்னியார்-இறந்தகாலவினையாலணையும்

சகூரு. நெடும்புனலுள் வெல்லு முதலை
யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

(இ - ள்.) முதலை—, நெடும் புனலுள் -
ஆழமுடைய நீரின்கணுயின்,
(பிற) வெல்லும் - பிறவற்றையெல்லாம் (தான்)
வெல்லாநிற்கும்; புனலின்
நீங்கின் - அப்புனலின் நீங்குமாயின், அதனை—, பிற
அடும் - பிறவெல்லாம்
வெல்லாநிற்கும்; (எ - று.)

எனவே, எல்லாரும் தம்நிலத்துவலியரென்பது கூறப்பட்டது. 'பிற' என்பது, முன்னும் கூட்டப்பட்டது. 'நிலைப்படாநீரின்கண் * பிற நிற்ற
லாற்றுமையின், அவையெல்லாம் முதலைக்கு எளியவாம்;
அவை இயங்கு
தற்குஉரிய நிலத்தின்கண் அஃது இயங்கலாற்றுமையின்,
அஃது அவற்றிற்
கெல்லாம் எளிதாம்' என்றது - 'மேற்செல்லும் அரசர்
பகைவர்நிற்றலாற்று
இடன்அறிந்து செல்வராயின் அவர் தமக்கு எளியராவர்:
அன்றி, தாம் நிற்க
லாற்று இடத்துச் செலவராயின் அவர்க்கு எளிய ராவர்'
என்னும் பொருள்
தோன்ற நின்றமையின், இது 'பிறிதுமொழிதல்'
என்னும் அலங்காரம்.
அவரை அவர் நிற்றலாற்று விடத்துச் சென்று வெல்க

என்பதாம்.

(கு - ரை.) நீரின்கண் ஆயின் - நீரிலே
தான்இருந்தால். அப்புனலின்-
அந்த ஆழமுடைய நீரினின்றும். அதனை - முதலையை.
பிறவெல்லாம் வெல் லாநிற்கும் - மற்றைஎளியபிராணிகள்
சயிக்கும். 'முதலை தன்னிடமாகிய நீரி
லிருந்தால் மலையொத்த யானையையும்
இழுத்துக்கொண்டுபோகிறது; அதுவே

பி-ம்: * பிறவெல்லாம்.

---

ரு௦ - ஆம் அதிகாரம்.—இடனறிதல்

கΟரு

அந்தஇருப்பிடம்விட்டுப் பெயருமாயின், அதனை
நாய்களும் இழுத்துக் கொண்டுபோகின்றன'
என்பது,பஞ்சதந்திரம். முன்னும் - முதல்வாக்கியத்தி லும்.
பிறஎன்னும் பலவின்பாற்பெயர் - முன்வாக்கியத்திற்குச்
செயப்படு பொருளும், பின்வாக்கியத்திற்கு எழுவாயுமாம்.
நிலைப்படாநீரின்கண் - அதிக ஆழத்தால் நிலைகொள்ளாத
ஜலத்தில். பிற - மற்றைப் பிராணிகள். நிற்ற
லாற்றாமையின்-நிலைகொள்ளமாட்டாமையால்.
நீந்தியியங்குதலையே இயற்கை யாகவுடைய முதலைக்கு,
அங்ஙனம் இல்லாத யானை முதலியன நீரில் வெல்
லப்படுவனவா மென்க. அவை இயங்குதற்கு உரிய
நிலத்தின்கண் அந்தப்பிராணிகள் இயற்கையாய் நடந்து

சஞ்சரித்தற்குஏற்ற தரையில். அஃது இயங்கலாற்றாமையின் - அம்முதலை இயல்பாய்ச் சஞ்சரிக்கமாட்டாமையால். அஃது - முதலை. அவற்றிற்கெல்லாம் - யானை முதலியமற்றைப் பிராணிகள் பலவற்றிற்கும். நிற்றலாற்று இடன் - நிலைநிற்கமாட்டாதஇடம். அவர் தமக்கு எளியராவர் - அப்பகைவர்கள் பகைமேற்சென்ற தங்கட்கு வெல்லப்படுபவராவர்: அன்றி-அங்ஙனமல்லாமல். அவர்க்கு-பகைவர்க்கு. இது- இச்செய்யுள். அவரை-பகைவரை. அவர்-பகைவர். "தன்னிலத்தினிற் குறு முயல் தந்தியின்வலிதென்று, இந்நிலத்தினிற் பழமொழியறிதி நீயிறைவ, எந்நிலத்தினு முனக்கெளிதாயினு மிவர்கம், நன்னிலத்தினில்வர வமர்தொடங்குதல் நன்றால்" என்ற வில்லிபுத்தூரார்பாரதச்செய்யுளையுங்காண்க. (௫)

௪௯௬. கடலோடா கால்வ
ணெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

(இ - ள்.) கால் வல் நெடுந் தேர் - (நிலத்தின்கண் ஓடும்) கால்வலிய நெடிய தேர்கள், கடல் ஓடா-கடலின்கண் ஓடமாட்டா; (இனி), கடல் ஓடும் நாவாய்உம் - அக்கடலின்கண் ஓடும் நாவாய்கள் தாமும், நிலத்து ஓடா-நிலத்தின் கண் ஓடமாட்டா; (எ - று.)

'கடல்ஓடா' என்ற மறுதலை யடையான், 'நிலத்து ஓடும்' என்பது வருவிக் கப்பட்டது. 'கால்வல்நெடுந்தேர்'

என்பது- ஓடுதற்கு ஏற்ற காலும் பெருமையும் உடையவாயினும் என்பதுபட நின்றது. 'மேற்சென்றார் பகைவரிடங்களை அறிந்து அவற்றிற்கு ஏற்ற கருவிகளான் வினைசெய்க' என்பது தோன்ற நின்

றமையின், இதுவும் மேலையலங்கார மாயிற்று.

(கு

- ரை.) கால் வலிய - சக்கரங்கள் வலியனவாகப்பெற்ற. கால் - சக்கரமாதலை "சகடக்கால்போலவரும்" என நாலடியாரிலுங் காண்க. நெடிய - பெரிய. நாவாய்கள் தாமும் - மரக்கலங்களும். மறுதலையடை-எதிரான அடை மொழி. அடையெனினும், அடைமொழியெனினும், விசேஷணமெனினும் ஒக்கும்; அடைகொளியெனினும், விசேஷ்யமெனினும் ஒக்கும். நிலத்துஓடா என்ற மறுதலையடையைப் பெற வைக்கப்பட்ட நாவாய் என்னும் விசேஷ்யத் திற்கு 'கடலோடும்' என்ற உடன்பாட்டு அடைமொழி கொடுக்கப்பட்டதற்கு ஏற்ப,கடலோடா என்ற மறுதலையடைமொழியைப்பெற வைக்கப்பட்ட 'தேர்' என்ற விசேஷ்யத்திற்கு

'நிலத்துஓடும்' என்ற உடன்பாட்டு அடைமொழி

வருவிக்கப்பட்டது. கால் வல் நெடு என்ற அடைமொழிகள், அத்தேரின் அமைதிச்சிறப்பை விளக்கின. இதற்கேற்ப, நாவாய் என்பதற்கும் பாய்மரம் பாய்சுக்கான் முதலிய அமைதிச்சிறப்பைக் கொள்க. மேற்சென்றார்-பகைமேற் சென்ற அரசர். கருவிகள் - உபகரணங்கள். இதுவும் - இப்பாட்டும். மேலே அலங்காரம் - மேற்செய்யுளினுரையிற்கூறிய பிறிதுமொழிதல். இப்பாட்டானும், எல்லாரும் தம்தம்நிலத்துவலியரென்ற கருத்தே வேறுதிருஷ்டாந்த முகத்தாற் கூறப்பட்டது. கால்வல்தேர் - வினையின் குணம் முதலைக் கொண்டது. நாவாய் - நௌ என்னும்வடமொழியின் சம்பந்தமாக வந்ததென்பர். உம்மை - முந்தினவாக்கியத்தை நோக்கியதனால், இறந்ததுதழுவியதும்; உயர்வுசிறப்பு ஆகக்கொள்ளின், முன்வாக்கியத்தில் தேர்என்பதனோடும் கூட்ட வேண்டும். இக்குறளைக் காண்டலென்னும் அளவைக்கு உதாரணங்காட்டினர் வீரசோழியவுரைகாரர்.

(கூ.)

சகூஎ. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

(இ - ள்.) எஞ்சாமை எண்ணி - (பகையிடத்து வினைசெய்யுந் திறங்களையெல்லாம்) ஒழியாது எண்ணி, இடத்தான் செயின்-(அவற்றை அரசர்) இடத்தோடு பொருந்தச் செய்வாராயின்,—(அச்செயற்கு), அஞ்சாமை அல்லால் - (தம்)திண்மையல்லது, துணை வேண்டா - (பிறிதொரு துணை வேண்

டுவதில்லை; (எ - ற.)

'திண்ணியராய்நின்று செய்துமுடித்தலே வேண்டுவ
தல்லது துணை
வேண்டா,' என்றார், அவ்வினை தவறுதற்கு ஏது
இன்மையின்.

இவை மூன்றுபாட்டானும்,
வினைசெய்தற்குஆம்இடன் அறிதல் கூறப்
பட்டது.

(கு - ரை.) திறம் - வகை.
ஒழியாது எண்ணி - விடாமல் ஆலோசித்து.
அவற்றை - அத்திறங்களை. திண்மை - பகைக்கு அஞ்சாத
மனவுறுதி; தைரி
யம். கீழ்இறைமாட்சியில்
"அஞ்சாமையீகையறிவூக்கமிந்நான்கும், எஞ்சாமை
வேந்தர்க்கியல்பு" என்ற குறளிலும்,
அஞ்சாமையென்பது அரசர்க்குரிய
மற்றைக்குணங்களெல்லாவற்றினும் முதலதாகக்
கூறப்பட்டதுகாண்க.
பிறிது - வேறு. திண்ணியராய்நின்றுசெய்துமுடித்தலே
வேண்டுவதல்லது-
தைரியசாலிகளாய்நின்றுபோர்த்தொழிலைச்செய்து
நிறைவேற்றுவதேவேண்டு
வதல்லாமல். எஞ்சாமை - எதிர்மறைவினையெச்சம்.

(எ)

சகூ௪. சிறுபடையான் செல்லிடஞ் சேரி
னுறுபடையா

னூக்க மழிந்து விடும்.

(இ - ள்.) உறு படையான் - பெரும்படையுடைய
அரசன், சிறு படை

யான் செல் இடம் சேரின் - ஏனைச்சிறுபடையுடையா(னை
அழித்தல்கருதி

அவ)ன் புகலைச் (சென்று) சாருமாயின்,—ஊக்கம்
அழிந்துவிடும் - (அவனால் தன்) பெருமை அழியும்; (எ - று.)

ருப - ஆம அதிகாரம்.—இடனறிதல்

கo௫

'செல்இடம்' - அவனுக்குச் செல்லு மிடம். 'அழிந்துவிடும்' என்பது, 'எழுந்திருக்கும்' என்றாற்போல ஒருசொல். ஊக்கத்தின் அழிவு, உடையான் மேல் ஏற்றப்பட்டது. தன்படைப்பெருமைநோக்கி இடம்நோக்காது செல் வானாயின், அஃது - அப்படைக்கு ஒருங்குசென்று வினைசெயலாகாமையா னும், பயிற்சியின்மையானும், அப்பெருமையாற் பயன் இன்றித் தான் அழிந்து விடுமென்பதாம்.

(கு - ரை.) ஏனை - மற்றை. அழித்தல்கருதி -

அழிக்கவியலாத்து. அவன்

புகலே - அவன் தங்குமிடத்தை. சாருமாயின் - அடைவனுனல். அவனுக்கு-சிறுபடையுடையானுக்கு. செல்லுமிடம் - அதிகாரம்முதலியன தடையின்றி நடக்குமிடம். எழுந்திருக்கும் என்பது - எழும் என்ற பொருள்படுதல்போல, அழிந்துவிடும் என்பது-அழியுமெனப்பொருள்பட்டு ஒருசொல்லாகும்; இதில் விடும் என்பது - ஒருபொருளையுங்குறியாதுவந்த துணைவினையென்க. படையான் ஊக்கம் அழிந்துவிடும் - உயர்திணையோடு சேர்த்துச்சொல்லப்பட்ட குணமாகிய அஃறிணை, உயர்திணைமுடிபைக் கொண்டது; [நன். பொது. உகூ.] இனி, உறுபடையானது ஊக்கமானது அழிந்தேதீரும் என்றும் பொருள் கொள்ளலாம்; அழிந்துவிடும் என்பதில், விடும் என்பது - துணிவுப் பொருள் காட்டிற்று. படைப்பெருமை-சேனையின்மிகுதி. அஃது-அச்செல்லுதல். அப்படைக்கு ஒருக்குசென்று வினைசெயல் ஆகாமையான் ஆக - அந்தத் தன்பெருஞ்சேனைக்கு ஒருமிக்கப்போய்த் தொழில்செய்யக் கூடாமையாலாவது. பயிற்சியின்மையான் ஆக-அப்படிப்பட்ட இடத்தில் முன்பழக்கமில்லாததனுலாவது. சிறுபடை-பண்புத்தொகை. செல்லிடம் - வினைத்தொகை.(அ)

சகூகூ. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(இ - ள்.) சிறை நலன் உம் - அரண் அழித்தற்கு அருமையும், சீர் உம்-பெருமையாகிய ஆற்றலும், இலர் எனின் உம் - உடையரல்லராயினும், மாந்தர் - (வினைக்கு உரிய) மாந்தரை, உறை நிலத்தோடு ஒட்டல்-(அவர்) உறைகின்ற நிலத்தின்கண் சென்று தாக்குதல், அரிது—; (எ - று.)

'நிலத்தோடு' என்பது - வேற்றுமைமயக்கம். ஆண்மையுடையாரைச் சிறுமைநோக்கி இருப்பின்கட் சென்றுதாக்கின், அவர் அதுவிட்டுப்போதல் துணிவினரன்றிச் சாதல்துணிவின ராவர்; ஆகவே, அவர்க்குப் பெரும்படையுடையு மென்பதாம்.

(கு - ரை.) அரண் அழித்தற்கு அருமை - தமதுகோட்டை பகைவரால் அழிப்பதற்குக் கூடாதபடியிருத்தல். பெருமையாகிய ஆற்றல்-மிக்கவலிமை; மூவகை ஆற்றலுள் ஒன்று என்பாருமுளர்.

வினைக்குஉரியமாந்தரை - போர் முதலிய தொழில்செய்தற்குரிய அரசர்களை. அவர் உறைகின்ற - அவர்கள் தங்குகிற. அரிது - அருமையானது. நிலத்தோடு என்னும் மூன்றனுருபு - நிலத்தில் என ஏழாம்வேற்றுமை யிடப்பொருள்தக்கதனுல், வேற்றுமைமயக்கம். ஆண்மை உடையார் - பராக்கிரமமுடையவர்கள்.

14



நலனும் சீரும் இன்மையைப் பார்த்து. இருப்பின்கண் - அவர் இருக்குமிடத்திலே. அதுவிட்டுப்போதல் துணிவினர் அன்றி-அந்தத் தம் இருப்பிடத்தை விட்டுப்போகத்துணிவுடையவராகாமல். சாதல் துணிவினராவர் - தம்மால் ஆனவரையிலும் போர்செய்து இறக்கநிச்சயிப்பர். அவர்க்கு - இப்படிநிச்சயிப்பவர்க்கு. அவர்க்கு - அவரால் என்றபடி. பெரும் படைஉடையும்-பிறரது பெரியசேனையும் அழியும். சிறை - காப்புடையஇடம். (க)

௫௦௦. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

(இ - ள்.) கண் அஞ்சா - பாகர்க்கு அடங்காவுமாய், வேல் ஆள் முகத்த - வேலாட்களைக்கோத்த கோட்டவுமாய, களிறு - களிறுகளை,—கால் ஆழ் களரின் - (அவை)கால்ஆழும் இயல்பிற்றாய சேற்றுநிலத்து(ப் பட்டுழி), நரி அடும் - நரி கொல்லும்; (எ - று.)

'முகம்' - ஆகுபெயர். 'ஆண்மையும் பெருமையும் உடையாரும் தமக்கு ஏலாநிலத்துச் செல்லின் அவற்றாற்பயன் இன்றி மிகவும்எளியரால் அழிவர்' என்பது தோன்ற நின்றமையின், இதுவும் - அவ்வலங்காரம். 'வேலாழ் முகத்த' என்று பாடமோதுவாரும் உளர்; வேற்படைகுளித்த முகத்தவாயின் அதுவும் நரிஅடுதற்கு ஏதுவாய்முடிதலின், அது பாடமன்மை அறிக.

இவைமூன்றுபாட்டானும், பகைவரைச்சார்தலாகா இடனும், சார்ந்துழிப் படும் இழுக்கும் கூறப்பட்டன.

(கு - ரை.) கண் என்ற மூங்கிற்கணுவின்பெயர் - சினையாகுபெயராய் மூங்கிற்கோலை யுணர்த்தி, அது மறுபடி ஆகுபெயராய் அக்கோலையுடைய பாகரை யுணர்த்திய தெனக் கொள்ளலாம். கண்ணஞ்சா என்றதனால், மதயானை யென்றதாயிற்று; ஏனெனில்,—"தறுகண்யானை தான்பெரிதாயினுஞ், சிறுகண்மூங்கிற்கோற்கஞ்சும்மே" என்பது இயல்பாதலால். மதயானை எதற்கும்அஞ்சாமையை "தூணும்விலங்குமுறிப்பது பாகுபரிக்கோல்யாவுந் தூரத்தே, காணினுநின்றுகொதிப்பது" என்னும் மகாபாரதத்திலுங் காண்க. இனி, கண்என்பதைப் பொருள்குறியாத வினைச்சொல்லோடுவந்த உபசர்க்கமெனக்கொண்டு, பாகர்க்குஎன வருவித்ததாகக் கொள்ளினும் அமையும். அடங்காவும் - அடங்காதவையும். வேலாட்கள் - வேலாயுதத்தை யேந்தின வீரர்கள். இங்கே பிறஆயுதங்களைக்கூறாமல் வேலாயுதத்தைக்கூறினது, யானையோடு எதிர்க்கும் வீரர் வேலேந்தியிருத்தல் ஒருமரபென்பது பற்றிப் போலும்; இதனை "ஒன்றாயினும்பலவாயினுமோரோச்சினுளெறிய, வென்றாயின மதவேழமுமுளவோவெனவினவிப், பொன்றாழ்வரைப்புலி போத்தெனப் புனைதார்மிஞிறார்ப்பச், சென்றான்பலகளிறாயிரமிரியச்சினவேலோன்" என்ற சிந்தாமணிச்செய்யுள்கொண்டும் உணர்க. கோட்டவும் - தந்தங்களுடையனவும். களிறு - யானையின் ஆண்மைப்பெயர். அவை காலாழும் இயல்பிற்றாய - அவ்யானைகள் கால்களழுந்திப்போகுந் தன்மையதான. புட்டுழி - அகப்பட்டபொழுது. முகம் - முகத்திலுள்ளகொம்புக்கு இடவாகு

## ருக - ஆம் அதிகாரம்.—தெரிந்துதெளிதல்

கள் பெயர். ஏலாநிலத்து - தகாதஇடத்தில், அவற்றால் - ஆண்மை பெருமை களால். அவ்வலங்காரம் - முற்கூறிய பிறிதுமொழிதல். 'வேலாழ்முகத்த' என்ற பாடத்துக்கு - வேலாயுதந் தைத்த முகத்தை யுடையனவானவெனப் பொருள்படுதலின், அங்ஙனமிருத்தலும் நரியடுதற்கு ஒருகாரணமாகுமாத லால், அப்பாடம் இடத்தின் பெருமையை உணர்த்தாததாய்ப் பொருட்சிறப் பின்றி இவ்வதிகாரத்துக்குப் பொருந்தாதொழிதலால், அதனைக் கொள்ள லாகா தென்பது, பரிமேலழகர்கருத்து. சார்தலாகா - (எதிர்த்தற்கு) அடை யத்தகாத. சார்ந்துழிப் படும் இழுக்கு - (தகாதவிடத்தில் எதிர்த்துச்)சேர்தலா லுண்டாகுங் குற்றம். களிறு என்னும் பால்பகா அஃறிணைப்பெயரை இங்குப் பன்மையாக்கி, அதனால் தகாத நிலத்தின் மிக்கஇழிவை விளக்கத்தொடங்கி, அதனை நன்குதெரிவித்தற்பொருட்டு, 'அஞ்சாமுகத்த' என்பதைப் பெய ரெச்சமாக்கொள்ளாமல் பலவின்பால்வினையாலணையும்பெயராக் கொண் டார். காலாழ் களர் - இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேல் நின்றது.
(க0)

## ருக - ஆம்
## அதிகாரம்.—தெரிந்துதெளிதல்.

அஃதாவது - அமைச்சர் முதலாயினாரை, பிறப்பு குணம் அறிவு என்பனவற்றையும் செயலையும், காட்சி

கருத்து ஆகமம் என்னும் அளவைகளான் ஆராய்ந்துதெளிதல்.
வலிமுதல் மூன்றும் அறிந்து பகைமேற்செல்வானுக் குத் தானை வினையுற்றுச் செய்தற்பொருட்டும் அறைபோகாமைப்பொருட்டும் இது வேண்டுதலின், அவற்றின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) 'முதலாயினர்' என்றது - படைத்தலைவர், தூதர், ஒற்றர், காவலாளர், நண்பர் முதலியோரை. பிறப்பு - சாதியும், குலமும். காட்சி கருத்து ஆகமம் என்னும் அளவைகள் - பிரதியக்ஷம், அநுமானம், சப்தம் என்னும் பிரமாணங்கள். கீழ் உசஉ - ஆந் திருக்குறளி னுரையில் இவற்றைப்பற் றிக் கூறப்பட்டது. மணிமேகலையிற் சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதையி லும் பரக்கக் கூறப்பட்டுள்ளது. பிறப்பு முதலியவற்றை அளவைகளான் ஆராய்ந்து அமைச்சர் முதலாயினரைத் தெளிதல் என இயையும். தெளிதல்-நம்புதல். வலிமுதல் மூன்று - வலி காலம் இடம். தானை வினை உற்றுச் செய்தல் - சேனைதொழிலை ஊக்கத்தோடு செய்தல். அறைபோகாமை - கீழறுத்துச்செல்லாமை; அதாவது-தலைவனை வஞ்சித்து ஒழுகாமை: இதற்கு-பகைக்குஅஞ்சிக் கீழறையால் [சுருங்கைவழியாற்] போகாமை யென்றும், பகைவரால் வஞ்சிக்கப்பட்டு ஓடிப்போகாமை யென்றும் பொருள்கொள்வா ரும் உளர். இது வேண்டுதலின் - தெரிந்துதெளிதல் இன்றியமையாததால். அவற்றின்பின் - வலியறிதல், காலமறிதல், இடனறிதல் என்பவற்றின் பின்; இம்மூன்றும் - முறையே கீழ் சஅ, சகூ, ருO - ஆம் அதிகாரங்கள்.

ருoக. அறம்பொரு ளின்ப முயிரச்ச
நான்கின்
றிறந்தெரிந்து தேறப் படும்.



(இ - ள்.) (அரசனுல் தெளிப்படுவா ஞெருவன்),—அறம் - அறமும், பொருள் - பொருளும், இன்பம் - இன்பமும், உயிர் அச்சம் - உயிர்ப்பொருட் டான் வரும் அச்சமும் (என்னும்), நான்கின் - (உபதை) நான்கின், திறம் - திறத்து, தெரிந்து - (மனவியல்பு) ஆராய்ந்தால், தேறப்படும் - (பின்பு) தெளியப்படும்; (எ - று.)

அவற்றுள், அறவுபதையாவது - புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரால் 'இவ்வரசன் அறவோன் அன்மையின் இவனைப் போக்கி அறனும்உரிமையும்உடையாஞெருவனை வைத்தற்கு எண்ணினம்: இது தான் யாவர்க்கும் இயைந்தது; நின்கருத்து என்னை?' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். பொருளுபதையாவது - சேனைத்தலைவனையும் அவனேடு இயைந்தாரையும் விட்டு, அவரான் 'இவ்வரசன் இவறன்மாலைய னுகலின் இவனைப்போக்கிக் கொடையும் உரிமையும் உடையாஞெருவனை வைத்தற்கு எண்ணினம்: இது தான்

யாவர்க்கும் இயைந்தது; நின்கருத்து என்னை?' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். இன்பவுபதையாவது - தொன்று தொட்டு உரிமையொடு பயின்றாளொரு தவமுதுமகளை விட்டு, அவளால் 'உரிமையுள் இன்னாள் நின்னைக் கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்கவேண்டு மென்று என்னை விடுத்தாள்: அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமேயன்றிப் பெரும்பொருளுங் கைகூடும்' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல்.

அச்சவுபதையாவது-ஒருநிமித்தத்தின்மே விட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவனில்லின்கண் அழைப்பித்து, 'இவர் அரசனைப் போவான் எண்ணற்குக் கூடிஇயினார்' என்று தான் காவல்செய்து, ஒருவனால் 'இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம் முற்படச் செய்து நமக்கு இனிய அரசனொருவனை வைத்தல் ஈண்டை யாவர்க்கும் இயைந்தது: நின் கருத்து என்னை?' எனச் சூளுறவோடு சொல்லுவித்தல். இந்நான்கினும் திரிபிலனாயவழி எதிர்காலத்தும் திரிபிலனெனக் கருத்தளவையால் தெளியப்படுமென்பதாம்.

இவ்வடநூற்பொருண்மையை உட்கொண்டு இவர் ஓதியது அறியாது, பிறரெல்லாம் இதனை 'உயிரெச்சம்' எனப் பாடந்திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்.

(கு - ரை.) உயிர்ப்பொருட்டான் வரும் அச்சம் - தனதுஉயிர்விஷயமாக உண்டாகும் பயம். உபதை - சோதனை. 'உபதா' என்ற வடசொல்லுக்கு- தருமமுதலியவற்றால் (அமைச்சர் முதலியோரை

அரசன்) பரீட்சித்த லென்று வடமொழி அமரநிகண்டிற் பொருள்கூறப்பட்டுள்ளது. ஒருவரைச் சார்ந்து சோதித்தற்குக் கருவியான உபாயங்கள் உபதை யெனப்படு மென்றும், அதனால் அரசன் அமைச்சர்முதலியோரைப்பரீக்ஷிக்கவேண்டுமென்றும், அங்ஙனம் பரிசோதிக்கப்பட்டவர் நம்புகைக்கு உரியரென்றும், வட மொழியிற் காமந்தகமும், சாணக்கிய அர்த்தசாஸ்திரமும் கூறுகின்றன. இது- தர்மோபதா, அர்த்தோபதா, காமோபதா, பயோபதாஎன நால்வகைப்படு மென வடநூல்கள் கூறும். (அர்த்தோபதை

காமோபதைகளால் மனைவிமக்

ருக் - ஆம்

அதிகாரம்.—தெரிந்துதெளிதல் களைக் களையும்,

தருமோபதையால் அந்தணரையும்,

எல்லாவுபதைகளாலும் மந்திரி களையும் பரிசோதிக்கவேண்டுமென்று காளிகாபுராணம் கூறுகின்றது.) அற வுபதை -தருமநெறியைக் கூறிச்சோதித்தல்;பிறவும் இங்ஙனே காண்க. திறம்- வகை; வல்லமையுமாம். அறவோர் - தருமவழிநடப்பவர். விட்டு - ஏவி யனுப்பி. அறவோனன்மையின் - தருமமுடையவனல்லாததால். போக்கி - ஒழித்து. உரிமை -

சுவதந்திரம். வைத்தற்கு - அரசனாக ஏற்படுத்த. இயைந் தது - சம்மதப்பட்டது. சூளுறவு - சத்தியஞ்செய்தல். இயைந்தார் - கூடினவர். இவறன்மாலையன் - உலோபகுணமுடையவன்; இவறல் - செல்வத்தை இறுக்கிப்பிடித்தல், ஆசைப்பெருக்கம்: மாலை - இயல்பு. தொன்று தொட்டு-பழமைதொடங்கி, நெடுநாளாக. உரிமையொடுபயின்றாள் - மனைவி யோடு பழகியவள்; உரிமையொடு - சுவாதந்திரியத்தோடு என்றுங் கொள் ளலாம். தவமுதுமகள் - தவவேடம்பூண்ட வயதுமுதிர்ந்தவள்; முதுமகள்- கிழவி. உரிமையுள - அரசனுக்கு மனைவியாகும் உரிமையையுடைய. 'உரிமையுளின்னாள்' என்று சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகிறது; உரிமையுள் - மனைவியருள் என்க. வருத்தம்உற்று - காமவேதனைப்பட்டு. 'கூடுவிக்க' என்று பிரதிபேதம்; இதுவே பொருத்தம்: இரண்டு பிறவினை இங்கு வேண்டாமையின். விடுத்தாள் - அனுப்பினாள். பேர்இன்பம் - அதிகசுகம். ஏனையோர் - மற்றையோர். இல்லின்கண் - வீட்டில். அறைபோவான் எண்ணற்குக் குழீஇயினார் - அரசனை வஞ்சித்துச்செல்லுமாறு ஆலோசித்தற் பொருட்டுக் கூட்டங் கூடினார்கள். கொல்வான் சூழ்கின்றமையின் - கொல்ல ஆலோசிக்கிறதனால். அதனை - கொலையை. ஈண்டை - இவ்விடத்திலுள்ள; இப்பொழுது என்றுமாம். இந்நான்கினும் திரிபிலனையவழி - இந்நால்வகைச்

சோதனையிலும் ஒருவன் மனம்மாறுபடாதவனாயிருந்தால். பொருண்மை - பொருள். தேறப்படும் - செய்யுமென்னும் வினைமுற்று, ஆண்பாலுக்கு வந்தது; இதற்கு, 'ஒருவன்' - தோன்றாஎழுவாய்.

'அறம்பொருளின்பமுயிரச்சம்' என்ற பெயர்ச்செவ்வெண், 'நான்கு' என்னுந் தொகைபெற்று வந்தது; அறவுபதைமுதலிய நான்கையும்பற்றி விநாயகபுராணங் கூறுமாறு:—(அறவுபதை-) "அறவோர்

புரோகிதரைவிடுத்திட்டவராலிந்தவரசன்றான், அறவோனல்லனிவற்போக்கி யறனோடுரிமையுடையானை, உறவேவைத்தற்கெண்ணினமீ தொத்ததெவர்க்கு நின்கருத்தென், உறவோதெனச் சூளுறவோடுமோர்ந்தேயொருவன்றனைத்தெளிக," (பொருளுபதை-) "சேனைத்தலைவனொடுமவனைச் சேர்ந்தாரையும் விட்டிவ்வரசன், ஈனப்பொருளாசையனிவனையிழுக்கிக்கொடையோடுரிமையுடை, யானைப் புரத்தற்கெண்ணினமீ தமைந்ததெவர்க்குநின் கருத்தென், ஊனப்படாமையுரைத்தியெனச் சூளோடுரைப்பித்தேதெளிக", (இன்பவுபதை-) "தொன்றுதொட்டவுரிமையொடு சூழ்ந்தவமூதாட்டியை விட்டு,ஒன்றுமுரிமைதனிலின்னுளனைக் கண்டுயங்கியெனைவிடுத்தாள், சென்றங்கவளைக் கூடுதியேற் சிறந்தபொருளுங் கூடுநினக்கு, என்று தெளியச் சூளுறவோடிசைப்பித்திதனானுந்தெளிக," (அச்சவுபதை-) "ஒருமித்தமேலிட்டே யோரமைச்சாலவன்மனையிலேனையோரை, யொருமையுற



வழைப்பித்திங்கிவர் பிழைப்பைக்குழீஇயினரென் றுறுத்திக்காவல், ஒருவனிலிவ்வரசனம்மை யொறுக்கமுயன்றானிவனை யொறுத்துவேறே, ஒருவனை வைப்பதற்கிசைந்தே முன்கருத்தென்னெனச் சூளோடுரைப்பித்தோர்க." (௧)

௫௦௨. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு

நாணுடையான் கட்டே தெளிவு.

(இ - ள்.) குடி பிறந்து - உயர்ந்த குடியிற் பிறந்து, குற்றத்தின் நீங்கி-
குற்றங்களினின்று நீங்கி, வடு பரியும்-'நமக்கு வடு வருங்கொல்' என்று அஞ்
சாநிற்கும், நாண் உடையான் கட்டு
ஏ-நாணுடையவன்கண்ணதே, தெளிவு -
(அரசனது) தெளிவு; (எ - று.)

குற்றங்களாவன - மேல் அரசனுக்குச் சொல்லிய *பகை ஆறும், மடி
மறப்பு பிழைப்பு என்றிவைமுதலாயவுமாம். நாண் - இழிதொழில்களில்
மனஞ்செல்லாமை. இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க்கேட்டலாகிய
ஆகம அளவையால் தெரிவன. இந்நான்குமுடையவனையே தெளிக என்
பதாம்.

(கு - ரை.) வடு வருங்கொல் - பழி வருமோ? அஞ்சாநிற்கும் - அஞ்சு
இ.ற. நாண் - நாணம். உடையவன் கண்ணதே - உடையவனிடத்தில் மாத்தி

ரம் உரியது. தெளிவு - நம்பிக்கை. மேல் - முன்பு; என்றது, கீழ் 'குற்றங்

கடிதல்' என்ற அதிகாரத்தில் "செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்,

பெருக்கம் பெருமிதநீர்த்து," "இவறலு மாண்பிறந்தமானமு மாணு, வுவகையு

மேத மிறைக்கு" என்ற திருக்குறள்களை. மடி-சோம்பல்: பிழைப்பு - காரியங்

களில் தவறுதல். இவைமுதலாயின என்றதனால், கூடாநட்புகூடாவொழுக்

கம் முதலியன கொள்க.

'நாணுவது-செயத்தகாதவற்றின்கண் உள்ளமொடுங்

குதல்' என்பர் நச்சினார்க்கினியர். தக்கோர்வாய்க் கேட்டல் - பெரியோர்கள்

வாயினின்று விஷயங்களைக்கேட்டல். இந்நான்கும் - குடிப்பிறப்பு, குற்றங்

கடிதல், வடுவஞ்சுதல், நாணம் என்பன. கட்டு - கண்என்னும்பெயரடியாப்

பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; டு - விகுதி.

(உ)

ரு0ரு. அரியகற் றுசற்றார் கண்ணுந் தெரியுங்கா

லின்மை யரிதே வெளிறு.

(இ - ள்.) அரிய - (கற்றற்கு) அரிய நூல்களை, கற்று—, ஆசு அற்றார் கண்உம் - (மேற்சொல்லிய) குற்றங்க ளற்றார்மாட்டும், தெரியும் கால் - (நுண்ணிதாக) ஆராயுமிடத்து, வெளிறு இன்மை - அரிது—; (எ - று.)

வெண்மையில்லாமை,

வெண்மை - அறியாமை; அஃது அவர்மாட்டு உளதாவது மனத்தது நிலையாமையான் ஒரோவழி யாகலின், 'தெரியுங்கால்' என்றார். காட்சியளவையால் தெரிந்தால் அதுவும் இல்லாதாரே தெளியப்படுவரென்பது, குறிப்பெச்சம்.

---

* பி - ம்: வகையாலும்,

ருக - ஆம்

அதிகாரம்.—தேரிந்துதேளிதல் கககக

இவ்வளவைகளான் இக் குணமுங் குற்றமுந்

தெரிந்து குணமுடையா
ரைத் தெளிக என்பது, இவைமூன்றுபாட்டானுங்
கூறப்பட்டது.
(கு - ரை.) அற்றார்மாட்டும் -
இல்லாதவரிடத்திலும். நுண்ணிதாக -
சூக்ஷ்மமாக. ஒரோவழி - ஒவ்வொருசமயத்தில். அதுவும்
இல்லாதார் - அவ்
வெளிறும் இல்லாதவர்; உம்மை-குற்றமில்லாமையைத்
தழுவும். குறிப்பெச்ச

மாவது - வெளிப்படையாகச் சொல்லப்படாமல் எஞ்சிநின்ற பொருளை ஒரு
சொல்லின் குறிப்பினுற் கொள்வது. தெரியுங்கால் - பெயரெச்சத்தொடர்;
கால் - காலமென்பதன் கடைக்குறை. ஏ - தேற்றம். வெளிறு-அறியாமையா
தலை, "வெளிறிலாக் கேள்வியான்" எனச் சீவகசிந்தாமணியிலுங் காண்க.
வெளிறு - சாரமின்மை; அது - இங்கு, அறியாமைமேல் நின்றது. உள்ளீட்
டில்லாதமரம் "வெளிற்றுமரம்" என்றும், உதிரநீங்கின உடல் "வெளிற்று
டல்" என்றும் வழங்கப்படுதல் காண்க. மேல் "வெளியார்முன், வான்சுதை
வண்ணங்கொளல்" என்னுமிடத்துப்பரிமேலழகர், 'அவையறியாதபுல்லரை
வெளியாரென்றது, வயிரமில்மரத்தை வெளிறென்னும் வழக்குப்பற்றி' என்
பதும் நோக்கத்தக்கது.
வெண்மைப்பண்பு-வெண்மேனிஎன நிறம்பற்றியன்றி,
வெண்டாமரைக்கொடி எனச் சினையடியாக முதல்பற்றியும், வெள்ளறி
வினர் என இழிப்புப்பற்றியும், வெண்களமர் எனச் சாதிபற்றியும், வெள்
ளோட்டமெனப் புதுமைபற்றியும், வெண்டேர்எனப் பொய்ம்மைபற்றியும்,

வெளியார் என இயல்புபற்றியும், வெளிற்றுமரமென உள்ளீடின்மைபற்றி
யும், இன்னும் பிறவாற்றானும் வரும்.
(௩)

௫0௪. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

(இ - ள்.) (குணங்குற்றங்களுள் ஒன்றேயுடையார் உலகத்து இன்மை
யின்),—குணம் நாடி - (ஒருவன்) குணங்களையாராய்ந்து, குற்றம்உம் நாடி -
(ஏனைக்) குற்றங்களையும் ஆராய்ந்து, (பின் அவ்விருபகுதியுள்ளும்), மிகை
நாடி-மிக்கவற்றை யாராய்ந்து, மிக்க கொளல் (அவனை) அம்மிக்கவற்றானே
அறிக; (எ - று.)

மிகையுடையவற்றை 'மிகை' என்றார்; அவையாவன - தலைமையா
னுகப் பன்மையானுக உயர்ந்தன அவற்றான் அறித
லாவது - குணம்மிக்க
தாயின் வினைக்கு உரிய னென்றும், குற்றம் மிக்கதாயின் அல்ல னென்றும்
அறிதல்.

குணமேயுடையார் உலகத்துஅரிய ராகலின், இவ்வகை யாவரையுங்

தெளிக வென்பது இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) ஏனை - மற்றை. பகுதி - பங்கு. மிகை - மிகுதலுடைய

வற்றிற்குத் தொழிலாகுபெயர். இனி, மிக்கது மிகை என இயற்பெயராக்

கொள்ளலும் ஒன்று. தலைமையாகப் பன்மையாக - தலைமைபற்றியாவது

பன்மைபற்றியாவது: இதில், ஆக என்பது - விகற்பப்பொருளது; "ஒரு

பெயர்ப்பொதுச்சொல்" என்ற தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக் கிளவி



யாக்கச்சூத்திரத்தில், 'பிறரும் வாழ்வாருளரேனும் பார்ப்பனச்சேரியென்றல் உயர்திணைக்கட் டலைமைபற்றிய வழக்கு; எயினர்நாடென்பது அத்திணைகட் பன்மைபற்றிய வழக்கு. பிறபுல்லுமரனு முளவேனும் கமுகந்தோட்டமென்றல் அஃறிணைக்கட்டலைமைபற்றிய வழக்கு; ஓடுவங்காடென்பது அத்திணைக் கட் பன்மைபற்றியவழக்கு' என்று சேனாவரையர் கூறியது, இங்கு அறியத் தக்கது. மிக்க-பலவின்பால் வினையாலணையும்பெயர். கொளல்-உடன்பாட்டு வியங்கோள்: இதற்கு, 'அரசன்' - தோன்றாஎழுவாய். (௬)

௫0௫. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்

(இ - ள்.) பெருமைக்குஉம் - (பிறப்பு குணம் அறிவு என்பனவற்றான் மக்கள்எய்தும்)
*பெருமையாகியபொன்னின் அளவுஅறிதற்கும், ஏனை சிறுமைக்குஉம் - மற்றைச் † சிறுமையாகியபொன்னின் அளவுஅறிதற்கும், கட் டளைக் கல் - உரைகல்லாவது, தத்தம் கருமம்ஏ - தாம்தாம்செய்யுங் கருமமே,
(பிறிதில்லை); (எ - று.)

இஃது-ஏகதேசவுருவகம். மக்களது பெருமையுஞ் சிறுமையுந்தப்பாமல் அறியலுறுவார்க்குப் பிறகருவிகளும் உளவாயினும் முடிந்தகருவி செயல் என்பது, தேற்றேகாரத்தாற் பெற்றாம்.

இதனான், குணக்குற்றங்கள் நாடற்குக் கருவி கூறப்பட்டது.

(கு - ரை.) பிறப்பு - குடிப்பிறப்பு. மக்கள் எய்தும் - மனிதர் அடையும். கருமம் - தொழில்; கர்மம் என்ற வடசொல்லின் விகாரம். உபமேயத்தினிட த்து உபமானத்தின் ஒருபகுதியை உருவகப்படுத்தி மற்றொருபகுதியை உரு வகப்படுத்தாது விடுவது, ஏகதேசவுருவகமாம்: இங்கே தொழிலை 'உரைகல்' என்றதற்கு ஏற்ப, பெருமை சிறுமைகளினிடத்துப் பொன்னின் தன்மையை ஏற்றிக்கூறாமை காண்க; பெருமைசிறுமைகளாகிய பொன்களின்மாற்றுவேற்றுமையை அவரவர் செய்தொழிலாகிய உரைகல்லைக்கொண்டு உணரலா மென்க. அறியல் உறுவார் - அறியத்தொடங்குபவர். முடிந்த கருவி-தேர்ந்த

ஸாதனம். தேற்றேகாரம் - கிச்சயப்பொருளைக்குறிக்கும் ஏகார இடைச்சொல்: இங்கு, 'கருமமே' என்பதி லுள்ளது; இதனை, ஸாதனங்கள் பலவற்றுள்ளும் செயலைப் பிரித்தமையால், பிரிநிலைப்பொருளதென்றலும் பொருந்தும். மனிதரது பெருமை சிறுமைகளை அவரவர்தொழிலே தெளிவாக அறி விக்குமென்பது கருத்து. தாம்தாம் என்ற அடுக்கின் விகாரமாகிய தந்தம்என் பது, தத்தம் என வலிந்துநின்றது. இனி, கட்டளைக்கல் - எல்லைவரையறுத்துக் காட்டுங் கல் என்றுங் கொள்ளலாம். "தருமம்பற்றிய தக்கவர்க்கெலாங், கருமங்கட்டளையென்றல் கட்டதோ" என்றது, இங்குக் காணத்தக்கது. (ரு)

ருoசு. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

---

பி-ம்: * பெருமைக்கும். †சிறுமைக்கும்.

## ருக - ஆம் அதிகாரம்.—தெரிந்து தெளிதல்

ககரு.

(இ - ள்.) அற்றாரை - சுற்றமில்லாதாரை, தேறுதல் ஓம்புக-தெளிதலை யொழிக: அவர்—, பற்று இலர் - (உலகத்தோடு) தொடர்பிலர்; (ஆகலான்), பழி நாணார் - பழிக்கு அஞ்சார்; (எ - று.)

'பற்றிலர்' என்பதனால், 'சுற்றம்' என்பது வருவிக்கப்பட்டது. உலகத்

தார் பழிப்பன ஒழிதற்கும் புகழ்வன செய்தற்கும் ஏதுவாகிய உலகநடையிய

ல்பு சுற்றமில்லாதார்க்கு இன்மையின், அவர்
தெளியப்படா ரென்பதாம்.

(கு - ரை.) சுற்றம் - பந்துவர்க்கம்.
அவர்-சுற்றமில்லாதவர். தொடர்பு-
சம்பந்தம். மற்று-அசைநிலை. உலகத்தில்
உறவினரையுடையரல்லாதவர் பிற
ரிடத்துப்பற்றுக்கொள்ளும்இயல்புஇலராயிருப்ப ராதலால்,
அன்பும்அருளுங்
கொண்டு உலகத்தாரோடு ஒத்துஒழுகாரென்பது,
தாற்பரியம். இப்பாட்டின்
முதல்வாக்கியத்திற்கு, 'அரசன்' - தோன்றாஎழுவாய்.
"சுற்றமிலரானவர்தம்
மைச்சூழேல் பழிபாவமுநாணார், பற்றுமிலராகுவர் விடுக"
என்பது, விநாயக
புராணம்.
(சு)

௫0எ. காதன்மை கந்தா வறிவறியார்த்
தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

(இ - ள்.) காதன்மை-அன்புடைமை, கந்து
ஆ-பற்றுக்கோடாக, அறிவு
அறியார் தேறுதல் - (தமக்கு) அறியவேண்டுவன
அறியாதாரைத் தெளி
தல்,—பேதைமை எல்லாம் தரும் - (அரசனுக்கு) எல்லா
அறியாமையையுந்

கொடுக்கும்; (எ - று.)

தன்னோடு
அவ்ரிடைநின்ற அன்புபற்றி அரசன் அறிவிலார்மேல் வினை
யை வைப்பின், அஃது
அவர் அறிவின்மையாற் கெடும்; கெட்டால், அவர்க்கு
உளதேயன்றி, வினைக்கு உரியாரையறியாமை மேல்
விளைவுறியாமைமுதலாக
அவனுக்கு அறியாமைபலவும் உளவா மென்பதாம்.

(கு - ரை.) பற்றுக்கோடு - ஆதாரம்; இங்கே,
பிரதானகாரணம் என்ற
படி. தன்னோடு அவரிடை நின்ற - தனக்கும் அவர்க்கும்
உள்ள. அஃது -
தொழில். அவர்க்குஉளதேயன்றி - அறியவேண்டுவன
அறியாத அவரிடத்து
அறியாமை உள்ளதாயிருத்தல்மாத்திரமல்லாமல். மேல்
விளைவு - பின்புஉண்
டாகும் பயன். 'முதலாக' என்றதனால் விளைவின்பின்
உண்டாகுந்துன்பம்
அறிவுடையாரால் பழிக்கப்படுதல் முதலியன
கொள்க.அவனுக்கு-அரசனுக்கு.
காதன்மை, மைவிகுதி - உடைமைப்பொருளது.
கந்து - ஸ்கந்தம் என்னும்
வடமொழியின் விகாரம்; மரக்கொம்பு. ஆக என்னுஞ்

செயவெனெச்சம் ஈறு
கெட்டு 'ஆ' என நின்றது. அறிவு - அறியவேண்டுவனவற்றுக்கு ஆகுபெயர்.
அறியார்த்தேறுதல் - உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது: இரண்டாம்
வேற்றுமைத்தொகை யாதலின், இயல்பின்விகாரமாக உயர்திணைப்பெயர்
முன் வலி மிக்கது; 'பேதைமையாவது யாதுமறியாமை' என்பர் மேல் பரிமே
லழகர்.

(எ)

ருOவு. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

15

(இ - ள்.) பிறனை - தன்னோடுஇயைபுடைய னல்லாதானை, தேரான் - (பிறப்பு முதலியவற்றானும் செயலானும்) ஆராயாது, தெளிந்தான்-தெளிந்த அரசனுக்கு,—(அத்தெளிவு),—வழி முறை - தன்வழிமுறையினும், தீரா - நீங்காத, இடும்பை - துன்பத்தை, தரும் - கொடுக்கும்; (எ - று.)

இயைபு - தன்குடியொடு * கோடாமரபு; இதனானே, அதுவும் வேண்டு மென்பது பெற்றாம். தெளிதல் - அவன்கண்ணே வினையை வைத்தல். அவ் வினை கெடுதலால், தன்குலத்துப் பிறந்தாரும் பகைவர்கைப்பட்டுக் கீழாய் விடுவ ரென்பதாம். நான்கனுருபு, விகாரத்தால் தொக்கது.

(கு - ரை.) இயைபு - சம்பந்தம். பிறப்பு முதலியவற்றான்-குடிப்பிறப்பு குணம் அறிவு என்பவற்றால். வழிமுறை - பரம்பரை, சந்ததி. தன்குடியொடு கோடா மரபு - தான் பிறந்த குலத்தோடு மாறுபடாத முறைமை; தன் குடி-தனது நாட்டில் வாழ்கிற ஜனங்க ளெனினுமாம். அதுவும்-இயைபும். அவன் கண்ணே - அவனிடத்தில். நான்கனுருபு தொக்கது, 'தெளிந்தான்' என்ற தன் இறுதியில். தேரான் - எதிர்மறை முற்றெச்சம். இப்பாட்டில், தெளிந் தான் என்ற வினையாலணையும்பெயரினின்றுகொள்ளப்பட்ட 'தெளிவு' என் பது - எழுவாய். (அ)

௫0௯. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

(இ - ள்.) யாரைஉம் - யாவரையும், தேராது - ஆராயாது, தேறற்க - தெளியாதொழிக; தேர்ந்தபின் - ஆராய்ந்தபின், தேறும் பொருள்-தெளியும் பொருள்களை, தேறுக - ஐயுறாதொழிக; (எ - று.)

'தேறற்க' என்ற பொதுமையான், ஒருவினைக்கண்ணுந் தெளியலாகா தென்பது பெற்றாம். ஈண்டு 'தேறுக' என்றது - தாற்பரியத்தால், ஐயுறவி னது விலக்கின்மேல் நின்றது. 'தேறும்பொருள்' என்றது-அவரவராற்றற்கு ஏற்ற வினைகளை. 'பொருள்' - ஆகுபெயர்.

(கு - ரை.) ஆராயாது தெளியாதொழிக-ஆராய்ந்தேதெளிக. தெளியும் பொருள்கள்-தெளியப்படும்பொருள்கள். பொதுமையான்-இன்னதொழிலைத் தேறுதலொழிக என்று சிறப்பு வகையாற் கூறாமல் 'தேறற்க'எனப் பொதுப் படக் கூறியதனால். ஒரு வினைக் கண்ணும்-யாதொரு தொழிலிலும். ஈண்டு - இங்கு. தாற்பரியம்-கருத்துவகை; இது, பொருள்கொள்ளுங் காரணங்களுள் ஒன்றுமெனஅறிக. ஐயுறவினது விலக்கு-சந்தேகத்தின் ஒழிபு. ஆற்றற்கு - வல்லமைக்கு; செய்தற்கு எனினுமாம். பொருள் - பயன்; இது, இங்கே,பய னைத் தருவதாகிய தொழிலை யுணர்த்தியதனால், காரியவாகுபெயராம்.

தேறும் - செயப்பாட்டுவினைப்பொருளில்
வந்தசெய்வினைப்பெயரெச்சம். அர

சன் ஒருவனை ஆராய்ந்து தொழிற்குஉரியவ னென்று
அறிந்தபின்பு, அவ

னது திறமைக்குஏற்றதொழிலை அவனிடம் ஒப்பிக்கிற
விஷயத்திற் சந்தேகப்

படலாகாதென்பது கருத்து. இங்ஙனங்கூறியது, மேல்
'தெரிந்துவினையா

---

* பி - ம்: தொடர்ந்த

---



டல்' என்னும் அதிகாரத்துக்குத் தோற்றுவாய்
செய்தவாறு. இப்பாட்டிற்கு,
'அரசன்' - தோன்றாஎழுவாய்.
(கூ)

ருகo. தேரான் றெளிவுந் தெளிந்தான்க
ணையுறவுந்

தீரா இடும்பை தரும்.

(இ - ள்.) (அரசன்), தேரான் தெளிவும் - (ஒருவனை) ஆராயாது தெளிதலும், தெளிந்தான்கண் ஐயுறவும் - ஆராய்ந்துதெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும், (இவ்விரண்டும்),— தீரா இடும்பை தரும்-(அவனுக்கு) நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்; (எ - று.)

வினைவைத்தபின் ஒருதவறு காணாதுவைத்து ஐயுறு மாயின், அதனை அவன் அறிந்து 'இனி இது நில்லாது' என்னுங் கருத்தான் அவ்வினையை நெகிழ்த்துவிடும்; அதுவேயன்றிப் பகைவரால் எளிதிற் பிரிக்கவும்படும்: ஆகலான், தெளிந்தான்கண் ஐயுறவும் ஆகாதாயிற்று. தெளிவிற்கு எல்லை கூறியவாறு.

இவையைந்துபாட்டானும், தெளியப்படாதார் இவரென்பதூஉம், அவரைத் தெளிந்தாற் படும் இழுக்கும், தெளிவிற்கு எல்லையும் கூறப்பட்டன.

(கு - ரை.) தெளிந்தவன் - தெளியப்பட்டவன். அவனுக்கு - அரசனுக்கு. வினை வைத்த பின் - தொழிலை அவனிடத்து ஒப்பித்தபின்பு. தவறுகாணாதுவைத்து - குற்றங்காணாமலிருக்கையிலே; 'வைத்து' - வாக்கியாலங்காரம். ஐயுறும் - சந்தேகப்படுவான். அதனை - அச்சந்தேகத்தை.

அவன் - தொழிலையேற்றுக்கொண்டவன். இது
கில்லாது - இத்தொழில்
(நம்மிடத்து) நிலைத்திராது. நெகிழ்த்துவிடும்
- தளரவிடுவான். படும்இழுக்கு -
உண்டாகுங் குற்றம்.
தெளிவிற்கு எல்லை, ஆராய்கிறவரையில் என்க. உம்
மைகள் - எண்ணுப்பொருளன.

(௫0)

## ருஉ - ஆம்

## அதிகாரம்.—தெரிந்துவினையாடல்.

அஃதாவது - அத்தெளியப்பட்டாரை,
அவர்செய்யவல்ல வினைகளை
யறிந்து அவற்றின்கண்ணே ஆளுந் திறம்.
விளங்கும்.

அதிகாரமுறைமையும் இதனானே

(கு - ரை.) அவற்றின்கண்ணே

- அத்தொழில்களிலே. தொழில்செய்
தற்குஉரியாரைத் தெளிந்தபின்பு தொழில்களைத்
தெளிந்து அவர்களிடம்
ஒப்பிக்கவேண்டுவது, அதிகாரமுறைமைக்குக் காரணம்.
ஆடல் - ஆளுதல்;

தொழிற்பெயர்.

௫கக. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

(இ - ள்.) (அரசன் முதற்கண் ஒருவினையைத் தன்கண் வைத்தால் அதன்கண்), நன்மைஉம் தீமைஉம் நாடி - ஆவனவும் ஆகாதனவும் ஆய செயல்களை ஆராய்ந்து அறிந்து; (அவற்றுள்) நலம் புரிந்த - ஆவனவற்றையே விரும்



பிய, தன்மையான் - இயல்பினையுடையான்,—ஆளப்படும் - (பின் அவனால் சிறந்தவினைகளிலே) ஆளப்படும்; (எ - று.)

தன்னை உரிமையறிதற்பொருட்டு வினையை அரசன் தன்கண் வைத்தவழி

அகம்புறங்கட்கு நடுவாயதோர் அதன்கண் ஆஞ் செயல்களையே செய்தவன், பின்னும் அவ்வியல்பின னாதல்பற்றி, அகமாயவினைக்கண்ணே ஆளப்படுவனென்பதாயிற்று. 'புரிந்த' என்ற இறந்தகாலத்தான், முன் உரிமை யறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெற்றாம்.

(கு - ரை.) முதற்கண் - முதலில். தன்கண் - தன்னிடத்தில். அதன் கண் - அத்தொழிலில். ஆவன - நன்மையாவன. ஆகாதன - தீமையாவன. ஆய - ஆகிய. அவனால் - அரசனால். உரிமை - உரியனாந்தன்மை. உரிமையறிதல் - காரியத்தைச் செய்து முடித்தற்கு உரியவனென்றறிதல். அகம் - உள்; அந்தரங்கம். புறம் - வெளி; பகிரங்கம். வைத்தவழி - வைத்தால். ஆம் செயல்கள் - அரசனுக்கு நன்மைதருஞ் செய்கைகள். நலம் - நன்மை, பண்புப்பெயர்: நன்மைதருஞ்செயல்களுக்குக் காரியவாகுபெயர்; 'நன்மை', 'தீமை' என்றனவும் இவ்வாறே. (க)

ருகஉ. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

(இ - ள்.) வாரி - பொருள் வருவாயில்களை, பெருக்கி - விரியச்செய்து, வளம் படுத்து - (அப்பொருளாற்) செல்வங்களை வளர்த்து, உற்றவை - (அவ்வாயில்கட்கும் பொருட்கும் செல்வங்கட்கும்) உற்ற இடையூறுகளை, ஆராய்வான் - (காடோறும்) ஆராய்ந்து நீக்கவல்லவன், வினை செய்க - (அரசனுக்கு) வினைசெய்க; (எ - று.)

வாயில்களாவன - மேல் இறைமாட்சியுள் "இயற்றலும்" என்புழி உரைத்தனவும், உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் வார்த்தையுமாம். செல்வங்களாவன - ஆண்டுப் பொருளும் இன்பமு மாக உரைக்கப்பட்டன. இடையூறுகளாவன - அரசன்வினைசெய்வார் சுற்றத்தார் பகைவர் கள்வர் என்றிவரான் வரும் நலிவுகள்.

(கு - ரை.) பொருள் வரு வாயில்கள் - திரவியம்வரும்வழிகள். விரியச் செய்து - அதிகப்படுத்தி. அப்பொருள் - திரவியம். செல்வங்கள் - யானை முதலாகவும், மண்டபம் முதலாகவும் கீழ்க்கூறப்பட்டன. அவ்வாயில்கள் - பொருள்வரும் அவ்வழிகள். உற்றஇடையூறுகள் - சேர்ந்த தடைகள். மேல் -

மூன். இறைமாட்சி—௩௯ - ஆம் அதிகாரம். அவ்வதிகாரத்தில் "இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த, வகுத்தலும் வல்ல தரசு" என்ற குறளில்,'இயற் றல்' என்பதற்கு - 'தனக்குப் பொருள்கள்வரும்வழிகளை மேன்மேல் உள வாக்கல்' என்று பொழிப்புரையும், 'பொருள்களாவன - மணி பொன் நெல் முதலாயின: அவைவரும்வழிகளாவன - பகைவரை யழித்தலும், திறைகோ டலும்,தன்நாடு தலையளித்தலும் முதலாயின'என்று விசேடவுரையும் உரைத் தவாறு அறிக.

என்புழி - என்றவிடத்து. வாணிகம் - வர்த்தகம். உழவு

௫௨ - ஆம்

அதிகாரம்.—தெரிந்துவினையாடல் ககள்

பசுக்காவல் வாணிகம்என்பன வடமொழியில் 'வார்த்தா' எனப்படுமாதலால்,

'உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் வார்த்தை' என்றார்: வார்த்தா

வ்ருத்தி ஜீவநம் என்பன வடமொழியில் பரியாயச்சொற்கள். உழவுமுத

லியமூன்றும் வைசியர்களுடைய ஜீவனோபாயமென நூல்கள்கூறும். ஆண்டு - அவ்விடத்தில்; "இயற்றலும்" என்றகுறளின் உரையில், யானை குதிரை

பண்ட நாடு அரண் முதலியன பொருளாகவும், மண்டபம் வாவி செய்குன்று

இளமரக்கா முதலியனவும் ஐம்புலன்களால் நுகரப்படுவனவும் இன்பமாக

வுங் கூறப்பட்டவாறு அறிக. அரசன்வினைசெய்வார் - ராஜகாரியஞ்செய்ப

வர். என்றிவர் - என்ற இவர். நலிவு - உபத்திரவம். வருவது வாரியெனக்

காரணப்பெயர். ஆராய்தலென்னுங்காரணம், நீக்குதலாகிய
கின்றது; உபசாரவழக்கு.
காரியத்தின்மேல்
(உ)
ருகரு.

அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.
(இ - ள்.) அன்பு -(அரசன்மாட்டு) அன்பும், அறிவு - (அவனுக்கு

ஆவன அறியும்) அறிவும், தேற்றம் - (அவைசெய்தற்கட்) கலங்காமையும்,

அவா இன்மை - (அவற்றாற் பொருள் கையுற்றவழி அதன்மேல்) அவாவின்

மையும், இ நான்கும் - (ஆகிய) இந்நான்குகுண ங்களையும், நன்கு உடை

யான்கட்டுஎ - நிலைபெற உடையான்மேலதே, தெளிவு - (வினையை விட்டி

ருக்குந்) தெளிவு; (எ - று.)

இந்நான்கும் நன்குடைமை, இவன் செய்கின்ற வினைக்கண் யாதும்

ஆராயவேண்டுவதில்லை யென்று அரசன்தெளிதற்கு ஏது வாகலின்,* அவனை

அதன் பிறப்பிடனுக்கிக் கூறினார்.

இவைமூன் றுபாட்டானும், ஆடற்குரியானது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) ஆவன - அனுகூலமானவை. அவை செய்தற்கண் - அரச

னுக்கு அநுகூலமானவற்றைச் செய்தலில். நயுற்றவழி-கையிலகப்பட்ட பொழுது. அவா-ஆசை. உடையான்மேலதே-உடையவனிடத்தில்தான் கொள் ளத்தக்கது. வினையை விட்டிருக்கும் தெளிவு - (அரசன்) தொழிலை ஒப்பித்

திருக்கும் நம்பிக்கை. இந்நான்கு-அன்புமுதலாகக் கூறியவை. அதன்-தெளி

வின். ஆடற்கு - ஆளுதற்கு.
இந்நான்குகுணமுமுடையவனையே அரசன்நம்ப

வேண்டும் என்பது கருத்து. முதலடியில், பெயர்ச்செவ்வெண் தொகைபெற்

றது. தேற்றம்-தொழிற்பெயர்.

(ரு)

ருகசு. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்

வேறாகு மாந்தர் பலர்.

(இ - ள்.) எனை வகையான் தேறியக்கண்உம் - எல்லாவகையானும்

ஆராய்ந்துதெளிந்து வினைவைத்தபின்னும், வினை வகையான் - அவ்வினையின்

இயல்பானே, வேறு ஆகும் - வேறுபடும், மாந்தர் —. பலர் - (உலகத்துப் பலர்).

கட்டியங்காரன்போல அரசவின்பத்தினைவெஃகி விகாரப்படுவதல்லது

அதனைக் குற்றமென்றொழிந்து தம் இயல்பில்நிற்பார் அரியராகலின்,

* பி - ம்: அதனை அவன்.



'வேறாகு மாந்தர் பலர்' என்றார். வினைவைப்பதற்குமுன் எல்லாக்குணங்களு முடையராய் வைத்தபின்விகாரப்படுவாரை, இடையாயதொருவினையை வைத்து அறிந்து ஒழிக்க வென்பதாம்.

இதனான், ஒருவகையால் ஒழிக்கப்படுவார் இவரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) கட்டியங்காரன் - சீவகசிந்தாமணியென்னும் பெருங்காப்பியத்தின் கதாநாயகனான சீவகனது தந்தையாகிய சச்சந்தனென்னும் அரசனுடைய மந்திரிகளுள் ஒருவன். சச்சந்தன் தன்மனைவியாகிய விசயையினிடத்து அளவிறந்தகாதல்கொண்டு அவளோடு இடைவிடாது இன்பமுற்றிருக்க எண்ணி நிமித்திகன் முதலிய மந்திரிமார் கூறிய உறுதிமொழியைச் சிறிதுங் கொள்ளாமல் கட்டியங்காரனையே நம்பி அவனிடம் இராச்சியத்தை ஒப்பித்து அவனையே அரசனுக்கிவிட்டுத்தான் அந்தப்புரத்திற்சென்று சுகித்திருக்க, கட்டியங்காரன் அரசனைக்கொன்று இராச்சியமுழுமையுந் தானேயாளக்கருதி அறிவுடையோர் சொற்கேளாமல் தன் மைத்துனனாகிய மதனனோடு ஆலோசித்து அரசனிருக்கும் அந்தப்புரத்தைச் சேனைகளோடு வளைந்து தனியனான அரசனோடு போர்விளைத்து அவனைக்கொன்றிட்டனனென்ற வரலாற்றைச் சீவகசிந்தாமணியில் நாமகளிலம்பகத்துப் பரக்கக்காண்க. வெஃகி - விரும்பி.

விகாரப்படுவது - எண்ணம் சொற் செயல்கள் வேறுபடுவது. அதனை - வின்பத்தை விரும்புதலை. இடையாயது - அகம் புறங்கட்கு நடுவாயது;

அரச

இவ்

வதிகாரத்து முதற்குறளுரையிற் காண்க. தேறியக்கண் -
'கண்'விகுதி காலங்

காட்டும் எதிர்காலவினையெச்சம்; இ, அ - சாரியைகள்.
(ச)

ருகரு. அறிந்தாற்றிச் செய்கிற்பாற்
கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(இ - ள்.) அறிந்து - (செய்யும்உபாயங்களை) அறிந்து, ஆற்றி - (செயலானும் இடையூறுகளானும் வருந்துன்பங்களைப்) பொறுத்து, செய்கிற்பாற்கு அல்லால்-முடிவுசெய்யவல்லானை யல்லது, வினை தான்—,சிறந்தான் என்று

ஏவற்பாற்று அன்று - (இவன்) நம்மாட்டு அன்புடைய னென்று (பிறனொருவனை) ஏவும் இயல்புடைத் தன்று; (எ - று.)

'செய்கிற்பாற்கு' என்பது - வேற்றுமைமயக்கம்.

அறிவு ஆற்றல்களான் அல்லது அன்பான் முடியாது என இதனான் வினையினது இயல்பு கூறப்பட்டது.

(கு - ரை.) பிறனொருவன்-உபாயமறிந்து சிரமம்பொறுத்துத் தொழிலை முடியச்செய்யவல்ல னல்லாதவன். வேற்றுமைமயக்க மெனினும் உருபுமயக்க மெனினும் ஒக்கும். செய்கிற்பாற்குஎன்பதில், நான்கனுருபு இரண்டனுருபின் பொருளில் வந்ததுகாண்க. ஆற்றல் - பொறுமை. கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. சிறந்தான் என்று - அன்பிற்சிறந்தவனென்றகாரணத்தால். ஏவற் பாற்று - ஏவுதலாகிய பான்மையுடையது. பாற்று - ஒன்றன்பாற்குறிப்புவினைமுற்று; இப்பாட்டில், வினை - எழுவாய்.

(ரு)

ருஉ - ஆம்

அதிகாரம்.—தெரிந்துவினையாடல் கககூ

ருகரு.

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(இ - ள்.) செய்வானை
கணத்தை ஆராய்ந்து, வினை

நாடி - (முதற்கண்ணே) செய்வானது இலக்
நாடி - (பின் செய்யப்படும்) வினையினது இயல்

பை ஆராய்ந்து, காலத்தோடு எய்த
யும்) காலத்தொடுபடுத்துப்பொருந்த
ஆடலைச்) செய்க; (எ - று.)
உணர்ந்து - (பின் அவனையும் அதனை
அறிந்து, செயல் - (அவனை அதன்கண்

செய்வானது இலக்கணமும், வினையினது இயல்பும் மேலே கூறப்பட்டன. காலத்தோடு எய்த உணர்தலாவது-இக்காலத்து இவ்விலக்கணமுடையான் செய்யின் இவ்வியல்பிற்றாயவினை முடியுமென்று கூட்டியுணர்தல்.

(கு - ரை.) அதனையும்-அவ்வினையையும். படுத்து-சேர்த்து. அதன்கண்-அவ்வினையில். செய்வானதுஇலக்கணம் இவ்வதிகாரத்து முதல்மூன்றுபாடல்களிலும், வினையியல்பு ஐந்தாவதுபாடலிலும் கூறப்பட்டமை காண்க. இவ்வியல்பிற்றாய - இத்தன்மையதான. எய்த - வினையெச்சம்; எய்து - பகுதி. (சு)

றுகஎ. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

(இ - ள்.) இதனை - இவ்வினையை, இதனால்-இக்கருவியால், இவன்—, முடிக்கும் - முடிக்கவல்லன், என்று - எனக் கூறுபடுத்து. ஆய்ந்து - ஆராய்ந்து, (மூன்றும் தம்முள் இயைந்தவழி),—அதனை - அவ்வினையை, அவன்கண் - அவன்கண்ணே, விடல் - விடுக; (எ - று.)

கருவி - துணைவரும் பொருளும் முதலாயின. வினைமுதலும் கருவியும் வினையும் தம்முள் இயைதலாவது - ஒரொன்றோடு ஏனைய இரண்டற்கும் பொருத்தமுண்டாதல். விடுதல் - அதற்கு அவனை உரியனாக்குதல்.

(கு - ரை.) கூறுபடுத்து - பகுத்து. மூன்றும் - செய்பவனும், செய்யத்தக்க தொழிலும், செய்தற்கருவியும். 'இவன்' என்று வினைமுதல் கூறப்பட்டது. வினைமுதல் - செய்பவன். தம்முள் இயைந்தவழி - தமக்குள் மாறுபாடின்றிக் கூடியபொழுது. 'முதலாயின' என்றது, காலம் இடம் படை ஆகியவற்றை. அதற்கு - அத்தொழில் செய்தற்கு. (எ)

௫௧௮. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல்.

(இ - ள்.) (ஒருவனை அரசன்),வினைக்கு உரிமை நாடிய பின்றை-(தன்) வினைசெய்தற்கு உரியனாக ஆராய்ந்து துணிந்தால் பின், அவனை அதற்கு உரியன் ஆக செயல் - அவனை அதற்கு உரியனாமாறு (உயரச்) செய்க; (எ - று.)

உயரச்செய்தலாவது-அதனைத் தானேசெய்துமுடிக்கும் ஆற்றலுடையனாக்குதல். அது செய்யாக்காலும் கெடு மென்பது கருத்து.

(கு - ரை.) அதற்கு உரியனாமாறு - அத்தொழிலைச் சுதந்திரனாய் முடிக்க உரிமையுடையனாகுமாறு. அது செய்யாக்காலும் - அவனை அத்தொழிற்கு



ஏற்ற அதிகாரியாக்காவிட்டாலும். கெடும் - அத்தொழில் முடியாதொழியும். (அ)
உரிமை - உரியனாயிருக்குந்தன்மை.

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

(இ - ள்.) வினைக்கண் - (எப்பொழுதும்) தன் வினையின்கண்ணே, வினை உடையான் - முயறலையுடையான், கேண்மை - (அவ்வுரிமையால் தனக்குக்) கேளாயொழுகின்ற
தன்மையை,(அதுபொறுதார்சொற்கேட்டு),
வேறு ஆக நினைப்பானை-(அரசன்)மாறுபடக் கருதுமாயின் அவனை, திரு-திரு
மகள், நீங்கும் - விட்டுநீங்கும்; (எ - று.)
கேளாய் ஒழுகுகின்ற தன்மையாவது - தான் பிறனாய்நில்லாது கேளிர்
செய்யும் உரிமையெல்லாஞ் செய்தொழுகுதல். அவனை அவமதிப்பாகக்கொ
ண்டு செறக் கருதுமாயின், பின் ஒருவரும் உட்பட்டு முயல்வா ரில்லையாம்;
ஆகவே, தன்செல்வம் கெடு மென்பது கருத்து.
இந்நான்குபாட்டானும், ஆடற்குரியானை ஆளுந் திறம்
கூறப்பட்டது.

(கு - ரை.) முயறல் - முயற்சிசெய்தல். உரிமையால் - சுதந்திரத்தால்.
அதுபொறுதார் - கேளாய் நடப்பதைப்பொறுக்கமாட்டாதவர். கேள் ஆய் -

அந்தரங்கனாய். கேளிர் - சுற்றத்தார். செற - வெறுக்க, விலக்க, தண்டிக்க.

கருதுமாயின் - நினைப்பானால். கேண்மையென்னுஞ்சொல்-ஒருவர்க்கொருவர் யோகக்ஷேமங்களைக் கேட்குந்தன்மை யென்ற காரணத்தால், உறவு முறைமையைக் குறிக்கும். திரு நீங்கும் - செய்யுமென்முற்று, பெண்பாலுக்கு வந்தது.

(க)

௫௨௦. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமைக் கோடா துலகு.

(இ - ள்.) வினை செய்வான்—, கோடாமை - கோடாதொழிய, உலகு கோடாது—; (ஆதலான்), மன்னன் - அரசன், (அவன்செயலை), நாள்தோறும்—, நாடுக - ஆராய்க; (எ - று.)

அஃதொன்றனையும் ஆராயவே, அதன்வழித்தாய உலகமெல்லாம் ஆராய்ந்தானும்; அதனான், அவனுரிமை அழியாமல் தன்னுள்ளே ஆராய்ந்து போதுக என்பதாம்.

இதனான், ஆண்டவழிச் செய்வது கூறப்பட்டது.

(கு - ரை.) கோடாதொழிய-(எண்ணஞ் சொற் செயல்களில்) மாறுபடா திருக்க. உலகு கோடாது - உலகத்தாரியல்பு மாறுபடாதிருக்கும். அஃது ஒன்றனையும் - வினைசெய்வானது செயல்மாத்திரத்தை. அதன்வழித்து ஆய- அவ்வினைசெய்வானியல்பின் வழியிலே உள்ளதான. அவனுரிமையழியா மல் - வினைசெய்வானது சுவாதந்திரியம் அழியாமல். போதக - ஒழுகுக. ஆண்டவழிச் செய்வது-அரசன் ஒருவனை ஒருதொழிலில் உரியனாக நியமித்த பின்பு செய்யவேண்டுவது. கோடாமை - எதிர்மறைவினையெச்சம், (௬0)

## ருஅ - ஆம் அதிகாரம்.—சுற்றந்தழால்.

அஃதாவது - அரசன் தன்கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல், வினைசெய்வாரைக் கூறி ஏனைச் சுற்றம் கூறுகின்றாராகலின், இது, தெரிந்துவினையாடலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) கிளைஞர் - உறவினர். தன்னின் - தன்னிடத்தினின்றும்.

சுற்றம் - (உரியகாலங்களில் வந்து) சுற்றிநிற்பது எனப் பந்துவர்க்கத்துக்குக் காரணப்பெயர். தழால் - தழுவுதல்; தொழிற்பெயர்: தழு - பகுதி; இதுவே

உகரச்சாரியைபெற்றுத் தழுவு என நிற்பது: இனி, தழுவு என்னும் பகுதி
விகாரப்பட்டதென்றலும் ஒன்று; ஆல் - தொழிற்பெயர்விகுதி.

௫௨௧. பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(இ - ள்.) பற்று அற்ற கண்உம் - (ஒருவன்)செல்வம்தொலைந்து வறிய
ஞயவழியும், பழமை பாராட்டுதல் - (விடாது தம்மோடு அவனிடைப்) பழ
மையை எடுத்துக் கொண்டாடும் இயல்புகள், சுற்றத்தார்கண்ண உள - சுற்
றத்தார்மாட்டே உளவாவன; (எ - று.)

சிறப்பும்மை - வறியனுயவழிப் பாராட்டப்படாமை விளக்கிநின்றது.
பழமை-பற்றுக்காலத்துத் தமக்குச் செய்த உபகாரம். பிறரெல்லாம் அவன்
பற்றற்றபொழுதே தாமும் அவனோடு பற்றறுவராகலின், ஏகாரம்-தேற்றத்
தின்கண் வந்தது.

இதனன், சுற்றத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) வறியன்-தரித்திரன். தம்மோடு

அவனிடைப் பழமை-தமக் கும் அவனுக்கும் இருந்த பழைய சம்பந்தம். சிறப்பு - இங்கே, இழிவு

சிறப்பு. பாராட்டப்படாமை - பாராட்டுதலரிது என்னுந் தன்மை யென்ற

படி. பற்று அறுக்காலத்து - செல்வம் நீங்காதிருந்தகாலத்தில். பிறர் எல்

லாம் - சுற்றத்தாரல்லாத மற்றையோர் யாவரும். அவன் பற்று அற்றபொ

ழுது - அவன் செல்வமழிந்தகாலத்து. பற்று அறுவர் - தொடர்ச்சிநீங்கு

வர். பற்று - செல்வத்தையும், தொடர்ச்சியையும் குறிக்கும். ஏகாரம் -

பிரிநிலைப்பொருள் தெனினுமாம். அற்றகண் - தெரிநிலைப்பெயரெச்சத்தொ

டர். 'அற்றக்கண்' என்று இருப்பின், ஒருசொல்லாகக்கொண்டு எதிர்கால

வினையெச்சமென்னலாம். பாராட்டுதல் என்னுந் தொழிற்பெயர் பால்பகா

வஃறிணையின்பாற்படு மாதலால், 'உள' என்னும் பன்மைமுற்றைக் கொண்

டது. "அற்றகுளத்தில்" என்ற

கின்றது.

மூதுரைப்பாடல், இங்கு நினைவுக்கு வரு

(க)

௫௨௨. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(இ - ள்.) விருப்பு அறா-அன்பறாத, சுற்றம்—, இயையின்-(ஒருவற்கு)
எய்துமாயின், (அஃது அவற்கு), அருப்பு அறா - கிளைத்தல் அறாத, ஆக்கம்
பலஉம் - செல்வங்கள் பலவற்றையும், தரும் - கொடுக்கும்; (எ - று.)

16



உட்பகையின் நீக்குதற்கு 'விருப்பறாச் சுற்றம்' என்றும், தானே வளர்க்கும் ஒருதலையாய செல்வத்தின் நீக்குதற்கு 'அருப்பறாவாக்கம்' என்றும் விசேடித்தார். தொடைநோக்கி விகாரமாயிற்று. 'இயையின்'என்பது - அதனது அருமை விளக்கி நின்றது. 'ஆக்கம்'என்பது - ஆகுபெயர். 'பலவும்'என்றது, அங்கங்கள் ஆறனையும் நோக்கி. பலர் கூடி வளர்த்தலின் அவை மேன்மேற் கிளைக்கு மென்பது கருத்து.

(கு - ரை.) எய்துமாயின் - வாய்க்குமானால். அஃது-அச்சுற்றம். கிளைத்தல் - பலவாறு செழித்துவளர்தல். உட்பகையின் நீக்குதற்கு - சுற்றத்தவரா யிருந்தே மனத்திற்பகைமைகொண்டு ஒழுகுந்தன்மை யில்லாமையைக்காட்டுதற்கு. தானே வளர்க்கும் ஒருதலையாய - தானே மேன்மேலும் வளரச்செய்யும் ஒப்பற்ற தலைமையுள்ள; "நூற்றுக்குமேல் ஊற்று" என்பது பணத்தின் வளர்ச்சி குறித்த பழமொழி. ஆகவே,

ஆக்கமென்பது - இங்கே பணத்தைக் காட்டவில்லை; அரசனுடைய அங்கங்களைக் காட்டுமென அறிக. விசேடித்தார் - அடைமொழிகொடுத்துக் கூறினார்; விசேஷணம் - அடைமொழி. அருப்பு - அரும்பு என்னும் முதனிலைத்தொழிற்பெயர் எதுகைத்தொடைநோக்கி வலித்தல்விகாரமடைந்தது. பரிமேலழகர் 'தொடைநோக்கி' என்றதனால், முதலடியின் இறுதியிலே வந்த 'அருப்பரு' என்பது அவ்வடியின்முதலில் வந்த 'விருப்பரு' என்றதற்குஏற்ற எதுகைத்தொடையாகக் கொள்ளப்பட்டதென அறிக; கீழ் "இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி, மாசறு காட்சி யவர்க்கு" என்ற குறளில், 'நீங்கியெனத் தொடைநோக்கி மெலிந்துநின்றது' என உரைத்ததுங் காண்க: தொல்காப்பியத்துச் செய்யுளியலில் "ஆயிரு தொடைக்குங் கிளையெழுத்துரிய" என்ற சூத்திரத்தின் உரையில் பேராசிரியர் 'இஃது ஓரடிக்கண்வரினும் ஒக்குமென்பது உய்த்துணர்க' எனக் கூறியதும் காண்க. ஓரடியில் இடையிருசீரொழித்து மற்றை முதற் சீரிலும் நான்காஞ்சீரிலும் எதுகை வருவது ஒரூஉவெதுகை யெனப்படுமாறும் உணர்க; "இருசீரிடையிடி னொரூஉவென மொழிப" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். அதனது-இத்தன்மையதான சுற்றம் இயைதலினது. ஆக்கம் - விருத்தியாகுதல்; இது - அத்தன்மையையுடைய செல்வத்துக்குத் தொழிலாகுபெயர். இனி, ஆக்கம் என்பதை ஒருவன் செழித்திருத்தற்குக் காரணமானதெனச் செல்வத்துக்குக் காரியவாகு பெயரெனினும் அமையும். அங்கங்கள் ஆறு—"படை குடி கூழ் அமைச்சு நட்பு

அரண்." 'பலர்' என்றது, சுற்றத்தாரை. அவை - அச்செல்வங்கள். விருப்பு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். இப்பாட்டில், 'இயையின்' என்ற எதிர்கால வினையெச்சத்தாற் பெறவைக்கப்பட்ட 'இயைதல்' என்பது - 'தரும்' என்பதற்கு எழுவாய். (உ) ௫௨௩.

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக் (இ
கோடின்றி நீர்நிறைந் தற்று.

- ள்.) அளவளாவு இல்லாதான் வாழ்க்கை - (அச்சுற்றத்தோடு) நெஞ்சுகலத்த லில்லாதவன் வாழ்க்கை, குளம் வளா - குளப்பரப்பு, கோடு இன்றி - கரையின்றி,

நீர் நிறைந்தற்று - நீர்நிறைந்தாற் போலும்; (எ - று.)

௫௩ - ஆம் அதிகாரம்.—சுற்றந்தழால்

கஉ௩

'சுற்றத்தோடு' என்பது, அதிகாரத்தான் வந்தது. நெஞ்சுகலப்புத் தன்னளவும் அதனளவும்உசாவுதலான் வருவதாகலின், 'அளவளாவு' என்பது - ஆகுபெயர். 'வாழ்க்கை' என்றதூஉம், அதற்கு ஏதுவாய செல்வங்களை, நிறைதலென்னும் இடத்துநிகழ்பொருளின்தொழில், இடத்தின்மேல் நின்றது. சுற்றமில்லாதான் செல்வங்கள் தாங்குவாரின்மையிற் புறத்துப்போமென்பதாம்.

(கு - ரை.) குளப் பரப்பு - குளத்தினது விசாலமான

இடம். அதிகாரத் தான் - இவ்வதிகாரம் சுற்றந்தழா லாதலால். அதன் - சுற்றத்தின். 'அளவு'- இங்கே, யோகக்ஷேமசமாசாரங்களை. உசாவுதலான் - (ஒருவரை யொருவர்) விசாரித்து அறிதலால். அளாவுதல் - விசாரித்தறிதல். அளாவு என்னும்பகுதியே அளாவுதலென்னுந்தொழிற்பெயர்ப்பொருளை யுணர்த்தியதனுல், முதனிலைத்தொழிற்பெயர். அளவளாவு - இரண்டாம்வேற்றுமைத் தொகை. அளவையளாவுத லென்னுங் காரணம், அதனாலுண்டாகும் மனங்கலத்தலைக் குறித்தலால், அளவளாவு என்பது - காரணவாகுபெயராம். வாழ்க்கை - வாழ்தல்; இது - வாழ்வுக்குக் காரணமான செல்வத்தைக் குறித்ததனுல், காரியவாகுபெயராம். குளப்பரப்பில் நீர்நிறைந்தாற்போலும் என்ற பொருள், குளப்பரப்பு நீர்நிறைந்தாற்போலும் எனக் கூறப்பட்டதனுல், 'இடத்து நிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேல் நின்றது' என்றார். நிறைந்தற்று - நிறையப்பெற்றாற்போலும். இடம் - குளப்பரப்பு. அங்கு நிகழ்பொருளின் தொழில் - நீரின் நிறைதல். அதனைக் குளப்பரப்பாகிய இடத்தின்மேல் ஏற்றிக் கூறியமை காண்க. பிரயோகவிவேகமென்னும் இலக்கணநூலில் "மரு ளறு காரணக்காரியம் பேரொடு வந்துறழும், இருளறுமொண்குணப்பேர் குணிப்பேர் வினையோ டியையும், பொருள்வினை மற்றோர்பொருளினுந் தோன்றும் புலத்தொடுமாம், தெருளுறு பண்பு புல னிவை

மாறியுஞ் சேர்ந்தி டுமே" என்னும் பாட்டி னுரையில், ""குளவளாக்கோடின்றிநீர்நிறைந்தற்று", 'இந்தப்பானை நாழியரிசி பொங்கும்' இவை புலமென்னும்இடத்து நிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேல்நின்றன' என்றமை காண்க. இவையெல்லாம் இலக்கணநூலில் 'உபசாரவழக்கு' எனப்படும். தாங்குவாரின்மையின் - வெளிச்செல்லவொட்டாது தடுத்துப் பாதுகாப்பவரில்லாமையால். இல்லா தான் என்னுங் குறிப்புவினையாலணையும்பெயரில், இல்என்னும் பகுதியே எதிர்மறைகுறித்ததனால், ஆ - சாரியை. வளா - பரப்பு. நிறைந்தற்று-நிறைந் தாலற்று என எச்சத்திரிபாம்; நிறைந்ததற்று எனத் தொழிற்பெயர்விகாரமாகக்கொள்ளினும் அமையும். கரையில்லாத குளத்தில் நிறைந்த நீர் தடை யில்லாமையால் வெளிச்சென் றுவிடுதல்போல, சுற்றமில்லாதவனிடத்தில் வாய்த்த செல்வம் பாதுகாப்பவரில்லாமையால் வெளிச்சென் றுவிடு மென்பது கருத்து; பயன்பற்றி வந்த உவமையணி.

(௯)

௫௨௪. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல்
செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(இ - ள்.) செல்வம் பெற்றத்தால் - செல்வம் பெற்றவதனால், பெற்ற - (ஒருவன்) பெற்ற, பயன் - பயனாவது,—சுற்றத்தால் - (தன்) சுற்றத்தால், தான்—, சுற்றப்பட - சூழப்படும்வகை, ஒழுகல் - (அதனைத் தழீஇ) ஒழுகுதல்; (எ - று.)

பெற்ற என்பதனுள் அகரமும், அதனால் என்பதனுள் அன்சாரியையும், தொடைநோக்கி விகாரத்தால் தொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாட்கு ஏது வாகலின், இதனைச் செல்வத்திற்குப் பயனென்றார்.

இவைமூன்றுபாட்டானும் சுற்றந்தழால் செல்வத்திற்கு ஏதுவும் அரணும் பயனும் ஆம் என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) தழீஇ - தழுவி; அணைத்து. ஆதரித்து. பெற்றத்தால் என்பது பெற்றவதனால் என்பதன் தொகுத்தல்விகாரமென்பது, பரிமேலழகர் கொள்கை. அது அல்லது அஃது என்ற சுட்டுப்பெயர் ஆல் என்னும் வேற்றுமையுருபு ஏற்கும்போது, 'அன்' சாரியைபெற்று 'அதனால்' என நிற்குமேயன்றி, சாரியைபெறாது 'அதால்' என நில்லாதென்பது, தொல்காப்பியத்தாற் போதரும். இனி, பெற்றதால் என்பது பெற்றத்தால் என விரித்தல் விகாரம் பெற்றதெனினுமாம். தொடை - இங்கே, எதுகைத்தொடை. இவ்வொழுக்கு - இவ்வாறு ஒழுகுதல்: சுற்றத்தாற் சூழப்பட வொழுகுதல். அரண் - பாதுகாப்பு. சுற்றத்தார் சுற்றப்பட ஒழுகல்—"சுற்றத்திற்கு அழகு சூழவிருத்தல்" என்றார் பிறரும். (௪)

ருஉரு. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய

சுற்றத்தாற் சுற்றப் படும்.

(இ - ள்.) (ஒருவன்),—கொடுத்தல் உம் - (சுற்றத்திற்கு வேண்டுவன) கொடுத்தலையும், இன் சொல்உம்

- இன்சொற் சொல்லுதலேயும், ஆற்றின் -
வல்லனுயின்,—அடுக்கிய சுற்றத்தால் - (தம்மில்) தொடர்ந்த
பலவகைச் சுற்
றத்தானே, சுற்றப்படும் - சூழப்படும்; (எ - று.)

இரண்டும் அளவறிந்து ஆற்றுதல் அரிதென்பது
தோன்ற, 'ஆற்றின்' என்றார். தம்மில்தொடர்தலாவது -
சுற்றத்தது சுற்றமும், அதனது சுற்றமு மாய் அவற்றாற்
பிணிப்புண்டுவருதல். இவ்வுபாயங்களை வடநூலார் தானமும்
சாமமும் என்ப.

(கு - ரை.) தம்மில் தொடர்ந்த-தமக்குள்
உறவுமுறைமையால் ஒன்றை யொன்றுதொடர்தலுடைய.
இரண்டும் - வேண்டுவனகொடுத்தலும், இன்
சொற்சொல்லுதலும். அளவு அறிந்து -
செல்வம்முதலியவற்றிலே சுற்றத் தின் அளவையும்
தன் அளவையும் அறிந்து. 'ஆற்றின்' எனக்கூறியது, அரு
மைவிளக்கு மென்க. அவற்றால் பிணிப்புண்டு -
கொடையாலும் இன்சொ லாலும் அன்புபூண்டு. கொடுத்தல்
தானமும், இன்சொல் ஸாமமுமாம். என்ப-
என்று சொல்வர். 'இன்சொல்என்பது
க்கு' என்பர் பிரயோகவிவேகநூலார்.

பண்புபுலன் மாறிவந்த உபசாரவழு

௫உசு. பெருங்கொடையான் பேணான்
மருங்குடையார் மாநிலத் தில்.

வெகுளி யவனின்

(இ - ள்.) (ஒருவன்). பெருங் கொடையான் - மிக்ககொடையையுடை யனுமாய், வெகுளி பேணான் - வெகுளியைவிரும்பானுமாயின்,—அவனின்அவன்போல, மருங்கு உடையார் - கிளையுடையார், மா நிலத்து இல் - இவ்வுலகத்து இல்லை; (எ - று.)

மிக்க கொடை - ஒன்றானும் வறுமையெய்தாமற் கொடுத்தல். விரும்பாமை-இஃது அரசர்க்குவேண்டுவதொன்றென்று அளவிறந்துசெய்யாமை.

(கு - ரை.) கொடை - கொடுத்தல், வெகுளி - கோபித்தல்; தொழிற் பெயர்கள். கிளை - சுற்றம். மா நிலம் - பெரியபூமி. ஒன்றானும் வறுமை எய் தாமல் - ஒருபொருளாலும் வறுமையடையாமல்; எல்லாப்பொருளாலும் நிறைந்திருக்கும்படி. விரும்பாமை - வெகுளியை விரும்பாமை. இஃது அரசற்கு வேண்டுவது ஒன்றுஎன்று அளவிறந்து செய்யாமை - கோபம் அரசனுக்கு இன்றியமையாததென்ற காரணத்தால் அக்கோபத்தை

வரம்புகடந்து கொள்ளாமை. அரசனுக்குக் காமமும் கோபமும் முனிவர்க்குப்போல முழுவதும் ஒழிக்கத்தக்க பெருங்குற்ற மல்ல வென்பது நூல்துணிபு; கீழ் 'குற்றங் கடிதல்' என்ற அதிகாரத்தின் இறுதியில் 'காமம் வெகுளி உவகையென்பன முற்றக்கடியுங்குற்றம் அன்மையின்' என்றும், மேல் 'பேதைமை' என்னும் அதிகாரத்தின் தொடக்கத்தில் 'முற்றக்கடியுங் குற்றமன்மையின் உளவாய வெகுளியானுங் காமத்தானும்' என்றும் பரிமேலழகர் கூறுதல் உணர்க: அவசியமான இடங்களிற் கோபமும், உரிமையிடத்துக்காமமும் கொள்வது அரசர்க்குமுறைமை. 'அரசர்க்கு' என்றவிடத்து, 'ஆதற்கு' என்று பிரதிபேத முண்டு; தாம் விருத்தியடைதற்கு என்று பொருள். அவனின் — இன் - ஐந் தாமுருபு, ஒப்புப்பொருளது. மருங்கு - பக்கம்; இது - இலக்கணையால், பக் கங்களிற் சூழ்ந்துநிற்கும் உறவினரை உணர்த்திற்று. (கூ)

௫உஎ.

காக்கை கரவாக் கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

(இ - ள்.) காக்கை - காக்கைகள்; (தமக்கு இரையாயின கண்டவழி), கரவா - மறையாது, கரைந்து - (இனத்தை) அழைத்து, உண்ணும் - (அதனோடுங் கூட) உண்ணாநிற்கும்; ஆக்கம்உம் - (சுற்றத்தான் எய்தும்) ஆக்கங் களும், அன்ன நீரார்க்கு - அப்பெற்றித்தாய இயல்பினை யுடையார்க்கே, உள - உளவாவன; (எ - று.)

அவ்வாக்கங்களாவன - பகையின்மையும், பெருஞ்செல்வமுடைமையும் முதலாயின. எச்சவும்மையான், அறமும் இன்பமுமேயன்றிப்பொருளும் எய்துமென்பது பெறுதும். 'அப்பெற்றித்தாய இயல்பு' என்றது, தாம்நுகர்வன எல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல்.

(கு - ரை.) கண்டவழி - பார்த்தபொழுது. மறையாது - ஒளிக்காமல். இனம் - தம் இனமாகிய பிறகாக்கைகள். சுற்றத்தான் எய்தும் ஆக்கம் - உற



வினரால் வரும் நன்மைகள். அப்பெற்றித்துஆய - அத்தன்மையதான். அப்பெற்றித்தாய இயல்பினையுடையார் - தாம் நுகரத்தக்கபொருள்கள் நேர்ந்தவிடத்து ஒளிக்காமற் சுற்றத்தாரை யழைத்து அவரோடுங்கூட நுகர்பவர். உள-உள்ளன. "காகமுறவுகலந்துண்ணக்கண்டீர்" என்றார், தாயுமானவரும். எச்சவும்மை-'ஆக்கமும்' என்பதில் உள்ளது; இது-இறந்ததுதழுவிய எச்சம். பெறுதும்-பெறுவோம். நுகர்வனஎல்லாம் - அனுபவிக்கும்பொருள்களெல்லாவற்றையும். கரவா-ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். கரவாக்கரைந்து என இதன்முன் வலிமிக்கது, பொதுவிதியால்; [நன். உயிர். கங.] 'கரவாகரைந்துண்ணும்' என இயல்பான பாடத்துக்கு - மறைக்காதனவாய் என்று எதிர்மறைப் பலவின்பால் முற்றெச்சமாகக் கொள்க; அதன்முன் வலிஇயல்பாம்: [நன். உயிர். உக.]

யிற்று. ஏ - பிரிநிலை.

நீரார்க்கு - நீர்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோ

உள - பலவின்பாற்குறிப்புமுற்று. (எ)

௫௨௮. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா
னதுநோக்கி வாழ்வார் பலர்.

நோக்கி

(இ - ள்.) பொது நோக்கான் - (எல்லாரையும்) ஒருதன்மையராக
நோக்காது, வேந்தன் - அரசன்; வரிசை ஆ நோக்கின் - (தத்தம்) தகுதிக்கு
ஏற்ப நோக்குமாயின், அது நோக்கி வாழ்வார் - அச்சிறப்புநோக்கி (அவனை
விடாது) வாழுஞ் சுற்றத்தார், பலர்—; (எ - று.)

உயர்ந்தார்நீங்குதல்நோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடா
தொழுகுதல்நோக்கி வரிசைநோக்கை விதித்தார்.

இந்நான்குபாட்டானும், சுற்றந்தழுவும் உபாயம் கூறப்பட்டது.

(கு - ரை.) தத்தம் - அவரவரது. தகுதி - யோக்கியதை, கௌரவிக்கப் படும் நிலைமை. அதற்குஏற்ப நோக்குதல் - உபசரித்தொழுகுதல். உயர்ந் தாரையும் தாழ்ந்தாரையும் சமமாகநடத்தினால், உயர்ந்தவர் தம்மை அவ மதித்ததாகக்கருதி அவனை நீங்குவ ராதலால், அங்ஙனம்பொதுப்படநோக்கு தல் ஆகாது. கபிலரென்னுஞ் சிறந்தபுலவர் மலையமான் திருமுடிக்காரி யென்னும் அரசனிடஞ் சென்றபோது அவ்வள்ளல் அவரதுபெருமைக்குத் தக்கபடி அவர்க்கு மிக்கபரிசுகொடாது

மற்றையபுலவர்களோடொப்ப அவரை
மதித்து ஏதோ சிறிதுகொடுத்தனனாக, அதுபற்றி அவர் அவனைநோக்கி "ஒரு
திசை யொருவனை யுள்ளி நாற்றிசைப், பலரும் வருவர் பரிசின் மாக்கள்,
வரிசையறிதலோ வரிதே பெரிதும், ஈத லெளிதே மாவண்டோன்றல், அது
நற்கறிந்தனையாயின், பொதுநோக்கொழிமதி புலவர்மாட்டே" என்று கூறிய
செய்யுள், புறநானூற்றிற் காணத்தக்கது. விதித்தார் - வேண்டுமென்றார்.
நோக்கான் - எதிர்மறை முற்றெச்சம். ஆ - ஆக: விகாரம். (அ)

௫உகூ. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

(இ - ள்.) தமர் ஆகி - (முன்) தமராய்வைத்து, தன் துறந்தார் - (தன்
ஞெடு அமராது யாதானுமொருகாரணத்தால்)

தன்னைப் பிரிந்து போயவர்,

௫௩ - ஆம் அதிகாரம்.—சுற்றந்தழால்

கஉள சுற்றம் - (பின்னும்வந்து)

சுற்றமாதல்,—அமராமை காரணம் இன்றி - அவ்வமராமைக்காரணம் (தன் மாட்டு) இல்லையாக, வரும் - தானே யுளதாம்.

'அமராமைக்காரணமின்றி' என்றதனுன், முன் அஃது உண்டாய்த் துறத்தல் பெற்ரும். அஃதாவது - அரசன் தான் நெறிகெடஒழுகல், வெறுப் பனசெய்தல் என்றிவை முதலியவற்ருன் வருவது. ஆக்கம், வருவிக்கப்பட்டது. 'இயற்கையாகவே அன்புடையராய சுற்றத்தார்க்கு, செயற்கையான் வந்த நீக்கம், அதனையொழிய ஒழியும்; ஒழிந்தால், அவர்க்கு அன்பு செய்துகொள்லவேண்டா: பழையஇயல்பாய் நிற்கும்' என்பார், 'வரும்' என்ருர்.

(கு - ரை.) முன் தமராய்வைத்து - முன்பு தன்னையடுத்த சுற்றத்தவரா யிருந்து. தன்னேடு அமராது - தன்னேடு மனங்கலந்திராமல். யாதானும் - யாதாயினும். அவ்வமராமைக் காரணம் தன்மாட்டு இல்லையாக - அங்ஙனம் அவர் தன்னேடுகலவாமற் பிரிந்துசென்றதற்குக் காரணமாகவுள்ள குற்றம் தன்னிடத்து நீங்க. முன் அஃது உண்டாய்த் துறத்தல் - முன்பு அவ்வமராமைக்காரணம் தன்னிடத்து உளதாயிருத்தலால் அவர்கள் தன்னைப்பிரிந்து செல்லுதல். அஃதாவது - அவ்வமராமைக் காரணமாவது. நெறிகெட ஒழுகல் - நல்லொழுக்கவழி விலகி நடத்தல்; அறநூல் பொருணூல் கூறிய வழிப்படி நடவாமல் தன் விருப்பின்படி நடத்தலெனினுமாம். வெறுப்பன செய்தல் - சுற்றத்தார் வெறுக்கத்தக்க காரியங்களைச் செய்தல்.

'முதலிய' என்றது ஞால் காமம் வெகுளி உவகைகளை அளவுகடந்து செய்தல், இடித்து மதிகூறும் அமைச்சர் புரோகிதர்களை ஆதரியாமை முதலியன கொள்க. ஆக்கம் - ஆதல்; இச்சொல் வருவிக்கப்பட்டது, 'சுற்றம்' என்றதன்பின். இயற்கையாகவே- ஸ்வபாவத்திலே; புதியகாரணமில்லாமலே என்றபடி. செயற்கையான் - காரணத்தால். நீக்கம் - பிரிவு. அதனை ஒழிய - அக்காரணத்தை நீங்க. தமர்- தாம் என்னும் பகுதியடியாப் பிறந்த கிளைப்பெயர். தற்றுறந்தார் - இரண்டனுருபுத்தொகை. அமராமை - எதிர்மறைத்தொழிற்பெயர். அமராமைக் காரணம் - நான்காம்வேற்றுமைத்தொகை. இப்பாட்டில், 'சுற்றமாதல்' - எழுவாய்.

(௯)

௫௩0. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(இ-ள்.) உழை பிரிந்து-(காரணமின்றித்) தன்னிடத்துநின்றும் பிரிந்து போய், காரணத்தின் வந்தானை - (பின்) காரணத்தான் வந்த சுற்றத்தானை, வேந்தன்-அரசன், இழைத்துஇருந்து எண்ணி கொளல் - (அக்காரணத்தைச்) செய்துவைத்து ஆராய்ந்து தழீஇக்கொள்க; (எ - று.)

வாளா 'உழைப்பிரிந்து' என்றமையின், பிரிதற்குக் காரண மின்மை பெற்றும். வருதற்காரணத்தைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்து போய்ப் பகையோடு கூடுமாகலின் 'இழைத்திருந்து' என்றும், அன்பின்றிப் போய்ப் பின்னுங் காரணத்தான் வந்தமையின்

'எண்ணிக் கொளல்' என்றுங்கூறினர்.

கஉ௬ திருக்குறள்

பிரிந்துபோய சுற்றத்தாருள் தீமை செய்யப் போய் அதனை யொழிய வருவானும், அதுசெய்யாமற் போய்ப் பின் நன்மை செய்ய வருவானும் தழுவப்படு மாகலின், தழுவுமாறு முறையே இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) உழை - இடம். உழைப் பிரிந்து - ஐந்தாம்வேற்றுமைத் தொகை. காரணத்தான் - யாதாயினுமோர் ஏதுவினால். வாளா - சும்மா; காரணங்கூறாமல் என்றபடி. வருதற்காரணம் - தன்னிடம் வந்து கூடுதற்கு வேண்டிய காரணம். செய்யாதவழி - தான் செய்யாமற்போனால். பகையோடு கூடும் - பகைவருடன் சேர்வான். பிரிந்தவன் மனங்கலந்த நட்பினலன்றிக் காரணத்தாற் கூடியவனாதலால், அவன் வந்து கூடுதலை ஆராய வேண்டுமென்றார். தீமைசெய்ய - அரசனுகியதான் தீங்குசெய்ததனால். அதனை யொழிய - தான் தீங்கு செய்தலை நீங்கியதனால். அதுசெய்யாமல் - தான் தீங்கொன்றுஞ்செய்யாமலிருக்கையில். நன்மை செய்ய-தான் நன்மை செய்ததனால். ஆறு - விதம். இழைத்திருந்து - ஒருசொல் தன்மைப்பட்டது. வந்தானைக் கொளல் என இயையும். 'வந்தானை' - செயப்படுபொருள். (கo)

## ருசு - ஆம் அதிகாரம்.—பொச்சாவாமை.

அஃதாவது - உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகையழித்தல் முதலிய காரியங்களினும் சோர்தலைச் செய்யாமை. மேற்சொல்லிய சுற்றத்தாராற் பயனுள்ளது இச்சோர்வுஇல்வழியாகலின், இது சுற்றந்தழாலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) உரு - வடிவழகு. திரு - செல்வம். ஆற்றல் - வலிமை. முத

லாய என்றதனால், நாடு அரண்முதலியன கொள்க. மகிழ்ந்து செய்யாமை

என இயையும். தன் காத்தல் - தன்னைப்பாதுகாத்துக்கொள்ளுதல். 'முதலிய'என்றதனால், தன்சேனை பகைவசமாகாது செய்தல், அமைச்சர் புரோகிதர் முதலியவரோடு கலந்தாலோசித்தல் முதலியனகொள்க. பயன் உள்ளது-

பயனுண்டாவது. சோர்வு இல்வழி - தளர்ச்சியில்லாதவிடத்து. பொச்சா

வாமை - மறவாமை, அஜாக்கிரதைப் படாமை; எதிர்மறைத்தொழிற்பெயர்:

பொச்சா - பகுதி; ஆ - எதிர்மறையிடைநிலை, மை - விகுதி. இதன் உடன்

பாடு - பொச்சாப்பு.

ருஙக. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(இ - ள்.) சிறந்த உவகை மகிழ்ச்சியின் - மிக்க உவகைக்களிப்பான்

(வரும்), சோர்வு - மறவி,—(அரசனுக்கு),—இறந்த வெகுளியின் தீது-அள

விறந்த வெகுளியினுந் தீது; (எ - று.)

மிக்கஉவகை - பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதம் என்றிவற்

றான் வருவது. அளவு - பகைவரையடர்த்தற்கும், கொடியோரையொறுத்தற்கும் வேண்டுவது. இறந்தவெகுளி ஒரோவழிப் பகைவரையும் கொல்லும்;

இஃது அன்னதன்றித் தன்னையே கோறலின், அதனினுந்

தீதாயிற்று.

ருச - ஆம்

அதிகாரம்.—பொச்சாவாமை கஉகூ

(கு - ரை.) உவகைக் களிப்பு - உட்பகைவர்க்கம் ஆறில் மோகத்தால் உண்டாகும் மதம்; இங்கே, உவகை - வரம்புகடந்த மகிழ்ச்சி; களிப்பு அதனாலுண்டாகும் மதிமயக்கம். இவ்விரண்டும், பதினெண்குற்றங்களிலுஞ் சேர்ந்தவை. மறவி - மறதி. அளவுஇறந்த - வரம்புகடந்த. பேரின்பம்-அதிக சுகம். பெருமிதம்-கம்பீரத்தன்மை. அளவு-கோபத்திற்கு அளவாவது. அடர்த்தல் - அழித்தல். கொடியோரை ஒறுத்தல் - துஷ்டரைத் தண்டித்தல். ஒரோவழி - ஒருசமயத்தில். 'பகைவரையும்' என்ற உம்மையால், அளவிறந்த கோபம் தன்னையுங்கொல்லும் என்பது பெறப்படும். இஃது - சிறந்த உவகை மகிழ்ச்சியாலுண்டாகுஞ் சோர்வு.

அன்னது அன்றி—அத்தன்மையதல்லாமல்; பகைவரையும் ஒருகால் அழித்தற்கு உதவாமல், தன்னையே கோறலின் - தன்னைமாத்திரமே அழிக்குமாதலால். அதனினும் - இறந்தவெகுளியினும். அளவுகடவாதவெகுளி அரசர்க்குவேண்டுவதொன்றாதலால், 'இறந்தவெகுளி' என்றார். இறந்த என்னும் பெயரெச்சத்தி லுள்ள இறத்தலென்னுஞ் செயப் படுபொருள்குன்றாவினை ஒருசெயப்படுபொருளை வேண்டிநின்றதனால், 'அளவு' என ஏற்றசொல் வருவிக்கப்பட்டது; இது - அவாய்நிலை யெனப் படும். வெகுளியின் - ஐந்தாமுருபு, எல்லைப்பொருளது. ஏ - தேற்றம். சிறத்தல் - இங்கே, அளவின் மிகுதல். மகிழ்ச்சியின், இன் - ஏது. உவகை, மகிழ்ச்சி, சோர்வு - தொழிற்பெயர்கள்.

(க)

ருஉ. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(இ - ள்.) புகழை - (ஒருவன்) புகழினை, பொச்சாப்பு-(அவன்) மறவி, கொல்லும் - கெடுக்கும்: அறிவினை—, நிச்சம் நிரப்பு—, கொன்றாங்கு - கெடுக்குமாறுபோல; (எ - று.)

நிச்ச நிரப்பு - நாள்தோறும் இரவான்வருந்தித் தன்வயிறு நிறைத்தல். அஃது அறிவுடையான்க ணுண்டாயின், அவற்கு இளிவரவானும் பாவத்தானும் எள்ளற்பாட்டினை விளைத்து, அவன் நன்குமதிப்பினை அழிக்கும்; அது போல, மறவியும் புகழுடையான்கணுண்டாயின், அவற்குத் தற்காவாமையா

னும் காரியக்கேட்டானும் எள்ளற்பாட்டினை விளைத்து, பின்னை அழிக்கும் என்பதாயிற்று.
அவன் நன்கு மதிப்

இவையிரண்டுபொட்டானும், பொச்சாப்பினது குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) நிச்சநிரப்பு - நித்தியதரித்திரம். இரவான் - இரத்தலால். இளிவரவு - அவமானம். எள்ளற்பாடு - இகழப்படுந்தன்மை, நிந்தை. நன்கு மதிப்பு-பெருமை, கௌரவம். தன் காவாமை-தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்ளாமை. நிச்சம் - நித்யம் என்ற வடசொல்லின் சிதைவு; இது, நிச்சல் என்றும் வழங்கும். நிரப்பு - எல்லாப்பொருள்களும் நிரம்பியிருத்தல்; நிரம்பு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்:
இது-எதிர்மறையிலக்கணையால்,
ஒருபொருளுமில்லாமையாகிய வறுமையைக் குறிக்கும்; (அரக்கரை 'புண்ணிய ஜநம்' என்றும், செல்வத்தை 'வெறுக்கை' என்றும், அறிவிலானை 'முழுமகன்' என்றும், பொருமைப்படுதலை 'அழுக்கறுத்தல்' என்றும், அநித்ய





மாகிய உடம்பை 'மெய்' என்றும், செவ்வாய்க்கிழமையை 'மங்களவாரம்'என்

றும் கூறுவனவெல்லாம் இத்தன்மையன.) கொன்றூங்கு - கொன்றலாங்கு,

அல்லது கொன்றதாங்கு என்பது விகாரப்பட்டதென்க. ஆங்கு-உவமவுருபு.

**தொழில்பற்றிவந்த உவமையணி.** வறுமை அறிவைக்கெடுத்தலை, "நீர்மையே

யன்றி நிரம்பவெழுந்த தம், கூர்மையுமெல்லா மொருங்கிழப்பர்—கூர்மை

யின், முல்லையலைக்கு மெயிற்றாய் நிரப்பென்னு, மல்லலடையப்பட்டார்"

என்ற நாலடியாரினுலும் அறிக. நிச்சநிரப்பு அறிவைக் கொல்லுமென்றது -

நித்தியதரித்திரம் ஒருவனுக்கு அறிவுடைமையாலாகும் நன்குமதிப்பினைக்

கெடுக்குமென்றவாறு: அறிவிருந்தும் விளக்கமுறாமற்செய்வதால் நிச்சநிரப்பு

அறிவைக் கொல்வதாயிற்று.

(உ)

௫௩௩. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்

தெப்பானூ லோர்க்குந் துணிவு.

(இ - ள்.) பொச்சாப்பார்க்கு - பொச்சாந்தொழுகுவார்க்கு, புகழ்மை

இல்லை - புகழுடைமையில்லை; அது - அவ்வின்மை, (இந்நீதி நூலுடையார்

க்கேயன்றி), உலகத்து—, எ பால் நூலோர்க்கும் -

எவ்வகைப்பட்டநூலு
டையார்க்கும், துணிவு - ஒப்பமுடிந்தது; (எ - று.)

அரசர்க்கேயன்றி அறம்முதலியநான்கினும்முயல்வார்யாவர்க்கும் அவை கைகூடாமையிற் புகழில்லை யென்பது தோன்ற, 'எப்பானூலோர்க்குந் துணிவு' என்றார்.

(கு - ரை.) அவ்வின்மை - மறவியுடையார்கட்குப் புகழில்லையென்பது.
அரசநீதிகூறிவருகிற சந்தர்ப்பமாதலால்,
'இந்நீதிநூலுடையார்' என்றது -
ராஜநீதிசாஸ்திரங்களெழுதியவர்களை. அறம்முதலியநான்கு - அறம்பொருள்
இன்பம் வீடு என்னும் நால்வகைப் புருஷார்த்தங்கள்.
அவை-அப்புருஷார்த்
தங்கள். புகழ்மை—மை -
உடைமைப்பொருள்காட்டும்விகுதி. உம்மை - முற்
றுப்பொருளது. துணிவு - ஆட்சேபமில்லாமல்
ஒரேவிதமாகநிச்சயிக்கப்பட்ட
விஷயம்; தொழிலாகுபெயர். 'துணிபு' என்றும் பாடம்.

(ரு)

ருகூச. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(இ - ள்.) அச்சம் உடையார்க்கு அரண் இல்லை - (காடு மலை முதலிய) அரண்களுள்ளே நிற்பினும் (மனத்தின்கண்) அச்சமுடையார்க்கு (அவற்றாற்) பயனில்லை; ஆங்கு - அதுபோல, பொச்சாப்பு உடையார்க்கு நன்கு இல்லை -

செல்வமெல்லாம் உடையராயினும் (மனத்தின்கண்) மறவியையுடையார்க்கு (அவற்றாற்) பயனில்லை; (எ - று.)

நன்மைக்கு ஏதுவாகலின், 'நன்கு' என்றார்.

அரண் அழியுமாறுபோல, மறவியுடையாருடைய

அச்சமுடையார் நின்ற
செல்வங்களும் அழியும்
என்பதாயிற்று.

(கு - ரை.) முதலிய என்றதனால், கடல், மதில், நிலம், படை என்ற இவைகளைக் கொள்க. அரண் - பாதுகாப்பு. அவற்றால் - அவ்வரண்களால்.

ருச - ஆம்

அதிகாரம். — போச்சாவாமை கங்க்

பின் உள்ள 'அவற்றால்' என்பதற்கு - அச்செல்வங்களால் என்று பொருள்.

நன்கு - நன்மையை விளைப்பதான செல்வத்துக்குக் காரியவாகுபெயர்.

உவமையணி. அரண் - 'ஶரணம்' என்ற வடமொழியின் சிதைவு. "வன்சார்

புடையரெனினும் வலிபெய்து, தஞ்சார்பிலாதாரைத் தேகுன்றலாகுமோ -

மஞ்சுசூழ் சோலைமலைநாடயார்க்கானும்,
அஞ்சுவார்க்கில்லையரண்" என்பது,

பழமொழி.

௫௩௫. முன்னுறக் காவா திழுக்கியான்
பின்னூ றிரங்கி விடும்.

றன்பிழை

(இ - ள்.) (தன்னாற் காக்கப்படுந் துன்பங்களை), உற
முன் காவாது -
(அவை) வருதற்குமுன்னே (அறிந்து) காவாது,
இழுக்கியான் - மறந்திருந்
தான்,—பின் ஊறு - பின் வந்துஉற்றகாலத்து,
(காக்கலாகாமையின்), தன்
பிழை - அப்*பிழைப்பினை (நினைந்து), இரங்கிவிடும்—;(எ
- று.)

காக்கப்படுந் துன்பங்களாவன - சோர்வுபார்த்துப்
பகைவர்செய்வன.
'ஊற்றின்கண்' என்புழி உருபும் சாரியையும்
உடன்தொக்கன. உற்றகாலத்
துக் காக்கலாகாமையின், 'இரங்கிவிடும்' என்றார்.
இவைமூன் றுபாட்டானும்,பொச்சாப்புடையார்க்கு வரும்
ஏதம் கூறப்பட்டது.

(கு - ரை.) காத்தல் - இங்கே, தடுத்தல்;
"செல்விடத்துக் காப்பான்"
என்ற குறளிற் போல. உற்றகாலத்து - துன்பங்கள்சேர்ந்தகாலத்தில். காக்க
லாகாமையின் - தடுக்கமுடியாமையால். அப்பிழைப்பினை - வருமுன் தான்
அறிந்து காவாதிருந்ததாகிய தன்குற்றத்தை. இரங்கிவிடும் - நிச்சயமாக அநு
தாபப்படுவான்; 'விடு'என்னுந் துணைவினை,
துணிவுப்பொருளை விளக்கிற்று.

சோர்வு - ஏமாந்திருக்குஞ் சமயம். ஊறு என்றதன் ஈற்றில், தொக்க
உருபு - 'கண்': தொக்க சாரியை - 'இன்'. ஏதம் - துன்பம். 'முன்',
'பின்' என்னும் இடைச்சொற்கள், இங்கே காலங்குறித்தன. 'பிழை' என்
பதை பிழைக்கு என விரிக்க. உறுத லென்னும் பொருளை யுணர்த்துகிற
'ஊறு' என்ற முதனிலைதிரிந்ததொழிற்பெயர் - உறுங்காலத்தையுணர்த்திய
தால், தொழிலாகுபெயராம். வருமுன்காப்பவனுயிராமல் வந்தபின் காப்பவனா
யிருப்பவன் வருத்தமுற்றுக் கழிவிரக்கமடைவ னென்பது கருத்து. (௯)

௫௩௬. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னஃதொப்ப தில்.

(இ - ள்.) (அரசர்க்கு), இழுக்காமை - மறவாமைக்குணம், யார்மாட்டு
உம் - யாவர்மாட்டும், என்றுஉம் - எக்காலத்தும், வழுக்காமை வாயின் - ஒழி
வின்றி வாய்க்குமாயின், அஃது ஒப்பது இல் - அதனை யொக்கும். நன்மை
பிறிதில்லை; (எ - று.)

வினைசெய்வார் சுற்றத்தார் என்னும் தம்பாலார்கண்ணும் ஒப்ப வேண்டு
தலின் 'யார்மாட்டும்' என்றும், தாம் பெருகியஞான்றும்

சுருங்கியஞான்றும்
ஒப்ப வேண்டுதலின் 'என்றும்' என்றும், எல்லாக்காரியங்களிலும் ஒப்ப

பி-ம்: * பிழையினை.



வேண்டுதலின் 'வழுக்காமை' என்றுங் கூறினார். 'வாயின்
' என்பது - முத
னிலைத் தொழிற்பெயரடியாக வந்த வினையெச்சம்;
வாய்த்தல் - நேர்படுதல்.
(கு - ரை.) யாவர்மாட்டும் - எல்லார்விஷயத்திலும்.
அதனை - அந்த
மறவாமைக்குணத்தை. தம்பாலார்கண்ணும் -
தம்மைச்சேர்ந்தவரிடத்திலும்;
உம்மை - பகைவரிடத்து மாத்திரமேயன்றி என்ற
கருத்தைத் தெரிவிக்கும்.
ஒப்ப வேண்டுதலின் - ஒருதன்மையாகவே
வேண்டியிருத்தலால், பெருகிய
ஞான்றும் - (செல்வம் முதலியவற்றால்)
அபிவிருத்தியடைந்தபொழுதும்.
சுருக்கிய ஞான்றும் - (அவற்றாற்)
குறைவடைந்தபொழுதும். 'வாயின்'
என்பதற்கு எழுதியுள்ள இலக்கணம், இக்காலவழக்கிற்கு
ஏலாது; 'வாய்ப்
பின்' என்றாவது, 'வாய்க்கின்' என்றாவது விகுதி

யாதாயினும் ஒரெழுத்தை
ஊர்ந்து வாராமையின், இங்ஙனங் கொள்ளப்பட்டது
போலும்: இனி,
'வினைப்பகுதியெல்லாந் தொழிற்பெயர்ப் பொருள்பட்டு
நிற்றலால், முதனி
லைத்தொழிற்பெயரடியாக என்றார்' என்பாருமுளர்.
இழுக்காமை-தொழிற்
பெயர். வழுக்காமை - வினையெச்சம்.
ஒப்பது-வினையாலணையும்பெயர். 'அது
வொப்பது' என்று பாடமோதுவாருமுளர்.
(சு)
௫௩௭. அரியவென் றாகாத வில்லைபொச்
சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.
(இ - ள்.) அரிய என்று - (இவை செய்தற்கு)
அரியனவென்று சொல்
லப்பட்டு, ஆகாத - (ஒருவற்கு) முடியாத காரியங்கள்,
இல்லை—: பொச்
சாவா கருவியான் - மறவாத மனத்தானே, போற்றி -
எண்ணி, செயின் -
செய்யப்பெறின்; (எ - று.)
'பொச்சாவாத' என்பதன் இறுதிநிலை, விகாரத்தால்
தொக்கது. அத்தக்
கரணமாகலின், 'கருவி'என்றார். இடைவிடாதநினைவும்
தப்பாதசூழ்ச்சியும்

உடையார்க்கு எல்லாம் எளிதின்முடியுமென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், பொச்சாவாமையது

சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) இறுதிநிலை - இங்கே,

தகரஎழுத்துப்பேற்றோடு கூடிய

அகரவிகுதி. அந்தக்கரணம் - அகக்கருவி. தப்பாத -

தவறாத. சூழ்ச்சி - உபா

யம், ஆலோசனை. அரிய, ஆகாத - 'அன்' சாரியை

பெறாத பலவின்பாற்

பெயர்கள். 'என்று' - செயப்பாட்டுவினைப்பொருளில்

வந்த செய்வினை.

'செயின்' என்றது, செய்தலின் அருமை விளக்கும்.

தொல்காப்பியத்துச்

சொல்லதிகாரத்து வினையியலில்

"நிலனும்பொருளும்" என்ற சூத்திரத்தின்

உரையில், "நின்முகங்காணுமருந்தினேன்" என்புழி,

காட்சியை மருந்

தென்றாதலின், 'காணுமருந்து' என்பது -

வினைப்பெயர்கொண்ட

தாம்; "பொச்சாவாக்கருவியாற் போற்றிச்செயின்" என்புழி

'பொச்சாவாக்

கருவி' என்பதும் அது' எனச் சேனாவரையரும், ''பொச்சாவாக்கருவியாற் போற்றிச்செயின்'' என்பது கருவிக்கண் அடங்கும்' என நச்சினார்க்கினியரும் உரைத்தவாற்றை நோக்குமிடத்து, 'பொச்சாவாக்கருவி' என்பதற்கு-பொச்சாவாமையாகியகருவி என்று பொருள்கொண்டனர் அவ்வாசிரியர்களென்பது பெறப்படும். (எ)

## ருச - ஆம்

## அதிகாரம்.—பொச்சாவாமை கருரு

ருருஅ. புகழ்ந்தவை போற்றிச்
செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

(இ - ள்.) புகழ்ந்தவை - (நீதிநூலுடையார் இவை அரசர்க்குஉரியன என்று) உயர்த்துக்கூறிய செயல்களை, போற்றி செயல்வேண்டும் - கடைப்பிடித்துச் செய்க: செய்யாது இகழ்ந்தார்க்கு - (அங்ஙனஞ்) செய்யாது மறந்தவர்க்கு, எழுமைஉம் - எழுமையினும், இல்-(நன்மை) இல்லை, (ஆகலான்).

அச்செயல்களாவன-மூவகையாற்றலும், நால்வகையுபாயமும், ஐவகைத் தொழிலும், அறுவகைக்குணமும் முதலாய செயல்கள். சாதிதருமமாகிய இவற்றின் வழீஇயோர்க்கு உள்ளது நிரயத்துன்பமே யாகலின், 'எழுமை யும் இல்' என்றார். எழுமை - ஆகுபெயர்.

இதனுன், பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன.

(கு - ரை.) கடைப்பிடித்து-மறவாமல் உறுதியாகப்பிடித்து. எழுமை - ஏழுபிறப்பு; ஒருவன் ஒருபிறப்பிற்செய்த கருமத்தின் பயன் ஏழுபிறப்பு வரையிலும் அவனுயிரைத் தொடர்தல் கூடும் என்பது, ஒருசார்நூல் துணிபு; கீழ் "எழுமை யெழுபிறப்பு முள்ளுவர்" என்ற குறளில் 'எழுமை யென்றது - வினைப்பயன் தொடரும் ஏழுபிறப்பினை; அது, வளையாபதியுட் கண்டது' என்றும், "ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின், எழுமையு மேமாப் புடைத்து" என்ற குறளில் 'ஒருமைக்கண் செய்த வினையின் பயன் எழுமையுந்தொடருமென்பது, இதனுன் அறிக' என்றும், "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற்கு, எழுமையு மேமாப் புடைத்து" என்ற குறளில் 'வினைகள்போல உயிரின்கட் கிடந்து அது புக்குழிப் புகு மாகலின், 'எழுமையுமேமாப்புடைத்து' என்றார்; எழுமை மேலே கூறப்பட்டது' என்றும் கூறிப்போந்தார் பரிமேலழகர். மூவகை ஆற்றல் - அறிவு ஆண்மை பெருமை என்னும் மூன்றுவிதமான சக்திகள்; சஅக-ஆங் குறளி னுரையிற் கூறினர். நால்வகை உபாயம் - கொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறு படுத்தல், ஒறுத்தல் என்பன; இவற்றை வடநூலார்தாக ஸாம பேத தண்டம் என்பர்; சஅஎ - ஆங் குறளி னுரையிற் கூறியதுஉணர்க.

ஐவகைத்தொழில் - சிறியமுயற்சியினவும், செய்தாற்பயனுள்ளனவும், பயன்பெரிதாயினவும், பயனில்ஐயமில்லாதனவும், பின்புஇன்பம்விளைப்பனவும் என இவை; ௬௬௬- ஆங் குறளி னுரைகொண்டு அறிக. தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்தில் "ஐவகைமரபி னரசர் பக்கமும்" என்றதனாற் குறிக்கப்பட்ட ஓதல், வேட்டல், ஈதல், காத்தல், தண்டஞ்செய்தல் என்ற ஐந்துதொழில்களைக் கொண் டாருமுளர். இனி, ஐவகைத் தொழில் - மேல் 'வினைசெயல்வகை' என்னும் ௬௮ - ஆம் அதிகாரத்தில் "பொருள் கருவி காலம் வினை யிடனோ டைந்தும், இருடீர வெண்ணிச் செயல்" என்னுங் குறளிற் கூறும் பொருள் படை காலம் வினை இடம் என்னும் ஐந்தையும் தனித்தனி எண்ணிச்செய்யுஞ் செய்கைகள் என்று உரைத்தலும் சிறவாது. அறுவகைக்குணம் - நட்பாக்கல், பகை யாக்கல், மேற்செல்லுதல், இருத்தல், பிரித்தல், கூட்டல் என்பன; ௬௮௫- ௬௩௬

திருக்குறள்

ஆங் குறளினுரையிற் கூறினர். வழீஇயோர்க்கு - தவறியவர்க்கு. நிரயம்-நரகம். எழுமை - ஏழுபிறப்பை யுணர்த்தியதனால், எண்ணலளவை யாகு பெயர். இங்கே 'எழுமை' என்றது - ஏழின்தன்மையைக் குறியாமல் ஏழென்னும்எண்ணையே குறித்ததனால், இதிலுள்ள 'மை'விகுதி - தன்மைப் பொருள்விகுதியன் றென்றும், தனக்கெனவேறுபொருளுணர்த்தாத பகுதிப்பொருள்விகுதியா மென்றும் அறிக. செயல்வேண்டும் என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு, செய்க வென்று உரைத்தார்; "ஓதல் வேண்டும்" என்னுங் குறளி னுரையில் 'ஓதல்வேண்டும் என்பது-ஒருசொல் நீர்மைத்து' என இலக்கணங் கூறுமாறு காண்க. இதற்கு, அரசன் - தோன்றாஎழுவாய். இனி, செயல் வேண்டும் என இருசொல்லாக்கொண்டு, செய்தல் இன்றியமையாதென எழுவாயும் பயனிலையுமாக உரைப்பினும் அமையும். இவ்வுரைக்கு, 'வேண்டும்' என்பது - ஒருவகைவியங்கோளாம். எழுமையும்— உம்மை - முற்றுப்பொருளது. 'இல்' என்னும் பயனிலைக்கு ஏற்ப, 'நன்மை' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. "உற்றிடுமாற்றன் மூன்று மூபாயங்களுன்கு நன்மை, பற்றியதொழில்களைந்தும் பண்புறுகுணங்களாறும், மற்றையவனைத்துங்கேடாம் வளர்பிறப்பேழன் கூறும், பற்றியான்மையின்றும் பாழ்த்த பொச்சாப்புச்சாரின்" என்றது இங்குக் காணத்தக்கது. (அ)

௫௩௯. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(இ - ள்.) (அரசர்),—தம் மகிழ்ச்சியில் - தம் மகிழ்ச்சிக்கண், தாம் மைந்துஉறும் போழ்து-தாம் வலியுறும்பொழுது, இகழ்ச்சியின் கெட்டாரை-(முற்காலத்துஅதனின்ஆய) சோர்வாற் கெட்டவர்களை, உள்ளுக - நினைக்க.

காரணங்களோடு அவர்க்குஉளதாய உரிமையை மகிழ்ச்சிமேல் ஏற்றி 'தம் மகிழ்ச்சியில்'என்றும், இகழ்ச்சியும் கேடும் உடன்தோன்று மாகலின் 'மகிழ்ச்சியின் மைந்துறும்போழ்து' என்றுங் கூறினார். கெட்டாரை உள்ளவே, நாமும் அவ்வாறே கெடுது மென்று அதன்கண் மைந்துறா ரென்பது, கருத்து. 'எண்ணுக' என்று பாடமோதுவாரும் உளர்.

(கு - ரை.) தம் மகிழ்ச்சிக்கண் தாம் வலிஉறும்பொழுது-தமது செல்வம் முதலியவற்றா லாகிய உவகைக்களிப்பில் தாம் மிக்குநிற்குங்காலத்திலே.

அதனின் ஆய சோர்வால் - அம்மகிழ்ச்சியா லுண்டாகிய மறதியால். காரணங்களோடு - (மகிழ்ச்சிக்குக்) காரணமான செல்வம் இன்பம் வீரம் என்ற இவற்றோடு. மகிழ்ச்சியென்பது-உபசாரவழக்கு. அவர்க்கு-அரசர்க்கு. உரிமை-உரியசம்பந்தம். மகிழ்ச்சியில் மிக்குநிற்கும்போது, இகழ்ச்சியும் கேடும் உடன் தோன்று மென்க. உள்ளவே-நினைக்கவே. கெடுதும்-கெடுவோம். அதன்கண் மைந்துஉறூர் - மகிழ்ச்சியில் வலியுற்றுநில்லார். 'எண்ணுக' என்ற பாடத்துக்கும்-நினைக்கவென்றே பொருள்; அந்தப்பாடம், மோனைத்தொடைக்குச் சிறக்கும். இகழ்ச்சியின்—இன்-ஐந்தனுருபு, ஏது. மகிழ்ச்சியில்—இல்-ஏழனுருபு. மைந்து - வலிமை. இகழ்ச்சியிற்கெட்டார் - இரணியன், சூரபதுமன், இராவணன், துரியோதனன், சச்சந்தன் முதலியோர்.

"இகழ்ச்சியிற் கெடுவார்களை யெண்ணுக, மகிழ்ச்சியுண் மதி மைந்துறும்போதெனப், புகழ்ச்சி நூலுட் புகன்றனர் பூவினுள், திகழ்ச்சிசெல் பொன்மணிமுடி மன்னனே"

என்பர் சூளாமணியிலும். (கூ)

## ருரு - ஆம் அதிகாரம்.—செங்கோன்மை

கஙரு

ருசுO. உள்ளிய செய்த லெளிதுமன்

மற்றுந்தா

ஹுள்ளிய துள்ளப் பெறின்.

(இ - ள்.) (அரசனுக்கு), உள்ளியது எய்தல் - (தான் எய்த) நினைத்த பொருளை (அந்நினைத்தபெற்றியே) எய்துதல், எளிது மன் - எளிதாம்: மற்று உம் தான் உள்ளியது உள்ள பெறின் - பின்னும் அதனையே நினைக்கக்கூடு மாயின்; (எ - று.)

அது கூடாதென்பது ஒழிந்துநின்றமையின், மன் - ஒழியிசைக்கண் வந்தது. அதனையே நினைத்தலாவது - மறவியின்றி அதன்கண்ணே முயறல்.

இவையிரண்டுபாட்டானும், பொச்சாவாமைக்கு உபாயம் கூறப்பட்டது.

(கு - ரை.) எய்த - அடைய. நினைத்தபெற்றியே - எண்ணியபடியே.

அதுகூடாது என்பது - அங்ஙனம்ஒருபொருளையே மறதியின்றி இடைவிடாது ஞாபகத்திற்கொண்டுமுயலுத லரிது என்பது. ஒழியிசை-சொல்லப்படாமல் ஒழிந்துநின்ற பொருளைக் குறித்தல். மன் என்னும் இடைச்சொல் ஒழியிசைப்பொருளதாதலை, "கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென், றம்

மூன்றென்ப மன்னைச்சொல்லே'' என்ற தொல்காப்பியத்தால் அறிக. அதன் கண்ணே முயறல் - எய்தகினைத்த அப்பொருள் விஷயத்திலேயே முயற்சி செய்தல். உள்ளியது - வினையாலணையும் பெயர். (௫௦)

## ௫௫ - ஆம்

## அதிகாரம்.—செங்கோன்மை.

அஃதாவது - அரசனாற்செய்யப்படும் முறையினது தன்மை; அம்முறை ஒருபாற்கோடாது செவ்வியகோல் போறலின், செங்கோலெனப்பட்டது; வடநூலாரும் 'தண்டம்' என்றார். அது சோர்வில்லாத அரசனாற்செயற்பால தாகலின், இது, பொச்சாவாமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) முறை - நீதி. ஒருபால் கோடாமை - இராசநீதிக்கு ஒருதலையிற் பக்ஷபாதங்கொள்ளாமையும், கோலுக்கு ஒருபக்கத்திற் கோணியிராமையும் ஆம். செவ்வியகோல்போறலின் - நேர்மையுடைய கோலையொத்தலால்.

விகுதி.

செங்கோல் - உவமவாகுபெயர்; மை - தன்மைப்பொருள்காட்டும் செங்கோலுக்கு எதிர்மொழி-கொடுங்கோல்; ஒருபக்கத்திற் கோணாத

லுடைய கோல்போல ஒருபக்கத்திற் பக்ஷபாதமுடைய கோலின்பெயர், அரசாட்சிக்கு வந்தது.

அரசாட்சி. தண்டம் -

ருசக.

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(இ - ள்.) (தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால்), ஓர்ந்து - (அக்குற்றத்தை) நாடி, யார்மாட்டுஉம்-யாவர்மாட்டும், கண்ணோடாது—, இறை புரிந்து-



நடுவுநிலைமையைப் பொருந்தி, தேர்ந்து - (அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடும்) ஆராய்ந்து, செய்வஃதுஎ - அவ்வளவிற்றாகச் செய்வதே, முறை - முறையாம்; (எ - று.)

நடுவுநிற்றல் இறைக்குஇயல்பாகலின் அதனை 'இறை' என்றும், உயிரி

னுஞ்சிறந்தார்கண்ணும் என்பார் 'யார்மாட்டும்' என்றுங் கூறினர். இறைமை-

இறை எனவும், செய்வது - செய்வஃது எனவும்

கின் றன.

இதனான், செங்கோன்மையது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) நாடி - ஆராய்ந்தறிந்து. கண்ணோடாது - தாக்ஷிணியப்படா மல். கீழ் 'குற்றங்கடிதல்' என்ற அதிகாரத்தில் "மாணு, வுவகையு மேத மிறைக்கு" என்றவிடத்தில், 'அளவிறந்தஉவகையாவது - கழிகண்ணோட்டம்' என்றதனால், இராசநீதி செலுத்துகையில், தாக்ஷிணியப்படுதல் குற்ற

மெனக் கூறப்பட்டது. நடுவுநிலைமை - பக்ஷபாதமில்லாத தன்மை; மத்யஸ்த னயிருத்தல். தண்டம் - தண்டனை. நூலோர்-சாஸ்திரங்களில்வல்ல மந்திரிக ளும், புரோகிதர்களும். அவ்வளவிற்றாக - நூலோர் சொன்ன அளவினை யுடையதாக. அதனை - நடுவுநிற்றலை. இறை - அரசன்; இச்சொல் - இங்கே அவன் தன்மையைக் குறித்தலால், இதனை 'இறைமை' என்பதன் விகார மாகக்கொண்டார். இறை - தொகுத்தல்விகாரமும், செய்வஃது - விரித்தல் விகாரமுமாம். இனி, அரசனுக்கு உரிய குணமாகிய நடுவுநிலைமையை 'இறை' என்ற குணிப்பெயரால் இங்கே கூறியது, பண்பு பண்பியாகக் கூறப்பட்ட உபசாரவழக்கு எனினுமாம். கண்ணோடாது—கண்ணோடு - பகுதி. 'கண் ணோட்டமாவது - தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர்கூறியன மறுக்க மாட்டாமை;இஃது,அவர்மேற் கண் சென்றவழி

நிகழ்வதாகலின், அப்பெயர்
த்தாயிற்று' என மேற் கண்ணோட்டமென்னும் அதிகாரத்தில் உரைப்பது
காண்க. புரிக்கியார் மாட்டும் - குற்றியலிகரம். ஏ - பிரிநிலை. (க)

௫௪௨. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(இ - ள்.) உலகு எல்லாம் - உலகத்து உயிரெல்லாம், வான் நோக்கி
வாழும் - மழைஉளதாயின் உளவாகாநிற்குமே: (எனினும்), குடி - குடிகள்,
மன்னவன் கோல் நோக்கி
வாழும்-அரசன்செங்கோல்உளதாயின் உளவாகா
நிற்கும்; (எ - று.)

நோக்கி வாழ்தல் - இன்றியமையாமை. வானின்ஆய உணவை 'வான்'
என்றும், கோலின்ஆய ஏமத்தை 'கோல்' என்றுங் கூறினர். அவ்வேமம்
இவ்வழி உணவு உளதாயினும் குடிகட்கு அதனாற் பயனில்லை யென்பதாம்.

(கு - ரை.) இன்றி அமையாமை - இல்லாமற் கூடாமை; அதியவசிய மாகக் கொண்டிருத்தல். வானின்
ஆய - மழையினா லுளதாகிற. கோலின்
ஆய ஏமம் - அரசுமுறைமையா லுளதாகும் பாதுகாப்பு. உலகத்து உயிர்க ளெல்லாவற்றிற்கும் மழை இன்றியமையாததலை "வானின் றுலகம் வழங்கி வருதலால்" என்று தொடங்கி "நீரின் றமையாதுலகெனின் யார்யார்க்கும்,

வானின் றமையா தொழுக்கு" என்பது இறுதியாகக் கீழ் 'வான்சிறப்பு' என்னும் அதிகாரத்திற் பரக்கக்கூறிப்போந்தார்; "மழையின்றி மாநிலத் தார்க் கில்லை" என்ற நான்மணிக்கடிகையையுங் காண்க. இப்பாட்டுக்கு - உலகமெல்லாம் வானேக்கிவாழ்தல்போல, குடிகள் செங்கோல்நோக்கி வாழும் என எடுத்துக்காட்டுவமைபட உரைத்தலும் பொருந்தும்; பின் ருௗ - ஆங் குறளி னுரையில் 'மேல் "வானேக்கிவாழும்" என்றதனை எதிர் மறை முகத்தாற் கூறியவாறு' என உரைப்பது காண்க. "கோனேக்கி வாழுங் குடியெல்லாந் தாய்முலையின், பானேக்கி வாழுங் குழவிகள்-வானத் துளிநோக்கி வாழு முலக முலகின், விளிநோக்கி யின்புறூஉங் கூற்று" என்ற நான்மணிக்கடிகைச்செய்யுளையுங் காண்க. மன்னவன்கோல்நோக்கிக் குடிவாழ்தலையும், வானேக்கி உலகெல்லாம் வாழ்தலையும், குலசேகரர், "தானேக்கா தெத்துயரஞ் செய்திடினுந் தார்வேந்தன், கோனேக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே" என்றும், "எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" என்றும் உவமையாக எடுத்துக்கூறியுள்ளார். வான் என்னும் ஆகாயத்தின்பெயர் - அங்கு உள்ள மேகத்துக்கு இடவாகுபெயரும், பின்பு

அதுபெய்யும் மழைக்குக் காரணவாகுபெயருமாய் இருமடியாகுபெயராம். நிலத்தையும் உயிர்களையும் ஒழுக்கத்தையும் உணர்த்திநிற்கும் பலபொருளொருசொல்லாகிய 'உலகு' என்பது - இங்கு 'வாழும்' என்றதனால், மண்ணுலகத்துவாழும் சீவான்மாக்களை யுணர்த்திற்று. 'உலகு'என்பது - பால்பகாஅஃறிணைப்பெயராதலின், 'எல்லாம்'என்னும் பன்மைச்சொல்லோடு தொடர்ந்தது. (௨)

௫௪௩. அந்தணர் நூற்கு மறத்திற்கு
நின்றது மன்னவன் கோல்.

மாதியாய்

(இ - ள்.) அந்தணர் நூற்குஉம் - அந்தணர்க்கு உரித்தாய வேதத்திற் கும், அறத்திற்குஉம் - (அதனாற் சொல்லப்பட்ட) அறத்திற்கும், ஆதி ஆய் - காரணமாய், நின்றது - நிலைபெற்றது, மன்னவன் கோல்-அரசனாற் செலுத் தப்படுகின்ற செங்கோல்; (எ - று.)

அரசர் வணிகர் என்னும் ஏனையோர்க்கும் உரித்தாயினும், தலைமைபற்றி 'அந்தணர் நூல்' என்றார். மாதவர்நோன்பு மடவார்கற்பும், காவலன் *காவலன்றித் தங்காவலான் ஆகலின், ஈண்டு 'அறம்' என்றது, அவையொழிந்த வற்றை. வேதமும் அறனும் அநாதியாயினும் செங்கோல்இல்வழி நடவா ஆகலின், அதனை அவற்றிற்கு ஆதி என்றும், அப்பெற்றியே தனக்கு ஆதியா

வது: பிறிதில்லை யென்பார் 'நின்றது' என்றும் கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) அந்தணர் - பிராமணர்; அழகிய தண்மையை யுடையவரெ ன்று காரணப்பொருள்படும். அம் - அழகு; தண் - தண்மை யென்னும் பண்புப்பெயரின் அடி: தண்மை - குளிர்ச்சி; இங்கே, அருள். இச்சொல்-அருளை

பி - ம்: * காவலன்றித் தங்கா, காவலிற்றங்கா





யுடைய பலர்க்கும் பெயராக வழங்கத்தக்கதாயினும், பிராமணர்கட்கே யுரிய தாக வழங்குதலால், காரணவிடுகுறிப்பெயராம். இப்பெயர்க்கு 'அந்தத்தை யணவுவார் அந்தணர்: என்றது, வேதாந்தத்தையே பொருளென்று மேற் கொண்டு பார்ப்பார் என்றவாறு' என்று காரணங்கூறுவர் நச்சினார்க்கினியர். வேதத்தை ஓதுதல் ஓதுவித்தல் என்னும் இருதொழிற்கும் உரியவர் அந்த ணரே யாதலால், வேதம் 'அந்தணர்நூல்' எனப்பட்டது. அந்தணர் வேதிய ரென்றும், மறையோ ரென்றும், நான்மறையாளரென்றும் வழங்கப்படுதலுங் காண்க. உரித்து - உரியது. ஏனையோர் - மற்றையோர். தலைமை-முதன்மை; இங்கே, ஓதுதற்கும் ஓதுவித்தற்கும் அதிகாரமுடைமை. க்ஷத்திரியரும் வைசியரும் ஓதுதற்கு மாத்திரமும், சூத்திரர் பொருள்கேட்டற்குமாத்திரமும் அதி காரிகளென்பது

னூற்கொள்கை. "மாதவர் நோன்பு...காவல்" என்ற தொடர், மணிமேகலை உ-ஆவது காதையில் வருகின்றது: மாதவர்நோன்பும் மடவார்கற்பும் காவலன் காவலன்றித் தங்காவலானுகலான் - பெருந்தவமுடையராய முனிவரது விரதாநுட்டானமும், மடமைக்குணமுடையராய மகளிரது கற்புநிலைமையும் என்னுமிரண்டும் அரசன் பாதுகாவலினுல் அல்லாமல் தம்மனக்காவலினு லாகையால்:
"சிறைகாக்குங்காப்பு எவன்செய்யும் மகளிர், நிறைகாக்கும் காப்பே தலை" என்றதனுல், மகளிர் கற்புக்கு அவர் மனநிலையேயன்றிப் பிறகாவல்கள் தலைமையாகாமை கூறப்பட்டது; தவத்திற்கும் இங்ஙனமே காண்க. முனிவரொழுக்கமும், மகளிர் கற்பும் உண்டாதற்குக் காரணம் அவரவர்மனநிலையே யாதலின், அவை அரசனுலுகையால் உண்டாகமாட்டா என்க; என்றாலும், அவை நிலைபெறுதற்கு உதவியாகமாத்திரம் அரசனுளுகை நிற்பதனுல் "அருந்திறலரசர் முறைசெயினல்லது, பெரும்பெயர்ப்பெண்டிர்க்குக் கற்புச்சிறவாது", "தவமும் அரசிலாரில் வழியில்லை" என்பவைமுதலாயின வந்துள்ளனஎன்க. அவை யொழிந்த

வற்றை - முனிவர்நோன்பும் மகளிர்கற்பும் தவிர மற்ற அறங்களை. அநாதி - மிகப்பழமையானது; தொன்றுதொட்டு உள்ளது. நடவா - பயிலவழங்கா. அப்பெற்றியே - வேதத்தையும் வேதத்தாற் கூறப்படுகின்ற அறத்தையும் நடத்துதலாகிய அத்தன்மையே, தனக்குஆதியாவது - அரசன் செங்கோலுக் குக் காரணமாவது: பிறிது இல்லை - வேறொருவகையாவில்லை. வேதத்தையும் வேதத்தான்

கூறப்பட்ட அறத்தையும் நடைபெறச்செய்வது குறித்துச் செங்கோலை அவற்றிற்குக் காரணமென்றாரென்க. (௩)

௫௪௪. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
னடிதழீஇ நிற்கு முலகு.

(இ - ள்.) குடி-தன்குடிகளையும், தழீஇ - அணைத்து, கோல் ஓச்சும் - செங்கோலையுஞ் செலுத்தும், மா நிலம் மன்னன் - பெருநிலவேந்தன், அடி-அடியை, தழீஇ - பொருந்தி, நிற்கும் - விடார்: உலகு - உலகத்தார்; (எ-று.)

அணைத்தல் - இன்சொற் சொல்லுதலும், தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. இவ்விரண்டனையும் வழுவாமற் செய்வான் நில

௫௫ - ஆம்

அதிகாரம்.—செங்கோன்மை கஙகூ

மூழுதும்ஆளு மாகலின் அவனை 'மாநிலமன்னன்' என்றும், அவன்மாட்டு யாவரும் நீங்காஅன்பினராவர் ஆகலின், 'அடிதழீஇ நிற்கு முலகு' என்றுங் கூறினர்.

(கு - ரை.) குடிகள் - நாட்டுச்சனங்கள். அணைத்து - அன்போடு ஆதரித்து. பெருநிலவேந்தன் அடியை -

பெரியஇராச்சியத்துஅரசனது பாதங்
களை. தளர்ந்தஉழி - தளர்ச்சியடைந்தவிடத்து.
முதலாயின என்றதனுல் கள்
வர் முதலியோரால் தீங்குண்டாகாதவாறு காத்தலைக்
கொள்க. நிலம்-பூலோ
கம். தழீஇ - தழுவி. சொல்லிசையளபெடை.
(ச)

ருசரு. இயல்புளிக் கோலோச்சு மன்னவ
னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

(இ - ள்.) பெயல்உம்-பருவமழையும்,
விளையுள்உம்-குன்றாத விளைவும்,
—தொக்கு - ஒருங்குகூடி, இயல்புஉளி - (நூல்கள்
சொல்லிய) இயல்பால்,
கோல் - செங்கோலை, ஓச்சும் - செலுத்தும்,
மன்னவன்-அரசனது, நாட்ட-
நாட்டின் கண்ணவாம்; (எ - று.)
'உளி' என்பது - மூன்ருவதன் பொருள்
படுவதோர் இடைச்சொல்.
வானும் நிலனும் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கும்
என்பதாம்.

(கு - ரை.) பருவமழை - காலந்தவருமற்
பெய்கிற மழை. குன்ருத -
குறையாத. நாட்டின்கண்ண - நாட்டில்உள்ளன.

மூனருவதன - மூனரும
வேற்றுமையின். வான் தொழிற்படுதல் -
மழைபெய்தல். நிலம் தொழிற்
படுதல் - விளைதல். 'இயல்புளி' என்பதில்,
உளி என்பது - கருவிப்பொரு
ளில்வந்த மூன்றும்வேற்றுமைச் சொல்லுருபின்பாற்படும்; 'கொண்டு, பொ
ருட்டு, உடைய, உளி, மாறு, ஒடு, ஓடு, கண்
முதலியனவும் உவமவுருபுகளும்
சொல்லே உருபாஞற்போல வென்க' என்ற
இலக்கணக்கொத்துரையைக்
காண்க. வான்தொழிற்பட்டு வளஞ்சுரத்தல் - மேகம்
பெய்யவேண்டிய
காலத்தில் தவருது மழை பெய்தல். நிலம்
தொழிற்பட்டு வளஞ்சுரத்தல் -
வயல்கள் விளையவேண்டிய காலத்தில் நன்கு விளைதல்.
நாட்ட - பலவின்
பாற் குறிப்புமுற்று. பெயல் - பெய்தல், விளையுள் -
விளைதல். (ரு)

ருசசு. வேலன்று வென்றி தருவது
மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

(இ - ள்.)
மன்னவன் - மன்னவனுக்கு, வென்றி தருவது - (போரின் கண்) வென்றியைக் கொடுப்பது, வேல் அன்று-(அவன் எறியும்) வேலன்று:

கோல்—; அதூஉம் - அஃதும், (அப்பெற்றித்தாவது), கோடாது எனின் -

(தான்) கோடாதாயின்; (எ - று.)

கோல் செவ்விதாயவழியே வேல் வாய்ப்பது என்பார், 'வேலன்று' என்றார்; "மாண்ட, அறநெறி முதற்றே அரசின்கொற்றம்" என்றார் பிறரும்.

'கோடான்' என்பது நின்றதாக உரைக்க.

பாடமாயின், கருவியின்தொழில் வினைமுதல்மேல்



(கு - ரை.)
அச்செங்கோலும்

கோல் - செங்கோல். அஃதும் அப்பெற்றித்து ஆவது - அத்தன்மையது [வெற்றிதருந்தன்மையது] ஆவது. கோடாதாயின் - கோணுதிருக்குமானல். செவ்விதாயவழியே - நேரான்தாயிருந்தபொழுதே. வாய்ப்பது - வெற்றிதருவது. என்பார் - என்று சொல்லவந்தவர். "மாண்ட; அறநெறி முதற்றே அரசின்கொற்றம்" என்பது - புறநாநூறு, ருரு - ஆம் பாட்டில் உள்ளது; மாட்சிமைப்பட்ட தருமமார்க்கத்தைப் பிரதானகாரணமாகவுடையது அரசரது வெற்றியென்று பொருள்.

இம்மேற்கோள், கீழ் 'இறைமாட்சி' என்ற அதிகாரத்தில் "அறனிழுக்காதல்லவை நீக்கி" என்ற குறளின் உரையிலும் எடுத்து ஆளப்பட்டுள்ளது.

கருவி - இங்கே, கோல். வினைமுதல் - கருத்தா; இங்கே, மன்னவன்.

'வென்றிதருவது' என்பது - மத்திமதீபமாக, முன்னுள்ள 'வேலன்று' என்றதனேடும், பின் நிற்கும் 'மன்னவன்கோல்' என்பதனேடும் இயையும். 'அதுவும்' என்பது, 'அதுஉம்' என விகாரப்பட்டு அளபெடுத்தது, இன்னிசையளபெடை. (சு)

ருசஎ. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

(இ - ள்.) வையகம் எல்லாம் - வையகத்தை யெல்லாம்; இறை காக்கும் - அரசன் காக்கும்; அவனை - அவன் தன்னை, முறை காக்கும் - (அவனது) செங்கோலே காக்கும்: முட்டா செயின் - (அதனை *முட்டுவந்துழியும்)
முட்டாமற் செலுத்துவனாயின்; (எ - று.)
முட்டாமற் செலுத்தியவாறு - மகனை
முறைசெய்தான் கண்ணும், தன்
கைகுறைத்தான் கண்ணுங் காண்க. 'முட்டாது' என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது.

இவை நான்குபாட்டானும், அதனைச் செலுத்தினான் எய்தும் பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) வையகம் - உலகம். அவன் தன்னை-அவனை. முட்டு வந்துழியும் - தடை நேர்ந்தபோதும். முட்டாமல் - தடைப்படாதபடி. அதனைச் செலுத்துவனாயின் என இயைக்க.

மகனை முறைசெய்தான் கண்ணும் - நீதிதவறாது தன்புத்திரனை மரண தண்டனைசெய்த மனுநீதிச்சோழனிடத்தும். அவ்வரலாறு வருமாறு:— சோழநாட்டிலே திருவாரூரில் அரசியற்றிய மனுநீதிகண்டசோழனென்னும் அரசனது புத்திரன் [வீதிவிடங்கன்] இளம்பிராயத்தில் ஒருநாள் தேரிலேறி வீதியிற்செல்லுகையில், ஒருபசுக்கன்று துள்ளிவந்து அத்தேர்க்காலினடியில் அகப்பட்டு இறந்தது; அதுகண்ட தாய்ப்பசு மிகவருந்திற்று; அதனையறிந்தஇராசகுமாரனும் மிகவும்மனம்வருந்தினன்; இப்படியிருக்கையில், கன்றையிழந்த பசு, அத்துன்பம்பொறுக்கமாட்டாமற் கதறிக்கொண்டு கண்ணீர்பெருக ஓடிச்சென்று அரசனது அரண்மனைவாயிலிற் கட்டியுள்ள ஆரா

---

* பி - பா முட்ட

ய்ச்சிமணியைத் தன்கொம்பினால் அடித்தது; அவ்வொ
லிகேட்ட மன்னவன், விரைந்துவந்து, அங்கிருந்த
ஒருமந்திரியால் நடந்தசெய்தியை அறிந்து,
அந்தப்பசுவின்முகத்தைப் பார்த்துப்பார்த்து மனந்தளர்ந்து
'இதற்குப் பரிகாரம் யாது?' என்று மந்திரிகளைக் கேட்க,
அவர்கள் 'கோவதத்திற்குத் தருமசாஸ்திரங்களில்
விதிக்கப்பட்ட பிராயச்சித்தத்தைக் குமாரனுக்குச்
செய்விப்பதே தருமம்' என்றார். வேந்தன்
'இந்தப்பிராயச்சித்தம், கன்றை யிழந்து அலறுகிற
இப்பசுவின் துன்பத்திற்கு ஈடாகாது; இப்பசு தன்
கன்றையிழந்து துயரடைதல் போல, நானும்
என்மகனையிழந்து துயரடைவதே நீதி'என்றுசொல்லி,
தனதுபுத்திரனை அங்குவரவழைத்து, ஒரு மந்திரியைநோக்கி
'இந்தப்பிள்ளையை வீதியிலே கிடத்தித் தேரை
மேல்நடத்தக் கடவாய்' என்று கட்டளையிட்டான்;
அந்தஅமைச்சன் அவ்வாறுசெய்யத்
துணியாமல் அரசன்கட்டளைக்குஅஞ்சித்
தன்னுயிரை விட்டனன்; அதனை யறிந்த மனுச்சோழன்
தனது புத்திரனைத் தானே கொண்டுபோய் வீதியிற்
கிடத்தித் தேரை மேலே யோட்டினான்; இந்த
அரியசெய்கையைக்கண்டு எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்;

தேவர்கள் பூமாரிபொழிந்தனர்; இவ்வரசனது தருமநெறியையும் நடுவுநிலைமை சிறிதுந்தவறாதபெருந்தன்மையையுங் கண்டு களித்துக் கடவுள் [சிவபிரான்] பிரதியக்ஷமாய்த் தரிசனந்தந்து பசுக்கன்று, இராஜகுமாரன், மந்திரி இம்மூவரையும் பிழைத்துஎழுந்திருக்கச்செய்தருளி மறைந்தனர் என்பதாம். (இதனை "சாலமறைத்தோம்பிச் சான்றவர்கைகரப்பக், காலைகழித்ததன்பின்றையும் - மேலைக், கறவைக்கன் றூர்ந்தானைத் தந்தையுமூர்ந்தான், முறைமைக்கு மூப்பிளமை யில்" என்ற பழமொழிப்பாடலாலும் அறிக. இக்கதை, பெரியபுராணத்தில் திருவாரூர்ச் சிறப்பில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, ஆவிற் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன், அரும்பெறற் புதல்வனை யாழியின்மடித்தோன்" என்பது, சிலப்பதிகாரத்து வழக்குரைகாதை. இவன், மனுமுறைகண்ட சோழனென்றும் வழங்கப்படுவன்.)

தன்கைகுறைத்தான் கண்ணும் - தனதுகையைத் தானேவெட்டிக்கொண்ட குலசேகரபாண்டியனிடத்திலும். அவ்வரலாறு வருமாறு:—குலசேகரபாண்டியன் ஒருநாளிரவில் மாறுவேடம்பூண்டு நகரசோதனை வருகையில், ஒருபிராமணன்வீட்டில் அழுகுரலுண்டானதைச்செவியுற்று அங்குச்சென்று மறைந்துநின்று உற்றுக் கேட்கலாயினன்; அப்பொழுது, அந்த வீட்டுக்கு உரிய அந்தணன் காசியாத்திரைசெல்ல உத்தேசித்ததை அவன்மனைவி அறிந்து 'என்னைத் தனியேவிட்டுப் போதல் தருமமா?' என்றுபுலம்பினள்; அதற்கு அப்பார்ப்பனன் 'நமது அரசன் மிகநீதிமான்: அவனே யாதொரு தீங்கும்

நிகழாதவாறு உன்னைப் பாதுகாப்பன்' என்று சொல்லிப் போயினன்; அது கேட்ட அரசன், 'நம்மை இப்படிநம்பிச்சென்ற பிராமணனது மனைவிக்கு ஒரு குறையும் நேரிடாதபடி காப்பது நமதுகடமை' என்று கருதி, அன்றுமுதல் நாள்தோறும் இரவில் மாறுவேடம்பூண்டு அவ்வீட்டினருகிற் காவல்காத்து வந்தான்; இங்ஙனம் பலநாள்கழிந்தபின் ஒருநாள் பகலில் அவள் கணவன்



மீண்டுவந்துசேர்ந்தனன்; அச்செய்தியை அறியாத அரசன், அந்நாளிரவில் அவ்வீட்டினுள் ஆடவரரவங்கேட்டு, யாரோ சோரநாயகன்போலு மென்று சங்கித்து, வாயிற்கதவைக் கையினால் தட்டியவளவிலே, உள்ளிருந்த அவள் கணவன் 'யார்?' என்று வினவ, அரசன் அக்குரலால் அவனை அவள் கணவ னே யென்று அறிந்து ஓடி மறைந்து, இங்ஙனம் நள்ளிரவிற் கதவிடித்தல் தினந்தோறும் இவள்சோரநாயக னியல்போ வென்ற சந்தேகம் அவ்வந்தண னுக்கு உண்டாகாமலிருத்தற்பொருட்டு, உடனே வீடுகள்தோறுங் கதவைத் தட்டிக்கொண்டே போய்விட்டான். மறுநாள் அந்தப் பிராமணனும் மற்றும் எல்லாருங் கூடி அரசன் முன்னிலையில் வந்து 'தங்கள்வீட்டு வாயிற்கதவை நடுநிசியில் தட்டிப்போன கள்வனைக் கண்டுபிடித்துத் தண்டனைசெய்யவேண் டும்' என்று முறையிட, அதுகேட்டு அரசன் 'இங்ஙனங் குற்றஞ்செய்தவ னுக்கு உரிய சிட்சை யாது?' என்று மந்திரிகளை வினவவே, அவர்கள் 'அவன்கையைக் குறைத்துவிடுவதே முறைமை'என்றனர்.

அரசன், உடனே தன் கையைத்தறித்துக்கொண்டு, நடந்தசெய்தியைக்கூறி, பின்னர்க் கடவுளருளாற் பொற்கை யமையப்பெற்று 'பொற்கைப் பாண்டியன்' என்னும் பெயரோடு அரசுசெலுத்தின னென்பதாம். இவ்வரலாறு சிறிது வேறுபடுத்தியுங் கூறப்படுவதுண்டு. ("உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி, புதவக் கதவம் புடைத்தன னொர்நா, ளரசவேலியல்லது யாவதும், புரைதீர்வேலி யில் லென மொழிந்து, மன்றத்திருத்திச் சென்றீ ரவ்வழி, யின்றவ்வேலி காவா தோ வெனச், செவிச்சூட்டாணியிற் புகையழல் பொத்தி, நெஞ்சஞ் சுடுதலி னஞ்சி நடுக்குற்று, வச்சிரத்தடக்கை யமரர்கோமா, னுச்சிப்பொன்முடி யொளிவளை யுடைத்த கை, குறைத்த செங்கோற் குறையாக்கொற்றத்து, இறைக்குடிப் பிறந்தோர்க் கிழுக்கமின்மை" என்ற சிலப்பதிகாரமும், "எனக் குத் தகவன்றா லென்பதே நோக்கித், தனக்குக் கரியாவான் றானாய்த் தவற் றை நினைத்துத் தன் கைகுறைத்தான் தென்னவனுங் காணு, ரெனச் செய் யார் மாணாவினை" என்ற பழமொழியும், "தீமைசெய்தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ" என்ற திருவிளையாடற்புராணமுங் காண்க.)

இறுதிநிலை - விகுதி; பகுபதத்தின் ஈற்றில் நிற்பது. விகாரம்-இங்கே, தொகுத்தல். முட்டா என்பது - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்ச மென்ற படி. அதனை - செங்கோலை. வை அகம் - (பொருள்களை)வைக்கு மிடம் எனப் பூமிக்குக்காரணப்பெயர்.

ருசஅ. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.

(இ - ள்.) எள் பதத்தான் - (முறைவேண்டினார்க்கு) எளிய செவ்வி யையுடையனாய், ஓரா - (அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடும்) ஆராய்ந்து, முறை செய்யா - (நின்ற உண்மைக்கு ஒப்ப) முறைசெய்யாத, மன்னவன் - அரசன், தண் பதத்தால் - தாழ்ந்த பதத்திலே நின்று, தானே கெடும்—; (எ - று.)



'எண்பதத்தான்' என்னும்முற்றுவினையெச்சமும், 'ஓரா' என்னும்வினை யெச்சமும் - 'செய்யா' என்னும் பெயரெச்ச வெதிர்மறையுள் செய்தல் வினை கொண்டன. தாழ்ந்தபதம்-பாவமும் பழியும் எய்தினிற்கும் நிலை. "அல்லவை செய்தார்க்கு அறங் கூற்றம்" ஆகலின், பகைவாின்றியும் கெடும் என்றார்.

இதனான், முறைசெலுத்தாதானது கேடு கூறப்பட்டது.

(கு - ரை.) முறை வேண்டினர்க்கு - (தமக்குப் பிறர்செய்த தீங்கைச் சொல்லி) நீதியை நடத்தும்படிவந்த சனங்களுக்கு; முறைவேண்டினர் - வழக்குஅறிவிப்பவர். எளிய செவ்வியை உடையனாய் - அரிதாகவன்றி எளிதிற் காட்சிகொடுக்குஞ் சமயத்தையுடையவனாய்; செவ்வி-சமயம். "காட்சிக்கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல், மீக்கூறு மன்ன னிலம்" என்ற குறளையும், 'முறைவேண்டினர்-வலியரால் நலிவெய்தினர். காண்டற்கு எளிமையாவது-பேரத்தாணிக்கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல்' என்ற அதனுரையையும் காண்க. அவர் - முறைவேண்டினர். நூலோர் - சாஸ்திரங்களில் வல்ல அமைச்சர் முதலியோர். நின்ற - அவர் சொல்லியவற்றிலுள்ள. ஒப்ப - ஏற்றபடி. முறை செய்யாத - நீதிநடத்தாத. பதத்திலே - நிலைமையிலே. தானே கெடும் - (ஒருவர் கெடுக்கவேண்டாமல்) தானே அழிவான். 'எண்பதத்தான்' என்பது குறிப்புவினைமுற்று வினையெச்சப்பொருளில்வந்தது: [நன் - வினை - ௩௨.] ஓரா - ஓர்ந்து; செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். செய்யா - செய்யாத; ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். "அல்லவைசெய்தார்க்கு அறங்கூற்றம்" என்னும் மேற்கோள்-நான்மணிக்கடிகையில் "கல்லாவொருவற்கு" என்ற பாடலில் உள்ளது; தருமமல்லாத (பாவத்) தொழில்களைச் செய்தவர்க்குத் தருமதேவதையே யமனாம் என்று பொருள். இம்மேற்கோள் "என்பிலதனைவெயில்போலக் காயுமே, அன்பிலதனை யறம்"என்ற குறளினுரையிலும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. 'அல்லாதமார்த்தர்க் கறங்கூற்றம்' என்ற ஔவையார் மூதுரையையுங் காண்க. "அல்லவை செய்தார்க் கறங்கூற்றமாமென்னும், பல்லவையோர்சொல்லும் பழுதன்றே" என்பது, சிலப்பதிகாரத்து வழக்குரை காதை. எண்பதம் - பண்புத்தொகை. பதம் - சமயம்: வடசொல். எளிமைப் பொருளுணர்த்தும் எண்மை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் நின்றது; மேல் 'பண்புடைமை' என்னும் அதிகாரத்தில் "எண்பதத்தாலெய்தலெளிதென்ப" என்பதுங் காண்க. தண்மை - இங்கே, தாழ்வு; கீழ்ப்பட்டசாதியார் 'தண்ணியர்' எனப்படுதலுங் காண்க. பதத்தால் என்பதில், ஆல் என்னும் மூன்றனுருபு பதத்தில் என ஏழாம்வேற்றுமையிடப் பொருளில் வந்தது, உருபுமயக்கம். (அ)

௫௪௯. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(இ - ள்.) குடி-குடிகளை, புறங் காத்து-பிறர் நலியாமற் காத்து, ஓம்பி-(தானும் நலியாது) பேணி, குற்றம் கடிதல்-(அவர்மாட்டுக்) குற்றம் (நிகழின்



அதனை ஒறுப்பான்) ஒழித்தல், வேந்தன் - வேந்தனுக்கு, வடு அன்று - பழி யன்று: தொழில் - தொழிலாகலான்; (எ - று.)

துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கோறல் என ஒறுப்பு மூன்று;

அவற்றுள், ஈண்டைக்கு எய்துவன முன்னைய என்பது 'குற்றங்கடிதல்'என் பதனாற் பெற்றாம். 'தன்கீழ் வாழ்வாரை யொறுத்தல் அறனன்மையின் வடுவாம்' என்பதனை ஆசங்கித்து, 'அஃது ஆகாது, அரசனுக்கு அவரை அக்குற் றத்தின் நீக்கித் தூயராக்குதலும் சாதிதருமம்' என்றார்.

(கு - ரை.) 'பிறர்' என்றது-பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய் வார் முதலாயினரை. கீழ் ௩அ௫, ௩அஅ, ௫௪௨ - இக்குறள்களினுரையிற் காண்க. நலியாது - வருத்தாமல். பேணி - அன்புகொண்டு. அவர்மாட்டு - அக்குடிகளிடத்து. நிகழின் - உண்டானால். ஒறுப்பான் - தண்டனையால். புறங்காத்து-சுற்றிலும் [எல்லாப்புறத்தும்] பாதுகாத்து என்க. இனி, புறம்- தமிழுபசர்க்கமெனினுமாம். பொருட்கோடல் - செல்வத்தைப் பறித்துக் கொள்ளுதல்.

கோறல் - கொல்லுதல். ஒறுப்பு - தண்டமென்னும் உபாயம். இம்மூன்றும் - முறையே வடமொழியில், பரிக்லேசம், அர்த்தஹரணம், வதம் எனப்படும். ஈண்டைக்கு எய்துவன - இவ்விடத்துக்குப் பொருந்துவன. முன்னைய - துன்பஞ்செய்தலும், பொருட்கோடலும். குற்றவாளிகளை யொழித்தலென்னாது 'குற்றந்தைக்கடிதல்' என்றதனால், கோறலாகிய தண்டனை இங்கு விதிக்கப்படவில்லை யென்பது பெறப்படும். அறன் அன்மை யின் - தருமமல்லாமையால். வடு ஆம் - பழிப்பாகுமோ. ஆசங்கித்து - ஆட்சேபங்கொண்டு. அஃது - வடு. தூயர் ஆக்குதல் - பரிசுத்தராகச்செய்தல். குற்றவாளிகள் அரசனால் தண்டிக்கப்பட்டால், அக்குற்றந்தீர்ந்து சுத்தராய் விடுகின்றன ரென்பது, நூற்கொள்கை. வடுவன்று, வேந்தன்தொழில் என்ற இரண்டு பயனிலைகளுக்கும் 'குற்றங்கடிதல்' என்பதே எழுவாய். (கூ)

௫௫0. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

(இ - ள்.) வேந்து - அரசன், கொடியாரை - கொடியவர்களை, கொலை யின் ஒறுத்தல் - கொலையான் ஒறுத்துத் தக்கோரைக் காத்தல்,—பைங்கூழ் களை கட்டதனொடு நேர் - (உழவன்) களையைக் களைந்து பைங்கூழைக் காத்ததனோடு ஒக்கும்; (எ - று.)

'கொடியவர்'என்றது - தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல் வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில்விழைவார் என் றிவர் முதலாயினரை; இவரை வடநூலார் ஆததாயிக ளென்ப. இப்பெற்றி யாரைக் கண்ணோடிக் கொல்லாவழி, புற்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ் போன்று நலிவுபல எய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசற்குச் சாதிதருமமென்பதாயிற்று.

இவையிரண்டுபாட்டானும், செங்கோல் செலுத்தும் வெண்குடை வேந் தற்குத் தீயார்மாட்டு கூறப்பட்டது.

மூவகையொறுப்பும் ஒழியற்பாலவல்ல வென்பது

## ருசு - ஆம் அதிகாரம்.—கொடுங்கோன்மை

கசரு

(கு - ரை.) கொலையான்

ஒறுத்து-கொலைசெய்தலாகிய தண்டனை விதித்து ஒழித்து. ஒறுத்தல் - நிக்கிரகித்தல். தக்கோர் - (காத்தற்குத்) தகுதியுடைய குடிகள். உழவன் - உழுதுபயிர்செய்பவன். களை - பயிர்க்குத்தடை யாகிற புல்பூண்டுகள். பைங்கூழ் - பயிர். தீக்கொளுவுவார் - (வீடு முதலிய வற்றில்) தீப்பற்றவைப்பவர். நஞ்சு இடுவார் - பிறர்க்கு விஷங்கொடுப்பவர். கருவியின் - ஆயுதங்களினால். ஆறு அலைப்பார் - வழிபறிப்பவர். சூறை கொள்வார் - கொள்ளையிடுபவர். பிறனில்விழைவார் - அயலான்மனைவியை விரும்புபவர். ஆததாயி - வஞ்சகன்; பெருங்குற்றஞ் செய்பவன். அக்நிதன், கரதன், சஸ்த்ரோந்மத்தன், தநாபஹறன், க்ஷேத்ரஹறன், தாரஹறன் என வடநூலிற் கூறப்பட்ட அறுவகை ஆததாயிகளில் அக்நிதனை 'தீக்கொளுவு வார்' என்றதனாலும், கரதனை

'நஞ்சிடுவார்' என்றதனாலும், சஸ்த்ரோக்மத் தனை 'கருவியிற்கொல்வார்' என்றதனாலும், தநாபஹனை 'கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார்' என்றவற்றாலும், க்ஷேத்ரஹரனையும், தாரஹரனையும் 'பிறனில்விழைவார்' என்றதனாலும் குறித்தார்; ஆதலால், 'பிறனில் விழைவார்' என்றதில், 'இல்' என்பதற்கு-இடமென்ற பொருளுங் கொள்க. இப்பெற்றியார் - இத்தன்மையார். கண்ணோடிக் கொல்லாவழி - தாக்ஷிணியப்பட்டுக் கொலைசெய்யாமற்போனால். புற் களை - புல்லாகிய களை. அஞ்சா நின்ற - அஞ்சுகிற. நலிவு பல எய்தி - அநேகத் துன்பங்களை யடைந்து.

இடர்ப்படுதலின் - வருந்துதலால். வெண்குடை - செவ்விய அரசாட்சிக்கு உறுப்பு. தீயார்மாட்டு - கொடியவரிடத்து. மூவகையொறுப்பு - துன்பஞ் செய்தல் பொருட்கோடல் கோறல் என்ற மூவகையான தண்டனை. கொலையின் ஒறுத்தல் என இயையும்; இனி, கொலையிற் கொடியார் என இயைத்து- கொலைத்தொழில்செய்யுங் கொடியார் என உரைப்பாரும் உளர். வேந்து - அரசத்தன்மை; இங்கே, அரசனுக்குப் பண்பாகுபெயர். 'கூழ்' என்னும் உணவின்பெயர் - காரியவாகுபெயராய், அதற்குக் காரணமான பயிரைக் குறிக்கும். பைங் கூழ்-பசிய பயிர்: பசுமை + கூழ்=பைங்கூழ்; [நன்.பத.கூ.] களை - கட்டற்கு உரியது. கட்டது - கள் என்னும் பகுதியடியாப் பிறந்த இறந்தகாலத் தொழிற்பெயர். இப்பாட்டு, உவமையணி; இதில், நேர் - உவமவுருபு. இக்குறளை எடுத்து 'இது தண்டம்' எனக் கூறியுள்ளார், தொல் காப்பியவுரையில்.

இக்குறட்பா, மநுதர்மசாஸ்திரத்தின் எ - ஆவது அத்தியா
யத்து ககo - ஆவது சுலோகத்தின்

மொழிபெயர்ப்பு எனத்தக்கது. (கo)

## ருசு - ஆம்

## அதிகாரம்.—கொடுங்கோன்மை.

அஃதாவது-அம்முறையினது கோடுதற்றன்மை.
ஈண்டும், உவமையின் பெயர் பொருள்மே லாயிற்று.
செங்கோன்மைக்கு மாறுகலின், இஃது, அதன்பின்

வைக்கப்பட்டது.

(கு - ரை.) அம்முறை - அரசுமுறைமை.
கோடுதல்-கோணுதல். ஈண் டும்-இங்கும்; செங்கோன்மை
யென்னுமிடத்திற்போல என்றபடி. உவமை - உபமானம்;

ஒருபக்கத்திற் கோணுதலுடைய கொம்பு.
பொருள்-உபமேயம்;





ஒருபக்கத்திற் பக்ஷபாதமுடைய அரசுமுறைமை. மாறு-எதிர். கல்வியென்
னும் அதிகாரத்தின்பின் கல்லாமையென்னும் அதிகாரத்தை வைத்ததற்குக்
காரணம், 'கல்விச்சிறப்பு மேல்விதிமுகத்தாற்கூறிய துணையான் முற்றுப்
பெருமை நோக்கி எதிர்மறைமுகத்தானும் கூறுகின்ற
தாகலின், இது கல்வி

யின்பின் வைக்கப்பட்டது' என்று பரிமேலழகர் உரைத்துள்ளதனுல், இங்

குச் செங்கோன்மையின்பின் கொடுங்கோன்மையை வைத்ததற்கும் அப்படிப்பட்ட காரணமே கொள்ளத்தக்கது.

ருடுக. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்

டல்லவை செய்தொழுகும் வேந்து.

(இ - ள்.) கொலை மேல் கொண்டாரின் - (பகைமைபற்றிக்) கொல்லு தல்தொழிலைத் தம்மேற் கொண்டு ஒழுகுவாரினும், கொடிது - கொடியன்: அலை மேல் கொண்டு - (பொருள்வெஃகிக் குடிகளை) அலைத்தற்றொழிலைத் தன்மேற்கொண்டு, அல்லவை செய்து ஒழுகும் - முறையல்லவற்றைச் செய் தொழுகும், வேந்து - வேந்தன்; (எ - று.)

அவர் செய்வது ஒருபொழுதைத் துன்பம், இவன்செய்வது எப்பொழுதுந் துன்பமாம் என்பதுபற்றி, அவரினுங் கொடிய னென்றார். பான்மயக் குறழ்ச்சி. 'வேந்து'என்பது - உயர்திணைப்பொருட்கண் வந்த அஃறிணைச் சொல். அலை கொலையினுங் கொடிது என்பதாயிற்று.

(கு - ரை.) தம்மேல் கொண்டு ஒழுகுவார்-தம்மீது ஏற்றுக்கொண்டுநடப் பவர். பொருள்வெஃகி-செல்வத்தை விரும்பி.

அலைத்தல்-வருத்துதல். அவர்-
கொலையாளிகள். உபமானமாகிய
'கொலைமேற்கொண்டார்' என்பது
பன்மைப்பாலாகவும், உபமேயமாகிய 'அலைமேற்கொண்டு
அல்லவை செய்
தொழுகும் வேந்து' என்பது ஒருமைப்பாலாக்வும் மாறிநின்றதனுல் 'பால்
மயக்கு' என்றும், இங்கு 'கொலைமேற்கொண்டாரிற்கொடிது' என்பது -
கொலையாளிகள்போலக் கொடியன்
எனஉவமப்பொருள்படாது கொலையாளி
களினும் கொடியனென
உறழ்ச்சிப்பொருள்பட்டதனுல் 'பால்மயக்குறழ்ச்சி'
என்றுங் கூறினர். உறழ்ச்சியாவது - திசை வழி காலம்
குணம் முதலியவற்
றின் அளவுபற்றி வரும் எல்லைப்பொரு ளன்றி உபமான
உபமேயசந்தர்ப்பத்
தில் வரும் எல்லைப்பொருள். ['காக்கையிற் கரிது
களம்பழம்' என உபமான
மும் உபமேயமுமாக வருமிடத்தில், காக்கையின் -
காக்கைபோல எனப் பொருள்கொண்டால், ஒப்புப்பொருள்
; இதனை 'உவமப்பொருவு' என்பர்.
காக்கையின் - காக்கையைக்காட்டிலும் எனப் பொருள்
கொண்டால், எல்
லைப்பொருள்; இதனை 'உறழ்பொருவு' என்பர் என்று
அறிக.] "முதலுஞ்
சினையுமென் றுயிருபொருட்கு, நுதலிய மரபி னுரியவை

யுரிய" என்னுந் தொல்காப்பியத்து உவமவியற்சூத்திரத்து உரையில் 'உரிய என்றது உரி யவை யென்றதனால், திணையும் பாலும் மயங்கிவரும் உவமையும் கொள்ளப் படும்' என்றுகூறி, "கடம்பமர்நெடுவேளன்ன மீளி, யுடம்பிடித்தடக்கை யோடாவம்பலர்" என்பது ஒருமைப்பன்மை மயங்கிற்று' என உதாரணங்

ருகூ - ஆம்

அதிகாரம்.—கொடுங்கோன்மை கசஎ

காட்டியவாறும் உணர்க: "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய" என்ற தண்டியலங்காரமுங் காண்க. வேந்து - பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால், 'கொடிது' என்னும் அஃறிணைமுற்றுக் கொண்டது; "குடிமை யாண்மை யிளமை மூப்பே, யடிமை வன்மை விருந்தே குழுவே, பெண்மை யரசே மகவே குழவி,......உயர்திணை மருங்கி னிலையின வாயினும், அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தையும், அத னுரையில் 'அன்ன பிறவும்' என்றதனால், 'வேந்து வேள் குரிசில் அமைச்சு புரோசு என்னுந் தொடக்கத்தனவுங் கொள்க' என்றதையுங் காண்க. அலை- வருத்துதல்; முதனிலைத்தொழிற்பெயர். ஏகாரம் - தேற்றம். (க)

ருருஉ. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

(இ - ள்.) (ஆறலைக்கு மிடத்து), வேலொடு நின்றான் - (தனியே) வேல்கொண்டு நின்ற கள்வன், இடு என்றது போலும் - (ஆறுசெல்வானை 'நின்கைப்பொருள் தா' என்று வேண்டுதலோடு ஒக்கும்: கோலொடு நின்றான் இரவு - ஒறுத்தற்றொழிலோடு நின்ற அரசன் வேண்டுதல்; (எ - று.)

(குடிகளைப்) பொருள்

'வேலொடுநின்றான்'என்றதனால் பிறரொடு நில்லாமையும், 'இரவு'என்றதனால் இறைப்பொருளன்மையும்பெற்றாம். தாராக்கால் ஒறுப்பலென்னுங் குறிப்பின னாகலின், இரவாற்கோடலும் கொடுங்கோன்மையாயிற்று.

இவை யிரண்டுபாட்டானும், கொடுங்கோன்மையது பட்டது.

குற்றம் கூறப்

(கு - ரை.) ஆறுஅலைக்குமிடத்து - வழியடித்துப்பறிக்குமிடத்து. ஆறுசெல்வானை - வழிப்பிரயாணியை. ஒறுத்தல் - வருத்துதல்; தண்டம். பிற

ரொடு நில்லாமை - தனியேநிற்றல்: 'வேலொடு நின்றான்' என்ற தொடரில் நிற்றலில் உடனிருப்பு வேலுக்குக் கூறியிருத்தலால் பிறரொடு நில்லாமை

பெறப்படும். பிறரொடு நின்று 'இடு'என்று கேட்பின், இரப்பாளர் பலர் நின்றுகொண்டு யாசகஞ்செய்கின்றார்களென்பது ஏற்படும்: வேலொடுநிற்றலால், கொடாவிடின் இவ்வேலினால் நின்னுயிரைமாய்ப்பே னென்பது, பெறப்படு மென்க. இறைப்பொருள் அன்மை - வரிப்பொருளல்லாத வேறு பொரு ளென்பது. தாராக்கால் ஒறுப்பல் என்னும் குறிப்பினன் - கொடா விட்டால் வருத்துவே னென் னுங் கருத்தைக் குறிப்பால் தெரிவிப்பவன். இரவால்கோடல் -

யாசகம்போல வேண்டிப்பெறுதல். அதிகாரம் கொடுங்கோன்மையாதலாலும், கோ லென்னுஞ் சொற்பொருள் பற்றியும், இப்பாட்டில், 'கோல்' என்பது - தண்டனையாயிற்று. இரவு - இரத்தல். 'வேலொடு நின்றான்' என்பதை, 'ஒடு' உருபு - கொண்டென்னுமெச்சப்பொருளில் வருதற்கு உதாரணங்காட்டினர், பிரயோகவிவேகநூலார். "உறையில் வாளொடு மாவழங்குறு வனத்தோடி, மறவனோர் பொருடருகென விரத்



தலைமானும், இறைவன் வாழ்குடி தன்னிலொன்றொரு பொருளிரத்தல்" என்ற பிரபுலிங்கலீலை இங்கே காணத்தக்கது. (உ)

ருரு. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

(இ - ள்.) (தன்நாட்டு நிகழுந் தீமைகளை), நாள்தொறும்—, நாடி - ஆராய்ந்து, முறை செய்யா - (அதற்கு ஒக்க)முறைமையைச் செய்யாத,மன்னவன் - அரசன், நாள்தொறும்—, நாடு கெடும் - நாடிழக்கும்; (எ - று.)

அரசனுக்கு நாடு உறுப்புஆகலின், அதன்வினை அவன்மேல் நின்றது. இழத்தல் - பயனெய்தாமை. மன்னவனுடு நாடொறுங்கெடு மென்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) நாட்டு-நாட்டில். அதற்கு ஒக்க-அவ்வாராய்ச்சிக்கு ஏற்றபடி. உறுப்பு - அங்கம். "படை குடி கூழமைச்சுநட்பரண்" என்ற ராஜாங்கங்கள் ஆறனுள் நாடும் ஒன்றாதல் காண்க. மன்னவன் நாடு கெடும் - சினைவினை முதல்மேல் நின்றது; இது, திணைவழுவமைதி. [நன் - பொது - உகூ.] அரசன்நாடுகெடப் பெறுவான்: நாட்டைக் கொண்டிருத்தலாலாகிய பயனை இழக்கப் பெறுவா னென்றபடி. தொறு - தொழிற்பயில்வுபொருளில் வந்த இடைச்சொல். நாடி முறைசெய்யாத மன்னவனுடைய நாடு நாளுக்குநாள் ஈனஸ்திதியை யடையுமென்பது, இரண்டாவது உரையின் கருத்து; இது,

வழாமிலே. முதலுரைக்குக் கெடுதல் மன்னவன் தொழிலும், இரண்டாமுரைக்கு நாட்டின் தொழிலுமாம். இரண்டாமுரைக்கு நாடோறும் சிறிதுசிறிதாக நாட்டை இழக்கப்பெறுவானென்று கருத்துக் கூறுவாருமுளர். "நாடோறு மன்னவனுட்டில் தவநெறி, நாடோறு நாடி யவநெறிநாடானேல், நாடோறு நாடு கெடு மூட நண்ணுமால், நாடோறுஞ் செல்வநரபதிகுன் றுமே" என்ற திருமந்திரச்செய்யுள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது. (௩)

௫௫௪. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

யும்

(இ - ள்.) சூழாது - (மேல்விளைவது) எண்ணாது, கோல் கோடி செய் - முறை தப்பச் செய்யும், அரசு-அரசன்,—(அச்செயலான்), கூழ்உம் -

(முன் ஈட்டிய) பொருளையும், குடிஉம் - (பின்ஈட்டற்கு ஏதுவாகிய) களையும், ஒருங்கு இழக்கும் - சேர இழக்கும்; (எ - று.)

குடி

'கோட' என்பது திரிந்துநின்றது. முன் ஈட்டிய பொருள் இழத்தற்கு

ஏது வருகின்ற பாட்டாற் கூறுப.

(கு - ரை.) மேல் விளைவது எண்ணாது-பின்புஉளதாகும்பயனை ஆலோ

சியாமல். ஈட்டிய - சேர்த்துவைத்த. கோலின் வினையாகிய கோடியென்

னும் செய்தெனச்சம், பிறகருத்தாவின் வினையையும் கொண்டுமுடிதற்கு

ஏற்ற கோடவென்னுஞ் செயவெனெச்சமாகத் திரித்துக்கொள்ளப்பட்டது.

[நன் - வினை - உடு, உஎ.] கூறுப - கூறுவர்.

"படைகுடிகூழமைச்சு" என்ற



குறளின் உரையில் 'கூழ் என்றது - அதற்குஏதுவாயபொருளை' என்று உரைத்துள்ளதனால், கூழ் என்னும் உணவின்பெயர் - காரியவாகுபெயராய், உணவிற்குக்காரணமான செல்வத்தை உணர்த்து மென்க. ஒருஉ-இடைச்சொல். (ச)

ருருரு. அல்லற்பட் டாற்ரு தழுதகண்
ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(இ - ள்.) அல்லல் பட்டு - (அரசன்
முறைசெய்யாமையாற் குடிகள்)
துன்பமுற்று, ஆற்ருது - (அதனைப்) பொறுக்கமாட்டாது,
அழுத—, கண்
ணீர் அன்றே—, செல்வத்தை தேய்க்கும் படை -
அவன்செல்வத்தைக்
குறைக்குங் கருவி; (எ - று.)

அழுத கண்ணீர் - அழுதலான்வந்த கண்ணீர்.
செல்வமாகிய மரத்தை யென்னுமையின், இஃது -
ஏகதேசவுருவகம். அல்லற்படுத்திய பாவத்தது
தொழில், அதற்கு ஏதுவாகிய கண்ணீர்மேல் நின்றது.
அக்கண்ணீரிற் கொ
டிது பிறிது இன்மையின், செல்வம் கடிதின் தேயு

மென்பது கருத்து.

(கு - ரை.) அதனை - அத்துன்பத்தை. அன்றே என்பது - வினவகை யால் தேற்றமுணர்த்திற்று. கருவி - ஆயுதம்; இங்கே, வாள். அழுதகண் ணீர் - பெயரெச்சம் காரணப்பொருளது; 'வந்த இளைப்பு, சங்குசுட்ட சுண் ணமபு' என்பவற்றிற்போல. அதற்கு ஏதுவாகிய - அல்லற்படுத்தியபாவம் வெளிப்படுதற்குக் காரணமான. அல்லற்படுத்தியபாவம் செல்வத்தைத்தேய்க் கும் படை யென்பார், 'அல்லற்பட்டாற்றாதழுத கண்ணீர் செல்வத்தைத் தேய்க்கும் படை' என உபசாரவழக்காற் கூறினர்: "அழக்கொண்டவெல்லா மழப்போம்" என்பர் பின்னும். "இருவர்தஞ்சொல்லையு மெழுதரங்கேட்டே இருவரும்பொருந்தவுரையாராயின்,மனுமுறைநெறியின் வழக்கிழந்தவர்தாம், மனமுறமறுகி நின்றழுதகண்ணீர், முறையுறத்தேவர் மூவர் காப்பினும், வழி வழியீர்வதோர் வாளாகும்மே" என்றதும் காண்க.

(ரு)

ருருரு. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னுவா மன்னர்க் கொளி.

(இ - ள்.) மன்னர்க்கு - அரசர்க்கு; (ஒளி) மன்னுதல் - புகழ்கள் தாம்

நிலைபெறுதல், செங்கோன்மை
(ஆம்)-செங்கோன்மையான் ஆம்; அஃது
இன்றேல் - அச்செங்கோன்மை இல்லையாயின், மன்னர்க்கு
ஒளி - அவர்க்கு
அப்புகழ்கள்தாம், மன்னு ஆம் - உளவாகா; (எ - று.)
விகாரத்தால்தொக்க மூன்றுவதுவிரித்து,
ஆக்கம் வருவித்து உரைக்கப்
பட்டது. மன்னுதற்குஏது
புகழாதல், "இந்நிலத்து,மன்னுதல்வேண்டினிசை நடுக"
என்பதனானும் அறிக. மன்னுமை - ஒருகாலும் நிலையாமை.
பழிக்கப் பட்டால் ஒளி மன்னுவாம்; ஆகவே, தாமும்
மன்னுரென்பதாயிற்று. வென்றி
கொடைமுதலிய ஏதுக்களால் புகழ் பகுதிப்படுதலின்,
பன்மையாற் கூறினார்.
அவையெல்லாம் செங்கோன்மைஇல்வழி
இலவாமென்பதாம். ௫௬௦

திருக்குறள்

இவைநான்குபாட்டானும், கொடுங்கோலனாயினான்
எய்துங் குற்றம்

கூறப்பட்டது.

(கு - ரை.) மூன்றாமுருபு தொகுத்தல் விகாரப்பட்டதும், ஆக்கம் வருவித்துரைத்ததும் 'செங்கோன்மை' என்பதனிறுதியில். விரித்துச் சொல்ல வேண்டிய இடத்து உருபு இல்லாமையால் அம்மூன்றனுருபு தொகுத்தல் விகாரமடைந்ததாக் கூறினர். மன்னுதல்-நிலைபெறுதல்.''இந்நிலத்து, மன்னுதல் வேண்டி னிசைநடுக'' என்பது நான்மணிக்கடிகையில் ''இன்னுமை வேண்டி னிரவெழுக விந்நிலத்து, மன்னுதல் வேண்டி னிசைநடுக - தன்னொடு, செல்வது வேண்டி னறஞ்செய்க வெல்வது, வேண்டின் வெகுளி விடல்'' என்னும் பாட்டி லுள்ளது; இம்மேற்கோளுக்கு - இந்நிலவுலகத்தில் ஒருவன் என்றும் அழியாமல் நிலைத்திருத்தலை விரும்புவானானல் கீர்த்தியை நிலைநிறுத்தக்கடவன் என்பது பொருள். ''ஒன்றாவுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்'' என்ற குறளாலும், புகழின் அழிவின்மை விளங்கும். ஒருகாலும் - ஒருபோதும். ஒளி மன்ற - புகழ் உண்டாகி நிலைபெற. மன்னர்-புகழுடம்பால் நிலைபெறார். முதலியஎன்றதனல், கல்வி ஆண்மைமுதலியன கொள்க.பகுதிப்படுதலின்-பல பகுப்பு உடைத்தாதலால். மன்ற என்பது பலவின்பாலாதலால், பன்மையாற் கூறினரென்றார். (சு)

ருரு௫. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(இ - ள்.) துளி இன்மை - மழையில்லாமை, ஞாலத்திற்கு - வையத்து வாழும் உயிர்கட்கு, எற்று - எவ்வகைத்துன்பம்பயக்கும்? அற்று-அவ்வகைத் துன்பம்பயக்கும்: வேந்தன் அளி இன்மை - அரசன் தண்ணளியில்லாமை, வாழும் உயிர்க்கு - (அவன்நாட்டு) வாழுங் குடிகட்கு; (எ - று.)

சிறப்புப்பற்றி, 'துளி' என்பது - மழைமேல்நின்றது; 'உயிர்' என்பது-குடிகள்மேல் நின்றது. மேல் ''வானேக்கிவாழும்'' என்றதனை எதிர்மறைமுகத்தாற் கூறியவாறு.

(கு - ரை.) வையத்து - பூலோகத்தில். பயக்கும் - தரும். தண் அளி - குளிர்ந்த கருணை. மழைக்குச் சிறப்பு - இன்றியமையாமையும், குடிகளுக்குச் சிறப்பு - அஃறிணையுயிர்களினும்
ஞான் ஒன்றாதலு மெனக் காண்க.

மேம்பாடுடைத்தாய் அரசனது ஆறங்கங்க

மேல்-முன்பு."வானோக்கிவாழும்"—டுசஉ-

ஆவது குறள். ஞாலம் - பூமியில்வாழும் உயிர்கட்கு இடவாகுபெயர்.

யின்மை அளியின்மை என்று இருத்தலால், எதிர்மறைமுகத்தாற்

துளி

கூறிய

தென்றூர். எற்று, அற்று - எகரவினாவடியாகவும்,

அகரச்சுட்டடியாகவும்

பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்றுக்கள். ஏ - தேற்றம்.

டுடுவ. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

(எ)

(இ - ள்.) முறை செய்யா - முறைசெய்யாத, மன்னவன் - அரசனது, கோல் கீழ்-கொடுங்கோலின்கீழ், படின்-வாழின்,—(யாவர்க்கும்),—இன்மையின் - (பொருளினது) இன்மையினும், உடைமை—, இன்னாது—; (எ-று.)

டுசு - ஆம்

அதிகாரம்.—கொடுங்கோன்மை கடுக

தனக்குஉரியபொருளோடுஅமையாது மேலும் வெஃகுவோனதுநாட்டுக் கைந்நோவயாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே யாகலின், அவ்வுடைமை இன்மையினும் இன்னாதாயிற்று.

இவையிரண்டுபாட்டானும், அவனாட்டுவாழ்வார்க்கு

வருங் குற்றம்
கூறபபடடது.

(கு - ரை.) பொருளினது இன்மை-வறுமை. உடைமை-செல்வமுடைமை. அமையாது - திருப்திப்படாமல். வெஃகுவோன் - ஆசைப்படுங்கொடுங் கோலரசன். கைந்நோவ யாப்புண்டல் முதலிய - கைகள்நோகும்படி கட்டப் படுதல் முதலிய கொடுமைகள். 'முதலிய'என்றதனால், அடியுண்ணல் சிறைக் குட்படுதல்முதலிய கொள்க.

(அ)

ருருகூ. முறைகோடி மன்னவன் செய்யி
னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

(இ - ள்.) மன்னவன்—, முறை கோடி செய்யின் - (தான் செய்யும் பொருளை) முறைதப்பச் செய்யுமாயின், (அவன்நாட்டு), உறை கோடி-பருவ மழை இன்றும் வகை, வானம் பெயல் ஒல்லாது - மேகம் பொழிதலைச் செய் யாது; (எ - று.)

இரண்டிடத்தும் 'கோட' என்பன திரிந்துநின்றன. உறைகோடுதலா வது - பெய்யுங்காலத்துப் பெய்யாமை.

அதற்கு ஏது, வருகின்ற பாட்டாற் கூறுப.

(கு - ரை.) பொருள் - இங்கே, தொழில்: இனி, செய்யும் பொருள் என்றது-ஈட்டுகிற செல்வத்தை எனக் கொள்வாருமுளர். "கோனிலைதிரிந் திடிற் கோணிலைதிரியும், கோணிலைதிரிந்திடின் மாரிவறங்கூரும், மாரிவறங் கூரின் மன்னுயிரில்லை," "கோணிலைதிரிந்து நாழிகுறைபடப்பகல் கண் மிஞ்சி, நீணிலமாரியின்றி விளைவஃகிப்பசியுநீடிப், பூண்முலைமகளிர் பொற்பிற் கற்பிழந்தறங்கண்மாறி, யாணையிவ்வுலகுகேடா மரசுகோல்கோடினென் றூன்" என்பன, இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. பருவமழை இன்றும்வகை- காலந்தவறாத மழை யில்லையாம்படி. இரண்டிடத்தும் - முறைகோடி, உறை கோடி என்பவற்றில். அதற்கு - பெய்யாமைக்கு. உறை - மழைத்துளி. (௯)

௫௬0. ஆபயன் குன்று மறுதொழிலோர்
காவலன் காவா னெனின்.

நூன்மறப்பர்

(இ - ள்.) காவலன்-காத்தற்குஉரிய அரசன், காவான் எனின் - (உயிர் களைக்) காவானாயின், (அறனில்லாத அவனாட்டு), ஆ - பசுக்களும், பயன் குன்றும் - பால்குன்றும்; அறு தொழிலோர் - அந்தணரும், நூல்

மறப்பர் -
நூல்களை மறந்துவிடுவர்; (எ - று.)

ஆபயன் - ஆவாற் கொள்ளும் பயன். அறுதொழிலாவன - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என இவை. பசுக்கள் பால் குன்றியவழி அவியின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரம் கற்பம்



என்பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம்; ஆகவே, வானம் பெயலொல்லா தென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானும், அவனாட்டின்கண் நிகழுங் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) காவலன் என்பது - காவல் அன் எனப் பிரிந்து, காத்தல் தொழிற்குஉரியவனெனவும்; கா வலன் எனப்பிரிந்து, காத்தலில் வல்லவனெனவும் பொருள்படும். அறுதொழிலோர் - ஆறுதொழிலையுடையவர். நூல் - வேதசாஸ்திரங்கள். க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் பிறசாதியார்க்கும் வெவ்வேறுவகைப்பட்ட அறுதொழில்கள் உளவாயினும் சிறப்புப்

பற்றி 'அறுதொழிலோர்' என்றது, அந்தணர்மேல்
நிற்கும்; "அறுவகைப்
பட்ட பார்ப்பனப்பக்கமும்"என்ற
தொல்காப்பியத்தையும், "ஓதல் வேட்ட
லவைபிறர்ச்செய்தல், ஈதலேற்றலென்
றாறுபுரிந்தொழுகு, மறம்புரி யந்த
ணர் வழிமொழி யொழுக்கம்" என்ற
உதாரணச்செய்யுளையும் உணர்க.
ஆவால் - பசுவினால். வேட்டல் - யாகஞ்செய்தல்.
வேட்பித்தல் - யாகஞ்
செய்வித்தல். ஏற்றல் - தானம்வாங்குதல்.
அவி - ஹவிஸ்; யாகங்களில்
தேவர்க்குஇடும் உணவு. கற்பம் -
வேதவிதிகளைநடப்பிக்கும்முறைமை கூறும்
நூல்; இது, வேதத்தின் அங்கங்கள் ஆறனுள் ஒன்று.
'போதாயனீயம், பாரத்து
வாசம், ஆபத்தம்பம், ஆத்திரேயம் முதலிய கற்பங்கள்'
என்றார், தொல்காப்
பியவுரையில் நச்சினார்க்கினியர். வேள்வி - யாகம். யாகம்
மழைக்குக் காரண
மாதலை "கருணையொடுக் தனதுபயகரமுதவும்
பொருள்மழையில், அரணிய
மந்திரவனல்க ளவை யுதவும் பெருமழையே" என்னுங்
கலிங்கத்துப்பரணி
யாலும் அறிக. "நல்லா ரொருவ ருளரே
லவர்பொருட்டா, லெல்லார்க்கும்

பெய்யு மழை," "மழையின்றி மாநிலத்தார்க்கில்லை
மழையுந், தவமிலாரில்
வழியில்லை தவமும், அரசிலாரில்வழியில்லை,"
'ஆபயன் குன்றும்' என்னும்
முடிபை, கீழ் 'மன்னவன்நாடுகெடும்' என்றதுபோலக்
கொள்க. "அறு
வகைப்பட்ட" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தின்
உரையில், நச்சினார்க்
கினியர்,இக்குறளை எடுத்து, 'இது காவல்கூறிற்று' எனக்
கூறியுள்ளார்.(௧0)

## ருஎ - ஆம்

## அதிகாரம்.—வெருவந்தசெய்யாமை.

அஃதாவது - குடிகள் அஞ்சுவதும், பகுதி
அஞ்சுவதும், தான் அஞ்சுவ
தும் ஆய தொழில்களைச் செய்யாமை. அவைசெய்தல்
கொடுங்கோன்மைப்
பாற் படுதலின், இஃது, அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) பகுதி-ப்ரக்ருதி: மந்திரி முதலிய
அங்கங்கள். கொடுங்கோன் மைப்பாற் படுதலின் -

கொடுங்கோலின் தன்மையிற் சேர்தலால். வெரு
வந்த - வெருவு என்னும் பகுதியும் வா என்னுந்
துணைவினையுஞ் சேர்ந்து
விகாரப்பட்டு ஒருசொல்தன்மையுற்ற வெருவா என்பத
னடியாப் பிறந்த

இறந்தகாலப்புலவின்பால்வினையாலணையும்பெயர்;
ருள். வெருவரல் - அஞ்சுதல்.

அஞ்சுவன என்றுபொ ருள - ஆம்

அதிகாரம்.—வெருவந்தசெய்யாமை கருரு

ருசுக.

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

(இ - ள்.) (ஒருவன் தன்னின் மெலியார்மேற் சென்றவழி அதனை), தக்காங்கு நாடி - நடுவாக நின்று ஆராய்ந்து, தலைச்செல்லா வண்ணத்தால் - (பின்னும்) அதுசெய்யாமற் பொருட்டு, ஒத்தாங்கு ஒறுப்பது - (அவனை அக் குற்றத்திற்கு) ஒப்ப ஒறுப்பானே, வேந்து - அரசனாவான்; (எ - று.)

தக்காங்கு, ஒத்தாங்கு என்பன - ஒருசொல். தகுதியென்பது - நடுவு நிலைமையாதல் "தகுதி யெனவொன்று நன்றே" என்பதனாலும் அறிக. இதனானே, தக்காங்கு நாடாமையும், பிறிதோர் காரணம்பற்றி மிக வொறுத்தலும் குடிகள் அஞ்சும் வினை யாதல் பெற்றாம்.

(கு - ரை.) தன்னின் மெலியார்மேல்
சென்றவழி-தன்னைக்காட்டிலும் எளியவர்மேற் சென்று வருத்தியபொழுது. அதனை-அக்குற்றத்தை. நடுவாக நின்று - பக்ஷபாதமில்லாமல் நின்று. பின்னும் அது
செய்யாமற்பொருட்டு - மறுபடியும் அவன் அக்குற்றத்தைச் செய்யாதிருத்தற்காக. ஒப்ப - ஏற்றபடி. ஒறுப்பான் - தண்டிப்பவன். தக்காங்கு, ஒத்தாங்கு என்பவற்றைத் தக்கஆங்கு, ஒத்தஆங்கு என்பவற்றின் விகாரமெனக் கொண்டு, தக்கபடி, ஒத்தபடி யென்றலும் ஒன்று. "தகுதியென வொன்று நன்றே பகுதியாற், பாற்பட் டொழுகப் பெறின்" என்பது, கீழ் 'நடுவுநிலைமை'
என்னும் அதி
காரத்தின் முதற்குறள். பகைவர் நண்பர் அயலாரென்னும் மூவகையோரிடத்தும் தன்முறைமையை விடாது ஒழுகப்பெற்றால், நடுவுநிலைமையென்று சொல்லப்படும் அறமுமே நல்லது என்ற பொருள். தலைச்செல்லுதல் - ஒருசொல்; "செயிரிற் றலைப்பிரிந்த காட்சியார்" என்ற குறளில் 'தலைப்பிரிவென்பது - ஒருசொல்' என்று கூறிப்போந்தார் பரிமேலழகர்: இவற்றில்,
தலையென்பதற்கு வேறுபொரு ளில்லாமையால், அதனைத் தமிழுபசர்க்க மென்பர். தலைச்செல்லா வண்ணத்தால் - தொடங்காதவிதமாக என்று பொருள்.

(க)

ருகூஉ. கடிதோச்சி மெல்ல வெறிக
நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

(இ - ள்.) (அவ்வொத்தார்கு ஒறுத்தல் தொடங்குங்கால்), கடிது ஓச்சி - அளவிறப்பச் செய்வார்போல் தொடங்கி, (செய்யுங்கால்), மெல்ல எறிக - அளவிறவாமற் செய்க: ஆக்கம்—, நெடிது நீங்காமை - (தங்கண்) நெடுங்காலம் நிற்றலை, வேண்டுபவர் - வேண்டுவார்; (எ - று.)

கடிதோச்சல்-குற்றஞ்செய்வார் அதனை அஞ்சுதற்பொருட்டும், மெல்ல வெறிதல் - யாவரும் வெருவாமைப்பொருட்டும் ஆம். தொடங்கின அளவிற் குறைதல்பற்றி, மென்மை கூறப்பட்டது. ஓச்சுதல், எறிதல் என்பன இரண்டும் - உவமைபற்றி வந்தன.

இவை யிரண்டுபாட்டானும், கூறப்பட்டது. குடிகள்வெருவந்தசெய்யாமையது இயல்பு

20

(கு - ரை.) ஒத்தாங்கு ஒறுத்தல் தொடங்குங்கால் - குற்றத்திற்கு ஏற்கத் தண்டிக்கத் தொடங்கும்பொழுது. அளவிறப்பச் செய்வார்போல்-அளவு கடந்து தண்டனைசெய்பவர்போல் உக்கிரமாக. இறவாமல் - கடவாமல். ஆக்கம் - செல்வம் முதலிய நன்மைகள். தங்கண் - தம்மிடத்து. அதனை - அத்தண்டனையை. வெருவாமை - அஞ்சாமை. 'தொடங்கினவளவிற் குறைதல்பற்றி, மென்மை கூறப்பட்டது' என்ற வாக்கியத்திற்குக் கருத்து - மெல்ல என்றது, தொடங்கினவளவினும் குறைவாகவென்றபடியேயன்றிக் குற்றத்தினளவினுங் குறைவாக என்றபடியன்று என்பதாம். அரசாட்சி கோல் என்றும் தண்ட மென்றும் உவமைப்பெயரால் கூறப்படுதல்பற்றி, அதற்கேற்ப, 'ஓச்சி யெறிக' என்றார். (உ)

## ருகூரு. வெருவந்த செய்தொழுகும்

வெங்கோல னாயி

னொருவந்த மொல்லைக் கெடும்.

(இ - ள்.) வெருவந்த செய்து ஒழுகும் - (குடிகள்) வெருவிய செயல்களைச் செய்து நடக்கும், வெம் கோலன் ஆயின் - வெங்கோலனுமாயின், (அரசன்), ஒருவந்தம் - ஒருதலையாக, ஒல்லை - கடிதில், கெடும்—; (எ - று.)

வெங்கோலன் என்பது-ஈண்டு, வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தம் என்பன-ஒருபொருட்கிளவி. அச்செயல்களும், கேடுகளும் முன்னர்க் கூறப்படும்.

(கு - ரை.) வெருவிய - அஞ்சும்படியான. வெங்கோலன் - கொடுங் கோன்மையுடையவன். ஒருதலையாக - நிச்சயமாக; தவறாமல். கடிதில் - விரைவில். முன்னே 'வெருவந்தசெய்தொழுகும்' எனக் கொடுங்கோன்மை குறிக்கும் அடைமொழி வந்ததனால், 'வெங்கோலன்' என்பது, அரசனென்ற

மாத்திரமாய் நின்றது என்க: மேல் "அடியளந்தான், ரூஅயதெல்லா மொருங்கு" என்றவிடத்திலும், 'அடியளந்தான் என்றது - வாளாபெயராய் நின்றது' என வுரைப்பர். 'பணிபணம், கரிகரலீலை, வம்சகரீரம், கரிகலபம்' என்பன பூர்வபதமும் உத்தரபதமும் சமானார்த்தகமென்பார்க்கு "வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்," "அடியளந்தான், ரூஅயதெல்லாம்", "கோடாத செங்கோல்" என்பனபோலக் கேவலபதமாத்திரையாய் நின்றன வென்க' என்பது, பிரயோகவிவேகவுரை. 'வாள்போலும் வேற்கண், கோடாத செங்கோல், வெருவந்தசெய்தொழுகும் வெங்கோலன், அடியளந்தான் தாஅயதெல்லாம் இவற்றுள், கண், கோல், கோலன், அடிஎனஒருசொல்லாகவே கொள்வர்' என்னும் இலக்கணக்கொத்து உரையையும் காண்க. ஈண்டு- இங்கு. வாளா - சும்மா; இன்றியமையாததல்லாமல். ஒருபொருட்கிளவிஒருபொருளுள்ள பலசொற்கள். ஒருவந்தம் என்பது - ஒரு அந்தம்எனப் பிரிந்து, ஒருமுடிபுடைய தெனப் பொருள்படும். அச்செயல்கள் - குடிகள் அஞ்சுஞ்செயல்கள். கேடுகள் - வெருவிய செயல்களைச் செய்தவனுக்கு அதனால்விளையுந் தீங்குகள். முன்னர் - அடுத்த நான்குகுறள்களில். (௩)

ருள - ஆம்

அதிகாரம்.—வெருவந்தசெய்யாமை கருரு

ருசச. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த

னுறைகடுகி யொல்லைக் கெடும்.

(இ - ள்.) இறை கடியன் என்று உரைக்கும் - (குடிகளால்) நம் இறைவன் கடிய னென்று சொல்லப்படும், இன்னா சொல் - இன்னாத சொல்லையுடைய, வேந்தன் —, உறை கடுகி - ஆயுளும் குறைந்து, ஒல்லை கெடும்-(செல்வமும்) கடிதின் இழக்கும்; (எ - று.)

நெஞ்சு நொந்து சொல்லுதலான் இன்னாமை பயப்பதாய சொல்லை 'இன்னாச்சொல்' என்றார். உறையென்பது - முதனிலைத் தொழிற்பெயர்;

அஃது - ஈண்டு, ஆகுபெயராய், உறைதலைச் செய்யும் நாள்மேல் நின்றது.

அது குறைதலாவது - அச்சொல் இல்லாதார்க்கு உள்ளதிற் சுருங்குதல்.

(கு - ரை.) இறைவன் - அரசன். கடியன் - கொடியவன். இன்னாத - இனிமையையுடையதல்லாத. உறை - உறைதல்; வாழ்தல்; இங்கே, வாழ்நாளுக்கு ஆகுபெயர். கடுகுதல் - சுருங்குதல். இன்னாமை பயப்பது - துன்பந்தருவது. முதனிலைத்தொழிற்பெயர் - பகுதிமாத்திரமே நின்று தொழிற் பெயர்ப்பொருளைத் தருவது; இதில் தொழிற்பெயர்விகுதி புணர்ந்துகெட்டதென்பர். அது குறைதல் - ஆயுள்நாள் குறைதல்.

அச்சொல் இல்லாதார்
க்கு உள்ளதின் சுருங்குதல் - குடிகள் வருந்திச்சொல்லும் இன்னுச்சொ
ல்லை உடையரல்லாத அரசர்க்கு எவ்வளவு ஆயுள் உண்டோ அவ்வளவிற்
குறைவடைதல். (௪)

ருசுரு. அருஞ்செவ்வி யின்னு முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

(இ - ள்.) அருஞ் செவ்வி - (தன்னைக் காணவேண்டுவார்க்குக்) காலம்
அரியனாய், இன்னு முகத்தான் - (கண்டால்) இன்னாத முகத்தினை யுடையா
னது, பெருஞ்செல்வம் - பெரிய செல்வம், பேஎய் கண்டு அன்னது உடை
த்து - பேயாற் காணப்பட்டாற் போல்வதொரு குற்றமுடைத்து; (எ - று.)

எனவே, இவையிரண்டும்

வெருவந்தசெய்தலாயின. இவை செய்வா
,னைச் சார்வார் இன்மையின், அவனது செல்வம்
தனக்கும் பிறர்க்கும் பயன்
படாதென்பதுபற்றி, 'பேஎய் கண் டன்ன துடைத்து'
என்றார். காணுதல்-
தன்வயமாக்குதல்.

(கு - ரை.) காலம் அரியன் - பார்க்கச்

சமயங்கிடைத்தற்கு அரியவன்.
இன்னாத - வெறுப்புக்காட்டுகிற.
இவை இரண்டும் - காணவருவார்க்கு அவ
காசங்கொடாமையும், முகமலர்ச்சியின்மையும். இவை
செய்வானை - அருஞ்
செவ்வியும் இன்னுமுகமு முடையவனை.
தன்வயமாக்குதல் - தன்வசப்

படுத்துதல். பேயினாற் கைக்கொள்ளப்பட்டபொருள், அதற்கும் பிறர்க்கும் பயன்படாதாம். 'பேஎய்கண்டு' என்றதில், அளபெடை - செய்யுளோசை நிறைக்க வந்தது; அலகிட்டுக் காண்க. (ரு)



ருசுசு. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி

னெடுஞ்செல்வ

நீடின்றி யாங்கே கெடும்.

(இ - ள்.) (அரசன்), கடுஞ் சொல்லன் - கடிய சொல்லையும் உடைய னாய், கண் இலன் ஆயின் - கண்ணோட்டமும் இலனுமாயின், நெடுஞ் செல்வம் - (அவனது) பெரிய செல்வம், - நீடு இன்றி - நீடுதலின்றி, ஆங்கே - அப் பொழுதே, கெடும் - ; (எ - று.)

"வேட்டக் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூது பொரு, ளீட்டங் கட் காம மோ டேழு" எனப்பட்ட விதனங்களுள் கடுஞ்சொல்லையும் மிகுதண்டத்தை யும் இவர் இவ்வெருவந்தசெய்தலுள் அடக்கினர். கண் - ஆகுபெயர். இவை செய்தபொழுதே கெடுஞ் சிறுமைத்து அன்றாயினும் என்பார், 'நெடுஞ்செல் வம்' என்றார். நீடுதல் - நீட்டித்தல்.

(கு - ரை.) நீடுதல்-நெடுங்காலம் நிலைநிற்றல். வேட்டம்-வேட்டையாடு தல். மிகுதண்டம் - அளவிறந்த தண்டனை. சூது - சூதாடுதல். பொருள் ஈட் டம் - திரவியஞ்சம்பாதித்தல். கள்-மதுபானம். விதனம்—வ்யஸநம்: அரசர்க் குத் துன்பந்தருஞ்செய்கை. ஒருவர்மேல் கண் ஓடுதலாலுண்டாகிறதாகிணி யத்தை 'கண்' என்றது-காரணவாகுபெயர். கெடும் சிறுமைத்து அன்று-அழி யக்கூடிய சிறியஅளவை யுடையதன்று. நீடு-முதனிலைத்தொழிற்பெயர். ஏகா ரம் - தேற்றவகையால், விரைவுகுறிக்கும். (சு)

௫௬எ. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

(இ - ள்.) கடு மொழிஉம் - கடிய சொல்லும், கையிகந்த தண்டம்உம் -
(குற்றத்தின்)மிக்க தண்டமும்,—வேந்தன் - அரசனது, அடு முரண் - பகை
வெல்லுதற்கேற்ற மாறுபாடாகிய இரும்பினை, தேய்க்கும்—, அரம்-அரமாம்.

கடுமொழியால் தானையும், கையிகந்ததண்டத்தால் தேசமும் கெட்டு
முரண் சுருங்கி வருதலின், அவற்றை அரமாக்கி, திண்ணிதாயினும் தேயும்
என்றற்கு அடுமுரணை இரும்பாக்கினர்; ஏகதேசவுருவகம். அரம் என்பத
னைத் தனித்தனி கூட்டுக.

இவையைந்துபாட்டானும், செவ்வியின்மை, இன்னாமுகமுடைமை,
கண்ணோட்டமின்மை, கடுஞ்சொற்சொல்லல், கையிகந்ததண்டம் என்றிவை
கள் குடிகளஞ்சும் வினை யென்பதூஉம், இவைசெய்தான் ஆயுளும் அடு முர
ணும் செல்வமும் இழக்கும் என்பதூஉம் கூறப்பட்டன.

(கு - ரை.) அரம்-இரும்பை அராவுதற்குரிய

ஒருவகைக்கருவி. தானை-
சேனை. கையிகந்த-வரம்புகடந்த. முரண்-வலிமை.
கடுமொழியையும் கையிகந்த
தண்டத்தையும் அரமாக உருவகஞ்செய்ததற் கேற்ப
அடுமுரணை 'இரும்பு' என்றமையால்,
ஏகதேசரூபகாலங்காரம். 'இக்குறளில் (இவ்வாறு) அர
மென்னும் ஒருமைப்பெயரை வாக்கியபேதமாகத்
தனித்தனி கூட்டிமுடிப்ப
தனைத் தேர்வடமிழுப்பார்போல
'பிரத்தியேகயந்தாந்வயம்' என்பர் (வட

ருள - ஆம்

அதிகாரம்.— வெருவந்தசெய்யாமை கருள

நூலார்). இதுவும் தூராந்வயத்துள் அடக்கிக்கொள்க'
என்பது, பிரயோக
விவேகவுரை. 'இதில் அரமென்பது ஒருசொல் நின்றே
தனித்தனி உதவுதல்
காண்க. முதனிலைத்தீவகம், இடைநிலைத்தீவகம்,
கடைநிலைத்தீவகம் முத
லாயினவும் அது' என்ற இலக்கணக்கொத்து
உரையையுங் காண்க. இழக்
கும் - இழப்பான். அடுமுரண் - வினைத்தொகை.

(எ)

௫௬௮. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

(இ - ள்.) இனத்து ஆற்றி - (காரியத்தைப்பற்றி வந்த எண்ணத்தை) அமைச்சர்மேல் வைத்து, எண்ணாத - (அவரோடு தானும்) எண்ணிச் செய்யாத, வேந்தன்-அரசன், (அப்பிழைப்பால் தன்காரியந் தப்பியவழி), சினத்து ஆற்றி - (தன்னைச்) சினமாகிய குற்றத்தின்கண்ணே செலுத்தி, சீறின் - (அவரை) வெகுளுமாயின், திரு - (அவன்) செல்வம், சிறுகும் - நாடோறுஞ் சுருங்கும்; (எ - று.)

அரசர்பாரம்பொறுத்துய்த்தல்ஒப்புமையான் அமைச்சரை 'இனம்' என்றும், தான் பின் பிழைப்பாதலறிந்து அமையாது அதனை அவர்மேல் ஏற்றி வெகுளின் அவர் வெரீஇ நீங்குவர்; நீங்கவே, அப்பிழைப்புத் தீருமாறும் அப்பாரம் இனிதுய்க்குமாறும் இலனும் என்பது நோக்கி 'திருச்சிறுகும்' என்றுங் கூறினார்.

இதனான், பகுதியஞ்சும்வினையும்,

அதுசெய்தான் எய்துங் குற்றமும் கூறபபடடன.

(கு - ரை.) எண்ணம் - ஆலோசனை. எண்ணி - ஆலோசித்து. அப்பிழைப்பு - அந்தத்தவறு. அவரை வெகுளுமாயின் - மந்திரிகளைக் கோபிப்பானுனல். இனம் - ஸஜாதி: ஒரேசாதியினர். அரசர்பாரம் பொறுத்து உய்த்தலொப்புமை - அரசரது இராச்சியபாரத்தைத் தாமும் உடனிருந்து வகித்துச் செலுத்துவதில் அரசர்க்கும் அமைச்சர்க்கும் ஒருவரோடொருவர்க்குள்ள சமானத்தன்மை. பின் பிழைப்பாதல் அறிந்து-பிழைப்பு ஆதல் பின் அறிந்து என்க; தவறிப்போனமையைப் பின்பு அறிந்து. அமையாது - அடங்கியிராமல். அதனை - அக்குற்றத்தை. அவர்மேல் - அமைச்சர்மேல். வெரீஇ - அஞ்சி. அப்பிழைப்புத் தீரும் ஆறு - அப்படிப்பட்டதவறு நீங்கும்விதம். அப்பாரம் இனிது உய்க்கும் ஆறு - அவ்விராச்சியபாரத்தை இனிமையாகச் செலுத்தும் விதம். பகுதி—அமைச்சர்முதலாகிய அங்கம்.

(அ)

ருகூகூ. செருவந்த போழ்திற் சிறைசெய்யா

வேந்தன்

வெருவந்து வெய்து கெடும்.

(இ - ள்.) சிறை செய்யா - (செரு வருதற்குமுன்னே தனக்குப் புகலாவ
தோர்) அரண் செய்துகொள்ளாத, வேந்தன் - அரசன்,—செரு வந்த போழ்தின் - அது வந்தகாலத்து, (ஏமம் இன்மையான்), வெருவந்து - வெருவி, வெய்து கெடும் - கடிதிற் கெடும்; (எ - று.)

கஙக திருக்குறள்

பகையைவெருவி, சேர்ந்தார் நீங்குதலின், தமியனாய்த் தானும் வெருவி அப்பகைவயத்தனாம் என்பதாம்.

இதனான், தான்அஞ்சும் வினையும், அதுசெய்தான் எய்தும் பயனும் கூறப்பட்டன.

(கு - ரை.) செரு - போர். புகலாவது ஓர் அரண் - பாதுகாப்பாகச் சென்றுசேரத்தக்க தொரு கோட்டை. அது - அப்போர். ஏமம் இன்மை யான் - பாதுகாப்பில்லாமையால்; ஏமம் - ரக்ஷகம். வெருவி - அஞ்சி. பகை யைவெருவிச் சேர்ந்தார்நீங்குதலின் - தன்னைச்சேர்ந்தவர்கள் பகைவர்க்கு அஞ்சித் தன்னைவிட்டு நீங்குதலால். தமியன் ஆய் - தனிப்பட்டவனாய். அப் பகை வயத்தனும் - அந்தப்பகைவர்க்கு வசப்பட்டவனாவன். தான் அஞ்சும் வினையென்றது - தனக்குப் புகலாவதோர் அரண்செய்துகொள்ளாது செய்யும் போராகிய வினை. அது - அஞ்சத்தக்க வினை. போழ்தின் கெடும் என இயையும். சிறை - இங்கே, காவலிட மென்ற மாத்திரமாய் நின்றது.

௫௭௦. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

(இ - ள்.) கடுங் கோல் - கடுங்கோலனுப அரசன், கல்லார் - (நீதிநூல் முதலிய) கல்லாதாரை, பிணிக்கும் - (தனக்குப் பகுதியாகக்) கூட்டாநிற்கும்; அது அல்லது - அக்கூட்டம்அல்லது, நிலக்கு பொறை - நிலத்திற்கு மிகையாய பாரம், இல்லை - பிறிதில்லை; (எ - று.)

கடுங்கோல் என்பது - ஈண்டு மிக்கதண்டத்தின்மேற்றன்றி அதனைச் செய்வான்மேற்றுயிற்று. அவன் அதுசெய்தற்கு இயைவாரையல்லது கூட்டாமையின் 'கல்லார்ப்பிணிக்கும்'என்றும், ஏனையவற்றையெல்லாம் பொறுக்கின்றது இயல்பாகலின் 'நிலத்திற்குப்பொறை அதுவல்லதில்லை'என்றுங் கூறினர். நிலக்கு என்பது - செய்யுள்விகாரம்,

இதனான், வெருவந்தசெய்தலின் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) ஆய - ஆகிய. முதலிய - முதலியவற்றை. கல்லாதார்-படியாதவர். பகுதி - அங்கம். கூட்டாநிற்கும் - சேர்த்துக்கொள்வான். மிகை - மிகுதி. மிக்கதண்டத்தின்மேற்று அன்றி - மிகுந்ததண்டனையென்னும் பொருளைக் குறிப்பதல்லாமல். அவன் - கொடுங்கோலரசன். அதுசெய்தற்கு இயைவாரையல்லது கூட்டாமையின்-தான் அக்கொடுங்கோன்மை

செலுத் துதற்குச் சம்மதிப்பவர்களையல்லது நல்லோர்பிறரைத் தனக்கு மந்திரிமுதலிய உறுதிச்சுற்றமாகச் சேர்த்துக்கொள்ளானாதலால். எல்லாப் பாரங்களையும்பொறுத்தல் பூமிக்குஇயல்பாதலை 'ஸர்வம்ஸஹா' என்ற அதன் வடமொழிப்பெயராலும் அறிக. நிலத்துக்கு என்பதன் அத்துச்சாரியை தொக்கு நிலக்கு என நின்றது, தொகுத்தல்விகாரம். கல்லார்ப்பிணிக்கும் - உயர் திணையில் இரண்டனுருபு தொக, அவ்வுயர்திணைப்பெயரின்முன் வலியிரட் டிற்று. கல்லார்ப்பிணிக்கும் கடுங்கோல் -

கடுங்கோலனது இயல்பைக் கடுங்

## ரு௫ - ஆம் அதிகாரம்.—கண்ணோட்டம்

கருக௯ கோலின்மேல் ஏற்றிக்கூறியது, உபசாரவழக்கு.

பொறை - பொறுக்கப்படுவதெனச் சுமைக்குக் காரணப்பெயர். மலைமுதலிய பாரங்களையெல்லாம் பொருளாகக் கருதாது பொறுத்தலையே இயல்பாகவுடைய பூமிக்குப் பாவிகள் பொறுத்தற்கரிய பாரமாவர் என்பது நூல் துணிபு; கீழ் 'புறங்கூறாமை' என்ற அதிகாரத்தில் "அறனோக்கியாற்றுங்கொல் வையம் புறனோக்கிப், புன்சொலுரைப்பான் பொறை" என்றதுங் காண்க.

(௧௦)

ரு௮ - ஆம்

## அதிகாரம்.—கண்ணோட்டம்.

அஃதாவது - தன்னோடுபயின்றாரைக் கண்டால் அவர்கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேற் கண் சென்றவழி நிகழ்வ தாகலின், அப்பெ யர்த்தாயிற்று. மேல் வெருவந்தசெய்யாமையுட் கூறியவதனையே சிறப்புப் பற்றி விரித்துக்கூறுகின்றமையின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) பயின்றார் - முன்புபழகியவர். கண் சென்றவழி-கண்பார்வை சென்றஇடத்தில். நிகழ்வது - உண்டாவது. கீழ் 'வெருவந்தசெய்யாமை' என்ற அதிகாரத்தில் "கடுஞ்சொல்லன் கண்ணில னாயின்" என்ற ஆறாவது குறளால், கண்ணோட்டமின்மை - வெருவந்தசெய்தல் எனப்பட்டமை காண்க.
சிறப்பு - அரசர்க்குக் கண்ணோட்டம் இன்றியமையாமை. ஓட்டம் - ஓடுதல்; தொழிற்பெயர்.

௫௭௧. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.

(இ - ள்.) கண்ணோட்டம் என்னும் - கண்ணோட்டமென்று சொல்லப் படுகின்ற, கழி பெருங் காரிகை - சிறப்புடைய அழகு, உண்மையான் - (அர சர்மாட்டு) உண்டாகலான், இ உலகு - இவ்வுலகம், உண்டு - உண்டாகா நின்றது; (எ - று.)

'கழிபெருங்காரிகை' என்புழி, ஒருபொருட்பன்மொழி - இவ்வுயிரழ கது சிறப்பு உணர நின்றது. இவ்வழகு அதற்கு உறுப்பாகலின், 'உண்மை யான்' என நிலைபெறுங் கூறினார். இன்மை வெருவந்தசெய்த லாகலின்,

அவர்காட்டுவாழ்வார் புலியையடைந்த புல்வாயினம் போன்று ஏமஞ் சாராமை பற்றி, 'இவ்வுலகுண்டு' என்றார்.

(கு - ரை.) என்புழி -
பெரு என மிகுதியென்னும்

என்றவிடத்தில். ஒருபொருட்பன்மொழி - கழி
ஒருபொருளைத்தரும் பலசொற்கள். "ஒருபொரு
ளிருசொற் பிரிவில வரையார்", "ஒருபொருட்பன்மொழி
சிறப்பினின் வழா" என்பன - முறையே
இவ்விலக்கணத்துக்குத் தொல்காப்பியத்திலும்,
நன்னூலிலும் விதிகளாம். 'இவ்வுயிரழகு' என்றது,
கண்ணோட்டத்தை. உயி

ரழகு - (அரசனது) உயிரின் அழகு. அதற்கு - அரசருயிர்க்கு. நிலைபேறு - நிலைபெற்றிருத்தல். இன்மை - கண்ணோட்டமின்மை. புல்வாய் இனம் போன்று - மான்கூட்டத்தை யொத்து. ஏமஞ்சாராமை-இன்பமடையாமை.



கழி - மிகுதி குறிப்பதோர் உரிச்சொல். உலகு என்றது,
குடிகளை. அரசன்
கண்ணோட்டமுடையனா
ரென்பது கருத்து.

யிருத்தலாலேயே உலகத்துக் குடிகள் வாழ்வுபெறுவ

(க)

ருஎ௨. கண்ணோட்டத் துள்ள துலகிய
லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

(இ - ள்.) உலகு இயல் - உலகநடை, கண்ணோட்டத்து உள்ளது - கண்ணோட்டத்தின் கண்ணே நிகழ்வது; (ஆகலான்), அஃது இலார் உண்மை- அக்கண்ணோட்டமில்லாதார் உளராதல், நிலக்கு பொறை - இந்நிலத்திற்குப் பாரமாதற்கே, (பிறிதொன்றற்கு அன்று); (எ - று.)

உலகநடையாவது - ஒப்புரவுசெய்தல், புறந்தருதல், பிழைத்தனபொறுத்தல் என்றிவை முதலாயின. அவை நிகழாமையால் தமக்கும் பிறர்க்கும் பயன்படார் என்பதுபற்றி, 'நிலக்குப்பொறை' என்றார். 'ஆதற்கு' என்பது- சொல்லெச்சம்.

இவையிரண்டுபாட்டானும், கண்ணோட்டத்ததுசிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) உலகநடை - உலகத்தாரது நடத்தை. நிகழ்வது-உள்ளது. ஒப்புரவு-உதவி. புறந்தருதல் - பிறரைப் பாதுகாத்தல். பிழைத்தன பொறுத்தல் - பிறர்செய்த குற்றங்களைப் பொறுத்தல். பொறையாதற்கு என்னவேண்

டிய இடத்தில் பொறை என்றதனால், 'ஆதற்கு' என்றசொல் எஞ்சியதாகும் என்பார், ஆதற்கு-சொல்லெச்சம் என்றார்; சொல்லெச்சம்-சொல் குறைந்து நிற்பது: இதற்கு "சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொளியற்கை, புல்லிய கிளவி யெச்சமாகும்" என்னுந் தொல்காப்பியச்சூத்திரம் விதி; இது, நன்னூ
லில் 'இசையெச்சம்' எனப்படும்.

(உ) ருஎங. பண்ணென்னும் பாடற்

கிசைபின் றேற் கண்ணென்னுங்
கண்ணோட்ட மில்லாத கண்.

(இ - ள்.) பண் என் ஆம் - பண் என்னபயத்ததாம்? பாடற்கு இயைபு இன்றேல் - பாடற்றொழிலோடு பொருத்த மின்றாயின்; (அதுபோல), கண் என் ஆம் - கண் என்னபயத்ததாம்? கண்ணோட்டம் இல்லாத கண் - கண்ணோட்டமில்லாதவிடத்து; (எ - று.)

பண், கண் என்பன - சாதிப்பெயர். பண்களாவன - பாலையாழ் முதலிய நூற்றுமூன்று.
பாடற்றொழில்களாவன - யாழின்கண் வார்தல் முதலிய எட்டும், பண்ணல் முதலிய எட்டும், மிடற்றின்கண் எடுத்தல் படுத்தல் நலிதல் கம்பிதம் குடிலம் என்னும் ஐந்தும், பெருவண்ணம் இடைவண்ணம் வனப்புவண்ணம் முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். இவற்றோடு

இசையியாதவழிப் பண்ணாற் பயனில்லாதவாறு போல,
கண்ணோட்டத்து

இயையாதவழிக் கண்ணாற் பயனில்லை என்பதாம். கண்சென்றவழி நிகழ்தல் பற்றி, அதனை இடமாக்கினார். இறுதிக்கட் கண் என்பதனை "கண்ணகன் ஞாலம்" என்புழிப்போலக் கொள்க.

ருவ - ஆம்

அதிகாரம்.—கண்ணோட்டம் கசுக

(கு - ரை.) பண் - இசை. பயத்தது - பயனையுடையது. சாதிப்பெயர்- அதன் இனத்தையெல்லாங் குறிக்கும் பெயர்ச்சொல். 'கோடிப்பாலை செம்பாலை படுமலைப்பாலை செவ்வழிப்பாலை அரும்பாலை மேற்செம்பாலை விளரிப்பாலை என்னும் இவ்வேழுபெரும்பாலையினையும் முதலடுத்து நூற்றுமூன்று பண்ணும் பிறக்கும்; அவற்றுள், செம்பாலையுட் பிறக்கும் பண்கள் - பாலையாழ் நாகராகம் ஆகரி தோடி கௌடி காந்தாரம் செந்துருத்தி உதயகிரி என இவை; பிறவும் விரிப்பின் உரை பெருகு மாதலின், அவற்றை வந்தவழிக் கண்டுகொள்க. "நாற்பெரும் பண்ணுஞ் சாதிநான்கும், பாற்படு திறனும் பண்ணெனப்படுமே" என்றார்' என்றும், 'பன்னிருபாலையின் உருத்தொண்ணூற்றொன்றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள் நூற்றுமூன்றாதற்குக் காரணமாமெனக் கொள்க' என்றும், 'பெருந்தானமெட்டினும் கிரியைகளெட்டாலும் பண்ணிப்படுத்தலாற் பண் என்று பெயராயிற்று' என்றுங் கூறினர், சிலப்பதிகாரவுரையில் அடியார்க்குநல்லார். யாழின்கண் - வீணையில். வார்தல் முதலிய எட்டு - வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்பன; இவை இசைக்கரணமெனப்படும். பண்ணல்முதலிய எட்டு - பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்பன; இவை - கலைத்தொழிலெனப்படும். "பண்ணல் பரிவட்டணை யாராய்தல் தைவரல், கண்ணியசெலவு விளையாட்டுக் கையூழ், நண்ணிய குறும்போக் கென்று நாட்டிய, எண்வகையா லிசை யெழீஇப், பண்வகையாற் பரிவுதீர்ந்து," "வார்தல் வடித்த லுந்த லுறழ்தல், சீருட னுருட்டல் தெருட்ட லள்ளல், ஏருடைப் பட்டடையென இசையோர் வகுத்த, எட்டுவகையி னிசைக்கரணத்துப், பட்டவகை தன் செவியி னோர்த்து" என்ற சிலப்பதிகாரத்தையும், 'பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மைமாத்திரை யறிந்து வீக்குதல்; பரிவட்டணை-அவ்வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலுங் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல்; ஆராய்தல் - ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிவது; அநுசுருதி யேற்றுதல் - தைவரல்; ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல் - செலவு; பாட நினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல் - விளையாட்டு; வண்ணத்திற் செய்த பாட்டெல்லாம் இன்பமாகப்பாடுதல் - கையூழ்; குடகச்செலவுந் துள்ளற்செலவும் பாடுதல் - குறும்போக்கு' என்ற சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியருரை...

யும், 'வார்த லென்பது - சுட்டுவிரற் செய்தொழில்; வடித்தலென்பது - சுட்டுவிரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்; உந்தலென்பது - நரம்புகளைத் தெறித்து வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதும் நிரலிழிபட்டதும் என்றறிதல்; உறழ்த லென்பது - ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் ஆராய்தல்; உருட்டலென்பது - இடக்கைச் சுட்டுவிரல் தானே யுருட்டலும், வலக்கைச் சுட்டுவிரல் தானே யுருட்டலும், சுட்டொடு பெருவிரல்கூட்டி யுருட்டலும், இருபெருவிரலும் இயைந்து உடனுருட்டலும் என வரும்; "தெருட்டலென்பது செப்புங்காலை, யுருட்





டிவருவ தொன்றே மற்ற, வொன்றன் பாட்டுமடை யொன்றநோக்கின், வல்லோராய்ந்த நூலேயாயினும், வல்லோர் பயிற்றுங் கட்டுரையாயினும், பாட்டொழிந் துலகினி லொழிந்த செய்கையும், வேட்டதுகொண்டு விதியுறநாடி" என வரும்; இவை இசைத்தமிழ்ப் பதினாறுபடலத்துட் காரணவோத்துட் காண்க,' 'பட்டடையென்பது - நரம்புகளில் இளிக்குப் பெயர்; என்னை? எல்லாப்பண்ணிற்கும் அடிமணையாதலின்' என்ற சிலப்பதிகார அரும்பதவுரையையுங் காண்க. மிடறு - கண்டத்தொனி; சாரீர ஓசை. "எடுத்தல் பாட்டு உச்சமாம் எண்படுத்தல் மந்தம், தடுத்து கலிதல் சமமாம் - தொடுத்தியன்ற, தள்ளாதகம்பிதந் தானடுக்கல் நற்குடிலம், உள்வாங்கிப் பாட லுணர்" என்ற சீவகசிந்தாமணியுரையிற் காட்டிய மேற்கோட்செய்யுள் இங்குஉணரத்தக்கது; எடுத்தல் முதலிய இவ்வைந்தும் கிரியைகளெட்டின்பாற் படுவன; அவ்வெட்டில், இங்குக் குறிக்கப்படாதவை - ஒலி, உருட்டு, தாக்குஎன்ற மூன்றுமாம்; 'சொல்வகை, நான்குவகைப்படும்; சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என; சுண்ணம் - நான்கடியான் வருவது: சுரிதகம் - எட்டடியான் வருவது:

வண்ணம் - நாலுன்கடியான் வருவது: வரிதகம்-முப்பத்திரண்டடியான் வரு வது; என்னே?—"சுண்ணகான்கடி சுரிதகமெட்டடி, வண்ணநாலுன்கு வரி தகமெண்ணுன்கென், றெண்ணியவடித்தொகை யெய்தவும் பெறமே" என் ருராகலின். வண்ணம் - ஒருவகையான் மூன்றுவகைப்படும்; பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ண மென; அவற்றுள், பெருவண்ணம், ஆறுய் வரும்; இடைவண்ணம் இருபத்தொன்ருய் வரும்; வனப்புவண்ணம் நாற்பத் தொன்பதாய் வரும்' என்பது, சிலப்பதிகாரத்து அடியார்க்குநல்லாருரை. இங்குக்காட்டிய இசைத்தமிழ்ப்பகுதிகள் இக்காலத்துப் பயிலவழங்கா. கண் ணோட்டத்து இயையாதவழி - தாக்ஷிண்யத்தோடு பொருந்தாதவிடத்து. நிகழ்தல் - கண்ணோட்டமுண்டாதல். அதனை - கண்ணை. இடமாக்கியது கண் ணோட்டத்துக்கு என்க. இறுதிக்கட் 'கண்' - ஈற்றில் 'இல்லாதகண்' என்பதி லுள்ள கண். "கண்ணகல் ஞாலம்" என்பதற்கு - இடமகன்ற நிலவுலகம் என்று பொருள்; இம்மேற்கோள்-திரிகடுகத்துக் கடவுள்வாழ்த்தின் தொடக் கம். இல்லாத கண் என்பது - ஒருசொல்லன் றென்றும், கண் என்பது இட மென்ற பொருளுள்ளதென்றும் எதிர்மறைக்குறிப்புப் பெயரெச்சத் தொட ரென்றும் கொள்க. பாடற்கு என்பதில், நான்கனுருபு மூன்றனுருபின்பொரு ளில் வந்தது; உருபுமயக்கம். இயைபு-தொழிற்பெயர். இன்று - எதிர்மறை யொன்றன்பாற் குறிப்புமுற்று. காண்பது கண்எனக் காரணக்குறி. இப்பாட்டு எடுத்துக்காட்டுவமையணி.

(ந.)

ருஎச. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினுற்

கண்ணோட்ட மில்லாத கண்.

(இ - ள்.) முகத்து உள போல் - (கண்டார்க்கு) முகத்தின்கண் உள போல் (தோன்றல் அல்லது), எவன் செய்யும் - (வேறு)

என்னபயனைச் செய்

யும்? அளவினன் கண்ணோட்டம் இல்லாத -
அளவிறவாத கண்ணோடுதலை

யுடையவல்லாத, கண் - கண்கள்; (எ - று.)

ருஎ - ஆம்

அதிகாரம்.—கண்ணோட்டம் கசுரு

தோன்றல், அல்லது என்னுஞ் சொற்கள் -

அவாய்நிலையான் வந்தன.

கழிகண்ணோட்டத்தின் நீக்குதற்கு, 'அளவினன்'
என்றார். 'ஒருபயனையுஞ்

செய்யா' என்பது, குறிப்பெச்சம்.

(கு - ரை.) உளபோல் - உள்ளனபோல. அளவு
இறவாத - வரம்புகட

வாத. அவாய்நிலை-உள்ளசொற்கள் வேறுசொற்களை
வேண்டிநிற்குந்தன்மை.

அவாய்நிலையால் வருவித்துமுடிக்குஞ் சொல்லை
வடநூலார் 'அத்யாஹாரம்'

என்பர். இங்கு 'உளபோல்' என்பது - 'தோன்றலல்லது'
என்பதை வேண்டி

நின்றமை காண்க. கழிகண்ணோட்டம் - வரம்புகடந்த
தாக்ஷிணியம்; இது அர

சர்க்குக் குற்றமாதலை கீழ் 'குற்றங்கடிதல்' என்ற
அதிகாரத்திலும் 'செங்

கோன்மை' என்ற அதிகாரத்திலும் விளக்கினர்.

அளவினன் என்பதற்கு -
அளவோடுகூடிய என்று பொருள்; இதில் 'ஆன்'
என்னும் மூன்றனுருபு,
'ஒடு' உருபின் பொருளில் வந்தது. குறிப்பெச்சமாவது -
சொல்லப்படாமல்
எஞ்சிநின்ற பொருள் குறிப்பினல் பெறப்படுவது; இங்கு
'எவன்செய்யும்'
என்ற வினவின் குறிப்பால் 'ஒருபயனையுஞ் செய்யா'
என்பது பெறப்பட்ட
மை காண்க.
(ச)

௫எ௫. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட
மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

(இ - ள்.) கண்ணிற்கு - (ஒருவன்) கண்ணிற்கு, அணி கலம் - அணியும் கலமாவது,—கண்ணோட்டம்—; அஃது இன்றேல்-அக்கலம் இல்லையாயின், புண் என்று உணரப்படும் - (அஃது அறிவுடையாரால்) புண்ணென்று அறியப்படும்; (எ - று.)

வேறு அணிகலம் இன்மையின் 'கண்ணிற்கணிகலம்' என்றும், கண்ணாய்த்தோன்றினும் நோய்களானும் *புலன்பற்றலானுந்
துயர்விளைத்தல்நோக்கி
'புண்ணென்றுணரப்படும்' என்றுங் கூறினர்.
இவைமூன்றுபாட்டானும், ஓடாதுநின்ற கண்ணின்
குற்றம் கூறப்பட்டது.

(கு-ரை.) அணியும் கலம்-ஆபரணம், அஃது-கண்.
புலன்பற்றலானும்- பல பொருள்களையுங் காணுந்

தன்மையைக் கொள்ளுதலாலும். புலன் - இந்
திரியவுணர்ச்சி; கண் என்னும் பொறிக்கு உரிய
புலன்-ஒளி. புண்-விரணம்.
ஓடாதுநின்ற - தாக்ஷிணியப்படாது நின்ற. கலமென்னும்
பலபொருளொரு
சொல், அணியென்ற அடைமொழியால்,
பொதுமைநீங்கி ஆபரணத்தின்
மேல் நின்றது; மரக்கலம், படைக்கலம், உண்கலம்,
கொள்கலம் என வெவ்
வேறு அடைமொழிகளோடு கூடி வெவ்வேறு
பொருள்குறிக்கும். இப்பாட்டின்
இரண்டாம் வாக்கியத்துக்கு, 'அக்கண்' என்பது -
தோன்றாஎழுவாய். "கண்
ணுக் கணிகலங் கண்ணோட்டம்" என்று
திரிகடுகத்திலும் வந்துள்ளது. (ரு)

ருஎசு. மண்ணோ டியைந்த மரத்தனையர்
கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

---

* பி - ம்: புனல்

(இ - ள்.) கண்ணொடு இயைந்து-(ஓடுதற்குஉரிய) கண்ணோடு பொருந்தி வைத்து, கண் ஓடாதவர் - அஃது ஓடாதவர், (இயங்காநின்றாராயினும்), மண்ணொடு இயைந்த மரத்து அனையர் - மண்ணொடுபொருந்திநிற்கின்ற மரத்தினை யொப்பர்; (எ - று.)

ஓடாதவர் என்புழி, சினைவினை முதல்மேல் நின்றது. மரமும் கண்ணொ டியைந்து கண்ணோடாமையின், இது - தொழிலுவமம். இதனைச் சுதைமண்ணோடுகூடிய மரப்பாவையென்று உரைப்பாருமுளர்; அஃது உரையன்மை காணப்படும் கண்ணன்றி அதனுள் மறைந்துநிற்கின்ற ஒருசாருள்ளீட்டாற் கூறினமையானும், "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்றிரக்கண்டாய்" என்பதனானு மறிக.

(கு - ரை.) ஓடுதற்கு - தாட்சிணியங்கொள்ளுதற்கு. அஃது ஓடாதவர் - அக்கண்ணோட்டமில்லாதவர். இயங்காநின்றார் - சஞ்சரிக்கிறவர். மண்ணோடு பொருந்திநிற்கின்ற - தரையில் முளைத்து அவ்விடம்விட்டுப் பெயராது நிற்கின்ற, இது, மரத்தின் தாவரத்தன்மையைக்காட்டி அதனால் இழிவுவிளக்க வந்த அடைமொழி. 'கண்ணோடாதவர்' என்பதில், கண் என்னுஞ் சினையின் வினையாகிய ஓடுதல்இன்மை, முதலாகிய அரசர்மேல் நின்றது; கண்ணோடப்பெறாதவர் என்றுகருத்து. மரத்துக்குக் கண்ணொடு இயைதல் - கணுக்களோடு பொருந்துதல்.

தொழிலுவமம்-செய்கைபற்றிவந்த உவமை; இது-வினையுவமமெனவும் படும்;(மற்றவை-பயனுவமை, மெய்யுவமை, உவமவுருபு.) கண்ணொடு [கண்ணென்னும் இந்திரியத்தொடு] கூடியிருந்தும் கண்ணோடாதவர், கண்ணொடு [கணுவோடு] பொருந்தியிருந்தும் கண்ணோடா திருக்கும் மரம்போல்வ ரென்றவாறு: கண் என்பது - சிலேடைப்பொருளது. "நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறியமாட்டாதவனன் மரம்" என்றாற போலவந்தது, இது. சுதைமண்-சுண்ணாம்புகலந்த மண். "நெடுநிலைமண்ணீடு நின்றவாயிலும்," "பாங்குற மண்ணீட்டிற் பண்புறவகுத்து" என்ற மணிமேகலையடிகளிலும் 'மண்' என்றது-சுதையென்னும் பொருளதாம். பாவை - பதுமை. மரம் என்றது, மரப்பாவையென்றபொருளிற் கருவியாகுபெயராம். 'காணப்படும் கண்ணானன்றி அதனுண்மறைந்துநிற்கின்ற ஒருசாருள்ளீட்டாற் கூறினமையானும்' என்பதற்குக்கருத்து நன்குவிளங்கவில்லை; எமக்குக் காணக் கிடைத்த மூன்று ஏட்டுப்பிரதிகளுள் இரண்டில் இவ்வாக்கியம் இல்லை. 'காணப்படும் மண்ணானன்றி' என்று இருப்பின் ஒருவாறு பொருந்தும்; மரத்தையுள்ளேவைத்து மேலே சுதையினாலமைக்கப்பட்ட பாவையைக் கீழ் 'கல்லாமை' என்ற அதிகாரத்தில் "நுண்மாணுழைபுலமில்லா னெழினலம், மண்மாண்புனைபாவையற்று" என்றதில் 'மண்மாண்புனைபாவை' என்றதுபோலவும், சிலப்பதிகாரத்தில் பாவைசெய்வாரை ''மண்ணீட்டாளர்" என்றது போலவும் 'மண்ணாலியைந்தபாவை' என்பதே போதுமானதாயிருக்க, 'மண்ணோடியைந்த மரப்பாவை' எனக்கூறுதல் 'வெற்றெனத்தொடுத்தல்' என்னும்

குற்றத்துக்கு இடமாமெனக் குறித்துப் பிறர்கூறும் உரையை

மறுத்தவாறும்.

ருஅ -

ஆம் அதிகாரம்.—கண்ணோட்டம் கசுரு

இனி, ஒருசாரார்
காணப்படுகின்ற

காணப்படுங் கண்ணன்றி என்றே பாடங்கொண்டு -
கண்ணினலன்றி அக்கண்ணினுள் மறைந்துகிடக்கும்
தாட்சிணியத்தைப்பற்றிக் கூறுவதாலும், மரக்கண்ணோ
என்று தொடங்
குஞ் செய்யுளிலும் தாட்சிணியமில்லாதவர்கண்ணை
மரத்தினுடைய
கண்ணோ [கணுவோ]? என்று கூறியிருப்பதாலும்
மரப்பாவையென்றல்
பொருந்தாதென்று பரிமேலழகர் மறுத்தன ரென்ப.
அதனுள் - அம்மண்ணி
னுள். ஒருசார்உள்ளீடு-ஒருபுறத்தினுட் கிடக்கும்பொருள்;
என்றது, மரத்தை.
"மரக்கண்ணோ மண்ணோர்வார்கண்ணென், றிரக்கண்டாய்"
என்பதற்கு-மண்
ணுலகத்தையாளும் அரசாது கண்
மரக்கண்ணோவென்றசொல்லி இரத்தல்

செய்வாய் என்று பொருள்; இம்மேற்கோள் முத்தொள்ளாயிர மென்னும் நூலி லுள்ள தென்று தெரிகிறது: "வரக்கண்டு நாணாதே வல்லேயா னெஞ்சே, மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென் றிரக்கண்டாய், வாளுழுவை வெல்கொடியான் வண்புனனீர் நாடற்கென், றோளுழுவந் தோன்றத் தொழுது" என்பது அதுவருஞ்செய்யுள். இதில், கண்ணோட்டமில்லாத கண் மரக்கண் எனப்பட்டமைகாண்க. இங்ஙனம் கூறவே, கண்ணோட்டமில்லாத வர் மரமெனப்படுவ ரென்பதுபோதரும். இம்மேற்கோள், தமது உரையைத் தாபிக்கக் காட்டியவாறு. மரத்தின்கணு கண்ணெனப்படுதலை "ஈனு தவிளங் கமுகின் மரகதமணிக்கண்ணும்" எனச் சீவகசிந்தாமணியிலுங் காண்க. (கூ)

௫எஎ.

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில்.

(இ - ள்.)

கண்ணோட்டம் இல்லவர் - கண்ணோட்டமில்லாதவர், கண் இலர்-கண்ணுடையரு மல்லர்; கண்

உடையார்-கண்ணுடையவர், கண்ணோட்டம் இன்மை உம் - கண்ணோட்டமிலாதலும், இல் - இல்லை; (எ-று.)

கண்ணுடையராயின் காட்சிக்கண்ணே அஃதுஓடும் என்பதுபற்றி, 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' எனக் கூறி, பின் அதனை எதிர்மறைமுகத்தான் விளக்கினர். உம்மை - இறந்தது தழீஇய எச்சவும்மை.

இவையிரண்டுபாட்டானும், கண்ணோடாதாரது இழிபு கூறப்பட்டது.

(கு - ரை.) காட்சிக்கண்ணே-தன்னுடையின்றுரைப் பார்த்தவிடத்தே.

அஃது ஓடும் - கண்ணோட்டமுண்டாம்.

கண்ணோட்டமில்லாதவரைக் குருடரென இகழ்ந்தவாறு. கண்ணிலர் என்பதற்கு எதிர்மறை, கண்ணுடையார்.

'கண்ணுடையார் கண்ணோட்டமின்மையுமில்' என்பது எதிர்மறைமுகத்தால் விளக்கியதாகும்.

(எ)

ருஎ௪.

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க் குரிமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) கருமம் சிதையாமல் - (முறைசெய்தலாகிய) தம்தொழில் அழி யாமல், கண்ணோட வல்லார்க்கு - கண்ணோடவல்ல வேந்தர்க்கு, உரிமை உடைத்து - உரித்தாந்தன்மையுடைத்து: இ உலகு - இவ்வுலகம்; (எ - று.)

தம்மொடுபயின்றார் பிறரை இடுக்கண்செய்துழி, அவரைக் கண்ணோடி ஒறுதார்க்கு முறைசிதைதல், மேல் "ஓர்ந்துகண்ணோடாது" என்ற முறை



யிலக்கணத்தானும் பெற்றும். முறை சிதைய வரும்வழிக் கண்ணோடாமையும், வாராவழிக் கண்ணோடலும் ஒருவர்க்கு இயல்பாத லருமையின் 'கண்ணோட வல்லார்க்கு' என்றும், அவ்வியல்புடையார்க்கு உலகமுழுதும் நெடுங்காலஞ் சேறலின் 'உரிமையுடைத்து' என்றுங் கூறினர்.

இதனன், கண்ணோடுமோறு கூறப்பட்டது.

(கு - ரை.) முறை செய்தல் - நீதிநடத்துதல். உரித்து - உரியது. இடுக்கண் செய்துழி - துன்பப்படுத்தின பொழுது. அவரை ஒறுதார் என இயையும். ஒறுதார் - தண்டியாதவர். முறைசிதைதல்-நீதிகெடுதல். "ஓர்ந்து கண்ணோடாது" என்றது, கீழ் 'செங்கோன்மை' என்ற அதிகாரத்தின்முதற் குறள். முறையிலக்கணம் - செங்கோன்மையின் லக்ஷணம். முறைசிதைய வரும்வழி - நீதிகெட நேருமிடத்து. வாராவழி - அங்ஙனம் நேராதவிடத்து. இயல்பாதல் அருமையின் - சுபாவமாதல் அரியதாதலின். நெடுங்காலம் சேற லின் - வெகுகாலம் வசப்பட்டு நடத்தலால். கண்ணோடும் ஆறு - கண்ணோட் டஞ்செய்யும்விதம். (அ)

௫௭௯. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(இ - ள்.) ஒறுத்தாற்றும் பண்பினார்கண்உம்-(தம்மை) ஒறுக்கும் இயல் புடையாரிடத்தும், கண்ணோடி - கண்ணோட்டமுடையராய், பொறுத்தாற் றும் பண்புஏ - (குற்றத்தைப்) பொறுக்கும் இயல்பே, தலை - (அரசர்க்குத்) தலையாய இயல்பாவது; (எ - று.)

பண்பினார்என்றதனன், அவர்பயிற்சிபெற்றும். ஒறுத்தாற்றும், பொறுத் தாற்றும் என்பன - ஈண்டு ஒருசொல்நீர.

(கு - ரை.) ஒறுக்கும்-வருத்தும்.

தலையாய-உத்தமமான. அவர் பயிற்சி-

அவர் தம்மோடு பழக்க முடையா ரென்பது. ஈண்டு -

இங்கு. ஒருசொல் நீர-

ஒருசொல்தன்மை யுடையன. ஒறுத்தாற்றும்என்பது - ஒறுக்குமென்றும், பொறுத்தாற்றும் என்பது - பொறுக்குமென்றும் பொருள்பட்டதனல், அவ ற்றை 'ஒருசொல் நீர' என்றார்; இவற்றில் ஆற்று - துணைவினையென் றவாறு. இனி, இரு சொல்லாக, ஒறுத்து ஒழுகும், பொறுத்து ஒழுகும்என்ற லும் ஒன்று. அன்றியும், ஒறுத்துஆற்றும் என்பதற்கு-(தம்மை) வருத்தி அவ் வருத்துதலைத் தொடர்ச்சியாகச் செய்யும் என்றும், பொறுத்துஆற்றும் என்ப தற்கு-(அக்குற்றத்தைப்)பொறுத்து மேலும் அவர்க்கு உதவிசெய்யு மென்றும்

கொள்ளின், இக்குணம் உத்தமோத்தமமாம். பண்பினர்கண், கண்- ஏழனுருபு. உம் - இழிவுசிறப்பு. ஏ - பிரிநிலை. (கூ)

ருஅ௦. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(இ - ள்.) நஞ்சு பெய கண்டும் - (பயின்றார் தமக்கு) நஞ்சிடக் கண்டு வைத்தும், (கண்மறுக்கமாட்டாமையின்), உண்டு-(அதனை) உண்டு, அமைவர்-(பின்னும் அவரோடு) மேவுவர்: நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்-(யாவரானும்) விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுமவர்; (எ - று.)

ருகூ - ஆம் அதிகாரம்.—ஒற்றாடல் ககூஎ

நாகரிகம்என்பது கண்ணோட்டமாதல் "முந்தையிருந்து நட்டோர் கொடுப்பி, னஞ்சு முண்பர் நனிநாகரிகர்" என்பதனானும் அறிக.

அரசர் அவரை ஒறுத்து கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றஞ்செய்துழி என்பது, இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) நஞ்சு இட - விஷங்கொடுக்க. கண்டுவைத்தும் - பார்த்திருந்தும். கண் மறுக்க மாட்டாமையின் - தாட்சிண்யம் தள்ளக்கூடாமையால். மேவுவர் - பழகுவர். "முந்தையிருந்து" என்ற மேற்கோளுக்கு-முன்பில் இருந்து சினேகிதர்கள் கொடுத்தால் விஷத்தையும் புசிப்பர் மிக்க கண்ணோட்ட

முடையார் என்று பொருள்; 'இது, நற்றிணைநானூற்றில் ௩டுஙு-ஆவது அக
வற்பாவி லுள்ளது. அவரை - தீங்குசெய்தாரை. தம்மாட்டுக் குற்றம் செய்
துழி - தமக்கு நேரில் குற்றஞ்செய்தவிடத்து மாத்திரமே: தம்முடைய
அங்கங்கட்குக் குற்றஞ்செய்த இடத்தன் றென்க. பெய - பெய்ய,
தொகுத்தல். கண்டும்—உம் - இழிவுசிறப்பு. நயத்தக்க என்பதில், நய என்
னும் வினைப்பகுதியே நயக்க என வினையெச்சப்பொருள்பட்ட தென்றுவது,
நயஎன்பது நயத்தல் என்னும்பொருள்தரும் முதனிலைத்தொழிற்பெயரென்
றுவது கொள்ளத்தக்கது. நாகரிகம்என்பது-வடமொழியில் நகரசம்பந்தமான
குணமெனப் பொருள்படும். (௬௦)

## ௫௯ - ஆம்

## அதிகாரம்.—ஒற்றாடல்.

அஃதாவது - பகை நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார்மாட்டும்
நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல். மேற்சொல்லிய இலக்கணத்தனுய

அரசனுக்குத் தன்நாடு செலுத்துங்காலும்
பிறர்நாடுகொள்ளுங்காலும் வேண்டு
வன கூறுகின்றா ராகலின், அவ்விருமைக்கும்
இன்றியமையாதாய இது முன்
வைக்கப்பட்டது.

(கு - ரை.) பகை - பகைவர். நட்பு - சினேகிதர். நொதுமல் - பகைவ
ரும் நண்பரு மல்லாத பிறர்; இவர் வடமொழியில் உதாஸீநர் எனப்படுவர்.
திறத்தார் - வகுப்பினர். நிகழ்தன - நடந்த செயல்களை. ஒற்றர்-வேவுகாரர்;
இவர் வடமொழியில் சாரர் எனப்படுவர்: இவர் தூதரினும் வேறுபட்டவர்;
ஆங்காங்கு நடப்பவற்றை ஒற்றியறிந்துவருதலால், ஒற்றரெனப் பெயர் பெறு
வர்: ஒற்றுதல் - அடுத்துநின்று உண்மையைக் கிரகித்தல்.

ஆளுதல் - உப யோகித்தல். மேற்சொல்லிய இலக்கணத்தன் - இறைமாட்சிமுதல் கண்
ணோட்டம் முடிய உள்ள அதிகாரங்களிற் கூறிய இலக்கணத்தையுடையவன்.
தன்நாடு செலுத்துங்காலும் - தனதுநாட்டை
ஆளுகைசெய்யும் பொழுதும். கொள்ளும் - பிடிக்கும். கூறுகின்றார் - இதுமுதல் ஐந்து அதிகாரங்களால்
சொல்லுகிறார். அவ்விருமைக்கும் - தன்நாடு

செலுத்துகைக்கும், பிறர்காடு கொள்ளுகைக்கும். 'முன்' என்றவிடத்து 'கண்ணோட்டத்தின்பின்' என்று பிரதிபேதம்.

ஒற்று-உயர்திணைப்பொருளில் வந்த அஃறிணைச்சொல்.

ருவுக. ஒற்று முரைசான்ற நூலு
மிவையிரண்டுந்
தெற்றென்க
மன்னவன் கண்.



(இ - ள்.) ஒற்றுஉம்—, உரை சான்ற நூல்உம்-புகழமைந்த நீதிநூலும் (ஆகிய), இவை இரண்டுஉம் - இவைஇரண்டையும், மன்னவன் - அரசன், கண் - (தன்) இரண்டுகண்ணுமாக, தெற்றென்க - தெளிக; (எ - று.)

ஒற்று - தன்கண்செல்லமாட்டாத பரப்பெலாஞ் சென்று கண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லாம் உணர்த்தலானும், நூல் - உணர்வுசெல்லமாட்டாத வினைகளையெல்லாஞ் அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன்

சொல்லி யுணர்த்தலானும்,

இவ்விரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணி

ந்துகொண்டு ஒழுகுக என்பதாம். ஒற்றனை 'ஒற்று' என்றார், வேந்தனை

"வேந்து" என்றாற்போல. தெற்றென்க என்பது - தெற்றென் என்பது முத

னிலையாக வந்த வியங்கோள்; அது 'தெற்றென்' என்னுஞ் செயவெனெச்சத்

தான் அறிக.

இதனான், ஒற்றினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) தன் கண் - அரசனது கண். பரப்பு - விசாலமான இடம்.

ஆண்டு - அங்கு. அந்நிகழ்ந்தவற்றிற்கு - அங்குநடந்தவைகளுக்கு ஏற்றபடி.

வினை - தொழில். ஊனக்கண் - மாமிசமயமான புறக்கண். "உளக்கண் நீதி

நூலாக ஒற்றேவெளிக்கண் எனவிடுத்து" என்றது, விநாயக புராணம். தெற்

றெனல் - தெளிதல். முதனிலை - பகுதி; பகுபதத்தின் முதலில் நிற்பது.

உரை - பலராலும் நன்குமதித்துப் பேசப்படுந்தன்மை; எனவே, புகழாம். இப்

பாட்டின் முதலடியில் எண்ணும்மை தொகைபெற்றது. பிராணிகளுக்கு எல்

லாவுறுப்புக்களுள்ளும் கண் சிறந்த தாதல்போல, அரசர்க்கு எல்லா அங்கங்க ளுள்ளும் ஒற்றர் சிறந்தவரெனப் புகழ்ந்தவாறு. (க)

௫௮௨. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

(இ - ள்.) எல்லார்க்குஉம் நிகழ்பவை எல்லாம் - எல்லார்கண்ணும் நிகழ் வன எல்லாவற்றையும், எ ஞான்றுஉம்-நாள்தோறும், வல் அறிதல்-(ஒற்றான்) விரைந்து அறிதல், வேந்தன் தொழில் - அரசனுக்குஉரிய தொழில்; (எ-று.)

எல்லார்க்கும்என்றது, மூன்று திறத்தாரையும். நான்காவது, ஏழாவதன் பொருட்கண் வந்தது. நிகழ்வன எல்லாம் என்றது, நல்லவுந் தீயவுமாயசொற் களையுஞ் செயல்களையும். அவை நிகழ்ந்தபொழுதே அவற்றிற்குத்தக்க * அளி யாகத் தெறலாகச் செய்யவேண்டுதலின் 'வல்லறிதல்' என்றும், அவ்விருதொ ழிற்கும் அறிதல் காரண மாகலின் அதனையே உபசாரவழக்கால் 'தொழில்'

என்றுங் கூறினர். 'ஒற்றான்' என்பது, அதிகாரத்தான் வந்தது.

இதனான், ஒற்றினாய பயன் கூறப்பட்டது.

(உ)

(கு - ரை.) ஒற்றான் - ஒற்றரால். 'எல்லார்க்கும்' என்றது-எல்லாரிடத்

தும்எனப் பொருள்பட்டதனால், உருபுமயக்கம். மூன்று திறத்தார் - பகை

நொதுமல் நட்புஎன் மூவகைப்பட்டவர். அவற்றிற்குத் தக்க - செய்தவை நல்

* வழியாகத் தேறுதலாக என்ற பாடம் இனிது பொருள்படாது.



லவையோ தீயவையோ அவைகளுக்கு ஏற்ற. அளி -

அநுக்கிரகம். தெறல் -

நிக்கிரகம். இவ்வாக்கியத்தில், ஆக என்பது -

இடைச்சொல் தன்மைப்பட்டு,

விகற்பப்பொருளுணர்த்திற்று.

அவ்விருதொழில்-அளித்தல் தெறுதல்என்ற

அந்த இருவகைத்தொழில். உபசாரவழக்கு-இங்கே

அறிதலென்னுங்காரணம்

தொழிலென்னுங் காரியமாக உபசரிக்கப்பட்டது.

எங்கும்நடப்பவற்றை யெல்

லாம் எப்பொழுதும் அரசன் ஒற்றரால் அறிதல்
அவன்தொழில்செய்தற்குக்
காரணமாமென்றவாறு. அதிகாரத்தான் - இவ்வதிகாரம்
ஒற்றுடலாதலால்.
அதிகாரத்தால் வருவித்துமுடிப்பதனை வடநூலார்
'ஆநுஷங்கிகம்' என்பர்.
ஒற்றின் ஆய - ஒற்றலால் ஆகிற. வல் - இடைச்சொல்.
(உ)

ருஅ௫. ஒற்றினு னொற்றிப் பொருடெரியா
கொற்றங் கொளக்கிடந்த தில்.

மன்னவன்

(இ - ள்.) ஒற்றினன் - ஒற்றினனே,
ஒற்றி-(எல்லார்கண்ணும் நிகழ்ந்
தவற்றை) ஒற்றுவித்து, பொருள் தெரியா -
(அவற்றான்எய்தும்) பயனை
ஆராயாத, மன்னவன் - அரசன், கொற்றம் கொள
கிடந்தது - வென்றி
யடையக் கிடந்தது, இல் - வேறொருநெறி இல்லை; (எ -
று.)
அந்நிகழ்ந்தனவும் பயனும் அறியாது பகைக்குஎ
ளியனாதல் பிறிதின்
றிராமையின், 'கொற்றங்கொளக் கிடந்ததில்' என்றார்.
இதற்கு - கொளக்

கிடந்ததொரு வென்றி யில்லையென்று உரைப்பினும்
அமையும்.

இதனுன், அத்தொழில்செய்யாதவழி வரும்
குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) ஒற்றினுனே - ஒற்றாலே.
ஒற்றுவித்து-உள்ளபடி அறிந்து
வரச்செய்து. அவற்ருன் எய்தும் - அங்கிகழ்ந்தவற்ருல்
வரும். கிடந்தது -
காரணமாய்ப் பொருந்தியது. நெறி - வழி. அறியாது -
அறியாமையால்
என்றபடி. பகைக்கு எளியனுதல்-பகைவர்க்கு வெல்ல
எளியவனுய் விடுதல்.
பிறிதின் தீராமையின் - வேருெருஉபாயத்தால்நீங்கா
மையால். அத்தொழில்
செய்யாதவழி - ஒற்ருளுதல் செய்யாமற்போனுல்.
கொற்றம் - (பகைவரைக்)
கொல்லுத லென்ற காரணத்தால், வெற்றியைக் குறிக்கும்;
இதில், கொல் -
பகுதி. ''ஒற்றினுலொற்றிப் பொருடெரிதன் முன்னிதே''
என்பது, இனி
யவைநாற்பது.

(கூ)
ருஅச.

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

(இ - ள்.) தம்—, வினைசெய்வார்-காரியஞ்செய்வார், சுற்றம்-சுற்றத்தார், வேண்டாதார் - பகைவர், என்ற ஆங்கு அனைவரைஉம்-என்றுசொல்லப்பட்ட அனைவரையும், ஆராய்வது - (சொற்செயல்களான்) ஆராய்வானே, ஒற்று - ஒற்றனாவான்; (எ - று.)

தம் என்றது, அரசனோடு உளப்படுத்தி. அவனுக்குக் காரியஞ்செய்வார் செய்வனவும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும், பகைவர் தன் அற்றம் ஆராய்தலும் மேல்தேறப்படுதலும் முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவும் அறிந்து அவற்றிற்கு ஏற்றன செய்யவேண்டுதலின்,



இம்மூவகையாரையும் எஞ்சாமல் ஆராயவேண்டு மென்பார் 'அனைவரையு மாராய்வ தொற்று' என்றார்.

(கு - ரை.) வினை செய்வார் - அரசன்காரியஞ்செய்யும் மந்திரிகள் சேனாபதிகள் முதலியோர். தம் - தனக்குரிய அரசனது என்றபடி. சொல் செயல்களான்-(அவரவரது)சொல்லையும் செயலையுங் கொண்டு. தன்னிடத்து- தன்னையனுப்பிய அரசனிடத்து. தன் அற்றம் ஆராய்தல் - தான்சோர்வடை யுஞ்சமயத்தைத் தேடுதல். மேல் தேறப்படுதல் - பின்பு அச்சமயம் தெளியப்படுதல். முன்னிட்டு - தான் அவர்கள்பக்கல் வெல்லும்உபாயங்களைச் செய் யத்தொடங்குதற்கு முந்தி. செய்வன - செய்யும் உபாயங்கள். அவற்றிற்கு ஏற்றன - வினைசெய்வார் சுற்றம் வேண்டாதார் என்ற இவர்கள் செய்வன வற்றிற்குத் தக்கவைகளை. எஞ்சாமல் - ஒழிவில்லாமல். என்றாங்கு - என்ற வென்னும் பெயரெச்சத்தின் அகரவீறு, தொகுத்தல்; ஆங்கு - அசை. என் றாங்கு - என்றவிடத்து எனினுமாம்.

'தஞ்சுற்றம்' என்ற விடத்து 'சுற்றத் தார்' என்றும் பாடமுண்டு.

(ச)

ருஅரு. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
பூகாஅமை வல்லதே யொற்று.

(இ - ள்.) கடா - (ஒற்றப்பட்டார் கண்டால்) ஐயுறாத, உருவொடு - வடிவோடு பொருந்தி, கண் அஞ்சாது - (அவர்

ஐயுற்று அறியலுறின் செயிர்த்து நோக்கிய அவர்) கண்ணிற்கு அஞ்சாதுநின்று, யாண்டுஉம் உகாமை வல்லது ஏ - நான்குஉபாயமுஞ்செய்தாலும் (மனத்துக்கொண்டவற்றை) உமிழாமை வல்லவனே, ஒற்று - ஒற்றனுவான்; (எ - று.)

'கடா' என்பது - 'கடுக்கும்' என்னும் பெயரெச்சத்து எதிர்மறை. ஐயுறுதவடிவாவன - பார்ப்பார் வணிகர் முதலாயினூர் வடிவு.

(கு - ரை.) ஐயுறுத - சந்தேகிக்கவேண்டாத. அறியலுறின் - தன்னை ஒற்றனென்று அறிந்துவிட்டால். செயிர்த்து நோக்கிய - கோபித்துப் பார்த்த. நான்கு உபாயம் - சாம தான பேத தண்டம். உமிழாமை-வெளிப்படுத்தாமை. கடுக்கும் என்னும் பெயரெச்சத்து-கடுக்கும் என்னும் உடன்பாட்டுப் பெயரெச் சத்தினது;கடுக்கும் என்பதற்கு-சந்தேகிக்கும் என்று பொருள்.'முதலாயினூர்' என்றதனுல், தீர்த்தயாத்திரைசெய்வார் தவஞ்செய்வார் முற்றத்துறந்தார் என்பவரைக் கொள்க. அளபெடைகள் செய்யுளோசை நிறைப்பன. உரு= ரூபம்: வடமொழியின் திரிபு.
கண் அஞ்சாது-நான்காம்வேற்றுமைத்தொகை.
அஞ்சாதியாண்டும் - குற்றியலிகரம்; இங்குக் குற்றியலிகரம் அலகுபெறவில்லை; இதற்கு விதி - "சீருந் தளையுஞ் சிதையிற் சிறிய இ உ அளபோ,

டாருமறிவாலகுபெறுமை," "தளைசீர் வண்ணந் தாம்கெட வரினே, குறுகிய விகரமுங்குற்றியலுகரமு, மளபெடையாவியு மலகியல்பிலவே" என்பன காண்க. அலகு பெற்றதாகக்கொள்ளின், வெண்டளை சிதைதலைத் தளையிட்டுக்

கண்டுகொள்க. யாண்டும் - எப்பொழுதும். உகாமை - எதிர்மறைத் தொழிற்பெயர், ஏ - பிரிநிலை. கடா - கடாத என்பது ஈறுகெட்டது. (ரு)

ருகூ - ஆம் அதிகாரம்.—ஒற்றாடல் கள்க

ருஅகூ. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்

தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(இ - ள்.) துறந்தார் படிவத்தர் ஆகி - முற்றத்துறந்தாராயும் விரத

வொழுக்கினராயும், இறந்து - (உட்புகுதற்குஅரிய இடங்களெல்லாம்) உள்

புக்கு, ஆராய்து-(ஆராயவேண்டுவன) ஆராய்ந்துஅறிந்து, என் செயின்உம்-

(ஆண்டையார் ஐயுற்றுப் பிடித்து) எல்லாத்துன்பமுஞ்செய்து கேட்டாலும்,

சோர்வு இலது - (தன்னை) வெளிப்படுத்ாதவனே, ஒற்று - ஒற்றனுவான்.

விரதவொழுக்கம் - தீர்த்தயாத்திரை முதலாயின. செயினும் என்பது-

அறவோரென்று செய்வாரின்மை விளக்கிநின்றது. மேல் நால்வகையுபாயத்

தினுஞ் சோர்வின்மை சொல்லிவைத்து, ஈண்டும் தண்டத்தைப் பிரித்துக்

கூறியது, அதனது பொறுத்தற்கருமைச்சிறப்புநோக்கி. இதனுள் படிவம்

என்றதனை வேடமாக்கி, 'துறந்தார்வேடத்தராகி' என்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.) முற்றத் துறந்தார் - சந்நியாசிகள். விரதவொழுக்கினர்-விரதா

நுட்டானமுடையவர். உட்புகுதற்கு அரிய இடங்கள் - அந்தப்புரம் ஆயுத

சாலை பொக்கிஷசாலை மந்திராலோசனைச்சபை முதலியன. இறந்து - வரம்பு

கடந்துசென்று என்றபடி. புக்கு - புகுந்து. ஆண்டையார் - அங்குள்ளவர்.

சோர்வு இலது - தளர்ச்சியடையாதவன். எல்லாத்துன்பமும் - விலங்கிடல்

அண்ணாந்தாளிடல் ஊசியேற்றுதல் முதலியன. தன்னை வெளிப்படுத்துதல் - தன்னை இன்னானென்று அறிவித்தல். தீர்த்தயாத்திரை - புண்ணியதீர்த்தங் களில்

கனைத்

ஸ்நாநஞ்செய்தற்குப் பிரயாணப்படுதல். அறவோர் என்று - இவர் தருமமார்க்கத்தில் நடப்பவரென்று கருதி, செய்வார் இன்மை - துன்

பஞ்செய்பவரில்லாமையை. மேல் - மூத்தினகுறளில் 'யாண்டு முகாமை'

என்றவிடத்தில். ஈண்டும் தண்டத்தைப் பிரித்துக்கூறியது - 'என்செயினும்'

என்றது. அதனது - அத்தண்டத்தினது.

(சு)

ருவஎ. மறைந்தவை கேட்கவற் றாகி
யறிந்தவை

ஐயப்பா டில்லதே யொற்று.

(இ - ள்.) மறைந்தவை - (ஒற்றப்பட்டார்) மறையச்செய்த செயல்களை, கேட்க வற்று ஆகி-(அவர்க்கு உள்ளாயினாரால்)கேட்கவல்லனாய், அறிந்தவை- கேட்டறிந்தசெயல்களில், ஐயப்பாடு இல்லது ஏ-(பின்) ஐயப்படாது துணிய வல்லவனே, ஒற்று - ஒற்றனவான்; (எ - று.)

மறைந்தவை சொல்லுவாரை யறிந்து அவர் அயிராமற் சென்று ஒட்டித் தாமேசொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாகச் செயலாக முன்னே விளைத்து அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறாதார்போன்று நின்று கேட்கவேண்டு தலின் 'கேட்கவற்றாகி' என்றும், கேட்டறிந்தவற்றைத் தானே ஐயுற்று வந்து சொல்லின் அரசனால் அவற்றிற்கேற்ற வினை செய்யலாகாமையின் 'ஐயப்பாடில்லதே' என்றுங் கூறினார்.

இவைநான்குபாட்டானும், ஒற்றின் து இலக்கணம் கூறப்பட்டது. கஎஉ

•

திருக்குறள்

(கு - ரை.) ஒற்றப்பட்டார் - வேவுகாரரால் அடுத்து அறியப்பட்டார். மறைய - மறைவாக. அவர்க்கு உள்ளாயினாரால் - அவர்களுக்கு அந்தரங்கமானவர்களால். துணிய - ஒன்றைநிச்சயிக்க. மறைந்தவை - இரகசியமான விஷயங்கள். தாமே - அவர்களே. அவர் அயிராமல் - அவர்கள் தன்னிடத்துச் சந்தேகப்படாதபடி. ஒட்டி-அடுத்து விசாரித்து. சொல்லாகச்செயலாக முன்னே விளைத்து-சொல்லையாவது செயலையாவது முன்னே உண்டாக்கி. தொடர்பு - தொடர்ச்சி. உறுதார் - இரகசியத்தை அறியவேண்டாதவர். வற்று - வன்மையென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. ஐயப்பாடு - ஐயப்படுதல்; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். 'ஐயமாவது - பலதலையாய உணர்வு' என்றார், கீழ் மெய்யுணர்தலில். (எ)

௫௮௮. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்.

(இ-ள்.) ஒற்று-ஓரொற்றன், ஒற்றி தந்த-ஒற்றிவந்து அறிவித்த, பொருளையும் - காரியந்தன்னையும், மற்றும் ஓர் ஒற்றினால் ஒற்றி - பிறனோரொற்றனாலும் ஒற்றுவித்து, கொளல் - (ஒப்புமைகண்டு) கொள்க; (எ - று.)

ஒற்றப்பட்டாரோடு ஒத்துநின்று மாறுபடக்கூறலுங் கூடு மாகலின், ஒருவன் மாற்றம் தேறப்படாது என்பதாம்.

(கு - ரை.) காரியந்தன்னையும் - காரியத்தையும். ஒற்றப்பட்டாரோடு ஒத்துநின்று - ஒற்றப்பட்டவர்களுக்கு உள்ளானவனாய்நின்று. மாறுபடக்கூறல் - நடந்ததை வித்தியாசப்படச் சொல்லுதல். ஒருவன் மாற்றம் தேறப்படாது-ஓரொற்றனது வார்த்தையை மாத்திரமே நம்பத்தக்கதன்று. பொருளையும்-உம்மை, உயர்வுசிறப்பு; எதிரதுதழுவிய எச்சமெனினும் அமையும். இப்பாட்டில் 'ஒற்றி' என வந்த சொல் இரண்டனுள், பின்னது-தன்வினை பிறவினைப்பொருளில்வந்தது; இதனைவடநூலார் 'அந்தர்ப்பாவிதணிச்' என்ப.

௫௮௯. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(இ - ள்.) ஒற்று ஒற்று உணராமை ஆள்க-ஒற்றரை (ஆளுமிடத்து)ஒருவனையொருவன் அறியாமல் ஆள்க; உடன் மூவர் சொல் தொக்க-அங்ஙனம் ஆண்ட ஒற்றர்மூவரை ஒருபொருள்மேல் வேறுவேறுவிட்டால் அம்மூவர் சொல்லும் பயனால் ஒத்தனவாயின், தேறப்படும்-(அது மெய்யென்று) தெளியப்படும்; (எ - று.)

'ஆயின்' என்பது வருவிக்கப்பட்டது. ஒருவனை யொருவன் அறியின் தம்முள் இயைந்து ஒப்பக்கூறுவ ராகலின் 'உணராமையாள்க' என்றும், மூவர்க்கும் நெஞ்சுஒற்றுமைப்படுதலும் பட்டால் நீடுநிற்றலும் கூடாமையின் 'தேறப்படும்' என்றுங் கூறினார். இதனானே அஃது ஒத்திலவாயின், பின்னும் ஆராய்க வென்பதூஉம் பெற்றும்.

(கு - ரை.) ஆண்ட - உபயோகிக்கப்பட்ட. ஒருபொருள்மேல் - ஒரு காரியத்தின்மேல். வேறுவேறுவிட்டால்-தனித்தனி அனுப்பினால். 'ஆயின்'

•

கூ0 - ஆம்

அதிகாரம்.—ஊக்கமுடைமை கஎங

என்பதை வருவித்தது,

'தொக்க' என்றதன் அவாய்நிலையால். தம்முள் இயைந்து - தமக்குள் கலந்து. ஒப்பக் கூறுவர் - ஒருவர்வார்த்தைக்கு ஒருவர் வார்த்தை ஒத்துவருமாறு கற்பித்துச்சொல்வர். பட்டால் - தற்செயலாக மனம்ஒன்றுபட்டால். நீடு நிற்றல் - அவ்வாறே

நெடும்பொழுதுநிற்பது.

அஃது ஒத்தில ஆயின் - (அம்மூவர்சொல்லும்) பயனால் ஒத்திராதனவானல்.

உடன்மூவர் - சமகாலத்தில் உபயோகிக்கப்பட்ட மூன்றுபெயர். தொக்க -

தொகு என்னும் பகுதியின்மேற் பிறந்த இறந்தகாலப்பலவின்பால் வினையா

லணையும்பெயர். உணராமை - எதிர்மறைவினையெச்சம்.

(கூ)

ருகூ௦. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்

புறப்படுத்தா னாகு மறை.

(இ - ள்.) ஒற்றின்கண் - (மறைந்தவை அறிந்துகூறிய) ஒற்றின்கண்,

(செய்யும்), சிறப்பு - சிறப்பினை, (அரசன்), அறிய-(பிறர்) அறிய, செய்யற்க-

செய்யாதொழிக; செய்யின் - செய்தானாயின், மறை புறப்படுத்தான் ஆகும் -

(தன் அகத்து அடக்கப்படும்) மறையைத் தானே புறத்திட்டானும்; (எ - று.)

மறையாவது - அவன் ஒற்றனாயதூஉம், அவன்கூறியதூஉ மாம். சிறப்

புப்பெற்ற இவன் யாவனென்றும், இதுபெறுதற்குக்காரணம் யாதென்றும்

வினவுவாரும் இறுப்பாரும் அயலா ராகலின், 'புறப்படுத்தானுகும்' என்றார்.

இவைமூன்றுயாட்டானும், ஒற்றரையாளுமாறும், அவரான் நிகழ்ந்தன அறியுமாறும், அறிந்தாற் சிறப்புச்செய்யுமாறும் கூறப்பட்டன.

(கு - ரை.) மறைந்தவை - இரகசியங்கள். ஒற்றின்கண் - ஒற்றனுக்கு என்றபடி. சிறப்பு - வெகுமானம். பிறர் அறியச் செய்யாது ஒழிக-இரகசியமாகவே செய்யவேண்டும். செய்தாளுயின்-பிறர் அறியச் செய்தால். அகத்து அடக்கப்படும் - மனத்தில் அடக்கிவைக்கவேண்டிய. மறை - இரகசியம். புறத்துஇட்டானும் - வெளியிட்டவனுவன். இறுப்பார் - உத்தரஞ்சொல்பவர். அவரான் நிகழ்ந்தன அறியும் ஆறு - நடந்தவற்றை ஒற்றரைக்கொண்டு அறியும் விதம். மறை-மறைக்கப்படுவதென்றபொருளில் செயப்படுபொருள் விகுதிபுணர்ந்துகெட்ட பெயர்.

(௬0)

## ௬0 - ஆம்

## அதிகாரம்.—ஊக்கமுடைமை.

அஃதாவது - மனம்மெலிதலின்றி வினைசெய்தற்கட்

கிளர்ச்சியுடைத்

தாதல். ஒற்றரான் நிகழ்ந்தன அறிந்து அவற்றிற்கேற்ற வினைசெய்வானுக்கு

இஃது இன்றியமையாமையின், ஒற்றாடலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மெலிதல் - தளர்தல். கிளர்ச்சி - உற்சாகப்படுதல். இஃது-

ஊக்கமுடைமை. ஊக்கம் - தொழிற்பெயர்; ஊக்கு - பகுதி. உடைமை-பண்

புப்பெயர்.

௫௯௧. உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா

ருடைய துடையரோ மற்று.

(இ - ள்.) உடையர் எனப்படுவது-(ஒருவரை) உடையரென்றுசொல்

லச் சிறந்தது, ஊக்கம்—; அஃது இல்லார்-அவ்வூக்கமில்லாதார்,-மற்றுஉடை

யது உடையர்ஓ-வேறுஉடையதுதானும் உடையராவரோ? [ஆகார்]; (எ-று.)



வேறுடையது என்றது, முன்எய்தினின்ற

பொருளை. உம்மை - விகா

ரத்தால் தொக்கது. காக்கும் ஆற்றல் இல ராகலின்,
அதுவும் இழப்பர்
என்பதாம்.

(கு - ரை.) சொல்லச் சிறந்தது - சொல்லுதற்குச் சிறந்தகாரணமாய்
நிற்பது. ஊக்கம் - மனத்திட்பம். வேறு உடையது தானும் - மற்றும் அவர்
கள் முன்பு உடையராயுள்ள செல்வத்தையும். உம்மை தொகுத்தல் விகாரப்
பட்டது, 'உடையது' என்பதன் இறுதியில். காக்கும் ஆற்றல் - பாதுகாக்
குந்திறமை. அதுவும் - செல்வத்தையும். ஓ - எதிர்மறை. மற்று - பிறிதென்
னும்பொருளது.

(க)

ருகூஉ. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

(இ - ள்.) உள்ளம் உடைமை - ஊக்கமுடைமையே, உடைமை - (ஒரு
வனுக்கு நிலைநின்ற) உடைமையாவது: பொருள் உடைமை-மற்றைப் பொரு
ளுடைமை, நில்லாது நீங்கிவிடும் - நிலைநில்லாது நீங்கிப் போம்; (எ - று.)

உள்ளம் - ஆகுபெயர். ஊக்கம் - உள்ளத்துப்பண்பு ஆகலின் அதற்கு நிலைநிற்றலும், பொருள்-உடம்பினும் வேறாய் அழிதன்மாலைத்தாகலின் அதற்கு நிலைநில்லாமையுங் கூறினர்; கூறவே, அஃது உடைமையன்று என்பது பெறப்பட்டது.

(கு - ரை.) உடைமை - சொத்து. பொருளுடைமை - செல்வமுடையராதல். உள்ளமென்னும் மனத்தின்பெயர், அதன்கிளர்ச்சியை உணர்த்தியதனால், இடவாகுபெயர். உள்ளத்துப்பண்பு - மனத்தின்குணம். அழிதல்மாலைத்து - அழியும் இயல்புடையது. அஃது-செல்வம். (உ)

ருகஈ. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

(இ - ள்.) ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் - (இழந்தாராயினும் யாம்) கைப்பொருளை யிழந்தே மென்று அலமரார்: ஒருவந்தம் ஊக்கம் - நிலைபெற்ற ஊக்கத்தை, கைத்து உடையார்-கைப்பொருளாக உடையார்; (எ-று.)

ஆக்கம்-ஆகுபெயர். ஒருவந்தமாய ஊக்கம் என்க. கைத்து-கையகத்தாய பொருள்; "கைத்துண்டாம் போழ்தே காவாதறஞ்செய்ம்மின்" என்றார் பிறரும். அல்லாவாமைக்குஏது, வருகின்ற பாட்டாற் கூறுப.

(கு - ரை.) இழந்தாராயினும் - செல்வத்தையிழந்தாலும். அலமரார் -

மனங்கலங்கார். 'ஆக்கம்' என்னுஞ்சொல் ஆகுபெயராதல்,
கீழ்ச் சுற்றந்தழா
லின் இரண்டாம்பாட்டி னுரைக்குறிப்பிற் கூறப்பட்டது.
'ஒருவந்தம்' என்
பதற்கு - கீழ் வெருவந்தசெய்யாமையின் மூன்றாம்பாட்டிற்
காண்க. கையக
த்து ஆய-கையினிடத்துஉள்ள. "கைத்துண்டாம்" என்று
தொடங்கிய மேற்
கோள், நாலடியாரில்
"மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது, கைத்து
ண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்,
முற்றியிருந்த கனியொழியத்

கூ0 - ஆம்

அதிகாரம்.—ஊக்கமுடைமை களரு

தீவளியா,னற்காயுதிர்தலு முண்டு"என்ற செய்யுளில்

உள்ளது.இதற்கு-கைப்
பொருளுண்டாகும் பொழுதே அதனை
மறைத்துவைக்காமல் தருமஞ்செய்
யுங்கள் என்பது பொருள். 'பிறர்' என்றது,
அச்செய்யுள்செய்த சமணமுனி
வரை. அல்லாவாமை - மனங்கலங்காமை. அல்லாவார்
என்னும் எதிர்ம

றைத் தெரிகிலேப் பலர்பால்முற்றில், அல்லா - பகுதி;
இது - ஒருசொல்:
கீழ் 'அடக்கமுடைமை' என்ற அதிகாரத்தில் 'அல்லாப்பர்,
செம்மாப்பர்என்
பனபோலச் சேரகாப்பர் என்பது ஒருசொல்'எனப்
பரிமேலழகர் உரைத்தது
கொண்டு உணர்க. கைத்து - ஒன்றன்பாற்
குறிப்புவினையாலணையும்பெயர்;
கை - பகுதி, து - விகுதி.
(ரு.)
ருகூச. ஆக்க மதர்வினுய்ச் செல்லு
மசைவிலா
வூக்க முடையா னுழை.
(இ - ள்.) அசைவு இலா ஊக்கம்
உடையானுழை-அசைவில்லாத ஊக்
கத்தை உடையான்மாட்டு, ஆக்கம்-பொருள், அதர் வினுய்
செல்லும்-(தானே)
வழி வினவிக்கொண்டு செல்லும்; (எ - று.)
அசைவின்மை - இடுக்கண் முதலியவற்றுல்
தளராமை. வழிவினவிச்
சென்று சார்வார்போலத் தானே சென்று சாரும்
என்பார், 'அதர்வினுய்ச்
செல்லும்' என்ருர்.
எய்திகின்ற பொருளினும் அதற்குக் காரணமாய
ஊக்கம் சிறந்தது என்
பது, இவ்வான்குபாட்டானும் கூறப்பட்டது.

(கு - ரை.) அசைவில்லாத - தளர்தலில்லாத.

எய்திநின்ற - கிடைத்து நின்ற. அதற்கு - செல்வத்துக்கு. வினய்-வினைஎன்னும் பகுதியடியாப்பிறந்த இறந்தகாலவினையெச்சம்; ய் - காலங்காட்டும் எச்சவிகுதி. (௪)

௫௯௫. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்த
முள்ளத் தனைய துயர்வு.

(இ - ள்.) வெள்ளத்து அனைய-(நின்ற) நீரின் அளவினவாம்: மலர் நீட்டம்-நீர்ப்பூக்களின் தாளினது நீளங்கள்; (அதுபோல), மாந்தர் தம் உள்ளத்து அனையது-மக்கள்தம் ஊக்கத்தளவினதாம்: உயர்வு-(அவர்) உயர்ச்சி; (எ-று.)

மலர்-ஆகுபெயர். நீர் மிக்கதுணையும் மலர்த்தாள் நீளுமென்பது பட, 'வெள்ளத்தனைய' என்றார். இவ்வுவமையாற்றலான், ஊக்கம் மிக்க துணையும் மக்களுயர்வரென்பது பெறப்பட்டது. உயர்தல்-பொருள் படைகளான் மிகுதல்.

(கு - ரை.) நின்ற - நீர்நிலையில் நின்ற. அளவின -

அளவையுடையன.

தாள் - அடிக்காம்பு, நாளம். மலர் என்றது - அதன் சினையாகிய நாளத்

தை யுணர்த்தினமையால், முதலாகுபெயராம்; தானியாகுபெய ரெனி

னும் அமையும். மிக்கதுணையும் - எவ்வளவுமிகுகிறதோ அவ்வளவுவரையி

லும். உவமையாற்றல் - உபமானத்தின்சக்தி. பொருள்படைகளால் மிகு

தல் - செல்வம் சேனை என்பவற்றால் அதிகப்படுதல்.

வெள்ளம் தனைய, உள்

•



ளம் தனையது எனப் பதம்பிரித்தலு மொன்று; தனை - அளவு. நீட்டம்-தொ ழிற்பெயர்; நீடு-பகுதி. இப்பாட்டிலும், உள்ளம் - ஆகுபெயர். (ரு)

ருகூசு. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(இ - ள்.) உள்ளுவது எல்லாம் - (அரசராயினோர்) கருதுவ தெல்லாம், உயர்வு உள்ளல்-(தம்)உயர்ச்சியையே கருதுக; அது - அவ்வுயர்ச்சி, தள்ளின் உம் - (பால்வகையாற்) கூடிற்றில்லையாயினும், மற்று தள்ளாமை நீர்த்து - அக்கருத்துத் தள்ளாமை நீர்மையுடைத்து; (எ - று.)

உம்மை, தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று. தள்ளியவழி யும் தாளாண்மையில் தவறின்றி நல்லோராற் பழிக்கப்படாமையின் தள்ளா வியற்கைத்து என்பதாம். மேல் 'உள்ளத்தனைய துயர்வு' என்றதனையே வற் புறுத்தியவாறு.

(கு - ரை.) பால் வகையால் - விதிவசத்தால். அக்கருத்துத் தள்ளாமை நீர்மையுடைத்து - தாம்உயரவேண்டுமென்ற அவ்வெண்ணம் ஒழிக்கப்படாத தன்மையுடையது. தள்ளாமை-(ஊக்கமுடையார்க்கு உயர்ச்சிஉண்டாவது) தவறுமை. உம்மை - தள்ளினும் என்ற இடத்திலுள்ளது: இது - விகற்பப் பொருளது. தள்ளியவழியும் - உயர்ச்சி தவறியவிடத்தும். தாளாண்மையில் தவறு இன்றி - முயற்சியிற் பின்வாங்குதலில்லாமல். உயர்ச்சியிற் கருத்து இருபபின், அது கைகூடாவிடினும், உயர்ச்சி பெற்றாற்போல நல்லோரால் மதிக்கப்படுதலால், தள்ளாமை நீர்மைத்து என்றதென்க. மேல் என்றது கீழ்க்குறளை. உள்ளுவது எல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். நீர்த்து - நீர்மையென்னும் பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று. (௬)

௫௯௭. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(இ - ள்.) களிறு—, புதை அம்பின் - புதையாகிய அம்பால், பட்டு - புண்பட்டவிடத்து, பாடு ஊன்றும் - (தளராது) தன்பெருமையை நிலை நிறுத்தும்; (அதுபோல), உரவோர் - ஊக்கமுடையார், சிதைவுஇடத்து - (தாம் கருதிய உயர்ச்சிக்குச்) சிதைவு வந்தவிடத்து, ஒல்கார் - தளராது (தம் பெருமையை) நிலைநிறுத்துவர்; (எ - று.)

புதை - அம்புக்கட்டு; பன்மை கூறியவாறு. பட்டால் என்பது பட்டு எனத் திரிந்துநின்றது. ஒல்காமை களிற்றுடனும், பாடூன்றுதல் உரவோருடனும் சென்று இயைந்தன. தள்ளினும் தவறாது உள்ளியது முடிப்பர் என்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், ஊக்கமுடையாரது உயர்ச்சி கூறப்பட்டது.

(கு - ரை.) களிறு - ஆண்யானை. புதையம்பு - அம்புகளின் தொகுதியென்றபடி. சிதைவு - கேடு. பன்மை - பலஅம்புகளென்பது. பட்டு - எச்சத்திரிபு. உபமேயத்தின் அடைமொழியாகிய ஒல்காமையை உபமானத்துக்

•

கூo - ஆம்

அதிகாரம்.—ஊக்கமுடைமை களஎ

கும், உபமானத்தின் அடைமொழியாகிய பாடூன்றதலை உபமேயத்துக்கும் எடுத்துக்கூட்டினார். தள்ளினும் - உயர்ச்சி தவறினாலும். தவறாது - முயற்சி தவறாமல் நின்று. உள்ளியது முடிப்பர் - நினைத்தகாரியத்தை நிறைவேற்றுவர். எடுத்துக்காட்டுவமையணி. உரவோர் -

மனோபலமாகிய ஊக்கத்தினை
யுடையோர். "வேழக்குரித்தே விதந்து களிறென்றல்"
என்பது, தொல்
காப்பியம்; இதன் பெண்பால் - பிடி.

(எ)

ருகூ௩. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) உள்ளம் இலாதவர் - ஊக்கமில்லாத
அரசர், உலகத்து - இவ்
வுலகத்தாருள், வள்ளியம் என்னும் செருக்கு - (யாம்)
என்று தம்மைத் தாம் மதித்தலை, எய்தார் - பெறார்; (எ

வண்மையுடையேம்
- று.)

ஊக்கம் இல்லையாகவே, முயற்சி பொருள் கொடை
செருக்கு இவை
முறையே இலவாம் ஆகலின், 'செருக்கு எய்தார்' என்றார்.
கொடைவென்றி
யினாய இன்பம் தமக்கல்லது பிறர்க்குப்
புலனாகாமையின், தன்மையாற்
கூறப்பட்டது.

(கு - ரை.) வண்மை - ஈகைக்குணம்.
ஊக்கத்தினால் முயற்சியும்,
முயற்சியால் பொருளும், பொருளால் கொடையும், கொடையால் செருக்
கும் முறையே உளவாம்: ஊக்கமில்லாமற்போனால், முயற்சி முதலியன

அடைவே இல்லாமற் போமென்க. கொடை வென்றியின் ஆய - கேட்ட வர்க்குக் கேட்டதை யெல்லாங் கொடுத்த லாகிய சயத்தா லாகிற. புலனு காமை - வெளியாகாமை. தன்மை - வள்ளியமென்பது; இது-உயர்வுபற்றி வந்த தனித்தன்மைப்பன்மையாம். (அ)

௫௯௯. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(இ - ள்.) பரியது-(எல்லாவிலங்கினும் தான்) பெருடம்பினது: (அது வேயு மன்றி), கூர் கோட்டது-கூரியகோட்டையும் உடையது: ஆயினும்—, யானை—, புலி தாக்குறின் - (தன்னைப்) புலி எதிர்ப்படின், வெரூஉம் - (அதற்கு) அஞ்சும்; (எ - று.)

பெருடம்பான், வலிமிகுதி கூறப்பட்டது. புலியின்மிக்க மெய்வலியும் கருவிச்சிறப்பும் உடைத்தாயினும் யானை ஊக்கமின்மையான் அஃது உடைய அதற்கு அஞ்சும் என்ற இது, பகைவரின்மிக்க மெய்வலியும் கருவிச்சிறப்பும் உடையராயினும் அரசர் ஊக்கமிலராயின் அஃதுடையஅரசர்க்கு அஞ்சுவ ரென்பது தோன்ற நின்றமையின், பிறிதுமொழிதல்.

(கு - ரை.) விலங்கு - மிருகம். கோடு - கொம்பு;

தந்தம். மெய்வலி -
தேகபலம். கருவிச்சிறப்பு என்றது, தந்தத்தின்
கூர்மையை. அஃது உடைய-
ஊக்கத்தையுடைய. அரசர்க்குக் கருவிச்சிறப்பு-ஆயுதபலம்.
உபமேயத்தைக்
கூறாமல் உபமானத்தைமாத்திரங் கூறி அதனால்
உபமேயத்தைப் பெறவைத்
தல், 'பிறிதுமொழிதல்' என்னும் அணியாம்.



புரியது என்னும் ஒன்றன்பாற்



குறிப்புவினையாலணையும்பெயரில், பருமை - பகுதி.
கூர்ங்கோட்டது— கூர்மையதாகிய கோட்டையுடைய
தென விரிதலால், பண்புத்தொகை. உம் - உயர்வு சிறப்பு.
வெரூஉம்=வெருவும். தாக்குறும் என்பதில், உறு -
துணைவினை.

(கூ)

கூ00. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

(இ - ள்.) ஒருவற்கு—,
உரம்-திண்ணிய அறிவாவது,—உள்ளம் வெறுக்கை -
ஊக்கமிகுதி; அஃது இல்லார் -

அவ்வூக்கமிகுதியில்லாதார்,—மரம் - (மக்களாகார்) மரங்களாவார்; வேறு மக்கள் ஆதல் ஏ - (சாதிமரங்களோடு இம்மரங்களிடை) வேற்றுமைவடிவு மக்கள்வடிவே, (பிறிதில்லை); (எ - று.)

உரம் என்பது அறிவாதல் "உரனென்னுந் தோட்டியான்" என்பதனானும் அறிக. மரம் என்பது - சாதியொருமை. மக்கட்குஉள்ள நல்லறிவும் காரியமுயற்சியும் இன்மைபற்றி 'மரம்' என்றும், மரத்திற்குஉள்ள பயன்பாடின்மைபற்றி 'மக்களாதலே வேறு' என்றுங் கூறினார். பயன் - பழம்முதலியவும், தேவர்கோட்டம் இல்லம் தேர் நாவாய்கட்கு உறுப்பாதலும் முதலிய.

இவை மூன்றுபாட்டானும், ஊக்கமில்லாதாரது இழிபு கூறப்பட்டது.

(கு - ரை.) திண்ணிய - வலிய. 'உள்ள வெறுக்கை' என்பது-உள்ளம் வெறுக்கை எனப் பிரிந்து, உள்ளம் என்பது - ஆகுபெயரால் ஊக்கத்தையும், வெறுக்கையென்பது - வெறுக்கப்படுவதென்ற காரணப்பொருள்பற்றி மிகுதியையுங் குறிக்கும். மக்கள் ஆகார் - மனிதராகார். சாதிமரம் என்றது, சாதாரணவிருக்ஷங்களை. இம்மரங்களிடை என்றது, ஊக்கமில்லாதவர்க்கு என்றபடி. வேற்றுமை வடிவு-வித்தியாசங்காட்டும் வடிவம். மக்கள்வடிவே- மனுஷ்யரூபம் மாத்திரமே. ஊக்கமில்லாத மனிதர்க்கு மரத்தோடு

கூறி, மரம்போல இவர் பயன்படாமையாகிய வேற்றுமையையும்

ஒப்புமை
தோன்ற
வைத்ததனால், இது-வேற்றுமையணி.
"உரமென்னுந் தோட்டியான்" என்பது, நீழ்
நீத்தார்பெருமையில் நான்காம்பாட்டின் தொடக்கம்; அங்கு,
'திண்
மையென்னுந் தோட்டியால்' என்றும், 'திண்மை - ஈண்டு
அறிவின்மேற்று' என்றும் உரைத்துப்போந்தார்
பரிமேலழகர். பயன்பாடு - பயன்படுதல். தேவர்கோட்டம் -
தேவாலயம். இல்லம் - வீடு. நாவாய் - மரக்கலம். ஒரு
வற்கு உள்ள வெறுக்கை உரம் என்று எடுத்து-ஒருவனுக்கு
நிலைபெற்ற செல்வமாவது ஊக்கம் என்றும்
பொருள்கொள்ளலாம். ஏ - பிரிநிலை. வேறு - வேறுபாடு.

(௬0)

## ௬௧ - ஆம்
## அதிகாரம்.—மடியின்மை.

அஃதாவது-கருதியன செய்யுங்கால்
சோம்புதலில்லாமை. ஊக்கமுடையார்க்கு ஒரோவழிக்
குணவயத்தான் மடிவருதல்நோக்கி, இஃது ஊக்கமுடை
மையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) கருதியன செய்யுங்கால் - செய்ய

நினைத்த காரியங்களைச் செய்யும்பொழுது. ஊக்கம் - மனம் மெலிதலில்லாமல் தொழில்செய்தலிற்

சூக - ஆம் அதிகாரம்.—மடியின்மை கஎகூ

கிளர்தல், உற்சாகம். ஒரோவழி-ஒவ்வொருசமயத்தில்.

[ஒரோர்வழி என்பது ஒரோவழி என மருவியதுபோலும்; ஒரோவிடத்து முதலியவற்றையும் இங்ஙனமே கொள்க.] குணவயத்தான்-சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்னும் மூன்றுகுணங்களுக்கு வசப்படுதலால். வயம்=வசம். சோம்பல் - தாமசகுணத்தின் காரியம். ஊக்கமுடையார்க்குச் சோம்பலில்லாமை இன்றியமையாததென்பது, அதிகாரமுறைமைக்குக் காரணம்.

சுoக. குடியென்னுங் குன்றா விளக்கு மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

(இ - ள்.) குடி என்னும்-(தான் பிறந்த) குடியாகிய, குன்றா விளக்கம்- நந்தாவிளக்கு,—மடி என்னும் - (ஒருவன்) மடியாகிய,

மாசு-இருள், ஊர -
அடர, மாய்ந்து கெடும் - நந்திப்போம்; (எ - று.)
உலகநடை உள்ள துணையும் இடையறாது
தன்னுட்பிறந்தாரை விளக்கு
தலின், குடியை 'குன்றாவிளக்கம்' என்றும்;
தாமதகுணத்தான் வருதலின்,
மடியை 'மாசு' என்றும்; அஃது ஏனையிருள்போலாது
அவ்விளக்கத்தைத்
தான் அடர்ந்துமாய்க்கும் வலி யுடைமையின்,
'மாசூரமாய்ந்துகெடும்' என்
றுங் கூறினார். கெடுதல் - பெயர்வழக்கமு மில்லையாதல்.

(கு - ரை.) குடி - குடும்பம். நந்தாவிளக்கு - ஒளிமழுங்காத தீபம். ஒருவன் மடி - ஒருவனது சோம்பல். அடர - நெருங்குதலால். நந்திப்போம் - முன்னர் மழுங்கிவந்து பின்பு அழியும். உலகநடையுள்ளவளவும் - லோகத்தின் நிகழ்ச்சி உள்ளவரையிலும்; பிரளயகாலமளவும். இடை அறாது-இடைவிடாமல். விளக்குதல் - விளங்கச்செய்தல். தாமசகுணமெனினும் தமோகுணமெனினும் ஒக்கும். அக்குணம் - கருநிறமுடையதும் பொருள்களின்
உண்மைநிலையைத் தோன்றாதபடி மறைப்பது மாதலால்,
அக்குணத்தின்
காரியமாகிய சோம்பல், கருநிறமுடையதும்
பொருள்களைமறைப்பதுமாகிய
இரு ளெனப்பட்டது; காரணத்தின்தன்மை
காரியத்திலுந் தொடருமென்
பது, நூல்துணிபு. அஃது - சோம்பலாகிய இருள். ஏனை
இருள்போலாது-
மற்றை உலகத்துச் சாதாரணஇருள்போல

விளக்கொளியால் தான் அழிக்கப்படாமல். அவ்விளக்கத்தை - குடியாகிய விளக்கை. பெயர்வழக்கமும் இல்லையாதல் - அக்குடியின் பேர்மாத்திரமும் வழங்காமற்போகுதல். ஒரு வனது குடிவாழ்க்கை சோம்பலுடைமையால் இருந்தவிடமுந் தெரியாமல் முற்றக்கெடு மென்பது கருத்து. குடியினிடத்து விளக்கின் தன்மையையும் மடியினிடத்து இருளின் தன்மையையும் ஏற்றிக்கூறியது உருவகவணி. அநித்தியமான மற்றவிளக்குக்களினும் வேறுபாடுதோன்ற 'குன்றுவிளக்கு' என விசேடித்தும், விளக்கின்முன் வலியிலதான மற்றையிருளினும் வேறுபாடு தோன்ற 'மடியென்னுமாசு' என விதந்தும் கூறினர். (௧)

௬0௨. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.



(இ - ள்.) குடியை-(தாம் பிறந்த) குடியை, குடி ஆக - (மேல்மேல்உயரும்) நற்குடியாக, வேண்டுபவர் - வேண்டுவார்,—மடியை மடிஆ ஒழுகல் - மடியை மடியாகவே (கருதி முயற்சியோடு) ஒழுகுக; (எ - று.)

'முயற்சியோடு' என்பது, அவாய்நிலையான் வந்தது.

நெருப்பிற் கொடி யது பிறிதின்மைபற்றி, 'நெருப்பை நெருப்பாகவேகருதுக' என்றாற்போல; மடியின் தீயது பிறிதின்மைபற்றி, பின்னும் அப்பெயர்தன்னானே கூறினர். 'அம்மனங்கருதி அதனைக்கடிந்து முயன்றொழுகவே தாம் உயர்வர்; உயரவே,

குடிஉயரும்' என்பார், 'குடியைக் குடியாகவேண்டுபவர்' என்றார். அம்மனம் ஒழுகாக்கால் குடி அழியும் என்பது கருத்து. இனி, 'மடியா' என்பதனை வினையெச்சமாக்கி, கெடுத்தொழுகுக வென்று உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) நற்குடி ஆக வேண்டுவார் - நல்லகுடியாகும்படி (செய்ய) விரும்புபவர். ஒழுகுக - நடக்கக்கடவர். 'ஒழுகல்' என்ற வினை இங்கு ஒரு விசேடணத்தை வேண்டிநின்றமையால் 'முயற்சியோடு' என்பதுவருவிக்கப் பட்டது: இது, அவாய்நிலை: வடமொழியில் அத்யாஹாரம் எனப்படும். நெருப் பின் - நெருப்பைக்காட்டிலும். மடியின் - மடியைக்காட்டிலும். பின்னும், 'அப் பெயர்தன்னானே கூறினர்' என்றது, பின்னும் மடி என்று கூறியதை. அதனைக் கடிந்து - மடியை ஒழித்து. அம்மனம் ஒழுகாக்கால் - சோம்பலை யொழித்து முயற்சிசெய்து நடவாவிட்டால். மடி, குடி என்பன இரண்டிடத்தும் ஒரேபொருளில் வந்ததனால், சொற்பொருட்பின்வருநிலையணியாகும். முதலுரைக்கு, மடியா என்றது தொடர்மொழியும், அதில் ஆஎன்பது ஆக என்பதன் விகாரமுமாம்; இரண்டாம் உரைக்கு, மடியா என்றது செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்த காலவினையெச்சம்: ஒழுகல், அல்-

விகுதி உடன்பாட்டு வியங்கோளில் வந்தது; "மக்கட்பதடியெனல்" என்ற விடத்திற்போல. ஆக - காரியப்பொருட் செயவெனெச்சம்; எதிர்காலம். (உ)

௬0௩. மடிமடிக்
கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(இ - ள்.) மடி - (விடத்தகுவதாய) மடியை, மடிகொண்டு - தன்னுள் ளே கொண்டு, ஒழுகும்—, பேதை - அறிவில்லாதான், —பிறந்த—, குடி—, —தன்னினும்-அவன்தன்னினும், முந்து மடியும்-முந்தற அழியும்: (எ - று.)

அழிவுதருவதனை அகத்தேகொண்டு ஒழுகுதலின் 'பேதை' என்றும், அவனால் புறந்தரப்படுவதாகலின் 'குடி தன்னினும்முந்துறஅழியும்' என்றுங் கூறினார். ஆக்கத்திற் பிற்படினும் அழிவில் முற்படுமென்பதாம்.

(கு - ரை.) அவன்தன்னினும் முந்துற - அக்குடியிற்பிறந்தவனாகிய மடியைத் தன்னிடங்கொண்டொழுகும் பேதையான அவனிறத்தலினும் முன்னாக. அழிவுதருவதனை - தீங்குவிளைப்பதை; சோம்பலை. அகத்தே - தன்னிடத்திலே. புறந்தரப்படுவது - பாதுகாக்கப்படுவது. குடிவாழ்க்கை ஒருவனாற் பாதுகாக்கப்படுவ தாதலால் அதன் அபிவிருத்தி அவனது உற்பத்தியினும் பிற்பட்டதாகவே யிருக்கும்; அவன்

காவர்விட்டாலோ, அதனழிவு அவனழிவுக்கு முற்பட்டுப்போம்: அதாவது - ஒருவன்பிறந்தபின் தலையெடுக்கிற குடி அவனது சீவதசையிலேயே அழியு மென்க. முதலடியில் மடியெனவந்த சொல் இரண்டனுள், முந்தியது - சோம்பல்; பிந்தியது வயிற்றின் பெயர் - இலக்கணையால், உள்என்றபொரு ளில் வந்தது. இனி, மடிமடி என்பதனை வினைத்தொகையாகக் கொண்டு, அதற்கு - விடத்தகுவதாகிய சோம்ப லென்று பொருள் கூறி, 'தன்னுள்ளே' என்பதனை வருவித்ததாக்குவாரும் உளர்.

(௩)

௬௱௪.

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

(இ - ள்.) மடி மடிந்து - மடியின்கண்ணே வீழ்தலான், மாண்ட - திருந்திய, உஞற்று-முயற்சி, இலவர்க்கு - இலராயினர்க்கு,—குடி மடிந்து - குடியும்மடிந்து, குற்றம் பெருகும் - குற்றமும் பல்கும்; (எ - று.)

'மடிந்து'எனத் திரிந்துநின்ற வினையெச்சம், 'இலவர்' என்னும் குறிப்பு வினைப்பெயர்கொண்டது. குற்றங்கள் முன்னர்க் கூறுப.

இவைநான்குபாட்டானும், மடியின் தீமை கூறப்பட்டது.

(கு - ரை.) மடியின்கண்ணே வீழ்தலான்-சோம்பலில் அழுந்தியதனால். திருந்திய - சீர்திருத்தமான. மடிந்து - கெட்டு. பல்கும் - மிகுதியாக உண்

டாம். திரிந்துநின்ற வினையெச்சம் - மடிய என்னும் காரணப்பொருட்செய வெனெச்சம் திரிந்ததென்க; இது, 'மடிமடிந்து' என்றவிடத்தில் உள்ளது. வினைப்பெயர் - இங்கே வினையாலணையும்பெயர். முன்னர் - அடுத்த நான்கு குறள்களில். கூறுப - சொல்வர். 'குடிமடிந்து' என்றதி லுள்ள மடிந்து என்றதும் - செயவெனெச்சத்திரிபாம். (௬)

௬0௫. நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

(இ - ள்.) மடி - மடியும், நெடுநீர் - (விரைந்துசெய்வதனை) நீட்டித்துச் செய்யும் இயல்பும், மறவி-மறவியும், துயில்-துயிலும், நான்குஉம் - (ஆகிய) இந்நான்கும்,—கெடும் நீரார் - இறக்கும் இயல்பினையுடையார், காமம் - விரும்பியேறும், கலன் - மரக்கலம்; (எ - று.)

முன்னிற்கற்பாலதாய மடி, செய்யுள்நோக்கி இடைநின்றது. நெடுமை யாகிய காலப்பண்பு, அதன்கண்நிகழ்வதாய செயல்மேல் நின்றது. கால நீட்டத்தையுடைய செயல்முதல்மூன்றும், தாமதகுணத்தில் தோன்றி உடன் நிகழ்வனவாகலின், மடியொடு ஒருங்கு எண்ணப்பட்டன. இறக்கும்இயல்பு - நாள்உலத்தல். 'இவை, துன்புறுநீரார்க்கு இன்புறுத்துவபோன்று காட்டி அவர்விரும்பிக்கொண்டவழித் துன்பத்திடை வீழ்த்தலின், 'நாளுலந்தார்க்கு ஆக்கம்பயப்பதுபோன்று காட்டி அவர்விரும்பியேறியவழிக் கடலிடை வீழ்க்குங் கலத்தினை யொக்கும்' என்னும் உவமைக்குறிப்பு, 'காமக்கலன்' என் னுஞ்சொல்லாற் பெறப்பட்டது. இதற்கு-'விரும்பிப்பூணும்ஆபரணம்' என்று உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) விரைந்து செய்வதனை நீட்டித்துச்செய்யும் இயல்பு - கால தாமசஞ் செய்யுந் தன்மை: இது, வடமொழியில் 'தீர்க்கஸூத்ரதா' எனப் படும். மறவி - மறப்பு. துயில் - தூக்கம். முன்நிற்கற்பாலதாய - (இவ்வதி காரம் மடியின்மையாதலால்)முதலில்வைத்தற்குத் தக்கதான. நீண்ட இயல்பு என நேரிற்பொருள்படும் நெடுநீர் என்றசொல்-காலநீட்டித்துச்செய்தலென்ற பொருளில் வந்ததற்குக் காரணங் கூறுகிறது, 'நெடுமையாகிய காலப்பண்பு அதன்கண் நிகழ்வதாய செயல்மேல்நின்றது' என்ற வாக்கியம். காலப்பண்பு- காலத்திற்குரியகுணம். அதன்கண் - அக்காலத்தில். இது, காலத்தின்குணம் அதில்நிகழும் பொருள் மேல் ஏற்றிக் கூறப்பட்ட உபசாரவழக்காம். காலநீட் டத்தையுடையசெயல் - காலதாமதத்தையுடைய காரியம். செயல்முதல் மூன்று-நெடுநீர், மறவி, துயில் என்பன. உடன்நிகழ்வன-கூடவே நடப்பன. மடியென்பது-ப்ரஸ்துதம்: [சொல்லப்படவேண்டிய விஷயம்]: நெடுநீர் முத லிய மற்றை மூன்றும்-அப்ரஸ்துதம்: இவைகளை யெல்லாஞ் சேர்த்து 'கெடு நீரார் காமக்கலன்' என்று ஒரு பொதுத்தன்மை கொடுத்துக் கூறியது-தீவக வணியின்பாற் படும். நாள் உலத்தல் - ஆயுள்நாள்கழிதல். துன்புறுநீரார்க்கு- துன்பமனுபவிக்குந் தன்மையுடையவர்க்கு. விரும்பிக்கொண்டவழி-(இத்தீக் குணங்களை) விரும்பி யேற்றுக்கொண்டபொழுது. வீழ்த்தலின்-தள்ளுதலால். நாள் உலந்தார்-வாழ்நாள் கழிந்தவர். ஆக்கம் பயப்பது-நன்மைதருவது. உவ மைக்குறிப்பு - உபமானத்தைப்பற்றின விவரம். நெடுநீர் மறவி மடி துயில் நான்கும் காமக்கலன்போலு மென்னாது காமக்கலனென்று அபேதமாகக் கூறியது - காட்சியணி. (௫)

௬0௬. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது.

(இ - ள்.) படி உடையார் - நிலம்முழுதும் ஆண்டாரது, பற்று - செல் வம், அமைந்தக்கண் உம் - தானே வந்து எய்தியவிடத்தும், மடி உடையார்—, (அதனான்), மாண் பயன்-மாண்டபயனை, எய்தல்-எய்துதல், அரிது-இல்லை.

உம்மை - எய்தாமைவிளக்கிநின்றது. மாண்பயன்-பேரின்பம். அச்செல் வம், அழியாமற் காக்கும் முயற்சி இன்மையின் அழியும்; அழியவே, தம்தன்

பம் நீங்காது என்பதாம். இதற்கு - 'நிலம்முழுதும் உடைய வேந்தர்துணையா தல் கூடியவிடத்தும்' என்று உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) நிலம்முழுதும் ஆண்டார் - பூமிமுழுவதையும் அரசாட்சி செய்த சக்கரவர்த்திகள். எய்திய இடத்தும் - சேர்ந்தாலும். அதனுன் - அச் செல்வத்தால். மாண்ட - சிறந்த. 'படியுடையார் பற்றமைந்தக்கண்ணும்' என்ற உம்மையால், சோம்பேறிகளுக்கு அப்படிப்பட்ட செல்வம் கிடைக்காதென்பது விளங்கும்; உயர்வுசிறப்பும்மை, எதிர்மறைகுறிக்கின்றது. உம்மைஉம் என்ற இடைச்சொல். எய்தாமை - கிடைக்காமை. பற்று - செல்வமும், துணையுமாம்; பற்றப்படுவதென்றகாரணம்பற்றிய பெயர்: பற்றுதல் - விரும்புதல், அடைதல். படியுடையார் புற்றமைந்தக்கண்ணும் என்ற இடத்து இர



ண்டுவகையாகக்கூறிய உரைகளைக் கவனிக்க.

அமைந்தக்கண்-எதிர்காலவினையெச்சம். மாண்பயன் - பண்புத்தொகை.

(கூ)

கூ0எ. இடிபுரிந் தெள்ளுஞ்சொற்
மாண்ட வுஞற்றில வர்.

கேட்பர் மடிபுரிந்து

(இ-ள்.) மடி புரிந்து-மடியை விரும்புதலான், மாண்ட—, உஞற்று-முய
ற்சி, இலவர் - இல்லாதார்,—இடி புரிந்து - (தம்நட்டார் முன்) கழறுதலை
மிகச்செய்து, (அதனாற் பயன்காணாமையின் பின்), எள்ளும் - இகழ்ந்து
சொல்லும், சொல் - சொல்லை, கேட்பர்—; (எ - று.)

'இடி' என்னும் முதனிலைத்தொழிற்பெயரான், 'நட்டார்' என்பது
பெற்றாம். அவரிகழ்ச்சி சொல்லவே, பிறரிகழ்ச்சி சொல்லாமையே முடிந்தது.
அவற்றிற்கெல்லாம் மாறுசொல்லும் ஆற்ற லின்மையின், 'கேட்பர்' என்றார்.

(கு - ரை.) மாண்ட - சிறந்த. நட்டார் - சிநேகிதர். முன் - முன்பு;
காலம். கழறுதலை மிகச்செய்து-இடித்திடித்து உறுதிமொழிகூறுதலை மிகுதி
யாகச்செய்து. அதனால் பயன்காணாமையின் - அந்த மிக்க உபதேசத்தால்
இவர்களிடத்தில் யாதொருபிரயோசனமும் உண்டாகக் காணாமையால்.'காண

மையின்' என்றது, 'சொல்லும்' என்பதனோடு இயையும். முதனிலைத்தொழிற்பெயர் - பகுதியே தொழிற்பெயர்ப்பொருளில் வருவது; [முதனிலை - பகுதி: பகுபதத்தின் முதலில் நிற்பது.] முடிந்தது - அமைந்தது. மாறு சொல்லும் ஆற்றல் - பிரதியுத்தரஞ்சொல்லுந்திறமை. மடிபுரிந்து என்பதில், புரிந்து - எச்சத் திரிபு: இது 'இலவர்' என்றதைக் கொள்ளும்; கீழ் கூ0௪ - ஆங் குறளுரையிற் காண்க. சோம்பேறிகள் முதன்முதலில் தம்சினேகிதரால் இடித்திடித்து நன்மதி கூறப்பட்டு அதனால் ஒருபயனையும் காணாமையால் பின்பு அவராலேயே பழித்துக்கூறப்படுவரென்பதாம். (எ)

கூ0௩. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்

கடிமை புகுத்தி விடும்.

(இ - ள்.) மடிமை - மடியினது தன்மை, குடிமைக்கண் - குடிமையுடையான் கண்ணே, தங்கின்-தங்குமாயின், (அஃது, அவனை), தன் ஒன்னார்க்கு- தன்பகைவர்க்கு, அடிமை - அடியனாந்தன்மையை, புகுத்திவிடும் - அடை

வித்துவிடும்; (எ - று.)

மடியினது தன்மை-காரியக்கேடு.

குடிமை-குடிசெய்தல்தன்மை. அஃது அதனையுடைய அரசன்மேற்றுதல், 'தன்னொன்னார்க்கு'என்றதனான் அறிக. அடியனுந்தன்மை - தாழ்ந்துநின்று ஏவல்கேட்டல். இவைநான்குபாட்டானும், *அக்குற்றங்கள் கூறப்பட்டன.

(கு - ரை.) காரியக்கேடு - செய்தொழிலழிதல். குடிசெய்தல் - குடி வாழ்க்கையை விருத்திபண்ணுதல். 'குடிப்பிறப்புக்குத்தக்க ஒழுக்கம், குடிமை; குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமையென்றுரென்பது' என்பதை,

---

* பி - ம்: மடிமைக்குற்றங்கள்



"பிறப்பே குடிமை" என்ற தொல்காப்பியச்சூத்திரவுரையிற்காண்க. அஃது அதனையுடைய அரசன்மேற்றுதல் 'தன் ஒன்னார்க்கு'என்றதனல் அறிக. தன் பகைவர்க்குளன வருதலால் குடிமையென்றசொல் குடிமையுடைய அரசனை யுணர்த்துதல் விளங்குமென்க. தாழ்ந்து - கீழ்ப்பட்டு, வணங்கி. ஏவல்கேட்டல்-அவர் ஏவிய கட்டளையைக் கேட்டு அதன்படி நடத்தல். சோம்பலுடைய அரசன் பகைவர் வசப்படுவான் என்பது கருத்து. சுoசு-ஆம்

'குற்றங்கள் முன்னர்க்கூறப' என்று எழுதியதனால், மடிமைக் குற்றங்களை இங்கு அக்குற்றங்கள் என்று சுட்டினர்: அக்குற்றம் - சோம்பலாலுண்டாகிற குற்றம். மடிமை, குடிமை, அடிமை என்றவற்றில், மை - தன்மையுணர்த்தும் விகுதி. குடிமை-பண்பாகுபெயர்; இங்ஙனங்கொள்ளுதல், நச்சினார்க்கினியர்க்கு உடன்பாடன்று: "குடிமை யாண்மை***, அஃறிணைமருங்கிற் கிளந்தாங்கியலும்" என்ற தொல்காப்பியச் சூத்திர வுரையைக் காண்க. (அ)

கூ0கூ. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(இ - ள்.) ஒருவன் —, மடி ஆண்மை - மாற்ற - ஒழிக்கவே,—குடி ஆண்மையுள் வந்த

(தன்)மடியாளுந்தன்மையை,
குற்றம் - அவன்குடியுள்ளும்

ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள், கெடும்—; (எ - மடியாளுந்தன்மை-மடியுடைமைக்கு ஏதுவாய

று.)
தாமதகுணம்.'குடியாண்
மை' என்பது - உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்த குற்றம் என்றது, மடியான் அன்றி முன்னே பிறகாரணங்களான் நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை மாற்றி முயற்சியுடையனாக நீங்கு மென்பதாம்.

(கு - ரை.) மடியாளுந்தன்மை-சோம்பலுடையவனாகும் இயல்பு. 'ஆண்மையாவது-ஆளுந்தன்மை; இவ்வாண்மை, ஆளுந்தன்மையையேயன்றி ஆண்பாலாகிய தன்மையையும் உணர்த்தும்: இனி, ஆண்மையை ஆள்வினையென்

றும் உரைப்ப'எனத் தொல்காப்பியவுரையில் நச்சினர்க்கினிய ருரைத்ததை இங்கே அறிக. குடியாண்மையுள் என்றதொடர் - குடியுள்ளும் ஆண்மையுள்ளும் என விரிதலால், உம்மைத்தொகை. மடியானன்றி - சோம்பலினு லல்லாமல். உயர்திணை யும்மைத்தொகைக்குப் போல அஃறிணை யும்மைத் தொகைக்குப் பன்மை விகுதிபெற்றே வரவேண்டு மென்னும் நியதி இல்லாமையால், 'குடியாண்மை' என ஒருமையாக நின்றது. (௬)

௬௱௧௰. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு.

(இ - ள்.) அடி - (தன்) அடியளவானே, அளந்தான் - எல்லாவுலகையும் அளந்த இறைவன், தாயது எல்லாம்-கடந்த பரப்புமுழுவதையும்,—மடி இலா மன்னவன் - மடியிலாத அரசன்,—ஒருங்கு எய்தும் - (முறையான் அன்றி) ஒருங்கே எய்தும்; (எ - று.)

'அடியளந்தான்'என்றது, வாளா பெயராய் நின்றது. தாவியது என்பது இடைக்குறைந்துநின்றது. எப்பொழுதும் இடையீடின்றி எய்தும் என்பதாம்.

•

வினையின் கண்ணே முயறலின்,

இவையிரண்டு பாட்டானும், மடியிலாதான் எய்தும் பயன் கூறப் பட்டது.

(கு - ரை.) அடியளவானே-காலினளவைக்கொண்டு. இறைவன்-தலைவன்; திருமால்: திரிவிக்கிரமமூர்த்தி. கடந்த - தாவிஅளந்த. பரப்பு - விசாலமான இடம். பரப்புமுழுதையும் - உலகமனைத்தையும் என்றபடி. முறையான் அன்றி-ஒருபிறப்பில் ஒருலகையும் மற்றொருபிறப்பில் மற்றோருலகையுமாக இங்ஙனம் முறைமையாலல்லாமல். ஒருங்கே எய்தும் - ஒருசேர அடைவான். பின்னே 'தாயதெல்லாம்' என வருதலால், முன்னே 'அடியளந்தான்' என்றது-அவ்வரலாற்றைக் குறிக்காமல் திருமாலென்றமாத்திரமாய் நின்றதென்க. வாளா பெயராதல் - வெறும்பெயர்மாத்திரமாதல். 'தாவியதென்பது' என்று தொடங்கிய வாக்கியத்தால், 'தாவுஎன்பதே பகுதி, தா என்னும்பகுதி உகரச்சாரியைபெற்றதன்று' என்பது பரிமேலழகர்கொள்கையெனத் தெரிகிறது. வினையின்கண்ணே முயறலின் - தொழிலில் முயற்சி செய்தலால், இடையீடு இன்றி - இடையில் விட்டிடுதலில்லாமல். மன்னவன் எய்தும் - செய்யுமென்னும் வினைமுற்று ஆண்பாலிற் சென்றது. தாயது எல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். தாயது என்றது - சாதியொருமையாய் உலகங்களையுணர்த்துமென்க. இனி, எல்லாம் என்பது-இங்கே பொருளின் பன்மை குறியாது பொருளின் பலவிடங்குறித்ததென்றும், எஞ்சாமைப் பொருளில் வருவதோர் உரிச்சொலென்றுங் கொள்வதும் ஒன்று. தா அயது - அளபெடை, செய்யுளோசைநிறைக்க வந்தது. (கо)

## கஉ - ஆம் அதிகாரம்.—ஆள்வினையுடைமை.

அஃதாவது-இடைவிடாத மெய்ம்முயற்சியுடையனாதல். அஃது, ஆளும் வினையெனக் காரியத்தாற் கூறப்பட்டது. மடிகெடுத்தாலும் வினை முயற்சியானன்றி ஆளப்படாமையின், இது மடியின்மையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மெய்ம்முயற்சி - தேகபரிசிரமத்தாற் செய்யும் பிரயத்தனம். முயற்சியாகிய காரணத்தால் தொழிலையாளுந்தன்மை உண்டாதல்பற்றி, அந்தஆள்வினையென்ற காரியத்தின்பெயரால் முயற்சியைக் குறித்தது, காரியப்பெயர் காரணப்பெயராகவந்த உபசாரவழக்கு. மடிகெடுத்தாலும் - சோம்பலையொழித்தாலும். ஆள் வினை - வினைத்தொகை.

௬௧௧. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(இ - ள்.) (தம் சிறுமைநோக்கி), அருமை உடைத்து என்று-(நாம் இவ்வினை முடித்தல்) அருமையுடைத்து என்று கருதி, அசாவாமை வேண்டும் - தளராதொழிக; பெருமை - (அதுமுடித்தற்கேற்ற) பெருமையை, (தமக்கு), முயற்சி—, தரும் - உண்டாக்கும்; (எ - று.)

'சிறுமைநோக்கி' என்பது 'பெருமைதரும்' என்றதனானும், 'வினைமுடித்தல்' என்பது அதிகாரத்தானும் வருவிக்கப்பட்டன. விடாதுமுயல், தாம் பெரியராவர்; ஆகவே, அரியனவும் எளிதின்முடியு மென்பதாம்,

24



(கு - ரை.) சிறுமை பெருமை என்றது-செல்வம் துணை சேனைமுதலிய வற்றா லாவதை. அதுமுடித்தற்கு ஏற்ற - அத்தொழிலைமுடிப்பதற்குத் தக்க.
அதிகாரத்தானும்-அதிகாரம் 'ஆள்வினையுடைமை' என்பதாதலாலும். 'அசா வாமைவேண்டும்' என்பதை ஒருசொல்லாகக்கொண்டு, 'தளராதொழிக' என்று உரைத்தார். இதற்கு 'அரசர்' என்பது - தோன்றாஎழுவாய். இனி, அசாவாமை வேண்டும்என இருசொல்லாகக்கொண்டு, தளராமை இன்றியமையாதது என எழுவாயும்

பயனிலையுமாக வுரைப்பினும் அமையும். இவ் வுரைக்கு, வேண்டும்என்பது-ஒருவகைவியங்கோளாம்; இது, நச்சினார்க்கினியர்கருத்து. இனி, வேண்டப்படும் என்னுஞ் செயப்பாட்டுவினை, அகரச்சாரியையும் படுவிகுதியும் தொக்கு, வேண்டும் என வந்ததென்று கொள்ளுதலும் ஒன்று. "உண்டோ......பார்மேல், முயன்றான் முடியாப்பொருள்"என்றது; இங்குக் காணத்தக்கது.

(௧)

௬௧௨. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை

தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

(இ - ள்.) வினை குறை தீர்ந்தாரின் - வினையாகிய குறையைச் செய்யாது விட்டாரை, உலகு தீர்ந்தன்று - உலகம் விட்டது; (ஆதலால்), வினைக்கண் - (செய்யப்படும்) வினைக்கண், வினைகெடல்-தவிர்ந்திருத்தலை, ஓம்பல் - ஒழிக; (எ - று.) குறை - இன்றியமையாப்பொருள்; அது, "பயக்குறையில்லைத் தாம் வாழுநாளே" என்பதனானும் அறிக. இதற்கு - 'வினை செய்யவேண்டுங் குறையை நீங்கினாரின் நீங்கிற்று' என்று உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) உலகம் விட்டது-உலகத்தார் அங்கீகரியாமல் நீக்குவர்என்ற படி. வைசேடிகர், பொருள் பண்பு தொழில் சாதி விசேடம் இயைபு என்பவற்றை அறுவகைப்பொருளென்றாற்போல, இங்கே, தொழில் பொருளெனப் பட்டது. அது - குறையென்னுஞ்சொல் செய்யவேண்டுந்தொழிலென்றபொருளை யுடையதாதலை. "பயக்குறையில்லை" என்ற மேற்கோள், "படைத்துப் பலபடைப்புப் பலரோ டுண்ணு, முடைப்பெருஞ் செல்வராயினு மிடைப் படக், குறுகுறுநடந்து சிறுகை நீட்டி, யிட்டுந்தொட்டுங் கவ்வியுந் துழந்து, நெய்யுடையடிசின்

மெய்பட விதிர்த்து, மயக்குறு மக்களை யில்லோர்க் குப்,
பயக்குறையில்லைத் தாம் வாழுநாளே" என்ற
புறநானூற்றுச் செய்யுளி லுள்ளது. (இச்செய்யுளின்
நான்கு ஐந்தா மடிகள், கீழ் "அமிழ்தினு மாற்ற
வினிதே தம்மக்கள், சிறுகையளாவிய கூழ்" என்ற குறளி
னுரையில் எடுத்தாளப்பட்டுள்ளன.) 'பயக்குறையில்லைத்
தாம்வாழு நாளே' என்பதற்கு - 'பயனாகிய
முடிக்கப்படும்பொரு ளில்லை, தாம் உயிர் வாழுநாளின்கண்'
என்று பொழிப்புரை கூறி, 'குறையென்பது - முடிக்கப்
படுங்கால் முடிக்கப்படும்பொருள்' என விசேடவுரையுங்
குறித்துள்ளதை அந்நூலுரையிற் காண்க.
இதற்கு-இக்குறளில் 'வினைக்குறைதீர்ந்தாரின் தீர்ந் தன்

றுலகு' என்ற இரண்டாம் வாக்கியத்துக்கு. இவ்வுரைக்கு,

'குறை' என்

௬உ - ஆம்
அதிகாரம்.—ஆள்வினையுடைமை க்வுள்

பதற்கு-நிறைவற்றதென்றும், 'நீங்கினாரின்'

என்பதற்கு-நீங்கினவரினின்று
என்றும் பொருள். இதற்கும், 'உலகு' என்பதே

எழுவாய். 'வினை' என்பதை
எழுவாயாகக் கொள்ளின், உலகு-உலகத்தில் என்க.

'தீர்ந்தாரின்' என்பது-
இரண்டாம் உரைக்கு ஐந்தாம்வேற்றுமைவிரியும், முதலுரைக்கு இன் சாரியை பெற்ற இரண்டாம்வேற்றுமைத்தொகையு மாம். ஓம்பல்-அல் ஈற்று உடன்பாட்டு வியங்கோள். தீர்ந்தன்று - உடன்பாட்டு ஒன்றன்பால்முற்று. 'ஓம்பல்' என்பதற்கு, 'அரசன்' - தோன்றா எழுவாய். (உ)

சுகூ. தாளாண்மை யென்னுந்

தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) தாளாண்மை என்னும் -

முயற்சியென்று சொல்லப்படுகிற,
தகைமைக்கண் - உயர்ந்தகுணத்தின்கண்ணே,

தங்கிற்று - நிலைபெற்றது:'
வேளாண்மை என்னும்-(எல்லார்க்கும்)
மேம்பாடு; (எ - று.)
உபகாரஞ்செய்தலென்னும்,செருக்கு-
பொருள் கைகூடுதலான் உபகரித்தற்கு உரியார்

முயற்சியுடையாரென்
பார் அவ்வக்குணங்கள்மேல்வைத்தும், அது பிறர்மாட்டு

இல்லை யென்பார்
'தங்கிற்றே' என்றுங் கூறினார்.

இவைமூன்றுபாட்டானும், முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) கைகூடுதலான் - கிடைத்தலால். அவ்வக்குணங்கள்மேல் வைத்து-தாளாண்மையுடையாரே வேளாண்மையுடையவரென்ற கருத்தைத் தாளாண்மையிலேயுள்ளது வேளாண்மை என அந்தந்தக்குணத்தின்மேல்

ஏற்றி. அது பிறர்மாட்டு இல்லை - உபகாரியாந்தன்மை முயற்சியில்லாதவரிடத்து இல்லை. 'தங்கிற்றே' என்ற பிரிநிலையேகாரம், பிரித்து, 'தகைமைக்கண்' என்றதனோடு கூட்டப்பட்டது; இதனை 'குணத்தின்கண்ணே நிலைபெற்றது' என்ற உரையை நோக்கி யறிக. தாளாண்மை வேளாண்மை யென்பன இப்பொருளனவாதலை "தாளாளனென்பான் கடன்படாவாழ்பவன்,

வேளாளனென்பான் விருந்திருக்கவுண்ணாதான்"

என்ற திரிகடுகத்திலும்,

"வேளாண்மைசெய்து விருந்தோம்பி வெஞ்சமத்து, வாளாண்மையாலும் வலியராய்த் - தாளாண்மை, தாழ்க்கு மடிகோ ளிலராய் வருந்தாதார்"

என்ற பழமொழியினுங் காண்க. செருக்கு - பெருமிதம். (௩)

௬௧௪. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

(இ - ள்.) தாளாண்மை இல்லாதான்-முயற்சியில்லாதவன், வேளாண்மை - உபகாரியாந்தன்மை,—பேடி - (படை கண்டால் அஞ்சும்) பேடி, (அதனிடை), கை வாள் ஆண்மை போல - (தன்) கையில் வாளை யாளுதல் தன்மைபோல, கெடும் - இல்லையாம்; (எ - று.)

ஆள் என்பது - முதனிலைத்தொழிற்பெயர். பேடி வாளைப் பணிகோடற்கருத்துடையளாயினும் அது தன் அச்சத்தால் முடியாதவாறுபோல,



முயற்சியில்லாதான் பலர்க்கும்
உபகரித்தற்கருத்துடையனாயினும் அது தன் வறுமையான்
முடியாது என்பதாம். 'வாளாண்மை' என்பதற்கு
- வாளாற் செய்யும் ஆண்மை என்று உரைப்பாரும் உளர்.

இதனுன், அஃது இல்லாதானது குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) படை - சேனை. வாளையாளுதல் - வாளாயுதத்தை உபயோகித்தல்: வாட்படையைக்கொண்டு போர்த்தொழிலைச் செய்தல். ஆள் என்பது ஆளுதலென்னும்பொருள்பட்டு முதனிலைத்தொழிற்பெயராதல் 'வாளாண்மை' என்றவிடத்தி லென்க. பணிகோடற் கருத்து - தொழில்செய்ய வேண்டுமென்னும் எண்ணம். பணிகோடல் - உபயோகித்தல். இரண்டாம் உரைக்கு, ஆண்மை - ஆடவர்தன்மை, பௌருஷம், பராக்கிரமம். அஃது - முயற்சி. பேடி - பெண்ணுறுப்புமிக்கு ஆணுறுப்புக்குறைந்த நபும்சகம். (௬)

௬௧௫. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

(இ - ள்.) இன்பம் விழையான் - (தனக்கு) இன்பத்தை விரும்பாமலும், வினை விழைவான் - வினைமுடித்தலையே விரும்புவான், —தன் கேளிர் - தன் கேளிராகிய பாரத்தின், துன்பம் - துன்பத்தினை, துடைத்து - நீக்கி, ஊன்றும் - (அதனைத்) தாங்கும், தூண் - தூணும்; (எ - று.)

இஃது - ஏகதேசவுருவகம். 'ஊன்றும்' என்றது அப்பொருட்டாதல், "மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு" என்பதனுனும் அறிக. சுற்றத்தார் நட்டாரது வறுமையுந் தீர்த்து அவர்க்கு ஏமஞ்செய்யும் ஆற்றலையுடையனும்; எனவே, தன்னைக் கூறவேண்டா வாயிற்று. காரியத்தைவிழையாது காரணத்தைவிழைவான்

எல்லாப்பயனும்எய்தும்என் றதனுல், காரணத்தை விழையாது காரியத்தை விழைவான் யாதும்எய்தான் என்பது பெற்ரும்.

இதனுல், அஃது உடையானது நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) கேளிர் - சுற்றத்தாரும் நண்பரும். (ஒருவர்க்கொருவர் யோகக்ஷேமங்களைக்) கேட்பவ ரென்பது பற்றிய காரணப்பெயர்; இதனை 'கேண்மை' என்னும் பண்பினடியாப் பிறந்த தென்னலாம். அதனை - அக் கேளிராகிய பாரத்தை. இங்கே முயற்சியுடையானை 'தூண்' என்றதற்கு ஏற்ப, அவனுறவினரை 'பாரம்' என்ஞமையால், ஏகதேசவுருவகம். அப் பொருட்டு - தாங்குமென்னும்பொருளை யுடையது. "மதலையாய்" என்ற மேற்கோள் "சிதலைதினப்பட்ட வாலமரத்தை, மதலையாய் மற்றதன் வீ ழூன்றியாங்குக், குதலைமை தந்தைகட் டோன்றிற் ருன்பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும்" என்ற நாலடியாரில் உள்ளது; இதில், இரண்டாமடிக்கு- அம்மரத்தின்விழுது தூணுய்நின்று தாங்கினுற்போல் என்றுபொருள். அவர்க்கு - சுற்றத்தார் நட்டார் என்ற அவர்கட்கு. ஏமம்செய்யும் ஆற்றலை - பாது காப்புச்செய்யும் வலிமையை. தன்னைக் கூறவேண்டா - தன்னைப்பாது காத்துக்கொள்ளவல்லவ னென்பதைச்சொல்லவேண்டுவதில்லை. காரியத்தை விழையாது காரணத்தை விழைவான் - முயற்சியின் பயனுகிய இன்பத்தை

•

## சுஉ - ஆம் அதிகாரம்.—ஆள்வினையுடைமை

க்துக்

விரும்பாமல் அதற்குஏதுவான முயற்சியையே

விரும்புபவன். காரணத்தை
விழையாது காரியத்தை விழைவான் - முயற்சியை
விரும்பாமல் இன்பத்தை
மாத்திரம் விரும்புபவன். யாதும் எய்தான் -
ஒருபயனையும் அடையான்.
இங்ஙனம் பெற்றது, அருத்தாபத்தி. அஃது
உடையான் - முயற்சி யுடையவன்.

(௫)

ஸுகஸு. முயற்சி திருவினை யாக்கு
முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

(இ - ள்.) முயற்சி - (அரசர்மாட்டு உளதாய)
முயற்சி, திருவினை ஆக்
கும் - (அவரது) செல்வத்தினை வளர்க்கும்; முயற்று
இன்மை-அஃது இல்
லாமை, இன்மை புகுத்திவிடும் - வறுமையை
யடைவித்துவிடும்; (எ - று.)
செல்வம் - அறுவகையங்கங்கள். வறுமை -
அவற்றான் வறியராதல்.
அதனை அடைவிக்கவே, பகைவரான் அழிவரென்பது
கருத்து.
(கு - ரை.) அரசர்மாட்டு - அரசரிடத்தில்.
அரசியலாதலால், 'அரசர்
மாட்டு' என வருவிக்கப்பட்டது. அஃது

இல்லாமை-முயற்சியின்மை. அறு

வகை அங்கங்கள்-அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பன;

"படை குடி கூழமைச்சு நட்பரணாறு, முடையா னரசரு ளேறு" என்றார்,

கீழ் இறையாட்சி என்ற அதிகாரத்திலும்; அங்கு, 'ஆறுமுடையான் என்ற தனல், அவற்றுள் ஒன்று இல்வழியும் அரசனீதி செல்லாதென்பது பெற்றாம்; வடநூலார் இவற்றிற்கு அங்கமெனப் பெயர்கொடுத்ததூஉம் அது நோக்கி' என உரைத்ததனால், இவற்றின் இன்றியமையாச்சிறப்பினை யறிக. அவற்றான் வறியராதல் - அவ்வங்கங்களாற் குறைவுபட்டவராதல். அதனை - வறுமையை. முயற்று-முயல் என்னும்பகுதி றுவிகுதிபெற்ற தொழிற்பெயர்.

கூகஎ. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(இ - ள்.) மா முகடி-கரிய சேட்டை, மடி உளாள்-(ஒருவன்) மடியின் கண்ணே உறையும்; தாமரையினாள் - திருமகள், மடி இலான் தாள் உளாள் - மடியிலாதானது முயற்சிக்கண்ணே உறையும்: என்ப - என்றுசொல்லுவர் (அறிந்தோர்); (எ - று.)

பாவத்தின்கருமை, அதன்பயனாய முகடிமேல் ஏற்றப்பட்டது. மடியும் முயற்சியும்உடையார்மாட்டு நிலையை அவைதம்மேல்வைத்துக் கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், அவ்விருமைக்கும் ஏது கூறப்பட்டது.

(கு - ரை.) கரிய சேட்டை - கருநிறமுடைய மூதேவி. சேட்டை -

ஜ்யேஷ்டா; மூத்தவள்: இதன் எதிர்மொழி-கனிட்டை, இளையவள்; திருப்
பாற்கடல்கடைந்தபொழுது அதனினின்று முதலில்கருநிறமுடைய மூதேவி
யும், பின்பு செந்நிறமுடைய ஸ்ரீதேவியும் தோன்றின ராதலால், மூத்தாள்
சேட்டை என்பன - மூதேவிக்கும், இளையாள் கனிட்டை என்பன - திருமக
ளுக்கும் பெயர்களாம்.

இங்கே, மடி - சோம்பல். உறையும்-தங்குவள். பாவத்



தைக் கருநிறமுடைய தென்றும் புண்ணியத்தை வெண்ணிறமுடைய தென்றும் உருவமில்லாதவற்றிற்கும் நிறங் கற்பித்துக்கூறுதல், கவிமரபு. அதன் - பாவத்தின். 'மடியும் முயற்சியும்......கூறினார்' என்ற வாக்கியத்தின் கருத்து - சோம்பலுள்ளவனிடத்து மூதேவியும், முயற்சியுள்ளவனிடத்து இலக்குமியும் தங்குவரென்ற தன்மையை, சோம்பலில் மூதேவியும், முயற்சியில் இலக்குமியும் தங்குவர் என்று கூறினரென்பது; இது-பண்பியின் தன்

மையைப் பண்பின்மே லேற்றிக்கூறிய உபசாரவழக்கு. அவ்விருமைக்கும் ஏது-முயற்சியில்லாதானது குற்றத்திற்கும்,

முயற்சியுடையவனது தன்மைக் குங்காரணம். மா என்பது-கருமையென்னும்பொருளதாதலே "மாவே பெரு மையுங் கருமையுஞ்சூதமும்" என்ற திவாகரத்தாலும் அறிக. தாமரையினுள்-செந்தாமரைமலரில் வாழ்பவள். தாமரை - தாமரஸம் என்னும் வடமொழியின் சிதைவென்பர். முக டியென்னுஞ்சொல் இப்பொருளதாதலே "சூதென் னும், முகடியான் மூடப்பட்டார்" என்னுங் குறளிலுங் காண்க. (எ)

சூகஅ. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் தாள்வினை யின்மை பழி.

(இ - ள்.) பொறி இன்மை-(பயனைத்தருவதாய) விதியில்லாமை, யார்க்கும் பழி அன்று-ஒருவற்கும் பழியாகாது; அறிவு அறிந்து-அறியவேண்டுமவற்றை யறிந்து, ஆள்வினை இன்மை - வினைசெய்யாமையே, பழி - பழியாவது; (எ - று.)

அறியவேண்டுவன - வலி முதலாயின. 'தெய்வம் இயையாவழி ஆள்வினையுடைமையாற் பயனில்லை' என்பானை நோக்கி, 'உலகம் பழவினைபற்றிப் பழியாது: ஈண்டைக்குற்றமுடைமைபற்றியே பழிப்பது' என்றார்; அத

னல், 'விடாதுமுயல்க' என்பது - குறிப்பெச்சம்.

(கு - ரை.) ஆய - ஆகிய. விதி - 'இருவினைப்பயன் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதி;' ஊழ். வலி முதலாயின - வலியும்

காலமும் இடனும் என்பன;' கீழ் சஙந-ஆம் குறளினுரையையும், சஅ, சகூ, ௫௦ - அதிகாரங்களையும் காண்க. தெய்வம் இயையாவழி - ஊழ்வினை அனுகூலியாதவிடத்து. உலகம் - உலகத்தார். பழவினைபற்றி - முன்செய்த நல்லூழ் இல்லாமைபற்றி. பழியாது - (அவ்விதியின்மையைப்) பழியார். ஈண் டைக்குற்றமுடைமை - இம்மையில் முயற்சிசெய்யாமையாகிய குற்றத்தை யுடைத்தாயிருத்தல். குறிப்பெச்சம் - சொல்லப்படாமல் எஞ்சிநின்றபொருள் குறிப்பால் உணரப்படுவது.
பொறியென்பது-விதியென்னும்பொருளதாதலை
"ஆம்பொருள்க ளாகுமதுயார்க்கு மழிக்கொண்ணு,
போம்பொருள்கள்போகு மது பொறியின்வகை வண்ணம்"
என்ற சிந்தாமணியிலுங் காண்க. அறிய வேண்டுவன வற்றை 'அறிவு' என்றது - ஆகுபெயர். ஆள்வினையின்மை - மொழிமாற்றி; வினையை ஆளுதலில்லாமை யென்க. அறிந்து என்ற வினையெச்சம் - ஆளுதலென்றதனையேனும் இல்லாமையென்றதனையேனும் கொண்டுமுடிதற்கேற்றது.

ஆளுதலென்பதனைக் கொள்ளுமிடத்து அறிதலும்

முயலுதலும் ஆகிய இரண்டுமில்லையென்றும், இல்லாமையைக் கொள்ளுமிடத்து அறிவிருந்து முயற்சிமாத்திரமில்லையென்றுங் கருத்தாம்; இதனை நுட்பமாக நோக்குக. "எண்ணியொரு கருமம் யார்க்குஞ் செய்யொண்ணாது, புண்ணியம் வந்தெய்து போதல்லால்" என்பது, நல்வழி. (அ)

## ௬௱௰௯. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
## மெய்வருத்தக் கூலி தரும்.

(இ-ள்.) தெய்வத்தான் ஆகாது எனின் உம்-(முயன்ற வினை) பால்வகையால் கருதியபயனைத் தாராதாயினும், முயற்சி——, தன் மெய் வருத்தம் கூலி தரும் - தனக்கு இடமாய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும் [பாழாகாது] ;(எ - று.)

தெய்வத்தான் ஆயவழித் தன் அளவின் மிக்கபயனைத் தரும் என்பது உம்மையாற் பெற்றும். இருவழியும் பாழாக வின்மையின், தெய்வம் நோக்கியிராது முயல்க என்பது கருத்து.

(கு - ரை.) பால்வகையால் - விதிவசத்தால். தனக்கு - அம்முயற்சிக்கு. பாழ் - வீண். தெய்வத்தான் ஆயவழி - விதி அநுகூலித்தபொழுது என்க. தன் அளவின் மிக்க - முயற்சியினளவினும் மிகுதியான. இழிவுசிறப்பும்மையைக்கொண்டு இக்கருத்துக்கொள்ளப்பட்டது. இருவழியும் - தெய்வம் அனுகூலியாதபொழுதும், அனுகூலித்தபொழுதும். இருவழியும் பாழாகல்இன்மையின்என்றது-தெய்வத்தாலாகாதபொழுது சிறிதுபயன்தந்தும், தெய்வத்தாலாகியபொழுது பெரும்பயன்தந்தும் பலித்தலால். தெய்வம்நோக்கியிராது - ஊழ்வினையையே நம்பி யெதிர்பார்த்திராமல். (கூ)

௬௱௨௰. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(இ - ள்.) ஊழையும் - (பயனை விலக்குவதாய) ஊழினையும், உப்பக்கம் காண்பர் - புறங்காண்பர்: உலைவு இன்றி - (அவ்விலக்கிற்கு) இளையாது, தாழாது உஞற்றுபவர் - (வினையைத்) தாழ்வறமுயல்பவர்; (எ - று.)

தாழ்வு அறுதல்-சூழ்ச்சியினும், வலி முதலிய அறிதலினும், செயலினும் குற்றமறுதல். ஊழ் ஒருகாலாக இருகாலாக அல்லது விலக்கலாகாமையின் பலகால் முயல்வார் பயனெய்துவ ரென்பார், 'உப்பக்கங்காண்பர்' என்றார். தெய்வத்தான் இடுக்கண் வரினும் முயற்சி விடற்பாலதன்று என்பது, இவைமூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.

(கு - ரை.) பயனை விலக்குவதாய ஊழ் என்றது-கொடுவிதியை. புறம் காண்பர் - முதுகுகொடுக்கப் பார்ப்பர்; தோல்வியடையச்செய்வர். தாழ்வு அற - தாழாமல். உப்பக்கம் - பின்பக்கம்; இதில், உகரச்சுட்டு -பின் என்னும் பொருளைக் குறித்தது: 'உகரம் எதிர்முகமின்றிப் பின்னிற்கும் பொருளையுஞ் சுட்டுமெனக்காண்க. உகரம் அவ்வாறு சுட்டி நிற்பதை "ஊழையு முப்பக்கங் காண்பர்" என்பதற்குப் பின்பக்கமாய் முதுகுகாட்டிக் காண்பர்



என்று பொருள் கூறுதலால் காண்க' என்றது, ராமாநுஜகவிராயருரை.

சூழ்ச்சி - ஆலோசனை. இடுக்கண் - துன்பம். ஊழையும், உம் - உயர்வு

சிறப்பு; அது - "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந்
துறும்" எனக் கூறிய அதன்வலிமையை விளக்கும். காண்பர் என்றதில்,
காணுதல்-செய்தலென்னுங் கருத்துடையது. உலைவு - தொழிற்பெயர். கீழ்
"ஆகூழாற்றோன்றுமசைவின்மை கைப்பொருள், போகூழாற்றோன்றுமடி",
"பரியினுமாகாவாம் பாலல்ல", "வகுத்தான் வகுத்தவகையல்லாற் கோடி,
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" என ஊழென்னும் அதிகாரத்தில் ஊழின்
வலிமையை மிகவற்புறுத்திக்கூறிய ஆசிரியர், இங்கு இக்குறளாலும் கீழ்க்
குறளாலும் அதனினும் முயற்சி வலியதென்றது, முயற்சி இன்றியமையா
தென்பதை உறுதிப்படுத்தும்பொருட்டுக் கூறியதே யென அறிக. இங்ஙனங்
கொண்ட வழியே 'மாறுகொளக்கூறல்' என்னுங் குற்றம் இல்லாததாம்.
"தொட்டனைத்தூறு மணற்கேணி மாந்தர்க்குக், கற்றனைத் தூறு மறிவு"என்ற
குறளினுரையில், பரிமேலழகர் 'இஃது ஊழ் மாறுகொள்ளாவழியாகலின்,
மேல் "உண்மையறிவே
மிகும்" என்றதனோடு மலையாமை யறிக' என உரைத்

தது காண்க. அன்றியும், மார்க்கண்டேயர்போல்வார் சிறுபான்மை முயற்சியால் ஊழை வென்றதுபற்றியு மாம்; "உலையாமுயற்சி களைகளு ஆழின், வலிசிந்தும் வன்மையு முண்டே-யுலகறியப், பான்முளை தின்று மறலியுயிர் குடித்த, கான்முளையே போலுங் கரி" என்ற நீதிநெறிவிளக்கத்தை யறிக.

சாரு - ஆம்

## அதிகாரம்.—இடுக்கணழியாமை.

அஃதாவது - வினையின்கண் முயல்வான், தெய்வத்தானாக, பொருவின்மையானாக, மெய்வருத்தத்தானாகத் தனக்குஇடுக்கண்வந்துழி அதற்கு மனங் கலங்காமை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) வினை-இங்கே, தொழில். ஆக-ஆவது: விகற்பப்பொருளில் வந்த இடைச்சொல். துன்பம்நேர்ந்தகாலத்தில் கண்இடுங்குதல்பற்றி, அதற்கு இடுக்கணென்று பெயர்; இடுங்குகண் என்பது, இடுக்கண் என விகாரப் பட்ட தென்க: காரியத்தின்பெயர், காரணத்தின்மேல் நின்றது; இத னைத் தொல்காப்பியவுரையில் 'இடுக்கணென்பது - மலர்ந்த நோக்கமின்றி மையல்நோக்கம்பட வரும் இரக்கம்' என்றதுகொண்டு அறிக. வந்துழி - வந்தவிடத்து; வந்தவுழி என்பதன் தொகுத்தல். ஆள்வினை யுடையானுக்கு இடுக்கணுக்கு அழிதல்கூடா தென்பது, அதிகாரமுறைமைக்குக் காரணம். இதனானே - கீழ்க்கூறிய வாக்கியத்தால் என்றபடி. இடுக்கண் அழியாமை - நான்காம் வேற்றுமைத்தொகை. அழியாமை-எதிர்மறைத்தொழிற் பெயர்.

சஉக. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(இ - ள்.) (ஒருவன்) இடுக்கண் வரும் காவ்-(வினையால் தனக்கு) இடுக்கண் வருமிடத்து, நகுக - (அதற்கு அழியாது உள்) மகிழ்க: அதனை அடுத்து

சூரு - ஆம்

அதிகாரம்.—இடுக்கணழியாமை கசூரு

ஊர்வது - அவ்விடுக்கணை மேன்மேல் அடரவல்லது, அம்மகிழ்ச்சி போல்வது பிறிது இல்லை, (ஆகலான்);

அஃது ஒப்பது இல் -
(எ - று.)
வினை இனிது முடிந்துழி நிகழற்பாலதாய
மகிழ்ச்சியை அதற்குஇடை-
யே இடுக்கண்வருவழிச் செய்யவே, அவன் அழிவின்றி
மனவெழுச்சியான்
அதனைத் தள்ளி அக்குறைமுடிக்கும் ஆற்றலுடையனு
மாகலின், 'அதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்' என்றார்.
(கு - ரை.) வினை - இங்கே, விதி.
அழியாது-மனங்கலங்காமல். உள் -
மனம். அடரவல்லது - நெருக்கியழிக்கவல்லது.
நிகழற்பாலது ஆய - உண்

டாகத்தக்கதான. அதற்கு இடையே - வினை முடிவத
ன் மத்தியில். மன
எழுச்சி - உற்சாகம்; எழுச்சி - கிளர்ச்சி. அதனைத் தள்ளி
- இடுக்கணையொ
ழித்து. அக்குறை - அந்தக்காரியக்குறைவை. கால் -
காலமென்னும் வட
சொல்லின் கடைக்குறை. வருங்கால் -
எதிர்காலப்பெயரெச்சத்தொடர்;
நகுக - வியங்கோள்.

(க)

சுஉஉ. வெள்ளத் தனைய விடும்பை
யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

(இ - ள்.) வெள்ளத்து அனைய-வெள்ளம்போலக்
கரையிலவாய, இடும்
பை - இடும்பைகளெல்லாம், அறிவு உடையான்
உள்ளத்தின் உள்ள கெடும்-
அறிவுடையவன் தன்உள்ளத்தான்
கெடும்; (எ - று.)
(ஒன்றனை) *நினைக்க (அத்துணையானே)

இடும்பையாவது - உள்ளத்து ஓர்கோட்பாடே
யன்றிப் பிறிதில்லை

யென்பதூஉம் அது மாறுபடக்கொள்ள நீங்கு

மென்பதூஉம் அறிதல் வேண்

டுதலின் 'அறிவுடையான்' என்றும், அவ்வுபாயத்து

ளத்தினுள்ள' என்றுங் கூறினார்.

எண்மை தோன்ற 'உள்

இவையிரண்டுபாட்டானும், ஊழினாய இடுக்கணால் உபாயம் கூறப்பட்டது.

அழியாமைக்கு

(கு - ரை.) இடும்பை - துன்பம். உள்ளத்தான் - மனக்கிளர்ச்சியால் என்றபடி; மனோதைரியத்தா லென்க. ஒன்றனை - (அவ்விடும்பைக்கு மாறான) ஒருபொருளை. அத்துணையானே - அந்நினைவுமாத்திரத்தால். உள்ளத்து ஓர்கோட்பாடு - மனத்தின் ஒருகொள்கை; இங்ஙனமாதலை, 'மனமாவது - சுகம்முதலிய அனுபவித்தற்குக் கருவியாகிய இந்திரியம்' என்ற தருக்கசங்கிரக வாக்கியங்கொண்டும் உணர்க. அது-அவ்விடும்பை. மாறுபடக் கொள்ள- இன்பமாகநினைக்க. இங்ஙனம்நினைத்தல் சாத்தியமாதலை "வைததனையின் சொல்லாக் கொள்வானு நெய்பெய்த, சோறென்று கூழை மதிப்பானும் - ஊறிய, கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர், மெய்ப்பொருள் கண்டு வாழ்வார்" என்றதிலுங் காண்க. உபாயத்து எண்மை-உபாயத்தினது செய்தற்கெளியதன்மை. உள்ள - காரணப்பொருட் செயவெனெச்சம். (உ)

பி - ம்: நினைந்ததுணையானே,

25

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படா அது தவர்.

(இ - ள்.) (வினைசெய்யுங்கால் அதற்கு இடையேவந்த), இடும்பைக்கு-

துன்பத்திற்கு, இடும்பை படாதவர் - வருந்தாதவர்,—இடும்பைக்கு - அத்

துன்பந்தனக்கு, (தாம்), இடும்பை படுப்பர் - துன்பம் விளைப்பர்; (எ - று.)

வருந்துதல்-இளைத்து விடநினைத்தல். மனத்திட்பமுடையராய் விடாது முயலவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே, எல்லாவிடும்பை

யும் இலவாம்: ஆகலின், 'இடும்பைக் கிடும்பைபடுப்பர்' என்றார். வருகின்ற

பாட்டு இரண்டினும் இதற்கு இவ்வாறே கொள்க. சொற்பொருட்பின்

வருநிலை.

(கு - ரை.) அதற்குஇடையே - அவ்வினைசெயற்கு நடுவே. விட - (அத்

தொழிலை இடையிலே) விட்டிட. மனத்திட்பம் - நெஞ்சுறுதி. அடுத்த இர

ண்டு குறள்களிலும் "இடுக்க ணிடர்ப்பா டுடைத்து"; "இடுக்க ணிடுக்கட்

படும்" என வருதல் காண்க. சொற்பொருட்பின் வருநிலை - ஓரணி; அதா

வது-வந்த சொல்லும் பொருளும் மீண்டும் ஒரு செய்யுளில் வருவது: இதனை

வடநூலார் உபயாவ்ருத்தி தீபகம் என்பர். இக்குறளில், இடும்பையென வந்த

சொல்லும், துன்பமென வந்த பொருளும் மீண்டும் பலகால்வந்தது காண்க'

இடும்பைக்கு என்ற சொல் இரண்டனுள் பிந்தினது -
மாய் நிற்கும்.
சுட்டுப்பெயர்மாத்திர

(௩)

௬௨௪. மடுத்தவா யெல்லாம் பகடன்ன
னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(இ - ள்.) மடுத்து - விலங்கிய, வாய் எல்லாம் - இடங்களெல்லாவற்றி

னும், பகடு அன்னான் - (சகடமீர்க்கும்) பகடுபோல வினையையெடுத்துக் கொண்டு உய்க்கவல்லானை, உற்ற-வந்துற்ற, இடுக்கண்—,—இடர்ப்பாடு உடைத்து - (தானே) இடர்ப்படுதலை யுடைத்து; (எ - று.)

'மடுத்தவாயெல்லாம்' என்பது பொதுப்படநின்றமையின், சகடத்திற்கு அளற்றுநிலம் முதலிய வாகவும், வினைக்கு இடையூறுகளாகவுங் கொள்க.

பகடு மருங்குஒற்றியும் மூக்குஊன்றியும் தாள்தவழ்ந்தும் அரிதின் உய்க்கு
மாறுபோலத் தன் மெய்வருத்தம் நோக்காது
டன்னன்' என்றார்.
முயன்றுய்ப்பான் என்பார் 'பக

(கு - ரை.) விலங்கிய இடங்களெல்லாவற்றினும்
- இனிது செல்லத்
தகாதவழிகளுமுட்பட எல்லாவிடத்தும். சகடமீர்க்கும்
பகடுபோல - வண்
டியையிழுக்கிற எருதுபோல. "நிரம்பாதநீர்யாற்
றிடுமணலுளாழ்ந்து,
பெரும்பாரவாடவர்போற் பெய்பண்டந்தாங்கி, மருங்கொற்றி மூக்கூன்றித்
தாடவழ்ந்து வாங்கி" என்ற சிந்தாமணியும், அதனுரையும், இங்கு
நோக்கத்தக்கன. வினையை எடுத்துக்கொண்டு உய்க்கவல்லான் - தொழி
லைத்தொடங்கி யேற்றுக்கொண்டு நடத்தவல்லவன். வந்து உற்ற - வந்து
சேர்ந்த. இடர்ப்படுதலை உடைத்து - துன்பப்படுதலை யுடையது. பொது

சஉ - ஆம்

அதிகாரம்.—இடுக்கணழியாமை க்கூறு

ப்பட - (உபமானத்துக்கும் உபமேயத்துக்கும்) பொதுவாக.
அளற்று நிலம் -
சேற்றுநிலம். முதலியன என்றதனால் - மணல்நிலம்

செங்குத்தானநிலம் முத
லிய கொள்க. இடையூறு - தடை. மருங்கு ஒற்றியும் -
பக்கங்களில் உராய்ந்
தும். மூக்கு ஊன்றியும்-நிலத்திலே மூக்கை
யூன்றிக்கொண்டும். தாள் தவழ்ந்
தும் - கால்களை மடியவைத்து இழுத்தும். அரிதின்
உய்க்கும் ஆறு - அருமை
யாக வண்டியைச் செலுத்தும் விதம். பகடு -
ஆண்பாற்பெயர்; இது பசுவின்
ஆணுக்குஉரியதாதலை "யானையுமெருமையும்
பெற்றமுமற்றிவை, பாண்மையி
லுரைக்கிற் பகடென்றுமே" என்ற பிங்கலந்தையாலும்
அறிக. (௲)

௬௨௫. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும்.

(இ - ள்.) அடுக்கி வரின் உம்-(இடைவிடாது)
மேன்மேல் வந்தனவாயி
னும், அழிவு இலான் - (தன்)
உள்ளக்கோட்பாடுவிடாதான், உற்ற—, இடுக்
கண்—, இடுக்கண் படும் - (தாம்) இடுக்கணிலே
பட்டுப்போம்; (எ - று.)

ஒன்றே பலகால்வருதலும் வேறுபட்டன
விராய்வருதலும் அடங்க,
'அடுக்கிவரினும்' என்றார். 'அழிவு' என்னுங் காரண
ப்பெயர், காரியத்தின்

மேல் நின்றது.

இவைமூன்றுபாட்டானும், தெய்வத்தானுயதற்கு அழியாமை கூறப் பட்டது.

(கு - ரை.) உள்ளக்கோட்பாடு விடாதான் - மனவுறுதி நீங்காதவன்.
ஒன்றே பலகால் வருதல்-ஒருவகைத்துன்பமே பலமுறை வருதல், வேறுபட் டன விராய் வருதல்-வெவ்வேறு வகைப்பட்ட பலதுன்பங்கள் கலந்து வரு தல், அடங்க-அமைய. அழிவு-மனங்கலங்குதல்; அது - அதனலாகிற தைரிய நீக்கத்தை உணர்த்துதலால், 'காரணப்பெயர் காரியத்தின்மேல் நின்றது' என்றார்; இது - உபசாரவழக்கு. தெய்வத்தான் ஆயதற்கு - விதியினலாகிய துன்பத்துக்கு. அடுக்கிவரினும், உம்-இழிவுசிறப்பு.
(ஙி)

௬௨௯. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்.

(இ - ள்.) (வறுமைக்காலத்து), அற்றேம் என்று-(யாம்) வறியமாயினே மென்று, அல்லல் படுபஓ-(மனத்தால்) துயருழப்பரோ?

(செல்வக்காலத்து),
பெற்றேம் என்று - (இது)பெற்றேமென்று,
ஓம்புதல்-இவறுதலை, தேற்றாத
வர் - அறியாதார்; (எ - று.)

பெற்றவழி இவறுமை நோக்கி அற்றவழியும் அப்பகுதி விடா தாகலின் அல்லற்பாடு இல்லையாயிற்று.

இதனுன், பொருளின்மையான் ஆயதற்கு அழியாமையும், அதற்குஉபாயமும் கூறப்பட்டன.

(கு - ரை.) வறியம் - செல்வமில்லோம். துயர் உழத்தல் - துன்பமனுபவித்தல். இவறுதல்-மிக்கஆசைகொண்டு லோபஞ்செய்தல். பெற்றவழி இவறு



மைநோக்கி - அரசன் செல்வம்பெற்றபொழுது தம்விஷயத்தில் லோபஞ் செய்யாததைப் பார்த்து. அற்றவழியும் அப்பகுதிவிடாது - செல்வம் நீங்கிய பொழுதும் மந்திரி முதலிய அந்தப் பரிவாரம் விட்டுநீங்காது. அல்லற்பாடு - துன்பப்படுதல். ஆயதற்கு - ஆகிய துன்பத்திற்கு. அதற்கு - அழியாமைக்கு. அரசன்கையிற் பொருளிருந்தபொழுது, சிறிதும் லோபஞ்செய்யாமல் தன்னை அடுத்த பரிசனங்களுக்கு வரையாது கொடுத்துவந்தானுயின், அவனை அப் பரிசனம் செல்வமழிந்தபொழுதும் பழைய அன்புடைமையால் விட்டுநீங்காது; ஆதலால் அங்ஙனமிருத்தல் செல்வமழிதலால்

வருந்தாமைக்கு உபாயமென் பது கருத்து.

(சு)

சுஉஎ. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்

கையாறுக் கொள்ளாதா மேல்.

(இ - ள்.) 'உடம்பு-(நாற்கதியினுமுள்ள) உடம்புகள், இடும்பைக்கு - இடும்பையென்னும் வாளுக்கு, இலக்கம் - இலக்கு,' என்று-என்றுதெளிந்து, கலக்கத்தை-(தம்மேல்வந்த)இடும்பையை, கையாறு ஆ-இடும்பையாக, கொள்ளாது - கொள்ளார்: மேல் - அறிவுடையார்; (எ - று.)

ஏகதேசவுருவகம். உடம்பு - சாதிப்பெயர். 'கலக்கம்' என்னும் காரியப்பெயர், காரணத்தின்மேல்நின்றது. 'கையாறு' என்பது, ஒருசொல்: இதற்கு 'ஒழுக்கநெறி' என்று உரைப்பாரும் உளர். இயல்பாகக்கொள்வரென்பது, குறிப்பெச்சம்.

(கு - ரை.) நாற்கதியினும் - (நரகர் விலங்கு மக்கள் தேவர் என்னும்) நால்வகைப் பிறப்பிலும். இலக்கு=லக்ஷயம்: குறி. நால்வகைக்கதி களும் துன்பத்திற்கு இடமாதலை "யாவதுந் துன்பம் மன்னு யாக்கை கொண்டவர்கட் கென்றான்" என்ற சிந்தாமணியாலும் அறிக. இக்கதி ஒவ்வொன்றிலுமுள்ள துன்பங்கள், சிந்தாமணியில் முத்தியிலம்பகத்திலும், சூளாமணியில் துறவுச்சருக்கத்திலும்

விரித்துக் கூறப்பட்டுள்ளன. தெளிந்து- நிச்சயமாக அறிந்து. உடம்பை இலக்கென்றதற்கு ஏற்ப, இடும்பையை வாள் என்னுமையால், ஏகதேசவுருவகவணி. கலங்குதல் என்னுங் காரியத்தின் பெயர், அதற்குக்காரணமான துன்பத்தை யுணர்த்தினது - உபசார வழக்கு.

கையாறு - கையறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்; கையாறு என்பதற்கு – 'உயிர்ப்புமின்றி வினையொழிந்தயர்தல்' என்றும், 'மூர்ச்சித்தல்' என்றும் விவரண முரைப்பர். கை அறு என்ற இரண்டுசொற்கள் தொடர்ந்து, தொழிலொழிதல் எனப் பொருள்பட்டு, அக்காரியத்தின்பெயர் அதன்காரணமான துன்பத்தின்மேல் நின்ற தென்னலாம். பிறருரைக்கு, கை - ஒழுக்கம்; ஆறு - வழி. 'கையாறுக்கொள்ளாது' என்றதன் குறிப்பால், இயல்பாகக் கொள்வர் என்பது பெறப்படும். ஆம்-அசை. மேல் - மேன் மக்களுக்குப் பண்பாகுபெயர்; இது - ஆகுபெயர்ப்பொருளால் உயர்திணைப் பலர்பாலாயினும், சொல்லால் பால்பகா அஃறிணையாதலால், சாதியொருமையாய் 'கொள்ளாது' என்னும் ஒன்றன்பால் முற்றைக் கொண்டது. ஸ்ரீ

௬௨௭ - ஆம்

அதிகாரம். — இடுக்கணழியாமை க்கள்

வினையை அனுபவிக்கும்பொருட்டு ஆகிய உடம்புக்குத் துன்பம் இயல்பு என்று எண்ணிப் பெரியோர் அதற்கு வருந்தாரென்பது கருத்து. "இடும் பைக்கிடும்பை

யியலுடம்பிதன்றே" என்றார், ஒளவையாரும். (எ)

சஉஎ. இன்பம் விழையா னிடும்பை பியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்.

(இ - ள்.) இன்பம் விழையான் - (தன் உடம்பிற்கு) இன்பமாயவற்றை விரும்பாதே, இடும்பை இயல்பு என்பான் - (வினையால்) இடும்பை (எய்துதல்) இயல்பென்று தெளிந்திருப்பான்,—துன்பம் உறுதல் இலன் - (தன் முயற்சியால்) துன்பமுறான்; (எ - று.)

இன்பத்தை விழையினும், இடும்பையை இயல்பென்னது காக்கக்கருதினும், துன்பம்விளைதலின், இவ்விரண்டுஞ் செய்யாதானை 'துன்பமுறுத லிலன்' என்றார்.

(கு - ரை.) ஆயவற்றை - ஆனவைகளை. வினையால் - விதியால். விழையினும் - விரும்பினாலும். காக்க - தடுக்க. (அ)

சஉக. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

(இ - ள்.) இன்பத்துள் இன்பம் விழையாதான் -

(வினையால் தனக்கு)

இன்பம் வந்துழி அதனை அனுபவியாநின்றே(மனத்தான்)விரும்பாதான்,— துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் - துன்பம்வந்துழியும் அதனை அனுபவியாநின்றே (மனத்தான்) வருந்தான்; (எ - று.)

துன்பம் - முயற்சியான்வரும் இடுக்கண். இரண்டையும் ஒரு தன்மையாகக் கோடலின், பயன்களும் இலவாயின.

(கு - ரை.) வினையால் - தன்செயலால். அனுபவியாநின்றே - அனுபவித்துக்கொண்டே: அனுபவியாநின்று நிகழ்கால வினையெச்சம்: ஆநின்று - இடைநிலை. இரண்டையும் ஒருதன்மையாகக் கோடலின்-(இன்பம் துன்பம் என்னும்) இரண்டையுஞ் சமமாகக்கொள்ளுதலால். பயன்களும் - பிரயோசனத்திலுள்ள வேறுபாடுகளும். இன்பம், துன்பம் என்பன - ஆகுபெயராய், அவைவருங் காலத்தைக் குறித்தன.

(கூ)

கூ௨0.

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

(இ - ள்.) இன்னாமை - (ஒருவன் வினைசெய்யுமிடத்து முயற்சியான் வருந்) துன்பந்தன்னையே, இன்பம் என - (தனக்கு) இன்பமாக, கொளின்-

கற்பித்துக்கொள்வனுயின்,—(அதனுல்), தன்

ஒன்னூர்-தன்பகைவர், விழை

யும் - நன்குமதித்தற்கு ஏதுவாய, சிறப்பு-உயர்ச்சி, ஆகும்-உண்டாம்; (எ-று.)

துன்பந்தானும் உயிர்க்கு இயல்பன்றிக் கணிகமாய் மனத்திடைநிகழ்வ

தோர் கோட்பாடாகலின், அதனைமாறுபடக்கொள்ளவே, அதற்கு அழிவின்றி, மனமகிழ்ச்சியுடையனுய் அதனுல்

லுடையனும் என்பது கருத்து.

தொடங்கியவினை முடித்தேவிடும் ஆற்ற

•



இவைநான்குபாட்டானும்,

மெய்வருத்தத்தானுயதற்கு அழியாமையும்,

அதற்கு உபாயமும் கூறப்பட்டன.

(கு - ரை.) கற்பித்துக்கொள்ளுதல் - மனவுறுதியாற் பாவித்தல். நன்கு மதித்தல் - கௌரவித்தல். இயல்பு - சுபாவம். கணிகமாய் - கணப்பொழுது நிற்பதாய்; கணிகம்—க்ஷணிகம், நிகழ்வது - உண்டாவது. கோட்பாடு -

கொள்கை. அதனை - துன்பத்தை. அதற்கு - துன்பத்துக்கு. அதனுல -

மகிழ்ச்சியால். ஆயதற்கு - ஆகிய துன்பத்திற்கு. அதற்கு-அழியாமைக்கு. (௫0)

அரசியல் முற்றிற்று.

---

## இரண்டாவது
# அங்கவியல்.

இனி, முறையானே, அரசியல்நடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையாய அங்கங்களாறனது இயல்பு முப்பத்திரண்டு அதிகாரத்தாற் கூறுவான் எடுத்துக்கொண்டு, அவையாறனுள்ளும் காவற்சாகாடு உகைத்தற்கண் அவ்வரசற்கு இணையாய அமைச்சனது இயல்பு பத்துஅதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

(கு - ரை.) அங்கவியல் - அரசனது அங்கங்களைப்பற்றிக் கூறும் பிரிவு. அரசியல் நடாத்துதல் - அரசாட்சியை நடத்துதல். கூறுவான் எடுத்துக் கொண்டு - சொல்லத்தொடங்கி. காவல் சாகாடு உகைத்தற்கண் - காத்தல் தொழிலாகிய வண்டியைச் செலுத்துதலில். "கால்பார்கோத்து ஞாலத்தியங்கும், காவற்சாகாடுகைப்போன் மாணின், ஊறின்றாகி யாறினிதுபடுமே, உய்த்தல்தேற்றானாயின் வைகலும், பகைக்கூ ழள்ளற்பட்டு, மிகப்பஃறீநோய் தலைத்தலைத்தருமே" என்ற புறநானூற்றுச்செய்யுளில், உலகங்காத்தலை வண்டியாகவும், அதனை நடத்தும் அரசனை அவ்வண்டிசெலுத்துபவனாகவும், நீதிநெறியை நல்வழியாகவும், அந்நெறி தவறுதலை வழிதவறுத லாகவும்,

பகையைச் சேருகவும், அதன்வசப்படுதலைச் சேற்றிலழுந்துதலாகவும் வரு

ணித்துக் கூறியுள்ளதைக்கொண்டு, 'காவற் சாகாடு உகைத்தற்கண்' என்

றார். இணை - சமம். காவற்சாகாடு உகைத்தற்கண் அரசனுக்கு அமைச்சன்

இணையாதலை "வீக்குசீ ருலகங் காக்கும் விழுநுக மொருவனாலே, தாங்கலாக்

தன்மைத் தன்று தளையவிழ் தயங்குதாரீர், பாங்கலார் பணியசசூழ நூலவர்

பாகமாகப், பூங்குலா மலங்கல்மாலைப் புரவலன் பொறுக்குமன்றே" என்ற

சூளாமணியாலும் அறிக.

## கூசு - ஆம்

## அதிகாரம்.—அமைச்சு.

அஃதாவது - அமைச்சனது தன்மை: என்றது - அவன் நன் குணங்

களையும், செயல்களையும்.

(கு - ரை.) அமைச்சன் - மந்திரி; அமாத்ய னென்னும் வடசொல்லின் சிதைவு; அவ்வடசொல், அருகிலுள்ளவனெனப் பொருள்படும்: அமா - சமீ

பம். இவ்வதிகாரத்தின் எட்டாங் குறளில் 'உழையிருந்தான்' என்ற பெயரையும், அதன் உரையையுங் காண்க. "உழையர்" என்பர் கம்பரும். அவன் தன் - அம் மந்திரியினது.

சுஙக.

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

(இ - ள்.) கருவிஉம் - (வினைசெய்யுங்கால் அதற்கு வேண்டும்) கருவிகளும், காலம்உம் - (அதற்கு ஏற்ற) காலமும், செய்கைஉம் - (அது) செய்யுமாறும், செய்யும் அருவினைஉம் - (அவ்வாற்றிற்) செய்யப்படும் அவ்வரிய வினைதானும், மாண்டது - வாய்ப்பஎண்ணவல்லவனே, அமைச்சு - அமைச்சனாவான்; (எ - று.)

கருவிகள் - தானையும், பொருளும். காலம் - அது தொடங்குங் காலம். செய்கை யெனவே, அது தொடங்கும்உபாயமும், இடையூறுநீக்கி முடிவுபோக்குமாறும் அடங்கின. சிறிய முயற்சியாற் பெரிய பயன் தருவது என்பார், 'அருவினை' என்றார். இவையைந்தனையும் வடநூலார் மந்திரத்திற்கு அங்க மென்ப.

(கு - ரை.) வினை-(போர்முதலிய) தொழில். கருவி-சாதனம். அதற்கு - வினைசெய்தற்கு. அது - வினை. ஆறு - வழி. அவ்வாற்றின் - அவ்வழியில்.

வாய்ப்ப - பொருந்த, பலிக்க. எண்ண - ஆலோசிக்க. தானை - சேனை. பொருள் - செல்வம். அது - வினை.

முடிவுபோக்குதல் - முற்றுப்பெற நடத் துதல். அரு வினை - பெறுதற்கரிய வினை யென்றபடி. இவையைந்தனை யும் - தானை, பொருள், காலம், செய்யுமாறு, வினை என்னும் ஐந்தையும். மந்திரத்திற்கு - ஆலோசனைக்கு. என்ப - என்பர்.

இவை வடநூலில் மந்த்ர பஞ்சாங்க மெனப்படும்; துணை, உபாயம், தேசகாலவிபாகம், இடையூறொழித்தல், காரியசித்தி என்ற ஐந்தையும் அங்கமென்பதும் ஒருசார் வடநூற் கொள்கையாம். 'கருவி' என்றதை இரண்டாகக் கொண்டமையின், இக் குறள் ஐந்தையும் கூறுவதாயிற்று. இக்குறளில் எண்ணும்மை தொகை பெறுதுவந்தது; [நன் - இடை - கூ:] இதற்குத் தொகை, அடுத்த கவியிற் கூறப்படும். மாண்டது - மாட்சிமைப்பட்டது. வேந்து அரசு தூது ஒற்று என்பனபோல, அமைச்சு என்பது - உயர்திணைப்பொருளில் வரும் அஃறிணைச்சொல் லாதலால், 'மாண்டது அமைச்சு' என்றதற்கு - 'வாய்ப்ப எண்ணவல்லவனே அமைச்சனாவான்' என்று உரைக்கப்பட்டது; "அன்ன பிறவு மஃறொடு சிவணி, முன்னத்தினுணருங் கிளவியெல்லாம், உயர்திணை மருங்கி னிலையினவாயினும், அஃறிணைமருங்கிற் கிளந்தாங் கியலும்" என்றார், தொல்காப்பியனார்.

(க)

சூ௱௨. வன்கண் குடிகாத்தல் கற்றறித

லாள்வினையோ

. . . .

டைநதுடன மாணட தமைசசு.

(இ - ள்.) வன்கண்-(வினைசெய்தற்கண்) அசைவின்மையும், குடி காத்தல்-குடிகளைக் காத்தலும், கற்று அறிதல்-(நீதிநூல்களைக்) கற்று (ச்செய்வன



தவிர்வன) அறிதலும், ஆள்வினையோடு - முயற்சியும், ஐந்துடன் மாண்டது-

(மேற்சொல்லிய அவ்வங்கங்கள்)ஐந்துடனே திருந்த உடையானே, அமைச்சு-

அமைச்சனாவான்; (எ - று.)

எண்ணொடு, நீண்டது. 'அவ்வைந்து' என, சுட்டு வருவிக்க. இந்நான் கனையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக்கூறியது - அவையும் இவற்றோடு கூடியே மாட்சிமைப்படவேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னுந்தொகை பெறுதற்கும். இனி, இதனை ஈண்டு எண்ணியவற்றிற்கே தொகையாக்கி, குடிகாத்தலென்பதனைக் குடிப்பிறப்பும் அதனை ஒழுக்கத்தாற்காத்தலு மெனப் பகுப்பாரும்,கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலு மெனப் பகுப்பாரும் உளர்; அவர், உடனென்பதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், குடியென்பதனை ஆகுபெயராக்கியும் இடர்ப்படுப.

(கு-ரை.) வினை செயற்கண்-ஒருதொழிலைச் செய்தலில். அசைவின்மை-தளராமை; உறுதியாய்நிற்றல். திருந்த - செவ்வையாக. எண்ஒடு - எண்ணுப்பொருள் தரும் 'ஒடு' என்ற இடைச்சொல். மேல் கூறியவற்றோடு-முந்தின குறளிற் சொன்ன கருவி முதலியவற்றுடன். அவற்றிற்கு-"கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யுமருவினையும்" என்றவற்றிற்கு. இவை ஐந்தாதல், கருவியை இரண்டாகக் கொண்டதனால். இதனை-ஐந்துடன் என்றதை. ஈண்டு எண்ணியவற்றிற்கே - இக்குறளில் எண்ணுப்பொருள்படக் கூறிய 'வன்கண், குடிகாத்தல், கற்றறிதல், ஆள்வினையோடு' என்றவற்றிற்கே. இடர்ப்படுப-துன்பப்படுவர். இதனால், பிறருரைகளுக்கு, 'க்லிஷ்டகற்பனை' [நலிந்து பொருள்கொள்ளுதல்] என்ற குற்றங் காட்டி அவற்றை மறுத்தவாறு. இங்குப் பிறருரையாகக் காட்டிய இரண்டனுள், 'கற்றறிதல்' என்பதனைக் கற்றலும் அறிதலும் எனப்பகுத்தல், பேராசிரியர்க்கு உடன்பாடு; அதனைத் தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்தில் "பிறப்பே குடிமை" என்ற மெய்ப்பாட்டியற் சூத்திரவுரையில் 'உருவினை அன்பிற்கு அடையாகக் கூறினுயினும், உருவு சிறப்புடைமையின், அதனை நாம் பகுத்து எண்ணிக் கொண்டாம் என்பது: என்னை? "வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினை

யோ, டைந்துடன் மாண்டதமைச்சு" என்புழி, 'கற்றறிதல்' என்பதனை இரண்டாக்கி ஐந்தென்ப வாகலின்' என்றது காண்க. (இவ்வாறு வேறொன்றற்கு அடைமொழியாய் நிற்பதனைத் தனியே யெடுத்து ஒன்றாகக் கொள்வதனை 'அவிம்ருஷ்டவிதேயாம்சம்' என்ற குற்றத்தின்பாற்படுத்துவர் வடமொழி அலங்காரநூலுடையார்.) உடன் என்னும் இடைச்சொல் முற்றும்மைப் பொருளதாதல் இரண்டுஉரைக்கும், குடியென்பது ஆகுபெயராதல் முதலுரைக்கு மாத்திரமு மென்க. உடன் என்பது மூன்றாம்வேற்றுமைச்சொல்லுருபாதற்குப் பொருந்துவதா யிருக்க அதனையொழித்து அதற்கு முற்றும்மைப் பொருள் கற்பித்தலும், இயல்பிற் பொருள் படாத இடத்தில் இன்றி யமையாமையாற் கொள்ளவேண்டிய ஆகுபெயரிலக்கணத்தை இயற்பொருள் படக்கூடிய இவ்விடத்தில் 'குடி' என்பதன்மே லேற்றுதலும் நலிவாதல் நோக்குக. வன்கண் - வலியதன்மை. குடிகாத்தல் - இரண்டாம் வேற்றுமைத்

தொகை. இப்பாட்டில் ஓரிடத்தில் நின்ற 'ஓடு' என்னும் எண்ணிடைச்சொல் அவ்விடத்தினின்று பிரிந்து வன்கண்ணொடு, குடிகாத்தலொடு, கற்றறிதலொடு, ஆள்வினையொடு எனப் பிறவிடத்துஞ் சென்று பொருந்தும். மேல் "பொருள் கருவி காலம்" என்ற சூ௬௧ - ஆங்குறளி னுரையிற் பரிமேலழகர் 'எண்ணொடு பிறவழியுங் கூட்டப்பட்டது' என இலக்கணங்குறித்தலுங் காண்க. "உம்மையெண்ணெனவெ, டிக்ரான்கெண்ணு மஃதின்றியுமியலும்" என்றதனால், இக்குறளில் எண்ணொடு தொகை பெறவில்லை. (உ)

சுஅஅ. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) (வினை வந்துழி), பிரித்தல்உம்-(பகைவர்க்குத்துணையாயினாரை அவரிற் பிரிக்கவேண்டின்) பிரித்தலும், பேணி கொளல்உம் - (தம்பாலாரை அவர் பிரியாமல் கொடை இன்சொற்களாற்) பேணிக்கொள்ளுதலும், பிரிந்தார் பொருத்தல்உம் - (முன்னே தம்மினும் தம்பாலாரினும்) பிரிந்தாரை (மீண்டும் பொருத்தவேண்டின்) பொருத்தலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - அமைச்சனாவான்; (எ - று.)

இவற்றுள் அப்பொழுதைநிலைக்கு ஏற்றசெய லறிதலும் அதனை அவர் அறியாமல் ஏற்ற உபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரியவாதல்நோக்கி, 'வல்லது' என்றார். வடநூலார் இவற்றுள் பொருத்தலை 'சந்தி' என்றும், பிரித்தலை 'விக்கிரகம்' என்றுங் கூறுப.

(கு-ரை.) வினை வந்துழி-காரியம் நேரிட்டபோது. அவரின்-அப்பகைவரிடத்தினின்றும். தம்பாலார்-தம்மைச்சேர்ந்தவர், தமக்குத் துணையாகுமவர். கொடை - வேண்டியபொருள் கொடுத்தல். பேணிக்கொளல்-விரும்பிப் பாதுகாத்துக்கொள்ளுதல். மீண்டும் பொருத்த வேண்டின்-மறுபடிசேர்க்கவேண்டினால். பொருத்தல் - சேர்த்தல். 'வல்லது' என அமைச்சன் தன்மையைப்

பாராட்டிக்கூறியதன் கருத்தை விளக்குவது 'இவற்றுள்' என்று தொடங்கும் வாக்கியம். அப்பொழுதைநிலைக்கு - அந்தச்சமயத்தின் நிலைமைக்கு. அதனை - அச்செயலை. அவர் - பகைவர்க்குத் துணையாயினாரும், தம்பாலாரும், பிரிந்தாரும். கடைப்பிடித்தல் - உறுதியாகக் கொள்ளுதல். அரியவாதல் நோக்கி - அரியனவாகுதலையெண்ணி. கூறுப - கூறுவர். (ரு)

சுஙஅ. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) தெரிதல்உம்-(ஒரு காரியச்செய்கை பலவாற்றால் தோன்றின் அவற்றுள் ஆவது ஆராய்ந்து) அறிதலும், தேர்ந்து செயல்உம்-(அதுசெய்யுங்கால் வாய்க்குந் திறன்) நாடிச் செய்தலும், ஒருதலை ஆ சொல்லல்உம் - (சிலரைப்பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கு இதுவேசெயற்பாலதென்று) துணிவு பிறக்கும்வகை சொல்லுதலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - அமைச்சனாவான்; (எ - று.)

தெரிதல், செயல்மேல தாயிற்று; வருகின்றது அதுவாகலின்.

26



(கு - ரை.)

பலஆற்றால் தோன்றின் - பலவிதமாகத் தோன்றினால். ஆவது-செய்யத்தக்கதை. அது - அத்தொழிலை. வாய்க்குந்திறன் நாடி-பலிக்கும் விதத்தை ஆலோசித்து. செயற்கண் - செய்தலில். அவர்க்கு இதுவே செயற்பாலது - இன்னார்திறத்தில் இன்னதுதான் செய்யத்தக்கது. 'துணிவு பிறக்கும் வகை' என்பதற்குமுன், 'அரசனுக்கு' என

ஒருசொல் வருவிக்க.

துணிவு பிறக்கும்வகை - (சந்தேகமில்லாமல்) நிச்சயமுண்டாம்படி. தெரிதல்

செயல்மேலதாயிற்று - தெரிதலென்ற வினைக்குச் செய்கையென்னுஞ் செயப்

படுபொருளை வருவித்தது என்றபடி. இதற்குக் காரணம்:—'வருகின்றது

அது வாகலின்'-அமைச்சனுக்கு ஆலோசிக்கநேர்வது செய்கையே யாதலால்.

ஒருதலையா - உறுதியாக.

(௪)

சுஙடு. அறனறிந் தான்றமைந்த
திறனறிந்தான் றேர்ச்சித்

சொல்லானெஞ் ஞான்றுந்
துணை.

(இ - ள்.) அறன் அறிந்து - (அரசனாற் செய்யப்படும்) அறங்களை அறிந்து, ஆன்று - (தனக்குவேற்ற கல்வியால்) நிறைந்து, அமைந்த சொல்லான் -

அமைந்தசொல்லையுடையனாய், எ ஞான்றும் - எக்காலத்தும், திறன் அறிந்தான்-(வினைசெய்யுந்) திறங்களை யறிந்தான்,—தேர்ச்சி துணை - (அவற்குச்) சூழ்ச்சித்துணையாம்; (எ - று.)

தன் அரசன் சுருங்கியகாலத்தும் பெருகிய காலத்தும் இடைநிகராய காலத்தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். சொல்லான் என்பதனை 'ஒடு' உருபின்பொருட்டாய ஆனுருபாக்கி உரைப்பாரும் உளர்.

இவையைந்துபாட்டானும், அமைச்சரது

குணத்தன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) அமைந்த சொல்லே-அடங்கிப்பேசும்

பேச்சை. அவற்கு-அர

சனுக்கு. சூழ்ச்சித்துணை - ஆலோசனைக்குஎற்ற துணைவன்; தக்கமந்திரி. சுருங்கிய - செல்வம் சேனை முதலியவற்றாற் குறைவுபட்ட. பெருகிய-அவற்றால் அபிவிருத்தியடைந்த. இடைநிகர் ஆய - சுருக்கமும் பெருக்கமு மில்லா

மல் நடுத்தரமாகவுள்ள. பிறருரைக்கு, 'சொல்லான்' என்பதில், ஆன் உருபு-அடைமொழிப் பொருளது: ஆனுருபு ஒடுஉருபின்பொருளில் வருதலே "ஊங்குகையா னோங்கு நடைய", "உறழ்மணியா னுயர் மருப்பின" என்ற இடங்களிலும் காண்க. பரிமேலழகருரைக்கு-'சொல்லான்' என்பது-குறிப்பு முற்றெச்சம். (ரு)

கூகூ. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

(இ - ள்.) மதி நுட்பம் - (இயற்கையாகிய) நுண்ணறிவை, நூலோடு - (செயற்கையாகிய) நூலறிவோடு, உடையார்க்கு-உடையராய அமைச்சர்க்கு, அதி நுட்பம் முன் நிற்பவை-மிக்கநுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்நிற்பன, யா உள - யாவை உள? (எ - று.)

'மதிநுட்பம்' என்பது-பின்மொழிநிலையல்.

வின், முற்கூறப்பட்டது. 'நூல்' என்பதூஉம்,

அது, தெய்வந்தரவேண்டுத

'அதிநுட்பம்' என்பதூஉம் -



ஆகுபெயர். 'அதி' என்பது - வடசொல்லுள்

மிகுதிப்பொருளதோர் இடைச் சொல்; அது திரிந்து 'நுட்பம்' என்பதனோடு தொக்கது. முன் நிற்றல்-மாற்றார்சூழ்ச்சியாயின தம்சூழ்ச்சியால் அழியாது நிற்றல். இனி, 'அதினுட்பம்' என்று பாடமோதி, அதனின் நுட்பம் யா என்று உரைப்பாரும் உளர்; அவர் சூழ்ச்சிக்கு இனமாய் முன் சுட்டப்படுவதொன்றுஇல்லாமையும், சுட்டுப்பெயர் ஐந்தாம்உருபுஏற்றவழி அவ்வாறு நில்லாமையும் அறிந்திலர். பகைவர் சூழ்வனவற்றைத் தாம் அறிந்து அழித்து, அவர் அறிந்து அழியாதன தாம் சூழ்வர் என்பது கருத்து.

இதனான், அவரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) நுண் அறிவு - சூட்சுமபுத்தி. நூலறிவு - கல்விகற்றலாலாகிய அறிவு. முன் நிற்பன - தடையாய் நிற்கும் பகைவரது தந்திரங்கள். யாவை உள-எவையுமில்லையென்றபடி; வினா, இன்மைகுறித்தது. 'பின்மொழிநிலையல்' என்பதற்கு-இங்கே, பின்முன்னாகத்தொக்க தொடர் என்று பொருள்; 'மதிநுட்பம்' என்றதை 'நுட்பமதி' என முன்பின்னாகத்தொக்கபண்புத்தொகையாகக்கொண்டமை காண்க. 'பின்மொழிநிலையல்' என்பது, தொல்காப்பியத்தில் தொகைச்சொல்லில் பின்மொழியிற் பொருள்சிறத்தல் என்ற கருத்தில் உபயோகிக்கப்பட்டுள்ளது; "அவைதாம், முன்மொழிநிலையலும் பின்மொழிநிலையலு, மிருமொழிமேலு மொருங்குடனிலையலு, மம்மொழிநிலை யா தன்மொழி

நிலையது, மஃனான்கென்ப பொருணெறி மரபே" என்றது காண்க. அச்சூத்திரவுரையில்,
'அடைகடல்-பின்மொழிநிலையல். இது கடலா
நியகரையெனக் கரைகூறுதலே கருத்தாகலின். இவை பண்புத்தொகை.
இவை-இடம்பற்றிவந்த முன்னும் பின்னுமாம்;
காலம்பற்றிவருவனவும் வந்துழிக்காண்க' என
நச்சினார்க்கினியரும், 'இனி, வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்கதோர் ஆறும்வேற்றுமைத் தொகையெனவும் அமையும்' எனச் சேனாவரையரும் உரைத்ததை உணர்க. பரிமேலழகரும் கீழ் வலியறிதலென்ற அதிகாரத்தில் 'நுனிக்கொம்பர் என்பது,'கடைக்கண்'என்பதுபோலப் பின்முன்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத் தொகை' என உரைத்துப்போந்தார்.
இது - இலக்கணப்போலி யெனவும் படும். அது - இயற்கையாகிய நுண்ணறிவு. தெய்வம்தரவேண்டுதலின் - ஊழ்வினையால் உண்டாக்கப்படவேண்டுதலால்.
ஊழ் என்னும் அதிகாரத்தில் "பேதைப் படுக்கு மிழவூழ் அறிவகற்று, மாகலூ ழுற்றக்கடை," "நுண்ணிய நூல் பல கற்பினும் மற்றுந்தன், உண்மையறிவே மிகும்" என்ற குறள்களைக் காண்க. முற்கூறப்பட்டது - செயற்கையாகிய நூலறிவுக்கு முன்னே நிறுத் தப்பட்டது. நூல் - (சாஸ்திரத்தைக் காட்டும்போது உவமையாகுபெயர்: பிறகு அது) அதனாலாகும் அறிவுக்குக் கருவியாகுபெயரும்,

அதிநுட்பம் - மிக்க நுட்பத்தையுடைய
ஆலோசனைகளுக்குப் பண்பாகுபெயருமாம்.
['நூலென்பதூஉ மதிநுட்பமென்பதூஉ மாகுபெயர்' என்ற
வாக்கியத்தை நூலென்பதூஉம் மதிநுட்பமென்பதூஉம்
ஆகுபெயர் எனப் பிரிப்பது,



வழுவாம்; மதிநுட்பம் என்ற தொடர்
ஆகுபெயரல்லாமையும், நூலென்
பதன்பின் நிறுத்தப்பட்டதும் இதனை அறியக்
காரணமாம்.] இடைச்
சொல்லை வடநூலார் 'அவ்யயம்' என்பர். 'அதி'
என்றதை, திரிக்
தது என்றது, ஒருபாஷையினின்று
மற்றொருபாஷைக்கு வந்து 'நுட்பம்'
என்ற தமிழ்மொழியோடு தொடர்தலையே: அன்றி,
சொல்லில் எழுத்துமாறு
பாடொன்று மில்லாமை காண்க. இங்ஙனம்
ஆரியத்தினின்று தமிழ்க்கு
வருதலையே வேறுபாடாகக்கொள்ளுதல்,
பண்டையோர்கருத்துப்போலும்;
இதனை "வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ,
யெழுத்தொடு புணர்ந்த

சொல்லாகும்மே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்துச் சேனாவரையருரையில்

'ஒருசொல்லாயினும் ஆரியமுந் தமிழு மாகிய இடவேற்றுமையான் வேறாயினு

வெனின்' என்று தொடங்கி உரையாசிரியர் கருத்தை மறுத்தலால் அறிக. இவ்

விஷயத்திற்

சேனாவ ரையர்கருத்து ம்,நச் சினார்க்கினியர்கருத்து ம் பரிமேலழகர்

கருத்துக்கு உடன்படா. தொக்கது - தொடர்ந்தது என்றபடி; அன்றி, 'அதி நுட்பம்' என்ற இடைச்சொற்பொருகாகிலைத்தொடரில் ஒன்றுந் தொகாமை காண்க. 'வடநூலார் உபசர்க்கம் இருபது என்பர்; அதிலோகம், அதிஜயம் என்பன - வடமொழி உபசர்க்கம்: சிந்தாமணியாரும் "அதிலோபமாந்தர்" என்றார். அதிநுட்பம் என்பது - வினைப்பெயரோடும் வினைச்சொல்லோடும் வாராமையின், அவ்வயீபாவம் என்க'என்பது, பிரயோகவிவேகவுரை. இதனை 'முற்பதம் வடமொழியாகிய பண்புத்தொகைநிலைத்தொடர்' என்றும், 'இவை போல்வன-வடமொழியாயம்வந்தன'என்றுங்கூறுவர் இலக்கணக்கொத்தில். மாற்றார்சூழ்ச்சியாயின - பகைவரது ஆலோசனைகள். அதனின் - மதிநுட்ப நூலோடுடைமையினும். நுட்பம் - சூக்ஷ்மமான பகைவர்சூழ்ச்சிகள். யா - யாவை. அவர் - அவ்வுரைகூறுபவர். சூழ்ச்சிக்கு இனமாய் - பகைவரது சூழ்ச்சிகளுக்கு இனமாய். மதிநுட்பநூலோடுடைமை குணமாகுமேயன்றிச் சூழ்ச்சிக்கு இனமாகாமையை நுண்ணிதின் நோக்குக. அது அல்லது

அஃது என்னுஞ் சுட்டுப்பெயர் இன் என்னும் ஐந்தாம்வேற்றுமையுருபை

யேற்கும்பொழுது, அன்சாரியைபெற்று அதனின் என நிற்குமேயன்றி, சாரி

யைபெறாது அதின் என நில்லாதென்க; இது, உது, யாது என்பனவற்றிற்

கும் இவ்வாறே. இதனை, தொல்காப்பியத்து உருபியலில் "சுட்டுமுதலுகர
மன்னொடு சிவணி, யொட்டிய மெய்யொழித் துகரங்கெடுமே", "யாதெனிறு
தியுஞ் சுட்டு முதலாகிய, வாய்தவிறுதியு டன்னொடு சிவணும், ஆய்தங்கெடுத
லாவயினான" என்ற சூத்திர விதிகளாலும், "யாதனின் யாதனி னீங்கியா
னேத, லதனி னதனி னிலன்", "அதனினியற லதற்றகு கிளவி, யதன்வி
னைப்படுத லதனினாதல், அதனிற்கோட லதனொடுமயங்கல்", "இதனினிற்
றிது வென்னுமதுவே" என்ற பிரயோகங்களாலும் அறிக. சூழ்வனவற்றை -
ஆலோசிப்பவற்றை. அழியாதன - அழிக்கமுடியாத உபாயங்களை. அவரது - அமைச்சரது. மதி - வடசொல். நுட்பம் - பண்புப்பெயர். அதிநுட்பம் என்பது - இடைச்சொல்தொட ராதலால், அன்மொழித்தொகையாகக் கொள்ள இடமில்லை; "ஐந்தொகை மொழிமேற்பிறதொக லன்மொழி". (௬)

## ௬௪ - ஆம் அதிகாரம்.—அமைச்சு

௨௦௫
௬௩௭. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

(இ - ள்.) செயற்கை அறிந்தக்கடைத்தும் - (நூல்நெறியான்) வினை
செய்யுந்திறங்களை அறிந்தவிடத்தும், உலகத்து இயற்கை அறிந்து - (அப்
பொழுது நடக்கின்ற) உலகவியற்கையை அறிந்து, செயல்-(அதனோடு பொருந்
தச்) செய்க; (எ - று.)

'கடைத்தும்' என்புழி, 'து' - பகுதிப்பொருள்விகுதி. நூல்நெறியேயா
யினும் உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க; செய்யின் அது பழிக்கும்
என இயற்கையறிவாற் பயன் கூறியவாறு.

(கு - ரை.) நூல்நெறியான் - நீதிநூல்களிற்சொன்னவழியால். அறிந்த விடத்தும் - அறிந்தாலும். அறிந்தக்கடை என்ற எதிர்காலவினையெச்சத்தின் மேல், து என்றது - ஒருபொருளையும் உணர்த்தாமையால், பகுதிப்பொருள்
விகுதி யெனப்பட்டது; (இதனை, வடநூலார் ஸ்வார்த்தபாவதத்திதப்ரத்யய
மென்பர்.) அது - உலகம். செயற்கை என்ற தொழிற்பெயரில், அல் -
சாரியை. உம் - உயர்வுசிறப்பு. செயல் - வியங்கோள். "எவ்வ துறைவ
துலக முலகத்தோ, டவ்வ துறைவ தறிவு" எனக் கீழ் அறிவுடைமை யென்
னும் அதிகாரத்திற் கூறியதற்கு ஏற்ப, இங்கு இவ்வாறு கூறப்பட்டது. "உல
கத்தோடொட்ட வொழுகல் பலகற்றுங்,

கல்லாரறிவிலாதார்'' என ஒழுக்க
முடைமையிலும், ''உலகத்தா ருண்டென்ப
தில்லென்பான் வையத், தல
கையா வைக்கப்படும்'' என மேற் புல்லறிவாண்மையிலுங்
கூறுதல் உணர்க.
ஒழுக்கமுடைமையிற் பரிமேலழகர்
'அறநூல்சொல்லியவற்றுள், இக்காலத்
திற்குஏலாதனவொழிந்து சொல்லாதனவற்றுள்
ஏற்பன கொண்டுவருத
லான் அவையும் அடங்க, 'உலகத்தோடொட்ட' என்
றுகூறினார்' என
உரைத்ததுங் காண்க.
''உலகநூலுணர்ந்தோர்க்குரைப்பினுந்தெரியா, பேர
றிவோர்வினையெனப்பேசுகவே,
அறிவுநூலுணர்ந்தோர்க்கறையினுந்தெரியா,
சிற்றறிவோர்வினையெனச்செப்புகவே,
அவ்விருநூலையறிந்தார்தமக்கே,இவ்வி
ருகூற்றெண்வினையிலங்கிடுமே'' என்ற
இலக்கணக்கொத்தை அறிக. (எ)
சூ௩௨.

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.
(இ - ள்.) அறி கொன்று -

(அறிந்துசொல்லியாரது) அறிவையும்
அழித்து, அறியான் எனின்உம் - (அரசன் தானும்) அறியானேயாயினும்,
(அக்குற்றம்நோக்கி ஒழியாது), உறுதி கூறல் - (அவனுக்கு) உறுதியாயின
கூறுதல், உழையிருந்தான் கடன் - அமைச்சனுக்கு முறைமை; (எ - று.)

'அறி' என்பது - முதனிலைத்தொழிற்பெயர். கோறல் - தான் கொள்ளா
மைமேலும் இகழ்ந்துகூறுதல். 'உழையிருந்தான்' எனப் பெயர்கொடுத்தார்,
'அமாத்யர்' என்னும் வடமொழிப்பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின்.
உறுதிகூறுருக்கால் அவனது இறுதியெய்தற் குற்றத்தை உலகம் தன்மேல் ஏற்
றும் என்பார், 'கூறல் கடன்' என்றார்.



இவையிரண்டுபாட்டானும், அவர்செயல் கூறப்பட்டது.

(கு - ரை.) சொல்லியாரது - சொன்னவருடைய. அழித்து-கேளாமல் அலட்சியஞ்செய்து; கொல்லுதல் - அழித்த லென்னும் பொருள தாதலை "உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற இடத்திலுங் காண்க.

அக்குற்றம்நோக்கி ஒழியாது - அறிந்தோர்சொற்கேளாமையாகிய அரசனது குற்றத்தைப் பார்த்து அவனை விட்டிடாமல். உறுதியாயின - நன்மைதரும் வார்த்தைகள். அறி - அறிவு; பகுதியே தொழிற்பெயர்ப்பொருளை யுணர்த்திற்று. கோறல் - கொல்லுதல். அறிந்தாரது அறிவைக் கொல்லுதலாவது - தான் அதனை ஏற்றுக்கொள்ளாததோடு நில்லாமல் நிந்தித்தும் பேசுதல்.

உழையிருந்தான்-பக்கத்திலுள்ளவன்.
பொருண்மை-பொருள்; அர்த்தம். அது-
பக்கத்திலுள்ளாரனென்பது. அரசன் கேளாவிட்டாலும் அமைச்சன் இடித்திடித்துக் கட்டுரைகூறிவிட்டால், பின்பு அரசனுக்கு அபாயம் நேர்ந்தால் அக்குற்றத்தை உலகத்தார் மந்திரியின்மேல் ஏற்றிக் கூறுவராதலால், தன் பழி கழித்துக் கொள்வதற்காகவும் அமைச்சன் உறுதிமொழி கூறவேண்டும். அவர்செயல் - அமைச்சர்செய்கை. எனினும், உம் - இழிவு சிறப்பு. உறுதி தருவனவற்றை 'உறுதி' என்றது - காரியவாகுபெயர். "மூரித்தேந்தாரினய் நீ முனியினுமுறுதிநோக்கிப், பாரித்தேன் தருமநுண்ணூல் வழக்கதுவாதல் கொண்டே" என்ற சிந்தாமணியையும், "தம்முயிர்க்குறுதியெண்ணார் தலைமகன் வெகுண்டபோதும், வெம்மையைத்தாங்கி நீதிவிடாது நின்றுரைக்கும் வீரர், செம்மையிற்றிறம்பல்செல்லாத்தேற்றத்தார் தெரியுங்கால, மும்மையு முணரவல்லா ரொருமையேமொழியுநீரார்" என்ற கம்பராமாயணத்தையும் காண்க;
"செவிசுடச்சென்றுங்கிடித்தறிவுமூட்டி, வெகுளினும் வாய்வெரீஇ ப்பேரா—கவிழ்மதத்த, கைம்மாவயத்ததேபாகு.

மற்றெத்திறத்து, மம்மாண்
பினவே யமைச்சு" என்பர் நீதிநெறிவிளக்கநூலாரும்.

௬௩௯. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட்

(அ)

டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்.

(இ - ள்.) பக்கத்துள் - பக்கத்து (இருந்து), பழுது

எண்ணும் - பிழைப்ப எண்ணும்,
மந்திரியின்-அமைச்சனொருவனில், ஓர் எழுபது கோடி
தெவ் - (அரசனுக்கு எதிர்நிற்பார்) ஓரெழுபதுகோடி
பகைவர், உறும் - உறுவர்; (எ - று.)

'எழுபதுகோடி' என்றது, மிகப்பலவாய எண்ணிற்கு ஒன்று காட்டிய வாறு. வெளிப்படநிற்றலான் அவர் காக்கப்படுவர், இவன் உட்பகையாய்நிற்ற லாற் காக்கப்படான் என்பதுபற்றி, இவ்வாறு கூறினர். 'எழுபதுகோடி மடங்கு நல்லர்' என்று உரைப்பாரும், 'எழுபதுகூறு தலே' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(கு - ரை.) பிழைப்ப எண்ணும் - (அரசனுக்குத்) தவறுசெய்ய நினைக் கும். உறுவர் - நல்லவராவர் என்றபடி. அவர் காக்கப்படுவர் - பகைவர் தடுக்கப்படுவர். உட்பகை-வெளித்தோற்றத்துக்கு வேண்டியவன்போலிருந்து உள்ளே பகைவனுயுள்ளவன்; அந்தச்சித்ரம். இங்கு, உட்பகையாயுள்ள மந்

திரியினது குற்றத்தால், தெவ்வரிடத்து நன்மை
கூறியது - அகமலர்ச்சி
யணி: ஒன்றினிடத்துள்ள குணத்தினாலேனும்
குற்றத்தினாலேனும் மற்றொன்
றற்கு நன்மையேனும் தீமையேனும் உளதாகக் கூறுதல்,
இதனிலக்கணம்.
'எழுபதுகூறுதலே' என்றபாடத்துக்கு-எழுபதுமடங்கு
மேலென்று பொருள்.
மந்த்ரம் - ஆலோசனை; அதனை யுடையவன், மந்த்ரீ
எனக் காரணப்பெயர்;
அவ்வடசொல், மந்திரியெனத் திரிந்தது.
தெவ்-பகைமையுணர்த்தும் உரிச்
சொல்; இது - இங்கே, பகைவர்க்குப் பண்பாகுபெயர்.
தெவ் என்பது -
பொருளாற் பலர்பாலாயினும், சொல்லாற்
பால்பகா அஃறிணைப்பெய ராத
லால், உறும் என்ற செய்யுமென்முற்றைக் கொண்டது.
தெவ்வோர் என
எடுத்துப் பகைவரென்று உரைத்தல், உறும் என்ற
பயனிலைக்குப் பொருந்
தாது; "பல்லோர் படர்க்கை

முன்னிலை தன்மையிற், செல்லாதாதுஞ்
செய்யுமென்முற்றே" ஆதலால். கோடி - வடசொல்;
நூறுலக்ஷம். (கூ)

கூசO. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

(இ-ள்.) முறை பட
சூழ்ந்துஉம்-(செய்யப்படும்வினைகளை முன்)அடைவு
பட எண்ணிவைத்தும், முடிவு இல ஏ செய்வர் -
(செய்யுங்கால் அவை)
முடிவிலவாகவே செய்யாநிற்பர்: திறப்பாடு இலாதவர் -
(முடித்தற்கு ஏற்ற)
கூறுபாடு இல்லாதார்; (எ - று.)

அக்கூறுபாடாவன - வந்தவந்த இடையூறுகட்கு
ஏற்றஏற்ற பரிகாரம்
அறிந்து செய்தலும், தாம் திண்ணியராதலு மாம்.
பிழையாமல் எண்ணவல்ல
ராய் வைத்தும் செய்து முடிக்கமாட்டாரும் உளர்
என்பதாம்.

இவையிரண்டு பாட்டானும், அமைச்சருள்
விடப்படுவாரது குற்றம்
கூறப்பட்டது.

(கு - ரை.) செய்யப்படும் வினைகளை -
செய்யவேண்டுந் தொழில்களை.
முன் அடைவுபட எண்ணிவைத்தும் - முன்பு கிரமமாக
ஆலோசித்திருந்தும்.

செய்யா நிற்பர் - செய்வர். கூறுபாடு - வங்கைகள். இடையூறு - தடை. ஏற்ற

ஏற்ற - அவ்வவற்றிற்குத் தக்க. திண்ணியர் - வலியர். பிழையாமல் எண்

ணவல்லராய்வைத்தும் - தவறாமல் ஆலோசிக்கவல்லவராயிருந்தும், விடப்

படுவார் - விடவேண்டியவர். கீழ்ப்பாட்டிலும் இப்பாட்டிலும் கூறியவாறு

அமைச்சர் உட்பகை யுடையரானாலும், நன்றாகஆராய்ந்து காரியத்தைத்

தொடங்கியும் இடையூறுநேர்ந்தால் திண்ணியராய் ஏற்ற பரிகாரங்களைச்

செய்யமாட்டாதவரானாலும் அன்னாரை அரசன் அமைச்சராக்கொள்ளாமல்

விட்டிடவேண்டு மென்பதாம். சூழ்ந்தும், உம் - உயர்வுசிறப்பு. இலவே,

ஏ - தேற்றம். அளபெடை, செய்யுளோசை நிறைப்பது.

(௬௦)

## சாரு - ஆம்

## அதிகாரம்.—சொல்வன்மை.

அஃதாவது - தான் கருதிய வினை முடியுமாற்றால் *அமைச்சியல்

நடத்தற்கு ஏதுவாய சொற்களைச் சொல்லவல்ல ஞதல். மேல் "ஒருதலை

* பி - ம்: வார்த்தை சொல்லவல்ல ஞதல்.



யாச் சொல்லலும் வல்லது" என்றதனையே சிறப்புப்பற்றி விரித்து உரைக்கின்றமையின், இஃது அமைச்சின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) கருதிய வினை - நினைத்த காரியம். முடியும் ஆற்றல் - முடியும் வழியால். மேல் - கூ௩௯-ஆங்குறளில். 'மேல்' என்ற தொடங்கும்வாக்கியம், அமைச்சு என்னும் அதிகாரத்தின்பின் 'சொல்வன்மை' என்னும் அதிகாரத்தை வைத்ததற்குக் காரணம் கூறுகின்றது. கூ)

௬௪௧. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(இ - ள்.) (அமைச்சர்க்கு இன்றியமையாக்குணமாவது), நா நலம் என்னும்-(சான்றோரான்) நாநலமென்றுசிறப்பித்துச்சொல்லப்படும், நலம் - நலத்தினை, உடைமை - உடையராதல்: அந்நலம்—, (பிறர்க்கும்), யா நலத்தி உள்ளதூஉம் அன்று - (பிறநலம்)எல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்கது (ஆகலான்); (எ - று.)

நாவால் உளதாய நலம் என விரியும். 'இந்நலம், உலகத்தைத் தம்வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேறாக வேண்டும்' என்னும் நீதிநூல்வழக்குப்பற்றி 'நாநலமென்னுநலன்' என்றும், பிறர்க்கும் இதுபோற் சிறந்தது பிறிது இன்மையான் 'அந்நலம் யாநலத்துள்ளதூஉமன்று' என்றுங் கூறினர். பிரித்தல்

பொருத்தல் முதலிய தொழி லில்லாதார்க்கும் இஃது இன்றியமையாதாய பின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோ? என்பது கருத்து.

(கு-ரை.) நாநலம்-நாவினாற்பேசிக் காரியத்தை முடிக்குந் திறமை. பிறர் க்கும் – (பிரித்தல் பொருத்தல் முதலிய தொழிலில்லாத) அமைச்சரல்லாதவ ர்க்கும்: உம்மை – இழிவுசிறப்போடு எச்சப்பொருளது. நாநலம் – மூன்றும் வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்கதொகை. வயத்தது-வசத்திலுள்ளது. வேறாக – தனிக்குணமாக; சிறப்பாக என்றபடி. வேண்டும் – இன்றியமையா தது. காமந்தக மென்னும் வடமொழிநீதி நூலில் மந்திரிகுண நிரூபணத்தில் "வாக்மியாகவுள்ளவன் மந்திரியாக விருத்தற்குத் தக்கவன்"என்றது காண்க. பிறர்க்கும் இது சிறந்ததாதலை "எத்துணையவாயினுங்கல்வி யிடமறிந், துய்த் துணர் வில்லெனி னில்லாகு-முய்த்துணர்ந்துஞ், சொல்வன்மை யின்றெனி னென்னா மஃதுண்டேற், பொன்மலர் நாற்றமுடைத்து" என நீதிநெறி விளக்கநூலாரும் பாராட்டிக் கூறுவர். 'அத்தொழிலார்' என்றது, மந்திரிகளை. அந்நலம் – சுட்டிடைச்சொல்தொடர். யாநலம் – வினாவிடைச்சொல்தொடர். உள்ளதூஉம் – இன்னிசையளபெடை. (க)

கூசஉ. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(இ - ள்.) (தம் அரசற்கும் அங்கங்கட்கும்), ஆக்கம்உம் கேடுஉம் - ஆக்க வழிவுகள், அதனால் வருதலால்-தம் சொல்லான் வருமாகலான், —சொல்லின் கண் சோர்வு-(அப்பெற்றித்தாய) சொல்லின்கண் சோர்தலை, காத்து ஓம்பல்- (அமைச்சர் தங்கண் நிகழாமல்) போற்றிக்காக்க; (எ - று.)

கூ௫ - ஆம்

அதிகாரம்.—சொல்வன்மை உ0கூ

ஆக்கத்திற்கு ஏதுவாய நற்சொல்லையும், கேட்டிற்கு ஏதுவாய தீச்சொல்லையும், சொல்லாத லொப்புமைபற்றி, 'அதனால்' என்றார். செய்யுளாகலின், சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர்சோர்வுபோலாது உயிர்கட்கெல்லாம்ஒருங்கு வருதலால், 'காத்தோம்பல்' என்றார்.

இவையிரண்டுபாட்டானும், இஃது இவர்க்கு இன்றியமையாதென்பது கூறபபடடது.

(கு - ரை.) ஆக்க அழிவுகள் - நன்மை தீமைகள். அப்பெற்றித்து ஆய -அத்தன்மையதான. சோர்தல்–தளர்தல்; தவறுதல். தங்கண் நிகழாமல் - தம்மிடத்து உண்டாகாதபடி. போற்றி - கவனித்து;

குறிக்கொண்டு. காக்க -
காக்கக்கடவர். 'ஆக்கத்திற்கு' என்று தொடங்கிய வாக்கியம் - 'அதனால்'
என்று ஒருமையாற் கூறியதன் காரணத்தை விளக்கும்; எனவே, இச்சொல் சாதியொருமை யென்றவாறாயிற்று. சாதியொருமை யாதற்குக் காரணம்,
'சொல்லாதலொப்புமைபற்றி' என்பது.
சொல்லாதலொப்புமைபற்றி-இரண்
டும் சொல்லென ஒன்றாய் அடங்குதலால். உலகவழக்கு செய்யுள்வழக்கு
என்னும் இரண்டிலும் சுட்டுப்பெயரை இயற்பெயரின் பின்னரே கூறுதல் வழாநிலையும், செய்யுளிற் சிறுபான்மை சுட்டுப்பெயரை இயற்பெயரின்முன் கூறுதல் வழுவமைதியும், வழக்கில் அங்ஙனங் கூறுதல் வழுவுமாம்; "இயற்
பெயர்க்கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும், வினைக்கொருங்கியலுங் காலந் தோன்றின், சுட்டுப்பெயர்க்கிளவி முற்படக் கிளவார், இயற்பெயர் வழிய வென்மனார் புலவர்", "முற்படக்கிளத்தல் செய்யுளு ளுரித்தே" என்பன
தொல்காப்பியவிதி: [நன் - பொது - சஙு.]
'காத்தோம்பல்' என வற்புறுத்
திக்கூறியதற்குக் காரணம்—மற்றையோர்சோர்வு அவர்க்குமாத்திரமே தீங்கு தரும்; அமைச்சர்சோர்வோ,
அரசனுக்கும் குடிகளுக்கும் எல்லார்க்கும் ஒரு
சேரத் தீங்குவிளைக்கு மாதலால் என்க. இஃது -

சோர்வுநீங்கிய சொல்
வன்மை. இவர்க்கு - அமைச்சர்க்கு. ஆக்கம் - ஆகுதல்,
அபிவிருத்தி; தொழிற்
பெயர். காத்தோம்பல் - ஓம்பிக்காத்தல் என விகுதி
பிரித்துக் கூட்டுக;
வியங்கோள். சோர்வு - தொழிற்பெயர்.

(உ)
கூசஙு.

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

(இ - ள்.) கேட்டார்-(நட்பாய்) ஏற்றுக்கொண்டாரை,
பிணிக்கும்-(பின்
வேறுபடாமற்)பிணிக்கும், தகை - குணங்களை, அவாய் -
அவாவி,—கேளார்
உம் - (மற்றைப் பகையாய்) ஏற்றுக்கொள்ளாதாரும்,
வேட்ப-(பின் அப்பகை
மை யொழிந்து நட்பினை)விரும்பும்வண்ணம்,
மொழிவது-சொல்லப்படுவதே,
சொல் ஆம் - (அமைச்சர்க்குச்) சொல்லாவது: (எ - று.)
அக்குணங்களாவன - வழுவின்மை, சுருங்குதல்,
விளங்குதல், இனிதா
தல், விழுப்பயன் தருதல் என்றிவை முதலாயின.

அவற்றை அவாவுதலாவ
 து-சொல்லுவான் குறித்தனவேயன்றி வேறு
நுண்ணுணர்வுடையோர் கொள்
 பவற்றின்மேலும் நோக்கு உடைத்தாதல். 'அவாய்'
என்னுஞ்செய்தெனெச்
27



சம், 'மொழிவது'என்னுஞ் செயப்பாட்டுவினை கொண்டது. இனி, 'கேட்டார் கேளார்' என்பதற்கு-நூல்கேட்டார் கேளாதார் எனவும், வினவியார் வினவாதார் எனவும் உரைப்பாரும் உளர். 'தகையவாய்' என்பதற்கு, எல்லாரும், 'தகுதியையுடையவாய்' என்று உரைத்தார்; அவர் அப்பன்மை மொழிவது என்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர்.

இதனான், சொல்வினது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) வேறுபடாமல் பிணிக்கும்-தம்மின் நீங்காதபடி வசப்படுத்தின்ற. அவாவி - மேன்மேலுங்கொள்ளவிரும்பி. ஏற்றுக்கொள்ளாதாரும் - தமதுசொல்லை யங்கீகரியாதவரும். வழுவின்மை - சொற்பொருட் குற்றமில் லாமை. சுருங்குதல் - சொற்சுருங்குதல். விளங்குதல் - பொருள்விளங்கு தல். விழுப் பயன் தருதல் - சிறந்தபொருளைக் கொடுத்தல். சுருங்கச்சொல் லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை, நன்மொழிபுணர்த்தல், விழு மியதுபயத்தல் என்பன, நூலுக்குக் குணம் ஆமாறுங் காண்க. அவற்றை - வழு வின்மை முதலிய குணங்களை. சொல்லுவான் குறித்தன - சொல்ல

தேசித்தவை. நோக்கு உடைத்தாதல்-கவனமுடைமை, கருத்துடையதாதல், மொழிவது-செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை. நூல்கேட்டார்-சாஸ்திரங்களைப் பாடங் கேட்டவர். வினவியார் - கேள்விகேட்டவர். உடைய வாய் - உடையனவாய்.

அப்பன்மை - 'தகைய' என்னும் பலவின்பால். நோக் கிற்றிலர் - கவனித்தாரில்லை. குற்றங் கூறப்பட்ட பிறருரைக்குத் தகைய ஆய் என்றுபிரித்து, தகைய - பலவின்பாற்குறிப்பு வினையாலணையும் பெயரென்னவேண்டும். கேட்டார் - அங்கீகரித்தவர். கேட்டார்ப் பிணிக்கும்- உயர்திணையில் இரண்டாம்வேற்றுமையுருபு தொக, அதன்முன் வலிமிக்கது; [நன் - உருபு-கக.] தகை - தகுதி, குணம்; இது - தொழிலடியாப்பிறந்த தாயினும், பொருளாற் பண்புப்பெயர். அவாய் - அவாவு என்னும் பகுதி யடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். கேளாரும், உம் - இழிவுசிறப்பு; இறந்தது தழுவிய எச்சமுமாம். (௩.)

கூ௨௪. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

(இ - ள்.) சொல்லை - (அப்பெற்றித்தாய) சொல்லை, திறன் அறிந்து- (அமைச்சர் தம்முடையவும் கேட்பாருடையவு மாய) திறங்களையறிந்து, சொல் லுக—: அதனின் ஊங்கு -

அவ்வனஞ் சொல்லுதற்கு மேம்பட்ட, அறனும் பொருளும்—, இல் - இல்லை: (ஆகலான்); (எ - று.)

அத்திறங்களாவன - குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பனவற்றான் வருந் தகுதிவேறுபாடுகள். அவற்றை அறிந்து சொல்லுதலாவது-அவற்றால் தமக்கும் அவர்க்கும் உளவாய ஏற்றத்தாழ்வுகளை அறிந்து அவ்வம்மரபாற் சொல்லுதல். அஃது, உலகத்தோடு ஒட்ட ஒழுகலையும் இனிமையையும் பயத்தலின், அறனாயிற்று; தம்காரியம் முடித்தலின், பொருளாயிற்று. 'அறனும் பொருளும்' எனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினார்.

•

௬௫ - ஆம்

அதிகாரம்.—சொல்வன்மை ௨கக

(கு - ரை.) அப்பெற்றித்தாய - முந்தினகுறளிற் சொன்ன கேட்டார்ப் பிணிப்பதாய்க் கேளாரையும் வேட்பிக்குந் தன்மையை யுடைய. திறங்கள் - தன்மைகள். குடிப் பிறப்பு - உயர்குடியிற் பிறத்தல். ஒழுக்கம் - நடத்தை. உருவம் - ரூபம். பருவம் - பிராயம். அவ்வம்மரபால் - அந்தந்தநிலைமைக்குத் தக்கபடி சொல்லவேண்டிய முறைமையால்.

பயத்தலின்-தருதலால். மூலத்
தில் 'அறனும்பொருளும்' என்றது - அறத்துக்கும்
பொருளுக்கும் காரண
மென்றபடி; உபசாரவழக்கு. ஊங்கு-இடைச்சொல்.
அளபெடை, இன்னிசை
நிறைப்பது.

(ச)

சூசரு சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ
லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(இ - ள்.) சொல்லை - (தாம் சொல்லக்கருதிய)
சொல்லை, பிறிது ஓர்
சொல் - பிறிதோர்சொல்லாய், வெல்லும் சொல் -
வெல்லவல்லதொரு
சொல், இன்மை - இல்லாமை, அறிந்து—, (பின்),
அச்சொல்லை—,
சொல்லுக—;
பிறிதோர்சொல் - மாற்றாரது மறுதலைச்சொல்.
வெல்லுதல் - குணங்க
ளான் மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக என்பதாம்.
இனி, பிறிதோர்
சொல், வெல்லுஞ்சொல் எனச்
செவ்வெண்ணாக்கி, ஒத்தசொல்லும் மிக்கசொல்
லும் உளவாகாமற் சொல்லுக என்று உரைப்பாரும்

உளர். இது - சொற்
போருட்பின்வருநிலை.

(கு - ரை.) பிறிதோர்சொல் - மாறுபட்ட ஒருசொல்.
அதுவே - தம்
சொல்லே. செவ்வெண் - உம்மைதொக்குவருவது;
பிறிதோர் சொல்லும்
வெல்லவல்ல சொல்லும் என இங்கே,
பெயர்ச்செவ்வெண். இது - இப்
பாட்டு.

(௫)

௬௪௬. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற்
மாட்சியின் மாசற்றார் கோள்.

பயன்கோடன்

(இ - ள்.) தாம் வேட்ப சொல்லி - (பிறர்க்குத்) தாம்
(சொல்லுங்கால்,
அவர் பின்னுங்கேட்டலை) விரும்புமாறு சொல்லி,
பிறர் சொல் பயன்
கோடல் - அவர் (தமக்குச் சொல்லுங்கால் அச்)
சொல்லின்பயனைக் கொண்
டொழிதல், மாட்சியின் மாசு அற்றார்
கோள்-அமைச்சியலுட் குற்றமற்றாது
துணிபு; (எ - று.)

பிறர்சொற்களுட் குற்றமுளவாயினும் அவைநோக்கி
இகழாரென்பதாம்.

வல்லாரை இகழ்தல் வல்லுநர்க்குத் தகுதியின்மையின், இதுவும் உடன்
கூறினர்.

இவை மூன்றுபாட்டானும், அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) பயனைக் கொண்டு-பொருளைமாத்திரம் கிரகித்துக்கொண்டு.

ஒழிதல் - சொற்குற்றத்தைப் பாராட்டாமை. அமைச்சுஇயல் - மந்திரிலக்ஷ
ணம். துணிபு - நிச்சயம், சித்தாந்தம், தேர்ந்தபொருள். வல்லார் - வல்லவ
ரல்லாதவர்: இது, செய்யுட்சொல்; சிறுபான்மை

உரைநடையில் வந்தது.

•

"வேண்டுவனம்பி" என்ற சிந்தாமணிச் செய்யுளில், நச்சினார்க்கினியர் 'வல்லான், செய்யுளாய் மறையாகாது, வழக்காய் உடன்பாடுணர்த்திற்று; இது மேலும் கொள்க' என உரைத்ததுகொண்டு அறிக. வல்லுநர்க்கு - வல்லவர்களுக்கு. புறநானூற்றில் உஎ, ருஎ-ஆம் பாட்டுக்களில் "வல்லாராயினும் வல்லுநராயினும்" என வந்ததையும், அவற்றிற்கு உரைகாரர் 'ஒன்றை மாட்டாராயினும் வல்லாராயினும்' என்றும், 'யாதொருகல்வியை மாட்டாராயினும் அதனை வல்லாராயினும்' என்றும் உரைத்ததையும் காண்க. 'இவை சொல்லொன்றே விதிவினையும் மறைவினையு மாயின' என்பர், இலக்கணக்கொத்துடையார். இது எதிர்மறைப்பொருளுணர்த்துமிடத்தில், எதிர்மறையாகாரம் புணர்ந்துகெட்ட தென்றாவது, 'ர்' விகுதி யென்றாவது கொள்ளத்தக்கது. இதுவும் - சொற்குற்றம் பாராட்டாமையை. அதனை - சொல்லை. மாட்சி - அதனையுடைய அமைச்சியலுக்கு, இங்கே, பண்பாகுபெயர். கோள் - கொள்கை; கொள் என்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (சு)

௬௪எ. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது.

(இ - ள்.) சொலல் வல்லன் - (தான் எண்ணியகாரியங்களைப் பிறர்க்கு ஏற்பச்)சொல்லுதல்வல்லனாய், சோர்வு இலன் -(அவை மிகப்பலவாயவழி ஒன்றினுஞ்)சோர்வு இலனாய், அஞ்சான் - (அவைக்கு) அஞ்சானுமினான்(யாவன்), அவனை—, இகல் வெல்லல் - மாறுபாட்டின்கண் வெல்லுதல், யார்க்குஉம் அரிது - யாவர்க்கும் அரிது; (எ - று.)

ஏற்பச் சொல்லுதல்-அவர்க்கு அவை காரியமல்ல
வாயினும் ஆமெனத்
துணியும்வகை சொல்லுதல்.
சோர்வு-சொல்லவேண்டுவதனை மறப்பான் ஒழி
தல். இம்மூன்றுகுணமுமுடையானை மாற்றாராய்ப்
செய்து வெல்வார் இல்லை என்பதாம்.

(கு - ரை.) அவை - அத்தொழில்கள்.
பலவாயவழி - அநேகங்களாக
இருந்தபோதிலும். அவைக்கு - சபையார்க்கு.
'சுட்டிற்குமுன்னே வினவா
வேண்டும்' என்ற வடநூல் வழக்கை யொட்டி,
'அவனை' என்பதற்குமுன்
. 'யாவன்' என்று வருவித்தார். மாறுபாட்டின்கண் -
சொற்போரில் என்ற
படி. அவர்க்கு - தன்சொல்லைக் கேட்கும்பிறர்க்கு.
அவை - தான்சொல்லுந்
தொழில்கள். காரிய மல்ல - செய்யத்தகாதவை.
ஆமெனத் துணியும்வகை -
செய்யத்தக்கவையென்று நம்பும்படி. மறப்பான் ஒழிதல் -
மறதியால் விடுதல்.
இம்மூன்றுகுணம் - சொல்வன்மை, சோர்வின்மை,
அஞ்சாமை. மாற்றாய-
பகைமைபாராட்டி யென்றபடி.
(எ)

கூசஅ. விரைந்து தொழில்கேட்கு ஞால
நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.
(இ - ள்.) தொழில் - (சொல்லப்படுக்)

காரியங்களை, நிரந்து - நிரல்
படக்கோத்து, இனிது சொல்லுதல் வல்லார் -
இனிதாகச்சொல்லுதல்வல்லா

•

சூ௫ - ஆம்

அதிகாரம்.—சொல்வன்மை உகந

யை, பெறின்—, ஞாலம் உலகம், விரைந்து
ஏற்றுக்கொள்ளும்; (எ - று.)

கேட்கும்-(அவற்றை) விரைந்து

தொழில் - சாதியொருமை. நிரல்படக் கோத்தல் - முன்சொல்வனவும் பின்சொல்வனவும் அறிந்து அம்முறையேவைத்தல். இனிதாதல்-கேட்டார்க்கு

இனபமபயத்தல். "சொல்லுதல் வல்லான் நூறுயிரவருள் ஒருவன்" என்ற வடமொழிபற்றி, 'பெறின்' என்றார். ஈண்டும், கேட்டல்-ஏற்றுக்கோடல்.
இவையிரண்டுபாட்டானும், அவ்வாற்றாற்
புக் கூறப்பட்டது.

சொல்லுதல்வல்லாரது சிறப்

(கு - ரை.) நிரல்படக்கோத்து-வரிசைப்படத் தொடுத்து. வல்லார்-வல்லவர். அவற்றை - அக்காரியங்களை. "ஶதேஷுஜாயதே ஶூர: - ஸஹஸ்ரேஷுச பண்டித:, வக்தா ஶதஸஹஸ்ரேஷு - தாதா பவதி வா நவா" என்ற வடநூல்மேற்கோள் இங்குக் குறிக்கப்பட்டது. அம்முறையே - முன் பின்சொல்லவேண்டிய முறைப்படியே. "நூற்றுவரிற் றோன்றுந் தறுகண்ணூ ருயிரவ, ராற்றுலித் தோக்க வவைபகத்து - மாற்றந்தான், ஒன்று கொடுக்கு மகனீறேன்றுந் தேற்றப், பரப்புநீர் வையகந் தேரினு மில்லை, யிரப்பாரை யெள்ளா மகன்" என்பது தகடூர்யாத்திரை. "ஆர்த்தசவை நூற்றொருவராயிரத்தொன்றும் புலவர், வார்த்தை பதினாயிரத்தொருவர் - பூத்தமலர்த், தண்டாமரைத்திருவே தாதா கோடிக்கொருவர், உண்டாயினுண்டென்றறு" என்ற தனிப்பாடலுங் காண்க. 'பெறின்'என எதிர்கால வினையெச்சத்தாற் கூறியது, பெறுதலின் அருமைவிளக்கும் என்றபடி. ஈண்டும் - இங்கும்; உம்மை, ௬௪௩-ஆம் குறட்பாவைக்குறிக்கும். இக்குறட்பாவைஎடுத்துக்காட்டி,சொல்வென்றி யென்னுந் துறையென்பர், பொருளதிகார வுரையில். ஞாலம் - உலகத்தா ரென்றபடி. (அ)

௬௪௯. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர்.

(இ - ள்.) மாசு அற்ற சில-குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை, சொல்லல்-(அவ்வாற்றால்)சொல்லுதலை,தேற்றாதவர்-அறியாதார்,பலசொல்ல-பலவாயவார்த்தைகளை(த்தொடுத்துச்)சொல்ல,காமுறுவர்-விரும்புவர்;(எ-று.)

குற்றம் - மேற்சொல்லிய குணங்கட்கு மறுதலையாயின. இடைவிடாது பலசொல்லுதலையும் சொல்வன்மையென்று விரும்புவாரும் உளர்: அவர் இவ்வாறு சொல்லமாட்டாதாரே: வல்லார் அது செய்யார் என யாப்புறுப்பார், 'மன்ற' என்றார்.

(கு - ரை.) அவ்வாற்றால் - கீழ்க்குறளிற்கூறியவகையால். மேற்சொல்லிய - ௬௪௮-ஆங் குறளினுரையிற் கூறிய. மறுதலையாயின - எதிரிடை

யானவை; இங்கே, வழூஉச்சொற்புணர்த்தல், மிகைபடக்கூறல், மயங்கவைத்தல், செவிக்கு இன்னாதாதல், விழுப்பயன்தராமைமுதலியன. யாப்புறப்பார் -உறுதிப்படுத்துபவர். மன்ற-உறுதிப்பொருளுணர்த்துவதோர் இடைச்சொல்; "மன்றவென்கிளவி தேற்றஞ் செய்யும்" என்பது, தொல்காப்பியம். காமுறு வர் - காமமுறுவர் என்பதன் விகாரம். அற்ற - பெயர்;பெயரெச்சமுமாம். (கூ)



கூ௰. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(இ - ள்.) கற்றது - கற்றுவைத்தநூலை, உணர-(பிறர்)அறியும்வண்ணம், விரித்து உரையாதார் - விரித்து உரைக்கமாட்டாதவர்;—இணர் ஊழ்த்தும் -கொத்தின் கண்ணே மலர்ந்துவைத்தும், நாறா - நாறாத, மலர் - பூவை; அனை யர் - ஒப்பார்; (எ - று.)

செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றமில்லாத பூச் சூடப்படாதவாறு போல,நூலைக் கற்றுவைத்தும் சொல்லமாட்டாதார் நன்குமதிக்கப்படாரென்ற மையின், இது - தொழிலுவமையாயிற்று.

இவையிரண்டுபாட்டானும், அதுமாட்டாதாரது இழிவு கூறப்பட்டது.

(கு - ரை.) கற்றவைத்த - கற்றுள்ள. மலர்ந்துவைத்தும் - மலர்ந்திருந் தும். நாறுத - மணம்வீசாத. செவ்விபெற - அழகாக; காலம்வாய்க்க எனினு மாம். நாற்றமில்லாத - வாசனையில்லாத. நாற்றமில்லாதபூ கிர்க்கந்த குஸுமமெனப்படும். உவமையணி. அதுமாட்டாதார் - ஒழுங்காகச்சொல்லத் திற

மற்றவர். ஊழ்த்து என்ற இறந்தகாலவினையெச்சத்தில், ஊழ் - பகுதி. உம் - உயர்வுசிறப்பு. (கo)

## கஉகூ - ஆம் அதிகாரம்.—வினைத்தூய்மை.

அஃதாவது - செய்யப்படும்வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாகவேண்டுமென்கின்ற

மையின், இது சொல்வன்மையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) வினைத்தூய்மை - செய்யுந்தொழில் சுத்தமானதாயிருத்தல்.

பொருளே யன்றி - செல்வத்தை யுண்டாக்குதல்மாத்திரத்தோடு நில்லாமல்.

பயந்து - உண்டாக்கி.

கூடுக.

துணைநல மாக்குந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

(இ - ள்.) (ஒருவனுக்கு),—துணை நலம் - துணையது நன்மை, ஆக்கம்

தரூஉம் - செல்வமொன்றனையுங் கொடுக்கும்; (அவ்வள வன்றி), வினை நலம் -

வினையது நன்மை, வேண்டிய எல்லாம் தரும் - (அவன்) வேண்டியன யாவற்

றையுங் கொடுக்கும்; (எ - று.)

'வேண்டியவெல்லாம்' என்றது-இம்மைக்கண் அறம்

பொருள் இன்பம் முதலாயவற்றையும், மறுமைக்கண் தான் விரும்பிய பதங்களையும்.

இதனான், காணப்படுந் துணைநன்மையினும் கருதப்படும் வினைநன்மை சிறந்தது என வினைத்தூய்மையது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) துணையது நன்மை - துணைவர் நல்லவரா யிருத்தல். ஒன்றனையும் - ஒன்று மாத்திரத்தை. அவ்வளவு அன்றி - செல்வமொன்றையுங் கொடுக்கும் என்ற அந்த அளவோடு நில்லாமல். பதம் - இடம், பதவி, உலகம். காணப்படுதல் - பிரதியக்ஷப்பிரமாணத்துக்கு இலக்காதல். கருதப்படுதல்-அநு

•



மானப்பிரமாணத்துக்கு இலக்காதல். துணைநலம் இம்மைப்பயனாகிய செல்வமொன்றையே கருதலால் 'காணப்படுந் துணை நன்மை' என்றும், வினைநலம் மறுமையையுந் தருதலால் 'கருதப்படும் வினைநன்மை' என்றுங் கூறி

ஞர்: செல்வந்தருதல் இம்மையிலேயே சேர்தலால்
ப்ரத்யக்ஷப்ரமாணத்துக்கு
விஷய மாதலும், மறுமையில் நற்பயனளிப்பது
அநுமானத்தினுலேயே ஊகித்து
உணரவேண்டிய தாதலுங் காண்க. துணை -
பண்பாகுபெயர். ஆக்கம்-செல்
வத்துக்கு, ஆகுபெயர். தரூஉம் - அளபெடை
செய்யுளோசை நிறைத்தது.
வேண்டிய - பெயரும், பெயரெச்சமுமாகக் கொள்ளத்தக்கது.
(க)

சுருஉ. என்று மொருவுதல் வேண்டும்
புகழொடு
நன்றி பயவா வினை.

(இ - ள்.) புகழொடு நன்றி பயவா வினை - (தம்
அரசனுக்கு இம்மைக்
கண்) புகழும் (மறுமைக்கண்) அறமும் பயவாத
வினைகளை, (அமைச்சர்க்கு),' என்றூஉம் ஒருவுதல்
வேண்டும் - எக்காலத்தும் ஒழிதல் வேண்டும்; (எ - று.)

பெருகல் சுருங்கல் இடைநிற்றல் என்னும்
நிலைவேறுபாடு காலத்தான்
வருதலின், 'என்றும்' என்றார். 'வேண்டும்' என்பது -
ஈண்டு, இன்றியமை
யாது என்னும் பொருட்டு.

(கு - ரை.) இம்மைக்கண் - இப்பிறப்பில்.
மறுமைக்கண் - இறந்தபின்
வரும் நிலையில். அறம் - இங்கே, புண்ணியம்.

பயவாத - உண்டாக்காத.

பெருகல் சுருங்கல் இடைநிற்றல் - ௬௩௰ - ஆம்

பொருட்டு - பொருளது.

குறளின் குறிப்பிற் காண்க.

(௨)

௬௫௩. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

(இ - ள்.) ஆதும் என்னுமவர் - மேலாகக்கடவே மென்று கருதுவார்,

ஒளி மாழ்கும் வினை - தம் ஒளி கெடுதற்குக் காரணமாய வினையை, செய் -

செய்தலை, ஓஒதல்வேண்டும் - தவிர்க; (எ - று.)

'ஓதல்வேண்டும்' என்பது - ஒருசொல் நீர்மைத்து; ஓவுதல் என்பது

குறைந்துநின்றது. ஒளி-தாம் உளகாலத்து எல்லாராலும் நன்குமதிக்கப்படு

தல். 'செய்' என்னும் முதனிலைத்தொழிற்பெயர், மாற்றப்பட்டது. அன்றி,

செய்வினை என வினைத்தொகையாக்கியவழி, பொருளின்மை அறிக. ஒளி

கெட வருவது ஆக்கமன்று என்பதாம்.

(கு - ரை.) நீர்மைத்து - தன்மையது.

'ஓதல்வேண்டும்' என்பதை ஒரு
சொல்லாகக்கொள்ளுமிடத்து, 'என்னுமவர்' - எழுவாய்; இருசொல்லாக்
கொள்ளுமிடத்து, ஓதல்-எழுவாயும், வேண்டும்-பயனிலையு மாக, என்னுமவ
ரென்றது ஓதல் என்றதனைக் கொள்ளும். 'ஓவுதலென்பது குறைந்துநின்றது'
என்றவிடத்து, 'ஒருவுதல் என்பது ஆதிநீண்டு இடைக்குறைந்து நின்றது'
என்று பிரதிபேதம். ஔவி - கௌரவ மென்றபடி. ஆதும் என்னுமவர் ஔவி
மாழ்கும் வினைசெய்(தல்) ஓதல்வேண்டும் என அந்வயம் காண்க. செய்வினை
என்பதை வினைசெய் என்று மாற்றிப்

பொருளுரையாது, செய்வினை - செய்



யும்வினை என வினைத்தொகையாகக் கொண்டால், பொருட் பொருத்தமில்லை யென்க. பொருளின்மை - ஒழுங்காகப் பொருள்படாமை. அளபெடைகள், செய்யுளோசை நிறைப்பன. ஆதும்-தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று.(௩)

௬௫௪. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) இடுக்கண் படினும்-(தாம்) இடுக்கணிலே பட வரினும், இளி

வந்த செய்யார் - (அதுதீர்தற்பொருட்டு முன்செய்தார்க்கு) இளிவந்த வினை

களைச் செய்யார்: நடுக்கு அற்ற காட்சியவர் - துளக்கமற்ற தெளிவினை

யுடையார்; (எ - று.)

சிறிதுபோழ்திற் கழிவதாய இடுக்கண் நோக்கி எஞ்ஞான்றுங் கழியாத

இளிவு எய்தற்பாலதன்று என்பதூஉம், அஃது எய்தினும் வருவதுவரும்

என்பதூஉம் தெளிவர் ஆகலான், 'செய்யார்' என்றார்.

(கு - ரை.) பட-அகப்பட; அனுபவிக்க என்றபடி. அது தீர்தற்பொருட்

டுச் செய்யார் என இயையும். இளிவந்த - இழிவு உண்டான காரியங்கள்:

இறந்தகாலப் பலவின்பால்வினையாலணையும்பெயர். துளக்கம் - அசைவு, சஞ்

சலம். கழிவதாய - நீங்குவதான. இடுக்கண்-துன்பம்; கண் இடுங்குதல் பற்றி

வந்த பெயர்: காரியம் காரணமாக வந்த உபசாரவழக்கு; இஃது, இடுக்குகண்

என்பதன் விகாரம். எஞ்ஞான்றும் - எப்பொழுதும். எய்தற்பாலதன்று -

அடையத்தக்கதன்று. அஃது எய்தினும்-இளிவையடைந்தாலும். வருவது -

விதிவசத்தால் வருந் தீங்கு.

இளிவந்த என்பதில், இளி வா என்னும் இரண்டுந் தொடர்ந்த இளிவா - பகுதி. நடுக்கு - நடுங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். காட்சியென்ற தொழிற்பெயரில், காணுதல் - மனத்தால் ஆராய்தல்.

(௬)

௬௫௫.

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(இ - ள்.) எற்று - (யான் செய்தது) எத்தன்மைத்து என்று, இரங்குவ - (பின் தானே) இரங்கும் வினைகளை, செய்யற்க - (ஒருகாலும்) செய்யாதொழிக: செய்வானேல்-(அன்றி ஒருகால் மயங்கி அவற்றைச்) செய்யுந் தன்மையனாயினுயின், மற்று - பின் (இருந்து), அன்ன - அவ்விரங்கல்களை, செய்யாமை - செய்யாதொழிதல், நன்று—; (எ - று.)

'இரங்குவ' என முன் வந்தமையின், பின் 'அன்ன' எனச் சுட்டியொழிந்

தார். அவ்வினைகளது பன்மையா , இரக்கமும் பலவாயின. அச்செயற்குப் பின் இருந்து இரங்குவனாயின், அது தீரும்வாயிலறிந்தில னெனவும், திட்ப மிலனெனவும், பயனில்லனசெய்கின்ற னெனவும், தன்பழியைத் தானே தூற்றுகின்ற னெனவும் எல்லாரும் இகழ்தலின், 'பின் இரங்காமை நன்று' என்றார். இதுவும், வினைத்தூயார்செய லாகலின், உடன் கூறப்பட்டது. 'பின்தொடர்தற்குச் செய்வா னாயின், அவைபோல்வனவுஞ் செய்யாமை நன்று' என, பிறரெல்லாம் இயைபு அற உரைத்தார்,



(கு - ரை.) பின் தானே இரங்கும்-பச்சாத்தாபப்படும்படியான. மயங்கி-மனந்தடுமாறி. முன்னே ஆலோசியாமல் யாதொருகாரியத்தையுஞ் செய்தல் கூடாது; ஏனெனில்,—சிலகாரியங்களைச் செய்துவிட்டால், பின்பு என்செய் தோமென்று அநுதாப முண்டாம்: தகாத தொழில்களை ஒருகால் செய்துவிட் டானாயின், அதற்காகப் பின்பு இரங்கிக் காலங்கழித்தல் தகுதி யன்று; "கற் றார்முன் தோன்றா கழிவிரக்கம்" ஆதலால் என்க. அது தீரும் வாயில் - அச் செய்கையாலுண்டாகிற தீங்கினின்றும் நீங்கும்வழி. திட்பம்-நெஞ்சுறுதி. தூற் றுதல் - கூறிவெளிப்படுத்தல். இதுவும் - இரங்காமையும். வினைத்தூயார் - தொழில்சுத்தமானவர். பின்தொடர்தற்குச் செய்தல் - முன்செய்த தகாத செயல்களையே பிடிவாதத்தால் மேல்மேல் அடுத்தடுத்துச் செய்தல்; இது அவற்றைத் தக்கனவென்று

சாதித்தற்பொருட்டு. சங்கத்துப்பிரதியில், பின் தொடர்தற்கு என்றஇடத்தில் 'பிற்றொடர்க்கு' என்று பாடம்: பிற்றொடர் என்றது - 'செய்வானேல் மற்றன்னசெய்யாமை நன்று' என்றதொடரை. இயைபுஅற - பொருத்தமில்லாமல். எற்று - வினாவடியாப்பிறந்த ஒன்றன் பாற் குறிப்புமுற்று; று - விகுதி. இரங்குவ - பெயர். செய்யற்க - எதிர்மறை வியங்கோள். மற்று - இங்கே, பின் என்னும் பொருளது. பரிமேலழகருரைக்கு, அன்ன - அகரச்சுட்டடியாப்பிறந்ததும்; பிறருரைக்கு அன் என்னும் உவமவிடைச்சொல்லடியாப்பிறந்தது மாம். நன்று - முற்று. (௫)

௬௫௬. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(இ - ள்) ஈன்றாள் - (தன்னைப்) பயந்தாளது, பசி-பசியை, காண்பான் ஆயின்உம் - (வறுமையால்) கண்டிரங்குந்தன்மைய னாயினு னெனினும், (அதுசுட்டி), சான்றோர் பழிக்கும் வினை-அறிவுடையார் பழிக்கும் வினைகளை, செய்யற்க - (ஒருவன்) செய்யாதொழிக; (எ - று.)

'இரந்தமூப்பினராய இருமுதுகுரவரும் கற்புடைமனைவியும் குழவியும் பசியான்வருந்தும் எல்லைக்கண், தீயனபலவுஞ் செய்தாயினும் புறந்தருக' என்னும் அறநூற்பொதுவிதி, பொருள்நூல்வழியொழுகுதலும் அரசர்தொழிற்கு உரியராதலும் நன்குமதிக்கற்பாடுமுடைய

அமைச்சர்க்கு எய்தாமைபற்றி இவ்வாறு கூறினர்.

இவையைந்துபாட்டானும், 'பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்க' என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பயந்தாளது - பெற்றதாயினது. வறுமை-செல்வமில்லாமை; தரித்திரம். அது சுட்டி - அத்துன்பம் காரணமாக. இறந்த மூப்பினர் - மிக்க முதுமையுடையவர். இரு முது குரவர்-இரண்டு பழைய பெரியோர்; தாய்தந்தையர். கற்பு - பதிவிரதாதருமம். குழவி - குழந்தை. எல்லைக்கண் - சமயத்தில். புறந்தருக - பாதுகாக்க. அறநூல் - தருமசாஸ்திரம். "அப்யகார்யஶதம் க்ருத்வா - பர்த்தவ்யா மநுரப்ரவீத்" என்ற வடமொழிமேற்கோள் இங்குக் காணத்தக்கது. 28

பொருள்நூல் - அர்த்தசாஸ்திரம்; இராசநீதி முதலியன.



ஒழுகுதல் - நடத்தல். மதிக்கற்பாடு - மதிக்கப்படுதல். எய்தாமை - பொருந்தாமை. இருமுதுமக்களுள் தந்தையினும் தாய் அன்பிலும் கடமையிலும் சிறத்தலால், அவளையே யெடுத்துக்கூறினர். (சு)

சூருள. பழிமலைந் தெய்திய வாக்கத்திற்
சான்றோர்

கழிநல் குரவே தலை.

(இ - ள்.) (சாலாதார் தீயவினைகளைச் செய்து அதனால்), பழி மலைந்து - பழியைத் தம்மேற்கொண்டு, எய்திய - பெற்ற, ஆக்கத்தின் - செல்வத்தின், சான்றோர்-(அதுமேற்கொள்ளாத) சான்றோர் அனுபவிக்கும், கழி நல்குரவே- மிக்கநல்குரவே, தலை - உயர்ந்தது; (எ - று.)

நிலையாதசெல்வத்தின் பொருட்டு நிலையினபழியை மேற்கோடல் சால்போடு இயையாமையின், 'சான்றோர்கழிநல்குரவே தலை' என்றார்.

(கு - ரை.) சாலாதார் - சான்றோரல்லாதவர்; முந்தின குறளில் 'சான்றோர்' என்பதற்கு - அறிவுடையாரென உரைத்ததனால், அதன் எதிர்மறையாக, இதற்கு - அறிவில்லாதாரென்க. அதுமேற்கொள்ளாத - தீவினை செய்து பழிப்போடு செல்வம்பெறாத. நல்குரவு - வறுமை; தொழிற்பெயர்: நல்கூர் என்னும் பகுதி குறுகிற்று; அ - சாரியை; நிலையாத - நிலைத்திராத.

நிலையின - நிலையுள்ள; உலகமுள்ளவளவும் அழியாத. மேற்கோடல் - ஏற்றுக் கொள்ளுதல். சால்போடு இயையாமையின் -

பெருமைக்குணத்துக்குத் தகா

மையால். கழி - மிகுதியுணர்த்தும் உரிச்சொல்.
மலைதலெனினும் மிலைத லெனினும் ஒக்கும்.
அகமலர்ச்சியணி; இலக்கணம் முன்கூறப்பட்டது. ஏ -
பிரிநிலை.

(எ)

கூருஅ. கடிந்த கடிந்தொரார் செய்தார்க்
கவைதா

முடிந்தாலும் பீழை தரும்.

(இ - ள்.) கடிந்த-(நூலோர்) கடிந்த வினைகளை,
கடிந்துஒரார்-(தாமும்) கடிந்து ஒழியாது, செய்தார்க்கு -
(பொருள்நோக்கிச்) செய்த அமைச்சர்க்கு,
அவை தாம் முடிந்தால்உம்-அவை (தூயவன்மையின்
முடியா, ஒருவாற்றான்)
முடியினும், (பின்), பீழை தரும்-துன்பத்தையே
கொடுக்கும்; (எ - று.)

முடிதல் - கருதியபொருள் தருதல்.
பீழைதருதலாகிய பொருளின் தொழில், அதற்குக்
காரணமாய வினைகள்மேல் ஏற்றப்பட்டது. (கு -
ரை.) நூலோர்-சாஸ்திரமறிந்தவர்.
கடிந்த-(செய்யலாகாதென்று) விலக்கிய. பொருள்
நோக்கி-செல்வவருவாயை உத்தேசித்து. அவை- நூலோர்
கடிந்த அவ்வினைகள். தூய அன்மையின் -
சுத்தமானவையல்லாமையால். பொருளின் தொழில் -

செல்வத்தின் காரியம். அதற்கு-செல்வத்திற்கு. காரி யத்தின்தொழிலைக் காரணத்தின்மேல் ஏற்றிய உபசாரவழக்கு. அத்தொழில்
கள் செல்வத்தை யுண்டாக்கி அதன்மூலமாகத் துன்பந்தருமென்க. கடிந்த - பெயர். ஓரார் - ஒருவார் என்னும் எதிர்மறைமுற்றெச்சம் விகாரப்பட்டது. 'முடிந்தாலும்' என்ற உம்மை - விகற்பப்பொருளை விளக்குவது. தாம்-அசை.

சுசு - ஆம்



பீழை - பீடா என்னும் வடமொழியின் சிதைவு; பீழையென்றதன் இறுதி
யில், பிரிநிலை யேகாரம் விகாரத்தால் தொக்கது. (அ)

சுருசு. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

(இ - ள்.) (ஒருவன் தீயவினைகளைச்செய்து), அழ - (பிறர்) இரங்க,
கொண்ட எல்லாம் - கொண்டபொருளெல்லாம், அழ-(இம்மையிலே அவன்
தான்) இரங்க, போம் - போகாநிற்கும்; நல் பாலவை-(மற்றைத்) தூயவினை

யான்வந்த பொருள்கள், இழப்பின்உம் - (முன்)
இழந்தானுயினும், (அவ
னுக்கு), பின் பயக்கும் - பின்னர்வந்து பயன்கொடுக்கும்;
(எ - று.)

'பின்' எனவே, மறுமையும் அடங்கிற்று.
பொருள்களான், அவற்றிற்
குக்காரணமாய வினைகளது இயல்பு கூறியவாறு.

(கு - ரை.) கொண்ட - தான்கவர்ந்துகொண்ட.
அவன் - அக்கொண்ட
வன். போகாகிற்கும் - அழியும்.
பொருள்களான்-பொருளின்நிலைமைகளால்.
இழப்பினும் என்ற இழிவுசிறப்பும்மை, இழவாமையையுங்
குறிக்கும். பின் -
இடைச்சொல்; காலம். நற்பாலவை -
நல்லதன்மையையுடையவை. இம்மை
யிலே ஒருவன் இரங்க அவனைவிட்டுப்
போம்பொருள்கள் தீயவினைசெய்து
பிறர் இரங்கக்கொண்டவை என்றும், இழந்தாலும்
பின்னர்வந்து பயன்தரும்
பொருள்கள் தூயவினையால் வந்தவையென்றும்
அறியலாமென்க. (கூ)

௬௬௦ சலத்தாற் பொருள்செய்தே மாக்கல்
பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(இ - ள்.) (அமைச்சன்), சலத்தால்-தீயவினைகளால்,
பொருள்செய்து-
பொருள்படைத்து, *ஏமாக்கல் - (அதனால்
அரசனுக்கு)ஏமஞ்செய்தல்,—பசு மண் கலத்துள் -
பசியமட்கலத்துள்ளே, நீர் பெய்து-நீரைப் பெய்து, இரீஇ
அற்று - (அதற்கு) ஏமஞ்செய்ததனோடு ஒக்கும்; (எ - று.)
முன் ஆக்கம்பயப்பனபோல்தோன்றிப்பின்
அழிவேபயத்தலால், அவை
சல மெனப்பட்டன. †'ஏமமாக்கல்' என்பது, ஏமாக்கல்
என்று ஆயிற்று: ஏம
த்தை அடையப்பண்ணுதல் என்றவாறு. இருத்துதல் -
நெடுங்காலம் இருப்
பச் செய்தல். அரசனும் பொருளும் சேரப்போம்
என்பதாம். பிறரெல்லாம்
'ஏமாத்தல்' என்று பாடமோதி, அதற்கு - மகிழ்தல்
என்றும், 'இரீஇ யற்று'
என்பதற்கு - வைத்தாற்போலும் என்றும் உரைத்தார்;
அவர், அவை தன்
வினையும் பிறிதின்வினையுமாய்
உவமையிலக்கணத்தொடு மாறுகோடல்
நோக்கிற்றிலர்.

இவைநான்குபாட்டானும், அதற்குக் காரணங்
கூறப்பட்டது.

(கு - ரை.) பொருள் படைத்து -
செல்வஞ்சம்பாதித்து. ஏமம் - காப்பு.

பசிய மட்கலம்-சுடப்படாத மண்பாத்திரம்; பசுமை-ஈரத்தின்மேலது. சலம் -

பி - ம்: *ஏமார்த்தல் †ஏமமார்த்தல்.



சலம் [ஃஜலம்]என்னும் வடசொல்லின் திரிபு; இதற்கு-வெளிக்கு ஒருவகையாகக்காணப்பட்டு உள்ளே ஒருவகையாக இருப்பதென்று பொருள்: அரசனும் பொருளும் சேரப்போம் - நீர்பெய்த பசுமட்கலமும் அந்நீரும் சேரப்போதல்போல எனக்கொள்க. பிறர் - மற்றையுரைகாரர். அவை தன்வினையும் பிறிதின்வினையுமாய் - மகிழ்தலென்ற உபமேயம் தன்வினையும் இருத்துதலென்ற உபமானம் பிறவினையுமாய். தன்வினை - தன்கருத்தாவின் புடைபெயர்ச்சியாய் நிகழுந் தொழில். பிறிதின்வினை - பிறகருத்தாவின் புடைபெயர்ச்சியாய்த் தொழிற்படுஞ்செயல். உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் - மகிழ்தற்கு நீர்பெய்துவைத்தல் ஒப்பாகப் பொருந்தாமை யென்க. அதற்கு - பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யலாகாதென்பதற்கு. மண், நீர் என்பன - ம்ருத், நீரம் என்னும் வடமொழிகளின் சிதைவென்பர். இரீஇ - இருவி அல்லது இருத்தி என்ற பிறவினைவினையெச்சம் விகாரப்பட்டு அளபெடுத்தது. உவமையணி. இக்குறட்பாவை, அனுமானமென்னும் அலங்காரமென்பர், வீரசோழியவுரையாசிரியர். (௬௰)

## சுஎ - ஆம் அதிகாரம்.—வினைத்திட்பம்.

அஃதாவது - அத்தூயவினைமுடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) திண்மை-வலிமை. இதனானே-கீழ்வாக்கியத்தால். வினைத்திட்பம் என்றதொடர் - தூயவினைக்குவேண்டிய மனவுறுதி எனப்பொருள்

பட்டு, நான்காம்வேற்றுமை யுருபும்பயனுமுடன் தொக்கதொகையா மென்க.

இனி, வினைசெய்தலில் திண்மையென ஏழாம்வேற்றுமைத்தொகையாகவும்மாம்.

௬௬௧. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

(இ - ள்.) வினை திட்பம் என்பது-வினைசெய்தற்கண் திண்மையென்று சொல்லப்படுவது, ஒருவன் மனம் திட்பம் - (அதனை முடித்தற்கு உரியான்) ஒருவன் மனத்தினது திண்மை; மற்றைய எல்லாம் - அஃது ஒழிந்தன எல்லாம், பிற - அதற்குத் திண்மையென்று சொல்லப்படா; (எ - று.)

ஒழிந்தனவாவன - படை அரண் நட்பு முதலியவற்றின் திண்மைகள். அவையும் அதற்கு வேண்டுவனவாய் இனமாகலின் 'மற்றைய' என்றும், வேண்டினும் அஃது இல்வழிப் பயனிலவாகலின் 'பிற' என்றுங் கூறினர்.

இதனான், வினைத்திட்பமாவது இன்னதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) அதனை - தொடங்கியகாரியத்தை. முடித்தற்கு உரியான் - முடிக்கவேண்டியவன். அஃது - மனத்திட்பம். அதற்கு - தொடங்கிய காரியத்தை முடித்தற்கு. படை - சேனை. அரண்-காப்பு; கோட்டை முதலியன.

நட்பு - நண்பர். அதற்கு - வினைமுடித்தற்கு. வேண்டினும் - வினைமுடித்தற்

குப் படைமுதலியவை வேண்டியிருப்பினும். அஃது இல்வழி - மனத்திட்ப மில்லாதவிடத்து. "மற்றையதென்பது சுட்டியதற்கினம்". பிற - பகுதியே

## சுஎ - ஆம் அதிகாரம்.—வினைத்திட்பம்

உ௨க பலவின்பால்முற்றாய் வந்தது; தென்பர்:

அஃறிணைப்பன்மைவிகுதி புணர்ந்து கெட்ட

(க)

சுசு௨. ஊறொரா லுற்றபி னொல்காமை
யிவ்விரண்டி னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(இ - ள்.) ஆய்ந்தவர் கோள் - (மூன் *நீதிநூல்) ஆராய்ந்த அமைச்சரது துணிபு,—ஊறு ஒரால் - பழுதுபடும்வினைகளைச் செய்யாமையும், உற்றபின்- (செய்யும்வினை தெய்வத்தான்) பழுதுபட்டவழி, ஒல்காமை-(அதற்குத்) தளராமையும், இ இரண்டின் - (ஆகிய) இவ்விரண்டின், ஆறு-வழி, என்பர்—, (நூலோர்); (எ - று.)

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப்பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபுதொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின்,

ண்டு வினைத்தூய்மையும் உடன்கூறினர். உறுதலுடையதனை மூன் 'ஊறு' என்றமையின் 'உற்றபின்' என்றும், இவ்விரண்டின் கண்ணே பட்டது என்

பார் 'இரண்டினுறு' என்றுங் கூறினர். 'ஊறொரார்' என்று பாடமோது வாருமுளர். அஃது 'ஒல்காமை' என்னும் எண்ணோடும், 'இரண்டு' என்னுந் தொகையோடும் இயையாமை அவர் அறிந்திலர்.

(கு - ரை.) தெய்வத்தான் - விதிவசத்தால். வியாழ வெள்ளிகள் - பிரு கஸ்பதியும், சுக்கிரனும்.
பிருகஸ்பதி-தேவர்க்குக் குருவும் பிரதான மந்திரியும், சுக்கிரன் - அசுரர்க்குக் குருவும் பிரதானமந்திரியு மாவர். துணிபு - சித்தாந் தத்தை. தொகுத்து-ஒருங்குசேர்த்து.
நீதி நூலுடையாரென்றது-சாணக்கிய ரையும் காமந்தகரையும் குறிக்குமென்பர். இனி, வெள்ளியினது துணிபைத்
தொகுத்துக் கூறிய நூல் சுக்கிரநீதி என்றலும் ஒன்று.
ஈண்டு-மனத்திட்பத் தைக்கூறும் இச்சந்தர்ப்பத்தில்.
'வினைத்தூய்மையும் உடன் கூறினர்' என் றது,'ஊறொரால்' என்றதனுற் போந்ததனை. மனத்திட்பத்துடன் செய்யப் படுங் காரியம்
தூயதாயிருக்கவேண்டுமென்பது,நீதிநூலோர்கருத்து:
அதுவே இவ்வாசிரியர்க்குங் கருத்தென்க.
ஊறுதல்-தடையாகநேர்தல். பழுதுபாடுடை யதை
ஊறென்றதற்கு ஏற்ப, பழுதுபடுதலை உறுத லென்று ரென்க. இவ் விரண்டின் கண்ணே பட்டது -
வினைத்தூய்மையும் வினைத்திட்பமு மாகிய
இவ்விரண்டினிடத்தே அமைந்தது. 'ஊறொரார்' என்ற பாடத்துக்கு-பழுது படும் வினைகளை நீங்காராய்(ச் செய்து) என்பது பொருளும், ஓரார் என்பது- எதிர்மறைத்தெரிநிலை முற்றெச்சமு மாம். அஃது - 'ஊறொரார்' என்பது. எண்

[செவ்வெண்] - எண்ணப்படுபொருள், உம்மை தொக்கசொல். பரிமேலழகர்பாடத்துக்கு, ஊறொரால் உற்றபின் ஒல்காமை என எண்ணும்மை தொக்க பெயர்ச்செவ்வெண் 'இரண்டு' என்னுந் தொகை பெறுதல் இனிது பொருந்துதல் காண்க. ஊறு என்றதை முதனிலைதிரிந்த தொழிலாகுபெய ரென்றாவது; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்ட விடத்துப் பகுதி முதல்நீண்ட பெய ரென்றாவது கொள்க. ஒரால் - தொழிற்பெயர்: ஒருவு என்னும் பகுதி ஈறுதொக்கது.

(உ)

---

* பி - ம்: நீதி



௬௬௩. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி னெற்றா விழுமந் தரும்.

(இ - ள்.) கடை கொட்க - (செய்யப்படும்வினையை) முடிவின்கண் புலப்படும்வகை, செய் தக்கது - (முன்னெல்லாம் மறைத்துச்) செய்வதே, ஆண்மை - திட்பமாவது; இடை கொட்கின் - (அங்ஙனமன்றி) இடையே புலப்படு மாயின், (அப்புலப்பாடு), (செய்வானுக்கு), எற்றா விழுமம்-நீங்காத இடும்பையை, தரும் - கொடுக்கும்; (எ - று.)

மறைத்துச்செய்வதாவது - அங்ஙனந்தும் எண்ணியவாறு பிறரறியாம லும், தான் அறிந்ததூஉம் தன் இங்கிதம் வடிவு செயல் சொற்களான் அவர் உய்த்துணராமலும் அடக்கிச்செய்தல். அத்திட்பம், ஆண்தன்மையான் வருத லின், 'ஆண்மை' எனப்பட்டது. எற்றாவிழுமமாவன-பகைவர் முன் அறிந்து அவ்வினையைவிலக்குதல் செய்வானைவிலக்குதல் செய்வ ராகலின், அவற்

றன் வருவன. விழுமம் - சாதிப்பெயர்.

இவையிரண்டுபாட்டானும், அதனது பகுதி கூறப்பட்டது.

(கு - ரை.) முடிவின்கண் புலப்படும் வகை - காரியம் முடிந்த பின்பே இவன் இக்காரியத்தைச்செய்தா னென்று பிறர் அறியும்படி. புலப்பாடு - புலப்படுதல், வெளிப்படுதல். செய்வானுக்கு - தொழில்செய்பவனுக்கு. இடும்பை - துன்பம். அங்கமைந்தும் எண்ணிய ஆறு - சுஙக - ஆம் குறளிற் கூறிய தானை பொருள் முதலிய ஐந்து அங்கங்களையும் பற்றித் தான் ஆலோசித்த விதத்தை. இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின்தொழில். உய்த்துணராமல் - ஊகித்தறிய வொட்டாமல். ஆண்தன்மையால் வருகிற திட்பத்தை ஆண்மையென்றது, கருவியாகுபெயரின்பாற்படும். செய்வானை விலக்குதல் - அவ்வினை செயபவனைத் தடுத்தல். விழுமம் என்றது-இங்கே, துன்பத்தின் வருக்கத்தையெல்லாம் உணர்த்தும். அதனது பகுதி - வினைத்திட்பத்தின் தன்மை. கொட்க என்னுஞ் செயவெனெச்சத்தில், கொட்கு - பகுதி. (ங)

சுகூச. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

(இ - ள்.) சொல்லுதல் - (யாம் இவ்வினையை இவ்வாற்றால் செய்தும் என நிரல்படச்) சொல்லுதல், யார்க்குஉம் எளிய-யாவர்க்கும் எளிய; சொல்லிய வண்ணம் செயல் - (அதனை) அவ்வாற்றானே செய்தல், அரிய ஆம் - (யாவர்க்கும்) அரியவாம்; (எ - று.)

சொல்லுதல், செயல் என்பன - சாதிப்பெயர். அரியவற்றை எண்ணிச் சொல்லுதல் திட்பமில்லாதார்க்கும் இயறலின், 'எளிய' என்றார்.

இதனான், அதனது அருமை கூறப்பட்டது.

(கு - ரை.) இவ்வாற்றால் - இன்னவிதமாய். செய்தும் - செய்வோம். நிரல்பட - ஒழுங்காக. எளிய - எளியவையாம். சொல்லுதல், செயல் என்பன - சொல்லுதல்கள், செய்தல்கள் எனப் பன்மைப்பொருள்பட்டு, எளிய

அரிய என்ற பலவின்பால்முற்றுக்களைக் கொள்ளும். அரியவற்றை - செய் வதற்கு அருமையான தொழில்களையும். இயறலின் - கூடுதலால். அதன் து- வினைத்திட்பத்தினது. "உரைசெயற்கெளிதுமாகியரிது மாமொழுக்கு" என இந்தக்குறளை யொட்டிக் கம்பர் கூறியுள்ளார். (ச)

சுசுரு. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க

ணூறெய்தி யுள்ளப் படும்.

(இ - ள்.) வீறு எய்தி - (எண்ணத்தாற்) சிறப்புஎய்தி, மாண்டார்-(பிற இலக்கணங்களானும்) மாட்சிமைப்பட்ட அமைச்சரது, வினை திட்பம்—,—வேந்தன்கண் ஊறு எய்தி-வேந்தன்கண்ணே உறுதலை யெய்தலான், உள்ளப் படும் - (எல்லாரானும்) நன்குமதிக்கப்படும்; (எ - று.)

வேந்தன்கண் ஊறெய்தல் - எடுத்தவினை அதனான் முற்றுப்பெற்றுச் செல்வமும் புகழும் அவன் கண்ணவாதல். 'எய்தலான்' என்பது திரிந்துநின் றது. உள்ளல் - மதிப்பான் மறவாமை.

இதனான், அதன்சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பிற

இலக்கணங்களானும்-சொற்செயல்களின் அமைதிகளா லும். எனவே, மனம் மொழி மெய் என்னும் திரிகரணத்தாலும் சுத்தரான

என்க. வேந்தன்கண்ணே உறுதலை எய்தல்

பலித்தல். அதனுன் - மனத்திட்பத்தால்.

- அரசனிடத்திலே நல்லதாய்ப்
அவன்கண்ண ஆதல் - அரச
னிடத்தன வாகுதல். மந்திரி முதலிய அங்கங்களின்
தொழில்களா லாகுஞ் செல்வமும் புகழும் அரசனுக்கே
யுரியனவாய் விளங்கும். காரணப்பொருள தாகிய
எய்தவென்னுஞ் செயவெனெச்சம் எய்தியெனத் திரிந்த
தென்பார்,

'எய்தலான் என்பது திரிந்துநின்றது' என்ருர்; இங்ஙனம் இலக்கணங்கூறு
தல், பரிமேலழகர்வழக்கம்: "நன்றே தரினு நடுவிகந்தா
மாக்கத்தை" என்ற குறளில், 'இகத்தலான் என்பது
இகந்து எனத் திரிந்துநின்றது' என இலக் கணங் குறித்தது
காண்க. இங்கே எச்சத்திரிபாகக் கொண்டது, 'எய்தி' என
வந்த சொல் இரண்டனுள் பிந்தியதை யென்க.
மதிப்பான் மறவாமை - கௌரவபுத்தியோடு
எப்பொழுதும் மறவாதிருத்தல். ஊறு - முதனிலை திரிந்த
தொழிற்பெயர்.

(௫)

௬௬௬. எண்ணிய வெண்ணியாங் கெய்துப
வெண்ணியார்

திண்ணிய ராகப் பெறின்.

(இ - ள்.) எண்ணிய - (தாம் எய்த) எண்ணிய
பொருள்கள் எல்லாவற் றையும், எண்ணி(ய) ஆங்கு -

அவ்வெண்ணியவாறே, எய்துப - எய்துவர்; எண்ணியார் - எண்ணியவர்,—திண்ணியர் ஆக பெறின் - (அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கண்) திண்மையுடையராகப்பெறின்; (எ - று.)

எளிதின் எய்துப என்பார், 'எண்ணியாங்கு எய்துப' என்றார். அவர் அவ்வாறல்லது எண்ணமையின் திண்ணியராகவே வினை முடியும்: அது முடிய அவை யாவையுங் கைகூடும் என்பது கருத்து.



இதனான், அஃதுடையார் எய்தும் பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) எய்த - அடையும்படி. வாயில் - வழி, உபாயம். அவ்வாறு அல்லது-மனத்திட்பமுடையராகவன்றி; இனி அவ்வாறல்லது என்பதற்கு - காரியம் எளிதில் முடியும்படியாகவன்றி என்றும், தொடக்கத்தில் நினைத்த படியல்லாமல் என்றும் பொருள் கூறுகின்றனர். அது முடிய - காரியம் நிறைவேற. அவையாவையும் - நினைத்தபொருள்களெல்லாம். அஃது உடையார் - வினைத்திட்பமுள்ளவர். எண்ணிய-பெயர். எண்ணியாங்கு - எண்ணியவாங்கு என்பதன் தொகுத்தல் விகாரம். எய்துப-பலர்பால்முற்று.

௬௬எ. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்ன ருடைத்து.

(இ - ள்.) உருள் - உருளாநின்ற, பெரு - பெரிய, தேர்க்கு—, அச்சு ஆணி அன்னார்-அச்சின்கண் ஆணிபோல வினைக்கண் திண்ணியாரை, உடைத்து—, (உலகம்); (அதனால்), உருவு கண்டு எள்ளாமை வேண்டும்- (அவரை) வடிவின்சிறுமைநோக்கி இகழ்தலை ஒழிக; (எ - று.)

சிறுமை, 'எள்ளாமைவேண்டும்' என்பதனாலும்,

உவமையானும், பெற்

றும்.

கண்

அச்சு - உருள்கோத்த மரம். ஆணி-உருள் கழலாது அதன் கடைக் செருகுமது. அது, வடிவாற் சிறிதாயிருந்தே பெரியபாரத்தைக்

கொண்டு உய்க்குச்

பெரியவினைகளைக்

திட்ப முடைத்து: அதுபோல, வடிவாற் சிறியராயிருந்தே

கொண்டுஉய்க்குந் திட்பமுடைய அமைச்சரும் உளர்;

அவரை அத்திட்பம்நோக்கி அறிந்துகொள்க என்பதாம்.

இதனான், அவரை அறியும் ஆறு கூறப்பட்டது.

(கு - ரை.) உருளாநின்ற - உருள்கிற. சிறுமை - வடிவஞ் சிறியதாயிருத்தல். உவமை - அச்சாணி. உருள் - சக்கரம். அதன் கடைக்கண் - அச்சின் கோடிகளில். கொண்டு உய்க்கும் - நடத்திமுடிக்கிற. அவரை - வினைத்திட்பமுடையாரை. உருவு, அச்சு, ஆணி என்பன - ரூபம், அக்ஷம், ஆணி: என்னும் வடசொற்களின் திரிபுகள். உருள் தேர் - வினைத்தொகை. "சில கற்றார்கண் ணுமுளவாம் உருள் பெருந்தேர்க், கச்சாணி யன்னதோர் சொல்" என்பது பழமொழி: "மடல்பெரிது" "உடலின் சிறுமை" என்ற பாடல்கள் இங்கு நினைவுக்கு வருகின்றன. வீரசோழியவுரைகாரர் அலங்காரப்படலத்தில் இக்குறட்பாவை உதாரணங்காட்டி 'இது இழிந்தஉவமையின்

உயர்ந்ததனைப் புகழ்ந்தமையால்

இழிவுயர்புப்புகழ்ச்சியுவமையாயிற்று'

என்பர்.

(எ)

௬௬௫. கலங்காது கண்ட வினைக்கட்
டுளங்காது

தூக்கங் கடிந்து செயல்.

(இ - ள்.) கலங்காது கண்ட - மனந்தெளிந்து
செய்வதாகத்துணிந்த,

வினைக்கண் - வினையின் கண், துளங்காது - பின்
அசைதலின்றி, தூக்கம் கடி

ந்து - நீட்டித்தலை யொழிந்து, செயல் - செய்க; (எ - று.)

௬௭ -

ஆம் அதிகாரம்.—வினைத்திட்பம் ௨௨௫

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோல் தோன்று
மாகலின், தெளிந்து
பலகால்
*ஆராய்ந்து தாம்செய்வதாக ஓர்த்தவினையை 'கலங்காது
கண்டவினை'
என்றார். துளங்காமை - திட்பமுடைமை.

(கு - ரை.) அசைதலின்றி - சலித்தலில்லாமல்.
நீட்டித்தல் - காலதாம
தஞ்செய்தல். கலங்கியவழி - மனங் கலங்கிவிட்டால்.
ஒழிவதும் - தவிரவேண்

டிய தொழிலும். செய்வதுபோல் - செய்யத்தக்கதொழில்போல. ஓர்த்த - நிச்சயித்த. கண்ட - அறிந்த என்றபடி. தூக்கம் - தூங்கு என்னும் பகுதியடியாப் பிறந்த தொழிற்பெயர். செயல் - முற்று.

(அ)

௬௬௯. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

(இ - ள்.) (முதற்கண்), துன்பம் உற வரின்உம் - (மெய்ம்முயற்சியால் தமக்குத்) துன்பம் மிகவருமாயினும், (அதுநோக்கித் தளராது), இன்பம் பயக்கும் வினை - (முடிவின்கண்) இன்பம்பயக்கும் வினையை, செய்க - திட்பமுடையராய்ச் செய்க; (எ - று.)

துணிவு ஆற்றி -

துணிவு - கலங்காமை; அஃது உடையார்க்கல்லது கணிகமாய முயற்சித் துன்பம் நோக்காது நிலையுதலுடைய பரிணமவின்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், 'துணிவாற்றிச் செய்க' என்றார்.

இவையிரண்டுபாட்டானும், அவர் வினைசெய்யுமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) முதற்கண் - முதலில். மெய்ம்முயற்சி-தேகபரிச்சிரமம். கணிக மாய - சிறிதுபொழுதே உள்ளதான; கணிகம் - க்ஷணிகம். முயற்சித்துன்பம்-முயற்சியினாலாகுந் துன்பம். நிலையுதலுடைய - நிலைத்தலுள்ள. பரிணும இன்பம் - முடிவிலுளதாகுஞ் சுகம். செய்தல் கூடாமையின் - (முயற்சித்துன்பந் தரும்வினையைச்)செய்தல் அருமையாயிருத்தலால். அவர் - திட்பமுடையார். உற - மிகுதிப்பொருளுணர்த்தும் 'உறு' என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த செயவெனெச்சம். உம் - இழிவுசிறப்பு. துணிவு ஆற்றி - கலங்காமையைக் கொண்டு: தளராது என்றபடி.

(கூ)

கூஎ0. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும்
வேண்டாரை வேண்டா துலகு.

வினைத்திட்பம்

(இ - ள்.) வினை திட்பம் - வினைத்திட்பத்தை, வேண்டாரை -(இது நமக்குச் சிறந்ததென்று) கொள்ளாத அமைச்சரை, எனை திட்பம்-ஒழிந்த திட்பங்களெல்லாம், எய்தியக்கண்உம்-உடையராயவிடத்தும், வேண்டாது -நன்கு மதியார்: உலகு - உயர்ந்தோர்; (எ - று.)

மனத்தின்கண் திட்பமில்லாதார்க்குப்படை அரண்கட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும் வினை முடியாதாம்; ஆகவே, அவையெல்லாங் கெடும் என்பதுபற்றி, 'உலகு வேண்டாது' என்றார்.

இதனால், வினைத்திட்பமில்லாதாரது இழிவு கூறப்பட்டது.

* பி - ம்: ஆராய்ந்தாலும் செய்வதாத லொத்த வினையை.

(கு - ரை.) அவையெல்லாம் - படைமுதலியன யாவும். எனை - எத்தனை என்பதன் மரூஉ: எனையென்னும் இடைச்சொல்லின் விகாரமுமாம். உம் - உயர்வுசிறப்பு. உலகு வேண்டாது - சொல்நிலைநோக்கிய முடிபு. (கூ0)

## சுஅ - ஆம் அதிகாரம்.—வினைசெயல்வகை.

அஃதாவது - அத்திட்பமுடைய அமைச்சன் அவ்வினையைச் செய்யுந் திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) வினைசெயல்வகை என்ற தொடரில், முன்னது-இரண்டாம் வேற்றுமைத்தொகையும், பின்னது-இருபெயரொட்டுப் பண்புத்தொகையும் ஆம். செயல் வகை - செய்தலாகிய வகை யென விரியும்: செய்தலினது வகையென விரித்து, ஆறாம்வேற்றுமைத்தொகை யெனினும் அமையும்.

சுஎக. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது.

(இ - ள்.) சூழ்ச்சி முடிவு-விசாரத்திற்கு எல்லையாவது,—துணிவு எய்தல் - (விசாரிக்கின்றான் இனி இது தப்பாதென்னுந்) துணிவினைப் பெறுதல்; அ துணிவு - அங்ஙனந்துணிவுபெற்ற வினை, தாழ்ச்சியுள் தங்குதல் - (பின்) நீட்டிப்பின்கண் தங்குமாயின் அது, தீது-குற்றமுடைத்து; (எ - று.)

'சூழ்ச்சிமுடிவு துணிவெய்தல்' எனவே, துணிவெய்துமளவுஞ் சூழ வேண்டு மென்பது பெற்றாம். பின்னர் 'துணிவு' - ஆகுபெயர். நீட்டிப்பு-செய்யுங்காலத்துச் செய்யாமை: அஃது உள்வழி, காலக்கழிவாகலானும் பகைவர் அறிந்து அழித்தலானும் முடியாமையின், அதனை 'தீது' என்றார்.

(கு - ரை.) விசாரம்-ஆலோசனை. விசாரிக்கின்றான் - ஆலோசிக்கின்றவன். இது-இக்காரியம். நீட்டிப்பின்கண் - காலதாமதத்தில்; செய்து முடிக்க வேண்டிய காலத்திற்குள் செய்துமுடிக்காமல் ஆலசியமாக. பின்னர்த் துணிவு - துணிவு என வந்த சொல் இரண்டனுட் பிந்தியது. துணிவு - நிச்சயித்தல்; அது - நிச்சயிக்கப்படுதலையுடைய வினையை யுணர்த்தியதனால் தொழிலாகுபெயராம். அஃது உள்வழி - நீட்டிப்பு உள்ள பொழுது. முடியாமையின் - (துணிவினைப் பெற்றவினையும்) நிறைவேறாதாதலால். (க)

௬௭௨. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(இ - ள்.) தூங்கி செயல் பால-நீட்டித்துச்செய்யும்பகுதியவாயவினைகளுள், தூங்குக - நீட்டிக்க; தூங்காது செய்யும் வினை - நீட்டியாதுசெய்யும் வினைகளுள், தூங்கற்க - நீட்டியாதொழிக; (எ - று.)

இருவழியும் இறுதிக்கண் தொக்க ஏழாவது விரிக்கப்பட்டது. இருவகை வினைகளும், வலியானும் காலத்தானும் அறியப்படும். மாறிச்செய்யின் அவை வாயா என்பது கருத்து. மேல் 'தூங்காமை' என்றார், ஈண்டு அதனைப் பகுத்துக்கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், பொதுவகையால் வினைசெய்யுந் திறம் கூறப்பட்டது.



(கு - ரை.) பகுதியவாய - தன்மையையுடையவையான. நீட்டியாது - காலதாமதஞ்செய்யாமல். இருவழியும் - இரண்டுவாக்கியங்களிலும். இறுதிக்கண்தொக்க ஏழாவது - செயற்பால, செய்யும்வினை என்ற சொற்றொடர்களில் மறைந்துநின்ற ஏழாம்வேற்றுமையுருபு. வலி - தான்செய்யக்கருதிய தொழிலின் வலிமையும், அதனைச்செய்துமுடிக்குந் தனது வலிமையும், அதனை விலக்கத்தொடங்கும் பகைவனது வலிமையும், இருவர்க்கும் துணையாவோரது வலிமையும் என்னும் நால்வகை வலிமைகள்: காலம் - சாமம் முதலிய உபாயங்களை உபயோகித்தற்கு ஏற்ற சமயம்.

மாறிச்செய்யின்
அவை வாயா - தாமதித்துச் செய்யவேண்டிய தொழிலை
விரைந்து செய்தா
லும், விரைந்து செய்யவேண்டிய தொழிலைத்
தாமதித்துச் செய்தாலும்
அவை பலிக்கமாட்டா. மேல் - மூன்: ௩௯ - ஆம்
அதிகாரமாகிய இறைமாட்
சியில் "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று,
நீங்கா நிலனாள்பவர் .
க்கு" என்ற குறளில். அங்கு, 'தூங்காமை' என்பதற்கு -
'அக்காரியங்களில்
விரைவுடைமை' எனப் பொருளுரைத்தமையும்,
'இவற்றுள் கல்வி ஆறு
அங்கத்திற்கும் உரித்து, ஏனைய வினைக்கு உரிய' என
விசேடவுரை குறித்த
மையுங் காண்க. பொதுவகையால் வினைசெய்யுந்திறம்
கூறப்படுதல் - வலி
யான் ஒப்பான் மெலியா னென மூவகையோரும்
வினைசெய்யும்வகை சொல்
லப்படுதல். இவ்வதிகாரத்தில் நான்காவது முதலிய
எழுகுறள்களில், இத்
திறம், சிறப்புவகையாற் கூறப்படுதல் காண்க. தூங்கி, தூங்காது என்ற வினை யெச்சங்கள், செய்தலைக் கொள்ளும். செயற்பால-செய்தற் றன்மையுடையன.

௬௭௩. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

(இ - ள்.) (வினைசெய்யுங்கால்), ஒல்லும் வாய் எல்லாம் - இயலுமிடத்தெல்லாம், வினை நன்று - போராற் செய்தல் நன்று; ஒல்லாக்கால் - அஃது இயலாவிடத்து, செல்லும் வாய்நோக்கி-(ஏனை மூன்று உபாயத்துள்ளும் அது) முடிவதோர் உபாயம் நோக்கி, செயல் - செய்க; (எ - று.)

இயலும் இடம் - பகையின் தான் வலியனாய காலம். அக்காலத்துத் தண்டமே நன்று என்றார், அஞ்சுவது அதற்கேயாகலின். இயலா இடம்-ஒத்தகாலமும், மெலியகாலமும். அவ்விரண்டு காலத்தும் சாமதானபேதங்களுள் அது முடியும் உபாயத்தாற் செய்க என்றார், அவை ஒன்றற்கு ஒன்று வேறுபாடு உடையவேனும் உடம்படுத்தற்பயத்தால் தம்முள் ஒக்குமாகலின்.

இதனான், வலியான் ஒப்பான் மெலியான் என நிலை மூவகைத்து என்பதூஉம், அவற்றுள் வலியது சிறப்பும் கூறப்பட்டன.

(கு - ரை.) இயலுமிடத்து - சாத்தியப்படுமிடத்து. அஃது - போராற் செய்தல். ஏனை மூன்று உபாயம் - சாம பேத தான மென்னும் மற்றை மூன்று உபாயங்கள். அது-தொழில். பகையின்-பகைவனிலும். தண்டம்-நான்காம் உபாயம். அது முடியும் - தொழில் நிறைவேறக்கூடிய. உடம்படுத்தற் பயத்தால் - சம்மதிக்கச்செய்யும் பிரயோசனத்தால். நன்றே, ஏ - ஈற்றசை;

தேற்றமாகவாவது, வினையே நன்று என மாறி இயைத்துப் பிரிநிலையாக வாவது கொள்ளினும் பொருந்தும். ஒல்லாக் கால் - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தொடர், ஒல்லுதல் - இயலுதல். செல்லும்வாய் என்றதில், வாய் - வழி. செயல் - முற்று. (௩)

௬௭௪. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

(இ - ள்.) வினை - (செய்யத்தொடங்கிய) வினையும், பகை - (களையத் தொடங்கிய) பகையும், என்ற - என்றுசொல்லப்பட்ட, இரண்டின் - இரண்டனது, எச்சம் - ஒழிவும்,—நினையும் கால்-ஆராயுங்கால், தீ எச்சம் போல - தீயினது ஒழிவு போல, தெறும் - (பின் வளர்ந்து) கெடுக்கும்; (எ - று.)

'இனி இக்குறை என்செய்வது?' என்று இகழ்ந்தொழியற்க; முடியச் செய்க என்பதாம். பின்வளர்தலொப்புமைபற்றி, பகையெச்சமும் உடன் கூறினர்.

இதனன், வலியான் செய்யுந்திறம் கூறப்பட்டது.

(கு - ரை.) களைய - முழுவதும் அழிக்க. ஒழிவு-குறை, மிச்சம், சேடம். இனி - பெரும்பான்மை முடிந்தபின்பு. என் செய்வது - என்னதீங்கு தர வல்லது? ஒழியற்க - விட்டிடாதிருக்கக்கடவன். வலியான் செய்யும் திறம்; பகையை வேரோடு அழித்தல்வேண்டு மென்பது. என்றிரண்டு - என்ற இரண்டு என்பதன் தொகுத்தல். இனி, என்று என்பதை எண்ணிடைச் சொல்லாகக் கொண்டு, வினையென்று, பகையென்று என இரண்டிடத்தும் எடுத்துக்கூட்டி, அவ்வெண்ணிடைச்சொல் இரண்டு என்னுந் தொகை பெற்றதெனக் கொள்ளுதலு மொன்று; [நன் - இடை - ௪௦.] எச்சம் - எஞ்

சுதலுடையது; எஞ்சுதல் - மிச்சப்படுதல், சேடித்தல். வினையொழிவாவது - செய்யவேண்டிய தொழிலின் மிச்சம். பகையொழிவாவது - பகைவர்பலரை யழித்துச் சிலரை விட்டிடுவது. 'பகை, செய்தொழில், கடன், தீ, நோய் இவற்றின் சேஷத்தை அலட்சியஞ்செய்த லாகாது; செய்யின், அவை வளர்ந்து அழிவு செய்யும்' என்பது, நூல்துணிபு. உவமையணி. (ச)

கூஎரு. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

(இ - ள்.) (வினைசெய்யுமிடத்து);—பொருள் -
பொருளும், கருவி -
கருவியும், காலம் - காலமும், வினை - வினையும்,
இடனொடு-இடனும், ஐந்து
உம்-(ஆகிய) இவ்வைந்தனையும், இருள் தீர
எண்ணி-மயக்கம் அற எண்ணி,
செயல் - செய்க; (எ - று.)

எண்ணொடு, பிறவழியும் கூட்டப்பட்டது. பொருள் - அழியும் பொருளும், ஆகும் பொருளும். கருவி - தன் தானையும், மாற்றார் தானையும். காலம் - தனக்கு ஆங்காலமும், அவர்க்கு ஆங்காலமும். வினை - தான் அவர் வல்ல வினையும். இடம் - தான் வெல்லும் இடமும்,

வல்ல வினையும்,
அவர் வெல்லும்

இடமும். இவற்றைத் தான் வென்றியெய்துந் திறத்திற் பிழையாமல் எண்ணிச்செய்க என்பதாம்.

(கு - ரை.) பொருளொடு, கருவியொடு, காலத்தொடு, வினையொடு, இடனொடு என, ஓரிடத்தில் நின்ற 'ஒடு' என்னும் எண்ணிடைச்சொல்லை எடுத்து எல்லாவற்றிற்கும் கூட்டுக; "என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி,நின் றும் பிரிந்தெண் பொருள்தொறு நேரும்"என்றார்,நன்னூலார். 'இதில் ஒடுஎன்பது ஒருசொல் நின்றே தனித்தனி உதவுதல் காண்க; முதனிலைத்தீவகம், இடைநிலைத்தீவகம், கடைநிலைத்தீவகம்,முதலாயினவும் அது'என்பது,இலக்கணக்கொத்து உரை. இது, 'ஐந்து'என்னுந் தொகை பெற்றது. உம்மை - இனைத்தென்றறிபொருளில்வந்த முற்றும்மை. வென்றி எய்தும் திறத்தில் - வெற்றி பெறும் வகையில். பிழையாமல் - தவறாமல். இருள்-விபரீதஞானம்; ஒன்றை மற்றொன்றாக மாறுபட அறிதல்: இது, திரிபுணர்வு எனப்படும்.(ரு)

கூஎகூ. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்

படுபயனும் பார்த்துச் செயல்.

(இ - ள்.) முடிவு உம் - (வினைசெய்யுங்கால்) அது முடிதற்கு உளதாம்
முயற்சியும், இடையூறு உம் - (அதற்கு வரும்) இடையூறும், முற்றியாங்கு
எய்தும் - (அது நீங்கி) முடிந்தால் (தான்) எய்தும், படு பயன் உம் - பெரும்
பயனும், பார்த்து - சீர்தூக்கி, செயல் - செய்க; (எ - று.)

முடிவு - ஆகுபெயர்.
முயற்சிஇடையூறுகளது அளவின் பயனது அளவு
பெரிதாயிற் செய்க என்பதாம்.

(கு - ரை.) சீர்தூக்கி - ஒத்துப்பார்த்து ஆராய்ந்து உள்ளவாறு உணர்
ந்து. முடிவு - முடிதற்குக்காரணமான முயற்சியைக் குறித்ததனால், காரிய
வாகுபெயர். முயற்சி யிடையூறுகளது அளவின் - முயற்சியின் அளவினும்,
இடையூற்றின் அளவினும். செய்க - (அத்தொழிலைச்) செய்க. முற்றியாங்கு-
முற்றியவாங்கு என்பதன் விகாரமாகக்கொண்டு, முடிந்த அப்பொழுதில்
என்க.

(சு)

ருஎஎ. செய்வினை செய்வான் செயன்முறை

யவ்வினை

யுளளறிவா னுளளங கொளல.

(இ - ள்.) செய் வினை செய்வான் - (அவ்வாற்ருல்) செய்யப்படும்வினை

யைத் தொடங்கினுன், செயல் முறை - செய்யும் முறைமையாவது,—அ

வினை உள் அறிவான் உள்ளம் கொளல் - அதனை உள்பாட்டினையறிவான்

கருத்தினை (த் தான்) அறிதல்; (எ - று.)

'அவ்வாறு' என்றது-பொருள் முதலிய எண்ணலையும், முடிவு முதலிய

தூக்கலையும். உள்ளறிவான்-முன்செய்துபோந்தவன். அவன்கருத்து-அவன்

செய்துபோந்த உபாயம். அதனை அறியவே, தானும் அதனுற் செய்து பயன்

எய்தும் என்பதாம்.

இவை மூன்றுபாட்டானும், ஒப்பான்

செய்யுந் திறம் கூறப்பட்டது. ௨௬௦

திருக்குறள்

(கு - ரை.) அவ்வாற்றால் - அவ்வகையால். அதனது உளப்பாட்டினை அறிவான் கருத்து - அவ்வினையின் உண்மைநிலையை முன்பு அறிந்து நடத்தியவனது கொள்கை. உளப்பாடு - மர்மம். எண்ணல் - சுஎடுஆம் குறளிற் கூறியது. தூக்கல் - சீர்தூக்கல். முடிவு முதலிய தூக்கல் - சுஎசுஆம் குறளிற் கூறியது. அதனால் - அவ்வுபாயத்தால். உள்ளம் - மனம்: அதன் கருத்துக்கு, ஆகுபெயர்: இனி, உள்ளம் என்பது - உள் என்னும் வினைப்பகுதியினடியாப்பிறந்த தொழிற்பெயராயின், எண்ணம் எனப்பொருள்படும். (எ)

சுஎஅ. வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(இ - ள்.) வினையான் - (செய்கின்ற) வினையாலே, வினை - (அன்னது பிறிதும் ஓர்) வினையை, ஆக்கிக்கோடல் - முடித்துக்கொள்க; (அது),—நனைகவுள் யானையால் - (மதத்தால்)நனைந்த கபோலத்தினையுடைய யானையாலே, யானை - (அன்னது பிறிதும் ஓர்) யானையை, யாத்தற்று - பிணித்ததனோடு ஒக்கும்; (எ - று.)

பிணித்தற்கு அருமை தோன்ற, 'நனைகவுள்' என்பது பின்னும் கூட்டப்பட்டது. தொடங்கியவினையானே பிறிதும் ஓர்வினையை முடித்தற்கு உபாயமாமாறு எண்ணிச் செய்க; செய்யவே, அம்முறையான் எல்லாவினையும் எளிதின் முடியும் என்பதாம்.

(கு - ரை.) அன்னது பிறிதும் ஓர் வினையை-அப்படிப்பட்ட வேறொரு தொழிலை. கபோலம் - கன்னம். பிணித்தது - கட்டியது. பின்னும் - யானையெனவந்தசொல் இரண்டனுட் பிந்தியதனுடனும். அதனோடும் 'நனைகவுள்' என்பது கூட்டப்பட்டதை, 'அன்னது பிறிதுமோர் யானையை' என்ற உரையால் அறிக. நனைகவுள் - வினைத்தொகை. யாத்தற்று - யாத்ததற்று என்பதன் விகாரம்: யாத்தாலற்று என்பதன் திரிபாகக் கொள்ளினுமாம். (அ)

சுஎகூ. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

(இ - ள்.) (வினைசெய்வானல்), நட்டார்க்கு-(தன்) நட்டார்க்கு, நல்ல-
இனியவற்றை, செயலின் - செய்தலினும், விரைந்தது - விரைந்துசெய்யப்
படும்: ஒட்டாரை ஒட்டிக்கொளல்-(தன்பகைவரோடு) ஒட்டாரை(த் தனக்கு)
நட்பாக்கிக்கோடல்; (எ - று.)

அவ்வினைவாய்த்தற்பயத்தவாய இவ்விரண்டும் பகைவர்க்குத் தன் மெலிவு புலனவதன்முன்னே செய்க என்பார், 'விரைந்தது' என்ருர். விரைந்துசெய்யப்படுவது என்றவாறு. வினைசெய்யுந் திறமாகலின், பகைவரோடொட்டாராயிற்று. தன்ஒட்டார் பிறருட்கூடாமல் மாற்றிவைத்த லெனினும் அமையும்.

(கு - ரை.) நட்டார்க்கு - சினேகிதர்க்கு. ஒட்டார் - சேராதவர். அவ்வினை வாய்த்தல் பயத்த ஆய - செய்யுந்தொழில் பலித்தலாகிய பயனைத் தருவனவான. இவ்விரண்டும் - நட்டார்க்கு நல்லசெயலும், ஒட்டாரை ஒட்டிக்



கொளலும். புலனவது-வெளியாவது, தெரிவது. 'ஒட்டாரை' என்பதற்குப்

பகைவரோ டொட்டாரை யென்று உரைத்ததன் காரணத்தைத் தெரிவிக்க
வந்தது, 'வினைசெய்யுந் திறமாகலின்'என்பது.
வினைசெய்யுந்திறமாகலின்–
இவ்வதிகாரம் பகைவரோடு போர் முதலிய தொழிலைச் செய்யும் வகையைக்
கூறுவதாதலால். பிறருள் கூடாமல்-பகைவருடன் சேராமல். மாற்றிவைத்
தல்-பேதமென்னும் உபாயம். ''நட்டார்க்கு நல்லசெயலினிதெத்துணையும்,
ஒட்டாரை யொட்டிக்கொளலதனின் முன்னினிதே''என்றது இங்குக்காணத்தக்கது.

(கூ)

கூ௪0.

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(இ - ள்.) உறை சிறியார் – ஆளும்இடஞ் சிறியராய அமைச்சர்,—(தம்
மின் வலியார் எதிர்ந்தவழி), உள் நடுங்கல் அஞ்சி - தம் பகுதி நடுங்கலை
அஞ்சி,—குறை பெறின் – (அந்நிலைக்கு) வேண்டுவதாய சந்து கூடுமாயின்,

பெரியார் பணிந்து கொள்வர்-அவரைத் தாழ்ந்து (அதனை) ஏற்றுக்கொள்வர்.

இடம் - நாடும், அரணும். அவற்றது சிறமை, ஆள்வார்மேல் ஏற்றப் பட்டது. மெலியாரோடு சந்திக்கு வலியார் இயைதல் அரி தாகலின், 'பெறின்' என்றார். அடியிலே மெலியராயினர் தம்பகுதியும் அஞ்சி நீங்கின் முதலொடும் கெடுவ ராகலின், அதுவாராமல் சிறிதுகொடுத்தும் சந்தினை யேற்றுக்கொள்க என்பதாம். பணிதல் மானமுடையார்க்குக் கருத் தன்மை யின், 'கொள்வர்' என உலகியலாற் கூறினர்.

இவைமூன்றுபாட்டானும், மெலியான் செய்யுந் திறம் கூறப்பட்டது.

(கு - ரை.) பகுதி - சேனைமுதலிய அங்கங்கள். நடுங்கல் - மிக அஞ்சு தல்; அச்சத்தால் மனமும் உடம்பும் நடுங்கும். நடுங்கலை யஞ்சி - அந்தஅங் கம் நடுங்குதற்குத் தான் பயந்து. அந்நிலை - அப்பொழுதைநிலைமை. வேண் டுவது - அவசியமானது. சந்து - ஸந்தி, சமாதானம். கூடுமாயின் - நேர்வ

தானல். அவரை வலியராய பகைவரை. அதனை - சந்தியை. 'உறைசிறி
யார்' என்பது - உபசாரவழக்கு. அடியிலே - தொடக்கத்திலே. அது
வாராமல் - அக்கேடு வராதபடி. சிறிது கொடுத்தல் - தானமென்னும் உபா
யம். உலகியல் - உலகத்தாரது தன்மை. "அச்சக்கிளவிக் கைந்து மிரண்
டும், எச்சமிலவே பொருள்வயினான"

என்ற தொல்காப்பியவிதிபற்றி, 'நடுங்
கலஞ்சி' என்றாற்போல வருவதை - நடுங்கலை அஞ்சி, நடுங்கலினின்று அஞ்சி
என இரண்டுவகையாகவும் விரிக்கலாம்; நடுங்கலினின்று அஞ்சி என
ஐந்தாம் வேற்றுமையாக விரித்தல், வடநூல்வழக்கு: நடுங்கற்கு அஞ்சி என
நான்காம் வேற்றுமையாக விரித்தல், உலகவழக்காம். (௯௦)

## ௬௯ - ஆம்

## அதிகாரம்—தூது.

அஃதாவது - சந்திவிக்கிரகங்கட்கு வேற்றுவேந்தரிடைச் செல்வாரது
தன்மை. அவ்விரண்டனையும் மேல் 'வினைசெயல்வகை' என்றமையின்,

இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

தான்வகுத்துக்கூறுவான், கூறியது

•



கூறுவான் எனத் தூது இருவகைப்படும். அவருள், முன்னோன் அமைச்சனோடு ஒப்பானாகலானும், பின்னோன் அவனின் காற்கூறுகுணம் குறைந்தோனாகலானும், இஃது அமைச்சியலாயிற்று.

(கு - ரை.) சந்தி விக்கிரகங்கள் - ௬௩௩ - ஆங் குறளிற் காண்க. சந்தி-பொருத்துதல். விக்கிரகம் - பிரித்தல். மேல் - மூந்தின அதிகாரத்தின் ஒன்பதாங் குறளில். தான்வகுத்துக்கூறுவான் - சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி தானே தன் அறிவால் ஒழுங்குபடக் காரியங்களை எடுத்துச்சொல்லவல்லவன். கூறியது கூறுவான் - சொல்லிக்கொடுத்ததைக் கொண்டுபோய்ச் சொல்பவன்.

௬௮௧

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூ துரைப்பான் பண்பு.

(இ - ள்.) அன்பு உடைமை - (தன்சுற்றத்தார்மாட்டு) அன்புடையனாதலும், ஆன்ற குடி பிறத்தல் - (அமைச்சுப்பூணற்கு) அமைந்த குடியின்கண் பிறத்தலும், வேந்து அவாம் பண்பு உடைமை - அரசர்சாதிவிரும்பும் பண்புடையனாதலும், தூது உரைப்பான் பண்பு -

இலக்கணம்: (எ - று.)

தூதுவார்த்தைசொல்லுவானுக்கு

முன்னைய இரண்டனாலும், முறையே, சுற்றத்தார்க்குத் தீங்குவாராமல் தான் பேணியொழுகலும் தன்முன்னோர் தூதியல்கேட்டுஅறிதலும் பெற்றாம். வேந்தவாம்பண்புடைமை, முன்னர் மன்னரைச்சேர்ந்தொழுகற்கண் பெறப்படும்: அதனால், வேற்றரசரும் அவன்வயத்தராதல் பெறுதும்.

(கு-ரை.) 'அன்பாவது-வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனாதல்' என உரைத்துப்போந்தார், கீழ் அன்புடைமையென்ற அதிகாரத்திற் பரிமேலழகர்; 'அன்பாவது - மனைவியர்கண்ணும் தாய் தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின்கண்ணும் மனமகிழ்ச்சிநிகழ்த்திப் பிணிப்பித்துநிற்கும் நேயம்' என நச்சினார்க்கினியரும், 'அன்பெனப்பட்டது - தான் வேண்டப்பட்டபொருளின்கண்தோன்றும் உள்ளநிகழ்ச்சி' என நக்கீரரும், 'அன்பாவது-தன்னாற் புரக்கப்படுவார்மேலுளதாகிய காதல்'எனப் புறநானூற்றுஉரையாசிரியரும் உரைத்தல் உணர்க. மாட்டு - இடத்து; ஏழாம் வேற்றுமையுருபு. அமைச்சுப்பூணற்கு - மந்திரியாயிருக்குந்தன்மையை ஏற்றுக்கொள்ளுதற்கு. பண்பு - நற்குணம். முன்னைய இரண்டு - அன்புடைமை

யும், சிறந்தகுடிப்பிறப்பும். பேணி ஒழுகல் - பாதுகாத்துநடத்தல். தன்முன்னோர் ஊதியல் கேட்டு அறிதல் - தான் பிறந்தகுலத்தில் தனது தாதை மூதாதை முதலிய முன்னேயோர் ஊதராயொழுகிய தன்மையைக் கேள்வியுற்று உணர்தல். முன்னர் - அடுத்ததாகிய; இங்கே, முன் - இடமுன். அதனால் - வேந்தவாம்பண்புடைமையால். மன்னரைச் சேர்ந் தொழுகல் - ௭௦ - ஆம் அதிகாரம். அவன்வயத்தர் ஆதல் பெறுதும் - அவனுக்குவசப்பட்டவராதலைப் பெறுவோம். வேந்து - இங்கே, சாதிப் பெயராய் நின்றது. அவாம் - அவாவும் என்னுஞ்

செய்யுமெனெச்சத்தின் ௬௯ - ஆம் அதிகாரம்.—தூது ௨௩௩.

விகாரம். 'பண்பாவது - பெருமைசான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்துஒழுகுதல்; "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்" என்றார் பிறரும்' என உரைப்பர், மேல் பண்புடைமையென்ற அதிகாரத்தில். அவ்வதிகாரத்தில் "அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும், பண்புடைமை யென்னும் வழக்கு" என்ற குறட்பாவையும் இங்கே யறிக. தன்சுற்றத்தாரிடத்திலே அன்பில்லாதவனுக்குப் பிறர்மேல் அன்பு உண்டாவது

பெரும்பாலும் இயல்பன் ருதலின், அன்புடைமை ஓரிலக்கணமாயிற்று; இத்தன்மையை, மேல் "அருளென்னு மன்பீன் குழவி" என்னுமிடத்து, 'தொடர்புபற்றாதே வருத்தமுற்றார்மேற் செல்வதாய அருள், தொடர்புபற்றிச் செல்லும் அன்புமுதிர்ந்துழி உளதாவது' என உரைப்பதுகொண்டு உணர்க. ஏற்றகுடியிற் பிறந்தவர் அதற்குத் தக்க நற்குணநற்செய்கைகளை யுடையராதல் இயற்கை யாகலின், குடிப் பிறப்பு இலக்கணமாம். இப்பாட்டில், பெயர்ச்செவ்வெண் தொகை பெறாது வந்தது. அடுத்த அதிகாரத்துக்கு இங்குத் தோற்றுவாயமைந்தமைகாண்க.(க)

கூ௨௨. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(இ - ள்.) அன்பு - (தம் அரசன்மாட்டு) அன்புடைமையும், அறிவு-(அவனுக்கு ஆவன அறியும்) அறிவுடைமையும், ஆராய்ந்த சொல் வன்மை - (அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால்) ஆராய்ந்துசொல்லுதல் வன்மையும், (என); தூது உரைப்பார்க்கு இன்றி அமையாத மூன்று - தூதுஉரைக்க உரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று; (எ - று.)

ஆராய்தல் - அவற்றிற்குஉடம்படுஞ் சொற்களைத் தெரிதல். 'இன்றியமையாத மூன்று' எனவே, அமைச்சர்க்குச் சொல்லிய பிறகுணங்களும் வேண்டு

மென்பது பெற்றும்.

இவையிரண்டுபாட்டானும், இருவகையார்க்கும் பொதுவிலக்கணங் கூறப்பட்டது.

(கு-ரை.) மூன்றினகுறளில் அன்பென வந்ததனோடு, இக்குறளினும் அன்பு என்றது, கூறியதுகூற லென்னுங் குற்றமாகாமைப்பொருட்டு, அங்கு 'தன் சுற்றத்தார்மாட்டு அன்புடையனாதல்' என்றும், இங்கு 'தம் அரசன் மாட்டு அன்புடைமை' என்றும் வேறுபட உரைத்தார்.
ஆவன-அனுகூலமாகு மவற்றை. அவற்றிற்கு உடம்படும் சொற்கள் - அன்பு அறிவுடைமை என்ற அவற்றிற்கு ஏற்றசொற்கள்; தாம்சொல்லும் விஷயங்களுக்குக் கேட்பவர் உடன்படும்படியான சொற்களுமாம்.
அமைச்சர்க்குச் சொல்லிய பிறகுணங்
கள் - கீழ் ஐந்து அதிகாரங்களிற் கூறப்பட்டவை.
இருவகையார் - தான்
வகுத்துக்கூறுவானும், கூறியதுகூறுவானும்.

(௨)

கூ௩௫. நூலாரு னூல்வல்ல னாகுதல்
வேலாருள்

வென்றி வினையுரைப்பான் பண்பு.

30



(இ-ள்.) வேலாருள் - வேலையுடைய

வேற்றரசரிடைச் சென்று, வென்றி வினை - (தன் அரசனுக்கு) வென்றிதரும்வினையை, உரைப்பான் - சொல்லுவானுக்கு, பண்பு - இலக்கணமாவது,—நூலாருள் நூல் வல்லன் ஆகுதல்- நீதிநூலையுணர்ந்த அமைச்சரிடை(த் தான்) *அந்நூலை(க் கற்று)வல்லவனாதல்.

கோறன்மாலையரென்பது தோன்ற'வேலார்' என்றும், தூதுவினை இரண்டும் அடங்க 'வென்றிவினை' என்றும் கூறினர். வல்லனாதல் - உணர்வுமாத்திரம் உடையராய அவர்முன் வகுக்கும் ஆற்றலுடைய னாதல்.

(கு - ரை.) கோறல் மாலையர் - கொல்லும் இயல்பை யுடையவர். "கையில் ஆயுதமுடையவனை நம்பலாகாது" என்ற நீதிநூற்கொள்கையின்படி கையில் வேற்படையையுடையராகின்ற அரசர்முன் சென்று தன்காரியத்தைப் பற்றிப் பேசுவது அரிதென்பது தோன்ற 'வேலார்' என்னுஞ் சொல்லால் இங்கு அரசரைக் குறித்தா ரென்பது தாற்பரியம். தூதுவினை இரண்டு - சந்தியும், விக்கிரகமும்: இங்கே, தான்வகுத்துக் கூறுதலும், கூறியது கூறுதலும் அன்று; ஏனெனில்?—இதுமுதலிய ஐந்துபாடல்கள் தான்வகுத்துக்கூறுவானது இலக்கணமாதலின்; இதனை, இவ்வதிகாரத்தின் ஏழாங்குறளின் உரையிற் காண்க. தொல்காப்பியத்தில் "பெரும்பகைதாங்கும் வேலினானும்" என்ற விடத்து, 'காத்தல்தொழிலன்றி அழித்தல்தொழில்பூண்ட முக்கட் கடவுட்குச் சூலவேல்

படை யாதலானும், முருகற்கு வேல் படை யாத லானும், சான்றோர் வேற்படையே சிறப்பப் பெரும்பான்மை கூறலானும், வேலைக் கூறி, ஏனைப்படைகளெல்லாம் 'மொழிந்தபொருளோடொன்ற அவ் வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல்' என்னும் உத்தியாற் பெற வைத்தார்' என உரைத்த விஷயம், இங்கே பிறபடைக்கலங்களாற் கூறாது 'வேலார்' என்றதற்குக் காரணமாக அறியத்தக்கது. நூலாருள், வேலாருள், உள் - ஏழனுருபு; [நன் - பெயர் - சஙு.] வெல்வது வேல் எனக் கருத்தாப் பொருள்விகுதி புணர்ந்துகெட்டுப் பகுதி முதல்நீண்ட பெயர். வென்றி - தொழிற்பெயர்; வெல் - பகுதி: இதனைப் பண்புப்பெயராகக்கொள்ள லாகாது; வினைப்பகுதியடியாகப் பிறந்ததனால். (௩)

கூ௨௪.

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(இ - ள்.) அறிவு-(இயற்கையாகிய) அறிவும், உரு-(கண்டார்விரும்புந்) தோற்றப்பொலிவும், ஆராய்ந்த கல்வி - (பலரோடும் பலகாலும்) ஆராயப் பட்ட கல்வியும், (என), இ மூன்றன் - (நன்குமதித்தற்கு ஏதுவாய) இம் மூன்றனது, செறிவு-கூட்டத்தை, உடையான்—, வினைக்கு செல்க - (வேற்றுவேந்தரிடைத் தூது) வினைக்குச் செல்க;

(எ - று.)

இம்மூன்றும் ஒருவன்பால் கூடுதல் அரிதாகலின், 'செறிவுடையான்' என்றார். இவற்றான் நன்குமதிப்புடையனாகவே, வினை இனிதுமுடியும் என்பது கருத்து.

---

* பி - ம்: அந்நூலை வல்லனாதல்.

௬௯ - ஆம் அதிகாரம்.—தூது ௨௩௫

(கு - ரை.) தோற்றப்பொலிவு - வடிவத்தின் விளக்கம். கூட்டம் - சேர்க்கை. பெயர்ச்செவ்வெண் தொகை பெற்றது. (௪)

௬௮௫. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

(இ - ள்.) தொக சொல்லி - (வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லும்வழிக் காரணவகையால்) தொகுத்துச்சொல்லியும், தூவாத நீக்கி நக சொல்லி-(இன்னாதகாரியங்களைச் சொல்லும்வழி) வெய்யசொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும், நன்றி பயப்பது - (தன் அரசனுக்கு)

நன்மையைப் பயப்பவனே, தூது ஆம் - தூதனாவான்; (எ - று.)

பலகாரியங்கட்குஉடம்படாதார், பரம்பரையான் அவற்றிற்குக்காரண மாயதொன்றைச் சொல்ல, அதனால் அவை விளையுமாறு உய்த்துணர அருமை யானும் சுருக்கத்தானும் உடம்படுவர்: இன்னாதவற்றிற்குஉடம்படாதார், தம் மனம்மகிழச் சொல்ல, அவ்வின்னாமை காணாது உடம்படுவர்: ஆதலின், அவ் விருவாற்றானும் தன்காரியம் தவறாமல் முடிக்கவல்லா னென்பதாம். எண் ணும்மைகள், விகாரத்தால் தொக்கன.

(கு - ரை.) இன்னாத - இன்பந்தருவதாகாத; துன்பந்தருகிற. வெய்ய சொற்கள் - கொடுஞ்சொற்கள். பரம்பரையான் - நேராகவன்றி: ஒன்றைப் பற்றி மற்றொன்று அதனைப்பற்றி வேறொன்று என்ற இவ்வாற்றால், அவற் றிற்குக் காரணமாயது - அப்பலகாரியங்களும் முடிதற்கு ஏதுவானது. அத னால் அவைவிளையும்ஆறு உய்த்து உணர அருமையானும் - ஒருகாரணத்தாற் பலகாரியங்களுண்டாகுந்தன்மை ஆலோசித்தறிய அரியதா யிருத்தலாலும்.

சுருக்கத்தானும் - சொன்னகாரியம் ஒன்றேயாய்ச் சுருங்கியிருத்தலாலும்.
உடம்படுவர் - அதற்கு ஒப்புக்கொள்வர். காணாது - அறியாமல். இருவாற்
றானும் - (தொகச்சொல்லுதல் நகச்சொல்லுதல் என்ற) இரண்டுவகையாலும்.
'சொல்லி' என்றசொல் இரண்டன் இறுதியிலும் எண்ணும்மைகள் தொகுத்
தல்விகாரப்பட்டன. தூவாத - சுத்தமல்லாதவை; தூய்மையென்னும் பண்
பினடியாப்பிறந்த எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும்பெயர். தூது-
தூதனென்ற வடசொல்லின் விகாரம்;
ணைச்சொல் என்றலு முண்டு.

உயர்திணைப்பொருளில் வந்த அஃறி

(ரு)

சூ௪சூ. கற்றுக்கண் ணஞ்சான்
செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

(இ - ள்.) கற்று - (நீதிநூல்களைக்) கற்று, செல
சொல்லி - (தான்சென்ற
கருமத்தைப் பகைவேந்தர்) மனங்கொளச் சொல்லி, கண்
அஞ்சான் - (அவர்
செயிர்த்துநோக்கின்) அந்நோக்கிற்கு அஞ்சாது, காலத்தால்

தக்கது அறிவது-
காலத்தோடுபொருந்த அதுமுடிக்கத்தக்க உபாயம்
அறிவானே, தூது ஆம் -
தூதனுவான்; (எ - று.)

அவ்வுபாயம் அறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், அதனுனன்றிப் பிறி தொன்ருன் முடியுங் காலம் வரின் அவ்வாறுமுடிக்கவேண்டுதலின் காலத் தால் தக்கது அறிதலும் இலக்கண மாயின.



(கு - ரை.) சென்ற கருமத்தை - நிறைவேற்றுமாறு உத்தேசித்துப் போனகாரியத்தை. செயிர்த்து நோக்கின் - கோபித்துப்பார்த்தால். அதனுன் அன்றிப் பிறிது ஒன்ருல் - நீதிநூலிற் கூறிய அவ்வுபாயத்தா லன்றி வேருேர் உபாயத்தால். காலத்தால் தக்கது - காலத்துக்குஏற்ற உபாயம். கண் அஞ்சான் - நான்காம் வேற்றுமைத்தொகை. அஞ்சான் - முற்றெச்சம். 'காலத்தான்' என்பதில், ஆனுருபு - உடனிகழ்ச்சிப் பொருளது. தக்கது - இறந்தகால வினையாலணையும் பெயர். கீழ் 'ஒற்ருடல்' என்ற அதிகாரத்தில் "கடா அவுருவொடு கண்ணஞ்சாது" எனச் செயிர்த்துநோக்கிய பிறர்கண்ணிற்கு அஞ்சாது நிற்குந் தன்மை ஒற்றர்க்கும் இலக்கணமாக உரைக்கப்பட்டமை காண்க. "பகைப்புலனணுகியுய்த்தார்பகர்ந்தது பகர்ந்து" என்ருர் கம்பராமாயணத்திலும்.

(கூ)

கூ௨எ. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

(இ - ள்.) கடன் அறிந்து - (வேற்றரசரிடத்துத் தான்செய்யும்) முறை

மையறிந்து, காலம் கருதி-(அவர்) செவ்வி பார்த்து, இடன் அறிந்து-(சென்ற

கருமஞ் சொல்லுதற்கு ஏற்ற) இடம் அறிந்து, எண்ணி - (சொல்லும் ஆற்றை

முன்னே) விசாரித்து, உரைப்பான் - (அவ்வாறு) சொல்லுவான், தலை -

(தூதரின்) மிக்கான்; (எ - று.)

செய்யும்முறைமையாவது-அவர்நிலையும், தன் அரசன்நிலையும், தன்நிலை

யுந் தூக்கி அவற்றிற்கு ஏற்பக் காணும் முறைமையும், சொல்லும் முறைமை

யும் முதலாயின. செவ்வி - தன்சொல்லை ஏற்றுக்கொள்ளும் மனநிகழ்ச்சி;

அது காலவயத்த தாகலின், 'காலம்' என்றார். இடம் - தனக்குத்துணையா

வார் உடனுறைய இடம். எண்ணுதல் - தான் அது சொல்லும் ஆறும், அதற்கு

அவர் சொல்லும் உத்தரமும், அதற்குப்பின் தான் சொல்லுவனவும் ஆக இவ்

வாற்றான் மேன்மேல் தானே கற்பித்தல். வடநூலார் இவ்விருவகையாரு

டன் ஓலைகொடுத்து நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் தலை இடை கடை

என்று வகுத்துக் கூறினாராகலின், அவர்மதமுந்

தோன்ற 'தலை' என்றார்.

தூது என்பது, அதிகாரத்தான் வந்தது.

இவை யைந்துபாட்டானும்,
தான்வகுத்துக்கூறுவானது இலக்கணங்
கூறப்பட்டது.

(கு - ரை.) செவ்வி-தன்மை, சந்தர்ப்பம். சொல்லும்
ஆற்றை முன்னே
விசாரித்து - சொல்லவேண்டும் விதத்தை முன்னமே
ஆலோசித்து. மிக்
கான் - சிறந்தவன். தூக்கி - சீர்தூக்கி, ஆராய்ந்து.
காணும் - வேற்றரச
ரைப் பார்க்கிற. மனநிகழ்ச்சி - மனத்தின்தன்மை.
காலவயத்தது - காலத்
துக்கு வசப்பட்டது. ஒரு சமயத்தி லுண்டாகும்
மனத்தியல்பை 'காலம்'
என்ற சொல்லாற் குறித்தது, காலவாகுபெயர். உடன்
ஆய - கூட இருக்
கிற. அது - தான்சென்ற கருமத்தை. கற்பித்தல் -
மனத்தால் தொடர்ச்சிப் பட நினைத்துக்கொள்ளுதல்.
"கற்றவன் கற்றவன் கருதுங்கட்டுரைக், குற்



றன வுற்றவுய்த்துரைக்கு மாற்றலான்" என்றார்

சூளாமணியாரும். இவ்விரு
வகையார்-தான் வகுத்துக் கூறுவானும்,
கூறியது கூறுவானும். தலை இடை
கடை - உத்தம மத்யம அதமர்; தான்வகுத்துக்கூறுவான்
உத்தமனும், கூறி
யதுகூறுவான் மத்யமனும் ஓலைகொடுத்துநிற்பான்
அதமனும்எனக் காண்க.
"தானறிந்து கூறுந் தலை மற்றிடையது, கோனறைந்த
நீதென்று கூறுமால்-
தானறியா, தோலையே காட்டுங் கடையென்
றொருமூன்று, மேலையோர்
தூதுரைத்தவாறு" என்ற பெருந்தேவனார்பாரதம்,
இங்குக் காணத்தக்கது.
அதிகாரத்தான் - அதிகாரம் தூதென்பததலால். தலை
- தலைமையானவ
னுக்கு, ஆகுபெயர்.
(எ)

கூ௮௯. தூய்மை துணைமை துணிவுடைமை
யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.
(இ - ள்.) வழி உரைப்பான் பண்பு -
(தன்அரசன்வார்த்தையை அவன்)
சொல்லியவாறே (வேற்றரசர்க்குச்)
சென்றுசொல்லுவானது இலக்கணமா
வன, - தூய்மை - (பொருள்காமங்களால்) தூயனாதலும்,

துணைமை - (தனக்கு
அவரமைச்சர்) துணையாந் தன்மையும், துணிவு உடைமை - துணிதலுடைமை
யும், இ மூன்றின் வாய்மை-இம்மூன்றோடு கூடியமெய்ம்மையும், (என இவை).
பொருள்காமங்கள்பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத் தூய்மையும்,
தன் அரசனுக்கு உயர்ச்சிகூறியவழி 'எம்மனோர்க்கு அஃது இயல்பு' எனக்
கூறி அவர்வெகுளி நீக்குதற்பொருட்டுத் துணைமையும், இதுசொல்லின் இவர்
எதஞ்செய்வர் என்று ஒழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும், யாவரா
னும் தேறப்படுதற்பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன. 'இன்'-ஒடுவின்
பொருட்கண் வந்தது.
(கு - ரை.) தூயன் - சுத்தன். பொருள் காமங்களால் தூயனாதல்-செல்வ
விஷயத்திலாவது சிற்றின்பவிஷயத்திலாவது பற்றில்லாதவனாக இருத்தல்.
"பற்றார், மிசைப்புலனடக்கி மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட, தகைப்
புலக் கருமத்தோர்" என்றார், கம்பரும். அவரமைச்சர்-வேற்றரசரது மந்திரி
மார். துணிதல்- மனோதைரியம். வந்த தூதன்

வேற்றரசனிடத்தில் தன் அர

சனது பெருமையை எடுத்துக்கூறுவானாயின்

அப்பொழுது அவ்வேற்றரச

னுக்கு அத்தூதன்மேல் உண்டாகுங்

கோபத்தை, 'எம்போல்வார்க்கு அங்ஙனம்

தம் அரசனைச் சிறப்பித்துக்கூறுதல் இயற்கை'

என்று சமாதானஞ்சொல்லித்

தணித்தல், அன்புள்ள அமைச்சர்க்கு இயல்பென்க;

இதனை, இராமதூதனான

அநுமானைக் கொல்லத்துணிந்த இராவணனை

விபீஷணன் மறுத்ததும், பாண்

டவதூதனான கண்ணனைக் கொல்லத்துணிந்த

துரியோதனனை விகர்ணன்

மறுத்ததும் போலக் கொள்க. ஏதம் செய்வர்-நமக்குத்

தீங்குசெய்வர். ஒழியா

மைப்பொருட்டு-சொல்லாது விடாமைக்காக.

தேறப்படுதல்-நம்பப்படுதல்.

'மூன்றின்' என்றதில், இன் என்னும் ஐந்தாமுருபு, மூன்றாம்வேற்றுமைக் குரிய உடனிகழ்ச்சிப்பொருளில் வந்த தென்பது, பரிமேலழகர்கொள்கை; எனவே, ஒருவேற்றுமையுருபு நிற்றற்கு உரிய இடத்தில் வேறு வேற்றுமை

யுருபு வந்த வேற்றுமைமயக்கம்; இது: "யாதனுருபிற் கூறிற்றாயினும், பொருள்சென் மருங்கில்வேற்றுமைசாரும்" என்பது, விதி. இனி, இன் - சாரியையெனக்கொண்டு 'மூன்றின்வாய்மை' என்பதை மூன்றாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன் தொக்க தொகை யெனினும் அமையும். (அ)

கூ௯க. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(இ - ள்.) விடு மாற்றம் - (தன் அரசன் வேந்தர்க்கு உரைப்பான் - வேற்றரசர்க்குச் சொல்லி) விட்ட வார்த்தையை, சென்று சொல்ல உரியான்,— வடு மாற்றம் வாய் சோரா - (தனக்குவரும் ஏதத்திற்கு அஞ்சி அவனுக்குத்) தாழ்வானவார்த்தையை வாய்சோர்ந்துஞ்சொல்லாத, வன்கணவன் - திண்மை யையுடையன்; (எ - று.)

தாழ்வு சாதிதரும மன்மையின் 'வடு' என்றார். 'வாய்சோரா' எனக் காரியம் காரணத்துள் அடக்கப்பட்டது.

(கு - ரை.) விட்ட-அனுப்பிய. ஏதம்-தீங்கு. அவனுக்கு-தன் அரசனுக்கு. வாய்சோர்ந்தும் - வாய்தவறியும். திண்மை - உறுதி. சாதிதரும மன்மை-அரசு சாதிக்கு உரியதன்மையல்லாமை. வடுவென்பது உடம்பிற்கு இயற்கையல்லாமல் செயற்கையா மாறுகாண்க. வடு - தழும்பு. காரியமாகிய வடுமாற்றஞ் சொல்லுதல், காரணமாகிய வாய்சோர்தலில் அடக்கப்பட்டது: காரியத்தைக் காரணத்தாற் கூறிய உபசாரவழக்கு. (கூ)

௬௯0. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(இ - ள்.) இறுதி பயப்பின்உம்-*(வேற்றுவேந்தரிடைச்சொல்லும் அவ்வார்த்தை தன் உயிர்க்கு) இறுதி தருமாயினும், எஞ்சாது - (அதற்கு) அஞ்சி ஒழியாது, இறைவற்கு உறுதி பயப்பது - (தன் அரசன்சொல்லியவாறே) அவனுக்கு மிகுதியை (வேற்றரசரிடை)ச் சொல்லுவானே, தூது ஆம் - தூதனுவான்; (எ - று.)

'இறுதிபயப்பினும்' என்றதனால், ஏனையபயத்தல் சொல்லவேண்டாவாயிற்று.

இவைமூன்றுபாட்டானும், கூறியதுகூறுவானது

இலக்கணம் கூறப்

பட்டது.

(கு - ரை.) இறுதி - அழிவு. ஒழியாது - விடாமல். மிகுதியை - சிறப்பை. ஏனைய பயத்தல் - மற்றைத்துன்பங்களைத் தருதல். இறுதி-'தி' விகுதி பெற்ற தொழிற்பெயர். பயப்பினும், உம் - இழிவுசிறப்பு. (௧0)

"அன்புடைமை யாய்ந்த வறிவுடைமை யிற்பிறப்பு, நன்குடைமை நல்ல நயனுடைமை நன்கமைந்த, சுற்றமுடைமைவடிவுடைமை சொல்வன்மை, கற்றடங்கல் தூதின் கடன்," "தடுமாற்ற மின்றுத் தகைசான்றசொல்லான், வடுமாற்றம் வாய்சோரா னாகி—விடுமாற்ற, மெஞ்சாதுகூறி யிகல்வேந்தன்

* வேற்றுவேந்தரிடைச்சொல்லும்என்பது பலபிரதிகளிலில்லை.

எ0 - ஆம்



சீறுங்கா, லஞ்சா தமைவது தூது," "படையளவு கூறார் பெரியார்முன் மாற்றார், படையளவிற் றென்று வியவார்—கொடைவேந்த, னீத்ததுகண் டின்புறு

ரேந்திழையார் தோள்சேரார், பார்த்திபர்தூ தாயடைந்தார் பண்பு" என்ற

பெருந்தேவனுர் பாரதச்செய்யுள்கள் இவ்வதிகாரத்துக் குறட்பாக்களின் கருத்தைத் தொகுத்துக்கூறியனவாதல் காண்க.

## எ0 - ஆம்

## அதிகாரம்.—மன்னரைச்சேர்ந்தொழுகல்.

அஃதாவது - அமைச்சர் அரசரைப் பொருந்தி ஒழுகுமாறு. இது "வேந் தவாம்பண்புடைமை"என மேலே வேண்டப்பட்டமையின், தூதின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மேலே - மூந்தின அதிகாரத்தின் முதற்குறளில்.

சூகூக. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(இ - ள்.) இகல்-மாறுபடுதலேயுடைய, வேந்தர்-அரசரை, சேர்ந்து ஒழுகுவார் - சேர்ந்து ஒழுகும் அமைச்சர்,—அகலாது அணுகாது - (அவரை)மிக நீங்குவதும் மிகச்செறிவதுஞ் செய்யாது, தீ காய்வார் போல்க - தீக்காய்வார் போல (இடைநிலத்திலே) நிற்க; (எ - று.)

கடிதின் வெகுளுந்தன்மையர் என்பதுதோன்ற, 'இகல்வேந்தர்' என்

ரூர். மிக அகலின் பயன்கொடாது மிக அணுகின் அவமதிபற்றித் தெறும்

வேந்தர்க்கு, மிக அகலின் குளிர்நீக்காது மிக அணுகின் உளதாய தொழிலுவமம் பெறப்பட்டது.

சுடுவதாய தீயோடு

(கு-ரை.) மாறுபடுதல்-முன்கொண்டிருந்த அன்பு மாறிவிடுவது. மிகச் செறிவது - அதிகமாக நெருங்குவது. தீக் காய்வார்-நெருப்பிலே குளிர்காய் பவர். இடை நிலம்-தீக்காய்வார்க்கு, மிக்க தூரமும் மிக்கசமீபமு மாகாத இட மும்: அமைச்சர்க்கு, மிகநீங்காமலும் மிகநெருங்காமலு முள்ள நிலைமையுமாம். கடிதின் - விரைவில். அகலின் - விலகினல். அவமதிபற்றி - தம்மை அவமானப்படுத்தினதாக நினைத்து. தெறும்-அழிக்கும். உவமையணி. போல்க - இடைச்சொல்லடியாப்பிறந்த வியங்கோள். "அழலி னீங்கா னணுகா னஞ்சி", என்ற நன்னூற்பாயிரத்தில், இங்ஙனம் ஒழுகுதல் நல்மாணக்கர்க்கு இலக்கண மெனப்பட்டமை காண்க. "அளையுறை பாம்பு மரசு நெருப்பும், முழையுறை சீயமு மென்றிவை நான்கு, மிளைய வெளிய பயின்றன வென்றெண்ணி,யிகழி னிழுக்கந் தரும்" ஆதலால், 'மிக அணுகின் அவமதிபற்றித்தெறும் வேந்தர்'

என்றார். தொழிலுவமம் - தொழில்பற்றிய உவமம்.
"தீண்டினார்தமைத்
தீச்சுடு மன்னர்தீ, யீண்டு தங்கிளையோடு மெரித்திடும்" என்று சிந்தாமணியிலும் "மன்னரென்பா ரெரியனற்குரியாரென்றே யெண்ணுதி" என்று கம்பராமாயணத்திலும் அரசர்க்குத் தீயுவமைகூறியது காண்க. (க)

சுகூஉ. மன்னர் விழைப விழையாமை
மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.
(இ - ள்.) மன்னர் - (தம்மாற்சேரப்பட்ட) மன்னர், விழைப - விரும்புவனவற்றை, விழையாமை - (தாம்)
விரும்பாதொழிதல்,—(அமைச்சர்க்கு),—



மன்னரான் - அவரானே, மன்னிய ஆக்கம்
தரும் - நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும்; (எ - று.)
ஈண்டு 'விழைப' என்றது, அவர்க்குச் சிறப்பாக உரியவற்றை; அவை -

நுகரப்படுவன, ஒப்பனை, மேன்மை என்றிவை
முதலாயின. இவற்றை
ஒப்பிற்கு அஞ்சித் தாம் விழையா தொழியவே,
அவ்வச்சம்நோக்கி உவந்து
அவர்தாமே எல்லாச்செல்வமும் நல்குவர் என்பது கருத்து.
எனவே, அவற்றை
விரும்பின் கேடுதரும் என்பதாம்.
(கு - ரை.) அவரானே-அவ்வரசர்களாலேயே.
அவர்க்கு - அவ்வரசர்க்கு.
நுகரப்படுவன - ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படும்
பொருள்கள். ஒப்பனை-
அலங்காரம்: அணியப்படும் ஆபரணங்களும், உடுக்கப்படும்
உடைகளும் இதில்
அடங்கும். ஒப்பிற்கு அஞ்சி - தமது தலைவராகிய
அரசரோடு அவர்க்கு அங்க
மாகிய தாம் சமமாகத்தோன்றுதற்குப் பயந்து. அவர்தாமே
- அவ்வரசர்களே.
நல்குவர் - கொடுப்பர். அவற்றை - மன்னர்விழைபவற்றை.
விழைப-பலவின்
பால் வினையாலணையும்பெயர்; ப் - எதிர்கால இடைநிலை,
அ - விகுதி. "கோல
நேர்செய்யார்," "பெரியா ருவப்பன தாமுவவார்",
"அறத்தொடு கல்யாண
மாள்வினை கூரை, யிறப்பப் பெருகியக்

கண் ணும் - திறப்பட்டார், மன்னரின்
மேம்படச் செய்யற்க செய்பவேல், மன்னிய செல்வங்
கெடும்" என்ற ஆசாரக்
கோவையை இங்கே அறிக.
(உ)

௬௯௩. போற்றி னரியவை போற்றல்
றேற்றுதல் யார்க்கு மரிது.

கடுத்தபின்

(இ - ள்.)
வை போற்றல்

போற்றின் - (அமைச்சர் தம்மைக்) காக்கக்கருதின், அரிய - அரியபிழைகள் (தங்கண் வாராமற்) காக்க: கடுத்த பின் தேற்றுதல் யார்க்கும் அரிது - (அவற்றை வந்தனவாகக் கேட்டு அவ்வரசர்) ஐயுற்றால் (அவரைப்) பின் தெளிவித்தல் யாவர்க்கும் அரிது (ஆகலான்).

அரியபிழைகளாவன - அவராற் பொறுத்தற்கரிய அறைபோதல், உரிமையொடு மருவல், அரும்பொருள்வெளவல் என்றிவை முதலாயின; அவற்றைக் காத்தலாவது - ஒருவன் சொல்லியக்கால், தருமோ வென்று ஐயுறாது தகாதென்றே அவர் துணிய ஒழுகல். ஒருவாற்றால் தெளிவித்தாலும்,
கடன்கொண்டான்தோன்றப் பொருள் தோன்றுமாறுபோலக் கண்டுழியெல்லாம் அவை நினைக்கப்படுதலின், 'யார்க்கும் அரிது'

என்றார்.

இவைமூன்றுபாட்டானும், அது பொதுவகையாற் கூறப்பட்டது.

(கு - ரை.) தம்கண் - தம்மிடத்து. ஐயுற்றால் - சந்தேகப்பட்டால். அறை போதல் - கீழறுத்துச்செல்லுதல்; அதாவது - தலைவனை வஞ்சித்து ஒழுகுதல்;

இதற்கு - பகைவர்க்குஉடம்பட்டுநடத்த லென்றும் பொருளுண்டு: உரிமை

யொடு மருவல்-அரசனுக்குஉரியமகளிரோடுகூடுதல். அரும்பொருள் வெளவல்- அருமையான பொருளை அபகரித்தல். சொல்லியக்கால் - கோட்சொன்னால்.

தகுமோ என்று ஐயுறாது - இவனிடத்து இக்குற்றம் ஒருகால் உண்டாயிருக்

குமோ என்ற சந்தேகமுங் கொள்ளாதபடி. தகாதென்றே

அவர் துணியஒழுகல்-



நிச்சயமாகச்செய்யாரென்றே அரசர் துணிபுகொள்ளும்படி அப்பிழைசிறிதுமிலராய் நடத்த லென்க. 'ஒருவாற்றால் தெளிவித்தாலும்' என்பதற்கு முன் 'ஐயுறப்பட்ட தன்னை இவன் அவ்வாறு தீத்தொழில் செய்யானென்று' என வருவிக்க. தெளிவித்தாலும் - நம்புவித்தாலும்.

கடன்கொண்டான் - கடன்வாங்கினவன்.
தோன்ற-காணப்பட. பொருள் தோன்றுதல் - அவன் கடனாகப்பெற்ற பொருள் ஞாபகத்துக்கு வருதல். கண்டுழி - கண்டவிடத்தில். அவை - அவ்வரும்பிழைகள். அது - மன்னரைச் சேர்ந்தொழுகல். அடுத்தநான்குபாடலிற் சிறப்புவகையாற் கூறுவர். போற்றல் - வியங்கோள். கடுத்தபின் - சந்தேகித்தால் என்றபடி; இதனை, 'பின்' விகுதிபெற்ற இறந்த காலவினையெச்ச மென்பர்: எதிர்காலவினையெச்ச மென்றலு முண்டு. கடுத்தல் - சந்தேகித்த லென்னும் பொருளாதாதலை,

கீழ் ஐம்பத்தொன்பதாம் அதிகாரத்தில் "கடாஅ வுருவொடு" என்றதிலும் காண்க; அங்கு, '(கண்டால்) ஐயுறாத வடிவோடு (பொருந்தி)' என உரையும், 'கடாவென்பது-கடுக்கும் என்னும் பெயரெச்சத்து எதிர்மறை' என இலக்கணமும் கூறினர் பரிமேலழகர். சிலப்பதிகாரத்தில் "கடுக்குமென்னெஞ்சம்" என்றவிடத்தில், அடியார்க்கு நல்லார், 'கடுக்கும் - ஐயுறும்; கடியென்னு முரிச்சொல் ஈறுதிரிபு: "போற்றி னரியவை போற்றல் கடுத்தபின், றேற்றுதல் யார்க்கு மரிது" என்றாற்போல; அது "ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே" என்பதனான் முடிந்தது' என்று உரைத்ததை உணர்க. இப்பாட்டின் முதல்வாக்கியத்துக்கு 'அமைச்சர்'- தோன்றா எழுவாய்; அடுத்த நான்குபாடல்களுக்கும் இப்படியே.

(௩)

கூகூச.

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

(இ-ள்.) ஆன்றபெரியார்

அகத்து - அமைந்தஅரசரருகு (இருந்தால்), செவி சொல்உம் சேர்ந்த நகைஉம் அவித்து ஒழுகல் - (அவர்காண ஒருவன்) செவிக்கண்சொல்லுதலையும்ஒருவன்முகம்நோக்கிநகுதலையும்தவிர்த்துஒழுகுக.

சேர்தல் - பிறனோடு சேர்தல். செய்தொழுகின் தம்குற்றம்கண்டுசெய் தனவாகக் கொள்வர் என்பது கருத்து.

(கு-ரை.) அமைந்த - தம்மாற் சேரப்பட்ட; அன்றி, பெருமை நிறைந்த எனினுமாம். அரச ரருகு இருந்தால் - அரசரது சமீபத்தில் தாமிருக்கும் போது. ஒருவன் செவிக்கண் சொல்லுதல் - வேறொருத்தனது காதிலே இரகசியமாகப் பேசுதல். நகுதல் - சிரித்தல். தவிர்ந்து - நீங்கி. "செவிச்சொல் லுங் கொள்ளார் பெரியாரகத்து", "பிறரொடு மந்திரங் கொள்ளார்" என்ற ஆசாரக்கோவையை இங்கே அறிக. சொல் - முதனிலைத் தொழிற்பெயர். 'செவிசொல்லும்' என்றும் பாடமுண்டு. நகை - 'ஐ' விகுதிபெற்ற தொழிற் பெயர்; நகு - பகுதி: அன்றி, நகையென்னும் முதனிலையே தொழிற்பெயர்ப் பொருளை யுணர்த்தியது எனினுமாம். ஒழுகல் - வியங்கோண்முற்று.
(ச)

சா௫௫.

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

31



(இ - ள்.) மறை-(அரசனுக்குப் பிறரோடு) மறை நிகழ்வுழி, எ பொருள் உம் ஓரார் - யாதொருபொருளையுஞ் செவிகொடுத்துக் கேளாது, தொடரார்- (அவனை) முடுகிவினவுவதுஞ் செய்யாது, அ பொருளை விட்டக்கால் கேட்க - அம்மறைப்பொருளை (அவன்தானே) அடக்காது சொல்லியக்கால் கேட்க.

ஓர்தற்கு ஏற்கும் பொருளாயினு மென்பார், 'எப்பொருளும்' என்றார். மற்று - வினைமாற்றின்கண் வந்தது.

(கு - ரை.) மறை நிகழ்வுழி - இரகசியம் நடக்கும்பொழுது. முடுகி - விரைவுகொண்டுவற்புறுத்தி. அவன் - அரசன். ஓர்தற்கு - தான் கேட்டு அறிந்துகொள்ளுதற்கு. வினைமாற்றின்கண் - வினைமாற்றுப்பொருளில். என்றுக்கொன்று மாறுபட்ட எப்பொருளும் தொடராமை என்ற வினைக்கும், அப்பொருளைக்கேட்டலென்ற வினைக்கும் இடையில் வந்ததனால், மற்று-வினைமாற்றும்; இதன் தன்மை, இன்னும் பலவகைப்படும். மறை - மறைக்கப்படுவதென்ற பொருளில் செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்ட பெயராம். "பெருந்தக்கார், சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும், வினவற்க சொல்லொழிந்தக்கால்", "இறைவனைச், சாரார் செவியோரார் சாரிற் பிறிதொன்று, தேர்வார்போல் நிற்க திரிந்து" என்னும் ஆசாரக்கோவை, இங்கு அறியத்தக்கது.

## ௬௯௬. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில வேண்டுப வேட்பச் சொலல்.

(ரு)

(இ - ள்.) (அரசனுக்குக் காரியஞ் சொல்லுங்கால்),—குறிப்பு அறிந்து-(அப்பொழுது நிகழ்கின்ற அவன்)குறிப்பினை அறிந்து, காலம் கருதி-(சொல்லுதற்கு ஏற்ற) காலத்தையும் நோக்கி, வெறுப்பு இல வேண்டுப - வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை, வேட்ப - (அவன் மனம்) விரும்பும்வகை, சொலல் - சொல்லுக; (எ - று.)

குறிப்புக் காரியத்தின்கணன்றிக் காமவெகுளியுள்ளிட்டவற்றில் நிகழ்வுழியும் அதற்கு ஏலாக் காலத்தும் சொல்லுதல் பயனின்றாகலின் 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவன் உடம்படாதன முடிவுபோகாமையின் 'வெறுப்பில' என்றும், பயனில்லவும் பயன் சுருங்கியவுஞ் செய்தல் வேண்டாமையின் 'வேண்டுப' என்றும், அவற்றை இனியவாய்ச் சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களாற் சொல்லுக வென்பார் 'வேட்பச் சொலல்' என்

றுங் கூறினர்.

(கு - ரை.) குறிப்பு - எண்ணம். வேண்டுவன - விரும்பப்படுவன. காம

வெகுளி உள்ளிட்டவற்றில் நிகழ்வுழியும் - சிற்றின்பவிருப்பம் கோபம் முத

யவற்றிற் பொருந்திய பொழுதும். அதற்கு ஏலாக் காலத்தும் - காரியஞ்

செய்தற்குத்தகாத சமயத்திலும். பயன் இன்று ஆகலின் - பிரயோசனப்

படா தாதலால். "என்குறை நீ வயவேந்தற் கியம்புதியேல் வடங்கிடந்து,

பொன்பிதிர் மின்சுணங்கார்ந்த பெரம்மலிளமுலையினர்பா, லன்புறு நல்லமய

மதி லறையற்க வறைகுதிபேல், நன்குறைநீங்கா மவர்பா னயப்புற்றதன்

•

எ௦ - ஆம் அதிகாரம்.—மன்னரைச்சேர்ந்தொழுகல்

உதரு.

மையினல்," "வேற்றரசர் திறைகொணரும் வேலையிலுஞ் சொலற்க, மாற் றரசர்பால் வெகுளுமமயத்தும் வருத்துரையேல், தேற்றமுடைய மதிவல்லோர் தேர்ச்சியிலுந் தெரிந்துரையேல், சாற்றி

னுரைத்தனவெல்லாந் தவறு தலறிதியே" என்ற நைடதச்செய்யுள்கள், இங்கு நோக்கத்தக்கன. முடிவு போகாமையின் - நிறைவேறுவாதலால். பயன் இல்ல - பிரயோசன மில்லாதவை. பயன் சுருங்கிய - அற்பமான பயனுள்ளவை. இல, வேண்டுப- பலவின்பாற் பெயர்கள். வேட்ப என்ற செயவெனெச்சத்தில், வேள் - பகுதி, அ - விகுதி, ப் - எழுத்துப்பேறு. வேண்டுப என்ற பெயரில், ப் - எதிர்கால விடைநிலை. சொலல் - முற்று.

"விரைந்துரையார் மேன்மேலு ரையார் பொய்யாய,
பரந்துரையார் பாரித்துரையார் - ஒருங்கெனைத்துஞ்,
சில்லெழுத்தினலே பொருளடங்கக் காலத்தாற், சொல்லுக
செவ்வியறிந்து" என்னும் ஆசாரக்கோவையை அறிக.

"காவன் மன்னவர் காய்வன சிந்தியார், நாவினும்
முரையார் நவையஞ்சுவார்" என்றார் சிந்தாமணியாரும்.

"கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த, செவ்வி
தெரியாதுரையற்க— ஒவ்வொருகா,
லெண்மையனேனுமரியன் பெரிதம்மா,
கண்ணிலனுள்ளெயர் ப்பினன்" என்பது, நீதிநெறிவிளக்கம்.

இங்கு "குறிப்பறிந்து" என்றது, மேல் 'குறிப்பறிதல்' என்னும் அதி காரத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறும். (௬)

௬௯௭. வேட்பன சொல்லி வினையில
வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

(இ - ள்.) வேட்பன - (பயன்பெரியனவுமாய் அரசன்) விரும்புவனவு மாயகாரியங்களை, சொல்லி - (அவன் கேட்டிலனாயினுஞ்) சொல்லி,—எஞ்ஞான்றும்—, வினை இல - பயனிலவாயவற்றை, கேட்பின் உம் - (தானே) கேட்டாலும், சொல்லா விடல் - சொல்லாது விடுக; (எ - று.)

'வினையில' எனவும் 'கேட்பினும்' எனவும் வந்த சொற்களான், அவற்றின் மறுதலைச்சொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான் வருதலின் 'வினை' என்றும், வறுமைக்காலமும் அடங்க 'எஞ்ஞான்றும்' என்றுங் கூறினார். சொல்லுவனவும் சொல்லாதனவும் வகுத்துக்கூறியவாறு.

இவைநான்குபாட்டானும், சிறப்புவகையாற் கூறப்பட்டது.

(கு - ரை.) பயன் பெரியன-பெரும்பயனுடையவை. தானே-அரசனே. மறுதலைச்சொற்கள் - எதிரானசொற்கள். வினையில என்றதற்கு எதிரானது - 'பயன்பெரியன'என்றது; கேட்பினும் என்றதற்கு எதிரானது-'கேட்டிலனாயினும்' என்றது. வினை யென்னுந் தொழிலின்பெயரால், அதனால் வரும் பயனைக் குறித்தது, காரணவாகுபெயர். சொல்லுவனவும், சொல்லாதனவும் - சொல்லத்தக்கவையும், சொல்லத்தகாதவையும். சாரியை பெற்ற பலவின்பால் வினையாலணையும்பெயர்.

வேட்பன-'அன்'

கேட்பினும், உம்-
உயர்வுசிறப்பு. சொல்லா - ஈறுகெட்ட எதிர்மறை வியங்கோள்வினைமுற்று.

வினையெச்சம். விடல்-

(எ)



௬௯௮. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

(இ - ள்.) இளையர் இன முறையர் என்று - (இவர் எம்மின்) இளையர் என்றும் (எமக்கு) இன்னமுறையினையுடையர் என்றும், இகழார் - (அரசரை) அவமதியாது, நின்ற ஒளியோடு ஒழுகப்படும் - (அவர்மாட்டு) நின்ற ஒளியோடு பொருந்த ஒழுகுதல் செய்யப்படும்; (எ - று.)

ஒளி - உறங்காநிற்கவும் தாம் உலககாக்கின்ற அவர் கடவுள்தன்மை. அதனோடு பொருந்த ஒழுகுதலாவது - அவர் கடவுளரும், தாம் மக்களுமாய் ஒழுகுதல். அவ்வொளியாற் போக்கப்பட்ட இளமையும் முறைமையும் பற்றி இகழ்வராயின் தாமும் போக்கப்படுவர் என்பது கருத்து.

(கு - ரை.) இளையர்-பிராயத்திற் சிறியவர். முறை - உறவு முறைமை. உறங்காநிற்கவும் - தூங்குகையிலும். கடவுள் தன்மை - தெய்வத்தன்மை; "உறங்குமாயினு

மன்னவன் தன்னொளி, கறங்குதெண்டிரை வையகங் காக்கு
மால்'' என்ற சீவகசிந்தாமணியையும்,
ஒளி உலகைக் காவாநிற்கும், என்ற

'மன்னவன் உறங்குமாயினும் அவ
அதன் உரையையும் உணர்க. அவர்
கடவுளரும் தாம்
மக்களுமாய் ஒழுகுதல்-தேவர்முன் மனிதர்போல அரசர்முன்
அமைச்சர் பணிவோடு நடத்தல். போக்கப்படுவர்-அமைச்சுத்
தொழிலினின்று விலக்கப்படுவர். இளையர் -
இளமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் இடை அகரம்
ஐயாயிற்று. இன - இன்ன என்னும் சுட்டடிப்
பெயரெச்சத் தின் தொகுத்தல். இகழார் - முற்றெச்சம்.
'ஒழுகப்படும்' என்பதில், 'ஒழுக' என்னும் வினையெச்சம், தொ
ழிற்பெயர்த்தன்மைபட்டு 'படும்' என்ற வினை முற்றிற்கு
எழுவாயாய் நின்றதெனக் கொள்ளுதல், எளிய வழி. இது
செய் . யுட்கண் வந்த பாவேப்ரயோகம்.
''அறிவறியாப், பிள்ளையேயானுமிழித்துரை யார்'' என்ற

ஆசாரக்கோவை இங்குக் காணத்தக்கது.

(அ)

௬௯௯. கொளப்பட்டே மென்றெண்ணிக்
துளக்கற்ற காட்சி யவர்.
கொள்ளாத செய்யார்

(இ - ள்.) கொளப்பட்டேம் என்று எண்ணி - (அரசனால் யாம்) நன்கு மதிக்கப்பட்டே மென்று கருதி, கொள்ளாத - (அவன்) விரும்பாதவற்றை, செய்யார் —: துளக்கு அற்ற காட்சியவர் - நிலைபெற்ற அறிவினையுடையார்; (எ - று.)

கொள்ளாதனசெய்து அழிவெய்துவார், கொளப்பாட்டிற்குப் பின் தம்மை வேறொருவராகக் கருதுவராகலின், முன்னைய ராதலே கருதி அஞ்சி யொழுகுவாரை 'துளக்கற்ற காட்சியவர்' என்றார்.

(கு - ரை.) கொள்ளாதன - அரசன் விரும்பாதவற்றை. கொளப்பாட்டிற்குப்பின் - அரசனால் தாம் நன்குமதிக்கப்பட்டபின்பு. வேறொருவராக - முன்னினுஞ் சிறந்தவராக; இங்ஙனம் கருதுதல், உலக வியல்பு. துளக்கு அற்ற - சஞ்சலப்படாத. கொள்ளாத - பெயர். துளக்கு - துளங்கு என்னும்



முதனிலை திரிந்த தொழிற்பெயர்: துளங்குதல் - சலித்தல். காட்சியென்னுந் தொழிற்பெயரில், சி - விகுதி. இதில், காணுதல் - அகக்கண்ணின் நோக்கம்.

எ00. பழைய மெனக்கருதிப் பண்பல்ல
செழுதகைமை கேடு தரும்.

செய்யுங்

(இ - ள்.) பழையம் என கருதி - (அரசனுக்கு
யாம்) பழைய மெனக்
கருதி, பண்பு அல்ல செய்யும் - (தமக்கு)
இயல்பல்லாதவற்றைச் செய்யும்,
கெழுதகைமை - உரிமை, கேடு தரும் - (அமைச்சர்க்குக்)
கேட்டினைப் பயக்
கும்; (எ - று.)
அவன் பொறாது செறும்பொழுதின்
அப்பழமைநோக்கிக் கண்ணோ
டாது உயிரை வௌவுதலான், அவன்வேண்டாதன
கெழுதகைமை கேடுதரு மென்றார்.

செய்தற்கு ஏதுவாய

இவை மூன்றுபாட்டானும், பொறுப்பரென்று
அரசர் வெறுப்பன செய்' யற்க என்பது கூறப்பட்டது.
(கு - ரை.) பழையம்-வெகுநாளைப்பழக்கமுள்ளோம்.
இயல்பு அல்லாத
வற்றை - தகாதவற்றை. அவன் - அரசன்.
செறும்பொழுது - கோபித்து
அழிக்கும்பொழுது. கண்ணோடாது -
தாக்ஷிணியப்படாமல். அரசர் வெறுப்
பன - அரசர்வெறுக்குங்காரியங்களை, அல்ல-பெயர்.

'தொழுதகைமையாவது-கூடியதகைமை,' 'தொழு..........உபசருக்கம்' என்பது பிரயோகவிவேகவுரை. "கழி கிழமை செய்யார்" என்ற ஆசாரக்கோவையைக் காண்க. "பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார், கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன், காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரு, மார்வலரு மில்லை யவர்க்கு" என்பது, நீதிநெறிவிளக்கம். (௯௦)

## எக - ஆம்

## அதிகாரம்.—குறிப்பறிதல்.

அஃதாவது - அரசர்கருதியவதனை அவர் கூறாமல் அறிதல்: இது, மன்னரைச்சேர்ந்தொழுகற்கு இன்றியமையாதாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) கருதியவதனை—நினைத்தவிஷயத்தை; சாதிபற்றி, ஒருமையாற் கூறினார். அவர் - அவ்வரசர்கள். 'அவர்கூறாமல் அறிதல்' என்றது, அவர்களது முகம் கண் முதலிய உறுப்புக்களின் குறிப்பினால் அறிதல் என்றவாறு.

இன்றியமையாது - இல்லாமல் முடியாதது, அவசியமானது.

'மன்னரைச்சேர்ந்
தொழுகல்' என்னும் அதிகாரத்தின் பின் 'குறிப்பறிதல்'
என்னும் இவ்வதி
காரத்தை வைத்ததற்குக் காரணம், அரசரையடுத்து
நடத்தற்கு உரிய வகைக
ளுள் குறிப்பறிதல் முக்கியமாக வேண்டியிருத்த
லென்றபடி. மன்னரைச்
சேர்ந்தொழுகற்குக்குறிப்பறிதல் இன்றியமையா
தாதலை, "குறிப்பறிந்து காலங்
கருதி வெறுப்பில, வேண்டுப வேட்பச் சொலல்" எனக்
கீழ் அதிகாரத்திற்
சொல்லிப்போந்தார்; ஆதலால், கீழ்அதிகாரத்தில்
தொகுத்துச்சொல்லப்பட்ட
தொரு பொருளையே சிறப்புப்பற்றி இவ்வதிகாரத்தில்
விரித்துக்கூறுகின்று
ரென்க.
குறிப்பறிதல்என்பதற்கு-குறிப்பைஅறிதலென இரண்டா
ம்வேற்றுமை
த்தொகையாகவாவது, குறிப்பாலறித லென
மூன்றாம்வேற்றுமைத்தொகை

யாதவாவது பதப்பொருள் கொள்க. குறிப்பு - குறித்தல்: 'பு'விகுதிபெற்ற இது - நினைத்த லென்றும், அடையாளப்படுத்த [சுட்டியுணர்த] லென்றும் பொருள்படும்: இது - இங்கே, நினைத்தவிஷயத்தையும், அடையாளத்தையும் உணர்த்துமிடத்து, தொழிலாகுபெயராம்.

எ0௫.

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

(இ - ள்) குறிப்பு - (அரசனாற் குறித்த கருமத்தை, கூறாமை - (அவன்) கூறவேண்டாவகை, நோக்கி - (அவன்முகமானுங் கண்ணானும்) நோக்கி, அறிவான் - அறியும் அமைச்சன்,—எஞ்ஞான்றும் மாறா நீர் வையக்கு அணி- எஞ்ஞான்றும் வற்றாத நீராற் சூழப்பட்ட வையத்து உள்ளார்க்கு ஓர் ஆபரணமாம்; (எ - று.)

ஒப்பறுடையனும் எல்லார்க்கும் அழகுசெய்தலான், 'வையக்கு அணி' என்றார். குறிப்பும், வையமும் - ஆகுபெயர். 'வையத்துக்கு' என்பது, விகாரப்பட்டுநின்றது.

(கு - ரை.) குறித்த - நினைக்கப்பட்ட. கருமம்-தொழில். முகமானுங்கண்ணும் - முகத்தையாவது கண்ணையாவது. இது அமைச்சிய லாதலால், 'அறிவான்'எனப் பொதுப்படக்கூறியதற்கு,'அறியும்அமைச்சன்' எனச் சிறப்பாக இடம்நோக்கி உரைக்கப்பட்டது. எஞ்ஞான்றும் - எந்நாளும்; 'எஞ்ஞான்றும் வற்றாத நீர்' என்றது, கடல். வையத்து - நிலவுலகத்தில். ஒட்ப முடையனாய் - ஞானவொளியையுடையவனாய். நினைத்தலென்னும்பொருள் தருகின்ற'குறிப்பு' என்னுஞ் சொல் - இங்கே நினைத்தகாரியத்தையும், பூமியென்னும்பொருள்தருகின்ற 'வையம்' என்னுஞ் சொல் - இங்கேபூமியிலுள்ளாரையும் உணர்த்துதலால், முறையே தொழிலாகுபெயரும் இடவாகுபெயருமென்க. 'வையத்துக்கு'என்பது, அத்துச்சாரியை தொக்கு, 'வையக்கு' என நின்றது,தொகுத்தலென்னுஞ் செய்யுள்விகாரம்:கீழ்''நிலக்குப்பொறை'' என்றவிடத்துப் பரிமேலழகர் 'நிலக்குஎன்பது - செய்யுள்விகாரம்' என்றதுங் காண்க; தொல்காப்பியத்தில் ''குற்றியலுகரக்கு இன்னே சாரியை'' என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'குற்றியலுகரக்கு-இதற்கு அத்து விரித்து முடிக்க' என்றதும் உணரத்தக்கது: 'மாடத்துக்கு=மாடக்கு என்றல் தொடக்கத்தன, வேண்டியவழி இன்மையின், செய்யுள்விகாரமா மென்க' என்பர், நன்னூல் விருத்தியுரையாசிரியரும். ''மஃகான்புள்ளிமுனத்தேசாரியை'' என்ற தொல்காப்பியஉருபியற்சூத்திரத்தால், மகரமெய்யீற்றுச்சொல் வேற்றுமையுருபோடு புணரும்பொழுது அத்துச்சாரியைபெறு மென்ற விதி அமைந்ததனால், அந்தச் சாரியையில்லாதஇடத்தைஇங்ஙனம் செய்யுள்விகாரத்தின்பாற்படுத்த வேண்டியதாயிற்று. 'வையத்துக்கு' என்றவிடத்தில் 'வையத்திற்கு' என்றும், பிரதிபேதம்உண்டு. அத்துச்சாரியைபோலஇன்சாரியை இன்றியமையாததன் றாதலாலும், இன்சாரியை அத்துச்சாரியைபற்றிவருவதே யாதலாலும், செய்யுள் விகாரமாகக்கொள்ளவேண்டியிடத்தில் 'வையத்திற்கு' என்பது விகாரப்

பட்டதாகக் கொள்வதனினும் 'வையத்துக்கு' என்பது விகாரப்பட்டதாக்கொள்ளுதலே சிறப்பாதல்நோக்குக. தொல்காப்பியவுரையில் 'வடநூலுள் உலகமென்பது இருபொருட்கு முரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட்டொகுதியை புணர்த்தும்வழியும் உரிய பெயரே யாதலின், ஆகுபெய ரன்று' என்று சேனாவரையரும், 'அந்நனம் மக்கட்டொகுதியைபுணர்த்துங்கால் உரியபெயராயேயுணர்த்திற்று: ஆகுபெயரன்று' என்று நச்சினார்க்கினியரும் உரைத்தவற்றாலும், "லோகஸ்து புவநே ஜநே" என்ற வடநூல்மேற்கோளாலும், உலகமென்பது இடத்தை யுணர்த்தும்பொழுதிற் போலவே இடத்திலுள்ளாரை யுணர்த்தும்பொழுதும் ஆகுபெயரன்றி இயற்பெய ராகுதலால், அதன் பரியாயச்சொல்லாகிய 'வையம்' என்பதற்கு இங்கே 'வையத்துள்ளார்' எனப் பொருள்கொண்டதையும் ஆகுபெயரிலன்றி இயற்பெயரின்பாற்படுத்தலுங் கூடும். இனி, 'வையக்கு அணி' என்பதற்கு - உலகத்துக்கு ஓராபரணம்போல விளங்குவான் என்றே உரைப்பினுமாம். அணிபோல்பவனை 'அணி' என்றே கூறியது, உபசாரவழக்கு; "உடையா னரசரு ளேறு" என்றவிடத்தில், ஏறுபோல்வானை ஏறென்றல் உபசாரவழக் காயினாற்போல. இது உவமவுருபு தொக்கு வந்ததனால், தொகையுவமையணி யென்னலாம்; ஆயினும், குறிப்பறிபவனிடத்து அணியின் தன்மையை ஏற்றிக் கூறியதனால், உருவகவணி யென்றலே மரபு. காட்சியணி யெனினும் இழுக்காது. இனி, 'வையம் கணி' எனப்பிரித்து, கூறாமற்குறிப்புநோக்கியறிபவன் உலகத்திலே ஒரு கணியாவான் என்றும் உரைக்கலாம்; கணி - நூல்வல்லவன், சோதிடன், நிமித்திகன். (க)

எ0உ. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(இ - ள்.) அகத்தது - (ஒருவன்) மனத்தின்கண் நிகழ்வதனை, ஐயப் படாது உணர்வானை - ஐயப்படாது [ஒருதலையாக] உணரவல்லானை, தெய் வத்தோடு ஒப்ப கொளல் - (மகனேயாயினும்) தெய்வத்தோடு ஒப்ப மதிக்க; (எ - று.)

நன்கு

உடம்பு முதலியவற்றான்

ஒவ்வானாயினும், பிறர் நினைத்தது உணருந் தெய்வத்தன்மை யுடைமையின், 'தெய்வத்தோடு ஒப்ப' என்றார். (கு-ரை.) ஒருவன் மனத்தின்கண் நிகழ்வதனை - ஒருவனது மனத்திற் பொருந்திய எண்ணத்தை. ஐயப்படாது - சந்தேகப்படாமல். ஒருதலையாக - நிச்சயமாக. மகனேயாயினும் - அவன் மனிதனாகவேயிருந்தாலும். கருவிற் சென்றுபிறத்தல், கண்இமைத்தல், கால்நிலந்தோய்தல், உடம்புவியர்த்தல், மாலைவாடுதல், ஆடைமாசுண்ணுதல், சாந்துபுலர்தல்முதலியன தேவர்க்கு இல்லாமையாலும், மனிதர்க்கு இருத்தலாலும், 'உடம்பு முதலியவற்றான் ஒவ்வானாயினும்' என்றார். ஒவ்வான் - ஒப்பாகமாட்டான். ஐயமாவது - பலதலையாய அறிவு: அதுவோ இதுவோ என ஒன்றில் துணிவுபிறவாமல் நிற்பது; இது, விபரீதவுணர்வுக்கும் உபலக்ஷணம்: அஃதாவது - ஒன்றை மற்றொன்றாக மாறுபடத் துணிந்தறிதல்; இவை, அறிவுக்குக் குற்றமாதலால், விலக்கப்பட்டன.

ஐயப்படாஅது, அலபெடை - செய்யுளோசைநிறைக்க வந்தது; அலகிட்டுக் காண்க: மாத்திரை - மூன்று. அகத்தது - அகம் என்னும் பெயரினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்: அகமென்னும் உள்ளிடத்தின்பெயர், அங்குள்ள மனத்தைக் குறித்தலால், இடவாகுபெயராம். தெய்வம் தைவமென்னும் வடமொழியின் திரிபு. கொளல் 'அல்'ஈற்று உடன்பாட்டுவியங்கோள்; இதற்கு, உலகத்தவரென்றுவது, அரசரென்றுவது தோன்றுஎழுவாய் வருவிக்க. (உ.)

எ0௩. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(இ - ள்.) குறிப்பின் குறிப்பு உணர்வாரை - தம் குறிப்பு நிகழுமாறு அறிந்து அதனற் பிறர்குறிப்பு அறியுந்தன்மையாரை, உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல் - (அரசர்) தம் உறுப்புக்களுள் அவர்வேண்டுவதொன்றனைக் கொடுத்தாயினும் (தமக்குத் துணையாகக்) கொள்க; (எ - று.)

உள்நிகழும் நெறி யாவர்க்குமொத்தலின், பிறர்குறிப்பு அறிதற்குத் தம் குறிப்புக் கருவியாயிற்று. உறுப்புக்களாவன - பொருளும் நாடும் யானை குதிரைகளும் முதலிய புறத்துஉறுப்புக்கள். இதற்கு - 'பிறர்முகக்குறிப்பானே அவர் மனக்குறிப்புணர்வாரை' என்று உரைப்பாரும் உளர்.

இவைமூன்றுபாட்டானும், குறிப்பறிவாரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) தம் குறிப்பு நிகழும் ஆறு அறிந்து - தமது குறிப்பு நடக்கும் விதத்தை அறிந்து. உறுப்பு - அவயவம். உள் நிகழும் நெறி - உடம்பினகத்தே நிகழும் நிலை. கருவி - சாதனம். 'உறுப்புக்களாவன' என்று தொடங்கிய வாக்கியம் - இங்கே உறுப்பெனப்பட்டவை கண் கை கால் முதலிய அகத்துறுப்புக்களல்ல வென்பதைக் காட்டும். செல்வமும் நாடும் சேனைகளும் அரசனுக்கு ஆட்சியங்கங்களாதலால், புறத்துஉறுப்புக்களெனப்பட்டன.

பிறர் முகக்குறிப்பானே - பிறரது முகக்குறிப்பைக்கொண்டு. ஆறுஅங்கங்
களுள் ஓரங்கமாகிய மந்திரிக்குப் பொருள்முதலிய மற்றுஞ்சில அங்கங்களுள்
ஒன்றைக் கொடுத்து இழத்தலால் தற்காலத்தில் உண்டாகின்ற நஷ்டத்தைக்
காட்டிலும்
அதனைப் பெற்றுமகிழ்கின்றஅச்சிறந்த அமைச்சனுல் பிற்காலத்தி
லுண்டாகும் இலாபம் மிகப்பெரிதா மென்பது இக்குறளினுற் பெறப்படுதல்
காண்க. குறிப்பின், இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருளது. கொடுத்தும்,
உம்மை - உயர்வு சிறப்பு. யாது என்ற வினுப்பெயரால், மற்றையங்கங்க
ளெல்லாம் அமைச்சனுகிய அங்கத்தினும் மேம்பட்டனவல்ல வென்பது புலப்
படும். இப்பாட்டை, "உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும், பெற்றி
யார்ப் பேணிக்கொளல்" என முன்வந்த குறளோடு ஒப்பிடுக. (௩)

எ0௪.

குறித்தது கூறுமைக் கொள்வாரொ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

(இ - ள்.) குறித்தது - (ஒருவன்மனத்துக்)

கருதியவ்தனை, கூறுமை -
(அவன்) கூறவேண்டாமல், கொள்வாரொடு -
அறியவல்லாரோடு, ஏனை -

•



மற்றை மாட்டாதார், உறுப்பு ஓர் அனையர் - உறுப்பால் ஒருதன்மையராக
ஒப்பாராயினும், வேறு - (அறிவான்) வேறு; (எ - று.)
'கொள்ளாதார்' என்பதூஉம், * 'அறிவான்'
என்பதூஉம் அவாய்நிலை
யான் வந்தன. சிறந்தஅறிவு இன்மையின் விலங்கு எ
ன்னுங் கருத்தான்,
'வேறு' என்றார்.
(கு - ரை.) மாட்டாதார்-குறிப்பறியமாட்டாதவர்.
இங்கே, 'உறுப்பு'என்
றது, உடம்பின் அவயவங்களை. அறிவான் - அறிவினால்.
வேறு - வேறாவர்.
கொள்ளாதார் - மாட்டாதார். அவாய்நிலை - ஒருசொல்
மற்றொருசொல்லை
வேண்டி நிற்றல்: இக்காரணத்தால் வருவித்துமுடிப்பதனை
வடநூலார் 'அத்
யாஹாரம்' என்பர்; 'அவாய்நிலை - ஒருபதம் தன்
னைமுடிப்பதொரு பதம் இல்
லாதவழி முடிவுபெறாது நிற்றல்' என்றார், தருக்கசங்கிரக

நூலாரும்: "அதிகா
ரத்தா லவாய்கிலதன்றால்,.....இன்னும்பலபல
வேதுவினாலும், மொழிவரு
வித்து முடித்தனர் கொளலே"என்ற
இலக்கணக்கொத்துங் காண்க. இங்கே
'ஏனை' என்பது 'கொள்ளாதார்' என்பதையும்,
'வேறு' என்பது - 'அறி
வான்' என்பதையும் வேண்டிநின்றமை நோக்குக.
விலங்கு - மிருகப்ராய
மானவர். விலங்குகளினும் மனிதர்க்குச் சிறப்பாகவுள்ள
நுண்ணுணர்வு இல்
லாமைபற்றி, விலங்கெனப்பட்டன ரென்க;
"ஜ்ஞாநேந ஹீநஃ பஶுபிஸ்
ஸமாநஃ" என்ற வடநூல்மேற்கோளுங் காண்க:
"விலங்கொடு மக்க ளனைய
ரிலங்குநூல், கற்றாரோ டேனையவர்" என்ற குறளோடு
இதனை ஒப்பிடுக;
அக்குறளினுரையிற் பரிமேலழகர் 'விலங்கின்மக்கட்கு
ஏற்றமாய உணர்வு
மிகுதி காணப்படுவது கற்றார்கண்ணே யாகவின்,
கல்லாதாரும் அவரும்
ஒத்த பிறப்பினரல்லர் என்பதாம்' என்று
உரைத்தவாறே, இங்கு, குறிப்
புணரவல்லார்க்கும் குறிப்புணரமாட்டாதார்க்குங் கொள்க.
குறித்தது - சாதி
யொருமை. உறுப்பு ஒரனையர் -

மூன்றாம்வேற்றுமைத்தொகை. ஆல்-அசை.

எ0டு. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

(இ - ள்.) குறிப்பின் -
குறித்ததுகாணவல்ல(தம்)காட்சியான், குறிப்பு-
பிறர்குறிப்பினை, உணரா ஆயின் -
உணரமாட்டாவாயின்,—உறுப்பினுள் -
ஒருவனுறுப்புக்களுள், கண் - (சிறந்த) கண்கள், என்ன
பயத்த ஓ - (வேறு)
என்னபயனைச்செய்வன? (எ - று.)

முதற்கண் 'குறிப்பு'-ஆகுபெயர். குறிப்பறிதற்கண்
துணையாதற் சிறப்புப்
பற்றி, உயிரது உணர்வு கண்மேல் ஏற்றப்பட்டது.
அக்கண்களாற் பயனில்லை
யென்பதாம்.

இவை யிரண்டுபாட்டானும், குறிப்பறியாரது இழிபு
கூறப்பட்டது.

(கு - ரை.) குறித்தது காணவல்ல தம் காட்சி -
பார்க்கும்படி உத்தேசிக்
கப்பட்ட பொருளைப் பார்த்தற்குவல்ல தமதுபார்வை.

கண் உறுப்புக்களுட்
சிறந்ததாதலை "கண்ணிற்சிறந்த வுறுப்பில்லை,"
"மின்னுமணிப்பூணும் பிற

* ஆயினும்
32





வுறுப்புப்பொன்னே யதுபுனையாக், காணும்
கண்ணொக்குமோ காண்" என்ப வற்றாலும் அறிக;
"ஸர்வேந்த்ரியாணும் நயநம் ப்ரதாநம்" என்பர் வடநூலா
ரும். முதற்கண் குறிப்பு - இக்குறளிலுள்ள 'குறிப்பு'
என்னுஞ்சொல் இரண்டனுள் முதலாவது; அது -
'குறிப்பின்' என்பதிலுள்ளது. குறிப்பிடுதலென்
னும் பொருளையுணர்த்தும் 'குறிப்பு' என்னுந்
தொழிற்பெயர்-இங்கு, குறிப் பிட்டபொருளைக்காணும்
பார்வையை உணர்த்தியதனால், ஆகுபெயராம்; இத
னைத் தொழிலாகுபெயரின்பாற்படுத்துவர்.
துணையாதற்சிறப்பு - துணையாதலாகிய சிறப்பு.
குறிப்பறிகின்றவிஷயத்தில் உயிர்க்குக் கண் சிறந்ததுணை
யாதலால், அவ்வுயிரினது உணர்வைக் கண்ணின்மேல்
ஏற்றி, 'உணரா வாயின் கண் என்னபயத்தவோ' என்றார்;

இது, ஒருபொருளின் வினையை மற்றொருபொருளின்மேல் ஏற்றிய உபசாரவழக்கு. அக்கண்கள்-குறிப்பறிய மாட்டாதகண்கள். இப்பாட்டிலுள்ள 'குறிப்பு' என்னுஞ்சொல் இரண்டனுள் பின்னது ஆகுபெயராதல், இவ்வதிகாரத்து முதற்பாட்டிற் கூறியதனாற் பெறப்படுதலால், இங்கே 'முதற்கண்குறிப்பு - ஆகுபெயர்' என்றார். 'என்னை பயத்தவோ' என்றதில், என்னஎன்றவினா - இன்மைகுறித்துநின்றது; ஓ - அசை: இரக்கமுமாம். பயத்த - பயம் என்பதன்மேற் பிறந்து அன்சாரியை பெறாத பலவின்பாற் குறிப்புமுற்று; அத்து - சாரியை. கண்-பால்பகா அஃறிணைப் பெயராதலால், 'பயத்த'என்னும் பலவின்பால்முற்றைக் கொண்டது.

௭0௬.

அடுத்தது காட்டும் * பளிங்குபோ னெஞ்சம்
கடுத்தது காட்டு முகம்.

(இ - ள்.) அடுத்தது - (தன்னை) அடுத்தபொருளதுநிறத்தை, காட்டும்- (தானே கொண்டு) காட்டும், பளிங்கு போல் - பளிங்குபோல,—நெஞ்சம் கடுத்தது - (ஒருவன்) நெஞ்சத்து மிக்கதனை, முகம் - (அவன்) முகம், காட்டும் - (தானே கொண்டு) காட்டும்; (எ - று.)

'அடுத்தது' என்பது - ஆகுபெயர். 'கடுத்தது' என்பது - கடி என்னும் உரிச்சொலடியாய்வந்த தொழிற்பெயர். உவமை, ஒருபொருள் பிறிதொரு பொருளின் பண்பைக்கொண்டு தோற்றுதலாகிய

தொழில்பற்றிவந்தது.

(கு - ரை.) பொருளது - வஸ்துவினுடைய. பளிங்கு - ஸ்படிகமென்னும் வடசொல்லின்சிதைவு: ஒருவகைக்கண்ணாடி: ஒருவகைக்கல்லுமாம். ஒருவன்நெஞ்சத்து மிக்கதனை - ஒருவனது மனத்தில் மிக்ககுணத்தை. அடுத்த பொருளைக் குறிக்கிற 'அடுத்தது' என்னும் ஒன்றன்பால் வினையாலணையும் பெயர் - இங்கே அப்பொருளின்நிறத்தைக் குறித்ததனால், முதலாகுபெயராம். பலபொருள் குறிக்கும் உரிச்சொல்லாகிய 'கடி' என்பது - இங்கே, மிகுதிப் பொருளை யுணர்த்திற்று; "கடுங்கால்" என்னுமிடத்துப்போல. கடி என்பது- கடு என ஈறு திரிதலை, தொல்காப்பியத்து உரிச்சொலியலில் உரைகாரர் 'கடுந்தேர்', 'கடும்பகல்', 'கடுமான்', 'கடுங்கால்', 'கடுநட்பு', 'கடுஞ்சூள்', 'கடுத்தனள்' என்பனவற்றை உதாரணங்காட்டியதனாலும், 'இவ்வுரிச்சொல்

* பி - ம்: பளிங்கே

## எக - ஆம் அதிகாரம்.—குறிப்பறிதல்

பெரும்பான்மை திரிந்துமிற்கும்' என உரைத்ததனுலும் அறிக. இங்கே தொழிற்பெயரென்றது, வினையாலணையும்பெய ரென்னும் பொருளது; தொழிலைக்குறிக்குஞ் சொல்லாலாகிய பெயராதலால், தொழிற்பெயரெனப் பட்டதென்க: வினையாலணையும்பெயரைத் தொழிற்பெயரென்னும் மரபை, சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியருரையிலும் பலவிடத்துக்காணலாம். பண்பு - குணம். தோற்றுதல் - தோன்றுதல். பளிங்கு தன்னையடுத்தபொருளின் செம்மை முதலியநிறத்தைத் தன்னுள்ளேகொண்டு காட்டுதல்போல, முக மும் தன்னையடுத்த மனத்தின் குணத்தைத் தன்னுட்கொண்டு காட்டுமெனத் தொழில்பற்றியுவமைவந்தமையால், தொழிலுவமையணி. மனம் களிப்புடன் இருந்தால் முகம்மலர்ந்தும், மனம் துயருற்றிருந்தால் முகம்வாடியு மிருத்த லால், "நெஞ்சங்கடுத்தது காட்டுமுகம்" என்றது. "ஒருவன், முகனுரைக்கு முண்ணின்ற வேட்கை", "மூன்னம், முகம்போல முன்னுரைப்பதில்", "அகத்தினழகு முகத்தில்தெரியும்"என்பன, இங்கு அறியத்தக்கன. பளிங்கு அடுத்ததுகாட்டுதலை, "பளிக்கறைப் பவழப்பாவை பரிசெனத் திகழுஞ் சாயல்" என்ற சிந்தாமணியாலும், 'பளிக்குப்பாறையையடுத்த பவழப்பாவை இவளது தன்மை யெனத் திகழுஞ் சாயல்', 'இதற்கு, அடுத்ததுகாட்டும் பளிங்கைப் பவழம் தன் தன்மையாக்கினாற்போல,' என்ற நச்சினார்க்கினிய ருரையாலும், "பளிங்குபோல, மையரிநெடுங்கணேக்கம் படுதலுங் கருகி வந்து, கைபுகிற் சிவந்து காட்டுங் கந்துகம்", "ஈர்ந்தநுண்பளிங்கெனத் தெளிந்த ஈர்ம்புனல், பேர்ந்தொளிர் நவமணி படர்ந்த பித்திகை, சேர்ந்துழிச்

சேர்தூழி நிறத்தைச் சேர்தலான்" என்ற
கம்பராமாயணத்தாலுங் காண்க,

எ0எ. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ
வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) உவப்பின் உம் காயின் உம் - (உயிர் ஒருவனை) உவத்தலா னும் காய்தலானும் உறின், தான் முந்துறும் - தான் (அறிந்து அவற்றின் கண் அதனின்) முற்படடுநிற்கும்: (ஆகலான்), முகத்தின் முதுக்குறைந்தது உண்டு ஒ - முகம்போல அறிவுமிக்கது (பிறிது) உண்டோ? [இல்லை];(எ-று.)

'உயிர்க்கே அறிவு உள்ளது: ஐம்பூதங்களான் இயன்ற முகத்திற்கு இல்லை' என்பாரை நோக்கி, 'உயிரது கருத்து அறிந்து அஃது உவக்குறின் மலர்ந்தும் காய்வுறின் கருகியும் வரலான், உண்டு' என மறுப்பார்போன்று, குறிப்பறிதற்குக் கருவி கூறியவாறு.

(கு - ரை.) உவத்தல் - விரும்புதல், மகிழ்தல். காய்தல் - வெறுத்தல், கோபித்தல். உவத்தலானும் காய்தலானும் உறின் - உவத்தலையாவது காய் தலையாவது அடைந்தால். (ஆனும் - ஆயினும்.) தான் - முகந்தான். அவற் றின்கண் - அவ் விருப்புவெறுப்புக்களை வெளியிடுதலில். அதனின் - அவ் வுயிரினும். ஐம்பூதங்களான் இயன்ற - நிலம் நீர் தீ காற்று வானம்

என்னும் பஞ்சபூதங்களின் சேர்க்கையாலாகிய; இங்கே, பூதவுடம்பின் ஒருறுப்பாகிய என்றபடி. இல்லை - அறிவு இல்லை. அஃது உவக்குறின் மலர்ந்தும் காய்



வுறின் கருகியும் வரலான் - உயிர் மகிழ்ந்தால் தான் மலர்ச்சியடைந்தும் உயிர் வெறுத்தால் தான் வாடியும் வருதலால். உண்டு என மறுப்பார் போன்று - முகத்திற்கும் அறிவு உள்ளது என்று சொல்லி மறுப்பவர்போல. கருவி - இங்கே, முகம். குறிப்பு - மனத்தினுற் குறித்தது. முகத்தின் என்பதற்கு - எல்லைப்பொருளாக, முகத்தைக்காட்டிலும் எனப் பொருள்கொண்டால், முகம்போல அறிவுமிக்கது வேறொன்று உண்டு என்று பொருள்பட்டு, முகமாகியகருவியின்சிறப்பைக் குறைத்திடு மாதலால், அங்ஙனங்கொள்ளாது முகம்போல வென்றே கொண்டார். முதுக்குறைந்தது, பேரறிவுடையது. இவ்வினையாலணையும்பெயரில், முதுக்குறை - பகுதி; இது, ஒருசொல். இதற்கு, முதுக்கு - முதுமை, (கு - பண்பின்விகுதி,) உறைவு - அதில் இருத்தல்; இரண்டுமொழியும் ஒருமொழித்தன்மைப்பட்டது: (அறிவில்) மூத்திருத்தல் [சிறந்திருத்தல்] என்பது பொருள் எனக் காரணங்கூறுவர் ஒருசாரார்; மற்றொருசாரார், முதுமை - வன்மையாகிய அறியாமை, அல்லது, இயல்பிலுள்ள தான பேதைமை: குறைவு-நீங்குதல்; இரண்டுசொல்லும் ஒருசொல்தன்மைப் பட்டு, அறியாமைநீங்குதலென்ற எதிர்மறைப்பொருளால், கூரறிவுக்குஆயிற்று என்பர். ஓ - எதிர்மறை.

பொருளேயுங் காட்டும்.

உம்மைகள் - எண்ணுப்பொருளோடு விகற்பப்

(எ)

எ0௪. முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) (குறையுறுவானும்),—அகம் - (தன்) மனத்தை, நோக்கி - (குறிப்பான்) அறிந்து, உற்றது-(தான்)உற்றஅதனை, உணர்வார்-தீர்ப்பாரை, பெறின்—,—முகம் நோக்கி நிற்க அமையும் - (அவர் தன்முகம்நோக்கும் வகை தானும் அவர்)முகம்நோக்கி (அவ்வெல்லேக்கண்)நிற்க அமையும்; (எ-று.)

'உணர்வார்' எனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினர். அவ்வெல்லே யைக்கடந்து சொல்லுமாயின், இருவர்க்குஞ் சிறுமையாம்: ஆகலின், அது வேண்டா என்பதாம்.

குறையுறுவானியல்பு கூறுவார்போன்று கருவிகூறிய வாறு.

இவைமூன்றுபாட்டானும், குறிப்பறிதற்கருவி முகமென்பது கூறப் பட்டது.

(கு - ரை.) குறையுறுவான் - தான் ஒரு குறையுள்ளவனய் அக்குறை யைத் தீர்க்கும்படி பிறரை வேண்டுபவன். தான் உற்ற அதனை - தான் அடைந்துள்ள

அக்குறையை. நோக்கும்வகை - பார்க்கும்படி. அவர் முகம் நோக்கி - அவர்முகத்துக்கு எதிராக என்றபடி. அவ்வெல்லைக்கண் நிற்க அமையும் - அவ்வளவோடுநிற்றலே போதும். அறிந்து தீர்ப்பா ரென்ற பொருளில் 'உணர்வார்' என்றது, காரியத்தைக் காரணமாகக்கூறிய உபசார வழக்கு; அறிதல் - காரணமும், தீர்த்தல் - காரியமுமாம். அவ்வெல்லையைக் கடந்து சொல்லுமாயின் - அவ்வளவோடுநில்லாமல் தன்குறையை எடுத்து வாயினால் வெளிப்படையாகக்

கூறுவனால். இருவர்க்கும் சிறுமையாம் -

எக - ஆம் அதிகாரம்.—குறிப்பறிதல்

உருரு குறைவேண்டுவானுக்கும்

குறைதீர்ப்பானுக்கும் கௌரவக்குறைவாம். குறை வேண்டுவானுக்குச் சிறுமை - தன்குறையை எடுத்துக்கூறும்பொழுது உண் டாகும் மானக்கேடும், குறைதீர்ப்பானுக்குச் சிறுமை - குறிப்பறிந்துசெய்யாமையாலாகும் பெருமைக்குறைவுமாம். "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள" என்ற இடத்தில் 'யான் வறிய னென்று சொல்லும்

இழிமொழியை ஒருவன் தன்னிடஞ்சொல்லவேண்டாத படி
முன்னமே அவன்குறிப்பறிந்துகொடுக்குந் தன்மை
உயர்குடிப்பிறந்தாரிடத்தே உண்டு' என்று
ஒருரைகொண்டதனால், குறிப்பறிந்து உதவாமை
குறைவாதல் அறிக. அது வேண்டா -
சொல்லவேண்டுவதில்லை. 'பெறின்' என்றது,
குறிப்பறிபவரது பெறுதற்கு அருமை தோன்ற நின்றது.
'முகநோக்கி,' 'அகநோக்கி' எனவும் பாடம் உண்டு.

(அ)

எ0௯. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) கண்ணின் வகைமை உணர்வார் பெறின் - (வேந்தர் தம்) நோக்குவேறுபாட்டின் தன்மையை அறியவல்ல அமைச்சரைப் பெறின், பகைமை உம் கேண்மை உம் கண் உரைக்கும் - (அவர்க்கு மனத்துக்கிடந்த) பகைமையையும் (ஏனைக்) கேண்மையையும் (வேற்றுவேந்தர் சொல்லிற்றில ராயினும்) அவர்கண்களே சொல்லும்; (எ - று.)

இறுதிக்கண் 'கண்' - ஆகுபெயர். நோக்குவேறுபாவன-வெறுத்த நோக்கமும் உவந்தநோக்கமும். உணர்தல் - அவற்றை அவ்வக்குறிகளான் அறிதல்.

(கு - ரை.) தம் நோக்கு வேறுபாடு-தமது பார்வை விருப்புவெறுப்புக் காலங்களில் மாறுபடுதல். அவர்க்கு -

அம்மந்திரிகளுக்கு. கிடந்த - பொருந் தின. ஏனை - மற்றை. கேண்மை - நட்பு. வேற்றுவேந்தர் - அயலரசர். சொல்விற்றிலர் - சொல்லாதொழிவர். அவர்கண்கள் - அவ்வயலரசருடைய கண்கள். சொல்லும் - வெளியிடும். இறுதிக்கண் 'கண்' - கண் என்னுஞ்சொல் இரண்டனுள் பின்நினது; 'கண்ணின்' என்பதி லுள்ளது. அது, கண்ணினதுபார்வையைக் குறித்ததனால், முதலாகுபெயராம். வெறுத்த நோக் கம் - வெறுப்பைக்காட்டும் பார்வை. உவந்த நோக்கம் - விருப்பைக்காட்டும் பார்வை. அவற்றை - வெறுப்பு விருப்புக்களை. அவ்வக்குறிகளான் - அதற்கு உரிய அடையாளங்களால். (ஒருவர்க்கொருவர் யோகக்ஷேமசமாசாரங்களைக்) கேட்டலென்கிற காரணத்தால், கேண்மை யென்பது - நட்புக்குப் பெயராம்; இதனை, வினைப்பகுதியின்மேல் வந்த பண்புப்பெய ரென்னவேண்டும். கண் உரைக்கும்-பேசாதது பேசுவதுபோலச் சொல்லப்பட்டது; "கேட்குநபோலவும் கிளக்குநபோலவும், இயங்குநபோலவும் இயற்றுநபோலவும், அஃறிணை மருங்கினும் அறையப்படுமே" [நன் - பொது - ருஅ] என்பது காண்க: அச் சூத்திரவுரையில் இதுவே உதாரணங் காட்டப்பட்டுள்ளது; "வாராமரபின வரக்கூறுதலும், என்னுமரபின எனக்கூறுதலும், அன்னவையெல்லாம் அவற்

றவற்றியலான், இன்னவென்னுங் குறிப்புரையாகும்" என்றார் தொல்காப்பியனாரும்: இது, மரபுவழுவமைதி.

(க)

எகo. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற.

(இ - ள்.) நுண்ணியம் என்பார் - (யாம்) நுண்ணறிவுடையே மென்றிருக்கும் அமைச்சர், அளக்கும் - (அரசர்கருத்தினை) அளக்கும், கோல்-கோலாவது,—காணும் கால் - ஆராயுமிடத்து, கண் அல்லது பிற இல்லை-(அவர்) கண் அல்லது பிற இல்லை; (எ - று.)

அறிவின் நுண்மை, அஃதுஉடையார்மேல் ஏற்றப்பட்டது. இங்கிதம் வடிவு தொழில் சொல் என்பன முதலாகப் பிறர்கருத்தளக்கும்அளவைகள் பல: அவையெல்லாம் முன் அறிந்தவழி அவரான் மறைக்கப்படும்; நோக்கம் மனத்தொடுகலத்தலான் ஆண்டுமறைக்கப்படாது என்பதுபற்றி, அதனையே பிரித்துக்கூறினார். இனி, 'அலைக்குங் கோல்' என்று பாடமோதி, 'நுண்ணியமென்றிருக்கும் அமைச்சரை (அரசர்) அலைக்குங் கோலாவது கண்' என உரைத்து, தம்வெகுளிநோக்கால் அவர்வெகுடற்குறிப்பறிக வென்பது கருத்தாக்குவாரும் உளர்.

இவையிரண்டுபாட்டானும், நுண்கருவி நோக்கு

என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) கோல் - அளவுகோல்.
அவர்கண்ணல்லது - அரசருடைய
கண்ணன்றி. அறிவின்நுண்மை அஃதுஉடையார்மேல்
ஏற்றப்பட்டது-பண்
பின்தன்மையைப் பண்பியின்மேல் ஏற்றிய உபசாரவழக்கு.
நுண்மை - நுட்
பம், சூக்ஷ்மம். அஃது உடையார் - அறிவுடையவர். வடிவு
- ஆகாரம். முன்
"உற்ற நோய் நீக்கி" என்ற குறளி னுரையிற் பரிமேலழகர்
'மக்களான்வரு வனவற்றை அவர்குணம் இங்கிதம் ஆகாரம்
செயல் என்பனவற்றால்
அறிந்து' என்றும், 'இங்கிதம் - குறிப்பால்
நிகழும் உறுப்பின்தொழில்; ஆகா ரம் - குறிப்பின்றி நிகழும்
வேறுபாடு' என்றும் உரைத்தவை, இங்கு உணரத் தக்கன.
ஒருவன் அறியாமலே அவனிடத்துநிகழும் முகவேறுபாடு
முதலியன - ஆகார மென்றும், புத்திபூர்வமாகச் செய்யும் கை
கண் முதலிய அவயவங்களின் சைகை - இங்கித மென்றும்
வடநூலாரும் வேறுபாடு கூறுவர். முதலாக என்றதனால்,
குணத்தையுங் கொள்க. அளக்கும் - ஆராய்ந்து அறியும்.
அளவை - அளக்குங்கருவி. முன் அறிந்தவழி அவரால்
மறைக்கப் படும் - தம்குறிப்பைப் பிறர் அறியவந்துளரென்று
முன்னமே ஒருவர்க்குத் தெரிந்தால் அவரால் அவை
மறைக்கப்படுதல் கூடும். நோக்கம் - பார்வை.
மனத்தொடுகலத்தல் - மனத்தோடு ஒற்றுமைப்பட்டிருத்தல்.

ஆண்டு - அவ் வாறு: நோக்கம் மனத்தொடுகலந்த அப்போதி எனினுமாம். அதனையே - நோக்கத்தையே. அலைக்கும் - வருத்தும், சஞ்சலப்படுத்தும். தம்வெகுளி நோக்கால்-தம்கண்ணின் கோபப்பார்வையால். அவர் வெகுடற்குறிப்பு-அவரது கோபக்கருத்து. நுண்கருவி - குறிப்பறிதற்கு நுட்பமான சாதனம். கண் ணினிடத்து அளவுகோலின் தன்மையை

ஏற்றியதற்கு ஏற்ப, அரசர்கருத்தி



னிடத்து நிலத்தின் தன்மையை ஏற்றிக்கூறுமையால்,

ஏகதேசவுருவகவணி.

காணுங் கால் - பெயரெச்சத்தொடர்; 'கண்டக்கால்' என்பதுபோல ஒரு

சொல்அன்று. கண்ணல்லது பிற இல்லை - இரண்டு எதிர்மறைமுகத்தாற்

கூறினது, வற்புறுத்தும்பொருட்டென்க. பிறருரைக்கு 'என்பாரை' என்

னும் இரண்டனுருபு தொக்க தென்க.

(௧0)

எஉ - ஆம்

அதிகாரம்.—அவையறிதல்.

அஃதாவது-அரசனோடுஇருந்த அவையினது
இயல்பை அறிதல். காரி
யஞ் சொல்லுங்கால் அவன்குறிப்பறிதலேயன்றி இதுவும்
வேண்டுதலின்,
இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) அவை - சபை; ஸபா என்னும்
வடசொல்லின் திரிபு.
அவன் - அரசனுடைய. இதுவும் - அவையறிதலும்.
இஃது - அவையறி
தல். அதன்பின் - குறிப்பறிதலின்பின்னே.
குறிப்பறிதலையடுத்து அவை
யறிதலைவைத்த அதிகாரமுறைமைக்குக் காரணம்,
மன்னரைச்சேர்ந்து ஒழுகு
வார்க்கு இரண்டும் அவசியம்வேண்டியிருத்தல். அவை
யென்பது - சபை
யிலுள்ளாரது தன்மையைக் குறித்ததனால்,
இருமடியாகுபெயர்.

எகக. அவையறிந் தாராய்ந்து சொல்லுக
சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(இ - ள்.) சொல்லின் தொகை - சொல்லின்
குழுவினை, அறிந்த—,
தூய்மையவர்-தூய்மையினையுடையார், (தாம் ஒன்று
சொல்லுங்கால்), அவை
அறிந்து - (அப்பொழுதை) அவையினை அறிந்து,

ஆராய்ந்து சொல்லுக—.

'சொல்லின் குழு' எனவே, செஞ்சொல் இலக்கணைச்சொல் குறிப்புச் சொல் என்னும் மூவகைச்சொல்லும் அடங்கின. தூய்மை - அவற்றுள் தம க்கு ஆகாதன ஒழித்து ஆவன கோடல். 'அவை' என்றது, ஈண்டு அதன் அளவை; அது - மிகுதி ஒப்பு தாழ்வு என மூவகைத்து. அறிதல் - தம் மொடு தூக்கி அறிதல். ஆராய்தல் - 'இவ்வவைக்கண் சொல்லுங் காரியம் இது: சொல்லும் ஆறு இது: சொன்னால் அதன்முடிவு இது' என்று இவை உள்ளிட்டன ஆராய்தல்.

(கு - ரை.) சொல்லின் குழு - சொற்களின் கூட்டம். தூய்மை-பரிசுத்த குணம். அப்பொழுதை அவை - அச்சமயத்திலுள்ள சபையாரது தன்மை.

செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல் என்பவற்றை, முறையே, வடநூலார் வாசகம், லக்ஷகம், வ்யஞ்சகம் என்பர்; அச்சொற்கள் பொருளை யுணர்த்தும் வகை - அபிதா லக்ஷணை வ்யஞ்ஜநாவ்ருத்தி எனப்படும்: பிரயோக விவேகவுரையில் 'இனி அலங்கார நூலார் அபிதை இலக்கணை வியஞ்சனாவிரு

த்தி என மூன்றுவகையாக்குவர்: அவர்மதம்பற்றிப் பரிமேலழகரும் "சொல்லின் தொகையறிந்த தூய்மையவர்" என்னுந் திருவள்ளுவர்குறளுள் செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல் என்பர்' என்றதுங் காண்க.

செஞ்சொல் - வெளிப்படைச்சொல்; உரியபொருள் தருவது: நிலம், நீர் உருக்கு

திருக்குறள்

என்றாற்போல்வன. இலக்கணைச்சொல்-ஆக்கச்சொல்; உரியபொருளைவிட்டு அப்பொருளோடு சம்பந்தப்பட்ட பிறிதொருபொருளை புணர்த்துவது: ஊர் அடங்கிற்று என்பதில் ஊர் என்பது - ஊரார்களை உணர்த்துதல் போல்வன. குறிப்புச்சொல் - வெளிப்படையாலன்றிக் குறிப்பினாற்பொருளுணர்த்துஞ் சொல்; "உவர்க்கடலன்ன செல்வர்" என்பது - பிறர்க்குப் பயன்படாத செல்வமுடைய லோபிகளையும், "ஐவரையடைத்த முனி" என்பதில், ஐவர் என்பது - ஐம்பொறிகளையும் உணர்த்துதல் போல்வன. அவற்றுள் - அச் சொற்களுள். ஆவனகோடல் - உபயோகமாகுபவற்றைக் கொள்ளுதல். ஈண்டு - இங்கு. தம்மினும் மேம்பட்ட சபை, தமக்குச்சமமான சபை, தம்மினுக்தாழ்ந்த சபை எனச் சபையின் அளவு மூன்றுவகையுள்ளதாம். தம்மொடு தூக்கி - தமது அளவோடு

ஒப்பிட்டுப்பார்த்து. இவ்வவைக்கண் - இந்தச்சபையிலே. சொல்லும் ஆறு - சொல்லும் விதம். அதன்முடிவு இது - அதனால்வரும்பயன், இன்னது. உள்ளிட்டன - முதலியவை. "உண் பொழுது நீராடி யுண்டலும்" என்பதில், 'நீராடி' என்பதுபோல, இங்கு 'ஆராய்ந்து' என்ற வினையெச்சம் - ஆராய்ந்தே சொல்லவேண்டுமெனத்தேற் றப்பொருள் தருமாறு காண்க. தொகை - தொகுதி. "தொகைபடுசெஞ்சொ லிலக்கணச்சொல்லே சூழ்ந்திடுங்குறிப்புச்சொன் மூன்றின், வகையறிந்துயர்ந்தோ ரொத்தவர் தாழ்ந்தோர் மருவுமூன் றவையுமாராய்ந்து, தகையறவுணர்ந்தோ ரவையின் முந்துரையார் சமத்தி னெவ்வாற்றினுங்கிளப்பார், நகைபடு தாழ்வி னொன்றையு மொழியார் நவைபடாச் சொற்பொருளாய்ந்தோர்" என்ற விநாயகபுராணம், இக்குறளின் பரிமேலழகருரையை அடியொற்றியது.

எகஉ.

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர்.

(இ - ள்.) சொல்லின் - சொற்களின், நடை - நடையினை, தெரிந்த - ஆராய்ந்தறிந்த, நன்மையவர் - நன்மையினையுடையார்,—(அவைக்கண் ஒன்று சொல்லுங்கால்), இடை தெரிந்து - (அதன்) செவ்வியை ஆராய்ந்து அறிந்து, நன்கு உணர்ந்து - (வழுப்படாமல்)மிகவுந்தெளிந்து, சொல்லுக—; (எ - று.)

சொற்களின் நடையாவது - அம்மூவகைச்சொல்லும்,செம்பொருள் இலக் கணைப்பொருள் குறிப்புப்பொருள் என்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி-கேட்டற்கண் விருப்புடைமை. வழு-சொல்வழுவும், பொருள்வழுவும்.

இவையிரண்டுபொட்டானும்,ஒன்றுசொல்லுங்கால்அவையறிந்தேசொல்ல வேண்டுமென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) நடை - போக்கு; பொருள்தரும்வகை. நன்மை - நல்லறிவு. அவைக்கண் - சபையில். அதன் - அந்தச் சபையின். செவ்வி - உரியசமயம் பக்குவமானநிலைமை. வழு - தவறு. தெளிந்து - நிச்சயித்து. செம்பொருள்,

இலக்கணைப்பொருள், குறிப்புப்பொருள் என்பவற்றை, முறையே, வடநூலார் வாச்யம், லக்ஷ்யம், வ்யங்க்யம் என்பர். செஞ்சொல் முதலியவற்றால் முறையே உணர்த்தப்படும் பொருள் செம்பொருள் முதலியனவாகும். பயக்



கும் ஆறு - தரும் விதம். கேட்டற்கண் விருப்புடைமை - தாம்சொல்லும் வார்த்தையைக் கேட்பதில் விருப்பமுடைத்தாயிருத்தல். சொல்வழு - இலக்கணப்பிழைகள். பொருள்வழு - குன்றக்கூறல் முதலியன.

(உ)

எகங. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில்.

(இ - ள்.) அவை அறியார் - அவையினது அளவை அறியாது, சொல் லல்-(ஒன்று)சொல்லுதலை, மேற்கொள்பவர்-தம்மேற்கொள்வார், சொல்லின் வகை அறியார் - அச்சொல்லுதலின் கூறுபாடும் அறியார்: வல்லதூஉம் இல்- (கற்று) வல்ல கலையும் (அவர்க்கு) இல்லை; (எ - று.)

அம்மூவகைச்சொற்களால் வருஞ் சொல்லுதல்வகைமை கேட்பாரது உணர்வுவகைமைபற்றி வருதலான் 'சொல்லின் வகை யறியார்' என்றும், அஃது அறியார் யாதும்அறியா ரென்று எல்லாரானும் இகழப்படுதலின் 'வல் லதூஉ மில்' என்றுங் கூறினார்.

இதனால், அவையறியாக்கால் வருங் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) சொல்லுதலைத் தம்மேற்கொள்வார் - சொல்ல உடன்பட்டுத் தொடங்குபவர். கூறுபாடு - வகை. கலை - கல்வி. கேட்பாரது உணர்வு வகைமை-தமதுசொல்லைக்கேட்குஞ் சபையாரது அறிவுவேறுபாடுகள். 'சொல் லுதல்வகைமை கேட்பாரது உணர்வுவகைமைபற்றி வருதலான், சொல்லின் வகையறியார் என்று கூறினார்'

- பேசுந்திறம் கேட்பவரறிவின் திறத்துக்கு ஏற்றபடியே பயன்படுதலால், கேட்குஞ்சபையின் இயல்பை யறியாதவர் சொல்லுந்திறமறியாதவரேயாவ ரென்க. அஃது அறியார் - அதனையறியாதவர்; அவையையறியாதார். அவையறியாக்கால் - சபையினியல்பை அறியா விட்டால். 'அறியார்' என்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது - எதிர் மறைத்தெரிநிலை முற்றெச்சம், பின்னது - முற்று. வல்லதூஉம் - இன்னிசை யளபெடை. உம்மை - இறந்தது தழுவியது. (௩)

௭௧௪.

ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(இ - ள்.) ஒளியார்முன் - (அறிவால்) ஒள்ளியார் அவைக்கண், ஒள்ளியர் ஆதல்-(தாமும்) ஒள்ளியராக: வெளியார் முன்- (ஏனை) வெள்ளைகளவைக் கண், (தாமும்), வால் சுதை வண்ணம்-வாலிய சுதையின் நிறத்தை, கொளல்- கொள்க; (எ - று.)

'ஒள்ளியார்' என்றது - மிக்காரையும், ஒத்தாரையும்; அது,விகாரத்தால் 'ஒளியார்' என நின்றது. ஒள்ளியராதல் - தம்நூலறிவும் சொல்வன்மையுந் தோன்றவிரித்தல். அவையறியாத புல்லரை 'வெளியார்' என்றது, வயிரமில் மரத்தை 'வெளிறு'என்னும் வழக்குப்பற்றி. அவர்

மதிக்கும்வகை அவரினும் வெண்மையையுடையராக என்பார், 'வான்சுதைவண்ணங்கொளல்' என்றார்.

அவையளவறிந்தார் செய்யுந் திறம், இதனால் தொகுத்துக்கூறப்பட்டது, முன்னர் விரித்துக் கூறுப.

33



(கு - ரை.) அறிவால் ஒள்ளியார் அவைக்கண் - அறிவினால் ஒளியை யுடையவரது சபையில்; இஃதே, ஒளி-சிறப்பு. ஒள்ளியர் ஆக-நன்றாகப்பேசி வெளிப்பட்டு விளங்குபவராகுக. வெள்ளைகள்-அறிவிலாதார். வாலிய சுதை யின்நிறத்தைக்கொள்க-வெண்ணிறமான சுண்ணாம்பின் தன்மையைக் கொண் டிருக்கக்கடவர்: என்றது; வான்சுதை வண்ணமாகிய வெண்மையை யுடைய ராகுக என்றபடி; அறியாமையை மேற்கொள்ளக்கடவர் என்பதாம். வெண்மை- அறிவின்மை: "வெண்மை யெனப்படுவ தி யாதெனி னொண்மை, யுடையம் யாமென்னுஞ் செருக்கு" என்னுங் குறளில், 'வெண்மை' என்பதற்கு - புல் லறிவுடைமை யென்றும், அறிவுமுதிராமை யென்றும் பொருள் கூறுமாறு உணர்க. மிக்கார் - தம்மினும் மேம்பட்டவர். 'அது' - ஒள்ளியார் என்பது. நூலறிவு-சாஸ்திரஞானம். சொல்வன்மை - பேசுந்திறம். தோன்ற-வெளிப் பட. விரித்தல் - வெளியிடுதல்; பேசிவிளக்குதல். 'அவையறியாத' என்ப தற்கு - மேழ்க்கூறிய நூலறிவு சொல்வன்மை என்னும்அவற்றை யறியாத என்றாவது, சபையின்தன்மையை யறியாத என்றாவது பொருள்கொள்க. புல்லர் - அற்பர்: சிறப்பில்லாதவர். வெளியார் என்பது - வெள்ளியா ரென் னும் பலர்பாற்பெயரின் தொகுத்தல். வயிரம் - உள்ளீடு. உள்ளீடில்லாத மரம், வெளிற்றுமர மெனப்படும். அவர் மதிக்கும்வகை - அவ்வறிவிலாதார் கொண்டாடும்படி. அறிவில்லார்க்குத் தம்மினும் அறிவில்லாரைக் கண்டாற் கொண்டாட்ட மாதலால், 'அவர்மதிக்கும்வகை அவரினும்

வெண்மையுடைய ராக' என்றார். முன்னர் - முன்னே; அடுத்த ஆறுசெய்யுட்களில். கூறப்படுவர். முன் - இங்கே, இடமுன். ஆதல் - தல்விகுதிபெற்ற வியங்கோள். "இன்மையரிதே வெளிறு," "மேனியிற்காட்டி வெளுத்ததே", "விளையுமாற்ற நின் திருவடிவினு மிக வெள்ளையாகியது", "வெண்மையில்லை பல் கேள்வி மேவலால்", "வெள்ளியையாதல் விளம்பினை", "வெள்ளைமை கலந்த நோக்கின்", "வெண்மையுடையார் விழுச்செல்வ மெய்தியக்கால்" என்ற இடங்களில், வெண்மையென்பது - பேதைமையெனப் பொருள்படுதல் காண்க. சிந்தாமணியில், உதிரம் நீங்கிய உடல் "வெளிற்றுடல்" எனப்பட்டவாறும், குற்றமில்லாத நூற்கேள்விகளை யுடையவன் "வெளிறி லாக்கேள்வியான்" எனப்பட்டவாறுங் காணத்தக்கன. பொருள்நயமில்லாத சொல், வெளிற்றுரை யெனப்படும். சிலப்பதிகாரத்தில் "வெள்ளைக்கோட்டி" என்பது - பயனில் சொற் பேசுஞ் சபை யென்றும், மணிமேகலையில் "வெள்ளைமகன்" என்பது - பயனில்லாத சொல்லை யுடையவனென்றும் பொருள்படுதலும் உணர்க. வால் + சுதை = வான்சுதை; நிலைமொழியீற்று லகரம் வலிவரச் சிறுபான்மை னகரமாய்த் திரிந்தது: [இதனை "குறில்செறியா லள" என்னுஞ் சூத்திரத்து 'பிற' என்றதனால் அமைத்துக்கொள்க.] சுதை, வண்ணம் - ஸுதா, வர்ணம் என்ற வடசொற்களின் திரிபு. 'வண்ணம் என்பது - இயற்சொல்; வருணம் என்பது - வடமொழித்திரிபு' என்பது -

நச்சினர்க்கினியர்கொள்கை. வான் சுதை வண்ண மென்பது-வெண்மையை யுணர்த்தி, அது அறியாமையைக் குறித்தது: "எட்டிஞேடிரண்டு" என்

•

ஏஉ - ஆம் அதிகாரம்.—அவையறிதல்

உ௫௬

பது - பத்தையுணர்த்திப் பக்தியைக் குறித்தல்போல; இப்படிப்பட்டதை, வடநூலார் 'லக்ஷிதலக்ஷணை' என்பர். அறியாமையை மேற்கொள்ளுக என் னுங்கருத்தை 'வான்சுதைவண்ணங் கொளல்' என வேறுவகையாக் கூறியத னல், இது - பிறிதினவிற்சியணி.

(ச)

எகரு. நன்றென்ற வற்றுள்ளு நன்றே

முதுவருண்

முந்து கிளவாச் செறிவு.

(இ - ள்.) (ஒருவர்க்கு), நன்று என்றவற்றுள் உம்-(இது) நன்று என்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்க ளெல்லாவற்றுள்ளும், நன்றே—: முதுவருள் - (தம்மின்)மிக்காரவைக்கண், முந்து - (அவரின்)முற்பட்டு, கிளவா - (ஒன்றனைச்) சொல்லாத, செறிவு - அடக்கம்; (ஏ - மு.)

தம்குறைவும் அவர்மிகுதியும் முந்துகிளந்தாற் படும் இழுக்கும் கிளவாக்கால் எய்தும் நன்மையும் அறிந்தே அடங்கினமையின், அவ்வடக்கத்தினை

'நன்றென்றவற்றுள்ளு நன்று' என்றார். முன்கிளத்தலையே விலக்கினமை யின், உடன்கிளத்தலும் பின்கிளத்தலும் ஆம் என்பது பெற்றாம்.

இதனான், மிக்காரவைக்கண் செய்யுந் திறம் கூறப்பட்டது.

(கு - ரை.) குறைவு - அறிவின்குறைவு.
நன்று-நல்லது. அவரின் முற்

பட்டு - அவர்பேசுதற்கு முந்தி. மிகுதி - உயர்வு.
முந்துகிளந்தால் படும் இழுக்கு-அவர்பேசுதற்குமுன்னே
தாம் பேசினால் உண்டாகுங் குற்றம். கிளவாக்

கால் எய்தும் நன்மை - முந்திப்பேசாவிடின் உளதாகும்
நன்மை. முன்கிளத்

தல் - முந்திப்பேசுதல்; உடன்கிளத்தல் - உடனேபேசுதல்.
'நன்று' என்ற

சொல் இரண்டனுள், முன்னது - ஒன்றன்பாற் குறிப்பு
வினையாலணையும்

பெயர்; பின்னது - முற்று. உம்மை -
முற்றுப்பொருளோடு உயர்வுசிறப்புப்

பொருளு முடையது. ஏ-தேற்றம். முதுவர்-முதுமையுடையோர்; முதுமை - இங்கே, மேன்மை. முந்து - இடைச்சொல்; வினைப்பகுதியே முந்தி யென வினையெச்சப்பொருள்பட்ட தென்னலுமாம். (ரு)

எகரு. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(இ

ஆற்றின்

- ள்.) (வீடெய்தற்பொருட்டு நன்னெறிக்கண் நின்றான் ஒருவன்), - அந்நெறியினின்றும், நிலை தளர்ந்து அற்று - நிலைதளர்ந்து

வீழ்ந்தாலொக்கும்: வியல் புலம் - அகன்ற நூற்பொருள்களை, ஏற்று - உட்கொண்டு, உணர்வார் முன்னர் - (அவற்றின் மெய்ம்மை) உணர வல்லாரவைக்கண், (வல்லானொருவன்), இழுக்கு - சொல்லிழுக்குப்படுதல்; (எ-று.)

நிலைதளர்ந்து

வீழ்தல்-உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காத்து ஒழுகியான் பின் இழுக்கிக் கூடாவொழுக்கத்தனாதல். பயனிழத்தலேயன்றி இக

ழவும்படுமென்பதாம்.

இதனான், அதன்கண் இழுக்கியவழிப் படுங் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) வீடு எய்தற்பொருட்டு-முத்திபெறுதற்காக. நல்நெறிக்கண்-நல்லவழியில்: சந்மார்க்கத்தில்; என்றது, யோகம் ஞானம் பக்தி பிரபத்தி முத

லிய முத்திபெறுதற்கு உரிய உபாயங்களுள் ஒன்றில் என்றபடி. நிலைதளர்ந்து வீழ்ந்தால் ஒக்கும் - உறுதிநிலை சோர்ந்து தவறினால் அதுபோலும். அகன்ற நூற்பொருள்களை உட்கொண்டு - பரந்த சாஸ்திரார்த்தங்களைக் கிரகித்து. மெய்ம்மை - உண்மையான கருத்து. "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்பது அறிவு" ஆதலால், 'உணர்வார்' என்பதற்கு - மெய்ம்மையுணரவல்லா ரென்று பொருள்கூறினர். சொல்இழுக்கு - சொற்குற்றம்; "யாகாவாராயினும் நாகாக்க காவாக்கால், சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" என்ற குறளில் 'சொல்லிழுக்கு' என்பதற்கு-'சொல்லின்கண் தோன்றுங் குற்றம்' எனப் பொருள் விரித்துஉரைத்தது அறிக. உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காத்து ஒழுகியான்-தனது வலிய அறிவாகிய அங்குசத்தால் ஐம்பொறிகளாகிய யானையைந்தையும் தம்தமக்கு உரிய புலன்களின்மேற் செல்லவொட்டாதபடி தடுத்துநடத்தவன்; பஞ்சேந்திரியநிக்கிரகஞ்செய்து நல்லொழுக்கத்தில் நின்றவன். "உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்,வரனென்னும் வைப்பிற் கோர் வித்து" என்பது, நீத்தார்பெருமை யென்னும் மூன்றும்அதிகாரத்தின் நான்காவது குறள். உரனைத் தோட்டியென்றதற்கு ஏற்ப, ஓரைந்து - யானைகளெனக் கொள்ளப்பட்டது. ஐம்பொறிகள் - மெய் வாய் கண் மூக்குச் செவி யென்பன; அவற்றிற்கு உரிய புலன்கள் - முறையே ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை யென்பன. பின் இழுக்கி - பின்பு அந்நல்லொழுக்கத்தினின்று தவறி. கூடாவொழுக்கத்தனாதல் - தனது துறவறவழிக்குத் தகாத காமவழியொழுகுதலை யுடையவனாதல். பயனிழத்தலேயன்றி இகழவும்படும் - பயனை யிழப்பதுமாத்திரமே யல்லாமற் பலராலும் இகழ்ச்சிசெய்யவும்படு மென்பதாம். ஒழுக்கந்தவறியவனுக்குப் பயனிழத்தல், தான் குறித்த பிரயோசனமாகிய முத்தியைப் பெறாமை; சொல்தவறியவனுக்குப் பயனிழத்தல் - ஓரரசனிடத் துத் தான் விரும்பிய பிரயோசனமாகிய காரியம்

கைகூடப்பெருமை. அதன் கண் இழுக்கியவழிப் படும் குற்றம் - தன்னினும்மேலோர்சபையிற் சொல் தவறிஞலுண்டாகுங் குற்றம். தளர்ந்து - தளர்ந்தால் என்னும் எச்சத்தின் திரிபு. வியல் - விசாலமென்னும் பொருளுணர்த்துவதோர் உரிச்சொல்; "வியலென்கிளவி யகலப்பொருட்டே" என்பது, தொல்காப்பியம். வியல் + புலம் = வியன் புலம்: நிலைமொழியீற்று லகரம் சிறுபான்மை னகரமாயிற்று: அகல் + புனம் = அகன்புனம் என்பதிற் போல. ஏற்று, ஏல் - பகுதி. உவமையணி.

(சு)

எ௧௭. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

(இ - ள்.) கசடு அற - வழுப்படாமல், சொல் தெரிதல் வல்லார் அகத்து - சொற்களை ஆராய்தல்வல்லா ரவைக்கண், (சொல்லின்), கற்று அறிந்தார் கல்வி விளங்கும் - (பலநூல்களையும்) கற்று (அவற்றின் ஆய பயனை) அறிந்தாரது கல்வி (யாவர்க்கும்) விளங்கித்தோன்றும்; (எ - று.)

எ௨ - ஆம் அதிகாரம்.— அவையறிதல்

உ௬௧

'சொல்லின்' என்பது, அவாய்நிலையான் வந்தது. ஆண்டேசொல்க என்பதாம்.

(கு - ரை.) வழுப்படாமல் - தவறாமல். அவற்றின் ஆய-அந்நூல்களினு லாகிய. 'அகத்து' என்பது 'சொல்லின்' என்பதை வேண்டிநின்றமை காண்க. ஆண்டே சொல்க - அவ்விடத்திலேயே சொல்லவேண்டும்; கசடறச் சொல்தெரிதல்வல்லார் கூடிய சபையிலே பேசக்கடவ னென்க. 'கற்று' என்னுமிடத்து 'பலநூல்களையும்' எனச் சிலசொற்கள் வருவித்ததை இசை யெச்ச மென்பர். 'தெரிதல் வல்லார்' என்பதை, இரண்டாம்வேற்றுமைத் தொகையாகவாவது, ஏழாம்வேற்றுமைத்தொகையாகவாவது கொள்க. (எ)

எகஅ. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்

பாத்தியு ணீர்சொரிந் தற்று.

(இ - ள்.) உணர்வது உடையார் முன் - (பிறர் உணர்த்தலின்றிப் பொருள்களைத் தாமே) உணரவல்ல அறிவினையுடையா ரவைக்கண், சொல்லல் - (கற்றார் என்றனைச்)சொல்லுதல்,—வளர்வதன் பாத்தியுள்-(தானே) வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண், நீர் சொரிந்து அற்று - நீரினைச் சொரிந்தாற்போலும்; (எ - று.)

தானேயும் வளர்தற்கு உரிய கல்வி மிகவளரும் என்பதாம்

இவையிரண்டுபாட்டானும், ஒத்தாரவைக்கண்

எவ்வழியுஞ் சொல்லுக வென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) உணர்த்தல் - அறிவித்தல். பொருள்களை - விஷயங்களை. பாத்திக்கண் - பாத்தியில். எவ்வழியும் - எவ்விதத்திலும்; அல்லது, எப் பொழுதிலும். உணர்வது - எதிர்காலவினையாலணையும்பெயர்; அல்லது, உணர்வு என்பதன்மேல் 'அது' என்பது - பகுதிப்பொருள்விகுதி யெனினு மாம். உவமையணி.

(அ)

எகக. புல்லவையுட் பொச்சாந்துஞ்
சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

(இ - ள்.) நல் அவையுள் - நல்லாரிருந்த அவைக்கண், நன்கு - நல்லபொருள்களை, செல - அவர்மனங்கொள்ள, சொல்லுவார் - சொல்லுதற்கு உரியார்,—புல் அவையுள் - (அவையறியாத) புல்லர் இருந்த அவைக்கண், (அவற்றை), பொச்சாந்து உம் - மறந்தும், சொல்லற்க - சொல்லாதொழிக.

சொல்லின், தம் அவையறியாமையை நோக்கி நல்லவையும், பொருளறி யாமையாற் புல்லவைதானும் இகழ்தலின், இரண்டு அவைக்கும் ஆகார் என்பது கருதி, 'பொச்சாந்துஞ் சொல்லற்க' என்றார்.

(கு - ரை.) மனங்கொள்ள - அங்கீகரிக்க. அவையறியாத - நற்பொருள்களை யறியாத. அவற்றை - நல்விஷயங்களை. கற்றறிந்தவர் அறிவில்லார்சபையிற்

பேசினால் அதற்காக அவரைச் சபையின் தன்மையறிந்தில ரென்று நல்லோர் இகழ்வர்: அவர்சொல்லும்பொருள்களை அறியமாட்டாமை



யாற் புல்லோர் அலக்ஷியஞ்செய்வர்; ஆகவே, இருதிறத்தாரது அவமதிப்புக் கும் இடமாவர் என்க. சொல்லின் - பேசினால். தம் - பேசுபவரது. ஆகார் - உதவார். புல்லவையின் தன் மை யை ப் ப ற்றி, "அவையின்றிறமறியாராய்த் தமைந்து சொல்லார், நவையின்றித்தாமுரையார் நாணார் - சுவையுணரார், ஆயகலைதெரியா ரஞ்சாரவரன்றே, தீயவவையோர்செருக்கு" என்று கூறி யிருப்பதுகாண்க. நல்லவையாவது-"புகழும் தருமநெறிநின்றோர் பொய்காம, மிகழுஞ்சினஞ் செற்றமில்லோர் - நிகழ்கலைகள், எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றே, நல்லாரவைக்கு நலம்" என்பதனால் அறிக. புல்லவை, நல்லவை என்பவற்றில், சபையிலிருந்தாரது புன்மையும் நன்மையும் சபையின்மே லேற்றிக் கூறப்பட்டன; இது - இடத்துநிகழ்பொருளின் தன்மையை இடத் தின்மேல் ஏற்றிக்கூறிய உபசாரவழக்கு: அடுத்த அதிகாரத்தின் முதற்குற ளில் 'வல்லவை' என்றவிடத்து, 'இருந்தாரது வன்மை, அவைமேல் ஏற்றப் பட்டது' என உரைப்பது காண்க. " ஞ கஞ்ஞான க்

கொண்டொழுகுங் காரறி வாளர்முன், சொல்ஞானஞ் சோரவிடல்" என்ற நாலடியாரையும், "வெள்ளைக்கோட்டியும் விரகினி லொழிமின்" என்ற சிலப்பதிகாரத்தையும் அறிக.

எ உ ० .

அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(இ - ள்.) (நல்லார்),—தம் கணத்தர் அல்லார் முன் - தம் இனத்தரல்லாதா ரவைக்கண், கோட்டி கொளல் - ஒன்றனையுஞ் சொல்லற்க; (சொல்லின் அது), அங்கணத்துள் உக்க அமிழ்து அற்று - (தூய்தல்லாத) முற்றத் தின்கண் உக்க அமிழ்தினை யொக்கும்; (எ - று.)

'கொள்' என்னும் முதனிலைத்தொழிற்பெயர், முன்னின்று, பின் எதிர் மறை 'அல்' விகுதியோடு கூடி, "மகனெனல்" என்பதுபோல நின்றது. 'சொல்லின்,' 'அது' என்பன - அவாய்நிலையான் வந்தன. பிறரெல்லாம், 'கொளல்' என்பதனைத் தொழிற்பெயராக்கி உரைத்தார்; அவர், அத்தொழில் அமிழ்து என்னும் பொருளுவமையோடு இயையாமை நோக்கிற்றிலர். சாவா மருந்தாதலறிந்து நு கர்வார்கையினும் படாது அவ்வங்கணத்துக்கும் இயை பின்றிக் கெட்டவாறு தோன்ற, 'உக்க அமிழ்து' என்றார். அச்சொல் பயனில் சொல்லும்

என்பதாயிற்று.

இவையிரண்டுபாட்டானும், தாழ்த்தாரவைக்கண் ஒருவழியுஞ் சொல்லற்க என்பது கூறப்பட்டது.

(கு- ரை.) இனி, "ஊரங்கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்கால்" என்ற நாலடி யாரிற் போல, இங்கும் 'அங்கணம்' என்பதற்கு - சலதாரையெனப் பொருள் கொள்ளினுமாம்; சேறென்றலுமாம்; "அங்கணம் சேறு முற்ற மாஞ் சல தாரைக்கும் பேர்" என்பது, நிகண்டு. நல்லார் - நல்லறிவுடையார். தம் இனத்தர் - தம்மோடு ஒத்த நல்லவர். சொல்லின் அது - சொன்னால் அச் சொல். தூய்து அல்லாத - பரிசுத்தியுடையதல்லாத. முற்றத்தின்கண் - முற்றத்தில். உக்க - சிந்தின. முதனிலைத்தொழிற்பெயர் என்றது, இங்கே

எரு - ஆம்

அதிகாரம்.— அவையஞ்சாமை உகூரு

வினைப்பகுதி யென்றபடி; முன் "இழுக்காமை யார்மாட்டும்" என்ற குற ளின்கீழ்ப் பரிமேலழகர் 'வாயின் என்பது - முதனிலைத்தொழிற்பெயரடியாக வந்த வினையெச்சம்' என்று இலக்கணமெழுதிய இடத்திலும், வினைப்பகுதி முதனிலைத் தொழிற்பெய ரெனப்பட்டவாறு உணர்க:

வினைப்பகுதியெல்லாம் தொழிற்பட்டு நிற்றலால். அதனை முதனிலைத்தொழிற்பெயரென்றுரைக்க. அல் விகுதி - உடன்பாடு எதிர்மறை என்னும் இரண்டு வியங்கோள் வினைமுற்றிற்கும் உரியதாய் வருகின்றது; ''மகனெனல்'' என்பது - பயனில சொல்லாமை யென்னும் உ0-ஆம் அதிகாரத்து ஆறும்பாட்டாகிய ''பயனில் சொற் பாராட்டுவானை மகனெனல், மக்கட் பதடி யெனல்'' என்பதி லுள்ளது; அங்கு 'மகனெனல்' என்பதற்கு - மகனென்று சொல்லற்க என்று பொருளும், 'அல்விகுதி வியங்கோள், முன் எதிர்மறையினும் பின் உடன்பாட்டினும் வந்தது' என்று இலக்கணமுங் கூறிப்போந்தார். 'அங்கணத்துளுக்க அமிழ்தற்று' என்ற உபமானம் 'சொன்னால் அது' என்ற உபமேயத்தை வேண்டி நிற்றல் காண்க. 'பிறர்' என்றது, மற்றை யுரையாசிரியர்களை. 'கொளல்' என்பதைத் தொழிற்பெயராகக் கொள்ளும்பொழுது, 'கோட்டி கொளல்' என்பதற்கு - ஒன்றைப்பேசுத லென்று பொருள். அவர் - அவ்வுரையாசிரியர்கள். அத்தொழில் அமிழ்தென்னும் பொருளுவமையோடு இயையாமை - கொள்ளுதலென்னுந் தொழிலாகிய உபமேயத்துக்கும், அமிழ்தென்னும் பொருளாகிய உபமானத்துக்கும் ஒற்றுமையில்லாமை. பரிமேலழகருரையில் 'அது' என வருவிக்கப்பட்டதனாற் கொண்ட 'சொல்லுதல்' என்றதே உபமேய மாதலால், பொருளாகிய உபமேய உபமானங்கள் தம்மில் ஒன்றியிருத்தல் காண்க. நோக்கிற்றிலர் - ஆராய்ந்தாரில்லை. சாவாமருந் தாதல்

அறிந்து நுகர்வார் கையினும் படாது - அமிருதமென்பது மரணத்தை யொழிக்கும்மருந்தா மென்பதையறிந்து அதனை விரும்பி யுண்பவரது கையிற் சேராமல். இயைபு இன்றி - ஏற்றதல்லாமல். கெட்ட ஆறு - கெட்டவிதம். அச்சொல் - இழிந்தார்சபையிற் சொல்லுஞ் சொல். ஒருவழியும் - ஒருவிதத்தி லும்; அல்லது, ஒருபொழுதிலும். அங்கணம் - வடசொல். ஆல் - ஈற்றசை. கணம் - இனம்; வடசொல். கோட்டி-கோஷ்டீ என்னும் வடசொல்லின் திரிபு; சபையின் பெயர் - ஆகுபெயராய், அங்குப்பேசுதலைக் குறித்தது. "அரங் கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய, நூலின்றிக் கோட்டி கொளல்" என்ற குறளில் பரிமேலழகர் 'கோட்டிகொளல்' என்பதற்கு - 'அவையின்கண் ஒன்றனைச் சொல்லுதல்' என்று பொருளும், 'கோட்டி என்பது - ஈண்டு ஆகுபெயர்; "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" என்புழிப் போல' என்று இலக்கணமும் எழுதியமை காண்க. உவமையணி. (கo)

## எஅ - ஆம்

## அதிகாரம்.—அவையஞ்சாமை.

அஃதாவது - சொல்லுதற்குஉரியஅவையினை அறிந்து சொல்லுங்கால் அதனை அஞ்சாமை. அதிகாரமுறைமையும், இதனானே விளங்கும்.

(கு - ரை.) சொல்லுதற்கு உரிய அவை - பேசுதற்கு ஏற்ற சபை. சொல்லுங்கால் - பேசும்பொழுது. அதனை - அச்சபையை. அவையறிதலின்பின் அவையஞ்சாமையை வைத்தற்குக் காரணம், வெளிப்படை: சபையினது தன்மையை முன்பு அறிந்து பின்பு அதிற் பேசும்பொழுது அதற்குப்பயப்படவாராதென் றுகூறுதலின்.

அவையஞ்சாமை-இரண்டாம்வேற்றுமைத்தொகை: நான்காம் வேற்றுமையாக விரித்தல், உலகவழக்கு; "அச்சக்கிளவிக்கு ஐந்து மிரண்டும், எச்சமிலவே பொருள்வயினான" என்ற தொல்காப்பியச்சூத்திரத்திற்கு ஏற்ப, அவையை அஞ்சாமை என இரண்டாம்வேற்றுமையாக விரிக்க: ஐந்தாம்வேற்றுமையாக விரித்தல், வடநூல்வழக்குக்கும் ஒத்தது.

அவையச்சம், வடமொழியில் 'ஸபாகம்பம்' எனப்படும்.

எ௨௧. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்

றொகையறிந்த தூய்மை யவர்.

(இ - ள்.) வகை அறிந்து - (கற்றுவல்லஅவை அல்லாஅவை என்னும்)
அவைவகையினை அறிந்து, வல் அவை - வல்ல அவைக்கண், (ஒன்று சொல்லுங்கால்), வாய் சோரார் - (அச்சத்தான்) வழுப்படச்சொல்வார்: சொல்லின்
தொகை அறிந்த - சொல்லின்தொகையெல்லாம் அறிந்த, தூய்மையவர் -
தூய்மையினையுடையார்; (எ - று.)

இருந்தாரது வன்மை, அவைமேல் ஏற்றப்பட்டது. 'வல்லவை' என்
பதற்கு - தாம் கற்றுவல்ல நூற்பொருள்களை யென்று உரைப்பாரும் உளர்.
'அச்சத்தான்' என்பது, அதிகாரத்தான் வந்தது. 'சொல்லின்தொகை,'
'தூய்மை' என்பனவற்றிற்கு, மேல்உரைத்தாங்கு உரைக்க.

(கு - ரை.) அல்லா அவை -

கல்விகற்றுவல்லதல்லாத சபை. இருந்
தார் - சபையிலிருந்தவர். வல்லவைஎன்றஇடத்து அவையிலுள்ளாரின்
வன்மையை அவையின்மேலேற்றிக்கூறியதனால், இது-இடத்துநிகழ்பொரு
ளின்பண்பை இடத்தின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்காம். 'வல்லவை'
என்பது - பரிமேலழகருரையின்படி,

பண்புத்தொகைநிலைத்தொடர்: அதனி
றுதியில் ஏழாம்வேற்றுமையுருபு தொக்கது;
'வாய்சோரார்' என்பதற்கு;
'ஒருசொல்லை' எனச் செயப்படுபொருள் வ
ருவித்தல்வேண்டும். பிறரு
ரைக்கு, 'வல்லவை' என்பது - வன்மையென்னும்
பண்பினடியாப் பிறந்த

பலவின்பாற்குறிப்பு வினையாலணையும்பெயராய், இரண்டாம்வேற்றுமைத்தொகையாக, 'வாய்சோரார்' என்பதற்குச் செயப்படுபொருளாம். அதிகாரம் அவையஞ்சாமை யாதலால் 'அச்சத்தான்' என்பது, வருவித்துஉரைக்கப்பட்டது என்க; அதிகாரத்தால் வருவித்துமுடிப்பதனை, வடநூலார், ஆநுஷங்கிகமென்பர். மேல் உரைத்தாங்கு உரைக்க - முன்சொன்னபடி உரைத்துக்கொள்க; மேல் என்றது, ஏகக - ஆம் திருக்குறளை. வாய்சோரார் - வாய்தவறார்; சொல்வழுப்படார் என்றபடி. (க)

எஉஉ. கற்றருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

எஙு - ஆம்



(இ - ள்.) கற்றாருள் கற்றார் எனப்படுவர் -
கற்றாரெல்லாரினும் (இவர்
நன்கு)கற்றா ரென்று (உலகத்தாரால்)சொல்லப்படுவார்,
கற்றார்முன் - கற்ற

ரவைக்கண், (அஞ்சாதே), கற்ற - (தாம்) கற்றவற்றை, செல - அவர்மனங்
கொள்ளும்வகை, சொல்லுவார் - சொல்லவல்லார்; (எ - று.)

உலகம் அறிவது அவரையே யாகலின், அதனாற் புகழப்படுவாரும் அவர் என்பதாம்.

(கு - ரை.) உலகம் - உலகத்தார். அவரையே - அவையச்சமின்றிப் பேசுபவர்களைமாத்திரமே. அதனால் - அவ்வுலகத்தால். அவர் - பேசுபவர்.
கற்றாருள் என்பது - ஏழாம்வேற்றுமை; கற்றாரெல்லாரைக்காட்டிலும் எனப் பொருள்பட ஏழனுருபு ஐந்தனுருபின்பொருளில் வந்த உருபுமயக்க மென்பாருமுளர். 'கற்றாரெனப்படுவர்' என்பது - கற்றாரென்று சிறப்பித்துச் சொல்லப்படுவா ரெனச்சிறப்புப்பொருள் தோன்ற நின்றது. கற்ற - இறந்த காலப் பலவின்பால் வினையாலணையும்பெயர்.

(உ)

எஉரு. பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

(இ - ள்.) பகையகத்து - பகையிடை, (அஞ்சாதுபுக்கு), சாவார் - சாவ வல்லார், எளியர் - (உலகத்துப்)பலர்; அவையகத்து அஞ்சாதவர் - அவையிடை அஞ்சாதுபுக்குச் சொல்லவல்லார், அரியர் - சிலர்;

(எ - று.)

அஞ்சாமை 'சாவார்' என்பதனோடுங் கூட்டி, அதனால் 'சொல்லவல்லார்' என்பது வருவித்து உரைக்கப்பட்டது.

இவைமூன்றுபாட்டானும், அவையஞ்சாரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) பகையிடை - பகைவர்கூட்டத்தின்நடுவில். 'அஞ்சாதவர்' என்பதிலுள்ள அஞ்சாமை யென்னும் வினையை 'சாவார்' என்பதனோடு கூட்டி, அதற்கு ஏற்ப, ('சாவார்' என்னுமிடத்திலுள்ள சாதலென்னும் வினையை அஞ்சாதவரென்னுமிடத்துங் கூட்டி, அதன்கருத்தாக) 'சொல்ல வல்லார்' என வருவித்துக்கொண்டார். எளியர் - கிடைத்தற்கு எளிமை யானவர். அரியர்-கிடைத்தற்கு னும் பண்பினடி; பகைவர்கட்குப் எதிர்காலவினையாலணையும்பெயர்:

அருமையானவர். பகை-பகைமையென் பண்பாகுபெயர். சாவார் - உடன்பாட்டு

இச்சொல், காலமுணர்த்தாதுதன்மை
யுணர்த்திற்று. பகைவர்குழாத்தினிடையிற் புக்கு
அஞ்சாது இயன்றவளவு
போர்செய்து இறத்தலினும் அரியது,
கற்றவர்குழாத்தினிடையிற் புக்கு
அஞ்சாது பேசுதலென்பதாம். 'பேசப்போகிறாயோ, சாகப்போகிறாயோ?'
என்று உலகவழக்கிலுள்ளதொரு பழமொழியையுங் காண்க. அவைக்கு
அஞ்சாதவர்க்குப் பகைக்கு அஞ்சாதாரை ஒப்புமை
கூறத்தொடங்கி, அவருள்
உபமானமாகியபகையஞ்சாரினும் உபமேயமாகிய
அவையஞ்சார்க்குக் கிடைத்
தற்கருமைமுகத்தாற் சிறப்புக்கூறுகிற
வேற்றுமையணி இப்பாட்டில்
தொனிக்குமாறு அறிக.
(சு) 34

உகூசு

திருக்குறள்

எஉச. கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற

மிக்காருண் மிக்க கொளல்.

(இ - ள்.) கற்றார் முன் - (பலநூல்களையும்) கற்றா ரவைக்கண், (தாம்) கற்ற - தாம் கற்றவற்றை, செல சொல்லி - அவர்மனங் கொள்ளுமாற்றாற் சொல்லி,—தாம் கற்ற மிக்க - அவற்றின் மிக்க பொருள்களை, மிக்காருள் - கொளல் - அம்மிகக்கற்றாரிடத்து அறிந்துகொள்க; (எ - று.)

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறுவேறாய கல்வியுடையார் பலர் இருந்த அவைக்கண் தாம் கற்றவற்றை அவர்க்கு ஏற்பச் சொல்லுக; சொல்லவே, அவரும் அவையெல்லாஞ் சொல்லுவ ராகலான், ஏனைக் கற்கப்பெறாதன கேட்டறியலா மென்பதாயிற்று.

இதனான், அதனது ஒருசார்பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) மனங்கொள்ளும் ஆற்றான்-கிரகிக்கும் விதமாக. 'தாம் கற்ற'

என்பது - சுட்டுமாத்திரமாய் நின்றதனால், தாம்கற்ற என்ற இடத்து, 'தாம்'

என்பதற்கு - 'அவற்றின்' எனப் பொருளுரைத்தார். அவற்றின் - தாம் படித்தவற்றினும். அவர்க்கு - அச்சபையார்க்கு. அவை எல்லாம் - தாம் தாம் கற்ற வெவ்வேறுவகைக் கல்விகளையெல்லாம். ஏனைக் கற்கப்பெறாதன - தாம் படித்தறியாத மற்றைநூற்பொருள்களை. அதனது - அவையஞ்சாது பேசுதலி

னது. ஒருசார்பயன் - ஓரோவிடத்துப் பிரயோசனம்: ஒருவகைப்பிரயோசன

மெனினுமாம். பிற இடத்தும்
"அவ்வினையாளரொடு பயில்வகை யொருகால்,

செவ்வியி னுரைப்ப அவ்விருகாலும், மையறுபுலமை மாண்புடைத்தாகும்"

எனக் கல்விநிரம்புமாறு கூறியமை காண்க.

(௪)

எஉரு. ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(இ - ள்.) ஆற்றின் - சொல்லிலக்கணநெறியானே,
அளவு - அளவை
நூலை, அறிந்து கற்க - (அமைச்சர்) உட்பட்டுக் கற்க:
அவை - வேற்றுவேந்த
ரவையிடை, அஞ்சா - அஞ்சாது, மாற்றம்
கொடுத்தற்பொருட்டு - (அவர்
சொல்லிய சொற்கு) உத்தரஞ் சொல்லுதற்பொருட்டு; (எ
- று.)

அளவைநூல் சொல்நூல்கற்றே கற்கவேண்டுதலின்,
அதற்கு அஃது
ஆறெனப்பட்டது. அளக்குங்கருவியை 'அளவு'
என்றார், ஆகுபெயரான்.
அவர்சொல்லை வெல்வதொருசொல் சொல்லலாவது,
நியாயத்து வாத
செற்ப விதண்டைகளும் சலசாதிகளும் முதலிய கற்றார்க்கே
யாகலின், அவற்
றைப் பிழையாமற் கற்க என்பதாம்.

இதனான், அதன்காரணம் கூறப்பட்டது.

(கு-ரை.) சொல்லிலக்கணநெறியானே-வியா
கரணசாஸ்திரவழியாலே.
அளவை நூலை - பிரதியக்ஷம் முதலிய

பலவகைப்பிரமாணங்களைப்பற்றிச் சொல்லுகிற தர்க்கசாஸ்திரத்தை. உட்பட்டு - மனமிணங்கி. வேற்றுவேந்தர்

அவையிடை - அயலரசர்சபையில். அவர் - அவ்வரசரும் சபையாரும். சட்த

## எஙு - ஆம்

அதிகாரம்.—அவையஞ்சாமை உகூஎ

சாஸ்திரமாகிய வியாகரணங்கற்று அதன்கோட்பாடுகளை யறிந்தபின்பே அர் த்தசாஸ்திரமாகிய தருக்கங் கற்றல் தகுதி. அதற்கு-அளவைநூற்கு. அஃது - சொல்நூல். ஆறு - வழி. அளத்தல் - ஆராய்ந்து வரையறுத்து அறிதல்; அதற்குக் கருவியாகிய பிரமாணங்களைப் பற்றிக் கூறுகின்ற சாஸ்திரத்தை 'அளவு' என்றது - இருமடியாகுபெயராம். அளவைகளின் விவரமெல்லாம், அருளுடைமையென்ற அதிகாரத்து இரண்டாங்குறளினுரையிற் கூறப்பட்டன. நியாயம் - தர்க்கசாஸ்திரம். வாதம் செற்பம் விதண்டை சலம் சாதி என்பன - இவற்றின் உண்மையறிவான் வீடடைதல் உளதா மென நியாய நூலிற் கூறிய பதினாறு பதார்த்தங்களின்பாற் பட்டன. இவற்றுள், வாதமாவது - உண்மையுணர்தல்வேட்கையோன்கதை. செற்பமாவது - சாதந மிரண்டுள்ளதன்கண் வெல்லும்

வேட்கையுடையான் கதை விதண்டை யாவது-தன்கோட்பாட்டை நிலைபெறுத்தாது பிறரைவெல்லுங்கதை. [கதை- கூறுவார் பலருள்ளதாய்ச் சங்கையுத்தரங்களைப் பயக்குந் தொடர்மொழியின் கோவைப்பாடு.] சலமாவது - ஒருகருத்துப்பற்றிக் கூறிய மொழிக்கு வேறு பொருள் படைத்திட்டுக்கொண்டு பழித்தல். சாதியாவது - போலியுத்தரம்; அது - பொதுவியல்பு, வேற்றியல்பு, உயர்ச்சி, தாழ்ச்சி, புகழ்ந்துரை, பழித் துரை, விகற்பம், சாத்தியம், அடைவு, அடையாமை, பிரசங்கம், வேறு திருஷ்டாந்தம், உற்பத்தியின்மை, ஐயம், பிரகரணம், ஏதுவின்மை,அருத்தா பத்தி, விசேடமின்மை, உபலப்தி, அநுபலப்தி, காரணம், நித்யம், அநித்யம், காரியம் இவற்றின் சமமென்க. 'முதலிய' என்றதனுல் தோல்வித்தானமுங் கொள்ளப்படும்: அஃதாவது-வாதம்பேசுவார் தோல்வியுறுதற்கு ஏது; அது - மேற்கோளழிவு, வேறுமேற்கோள், மேற்கோள்மாறுபாடு, மேற்கோள்விடு தல்,
வேற்றேது,வேற்றுப்பொருள்,பொருளின்மை, பொருளுணரப்படாமை, பொருட்போலி, காலம்பெறுமை, குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியது கூறல், பிற்கூற்றின்மை, அறியாமை, விடைதோன்றுமை, வேறுகாரணங் கற்பித்து வாதமொழிதல், தன்கோட்குற்றமகற்றுது பிறன்கோட்குற்றங் கூறல், பிறன்தோல்வியை யுணர்த்தாமை,

உடன்பட்டற்பாலதல்லதனை உடன்படுதல், சித்தாந்தப்போலி, ஏதுப்போலி என்பனவாம். இவை, தருக்க சங்கிரகதீபிகையிற் கண்டவை. ஜல்பம், விதண்டா, சலம், ஜாதி-வடசொற்கள். முதலிய-முதலானவற்றை. சொல்லலாவது, முதலிய கற்றூர்க்கேளனக் கூட்டிப்பொருள்கொள்க. அவற்றை - கீழ்க்கூறிய வாதம்முதலியவற்றை. பிழையாமல் - தவறுமல். அதன் காரணம் - அவையஞ்சாமைக்கு ஏது. (ரு)

எ௨சு. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்

நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(இ - ள்.) வன்கண்ணர் அல்லார்க்கு - வன்கண்மையுடைய ரல்லாதார்க்கு, வாளொடு என் - வாளோடு என்ன இயைபு உண்டு? (அதுபோல), நுண் அவை அஞ்சுபவர்க்கு - நுண்ணியாரது அவையை அஞ்சுவார்க்கு, நூலொடு என் - நூலோடு என்ன இயைபு உண்டு? (எ - று.)

௨௬௮

திருக்குறள்

இருந்தாரது நுண்மை, அவைமேல் ஏற்றப்பட்டது. நூற்கு உரியரல்

லர் என்பதாம்.

(கு - ரை.) வன்கண்மை - அஞ்சத்தக்கவற்றைக் கண்டவிடத்தும் அஞ்சாத நெஞ்சுறுதி; வலிய தன்மை. ''வன்கண் குடிகாத்தல்'' என்றவிடத்து, 'வன்கண்' என்றதற்கு-'வினைசெய்தற்கண் அசைவின்மை' என்று பொருள் கூறியதும் அறிக. வாள் - இங்கே, ஆயுதமென்னுமாத்திரமாய் நின்றது. இயைபு - சம்பந்தம், பொருத்தம், தகுதி. நுண்ணியார் அது - சூக்ஷ்மபுத்தியையுடையவர்களது. நூல் - சாஸ்திரம். இருந்தார் அது நுண்மை - சபையிலுள்ளாரது அறிவின் நுட்பம். 'நூற்குஉரியரல்லர்' என்பதற்கு, 'அவையஞ்சுபவர்' என்ற எழுவாய் வருவிக்க. (௬)

எ௨எ. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன் கற்ற நூல்.

(இ - ள்.) பகையகத்து பேடி கை ஒள் வாள் - (எறியப்படும்) பகைநடு

வண் (அதனை அஞ்சும்)பேடி பிடித்த கூர்வாளை ஒக்கும்: அவையகத்து அஞ்சு

மவன் கற்ற நூல் - (சொல்லப்படும்) அவைநடுவண் (அதனை) அஞ்சுமவன்

கற்ற நூல்; (எ - று.)

பேடி - பெண்ணியல்புமிக்கு ஆணியல்பு

முடையவள். களமும் வாய்த்

துத் தானும் நன்றாயிருந்ததேயாயினும்
பிடித்தவள்குற்றத்தால் வாள் சிறப்

பின்றாயினாற்போல, அவையும் வாய்த்துத் தானும்
நன்றாயிருந்ததே யாயி

னும் கற்றவன்குற்றத்தால் நூல் சிறப்பின் ருயிற்று.

(கு - ரை.) எறியப்படும் பகை நடுவண்-வாள்வீசிவெட்டப்படுதற்குஉரிய பகைவரது நடுவில். அதனை அஞ்சும் - பகைக்குஅஞ்சுகின்ற. பேடி - ஆண் தன்மைகுறைந்து பெண்தன்மைமிக்க நபும்சகம். பெண்தன்மை குறைந்து ஆண்தன்மைமிக்க நபும்சகம் அலி யெனப்படு மென்றும், பேடு என்பது 'நபும்ஸகம்' என்ற வடசொற்போல இவ்விருவகைக்கும் பொதுப்பெய ரென்றும் அறிக. "ஆண்மைவிட்டு அல்லதவாவுவ பெண்பால்" ஆதலால், பேடியைப் பெண்பாலாற் கூறினர். அவைநடுவண் - சபைநடுவில். அதனை அஞ்சுமவன் - சபைக்கு அஞ்சுபவன். களம் - இடம்; என்றது, போர்க்களத்தை. வாய்த்து - கிடைத்து. தானும் - வாள்தானும். நன்று - கூரியது. தானும் - நூல்தானும். கை - கையிற்பிடித்த என்றவாறு. உவமவுருபு தராமல் உபமான உபமேயங்களுக்கு ஐக்கியத்தை ஆரோபித்துக் கூறியது—, காட்சியணி. (எ)

எஉ௩. பல்லவை கற்றும் பயமிலரே

நல்லவையு

ணன்கு செலச்சொல்லா தார்.

(இ - ள்.)

நல் அவையுள் - நல்லாரிருந்த அவைக்கண், நன்கு - நல்ல சொற்பொருள்களை, செல சொல்லாதார்-(தம்அச்சத்தான் அவர்க்கு) ஏற்பச் சொல்லமாட்டாதார்,—பல்லவை கற்றும் - பல்நூல்களைக் கற்றாராயினும், பயம் இலர் ஏ - (உலகிற்குப்) பயன் படுதலிலர்; (எ - று.)

•

எரு - ஆம்

அதிகாரம் —அவையஞ்சாமை உகூசு

அறிவார்முன் சொல்லாமையின், *

கல்வியினுண்மையறிவாரில்லை

யென்பதாம். இனி, 'பயமிலர்' என்பதற்கு -

கல்விப்பயனுடையரல்லர்

என்று உரைப்பாரும் உளர்.

(கு-ரை.) அறிவார்முன்

சொல்லாமையின்-தமதுகல்வியின் அருமையை

அறியவல்லாரது முன்னிலையிற் சொல்லமாட்டாமையால்.

கல்வியின் உண்

மை - தம்மிடத்துக் கல்வியிருத்தலை; கல்வியின் நுண்மை

யென்று பிரித்துப்

பொருள் கொள்ளினுமாம். பல்லவை -

பன்மையென்னும் பண்பினடியாகப்

பிறந்த பலவின்பால் வினையாலணையும்பெயர். உம் - உயர்வுசிறப்பு. ஏ-தேற்றம். நல்லவை - பண்புத்தொகை. நன்கு - ஆகுபெயர்.

(அ)

எ௨௯. கல்லா தவரிற் கடையென்ப
கற்றறிந்து நல்லா ரவையஞ்சு வார்.

(இ - ள்.) கற்று - (நூல்களைக்) கற்றுவைத்தும், அறிந்து - (அவற்றூற் பயன்) அறிந்துவைத்தும், நல்லார் அவை அஞ்சுவார் - நல்லாரிருந்த அவையினை அஞ்சி ஆண்டுச்சொல்லாதாரை, கல்லாதவரின் கடை என்ப - (உலகத்தார்) கல்லாதவரினும் கடையரென்று சொல்லுவர்; (எ - று)

அக்கல்வியறிவுகளாற் பயன் தாமும்எய்தாது பிறரைஎய்துவிப்பதுஞ் செய்யாது கல்வித்துன்பமே எய்திநிற்றலின், 'கல்லாதவரிற்கடை' என உலகம் பழிக்கும் என்பதாம்.

(கு - ரை.) கற்றுவைத்தும் - கற்றிருந்தும்; அறிந்துவைத்தும் என்பதற்கும் இவ்வாறே. பயன் - அறிவு, புகழ் முதலியன. ஆண்டு - அவ்விடத்தில். கடையர் - கீழ்ப்பட்டவர்; அதமர். எய்தாது -

அடையாமல். எய்துவிப்பது -
அடைவிப்பது. கல்வித்துன்பமே எய்திநிற்றலின் -
வெகுகாலம் சிரமப்பட்
டுக் கற்றதனு லாகிய துன்பத்தைமாத்திரமே
அடைந்துநின்றதனுல். கல்லா
தவர்க்குக் கல்வித்துன்பம் இல்லாதுநிற்க, கற்றறிந்த
அவைக்கோழையர்க்குக்
கல்வித்துன்பமும் உள்ளதனுல், அவரினும் இவர் கீழோராவர்;
கல்விப்பயனை
யடையாமையில் இருவரும் ஒப்பராயினும், அவர்க்கு
இல்லாத துன்பம் இவர்
க்கு உளதாதல், கீழ்மைக்குக்காரணம். கடை-கடையர்க்குப்
பண்பாகுபெயர்.
என்ப - என்பர்: இதற்கு, 'உலகத்தார்' என்பது -
தோன்று எழுவாய். கற்
றும், அறிந்தும் என்ற எண்ணும்மைகள் தொக்கன;
வினைச்செவ்வெண்:
அறிந்தும்என்று பிரிப்பினுமாம்.
அவை அஞ்சுவார் - இரண்டாம்வேற்றுமைத்
தொகை. இனி, 'என்ப' என்பதை,
செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த
செய்வினை யெனக்கொண்டு, அவையஞ்சுபவர்
கல்லாதவரினுங் கடைய
ரென்று சொல்லப்படுவர் என்று முடித்தல், நேராம்.

(௧)

ஏஙo. உளரெனினு மில்லாரொ டொப்பர்
கற்ற செலச்சொல்லா தார்.

களனஞ்சிக்

(இ - ள்.) களன் அஞ்சி - அவைக்களத்தை அஞ்சி, கற்ற - (தாம்) கற்ற
வற்றை, செல சொல்லாதார் - (அதற்கு) ஏற்பச் சொல்லமாட்டாதார், — உள்

* பி - டி: கல்வியுண்மை.



எனின் உம் - உயிர்வாழ்கின்றாராயினும், இல்லாரொடு ஒப்பர் - (உலகத்தா
ரால் எண்ணப்படாமையின்) இறந்தாரோடு ஒப்பர்; (எ - று.)

ஈண்டு 'களன்' என்றது, ஆண்டு இருந்தாரை.

இவையைந்து பாட்டானும், அவையஞ்சுவாரது இழிபு கூறப்பட்டது.

(கு - ரை.) அச்சத்தாற் சபையிற் பேசமாட்டாதவர் ஜீவித்திருந்தும் பயனில்லை யென்பதாம்; அவர், செட்டுயிர்ப்போடுற்றபிண மென்றும் நடைப்பிணமென்றும் பலவாறு இகழப்படுவ ரென்க. அவைக்களம் - சபையினிடம்; என்றது, அங்கு உள்ளாரை. எண்ணப்படாமையின் - ஒருபொருளாக மதிக்கப்படாமையால். களன் - மகரனகரம் பெறுஞ்சொல். (௭௦)

அங்கவியலில் அமைச்சியல் முற்றிற்று.

## எச - ஆம் அதிகாரம்.— நாடு.

இனி, அவ்வரசனாலும் அமைச்சனாலும் கொண்டு உய்க்கப்படுவதாய் ஏனை அரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச்சிறப்பிற்றாய நாடு ஓரதிகாரத்தாற் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும். *

(கு - ரை.) கொண்டு உய்க்கப்படுவதாய் - ஆளுமாறுஏற்றுக்கொண்டு நடத்தப்படுவதாய். ஏனை அரண் முதலிய அங்கங்கள் - அரண், பொருள், படை, நட்பு என்னும் மற்றை நான்கு அங்கங்கள். இன்றி அமையாமை - இல்லாமல் முடியாமை: அவசியம்வேண்டுதல். சிறப்பிற்று - சிறப்பையுடையது. நாடு - நாட்டின் தன்மை.

இவ்வதிகாரமும் அடுத்த அதிகாரமாகிய அரண் என்பதும் ஆகிய இவ்வி

ரண்டும், 'அரணியல்' எனப்படும்; இதனை, திருவள்ளுவமாலையில் தொடித்

தலை விழுத்தண்டினர் "அறம்நான்கு அறிபொருள் ஏழ் ஒன்றுகாமத், திறம்

மூன்று எனப் பகுதிசெய்து - பெறலரிய நாலும்மொழிந்த பெருநாவலரே

நன்குணர்வார், போலும் ஒழிந்த பொருள்" என இந்நூற் பாலியலதிகாரத்

தொகையைத் தொகுத்துக்கூறியதுகொண்டும், போக்கியார் "அரசியல்ஐயை ந்து அமைச்சியல் ஈரைந்து, உருவல் அரண் இரண்டு ஒன்று ஒண் கூழ்-இரு

வியல், திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்று, எண்பொரு ளேழா

மிவை" எனப் பொருட்பாலியலதிகாரத்தொகையை வகுத்துக்கூறியதனு

லும் அறிக. "அரசியலையைந்து" என்ற பாட்டின் உரையில், 'பிற்காலத்

தார் அமைச்சு முதலிய ஐந்தனையும் அங்கவியல் என ஓரியலாக்கியும் வழங்

குப' என்பதனால், இது அங்கவியலின்பாற்படுதல் விளங்கும்.

அங்கவியலில் அமைச்சியல் முற்றுப்பெற்றதும்

அரணியலின்முதலில் நாட்டை வைத்ததற்குக் காரணம்—நாடு, அமைச்சனுற்பா துகாக்கப்படுதற்கு உரியதாதலும், அரண்முதலியவற்றுக்கு இடமாதலும்பற்றியாம்.

---

* இந்தவாக்கியம், ஒருபிரதியிலுள்ளது



தொல்காப்பியவுரையில்

'நாடு அரண் முதலாகக்கூறுவன வெல்லாம் திருவள்ளுவப்பயனிற் காண்க' என்றதனுலும், இந்நூலில் இவ்விராசாங் கங்களின் தன்மை நன்குகூறப்பட்டிருக்குமாறு வெளியாம்.

எஙக. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(இ - ள்.) தள்ளா விளையுள்உம் - குன்ருத விளையுளைச் செய்வோரும், தக்கார்உம் - அறவோரும், தாழ்வு இலா செல்வர்உம்-கேடில்லாத செல்வமுடையோரும், சேர்வது - ஒருங்குவாழ்வதே, நாடு - நாடாவது; (எ - று.)

மற்றை உயர்திணைப்பொருள்களோடும் சேர்தல் தொழிலோடும் இயை யாமையின், 'விளையுள்' என்பது-உழவர்மேல் நின்றது. குன்ருமை - எல்லா உணவுகளும் நிறைய உளவாதல். இதனுன், வாழ்வார்க்கு

வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர் - துறந்தோர், அந்தணர் முதலாயினர்; "நற்றவஞ் செய்வார்க் கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும். இதனான், அழிவின்மை பெறப்பட்டது.
கேடில்லாமை-வழங்கத்தொலையாமை. செல்வர் - கலத்தினும் காலினும் அரும்பொருள்தரும் வணிகர். இதனான், அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள்வாய்த்தல் பெறப்பட்டது.

(கு - ரை.) குன்றாத - குறையாத. விளையுள் - பயிர்விளைச்சல். அதனைச் செய்வோர் - உழுதுபயிர்செய்பவர். அறவோர்-தருமமார்க்கத்தில் நடப்பவர்; 'அறன்வலியுறுத்தல்' என்ற இடத்திற்போல, இங்கு 'அறம்'என்றது- இல்லறம் துறவறம் என்ற இரண்டையும் உணர்த்திற்று. கேடு - குறைதல். ஒருங்கு - ஒருசேர. வாழ்வது - வாழ்தற்கு இடமாவது. 'மற்றை உயர்திணைப் பொருள்கள்' என்றது - தக்காரையும், செல்வரையும். 'செம்பொருள்கொள் ளுதற்குப்பொருத்தமில்லாதவிடத்துமாத்திரமே ஒருசொல்லுக்கு ஆக்கப்பொருள் கொள்ளவேண்டும்' என்ற இலக்கணமுறைமைப்படி, தக்கார் செல்வர் என உடன் எண்ணப்பட்ட பொருள்களோடும், சேர்தல் என்ற தொழிலோடும், பயிர்விளைவையுணர்த்தும் 'விளையுள்' என்ற அஃறிணைப்பெயர் பொருந்தாமையால், அதற்கு, ஆகுபெயராக, விளையுளைச்செய்வோரெனப்

பொருள் கொண்டனர்.
'விளையுள்' என்னுந் தொழில் - அதனைச்செய்பவர் க்கு ஆதலால், காரியவாகுபெயர். வாழ்வார்க்கு - நாட்டில் வாழ்பவர்களுக்கு. வறுமை - தரித்திரம். துறந்தோர் - சந்நியாசிகள். இங்கே, 'அந்தணர்' என்றது, இல்லறத்துவேதியரை. 'முதலாயினோர்' என்றதனால், பிறசான்றோரையுங் கொள்க; "அறஞ்செய்மாக்கள் புறங்காத்தோம்புநர், நற்றவஞ்செய்வோர் பற்றறமுயல்வோர்" என்பது, மணிமேகலை. "நற்றவஞ்செய்வார்க்கிடம்" என்று தொடங்கிய மேற்கோள், சீவகசிந்தாமணி - நாமகளிலம்பகம் ௬௮ - ஆஞ் செய்யுளில் உள்ளது: 'அது [ஏமாங்கதமென்னும்நாடு] வீடுபெறத்தவஞ் செய்வார்க்கு இடம்; மறுமைகருதி இல்லறம்நடத்துவார்க்கும் இடம்' என இவ்விடத்துக்கு நச்சினார்க்கினியர் உரைகூறியுள்ளார்; இதில், நற்றவமெனப்பட்டது-துறவறவொழுக்கமும், தவமெனப்பட்டது - இல்லற



வொழுக்கமுமாம். 'பிறர்' என்றது, சீவகசிந்தாமணி நூலாசிரியராகிய திருத்தக்கதேவரை. அழிவின்மை-குடிவளங்குறையாமை. வழங்கத்தொலையாமை-

செல்வுசெய்யச்செய்யக் குறைவுபடாமை. கலத்தினும் காலினும் அரும் பொருள் தரும் வணிகர் - மரக்கலமேறித் துவீபாந்தரஞ்சென்று அவ்வகையாலும் தரைவழியாக வேறுநாடுகளுக்குச் சென்று அவ்வகையாலும் வர்த்தகஞ்செய்து அருமையான பொருள்களைக் கொணர்கிற வைசியர்; "உரைசால் சிறப்பி னரசுவிழை திருவிற், பரதர் மலிந்த பயங்கெழு மாநகர், முழங்குகடல் ஞால முழுவதும் வரினும், வழங்கத் தவாஅ வளத்த தாகி, அரும்பொருள் தரூஉம் விருந்திற் றேஎம், ஒருங்குதொக்கன்ன வுடைப் பெரும் பண்டம், கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக், குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்" என்பது, சிலப்பதிகாரத்து மனையறம்படுத்தகாதை. அந்நூலுரையில் 'அரும்பொருளாவன - "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும், காலின் வந்த கருங்கறி மூடையும், வடமலைப்பிறந்த மணியும் பொன்னும், குடமலைப் பிறந்த ஆரமுமகிலும், தென்கடல்முத்தும் குணகடல் துகிரும், கங்கை வாரியும் காவிரிப் பயனும், ஈழத்துணவுங் காழகத் தாக்கமும், அரியவும்பெரியவும்" எனப் பட்டினப்பாலையுட் சொன்னவும் பிறவும். "இரு வகைப்பிரிவு, நிலைபெறத் தோன்றினும், உரியதாகு மென்மனார் புலவர்" என்பதனால், 'கலத்தினுங் காலினும்' என்றார். கலம் - மரக்கலம். கால் - வட்டை. இதனானே, பின்ன ரிருமரபோரும் கலத்தொடுசேறல் பின்னரூழிக்குமரபெனக்கொள்க' என உரைத்தவை, உணரத்தக்கன. பொருள் வாய்த்தல் - செல்வம் மிகுதியாகப்பொருந்துதல். ஒழிவற விளைவுசெய்யுங் குடிகளும், துறவற இல்லற வொழுக்கங்களில் தவறாத யோக்கியரும், பல வகையாலும்பொருளீட்டும்வணிகருங் கூடிவாழ்வதே நாடாகு மென்க. (௧)

எ௬௨. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி

லாற்ற விளைவது நாடு.

யருங்கேட்டா

(இ - ள்.) பெரும் பொருளால் - அளவிறந்த பொருளுடைமையால்,
பெள் தக்கது ஆகி - (பிறதேயத்தாராலும்) விரும்பத்தக்கதாய், அருங் கேட்டால் - கேடின்மையோடு
கூடி, ஆற்ற விளைவது - மிகவிளைவதே, நாடு - நாடாவது; (எ - று.)

அளவிறப்பு - பொருள்களது பன்மை மேலும், தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது - மிக்கபெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்றிவற்றான் வருவது; "மிக்க பெயலோடு

பெயலின்மை யெலி விட்டில் கிளி, யக்கணரசண்மையோடாறு:" இவற்றை வடநூலார் ஈதிகளென்ப. இவற்றுள் முன்னையவற்றது இன்மை அரசனறத்தானும், பின்னையது இன்மை அவன் மறத்தானும் வரும். இவ்வின்மைகளான் மிக விளைவதாயிற்று.

(கு - ரை.) அளவிறந்த பொருளுடைமை - வரம்பில்லாத பொருள்களையுடைத்தாயிருத்தல். பொருள்கள் - பொன் மணி நெல் முதலியன. கேடு -

நீங்கு. அளவிறப்பு - வரம்பில்லாமை. பொருள்களது
தனி அவற்றின்
பன்மைமேலும் தனித் வொன்றும் மிக

மிகுதிமேலும் நின்றது - பலவகைப்பொருள்களுள் ஒவ்
அதிகமாக இருத்தலைக் குறிக்கின்றதென்க. அவற்றின் -
பொருள்களின். மிக்க பெயல் - அதிகமழை.
பெயலின்மை - மழையில் லாமை. விட்டில் -
ஒருவகைப்பறவை. அரசு அண்மை - அரசர் மிக நெருங்
குதல். என்றிவற்றான் வருவது - என்ற இவைகளால்
உண்டாவது. அக் கண் - அவ்விடத்து. ஆறு -
ஆறுகுற்றங்களாம். அதிவ்ருஷ்டி, அநாவ்ரு ஷ்டி,
மூஷிகம், சலபம், சுகம், அத்யாஸந்நரான ராஜாக்கள்
என்னும் ஆறும் வடநூல்களில் ஈதிபாதை யெனவும்,
தேசவ்யஸந மெனவும் படும்; ஈதி - உபத்திரவம். இவை,
தமிழில், நாட்டுக்குற்ற மெனப்படும். (மிக்கமழை முத லிய
எட்டை நாட்டுக்குக் கே டென்றலு முண்டு; "கிளிவளர்
பூமரு தணிந்து கேடிலா, வளவயல்" என்ற
சிந்தாமணிச்செய்யுளில் நச்சினார்க்கினியர் 'கேடு- "விட்டில்
கிளி நால்வாய் வேற்றரசு தன்அரசு, நட்டம் பெரும்பெயல்
கால் எட்டு" என உரைத்ததனாலும், "விட்டில் தன்அரசு
நால்வாய் மிகுமழை மிகுகாற்றேடே, நட்டம் வேற்றரசு
கிள்ளை நாடுறுங் கே டெட்டாமே" என்ற நிகண்டிறுலும்

காண்க.) இவற்றுள் - இந்தக்கேடுகளுள். முன்னையவற்றது இன்மை - முன்னுள்ள 'மிக்கபெயல்' முதலிய ஐந்தும் இல்லாமை. அரசன்
அறம் - ராஜனது தருமம்; நீதிதவறாமை. பின்னையது இன்மை - பின்னுள்ளதான அரசண்மை இல்லாமை. அவன் மறம் - அவனது பராக்கிரமம். இவ்வின்மைகளான் - நாட்டுக்குற்றம் ஆறும் இல்லாமையால்.

பெட்டக்கது - பெட்கத்தக்கது: பெள் தக்கது எனப் பிரிக்க; பெள் - விரும்புதலுணர்த்தும் வினைப்பகுதி: இதனடியாக, பெட்டல், பெட்பு, பெட்ட, பெட்டு என்பவை முதலாக வினைவடிவங்கள் உண்டாகும். 'அருங்கேட்டால்' என்பதில், 'ஆல்' உருபு - 'ஒடு' உருபின்பொருளில் வந்தது. அருங்கேடு என்பதை, கேடருமை என விகுதிபிரித்துக் கூட்டிக்கொண்டார்; இதில், அருமை - இன்மைமேல் நின்றது. ஆற்ற - ஆற்று என்னும் வினைப் பகுதியடியாப் பிறந்த செயவெனெச்சம். விளைவது - வது; வினைமுற்றுப்பெயர் [வினையாலணையும்பெயர்]

விளையும் இட மாகு
இடப்பொருள் படு
தற்கு 'விளைவது நாடு' என்பதை உதாரணங்காட்டினர், இலக்கணக்கொத் துடையார். இன்னும் அந்நூலில் 'விளைவதுநாடு - இது, வருமொழியை நோக்காமலே தனக்கு உரிய ஒருமைப்பாலைவிட்டுப் பன்மைப்பாலையே விளக்குதலால், அஃறிணைச்சாதியொருமையாயிற்று' என்றதும் உணர்க. (உ)

எΓБГБ.

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

(இ - ள்.) பொறை - (பிறநாடுகள்)
ஒருங்கே, மேல் வரும் கால் - தன்கண்

பொறுத்த பாரமெல்லாம், ஒருங்கு-
வருங்கால், தாங்கி - (அவற்றைத்)
தாங்கி,—(அதன்மேல்), இறைவற்கு - தன் அரசனுக்கு, இறை ஒருங்கு -
இறைப்பொருள் முழுதையும், நேர்வது - உடம்பட்டுக் கொடுப்பதே,—நாடு-
நாடாவது; (எ - று.)
35

பாரங்கள்-மக்கள்தொகுதியும், ஆன் எருமை முதலிய விலங்குத் தொகுதியும். தாங்குதல்-அவை தத்தம்தேயத்துப் பகை வந்து இறுத்ததாக, அரசு கோல்கோடியதாக, உணவின்மையானுகத் தன்கண் வந்தால் அவ்வத்தேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல். அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானேகொடுப்ப தென்பார், 'இறையொருங்கு நேர்வது' என்றார்.

(கு - ரை.) அயல்நாடுகள் பலவற்றினின்று பலகாரணங்களால் எத்தனை பிராணிசமூகம் வந்து சேர்ந்தபொழுதிலும் அவை யாவும் தம்தம்நாட்டிற் சுகமாக இருத்தல்போலத் தங்கும்படி அவற்றிற்கு வேண்டும் இடப்பரப்பையும் பொருள்வளத்தையும் மிகுதியாகவுடையதாய், தன் அரசனுக்கு இறை செலுத்துவதிற் சிறிதும்வெறுப்பின்றி, அரசன்வருத்திவாங்கவேண்டாதபடி பொருள்வளமுடைமையால் மிக்கமகிழ்ச்சியோடு தானே இறைப்பொருளைக் கொண்டுசெலுத்துந் தன்மையதே நாடாகு மென்க.

பொறுத்த - தரித்த. தன்கண் வருங்கால் - தன்னிடத்துவரும்பொழுது. தாங்கி - இடமாகி, காத்து. அதன்மேல் - அத்தன்மையோடும். இறைப்பொருள் - வரிப்பணம். உடம்பட்டுக்கொடுப்பது - தடையின்றிக் கொடுக்கும்படியான வளமுள்ளது. மக்கள்தொகுதி - மனிதர்கூட்டம். ஆன் - பசு. விலங்குத்தொகுதி - மிருகசமூகம். தத்தம் தேயத்துப் பகை வந்துஇறுத்ததாக - தங்கள் தங்கள் தேசங்களிற் பகைவர்கள் வந்துதங்கி நெருக்கியதனாலாவது. அரசுகோல்கோடியதாக - அரசன் செங்கோன்மை தவறிக் கொடுங்கோன்மை செலுத்தியதனாலாவது. உணவின்மையானுக - உண்ணப்படும் பொருள்களில்லாமல் வறுமையடைந்ததனு லாவது. இறையை-குடியிறைப் பொருளை.

பொறை - பொறுக்கப்பட்டது, இறை - இறுக்கப்படுவது; பொறு, இறு - பகுதிகள்: ஐ - செயப்படுபொருள்விகுதி. இறுத்தல் - செலுத்தல். ஒருங்கு - இடைச்சொல். நாட்டிலுள்ளார்வினையை நாட்டின்மேலேற்றி, 'இறையொருங்குநேர்வது நாடு' என்றார். 'இறைவற்கு இறையொருங்கு நேர்வது' என்றவிடத்து இறைக்குரியவனுக்கு இறைமுழுவதையுங் கொடுப்பதென்ற பொருள் தொனிக்கும். கால் - காலமென்பதன் விகாரம். (௩)

எ௩௪. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(இ - ள்.) உறு பசிஉம் - மிக்க பசியும், ஓவா பிணிஉம் - நீங்காத நோயும், செறு பகைஉம் - (புறத்துநின்று வந்து) அழிவுசெய்யும் பகையும், சேராது - இன்றி, இயல்வது - இனிது நடப்பதே, நாடு - நாடாவது; (எ-று.)

உறுபசி, உழவருடைமையானும் ஆற்றவிளைதலானுஞ் சேராதாயிற்று. ஓவாப்பிணி, தீக்காற்றும் மிக்க குளிர்வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமையும் இன்மையின் சேராதாயிற்று. செறுபகை, அரசனாற்றலும் நிலைப்படையும் அடவியும் அரணும் உடைமையின் சேராதாயிற்று.



(கு-ரை.) புறத்துநின்று-வெளியிலிருந்து. உழவருடைமை-உழுதுபயிர் செய்பவர்களை உடைத்தாயிருத்தல். மிக்க குளிர் வெப்பங்கள் - மிகுதியான குளிர்ச்சியும், மிகுதியான சூடும். நுகரப்படுமவற்றது-உண்ணப்படும்பொருள்களினது. அரசன் ஆற்றல் - அரசனது அறிவு ஆண்மை பெருமை என்னும் மூன்றுவகைவலிமைகள். நிலைப் படை - எப்பொழுதும் மாறுபடாமல் நிலைத் திருக்குஞ் சேனை. அடவி - காடு; என்றது, செறிந்த வனத்தினுற் சூழப் பட்டிருத்தலாகிய காட்டரணை. 'அடவி' என முன்னர்க்கூறியதனால், பின்னர் 'அரண்' என்றது - காட்டரண் நீங்கலான நீரரண், நிலவரண், மலை யரண் என்றவற்றை.

(ங)

எ௩௫. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

(இ - ள்.) பல் குழுஉம் - (சங்கேதவயத்தான் மாறுபட்டுக்கூடும்) பல

கூட்டமும், பாழ் செய்யும் உள் பகைஉம் - (உடன் உறையாநின்றே) பாழாகச்செய்யும் உட்பகையும், வேந்து அலைக்கும் கொல் குறும்புஉம்-(அளவு வந்தால்) வேந்தனை அலைக்குங் கொல்வினைக்குறும்பரும், இல்லது - இல்லாததே, நாடு - நாடாவது; (எ - று.)

சங்கேதம் - சாதிபற்றியும், கடவுள்பற்றியும் பலர்க்கு உளதாம் ஒருமை. உட்பகை - ஆறலைப்பார், கள்வர், குறளைகூறுவார் முதலிய மக்களும்; பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும். உட்பகை, குறும்பு என்பன-ஆகுபெயர்.

இம்மூன்றும் அரசனாலும் வாழ்வாரானுங் கடியப்பட்டு நடப்பதே நாடு என்பதாம்.

(கு - ரை.) வயத்தான் - வசத்தால். உடன் உறையாநின்றே-கூடவசித்துக்கொண்டிருந்தே. பாழாகச்செய்யும் - அழியச்செய்கின்ற. உட்பகையை, வடநூலார் 'அந்தஸ்சித்ரம்' என்பர். அளவு வந்தால் - சமயம் நேர்ந்தால். அலைக்கும் - வருத்துகின்ற. கொல்வினைக் குறும்பர் - கொலைத்தொழிலை யுடைய சிற்றரசர். குறும்பர் - குறுநிலமன்னர்; வேடர்களும், துற்சனருமாம். ஸங்கேதம் - கட்டுப்பாடு. கடவுள்பற்றி-தம்தம்வழிபடுகடவுளே சிறந்ததென்றும், மற்றையதெய்வங்கள் சிறந்தனவல்லவென்றுந் தாபிக்கின்ற நிமித்தமாக; மதம்பற்றி யென்றபடி. உளதாம் ஒருமை-உண்டாகும் ஒற்றுமை. ஆறு அலைப்பார் - (பிரயாணிகளை) வழியில்

உபத்திரவித்துப் பொருள்கவர்பவர். கள்வர் - திருடர்; பிறருடைமையாயிருப்பதொருபொருளை அவரைவஞ்சித் துக்கொள்பவர். குறளை கூறுவார் - கோள்சொல்பவர். 'முதலிய' என்றதனால், இச்சகம்பேசிப் பொருள்பறிப்பார், முன்னொன்றுகூறிப் பின்னொன்று கூறுவார், பொய்ச்சாக்ஷிகூறுவார், மித்திரபேதஞ்செய்வார் முதலியவர்களைக் கொள்க. மக்கள் - மனிதர். விலங்கு - மிருகம். பகை என்பது - பகைமையுடைய பிராணிகளையும், குறும்பு என்பது - குறும்பரையுங் குறித்தலால், பண்பாகுபெயராம்; பகை - பகைமை. குறும்பு - குறுநில ஆட்சி; சிறுமைக் குணமுமாம். கடியப்பட்டு

நடப்பது-ஒழிக்கப்பட்டுப் பொருந்துவது. சங்கேத



வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டங்கள்,

சனங்களுக்குள் உள்ள பொதுவொற்றுமையைக் கெடுத்து மாறுபாட்டைவிளைத்து ஒரோவழி அரசனோடு எதிர்த்தற்குங் காரணமாகு மாதலால், அவை ஒழிக்கத்தக்கனவென்க.

உட்பகை - உள்ளே நின்றபகை என

ஏழாம்வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்கதொகை. வேந்து - அரசத்தன்மை: அரசனுக்குப் பண்பாகு பெயர்; இதனை, பரிமேலழகர் 'உயர்திணைப்பொருட்கண் வந்த

அஃறிணைச் சொல்' என்பர்: அரசு, அமைச்சு, தூது, ஒற்று, யாதுஎன்பனவும் இவ்வாறே. அலைக்கும் - பிறவினைப்பெயரெச்சம். கொல் குறும்பு - வினைத்தொகை. (௫)

௭௩௬.

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

(இ - ள்.) கேடு அறியா - (பகைவராற்) கெடுதலறியாததாய், கெட்ட இடத்துஉம் வளம் குன்றா - (அரிதின்) கெட்டதாயினும் அப்பொழுதும் தன் வளங்குன்றாத, நாடு - நாட்டினை, நாட்டின் தலை என்ப - எல்லாநாட்டினும் தலையென்று சொல்லுவர், (நூலோர்); (எ - று.)

அறியாத, குன்றாத என்னும் பெயரெச்சங்களின் இறுதிநிலைகள் விகாரத்தால் தொக்கன. கேடு அறியாமை, அரசனாற்றலானும் கடவுட்பூசை அறங்கள் என்றிவற்றது செயலானும் வரும். வளம் - ஆகரங்களிற் படுவனவும், வயலினும் தண்டலையினும் விளைவனவுமாம். குன்றாமை-அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே உளவாயும் முன் ஈட்டப்பட்டும் குறைவறுதல்.

இவையாறுபாட்டானும், நாட்டது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) கெடுதல் அறியாததாய்-எப்பொழுதும் அழிவடையாததாய் என்றபடி. அரிதின் கெட்டதாயினும்-அருமையாக [ஒருபொழுது] அழிவ

டைந்தாலும். வளம் குன்றாத - வளப்பங்குறையாத.
தலை - மேலானது, உத்தமம். நூலோர் -
சாஸ்திரமறிந்தவர்; இங்கு, 'நூல்' என்றது, பொருள்நூலை.
இறுதிநிலை - விகுதி; பகுபதங்களின் ஈற்றில் நிற்பது; தகர வெழுத்துப்பேற்றோடுகூடிய அகரவிகுதி
செய்யுள்விகாரத்தால் தொக்கதென்க. அறியா, குன்றா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சங்கள்: இவ் விரண்டும் அடுக்கி 'நாடு' என்னும் பெயர் கொண்டன: [நன் - பொது - ௬.] "மூவா முதலா வுலகம்" என்பதிற் போல.

கடவுட்பூசை - தெய்வங்களைப் பூசித்தல். இவற்றது செயல் - இவற்றைச்செய்தல் என்றபடி. ஆகரங்களில் படுவன - உரியஇடங்களில் உண்டாகின்ற பொன் மணி முத்து பவழம் முதலியன; ஆகரம் - தோன்றுதற்குஉரிய இடம். வயல் - கழனி. தண்டலை- சோலை. வயலினும் தண்டலையினும் விளைவன - தானியங்கள் காய்கனிகள் முதலியன.
"கதிர்படுவயலினுள்ள கடிகமழ்பொழிலினுள்ள,
முதிர்பலமரத்தி
னுள்ள முதிரைகள் புறவினுள்ள,
னுள்ள, மதுவனமலரிற் கொள்ளும்

பதிபடுகொடியினுள்ள படிவளர்குழியி
வண்டென மள்ளர் கொள்வார்" என்ற
கம்பராமாயணச்செய்யுள், இங்கு அறியத்தக்கது. அவை - அவ்வளங்கள்.
செய்யவேண்டாமல் - புதிதாகச் சம்பாதிக்கவேண்டாதபடி. முன் ஈட்டப்பட்

டும் - முன்னே கொணர்ந்து சேர்க்கப்பட்டும்.
குறைவறுதல்-குறைவில்லாம
விருத்தல். நாட்டது இலக்கணம் - நாட்டினது லக்ஷணம்.

'கெட்டவிடத்து' என்பதை, கெட்டால் எனப்
பொருள்படும் எதிர்கால
வினையெச்சமென்னலாம்; உம் - இழிவுசிறப்பு. என்ப
- பலர்பால் வினை
முற்று; ப - பலர்பால் விகுதி: [நன் - வினை - அ.]
இவ்விகுதியே இங்கு
எதிர்காலங் காட்டிற்று; [நன் - பத - கஅ.] நாட்டின் -
ஐந்தாம்வேற்றுமை
விரி யென்றாவது, எழாம்வேற்றுமைவிரி யென்றாவது
கொள்க. தலை - தலை
மையானது, தலைபோன்றது, முதன்மைபெற்றது;
ஆகுபெயர். 'என்ப'
என்னும் முற்றுச்சொல், 'நூலோர்' என்னும் பெயர்
தொக்குநின்றதனோடு
முடியும்.

(ரு)

எ௬எ. இருபுனலும் வாய்ந்த மலையும்
வருபுனலும்

வல்லரணு நாட்டிற் குறுப்பு.

(இ - ள்.) இரு புனல்உம் - கீழ்நீர் மேல்நீர் எனப்பட்ட தன்கண்நீரும்,
வாய்ந்த மலைஉம் - வாய்ப்புடைத்தாய மலையும், வரு புனல்உம் - (அதனி
னின்றும்) வருவதாய நீரும், வல் அரண்உம் - அழியாத நகரியும், நாட்டிற்கு
உறுப்பு - நாட்டிற்கு அவயவமாம்; (எ - று.)

ஈண்டு 'புனல்' என்றது, தரவுகேணிகளும் ஏரிகளும் ஆறுகளு மாகிய
ஆதாரங்களை; அவயவமாதற்குரியன அவையே யாகலின். அவற்றான், வானம்
வறப்பினும் வளனுடைமை பெறப்பட்டது. இடையதன்றிஒருபுடையதா
தலும், தன்வளந் தருதலும், மாரிக்கண் உண்ட நீர் கோடைக்கண் உமிழ்
கலும் உடைமைபற்றி, 'வாய்ந்த மலை' என்றார். அரண் - ஆகுபெயர்.

இதனான், அதன் அவயவம் கூறப்பட்டது.

(கு - ரை.) கீழ்நீர் - கிணறு குளங்கள். மேல்நீர் - ஏரி ஆறுகள். தன்கண்
நீர் - தன்னிடத்து நீர். வாய்ப்பு உடைத்தாய - ஏற்றவிடத்தில் அமைதியை
யுடைய. நகரி - இங்கே, கோட்டை; நகரமுமாம்.

கேணி-குளம்: ஆதாரங்கள்-
ஜலாதாரங்கள்: நீர்நிலைகள். அவயவமாதற்கு - நாட்டிற்கு
உறுப்பாவதற்கு.
அவையே-தூரவு கேணி முதலியவைகளே.
அவற்றான்-தூரவுமுதலிய நீர்நிலை
கள் அமைந்திருத்தலால். வானம் வறப்பினும் வளன்
உடைமை - மேகம்
மழைபெய்யாது வறந்தாலும் தன்வளங்குறையாதிருத்தல்.
இடையது அன்றி
ஒருபுடையது ஆகல் - நாட்டின்நடுவிலுள்ளதாகாமல்
ஒருபக்கத்திலுள்ளதா
தல்; இங்ஙனம் ஒருபுறத்து விலகியிருத்தலே மலைக்கு
நல்ல வாய்ப்பாதல்
பற்றி, அதற்கு 'விலங்கல்' என ஒருபெயர் வழங்குதலுங்
காண்க. 'தன் வளம்' என்றது, மலைவளத்தை; அவ்வளம் -
அகில், மிளகு, கோட்டம், தக்
கோலம், குங்குமம், சந்தனம், பொன் முதலியன.
மாரிக்கண் உண்ட நீர் கோடைக்கண் உமிழ்தல் -
மழைக்காலத்தில் உட்கொண்ட நீரை வெயிற் காலத்தில்
வெளிப்படுத்தல். 'அரண்' என்னும் பாதுகாப்பின்பெயர்,
அதனை
யுடைய கோட்டையைக் குறித்தலால், ஆகுபெயராம்.
அதன் - நாட்டின்.

இரு புனல் - இரண்டுவகை நீர்; பண்புத்தொகை. (மிக்கபுனலென்னும்பொருளில் 'இரும்புனல்' என வரும்; இருமை - பெருமை') வரு புனல்- வினைத்தொகை. மலை-மலையப்படுவதெனக் காரணம்பற்றிய பெயரென்னலாம்; மலைதல் - கண்டவர் அஞ்சுதல்: செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டதென்க. (எ)

௭௩௮. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(இ - ள்.) பிணி இன்மை - நோயின்மையும், செல்வம் விளைவு இன்பம் ஏமம் - செல்வம் விளைதல் இன்பம் காவல் என்றிவையுடைமையும் ஆகிய, இஐந்து - இவ்வைந்தினையும், நாட்டிற்கு அணி என்ப - நாட்டிற்கு அழகென்றுசொல்லுவர், (நூலோர்); (எ - று.)

பிணியின்மை, நிலநலத்தான் வருவது. செல்வம் - மேற்சொல்லியன. இன்பம் - விழவும் வேள்வியும் சான்றோரும் உடைமையானும், நுகர்வன உடைமையானும், நிலநீர் களது நன்மையானும், வாழ்வார்க்கு உள்நிகழ்வது. 'காவல்' எனவே, அரசன்காவலும் வாழ்வோர்காவலும் அரண்காவலும் அடங்கின.

பிறதேயங்களினுள்ளாரும் விழைந்து பின் அவையுள்ளாமைக்கு ஏது வாய அதன் அழகு இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) விளைதல் - நெல்முதலிய விளைவு.

"செல்வம் விளையுள் பல் வளஞ் செங்கோல்,
கொல்குறும்பின்மை கொடும்பிணியின்மை யென், றிவ் வகை
யாறு நன்னாட்டமைதி" என்று பிங்கலந்தையிற்கூறப்பட்ட
அறுவகை நாட்டமைதிகள் இங்கு அறியத்தக்கன.
நிலநலம்-அந்தந்தப் பூமியின் நன்மை. மேல்-முன்.
'மேற்சொல்லியன' என்றவை, இவ்வதிகாரத்தின்
ஆறுஞ்செய் யுளிற் சொல்லப்பட்ட 'வளம்' என்றதன்
பொருளாகிய 'ஆகரங்களிற்படு வன' முதலியன. இனி,
செல்வம் - கலத்திலும் காலினும் வணிகர் தரும்
அரும்பொருளுமாம்; இவ்வதிகாரத்தின் முதற்குறளைக்
காண்க. விழவு-திரு விழா; தெய்வங்களுக்குச் செய்யும்
உற்சவங்கள். வேள்வி-கலியாணம், யாகம்
சான்றோர்-பலநற்குணங்களாலும் நிறைந்த பெரியோர்.
நுகர்வன உடை மை - ஐம்பொறிகளாலும்
அனுபவிக்கப்படும் பொருள்களை யுடைத்தாயிரு த்தல். உள்
நிகழ்வது - மனத்தில் உண்டாவது. அரண் காவல் -
அரணினா லுண்டாகும் பாதுகாப்பு. விழைந்து - இந்நாட்டை
விரும்பி. பின் - இங்கு வந்த பின்பு. அவை உள்ளாமை -
தம்தம்தேயங்களை நினைத்தலுஞ்செய்யாமை. அதன் -
நாட்டின். அழகைத்தருவதை 'அழகு' என்றது, காரிய
வாகுபெயர். இனி, அணி - ஆபரணமென்றுமாம்:
அழகுதருதல் பற்றிய உவமை.

(அ)

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.



(இ - ள்.) நாடா வளத்தன - (தங்கண்
(அவர்பால்) தானேயடையுஞ் செல்வத்தை

வாழ்வார்) தேடி வருந்தாமல்
யுடையவற்றை, நாடு என்ப -
(நூலோர்) நாடென்று சொல்லுவர்; (ஆதலால்), நாட வளம் தரும் நாடு -
தேடிவருந்தச் செல்வமடைவிக்கும் நாடுகள், நாடு அல்ல - நாடாகா; (எ - று.)

நாடுதல், இருவழியும் வருத்தத்தின்மேல் நின்றது.
வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும். நூலோர்விதிபற்றி,

"பொருள்செய்
எதிர்மறைமுகத்

தாற் குற்றங் கூறியவாறு. இவ்வாறன்றி, 'என்ப'
கூட்டி இருபொருள்பட உரைப்பின், அநுவாதமாம்.

என்பதனைப் பின்னுங்

(கு - ரை.) தங்கண் - தம்மிடத்து. அவர்பால்-தங்கண் வாழ்வாரிடத்து. நாடுதல்-தேடுதல். இருவழியும்-'நாடா வளத்தன', 'நாட வளந்தரும்' என்னும் இரண்டிடத்தும். தேடுதலாகிய காரணத்தைக் குறிக்குஞ்சொல்லால் வருந்துதலாகிய காரியத்தைக் குறித்தது, காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசார வழக்கு. "பொருள்செய்வார்க்கு மஃதிடம்" என்ற மேற்கோள், இவ்வதிகாரத்து முதற்குறளின் குறிப்பிற் காட்டப்பட்ட "நற்றவஞ் செய்வார்க் கிடம்" என்ற சீவகசிந்தாமணிச் செய்யுளி லுள்ளது: பொருளைத்தேடுவார்க்கும் அந்நாடு இட மென்பது, இதன்பொருள்; இம்மேற்கோள் இங்கு எடுத்துக்காட்டியது, நாடு பொருள்தேடுபவர்க்கு இடமாம் என்பதைக் காட்டுதற்கு. நூலோர்விதிபற்றி - சாஸ்திரமுணர்ந்தோர் 'இத்தன்மையுள்ள தே நாடு' என்று விதித்திருத்தல்பற்றி. எதிர்மறைமுகத்தால் - பெறப்படுங் கருத்தை 'நாடவளந்தருநாடு நாடல்ல' என எதிர்மறைமுகமாகக் கூறுதலால். இனி, நூலோர்விதிபற்றி - நூலோரின் முறைமையையொட்டி எனப் பொருளுரைத்து,

ஒருபொருளை வற்புறுத்துதலின்பொருட்டு உடன்பாட்டாற்கூறியதனை எதிர்மறைமுகத்தாற் கூறுவதும் நூலோர்முறைமையெனினுமாம். பின்னும் கூட்டுதல் - 'நாடவளந்தருநாடு நாடல்ல என்ப' எனப் பின்னுள்ளவாக்கியத்தோடுஞ் சேர்த்தல். 'இருபொருள்பட உரைப்பின்' என்றது, இரண்டுவிஷயங்கள் தனித்தனிதோன்ற இரண்டுமுடிபாக்கி உரைகூறினால் என்றபடி. முதலிற்கூறிய உரைப்படி, 'நாடவளந்தருநாடு நாடல்ல' என்ற பிரதானவாக்கியத்தால் நாட்டின்குற்றமொன்றே கூறப்பட்டதாக, 'நாடாவளத்தன நாடென்ப' என்றது, அக்கொள்கையைச்சாதித்தற்கு மேற்கோளெடுத்துக்காட்டிய ஏதுவாக்கியமாய் அப்பிரதானமாதலும்; இரண்டாவது கூறிய உரைப்படி 'நாடாவளத்தனநாடென்ப' என்ற முதல்வாக்கியம் நாட்டின் குணத்தையும், 'நாடவளந்தருநாடு நாடல்ல என்ப' என்ற இரண்டாம் வாக்கியம் நாட்டின்குற்றத்தையுங் கூறி இரண்டும்பிரதானவாக்கியமாதலுமாகிய வேறுபாட்டை நுட்பமாக நோக்குக: ஓரிடத்து ஒருவிஷயமே விதிக்கப்படவேண்டுமென்றும், இரண்டுவிதி ஓரிடத்துஇருப்பின் வாக்கியபேதமென்னுங் குற்றமாமென்றும் கூறுகிற நூன்முறைமையையொட்டி இரண்டுவிதி கொள்ளற்பாலவல்ல என்று, இருபொருள்படவுரைப்பின் அநுவாதமாமென்றார். அநுவாதமாவது - 'யாதானும் ஓர் நிமித்தத்தால் ஒன்றனை முற்



கூறி வேறொருநிமித்தத்தால் அதனையே பின்னுங்கூறுதல்' என்பது, இலக்கணக்கொத்துரை; தமிழில், வழிமொழிதலெனப்படும். குடிகள் தேடிவருந்த மடையாதபடி அவர்கட்கு எல்லாவளங்களையும் எளிதிற்கொடுப்பவையே நாடாகும் என்க. 'ஒருபொருளை முன்னரெடுத்துக்கூறுவது, புரோவாதம்; அதனை ஒருநிமித்தத்தாற் பின்னரும் எடுத்துக்கூறுவது, அநுவாதம்' என்பது, பிரயோகவிவேகவுரை. (௬)

௭௪0. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(இ - ள்.) வேந்து - வேந்தனோடு, அமைவு இல்லாத - மேவுதலில்லாத, நாடு—, ஆங்கு அமைவு எய்தியக்கண் உம் - மேற்சொல்லியகுணங்களெல்லா வற்றானும் நிறைந்திருந்ததாயினும், பயம் இன்று - தன்று; (எ - று.)
(அவற்றாற்) பயனுடைத் 'வேந்தமைவு' எனவே,

குடிகள் அவன்மாட்டு அன்புடையராதலும், அவன்தான் இவர்மாட்டு அருளுடையனாதலும் அடங்கின. அவை இல்வழி வாழ்வோர் இன்மையின், அவற்றாற் பயனின்றாயிற்று.

இவையிரண்டுபாட்டானும், அதன்குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) மேவுதல் - பொருந்துதல், ஒற்றுமைப்படுதல். மேற்சொல்லிய குணங்கள் - தள்ளாவிளையுள் என்பதுமுதல் நாடாவளத்தன என்பது வரை இவ்வதிகாரத்துக்கூறிய நாட்டின்குணங்கள். ஆங்கு - அவ்வாறு: கீழ்க்கூறியபடி. அமைவு எய்தியக்கண்ணும் - நிறைவடைந்தாலும். அவன் மாட்டு - அரசனிடத்தில். அன்பு - பிரீதி; அவன் - அரசன். இவர்மாட்டு குடிகளிடத்தில். அருள் - கருணை. அவை இல்வழி - குடிகளுக்கு அரச னிடத்தில் அன்பும்,

அரசனுக்குக் குடிகளிடத்தில் அருளும் இல்லாதவிடத் தில்.
அதன் - நாட்டின். எவ்வளவு குணங்கள் நிறைந்துள்ள
நாடாயினும்
அரசனுக்குங் குடிகளுக்கும் ஒற்றுமையில்லாவிட்டால்
இடமாகாதாதலால், அவ்வொற்றுமையின்மை நாட்டுக்குக்

இனிதுவாழ்தற்கு
குற்றமா மென்க.

## எரு - ஆம்

## அதிகாரம்.—அரண்.

இனி, அந்நாட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும்
பகைவரால் தொலைவு வந்துழி அதுதனக்கும்
அரசன்தனக்கும் ஏமமாதற் சிறப்புப்பற்றிப் பிறிதோ
ரங்கமாக ஓதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தாற்
கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம்
அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும். *

(கு - ரை.) அடங்கும் - நாட்டின்
இலக்கணஞ்சொன்னதிலேயே அடங்கிவிடும்; இங்ஙனம்
அரண் நாட்டில் அடங்குதலை, கீழ் "வல்லரணு நாட்டிற்
குறுப்பு" என்றதிற் காண்க. படை குடி கூழ் அமைச்சு
நட்பு என்ற உறுப்புக்கள்போலப் பிறிதின்கிழமைப்பொரு
ளாக அல்லாமல்
தற்கிழமைப்பொருளதா யிருப்பினும் என்ற கருத்துப்பற்றி, 'நாட்

* இந்தவாக்கியம் பலபிரதிகளில் இல்லை.

டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும்'
என்றுகூறினரெனக் கொள்ளலாம். தொலைவு வந்துழி - அழிவுநேரிடும்பொழுது. அதுதனக்கும் - அந்நாட்டிற்கும். அரசன்தனக்கும் - அரசனுக்கும். ஏமமாதற்சிறப்பு - பாதுகாப்பாதலாகிய சிறப்பு. அரண் - கோட்டை.
நாடென்னும் அதிகாரத்தின்பின் அரணென்னும் அதிகாரத்தை வைத்த காரணம், வெளிப்படை; நாடு உறுப்பியும், அரண் உறுப்பு மாதல் காண்க. அரண் - ஶரணமென்னும் வடசொல் லின்விகாரம், காப்பதென்று பொருள். 'முழு அரணாவது - மலையுங் காடும்நீரு மல்லாத அகநாட்டுச் சேம அருமதில்; அது வஞ்சனைபலவும் வாய்த்துத் தோட்டிமுள் முதலியன பதித்த காவற்காடும் அதனுள்ளே இடங்கர் முதலி யன உள்ளுடைத்தாகிய இடங்கும் புறஞ்சூழ்ந்து, யவனரியற்றிய பலபொறி களும் ஏனைப் பொறிகளும் பதணமும் ஏப்புழைஞாயிலும் ஏனையபிறவும் அமைந்து, எழுவும் சீப்பும் முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற்கோபுர மும் பிற எந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாம். இனி, மலையரணும் நிலவரணுஞ் சென்றுசூழ்ந்து நேர்தலில்லாது வார்ந்து அமைந்தனவும், இடத் தியற்றிய மதில்போல வடிச்சிலம்பின் அரணமைந்தனவும், மீதிருந்து கணை சொரியு மிடமும் பிறவெந்திரங்களும் அமைந்தனவு மன்றி, காட்டரணும் நீரரணும் அவ்வாறு வேண்டுவனவும் அமைந்தனவாம்'

என்று தொல்காப்பியவுரையில் உரைத்தது இங்கு அறியத்தக்கது.

எசுக.

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

(இ - ள்.) ஆற்றுபவர்க்கு உம் - மூவகை யாற்றலும் உடையராய்ப் பிறர் மேற் செல்வார்க்கும், அரண் —, பொருள் - சிறந்தது; அஞ்சி தன் போற்று பவர்க்குஉம் - (அவையின்றித் தம்மேல்வருவார்க்கு) அஞ்சித் தன்னையே அடைவார்க்கும், (அரண்) பொருள் - அரண் சிறந்தது; (எ - று.)

பிறர்மேற்செல்லுங்கால்*உரிமை பொருள் முதலியவற்றைப் பிறனொருவன் வௌவாமல்வைத்துச் செல்லவேண்டு மாகலானும், அப்பெருமைதொலைந்து இறுதிவந்துழிக் கடல்நடுவண் உடைகலத்தார்போன்று ஏமங்காணாது இறுவ ராகலானும், ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருளாயிற்று. †அரண் இல்வழி அழியும்பால ராகலின், அவரை முற்கூறினார்.

இதனான், அரணினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) மூவகை ஆற்றல் - அறிவு ஆண்மை பெருமை என்பன; சகூகூ - ஆம் குறளுரையிற் கூறிப்போந்தார்: இவற்றில், பெருமை-பொருள், படை

[சேனை] என இருவகையதாம். பிறர்மேற் செல்வார் - பகைவர்மேல் எதிர்த்துப் போர்க்குச்செல்பவர். அவை இன்றி - அவ்வாற்றல்கள் இல்லாமல். தம்மேல் வருவார் - தம்மையெதிர்த்துவரும் பகைவர். 'தன்னையே' என்றது, அரணை. இனி, 'தன் போற்றுபவர்' என்பதற்கு - தம்மைத் தாம் பாதுகாத்துக்கொள்ள முயல்பவர் என்று பொருள்கொண்டால், 'போற்று

* பி - ம்: உரிமைப்பொருள்.

† ஆற்றலுடையராயினும் அரண்.





பவர்' என்னும் பன்மையோடு 'தன்' என்ற ஒருமை மயங்கியதாம். உரிமை - தனக்கு உரிய பொருள்; மனைவி முதலியன. வெளவாமல் - அபகரித்துக் கொள்ளலாகாதபடி. இறுதி வந்துழி - அபாயம் நேர்ந்தபொழுது. கடல் நடுவண் உடை கலத்தார் போன்று - கடலின்நடுவிலே உடைந்துபோன மரக்கலத்தில் உள்ளவர்போல; இவ்வுவமை, பல நூல்களிலும், பெருந்தீங்குஅடை தற்கு எடுத்துக்காட்டப்படும். ஏமம் காணாது இறுவர் - பாதுகாக்குமிடத்

ணைதப்பெருமல் அழிவர். வலிமையுடையார்க்கு அரண் சிறந்ததாதற்குக்

காரணம் - ஒருவன்மேற் போர்க்குச் செல்லும்பொழுது தம்முடைய உரிய

பொருள்களைப் பிறனெருவன் கவராதபடி வைத்துச்செல்லுதற்குப் பாதுகாப்

புள்ள இடம் வேண்டியிருத்தல். வலிமையில்லார்க்கு அரண் சிறந்ததாதல்,

பகைவர்க்கு அஞ்சி உள்ளிருத்தற்குத் தக்க இடம் வேண்டியதாதலின். அரண்

இல்வழி அழியும்பாலராகலின் அவரை முற்கூறினர் - ஆற்றலில்லாதவர்

அவ்வின்மையினுலேயே அழியுந்தன்மையர்: அவர் அழிதற்குக் காரணம்,

அரணில்லாமைமாத்திர மன்று: ஆற்றலுடையவர் அழிதற்கு வேறு காரண

மில்லை யாதலால், அரணின்மைமாத்திரமே அவரழிதற்குக்காரணமாம்; ஆத

லால், அரண், அஞ்சித் தற்போற்றுபவர்க்குப் பொருளாதலினும் ஆற்றுபவர்

க்குப் பொருளாதல் முன் கூறப்பட்ட தென்க. வலிமையுடையராய்

வெளிச்சென்று பிறரையெதிர்க்கும் அரசர்க்கும், வலிமையிலராய்ப் பிறர்க்கு

அஞ்சி உள்தங்கும் அரசர்க்கும் அரண் இன்றியமையாத

தென்பதாம்.

'அரண்' என்பதனைத் தனித்தனி கூட்டுக. உம்மைகள் இரண்டனுள்,

முன்னது - உயர்வுசிறப்போடு எதிரதுதழுவிய எச்சமும், பின்னது - இழிவு

சிறப்போடு இறந்ததுதழுவிய எச்சமுமாம்; பொருள் - சிறந்தபொருளாகக்

கொண்டாடத்தக்க தென்றபடி.

(க)

எசஉ. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(இ - ள்.) மணி நீர்உம் - மணிபோலுநிறத்தினையுடைய நீரும், மண் உம் - வெள்ளிடை நிலமும், மலைஉம்—, அணி நிழல் காடுஉம் - குளிர்ந்த

நிழலையுடைய காடும், உடையது - உடையதே, அரண் - அரணாவது; (எ-று.)

எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார் 'மணிநீர்' என்றும், நீரும் நிழலும்

இல்லா மருநிலமென்பார் 'மண்' என்றும், செறிந்தகாடென்பார் 'அணிநிழற்

காடு' என்றுங் கூறினார். மதிற்புறத்தது மருநிலம், பகைவர் அரண்பற்று

மைப்பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என இயற்கை

யுஞ் செயற்கையு மாய இர்நான்கரணுஞ் சூழப்படுவது அர ணென்பதாம்.

(கு-ரை.) மணி - நீலமணி; முத்துமாம்: தொகுதியாக நோக்குமிடத்துக் கறுத்தும், பகுதியாகநோக்குமிடத்து வெளுத்துங் காணப்படுதல், நீரின் இயல்பு. வெள்ளிடை நிலம் - யாதொருபொருளுமில்லாமல் வெட்டவெளி யாகவுள்ள நிலம்; இது, வடநூலில் 'மருபூமி' எனப்படும்: மரு என்ற வட சொல்லுக்கு - (பிராணிகள் தாஹதாபங்களால்) மரணமடையத்தக்கஇடமென்

எரு - ஆம் அதிகாரம்.—அரண் உ௫ரு

பது, காரணப்பொருள். எஞ்ஞான்றும் - எப்பொழுதும்.

செறிந்த - அடர்ந்த. மதிலின் வெளிப்புறத்தில் வெகுதூரம் மருபூமி இருக்குமாயின், பகைவர்கள் சேனையோடு தங்கித் தொழில்செய்தற்கு இடமின்று மாகவே, அவர்கள் இம்மதிலரணை முற்றுகைசெய்து கைப்பற்றிக்கொள்ள முடியா தாதலால், அது ஓரரணாகு மென்க. நிலவரணும், மலையரணும் - இயற்கை; நீரரணும், காட்டரணும் - செயற்கை: ஒரோவிடத்து நீரரண்

இயற்கையாக அமைந்தி
ருத்தலும் உண்டு; நிலவரணைச் செயற்கை யென்பாரும்
உளர். நான்கு அர
ணும் சூழப்படுவது - நான்கு அரண்களாலுஞ்
சூழ்ந்திருக்கப்டுபவது. நீரரண்
முதலியன, முறையே வடமொழியில் ஜலதுர்க்கம்,
ஸ்தலதுர்க்கம், பர்வத
துர்க்கம், வநதுர்க்கம் எனப்படும். இந்தக்கருத்தைக்
காட்டும்ஶ்லோகம்,
மநுஸ்மிருதி எ-ஆம் அத்தியாயத்து
எழுபதாவதாகவுள்ளது.

நிழலுக்கு அணியாவது குளிர்ச்சியென்ற கருத்தால்,
'அணிநிழல்' என்
பதற்கு - 'குளிர்ந்தநிழல்' என்று பொருள்கூறினர்;
செறிந்த நிழலுமாம்.
மணிநிழல் என்று எடுத்தால், முதலடி -
முற்றுமோனையாம். உடையது -
குறிப்பு வினையாலணையும்பெயர்.
(உ)

எசாரு. உயர்வகலந் திண்மை யருமையிந்
நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

(இ - ள்.) உயர்வு அகலம் திண்மை அருமை இ
நான்கின் அமைவு -
உயர்ச்சியும் அகலமும் திண்மையும் அருமையும்

என்றுசொல்லப்பட்ட இந்
நான்கின் மிகுதியையுடைய மதிலை, அரண் என்று
உரைக்கும் - அரணென்று
சொல்லுவர்: நூல் - நூலோர்; (எ - று.)
'அமைவு,' 'நூல்' என்பன - ஆகுபெயர். உயர்வு,
ஏணிஎய்தாதது. அக
லம் - புறத்தோர்க்குஅகழலாகா அடியகலமும்,
அகத்தோர்க்கு நின்றுவினை
செய்யலாந் தலையகலமும். திண்மை -
கல்இட்டிகைகளாற்செய்தலின், குத்
தப்படாமை. அருமை - பொறிகளா னணுகற்கு அருமை.
பொறிகளாவன -
"வளைவிற் பொறியு மயிற்பொறி நிலையுங், கருவிர
லூகமுங் கல்லுமிழ் கவ
ணும், பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங், காய்பொன்
னுலையுங் கல்லிடு
கூடையுந், தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங்,
கவையுங் கழுவும்
புதையும் புழையு, மையவித் துலாமுங் கைபெய லூசியுஞ்,
சென்றெறி சிர
லும் பன்றியும் பணையு, மெழுவுஞ் சீப்பு முழுவிறற்
கணையமுங், கோலுங்
குந்தமும் வேலுஞ் சூலமும்" என்றிவை முதலாயின.

(கு - ரை.) அகலம் - பரப்பு. திண்மை - வலிமை.
அருமை - அரிய

தாதல். மிகுதியுணர்த்தும் 'அமைவு' என்பது - மிகுதியையுடைய மதிலுக்
கும், சாஸ்திரத்தைக்குறிக்கும் 'நூல்' என்பது - நூல்வல்லோர்க்கும் ஆகு
பெயராம். ஏணிஎய்தாதது - ஏணிக்கு எட்டாதது; ஏணியின் உதவியைக்
கொண்டு ஏறிக் கடக்க முடியாதது. புறத்தோர்க்கு அகழல் ஆகா - வெளி
யார்க்கு வெட்டித்தோண்டிவிட்டுஉள்ளேவரமுடியாத. அடிஅகலம் - கீழிட
ப்பருமை. அகத்தோர்க்கு நின்று

வினைசெய்யல் ஆம் - உள்ளேயுள்ளவர் உழுச

திருக்குறள்

கள் மேல்நின்று போர்த்தொழில்செய்தற்கு ஏற்ற. பரப்பு. கல்இட்டிகைகளால் - கருங்கற்களாலும்

தலை அகலம் - மேலிடப்
செங்கற்களாலும். இஷ்
டிகா - வடசொல். பொறிகளான் அணுகற்கு அருமை - யந்திரங்களையுடை
மையாற் பகைவர் சமீபித்தற்குங் கூடாதபடி யிருத்தல்; நணுகற்கு என்றும்

பிரிக்கலாம்.

"வளைவிற் பொறியும்" என்று தொடங்கிய மேற்கோள் - சிலப்பதிகாரத்து அடைக்கலக்காதையின் (உ0எ - உகசு) வரிகள். இங்குக்காட்டியவற்றின் முதலடி "இளையுங் கிடங்கும் வளைவிற்பொறியும"என்றும், ஈற்றடி "கோலுங் குந்தமும் வேலும் பிறவும்" என்றும் வழங்கப்படும்; சிலப்பதிகாரவுரையாசிரியராகிய அடியார்க்குநல்லார் கொண்ட பாடம் அதுவே. இவற்றுக்கு அடியார்க்குநல்லாருரை வருமாறு:—'வளை வில் பொறியும் - வளைந்து தானேயெய்யும் எந்திரவில்லும், கரு விரல் ஊகமும் - கரிய விரலையுடைய குரங்குபோ லிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும், கல் உமிழ் கவணும்- கல்லையுமிழுங் கவணும், [கவண் - கல்லெறிகயிறு.] பரிவுஉறு வெம் நெயும்- காய்ந்து இறைத்தலாற் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்யும், பாகுஅடு குழிசியும் - செம்புருக்கும், (அன்றி, அங்ஙனம் இறைத்தற்குப் பாகு காயும் குழிசிகளுமாம். குழிசி - பானை.) காய் பொன் உலையும் - உருகக்காய்ச்சி யெறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலைகளும், கல் இடு கூடையும் - இடங்கணிப் பொறிக்குக்கல்லிட்டு வைக்குங்கூடையும்,[இடங்கணிப்பொறி-வந்தோர்மேற் கல்லைவீசு மியந்திரம்.] தூண்டிலும் - தூண்டில்வடிவாகப்பண்ணிப் போகட்டு வைத்துக் கிடங்கு நீங்கி மதில்பற்றுவாரைக் கோத்து வலிக்குங் கருவியும், தொடக்கும் [தொடக்கும்]-கழிகோல்போலக் கழுத்திற் பூட்டி முறுக்குஞ் சங்கிலியும், (கயிற்றுத்தொடக்குமாம்) ஆண்டலை அடுப்பும் - ஆண்டலைப்புள்வடிவாகப் பண்ணிப் பறக்கவிட உச்சியைக்கொத்தி மூளையைக்கடிக்கும் பொறி நிரைகளும், [ஆண்டலைப்புள் - ஆண்மகனது தலைபோன்ற வடிவமுள்ள ஒருவகைப்பறவை; கோழியென்பாரு முளர்.] கவையும் - கிடங்கிலேறின் மறியத் தள்ளும் இருப்புக்கவையும், [கவை - மரக்கப்புப்போன்றது.] கழுவும் - கழுக்கோலும், [கழுக்கோல் - இருப்புமுட்கோல்.] புதையும் - அம்புக்கட்டும், புழையும் - ஏவறைகளும், [ஏவறை - மறைந்துநின்று அம்புதொடுத்தற்கு உரிய இடம்.] ஐயவித் துலாமும் - பற்றுக்கை தூக்கிப் போகட்ட விட்டமும், [பற்றுக்கை - அம்புகட்டுங்கயிறு; விட்டம் - உத்திரம்.] (அன்றி, கதவையணுகாதபடி கற்கவிதொடங்கினாற்றுந் துலாமுமாம். சாணம்புக்கூடென்பாரும், சிற்றம்புகள்வைத்தெய்யும் இயந்திர மென்பாரும் உளர்.) [கற்கவி - நிலையின்மேலே போடப்பட்டிருக்கும் பாஷாணக்கல்.] கைபெயர் ஊசியும் - மதில்தலையைப்பற்றுவாரைக் கையைப்பொதிர்க்கும்

ஊசிப்பொறிகளும்,

(இனி, கதவொடு சேராதபடி வைத்த நிரைக்கழு வெனினும் அமையும்.) [பொதிர்க்கும் - பொத்திக்கொள்ளும்.] சென்று எறி சிரலும் - மாற்றார்மேற் சென்று கண்ணைக்கொத்துஞ் சிச்சிலிப்பொறியும், [சிச்சிலிப்பொறி - சிச்சிலி யென்னும் பறவைவடிவான யந்திரம்.] பன்றியும் - மதில்தலையிலேறினாருடைய

•



லைக் கோட்டாற்கிழிக்க இரும்பாற்செய்துவைத்த

பன்றிப்பொறியும், பணை
யும் -
கில்.]

வேய்வடிவாகப் பண்ணி அடிக்தற்கமைத்த பொறியும், [வேய் - மூங் எழுவும் சீப்பும் - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்திலே வீழ விடு மரங்களும், (திறக்குங்காலத்து

மேலேயெழுப்புகையால், 'எழு
வுஞ்சீப்பும்' என்றார். இனி, சீப்பு -

அகப்படக்குறுக்கே போடக்கடவ
மரமுமாம்.) முழு விறல் கணையமும் -

கணையமரமும், [முழுவிறல் -
பூர்ணபலம். கணையம் - குறுக்கேபோகடும் மரம்.]

கோலும் - விட்டேறும்,

[விட்டேறு - ஒருவகையீட்டி.]குந்தமும் - சிறுசவளமும், [இதுவும் ஒருவகை
யீட்டியே.] வேலும் - வல்லையமும், [வல்லயம் - எறியீட்டி.] (ஈட்டி
முதலியனவுமாம்.) பிறவும் - சதக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப்பொறி,
விழுங்கும்பாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி,
தகர்ப்பொறி, அரிநூற்பொறி என்பனவும். (சதக்கினி - நூற்றுவரைக் கொல்லி.)
"மாற்றவர்மறப்படை மலைந்துமதில்பற்றின், நூற்றுவரைக்
கொல்லியொடு நூக்கியெறிபொறியும்,
தோற்றமுறுபேய்களிறு தூற்றுபெரும்
பாம்பும், கூற்றமன கழுகு தொடர் குந்தமொடு கோண்மா" எனவும், "விற்
பொறிகள் வெய்யவிடுதிரை தொடரயில்வாள், கற்பொறிகள் பாவையன
மாடமடுசெந்தீக், கொற்புனைசெய்கொள்ளி பெருங்கொக் கெழில்செய் கூகை,
நற்றலைகள் திருக்கும்வலிநெருக்கு மதிலையே" எனவும், "செம்புருகுவெங்
களிகளுமிழ்வதிரிந்தெங்கும், வெம்புருகுவட்டுமிழ்வ வெந்நெய்முகந்துமிழ்வ, அம்புமிழ்வவேலுமிழ்வகல்லுமிழ்வ வாகித், தம்புலங்கள்ால்யவனர்தாட்படுத்த பொறியே" எனவும், "கரும்பொனியல்பன்றி கதநாகம் விடுசகடம், குரங்கு
பொருதகரினொடு கூர்ந்தரிவநுண்ணூல்,

பரந்தபசும்பொற்கொடிகள்பதாகை
யொடுகொழிக்கும், திருத்துமதில்தெவ்வர்தலை
பனிப்பத்திருந்தின்றே" என
வுஞ் சொன்னார் சிந்தாமணியிலும்' எனக் காண்க.

'மயிற் செறி நிலை' என்பது - மயில்வடிவமா
னயந்திரமென்று பொருள்
படும்; அயில் என எடுத்து உரைப்பினுமாம்.
திருவிளையாடற்புராணத்துத் திருநகரப்படலத்தில்
"மழுக்கள்வீசுவன" என்று தொடங்கி
"வெறிகொளைம்பொறி" என்
பதுவரையுள்ள செய்யுட்கள், இங்கு உணரத்தக்கன.
"சினத்தயில்கொலைவா
ள்சிலைமழுத்தண்டுசக்கரந்தோமரமுலக்கை
கனத்திடையுருமின்வெருவருங்கவண்கலென்றிவை
வகணிப்பிலகொதுகி
னினத்தையுமுவணத்திறையையுமியங்குங்காலையுமித
மலநினைவார்
மனத்தையுமெறியும்பொறியுளவென்றான்
மற்றினியுணர்த்துவதெவனோ"
என்றார் கம்பரும்.
(௩)

௭௬௪. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி
யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(இ - ள்.) சிறு காப்பின் -

காக்கவேண்டும்இடம் சிறிதாய், பேர் இடத்தது ஆகி - அகன்ற இடத்தையுடைத்தாய், உறு பகை ஊக்கம் அழிப்பது -



(தன்னை) வந்துமுற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே, அரண் அரணாவது; (எ - று.)

வாயிலும்வழியும்ஒழிந்தஇடங்கள் மலை காடு நீர்நிலை என்றிவற்றுள்

ஏற்பன உடைத்தாதல்பற்றி 'சிறுகாப்பின்' என்றும், அகத்தோர் நலிவின்றியிருத்தல்பற்றி 'பேரிடத்த தாகி' என்றும், தம்வலிநோக்கி இதுபொழுதே அழித்துமென்று வரும் பகைவர் வந்துகண்டால் அவ்வூக்கம் ஒழிதல்பற்றி 'ஊக்கமழிப்பது' என்றுங் கூறினார்.

(கு-ரை.) காக்கவேண்டும் - பாதுகாக்கப்படவேண்டிய. அகன்ற-பரந்த. முற்றிய-வெல்லும்பொருட்டுச் சேனைகளோடு சூழ்ந்த: முற்றுகைசெய்த. மனஎழுச்சி - மனக்கிளர்ச்சி; உற்சாகம். 'வாயில்' க்குவரவுசெய்யப்படுகின்ற கோபுரவாயில்களை.

என்றது, பகிரங்கமாகப் போ 'வழி' என்றது, அந்தரங்க

மாகப் போக்குவரவுசெய்தற்கு உரிய சுரங்கவழியை. அகழியை. ஏற்பன - பொருந்துபவற்றை. அகத்தோர்

'நீர்கில' என்றது,

- உள்ளேயிருப்பவர்,

நலிவு இன்றி - இடநெருக்கத்தாற் சங்கடப்படுதலில்லாமல். தம்வலிநோக்கி- பிறரது வலிமையை ஒருபொருளாகப் பாராட்டாமல் தமதுவலிமையையே பெரிதாகக்கருதி. இதுபொழுதே அழித்தும் என்று வரும் - இப்பொழுதே அழித்துவிடுவோ மென்று வருகின்ற. கண்டால் - அக்கோட்டையைப் பார்த் தால். அவ்வூக்கம் - யாம் அழித்துவிடுவோ மென்ற அந்த ஊக்கம். சுற்றிலு முள்ள இடத்திற் பெரும்பான்மையான பகுதி மலையரண் காட்டரண் நீர

ரண் என்பவற்றாற் சூழப்பட்டிருத்தலின், வாயிலும் வழியுமாகிய சிறுபான் மையான பகுதியே காவலாளராலும் சேனைகளாலும் பாதுகாக்கப்படவேண் டுவ தாதலும், எவ்வளவுபேர் தங்கவேண்டுமாயினுந் தங்கும்படி உள்ளிடம் விசாலமாக இருத்தலும், கீழ்க்கூறிய உயர்ச்சி முதலியவற்றாற் பகைவர் வெல்லுதற்கு அரிதாய் அவர்க்கு அச்சந்தரவல்லதாதலும், கோட்டைக்கு உரிய இலக்கணங்க ளென்க.

சிறு காப்பின் - சிறிய காக்கவேண்டுமிடத்தை யுடையதாய்; இது, காப் புச்சிறிதாய் என மொழிமாற்றி யுரைக்கப்பட்டது. இங்ஙனமே 'பேரிடத்த தாகி' என்பதையும் இடம்பெரியதாகி என்று விகுதிபிரித்துக்கூட்டி

யுரைக் கலாம். சிறுகாப்பு, பேரிடம் - பண்புத்தொகைகள். காப்பு என்னும் தொழிற்பெயர், ஆகுபெயராய், காத்தற்கு உரிய இடத்தை யுணர்த்திற்று. உறு பகை - உற்றபகை; நெருங்கிய பகைவர்: இறந்தகாலவினைத்தொகை. பகை - பகைவர்க்குப் பண்பாகுபெயர். ஊக்கம் - ஊக்குதல், கிளர்தல்; இப்பாட்டின் முதலடியில், 'சிறு', 'பேர்' எனப் பொருள்மாறுபாடுடைய சொற்கள் வந்தது,

முரண்தொடையாம்.

(௬)

எசரு. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்

நிலைக்கெளிதா நீர தரண்.

(இ - ள்.) கொளற்கு அரிது ஆய் - (புறத்தாரால்) கோடற்கு அரிதாய், கொண்ட கூழ்த்து ஆகி - உட்கொண்ட (பலவகை) உணவிற்றாய், அகத்தார்

எரு - ஆம் அதிகாரம்.—அரண்

உ௲ள

நிலைக்கு - அகத்தாரது போர்நிலைக்கு, எளிது ஆம் - எளிதாய, நீரது - நீர்மையை யுடையதே, அரண் - அரணாவது; (எ - று.)

கோடற்கு அருமை - இளேகிடங்குகளானும்

பொறிகளானும் இடங் கொள்ளுதற்கு அருமை. உணவு தலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவும் அடங்கின. நிலைக்கு எளிதாம் நீர்மையாவது - அகத்தார் விட்ட ஆயுதம் முதலிய புறத்தார்மேல் எளிதிற் சேறலும், அவர்விட்டன அகத்தார்மேற் செல்லாமையும், பதணப்பரப்பும் முதலாயின.

(கு - ரை.) புறத்தாரால் - கோட்டைக்கு வெளியிலுள்ளாரால், பகைவரால். கோடற்கு - தங்கள்வசப்படுத்திக்கொள்ளுதற்கு. உணவிற்று ஆய் - உண்ணப்படும் பொருள்களை யுடையதாய். போர்நிலைக்கு -நிலைத்துப் பகைவரோடு யுத்தஞ்செய்தற்கு. நீர்மை - தன்மை. இளை - காவற்காடு: என்றது, காட்டரண்; அன்றி, இருப்புமுட்களைச் சுற்றிலும்பதித்த வேலியுமாம்.' கிடங்கு - அகழி. "இளையுங் கிடங்கும்" என்றார் சிலப்பதிகாரத்தும், பொறிகள் - யந்திரங்கள். நுகரப்படுவன - அனுபவிக்கப்படும்பொருள்கள். 'உணவு தலைமைபற்றி' என்று தொடங்கிய வாக்கியத்தின் கருத்து - 'கூழ்' என்னும் உணவின் பெயர், இங்கே, மற்றை நுகரப்படுவனவற்றிற்கும் உபலக்ஷணமென்பது: நுகரப்படுமவற்றுள் உணவே பிரதானமாதலால் அதனையேயெடுத்துக்கூறினரென்பது, 'உணவு தலைமைபற்றிக் கூறினமையின்' என்றதனால் விளங்கும். விட்ட - பிரயோகித்த. முதலிய - முதலானவை. எளிதிற் சேறல் - சுலபமாகச்செல்லுதல். அவர் விட்டன - புறத்தார் பிரயோகித்தவை. பதணப்பரப்பு - மதிலுண்மேடையின் விசாலம். முதலாயின என்றதனால் மதில்பதித்து

விடமுடியாதபடி அடியகலமுடைமை முதலியன கொள்வர். பலவகைக் காவல்மிகுதியை யுடைமையால் பகைவர் சுவாதீனப் படுத்திக்கொள்ள முடியாதபடி யிருத்தலும், எதிர்பாராமற் சடக்கெனப் பகை வர் நெருக்கித் தன்னுளிருப்பவர் வெளிச்செல்லவொண்ணாதபடி சூழ்ந்து போர்செய்யத் தொடங்கிவிடுவராயினும் பலநாள் வருத்தமில்லாமல் தன்னு ளிருப்பவர் உண்ணுதற்குவேண்டிய பண்டங்களை மிகுதியாக வுடைமையும், தன்னுளிருப்பவர் வெற்றிபெறும்படி போர்செய்தற்கு ஏற்ற இடவமைதியை யுடையதா யிருத்தலும் கோட்டைக்கு உரிய இலக்கணங்க ளென்க. மநு-எ-எச, எரு ஒப்புநோக்குக.

கூழ் - இங்கே, ஒருவகையிழியுணவின்பெயராகாது, உணவென்னுமாத்திரமாய் நின்றது. இளையை மிளையென்றும் ஓதுப.

(ரு)

எசஅ. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு

நல்லா ளுடைய தரண.

(இ - ள்.) எல்லாம் பொருள் உம் உடைத்து ஆய் - (அகத்தோர்க்கு வேண்டும்) பொருள்களெல்லாவற்றையும் (உள்ளே) உடைத்தாய், இடத்து உதவும் நல் ஆள் உடையது - (புறத்தோரால் அழிவெய்தும்) எல்லைக்கண் (அஃது எய்தாவகை) உதவிக் காக்கும் நல்ல வீரரையும் அரணாவது; (எ - று.)

அரசன்மாட்டு அன்பும் மானமும் மறமும் சோர்வின்மையும் முதலிய நற்குணங்கள் உடைமைபற்றி, 'நல் ஆள்' என்றார்.

(கு-ரை.) அழிவு எய்தும் எல்லைக்கண்-அபாயம்நேருமளவில். அஃது எய்தாவகை உதவி - அவ்வழிவுநேரிடாதபடி உதவிசெய்து. அரசன்மாட்டு-அரசனிடத்தில். மறம் - பலபராக்கிரமங்கள். சோர்வு இன்மை - தளர்ச்சியில்லாமை; சோர்வு - அஜாக்கிரதையும், சோம்புதலுமாம். முதலிய என்றதனால், கல்வியறிவொழுக்கமுடைமை, நல்லோரிணக்கமுடைமை, தெய்வசிந்தையுடைமை முதலியனகொள்க. ஆள் - வீரன்; இது சாதிப்பெய ராதலால், இதற்கு - வீரரென்று பன்மையாகப் பொருளுரைக்கப்பட்டது. இடத்து - சமயத்தில்; 'இடப்பொருளுணர்த்துஞ்சொற்கள் காலப்பொருளுணர்த்துதலும் உண்டு.' தன்னுள்ளேயிருப்பவர்கட்கு வேண்டிய சகலபதார்த்தங்களும் நிறையப்பெற்றிருத்தலும், சமயத்திற் பின்வாங்காது போர்செய்யவல்ல வீரர்களை யுடைமையும், கோட்டைக்கு உரிய இலக்கண மென்க. (கூ)

எசஎ. முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

(இ - ள்.) முற்றிஉம் - (புகலொடு போக்கு ஒழியும்வகை நெருங்கிச்) சூழ்ந்தும், முற்றாது எறிந்துஉம் - (அங்ஙனஞ்) சூழாது (நெகிழ்ந்தஇடன் நோக்கி) ஒருமுகமாகப் பொருதும், அறைப்படுத்துஉம்-(அகத்தோரை அவர் தெளிந்தோரைவிட்டுக்) கீழறுத்துத் திறப்பித்தும், பற்றற்கு - (புறத்தோராற்) கொள்ளுதற்கு, அரியது - அரியதே, அரண் - அரணாவது; (எ - று.)

இம்மூன்று உபாயத்துள்ளும் முதலது எல்லாப்பொருளும் உடைமையானும், ஏனைய நல்லாளுடைமையானும் வாயாவாயின.

(கு - ரை.) புகலொடுபோக்குஒழியும்வகை - முன்புவெளியில்வந்தவர் பின்புஉள்ளே செல்லுதலும், உள்ளேயுள்ளவர் வெளியிற்செல்லுதலுங் கூடாதபடி. நெருங்கிச் சூழ்ந்து - இடைவிடாமல்எங்குஞ்சூழ்ந்துகொண்டு. நெகிழ்ந்தஇடன் நோக்கி - காப்புத்தளர்ந்தஇடத்தை அல்லது காப்புத்தளர்ந்த காலத்தைக் குறிப்பிட்டுப்பார்த்து அதனையே பிரதானமாகக் கொண்டு. ஒருமுகயாகப் பொருது - ஒருங்குவந்துநெருங்கிப் போர்செய்து. அவர்தெளிந்தோரை விட்டு - அவர்கள்நம்பும்படியானவர்களை ஏவி, அவர்களைக்கொண்டு: (இங்கு அவர்என்றது- உள்ளிருந்தோரை.) கீழறுத்துத் திறப்பித்தும் - தம் அரசனைவஞ்சித்து ஒழுகி வேற்றரசர்க்கு அந்தரங்கராய்நிலைமாறிக் காவல் கெடும்படி செய்தும். கொள்ளுதல் - பிடித்துக்கொள்ளுதல். மூன்றுஉபாயம்-

முற்றிப்பற்றுதல் முதலியன. முதலது - முதலாவது; முற்றிப்பற்றுதல். ஏனைய - மற்றையவை; முற்றுஇருந்து பற்றுதலும், அறைப்படுத்துப் பற்றுதலும். வாயாவாயின - பயன்படாதவையாயின. வாயா - பலிப்பனவல்ல. பகைவர் நெருங்கிச்சூழ்ந்தாலும் அகத்தார் பசிமுதலியவற்றால் வருந்தாதபடி எல்லாப்பொருள்களையு முடையதும், பகைவர்க்குஓரிடத்தேனும்நெகிழ்ச்சி கொடாதபடி கொடும்போர்செய்யும்வன்மையையும் பகைவர்க்குவசப்படாம



லொழுகும் இராசவிசுவாசத்தையுமுடைய வீரர்களையுடையதுமாய், பகைவரால் எவ்வகையுபாயத்தாலும் கைக்கொள்ளமுடியாதபடியிருத்தல், கோட்டைக்கு உரிய இலக்கண மென்க.

முற்றி, எறிந்து, அறைப்படுத்து என்ற வினையெச்சங்கள், அடுக்கி,

'பற்ற' என்னும் வினையைக் கொள்ளும்.
இவ்வினைகட்கெல்லாம் கருத்தா -
புறத்தார்.

(எ)

எசஅ. முற்றாற்றி முற்றி யவரையும்

பற்றாற்றிப்

பற்றியார் வெல்வ தரண்.

(இ - ள்.) முற்று ஆற்றி முற்றியவரைஉம் -
(தானைப்பெருமையாற்)
சூழ்தல்வல்லராய் வந்துசூழ்ந்த புறத்தோரையும்,
பற்றியார் - (தன்னைப்) பற்
றிய அகத்தோர், பற்று ஆற்றி வெல்வது - (தாம்) பற்றிய
இடம் விடாதே நின்றுபொருது வெல்வதே, அரண் -
அரணாவது; (எ - று.)

உம்மை - சிறப்பும்மை. பற்றின்கண்ணே ஆற்றி என
விரியும். பற்று -
ஆகுபெயர். 'வெல்வது' என, உடையார்தொழில்
அரண்மேல்நின்றது.
பெரும்படையானைச் சிறுபடையான்
பொறுத்துநிற்குந்துணையேயன்றி வெல்
லும் இயல்பினது என்பதாம். இதற்குப்
பிறிதுஉரைப்பாரும் உளர்.

இவையேழுபாட்டானும், அதனது இலக்கணம்
கூறப்பட்டது.

(கு - ரை.) தானைப்பெருமை-சேனைமிகுதி.

தன்னைப் பற்றிய - தன்னை
இடமாகக்கொண்ட. தாம்பற்றிய-தாம் கொண்ட.
வெல்வது - வெல்ல இட
மாவது. சிறப்பு - இங்கே, உயர்வுசிறப்பு.
பற்றின்கண்ணே ஆற்றி - தாம்
கொண்ட இடத்திலே வலியராய்நின்று.
கொள்ளுதலென்னும் பொரு
ளுணர்த்தும் 'பற்று' என்னும் முதனிலைத்தொழிற்பெயர்,
தொழிலாகுபெய
ராய், கொண்டஇடத்தை உணர்த்தியதனால், 'பற்று -
ஆகுபெயர்' என்றார்.
அரணை இடமாகவுடைய வீரரது வெற்றித்தொழிலை
அரண்மேல்ஏற்றி
'வெல்வ தரண்' என்றது, உடையாரதுதொழிலை
உடைமை மேலேற்றிக்
கூறிய உபசாரவழக்கு. பொறுத்துநிற்குந் துணையே
யன்றி - எதிர்த்துத்
தடுத்துத் தற்காத்துநிற்பதுமாத்திரமே யல்லாமல்.
பொறுத்து - தரித்து.
இதற்குப் பிறிதுஉரைப்பாரும் உளர் - இக்குறட்பாவிற்கு
வேறுவகையுரை
கொள்பவரும் உண்டு: பற்றியார் - (தன்னிடத்துப்)
பொருந்திய வீரர், பற்று
ஆற்றி - (தமது அரசனிடத்து) அன்பை
மிகுதியாகக்கொண்டு, (அதனால்),

முற்றியவரையும் முற்று ஆற்றி வெல்வது - (தன்னை) முற்றுகை செய்த பல
ரையும் முடியச்செய்து [அழியச்செய்து] வெல்லுதற்கு இடமாவதே, அரண்--
அரணும் என வேறுவகையாகவும் இப்பாட்டுப் பொருள்படும். அதனது -
அரணினது.
முற்று - முதனிலைத்தொழிற்பெயர்; முற்றுஆற்றி - முற்றல்வல்லராய்
என்க; இனி, முற்றஆற்றி என்பதன் தொகுத்தலாக் கொண்டு, சூழவல்ல
ராய் என்றும் உரைக்கலாம். வெல்வதுஎன்பதற்கு,



வெல்லுதற்குக்கருவியா



வதுஎன்றும் உரைக்கலாம். வினைமுற்றுப்பெயர் கருவிப்பொருள்படுதற்கு
'வெல்வது அரண்' என்பதை உதாரணங் காட்டினர், இலக்கணக்கொத்
துடையார். 'பற்றியார்வெல்வதரண், ஆற்றவிளைவது நாடு, யாமிருப்பது
உறையூர் இம்மூன்றும் அதிகரணமான கிருதக்தம்' என்பது, பிரயோகவிவேக

வுரை. முற்முற்றலென்பதற்குக் கருத்தா - முற்றியவர். பற்முற்றல்,
வெல்லுதல் என்பவற்றுக்குக் கருத்தா - பற்றியார். பெருஞ்சேனையோடு
வலியராய்வந்து சூழ்ந்த பகைவர்க்குப் பின்வாங்கித் தம்இடத்தை விட்டிடா
மல் அவர்களை வென் று தம்இடத் தைப் பாதுகாத்துக்கொள்ளத்தக்க வலிய
வீரர்களை யுடைமை, கோட்டைக்குஉரிய இலக்கண மென்க. (அ)

எசகூ. முனைமுகத்து மாற்றலர் சாய
வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(இ - ள்.) முனை முகத்து - போர்தொடங்கின அளவிலே, மாற்றலர் -
பகைவர், சாய - கெடும்வண்ணம், வினை முகத்து வீறு எய்தி - (அகத்தோர்
செய்யும்) வினைவேறுபாடுகளான் வீறுபெற்று, மாண்டது - (மற்றும்வேண்
டும்) மாட்சியையுடையதே, அரண் - அரணாவது; (எ - று.)

தொடக்கத்திற் கெட்டார் பின்னும் கூடிப்பொருதல் கூடாமையின்,
'முனை முகத்துச்சாய' என்றார்.
வினைவேறுபாடுகளாவன - பகைவர்தொடங்

கிய போரினை அறிந்து, எய்தல் எறிதல் குத்துதல் வெட்டுதல் என்றிவை முத
லாயின வினைகளுள் அதனைச் சாய்ப்பன செய்தல். 'மற்றும்வேண்டும் மாட்சி'
என்றது, புறத்தோர் அறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட சுரு
ங்கைவழி முதலாயின உடைமை.
(கு - ரை.) வினை வேறுபாடுகள் - பலவகைப் போர்த்தொழில்கள். வீறு
பெற்று - சிறப்புப் பெற்று; மாட்சி - பெருமை. தொடக்கத்திற் கெட்டார் -
ஆரம்பத்தில்தோற்று அழிந்தவர். பின்னும் கூடிப் பொருதல் - மீண்டுந் தம்
மில் திரண்டு போர்செய்தல். எய்தல் - பாணங்களைப் பிரயோகித்தல். எறி
தல் - கைவேல், சக்கரம் முதலியவற்றை மேல்வீசுதல். குத்துதல் - ஈட்டி
முதலியவற்றால் ஊறுபடுத்தல். வெட்டுதல் - வாளினால் துணித்தல். அத
னைச் சாய்ப்பன - பகைவரதுபோரை அழித்தற்கு வேண்டியவற்றை. கண்ட -
செய்த. சுருங்கைவழி - சுரங்கவழி; கோட்டையினுள்ளே அமைத்துள்ள
கள்ளவழி. முகமென்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது - தொடக்க

மென்னும் பொருளையும், பின்னது - விகற்பமென்னும் பொருளையுந் தந்தது.

சாய என்னுஞ் செயவெனெச்சம் - காரியப்பொருள தாதலால், எதிர்காலம்;

இது, 'செய்யும்' என வருவிக்கப்பட்ட பெயரெச்சவினையைக் கொள்ளும்:

அன்றி, சாய வீறெய்தி என இயைப்பினுமாம்.

பகைவர் எளிதிலழியும்

படி பல வாறு நன்கு போர்செய்து வெல்லும் வல்லமையையுடைய வீரர்க

ளோடு கூடிச் சிறப்புற்றதே நல்லரணென்பதாம்.

(க)

எருo.

எனைமாட்சித் தாகியக்கண்ணும் வினைமாட்சி
யில்லார்கணில்ல தரண்.

எகூ - ஆம்

அதிகாரம்.—பொருள்செயல்வகை உகூ

(இ - ள்.) அரண்—,எனை மாட்சித்து ஆகியக்கண் உம் - (மேற்சொல்லப்

பட்ட) மாட்சியெல்லாம் உடைத்தாய இடத்தும், வினை மாட்சி இல்லார் கண்

-வினைசெய்தற்கண் மாட்சியில்லாதார்மாட்டு, இல்லது -

(அவை) இலதாம்.

வாளா இருத்தலும் அளவறியாதுசெய்தலும் ஏலாததுசெய்தலும் எல்லாம் அடங்க 'வினைமாட்சியில்லார்' என்றும், ஏற்ற வினையை அளவறிந்து செய்து காவாக்கால் அம்மாட்சிகளாற் பயனின்றி யழியுமென்பார் '*அவையுடைத்தன்று' என்றும் கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், காப்பாரை யின்றி யமையாதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) மேல் - முன். வினைசெய்தற்கண் மாட்சியில்லாதார்மாட்டு - போர் முதலிய வெல்லும் உபாயவகைகளைச் செய்தலில் திறமையில்லாதவர்களிடத்தில். அவை இலதாம் - முன்சொல்லப்பட்ட மாட்சிமைகளையெல்லாம் பெற்றிருந்தும் பயனின்மையாற்பெறாததேபோலும் என்றபடி. வாளா இருத்தல் - வெல்லத்தக்க உபாயங்களைச் செய்யாமற் சும்மா இருந்துவிடுதல்.

அளவறியாதுசெய்தல் - எதிர்ப்பவருடைய அளவையும் தன் அளவையும் ஆலோசித்தறியாது மிகவுங் குறையவுஞ் செய்தல். ஏலாதது செய்தல் - வெற்றிப்பயனை விளைத்தற்கு ஏற்றதல்லாத உபாயத்தைச்

செய்தல். இங்குக் காட்டிய மூன்றும், வெல்லத்தக்க உபாயங்களல்ல. காவாக்கால் - பாதுகாவா விட்டால். அம்மாட்சிகள் - கீழ்க்கூறிய சிறப்புக்கள். 'அழியும்' என்பதற்குக் கருத்தா - 'அரண்.' காப்பாரை இன்றியமையாது - பாதுகாக்கும் வீரர் அவசியம் வேண்டும். எனை - எத்தனை யென்பதன் மரூஉ; இனி, எனை என்பதை ஏனை என்பதன் தொகுத்த லெனக் கொண்டு, மற்றைமாண்புகளையுடைத்தாயவிடத்தும் வினைமாண்பில்லாதவரிடத்து அரண் பயன்படாது என உரைப்பினுமாம். இதனோடு அங்கவியலில் அரணியல்முடிந்தது. (௧0)

எகூ - ஆம்

## அதிகாரம்—பொருள்செயல்வகை.

இனி, பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவும் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார். †

(கு - ரை.) நாட்டால் ஆக்கவும் அரணாற் காக்கவும் படுவதாகிய செல்

வம் என முறைநிரனிறையாகப் பொருள்கொள்க.
ஆக்கவும் - உண்டாக்க

வும், வளர்க்கவும். பொருளைச் செய்தல் -
செல்வத்தைச் சம்பாதித்தல்.

திறம் - வகை, விதம். இவ்வதிகாரத்தை நாடு அரண்
என்னும் அதிகாரங்

களின்பின் வைத்த முறைமைக்குக் காரணம்,
வெளிப்படை; பொருள் உண்

டாகிவளர்தற்கும் காக்கப்படுதற்கும் நாடும் அரணும் காரண
மாதலால், காரண

காரியமுறைப்படி வைத்தனரென்க. இவ்வதிகாரம்ஒன்றும், அங்கவியலில்

---

* பி - ம்: 'அவையிலதாம்' or 'இல்லதாண்'

† அஃதாவது இன்னதென்பதூஉம்,
அதிகாரமுறைமையும் இதனுள்

விளங்குமென்று சங்கப்பிரதியில்
ஒருவாக்கியம் இங்குக்காணப்படுகின்றது.



'பொருளியல்' எனப்படும்: "ஒன்று ஒண்கூழ்" என்று போக்கியார் கூறி யிருத்தல் காண்க. பொருள்செயல் வகை என்ற தொடரில்,முன்னது-இரண் டாம்வேற்றுமைத்தொகையும், பின்னது - ஆறும்வேற்றுமைத்தொகையுமாம்.

எடுக.

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(இ - ள்.) பொருள் அல்லவரை - ஒருபொருளாகமதிக்கப்படாதாரையும், பொருள் ஆகசெய்யும் - *மதிக்கப்படுவோராகச்செய்யவல்ல, பொருள் அல்லது - பொருளை யொழிய, பொருள் இல்லை - (ஒருவனுக்குப்) பொருளாவது இல்லை.

மதிக்கப்படாதார் - அறிவிலாதார், இழிகுலத்தார்.

இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.
மதிக்கப்படுவாராகச் செய்தல் - அறிவுடையாரும
உயர்குலத்தாரும் அவர்பாற் சென்று நிற்கப் பண்ணுதல்.
அதனல், ஈட்டப் • படுவது அதுவே. பிறிது இல்லை என்பதாம்.

வாரக

(கு - ரை.) பொருளாக - வஸ்துவாக. மதிக்கப்படுவாராக - ஒருபொரு மதிக்கப்படுபவராக. பொருளையொழிய - செல்வத்தைத் தவிர. பொருளாவது - பாராட்டிச் சம்பாதிக்கத்தக்க வஸ்துவாகுவது.
இழிவுசிறப்பும்மை தொகுத்தல் விகாரப்பட்டது,
'பொருளல்லவரை' என்பதன் இறுதியில். அவர்பால் -
அறிவில்லாதவரும் இழிகுலத்தவருமான
செல்வமுடையவரிடத் தில். அதனல்-ஆதலால்.
ஈட்டப்படுவது-சம்பாதிக்கவேண்டுவது. அதுவே - செல்வமே.
பிறிது - மற்றொன்று. இக்குறட்பாவில், 'பொருள்' என்ற

சொல் வெவ்வேறுபொருளில் வந்ததனால், சொற்பின்வரு நிலையணி. "பூரியர்தமை வேர்தாக்கும் புவிபுரப்பிக்குத் துய்க்குஞ், சீரியவுண் டிசேர்க்குத் தேவர் தமூலகம்போக்கும், காரியமனைத்துங் கூட்டுங் கருதலர்தம்மை வாட்டுங், கூரியதிதன்மேலில்லை கொழும்பொனீர் கொண்மினென்றார்", "என்சொலி னும், கைத்துடையான் காற்கீ ழொழிதுங் கடன்ஞாலம்" என்றார் பிறரும்.

அல்லது-எதிர்மறைக் குறிப்புவினையெச்சம்; அ-சாரியை, து-விகுதி. (க)

எருஉ.

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(இ - ள்.) இல்லாரை - (எல்லாநன்மையும்உடையராயினும்) பொரு ளில்லாரை, எல்லார்உம் எள்ளுவர் - யாவரும் இகழ்வர்; (எல்லாத் தீமையும் உடையராயினும்), செல்வரை - அஃதுஉடையாரை, எல்லார்உம் - யாவரும், சிறப்பு செய்வர் - உயரச்செய்வர்; (எ - று.)

உயரச்செய்தல் - தாம் தாழ்ந்துநிற்றல். இகழ்தற்கண்ணும் தாழ்தற் கண்ணும் பகைவர் நட்டார் நொதுமலர் என்னும் மூவகையாரும் ஒத்தலின், 'யாவரும்'

என்றார். பின்னும் கூறியது, அதனை வலியுறுத்தற்பொருட்டு.

(கு - ரை.) நன்மை - நற்குணம். தீமை - துர்க்குணம். அஃது உடையார் - பொருளுடையவர். உயரச்செய்வர்-மேம்படுத்துவர். தாழ்ந்து-

* பி - ம்; படுவாராகச்.

## எகூ - ஆம் அதிகாரம்.—பொருள்செயல்வகை

உகூங

பணிந்து. இகழ்தற் கண்ணும் படிந்திருத்தலினும். நட்டார் - - இகழ்தலினும். தாழ்தற்கண்ணும் - கீழ்ப் பினேகிதர். நொதுமலர் - அயலார்; பகை வரும் நண்பரு மல்லாதவர்: இவர், உதாசீந ரெனப்படுவர். பொருளில்லாதவரைப் பகைவர் நண்பர் அயலார் என்னும் மூவரும் இகழ்ந்துபேசுவர் என்றும், பொருளுடையவரிடம் அம்மூவகையோரும் தாழ்ந்துநிற்பர் என்றுங் கொள்க. 'பின்னுங்கூறியது' என்றது, "பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருள்" என்று மேற்கூறியதனோடு அமையாது, மீண்டும் 'செல்வரை யெல்லாருஞ் செய்வர் சிறப்பு' என்று கூறியதை. அதனைவலியுறுத் தற்பொருட்டு - அப்பொருளின் சிறப்பை உறுதிப்படுத்திக்காட்டுதற்காக வென்க: இவ்வாறுகூறுவது, அநுவாதத்தில் அடங்கும். செல்வத்தின் தன்மையை எதிர்மறைமுகத்தாலும் உடன்பாட்டுமுகத்தாலும் இரண்டு வாக்கியங்களால் இக்குறளில் விளக்கினர். பொருளுடையவர் மதிப்பையும், பொருளில்லாதவர்

அவமதிப்பையும் அடைவ ரென்க. செல்வத்தவர் என்பது செல்வர் என அத்துச்சாரியை முதலியன தொக்குநின்ற தென்பர். 'சிறப்புச்செய்வர்' என்றது, ஒருசொல்தன்மைப்பட்டு, 'செல்வரை' என்ற செயப்படுபொருளுக்கு முடிக்குஞ்சொல்லாயிற்று. இனி, 'செல்வரை' என்பதைச் செல்வர்க்கு என உருபுமயக்கமாகக்கொள்ளுதலு மொன்று. "நல்லாவின் கன்றாயி னுகும் விலைபெறூஉம், கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற் செல்லும், புல்லீரப்போழ்தி னுழவேபோன் மீதாடிச, செல்லாவா நல்கூர்ந்தார் சொல்" என்ற நாலடியாரையும், "கல்லானே யானலுங் கைப்பொருளொன் றுண்டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர் - இல்லானை, இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லாதவன்வாயிற் சொல்" என்ற நல்வழியையும் இங்கே அறிக. இக்குறள், சேரமான்பெருமாள்நாயனுர் திருக்கைலாயஞானவுலாவென்னுந் திருவாதியுலாவில் எடுத்தாளப்பட்டுள்ளது. (உ)

எருரு. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

(இ - ள்.) பொருள் என்னும் - பொருளென்று (எல்லாரானுஞ்) சிறப்பிக்கப்படும், பொய்யா விளக்கம் - நந்தாவிளக்கு,—(தன்னைச் செய்தவர்க்கு), எண்ணிய தேயத்து சென்று - அவர் நினைத்த தேயத்துச் சென்று, இருள் அறுக்கும் - (பகையென்னும்) இருளைக் கெடுக்கும்; (எ - று.)

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய்வருதல்பற்றி 'பொய்யாவிளக்கம்' என்றும், ஏனைவிளக்கோடு இதனிடை வேற்றுமைதோன்ற 'எண்ணியதேயத்துச்சென்று' என்றுங் கூறினர்.

ஏகதேசவுருவகம்.

இவைமூன்றுபாட்டானும், பொருளதுசிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) நந்தா விளக்கு - அழியாத தீபம்; தூண்டவேண்டாத சுடர்ப் பிழம்பு. தன்னைச் செய்தவர்க்கு - தன்னைச் சம்பாதித்தவர்க்கு. எனை விளக்கோடு இதனிடை வேற்றுமை - மற்றைச் சாதாரணவிளக்குக்களோடு இப்



பொருள்விளக்குக்கு உள்ள வேறுபாடு. ஒருவர் எடுத்துக்கொண்டுபோன இடத்திலேமாத்திரம் சென்று நின்று இருளையொழிக்கின்றஉலகத்துவிளக்கினும், அவர்நினைத்ததேயங்களிலெல்லாஞ் சென்று பகையிருளையறுக்கின்ற இப்பொருள்விளக்குக்கு உள்ள விசேடந் தோன்ற, 'எண்ணிய தேயத்துச் சென்று' என்றுரென்க. 'பொருளென்னும் விளக்கம்' என்று பொருளினிடத்து விளக்கின் தன்மையை ஏற்றியதற்கு ஏற்ப, 'பகையென்னுமிருளறுக்கும்' என்று பகையினிடத்து இருளின் தன்மையை ஏற்றிக்கூறாமல் சும்மா 'இருளறுக்கும்' என்றதனால், ஏகதேசரூபகாலங்கார மாயிற்றென்று இங்கு ஒருசாரார் விவரிக்கின்றனர். இது, தவறு: இவ்விடத்து **ஏகதேசவுருவகம்** என்பது - பிற்காலத்து அறியாதவராற் செருகப்பட்டதாதல் வேண்டும்: இங்கே, பகையறக்குமென்றுகூறாது பகையை இருள் என்ற

உருவகச்சொல் லாயே கூறியிருத்தலால், இது ஏகதேசவுருவகமாகாது: முற்றுருவகமே: உபமேயத்தை உபமானச் சொல்லாலேயே கூறுவதும், வடநூலார்க்கு உடன்பாடே. விளக்குத் தான் உள்ளவிடத்து இருளைப் போக்குதல் போல, பொருள் தன்னையுடையானுக்கு எங்கும் பகையை யொழிக்கு மென்பது, தேர்ந்த பொருள். இங்கு, விளக்காகிய உபமானத்தினும் பொருளாகிய உபமேயத்திற்குச் சிறப்பிருத்தலைக் காட்டுகின்ற வேற்றுமையணி தொனிக்குமாறு அறிக.

(ரு)

எருச. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(இ - ள்.) திறன் அறிந்து-(செய்யுந்)திறத்தினை அறிந்து, தீது இன்றி(அரசன்) கொடுங்கோன்மையிலனாக, வந்த - உளதாய, பொருள்—,—அறன் ஈனும்-(அவனுக்கு) அறத்தையும் கொடுக்கும்; இன்பம் உம் ஈனும் - இன்பத்தையுங் கொடுக்கும்; (எ - று.)

செய்யுந் திறம் - தான்பொருள்செய்தற்கு உரிய நெறி.

'இலனாக' என்பது, 'இன்றி' எனத் திரிந்துநின்றது. 'செங்கோலன்' என்று புகழப்படுதலானும் கடவுட்பூசைதானங்களாற் பயன் எய்தலானும் 'அறனீனும்' என்றும், நெடுங்காலம் நின்று துய்க்கப்படுதலான் 'இன்பமுமீனும்' என்றும் கூறினார். அதனன்,

அத்திறத்தான் ஈட்டுக என்பதாம்.

(கு - ரை.) செய்யுந் திறம் - பொருள்சம்பாதிக்கின்ற வகை. கொடுங் கோன்மையிலனாக - நீதிதவறாதவனாயிருக்க. முக்காலத்துக்கும் பொதுவாகிய இன்றியென்னும் எதிர்மறைக்குறிப்புவினையெச்சத்துக்கு, இல்லாமலிருத் தலால் என்று தெரிநிலைச்செயவெனெச்சத்துக்கு உரிய காரணப்பொருள் கொண்டாராதலால், 'இலனாகவென்பது, இன்றியெனத்திரிந்துநின்றது' என்றார். செங்கோலன் - நீதிதவறாதவன். கடவுட்பூசைதானங்களால் பயன் எய்தல் - தேவபூசையுந் தானமுஞ் செய்து அறத்தின்பயனை யடை தல். நெடுங்காலம் நின்று துய்க்கப்படுதலான் - வெகுகாலம் அழியாது நின்று அனுபவிக்கப்படுதலால். அதனான் - ஆதலால்.

அத்திறத்தான் ஈட்.

எசுஈ - ஆம்

அதிகாரம்.—பொருள்செயல்வகை உகூரு கெ - நீதிநெறிதவறாமற் பொருள்சம்பாதிக்கும்வழியை யறிந்து அவ்வழியாற் சம்பாதிக்கவேண்டும். தான தருமங்களைச் செய்து புகழும் புண்ணியமும் பெறுதலும், தான் அனுபவித்துச் சுகம்பெறுதலும் பொருளுடையானுக்கே ஆகு மென்க; "வடுவிலாவையத்து மன்னியமூன்றி,னடுவணதெய்த விருதலை யுமெய்தும்," "அருள்கொண்டியற்றும் அறமும்

அறநெறியாய்ந்தமென்பூச்,
சுருள்கொண்டகோதையர்தோள்புணரின்பமும் சூழ்சுரும்பு,
மருள்கொண்டு பாடமதுமலர்ச்சோலைமயிலனையாய்,
பொருள்கொண்டொழியமுற்றுமென்று ஞாலம் புகலு
மன்றே", "இல்லார் இருமையும் நல்ல எய்தார்",
"வறியார் இருமையறியார்" என்றார் பிறரும்.
(ச)

எருரு. அருளொடு மன்பொடும் வாராப்

பொருளாக்கம்

புல்லார் புரள விடல்.

(இ - ள்.) அருளொடு உம் - (தாம் குடிகண்மாட்டுச் செய்யும்) அருளோடும், அன்பொடு உம் - (அவர் தம்மாட்டுச் செய்யும்) அன்போடும், வாரா - கூடிவாராத, பொருள் ஆக்கம் - பொருளீட்டத்தை, (அரசர்), புல்லார் - பொருந்தாது, புரள விடல் - கழியவிடுக; (எ - று.)

அவற்றோடுகூடி வருத லாவது, அறிவொன்றாய்வருதல். அவ்வாறுவாராத பொருளீட்டம் பசுமட்கலத்துள்நீர்போலச் செய்தானையுங் கொண்டு இறத்தலின், அதனை 'புல்லார்' என்று ஒழியாது 'புரளவிடல்' என்றுங்கூறினார்.

(கு - ரை.) தாம் - அரசர்தாம். இங்கே, அருள் - தம்மினுந் தாழ்ந்தவரிடத்துச்செய்யும் நேயம். அவர் - அக்குடிகள். இங்கே, அன்பு - தம்மினும் உயர்ந்தவரிடத்துச் செய்யும் நேயம். பொருளீட்டம் -

செல்வச்சம்பாதி ப்பு. அவற்றோடு - அருளன்புகளோடு. ஆறி லொன்றாய் வருதல் - குடிகள் சம்பாதிக்கும்பொருளில் ஆறிலொருபாகமாகப்பெறுதல்; "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு, ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை" என்றபடி பிதிரர் தேவர் விருந்ினர் சுற்றத்தார் தான் என்னும் ஐந்து இடத்திற்கும் இல்வாழ்வான் பகுத்துக்கொடுக்கும் கூறாக 'ஊர்ந்துடன் ஒன்றாய் வருதல்: "ஆறிலொன் றறமென வருளி னல்லதொன், றாறுசெய் துலகினி னுவப்ப தில்லையே" என்ற சூளாமணியையுங் காண்க. பசுமட் கலம் - சுடப்படாத பச்சைமண்பாத்திரம்; பசுமை - ஈரத்தின்மேலது. பசு மட்கலத்துள் நீர்போலச் செய்தானையுங் கொண்டு இறத்தலின் - பசுமட் கலத்துள்ளேபெய்துவைத்த நீர் அக்கலத்தோடு தானும் ஒருசேர அழிதல் போல, தீயவழியாற்சம்பாதித்துச் சேர்த்துவைக்கப்பட்ட பொருள் அச் சம் பாதித்தவனோடு தானும் ஒரு சேர அழிந்திடு மாதலால்: "சலத்தாற் பொருள் செய் தேமாக்கல் பசுமட், கலத்துள் நீர்பெய் திரீஇயற்று" என்பது, வினைத் தூய்மையென்னும் அதிகாரத்து ஈற்றுச்செய்யுள்; அக்குறளினுரையில் 'அரச னும் பொருளும் சேரப்போம் என்பதாம்' எனப் பரிமேலழகர் உரைத்ததை அறிக. அதனை - அவ்வகையான திரவியசம்பாத்தியத்தை. புல்லாரென்று

ஒழியாது-புல்லார் என்றவளவோடு நிறுத்தாமல். 'புல்லார்' என்றும், 'புரள விடல்' என்றும் இருவகையாகக்கூறி மறுத்தது, வற்புறுத்துதற்கென்க. (ரு)

எருகூ. உறுபொருளு முல்கு
பொருளுந்தன் ஞென்ஞர்த்
தெறுபொருளும் வேந்தன்
பொருள்.

(இ - ள்.) உறு பொருள் உம் - (உடையார் இன்மையின் தானேவந்து) உற்ற பொருளும், உல்கு பொருள் உம் - சுங்கமாகிய பொருளும், தன் ஒன்ஞர் தெறு பொருள் உம் - தன்பகைவரைவென்று திறையாகக்கொள்ளும் பொருளும்,—வேந்தன் பொருள் - அரசனுக்கு உரிய பொருள்கள்; (எ - று.)

உறு பொருள் - வைத்தார்இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டு எடுத்ததூஉம், தாயத்தார்பெறாததூஉமாம். சுங்கம் - கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது. தெறு பொருள்- தெறுதலான் வரும் பொருள் என விரியும். ஆறிலொன்று ஒழியவும் உரியன கூறியவாறு.

இவைமூன்றுபாட்டானும், அஃது ஈட்டும்நெறி கூறப்பட்டது.

(கு - ரை.) உடையார் இன்மையின் - சொந்தக்காரர் இல்லாமையால். உற்ற - அடைந்த; கிடைத்த என்றபடி. சுங்கம் - ஆயம்; தீர்வை. திறை- அரசிறை, கப்பம். வைத்தார் - சம்பாதித்துவைத்தவர். நிலத்தின் கட்கிடந்து - தரையின்கீழ்ப் புதையலாய்ப்பொருந்தியிருந்து. தாயத்தார் பெறுதலும் - பங்காளிகள் அடையாததும். ஒருவன்சம்பாதித்த சொத்துக்கு, முதலில் அவன் சந்ததியாரும், அவர்இல்லாவழிப் பின்பு பங்காளிகள் இருப்பின் அவரும், அவரும் இல்லாவிடின் அப்பால் அரசனும் உரிய ரென்க. கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது - மரக்கலமார்க்கமாகவும் தரைவழியாகவும் வெளியூர்களிலிருந்து கொணரப்படுகின்ற வர்த்தகப்பொருள்களுக்கு வரியாக விதித்துவாங்கும் பொருள். தெறுதலான்

வரும் - போர்செய்துவெல்லுதலால் வருகின்ற. ஆறிலொன்று ஒழியவும்

உரியன கூறியவாறு-குடிகளிடத்து வாங்கும் ஆறிலொருபொருளல்லாமலும்

மற்றும் அரசனுக்கு உரியவை சொல்லியபடி; ஆறிலொன்று உரியதாதல் மூன்

றாங்குறளாற் பெறப்பட்டதனால், மற்றும் உரியவற்றை இதிற் கூறினா

ரென்க. அஃது ஈட்டும் நெறி - பொருள் சம்பாதிக்கின்ற வழி.

போர்வீரர் தாம்வென்ற பொருள்களிற்

சிறந்தவற்றைத் தம் அரசனுக்

குக் கொடுத்தல்வேண்டு மென்பது, வேதமொழி. உடையவனறியப்படாத பொருள் அகப்பட்டால் அதனை அரசன் மூன்றுவருஷகாலம் பாதுகாத்து வைத்திருந்து அதற்குள் உடையவன் வந்துபெற்றுக்கொள்ளாவிடின் பின்பு அதனைத் தனதாக்கிக்கொள்க. பிறன் இழந்தபொருள் அகப்பட்டால் அரசன் அதனைப் பாதுகாத்துவைத்து, தான் பாதுகாத்துவைத்ததற்காக அதில் ஆறிலொருபகுதியையாவது, பத்திலொருபகுதியையாவது பன்னிரண்டிலொருபகுதியையாவது அப்பொருளுக்கு உடையவனது தகுதிக்கு

## எகூ - ஆம் அதிகாரம்.—பொருள்செயல்வகை

உகூஎ

ஏற்றவாறு நல்லோர்முறைமைப்படி எடுத்துக்கொண்டு மற்றதை உடையவனுக்குக் கொடுத்திடவேண்டும். ஒருவன் தான் கண்டெடுத்த புதையலையாவது, பிறன்கண்டெடுத்த புதையலையாவது, தனக்குச்சேர்தற்கு உரியதென்று சத்தியமாக நிலைநாட்டுவானாயின், அரசன் அதில் ஆறிலொருபகுதியையாவது பன்னிரண்டிலொருபகுதியையாவது எடுத்துக்கொண்டு மற்றதை அவனுக்குக் கொடுத்திடவேண்டும். முன்னோரால் வைக்கப்பட்டதும், உடையவனுணரப்படாததுமான புதையலை அரசன் தான் கண்டெடுத்தால் அதில் அந்தணர்க்குப் பாதிகொடுத்து மற்றதைத் தன் திரவியசாலையிற் சேர்க்கவேண்டும். இங்ஙனம் அடைதற்குக் காரணம், அரசன் பூமிக்குத் தலைவ

ஞதல். கலத்தினுங் காலினும் வரும் பண்டங்களினல் வணிகர்க்கு வரும் இலாபத்தில் இருபதிலொருகூறு அரசன் வாங்கிக்கொள்ள வேண்டும்'' என்று மனு - எ - கூஎ, அ - ௩௦, ௩௩, ௩௫, ௩அ, ௩௯, ௩௯அ - ஸ்லோகங்களிற் கூறியவை இங்குக் காணத்தக்கன.

உல்கு பொருள் - பண்புத்தொகை. உல்கு - ஶுல்க மென்னும் வட சொல்லின் விகாரம்: இதுவே, சுங்கமெனச் சிதைவதும். ஒன்னார்த் தெறுஉயர்திணையில் ஐயுருபு தொக்கது; தகரம்இரட்டிற்று: ''இயல்பின்விகாரம்''. தெறு பொருள் - காரணப்பொருளில்வந்த இறந்தகாலவினைத்தொகை. (முதனிலைத்தொழிற்பெயரின்மேல் வந்த மூன்றும்வேற்றுமையுருபும் பயனும் உடன்தொக்கதொகையாயின், 'தெறுப்பொருள்' என நிற்கும்.) செய்யுளின்பம் நோக்கி 'தெறுபொருள்' என இயல்பாயிற்றென்றலும் ஒன்று.

(௯)

௭௫௭. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(இ - ள்.) அன்பு ஈன் - அன்பினல் ஈனப்பட்ட, அருள் என்னும் குழவி—,—பொருள் என்னும் - பொருளென்று உயர்த்துச்சொல்லப்படும், செல்வம்

செவிலியால் - செல்வத்தையுடைய செவிலியான்,
உண்டு-வளரும்.

தொடர்புபற்றுதே வருத்தமுற்றூர்மேற் செல்வதாய அருள் தொடர்பு பற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்தழி உளதாவ தாகலின், அதனை 'அன்பீன் குழவி' என்றும், அது வறியார்மேற்செல்வது அவ்வறுமை களையவல்லார்க்கு ஆகலின் பொருளை அதற்கு 'செவிலி' என்றும், அஃதுஉலகிற்செவிலியர் போலாது தானே எல்லாப்பொருளும் உதவிவளர்த்தலின் 'செல்வச்செவிலி' என்றுங் கூறினுர்.

(கு - ரை.) ஈனப்பட்ட - பெறப்பட்ட. குழவி - குழந்தை. பொருளென்றுஉயர்த்துச்சொல்லப்படுஞ் செவிலியென இயையும். 'செல்வத்தை யுடைய' என்பதற்கு - வேண்டும் பொருள்களைக் கொடுக்குந்தன்மையுடைய என்று கருத்து; அது, விசேடவுரையில் 'தானே எல்லாப்பொருளும் உதவி வளர்த்தலின், செல்வச்செவிலி யென்று கூறினுர்' என்பதனுல் விளங்கும். செவிலி - வளர்க்குந்தாய். தொடர்புபற்றுதே - யாதொரு சம்பந்தமு மில்லாமலே. 'வருத்தமுற்றூர்' என்று சிறந்தஉயர்திணையாற் கூறினுராயினும், வருத்

தமுற்ற அஃறிணைப்பிராணிகளும் உபலக்ஷணத்தாற்

கொள்ளத்தக்கன. தொடர்புபற்றி - உறவுமுறை சிநேகம் உரிமை முதலிய யாதாயினும் ஒருசம் பந்தத்தால். கீழ் அன்புடைமை யென்ற அதிகாரத்தில் 'அன்புடைமையாவது - வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கண் காத லுடையனாதல்' என்றும், அருளுடைமை யென்ற அதிகாரத்தில் 'அருளா வது - தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கள்மேலுஞ் செல்வதாகிய கருணை' என்றும் பரிமேலழகர் கூறிப்போந்தவற்றாலும், அன்புக்கும் அரு ளுக்கும் உள்ள வேறுபாடு விளங்கும். முன் "அன்பீனுமார்வமுடைமை யது வீனு, நண்பென்னு நாடாச்சிறப்பு" என்ற குறளில் 'ஒருவனுக்குத் தொடர் புடையார்மாட்டுச்செய்த அன்பு அத்தன்மையாற் பிறர்மாட்டும் விருப்பமு டைமையைத் தரும்' என்றதனாலும், அன்பு அருளுக்குக் காரணமாதல் அறிக. தொல்காப்பியவுரையில் 'அன்பாவது - மனைவியர்கண்ணும் தாய் தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின்கண்ணும் மனமகிழ்ச்சிநிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம்' என்றும், 'அன்பென்பது - அருட்குமுதலாகி மனத்தில் நிகழும் நேயம்: அஃதுஉடையார்க்குப் பிறர்கண் துன்பங்கண்டவ ழிக் கண்ணீர்விழு மாகலின், அவ்வருளானே

அவ்வன்புடைமை விளங்கு மென்பது' என்றும், 'அளியாவது - அன்புகாரணத்தால் தோன்றும் அருள்' என்றும் உரைத்தவை உணரத்தக்கன. 'அருளாவது - ஒன்றின் துயர்கண்டால் காரணமின்றித் தோன்றும் இரக்கம்; அன்பாவது - தன்னுற்புரக்கப் படுவார்போல் உளதாகிய காதல்' என்பர், புறநானூற்றுஉரையாசிரியரும். முதிர்ந்துழி - மிக்கவிடத்து. அதனை - அருளை. அது - அருள். வறுமை களையவல்லார் - பிறரது வறுமையை நீக்கவல்ல செல்வர். அதற்கு - அருளுக்கு. அஃது - செல்வம். உலகிற்செவிலியர்போலாது - உலகத்திலுள்ள சாதாரண செவிலித்தாயர்போலாகாமல். இச்செய்யுள், இயைபுருவகவணி; அதன் இலக்கணம் - உபமானத்தையும் உபமேயத்தையும் வேற்றுமையொழி வித்து ஒற்றுமைதோன்றக் கூறுகையில், பலபொருள்களை ஒன்றுக்குஒன்று இயைபுடையனவாக நிறுத்துவது; இங்கு, 'ஈன்' என்ற வினைப்பகுதியின் ஆற்றலால், அன்பு தாயாதல் பெறப்படும்.

(எ)

எருஅ. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

(இ-ள்.) தன் கைத்து-தன்கையதாகிய பொருள், உண்டாக—, ஒன்று செய்வான் - ஒருவினையைஎடுத்துக்கொண்டான், வினை - (அதனைச்)

செய்தல்,—குன்று ஏறி யானை போர் கண்டு அற்று - (ஒருவன்) மலைமேல் ஏறி நின்று யானைப்போரைக் கண்டா லொக்கும்; (எ - று.)

கைத்துஉண்டாக ஒன்றுசெய்வா னெனக் கூட்டுக. 'ஒன்று' என்பது - வினையாதல், 'செய்வான்' என்றதனாற் பெற்றும். குன்றேறியான் அச்சமும் வருத்தமும்இன்றி நிலத்திடை யானையும் யானையும் பொரு போரைத் தான் இனிது இருந்து காணுமதுபோல, கைத்துஉண்டாக வினையைமேற்கொண்

•

எசு - ஆம்

அதிகாரம்.—பொருள்செயல்வகை உசுக

டானும் அச்சமும்வருத்தமும் இன்றி வல்லாரை ஏவித் தான் இனிதுஇருந்து முடிக்கு மென்பதாம்.

(கு - ரை.) கையது - கையிலுள்ளது; சொந்தமானது என்றபடி. எடுத் துக்கொண்டான் - செய்ய உடன்பட்டவன்; 'மேற்கொண்டான்' என்பதற் கும் இதுவே பொருள். அதனை - அத்தொழிலை. யானைப்போர் - யானைகள் ஒன்றோடொன்றுசெய்யும் போர். ஒன்று - ஒருதொழிலுக்கு, எண்ணலளவையாகுபெயர்; 'ஒன்று இரண்டு என்னுந்தொடக்கத்து எண்ணுப்பெயர்கள், ஆகுபெயராகாது உரியபெயராகவே எண்ணப்படுபொருளின்மேலும் நிற்கும்' என்பர், சேனாவரையர். குன்று ஏறியான் - மலைமேல் ஏறியவன்.

வருத்தமுமின்றி இனிதிருந்துகாணுமது என இவையும். பொரு போர்செய்கின்ற சண்டை. வல்லாரை ஏவி - தான் தொடங்கிய தொழிலைச்செய்து முடிக்க வல்லவர்களை நியமித்து. முடிக்கும் - நிறைவேற்றுவான். யானைப் போர் - யானைகளது போர். கண்டற்று - கண்டாலற்று என்பதன் விகாரம்; இனி,கண்டதற்று என்பது கண்டற்று எனத்தொகுத்தல்விகாரப்பட்டதென்றலும் ஒன்று. ஆல் - அசை. கைத்து - கையிலுள்ளது; பொருள்.

இச்செய்யுளின் பொழிப்புரையின்பின் 'கைத்து உண்டாக ஒன்றுசெய்வான் எனக் கூட்டுக' என்று அந்வயத்தை விளக்குகின்ற வாக்கியம், அச்சுப் பிரதிகளி லில்லையாயினும், பல ஏட்டுப்பிரதிகளில் உள்ளது. இச்செய்யுளில், தன்கைத்துண்டாக ஒன்றுசெய்வான் வினை என உபமேயமும், குன்றேறி யானைப்போர் கண்டு என உபமானமும், அற்று என உவமவுருபும் விரிந்துநிற்க, அச்சமும்வருத்தமுமின்றி இனிதிருந்துமுடித்தலாகிய பொதுத் தன்மை யொன்றும் தொக்குவந்ததனால், இது - பொதுத்தன்மைத்தொகை யுவமையணி; வடநூலார் தர்மலுப்தோபமா என்பர். இவ்வுவமை, தொழில் பற்றி வந்தது.

(அ)

எடுகூ.

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

(இ - ள்.) (தமக்கு ஒன்று உண்டாகக் கருதுவார்), பொருளை செய்க - பொருளை உண்டாக்குக; செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு - (தம்)பகைவர் தருக்கினை அறுக்கும் படைக்கலம், (அதுவாம்); அதனின் கூரியது இல்-(அதற்கு) அதுபோலக் கூரியபடைக்கலம் (பிறிது) இல்லை; (எ - று.)

'அதுவாம்', 'அதற்கு' என்பன, அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே, பெரும்படையும் நட்பு முடைய ராவர்; ஆகவே, பகைவர் தருக்கு ஒழிந்து தாமே அடங்குவர் என்பார் 'செறுநர்செருக்கறுக்கு மெஃகு' என்றும், ஏனை எஃகுகள் அதுபோல அருவப்பொருளை அறுக்கமாட்டாமையின் 'அதனிற்கூரியது இல்' என்றுங் கூறினார்.

(கு - ரை.) ஒன்று உண்டாகக் கருதுவார் - ஒருநன்மை உண்டாகும்படி நினைப்பவர். உண்டாக்குக - சம்பாதிக்கக்கடவர். பகைவர்தருக்கு - பகை வரது களிப்பு. படைக்கலம் - ஆயுதம்; போர்க்கருவி. அதுவாம் - செல்வ

மாம். அதற்கு - பகைவர்செருக்கை யறுத்தற்கு. அதுபோல - செல்வம் போல. கூரிய - கூர்மையுள்ள. நட்பு - நண்பர். ஏனை எஃகுகள் - மற்றை ஆயுதங்கள். அதுபோல - செல்வம்போல. அருவப்பொருள் - உருவமில் லாதபொருள். அருவம் - அரூபம்: இங்கே, அருவப்பொருள் - தருக்கு. வைசேடிகரது மதம்பற்றி, தருக்காகிய குணம் பொருளாகக்கூறப்பட்டது; "சினத்தைப் பொருளென்று கொண்டவன்" என்ற குறளின் உரையிற் பரி மேலழகர் 'வைசேடிகர் பொருள் பண்பு தொழில் சாதி விசேடம் இயைபு என்பவற்றை அறுவகைப்பொருளென்றாற்போல, ஈண்டுக் குணம் பொரு ளெனப்பட்டது' என்றனர். எஃகு - எஃகினாற்செய்யும் ஆயுதத்துக்கு, கரு வியாகுபெயர். கூரியது - ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்: இ, அ - சாரியைகள். பொருளினிடத்துப் படைக்கலத்தின் தன்மையை ஏற்றிக் கூறியதனால், உருவகவணி. செல்வத்தைக்கொண்டு சேனை யையும் நண்பரையுஞ் சேர்த்துப் பகைவரை அடக்குதல்போல மற்றொன்றால் அடக்கமுடியாமையால், செல்வம் அவசியம் அரசராற் சம்பாதிக்கத்தக்கது என்பதாம். "செய்தபொருள்யாருஞ் செறுவாரைச்செறுகிற்கு, மெஃகுபிறிதில்லை யிருந் தேயுயிரையுண்ணும், ஐயமிலை யின்பமறனோ டவையுமாக்கும், பொய்யில் பொருளேபொருள் மற்றல்லபிறபொருளே" என்ற சிந்தாமணி இங்கு நோக்கத்தக்கது.

(கூ)

எசுo. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்
ளேனை யிரண்டு மொருங்கு.

கெண்பொரு

(இ - ள்.) ஒள் பொருள் - நெறியான் வரும் பொருளை, காழ்ப்ப இயற்றி யார்க்கு - இறப்பமிகப்படைத்தார்க்கு,—ஏனை இரண்டுஉம்-மற்றை அறனும் இன்பமும், ஒருங்கு - ஒருங்கே, எள் பொருள் - எளியபொருள்களாம்;(எ-று.)

காழ்த்தல் - முதிர்தல்.
பயன்கொடுத்தல்லதுபோகாமையின் 'ஒண் பொருள்' என்றும், ஏனையிரண்டும் அதன் விளைவாகலின் தாமே ஒருகாலத் திலே உள்வா மென்பார் 'எண்பொருள்' என்றுங் கூறினர்.

இவை நான்குபாட்டானும், அதனான் வரும் பயன் கூறப்பட்டது. (கு - ரை.) நெறியான் - நல்லவழியால். இறப்ப மிகப் படைத்தார் - வெகு அதிகமாகச் சம்பாதித்தவர்கள். ஒண்மை - ஒளி; பொருளுக்கு ஒண்மை- நெறியால் வருதலும், பயன்கொடுத்தலில் தவறாமையு மென்க. அறம் பொருள் இன்பம் என உடனெண்ணப்பட்ட மூன்றனுள் பொருளை முன்னர்ப் பிரித்தமையால், மற்றை அறமும் இன்பமும் 'ஏனை யிரண்டு' எனப்பட்டன. அதன் விளைவு -

செல்வத்தினுலுண்டாகும் பயன். ஒருகாலத் திலே - ஒரேகாலத்தில், ஏககாலத்திலே. அதனுன் - பொருளால்.

காழ்ப்ப - காழ் என்னும் வினைப்பகுதியினடியாப் பிறந்த செயவெ னெச்சம். ஏனை, ஒருங்கு - இடைச்சொற்கள். இவ்வதிகாரத்தின் நான்காங் குறளுக்கும் இக்குறளுக்கும் உள்ள ஒற்றுமைவேற்றுமைநயங்களை உய்த் துணர்க. "அறத்தி னீட்டிய வொண்பொருள்"

என்ற மணிமேகலையும்,

ஏஎ - ஆம் அதிகாரம்.—படைமாட்சி

ௗ௰௧

"தீவினை விட் டீட்டல் பொருள்" என்ற ஔவையார்பாடலும், "சிறப்புடை மரபிற் பொருள்" என்ற புறநானூறும் இங்கு அறியத்தக்கன. அங்கவியலில் பொருளியல் முற்றும்.

(௧0)

எஎ - ஆம்

அதிகாரம்.—படைமாட்சி.

இனி, அப்பொருளினுன் ஆவதாய் வெல்வதாய படை இரண்டு அதிகாரத்தாற் கூறுவான்தொடங்கி முதற்கட் படைமாட்சி

கூறுகின்றார்; அஃதா

வது - படையினது நன்மை. அதிகாரமுறைமை இதனுள் விளங்கும் *

(கு - ரை.) படை-சேனை: (பகைவரைப்)படுப்பதெனக் காரணப்பெயர்.

படுத்தல் - அழித்தல்: படு - பகுதி, ஐ - கருத்தாப்பொருள்விகுதி. பொருள் காரணமும், படை காரியமு மாதல் அதிகாரமுறைமைக்குக் காரணம்.

இதுவும்,அடுத்த அதிகாரமும், அங்கவியலில் 'படையியல்' எனவும்படும்.

எகூக. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) உறுப்பு அமைந்து - (யானை முதலிய நான்கு) உறுப்பானும் நிறைந்து, ஊறு அஞ்சா - (போரின்கண்) ஊறுபடுதற்கு அஞ்சாது நின்று, வெல் - (பகையை) வெல்வதாய, படை—,—வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை-அரசன் செல்வங்களெல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம்;(எ-று.)

ஈண்டு 'படை' என்றது, அந்நான்கன் தொகுதியை. ஊறுஅஞ்சியவழி வேறல்கூடாமையின் 'ஊறஞ்சா' என்றும், ஒழிந்தஅங்கங்கட்கும் அரசன்

றனக்கும் காவலாகலின் "வெறுக்கையுளெல்லாந் தலை' என்றுங் கூறினர்.

(கு - ரை.) நால்வகை அங்கங்களோடு கூடியதும், பகைவராற் புண்படு

தற்கு அஞ்சிப் பின்னிடாது நிலைத்துநிற்பதும், பகையை வெல்லவல்லதுமா

கிய சேனை, அரசனுக்கு மற்றையங்கங்களினுஞ் சிறந்தது என்பதாம்.

யானை முதலிய நான்கு உறுப்பு - யானை தேர் குதிரை காலாள் என்னுஞ்சதுரங்கங்கள்; "கச ரத துரகமாக் கடல்கொள் காவலன்" என்றார் கம்பரும். போரின்கண் ஊறுபடுதற்கு - யுத்தத்தில் விரணப்படுதற்கு.

நின்று - நிலைத்து. தலையாய -

கண் - யானை முதலியவற்றின்.

முதன்மையான. ஈண்டு - இங்கு. அந்நான்

ஊறு அஞ்சியவழி - விரணப்படுதற்கு அஞ்,

சினால். வேறல் கூடாமையின் - (பகையை) வெல்லுதல் முடியாமையால்

ஒழிந்த அங்கங்கள் - அமைச்சு, நாடு, அரண், பொருள், நட்பு என்பவை.

ஒழிந்த - சேனைநீங்கலான. அரசன்தனக்கும் - அரசனுக்கும். இப்பொருள்

கட்கெல்லாம்பாதுகாவலாவது அரசன்சேனை யென்க. 'வெறுக்கையுளெல்

லாந் தலை' என்றவிடத்து 'உள்' என்ற ஏழனுருபு - கூட்டிப்பிரித்தற்பொரு

ளில் வந்தது; "உடையா னரசரு ளேறு"
என்றவிடத்துப் போல. (க)

எசூஉ. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

* இத்தவாக்கியம் பல பிரதிகளிலில்லை.



(இ - ள்.) தொலைவு இடத்து - தான்சிறிதாயவழியும்,
உலைவு இடத்து-
(அரசற்குப் போரின் கண்) உலைவு வந்தால், ஊறு அஞ்சா -
(தன்மேல்) உறு
வதற்கு அஞ்சாதுநின்று தாங்கும், வன்கண் -
வன்கண்மை,—தொல் படை
க்கு அல்லால் - அவன்முன்னோரைத் தொடங்கி வரும்
படைக்கு அல்லது,
அரிது - உளதாகாது; (எ - று.)

இழிவுசிறப்புஉம்மை, விகாரத்தால் தொக்கது.
மூலப்படை கூலிப்
படை நாட்டுப்படை காட்டுப்படை துணைப்படை
பகைப்படை என்னும்
அறுவகைப்படையுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படை
யாகலான், அதனை

அரசன் "வெல்பொறிய நாடும் விழுப்பொருளுந் தண்ணடையுங், கொல் களிறு மாவுங் கொடுத்தளிக்க" என்பது, குறிப்பெச்சம்; இப்படையை வட நூலார் 'மௌலம்' என்ப.

(கு-ரை.) தான் சிறிதாய வழியும்-சேனை தான் பகைவரால் அழிக்கப்பட்டுச்சுருங்கியபொழுதும். உலைவு-அழிவு; அபாயம். உறுவதற்கு-புண்படுவதற்கு.

தாங்கும்-பகைவரை எதிர்த்துத் தம் அரசனைக் காக்கின்ற. வன்கண்மை-வலியதன்மை; சௌரியம். அவன்முன்னோர் - அவ்வரசனது தாதை மூதாதைமுதலிய முந்தினைபரம்பரையார். முன்னோரைத் தொடங்கி வரும் படை - மூலப் படை; மற்றையபடைகள், அப்பொழுதப்பொழுது அரசனாற்சேர்க்கப்படுவன.

விகாரத்தால் - செய்யுள்விகாரத்தால். இழிவுசிறப்புஉம்மை தொகுத்தல் விகாரப்பட்டது, 'தொலைவிடத்து' என்பதன் இறுதியிலென்க. மூலப் படை - தொன்றுதொட்டுப் பரம்பரையாக வருகின்ற சேனை. கூலிப் படை - வேண்டியபொழுது கூலிகொடுத்துச்சேர்க்குஞ் சேனை. நாட்டுப் படை - நாட்டிலுள்ள வீரர்களைப் போரின்பொருட்டுத்

தொகுப்பது. காட்
டுப் படை - காட்டிலுள்ள வேடர் முதலிய
போர்வல்லாரைத் துணையாகச்
சேர்ப்பது. துணைப் படை - தமக்குநண்பரான அரசரால்
உதவியாக அனு
ப்பப்பட்ட சேனை. பகைப் படை - பகைவர்களை வென்று
அவர்களிடத்தி
னின்று திறையாகக்கொணர்ந்த சேனை. "உறவின்மிக்கவர்
பகையி னெய்
த்தவ ருதவுமப்படை குடைநிழற்,
செறிதலத்தினில்வளர்நகர்ப்படை திரள்
வனப்படை பொருள்விலைத்,தறுகண்மெய்ப்படை
யுறுதியிற்பொருதமதகப்
படை யெனவிராய், அறுவகைப்படைகளும் வகுத்தன
அணிகள்" என்ற
வில்லிபுத்தூரார்பாரதத்தையும், "சுத்தமூலம் கான் கூலி
துணை பகை நாட்
டொ டாறே" என்ற சூடாமணிநிகண்டையும், இவற்றில்
மூலபலத்தை'உறு
தியிற்பொருதமதகப்படை' என்றும் 'சுத்தமூலம்'
என்றும் அடைமொழி
கொடுத்து மற்றவற்றினுஞ் சிறப்பித்து முறையே
இறுதியிலும் முதலிலும்
நிறுத்தியவாற்றையும் அறிக. "வெல்பொறியு நாடும்
விழுப்பொருளுந்
தண்ணடையும், கொல்களிறு மாவுங் கொடுத்தளித்தான்

- பல்புரவி, நன்
மணித் திண்டேர் நயவார்
தலையளிப்பப், பன்மணிப்பூணான் படைக்கு" என்
பது, புறப்பொருள்வெண்பாமாலை, தும்பைப்படலம் - உ -
ஆம்பாட்டு: இது,
தும்பையரவ மென்னுந் துறை கூறியது; அதர்வது-சிறந்த
அரசன் தனது

எஎ - ஆம்
அதிகாரம்.—படைமாட்சி ௬௦௬
சேனைக்கு மிக்க அருள்செய்வது: "பொன்புனைந்த
கழலடியோன், தன் படையைத் தலையளித்தன்று"
என்ற கொளுவினை அறிக. "வெல்பொறியும்" என்று
தொடங்கிய மேற்கோள்வாக்கியத்தின் பொருள்:—வெல்
பொறியும்- போர்வெற்றிக்குஉரிய அடையாளங்களையும்
[பட்டப்பெயர் விருது முதலியவற்றையும்],
நாடுஉம்-நாட்டின் பாகத்தையும், விழுப் பொருள்உம்-சிறந்த
செல்வத்தையும், தண் நடைஉம் -
குளிர்ந்ததன்மையையுடைய கழனிகளையும், கொல்
களிறுஉம்-(பகைவரைக்) கொல்லவல்ல யானைகளையும்,
மாஉம் - குதிரைகளையும், கொடுத்து - (பரிசு) கொடுத்து,
அளிக்க - அருள்செய்க. தன்பக்கல் மெய்யன்பு
உடையராகிய அவர் வேண்டுவனவற்றை அரசன் தானும்
அருளோடுகொடுத்து அவரைக் காப்பாற்றவேண்டும்

என்றவாறு. மௌலம்—மூலபலம். உலைவு, தொலைவு - தொழிற்பெயர்கள். உலைவிடம், தொலைவுடம் - உலைவுநேருங்காலம், தொலைவுநேருங்கால மென்க. (உ)

எகூரு. ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை

நாக முயிர்ப்பக் கெடும்.

(இ - ள்.) எலி பகை - எலியாய பகை, உவரி ஒலித்தக்கால் - (திரண்டு) கடல்போல ஒலித்தால், என் ஆம் - (நாகத்திற்கு) என்னஏதம் வரும்? நாகம் உயிர்ப்ப - அந்நாகம் உயிர்த்தஅளவிலேயே, கெடும் - (அது தானே) கெடும்.

உவமைச்சொல், தொக்குநின்றது. இத்தொழிலுவமத்தால், திரட்சி பெற்றும். வீரரல்லாதார்பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான், அவன்சினந்த அளவிலேயே அவர்தாம் கெடுவரென்பது தோன்ற நின்றமையின், இது-பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம். வீரரல்லாதார்பலரினும் வீரனொருவனை ஆடல் நன்று என்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், முறையே அரசனுக்குப் படை ஏனை அங்கங்களுட் சிறந்தது என்பதூஉம், அது தன்னுள்ளும் மூலப்படை சிறந்ததென்ப தூஉம், அதுதன்னுள்ளும் வீரன் சிறந்தா னென்பதூஉம் கூறப்பட்டன.

(கு - ரை.) ஆய-ஆகிய. திரண்டு-கூட்டமாகக்கூடி.

நாகத்திற்கு-பாம் பிற்கு. ஏதம்-தீங்கு.என்ன ஏதம் வரும் - ஒருதீங்கும்வரா தென்றபடி. உயிர்த்த துணையானே - மூச்சுவிட்ட அவ்வளவினலே. அது-அவ்வெலிப்பகை. உவமைச்சொல்-போலவென்னும் உவமவுருபு; அது தொக்கது, 'உவரி' என்பதன் இறுதியில். இத்தொழிலுவமம் என்றது, உவரி யொலித்தலைக் கூறியதை. திரட்சி - கூட்டங்கூடுதல். ஆர்த்தால் - ஆரவாரித்தால். அதற்கு - அவ்வார வாரத்திற்கு. அவன் கிளர்ந்த துணையானே - அவ்வீரன் ஊக்கங்கொண்டு போர்க்கு எழுந்தமாத்திரத்தாலே. அவர் - வீரரல்லாதபலர். **பிறிதுமொழித** லணியின் இலக்கணம் - உபமேயத்தைக் கூறாமல் உபமானத்தைமாத்திரங் கூறி அதனல் உபமேயத்தைப் பெறவைத்தல்; இவ்வணி - ஒட்டு, உவமப் போலி, நுவலாநுவற்சி, புனைவிலிபுகழ்ச்சி எனவும் பெயர்பெறும்: "கருதிய பொருள்தொகுத் தது புலப்படுத்தற், கொத்ததொன் றுரைப்பி னஃ தொட் டெனமொழிப" என்பது, தண்டியலங்காரம். இதனைச்

சுருக்கணி யென்பர்,

வீரசோழியனூலுடையார்; "வீவில் கவிதான் கருது பொருளை வெளிப்படுத் தற்கு, ஓவியமே சுருக்கா மறைசொல்லினுரைத்திடினே" என்பது காண்க. இதற்குத் தொகைமொழி யென்றும் ஒருபெய ருண்டு. ஆடல் - ஆளுதல், தொழில்கொள்ளுதல். அதுதன்னுள்ளும் - அப்படையினுள்ளும். அதுதன் னுள்ளும் - அந்த மூலப்படையினுள்ளும். இச்செய்யுளின் கருத்தேபற்றி, "எலி யெலா மிப்படை யரவம் யானென" எனக் கம்பராமாயணத்திலும், "உரககன்னி, யருளுடைமைந்த னெண்ணிலாயிரமுருவமாகி, யிருபுடை யினும் போர்வேந்த ரெலிகள்போ லேங்கி யம்பாற், பொருபடையுருண்டு போகப் பொருவில்வெம்பூசல்செய்தான்" என வில்லிபுத்தூரார் பாரதத்தி லும் வருவன காண்க. என் என்ற வினைப்பெயர், இங்கு, இடம்நோக்கி, தீங் கைக் குறித்தது. உவரி என்பதில், உவர் - பகுதி, இ - உடைமைப்பொரு ளுணர்த்தும்பெயர் விகுதி. நாகம் - நகத்தில் வாழ்வது என்று காரணப் பொருள்படும்; நகம் - நடவாதது: மலையும், மரமும். (ரு)

எகூச. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(இ - ள்.) அழிவு இன்று - (போரின்கண்) கெடுத லின்றி, அறைபோ காது ஆகி - (பகைவராற்) கீழறுக்கப்பட்டதாய், வழி வந்த - தொன்று தொட்டுவந்த, வன்கணது ஏ - தறுகண்மையையுடையதே, படை - (அரச னுக்குப்) படையாவது: (எ - று.)

அழிவின்மையான் மறமானங்களுடைமையும், அறைபோகாமையான் அரசன்மாட்டு அன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை - "கன்னின்ற னெந்தை கணவன்களப்பட்டான், முன்னின் றுமொய்யவிந்தா ரென்னையர்—பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன்மேலோடி; யெய்போற் கிடந்தானென் னேறு" என்பதனுன் அறிக. குற்றியலுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான் வந்தது; இது, வருகின்ற பாட்

டுள்ளும் ஒக்கும்.

(கு - ரை.) போரின்கண் கெடுதல் - யுத்தத்தில் தோற்றல். கீழறுக்கப் படாததாய் - வஞ்சனைவழியில் வசப்படுத்திப்பிரிக்கமுடியாததாய். தொன்று தொட்டு வந்த தாதை மூதாதை முதலாகப் பரம்பரையாய் வந்த. மற மானம்- பராக்கிரமமும் பெருமையும். அறைபோகாமை-பகைவரான் வஞ்சித்துப்பிரிக் கப்படாமை. அரசன்மாட்டு-அரசனிடத்து. "கன்னின்றான்" என்றுதொடங் கிய மேற்கோள், புறப்பொருள்வெண்பாமாலை - வாகைப்படலம் - உஉ - ஆம் பாட்டு: இதன்பொருள் வருமாறு:— எந்தை - (எனது) தகப்பன், கல் நின் றான் - கல்லிலே பொருந்திநின்றான்; கணவன் - (எனது) கணவன், களம் பட்டான் - போர்க்களத்திலே இறந்தான்; என் ஐயர் - எனது தமையன் மார், முன் நின்று - (பகைவரது) முன்னே நின்று எதிர்த்து, மொய் அவிந் தார் - போரில் விழுந்தார்; என் ஏறு - எனது மகன், பின் நின்று - (தனது சேனை அழிந்த)பின்பும்(தான் கலங்காது)நின்று,கை போய் கணை உதைப்ப-



தன்கைசென்று அம்புகளைச்செலுத்த, காவலன் மேல் ஓடி - பகையரசன் மேல் எதிர்த்துச்சென்று, எய்போல் கிடந்தான் - (அவன் எய்த அம்புகளால் தன் உடம்புமுழுவதுந் தைக்கப்பட்டு) முள்ளம்பன்றிபோலக் கிடந்தான் என்க. இது, வாகைத்திணையில் ஏரூண்முல்லையென்னுந் துறை: அதாவது - எதிரில்லாமலெரீழியும்படி சினம் மிகுகின்ற

மேன்மேலேறுநின்ற ஆண்மைத் தன்மையையுடைய குடியொழுக்கத்தை உயர்த்துச் சொல்லுதல்; அரிய போரைப் பரம்பரையாச்செய்துவிரணப்பட்ட பெரியகுடியின் பராக்ரமத்தைச் சொல்லுத லென்றுங் கூறுவர். "மாறின்றி மறங்கனலும், ஏறுண்குடி யெடுத்துரைத்தன்று" என்ற புறப்பொருள்வெண்பாமாலைக்கொளுவையும், "அருஞ்சமம் வழிவழியாற்றியேறுண்ட, இருங்குடிமறம்புக லேறுண்முல்லையும்" என்ற இலக்கணவிளக்கத்தையுங் காண்க. போரிற் பின்னிடாது பகை வனை யெதிர்த்து அவனால் விழுப்புண்பட்டுக் கிடக்கின்ற ஒருவனது தாயின் வார்த்தையாகக் கூறியது, இப்பாட்டு. கல்நின்றான் - போரில் இறந்து கல் விலே பெயரும் பெருமையும் பொறிக்கப்பட்டுப் பிரசித்திபெற்றுநின்றான்; கல்லில் தெய்வவடிவமாக ஆவேசித்துநின்றான் என்றவாறுமாம்; இதன் விவரம், ௭௭௧ - ஆங் குறளில் "கல்நின்றவர்" என்றவிடத்து விளக்கப்படும்; இறந்தவருடம்பைப் புதைத்தவிடத்திற் கல்நாட்டுதல், மரபு. போய் - புடை பெயர்ந்து; விரைந்து தொழில்செய்யத்தொடங்கி யென்றபடி. உடம்புமுழுவதும் முட்களையுடைய எய்ப்பன்றி, உடம்புமுழுவதும் அம்பு தைக்கப்பட்டிருக்கின்ற நிலையிலுள்ள வீரர்க்கு உவமை.

வன்கணது + ஏ = வன்கணதே எனக் குற்றியலுகரத்தின்முன் உயிர் வந்தபொழுது வருமொழிமுதலுயிரேறி முடியற்பாலது, இடையில் வகரவுடம்படுமெய் பெற்று 'வன்கணதுவே' என்று வந்தது,

விரித்தல்விகாரத் தின்பாற்படு மென்க; இது வருகின்றபாட்டுள்ளும் ஒக்கும். இவ்விலக்கணம் அடுத்தகுறளில் 'ஆற்றலதுவே' என்பதற்கும் பொருந்தும். இன்று - இன்றி யென்னும் எதிர்மறைக் குறிப்புவினையெச்சம் ஈறுதிரிந்தது; "இன்றியென் னும் வினையெஞ்சிறுதி, நின்றவிகர முகரமாதல், தோன்றியன்மருங்கிற் செய்யுளு ளுரித்தே" என்ற தொல்காப்பியத்தைக் காண்க. வழியென்பது வம்ச பரம்பரையாதலை 'வழித்தோன்றல்' என்பதிலுங் காண்க. வன்கணது - ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். (ச)

எசாரு. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

(இ - ள்.) கூற்று - கூற்றுவன்தானே, உடன்று - வெகுண்டு, மேல் வரின் உம் - மேல் வந்தாலும், கூடி எதிர் நிற்கும் - நெஞ்சு ஒத்து எதிர்நின்று தாங்கும், ஆற்றலது ஏ - ஆற்றலையுடையதே, படை - படையாவது;(எ-று.)

மருந்தில்கூற்றாகவின்,

உம்மை - சிறப்பும்மை. மிகப்பலர் நெஞ்சு ஒத்த ற்குக் காரணம், அரசன்மேல் அன்பு. ஆற்றல் - மனவலி.

39

(கு - ரை.) கூற்றவன் - யமன். மேல்வருதல் - எதிர்த்துப்போரிட வருதல். நெஞ்சு ஒத்து - மனம் இணங்கி. தாங்கும்—தடுக்கும். ஆற்றல் - வல்லமை. 'மருந்து இல் கூற்று' என்பதற்கு - எவ்விதத்தாலும் தடுக்கமுடியாத யமனென்று கருத்து; "மருந்தில்கூற்றத்தருந் தொழில்சாயா" என்பது புறநானூறு. "மாற்றருங்கூற்றம்" என்றார் தொல்காப்பியனாரும். மருந்து - இங்கே, பரிகாரமென்ற மாத்திரமாய்நின்றது. சிறப்பு - உயர்வுசிறப்பு. உம்மை-'வரினும்' என்றவிடத்தி லுள்ளது. மனவலி—மனோபலம், தைரியம். கூற்று - (பிராணிகளின் உடம்பையும் உயிரையும் வெவ்வேறுபிரித்துக்) கூறுக்குபவன் என்பதுபற்றிய காரணப்பெயர்; (காலத்தை இன்ன இன்ன பிராணிக்கு இவ்வளவு இவ்வளவென்றுவரையறைசெய்து) கூறுபடுத்தி நடத்துபவனென்றலும் ஒன்று: 'கூற்றுவது - வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைப் பொருள்வகையாற் கூறுபடுத்துங் கடவுள்; அதனைத் தான் பேரூர்க்கூற்றம் போலக் கொள்க' என்ற தொல்காப்பியவுரை அறியத்தக்கது.

(ரு)

எசுகூ. மறமான மாண்ட வழிச்செலவு
தேற்ற மெனநான்கே யேமம் படைக்கு.

(இ - ள்.) மறம் - தறுகண்மையும், மானம் - மானமும், மாண்ட வழி செலவு - முன் வீரராயினர்சென்ற நன்னெறிக்கண் சேறலும், தேற்றம் - (அரசனால்)தேறப்படுதலும், என நான்கு ஏ - என இந்நான்குகுணமுமே, படைக்கு ஏமம் - படைக்கு அரணாவது; (எ - று.)

இவற்றான், முறையே, பகைவரைக் கடிதிற்
கொன்றுநிற்றலும், அரசனுக்குத் தாழ்வுவாராமற் காத்தலும்,
அழியுநர்புறக்கொடை அயில்வாளோச் சாமை முதலியவும்,
அறைபோகாமையும் ஆகிய செய்கைகள் பெறப்பட்டன.
இச்செய்கையார்க்குப் பகைவர் நணுகா ராகலின்,
வேறு அரண் வேண்டா என்பதாம்.

(கு - ரை.) தறுகண்மை -
அஞ்சாதுபொரும்வீரகுணம். நல்நெறிக்கண் சேறல்
- நல்வழியிற்செல்லுதல்: முன்வீரராயினோர்
சென்றநன்னெறிக்கட்சேறலாவது - தருமயுத்தஞ்செய்தல்.
தேறப்படுதல் - நம்பப்படுதல். அரண் - பாது காவல்;
அழியாமைக்குக் காரண மென்றபடி. கடிதின்-விரைவாக.
தாழ்வு- அவமானம். அழியுநர் புறக்கொடை அயில்வாள்
ஓச்சாமை - (ஒருவீரன் தன் எதிரில்) தோற்றுஓடுபவரது
முதுகுபுறத்திலே கூரிய ஆயுதத்தை எடுத்து வீசாமை: இது,
தழிஞ்சியென்னும் புறப்பொருள்துறையின்பாற் படும்; [தழி
ஞ்சியாவது—எஎ௩ - ஆம் குறளின் குறிப்பிற் காண்க.]
"அழியுநர் புறக் கொடை யயில்வா ளோச்சாக்,
கழிதறுகண்மை காதலித் துரைத்தன்று" என்ற
கொளுவையும், ('அழிகுநர்' என்பதும் பாடம்.) "கான்படு
தீயிற் கல வார் தன்மேல்வரினுந், தான்படைநீண்டாத்
தறுகண்ணன் - வான்படர்தல், கண்ணியபி னன்றிக்
கறுத்தார் மறந்தொலைத, லெண்ணியபின் போக்குமோ
வெஃகு" என்ற செய்யுளையும் புறப்பொருள்வெண்பாமாலை

திற் காண்க. மறங்கூறியதனுல் பகைவரை விரைவிற் கொல்லுதலும், மானங்கூறியதனுல் தன் அரசனுக்கு அவமான முண்டாகாதபடி பாதுகாத்த லும், மாண்டவழிச்செலவுகூறியதனுல் புறங்கொடுப்பவர்மேற் படைக்கலம் வழங்காமையும், தேற்றங்கூறியதனுல் பகைவர்க்கு வசப்பட்டுத் தன் அர சனை வஞ்சியாமையும் பெறப்படு மென்க. தொல்காப்பியப்பொருளதிகார வுரையில் 'சிறப்புடை அரசியலாவன -

மடிந்தஉள்ளத்தோனையும் மகப்பெரு தோனையும்
மயிர்குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோனையும்
பெண்பெய ரோனையும் படையிழந்தோனையும்
ஒத்தபடையெடாதோனையும் பிறவும் இத்
தன்மையுடையோரையும் கொல்லாதுவிடுதலும்,
கூறிப்பொருதலும் முதலிய னவாம்' என்றது,

இங்குஅறியத்தக்கது. இச்செய்கையார் - இத்தொழில் களையுடையவர். நணுகார் - நெருங்கமாட்டார்: சுவ ரென்க.

சமீபத்தில்வருதற்கும் அஞ்

இப்பாட்டில், என வென்னும்

எண்ணிடைச்சொல், மறமென மான மென
மாண்டவழிச்செலவென தேற்றமென என்று,
நின்றவிடத்துப்பிரிந்து, பிறஇடத்துஞ்சென்று பொருந்திற்று; [நன் - இடை - கo.] எனவென்பது, நான்குஎன்னுந் தொகைபெற்றது; [நன். இடை - கூ.] மாநம் - வடசொல். தேற்றம் - தேறுதல்: தேறப்படுதலெனச் செய்வினை செயப்பாட்டுவினைப் பொருளில்வந்தது. ஏ - பிரிநிலே. ஏமம் - க்ஷேம மென்னும் வடசொல்லின் சிதை வென்பர்.

(சு)

எகூஎ. தார்தாங்கிச் செல்வது
போர்தாங்குந் தன்மை

தானை தலைவந்த
யறிந்து.

(இ - ள்.) தலை வந்த போர் - (மாற்றான் வகுக்கப்பட்டுத்)தன்மேல் வந்த படையின் போரை, தாங்கும் - விலக்கும், தன்மை அறிந்து - வகுப்பு அறிந்து வகுத்துக்கொண்டு, தார் தாங்கி-அவர்தூசியைத் (தன்மேல்வாராமல்) தடுத்து, செல்வது - (தான் அதன்மேற்) செல்வதே, தானை - படையாவது.

படைவகுப்பாவது - வியூகம்; அஃது - எழுவகையுறுப்பிற்றாய், வகையால் நான்காய், விரியால் முப்பதாம். உறுப்பு ஏழாவன-உரம் முதல் கோடி ஈறாயின. வகை நான்காவன - தண்டம் மண்டலம் அசங்கதம் போகம் என இவை. விரி முப்பதாவன - தண்டவிரி

பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரி ஆறும், போகவிரி ஐந்தும் என இவை. இவற்றின்பெயர்களும் இலக்கணமும் ஈண்டுஉரைப்பிற் பெருகும்; அவையெல்லாம் வடநூல்களுட் கண்டுகொள்க.

இவை நான்குபாட்டானும், படையினது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) மாற்றாரான் வகுக்கப்பட்டு - பகைவரால் அணிவகுக்கப் பட்டு. விலக்கும் வகுப்பு - தடுக்கும் விதம்; வகுப்பு - வகை: அணிவகுப்புமாம். வகுத்துக்கொண்டு - அமைத்துக்கொண்டு. அவர் தூசி - பகைவர்களது படை வகுப்பு. அதன்மேல் - அவரது படைவகுப்பின்மேல். தூசி - முந்துற்றுப் பொருபடையுமாம்: இதற்கு - தாரென்றும், கொடிப்படையென்றும், மூன்



னணிச்சேனையென்றும் பெயர்கள் உண்டு. 'தார்' என்பது முந்துற்றுப் பொருபடையாதலை, 'தார்நிலை' என்னும் புறப்பொருள்துறைப்பெயரிலுங் காண்க. படைவகுப்பு - சேனை ஒருவடிவமமைய ஒழுங்குபட நிறுத்தப்படுவது; இதனை வடநூலார் வ்யூஹ மென்பர். எழுவகை உறுப்பிற்று - எழு வகை அவயவங்களையுடையது.

வகை-பிரிவு, பகுப்பு. விரி - முழுத்தொகை. உரம் முதல் கோடி ஈருயின - மார்பு, இரண்டுஇறகுகள், இடை, பின்புறம், பிரதிக்கிரகம் [முற்செல்லுஞ் சேனையின்பின்னே அதற்குப் பாதுகாவலாக இருநூறு விற்கிடை தூரத்திலுள்ள தனிச்சேனைக்குப் பிரதிக்கிரகமென்று பெயர்], கோடி என இவை. உரம்முதலிய எழும், வியூகத்துக்கு ஸப்த அங்கங்களென்று சொல்லப்படும். இது, தேவகுருவாகிய பிருகஸ்பதியின் மதம்; (இறகுகளை நீக்கி ஐந்து அங்கம் கொள்வர், அசுரகுருவாகிய சுக்கிராசாரியர்.) தண்டமாவது - சேனையைக் குறுக்காக நிறுத்துவது. மண்டலமாவது - பாம்பு மண்டலமிடுவதுபோலச் சேனையை வளைவாகநிறுத்துவது. அசங்கதம் - அஸம்ஹதம் என்ற வடசொல்லின் திரிபு: அஸம்ஹதமாவது - சேனையை வேறுவேறாக நிறுத்துவது. போகமாவது - சதுரங்கசேனையை ஒன்றன் பின் ஒன்றாக நிறுத்துவது. இந்நான்கும், ப்ரக்ருதிவ்யூஹபேத மெனப்படும். தண்டவிரி - தண்டமென்னும் வகுப்பின் விஸ்தாரம்; தண்டவிரி பதினேழாவன - பிரதரம், திருடகம், சியாவஸ்தம், குக்ஷி, பிரதிஷ்டம், சுப்பிரதிஷ்டம், சியேநம், விசயம், சஞ்சயம், விசாலம், நிசயம், சூசீ, ஸ்தூணை, கர்ணம், சமூமுகம், ரதாஸ்யம், வலயம் என இவை. மண்டலவிரி - மண்டலமென்னும் வகுப்பின் விஸ்தாரம்; மண்டலவிரி இரண்டாவன - ஸர்வதோபத்திரம், துர்ஜயம் என இவை. அசங்கதவிரி - அசங்கதமென்னும்வகுப்பின் விஸ்தாரம்; அசங்கதவிரி

ஆரூவன - அர்த்தசந்திரகம், சிருங்காடம், வஜ்ரம், கர்க்கடசிருங்கரி, காகபாதி, கோதிகா என இவை. போகவிரி - போக மென்னும் வகுப்பின் விஸ்தாரம்; போகவிரி ஐந்தாவன - கோமூத்ரிகை, அபி சாரி, சகடம், மகரம், பதந்தகம் என இவை. இவற்றை, காமந்தகம், சுக்ர நீதி முதலிய வடநூல்களிற் காணலாம். தன்மேல் எதிர்த்துவருகின்ற பகை வர்சேனையைத்தடுத்தற்கு உரியபடி அணிவகுத்துக்கொண்டு சென்று பொருது வெல்லுதல் சேனைக்கு இலக்கண மென்க; நாற்புறத்தும் அச்சமுண் டாம்பொழுது தண்டவியூகத்தாலும், பின்னேபயமுண்டாம்பொழுது சகட வியூகத்தாலும், இருபக்கத்தும் பயமுண்டாம்பொழுது வாராகம் காருடம் என் னும் வியூகங்களாலும், முன்னும்பின்னும்பயமுண்டாம்பொழுது மகரவியூகத் தாலும், முன்னேபயமுண்டாம்பொழுது சூசிகாவியூகத்தாலும் எதிர்க்க வேண்டு மென்று மநுதர்மசாஸ்திரவியாக்கியானம் கூறுகின்றது.

இனி, 'தார்தாங்கிச் செல்வது' என்பதற்கு - பகைவரோடு போர்செய்த ற்கு வஞ்சிப்பூமாலையைச் சூடிக்கொண்டு செல்வ தென்று உரைத்தலு மொன்று; "வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம், வட்கார்மேற் செல்வது வஞ்சியாம் - உட்காது, எதிரூன்றல் காஞ்சி எயில்காத்தல் நொச்சி, அது வளைத்த லாகு முழிஞை-யதிரப், பொருவது தும்பையாம்

•

## எள - ஆம் அதிகாரம்.—படைமாட்சி

ிடoகூ கோர், செருவென்றது

வாகையாம்'' என்றதனால், இன்ன இன்னசமயத்தில் இன்ன இன்ன பூமாலை வீரர்க்கு உரிய தென்பதை அறிக.
'தார்தாங்கிச் செல்வது தானை' என்பதை,
வினைமுற்றுப்பெயர் வினைமுதற்பொருள்படு தற்கு
உதாரணங்காட்டினர்
இலக்கணக்கொத்துடையார். 'தார்தாங்கிச் செல் வது தானை
என்பது - அஃறிணையிற்கருத்தாவன க்ருதந்தமென்னும்
வினை முற்றுப்பெயர்' என்பது, பிரயோகவிவேகவுரை.

(எ)

எகூ௫. அடற்றகையு மாற்றலு
மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

(இ - ள்.) தானை—, அடல் தகை உம் -
(பகைமேல் தான்சென்று)
அடுந் தறுகண்மையும், ஆற்றல்
ஆற்றலும், இல் எனின் உம்

உம் - (அது தன்மேல்வந்தாற் பொறுக்கும்) - இல்லையாயினும், படைத் தகையால் - தன் தோற்றப்பொலிவானே, பாடு பெறும் - பெருமையெய்தும்; (எ - று.)

'இல்லெனினும்' எனவே, அவற்றது இன்றியமையாமை பெறப்பட்டது. 'படைத்தகை' என்றது, ஒருபெயர்மாத்திரமாய் நின்றது. தோற்றப்பொலிவாவது - அலங்கரிக்கப்பட்ட தேர் யானை குதிரைகளுடனும், பதாகை கொடி குடை பல்லியம் காகளம் முதலியவற்றுடனும் அணிந்துதோன்றும் அழகு. பாடு - கண்ட அளவிலே பகைவர் அஞ்சும் பெருமை.

(கு-ரை.) அடும்-கொல்லும், அழிக்கும். அது-பகைவர்சேனை. பொறுக்கும்-விலக்கும்; அல்லது, சகிக்கும். தோற்றப்பொலிவு-காட்சியின் அழகு. பெருமை எய்தும்-பெருமையை யடையும். 'இல்லெனினும்' எனவே அவற்றது இன்றியமையாமை பெறப்பட்டது - அடல்தகையும் ஆற்றலும் இல்லையாயினும் என்று இழிவுசிறப்பும்மை கொடுத்துக்கூறியதனால் அவ்விரண்டுகுணங்களும் அவசியம் வேண்டுமென்பது விளக்குகின்றதென்க. 'படைத் தகை' என்ற தொடர்மொழி - ஆறும்வேற்றுமைத்தொகையாய், சேனையின் தகுதியென்று பொருள்படுவது; அது-இங்கே, முன்னே 'தானை'என வந்ததனால், தகுதியென்றமாத்திரமாகி, தனது தோற்றப்பொலிவெனப் பொருள்பட்டது பற்றி, 'படைத்தகை யென்றது ஒருபெயர்மாத்திரமாய்நின்றது' என்றார். பதாகை - பெருங்கொடி. பல் இயம் - பலவகைவாத்தியங்கள்; கொட்டுவன, ஊதுவன முதலிய. காகளம் - எக்காள மென்னும் ஊதுகுழல்; சிறப்புப்பற்றி, காகளத்தைத் தனியே

யெடுத்துக்கூறினர்: "காகளமும் பல்லியமும் கனைகடலின் மேன்முழங்க" எனக் கம்பர் கூறுதலுங் காண்க. அணிந்து - அணிவகுக்கப் பெற்று. கண்ட அளவிலே - பார்த்தமாத்திரத்திலே. அடல் தகை - அடு தற்குரிய தகைமை யென நான்கனுருபும்பயனுமுடன் தொக்கதொகையாக விரிக்க. அடல் - தொழிற்பெயர். உம்மைகள் மூன்றனுள், பின்னது - இழிவுசிறப்புப்பொருளது; மற்றவை - எண்ணுப்பொருளன. சேனை பல பராக்கிரமங்களிற் குறைவுடையதாயினும், கம்பீரமான காட்சியை யுடைய தாயிருப்பின், அதனைக்கண்டு பகைவர் அஞ்சுவரென்பது, இக்குறளின் கருத்து.

(அ)



எகஅ. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

(இ - ள்.) சிறுமை உம் - (தான் தேய்ந்து) சிறிதாகலும்; செல்லா துனி உம் - (மனத்தினின்று) நீங்காத வெறுப்பும், வறுமை உம் - நல்குரவும், இல் ஆயின் - (தனக்கு) இல்லையாயின், படை வெல்லும் - படை (பகையை)

வெல்லும்; (எ - று.)

விட்டுப்போதலும், நல்கூர்தலும் - அரசன் பொருள்கொடாமையான் வருவன. செல்லாத்துனியாவது - மகளிரைவெளவல், இளிவரவாயின செய்தல் முதலியவற்றான் வருவது. இவை உள்வழி அவன்மாட்டு அன்பு இன்றி உற்றுப்பொராமையின், 'இல்லாயின் வெல்லும்' என்றார்.

(கு - ரை.) தேய்ந்து - குறைந்து. நல்குரவு - வறுமை; அனுபவிக்கப் படும்பொருள்களில்லாமை. விட்டுப்போதல் - அரசனை நீங்கிச் செல்லுதல்.

நல்கூர்தலென்றவிடத்து 'நின்றது நல்கூர்தல்' என்று சிலபிரதிகளிற் காணப் படுகின்றது; அப்பொழுது, 'நின்றது' என்பதற்கு - விட்டுப்போகாமல் நின்ற சேனையென்று பொருள். நல்கூர்தல் - வறுமைப்படுதல். மகளிரைவெள வல் - பிறர்க்குரிய ஸ்திரீகளை அரசன் அபகரித்தல். இளிவரவு - இழிவு. இளிவரவாயின செய்தல் - அவமானத்தையுண்டாக்குந்தொழில்களைச் செய் தல். 'முதலிய' என்றதனால், ஆறிலொன்றற்குமேலிறைவாங்குதல், தண் டிக்கவேண்டியவர்களைத் தண்டியாமை,

தண்டிக்கத்தகாதவர்களைத் தண்டித்
தல், பலவகைக்கடுந்தீர்வைவிதித்தல்
முதலியனகொள்ளப்படும். இவை உள்
வழி - சிறுமைமுதலியன உண்டானபொழுது.
அவன்மாட்டு அன்பு இன்றி-
அவ்வரசனிடத்து அன்பில்லாமையால்.
உற்றுப்பொராமையின் - மனம்
பொருந்திப் போர்செய்யாமையால்.

(கூ)

எஎ0. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந்
தானை
தலைமக்க ளில்வழி யில்.

(இ - ள்.) நிலை மக்கள்- (போரின்கண்)
நிலையுடைய வீரரை, சால
உடைத்து எனின் உம் - மிக உடைத்தேயாயினும்,
தலைமக்கள் இல் வழி -
(தனக்குத்) தலைவராகிய வீரர் இல்லாதவழி, தானை இல்
- தானைநில்லாது.
படைத்தலைவர் நிலையுடையரன்றிப்
போவாராயின், கண்போர் இல்
லெனப் பொராது தானும் போம் என்பார்,
'தலைமக்களில்வழியில்' என்றார்.

* இவை மூன்றுபாட்டானும், முறையே,
படைத்தகையின்மையானும்,

அரசன்கொடைத்தாழ்வுகளானும், தலைவரின்மையானும்

தாழ்வு கூறப்பட்

டது.

(கு - ரை.) சிறந்த வீரர்கள் எவ்வளவுபேர்

இருந்தாலும்,சேனைத்தலைவ

ரில்லாவிடின் சேனை நிலைத்திராது என்பது, இக்குறளின்கருத்து. நிலையு

* பி - ம்: இவைமூன்றயாட்டானும், முறையே,

படைத்தகையானும்

அரசன்கொடைதழுவல்களானும், தலைவரானும் தா

•

ழ்வின்மை கூறப்பட்டது

எஅ - ஆம்

அதிகாரம்.—படைச்செருக்கு ௫௧௧

டைய - பிற்படாது முன்நிற்குந்தன்மையுள்ள. மிக உடைத்து - மிகுதியாக வுடையது. இல்லாதவழி - இல்லாமற்போனால். படைத்தலைவர் - சேனாபதிகள். நிலையுடையரன்றிப் போதல் - உறுதிநிலையில்லாம லொழிதல். காண்போர் இல் என - தான் போர்செய்தலைக் குறிக்கொண்டுகாண்பவர் எவருமில்லை யென்று எண்ணி. பொராது - போர்செய்யாமல். படைத்தகை யின்மை - கம்பீரமானதோற்றமில்லாமை. அரசன்

கொடைத் தாழ்வுகள் -

அரசன் பொருள்கொடுத்தற்குறைவும், அவன்செய்யும்

அவமதிப்பும். (௧௦)

எஅ - ஆம்

## அதிகாரம்.—படைச்செருக்கு.

அஃதாவது - அப்படையது மறமிகுதி. அதிகார ஞனே விளங்கும்.

முறைமையும் இத

(கு - ரை.) மறமிகுதி-மிக்கவீரத்தனம். சேனையின்

நன்மையைக் கூறிய
பின்பு அதன்செருக்கைக் கூறுத லாகிய

அதிகாரமுறைமையின் காரணம் •
வெளிப்படையாக விளங்குதலால்,

'அதிகாரமுறைமையும் இதனுனே விளங்
கும்' என்ருர். படைமாட்சி, படைச்செருக்கு
தொகைகள்.

என்பன-ஆரும்வேற்றுமைத்

எஎக. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர்

பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

(இ - ள்.) தெவ்விர் - பகைவீர்! என் ஐ முன்

நின் று - (இன் று இங்கு)
என் தலைவனெதிர் (போரேற்று) நின் று, (அவன்வேல் வாய் வீழ்ந்து), கல் நின்றவர் பலர் - (பின்) கல்லின் கண்ணே நின்ற வீரர் பலர்; (நீவிர் அதன் கண் இன்றி நும்உடற்கண் நிற்றல் வேண்டின்), என் ஐமுன் நில்லன்மின் -
என் தலைவனெதிர் (போரேற்று) நிற்றலையொழிமின்;

(எ - று.)

'என்ஐ' எனத் தன்ஞெடு தொடர்பு
படுத்துக்கூறினமையின், அவன்
வேல்வாய்வீழ்தல் பெற்ரும். கல் - நடுகல். "நம்பன்
சிலைவாய் நடக்கும்
கணை மிச்சி லல்லா, வம்பொன் முடிப்பூ ணரசும்
மிலை" எனப் பதுமுகன்
கூறிஞற்போல, ஒருவீரன் தன்மறம்
அரசன்மேல்வைத்துக் கூறியவாறு.
இப்பாட்டு - நெடுமொழிவஞ்சி.

(கு - ரை.) பகைவர்களே! எனது
தலைவனெதிரிற் போரில்நின்று
வெல்ல மாட்டாமற் பலவீரர் இறந்தனர்; ஆதலால்,
நீங்கள் உயிரோடிருக்க
விரும்புவீராயின், எனது தலைவனெதிரிற்
போர்க்குநில்லாது நீங்கிச் செல்
லுங்க ளென்றன னென்று ஒருவீரன்
தனதுவீரத்தைத் தனது தலைவ
னுடையதாகக்கூறியது, இது. பகைவீர் - பகைவர்களே!
இன்று இங்கு என்
தலைவன்எதிர் போரேற்று நின்று - இன்றைக்கு
இவ்விடத்திலே எனது
தலைவனுடைய முன்னிலையில் எதிர்த்துப்
போர்செய்துநின்று. அவன் வேல்

வாய் வீழ்ந்து - அவனதுவேலாயுதம்பட்டு அதனால்
இறந்துகீழ்விழுந்து.

பின் - பின்பு. கல்லின்கண்ணே நின்ற - கல்லிலே
பெயர்பொறிக்கப்பட்டு

நின்ற, கல்லில் தெய்வவடிவமாய் ஆவேசித்து நின்ற.
'பலர்'என்பதன்பின்

• ௩௯௨

திருக்குறள்

'ஆதலால்' என வருவிக்க. அதன்கண்
இன்றி-அக்கல்லிலே நிற்ற லில்லாமல்.

நும் உடற்கண் நிற்றல் வேண்டின் - உங்களுடைய
உடம்பில் நிற்றலை விரும்பு

வீரானால்: உயிர்வாழ்ந்திருக்கவேண்டு மென்றால்.
தொடர்பு படுத்து - சம்

பந்தப்படுத்தி. சேனையின் வீரத்தின் மிகுதியைக்
கூறுகின்ற இவ்வதிகாரத்

தினுட்பட்ட இப்பாட்டு, மிக்க வீரமுடையா
னொருபோர்வீரனது வார்த்தை

யாகக் கூறிய தாதலால், இதில்
அரசனதுபராக்கிரமத்தைக் கூறுகிற மூல

மாகத் தனதுவீரத்தை வெளியிடுகின்றவன்
அவ்வரசனைத் தன்னோடுசம்பந்

தப்படுத்தி எனதுதலைவனென்று கூறியது, அவனது
ஆயுதம்பட்டுப் பகை

வர் அழிந்தன ரென்று சூசிப்பித்தற்குக் காரணமாகு மென்றார். ஆயுதங்க

ளுள் வேல் சிறத்தலால், இங்கே, வேலெனக் கொள்ளப்பட்ட தென்ப;

("காத்தற்றொழிலன்றி அழித்தற்றொழில் பூண்ட முக்கட்கடவுட்குச் சூல

வேல் படை யாதலானும், முருகற்கு வேல் படையாதலானும், சான்றோர் • வேற்படையே சிறப்பப் பெரும்பான்மை கூறலானும், வேலைக் கூறி, ஏனைப்

படைகளெல்லாம் மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை

யும்முட்டின்றுமுடித்த லென்னு முத்தியாற் பெறவைத்தார்,' 'வாளினை

வாகைத்திணையிற்கூறுது "பெரும்பகை தாங்கும் வேலினனும்" என்று

வேலிற்கே வாகைகூறியது காவற்றொழில்பூண்ட மாயோனைம்படையும்

போலாது அழித்தற்றொழிலோர்க்கே யுரித்தாய் முக்கட்கடவுளும் முருகனுங்

கூற்றும்ஏந்தி வெற்றிபெறுதற்குச் சிறந்த தென்பதுபற்றி யெனப் புறத்

திணையியலுட் கூறினமையால், ஈண்டும் வேலினை வியந்து மண்ணுநீராட்

டினவெற்றியைக் கண்டோர் புகழ்தலின், புகழ்வேல் என்றார்' என்ற

உரைவாக்கியங்கள் அறியத்தக்கன.)

'நடுகல் - கல்லினை நடுதலும், அக்கல்லின்கண் மறவனைநடுதலு மென
இருவகையாம்; (உதாரணம்) "சீர்த்த துகளிற்றாய்த் தெய்வச் சிறப்பெய்த,
நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப் - போர்க்களத்து, மன்னட்ட வென்றி மற
வோன் பெயர்பொறித்துக், கல்நட்டார் கல்சூழ் கடத்து"—இது, கல்நாட்
டியது;' "'கோள்வாய்த்த சீயம்போற்கொற்றவர்தம் மாவெறிந்து,வாள்வாய்
த்து வீழ்ந்த மறவேலோய்-நாள்வாய்த்,திடைகொளலின்றி யெழுத்துடைக்
கல்வாய், மடைகொளல் வேண்டு மகிழ்ந்து"—இது, மறவனை நாட்டியது'
என்ற தொல். புறத். ரு-உரையால், நடுகல்லினிலக்கண மறிக. இது,பொது
வியலென்னும் புறத்திணைத்துறைகளுள் ஒன்றாம்; இதற்கு, 'கல்நடுதல்'
என்றும் பெயர் வழங்கும். 'கல்நடுதல்:—"அவன்பெயர் கன்மிசைப் பொறித்
துக், கவின்பெறக்
கன்னாட்டின்று."வரலாறு—"மாலைதுயல மணியெறிந்து

மட்டுகுத்துப், பீலி யணிந்து பெயர் பொறித்து -
வேலமரு, ளாண்டக நின்ற
வமர்வெய்யோற் காகென்று, காண்டக நாட்டினூர்
கல்''என்ற புறப்பொருள்
வெண்பாமாலையும் அறியத்தக்கது. பராக்கிரமத்துடனே
பொருது பட்டபோர்
வீரனது ஞாபகசின்னமாகக் கல்நடுதல், மரபு.
பின்னிடாமற் போர்செய்து இறந்து வீரசுவர்க்கமடைந்த
வீரனைத் தெய்வமாகப்பாவித்து, அவன்பெயரை
யும்பெருமையையும் ஒருகல்லில்எழுதி, அக்கல்லை நட்டு,

•

அதனிடத்து அவனை

எ.வு - ஆம் அதிகாரம்.—படைச்செருக்கு

௨௧௩ வழிபடுவர். அக்கல் வீரக்கல்லென்றும்,

அத்தெய்வம் வீரனென்றும் வழங்கப் படும். கல்கெழுசுரத்திற்
கல்லைக் கண்டு பட்டவனுக்குத் தக்கது இது வென்று
துதித்துக் கழல்வீரர் அக்கல்லினைக் கொண்டுவந்து
நீர்ப்படுத்துத் தூய்மை செய்தலும், உணவும் மலரும் மதுவும்
முதலியன கொடுத்துப் பீலிமாலையும்
மலர்மாலையும் நாற்றிப் பல்லியம் இயம்ப விழாச்செய்து
அக்கல்லில் வீர னுடைய பெயரும்பெருமையும் எழுதி
நடுதலும், அங்ஙனம் நாட்டிய கல்லை
அவனுருவமாகக்கொண்டு அதற்குக் கோயிலும் மதிலும்

வாயிலும் ஏனைச்
சிறப்புக்களும் படைத்து 'இக்கல் நெடிதுவாழ்க: இதன்கண் அவ்வீரன் நின்று நிலவுக'என வாழ்த்துதலும் முதலிய இயல்புகளைப் புறப்பொருளிலக்கிய விலக்கணங்களிற் பரக்கக்காணலாம். இங்ஙனம் கல்நாட்டுதல், சேனையிற் புறங்கொடாது முன்னின்றுபொருது பகைவரால் இறந்து சுவர்க்கம்பெற்ற வீரனுக்குப் பின்பு அரசன் நடத்துஞ் சிறப்பாம்.

•

"நம்பன்சிலைவாய்" என்று தொடங்கிய மேற்கோள் - சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௩௧௭ - இல் உள்ளது. இம்மேற்கோளுக்குப் பொருள்:—நம்பன் - சீவகனது, சிலைவாய் - வில்லினின்று, நடக்கும் - பிர யோகிக்கப்பட்டுவருகின்ற, கணை - அம்புகளின், மிச்சில் அல்லால் - எச்சிலல்லாமல், அம் பொன் முடி பூண் அரசும் இலை - அழகிய பொன்மயமான கிரீடத்தையும் மற்றையாபரணங்களையு முடைய அரசரு மெவருமில்லையென்க. கணை மிச்சில் - அம்புகளால் முன்னமே வாய்வைக்கப்பட்ட உச்சிட்டமென்றபடி. 'அரசும்' என்ற உம்மை - முன்னிரண்டடிகளிற் குறிக்கப்பட்ட யானை தேர் குதிரை காலா ளென்னுஞ் சதுரங்கசேனைத்தொகுதியைத் தழுவும். காந்தருவதத்தை சீவகனுக்குமணமாலைசூட்டியதுகண்டு பொறாமைகொண்ட கட்டியங்காரனால் தூண்டப்பட்ட அரசர்களுக்கும், தோழரோடுகூடிய சீவகனுக்கும் நடந்தபோரில், சீவகன்தோழர்நால்வரில் ஒருவனான பதுமுகனென்பவன், பகைவர்மேலும் அவர்சேனைகளின்மேலும் பலஅம்புகளைத் தொடுக்கின்றபொழுது, முன்னமே அவ்வெதிரிகளின்மேற் சீவகனம்புகள்பல தைத்துக்கிடப்பதைக் கண்டு, சீவகனம்புக்கு இலக்காகாதது இல்லையென்று வியந்து, 'யாம் இனிப் போர்செய்யவேண்டுவது என்?' என்று பகைவரை நோக்கிப் பரிகசித்துக் கூறியது, இது. இங்ஙனம் தனது தலைவனான சீவகனது பராக்கிரமத்தை யெடுத்துக்கூறியதுமூலமாகத் தனதுவீரத்தையும் புலப்படுத்தின னென்க.

நெடுமொழிவஞ்சியென்பது - வஞ்சியென்னும் புறப்பொருள் திணையின்

துறைகளுள் ஒன்று: அதாவது - ஒருவீரன் தனதுபகைவர்களுடைய சேனையைக் கிட்டித் தன்னுடைய ஆண்மைத்தன்மையை உயர்த்திச் சொல்வது; "ஒன்னுதார் படைகெழுமித், தன்னுண்மை யெடுத்துரைத் தன்று" என்ற கொளுவையும், "இன்ன ரெனவேண்டா வென்னோ டெதிர் ஞ்றி, முன்னர் வருக முரணகலு—மன்னர், பருந்தார் படையமருட் பல்லார் புகழ, விருந்தா யடைகுறுவார் விண்" என்ற வெண்பாமாலையையும் அறிக,
40



ஐஎன்பது - தலைவனுதலை "ஐ அழகு இடைச்சொல்கோழை இருமல்சாமி" என்ற நிகண்டினாலும் அறிக.

அரசனோடு
-(க)

எஎ௨. கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(இ - ள்.) கானம் - கானத்தின்கணோடும், முயல் - முயலை, எய்த - (பிழையாமல்)எய்த, அம்பினில் - அம்பை யேந்தலினும்,—யானை பிழைத்த- (வெள்ளிடைநின்ற) யானையை யெறிந்துபிழைத்த, வேல் - வேலை, ஏந்தல் - ஏந்துதல், இனிது - நன்று; (எ - று.)

'கானமுயல்' என்றதனால் 'வெள்ளிடைநின்ற' என்பதும், 'பிழைத்த' என்றதனால் 'பிழையாமல்' எ ன்பதும், முயற்குத்தக 'எய்த' என்றதனால்

யானைக்குத்தக எறிதலும் வருவிக்கப்பட்டன இது,
*மாற்றரசன்படையொடு பொருதானோர் வீரன் அது புறங்கொடுத்ததாக நாணிப் பின் அவன்றன் மேற்செல்ல லுற்றானது கூற்று.

(கு - ரை.) கானத்தின்கண் - காட்டில். பிழையாமல் - தவறாமல். ஏந்தலினும் - ஏந்துதலைக்காட்டிலும். வெள்ளிடை-காடல்லாதவெளிநிலத்தில். பிழைத்த - தவறிய. தக - தகுதியாக; அம்பிற்குத்தக 'எய்த' என்றதற்கு ஏற்ப, வேலிற்குத்தக 'எறிந்து' என்பது வருவிக்கப்பட்டதென்று அறிக. யானையையெதிர்த்துப் போர்செய்வார் பெரும்பாலும் வேலினாற் பொரு மியல்பு மரபாதலால், 'யானைபிழைத்தவேல்' என்றார்; இத்தன்மையை "விழித்து மேற்சென்றவேழம் வேலினால் விலக்கி நிற்பார்", "விரும்புவார் வேழ வேற்போர்" என்ற சிந்தாமணி வாக்கியங்களாலும், "ஒன்றாயினும் பலவாயினுமோரோச்சினு ளொரிய, வென்றாயின மதவேழமு மூளவோவென வினவிப், பொன்றாழ்வரைப் புலிப்போத்தெனப் புனைதார்மிளி ரார்ப்பச், சென்றான் பல களிறுயிர மிரியச் சினவேலோன்" என்ற சிந்தாமணிச்செய்யுளி னுரையில் நச்சினார்க்கினியர் 'அயிலுழவன் வேலோன் என்றது, யானையிலிருந்து பொருமிடத்து வேல் வேண்டுமென்று கருதி' என்றதுகொண்டும் அறிக. முயல் மிகவிரைந்து ஓடிப் புதர்களினுள் நுழைந்து செல்லுந் தன்மைய தாதலால், அதன்மேல் அம்பெய்தல் தகுதியாம். விருட்சங்கள் புதர்கள் சூழ்ந்தஇடத்தில் அம்புகளாற் போர்செய்யவேண்டுமென்பது, மநு, எ-கஅஉ. இது - இப்பாட்டு. மாற்றரசன்படையொடுபொருதா னோர்வீரன் அது புறங்கொடுத்ததாக நாணிப் பின் அவன்தன்மேற் செல்லலுற்றானது கூற்று - ஒரு வீரன் பகையரசனது சேனையோடு போர்செய்துகொண்டிருக்கையில் அச்சேனை முன்நிற்கும்வலியிலதாய் முதுகுகொடுக்க அதுகண்டு அங்ஙனந் தோற்ற அதனோடு மேலும் போர்செய்தற்கு வெட்கிப் பின்பு அவ்வரசன் மேல் எதிர்த்துச்செல்லத்தொடங்கிய அவ்வீரனது வார்த்தை.

இக்குறளிற் கூறிய உபமானவாக்கியம், வலியிலாதாரை எதிர்த்துக் கொன்றுதீர்த்தலைக்காட்டிலும் வலியுடையானை வெல்லமுடியாவிடினும் எதி

* பி - ம்: வேற்றரசன்,

ர்த்தல்மாத்திரமே சிறப்பா மென்ற உபமேயத்தை விளக்கியதனால், பிறிது மொழிதல் என்னும் அலங்காரம்; "விசையின் நரிமா வுளங்கிழித்த வம்பினிற் றீதோ, அரிமாப் பிழைப்பெய்த கோல்" என்ற நாலடியாரோடு இத்திருக்குறளை ஒப்பிடுக. சந்தர்ப்பத்தால், முயல்பல வென்றும், யானை ஒன்று என் றும் கொள்ளலுமாம்.

தன்முன் வலியிழந்தாரை அழித்திடத் துணியாமல் வலியிழவாதவன்மேற் செல்பவன்வார்த்தை யாதலால், இப்பாட்டு, தழிஞ்சி யென்னும் புறப்பொருள்துறையின்பாற் படும்; இதனை, அடுத்தகுறளின் உரையினால் அறிக.

யானைபிழைத்த - யானையினின் றுதவறிய என ஐந்தாம் வேற்றுமைத்தொகை.

(உ)
எஎ௬.

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

(இ - ள்.) தறுகண் - (பகைவர்மேற் கண்ணோடாது செய்யும்)மறத்தை, பேர் ஆண்மை என்ப - (நூலோர்) மிக்க

ஆண் தன்மையென்று சொல்லுவர்; ஒன்று உற்றக்கால் ஊர் ஆண்மை - (அவர்க்கு) ஒருதாழ்வுவந்ததாயின் (கண்ணோடி அது தீர்த்துக்கோடற்பொருட்டு) ஊராண்மைசெய்தலை, அதன் எஃகு (என்ப) - *(நூலோர்) அதற்குக்கூர்மை யென்றுசொல்லுவர்; (எ - று.)

'என்ப' என்பது, பின்னும் இயைந்தது. ஊராண்மை - உபகாரியாந் தன்மை; அஃதாவது - இலங்கையர்வேந்தன் போரிடைத் தன்தானைமுழு தும்படத் தமியனு யகப்பட்டானது நிலைமை நோக்கி அயோத்தியரிறை மேற்செல்லாது 'இன்றுபோய் நாளை நின்தானையோடு வா' என விட்டாற் போல்வது.

இவையிரண்டுபாட்டும் - தழிஞ்சி.

(கு - ரை.) தாட்சிணியமின்றிப் பகைவரையழித்தல் தகுதியாயினும் அப் பகைவர்க்குப் போரில் துன்பம்நேர்ந்த இடத்து அவரை அழித்திடாமல் அன்போடுவிடுதல், வீரனது மிக்க பராக்கிரமத்தை விளக்கு மென்பது, இக் குறளின் கருத்து.

பகைவர்மேல் - பகைவரிடத்து. கண்ணோடாது - தாட்சிணியங்கொள் ளாமல். மறத்தை - வீரத்தை. அவர்க்கு - அப்பகைவர்க்கு. அது தீர்த்துக் கோடற்பொருட்டு - அத்தாழ்வை அப்பகைவர்கள் தீர்த்துக்கொள்ளுதற்காக. ஊராண்மை-உதவி. அதற்கு - அந்த மிக்க ஆண்தன்மைக்கு. என்ப என்பது பின்னும் இயைந்தது-'ஒன்று உற்றக்கால் ஊராண்மை மற்றதன் எஃகுஎன்ப' என்று

இரண்டாவதுவாக்கியத்தின் இறுதியிலும் 'என்ப' என்பது எடுத்துக் கூட்டப்பட்டது. உபகாரி - உதவிசெய்பவன். இலங்கையர் வேந்தன்-லங்கா புரியிலுள்ளார்க்கு அரசன்; இராவணன். பட - அழிய. தமியன் - தனிப் பட்டவன். அயோத்தியர் இறை - அயோத்தியாநகரத்திலுள்ளாரது அரசன்; இராமபிரான். மேற்செல்லாது - பகைவனுகிய அவன் சோர்ந்த அச்சமயம்

நோக்கிப் பின்னும் அவன்மேல் எதிர்த்துச்சென்று அவனை யழித்திடாமல்.

* நூலோர் என்பது சிலபிரதிகளிலில்லை.



இலங்கையில்நடந்த ராமராவணயுத்தத்தில் முதல்நாட்போரிலே இராமனம்புகளால் இராவணன் கிரீடங்களையும் ஆயுதங்களையும் சேனைகளையும் இழந்து சோர்ந்து வெள்கி முகங்கறுத்துத் தலைகுனிந்து நின்ற சமயத்தில், இராமபிரான், இப்படியாவுமிழந்திருக்கின்றவனை இப்பொழுது கொல்லலாகாதென்று திருவுள்ளம்பற்றி, அவனைநோக்கி 'தனியனுய் வெறுங்கையுடனிருக்கின்ற உன்னை இப்பொழுது நான் கொல்வேனல்லேன்; நீ இன்று உயிர்தப்பிச்சென்று சேனைகளையும் ஆயுதங்களையும் சித்தஞ்செய்துகொண்டு நாளைக்குப் போர்க்குப் பிரியமிருந்தால் வா' என்று பலவாறு இரக்கத்தோடு சொல்லி அனுப்பியருளினனென்பது, பிரசித்தம்.

இராவணன்நிலைமையை, "அறங்கடந்தவர்

செயலிதென்றலகெலாமார்ப்ப, நிறங்கரிந்து கானிலம் விரல்கிளைத்திடகின்றான்.
இறங்குகண்ணினனெல்லழிமுகத்தினன் றலையன்,
வெறுங்கைநாற்றினன் விழுதுடையாலன்னமெய்யன்"
என்றதனால் அறிக. அங்கனம் வெறுங்கைநாற்றியவனை இராமன் அருள்கூர்ந்து 'இன்றுபோய் நாளைவா' என்றதை "ஆளையாவுனக்கமைந்தன மாருதமறைந்த, பூளையா யின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு, நாளை வா வென நல்கினன் நாகி ளங்கமுகின், வாளைதாவுறு கோசல நாடுடை வள்ளல்" என்று கம்பராமா யணத்திலும்,
"எட்டுமத, மாவென்றுவந்தான் வர நாளைவா வின்று,
போ வென் றுவந்தான்" எனத் திருவேங்கடமாலையிலும் வருவனவற்றாலும் அறியலாம். பாரதயுத்தத்திற் பதினாறாநாட்போரில் அருச்சுனன் கர்ணனை வென்று கொல்லாமல் உயிரோடுவிட்டதும் இத்திறத்ததே; அத்தன்மையை "அன்று போர்புரி
சேனையின்பதியானவீரனை நீ, இன்றுபோ யினி நாளைவா வென இனிதியம்பினனால், வென்றிகூர்வரிவின்மையா லடல்வெவ்வரக்கரை முன், கொன்ற காளையை யொத்த பேரிசைகொண்ட வாண்மையினான்" என்ற வில்லிபுத்தூரார்பாரதத்தால் உணர்க. தழிஞ்சி யென்பது - வஞ்சி யென்னும் புறப்பொருள் திணைக்கு உரிய துறைகளில் ஒன்று; அதாவது - பகைவரைத்தழுவுதல்; என்றது, ஒருவீரன் தன்எதிரில் தோற்றவர்மேல் ஆயுதஞ்செலுத்தாத மிக்கசௌரியத்தைக் கூறுதலாம்.

இதன் தன்மை, ஏகூகூ ஆர் திருக்குறளின் குறிப்பிலும் கூறப்பட்டது. "அழியுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக், கழிதறுகண்மைத் தழிஞ்சி" என்ற இலக்கணவிளக்க மும் காண்க. 'தழிச்சுத லெனினும், தழுவுதலெனினும், தழிஞ்சி யெனினும் ஒக்கும்; தழிச்சுதல், தழிஞ்சியாயிற்று: "பொருகணை தழிஞ்சிய புண்டீர் மார்பின்" என்றாற்போல' என்ற தொல்காப்பியவுரையையும், 'தழிஞ்சி - தழுவல்' என்ற இலக்கணவிளக்கவுரையையுங் காண்க. இத்துறைக்கு இலக்கணங்கூறலில் தொல்காப்பிய வுரைகாரர் கருத்து வேறுபடும்; அதனை, தொல்காப்பியத்தில் "அழிபடைகட்டோர் தழிஞ்சி" என்பதற்கு - 'அங்ஙனம் வென்றுந் தோற்றும் மீண்ட வேந்தர், தம்படையாளர் முன்பு போர்செய்துழிக் கணையும் வேலும் முதலிய படைகளைத் தம்மிடத்தே தடுத்துக்கொண்டு அழிந்தவர்களைத் தாம்சென்றும் பொருள்கொடுத்தும் வினவியுந் தழுவிக்கோடல்' என்று பதவுரையும்,

'இத்தழிஞ்சியை அழியுநர்புறக்

ஏஅ - ஆம் அதிகாரம்.— படைச்செருக்கு ஙகள

கொடையயில்வாளோச்சாமை யெனின், அது ஒருவன்தாங்கிய பெருமைப்

பாற் படும்' என்று விசேடவுரையுங் கூறியவாறுகொண்டு உணர்க.

பேராண்மை - சிறப்பாகிய ஆண்தகைமை யெனப் பண்புத்தொகை.

ஊராண்மை - ஊரையாளுந்தன்மை; இது, பலர்க்கு உதவும் இயல்புக்கு வழங்கும். மற்று - அசை; வினைமாற்றுமாம். ஊராண்மையைக் கூர்மை யென்றதற்கு ஏற்ப, தறுகண்மையை ஆயுதமென்றது, ஏகதேசவுருவக வணியின்பாற் படும். இங்கே, கூர்மையென்றது, அதன் சிறப்பை. (ந)

எஎ௪. கைவேல் களிற்றொடு போக்கி
வருபவன் மெய்வேல் பறியா நகும்.

(இ-ள்.) கை வேல்-(தன்)கைப்படையாய வேலை, களிற்றொடு போக்கி-(தன்மேல் வந்த) களிற்றோடு போக்கி, வருபவன் - வருகின்றகளிற்றுக்கு வேல்நாடித் திரிவான்,—மெய் வேல் பறியா - (தன்) மார்பின்கண்நின்ற வேலைக்கண்டு பறித்து, நகும் - மகிழும்; (எ - று.)

களிற்றொடு போக்கல் - களிற்றினது உயிரைக் கொடுபோமாறுவிடுதல். மகிழ்ச்சி, தேடியது எய்தலான். இதனுள், களிற்றையல்லது எறியானென்பதூஉம், சினமிகுதியான் வேல்

இடைபோழ்ந்தது அறிந்ில னென்பதூஉம்,
பின்னும் போர்மேல்விருப்பினனென்பதூஉம்
பெறப்பட்டன. நூழிலாட்டு.
(கு - ரை.) சிறந்தவீரனுகவுள்ளான்,
பகைவராற்புண்படுதற்கு அஞ்சா
ஞதலால், கையில்ஆயுதமில்லாதபொழுது, பகைவரால்
தன் உடம்பிற் செலு
த்தப்பட்டுத் தைத்துள்ள ஆயுதத்தையே பறித்தெடுத்துப்
பகைவர்மேற் பிர
யோகிப்பன் என்பது இக்குறளின் கருத்து. கைப்படை-கையிலுள்ள ஆயுதம். தன்மேல் வந்த-தன்னை யெதிர்த்த. களிற்ரோடு-ஆண்யானையுடன். போக்கி-(எறிந்துசெலுத்துதலால்) இழந்துவிட்டு. வருகின்ற - (தன்மேல்) எதிர்த்து வருகின்ற. வேல் நாடித்திரிவான் - வேறொரு வேலாயுதத்தைத் தேடித்திரிபவன். நின்ற - நுழைந்திருக்கின்ற. பறித்து - பிடுங்கி. மகிழும் - மகிழ்வான். கொடுபோமாறு - கவர்ந்து கொண்டுபோம்படி. விடுதல் - எறிதல். தேடியது எய்தலான் - தான் தேடினபொருளாகிய ஆயுதம் கிடைக்கப்பெற்றதனுல். இதனுள் - இப்பாட்டில். களிற்றையல்லது எறியான் என்பதூஉம்- எப்பொழுதும் யானையையே எதிர்த்துப் போர்செய்யுந் திறமுடையவனென்பதும். சினமிகுதியால் அறிந்திலனென்க. வேல் இடைபோழ்ந்தது-
பகைவனெறிந்தவேலாயுதம் தன்மார்பினிடையே பிளந்து

புதைந்திருத்தலை.
நூழிலாட்டு என்பது - தன் உடம்பிற் புதைந்த
ஆயுதத்தைப் பறித்தெடு
த்துப் பகைவர்மேற் பிரயோகித்தல்; "களங்கழுமிய
படையிரிய, உளங்கழி
ந்த வேல் பறித்தோச்சின்று" என்ற

கொளுவையும், "மொய்யகத்து மன்னர்
முரணினி யென்னுங்கொல், கையகத்துக் கொண்டான்
கழல்விடலை - வெ
ய்ய, விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த, படுசுட ரெஃகம் பறித்து"
என்ற புறப்பொருள்வெண்பாமாலையையுங் காண்க. இது, தும்பையென்
னும் புறப்பொருள் திணையின் துறைகளுள் ஒன்றும். "நேரலர் பணிப்ப நெ



ஞ்சிடைக் குளித்த, கூரயில் பறித்துக் கைக்கொண்ட
நூழிலும்" என்ற
இலக்கணவிளக்கத்தால், இது சிறுபான்மை
நூழிலெனப்படுதலு முண்டெ
ன்றுதெரிகின்றது. "கையில்வாளி தொலைந்தபின்
காய்ந்துதம், மெய்யில்
வாளிகள் வாங்கி வில்வாங்கினர்,
பொய்யிலாமொழிப்பூபதிசேனையின், மையி
லாண்மையினர் சிலமன்னரே" என்ற வில்லிபுத்தூரார்
பாரதமும், "நேர்
முனையிற் றொடுத்த பகழிகள் நேர்வளைவிற் சுழற்று
மளவினில், மார்பிடை
யிற்குளித்த பகழியை வார்சிலையில் தொடுத்து விடுவரே"
என்ற கலிங்கத்துப்
பரணியும், "அள்ளினன் பறிக்குந் தன்பே ராகமே யாவ
மாக, வள்ளல்மே
லனுமன் றன்மேல் மற்றையோர் மற்றிண்டோள்மே,

லுள்ளூறப் பகழிதூவி
யார்த்தன னெவரு முட்க'' என்ற கம்பராமாயணமும்
இதன்பாற்படும். இத் திருக்குறள், போர்த்தொழிலால்
தானைநிலை [ஒரு தும்பைத்துறை] வருதற்கு
உதாரணங்காட்டப்பட்டுள்ளது; ''தானையானை''என்ற
தொல்காப்பியப் புறத்
திணையியற்சூத்திரத்தின்கீழ்க் காண்க.

கைவேல், மெய்வேல் - ஏழனுருபும் பயனுந் தொக்க
தொகைகள். (அ)

எஎரு. விழித்தகண் வேல்கொண் டெறிய
வழித்திமைப்பி
ேனாட்டன்றோ வன்க ணவர்க்கு.

(இ - ள்.) விழித்த கண் - (பகைவரை வெகுண்டு)
நோக்கிய கண், வேல்
கொண்டு எறிய - (அவர்) வேலைக்கொண்டு எறிய, (அஃது
ஆற்றாது), அழித்து இமைப்பின் - (அந்நோக்கை) அழித்து
இமைக்குமாயின்; (அது), வன்கணவர்க்கு - வீரர்க்கு, ஓட்டு
அன்றோ - புறங்கொடுத்தலாம்; (எ - று.)

அவ்வெகுளிநோக்கம்மீட்டலும்
வுஞ் செய்யாரென்பதாம்.

போரின்கண்மீட்சி யெனக் கருதி அது

(கு - ரை.) பகைவர் தம்மேற் படைக்கலம்பிரயோகிக்கையிற் சிறிது

கூசிக் கண் இமைப்பராயின் அதுவும் வீரர்க்குத் தோல்விக்குறியென்று துணி யப்படுமென்பதாம். சிந்தாமணியில் "ஆரமருளாண்டகையும் அன்னவகை வீழும், வீரரெறி வெம்படைகள் வீழ இமையானுப், பேரமருளன்று பெருந்தாதையொடும் பேராப், போரமருள்
ளூன்" என்ற செய்யுளில் 'இமையானுப்'

நின்ற இளையோனிற் பொலிவுற்
என்றதும் இதுபற்றியே. மற்றும்
சிந்தாமணியில் "ஏந்தல்தன் கண்கள் வெய்ய விமைத்திட
வெறிதலோம்பி, காந்தகவுழவ ஞணி நக்கு நீ யஞ்சல்
கண்டாய், காய்ந்திலே னென்று வல்லே
கலினமாக்குன்றிற்பொங்கிப், பாய்ந்ததோர்புலியின்
மற்றோர்பகட்டின்மேற் பாய்வித்தானே", "வேந்தன்,
வெல்வது விதியினுகும் வேல்வரினிமைப் பேனுயிற்,
சொல்லி நீ நகவும்பெற்றுய் தோன்றல் மற்
றென்னையென்றான்" என்பனவும், சூளாமணியில்
"ஏற்றவ ரிமைப்பினு மிகழ்ந் தெறிதல்
செய்யார்" என்பதும் இங்கு நோக்கத்தக்கன. இத்தன்மை,
சிறுவர்விளையாட்டி லுள்ளது.

உலகவழக்கிலும்

வெகுண்டு நோக்கிய - கோபித்துப்பார்த்த. அவர் வேலைக்கொண்டு எறிய - வேலினுல் வீச, அஃது ஆற்றுது

- அப்பகைவர்.
- அவ்வெவெல்றி

எ௭ - ஆம்

அதிகாரம்.—படைச்சேருக்கு ௩௧௧

தலைப் பார்த்துப் பொறுக்கமாட்டாமல். அந்நோக்கை அழித்து - அந்தக்
கோபப்பார்வையை மாற்றி. இமைக்குமாயின் - இதழ்கள் குவியுமானல்.
இதழ் - கண்ணிமை. அது - அவ்விமைத்தல். புறங்கொடுத்தல் - முதுகு
காட்டியோடுதல்; தோல்வி யென்றபடி. வெகுளிநோக்கம் மீட்டலும் -
கோபப்பார்வையைப் பின்வாங்கச்செய்தலும; மீட்டல் - மாற்றுதல். மீட்சி -
தாம்தோற்று மீளுதல், பிற்படுதல், முன்வைத்தகாலைப் பின்வாங்குதல். அது
வும் செய்யார் - வெகுளிநோக்கத்தை மீட்டிடவும் மாட்டார்; இதற்கு எழு
வாய் - வீரர்.
வேல்கொண்டுஎறிய விழித்தகண் அழித்து இமைப்பின் (அது) வன்கண
வர்க்கு ஓட்டன்றே என இயையும். 'அது' என்பது, அவாய்நிலையான் வந்

தது. வேல்கொண்டு, கொண்டு -
மூன்ரும்வேற்றுமைச்சொல்லுருபு; பிர
யோகவிவேகவுரையில், 'விழித்த கண் வேல்கொண்
டெறிய என்பது
ஆனென்னும் மூன்ரும்வேற்றுமைப் பொருளாயினவாறு
காண்க; இதனைத்
தொல்காப்பியர், "வேற்றுமைப்பொருள்வயி
னுருபாகுவும்" என்பர்: அது
சேனவரையருரையானுங் காண்க' என்றமை
அறியத்தக்கது. ஓட்டு - முத
னிலை திரிந்த தொழிற்பெயர்.

(ரு)

எஎகூ.

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

(இ - ள்.) தன் நாளை எடுத்து - தனக்குச்சென்ற
நாள்களை எடுத்து
எண்ணி, விழு புண் படாத நாள் எல்லாம் - (அவற்றுள்)
விழுப்புண்படாத
நாள்களையெல்லாம், வழுக்கினுள் வைக்கும்-பயன்படாது
கழிந்த நாளுள்ளே
வைக்கும், (வீரன்); (எ - று.)
விழுப் புண் - முகத்திலும் மார்பினும் பட்ட புண்.

போர்பெற்றிருக்க
வும், அதுபெறாத நாள்களோடுங் கூட்டு மென்பதாம்.
இவைமூன்றுபாட்டானும், ஊறஞ்சாமை
கூறப்பட்டது.

(கு - ரை.) சுத்தவீரர், தாம் நல்லபோரிற்
சிறந்தவிரணப்படாத நாள்
களை வீணேகழிந்தநாள்களாக எண்ணி
வருந்துவரென்பது இந்தக்குறளின்
கருத்து. தனக்குச் சென்ற நாள்களை-தன்னுடைய
ஆயுளிற் கழிந்த தினங்
களை. அவற்றுள்-அந்நாள்களுள். விழுப் புண்-சிறந்த
புண்; சிறப்பையுணர்த்து
கின்ற விழுமம் என்னும் உரிச்சொல் விகாரப்பட்டு
'விழு' என நின்றது:
"வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து" என்னு
மிடத்திலுங் காண்க.
விழுப்புண்என்பது-சீரிய புண் எனப் பொருள்படுதலை
"பெருந்தகை விழுப்
புண்பட்ட மாறே," "போரடுதானை யெவ்விமார்பின்,
எஃகுறுவிழுப்புண்
பலவென" எனப் புறநானூற்றிலும் காண்க. நாளுள்ளே
வைக்கும் - நாள்
களாகக் கருதுவான் என்றபடி. விழுப்புண்படாதபடி
போர்நேர்ந்த நாள்
களைப் போர்நேர்ந்த நாள்களாகக் கருதா னென்க. அதுபெறாத-போர்பெறாத.

ஊறு அஞ்சாமை - எதிரிகளாற் புண்படுதற்குப் பயப்படாமை. தமிழ்மொழி விதியால் நிலைமொழியும் வருமொழியுந் திரியாது தம்முள் நிலைமாறுதற்கு



"வைக்குந் தன்னாளை யெடுத்து" என்றதை உதாரணங்காட்டினர், இலக்கணக்கொத்துடையார். (சு)

௭௭௭. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(இ - ள்.) சுழலும் இசை வேண்டி - (துறக்கத்துத் தம்மொடுசெல்லாது வையத்தைச்) சூழ்ந்துநிற்கும் புகழை வேண்டி, வேண்டா உயிரார் - உயிர்வாழ்தலை வேண்டாத வீரர், கழல் யாப்பு - கழல்கட்டுதல், காரிகை நீர்த்து - அலங்கார நீர்மையையுடைத்து; (எ - று.)

'வையத்தைச் சூழும்' எனவே, அதன்பெருமை பெற்றும். செயப்படுபொருள், வருவிக்கப்பட்டது. சூழ்தல் - அகத்திடல்.

துறக்கமும் புகழும்
எளிதின்எய்துவ ராகலின், ஆபரணமாவது அதுவே
என்பதாம்.
(கு - ரை.) துறக்கத்துத் தம்மொடு
செல்லாது-(புறங்கொடாது போர்
செய்து பகைவரால் இறத்தலால் இவ்வுலகைவிட்டு)
வீரசுவர்க்கமடைகின்ற
தம்மோடு இவ்வுலகத்தைவிட்டு
அவ்வுலகத்துக்குவந்திடாமல். வையத்தைச்
சூழ்ந்து நிற்கும் - நிலவுலக முழுவதும் பரவி
நிலைபெறுகின்ற. 'புகழாவது -
இம்மைப்பயனுகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து
இறவாதுநிற்குங் கீர்த்தி' என்
றூர், கீழ்ப்புகழென்றஅதிகாரத்திற் பரிமேலழகர்.
'புகழாவது-தாம் இறந்து
ழியும் தாம்நிகழ்த்தியவாறு உலகம்உயர்த்திக்கூற
நிலைபெறுவது' என்றலும்
உண்டு. வேண்டி - விரும்பி.
கழல் - வீரர் தமதுவீரத்திற்கு அறிகுறியாகத்
தமது காலில் அணிவ தோர் ஆபரணம்; (இது
தியாகத்திற்காக அணியப்படு
தலும் உண்டு: "ஆடவர் கோடையால் வீரத்தா லணி,
பாதத்தணியே கழ
லணி யென்ப" என்ற பிங்கலந்தையையுங் காண்க.)
அலங்காரநீர்மையை
உடைத்து - அழகுசெய்யுந்தன்மையை யுடையது. அதன் பெருமை-புகழின்

மகிமை; கீர்த்திமிக்குப்பரவுதல். சூழ மெனப் பொருள் படுகின்ற 'சுழலும்' என்ற பெயரெச்சம் யாதாயினும் ஒருசெயப்படுபொருளை வேண்டிநின்றத

னால், 'வையத்தை'
என்பதை வருவித்துக்கொண்டார்; அவாய்நிலை. அகத்
திடல் - உட்படுத்தல்; கவிந்துகொண்டு
முழுவதும்பரவுதல். புகழையே
விரும்பி உயிர்வாழ்க்கையை விரும்பாத வீரர், சுவர்க்க
லோகத்தையும் புகழை
யும் எளிதில் அடைவ ராதலால், அவர்கள் காலிற் கட்டுங்
கழலே அணிகல
மென்று நன்குமதிக்கத்தக்கதா மென்பது,
இறுதிவாக்கியத்தின் கருத்து. இனி, இக்குறள் -
புகழைப்பெற்று உயிர்வாழ விரும்பாதவர் [தம் உயிர்வாழ்க்
கையின்பொருட்டுப் போரிற்புறங்கொடுத்து
மானங்கெட்டுப் புகழையிழப்ப வர்] காலில்
வீரக்கழலணிதல் வெறும் அலங்காரமாத்திரமாகுந்தன்
மையுடை யது [வீரத்திற்கு அறிகுறியா மென்று
நன்குமதிக்கத்தக்கதன்று] என்று வேறும் ஒருபொருள்
கொள்ள இடங்கொடுத்தலை நுட்பமாக நோக்குக.

'வேண்டாஉயிரார்' என்பதனை "அருங்கேடன்" என்பதுபோலக் கொள்க; இது, வடமொழிநடை: 'இனி, சொற்கள் இங்ஙனந் தமிழ்மொழி விதியால் நிலைமாறுதலு மன்றி, வடமொழிவிதியால் நிலைமாறுதலும் உள;

(உதாரணம்.) 'செய்தவேள்வியர், எய்தியசெல்வத்தர், கழித்த உண்டியர், வேண்டாவுயிரார், அருங்கேடன், கொண்டகூழ்த்தாகி, கூப்பிய கையினர், வெறுத்த ஆசையர், பொறுத்த சடையர், கெட்ட வறுமையர், விட்ட அவாவினர்......என வரும்' என்ற இலக்கணக்கொத்துரை அறியத்தக்கது. இதனை, உயிர்வேண்டாதார் என விகுதிபிரித்துக்கூட்டல், பிரயோகவிவேக நூலார்கொள்கை. கழல் யாப்பு - கழலை யாத்தல் என இரண்டாம்வேற்றுமைத்தொகை. யாப்பு-'பு' விகுதி பெற்ற தொழிற்பெயர். காரிகை நீர்த்துஅழகைச்செய்யுந்தன்மையது என இரண்டனுருபும்பயனுந்தொக்க தொகை.

எஎ௪. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்

செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(இ - ள்.) உறின் - (போர்) பெறின், உயிர் அஞ்சா - (தம்) உயிர்ப் பொருட்டு அஞ்சாது (அதன்மேற்) செல்லும், மறவர் - வீரர்,—இறைவன் செறின் உம் - (தம்) இறைவன் (அதுவேண்டாஎன்று) முனியினும், சீர் குன்றல் இலர் - அவ்வீரமிகுதி குன்றார்; (எ - று.)

போர்பெற்றுஅறியாமையின், அதுபெற்றால்

அரசன் தடுப்பினும் நில்லா ரென்பதாம். பிறரும், "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" என்றும், "*புட்பகைக், கேவா னாகலிற் சாவேம் யாமென, நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப" என்றுங் கூறினர்.

(கு-ரை.) வீரர் தம்அரசன் தடுத்தாலும் போரைவிடுத்துதல் அரிது என்பது இக்குறளின்கருத்து.

பெறின்-பெற்றால். தம்உயிர்ப்பொருட்டு-தமது உயிரை உடம்பைவிட்டுநீங்காமற்பாதுகாக்கும்பொருட்டு. உயிர்ப்பொருட்டு என்றது, 'அஞ்சாது' என்பதில் 'அஞ்சு' என்னும் வினைப்பகுதியைக் கொள்ளும். அதன்மேற்செல்லும் - அப்போரின்மேற் செல்லுகின்ற. இறைவன் - தலைவன், அரசன். அது வேண்டா - அப்போர் வேண்டுவதில்லை. முனியினும்- கோபித்தாலும், வெறுத்தாலும். குன்றார் - குறையார். போர் பெற்று அறியாமையின் - (தமக்குவிருப்பமான) போர் பலநாளாகக் கிடைக்கப்பெறாமையால். அது - போரை. இங்குக் காட்டிய இரண்டுமேற்கோள்களுள், முன்னது - புறநானூறு ௩௧-ஆஞ்செய்யுளிலும், பின்னது - புறநானூறு ௬௮-ஆஞ் செய்யுளிலும் உள்ளன. 'பிறர்' என்றது, அப்பாடல்களைச் செய்தவராகிய கோவூர்க்கிழாரை. இவற்றின் பொருள்:—போர் எனின்-போர்நேர்வதென்று கேள்விப்பட்டால், புகலும் - விரும்பிமகிழ்கின்ற, புனை கழல் மறவர் - அணிந்த வீரக்கழலையுடைய வீரர்கள் என்றும்; புண் பகைக்கு - புண்படுத்தவல்ல பகைவரிடத்து, ஏவான் ஆகலின் - (எம்மைப் போர்க்கு அரசன்) செலுத்தானாதலால், யாம்

சாவேம் - நாம் (நமக்குட் போர்செய்து) இறக்கக்கடவோம், என - என்று, நீங்கா மறவர் - நீங்காதவீரகுணத்தையுடைய வீரர் [மறம்நீங் காதவர்], வீங்கு தோள் புடைப்ப - (தமது) பூரித்த தோள்களைக் கைகளால்
தட்ட என்றும் காண்க. பின்னதற்குக் கருத்து - பகைவரோடு போர்செய்

* பி - ம்: புட்பகத் தேவனுகலின்





தற்கு எம்மை அரசன் ஏவாமையால் [போர்நேராமையால்] நாம் நமக்குட் போர்செய்தாயினும் அழிவோ மென்று அதிகபராக்கிரமமுடைய வீரர்கள் (போர்த்தினவுமிக்குப்) போரின்பொருட்டுத்தோள்புடைப்பாராயினர் என்க. புன் பகைக்கு என்றுபிரித்து -
பக்ஷிசகுனம்மாறுபடுகின்றஇடத்தில் என்றலுமாம். இவை யிரண்டும், சோழன்நலங்கிள்ளியின் சேனையிலுள்ள வீரரது யுத்தாவேசமிகுதியைப் பற்றியன வ.
(அ)

எஎக. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே

பிழைத்த தொறுக்கிற் பவர்.

(இ - ள்.) இழைத்தது - (தாம்) கூறின வஞ்சினம், இகவாமை தப்பாமைப்பொருட்டு, சாவாரை - (சென்று) சா

வவல்ல வீரரை, பிழைத்தது - (அது)தப்பியவாறு (சொல்லி), ஒறுக்கிற்பவர் - எள்ளுதற்குஉரியார், யார் - யாவர்? (எ - று.)

இழைத்தல் - இன்னதுசெய்யேனாயின் இன்னனாக வெனத் தான் வகுத்தல். 'சொல்லி' என்பது, அவாய்நிலையான் வந்தது. வஞ்சினம் முடிப் பான்புக்கு முன்னே சாவினும் தொலைவன்மையின் அதுமுடித்தாராவரென, சாதற்சிறப்புக் கூறியவாறு.

(கு - ரை.) வஞ்சினம் - சபதவார்த்தை. சென்று-போர்க்குச் சென்று. அதுதப்பியவாறுசொல்லி எள்ளுதற்கு உரியார் யாவர் - அச்சபதந்தப்பிய விதத்தைக் கூறி எவரும் இகழமாட்டார். இன்னனாக - இத்தன்மையனாவேன். வகுத்தல்-அமைத்துக்கூறுதல். 'பிழைத்தது' என்ற செயப்படுபொருள், யாதாயினும் ஒருமுடிக்குஞ்சொல்லை வேண்டிநின்றதனால், 'சொல்லி' என வருவித்தார். ஒருவர் தாம் கூறிய சபதத்தை நிறைவேற்றும்பொருட்டுப் போர்க்குச்சென்று அதனைநிறைவேற்றுதற்குமுன்னமே அப்போரிற் பகை வராலிறந்தாலும் அது தோல்வியாகாமையால் அவர் சபதத்தை நிறைவேற்றின சிறப்புடையராகக் கொண்டாடத்தகுவ ரென்க. முடிப்பான் - முடித் தற்கு. முன்னே - காலமுன். சாவினும்-இறந்தாலும். தொலைவு அன்மை யின் - தோல்வியாகாமையால். அது - சபதம். இழைத்தது - வினையாலணை யும்பெயர். பிழைத்தது-தொழிற்பெயர். இகவாமைக்கு என நான்

கனுருபு தொக்கதாகவிரிக்க; வினையெச்சமாகக்கொண்டு இகவாதபடி எனினும் அமையும்; 'இகவாமல்' என்றும் பாடம் உண்டு.

"சிந்துபதியாகிய செயத்திரதனைத்தே, ருந்தமரில் நாளை யுருமேறென வுடற்று, அந்திபடு மவ்வளவி னுவிகவரேனேல், வெந்தழலின்வீழ்வனிது வேத மொழி யென்றான்" என்றபடி 'நாளைப்பகற்பொழுதிற்குள் நான் பகைவனைக் கொல்லேனாயின் அக்கினிப்பிரவேசஞ்செய்து இறப்பேன்'என்று பாரதத்தில் அருச்சுனன் சபதஞ்செய்தாற்போலச் சபதஞ்செய்தவீரர் அச்சபத வகையிரண்டனுள் முதலதாகியபகைவனுயிர்போக்குதலை நிறைவேற்றமுடியாதவிடத்து மற்றொருவகையாகிய தன்னுயிர்போக்குதலைச் செய்திடுவராயின் அப்பொழுது அவரைச் சபதந்தப்பினவரென்று இகழக்காரணமில்லை

## எவ - ஆம் அதிகாரம்.—படைச்செருக்கு

ஙஉங

யென்னுங் கருத்துப்பட இப்பாட்டுக்கு உரைகொள்ளினுமாம்; சபதம்நிறைவேற்றாமைப்பொருட்டுச் சாகும் வீரரை அறுதவறியவராகச்சொல்லி இகழத் துணிவார்இல்லையென உரைகாண்க. இது ஒருசாரார்கருத்து: அதனை, "கூதிர் வேனில்" என்ற தொல்காப்பியப்புறத்திணையியற் சூத்திரத்தில் "ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச், சொல்லிய வகையி னொன்றொடு புணர்ந்து, தொல்லுயிர் வழங்கிய அவிப்பலியானும்" என்றதற்கு, 'பகைவர்நாணும்படி

யாக உயர்ந்தோரான் னன்குமதித்தலைக்கருதி இன்னதுசெய்யேனாயின் இன்னதுசெய்வலெனத் தான்கூறிய பகுதி இரண்டனுள் ஒன்றனோடே பொருந்திப் பலபிறப்பினும் பழகிவருகின்ற உயிரை அக்கியங்கடவுட்குக்கொடுத்த அவிப்பலியானும்' என்று உரைகூறியவர் '"எம்பியை வீட்டுதலெம்மனைக்கா யான்படுதல், வெம்பகலின் முன்விளைப்ப னென்றெழுந்தான் - தம்பி, புறவோரிற்பாணிப்பப் பொங்கெரிவாய் வீழ்ந்தா, னறவோன் மறமிருந்த வாறு" —இப்பாரதத்துள் ஒருவன் இன்னதுசெய்வலென்று அதுசெய்யமுடியாமையின் அவிப்பலிகொடுத்தவாறு காண்க:"இழைத்த திகவாமைச் சாவாரை யாரே, பிழைத்த தொறுக்கிற்பவர்"—இதுவுமது' என்று இத்திருக்குறளை உதாரணங் காட்டியமைகொண்டு உணர்க. (கூ)

எஅ0. புரந்தார்கண் ணீர்மல்கச் *சாகற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

(இ - ள்.) புரந்தார் கண் - (தமக்குச் செய்த நன்றிகளை நினைந்து) ஆண்ட அரசர்கண்கள், நீர் மல்க-நீர் மல்கும்வகை, சாகற்பின்-(போரிடைச்) சாவப்பெறின்,—சாக்காடு-அச்சாக்காடு,—இரந்து கோள் தக்கது உடைத்து- இரந்தாயினும் கொள்ளுந் தகுதியையுடைத்து; (எ - று.)

மல்குதலாகிய இடத்துநிகழ்பொருளின்தொழில், இடத்தின்மேல் நின்றது. கிளைஅழ இல்லிடை நோயால் விளிவார் பழவினைப்பயனே யெய்தலின் அடுத்தவினையால் துறக்கமெய்துஞ் சாதலை 'இரந்துகோட்டக்கதுடைத்து' எ

ன்றார்.

இவைநான்குபாட்டானும், உயிரோம்பாமை கூறப்பட்டது.

(கு - ரை.) தமக்குச்செய்த நன்றிகளை நினைந்து-தமக்குப் படைவீரர் முன்புசெய்த உபகாரங்களை யெண்ணி; அரசர்கண்கள் நீர் மல்கும்வகை என இயையும். 'சாவப்பெறின்' என்பதனோடு இயைத்தால், தமக்கு அரசர் முன்பு செய்தஉபகாரங்களை மறவாமல் மனத்திற்கொண்டு வீரர் இறந்தால் என்க. ஆண்டஅரசர் - தமக்குத்தலைவரானவரசர். கண்கள் நீர்மல்கும்வகை-கண்கள் நீர்வழியப்பெறும்படி. சாவப்பெறின் - இறக்கநேர்ந்தால். சாக்காடு - சாவு, மரணம். இரந்து-யாசித்து, வேண்டி. கண்ணாகிய இடத்தில் நிகழ்பொருளான நீரினது தொழிலாகிய மல்குத லென்பது, இடமாகிய கண்ணின்மேல் ஏற்றிக்கூறப்பட்டுநின்றது; இது, ஒருவகை உபசாரவழக்கு: இதற்கு "குளவளாக்,கோடின்றி நீர்நிறைந் தற்று", 'இந்தப்பானை நாழி அரிசி பொங்கும்'

* பி - ம்: சாகிற்பிற்



என்பவற்றை

உதாரணங்காட்டினர், பிரயோகவிவேகநூலார். இனி, புரந்தார்

கண் நீர்மல்க - அபசரது கண்களிலே நீர்பெருகும்படிஎன ஏழாம்வேற்றுமைத்
தொகையாகப் பொருள்கொள்ளுதல், எளியவழியாம். கிளை அழ - உறவினர்
புலம்ப. இல்லிடை-(தமது)வீட்டில். விளிவார்-இறப்பவர். பழவினைப் பயனே
எய்தலின்-முன்புசெய்தகருமத்தின் பலத்தையே அடைதலால். அடுத்த வினை
யால் துறக்கம் எய்தும் சாதல் - அப்பொழுதைக்கருமத்தின் பயனாக வீர
சுவர்க்கமடையும்படியான மரணம்; என்றது, போரிற்புறங்கொடாது பகை
வரா லிறத்தலை. உயிர் ஓம்பாமை - தம் உயிரை விரும்பிப் பாதுகாக்கக் கரு
தாமை. அங்கவியலில் படையியல் முற்றிற்று. (௯0)

## எகூ - ஆம்

## அதிகாரம்.—நட்பு.

இனி, அப்படைபோல அரசனுக்கு வினையிடத்து உதவுவதாய நட்பினை
ஐந்து அதிகாரம் விதிமுகத்தானும், பன்னிரண்டு அதிகாரம் எதிர்மறைமுகத்
தானும் கூறுவான் தொடங்கி, விதிமுக அதிகாரம் ஐந்தனுள்ளும் முதற்கண்
நட்புக் கூறுகின்றார்; அஃதாவது இன்னதென்பதூஉம்,

அதிகாரமுறைமை

யும் இதனுள் விளங்கும்.

(கு - ரை.) வினையிடத்து - தொழிலில். நட்பு - சிநேகிதவர்க்கம். விதி

முகத்தானும் - உடன்பாடாகவும்; நட்பைக்கூறும்விதத்தாலும். எதிர்மறை

முகத்தானும் - நட்பிற்கு எதிரான பகையைக் கூறுகிற விதத்தாலும்; மேல்

அ௬ - ஆம் அதிகாரத்தின் முதலில் 'இனி அந்நட்பினை எதிர்மறுத்துப்

பகைமுகத்தாற் கூறிய தொடங்கினர்' என விவரிக்குமாறு காண்க. விதி

முக அதிகாரம் ஐந்து - நட்பு, நட்பாராய்தல், பழமை, தீநட்பு, கூடாநட்பு

என்பன. பகைமுக அதிகாரம் பன்னிரண்டு - பேதைமை முதல் மருந்து ஈறு

யினவாம். ஆக, இந்தப்பதினேழதிகாரம் அங்கவியலுள் நட்பியல் என ஒரு

சாரரால் வழங்கப்படுமென்று அறிக. அஃதாவது - நட்பாவது. இதனுள் -

இங்குக்கூறியவகையில். அதிகாரமுறைமைக்குக் காரணம், படைபோல நட்

பும் அரசனுக்கு ஆட்சிநடத்துந்தொழிலில் உதவுவதாதல். நட்பு - நட்டல்,

சிநேகம்: தொழிற்பெயர்.

எ௸க. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்

வினைக்கரிய யாவுள காப்பு.

(இ - ள்.) நட்பின் - நட்புப்போல, செயற்கு அரிய - செய்துகோடற்கு
அரிய பொருள்கள், யா உள - யாவை உள? அது போல் - (செய்துகொண்
டால்) அதுபோல, வினைக்கு அரிய காப்பு - (பகைவர்செய்யும்) வினைக்குப்
புகற்கரிய காவலாவன, யா உள - யாவை உள? (எ - று.)

நட்புச்செய்தற்கு ஆவாரைப் பெறுதலும், பெற்றாற் செய்யும் உபாய
மும், செய்தால் திரிபின்றிநிற்றலும் முதலிய அரியவாகலின் 'நட்பிற் செயற்
கரியன இல்லை' என்றும், செய்தாற் பகைவர் அஞ்சி வினைதொடங்கா ராக
லின் 'அதுபோல வினைவாராமைக்கு அரியகாவ லில்லை'

என்றுங் கூறினர். எஉ - ஆம் அதிகாரம்.— நட்பு

ளஉ௫

நட்புத்தான் இயற்கை செயற்கை என இருவகைப்படும்; அவற்றுள் இயற்கை -

பிறப்புமுறையான் ஆயதூஉம், தேயமுன்றயான் ஆயதூஉம், என இருவகைப்படும்: அவற்றுள், முன்னையது சுற்றமாகலின், அது சுற்றந் தழாலின் அடங்கிற்று; ஏனையது பகையிடையிட்டதேயத்த தாகலின், அது 'துணைவலி' என வலியறிதலுள் அடங்கிற்று: இனி, ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த உதவிபற்றி வருஞ் செயற்கையே யாகலின், அதன் சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) செய்துகோடற்கு - சம்பாதித்துக்கொள்ளுதற்கு. உள - உள்ளன. அதுபோல - நட்புப்போல. புகற்கு அரிய - பிரவேசிக்கமுடியாத. காவல் - பாதுகாப்பு. நட்புச்செய்தற்கு - சிநேகஞ்செய்யப்படுதற்கு. ஆவாரை- அநுகூலரானவர்களை; தக்கவரை. பெறுதல் - கிடைக்கப்பெறுதல். பெற்றால் செய்யும் உபாயம் - அப்படிப்பட்டவர் நேரிடப்பெற்றால் அவர்களைச்சிநேகித ராக்கிக்கொள்ளுதற்குச் செய்யும் வகை. செய்தால் திரிபு இன்றி நிற்றல் - சிநேகஞ்செய்துகொண்டபின்பு மாறுபாடில்லாமல் ஒருநிலையில் நிற்றல். முதலிய - முதலானவை. அரிய - அருமையானவை. நட்பின் - நட்புப்போல. வினை வாராமைக்கு - பகைவர் வெல்லுதற்குச் செய்யுந் தொழில் அரசனிடம் வந்திடாமைக்கு. வடநூலார் இயற்கையை 'ஸஹஜம்' என்றும், செயற்கையை 'க்ரித்ரிமம்' என்றுங் கூறுவர். பிறப்புமுறையான் ஆயது - உறவு முறைமையா லாகியது: பிறப்புமுறை -

தேகசம்பந்தம். தேயமுறை தேசத்தின்நிலே. நட்பு, பகை என்றவற்றில் ஒவ்வொன்றும், ஸஹஜம் ப்ராக்ருதம் க்ரித்ரிமம் என மூன்றுவகைப்படும்; அவற்றில், ஸஹஜம் - பிறப்பு முறையால் ஆகியது. சிறியதாயார்பிள்ளே, பெரியதாயார்பிள்ளே, அத்தை பிள்ளே முதலியோர் - இயல்பில் நண்பர். சிற்றப்பன், பெரியப்பன், அவர்கள்பிள்ளேகள் முதலியோர் - இயல்பிற் பகைவர். ப்ராக்ருதம் - தேசமுறை யால் ஆகியது. ஒவ்வோர் அரசனுக்கும் அடுத்தநாட்டவன் பகையென்றும், அதற்கு அடுத்தநாட்டவன் நண்பனென்றும், அதற்கும் அப்பாலுள்ளநாட்ட வன் நொதுமலென்றும் உணர்க. க்ரித்ரிமம் - உபகாரஞ்செய்யப்பெற்றதனுலாகும் நண்பும், அபகாரஞ்செய்யப்பெற்றதனுலாகும் பகைமையுமாம். இந்த இராஜநீதி, இங்கே முக்கியமாக உணரத்தக்கது. இவற்றில் முந்தின இரண்டும் இயற்கையென்றும், பிந்தினது செயற்கையென்றுங் கூறப்பட்டது. முன்னேயது - பிறப்புமுறையாலாயது. சுற்றம் - பந்துவர்க்கம். சுற்றந் தழால் ருஉ - ஆம் அதிகாரம். ஏனேயது - மற்றது; தேயமுறையால் ஆயது. பகை இடையிட்ட தேயத்தது - தன்துநாட்டிற்கு அடுத்தான பகைவனது நாட்டுக்கு அப்பாலுள்ளது. துணே வலி - அரசனுக்குத்துணேயாகுமவரது வலிமை. வலியறிதல் - சஅ - ஆம் அதிகாரம்; துணேவலி வலியறிதலுள் அடங்கினமையை "வினேவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந், துணேவலி யுந் தூக்கிச் செயல்" என்ற

அவ்வதிகாரத்துமுதற்குறளிற் காண்க. அதன் - செயற்கைகட்பின். இதனால் - இக்குறட்பாவினால்,

(க) ௲௨௬

திருக்குறள்

௭௮௨. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்

பின்னீர பேதையார் நட்பு.

நீர -

(இ - ள்.) நீரவர் கேண்மை - அறிவுடையார்நட்புக்கள், பிறை நிறை பிறை நிறையுந்தன்மை போல நாடோறும் நிறையுந்தன்மையவாம்; பேதையார் நட்பு - மற்றைப்பேதைமையுடையார்நட்புக்கள், மதி பின் நீர நிறைந்தமதி பின் குறையுந்தன்மை போல யவாம்; (எ - று.)

நாடோறுங் குறையுந்தன்மை

'நீரவர்' என்றார், இனிமைபற்றி. கேண்மை, நட்பு என்பன - ஒரு பொருட்கிளவி. செய்தாரது பன்மையான், நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன்சுருங்கிப் பின்பெருகற்கும், பேதையாரும் பேதையாருஞ் செய்தன முன்பெருகிப் பின்சுருங்கற்கும் தம்முள் முன் அறியாமையும், பின் அறிதலு மாம்.

காரணம்,

(கு-ரை.) அறிவுடையார் நட்பு-புத்திமான்களது சிநேகம். பிறை-இளஞ் சந்திரன். நிறைந்த மதி - பூர்ணசந்திரன். "பெரியவர் கேண்மை பிறை போல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம் போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்ற நாலடியா ரோடு இதனை ஒப்பிடுக.
(மற்றைப்புலவர்க்கு நான்கடியிலடங்குகின்ற விஷ யம், பெருநாவலராகிய திருவள்ளுவர்க்கு இரண்டடியினுள்ளே அடங்குகின்ற திறத்திற்கு இக்குறட்பா ஏற்ற உதாரண மாகும்: எனவே, சுருங்கச்சொல்ல லென்னும் அழகு இந்நூலிலே நன்கு அமைந்துள்ள தென்றவாறும்.) நீரவர்-நீரின் தன்மையையுடையவர்: எனவே, இனியவ ரென்றவாறு; "சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில, நீர்மை யுடையார் சொலின்" என்ற குறளில், 'நீர்மையுடையார்' என்பதற்கு - பரிமேலழகர் 'இனியநீர்மையுடையார்' என்று பொருளும், 'நீர்மை - நீரின் தன்மை' என்று விசேடவுரையுங் கூறிய வாற்றை இங்கே அறிக. ஒருபொருட்கிளவி - "ஒருபொருள் குறித்தபல சொல்". இவை அமைந்தது, பொருட்பின்வருநிலையணியின்பாற்படும். செய்தன - செய்தநட்புக்கள். தம்மில் ஒவ்வொருவரிடத்துமுள்ள நற்குணம் முன்பு அறியப்படாமலிருந்து பரிசயம் முதிரமுதிரப் பரஸ்பரம் நன்கு அறி யப்படுதலால், அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்த நட்பு சுக்கிலபட் சத்துச்சந்திரன்போல நாளடைவில் விருத்தியாம்; இங்ஙனமே, அறிவிலா ரும் அறிவிலாருஞ்செய்த நட்பு

அவர்களில் ஒவ்வொருவரிடத்து முள்ள நீக் குணம் முன்புஅறியப்படாமலிருந்து பரிசயம்முதிரமுதிர நன்குவிளங்குத லால் க்ருஷ்ணபட்சத்துச்சந்திரன்போல முதலிற்பெரிதாயிருந்து வரவரக் குறையுமென்பதாம்.

நிறைநீர - வினைத்தொகை. நீர - நீர்மை யென்னும் பண்பி னடியாப் பிறந்த பலவின்பாற்குறிப்புமுற்று. நீரவர் - நீரென்னும் பெயரின்மேற்பிறந்த பலர்பாற்பெயர்; இதனையும், நீர்மை யென்னும் பண்பி னடியாப் பிறந்ததாக்கி உரைக்கலாம்; அப்பொழுது, தன்மையுணர்த்தும் நீர்மையென்னும்

எகூ - ஆம் அதிகாரம்.—நட்பு ௩உஎ

பொதுப்பெயர் அடைமொழிகொடாது கூறப்பட்டதனால், இங்கே இனிய தன்மையையுணர்த்திற் றென்க; குடிப்பிறந்தார், குணமுளோன், ஒழுக்க முடையார் முதலியவற்றில், குடி, குணம், ஒழுக்கம் முதலிய பொதுப்பெயர்கள் - உயர்குலம், நற்குணம், நல்லொழுக்கம் என நற்பொருளின்மேல் நிற்றல் காண்க: அடுத்தகுறளில் 'பண்புடையாளர்' என்பது நற்குணமுடையவரெனப் பொருள்படுதலும் நோக்குக. பிறப்பது பிறையெனக் காரணப்பெயரென்பர். மதி - (யாவராலும்) மதிக்கப்படுவ தெனக்

காரணப்பெயர். மதி
பின் நீர - மதியின்பின்னுள்ள நீர்மை போன்ற நீர்மை
யுடையன வென
விரிக்க. கேண்மை, நட்பு என்பன - பால்பகா
அஃறிணைப்பெயர்க ளாத
லால், 'நீர' என்னும் பலவின்பால்முற்றைக் கொண்டன.
வர்க்கொருவர் யோகக்ஷேமங்களைக்) கேட்குந் தன்மை;

கேண்மை - (ஒரு
எனவே, நட்பாம்.
உவமையணி.

(உ)

எஅரு. நவிறொறு நூனயம் போலும்
பண்புடை யாளர் தொடர்பு.

பயிறொறும்

(இ - ள்.) பண்பு உடையாளர் தொடர்பு -
நற்குணமுடைய மக்கள் (தம்
முள் செய்த) நட்பு, பயில் தொறு உம் - பயிலுந்தோறும்,
(அவர்க்கு இன்பஞ்
செய்தல்),—நூல் நவில் தொறு உம் நயம் போலும் -
நூற்பொருள் கற்குந்
தோறும் (கற்றார்க்கு) இன்பஞ்செய்தலை ஒக்கும்; (எ - று.)
நயத்தினைச்செய்தலான், நயமெனப்பட்டது.

இருமையினும் ஒருகாலை
க்கு ஒருகால் மிகும் என்பதாம்.

இவை யிரண்டுபாட்டானும், அச்சிறப்பிற்கு ஏது கூறப்பட்டது.

(கு-ரை.) மக்கள் - மனிதர். தம்முள் - தங்களுக்குள்; ஒருவரோடொருவர்.
நயம் - இன்பம். நயஞ்செய்தலை 'நயம்' என்றது, காரியத்தைக் காரணமா
கக்கூறிய உபசாரவழக்கு. இருமையினும் - உபமானம் உபமேயம் என்னும்
இரண்டிலும். அச்சிறப்பிற்கு ஏது - நட்பின் சிறப்புக்குக் காரணம். கல்வி
கற்கக்கற்க இன்பந்தருதல்போல, நற்குணமுடையார் நட்புப் பழகப்பழக
இன்பந்தருமென்பதாம்; பயன்பற்றி வந்த உவமையணி.
நவில்தொறும், பயில்தொறும் என்பவற்றில், தொறு என்னும் இடைச்சொல் பெயர்ச்சொல்
தன்மைப்பட்டதனால், நவில் பயில் என்ற வினைத்தொகைகள் அதனை விசே
டித்தன வென்க.

(ரு)

எழுசு. நகுதற் பொருட்டன்று நட்டல்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

மிகுதிக்கண்

(இ - ள்.) நட்டல் - (ஒருவனோடு ஒருவன்) நட்புச்செய்தல், நகுதல் பொருட்டு அன்று - (தம்முள் நகுதற்கு இயைந்தன சொல்லி) நகையாடற் பொருட்டன்று; மிகுதிக்கண் - (அவர்க்கு) வேண்டாதசெய்கை உளதாயவழி, மேல் சென்று இடித்தல் பொருட்டு-முற்பட்டுக் கழறுதற்பொருட்டு; (எ-று.)

பழியும்பாவமுந் தருஞ்செய்கை துன்பமேபயத்தலான் வேண்டப்படுவ தன்மையின் அதனை 'மிகுதி' என்றும், அதுசெய்தற்குமுன்னே மீட்டல்வே ண்டு

திருக்குறள்

ண்டுதலின் 'மேற்சென்று' என்றும், இன்சொற்கு மீளாமையின் 'இடித்தற் பொருட்டு' என்றுங் கூறினர்.

இதனன், நட்பின் பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) நகுதற்கு இயைந்தன - சிரித்துமகிழ்தற்கு ஏற்றவற்றை நகையாடல் - சிரித்துமகிழ்தல். அவர்க்கு - தம்மில் ஒருவர்க்கு. வேண்டாத

செய்கை உளதாயவழி - விரும்பத்தகாத தீச்செய்கை உண்டானபொழுது. கழறுதல் - கண்டித்துப் புத்திசொல்லுதல். பயத்தலான் - தருதலால். வேண்டப்படுவது அன்மையின் - விரும்பப்படுவதல்லாமையால். அதனை - பழிபாவந்தருஞ்செய்கையை. மிகுதி - அவசியமல்லாதது; தன் அளவுக்குத்

தகாமல் மிக்கது; வரம்புகடந்தது. அது - பழிபாவந்தருஞ் செய்கையை.

மீட்டல் வேண்டுதலின் - செய்யாதபடி திருப்பவேண்டுதலால். (௪)

எஅரு. புணர்ச்சி பழகுதல் வேண்டா
னட்பாங் கிழமை தரும்.

வுணர்ச்சிதா

(இ - ள்.) (ஒருவனோடு ஒருவன் நட்பாதற்கு), புணர்ச்சி பழகுதல் - புணர்ச்சியும் பழகுதலு மாகிய காரணங்கள், வேண்டா - வேண்டுவதில்லை; உணர்ச்சி தான் - (இருவர்க்கும் ஒத்த) உணர்ச்சிதானே, நட்பு ஆம் கிழமை தரும் - நட்பாம் உரிமையைக் கொடுக்கும்; (எ - று.)

புணர்ச்சி-ஒருதேயத்தாராதல்; "இன்றேபோல்க நம் * புணர்ச்சி" என்ற

தும் அதனை. பழகுதல் - பலகாற் கண்டும் சொல்லாடியும் மருவுதல். இவ்வி ரண்டும் இன்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சிஒப்பின் அதுவே, உடன்உயிர்நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும் என்பதாம்.

நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்தல் என்னுங் காரணம் மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்து என்பது இதனாற் கூறப்பட்டது.

(கு - ரை.) புணர்ச்சி-சேர்க்கை. ஒத்தஉணர்ச்சி - அறிவுஒத்திருத்தல்; அபிப்பிராய பேதப்படாமை. நட்பாம் உரிமையைக் கொடுக்கும் - சிநேக சம்பந்தத்தையுண்டாக்கும். "இன்றேபோல்க" என்னும் மேற்கோள், புறநானூறுருஅ - ஆம் பாட்டிலுள்ளது; இதற்கு-நுமதுசேர்க்கை இன்று போலவே என்றும் இருக்க என்றுபொருள்; [இது, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் காவிரிப்பூம்பட்டினத்துக்காரிக்கண்ணனார் பாடியது.] புணர்ச்சியென்பது ஓரிடத்திலிருத்தலென்று பொருள்படுதற்கு இது மேற்கோளாகக் காட்டப்பட்டது. அதனை - ஒருதேயத்தாராதலை. பலகால் - பலதரம். சொல்லாடி - பேசி. மருவுதல் - கலத்தல். இவ்விரண்டும் இன்றி - புணர்ச்சியும் பழகுதலும் இல்லாமல்.

கோப்பெருஞ்சோழன் - சோழநாட்டில் உறையூரில் இருந்து அரசாண்ட ஒரு சோழராசன்; செய்யுள்செய்தலில்வல்லவன்; பிசிராந்தையார்க்கும்

* பி - ம்: புணர்ச்சிதானே



பொத்தியார்க்கும் மற்றுஞ்சிலபுலவர்க்கும் உயிர்நண்பன்.

இவன், தன்பிள்ளைக ளிருவரோடு பகைமைகொண்டு போர்செய்தற்கு எழுந்தபொழுது, புல்லாற்றூ ரெயிற்றியனா ரென்னும் புலவராற் சமாதானஞ்செய்யப்பட்டு, பின்பு எல்லாவற்றையுந் துறந்து வடக்கே சென்று சேர்கையில், நண்பினால் தன்னுடனிறத்தற்குவந்த பொத்தியாரை நோக்கி 'புதல்வனைப் பெற்றபின் வருக' என்று கூறி அனுப்பிவிட்டு, அவர்வருதற்குமுன்னமே உயிர்நீத்தனன்; இவன் சொன்னபடி உறையூர்க்குச் சென்ற பொத்தியார், தமக்குச் சந்ததி யுண்டான பின்பு மீண்டுவந்து, இவன் முன்னமே உயிர்நீத்தமையையறிந்து வருந்தி, அவனிறந்தவிடத்து நாட்டப்பட்டிருந்த கல்லை நோக்கி 'எனக்கு இடந் தா' என்று கேட்டு, அங்ஙனமே அந்நடுகல் இடங்கொடுக்கப் பெற்று வியப்புற்று இவனைப் பாடித் தாமும் அங்கு உயிர்நீத்தனர்.

**பிசிராந்தையார்** - ஒருபுலவர்; பாண்டியநாட்டி லுள்ள பிசி ரென்னும் ஊரி லுள்ளவர்: 'ஆந்தை' என்பது, இவரது பெயர்; இவர், அறிவுநிரம்பிய மனைவியையும், மக்களையும், தன்கருத்தின்படி தவறாமலொழுகும் ஏவலாள ரையு முடையவர்; சான்றோர்பலரோடு சேர்க்கையுள்ளவர்; வாய்மை முதலிய பல நற்குணம் வழுவாதவர்; பிராயம் மிகமுதிர்ந்தபின்பும் நரையில்லாதவர்.
வேற்றுநாட்டவராகிய இவர், கோப்பெருஞ்சோழனைப்பற்றிக் கேள்விப்பட்டிருத்தலே யொழிய நேரில் அவனை ஒருபொழுதுங் கண்டு பேசிப் பழகாதிருந்தும் அவனிடத்து உயிர்நண்புடையராயிருந்தார்: இங்ஙனமே

கோப்பெருஞ்சோழனுக்கும் இவரிடத்தில் மிக்க நண்பு நிகழ்ந்துவந்தது; இவர், அவனிடத்து மிக்கஅன்புபொருந்திய உரிமையால், தம்பெயரைப் பிறர்க்குச்சொல்லும்பொழுது 'என்பெயர் சோழன்' என்று அவன்பெயரைத் தம்பெயராகச்சொல்லும் இயல்புடையவராயிருந்தனர். இவர்பெயர் இரும் பிசிராந்தையா ரென்றும் வழங்கும். அவன், துறந்து வடக்கே சென்று சேர்ந்தபொழுது, தன நட்பாளராகிய பிசிராந்தையார் தன்நிலைமையைக் கேட்டுத் தவறுமல் இப்பொழுது தன்னிடம் வரக்கூடுமென்று நிச்சயித்து அவ்வுறுதியைத் தன்னுடனிருந்தசான்றோர்க்குச் சொல்லி அவர்க்காகஇடமொழித்துவைக்க வென்றுங் கூறி இவர்வரவை எதிர்பார்த்திருக்குமளவில், அவன்செய்தியைக்கேள்விப்பட்ட இவர், மனம்பொறுது உடனே தாமுந் துறந்து அவனிருந்தவிடத்தே சென்று அவன்உயிர்நீத்தபொழுது தாமும் உடன் உயிர்நீத்தனர்.

இங்குக் குறித்த விவரம், புறநானூற்றுச் செய்யுட்களால் விளங்கும்: தொல்காப்பியப் பொருளதிகார வுரையில் "தோழிதாயே" என்ற கற்பியற் சூத்திரத்தின்கீழ் 'இதற்குக் கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தை யாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தா ரென்றுகூறும் புறச்செய்யுட்கள் உதாரணம் என்றவாறு' என்று எழுதியதும் அறிக. "பொன்னுந் துகிரும்

முத்தும் மன்னிய, மாமலை பயந்த காமரு மணியும்,
இடைபடச்சேயவாயினுந் தொடைபுணர்ந்து, அருவிலை நன்கலம் அமைக்குங் காலை, ஒருவழித்
42



தோன்றி யாங்கு என்றுஞ் சான்றோர், சான்றோர் பால ராப, சாலார் சாலார்
பால ராகுபவே" என்று வடக்கிருந்த பிசிராந்தையாரைக் கண்ட கண்ண
கனார் பாடிய புறநானூற்றுச் செய்யுளிலும் இக்குறளின் கருத்து விளங்குதல்
காண்க.

அது - உணர்ச்சியொத்தல். உடன் உயிர்நீக்கும் உரிமைத்து ஆய-கூட
உயிர்விடும் உரிமையை யுடையதான. பயக்கும்-தரும்; உண்டாக்கும். பின்
னது - உணர்ச்சியொத்தல். புணர்ச்சி பழகுதல் - உம்மைத்தொகை. (௫)

எ௯௬. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(இ - ள்.) முகம் நக - (கண்டவழி அகம்ஒழிய)

முகம்மாத்திரமே மலரும்

வகை, நட்பது - நட்குமது, நட்பு அன்று-நட்பாகாது; நெஞ்சத்து-அன்பால்,

அகம் நக - அகமும் மலர, நட்பது - நட்குமதே, நட்பு - நட்பாவது; (எ-று.)

நெஞ்சின்கண் நிகழ்வதனை 'நெஞ்சு' என்றார். இறந்ததுதழீஇயஎச்ச

வும்மை, விகாரத்தால் தொக்கது; *அதனால், இரண்டும் ஒருங்கேமலரவேண்டு

மென்பது பெற்றாம்.

(கு - ரை.) கண்டவழி - பார்த்தபொழுது. அகம்ஒழிய - மனம்மகிழா

மல். நட்குமது - சிநேகிப்பது. நெஞ்சிற்பொருந்தும் அன்பை 'நெஞ்சு'

என்றது-இடவாகுபெயர். இறந்ததுதழுவியஎச்சவும்மை தொகுத்தல்விகாரப்

பட்டது, 'அகம்' என்பதன் இறுதியி லென்க. அதனால் - அவ்வும்மையால்.

அது; 'முகம்' என்றதைத் தழுவிநின்றது. இரண்டும் - முகமும், அகமும்.

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து"

என்னுமாறு முகமலர்ச்சியில்லாமைகாணுமிடத்து விருந்ினர்க்கு உண்டா

கும் வாட்டம் நண்பர்க்கும் பொருந்துவ தாதலால், நட்புக்கு அகமலர்ச்சி
யோடு அதன் அறிகுறியான முகமலர்ச்சியும் வேண்டுவ தாயிற்று. 'முகம்'
என்பதன் இறுதியில் பிரிநிலையேகாரம் விகாரத்தால் தொக்கது. நட்பது -
எதிர்காலத்தொழிற்பெயர்; காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற்று. நெஞ்
சத்து - மூன்றாம்வேற்றுமைத்தொகை: 'அகநக நட்பதே நட்பு' என்றும்
பாடமுண்டு.

(கூ)

எஅஎ. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

(இ - ள்.) அழிவின் அவை நீக்கி-கேட்டினைத்தரும் தீநெறிகளை(ச் செல்
லுங்கால்) விலக்கி, ஆறு உய்த்து-(ஏனை) நன்னெறிகளை(ச் செல்லாக்காற்)
செலுத்தி, அழிவின்கண் - (தெய்வத்தாற்) கேடுவந்துழி, (அது விலக்கப்
படாமையின்), அல்லல் - அத்துன்பத்தை, உழப்பது - உடன் அனுபவிப்
பதே, நட்பு ஆம் - (ஒருவனுக்கு) நட்பாவது; (எ - று.)

'ஆறு' என வருகின்றமையின், 'அழிவினைத் தரும் அவை' என்றொழி

ந்தார். "தெருண்டவறிவினவர்" என்புழிப்போல,
இன்சாரியை நிற்க இர

---

* பி - ம்:—இதனல்,

எகூ - ஆம் அதிகாரம்.—நட்பு ங்ங்க

ண்டனுருபு தொக்கது. இனி, 'நவை' என்று பாடமோதி,

அதற்கு - போ ரழிவினுஞ் செல்வவழிவினும் வந்த துன்பங்க ளென்றும், 'அழிவின்கண்' என்பதற்கு - யாக்கையழிவின்கண் என்றும் உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) செல்லுங்கால் - அவற்றிற் செல்லும்பொழுது. செல்லாக்கால் - அவற்றிற் செல்லாதபொழுது. தெய்வத்தால் - விதிவசத்தால். வந்துழி - வந்தவிடத்து. அது - அக்கேடு. ஆறு - வழி. அடைமொழியின்றிக் கூறுமிடத்துப் பொதுப்பெயர்கள் பெரும்பாலும் நல்லவற்றையேகாட்டுதல் இயல்புஆதலால், ஆறு - நல்லாறுஆயிற்று. பின்னே 'ஆறு' என வருவதனல், முன்னே 'அழிவினவை' என்றது - கேட்டைத்தரும்வழிகளை உணர்த்திற்றென்க; "செய்யுட்குஏற்புழி" [நன் - பொது - சஙு.] என்றபடி, செய்யுளாதலால் 'அவை' என்னுஞ் சுட்டுப்பெயர் 'ஆறு' என்னும் இயற்பெயர்

முன் வந்து வழியை புணர்த்திற்று; இது, வழுவமைதி. அழிவினைத் தரும் அவை யென்று ஒழிந்தார் - அழிவினைத்தருநெறிகளை யென்றது அழி

வினைத்தரும்அவை யென்று சுட்டியமாத்திரத்தோடு நிறுத்தினர். "தெருண்டவறிவினவர்" என்ற மேற்கோள், நாலடியார் - இரவச்சம் - (க) "நம்மாலே

யாவரிந் நல்கூர்ந்தா ரெஞ்ஞான் றுந், தம்மாலா மாக்க மில ரென்று - தம்மை, மருண்ட மனத்தார்பின் செல்பவோ தாமுந், தெருண்ட வறிவி னவர்" என்ற செய்யுளி லுள்ளது. 'தெருண்டவறிவினவர்' என்பதற்கு - தெளிந்த அறிவையுடைய அவர்கள் [நல்கூர்ந்தார்] என்று பொருள். என்புழி - என்றவிடத்து. அழிவின் அவை-இரண்டனுருபும்பயனுந்தொக்கதொகை. 'நவை என்று பாடமோதி' என்றது, 'அழிவினவை' என்றதை அழிவின் அவை யென்று கொள்ளாமல் அழிவின்நவை யென்று பிரித்துக்கொண்டு என்றபடி. அதற்கு - 'அழிவின் நவை' என்பதற்கு. போர்அழிவினும்-போரில் தோற்றவாலும். செல்வஅழிவினும் - பொருளஅழிதலாலும். இப்பொருள்களில், 'அழிவின்' என்பது - ஐந்தாம்வேற்றுமைவிரி; 'வந்த' என்பது, அவாய்நிலையால் வருவிக்கப்படும். யாக்கையழிவின்கண் - உடம்புஅழிந்தபோது. பிறருரைக்குக் கருத்து - தம்மிலொருவர்க்குப் போரில் தோற்றபொழுதாவது செல்வமழிந்தபொழுதாவது நேரிட்ட துன்பங்களை ஒழித்து நல்வழிச்செலுத்தித் தம்மிலொருவர்க்கு மரணம்நேருமாயின் அதற்காக அம்மரணத் துன்பத்தைப்பெறுவதே சிநேகதருமமென்பதாம். (எ)

எஅஅ. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

(இ - ள்.) உடுக்கை இழந்தவன் கை போல - (அவையிடை) ஆடை குலைந்தவனுக்கு (அப்பொழுதே) கை (சென்றுஉதவி அவ்விளிவரல் களையு மாறு) போல, இடுக்கண் ஆங்கு ஏ களைவது - (நட்டவனுக்கு) இடுக்கண்(வந்

வழி) அப்பொழுதே (சென்று உதவி அதனைக்) களைவதே, வது; (எ - று.)

நட்புஆம்-நட்பா



அற்றங்காத்தற்கண் கை தன்மனத்தினும் முற்படுதலின், அவ்விரைவு இடுக்கண் களைவுழியும் அதற்குஒத்த தொழிலுவமையினும் வருவிக்க. உடையவன்தொழில், நட்பின்மேல் ஏற்றப்பட்டது.

(கு - ரை.) பலர்கூடியஇடத்தில் ஒருவனுக்கு உடுத்தஆடை சடக்கென நெகிழ்த்துவிட்டால் அப்பொழுது அவன்கை விரைவில் அவ்வாடையை உடுத்தி அவனது மானத்தைக் காத்தல்போல, தம்மில்ஒருவனுக்குத் தீங்கு நேரும்பொழுது உடனேஉதவிசெய்து அத்தீங்கைஒழிப்பதே சிநேகதருமமென்க. நட்பாய்உதவித் துயர்தீர்த்தற்குக் கை உவமைகூறப்படுதலை "தோளுற்றொர் தெய்வந்துணையாய்த் துயர்தீர்த்த வாறும்" எனச் சிந்தாமணியிலுங் காண்க. "எனது தோள்களி லிளையவன் தனக்கு வேறுயா தெனு மெண்ணுடை மனத்தான்," "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்றஇடங்களில், வேண்டுவனசெய்யுந் தம்பி கையெனப்பட்டவாறுங் காண்க. ஆடைநெகிழ்ந்தவனுக்குமறைத்து மானங்காக்கவேண்டியஉறுப்பைத் தானே சென்று மறைத்து மானங்காத்தல்பற்றிக் கை உவமைகூறப்பட்ட தென்னலுமாம்.

அவையிடை - பலர்கூடியசபையினிடத்தில். குலைந்தவன் - நெகிழப் பெற்றவன். அவ்விளிவரல் களையுமாறு - அந்தஅவமானத்தை நீக்கும்விதம். நட்டவனுக்கு - சிநேகித்தவனுக்கு. இடுக்கண் - துன்பம். அதனைக் களைவது - அத்துன்பத்தைத் தீர்ப்பது. அற்றம் காத்தற்கண் - (அவமானம் நேராதபடி)

சமயத்திற் பாதுகாத்தலில். அற்றம் என்பதற்கு - சோர்வு அல்லது அவமானம் என்றும் பொருள்கொள்ளலுமாம். களைவுழியும் - தீர்க்கும்பொழுதும். அதற்கு ஒத்த - இடுக்கண்களைதற்கு உபமானமான. 'அதற்குஒத்த தொழிலுவமை' என்றது, 'அப்பொழுதேசென்று உதவி அவ்விளிவரல்களைதல்' என்றதை. உடையவன்தொழில் - நட்புடையான்துதொழில்; இடுக்கண்களைதல். அதனை நட்பின்மேல் ஏற்றி 'இடுக்கண்களைவதாம் நட்பு' என்றது, உபசார வழக்கு: குணிவினை குணவினையாகக் கூறப்பட்டது. 'உடையவன்தொழில் நட்பின்மேல் ஏற்றப்பட்டது' என்றது, முந்தின இரண்டுகுறள்களுக்கும் பொருந்தும்.

உடுக்கை - உடுக்கப்படுவ தென ஆடைக்குக் காரணப்பெயர்: உடு - பகுதி, ஐ - செயப்படுபொருள்விகுதி, கு - சாரியை, க் - சந்தி; இதனை, 'கை' விகுதிபெற்ற தொழிலாகுபெயராகவுங் கொள்ளலாம். துன்பம் நேர்ந்த காலத்திற் கண் இடுங்குதல்பற்றி, துன்பத்துக்கு இடுக்கணென்று ஏதுப்பெயர்; இடுங்குகண் என்பது இடுக்கண் என்று விகாரப்பட்டதென்க: காரியத்தின்பெயர், காரணத்தின்மேல் நின்றது. இதனை, தொல்காப்பியவுரையில் 'இடுக்கண் என்பது - மலர்ந்தநோக்கமின்றி மையல் நோக்கம்பட வரும் இரக்கம்' என்றதுகொண்டு அறிக. உவமையணி. (அ)

எ௮௯. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

(இ - ள்.) நட்பிற்கு வீற்றிருக்கை யாது எனின் - நட்பினுக்கு அரசிருக்கை யாதெனின்;—கொட்பு இன்றி - (அஃது எஞ்ஞான்றும்) திரிபு இன்றி,

எ௯ - ஆம் அதிகாரம்.— நட்பு ௩௩௩

ஒல்லும் வாய் - இயலுமெல்லையெல்லாம், ஊன்றும் - (அறம்பொருள்களில்)
தளராமைத் தாங்கும், நிலை - திண்மை; (எ - று.)
ஒருஞான்றும் வேறுபடாது மறுமையிம்மைகட்கு

உறுதியாய அறம்பொ

ருள்களில் தளர்ந்துழி அத்தளர்ச்சிநீக்கி

அவற்றின்கண்நிறுத்துதற்குமேல்

ஒருசெயலும் இன்மையின், அதனை 'நட்பிற்கு முடிந்த

எல்லை' என்றார்.

(கு - ரை.) அரசு இருக்கை - அரசாட்சிசெய்து

வீற்றிருத்தல்: என்

றது - இங்கே, மிக மேம்பட்டநிலைமை யென்றபடி.

அஃது - நட்பு. என்

ஞான்றும் திரிபு இன்றி - எந்நாளும் மாறுபடாமல்.

இயலும் எல்லை யெல்

லாம் - கூடும் இடங்களிலெல்லாம். தளராமை - தளராதபடி. தாங்கும் திண்மை - நன்றாக உதவும் வலிமை. ஒருஞான்றும் - ஒருபொழுதும். வேறுபடாது நிறுத்துதற்கு எனக் கூட்டுக. மறுமையிம்மைகட்கு உறுதியாய

அறம்பொருள்கள் - மறுமைப்பயன்விளைத்தலில் மிகவுறுதியான அறமும், இம்மைப்பயன்விளைத்தலில் மிகவுறுதியானபொருளும் என முறையே கொள்ளலாம்; அறம் இம்மைக்கும், பொருள் மறுமைக்கும் உறுதியாதலும் உண்டு. மறுமை - இப்பிறப்பொழிந்தபின் வரும்நிலை. இம்மை - இப்பிறப்பு; இவ்வுலகம். அறம் பொருள்களில் தளர்ந்த உழி - அறத்தைச் செய்தலிலும் பொருளைத் தேடுதலிலுஞ் சோர்ந்தபொழுது. அவற்றின்கண் - அறம்பொ

ருள்களில். அதனை - அங்ஙனம் நிறுத்துதலை. முடிந்த

மாகிய நிலைமை. வீற்றிருக்கை - வீறோடிருத்தல்; வீறு

எல்லை - பூர்ண

- மிக்க சிறப்பு.

டொட்பின்றி ஊன்றும் என்க.

(கூ)

ஏகூ0.

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

(இ - ள்.) 'இவர்—, எமக்கு - நமக்கு, இனையர் - இத்துணையன்பினர் யாம்—, இன்னம் - (இவர்க்கு) இத்தன்மையம்,' என்று—, புனையின் உம் : (ஒருவரை யொருவர்) புனைந்துசொல்லினும், நட்பு—,புல்லென்னும் - புல்லிதாய்த் தோன்றும்; (எ - று.)

'இவர்க்கு' என்பது, வருவிக்கப்பட்டது. தாம் அவர் என்னும்வேற்றுமை இன்றி *வைத்துப் புனைந்துரைப்பினும் வேற்றுமை உண்டாமாகலின் 'நட்புப்புல்லென்னும்' என்றார்.

இவ்வையைந்துபாட்டானும், நட்பினது இலக்கணம் கூறப்பட்டது.

(கு - ரை.) இத்துணை அன்பினர் - இவ்வளவு அன்புடையவர். இத்தன்மையம் - இவ்வளவு அன்புடையேம். புனைந்துசொல்லுதல் - இங்கே, ஒழுங்காக அலங்கரித்துக்கூறிச் சிறப்பித்தல். புல்லிது - அற்பமானது. 'எமக்கு' என்றதற்கு ஏற்ப, 'இவர்க்கு' என்பதை வருவித்தார். வேற்றுமையின்றி வைத்து - வேறுபாடில்லாமலிருந்து. புனையினும், உம் - உயர்வு சிறப்பு. புல்லென்னல்-பொலிவுகெடுதல்; புன்மை யெனப்படுதல். (க0)

* பி - ம்: வைத்தும் புனைந்துரைப்பின்.

## ௮0 - ஆம் அதிகாரம்.—நட்பாராய்தல்.

அஃதாவது - மேற்சொல்லிய இலக்கணத்தாரை ஆராய்ந்து அறிந்தே நட்கவேண்டுதலின், அவரை ஆராயுந் திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) மேல் சொல்லிய - முந்தின அதிகாரத்திற் சொல்லப்பட்ட.

இலக்கணத்தார் - நட்பிலக்கணமுடையவர். நட்க - சிநேகிக்க, நட்புக்கு உரியாரை. நட்பின் தன்மை இன்ன தென்றதன்பின், அவரை - நட்புக்கு உரிய சிறந்த இலக்கணமுடையாரை இன்னரென்று கூறுதல், அதிகாரமுறைமைக்குக் காரணம். 'நட்பு' ஆராயும் விதத்தைக் என்பது - ஆகுபெயராய், நட்பினர்மேல் நின்றது.

எகூக. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்

வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(இ - ள்.) நட்பு ஆள்பவர்க்கு - நட்பினை விரும்பி (அதன் கண்ணே) நிற்

பார்க்கு, நட்ட பின் - (ஒருவனோடு) நட்புச்செய்தபின், வீடு இல்லை-(அவனை)

விடுதல் உண்டாகாது; (ஆகலான்), நாடாது நட்டலின் - ஆராயாதுநட்புச்

செய்தல்போல, கேடு - கேடுதருவது, இல்லை - (பிறிது) இல்லை; (எ - று.)

ஆராய்தல்-*குணஞ்செய்கைகளது நன்மையை ஆராய்தல். கேடு - ஆகு

பெயர். நட்கின் தாம் அவர் என்னும் வேற்றுமையின்மையின் 'வீடில்லை'

என்றும், அவ்வேற்றுமையின்மையான் அவன்கட் பழிபாவங்கள் தமவா மாக

லின் இருமையுங்கெடுவ ரென்பதுநோக்கி 'நாடாதுநட்டலிற் கேடில்லை'

என்றுங் கூறினர்.

(கு - ரை.) அதன்கண்ணே - அந் நட்பிலே. ஆகலான் - ஆதலால்.

குணஞ்செய்கைகளது-குணமுஞ் செய்கையும் என்னு மிவற்றினுடைய. கேடு தருவதை, 'கேடு' என்றது-காரியவாகுபெயர். நட்கின்-சிநேகித்தால். வேற்றுமை - வேறுபாடு, வித்தியாசம், பேதம். அவன்கட் பழிபாவங்கள் தம

ஆம் - சினேகித்தவனிடத்துள்ள பழியும் பாவமும் தம்முடையவையாம். இருமையும் - இம்மை மறுமை யென்ற இரண்டிலும்: பழியால் இம்மையிலும் பாவத்தால் மறுமையிலுங் கெடுவ ரென்க. "பெரியோர், நாடி நட்பினல்லது, நட்டுநாடார்தம்மொட்டியோர்திறத்தே" என்ற நற்றிணையும், "இன்னு செயினுமினிய வொழிகென்று, தன்னையே தானோவினல்லது - துன்னிக், கலந்தாரைக்கைவிடுதல் கானகநாட, விலங்கற்கும் விள்ளலரிது" என்ற நாலடியும் இங்குஒப்புநோக்கத்தக்கன. (க)

எகூஉ. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை தான்சாந் துயரந் தரும்.

(இ - ள்.) ஆய்ந்து ஆய்ந்து - (குணமும் செய்கையும் நல்லனென்பதும் அல்ல னென்பதும்) பலகால் ஆராய்ந்தும் பலவாற்றான் ஆராய்ந்தும், கேண்மை கொள்ளாதான் - (ஒருவனோடு)

* பி - ம்:—குணச்செய்கைகளது.

ஙஙரு

௮0 - ஆம் அதிகாரம்.— நட்பாராய்தல்

நட்புக்கொள்ளாதவன்,—கடைமுறை -
முடிவில், தான் சாம் துயரம்-தான் சாதற்கு ஏதுவாய துன்பத்தினை, தரும் -
(தன்மாற்றார் விளைக்கவேண்டாமல் தானே) விளைக்கும்; (எ - று.)
'கடைமுறைக்கண்' என இறுதிக்கண்தொக்க ஏழாவது விரிக்க. குண
முஞ் செயலுந் தீயானொடு கொள்ளின் அவற்கு வரும் பகைமையெல்லாம்
தன்மேலவாய்ப் பின் அவற்றான் இறந்துவிடு மென்பதாம்.
இவையிரண்டுபாட்டானும், ஆராயாவழிப்படும்இழுக்குக்கூறப்பட்டது.
(கு - ரை.) அல்லன் - நல்லவனல்லாதவன்; தீயவன். பலகால் - பல
தரம். பலஆற்றான்-அநேகவழிகளால். மாற்றார் விளைக்கவேண்டாமல்-பகைவர் உண்டாக்கவேண்டாமலே. விளைக்கும் - உண்டாக்கிக்கொள்வான். இறு
திக்கண் தொக்க ஏழாவது- ஈற்றில் மறைந்த ஏழாம்வேற்றுமையுருபு. 'கடை
முறை' என்பதன் இறுதியில் தொக்குநின்ற 'கண்' என்னும் ஏழனுருபை
விரித்து 'கடைமுறைக்கண்'என்று கொள்க. குணமும் செயலும் தீயான்- தீய
குணமுந் தீயசெயலு முடையவன். கொள்ளின்-நட்புக்கொண்டால். அவற்கு-
அத்தீயவனுக்கு. தன்மேல ஆய்-தன்மேல்வருவனவாக.

அவற்றூன்-அப்பகை
மைகளால். ஆராயாவழிப் படும் இழுக்கு -
நட்பாராயாவிடின் உண்டாகுங்
குற்றம். கேண்மை கொள்ளாதான் என மாறுக.
கொள்ளாதான் என்ற ஆண்
பால்எழுவாய், தரும்என்னுஞ்செய்யுமென்முற்றைக்
கொண்டது. பலதரம்
பலவிதத்தால் ஆராயாமல் தகுதியல்லாதஒருத்தனைச்

சிநேகஞ்செய்துகொண்
டவன், பின்பு அவன்பகையால் தான் அழியநேரும்.
இனி, ஆய்ந்தாய்ந்து
கொள்ளாதான் ஒருவனேடு செய்யுங் கேண்மை, முடிவில்
அவனுக்குத் தான்
சாதற்குஏதுவாகிய துன்பத்தை யுண்டாக்கு மென
கடைமுறை - இறுதியெல்லை.

நேரேகூட்டவுமாம்.

(உ)

எகூ௩. குணனுங் குடிமையுங் குற்றமுங்
குன்ற

வினனு மறிந்தியாக்க நட்பு.

(இ - ள்.) குணன்உம் - (ஒருவன்) குணத்தினையும்,
குடிமைஉம் - குடிப்
பிறப்பினையும், குற்றம்உம் - குற்றத்தினையும், குன்ற
இனன்உம்-குறைவற்ற

சுற்றத்தினையும், அறிந்து - ஆராய்ந்துஅறிந்து, நட்பு யாக்க - (அவனோடு)
நட்புச்செய்க; (எ - று.)

குற்றமில்லாதார் உலகத்துஇன்மையின் உள்ளது பொறுக்கப்படுவதா யின் அவர்நட்பு விடற்பாற்றன்று என்பார் 'குற்றமும்' என்றும், சுற்றப்பிணி ப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டுவருதலின் 'குன்றுஇனனும்' என் றும், விடப்படின் தம்குறையா மென்பார் 'அறிந்தியாக்க' என்றுங் கூறினார்.

(கு - ரை.) சுற்றம் - உள்ளது - உள்ளகுற்றம்.

பந்துவர்க்கம். இன்மையின் - இல்லாமையால். பொறுக்கப்படுவது - பொறுக்கத்தக்கது. விடற் பாற்று அன்று - விடுதற்குரிய தன்மையையுடையது அன்று. சுற்றப்பிணிப் புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருதலின்-உறவினரோடு மனமொத்

திருப்பவர் அப்பயிற்சியால் சிநேகிதரோடும் மனமொத்து நடக்கக்கூடு மாத லால். 'தெரிந்துதெளிதல்' என்னும் அதிகாரத்தில் "அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர், பற்றிலர் நாணார் பழி" என்றதும், அக்குறட்பாவின் உரையிற் பரிமேலழகர் 'உலகத்தார்பழிப்பனவொழிதற்கும் புகழ்வனசெய்தற் கும்ஏதுவாகிய உலகநடையியல்பு சுற்றமில்லாதார்க்குஇன்மையின் அவர் தெளியப்படாரென்பதாம்' என்றதும், சுற்றமில்லாதவர் உலகத்தாரோடு தொடர்பிலராதலாற் பழியஞ்சாமைபற்றி அவர் தெளியத்தகாதவரென்பதை விளக்குதல் காண்க. விடப்படின் தம்குறையாம்-சிநேகிக்கத்தக்கவர் சிநேகி யாது விடப்பட்டால் விட்டவரது குற்றமாம்; தகாதவரைச்சிநேகித்தல் போலவே தக்கவரைச்சிநேகியாதொழிதலும் குற்றமா மென்க. குணம் குற் றம் குலம் உறவினம் என்னும் இவற்றை ஆராய்ந்து, குற்றமில்லாதவனோடும், குற்றம்மிகச்சிறிதேயிருக்கப் பெருநற்குணங்களையுடையவனோடும், உயர்குடிப் பிறந்தவனோடும், உறவினருடன் ஒற்றுமையுடையவனோடும் சிநேகஞ்செய்ய வேண்டு மென்பதாம். (ரு)

எகூச. குடிப்பிறந்து தன்கட் பழிநா ணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(இ - ள்.) குடி பிறந்து - உயர்ந்தகுடியின்கட் பிறந்து, தன்கண் பழி நாணுவானை - தன்மாட்டு (உலகர்சொல்லும்) பழிக்கு அஞ்சுவானை, கொடுத் துஉம் - (சில) கொடுத்தாயினும், நட்பு கொளல் - நட்புக்கோடல், வேண்டும்- சிறந்தது; (எ - று.)

குடிப்பிறப்பால் தான் பிழைசெய்யாமையும், பழியை யஞ்சலாற் பிழை த்தனபொறுத்தலும் பெற்றாம். இவையிரண்டும் உடையானைப் பெறுதலரு மையின், அவன்நட்பை விலைகொடுத்துங் கொள்க என்பதாம்.

(கு - ரை.) குடியின்கண் - குலத்தில். தன்மாட்டு - தன்னிடத்து. உல கர் - உலகத்தார். சில - அவன்விரும்பும் பொருள்கள் சிலவற்றை. நட்புக் கோடல் - சிநேகிதனாக்கிக்கொள்ளுதல். உயர்குடிப்பிறந்தவன் தான் பிழை செய்யாமையை "அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார், குன்றுவ செய்த லிலர்" என்பது முதலாக மேல் 'குடிமை' என்னும் அதிகாரத்துக் கூறுவத

ஞலும் உணர்க. நண்பர்செய்தபிழையைப் பொறுத்திடானுயின் அதுபழிப்பா மாதலால், பழியை அஞ்சுபவன் நட்பிற்பிழைபொறுத்திடுவனென்க. பிழைத்தன - பிறர் செய்த குற்றங்களை. "அஃதொருவன், விற்றுக்கோட் டக்க துடைத்து" என்றுற்போல, 'கொடுத்துங்கொளல்வேண்டும்' என்றுர்.

எகூரு. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(இ - ள்.) அல்லது - (தாம்) உலகவழக்கல்லது(செய்யக்கருதின்), அழ சொல்லி - சோகம்பிறக்கும்வகை சொல்லி(விலக்கி)யும், இடித்து - (செய்தக் காற் பின்னுஞ்செய்யாவகை) நெருக்கியும்; வழக்கு அறிய - அவ்வழக்குச்



செய்யாவழிச் செய்விக்கவும்; வல்லார் - வல்லாரை, ஆய்ந்து - ஆராய்ந்து, நட்புகொளல் - நட்புக்கொள்க; (எ - று.)

'அழச்சொல்லி', 'இடித்து' என வந்த பரிகாரவினைகளான், அவற் றிற்கு ஏற்ற குற்றவினைகள் வருவிக்கப்பட்டன. வழக்கு - உலகத்தார் அடிப் படச் செய்துபோந்த செயல். * தம்மொடுநட்டாரும் அறியும்வகை அறிவித் தல் அரிதாகலின், 'அறியவல்லார்' என்றுர்; இரண்டாவது, இறுதிக்கண் தொக்கது.

(கு - ரை.) உலகவழக்கு அல்லது - லோகத்தாரது நடத்தைக்கு மாறு

பட்டதை. சோகம் பிறக்கும்வகை - துக்க முண்டாம்படி. செய்தக்கால்-உலக

வழக்கல்லாததொழிலைச் செய்துவிட்டால். பின்னும் செய்யாவகை - மீள

வுஞ்செய்யாதபடி. நெருக்கியும் - கண்டித்தும், நிர்ப்பந்தித்தும். அவ்வழக்கு -

உலகவழக்கத்தோடு ஒத்த தொழில். செய்யாவழி - செய்யாவிட்டால். குற்ற

வினைகள் - செய்யக்கருதின், செய்தக்கால் என்பன. அடிப்படச் செய்து

போந்த செயல் - தொன்றுதொட்டுச் செய்துவந்த செய்கை. இரண்டாம்

வேற்றுமையுருபுதொக்கது, 'வல்லார்' என்பதன் ஈற்றில் என்க. தாம் மன

மொழிமெய்களால் தீயன தொடங்கும்பொழுது தமக்கு இடித்திடித்துக்கட்

டுரைகூறி அவற்றை விலக்கித் தம்மைக்கொண்டு நல்லன செய்விக்க வல்ல

அறிவும் அன்பும் திறமையும் உறுதியும் உடையவர் சினேகிக்கத்தக்கவரென்

பதாம்.

அறிய = அறிவிக்க;
பிறவினைப்பொருளில்வந்த தன்வினை: செய்விக்க

என்ற பொருளில் 'அறிய' என்றது, காரியத்தைக் காரணமாகக் கூறிய உப

சாரவழக்கு. இக்குறளில், 'அல்லது' என்பது - மத்திமதீபமாய், முன்னும்

பின்னும் இயைந்தது.

(ரு)

எகூரு. கேட்டினு முண்டோ ருறுதி
நீட்டி யளப்பதோர் கோல்.

கிளைஞரை

(இ - ள்.) கிளைஞரை நீட்டி அளப்பது ஓர் கோல் - (ஒருவனுக்குக்கேடு

என்பது) தன் நட்டாராகிய புலங்களை எஞ்சாமல் அளப்பது ஓர்கோல்: (ஆக

லின்), கேட்டின்உம் ஓர் உறுதி உண்டு-அதன்கண்ணும் அவனாற்பெறப்படுவ

தோர் நல்லறிவு உண்டு; (எ - று.)

தத்தம் நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் புறத்துத்

தோன்றாமற்போந்தார் பின்கேடுவந்துழிச் செயல்வேறுபடுதலின் அக்கேட்

டால் அவை வரையறுக்கப்படுமென்பதுபற்றிக் கேட்டினைக் கோலாக்கியும்,

அதனால் அவரை அளந்தறிந்தால் ஆவாரையே

கோடலின் அவ்வறிவை

'உறுதி' என்றுங் கூறினர். கிளைஞர் - ஆகுபெயர். இஃது - ஏகதேசவுருவகம்.

இவைநான்குபாட்டானும், ஆராயுமாறும், ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவரென்பதூஉம் கூறப்பட்டன.

---

* பி - ம்: தாம்அறிதலேயன்றித் தம்மொடுநட்டாரும் அறியும்வகை.

43



(கு - ரை.) ஒருவனது சிநேகத்தின் தன்மையை, மற்றொருவன், தனக்கு ஆபத்து நேர்ந்தகாலத்து அவன் உதவுதலும் உதவாமையுங் கொண்டு, தெளிவாக அறியலாமென்க. இங்ஙனம், ஒருவனுக்குக்கேடுநேர்தல் அவன் தனது சிநேகிதரின் அளவை ஐயந்திரிபற நன்குஅறிதற்குக் கருவியாகின்றதென, தீயதனிடத்து நன்மையுண்மையைக் கூறுதலால், இலேசவணியாம்; அதாவது-குணத்தைக் குற்றமாகவும், குற்றத்தைக் குணமாகவுங் கற்பித்தல்.

கேடு - செல்வஅழிவு. புலம்-நிலம். எஞ்சாமல்-மிச்சமில்லாமல். கோல்அளவுகோல். அதன் கண்ணும் - அக்கேட்டிலும். தத்தம் நட்பு எல்லை - தம் தமதுசிநேகத்தின் அளவு. செல்வக்காலத்துப் புறத்துத் தோன்றுமற் போந்தார் - ஒருவர் செல்வமுடையராயிருந்தகாலத்தில் தாம் உண்மையற்ற

சிநேகமுடையவ ரென்று வெளிக்காணவொண்ணுதபடி மிக்கசிநேகிதர் போல வெளிக்காட்டி நடந்தவர். செயல்

வேறுபடுதல் - சிநேகத்துக்கு உரிய தன்மைகள் குறைதல். அவை - அந்நட்பெல்லேகள். வரையறுக்கப்படும் - அளவிட்டறியப்படும். அதனுல் - கேடாகிய கோலினுல். ஆவாரையே கோடலின் - தக்கவரையே நட்பாக்கொள்ளக்கூடு மாதலால். உறுதி - நன்மை தருவது. 'கிளேஞர்' என்றது - இங்கே, அவரது நட்பெல்லேகளேக் குறித்தலால், பொருளாகுபெயராம். கேட்டை 'கோல்' என்றதற்கு ஏற்ப, கிளேஞரை 'புலம்' என்னுமையால், ஏகதேசவுருவகவணி. ஆராயும் ஆறு - ஆராயும் விதம். உம்மை - இழிவுசிறப்பு. உறுதிதருவதை, உறுதியென்றது - ஆகுபெயர். 'கேட்டின்' என வருதலால், 'கோல்' என்ற பெயர்ப்பயனிலேக்கு, 'கேடு' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.
(சு)

எகூஎ.

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, ஊதியம் என்பது - பேறு என்று சொல்லப்படுவது, பேதையார் கேண்மை ஒரீஇ விடல் - அறிவிலாரோடு நட்பு(க்கொண்டானுயின் அதனே) ஒழிந்து (அவரின்)

நீங்குதல்; (எ - று.)

நட்பு ஒழிந்தாலும் நீங்காக்கால்
வெறிகமழ்சந்தனமும் வேங்கையும் வேமாறு போலத்
தீங்குவருதலின் 'விடல்' என்றும், நீங்கியவழித் தீங்கொழி
தலேயன்றி இருமையின்பத்திற்கு உரிமையெய்தலு
முடைமையின் அதனை 'ஊதியம்' என்றுங் கூறினர்.

(கு - ரை.) பேறு - லாபம். அதனை - அந்நட்பை.
அவரின் நீங்குதல் - அவரைவிட்டுப் பிரிதல். நீங்காக்கால்
- (அவரைவிட்டுப்) பிரியாவிட்டால். வெறிகமழ்
சந்தனமும் வேங்கையும் வேமாறு போலத் தீங்கு வருதலின்
- வாசனைவீசுகின்ற சந்தனமரமும் வேங்கைமரமும்
(மூங்கிலின் சேர்க்கையால்) வெந்து அழிவதுபோல
அறிவிலாரது சேர்க்கையால் தனக்குத்
தீமையுண்டாகுமாதலால்: "மனத்தான் மறுவில ரேனுந்
தாஞ் சேர்ந்த, இனத்தா லிகழப்படுவர் - புனத்து,
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே,

எறிபுனந்தீப்பட்டக் கால்" என்பது, நாலடியார் -
நல்வினஞ்சேர்

•

## ௮௦ - ஆம் அதிகாரம்.—நட்பாராய்தல்

தல் - ௬௦. "சந்தனத்தைச் சேர்தருவுந் தக்க மணங்கமழுஞ், சந்தனத்தைச் சார்வேய் தழல்பற்ற - அத்தவனந், தானுமச் சந்தனமுந் தன்னினமு மாள்வ தன்றித், தானுங் கெடச்சுடுமே தான்" எனப் பின்னோர் கூறுவதுங் காண்க. நீங்கியவழி - பிரிந்தவிடத்து. இருமை யின்பத்திற்கு உரிமை எய்தல் - இம்மை மறுமையின்பங்கட்கு உரிய தன்மையை யடைதல். 'என்பது' எனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது; செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினையென்க. ஒரீஇ-ஒருவியென்னும் வினையெச்சம் விகாரப்பட்டு அளபெடுத்தது; சொல்லிசையளபெடை: மாத்திரைமூன்று.(எ)

எகூ௯.

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(இ - ள்.) உள்ளம் சிறுகுவ - (தம்) ஊக்கம் சுருங்குதற்குக் காரணமாய வினைகளை, உள்ளற்க - செய்ய நினையாதொழிக; (அதுபோல), அல்லற்கண்

ஆற்று அறுப்பார்
பினை, கொள்ளற்க

நட்பு - (தமக்கு) ஒருதுன்பம்வந்துழிக் கைவிடுவார் நட்
- கொள்ளாதொழிக; (எ - று.)

உள்ளஞ் சிறுகுவ வானை - தம்மின் வலியாரோடு தொடங்கியனவும், பயனில்லனவுமாம். 'ஆற்று' என்பது - முதனிலைத்தொழிற்பெயர். முன்னெ

ல்லாம் வலியராவார்போன்று ஒழிதலின், ' * ஆற்றறுப்பார்'
துக்காட்டுவமை. கொள்ளின் அழிந்தேவிடுமென்பதாம்.

என்றார். எடுத்

(கு - ரை.) ஊக்கம் - மனவெழுச்சி; உற்சாகம். தம்மின் வலியாரோடு தொடங்கியன - தம்மைக்காட்டிலும் வலிமையுடையவரோடு செய்யத்தொடங்கிய போர்த்தொழில்கள். பயன் இல்லன - பிரயோஜனமில்லாதவை. ஆற்று — ஆற்றல், ஆற்றுதல்: வலிமையாய் உதவுதல்; அதனையொழிப்பவர், ஆற்றறுப்பார். முதனிலைத்தொழிற்பெயர் - பகுதியே தொழிற்பெயர்ப்

பொருளையுணர்த்துவது: [முதனிலை - பகுபதத்தின்முதலில் நிற்பது, பகுதி;] இதில், தொழிற்பெயர்விகுதி புணர்ந்து கெடும். முன் எல்லாம் வலியராவார்

போன்று - துன்பம்வருதற்கு முன்பெல்லாம் வலிமையுடையராய் உதவுபவர் போலிருந்து. ஒழிதலின் - துன்பம்வந்தவிடத்து வலிமையுடையராய் உதவாமையால். 'உள்ளற்க உள்ளஞ்சிறுகுவ' என்ற உபமானவாக்கியத்திற்கும், 'கொள்ளற்க அல்லற்கண் ஆற்றறுப்பார்நட்பு' என்ற உபமேயவாக்கியத்திற்கும் இடையில் உவமவுருபுகொடாமற் கூறியதனால், எடுத்துக்காட்டுவமையணி; இதனை வடநூலார் த்ருஷ்டாந்தாலங்கார மென்பர். மனந்தளர்தற்குக்காரணமான தொழில் செய்யநினைத்தற்குத்தகாதவாறுபோல, காலத்தில் உதவாதவரதுநட்பு ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று

ஆபத்துக்
என்பதாம்.
கொள்ளின் - துன்பம்வந்தபொழுது
கைவிடுபவரதுநட்பைக்கொண்டால், அழிந்தேவிடும்

- கொண்டவன் தவறாமல் அழிந்தேவிடுவன். (அ)

எ௬௯௯. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை

யுள்ளினு முள்ளஞ் சுடும்.

---

* பி - ம்:—'வலியறுப்பார்'



(இ - ள்.) கெடும் காலை கைவிடுவார் கேண்மை - (ஒருவன்)கெடுங்கால
த்து (அவனை விட்டு) நீங்குவார் (முன் அவனோடுசெய்த) நட்பு,—அடும் காலை
உள்ளின் உம் - (தன்னைக்கூற்று) அடுங்காலத்து (ஒருவன்) நினைப்பினும்,
உள்ளம் சுடும் - (அந் நினைத்த) உள்ளத்தைச் சுடும்; (எ - று.)

நினைத்ததுணையானே இயைபில்லாதபிறனுக்கும் கூற்றினுங்கொடிதா
மென, கைவிடெண்ணிச்செய்தநட்பின் கொடுமை கூறியவாறு. இனி, அவன்
தானே ஆக்கிய கேடு தன்னை அடுங்காலை உள்ளினும் அக்கேட்டினுஞ் சுடு
மென்று உரைப்பாரும் உளர்.

இவைமூன்றுபாட்டானும், ஆராய்ந்தால் நட்கப்படாதார் இவரென்பது
கூறப்பட்டது.

(கு - ரை.) ஒருவனைத் துன்பம்வந்தகாலத்தில் அவனது சிநேகிதர்கள்
அடுத்துஉதவிப் பாதுகாவாமல் விட்டுநீங்கின ரென்ற தன்மையை யாதொரு
சம்பந்தமுமில்லாத அயலானொருவன் கேள்விப்பட்டிருந்து அத்தன்மையை
அவன் தன்மரணகாலத்தில் நினைப்பானாயினும் அது அப்பொழுது அம்மரண
வேதனையினும் அவன்மனத்தை மிகவருத்துமென்பதாம். இங்ஙனம் ஒரு
வனைச் சிநேகிதர் சமயத்திற் கைவிட்டகொடுமை நண்பனல்லாதவொருமல
னை நெடுநாள்கழித்தபின்பும் நினைத்தமாத்திரத்திலும் கூற்றினுங்கொடிதாய்
வருத்தும் என்றதனால், அது அவனை அக்காலத்தில் இன்னபடி வருத்து
மென்றல் கூறவேண்டாதாயிற்று.

கெடுங் காலத்து - துன்பமடையும் பொழுது. கூற்று அடுங்காலத்து -
யமன்கொன்றுவருத்துங்காலத்து; மரணவேதனைப்படுங்காலத்தில் என்றபடி.
ஒருவன் - அயலானொருத்தன். சுடும் - மிகவருத்தும் என்றபடி. நினைத்த
துணையானே - நினைத்தமாத்திரத்தாலே. இயைபு இல்லாத-சம்பந்தமில்லாத.
கூற்றினும் கொடிது - யமனைக்காட்டிலுங் கொடியது.

கைவீடு எண்ணிச்
செய்த நட்பு - ஆபத்துக்காலத்தில்
தாம்விட்டுவிடகினைத்து முன்பு செய்த
சிநேகம்.

இனி, இரண்டாவதுஉரைக்குக்கருத்து:—ஒருவன்
துன்புறுங்காலத்து
அவனைக் கைவிடுபவர் முன் அவனேடுசெய்த சிநேகம், அவ
ன் தானே தனக்
குச் செய்துகொண்ட தீங்கு
தன்னையழிக்குங்காலத்துநினைத்தாலும், அத்
தீங்கினும் மிகவருத்தும் என்பதாம்; ஒருவன்
வரைபாய்ந்தும் நீரிலேனும்
நெருப்பிலேனுங்குதித்தும் தற்கொலைசெய்துகொள்ள
முயன்றமுயற்சி தன்
னைக் கொல்லும்பொழுது நினைத்தாலும் அவ்வருத்தத்தினும்
மிகவருத்துவது,
கெடுங்காலைக்கைவிடுவார்கேண்மை யென்க. ('அவன்
தானே' என்பதற்கு -
கெடுங்காலத்துக்கைவிட்டவன்தானே யென்று
பொருள்கொள்ளலாகாது;
மூலத்தில் "கெடுங்காலைக் கைவிடுவார்" என்று
பன்மையாகவுள்ளதனேடு
மாறுபடுதலால்.)

இனி, இக்குறளுக்கு,
கெடுங்காலைக்கைவிடுவாரதுகேண்மை அது
கொண்டவனுக்குத் தன்னைக் கூற்றுவன்

௪க - ஆம் அதிகாரம்.—பழமை ௩௪க

ளைத்த உள்ளத்தை அக்கூற்றுவனினுங் கொடிதாய்வருத்து
மென்று பொருள்
கொள்ளுதல், எளியவழியாம்.

(கூ)

௪00. மருவுக மாசற்றார் கேண்மையொன்
றொருவுக வொப்பிலார் நட்பு.

றீத்து

(இ - ள்.) மாசு அற்றார் கேண்மை - (உலகோடு
ஒத்துக்) குற்றமற்றார்
நட்பினையே, மருவுக - பயில்க; ஒப்பு இலார் நட்பு -
உலகோடு ஒத்தலில்லார்
நட்பினை, (அறியாது கொண்டாராயின்), ஒன்று ஈத்து
உம் ஒருவுக - (அவர்
வேண்டியது) ஒன்றனைக் கொடுத்தாயினும் விடுக; (எ -
று.)

உலகோடொத்தார்நட்பு இருமையின்பமும்பயத்தலின்
'மருவுக' என்றும்,
அதனோடுமொராயினார்நட்புத் துன்பமேபயத்தலின் அதன்
ஒழிவை 'விலை

கொடுத்துங் கொள்க' என்றுங் கூறினர்.

இதனான், அவ்விருமையுந் தொகுத்துக்கூறப்பட்டன.

(கு - ரை.) உலகோடு - உலகத்தவரோடு; உயர்ந்தவரொழுக்கத்தோடு எனினுமாம். ஒத்து - மாறுபடாமல். பயில்க - ஏற்றுக்கொண்டு பழகவேண்டும். கொண்டாராயின் - கொண்டாரானல். உலகோடொத்தார்நட்பு இருமையின்பமும் பயத்தல், அவரிடத்துப் புகழும் புண்ணியமுந் தமவா மாகலான்.

"புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே, ஒப்புரவி னல்ல பிற" என்றதனாலும், உலகத்தோடொத்தசெயலின்சிறப்பை யுணர்க. அதனேடு மாறுயினர் - உலகத்தோடு மாறுபட்டவர். அதன் ஒழிவை - அச்சிநேகத்தின் நீக்கத்தை. அவ்விருமையும் - அவ்விரண்டும்; ஆராய்ந்தால் நட்கப்படுவா ரிவ ரென்பதும், ஆராய்ந்தால் நட்கப்படாதா ரிவ ரென்பதும். கீழ் எகூ௬ - ஆங் குறளில் நல்லவர்நட்பை 'கொடுத்துங் கொளல்வேண்டும்' என்றாற்போல, இங்கே தீயவர்நட்பை 'ஒன்றீத்தும் ஒருவுக' என்றார். வலிய ஒழிக்கத்தக்கது என்பதாம்.

ஈத்து - ஈந்து என்பதன் முதற்சொரூபம்; இதுவே, ஈந்து என மெலி

வது. 'ஈத்து' என்பதும், 'ஈந்து' என்பதுபோலவே இலக்கியங்களிற் பயின்றுவரும்; "ஈத்துவக்கு மின்பம்" என்றார், ஈகையென்றஅதிகாரத்திலும். 'ஈத்தலும் ஈதலும் போலப் பாத்தலும் பாதலும் ஒன்று' எனத் தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர் உரைத்தது கொண்டு, ஈத்து என்றதை ஈந்துஎன்பதன் வலித்த லென்றல் பழையஇலக்கணநூற்கொள்கைக்குச் சிறவாதென்று தெரிகின்றது. (அன்றியும், "வலித்தல் மெலித்தல்" என்னுஞ்சூத்திரத்து 'வேண்டுழி' என்றதனால் எதுகைதளைமுதலிய யாப்பிலக்கணத்திற்கு இன்றியமையாதவிடத்துமாத்திரமே செய்யுள்விகாரம் வருதற்கு உரியதென்பதும், அப்படிப்பட்டஅவசியம் ஒன்றும் இல்லாத இடத்திலும் 'ஈத்து' எனச் சான்றோர்செய்யுள்களிற் பிரயோகமுள்ளதென்பதும், குறளிலும் அங்ஙனமே யென்பதும் அறிக.)

இக்

(௧௦)

## அக - ஆம்

## அதிகாரம்.—பழமை. அஃதாவது - நட்டாரது

பழையராந்தன்மை பற்றி அவர்பிழைத்தன
பொறுத்தல்; காரணப்பெயர், காரியத்திற்கு ஆயிற்று.
ஆராய்ந்து நட்கப்



பட்டா ரெனினும் பொறுக்கப்படுங்குற்றமுடையராகலானும் ஊழ்வகையர் னும் நட்டார்மாட்டுப் பிழையுளதா மென்பது அறிவித்தற்கு, இது நட்பா ராய்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) நட்டார்-நண்பர். அவர்பிழைத்தன-அவர்கள்செய்த பிழைகளை. பழமையாகிய காரணப்பெயர், அதுபற்றிச் செய்யப்படும் பிழைபொறுத்தலாகிய காரியத்திற்கு ஆகுபெயர்; காரணவாகுபெயர். நாலடியாரில் நட்பாராய்தலென்னும்அதிகாரத்தின்பின் அந்நண்பரிடத்துஉள்ளனவாகும் பிழைகளைப் பொறுத்தல் சிரேகதருமமா மென்று கூறும் அதிகாரத்திற்கு 'நட்பிற்பிழைபொறுத்தல்' என்று பெயர். ஊழ்வகையானும் - விதிவசத்தாலும். நட்டார்மாட்டு-சிநேகிதரிடத்தில். இது-பழமையென்ற அதிகாரம்.

௮0௧. பழமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(இ - ள்.) பழமை எனப்படுவது யாது எனின் - பழமையென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்,-(அது),—கிழமையை - (பழமையோர்) உரிமையாற் செய்வனவற்றை, யாதுஉம் கீழ்ந்திடா - சிறிதும் சிதையாது (அவற்றிற்கு) உடம்படும், நட்பு—; (எ - று.)

கிழமை - ஆகுபெயர்; 'கெழுதகைமை' என வருவனவும் அது. உரிமையாற்செய்வனவாவன - கருமமாயினசெய்யுங்காற் கேளாதுசெய்தல், கெடும் வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவச்சங்களின்மை

என்றிவை முதலாயின. சிதைத்தல் - விலக்கல்.

இதனால், 'பழமையாவது - காலஞ்சென்றதன்று: இப்பெற்றித்தாய நட்பு' என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) வினவின் - கேட்டால். அது - அப்பழமை. சிதையாது- விலக்காமல். உடம்படும் - சம்மதித்திருக்கின்ற. கிழமை - உரிமை; இங்கே, உரிமையாற் செய்வனவற்றிற்கு, காரணவாகுபெயர். உரிமைகுறிக்கின்ற 'கெழுதகைமை' என்ற சொல் இங்ஙனங் காரணவாகுபெயராதலே, அடுத்த இரண்டுகுறள்களிற் காண்க. ஆனதுபற்றியே, 'வருவன' என்று பன்மையாற் கூறினார். அது - ஆகுபெயரென்றபடி. கருமமாயின - காரியங்கள். இப்பெற்றித்து ஆய - இப்படிப்பட்டதான. செய்யுங்கால்-செய்யும்போது. கோடல் - கொள்ளுதல். பணிவு அச்சங்கள் இன்மை - வணக்கமும் பயமும் இல்லாமை. நெடுநாளாகநடந்துவருகிறபழக்கமாத்திரமே பழமையெனத் தக்கதன்று: அப்பழக்கத்தால் நட்பிற்பிழைபொறுத்தலே பழமையெனத்தக்கது என்பதாம்.

(க)

௮0௨.

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

(இ - ள்.) நட்பிற்கு—, உறுப்பு-அவயவமாவன,—கெழுதகைமை - (நட்டார்) உரிமையாற்செய்வன; (அதனால்), அதற்கு - அவ்வுரிமைக்கு, உப்பு ஆதல் - இனியராதல், சான்றோர்

கடன்-அமைந்தார்க்கு முறைமை; (எ-று.)

## அக - ஆம் அதிகாரம் —பழமை

ருசரு.

வேறன்மை தோன்ற, 'உறுப்பு' என்றார். 'உறுப்பு'
என்பது - ஈண்டு,
இலக்கணையடியாகவந்த குறிப்புச்சொல்.
அவயவமாதலறிந்தே இனியராவ
ரென்பது தோன்ற, சான்றோர்மேல் வைத்தார்.
(கு - ரை.) உறுப்பு-அங்கமென்பதுபோலக் கொள்க.
உப்பு-இனிமை;
இனியவர்க்குப் பண்பாகுபெயர். சான்றோர் - கல்வி
கேள்வி அறிவு ஒழுக்கம்
முதலிய பலகுணங்களாலும் நிறைந்தவர். முறைமை -
நீதி. வேறு அன்மை-
வேறல்லாமை; நட்பிற்கும்
நட்டார்உரிமையாற்செய்வனவற்றிற்கும் உள்ள
ஒற்றுமை. ஈண்டு - இங்கு. இலக்கணை - ஆகுபெயர்;
வடமொழி - லக்ஷணா.
உறுப்புப்போல்வதை 'உறுப்பு' என்றது -
உவமவாகுபெயர். பொருட்குக்
கூறும் உறுப்பை

இங்கே பண்பிற்குக் கூறியதனால், 'இலக்கணையடியாக வந்த
குறிப்புச்சொல்' என்றார். ஒன்றற்குஉரியதை
மற்றொன்றுக்கு அமைப்பது,
இலக்கணையாம். குறிப்புச் சொல் -
குறிப்பாற்பொருளுணர்த்துஞ் சொல்.
ஆகுபெயர் குறிப்புச்சொற்களிலொன்றாவதை
"ஒன்றொழிபொதுச்சொல்
விகாரந் தகுதி, ஆகுபெய ரன்மொழி வினைக்குறிப்பே,
முதல் தொகை குறிப்
போ டின்னபிறவுங், குறிப்பிற்றருமொழி அல்லன
வெளிப்படை" என்னும்
நன்னூலானும் உணர்க. அவயவமாதல் - நண்பர்
உரிமையாற்செய்வன
உறுப்பாயிருத்தல். இனியராவர் - அவ்வுரிமைக்கு
உடம்பட்டுமகிழ்வரென்ற
படி. நண்பர் உரிமையாற்செய்யுஞ்செயல்கள் நண்பிற்கு அங்க மாதலால், அங்ஙனஞ்செய்தவற்றை வெறுக்காமல் அவற்றிற்கு மகிழ்தல் பெரியோரியல்பு என்பதாம். (உ)

அ0௩. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(இ - ள்.) கெழுதகைமை - (தாம் உடம்படாதனவேனும் நட்டார்) உரிமையாற்செய்தனவற்றிற்கு, செய்து ஆங்கு அமையாக்கடை - (தாம்) செய்
தாற்போல உடம்படாராயின், பழகிய நட்பு எவன்
செய்யும் - (அவரோடு)
பழையதாய்வந்த நட்பு என்னபயனைச் செய்யும்? (எ - று.)

செய்தாற்போல உடம்படுதலாவது - தாமும் அவரிடத்துஉரிமையால்
உடன்படுதல்.

இவையிரண்டுபாட்டானும், பழமையான்வரும் உரிமையது சிறப்புக்
கூறப்பட்டது.
(கு - ரை.) உடம்படாதனவேனும் - சம்மதியாதகாரியங்களா யிருந்தா
லும். தாம் செய்தாற்போல - தாமே அக்காரியங்களைச் செய்ததுபோலப்
பாவித்து. 'என்செய்யும்' என்றது. யாதொருபயனையுஞ்செய்யாது என
இன்மைகுறித்துநின்றது. செய்து—செய்தால்: எச்சத்திரிபு. ஆங்கு - உவம
வுருபு. அமையாக்கடை - எதிர்மறைவினையெச்சம்; கடை-விகுதி: இதுவே
எதிர்காலங்காட்டும். கெழுதகைமை - இறுதியில் நான்காம்வேற்றுமைத்
தொக்குள்ளது.
(ரு) ௲௩௪

திருக்குறள்

௮0௪. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்

கேளாது நட்டார் செயின்.

(இ - ள்.) (தம் கருமத்தை), நட்டார்—,
கெழுதகையான்-உரிமையால்,
கேளாது செயின் - கேளாதுசெய்தாராயின், விழை
தகையான் - (அச்செய
லது) விழையப்படுந்தன்மைபற்றி, வேண்டியிருப்பர் -
(அதனை) விரும்புவர்,
(அறிவுடையார் ; (எ - று.)

ஒருவர்க்குத் தம்கருமம் தாம்அறியாமல்
முடிந்திருத்தலினூங்கு நன்மை
இன்மையின், அச்செயல் விழையத்தக்கதாயிற்று.
அதனை அவ்வாறு
அறிந்துவிரும்புதல் அறிவுடையார்க்கல்லதுஇன்மையின்,
அவர்மேல்வைத்
துக்கூறினர். 'வேண்டியிருப்பர்' என்பது -
'எழுந்திருப்பர்' என்பது போல
ஒருசொல்நீர்மைத்து.

இதனால், கேளாதுசெய்துழி
அதனைவிரும்புகவென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) விழையப்படும் - விரும்பப்படும்.
அதனை - அச்செயலை.
முடிந்திருத்தலின் ஊங்கு-முடிந்திருத்தலைக்காட்டிலும் மேலான. அவ்வாறு
அறிந்து - விரும்பத்தக்கதாக அறிந்து. அவர்மேல் - அறிவுடையார்மேல்;
'அறிவுடையார்' என்ற தோன்றாஎழுவாய் வருவித்ததற்குக் காரணங்காட்டி
யவாறு. நீர்மைத்து - தன்மையது. 'எழுந்திருப்பர்'

என்பது-எழுவார் என்று
பொருள்படுமிடத்து, ஒருசொல்லின் தன்மையது;
அவ்வாறே, 'வேண்டியிருப்
பர்' என்பது - வேண்டுவரென்றுபொருள்பட்டதனால்,
ஒருசொல்தன்மைய
தாயிற்று. செய்துழி - செய்தஉழி: செய்தவிடத்து.
அதனை-அச்செயலை. (ச)

அ0ரு. பேதைமை யொன்றோ பெருங்கிழமை
யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

(இ - ள்.) நோ தக்க - (தாம்)
வெறுக்கத்தக்கனவற்றை, நட்டார்—,
செயின் - செய்தாராயின்,-(அதற்குக்
காரணம்),-பேதைமை ஒன்று ஒ பெருங் கிழமை என்று
உணர்க - ஒன்றிற் பேதைமையென்றுதல் ஒன்றில் மிக்க
உரிமையென்றுதல் கொள்க; (எ - று.)
'ஒன்றோ' என்பது - எண்ணிடைச்சொல். 'செயின்'
எனவே, தம் இயல்பாற் செய்யாமை பெற்றும்; இது,
வருகின்றவற்றுள்ளும் ஒக்கும். இழ வூழான் வரும்
பேதைமை யாவர்க்கும்உண்மையின் தமக்குஎதங்கொண்டா
ரென்றுதல், ஊழ்வகையான் எம்மின் வரற்பாலது
ஒற்றுமைமிகுதி பற்றி அவரின்வந்த தென்றுதல்
ளப்படா தென்பதாம்.

கொள்வதல்லது, அன்பின்மையென்று கொள்

கெடும்வகை செய்யின், அதற்குக் காரணம் இதனைற்
(கு - ரை.) பேதைமை -
கூறப்பட்டது. ஆவது: விகற்பப்பொருளது.

அறியாமை. ஒன்றில்-ஒருபக்ஷத்தில். ஆதல் -
உணர்க - அறியக்கடவர். இது - இயல்பாற்
செய்யாமை. வருகின்றவற்றுள்ளும்-மேல் 7, 8-திருக்குறள்களிலும்: தொலைவு
வந்தவிடத்தும் என்றதையும் 'வருகின்றவற்றுள்ளும்' என்பது குறிக்குமென்
:

அக - ஆம் அதிகாரம்.—பழமை ௩சரு

பாருமுளர். இழவூழ் - இழவுஊழ்:

கேடுறுதற்குக் காரணமாகிய வினைப்ப
யன். இழவூழான் வரும் பேதைமை - கீழ் 'ஊழ்'
என்ற அதிகாரத்தில்
"பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும், ஆகலூழ்
உற்றக்கடை" என வந்

தமை யுணர்க. உண்மையின் - உளதாதலால்.ஏதம்கொண்டார் - தீங்குசெய்தார். ஆதல் - ஆவது. எம்மின் வரற்பாலது - எம்மால் வரக்கடவது. அவரின் - அந்நண்பரால். 'ஒன்றோ' என்ற எண்ணிடைச்சொல்லைப் பெருங்கிழமையென்பதனோடுங் கூட்டி, பேதைமையும் பெருங்கிழமையும் என்று உணர்க எனக் கொள்ளவேண்டும். இதனை விகற்பப்பொருளதென்றலும் பொருந்தும். இவ்வகைப்பிரயோகத்தை "பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப், பேதை வினைமேற் கொளின்" என்னுந் திருக்குறளிலும், "காவலன் மக்களாக்கங்கண்டு கண்குளிர்ந்துநோக்கி, ஏவலா னரசனென்றோ விருபிறப்பாள னல்லார்க், காவதன் றின்னமாட்சி" எனச் சிந்தாமணியிலுங் காண்க. இனி, 'ஒன்றோ' என்பதற்கு - ஒன்று மாத்திரமோ என்றுங் கொள்ளலாம். (௫)

௮0௬. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

(இ - ள்.) எல்லைக்கண் நின்றார் - நட்புவரம்புஇகவாது அதன்கண்ணே நின்றவர்,—தொல்லைக்கண் நின்றார் தொடர்பு - (தம்மோடு) பழமையின் திரியாது நின்றாரது நட்பினை, தொலைவு இடத்தும் - (அவரால்) தொலைவு வந்தவிடத்தும், துறவார் - விடார்; (எ - று.)

பழமையின் திரியாமை - உரிமையொழியாமை. தொலைவு - பொருட்கேடும், போர்க்கேடும்.

(கு - ரை.) இகவாது - கடவாமல். அதன்கண்ணே

- அந்நட்பின்வரம்
பிலே. பழமையின் திரியாது -
பழமையினின்றுவேறுபடாமல். பொருட்
கேடு - செல்வவழிவு.
போர்க் கேடு - யுத்தத்தில் தோல்வி. (கூ)
அ0எ.

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(இ-ள்.) (நட்டார்), அழி வந்த-(தமக்கு) அழிவு வந்தவற்றை, செய்யின் உம் - செய்தாராயினும், அன்பு அறார் - (அவர்மாட்டு) அன்பு ஒழியார்; அன்பின் - அன்புடனே, வழி வந்த-பழையதாய் வந்த, கேண்மையவர்-நட்பினை யுடையார்; (எ - று.)

அழிஎன்பது - முதனிலைத்தொழிற்பெயர்; *அழிவு - மேற்சொல்லிய கேடுகள்.

இவையிரண்டுபாட்டானும், கேடுசெய்தற்கண்ணும் றென்பது கூறப்பட்டது.

நட்புவிடற்பாற்றன்

(கு-ரை.) அவர்மாட்டு - அந்நண்பரிடத்தில். 'அழி' என்ற பகுதிதானே

'அழிவு' என்ற தொழிற்பெயர்ப்பொருளை புணர்த்தியதனுல், முதனிலைத்

* பி - ம்: அது.

44



தொழிற்பெயராயிற்று. மேற்சொல்லிய கேடுகள் - முந்தின குறளினுரையிற் கூறிய பொருட்கேடும், போர்க்கேடும். கேடுசெய்தற்கண்ணும் - கெடுதி செய்தவிடத்தும். 'கேடுசெய்தக்கண்ணும்' என்று பிரதிபேதமுண்டு. விடற்பாற்று அன்று - விடத்தக்கதன்று.

'வந்த' என்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது - 'அன்' பொருக அஃறிணைப்பன்மைப்பெயர்; பின்னது - பெயரெச்சம்.

சாரியை

'அன்பு'

என்னும் அஃறிணையெழுவாய், 'கேண்மையவர்' என்னும் உயர்திணையெழுவாயின் பயனிலையாகிய 'அரூர்' என்னும் உயர்திணைவினையைக் கொண்டு முடிதலால், திணைவழுவமைதி; [நன் - பொது - உகூ.] உம் - இழிவுசிறப்பு. 'அன்பின்' என்பதில், 'இன்' என்ற ஐந்தனுருபு - மூன்றனுருபின் பொருளில் வந்தது; இன் - சாரியையுமாம். (எ)

௮௦௮.

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு

நாளிழுக்க நட்டார் செயின்.

(இ - ள்.) கேள் இழுக்கம் கேளா - நட்டார் (செய்த) பிழையை (த் தாமாகவேயன்றிப் பிறர்சொன்னாலும்) கொள்ளாத, கெழுதகைமை வல்லார்க்கு - உரிமை அறியவல்லார்க்கு, நட்டார் இழுக்கம் செயின் - அவர் பிழை செய்வாராயின், (அது), நாள் - (பயன்பட்ட) நாளாம்; (எ - று.)

பிழையாவன - * சொல்லாது நற்பொருள்வெளவல், பணியாமை, அஞ்சாமை முதலாயின. கேட்டல் - உட்கோடல். 'கெழுதகைமைவல்லார்' என்பது - ஒருபெயராய்,

செய்துபோக்துழியல்லது

நாளல்லவாயின.

'கேளாத' என்னும் எச்சத்திற்கு முடிபாயிற்று.

† அவ்வன்மை வெளிப்படாமையின், செய்யாதன

இதனால், பிழைபொறுத்தற்சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) கொள்ளாத - மனத்திற்கொள்ளாத.

'நட்டார்' என்றது - சுட்டுப்பெயர்மாத்திரமாய்

முதலடியிற்சொன்ன கேளிரையே குறித்தது.

அது - பிழைசெய்த அந்தநாள். சொல்லாது நல் பொருள் வெளவல் - தம்மிடஞ்சொல்லி அநுமதிபெற்றுக்கொள்ளாமலே தம்மிடமுள்ளசிறந்தபொருளை எடுத்துக்கொள்ளுதல்; 'தமக்குவேண்டியன தாமேகோடல்' என்று இவ்வதி

காரத்து முதற்குறளினுரையிற்கூறியதும் இது. அங்கு 'பணிவு அச்சங்களின்மை' என்றதையே, இங்கு 'பணியாமை அஞ்சாமை' என்று விவரித்தார். பணியாமை - வணக்கமில்லாமை. 'முதலாயின' என்றதனால், மேற்கொண்ட காரியத்தைக்கெடும்படிசெய்தல், கேளாமலே ஒருகாரியத்தைத்தொடங்கிச்

செய்தல் முதலாயின கொள்க. உட்கோடல் - மனத்திற் கொள்ளுதல். எச்சம் - இங்கே பெயரெச்சம். முடிபு - முடிக்குஞ்சொல். 'கேளா' என்ற ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம், 'கெழுதகைமைவல்லார்' என்னும்

* பி - ம்: மேற்சொல்லிய சொல்லாது நற்பொருள் வெளவல்
† அவ்வுரிமை

## அக - ஆம் அதிகாரம்.—பழைமை

௲௨௱௭

பெயரைக்கொண்டுமுடிந்த தென்க. செய்துபோந்தழி
யல்லது - (பிழை)
செய்த விடத்தல்லாமல். அவ்வன்மை -
அக்கெழுதகைமையறியும் வல்லமை.
செய்யாதன - நண்பர் பிழைசெய்யாத நாள்கள்.
நாளல்ல - பயன்படு
நாளல்லன: இதனை "விழுப்புண்படாதநாளெல்லாம் வழுக்கினுள், வைக்குந் தன்னாளை யெடுத்து" என்றதுபோலக் கொள்க. கேள் - கேண்மை யென்ற பண்பின் அடி; இங்கே, கேளிர்க்குப் பண்பாகுபெயர். இழுக்கம் - தொழிற் பெயர்; இழுக்கு - பகுதி, அம் - விகுதி. கேளிழுக்கம் - கேளிரது இழுக்க மென ஆறும்வேற்றுமைத்தொகையாக வாவது, கேளிராற்செய்யப்பட்ட
இழுக்கம் என மூன்றாம்வேற்றுமையுருபும் பயனு
முடன்தொக்க தொகை
யாக வாவது கொள்ளத்தக்கது. 'நட்டார்
இழுக்கஞ்செயின்' என்றதனால்,
'அது' என்ற தோன்றா எழுவாய் வருவிக்கப்பட்டது.

(அ)

௮0௯. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

(இ - ள்.) கெடாஅ - (உரிமை) அருது, வழி வந்த - பழையதாய் வந்த, கேண்மையார் - நட்பினையுடையாரது, கேண்மை - நட்பினை, விடாஅர் - (அவர்பிழைநோக்கி) விடுதல்செய்யாதாரை, உலகு - உலகம், விழையும் - (நட்புக்குறித்து) விரும்பும்; (எ - று.)

'கெடாது' என்பதன் இறுதிநிலை, விகாரத்தால் தொக்கது. விடாதாரை யெனவே, விடுதற்காரணங் கூறப்பட்டது. நம்மாட்டும் இவர் இத்தன்மைய ராவ ரென்று யாவரும் தாமேவந்து நட்பாவ ரென்பதாம். 'கெடாஅர்' என்று பாடமோதி, நட்புத்தன்மையிற் கெடாராகி யென்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) அருது - நீங்காமல். கெடா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். இறுதிநிலை - விகுதி; பகுபதத்தின் இறுதியில் நிற்பது: இங்கே 'து'

என்பது. விகாரத்தால் - தொகுத்தலென்னுஞ் செய்யுள்விகாரத்தால். விடுதற்

காரணம் - 'அவர்பிழைநோக்கி' என்பது. 'கெடாஅர்' என்ற பாடத்திற்கு, பலர்பால் முற்றெச்சம். கெடாஅ, விடாஅர் - செய்யுளிசைநிறைக்கவந்த அளபெடைகள். கேண்மையார்கேண்மை - ஆறும்வேற்றுமைத்தொகை.

விடாஅர் விழையும் - இரண்டாம்வேற்றுமைத்தொகை.

(கூ)

௮௧௦. விழையார் விழையப் படுப

பழையார்கட்

பண்பிற் றலைப்பிரியா தார்.

(இ - ள்.) பழையார்கண் - பழையநட்டார் (பிழைசெய்தாராயினும்) அவர்மாட்டு, பண்பின் தலைப்பிரியாதார் - தம் பண்பில் நீங்காதார்,—விழையார் விழையப்படுப - பகைவராலும் விரும்பப்படுவர்; (எ - று.)

தம் பண்பாவது - செய்யாதமுன்போல அன்புடையராதல். மூன்றனுருபும் சிறப்பும்மையும், விகாரத்தால் தொக்கன. அத்திரிபின்மைநோக்கிப் பகைவரும் நட்டாராவரென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், பழமையறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது.

(கு-ரை.) பண்பில்-குணத்தினின்று. பண்பு-குணம்; இப்பொதுப்பெயர்;
இங்கு,அதிகாரத்தால்,நட்பிற்பிழைபொறுத்தலைக் குறித்தது. செய்யாதமுன் -
பிழைசெய்தற்குமுன். மூன்றனுருபும், சிறப்பும்மையும் - 'விழையாரானும்'
என்னுமிடத்தில் உள்ளன. சிறப்பு - இழிவுசிறப்பு. அத்திரிபு இன்மை -
பிறர்பிழைசெய்தபோதும் தமதுகுணம்மாறுபடாமை. எய்தும் - அடையும்.

'பழையார்' என்றதில், பழமை யென்ற பண்புப்பகுதி ஈறுபோய் இடை
அகரம் ஐகாரமாயிற்று. பண்பின் - பண்பினின்று; ஐந்தனுருபு, நீக்கப்பொ
ருளது. தலைப்பிரிவு என்பது-ஒருசொல்; "செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா
ருண்ணா, ருயிர்த்தலைப்பிரிந்த வூன்" என்ற குறளில் இங்ஙனமேயுரைத்தனர்
பரிமேலழகர்; தலை - உபசர்க்கம்.

(௯௦)

## ௮௨ - ஆம்

## அதிகாரம்.—தீ நட்பு.

இனி, பொறுக்கப்படாத குற்ற முடைமையின்

விடற்பாலதாய நட்பு,
நட்பாராய்தற்கட் சுருங்கச்சொல்லிய துணையான்
அடங்காமையின், அதனை
இருவகைப்படுத்து இரண்டு அதிகாரத்தாற் கூறுவான்
தொடங்கி, முதற்
கண் தீநட்புக் கூறுகின்றார்;
அஃதாவது - தீக்குணத்தாரோடு உளதாய நட்பு:
குணத்தின் தீமை, ஒற்றுமைபற்றி உடையார்மேற்றாய்,
அது பின் அவரோடு
செய்த நட்பின்மேற்றாயிற்று. அதிகார முறைமை,
கூறாமையே விளங்கும்.
(கு - ரை.) உடைமையின் - உடைமையால்.
விடற்பாலதுஆய-விடத்
தக்கதான. நட்பாராய்தற்கண் - கீழ் ௮௦-ஆம்
அதிகாரத்தில். சுருங்கச்சொ
ல்லிய துணையான் - சுருக்கமாகச் சொன்னமாத்திரத்தால்.
அங்கே சுருங்
கச்சொன்னமை - "ஊதியமென்ப தொருவற்குப்
பேதையார், கேண்மை
யொரீஇ விடல்", "உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ
கொள்ளற்க, அல்லற்கண்
ஆற்றறுப்பார் நட்பு", "கெடுங்காலைக் கைவிடுவார்
கேண்மை யடுங்காலை,
யுள்ளினு முள்ளஞ் சுடும்", "ஒன்றீத்து, மொருவுக
வொப்பிலார்நட்பு"

எனக் காண்க. அதனை - விடத்தக்க நட்பை.
இருவகைப்படுத்து - தீநட்பு,
கூடாநட்பு என இரண்டுபகுப்பாக்கி. அஃதாவது -
தீநட்பாவது. தீநட்பு-
பண்புத்தொகை. தீமை யென்ற அடைமொழியை
நட்பிற்குக்கொடுத்தது
உபசாரவழக்கா மென்பது, 'குணத்தின் தீமை'
என்றுதொடங்கிய வாக்கியத்தின் கருத்து.
உடையார்மேற்றுஆயது என்று பிரித்து-அத்தீக்குணத்தை
யுடையவர் களின்மேல்ஆயினது என்று
பொருள்கொள்ளினுமாம். [மேற்று-
மேலது.]நட்பிற்பிழைபொறுத்தலாகிய பழமையின்பின்,
பொறுக்கப்படாமல்
விடத்தக்க நட்பைக் கூறுதல்,
அதிகாரமுறைமையின் காரணம்.

அகக. பருகுவார் போலினும் பண்பிலார்
கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(இ - ள்.) பருகுவார் போலின்உம் - (காதல்மிகுதியால்)
பருகுவார் போ
ன்ரு ராயினும், பண்பு இலார் கேண்மை -
தீக்குணமுடையார் நட்பு, பெ
ருகலின் - வளர்தலின், குன்றல் - தேய்தல், இனிது -
நன்று; (எ - று.)

-

"பருகு வன்ன வருகா நோக்கமொடு" என்றார் பிறரும். நற்குணமில்லா ரெனவே, தீக்குணமுடையா ரென்பது அருத்தாபத்தியான் வந்தது. பெருகினல்வருங் கேடு குன்றினல் வாராமையின், 'குன்ற வினிது' என்றார்.

இதனல், தீநட்பினது ஆகாமை பொதுவகையாற்
இனிச் சிறப்புவகையாற் கூறுப.

கூறப்பட்டது;

(கு - ரை.) காதல் - ஆசை. பருகுதல்
அருகா நோக்கமொடு - (தன்னற் கண்ணற்)

- குடித்தல். பருகு அன்ன
பருகுத்தன்மையை யொத்த

கெடாதபார்வையாலே.
வரி. 'பிறர்' என்றது

இம்மேற்கோள் - பொருநராற்றுப்படை, ௭௭ - ஆம்
- அந்நூலாசிரியராகிய முடத்தாமக்கண்ணியாரை.

"பருகுவான்போல
வத்தனகி" என்ற

நோக்கி" என்ற சிந்தாமணியும், "பருகுவனன்ன வார்
நன்னூலும் இங்கு நோக்கத்தக்கன. அர்த்தாபத்தியா
வது - ஒருபொருளைக் கூறியமாத்திரத்தால் அதன்
குறிப்புக்கொண்டு மற்றொருபொருள் அறியப்படுதல். இது,

எட்டுவகைப் பிரமாணங்களில் ஒன்று; 'பகலுண்ணான் பருத்திருப்பான்' என்றவிடத்து 'இரவில் ஒளித்துஉண்பான்' என உணர்தலை இதற்கு உதாரணங்காட்டுவர்; 'இராமன் வென்றான்' என்றால் 'இராவணன் தோற்றான்' எனக் கொள்ளப்படுவதும் அது; 'இங்ஙன மன்றாயின் இதுகூடா தென்று உணரும் அருத்தாபத்தி' என்றனர் உ௯உ - ஆங் குறளின் உரையிற் பரிமேலழகர். பண்புஇலார் - நற்குணமில்லாதவர். வளர்தலின் - வளர்தலைக்காட்டிலும். குன்றல் - குறைதல். 'இனி'-அடுத்த குறள்முதலாக ஒன்பதுகுறள்களில். கூறுப - கூறுவர். சிறப்புவகையாற் கூறுதல்-இன்னஇன்னவகையான தீயவரோடு நட்புக் கூடா தென்றல். (க)

அ௧உ. உறினட் டறிநொரூஉ மொப்பிலார்
கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

(இ - ள்.) உறின் - (தமக்குப்) பயன் உள்வழி, நட்டு - நட்புச்செய்து,
அறின் - (அஃது) இல்வழி, ஒரூஉம் - ஒழியும், ஒப்பு இலார் - ஒப்பிலாரது, கேண்மை - நட்பினை, பெறின்உம் இழப்பின்உம் என் - பெற்றால் ஆக்கம் யாது? இழந்தாற் கேடி யாது? (எ - று.)

தமக்குஉற்றனபார்ப்பார் பிறரோடுபொருத்தமில ராகலின், அவரை 'ஒப்பிலார்'என்றார். அவர்மாட்டு ஒராதுமல்தன்மையே அமையுமென்பதாம்.

(கு - ரை.) உள்வழி -
பயன் இலதாம்பொழுது.

உளதாம்பொழுது. அஃது இல்வழி - (தமக்குப்)
ஒழியும் - நண்புநீங்கும், விட்டு விலகும். ஒப்பு

இலார் - ஒற்றுமையில்லாதவர்; ஒப்பு - ஒத்தல், கலப்பு, பொருத்தம்.
கம் - இலாபம். கேடு - நஷ்டம். தமக்கு உற்றன பார்ப்பார்-தமக்கு

ஆச்
வரும்
பயன்களையே பார்ப்பவர். அவர்மாட்டு -
அவர்விஷயத்தில். நொதுமல் தன்மை - நண்பும் பகைமையும்
இன்றி அயலாயிருத்தல். அமையும் - தகு தியாம். ஒரூஉம்
- ஒருவும்; சொல்லிசையளபெடை; 'ஒரூஉம்' என்பது,
ஒப்பிலார்க்கு அடைமொழி. பெறினும், உம் - உயர்வுசிறப்பு.
இழப்பினும்,



உம் - இழிவுசிறப்பு. இரண்டையும் எண்ணுப்
பொருளனவாகக் கொண்டா
லுங் குற்றமில்லை.

(உ)

அ காஉ ·

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

(இ - ள்.) உறுவது சீர்தூக்கும் - (நட்பளவுபாராது அதனால்) வரும் பயனளவு பார்க்கும், நட்புஉம் - நட்டாரும், பெறுவது கொள்வார்உம் - (கொடுப்பாரைக் கொள்ளாது) விலையைக் கொள்ளும் பொதுமகளிரும், கள்வர்உம் - (பிறர்கேடுநோக்காது அவர்சோர்வுநோக்கும்) கள்வரும், நேர் - (தம்முள்) ஒப்பர்; (எ - று.)

நட்பு - ஆகுபெயர். பொருளையே குறித்து வஞ்சித்தொழுகலின், கணிகையர் கள்வர் என்றிவரோடு ஒப்பரென்பதாயிற்று.

இவையிரண்டுபாட்டானும், தமக்கு உறுவதுபார்ப்பார்நட்பின் தீமை கூறப்பட்டது.

(கு - ரை.) நட்பு அளவு பாராது - சிநேகத்தின் அளவை முக்கியமாகக் கொள்ளாமல் . அதனால் - நட்பினால், கொடுப்பாரை - (தமது இன்பத்திற்கு விலையாகப்) பொருள்கொடுக்கும் ஆடவரை. கொள்ளாது - உள்ளன்புடன் ஏற்றுக்கொள்ளாமல். விலையைக் கொள்ளும் -

அப்பொருளையே முக்கிய
மாகக்கொண்டொழுகின்ற. "அன்பின் விழையார் பொருள்விழையு மாய்
தொடியா, ரின்சொ லிழுக்குத் தரும்" முதலியவர்க மேல் 'வரைவின்மகளிர்'
என்னும் அதிகாரத்தில் விலைமகளிரின் தீமை கூறப்படுதல் காண்க. பொது
மகளிர் - போகத்தின்பொருட்டு விலையாகப் பொருள்கொடுப்பவர்க்கெல்லாம்
பொதுவாயிருக்கும் வேசையர். பிறர்கேடு நோக்காது-பிறர் நஷ்டமடைவரே
யென்று அவரது நஷ்டத்தைப்பற்றிச் சிந்தியாமல். அவர் சோர்வு நோக்கும்-
அவர் அஜாக்கிர தைப்பட்டு நிற்கின்ற சமயத்தையே கவனித்துப்பார்க்கின்ற.
நட்பு-நட்பின ர்க்குப்
பண்பாகுபெயர்; தொழிலாகுபெயரெனினுமாம். கணிகை
யர் - வேசையர். உறுவது சீர்தூக்கும்நட்பினரும், வேசையரும் திருடரும்
நேரென்றதனால், அவர்கள்
தயைதாட்சிணியமின்றியொழுகும் வஞ்சக ராத
லால் வெறுக்கத்தக்கவ ரென்பதாம். உறுவது - வருவது; லாபம். பெறு
வது - பெறப்படுகின்ற விலைப்பொருள். 'நேர்வர்' என்னும் முற்று, இடை
நிலையோடு விகுதி கெட்டு, 'நேர்' என நின்றது.

௮௧௪. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா
தமரிற் றனிமை தலை.

வன்னார்

(இ - ள்.) அமர் அகத்து - அமர் (வாராதமுன்
னெல்லாந் தாங்குவது
போன்று) வந்துழி, (களத்திடை), ஆற்று அறுக்கும் -
வீழ்த்துப்போம், கல்லா
மா - கல்வியில்லாத புரவி, அன்னார் - போல்வாரது,
தமரின் - தமர்மையின்,
தனிமை—, தலை - சிறப்புடைத்து; (எ - று.)

கல்லாமை கதி ஐந்தும், சாரி பதினெட்டும்,
பொருமுரணாற்றலும்
அறியாமை. துன்பம் வாராத முன் னெல்லாந்
துணையாவார்போன்று, வந்

## ௮௨ - ஆம் அதிகாரம்.—தீநட்பு

ரு௫௧

துழிவிட்டு நீங்குவா ரென்பது, உவமையாற் பெற்றும். அவர்
தமரானுல் வரும் இறுதி தனியானுல் வாராமையின்,
தனிமையைத் தலை யென்றார்; எனவே, அதுவுந் தீதாதல்
பெறுதும்.

(கு -ரை.) போன்று - போலிருந்து. வந்துழி - வந்தஉழி: போர்நேர்ந்த பொழுது. களத்திடை - போர்க்களத்தில். வீழ்த்துப்போம் - தள்ளிவிட்டுப் போகின்ற. புரவி - குதிரை. தமர்மையின் - நண்பராந்தன்மையைக்காட்டிலும். தனிமை - தனியாயிருத்தல். கதி - நடை. கதியைந்து - பஞ்ச தாரைகள்: அவையாவன - "விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட, மத்தி மஞ் சாரிபோ டைந்து" என்பன; ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கி தம், புலுதம் எனவும் படும்: அவற்றுள், நிச்சலமாக அதிவேகமும் அதிமந்தமு மாகாமற் சமமான கதி, ஆஸ்கந்திதம்; அதைக்காட்டிலும் அதிகமாய்ச்சதுர மான கதி, தோரிதகம்; தாளகதியுடன் வட்டமிட்ட நடை, ரேசிதம்; வேகத் தினாலே முன்னங்காலைத் தூக்கிவரும்நடை, வல்கிதம்; அவ்வளவு வேகமாக வும் சமமாகவும் போகுகை, புலுதம்: இனி, மல்லகதி, மயூரகதி, வியாக்கிர கதி, வானரகதி, விருஷபகதி என்பனவுமாம். 'விக்கிதம் வற்கிதம் உபகண்டம் ஜவம் மாஜவம் என்னும் இப்பஞ்சதாரை' என்பர் புறப்பொருள்வெண்பா மாலையுரையாசிரியர். சாரி - மண்டலமாயோடல். புறப்பொருள்வெண்பா மாலையில் 'குதிரைவென்றி' என்னுந் துறையின் இலக்கியச்செய்யுளில் "ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியுங், கந்து மறமுங் கருங்குளமா" என்ற விடத்து 'பதினெட்டுச் சாரி' என்பதற்கு 'பதினெட்டு வகைப்பட்ட சுற்று வரவு' என்று உரைகூறியிருக்கின்றனர். அவை - வலசாரி,

இடசாரி, மண்

டலம், பவுரி முதலாகக் காண்க. சாரிகையெனவும் படும். பொருமுரண்

ஆற்றல் - போர்செய்யும் வலிமைத்திறம். போன்று - போலிருந்து. வந்துழி - துன்பம்வந்தவிடத்து. உவமையால் - 'அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா'

என்ற உபமானத்தினுல். அவர் - கல்லாமாவன்ஞர். இறுகி - அழிவு. அது

வும் - தனிமையும். பெறுதும் - பெறுவோம். அமர் அகத்து - போரில்

போர்செய்யுமிடத்தில்; போர்க்களத்தில்: என்றும் கொள்ளலாம்; 'அகத்து'

என்றது - ஏழனுருபு. ஆற்றறுத்தல் - வலியறச்செய்தல். மா - பொதுப்

பெயர், சிறப்புப்பொருளில் வந்தது. தமர் - தமர்மைக்கு

உவமையணி.

ஆகுபெயர். முதலடி-

(ச)

அகரு. செய்தேமஞ் சாராச் சிறியவர்

புன்கேண்மை

பெய்தலி னெய்தாமை நன்று.

(இ - ள்.) செய்து - செய்துவைத்தாலும், ஏமம் சாரா - அரணுகாத,

சிறியவர் புல் கேண்மை - கீழ்மக்களது நீட்பு,

எய்தலின் - (ஒருவர்க்கு)
உண்டாதலின், எய்தாமை - இல்லையாதல், நன்று—; (எ - று.)

சிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது.
அரணாகாமை - தொலைவின்
கண் விட்டுநீங்குதல். 'எய்தலி னெய்தாமை நன்று' என்பதற்கு, மேல் உரைத்
தாங்கு உரைக்க. 'சாராத' என்னும் பெயரெச்சம், 'கேண்மை' என்னும்



பெயர் கொண்டது; 'சிறியவர்' என்பதனைக் கொள்ளின், 'செய்து' என்பது நின்று வற்றும்.

இவையிரண்டுபாட்டானும், தொலைவில் துணையாகாத நட்பின் தீமை கூறப்பட்டது.

(கு - ரை.) அரண் - பாதுகாவல். சிறப்பு - உயர்வுசிறப்பு. உம்மை தொக்கது, 'செய்து' என்பதில். தொலைவின் கண் - தொலைவில்; அழிவுநேர்ந்த விடத்து. மேல் உரைத்தாங்கு - முந்தினகுறளில் "தமரிற் றனிமை தலை" என் றதற்கு விசேடவுரை கூறியதுபோல: செய்தும் எமஞ்சாராத சிறியவர் புன்கேண்மை ஒருவர்க்கு உண்டானல் வரும் அழிவு அவர்சினேகத்தைக் கொள்ளாமல் தனியாயிருந்தால் வாராமையால், எய்தாமையை நன்றென்றார் என்று உரைத்துக்கொள்க. நின்று வற்றும் - இருந்தும் பயன்படாமற் போம். 'நின்று

பயனின்மை' என்பது, நூற்குற்றம் பத்தினுள் ஒன்று; அதாவது சொல் இருந்தும் அதற்கு யாதொருபிரயோசனமும் இல்லாதொழிதல். (ரு)

அ௲௬.

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

(இ - ள்.) பேதை - அறிவிலானது, பெருங் கெழீஇ நட்பின் - மிகச் செறிந்த நட்பின்,—அறிவு உடையார் ஏதின்மை - அறிவுடையானதுபகைமை,—கோடி - கோடிமடங்கு, உறும் - நன்று; (எ - று.)

'கெழீஇய' என்பதன் இறுதிநிலை, விகாரத்தால் தொக்கது. பன்மை, உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான்பகைமை ஒருதீங்கும் பயவாமை யானும், பேதைநட்பு எல்லாத்தீங்கும்பயத்தலானும், 'கோடியுறும்' என்றார்.

'பெருங்கழிநட்பு' என்று பாடமோதுவாரு முளர்.

(கு - ரை.) செறிந்த-நெருங்கிய. இறுதிநிலை-ஈற்றெழுத்து: 'ய'என்பது. கெழுவிய அல்லது கெழுமிய என்பது, கெழீஇயவென விகாரப்பட்டு அளபெடுத்தது, சொல்லிசையளபெடை. 'பெருங்கழிநட்பு' என்ற பாடத்துக்கு, கழியென்பது - மிகுதிப்பொருள் குறிக்கும் உரிச்சொல்லாய், பெருங் கழி யென்பன - ஒருபொருட்பன்மொழி யென்க. மிக அதிகமான சிநேக மென்று பொருளாம். பன்மை உயர்த்தற் கண்வந்தது - 'பேதை' என்றதற்கு ஏற்ப 'அறிவுடையான் ' என ஒருமையாற் கூறாமல் 'அறிவுடையார்' எனப்

பன்மையாற்கூறியது, அறிவுடையவனது உயர்வை விளக்குதற்பொருட்டு என்க; "ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியும், ஒன்றனைக்கூறும் பன்மைக் கிளவியும், வழக்கினாகியவுயர்சொற்கிளவி" என்ற தொல்காப்பியத்தைக் காண்க: [சொல் - பொது - உஅ.] இதனை வடநூலார் 'பூஜாயாம் பஹுவசநம்' என்பர். ஏதின்மை - ஒருபற்றுமில்லாமை. கோடி - நூறிலக்ஷம்; மிகப் பலவாகிய எண்ணிற்கு ஒன்று காட்டியவாறு: அடுத்தகுறளில் "பத்தடுத்த கோடி" என்பதும் இவ்வாறே. இனி, 'அறிவுடையார்' என்பதனைப் பன்மையாகவே கொண்டு, அறிவில்லானொருவனது நட்பினும்

அறிவுடையார் அஉ - ஆம் அதிகாரம்.—தீநட்பு

௩௫௩

பலர்துபகைமை பலமடங்கு நல்லதென்று பொருள்கொள்ளலுமாம். பேதை- பேதைமையுடையானுக்குப் பண்பாகுபெயர். கோடி - வடசொல். "தெளிவி லார் நட்பிற் பகை நன்று" என்ற நாலடியார் இங்கு அறியத்தக்கது. (௬)

அகஎ. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற் பத்தடுத்த கோடி யுறும்.

(இ - ள்.) நகை வகையர் ஆகிய நட்பின் - (தாம் அறிதல்வகையரா காது) நகுதல்வகையராதற்கு ஏதுவாகிய நட்பான்

வருவனவற்றின், பகைவ

ரான் - பகைவரான் (வருவன), பத்து அடுத்த கோடி உறும் - பத்துக்கோடி

மடங்கு நல்ல; (எ - று.)

நட்பு - ஆகுபெயர். அந்நட்பாவது - விடமரும், தூர்த்தரும், வேழம்பரும் போன்று பலவகையால் நகுவித்துத் தாம் பயன்கொண்டொழிவாரோடு உளதாயது. 'பகைவரான்' என்பது அவாய்நிற்றலின், 'வருவன' என்பது வருவிக்கப்பட்டது. பத்து அடுத்த கோடி - பத்தாகத் தொகுத்த

கோடி. அந்நட்பான் வரும்இன்பங்களின் அப்பகைவரான்வருந் துன்பங்கள்

இறப்பநல்ல வென்பதாம். இதற்குப் பிறரெல்லாம் சொல்லிலக்கணத்தோடு

மாறுகொள உரைத்தார்.

(கு - ரை.) அறிதல்வகையராகாது - அறிவுடையாராதற்கு ஏது வல்லாமல்; நகுதல் - பரிகசித்தல்; விளையாட்டுச்சிரிப்புக் கொள்ளுதல். நட்பு-சிநேகம்; இங்கு, அதனால்வரும் இன்பங்களைக் குறித்தலால், காரணவாகுபெயர். விடமர் - விஷமர்; நேரானநெறி யில்லாதவர். தூர்த்தர் - காமுகர். விடமர் - விடரென்றும், தூர்த்தர் - வஞ்சகரென்றுங் கொள்ளுதலு மொன்று; விடர் -

தீயொழுக்கமுடைய காமுக ரென்பாரு முளர். வேழம்பர் - கழைக்கூத்தாடிகள். தீழ்ச் சிற்றினஞ்சேராமை யென்ற அதிகாரப்பெயரின் கீழ்ப் பரிமேலழகர் 'சிறியஇனமாவது - நல்லதன்நலனும் தீயதன்தீமையும் இல்லென்போரும் விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட குழு. அறிவைத்திரித்து இருமையுங்கெடுக்கும் இயல்பிற்றாய அதனைப் பொருந்தின்' என்றதும், அவ்வதிகாரத்தில் திருவள்ளுவர் "தீயினத்தின், அல்லற்படுப்பதூஉ மில்" என்றதும், மணிமேகலையில் "விடருந் தூர்த்தரும் விட்டேற்றாளரும், நடவைமாக்களும் நகையொடு வைகி, வட்டுஞ் சூதும் வம்பக்கோட்டியும், முட்டா வாழ்க்கை முறைமைய தாக" என்றதும் இங்கு நோக்கத்தக்கன. நகுவித்து - சிரிப்புவிளைத்து, மகிழ்ச்சியூட்டி. தாம் பயன்கொண்டு ஒழிவார் - தாம் இவனால் இலாபமடைந்து பிறகு கைவிட்டுச்செல்பவர். அவாய் வேண்டி. இறப்ப - மிகவும். இதற்கு - இக்குறளுக்கு.

- (ஒருசொல்லே)

பிறர் - மற்றை

உரைகாரர். "நகுதற்

றிடித்தற் பொருட்டு"

பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென்

என்றார், முன் நட்பு என்ற அதிகாரத்தில். (எ)

அகஅ. ஒல்லுங் கரும முடற்றுபவர் கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

(இ - ள்.) ஒல்லும் கருமம்-(தம்மால் )முடி யுங் கருமத்தை, உடற்றுபவர்-
*முடியாதாக்கிச் செய்யாதாரோடு கொண்ட, கேண்மை - நட்பினை,—(அது
கண்டால்), சொல்லாடார் - (அவரறியச்) சொல்லாதே, சோரவிடல் - சோர
விடுக; (எ - று.)
முடியாதாக்குதல் - †முடியாதாக நடித்தல். சோரவிடல் - விடுகின்ற
வாறு தோன்றாமல் ஒருகாலைக்குஒருகால் ஓயவிடுதல். அறியச் சொல்லி
னும், விடுகின்றவாறு தோன்றினும், அதுபொழுது பரிகரித்துப் பின்னும்
நட்பாயொழுகக் கருதுவ ராதலின், 'சொல்லாடார்' என்றும், 'சோரவிடல்'
என்றுங் கூறினர்.
இவைமூன்றுபாட்டானும், முறையே பேதையார், நகுவிப்பார், இயல்
வதுசெய்யாதார் என்றிவர்கள் நட்பின் தீமை கூறப்பட்டது.
(கு - ரை.) கருமத்தை - காரியத்தை. அதுகண்டால்

- தம்மால்முடியுந்

தொழிலைத் தம்மால்முடியாததாக அவர்கள் வெளிக்குக்காட்டிச் செய்யாது

விடுதலைப் பார்த்தால். சோர - தளர. முடியாதாக நடித்தல் - முடியாதது

போல வெளிக்குக்காட்டுதல். ஓயவிடுதல் - தளரவிடுதல். அதுபொழுது -

அச்சமயத்தில். பரிகரித்து - அதற்குஏற்ற பரிகாரத்தைச் செய்து. இயல்

வதுசெய்யாதார் - தாம்செய்யக்கூ டியஉத வியைச் செய்யாதுவிடுபவர். (அ)

௮௧௯. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு

சொல்வேறு பட்டார் தொடர்பு.

(இ - ள்.) வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு - வினையும்

சொல்லும் (ஒவ்வாது) வேறுவேறாயிருப்பார் நட்பு, கனவின் உம் இன்னாது -

(நனவின் கண்ணேயன்றிக்) கனவின்கண்ணும் இன்னாது; (எ - று.)

வினைசொற்களது ஒவ்வாமை, முதல்மேல் ஏற்றப்பட்டது. அஃதாவது - வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத்தல். நிகழ்வின் கண் உளதாயிருத்தலால், 'கனவினும்இன்னாது' என்றார். உம்மை - எச்ச

வும்மை; இழிவுசிறப்பும்மையுமாம். மன்னும், ஓவும் - அசைநிலை.

(கு - ரை.) வினை - செயல். நனவு - விழிப்பு: ஜாக்கிராவத்தை. கனவின்கண்ணும் இன்னாது - சொப்பனத்திலுந் துன்பந்தருவது. வினையுஞ் சொல்லுமாகிய சினைகளின் ஒற்றுமையில்லாதிருத்தல், 'வினைவேறுசொல் வேறுபட்டார்' என, நீநட்பினராகிய முதலின்மேல் ஏற்றிச்சொல்லப்பட்டது; இது, சினைவினையை முதலின்மேல் ஏற்றிக்கூறிய உபசாரவழக்கு. முதல் - அவயவி. அஃதாவது - வினைசொற்களின் ஒவ்வாமையாவது. நிகழ்வின்கண் உளதாயிருத்தலால் - கனா நடக்குங் காலத்து உண்மைபோலிருத்தலால், எச்சவும்மை, நனவிலன்றி என்று இறந்ததுதழுவியது. (௯)

௮௨௦. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

பி - ம்: * முடியாதாகச்செய்தாரொடு. † முடியாதாகக் கடத்தல்,

(இ - ள்.) மனை - (தனியே)மனைக்கண்(இருந்துழி); கெழீஇ - நட்பாடி, மன்றில் - (பலரோடு)மன்றின்கண் (இருந்துழி), பழிப்பார் - பழிகூறுவார், தொடர்பு - நட்பு, எனைத்து உம் - சிறிதாயினும், குறுகுதல் - (தம்மை)நணுகுதலை, ஓம்பல் - பரிகரிக்க; (எ - று.)

மனைக்கண் கெழுமலும், மன்றின்கண் பழித்தலும் தீதாகலின், அவர் ஒருகாலும் தம்மை நணுகாவகை குறிக்கொண்டுகாக்க வென்பார், அவர் நட்பின்மேல்வைத்துக் கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், வஞ்சர்நட்பின் தீமை கூறப்பட்டது.

(கு - ரை ) மனைக்கண் - வீட்டில். இருந்துழி - இருந்தபொழுது. நட்பு ஆடி - சிநேகம்பாராட்டி. மன்றின்கண் - சபையில். எனைத்தும் - எவ்வளவும். நணுகுதல் - சமீபித்தல். பரிகரிக்க - நீக்குக. அவர் - அத்தீயவர். ஒருகாலும் - ஒருபோதும். குறிக்கொண்டு - கவனம்வைத்து.
மனைக்கண்கெழுமி மன்றிற்பழிப்பவரது நட்பை எவ்வளவுசிறிதாயினுந் தம்மைச் சேரலாகாதபடி நீக்குக என்றதன் கருத்து, அவர்களை ஒருபொழுதுந்தம்மைச்சேராத படி நீக்குக வென்பது.
மனைக்கெழீஇ-ஏழாம்வேற்றுமைத்தொகை. கெழீஇ - கெழுமி யென்பது விகாரப்பட்டு அளபெடுத்தது; சொல்லிசையளபெடை.

அங - ஆம்

## அதிகாரம்.—கூடாநட்பு.

இனி, ஏனைக் கூடாநட்புக் கூறுகின்றார். அஃதாவது - பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந் துணையும் புறத்தாற் கூடியொழுகுவார் நட்பு.

(கு - ரை.) ஏனை - விடத்தக்கதான நட்பின் வகை யிரண்டனுள் தீநட்புத்தவிர மற்றொன்றாகிய என்றபடி. அகத்தாற் கூடாதிருந்தே - மனத்தில் நட்பில்லாமலிருந்துகொண்டே. வாய்க்கும் இடம்-தீங்குசெய்யவாய்க்குஞ் சமயம். பெறுந்துணையும் - பெறுமளவும். புறத்தான் - வெளியிலே; சொற்செயல்களால் என்றபடி. கூடாமை யென்னுந் தொழில், ஒற்றுமைபற்றி அத்தொழிலுடையார்மேலதாகி, பின்பு, அவரோடுசெய்த நட்பின்மேலதாயிற்று.

அ௨௧. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

(இ - ள்.) நேரா - கூடாதிருந்தே, நிரந்தவர் - (தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும்) கூடியொழுகுவார். நட்பு—,சீர் இடம் காணின் - அது பெற்றால், எறிதற்கு - (அற) எறிதற்கு (த்துணையாய); பட்டடை - பட்டடையாம்; (எ - று.)

எறியுமெல்லைவாராமுனெல்லாந் தாங்குவதுபோன்றிருந்து வந்துழி அற எறிவிப்பதாகிய பட்டடைக்கும், அத்தன்மைத்தாய நட்பிற்குந் தொழி லொப்புமை உண்மையான், அதுபற்றி, அந்நட்பினைப் பட்டடையாக உப சரித்தார். 'சீர்விடம்' என்று பாடமோதி, முடிவிட மென்று உரைப்பாரு

முளர்.



(கு - ரை.) சீரிடம் - சிறப்பான இடம். அது - வாய்க்குமிடம். எல்லை - சமயம். அற எறிதற்கு - (பொன்முதலியவற்றை வேறுகருவிகள்) நன்றாக வெட்டுவதற்கு. பட்டடை - பொற்கொல்லர் பொன்முதலியவற்றை வைத்து அடிப்பதற்கும் வெட்டுதற்கும் ஆதாரமாயிருப்பதொரு கருவி. சீவகசிந்தாமணியில் "ஊனமர்குறடுபோலவிரும்புண்டு" என்றதற்கு நச்சினார்க்கினியர் 'இறைச்சிகொத்தும் பட்டடைமரம்போல இரும்புமேய்ந்து' என்று உரை கூறியதை நோக்குமிடத்து, ஊன்வெட்டுதற்கு ஆதாரமாகின்ற இரும்புவேய்ந்தமரத்துக்கும் பட்டடையென்றுபெயருண்டெனத்தெரிகிறது. உண்மையான் - இருத்தலால். பட்டடைபோன்றதைப் பட்டடையென்றே கூறியது, உபசாரவழக்கு; பட்டடைபோலுமென்னுமல் 'பட்டடை' என உபமேய

உபமானங்களுக்கு
ஐக்கியந்தோன்றச்சொல்லியிருத்தலால், தொழிலுவமை
பற்றிவந்த காட்சியணி யென்றலுமாம். முடிவிடம் -
அபாயமடைகின்ற
சமயம். நேரா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.
(க)

அஉஉ. இனம்போன் றினமல்லார் கேண்மை
மகளிர்
மனம்போல வேறு படும்.

(இ - ள்.) இனம் போன்று - (தமக்கு)
உற்றூர்போன்று, இனம் அல்
லார்-உறுதாரோடு (உளதாய), கேண்மை - நட்பு,
(இடம்பெற்றால்),—மகளிர்
மனம் போல - பெண்பாலார் மனம்போல, வேறுபடும்—;
(எ - று.)
அவர்மனம் வேறுபடுதல், "பெண்மனம் பே
தின் றொருப்படுப்பே
னென்று, மெண்ணி லொருவன்" என்பதனானும்
அறிக. நட்புவேறுபடுத
லாவது - பழைய பகையேயாதல்.

இவையிரண்டுபாட்டானும், கூடாநட்பினது குற்றங்
கூறப்பட்டது.
(கு - ரை.) உற்றூர் - நண்பர், வேண்டியவர்.
உறுதார் - வேண்டாதார்,

பகைவர். இடம் - வாய்க்குமிடம். பெண்மனம் - மகளிரதுமனத்தை, பேது
இன்று - வேறுபடுதலில்லாமல், ஒருப்படுப்பேன் - ஒருதன்மையதாயிருக்கச்
செய்வேன், என்னும் - என்றுசொல்லுகின்ற, எண் இல் ஒருவன் - ஆராய்ச்சி
யில்லாத ஒருத்தன் என்பது, மேற்கோளின் பொருள்; இது, "தெண்ணீர்
பரந்து திசைதொறும் போய்க்கெட்ட, வெண்ணெய்கொண் டட்ட விவறுத
லென்னைக்கும், பெண்மனம் பேதின் ஞெருப்படுப்பேனென்னு, மெண்ணி
லொருவ னியல்பெண்ணு மாறே" என்ற வளையாபதிச் செய்யுளி லுள்ளது.
"பெண்ணெனப்படுவ கேண்மோ பீடில பிறப்புநோக்கா, உண்ணிறை
யுடையவல்ல வோராயிரமனத்தவாகும்" என்ற சிந்தாமணியும் இங்குநோக்
கத்தக்கது. உவமையணி.

(உ)

அஉரு. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது.

(இ - ள்.) பல நல்ல - நல்லன பல நூல்களை, கற்றக்கடைத்தும் - கற்ற
விடத்தும், (அதனால்), மனம் நல்லர் ஆகுதல் -

மனந்திருந்திரட்பாதல்,
மாணூர்க்கு - பகைவர்க்கு, அரிது - இல்லை; (எ - று.)

## ௮ங - ஆம் அதிகாரம்.—கூடாநட்பு நஙுள்

நல்லன் - மனக்குற்றங் கெடுப்பன. 'மனநல்லர்' எனச் சினைவினை
முதல்மேல் நின்றது. நல்லராகுதல் - செற்றம்விடுதல். உள்ளே செற்ற
முடையாரைக் கல்வியுடைமைபற்றி நட்பென்று கருதற்க வென்பதாம்.

(கு - ரை.) நல்லன - நல்லவை யாகிய. கற்றவிடத்தும் - படித்தாலும்.
மனமாகிய சினையினது நன்றாதலாகிய வினை, பகைவராகிய
ஏற்றிக் கூறப்பட்டது. செற்றம் - வைரம், தணியாக்கோபம்.

முதலின்மேல்

பல, நல்ல - பலவின்பாற் பெயர்கள். கற்றக்கடைத்து - எதிர்கால
வினையெச்சம்; கல் - பகுதி, து அ - சாரியைகள், கடை-வினையெச்சவிகுதி,
அதன்மேல் 'து' - பகுதிப்பொருள்விகுதி: மற்றவை - சந்தி. உம் - உயர்வு
சிறப்பு. மாணூர் - மாட்சிமையில்லாதவர்; அன்பரல்லாதவ
ரென்றபடி. (௩)

௮௨௪. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

(இ - ள்.) முகத்தின் இனிய நகாஅ - (கண்டபொழுது) முகத்தால் இனியவாகச் சிரித்து, அகத்து இன்னா - (எப்பொழுதும்) மனத்தால் இன்னாராய, வஞ்சரை—, அஞ்சப்படும் - அஞ்சல்வேண்டும்; (எ - று.)

நகையது வகைபற்றி 'இனிய' என்றும், அகத்துச் செற்றம் நிகழவும் அதற்கு மறுதலையாய நகையைப் புறத்து விளைத்தலின் 'வஞ்சர்' என்றும், அச்செற்றம் குறிப்பறிதற்கருவியாய முகத்தானுந் தோன்றாமையின் 'அஞ்சுதல் செய்யப்படும்' என்றுங் கூறினார்.

இவையிரண்டுபாட்டானும், குற்றத்திற்கு ஏதுவாய கூறப்பட்டது.

அவர்கொடுமை

(கு - ரை.) இன்னார் ஆய - இனியரல்லாதவரான.

வஞ்சர் - வஞ்சகர்.

"எள்ளவிளமை பேதைமை மடனென், றுள்ளப்பட்ட

நகை நான்கென்ப''
என்ற தொல்காப்பியத்தால், நகைப்பின்வகைகளை யுணர்க. அகத்து - மனத்தில். நிகழ - தோன்றுநிற்க. மறுதலை - எதிர். விளைத்தலின் - காட்டுதலால். குறிப்பறிதற் கருவி - ஒருவர்நினைத்ததை அவர்சொல்லாமற் குறிப்பால் அறிவதற்குச் சாதனம். முகம் குறிப்பறிதற்கருவியாதலை, கீழ் 'குறிப்பறிதல்' என்ற அதிகாரத்தில் ''அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டு முகம்'' என்றது முதலாகக் கூறியவற்றாலும், ''முன்னம், முகம்போல முன்னுரைப்ப தில்,'' ''முகனுரைக்கு முண்ணின்றவேட்கை'' என்பவற்றாலும் அறிக. அவர் - கூடாநட்பினர்.

(ச)

௮௨௫. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

(இ - ள்.) மனத்தின் - மனத்தால், அமையாதவரை-(தம்மொடு) மேவாதாரை, எனைத்து ஒன்றும் - யாதொரு கருமத்திலும், சொல்லினால்-சொல்லால், தேறல்பாற்று

அன் று-தெளிதன் முறைமைத்தன் று, (நீதிநூல்);(எ-று.)



'நீதிநூல்' என்பது, அவாய்நிலையான் வந்தது. பகைமைமறைத்தற்
பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லை
செவ்விய சொல்லெனக்
கருதி அவரைக் கருமங்களில்தெளிதல் நீதிநூல்
முறைமையன் றென்பதாம்.

(கு - ரை.) மேவாதார் - பொருந்தாதவர்.
கருமத்தில் - காரியத்தில்.
தெளிதல் முறைமைத்து அன்று -
நம்பும்முறைமையுடையதன்று. இந்த முற்
றிற்கு 'நீதிநூல்'என்ற தோன்றாஎழுவாய்
வருவிக்கப்பட்டது. நீதிநூன்
முறைமையன்றென்பார், அதன்மேல்வைத்துக் கூறினார்.
இனி, 'முறைமைத்
தன்று என்று சொல்லும் நீதிநூல்' என்று
சிலபிரதிகளிற் காணப்படு
கின்றது. அவரை - கூடாநட்பினரை. செவ்விய - நல்ல;
வஞ்சனையில்லாத.

௮௨௬. நட்டார்போ னல்லவை சொல்லினு
மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

(இ - ள்.) நட்டார் போல் - நட்டாரைப் போன்று, நல்லவை சொல்லின் உம் - நன்மைபயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும், ஒட்டார்சொல் - பகைவர்சொற்கள் (அது பயவாமை), ஒல்லை உணரப்படும் - அச் சொல்லிய பொழுதே அறியப்படும்; (எ - று.)

'சொல்லினும்' எனவே, சொல்லாமையே பெற்றும். ஒட்டாராதலால் தீமைபயத்தல் ஒருதலையென்பார், 'ஒல்லை உணரப்படும்' என்றார்.

(கு - ரை.) ஒட்டார் - மனம்பொருந்தாதவர்; எனவே, பகைவராவர். ஒல்லை - விரைவு. சொல்லாமை - பகைவர் நல்லவைசொல்லாமை. ஒருதலை - நிச்சயம். பயக்கும் - விளைக்கும். அது பயவாமை - நன்மையை விளைக்காமை. சொல்லினும் என்ற உம்மை - உயர்வுசிறப்பு; ஒருசார் எதிர்மறையென்னலாம். ஒல்லை - விரைவுகுறிப்பதோர் இடைச்சொல். (௬)

௮௨௭. சொல்வணக்க மொன்னார்கட்
கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

(இ - ள்.) வில் வணக்கம் - வில்லினது வணக்கம்,

தீங்கு குறித்தமை யான் - (ஏற்றவர்க்குத்) தீமைசெய்தலைக் குறித்தமையால்,—ஒன்னார்கண் சொல் வணக்கம் - பகைவர்மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும், கொள்ளற்க - (தமக்கு நன்மைசெய்தலைக் குறித்ததென்று) கருதற்க.

தம்வணக்கமன்றென்பது தோன்ற 'சொல்வணக்கம்' என்றும், வில்
வணக்கம் வேறாயினும் வணங்குதலொப்புமைபற்றி
அதன்குறிப்பை ஏதுவாக்
கியுங் கூறினார். வில்லியதுகுறிப்பு, அவனிடைய
வில்வணக்கத்தின்மேல்
நிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவரிடைய
சொல்வணக்கத்தின் மேலதா
யிற்று. இதுவுந் தீங்குறித்த வணக்கமென்றே

கொண்டு அஞ்சிக்காக்க வென்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், அவரைச்
பது கூறப்பட்டது.

சொல்லால் தெளியற்க வென்

அரு - ஆம் அதிகாரம்.— கூடாநட்பு

(கு - ரை.) ஏற்றவர்க்கு - எதிர்த்தவர்க்கு. தம் வணக்கம் அன்று - வணக்கமென்பது புறத்தே சொல்லினிடத்து மாத்திரமுள்ளதன்றி அந்தப் பகைவரிடத்து இல்லையென்றபடி. வணக்கம் வேறாயினும் - வில்வணக்க மென்பது வில்லின்முனை நிமிர்ந்திராமல் தாழ்ந்திருக்குந்தன்மையென்றும், சொல்வணக்கமென்பது - சொல்லிற்காட்டும்பணிவு என்றும் இங்ஙன் ஈரிடத்துள்ள வணக்கம் வெவ்வேறுபொருள்கொண்டதாயினும். வணங்குதலொப் புமைபற்றி என்பதன்பின் 'இரண்டுவணக்கத்தையும் ஒன்றாகக்கொண்டு' என வருவிக்க. குறிப்பு - தீங்கு குறித்தல். வில்லி - வில்லையேந்தியவன். வில்லியதுகுறிப்பு அவனினுடைய வில்வணக்கத்தின்மேல்நிற்றலான் ஒன்னாதகுறிப்பும் அவரினுடைய சொல்வணக்கத்தின்மேலதாயிற்று என்பதன்பொருள்வில்லையேந்தியவன் தீங்குகுறித்தலை அவனாலாகிய வில்வணக்கத்தின் மேலேற்றி வில்வணக்கந் தீங்குகுறித்தமையான் என்றுகூறியதனால் அதற்கு ஏற்ப, ஒன்னார்தீங்குகுறித்ததை அவர்களாலாகிய சொல்வணக்கத்தின்மேலேற்றி ஒன்னார்கட்சொல்வணக்கங்கொள்ளற்க என்று மறுத்துக்கூறியது என்பது. இதுவும் - சொல்வணக்கமும். காக்க - (தம்மைப்)பாதுகாத்துக் கொள்ளக்கடவர் (அரசர்)

என்க. அவரை - கூடாநட்பினரை. தெளியற்க - நம்பாதிருக்கக்கடவர். ஏதுவணி.

(எ)

அ௨அ. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா ரழுதகண் ணீரு மனைத்து.

(இ - ள்.) (ஒன்னார்குறிப்பை உணரவல்லார்க்கு),—ஒன்னார் தொழுத கையுள்உம் - அவர் தொழுத கையகத்தும், படை ஒடுங்கும் - படைக்கலம் மறைந்திருக்கும்; அழுத கண் நீர்உம் - (அவர்)அழுத கண்ணீரும், அனைத்து- அவ்வாறே அது மறைந்திருத்தற்கு இடனாம்; (எ - று.)

தாம் நட்பென்பதனைத் தம் கையானும் கண்ணானும் தேற்றிப் பின் கோறற்கு வாங்கவிருக்கின்ற படைக்கலம் உய்த்துணர்வுழித் தேற்றுகின்றபொழுதே அவற்றுள்ளே தோன்று மென்பார் 'ஒடுங்கும்' என்றார். பகைவர் தம் மென்மை காட்டித் தொழினும் அழினும் அவர்குறிப்பையே நோக்கிக் காக்க வென்பதாம்.

இதனால், அவரைச் செயலால் தெளியற்க வென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) அவர் - அப்பகைவர். தொழுத - அஞ்சலிசெய்த, கூப்பிய. கையகத்தும் - கைகளினுள்ளும். படைக்கலம் - ஆயுதம். அது - அவ்வாயுதம். கையானும் கண்ணானும் - கைகளாலும் கண்களாலும். தேற்றி - நம்புவித்து. கோறற்கு - கொல்லுதற்கு. வாங்க - எடுக்க. உய்த்து உணர்வுழி - ஆலோசித்து அறியுமிடத்து. அவற்றுள்ளே - தொழுதகையிடத்தும் அழுதகண்ணீரிடத்தும். மென்மை - தளர்ச்சி. தொழினும் அழினும் - தொழுதாலும் அழுதாலும். காக்க - (தம்மைப்)பாதுகாத்துக்கொள்க. அவரை - கூடாநட்பினரை.

அழுத கண்ணீர்-அழுதலாலாகிய கண்ணீர்

எனப் பெயரெச்சம்காரணப் பொருளது.



"தொழுத தங் கையினுள்ளுந் துறுமுடியகத்துஞ்
சோர, வழுதகண் ணீரினுள்ளும் அணிகலத்தகத்து
மாய்ந்து, பழுதுகண்ணரிந்துகொல்லும் படையுடனொடுங்கும்
பற்றா, தொழிகயார்கண் ணுந்தேற்றந் தெளிகுற்றார்
விளிகுற்றாரே" என்ற சிந்தாமணிச்செய்யுளும்,
அதனுரையில் நச்சினார்க்கினியர் 'அரசர்க்கு ஓர் துன்பம்
வந்தவிடத்து அவர் நட்புடையோர்போல அழுத கண்ணீரும்
கொலைசூழ்தலின், கண்ணினும் படை யொடுங்கிற்றாம்;
"ஒன்னார், அழுத கண்ணீருமனைத்து" என்றார் தேவரும்'
என்று உரைத்ததும் இங்கு உணரத்தக்கன. "தொழுத
கையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதால்" என்றார்,
வில்லிபுத்தூராரும். 'அழுகள்ளன்', 'தொழுகள்ளன்', 'கும்
பிடுகள்ளன்' என்னும் வழக்கு நோக்கத்தக்கது.

(௮)

௮௨௯.

மிகச்செய்து தம்மெள் ளுவாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

(இ - ள்.) மிக செய்து - (பகைமைதோன்றாமற்
புறத்தின்கண் நட்பினை) மிகச்செய்து, தம் எள்ளுவாரை -
(அகத்தின்கண்) தம்மை யிகழும் பகைவரை,—நட்பினுள்

- (தாமும்) அகநட்பின்கண்ணே (நின்று), நக செய்து - (புறத்தின்கண் அவர்)மகிழும்வண்ணஞ் செய்து, சா புல்லல் பாற்று - (அகத்தின்கண் அது) சாம்வண்ணம் பொருந்தற்பான்மையுடைத்து, (அரசநீதி).

'நின்று'என்பதூஉம், 'அரசநீதி' என்பதூஉம், அவாய்நிலையான் வந்தன. அகனொன்று புறனொன்றுதல் ஒருவற்குத் தகாதே யெனினும் பகைவர்மாட் டாயின் தகு மென்பது நீதிநூல்துணி பென்பார், அதன்மேல் வைத்துக் கூறினார். 'சாவ' என்பதன் இறுதிநிலை, விகாரத்தால் தொக்கது; "கோட் டின்வாய்ச்சாக்குத்தி" என்புழிப் போல. எள்ளுவாரைப் புல்லல் எனக் கூட்டுக.

(கு - ரை.) வெளிக்கு அதிகஸிநேகங்காட்டி உள்ளே தம்மையிகழ்ந்தொழுகும் பகைவரைத் தாமும் அவ்வாறு ஸிநேகித்தொழுகவேண்டு மென்பதாம்.

அகநட்பு-அகத்தின்கண் இகழ்ந்து புறத்தேமிகச்செய்யும் அப்படிப்பட்ட ஸிநேகம். அவர் - பகைவர். அது சாம்வண்ணம் - அம்மகிழ்ச்சி அழியும்படி. பான்மை - தன்மை. துணிபு-தேர்ந்தகொள்கை, ஸித்தாந்தம். "கோட்டின் வாய்ச் சாக்குத்தி"—கலித்தொகை, முல்லைக்கலி - ரு; (தம்மைத்தழுவ வருவாரை எருதுகள்) கொம்பினிடத்தே

சாகும்படி குத்தியென்பது இதன் பொருள். சாப்புல்லல் - "சாவ வென்னுஞ் செயவெனச்சத்து, இறுதி வகரங் கெடுதலு முரித்தே" என்ற தொல்காப்பியத்தைக் காண்க.
"மெல்லிய நல்லாருள் மென்மை
யதுவிறந்து, ஒன்னருட்கூற்றுட்கு மூட்குடைமை
யெல்லாம், சலவருட் சாலச் சலமே நலவருள்,
நன்மைவரம்பாய் விடல்" என்ற நாலடியாரினும்,
அயோக்கியரிடத்து அயோக்கியமாயும் யோக்கியரி டத்தில்
யோக்கியமாயும் நடப்பது தகுதி யென்று அறிக.
"மாதர்க் கிதங் கவிவாணர்க்குச் சாலவணக்கங் குரு, நாதர்க்கு
நீதியொடாசாரம் நண்பினயந்

•

## அசு - ஆம் அதிகாரம்.—பேதைமை ௩௲௬௧

தவர்க்குக், கோதற்றவாசகம் பொய்த்துப் போய்
கோளுக்குக் கோளறிவி,
லாதார்க்கிரட்டிப் பறிவுடையோர்செய்யுமாண்மைகளே"
என்பதுங் காண்க'
அதன்மேல் - நீதிநூலின்மேல். இக்குறளுக்கு, 'நீதிநூல்'
என்பது-தோன்று
எழுவாய். புல்லல் பாற்று - புல்லுதல் தகுதியுடையது
என எழுவாய்பய
னிலைகளாக முடித்தலுமாம்; கீழ் அஉ௫ - ஆங்
குறளினும், தேறல் பாற்று

அன்று - தெளிதல்முறைமையுடையதன்று என
எழுவாய்பயனிலைகளாக்கி

முடிக்கலாம். இறுதிநிலை-கடைசியெழுத்து;
வகரவுடம்படுமெய்யோடுகூடிய

அகரவிகுதி யென்க.

(கூ)

அங்0 பகைநட்பாங் காலம் வருங்கான
முகநட்

டகநட் பொரீஇ விடல்.

(இ - ள்.) பகை - (தம்)பகைவர், நட்பு ஆம் காலம் -
(தமக்கு) நட்டாரா

யொழுகுங் காலம், வருங்கால்-வந்தால்,—முகம் நட்டு -
(தாமும் அவரோடு)

முகத்தால் நட்புச்செய்து, அகம் நட்பு ஒரீஇ -
அகத்தால் அதனைவிட்டு,

விடல் - (பின் அதுவுந்) தவிர்க; (எ - று.)

அக்காலமாவது - தம்மானும் பகையென்று
வெளிப்பட நீக்கலாகாத

அளவு. இதனானே, ஆமளவெல்லாம் நீக்குக வென்பது
பெற்றாம்.

இவையிரண்டுபாட்டானும், அந்நட்பிடை ஒழுகுமாறு
கூறப்பட்டது.

(கு - ரை.) பகைவர் நண்பர்போன்றுஒழுகினாலும்
அவர்நட்பைத் தம்மா

லானவரையிலும் நீக்கவேண்டு மென்பதாம்.
அகத்தால்-மனத்தால். அதனை-

சினேகத்தை. அதுவும் - முகநட்பையும். தம்மானும் - தம்மாலும். ஆமளவு
எல்லாம் - கூடியவரையிலும். அந்நட்பிடை ஒழுகும்ஆறு - கூடாநட்பின
ரிடத்து நடக்கவேண்டியவிதம். அளவு - சமயம். (௮௰)

# அசு - ஆம்

## அதிகாரம்.—பேதைமை.

இனி, அந்நட்பினை எதிர்மறுத்துப் பகைமுகத்தாற் கூறிய தொடங்கி
னூர். அப்பகைதான், முற்றக்கடியுங்குற்றமன்மையின் உளவாய வெகுளியா
னுங் காமத்தானும் வருவதாம். அவற்றுள் வெகுளியான்வருவன ஐந்து அதி
காரத்தானும் காமத்தான்வருவன ஐந்து அதிகாரத்தானும் கூறுவார், அவ்வி
ரண்டற்கும் அடியாய மயக்கத்தை இருவகைப்படுத்து, இரண்டுஅதிகாரத்
தாற் கூறுவான்தொடங்கி, முதற்கண் பேதைமை கூறுகின்றார். அஃதாவது-
யாதும் அறியாமை.

(கு - ரை.) இனி, என்றதன்பின் நட்பைப்பற்றி, நட்பு நட்பாராய்தல்
பழமை தீநட்பு கூடாநட்புஎன்று உடன்பாட்டுமுகத்தால்

ஐந்து அதிகாரங்

களாற் கூறியபின் என வருவிக்க. கூறிய-சொல்ல.
முற்றக்கடியுங் குற்ற

மன்மையின் உளவாய - முழுவதும் நீக்கத்தக்க குற்றமல்ல
வாதலால் உள்ள

னவான; பகைவர் பக்கலிலும் தம் மனைவியர்பக்கலிலும்
முறையே வேண்டுத

லால், இல்லறத்தாரான அரசர்க்குக் கோபமுங் காமமும்
முற்றக்கடியுங்குற்ற

மல்லவாயின. அவ்விரண்டற்கும் - வெகுளி காமம்
என்ற அந்த இரண்டு

குற்றங்கட்கும். பகைதான் வெகுளியானும்

காமத்தானும் வருவதாமென





முடியும். அடி - காரணம். மனுதருமசாஸ்திரம் எ - ஆம் அத்தியாயத்தில், கோபத்தால், கோள் துணிவு துரோகம் பொறாமை பிறன்குணத்தைச்சகியாமை ஒருவன்பொருளையபகரித்தல் காரணமின்றியடித்தல் திட்டுதல் என எட்டுத்துக்கங்கள்உண்டாகுமென்றும், காமத்தால், 'வேட்டை சூது பகற்றூக்கம் வம்பளப்பு ஸ்திரீலோலதை குடி பாட்டு கூத்து வாத்தியம் பயனற்றதிரிச்சல் என்ற பத்துத்துக்கங்களுண்டாகுமென்றும் கூறியுள்ளது. இருவகைப்படுத்து - பேதைமை, புல்லறிவாண்மை என்ற இரண்டுவகைப்படுத்தி. கூறுவான் - சொல்ல. அஃதாவது - பேதைமையாவது. யாதும்அறியாமை -

செய்வன தவிர்வன அறியாமை.

௮௩௧. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

(இ - ள்.) பேதைமை என்பது - பேதைமையென்று சொல்லப்படுவது, ஒன்று-(ஒருவனுக்கு ஏனைக்குற்றங்களெல்லாவற்றிலும்மிக்கது) ஒன்று;யாது எனின் - (அதுதான்) யாதென்ற வினவின்,—ஏதம் கொண்டு - (தனக்குக்) கேடுபயப்பனவற்றைக் கைக்கொண்டு, ஊதியம் போக விடல் - ஆக்கம்பயப்பனவற்றைக் கைவிடுதல்; (எ - று.)

கேடு - வறுமை பழி பாவங்கள். ஆக்கம் - செல்வம் புகழ் அறங்கள். தானே தன்இருமையுங் கெடுத்துக்கோடலென்பதாம்.

(கு - ரை.) பேதைமையாவது, தனக்குத்தீமைதருமவற்றைக் கைக்கொண்டு தனக்குநன்மைதருமவற்றைக் கைவிடுதல் என்பதாம்.

கேடு - தீங்கு. இம்மையிற்கேடுபயப்பன - வறுமையும்பழியும்: மறுமையிற்கேடுபயப்பன - பாவங்கள். ஆக்கம் - நன்மை, இலாபம். இம்மையில் ஆக்கம்பயப்பன-செல்வமும்புகழும். மறுமையில்ஆக்கம்பயப்பது-அறம். போக விடல் - அழியவிடுதல். தானே தன்இருமையுங் கெடுத்துக்கோடலென்பதாம் - 'ஏதங்கொண்டூதியம்போகவிடல் பேதைமை' என்றதனால் ஒருவன் இம்மைமறுமையென்ற இரண்டிடத்திலும் தனக்குத் தீமைதருவனவற்றைக் கைக்கொண்டு நன்மைதருவனவற்றைக் கைவிடுதலே பேதைமையென்பதாம். ஏதம்,ஊதியம் என்பன-அவற்றைத் தருஞ் செய்கைகட்குக் காரியவாகுபெயர்.

௮௩௨. பேதைமை யுள்ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(இ - ள்.) (ஒருவனுக்கு), பேதைமையுள் எல்லாம் பேதைமை - பேதைமையெல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது,—கை அல்லதன்கண் - (தனக்கு) ஆகாதஒழுக்கத்தின்கண், காதன்மை செயல்-காதன்மை செய்தல்.

இருமைக்கும்ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்தலென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், பேதைமையது இலக்கணங் கூறப்பட்டது.

(கு - ரை.) காதன்மை - விருப்பம். இருமைக்கும் - இம்மைமறுமையிரண்டுக்கும். நூலோர் - சாஸ்திரமுணர்ந்தவர். கடிந்த - விலக்கிய. விரும்பிச்

௩௬௩ செய்தலென்றதன்பின், பெரும்பேதைமையென்று வருவிக்க. காதல்-ஆசை;
அதன்மேல், மை - பகுதிப்பொருள்விகுதி. கை - ஒழுக்கம்.

(உ)

அ௩௩.

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(இ - ள்.) நாணாமை - (நாணவேண்டுமவற்றிற்கு) நாணாமையும், நாடாமை - (நாடவேண்டுமவற்றை) நாடாமையும், நார் இன்மை - (யாவர்மாட்டும்) முறிந்த சொற்செயலுடைமையும், யாது ஒன்றும் பேணாமை - (பேணவேண்டுமவற்றுள்) யாதொன்றனையும் பேணாமையும், பேதை தொழில் - பேதையது தொழில்; (எ - று.)

நாணவேண்டுமவை - பழி பாவங்கள். நாடவேண்டுமவை - கருமங்களிற் செய்வன, தவிர்வன. முறிதல் - கண்ணறுதல். பேணவேண்டுமவை - குடிப் பிறப்பு, கல்வி, ஒழுக்கம் முதலாயின. இவை பேதைக்கு என்றும் இயல்பாய் வருதலின், 'தொழில்' என்றார்.

(கு - ரை.) பேதை - மூடன். நாணுதல் - வெட்கப்படுதல், லஜ்ஜை. 'தமக்குஒவ்வாத கருமங்களில் நாணுதல்' என்றும், 'செயத்தகாதவற்றின்கண்

உள்ளமொடுங்குதல்' என்றுங் கூறுவர். நாடுதல் - ஆராய்தல். முறிந்த - மாறுபட்ட. சொற்செயல் - சொல்லுஞ் செயலும். பேணுதல் - விரும்பிக் காத்தல். செய்வன தவிர்வன - விதி விலக்குக்கள். கண்ணறுதல் - தாட்சிணியமின்மை., நாரின்மை - கண்ணோட்டமில்லாமை; நார் - அன்பு. நாணாமை முதலிய நான்கும் - பெயர்ச்செவ்வெண். நாணாமை, நாடாமை பேணாமை-எதிர்மறைத்தொழிற்பெயர்கள். நாணாமைமுதலியவை, பேதைமையைப் புலப்படுத்து மென்க.

(௩)

௮௩௪.

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

(இ - ள்.) ஓதி(உம்)-(மனமொழி மெய்கள் அடங்குதற்கு ஏதுவாய நூல்களை) ஓதியும், உணர்ந்துஉம் - (அவ்வடக்கத்தான் வரும் பயனை) உணர்ந்தும், பிறர்க்கு உரைத்துஉம் - (அதனை அறியலுறப்) பிறர்க்கு உரைத்தும், தான் அடங்கா - தான் (அவை)அடங்கி ஒழுகாத, பேதையின் - பேதைபோல, பேதையார் —, இல் - (உலகத்து) இல்லை; (எ - று.)

உம்மை, மூன்றுங் கூட்டப்பட்டது. இப்பேதைமை, தனக்கு மருந்தாய இவற்றால் தீராமையானும், வேற்றுமருந்து இன்மையானும், 'பேதையிற் பேதையாரில்' என்றார்.

இவை யிரண்டுபாட்டானும், பேதையதுதொழில் பொதுவகையாற்
கூறப்பட்டது; இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(கு - ரை.) மன மொழி மெய்கள் - மனோ வாக் காயங்கள்; இவையே
திரிகரணம். ஓதி - படித்து. அதனை - அடக்கத்தால்வரும் பயனை. அறிய
லுற - அறியும்படி. அவை-அம் மனமொழிமெய்கள். 'உணர்ந்தும்' என்பதி லுள்ள உம்மை, 'ஓதியும்' என
முன்னுங் கூட்டப்பட்டது. தனக்கு-பேதை



மைக்குணமாகிய தனக்கு. மருந்து-பரிகாரம். இவற்றால் - ஓதுதல் முதலிய
வற்றால். 'இனி' - அடுத்த ஆறுசெய்யுள்களிலும். (௪)

௮௩௫. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தானபுக் கழுந்து மளறு.

(இ - ள்.) பேதை - பேதையாயினன்,—எழுமை

உம் - வரும்பிறவிக்

ளெல்லாம், தான் புக்கு அழுந்தும்—, அளறு -
நிரயத்தினை, ஒருமை - இவ்

வொருபிறப்புள்ளே, செயல் ஆற்றும் - செய்துகொள்ள
வல்லனும்; (எ - று.)

எல்லாப்பிறப்பும் ஏழாய் அடங்குதல்
அறியப்பட்டமையின், முற்றும்மை

கொடுத்தார். * அழுந்துதற்கு இடனுடைய நிரயம். ஈண்
டைப் பிறப்புக்களி

னும் கொடுவினைவயத்தால் அந்நிரயத்துன்பமே உழந்து
வருதலின், 'எழு

மையுந்தான்புக் கழுந்து மளறு' என்றார்.
முடிவில்காலமெல்லாந் தான்நிரய

த்துன்ப முழத்தற்கு ஏதுவாம் கொடுவினைகளையே அறிந்து சிலகாலத்துள்ளே செய்துகோடல் பிறர்க்கு அரிதாகலின், 'ஆற்றும்' என்றார்.

இதனால், அவன் மறுமைச்செயல் கூறப்பட்டது.

(கு - ரை.) பிறவிக ளெல்லாம் - பிறப்புக்களி லெல்லாம். எழுமை - எழுவகைப்பிறப்புக்கள்; பிறப்பேழாவன - தேவர், மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. நிரயம் - நரகம். முற்றும்மை, 'எழுமையும்' என்பதில். இங்கே, முற்றும்மை - இனைத்தென் றறிபொருளில் வந்தது: [நன் - பொது - சஅ.] அழுந்துமளறு என்ற இடத்து 'அழுந்தும்' என்ற பெயரெச்சம், அழுந்துதற்கு இடனுடைய அளறு என இடப்பெயர்கொண்டு முடியுமென்பார் 'அழுந்துதற்கு இடனுடைய நிரயம்' என்றார். ஈண்டைப்பிறப்புக்கள் - இவ்வுலகத்துப்பிறவிகள். கொடுவினைவயத்தால் - கொடியகரும

வசத்தால். உழந்து - அனுபவித்து. அவன் -
பேதையாயினனது. மறுமை -

இறந்தபின்புவரும்பிறவி; அதற்கு உரியசெயல் -
மறுமைச்செயல். பேதை

ஆற்றும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்கு வந்தது; [நான் - வினை - உகூ.]

இவ்வுலகத்தில் ஒருபிறப்பிலே இருந்து அவ்வுடலைவிட்டபின்பு நரகலோகத்திற்சென்று துன்பமடைவதே யன்றி அடுத்தபடியாக இவ்வுலகத்திலே எடுக்கும் பிறப்பிலும் நரகவேதனைக்குச்சமமான கொடுந்துன்பங்களையே பாபவசத்தால் அனுபவிப்பனென்பது, 'எழுமையும் தான்புக்கழுந்து மளறு' என்ற தொடரால் விளங்கிற்று. அளறு - குழைசேறு; அதன்மயமாகச் சிலநரகங்கள் இருத்தலால், நரகத்திற்கு 'அளறு' என்று ஒருபெய ராயிற்று: "இருள்" என்பது போல. (௫)

அ௩௬. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

(இ - ள்.) கை அறியா பேதை - செய்யுமுறைமை யறியாத பேதை, வினை - ஒருகருமத்தை, மேற்கொளின் - மேற்கொள்வனாயின், பொய் படும் ஒன்றோ புனை பூணும் - (அதுவும்) †புரைபட்டுத் (தானும்) தளைபூணும்; எ - று.)

பி-ம்: *அழுந்துசிரயம்-அழுந்துதற்கு இடனாயநிரயம். † புரைபடும்;

அ௯ - ஆம் அதிகாரம்.—பேதைமை

௩௬௫

புரைபடுதல் - பின் ஆகாவகை உள்ளழிதல். 'ஒன்றோ' என்பது - எண்ணிடைச்சொல். அதனையுங் கெடுத்துத் தானுங் கெடு மென்பதாம்.

இதனால், அவன் * செல்வம்படைக்குமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) மூடன் தான்மேற்கொண்டகாரியத்தைக்கெடுப்பதோடு தன்னையுங் கெடுத்துக்கொள்வனென்பதாம்.

மேற்கொள்ளுதல் - தான்செய்வதாக ஏற்றுக்கொண்டு தொடங்குதல். அதுவும் - அத்தொழிலும். தளை பூணும் - பந்தப்படுவான். புனை - விலங்கு. 'ஒன்றோ' என்பதைப்பற்றி அ௦௫ - ஆம் குறளின் உரைக்குறிப்பில் எழுதப் பட்டது. பின்ஆகாவகை - (மேற்கொண்டகாரியம்) பின்பு ஒருகாலும் முடியாதபடி. அதனையும்-அத்தொழிலையும். பொய்படும் ஒன்றோ - (அத்தொழில் முழுவதுங்) கெட்டுவிடுதல்மாத்திரமோ என்றபடியுமாம். அவன் - பேதை. செல்வம் படைக்கும் ஆறு - பணம்சம்பாதிக்கும் விதம். (௬)

அ௩௭. ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(இ - ள்.) பேதை-பேதையாயினன், பெருஞ்செல்வம் - பெரிய செல்வத்தை, உற்றக்கடை - (தெய்வத்தான்) எய்தியவழி,—ஏதிலார் ஆர - (தன்னெடு) ஓரியைபுமில்லாதார் நிறைய, தமர் பசிப்பர் - (எல்லாஇயைபுமுடைய) தமராயினர் பசியாநிற்பர்; (எ - று.)

எல்லாநன்மையுஞ் செய்துகோடற்கருவி யென்பது தோன்ற 'பெருஞ்

செல்வம' என்றும், அதனைப் படைக்குமாற்ற லில்லாமை தோன்ற 'உற்றக்
கடை' என்றும், எல்லாம்பெறுதல் தோன்ற 'ஆர' என்றும். உணவும்
பெருமை தோன்ற 'பசிப்பர்' என்றுங் கூறினர்.

(கு - ரை.) அறிவீனனுக்குச் செல்வங்கிடைத்தால், அயலார் அதனைப்
பெற்றுஅனுபவித்து மிக்க சுகமடைய, அவன்சுற்றத்தார் ஒன்றும் பெறாது
மிகவருந்துவ ரென்பதாம். தெய்வத்தான் - விதிவசத்தால். எய்தியவழி -
அடைந்தபொழுது. தன்னோடு-அவனுடன். இயைபு -சம்பந்தம். நிறைய-
திருப்தியடைய. வயிறாரவென்னாது 'ஆர' என்று பொதுவாகச்சொன்னமை
யால் எல்லாம்பெறுதல் தோன்று மென்க. தமர் - உறவினரும், நண்பரும்;
தாம்என்பதன் அடியாகப்பிறந்த கிளைப்பெயர். அதனைப் படைக்கும் ஆற்
றல் - செல்வத்தைச் சம்பாதிக்கும் வல்லமை.

ஏது இலார்-யாதொருதொடர்பும்இல்லாதவர்; எனவே, பிறராவர். (எ)

௬௱௩௰௮. மையல் ஒருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

(இ - ள்.) பேதை - பேதையாயினான், தன் கை - தன் கைக்கணேண,

ஒன்று - ஒன்றனை, உடைமை - உடைமையாக, பெறின் - பெற்றானாயின்,

(அவன் மயங்குதல்),—மையல் ஒருவன் - (முன்னே) பித்தினையுடையானொரு

---

ங - ம்: *வினைசெய்யுந்திறம் கூறப்பட்டது.



ருவன், களித்து அற்று - (அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டு மயங்கினாற் போலும்; (எ - று.)

'பெறின்' எனவே, தெய்வத்தானன்றித் தன்னாற் பெறுமை பெற்றும். பேதைமையும் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால் அவன்செய்வன, மையலும் மதுகளிப்பும் ஒருங்குடையான்செய்வனபோல் தலைதடுமாறு மென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், அவன் ருமாறு கூறப்பட்டது.

செல்வமெய்தியவழிப் பயன் கொள்

(கு - ரை.) மூடன் பணங்கிடைக்கப்பெற்றால், பைத்தியக்காரன் கள்ளையும் குடித்தாற்போல மிகமயங்கித் தாறுமாறாகத் தொழில்செய்வ

னென்பதாம். உவமையணி.

அவன் - அப்பேதை. பித்து

ஆல் - அசை. கைக்கண்ணே - கையிலே.

- பித்தம், பைத்தியம். மது - கள். தெய்

வத்தான் - விதிவசத்தால். செய்வன - செய்யுஞ்செயல்கள். மதுக்களிப்பு - கட்குடித்ததனு லாகிய மயக்கம். தலைதடுமாறும் - ஒழுங்குகெடும், முறைபிறழும். செல்வச்செருக்குக் களிப்பாகுதலை 'தநமதம்'என வழங்குதலினாலும் உணர்க; "கழிபெருஞ்செல்வக் கள்ளாட்டயர்ந்து, மிக்கநல்லறம் விரும்பாது வாழும், மக்களிற் சிறந்த மடவோ ருண்டோ" என்ற மணிமேகலையையுங் காண்க. (அ)

௩௩௯. பெரிதினிது பேதையார் கேண்மை
பிரிவின்கட் பீழை தருவதொன் றில்.

(இ - ள்.) பிரிவின்கண் - (பின்) பிரிவு வந்துழி, தருவது பீழை ஒன்று

இல் - (அஃது இருவர்க்குந்) தருவதொரு துன்பம் இல்லை; (ஆதலால்),

பேதையார் கேண்மை - பேதையாயினோர்

இனிது - மிக இனிது; (எ - று.)

(தம்முட்கொண்ட) நட்பு, பெரிது

நாடொறுந் தேய்ந்துவருதலின், துன்பந் தாராதாயிற்று. புகழ்வார் போன்று பழித்தவாறு.

இதனுல், அவரது நட்பின் குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) அஃது - அப்பிரிவு. பீழை - பீடா என்னும் வடசொல்

லின் சிதைவு.

பேதையாயினுர்நட்பு நாள்தோறுந்தேய்ந்துவருதலே, "மதிப், பின்னீர பேதையார்நட்பு" என்றதனுலும் அறிக; "உவப்பத் தலைக்கூடி யுள்

ளப் பிரித, லனைத்தே புலவர் தொழில்" என்றவாறு பிரியுங்காலத்து உள்தா

குந் துன்பத்தைப் பேதையாயினுர் தம்முட்கொண்டநட்புத் தாராதாகலின் அந்நட்புக் கற்றறிந்தார்தம்முட்கொண்ட நட்பினும் மிக இனிது என்று புகழ்

பவர்போன்று, பேதையார் நட்பு நாடோறுந் தேய்ந்துவருதலாற் பயனற்ற

தென்னும் பழிப்புத் தோன்றக் கூறியதனுல், இது வஞ்சப்புகழ்ச்சியணி;

இதனை வடநூலார் வ்யாஜஸ்துதியலங்கார மென்பர். "பழிப்பிற்புகழ்ச்சி

புகழ்ச்சியிற்பழிப்புப்,புகழ்ச்சியிற்புகழ்ச்சி யென முப்பாலாப்,போந்தது வஞ்ச

ப்புகழ்ச்சியாகும்" என்று சந்திராலோகத்துக்கூறப்படும்

மூன்றுவகையால்,

அரு - ஆம் அதிகாரம்.—புல்லறிவாண்மை

பழிப்பிற்புகழ்ச்சி யிது; இனி, ஒன்றன் பழிப்பைப் புகழ்வதாகக்கற்பிக்கும் இதனை இலேசவணியின்பாற்படுத்துக் கூறுவர் ஒருசாரார்: "புகழ்வதுபோலப் பழித்திறம்புனைதலும், பழிப்பதுபோலப் புகழ்புலப்படுத்தலும், அவையு மன்னவென் றறைகுந ருளரே" என்ற தண்டியலங்காரத்தைக் காண்க. அவரது - பேதையாயினரது.

(௯)

௮௪௦. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

(இ - ள்.) சான்றோர் குழாஅத்து - சான்றோர்அவையின்கண், பேதை புகல் - பேதையாயினான் புகுதல்,—கழாஅ கால் - தூயவல்லமிதித்த காலை, பள்ளியுள் வைத்து அற்று - (இன்பந்தரும்) அமளிக்கண்ணே வைத்தாற் போலும்; (எ - று.)

கழுவாக்கால் என்பது - இடக்கரடக்கு. அதனால் அவ்வமளியும் இழிக் கப்படுமாறுபோல, இவனால் அவ்வவையும் இழிக்கப்படு மென்பதாம்.

இதனால், அவன் அவையிடை இருக்குமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) சான்றோர் அவையின்கண் - பெரியோர்கூடியசபையில். தூயவல்ல - அசுத்தமானவற்றை. அமளிக்கண்ணே - படுக்கையிலே. இடக்கரடக்கு -

சொல்லத்தகாததை மறைத்துச்சொல்வது; இங்கே, மிதித்த மலங் கழுவாத காலே 'கழுவாக் கால்' என்றது; [நன் - பெயர் - கo.] இடக்கர்ச் சொல்லே "அவையல் கிளவி" என்பர் ஆசிரியர் தொல்காப்பியனுர். அஸப்யம் என்ற வடசொல்லின்
பொருள் அது; சபையிலே [நன்மக்களிடத்தே] கூறப் படுவதல்லாத சொல்லே அவ்வாய்பாடுமறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறுக வென்னும் விதியை "அவையல்கிளவி மறைத்தனர்கிளத்தல்" என்றதனுல் உணர்க. அதனுல் - கழுவாத காலினுல். இதனுல் என்ற பாடத்துக்கு - பேதையாயினுன்
சான்றோர்குழாஅத்துப்புகுந்ததனுல் என்க. குழாம் - கூட்டம். உவமையணி; இது, அபரிசுத்தமாதலே விளக்கும் உவமை. "கல்லாது நீண்ட வொருவ னுலகத்து, நல்லறிவாளரிடைப்புக்கு - மெல்லவிருப்பினு நாயிருந்தற்றே யிராஅ, துரைப்பினு நாய் குரைத்தற்று" என்றூர் நாலடியாரிலும். 'படுக்கும்பொழுது கால்கழுவித்
துடைத்துக்கொண்டு ஈரம் உலர்ந்தபின்னரே படுக்கையிற் படுத்துக்கொள்ள வேண்டும்' என்பது, சயனவிதி.

## அரு - ஆம்
## அதிகாரம்.—புல்லறிவாண்மை.

இனி, ஏனப் புல்லறிவாண்மை கூறுகின்றூர்; அது, புல்லிய அறிவினை ஆடற்றன்மை யென விரியும். அஃதாவது - தான் சிற்றறிவினனுயிருந்தே தன்னைப் பேரறிவினனுக மதித்து உயர்ந்தோர்கூறும்

உறுதிச்சொற் கொள்ளாமை.

(கு - ரை.) புல்லிய - இழிந்த. ஆடல்-ஆளுதல். ஆண்மை யென்பதில், ஆள் - பகுதி, மை - தன்மைப்பொருள் விகுதி.

௲௪௧. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு.



(இ - ள்.) (ஒருவனுக்கு), இன்மையுள் - இல்லாமை பலவற்றுள்ளும்,
இன்மை - (மிக்க) இல்லாமையாவது, அறிவு இன்மை - அறிவில்லாமை:
பிறிது இன்மை - மற்றைப் பொருளில்லாமையோ வெனின், (அதனை), இன்
மை ஆ வையாது - (அப்பெற்றித்தாய) இல்லாமையாகக் கொள்ளார்,
உலகு - உலகத்தார்; (எ - று.)

அறிவென்பது - ஈண்டு, தலைமைபற்றி நல்லறிவின்மேல் நின்றது. புல்லறிவாளர் செல்வமெய்தியவழியும் இம்மைமறுமைப்பயனெய்தாமையின் அதனை 'இன்மையுளின்மை' என்றும், நல்லறிவாளர்

வறுமையெய்தியவழி

யும் அஃது இழவாமையின் அதனை 'இன்மையா வையாது' என்றுங்

கூறினர்.

இதனால், புல்லறிவினது குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) அதனை - பொருளில்லாமையை.

பண்புஎன்பது அடை

மொழிகொடாது கூறப்படின்

தலைமைபற்றி நற்பண்பையேகாட்டுவதுபோல,

'அறிவு' என்பது நல்லறிவு புல்லறிவு என்ற

இரண்டற்கும்பொதுவாயினும்,

தலைமையினால் நல்லறிவைக்காட்டுமென்றுகூறினர்.

எய்தியவழியும் - பெற்

றாலும். எய்தாமையின்-பெறுமையால்.

அஃது-அவ்விம்மைமறுமைப் பயன்.

உலகென்பது - பொருளால் உயர்திணையாயினுஞ்

சொல்லால் அஃறிணையா

தலால், வையாதென்னும் அஃறிணை வினைகொண்டு

முடிந்தது. "நுண்ணு

ணர்வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப்பணைத்த

பெருஞ்செல்வம்"

என்ற நாலடியாரை இங்கே அறிக. இன்மையென்பது

ஒருபொருளிற் பன்

முறைவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி.

(௧)

வுசஉ. அறிவிலா னெஞ்சுவந் தீதல்
பிறிதியா து
மில்லை பெறுவான் றவம்.
(இ - ள்.)

அறிவு இலான்-புல்லறிவுடையான்,—(ஒருவனுக்கு), நெஞ்சு உவந்து - மனம்உவந்து, ஈதல் - (ஒன்று) கொடுத்தல், (கூடிற்றாயின், அதற்
குக் காரணம்), பெறுவான் தவம் - பெறுகின்றவன் நல்வினையே; பிறிது யாதுஉம் இல்லை - வேறொன்று மில்லை; (எ - று.)

'ஒரோவழி நெஞ்சு உவந்து ஈதல் கூடலின், 'புல்லறிவாளரும் நல்வினைசெய்ப' என்பார்க்கு, 'பெறுவான் வீழ்பொருளெய்தியான் போல்வதல்லது, இம்மைநோக்கியாக மறுமைநோக்கியாக ஈகின்றாரல்லர்' எனக் கூறியவாறு. 'கூடிற்றாயின், அதற்குக்காரணம்' என்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன.

இதனால், அஃதுடையார் தம்மாட்டு
பட்டது.
நல்லனசெய்தலறியாமை கூறப்

(கு - ரை.) கூடிற்றாயி னென்னவே, கூடுதலருமைகூறப்பட்டது. ஒரோவழி நெஞ்சுஉவந்து ஈதல் கூடலிற் புல்லறிவாளரும் நல்வினைசெய்ப என்பார்

க்கு - (புல்லறிவாளர் நல்வினையைச்செய்வதேயில்லை யென்பதைமறுத்துச்) சிலவேளைகளில் (சிலர்க்கு) மனமுவந்து கொடுத்தலாற் புல்லறிவாளரும்

௺௯௧
மனப்பூர்வமாய் நல்வினையைச்செய்பவர்கள் தாம்
என்பாரை நோக்கி. வீழ்
பொருளெய்தியான்போல்வதல்லது -
கீழ்விழுந்திருப்பதொருபொருளை (நல்
வினைப்பயனால்) அடைபவன்போன்று
(இப்புல்லறிவாளரிடத்தினின்றும் தனதுநல் வினைப்பயனாற்
பொருளைப்பெறுகின்றானே) அல்லாமல். ஆக-ஆவ
து; விகற்பப்பொருளது.ஈகின்றாரல்லரென்பதற்குஎழுவாய்
- புல்லறிவாளர்.

அசஅ. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும்
செறுவார்க்குஞ் செய்த லரிது.

பீழை

(இ - ள்.) அறிவு இலார்-புல்லறிவுடையார், தாம் -
தாமே, தம்மை—, பீழிக்கும் - வருத்தும், பீழை - வருத்தம்,
செறுவார்க்குஉம் - (அதுசெய்தற்கு உரியராய தம்)
பகைவர்க்கும், செய்தல் அரிது—; (எ - று.)

பகைவர் தாம் அறிந்தவொன்றனைக்
காலம்பார்த்திருந்து செய்வதல்லது வறுமை பழி பாவம்
முதலிய பலவற்றையும் எக்காலத்துஞ் செய்யமாட்டா
மையின், அவர்க்குஞ் செய்தலரி தென்றார்.

இதனால், அவர் தம்மாட்டுந் தீயனசெய்தலறிவ

ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) அறிவில்லாதவர் தமது அறிவின்மையாற் பகைவராலுஞ் செய்தற்குமுடியாத பெருந்துன்பங்களைத் தாமே யுண்டாக்கிக்கொள்ளுவரென்றவாறு. பீழித்தல் - பீடித்தல். அது - அவ்வருத்தத்தை. அறிந்தொன்று - செய்ய அறிந்ததொரு தீமை. உம் - இழிவு சிறப்பு. (ரு)

அஉசு. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) வெண்மை எனப்படுவது - புல்லறிவுடைமையென்று சொல்லப்படுவது, யாது எனின் - யாதென்றுவினவின்,—(அது),—யாம் ஒண்மை உடையம் என்னும் - (தம்மைத் தாமே) யாம் நல்லறிவுடையமென்று நன்கு மதிக்கும், செருக்கு - மயக்கம்; (எ - று.)

வெண்மை - இளமை; அஃதாவது - அறிவுமுதிராமை. ஒண்மையென க்காரியப்பெயர் காரணத்திற்கு ஆயிற்று. உலகத்தாரிகழ்த லறிந்துவைத் தும் அவ்வாறு மதித்தலான், மயக்க மென்றார்.

(கு - ரை.) ஒண்மை - புகழ்; இங்கே, அதற்குக் காரணமான நல்லறிவிற்கு ஆகுபெயர். அறிவின்மையை வெண்மை யென்றது, வைரமின்மரத் தை வெளிற்றுமரமென்னும் வழக்குப்பற்றி; "வெளியார்முன், வான்சுதை வண்ணங் கொளல்" என்றதுங் காண்க. உலகத்தாரிகழ்தலையறிந்திருந்தும் யாம் ஒண்மையுடையம்

என்று கருதுகின்ற செருக்கு மயக்கத்தின் காரியமாதலால், அம்மயக்கத்தைச் செருக்கு என்றேகூறினர்: இது, காரணத்தாற் காரியத்தைக்கூறிய உபசாரவழக்காம்.

(௬)

௪௱௫. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

(இ - ள்.) (புல்லறிவாளர்),—கல்லாத - (தாம்) கல்லாத நூல்களையும், மேற்கொண்டு - (கற்றாராகத் தாம்) மேலிட்டுக்கொண்டு, ஒழுகல் - ஒழுகுதல்,





கசடு அற வல்லது உம் - கசடறக்கற்றதொரு நூல் உண்டாயின் அதன்கண்ணும், ஐயம் தரும் - (பிறர்க்கு) ஐயத்தை விளைக்கும்; (எ - று.)

வல்லது என ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'உண்டாயின்' என்பது, அவாய்நிலையான் வந்தது. ஐயம் - அதுவல்லரென்பதூஉம் இவ்வாறு கொல்லோ வென்பது.

(கு - ரை.) புல்லறிவாளர் தாம் படியாதநூல்களையும் படித்தனவாகப் பேசித் தாம் படித்த நூலைப் பற்றியும் 'இவர் இந்நூலைப்படித்தாரோ? இல்லையோ?' என்று பிறர்சந்தேகிக்குமாறு நடந்துகொள்வரென்றவாறு. கசடறக் கற்றலாவது - விபரீதஐயங்கள் இலவாகப் படித்தல். உண்டாயினென்பது, பெரும்பாலும் உண்டாகாமை உணர்த்திநின்றது. ஏழாவது - 'வல்லதில்' என்னும் ஏழனுருபு. அதுவல்லரென்பதூஉம் இவ்வாறுசொல்லோ - இவர் அந்நூலிலே வல்லவ ரென்று சொல்லுவதும் இங்ஙனந்தா னிருக்குமோ? கல்லாத - பெயர். அளபெடை, இன்னிசைதருதற்பொருட்டு வந்தது. (ரு)

௮௪௬.

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

(இ - ள்.) (புல்லறிவாளர்), தம்வயின் குற்றம் - தங்கண்ணிகழுங் குற்றங்

களை, மறையாவழி - (அறிந்து) கடியாராயின், அற்றம் மறைத்தலோ-(ஆடை-

யால்) அற்றம்மறைத்தாராக(த் தம்மைக்) கருதுதலும், புல்

வாம்; (எ - று.)

அறிவு - புல்லறி

குற்றம் மறைத்தலாவது - அவற்றை இலவாக்குதல். மறைக்கப்படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றையெல்லாம் மறையாது தாழ்ந்தவொன்றனையே மறைத்து அவ்வளவால் தம்மையும் உலகவொழுக்கினராக மதித்தலும் புல்ல

றிவு என்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், அவர்

தம்மைவியத்தற்குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) அற்றம் - மறைக்கத்தக்க அவயவம். இலவாக்குதல் - இல்லாமற்போகச்செய்தல். மறைக்கப்படுவன - பிறர்காணமுடியாதவாறு இல்லாமற் போக்கவேண்டியகுற்றங்கள். தாழ்ந்தவொன்று - தாழ்மையுள்ளதான ஓரவயவம். வியத்தல் - கொண்டாடுதல். ஓ - தெரிநிலை. (சு)

௯௪எ. அருமறை சோரு மறிவிலான் செய்யும்

பெருமிறை தானே தனக்கு.

(இ - ள்.) அரு மறை - (பெறுதற்கு) அரிய உபதேசப்பொருளை, (பெற்றாலும்), சோரும் - (உட்கொள்ளாது)போக்கும், அறிவு இலான் - புல்லறிவாளன்,—(அவ்வுறுதி அறியாமையால்), தானே—, தனக்கு—, பெரு மிறை - மிக்க வருத்தத்தை, செய்யும் - செய்துகொள்ளும்; (எ - று.)

சோரும் என இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேல் நின்றது. மிக்க வருத்தம் - பொறுத்தற்கரிய துன்பங்கள். இனி, 'அருமறை

சோரும்' என்பதற்கு - பிறரெல்லாம், உள்ளத்து

அடக்கப்படும் எண்ணத்தை

அரு - ஆம்

அதிகாரம்.—புல்லறிவாண்மை நஎக

வாய்சோர்ந்து பிறர்க்கு உரைக்கும் என்று உரைத்தார்; அது, பேதைமை யென்னும் பேதைமையாவதன்றிப் புல்லறிவாண்மையன்மை அறிக.

(கு - ரை.) பெரியோர்கூறிய உபதேசப்பொருளை உறுதியாகக்கொண்டு நடவாமையால், புல்லறிவாளன் தனக்குத்தானே வருத்தத்தையுண்டாக்கிக் கொள்வானென்பதாம். அவ்வுறுதி - அவ்வுபதேசத்தாற் பெறும் நன்மை. புல்லறிவாளராகிய இடத்திலே நிகழ்கின்ற மறையாகிய பொருளினது சோர்தலாகியதொழில், அவ்வறிவிலானாகிய இடத்தின்மேல் நின்றது. மறைபிறரறியாமல் மறைக்கப்படுவதாகிய உபதேசவார்த்தையும், உள்ளத்து அடக் கப்படும் எண்ணமும். பிறரெல்லாம் உரைத்தார் என இயையும். முதலுரையில், சோர்தல் - மனத்திற்கொள்ளாது விட்டிடுதல்; இரண்டாமுரையில், வாய்விட்டுச்சொல்லுதல் என்க. (எ)

அசஅ. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்

போஒ மளவுமோர் நோய்.

(இ - ள்.) (புல்லறிவாளன்), ஏவவும் செய்கலான் - (தனக்கு உறுதியாயவற்றை அறிவுடையார்) சொல்லாநிற்கவுஞ் செய்யான்: தான் தேறான் (அதுவன்றித்) தானாகவும் (இவை செய்வன வென்று) அறியான்; அ உயிர் —, போஒம் அளவும் - (யாக்கையின்) நீங்குமளவும், ஓர் நோய் - (நிலத்திற்குப் பொறுத்தற்கரியது) ஒரு நோயாம்; (எ - று.)

உயிர் தான் உணர்தற்றன்மைத்தாயிருந்தும் நின்ற யாக்கைவயத்தான் மருடற்றன்மைத்தாய் வேறுபடுதலின் 'அவ்வுயிர்' என்றும், அதனின் நீங்கிய பொழுதே அதற்கு இரண்டனுள் ஒன்று கூடுதலின் 'போஒமளவும்' என்றும், குலமலைமுதலிய பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பஞ்செய்தலின் 'ஓர்நோய்' என்றுங் கூறினர்.

(கு - ரை.) உணர்தற்றன்மைத்து - இயற்கையில் அறியுந் தன்மையது. நின்ற யாக்கைவயத்தான் - வினையினாற்பெற்றுநின்ற உடம்பின்வசத்தினால். மருடல் - மயங்குதல். இரண்டனுள் ஒன்று - ஏவச்செய்தல், தான்தேறுதல் என்னுந்தொழில்களுள் ஏதாயினும் ஒன்று. குலமலை - குலபர்வதங்கள். பொறை - பாரம். இங்கே பழிப்பினால் உயர்திணை அஃறிணையாயிற்று; உயர் திணை - புல்லறிவாளன்; அஃறிணை - அவ்வுயிர்: உடலையும் உயிரையுந் தனித் தனி பிரித்துக்கூறினால் அவை அஃறிணையாம். அதனின்நீங்கியபொழுதே - வினைவயத்தாற்பெற்றுநின்ற அவ்வுடலினின்று

நீங்கியபோதே. பாவ
யாக்கை - பாவஞ்செய்த உடம்பு: இது, பூமிபாரம்
எனப்படும். 'ஸர்வம்ஸஹா'
என்ற வடமொழிப்பெயரின்படி எல்லாவற்றையும்
பொறுப்பதாகிய பூமியும்
பாவிகளைப் பொறுக்கமாட்டாமல் அவர்களை
அதிபாரமாகக்கருது மென்பதை
யறிக. போஒம் - அளபெடை, செய்யுளோசை
நிறைக்கவந்தது. செய்கலான்,
கு - சாரியை, அல் - எதிர்மறையிடைநிலை.

(அ)

அசஅ. காணாதாற் காட்டுவான் றான்காணான்
காணாதான்
கண்டானாந் தானகண்ட வாறு.



(இ - ள்.) காணாதான் - (தன்னை எல்லாம்
அறிந்தானாக மதித்தலால் பிற
ரால் ஒன்று) அறியுந் தன்மை யிலாதானை, காட்டுவான் -
அறிவிக்கப்புகுவான்,
தான் காணான் - (அவனாற் பழிக்கப்பட்டுத்) தான்
அறியானாய் முடியும்: கா
ணாதான் - (இனி) அவ் வறியுந்தன்மை யில்லாதான்,
(கொண்டது விடா

மையால்), தான் கண்ட ஆறு - தான் அறிந்த ஆற்றால், கண்டான் ஆம் -

(அதனை) அறிந்தானாய் முடியும்; (எ - று.)

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல்

ஒருவாற்றானும் இயைவதன்

றென்பதாம்.

(கு - ரை.) கொளுவுதல் - கொள்ளச்செய்தல்.

ஒருவாற்றானும் இயைவ

தன்று - ஒருவழியாலுங்கூடாது.

சொற்பொருட்பின்வருநிலையணி. புல்லறி

வாளனுக்கு உறுதியானவைகளைச் சொன்னாலும் அவன்

கொண்டதுவிடாத

குணமுடையவனாதலால், உறுதிப்பொருள்சொல்பவனே

அப்புல்லறிவாளனாற்

பழிக்கப்பட்டு அவமானமடைவான்; ஆகவே,

புல்லறிவாளனுக்கு நல்லறிவை

வருவித்தல் ஒருவகையாலும் முடியாதென்பதாம்.

"கற்றன கல்லார் செவி

மாட்டிக் கையுறூஉங், குற்றந் தமதே

பிறிதன்று—முற்றுணர்ந்துந், தாமவர்

தன்மை யுணராதார் தம்முணரா,

ஏதிலரைநோவ தெவன்" என்பர், நீதிநெறி

விளக்கத்தும்.

(கூ)

௲௫0. உலகத்தா ருண்டென்ப
தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.
(இ - ள்.) உலகத்தார் - உயர்ந்தோர் (பலரும்),
உண்டு என்பது - உண்
டென்பதோர் பொருளை, இல் என்பான்-(தன்
புல்லறிவான்)இல்லையென்று
சொல்லுவான், (மகனென்று கருதப்படான்); வையத்து
அலகை ஆவைக்கப்
படும் - வையத்து(க் காணப்படுவதோர்) பேயென்று
கருதப்படும்; (எ - று.)
கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்பயனும் முதலாக
அவர் உளவென்
பன பலவேனும், சாதிபற்றி 'உண்டென்பது' என்றும்,
தானே வேண்டிய
கூறலால் ஒப்பும் வடிவால் ஒவ்வாமையும் உடைமையின்,
தன்யாக்கை கரந்து
மக்கள்யாக்கையுள் தோன்றுதல் வல்ல அலகை யென்றுங்
கூறினார்.
இவை நான்குபாட்டானும், உறுதிச்சொற்
கொள்ளாமையது குற்றங்
கூறப்பட்டது.
(கு - ரை) மகன் - மனிதன். அவர் - உலகத்தார்.
என்பது - சாதி
யொருமை. தானே வேண்டியகூறலால் ஒப்பும்

வடிவால் ஒவ்வாமையும்
உடைமையின்-பேயும்உலகத்தாருண்டென்பதை
இல்லையென்பவனும் தானே
வேண்டியவற்றைச் சொல்லுதலால் ஒத்திருத்தலும்
வடிவம்வேறுபடுதலால்
ஒவ்வாதிருத்தலும் உடையராயிருத்தலால். தன்
யாக்கை கரந்து மக்கள்
யாக்கையுள்தோன்றுதல்வல்ல அலகை - தன்னுடம்பை
மறைத்து மனித
ருடம்பிலே தோன்றுதல் வல்ல பேய். வையம் -
பொருள்களை வைக்குமிடம்.

•

## அசு-ஆம் அதிகாரம்—இகல்.

இனி, அவற்றான் வரும் வெகுளிகாமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும் பான்மைத்தாகலின் அதனான் வருவன கூறுவான் தொடங்கி, முதற்கண் இகல்கூறுகின்றார்: அஃதாவது - இருவர் தம்முள் பொருது வலிதொலைதற்கு ஏதுவாய மாறுபாடு.

(கு - ரை.) அவற்றான் - கீழ்க்கூறிய பேதைமை புல்லறிவாண்மை
களால்; காமம் வெகுளி மயக்கம் என்னும் குற்றங்கள்
மூன்றனுள் வெகுளி
காமங்களுக்குக் காரணம் மயக்கமாதலாலும்,
அம்மயக்கத்தைப் பேதைமை புல்லறிவாண்மை என
இருவகைப்படுத்துக் கீழ் இரண்டதிகாரங்களாற் கூறி
னாராதலாலும், 'அவற்றான்வரும் வெகுளி

காமங்கள்' எனப்பட்டது.
வெகுளி - கோபம். பெரும்பான்மைத்து - பகைவர்கள் குற்றவாளிகள் முத
லியோர்பக்கல் மிகுதியாய் வரக்கூடிய தன்மையையுடையது. அதனான் வரு
வன - வெகுளியால்வரும் பகைகளை. தம்முள் பொருது - தமக்குள்ளே
[ஒருவரோடொருவர்] போர்செய்து. வலிதொலைதற்கு - பலம் அழிதற்கு.
ஏது - காரணம். இகல் - முதனிலைத்தொழிற்பெயர்.
அறுக.

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

(இ - ள்.) எல்லா உயிர்க்குஉம் - எல்லாவுயிர்கட்கும், பகல் என்னும் -
(பிற உயிர்களொடு) கூடாமை யென்னும், பண்பு இன்மை - தீக்குணத்தை,
பாரிக்கும் - வளர்க்கும், நோய் - குற்றம்,—இகல் என்ப - இகலென்று சொல்
லுவர் (நூலோர்); (எ - று.)
மக்களையும் விலங்குகளோடு ஒப்பிப்ப தென்பது தோன்ற 'எல்லாவுயிர்
க்கும்' என்றும், *பகுதிக்குணத்தை இடைநின்று

விளைத்தலின் 'பகலென்
னும் பண்பின்மை' என்றுங் கூறினர். †
நற்குணமின்மை, அருத்தாபத்தி
யால் தீக்குணமாயிற்று.
இதனன், இகலது குற்றங் கூறப்பட்டது.
(கு - ரை.) நூலோர் - சாஸ்திரமறிந்தவர்கள். மக்கள்
- மனிதர். விலங்கு
கள் - மிருகங்கள். ஒப்பிப்பது - சமானமாக்குவது.
'மக்களுயிர்க்கு' என்னமல்
'எல்லாவுயிர்க்கும்' என்றது - இகல் தான்
நல்லறிவுடைய மக்களையும் அவ்
வறிவில்லாத விலங்குகளோடு ஒப்பாகச் செய்துவிடு
மென்பதுபற்றி யென்று
கருத்து. பகுதி - பிரிவு. பண்பின்மை -
நல்லகுணமில்லாமை. பகுதலென்
பது தீக்குணத்தாலன்றிக்கூடாமையின்,
பண்பின்மையென்பது தீக்குணத்
தைக்காட்டிற்றெனக. அருத்தாபத்தியாவது -
ஒருபொருளைக் கூறியமாத்
திரத்தால் அதன்குறிப்புக்கொண்டு கூறப்படாத
மற்றொருபொருளை அறிதல்.
இகலது - மாறுபாட்டினது. என்ப -
இடைச்சொல்லடியாப்பிறந்த பலர்
பாற்படர்க்கை யெதிர்காலவினைமுற்று; 'என்ப'
என்னும் முற்றுச்சொல்,

பி - ம்: *பகுதி தீக்குணத்தை இடையின்றி வளர்த்தலின் † குண
மின்மை.



'னூலோர்' என்னும் பெயர் தொக்குநின்றதனேடுமுடியும்; தோன்றா எழுவாயுமாம். எல்லாமென்பது, இருதிணைக்கும் பொது. உயிர்க்கும், உம்மை - முற்றுப்பொருளது. பகல் - தொழிற்பெயர்; பகு - முதனிலை. துன்பத்தை உண்டாக்குதல்பற்றி, குற்றம் நோயெனப்பட்டது. (க)

௮௫௨. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
இன்னா செய்யாமை தலை.

(இ - ள்.) பகல் கருதி - (தம்மொடு) கூடாமையைக் கருதி, பற்றா செயின் உம் - (ஒருவன்) வெறுப்பன செய்தானாயினும், இகல் கருதி - (அவனோடு) மாறுபடுதலைக் குறித்து, இன்னா செய்யாமை - (தாம் அவனுக்கு) இன்னாதவற்றைச் செய்யாமை, தலை - உயர்ந்தது; (எ - று)

செய்யின் பகைமைவளரத் தாம் தாழ்ந்துவரலானும், ஒழியின் அப்பற்றாதன தாமே ஓய்ந்துபோகத் தாம் ஓங்கிவரலானும் 'செய்யாமை தலை' என்றார். 'பற்றாத' என்பது, விகாரமாயிற்று.

(கு - ரை.) வெறுப்பன - வெறுக்கத்தக்க தீச்செய்கைகள். இன்னாதவற்றை - துன்பந்தருஞ் செய்கைகளை. ஒருவன் ஒருகூட்டத்தாரோடு கூடாமையைநினைந்து பிறர்வெறுக்குந்தொழிலைச் செய்தானாயினும், அவர்கள் அவனுக்குப் பிரதியாக இன்னாசெய்யாமலிருத்தலே உத்தமமென்றவாறு: இதற்குக் காரணங்கூறுவது 'செய்யின்பகைமைவளர.........என்றார்' என்றவாக்கியம். செய்யின் - இன்னாதவற்றைச் செய்தால். தாம் - செய்தவர்.

வரலானும் - தாம்பெருமைகுன்றியவராதலாலும். ஒழியின்

தாம் தாழ்ந்து
- அச்செய்தலை

ஒழிந்தால். அப்பற்றுதன - அவன்செய்ததீங்குகள். தாமே ஓய்ந்துபோக- ஒழிப்பாரில்லாமலே வரவர ஒழிந்துபோய்விட. தாம் - ஒழிந்தவர். ஓங்கி - உயர்ந்து. விகாரம் - தொகுத்தல். பற்று - விரும்பாதவை; எனவே, அருத்தாபத்தியால் வெறுப்பனவாயிற்று: இது, ஈறுதொக்க அஃறிணை எதிர்மறைப் பன்மை வினையாலணையும் பெயர்; 'இன்னா' என்பதும் இது. வெறுப்பன செய்யாதானோடு மாறுபடலாகாமை சொல்லவேண்டாதாயிற்று. வெறுப்பன செய்யாதானுக்கு இன்னாதன செய்தல் கடையென்றும், செய்தவனுக்குச் செய்தல் இடையென்றும், செய்தவனுக்குஞ் செய்யாமை தலையென்றுங் கூறியவாறும். (உ)

௮௫௩. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

(இ - ள்.) இகல் என்னும் - மாறுபாடென்று சொல்லப்படுகின்ற, எவ்வம் நோய் - துன்பத்தைச்செய்யும் நோயை, நீக்கின் - (ஒருவன் தன்மனத் தினின்று) நீக்குமாயின்,—(அவனுக்கு அந்நீக்குதல்);—தவல் இல்லா - (எஞ்ஞான்றும்) உளனாதற்கு ஏதுவாய, தா இல் விளக்கம் - புகழை, தரும் - கொடுக்கும்; (எ - று.)

தவலில்லாமை - அருத்தாபத்தியான்

அப்பொருட்டாயிற்று. தாவில் விளக்கம் - வெளிப்படை. யாவரும் நண்பராவர்: ஆகவே, எல்லாச்செல்வ மும் எய்திக் கொடைமுதலிய காரணங்களாற் புகழ்பெறு மென்பதாம்.



(கு - ரை.) தன்மனத்தினின்று நீக்கும் - எண்ணுமலே விடுவான். எஞ்ஞான்றும் - எந்நாளும். உளனுதல் - அழிவில்லாதவனுயிருத்தல். பூதவுடம்பு அழியினும் புகழுடம்பு அழியாது நிலைநிற்றலால், 'எஞ்ஞான்றும் உளனு தற்கு ஏதுவாய புகழ்' எனப்பட்டது. தவவில்லாமையென்பதற்கு அழிதவில்லாமையென்றுபொருளாதலாலும், எஞ்ஞான்றும் உளனுதலென்பதில்லாவிடின் அழிதவில்லாமையென்பது சித்தியாதாதலாலும், எஞ்ஞான்றும் உளனுதலைத் தவவில்லாமையென்றது, அருத்தாபத்தியாற்கிடைத்தபொருளாம். அப்பொருட்டு-அந்த [எந்நாளும் உள்ளவனுத லென்னும்] பொருளது. விளக்கம்-பொருள்களை விளங்கச்செய்வதற்குக் கருவியாவது; அம்-கருவிப்பொருள் விகுதி. தா இல் விளக்கம் - கெடுதலில்லாத விளக்கு: எனவே, புகழென விளங்குகிறது; இது, சீவகசிந்தாமணியில் "பூண்முலைப்பிடி," கல்லாடத்தில் "திருநுதற்கொடி" என்பனபோல வெளிப்படைச்சொல்: அதாவது-அடை மொழியாற் பொருள் விளங்கி நிற்கும் மொழி. உலகத்து எவ்விடத்தும் எந்நாளும் அழியாது நிலைநிற்றல்பற்றியும், அவியுநதன்மையனவாகிய மற்

றைவிளக்குக்களினும் இப்புகழ்விளக்குக்கு உள்ள விசேடந் தோன்றவும் 'தாவில்விளக்கம்' என்றார்; "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன்றில்," "இந்நிலத்து, மன்னுதல் வேண்டி னிசைநடுக," "நிற்பதே துகொ ளீடிசை யொன்றுமே நிற்கும்" என்பன காண்க. எய்தி - பெற்று. கொடை - கொடுத்தல்; தானம். 'முதலிய' என்றதனால், கல்வி ஆண்மை முதலியவைகளையும் கொள்க. புகழ்பெறும் - மாறுபாடு நீக்கின வன் கீர்த்தியைப் பெறுவான். புகழ் பெரும்பான்மையும் ஈதல்பற்றிவருத லால், 'கொடைமுதலிய காரணங்களாற் புகழ்பெறும்' எனப்பட்டது. தவல்- தொழிற்பெயர்; தவு - முதனிலை. தரும் - இடவழுவமைதி. (ரு)

௩௫௪. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(இ - ள்.) இகல் என்னும் - மாறுபாடென்று சொல்லப்படுகின்ற, துன் பத்துள் துன்பம் - துன்பங்களெல்லாவற்றினும் மிக்க துன்பம், கெடின் - (ஒருவனுக்கு) இல்லையாயின், (அவ்வின்மை அவனுக்கு), இன்பத்துள் இன் பம் - இன்பங்களெல்லாவற்றினும் மிக்க இன்பத்தினை, பயக்கும் - கொடுக்கும்; (எ - று.)

துன்பத்துள் துன்பம் - பலரொடு பொருது வலிதொலைதலான் யாவர்க்கும் எளியனாய்உறுவது; அதனை இடையின்றியே பயத்தலின், 'இகலென்னும்' என்றார்.

இன்பத்துள் இன்பம் - யாவருங்கட்பாகவின் எல்லாப்பயனும் எய்தி உறுவது.

(கு-ரை.)

அவ்வின்மை-இகலென்னும்மிக்கதுன்பமில்லாமை. பொருது-போர்செய்து. வலிதொலைதலான் - பலம் அழிதலால். உறுவது-பொருந்துவது. இகல் தான் துன்பத்துட்டுன்பத்தை இடைவிடாது தருதலால், 'இக



லென்னுந் துன்பத்துட்டுன்பம்' எனக் காரணத்தைக் காரியமாக கெடின் என்றது, கெடுதலின் அருமை குறித்து நின்றது.

உபசரித்தார்.

(௬)

௮௫௫. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை
மிகலூக்குந் தன்மை யவர்.

யாரே

(இ - ள்.) இகல் - (தம்உள்ளத்து) மாறுபாடு (தோன்றியவழி), எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை - (அதனை) ஏற்றுக்கொள்ளாது சாய்ந்து ஒழுகவல்லாரை, மிகல் ஊக்கும் தன்மையவர் - வெல்லக் கருதுந்

தன்மையுடையார,

யாரே - யாவர்? (எ - று.)

இகலை ஒழிந்து ஒழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாகலின் 'வல்லாரை' என்றும், யாவர்க்கும் நண்பாகலின் அவரை வெல்லக்கருதுவார் யாவரும் இல்லை யென்றுங் கூறினர்.

இவைநான்கு பாட்டானும், இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

(கு - ரை.) உள்ளத்து - மனத்தில். தோன்றிய வழி - உண்டானபொழுது. சாய்ந்து - தாழ்ந்து. ஒழுகவல்லார் - நடக்கவல்லவர். வேந்தர்-அரசர். எவ்வாற்றானும் - எவ்விதத்தாலும். அரிது - அருமையானது. அவரை-மாறுபாடுகொள்ளாது ஒழுகவல்லவரை. யாவர்க்கும் - பகைவர்க்கு முட்படட இகலாதார் - மாறுபடாதவர். யார் என்னும் வினப்பெயர், இங்கு இன்மை குறித்து நின்றது. ஏகாரம் - அசை; தேற்றமாகவும் கொள்ளலாம். உள்ளத்துமாறுபாடுதோன்றும்போது அதற்குஇடங்கொடுக்காமல் அவ்விகலுக்கு மாறுபாடாகத்தாழ்ந்துநடக்கவல்லவர் யாவர்க்கும் நண்பராவராதலால், அவரை வெல்லக்கருதுவார் எவருமிலரென்பதாம். எதிர்சாய்தல்-எதிர்தலையொழிதல்.

௮௫௬. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(இ - ள்.) இகலின் - (பிறரொடு) மாறுபடுதற்கண், மிகல் - மிகுதல், இனிது என்பவன்-(எனக்கு) இனிதென்று (அதனைச்) செய்வானது, வாழ்க்கை-உயிர்வாழ்க்கை,—தவல்உம் கெடல்உம் நணித்து - பிழைத்தலும் முற்றக் கெடுதலுஞ் சிறிதுபொழுதுள் உளவாம்; (எ - று.)

மிகுதல் - மேன்மேல் ஊக்குதல். 'இனிது' என்பது - தான் *வேறலைக் குறித்தது. பிழைத்தல் - வறுமையான் †இன்னாதாதல். முற்றக்கெடுதல் -

இறத்தல். இவற்றோடு 'நணித்து' என்பதனைத் தனித்தனி கூட்டி, உம்மைகளை எதிரதும் இறந்ததுந் தழீஇய எச்சவும்மையாக உரைக்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே உளவா மென்பதாம்.

(கு - ரை.) மாறுபடுதற்கண்-மாறுபடுதலில். பிழைத்தல்-பொருட்கேடு· முற்ற-முழுதும். முற்றக்கெடுதல் - உயிர்க்கேடு. சிறிதுபொழுதுள் - விரைவில். ஊக்குதல் - கருதி முயலுதல். வேறல் - வெல்லுதல். வழமை - நுகரப்படுவனயாவும் இல்லாமை. இன்னாதாதல் - துன்பப்படுதல். இவற்றோடு நணித்தென்பதனைத் தனித்தனிகூட்டி - தவலும் நணித்து, கெடலும்

* பி - ம்: வேறல் குறித்தல். † இன்னாதல்.



நணித்து என இயைத்து. தவலும், உம்மை - கெடலும் நணித்தா மென் னும் பொருளைத் தருதலால், எதிரது தழுவிய எச்சம்: கெடலும், உம்மை - தவல் நணித்தானன்றி யென்னும் பொருளைத் தருதலால், இறந்தது தழுவிய எச்சம். நணித்து - உடனே உண்டாவது; ஒன்றன்படர்க்கை முற்று. இகலில் மிகுதல் நல்லதுஎன்றுகருதி ஒருவன் மேன்மேற்செய்தால் அவனுக்குப் பலரும் பகைவராய்விடுவராதலால் அன்னானுக்குச் செல்வக்கேடும் உயிர்க் கேடும் விரைவில்உளவாகுமென்க. 'இகலின் மிகலினிது' என்பது தனக்கு வெற்றியேகிடைக்குமென்ற காரணத்தினாலாகும்.

(கூ)

அருஎ. மிகன்மேவல் மெய்ப்பொருள் காணா
ரிகன்மேவ
லின்னா வறிவி னவர்.

(இ - ள்.) இகல் மேவல் - இகலொடு மேவுதலையுடைய, இன்னா அறிவினவர் - இன்னாத அறிவினையுடையார்,—மிகல் மேவல் - வெற்றிபொருந்துதலையுடைய, மெய் பொருள் - நீதிநூற்பொருளை, காணார் - அறியமாட்டார்; (எ - று.)

இன்னா அறிவு-தமக்கும் பிறர்க்குந் தீங்குபயக்கும் அறிவு. வெற்றி-வழி நின்றார்க்குஉளதாவது. காணப்படும் பயத்ததாகலின், 'மெய்ந்நூல்' எனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின், 'காணார்' என்றார்.

இவை இரண்டுபாட்டானும், இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

(கு - ரை.) மேவுதல் - பொருந்துதல். இன்னாத - துன்பஞ்செய்கின்ற: வழி நின்றார் - நீதிநூல்வழியே நடப்பவர். காணப்படும் பயத்தது - பிரதி யக்ஷமாகத் தோன்றும் பயனையுடையது. இகலினார் - மாறுபட்டவர். மெய்ந்நூலுக்கு ஆகுபெயர்.

(எ)

அருஅ. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(இ - ள்.) இகலிற்கு எதிர் சாய்தல் - (தன் உள்ளத்து மாறுபாடு தோன்றியவழி) அதனை எதிர்தலை ஒழிதல், ஆக்கம் ஆம்-(ஒருவனுக்கு) ஆக்கமாம்; (அதுசெய்யாது), அதனை மிகல் ஊக்கின் - அதன்கண்

மிகுதலை மேற்கொள்ளுமின், கேடு ஊக்கும் - கேடுந் தன்கண் வருதலை மேற்கொள்ளும்.

எதிர்தல் - ஏற்றுக்கோடல். சாய்ந்தபொழுதே வருதலின், 'சாய்தல் ஆக்கம்' என்றார். 'இகலிற்கு' எனவும், 'அதனை' எனவும் வந்தன-வேற்றுமை மயக்கம்.

(கு - ரை.) அதனை - அவ்விகலை. எதிர்தல்-எதிர்கொள்ளுதல், ஏற்றுக் கொள்ளுதல். ஆக்கம் - நன்மை. அதுசெய்யாது - ஏற்றுக்கொள்ளாமையைச் செய்யாமல்; ஏற்றுக்கொண்டு என்றபடி. அதன்கண் - அம்மாறுபாட்டிலே.

மாறுபாடு ஒழிந்த பொழுதே ஆக்கம் வருதலால், 'இகலிற்கெதிர்சாய்தல் ஆக்கம்' எனக் காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. 'இகலிற்கு' என்பதில் இகல் - செயப்படுபொருளாய் நிற்றலால் குவ்வுருபை ஐயுரு

பாகவும், 'அதனை' என்பதில் அது - இடப்பொருளாய் நிற்றலால் ஐயுருபைக் கண்ணுருபாகவுந் திரித்துக்கொள்க என்றபடி. எதிர் - முதனிலைத் தொழிற் பெயர். ஆம்-ஆகும்; செய்யுமென்முற்று, ஈற்றுயிர்மெய்சென்று நின்றது: இது ஆக்க மென்பதனோடு கூட்டப்பட்டது: இனி, அசையாகவுங் கொள்ளலாம்.

அ௩௯. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

(இ - ள்.) (ஒருவன்), ஆக்கம் வருங்கால் - (தன்கண்) ஆக்கம் வரும்வழி, இகல் காணான் - (காரணம் உண்டாயினும்) இகலை நினையான்; கேடு தரற்கு- (தனக்குக்) கேடுசெய்துகோடற்கண், அதனை மிகல் காணும் - (காரணம் இன்றியும்) அதன்கண் மிகுதலை நினைக்கும்; (எ - று.)

இகலான்வருங்கேடு பிறரான் அன்றென்பது தோன்ற, 'தரற்கு' என்றார். நான்காவதும், இரண்டாவதும் - ஏழாவதன்கண்வந்தன. ஆக்கக்கேடு கட்கு முன் நடப்பன, இகலினது இன்மை உண்மைக ளென்பதாம்.

(கு - ரை.) வரும்வழி - வரும்போது. கேடுசெய்துகோடற்கண் - கெடுதி செய்துகொள்ளுமிடத்து. அதன்கண் - இகலில். தன்மைக்குச் சிறந்த தரலென்னுஞ் சொல்லாற் கூறினதனுல், தனக்குத்தானே கெடுதியை உண்டாக்கிக்கொள்ளுதற் கென்று பொருள். 'தரற்கு' என்னும் நான்காம்வேற்றுமையும், 'அதனை' என்னும் இரண்டாம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையின் இடப்பொருளில் வந்தன. இகல் இல்லையாயின் ஆக்கமும், இகல் உண்டாயின் கேடும் உண்டா மென்பதாம். காணும் - செய்யுமென்முற்று, உயர்திணை ஆண்பாலிற் சென்றது. (௯)

அ௬௦. இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) (ஒருவனுக்கு), இகலான் - மாறுபாடு

ஒன்றானே, இன்

னாத எல்லாம் - இன்னாதனவெல்லாம், ஆம் - உளவாம்;
நகலான் - நட்ப

ஒன்றுனே, நல் நயம் என்னும் செருக்கு -
செல்வம், ஆம் - உளதாம்; (எ - று.)

நல்ல நீதியென்னும் பெருஞ்

இன்னுதன - வறுமை, பழி, பாவம் முதலியன.
நகல் - மகிழ்தல்.

அதுவும் செருக்கு என்பதும் - தத்தம் காரணங்கட்கு
ஆயின. 'நயமென்
னுஞ் செருக்கு' எனக் காரியத்தைக் காரணமாக
உபசரித்தார்.

இவைமூன்றுபாட்டானும், அவ்விருமையுங்
கூறப்பட்டன.

(கு - ரை.) மகிழ்ச்சியென்னும் பொருளதாகிய
நகலென்பது - அதற்குக்
காரணமாகிய நட்புக்கும், களிப்பென்னும்
பொருளதாகிய செருக்கென்
பது - அதற்குக் காரணமாகிய செல்வத்துக்குங்
காரியவாகுபெயர். காரிய மாகிய செல்வம், அதற்குக்
காரணமாகிய நீதியாக உபசரிக்கப்பட்டது. இருமை -
இகலாதார்க்கு வரும் நன்மையும், இகலினர்க்கு வருந்
தீமையும்.

இகலர்ன், நகலான் - ஆன், மூன்றனுருபு. இன்றைத -
பெயர். (50)

அ௯ - ஆம்

# அதிகாரம்.—பகைமாட்சி.

அஃதாவது - மாட்சிப்படுத்தல்.

அறிவின்மைமுதலிய குற்றங்களுடைமையாற் பகையை அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின், மேற் பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்றாராகலின், இஃது, அதன்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) கூடாமை - முடியாமை. ஈண்டு - இவ்வதிகாரத்தில். விதித்தல் - நியமித்துக் கூறுதல். இஃது - இவ்வதிகாரம். அதன்பின் - இகலென்னும் அதிகாரத்தின்பின். 'இகல்கூடாது' என்று கீழதிகாரத்திற் பொதுவாக விலக்கப்பட்டதனை இன்ன இன்ன இடத்துக்கூடும் என்று விதித்தலால் பொதுவகையான் விலக்கப்பட்ட இகலைச் சிறப்புவகையான் விதிக்கின்றாரென்றார். பகைமாட்சியென்பது - அறிவில்லாமை முதலிய குற்றங்களையுடைய பகைவர்களை நன்றாகஆராய்ந்தறிந்து அவர்களோடு பகைமை கொள்ளுதலென்றபடி.

அசாக.

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(இ - ள்.) வலியார்க்கு - (தம்மின்)வலியார்க்கு, மாறு ஏற்றல் - பகையாய் எதிர்தலை, ஓம்புக - ஒழிக: மெலியார்மேல் - (ஏனை) மெலியார்க்கு, பகை - பகையாதலை, ஓம்பா - ஒழியாது, மேக - விரும்புக; (எ - று.)

'வலியார்' என்புழித் துணைவலியும்அடங்கலின், 'மெலியார்' என்புழித் துணைவலியின்மையுங் கொள்ளப்படும்; அத்துணைதான் - படை பொருள் முதலிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை *நீதிவழியொழுகல் முதலிய ஒற்றுமைத்துணையும் என இரண்டாம். அவ்விரண்டும் இல்லாரை வெல்வார்க்கு வலிதொலையாமையின், அவரோடுபகைத்தல் விதிக்கப்பட்டது.

சிங்கநோக்காகிய இதனுள், பகைமாட்சி பொதுவகையாற் கூறப்பட்டது.

(கு - ரை.) தம்மின் வலியார் - தாஞ்செய்யக்கருதிய வினைவலியையும் அதனைச் செய்துமுடிக்குந் தம்வலியையுந் துணையாவார்வலியையுந் தம்மி னும் மிகுதியாகவுடையவர். ஒழிக - நீங்கக்கடவர். ஏனை - மற்றை. மெலி யார் - அவ்வலிமைகளில் தம்மினும் எளியவர். ஒழியாது - நீங்காமல். என் புழி - என்றவிடத்து. படை - சேனை. பொருள் -

செல்வம். வேற்றுமைத் துணை - தன்னின் வேறாகிய துணை. ஒற்றுமைத்துணை - அபேதமாகிய [தன்னின் வேறாகாத] துணை. சிங்கநோக்காகிய இதனுள் - முன்னும்பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது பார்வையைப்போல முன்னதிகாரத்தையும் பின்னதிகாரத்தையும் நோக்குகின்ற இத்திருக்குறளில். 'மெலியார் மேல் மேக பகை' எனப் பொதுப்படக் கூறப்பட்டது; இனி, பகைமாட்சி சிறப்புவகையாற் கூறப்படும். ஏற்றல், ஏல் - முதனிலை. ஓம்புக, மேக-வியங்கோள் தற்பொருளில் வந்த வியங்கோள்.

(க)

பி - ம்: * நீந்துதல்லர்.



அகூஉ. அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(இ - ள்.) (ஒருவன்), அன்பு இலன் - (தன் சுற்றத்தின்மேல்) அன்பிலன்; (அதுவேயன்றி), ஆன்ற துணை இலன் - வலிய துணையிலன்; (அதன்மேல்), தான் துவ்வான் - தான் வலியிலன்; (அப்பெற்றியான்), ஏதிலான் துப்பு-(மேல்வந்த) பகைவன்வலியினை, என்பரியும்-யாங்ஙனந் தொலைக்கும்?

சுற்றமும் இருவகைத்துணையுந் தன்வலியும் இலனாகலின் அவன்மேற் செல்வார்க்கு வலி வளர்வதன்றித்

தொலையாதென்பதாம். துவ்வான் -
துவ்வினைச் செய்யான்.

(கு - ரை.) சுற்றம் - உறவினர். அன்பாவது - தொடர்புடையாரிடத்
துக் காதலுடையவனாதல். அப்பெற்றியான் - அப்படிப்பட்டவன். மேல்
வந்த - தன்மேல் எதிர்த்துவந்த. பகைவன்வலி - பகைவனது வலி. யாங்
ஙனந்தொலைக்கும் - எவ்வாறு அழிப்பான். இருவகைத்துணை - கீழ்க்கூறிய
வேற்றுமைத்துணையும், ஒற்றுமைத்துணையும். செல்வார் - படையெடுத்துப்
போருக்குப் போவார். துவ்வினை-வலிமையை. அன்பிலன், துணையிலன்
என்பவற்றில் அன்பு, துணை என்னும் அஃறிணை எழுவாய்கள்-ஒருவனென்
னும் உயர்திணைத் தோன்றாஎழுவாயின் பயனிலையாகிய இலனென்னும்
உயர்திணையைக்கொண்டுமுடிதலால், திணைவழுவமைதி. ஆன்ற, ஆன் -
முதனிலை. எவனென்னும் வினைப்பெயர் - என் என்று ஆய், இங்கு இன்மை
குறித்து நின்றது.

௮௬௫. அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.

(இ - ள்.) (ஒருவன்), அஞ்சும் - (அஞ்சவேண்டாதவற்றிற்கு) அஞ்சாநிற்கும்; அறியான் - (அறியவேண்டுமவற்றை) அறியான்; அமைவு இலன் - (பிறரோடு) பொருத்தமிலன்; (இவற்றின்மேலும்), ஈகலான் - (யாவர்மாட்டும்) இவறன்மாலையன்; (இப்பெற்றியான்), தஞ்சம் எளியன் - மிக எளியன்; (எ - று.)

பகைக்கு - பகைவர்க்கு, தஞ்

தஞ்சம் எளியன் என்பன - ஒருபொருட்பன்மொழி; இந்நான்கு குற்றமுமுடையான் பகையின்றியும் அழியுமாகலின், 'தஞ்சமெளியன்' என்றார்.

(கு - ரை.) "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்" என்னுமிடத்து 'பாவமும் பழியுங் கேடும் முதலாக அஞ்சப்படுவன பலவற்றையும் அஞ்சி எண்ணித் தவிர்தல்வேண்டும்'

என்றாராதலின்,

'அஞ்சும்' என்பதற்கு - 'அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும்' என்று உரைக்கப்பட்டது;

வேந்தர்க் கியல்பு''

''அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு, மெஞ்சாமை என்றவிடத்து, அஞ்சாமைமுதலியன இறைமாட்சியாகச் சொல்லினமை காண்க.

'அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும்' என்றதனால், அதன் எதிர்மறையாகிய

•

அஞ்சவேண்டுவனவற்றை அஞ்சாது



என்றதுசெய்துநிற்பா னென்பதுங் கொள்ளலாம். பொருத்தம்-சேர்க்கை. இவற்றின்மேலும் - இவைமாத்திரமேயன்றி யென்றபடி. யாவர்மாட்டும் - எல்லாரிடத்தும். இவறன்மாலையன் - லோபகுணமுடையவன். எளியன் - எளியனாவான். தஞ்சம்-எளிமைப்பொருளுணர்த்துவதோர் இடைச்சொல்; ''தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே'' என்றார் தொல்காப்பியனார். ஒரு பொருட்பன்மொழி - ஒருபொருளைக் குறித்துவந்த பலசொற்கள்; இது, மிகு

றிப்பொருளது. பகையின்றியும் அழியும -
தனக்குத்தானே அழிவான். பகையின்றியே
அழியவல்லவன் பகைவரால் அழிதற்கு ஐயமின் றென்பது
கூறவேண்டாதாயிற்று. பகை - பகைவர்க்குப்
பண்பாகுபெயர். (அ)

அகூ௪. நீங்கான் வெகுளி நிறையில
னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

(இ - ள்.) (ஒருவன்), வெகுளி நீங்கான் - வெகுளியின்
நீங்கான்; நிறை இலன் - (அதுவேயன்றித் தான்)
நிறையுடையனல்லன்; (அவன்மேற் சேறல்); எஞ்
ஞான்றுஉம் - எக்காலத்தும், யாங்கண்உம் - எவ்விடத்தும்,
யார்க்கும்—, எளிது—; (எ - று.)

நிறை - மறைபிறரறியாமை. வெகுடன் மாலைய
னாகலானும், மறை வெளிப்படுத்தலானும்,
மேற்செல்வார்க்குக் காலமும் இடனும் வலியும் அறிந்து
சேறல் வேண்டாதாயிற்று. இனி, 'இனிது' என்று
பாடமோதி, அவன்பகைமை இனிதென்று உரைப்பாரு
முளர்.

(கு - ரை.) சேறல் - பகைத்துச்செல்லுதல்.
மறைபிறர்அறியாமை - மறைந்தவொருகாரியம்
பிறர்அறியாமல் ஒழுகுதல். "நிறையெனப் படுவது
மறைபிற ரறியாமை" என்றார் கலித்தொகையிலும்
(நெய்தல், ௪கூ). நிறையின்மை - மனத்து

அடக்கற்பாலனவற்றை அடக்கமாட்டாது வாய்விடுதல். வெகுடன்மாலையன் - கோபிக்குந்தன்மையுடையவன். மறை - இரகசியம். காலம் - வெல்லுதற்கு ஏற்ற காலம். இடன் - வெல்லுதற்குஏற்ற இடம். வலி - வினைவலி, தன்வலி, மாற்றான்வலி, துணைவலி என்னும் நால்வகை வலிகள். அவர்களை எப்பொழுதும் எவ்விடத்தும் யாவர் எதிர்த்தாலும் வெற்றிபெறலா மென்றபடி. நிறை - தொழிற் பெயர்; நிறு-முதனிலை: இது நில்லென்பதன் பிறவினை யென்பர். என்ஞான்றும், யாங்கணும், யார்க்கும் ஏகரவிறுவும், யாவிறுவும் - எஞ்சாமைப்பொருளன; உம்மைகள்-முற்று. (௪)

அ௬௫. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்

பண்பிலன் பற்றார்க் கினிது.

(இ - ள்.) (ஒருவன்), வழி நோக்கான் - நீதிநூலை ஓதான்; வாய்ப்பன செய்யான் - (அது) விதித்ததொழில்களைச் செய்யான்; பழி நோக்கான் - (தனக்குவரும்) பழியைப் பாரான்; பண்பு இலன் - (தான்) பண்புடையனல்லன்; பற்றார்க்கு இனிது - (அவன்) பகைவர்க்கு (அப்பகைமை) இனிது.



தொல்லோர் அடிப்பட வழங்கிவந்த தாகலான் 'வழி'

என்றும், தப்பாது

பயன்படுதலின் 'வாய்ப்பன' என்றும்,

இக்குற்றங்களுடையான் தானே அழி

தலின் 'பற்றார்க்கினிது' என்றுங் கூறினர்.

(கு - ரை.) ஓதான் - படியான். பண்பு-நற்குணம். அப்பகைமை-அப்படிப்பட்டவனோடு கொண்டபகைமை. தொல்லோர் அடிப்பட வழங்கிவந்தது - முன்னோர்முதலாக நடந்துவந்தது. வாய்ப்பன - தவறாது பயன்படுந் தொழில்கள். பண்பாவது - உலகவொழுக்கமறிந்து ஒத்து ஒழுகுதல்; "பண்பெனப் படுவதுபாடறிந்தொழுகுதல்" என்றார் கலித்தொகையிலும். பற்றார்-தன்னோடு பொருந்தாதவர்; எனவே, பகைவர். வழிநோக்காமைமுதலிய தீக்குணங்களையுடையவனை யழிப்பதில் வருத்தமொன்றுமில்லாமையால், அவன் பகைமை இனிதெனப்பட்டது: இனிது - போக்கற்குஎளியது. (ரு)

அகுரு. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்

பேணாமை பேணப் படும்.

(இ - ள்.) காணா சினத்தான் - (தன்னையும் பிறரையுந் தான்) அறியாமைக்கு ஏதுவாய வெகுளியையுடையான் யாவன், கழி பெரு காமத்தான் - மேன்மேல்வளராநின்ற மிக்க காமத்தையுடையான் யாவன், பேணாமை - (அவரது) பகைமை, பேணப்படும் - விரும்பிக் கொள்ளப்படும்; (எ-று.)

காணாதசினமென்பது, விகாரமாயிற்று. மூன்றேனுக்கு யாவரும் பகையாகலானும், ஏனேனுக்குக் காரியந்தோன்றாமையானுங்

தாமே அழிவரென்

பது பற்றி, 'இவர் பேணுமை பேணப்படும்' என்றார்.

(கு - ரை.) முன்னேன்-முன்சொல்லப்பட்டவன்; இனத்தான். ஏனேன்-
மற்றையோன்; காமத்தான். காரியம் - செய்யவேண்டுந்தொழில். தோன்
ருமையான் - மனத்திற்படாமையால். காணு - ஈறுகெட்ட எதிர்மறைப்
பெயரெச்சம்; காணுச்சினம் - பெயரெச்சம், காரியப்பொருளது. பேணுமை -
விரும்பாமை; எனவே, பகைமை. கழி பெரு
யாகவுங் கொள்ளலாம்.

- ஒருபொருட்பன்மொழி

(சு)

ருசுஎ.

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணுத செய்வான் பகை.

(இ - ள்.) அடுத்து இருந்து மாணுத செய்வான் பகை - (வினையைத்)
தொடங்கியிருந்து (அதற்கு) ஏலாதன செய்வான்பகைமையை, கொடுத்து

உம் - (சிலபொருள் அழியக்) கொடுத்தாயினும், கொளல் - கோடல், மன்ற -
ஒருதலையாக, வேண்டும்--; (எ - று.)
ஏலாதன - மெலியனுய்வைத்துத் துணிதலும், வலியனுய்வைத்துத்
துணிதலும் முதலாயின. அப்பொழுது அதனுற் சிலபொருள் அழியினும் பின்
பலபொருள் எய்தற்கு ஐயமின்மையின், 'கொளல்வேண்டு மன்ற' என்றூர்.
இவை ஆறுபாட்டானும், அது
•
சிறப்புவகையாற் கூறப்பட்டது.

## அஎ - ஆம் அதிகாரம்.—பகைமாட்சி

௯அ௯

(கு - ரை.) வினை - தொழில். ஏலாதன - தகாதவை, ஒருதலையாக- நிச்சயமாக. மெலியனுய்வைத்துத்துணிதல் - தான் வலிகுறைந்தவனுயிருந்தேயும் போர்க்கு நிச்சயித்தல், வலியனுய்வைத்துத் துணிதல் - தான்வலி மிகுந்தவனுயிருந்தேயும் போர்க்குச்செல்லாமல் அடங்குதல். முதலாயின என்றதனுல், தம்போர்வீரரிடத்து ஐயுறுதல் தக்கபடிபொருள்தாராமை முதலியன கொள்க. அப்பொழுது - பொருள்கொடுத்துக் கொள்ளும்பொழுது. அதனுல்-

அக்கொடையால். எய்தற்கு-பெறுதற்கு. ஐயம்-சந்தேகம். அது-பகைமாட்சி. கொடுத்தும், உம்மை - உயர்வுசிறப்பு. "அன்பிலன்" (அகஉ) முதலாகத் தனித்தனியே கூறியதனுல், சிறப்புவகையாயிற்று. மாளுத - பெயர். (எ)

அகூஅ. குணனிலனுய்க் குற்றம் பலவாயின் மாற்றூர்க்
கினனிலனு மேமாப் புடைத்து.

(இ - ள்.) குணன் இலன் ஆய் - (ஒருவன்) குணனென்றும் இலனுய், குற்றம் - (உடைய) குற்றம், பல ஆயின் - பலவாயவழி, இனன் இலன் ஆம்- (அவன்) துணையிலனும்; (அவ்விலனுதல்தானே), மாற்றூர்க்கு - (அவன்) பகைவர்க்கு, ஏமாப்பு உடைத்து - துணையாதலையுடைத்து; (எ - று.)

குணம் - இறைமாட்சியுட் சொல்லியன. குற்றம் - இவ்வதிகாரத்துச் சொல்லியனவும், மற்றும் அத்தன்மையனவும். துணை - சுற்றம், நட்பு, பொருள், படை முதலாயின. பகைவர்க்கு இவற்றான் உளதாம் பயன் தானே உளதா மாகலின், 'ஏமாப்புடைத்து' என்றார். 'இலனுய்' என்னுஞ் செய்தெனெச்சம், 'உடைய' என வந்த பெயரெச்சக்குறிப்புக் கொண்டது.

(கு - ரை.) இலன் - இல்லாதவன். உடைத்து - உடையது. இறை மாட்சி - முப்பத்தொன்பதாம்அதிகாரம்; அதிற்சொல்லிய குணங்கள் - அஞ் சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை, மான

முடைமைமுதலாயின. இவ்வதிகாரத்துச் சொல்லியன - அன்பின்மை முதலியன. மற்றும் அத்தன்மையன - வேறும் அவைபோன்றவை. அவை - பிறர்மனைவெஃகல் பிறர்பொருள்கவ்வல் துணையாகாரைத்துணையாக்கொள்ளுதல் முதலியன. பகைவர்க்கு இவற்றானுளதாம்பயன் தானே உளதாம் - குணம் குற்றமின்மை துணை இவை இல்லாதிருந்தும், இருந்தால் உண்டாகும் பயனாகிய வெற்றி இத்தன்மையானோடு பகைமைகொண்ட மாத்திரத்தால் தானே உண்டாகுமென்பதாம்.

செய்தெனெச்சம் - இறந்தகாலவினையெச்சம். குணன், இனன் - எதிராய் நிற்பவர். சோகாப்பர்,

மகரனகரம்மாறி வருஞ்சொல். மாற்றார் - அல்லாப்பர், செம்மாப்பர் என்பனபோல 'ஏமாப்பு' என்பது - ஒருசொல்; இனி, ஏமம்யாப்பென்பதன் மரூஉவாகவுங் கொள்ளலாம்.

(அ)

௮௬௯. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.

(இ - ள்.) அறிவு இலா - (நீதியை) அறிதலில்லாத, அஞ்சும்—, பகை வர் - பகைவரை, பெறின் - பெற்றால்,—செறுவார்க்கு - (அவரைச்) செறு வார்க்கு, சேண் இன்பம் - உயர்ந்த இன்பங்கள், இகவா - நீங்கா; (எ - று.)

உபாயமறிதலும் அறிந்தாற் செய்துமுடிக்குந் திண்மையும் இல்லாதாரே பகைவராதல் கூடாமையின் 'பெறின்' என்றும், அவரை அறிந்து மேற் சென்றபொழுதே பகையின்மையுஞ் செல்வமும் ஒருங்கே எய்தலின் 'சேணு டையின்பங்கள் இகவா' என்றுங் கூறினர்.

(கு - ரை.) செறுவார் - பகைவர். அஞ்சுவதற்கு அஞ்சல் அறிவார்தொழி லாதலால், அஞ்சும் என்பது - அஞ்சவேண்டாததற்கு அஞ்சுகின்ற என்ற பொருளது. உபாயம் - சாம பேத தான தண்டங்கள். திண்மை - வலிமை. கூடாமையின் - கிடைத்த லருமையால். ஒருங்கே - ஒருசேர. சேணுடை - உயர்வுடைய. சேணின்பம் - இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகை. இகவா - அஃறிணைப்பன்மை எதிர்மறைமுற்று.

பகைவர்ப்பெறின் -
ஐயுருபு, உயர்திணையிடத்தே தொக்கது; வல்லொற்று மிக்கது, இயல்பின்
விகாரம். நீதிநூலோதிய நால்வகையுபாயங்களை யறிதலும், அறிந்துமேற்
கொண்டசெயலை முடிக்கும் மனவுறுதியும் இல்லாதபகைவருடன் போர்புரி
யச்சென்றபோதே அப்பகையழிதலும் செல்வமும் ஒருங்கேகிடைக்கச்
சேணின்பமடையலா மென்றவாறு.

(கூ)

அஎ0. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

(இ - ள்.) கல்லான் - (நீதிநூலைக்) கல்லாதானொடு, வெகுளும்-பகைத்த
லான்வரும், சிறு பொருள் - எளிய பொருளை, ஒல்லானை - மேவாதானை, எஞ்ஞான்றும்—, ஒளி - புகழ், ஒல்லாது - மேவாது; (எ - று.)

சிறுபொருள் - முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக்கவும் அதுமாட்டாதானை வெற்றியான்வரும்புகழ் கூடா தென்பதாம்; ஆகவே, இச்சிறியமுயற்சியாற் பெரியபயனெய்துக வென்றவாறாயிற்று. இதற்குப் பிறரெல்லாம் அதிகாரத்தோடு மாறுதன்மேலும் ஒருபொருட்டொடர்புபடாமல் உரைத்தார்.

இவை மூன்றுபாட்டானும், அதனினுய பயன் கூறப்பட்டது.

(கு - ரை.) 'நீதிநூலை' என்பது இசையெச்சம். எளியபொருள் - சிரமப்படாமற் சுலபமாகக்கிடைக்கும்பொருள். மேவாதான் - விரும்பி அடையாதவன். வேறல் - வெல்லுதல். முயற்சி சிறிதாயபொருள் - பொருள் அதிக

மாயினுஞ் சிறியமுயற்சியால் அடையப்படுவது. அதுமாட்டாதான் - வெல்ல மாட்டாதவன். பிறர் - மற்றை உரையாசிரியர்கள். ஒருபொருட்டொடர்பு படாமல் - அர்த்தசம்பந்தமொன்றுமில்லாமல். அதனின் - பகைமாட்சியால். கல்லான்வெகுளும் - மூன்றும்வேற்றுமைத்தொகை. வெகுளும் பொருள் - பெயரெச்சம், காரணப்பொருளது. புகழ் அதுபெற்றவனை உலகமுழுவதும் எக்காலத்தும் விளங்கச்செய்தலால், ஒளி யெனப்பட்டது. (௧0)

# அஅ - ஆம்

## அதிகாரம்.—பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது - மாணாத பகையை ஆக்குதற்குற்றமும், முன் ஆகின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதுமலாக்கற்பாலதும், அவற்றின்கட் செய்வதும், ஏனைக் களைதற்பாலதன்கட் செய்வனவும், களையும்பருவமும், களையாக்கால் படும் இழுக்கும் என்று இத்திறங்களை ஆராய்தல். 'இரட்டுற மொழிதல்' என்பதனால், பகையது திறமும், பகையிடத்து ஆக்குந் திறமும் என விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாணாப்பகையவாகலின், இது பகைமாட்சியின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மாணாத - மாட்சிமைப்படாத; தனக்கு நன்மையைத் தராத.

யாணாதபகையை ஆக்குதற்குற்றம் - அறிவின்மைமுதலிய குற்றங்களில்லாதா

ரோடு பகைகொள்ளுதலால் வருங் குற்றம்.

நொதுமலாக்கற்பாலது - நட்பும்
பகையும் ஆகாமல் அயலாக விட்டுவைக்குந் தன்மையது. அவற்றின்கண்-நட்
பாக்கற் பாலதனிடத்தும், நொதுமலாக்கற் பாலதனிடத்தும். ஏனை - மற்றை.
களைதற்பாலது - அடியோடு அழித்தற்குஉரியது. களையாக்காற்படும்இழுக்கு-
அழிக்காவிடின் உளதாகுங் குற்றம். இரட்டுறமொழிதல் - ஒருவாக்கியத்தை
இரண்டுபொருள்படச் சொல்லுதல். பகைத்திறமென்பதனை - முறையே பகை
யதுதிறமென ஆறும்வேற்றுமைத் தொகையாகவும், பகையிடத் தாக்குந்திறம்
எனஏழாம்வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்க தொகையாகவுங்
கொள்க. மாணப்பகைய - மாட்சிமையில்லாத பகையினிடத்தன.

௮௭௧. பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) பகை என்னும் - பகையென்று சொல்லப்படும், பண்பு இல தனை - தீமைபயப்பதனை, ஒருவன்—, நகை ஏ உம் - விளையாட்டின்கண் ணேயாயினும், வேண்டல் பாற்று அன்று - விரும்புதலியற்கைத்தன்று, (நீதி நூல்); (எ - று.)

மாறுத பகையை ஆக்கிக்கோடல் எவ்வாற்ருனுந் தீமையே பயத்த
லின் 'பண்பிலது' என்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினுஞ் செற்
றமே விளைந்து மெய்யா மாகலின் 'நகையேயும்' என்றும், வேண்டாமை
தொல்லையோரது துணிவென்பார் நீதிநூல்மேல்வைத்துங் கூறினர். அப்
பெயர், அவாய்நிலையான் வந்தது.

(கு - ரை.) விரும்புதலியற்கைத்து - விரும்புந் தன்மையை யுடையது
செற்றம் - கோபம். தொல்லையோர் - முன்னோர், பெரியோர். அப்பெயர்-
நீதிநூலென்னும் பெயர். நகையேயும், ஏகாரமும் உம்மையும் - இழிவு
சிறப்பு.
(க)

அஎஉ. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.
49



(இ - ள்.) (ஒருவன்), வில் ஏர் உழவர் - வில்லை ஏராகவுடைய உழவ

ரோடு, பகை கொளின்உம் - பகைகொண்டானாயினும்,
சொல் ஏர் உழவர் -
சொல்லை ஏராகவுடைய உழவரொடு, பகை கொள்ளற்க - பகை கொள்ளா
தொழிக; (எ - று.)

சொல் - ஆகுபெயராய், நீதிநூன்மேல் நின்றது. வீரம் சூழ்ச்சி என்னும்
ஆற்றல்களுள் வீரமே உடையாரோடு பகைகொண்டாற் கேடுவருதல் ஒருதலை
யன்று; வந்ததாயினுந் தனக்கே ஆம்: ஏனைச் சூழ்ச்சியுடையாரோடாயின்
தன்வழியினுள்ளார்க்குந் தப்பாது வருதலின், அதுகொள்ளினும் இது கொள்
ளற்க வென்றார். உம்மையான், அதுவும் ஆகாமை பெறுதும். இரண்டும்
உடையாரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டாதாயிற்று. உருவக விசேடம்.

(கு - ரை.) வில் - வாள் வேல் முதலிய ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம்.
ஏர்-உழுபடை, கலப்பை. வில்லை ஏராகவுடைய உழவர் - வீரரென்றபடி.
சொல்லை ஏராகவுடைய உழவர்-ஆலோசனை யுடையோர்: மந்திரிமாரென்ன
வாம். சொல்-நீதிநூலுக்குக் கருவியாகுபெயர்.

சூழ்ச்சி-ஆலோசனை. ஆற்றல்-
வலிமை. தனக்கே-தானொருவனுக்கு மாத்திரமே.
தன்வழியி னுள்ளார்-தன்
வம்சத்தவர். உம்மையான்-'கொளினும்' என்ற இடத்து
உள்ள உயர்வு சிறப்
புப்பொருளோடு எதிர்மறைப்பொருளதாகிய
உம்மையால். அதுவும் - வீரர்
பகைமையும். பெறுதும்-பெறுவோம். இரண்டும்-வீரமும்,
சூழ்ச்சியும். கொள்ள
லாகாமை-பகைகொள்ளலாகாமை.
சொல்லவேண்டாதாயிற்று-அருத்தாபத்தி
யால் தானே பெறப்பட்டது.வில்லேருழவர்-பகைவராகிய
விளைநிலத்தே வில்
லாகிய ஏரைக்கொண்டு உழுது அம்புகளாகிய விதைகளை
விதைத்து வெற்றி
யாகிய பயனைக் கொள்பவர். உருவகவிசேடம் -
ஒருவகைரூபகாலங்காரம்;
(இதனைச் சிறப்புருவக மென்பாருமுளர்.)
உருவகவணியாவது - உபமானப்
பொருளையும் உபமேயப்பொருளையும் வேறுபாடொழிவித்து
ஒன்றென்பதோர்
உணர்வு தோன்ற ஒற்றுமைகொளுத்தி வைப்பது.
இத்திருக்குறள், தண்டி
யாசிரியர் மதத்தின்படி ஏதுவுருவகத்தின்பாற் படும்;
[ஏதுவுருவகமாவது -

காரணத்தைக்காட்டி உருவகப்படுத்துவது.] இது, வில்வினை ஏராக
வுடைய உழவரென்றுஞ் சொல்லினை ஏராகவுடைய உழவரென்றும் உருவக
மாக்கி இருவரையும் பொருட்டெளிவால் உவமித்ததனுல், உருவகவுவமை
யென்பர் வீரசோழிய நூலுடையார்: [உருவக வுவமையாவது - உருவகஞ்
செய்த பொருளைத்திரும்பவும் ஓர்விசேடத்தினுல் ஒன்ருேடு ஒப்புமைப்படுத்து
வது.] கொள்ளற்க - எதிர்மறைவியங்கோள்.
(உ)

அஎ௲. ஏமுற் றவரினு மேழை தமியனுய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(இ - ள்.) தமியன் ஆய் - (தான்) தனியனுய்வைத்து, பல்லார் பகை
கொள்பவன் - பலரோடு பகை கொள்வான், ஏமுற்றவரின்உம் - பித்து உற்
ருரினும், ஏழை - அறிவிலன்; (எ - று.)

அஅ - ஆம் அதிகாரம்.—பகைத்திறந்தெரிதல்
௲அஎ

தனிமை - சுற்றம் நட்பு படை முதலிய இன்மை. மயக்கத்தால் ஒப்பா ராயினும் ஏமுற்றவர் அதனல் தீங்குஎய்தாமையின், தீங்குஎய்துதலும் உடைய இவனை 'அவரினும் ஏழை' என்றார். தீங்காவது - துணையுள்வழியும் வேறல் ஐயமாயிருக்க, அஃது இன்றியும் பலரோடு பகைகொண்டு அவ ரால் வேறுவேறு பொருதற்கண்ணும் ஒருங்குபொருதற்கண்ணும் அழிந்தே விடுதல்.

இவைமூன்றுபாட்டானும், பகைகோடற்குற்றம் பொதுவினுஞ் சிறப்பினுங் கூறப்பட்டது.

(கு - ரை.) தனியனய்வைத்து - தனியனயிருந்துகொண்டு. முதலிய என்றதனல், தக்கஅரண் தக்கஅமைச்சர்சூழ்ச்சி முதலியன கொள்க. மயக்கத்தால் ஒப்பாராயினும் - புத்திமயங்குதலென்ற செயலிற் பல்லார்பகைகொள்பவரும் பித்துக்கொண்டாரும் ஒப்பாராயினும். பித்துற்றார் - பைத்தியம்பிடித்தவர். தீங்கு - இங்கு, அபஜயம். இவனை - தமியனய்ப் பல்லார்பகைகொள்பவனை. ஐயம்-சந்தேகம். அஃது இன்றியும் - அத்துணையில்லாமலும். பொதுவிற்கூறப்பட்டது, முதற்பாட்டில். சிறப்பிற்கூறப்பட்டது, இரண்டு மூன்றாம் பாடல்களில். ஏமுறு - ஏமமுறு என்பதன் விகாரம்: காமுறு, ஐயுறு என்பனபோல. உற்றவரின்-ஐந்தாம் வேற்றுமை, உறழ்பொருவு. ஏழைமை-அறிவின்மை; ஏழை-பண்பாகுபெயர். (௩)

அஎ௯. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

(இ - ள்.) பகை நட்பு ஆ கொண்டு-(வேண்டியவழிப்) பகையை (வேறு படுத்துத் தனக்கு) நட்பாகச் செய்துகொண்டு, ஒழுகும்—, பண்பு - இயல்பினை, உடையாளன் - உடைய அரசனது, தகைமைக்கண் - பெருமை யுள்ளே, தங்கிற்று - அடங்கிற்று, உலகு - இவ்வுலகு; (எ - று.)

வேண்டியவழி யென்பது, ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல் - பகை நிலைமையின் நீக்குதல். ஒழுகல் - நீதிவழி யொழுகல். பெருமை-பொருள், படை என இருவகைத்தாய ஆற்றல். அதன்வழித்தாதற்கு என்ஞான்றுந் திரி பின்மையின், அத்துணிவுபற்றி, 'தங்கிற்று' என்றார்.

(கு-ரை.) வேறுபடுத்து-மாற்றி. அடங்கிற்று-சுவாதீனப்பட்டது. ஆக்கத்தான் வருவிப்பதனை வடநூலார் ஆகாங்க்ஷையென்பர். அதன்வழித்து - பெருமையின் வழியது. திரிபு - மாறுபாடு. தங்கிற்று - துணிவினால் எதிர் காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. துணிவு-தெளிவு.

அஎரு. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற்

ருனொருவ

னின்றுணையாக் கொள்கவற்றி

னொன்று.

(இ - ள்.) தன் துணை இன்று - தனக்கு உதவுந் துணையோ வெனின்

இல்லை; பகை இரண்டு - (நலிவுசெய்யும்) பகையோ வெனின் இரண்டு;

(அங்ஙனமாயின்றவழி), ஒருவன் தான் - ஒருவனாகிய தான், அவற்றின் -



அப்பகையிரண்டனுள், ஒன்று - பொருந்தியதொன்றை, இன் துணை ஆ -

(அப்பொழுதைக்கு) இனிய துணையாக, கொள்க - செய்துகொள்க; (எ - று.)

பொருந்தியது - ஏனையதனை வேறற்குஏற்றது. அப்பொழுது - அவ்

வெல்லும்பொழுது. திரிபின்றாகச்செய்துகொள்க வென்பார். 'இன் துணையா'

என்றார். ஆல்கள் - அசை.

இவை இரண்டுபாட்டானும், நட்பாக்கற்பாலது கூறப்பட்டது.

(கு - ரை.) நலிவு - வருத்தம். ஏனையதனை - பகையிரண்டனுள் மற்றொ
ன்றை. திரிபு இன்றாக - மறுபடியும் வேறுபடாமல், தன்னைவிட்டு நீங்காமல்.

ஆல்கள் - இன்றால், இரண்டால் என்பவற்றில் உள்ளன. கொள்கவற்றின் -
வியங்கோள், உயிர்முதன்மொழிமுன் அகரந்தொக்கு நின்றது: இது, செய்
யுள்விகார ம்.
(ரு)

௮எகூ. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

(இ - ள்.) தேறின்உம் - (பகைவனை முன்) தெளிந்தானாயினும், தேறா
விடின்உம் - தெளிந்திலனாயினும், அழிவின்கண் - (தனக்குப் புறத்து ஒரு
வினையால்) தாழ்வு வந்துழி, தேறான் பகாஅன் விடல் - கூடாது நீக்காது
இடையே விட்டுவைக்க; (எ - று.)

முன்தெளிந்தானாயினும் அப்பொழுது கூடாதொழிக வென்றது - உள்
ளாய்நின்று கெடுத்தல் நோக்கி. தெளிந்திலனாயினும் அப்பொழுது நீக்கா
தொழிக வென்றது - அவ்வழிவிற்குத் துணையாதல்

நோக்கி.

இதனுன், நொதுமலாக்கற்பாலது கூறப்பட்டது.

(கு - ரை.) தெளிதல் - பகைவனன்றெனத் தேர்தல். தாழ்வு -
தோல்வி. கூடாது நீக்காது - கூடாளுகியும் நீக்காளுகியும். இடையே விட்டு
வைத்தல் - நொதுமலாக்குதல். உள்ளாய் - உட்பகையாய். அவ்வழிவிற்குத்
துணையாதல் - தனக்கு வேறொருதொழிலாலுண்டாகும் 'தாழ்வுக்குத்
துணையாய்த் தன்னை நன்றாய் அழித்தல். தேறினுந் தேருன், தேருவிடினும்
பகாஅன் என இயைந்து கிற்றலால், முறைநிரனிறைப்போருள்கோள்.
விடல் - விதித்தற்பொருளில்வந்த அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள்.
அரசன் தனக்கு ஒருதாழ்வுநேர்ந்தபோது உட்பகையென்று கருதப்பட்டவ
ருடன் கூடாமலும் மாறுபட்டு நீங்காமலும் அவரை நடுவானநிலையில்
வைக்கக்கடவனென் பது , இதன் கருத்து .
(௬)

௮௭௭. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க

மென்மை பகைவ ரகத்து.

(இ - ள்.) நொந்தது அறியார்க்கு - (நொந்ததனைத் தாமாக) அறியாத நட்டார்க்கு, நோவற்க - (தன்) நோவு சொல்லற்க; பகைவர் அகத்து - (வலி யின்மைபார்த்திருக்கும்) பகைவர்மாட்டு, மென்மை - அவ்வலியின்மையை, மேவற்க - மேலிட்டுக்கொள்ளற்க; (எ - று.)

௮௮ - ஆம் அதிகாரம்.—பகைத்திறந்தெரிதல்

௩௪௯

நோ என்னும் முதனிலைத்தொழிற்பெயர், ஈண்டு அதுசொல்லுதற்கண் ஆயிற்று. பகைவர்கண் தவிர்வது கூறுவார், நட்டார்கண் தவிர்வதும் உடன் கூறினர். இதனன், அவ்விருபகுதிக்கணுஞ் செய்வது கூறப்பட்டது.

(கு - ரை.) தாமாக - நொந்தவன் சொல்லாமல். "தோழனோடும் ஏழை மைபேசேல்" என்றார் ஔவையாரும். இங்குக் கூறிய நட்டாரும் பகைவரும்- மூன் ஆகின்ற பகையுள் நட்பாக்கப்பட்டவரும், நொதுமலாக்கப்பட்டவரும் என்பர் ஒருசாரார். மேலிட்டுக்கொள்ளுதல் - தன்னிடத்து இருப்பதாகக் காட்டுதல். முதனிலைத்தொழிற்பெயராவது-தொழிற்பெயர் விகுதி புணர்ந்து கெட்டுப் பகுதிமாத்திரையாய் நின்றாலும் விகுதியோடு நின்றாற்போலவே தொழிற்பெயர்ப்பொருளை உணர்த்துவது; அது - நோவு. தவிர்வதுவிலக்கத்தக்கது.

இருபகுதி - நண்பரும்பகைவரும்: இனி, உட்பகைவராயிரு
ந்து நட்பாக்கப்பட்டாரும்
நொதுமலாக்கப்பட்டாருமென்பாருமுளர். (எ)

௮௭௮. வகையறிந்து தற்செய்து தற்காப்ப
மாயும்

பகைவர்கட் பட்ட செருக்கு.

(இ - ள்.) வகை அறிந்து - (தான் வினைசெய்யும்) வகையை அறிந்து, தன் செய்து - (அதுமுடித்தற்கு ஏற்பத்) தன்னைப் பெருக்கி, தன் காப்ப(மறவிபுகாமல்) தன்னைக் காக்கவே, பகைவர்கண் - (தன் )பகைவர்மாட்டு, பட்ட - உளதாய, செருக்கு - களிப்பு, மாயும் - கெடும்; (எ - று.)

வகை - வலியனுய்த் தான் எதிரேபொருமாறும், மெலியனுய அளவிற் போர்விலக்குமாறும் முதலாயின. பெருக்கல் - பொருள்படைகளாற் பெருகச்செய்தல். களிப்பு - இவற்றான் வேறு மென்று எண்ணி மகிழ்ந்திருத்தல், இவ்விறுகுதலறிந்து தாமே அடங்குவரென்பதாம்.

இதனுன், களைதற்பாலதன்கண் செய்வன கூறப்பட்டன.

(கு - ரை.) அதுமுடித்தற்குஏற்ப - அத்தொழிலை முடிக்குமாறு. மறவி புகாமல் - மறதி [சோர்வு] அடையாமல். பொரும் ஆறு - போர்செய்யும் விதம். போர்விலக்கும் ஆறு - போரை ஒழியும் விதம். முதலாயின என்ற

தனால், இருபகைவரில் ஒருபகைவரைத்
தனக்குத்துணையாகக்கொள்ளுதலும்,
பகைவரிடத்துத் தனதுவலியின்மைகாட்டாமை
முதலியனவும். இவற்றான் -
தம்மிடத்து உள்ள பொருள்படைகளால். வேறும் -
வெல்வோம். இவ்விருகு தல் - இந்த [வகையறிந்து
தற்செய்து தற்காக்கும்] கட்டுப்பாடு: அழுத்தம்.
'காப்ப' என்னுஞ் செயவெனெச்சம், காரணப்பொருளதாய்
இறந்தகாலத்தில்
வந்தது.

(அ)

அளகூ. இளைதாக முண்மரங் கொல்க
களையுநர்

கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(இ - ள்.) முள் மரம் - (களையவேண்டுவதாய)
முண்மரத்தை, இளைது
ஆக - இளைதாய நிலைமைக்கண், கொல்க - களைக;
(அன்றியே), காழ்த்த



இடத்து - முதிர்ந்த நிலைமைக்கண் (களையலுறின்),
களையுநர் கை - களைவார்
கையினை, கொல்லும் - (அது தான்) களையும்; (எ - று.)

'களையப்படுவதாய தம்பகையை அது மெலிதாயகாலத்தே களைக; அன்

றியே, வலிதாயகாலத்துக் களையலுறின் தம்மை அதுதான் களையும்' என்பது

தோன்ற நின்றமையின், இது, பிறிதுமொழிதல்.

இதனுன், களையும் பருவங் கூறப்பட்டது.

(கு - ரை.) முதிர்தல் - வைரம்பற்றுதல். களையலுறின் - அழிக்கத் தொடங்கினுல். களையும்-போக்கும். இது - இத்திருக்குறள். இளது-இளமை

யென்னும் பண்படியாப் பிறந்த குறிப்புமுற்று. முண்மரம் - முட்களையுடைய

மரம். களையுநர், உகரம் - சாரியை; நகரஒற்று - பெயரிடைநிலை. (கூ)

அ௮௦. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்

செம்மல் சிதைக்கலா தார்.

(இ - ள்.) செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார் - (தம்மொடு) பகைப் பாரது தருக்கினைக் கெடுக்கலாயிருக்க (இகழ்ச்சியான்) அதுசெய்யாத அரசர்,—உயிர்ப்ப உளர் அல்லர் மன்ற - (பின்) உயிர்க்கும் மாத்திரத்திற்கும் உளரல்லர் ஒருதலையாக; (எ - று.)

அவர் வலியராய்த் தம்மைக் களைதல் ஒருதலையாகலின், இறந்தாரேயாவ

ரென்பதாம். அவர் உயிர்த்த துணையானே தாம் இறப்ப ரெனினும் அமையும்.

இதனன், களையாவழிப் படும் இழுக்குக் கூறப்பட்டது.

(கு - ரை.) தருக்கு - களிப்பு. இகழ்ச்சி - அலட்சியமாக நினைத்தல். அது செய்யாத - கெடுக்காத. மூச்சுவிடும் காலஅளவிற்கும் இருக்கின்றவ ரல்லர்; இறப்ப ரென்றபடி. அவர்-பகைவர். உயிர்த்ததுணையானே - மூச்சு விட்டமாத்திரத்தாலே: உயிர்த்தலென்றதனுல், பாம்பின் தன்மைபெறப்படு மென்ப. தாம் - முன்சிதைக்காதவர். முதலுரைக்குக்கருத்து - பகைவர் வலியரானபின்பு தம்மையழித்தல் நிச்சயமாதலால் மெலிதாயபோதுபகையைக் களையாதவர் இறந்தவரேயாவரென்பது. இரண்டாவது உரைக்குக் கருத்து- வலிமையடைந்தபகைவர் மூச்சுவிட்டமாத்திரத்து அவரால் [மிகஎளிதில்] அழிக்கப்படுவ ரென்பதாம். முதற்பொருளில் 'உயிர்ப்பவும்' என்னும் இழிவு சிறப்பு உம்மை, விகாரத்தால் தொக்கது. 'உயிர்ப்ப' என்னுஞ் செயவெனெச்சம் - இருவகைப்பொருள்களிலும் முறையே காரியப்பொருளதாய் எதிர்காலத்திலும், காரணப்பொருளதாய் இறந்தகாலத்திலும் வந்தது. சிதைக்கலாதார் - சிதையென்னுந் தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய முதனிலை, இங்குப் பிறவினைப்பொருளைத்தந்ததனுல் வல்லெழுத்து மிக்குவந்தது;

தன்வினையிற் சிதைகலாதாரென்று வரும்.
(கo)

## அகூ - ஆம்
## அதிகாரம்.—உட்பகை.

அஃதாவது - புறப்பகைக்கு இடனாக்கிக்கொடுத்து அதுவெல்லுந்துணை
யும் உள்ளாய்நிற்கும் பகை. இதுவுங் களையப்படுவதன்பாலதாகலின்,
பகைத்திறந்தெரிதலின்பின் வைக்கப்பட்டது.



(கு - ரை.) புறப்பகை - வெளிப்பகை.
இடனாக்கிக்கொடுத்து - இடங் கொடுத்து. அது -
புறப்பகை. வெல்லுந்துணையும் - சயிக்குமளவும். உள்ளாய்
நிற்கும் - நண்பாயிருக்கும். களையப்படுவதன்பாலது -
நீக்கத்தக்கனிற் சேர்ந்தது. உட்பகையை வடநூலார்
அந்தசசித்ர மென்பர்.

அஅக. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

(இ - ள்.) நிழல் நீர்உம் - (ஒருவனுக்கு
அனுபவிக்கவேண்டுவனவாய) நிழலும் நீரும், இன்னாத -
(முன் இனியவேனும் பின்)நோய்செய்வன, இன்னா -
இன்னாவாம்; (அதுபோல), தமர்

நீர் உம்-(தழுவவேண்டுவனவாய) தமரியல்புகளும், இன்ன செயின் - (முன் இனியவேனும் பின்) இன்னசெய்வன, இன்ன ஆம்—; (எ - று.)

நோய் - பெருங்கால் பெருவயிறு முதலாயின. 'தமர்' என்றதனால், உட்பகையாதற்கு உரியராய ஞாதியரென்பது அறிக. இன்னசெயல் - முன் வெளிப்படாமை நின்று துணைபெற்றவழிக் கெடுத்தல்.

(கு - ரை.) தமர் - தம்மவர்; தாம் - பகுதி. பெருங்கால் - யானைக்கால் எனப்படும். பெருவயிறு - மஹோதரம். ஞாதியர் - தாயத்தார். நிழல்நீர்-உம்மைத்தொகை. உம்மை - உயர்வுசிறப்பு. இன்னாத - பெயர். இன்னா என்னுஞ்சொல் மூன்றனுள், முன்னைய இரண்டும் - முற்று; பின்னது - பெயர். இன்னா என முன்னர்வந்த சொல்லும் பொருளும் பின்னர்ப் பலவிடத்து ஒருங்கு வந்ததனால், சொற்பொருட்பின்வருநிலையணி: இதனை வடநூலார் உபயாவ்ருத்திதீபகமென்பர்.

(க)

அஅ௨. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக

கேள்போல் பகைவர் தொடர்பு.

(இ - ள்.) வாள் போல் பகைவரை-வாள்போல(எறிதும் என்று வெளிப்பட்டு நிற்கும்) பகைவரை, அஞ்சற்க - அஞ்சாதொழிக; கேள் போல் பகைவர் தொடர்பு - (அங்ஙனம் நில்லாது) கேள்போல

(மறைந்துநிற்கும்) பகைவர் நட்பினை, அஞ்சுக—; (எ - று.)

முன்னே அறிந்து காக்கப்படுதலான் 'அஞ்சற்க' என்றும், அங்ஙனம் அறியவுங் காக்கவும் படாமையின் கெடுதல் ஒருதலையென்பதுபற்றி 'அஞ்சுக' என்றுங் கூறினார். பின்செய்யும் பகையினுங் கொடிதாகலானும், *காக்குங்காலம் அதுவாகலானும், அஞ்சப்படுவது முன்செய்த அவர்தொடர் பாயிற்று.

இவைஇரண்டுபாட்டானும், உட்பகைஆகாதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) எறிதும் - வெட்டுவோம். கேள் - உறவினர்; க்ஷேமசமாசாரங்களைக் கேட்பவர். அவர் - உட்பகைவர். தொடர்பு - நட்பு. உட்பகைவர் வெளிப்பட்டபகைவர்போன்று முன்அறியப்பட்டுக் காக்கப்படாமையால் அப்படிப்பட்ட உட்பகைவரோடு பின்புநேரும் பகையைக் காட்டிலும் நண்பு

---

* பி - ம்: காக்கலாகாததாகலானும்.

---



கொடிது ஆகையாலும், அவரால் தீங்குநேராது

காக்கவேண்டிய காலம்

அவரோடு சிநேகமாயிருக்கும்பொழுதே யாதலாலும் அஞ்சுதற்குஉரியது உட்பகைவரின் நட்பேயா மென்க.

(௨)

௮௮௩. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து

மட்பகையின் மாணத் தெறும்.

(இ - ள்.) உள் பகை - உட்பகையாயினாரை, அஞ்சி—, தன் காக்க - தன்னைக் காத்துக்கொண்டுஒழுகுக; (அங்ஙனம் ஒழுகாதவழி), உலைவு இடத்து - (தனக்கு ஓர்)தளர்ச்சி வந்தவிடத்து, மண் பகையின் - (குயவன்) மட்கலத்தை அறுக்குங் கருவிபோல, மாண தெறும் - (அவர்) தப்பாமற் கெடுப்பர்; (எ - று.)

காத்தல் - அவர் அணையாமலும் அவர்க்கு உடம்படாமலும் பரிகரித்தல்.

மண்ணைப் பகுக்குங் கருவி, 'மட்பகை' எனப்பட்டது. பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலின் கெடுதல் தப்பா

தென்பதாம்.

(கு - ரை.) மட்கலம் - மண்பாத்திரம். கருவி - ஆயுதம். அவர் - உட்பகையானோர். அணையாமல் - தம்மிடத்துச்சேராமல். அவர்க்குஉடம்படாமலும் - அப்பகைவரின்செயல்களுக்கு உட்படாமலும். பரிகரித்தல் - நீக்குதல். மட்பகை - காரணப்பெயர்; இது, ஊசியெனப்படுமென்பர்; ஐ - கருவிப்பொருள் விகுதி: இன் உருபு - உவமப்பொருவு. உள்ளாயிருந்து - நட்பாயிருந்து. கீழறுத்தல் - சூழ்ச்சிசெய்துகெடுத்தல். மாண - நன்றாக. (௩)

அஅச. மனமாணா உட்பகை தோன்றி னினமாணா

ஏதம் பலவுந் தரும்.

(இ - ள்.) மனம் மாணா - (புறந் திருந்தியது போன்று) அகந்திருந்தாத, உள் பகை—, தோன்றின் - (அரசனுக்கு) உண்டாவதாயின், (அஃது அவனுக்கு), இனம் மாணா - சுற்றம் வயமாகாமைக்கு ஏதுவாகிய, ஏதம் பலஉம்- குற்றம் பலவற்றையும், தரும் - கொடுக்கும்; (எ - று.)

அவை - சுற்றத்தாரை உள்ளாய் நின்று

வேறுபடுத்தலும், அதனுல்
அவர் வேறுபட்டவழித் தான் தேறுமையும்,பின் அவற்றுன் விளைவனவுமாம்.

(கு - ரை.) புறந்திருந்தியதுபோன்று அகந் திருந்தாத - வெளியில் நட்பானதுபோலிருந்து மனத்தில் நட்பாகாத. உள் ளாய் - நட்புஆய். அதனுல்- வேறுபடுத்தியதனுல். வயமாகாமை - வசப்படாமை. வேறுபடுத்தல் - ஒற்றுமையில்லையாக்குதல். தான் தேறுமை - அரசன் தெளியாமை. அவற்றுன் விளைவன - வேறுபடுத்தலாலும், தேறுமையாலும் உண்டாவன. பலவும், உம்மை - முற்று.

(ச) அ௮௫.

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) உறல் முறையான் - (புறத்தில்) உறவுமுறைத்தன்மையோடு (கூடிய), உள் பகை—, தோன்றின்-(அரசனுக்கு) உண்டாவதாயின், (அஃது



அவனுக்கு), இறல் முறையான் - இறத்தல்முறையோடு (கூடிய), ஏதம் பல

உம் - குற்றம் பலவற்றையும், தரும் - கொடுக்கும்; (எ - று.)

அவை - புறப்பகைத்துணையாய்நின்றே அது தோன்றாமல் கோறல் முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் முதலிய உறுப்புக்களைத் தேய்த்தலும் முதலாயின.

(கு - ரை.) உறவுமுறைத்தன்மை - பந்துத்துவம். இறத்தல்முறை - சாகுந்தன்மை. அவை - அக்குற்றங்களாவன. புறப்பகைத்துணையாய் - புறப்பகைக்குத் துணையாய். அது தோன்றாமல் - அப்படி துணையாய் நிற்பது வெளிக்குத்தெரியாமல். கோறல் - கொல்லுதல். அமைச்சர் முதலிய உறுப்புக்கள் - ஆறு அங்கங்களும். தேய்த்தல் - வரவரக் குறையச்செய்தல். (ரு)

அஅசு. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

(இ - ள்.) ஒன்றாமை - பகைமை, ஒன்றியார்கண் - (தனக்கு) உள்ளாயினார்மாட்டே, படின் - பிறக்குமாயின், (அரசனுக்கு), பொன்றாமை ஒன்றல் - இறவாமை கூடுதல், எஞ்ஞான்றும் அரிது—;

(எ - று.)
பொருள் படை முதலிய உறுப்புக்களாற்
பெரியனுயகாலத்தும் என்
பார், 'எஞ்ஞான்றும்' என்றார்.
இவைநான்குபாட்டானும், அதனல் தனக்குவருந்
தீங்கு கூறப்பட்டது.
(கு - ரை.) பொருள் படை முதலிய உறுப்புக்களாற்
பெருகியிருந்தானு
யினும் அரசனுக்கு உட்பகையிருப்பின் அவனுக்கு
மரணம்நேர்வது நிச்சய
மென்பது, இக்குறளின்கருத்து. பிறக்குமாயின் -
உண்டானல். 'முதலிய'
என்றதனல், நட்புங்கொள்க. பெரியன் - மிகுந்தவன்.
அதனல் - உட்பகை
யால். ஒன்றியார் - சேர்ந்தவர்; இறந்தகால
வினையாலணையும் பெயர். (கூ)

அ௮௭. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங்
கூடாதே

யுடபகை யுறற குடி.

(இ - ள்.) செப்பின் புணர்ச்சி போல் - செப்பினது
புணர்ச்சி போல,
கூடின்உம் - (புறத்து வேற்றுமைதெரியாமற்)
கூடினராயினும், உள் பகை
உற்ற குடி - உட்பகை உண்டாகிய குடியிலுள்ளார்,

கூடாது - (அகத்துத்
தம்முள்) கூடார்; (எ - று.)

செப்பின் புணர்ச்சி - செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையின், புறப்பகைபெற்றுழி வீற்றுவீற்றுவரென்பதாம். குடி கூடாது என்பதனை 'நாடுவந்தது' என்பதுபோலக் கொள்க. உட்பகை தான் உற்ற குடியொடு கூடா தென்றும், உட்பகையுண்டாய குடி அப்பகையொடு கூடா தென்றும் உரைப்பாருமுளர்.

(கு - ரை.) செப்பு - செம்பினாலியன்ற சிமிழ். புணர்ச்சி - சேர்க்கை: வேற்றுமை - வேறுபாடு. மூடி - மேன்மூடி. பெற்றுழி - நேர்ந்தபொழுது. வீற்றுவீற்றுவர் - தனித்தனியாப்பிரிவர். குடி - குடும்பம்; இங்கு, அதிலுள்





ளார்க்கு இடவாகுபெயர்: இது, பொருளால் உயர்திணையாயினுஞ் சொல்லால் அஃறிணையாதலால்

அஃறிணை வினை கொண்டு முடிந்தது; ஊரடங்கிற்று,

உலகம்புகழ்ந்தது என்பனவுங் காண்க. தான் உற்ற - தானுள்ள, ஏகாரம் -

தேற்றம். ஒருகுடியிலிருக்கும் உட்பகையுள்ளார் வெளிப்பார்வைக்கு எவ

வளவு ஒற்றுமையுடையராகத்தோன்றினும் மனத்தினல் தம்முட்சேரா

ரென்பது முதலிற் கூறியபொருள்; இனி, இக்குறட்கு வேறுஇரண்டுபொருள்

வருமாறு:—உட்பகையுடையான் தானுள்ளகுடியாரோடு கூடானென்பதும்,

உட்பகையுண்டாகிய குடியிலுள்ளார் அப்பகையாரோடு கூடாரென்

பதுமாம். (எ)

அஅஅ. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு

துட்பகை யுற்ற குடி.

(இ - ள்.) (முன் வளர்ந்துவந்ததாயினும்), உள்பகை உற்ற குடி - உட்

பகையுண்டாய குடி, அரம் பொருத பொன் போல - அரத்தாற் பொரப்

பட்ட இரும்பு போல, பொருது - (அதனால்) பொரப்பட்டு, உரம் தேயும் -

வலி தேயும்; (எ - று.)

'பொருது' என்னுஞ் செயப்பாட்டு வினையெச்சம், 'தேயும்' என்னும் வினை கொண்டது; அஃது, உரத்தின்தொழிலாயினும் குடிமேல் ஏற்றுதலின் வினைமுதல்வினையாயிற்று. காரியஞ்செய்வதுபோன்று பொருந்தி மெல்ல மெல்லப் பிரிவித்தலான், வலி தேய்ந்துவிடு மென்பதாம்.

இவை இரண்டுபாட்டானும், அவன்குடிக்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

(கு - ரை.) அரம் - வாள்விசேடம். பொரப்பட்ட - அராவப்பட்ட. அதனால் - உட்பகையால் பொரப்பட்டு - கீழறுக்கப்பட்டு. தேயும் - குறையும்.

பொருத எனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது; இது, செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை; பொரப்பட்ட என்பது - அகரச்சாரியையும் செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் படுவிகுதியுந் தொக்குப் பொருத என நின்றதென்று கொள்வாருமுளர்; பொருது என்பதனையும் இவ்வாறே கொள்க. அஃது - தேயுமென்பது. உரமென்பது குடியென்பதன் பயனிலையாகிய தேயு மென்னும் வினையைக்

கொண்டு முடிந்தது, வழுவமைதி. பிரிவித்தலான் - வேறுபடுத்தலால், அரமென்பதன் குறிப்பால், பொன் - கரும்பொன். (அ)

௮௮௯. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(இ - ள்.) உள் பகை - (அரசனது) உட்பகை, (அவன்பெருமையை நோக்க), எள் பகவு அன்ன-எள்ளின்பிளவையொத்த, சிறுமைத்து ஏ ஆயின் உம் - சிறுமை யுடைத்தே யாயினும், கேடு உள்ளது ஆம் - (பெருமையெல்லாம் அழியவரும்) கேடு அதனகத்ததாம்; (எ - று.)

## ௯௦ - ஆம் அதிகாரம்.—பெரியாரைப் பிழையாமை ௩௯௫

எத்துணையும் பெரிதாய கேடு, தனக்கு எல்லவருந்துணையும் எத்துணை யுஞ்சிறிதாய உட்பகையுள்ளே அடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிற்கு மென்பதாம். இதனுன், அது சிறிதென்று இகழப்படா தென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) பெருமையெல்லாம் - அரசன்பெருமையெல்லாம். அதன கத்தது - அந்தச்சிறிய

உட்பகையினிடத்தது. எத்துணையும் - மிகவும். எல்லை-
வெளிப்படுங்காலம். அது - உட்பகை. ஆயினும், உம்மை
- இழிவுசிறப்பு.
பகவு - பிளவுறுபண்டத்துக்குத் தொழிலாகுபெயர்; பகு -
பகுதி. தனக்குக்
காலம்வருமளவும் மிகவுஞ்சிறிதாகத்தோன்றுகின்ற
உட்பகையினிடத்து மிக வும்பெரிதாகிய கேடு
அடங்கியிருந்து காலம்வந்தால் வெளிப்பட்டிடுமென் பதாம்.

(கூ)

அகூ0. உடம்பா டிலா தவர் வாழ்க்கை
குடங்கருட்
பாம்பொ டுடனுறைந் தற்று.

(இ - ள்.) உடம்பாடு இலாதவர் வாழ்க்கை -
மனப்பொருத்தமில்லாதா
ரோடு (கூட ஒருவன்) வாழும் வாழ்க்கை, குடங்கருள் -
ஒருகுடிலுள்ளே,
பாம்போடு—,உடன் உறைந்து அற்று - கூடஉறைந்தாற்
போலும்; (எ-று.)

'குடங்கம்' என்னும் வடசொல், திரிந்துநின்றது.
இடச்சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல்
ஒருதலையாம்; ஆகவே, அவ்வுவ
மையால், அவனுயிர்க்கு இறுதிவருதல் ஒருதலை யென்பது
பெற்றாம்.

இதனுன், கண்ணோடாதவரைக் கடிகவென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) குடில் - குடிசை. உறைதல் - வசித்தல். குடங்கம் - குடங்கர்; காமம் - காமர் என்றாற்போல. பயிற்சி - பழக்கம். கோட்படல் - கடிக்கப்படுதல். இறுதி - முடிவு. கண்ணோடாதவர் - இங்கு மனப்பொருத்தமில்லாதவர். கடிக - விலக்குக. உடம்பாடெனினும், உடன்பாடெனினும் ஒக்கும். உடனுறைதல் - பயின்றுவாழ்தல். அற்று - அன் என்னும் உவமவுருபிடைச்சொல்லடியாப் பிறந்த குறிப்புமுற்று. உவமானமும் உவமேயமும் உவமையுருபும் விரிந்துநிற்க, உயிர்க்குஇறுதிவருதலாகிய பொதுத் தன்மையொன்று தொக்குவந்ததனுல், பொதுத்தன்மைத்தொகையுவமையணி: இதனை வடநூலார் லுப்தோபமாலங்கார மென்பர். (௧௦)

## ௯௦ - ஆம் அதிகாரம்.—பெரியாரைப் பிழையாமை.

அஃதாவது - பெரியராயினரை அவமதித்து

ஒழுகாமை. 'இரட்டுற
மொழிதல்' என்பதனால், பெரியாரென்பது - ஆற்றலாற்பெரியாராய வேந்தர்மேலும், தவத்தாற்பெரியாராய முனிவர்மேலும் நின்றது. மேல் சொல்லாது எஞ்சிநின்றதாகலின், இது, வெகுளியான்வருனவற்றது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

(கு - ரை.) பெரியார்என்பது - ஆற்றலாற்பெரியராகிய அரசரையும் தவத்தாற்பெரியராகிய இருடியரையுங் காட்டும். இங்ஙன் இரண்டுபொருள்



ஒருங்குகொள்ள உரைப்பது - இரட்டுறமொழிதலெனப்படும். மேற்சொல்லாது எஞ்சிநின்றது - முன்சொல்லாமல் மிகுந்தது.

௯கூக. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

(இ - ள்.) ஆற்றுவார் - (எடுத்துக்கொண்டனயாவும்) முடிக்கவல்லா ருடைய, ஆற்றல் - ஆற்றல்களை, இகழாமை - அவமதியாமை, போற்றுவார் போற்றலுள் எல்லாம் - (தங்கண் தீங்குவராமல் காப்பார்) செய்யுங் காவல் கள் எல்லாவற்றினும், தலை - மிக்கது; (எ - று.)

ஆற்றலென்பது - பெருமை, அறிவு, முயற்சிஎன்னும் மூன்றன்மேலும் நிற்றலின், சாதியொருமை. இகழ்ந்தவழிக் களையவல்லா ரென்பது தோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண் படை பொருள் நட்பு முதலிய பிறகாவல்கள் அவரான் அழியு மாதலின் அவ்விகழாமையைத் *தலையாயகாவ லென்றுங் கூறினார்.

பொதுவகையால், அவ்விருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இத னாற் கூறப்பட்டது.

(கு - ரை.) எடுத்துக்கொண்டன-தொடங்கின காரியங்கள். பெருமை அறிவு முயற்சி என்னும் மூவகை ஆற்றல்களை, முறையே

வடநூலார் ப்ரபு
 ஶக்தி மந்த்ரஶக்தி உத்ஸாஹஶக்தி என்பர். சாதிஒருமை
- சாதிபற்றிவந்த
 ஒருமை. களையவல்லார்-இகழ்ந்தவர்களை அழிக்கவல்லார்.
அரண் - காவலாக
 இருக்கும் மதில் அகழி மலை காடு வெளிநிலம் என்பன.
அவரான்-ஆற்றலுடை
 யவரால். இருதிறத்தார் - இருவகைப்பெரியோர்;
ஆற்றலாற்பெரியாராய
 வேந்தரும், தவத்தாற்பெரியாராய முனிவரும்.
ஆற்றலென்பது பெருமை
 முதலிய மூன்றைக்காட்டுமென்று வேந்தர்க்கு
ஏற்பக்கூறினாராயினும்,
 முனிவர்க்குஏற்பத் தவத்தையும் கொள்ளவேணும்.
(க)
அ௯உ. பெரியாரைப் பேணு தொழுகிற்
பெரியாராற்
பேரா விடும்பை தரும்.
(இ - ள்.) பெரியாரை - (ஆற்றல்களால்)
பெரியராயினாரை, பேணாது
 ஒழுகின் - (வேந்தர்) நன்குமதியாது [அவமதித்து]
ஒழுகுவாராயின், (அவ்
 வொழுக்கம்), பெரியாரால் - அப்பெரியாரால், பேரா
இடும்பை - (அவர்க்கு எஞ்ஞான்றும்) நீங்காத துன்பங்களை,
தரும் - கொடுக்கும்; (எ - று.)
அத்துன்பங்களாவன - இருமையினும்

இடையறாதுவரும் மூவகைத் துன்பங்களுமாம்.
அவையெல்லாந் தாமே செய்துகொள்ளுகின்றனரென்பது தோன்ற ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும், பெரியாரைக் கருவியாக்கியுங் கூறினர்.

பொதுவகையால் அவரைப் பிழைத்தற் குற்றம், இதனாற் கூறப்பட்டது. இனி, சிறப்புவகையாற் கூறுப.

* பி - ம்: தலையென்றும்.

## ௯௦ - ஆம் அதிகாரம்.—பெரியாரைப் பிழையாமை ௩௨கள்

(கு - ரை.) நன்குமதியாது-கௌரவியாமல்.

இருமை-இம்மை மறுமை. இடையறாது - ஓயாமல். மூவகைத்துன்பங்களாவன - தன்னைப்பற்றி வருவனவும், பிறஉயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவன வும் என மூவகைப்படும் பிறவித் துன்பங்கள்; இவற்றை முறையே ஆத்யாத் மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிக மென்பர். வினைமுதல் - எழுவாய். பெரியாரை அவமதித்தொழுகுவார்க்கு இடும்பைவருதற்கு முக்கியகாரணம் அவரைப்பேணுதொழுகியமையேயாதலால், அவ்வொழுக்கத்தைக் கருத்தா வாக்கி, அப்பெரியாரை இடும்பைதருதற்குக் கருவியாக்கினு ரென்க. அவ ரைப்

பிழைத்தற் குற்றம் - அவ்விருவர்க்கும் பிழைசெய்வதனு லுண்டாங் குற்றம். சிறப்புவகையாற் கூறுப - தனித்தனியே சொல்லுவர். (உ)

௬௯௩. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி

னாற்று பவர்க ணிழுக்கு.

(இ - ள்.) அடல்வேண்டின் - (வேற்று வேந்தரைக்) கோறல் வேண்டியவழி, ஆற்றுபவர்கண் - (அதனை அப்பொழுதே) செய்யவல்ல வேந்தர் மாட்டு, இழுக்கு - பிழையினை, கெடல் வேண்டின் - (தான்) கெடுதல் வேண் டினனாயின், கேளாது செய்க-(ஒருவன் நீதிநூலைக்) கடந்து செய்க; (எ - று.)

அப்பெரியாரை "காலனுங் காலம் பார்க்கும் பாராது, வேலினடு தானை விழுமியோர் தொலைய, வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தர்" என்றார் பிறரும். நீதிநூல் செயலாகாதென்றகூறலின், 'கேளாது' என்றார்.

(கு - ரை.) வேற்று வேந்தர் - பகையரசர்கள். நீதிநூலைக் கடந்து-நீதி சாஸ்திரத்திற் சொல்லியபடி நடவாமல். அதனை - அக்கோறலை. "கால னுங்காலம்பார்க்கும்" என்னும் மேற்கோள், புறநானூறு - ௪௧-இல் உள்ளது; இதற்கு - யாவரையுங் கொல்லுகின்ற யமனும் அக்கொலைக்கு ஏற்ப விதித்த காலம் வருந்துணையும் எதிர்பார்த்து நிற்பன்: அங்ஙனங் காலத்தை எதிர்பா ராமல் தமக்கு வேண்டியபொழுதே வேல்முதலிய ஆயுதங்களாற்

போர்செய்கின்ற சேனையையுடைய சிறந்த அரசர்கள் அழியும்படி கொல்லுகின்ற வெல்லும் போரினையுடைய அரசரென்பது பொருள். செயலாகாது-இத்தன்மை யாரிடத்துப் பிழைசெய்யக்கூடாது.

(௩)

௮௯௪. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்

காற்றா தாரின்னா செயல்.

(இ - ள்.) ஆற்றுவார்க்கு - (மூவகை) ஆற்றலு முடையார்க்கு, ஆற்றாதார் - அவையில்லாதார், இன்னா செயல் - (தாம் முற்பட்டு) இன்னாதவற்றைச் செய்தல்,—கூற்றத்தை - (தானேயும் வரற்பாலனாய) கூற்றுவனை, கையால் விளித்து அற்று-(அதற்குமுன்னே) கைகாட்டிஅழைத்தாலொக்கும்.

கையால் விளித்தல் - இகழ்ச்சிக்குறிப்பிற்று. தாமேயும் உயிர்முதலிய கோடற்குஉரியாரை அதற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக்கொள்வார் இறப்பினது உண்மையும் அண்மையுங் கூறியவாறு.



இவை இரண்டு பாட்டானும்,

வேந்தரைப்பிழைத்தலின் குற்றங் கூறப் பட்டது.

(கு - ரை.) அவை-அவ்வாற்றல்கள்.

வரற்பாலன்-வருந்தன்மையன்.

கூற்றுவன் - யமன். ஒருவனை 'நீ என் மீதுவா: பார்ப்போம்' என்று வலிய அழைப்பது அவனிடத்துள்ள அவமதிப்புப்பற்றிஇகழ்வதாதலால், அத்தன்மையை யமனிடத்தேற்றி அவனைக்கையால்விளித்தல் அக்கூற்றுவனிடத்துத் தனக்குள்ள இகழ்ச்சிபற்றியதாகுமென்பார், கையால்விளித்தல் 'இகழ்ச்சிக் குறிப்பிற்று' என்றார்: பிறர் வலியறியாமல் அவரை வலியப்போருக்கு அழைத்தல் தீங்குக்கே காரணம்என்க. குறிப்பிற்று - குறிப்பினையுடையது.

'முதலிய' என்பதனால், இடம் பொருளேவல்களுங் கொள்க. இறப்பு - மரணம். உண்மை - தவறாமை. அண்மை - சமீபித்த தன்மை. ஆல் - அசை.

கூற்றத்தை உவமை கூறியதனால், தடுக்கலாகாமை விளங்குகின்றது. (௬)

அ௯௫. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

(இ - ள்.) வெம் துப்பின் - (பகைவர்க்கு) வெய்தாய வலியினையுடைய, வேந்து - வேந்தனால், செறப்பட்டவர்-செறப்பட்ட அரசர்,

யாண்டு சென்று
(உளர்). - (அவனைத்
தப்பி) எங்கேபோய்(உளராவர்?) யாண்டுஉம் உளர் ஆகார்-
ஓரிடத்தும் உளராகார்; (எ - று.)

இடைவந்த சொற்கள், அவாய்நிலையான் வந்தன.
வெந்துப்பின் வேந்தாகலால், தம்நிலம்விட்டுப் போயவர்க்கு
இடங்கொடுப்பாரில்லை; உளராயின்,
இவர் இனி ஆகாரென்பது நோக்கி, அவனோடு
நட்புக்கோடற்பொருட்டும்
தாமே வந்தெய்திய அவருடைமையை
வெளவுதற்பொருட்டுக் கொல்வர்; அன்றெனின், உடனே
அழிவர் என்பன நோக்கி, 'யாண்டுச்சென் றியாண்டு
முளராகார்' என்றார்.

இதனால், அக்குற்றமுடையார் ''அருமை யுடைய
அரண் சேர்ந்தும் உய்யார்'' என்பது கூறப்பட்டது.

(கு - ரை.) வெய்தாய - வெம்மை யுடையதாகிய:
கொடுமை யுடைய தாகிய, செறப்பட்ட - கோபிக்கப்பட்ட.
இடைவந்தசொற்கள் - அவனைத்தப்பி, உளராவர் என்பன.
உளராயின் - இடங்கொடுப்பவருண்டானால் அவர். இவர்
இனி ஆகாரென்பது நோக்கி - வெந்துப்பின் வேந்தாற்
செறப்பட்ட இவர் இனி நன்மைபெறா ரென்பதுகருதி.
அவனோடு நட்புக்கோடற் பொருட்டு - வெந்துப்பின்

வேந்தோடு வலியச் சினேகஞ் செய்துகொள்ளுதற் பொருட்டு. எய்திய - அடைந்த. உடைமை - சொத்து. வெள்வுதல் - அபகரித்துக் கொள்ளுதல். அக்குற்றம் - பெரியாரைப் பிழைத்தற்குற்றம். அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யார் - அழித்தற்கு அரிய காவலிடத்தைச் சேர்ந்திருந்தாலும் பிழைக்கமாட்டார்; இது, நாலடியார் - பெரியாரைப் பிழையாமை - ௬ - இல் உள்ளது. சென்றியாண்டும் - குற்றியலிகரம்,

## ௯௦ ஆம் அதிகாரம்.—பெரியாரைப் பிழையாமை ௩௩௩

அலகுபெறாது நின்றது உம்மை - முற்று. வேந்து - பண்பாகுபெயர். "வேந்தொடுமாறுகோடல் விளிகுற்றார் தொழிலதாகும்" என்ற சிந்தாமணி இக்குக் கருதத்தக்கது. (௫)

௮௯௬.

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(இ - ள்.) எரியால் சுடப்படின் உம் - (காட்டிடைச் சென்றானொருவன் ஆண்டைத்) தீயாற் சுடப்பட்டானாயினும், உய்வு உண்டாம் - (ஒருவாற்றான்) உயிருய்தல் கூடும்; பெரியார் பிழைத்து ஒழுகுவார் (தவத்தாற்) பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார், உய்யார் - (எவ்வாற்றானும்)

உயிருய்யார்; (எ - று.)

தீ முன் உடம்பினைக்கதுவி அதுவழியாக உயிர்மேற்சேறலின் இடையே உய்யவுங் கூடும்; அருந்தவர்வெகுளி அன்னதன்றித் தான் நிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்குங் காத்தலரிதாகலின் அது கூடாதாகலான், அதற்கு ஏதுவாய பிழை செய்யற்க வென்பதாம்.

(கு - ரை.) ஆண்டைத்தீ - அக்காட்டிடத்துள்ள தீ. ஒருவாற்றான்-ஒரு வழியால். உயிருய்தல் - பிழைத்தல். தீ முன் உடம்பினைக்கதுவி-தீயானது முதலிலே உடம்பிற்பற்றி. அதுவழியாக - உடம்பின்வழியே. அருந்தவர் - பிறராற் செய்தற்கு அரிய தவமுடைய முனிவர். அன்னதன்றி - அப்படிப்பட்டதல்லாமல். தான் நிற்பது - தானுள்ள அளவு. கணம்-க்ஷணப்பொழுது. காத்தலரிது - தடுத்தற்கரியது. அனுதியாய் வருகின்றவாறு பற்றி ஒரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் 'நிற் பதுகணமாய்' என்றும், நிறைமொழிமாந்தராகலின்'யாவர்க்குங் காத்தலரிது' என்றுங் கூறினர்; "குணமென்னுங்குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தலரிது" என்றார், நீத்தார்பெருமையில். சுடப்படினும், உம்மை-உயர்வு சிறப்பு. இங்குத் தவத்தாற் பெரியாராகிய உபமேயத்திற்கு எரியாகிய உப மானத்தினும் சிறப்புத்தோன்றக் கூறியது-வேற்றுமையணியின்பாற்படும்.

அகூஎ.

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு
தகைமாண்ட தக்கார் செறின்.

னென்னுந்

(இ - ள்.) தகை மாண்ட தக்கார் - (சாபஅருள்கட்கு ஏதுவாய) பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர், செறின் - (அரசனை) வெகுள்வராயின், வகை மாண்ட வாழ்க்கைஉம் - உறுப்பழகுபெற்ற அவனரசாட்சியும், வான் பொருள்உம் - (ஈட்டிவைத்த) பெரும்பொருளும், என் ஆம்-என்பட்டுவிடும்!

உறுப்பு - அமைச்சு நாடு அரண் படை என இவை. 'செறின்' என்பது- அவர் செறுமை தோன்ற நின்றது; இவ்வெச்சத்தான் முன்வருவனவற்றிற்

கும் இஃது ஒக்கும். அரசர் தஞ் செல்வக்களிப்பான் அருந்தவர்மாட்டுப்பிழை செய்வாராயின், அச்செல்வம் அவர்வெகுளித்தீயான் ஒரு கணத்துள்ளே வெந்துவிடு மென்பதாம்.

(கு - ரை.) சாபம் - சபிப்பு; வெகுண்டு கூறும் மொழி. அருள் - அநுக்

ரகம்; அருளிக்கூறும்மொழி. உறுப்பழகுபெற்ற - அங்கங்கள்நன்கமைந்த.

ஈட்டிவைத்த - சம்பாதித்துவைத்த. என்பட்டுவிடும் - எப்படியாய்விடும்; அடியோடு அழிந்துபோய்விடும். இவ்வெச்சம் - செறினென்னும் வினையெச்சம். முன்வருவனவற்றிற்கும் - மேற்குறள்களில் வரும் 'மதிப்பின்', 'சீறின்,' 'செறின்' என்னும் எதிர்கால வினையெச்சங்களுக்கும். இஃது - அவ்வாறுசெய்யாமை தோன்ற நிற்பது. வெகுளித்தீ-கோபாக்கினி. மாண்ட, மாண் - முதனிலை; [இறந்த என்னும் பொருளில், மாள் - முதனிலை.] (எ)

௮௯௮. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(இ - ள்.) குன்று அன்னார் - குன்றத்தை யொக்கும் அருந்தவர், குன்ற

மதிப்பின்-கெடநினைப்பாராயின், (அப்பொழுதே), நிலத்து நின்று அன்னார்-

இந்நிலத்து நிலைபெற்றாற்போலுஞ் செல்வர், குடியொடு - (தம்) குடியொடும்,

மாய்வர்—; (எ - று.)

வெயில் மழை முதலிய பொறுத்தலுஞ் சலியாமையும் உள்ளிட்ட

குணங்களுடைமையின், 'குன்றன்னார்' என்றார்; "மல்லன் மலையனைய மாத

வர்" என்றார் பிறரும்.
நிலைபெற்றாற்போறலாவது - இறப்பப்பெரியராக

லின், இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லை யென்று

கண்டாரால் கருதப்

படுதல்.

(கு - ரை.) குன்றம் - மலை. சலியாமை - அசையாமை. உள்ளிட்ட

குணங்கள் - அளவுசெய்யப்படாத பெருமையும், பலவகைப்பொருளுடைமை

யும், நெடுந்தூரத்திலுள்ளாராலும் அறியப்படும் உயர்ச்சியும், எப்பொழுதும்

பயன்கொடுக்குந் தன்மையும், அழித்தற்கு அருமையும் முதலியன. "மல்லல்"

என்னும் மேற்கோள், சீவகசிந்தாமணி - முத்தியிலம்பகம் ௧௬௧ - இல் உள்

ளது; இதற்கு - அளவுசெய்யப் படாத பலவளங்களையுடைய மலைபோல யாவ ராலும் அசைக்கப்படாத மிக்க தவத்தையுடைய முனிவ ரென்பது பொருள்.

இறப்பப்பெரியர் - (மூவகையாற்றலால்) மிகவும்பெரியவர். இவர்க்கு - இச்

செல்வர்க்கு.

(அ)

அ ௯௯ .

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(இ - ள்.) ஏர்திய கொள்கையார் - (காத்தற்கு அருமையான்) உயர்ந்த விரதங்களையுடையார், சீறின் - வெகுள்வராயின், (அவராற்றலான்), வேந்தனும் - இந்திரனும், இடை வேந்து முரிந்து - இடையே (தன்) பதம் இழந்து, கெடும்—; (எ - று.)

"வேந்தன் மேய தீம்புன லுலகமும்" என்றார் பிறரும். நகுடனென்பான் இந்திரன்பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்புமிகுதியான் அகத்தியன்வெகுள்வதோர் பிழை செய, அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தா னென்பதனை உட்கொண்டு, இவ்வாறு கூறினார்.

இவைநான்கு பாட்டானும், முனிவரைப்பிழைத்தலின் குற்றங் கூறப் பட்டது.

•

## கூ0 - ஆம் அதிகாரம்.—பெரியாரைப் பிழையாமை ௬0௧

(கு - ரை.) விரதங்களாவன -வினைமாசு தீர்ந்து அந்தக்கரணம் பரிசுத்த மாதற்பொருட்டு இன்ன அறஞ்

செய்வேனெனவும், இன்னபாவந் தவிர்வேனெனவுந் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்துகொண்டு துறந்தோராற் காக்கப்படும் அருளுடைமை முதலியன. "வேந்தன்மேய" என்னும் மேற்கோள், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - அகத்திணையியல், ரு - ஆம் சூத்திரத் தில் உள்ளது; இதற்கு-இந்திரன் காதலித்த தண்புனல்நாடென்று பொருள் : இம்மேற்கோள், வேந்தனென்னுஞ் சொல் தேவேந்திரனென்னும் பொருளில் வருதற்கு எடுத்துக்காட்டப்பட்டது. பதம் - பதவி. வேந்தனும், உம்மை- உயர்வுசிறப்பு. நகுஷனென்னுஞ் சந்திரகுலத்து அரசன், நூறு அசுவமேதயாகஞ்செய்து இந்திரபதம்பெற்றுச் சிவிகையேறிச் செல்கின்ற காலத்து, இந்திராணிமேல்வைத்த காதல்மிகுதியால், தன்சிவிகைதாங்கிச் செல்கிற எழுமுனிவர்களுள் குறுமுனிவராதலால் மெதுவாய் நடந்த அகத்தியரைநோக்கி விரைவிற்செல்கவென்பான் 'ஸர்ப்ப ஸர்ப்ப [ஓடு ஓடு]' என்று கூறினனாக, அகத்தியர் வெகுண்டு 'நீ ஸர்ப்பமாகுதி' என்று சபிக்க, அவன் அவ்விந்திரபதமிழந்து உடனே பாம்பாகி நிலத்திற் கிடந்தா னென்பது, வரலாறு. வேந்து-தேவேந்திரபதவி: இச்சொல்லின்பொருளை இவ்வாறுகொள்ள மாட்டாத ஒருசாரார் 'வேந்தனும் வெந்துகெடும்' என்றுபடிப்பர். அது பரிமேலழகர்க்குக் கருத்தன்மை ஊன்றியுணர்வார்க்குப் புலனும். புறப்பொருள் வெண்பாமாலையில் காஞ்சிப்படலத்தில்

"துன்னருந்துப்பின்" என்ற பாடலின் உரையில் அதன் உரையாசிரியர் ""ஏந்தியகொள்கையார் சீறினிடைமுரிந்து, வேந்தனும்வேந்து கெடும்" என்பதனால், வேந்து - இராச்சியமென்றுமாம்' என்று எழுதியிருப்பதும் இங்குக் காணத்தக்கது. (கூ)

கூOO. இறந்தமைந்த சார்புடைய ராயினு
 முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

(இ - ள்.) சிறந்து அமைந்த சீரார் - கழிய மிக்க தவத்தினை யுடையார், செறின் - வெகுள்வராயின், (அவரான் வெகுளப்பட்டார்),—இறந்து அமைந்த சார்பு உடையர் ஆயின் உம்-கழியப்பெரிய சார்புடையராயினும், உய்யார்- (அதுபற்றி) உய்யமாட்டார்; (எ - று.)

சார்பு - அரண் படை பொருள் நட்பு என இவை; அவையெல்லாம் வெகுண்டவரது ஆற்றலால் திரிபுரம்போல அழிந்துவிடு மாகலின், 'உய்யார்' என்றார். சீருடையது, சீரெனப்பட்டது.

இதனால், அக்குற்றமுடையார் சார்புபற்றியும்உய்யாரென்பது கூறப் பட்டது.

(கு - ரை.) கழிய மிக்க - மிகவும் அதிகமான. சார்பு - துணையாய அங்கங்கள். திரிபுரம் - இருப்புமதில், வெள்ளிமதில், பொன்மதில்களையுடைய மூன்று பட்டணங்கள்: திரிபுரமழித்தது, வெகுண்டசிவபிரானது

ஆற்றலால். சீர் - சிறப்பு; தவத்துக்குப் பண்பாகுபெயர். அக்குற்றம் - பெரியாரைப் பிழைத்தலாகிய குற்றம்.

(௧0)

51



௯௧ - ஆம்

## அதிகாரம்.—பெண்வழிச்சேறல்.

இனிக் காமத்தான்வருவன நேரே பகையல்லவாயினும், ஆக்கஞ்சிதைத்தல் அழிவுதலைத்தருத லென்னுந் தொழில்களாற் பகையோடொத்தலின் பகைப்பாற் படுவனவாம்: ஆகலான், அவற்றைப் பகைப்பகுதியது இறுதிக்கட் கூறுவான் றொடங்கி, முதற்கட் பெண்வழிச்சேறல் கூறுகின்றார். அஃதாவது - தன்வழியொழுகற்பாலளாய இல்லாள்வழியே தான் ஒழுகுதல்.

(கு - ரை.) 'காமத்தான்வருவன நேரே பகையல்லவாயினும்' என்பது - வெகுளியான் வருவன வாகிய இகல் முதலியன நேரே பகையா மென்பதைக் குறிப்பிக்கும். ஆக்கஞ்சிதைத்தல் -

பொருளைச்சிதைத்தல்:

பெருக்கஞ் சிதைத்த லென்பாருமுளர். அழிவு தலைத்தருதல் - அழிவை

விளைத்தல். அவற்றை - காமத்தால் வருவனவற்றை. தன்வழியொழுகற்

பாலளாய - தான்போகின்ற வழியே தானுமடத்தற்குரியவளாகிய. இல்

லாள் - மனைவி. "தன்னாலாளப்படுமனைவி தன்னை லாளப்படுவானேல், அன்

றேற் கறனும் பொருளுமுள வாகா தொல்லைப் பொருளானும், மன்னு பயன்

கள் வினைமுடியா மறுமையணுகா தெப்பிழையும், முன்னும் பின்னும் பெரு

நாணு மூவாப்பழியு மறிமைந்தா" என்ற விநாயகபுராணம் இங்குக்

காணத்தக்கது.

௯௦௩. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்

வேண்டாப் பொருளு மது.

(இ - ள்.) (இன்பம் காரணமாக), மனை விழைவார் - (தம்) மனையாளை

விழைந்து (அவடன்மையராய்) ஒழுகுவார், மாண் பயன் - (தமக்கு) இன்

றுணையாய அறத்தினை, எய்தார்—:(இனி), வினைவிழைவார் - பொருள்செய்

தலை முயல்வார், வேண்டா - (அதற்கு இடையீடென்று) இகழும், பொருள்
உம் —, அது - அவ்வின்பம்; (எ - று.)
மனையும் விழைதலும் பயனும் ஆகுபெயர்.
அவ்வின்பம் - அவடன்மை
யராதற்கு ஏதுவாய இன்பம். அஃது; அவளாற் பயனுய அறத்தினும் அவ்
வறத்திற்கும் தனக்கும் ஏதுவாய பொருளினும் செல்ல விடாமையின்,
விடற்பாற் றென்பதாம்.

(கு - ரை.) மாண்பயன் - பண்புத்தொகை: மாட்சிமைப்பட்ட பயனை
யளித்தலால், இன்றுணையாய அறத்தை 'மாண்துணை' என்றார். வினை -
பொருளைச் சம்பாதித்தலாகிய தொழிலைக் காட்டிற்று. மனையென்ற இடத்
தின்பெயர் - அங்கு இருத்தற்குஉரிய மனைவிக்கு ஆகியதனுல், இடவாகு
பெயர். விழைவார் என்ற காரணப்பெயர் - அதன்காரியமாகிய விழைந்து
அவள் தன்மையராய் நடத்தலை மேற்கொள்வதைக் காட்டுவதனுல், காரண
வாகுபெயர். பயன் என்ற காரியத்தின்பெயர்-அதற்குக் காரணமாகிய அறத்
திற்கு ஆகியதனுல், காரியவாகுபெயர். அஃது -

அவ்வின்பம். இல்லறத்தா
னுக்குப்பயனாய அறத்திற்கு மனையாள்
துணையாயிருத்தலால், 'அவளாற்



பயனாய அறத்தினும்'எனப்பட்டது. இல்லறத்தானுக்குப்
பயன்-அறம்: அந்த அறத்திற்குத் துணையாகுபவள்-மனைவி.
அந்த அறத்தையும் தன்னதிகாரத்தையும் விளைப்பது -
பொருள்: பெண்வழிச்சேறலாற் பெறப்படும் இன்பம்
இல்லறத்திற்குப் பயனாகிய அறத்திற்கும், அறம்
அதிகாரம் இவற்றை விளக்கக்கூடிய பொருளைத்
தேடுவதற்கும் இடையூறாக முடிதலால், அந்த இன்பம் ஒ
ராண்மகனால் விரும்பி மேற்கொள்ளத்தக்கதன்று:
இகழ்ந்துவிடத் தக்கதென்றவாறு. மனையாள் வழியே
நடப்பவர் தருமத்தைப்பெருமையோடு பொருளையும் பெறு
ரென்பது கருத்து. (௧)

௯௦௨. பேணாது பெண்விழைவா னாக்கம்
பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

(இ - ள்.) பேணாது - (தன்) ஆண்மையைவிட்டு,
பெண் விழைவான் - (மனையாளது) பெண்மையை
விழைவானெய்திகின்ற, ஆக்கம் - செல்வம், (இவ்வுலகத்து
ஆண்பாலார்க்கெல்லாம்), பெரியது ஓர் நாண் ஆக - பெரிய

தோர் நாணுண்டாக, (தனக்கும்), நாணு தரும் - நாணுதலைக் கொடுக்கும்.

எய்திநின்றதாயிற்று, படைக்கும் ஆற்றலிலனாகலின். அச்செல்வத்தால் ஈதலும் துய்த்தலும் முதலிய*பயன்கள் அவளளவு ஆகலின், அவ்வாண்மைச் செய்கை அவள் கண்ணதாயிற்றென்று ஆண்பாலார்யாவரும் நாண, அதனால் தன் ஆண்மையின்மை யறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கி, 'பெரியதோர்நாணாக நாணுத்தரும்' என்றார்.

இவை யிரண்டுபாட்டானும், மனைவிழைதற்குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) எய்திநின்றசெல்வம் என்று பொருள்கூறியது, பெண்வழிச் சேர்பவனுக்குப் பொருளை மேன்மேலுந்தேடும் வல்லமை நீங்குதலால் அவன் தேடியதன்றி அவன்முன்னோராற் பெற்றுநின்ற செல்வமே யுள்ளதென் பதனை லாகுமென்பார் 'எய்திநின்றதாயிற்று, படைக்கும் ஆற்றலிலனாகலின்' என்றார். அச்செல்வத்தால் - தன்முயற்சியாற் சம்பாதித்ததன்றி முன்னரே யடைந்துநின்ற செல்வத்தினால். அவள் - மனையாள். அளவு-அதீனம். ஆண்மைச்செய்கை யென்றது - பொருளைப் பிறர்க்கூதல் துய்த்தல் முதலிய வற்றை. அவள் கண்ணது - மனையாளிடத்தது.

(உ)

௯0௩. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை

யெஞ்ஞான்று

நல்லாரு ணாணுத் தரும்.

(இ - ள்.) (ஒருவன்), இல்லாள்கண் - இல்லாண்மாட்டு, தாழ்ந்த-தாழ் தற்கு ஏதுவாய, இயல்பு இன்மை - அச்சம்,—நல்லாருள் - (அஃதிலராய) நல்லாரிடைச்செல்லுங்கால், நாணு - நாணுதலை, (அவனுக்கு), எ ஞான்று உம் - எக்காலத்தும், தரும் - கொடுக்கும்; (எ - று.)

அவடான் அஞ்சியொழுகுதல் இயல்பாகலின், அவளையஞ்சுதல் இயல்பின்மை யாயிற்று. அங்ஙனம் அஞ்சியொழுகுதலின், அவளை நியமிப்பா

---

* பி - ம்: பயன் கொள்வாள் அவளாகலின்,



ரில்லையாம்: ஆகவே, எல்லாக்குற்றமும் விளையு மென்பதுநோக்கி, 'எஞ்ஞான்றும் நாணுத்தரும்' என்றார்.

(கு - ரை.) இல்லாண்மாட்டு - மனையாளிடத்தில். தாழ்தற்கு ஏதுவாய- ஒடுங்கிநடத்தற்குக்காரணமாகிய. அஃது - ஒடுங்கிநடத்தல். நல்லாரிடை-நற் குணமுடைய பெரியாரிடத்து. அவடான் - மனையாள். மனையாள் கணவனிடத்து ஒடுங்கிநடப்பது இயல்புஆக இருக்க அதற்குமாறாகக் கணவன்

மனையாளிடம் ஒடுங்கிநடப்பானாயின் அது இயல்பல்லாத செயலாதலால், அச்செயலை 'இயல்பின்மை' என்று கூறினரென்று விவரிப்பது 'அவடான்......
இயல்பின்மையாயிற்று' என்ற வாக்கியம்.
அஞ்சியொழுகுதலின் என்பதற்கு 'கணவன்' என்ற எழுவாய் வருவிக்க. நியமிப்பார் - இதுசெய்யக்கூடாது என்றுகட்டுப்படுத்தியடக்குபவர்.
எல்லாக்குற்றமும்-கற்புக்கேடு உட்பட எவ்வகைக்குற்றமுமென்றபடி.
(௩)

கூ0௪. மனையாளை யஞ்சு மறுமை யிலாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(இ - ள்.) மனையாளை அஞ்சும் - (தன்)மனையாளை யஞ்சியொழுகின்ற, மறுமை இலாளன் - மறுமைப்பயனில்லாதானுக்கு, வினை ஆண்மை- வினையையாளுந்தன்மை, (உண்டாயவழியும்), வீறு எய்தல் இன்று - (நல் லோரால்) கொண்டாடப்படாது; (எ - று.)

'உண்டாயவழியும்' என்பது, அவாய்நிலையான் வந்தது. இல்லறஞ்செய் தற்குரிய நன்மை யின்மையின், 'மறுமையிலாளன்' என்றும், வினையை யாளுந்தன்மை தன்றன்மையில்லாத அவனான் முடிவு போகாமையின், 'வீறெய்தலின்று' என்றுங் கூறினர்.

(கு - ரை.) உண்டாயவழியும் -

உண்டானபோதிலும். வினையாண்மை வீறெய்தலின்று என்பது இன்னபோதில் என ஒன்றை வேண்டியிருத்தலால், அதற்கு ஏற்ப, உண்டாயவழியும் என்பது வருவித்துரைக்கப்பட்டது. இல்லாளையஞ்சுபவன், இல்லறத்திற்குப்பயனாகிய அறனைத் தான் சுதந்திரமாகச்செய்யமாட்டாமையால் அவனை மறுமையிலாளனென்றது என்பார் 'இல்லறஞ்செய்தற்குரிய நன்மையின்மையின் மறுமையிலாளன் என்றும்' என்றார். தன்தன்மை - ஆயந்தன்மை: மனைவியையடக்கியாளுந்திறம். அவனால் - மனையாளையஞ்சிநடப்பவனால். வீறு எய்தல் இன்று - பெருமையையடைதல் இல்லையென்பது, சொற்பொருள்: இதன்கருத்தாக, நல்லோரால் கொண்டாடப்படாது என்று பரிமேலழகர் கூறியுள்ளார். வீறெய்தாமைக்குக் காரணம், அவனெடுத்தகாரியம் முடிவுபோகாமை யென்க. (௪)

௯௦௫. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற்
றெஞ்ஞான்று நல்லார்க்கு நல்ல செயல்.

(இ - ள்.) இல்லாளை - (தன்) மனையாளை, அஞ்சுவான் —, —(தான் தேடிய பொருளேயாயினும், அதனால்), நல்லார்க்கு—, நல்ல செயல்-நல்லன செய்தலை, எஞ்ஞான்றும்—, அஞ்சும் - அஞ்சாநிற்கும்; (எ - று.)

ஃகக - ஆம்

## அதிகாரம். — பெண்வழிச்சேறல் ௬0௫

நல்லார் - தேவர் அருந்தவர் சான்றோர் இருமுதுகுரவர் முதலாயினு ரும், நல்விருந்தினரும். நல்லனசெய்தல் - அவர்விரும்புவனகொடுத்தல். அது செய்யவேண்டும்நாள்களினு மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். "இல் லாளை யஞ்சி விருந்தின்முகங்கொன்ற நெஞ்சிற்,
பிறரும்.
புல்லாளனாக" என்றார்

(கு - ரை.) சான்றோர் - தவசியராயிராவிடினும் கல்விகேள்விகளால் மிக்க பெரியோர். இருமுதுகுரவர் - தாய்தந்தையர். முதலாயினரும் என் றதனால், நட்பினர் குலகுருமார் முதலியோரைக் கொள்க. அது - தேவர் முதலியோர்விரும்புவன கொடுத்தல்.
கொடுக்கவேண்டிய நாள்களாவன -

தேவர்முதலியோர்க்கு விரும்புவன
பிரார்த்தனைசெலுத்தவேண்டியநாள்
சிராத்தநாள் முதலாயின. "இல்லாளையஞ்சி" என்று தொடங்கும் மேற் கோள், சீவகசிந்தாமணி மண்மகளிலம்பகம் - உகஎ - இல் உள்ளது: இதன் பொருள்:—இல்லாளை அஞ்சி - (தன்) மனைவிக்குஅஞ்சி,
விருந்தின் - விருந்தினரின், முகம் - முகத்தை,
கொன்ற-மகிழ்ச்சிசெய்யாதுவிட்ட, நெஞ்சின்-
மனத்தினையுடைய, புல்லாளன் -
அற்பத்தன்மையுடையவனாக, ஆக-ஆகக் கடவேன் என்பது.

மனையாளுக்கு அஞ்சுவோனல் நல்லார்க்குஉதவிசெய்ய இயலாதென்பது, கருத்து.

(ரு)

கூ0சு.

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(இ - ள்.) இல்லாள் - (தம்) இல்லாளுடைய, அமை ஆர் தோள் - வேய் போலுந் தோளினை, அஞ்சுபவர் - அஞ்சுவார்,—(வீரத்தால் துறக்கமெய்திய), இமையாரின் - அமரர்போல, வாழின் உம் - (இவ்வுலகத்து) வாழ்ந்தாராயினும், பாடு இலர் - ஆண்மையிலர்; (எ - று.)

அமரர்போல வாழ்தலாவது - பகைத்தவீரர்தோள்களையெல்லாம் வேறலான் நன்குமதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின் 'வாழினும்' என்றார். அமையார்தோளெனவே, அஞ்சுதற்காரணத்தது எண்மை கூறியவாறு. வீரர்தோள்களைவென்றாராயினும் இல்லாடோள்களையஞ்சுவார் ஆண்மையில ரென்பதாம்.

இவை நான்குபாட்டானும், அவளை யஞ்சுதற்குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) வேய் - மூங்கில். வீரத்தால் - பராக்கிரமகுணத்தைக்காட் டிப் பொருததனல். துறக்கம் -

சுவர்க்கம். தம் ஆண்மையாற் போர்க்களத்திற் பகைவர்க்குப் பின்னிடாது போர்புரிந்து மடிந்தவர் தேவராகி வீரசுவர்க்கத்தையடைவ ரென்ற நூற்றுணிபு இங்குக் கருதத்தக்கது. தோள்களை யெல்லாம்வேறலான் - தோள்வலிமையை யோங்கவிடாது கீழ்ப்படுத்திச் செயித்தலால். அது - வீரகுணத்தால் நன்குமதிக்கப்பட்டுவாழ்தல். வாழி ஓம், உம்மை - எதிர்மறைப்பொருளது. தோளுக்கு 'அமையார்' என்ற அடைமொழிகொடுத்தது - அது அஞ்சுதற்கு உரியது அன்று என்று அதன் எளிமையைப் புலப்படுத்தும். மூலத்தில், பாடு என்பது - பெருமையென்



னும்பொருளது: இங்குவீரகுணத்தாலாகிய பெருமையைக் காட்டுமென்பார், அதனை ஆண்மையென்றார்.

(௬)

௯0௭. பெண்ணேவல்

செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

(இ - ள்.) (நாணின்றி) பெண் - (தன்) இல்லாளது, ஏவல் - ஏவற்றொழிலை, செய்து ஒழுகும் - செய்துதிரிகின்றவனது, ஆண்மையின் - ஆண்டன்மையின்,

நாண் உடை - நாணினையுடைய, பெண் ஏ - (அவள்) பெண் டன்மையே, பெருமை உடைத்து - மேம்பாடுடைத்து; (எ - று.)

'நாணுடைப்பெண்' என வேண்டாகூறியது - அவளேவல்செய்வானது நாணின்மை முடித்தற் காதலின், அம்மறுதலைத்தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல் - ஆகுபெயர். இறுதிக்கட் பெண்ணென்பதூஉம் அது. ஏவல்செய் வித்துக் கோடற்சிறப்புத்தோன்றப் பெண்ணே யெனப் பிரித்தார்.

(கு - ரை.) பெண்ணென்றமாத்திரத்தில் நாணுடைமை பெறப்படுமாத லால், பெண்ணென்றசொற்கு 'நாணுடை' என்ற அடைமொழி வேண்டுவ தன்று: வேண்டாத ஒன்றைக் கூறுதல் தாம் வேண்டியதொன்றைப் பெற வைத்தற் காகு மாதலால், 'பெண்ணேவல்செய்வான்' என்றவிடத்து 'நாணின்றி' என்று நாணுடைமைக்கு மறுதலைத்தொழில் வருவித்துக்கூறப் பட்ட தென்க: மறுதலை - எதிர்த்தட்டானது. ஏவல் என்பது - ஏவியதொழிலைக் காட்டுவதனால், தொழிலாகுபெயராம். இறுதிக்கட் பெண் - இச்செய் யுளிலுள்ள பெண் என்ற சொல் இரண்டனுள் பின்னது. அவ்விடத்துப் பெண் என்பது - பெண்தன்மையைக்காட்டிற்று: பொருளாகுபெயரின்பாற் படும். ஆண்மகனைக்கொண்டு தான் ஏவிய தொழிலைச் செய்வித்துக்கொள்ள வல்ல சாமர்த்தியமுடையாளென்று அச்சிறப்புத்தோன்ற 'பெண்ணே' என்று பிரிநிலையேகாரம் கொடுக்கப்பட்ட தென்க. (எ)

கூ0அ. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்

பெட்டாங் கொழுகு பவர்.

(இ - ள்.) (தாம் வேண்டியவாறன்றி), நல் நுதலாள் - தம்மனையாள், பெட்ட ஆங்கு - வேண்டியவாறு, ஒழுகுபவர் - ஒழுகுவார்,—நட்டார் - (தம்மொடு) நட்புச்செய்தாருற்ற, குறை—; முடியார்-முடிக்கமாட்டார்: (அதுவே யன்றி), நன்று ஆற்றார் - (மறுமைக்குத் துணையாய) அறஞ்செய்யவும் மாட்டார்; (எ - று.)

நன்னுதலாளென்பதனை, "அமையார்தோள்" என்புழிப் போலக் கொள்க. அவடானே யறிந்து ஏவலும் பொருள்கொடுத்தலும் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டா ரென்பதாம்.

(கு - ரை.) நல்நுதலாள் என்பது-அழகியநெற்றியையுடையா ளென்று பொருள்படும். இவ்வதிகாரத்து ஆறாவது குறளில் அமையார் தோள் என்று அஞ்சுதற்குக் காரணமான தன் எளிமையைக் கூறினாற்போல, இக்குறளில்

கூக - ஆம் அதிகாரம்.—பெண்வழிச்சேறல்



அஞ்சுதற்குக்காரணமான தன் எளிமையை நன்னுதலாள் என்று கூறினா ரென்க. என்புழி - என்றவிடத்து.

அவடானே - அம்மனைவியே. ஏவலும் -
நட்டாரின்குறையையறிந்து அதனை முடிக்குமாறு
தன் கணவனை ஏவுதலும். பொருள்கொடுத்தலும் -
மறுமைக்குத் துணையாகிய அறம் இன்னதென்று அறிந்து
அதைச்செய்யும்படி ஏற்றபொருளைக் கணவனிடத்துக்
கொடுத்தலும். நட்டார்குறையை முடியாமையால்
இம்மைப்பயனையும், நன்று ஆற்றுமையால்
மறுமைப்பயனையும் பெண்வழிச்செல்வோர்
அடையமாட்டாரென்க. நட்டார் - 'நள்' என்ற
வினைப்பகுதியி னடியாகப்பிறந்த வினையாலணையும் பெயர்.
நன்று - நன்மையையுடைய அறத்துக்குப் பண்பாகுபெயர்.
(அ)

கூ0கூ. அறவினையு மான்ற பொருளும்
பிறவினையும்

பெண்ணேவல் செய்வார்க ணில்.

(இ - ள்.) அறம் வினை உம் - அறச்செயலும், ஆன்ற
பொருள் உம்-அது முடித்தற்கு ஏதுவாய பொருட்செயலும்,
பிறவினை உம் - (அவ்விரண்டின்) வேறாய
இன்பச்செயல்களும், பெண் ஏவல் செய்வார் கண் -
(தம்)மனையாள் ஏவல்செய்வார் மாட்டு, இல் - உளவாகா; (எ
- று.)

புலன்களைந்தாகலின் 'பிறவினை' எனப்
பன்மையாயிற்று. அவை நோக்கி அறச்செயல்
பொருட்செயல்கள் முன்னேயொழிந்தார்க்குத் தலைமை
அவள்கண்ண தாகலின், பின் அவைதாமும் இலவாயின
என்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக்கூறினார்.

இவை மூன்றுபாட்டானும்,

அவளேவல்செய்தற்குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) அவ்விரண்டின் - அறச்செயல் பொருட்செயல் என்ற அவ் விரண்டைக்காட்டிலும். 'பிற' என்பது பலவின்பாலாதலால், இன்பத்தை 'பிறவினை' என்று கூறினரென்றார்: பிறவினை என்று பன்மையாற் கூறிய தற்குக் காரணம் - 'புலன்களைந்தாகலின்' என்பது: புலன்கள் - ஐம்பொறிக ளால் நுகரப்படும் விஷயங்கள்: ஐம்பொறிகளால் கண்டு கேட்டுற்று மோந் துண்ணுதற்குரியவாகி நுகரப்படும்புலன்கள் ஐவகையாயிருத்தல்பற்றி, இன் பம் பலவா மென்க: பிற என்பதற்கு ஒருமை - பிறிது என்பது. அவை நோக்கி - அவ்வின்பங்களைநோக்கி. பெண்வழிச்சேறலுக்குக் காரணம் அவ ளால் இன்பம்பெறவேணுமென்னும் விருப்பமே யாதலாலும், அந்தப்பெண் வழிச் சேறலால் அறச்செயல் பொருட்செயல்களை முன்னே யொழிந்தாராத லாலும், 'அவைநோக்கி அறச்செயல் பொருட்செயல்களை முன்பேயொழிந் தார்க்கு' என்றது. தலைமை - அதிகாரம். அவள்கண்ணது - அந்த இல்வா ளிடத்திலுள்ளது. அவற்றைப் பிரித்துக்கூறினர்-அவ்வின்பங்களைப் பிறவினை என்று பிரித்துக்கூறினரென்றபடி. அவள் - மனையாள். ஆன்றபொருள் - (அறம்) அமைவதற்குக் காரணமாய பொருள். (கூ)

கூகO. எண்சேர்ந்த

நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.



(இ-ள்.) எண் சேர்ந்த - கருமச் சூழ்ச்சிக்கட் சென்ற, நெஞ்சத்து-நெஞ்சத்தினையும், இடன்-(அதனினாய) செல்வத்தினையும், உடையார்க்கு-உடையராயவேந்தர்க்கு, பெண் சேர்ந்து ஆம் பேதைமை - மனையாளைச்சேர்தலான் விளையும் பேதைமை, எ ஞான்று உம் - எக்காலத்தும், இல் - உண்டாகாது.

"இடனில்பருவத்தும்" எனவும்,
"இடனின்றியிரந்தோர்க்கு" எனவும் வந்தமையான்,
இடனென்பது அப்பொருட்டாதலறிக. இளமைக்காலத்து
மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார்.
அப்பேதைமையாவது-மேற்சொல்லிய விழைதல் அஞ்சல்
ஏவல்செய்தல் என்னும் மூன்றற்குங் காரணமாயது.
எதிர்மறைமுகத்தான் அம்மூன்றும் இதனாற்
றொகுத்துக் கூறப்பட்டன.

(கு - ரை.) கருமச்சூழ்ச்சி - வினைசெய்வதில்
ஆராய்ச்சி. அதனினாய அங்ஙனஞ்சூழ்ந்து வினைசெய்தலால்
தோன்றிய. இடன் என்ற சொல் - செல்வமென்னும்
பொருளில்வருதற்கு மேற்கோள்கள் - "இடனில்பருவத்தும்," "இடனின்றியிரந்தோர்க்கு" என்ற இரண்டும்:
முதல்மேற்கோள் - திருக்குறளில் (உ௰அ) ஒப்புரவறிதல்
என்னும் அதிகாரத்தில் எட்டாங்குறளி லுள்ளது:

இதன்பொருள்:—இடன் இல்

பருவத்துஉம்-செல்வமில்லாத [வறுமைக்]காலத்திலும் என்பது. இரண்டாம்மேற்கோள்-கலித்தொகையில் பாலைக் கலியில் முதற்பாடலிலுள்ளது: இதன்பொருள்:—இடன் இன்றி - (தம்முடைய

இல்வாழ்க்கைக்குவேண்டிய)பொருளில்லாமல்,

இரந்தோர்க்கு-யாசித்தவர்க்கு என்பது. அப்பொருட்டாதல் - செல்வம் என்ற அருத்தத்தையுடைய தாதல்.

இளமைக்காலத்தும்-யௌவனபருவத்திலும். அப்பேதைமை - பெண் சேர்ந்தாம் பேதைமை. மேற்சொல்லிய -

இவ்வதிகாரத்து முதற்குறள் முதல் சொல்லிய. விழைதல் - மனையாளின்பத்தைவிரும்பி அவள்வழியே நடத்தல்.

அஞ்சல்-(மனையாளை) அஞ்சுதல். ஏவல்செய்தல்-மனையாள் ஏவியதைச்செய் தல். இதுவரையில் பெண்வழிச்சேறலால் விளைவன கூறி, இந்தக்குறளில், எண்சேர்ந்த

நெஞ்சத்தினையும் அதனாலாகிய

செல்வத்தையுமுடையார்க்கு பெண்சேர்ந்தாம் பேதைமையில் என்று எதிர்மறைமுகத்தால் பெண்வழிச் சேர்தலின் குற்றத்தைத் தொகுத்துக்கூறினார். அம்மூன்று - விழைதல் அஞ் சல் ஏவல்செய்தல் என்பன. இம்மூன்றையும் 'பெண்சேர்ந்தாம்பேதைமை' என் றுகூறியதனால்,

தொகுத்துக்கூறப்பட்டன என்றார். (௯௰)

## ௯௨ - ஆம்

## அதிகாரம்.—வரைவின்மகளிர்.

அஃதாவது - தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும்

விற்பதல்லது, அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவுஇலாத மகளிரது இயல்பு. ஆதலால், தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) தந்நலம்-தமது இன்பம். ஆவார் - தக்கவர். ஆகாதார் - தகாதவர். வரைவு - எல்லை, வரம்பு வரைவின்மகளிரின் தன்மையை "இழிபவர் மூத்தோரிளையவர் கழியா நோயாற், கழிபவர் யாவரேனும் கண்வலைப்பட்டு நெஞ்சம், அழிபவர் பொருள் கொண்டெள்ளுக்

கெண்ணெய் போலவளர்ந்து

கூஉ - ஆம்

அதிகாரம்.—வரைவின்மகளிர் ௪0கூ

காட்டிப், பழிபடுபோகம் விற்பார்" எனக் கூறியிருத்தல் காண்க. மகளிரான் வருங்குற்றம் - தாம்மணந்து கொண்ட பெண்ணின்

தமக்குரிய

வழிச்சேற

லால் விளையுந் தவறு. வரைவில் என்பது - எழுவாய்த்தொடர்: இன்மகளிர் - பண்புத்தொகை. வரைவின் மகளிரென்பது - அவரது தன்மையைக் கூறும் அதிகாரத்திற்கு, ஆகுபெயராயிற்று.

கென்று சிலபிணவியரை மணந்தும்,

முற்காலத்துத் தமிழகத்தில் தமக்

ஆடவர் பரத்தையர்பாலுங் காதல்

செலுத்திப்போந்துவந்த குற்றத்தைக் கருதி, கற்பினிழுக்கத்தை வரைவின்மகளி ரென்ற லாயின ரென்க.

திருவள்ளுவர் அவ்வொழுக் அதிகாரத்தால் வற்புறுத்த

கூகக. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா ரின்சொ லிழுக்குத் தரும்.

(இ - ள்.) (ஒருவனை), அன்பின் விழையார்-அன்புபற்றி விழையாது, பொருள் விழையும் - பொருள்பற்றி விழையும், ஆய் தொடியார் - மகளிர், (அதுமறைத்துத் தாம் அன்புபற்றி விழைந்தாராகச் சொல்லும்), இன் சொல்-இனிய சொல், (அவனுக்கு), இழுக்கு தரும்-(பின்) இன்னாமையைப் பயக்கும்; (எ - று.)

பொருள் என்புழி 'இன்' விகாரத்தாற் றொக்கது. ஆய்ந்த தொடியினை யுடையா ரென்றதனும் இனிய சொல் என்றதனும், அவர்கருவி கூறப் பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று

பின் வறுமைபயத்
தலின், அது கொள்ளற்க வென்பதாம்.
(கு - ரை.) விழையாது - விரும்பாது. இன்னுமை -
தீங்கு. பயக்கும் -
உண்டாக்கும். ஆய்தொடியார் - ஆய்ந்து செய்யப்பட்ட
தொடியினை யணிந்
தவர்: எனவே, மகளிரைக் காட்டும். தொடி -
கையிலணியும் ஓரணிவிசே
டம். 'அன்பின் விழையார்' என்ற இடத்து
ஏதுப்பொருளைக் காட்டும் 'இன்'
என்பது, வெளிப்பட்டு நின்று 'பொருளின்விழையும்'
என்று இருந்தால்
தான் இருப்பதுபோல,பொருள் என்பதன்பின்னும்
ஏதுப்பொருளைக் காட்டும்
'இன்' என்பது பொருள்பற்றி விழையும் என்ற
பொருள் தெளிவாகக்
கிடைக்கும்: ஆதலால், 'பொருள் என்புழி
இன்விகாரத்தாற் றொக்கது' என்
றார். என்புழி-என்ற இடத்து. அவர்கருவி-அந்த
விலைமகளிருடைய பொரு
ளைப்பறிக்கும் கருவி. அவை-அந்த விலைமகளிரின்
தொடியும் இன்சொல்லு
மென்க. தொடியைக் கூறியது - பிற பூண்கட்கும்
உபலட்சணம். விலைமகளி

ரின் சொல் அவர்கூறும்போது இனியதுபோன்று தோன்றினும், பிறகு வறு
மையை விளைத்தலால், அதனைக் கொள்ளற்க என்றவாறு.

(க)

கூகஉ. பயன்றாக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றாக்கி நள்ளா விடல்.

(இ - ள்.) பயன் தூக்கி - (ஒருவனுக்குஉள்ள) பொருளை யளந்தறிந்து,
(அஃது எய்துந்துணையும்), பண்பு உரைக்கும் - (தம்) பண்புடைமைசொல்

52



லும், பண்பு இல் மகளிர் - பண்பில்லாத மகளிரது, நயன் - ஒழுகலாற்றினை,
தூக்கி-ஆராய்ந்தறிந்து, நள்ளாவிடல்-(அவரைப்) பொருந்தாதுவிடுக; (எ-று.)
பண்பு சொல்லின்கணல்லது தங்கட் கிடவாமைதோன்ற 'பண்பின்மக
ளிர்' என்றும், அவர்க்கு அது சாதிதருமமாதல் நூலானேயன்றி அவர்செய

லானும் அறிக்தென்பார் 'நயன்றாக்கி' என்றும், அவ்வறிவு அவரை விடு

தற்கு உபாய மென்பது தோன்றப் பின் 'ஙள்ளாவிடல்' என்றுங் கூறினர்.

(கு - ரை.) பொருள் - செல்வம். அஃது - அந்தச்செல்வம். எய்துந்

துணையும் - (தாம்) அடையுமளவும். 'பண்பையுரைக்கின்ற பண்பில்லாத

மகளிர்' என்று வேசையரைச் சொன்னதனுல், பண்பு அவருடையஉரையி

லன்றி அவரிடத்து இல்லை யென்பது பெறப்படு மென்கிருர். அவர்க்கு -

அவ்வேசையர்க்கு. அது-பண்பில்லாமை. சாதிதருமம்-அவருடைய சாதிக்கு

உரிய தன்மை. அவ்வறிவு - விலைமகளிர்க்குப் பண்புஇல்லாமை சாதிதரும

மாகஇருத்தலை நூலினுலன்றி அவரதுநடத்தையினுலும் அறிந்த அறிவு.

வேசையர் பணம்பறித்தற்காகவே இன்சொல்பேசுபவ ரென்று அவருடைய

நடவடிக்கையாலறிந்து அவரைப் பொருந்தாதிருக்கவேண்டு மென்றவாறு.(உ)

கூகா. பொருட்பெண்டிர் பொய்ம்மை
லேதில் பிணந்தழீஇ யற்று.

முயக்க மிருட்டறையி

(இ - ள்.) (கொடுப்பாரை விரும்பாது), பொருள் பெண்டிர் - பொரு
ளையே விரும்பும் பொதுமகளிரது, பொய்ம்மை - பொய்ம்மையையுடைய,
முயக்கம்—,—(பிணமெடுப்பார்); இருட்டு அறையில்-இருட்டறைக்கண்ணே,
ஏதில் பிணம் - முன்னறியாத பிணத்தை, தழீஇஅற்று - தழுவினாற்
போலும்; (எ - று.)

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்துஞ்செயலும் ஆராயாது சாதியும்
பருவமு மொவ்வாதாரை முயங்குங்கால், அவர்குறிப்பு, கூலிக்குப் பிண
மெடுப்பார் காணப்படாததோரிடத்தின் கண் இயைபில்லாததோர்பிணத்தை
எடுக்குங்கால் அவர்குறிப்போ டொக்கு மெனவே, அகத்தால் அருவராநின்
றும் பொருணோக்கிப் புறத்தாற் றழுவுவர்: அதனை யொழிக வென்பதாம்.

இவை மூன்றுபாட்டானும் அவர்சொல்லும் செயலும் பொய்யென்பது
கூறப்பட்டது.

(கு - ரை.) பொருட்பெண்டிர் என்று பொதுமகளிர்க்குப் பெயர்
கொடுத்தது - பொருளினிடத்து விருப்பத்தால் முயங்குபவரேயன்றிப்
பொருள்கொடுப்பானிடத்து விருப்பத்தால் முயங்குபவரல்ல ரென்பதைப்
புலப்படுத்தும்: இது பொருளையே விரும்பும் பெண்டிரென்று விரிதலால்,
இரண்டனுருபும் பயனுந்தொக்க தொகையாம். கருத்துஞ் செயலும் ஆரா
யாது-முயங்கப்படுவானது எண்ணத்தையாவது செய்கையையாவது ஆலோசி
யாம லென்றபடி. அவர் குறிப்பு - பொதுமகளிரின் எண்ணம். இயைபு இல்
லாதது - சம்பந்தமில்லாதது. அவர் குறிப்பு-பிணமெடுப்பவர் குறிப்பு. அகத்
தால் - மனத்தால். அருவராகின்றும் - அருவருத்தும். அதனை - பொதுமக

௯௨ - ஆம் அதிகாரம்.—வரைவின்மகளிர்

சகக

ளிரின் தழுவுதலை. கூலிக்குப் பிணமெடுப்பார் இதற்குமுன் தம்மாற் காணப் படாததோரிடத்துத் தமக்குச்

சம்பந்தமில்லாத தொருபிணத்தை யெடுக்கும் போது அவர் அகத்தால் அருவரா நின்றாலும் பொருளுக்காக அந்தப்பிண மெடுத்தற்றொழிலைச் செய்வாராவது போல, பணத்தை விரும்பிச் சாதியும் பருவமு மொவ்வாதாரை முயங்கும் பொதுமகளிரும் அகத்தால் அருவரா நின்றாலும் புறத்தால் தழுவுவ ரென்று உவமைக் கருத்தை விரித்துக் காண்க.

(ஞ)

ஙஅகச. பொருட்பொருளார் புன்னலந் தோயா
ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

(இ - ள்.) (இன்பமாகியபொருளை யிகழ்ந்து), பொருள் பொருளார் - பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது, புல் நலம் - புல்லிய நலத்தை, அருள் பொருள் - அருளொடுகூடிய பொருளை, ஆயும் - ஆராய்ந்து செய்யும், அறிவினவர் - அறிவினையுடையார், தோயார் - தீண்டார்; (எ-று.)

அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலின், 'பொருட்பொருள், அருட்பொருள்' என விசேடித்தார். புன்மை - இழிந்தார்க்கே யுரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர்மெய்நலம் மறுதலை யாகலின், தோயா ரென்பதாம்.

(கு - ரை.) அறம் முதலிய நான்கு - அறம் பொருள் இன்பம் வீடு என்பன. இவைநான்கும் பொருளெனப்படுமாதலால், பொருளைச் சேர்ந்த பொருளைப் பொருட்பொருள் என்றும், அறத்தைச்சேர்ந்த அருளை அருட் பொருள் என்றும் கூறினார். பொருள்

என்பது பலவற்றிற்கும்பெயரென்பது பெறப்படுதலால், இன்னவகையான பொருள் என்பது விளங்க, இந்தச்செய்யுளில் 'பொருட்பொருள், அருட்பொருள்' எனக் கூறப்பட்டதென்றவாறு. விசேடித்தல் - அடைமொழிகொடுத்துக்கூறல். இழிந்தார் - சாதியாலிழிந் தார் ஒழுக்கத்தாலிழிந்தார் என இருவகையர். அவர் மெய்ந்நலம்-அப்பொது மகளிரை முயங்கிப் பெறும் இன்பம். மறுதலை - எதிர்த்தட்டானது. அருளை நாடும் அறிஞர் வேசையரைத்தீண்டாரென்பதாம்.

(ச)

கூகரு. பொதுநலத்தார் புன்னலந் தோயார்
மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

(இ - ள்.) மதி நலத்தின்-(இயற்கையாகிய) மதிநன்மையால், மாண்ட - மாட்சிமைப்பட்ட, அறிவினவர் - செயற்கையறிவினையுடையார்,— பொது நலத்தார் - (பொருள்கொடுப்பார்க்கெல்லாம்) பொதுவாய ஆசையினையுடைய மகளிரது, புல் நலம் - புல்லிய நலத்தை, தோயார் - தீண்டார்; (எ - று.)

மதிநன்மை - முற்பிறப்புக்களிற்செய்த நல்வினைகளான் மனந்தெளிவுடைத்தாதல். அதனானன்றிக் கல்வியறிவு மாட்சிமைப்படாமையின் 'மதி நலத்தின்மாண்டவறிவினவர்' என்றும், அவ்வறிவுடையார்க்கு * அவராசை

* பி-ய்: அவராசையது
பொய்ம்மையும் மெய்ந்நலத்தது பொதுமையும்.



யதுபொதுமையும் மெய்ந்நலத்ததுபுன்மையும் விளங்கித்தோன்றலின்,

'தோயார்' என்றுங் கூறினர்.

(கு - ரை.) மதிநன்மை - புத்தியின்தெளிவு. செயற்கையறிவு - கல்வி

கேள்விகளாலாகிய அறிவு. அதனானன்றி - இயற்கையறிவினாலன்றி. மாட்

சிமைப்படா மை-சிறப்புறாமை. அவ்வறிவு உடையார்க்கு-இயற்கையறிவோடு

கூடிய செயற்கையறிவையு முடையார்க்கு. அவராசை - அப்பொதுமகளிரி

னாசை. இயற்கையறிவோடு செயற்கையறிவுமுடையார்க்கு அந்தப்பொது

மகளிரின் ஆசையின்பொது மையும் அன்னார் உடம்பினால்தரும் இன்பத்தின்

புன்மையும் விளங்கித் தோன்று மாதலால், அன்னார் பொதுமகளிரைத்

நீண்டா ரென்க.

(ரு)

௯௬௩. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்

புன்னலம் பாரிப்பார் தோள்.

(இ - ள்.) தகை - ஆடல் பாடல் அழகு என்பனவற்றால், செருக்கி - களித்து, புல் நலம் - (தம்) புல்லிய நலத்தை, பாரிப்பார் - (விலைகொடுப்பார் யாவர்மாட்டும்) பரப்பும் மகளிர், தோள்-தோளினை, தம் நலம்-(அறிவொழுக்கங்களாகிய) தம் புகழை, பாரிப்பார் - (உலகத்துப்) பரப்புதற்குரிய உயர்ந்தோர், தோயார் - தீண்டார்; (எ - று.)

ஆடன்முதலிய மூன்றுமுடைமை அவர்க்கு மேம்பாடாகலின், 'தகை' என்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியு மாகலின் அவற்றாற் புகழ்பரப்புவார் 'தோயார்' என்றுங் கூறினார். 'தந்நலம்' - என்புழி, நலம் - ஆகுபெயர்.

இவை மூன்றுபாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டா ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) ஆடன்முதலிய மூன்று - ஆடல்

பாடல் அழகுஎன்னும்
மூன்று. அவர்க்கு - பொதுமகளிர்க்கு.
மேம்பாடு - சிறப்புக்குக் காரண
மானது. தகையென்பதற்கு-மேம்பாடு
என்றுபொருளாம்: ஆடல்முதலியன
பொதுமகளிரின்மேம்பாட்டுக்குக் காரண மாதலால், அவை 'தகை' எனப்பட்
டன என்க. அவற்றால்-அறிவொழுக்கங்களினால். அறிவொழுக்கங்களாற்
புகழைப் பரப்பவிரும்புவோர் அவ்வறிவொழுக்கங்களை யழிப்பதுபற்றி, புன்
னலம்பாரிப்பார்தோளைத் தோயா ரென்க. நலம்என்பது - நலத்தாலாய புக
ழுக்கு ஆதலால், கருவியாகுபெயராம். "எழிலாற் பாடலாடலினு லிச்சை
பெருக்கி யுளமொவ்வா, மொழியாற்செயலால் வசமாக்கி முற்றும்பொருளைப்
பறித்துவிடும், பழிநாணுதபரத்தையரைப் பற்று ராய்ந்த பண்புடையார்"
என்றது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.
(கூ)
கூகள. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

(இ - ள்.) நெஞ்சின் - நெஞ்சினால், பிற-பிறவற்றை, பேணி - ஆசைப்
பட்டு, (அவைகாரணமாக), புணர்பவர் - (கொடுப்பாரை

மெய்யாற்) புணரும்

௬௨ - ஆம்
அதிகாரம்.—வரைவின்மகளிர் சக௩
மகளிர், தோள் - தோள்களை, நிறை நெஞ்சம்
இல்லவர்-நிறையாற்றிருந்திய நெஞ்சமில்லாதார்,
தோய்வர்—; (எ - று.)

பொருளும் அதனாற்படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு அவற்றின் மேல தாகலின், புணர்வது உடம்புமாத்திர மென்ப தறிந்து அதுவழி யோடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையின், அஃதிலார் 'தோய்வர்' என்றார்.

(கு-ரை.) பிறவற்றை-பொருளையும் அதனாற்படைக்கப்படுவனவற்றையும். நிறை-கண்டபடி யோடாது நிறுத்தப்படுதல்: சஞ்சலமின்மை. நிறைநெஞ்சம்-மனவடக்கம். அவற்றின் - பொருளும் அதனாலுண்டாக்கிக்கொள்ளப்படுவனவாய்ப் போகத்திற்குஉரியனவான, நறுமலர் சந்தனம் அணிகலம் முதலியவற்றின். புணர்வது உடம்புமாத்திரம்-பொதுமகளிரின்புணர்ச்சி மனப்பூர்வமாக வன்று என்றபடி. அது வழி-பொதுமகளிரின்புணர்ச்சியின்வழி. அஃது இலார் - நிறைநெஞ்சமில்லாதவர்.

கூகூ௭. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(இ - ள்.) மாயம் மகளிர் - (உருவு சொற் செயல்களால்) வஞ்சித்தலை வல்ல மகளிரது, முயக்கு - முயக்கத்தை, ஆயும் - (அவ்வஞ்சனை) ஆராய்ந் தறியும், அறிவினர் அல்லார்க்கு - அறிவுடையரல்லார்க்கு, அணங்கு என்ப- அணங்குதாக்கென்று சொல்லுவர் (நூலோர்); (எ - று.)

அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளுந் தெய்வமகள். தாக்கு-தீண்டல். இவ்வுருவகத்தான், அம்முயக்கம் முன் இனிதுபோன்று பின் உயிர் கோடல் பெற்றும். இது நூலோர் துணிவென்பது தோன்ற, அவர்மேல் வைத்துக் கூறினர். அப்பெயர், அவாய்நிலையான் வந்தது.

(கு - ரை.) உருவு - வடிவம். சொல்-இனிய சொல். செயல்-செய்கை, செய்கின்ற உபசாரம். முயக்கத்தை-தழுவுதலை. மாயமகளிரின் முயக்கத்தை அணங்கு என்று உருவகித்ததனாலும், முயக்கம் என்பது தழுவுதலாகிய தொழிலைக் காட்டுதலாலும், அணங்கு என்ற சொற்கு - அணங்குதாக் கென் றுபொருளுரைக்கப்பட்டது: ஆகவே, அணங்கு என்பது - அணங்கி னுடைய தாக்கிற்கு ஆகுபெயர். மனவடக்கமில்லாது காமசிந்தனையுடைய இளைஞர்களை

மோகினியென்னும் பெண்தெய்வம் பிடித்துக்கொண்டு கன விலே கட்டழகையுடைய மங்கைபோல்வந்து புணர்ந்து உடம்பை நாளடைவி லொடுங்கச்செய்து கொல்லு மென்பது, இங்குக் கருதத்தக்கது. இந்த நூலி லேயே "தாக்கணங்கு" (1082-ஆம் குறள்) என்று வந்திருப்பதும், அதற்குப் பரிமேலழகர் 'தானே தாக்கிவருத்துவதோர் அணங்கு' என்று உரை கூறி யிருப்பதுங் காண்க. இவ்வுருவகத்தான் - மாயமகளிரின் முயக்கத்தை அணங்கு தாக்கு என்று உருவகஞ்செய்த இதனால். அம்முயக்கம் - மாயமகளி ரின் முயக்கம். "ஆமாபோ லணக்கி யவர்கைப்பொருள் கொண்டு, சேமாப்போற் குப்புறுஞ் சில்லைக்க ணன்பினை, ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே,



தாமாம் பலரால் நகை" என்ற நாலடி, இங்கு ஒருசார்ஒப்பு நோக்கத்தக்கது. இது - மாயமகளிரின் முயக்கு முன் இனிதுபோன்று பின் உயிர்கோடல். நூலோர்மேல்வைத்துக் கூறியது, 'என்ப' என்றதனால். அப்பெயர் - நூலோ ரென்ற பெயர். (அ)

௯௧௯. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

(இ - ள்.) வரைவு இலா மாண்இழையார் - உயர்ந்தோர் இழிந்தோர் என்னாது (விலைகொடுப்பார் யாவரையும்) முயங்கும் மகளிரது, மெல் தோள்- மெல்லிய தோள்கள், புரை இலா-(அக்குற்றத்தையறியும்) அறிவு இல்லாத,

பூரியர்கள் - கீழ்மக்கள், ஆழும் - புக்கழுந்தும், அளறு - நிரயம்; (எ - று.)

உயர்தற்கேதுவாகலின், 'புரை' எனப்பட்டது. சாதியா னிழிந்தாரி

னீக்குதற்கு 'புரையிலாப் பூரியர்கள்' என்றும், அவர் ஆழ்தற்கு ஏது உருவ

முதலிய மூன்று மென்பது தோன்ற 'மாணிழையார் மென்றோள்' என்றும்,

அவர்க்கு அளற்றினை இடையின்றிப் பயக்கு மென்பது தோன்ற உருவக

மாக்கியுங் கூறினார்.

(கு - ரை.) முயங்கும் - தழுவும். அக்குற்றத்தை - யாவரையுந்தழுவுங்

குற்றத்தை. புரை என்பதற்கு - உயர்வு என்பது பொருள்: அச்சொல் -

உயர்வுக்கு ஏதுவாகிய அறிவைக் காட்டிற்று: காரியவாகுபெயர். பூரியர்கள் -

கீழோர்: அறிவினாற்கீழோரும் சாதியினாற்கீழோரும் என அந்தக்கீழோர்

இருவகைப்படுவ ராதலால், இங்குப் பூரியர்களென்றது - பிறப்பினாற் கீழோ

ரையன்று என்பதற்காக, 'புரையிலா' என்று அந்தப்பூரியர்க்கு அடைமொழி

கொடுக்கப்பட்டதென்க. அவர் - அறிவில்லாத கீழோர். அறிவில்லாதவர்

பொதுமகளிரின் உருவம்முதலிய மூன்றினுமே மனந்தாழ்கின்றன ரென்

பது தோன்ற, 'மாணிழையார்மென்றோள்' என்றார்: இத்தொடரில் மாணிழை

யாரென்று உருவத்தையும் அவர்கள் தம்மையலங்கரித்துக்கொண்டிருத்தலை

யுங் கூறியது, அன்றார் இன்சொற்கூறுவதற்கும் உபலட்சண மென்க.

பொதுமகளிரின்தோள் அறிவில்லாப்பூரியர்க்கு நரகத்தைத் தவறாதுகொடுக்கு

மென்பது விளங்குவதற்காகவே, அத்தோளை அளறு என்று உருவகமாக்

கூறினார். அளறுநிறைந்துள்ள நரகு, 'அளறு' என்றே கூறப்பட்டது. அளறு-

சேறு.

(கூ)

கூ௨0. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்

திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(இ - ள்.) இரு மனம் பெண்டிர்உம் - கவர்த்த மனத்தினையுடைய மக

ளிரும், கள்ளும்—,கவறுஉம் - சூதும், (என

இம்மூன்றும்),—திரு - திருமக

ளால், நீக்கப்பட்டார் - துறக்கப்பட்டார்க்கு, தொடர்பு - நட்பு; (எ - று.)

இருமனம் - ஒருவனோடுபுணர்தலும் புணராமையும் ஒருகாலத்தே

யுடைய மனம். கவறு - ஆகுபெயர். ஒத்தகுற்றத்த ஆகலின், கள்ளுஞ்

•

கூஙு - ஆம் அதிகாரம்.—கள்ளுண்ணாமை

சகரு

சூதும் உடன்கூறப்பட்டன. வடநூலாரும் * இக்கருத்தான் விதனமென

உடன்கூறினர். வருகின்ற அதிகாரமுறைமையும் இதனானறிக. திணை

விராயெண்ணியவழிப் பன்மைபற்றி முடிபுகோடலின், ஈண்டு அஃறிணை

யாற் கொண்டது. திரு நீக்கப்பட்டமை, இக்குறிகளான் அறியப்படுமென்

பதாம்.

இவைநான்குபாட்டானும், சேர்வார் இழிந்தோரென்பது கூறப்

பட்டது.

(கு - ரை.) கவர்த்த - இரண்டாகப்பிரிவுபட்ட. ஒருவனோடு - செல்வங்கொடுத்த ஒருத்தனோடு. புணர்தலும் புணராமையும் ஒருகாலத்தேயுடைய - உடல்மாத்திரத்தாற்புணர்தலும் மனம்பொருந்தப் புணராமையும் ஆகிய இரண்டையும் ஒருசமயத்திற்றானேயுடைய. சூதாடுகருவியென்று பொருளுள்ள கவறு என்பது - அதுகொண்டுஆடப்படுஞ் சூதினைக் காட்டியது: கருவியாகுபெயர். ஒத்த குற்றத்த - (சூதாடல் கட்குடித்தல் வே.சையரைச்சேர்தல்என்ற மூன்றும்) ஒருநிகரான குற்றத்தையுடைய. விதனம் ஏழனைக் கூறுமிடத்து இம்மூன்றையும் வடநூலார் சேர்த்துக்கூறியுள்ளார்: விதனங்களேழாவன - "வேட்டம் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூது பொருளீட்டங் கட்குடி காமமோ டேழு" என்பன. இவ்வதிகாரத்தையடுத்துக் கள்ளுண்ணாமை என்பதனையும், அதனையடுத்துச் சூதுஎன்பதனையும் வைத்ததும் விதனம் ஆதலிலொப்பேயென அதிகாரமுறைமைக்குக் காரணங் காண்க. "பலவயினானு மெண்ணுத்திணைவிரவுப்பெயர், அஃறிணைமுடிபின செய்யுளுள்ளே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தினால், இருமனப்பெண்டி

ரும் கள்ளுங்கவரும் என உயர்திணையோடு அஃறிணைவிரவி, மிகுதியினால்,

தொடர்பு என்னும் அஃறிணைமுடிபைக் கொண்டது. விலைமகளிரைச் சேர்

வோர் இழிந்தோரே யென்று இவைநான்குபாட்டானுங் கூறப்பட்டதென்க.

## கூரு - ஆம்
## அதிகாரம்.—கள்ளுண்ணாமை.

இனி, ஒழுக்கமும் உணர்வும் அழித்தற்கண் அவ்வரைவின்மகளிரொடு

ஒப்பதாய கள்ளினை யுண்ணாமையது சிறப்பு எதிர்மறைமுகத்தாற் கூறு

கின்றார்.†

(கு - ரை.) ஒழுக்கம் - நன்னடக்கை. அழித்தற்கண் - அழிப்பதில்.

கள்ளினை யுண்ணாமையதுசிறப்பு எதிர்மறை முகத்தாற் கூறுகின்றார் - கள்

ளினையுண்ணுதல் கூடாது ஆதலால், அக்கள்ளுண்டலின் இழிவை எடுத்துக்

கூறுமாற்றால் கள்ளுண்ணாமையின் சிறப்பைத் தெரிவிக்கின்றாரென்க.

கூஉக. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங் கட்காதல்

கொண்டொழுகு வார்.

* காயந்தகம் - 11—ஆம் அத்தியாயத்தில் 124-ஆவது ஸ்லோகம்.

† இந்த வாக்கியத்தின்பின் சில பிரதிகளில் அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும் என்ற வாக்கியம் காணப்படுகின்றது.

சுகசு திருக்குறள்

(இ - ள்.) கள் - கள்ளின்மேல், காதல் கொண்டு ஒழுகுவார் - காதல் செய்து ஒழுகும் அரசர், எஞ்ஞான்றும்—, உட்கப்படார் - (பகைவரான்) அஞ்சப்படார்; (அதுவேயன்றி), ஒளி இழப்பர் - (முன் எய்தின்ற) ஒளி யினையும் இழப்பர்; (எ - று.)

அறிவின்மையால், பொருள் படை முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார்: தம்முன்னோரான் எய்தின்ற ஒளியினையும் இகழற் பாட்டான் இழப்பரென்பதாம்.

இவை யிரண்டானும் அரசு இனிதுசெல்லா

தென்பது இதனற் கூறப்

பட்டது.

(கு - ரை.) காதல்செய்து - விருப்பம்வைத்து. ஒளி - தாம் உள்ள

காலத்தில் மிக்குத்தோன் றுதலுடைமையாகிய மதிப்பு. கள்ளுண்பார் அறிவை

யிழத்தலால், அவர்கள் பொருள் படை முதலியவற்ருற் பெரியவராய

காலத்தும் அவருக்குப் பகைவர் அஞ்சார்: அன்றியும், அவர்கள் பிறரால்

இகழப்படுதலால், தம்முன்ஞேரால் தமக்குக்கிடைத்துள்ள ஒளியினையும்

இழப்ப ரென்பதாம். இகழ்ப்பாட்டான் - இகழப்படுந்தன்மையால். அரசு -

அரசாட்சி. இவை இரண்டானும் - (கள்ளுண்பார்க்குப்) பகைவரால் அஞ்சப்

படாமை மதிப்பிழத்தல் என்ற இவ்விரண்டினுலும். இதனுல் - இந்தக்

குறளால்.

(க)

௯௨௨. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்ரோரா

னெண்ணப் படவேண்டா தார்.

(இ - ள்.) (அறிவுடையராயினர்), கள்ளை

உண்ணற்க - (அஃதிலரா
தற்கு ஏதுவாய) கள்ளினை உண்ணுதொழிக; (அன்றியே), உணில் - உண்
ணல்வேண்டுவாருளராயின், சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார் -
நல்லோரால் எண்ணப்படுதலை வேண்டாதார், உண்க—; (எ - று.)

பெறுதற்கு அரிய அறிவைப் பெற்றுவைத்தும் கள்ளான் அழித்துக்
கொள்வாரை இயல்பாகவே அஃதில்லாத விலங்குகளுடனும் எண்ணுராக
லின், 'சான்றோரா னெண்ணப்பட வேண்டாதா ருண்க' என்றார்.

(கு - ரை.) பெறுதற்கு அரிய அறிவு - பகுத்தறிவு. அஃது இல்லாத -
அறிவு இல்லாத. கள்ளுண்பார்க்குப் பகுத்தறிவு அழிதலால், அன்னர்
சான்றோரால் மதிக்கப்படா ரென்றவாறு. (உ)

கூஉங. ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(இ - ள்.) ஈன்றாள் முகத்து ஏ உம் - (யாதுசெய்யினும் உவக்குந்) தாய்
முன்பாயினும், களி - (கள்ளுண்டு) களித்தல், இன்னாது -

இன்னாதாம்: மற்று-
ஆனபின், சான்றோர் முகத்து என் - (குற்றம்யாதும்பொருத) சான்றோர் முன்பு களித்தல் (அவர்க்கு) யாதாம்? (எ - று.)

கூ௩ - ஆம்

அதிகாரம்.—கள்ளுண்ணாமை சுகஎ

மனமொழிமெய்கள் தம்வயத்த அன்மையான் நாண் அழியும்: அழி யவே, ஈன்றாட்கும் இன்னாதாயிற்று: ஆனபின், கள் இருமையுங் கெடுத்த லறிந்து சேய்மைக்கண்ணே கடியுஞ் சான்றோர்க்கு இன்னாதாதல் சொல்ல வேண்டுமோ என்பதாம்.

(கு - ரை.)

உலக்கும் - மகிழும். இன்னாது - இனியதன்று. இருமை - இம்மை மறுமைகள், சேய்மைக்கண்ணே - தூரத்திலே. கடியும் - வெறுத்து விலக்கும். முகத்தேயும், ஏ - அசை: உம் - உயர்வு சிறப்பு. ஆல்-ஈற்றசை. மற்று - வினைமாற்று. களி - முதனிலைத்தொழிற்பெயர். (௩)

கூ௨ச, நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

(இ - ள்.) கள் என்னும் பேணா பெரு குற்றத்தார்க்கு - கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவரும்இகழும் மிக்குகுற்றத்தினையுடையாரை, நாண் என்னும் நல்லாள்-நாணென்றுசொல்லப்படுகின்ற

உயர்ந்தவள், (நோக்குதற்கு அஞ்சி), புறங்கொடுக்கும் - (அவர்க்கு) எதிர்முகமாகாள்; (எ - று.)

காணுதற்கும் அஞ்சி உலகத்தார் சேய்மைக்கண்ணே நீங்குவ ராகலின் 'பேணு' என்றும், பின் ஒருவாற்றானுங் கழுவப்படாமையின் 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோர்பால் நில்லாமையின் 'நல்லாள்' என்றுங் கூறினார். பெண்பாலாக்கியது, வடமொழிமுறைமைபற்றி.

இவை மூன்றுபாட்டானும், ஒளியிழத்தற்காரணங் கூறப்பட்டது.

(கு - ரை.) பேணு - விரும்பப்படாத. கழுவப்படாமையின் - எவ் வகைப் பிராயச்சித்தத்தாலும் போக்கப்படாமையால். நாணென்ற பொருளைக் கொண்ட 'லஜ்ஜா' என்பது வடமொழியில் ஸ்த்ரீலிங்கமாதலால், அதனை நல்லாளெனப் பெண்பாலாற் கூறியது.

(௪)

கூஉ௫. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

(இ - ள்.) (ஒருவன்), பொருள் கொடுத்து - விலைப்பொருளைக் கொடுத்து, மெய் அறியாமை கொளல் - (கள்ளால் தனக்கு) மெய்ம்மறப்பினைக் கொள்ளுதல், கை அறியாமை உடைத்து-(அவன்பழவினைப்பயனாய) செய்வ தறியாமையை(த் தனக்குக் காரணமாக) உடைத்து; (எ -

று.)

தன்னையறியாமை சொல்லவே, ஒழிந்தனயாவும் அறியாமை சொல்ல வேண்டாவாயிற்று. கை - அப்பொருட்டாதல், "பழனுடைப்பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று" என்பதனானும் அறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக்கொள்ளுங்கால் தீயதுகொள்ளாமையின், மெய்யறியாமைகொளல் முன்னையறியாமையான் வந்தது என்பதாம்.

(கு - ரை.) மெய்ம்மறப்பு - தேகம்பரவசப்படுதல். அப்பொருட்டு-செய லென்னும் பொருளது. கையென்பது செயலென்னும் பொருளினையுடைய தாதற்கு மேற்கோள், "பழனுடைப் பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று"





என்பது:இது,புறநானூற்றில் உ௦க—இல் உள்ளது.இதன்பொருள்:—பழன் உடை - பழங்களையுடைய, பெருமரம் - பெரியமரம், வீழ்க்(த)து என - பழுத்துமாறியதென்று, (பறவைகள்), கைஅற்று - செயலொழிந்து என்பது. அறிவார் - அறிவுபடைத்தவர். கொள்ளுங்கால் - கொள்ளும்போது. மெய்யறியாமைகொளல்-உடல் பரவசப்படுதலைக் கொள்வது. பொருள்கொடுத்துக் கள்ளைவாங்கிப் பருகி மெய்ம்மறத்தல், அறியாமையின் செயலே யென்க.(ரு)

கூஉசு

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(இ - ள்.) துஞ்சினர் - உறங்கினர், செத்தாரின் வேறு அல்லர் - செத்

தாரின் (வேறுதலுடையரேனும் அக்காலத்து அறிவின்மையான்)வேறெனப்

படார்: (அவ்வாறே), கள் உண்பவர் - கள்ளுண்பார், எ ஞான்றும் நஞ்சு

உண்பார் - (நஞ்சுண்பாரின் வேறுதலுடையரேனும்) எக்காலத்தும் (அறிவின்

மையான்) வேறெனப்படார், அவர்தாமேயாவர்; (எ - று.)

உறங்கினர்க்கும் கள்ளுண்பார்க்கும் வேற்றுமை, உயிர்ப்புநிற்றல்.

வேறுதலும் வேறன்மையு முடைமை காட்டற்கு*உவமை புணர்க்கப்பட்டது. இதனை நிரனிறையாக்கி, திரிக்கப்படுதலால் உறங்கினரும் நஞ்சுண்பாரும் ஒப்பர்: கைவிடப்படுதலால் செத்தாரும் கள்ளுண்பாரும் ஒப்பர் என்று உரைப்பாரும் உளர்; அதிகாரப்பொருள் பின்னதாயிருக்க யாதும் இயைபில்

லாத நஞ்சுண்பார்க்கு உவமைபுணர்த்து ஈண்டுக்கூறல் பயனின்றாகலானும்,

சொற்கிடக்கை நிரனிறைக்கு ஏலாமையானும், அஃதுஉரையன்மை அறிக.

இவை யிரண்டுபாட்டானும், அவரது அறிவிழத்தற்குற்றங் கூறப்

பட்டது.

(கு - ரை.) அக்காலத்து - உறங்கும் காலத்து. வேற்றுமை-வேறுபாடு.

உயிர்ப்புநிற்றலால் வாசியிருந்தபோதிலும், எப்படித் துஞ்சினரோடு செத்

தார்க்கு அறிவிழத்தலில் வாசியில்லையோ, அப்படியே கள்ளுண்பார்க்கு உயிர்

ப்புநிற்றலால் நஞ்சுண்பாரோடு வாசியிருந்தபோதிலும், அறிவு இழத்தலில் எப்

போதும் வாசியில்லையென்பதாம்: ஆகவே, இச்செய்யுள் -எடுத்துக்காட்டுவமை

யணி. உயிர்ப்பு நிற்றலால் வேறுதலையும், அறிவின்மையால் வேறன்மையை

யும் இவ்வுவமை காட்டுவது காண்க. புணர்க்கப்பட்டது-பொருத்தப்பெற்றது:

---

* "நஞ்இவயுக்தம் அந்யஸத்ருஶே தயாஹ்யர்த்தகதிஃ [அன்மைப் பொருளையுடைய சொல்லோடும் உவமவுருபோடும் சேர்ந்த சொல் அதைக்

காட்டிலும் வேறாய் அதைப்போன்ற பொருளைக் காட்டும்: பொருண்முறை

அதுவன்றோ]" என்ற நியாயம், இங்கு அறியத்தக்கது: ஒருவனைப்பார்த்து

'கள்வனல்லன்' என்றால், அவன் கள்வனிலும் வேறானவன்: ஆனால் கள்வ

னென்று ஐயுறுதற்கு ஏற்றகாரணம் அவனிடத்து உண்டு என்றுபெறப்படுத

லும்; 'முகம் சந்திரன்போலும்' என்றால், முகமானது சந்திரனினும் வேறு

பட்டது: ஆனால், மகிழ்ச்சியைத்தருதல் முதலிய சந்திரனுடையகுணங்கள்
அதனிடத்து வேறுபடாதுள்ளன என்று பெறப்படுதலுங்
காண்க,

## ௯௩ - ஆம் அதிகாரம்.—கள்ளுண்ணாமை

௯௨௬ சேர்க்கப்பெற்றது. கள்ளுண்பவர்க்கும்

நஞ்சுண்பார்க்கும் வேற்றுமை யிருக்க, நஞ்சுண்பார் கள்ளுண்பவர் என்று ஐக்கியப்படுத்திக்கூறியது - காட்சியணியாகும். நிரல் நிறை - பெயரும் வினையுமாகிய சொல்லையும் அவைகொண்டு முடியுஞ்சொல்லையும் வேறு வேறாக நிறுத்தி முறையே பொருள் கொள்ளவைப்பது. திரிக்கப்படுதல் - நிலைமாற்றப்படுதல். கை

விடப்படுதலால் - விட்டிடுதற்கு உரியராயிருத்தலால். இயைபு-சம்பந்தம். சொற் கிடக்கை - சொற்கள் இருக்கிற நிலை. ஏலாமை - பொருந் தாமை. இனி, இக்குறளை முறைநிரனிறைப்பொருள்கோளாக்கி, (மனித னுடைய நிலைமை மாற்றப்படுதலால்) துஞ்சினார்
எஞ்ஞான்றும் நஞ்சுண் பவரே:
கைவிடப்படவேண்டியவராயிருத்தலால் கள்ளுண்பவர்
செத்தாரின் வேறல்லர். [கள்ளுண்பார்
செத்தவரோடொப்பர்] எனப் பொருள் கூறுவாரு முளர்: இப்பொருளில், கள்ளுண்ணாமையைப்பற்றிய
இவ்வதிகாரத் தின் பொருள் பின்வாக்கியத்தி லிருக்க,

யாதொருதொடர்புமில்லாத நஞ்
சுண்பார்க்குத் தஞ்சினரை உவமைபுணர்த்து இங்குக்கூறுதலில் யாதொரு பயனும் இல்லையாதலாலும், துஞ்சினர் செத்தாரின்வேறல்லர் என்றஒரு வாக்கியமாகவும் 'எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண்பவர்' என்று மற்றொருவாக்கியமாகவும் இருப்பதன்றி 'நல்லரசன் பகைவர்க்கும் நண்பர்க்கும் துன்பமும் இன்பமும் செய்வான்' என்றாற்போன்று சொற்கிடக்கை நிரனிறையாகக்கொள்ளுமாறு அமையாமையாலும், அவ்வுரை பொருந்துவ தன்றாமென்பது, பரிமேலழகர்
ளும் அதன் மறுப்பும்.
காட்டிய இரண்டாவது உரையின் பொரு

(சு)

கூஉஎ. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ
ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(இ - ள்.) கள் - கள்ளை, ஒற்றி - மறைந்து உண்டு, (அக்களிப்பால்), கண் சாய்பவர் - (தம்) அறிவு தளர்வார்,—உள்ளூர் - உள்ளூர்வாழ்பவரான், உள் ஒற்றி - உண்ணிகழ்கின்றது உய்த்துணர்ந்து, எஞ்ஞான்றும்—, நகப்படுவர் - நகுதல்செய்யப்படுவர்; (எ - று.)

உள்ளூர் - ஆகுபெயர். 'உண்டு' என்பது அவாய்நிலையான் வந்தது. உய்த்து உணர்தல் - தளர்ச்சியாற் களிப்பினை யுணர்ந்து அதனாற் கள்ளுண்டது உணர்தல்.

(கு - ரை.) கண் - ஞானக்கண். உள்

நிகழ்கின்றது உய்த்துணர்தல் - மறைவாக நிகழ்ந்த செய்தியை ஊகித்தறிதல்: கள்ளுண்டாரின் சோர்வினாற் களிப்பினையறிந்து அதனாற் கள்ளுண்டதை யறிதல். நகுதல் - பரிகசித்தல்: இகழ்ந்து சிரித்தல். ஊருள் என்பது - உள்ளூர் என்று மாறிவந்தது - இலக் கணப்போலி: உள்ளூரென்பது - அங்கு இருப்பவர்க்கு ஆகிவந்தது, இட வாகுபெயராம். தளர்ச்சி - அறிவு சோர்தல். உள்ளொற்றி யென்றவிடத்து 'உள்' என்ற இடப்பெயர் - இடத்தில் நிகழுஞ்செயலுக்கு ஆகிவந்ததும் இட வாகுபெயரே.

(எ)



கூஉ௯

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(இ - ள்.) (மறைத்து உண்டுவைத்து), களித்து அறியேன் என்பது - (யான்) கள்ளுண்டறியேனென்று (உண்ணுதபொழுது) தம்மொழுக்கங்கூறுதலை, கைவிடுக - ஒழிக: ஆங்கே - அவ்வுண்டபொழுதே, நெஞ்சத்து ஒளித்ததூஉம் - (பிறர் அறியின் இழுக்கா மென்று முன்) நெஞ்சத்து ஒளித்த குற்றமும், மிகும் - (முன்னையளவின்) மிக்கு வெளிப்படுதலான்; (எ - று.)

'களித்தறியேன்' எனக் காரணத்தைக் காரியத்தாற் கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், அது மறைக்கப்படாதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) இழுக்கு - குற்றம். 'நெஞ்சத்து ஒளித்ததும் ஆங்கேமிகும்' என்பதன் கருத்து, ஒருவர் கள்ளுண்டு பரவசப்பட்டபோது பிறரறியாமல் இரகசியமாகச்செய்து அவர் மனமறிந்த குற்றம் யாவும் வெளிப்பட்டுவிடுமென்பது. கள்ளுண்டறியேன் என்று காரணத்தாற் கூருது,'களித்தறியேன்' என்று கள்ளுண்டதைக் காரியத்தாற் கூறினர்: கள்ளுண்டல் காரணமும், களித்தல் அதன்காரியமுமாதல் காண்க. ஆங்கே-அப்பொழுதே. "காணுமையுண்ட கடுங்களிளமெய்கூர, நாணுது சென்று நடுங்கவுரைத்தாங்கு" என்ற கலித்தொகை இங்குக் காணத்தக்கது. (அ)

கூஉகூ. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(இ - ள்.) களித்தானை - கள்ளுண்டுகளித்தானொருவனை, (இஃது ஆகாதென்று), காரணம் காட்டுதல்-(பிறனொருவன்) காரணங்காட்டித் தெளிவித்தல், நீர் கீழ் குளித்தானை - நீருள்மூழ்கினுனொருவனை, (பிறனொருவன்),

நீ துரீஇ அற்று - விளக்கினுல் நாடுதலையொக்கும்; (எ - று.)

'களித்தானை' என்னும் இரண்டாவது "அறிவுடையந்தண னவளைக் காட்டென்றானே" என்புழிப்போல நின்றது. நீருள் விளக்குச் செல்லாதாற்போல, அவன்மனத்துக் காரணஞ் செல்லா தென்பதாம்.

இதனுன், அவனைத்தெளிவித்தல் முடியாதென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) நீரினுள் விளக்குச் செல்லாதவாறுபோல, கள்ளுண்பானுடைய மனத்துக் கள்ளுண்டலாகா தென்பதற்குச் சொல்லுங் காரணம் செல்லா தென்பது, கருத்து. துரீஇ—துருவி. நாடுதல் - தேடுதல். செல்லாதாற்போல-செல்லாதவாறு போல. களித்தானை என்ற இடத்து இரண்டாம் வேற்றுமை "அறிவுடையந்தண னவளைக் காட்டென்றானே" (மருதம் - 7) என்ற கலித்தொகையிற்போல நான்கனுருபின் பொருளில் வந்தது. இங்குக் காட்டிய மேற்கோளின் பொருள் வருமாறு:—அறிவு உடை-அறிவு உடைந்த

[அழிந்த], அந்தணன் - பிராமணன், அவளை - அவளுக்கு, காட்டு - காணச்
செய், என்றானோ - என்று சொன்னானோ? என்பது.

(௯)

௯௩௪ - ஆம் அதிகாரம்.—சூது  ௬௨௧

௯௩௦. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(இ - ள்.) (கள்ளுண்பானொருவன்),—கள் உண்ணா போழ்தில் - (தான்) அஃது உண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண், களித்தானை - (உண்டு) களித்த பிறனை(க் காணுமன்றே!) காணுங்கால்—, உண்ட தன் சோர்வு தான் உண்டபொழுது உளதாஞ் சோர்வினை, (அவன் சோர்வால்), (அதுவும் இற்றென்று), உள்ளான்கொல் - கருதான்போலும்; (எ - று.)

சோர்வு - மனமொழிமெய்கள் தன்வயத்தஅல்லவாதல்.

கருதலளவையான் * அதன் இழுக்கினை உய்த்துஉணரின் ஒழியுமென, இதனால், அஃது ஒழிதற்காரணங் கூறப்பட்டது.

(கு - ரை.) காணுமன்றே - காண்பானன்றோ? சோர்வு - மனம்மொழி மெய்கள் தன்வயத்தன அல்ல ஆதல். 'எங்கு எங்குக் கள்ளுண்டலென்பது உண்டோ, அங்கு அங்குஎல்லாம் சோர்வுஉண்டாகுமன்றே: கள்ளுண்டாற்

சோர்வு உண்டாமென்பதை
இந்தப்பிறரிடத்துக்காண்கின்றோ மன்றோ; ஆகையால்,
யாமும் கள்ளுண்டால் சோர்வுடையவராவோம்' என்று
இங்ஙனம் ஆராய்ந்து கள்ளுண்பதன் இழிவை ஒருவன்
உய்த்துணர்வானாயின், கள்ளுண்டல் ஒழியு மென்றவாறு.
இங்ஙனம் உய்த்துணர்வது-கருதலளவை யென்னும்
அனுமானபிரமாணமாகும்: புகையைக் கண்டு நெருப்பு
உண்டு என்று உய்த்துணர்தல் போல்வது, இது.

(௧௦)

## ௯௪ - ஆம் அதிகாரம்.—சூது.

இனி, அக்கள்ளுண்டல்போல
அறம்பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும்
பிணியுழத்தலுங் கூறுவான் தொடங்கி, முதற்கண் சூதினது
இயல்பு கூறுகின்றார்.†

(கு - ரை.) இடையீடு - தடை. பிணியுழத்தல் -
நோயனுபவித்தல்.

௯௩௧. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை
வென்றதூஉந்

தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(இ - ள்.) வென்றிடினும்-(தான்) வெல்லும் ஆற்றலுடையனாயினும்,
சூதினை - சூதாடலை, வேண்டற்க-விரும்பாதொழிக: வென்றதூஉம்-(வென்று
பொருளெய்துவார் உளராலெனின்) அவ் வென்றபொருள்தானும், தூண்
டில்பொன் - (இரையான் மறைத்த) தூண்டி லிரும்பினை,
(இரையெனக் கருதி), மீன்—, விழுங்கி அற்று -

விழுங்கினாற்போலும்; (எ - று.)

வேறல் ஒருதலை யன்மையின் 'வென்றிடினும்' என்றும், கருமங்கள் பலவுங் கெடுதலின் 'வேண்டற்க' என்றுங் கூறினார். எய்தியபொருள்

* பி - ம்: அஃனிழுக்கினை † சிலபிரதிகளில், அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும் என்ற வாக்கியம் இவ்வாக்கியத்தின்பின் காணப்படுகின்றது.



சூதாடுவார் மீக்கின்க்கு இட்டதோர் தளை யென்பதூஉம், அதனால் பின் துயருழத்தலும் உவமையாற் பெற்றாம்.

(கு - ரை.) ஆற்றல் - திறமை. உளரால் - உள்ளாரன்றோ? தூண்டிற்பொன் - தூண்டிலாகிய பொன் என இருபெயரொட்டு. விழுங்குதல்-வாயினுட்கொள்ளுதல். வேறல் - வெல்லுதல். ஒருதலையன்மையின் -நிச்சயமல்லாமையால். தளை-பந்தம். ஒருவன் சூது ஆடுவதிற் சமர்த்தனாயிருந்து அதனால் அவனுக்குப்பொருள் கிடைப்பினும் அப்பொருள் பலதீங்குக்கும் காரணமா

யிருத்தலால், அப்பொருளில் விருப்பங்கொள்ளாது சூதாடுதலை யொழிந்திடுக
என்றவாறு. சூதினால் வென்றுபடைத்த பொருளுக்கு மீன்விழுங்கும் தூண்
டிற்பொன்னை உவமைகூறியதனால், சூதினாற்கிடைத்த அப்பொருள் சூதாடு
வார் அதனினின்று நீங்காமைக்கு இட்டதோர் தளையாகுமென்பதும், அப்
பொருளினால் பிறகு துயரம் நேருமென்பதும் பெறப்படும். சூதில்வெல்லுதல்
நிச்சயமன்று என்பதை யறிவித்தற்கு, 'வென்றிடினும்' என்று ஐயவும்மை
கொடுத்தார். வேண்டற்க - எதிர்மறைவியங்கோள்
வினைமுற்று. (க)

கூ௩௨.

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(இ - ள்.) ஒன்று எய்தி - (அத்தூண்டிற்பொன் போன்ற) ஒன்றனை
முன்பெற்று, நூறு இழக்கும்-(இன்னும் பெறுது மென்னுங் கருத்தால்) நூற்
றினையிழந்து வறியராம், சூதர்க்கும்—, நன்று எய்தி-(பொருளால்) அறனும்

இன்பமும் எய்தி, வாழ்வது ஓர் ஆறு - வாழ்வதொரு நெறி, உண்டு ஆம்
கொல் - உண்டாமோ? [ஆகாது]; (எ - று.)

அவ்வாற்றாற் பொருளிழக்தே வருதலான் அதனாலெய்தும் பயனும்
அவர்க்கு இல்லை யென்பதாம்.

(கு - ரை.) பெறுதும் - பெறுவோம். உம்-இழிவுசிறப்பு. 'கொல்'-வினை வகையால் எதிர்மறை குறிக்கும். ஒன்று, நூறு-எண்ணலளவை யாகுபெயர்.

௯௩௩. உருளாய மோவாது கூறிற்
போஒய்ப் புறமே படும்.

பொருளாயம்

(இ - ள்.) உருள் ஆயம் - உருளுங்கவற்றின்கட்பட்ட ஆயத்தை, ஓவாது கூறின் - இடைவிடாது கூறிச் சூதாடுமாயின்,—பொருள் - (அரசன் ஈட்டிய) பொருளும், ஆயம்-(அவன்) பொருள்வருவாயும், போய் - (அவனை விட்டுப்) போய், புறம் ஏ படும் - பகைவர்கண்ணே தங்கும்; (எ - று.)

கவற்றினது உருட்சியை அதனிலுய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடலை அதுகூறலாகிய காரணத்தின்மேல் இட்டும் கூறினர். பொருளாயம்
என்பது - உம்மைத்தொகை. ஆயம் - வடமொழித் திரிசொல். காத்தற்

கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனாகவின், அவையிரண்டும், பகைவர் பாற் செல்லும் என்பதாம்.

(கு - ரை.) கவற்றின்கண் - சூதாடுகருவியில். பட்ட - உண்டான.
ஆயம் - ஆதாயம்: பந்தயலாபம். பொருள்வருவாய் - பொருள்வரும்வழி.

## கூச - ஆம் அதிகாரம்.—சூது

சஉந.

சூதாடுகருவியாகிய கவற்றின் உருட்சியை அதனினாற்பெறுகின்ற ஆயத்தின்மேலேற்றி, 'உருளாயம்' என்றது, கருவிக்குஉரிய அடைமொழியைப் பயன்மேலேற்றிக் கூறிய உபசாரவழக்கு. 'சூதாடின்' என்ற பொருளில் 'கூறின்' என்றது, காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டவாறும். ஆயம் என்றவடமொழி யாதொரு திரிபுமின்றித் தமிழில்வந்துவழங்கிய தற்சமமே யாகவும் அதனை 'வடமொழித்திரிசொல்' என்றது - ஒருபாஷையினின்று மற்றொரு பாஷைக்கு வருதலேயே திரிபெனக்கொண்டவாறும்; அன்றி, அச்சொல்லில் எழுத்துமாறுபாடு ஒன்றில்லாமைகாண்க. கூஙகூ - ஆங் குறளின்கீழ் 'அதி என்பது - வடசொல்லுள் மிகுதிப்பொருளதோர் இடைச்சொல். அது திரிந்து நுட்பம்என்பதனோடு தொக்கது' என்று பரிமேலழகர்

உரைத்ததுங் காண்க. இங்ஙனம் ஆரியத்தினின்று தமிழுக்குவருதலையே திரிதலாகக்கொள்ளுதல், ஒருசார் பண்டையோர்கருத்து: "வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ, யெழுத்தோடுபுணர்ந்த சொல்லாகும்மே" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தையும் அதற்கு உரையாசிரியர்கூறிய உரையையுங் காண்க. இவ்விஷயத்தில் சேனாவரையர்கருத்தும் நச்சினார்க்கினியர்கருத்தும் மாறுபடும். ஆயம் என்ற வடசொல் - முதலில் கெலிப்புப்பொருள் என்ற அர்த்தத்தையும், பிறகு பொருள்வருவாய் என்ற அர்த்தத்தையும் காட்டிற்று. காத்தல் - பொருளைக்காத்தல். இயற்றல் - பொருளை யீட்டுதல். அவை யிரண்டும் - பொருளும் பொருள்வருவாயும். பொருளைக் காப்பதிலும், மேன் மேற்சம்பாதித்தலிலும் சூது ஆடும் அரசனுக்குக் கருத்துச் செல்லாது ஆதலால், அவையிரண்டும் பகைவரிடத்துச் செல்லுமென்பதாம். ஓயாமற் சூதாடுவோரின் பொருள் விரைவில் ஒழியுமென்பது, கருத்து. (௩)

௯௩௪.

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(இ - ள்.) சிறுமை பல செய்து - (தன்னை விழைந்தார்க்கு முன் இல்லாத) துன்பங்கள் பலவற்றையும் விளைத்து, சீர் அழிக்கும் - (உள்ள) புகழை யுங்கெடுக்கும்,

குதின்-குதுபோல், வறுமை தருவது-நல்குரவினைக் கொடுக்க வல்லது, ஒன்று - பிறிதொன்று, இல் - இல்லை; (எ - று.)

அத்துன்பங்கள் முன்னர்க் கூறுப. நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தியினத்தையுங் கூட்டுதலால், 'சிரழிக்கும்' என்றார்; வறுமைக்கு எல்லையாவரென்பதாம்.

(கு - ரை.) விழைந்தார் - விரும்பினவர்: விரும்பியாடினவரென்க. நல் குரவு - தரித்திரம். முன்னர்க்கூறுப - இனிச்சொல்வர்: கஉகூ-முதல் நான்கு கவிகளிற் காண்க. நல்இனம் - நல்லோர்சேர்க்கை. தீ இனம் - தீயோர் சேர்க்கை. வறுமைக்குஎல்லையாவர் - மிக்கவறுமையை யடைவரென்றபடி. எல்லை - முடிவெல்லை: முதிர்ச்சி. (ச)

கூஉ௫. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்,



(இ - ள்.) இல் ஆகியார் - (முற்காலத்துத் தாம் உளராகியே) இலராகி யொழுகினர்,—கவறுஉம் - கவற்றினையும், கழகம்உம் - (அஃது ஆடும்) களத்தினையும், கைஉம் - (அவ்வாடற்குவேண்டும்) கைத்தொழிலினையும், தருக்கி- மேற்கொண்டு, இவறியார் - கைவிடாத வேந்தர்; (எ - று.)

கைத்தொழில் - வெல்லும் ஆயம் படப் பிடித்து எறிதல். * அவ்விவறுத

லால் பாண்டவர் தம் அரசுவிட்டு வனத்திடைப்போய்
ஆண்டு மறைந்தொழு
கினரென அனுபவங் காட்டியவாறு.
இவை யைந்து பாட்டானும், அதனது
வறுமையயத்தற் குற்றங் கூறப்
பட்டது.
(கு - ரை.) களம் - இடம். ஆயம் பட -
பந்தயலாபம் உண்டாக.
இவறுதல் - இறுகப்பிடிக்கை: கைவிடாமை. ஆண்டு -
ஒருவருஷகாலம்:
அவ்வாறுஎன்றும் அதன்பின்பு என்றும் கூறுவாருமுளர்.
மறைந்தொழுகல் -
அஜ்ஞாதவாசம். கவறு முதலியவற்றை விரும்பியதனுல்,
பாண்டவர் தம்
முடைய இராச்சியத்தை யிழந்து பன்னிரண்டியாண்டு
காட்டிலுறைந்து
ஓரியாண்டு நாட்டில் மறைந்தொழுகினரென
அனுபவங்காட்டியவாறு. (ரு)

கூ௩௬. அகடார ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார.

(இ - ள்.) (தன் பெயர்சொல்லல்
மங்கலமன்மையின்), சூது என்னும்-
சூதென்று சொல்லப்படும், முகடியான்—,

மூடப்பட்டார் - விழுங்கப்பட்
டார்,—அகடு ஆரார் - (இம்மைக்கண்) வயிறு
ஆரப்பெறார்; அல்லல் உழப்
பர் - (மறுமைக்கண்) நிரயத்துன்பமுழப்பர்; (எ - று.)
செல்வங்கெடுத்து நல்குரவு கொடுத்தற்றொழில்
வேறுபடாமையின்
'சூதென்னு முகடி' என்றும், வெற்றி தோல்விகள் நோக்கி
ஒருபொழுதும்
விடாராகலின் 'ஈண்டு அகடாரார்' என்றும், பொய்யும்
களவும் முதலிய
பாவங்கள் ஈட்டலின் 'ஆண்டு அல்லலுழப்பர்' என்றுங்
கூறினார். வயிறு
ராமை சொல்லவே, ஏனைப்புலன்கள் நுகரப்பெறாமை
சொல்லவேண்டா
வாயிற்று. உழப்பர் என்பது - எதிர்காலவினைச்சொல்.
(கு - ரை.) முகடி - மூதேவி:
பாற்கடல்கடைந்தகாலத்தில் திருமகளுக்கு
முன் தோன்றியவள்: முகடு - முன்: பகுதி, இ -
பெண்பால்விகுதி: முகடி
யான் விழுங்கப்பட்டார் - முகடிக்கு முற்றும்வசப்பட்டவர்.
ஆரப்பெறார் -
நிரம்பப்பெறார். நிரயம் - நரகம். உழப்பர் -
அனுபவிப்பர். ஈண்டு - இவ்'வுலகில். ஆண்டு -
அவ்வுலகில். ஏனைப்புலன்கள் நுகரப்பெறாமை - மற்றை
யிந்திரியங்கள் விஷயங்களையனுபவிக்கப்பெறாமை.
வினைச்சொல் - இங்கு

வினைமுற்று. சூதென்னும்முகடியென்பது - அபநுதியணி. (௬)

௯௩௭. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

* பி - ம்: அவ்வாயந் தவறுதலால்

௯௪ - ஆம் அதிகாரம்.—சூது ௪௨௫

(இ - ள்.) காலை - (அறம்பொருளின்பங்கட்கு அடைத்த) காலம், கழகத்து புகின் - (அரசனுக்குச்) சூதாடுகளத்தின்கட் கழியுமாயின்,—(அக்கழிவு), பழகிய செல்வம்உம்-தொன்றுதொட்டுவந்த (அவன்) செல்வத்தினையும், பண்புஉம் - நற்குணங்களையும், கெடுக்கும் - போக்கும்; (எ - று.)

'பழகிய' என்பது, பண்புடனும் இயையும். தான் செய்துகொள்ளும் அறம்முதலியவேயன்றி முன்னோரைத் தொடங்கி வருகின்ற செல்வமும்,

முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவா மென்பதாம்.

(கு - ரை.) அடைத்த - உரியதாக அமைக்கப்பட்ட. கழகத்துக்காலை புகின் என்பதற்கு - சூரிபவுதயமானவுடன் சூதாடுகளத்துக்குச்செல்வானு யின் என்றலும் ஒன்று. தான் தேடிச் சம்பாதிக்கின்ற அறம்முதலியனவே யன்றி முன்னோர்தொடங்கி வருகின்ற செல்வமும்,முன்செய்த நல்வினையின் பயனாகிய பண்பும் சூதாடுவதனால் இல்லாமற்போமென்பதாம். (எ)

௯௩௮. பொருள்கெடுத்துப் பொய்மேற்
கொளீஇ யருள்கெடுத்
தல்லல் உழப்பிக்குஞ் சூது.

(இ - ள்.) சூது—, பொருள் கெடுத்து - (தன்னைப் பயின்றவன்) பொருளைக் கெடுத்து, பொய் மேற் கொளீஇ - பொய்ம்மையை மேற்கொள்ளப்பண்ணி, அருள் கெடுத்து - (மனத்துளழும்) அருளைக் கெடுத்து, அல்லல் உழப்பிக்கும் - (இவ்வாற்றான் அவனை இருமையினும்) துன்பமுறுவிக்கும்.

இத்தொழில்கள்மூன்றற்கும் சூது

விஜீன முதலாகவும், தோல்வி வெற்றி
செற்றம் என்பன முறையே கருவிகளாகவுங் கொள்க.
முன்னதனுன் இம்
மையினும், ஏனையவற்ருன் மறுமையினுமாம்.
'பொருள்கொடுத்து' என்
பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிவு, 'மேற்கொளீஇ'
என்புழி மேற்
கோடலாகிய விஜீனமுதல்விஜீன.
(கு - ரை.) பயின்றவன் - பழகினவன்.
இத்தொழில்கள் மூன்று -
பொருள்கெடுத்தல் பொய்யைமேற்கொள்ளப்பண்ணுதல்
அருளைக்கெடுத்தல்
என்ற இந்த மூன்றுசெயல்கள். விஜீனமுதல் - கருத்தா.
செற்றம் - பகைமை.
தோல்வியாற் பொருளைக்கெடுத்தலையும், வெற்றியாற்
பொய்யைமேற்
கொள்ளப்பண்ணுதலையும், கோபத்தா
லருளைக்கெடுத்தலையும் சூது தோற்று
விக்குமென்றவாறு. முன்னதனுன் -
பொருள்கெடுத்தலால். ஏனையவற்ருன்-
பொய்யைமேற்கொள்ளப்பண்ணுதல் அருளைக்கெடுத்தல்
என்பவற்ருல். ஆம்-
துன்பமுண்டாக்குவதாமென்க. முடிவு-முடிக்குஞ்சொல்.
மேற்கோடல்-மேற்

கொள்ளுதல். பொருள்கெடுத்து என்ற இடத்துப்
பொருள்கொடுத்து என்று
பாடமாயின், கொடுத்து என்ற வினையெச்சம்,
மேற்கொளீஇ என்றவிடத்
துள்ள மேற்கொள்ளுதலென்ற வினைமுதல்வினையோடு
இயையு மென்றூர்: வினைமுதல் வினை -
சூதாடுபவனதுதொழில்: சூதாடுபவன் தன்பொருளைக்
கொடுத்துப் பொய்யை மேற்கொள்ளுகின்றூ னென்க.

(அ)

௯௩௯.

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

54



(இ - ள்.) ஆயம் கொளின் - (அரசன்) சூதினை(த் தனக்கு விளைத்த
தொழிலாக) விரும்புமாயின், —(அவனை), ஒளி - ஒளியும், கல்வி - கல்வியும்,
செல்வம் - செல்வமும், ஊண் - ஊணும், உடை - உடையும், என்று ஐந்து

உம் - என்று இவ்வைந்தும், அடையா ஆம் - சாராவாம்; (எ - று.)

ஆயம் - ஆகுபெயர். இச்சிறப்புமுறை, செய்யுள்நோக்கிப் பிறழ்ந்தின்
றது. செல்வம் - அறுவகை யுறுப்புக்கள். ஊண் உடை என்பனவற்றால்,
துப்புரவுகளெல்லாம் கொள்ளப்படும். காலமுங் கருத்தும் பெருமையின்,
இவை உளவாகா என்பதாம்.

இவை நான்குபாட்டானும், சிறுமைபலசெய்து அவற்றான் இருமையுங்
கெடுத்தல் கூறப்பட்டது.

(கு - ரை.) விளைதத்தொழில்-உற்சாகத்தோடு போதுபோக்குஞ்செயல்.
விரும்பும் - விரும்புவான். உடை - ஆடை. ஆயம் என்ற சொல் - சூதாடு
கருவியினாற் பெறப்படும் பந்தயமாகிய தாயம்: இது - சூதுக்கு ஆயினமை
யால், காரியவாகுபெயர். ஒளி - மதிப்பு. மதிப்பு உண்டாயின், கல்வி
சிறக்கும்: கல்வியிருப்பின், செல்வம் சிறக்கும்: செல்வமிருப்பின் ஊணும்
உடையும் சிறக்கும்: இங்ஙனம் மதிப்புமுதலியன தோன்றிக் கல்வி
முதலியவற்றைச் சிறக்க வைத்தலால், ஒளி கல்வி

செல்வம் ஊண் உடை

என்று அமையவேண்டியிருக்க, செய்யுளாதலின் 'உடைசெல்வமூ ணொளி

கவில்' என்று முறைபிறழநின்றதென்க. செல்வம் என்பது - அரசர்க்கு

உரிய அறுவகையுறுப்புக்களை யென்பர்:

அறுவகையுறுப்புக்களாவன - அமை

ச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பன. துய்ப்புரவு - அனுபவித்

தற்குஉரிய பொருள்கள். என்று என்னும் எண்ணிடைச்சொல் - நின்ற

விடத்துப்பிரிந்து பிறவிடத்தும் சென்றுபொருந்தி, 'ஐந்து'என்னுந் தொகை

பெற்றது. இனி, என்ற ஐந்து என்பன என்றைந்தெனத்தொக்கனவென

லும் ஒன்று. மதிப்பு முதலியவற்றைப் பெறுமாறு முயலவேண்டிய காலத்து

அச்செயலை யொழித்து சூதாட்டத்தின்மேற் கருத்துச்செல்லுதலால், ஒளி

செல்வம் முதலியன. சூது ஆடுவோர்க்கு உளவாகா என்பதாம். (கூ)

கூ௪0.

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(இ - ள்.) இழ தொறூஉம் - (சூதாடலான்
இருமைப்பயன் களையும்)
இழக்குந்தோறும், காதலிக்கும் - (அதன்மேற்)
காதல்செய்யும், சூதுபோல் -
சூதன் போல,—துன்பம் உழ தொறூஉம் - (உடம்பான்
மூவகைத்) துன்பங்
களையும் அனுபவிக்குந்தோறும், காதற்று - (அதன்மேற்)
காதலையுடைத்து,
உயிர்—; (எ - று.)

சூது - ஆகுபெயர். உயிரினது அறியாமை
கூறுவார்போன்று சூதனது
அறியாமை கூறுதல் கருத்தாகலின், அதனை
யாப்புறுத்தற்பொருட்டு உவமமாக்கிக் கூறினர். இதன்
எதிர்மறைமுகத்தால், சூதினை வெறுத்தொழி
வானை யொக்கும் உடம்பினை வெறுத்தொழியும் உயிர் எனவுங்
கொள்க.

## கூ௫ - ஆம் அதிகாரம்.—மருந்து

சஉஎ

இதனன், அஃது ஒழிதற்கு அருமையும்,
ஒழிந்தாரது பெருமையுங் கூறப்பட்டன.

(கு - ரை.) இருமைப்பயன் - இம்மை மறுமைகளிலனுபவிக்குஞ் சுகாநுபவம். அதன்மேல் - அச்சூதின்மேல். காதல்செய்யும் - விருப்பங் கொள்ளும். மூவகைத்துன்பங்கள், முன் கூறப்பட்டன. அதன்மேல் - அவ்வுடம்பின்மேல். சூது என்பது - அதனையாடுவோனுக்கு ஆகிவந்ததனால், பண்பாகுபெயர். இக்குறள்-உயிரின் அறியாமையைக் கூறுவதுபோன்று சூதனுடைய அறியாமையைக் கூறுதலையே கருத்தாகக்கொண்டதாகலின், உபமேயமாகக்கூறவேண்டிய இடத்துச் சூதனது அறியாமையை யாப்புறுத்தற் [யாப்புறுத்தல் - வற்புறுத்தல்.] பொருட்டு, 'இழத்தொறூங் காதலிக்குஞ் சூதுபோல்' என உபமானமாக்கிக் கூறினார்: உபமானம் உபமேயத்தினும் சிறந் திருக்கு மென்பது, அலங்காரநூலார்கொள்கை: உபமான உபமே யங்களை மாற்றுச்சொல்லியதால், இது-விபரீதவுவமையணி: எதிர்நிலையணி யென்பதும் இது: "பொருளே உவமஞ்செய்தனர் மொழியினும், மருளறு சிறப்பினஃதுவமமாகும்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தையும் அறிக. சூதாடுவோன் இருமைப்பயன்களையும் தான் இழத்தலையறியாது அதனையே விரும்புவா னென்பது, கருத்து.

(௯0)

## ௯௩ - ஆம்

## அதிகாரம்.—மருந்து.

பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு

வாதம்முதலிய பிணிகள் வரும்; அவற்றுட் பழவினையான் வருவன அதன்கழிவின்கணல்லது தீரா மையின் அவைஒழித்து ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் திறம் கூறுகின்றார்.
காரணங்களாவன-உணவு செயல்களது ஒவ் வாமை; ஆகலின், பிணிகளும் காரணத்தான் வருவனவாயின.

(கு - ரை.) பழவினை - முற்பிறவியிற்செய்த தீவினை.
காரணங்களான் - பிறகாரணங்களால்: காரணங்கள் -
உணவுசெயல்கள் என்னும் இவற்றின்
ஒவ்வாமை. வாதம் முதலிய பிணிகள் - வாதம் பித்தம் சிலேட்டுமம் என்னும்
இவற்றின்மாறுபாட்டினால் விளையும் வியாதிகள்.
கழிவின்கண் - நீக்கத்தில்,
அவை - பழவினையான்வருவன. ஏனை -
பழவினையின்வேறுன. திறம் -
கூறுபாடு.

௯௪௧. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

(இ - ள்.) மிகின்உம் - (உணவும் செயல்களும்

ஒருவன்பகுதிக்கு ஒத்த
அளவினவன்றி அதனின்) மிகுமாயினும், குறையின் உம் - குறையுமாயினும்,
நூலோர் - ஆயுள்வேதமுடையாரால், வளி முதல் ஆ எண்ணிய - வாதம்முத
லாக எண்ணப்பட்ட, மூன்று - மூன்றுநோயும், நோய் செய்யும் - (அவனுக்
குத்) துன்பஞ்செய்யும்; (எ - று.)



'நூலோர் எண்ணிய'எனவே,
அவர்* அவ்வாற்றான் வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி ஐப்பகுதி என்னும் பகுதிப்பாடும் பெற்றும். அவற்றிற்குஉணவு ஒத்தலாவது - சுவைவீரியங்களானும், அளவானும் பொருந்துதல். செயல்கள் ஒத்தலாவது-மனமொழிமெய்களாற் செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்குமுன்னே ஒழிதல்.இவையிரண்டும் இங்ஙனமன்றி மிகுதல்குறைதல் செய்யின் அவை தத்தம்நிலையில் நில்லாவாய் வருத்து மென்பதாம். காரணமிரண்டும், அவாய்நிலையான் வந்தன. முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

இதனால், யாக்கைகட்கு இயல்பாகிய நோய் மூவகைத்து என்பதூஉம், அவை துன்பஞ்செய்தற்காரணம் இருவகைத்து என்
பதூஉம் கூறப்பட்டன.

இன்பஞ்செய்தற்காரணம் முன்னர்க் கூறுப.

(கு - ரை.) பகுதி - தேகத்தின் கூறுபாடு.
ஆயுள்வேதம் - வைத்திய

சாஸ்திரம். வாதம் - வாயு. ஐ - சிலேஷ்மம். பகுதிப்பாடு - பகுப்பு. பெற்றும் -

பெற்றேம். சுவைவீரியங்கள் - ருசியும் சத்தும். இவையிரண்டும் - உணவுஞ்

செயலும். அவை - வாதம்முதலியன. காரணம் இரண்டு - உணவு செயல்

என்பன. மிகினும்குறையினும் என்பவற்றிற்கு 'உணவும் செயலும்' என்ற

எழுவாய்கள், அவாய்நிலையால்வந்தன: அவ்வுணவுசெயல்களின் மிகுதியும்

குறைவுமே நோய்க்குக் காரணங்களென்க. முற்றும்மை விகாரத்தால்தொக்

கது 'மூன்று' என்பதில்:
"இனைத்தென் றறிபொருள்...வினைப்படுத்துரைப்

பின் உம்மைவேண்டும்" என்பது விதியாதலால், அஃது இல்லாமையை விகா

ரத்தால்தொக்கதென்றார். முன்னர்க்கூறுப - இனிக்கூறுவர்: அடுத்த கவி

முதற் காண்க.

(க)

கூசஉ. மருந்தென வேண்டாவாம்
தற்றது போற்றி யுணின்.

யாக்கைக் கருந்திய

(இ - ள்.) (ஒருவன்), அருந்தியது - முன்உண்டது,

அற்றது - அற்ற
படியை, போற்றி - (குறிகளால்) தெளிய அறிந்து, உணின்
- (பின்) உண்ணு
மாயின்,—யாக்கைக்கு - (அவன்) யாக்கைக்கு, மருந்து என
வேண்டா ஆம்-
மருந்தென்று (வேறு) வேண்டாவாம்; (எ - று.)
குறிகளாவன - யாக்கைநொய்ம்மை,

தேக்கின் தூய்மை, கரணங்கள்
தொழிற்குஉரியவாதல், பசிமிகுதல் என இவை முதலாயின.
பிணிகள் யாக்
கைய வாகலின், 'யாக்கைக்கு' என்றார். 'உணின்' என்பது,
அதன் அருமை தோன்ற நின்றது.

(கு - ரை.) உண்டது - உண்டவுணவு. அற்றபடி -
சீரணித்ததன்மை. குறிகளாவன-(உண்டது அற்றதற்குக்)
குறிகளாவன. யாக்கை நொய்ம்மை-
உடம்பு இலேசாகஇருத்தல். தேக்கின் தூய்மை - ஏப்பம்
அஜீர்ணத்தைக் குறிப்பிக்கும் துர்க்கந்தமில்லாமல் சுத்தமாய்வ
ருதல். கரணங்கள் - உறுப்புக்கள். யாக்கைய -
உடம்பிற்கு உரியவை. முதலிய என்றதனால், மனம்
மொழிகள் தம்வயத்தவாதல் சோம்புதலின்மை முதலியன
கொள்க. நோய்

* பி - ம்: அவற்றூன்

கள் யாக்கைக்கு வருவன ஆதலால், 'யாக்கைக்கு மருந்து வேண்டா' என்ருரெண்க. 'உணின்' என்ற எதிர்காலம்; அங்ஙன் உண்ணுதலின் அருமை தோன்றநின்றது.

(உ)

கூசாரு. அற்ருலளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்ருனெடிதுய்க்கு மாறு.

(இ - ள்.) அற்ருல் - (முன் உண்டது) அற்ருல், அளவு அறிந்து - (பின் உண்பதனை) அறும் அளவு அறிந்து, உண்க - (அவ்வளவிற்ருக) உண்க; உடம்பு பெற்ருன் - (இறப்பவும் பலவாய பிறயாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கு அரிய இம்மானுட) யாக்கையைப் பெற்ருன், நெடிது உய்க்கும் ஆறு - (அதனை) நெடுங்காலம் கொண்டுசெலுத்தும் நெறி, அஃது - அது (ஆக லான்); (எ - று.)

இம்மைமறுமைவீடுபேறுகள் எய்தற்பாலது ஈதொன்றுமே யாகலின் 'உடம்புபெற்ருன்' என்றும், அது நெடிதுநின்றுழி அவை பெருகச்செய்து கொள்ளலாமாகலின் 'நெடிதுஉய்க்குமாறு' என்றுங் கூறினுர். 'பெற்ருல் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(கு - ரை.) அற்ருல் - சீரணித்தால். அறும் - சீரணிக்கும். அவ்வளவிற்று ஆக-சீரணிக்கும் அளவையுடையதாக. இறப்பவும்-மிகவும். பிழைத்து-

தப்பி. "புன்மர நெளிபுழுப் புள்விலங்கெனும், பன்மைய துயர்செயும் பவங்க டப்பியே, வன்மைகொ ணிலமிசை மக்களாகுதல், நன்மைகொளுயிர்க்கலா லரிது" என்றதுங் காண்க. மானுடயாக்கை - மநுஷ்யசரீரம். அதனைநெடுங் காலங்கொண்டுசெலுத்தும்நெறி - யாக்கையைக்கொண்டு நெடுநாள்சீவித் திருக்குமுபாயம். அது ஆகலான் - அளவறிந்துண்ணுதலாதலால். எய்தற் பாலது - அடையத்தக்கது. ஈது ஒன்றுமே-இந்த மனிதப்பிறப்பு ஒன்றினன் மாத்திரமே. பெற்றான் என்றது-பெறுதலின் அருமைதோன்றநின்றது. அது நெடிது நின்றாழி - அம்மனிதவுடம்பு நெடுநாள் அழிவின்றி நின்றால். அவை- இம்மைமறுமை வீடுபேறுகளை.

பெற்றாலென்றுபாடமோதுவாருமுளர் என்ப தன்கருத்து - பெற்றால் என்று பதம்பிரித்துப் பொருள்சொல்வாரு முளரென்பது.

(ந)

கூ௪௪. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(இ - ள்.) அற்றது அறிந்து - (முன் உண்டது) அற்றபடியை அறிந்து, துவர பசித்து - பின் மிகப்பசித்து, மாறு அல்ல - (உண்ணுங்கால்) மாறுகொள்ளாத உணவுகளை, கடைப்பிடித்து துய்க்க - குறிக்கொண்டு உண்க.

'அற்றதறிந்து' என்னும் *பெயர்த்துறை, அதனை யாப்புறுத்தற் பொருட்டு. உண்டது அற்றாலும்

அதன்பயனாகிய இரதம் அறா தாகலான் அஃதுவும் அறல்வேண்டு மென்பார், 'மிகப்பசித்து' என்றார். பசித்தல்வினை;

---

* பி - ம்: பெற்றதன்பெயர்த்துறை



ண்டு, உடையான்மேல் நின்றது. மாறுகொள்ளாமையாவது - உண்பான் பகுதியொடு மாறுகொள்ளாமையும், காலவியல்பொடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளாமையுமாம். அவையாவன - முறையே வாதபித்தஐங்களான் ஆய பகுதிகட்கு அடாதவற்றைச் செய்வன வாதலும், பெரும்பொழுது சிறுபொழுது என்னுங் காலவேறுபாடுகளுள் ஒன்றற்கு ஆவன பிறிதொன்றற்கு ஆகாமையும், தேனும் நெய்யும் தம்முள் *ஒத்து நஞ்சாதல் போல்வனவுமாம். அவற்றைக் குறிக்கொள்ளாது மனம் பட்டவாற்றால் துய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், 'கடைப்

பிடித்து' என்றார்.

(கு - ரை.) குறிக்கொண்டு - கவனித்து. பெயர்த்துரை - முன் கூறி யதையே மீண்டுங் கூறுதல்: இது பயன்கருதிக் கூறிய தாதலால், கூறியதுகூறலென்னுங் குற்றமாகாது: அநுவாதம் [வழிமொழிதல்] என்னுங் குணமாம். "அற்றாலளவறிந்துண்க" என்று கீழ்க்கூறியதனால், இங்கு 'அற்ற தறிந்து' என்பது பெயர்த்துரையாம். அதனை-அற்றதறிதலை. யாப்புறுத்தல்-வற்புறுத்தல். இரதம் - சாரம். பசித்தலென்ற வினைப்பெயராகியவயிற்றின் வினை, இங்கே அந்தவயிற்றையுடையானாகிய முதலின்மேல் ஏற்றிக்கூறப் பட்டது: உபசாரவழக்கு. தம்முள்-ஒன்றோடொன்று. அவையாவன - மாறு கொள்வனவாவன. அடாதவற்றை - பொருந்தாதவற்றை. பெரும்பொழுது - இளவேனில் முதுவேனில் கார் கூதிர் முன்பனி பின்பனி என்னும் ஆறுபருவங்கள்: சித்திரைமுதலாக இவ்விரண்டுமாதங்கள் முறையே இவ்வாறு பருவங்கட்கு முரியனவாம். சிறுபொழுது-காலை நண்பகல் எற்பாடு மாலை யாமம் வைகறை என்று ஆறுபிரிவாம்: இவை சூரிய

உதயகாலமுதல் ஒவ்வொன்று
பப்பத்துநாழிகையாக முறையே அமையும். தம்முள் ஒத்து - சமபாகமாகக் கலந்து. மனம்பட்ட ஆற்றால் துய்ப்பின் - மனம்விரும்பியபடி யுண்டால்.(௪)

கூ௪௫. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) மாறுபாடு இல்லாத உண்டி - (அம்மூவகை) மாறுகோளும் இல்லாத உணவை, மறுத்து உண்ணின் - தன்உள்ளம்வேண்டியவளவினன்றி (ப் பிணிவாராவளவினால் ஒருவன்) உண்ணுமாயின், உயிர்க்கு - அவனுயிர்க்கு, ஊறுபாடு இல்லை-(பிணிகளால்) துன்பம்விளைதல் உண்டாகாது.

உறுவதனை 'ஊறு' என்றார்: அஃது இன்பத்திற் செல்லாதாயிற்று, †இல்லையென்பதனோடு தொடர்பாகலின். துன்பமுறுவது உயிரே யாகலின், அதன்மேல் வைத்துக் கூறினார். மாறுபாடுஇல்வழியும் குறைதல் நன்று என்பதாம்.

இவைநான்குபாட்டானும், உண்ணப்படுவனவும், அவற்றது அளவும், காலமும், பயனும் கூறப்பட்டன.

---

பி - ம்: * அளவொத்து. † இல்லைஎன்பது.



(கு - ரை.) மூவகைமாறுகோள்-பகுதிபற்றியும், காலவியல்புபற்றியும், சுவ்வவீரியங்கள்பற்றியும் மாறுபடுகை. உறுவதாகிய துன்பத்தினை 'ஊறு' என்றார்: இச்சொல் வினைமுதற்பொருள்விகுதிபுணர்ந்துகெட்டு முதல்நீண்ட பெயராம். உறுவது என்ற காரணம்பற்றி வந்த இந்தப்பெயர்ச்சொல், இன்பமும் உறுவதேயாயினும் அதன்மேற்செல்லாது துன்பத்தின்மேலேயே செல்லுவதாயிற்று: இதற்குக்காரணம்-இல்லையென்பதனோடு தொடர்புபட்டிருத்தலாலும், அதுவே வேண்டப்படாததாதலாலுமாமென்க. துன்பமுறுவது உயிரேயாதலின் அதன்மேல்வைத்துக்கூறினார் - பிணிஉடம்பைப்பற்றியதே யாயினும் அந்தப்பிணியால் துன்பம் உறுவது உயிரே யாதலால், உயிரின் மேல்வைத்து 'ஊறுபாடில்லையுயிர்க்கு' என்றார். குறைதல் நன்று - குறை வாகவுண்ணுதல் நன்று என்றவாறு.

(ரு)

கூசசு. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்

கழிபே ரிரையான்க ணோய்.

(இ - ள்.) இழிவு அறிந்து-அக்குறைதலை (நன்றென்று) அறிந்து, உண் பான்கண்-(அவ்வாறே) உண்பவன்மாட்டு, இன்பம் போல்-இன்பம் (நீங்காது நிற்குமாறு) போல,—கழி பேர் இரையான்கண் - மிகப்பெரியஇரையை விழுங்குவான்மாட்டு, நோய்—, நிற்கும் - நீங்காதுநிற்கும்; (எ - று.)

அவ்வாறே உண்டல் - உண்ணலாமளவிற் சிறிதுகுறைய உண்டல். இன்பமாவது - வாதம்முதலிய மூன்றும் தத்தம்நிலையிற் றிரியாமையின் மனமொழிமெய்கள் அவன்வயத்தவாதலும், அதனான் அறம்முதலிய நான்கும் எய்தலுமாம். இரையை அளவின்றியெடுத்து அதனான் வருந்தும் விலங்கொடு ஒத்தலின், 'இரையான்' என்றார். விதியெதிர்மறைகளை உவமமும் பொருளுமாக்கியது, இரண்டானும் பெறுதற்கு.

(கு-ரை.) அக்குறைதலை-மாறுகோளில்லாவிடத்தும் உணவுகுறைதலை. உண்பவன்மாட்டு-உண்பவனிடத்தில். தம்தம்நிலையின் திரியாமையின் - தம் தமக்குரியநிலைமையினின்று மாறுபடாமையால். எய்தல்-அடைதல். இரை- விலங்கு உட்கொள்ளும் உணவு. உணவை அளவின்றி மிகுதியாக உண்பவன் அதனால் வருந்தும் மிருகத்தோடொப்பா னென்ற காரணத்தினால், அவனை 'இரையான்'என்றது. குறைவாக வுண்ணவேண்டுமென்பது பெறப்படுதலால்,

'இழிவறிந்துண்பான்கணின்பம்' என்பது, விதி: மிகுதியாக உண்ணலாகாது என்பதுபெறப்படுதலால்,
'கழிபேரிரையான்கணோய்' என்பது, எதிர்மறை: விதியெதிர்மறைகளை உவமமும் பொருளுமாக்கியது இரண்டானும் பெறுதற்கு-விதியாயுள்ளதை 'இழிவறிந்துண்பான்கணின்பம்போல்' என்று உபமானமாகவும் எதிர்மறையாயுள்ளதை 'நிற்கும் கழிபேரிரையான்கணோய்' என்று உபமேயமாகவும் கூறியது, மாறுபாடில்லாத உணவை உண்ணலாமளவிலே சிறிது குறைய உண்டால் இன்பமுண்டாமென்றும் மிருகம்போல் அளவுகடந்து மிகப்பெரிய இரையை விழுங்கினல்

நோயுண்டாமென்றும்



உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் கருதிய விஷயம் பெறப்படுதற்கு என்ற வாறு. கழி - உரிச்சொல். உவமையணி. (ஞ)

கூசஎ. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
ஞேயள *வின்றிப் படும்.

(இ - ள்.) தெரியான் - (தன்பகுதியும் அதற்குஏற்றஉணவும் காலமும்)

ஆராயாது, (வேண்டியதோருணவை வேண்டியதொருகாலத்து), தீ அளவு

அன்றி - வயிற்றுத்தீயளவன்றி, (ஒருவன்), பெரிது உண்ணின் - மிகஉண்ணு

மாயின், நோய் அளவு இன்றி படும் - (அவன்மாட்டு) நோய்கள் எல்லையற

வளரும்; (எ - று.)

தெரியாமைவினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான் வந்தன.

நோய் - சாதியொருமை.

இவையிரண்டுபாட்டானும், அவ்வகைஉண்ணுவழிப் படும் இழுக்குக்

கூறப்பட்டது.

(கு - ரை.) வயிற்றுத்தீ - பசிக்கனல்; ஜாடராக்கி: ஜீரணசக்தி யிதனால்

தான் உண்டாவது. அவன்மாட்டு - அவனிடத்தில். தெரியாமைவினைக்கு,

உண்பானுடையசரீரத்தின் பகுதியும் அதற்கு ஏற்ற உணவும் காலமும் என்

னுஞ் செயப்படுபொருள்கள், 'மருந்து' என்னும் இவ்வதிகாரத்திற்கு ஏற்ப

வந்தன என்க. நோய்-சாதியொருமை. அவ்வகை உண்ணுவழிப்படும் இழுக்கு-

தீயளவுதெரிந்து குறைவாக உண்ணுவிட்டால் உண்டாகுங் குற்றம். (எ)

கூசஅ.

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(இ - ள்.) (மருத்துவனாயினான்), நோய் நாடி - (ஆதுரன்மாட்டு நிகழ்கின்ற) நோயை (அதன்குறிகளான் இன்னதென்று) துணிந்து, நோய் முதல் நாடி - (பின்) அதுவருதற்காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, அது தணிக்கும் வாய் நாடி - (பின்) அதுதீர்க்கும்உபாயத்தினை அறிந்து, வாய்ப்ப செயல் - (அதனைச்செய்யும்வழிப்) பிழையாமற் செய்க; (எ - று.)

காரணம் - உணவு செயல் என முற்கூறியஇரண்டும். அவற்றை ஆயுள் வேதமுடையார் நிதானமென்ப. அவைநாடுதற்பயன் - நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்துசெய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, 'அது தணிக்கும்வாய்' என்றார்; "கழுவாயுமுள" என்றார், பிறரும். பிழையாமை - பழைய மருத்துவர் செய்துவருகின்ற முறைமையின் தப்பாமை.

(கு - ரை.) மருத்துவன் - வைத்தியன்: மருந்துதருபவன். ஆதுரான் -

நோயால் வருந்துவோன். அதனை - தீர்க்கும் உபாயத்தை. பிழையாமல் -

தவறாமல். நிதானம்-காரணம். 'நோய்முதல்' என்றது-நிதானத்தை. அவை -

அவ்வுணவுசெயல்களை. வாய் - நோயைத்தீர்க்கும் உபாயம்: முதலிய என்றத

---

* பி - ம்: அன்றி



ஞல் பற்றுப்போடுதல்

கலிக்கயிடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்கும். உதிரங்களைதல் - இரத்தத்தைவெளிப்படுத்தல். வாய் என்றது-வழி அல்லது உபாயமென்றபொருளில் வருதலை ''கழுவாயுமுள''என்ற இடத்துங் காண்க: இது - புறநானூறு நுசு - ஆம்பாடலிலுள்ளது. கழுவாய் என்பதற்கு-கழுவும் [போக்கும்]வழி அல்லது உபாயம்என இதற்குப் பொருள் காண்க. கழுவாய்—பிராயச்சித்தம். பிறர் என்றது - அச்செய்யுளையியற்றிய ஆலத்தூர்கிழாரை. வாய்ப்ப - பழைய மருத்துவர் செய்துவருகின்ற முறைமைக்கு ஏற்ப. செயல்- உடன்பாட்டு வியங்கோள்முற்று.

(அ)

௯௪௯. உற்றா னளவும் பிணியளவுங் காலமும்
கற்றான் கருதிச் செயல்.

(இ - ள்.) கற்றான் - (ஆயுள்வேதத்தினைக்) கற்ற மருத்துவன், (அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால்), உற்றான் அளவுஉம் - ஆதுரன் அளவினையும், பிணி அளவுஉம்-(அவன் கண் நிகழ்கின்ற) நோயின் அளவினையும், காலம்உம்- (தன்செயற்குஏற்ற) காலத்தினையும், கருதி - ( அந்நூல்நெறியால்) நோக்கி, செயல் - (அவற்றோடு பொருந்தச்) செய்க; (எ - று.)

ஆதுரன்அளவு - பகுதி பருவம் வேதனை வலிகளின் அளவு. பிணியளவு - சாத்தியம் அசாத்தியம் யாப்பியம் என்னும் சாதிவேறுபாடும், தொடக்கம் நடு ஈறு என்னும் அதன்பருவவேறுபாடும், வன்மைமென்மைகளும் முதலாயின. காலம் - மேற்சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூல் நெறியானும் உணர்வுமிகுதியானும் ஆராய்ந்து செய்க வென்பார், 'கற்றான் கருதிச் செயல்' என்றார்.

இவையிரண்டுபாட்டானும், அவ்விழுக்குப்பட்டுழி மருத்துவன் தீர்க்கு மாறு கூறப்பட்டது.

(கு - ரை.) அந்நூனெறியானோக்கி - வைத்தியசாஸ்திரத்திற் கூறிய முறைப்படி யாராய்ந்து. அவற்றோடு - உற்றானளவு பிணியளவு காலம் என்பவைகளுடன். உற்றான் - நோயுற்றவன். பருவம் - பிராயம்: இளமை முதுமைமுதலியன. வேதனை - துன்பம். வலி - உடல்வலிமை. சாத்தியம் - மருந்தினால் தீர்க்க

க்கூடியநோய்: அசாத்தியம் - மருந்தினால் தீர்க்கக்கூடாத நோய்: யாப்பியம் - அறத்தீர்க்கமுடியாது காலங்கழித்தற்கு உரியது. அதன் - நோயின். காலம் கூசுச - ஆங் குறளினுரையிற் கூறப்பட்டன. அவ்விழுக்கு-தியினளவறிந்து குறைவாகவுண்ணாமையால் நேர்ந்த நோயாகிய குற்றம். பட்டுழி - உண்டான இடத்து. கற்றான் - வினைமுதல். உற்றானளவு பிணியளவு காலம் என்ற இம்மூன்றும் பிழையாமல் சாஸ்திர வழியினாலும் தன்னுணர்வுமிகுதியினாலும் மருத்துவன் ஆராய்ந்து பரிகாரஞ்செய்யவேண்டு

மென்பதாம்.

(க)

கூ௫௦.

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

(இ - ள்.) மருந்து - (பிணிக்கு) மருந்தாவது;—உற்றவன் - (அதனை) உற்றவன், தீர்ப்பான் - (அதனைத்) தீர்க்கும் மருத்துவன்; மருந்து - (அவ





னுக்குக் கருவியாகிய) மருந்து, உழைச்செல்வான் - (அதனைப் பிழையாமல்) இயற்றுவான், என்ற அப்பால் நால் கூற்று - என்றுசொல்லப்பட்ட நான்கு

பகுதியையுடைய நான்குதிறத்தது; (எ - று.)

நான்குஎன்னும் எண் வருகின்றமையின், அதுநோக்கி 'அப்பால்'என்று ஒழிந்தார். 'நாற்கூற்றது' என்பது, விகாரமாயிற்று. அவற்றுள் உற்றவன் வகை நான்காவன - பொருளுடைமை, மருத்துவன்வழிநிற்றல், நோய்நிலை யுணர்த்தல்வன்மை, மருத்துத்துன்பம்பொறுத்தல் என இவை. தீர்ப்பான் வகை நான்காவன - *நோய்கண்டஞ்சாமை, ஆசிரியனை †வழிபட்டு ஓதிய கல்வியும் நுண்ணறிவு முடைமை, பலகாலும் தீர்த்துவருதல், மன மொழிமெய்கள் தூயவாதல் என இவை. மருந்தின்வகை நான்காவன - பலபிணிகட்கும் ஏற்றல், சுவைவீரியம்விளைவு ஆற்றல்களான் மேம்படுதல், எளிதின் எய்தப்படுதல், பகுதியோடுபொருந்துதல் என இவை. இயற்றுவான்வகை நான்காவன - ஆதுரன்மாட்டு அன்புடைமை, மனமொழிமெய்கள் தூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல்வன்மை, அறிவுடைமை என இவை. இவையெல்லாம் கூடியவழியல்லது பிணி தீராமையின், இத் தொகுதியையும் 'மருந்து' என்றார். ஆயுள்வேதமுடையாரும் இவை கால்களாகநடக்குமென்பதுபற்றி 'பாதம்' என்றும், இவை மாறுபட்டவழிச் சாத்தியமும் முதிர்ந்து அசாத்தியமா மென்றுங் கூறினர்.

இதனால், அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாம் தொகுத்துக் கூறப்பட்டன.

(கு - ரை.) உற்றவன் - நோயுற்றவன். உழைச்செல்வான் என்றது நோயாளியின் அருகேயிருந்து அவனிடத்துப்போய்த் தக்ககாலத்தில் மருந்து முதலியன கொடுப்பவனை. அப்பால் - அந்தப்பகுதி: அதாவது நான்குபகுதி. நான்குஎன்னும்எண் மேலே வருகின்றதனால்,

அதுநோக்கி, நான்கு என் று கூறவேண்டுவதை 'அப்பால்' என்று சுட்டிக்கூறியொழிந்தார்: சுட்டுமுன் வந்தது, செய்யுளாதலின். 'நான்கு பகுதியையுடைய நான்கு திறத்தது'

எனவே, உற்றவன் முதலிய நான்குதிறத்தில் ஒவ்வொன்றிலும் நான்கு பகுதி யிருத்தல் அறிக. நாற்கூற்றது என்பது - நாற்கூற்றுஎன்று விகாரப் பட்டுவந்தது. மருத்துவன் ெ ழிசிற்றல்-வைத்தியன் சொன்னபடி நடத்தல். மருத்துத் துன்பம் - மருந்தினலாகுந் துன்பம். விளைவு - பயன். ஆற்றல்நோயைத் தீர்க்குந் திறம். பகுதி-உடலின் இயல்பு. இயற்றுவான்-மருந்து செய்பவன்: வைத்தியன். இவையெல்லா ம் கூடினலல்லாமல் நோய் தீராமை யால் இந்நான்குஞ்சேர்ந்த தொகுதியை 'மருந்து' என்றெரன்க. அதனைநோயை. என்ற அப்பால் என்பன, என்றப்பாலெனத் தொக்கன. அங்க வியலில் நட்பியல் முற்றிற்று.

(௧௦)

அங்கவியல் முற்றிற்று.

---

---

* பி-ம்: பலபிணிநோய் காண்டற்கு அஞ்சாமை, † வழிபட்டு எய்திய.

## ஒழிபியல்.

இனி, அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்காதொழிந்தவற்றது இயல்பு பதின்மூன்று அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதற்கண் குடிமை கூறுகின்றார்.

(கு - ரை.) ஒழிபு-(கூறப்படாமல்) ஒழிதல்: கூறப்படாமலொழிந்த விஷயத்திற்கு ஆகுபெயர். இத்தொடர்-ஒழிபைப்பற்றிய இயல் என இரண்டனுருபும் பயனுந் தொக்கதொகையாக விரியும். போக்கியார்பாடலை நோக்குமிடத்து இந்த ஒழிபியலுக்குத் தூடியியல் என்று பெயர் வழங்கியதாகத்தெரிகின்றது.

## ௬௬ - ஆம்

## அதிகாரம்.—குடிமை.

அஃதாவது - உயர்ந்தகுடியின்கட் பிறந்தாரது தன்மை. உயர்ந்தகுடிப் பிறப்பு நால்வகைவருணத்தார்க்கும் இன்றியமையா தாகலின், அச்சிறப்புப் பற்றி, இது முன்வைக்கப்பட்டது.

(கு - ரை.) உயர் குடிப்பிறப்பென்பது பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திர ரென்கிற நால்வகைவருணத்தார்க்கும் இன்றியமையா ததலால், அச்சிறப்புப்பற்றி, மானம் பெருமை முதலிய மற்றைய குணங்களுக்கு முன் இக் குடிமை வைக்கப்பட்டதென்க.

௯௫௩. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

(இ - ள்.) செப்பம்உம் நாண்உம்-செம்மையும் நாணும், ஒருங்கு - சேர, இல் பிறந்தார்கண் அல்லது - குடிப்பிறந்தார்மாட்டல்லது, (பிறர்மாட்டு), இயல்பு ஆக இல்லை - இயற்கையாக உளவாகா; (எ - று.)

'இல்,' 'குடி' என்பன - ஈண்டு, உயர்ந்தவற்றின்மேல. செம்மை - கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாமை. நாண்-பழிபாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின், ஒருவர் கற்பிக்கவேண்டாமல் தாமே உளவாம்; பிறர்க்காயின், கற்பித்தவழியும் நெடிதுநில்லாவென்பதாம்.

(கு - ரை.) ஈண்டு - இவ்வதிகாரத்தில். 'இல்' என்று அடைமொழி யின்றிக் கூறப்பட்டதாயினும், உயர்ந்ததையே காட்டும்: குடியென்பது உயர்ந்ததைக் காட்டுவதை மேலே காணலாம். செப்பமாவது - திரிகரணங் களும் ஒற்றுமைப்பட்டிருத்தல். மடங்குதல் - கூசுதல். "கருமத்தானாணுதல் நாணு" என நாணுக்கு இலக்கணத்தை நூலாசிரியரே கூறுவர். செப்பம் நாண் என்ற இவ்விரண்டும், உயர்குடிப்பிறந்தார்க்கு ஒருவர்

கற்பிக்காமல் தாமாகவே
உண்டாகும்: உயர்குடிப்பிறவாதார்க்கோ இவை கற்பிக்கப்படினும் நெடிது
நில்லா என்பது கருத்து.
(க)

கூ௫உ. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(இ - ள்.) குடி பிறந்தார் - உயர்ந்தகுடியின்கட் பிறந்தார்,—ஒழுக்கம்
உம் வாய்மைஉம் நாண்உம் இ மூன்றுஉம் - (தமக்குஉரிய) ஒழுக்கம் மெய்ம்மை

•



நாண் எனப்பட்ட இம்மூன்றன்கண்ணும், இழுக்கார் - (கல்வியானன்றித்
தாமாகவே) வழுவார்; (எ - று.)

ஒழுக்கம்முதலியன மெய்ம்மொழிமனங்களின வாகலின், அம்முறைய
வாயின. இழுக்குதல் அறியாதுவருகின்றமையின், 'இழுக்கார்' என்றார்.

(கு - ரை.) கல்வியானன்றி - கல்வியினாற் சோர்வுபடாதிருத்தல் மாத்திரமல்லாமல். இச்செய்யுளிற் கூறப்பட்ட ஒழுக்கம் வாய்மை நாண் என்பன- உடல் மொழி மனம் என்பவற்றிற்கு உரியவைகளாதலால், அம்முறையில் வைக்கப்பட்டன. இழுக்குதல் என்பது - தம்மையுமறியாது தவறுதல். தம்மையறியாமலும் ஒழுக்கம் முதலியவற்றினின்று தவறாராதலால், 'குடிப்பிறந்தார் இழுக்கார்' என்றார். ஒழுக்கமென்பது - அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளினின்று வழுவாது நடத்தல்.

(உ)

கூருரு. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்

வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(இ - ள்.) வாய்மை குடிக்கு - (எக்காலத்தும்) திரிபில்லாத குடியின்கட் பிறந்தார்க்கு,—நகை-(வறியார்சென்றவழி) முகமலர்ச்சியும், ஈகை-உள்ளனகொடுத்தலும், இன் சொல் - இன்சொற்சொல்லுதலும், இகழாமை -

இகழாமையும், நான்குடம் - ஆகிய இந்நான்கும், வகை என்ப - உரிய கூறு
என்று சொல்லுவர் (நூலோர்); (எ - று.)
பொய்ம்மை திரிபுடைமையின், திரிபின்மையை 'வாய்மை' என்றும்;
"இல்லாரை எல்லாரும் எள்ளுவ" ராகலின், இகழாமையை அவர்கூறாக்கியுங்
கூறினர். குடி - ஆகுபெயர். 'நான்கின்வகை' என்பது பாடமாயின், வாய்
மைக் குடிப்பிறந்தார்க்குப் பிறரின்வேறுபாடு இந்நான்கான் உளதாமென்று
உரைக்க.
இவைமூன்றுபாட்டானும், குடிப்பிறந்தாரது இயல்பு கூறப்பட்டது.
(கு - ரை.) திரிபு - வேறுபடுகை. பொய்ம்மை யென்பது வேறுபடுதலுடைமை யாதலால்,
வேறுபடாமையை 'வாய்மை' என்றார். "இல்லாரை" என்று தொடங்கும் வாக்கியத்தின் கருத்து - "இல்லாரை எல்லாருமெள்ளுவர்" என்றபடி பொருளில்லாதவரை இகழ்வது உலகத்தார்க்கு இயற்கையாயினும் குடிப்பிறந்தார் அங்ஙனஞ் செய்யா ரென்பார், இகழாமையை அக் குடிப்பிறந்தாரின் செயலாக்கிக் கூறினரென்பது. "இல்லாரை யெல்லாருமெள்ளுவர்" என்ற இம்மேற்கோள் - திருக்குறள், எகூ - அதி. உ - ஆஞ் செய்யுளிலுள்ளது. 'குடி' என்பது - உயர்குடிப் பிறந்தவர்க்கு இடவாகு பெயர். 'நான்கும் வகை' என்பதற்குப் பதிலாக 'நான்கின் வகை' என்று பாடமாயின், 'வாய்மையுடைய

குடிப்பிறந்தவர்க்கு மற்றவர்களினும் வேறுந்தன்மை நகை ஈகை இன்சொல் இகழாமை என்னும் இந்நான்கினு லுண்டாகும் வகையாம்' என்று பொருளுரைத்துக் கொள்க.

(௩) ௯௬ - ஆம் அதிகாரம்.—குடிமை

சிறுஎ

௯௫௪. அடுக்கிய கோடி பெறினுங்
குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

(இ - ள்.) அடுக்கிய - பலவாக அடுக்கிய, கோடி - கோடியளவிற்றாய பொருளை, பெறின் உம் - பெற்றாராயினும், குடி பிறந்தார் - உயர்ந்தகுடியின்கட் பிறந்தார்,—குன்றுவ - (தம் ஒழுக்கம்) குன்றுந்தொழில்களை, செய்தல் இலர் - செய்யார்; (எ - று.)

'அடுக்கியகோடி' என்பது, ஈண்டு
றது. குன்றுந்தொழில்கள் - குன்றுதற்கு

எண்ணப்படுபொருள்மேல் நின்
ஏதுவாய தொழில்கள்.

(கு - ரை.) கோடி என்பது - அவ்வளவைக் கொண்ட பொருளுக்கு ஆகிவந்ததனால், எண்ணலளவையாகுபெயர். குன்றுதற்குக் காரணமான தொழில்களை 'குன்றுவ' என்றே கூறினர்; இது, ஒருவகையுபசாரவழக்கு. குன்றுவ - பலவின்பால் வினையாலணையும் பெயர். இதனால், பெருஞ்செல்வம்படைத்தாலும் குடிப்பிறந்தார் தம் ஒழுக்கங்குன்றாரென்பது, கூறப்பட்டது. (௪)

௯௫௫. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(இ - ள்.) பழங் குடி - தொன்றுதொட்டுவருகின்ற குடியின்கட் பிறந்தார், வழங்குவது - (தாம்)கொடுக்கும்பொருள், உள் வீழ்ந்தக்கண்உம் - (பண்டையிற்) சுருங்கியவிடத்தும், பண்பின் -(தம்) பண்புடைமையின், தலைப் பிரிதல் இன்று - நீங்கார்; (எ - று.)

தொன்றுதொட்டு வருதல் - 'சேரசோழபாண்டியர்' என்றாற்போலப் படைப்புக்காலந்தொடங்கி மேம்பட்டுவருதல். அவர்க்கு நல்குரவாவது - வழங்குவது உள்வீழ்வது: ஆகலின், அதனையே கூறினார்.

(கு-ரை.) பண்டையின்-முன்னிருந்த அளவினும். பண்புடைமை இன்ன தென்பதை ௯௯௦—ஆம் அதிகாரத்தின் அவதாரிகையிற் காண்க. வழங்குவது- பெயர். பழங்குடிக்கு நல்குரவாவது - தாம் வழங்குவது உள்வீழ்வதே யாதலால், நல்குரவை யடைந்தவிடத்தும் என்ற பொருளில் 'உள்வீழ்ந்தக் கண்ணும்'என்றார். வீழ்ந்தக்கண்-எதிர்காலவினையெச்சம், வறுமைக்காலத்திலும் குடிப்பிறந்தவர் தம் குணத்தினின்றுங் குறையாரென்றவாறு; "உடுக்கை யுலறியுடம்பழிந்தக் கண்ணும், குடிப்பிறப்பாளர் தம் கொள்கையிற் குன்றார்" என்பது; நாலடி.

(௫)

௯௫௩. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற

குலம்பற்றி வாழ்துமென் பார்.

(இ - ள்.) 'மாசு அற்ற குலம் பற்றி-வசையற்றுவருகின்ற தம்குடிமரபி ஞேடு ஒத்து, வாழ்தும்-வாழக்கடவேம்', என்பார் - என்றுகருதி (அவ்வாறு) வாழ்வார்; (வறுமையுற்றவழியும்), சலம் பற்றி - வஞ்சனையைப்பொருந்தி, சால்பு இல - அமைவிலவாய தொழில்களை, செய்யார்—; (எ - று.) சஉ௯

திருக்குறள்

அமைவின்மை - அம்மரபிற்கு ஏலாமை. இவைமூன்றுபாட்டானும், அவர் வறுமையுற்றவழியும் அவ்வியல்பின் வேறுபடா ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) வசை - பழிப்பு. குடிமரபு - குலத்தின்முறைமை. அமைவு இல ஆய - தகுதியற்றனவான. சலம் - வஞ்சனையென்ற பொருளைக் காட்டும் வடசொல். அவர்-குடிப்பிறந்தார். உயர்குடியிற்பிறந்த தம்முன்னோர்

கொண்டிருந்த முறையைக் கைவிடாது வாழவேண்டு மென்பவர், வறுமை
யிலும் தகாத செயலைச் செய்யா ரென்றவாறு.
(சு)

கூடுள.

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(இ - ள்.) குடி பிறந்தார்கண் குற்றம் - உயர்ந்தகுடியின்கட் பிறந்
தார்மாட்டு உளதாம் குற்றம், (தான் சிறிதேயாயினும்), விசும்பின் - விசும்பின்
கண், மதிக்கண் மறு போல் - மதியினிடத்து மறுப்போல, உயர்ந்துவிளங்கும்-
ஓங்கித்தோன்றும்; (எ - று.)

உயர்குடி முதலிய பொருள்வகை மூன்றற்கும் விசும்புமுதலிய உவமை
வகை ஒத்துப் பால்மாறுபட்டது. குடியது உயர்ச்சியானும், மதிபோன்ற
அவர்நற்குணங்களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படு
மென்பதாம்.

(கு - ரை.) விசும்பு - வானம். மதி - சந்திரன். மறு -

களங்கம். ஓங்கி -
மிக்கு. பொருள் வகை - உபமேயத்தின் வகைகள். இசைசெய்யுளில், உயர்ந்த
குடிக்கு விசும்பும், அக்குடிப்பிறந்துள்ளோர்க்கு - விசும்பிற்றோன்றும் மதி
யும், அவர் குற்றத்துக்கு - மதியினிடத்துள்ள களங்கமும் உபமானம். 'மதி'
என்னும் ஒருமைப்பால் உபமானத்திலும் 'பிறந்தார்' என்னும் பன்மைப்பால்
உபமேயத்திலும் வந்தமையால், இவ்வுவமையணி, பால் மாறுபட வந்ததாம்:
இவ்வாறு வருவதனை, "மிகுதலும் குறைதலுந் தாழ்தலுமுயர்தலும், பால்
மாறுபடுதலும் பாகுபாடுடைய" என்று தண் டியலங்காரநூலார் அமைப்பர்.
பிறந்த குடியினதுமேன்மையாலும், சந்திரன்போன்ற அவருடைய நற்கு
ணங்களோடு மாறுபடுதலாலும், குடிப்பிறந்தாரின் குற்றம், உலகெங்கும் பர
ந்து வெளிப்படு மென்பதாம். "அங்கண்விசும்பினகனிலாப் பாரிக்கும், திங்க
ளுஞ் சான்றோரு மொப்பர்மன் - திங்கள், மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்
றார் தெருமந்து, தேய்வரொருமாசுறின்" என்பது, ஒருசார் நோக்கத்தக்கது.
"பெருவரைநாட பெரியார்கட்டீமை, கருநரைமேற் சூடேபோற்றோன்றும் -

கருநரையைக், கொன்றன்னவின்னுசெயினுஞ் சிறியார்மே, லொன்றானுந் தோன்றாக்கெடும்," "கன்றிமுதிர்ந்த கழியப்பன்னாள் செயினும், ஒன்றுஞ் சிறியார்க ணென்றானுந் தோன்றாவாம், ஒன்றாய்விடினு முயர்ந்தார்ப்படுங் குற்றம், குன்றின்மேலிட்ட விளக்கு" என்பனவும் காண்க. (எ)

கூறுஅ. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

கூகூ - ஆம் அதிகாரம்.—குடிமை சாஙகூ

(இ - ள்.) நலத்தின்

கண்-குலநலமுடையனாய்வருகின்றவன் கண்ணே, நார் இன்மை தோன்றின் - ஈரமின்மைஉளதாமாயின்,—அவனை—, குலத் தின்கண் - அக்குலப்பிறப்பின்கண்ணே, ஐயப்படும்—, (உலகம்); (எ - று.)

நலமும், குலமும் - ஆகுபெயர். நாரின்மையால், கொடாமையும் கடுஞ் சொல்லும் முதலிய பெற்றாம். தோன்றின் என்பது, தோன்றாமை விளக்கி நின்றது. நலனுடையனாய்வருதலினிடையே இவை தோன்றலின், உள் ளது ஐயமாயிற்று. 'உலகம்' என்பது, அவாய்நிலையான் வந்தது. 'ஐயப் படல்' என்பது யாடமாயின், ஐயப்படுக என விதியாக்கி உரைக்க.

இவையிரண்டுபாட்டானும், வேறுபட்டவழிப் படும் இழுக்குக் கூறப் பட்டது.

(கு - ரை.) குலநலம் - குலத்தின் நன்மை: உயர்குடிப் பிறப்பு. ஈரம் - அன்பு. ஐயப்படும் உலகம் - உலகத்தவர்

சந்தேகிப்பர் என்றபடி: உயர்குடிப் பிறந்தும் அக்குடிப்பிறப்பிற்குரிய ஈகை முகமலர்ச்சியுடைமை முதலிய குண மில்லாமற் போமாயின், அவனை, 'அக்குடிப்பிறந்தவனோ? அன்றோ?' என்று உலகத்தார் ஐயப்படுவ ரென்றவாறு. நலம் என்னும் பண்புப்பெயர் - அதனை யுடையோனுக்கு ஆதலால் பண்பாகுபெயரும், குலமென்னும் இடப்பெயர் - அங்குத்தோன்றிய பிறப்பிற்கு ஆதலால் இடவாகுபெயருமாம். 'நாரின்மை தோன்றின்'
என்று நாரின்மையைக்கூறியது-அதனால்விளையும் கொடாமை முகமலர்ச்சியின்மை கடுஞ்சொல் முதலியவை தோன்றின் என்ற பொருளைக் காட்டும்: உபசாரவழக்கு. நலன் - குலநன்மை. இவை - ஈரமின்மையும், கொடாமையும், கடுஞ்சொல்லும் முதலியன. உள்ளது - உண்டாவது. ஐயப் படல் - உடன்பாட்டு வியங்கோள். வேறுபட்ட வழிப்படும் இழிக்கு - (உயர் குடிப் பிறந்தவர்தம் இயல்பினின்று) வேறுபட்டால் உண்டாகும் குற்றம்.(அ)

௯௫௯. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(இ - ள்.) நிலத்தில் கிடந்தமை - நிலத்தின் இயல்பை, கால் - (அதன் கண்முளைத்த) முளை, காட்டும்—; (அதுபோல), (குலத்தின் இயல்பை), குலத் தில் 'பிறந்தார் வாய் சொல் - அதன்கட் பிறந்தார் வாயிற்சொல், காட்

டும்—; (எ - று.)

கிடந்தமை - உள்ளபடி. முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந் தெரிதலின், இலைமுதலிய கூறுராயினர். ஆகவே, பொருளினும் செயல் முதலியன வேண்டாவாயின. குலத்து இயல்பு அறிதற்கருவி கூறுவார் போன்று, இன்சொல்வேண்டுமென்றவா றாயிற்று.

(கு - ரை.) முளைமாத்திரத்தாலே நிலத்தின் நன்மையும் தீமையுந் தெரிதலால், இலை முதலியன கூறுராயினராதலால், உபமேயத்திலும் குடிப்பிறந்தார் கூறும் சொல்மாத்திரத்தாலே அவர் பிறந்த குலத்ினது நன்மையுந் தீமையுந் தெரிதலால், குலத்தியல்பையறிதற்கு அவரது செயல்



முதலியவை வேண்டா வென்று கூறுராயினரென்க. 'குலத்தியல்பு' என்று தொடங்கும் வாக்கியத்தின் கருத்து - குலத்தியல்பை யறிதற்குச் சாதனமாகிய சொல்லைப்பற்றிக் கூறுவார் போன்று, குடிப்பிறந்தார்க்கு இன்சொல் வேண்டு மென்று கூறினாராயிற்றென்பது: "வடுப்படவைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார், காணுர்தம்வாயிற் சிதைந்து" என்றது, நாலடி. 'நிலத்திற் குரிய தன்மையைக் கால் காட்டும்' என்னும் உபமான வாக்கியத்தையும், 'குலத்தை அதிற்பிறந்தார் வாய்ச்சொல் காட்டும்' என்னும் உபமேய வாக்கியத்தையும் தனித்தனி நிறுத்தி, 'அதுபோல' என்ற உவமையுருபு கொடாமற் பிம்பபிரதிபாவம் தோன்றக்கூறினமையால், இச்செய்யுள்—எடுத்துக் காட்டுவமையணியாம். (௯)

௯௱௬௰. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்

வேண்டுக யார்க்கும் பணிவு.

(இ - ள்.) (ஒருவன்), நலம் வேண்டின் - (தனக்கு) நலனுடைமையை வேண்டுவனாயின், நாண் உடைமை வேண்டும் - (தான்) நாணுடையனாதலை வேண்டுக: குலம் வேண்டின் - குலனுடைமையை வேண்டுவனாயின், யார்க்கு உம் பணிவு வேண்டு க-(பணியப்படுவார்) யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக.

நலம் - புகழ்புண்ணியங்கள். வேண்டு மென்பது - விதிப்பொருட் டாய் நின்றது: "வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்" என்புழிப் போல. "அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர், தந்தை தாயென் றிவர்" எல்லாரும் அடங்க, 'யார்க்கும்' என்றார். பணிவு - "இருக்கை யெழலும் எதிர்செலவும்" முதலாயின.

இவையிரண்டுபாட்டானும், குடிமைக்குவேண்டுவன கூறப்பட்டன.

(கு - ரை.) பணியப்படுவார் - வணங்கி யுபசரிக்கத்தக்கவர். விதிப் பொருட்டு - விதித்தற்பொருளது. "இனைத்தெனவறிந்த சினைமுதற்கிள விக்கு, வினைப்படுதொகுதியினும்மை வேண்டும்" என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௩௩ - ஆஞ் சூத்திரம். இத்தனையென்று அறியப்பட்ட சினைப்பொருளை யுணர்த்துஞ் சொல்லுக்கும் முதற்பொருளை யுணர்த்துஞ் சொல்லுக்கும் முடிக்குஞ்சொல்லோடு கூட்டிச்சொல்லும்போது முற்றும்மைகொடுத்துச் சொல்லுக என்பது பொருள். வேண்டுமென்பது - ஒருவகைவியங்கோள்வினைமுற்று. "அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர், தந்தை தாயென்றிவர்க்குத் தார்வேந்தே,—முந்தை, வழிநின்று பின்னை வயங்குநீர்வேலி, மொழிநின்று கேட்டல் முறை" என்பது, புறப் பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம், ௩௩. அந்தணர் - பிராமணர். சான்றோர்-பெரியோர். அருந்தவத்தோர் - முனிவர். தம்முன்னோர் - தமை யன்மார்.பணிவாவது-தம்மைநாடி ஒருவர் வந்தபொழுது,தம்மிருக்கையினின்

றெழுதலும் எதிர்செல்லுதலும் முதலியன: "இருக்கையெழலு மெதிர்செலவு மேனை, விடுப்ப வொழிதலோடின்ன - குடிப்பிறந்தார், குன்றா வொழுக்க மாக் கொண்டார்" என்பது, நாலடியார், குடிப்பிறப்பு, ௩. இருக்கையெழல்-

•



இருக்குமிடத்தைவிட்டு எழுதல். எதிர்செலவு - எதிர்கொண்டு செல்லுதல்.
இது - எடுத்துக்காட்டுவமையணி.
(௯0)

## ௯௭ - ஆம்

## அதிகாரம்.—மானம்.

இனி, குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் தொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்றார். அஃதாவது - எஞ்ஞான்றும் தம்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வுவந்துழி உயிர்வாழாமையுமாம். இஃது அக்குடிப்பிறப்பினை சிறுத்துதலுடைமையின் அச்சிறப்புப்பற்றி முன்வைக்கப் பட்டது.

(கு - ரை.) நிலையின் - நிலைமையினின்று. தெய்வம் - ஊழ்வினை.

௯௬௧. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

(இ - ள்.) இன்றி அமையா - செய்யாதவழி(த் தாம்)

அமையாத, சிறப்பின ஆயின் உம் - சிறப்பினை யுடையவேயெனினும், குன்ற வருப - (தம்குடிப் பிறப்புத்)தாழ வருஞ்செயல்களை, விடல் - ஒழிக; (எ - று.)

அமையாமை - இறத்தல். 'குடிப்பிறப்பு' என்பது, அதிகாரமுறைமையான் வந்தது. 'இறப்பவரும் வழி இளிவந்தன செய்தாயினும் உய்க' என்னும் வடநூல்முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவைசெய்யற்க என்பதாம்.

(கு - ரை.) அமையாத -

இறத்தற்குக் காரணமான: அமைதல் - உயிரோடு பொருந்துதல். குடிமையென்ற அதிகாரத்திற்குப்பின் மானமென்ற இவ்வதிகாரமுள்ளதனுல் அவ்வதிகார முறைமைபற்றி, குன்றவரும் என்ற விடத்து குடிப்பிறப்பென்பது, வருவிக்கப்பட்டதென்க. இறப்பவரும் வழி - இறக்கநேருமிடத்து. இளிவந்தன - இழிவுதருஞ்செயல்கள். "ஜீவிதாத்யய மாபந்நோ,யோந்நமத்தியதஸ்ததঃ-ஆகாஶமிவபங்கேந,ந ஸ பாபேந லிப்யதே," "அப்யகார்யஶதம் க்ருத்வா - பர்த்தவ்யாமநுரப்ரவீத்" முதலியன காண்க. 'இறக்கும்படி நேர்ந்தபோது இழிதொழிலைச் செய்தாயினும் உயிர்பிழைக்க' என்று வடநூலில் தருமசாத்திரம் கூறினும், அம்முறைமையை மறுத்து, உடம்பினது

நிலையில்லாமையையும் மானத்தினுடைய நிலையுடைமையையும் நோக்கி, 'இளிவந்தவற்றைச் செய்யாதொழிக' என்று இதனாற் கூறுகின்றார். சிறப்பின - 'சிறப்பு' என்ற பகுதியினடியாகப்பிறந்த பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர்.

(க)

௯௬௨. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(இ - ள்.) சீரின் உம்-புகழ்செய்யுமிடத்தும், சீர் அல்ல-(தம்) குடிமைக்கு ஒவ்வாத இளிவரவுகளை, செய்யார்—; சீரொடு-புகழுடனே, பேர் ஆண்மை-மானத்தை (நிறுத்துதலை), வேண்டுபவர் - விரும்புவார்; (எ - று.)





எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றி, 'பேராண்மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின் பொருட்டாகவும் செய்யாரென்பதாம்.

(கு - ரை.) புகழ்செய்தல் - சொல் மூன்றனுள், இரண்டாவது

புகழையுண்டாக்குதல். 'சீர்' என்னுஞ்

தகுதியென்னும் பொருளது. மானத்தைப்

பேராண்மையென்றது - காரணப்பெயர் காரியத்தின்மேல் நின்றது. செய்யார்-தகுதியல்லாத காரியங்களைச் செய்யமாட்டார். உம்மை - உயர்வுசிறப்பு.

கூசுஙு.

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

(இ - ள்.) (குடிப்பிறந்தார்க்கு), பெருக்கத்து - நிறைந்த செல்வம் உள

தாயவழி, (யாவர்மாட்டும்), பணிதல் - பணிவு, வேண்டும்—; சிறிய சுருக்

கத்து-குறைந்த நல்குரவு உளதாயவழி, உயர்வு - பணியாமை, வேண்டும்—.

பணியாமை-தாழ்வாராமற்பழையவுயர்ச்சிக்கண்ணேநிற்றல். செல்வ

க்காலை அஃது உயர்ச்சிசெய்யத் தாம் தாழ்தலும், அல்லற்காலை அது தாழ்வு

செய்யத் தாம் உயர்தலும் வேண்டும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும், தாம் தாழ்தற்கு

ஏதுவாயின செய்யாமைச்

சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) குறைந்த - இழிவான, செல்வக்காலை - செல்வமுண்டான

பொழுது. அஃது - அச்செல்வம். அல்லற்காலை -
வறுமைத்துன்பம் வந்த
பொழுது. அது - அத்துன்பம். செல்வமுண்டான
காலத்தில் அச்செல்வம்
உயர்ச்சி செய்தலால் தாம் தாழ்தலும், செல்வம் சுருங்கிய
வறுமைக்காலத்
தில் அவ்வறுமை தாழ்வை விளைத்தலால் தாழ்வு
வராதபடி தாம் பழைய
வுயர்ச்சியில் நிற்றலும் வேண்டு மென்பதாம்.
(ங)

கூகூச. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(இ - ள்.) மாந்தர் - (குடிப்பிறந்த) மாந்தர், நிலையின்
இழிந்தக்கடை -
(தம்) உயர்ந்த நிலையை விட்டு (அதனினின்றும்)
தாழ்ந்தவழி, தலையின் இழி
ந்த மயிர் அனையர்-தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த
மயிரினை ஒப்பர்.

அந்நிலையை விடாதுநின்றவழிப் பேணப்படுதலும்,
விட்டுத் தாழ்ந்தவழி
இழிக்கப்படுதலும் உவமையாற் பெற்றாம்.

(கு - ரை.) தாழ்ந்தவழி - தாழ்ந்தபொழுது.
பேணப்படுதல் - விரும்பிப்
பாராட்டப்படுதல்.உவமையணி.தமது உயர்ந்தநிலையை

விட்டிடாமல் இருந்த
போது யாவராலும் விரும்பி மரியாதை செய்யப்படுதலும்,
தம்நிலையை விட்
டுத் தாழ்ந்தபோது எவ்ராலும் அலட்சியஞ்
செய்யப்படுதலும் உவமையாற் பெறப்படுமென்க. மயிர்
தலையிலிருக்கும்போது பேணப்படுதலும், ஆங்கு
நின்று வீழ்ந்திடின் அப்பாலெறியப்படுதலுங் காண்க.
(௲)

௯௬௫. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்,

## ௯௭ - ஆம் அதிகாரம்.—மானம்

ச்சந்

(இ - ள்.) குன்றின் அனையார் உம்-(குடிப்பிறப்பான்) மலைபோல உயர்ந்
தோரும்,—குன்றுவ - தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களை, குன்றி அனைய
செயின்-ஒருகுன்றியளவாயினும் செய்வராயின்,
குன்றுவர்-தாழ்வர்; (எ-று.)
'குன்றியனையவும்' என்னும் இழிவுசிறப்பு உம்மை,
விகாரத்தால் தொக்
கது. தாழ்தற்கு ஏதுவாய செயல்களாவன-இளிவந்தன.
சொற்பின்வருநிலை.
(கு - ரை.) குன்றி-குன்றிமணி: சிறுமைக்கு
எடுத்துக்காட்டப்பட்டது.
'குன்றியனைய' என்பதன்பின் இழிவுப்பொருளைக் காட்டும்
உம்மை, விகாரத்

தால் தொக்கது. இளிவந்தன - பழிக்கத்தக்கவை. குன்றுவ, அனைய-பெயர்கள்: 'அனைய' என்பதைக் குறிப்புமுற்று வினையெச்சப்பொருளில் வந்ததாகவும் கொள்ளலாம். "குன்றன்னார்" என்றார், கீழும். (ரு)

சுகூகூ. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

(இ - ள்.) (மானத்தைவிட்டு), இகழ்வார் பின் - (தன்னை) அவமதிப்பார் பின்னே, (ஒருவன்), சென்று நிலை-சென்று நிற்கின்ற நிலை,—புகழ் இன்று-(இவ்வுலகத்துப்)புகழ் பயவாது; புத்தேள் நாட்டு உய்யாது - (ஏனைப்)புத்தேணுலகத்துச் செலுத்தாது; மற்று என் - இனி (அவனுக்கு அது செய்வது) யாது? (எ - று.)

புகழ்பயப்பதனை 'புகழ்' என்றார். பயனுடைய இவ்விரண்டும் இன்றிக் கொன்னே மானங் கெடுகின்றது என்னே! என்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், அவைசெய்தற்குற்றம் கூறப்பட்டது.

(கு - ரை.) பயவாது - தாராது. ஏனை - மற்றை.

புத்தேளுலகம் - தேவ
லோகம். புகழ்இன்று - புகழ்தருவதில்லை.
புகழ்தருவதென்னும் பொருளில்
'புகழ்' என்றது -
காரியப்பொருள் காரணமாக உபசரிக்கப்பட்டது. பயனுய
இவ்விரண்டும் இன்றி - இம்மை மறுமைப் பயன்களாகிய
புகழும் தேவலோக
வாழ்வுமில்லாமல். கொன்னே - வீணய். அவை -
இளிவந்தன. மற்று-வேறு
என்னும் பொருளது.

(கூ)

கூகூஎ.

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

(இ - ள்.) ஒட்டார் பின் -
(தன்னை)இகழ்வார்பின்னே, சென்று—,
(பொருள்பெற்று), (அதனுல்), ஒருவன்—,
வாழ்தலின்-உயிர் வாழ்தலின், அ
நிலையே கெட்டான் எனப்படுதல் - அதுசெய்யாது இறந்தா
னென்று சொல்
லப்படுதல், நன்று - (அவனுக்கு) நன்று; (எ - று.)

ஒட்டுதல் -

*நிலேக்கண்ணே

பொருந்துதல். 'அந்நிலேயே' என்றது, செல்லாத முன்னே நின்று என்றவாறு; அப்பொழுதே என்றுமாம். 'புகழும் புத்தேள்நாடும் படவாதேனும் பொருள்பெற்று உயிர்வாழ்வாம்' என்பாரை நோக்கிக் கூறியது.

* பி - ம்: நிலேக்கண்ணே யென்றும்,



(கு-ரை.) செல்லாதமுன்னே நிலேக்கண்ணே நின்று-தன்னேயவமதிப்பார் பின்னே செல்லாத முன்னே நிலேயிலே (நின்று) இனி, அந்நிலேயே - பிறர் பின்னேசென்று பொருள்பெறவேண்டிய நிலேமை யேற்பட்ட அப்போதே யெனினுமாம். 'புகழும்'என்று தொடங்கும் வாக்கியத்தின்பொருள்-இம்மைப் பயனுகிய புகழும் மறுமைப்பயனுகிய மேலுலகமும் பெறுமற்போனுலும், மானத்தையிழப்பதாற்பொருள்பெற்று உயிர்வாழ்வோமென்பாரை நோக்கிக் கூறியது, இது என்பது. மானத்தையிழந்து பொருள்பெற்று வாழ்வதைக் காட்டிலும், மானத்தை யிழவாது உயிர்விடுதலே நன்றென்றவாறு. (எ)

கூகூஅ. மருந்தோமற் றூனேம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

(இ - ள்.) பெருந்தகைமை - உயர்குடிப்பிறப்பு, பீடு - (தன்)வலியாகிய மானம், அழியவந்த இடத்து - அழிய வந்துழி, (இறத்தலொழிந்து), ஊன் ஓம்பும் வாழ்க்கை-(பயனில்லாத) உடம்பினேக் காக்கும் வாழ்க்கை,—மற்று - பின்னும், மருந்துஓ - (இறவாமைக்கு) மருந்தாமோ? (எ - று.)

'மற்று' என்பது - மேற்சொல்லிய இறப்பினை மாற்றி நின்றது. நற்குணங் கட்கெல்லாம் இடனாதற் சிறப்புப்பற்றி 'பெருந்தகைமை' என்றும், அவை யெல்லாவற்றினும் அதற்கு வலியாதற் சிறப்புப்பற்றி 'பீடு' என்றும், அஃது அழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலின் அதனை 'ஊன்' என்றும், பின்னும் இறத்தல் ஒருதலை யென்பார் 'மருந்தோ' என்றுங் கூறினார். மானத்தின்தொழில் அதற்குஇடனாகிய குடிப்பிறப்பின்மேல் நின்றது.

(கு - ரை.) வந்துழி - வந்தவிடத்து. பின்னும் - மீண்டும். அவை - அந் நற்குணங்கள். அதற்கு - உயர்குடிப்பிறப்புக்கு. பீடு - வலிமைதரும் மானம். அஃது - மானம். வெற்றுடம்பு-மானத்தையிழந்த உடம்பு. ஒருதலை நிச்சயம். 'மற்று' என்னும் இடைச்சொல் - ''ஒட்டார்பின்'' என்னுங் கீழ்க்குறளிற் சொல்லிய கெட்டானெனப்படுதல் [இறத்தல்] என்ற தொழிலினை மாற்றி, இறவாமையென்னும் வினையைத் தந்துநிற்றலால், வினைமாற்றும். உயர் குடிப்பிறப்பிற்கு உரிய மானத்தின் தொழிலாகிய அழிவை அம்மானத்திற்கு இடனாகிய குடிப்பிறப்பின்மேலேற்றி,'பெருந்தகைமை பீடழிய'என்று கூறிய இது-இடத்து நிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேலாகிய உபசாரவழக் கின்பாற்படுமென்க. மானம் கெட்டாயினும் உயிர்வாழ்வது என்றும் இறவாமைக்கு மருந்தாமெனின், அவ்வாறு மானத்தை யிழந்தாலும்

இழக்கலாம்: அங்ஙனம் இல்லாமையால், நிலையற்ற உடலுக்காக நிலையான மானத்தை க் கிழப்பது, நன்றன்றென்பதாம். "மான வருங்கல நீக்கி யிரவென்னு, மீன விளிவினால் வாழ்வேன்மன் —ஈனத்தால் , ஊட்டியக்கண்ணு முறநிசேர்ந்திவ் வுடம்பு, நீட்டித்து நிற்குமெனின்" என்பது, இக்குறளின் கருத்தைக்கொண்டு வந்தது .

(அ)

கூகூசு.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின்.



(இ - ள்.) மயிர் நீப்பின் - (தன்மயிர்த்திரளின்) ஒருமயிர் நீங்கினும், வாழா - உயிர் வாழாத, கவரிமா - கவரிமாவை, அன்னார் - ஒப்பார், மானம் வரின் - (உயிர் நீக்கத்தான்) மானமெய்து மெல்லை வரின், (அதனைத் தாங்காது), உயிர் நீப்பர் - இறப்பர்; (எ - று.)

இழிவுசிறப்பு உம்மை, விகாரத்தால் தொக்கது. உயிரும் மானமும் உடன் நில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரை நீத்து எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை எய்துவரென்பதாம். உவமை, அவர்க்கு அஃது இயல்பு என்பது விளக்கின்றது.

(கு - ரை.) கவரிமா - ஒருசாதி மான்: வடமொழியில் 'சமரம்' எனப் படும். உயிர் நீக்கத்தான் மானம் எய்தும் எல்லவரின் - (தமது) உயிரைவிட்டால்(தமது)மானம் அழியாதுநிலைபெறுஞ் சமயம் வாய்த்தால். அதனைத் தாங்காது - அவ்வுயிரை வைத்திராது. 'நீப்பின்' என்றதன்பின், இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மானங்கெடாமலிருப்பதற்காக உயிரை விடுதல் உயர்குடிப் பிறந்தார்க்கு இயற்கையென்பது, கவரிமானின் உவமையாற் பெறப்படு மென்க. (௯)

௯௭௦. இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(இ - ள்.) இளிவரின்-(தமக்கு ஓர்) இழிவு வந்தவழி, வாழாத-(பொறுத்து உயிர்)வாழாது (அதனை)நீத்த, மானம் உடையார் - மானமுடையாரது, ஒளி - புகழ் வடிவினை, தொழுது ஏத்தும்-(எஞ்ஞான்றும்)தொழுது துதியாநிற்பர்: உலகு - உலகத்தார்; (எ - று.)

"புலவர்பாடும் புகழுடையோர் விசும்பின், வலவனேவா வானவூர்தி யெய்து"வ ராகலின், துறக்கச்செலவு சொல்லவேண்டாவாயிற்று.

இவை நான்குபாட்டானும், மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) அகனைநீத்த - உயிரைவிட்ட. புகழ்வடிவு - புகழுடம்பு: புகழினுற் பெயர் நிலைபெறுதல். "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவனேவா வானவூர்தி, எய்துப" என்ற மேற்கோள், புறநானூறு உஎ-ஆம் பாட்டிலுள்ளது. இதன் பொருள்:—புலவராற் பாடப்படும் புகழை யுடையோர் ஆகாயத்தினிடத்துப் பாகனுற்செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவர் என்பது. இதனுல், ஒளியுடையார் சுவர்க்கலோகத்தை யடைவரென்பது பெறப்படும். இம்மேற்கோள் "நிலவரை நீள் புகழாற்றிற் புலவரைப் போற்ருது புத்தேளுலகு" என்ற உஙச-ஆங் குறளினுரையிலும் எடுத்தாளப்பட்டுள்ளது. வானவூர்தி - ஆகாயத்திற்செல்லுந் தன்மையை புடைய வாகனம். இறக்கச் செலவு - (மானமழியாது) புகழ்பெற இறந்தவர் சுவர்க்கலோகத்துக்குச் செல்லுதல். மானப்பொருட்டு ஆய - மானத்தைப் பாதுகாத்தற்பொருட்டு அடைகிற. (கo)



## ௬அ - ஆம் அதிகாரம்.—பெருமை.

அஃதாவது - செயற்கு அரிய செய்தல், தருக்கு இன்மை, பிறர்குற்றங் கூருமை என்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை. நிலையினும் மேன்மேல் உயர்த்தற்பயத்தவாய இவை உளவாவது நிலையிற்ருழாமை உள்வழி யாகலின், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) தருக்கு இன்மை-செருக்கு இல்லாமை. உயர்த்தற் பயத்த ஆய - உயர்த்துதலாகிய பயனை யுடையனவான. உள்வழி - உள்ளவிடத்து.

௬௭௧. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒளி - ஒளியாவது,— உள்ளம் வெறுக்கை - (பிறராற் செயற்கரிய செய்வே மென்று கருதும்) ஊக்கமிகுதி; ஒருவற்கு - ஒருவனுக்கு, இளி - மாசாவது,—அஃது இறந்து வாழ்தும் எனல்-அச்செயலை யொழிந்து உயிர்வாழக்கடவே மென்று கருதுதல்; (எ-று.)

ஒளி - தான் உளனுயகாலத்து மிக்குத் தோன்றுத லுடைமை; "ஒளி நிறு னோக்குபுகழ் செய்யான்" என்றார் பிறரும். மேலும் "செயற்கரிய செய்வார் பெரியர்" என்றாராயினும், ஈண்டு அவை அளவிறந்த ஒப்புரவு ஈகை முதலியவாம். அவற்றினான் ஆய பெருமையை அதன் காரணத்தின்மே லிட்டு 'உள்ளவெறுக்கை' என்றும், அதுதன்னையே அதன்காரியமாகிய ஒளி யாக்கியுங் கூறினார். இவ்வாறு அதன் எதிர்மறைக்கண்ணும் ஒக்கும்.

இதனால், பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.) செயற்குஅரிய - செய்யமுடியாதவற்றை. ஊக்கம் - மனக் கிளர்ச்சி. மாசு - விளக்கமின்மை, பிரசித்தியில்லாமை. அச்செயலை - செயற் கரிய செய்யக்கருதுதலை. "ஒளிநிறுனோக்குபுகழ் செய்யான்" என்னும் மேற் கோள், நாலடி, செல்வநிலையாமை க - ஆம் பாட்டிலுள்ளது. இதன் பொருள்:—ஒளி நிறுன் - (தனது) விளக்கத்தை நிலை நிறுத்தான்: ஒங்கு புகழ்செய்யான் - சிறந்த கீர்த்தியைச் சம்பாதியானென்பது. மேலும் - முன்னும். "செயற்கரிய செய்வார் பெரியர்" என்பது - திருக்குறள், நீத்தார் பெருமை, சு - ஆம் பாட்டிலுள்ளது: 'இயமம் நியமம் முதலிய செய்தற்கரியவைகளைச் செய்பவர் பெரியவர்' என்பது அதன்பொருள். நீத்தார் பெரு

மையில் இயமம் முதலிய செய்வார் பெரியோரென்ற கருத்தினால், "செயற்
கரிய செய்வார் பெரியர்"
என்றாராயினும், இல்லறத்தார்க்குப் பெருமையை
யுண்டாக்குவன அளவிறந்த உதவி
ஈகைமுதலியனவேயா மென்க.

ஈண்டு - இங்கே. அவை - செயற்கு அரியன. ஒப்புரவு -உலக நடையை யறி
ந்து செய்யும் உபகாரம். உள்ளவெறுக்கை - மனச்செல்வம்: மனவெழுச்சி:
மனவெழுச்சியாற் செய்யப்படுவதாகிய அளவிறந்த உபகாரம், ஈகை முதலிய
வற்றினாலாகிய பெருமையைக் காட்டியதால், இது - காரணத்தாற் காரி யப்பொருளைக் கூறிய
உபசாரவழக்கு: உள்ளவெறுக்கை - காரணமும்,
பெருமை - அதன்காரியமு மாதல் காண்க.

உபசாரவழக்காற் பெருமை.

கூ௭ - ஆம் அதிகாரம்.—பெருமை சசள

யென்ற பொருளை

முடிவாகக் காட்டும் உள்ளவெறுக்கையையும், அப்பெரு
மையின் காரியமாகிய ஒளியையும் ஒற்றுமைப்
படுத்தி,'ஒளியொருவற் குள்ள வெறுக்கை' என்றார்:

பெருமையால் ஒளியுண்டா மென்க. தான்உளனுய காலத்து - (இவ்வுலகத்தில்) தான் சீவித்திருக்கும்போது. இவ்வாறு இதன் எதிர்மறைக்கண்ணும் ஒக்கும் - 'ஒளியொருவற்குள்ளவெறுக்கை' என்ற முதல் வாக்கியத்திற்கு எதிர்மறையாகவுள்ள 'இளியொருவற்கு அஃதிறந்து வாழ்துமெனல்' என்ற இரண்டாம்வாக்கியத்திலும் இவ்வாறுவந்துள்ளது; இளிவை அதன்காரணத்தின்மேலிட்டு 'அஃது இறந்து வாழ்துமெனல்' என்றும், அதனையே அதன்காரியமாகிய இளியாக்கியும் கூறினமைகாண்க. ஊக்கமிகுதி யில்லாமையாற் பெருமையில்லாதவர்க்கு ஒளியின்றி இளியே யுண்டாகு மென்பது, இரண்டாம் வாக்கியத்தின் கருத்து. (க)

கூ௭௨. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(இ - ள்.) எல்லா உயிர்க்குஉம் - எல்லாமக்களுயிர்க்கும், பிறப்பு ஒக்கும்- (பொதுவாகிய) பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், சிறப்பு ஒவ்வா - (பெருமை சிறுமை எனப்பட்ட) சிறப்பியல்புகள் ஒவ்வா: செய் தொழில் வேற்றுமையான் - (அவை)செய்யுந் தொழில்களது வேறுபாட்டான்; (எ - று.)

வேறுபாடு - நல்லனவும் தீயனவும் இரண்டுமாயினவும் இரண்டு மல்ல வாயினவு மாய அளவிறந்த பாகுபாடுகள்.

வினைவயத்தாற் பஞ்சபூதபரிணாமமாகிய யாக்கையைப் பொருந்திநின்று அதன்பயனனுபவித்தல் எல்லாவருணத்தார்க்கும் ஒத்தலின் 'பிறப்பொக்கும்' என்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலின் 'சிறப்பொவ்வா' என்றும் கூறினர்.

(கு - ரை.) வினைவயத்தால் - கர்மவசத்தால். பஞ்சபூதபரிணாமம்-நிலம் நீர் தீ காற்று வானம் என்னும் ஐம்பெரும்பூதங்களின் விகாரப்பாட்டினலாகியது. அதன்-கருமத்தின். கட்டளைக்கல் - உரைகல். "பெருமைக்குமேனைச் சிறுமைக்குந்தத்தங், கருமமே கட்டளைக்கல்" என்றார், தெரிந்து தெளிதலென்ற அதிகாரத்தில். மனிதரடையும் பெருமையையும் மற்றைச்சிறுமையையும் தப்பாமல் அறிவிக்குங் கருவி அவரவர்செய்தொழிலே யென்பது, இதன்பொருள். ஏதுவணி.

(௨)

௯௭௩. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(இ - ள்.) மேல் அல்லார் - (செயற்கரியசெய்கலாது)சிறியராயினர், மேல் இருந்தும் - உயர்ந்த அமளி முதலியவற்றின்மிசை இருந்தாராயினும், மேல் அல்லர் - பெரியராகார்: கீழ் அல்லவர் - (அவைசெய்து) பெரியராயி னர்,—கீழ் இருந்தும்-தாழ்ந்த வறுநிலத்து இருந்தாராயினும், கீழ் அல்லார்- சிறியராகார்; (எ - று.)



மேலிருத்தல் கீழிருத்தல்களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ் களாற் பெருமை சிறுமைகளும் கருதப்பட்டன.

இவையிரண்டுபாட்டானும், முறையே குடிமைமாத்திரத்தானும் செல்வமாத்திரத்தானும் அஃது உளதாகாமை கூறப்பட்டது.

(கு - ரை.) செய்கலாது - செய்யமாட்டாமல். அமளி - படுக்கை; ஆசனம். மிசை - மேல். அவைசெய்து - செய்தற்குஅரியவற்றைச்செய்து.

வறுநிலம்-அமளிமுதலியன இல்லாத வெறுந்தரை.
அஃது-பெருமை. உம்மை
கள்-முறையே உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பும்.
முரண்விளைந்தழிவணி. (ரு)

கூஎச. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(இ - ள்.) ஒருமை மகளிர் ஏ
போல-கவராதமனத்தினையுடைய மகளிர்
(நிறையின்வழுவாமல் தம்மைத் தாம் காத்துக்கொண்டு
ஒழுகுமாறு) போல, பெருமைஉம் -
பெருமைக்குணனும்,—தன்னை தான் கொண்டு ஒழுகின் -
(ஒருவன் நிறையின்வழுவாமல்) தன்னைத் தான் காத்துக்கொண்டு ஒழுகுவா
னாயின், உண்டு - (அவன்கண்) உண்டாம்; (எ - று.)

பொருளின்தொழில், உவமையினும் வந்தது. கற்புஉண்டாதல்தோன்ற
நின்றமையின், உம்மை - எச்சவும்மை. ஒழுகுதல் - மனமொழிமெய்களை
யொடுக்கி ஒப்புரவுமுதலிய செய்துபோதல்.

இதனால், அஃது உளதாமாறு கூறப்பட்டது.

(கு - ரை.) கவராத - சஞ்சலப்படாத: பலரிடத்துஞ்செல்லாத. நிறை-
நெஞ்சை நல்லநெறியில் நிறுத்தல். பொருள் - உபமேயம். உபமேயத்தின்
தொழிலான 'தன்னைத்தான் கொண்டொழுகின்' என்பது, 'ஒருமைமகளிர்'
என்ற உபமானத்திற்குங் கூட்டப்பட்டது;
ஒருமைமகளிர்க்குத் தம்மைத் தாம்
காத்துக்கொண்டொழுகலாவது - கற்புடையரென்ற தம்பேர்

நிலநிற்கு மாறு அக்கறபைக் குறிக்கொண்டு பாதுகாத்தல்: பெருமையுடையார்க்குத் தம்மைத் தாம் காத்துக்கொண்டொழுகுதலாவது - பெரியாரென்ற தம்பெயருக் கேற்ப மனமொழிமெய்களை யொடுக்கி உபகாரம் கொடை முதலியன செய்து போதல். 'பெருமையும்' என்றவிடத்து உம்மை, கற்புண்டாதல் தோன்றநின்றமையின், எச்சவும்மையாம். அஃது - பெருமை. உவமையணி.

கூஎரு. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

(இ - ள்.) பெருமை உடையவர் - (அவ்வாற்றால்) பெருமையுடையரா யினர், (தாம் வறியராயவழியும்), அருமை உடைய செயல்-(பிறராற்செய்தற்கு)
அரியவாய (தம்) செயல்களை (விடாது),
ஆற்றின்-(அவைசெய்யும்) நெறியால், ஆற்றுவார் -
(கடைபோகச்செய்தலை) வல்லராவர்; (எ - று.)

'வறியராயவழியும்' என்பது, முன்செய்துபோந்தமை தோன்ற 'பெருமையுடையவர்' என்றதனானும், 'ஆற்றுவார்' என்றதனானும் பெற்றாம்.

இதனால், அதனையுடையார்செய்தி கூறப்பட்டது.



(கு - ரை.) அவ்வாற்றால் - கீழ்க்கூறியவகையால்: தம்மைத்தாம் கொண்டொழுகுதலால். ஆற்றின் - வழியால். கடைபோக - முற்றமுடிய.

அதனை - பெருமையை.

(௫)

௯௱௬௬. சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்

பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(இ - ள்.) பெரியாரை - (அப்பெற்றியாராய) பெரியாரை, பேணி - வழிபட்டு, கொள்வேம் - (அவரியல்பினை யாம்)கோடும், என்னும்—, நோக்கு - கருத்து,—சிறியார் உணர்ச்சியுள் - (மற்றைச்) சிறியராயினார்மனத்தின்கண், இல்லை - உளதாகாது; (எ - று.)

குடிமை செல்வம் கல்வி என்றிவற்றது உண்மைமாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு,அவை நமக்கு இயல்பென்று அமைந்திருப்பாரை வழிபட்டு அஃது உடையராதல் கூடா தென்பதாம்.

(கு - ரை.) அப்பெற்றியர்-அத்தன்மையர்: தம்மைத்தாம் கொண்டொழுகிப் பெருமைபெற்றுப் பிறராற்செயற்கரியவற்றை வறுமையிலும் கடையோகச்செய்யவல்லவர். கோடும் - கொள்வோம். உண்மை - இருத்தல். வியந்து - நன்குமதித்து. தம்மைவியந்து - செருக்கியென்றபடி. அவை-குடிமை முதலியன. அமைந்து - அடங்கி. வழிபட்டு - நன்குமதித்துப்பணிந்து உபசரித்து. வழிபட்டு என்றதன்பின் 'அதன்மூலமாக' என்று வருவித்துக்கொள்ளின் நலம். அஃது - பெருமை.

(௬)

௯௱௭௭. இறப்பே புரிந்த தொழிற்றாஞ்

சிறப்புந் தான்

சீரல் லவர்கட் படின்.

(இ - ள்.) சிறப்பு தான்உம் -

(தனக்குஒக்கும்பெரியாரிடத்து அமைந் திருத்தலைச் செய்வதாய) சிறப்புத்தானும்,—சீர் அல்லவர்கண் படின் - (தன

க்குஒவ்வாத) சிறியாரிடத்துப் படுமாயின், இறப்புஎ புரிந்த தொழிற்று ஆம்-

(அதனையொழிந்து) தருக்கின்கண்ணே மிக்க செயலை யுடைத்தாம்; (எ - று.)

தருக்கினை மிகச்செய்யு மென்பதாயிற்று. சிறப்பு - குடிமைசெல்வங்

கல்விகளினுய மிகுதி.

இவையிரண்டுபாட்டானும், அஃதிலார்செய்தி

கூறப்பட்டது.

(கு - ரை.) தனக்கு ஒக்கும் - தான் இருத்தற்கு ஏற்ற இடமான.

அமைந்திருத்தல் - அடங்கியிருத்தல், படும் - உண்டாகும், அமையும். அதனை -

அமைதியை. இறப்பு - வரம்புகடத்தல், தருக்கு: செருக்கு. புரிதல் மிகுதல்:

தலை "வனப்புப்புரிந்தகையினுன்" என்ற பரிபாடலினும் காண்க. ஏ-பிரிநிலை.

தொழிற்று - ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்
பெயர்: உம் - உயர்வு
சிறப்பு. அஃது இலார் - பெருமையில்லாதவர்.
(எ)

கூஎவு. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.
57



இ - ள்.) பெருமை - பெருமையுடையார், என்றூம் பணியும் - அச்
சிறப்பு உண்டாய ஞான்றும் (தருக்கின்றி) அமைந்தொழுகுவர்; சிறுமை-மற்
றைச் சிறுமையுடையார், (என்றும்) - அஃது இல்லாதஞான்றும், தன்னை
வியந்து அணியும் - தம்மை வியந்து புனையாநிற்பர்; (எ - று.)

பொருளின்தொழில்கள், பண்பின்மேல் ஏற்றப்பட்டன: இஃது "அற்ற
மறைக்கும் பெருமை" என்புழியும் ஒக்கும். 'என்றும்' என்பது பின்னும்
வந்துஇயைந்தது. 'ஆம்' என்பன இரண்டும் - அசை. புனைதல் - பிறரின்

தமக்குளர்மிகுதியை ஏற்றுக்கோடல். இதற்கு - உயர்ந்தார் தாழ்வார், தாழ்ந்

தார் உயர்வார், இஃது ஒரு விரோதம் இருந்தவாறு என்! என உலகியலை

வியந்துகூறிற் ருக்குவாரும் உளர்.

(கு - ரை.) அச்சிறப்பு - கீழ்க்கவியிற்கூறியது. உண்டாய ஞான்றும் -

உண்டானகாலத்தும். அஃது - அச்சிறப்பு. பொருள் - பண்பியென்றபடி.

பெருமையுடையாரின் தொழிலாகிய பணிதலும், சிறுமையுடையாரின்

தொழிலாகிய அணிதலும், 'பெருமைபணியும், சிறுமை யணியும்'எனப் பண்

பின்மேலேற்றிக் கூறப்பட்டன; இவை, பண்பியின் வினைகளைப் பண்பின்

வினைகளாகக் கூறிய உபசாரவழக்குகளாகும். இவ்வதிகாரத்துப் பத்தாங்குற

ளில் "அற்றமறைக்கும் பெருமை" என்பதும், இவ்வாருன உபசாரவழக்கே.

இஃது-இவ்விலக்கணவமைதி. முதல் வாக்கியத்திலுள்ள 'என்றும்' என்பது,

இரண்டாவதுவாக்கியத்திலும் எடுத்துக் கூட்டப்பட்டது. அசை - பொருளை

யுணர்த்தாதசொல். பிறரின்-அயலாரைக் காட்டிலும்.

எற்றுக்கோடல்-எறிட்

டுக்கொள்ளுதல். இனி, இக்குறளுக்கு,—பெருமை - உயர்ந்தார், என்றும்-எந்

நிலையிலும், பணியும்-தாழ்வார்: சிறுமை-தாழ்ந்தாரோ, என்றும்—, தன்னை

வியந்து-தம்மைமேம்படுத்தி, அணியும் - உயர்குவர்: (இஃது ஒரு விரோதம் இருந்தவாறு என்னே!)என, உலகியலைவியந்து கூறியதாகப் பொருள் காண்பாரு முளர்."தாழ்ந்தோருயர்வரென்று மிக்குயர்ந்தோர் தாழ்வரென் றுமறஞ், சூழ்ந்தோருரைக்குமுரை கண்டாம்" என்ற பிரபுலிங்கலீலையும் காண்க. (அ)

௯௭௬. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

(இ - ள்.) பெருமை - பெருமைக்குணமாவது, பெருமிதம் இன்மை -

(காரண முண்டாயவழியு மஃது இயல்பாதல்நோக்கித்) தருக்கின்றியிருத்தல்;

சிறுமை - சிறுமைக்குணமாவது, பெருமிதம் ஊர்ந்து விடல் - (அஃது இல்

வழியும்அதனையேற்றுக்கொண்டு) தருக்கின்முடிவின் கண்ணே நின்றுவிடுதல்.

அளவறத் தருக்குதலென்பதாயிற்று. 'விடும்' என்று பாடமோதுவா

ரும் உளர்; முற்றுத்தொடரும் எழுவாய்த்தொடரும் யின், அது பாடமன்மை அறிக.

தம்முள் இயையாமை

(கு-ரை.) காரணம் -

பெருமைபாராட்டுதற்குக்காரணமான உயர்குடிப் பிறப்பும் கல்விப்பொருளும் செல்வப்பொருளும். அஃது - அப்பிறப்புமுதலிய

வற்றினமைதி. ஏற்றுக்கொண்டு - உளதாகக்

கற்பித்துக்கொண்டு. முடிவு -

௯௯ - ஆம் அதிகாரம்.—சான்றாண்மை

சஅக்

முடிந்த எல்லை. பெருமிதமூர்ந்துவிட லென்பதன்கருத்து, அளிவறத் தருக் குதலென்பது. முற்றுத்தொடர் - முதல்வாக்கியம்: அதில் பெருமையென் னும் பெயர்ப்பயனிலை பெருமிதமின்மையென்னும் எழுவாயோடுதொடர்ந் தது. எழுவாய்த்தொடர் - இரண்டாம்வாக்கியமாகிய'சிறுமைபெருமிதமூர்ந்து விடும்' என்பது: அதில் சிறுமையென்னும் எழுவாய் ஊர்ந்துவிடும் என்னும் முற்றைக்கொண்டு முடிதல் காண்க. இந்த இரண்டுவாக்கியங்களும் ஒருவழிப் படாமல் மாறுபடுதல் ப்ரக்ரமபங்கம் [எடுப்பழிவு] என்னுங் குற்றமாகு மாத லால், 'தம்முளியையாமையின் அஃது பாடமன்மையறிக' என்றார். பெருமித மூர்ந்துவிட லென்ற பாடத்தில் இரண்டு வாக்கியமும் எழுவாய்த்தொடராம். பெருமிதம் - எல்லாரோடும் ஒப்பகில்லாது பேரெல்லையாகநிற்றல். ஊர்ந்து - மேற்கொண்டு. (௯)

௯௭0. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(இ - ள்.) பெருமை
(பிறர்மானத்தையே கூறி)

- பெருமையுடையார், அற்றம் மறைக்கும் -
அவமானத்தை மறையாநிற்பர்; சிறுமை - மற்
றைச் சிறுமையுடையார், குற்றம்
குற்றத்தையே கூறிவிடுவர்; (எ -
எ கூறிவிடும் - (பிறர்குணத்தைமறைத்துக்)
று.)

மறைத்தலும், கூறலும், ஏனையிடத்தும்
பெயர். தான் என்பது - அசைநிலை.

இயைந்தன. அற்றம் - ஆகு

இவைமூன்றுபாட்டானும், இருவர்செயலும்

ஒருங்குகூறப்பட்டன.

(கு - ரை.) மானம் - பெருமைக்குணம். ஏனையிடத்தும் - மற்றையிடத்திலும்: 'மறைத்தல்' என்பது - சிறுமை யென்றவிடத்தும், 'கூறல்' என்பது-பெருமை யென்றவிடத்துமாக இயைதல் காண்க. அற்றம் - சோர்வு; சோர்வினாலுளதாகும் அவமானத்தை 'அற்றம்' என்றது - கருவியாகு பெயர். ஏ - பிரிநிலை. 'விடு' என்பது துணிவுப்பொருளை யுணர்த்தும்; மூந்தின குறளிலும் இது. இருவர் - பெருமையுடையாரும், சிறுமையுடையாரும்.பண்பியின்தொழில் பண்பின்மேல் ஏற்றிக்கூறப்பட்ட உபசாரவழக்கை, 'பெருமை அற்றமறைக்கும்: சிறுமைகுற்றமே கூறிவிடும்' என இத்தகுறளிலும் காண்க. அசையெனினும், அசைநிலையெனினும் ஒக்கும். (௬0)

## ௯௯ - ஆம் அதிகாரம்.—சான்றாண்மை.

அஃதாவது - பலகுணங்களானும் நிறைந்து
அவற்றை ஆடல்தன்மை. 'பலகுணங்களானும்' என்பது

சாலுதற்றொழிலாற் பெறப்படுதலின், 'அவற்றை' என்பது வருவிக்கப்பட்டது. பெருமையுள் அடங்காத குணங்கள் பல வற்றையும் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃது அதன்பின் வைக்கப் பட்டது.

(கு - ரை.) சான்றாண்மை யென்பதற்கு - நிறைந்த ஆளுந்தன்மை என்று பொருளாதலாலும், நிறைதலென்னும் பொருளுள்ள 'சாலுதல்' என்



னுந்தொழிலாற் பலகுணங்களானுமென்று பெறப்படுதலாலும், ஆளுதலென்ற தொழிற்கு இயைய அப்பலகுணங்களை யென்ற செயப்படுபொருள் வருவிக் கப்பட்டது. தொகுத்து - ஒருசேர அடக்கி. இஃது - இவ்வதிகாரம். அதன் பின் - பெருமையென்னும் அதிகாரத்திற்குப்பின்.

கூ௮க. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

(இ - ள்.) கடன் அறிந்து - (நமக்குத்)தகுவது (இது)வென்று அறிந்து, சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு-சான்றாண்மையை மேற்கொண்டு ஒழுகு வார்க்கு, நல்லவை எல்லாம் கடன் - நல்லனவாயகுணங்களெல்லாம் இயல் பாயிருக்கும், என்ப - என்றுசொல்லுவர், (நூலோர்); (எ - று.)

சிலகுணங்கள் இலவாயவழியும், உள்ளன செய்துகொண்டனவாயவழி யும் சான்றாண்மையென்னுஞ் சொற்பொருள் கூடாமையின், நூலோர் இவ் வேதுப்பெயர்பற்றி அவரிலக்கணம் இவ்வாறுகூறுவ ரென்பதாம்.

(கு - ரை.) கடன் - கடமை. நூலோர் - சாஸ்திரமுணர்ந்தவர். உள்ளன செய்துகொண்டன ஆயவழியும் - உள்ளகுணங்கள் இயல்பினலமையாமற் செயற்கையாக ஏற்றுக்கொண்டனவானபொழுதும். சொற்பொருள் - சொல் லின்பொருள். கூடாமையின் - பொருந்தாதாதலால். இவ்வேதுப்பெயர் - சான்றாண்மையென்னுங் காரணப்பெயர். சான்றோர்க்கு நல்லனவாகிய

௯௮௨. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ள தூஉ மன்று.

(இ - ள்) சான்றோர் நலன் - சான்றோர்நலமாவது, குணம் நலம் ஏ -
குணங்களான் ஆய நலமே; பிற நலம் - (அஃது) ஒழிந்த உறுப்புக்களான் ஆய
நலம், எ நலத்து உம் உள்ளது அன்று - ஒருநலத்தினும் உள்ளதன்று; (எ-று.)

அகநலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப் புறநலத்தை 'பிறநலம்'
என்றும், அது குடிப்பிறப்புங் கல்வியும் முதலாக நூலோர்எடுத்த நலங்களுட்
புகுதாமையின் 'எந்நலத்துள்ள தூஉ மன்று' என்றுங் கூறினார்.

இவையிரண்டுபாட்டானும், சால்பிற்குஏற்ற குணங்கள் பொதுவகை
யாற் கூறப்பட்டன.

(கு - ரை.) உறுப்புக்கள் - அவயவங்கள். நலம் - அழகு. அகநலம் -
மனத்தின் நன்மை. குணநலமேயென்றதனால், அகநலம் பிரிக்கப்பட்டதென்க.
ஏ - பிரிநிலை. புறநலம் - உடம்பினழகு. அது - புறநலம். புகுதாமையின் -
சேராததலால். சால்பு - சான்றாண்மை. அளபெடை -

இன்னேசைதர

வந்தது.

(உ)

கூஉரு. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம்
வைந்துசால் பூன்றிய தூண்.

வாய்மையொ

(இ - ள்.) அன்பு - (சுற்றத்தார்மேலேயன்றிப்
பிறர்மேலும் உளதாய அன்பும், நாண் - (பழிபாவங்களின்)
நாணலும், ஒப்புரவு - (யாவர்மாட்டும்)

கூக - ஆம் அதிகாரம்.—சான்றாண்மை

கூஉரு

ஒப்புரவுசெய்தலும், கண்ணோட்டம் - (பழையார்மேல்) கண்ணோடலும், வாய்மையொடு - (எவ்விடத்தும்) மெய்ம்மைகூறலும் என, சால்பு ஊன்றிய தூண் ஐந்து - சால்பென்னும்பாரத்தைத் தாங்கிய தூண்கள் ஐந்து; (எ-று.)

எண்ணொடு, முன்னவற்றோடுங் கூடிற்று. இக்குணங்கள் இல்வழிச் சால்பு நிலைபெறுமையின், இவற்றை 'தூண்' என்றார். ஏகதேசவுருவகம்.

(கு - ரை.) சுற்றத்தார் - உறவினர். பழையார்மேற் கண்ணோடல் - முன் பரிசயமுடையவரிடத்தில் தாட்சிணியப்படுதல். முன்பு கண்ணோட்டமென்னும் அதிகாரத்தில் 'அஃதாவது - தன்னொடு பயின்றாரைக்கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை: இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின் அப்பெயர்த்தாயிற்று' என உரைத்தது உணரத்தக்கது. எண் ஒடு - எண்ணுப்பொருள்தருவதாகிய 'ஒடு' என்னுஞ்சொல். அது அன்பொடு நாணொடு ஒப்புரவொடு கண்ணோட்டத்தொடு என நின்றவிடத்துப்பிரிந்து பிறவிடத்துஞ்சென்று பொருந்தியமை காண்க. இக்குணங்கள் - அன்பு முதலிய குணங்கள். அன்பு முதலிய குணங்களைத் தூணாக உருவகஞ் செய்தவர், அதற்கேற்பச் சால்பினைப் பாரமாக உருவகஞ் செய்யாமையால், இஃது - ஏகதேசவுருவகம். (௩)

௬அ௪. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

(இ - ள்.) (பிறஅறங்களும் வேண்டுமாயினும்), நோன்மை - தவம், கொல்லா நலத்தது - (ஓருயிரையுங்) கொல்லாத அறத்தின் கண்ணதேயாம்; (அதுபோல), (பிறகுணங்களும் வேண்டுமாயினும்), சால்பு—, பிறர் தீமை சொல்லா - பிறர்குற்றத்தைச் சொல்லாத, நலத்தது - குணத்தின் கண்ணதேயாம்; (எ - று.)

நலம் என்னும் ஆகுபெயர்ப்பொருள் இரண்டனையும் தலைமைதோன்ற இவ்விரண்டற்கும் அதிகாரமாக்கிக் கூறினார். தவத்திற்குக் கொல்லாவறம் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர்குற்றஞ்சொல்லாக்குணம் சிறந்தது என்

பதாம்.

(கு - ரை.) பிறஅறங்களை உஎ - ஆவது

அதிகாரத்தின் அவதாரிகை யிற் காண்க.
அறத்தின்கண்ணதே - அறத்தினிடத்திலேயே
யுள்ளது. ''நிலை யஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்,
கொல்லாமைசூழ்வான் றலை'' என் ரூர்;
இழ்க்கொல்லாமையென்ற அதிகாரத்தும்.
பிறகுணங்கள் - அன்பு நாண் ஒப்புரவு முதலானவை.
'நலத்தது' என்னுஞ் சொற்களிலுள்ள 'நலம்' என்பன -
பண்பாகுபெயரால், முறையே, நலத்தையுண்டாக்கும்
அறம் குணம் என்ற பொருளைக் காட்டும்.
ஆகுபெயர்ப்பொருளிரண்டு - அறமும் குணமும்.
இவ்விரண்டற்கும் - தவத்துக்கும் சால்புக்கும். அதிகாரம் -
முக்கியஸ்தானம். தவத்தில் கொல்லா வறத்திற்கும்,
சால்பில் பிறர்தீமை சொல்லாக் குணத்திற்கும்
உள்ள தலைமை தோன்ற, 'நோன்மை கொல்லாநலத்தது',
'சால்பு பிறர்தீமைசொல்லாநலத்தது' என

•



நோன்மைசால்புகட்குக் கொல்லாநலத்தையும் பிறர்தீமைசொல்லாநலத்தையும் முறையே இடமாக்கிக் கூறினரென்றவாறு. (௪)

கூஉரு. ஆற்றுவா ராற்றல் பணித
லதுசான்றோர்

மாற்றாரை மாற்றும் படை.

(இ - ள்.) ஆற்றுவார்-(ஒருகருமத்தைச்) செய்துமுடிப்பாரது, ஆற்றலாவது, பணிதல் - (அதற்குத் துணையாவாரைத்),தாழ்ந்து

ஆற்றல்-
கூட்டிக்

கொள்ளுதல்: சான்றோர் - (இனி) சால்புடையார், மாற்றாரை - (தம்)பகைவரை, மாற்றும் - பகைமையொழிக்கும், படை - கருவியும், அது - அதுவே.

ஆற்றல்-அதுவல்லராந் தன்மை.

இறந்ததுதழீஇயஎச்சவும்மை, விகார

த்தால் தொக்கது. சால்பிற்குஏற்ற பணிதற்குணத்தது சிறப்புக் கூறுவார்,

ஏனையதும் உடன்கூறினர்.

(கு - ரை.) கருமம் - தொழில். அதற்கு - கருமத்தைச்செய்துமுடித்

தற்கு. அது - பணிவு. அதுவல்லர் - தொழில்செய்துமுடிக்கவல்லர். படை

யென்பதன்பின், இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

ஏனையது -மற்றொன்று: மாற்றாரைமாற்றும்படை அப்பணிவு என்பது. சான்

றாண்மையைச்சார்ந்த பணிவைக் கூறுமிடத்துப்

பகைவரைமாற்றும் படை

யென்பது ஏனையதாத லறிக. மாற்றார் - மாறுபாடுடையோர். (ரு)

கூ௨௯௬. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி

துலையல்லார் கண்ணுங் கொளல்.

(இ - ள்.) சால்பிற்கு - சால்பாகிய பொன்னின் அளவு அறிதற்கு,

கட்டளை - உரைகல்லாகிய செயல், யாது எனின்—, (அது), தோல்வி-(தம்

மின் உயர்ந்தார்மாட்டுக்கொள்ளுந்) தோல்வியை, துலை அல்லார்கண்உம் -

இழிந்தார்மாட்டும், கொளல் - கோடல்; (எ - று.)

துலை - ஒப்பு. எச்சவும்மையான், இருதிறத்தார்கண்ணும் வேண்டுதல்

பெற்றும். கொள்ளுதல் - வெல்லும் ஆற்றலுடையராயிருந்தே ஏற்றுக்

கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித் தம்மோடு ஒப்பித்துக்கொள்

ளாது தோல்வியான் அவரினும் உயர்வராயின், அதனல் சால்பளவு அறியப்

படுமென்பதாம்.

(கு - ரை.) அளவு - மாற்று. தோல்வி-பணிவு, கீழ்ப்படிதல். 'துலையல்

லார் கண்ணும்' என்ற இடத்துள்ள இழிவு சிறப்புப் பொருளோடு இறந்தது

தழுவிய எச்சப்பொருளையுமுடைய உம்மையினால், உயர்ந்தார் இழிந்தார்

என்ற இருவரிடத்தும் தோல்வி வேண்டுதல் பெறப்படு மென்க. ஒப்பித்

துக்கொள்ளுதல் - சமமாக்கிக்கொள்ளுதல். தோல்வியான் உயர்ந்தவராயின்

என இயையும்: தோல்வியான் உயர்தல் - மிக்கபணிவுகாட்டுதல். அவரி

னும் - துலையல்லாரைவிட. சால்பு அளவு - சால்பினளவு. துலையல்லார்

கண்ணும் தோல்விகொள்ளுதலைக் கட்டளையென்றதற்கு ஏற்ப, சால்பைப்

பொன்னென்னுமையால், இஃது ஏகதேசவுருவகம்.

(௬)

௯௯ - ஆம் அதிகாரம்.—சான்றாண்மை ௬௫௫

௯௮௭. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா

லென்ன பயத்ததோ சால்பு.

(இ - ள்.) இன்னா செய்தார்க்குஉம் - (தமக்கு) இன்னாதவற்றைச் செய் தார்க்கும், இனியவை செய்யாக்கால் - (சால்புடையார்) இனியவற்றைச் செய் யாராயின், சால்பு என்ன பயத்தது - அச்சால்பு வேறு என்னபயனை யுடைத்து? (எ - று.)

சிறப்பு உம்மை, அவர் இன்னா செய்தற்கு இடனாதல் விளக்கிநின்றது. ஓகாரம்-அசை. வினா-எதிர்மறைப்பொருட்டு. தாமும் இன்னாசெய்வராயின், சால்பால் ஒருபயனும் இல்லை யென்பதாம்.

இவையைந்துபாட்டானும், சிறப்புவகையாற் கூறப்பட்டன.

(கு - ரை.) இன்னாதவற்றை - துன்பந்தருவனவற்றை. 'இன்னா செய் தார்க்கும்' என்ற இடத்துள்ள இழிவுசிறப்பும்மை, தம்மால் இன்னாசெய்தற்கு உரியவர் அவர் என்பதை விளக்கிநின்றது. 'என்ன' என்ற வினா - எதிர் மறைப் பொருளது; சால்புடையவர் இன்னாசெய்தார்க்குத் தாமும் இன்னாத வற்றைச் செய்வராயின், இவரிடத்துள்ளசால்பால் ஒருபயனு மில்லை யென்ப தாம். சால்பாவது - குணங்களால் நிறைந்திருக்குந்தன்மை. "கறுத்தின்னா செய்தவக்கண்ணு மறுத்தின்னா, செய்யாமை மாசற்றார்கோள்"; "இன்னா செய்தாரை யொறுத்த லவர்நாண, நன்னயஞ் செய்து விடல்" என்பன இங்குக்காணத்தக்கன. சிறப்புவகையாற்கூறப்பட்டன, சால்பிற்குஏற்றகுணங்கள்.

கூ ௪ ௪.

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) சால்பு என்னும் திண்மை-சால்புஎன்று சொல்லப்படும் வலி, உண்டாகப்பெறின்—, ஒருவற்கு - ஒருவனுக்கு, இன்மை-நல்குரவு, இளிவு அன்று - இளிவாகாது; (எ - று.)

தளராமை நாட்டுதலின், வலியாயிற்று.

இன்மையான்வருவதனை இன் மைதானாக உபசரித்துக்கூறினார். சால்புடையார் நல்கூர்ந்தவழியும் மேம் படுதலுடைய ரென்பதாம்.

(கு - ரை.) சால்பென்பது எந்நிலையிலும் ஒருவனைத் தளரவொட்டாமல் நிலைநிறுத்துதலால், வலியாமென்க. வலி - வலிமை. இளிவு - தாழ்வுவிளைப் பது. இளிவு=இழிவு. இன்மை - பொருளின்மை. இன்மைதானாக - இன் மையாகவே. பொருளில்லாமையால் வருகிற வறுமையை இன்மையாகவே உபசரித்துக் கூறியது, காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கு. சால்புடையவர் வறுமையையடைந்தாலும், அதனால் இழிவடையாது மேம் படுதலுடையவராவ ரென்பதாம். (அ)

கூ ௪ கூ. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(இ - ள்.) சான்றாண்மைக்கு-சால்புடைமையாகிய கடற்கு, ஆழி எனப் படுவார் - கரையென்றுசொல்லப்படுவார்,—ஊழி பெயரினும்-(ஏனைக்கடலும் கரையுள்நில்லாமல்) காலந்திரிந்தாலும், தாம் பெயரார் - தாம் திரியார்.

சான்றாண்மையது பெருமை தோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டுநிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியுங் கூறி னார்; "பெருங்கடற்கு ஆழி யனையன் மாதோ" என்றார் பிறரும். ஏகதேச வுருவகம்.

(கு - ரை.) சால்புடைமையாகிய கடற்குக் கரையென்றுசொல்லப்படுவார் - சான்றாண்மைக்குவரம்பாய் நிற்பவர்; சான்றாண்மைதவறாதவர். ஏனைக்கடல் - இயற்கையானகடல். காலந்திரிந்தாலும் - பிரளயம்சேர்ந்தாலும்: திரிதல் - மாறுபடுதல். தாம் திரியார் - தாம் நிலைமாறார். சால்புடையார் எப்போதும் தம் நிலையினின்றும் மாறுபடாரென்க. "உறையார்விசும்பி னுவாமதி போல, நிறையாநிலவுதலன்றிக்-குறையாத, வங்கம்போழ் முந்நீர்வளம் பெறினும் வேறாமோ, சங்கம்போல் வான்மையார் சால்பு" என்பது, இங்கு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது. சான்றாண்மையின் பெருமைதோன்ற அதனைக் கடலாக்கியும், அச் சான்றாண்மையைத் தாங்கிநிற்றலாற் சான்

ருண்மையுடையாரைக் கரையாக்கியும் கூறினர். 'ஆழி' என்பது-கரையென் னும் பொருளில் வருதற்கு "பெருங்கடற் காழி யனையன் மாதோ" என்ற மேற்கோள் புறநானூறு ௩௩௦ - ஆம் பாடலிலுள்ள அடி: இதன்பொருள்:— பெரியகடலுக்குக் கரைபோல்வானென்பது. 'பிறர்' என்றது, அப்பாடல் செய்தவரான மதுரைக் கணக்காயனார்மேல்நிற்கும். சான்ருண்மையுடையா ரைக் கரையாக உருவகஞ் செய்ததற்கேற்பச் சான்ருண்மையைக் கடலாக உருவகஞ் செய்யாதது - ஏகதேசவுருவகவணி. (௬)

௯௯0. சான்றவர் சான்ருண்மை குன்றி னிருநிலந்தான்

ருங்காது மன்னே பொறை.

(இ - ள்.) சான்றவர் - பலகுணங்களானும் நிறைந்தவர், சான்ருண்மை குன்றின் - (தம்) தன்மை குன்றுவராயின், இரு நிலம் தான் பொறை தாங்காது - மற்றைஇருநிலந்தானும் தன்பொறையைத் தாங்காதாய் முடியும்.

'தானும்' என்னும் எச்சவும்மை, விகாரத்தால் தொக்கது. அவர்க்கு அது குன்ருமையும், அதற்கு அது தாங்கலும் இயல்பாகலான், அவை எஞ்

ஞான்றும் *உளவாகாநின்றன என்பது தோன்ற நின்றமையின், மன் - ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் - அசை. இதற்கு - இருநிலம் பொறைதாங்குவது சான்றவர் துணையாக வருதலான் அதுவும் அதுதாங்கலாற்றாது என்று உரைப்பாரும் உளர்.

இவை மூன்றுபாட்டானும், அவற்றால் நிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.

---

* பி - ம்: உளவாகா என்பது.

## கoo - ஆம் அதிகாரம்.—பண்புடைமை

சுருள

(கு - ரை.) இருநிலம் - பெரியபூமி: பண்புத்தொகை. பொறையை - பாரத்தை. எச்சவும்மை - சான்றவர் சான்றாண்மை குன்றியதன்றி என்ற பொருளைத் தருதலால், இங்கே இறந்ததுதழுவிய எச்சம். 'இருநிலந்தான்' என்ற இடத்து இருக்க வேண்டிய

எச்சவும்மை, செய்யுள் விகாரத்தாற்
றொக்கதென்றார். சான்றவர்க்குச் சான்றாண்மைகுன்றாமையும் நிலத்திற்குப் பொறையைத்தாங்குதலும் இயற்கை யாகையால், அவைகள் என்ஞான்றும் உளவாகின்றன என்பது தோன்ற நின்றமையால், மன் - ஒழியிசைக்கண் வந்ததாம். ஒழியிசையாவது - சொல்லப்பட்ட பொருளை யொழியச் சொல் லாதுஒழிந்துநின்றபொருளுந் தோன்ற நிற்பது. அவற்றால்-சால்பிற்குஏற்ற
குணங்களால். முதலுரையின்கருத்து - பூமியானது பாரத்தைச்சுமப்பது போலச் சான்றோர் சான்றாண்மையை வகிப்பரென்பது. இனி, இக்குறட்குக் கூறிய வேறோருரை:—இருநிலம் பொறைதாங்குவது சான்றவர் துணையாக வருதலாலாகும்: ஆதலால், சான்றவர் சான்றாண்மை குன்றின் தானும் பொறை தாங்கமாட்டாது என்பது.

அவ்விருநிலந்

(கo)

## கOO - ஆம்

## அதிகாரம்.—பண்புடைமை.

அஃதாவது - பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாதுநின்று எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து *ஒழுகுதலுடையனாதல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்றார் பிறரும். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்ற மேற்கோள் கலித்தொகை நெய்தற்கலி கக - இல் உள்ளது: மக்கட்பண்பு என்று சொல்லப்படுவது உலகவழக்கம் அறிந்து ஒழுகுதலென்பது, இதன்பொருள். பெருமைசான்றாண்மைகளை யுடையார்க்குப் பண்புடைமை வேண்டுமென்பதுபற்றி, அவற்றின்பின் பண்புடைமை வைக்கப்பட்டதென்க.

கஉகக. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்

பண்புடைமை யென்னும் வழக்கு.

(இ - ள்.) யார்மாட்டுஉம் - யாவர்மாட்டும், எண்

பதத்தால் - எளிய
செவ்வியராதலால்,
பண்பு உடைமை என்னும் வழக்கு எய்தல் - (அரிதாய)
பண்புடைமையென்னும் நன்னெறியினை எய்துதல்,
சொல்லுவர், (நூலோர்); (எ - று.)

எளிது—, என்ப-என்று

குணங்களால் நிறைந்து செவ்வியெளியருமாயக்கால் பண்புடைமை தானே உளதா மாகலின், 'எண் பதத்தா லெய்த லெளிது' என்றும், அஃது உலகத்தையெல்லாம் வசிகரித்தற்பயத்ததாகலின் அதனைத் தொல்லோர் சென்ற நன்னெறி யாக்கியும், அதனை எளிதின்எய்துதற்கு இது நூலோர் ஓதிய உபாய மென்பார், அவர்மேல்வைத்துங் கூறினார்.

(கு-ரை.) யாவர்மாட்டும்-எல்லோரிடத்தும். எளிய செவ்வியராதலால் - தம்மிடத்து எளிதில்வந்து தம்மைக்கண்டுபேசும்படி சமயமளிக்குந் தன்

---

* பி - ம்: ஒழுகுதல்;

மையையுடையராகுதலால். என் - எளிமை: பதம் - சமயம்:
எண்பதம்-பண்
புத்தொகை. வழக்கு - வழங்குதற்கு உரியது: வழங்குதல்
- செல்லுதல்:
எனவே, சன்மார்க்கமாயிற்று. அஃது - பண்புடைமை.
வசிகரித்தற்பயத் தது - வசப்படுத்தலாகிய பயனையுடையது.
தொல்லோர் - தொன்றுதொட்டுள்ளவர். அதனை -
பண்புடைமையை. இது - செவ்வியெளிமை. (க)

கூகூஉ. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த
பண்புடைமை யென்னும் வழக்கு.

லிவ்விரண்டும்

(இ - ள்.) அன்பு உடைமை - (பிறர்மேல்)
அன்புடையனாதலும், ஆன்ற குடி பிறத்தல் -
உலகத்தோடுஅமைந்த குடியின்கண் பிறத்தலும், இ இரண்டு
உம் - ஆகியஇவ்விரண்டும்,—பண்பு உடைமை என்னும்
வழக்கு - (ஒருவனுக்
குப்) பண்புடைமையென்று (உலகத்தார்) சொல்லும்
நன்னெறி; (எ - று.)

அமைதல் - ஒத்துவருதல். 'குடிப்பிறத்தல்' என்றது,
பிறந்தார்செயலை.
தனித்தவழி ஆகாது இரண்டுங்கூடியவழியே ஆவது என்பது தோன்ற, முற்

றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக உபசரிக்கப்பட்டன.

இவையிரண்டுபாட்டானும், பண்புடையராதற்காரணங் கூறப்பட்டது.

(கு - ரை.) அன்புடைமை குடிப்பிறத்தல் என்ற இரண்டும் கூடியிருக்கும்போதே பண்புடைமை உண்டாவதென்பார், 'இவ்விரண்டும்' என முற்றும்மை கொடுத்துக் கூறினர்: "அன்புடைமையான்ற குடிப்பிறத்தல் வேத்தவாம், பண்புடைமை தாதுரைப்பான் பண்பு" என்றது இங்கு ஒருசார் நோக்கத்தக்கது. அன்புடைமை ஆன்றகுடிப்பிறத்தல் என்ற இவ்விரண்டும் பண்புடைமை யென்னும் வழக்கிற்குக்காரணம் என்று கூறவேண்டியவிடத்து, அன்புடைமை ஆன்றகுடிப்பிறப்பு என்ற இவற்றையே பண்புடைமையென்னும்வழக்கு என்றது - காரணங்களை காரியமாக ஒற்றுமைப்படுத்துக் கூறிய உபசாரவழக்காம். (உ)

௬௬௩. உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

(இ - ள்.) உறுப்பு ஒத்தல் - (செறியத்தகாத) உடம்பால் ஒத்தல், மக்கள் ஒப்புஅன்று-(ஒருவனுக்கு)நன்மக்களோடு(ஒப்பாகாமையின் அது)பொருந்துவதன்று; (இனி), ஒப்பது ஆம் ஒப்பு-பொருந்துவதாய ஒப்பாவது, வெறுத்தக்க பண்பு ஒத்தல் - செறியத்தக்க பண்பால் ஒத்தல்; (எ - று.)

வடநூலார் 'அங்கம்' என்றமையின், 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படும் ஒப்பாவது, உயிரின்வேறாய் நிலையுதலில்லாவுடம்பு ஒத்தல் அன்று: வேறன்றி நிலையுதலுடைய பண்பு ஒத்தல்: ஆகலான், அப்பெற்றித்தாய அவர்பண்பினை யுடையனாக என்பதாம்.

(கு - ரை.) செறியத்தகாத - உயிரோடு ஒற்றுமைப்படாத. அது - உடம்பாலொத்தல். செறியத்தக்க - உயிரோடு ஒற்றுமைப்படுகிற. அங்கம் என்ற வடசொல் உறுப்பையும் உறுப்புக்களையுடைய உடலையும்

உணர்த்துதல்போல உறுப்பு என்ற தமிழ்ச்சொல்லும் இரண்டையும் உணர்த்தும். அது; இங்கு

## ௧௦௦ - ஆம் அதிகாரம்.—பண்புடைமை

சருக்க

உடம்பையுணர்த்திற்று: "அங்கங் குலைவதறிவு" என்று உடலை அங்கமென்று பின்னுள்ளார் கூறியதுங் காண்க. நிலையுதல் - நிலைத்தல். வேறு அன்றி-உயிரோடு ஒப்புமைப்பட்டு என்றபடி. அப்பெற்றித்தாய - அத்தன்மையதான. அவர்பண்பு - நன்மக்களதுபண்பு. மக்கள் - மனிதர். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறும் ஒப்பாவது உயிரின் வேறாய் நிலைபெறாத உடம்பு ஒத்தலாகாது உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிலைபெறுதலுடைய பண்பினால் ஒத்தலேயாதலால், அப்படிப்பட்ட அந்த நன்மக்களின் பண்பையுடையவனாகுக என்பதாம். குணமே ஆன்மாவோடு நெருங்கியுள்ளதாதலால், "வெறுத்தக்க

பண்பு" என்றார்: வெறுத்தல் - நெருங்குதலென்னும் பொருளதாதலை

"விறப்பு முறப்பும் வெறுப்பும் செறிவே" என்ற தொல்காப்பியத்தாலுமறிக.

௯௯௪. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்

பண்புபா ராட்டு முலகு.

(இ - ள்.) நயனொடு - நீதியையும், நன்றி - அறத்தையும், புரிந்த - விரும்புதலால், பயன் உடையார் - (பிறர்க்கும் தமக்கும்) பயன்படுதலுடையாரது, பண்பு - பண்பினை, உலகு பாராட்டும் - உலகத்தார்கொண்டாடாநிற்பர்.

'புரிந்த' என்னும் பெயரெச்சம் - ஈண்டு, காரணப்பொருட்டு. நயனொடு நன்றிபுரிதலும், பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், 'அதனைப் பாராட்டும்' என்றார்.

(கு - ரை.) 'புரிந்த' என்ற பெயரெச்சம், இங்குப் புரிதலாலெனக் காரணப்பொருளதாதல்காண்க. அதனை - பண்பை. பண்புடையார் நீதியையும் தருமத்தையும் விரும்புதலாலும்,

அக்காரணத்தாற் பயன்படுதலா
லும், அவர்பண்பை உலகத்தார் கொண்டாடாநிற்ப

ரென்பது. கருத்து. (௪)

௯௯௫. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி
பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(இ - ள்.) இகழ்ச்சி - (தன்னை) இகழ்தல்,
நகையுள்உம் இன்னாது -
(ஒருவற்கு) விளையாட்டின்கண்ணும் இன்னாதீ;
(ஆகலால்); பாடு அறிவார்
மாட்டு - பிறர்பாடு அறிந்து ஒழுகுவார்மாட்டு,
பகையுள்உம் - பகைமையுள்
வழியும், பண்பு உள-(அஃது உளதாகாது
இனியவாய)பண்புகளே உளவாவன,
'பாடறிவார்' எனவே, அவ்வின்னாமையறிதலும்
பெற்றாம். அதனை
யறிந்தவர் பின் அதுசெய்யார், இனியவே செய்வார்
என்பது கருத்து. இதற்
குப் பிறரெல்லாம் இரண்டுதொடரும் தம்முள்
இயையாமல் உரைப்பாரும்,
'இன்னாது' என்னுஞ் சொற்குப் பிறவாது என்று
உரைப்பாரு மாயினர்.

(கு - ரை.) தன்னையிகழ்தல் ஒருவற்கு
விளையாட்டின்கண்ணும் இன்
னாது - ஒருவன் தான் பிறரால் விளையாட்டுவகையாக
இகழப்பட்டாலும்
அவ்விகழ்ச்சி அவனுக்கு மனவருத்தத்தைவிளைப்பதாம்.
பிறர்பாடு - பிற
ரியல்பு. அஃது - இகழ்ச்சி. அவ்வின்னாமையறிதல் -
தன்னைப்பிறரிகழ்தல்
தனக்கு இன்னாதாதல்போலத் தான் பிறரை
இகழினும் அது அவர்க்கு இன்

•



னாதாகுமென்னும் இயல்பை யறிதல். அதனை
- அவ்வின்னாமையை: பிற
ரியல்பை என்பாருமுளர். அதுசெய்யார் - இகழார்.
பொருளன.
உம்மைகள் - சிறப்புப்
(ரு)

சுசுரு. பண்புடையார்ப் பட்டுண் டுலக
மதுவின்றேன்.
மண்புக்கு மாய்வது மன்.

(இ - ள்.) பண்பு உடையார் பட்டு -

பண்புடையார்கண்ணே படுதலால்,
உலகம் - உலகியல், உண்டு-(எஞ்ஞான்றும்)
உண்டாய்வாராநின்றது: இன்று
ஏல் - (ஆண்டுப்) படுதல் இல்லையாயின், அது—, மண்
புக்கு - மண்ணின்
கட்புக்கு, மாய்வது - மாய்ந்துபோவதாம்; (எ - று.)
'பட' என்பது, திரிந்துநின்றது. உலகம் -
ஆகுபெயர். மற்றைப் பண்
பில்லார் சார்பன்மையின் ஓர்சார்புமின்றி
மண்ணின்கட்புக்கு மாயுமது
வேண்டாவாயிற்று என்பதுபட நின்றமையின்,
மன்-ஒழியிசைக்கண்வந்தது.
இவைநான்குபாட்டானும், அதனையுடையாரது
உயர்ச்சி கூறப்பட்டது.

(கு - ரை.) ஆண்டுப்படுதல் -
அப்பண்புடையாரிடத்தே பொருந்துதல்.
உலகியல் - உலகவொழுக்கம். 'பட்டு' என்பது - 'உண்டு' என்னும் வேறு வினைமுதல் வினையைக்கொண்டுமுடிதலால், அதற்கு ஏற்ப 'பட' என்ற செயவெனெச்சத்தின் திரிபு என்க. உலகம் என்பது - உலகியலைக் காட்டுத
லால், இடவாகுபெயர். பண்பில்லாரோ உலகியல்
நிற்பதற்குச் சார்பு ஆகா
ராதலால், அவ்வுலகியல் பண்புடையாரிடத்துப்
படாவிடின் தனக்கு ஓரா
தாரமுமில்லாமையால் மண்ணின்கட் புக்கு மாயும்; அது
வேண்டா வாயிற்

றென்ற ஒழிந்த பொருளைத் தந்தமையின், மன் -
ஒழியிசைக்கண் வந்த
தாம்: "உண்டாலம்ம விவ்வுலகம்
****,தமக்கெனமுயலாநோன்றாட், பிறர்க்
கெனமுயலுநருண்மையானே" என்பது, இங்கு
ஒப்புநோக்கத்தக்கது. சார்பு-
ஆதாரம். வேண்டாவாயிற்று - விரும்பப்படாதாயிற்று.
என்பது பட -
என்றபொருள்தோன்ற. அதனை - பண்பை.
(சு)
சுகூஎ. அரம்போலுங் கூர்மைய ரேனு
மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.
(இ - ள்.) மக்கள் பண்பு இல்லாதவர் -
நன்மக்கட்கேயுரிய பண்பு இல்லாதவர்,—அரம் போலும்
கூர்மையர் என்உம்-அரத்தின் கூர்மைபோலும் கூர்மையை
யுடையரேயாயினும், மரம் போல்வர் - (ஓரறிவிற்றாய)
மரத்தினை யொப்பர்; (எ - று.)
அரம் - ஆகுபெயர். ஓரறிவு - ஊற்றினையறிதல்.
உவமையிரண்டனுள், முன்னது - தான் மடிவின்றித்
தன்னையுற்ற பொருள்களை மடிவித்தலாகிய தொழில்பற்றி
வந்தது: ஏனையது, விசேடவறிவின்மையாகிய பண்பு பற்றி
வந்தது. அவ்விசேடவறிவிற்குப் பயனாய மக்கட்பண்பு
இன்மையின் அதுதானும் இல்லையென்பதாயிற்று.
(கு - ரை.) அரம் - ஒருவகை வாள்.

கூர்மையையுடையர் - அறிவின்
நுட்பத்தோடு செயல்நுட்பத்தையு முடையவர். அரம் -

அரத்தின் கூர்

## சுப௦ - ஆம் அதிகாரம்.—பண்புடைமை

சக்க

மைக்கு, ஆகுபெயர். மரத்திற்கு உள்ள ஓரறிவாவது - ஊற்றினை [ஸ்பரிசத்தை] யறிதல். அரத்திற்குமடிவு - கூர்மைமழுங்குதல்: தன்னையுற்ற பொருள்களை மடிவித்தல் - தன்னிடம் அராவப்பட்டபொருள்களைத் தேயச் செய்தல். மனிதர்க்குமடிவு - சோர்தல்: தன்னையுற்ற பொருள்களைமடிவித்தல் - தன்னை எதிர்த்தவரைக் கெடுத்தல். ஏனையது - மற்றையது; இரண்டாவது உவமை. விசேடவறிவு இன்மை - விவேகமில்லாமை. மக்கட்பண்பு-நன்மக்கட்குரிய பண்பென்னும் குணம். அதுதானும்-விசேடவறிவும். இல்லை-பயனற்றதென்றபடி. உவமையணி. (எ)

கூகூஅ. நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை.

(இ - ள்.) நண்பு ஆற்றார் ஆகி - (தம்மொடு) நட்பினைச் செய்யாது, நயம் இல செய்வார்க்குஉம் - பகைமையைச் செய்தொழுகுவார்மாட்டும், பண்பு ஆற்றார் ஆதல் - தாம் பண்புடையராய் ஒழுகாமை, கடை - (அறிவுடையார்க்கு) இழுக்காம்; (எ - று.)

நயம் - ஈரம். சிறப்புஉம்மை, அவர்பண்பாற்றாமைக்கு இடனுதல் தோன்ற நின்றது. அதனைச் செய்யின் தாமும் அவர்தன்மையராவ ரென்பார், 'கடை' என்றார்.

(கு - ரை.) இழுக்கு - குற்றம். ஈரம் -

அன்பு. அவர் - நயமிலசெய்வார்.
இடனுதல் - விஷயமாதல். அதனைச்செய்யின் -
கொண்டால். அவர் - நயமிலசெய்வார்.

பண்பாற்றுமையை மேற்

(அ)

கூகூகூ. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்

பகலும்பாற் பட்டன் றிருள்.

(இ - ள்.) நகல் வல்லர் அல்லார்க்கு -
டும் கலந்து) உண்மகிழ்தல்மாட்டார்க்கு, மா

(பண்பின்மையான் ஒருவரோ
இரு ஞாலம் - மிகவும் பெரிய
ஞாலம், பகல்உம் - (இருளில்லாத) பகற்பொழுதினும்,
இருள்பால்-இருளின் கண், பட்டன்று - கிடந்ததாம்; (எ -
று.)

எல்லாரோடும்
கலந்துஅறியப்பெருமையின் பண்பில்லார்க்கு உலகியல் .
தெரியாது என்பார் 'உலகம் இருளின்கட் பட்டது'
என்றார். 'பாழ்பட்டன் றிருள்'
என்றுபாடமோதி, 'இருள்நீங்கிற்றன்று' என்று
உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) உண்மகிழ்தல் - மனம்மகிழ்தல். மாயிரு

என்றுபுணர்ந்தது- உரிச்சொற்புணர்ச்சியாதலால். பாற்பட்டன்று என்ற இடத்து 'பாழ் பட்டன்று' என்று பாடம் ஓதி—ஞாலம் பகலிலும், இருள் பாழ்பட்டன்று - இருள் நீங்கியதன்று என்று உரைப்பாருமுளர். பட்டன்று என்பது பரிமே
லழகருரையில் உடன்பாட்டிறந்தகாலமுற்றும்,
பிறந்தகாலமுற்றுமாம்.

பிறருரையில் எதிர்மறை

(கூ)

கOOO. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ
நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.



(இ - ள்.) பண்பு இலான் பெற்ற பெரு செல்வம் - பண்பில்லாதவன் (முன்னைநல்வினையான்) எய்திய பெரிய செல்வம், (அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்),—நல் பால்-நல்ல ஆன்பால், கலம் தீமையால் - (ஏற்ற) கலத்தின் குற்றத்தால், (இன்சுவைத்தாகாது), திரிந்து அற்று-கெட்டாற் போலும்; (எ - று.)

கலத்தீமை யென்பது, மெலிந்து நின்றது. தொழிலுவம மாகலின் பொருளின்கண் ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும் ஆற்றலிலனாதல் தோன்ற 'பெற்ற' என்றும், எல்லாப்பயனுங் கோடற்கு ஏற்ற இடனுடைமை தோன்ற 'பெருஞ்செல்வம்' என்றுங் கூறினார். அச்செல்வமும் பயன்படா தென்ற இதனான், வருகின்ற அதிகாரப் பொருண்மையும் தோற்றுவாய் செய்யப்பட்டது.

இவைநான்குபாட்டானும், அஃதில்லாரது இழிவு கூறப்பட்டது.

(கு - ரை.) முன்னைநல்வினை - முற்பிறப்பிற்செய்த புண்ணியம். அக்குற்றத்தால் - பண்பின்மையால். ஆன்பால் - பசுவின்பால். ஏற்ற - பெய்த. கலம் - பாத்திரம். பொருளின்கண் - உபமேயத்தில். ஒத்த தொழில் - 'அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல்' என்பது. படைக்கும் ஆற்றலிலனாதல் - தானே சம்பாதிக்கும் வல்லமையில்லாதவனென்பது. வருகின்ற அதிகாரப்பொருண்மை - நன்றியில் செல்வத்தினியல்பு. தோற்றுவாய் செய்தல் - தொடங்குதல். அஃது இல்லார் - பண்பில்லாதவர். கலத்தீமை யென்பது - கலந்தீமை யென மெலித்தல் விகாரம் பெற்றுவந்தது. இது - தொழிலுவம மாதலால், 'கலத்தீமையால் பால் திரிதல்போல்' என்ற உபமானத்திற்கு ஏற்ப, உபமேயமாகிய முதல்வாக்கியத்தில், 'பண்பிலாக் குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாதுகெடுதல்' என்ற ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வமும் பயன்படா தென்ற இதனால், அடுத்து வருகின்ற அதிகாரமாகிய 'நன்றியில் செல்வம்' என்பதற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது. (௧0)

## ௧0௧ - ஆம் அதிகாரம்.—நன்றியில் செல்வம்.

அஃதாவது - ஈட்டியார்க்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தி

னது இயல்பு. உடையானது குற்றம், செல்வத்தின்மே லேற்றப்பட்டது. அதி

காரமுறைமை, மேல் தோற்றுவாய்செய்த வதனாற் பெற்றாம்.

(கு - ரை.) ஈட்டியாற்கும் - சம்பாதித்தவனுக்கும். செல்வமுடையவனது குற்றமாகிய நன்றியின்மையைச் செல்வத்தின்மேலேற்றி, நன்றியில் செல்வமென்றது - உபசாரவழக்கு. நன்றி - பயன்படுதல். செல்வம் பயன் படுதலில்லாமற்போவது பண்பில்லாமையா லாதலால் இந்நன்றியில்செல்வம் பண்புடைமையென்ற அதிகாரத்தின்பின் வைத்தற்கு உரியது என்பது, பண்பிலான்பெற்ற பெருஞ்செல்வம் என்று கீழ்க்கூறியதனால் பெறப்படுதல் காண்க.

க0க - ஆம்

அதிகாரம்.—நன்றியில் செல்வம் சகூரு

கOOக. வைத்தான்வாய் சான்ற பெரும்பொருளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) வாய் சான்ற பெரு பொருள் - (தன்) மனையகலமெல்லாம் நிறைதற்கு ஏதுவாய பெரும்பொருளை, வைத்தான் - ஈட்டிவைத்து, அஃது உண்ணான் - (உலோபத்தால்) அதனை உண்ணாதவன், செத்தான் -

(உளனாயினும்) செத்தானும்; செய கிடந்தது இல் - (அதன்கண் அவனாற் செயக் கிடந் ததோ ருரிமை யின்மையான்: (எ - று.)

வைத்தான் என்பது முற்றெச்சம்.

உண்ணுதல்-அதனான் ஐம்புலன்களையும் நுகர்தல். வாய்சான்றபெரும்பொருளை வைத்தா னொருவன் அதனையுண்ணாது செத்தவழி அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோருரிமையில்லை யாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்க வென்று உரைப்பினும் அமையும்; இதற்கு 'செத்தான்' என்பது - எச்சம்.

இதனால், ஈட்டியானுக்குப் பயன்படலின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) வாய் - இடம்: இங்கே, வீட்டினகலம். ஈட்டிவைத்து - சம்பாதித்துவைத்து. உலோபம் - பணத்தின்மேலாசை: அது இறுகப்பிடிக்குந் தன்மையைக் காட்டும். அதன் கண்-அப்பொருளினிடத்து. உரிமை-சுதந்திரம் வைத்தான் என்ற வினைமுற்று, வைத்து என எச்சப்பொருள்படுதல்காண்க. அதனான் - அப்பொருளினால். ஐம்புலன்களையும் நுகர்தல் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்பொறிகட்கு உரிய ஐந்துவிஷயங்களையும் அனுபவித்தல். இக்குறளுக்கு இரண்டாவது உரைவருமாறு:— வாய் சான்ற - மனை யினிடமெல்லாம் நிறைதற்குக் காரணமாகிய, பெரும்பொருள்வைத்தான்—, அஃது உண்ணான் - அதனை யுண்ணாது, செத்தான் - செத்தவழி, அதன்கண்

அவனுற்செயக்கிடந்தது இல் என்பது: இப்பொருளில், வாய்சான்ற பெரும் பொருள்வையாது பெற்றபொழுதே நுகர்க என்பது, குறிப்பெச்சம். இப் பொருளில், செத்தான் என்பது செத்து எனப் பொருள்படுதலால், முற் றெச்சமாம். இங்கு ஆய்தம் மெய்போல ஒலித்தது.

(க)

க00உ. பொருளானு மெல்லாமென்
மருளானு மாணுப் பிறப்பு.

ரீயா திவறு (இ - ள்.) பொருளான் லாம் ஆம் என்று - எல்லாம்

- பொருள் ஒன்றும் உண்டாக அதனுல், எல் உண்டாம் என்று அறிந்து (அதனை ஈட்டி), ஈயாது இவறும் - (பின் பிறர்க்கு) ஈயாது பற்றுள்ளஞ்செய்யும், மருளான் - மயக்கத்தாலே, மாணு பிறப்பு ஆம் - (ஒருவனுக்கு) நிறைதலில்லாத பேய்ப் பிறப்பு உண்டாம்; (எ - று)

இருமையினும் எய்தும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லாம்'என்றும், ஈட்டுதற்குமுன் உண்டாய அறிவு பின் மயங்குதலின் 'மருள்' என்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர்பசிகண்டிருந்த தீவினைபற்றி உணவுகளுளவா யிருக்கப் பசித்துவருந்தும் பிறப்பு உளதா மென்றுங் கூறினர்.

(கு - ரை.) பொருள் ஒன்றும் - பொருள்மாத்திரம். பற்றுள்ளம் - உலோபம். நிறைதலில்லாத - திருப்தியுண்டாகாத. பொருளானும் எல்லாம் - "அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து, தீதின்றி வந்தபொருள்," "ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கு எண்பொரு, ளேனை யிரண்டு மொருங்கு" என்றமை காண்க. (உ)

௧00௫. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(இ - ள்.) ஈட்டம் இவறி - (யாம் பிறரின் மிக ஈட்டுதும் என்று பொருளினது) ஈட்டல்மாத்திரத்தையே விரும்பி, இசை வேண்டா - (அதன் பயனாய) புகழை விரும்பாத, ஆடவர் - மக்களது, தோற்றம்-பிறப்பு, நிலக்கு பொறை - நிலத்திற்குப் பாரமாம் அத்துணையே; (எ - று.)

இசை இருமைக்கும் உறுதியாய அறமாகலின் ஈகையான் அதனையே

வேண்டல்செய்யாது ஈட்டல்துன்பத்தையுங் காத்தல்துன்பத்தையும் வேண்

டிய அறிவின்மை பற்றி, 'நிலக்குப் பொறை' என்றார்.

'பிறப்பு' என்றது

அதற்கு உரிய உடம்பினை.

(கு - ரை.) பிறரின் மிக ஈட்டுதும்-அயலாரினும் அதிகமாகச்சம்பாதிப்

போம். அதன்பயன் - பொருளின்பயன். அத்துணையே -

அவ்வளவே. உறுதி

யாய அறமாகலின் என்றவிடத்து, உறுதியாதலினென்ற பாடமிருப்பின்

நலம். இசை இருமைக்கும் உறுதியாதலை "நிலவரை நீள்புக ழாற்றின் புல

வரைப், போற்றாது புத்தேளுலகு" என முன்பு விளக்கினர். தோற்றம் -

தோன்றுதல்: பிறப்பு. நிலக்குப்பொறை-பூமிபாரம்: புகழென்ற அதிகாரத்தில்

"இசையிலா யாக்கை பொறுத்த நிலம்" என்றதையும் அதனுரையையும்

காண்க. நிலக்கு - அத்துச்சாரியைதொக்கது, விகாரம். (௩)

கoo௪. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா

னச்சப் படாஅ தவன்.

(இ - ள்.) (ஒருபொருளும் ஈந்தறியாமையின்), ஒருவரால்-ஒருவராலும், நச்சப்படாதவன் - நச்சப்படுதலில்லாதவன், எச்சம் என்று - (தான் இறந்த வழி ஈண்டு) ஒழிந்துநிற்பதாக, என் எண்ணும் கொல்-யாதனைக் கருதுமோ?

ஈண்டு ஒழிந்து நிற்கும் புகழ் ஈவான்மேலன்றி நில்லாமையின் அவனுக்கு அதனோடு யாதும் இயைபில்லை யென்பார்,'என்னெண்ணுங்கொல்லோ' என்றார். ஓகாரம் - அசை.

இவ்வமூன்றுபாட்டானும், பிறர்க்குப்பயன்படலின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) நச்சப்படுதல் - விரும்பப்படுதல். ஈண்டு ஒழிந்து நிற்பது - இவ்வுலகில் மிச்சமாய்நிற்பது. புகழுண்டாதற்குக் கல்வி ஆண்மை முதலிய பிறகாரணங்களும் உளவாயினும் ஈதலே சிறந்ததென்பதை, "ஈதலிசைபட வாழ்தல்," "இரப்பார்க்கொன்றீவார்மேனிற்கும்புகழ்"என்றவற்றாலுணர்க. அவனுக்கு - ஈயாதவனுக்கு. அதனோடு - புகழோடு. ஈண்டு ஒழிந்து நிற்கு

## கoக - ஆம் அதிகாரம்.—நன்றியில் செல்வம் சகூரு

மது புகழேயென்பது "ஒன்றாவுலகத்துயர்ந்த புகழல்லாற், பொன்றாதுநிற்ப தொன்றில்," "இந்நிலத்துமன்னுதல்வேண்டி னிசைநடுக" என்றவற்றால் விளங்கும். எஞ்சுவது [ஒழிந்துநிற்பது] எச்சம்: அம்-வினைமுதற்பொருளது.

கooரு. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(இ - ள்.) கொடுப்பதுஉம் துய்ப்பதுஉம் இல்லார்க்கு - (பிறர்க்கு) ஈவதும் (தாம்) நுகர்வதுமாய இரண்டுசெய்கையும் உடையரல்லாதார்க்கு, அடுக்கிய கோடி உண்டாயின்உம் - பலவாக அடுக்கிய

னும், இல் - ஒன்றுமில்லை; (எ - று.)

கோடிப்பொருள் உண்டாயி

இன்பத்தினும் அறம்சிறந்தமையின், கொடுத்தல்தொழில் முற்கூறப்பட்டது. 'அடுக்கியகோடி' என்றது, ஈண்டு எண்ணப்படும் பொருள்மேல் நின்றது. ஒன்றுமில்லார்போலப் பயனிரண்டும் இழத்தலின், 'இல்' என்றார்.

(கு - ரை.) துய்ப்பதாலுண்டாகும் இன்பத்தினும், கொடுப்பதாலுண்டாகும் அறஞ் சிறத்தலால்,'கொடுப்பதூஉம்' என்று முற்கூறப்பட்டதென்க.

கோடி - எண்ணலளவையாகுபெயர். ஒன்றுமில்லார் - பொருள் சிறிதுமில்லார். பயனிரண்டும் - அறப்பயனும் இன்பப்பயனும். (ரு)

௧00௬. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்

றீத லியல்பிலா தான்.

(இ - ள்.) தான் றுவ்வான்-தான் நுகரானாய், தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பு இலாதான் - (அதன்மேலும்) தகுதியுடையார்க்கு

அவர் வேண்டிய
தொன்றனை ஈதலியற்கையிலனுயினுன்,—பெரு செல்வம்
- இரண்டுஞ் செய்
தற்கு இடனுடைத்தாய செல்வத்திற்கு, ஏதம்
- ஒருநோய்; (எ - று.)

தகுதி - தானங்கோடற்கு ஏற்புடைமை. ஏதம் - ஆகுபெயர். நுகரப்படு
தலும் ஈயப்படுதலு மாகிய தொழிற்கு உரியதனை அன்றாக்கினமையின்,
'நோய்' என்றார். ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு ஈட்டல்
காத்தல் முதலியவற்றால் துன்பமேயா மென்று உரைப்பாரும் உளர்.

இவையிரண்டுபாட்டானும், அவ்விருமையும் உடன் கூறப்பட்டன.

(கு - ரை.) அதன்மேலும் - தான்
நுகராமலிருப்பதற்குமேலும். ஈத
லியற்கை-ஈதலாகிய இயல்பு. இரண்டு-தான் நுகர்தலும் தகுதியுடையார்க்கு
ஈதலும். தானங்கோடல் - கொடுத்ததைப்
பெற்றுக்கொள்ளுதல். ஏதம் -
துன்பம்: இங்கே, துன்பந்தரும் நோயையுணர்த்தியதனுல், காரியவாகுபெயர்.
தொழிற்குரியதல்லதாகச்செய்தல்

நோயின் தன்மையாதலறிக. அவ்விருமை -
ஈட்டினவனுக்குப்பயன்படுதலின்மை, பிறர்க்குப்
பயன்படுதலின்மை. முதலு
ரையில் செல்வத்தைத்துய்த்தல் ஈதல் இலனுயினனைச்
செல்வத்திற்கு நோய்
போல்வானென்றது நோயென்று அபேதமாகக்கூறியது
- காட்சியணியாம்.
இரண்டாமுரையிலும்,
ஈயுமியல்பிலாதானுக்குச் செல்வம் நோய்போலுமென்
றது செல்வத்தை நோயாகக்கூறியது - காட்சியணியே.
59
"ஈட்டலுந் துன்பு



மற்றீட்டிய வொண்பொருளைக், காத்தலுமாங்கே
கடுந்துன்பம் - காத்தல், குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந்
துன்பக், குறைபதி மற்றைப்பொருள்"
என்ற நாலடி, இங்குக் காணத்தக்கது.
(கூ)
கOOஎ. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ
பெற்றா டமியண்மூத் தற்று.

*மிகுநலம்

(இ - ள்.) அற்றார்க்கு - (ஒருபொருளும்) இலராயினார்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றனை, ஆற்றாதான் - கொடாதானது, செல்வம்—, (கொன்னேகழிதல்),—மிகு நலம் பெற்றாள் - (பெண்டிரின்) மிக்க நலத்தினைப் பெற்றாளொருத்தி, (கொடுப்பாரின்மையின் கொழுநனின்றி), தமியள்- தமியளாய், மூத்த அற்று - மூத்ததன்மைத்து; (எ - று.)

நலம் - வடிவின்நன்மையும், குணத்தின்நன்மையும். இரண்டும் ஒருங்கு பெறுதல் அரிதாகலின், 'பெற்றாள்' என்றார். கொடுப்பாரும் கொழுநனுமே யன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோடு உவமை கூறினமையின், தானும் ஏற்பானுமேயன்றிச் செல்வமும் பயனிழந்து கழியு மென்பதாயிற்று.

(கு-ரை.) கொன்னே-வீணாய்; பயன்படாமல். பெண்டிரின்-பெண்டிர்க் குரிய: மகளிருள் எனினுமாம். கொழுநன் இன்றி - கணவனில்லாமல். தமிய ளாய்-தனியளாய். கன்னிகாதானஞ்செய்வதனால் ஒருவகைப் புண்ணியமுண் டாகுமென்ற நூற்கொள்கைபற்றி, 'கொடுப்பாரும் பயனிழந்து' என்றது. குமரி-கன்னிகை. "குமரிமூத்த வென்பாத்திரம்" என்றும், "குமரிமூத்தவக் கொடுங்குழைநல்லாள்" என்றும் மணிமேகலையில் வருதல்

காண்க. தான் - செல்வமுடையான். ஏற்பான் - இரப்பான்.

(எ)

கூ00௯. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(இ - ள்.) (வறியார்க்கு அணியனாயிருந்தும் ஒன்றுங்கொடாமையின்), நச்சப்படாதவன்-(அவரால்) நச்சப்படாதவன், செல்வம்-செல்வமெய்துதல், ஊர் நடுவுள் நஞ்சு மரம் - ஊரிடைநிற்பதோர் நச்சுமரம், பழுத்து அற்று - பழுத்தாற்போலும்; (எ - று.)

'நடுவூர்' என்பது - பின்முன்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை.

அண்மைஉடைமைகளாற் பயனில்லை யென்பதாம்.

(கு - ரை.) அணியன் - சமீபத்திலுள்ளவன். நச்சுமரம்—நஞ்சு + மரம்; விஷத்தன்மையையுடையமரம்: எட்டிபோல்வது. நடுவூர்—ஊர்நடு: இதனை யிலக்கணப்போலியென்பர். அண்மை - சமீபித்ததாதல். உடைமை - பொருளுடைமையும் பழமுடைமையும். உவமையணி. "பயன்மரமுள்ளூர்ப் பழுத்தற்றாற்செல்வ;நயனுடையான்கட்படின்"என்ற திருக்குறளில் இதன் எதிர்மறைப்பொருளை விளக்கியமை காண்க. (அ)

கூ00கூ. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

* சிலபிரதிகளில் 'மிகாலம்' என்று காணப்படுகின்றது.

கூ0௪ - ஆம் அதிகாரம்.—நன்றியில்

(இ - ள்.) (ஒருவன்), அன்பு ஒரீஇ - (கொடாமைப்பொருட்டுச் சுற்றத் தார் நட்டார்கண்) அன்புசெய்தலை யொழிந்து, தன் செற்று - (வேண்டுவன நுகராது) தன்னைச் செறுத்து, அறம் நோக்காது - (வறியார்க்குஈதல் முதலிய) அறத்தை நினைப்பதுஞ்செய்யாது, ஈட்டிய—, ஒள் பொருள் - ஒள்ளிய பொருளை, கொள்வார்-கொண்டுபோய்ப் *பயன்பெறுவார், பிறர்—; (எ-று.)

பயனாய அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளாதானுக்குப் பொருளால் உள்ளது ஈட்டற்றுன்பமே யென்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன் வழியினுள்ளார்க்கும் உதவாதென்பது தோன்ற 'பிறர்' என்றுங் கூறினார்.

(கு - ரை.) நட்டார் - சிநேகித்தவர். செறுத்து - வருத்தி. வறியார் - தரித்திரர். நோக்கல்-கருத்தினால்நோக்குதல். பயன் ஆய-பொருளினாற் பெறக் கூடிய பிரயோசனமாகவுள்ள. அவன்வழியினுள்ளார் - அவன்சந்ததியார். பிறர் - கள்ளர் முதலியோர்.

க0க0. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(இ - ள்.) சீர் உடை செல்வர் - புகழுடைத்தாய
செல்வத்தினையுடை
யவரது, சிறு துனி - நிற்குங்காலஞ்சிறிதாய வறுமை,
மாரி - (உலகத்தை
யெல்லாம் நிலைநிறுத்தும்)மேகம், வறம்
கூர்ந்து அனையது உடைத்து -வறுமை
மிக்காற் போல்வதோர் இயல்பினை யுடைத்து; (எ - று.)

துனி - வெறுப்பு; அதனைச்செய்தலால்,
துனியெனப்பட்டது. யாவர்
க்கும் பயன்பட்டார் அதனான்
வறியராயவழியும் அவ்வறுமை கடிதின்நீங்குத
லின் பின்பும் செல்வராய்ப் பயன்படுவ ரென்பது,
உவமையாற் பெறப்பட்
டது; படவே, நன்றியில்லாதசெல்வம் எஞ்ஞான்றும்
பயன்படா தென்ப
தாயிற்று. இதற்கு - சீருடைச்செல்வர் இரவலரோடு
வெறுக்கும் நிலையில்
வெறுப்பு மாரி
வறங்கூர்ந்தனையதன்மையையுடைத்து என
அதிகாரத்தோடு

பொருந்தாமைமேலும் ஓர்பொருட்டொடர்புபடாமல் உரைப்பாரும் உளர்.

இவைநான்குபாட்டானும், அச்செல்வத்தது குற்றங் கூறப்பட்டது.

(கு - ரை.) நிற்குங் காலஞ் சிறிது ஆய - சிறிதுகாலமேநிற்பதான.

மேகத்திற்கு வறுமைமிகுதல்-நீரில்லையாதல். துனி - வெறுப்பையுண்டாக்கு

வதான வறுமைக்குக் காரியவாகுபெயர். மேகம்மழைபொழிதலால் நீரற்ற

விடத்தும் மீண்டும் அந்நீரைப்பெற்றுப் பொழியுமியல்பினதாதல்போல, சீரு

டைச்செல்வர் பிறர்க்குப்பயன்படுதலால் வறியராயினும் விரைவில் அவ்

வறுமைநீங்கிப் பயன்படுவ ரென்பது, மாரியுவமையாற் பெறப்படும்: இத

னால், அதிகாரத்திற்கு ஏற்பச் சீரில்லாச்செல்வரின்பொருள் எப்போதும்

பயன்படாதென்பது பெறப்படுதல் காண்க. இனி, இக்குறளுக்கு, சீருடைச்

செல்வரின் (பொருளின்மையால் இரவலரோடுவெறுக்கும்) வெறுப்பு, மாரி

வறங்கூர்ந்தனையதுடைத்து எனப் பொருள்கூறுவாரு முளர்: அப்பொருள்

* பி - ம்: பயன்கொள்வார்.

# திருக்குறள்

நன்றியில்செல்வம் என்ற அதிகாரத்திற்குப்பொருந்துவது அன்று: அன்றியும், சீருடைச்செல்வர்க்கு இரவலரோடு வெறுப்பு ஒருபோதும் உண்டாகாதாதலால்,அங்ஙனம் வெறுப்பு உளதாகவைத்துக்கூறுவது பொருள்தொடர்புபடாததாகும். (௧௦)

## ௧0௨ - ஆம் அதிகாரம்.—நாணுடைமை.

அஃதாவது - மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களான் உயர்ந்தோர் தமக்குஒவ்வாத கருமங்களில் நாணுத லுடையராந் தன்மை: அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு-ரை.) ஒவ்வாத-தகாத. உயர்ந்தோர் நன்றியில்செல்வத்தைக் குறித்து நாணுவராதலால், நன்றியில்செல்வத்தின்பின் நாணுடைமை வைக்கப்பட்டதென்க.

**௧0௧௧. கருமத்தா னாணுத னாணுத் திருநுத**
**னல்லவர் நாணுப் பிற.**

(இ - ள்.) நாணு -

ந்த கருமங் காரணமாக

(நன்மக்கள்) நாணுவது, கருமத்தால் நாணுதல்-இழி

நாணுதல்; பிற - அஃதன்றி மனமொழிமெய்களது

ஒடுக்கத்தான் வருவனவோவெனின் அவை,(அவரளவல்ல):திரு நுதல் வர் நாணு - அழகியநுதலினையுடைய குலமகளிர் நாண்கள்; (எ - று.)

நல்ல

'பிற குலமகளிர்நாண்' என்றதனால் ஏனையது நன்மக்கள் நாண் என்பதும், 'நாணுதல்' என்றதனால் கருமத்தது இழிவும் பெற்றாம். 'திருநுதல் நல்லவர்' என்பது, புகழ்ச்சிக்குறிப்பு. ஏதுப்பன்மைபற்றி, 'பிற' என்றார். இனி, அற்றமறைத்தல் முதலியன பொதுமகளிர் நாணோடு ஒக்கு மென்று உரைப்பாரும் உளர்; அவர்க்கு நாண் கேடுபயக்கும் என விலக்கப்பட்டமையானும், *அவர்பெயராற் கூறப்படாமையானும், அஃது உரையன்மை யறிக.

இதனான், நாணினது இலக்கணங் கூறப்பட்டது.

(கு - ரை.) நன்மக்கள் - ஸத்புருஷர். அஃது அன்றி - இழிந்தகருமங் காரணமாக நாணுதலல்லாமல். அவர் அளவு அல்ல - அந்நன்மக்கட்கு உரியன வல்ல. நுதல் - நெற்றி. ஏனையது - இழிகருமத்தால்நாணுதல். கருமம் என்ற பொதுச்சொல் - நாணுதல் என வருதலால், இழிந்தகருமத்தின் மேலது. புகழ்ச்சிக்குறிப்பு - புகழ்ச்சிகுறித்துவந்த சொல். ஏதுப்பன்மை-ஏதுக்கள்பலவாதல்; அவை-மனவொடுக்கம், மொழியொடுக்கம், மெய்யொடுக்கம் என்பன. இனி வேறோருரை:—பிற - அற்றமறைத்தல்முதலியன, திருநுதல் நல்லவர் நாணு - பொதுமகளிர் நாணோ டொக்கும் என்பது: பொதுமகளிர்க்கு நாண் கேடுதருமென்று நூல்கள் விலக்குவதாலும், 'திருநுதல்நல்லவர்'என்ற தொடர் மகளிரைப் பொதுவாகக் காட்டக்கூடியதன்றிச்சிறப்பாகப் பொதுமகளிரைக்காட்டா ததலாலும், அவ்வுரை கொள்ளத்தக்கதன்றென்று மறுத்தார். பொதுமகளிர்க்கு நாண் கேடுதரு மென்பதை "மானமுறும் வேசை

* பி - ம்: அவர்பெயர் பொதுப்பெயராற் கூறப்படாமையானும்,

கoஉ - ஆம்

அதிகாரம்.—நாணுடைமை சகூகூ

யரும், ஈனமுறுவார்" என்றதனுலும் அறியலாம்.
அற்றம்மறைத்தல்-மறைக்
கத்தக்க அவயவத்தை
மறைத்தல். பொதுமகளிர்-விலைமாதர். பயக்கும்-தரும்.

கOகஉ. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம்
வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(இ - ள்.) ஊண் - ஊணும், உடை - உடையும்,
எச்சம் - அவையொ
ழிந்தனவும், உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல
- மக்களுயிர்க்கெல்லாம் பொது:
மாந்தர் சிறப்பு - நன்மக்கட்குச் சிறப்பாவது, நாண்
உடைமை - நாணுடை
மையே: (அவையல்ல); (எ - று.)
அவை ஒழிந்தன - உறக்கமும், அச்சமும், காமமும்.
சிறப்பு - அவ்வுயிர்க
ளின் வேறுபாடு. 'அச்சம்' என்று பாடம் ஓதுவாரும்
உளர்.
(கு-ரை.) ஊண்-உணவு. உடை-ஆடை. அவை-ஊண்
உடை முதலியன.
அவ்வுயிர்களின் வேறுபாடு-மற்றையுயிர்களினும்
இவர்கட்குள்ளவித்தியாசம்.

கOகந. ஊனைக் குறித்த வுயிரெல்லா
நாணென்னு

நன்மை குறித்தது சால்பு.

(இ - ள்.) உயிர் எல்லாம் - எல்லாவுயிர்களும்; ஊனை - உடம்பினை,

குறித்த - (தமக்கு) நிலைக்களனாகக் கொண்டு அதனை விடா: (அதுபோல),

சால்பு—, நாண் என்னும் நன்மை குறித்தது - நாணெ ன்னும் நன்மைக்குணத்

தை(த் தனக்கு) நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது; (எ - று.)

உடம்பு என்பது - சாதியொருமை. நன்மை - ஆகுபெயர். உயிர் உடம்

பொடு கூடியல்லது பயனெய்தாதவாறுபோல, சால்பு நாணொடுகூடியல்லது

பயனெய்தாது என்பதாம். 'ஊனைக்குறித்த'என்று பாடம் ஓதுவாரும் உளர்.

(கு - ரை.) நிலைக்களன் - தங்குமிடம். ஊன் - உடம்பு. நன்மை - நற்குணத்துக்கு ஆகுபெயர். 'ஊனைக்குறித்த' என்ற பாடத்துக்கு - (எல்லாவுயிர்களும்) உணவையே (தமக்கு) ஜீவநாதாரயாகவுடையன என்று பொருள்.

௧0௧௪. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

(இ - ள்.) சான்றோர்க்கு—, நாண் உடைமை—, அணி அன்றோ-ஆபரணமாம்; அஃது இன்று எல் - அவ்வாபரணம் இல்லையாயின், பீடு நடை -

(அவர்) பெருமிதத்தையுடைய

நடை, பிணி அன்றோ - (கண்டார்க்குப்) பிணி

யாம்; (எ - று.)

அழகுசெய்தலின்
'அணி' என்றும், பொறுத்தற்குஅருமையின் 'பிணி'
என்றுங் கூறினர். ஓகாரஇடைச்சொற்கள்,
எதிர்மறைக்கண் வந்தன.

இவைமூன்றுபாட்டானும், அதன்சிறப்புக் கூறப்பட்
டது.

(கு - ரை.) பெருமிதத்தையுடையநடை -
கம்பீரமானநடை. அன்று ஓ-
தேற்றம்: இரண்டு எதிர்மறைச்சொற்கள்தொடர்ந்து
உடன்பாட்டுப்பொருளை
யுணர்த்தித் தேற்றக்கருத்தை விளக்கின. அதன் -
நாணின். (௪)

௧0௧௫. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.



(இ - ள்.) பிறர் பழிஉம்-பிறர்க்குவரும் பழியையும்,
தம் பழிஉம்-தமக்கு
வரும் பழியையும், (ஒப்பமதித்து), நாணுவார் - நாணுவாரை,
தார், நாணுக்கு—, உறை பதி என்னும் - உறைவிட மென்று
உலகு - உலகத
சொல்லுவர்.

ஒப்பமதித்தல் - அதுவுந் தமக்குவந்ததாகவே கருதுதல். அக்கருத்து

டையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர்யாவரும் புகழ்வரென்பதாம்.

இதனால், அதனையுடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

(கு - ரை.)

நாணினை.

உறைவிடம் - தங்குமிடம். ஒப்ப - ஒருநிகராக. அதனை - (௫)

கா0கரு. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்

பேணலர் மேலா யவர்.

(இ - ள்.) மேலாயவர் - உயர்ந்தவர்,—வேலி நாண் கொள்ளாது - (தம

க்கு) ஏமமாக நாணினைக் கொள்வதன்றி, வியல் ஞாலம் பேணலர் - அகன்ற

ஞாலத்தைக் கொள்ள விரும்பார்; (எ - று.)

மம்

பழிபாவங்கள் புகுதாமற் காத்தலின், 'வேலி' என்றார். தம்முள் மாறுயவழி அந்நாணினைக் கொள்வதல்லது

நாணும் ஞால
அவை புகுதும்

நெறியாய ஞாலத்தினைக் கொள்ள விரும்பா
அசை. நாணாகிய வேலியைப் பெற்றல்லது

ரென்பதாம். மன்னும், ஓவும் -
ஞாலம்பெற விரும்பா ரென்று
உரைப்பாரும் உளர்.

(கு - ரை.) ஏமம் - இரட்சகம்: பாதுகாப்பு. ஞாலம் - உலகம். அவை

புகுதும் நெறி - பழிபாவங்கள் புகும் வழி. ஞாலத்தினும் நாணினை மேலா
கக்கொள்வ ரென்பது, முதலுரையின் கருத்து.
இக்குறளுக்கு வேறோருரை
வருமாறு:— மேலாயவர் - மேலோர், நாண் வேலி - நாணாகிய வேலியை, கொள்ளாது - பெற்றாலல்லாமல், வியல் ஞாலம் - பெரிய வுலகத்தை, பேணலர் - பெறவிரும்பாரென்பது: நாணுடனே தான் ஞாலத்தைப் பெறவிரும்புவ ரென்பது இவ்வுரையின் கருத்து. வியல் - அகலமென்னும்பொருளுணர்த்தும் உரிச்சொல். (கூ)

க0கஎ. நாணு லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
ஞண்டுறவார் நாணாள் பவர்.

(இ - ள்.) நாண் ஆள்பவர் - நாணினது சிறப்பு அறிந்து அதனை விடாது ஒழுகுவார், (அந்நாணும் உயிரும் தம்முள் மாறுயவழி), நாணால் - நாண்சிதையாமைப்பொருட்டு, உயிரை துறப்பர் - உயிரை நீப்பர்; உயிர்பொருட்டு - உயிர்சிதையாமைப்பொருட்டு, நாண் துறவார் - நாணினை நீக்கார்; (எ - று.)

உயிரினும் நாண் சிறந்தது என்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், அவர்செயல் கூறப்பட்டது.

(கு - ரை.) நாணும் உயிரும் தம்முள்மாறு ஆயவழி - நாண் உயிர் என்ற இரண்டனுள் ஏதாவதொன்றை நீக்கநேர்ந்தபோது என்றபடி. நீப்பர் - விடுவர். அவர் - நாணுடையவர். நாணால் - நாணின்பொருட்டு: மூன்றும்வேற்

## க0உ - ஆம் அதிகாரம்.—நாணுடைமை

சஎக

றுமை நான்காம்வேற்றுமைக்குரிய பொருட்டுப்பொருளில் வந்தது. பொருட்டால், ஆல் - அசை. உயிரைக்காட்டிலும் நாணே சிறந்ததென்பது, இக்குறளின் கருத்து: "உயிரினுஞ்சிறந்தன்று நாணே" என்று, தொல்காப்பியத்துப் பொருளதிகாரக் களவியலில் வருகின்றது.

(எ)

க0கஅ. பிறர்நாணத் தக்கது தாநுணா ணாயி
னறநாணத் தக்க துடைத்து.

(இ - ள்.) பிறர் - கேட்டாரும் கண்டாரும், நாண

தக்கது - நாணத்தக்க
பழியை, (ஒருவன்), தான் நாணான் ஆயின் - தான்

நாணாது செய்யுமாயின்,
(அந்நாணாமை), அறம் நாணத்தக்கது உடைத்து-(அவனை)

அறம்விட்டுநீங்கத்
தக்க குற்றத்தினை யுடைத்து; (எ - று.)
தான் எனச் செய்வானைப் பிரிக்கின்றா ராகலின்,

'பிறர்' என்றார்.
நாணோடு இயைபில்லாதானை அறம் சாராது என்பதாம்.
(கு - ரை.) செய்வானை - கண்டாரும்கேட்டாரும்

நாணத்தக்க பழியைச்
செய்பவனை. பிறர் - கண்டாரும் கேட்டாரும். இப்பாட்டில்,

உடைத்து என்ற
முற்றுக்கு, அந்நாணாமை என எழுவாய் வருவிக்க. நாண

என்பது - விட்டு
நீங்க என்றபொருளது: இலக்கணை.

(அ)

க0கக. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

(இ - ள்.) கொள்கை பிழைப்பின் - (ஒருவனுக்கு) ஒழுக்கம் பிழைக்குமாயின், (அப்பிழைப்பு), குலம் சுடும் - அவன்குடிப்பிறப்பு ஒன்றனையுங் கெடுக்கும்; நாண் இன்மை நின்றக்கடை - (ஒருவன்மாட்டு) நாணின்மை நின்றவழி, (அந்நிலை), நலம் சுடும் - அவன்நலம்யாவற்றையுங் கெடுக்கும்.

நிற்றல் - ஒருபொழுதும் நீங்காமை. நலம் - சாதியொருமை: ஆகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் என்றிவற்றான் வந்தனவெல்லாம்

கொள்ளப்படும். ஒழுக்கவழிவினும் நாணழிவு இறப்பத் தீது என்பதாம்.

(கு - ரை.) பிழைக்கும் - தவறும். பிழைப்பு - தவறுதல். ஒன்றனையும் - குடிப்பிறப்பைமாத்திரம். இறப்ப - மிகவும்.

குடிப்பிறப்பு

(கூ)

க0உ0. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை

நாணா லுயிர்மருட்டி யற்று.

(இ - ள்.) அகத்து - (தம்)மனத்தின்கண், நாண் இல்லார்-நாணில்லாத மக்கள், இயக்கம் - உயிருடையார்போன்று இயங்குகின்ற இயக்கம்,—மரம் பாவை-மரத்தாற்செய்த பாவை, நாணால் - (இயந்திரக்)கயிற்றினாய (தன்) இயக்கத்தால், உயிர் மருட்டி அற்று - உயிருடைத்தாக மயக்கினாற்போலும்.

கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய பாவையியக்கம் போல்வதல்லது உயிரியக்கமன்று என்பதாம்.

இவைமூன்றுபாட்டானும், நாணில்லாரது இழிவு கூறப்பட்டது.

(கு - ரை.) இயக்கம் - புடைபெயர்ச்சி. மரப்பாவையென்பது கயிறு

கொண்டு ஆட்டுவோர் பிறரை மயக்குதற்குக்

கருவியாவதல்லது கருத்தாவாகா



தாயினும், இக்கு பாவை மருட்டியற்று என்று பாவையைக் கருத்தாவாகக் கூறியிருத்தலால், 'கருவியே கருத்தாவாயிற்று' என்றார். "செயப்படு பொருளை" என்ற சொல்லதிகாரச்சூத்திரவுரையில், 'ஒன்றென முடித்தலால், இவ்வாளெறியும் எனக் கருவியைத் தானேசெய்வதாகக் கூறும் கருவிக்கருத்தாவுங் கொள்க' என்று நச்சினார்க்கினியர் கூறியது இங்குக் காணத்தக்கது. (கருத்தா - கருவிமுதலியகாரணங்களைத் தொழிற்படுத்துவது: கருவி - வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படுபொருட்க ணுய்ப்பது.) மயக்குதல் - அப்பாவை தானே ஆடுவதென்று காண்பவர் நினைக்கும்படிசெய்தல். நாண் - வெட்கமும், கயிறும். உவமையணி. நாணைப்பெற்றிராத மக்களியக்கம் சூத்திரக்கயிறுள்ள மரப்பாவையின் இயக்கம்போலுமே யல்லாமல், உயிர்ப்பயனைப்பெற்றுள்ள இயக்க மாகா தென்றவாறு. (௧௦)

## ௧0௩. - ஆம் அதிகாரம்.—குடிசெயல்வகை.

அஃதாவது - ஒருவன் தான் பிறந்த குடியை யுயரச்செய்தலின் திறம். இது, தாழ்வின்கண் நாணுதலுடையார்க்கு உளதாவதாகலின், நாணுடைமையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) தாழ்வின் கண் - தாழ்வுநேர்ந்தபோது. குடிசெயல்வகை- (தான் பிறந்த)குடியை (மேம்படச்)செய்வதன் விதம் எனப் பதப்பொருள் காண்க. குடியை மேம்படச்செய்யும்வகையில் முயல்வது நாணமுடையார்க்கே யுளதாய ஒருகுண மாதலால்,
நாணமுடைமையின்பின் குடிசெயல் வகை வைக்கப்பட்ட

தென்க.

க0உக. கருமஞ் செயவொருவன் கைதூவே
பெருமையிற் பீடுடைய தில்.

னென்னும்

(இ - ள்.) (தன் குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமம் முடியாமையின்), கருமம் செய - (எண்ணிய) கருமஞ்செய்தற்கு, (யான்), கைதூவேன் - கையொழியேன், என்னும்—, பெருமையின் - (ஆள்வினைப்) பெருமைபோல, ஒருவன்-ஒருவனுக்கு, பீடு உடையது-மேம்பாடுடைய பெருமை, இல் - பிறிதில்லை; (எ று.)

குடிசெய்தற்கென்பது, அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமச் செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின், 'பீடுடையதில்' என்றார். குடிசெய்தற்கருமமே நடத்தலால், 'தன்கருமஞ்செய்ய' என்றும், 'பிறர்கருமஞ்செய்ய' என்றும் உரைப்பாருமுளர். தன்கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல்செய்தல் தலைமையன்மையானும் அவை யுரையன்மையறிக.

(கு - ரை.) கையொழியேன் - விட்டிடேன். இது குடிசெயல்வகையென்ற அதிகாரமாதலால், அதற்கு ஏற்ப, 'தன்குடிசெய்தற்பொருட்டு' என்பது வந்ததென்க. கருமஞ்செய என்பதற்கு - தன் கருமஞ்செய்ய என்று உரைப்பாரும், பிறர்கருமஞ்செய்ய என்று உரைப்பாரும் உளர்: அதன் மறுப்பு:—தன்கருமம் என்பது குடியையுயரச்செய்யுங் கருமமேயாதலால்,

எண்ணியகருமஞ்செய்தற்கு என்று கூறியதைவிட இது வேறுபொருளாகாது என்பது: தன்குடியுயரச்செய்யுங் கருமத்தைவிட்டுப் பிறரேவிய வேறுகருமத்தைச்செய்தல் குடிசெய்வார்க்குச் சிறந்ததாகாது கொள்ளத்தக்கதன்று என்பது. ஆதலால் அவ்வுரையுங்

(௩)

கா0உஉ. ஆள்வினையு மான்ற வறிவு *மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி.

(இ - ள்.) ஆள்வினை உம் - முயற்சியும், ஆன்ற அறிவு உம் - நிறைந்த அறிவும், என-என்று (சொல்லப்பட்ட), இரண்டின்-இரண்டினையுமுடைய, நீள் வினையான்-இடையறாத கருமச்செயலால், குடி நீளும் - (ஒருவன்) குடியுயரும்; (எ - று.)

நிறைதல் - இயற்கையறிவு செயற்கையறிவொடுகூடி நிரம்புதல். ஆள்வினை, மடிபுகுதாமற் பொருட்டு. ஆன்றவறிவு, உயர்தற்கேற்ற செயல்களும்

அவைமுடிக்குந்திறமும் பிழையாம லெண்ணுதற்பொருட்டு.

இவையிரண்டுபாட்டானும், அச்செயற்குக் காரணங் கூறப்பட்டது.

(கு - ரை.) மடி - சோம்புவதாகிய துர்க்குணம். ஆள்வினையென்பதன் பொருள் - முயற்சியென்பது. அவை - உயர்தற்கேற்ற செயல்களை. அச் செயற்கு - பிறந்த குடியை யுயரச்செய்யுஞ் செய்கைக்கு.

(உ)

கூ0உரு. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

(இ - ள்.) 'குடி செய்வல் - (என்)குடியினை யுயரச்செய்யக்கடவேன்,' என்னும்-என்றுகொண்டு (அதற்குஏற்ற கருமங்களின்) முயலும், ஒருவற்கு - ஒருவனுக்கு, தெய்வம்—, மடி தற்று-ஆடையைத் தற்றுக்கொண்டு, தான்—, முந்துறும் - முந்துற்றுநிற்கும்; (எ - று.)

முயற்சியை அதன்காரணத்தாற் கூறினர். தற்றுதல் - இறுகவுடுத்தல். முன்னடப்பார்செயல், தெய்வத்தின்மே லேற்றப்பட்டது.

(கு - ரை.) தெய்வம் - ஊழ். ஒருகாரியத்தில் முயல்பவர் ஆடையை யிறுகவுடுத்து முற்படுவ ராதலால், ஆடையை யிறுகவுடுத்து முற்படுதல் - முயற்சிக்குக்காரணமாம்: இங்கு, முயலுமென்பதை மடிதற்றுமுந்துறுமென் றது-காரியத்தைக் காரணத்தாற் கூறினதாம். மடி - ஆடை. குடியையுயரச் செய்யக்கருதி அதற்கு ஏற்ற காரியங்களில் முன் நடப்பவரது செயல், அவரதுசெயலுக்குக் காரணமான தெய்வத்தின்மே லேற்றிக் கூறப்பட்டது:

இஃது ஒன்றின்செயல் மற்றொன்றன்மேலாகிய உபசாரவழக்கு. நியதி-ஊழ்: தெய்வம்.

(ரு.)

௧0௨௪. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்

தாழா துஞற்று பவர்க்கு.

* 'எனுமிரண்டின்' என்று பாடமிருக்குமோ என்று ஓரையம் தோன்றுகின்றது.



(இ - ள்.) தம் குடியை - தங் குடிக்காம்வினையை, தாழாது-விரைந்து, உஞற்றுபவர்க்கு-முயல்வார்க்கு, (அவ்வினை முடிக்குந்திறம்), சூழாமல்-(அவர்) சூழவேண்டாமல், தானே—, முடிவுஎய்தும்—; (எ - று.)

குடி - ஆகுபெயர். தெய்வ முந்துறுதலாற் பயன்கூறியவாறு.

இவையிரண்டுபாட்டானும், அதற்குத் தெய்வந் துணையாதல் கூறப்பட்டது.

(கு - ரை.) தாழாது என்பதன்கருத்துப்பொருள், விரைந்து என்பது.

குடி என்பது - குடியையுயரச்செய்தற்குக் காரணம்ஆம் வினை என்ற பொரு

ளில் வந்தது: கருவியாகுபெயராம். கீழ்ச்செய்யுளில், குடியுயரமுயல்வார்க்

குத் தெய்வம்முந்துறுமென்ற ஆசிரியர், இச்செய்யுளில் அங்கனம் தெய்வம்

முந்துறுதலாற் றேன்றும் பயனைக் கூறினு ரென்க. (ச)

கo௨௫. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

(இ - ள்.) குற்றம் இலன் ஆய் - குற்றமாயினசெய்யாது, குடி செய்து - (தன்) குடியை யுயரச்செய்து, வாழ்வானை - ஒழுகுவானை, சுற்றம் ஆ-(அவ

னுக்குச்)சுற்றமாகவேண்டி, சுற்றும் -(தாமே சென்று) சூழ்வர், உலகு - உல

கத்தார்; (எ - று.)

குற்றமாயின - அறநீதிகட்கு மறுதலையாய செயல்கள். தாமும் பய

னெய்தல்நோக்கி யாவருஞ் சென்றுசார்வ ரென்பதாம்.

(கு - ரை.) ஒழுகுவான் - நடப்பவன். அறநீதிகட்கு - தருமத்திற்கும்

நீதிநூலுக்கும். மறுதலையாய-எதிர்த்தட்டான. தாமும்-சூழும் உலகத்தாரும்.

கo௨௬.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, நல் ஆண்மை என்பது-நல்ல ஆண்மையென்று உயர்த்துச்சொல்லப்படுவது, தான் பிறந்த—, இல் - குடியினை, ஆண்மை-ஆளுந்தன்மையை, ஆக்கிக்கொளல்-(தனக்கு) உளதாக்கிக்கோடல்.

போர்த்தொழிலினீக்குதற்கு 'நல்லாண்மை'என விசேடித்தார். குடியினை யாளுந்தன்மை-குடியிலுள்ளாரை யுயரச்செய்து தன்வழிப்படுத்தல்: அதனைச் செய்துகோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டாற் பெறப்படும்.

(கு - ரை.) ஆண்மைக்கு 'நல்' என்று அடைமொழிகொடுத்து 'நல்லாண்மை' என்றுகூறியது, போர்த்தொழிற்காட்டும் ஆண்மையை நீக்குதற்கு ஆகும்: அது, பொல்லாதஆண்மை யாதலால், நல்லென்ற அடைமொழி அதனை நீக்கு மென்க. அதனை-தன்வழிப்படுத்தலை. வழிப்படுத்தல்-தன்விருப்பின்படி நடக்கச்செய்தல்.

க0உஎ. அமரகத்து வன்கண்ணர் போலத்
தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(இ - ள்.) அமரகத்து - களத்தின்கண்,
(சென்றார்பலராயினும் போர்
தாங்குதல்), வன்கண்ணர் (மேற்றே) போல -

வன்கண்ணர் (மேலதானற்

க0௩ - ஆம் அதிகாரம்.—குடிசெயல்வகை

சுஎ௫
போல, தமரகத்துஉம் - குடியின்கண்,
(பிறந்தார்பலராயினும்), பொறை -
(அதன்) பாரம் பொறுத்தல், ஆற்றுவார்
மேற்றஏ-(அது) வல்லார்மேலதாம்.
* பொருட்கொக்க, வேண்டுஞ்சொற்கள்
உவமைக்கண் வருவிக்கப்பட்
டன. நன்குமதிக்கப்படுவார் அவரே யென்பதாம்.
இவை, மூன்றுபாட்டானும், அதுசெய்வா
ரெய்துஞ் சிறப்புக் கூறப்

பட்டது.

(கு - ரை.) களத்தின்கண் - போர்செய்யுமிடத்தில். வன்கண்ணர் - அஞ்சாத்தன்மையுள்ள சுத்தவீரர். அது - பாரம்பொறுத்தலே. பொருட்கு ஒக்க - 'தமரகத்தும் ஆற்றுவார்மேற்றே பொறை' என்னும் உபமேயத்திற்கு ஏற்க. வேண்டுஞ் சொற்கள் - 'சென்றார்பலராயினும் போர்தாங்குதல், மேல தானுற்போல' என்பன. உவமைக்கண் - அமரகத்து வன்கண்ணர்போல என்ற உபமானத்தினிடத்தில். அவரே - குடியின்பாரம்பொறுப்பவரே. அது செய்வார் - தாம் பிறந்தகுடியை உயரச்செய்வார். (எ)

கO௨௪. குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(இ - ள்.) (தங் குடியினை யுயரச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தைநோக்கி), மடி செய்து - மடியினைச் செய்துகொண்டு, மானம் - மானத்தையும், கருத-கருதுவராயின், கெடும் - (குடி) கெடும்: (ஆகலான்), குடி செய்வார்க்கு - அவர்க்கு, பருவம் இல்லை -

காலநியதி யில்லை; (எ - று.)

காலத்தைநோக்கிமடிசெய்தல்-வெயில் மழை பனியென்பன உடைமை நோக்கிப் பின்னர்ச்செய்துமென்று ஒழிந்திருத்தல்.

மானங்கருதுதல் - 'இக் குடியிலுள்ளார்யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன்யானோ?' என்று உட்கோடல்.

மேல்,"'இகல்வெல்லும்வேந்தர்க்கு வேண்டும்பொழுது" என்றதுஉட்கொண்டு இவர்க்கும் வேண்டுமோ?' என்று கருதினும், அது கருதற்க என்று மறுத்தவாறு.

(கு - ரை.) மடியினை - சோம்புவதை. பின்னர் - வெயில்தாழ்ந்தபின் மழைநீங்கியபின் பனியற்றபின், செய்தும் - (குடியையுயரச்செய்யுந்தொழிலினைச்) செய்வோம். ஒழிந்திருத்தல் - (வெயில் மழை பனி உள்ளகாலத்துக் குடியையுயரச்செய்யுந் தொழிலைச்செய்யாது) தவிர்ந்திருத்தல். மானம்-தன் பெருமை. உட்கோடல் - மனத்துக்கொள்ளுதல். "இகல்வெல்லும்" என்னும் மேற்கோள் இந்நூலின் ௪அ௩ - இல் உள்ளது: இதன்பொருள்:—பகை

வரின் வலிமையை வெல்லநினைக்கும் அரசர்க்கு அதற்குஏற்ற காலம் வேண்டு
மென்பது. இவர்க்கும் வேண்டுமோ என்றுகருதினும் அது கருதற்க - (பகை
வரின் வலிமையை வெல்லநினைக்கும் அரசர்க்கு அதற்குஏற்ற காலம் நோக்கி
யிருப்பதுபோலக்) குடிசெய்வார்க்கும் (காலத்தைநோக்கி ஒருகால் சோம்பி
யிருத்தல்) வேண்டுமோ என்று மனங்கருதினலும், அந்தமானத்தைக் கருத

* பி - ம்: பொருட்கேற்க,



வேண்டா. கருதினும் என்ற உம்மை காலம்நோக்கிச் சோம்பக்கருதுதலும் கூடாதென்பதை விளக்கிநின்றது. (அ)

௧0௨௯. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ
குற்ற மறைப்பா னுடம்பு.

குடும்பத்தைக்

(இ-ள்.) குடும்பத்தை-(மூவகைத்துன்பமுமுறற்பாலதாய தன்) குடியை, குற்றம் மறைப்பான் - அவையுறாமற் காக்கமுயல்வானது, உடம்பு—, இடும்பைக்கு ஏ - (அந்தமுயற்சித்) துன்பத்துக்கே, கொள்கலம் கொல் - கொள்கலமாம் அத்துணையோ? (அஃதொழிந்து இன்பத்துக்கு ஆதவில்லையோ?)

“உறைப்பெய லோலைபோல, மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே” என்புழியும், மறைத்தல் - இப்பொருட்டாயிற்று. என்குடிமுழுதும் இன்புற்றுயரவே, நான் இருமையும் எய்துதலான், இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நன்றென்று முயலும் அறிவுடையான் அஃது ஒருஞான்றும் ஒழியாமைநோக்கி, ‘இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ’ என்றார்: இது, குறிப்புமொழி.

இவையிரண்டுபாட்டானும், அவர் அதுசெய்யுமியல்பு கூறப்பட்டது.

(கு-ரை.) மூவகைத் துன்பங்கள்-தன்னைப்பற்றிவருவன முதலியவை: இந்நூலின் ௬ - ஆங் குறளினுரையிற் கூறப்பட்டன. உறற்பாலது - அடையக்கூடியது. அஃது ஒழிந்து - முயற்சித்துன்பத்திற்குக் கொள்கலமாதல் நீங்கி. “உறைப்பெயல்” என்று தொடங்கும் மேற்கோள், புறநானூறு ௨௯௦இல் உள்ளது: இதன்பொருள்:—உறை பெயல் - மழைபெய்தலை, (மேல்விழ வொட்டாது தடுக்கும்), ஓலை போல - ஓலைக்குடையைப்போல, பெரும -

பெருமானே! நின் குறித்து வரு வேல் - உன்னை இலக்காகக்கொண்டுவரு கின்ற வேற்படையை, மறைக்குவன் - (உன்மேற்படவொட்டாது) காப்பேன் என்பது. இப்பொருட்டு - காத்தலென்னும்பொருளது. அஃது - தன் குடியுயருமாறு தான் மெய்வருந்துதல். ஒருஞான்றும் - ஒருபோதும். குறிப்பு மொழியென்பது - குறிப்பாற் பொருளுணர்த்தும் மொழி. 'இடும்பைக்குக் கொள்கலங்கொல்லோ' என்ற இது - குடும்பத்தைக் குற்றமறைப்பானுடம்பு இடும்பைக்குக் கொள்கலமாயினும், இருமையின்பமடைதற்குக் காரண மாதலால் இனிமையா மென்ற பொருளைக் குறிப்பித்தல் காண்க. (குறிப்புமொழி யென்பது - கீழ் ௩௩அ - குறளினுரையிலும் வந்துள்ளது.) அவர்-குடிசெய் வார். அது - குடிசெய்தல்.

(௯)

௧௦௩௰. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று

நல்லா ளிலாத குடி.

(இ - ள்.) இடுக்கண்-துன்பமாகிய நவியம் (புகுந்து), கால் கொன்றிட-

(தன்)முதலை வெட்டிச்சாய்க்க, வீழும்-(ஒருபற்றின்றி) வீழாநிற்கும்: அடுத்து-(அக்காலத்துப்) பற்றுவனகொடுத்து, ஊன்றும்-தாங்கவல்ல, நல் ஆள்-நல்ல ஆண்மகன், இலாத - பிறவாத, குடி - குடியாகியமரம்; (எ - று.)

முதல் - அதன்வழிக்குரியார்.

வளர்ப்பாரைப்பெற்றுழி வளர்ந்து பயன்
படுதலும் அல்லாவழிக் கெடுதலு முடைமையின்,
மரமாக்கினார். "தூங்குசிறை
வாவலுறை தொன்மரங்க ளென்ன, ஓங்குகுல நையவத
னுட்பிறந்த வீரர்,
தாங்கல்கட னாற்றலை சாய்ப்பவரு நீச்செ,
னீங்கன்மட்வார்கள்கட னென்
றெழுந்து போந்தான்" என்றார், பிறரும். இது -
குறிப்புருவகம்.

இதனான்; அவரில்லாதகுடிக்கு உளதாம் குற்றங்
கூறப்பட்டது.

(கு - ரை.) நவியம் - கோடரி. பற்றின்றி -
ஆதாரமில்லாமல். அக்கா
லத்து - வீழுங்காலத்து. பற்றுவன - விழாது
தாங்கவல்ல முட்டுக்கள்.
முதல் - அடி: ஆதாரம். குடியை மரமென்றமையால்,
முதலென்றது அதன்
வழிக்கு உரியாரை: அதன்வழி -
அந்தக்குடும்பத்தின்பரம்பரை. மரம்போல
வளர்ப்பாரைப்பெற்றபோது வளர்தலும், வளர்ப்பாரைப்
பெறுதபோது கெடு
தலுமுடைமையால், குடியை மரமாக்கினா ரென்க.

"தூங்குசிறை" என்ற
மேற்கோள் சீவகசிந்தாமணியில்,
காந்தருவதத்தையாரிலம்பகத்தின் ஆறுவது
பாடல்: இதன்பொருள்:—தூங்குசிறை - தொங்கிய
சிறகுகளையுடைய,
வாவல் - வெளவால், உறை - வாழ்கின்ற, தொல்
மரங்கள் என்ன - ஆல
மரங்கள் (தாம் கெட அவைகெடாதபடி
அவற்றள்தோன்றிய விழுது தாங்கி
நூற்) போல, ஓங்கு குலம் நைய - உயர்ந்த (தமது
)குலமானது தளர்ச்சி
யடைய, அதனுள் பிறந்த-அந்தக்குலத்தில் தோன்றிய,
வீரர்—,தலைசாய்ப்ப வரு தீசசொல் - (இவன்பிறக்க
இக்குலங்கெட்ட தென்று உலகத்தில்
நாணத்தால்) தலைகவிழுமாறு (உலகத்துத்)தோன்றும்
வசைச்சொல் (பிறவாத
படி), தாங்கல் - காப்பது, கடன் - கடமையாகும்:
நீங்கல் - (தமதுகுலத்
தைத்)தாங்காதுபோதல், மடவார்கள் கடன் -
மூடரதுகடமையாகும்; (ஆதலால்
யானும்முயன்று பொருள்தேடி என்குலத்தைத்
தாங்குவேன்), என்று - என்றுசொல்லி, எழுந்துபோந்தான்
- எழுந்துபோனான் சீதத்த னென்க.
'அடுத்தூன்றும் நல்லாள்' என்று கூறியதனால்,
இடுக்கணைக் கோடரியாகவும், குடியை மரமாகவும்

ஊகிக்குமாறுவைத்ததனால், இக்குறள் குறிப்புருவகம் ஆயிற்று. அவர் - குடியைத்தாங்குவார். "சிதலை தினப்பட்ட ஆல்மரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றியாங்குக், குதலைமை தந்தைகட்டோன்றிற் றான்பெற்ற, புதல்வன் மறைப்பக்கெடும்" என்ற நாலடி, இங்குக் காணத்தக்
கது. கால் - அக்குடியின்சந்ததிக்கு உரியவர்.

(௪0)

## க0௪ - ஆம்

## அதிகாரம்.—உழவு.

அஃதாவது - சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கு முரித்தாய உழுதற்றொழில். செய்விக்குங்கால் ஏனையோர்க்கு முரித்து. இது, மேல் குடியுயர்தற்குஏது என்ற ஆள்வினைவகை யாதலின், குடிசெயல்வகையின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) "வேளாண்மாந்தர்க் குழுதூணல்லது, இல்லெனமொழிப பிறவகை நிகழ்ச்சி" என்னுந் தொல்காப்பியமரபியற்சூத்திர ஹுரையில், 'வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்தசெய்தி யெனவாகிய, உழவுத்



தொழிலும் நிரைகாத்தலும் வாணிகமுமென்பன. ஒத்தசிறப்பினவன்றி

அவற்றுள்ளும் ஒரோவொன்று ஓரோர்வருணத்தார்க்கு உரியனவாம். ஆக லானும், ஈண்டு அவை விதந்தகூறினரென்பது. நிரைகாவலும் உழவுத்
தொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்கும்
தடுமாறுதல்போலாது, வாணிக
வாழ்க்கை வேளாண்மாந்தர்க்குச் சிறுவரவிற்றெனவும்
உழுதுண்டல் பெரு
வரவிற்றெனவும், உழுதுண்டல் வணிகர்க்குச்
சிறுவரவிற்றெனவும் என்
வகைக்கூலத்தொடுபட்டதே பெருவரவிற்றெனவும்
கூறினர் இச்சூத்திரவுரை
யாலென்பது' என்று கூறியிருப்பது காண்க. செய்விக்குங்
கால்-(தாமேசெய்
யாது பிறராற்) செய்விக்கப்படுமாயின், ஏனையோர்க்கும் -
அந்தணர்முதலிய
மற்றையோர்க்கும். இது - உழவு. ஆள்வினைவகை -
முயற்சியின் ஒருவகை.

கOஙக. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனு
லுழந்து முழுவே தலை.

(இ - ள்.) (உழுதலான்வரும் மெய்வருத்தம் நோக்கி), சுழன்றுஉம்-(பிற
தொழில்களைச் செய்து; திரிந்தும், ஏர் பின்னது -
(முடிவில்) ஏருடையார்
வழியதாயிற்று, உலகம்—: அதனுல் - ஆதலால்,
உழந்துஉம் - எல்லாவருத்த
முற்றும், தலை - தலையாயதொழில், உழவு ஏ—; (எ - று.)
ஏர் - ஆகுபெயர். பிறதொழில்களாற்

பொருளெய்தியவழியும் உணவின்
பொருட்டு உழுவார்கட் செல்ல வேண்டுதலின்,
'சுழன் றுமேர்ப்பின்னது தல
கம்' என் றும், வருத்தமிலவேனும் பிறதொழில்கள்
கடையென்பது போதர
'உழந்து முழவேதலே' என் றுங் கூறினர்.
இதனான், உழவினது சிறப்புக் கூறப்பட்டது.
(கு - ரை.) பிற தொழில் - நிரைகாத்தல் வாணிகம்
முதலியன. ஏரு
டையார் - உழவர். வழியது - அதீனத்தது.
எல்லாவருத்தம்உற்றும் - எல்லா
[பலவகை] வருத்தமும் அடைந்தாலும். தலையாய-சிறந்த.
ஏர் என்பது-கலப்
பையை: அது-அதனையுடையார்க்கு ஆகிவந்ததனால்,
ஆகுபெயராம். எய்திய
வழியும்-அடைந்தபோதிலும். உணவின்பொருட்டு -
உணவுக்குஉரிய தானி
யத்தைப்பெறுதலின்பொருட்டு. கடை - அதமம். இங்கு,
"வேதநூல் முத
லாகி விளங்குகின்ற கலையனைத்தும், ஓதுவாரெல்லாரும்
உழுவார்தந்தலைக்
கடைகே" என்ற ஏரெழுபது கருதத்தக்கது.
(க)

கoஙஉ. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்று
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(இ - ள்.) அஃது - அவ்வுழுதலை, ஆற்றாது -

செய்யமாட்டாது, எழு
வாரை எல்லாம்-(பிறதொழில்கண்மேற்) செல்வார்
யாவரையும், பொறுத்து-
தாங்குதலால், உழுவார் - அதுவல்லார், உலகத்தார்க்கு
- உலகத்தாராகிய
தேர்க்கு; ஆணி - அச்சாணியாவர்; (எ - று.)
"காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு"
என்றாற்போல உழுவாரென்
றது - உழுவிப்பார்மேலுஞ் செல்லும். உலகத்தாரென்றது
- ஈண்டு அவரை யொழிந்தாரை, கலங்காமனிறுத்தற்கண்

ஆணிபோறலின் 'ஆணி' என்றார்.



பொறுத்தலானென்பது திரிந்துநின்றது.

ஏகதேசவுருவகம். 'அஃதாற்றார் தொழுவாரேயெல்லாம்
பொறுத்து'என்று பாடமோதி, அது மாட்டாதார்
புரப்பார்செய்யும் பரிபவமெல்லாம் பொறுத்து அவரைத்
தொழுவாரே யாவ
ரென் றுரைப்பாருமுளர்.

(கு - ரை.) அது வல்லார்-உழுதற்றொழிலில்வல்லவர்.
"காடுகொன்று" என்று தொடங்கும்
மேற்கோள், பத்துப்பாட்டுள் பட்டினப்பாலையில் உஅ௩, உஅ௪
- வரிகளில் உள்ளது. இம்மேற்கோளின்பொருள்—காடு

கொன்று காட்டைஅழிப்பித்து, நாடு ஆக்கி - நாட்டை யுண்டாக்குவித்து, குளம் தொட்டு - குளத்தைத் தோண்டுவித்து என்பது. இந்தஇடத்து, கொன்றுமுதலியன தன்றைச்செய்யப்படாது பிறரைக்கொண்டு செய்வித்து என்ற பொருளைத் தருதல்போல, உழுவார் என்பது - உழவுதொழிலைச்செய்வாரைக் காட்டுவதன்றி, உழவுதொழிலைச் செய்விப்பாரையும் காட்டுமென்க. உலகத்தவரில் உழுவாரும் சேர்ந்தாராயினும், உழுவார்க்கு உழுவாரேயாணியெனின் பொருந்தா தாதலால், உலகத்தாரென்பது-உழுவாரொழிந்த பிறரையே காட்டிற் றென்றார். அவரை - உழுவாரை. கலங்காமல் நிறுத்தற்கண் - கலங்காமல் நிலைநிறுத்துதலில். ஆணி - அச்சாணி; "ஆணியிவ்வுலகுக்கெல்லாம்" என்ற இடத்திலும் ஆணி இப்பொருளில் வருதல் காண்க. பொறுத்து என்பது காரணப்பொருளது என்பார் பொறுத்தலான் என்பது திரிந்துநின்ற தென்றார். உழுவாரை அச்சாணியாக உருவகஞ்செய்தவர் அதற்கேற்ப உலகத்தாரைத் தேராக உருவகஞ்செய்யாமையால், இஃது ஏகதேசவுருவகம். அது மாட்டாதார் - அவ்வுழவுத் தொழிலைச் செய்யமாட்டாதார். புரப்பார் - காப்பவரான உழவர்: அரசர் என்பாருமுளர். பரிபவம்-அவமானம்: பிறதொழிலைப்பற்றி ஏளனமாகப் பேசுவதனா லானது. பொறுத்து-சகித்துக்கொண்டு. அவரை - உழுவாரை. "உழுங்குலத்திற் பிறந்தாரே உலகுய்யப் பிறந்தாரே" எனக் கம்பர் தமதுஏரெழுபதில் வேளாளரைப் புகழ்ந்திருத்தலும், "எண்பத னும்,

தத்துநீ ரார்க்குங் கடல்வேலித் தாயர்போல்,வித்தித் தருவான் விளைவு'' என்ற உழவன்வென்றித்துறை (புறப்பொருள்வெண்பாமாலை, ஒழிபு - ௬) யும் ஒருசார் ஒப்பு நோக்கத்தக்கன.

(உ)

௧0௩௩. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்

தொழுதுண்டு பின்செல் பவர்.

(இ - ள்.) உழுது - (யாவருமுண்ணும்வகை) உழுதலைச்செய்து, உண்டு- (அதனால் தாமும்) உண்டு, வாழ்வார் ஏ - வாழ்கின்றாரே, வாழ்வார் - (தமக் குரியராய்) வாழ்கின்றவர்: மற்று எல்லாம்-மற்றையாரெல்லாம், தொழுது- (பிறரைத்)தொழுது, உண்டு-(அதனால்தாம்)உண்டு, பின்செல்பவர்-அவரைப் பின்செல்கின்றவர்; (எ - று.)

மற்று என்பது வழக்குப்பற்றிவந்தது. தாமும் மக்கட்பிறப்பினராய் வைத்துப் பிறரைத்தொழுது அவர் சில கொடுப்பத் தம்முயிரோம்பி அவர் பின்செல்வார் தமக்குரியரல்ல ரென்பது கருத்து.

(கு - ரை.) அதனால் - அவ்வுழுதலால். பிறரையென்றது, உழுவோரைக் குறிக்கும். மற்று என்பது வினைமாற்றிலேனும் அசையிலேனும் வாராமல், உலகமழக்குப்பற்றி, மற்றையார் என்ற பொருளில் வந்ததெனக. மக்கட்பிறப்பினராய்வைத்து - மனிதராய்ப் பிறந்திருந்தே. உயிரோம்பி - உயிரைப்பாதுகாத்து. செல்வார் - செல்பவர்: வினையாலணையும்பெயர். செல்வாரென்ற எழுவாய், உரியரல்லர் என்ற பயனிலையோடு முடியும். "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லைகண்டீர், பழுதுண்டுவேறோர் பணிக்கு" என்றது இங்கு நோக்கத்தக்கது, "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாரும், தொழுதுண்டு பின்செல்வா ரென்றேயித் தொல்லுலகில், எழுதுண்டமறையன்றோ இவருடனே இயலுமிது, பழுதுண்டோ கடல்சூழ்ந்த பாரிடத்திற் பிறந்தோர்க்கே' என்றார் கம்பரும். (ந.)

௧0௩௪. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

(இ - ள்.) அலகு உடை - (உழுதற்றொழிலான்) நெல்விளையுடையராய, நீழலவர் - தண்ணளியுடையார்,—பல குடைநீழல் உம் - பலவேந்தர் குடைநீழலதாய மண்முழுதினையும், தம் குடைக்கீழ் - தம்வேந்தர்குடைக்கீழே, காண்பர்—;(எ - று.)

அலகு - கதிர்: அஃது ஈண்டு ஆகுபெயராய், நென்மேலதாயிற்று.

உடைய என்பது குறைந்துநின்றது. நீழல்போறலின், நீழலெனப்பட்டது.

நீழலவரென்றது - இரப்போர்க்கெல்லாம் ஈதனோக்கி. ஒற்றுமைபற்றி 'தங்

குடை' என்றார். குடைநீழலென்பதூஉம் ஆகுபெயர். "ஊன்றுசான் மருங்கி

னீன்றதன்பயனே" என்றதனால், தம்மரசனுக்குக் கொற்றம்பெருக்கி மண்

முழுதும் அவனதாகக் கண்டிருப்பரென்பதாம்:
"இரப்போர்சுற்றமும் புரப்
போர்கொற்றமு, முழவிடைவிளைப்போர்" என்றார்,
பிறரும்.
(கு - ரை.) தண்ணளி - குளிர்ந்த அருள்.
கதிரென்னும்பொருளை
யுடைய அலகு என்பது-கதிரிலுள்ள நெல்லைக்
காட்டுதலால், ஆகுபெயரா
யிற்று. அலகுடை என்றவிடத்துள்ள உடையென்பது,
உடைய என்பதன்
விகாரம். நிழலைப்போற் குளிர்ந்திருத்தலால், நிழல்
என்பது உவமவாகுபெய
ரால், தண்ணளியைக் காட்டிற்று.
இரப்போர்க்கெல்லாம் - யாசிப்பவருக்
கெல்லாம். உழுவார்க்கும்
அவ்வுழுவாரின்வேந்தர்க்குமுள்ள ஒற்றுமைபற்றி,
அத்தலைவரின்குடை 'தங்குடை' என்றார். குடைநிழல்
என்னுந் தானத்தின்
பெயர் அக்குடைநிழலிலுள்ள பூமியைக் காட்டுதலால்,
தானவாகுபெயராம்.
"ஊன்றுசால்" என்ற மேற்கோள், புறநானூறு ௩௫ -
இல் உள்ளது: இதன்
பொருள்:—பொரு படை தரூஉம் கொற்றம்உம் -
போர்செய்கின்ற சேனை
தருகின்ற வெற்றியும், ஊன்று சால் மருங்கின் -

(உழுகின்ற கலப்பை

நிலத்தினிடத்தே) ஊன்றிய சாலினிடத்து, ஈன்றதன் - விளைந்தநெல்லின்,

பயனே என்பது. "இரப்போர்" என்றுதொடங்கும் மேற்கோள், சிலப்பதி

காரம், நாடுகாண்காதை கசசு, கஙு0 - அடிகளி லுள்ளது. இவ்வடிகளின்

கዐச - ஆம் அதிகாரம்.—உழவு சவுக

பொருள்:—இரப்போர் சுற்றம்உம் - இரப்பவருடைய சுற்றத்தாரையும், புரப்

போர் - (தம்மைக்) காக்கும் அரசருடைய, கொற்றம்உம்-வெற்றியையும், உழ

விடை - உழவினிடத்தே, விளைப்போர் - உண்டாக்குவோரென்பது. பிற

ரென்றது - சிலப்பதிகாரநூலாசிரியராகிய இளங்கோவடிகளை. "குடையாளு

முடிவேந்தர் கொலையானை தேர்புரவி, படையாளு மிவைநான்கும் படைத்

துடைய ராஞெலென், மடைவாளை வரும்பொன்னி வளநாடர் தங்கள் அலப்,

படைவாளைக் கொண்டன்றிப் பகையறுக்க மாட்டாரே"
என்ற ஏழெழு
பதும் காண்க.

(ச)

கOடுடு. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் காவாது

கைசெய்தூண் மாலை யவர்.

(இ - ள்.) கை செய்து - (தம்)கையாலுழுது, ஊண் - உண்டலை, மாலை யவர் - இயல்பாகவுடையார்,—இரவார் - (பிறரைத் தாம்) இரவார்: இரப்பார்க்கு-(தம்மை) இரப்பார்க்கு, ஒன்று - (அவர்வேண்டியது) ஒன்றனை, கரவாது—, ஈவர் - கொடுப்பர்: (எ - று.)

செய்தென்பதற்கு உழுதலையென வருவிக்க. கைசெய்தூண்மாலையவ ரென்பது, ஒருஞான்றும் அழிவில்லாதசெல்வமுடைய ரென்னும் ஏதுவை யுட்கொண்டு நின்றது.

(கு - ரை.) கரவாது - ஒளியாமல். ஊண் - உண்ணுதல்: முதனிலை திரிந்த தொழிற்பெயர். செய்து என்பதற்கு ஏற்க, உழுதலையென்ற செயப்படுபொருள் வருவிக்கவேண்டுமென்றார். ஒருஞான்றும் - ஒருபோதும். கை

செய்தூண்மாலையவர் என்பது-ஒருபொழுதும் அழிவில்லாதசெல்வத்துக்குக் காரணமான செயலைக் கொண்டவரென்று தெரிவிக்கும் ஏதுவை [காரணத்தை] யுட்கொண்ட விசேடியம் என்க: எனவே, இது - ஹேதுவணியாம்.

கருத்துடையடை

(ரு)

௧௦௩௬. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

(இ - ள்.) உழவினார் கை - உழுதலையுடையார் கை, மடங்கின் - (அதனைச் செய்யாது)மடங்குமாயின், —'விழைவதூஉம்-(யாவரும்)விழையும் உணவும், விட்டேம் - (யாம்) துறந்தேம்,' என்பார்க்கு—, நிலை - (அவ்வறத்தின் கண்) நிற்றலும், இல்லை - உளவாகா; (எ - று.)

உம்மை, இறுதிக்கண்ணும் வந்தியைந்தது. உணவின்மையால் தாம் உண்டலும் இல்லறஞ்செய்தலும் யாவர்க்கும் இல்லையாயின. அவருறுப்பு மாத்திரமாய கை வாளாவிருப்பின், உலகத்து இம்மை

மறுமை வீடு என்னும்
பயன்கள் நிகழா என்பதாம். ஒன்றனை மனத்தான்
விழைதலுமொழிந்தே
மென்பார்க்கு என உரைப்பாரு முளர்.
இவையைந்துபாட்டானும்,
அதனைச்செய்வாரதுசிறப்புக் கூறப்பட்டது.
(கு - ரை.) மடங்குதல் -
தொழில்செய்யாதொழிந்துநிற்றல். அவ்வற
த்தின்கண் - துறவறத்தில். விழைவதூஉம்
என்ற இடத்திலுள்ள உம்மை,

61



நிலை என்பதிலும் சேர்தற்கு உரியது என்பார் 'உம்மை இறுதிக்கண்ணும் வந்தியைந்தது' என்றார். உழுபவரின்கை மடங்கினால் உணவுவிளையாதாகையால், உணவு இல்லையாம்: உணவு இல்லாமையால் உலகத்தோர்யாவர்க்கும் தாம் உண்ணுதலும் இல்லறம்நடத்தலும் இல்லையாம்: இல்லறத்தோர் தமது அறத்தைச்செய்யாதுபோகவே, துறவோர்க்கு உண்டிமுதலியன ஈபவர் இலராவர்: (துறந்தார்க்குந் துவ்வாதவர்க்குமிறந்தார்க்கு, மில்வாழ்வா னென்பானறனை" என்ற குறளையும் நோக்குக.) ஆகவே, அவர் துறவறமும் நடவாதென்க. விட்டேமென்பாரென்று கூறியது - துறவியர் என்பதன் பொருளைப்பற்றி. அவருறுப்புமாத்திரமாய கை வாளாவிருப்பின் - உழவோரின் ஒருறுப்புமாத்திரமான கை உழவுத்தொழிலைச்செய்யாது வெறுமனேயிருந்தால். விழைவதூஉம் என்பதற்கு-யாவரும் விழையும் உணவு என்றுகூறாது,
ஒன்றனை மனத்தினால்
வேறோருரை கூறினர்:

விரும்புவதையும் என்றுஉரைத்தலும் உண்டு என்று இவ்வுரையில் உம்மை யிறுதிக்கண் இயையவேண்டுவ தின்று. அதனே - உழவை. (சு)

௧0௩௭. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும் வேண்டாது சாலப் படும்.

(இ - ள்.) (ஒருநிலத்தினை யுழுதவன்), தொடி புழுதி-ஒருபலப்புழுதி, கஃசுஆ - கஃசு ஆம்வண்ணம், உணக்கின் - (அதனைக்) காயவிடுவானாயின், (அதன்கட்செய்த பயிர்), பிடித்து - ஒருபிடியின்கணடங்கிய, எருவும்—, வேண்டாது - இடவேண்டாமல், சால படும்-பணைத்து விளையும்; (எ - று.)

பிடித்து - பிடியின்தண்ணது: பிடித்த என்பதன் விகாரமென்பாரு முளர். வேண்டாமல், சான்று என்பன திரிந்து நின்றன.

(கு - ரை.) தொடி - பலம். கஃசு - காற்பலம். அதனே - நிலப்புழுதியை. அதன்கண் - அந்நிலத்தில். பணைத்து - பருத்து: செழுமையாகவளர்ந்து என்றபடி. பிடித்து - பிடி என்ற பகுதியினடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்: பிடியளவிலுள்ளது என்று பொருள். பிடித்த எரு என்பது பிடித்தெரு என்று விகாரப்பட்டதெனின், அப்போது, பிடித்த என்பது - இறந்தகாலப்பெயரெச்சமாம். வேண்டாது என்பது முற்றுப்பொருள்படாமல் எச்சப்பொருள்பட்டதனல், வேண்டாமல் என்பது திரிந்ததாகக் கூறினர்:

பதிற்றுப்பத்தின் கூஅ - ஆம்பாட்டில் "உண்ணுதடுக் கிய பொழுதுபலகழிய" என்பதற்கு, 'உண்ணுதென்றதனை உண்ணுமல் எனத் திரித்து அதனை அடுக்கிய என்னும் வினையொடுமுடித்து' எனவும், எக-ஆம் பாடலில் "தோன்றலீயாது தம்பழியூக்குநர்" என்பதற்கு, 'தோன்ற லீயாது என்றது தோன்றது என்னும் வினையெச்சத்திரிசொல்: தோன்ற லீயாமல் எனத்திரிக்க' எனவும் பழையவுரையில் எழுதியிருப்பது காண்க: இங்ஙனம் கொள்வது-பண்டைக்காலத்து ஒருசாராரின் கொள்கைபோலும். சால என்பதற்குப் பணைத்து எனப் என்பதன் திரிபு என்ருர்.

பொருள்கூறியதனுல், அதனை சான்று

(எ)



கoரு௫. ஏரினு நன்ரு லெருவிடுதல்
நீரினு நன்றதன் காப்பு.

கட்டபின்

(இ - ள்.) (அப்பயிர்க்கு), ஏரின்உம் -

அவ்வுழுதலினும், எரு இடுதல் -
எருப்பெய்தல், நன்று—: கட்டபின் -
(இவ்விரண்டுஞ்செய்து)களைகட்டால்,
அதன் காப்பு-அதனைக் காத்தல், நீரின்உம் - (அதற்கு)
நீர்கால்யாத்தலினும்,
நன்று—; (எ - று.)
ஏர் - ஆகுபெயர். காத்தல் - பட்டிமுதலியவற்றானழி
வெய்தாமற் காத்
தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல்,
நீர்கால்யாத்தல், காத்தல்
என்ற இம்முறையவாய இவ்வைந்தும் வேண்டு
மென்பதாம்.
(கு - ரை.) ஏர் என்னுங் கருவியின்பெயர் -
அதனாலாகிய உழவுக்கு
ஆகுதலால், கருவியாகுபெயர். பட்டி - பட்டிமாடு:
திருட்டுத்தனமாகச்
சென்று தன் விருப்பின்படியே பயிர்முதலியவைகளை
மேயும் மாடு. அழிவு
எய்தாமல் - இட்டபயிர் அழிந்திடாமல். நீர்கால்யாத்தல் -
(கால்வாயினின்று)
நீர்பாய்ச்சுதல். பயிருக்குச் செய்யவேண்டுவன
உழுதல்முதலிய ஐந்தாமென்க.

கoா௬. செல்லான் கிழவ னிருப்பி
தில்லாளி னூடி விடும்.

னிலம்புலந்

(இ - ள்.) கிழவன் - (அந்நிலத்திற்கு) உரியவன்,
செல்லான் இருப்பின்-
(அதன்கண் நாடோறுஞ்) சென்றுபார்த்து
அடுத்தனசெய்யாது மடிந்திருக்கு
மாயின், நிலம் - அஃது, இல்லாளின் -
அவனில்லாள்போல, புலந்து -
(தன்னுள்ளே)வெறுத்து, (பின் அவனோடு),
ஊடி விடும்—: (எ - று.)

செல்லுதல் - ஆகுபெயர். பிறரை யேவியிராது
தானே சேறல்வேண்டு
மென்பது போதர 'கிழவன்' என்றார். *தன்கட்சென்று
வேண்டுவனசெய்
யாது வேறிடத்திருந்தவழி மனையாளூடுமாறுபோல
மிழத்தல் நோக்கி.
என்றது, அவன் போக

இவை மூன்றுபாட்டானும், அதுசெய்யுமாறு
கூறப்பட்டது.

(கு - ரை.) அதன்கண் - அந்நிலத்தினிடத்தில்.
அடுத்தன - செய்ய
வேண்டுமவை: எருப்பெய்தல்முதலியன. செய்யாது -
செய்யவேண்டிய பரு
வத்திற் செய்யாமல். மடிந்திருக்குமாயின் - சோம்பியிருப்பானானல். செல்லு
தல் - போய்ப்பார்த்து வேண்டியனசெய்தலென்ற பொருளைத் தந்ததனல்,

காரணவாகுபெயர். தானே - நிலத்திற்கு உரியவனே. மனையாளையென்ற

உவமையைநோக்க, போகமிழந்தல்
என்பது-இன்பத்தையிழத்த லென்றும்,
உபமேயமாகிய நிலத்தைநோக்க,விளைவையிழத்த
லென்றும் சிலேடையினல்
இருபொருளைத் தரும். அது - உழவு.

(கூ)

கஙசய.

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(இ - ள்.) இலம் என்று - (யாம்)
வறியேமென்றுசொல்லி, அசைஇ
இருப்பாரை - மடிந்திருப்பாரை, காணின் - கண்டால்,—நிலம் என்னும் நல்

* பி - ம்:—அதன்கட்சென்று



'லாள் - நிலமகளென்று உயர்த்துச்சொல்லப்படுகின்ற நல்லாள், நகும் - (தன் னுள்ளே) நகாநிற்கும்; (எ - று.)

உழுதன்முதலியசெய்வார்யாவர்க்குஞ் செல்வங்கொடுத்துவருகின்ற வாறு பற்றி 'நல்லாள்' என்றும், அதுகண்டுவைத்தும் அவைசெய்யாது வறுமையுறுகின்ற பேதைமைபற்றி 'நகும்' என்றுங் கூறினர். இரப்பாரை

யென்று பாடமோதுவாருமுளர்.

இதனான், அதுசெய்யாதவழிப் படும் இழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற அதிகாரமுறைமைக்குக் காரணமும் இது.

(கு - ரை.) வறியேம் - தரித்திரராக இருக்கிறோம்.

மடிந்திருப்பாரை - சோம்பியிருப்பாரை.

நகாநிற்கும்-பரிகாசச்சிரிப்புச்செய்வாள். பூமிதேவியின் சிரிப்பு, உழவுத்தொழில்செய்யாதாரது பேதைமையைக் கண்டதனாற் பிறந்ததாகும். அதுகண்டுவைத்தும் - (உழுதல் முதலியன செய்வார்யாவர்க்குஞ்) செல்வங்கொடுப்பதைப் பிரதியட்சமாகப்பார்த்தும். அது - உழவு. ஒரு சாரார், இருப்பாரை யென்ற விடத்து இரப்பாரையென்று பாடம் ஓதுகின்றனர். செல்வமுண்டாதற்கு முக்கியகாரணமாகிய உழவுகூறியபின் அதுசெய்யாமையால் விளையும் நல்குரவுகூறுகின்றாரென்று வருகின்ற அதிகாரம் இந்த உழவை யடுத்து நிற்பதற்குக் காரணங் காண்க. (௧0)

## ௧0௫ - ஆம்

# அதிகாரம்.— நல்குரவு.

அஃதாவது - நுகரப்படுவனயாவுமில்லாமை.

(கு - ரை.) நுகரப்படுவன - அனுபவிக்கப்படுவன. 'கொடுப்பதைப் பெற்றுக்கொள்' என்ற பொருளுள்ள 'நல்கு ஊர்' என்ற

இரண்டுசொற்கள்
சேர்ந்து, கொடுத்தலைப்பெற்றுக்கொள்ளுதலாகிய
தொழிற்குக் காரணமான
'தரித்திரத்தைப்படு' என்ற பொருளைக் காட்டிற்று:
காரியச்சொல் காரணப்
பொருளைக் காட்டிய உபசாரவழக்கு. நல்கூர் என்றபகுதியின்
தொழிற்பெயர்,
நல்குரவு என்பது.

க0சக. இன்மையி னின்னாத தியாதெனி
னின்மையி
னின்மையே யின்னா தது.

(இ - ள்.) (ஒருவனுக்கு),
இன்மையின்-வறுமைபோல, இன்னாதது—,
யாது எனின் - யாதென்றுவினவின்,—இன்மையின் -
வறுமைபோல, இன்
னாதது—, இன்மைஏ - வறுமையே: (பிறிதில்லை); (எ -
று.)
இன்னாதது-துன்பஞ்செய்வது. ஒப்பதில்லை
யெனவே, மிக்கதின்மை
சொல்லவேண்டாவாயிற்று.
(கு - ரை.) வறுமை - துன்பம்.
ஒப்பதேகிடையாதபோது மிக்கது
கிடைக்க வழியில்லை யென்க. வறுமையையொப்பது
வேறில்லையென்ற கருத்
துத் தோன்ற, இன்மையைப்போல் இன்னாதது

இன்மையே யென, இயை

பின்மையணி தோன்றக் கூறினர்: இதனை, வடநூலார் அநக்வயாலங்கார மென்பர். 'இன்னுதநியாதெனின்' என்ற இடத்துக் குற்றியலிகரம் அலகு பெறவில்லை; அலகுபெற்றதாயின், வெண்டளை பிறழும்.

(௪)

கoரு - ஆம் அதிகாரம்.—நல்குரவு

சஙு

கoசஉ.

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

(இ - ள்.) இன்மை என - வறுமையென்று (சொல்லப்படுவது), ஒரு பாவி—, (ஒருவனுழை வருங்கால் அவனுக்கு), மறுமை உம் - மறுமையின்ப மும், இம்மை உம்-இம்மையின்பமும், இன்றி-இல்லையாக, வரும்—; (எ-று.)

இன்மையெனவொருபாவியென்பதற்கு, மேல் "அழுக்காறெனவொரு

பாவி'' என்புழி

யுரைத்தாங்கு உரைக்க. மறுமை, இம்மை என்பன - ஆகு பெயர். ஈயாமையானும் துவ்வாமையானும் அவை யிலவாயின. 'இன்றி

விடும்' என்று பாடமோதி, பாவியால் என

விரித்துரைப்பாருமுளர்.

(கு-ரை.) ஒருவனுழை-ஒருவனிடத்து. இன்மையென்பது-பண்பு ஆதலால், அதனைப் பாவமுடையதெனக் கூறலாகாது: பண்புக்குப் பண்பு இல்லை யென்பது நூல்வழக்கு ஆதலால்; ஆகவே, அழுக்காற்றின் கொடுமையை விளக்க'அழுக்காறெனை ஒருபாவி'என்று சொன்னாற்போல, இங்கும் இன்மை

யின் கொடுமையைவிளக்க 'இன்மையென ஒருபாவி' என்று கூறியதென்க. என்புழி - என்றவிடத்து. உரைத்தாங்கு-சொன்னவகையாக. மறுமையென்

பது-மறுமையின்பத்தையும், இம்மையென்பது-இம்மையின்பத்தையுங் காட்

டுவதால், இடவாகுபெயர். ஈயாமையால் மறுமையின்பமும், துவ்வாமையால்

இம்மையின்பமும் ஒருவற்கு இல்லையாம். துவ்வாமை-அநுபவியாமை. இன்றி வருமென்ற இடத்து 'இன்றிவிடும்' என்று பாடமாயின், பாவியென்பதைப் பாவியால் என்று மூன்றனுருபு விரிப்பரென்றார்.

(உ)

## ௧0௪௩. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் நல்குர வென்னு நசை.

தொகையாக

(இ - ள்.) நல்குரவு என்னும் நசை - நல்குரவென்றுசொல்லப்படும் ஆசை,—(தன்னாற் பற்றப்பட்டாருடைய), தொல் வரவு உம்-பழைய குடிவரவினையும்,தோல்உம்-(அதற்கு) ஏற்றசொல்லினையும், தொகை ஆக-ஒருங்கே, கெடுக்கும்—; (எ - று.)

நசையில்வழி நல்குரவும்இல்லை யாகலின், நல்குரவையே நசையாக்கி, அஃது அக்குடியிற்றெல்லோர்க்குஇல்லாத இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையும் உளவாக்கலான் அவ்விரண்டனையும் ஒருங்குகெடுக்கு மென்றார்: "குடிப்பிறப்பழிக்கும் விழுப்பங்கொல்லும்" என்றார், பிறரும். தோலாவது - "இழுமென்மொழியான்விழுமியதுநவிறல்" என்றார், தொல்காப்பியனாரும்: இதற்குஉடம்புஎன்று உரைப்பாருமுளர்: அஃது அதற்குப் பெயராயினும், உடம்புகெடுக்கும்என்றதற்கு ஓர் பொருட்சிறப்பில்லாமை யறிக.

(கு - ரை.) பற்றப்பட்டார் - கொள்ளப்பட்டார். நசை - வேண்டு

மென்ற ஆசை. ஆசையே நல்குரவென்றும்
உள்ளதுகொண்டு போதுமென்ற
மனநிறைவே செல்வமாவதென்றும் அறிக.
குடிவரவு-குடிப்பிறப்பு. "குடிப்
பிறப்பழிக்கும் விழுப்பங்கொல்லும"
என்னும் மேற்கோள், மணிமேகலையில்,
பாத்திரம் பெற்ற காதையில், எ௬-ஆவது அடி: இதன்
பொருள்:—குடிப்

௪௨௬

திருக்குறள்

பிறப்பு அழிக்கும் - (பசிப்பிணியானது தன்னாற் பற்றப்பட்டாருடைய)உயர் குடிப்பிறப்பினை யழிக்கும்: விழுப்பம் கொல்லும் - (அக்குடிக்கு இருந்த சிறப்பையும்) ஒழிக்கும் என்பது. தோலாவது - "இழுமென்மொழியால் விழுமியது நுவறல்" என்றார், தொல்காப்பியனார்: (பொருளதிகாரம், செய்யுளியல், உ௩௬). இதன்பொருள் - மெல்லென்ற சொல்லாற் சிறந்த நால் வகைப்புருஷார்த்தமும் உண்டாகுமாறு சொல்லுத லென்பது.ஆகவே, தோல் என்பது - அந்தத் தொல்காப்பியத்தையொட்டி, குடிப்பிறப்பிற்குஏற்ற விழுமியசொல் என்ற பொருளில் இங்கு வந்ததென்க. இனி, தோல் என்பதற்கு-
உடம்பு என்று ஒருசாரார் பொருள்கூறுவ ராயினும்,
உடம்பைக்கெடுக்கு
மென்று கூறுவதிற் பொருட்சிறப்பு இல்லாமையால்,
அப்பொருள் கொள்
ளத்தக்கதன்று என்பது, பரிமேலழகர் கொள்கை.
(௩)

௧0௪௪.

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(இ - ள்.) இற் பிறந்தார்கண் ஏ உம் - (இளிவந்தசொல் பிறவாத)குடிப் பிறந்தார்மாட்டேயும், இளிவந்த சொல் - அது, பிறக்கும்-பிறத்தற்குஏதுவாகிய, சோர்வு - சோர்வினை, இன்மை-நல்குரவு; தரும்-உண்டாக்கும்; (எ-று.)

சிறப்பும்மை, அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றது. இளிவந்த சொல் - இளிவருதற்கேதுவாகிய சொல்; அஃதாவது, எமக்கு ஈய வேண்டு மென்றல். சோர்வு - தாம்உறுகின்ற துன்பமிகுதிபற்றி ஒரோவழித் தம் பிறப்பினையறந்து அதுசொல்லுவதாக நினைத்தல்.

(கு - ரை.) இளிவந்த - இழிவு பொருந்திய. குடிப்பிறந்தார் மாட்டே யும் - குடிப்பிறந்தாரிடத்தும். அது - இளிவந்தசொல். சிறப்பும்மை - இளி வந்தார் கண்ணேயும் என்ற இடத்திலுள்ளது. அது - இளிவந்தசொல். இளி

வருதற்கு - இழிவுவருதற்கு. ஏது - காரணம்.
உறுகின்ற - அடைந்திருக்
கின்ற. ஒரோவழி - சிலவேளை. அது - இளிவந்தசொல்.
(௪)

க0௪௫. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

(இ - ள்.) நல்குரவு என்னும் -
நல்குரவென்றுசொல்லப்படும், இடும்பை
யுள் - துன்பமொன்றனுள்ளே, பல்
துன்பங்கள்-பலதுன்பங்களும், சென்று
படும் - வந்துவிளையும்; (எ - று.)
குரை - இசைநிறை. செலவு * வரவின்கண் வந்தது.
துன்பமுந்தானும்
உடனிகழ்தலின், நல்குரவைத் துன்பமாக்கியும்,
அத்துன்பமடியாகச் செல்
வர்கடைநோக்கிச் சேறற்றுன்பமும், அவரைக்
காண்டற்றுன்பமும், கண்டான்
மறுத்துழி நிகழுந் துன்பமும், மறுவழியும்
அவர்கொடுத்தது வாங்கற்றுன்ப
மும், அதுகொடுவந்து நுகர்வனகூட்டற்றுன்பமும்
முதலாயின நாடொறும்
வேறு வேறாக வருதலின், எல்லாத்துன்பங்களுமுளவா

மென்றுங் கூறினர்.

இவையைந்துபாட்டாலும், நல்குரவின்கொடுமை கூறப்பட்டது.

---

* பி - ம்: விரைவின்கண்.

கʘரு - ஆம் அதிகாரம்.—நல்குரவு சருஎ

(கு-ரை.) இசைநிறை-செய்யுளில் ஓசையை நிறைக்கவருவது. "ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை" என்பது, தொல்காப்பியத்து இடைச்சொல் லியற்சூத்திரம். சென்று என்பதற்கு வந்து என்று பொருள் கூறியதனுல், செலவு வரவின்கண் வந்தது என்றூர். நல்குரவு உள்ளபோது துன்பமும் உடனிருத்தலால், 'நல்குரவென்னுமிடும்பை' என்று இரண்டையும் அபேத மாக்கிக் கூறினர். கடை - வாசல், மறுத்துழி - பொருளை ஈயவேணுமென்று இரக்க அவர் கொடாது மறுத்தால். கூட்டல் - சேர்த்தல். (ரு)

கʘசகூ. நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு
மொற்பொருட் சோர்வு படும்.

நல்கூர்ந்தார்

(இ - ள்.) நல் பொருள்-மெய்ந்நூற்பொருளை, நன்கு உணர்ந்து-தெளிய

வறிந்து, சொல்லின் உம் -
சொன்றாயினும்,—நல்கூர்ந்தார்—, சொல் -
(சொல்லிய) சொல், பொருள் சோர்வு-பொருளின்மையை,
படும்-தலைப்படும்.

பொருளின்மையைத் தலைப்படுதலாவது - 'யாம் இவர் சொல்லியன
விரும்பிக்கேட்டுமாயிற் கண்ணோடி இவர் உறுகின்ற குறைமுடிக்கவேண்டும்'
என்று அஞ்சி யாவருங்கேளாமையிற் பயனில்சொல்லாய்முடிதல். கல்வி
யும் பயன்படாதென்பதாம்.

(கு - ரை.) தலைப்படும்-பொருந்தும்.
கேட்டுமாயின்-கேட்டோமாயின்.
கண்ணோடி - தாட்சிணியப்பட்டு. மெய்ந்நூற்பொருளை நல்கூர்ந்தார் சொல்
லக்கேட்பின், பின்பு அவர் தங்குறையைக் கூறினாராயின் அவர்திறத்துத்
தாட்சிணியத்தால்
அக்குறையையும் முடிக்கும்படிவருமேயென்றஞ்சி எவரும்
அவர் கூறுவதைக் கேளாரென்க. பயன்
இல்சொல்-பயனற்றசொல்: கேட்பா
ரில்லாமையால், நல்கூர்ந்தார்சொல் பயனிலதாமென்க.
"எனைத்துணைய
வேனு மிலம்பாட்டார்கல்வி, தினைத்துணையுஞ்
இங்குக் காணத்தக்கது.

சீர்பாடிலவாம்'' என்றது,

(௬)

க0ௌ. அறஞ்சாரா நல்குர வீன்றதா
பிறன்போல நோக்கப் படும்.

யானும்

(இ - ள்.) அறம் சாரா - அறத்தொடியைபில்லாத, நல்குரவு - நல்குரவு
டையான்,—ஈன்ற தாயான் உம்-(தன்னை) ஈன்ற தாயானும், பிறன்போல-
பிறனைக் கருதுமாறுபோல(க்கருதி), நோக்கப்படும்—; (எ - று.)

அறத்தொடு கூடாமை - காரணகாரியங்களு *ளொன்றானு மியை
யாமை. நல்குரவு-ஆகுபெயர். சிறப்பும்மை, அவளது இயற்கையன்புடைமை
விளக்கிநின்றது. கொள்வதின்றாதலேயன்றிக் கொடுப்பதுண்டாதலு முடை
மையின், அதுநோக்கிச் சுற்றத்தார்யாவருந் துறப்ப ரென்பதாம்.

(கு - ரை.) செல்வத்தினால் விளையக்கூடியது - தருமம்: நல்குரவினால்
விளையக்கூடியது - அதருமம்: ஆகவே, நல்குரவினால் அறத்தைச் செய்ய
முடியாது. எனவே, நல்குரவு அறத்திற்குக்

காரணமாகாதாம்: இனி, தருமஞ்

செய்வார்க்குச் செல்வமுண்டாகும்: அதருமஞ்செய்வார்க்கு நல்குரவு உண்டா

---

* பி - ம்: ஒன்றாயிையயாமை.



கும்: எனவே, நல்குரவு அறத்தின்காரியமுமாகாதாம்: ஆதலால், நல்குரவுக்கு

'அறத்தொடு கூடாமை-காரணகாரியங்களு ளொன்றானும் இயையாமை'என்

றார். நல்குரவு-இங்கு அதனையுடையானைக்காட்டுதலால்,ஆகுபெயராம்.'தாயா

னும்'என்ற இடத்துள்ள உயர்வுசிறப்பும்மை, பெற்றமைக்தனிடத்து இயல்பு

ஆக அன்புடையாள் அவள் என்பதைத் தெரிவிக்கும். கொள்வது இன்று -

(தரித்திரனிடத்துக்) கொள்ளத்தக்கபொருள் ஒன்றுமில்லை. கொடுப்பது-

(கைவிடாவிட்டால் நல்கூர்ந்தானுக்குத் தாங்கள்) கொடுக்கவேண்டிய பொருள். உண்டாதலும் - உளதாதலும். அதுநோக்கி - பொருள்கொடுக்க

வேண்டியதாயிருத்தலைநோக்கி. துறப்பர்-நீங்கிவிடுவர்.

"இல்லாளை, யில்லா
ளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்,
செல்லாதவன்வாயிற்
சொல்," "தாயும்பகை கொண்டபெண்டிர் பெரும்பகை
தன்னுடைய, சேயும்
பகை யுறவோரும்பகையிச் செகமும்பகை, ஆயும்பொழுதி
லருஞ்செல்வமீன்
இன்" என்பன காண்க.

(எ)

கூ௦௪௭. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

(இ - ள்.) நெருநல் உம் - நெருநற்றும், கொன்றது போலும் - கொன்
றது போன்று (எனக்கு இன்னாதவற்றைச்) செய்த, நிரப்பு -
நல்குரவு, இன்
றும் —, வருவது கொல் ஓ - (என்பால்) வரக்கடவதோ?
[வந்தால் இனி
யாதுசெய்வேன்]? (எ - று.)

அவ்வின்னாதனவாவன - மேற்சொல்லிய
துன்பங்கள். நெருநல் மிக
வருந்தித் தன்வயிறுநிறைத்தானொருவன் கூற்று.

(கு - ரை.) நெருநல், நெருநற்று - நேற்று. மேற்சொல்லிய - இவ்வதி
காரத்து ஐந்தாங்குறளினுரையிற் கூறிய. நெருநல் - முன்னாள். தன் வயிறு
நிறைத்தான் - தன்வயிற்றை நிரப்பிய தரித்திரன். கூற்று - சொல். ஒரு
பொருளும் இல்லாமையையுடைய வறுமையை, நிரம்பியிருப்பது என்ற
பொருளுள்ள 'நிரப்பு' என்ற சொல்லாற் கூறியது,
எதிர்மறையிலக்கணை.(அ)

கOசகூ. நெருப்பினுட் டுஞ்சலு மாகு
நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.
(இ - ள்.) (யந்திரமருந்துகளான்), (ஒருவனுக்கு),
நெருப்பினுள்-நெருப்
பிடையே, துஞ்சல் உம் ஆகும் - கிடந்துறங்கலுமாம்:
நிரப்பினுள் - நிரப்பு
வந்துழி, யாது ஒன்று உம் - யாதொன்றானும், கண்பாடு -
உறக்கம், அரிது- இல்லை; (எ - று.)

நெருப்பினும் நிரப்புக்கொடி தென்றவாறாயிற்று.

இதுவும்,அவன் கூற்று.
இவைநான்குபாட்டானும்,நல்கூர்ந்தார்க்குளதாங்
குற்றங் கூறப்பட்டது.
(கு-ரை.) மந்திரசக்தியாலும் மருந்தின்வன்மையினாலும்
நெருப்பிற்குள் தூங்கலா மென்பர். அவன் - நல்கூர்ந்தான்.
(கூ) கOடுO. துப்புர
வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(இ - ள்.) துப்புரவு இல்லார் - நுகரப்படும்பொருள்க ளில்லாதார், (தம் மாற் செயற்பாலது முற்றத்துறத்தலேயாகவும்), துவர துறவாமை - அது செய்யாதொழிதல்,—(பிறரில்லினுளவாய), உப்பிற்கும்—, காடிக்கும்—, கூற்று - கூற்றாம்; (எ - று.)

மானமழியாமையிற் செயற்பாலது அதுவே யாயிற்று. முற்றத்துறத்தல் - சுற்றம் தானே விட்டமையின் ஒருவாற்றாற் றுறந்தாராயினார், நின்ற தம்முடம்பினையும் துறத்தல். அதுசெய்யாதுகொண்டிருத்தல் இரண்டனையும் மாளப்பண்ணுதலின், அதனை, அவற்றிற்குக் கூற்று என்றார். இனி, முற்றத்துறத்தலாவது - துப்புரவில்லாமையின் ஒருவாற்றாற் றுறந்தாராயினார் பின் அவற்றை மனத்தாற் றுறவாமை யென்று உரைப்பாருமுளர்.

இதனான், அஃது உளதாயவழிச் செய்வது கூறப்பட்டது.

(கு-ரை.) முற்றத்துறத்தல்-இறத்தல். ஒருவாற்றால் துறந்தாராயினார்- ஒருவகையாற் சன்னியாசிபோலானவர்: (சந்நியாசிகள்

சுற்றத்தாரையும் பொருளையும் துறப்பவரென்பது, இங்குக் கருதத்தக்கது.) பொருள்நீங்கிய நல்கூர்ந்தாரைச் சுற்றத்தார் தாமே துறக்கின்றனர்: இனி, இவர்க்குத் துறக்க வேண்டியதாகவுள்ளது-உயிரேயென்க.

உயிரைவிடத்துணியாவிடின் உயிரை யோம்புதற்காக மானத்தைவிட்டுப் பிறரிடத்துக் காடியையும் உப்பையும் இரந்து பெறவேண்டியிருத்தலால், 'துவரத்துறவாமை உப்பிற்குங் காடிக்குங் கூற்று' என்றார். அதனை - துவரத்துறவாமையை. அவற்றிற்கு - காடிக்கும் உப்புக்கும். மாளப்பண்ணுஞ்செயல் ஒத்திருத்தலால், 'துறவாமையைக்கூற்று' என்றது. பரிமேலழகருரையில் - 'இனி, முற்றத்துறத்தலாவது****மனத் தாற்றுறவாமை' என்பது 'இனி, முற்றத்துறத்தலாவது****மனத்தாற்றுறாத் தல்' என்று இருக்கவேண்டுமெனத் தோன்றுகின்றது. துவரத்துறவாமை - சுற்றமும் பொருளும் தாமே நீங்கினும், தாம் அவற்றை மனத்தால் வெறுத்து விட்டிடாமல் அவற்றின்கட் பற்றுச்செய்தல் என்பது வேறுரை. அஃது - நல்குரவு.

(௧0)

## ௧0௫ - ஆம் அதிகாரம்.—இரவு.

இனி, மானந்தீரா இரவு இரவாமையொடொத்தலின், அதனானும் வீடெய்தற்பயத்ததாய உடம்பு ஓம்பப்படு மென்னும்

அறநூல்வழக்குப்பற்றி,
மேலெய்திய துவரத்துறத்தல் விலக்குதற்பொருட்டு இரவு கூறுகின்றார்.
அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) மானம் - பெருமை. தீரா - நீங்காத. இரவு - யாசகத்தொழில். ஓம்பப்படும் - பாதுகாத்தற்கு உரியதாம். அறநூல் - தருமசாஸ்திரம். மேலெய்திய - மேலதிகாரத்தில் [நல்குரவு என்ற அதிகாரத்தில்] பெறப்பட்ட. துவரத் துறத்தல் - உயிரைவிடுதல். நல்குரவினால் உயிர் போவதாகவரின், மானம்போகாத இரவினால் உயிரை ஓம்புதல் தகும் என்று





இவ்வதிகாரத்தாற் பெறப்படுவதனால், இது நல்குரவு என்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டதென்க.

க0ருக. இரக்க விரத்தக்கார்க் காணிற்
னவர்பழி தம்பழி யன்று.

(இ - ள்.) (நல்கூர்ந்தார்);—இர தக்கார் - இரத்தற்குஎற்புடையாரை, காணின்—, (அவர்மாட்டு), இரக்க—: (இரந்தால்), கரப்பின்-(அவர்) கரந்தாராயின், அவர் பழி - அவர்க்குப் பழியாவது (அல்லது), தம் பழி அன்று - தமக்குப் பழியாகாமையான்: (எ - று.)

'இர' என்னும் முதனிலைத்தொழிற்பெயரதிறுதிக்கண் நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது. இரத்தற்குஎற்புடையராவார் - உரையாமைமுன் உணரும் ஒண்மையுடையராய் மாற்றுதீவார். அவர் உலகத்துஅரிய ராகலின் 'காணின்' என்றும், அவர்மாட்டு இரந்தார்க்கு இரவான்வரும் இழிவு இன்மையின் 'இரக்க' என்றும், அவர் ஈதலிற் குறை காட்டாமையின்,'கரப்பின்' என்றும்,காட்டுவராயின் அப்பழி தூவெள்ளறுவைக்கண்மாசுபோல அவர்கட் கடிதுசேறலின் 'அவர்பழி'என்றும், ஏற்பிலார்மாட்டு இரவு அன்மையின் 'தம் பழியன்று' என்றும் கூறினர்.

(கு - ரை.) இரத்தக்கார் என்றதொடரில், 'இர' என்ற முதனிலைத் தொழிற்பெயரினிறுதியில், இரத்தற்கு என்ற பொருள்தரவேண்டிய நான்கனுருபு தொக்க தென்க. இரத்தற்கு ஏற்புடையராவார் - யாரிடத்து எனக்கு ஈவாய் என்றுசொல்லி இரத்தல்தொழிலைச்செய்தால் தருமோ, அப்பப்

பட்டவர். உரையாமைமுன் - (யாசகன் எனக்கு இன்னது ஈவாய் என்று வாய்திறந்து) சொல்லுதற்குமுன். ஒண்மை - நுண்ணறிவு. மாற்று-இல்லை யென்றுசொல்லாமல். "முகநோக்கிநிற்கவமையுமகநோக்கி, யுற்றதுணர்வார்ப் பெறின்"என்ற குறளின்கருத்தும்,"ஏற்றகைமாற்றாமை யென்னுந் தாம்வரையா,ராற்றாதார்க்கீவதா மாண்கடன்"என்ற நாலடியாரின் கருத்தும் இங்கு அறியத்தக்கன. 'காணின்' என்றதனால், அப்படிப்பட்ட கொடையாளியைக் காணுதலரிது என்னுங் கருத்துப் பெறப்படும். அவரீதலிற் குறைகாட்டாமையின்-அப்படிப்பட்டவர் ஈதலைச்செய்தலிற் குறைகாட்டாராதலால். தூவெள் ளறுவை-பரிசுத்தமாய் வெண்ணிறமாகவுள்ள ஆடை. மாசு-அழுக்கு. கடிது - விரைவாக. ஏற்பிலார்மாட்டு-தகாதவரிடத்துச்செய்த, இரவு - யாசகம், அன்மையின் - அல்லவாதலால்.

(க)

கoருஉ. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

(இ - ள்.) ஒருவற்கு—, இரத்தல் - இரத்தல்தானும், இன்பம் - இன்பத்
திற்கு ஏதுவாம்; இரந்தவை - இரந்தபொருள்கள், (ஈவாரதுஉணர்வுடைமை
யான்), துன்பம் உறாஅ - (தான்) துன்புறாமல், வரின்-வருமாயின்; (எ - று.)

இன்பம் - ஆகுபெயர். உறாமல்என்பது, கடைக்குறைந்து நின்றது. துன்பம் -
சாதியொருமைப்பெயர். அவையாவன-ஈவார்கட் காலமும் இட

கூ0௬ - ஆம்-அதிகாரம்.—இரவு சகூக

னும் அறிந்துசேறலும், அவர்குறிப்பறிதலும், அவரைத் தன்வயத்தராக்கலும்,
அவர்மனம்நெகிழ்வன நாடிச்சொல்லலும் முதலியவற்றால் வருவனவும், மறு
த்துழி வருவனவுமாம். அவையுறாமல் வருதலாவது - அவர் முன்னுணர்ந்
தீயக்கோடல்.' இரந்தவர் துன்பமுறாவரின்' என்றுபாடமோதி, இரக்கப்பட்
டவர் பொருளின்மைமுதலியவற்றாற் றுன்புறாது எதிர்வந்தீவராயின் என்று

உரைப்பாரு முளர்.

இவையிரண்டுபாட்டானும்,

நல்குரவானுயிர்நீக்குமெல்லைக்கண் இளி
வில்லாஇரவு விலக்கப்படா தென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) இன்பம் என்னும் காரியத்தின்பெயர்
- அதன்காரணத்
திற்கு ஆகுதலால், காரியவாகுபெயர். 'உறூஅவரின்'
என்றவிடத்து உறாமல்
என்பது இறுதியிலுள்ள 'மல்' என்பது குறைந்து
அளபெடுத்து 'உறூஅ'
என நின்றதென்க. துன்பம் என்பது
பன்மையீறுதோன்றாதுநின்று பல
வகைத்துன்பங்களையும் காட்டுதலால், சாதியொருமை
யென்றார்: பால்பகா
வஃறிணைப்பெயர் இங்குப் பன்மையையுணர்த்திற்று
என்று கூறுமைக்குக்
காரணம், இது பன்மையென்று தீர்மானித்தற்குரிய
அடையாளமொன்றும்
வராமையாலாகும். அவையாவன-அத்துன்பங்களாவன.
ஈவார்கண்-கொடுப்
பவரிடத்து. மனம் நெகிழ்வன - மனம் தன்னிடத்து
இரங்கக்கூடியமொழி
களை. நாடி - ஆராய்ந்து. மறுத்துழி - (ஈவார்
இரப்போனுக்கியதான் வேண்டு
வதைக் கொடுக்காமல்) மறுத்தபோது. அவை யுறாமல் - அவ்வகைத்துன்பங்

கன் (இரப்பாற்கு)நிகழாமல். அவர் முன்னுணர்ந்து ஈயக் கோடல் - கொடுப்

போர் (இரப்பான்கருத்தை) முன்னமேயறிந்து தரப்பெற்றுக்கொள்ளுதல். இரந்தவையென்றவிடத்து இரந்தவர் என்று பாடம் ஓதுவாருமுளர். இரக்கப்பட்டவர்—ஈவார். உயிர்நீங்கும் எல்லைக்கண் - போது. இளிவில்லா - இழிவுபடுதலில்லாத.

உயிர்போவதாக இருக்கும்

(உ)

௧0௫௩. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

(இ - ள்.) கரப்பு இலா - கரத்தலில்லாத, நெஞ்சின்-நெஞ்சினையுடைய, கடன் அறிவார் - மானமறிவார், முன்நின்று - முன்னர்நின்று, இரப்புஉம் - (அவர்மாட்டுஒன்று) இரத்தலும், (நல்கூர்ந்தார்க்கு), ஓர் ஏர் உடைத்து-ஓரழகுடைத்து; (எ - று.)

"சிறியசுருக்கத்துவேண்டுமுயர்வு" என்றதனால் அவர்க்கு அது கடனெனப்பட்டது: அதனை யறிதல் - சொல்லுதலூற்று உரைக்கலாகாமைக்கு ஏதுவாய அதனியல்பினை யறிதல்: அவ்வறிவுடையார்க்கு

முன்னிற்றல்மாத்
திரமே யமைதலின் 'முன்னின்று' என்றும்,
சொல்லுதலான் வருஞ் சிறுமை
எய்தாமையின் 'ஓரேஎ ருடைத்து' என்றுங் கூறினர்.
உம்மை - அதனிழிபு
விளக்கிநின்றது.
(கு - ரை.) கரத்தல் - (தம்மிடத்துப்பொருளிருக்கவும்
இல்லையென்று)
ஒளித்தல். அவர்மாட்டு - கரப்பிலாநெஞ்சுள்ள
ஈவாரிடத்து. "சிறியசுருக்



கத்துவேண்டுமுயர்வு" என்ற மேற்கோள், கீழ் மானம் என்ற அதிகாரத்து ரு - ஆம் பாடலி லுள்ளது. குறைந்தநல்குரவில் பணியாமைவேண்டுமென்று குடிப்பிறந்தார்க்குக் கூறியிருத்தலால், அதனையுணர்ந்த குடிப்பிறந்தாராகிய ஈவார், குடிப்பிறந்தாராகிய இரப்பார் தம்மிடத்துப் பணியாதிருத்தலைக் கொண்டு கரவா ராதலால், அப்படிப்பட்ட ஈவாரை 'கடனறிவார்' என்றார். சொல்லுதலுற்று உரைக்கலாகாமை - (தம் இளிவைச்) சொல்லத்தொடங்கி (அதனை)ச்சொல்லமாட்டாமை. அதனியல்பினை - மானத்தினியல்பை. அவ் வறிவுடையார்க்கு - மானத்தினியல்பையறியும் அறிவை யுடையவர்க்கு. உம்மை, இரப்பும் என்ற இடத்து உள்ளது.
(ரு)

கய௫ச. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

(இ - ள்.) கரத்தல் - (தமக்குஉள்ளது) கரத்தலை, கனவின் உம் - கன
வின் கண்ணும், தேற்றாதார்மாட்டு - அறியாதார்மாட்டு, இரத்தல்உம்-சென்று
(ஒன்றை) இரத்தலும், (வறியார்க்கு), ஈதல்

போலும்---; (எ - று.)

உம்மை - ஈண்டும் அவ்வாறு நின்றது. தான் புகழ் பயவாதாயினும்
முன்னுளதாய புகழ் கெட வாராமையின்
'ஈதலேபோலும்' என்றார். ஏகா
ரம் - ஈற்றசை.

(கு - ரை.) தமக்கு உள்ளது கரத்தலை - (இரப்பார் 'எனக்கு ஈ' என்று
கேட்கும்போது)தம்மிடத்துள்ளபொருளை இல்லையென்று ஒளித்துக்கூறுதலை.
ஈண்டும் - இக்குறளிலும். அவ்வாறு
நின்றது-முன்குறளிற்போலவே இழிவு
சிறப்புப்பொருளதாய்நின்றது. ஈதலே, ஏ - ஈற்றசை: வாக்கியத்திலன்றிச்
சொல்லினீற்றிலிருப்பதும், ஈற்றசையேயா மென்க.

(௪)

௧0௫௫. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்

இரப்பவர் மேற்கொள் வது.

(இ - ள்.) கண் நின்று - (சொல்லுதல்மாட்டாது) முன்நிற்றன்மாத்தி
ரத்தான், இரப்பவர்-இரப்பார், (உயிரோம்பற்பொருட்டு), மேற்கொள்வது -
(அதனை) மேற்கொண்டுபோதுகின்றது,—கரப்பு இலார்-(அவர்க்குஉள்ளது)
கரவாதுகொடுப்பார்(சிலர்), வையகத்து உண்மையான் - உலகத்து உளராய
தன்மையானே, (பிறிதொன்றானன்று); (எ - று.)

அவரில்லையாயின், மானநீக்கமாட்டாமையின், உயிர்நீப்ப ரென்பதாம்.

(கு - ரை.) அதனை - இரத்தற்றொழிலை. அவர்க்கு - இரப்பார்க்கு: உள்
ளது கரவாது - தம்மிடத்து உள்ளதை ஒளிக்காமல்: இனி, அவர்க்கு
உள்ளது - கொடுப்பவராகிய தமக்கு உள்ளதைக் கரவாது என்பாருமுளர்.

மேற்கொள்வது என்ற எழுவாய்க்கு 'ஆகும்' என ஒருமுற்று வருவிக்க. கண் -
கண்ணுக்குத்தெரியும் எதிரிடத்துக்கு இலக்கணை. 'நின்று' என்றவினையெச்
சம், 'இரப்பவர்' என்பதன்முதனிலையான இரத்த லென்பதனோடாவது, 'மேற்கொள்பவர்' என்பதன்

முதனிலையாண மேற்கொள்ளுதற்சிறுழிலே.

க0கூ - ஆம் அதிகாரம்—இரவு சுகூ

டாவது இயைதற்கு உரியது. அவர் - கரப்பிலார்.
உயிர்ப்பரென்பதற்கு
இரப்பவரென்ற எழுவாய் வருவிக்க.

(ரு)

க0ருகூ. கரப்பிடும்பை யில்லாரைக் காணி
னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

(இ - ள்.) கரப்பு இடும்பை - (உள்ளது)
கரத்தலாகிய நோய், இல்
லாரை—, காணின் - கண்டால், (மானம் விடாது
இரப்பார்க்கு),—இரப்பு
இடும்பைஎல்லாம் - இரப்பான்வருந் துன்பங்களெல்லாம்,
ஒருங்கு கெடும் -
சேரக் கெடும்; (எ - று.)

கரத்தல் ஒருவர்க்குவேண்டுவதொன் றன்மையின்,
அதனை 'நோய்' என்
றும், அஃதுஇல்லாத இரக்கத்தக்காரைக் கண்ட
பொழுதே அவர் கழி
யுவகையராவ ராகலின்,'எல்லாமொருங்குகெடும்'என்றும்
கூறினர்.இடும்பை-

ஆகுபெயர். முழுதுங்கெடு மென்று பாடமோதி, எஞ்சாமற்கெடுமென்று உரைப்பாரு முளர்.

(கு - ரை.) உள்ளதுகரத்தல் - (தம்மிடத்து) இருக்கும்பொருளை இல்லையென்று சொல்லி ஒளித்தல். நிரப்பை இடும்பையாகக்கருதுபவர் மானம் விடாதிரப்பவரே யாதலால், 'மானம்விடாதிரப்பார்க்கு' என வருவித்தார்.

நிரப்பு - வறுமை. ஒருங்கு என்பதன்பொருள், 'சேர' என்பது. அதனை - கரத்தலை. அஃது - கரப்பு. இரக்கத்தக்கார் - யாசித்தற்குத்தக்கார்: கொடுப்போர். அவர் - இரப்போர். கழியுவகையர் - மிக்கமகிழ்ச்சியையுடையவர்.

இடும்பையென்பதற்குப் பொருள் - துன்பமென்பது: அச்சொல் - துன்பத்தையுண்டாக்கும் நோயைக் காட்டுவதால், காரியவாகுபெயர். ஒருங்குகெடும் என்றவிடத்துப் பாடாந்தரம், 'முழுதுங்கெடும்' என்பது. எஞ்சாமல் - குறையாமல்: இது முழுதும் என்பதன்பொருள்; "முழுதென்கிளவி எஞ்சாப் பொருட்டே" என்பது, தொல்காப்பியத்து உரியியற்சூத்திரம். (சு) கOருள.

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முளளுளுவப்ப துடைத்து.

(இ - ள்.) இகழ்ந்து - (தம்மை) அவமதித்து, எள்ளாது - இழிவுசொல்லாது, ஈவாரை - பொருள்கொடுப்பாரை, காணின் - கண்டால்,—உள்ளம் - (அவ்விரப்பாரது) உள்ளம், மகிழ்ந்து—, உள்ளுள் - உள்ளுள்ளே, உவப்பது உடைத்து - உவக்குந்தன்மையதுடைத்து; (எ - று.)

'இகழ்ந்தெள்ளாது' எனவே நன்குமதித்தலும் இனியவைகூறலும் பெறுதும். சிறப்பிடும்பை கெடுதலளவேயன்றி, ஐம்புலன்களானும் பேரின்பமெய்தினுராகக் கருதலான் 'உள்ளுளுவப்பதுடைத்து' என்றார்.

இவையைந்துபாட்டானும், அவ்விரத்தக்காரதியல்பு கூறப்பட்டது.

(கு - ரை.) உள்ளுள்ளே - மனத்திற்குள்ளேயே. இகழ்ந்தெள்ளாது என்ற இடத்து எதிர்மறை 'இகழாது எள்ளாது' என ஈரிடத்தும் சேருதலால், இகழாது என்பதனுல் நன்குமதித்தலும், எள்ளாது என்றதனுல் இனியவைகூறலும் பெறப்படும். பெறுதும் - பெறுவோம்.

ஈவாரைக்கண்ட போதே இரப்பார்க்கு சிரப்பிடும்பை
[வறுமைத்துன்பம்] கெடுதல்யாத்திர



மன்றி, அக்கொடையாளரால் தாம் பெரும்பொருள்பெறலாமென்ற கருத்தினுல் மெய்வாய்முதலிய பஞ்சேந்திரியங்களும் பேரின்பத்தைப்பெற்றனவாகவே அவராற் கருதப்படுமென்க. ஐம்புலன்களானும்—ஐம்பொறிகளாலனுபவித்தற்குரிய ஐந்துவிஷயங்களாலும். அவ்விரத்தக்கார் - இரப்போரை நன்குமதித்து இன்சொற் சொல்லிக் கரவாது ஈயுமவர். (எ)

௧0௫௮. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

(இ-ள்.) இரப்பார் - (வறுமையுற்று) இரப்பார், இல் ஆயின் - இல்லையாயின், ஈர் கண் மா ஞாலம் - குளிர்ந்த இடத்தையுடைய பெரியஞாலத்துள்ளார், (செலவுவரவுகள்), மரம் பாவை - (உயிரில்லாத) மரப்பாவை, சென்று வந்து அற்று-(இயந்திரக்கயிற்றால்)சென்று வந்தாற்போலும்;(எ-று.)

ஐகாரம் - அசைநிலை. ஞாலமென்னும் ஆகுபெயர்ப்பொருட்கு உவமையோடொத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளாரென்றது-அவரை யொழிந்தாரை: அவர்க்கு ஈதலைச்செய்து புகழும்புண்ணியமும் எய்தாமையின், உயிருடைய ரல்ல ரென்பதாம். "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரேவன் கணவர்" என்றார் பிறரும். இத்தொடையின்பம் நோக்காது

'இரப்பவரில்லாயின்' என்று பாட மோதுவாருமுளர்.

(கு - ரை.) இயந்திரக்கயிறு - மரப்பாவையை யாட்டுவிக்குஞ் சூத்திரக் கயிறு. 'இரப்பாரை' என்ற இடத்திலுள்ள ஐகாரம் அசைநிலையாகும். ஞாலம்-

ஞாலத்திலுள்ளார்க்கு இடவாகுபெயர். ஞாலத்துக்கு உவமை, மரப்பாவை. மரப்பாவையாகிய உவமையில் 'சென்றுவந்தற்று' என்று செலவு வரவுகள்
கூறப்பட்டிருத்தலால், உபமேயமாகிய ஞாலம்
லுள்ளாரது செலவுவரவுகள் என உரைக்கப்பட்ட

என்பதற்கும் - ஞாலத்தி
தென்க. அவரை யொழிந்

தாரை - இரப்பவரையொழிந்தவரை: இரப்பாரைத்
தனியே கூறிவிட்டத

னுல், அவரையொழிந்தாரைக்கொள்வதே
ஏற்புடையதாகுமென்க. மானிட

ராக உயிர்படைத்ததற்குப்பயன் புகழும்புண்ணியமுமே
யாதலாலும், இரப்பா

ரில்லாவிடின் கொடுத்தலா லடைய லாகும் புகழும்
புண்ணியமும் அடைய

முடியா வாதலாலும்,
மானிடப்பிறவியின்பயனேயற்றதாகுதலால், இரப்பா

ரைப்பெறுத அப்போது செல்வர்களியக்கம் உயிரற்ற
மரப்பாவையியக்கம்

போலு மென்றார். ''ஈவாரும்'' என்றுதொடங்கும்
மேற்கோள் உள்ள இடம்

விளங்கவில்லை: இதன்பொருள்:—ஈவாரும் -

கொடுப்பவரும், கொள்வாரும் -
பெற்றுக்கொள்பவரும், (என்னும் இருவரையும்), இல்லாத - பெற்றிராத,
வானத்து - சுவர்க்கலோகத்து, வாழ்வாரே - வாழ்பவரே, வன்கணவர் -
கொடுமையையுடையோர் என்பது. "புத்தேளுலகத்து" (உகஙு) என்னுங்
குறளி னுரையில், "ஈவாரும் ஏற்பாருமின்றியே எல்லாரும் ஒருதன்மையராத
லின்" என்று பரிமேலழகரே உரைத்திருப்பது இங்குக் கருதத்தக்கது. 'இரப்
பாரை...மரப்பாவை' என்ற பாடத்தைவிட்டு 'இரப்பவர்...மரப்பாவை' என்றுபாடங்கொள்ளின்,
எதுகைத்தொடையின்பம் கெடுதல் காண்க. (அ)

கoசஎ - ஆம் அதிகாரம்.—இரவு சகூடு

கoருகூ. ஈவார்க ணென்னுண் டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை.

(இ - ள்.) இரந்துகோள் - (அவர்பாற்சென்று ஒன்றனை) இரந்துகோ
டலை, மேவார் - விரும்புவார், இலாஅக்கடை - இல்வழி, ஈவார்கண்-கொடுப்
பார்மாட்டு, என் - என்ன, தோற்றம் - புகழ்,

உண்டாம்—? [யாதுமில்லை].

தோற்றம் - ஆகுபெயர். மேவுவாரென்பது விகாரமாயிற்று. கொடுத்தல்வண்மை வெளிப்படாமையின் அதனாற் புகழெய்தாரென்பதாம்.

இவையிரண்டுபாட்டானும், உலகிற்கு இரப்பார்வேண்டு மென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) அவர்பால் - ஈவாரிடத்து. தோற்றம் - விளங்கிக்காணப்படுதல்: அங்ஙன் விளங்கிக் காணப்படுதலையுடைய புகழுக்கு, ஆகுபெயர். செய்யுளில் மேவார் என்றது - மேவுவாரென்பதன் விகாரமான சொல். கொடுத்தல்வண்மை-கொடுக்கின்ற உறுதி: கொடுத்தல்வண்மை என்றபாடமுமுண்டு.

அதனால் - கொடுத்தலினால்.

(கூ)

க0கூ0.

இரப்பான் வெகுளாமை வேண்டு மிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

(இ - ள்.) (ஈவானுக்குப் பொருளுதவாவழி 'இவன் எனக்கு ஈகின்றிலன்' என்று அவனை), இரப்பான்—, வெகுளாமை -

வெருளாதொழிதல்,

வேண்டும்—; (அது வேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசான்று வேண்டா): நிரப்பு இடும்பை - நிரப்பாகிய தன்னிடும்பை, தானே உம்—, கரி - சான்றுதல், சாலும் - அமையும்; (எ - று.)

யாவர்க்கும் *தேடவேண்டுதலும் நிலையின்மை முதலிய பிறசான்று

முண்டு என்பதுபட நின்றமையின், உம்மை - எச்சவும்மை. தனக்கேயன்றி,

மற்றை யிரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள்கடைக்கூட்டற்கு அவனுறுந்

துன்பத்தைத் தனக்கேயாகவைத்துத் தானுறுந் துன்பம் தானறிந்து வெரு

ளற்க வென்பதாம்.

இதனான், அவற்கு இன்றியமையாததோரியல்பு கூறப்பட்டது.

(கு - ரை.) ஈவானுக்கு - கொடுப்பவனுக்கு. பொருள் உதவாவழி-பணம்

(கையிற்கிடைக்காமையால்) உதவாதிருக்கும்போது, அவனே - பொருள் (உத

வாமையால் கொடுக்கமாட்டாத) ஈவானே. அது - பொருள், சான்று -

சாட்சி. அமையும் - பொருந்தும். யாவர்க்கும் - எத்துணைச்செல்வர்க்கும்.

தேடவேண்டுதலும்-பொருள் சிலகாலத்தில் கையிற்கிடையாமையால் தேட

வேண்டியிருத்தலும். நிலையின்மை - பொருளின் தன்மை நிலைத்திராதாதல்.

தானேயும் என்ற இடத்து உம்மை யாவரிடத்தும் தேடவேண்டுதலும் நிலை

யின்மை முதலிய பிறசான்றுமுண்டாயினும் என்பதுபட நின்றமையால்,

எச்சவும்மையாம்: இறந்ததுதழுவிய எச்சமென்னலாம்; எதிரதுதழுவியது

என்பாருமுளர். கடைக்கூட்டல் - முயன்றுசேர்த்தல். அவனுறுந்துன்பம் -

* பி - ம்: வேண்டுதலும் நிலையின்மையும்



ஈவான் அடையும் முயற்சிவருத்தம். தனக்கேயாகவைத்து - தனக்கேவந்ததாகவைத்து: தன்பொருட்டேபடுவதாகவைத்து என்பாருமுளர். அஃற்கு - யாசகனுக்கு. இயல்பு - தன்மை. "புள்ளும்பொழுதும் பழித்தலல்லதை, யுள்ளிச்சென்றோர்ப்பழியலர்" என்ற புறநானூறும், "பிச்சைபுக்குண்பான்பிளிறுமைமுன்னினிதே"என்ற இனியவைநாற்பதும் ஈண்டுஅறியத்தக்கன.(௧0)

## ௧0எ - ஆம் அதிகாரம்.—இரவச்சம்.

அஃதாவது - மானந் தீர வரும் இரவினை யஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) மானந்தீர - தவ்தொழிலுக்கு.

மானம் விட்டுநீங்க. இரவினை - பிச்சையெடுக்

௧0௬௧. கரவா துவந்தியுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

(இ - ள்.) கரவாது - (தமக்குள்ளது) கரவாது, உவந்து - (இவர் வரப் பெற்றேமென்று) உண்மகிழ்ந்து, ஈயும் - கொடுக்கும், கண் அன்னார் கண் உம் - கண்போலச் சிறந்தார்மாட்டும், இரவாமை - இரவாதே (ஒருவன்) வறுமைகூர்தல், கோடி உறும் - (இரந்துசெல்வமெய்தலிற்) கோடிமடங்கு நன்று; (எ - று.)

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாதென்பதுபட நின்றமையின், உம்மை - உயர்வுசிறப்பின்கண்வந்தது. அவ்விரவான் மானந்தீராதென்னுந் துணையல்லது அதற்குமிகுதி கூடாமையின், வல்லதோர்முயற்சியான் உயிரோம்பலே நல்லதென்பது கருத்து.

(கு - ரை.) இவர்-இவ்விரப்பவர். உண்மகிழ்ந்து-மனமகிழ்ந்து. செல்வமெய்தலின் - பணம் அடைவதைக்காட்டிலும். நல்குரவு - [தன்] வறுமையை. நட்டார் - சினேகிதர். ஆகாது என்பதற்கு 'இரவு' என்னும் எழுவாய் வருவிக்க. "ஏற்பதிகழ்ச்சி" என்றதும் இங்குநோக்குக. 'கண்ணன்னார்கண்ணும்' என்ற இடத்து உம்மை, உயர்வுசிறப்பில்வந்தது. மானந்தீராதென்னுந்துணையல்லது-மானம்போகாதென்ற அவ்வளவுமாத்திரமன்றி. அதற்குமிகுதி-அதனினும்மிக்கது. வல்லது - (தான்) செய்யத்தக்கது. (௧)

௧0௬௨. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(இ - ள்.) உலகு இயற்றியான் - இவ்வுலகத்தைப் படைத்தவன், (இதன்கண்வாழ்வார்க்கு முயன்று உயிர்வாழ்தலையன்றி), இரந்தும்—, உயிர் வாழ்தல்-உயிர்வாழ்தலை, வேண்டின்-வேண்டிவிதித்தானாயின், (அக்கொடியோன் தானும்), பரந்து-(அவரைப்போன்று)எங்கும் அலமந்து, கெடுக-கெடுவானாக.

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்குவேண்டுவதாய உண்டியும் அதற்கேதுவாய செய்தொழிலும் பழவினைவயத்தாற் கருவொடு கலந்தவன்றே அவன் கற்பித்த மன்றே? அவற்றுட் சிலவுயிர்க்கு இரத்தலையும் ஒரு

அதிகாரம்.—இரவச்சம் சகூஎ

செய்தொழிலாகக் கற்பித்தா ஞயின், அத்தீவினையால்
முறல் வேண்டுமென்பதாம்.

தானும் அத்துன்ப

இவையிரண்டுபாட்டானும், அவ்விரவின்கொடுமை கூறப்பட்டது.

(கு - ரை.) இதன்கண் - இவ்வுலகில். விதித்தான் - ஏற்படுத்தினன். 'அக்கொடியோன் தானும்' என்று பிரமனைக் கூறியது - இரந்தேவாழவேணு மென்று விதித்தானென்று அவன்மீதுகொண்ட சினம்பற்றி. அவரை - அவ் விரப்போரை. அலமந்து - சுழன்று: திரிந்து என்றபடி. கெடுக - வியங் கோள்: சபித்தற்பொருளது. அதற்கு - வாழ்நாளுக்கு. உண்டி - உணவு. அதற்கு - உணவிற்கு. கருவொடு கலந்த அன்றே - கருப்பத்திற்சேர்ந்த அன் றைக்கே. அவன் - உலகியற்றியான்: பிரமன். கற்பிக்கும் - உண்டாக்கிவைப் பான். அத்தீவினையால் - (சிலர்க்கு இரத்தலையும் உண்டிக்கு ஏதுவான செய் தொழிலாகச்செய்த) அந்தத்தீவினையின்பயனால். தானும் - பிரமனும். (உ)

கOசுரு. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

(இ - ள்.) இன்மை - வறுமையான்
(முயன்று நீக்கக்கடவேமென்றுகருதாது);

வரும், இடும்பை - துன்பத்தை,
'இரந்து—, தீர்வாம் - நீக்கக்கட

வேம்', என்னும் - என்றுகருதும், வன்மையின் - வன்மைபோல, டது - வலிமைப்பாடுடையது, இல் - பிறிதில்லை; (எ - று.)

வ ன்பாட்

நெறியாய முயற்சி நிற்க, நெறியல்லாத இரவால் தீர்க்கக்கருதலின், வன்மையாயிற்று. வன்பாடு - முருட்டுத்தன்மை; அஃதாவது - ஓராது செய்துநிற்றல்.

இதனான், வறுமைதீர்தற்குநெறி இரவன் றென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) இரந்து - யாசித்தல்தொழிலைமேற்கொண்டு. வன்மை - கொடுமை. நெறியாய முயற்சி நிற்க - நேர்வழியான முயற்சியிருக்க. இரவால்-யாசகத்தால். ஓராது-ஆராய்ச்சியில்லாமலே: பிடிவாதமாகஎன்றபடி.

கo௬௪. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

(இ - ள்.) இடம் இல்லாக்கால்உம் - நுகரவேண்டுவனவின்றி நல்கூர்ந்த வழியும், இரவு-(பிறர்பாற்சென்று) இரத்தலை, ஒல்லா-உடம்படாத, சால்பு - அமைதி,—இடம்எல்லாம்-எல்லாவுலகும், கொள்ளா-(ஒருங்குஇயைந்தாலும்) கொள்ளாத, தகைத்து ஏ - பெருமையுடைத்து; (எ - று.)

அவ்விரத்தலைச் சால்பு விலக்கு மாகலின், இரவொல்லாமை அதன்மே லேற்றப்பட்டது.

இதனான், அந்நெறியல்லதனைச்

சால்புடையார்செய்யாரென்பதுகருத்து.

(கு - ரை.) நுகரவேண்டுவன - அனுபவிக்க உரியன. நல்கூர்ந்தவழியும் - தரித்திரப்பட்டபோதும். பிறர்பால் - அயலாரிடத்து. சால்பு - அடங்கியதன்மை. இரத்தலைச் சால்பு விலக்கு மாதலால், இரவொல்லாமையையும் சால்பையும் அபேதப்படுத்தி 'இரவொல்லாச்சால்பு' என்று கூறினர்: காரி 63



யத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கின் பாற்படும். அந்நெறியல்ல

தனை - பிழைப்புக்கு நேர்வழியாகாத அந்த இரத்தல்தொழிலை. (௪)

௧0௬௫. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த

துண்ணலி னூங்கினிய தில்.

(இ - ள்.) தாள் - (நெறியாய) முயற்சி, தந்தது - (கொடுவந்து) தந்தது,

தெள் நீர் - தெளிந்தநீர்போலும், அடு புற்கை ஆயின் உம்-அடு புற்கையே யா

யினும், உண்ணலின் - (அதனை) உண்டற்கு, ஊங்கு - மேல், இனியது இல்-

இனியதில்லை; (எ - று.)

தாள்தந்தகூழ் செறிவின்றித்
தெண்ணீர்போன்றதாயினும், இனிவாய
இரவான் வந்த தன்றித் தம்முடைமை யாகலின்,
அமிழ்தத்தோடொக்கு
மென்பதாம்.
இதனான், நெறியினானெய்த
சிறிதேனும், அதுசெய்யுமின்பம் பெரிதென்
பது கூறப்பட்டது.
(கு - ரை.) அடுபுற்கை - சமைத்தகூழ். தாள்தந்த
கூழ் - முயற்சியினாற்
கிடைத்த கூழ். செறிவின்றி - கெட்டியாக இல்லாமல்.
தம்முடைமை - தம்
முயற்சியாற்பெற்ற பொருள். சிறிதேனும் -
அற்பமானபொருளேயாயினும்.
அது - அச்சிறுபொருள்.
(ரு)

க0கூகூ. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

(இ - ள்.) ஆவிற்கு - (தண்ணீர்பெறாதுஇறக்குநிலைமைத்தாயதோர்) ஆவினை(க் கண்டு), நீரென்று-(அறனோக்கி இதற்குத்) தண்ணீர் (தரல்வேண்டும்) என்று, இரப்பின்உம் - இரந்துசொல்லுங்காலும், இரவின் - அவ்விரவு போல, நாவிற்கு - (ஒருவன்) நாவிற்கு, இளிவந்தது—, இல் - பிறிதில்லை.

ஆ காத்தோம்பல் பேரற மாகலின் 'ஆவிற்கு' என்றும், பொருள் கொடுத்துக்கொள்ளவேண்டாத எண்மைத்தாகலின் 'நீர்' என்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவே யாகலின் 'நாவிற்கு' என்றும், அதுதான் எல்லா இளிவினும் மேற்படுதலின் 'இளி வந்ததில்' என்றும் கூறினார்.

இதனான், அறனும் முயன்றுசெய்வதல்லது இரந்துசெய்யற்க பது கூறப்பட்டது.

வென்

(கு - ரை.) இறக்குநிலைமைத்து - சாகின்ற நிலைமையையடைந்தது.

அறனோக்கி - (இந்த ஆவிற்கு நீர்வார்க்குமாறுசெய்தால் பசுவின் உயிரைக் காத்த) அறப்பயனுண்டாமென்று நினைத்து. ஆவையெடுத்தது, அதனைக் காத்தல் பேரறமாதலால். பொருள்கொடுத்துக் கொள்ளவேண்டாத - பணங் கொடுத்து வாங்கவேண்டியதாகாத. எண்மைத்து - சுலபமாகக் கிடைக்கக் கூடியது. இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவே யாகலின் - ஆவிற்கு நீரிரப்பவன் இளிவுபடச் சொல்லவேண்டுவது 'ஆவிற்குநீர்கொடு' என்ற அளவேயாதலால்: வேறு இல்லையென்க. அதுதான்-அச்சொல்லே. முயன்று- முயற்சியினாற் பொருளைத்தேடி. "தளர்வொடு மெலிந்தும் வையந் தனிக்

குடை நிழற்றும் பைம்பொற், கிளரொளிப் பூணான் வீமன்பாவையைக் கேட்டல்செய்யா, ளளியென வுயிரை யுண்மை யறத்தினை யற விட்டாலு, மிளிவென வெண்ணி மானம் பூண்டவ ரிரப்பர் கொல்லோ" என்ற நைடதமும் ஈண்டுக் காண்க. (சு)

கoசுஎ. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

(இ - ள்.) இரப்பாரை எல்லாம்—, இரப்பன்-(யான்) இரவாநின்றேன்: (யாதுசொல்லியெனின்), 'இரப்பின் -(நுமக்கு) இரக்கவேண்டுமாயின், கரப்பார் - (தமக்குள்ளது) கரப்பாரை, இரவன்மின்-இரவாதொழிமின்,' என்று- என்றுசொல்லி; (எ - று.)

இரண்டாவது விகாரத்தாற் றொக்கது.

இவ்விளிவந்த செயலான் ஊட்

டியவழியும் உடம்பு நில்லா தாகலின், இது 'இரப்பன்' என்றார்.

வேண்டாவென்பது தோன்ற

இதனான், மானந்தீர வரு மிரவு விலக்கப்பட்டது.

௭

(கு - ரை.) இரண்டாவது தொக்கது - 'காப்பார்' என்றதன்பின்னும். இவ்விளிவந்தசெயலான் - இழிவுபொருந்திய இந்தயாசகத்தொழிலால். ஊட்டியவழியும் - இவ்வுடலுக்கு உணவைத்தேடிக்கொடுத்தாலும். இது - இரவு. "மானவருங்கலநீக்கியிரவென்னு, மீனவிளிவினல்வாழ்வேன்மன்-ஈனத்தா, லூட்டியக்கண்ணு முறுதிசேர் திவ்வுடம்பு, நீட்டித்துநிற்குமெனின்" என்ற நாலடி இங்குக் காணத்தக்கது. (எ)

கo௬௮. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

(இ-ள்.) (இவ்வறுமையென்னுங்கடலை இதனாற் கடத்துமென்று கருதி ஒருவனேறிய), இரவுஎன்னும்—, ஏமாப்பு இல் - சேமமற்ற, தோணி—,— (அதன்கணோடுங்கால்), கரவுஎன்னும் - கரத்தலென்னும், லத்தொடு தாக்குமாயின், பக்குவிடும் - பிளந்துபோம்; (எ

பார் தாக்க-வன்னி
- று.)

யின்
முயற்சியாற் கடப்பதனை இரவாற் கடக்லுற்றான் அதன்கரைகாணாமை 'ஏமாப்பிறோணி' என்றார். ஏமாப்பின்மை, தோணிமேலேற்றப்பட்

டது. அது கடத்தற்கேற்றது அன்மையானும், நிலமறியாதுசெலுத்தியவழி யுடைதலானும் அதன்கணேறற்கவென்பதாம். இஃது - அவயவவுருவகம்.

(கு - ரை.) இதனல் - இரவினல். இரவைத்தோணியென்றதற்கு ஏற்ப, இரவாளனை அத்தோணியின்மீது ஏறியவனுகக் கொண்டார். அதன்கண் - வறுமையென்னுங்கடலில். வன்னிலம் - பாறையான இடம். முயற்சியாற் கடப்பதனை - முயற்சியினுற் கடந்திடவேண்டிய வறுமையென்னுஞ் சமுத்திரத்தை. அதன் - அந்தவறுமைக்கடலின். இரவினல் வறுமைக்கடலைக் கடக்க முடியாதென்றகாரணத்தினல்; இரவென்னும் ஏமாப்பில்தோணி என்ருர். ஏமாப்பின்மை இரவுக்கு அடையாகவேண்டியிருக்க, 'ஏமாப்பிறேணி' என்று



தோணிக்கு அடைமொழியாகக்கூறியதனல், ஏமாப்பின்மை தோணிமேலேற்

றப்பட்டதென்ருர். அது கடத்தற்கு ஏற்றது அன்மையானும் - அந்த இரவு

வறுமையைக் கடத்தற்கு உரியதல்லாமையாலும். நிலம் - செல்லும் இடம்.

கரத்தலையுடையாரிடத்து இரத்தல் வறுமையைப்போக்க உதவாமையால்

'நிலமறியாதுசெலுத்தியவழி உடைதலான்' என்றது. அதன்கணேறற்க-வறுமையை

இரத்தலாற்கடந்துவிடலாமென்று அத்தொழிலைக் கொள்ளற்க என்றபடி. அவயவவுருவகமாவது - அவயவியை உருவகப்படுத்தாது அவய

வத்தை மாத்திரம் உருவகஞ் செய்வது. முக்கியமான

வறுமையைக் கட லென்று உருவகஞ்செய்யாது, இரவு கரவுகளை தோணி பாரென்று உருவகஞ் செய்தமையால், இது - அவயவவுருவகம். பார் - வன்னிலம். (அ)

க0சுகூ. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) (உடையார்முன் இல்லார் சென்று), இரவு - இரந்துநிற்ற லின்கொடுமையை, உள்ள - நினைந்தால், உள்ளம் - எம்முள்ளம், உருகும் - கரைந்துருகாநிற்கும்; (இனி அந்நிலையைக் கண்டுவைத்தவர்), கரவு - இல்லை யென்றலின் கொடுமையை, உள்ள - நினைந்தால், உள்ளதூஉம் - அவ்வுருகு மளவு தானும், இன்றி—, கெடும் - பொன்றிவிடும்; (எ - று.)

“இரவினை,
யுள்ளுங்காலுள்ளமுருகுமாலென்கொலோ, கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு” என்றார், பிறரும். இரவினுங் கரவு கொடிதென்பதாம்.

இதற்குப் பிறரெல்லாம் இரக்கின்றவருள்ளம் உருகு மென்று உரைத்தார்.

(கு - ரை.) உடையார் - பொருளுள்ளவர். இல்லார் - வறியவர். “உடையார்முனில்லார்போலேக்கற்றும்” என்பது, திருக்குறள், கல்வி, ரு. அந்நிலையை - இரப்பவரிருக்கின்றநிலைமையை. கண்டுவைத்தவர்-செல்வர். அச் செல்வர் இல்லையென்று சொல்லுங் கொடுமையை நினைந்தால் எம்மனம்

அழிந்தேவிடும் என்றபடி. பொன்றுதல் - அழிதல். "இரவினை" என்று தொடங்கும் மேற்கோள், நாலடி, இரவச்சம், ரு - இல் உள்ளது: இதன்பொருள்:—இரவினை - யாசித்தல்தொழிலை, உள்ளுங்கால் - நினைக்குமிடத்து, உள்ளம் - மனம், உருகும்—:
கொள்ளுங்கால்-(பிறரிடத்து ஒன்றனைப்) பெறும்போது, கொள்வார் குறிப்பு-பெற்றுக்கொள்ளும்யாசகரின் எண்ணம், என் கொலோ - எவ்வாறு இருக்குமோ?
இரத்தலைநினைக்கும்போதே நமது உள்ளம் உருகுகின்றதே! இரந்துபெறும் யாசகர்மனம் எவ்வாறு இருக்குமோ என்றபடி: இனி, என்கொலோ கொள்ளுங்கால் கொள்வார்குறிப்பு என்பதற்கு - பிறர்வருந்திச் சம்பாதித்த பொருளைத் தாம் ஒருமுயற்சியுமின்றி யாசகத்தாற் பெறுபவரது எண்ணம் என்னவோ? அந்த எண்ணம் இகழத் தக்கதேயென்றுமாம். இதற்கு - இரவுள்ள உள்ளமுருகும் என்பதற்கு. இரக்கின்றவருள்ளமுருகும்என்று பிறரெல்லாங்கூறியது சிறக்குமாறில்லையென்க.

க0எ0. காப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்

சொல்லாடப் போஒ முயிர்.

க0எ - ஆம் அதிகாரம்.—இரவச்சம்

ரு0க

(இ - ள்.) (கரப்பார்), சொல்ஆட-(இல்லையென்று) சொல்லாடியதுணையானே, இரப்பவர் - இரப்பார்க்கு, உயிர்

போம்-உயிர்போகாநின்றது: கரப்
பவர்க்கு-(இனிச்)சொல்லாடுகின்றஅவர்தமக்கு,
(உயிர்பின்னும்நிற்றலால்அப் பொழுது), யாங்கு-எப்புரையுள்,
ஒளிக்கும் கொல்ஓ - புக்கொளித்துநிற்கும்?

உயிர்போகலாவது-இனி யாம் என்செய்தும் என்று ஏங்கிச் செயலற்று நிற்றல்: "அங்கிலேயே - மாயானேமாற்றிவிடின்" என்றார், பிறரும். கேட் டாரைக் கொல்லவற்றாய சொல்,சொல்வாரைக்கோறல் சொல்லவேண்டாவா யினும், அது காண்கின்றிலம்: இஃது என்னோ! என்பதாம். வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவாராய கேளிர்கட்கும் அதனைச் சொல்லாட உயிர் போம்; ஆனபின், மறைக்கப்படுவாராய பிறர்க்குச் சொல்லாடியக்காற் போகாது எங்கே யொளித்துநிற்கும்? இரண்டானும் போமேயன்றோ! என இரவஞ்சினு னொருவன் கூற்றாக்கி யுரைப்பாரு முளர்.

இவைமூன்றுபாட்டானும், அவ்விரவின்குற்றமும் கரவின்குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன.

(கு - ரை.) சொல்லாடிய துணையானே - பேசியமாத்திரத்தாலே. அப் பொழுது - கரப்பார் தம்மிடத்து இல்லையென்றுபேசும்போது. எப்புரையுள் - எந்த (உள்ளிருக்குந்)தொளையில். உயிர்போகலாவது என்பதற்குமுன் 'இரப் பார்க்கு' என்று வருவிக்க. பிறரிடத்துயாசிக்குமிடத்து இரப்போர்க்கு மரண வேதனைபோன்ற வேதனையுண்டாகுமென்றவாறு. என்செய்தும்-(பிழைக்க) என்ன உபாயஞ்செய்வோம்?

"அந்நிலையே" என்ற மேற்கோள், நாலடி, இர வச்சம், அ-ஆம் பாட்டி லுள்ளது: இதன்பொருள்:—மாற்றிவிடின் - (இரப்ப வன் 'எனக்கு ஈவாய்' என்றுகேட்கும்போது செல்வமுடையான் தன்னிட முள்ளதைக் கரந்து இல்லையென்று) மறுத்துவிட்டானாயின், அ நிலையே-அப்போதே, (இரப்பாளன்), மாயானோ - மரணவேதனையடையானோ? மரண வேதனையடைவானே! என்று இரங்கியவாறு. கேட்டாரை - இல்லையென்ற சொல்லைக்கேட்ட இரப்பாளரை. கொல்லவற்றாய - கொல்லும் வல்லமையுள்ளதாகிய. கோறல் - கொல்வது. அது - சொல்வாரைக்கொல்வதை. இஃது என்னோ - இது என்னவியப்போ! வறுமையுற்றுழி - தரித்திரப்பட்ட போது. இந்தமுதலுரையை, யாசகனொருவனது பரிதாபநிலையைக்கண்டவன் கூற்றாகக் கொள்க: இனி, இரவஞ்சினான் கூற்றாக [சொல்லாக] வேறோருரை வருமாறு:—(யாசித்தற்குரிய சுற்றத்தார்க்கும்), இரப்பவர் - யாசகர், சொல்லாட - (தம் வறுமையைமறையாமல்) சொல்ல, உயிர்போம்—: (அப்படியிருக்க), கரப்பவர்க்கு-(வறுமையைச் சொல்லாமல்) மறைத்தற்குரியவராகிய பிறரிடத்தில், சொல்லாட - (தமது வறுமையைச்) சொல்லுமாறுநேர்ந்தால், உயிர்-(அங்ஙனம் தம்வறுமையைச்சொல்லுகின்ற இரப்பவரின்) உயிர், யாங்கு ஒளிக்கும் கொல் - (சொல்லாடியக்காற் போகாது) எங்கேயொளிக்குமோ? [சுற்றத்தார் மற்றையார் என்ற இருவரிடத்தும் சொல்லாட

உயிர்போயே தீரும்] என்பது.



திருக்குறள்

## ௧0௮ - ஆம்

## அதிகாரம்.—கயமை

அஃதாவது - மேல் அரசியலுள்ளும் அ
ங்கவியலுள்ளுஞ் சிறப்புவகை
யாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினல்
யாவர்க்கும் எய்த
வைத்தமையின் ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும்,
ஈண்டு ஒழிபியலுள்
வெளிப்படக்கூறியனவுமாய குணங்கள் யாவுமிலராய
கீழோரது தன்மை.
அதனல், இஃது எல்லாவற்றிற்கும்பின் வைக்கப்பட்டது.
(கு - ரை.) ஏற்புடையன - தக்கவை. குறிப்பினல்
யாவர்க்கும் எய்த
வைத்தமையின் - எல்லார்க்கும் வேண்டியனவென்று
குறிப்பாக அறியும்படி
கூறியிருத்தலால். ஈண்டு ஒழிபியலுள் - இந்நூலில்
ஒழிபியலில். ஒழிபிய
லுள் கூறியவை - குடிமை முதல் கயமையீறானவை:
இவற்றுள் கொள்ள
வேண்டுவன தள்ளவேண்டியன என்ற இரண்டும்
உள்ளன: உதாரணமாக,

குடிமை கொள்ள வேண்டியது,
நல்குரவு தள்ளவேண்டியது எனக் காண்க.
கயமை - இருக்கவேண்டிய
நற்குணமொன்றும் இல்லாமையாற் கீழ்மைப்
பட்டோரின் தன்மை. எல்லாவற்றிற்கும் -
ஒழிபியலிலுள்ள அதிகாரங்கள்
யாவற்றிற்கும்.

க0ௗக. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

(இ - ள்.) மக்களே போல்வர் -
(வடிவான் முழுதும்)மக்களையொப்பர்,
கயவர்—:அவர் அன்ன ஒப்பாரி -
அவர்மக்களையொத்தாற்போன்ற ஒப்பு,
(வேறிரண்டுசாதிக்கண்), யாம்—, கண்டது இல் -
கண்டதில்லை; (எ - று.)

முழுதுமொத்தல், தேற்றேகாரத்தாற் பெற்றும்.
அவரென்றது - அவர்
மாட்டுளதாயவொப்புமையை. மக்கட்சாதிக்கும்
கயச்சாதிக்கும் வடிவு ஒத்த
லின், குணங்களது உண்மையின்மைகளானல்லது
வேற்றுமை யறியப்படா
தென்பதாம்.

இதனான், கயவரதுகுற்றமிகுதி கூறப்பட்டது.

(கு - ரை.) கயவர் - கீழோர். மக்கட்சாதி கயச்சாதி
என்ற இரண்டு
சாதிக்கணுள்ள ஒற்றுமைபோல,

வேறுவந்தஇரண்டுசாதிக்கண்ணும் ஒப்புமை கண்டோமில்லை யென்க. மக்களேபோல்வர் என்ற இடத்திலுள்ளது, தேற்றேகாரம். தேற்றேகாரம்-துணிவுப்பொருளுள்ள 'ஏ' என்னும் இடைச்சொல். அவர் என்றது - அவரிடத்திலுள்ள ஒப்புமை என்ற பொருளில் வந்ததென்க: அங்ஙனம் கொள்ளாவிடின், ஒப்பாரி என்பதனோடு இயையாது. ஒப்பாரி - ஒப்பு. அவரென்றது கயவரை. முழுதும் - சிறிதிடமும் மிச்சமில்லாமல் என்றபடி. வடிவால் மக்களும் கயவரும் ஒப்ப ரென்றதனால், அவர்கள் குணங்களால் தம்முள் ஒவ்வா ரென்பது பெறப்படுமாறு அறிக. (க)

க0எஉ. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(இ - ள்.) நன்று - (தமக்கு) உறுதியாவன, அறிவாரின் —, கயவர் - (அவை யறியாத) கீழ்மக்கள், திரு உடையர் - நன்மை யுடையர்: (அவர்



போல அவைகாரணமாக), நெஞ்சத்து - (தம்)நெஞ்சத்தின்கண், அவலம் இலர் - கவலையிலர்: (ஆகலான்); (எ - று.)

நன்றென்பது - சாதியொருமை. உறுதிகளாவன - இம்மைமறுமைவீடுகட்குரியவாய புகழ் அறஞானங்கள்.

இவற்றை யறிவார், இவைசெய்யா நின்றே மிகச்செயப்பெறுகின்றிலே மென்றும், செய்கின்ற இவைதமக்கு இடையூறுவருங்கொ லென்றும், இவற்றின் மறுதலையாய பழிபாவமறியாமை யென்பனவற்றுள் யாதுவிளையுமோ வென்றும், இவ்வாற்றாற் கவலை யெய்துவர்: கயவர், அப்புகழ்முதலியவொழித்துப் பழிமுதலியசெய்யாநின்றும் யாதுங் கவலையுடையரல்ல ராகலான், 'திருவுடையர்' எனக் குறிப்பா லிகழ்ந்த வாறு.

இதனான், பழிமுதலியவற்றை யஞ்சா ரென்பது கூறப்பட்டது.

(கு - ரை.) அவர் - நன்றறிவார். அவை - தமக்குஉறுதியாவன. நன்று என்றது - உறுதியான புகழறஞானங்கள் என்ற பன்மைப்பொருளைத் தந்த தனால், சாதியொருமை யாயிற்று. இம்மைக்கு உரியது புகழென்றும், மறுமைக்கு உரியது அறமென்றும், வீட்டிற்கு [மோட்சலோகத்திற்கு] உரியது ஞான மென்றும் அறிக. "ஞானம் மோட்சஃ" என்றது இங்குக் காணத்தக்கது. இவற்றை - புகழற ஞானங்களை. இவை செய்யாநின்றே - புகழறஞானங்களைப் பெற முயற்சிசெய்துகொண்டிருந்தே. புகழுக்கு மறு தலை, பழி; அறத்துக்கு மறுதலை, பாவம்: ஞானத்துக்கு மறுதலை, அறியாமை. இவ்வாற்றால்-இவ்வாறு கருதும்வகையால். கயவரைத் திருவுடைய ரென்று புகழ்ந்தாற்போல, இகழ்ந்த இது - வஞ்சப்புகழ்ச்சியணி யெனப்படும். கயவர் திருவுடைய ரென்பதை, 'நெஞ்சத்தவலமிலர்' என்ற பின்வாக்கியம் சமர்த்தித்து

கிற்பது - தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்.
அஞ்சாரென்பதற்கு, கயவரென்ற எழுவாய் வருவிக்க.

(உ)

கOஎந. தேவ ரனையர் கயவ ரவருந்தா

மேவன செய்தொழுக லான்.

(இ - ள்.) தேவர் அனையர் கயவர் - தேவரும் கயவரும் ஒருதன்மையர்: (அஃது யாதினு னெனின்), (தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரின்றி), அவர் உம் - கயவரும், தாம்—, மேவன - விரும்புவனவற்றை, செய்து ஒழுகலான்—; (எ - று.)

உயர்ச்சியும் இழிவு மாகிய * தம்காரணவேறுபாடு குறிப்பாற்றோன்ற நின்றமையின், இது, புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று.

இதனால், விலக்கற்பாடின்றி வேண்டியசெய்வா ரென்பது கூறப் பட்டது.

(கு - ரை.) நியமிப்பார் - ஒருவரையறைக்கு உட்பட்டிருக்குமாறு கட்டளையிடுபவர். தேவர் உயர்ந்தோராதலால் அவரைக் கட்டளையிடுபவரில்லை: கயவரோ அடங்காப்பிடாரியாய் இழிந்தோராதலால் அவரை யும் நியமிப்பா

---

* பி - ம்: அதன்காரணவேறுபாடு.

ரில்லை: இங்ஙன் நியமிப்பாரில்லாமை இருவர்க்கும் ஒத்திருப்பினும், தேவர்க்கு நியமிப்பாரின்மை அவருடைய உயர்ச்சியாலும், கயவர்க்கு நியமிப்பாரின்மை அவருடைய இழிவினாலும் ஆகியன என்பது குறிப்பாகவிளங்குவது காண்க: இங்கு 'தேவரனையர் கயவர்' என்று புகழ்வார் போன்று குறிப்பாற்பழித்தவாறு காண்க: இதுவும்-வஞ்சப்புகழ்ச்சியணியே. விலக்கற்பாடு-தவிர்க்கப்படுதல். மேவன=மேவுவன: விரும்பியவை: பலவின்பால் வினையாலணையும் பெயர். (ரு)

கoஎச. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(இ - ள்.) கீழ் - கீழாயினன், அகம் பட்டி ஆவாரை - (தன்னிற்) சுருங்கிய பட்டியா யொழுகுவாரை, காணின் - கண்டானாயின், (அவ்வொழுக்கத்தின்கண்), அவரின் மிகப்பட்டு - அவரின் (தான்) மேம்பட்டு, செம்மாக்கும் - (அதனால் தன்மிகுதிகாட்டி) இறுமாக்கும்; (எ - று.)

அகப்பட்டி - அகமாகிய பட்டி. பட்டிபோன்று வேண்டியவாறே யொழுகலின், 'பட்டி'என்றார்; "நோதக்கசெய்யுஞ் சிறுபட்டி" என்றார், பிறரும். இதனால், அவர்மேம்பாடு கூறப்பட்டது.

(கு - ரை.) அகம் பட்டி - (தனக்கு) உட்பட்டதாகிய, அதாவது தன்னினும் குறைந்த பட்டி: பட்டி-தன்விருப்பின்படியே அடக்கமின்றித் திரிவது.தான் வேண்டியவாறே திரியும் பிராணியைப் பட்டியென்று வழங்குவதற்கு மேற்கோள் "நோதக்கசெய்யுஞ் சிறுபட்டி" என்பது: இம்மேற்கோள், கலித்தொகையில் குறிஞ்சிக்கலி கங - இல் உள்ளது: இதன்பொருள்:—சிறு பட்டி-சிறுமையையுடைய காவலில்லாதான், நோதக்கசெய்யும்-நோவத்தக்க தொழில்களைச் செய்வான் என்பது. அவர் - கயவர். கயவர் மேம்படுவது, அயோக்கியத்தனத்திலேயே யென்க.

(ச)

க0எரு. அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(இ - ள்.) கீழ்களது - கயவரதாய, ஆசாரம்—, (கண்டதுஉண்டாயின்), (அதற்குக்காரணம்), அச்சம் ஏ - (அரசனான் ஏதம்வருமென்றுஅஞ்சும்) அச்சமே: எச்சம் - (அஃது) ஒழிந்தால், அவா-(தம்மால்)

அவாவப்படும் பொருள்,

உண்டுஎல் - (அதனுல்) உண்டாமாயின், சிறிது உண்டுஆம் - சிறிதுண்டாம்.

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படுவதனை 'அவா' என்றுங் கூறினர். எச்சத்தின்கணென்னு மேழாவது, இறுதிக்கட் டொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு: இவ்விரண்டானு மன்றி இயல்பாக உண்டாகாதென்பதாம்.

வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரஞ்செய்தல் இயல்பன்றென்பது இதனுற் கூறப்பட்டது.

(கு - ரை.) ஆசாரம் - நல்லொழுக்கம். ஏதம் - துன்பம். கீழோர் அரசனிடத்து அச்சத்தினுலோ, தாம் விரும்பும் பொருளைப்பெறலா மென்ற எண்ணத்தினுலோ ஆசாரத்தை மேற்கொள்வ தன்றி, காரண



மின்றி இயல்பாக ஆசாரத்தை மேற்கொள்ளாரென்றவாறு. ஆசாரத்திற்குக் காரணம் அச்சமென்னுது ஆசாரத்தையே அச்சம் என்று ஒற்றுமைப்படுத்திக் கூறியது - காரணம் காரியமாகிய உபசாரவழக்கு. அவாவப்படு பொருளை அவா

எனத் தொழிற்பெயராகக் கூறியது-தொழிலாகுபெயராம். எச்சம் என்பது - (அச்சம்)ஒழிந்த நிலையில் என்று பொருள்படுதலால், 'எச்சத்தின்கண்' என்றிருக்கவேண்டிய ஏழனுருபு தொக்கதென்றார். இயல்பாக உண்டாகாது என்றஇடத்து 'கயவர்க்கு ஆசாரம்' என்றுவருவித்து உரைக்க. வேண்டிய செய்தலே - (ஒருகட்டுக்கு அடங்காமல் தாம்) விரும்பியவற்றைச் செய்வதே.

கOஎசு. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(இ - ள்.) தாம் கேட்ட—, மறை-மறைகளை, உய்த்து - (இடந்தொறுந்) தாங்கிக்கொண்டுசென்று, பிறர்க்கு—, உரைக்கலான்-சொல்லுதலான்,—கயவர்—, அறை-அறையப்படும், பறை - பறையினை, அன்னர்-ஒப்பர்; (எ-று.)

மறை - வெளிப்படிற் குற்றம்விளையு மென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர் - அம்மறைத்தற் குரியார். உய்த்தென்றார், அவர்க்கது பெரும்பாரமாதனோக்கி. பறை, ஒருவன் கையாற் றன்னை யறிவித்ததொன்றனை இடந்தொறுங் கொண்டுசென்று யாவரையும் அறிவிக்கு மாகலின், இது, தொழிலுவமம்.

இதனால், அவரது செறிவின்மை கூறப்பட்டது.

(கு - ரை.) மறைகளை - இரகசியங்களை. பறை - கொட்டப்படுந் தோற் கருவி. உய்த்து என்பதற்குத் தாங்கிக்கொண்டு என்றுபொரு ளாதலால், அந்தமறை அக்கயவர்க்குப் பெரும்பாரமாதல் பெறப்படும். கையால் இடந் தோறும் கொண்டுசென்று என இயையும். பறையென்பது கையால் இடந் தோறும் சுமந்துகொண்டு சென்று ஒருவன்சொல்லிய விஷயத்தை யாவ ருக்கும் அறிவிப்பதுபோன்று, கீழ்மக்கள் தாம் கேட்ட இரகசியத்தை யுட் கொண்டுசென்று பிறருக்குச் சொல்லுவரென்றதனால், தொழிலுவமமாயிற்று.

செறி வின்மை - அடக்கமின்மை.

(சு)

க0எஎ.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

(இ - ள்.) கயவர்—, கொடிறு உடைக்கும் - (தம்)கதுப்பினை நெரிப்பதாக, கூன் கையர் அல்லாதவர்க்கு - வளைந்த கையினை யுடையவரல்லாதார்க்கு,—ஈர்ங் கை - (தாம்)உண்டு பூசிய கையை, விதிரார் - (தெறித்தல் வேண்டுமென்று இரந்தாலும்) தெறியார்: (எ - று.)

வளைந்த கை - முறுக்கிய கை. மெலிவார்க்கு யாதும் வார்க்கு எல்லாங் கொடுப்ப ரென்பதாம்.

கொடார்: நலி

(கு - ரை.) கதுப்பினை - கன்னத்தை.
பொருள் - ஈரமுள்ள கை யென்பது: இங்கு,

'ஈர்ங்கை' என்பதன் பதப்
உண்ட உணவின் ஈரம் பூசப்
பெற்றுள்ள கை யென்ற பொருளது என்பார், 'தாமுண்டு பூசிய கையை'
என்று விவரித்தார்: 'எச்சிற் கையால் காக்கையையும் ஓட்டான்' என்று

64



உலோபியைப்பற்றிக் கூறுவதும், இங்கு
அறியத்தக்கது. "தளிர்மேலே

நிற்பினும் தட்டாமற் செல்லா, வுளிநீரர் மாதோ
கயவர் - அளிநீரார்க்,

கென்னுனுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே,
இன்னுங்கு செய்வார்ப்

பெறின்," "பெற்றூர் பிறந்தார் பெருநாட்டார்
பேருலகி, லுற்றுருகந்தா

ரென வேண்டார் - மற்றோர், இரணங்கொடுத்தா லிடுவ
ரிடாரே, சரணங்

கொடுத்தாலுந் தாம்", "பாடுவோர்க் கீயாரே பல்லுதிரத்
தாடையிலே, போடு

வார்க்கீவர்பொருள்" என்பன, இங்குக் காணத்தக்கன.
(எ)

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(இ - ள்.) சொல்ல - (மெலியார்சென்று
தங்குறையைச்) சொல்லிய

துணையானே, பயன் படுவர் - (இரங்கிப்)பயன்படுவர்,
சான்றோர் - மேலாயி

னர்; கீழ் - மற்றைக்கீழாயினர்,—கரும்பு போல் -
கரும்புபோல, கொல்ல -

(வலியார்) நைய நெருக்கியவழி. பயன் படும் -
பயன்படுவர்: (எ - று.)

பயன்படுதல் - உள்ளதுகொடுத்தல். கீழாயினரது
இழிவுதோன்ற,

மேலாயினரையும் உடன்கூறினர்.

இவையிரண்டுபாட்டானும், அவர் கொடுக்குமாறு
கூறப்பட்டது.

(கு - ரை.) நைய - நைந்து போகும்படி.
வலியார் நெருக்கியவழி என

இயையும். உள்ளது கொடுத்தல் -
தம்மிடத்துள்ளபொருளைக் கொடுத்தல்.

இது, கயமையென்னும் அதிகார மாதலால்,
அதிகாரத்திற்கு ஏற்பக் கயவர்

குணமே இதிற் கூறத்தகுவ தன்றி, ஏனைமேலாயினர்

குணம கூறததகுவ

தொன்று அன்றே என்ற எழும் வினைவை யுட்கொண்டு, கீழாயினாது

இழிவுதோன்ற, மேலாயினரையும் உடன்கூறினா ரென்றார்: மேலாயின

ருடைய தன்மையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது கீழாயினரின் இழி

தன்மை நன்குபுலனாதல் காண்க. அவர் - கீழாயினர். "துச்சனரைப் பொன்

னைத் துடியைத் தூசுதத்தை, யச்சமற மூன்றிற்கு மாயிழையை-நச்சரவைக்,

கண்டித்த எள்ளைக் கரும்பை இளநீரைத், தண்டித்தார்க்கல்லோசயம்"

என்ற பாடல் இங்குக் காணத்தக்கது.

(அ)

கOளகூ. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்

வடுக்காண வற்றாகுங் கீழ்.

(இ - ள்.) உடுப்பதூஉம் - (பிறர் செல்வத்தால் பட்டும் துகிலும்) உடுத்

தலையும், உண்பதூஉம்-(பாலொடு அடிசில்) உண்டலையும், கீழ் - கீழாயினன்,

காணின் - காணுமாயின், (அவற்றைப்பொறாது), பிறர்மேல் - அவர்மாட்டு,

வடு காண - வடு (இல்லையாகவும்) உண்டாக்க, வற்று ஆகும் - வல்லனும்.

உடுப்பதுஉண்பதுஎன்பன - ஈண்டு
அவ்வத்தொழின்மேனின்றன.

அவற்றால், பூண்டல் ஊர்தல் முதலிய
பிறதொழில்களும் கொள்ளப்படும்.

அவற்றைக் கண்ட துணையானே பொறாமையெய்தலின்
'காணின்' என்றும்,

கேட்டார் இதுகூடுமென்று இயையப் படைத்தல் அரிது
ஆகலின் 'வற்றாகும்'

என்றும் கூறினார்.

இதனால், பிறர்செல்வம் பொறாமை கூறப்பட்டது.

கஶ்வு - ஆம் அதிகாரம் — கயமை ௫0எ

(கு-ரை.)

கப் படுதலால்,

உடுப்பதும் உண்பதும் என்று தனியே எடுத்து ப்ரஸ்தாவிக்
அதற்கு ஏற்ப, பட்டுந் துகிலுமுடுத்தலையும், பாலொடு

அடிசிலுண்டலையும் காட்டு மெனக்கொண்டு உரைக்கின்றார். அவற்றை - உடுத்தல் உண்டல்களை. அவர்மாட்டு - செல்வத்தால் பட்டுந்துகிலுமுடுத்துப் பாலொடடிசிலுண்ணுஞ் செல்வரிடத்து. வடு - குற்றம். உடுப்பது உண்பது என்று செய்யுளில் வந்தவை - உடுக்கப்படும்ஆடை உண்ணப்படும்உணவுப் பொருள் என்று வினையாலணையும்பெயராகாமல், உடுத்தல் உண்ணுதல் எனத் தொழிற் பெயர்ப்பொருளனவா மென்பார், தொழின்மேனின்றன என்றார். உடுத்தல் உண்ணுதலைக் கூறியது - பூண்டல்முதலியவற்றிற்கும் உபலட்சணயாம். பூண்டல் - ஆபரணங்களை யணிதல். ஊர்தல் - குதிரை யானை தேர் என்ற இவைகளின்மீது ஏறிச்செல்லுதல். அவற்றை - உடுத்தல் முதலியவற்றை. கண்ட துணையான் - பார்த்த மாத்திரத்தில். கேட்டார் இது கூடும் என்று இயைய - (கயவன் பொறாமையினாற் கற்பித்துச் செல்வரான பிறர்மீது வடுச்சொல்லைச் சொல்லுகையில், அச்சொல்லைக்) கேட்டவர் (அப்பிறரைப்பற்றிய)வடுச்சொல் அவர்க்கு ஏற்கும் என்று உடன்படுமாறு. வற்று- வல்லமையுடையது: வன்மையென்ற பகுதியினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. கீழ் - பண்பாகுபெயர்: கீழ் என்பதற்கு ஏற்ப, வற்று என்ற பயனிலைவந்தது. (சு)

க0ௗ0. எற்றிற் குரியர் கயவ ரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

(இ - ள்.) கயவர்—,—ஒன்று - (தம்மை யாதானும்) ஒருதுன்பம், உற்றக்கால்—,—(அதுவேபற்றுக்கோடாக), விரைந்து—, விற்றற்கு-(தம்மைப் பிறர்க்கு) விற்றற்கு, உரியர்—: (அதுவன்றி), எற்றிற்கு - (வேறு) எத்தொழிற்கு, உரியர்—? (எ - று.)

உணவின்மையாக பிறிதாக ஒன்றுவந்து உற்ற துணையா னென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கொள்ளுகின்றார் தம்கயமையறிந்து வேண்டா என்றற்குமுன்னே விற்றுநிற்றலின் 'விரைந்து' என்றும் கூறினார். ஒருதொழிற்கும் உரியரல்ல ரென்பது, குறிப்பெச்சம்.

இதனன், தாம் பிறர்க்குஅடிமையாய் நிற்ப ரென்பது கூறப்பட்டது.

(கு-ரை.) விற்றற்குரியரென்பதனால், அடிமையாவரென்றுகூறியவாறு. அடிமைவழக்கம் திருவள்ளுவர் காலத்திலிருந்தமை, இதனாலும் பெறப்படும். உணவு இன்மை ஆக - உணவில்லாமையாலாவது. பிறிது ஆக-வேறு காரணத்தாலாவது. உற்றதுணையான் - நேரிட்டவளவால். கயமை-கீழ்மை. வேண்டா என்றற்குமுன்னே - விற்கப்படுகின்ற இவர் எமக்கு வேண்டா என்றுவாங்குபவர் சொல்வதற்குமுன்னே. ஒருகாரியத்துக்கும் கயவர் உதவாரென்பது, இங்குப்பெறப்படும் குறிப்பெச்சமாகிய பொருளாம். (௧௦)

ஒழிபியல் முற்றிற்று

# பொருட்பால் முற்றிற்று.

## திருக்குறட் பொருட்பாலின் செய்யுண் முதற்குறிப்பகராதி.

# பொருட்பாலின்

## அரும்பதவகராதி முதலியன.

[எண் - பாட்டெண்.]

அரும்பதவகராதி முதலியன ருகள்

அரும்பதவகராதி முதலியன

அரும்பதவகராதி முதலியன

# காமத்துப்பாலின் இயல் அதிகாரம் என்பவற்றின்

அ

109. தகையணங்குறுத்தல்
110. குறிப்பறிதல்
111. புணர்ச்சி மகிழ்தல்

## ட்டவணை.

களவியல்.



கற்பியல்.

---

## காமத்துப்பாலின் பிழைத்திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை |
|---|---|---|
| 32 | 34 | அவன்மனத்தின்க |
| 52 | 34 | தஞ்சைவாணனுரை |
| 57 | 1 | ககள |
| 75 | 14 | வசை |
| 85 | 14 | எண்ணபடி |
| 113 | 36 | யழிதலாலும் |

122 13 அவன்

திருத்தம்.

அவன்மனத்தின்க

தஞ்சைவாணன்கோவையுரை

கககூ

வகை
எண்ணப்படி
யழிதலாதலாலும்

அவள்

| | | | |
|---|---|---|---|
| 123 | 28 | (முகிழ்ப்பினுளதாய்) | முகிழ்ப்பினுளதாய் |
| 125 | 31 | மேன்றோனு | மென்றோனு |
| 133 | 33 | (முன் | (முன்) |
| ,, | 34 | டாக்கி), | டாக்கி, |

---

# திருக்குறள்.

## பரிமேலழகருரை.

### காமத்துப்பால்.

இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய இன்பங் கூறுவானெடுத்துக்கொண்டார். ஈண்டு இன்பமென்றது - ஒருகாலத்தொருபொருளான் ஐம்புலனு நுகர்தற்சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனும் 'சுவைபல வென்று கூறுவார் கூறுக; யாங் கூறுவது இன்பச்சுவை யொன்றினையுமே' என இதனையே மிகுத்துக்கூறினான். இது, புணர்ச்சி பிரிவென இருவகைப் படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடலென்பனவோவெனின், இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல்வழக்குப்பற்றியோதுதலான், அவ்வாறே அவற்றைப்

பிரிவின்க ணடக்கினு ரென்க.

(கு - ரை.) காமத்துப்பால் என்பது - காமத்தைப்பற்றிய பகுதி என இரண்டனுருபும் பயனுந்தொக்க தொகையாக விரியும். காமமாவது-பொருள் துணைக்காரணமாக ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலன்களும் நுகர்தற் கு சிறப்புடைத்தாய இன்பம்.காமவின்பமென்பதனைக் காமமாகிய இன்பமெனக் கொள்ளாது காமத்தாற் பெறலாகு மின்ப மென்றுகொண்டு, காமமென்பது- மனத்துநிகழ்குங் காத லென்றலும் உண்டு. ஶ்ருங்காரம் வீரம் கருணம் அத் புதம் ரௌத்ரம் ஹாஸ்யம் பீபத்ஸம் வத்ஸலம் பயாநகம் ஶாந்தம் என்று ஒரு சார் அணியியலில்வல்லோரால் பத்துச்சுவைகள் [சுவை - ரஸம்.] கூறப்பட் டுள்ளன: (இவை - முறையே தமிழில் உவகை பெருமிதம் அழுகை மருட்கை வெகுளி நகை இளிவரல் அன்பு அச்சம் அமைதி எனப் பெயர்பெறும்.)இவற் றுள் வத்ஸலமென்பது பெரும்பாலாராற் கூறப்படவில்லை. "ஶ்ருஜார வீரகருணாஜ்ஜுத ரௌஜ்ர ஹாஸ்ய - வீஹத்ஸ வத்ஸல ஹயா நக ஶாந்த நாம்நஃ ஆம்நாஸிஷுர்தஶரஸாந் ஸுயியோ வயஞ்து ஶ்ருங்காரமேவ ரஸநாஜ்ரஸமாமநாம:" என்பது, போசமகாராசன் இயற்றிய ஶ்ருங்காரப்ரகாஶமென்ற நூலில் முதல்ப்ரகாஶத்திலுள்ளஶ்லோக மாகும். இது சிருங்காரம். புணர்ச்சியை ஸம்யோகம் என்றும், பிரிவை-விப்ர யோகம் அல்லது விப்ரலம்பம் என்றும் கூறுவர். ஏனை-(முதற்பொருள் கருப் பொருள் உரிப்பொருள்

என்னும்மூன்றனுள் உரிப்பொருளைச்சேர்ந்த புணர்ச்சிபிரிவுகள் தவிர) மற்றையனவான. 'பொருட்பாகுபாட்டினை அறம் பொருள் இன்பம் என வடநூல்வழக்குப்பற்றியோதுதலான்' என்றது-தென்மொழி வழக்குப்பற்றிக்கூறின், இன்பம் அகம் என்றும், எனை அறம்பொருள்கள் புறம் என்றும் இங்ஙன் பாகுபடுத்துக் கூறத்தக்கன ஆதலால் அங்ஙன்

கூறுமையால் என்ற கருத்தது. அவ்வாறே-வடநூல் வழக்குப்பற்றிக் கூறிய அவ்வகையாகவே. அவற்றை - இருத்தல் இரங்கல் ஊடல் என்றவற்றை.

*—1





## முதலாவது
# களவியல்.

இனி, அவைதம்மையே தமிழ்நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதிபயப்ப உலகநடையோடு ஒப்பும் ஒவ்வாமையு முடையவாக்கிக் கூறுகின்றார். அக்கைகோளிரண்டனுள்ளும் களவாவது பிணிமூப்பிறப்புக்களின்றி என்றுமொருதன்மையராய் உருவுந் திருவும் பருவமுங் குலனுங் குணனு மன்பும் முதலியவற்றாற் றம்முளொப்புமையுடையராய தலைமகனுந் தலைமகளும் பிறர்கொடுப்பவும் அடுப்பவுமன்றிப் பால்வகையால் தாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்துவருவது. அதனை, ஏழதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கண் தகையணங்குறுத்தல் கூறுகின்றார்.

(கு - ரை.) களவியலென்பது - களவைப்பற்றிய இயலென்று விரியும். அவைதம்மையே - புணர்ச்சிபிரிவுகளையே. களவொழுக்கத்தில் இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம் பாங்கியிற்கூட்டம் எனப் பெரும்

பாலும் புணர்ச்சியே வருதலும், கற்பொழுக்கத்தில் பொருட்பிரிவு ஓதற்பிரிவு காவற்பிரிவு பகைதணிவினைப்பிரிவு வேந்தற்குற்றுழிப்பிரிவு பரத்தையிற் பிரிவு என அறுவகைப்பிரிவு வருதலும் அறிக: தொல்காப்பியனாரும் கற்பைப் பற்றிக் கூறும்போது "பிரிவொடு புணர்ந்தது கற்பெனப்படுமே" எனக் கூறிய

துங் காண்க. ஆண்பெண்களாகிய இருவர் கண்டு காதலித்தல் என்பது, உலகத்

தோடொத்தது. கூர்வேலிளைஞர் சூழவும் ஆயவெள்ளஞ் சூழவும் தலைவனும்

தலைவியும் ஓர்பொழிலிடத்துச் சேர்தலும், கூர்வேலிளைஞரும் ஆயமும் வெவ்வேறு தொழிலிற் செல்லுதலும், அதனால் இவர் தனிப்படலும் முதலியன ஒவ்வாதது என்னலாம். கைகோள் இரண்டு-களவு கற்பு என்பன. (கை என்

றால் ஒழுக்கம்: கோள்-கொள்ளுதல்: எனவே, கொள்ளப்படும் ஒழுக்க மென்

பது கைகோளென்பதன் பொருள். கோள் - தன்மையுமாம்.) கொடுப்பவும்

அடுப்பவும் அன்றி- பெற்றோர்முதலியோர் கொடுப்பதும், உறவினர் நண்பர்

முதலியோர் அடுத்திருத்தலும் என்ற இவை நேராமலிருக்க. பால்வகையால்-

ஊழ்வினையால். இங்ஙனந் தாமே கூடும் கூட்டத்தினைக் களவு என்பது -

பெற்றோராற் கொடுத்தற்குரிய தலைவியை அவர் கொடுப்பத் தலைவன் கொள்

வது இருவருங் கரந்த உள்ளத்தோடு புணர்வதாலாகும்:

இது முதலிற் பிற
ரறியாமையிருந்து கற்பின்வழி நின்று விளங்குதலாற் குற்றமின்றா மென்ப.

## க0சு - ஆம்

## அதிகாரம்.—தகையணங்குறுத்தல்.

அஃதாவது-பொழில்விளையாட்டுவிருப்பான் ஆயநீங்க அதன் கட்டமிய
ளாய் நின்றாளை, வேட்டவிருப்பான் இளையார்நீங்கத் தமியனாய்வந்து கண்
ணுற்ற தலைமகன் அவள் வனப்புத் தன்னை வருத்தமுறுவித்தலைச் சொல்லு
தல். இது, கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கட் கூறப்பட்டது.

க0சு - ஆம் அதிகாரம்.—தகையணங்குறுத்தல்

ஙு

(கு - ரை.) மாணக்கர் அகப்பொருளைப்பற்றித் தெரிந்துகொள்ளுமிடத்து
முதன்முதலில் ஒருசரித்திரம்போல அறிந்துகொள்வது நலம். அது வரு
மாறு:—ஓர்உத்தமபுருஷன் பரிவாரத்துடன்

வேட்டையாடுதற்குப் புறப்பட்-
டுக் குறிஞ்சிநிலத்துச்சென்றானாக,ஓர் உத்தமகன்னிகையும்
தோழியருடன் பூக்
கொய்து விளையாடுதற்கென்று அந்நிலத்து ஓர்
பூஞ்சோலையிற்சேர்ந்தாளாக,
அத்தலைவிசேர்ந்த அளவிலே, ஒவ்வொருகாரணமாகத்
தோழியர் பிரிய, அக்
கன்னிகை அங்குத்தனித்துநின்ற சமயத்திலே
ஒவ்வொருவியாஜத்தாற் பரிவா
ரங்கள் பிரியத் தனிப்பட்டவனாய் அப்புருஷன் அங்கு
வந்துசேர, இருவரும்
ஊழ்வினைவசத்தால் இங்ஙனம் தற்செயலாய் ஓரிடத்திலே
சந்தித்து,ஒருவரை
யொருவர்கண்டு காதல்கொண்டு காந்தருவமணத்தாற்
கூடுவர்: (இது,
இயற்கைப்புணர்ச்சி முன்னுறுபுணர்ச்சி
தெய்வப்புணர்ச்சி காமப்புணர்ச்சி
என்ற பெயரால் வழங்கப்படும்.) இங்ஙனம்
இயற்கைப்புணர்ச்சி நிகழ்தற்கு
முன் தலைவனிடம் காட்சி ஐயம் தெரிதல் தேறல் என்ற
நான்கு செய்திகள்
நிகழும்: இவை-கைக்கிளையெனப்படும்:
(கையென்பது-சிறுமை; கிளையென்
பது - உறவு: ஆகவே, கைக்கிளையென்பது ஒருமருங்கு
பற்றிய கேண்மை:

அதாவது-ஒருதலைக்காமம்.) இந்தக்கைக்கிளையின் பின்னரே களவுப்புணர்ச்சி நிகழு மென்பதை "மெய்க்கிளையாழோர் வேண்டும்புணர்ச்சி முன், கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப" என்பதனாலும் அறியலாம்.

தகை - அழகு, அணங்குஉறுத்தல் - வருத்தமுறச்செய்தல்: இது ஒரு அகப்பொருட்கிளவியாதலால், அணங்குறுத்தலென்பது-அணங்குறச்செய்தைச் சொல்லுதலைக் காட்டிற்று. ஆயம்-தோழியர்கூட்டம். அதன்கட்டமியளாய் - அச்சோலையில் தனிப்பட்டவளாய். வேட்டவிருப்பான்-வேட்டையாடுவதிலுள்ள விருப்பத்தால். இளையார் - தோழரான கூர்வே லிளைஞர். கண்ணுற்ற-கண்ட. தலைமகன் தலைமகளைக் கண்ட காட்சியில் தகையணங்குறுத்தல் நிகழ்வதாதலால், களவியலில் முதலில் இது கூறப்பட்டதென்று அதிகாரமுறைமைக்குக் காரணங் காண்க.

கO௨௯க. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை

மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

தலைமகளுருவு முதலியன முன்கண்டறிவனவன்றிச் சிறந்தமையின்

அவளைத் தலைமகன் ஐயுற்றது.

(இ - ள்.) கனம் குழை -

இக்கனவியகுழையையுடையாள், அணங்கு
கொல்-(இப்பொழிற்கணுறைவாளோர்) தெய்வமகளோ?
ஆய் மயில் கொல் -
(அன்றி) ஒருமயில் விசேடமோ? மாதர் கொல் - (அன்றி)
ஒருமானுடமாத
ரோ? என் நெஞ்சு மாலும்-(இவளையின்னளென்று
துணியமாட்டாது) என்
னெஞ்சு மயங்காநின்றது; (எ - று.)
ஓ - அசை. ஆய்மயில் - (படைத்தோன் விசேடமாக)
ஆய்ந்துபடைத்த
மயில்; மயிற்சாதியுள் தெரிந்தெடுத்த மயிலென்றுமாம்.
கனங்குழை - ஆகு
பெயர், கணங்குழையென்று பாடமோதி,

பலவாய்த்திரண்ட குழையென்று

திருக்குறள்

உரைப்பாருமுளர். எழுதலாகா வுருவுந் தன்வருத்தமும்
பற்றி 'அணங்கு கொல்' என்றும், சாயலும்
பொழில்வயினிற்றலும்பற்றி 'ஆய்மயில் கொல்' என்றும்,
தன்னெஞ்சஞ் சென்றமையும் அவளெதிர்நோக்கியவாறும்
பற்றி 'மாதர்கொல்' என்றும் கூறினான்.

காட்சிமுதலிய கைக்கிளை நிகழு மென்று கூறினேமன்றே: அவற்றுள் காட்சியென்பது - தலைவனுந் தலைவியும் தெய்வவசத்தால் எதிர்ப்பட்டு தம்முட் கண்ணுறுவது. ஐயமென்பது காட்சிக்குப்பின், 'இங்ஙனந்தோன்றுகின்ற மாது திருமகள்முதலாகிய தெய் வமோ? அன்றி, மக்கட்பிறப்பினளோ?என்று ஐயுற்றுக்கூறுவது. இந்தச்செய் யுள் அங்ஙன்வந்த ஐயமாம் என்க. கனவிய - பாரமுள்ள, குழை - காதணி வகை. 'ஆய்மயில்கொல்லோ' என்ற இடத்து, 'கொல்' என்பது வினாப் பொருளைத் தந்திட்டதனால், ஓ-அசையாகும். ஆய்மயில் என்பதற்கு இரண்டு வகையாகப்பொருள் கூறுகிறார்: முதலது - ஆய்ந்துபடைத்தமயிலென்பது: இரண்டாவது - (மயிற்சாதியிலிருந்து) ஆராய்ந்தெடுத்த மயிலென்பது: இரு வகைப்பொருளிலும், ஆய்மயிலென்பது - வினைத்தொகையே. கனங்குழை யென்பது - கனமாதலையுடைய குழையையுடையாள் எனப் பொருள்படும். கனங்குழையென்ற இத்தொடரில், கனம்என்ற அடைமொழியையடுத்த குழையென்பது-குழையைப்பூண்டாளைக் காட்டுவதால், ஆகுபெயர்என ப்பட் டது: அடியார்க்குநல்லார் 'அருந்திறல் 'என்பதை அன்மொழித்தொகையாகு பெயரென்று உரைத்ததும் ஈங்குக் காணத்தக்கது: சேனாவரையரும் இங்ஙன மே கூறுவர். இவ்வாறுள்ளவற்றை அன்மொழித்தொகையென்னவேண்டுமே யன்றி

ஆகுபெயரென்னலாகாதென்று நச்சினார்க்கினியர் மறுத்துரைப்பதை, "முதலிற்கூறுஞ் சினையறிகிளவியும்" என்ற வேற்றுமைமயங்கியற்சூத்திரத்தி னுரையிற் காணலாம். கணங்குழையென்றபாடத்தில், கணம் - திரளுதலையுடைய குழை என்க. அணங்குக்குஉரியகுணம். எழுதலாகாவுருவமுடைமை யோடு வருத்தந்தருந் தன்மையென்றும், மயிலுக்குரியகுணம் சாயலுடைமை யும் பொழில்வயினிற்றலும் என்றும், பெண்மகளுக்குரியகுணம்-ஆடவர்மனம் தன்னிடத்துச் செல்லுமாறு இருத்தலும் எதிர்நோக்குதலும் என்றும் அறிக. அவ்வக்குணங்களுடைமையான், தலைவியைத் தலைமகன் அணங்குமுதலியன வாக ஐயமுற்றான்: ஐயவணி.

(க)

க0வு உ.

நோக்கினா ளொக்கெதிர் நோக்குத ரக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

மானுடமாதராதல் தெளிந்த தலைமகன் அவள் நோக்கினாைய வருத்தங் கூறியது.

(இ - ள்.) நோக்கினாள் - (இப்பெற்றித்தாய) வனப்பினையுடையாள், நோக்கு - என்னோக்கிற்கு, எதிர்நோக்குதல்,— தாக்கு அணங்கு - தானே

தாக்கி வருத்துவதோரணங்கு, (தாக்குதற்கு), தானை கொண்டு அன்னது உடைத்து - தானையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையையுடைத்து.

கஉஅ - ஆம்

## அதிகாரம். — தகையணங்குறுத்தல் ரு

மேலும் 'அணங்குகொலாய்மயில்கொல்'

என்றமையான், இகரச்சுட்டு
வருவிக்கப்பட்டது. 'எதிர்நோக்குதலென்றமையின்' அது
குறிப்புநோக்கா
யிற்று. வனப்பால் வருத்துதன்மேலுங் குறிப்புநோக்கால்
வருந்துதல் கூறிய
வாறு. நோக்கினளென்பதற்கு -
என்னுனோக்கப்பட்டாளென்றுரைப்பாரு
முளர்.

(கு-ரை.) தான் காட்சியிற்கண்டவளை
மானுடமென்றுதெளிந்து துணிவு
கொண்டதலைவன் கூற்று: அடுத்துவருஞ்செய்யுள்களும்
இவ்வாறுனவையே.
இப்பெற்றித்தாய - ('அணங்குகொல்'
என்பதுமுதலியவாக) இப்படிச்சந்தேகி
த்தற்குஏற்றதன்மையுள்ள. வனப்பினை - அழகை.
தானை-சேனை. மேலும் -
முன்னும். கீழ்ச்செய்யுளில், "அணங்குகொல்" என்று

கூறி, இச்செய்யு
ளில் நோக்கினாள் என்றது அந்த அணங்கையே
சுட்டவல்லதென்ற கருத்தால், அதற்கு
இப்பெற்றித்தாயவனப்பினையுடையாள் என்று சுட்டாகப்
பொருள்கூறினார். குறிப்புநோக்கு - மனக்கருத்தைக்
குறிப்பாகத் தெரி
விக்கும் பார்வை. கீழ்ச்செய்யுளில் தான் கண்ட
மாதராளின் வனப்
பால் தான்வருந்தியமை கூறிய தலைமகன் இக்குறளில்
அதற்குமேல் அம்
மாதராளின் குறிப்புநோக்கினால் வருந்தியமையைத்
தெரிவிக்கின்றானென்க. நோக்கினாளென்பதற்கு
முதலுரை-வனப்பினையுடையாளென்பது: இரண்டா
முரை - (என்னால்) நோக்கப்பட்டவளென்பது. இக்குறளை,
'புகுமுகம் புரி
தல்' என்ற மெய்ப்பாட்டினதென்றனர், நச்சினார்க்கினியர்.
(உ)

க0ௗ௩.

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

இதுவுமது.

(இ - ள்.) கூற்று என்பதனை - கூற்றென்று
நூலோர்சொல்வதனை, பண்டு அறியேன் - பண்டு

(கேட்டறிவதல்லது) கண்டறியேன்; இனி அறிந்தேன்-இப்பொழுது கண்டறிந்தேன்: (அது), பெண்தகையான் - பெண்டகையுடனே, பேர் அமர்க்கட்டு-பெரியவாய் அமர்த்த கண்களையுடைத்து; (எ-று.)

பெண்டகை - நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னுங் குணங்கள். அவை அவ்வக்குறிகளா னறியப்பட்டன. அமர்த்தல் - அமர்செய்தல்; பெயரடியாய வினை. பெண்டகையால் இன்பம் பயத்தலு முண்டேனும், துன்பம் பயத்தன்மிகுதிபற்றிக் கூற்றாக்கிக் கூறினான்.

(கு-ரை.) இச்செய்யுளும் முன்செய்யுள்போலவே நோக்கினாளை வருத்தும் கூறுவது என்பது, இதுவும் அது என்பதன்பொருள். பெண்டகை-பெண்மைக்குரியகுணம்: அவை - நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்பன: அவற்றுள் நாணமாவது-தகாதவற்றின்கண் உள்ளமொடுங்குதல்: மடமாவது - கொளுத்தக்கொண்டுகொண்டதுவிடாமை. அச்சம்-அபூர்வமான பொருளைக்காணுதல் முதலிய நிகழும்போது அஞ்சுதல்:பயிர்ப்பு-பயிலாதபொருட்கண் அருவருத்து நிற்குமியல்பு. பெண்டகையான் என்ற இடத்து ஆனுருபு. "தாங்குகையா னோங்குநடைய" என்ற இடத்துப்போல

# திருக்குறள்

தானே கூடல் நிகழ்தற்குமுன்பும்

பெண்டகைமையால் இன்பமயத்தலுண்டேனும், மாதரார்
பெருவருத்தம் விளைத்தலே மிகுதியாயிருத்தல்பற்றி,
'கூற்றென்பதனை யினியறிந்தேன் பெண்டகையாற்
பேரமர்க்கட்டு' என்கின்றான் தலைமகனென்க. கூற்று-யமன்.
அமர்க்கண்-அமரைச்செய்யவல்லகண்: வேற்றுமைத்தொகை:
(வினைத்தொகையாயின் 'அமர்கட்டு' என்று இருக்க
வேண்டும்.) கட்டு - 'கண்' என்ற பகுதியின்மேல்வந்த
ஒன்றன்பாற்குறிப்பு முற்று.

(ந)

கoஅ௪. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற்
பெண்டகைப்

பேதைக் கமர்த்தன கண்.

இதுவுமது.

(இ - ள்.) பெண் தகை - பெண்தகைமையுடைய,
பேதைக்கு - இப் பேதைக்கு உளவாய, கண் - கண்கள்,
கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்
தான்-(தம்மைக்) கண்டாருயிருண்ணுந் தோற்றத்துடனே
கூடி, அமர்த்தன- அமர்த்திருந்தன; (எ - று.)

அமர்த்தல்-மாறுபடுதல். குணங்கட்கும் பேதைமைக்கும்

ஏலாது கொடியவாயிருந்தன வென்பதாம்.

(கு - ரை.) பெண்டகை - பெண்மைக்குணம்: அவை - நாண் மடம் அச்சம் பயிர்ப்பு எனக் கீழ்க்கூறப்பட்டன. அமர்த்தல் - போர்செய்யுங் குணத்தினைப்பெறுதல்: எனவே, மாறுபடுதலாயிற்று. ஏலாது - பொருந்தாதபடி. கொடியவாதல் பெண்மைக்குத்தகாது; பேதைமைக்குத் தகாதென்க.(௪)

க0அ௫. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.

இதுவுமது.

(இ - ள்.) கூற்றம் ஓ (என்னை வருத்துதலுடைமையாற்) கூற்றமோ? கண் ஓ - (என்மேலோடுதலுடைமையாற்) கண்ணோ? பிணை ஓ - (இயல்பாக வெருவுதலுடைமையாற்)பிணையோ? (அறிகின்றிலேன்): மடவரல் நோக்கம்- இம்மடவரல் கண்களினோக்கம்,
இம்மூன்றஉம்-இம்மூன்றன் றன்மையையும்,
உடைத்து - உடைத்தாயிராநின்றது; (எ - று.)

இன்பமுந் துன்பமும் ஒருங்கு செய்யாநின்றதென்பதாம். தொழில் பற்றிவந்த ஐயவிலையுவமம்.

(கு - ரை.) மடவரல் - மடமைக் குணம்

வரப்பெறுதலை யுடையவள்: வேற்றுமைத் தொகையன்மொழி.
மூன்றன் தன்மை—கூற்றத்தின் தன்மை- வருத்துதல்:
கண்ணின் தன்மை - தாட்சிணியமுடையதாதல்:
பிணையின் தன்மை - வெருவுதலுடைமை. வருத்துதலால்
துன்பத்தையும், தன்மே லோடுதலுடைமையும்
வெருவுதலுடைமையும்பற்றி இன்பமும், ஆக இரண்
டையும் ஒருங்கே விளக்கின்றன கண்கள் என்க.
கூற்றமுதலியன கண்கட்கு ஒப்பாவது வருத்துதல்முதலிய
தொழிலா லாதலால், இது தொழிலுவம

கOகூ - ஆம் அதிகாரம்.—தகையணங்குறுத்தல்

எ
யாம். கூற்றமோ கண்ணோ பிணையோ என்று
ஐயவோகாரம்பெய்துகூறுத
லால், ஐயநிலையுவமம். மாதரார்கண்ணுக்கு
வெருவுதல்தன்மையால் பிணை
யின் கண்ணே உவமை கூறப்படுதலால், பிணையென்பது -
இலக்கணையால்,
பிணையின்கண் என்ற பொருளதா மென்க.
(ரு)

கOஅரு. கொடும்புருவங் கோடா மறைப்பி
னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

இதுவுமது.

(இ - ள்.) கொடு புருவம் - (பிரியா நட்பாய)

கொடும்புருவங்கள் தாம்,
கோடா மறைப்பின் - செப்பமுடையவாய்

விலக்கினவாயின்,—(அவற்றைக்
கடந்து), இவள் கண் - இவள் கண்கள், (எனக்கு), நடுங்கு

அஞர் செய்யல-
நடுங்குந்துயரைச் செய்யமாட்டா; (எ-று.)
நட்டாரைக்

கழறுவார்க்குத் தாஞ் செம்மையுடையராதல் வேண்டலின்
'கோடா' என்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற

தனக்கும் இடை
நின்று விலக்குங்காலுஞ் சிறிது இடைபெறின்

அதுவழியாக வந்து அஞர்
செய்யுமாகலின் 'மறைப்பின்' என்றுங் கூறினான்.

நடுங்கஞர்-நடுங்கற்கேது
வாய அஞர். தாம் இயல்பாகக் கோடுதலுடைமையான்

அவற்றை மிகுதிக்
கண்மேற்சென்று இடிக்கமாட்டாவாயின
ஒழியிசைக்கண் வந்தது.

என்பதுபட நின்றமையின், 'மன்'

(கு - ரை.) பிரியாநட்பு - விட்டுப்பிரியாதநண்பு.

செப்பம் - நேர்மை:
இது, வடிவினாலும் குணத்தினாலுங் கொள்ளப்படும்.

அவற்றை - அப்புருவங்
களை. புருவங்கள் இப்போது

இருப்பனபோலவளைவாயிருப்பனவன்றி, நேர்மையாக
இருப்பின் அப்போது அவை கண்களின்பார்வையை
என்மேல் நேரேபடவொட்டாது விலக்கு மென்க. நட்டார் -
சினேகிதர். கழறுதல் -
இடித்துப்புத்திமதிகூறுதல். நட்டார்க்குப் புத்திமதிகூறுவோர் முதலில் தாம்
செம்மையுடையவராக இருக்கவேண்டும்: செம்மை - நேர்மைக்குணம்: இச்
சொல்-சிலேடையால், வளைதலில்லாத்தன்மை என்ற பொருளையும் காட்டும்.
செய்கின்ற என்பதற்குச் செயப்படுபொருள் 'நடுங்குஅஞர்' என்பது. அவற்
றிற்கும்-அக்கண்கட்கும். உறுகின்ற-நடுங்கஞரையடைகின்ற. அதுவழியாக-
பெற்ற அந்தச் சிறியஇடத்தின்மூலமாக. நடுங்குதலாகிய காரியச்சொல்,

அஞர் என்னும் காரணப்பெயரைக் கொண்டதென்க. அஞர்-துன்பம். தாம்-
புருவங்கள். கோடுதல்-நேர்மைதவிர்தல், வளைதல் என்ற இருபொருளது.
அவற்றை - கண்களை. மிகுதிக்கண் -

தகாதசெயலுண்டானபோது. மேற்
சென்று இடிக்கமாட்டா - முற்பட்டுங் கண்டித்துப்

புத்திமதிசொல்லும்
வன்மையில.

(சு)

கூ0அ௭. கடாஅக் களிற்றின்மேற் கட்படாம்
மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

அவள்முலைகளினுய வருத்தங் கூறியது.

(இ - ள்.) மாதர் - இம்மாதர், படா முலைமேல் - படாமுலைகளின் மேலிட்ட, துகில்—,—(அவை கொல்லாமற் காத்தலின்), கடாம் களிற்றின் மேல் - (கொல்வதாய)மதக்களிற்றின்மேலிட்ட, கண் படாம்-முகபடாத்தினை யொக்கும்; (எ - று.)

கண்ணை மறைத்தல்பற்றி 'கட்படாம்' என்றான். துகிலான் மறைத்தல்

நாணுடை மகளிர்க்கு இயல்பாகலின், அத்துகிலூடே அவற்றின் வெம்மை

யும் பெருமையுங்கண்டு இத்துணையாற்றலுடையன இனி யெஞ்ஞான்றுஞ்

சாய்வில வெனக் கருதி 'படாமுலை' என்றான். உவமை, சிறிதுமறையாவழி

உவை கொல்லுமென்பது தோன்ற நின்றது.

(கு - ரை.) இம்மாதர் - இந்த அழகிய பெண். படா முலை - முகஞ்

சாயாத [நெறித்துள்ள] கொங்கை. அவை கொல்லாமல் - அம்முலைகள் என்னைக் கொல்லாமல். யானையின் முகபடாத்தை 'கட்படாம்' என்றது,

அந்த முகபடாம் யானையின் கண்ணையும் மறைத்தலாலாகும். (படாம்=

படம்: வஸ்திரம்.) நாணத்தினுல் கொங்கையை மாதர் துகிலிட்டு மறைப்

பர்: அங்ஙனம மறைக்கப்பட்ட கொங்கையைத் துகிலின்வழியாகக் கண்ட

தலைவன் கூற்று, இது. அவற்றின் - அக்கொங்கைகளின். வெம்மை-கொடிய

தன்மை: விருப்பமுமாம். பெருமை - பருத்திருக்குந்தன்மை. மதயானையின்

கண்ணைப் படாமிட்டுமறையாவிட்டால் அதுயாய்ந்துகொல்லுமாறுபோல

முலைக்கண்மேற் படாமிட்டுமறைக்காவிட்டால், அம்முலைகள் என்னைக்கொல்

லும் என்பது தோன்றக் கூறுகின்றான், தலைமகளின்கொங்கைபி லீடுபட்ட

தலைமகனென்க. உவை - இடைப்பட்ட இடத்திலிருப்பவை. துகில் படாம்

போலுமென்றது துகிலையே கட்படாமெனக்கூறியது-காட்சியணியாம். (எ)

கoஅ௮. ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

நுதலிறய வருத்தங் கூறியது.

(இ - ள்.) ஞாட்பினுள் நண்ணார்உம்-போர்க்களத்து வந்து சேராதபகை வரும், (சேர்ந்தார்வாய்க்கேட்டு), உட்கும்-அஞ்சுதற்கேதுவாய, என் பீடு-என் வலி, ஒள் நுதற்கு ஓ உடைந்தது-(இம்மாதரது)ஒள்ளிய நுதலொன்றற்குமே

அழிந்துவிட்டது! (எ - று.)

மாதரென்பது அதிகாரத்தான் வந்தது.

ஞாட்பினுளென்றதனாற் பகை

வராதல் பெற்றாம். பீடென்ற பொதுமையான் மனவலியுங் காயவலியுங் கொள்க. ஓ வென்னும் வியப்பின்கட்குறிப்பு, அவ்வலிகளது பெருமையும் நுதலினது சிறுமையுந் தோன்ற நின்றது. கழிந்ததற்குஇரங்கலிற் றற்புகழ்த லன்றாயிற்று.

(கு - ரை.) தகையணங்குறுத்தலென்ற அதிகாரம்பற்றி, ஒண்ணுதற்கு என்றவிடத்து மாதரின் என்று வருவிக்கப்பட்டதென்க. ஞாட்பினுள்

கOகூ - ஆம்

அதிகாரம்.—தகையணங்குறுத்தல் கூ

நண்ணார் எனவே, பகைவரென்பது பெறப்படும். பீடு என்பது - எல்லா வலிமையும் காட்டும் பொதுப்பெயராதலால், மனவலி காயவலி என இரு வகை வலிமையையும் காட்டும். ஓ உடைந்ததே என்ற இடத்துள்ள ஓ என்ற குறிப்பிடைச்சொல்-உடைதற்குஅரிய மனவலி காயவலிகளின் பெருமையையும் அவற்றையுடைக்கும் நுதலின் சிறுமையையும்

குறித்து வியப்பதைத்
தெரிவிக்கும். நுதல் - நெற்றி. 'என்பீடு' என்று
தன்னைப்புகழ்தல் தகுமோ
எனின்,—தன்னை விட்டுக் கழிந்திட்ட வலிக்கு
இரங்கும் இடமாதலால், தகுமென்க; கழிந்ததற்கு
இரங்கும்போது அதன் மேன்மைதோன்றக் கூறு
வது உலகவியற்கையே யென்க.

(அ)

கூ0௩கூ. பிணையேர் மடநோக்கு நாணு
முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

அணிநலத்தானுய வருத்தங் கூறியது.

(இ - ள்.) பிணை ஏர் - (புறத்து) மான்பிணையொத்த,
மடம்நோக்குஉம்-
மடநோக்கினையும், நாண்உம் உடையாட்கு - (அகத்து)
நாணினையுமுடைய
ளாய இவட்கு, (ஒற்றுமையுடைய இவ்வணிகளே
யமைந்திருக்க), ஏதில
தந்து அணி எவன்-வேற்றுமையுடைய அணிகளைப்
படைத்தணிதல் என்ன
பயனுடைத்து? (எ - று.)
மடநோக்கு - வெருவுதலுடைய நோக்கு.

இவட்குப் பாரமாதலும் எனக்கு அணங்காதலுக் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம்.

(கு - ரை.) ஏர்தல் - ஒத்தல். படைத்து - புதிதாகச்செய்து: இது, தந்து என்பதன்பொருள். இம்மாதர்க்கு மடநோக்கமும் நாணமும் ஆகிய இவை அணிகலனாகி அழகுசெய்யாநிற்கையில், மேலும் அணிகலனைப் பூட்டியது - இவட்குப் பாரமாதலையும் எனக்கு வருத்தஞ்செய்தலையு மன்றி, அழகாதற் றன்மையை விளக்கா: ஆதலால், தாம் கருதிய பயனை விளக்காதென் பதனை ஆராயாது அணிகலனைப் பூட்டியவர் அறிவிலரேயென்க. ஏதிலதந்து அணியெவனோ என்றமையால், மடநோக்கும் நாணும் ஏதில வாகாமல் ஒற்றுமையுடையனவா மென்பது பெறப்படும்.

(௯)

௧0௯0. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்

கண்டார் மகிழ்செய்த லின்று.

தலைமகள் குறிப்பறிதலுற்றன் சொல்லியது.

(இ - ள்.) அடு நறா - அடப்படுநறா,—உண்டார்கண் அல்லது -(தன்னை)

உண்டார்மாட்டு (மகிழ்ச்சியைச்செய்வது) அல்லது,—காமம்போல் கண்டார்

மகிழ்செய்தல் இன்று - காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்த

லுடைத்தன்று; (எ - று.)

அடுநறா - வெளிப்படை. காமமென்றது - ஈண்டு அது நுகர்தற்கிடனாகி

யாரை. கண்டார்கணென்னும் எழாவது, இறுதிக்கட் டொக்கது. மகிழ் செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததே யெனினும், இவள் குறிப்பாராய்க்

*—2
கO



தறியாமையின் யான் அது பெற்றிலே னெனக் குறிப்பெச்சம் வருவித் துரைக்க;"அரிமயிர்த்திரண் முன்கை"என்னும்புறப்பாட்டிற் குறிப்புப்போல.

(கு - ரை.) நறு - கள். இங்கு நறவினும் காமத்திற்குக் கண்டார்மாட்டு மகிழ்ச்சிசெய்தலாகிய சிறப்புத்தோன்றக் கூறியது - வேற்றுமையணி. நறு என்று ஒருசெடியும் இருத்தலால், அதனை விலக்கிக் கள்ளென்ற பொருளைத் தர 'அடு' என்று அடைமொழி கொடுத்துக் கூறினமையால், அடுநறு என்பது - கள்ளுக்கு வெளிப்படை யாயிற்று. கள்ளை யடுத லுண் டென்பதை "ஆடுறுதேறல்" என்பதனாலும் அறிக. அது நுகர்தற்கு இடனுகியாரென்பது- மகளிரை. கண்டார் என்ற வினையாலணையும்பெயரி னிறுதியில் ஏழாவது தொக்க தென்க. குறிப்பு - மனோபாவம். அது-மகிழ்ச்சி. "அரிமயிர்த்திரண் முன்கை" என்று தொடங்குவது, புறநானூறு, 11-ஆம் பாடலாகும்: அப்பாடலின் உரையில், 'பாடினி இழைபெற்றாள்: பாணன் பூப்பெற்றான்: யான் அது பெறுகின்றிலேன்' எனக் குறிப்பெச்சம் வருவித்து உரைக்கப்பட்டிருத் தல் காண்க:

அதுபோன்று இங்கும் குறிப்பெச்சம் வருவித்து உரைக்கப்பட்டதென்க.

(௧0)

## ௧௧0 - ஆம்

## அதிகாரம்.—குறிப்பறிதல்.

அஃதாவது - தலைமகன் தலைமகள்குறிப்பினை யறிதலும், தோழி குறிப் பினை யறிதலும், அவடான் அவ்விருவர்குறிப்பினையு மறிதலுமாம். தகை யணங்குற்ற தலைமகன் றலைமகளைக் கூடுங்கால் இது வேண்டு மாகலின், தகை யணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) குறிப்பு-மனத்திலெண்ணம்.

அவ்விருவர்-தலைவன் தலைவி

என்ற அந்த இருவர். தலைமகளின் கண் கொங்கை நுதல் முதலியவற்றின் வனப்பினால் வருத்தப்பட்டுக் கூறுதலுற்ற தலைமகன் தலைமகளைக் கூடும் போது குறிப்பறித லென்ற இது வேண்டு மாதலால், குறிப்பறிதலென்ற இந்த அதிகாரம் தகையணங்குறுத்தலென்ற அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டதென அதிகாரமுறைமைக்குக் காரணங் காண்க.

௧0௯௧.

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

தலைமகன் தலைமகளுள்ப்பாட்டுக்குறிப்பினை அவள்நோக்கினு னறிந்தது.

(இ - ள்.) இவள் உண் கண் உள்ளது-இவளுடைய உண்கணகத்ததாய நோக்கு,-(இதுபொழுது), இரு நோக்கு - (என்மேலிரண்டு) நோக்காயிற்று; ஒரு நோக்கு நோய் நோக்கு - (அவற்றுள்) ஒருநோக்கு என்கண்நோய்செய் யும்நோக்கு: ஒன்று அ நோய் மருந்து - ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு; (எ - று.)

உண்கண் - மையுண்டகண். நோய்செய்யும்நோக்கு-அவண்மனத்தினுய காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்ற நோக்கு. மருந்தாய நோக்கு - தன்கண் நிகழ்கின்ற அற்புநோக்கு. நோய்செய்யும் நோக்கினைப் பொதுநோக் கென்

க்க0 - ஆம் அதிகாரம்.—குறிப்பறிதல் க்க்

பாருமுளர்: அது நோய்செயிற் கைக்கிளையாவ தல்லது அகமாகாமை யறிக. இவ்வருத்தந் தீரும் வாயிலு முண்டாயிற் றென்பதாம்.

(கு - ரை.) கண் அகத்ததாய-கண்ணிலுள்ள. நோக்கு - பார்வை. உண் என்பது செயப்படுபொருளுள்ள வினை யாதலால், அதற்கு ஏற்ப, மையென்ற செயப்படுபொருளை வருவித்தார். மையுண்ட கண் - மைதீட்டிய கண். அவ ளுடைய ஒருநோக்கு, அன்னுளுடைய காமக்குறிப்பினை வெளிப்படுத்தித் தன்திறத்தில்தான் ஆகிய தென்பதனைப் புலப்படுத்தாமையால், நோய்செய் யும் நோக்காகும்: "ஒண்டொடிநோய் நோக்கிற்பட்ட வென்னெஞ்சநோய்" என்றதும் காண்க. தலைவிக்குநேர்ந்த காமக்குறிப்பு தன்மீது

அன்பு செய்யும்பொருட்டே என்பதைப் பெறவைத்தலால், மற்றொருநோக்கு, மருந்தாய நோக்கு எனப்பட்டது. 'நோய்செய்யும் நோக்கு' என்பதற்குப் பரிமேலழகர் கொண்டபொருள், காமக்குறிப்பினைப் புலப்படுத்தும் பார்வையென்பது: பிறர் கூறுவது - காமக்குறிப்பின்றிப் பொதுவாகப்பார்க்கும் பார்வையென்பது: அங்ஙனம் கூறின், 'அந்நோய்மருந்து' என்று பின்னுற் கூறப்படும் நோக்கு - காமக்குறிப்பினைக்காட்டும் நோக்கு என்ன வேண்டும்: அவ்வாறு கொள்ளின், இப்பாடலில் தலைவிக்கு யார்மாட்டோ காதலுள்ளது என்ற பொருள் வெளியாவதால், இது - தன்மாட்டு அத்தலைவி காதல்குறிப்போடு பார்த்தாளென்ற பொருளைத் தெரிவிக்கும் அகப்பொருட்கு அங்கமாகிய கைக்கிளையாகாது, ஒருதலைக்காமமாகிய புறக்கைக்கிளையே யாகுமென்று அவ்வுரைக்குக் குற்றங் கூறியவாறு. அகப்பொருட் கைக்கிளையில் காட்சி முதலியநான்கும் நிகழுமென்பதனை "காட்சி யையந் துணிவு குறிப்பறிவென, மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை" என்பதனாலும் அறியலாம். கைக்கிளை யென்பது - ஒருபக்கத்துக்கேண்மை யென ஏழாம்வேற்றுமையாகவிரியும். காட்சி முதலிய இவற்றைக் கைக்கிளையென்பது, கூட்டம் இன்னும் நிகழா மையாலாகும். "அரிவைநாட்டமகத்துநிகழ் வேட்கை, தெரிய வுணர்த்துங் குறிசிற்கென்ப," "நாட்டமிரண்டு

மறிவுடம் படுத்தற்குக், கூட்டியுரைக்கும் குறிப்புரையாகும்,'' ''இப்பேதை தன்பார்வை பெருவினையே, னெண்ணிற் சிறந்த விருந்துயர்நோய் தனக்கின் மருந்தாய்,'' ''பிணியு மதற்குமருந்தும் பிறழப் பிறழமின்னும், பணியும் புரைமருங்குற் பெருந்தோளி படைக்கண் களே'' என்றவை இங்குக் காணத்தக்கன. (க)

கoகூஉ. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

இதுவுமது.

(இ - ள்.) கண் களவுகொள்ளும் சிறு நோக்கம் - (இவள்) கண்கள் யான்காணுமல்என்மேனுேக்குகின்ற அருகிய நோக்கம், காமத்தில் செம் பாகம் அன்று-மெய்யுறுபுணர்ச்சியின் ஒத்த பாதியளவன்று: பெரிது - (அதனினும்) மிகும்; (எ - று.)

தானுேக்கியவழி நாணி யிறைஞ்சியும் நோக்காவழி உற்றுநோக்கியும் வருதலால் 'களவுகொள்ளும்' என்றும், அஃது உளதாங்காலஞ் சிறிதாகலின்



'சிறுநோக்கம்' என்றும், அஃது உள்ப்பாடுள்வழி நிகழ்வதாகலின் இனிப்

புணர்தல் ஒருதலையென்பான் 'செம்பாகமன்று பெரிது' என்றுங் கூறினன்.

(கு-ரை.) 'களவுகொள்ளும்' என்பதனை 'யான்காணாமல் என்மேனோக்கு

கின்ற' என்பதனால் விவரித்தார். அருகிய - சிறிதுகாலமேயுள்ள. கண் களவு கொள்ளுஞ்சிறுநோக்கமென்பது உள்ளப்புணர்ச்சியையும், காமமென்பது மெய்

யுறுபுணர்ச்சியையும் காட்டும்: புணர்ச்சி இருவகைப்படுமென்பதை "உள்ளப்

புணர்ச்சியு மெய்யுறுபுணர்ச்சியுங், கள்ளப்புணர்ச்சியுட்காதலர்க் குரிய"

என்ற நம்பியகப்பொருளிலுங் காண்க. மெய்யுறுபுணர்ச்சியாவது - உடலைத்

தொட்டுப்புணரும்புணர்ச்சி: உள்ளப்புணர்ச்சியாவது - தலைவன் தலைவி என்ற

இருவர்கருத்தும் ஒத்துநிற்பது. அஃது-களவுகொள்ளும் சிறுநோக்கம். உளப்

பாடு - மனத்தினின்றுமைப்பாடு. உள்வழி - இருக்கும்போது. ஒருதலை -

நிச்சயம். செம்பாகம் என்றசொல்-சரிபாதியென்றுபொருள்படும். பெரிது -

செம்பாகத்தினும் மிக்கது என்பது, பொருள். தலைவியின் களவுகொள்ளுஞ்

சிறுநோக்கம் மெய்யுறுபுணர்ச்சி பாதி நிகழ்த்ததனினும் மிக்க மகிழ்ச்சியை

விளக்கின்ற தென்பது, இக்குறளின்பொருள்.
(உ)
கoகூஈ.

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

நோக்கினனும் நாணிறனும் அறிந்தது.

(இ - ள்.) நோக்கினாள் - (யான் நோக்காவளவில் தான் என்னை அன்போடு)நோக்கினாள்: நோக்கி இறைஞ்சினாள் - நோக்கி(ஒன்றனையுட்கொண்டு நாணி) இறைஞ்சினாள்: அஃது - அக்குறிப்பு, யாப்பினுள்-(இருவேமிடையுந் தோன்றிய) அற்புப்பயிர்வளர அதன்கண், அவள் அட்டிய நீர்-அவள்வார்த்த நீராயிற்று; (எ - று.)

அஃதென்னுஞ் சுட்டுப்பெயர். அச்செய்கைக்கேதுவாய குறிப்பின்மே னின்றது. யாப்பினுளுயதனை 'யாப்பு' என்றார். ஏகதேசவுருவகம்.

(கு - ரை.) தலைவியின் அன்போடு உள்ள நோக்குதலாலும், நாணத்தாலும் அவளது உள்ளக்குறிப்பினைத் தலைவன் அறிந்தமை கூறியது, இது. நோக்காவளவில் - பாராதபோது. ஒன்றனை - மெய்யுறு புணர்ச்சியை. அக்குறிப்பு என்றது - நோக்கியிறைஞ்சியதை. இருவேமிடையும் - தலைவன் தலைவி என்ற எங்கள் இருவேங்களிடத்தும். அதன்கண் - அந்த அற்பாகிய பயிரில். அச்செய்கைக்கு - நோக்கித்

தலைகுனிதலாகியசெயலுக்கு. யாப்பு -
பிணிப்பு: மனப்பிணிப்பினுலாவதனுல், அன்பினை யாப்பென்ருரென்க.
குறிப்பை நீரென்றதற்கு ஏற்ப, யாப்பைப் பயி ரென்னுமையால், ஏகதேச
வுருவகமாம். (ரு)

• ௧0௯௪. யானோக்குங் காலை நிலனோக்கு
நோக்கக்கால் தானோக்கி மெல்ல நகும்.

நோக்காக்காற்
நாணினுலும் மகிழ்ச்சியினுலும்
அறிந்தது.
(இ - ள்.) யான் நோக்கும்
காலை-யான் (தன்னை)நோக்குங்கால், (தான்),
நிலன் நோக்கும் - (எதிர்நோக்காது இறைஞ்சி) நிலத்தை நோக்காநிற்கும்:

௧௧௦ - ஆம் அதிகாரம்.— குறிப்பறிதல்

௯௩

நோக்காக்கால் - (அஃதறிந்து) யான் நோக்காக்கால், தான் நோக்கி - தான்
என்னை நோக்கி, மெல்ல நகும் - தன்னுள்ளே மகிழாநிற்கும்; (எ - று.)
மெல்ல - வெளிப்படாமல். மகிழ்ச்சியாற் புணர்தற்குறிப்புஇனிது விளங்

கும். மெல்லநகு மென்பதற்கு
முறுவலிக்குமென் றுரைப்பாருமுளர்.
(கு - ரை.) தான் - தலைவி. தலைவி
எதிர்நோக்காமைக்குக்காரணம்,
நாணமாகும். அஃது அறிந்து - தலைவி என்னேக்கிற்கு
எதிர்நோக்காமையை
யறிந்து. மெல்ல என்பதன்பொருள் - நகுவது
வெளிக்குத்தெரியாம
லென்பது. புணர்தற்குறிப்பு - புணரவிருப்புள்ளதென்ற
எண்ணம். வறிது
நகைதோற்றல் என்ற துறையில் 'நகை
தோற்றல்-நகைவெளியாய்த்தோன்
றியது என்னல் பொருந்தாது. என்னை? தலைவன்முன்
லின் பல்தோன்றச் சிறுமுறுவல்தோன்றலும் அமையாது:

நாணுடையளாத
அமையாதாயின்,
வறிதுநகைதோற்ற லென்னும் கிளவிப்பொருள்
பொய்க்குமேயெனின்?—
அற்றன்று; "முகைமொக்குளுள்ளது நாற்றம்
போற் பேதை, நகை
மொக்குளுள்ள தொன்றுண்டு" என்பதனல் நகை
வெளித்தோன்றாதென்பது
கூறியவாறு உணர்க. நகைதான்
தோன்றுமாறென்னையெனின்?—தலைவன்
சொற்கு வேட்கையாலுடன்பட்டு மகிழ்ச்சியான்

முகம் மலர்ந்தது; அம்மலர்ச்சி
குறிப்பினுன் நகையெனத்
தோற்றுவித்தவாறென் றுணர்க' என்று தஞ்சை
வாணன்கோவையுரைகாரர் கூறியது ஈண்டு
நோக்கத்தக்கது. முறுவலிக்
கும் - புன்சிரிப்புச்செய்வாள். "பல்லூழ்பெயர்ந்
தென்னைநோக்கு மற்றியா
னோக்கின், மெல்லவிறைஞ்சுந் தலை,"
"தன்னையான்முகத்தைநோக்கிற்றான்
முலை முகத்தை நோக்கும்" என்பன, இங்கு
ஒப்புநோக்கத்தக்கன. இக்குறளை
'புகுமுகம் புரிதல்' என்னும் மெய்ப்பாட்டிற்கு
உதாரணமாகக் காட்டியுள்
ளார் பேராசிரியர்.

(௪)

௧0௯௫. குறிக்கொண்டு நோக்காமை யல்லா
லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

இதுவுமது.

(இ - ள்.) குறிக்கொண்டு நோக்காமை அல்லால் - நேரே குறிக்
கொண்டு நோக்காத்துணையல்லது, ஒரு கண்
சிறக்கணித்தாள் போல - ஒரு
கண்ணைச் சிறங்கணித்தாள்போல, (என்னை நோக்கி),

நகும் - (பின் தன்
னுள்ளே) மகிழாநிற்கும்; (எ - று.)
சிறக்கணித்தாளென்பது செய்யுள் விகாரம்.
சிறங்கணித்தல் - சுருங்கு
தல். அதுதானும் வெளிப்பட நிகழாமையின், 'போல'
என்றான். நோக்கி
யென்பது சொல்லெச்சம். இனி யிவளை யெய்துதல்
ஒருதலையென்பது
குறிப்பெச்சம்.

(கு - ரை.) நேரேகுறிக்கொண்டு - நேரே
(இலக்காகும் என்னைக்)குறிப்
பிட்டு. நோக்காத்துணையல்லது - பார்க்கவில்லை யென்ற
அவ்வளவேயன்றி.
சிறங்கணித்தாள்போல - சுருங்கினாள்போல;
அதுதானும் - சிறங்கணித்
தலும். நோக்கி என்றசொல் எஞ்சிநின்றதென்க.
நோக்கி என்பது எஞ்சி





நிற்றலால், அதற்கு ஏற்ப, என்னை யென்பது வந்தியையும். குறிக்கொண்டு
நோக்காவிடினும் சிறங்கணித்தாள்போன்று நகுதலால் அவள்குறிப்பு என்
னிடத்த தென்பது பெறப்படுமென்க. இனி இவளையெய்துதல் ஒருதலை
யென்பது, இச்செய்யுளினுற் பெறப்படும் குறிப்பெச்சமாம். இவளை யெய்து
தல் - இத்தலைவியைப்பெறுதல். ஒருதலை - நிச்சயம். (ரு)

க0கசு. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ

லொல்லை யுணரப் படும்.

தோழி சேட்படுத்த வழி அவள்குறிப்பறிந்த

தலைமகன்

தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) உருதவர் போல் சொலின் உம்-(புறத்து)நொதுமலர்போலக் கடுஞ்சொற்சொன்னாராயினும்,—செறூர் சொல்-(அகத்துச்) செறுதலிலாதார் சொல், (பிற்பயத்தல்), ஒல்லை உணரப்படும்-(குறையுற்றோரால்) கடிதினறியப் படும்; (எ - று.)

கடுஞ்சொலென்பது-'இவ்விடங் காவன்மிகுதியுடைத்து: வரற்பாலிரல் லீர்' என்றல். முதலாயின. செறூரெனவே, அருளுடைமை பெறப்பட்டது.

தன்குறை முடிக்கக் கருதியே சேட்படுக்கின்றமை குறிப்பா னறிந்து, யன்மேலிட்டுக் கூறியவாறு. இது, வருகின்ற பாட்டிற்கு மொக்கும். உலகி

(கு - ரை.) சேட்படை யென்பது - யாங்கியிற் கூட்ட வகையிற் சேர்ந்தது: திருக்கோவையாருரையில், 'சேட்படை யென்பது-தலைமகளைக் குறை நயப்பித்துத் தன்னிஞய கூட்டம் கூட்டலுறுந் தோழி தலைமகளது பெருமையும் தனது முயற்சியது அருமையும் தோன்றுதல் காரணமாகவும், இத்

துணை யருமையுடையாள் இனி நமக்கு எய்துதற்கு அருமையுடையளென, இதுவே புணர்ச்சியாக நீட்டியாது விரையவரைந்து [மணஞ்செய்து] கோடல் காரணமாகவும், தலைமகனுக்கு இயைய மறுத்துக் கூறுநிற்றல்' என்று உள்ளது. (சேண் - அகறல்: படை-நிகழ்த்தல்: எனவே,

தலைவனை அகலுமாறு செய்தல்: இது - சேட்படை

காப்புமிகுதி சொல்லித்
யென்பதன்பொருள்.)

அவள் குறிப்பு - தோழியின் எண்ணம். இயற்கைப்புணர்ச்சிக்கு முன்னர்த் தலைவியின்குறிப்பை யறிதலை முதலைந்து பாடல்கள் கூறின: எட்டாம்பாடலும் அன்னதன்மையதே. ஆறு ஏழாம் பாடல்கள் - தோழியின் குறிப்பைத் தலைமகனறிதலையும், ஒன்பது பத்தாம் பாடல்கள் - தோழி இருவரின்குறிப் பறிதலையும் கொண்டு வருவன என்க.

நொதுமலர் - நண்பரும் பகைவருமாகாமல் நடுநிலையாயுள்ளவர்: இது - உறாதவரென்பதன்பொருள்: உறாதவர் - யாதொரு சம்பந்தமும் இலாதவர்: உதாசீனர். செறுதல்-கோபித்தல். சேட்படுக்கின்றமை-காப்புமிகுதி முதலியவற்றால் தலைவி அணுகற்குஅரியள் என்று கூட்டத்திற்குஇயையாது மறுத்துக்கூறித் தலைவனை யகற்றுதல். 'தோழி கடுஞ்சொல்லால் மறுக்கின்றாளென்றாலும் அகத்துச் செறுதலில்லாமையால் இவள்சொல் விரைவிற் பயனை

## ககo - ஆம் அதிகாரம்.—குறிப்பறிதல்

கரு

விளக்கு மென்பது குறையுற்ற என்போன்றவரா

லுணரப்படும்' என்று கூறுது உலகவழக்கத்தைக் கூறுவதுபோல 'செறுஅர் சொல் ஒல்லே யுணரப் படும்' என்று கூறியதனுல், உலகியன்மேலிட்டுக் கூறியவாறு என்றது. சிறப் பாகக் கூறவேண்டிய இடத்து உலகியலில்வைத்துப் பொதுவாகக் கூறுவ தனே மேற்செய்யுளிலுங் காணலாம்.

(சு)

கOகூஎ. செறுஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ ஞேக்கு

முருஅர்போன் றற்றார் குறிப்பு.

இதுவுமது.

(இ - ள்.) செறு சிறு சொல்உம் - பின்னினிதாய் முன்னின்னுதாய சொல்லும், செற்றார் போல் நோக்குஉம்-(அகத்துச் செறுநிருந்தே புறத்துச்) செற்றார்போன்ற வெகுளிநோக்கும், உறார் போன்று உற்றார் - நொதுமலர் போன்று நட்பாயினர்க்கு, குறிப்பு - ஒருகுறிப்புப்பற்றி வருவன; (ஞ - று.)

குறிப்பு - ஆகுபெயர். இவை உள்ளே ஒரு பயன்குறித்துச் செய்கின் றன: இயல்பல்ல: ஆகலான், இவற்றிற்கு அஞ்சவேண்டாவென்பதாம்.

(கு - ரை.) செறுதசொல் சிறுசொல் என இயையும்: செறுதசொல் - சினமில்லாதசொல்: எனவே, இனிதாய சொல்லாம்: சிறுசொல் எனவே,

இன்னாதாய சொல்லாம்: ஒருசொல் இனிதும்
இன்னாதுமாவது காலவேற்
றுமையா னென்பார் 'பின்னினிதாய் முன்னின்னாதாய
சொல்' என்றார்.

செற்றார் - சினந்தவர். குறிப்பு என்ற சொல் -
குறிப்புப்பற்றி வருவனவற்
றைக் காட்டுவதால், கருவியாகுபெயராம்.

(எ)

கoகூ௯.

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக்கண்டு
தலைமகன் கூறியது.

(இ-ள்.) யான் நோக்க-(என்னை யகற்றுகின்ற சொற்கு
ஆற்றாது) யான்
(இரங்து) நோக்கியவழி, பசையினள்-(அஃதறிந்து)
நெகிழ்ந்து, பைய நகும்-
உள்ளே மெல்ல நகாநின்றாள்: (அதனால்), அசை இயற்கு -
நுடங்கிய இயல்
பினையுடையாட்கு, ஆண்டு - அந்நகையின்கண்ணே

(தோன்றுகின்றது), ஓர்

ஏர் - ஓர் நன்மைக் குறிப்பு, உண்டு—; (எ - று.)

ஏர் - ஆகுபெயர். அக்குறிப்பு இனிப் பழுதாகா தென்பதாம்.

(கு - ரை.) சொற்குஆற்றாது - சொல்லைப்பொறாமல். அஃது - யான் இரந்து நோக்கியதை. ஏர்-அழகு: இது நன்மையிலுள்ளதாதலால் தானியாம்:

இந்தத்தானியின்பெயர்-அதற்குத் தானமாகிய நன்மையைக் காட்டுதலால்,

தானியாகுபெயராம். அக்குறிப்பு-நகையினிடத்தே தோன்றுகின்ற நன்மைக்

குறிப்பு: அதாவது, அகற்றுவது கூட்ல்நிகழ்வதன்பொருட்டே யென்பது.

இங்கும் அகற்றுதல் வருவதனல், இதுவும் சேட்புடையிற் சேர்ந்ததே. (அ)

கo௬௯. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) ஏதிலார் போல - முன்னறியாதார்போல, பொதுநோக்கு நோக்குதல் - (ஒருவரையொருவர்) பொதுநோக்கத்தா னோக்குதல், காதலார் கண்ணே உள - இக்காதலையுடையார்கண்ணே யுளவாகாநின்றன; (எ - று.)

பொதுநோக்கு - யாவர்மாட்டும் ஒருதன்மைத்தாய நோக்கு. நோக்குதற் றொழில் ஒன்றேயாயினும் இருவர்கண்ணும் நிகழ்தலானும், ஒருவர்கட்டா னும் குறிப்பு வேறுபாட்டாற் பலவா மாகலானும், 'உள'எனப் பன்மையாற் கூறப்பட்டது. இருவரும் "மதுமறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல துள்ளேமகிழ்"தலின் அதுபற்றி 'காதலார்' என்றும், அது புறத்து

உள்ளத்

வெளிப்

படாமையின் 'ஏதிலார்போல' என்றுங் கூறினுள்.

(கு - ரை.) மதியுடம்பாடு - தோழி தலைவனுக்குந் தலைவிக்குங் கூட்ட முண்டானமையைத் தன்னுணர்வினலாராய்ந்து அறிதல். அங்ஙனம் அறிந்த தோழி தலைவன்தலைவியரதுபொதுநோக்கை வியந்து கூறியது இது. இது-பாங்கற்கூட்டத்தின்பின் நிகழ்வதாகும். ஒருவர்கட் டானும் - ஒருவரிடத் திலே தோன்றும் நோக்கும். குறிப்பு - அந்நோக்கங்கொண்டுள்ள குறிப்பு. 'நோக்குதல் உளது'என்று ஒன்றன்பாலாற்கூறுமல் 'நோக்குதல்உள' என்ற பலவின்பாலாற்கூறியதற்குக் காரணம், தலைவன் தலைவியர்என்ற இருவரி டத்தும் நோக்குதல் இருத்தலாலும், அன்றியும் தலைவன் தலைவிஎன்ற இவ் விருவரிடத்தும் தனித்தனியே நோக்குதல் குறிப்புவேறுபாட்டாற் பலவா மாகலானும் என்க. நோக்கம் வெவ்வேறு குறிப்புக்கொண்டிருப்பினும் நட்ப மாய் நோக்குமவர்க்கன்றி மற்றையோர்க்குப் புலனுகாமையால், 'பொது

நோக்கு' என்றது. இருவரும் - தலைவனும் தலைவியும். "தம்முண், மது மறைந்துண்டோர்மகிழ்ச்சிபோல, உள்ளத்துள்ளேமகிழ்ப, சொல்லுமாடுப கண்ணினானே" என்று தொல்காப்பியத்துக் களவியல் (உஉ-ஆம் சூத்திரத்து) உரையில் மேற்கோட்செய்யுளில் வந்துள்ளது. அது - மகிழ்ச்சி: (க)

ககOO. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்ன பயனு மில.

இதுவுமது.

(இ - ள்.) கண்ணொடு கண் இணை -

(காமத்திற்குரியஇருவருள்)ஒருவர் கண்களோடு ஒருவர்கண்கள், நோக்கு ஒக்கின் - நோக்கலொக்குமாயின்,— வாய் சொற்கள் என்ன பயன் உம் இல - (அவர் வாய்மைதோன்றச் சொல்லு கின்ற) வாய்ச்சொற்கள் ஒருபயனு முடையவல்ல; (எ - று.)

நோக்கலொத்தல் - காதனோக்கினவாதல். வாய்ச்சொற்கள் - மனத் தின்கணின்றி வாயளவிற் றோன்றுகின்ற சொற்கள். இருவர்சொல்லுங் கேட்டு உலகியன்மேல்வைத்துக் கூறியவாறு. இருவர்சொல்லுமாவன - அவள் புனங்காவன்மேலும், அவன் வேட்டத்தின் மேலுஞ் சொல்லுவன. பயனில் சொற்க ளா கலின், இவை கொள்ளப்படா வென்பதாம். இவை புணர்தனிமித்தம்,

ககக - ஆம் அதிகாரம்.—புணர்ச்சிமகிழ்தல்

கள

(கு - ரை.) தலைவி தான் புனங்காவல் செய்வதாகச் சொல்லுவது: தலைவன் தான் வேட்டையாட அவ்வழிப்போந்ததாகச் சொல்லுவது: இங் ஙனம் தலைவி தலைவன் என்ற இருவரும் தாம் வெவ்வேறுதொழில் நிகழ்த்து வதாகச் சொல்லினும், இவர்களின் கண்பார்வைகள் காமக்குறிப்பை வெளிப் படுத்தலால், இவர்கள் வாய்ச்சொற்கள் உண்மையெனக் கொள்ளப்படா என்றவாறு. உலகியலைக்கூறுவதுபோல இருப்பினும், தலைவன் தலைவியரின் குறிப்பை யறிந்து தோழி கூறுகின்றாளாக இச்செய்யுளுக்குக் கருத்துக் காண்க. இவை-குறிப்பறிதல் என்ற இந்த அதிகாரத்தில் வந்த செய்யுட்கள்:

இருவர்சொற்களும் ஒத்தநோக்கங்களும் எனக் கொள்வாரு முளர். தலைவன் தலைவி என்ற இருவர் கண்களும் தம்முளொத்துவிடின், வாய்விட்டுத் தம் காதலை யொருவர்க்கொருவர் சொல்லவேண்டுமென்பதில்லை யென்று இக் குறட்குக் கருத்துக்காணினுமாம்: "ஒருவன்,...தொடைமாண்ட, கண்ணியன்

வில்லன் வருமென்னைநோக்குபு, முன்னத்திற்காட்டுத
லல்லது தானுற்ற,
நோயுரைக்கல்லான் பெயருமற் பன்னாளும்,
பாயல்பெறேனென் படர்கூர்ந்
தவன்வயிற், சேயேன்மன் யானுந் துயருழப்பேன்"
என்ற கலித்தொகை
இங்குக் காணத்தக்கது.

(கo)

## ககக - ஆம்

# அதிகாரம்.—புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது - அங்ஙனங்குறிப்பறிந்து புணர்ந்த
தலைமகன் அப்புணர்ச்சி
யினை மகிழ்ந்து கூறல்.
அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) குறிப்புஅறிந்து - தலைமகளின் நினைவு
தன்மீது அன்புகூர்ந்
திருத்தலையறிந்து. குறிப்பறிதல் நிகழ்ந்தபின்பு,
அத்தலைவியைப்புணர்ந்து
அம்மகிழ்ச்சியைக்கூறுதல் முறைமையாதலால்,
குறிப்பறிதலின்பின், இது
வைக்கப்பட்டதென்க.

ககOக. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு
மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட்
சொல்லியது.

(இ-ள்.) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று
அறியும் ஐம்புலன் உம் -
கண்ணாற்கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும்
மூக்கான்மோந்தும்
மெய்யாற்றீண்டியும் அனுபவிக்கப்படும் ஐம்புலனும்,
ஒண்டொடி கண் ஏ -
இவ்வொள்ளிய தொடியையுடையாள் கண்ணே,
உள - உளவாயின; (எ - று.)

உம்மை - முற்றும்மை. தேற்றேகாரம்,
வேறிடத்தின்மை விளக்கிநின்
றது. வேறுவேறுகாலங்களில் வேறுவேறு பொருள்களா
னனுபவிக்கப்படு
வன ஒருகாலத்து இவள்கண்ணே யனுபவிக்கப்பட்டன
வென்பதாம். வட
நூலார் இடக்கர்ப்பொருளாகச் சொல்லிய
புணர்ச்சித்தொழில்களும் ஈண்டு
அடக்கிக் கூறப்பட்டன.

(கு - ரை.) ஐம்புலனும் -
சுவைஒளிஊறுஓசைநாற்றமென்னும் ஐம்
பொறிகளுக்குரிய ஐந்துவிஷயங்களும்: இநில், உம்மை -
இனைத்தென்றறி
பொருளில்வந்ததனால், முற்றும்மையாம்.

திலுள்ள ஏகாரம் - தெளிவுப்பொருளது: தெளிவு
- நிச்சயம்: இவ்வொண்

டொடியாளிடத்திலேதான் ஐம்புலனும் உள்ளன என்று
தெளிவுபடக்கூறிய

மையால், பிறிதோரிடத்து ஒருங்கே ஐம்புலனும்
அனுபவிக்குமாறு இல்லை

யென்பது விளங்குமாறு அறிக. வடநூலார்
இடக்கர்ப்பொருளவாகச்சொல்

லிய புணர்ச்சித்தொழில்கள் - பயோதரங்களை வருடல்,
நகக்குறியமைத்தல்,

இதழ்சுவைத்தல்முதலியன: இவற்றின் விவரங்களை
வாத்ஸ்யாயநம்முதலிய

வற்றுட் காணலாம். தத்துவநூலாகிய
திருவாய்மொழியையருளிச்செய்த நம்

மாழ்வார், ஐம்புலன்களும் தமக்குஅடையப்படுபொருளாகிய
திருமாலினிடத்

தேஉள்ளன என்ற கருத்தை யமைத்து,
இந்தக்குறளையொட்டி "கண்டுகேட்

டுற்றுமோந்துண்டுழலுமைங்
கருவி,கண்டவின்பம்தெரிவரியவளவில்லாச்சிற்

றின்ப,மொண்டொடியாள் திருமகளுநீயுமேநிலா நிற்பக்,கண்ட சதிர்கண்டொ

ழிந்தேனடைந்தேனுன் திருவடியே" என்று அருளிச்செய்துள்ளார். சேர

மான்பெருமாணுயனுர் இத்திருக்குறளைத் திருக்கைலாயஞானவுலாவில்

மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார். ஒண்டொடி - பண்புத்தொகையன்மொழி.

கக0உ. பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.

(இ - ள்.) பிணிக்கு மருந்து பிற-(வாதம் முதலிய) பிணிகட்கு மருந்தா

வன (அவற்றிற்கு நிதானமாயினவன்றி) மாறுயவியல்பினை யுடையனவாம்;

(அவ்வாறன்றி), அணியிழை - இவ்வணியிழையினை யுடையாள், தன் நோய்

க்கு - தன்னிஞய பிணிக்கு, மருந்து தானே - மருந்துந் தானே யாயினள்.

இயற்கைப்புணர்ச்சிஸ்ய நினைந்து முன்வருந்திஞைகவின்,'தன்னோய்' என்றும், அவ்வருத்தந் தமியாளை யிடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தாஞைகவின்

'தானே மருந்து' என்றுங் கூறினுன். இப்பிணியும் எளியவாயவற்ருற் றீரப்

பெற்றில மென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது.

(கு - ரை.) இடந்தலைப்பாடு என்பது - தலைவன்

முன்னாட்கூடின
இடத்திலேவந்து தலைவியை
யெதிர்ப்படுதலென்ற பொருள்படும். இது
இயற்கைப்புணர்ச்சிக்குப் பின் நிகழுங்
கொள்கை: இதனை "காமப்புணர்ச்சியு

கூட்ட மென்பது தொல்காப்பியனார்
மிடந்தலைப்பாடும், பாங்கொடுதழாஅ
லுந் தோழியிற்புணர்வுமென்று, ஆங்கநால் வகையினு
மடைந்த சார்பொடு,
மறையென மொழிதன் மறையோராறே" என்ற
தொல்காப்பியச்(செய். 498)
சூத்திரத்தா லறிக. இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்து
தலைவனும் தலைவியும்
பிரிந்தபின்னர் ஆற்றாது வருந்திநின்ற தலைமகன்
தலைவியை மறுநாளுங்கூட
எண்ணி, 'விதியாலே அவளையெய்தின யான் அவ்விதி
தருமேல் இன்றுங் காண்பேன்' என்று முன்னாளில்
அவளைக் கண்ணுற்ற பொழிலிலே புக்கானாக, தலைவியும்
தன் ஆயவெள்ளத்தோடும் விளையாடி ஆங்குவருகின்றவள்
ஆயங் கள் முன்னாளிற்போலவே பிரிய,
நெருநலில்தலைமகனை வழிபட்ட இடம் எதிர்ப்பட்டுத்
தலைமகனைக் கண்டாளேபோலப் பரவசமாக நின்றாளாக,
தலை

கக

மகனும் தனியளாய்நின்ற தலைமகளை யெதிர்ப்பட்டுப் புணர்வனென்க. இதுவே, இடந்தலைப்பாட்டுப் புணர்ச்சியாகும். இவ்விடந்தலைப்பாடு, தலைவன் தானேசென்றுகூடுவது, பாங்கனுற்றலைவன்முற்குறித்த இடந்தலைப்பட்டுப் புணர்வது என இருவகைப்படு மென்றும், தானே சென்றுகூடுவதே சிறக்கு மென்றும் கொள்வர் ஒருசாரார்: இனி, வேறொருசாராசிரியர் இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற்கூட்டம் நிகழாது: பாங்கற்கூட்டம் நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது என்று கொள்வர். நிதானம் - ஆதிகாரணம். தன்னோய் - தன்னால் வந்த நோய்: தான் என்றது-தலைவியை. தமியாளை - தனிப்பட்ட தலைவியை. வருத்தந்தீர்த்தான் என இயையும். இப்பிணி - தலைவியினுடைய நோய். எளிய

வாயவற்றால்-எளிமையாகக் கிடைக்கக்கூடிய பிறமருந்துகளால். "நின்முகந் தான் பெறினல்லது கொன்னே, மருந்து பிறிதியாதுமில்" என்ற கலித்தொகை இங்குக் காணத்தக்கது. அணியிழை-வினைத்தொகையன்மொழி. (உ)

ககoஙு. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

'நிரதிசயவின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற்கு இன்னையாதல் தகாது' என்ற பாங்கற்குச் சொல்லியது.

(இ-ள்.) (ஐம்புலன்களையும் நுகர்வார்க்கு), தாம் வீழ்வார் மெல் தோள் துயிலின்-தாம் விரும்பும் மகளிர்

மெல்லியதோளின்கட் டுயிலுந்துயில்போல,
இனிதுகொல்-வருந்தாமலெய்தலாமோ? தாமரைக்கண்ணான்
உலகு - (அவற்றைத் துறந்த தவயோகிகளெய்துஞ்)
செங்கண்மாலுலகம்? (எ - று.)

ஐம்புலன்களையும் நுகர்வாரென்னும்பெயர்,
அவாய்நிலையான் வந்தது. இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத்
தவயோகங்களான் வருந்தவேண்டுதலின், எம்மனோர்க்கு
ஆகாதென்னும் கருத்தால் 'இனிதுகொல்' என்றான்.
இந்திர னுலகென்றுரைப்பாரு முளர்:
தாமரைக்கண்ணனென்பது அவனுக்குப்
பெயரன்மையின், அஃது உரையன்மை யறிக.

(கு - ரை.) இது பாங்கற்கூட்டத்தில், கிழவோன்
கழற்றெதிர்மறுத்த லெனப்படும். பாங்கற்கூட்டம்
என்பதைப் பாங்கனால் தலைவன் தலைவியைச் சென்றெய்துதல்
என்பர் ஒருசாரார்: மற்றொருசாரார் தோழியிற்கூட்டம்
போலப் பாங்கன் தலைவனுக்கு இடைநின்று உரையாடிக்
கூட்டாமையின், அது பொருளன்று:
இடந்தலைப்பாட்டிற்குப்பின்பு தலைமகன்பாங்கனைக்கூடுங்
கூட்டம் என்பர்: தலைமகன்
இடந்தலைப்பாட்டில் தலைவியைக்கூடிப்பிரிந்தவன்
தலைமகளைப்பற்றிய நினைவினால் வருந்திநின்றானாக,
இந்நிலைமையில் பின்னாள் சென்று எதிர்ப்பட்ட பாங்கன்
தலைவனை அடிமுதல் முடிகாறும் நோக்கி,
'எம்பெருமாற்குத் திருவொளிமழுங்குமாறு நேர்ந்த வாட்டம்

என்னோ?' என்று வினவ, இவ்வகைவினவிய தோழனுக்குத் தலைவன் நிகழ்ந்தவரலாறெல்லாங் கூறினான்: கேட்ட பாங்கன் தலைவனிடத்துத் தீயனகண்டால் இடித்துக் கூறுமவனாதலால் 'அன்பனே! நின்னுள்ளம் உன்னளவன்றிக் கைம்மிக் கோடுமேயெனின் உன்னைத் தெளிவிப்பார் யார்? இது உன் கல்வியறிவிற்குத் தகாது' என்று கழறி [இடித்து]க் கூறினான்: இங்ஙன் பாங்கன் கூறவும்,



வேட்கையடங்கியத் தலைவன் 'என்னாற் காணப்பட்ட வடிவை நீ கண்
டிருப்பாயாயின் இங்ஙன் கழறாய்' என்னுங் கருத்துப்பட, அந்தப்பாங்கன்
கழறியதை மறுத்துரைக்கும் கிளவி இது என்க.

வீழ்வாரென்றசொல்,
விரும்பப்படுவாரென்றபொருளது. விரும்பும்
மகளிரின்தோளில் துயிலுதலினும் மோட்சலோகம் இனிதாகாதென்று பாங்
கனுக்குத் தலைவன் கழற்றெதிர்மறுத்தவாறு; பொதுவாகக்கூறிச் சிறப்புப்
பொருளைப்பெறவைத்தது இது. இப்பெற்றித்தாய - இப்படிப்பட்டதன்மை
யையுடைய: எளிதிற்கிடைப்பதாயஎன்றபடி.

'இனிதுகொல்'என்ற விஞவிற்
குக் காரணம் 'தவயோகங்களான்வருந்தவேண்டுதலின்'
என்பது. தாமரைக்
கண்ணுனுலகுஎன்பதற்கு - இந்திரலோகமாகிய சுவர்க்கம்
என்று ஒருசாரார்
பொருள்கூறுவர்:
அது பொருந்தாது: தாமரைக்கண்ணனென்று இந்திரனுக்
குப் பேரின்மையால் என்று அவ்வுரையை மறுத்தனர்.
இனி, தாமரைக்
கண்ணுன் என்பதற்கு - அடியாரின்
இதயத்தாமரையிடத்துவீற்றிருக்குங் கட
வுள்எனப் பொதுவாகக் கடவுளைக் காட்டுமென்பாருமுளர்.
மகளிர்தோளில்
துயிலுதல் கூறப்படுவதனை "வரிக்குழை, வேயுறு
மென்றோட்டுயில்பெறும்"
என்ற கலித்தொகையிலும் காண்க.

(க)

ககoச.

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

பாங்கற்கூட்டத்திறுதிக்கட் சொல்லியது.

(இ-ள்.) நீங்கின் - (தன்னை) அகன்றுழி,
தெறூஉம்-சுடாநிற்கும்: குறு
குங்கால்-அணுகுழி, தண்ணென்னும்-குளிராநிற்கும்:
தீ-(இப்பெற்றித்தாய)

தீயை, (என்கண் தருதற்கு), இவள்—,
யாண்டு-எவ்வுலகத்து, பெற்றாள்—?

கூடாமுன் துன்புறுதலின் 'நீங்கிற்றெறூஉம்'
என்றும், கூடியபின்
இன்புறுதலின் 'குறுகுங்காற்றண்ணென்னும்' என்றும், இப்பெற்றியதோர் தீ உலகத்தில்லையாமாகலின் 'யாண்டுப்பெற்றாள்' என்றுங் கூறினான். தன் காமத்தீத்தன்னையே அவள்தந்தாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின்.

(கு - ரை.) பாங்கற்கூட்டத்திறுதியில் தலைவியின் கலவியைப் பெற்ற தலைவன் அக்கலவியைப் புகழ்ந்து கூறிய கிளவியாகும் இது. கூடாமுன் - புணர்தற்குமுன்னம். காமத்தீ - விருப்பமாகியதீ. காமம் என்பது தலைவியாலேயே தனக்குஉண்டானதாகையால் அக்காமத்தீயை அத்தலைவி தந்தாளெனத் தலைவன் கூறுகின்றான்: உலகத்துத்தீயையணுகினால் சுடும்:நீங்கினாற் சுடாது நிற்கும்: இந்தக்காமத்தீயோ இவளையணுகினால் தண்ணென்றிருந்து நீங்கினாற் சுடுகின்றதே! இதுஎன்னே என்று காமத்தீயின் விபரீதத்தன்மையை வியந்தவாறு. வேற்றுமையணிபடவந்த உருவகம். "காமநோய்போல, விடிற்சுடலாற்றுமோ தீ" என்று மேலே கூறுவது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

கக0ரு.

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

க்கக - ஆம்

அதிகாரம்.—புணர்ச்சிமகிழ்தல் உக்

சொல்லியது.
திண்

(இ - ள்.) (மிகவினியவாய பொருள்களைப் பெறாது), வேட்ட - (அவற்றின்மேல்) விருப்பங்கூர்ந்தபொழுதின்கண், அவை

பொழு
அவை
போலும்-அவையவை (தாமே வந்து இன்பஞ்செய்யுமாறு)
போல இன்பஞ்
செய்யும்: (எப்பொழுதும் பெற்றுப்புணரினும்), தோடு
ஆர் கதுப்பினள்
தோள்-பூவினை யணிந்த தழைத்த
கூந்தலினையுடையாள்தோள்கள்; (எ-று.)
தோடு - ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி,
இடந்தலைப்பாடு, பாங்கற்
கூட்டத்துக்கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும்
புதியவாய் நெஞ்சம்
பிணித்தலின், அவ்வாராமைபற்றி இவ்வாறுகூறினான்.
தொழிலுவமம்.

(கு - ரை.) தோழியிற்கூட்டத்து இறுதிக்கண் தலைவியைப்புகழ்ந்த கிளவியாகும், இது. பாங்கற்கூட்டம் நிகழ்ந்தபின்பு, இடந்தலைப்பாட்டினாலோ பாங்கனாலோ மீண்டும் தலைவியைக் கூட முயலாமல், முன்னர்த் தலைவியைத் தலைவன் தோழியர்திரளிற் செலுத்தினபோது அவள் காதற்றோழியைக்

குறிப்பா லறிந்தவ ளுதலின், அத்தோழியை இரந்து
குறையுற்று இவள்வாயி
லாக இடையீடின்றித் தலைவியைக்கூட எண்ணி
அதற்குஎற்பமுயன்று பாங்
கியால் தலைவியைக்கூடுதல்,
தோழியிற்கூட்டமெனப்படும். (இக்கூட்டம் -
மதியுடம்பாடு மடல்விலக்கல் குறியிடஞ்சேர்தல்
வரைவுகடாதல் அறத்தொடு
நிற்றல் உடன்போக்கு என வகைப்படுத்துக் கூறப்படும்.)

விருப்பம்கூர்ந்த - விருப்பம்மிகுந்த.

அவையவை - விரும்பப்பட்ட அவ்
வப்பொருள்கள். தோடு - இதழ்: இதழினையுடைய
மலருக்குச் சினையாகு
பெயர். இயற்கைப்புணர்ச்சி முதலிய மூன்றிலும்
கூட்டம் நிகழ்ந்திருக்க
என்க. நெஞ்சம் பிணித்தலின் -
தலைவனதுநெஞ்சத்தைப் பிணித்தலால்:
பிணித்தலுக்கு எழுவாய், தோள்.
ஆராமை-விருப்பந்தணியாமை. இயற்கைப்
புணர்ச்சி முதலிய மூவகைக்கூட்டத்திலும் தலைவியைப்
புணர்ந்திருந்தாலும், விருப்பந்தணியாது
நெஞ்சம்பிணிப்புண்டதனுல் புதியவாய்க்கண்டனபோலத்
தோள்களைப் பாராட்டுகின்றுன், தலைவ
னென்க.வேட்டபொழுதில் வேட்கப்

பட்டவை வந்து இன்பஞ்செய்தல்போலக்
கதுப்பினுள்தோறும் வந்து இன்
பஞ்செய்யு மென்றுகூறியதால், இது-தொழிலு
வமமாயிற்று. "வேட்டார்க்கு
வேட்டனவே போன்றினிய
வேய்மென்றோள்,பூட்டார் சிலைநுதலாள் புல்லா
தொழிவேனோ" என்ற சிந்தாமணி இங்கு
ஒப்புநோக்கத்தக்கது. "கொடி
யிடைதோள்,புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம்
பின்னும் புதிதாய்,
மணந்தாழ்புரிகுழலாளல்குல்போலவளர்கின்றதே"
என்றார், திருக்கோவை யாரிலும்.

(ரு)

கக0சு.

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

இதுவுமது.

(இ - ள்.) உயிர் - (தன்னைப்பெறாது வாடிய)
என்னுயிர், உறு தோறு-(பெற்று) உறுந்தோறும், தளிர்ப்ப -
தளிர்க்கும்வகை, தீண்டலால் - தீண்டுத

லான்,—பேதைக்கு - இப்பேதைக்கு, தோள்-தோள்கள், அமிழ்தின் இயன்

றன - தீண்டப்படுவதோ ரமிழ்தினுற் செய்யப்பட்டன; (எ - று.)

ஏதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்கு மெய்திற்று. வாடியவுயிரைத்

தளிர்ப்பித்தல்பற்றி, அவை அமிழ்தினியன்றன என்றான். தளிர்த்தல் -

இன்பத்தால் தழைத்தல்.

(கு-ரை.) இதுவும், தோழியிற்கூட்டம் நிகழ்ந்த பின், தலைமகன் தலைவியொடு நிகழ்ந்த புணர்ச்சியைப் புகழ்ந்துகூறியதாகும். பெற்றுறுந்தோறும் - பெற்று ஊற்றின்பத்தையடையுந்தோறும். உயிர்தளிர்ப்பதற்கு அமிழ்தினுலியன்றமை ஏதுவாவதுபோல, தீண்டப்படுதலும் ஏதுவாக அமைதலால், அவ்வமிழ்திற்குப் பருகப்படுந் தன்மையேயன்றித் தீண்டப்படுந்தன்மையும் கொள்ளவேண்டுவதாயிற் றென்பது, 'ஏதுவாதலால் தீண்டல் அமிழ்திற்கும் எய்திற்று' என்றதன்பொருள். (சு)

கககஎ. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

இவளை நீ வரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து

தமது பாத்துண்ணு மில்லறத்தோடு

படல்வேண்டுமென்ற

தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) அம் மா அரிவை முயக்கு - அழகிய மாமைநிறத்தையுடைய அரிவையது முயக்கம், (இன்பம் பயத்தற்கண்), தம்இல் இருந்து-தமக்குரிய இல்லின்கணிருந்து, (உலகோர்), தமது-தந் தாளான் வந்தபொருளை, பாத்து உண்டு அற்று - (தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்கட்குப்)பகுத்து(த் தங்கூற்றை) உண்டாற்போலும்; (எ - று.)

தொழிலுவமம். இல்லறஞ்செய்தாரெய்துந் துறக்கத்தின்பம் எனக்கு இப்புணர்ச்சியே தருமென வரைவுடன்படான் கூறியவாறாயிற்று.

(கு.- ரை.) தோழியிற்கூட்டத்தால் தலைவன் தலைவியினிடத்துக் களவொழுக்கத்தை நிகழ்த்திவந்தானாக, தோழி 'களவொழுக்கத்தைத் தவிர்ந்து வரைந்து இல்லறம்நடத்துக'என்ன, வரைதலை யுடம்படானாய்த் தலைவன் சொன்னது இது. அரிவை - பெண். முயக்கம் - தழுவுகை: புணர்ச்சியென்ற கருத்தது. பயத்தற்கண் - உண்டாக்குதலில். இல்லின்கண் - வீட்டில். தம் தாளான் - தமதுமுயற்சியால். தென்புலத்தார் - பிதிரர். ஒக்கல்-சுற்றத்தார். பகுத்து - பிரித்துக்கொடுத்து. தங்கூற்றை - தமதுபகுதியை. தம்மிலிருந்து தமதுபாத்துண்டற்றொழிலை அரிவை முயக்கிற்கு உவமையாகக்கூறியதனால், இது-தொழிலுவமமாயிற்று. இனி, தம்மிலிருந்து பாத்துண்டலாற் பெறலாகுஞ் சுவர்க்கவின்பம் இவ்வரிவைமுயக்கத்திலேயே எனக்கு உள்ளது என்று கூறியதாகக் கருதுமிடத்து, இதனைப் பயனுவமமென்னலாமென்று தோன்றுகின்றது. துறக்கத்தின்பம் -

சுவர்க்கலோகத்தின்பம். வரைவுடன்படான் - மணந்துகொள்ளச் சம்மதியாதவன்.

(எ)

கக
0௲. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

## கசக - ஆம்

அதிகாரம்.—புணர்ச்சிமகிழ்தல் உரு

ஒத்த அன்புடைய நமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியதென வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்.) (நீ சொல்லுகின்றதொக்கும்): வளி இடை போழப்படா-(ஒரு பொழுதும் நெகிழாமையின்) காற்றால் இடையறுக்கப்படாத, முயக்கு-முயக்கம், வீழும் இருவர்க்கு-(ஒருவரையொருவர்) விழைவாரிருவர்க்கும், இனிதே—.

முற்றும்மை, விகாரத்தாற்றொக்கது. ஏகாரம், தேற்றத்தின்கண் வந்தது. ஈண்டு இருவரில்லை: இன்மையான், இஃதொவ்வாதென்பது கருத்து.

களவிற்புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன்படான் கூறியவாறு.

(கு-ரை.) இதுவும் வரைவுடம்படாதான் கூறிய கிளவியேயாகும். ஒரு
பொழுதும் விடாமுயக்கமே யினிய தெனச்சொல்லி வரைவுகடாய தோழிக்
குக் கருத்து-களவொழுக்கத்தால் தலைவியை முயங்குவது இடையீடுபடுமாத
லால் இக்களவொழுக்கத்தைத் தவிர்த்து தலைவியை வரைவாயாக என்பது.
வரைவுகடாய - வெளிப்பட மணந்துகொள்ளும்படி வற்புறுத்திக்கூறிய.
நீ சொல்லுகின்றது ஒக்கும் என்பது - தோழியின் பேச்சிற் பாதிப்
பகுதியை யுடன்பட்டதைக் குறிப்பிக்கும். ஒருபொழுதும் நெகிழாமையால்-
ஒருபொழுதும் முயங்கிய கையைத் தளரவிடாமையால். முற்றும்மை விகா
ரத்தாற்றொக்கது 'இருவர்க்கு' என்பதனீற்றில். இனிதே என்ற ஏகாரம்
தெளிவைக் காட்டுதலால், தேற்றேகாரம். ஈண்டு - இப்போது, இங்கே.
இருவர் இல்லை - நான் இவள் என்று பிரித்துச் சொல்லும்படி இருவராக
இல்லை: ஒருவரே யென்னும்படி ஒற்றுமைப்பட்டுள்ளோமாதலால், நீ
சொல்லுவது எம்திறத்துக்கு ஏலாது என்பது கருத்து.

(அ)

கக0கூ. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

காத்தல்வேண்டாமையின் இடையறவில்லாத
கூட்டமே
இன்பப்பயனுடைத்தென வரைவுகடாவியாட்குச்
சொல்லியது.

(இ - ள்.) ஊடல் உணர்தல் புணர்தல் இவை - (புணர்ச்சியினிதாதற்
பொருட்டு வேண்டுவதாய)ஊடலும் அதனை யளவறிந்து நீங்குதலும் அதன்பி
னிகழ்வதாய அப்புணர்ச்சிதானுமென இவையன்றே, காமம் கூடியார்
பெற்ற பயன்-(வரைந்துகொண்டு)காமத்தை யிடைவிடாதெய்தியவர் பெற்ற
பயன்கள்? (எ - று.)

ஆடவர்க்குப் பிரிவென்பதொன்று உளதாதன்மேலும் அதுதான் பரத்
தையர் மாட்டாதலும், அதனையறிந்து மகளிரூடிநிற்றலும், அவ்வூடலைத்
தவறுசெய்தவர்தாமே தன் தவறின்மைகூறி நீக்கலும், பின்னும் அவ்விருவரும்
ஒத்த அன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைந்தெய்தினோர் பெற்ற பயன்;
அப்பயன் இருதலைப்புள்ளினோருயிராய உழுவலன்புடைய

எமக்கு வேண்டா
வென அவ்வரைந்தெய்தலை யிகழ்ந்து கூறியவாறு.
(கு - ரை.) கரத்தல் வேண்டாமையின் - மறைக்கப்படுதல் வேண்
டாமையால்: களவொழுக்கத்திற்குக் கரத்தல் வேண்டு மென்றபடி. இடை



யறவு - நடுவில் தடைப்படுதல். வரைந்தால் இடையீடின்றிக் கூட்டம் பெறலா மாதலால் 'வரைந்துகொள்க' என்று கூறிய தோழிக்கு, வரைவு உடன்படாத தலைவன் கூறியது இது என்க. வரைந்தெய்தியவர் எய்துவது ஊடல் முதலியவற்றாலாகும் இன்பப்பயனே யாதலால், ஒருயிராய இருதலைப்புள் போன்றுள்ள எமக்கு அந்த தலிலுள்ள குறைவை யெடுத்துக்காட்டி இன்பம் வேண்டா என்று வரை யிகழ்ந்தவாறாகும். ஊடலேன்

பது - தலைவனும் தலைவியும் ஒத்துக்கூடுங் காலத்து பரத்தையிற்பிரிவுபோன்ற செய்தி நடந்தனவாகத்

மனத்திற்கு ஒவ்வாத
தலைவன்மீது ஐயப்
பட்டதனால் தலைவி மனம்வேறுபட்டிருத்தல்.
உணர்தலென்பது - ஊடியதனைத் தணிக்கக்கருதிய
தலைவன், காரணங் காட்டியேனும் வேறுவகையாலேனும்
தெளிவிக்கத் தலைவி தெளிதலாம். ஊடலும் உணர்தலும்
நிகழ்ந்தபின் கூடல் நிகழும். கூடல் - புணர்ச்சி. இருதலைப்புள்
- இரண்டு தலையையுடைய தொருபக்ஷி. உழுவலன்பு -
எழுமையுந்தொடரவல்ல அன்பு. (க)

ககக0. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

புணர்ந்து உடன்போகின்றான் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) அறிதோறு - (நூல்களானும்
நுண்ணுணர்வானும் பொருள்களை) அறியவறிய, அறியாமை
கண்டற்று - முன்னையறியாமை கண்டாற் போலக்
காணப்படாநின்றது: சேயிழைமாட்டு செறிதோறும்-சிவந்த
இழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய,
காமம் - இவண்மாட்டுக் காதல்; (எ - று.)

களவொழுக்கத்திற் பல இடையீடுகளா னெய்தப்பெறாது *அவாவுற்
றான் இதுபொழுது நிரந்தரமாக எய்தப் பெற்றமையின், 'செறிதோறும்'
என்றான். அறிவிற்கெல்லையின்மையான் மேன்மேலறிய வறிய முன்னை
யறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற் கெல்லையின்றி மேன்
மேற் செறியச்செறிய முன்னைச்செறிவு செறியாமையாய் முடியாநின்ற
தெனத் தன்னாராமை கூறியவாறு. இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கும் உண்
டேனும் அவண்மாட்டுக் குறிப்பானிகழ்வதல்லது கூற்றா னிகழாமை யறிக.

(கு - ரை.) புணர்ந்து-களவொழுக்கத்தாற்கூடி. உடன் போகின்றான்-பாங்கியினுரைப்படி தலைமகளை இரகசியமாக இட்டுக்கொண்டு தன்னூருக்குச் செல்லும் தலைமகன். உடன்போக்குவருமாறு:—களவொழுக்கத்து ஒழுகாநின்ற தலைமகன் தலைவியைத் தோழியிற்கூட்டத்தாற் கூடி இன்புற்று வருநாளில், பெற்றோர் அயலானுக்குத் தம்மகளை மணம் பேசினும், தலைவனைத் தலைமகள் காணப்பெறுவண்ணம் கடுங்காவற் படுத்தினும், தலைவிக்கு ஆற்றாமை மீதூர்ந்து துயரம் பெருகும்: பெருகவே, அதுகண்ட தோழி கவன்று தலைவனை யெதிர்ப்பட்டுச் செய்தியுரைப்பள்: தலைவன் சூழ்ந்து தன் காதலியைத் தன்னூர்க்கு உடன்கொண்டுபோக வலித்தமையைத் தெரிவித்துத்

---

* பி - ம்: வருத்தமுற்றான் இதுபொழுது தீர்ந்தானாக

ககஉ - ஆம்

அதிகாரம்.— நலம்புனைந்துரைத்தல் உரு

தலைவியை உடன்படுத்தத் தோழியை வேண்டும்; தோழியும் தலைவிக்கு அதனை மெல்ல உணர்த்த, அதுகேட்ட தலைவி "உயிரினுஞ்சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந்தன்று" என்றதற்கு ஏற்பத் தன் நாண் அழிய வரினும் கற்புக்கெடா திருத்தற்பொருட்டு உடன்போக்குக்கு ஒருப்பட்டமையைக் குறிப்பிப்பள்: பின்னர்த் தோழி அத்தலைவி வெளியேறு தற்கு வேண்டுவன புரிந்து ஒருவரும் அறியாவகை அவளைக் குறியிடத்துக்

கொண்டு தலைவன்பாற்சேர்த்து ஓம்படைகூறி வழிவிடுப்பள்: தலைவன் தலைவியுடன் தன்னூர் நோக்கிச் செல்லும் என்பது.

பொருள்களை - அர்த்தங்களை.

சிவந்த-செம்பொன்னினாலியன்ற என்றபடி.

இழை-ஆபரணம். இடைவிடாது-ஒருகணப்பொழுதும் விடாமல். செறியச்செறிய - புணரப்புணர. இவண்மாட்டு - இத்தலைவியினிடத்து. இடையீடு கள்-தடைகள். எய்தப்பெறாது - (தலைமகளைக் கூடுமாறு) அடையப்பெறாமல். நிரந்தரமாக-இடையீடின்றி. களவொழுக்கத்தில் இடையீடுபடும் புணர்ச்சி உடன்போக்கில் இடையீடின்றி நிரந்தரமாகப் பெறப்படுதலால் முன்னைய புணர்ச்சி நிகழாததுபோலவே தோன்றுதற்கு, மேன்மேல் அறியவறிய முன்னைய அறிவு அறியாமையே போலுதலை உவமை கூறினான்.

ஆராமை-விருப்பம் அடங்காமை. புணர்ச்சி மகிழ்தலில் தலைவியின் கூற்றாகக் கிளவி வாராமைக்குக் காரணங்கூறுவது - 'இப்புணர்ச்சி மகிழ்தல்' என்று தொடங்கும் வாக்கியம்: "காமத்திணையிற் கண்ணின்றுவரூஉம், நாணும் மடனும் பெண்மையவாதலிற், குறிப்பினுமிடத்தினுமல்லது வேட்கை, நெறிப்படவாரா வவள்வயினான" என்ற தொல்காப்பியத்துக் களவியற்சூத்திரமுங் காண்க. (கo)

**கக௨ - ஆம்**

## அதிகாரம்.—நலம்புனைந்துரைத்தல்.

அஃதாவது-தலைமகன்
றலைமகளை லத்தைப் புனைந்துசொல்லியது. இது,
புணர்ச்சிமகிழ்ந்துழி நிகழ்வ தாகலின்,
புணர்ச்சிமகிழ்தலின்பின் வைக்கப் பட்டது.

(கு - ரை.) நலத்தை - அழகை. புனைந்து -
அலங்கரித்து: அழகுபட என்றவாறு. மகிழ்ந்துழி -
மகிழ்ந்தபோது.

கககக. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட்
சொல்லியது.

(இ - ள்.) அனிச்சமே - அனிச்சப்பூவே!
வாழி-வாழ்வாயாக: நல்நீரை- (மென்மையால் நீ
யெல்லாப்பூவினும்)நல்ல இயற்கையை யுடையை:(அங்ஙன மா
யினும்), யாம் வீழ்பவள் - எம்மால் விரும்பப்பட்டவள்,
நின்னினும்—, மென் நீரள் - மெல்லிய
இயற்கையை யுடையள்; (எ - று.)

அனிச்சம்-ஆகுபெயர். வாழியென்பது
உடன்பாட்டுக்குறிப்பு: இனி, 'யானே மெல்லியன்' என்னுந்
தருக்கினை யொழிவாயாகவென்பதாம். அது பொழுது உற்று
அறிந்தானாகலின், ஊற்றினினிமையையே பாராட்டினான்.
இன்னீரளென்று பாடமோதுவாருமுளர்.

*—4

(கு - ரை.) "ஞாயிறுதிங்க ளறிவேநாணே" என்று தொடங்குந் தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரத்தில், "சொல்லுநபோலவுங் கேட்குநபோலவும், சொல்லி யாங்கமையு மென்மனார்புலவர்" என்றதனால், அனிச்சமலர் கேட்பனபோல வைத்துக் கூறப்பட்டது. "மோப்பக்குழையுமனிச்சம்" என்றதனால், அனிச்சப்பூ மிகவும்மென்மையதாதல் பெறப்படும். அனிச்சம் என்ற முதலின் பெயர்-மலரைக் காட்டுதலால், முதலாகுபெயர். வாழி என்ற உடன் பாட்டுவியங்கோள்-'நின்னினும் மெல்லியதன்மையையுடையாள் யாம் விரும் பியவளாதலால், இனி மென்மையாலான தருக்கை நீ ஒழியவேண்டுவதே' என்றகருத்தைக் குறிப்பிப்பதனால், 'வாழியென்பது உடன்பாட்டுக்குறிப்பு' எனப்பட்டது. தருக்கினை - கர்வத்தை. அதுபொழுது-அப்போது. உற்றறிந் தான் - தலைவியை உற்றதனால் [தலைவியின் ஊற்றின்பத்தைப்பெற்றதனால்] அவள்மென்மையை யறிந்தான். மென்னீரள் என்ற

இடத்து 'இன்னீரள்'

என்று பாடம் ஓதுவாருமுளர். நீரை - முன்னிலையொருமைக்குறிப்புமுற்று.

கககஉ. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்

பலர்காணும் பூவொக்கு மென்று.

இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.

(இ - ள்.) நெஞ்சே—! இவள் கண் - (யானே காணப்பெற்ற) இவள் கண்களை, பலர் காணும் பூ ஒக்கும் என்று - பலரானுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதி, மலர் காணின் மையாத்தி-(தாமரை குவளை நீலமுதலிய) மலர்களைக்கண்டால் மயங்காநின்றாய்: (நின்னறிவிருந்தவாறென்)?

மையாத்தல் - ஈண்டு, ஒவ்வாதவற்றை யொக்குமெனக்கோடல்: இறுமாத்தல் செம்மாத்தலென்பனபோல ஒருசொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கம் முதலாகத் தலைமகள்கண்களைக் காணப்பெறாமையின் அவற்றோடொருபுடை யொக்கும் மலர்களைக் கண்டுழியெல்லாம் அவற்றின்கட் காதல்செய்து போந்தான், இதுபொழுது அக்கண்களினலமுழுதுந் தானே தமியாளை யிடத்தெதிர்ப்பட்டனுபவித்தானாகலின், அம்மலர்கள் ஒவ்வாமைகண்டு ஒப்புமை கருதிய நெஞ்சை யிகழ்ந்து கூறியவாறு.

(கு - ரை.) தலைவன் இடந்தலைப்பாட்டில் தனியளாயிருந்த தலைவியின் கண்ணழகிலே ஈடுபட்டுச்சொல்லிய கிளவி இது. பலர்காணும் பூ என்றதனால், இவள்கண் யானொருத்தனேகாணுமது என்பது பெறப்படுவதோடு,

மலர்கட்குப் பலராற்காணப்படுவது இழுக்கா மென்பதையும் குறிப்பிக்கும். மையாத்தி என்பதன்பொருள் - மயங்காநின்றாய் என்பது. மையாத்தல் - மயங்குதல்: இங்கே, ஒவ்வாதவற்றை ஒக்குமெனக் கொள்ளுதல். மையாத்தல் என்றசொல்லை நோக்குமிடத்து, மை யாத்தல் எனப் பிரித்தற்கு உரியது போலத்தோன்றுதலால், பிரித்தலாகாதென்பார் 'மையாத்தல் ஒருசொல்' என்றார்.
இயற்கைப்புணர்ச்சிக்கம் - இயற்கைப்புணர்ச்சியில் தலைவியைக் கூடியபின் அவளைப்பிரிந்த பிரிவு. அவற்றோடு - தலைவியின் கண்களோடு.

கக௨ - ஆம்

அதிகாரம்—நலம்புனைந்துரைத்தல் உ௪

ஒருபுடை - ஒருசார்: முற்றிலுமன்றியென்றபடி.
கண்டுழியெல்லாம்-பார்த்த போதெல்லாம்.
இடத்தெதிர்ப்பட்டு - இடந்தலைப்பாட்டிலெதிர்ப்பட்டு. (உ) கககங.

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

கூட்டுதலுற்ற பாங்கற்குத் தலைமகன் தலைமகளதியல்பு கூறியது.

(இ - ள்.) வேய் தோளவட்கு-வேய்போலுந் தோளினையுடையவட்கு, மேனி முறி - நிறம் தளிர்நிறமாயிருக்கும்: முறுவல் முத்தம்-பல்லு முத்தமாயிருக்கும்: நாற்றம் வெறி - (இயல்பாய)நாற்றம் நறுநாற்றமாயிருக்கும்; உண் கண் வேல் - உண்கண்கள் வேலாயிருக்கும்; (எ - று.)

பெயரடையானும் ஓரியல்பு கூறப்பட்டது. முறி, முறுவலென்பன - ஆகுபெயர். உருவகவகையாற் கூறினமையின், புனைந்துரையாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளை யறியேனென்று சேட்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம்.

(கு - ரை.) மேனி - உடல்நிறம். வேய்த்தோளவள் என்ற பெயரில், வேய் என்பது பெயர்ச்சொல்லாகிய அடை: (அடை - விசேஷணம்:) அதனாலும், தலைவியின் இயல்புகூறப்பட்டதாகும்: தலைவியின் தோள்கள் அளவினாலும் வடிவினாலும் பசுமைநிறத்தினாலும் மூங்கிலையொத்திருக்குமென்ற வாறு:

"அளவேவடிவொப்பதன்றியே பச்சை,
யிளவேய்நிறத்தானுமேய்க் கும்" என்றது காண்க. முறி-தளிர்: இங்குத் தளிரின்நிறம் என்ற பொருளில் வந்தது:

பொருளாகுபெயரின்பாற்படும். முறுவல் - சிரிப்பு: இது, அதனைக் கொண்ட பல்லுக்கு
ஆகிவந்தது:பண்பாகுபெயரின்பாற்படும். பாங்கனைப் பற்றித் தலைவியைக் கூட்டியவனுகக் கூறுதல் அத்துணையாகச் சிறவாது என்ற கருத்தினுல்,இந்தக்குறளுக்கு இரண்டாவதாக வேருருகிளவித்துறை கூறப் படுகின்றதென்னலாம்.
(ரு)

ககககச. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

பாங்கற்கூட்டத்துச்சென்று சார்தலுறுவான் சொல்லியது.

(இ - ள்.)
குவளை-குவளைப்பூக்கடாமும்,—காணின்-காண்டற்றொழிலை யுடையவாயின்,—மாண் இழை கண் ஒவ்வேம் என்று-மாண்ட இழையினை
யுடையாள்கண்களை(யாம்)ஒவ்வே மென்று கருதி,
கவிழ்ந்து-(அந்நாணினுல்)
இறைஞ்சி, நிலன் நோக்கும் - நிலத்தினை நோக்கும்; (எ - று.)

பண்பானேயன்றித் தொழிலானும் ஒவ்வாதென்பான் 'காணின்' என்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தாமென்பது தோன்ற
'கவிழ்ந்து' என்றுங் கூறினுன். காட்சியு நாணு

மின்மையிற் செம்மாந்து
வானை நோக்கின வென்பதாம்.

(கு - ரை.) பண்பானே-வடிவு நிறம் என்கிற இக்குணத்தால். 'குவளை காணுதல்தொழிலையுடையவாயின் நாணத்தால் கவிழ்ந்து நிலனோக்கும்' என்ற இதில், '

குவளைக்குக் காணுதலென்ற தொழில் இல்லாமையால்தான்,



நாணமின்றிச் செம்மாந்து வானைநோக்கின' என்று, குவளைகள் இயற்கை
யின் வானோக்கிமலர்ந்துநிற்பதற்குக் காரணங் கற்பித்துக் கூறியவாறு; ஏதுத்
தற்குறிப்பேற்றவணி. காட்சி - காணுதற்றொழில். செம்மாந்து - கருவங்
கொண்டு.
(௲)

௧௧௧௫. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.
பகற்குறிக்கட் பூவணிகண்டு சொல்லியது.

(இ - ள்.) (இவள் தன்மென்மைகருதாது), அனிச்சப்பூ - அனிச்சப்
பூவை, கால் களையாள் பெய்தாள் - முகிழ்களையாது

குடிஞன்: நுசுப்பிற்கு -

(இனி) இவளிடைக்கு, நல்ல பறை படா -
நல்லபறைகளொலியா; (எ - று.)

அம்முகிழ்ப்பாரம் பொறுமையின் இடை முரியும்:
முரிந்தால், அதற்குச்

செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுவதென்பதாம்.
மக்கட்குரிய சாக்காடும்

பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மே
லேற்றப்பட்டன.

(கு - ரை.) பகற்குறியென்பது - தலைமகளைத்
தழையேற்பித்த தோழி

தலைமகனுடன் அவளைப் பகற்குறிக்கண்
தலைப்பெய்வியாநிற்றல் என்பர்,

திருக்கோவையாரிற் பேராசிரியர். கால் - காம்பினடி.
முகிழ்ப்பாரம் - காம்பி

னடிச்சுமை. இடை - இடுப்பு. நெய்தற்பறை சாப்பறை
யெனப்படுதலால்,

'செத்தார்க்குரிய நெய்தற்பறை' என்றது. படுவது -
ஒலிப்பது. சாக்காடு -

மரணம்; பறைபடுதல் - (நெய்தற்) பறையொலித்தல்:
மரணம் சாப்பறை

கொட்டல் இவையிரண்டும் மானுடர்க்கு உரியன:
இவற்றை மானுடரின்

உறுப்பாகிய நுசுப்பிற்கு ஏற்றி,
'நுசுப்பிற்குநல்லபடாஅ பறை' என்றார்:

இது, இலக்கணைக்குறிப்பு—லக்ஷணாமூலத்வனி:
நல்லபறைபடா என்றதனுல்,
தீயபறைபடும் என்பது குறிப்பாற்கிடைக்கும்:
தீப்பறையொலிப்பது மானுட
ரின் மரணகாலத்தது: ஆகவே,
'நுசுப்பு முரியும்' என்ற இலக்கணைப்பொரு
ளைத் தருமாறு, சாப்பறையொலித்தலை நுசுப்பிற்கு
ஏற்றி 'நுசுப்பிற்குநல்ல
படாஅ பறை' என்றது: ஆதலால், இது, இலக்கணை
யடியாகவந்த குறிப்புப்
பொருளாயிற்று.

(ரு)

கககரு. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது.

(இ - ள்.) மீன் - (வானத்து)
மீன்கள்,—(வேறுபாடுபெரிதாகவும்),மதி
உம் மடந்தைமுகன்உம் அறியா-(தம்)மதியினையும் (எம்)
மடந்தைமுகத்தினை
யும் (இது மதி இது முகம்என்று) அறியமாட்டாது,—பதியில் - (தம்) நிலையி
னின்றும், கலங்கிய - கலங்கித்திரியாநின்றன; (எ - று.)
ஓரிடத்து நில்லாது எப்பொழுதும் இயங்குதல்பற்றி 'பதியிற்கலங்கிய'
என்றான். வேறுபாடு, வருகின்ற பாட்டாற் பெறப்படும்.

இனி, இரண்டனை

யும் பதியிற்கலங்காத மீன்களறியுமல்லது
கலங்கினமீன்கள் அறியாவென்று
உரைப்பினு மமையும்.

கக௨ - ஆம்



(கு - ரை.) இரவுக்குறி யென்பது - தலைவன் தலைவியை இரவுப் பொழுதில் குறிக்கப்பட்ட இடத்திற்கூடுதல். தலைவன் இரவுக்குறிக்கட் செல்லுங்கால், நடுயாமத்தில் தலைவியது மனையெல்லைக்கட்சென்று மரங்களில் வதியும் மயில் அன்னம் முதலிய புட்களை யெழுப்பல் புன்னைக்காய் களை நீரிலிடுதல் போன்ற செயல்களால் தான் வர்தமையைக் குறிப்பிக்க, அதனையுணர்ந்த தோழி, தாய்முதலியவரின் துயில்கையை ஆராய்ந்தறிந்த பின் தலைவியைக்கொண்டு சென்று குறியிடத்திலுய்த்து, பூக்கொய்தல் முத லிய வியாஜத்தாற் பிரிந்து செல்ல, தலைவன் தலைவியைச் சார்வனென்ப. வேறுபாடு - இங்கே, சந்திரனுக்கும் மடந்தைமுகத்துக்கு முள்ள வித்தியாசம். பெரிதாகவும் - மிகுதியாக இருக்கவும். தம்பதியென்றது - சந்திரன் வானமீன்களுக்குப் பதியென்று சொல்லப்படுவானுதலால். வானமீன்கள் மதியினையும் மடந்தைமுகத்தையும் ஒப்புமை வேறுபாடு அறியமாட்டாமற் கலங்கின என்று கூறியது - பொதுவணி யெனப்படும் ஸாமாந்யாலங்கார

மாம். நட்சத்திரங்கள் ஓரிடத்தில் நில்லாது சஞ்சரித்தற்கு, முகமதிகட்கு வேறுபாடு அறியமாட்டாமையாலுண்டான கலக்கத்தைக் காரணமாகக் கற்பித்துக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியின்பாற் படும். தந்நிலை - தாம் நிற்கும் இடம்: இது, பதியென்ற சொல்லின் பொருள். இயங்குதல் - சஞ்சரித்தல். வேறுபாடு-முகத்திற்கும் சந்திரனுக்குமுள்ள வேறுபாடு: அது, வளர்ந்து தேய்தலும் மறுவுடைமையுமென்று மேற்செய்யுளில் விளங்கும். 'இனி' என்பது தொடங்கி இப்பாடலுக்கு வேறோருரை: இரண்டினையும் - (மதி முகம் என்ற) இரண்டையும். முதலுரையில், அறியமாட்டாதனவாய் மீன்கள் கலங்கின என்றுபொருள்படுதலால், அறியா என்பது - பலவின்பாலெதிர்மறை வினையாலணையும்பெயரும், கலங்கிய என்பது - பலவின்பா லிறந்தகாலவினைமுற்றுமாம்; இரண்டாவதுஉரையில்,(தம்நிலையிற் கலங்காத மீன்கள் அறியுமல்லது) தம்நிலையிற்கலங்கியமீன்கள் அறியமாட்டா என்று பொருளாதலால், அறியா என்பது - பலவின்பாலெதிர்மறை வினைமுற்றும், கலங்கிய என்பது - இறந்தகாலப்பெயரெச்சமு மாம். (கூ)

கககஎ. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

இதுவுமது.

(இ - ள்.) (அம்மீன்கள் அங்ஙனங் கலங்குதற்குக்

காரணம் யாது? அறு வாய் நிறைந்த அவிர் -
முன்குறைந்தவிடம் வந்துநிரம்பியே விளங்கும், மதிக்கு
போல - மதிக்கட்போல, மாதர் முகத்து மறு உண்டோ -
இம்மாதர் முகத்து மறுவுண்டோ? (எ - று.)

இடம் - கலை. மதிக்கென்பது-வேற்றுமைமயக்கம்.
தேய்தலும், வளர்த லும், மறுவுடைமையும் இன்மைபற்றி
வேறுபாடு அறியலாயிருக்க அறிந்தில வென
இகழ்ந்துகூறியவாறு.

(கு - ரை.) அறுவாய் என்றது - அற்ற இடம்:
அதாவது-தேய்ந்த கலையென்க. மதிக்கு என்பது -
மதிக்கண் என்று ஏழாம்வேற்றுமையாகு



பொருள் படுதலால், வேற்றுமைமயக்கம்.
இன்மைபற்றி-(முகத்திற்கு) இல்லா
திருத்தலால். அறிந்தில
என்பதற்கு எழுவாய், வானமீன்கள் என்பது. (எ)

சகக௰. மாதர் முகம்போ லொளிவிட
வல்லையேற்

காதலை வாழி மதி.

இதுவுமது.

(இ - ள்.) மதி - மதியே! வாழி-வாழ்வாயாக;—மாதர்
முகம்போல் ஒளி

விட வல்லைஏல் - இம்மாதர்முகம்போல (யான்

மகிழும்வகை) ஒளிவீசவல்லை யாயின், காதலை - (நீயும் என்)காதலை யுடையையாதி; (எ - று.)

மறுவுடைமையின் அது மாட்டாய்; மாட்டாமையின் என்னுற் காதலிக்

கவும்படாயென்பதாம். வாழியென்பது, இகழ்ச்சிக்குறிப்பு.

(கு-ரை.) காதலையுடையை யாதி-என் விருப்பத்தைப் பெற்றவளுவாய்:

என்னுல் விரும்பப்படுவா யென்றபடி. காதலை - 'காதல்' என்ற பெயர்ச்

சொல்லினடியாகப் பிறந்த முன்னிலை யொருமைக்குறிப்பு முற்று: வல்லை என்பதும், 'வன்மை' என்ற

பண்பினடியாப்பிறந்த அவ்வகை வினைமுற்றே.

ஏல்-என்னில் என்பதன் மரூஉ. 'மாதர் முகம்போல் ஒளிவிடமாட்டாத நீ இரு

ந்து யாதுபயன்?'என்ற பொருளைக் குறிப்பித்தலால்,'வாழியென்பது இகழ்ச் சிக்குறிப்பு' என்றது.
இச்செய்யுள், தலைவியாற் பெறும் புணர்ச்சிவகையை விரிக்கும்போது பொய்பாராட்ட லென்பதற்கு உதாரணமாக நம்பியகப்

பொருளுரையிற் காட்டப்பட்டுள்ளது.

(அ)

கககரு. மலரன்ன கண்ணுண் முகமொத்தி யாயிற்

பலர்காணத் தோன்றன் மதி.

இதுவுமது.

(இ-ள்.) மதி-மதியே!—மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தி ஆயின்-இம்மலர்போலுங் கண்ணினையுடையாள் முகத்தை (நீ) ஒக்கவேண்டுதி யாயின்,—(இதுபோல யான் காணத்தோன்றுː) பலர் காண தோன்றல் - பலர்காணத் தோன்றுதொழி; (எ - று.)

தானே முகத்தின் நலமுழுதுங்கண்டு அநுபவித்தானாகவின், ஈண்டும் பலர்காணத்தோன்றலை யிழித்துக்கூறினான்: தோன்றின், நினக்கு அவ் வொப்பு உண்டாகாதென்பதாம்.

(கு - ரை.) இதுபோல-இம்முகத்தைப்போல. யான்காண-யான்மட்டும் காண. நலம் முழுதும் - அழகுமுழுவதையும். ஈண்டும் - இந்தச்செய்யுளிலும்: இவ்வதிகாரத்தின் இரண்டாஞ் செய்யுளில் 'பலர்காணும் பூவொக்கும்' என்று பலர்காண்பதை இழித்துக்கூறியமை காண்க. தோன்றின் - பலர் காணத் தோன்றினால். தோன்றல் - எதிர்மறைமுற்று. (க)

கக௨0. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

ககந - ஆம்

அதிகாரம்.—காதற்சிறப்புரைத்தல் ௩௧

உடன்போக்கு உரைத்த
தோழிக்கு அதனதருமைகூறி மறுத்தது.

(இ - ள்.) அனிச்சமும் அன்னத்தின் தூவிஉம் - (உலகத்தாரான் மென்மைக்கு எடுக்கப்பட்ட) அனிச்சப்பூவும் அன்னப்புள்ளின் சிறகுமாகிய இரண்டும், மாதர் அடிக்கு—, நெருஞ்சிப்பழம் - நெருஞ்சிப்பழம்போல வருத் தஞ்செய்யும்; (எ - று.)

முள் வலிதாதலுடைமையிற் பழமென்றான். இத்தன்மைத்தாய அடி "பாத்தியன்ன குடுமிக்கூர்ங்கற்" களை உடைய வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற் பெறப்பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப்புப் பொருளும் அடி நலனழியாமை யாகலின், இதுவும் இவ்வதிகாரத்த தாயிற்று.

(கு - ரை.) உடன்போக்கு என்பது - தலைவன் தன்னுடன் தலைவியை ஊர்க்கு அழைத்துக் கொண்டு போதல்: இத்துறையில், அருமையுரைத்தல் என்பது ஒருகிளவி: அதனை, 'குறிப்புரைத்துப் போக்குஉடம்படுத்திய தோழிக்கு, கொங்கை பொறாது நடுங்காநின்ற இடையினை யுடையாளது மெல்லிய அடிக்கு யான்செல்லும் வெஞ்சுரம்தகாது: அதன்மேலும் எம்பதியும் சேய்த்து: அதனால், நீ கருதுகின்ற காரியம் மிகவும் அருமை யுடைத்தெனத் தலைமகன் போக்கருமை கூறா நிற்றல்' என்று திருக்கோவையாருரையிற் பேராசிரியர் விவரித்துள்ளார். அதனது - உடன்போக்கினது. இங்ஙன

ம் உடன்போக்கினருமையைக் கூறும் முகத்தால் தலைவன் தலைவியின் அடிகளுடையமென்மையைப் புகழ்ந்து கூறுகின்ருன். நெருஞ்சிச் செடியின் முள்ளி னும் அதன் பழத்தின்முள் வலிதாயிருக்கு மாதலால், அனிச்சத்தையும் அன் னத்தின் தூவியையும் நெருஞ்சிப்பழம் என்ருர். "பாத்தியன்னகுடுமி" என் பது, அகநானூறு, களிற்றியானைநிரையில் ரு-ஆவது பாடலில் வருவதாகும்: இதன்பொருள்:—பாத்தி அன்ன-பாத்தியிட்டாற் போன்ற, குடுமி-உச்சியை யுடைய, கூர்ங்கற்கள் என்க. இச்செய்யுளில், தலைவியின் பாதத்திற்கு அனிச் சம் அன்னத்தின் தூவி இவை நெருஞ்சிப்பழம் போலும் என்பது, செம்பொருள்: இதனுற் பெறப்படுங் குறிப்பு ப்பொருள்-இங்ஙன் மெல்லிய அடி கடுஞ் சுரத்தை எவ்வாறு கடக்கும்? என்பது. செம்பொருளோடு இதில் தோன்றுங் குறிப்புப்பொருளும் தலைவியின் அடிகளுடைய நலனைக் குறைக்காது விளக் குவதனுல், இக்குறள் நலம்புனைந்துரைத்த லென்ற இவ்வதிகாரத்தி லிருத் தற்கு ஏற்றதேயாம்.

(௧௦)

## ௧௧௩ - ஆம்

## அதிகாரம்.—காதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது-தலைமகன் தன்காதன்மிகுதிகூறலும், தலைமகள் தன்காதன் மிகுதிகூறலு மாம். இது,

புணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்வ தாகலின், புணர்ச்சிமகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) காதன் மிகுதி - அன்பின் மிகுதி.

கக௨க. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.



இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட் டலைமகன் தன் நயப்பு உணர்த்தியது.

(இ - ள்.) பணி மொழி - இம்மெல்லியமொழியினையுடையாளது, வால் எயிறு ஊறிய-வாலிய எயிறு ஊறிய, நீர்—, பாலொடு தேன் கலந்தற்று-பாலுடனே தேனைக் கலந்த கலவைபோலும்; (எ - று.)

கலந்த தற்றென்பது விகாரமாயிற்று: கலக்கப்பட்டதென்றவாறு. பாலொடுதேனென்றவதனால், அதன்சுவைபோலுஞ் சுவையினையுடைத்தென் பதாயிற்று. எயிறூறியவென இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மே னின்றது. வேறுவேறு அறியப்பட்ட சுவையவாய பாலும் தேனும் கலந்துழி அக்கலவை இன்னதென்றறியலாகாத இன்சுவைத்தா மாகலின், அது,பொருளாகிய நீர்க்கும் எய்துவிக்க.

(கு - ரை.) நயப்பு - அன்பு. வாலிய எயிறு - வெண்ணிறமுள்ள பல். கலந்ததற்று என்பது கலந்தற்று என விகாரமாயிற்று. கலந்தது - கலக்கப் பட்டதென்றபொருளது. அஃதன் - கலக்கப்பட்டவதன். ஊறுதல் என்ற தொழில் நீருக்கு உரியது: பல்லுக்கு உரியதன்று: இங்ஙனமாகவும் எயிறூறிய என்று ஊறுதல்தொழிலைப் பல்லுக்குக் கூறியது, இடத்து நிகழ்பொருளாகிய நீரின்தொழிலை இடத்தின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்காமென்க. சுவைய வாய - சுவையையுடையனவான. அது - இன்னதென்றறியலாகாத சுவை. பொருளாகிய - உபமேயமாகிய. நீர் - எயிறூறிய நீர். பணிமொழியாளின் எயிற்றினூறிய நீர் இன்னதென்றறியலாகாத இன்சுவைத்து என்று தலைவியினிடத்து அன்பால் தலைவன்கூறியது, இது. "இவள் செங்கனிவாயாருந் தொறு மினிதாயமிழ்தாமென தாருயிர்க்கே" என்றதுங் காண்க. (௧)

௧௧௨௨. உடம்பொ டுயிரிடை யென்ன மற்றன்ன

மடந்தையொ டெம்மிடை நட்பு.

பிரிவச்சங்கூறியது.

(இ-ள்.) உடம்பொடு உயிரிடை என்ன அன்ன-உடம்பொடு உயிரிடையுள்ளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய, மடந்தையொடு எம்மிடை நட்பு - இம்மடந்தையொடு எம்மிடையுள்ளவாய நட்புக்கள்; (எ - று.)

என்னவெனப் பன்மையாற் கூறியது - இரண்டுந்

தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவருதல்,
இன்பதுன்பங்களொக்க வநுபவித்தல், இன்றியமையாமை
யென்றிவற்றை நோக்கி. தெய்வப்புணர்ச்சியாகலான்
அதுபொழுது உணர்ச்சியிலளாகியாள்
பின் உடையளாமன்றே; ஆயவழி, இவன்
யாவன்கொலெனவும் என்கண்
அன்புடையன்கொலெனவும் இன்னும் இவனைத்
தலைப்பெய்தல் கூடுங்கொலெனவும் அஃன்மனத்தின்கணிக
ழும் அங்கிகழ்வனவற்றைக் குறிப்பானறிந்து
அவைதீரக் கூறியவாறு. என்னையென்று பாடமோதுவாரு
முளர்.

(கு-ரை.) இயற்கைப்புணர்ச்சிக்குப்பின் தலைவிக்குப்பிரிவினைப்பற்றிய அச்சம் நிகழ,அத்தலைவியைத் தேற்றுமாறு தலைவன்சொல்லிய கிளவி, இது. உயிரிடை - உயிரினிடத்து. என்ன என்று பலவின்பாலாற் கூறியது -



தொன்றுதொட்டுவேற்றுமையின்றிக் கலந்துவருதல்முதலிய காரணம்பற்றி யென்க. இரண்டும்-உயிரும் உடம்பும். "குடம்பைதனித்தொழிய" என்று தொடங்கும் குறளை இதனோடு ஒத்துவைத்துக்கவனிக்க. வேற்றுமையின்றி - வேறுபடுதலின்றி, ஒன்றாக. ஒக்க அநுபவித்தல் - ஒருசமமாக அநுபவித்தல். தலைவன் தலைவியைப்புணர்ந்தது தெய்வப்புணர்ச்சியாதலால், தலைவன் கலந்த அப்போது தன்வசந்தப்பிய தலைவி பிறகு தன்னுணர்ச்சிபெறுவா ளென்க. ஆயவழி - உணர்ச்சியுடையளாய அப்போது. என்கண் - என்னிடத்து. தலைப்பெய்தல் - சேர்தல். கூடுங்கொல் - நேர்படுமோ. அவைதீர - அவ்வெண்ணங்கள் தீர.

(உ)

௧௧௨௩. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

இடந்தலைப்பாட்டின்கண் தலைமகனீக்கத்துச் சொல்லியது.

(இ - ள்.) கருமணியில் பாவாய்-(என் கண்ணிற்)கருமணியின்கணுறையும் பாவாய்! நீ—, போதாய் - (அங்குநின்றும்) போதருவாயாக; (போதராதிருத்தியாயின்),யாம் வீழும் திருநுதற்கு-எம்மால் விரும்பப்பட்ட திருநுதலையுடையாட்கு, இடம் இல்லை - (இருக்க) இடமில்லையாம்; (எ - று.)

யான் காணாது அமையாமையின் இவள் புறத்துப் போகற்பாலளன்றி என்கண்ணு ளிருக்கற்பாலள்; இருக்குங்கால் நின்னோடொருங்கிருக்க இடம் போதாமையின் நின்னினுஞ் சிறந்த இவட்கு அவ்விடத்தைக் கொடுத்து நீ போதுவாயாக வென்பதாம்.

யாக

(கு - ரை.) நீக்கத்து-பிரியும்போது. உறையும்-வசிக்கின்ற. போதருவா - போய்விடுவாயாக. நீயும் இருந்து என்காதலியும் தங்கியிருக்கக் கண்ணில் இடம்போதாதாகையால், என்காதலிக்கு இடந்தருமாறு நீபோதுக என்கின்றான், தலைவன். வீழும்-விரும்புகின்ற. திருநுதல்-அன்மொழித்தொகை. காணாதமையாமையின் - காணமல் இருக்கமுடியாதாகையால். இருக்கற்பாவள் - இருத்தற்கு உரியள்.

(௫)

௧௧௨௪. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

பகற்குறிக்கட் புணர்ந்துநீங்குவான்

சொல்லியது.

(இ - ள்.) ஆய் இழை - தெரிந்த இழையினையுடையாள்,—(எனக்குப் புணருமிடத்து),உயிர்க்கு வாழ்தல் அன்னள்-உயிர்க்கு (உடம்போடுகூடி)வாழ்தல் போலும்; நீங்குமிடத்து - பிரியுமிடத்து, அதற்கு சாதல் அன்னள் - அதற்கு அதனினீங்கிப் போதல்போலும்; (எ - று.)

எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும்

அவாய்நிலையான் வந்தன.

வாழுங்காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலானும்,சாங்காலத்து வருத்தஞ் செய்தலானும், அவற்றை அவள்புணர்வுபிரிவுகட்கு உவமையாக்கினன்.

(கு - ரை.) உயிர்க்குவாழ்தலாவது - உடம்போடுகூடியிருத்தலேயாம். 'காதற்சிறப்புரைத்தல்' *—5

என்பது அதிகாரமாதலாலும், 'நீங்குமிடத்து' என



அடுத்தவாக்கியத்து வருதலாலும் அவற்றிற்கு ஏற்ப, 'எனக்கு, புணருமிடத்து' என்பன, அவாய்நிலையால்வந்தன. வழிநிற்றல்-அடங்கியிருத்தல். அவற்றை-வாழ்தலையும்சாதலையும்.இந்தத்திருக்குறளை,"பிரிந்தவழிக்கலங்கலும்" என்ற இடத்து'வழி'என்றதனாற் பிரியலுறாமான் கூறுவனவும் உண்டு என்று கொண்டு,உதாரணங்காட்டினர் தொல்காப்பியத்தில் நச்சினார்க்கினியர்: அன்றியும், பாங்கற்கூட்டத்தின்பகுதியிற் சேர்த்தோதனவும் கொண்டுள்ளார். (௪)

கக௨௫. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்.

ஒருவழித்தணந்துவந்த தலைமகன் 'நீயிர் தணந்தஞான்று எம்மையுள்ளியு மறிதிரோ?' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) ஒள் அமர் கண்ணாள் குணம்-ஒள்ளியவாய் அமரைச்செய்யுங்

கண்ணிணையுடையாள் குணங்களை, யான் மறப்பின் - யான் மறந்தேனாயின்,

உள்ளுவன் - நினைப்பேன்; மறப்பு அறியேன்-(ஒருபொழுதும்) மறத்தலையறியேன்: (ஆகலான் நினைத்தலையுமறியேன்); (எ - று.)

மன் - ஒழியிசைக்கண்வந்தது. குணங்கள் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன்கூற்று; மேல் தலைமகள்கூற்று.

(கு - ரை.) ஒருவழித்தணத்தலாவது - தலைமகளைக் களவொழுக்கத்தால் தலைமகன் புணர்ந்துவாராநிற்கையில் அவர் [அலராவது - களவுப் புணர்ச்சியைப்பலரறிந்து பேசுதல்] எழுந்ததாக, அந்த அலரடங்கச் சிலநாள் தலைமகன் ஓரிடத்தில் தலைமகளைப்பிரிந்து உறைதலாகும். தணந்தஞான்று - பிரிந்திருந்தபோது. உள்ளியும் - நினைத்தும். உள்ளுவன்மன் என்ற இடத்து 'மன்' என்பது உள்ளுவேனல்லேன் என்ற பொருளைத் தந்ததனால், ஒழியிசையாயிற்று. மறந்ததையே யுள்ளுவதுமுடியும்: ஒருபோதும் மறவாதிருப்பின் அப்பொருளை யுள்ளுவது எப்படிமுடியும்? முடியாதன்றோ? ஆகையால், யான் தலைவியையுள்ளுவேனல்லேனென்று தலைவன் தலைவியை உள்ளாமைக்குக் காரணம் கூறுகின்றான். கூற்று - பேச்சு. (௬)

௧௧௨௬. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

ஒருவழித்தணப்பின்கண் தலைமகனைத் தோழி இயற்பழித்துமென்றஞ்சி அவள்கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) (தாம் காணுமைபற்றிச் சேய்மைக்கட்போயினரென்று கருதுவார் கருதுக): எம் காதலவர்-எம்முடைய காதலர், கண் உள்ளின் போகார் - (எம்)கண்ணகத்துநின்றும் போகார்: இமைப்பின் பருவரார் - (யாம்அறியாது) இமைத்தேமாயின் அதனால் வருந்துவதுஞ்செய்யார்: நுண்ணியர்-(ஆகலால்) காணப்படா நுண்ணியர்; (எ - று.)

இடைவிடாத நினைவின்முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னேதோன்றலின் 'கண்ணுள்ளிற் போகார்' என்றும், இமைத்துழியும் அது கிற்றலான்

'இமைப்பிற் பருவரார்' என்றுங் கூறினன்.

க்கஙஅ - ஆம்

அதிகாரம்.—காதற்சிறப்புரைத்தல். ௩௨௫

(கு - ரை.) இயற்பழித்த லென்பது - (தலைமகனது) தகவின்மையைக் கூறுதலாம்: இயல் - தன்மையை, பழித்தல் - பழிப்புள்ளதெனக் கூறுத லென்க. காணப்படா நுண்ணியர் - பிறரால் அறியமுடியாத நுட்பத்தன்மை யுடையார். முன்னேதோன்றலின் - கண்ணுக்கு எதிரிலே தோன்றுவதால்: ஒன்றை இடைவிடாது நினைப்பின் அது நினைவின் முதிர்ச்சியால் கண் முன்னே நிற்பதுபோலத் தோன்று மென்க.
இமைத்துழி-இமைத்தபொழுது. அது - அத்தோற்றம். பருவரார் என்பது - 'பருவா' என்ற பகுதியினடியாகப் பிறந்த எதிர்மறைப் பலர்பால்வினைமுற்று.

(சு;

கக௨எ. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

இதுவுமது.

(இ - ள்.) காதலவர் கண் உள்ளார் ஆக-காதலர் (எப்பொழுதும்) எங் கண்ணினுள்ளாராதலான், கண் உம்

எழுதேம் - கண்ணினை அஞ்சனத்தா லெழுதுவதுஞ் செய்யேம்: கரப்பாக்கு அறிந்து-(அத்துணைக்காலமும் அவர்) மறைதலையறிந்து; (எ - று.)

இழிவுசிறப்பும்மை, மாற்றப்பட்டது.

கரப்பாக்கென்பது-வினைப்பெயர்:

வருகின்றவேபாக்கென்பதும் அது.யான் இடையீடின்றிக் காண்கின்றவரைப்

பிரிந்தாரென்று கருதுமாறு என்னை? என்பது குறிப்பெச்சம்.

(கு - ரை.) அஞ்சனமெழுதாமைக்குக் காரணம், அஞ்சன மெழுதும் போதெல்லாம் அக்காதலர் கண்ணின்மறைவரென்பது கருதியாமென்கிறான்.

கண்ணும் என்ற இடத்துள்ள உம்மையைப் பிரித்து, எழுதுதலைச்செய்யேம் என்று பொருளுள்ள எழுதேம் என்ற இடத்து எழுது என்ற பகுதியின் பின்னே கூட்டி எழுதுதலுஞ் செய்யே மென்று உரைக்கப்பட்டது. கரப்பாக்கு-தொழிற்பெயர்:

கரத்தலென்பது பொருள். வருகின்ற - அடுத்தபாட்டிலே வருவதான. வேபாக்கு என்பது

வேதலென்று பொருள்படுவதால், அது 'வே' என்ற பகுதியினடியாகப் பிறந்த தொழிற்பெயராகுமென்க.

இடையீடுஇன்றி-இடைவிடாமல். இடையீடின்றிக் காதலரைக்காண்பதனால் சொல்லாதுஎங்கேயோ போய்விட்டாரென்று அந்தக்காதலரையயற்பழித்தல் தகாதென்று தோழிக்குக் கேட்கும்படி தலைவி சொல்லியவாறு. "கண்ணு

ளார்நுங்காதலரொழிககாமமீங்கெனு" என்ற சிந்தாமணி

உரியது.

இங்குக் கருதுதற்கு

(எ)

கககஉ௪.

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

இதுவுமது.

(இ - ள்.) காதலவர் நெஞ்சத்தார் ஆக - காதலர் எந்நெஞ்சினுள்ளாரீராக லான், வெய்து உண்டல் அஞ்சுதும் - (உண்ணுங்கால்) வெய்தாக உண்டலை யஞ்சாநின்றேம், வேபாக்கு அறிந்து - (அவர் அதனுன்)வெய்துறலையறிந்து.

எப்பொழுதும் எந்நெஞ்சின் கணிருக்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமாறு என்னை? என்பது குறிப்பெச்சம்.



(கு - ரை.) வெய்தாக - வெம்மையுள்ளதாக. உண்டலை - (சோறு நீர் கறி முதலியவற்றை) உட்கொள்ளுதலை. அஞ்சுதும்-தனித்தன்மைப்பன்மை. வேபாக்கு - வேதல்: வெப்பத்தைபடைதல். (அ)

கககஉகூ. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர்.

வரைவிடைவைத்துப் பிரிவின்கட் டலைமகளாற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனையியற்பழித்தவழி அவளியற்பட மொழிந்தது.

(இ-ள்.) இமைப்பின்-(என் கண்) இமைக்குமாயின், கரப்பாக்கு அறிவல்-

(உள்ளிருக்கின்ற காதலர்) மறைதலையறிந்து இமையேன்; அனைத்திற்கு ஏதிலர் என்னும் இ ஊர் - அவ்வளவிற்கு (அவரைத் துயிலாநோய்செய்தார்) அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர்; (எ - று.)

தன் கருத்தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூர்' என்றாள். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்கற்பாலையல்லை யென்பதாம்.

(கு - ரை.)

வரைவிடைவைத்துப்பிரிவு என்பது-கலியாணஞ்செய்து கொள்ளுவதாகிய சடங்கை இடையே வைத்துக்கொண்டு அதற்குவேண்டும் பொருளைத் தேடப்பிரிதலாம். தலைவன் வரைதற்குக் காரணமாகப் பொருள் தேடப் பிரிந்தானென்றால் வறியனென்று ஏற்படுமே யெனின்?—ஏற்படாது: முன்னோர் தேடிவைத்த பொருள் மிகுதியாக இருப்பினும் அதனை நுகர்வோன் சிறியோனென்றும், முயற்சியில்லாத சோம்பேறி யென்றும் இகழப்படுவானாதலாலும், தான் முயன்று தேடிய பொருளை நுகர்தலே உத்தம மாதலாலும் பொருள்தேடப் பிரிவனென்க. அவள்-தலைவி. இயல்-நல்ல தன்மை. அறிவல் என்பதற்குப் பயனாக, அறிந்து இமையேன் என்று இலக்கணையாற் பொருள் கூறப்பட்டது. நான் கண்ணிமையாமைக்குக் காரணம், துயிலாமையன்று: உள்ளிருக்குங்காதலர் மறைவரென்ற எண்ணமே: அவ்வாறு நான் கண்ணிமையாமைமாத்திரத்தைக்கொண்டு என்காதலரை

ஏதில . ரென்று இவ்வூர் கூறுகின்றது:
அது தகுதியன்று என்றவாறு: ஏதிலரென்' பதன் கருத்துப் பொருள், பிரியாநோய்செய்தா ரன்பிலரென்பது. தன் கருத்து அறியாமைபற்றித் தோழியைப் புலந்து சொல்லுபவள் - தலைவி. புலந்து -
(பாங்கிமீது)வெறுப்புக்கொண்டு. இவ்வூர்என்றது, இங்குத் தோழியைக்காட்டு மென்க.
பழிக்கற்பாலையல்லை-பழித்தற்றன்மையை விடுவாய்

என்றபடி. (க)

ககஙo.

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

இதுவுமது.

(இ - ள்.) (காதலர்), என்றும் -
எஞ்ஞான்றும், உள்ளத்துள் - உவந்து
உறைவர்-என்னுள்ளத்துள்ளே யுவந்துறையாநிற்பர்: (அதனையறியாது அவரை), 'இகந்து உறைவர்-பிரிந்துறையாநின்றார்: ஏதிலர் - அன்பிலர்:' என்னும் - என்று சொல்லாநிற்கும்: இவ்வூர்—: (எ - று.)

ககச - ஆம்

அதிகாரம்.—நாணுத்துறவுரைத்தல் ||

உவந்துறைவரென்றதனல் அன்புடைமை

கூறினள். பிரியாமையும்
அன்பும் உடையாரை இலரெனப் பழிக்கற்பாலையல்லை
யென்பதாம்.

(கு - ரை.) உவந்துறைதல் அன்பின்செயலேயாதலால், உவந்துறைவ ரென்றதனால், காதலரின் அன்புடைமையைக் கூறினளென்றார். உவத்தலால் அன்பும், உறைதலாற் பிரியாமையும் காதலர்க்கு ஏற்படுவது காண்க. இல ரென - அன்பும் பிரியாமையும் இல்லாதவர் என்று. (௧௦)

## ககச - ஆம் அதிகாரம்.— நாணுத்துறவுரைத்தல்.

அஃதாவது-சேட்படுக்கப்பட்டு ஆற்றாளாய தலைமகன் தோழிக்குத் தன்
நாண்துறவு உரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன் நாண்துறவுரைத்தலுமாம். இது, காதன்மிக்குழி நிகழ்வதாகலின், காதற் சிறப்பு உரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) சேட்படுக்கப்பட்டு - (தோழியால்)
தலைவி களவொழுக்கிற்
கிட்டுதற்கு அரியளென்று மறுத்து அகற்றப்பட்டு.
ஆற்றாளாய - தலைமகளைப்
பிரிந்திருக்கப்பொறாதவனான. நாண்துறவுரைத்தல் -
'மடன்மாவேறுவேன்'
என்றாற்போன்று நாணைத்துறந்தமைதோன்றும்
பேச்சுக்களைப் பேசுதல்.
அறத்தொடு நிற்பிக்கலுற்ற - தருமத்தோடுபொருந்துமாறு
செய்விக்கலுற்ற:
அதாவது-களவொழுக்கத்தை வெளிப்படுத்தாவிட்டால் தலைவியின் நிலையை யுணராத பெற்றோர் அத்தலைவியை வேறொருத்தனுக்கு வாழ்க்கைப்படுத்தி

ளல் அப்போது கற்புஆகியஅறம் தலைவிக்குப் பழுதுறுமாதலால், அங்ஙனம் பழுதுறுமைக்காகக் களவொழுக்கத்தை முறையேவெளிப்படுத்தி நிற்கத் தொடங்கிய என்க. "அறத்தோடுநிற்றலாவது-களவை முறையே வெளிப்படுத்திநிற்றல்: முறையே வெளிப்படுத்திநிற்றலாவது - தலைவி பாங்கிக்கு அறத்தொடுநிற்கும்: பாங்கி செவிலிக்கு அறத்தொடுநிற்கும்: செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்கும்: நற்றாய் தந்தைதன்னையர்க்கு அறத்தொடுநிற்குமென்றுகொள்க.......இப்பொருள் எவ்விடத்திற்கு மாகாது: இவ்விடத்திற்கு மாத்திரமென்றுகொள்க" என்று தஞ்சைவாணன்கோவையுரையிற் கூறியுள்ளது. அவட்கு - தோழிக்கு.

கக௩௧. காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

சேட்படுக்கப்பட்டு ஆற்றனாய தலைமகன் சொல்லியது.

(இ - ள்.) காமம் உழந்து - (அரியராய மகளிரோடு) காமத்தையனுபவித்து, வருந்தினார்க்கு-(பின் அதுபெறாது) துன்புற்ற ஆடவர்க்கு, (பண்டும்), ஏமம் - ஏமமாய் வருகின்ற, மடல் அல்லது-மடலல்லது, வலி இல்லை- (இனி எனக்கு) வலியாவதில்லை; (எ - று.)

ஏமமாதல் - அத்துன்ப நீங்கும்வகை அவ்வனுபவத்தினைக் கொடுத்தல்.

வலி-ஆகுபெயர். பண்டும் ஆடவராயினார் இன்பமெய்தி வருகின்றவாறறிக,

பின்னை அதற்குத்துணையென்றுகருதிக் கொன்னே

ழுயன்ற யான் இதூ ௬.௪

திருக்குறள்

பொழுது அல்லாமையை யறிந்தேன்: ஆகலான், இனி, யானும் அவ்வாற்றான் அதனை யெய்துவ லென்பது கருத்து.

(கு - ரை.) அதுபெறாது -

காமவின்பத்தைப்பெறாது. ஆடவர்க்கு - புருஷர்கட்கு. பண்டும் - முன்பும். ஏமமாய் - துன்பத்தைப்போக்கி இன்பத்தைக்கொடுப்பதாய். மடலாவது - தலைவியைக் களவுப்புணர்ச்சிபுணர்ந்து பிரிந்த தலைமகன் பாங்கியையிரந்து

தன்குறைபெறாது சேட்படுக்கப்பட்டுப் பிரிவுத்துயராலாற்றாமைமிஞ்சி அதனால் நாணம்முதலியன அழித்து தலைவியின்வடிவையும் ஊரையும் பேரையும்

தனது ஊரையும் பேரையும் ஒருபடத்திலெழுதி அந்தச்சித்திரப்படத்தைக் கையிற்கொண்டு பனைமடலினால் ஒருகுதிரையுருச்செய்வித்து அதன்மீது தான் ஏறி அதனைப்பிறராலிழுப்பித்து வீதிவழியே பலருங்கூடும் பொதுவிடங்களிற் செல்லுபவனாவது: இது, மட லூர்தலெனவும், மடன்மாவேறுதலெனவும் சொல்லப்படும்: இதற்குப்பயன் - தலைவனது இக்கடுந்தொழிலைக்கண்டு இதனால் இவனதுபெருவேட்கையை யுணர்ந்த உறவின ராலாயினும், சான்றோராலாயினும் அரசனாலாயினும் வெளிப்படையாக மணஞ்செய்விக்கப்பெறுதலென்ப.

ஏமமாதல் என்பதற்குப் பொருள், இரட்சகமாதலென்பது.

இங்கே, தலைவியையனுபவிக்கப் பெறுமை யாலான அத்துன்பம் நீங்கும்படி அந்தத்தலைவியின் காமவனுபவத்தைக் கொடுத்தலாம். வலியென்ற பண்புப்பெயர், வலிமையைத்தரும் பொருளுக்கு ஆயினது - பண்பாகுபெயராம். எய்திவருகின்ற ஆறு - அடைந்துவருகின்ற விதம். அதற்கு - இன்பமனுபவித்தற்கு. கொன்னே - பயனின்றி. அல்லாமையை - நீ துணையாகாமையை. அவ்வாற்றான் - மூன்றும் ஆடவர் மடன்மாவேறுதலாகியவழியால். அதனை - அந்தக்காமவனுபவத்தை. "சான்றீருமக்கொன் றறிவுறுப்பேன்மான்ற, துளியிடைமின்னுப்போல் தோன்றியொருத்தி, ஒளியோடுருவென்னைக் காட்டியளியளென், நெஞ்சாறுகொண்டாளதற்கொண்டுர்துஞ்சேன், அணியலங் காவிரைப் பூவோடெருக்கின், பிணையலங்கண்ணி மிலைந்துமணியார்ப்ப, ஓங்கிரும்பெண்ணை மடலூர்ந் தென்னெவ்வநோய், தாங்குதநேற்றூவிடும்பைக்குயிர்ப்பாக, வீங்கிழைமாதர் திறத்தொன் றநீங்காது, பாடுவேன்பாய்மாநிறுத்து:......காமக்கடும்பகையிற் றோன்றினேற்கேம, மெழினுதலீத்தவிம்மா:......என், துயர்நிலைதீர்த்தல் நுர்தலைக்கடனே" என்ற கலித்தொகை இங்குக் காணத்தக்கது. (க)

ககங௨. நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

நாணுடைய நுமக்கு அது முடியாதெனமடல் விலக்கலுற்றற்குச் சொல்லியது.

(இ - ள்.) நோனா உடம்புமும் உயிர்உம் - (அவ்வருத்தத்தினை) பொறாத உடம்பும்உயிரும், மடல் ஏறும் - (அதற்கேமமாய) மடன்மாவினையூரக் கருதாநின்றன: நாணினை நீக்கி நிறுத்து-(அதனைவிலக்குவதாய) நாணினையகற்றி.

வருந்தினார்க்கென மேல்வந்தமையின்,

செயப்படுபொருள் ஈண்டுக் கூறா ராயினர். மடல் - ஆகுபெயர். நீக்கிநிறுத்தென்பது, ஒரு சொன்னீர்மைத்து. அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும், நாண் நீங்

காது நின்றது: அதுவும் இதுபொழுது நீங்கிற்றென்பான், 'உடம்புமுயிரும்'

என்றான். அவை தாந் தம்முணீங்காமற்பொருட்டு மடலேறுமென்றது, அவள் தன்றாற்றாமை யறிந்து கடிதிற் குறைநேர்தனோக்கி.

(கு ரை.) நாணையுடைய நுமக்கு அந்தமடன்மாவேறுதல் முடியாது

என்று மடல்விலக்குதலுற்ற பாங்கிக்குத் தலைமகன்சொல்லியது, இது. நோனாளென்பதற்கு வருத்தத்தினையென்ற செயப்படுபொருள் கூறவேண்டிய

தாகவும் கூறாதது, கீழ்ச்செய்யுளில் வருந்தினார்க்குஎன்றுவந்திருத்தலால்,

அந்த அதிகாரம்பற்றி வருத்தத்தினையென்ற

செயப்படுபொருள் தானே

கிடைக்குமென்பதனலாகும்.
அதற்குஏமமாகிய-அந்தப்பிரிவுத்துயர்க்கு இரட்
சகமாகிய. மடலென்பது-பனை மடலினலியன்ற
குதிரைக்குஆகியதனில், கார
ணவாகுபெயராம். நீக்கிநிறுத்து என்பது
இரண்டுசொல்லாய் இருபொரு
ளைத்தாராமல் அகற்றியென ஒருபொருளையே தந்ததனல்,
ஒருசொல் என்
றூர்: ஆகவே, நீக்குஎன்பது நிறுஎன்றதுணைவினை பெற்ற
தென்க. அறிவு
என்பது - "எப்பொருளெத்தன்மைத்தாயினு
மப்பொருள், மெய்ப்பொருள்
காண்பது". நிறையென்பது - காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம். ஓர்ப்புஎன்பது - ஒருபொருளை ஆராய்ந்துணர்தல். கடைப்பிடியென்பது - கொண்டபொருளைமறவாமை. அவைதாம் - உடலும் உயிரும். அவள் - தோழி. குறை நேர்தல் - குறையைப்போக்க உடன்படுதல். (உ)

கசநந. நாணொடு நல்லாண்மை பண்டுடையே
னின்றுடையேன்
காமுற்றூர் ஏறு மடல்.

நாணையன்றி நல்லாண்மையு முடைமையின்
முடியாதென்றற்குச்
சொல்லியது.

(இ - ள்.) நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன் - நாணும் மிக்க ஆண்டகைமையும் (யான்) பண்டு உடையேன்: (அவை காமத்தானீங்குத

லான்), காமுற்றூர் ஏறும் மடல் இன்று உடையேன் - அக்காமமிக்காரேறும் மடலினை இன்றுடையேன்; (எ - று.)

நாண் - இழிவாயின செய்தற்கண் விலக்குவது. ஆண்மை - ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன, இன்றுள்ளது இதுவேயாகலிற் கடிதின் முடியு மென்பதாம்.

(கு - ரை.) நல்லாண்மையுமுடைமையின் - நல்லஆண் தன்மையையும் நீ உடையவனாகஇருத்தலால். முடியாது - மடலேறுதலென்பது கூடாது. 'நல்லாண்மையையும் நாணையும் உடையா யாதலால் மடலேறுதல் நினக்கு ஒல்லாது' என்ற பாங்கிக்குத் தலைவன்சொல்லியது, இது. பண்டுடையேன் என்றதனால், இன்று அவை என்னைவிட்டுக் காமத்தால் விலகின என்பது, பெறப்படும். இழிவாயினசெய்யக்கருதுமிடத்துச் செய்யவொட்டாது விலக்



குந் தன்மையது நாண்என்க. இதுவே - மடலே. கடிதின் முடியும் என்பதற்கு, மடலேறுதல் எழுவாயாம். (௩)

௧௧௩௪. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

'நாணுநல்லாண்மையும்
காமவெள்ளத்திற்குப் புணையாதலின்
அதனால் அவை நீந்துவன வல்ல' என்றுட்குச்
சொல்லியது.

(இ - ள்.) நாணொடு நல்லாண்மை என்னும்
புணை-(யான் தன்னைக் கடத்
தற்குக் கொண்ட) நாணும் நல்லாண்மையுமாகிய
புணைகளை, (என்னிற்
பிரித்து), காமம் கடும்புனல் உய்க்கும் - காமமாகிய கடிய
புனல் கொண்டு
போகாநின்றது; (எ - று.)

அதுசெய்யமாட்டாத ஏனைப்புனலினீக்குதற்கு
'கடும்புனல்' என்றான்.

இப்புனற்கு அவை புணையாகா, அதனான்
அவைநீக்குமென்பதாம்.

(கு - ரை.) காமவெள்ளத்திற்குப்புணை -
காமமாகியகடலினைக் கடத்தற்
குத்தெப்பம் போல்வது. அதனால் - காமவெள்ளத்தினால்.
அவை நாணும் நல்
லாண்மையும். தன்னை - காமக்கடும்புனலை. புனல்வெள்ளம், மிகவும்அதிகரிக்
குமாயின் அது புணையையும் அடித்துக்கொண்டுபோய் விடுந்தன்மைய
தென்க. அது செய்யமாட்டாத-புணையை அடித்துக்கொண்டு
போகமாட்டாத.

இப்புனற்கு-காமக்கடும்புனற்கு. அவை-நாணும்
நல்லாண்மையும். அதனான்-
காமக்கடும்புனலால். காமம் ஆண்தன்மையை

உடைத்திடு மென்பதைக்
"கானுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தே, ஞெணைழின்
முற்றியுடைத்துள்
ளழித்தரு, மாணிழை மாதராளே ளெனக்காமன,
தாணையால் வந்தபடை"
என்றதனாலும் அறிக. (௪)

௧௩௩௫. தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

'இவ்வாற்றமையும் மடலும் நுமக்கு எவ்வாறு
வந்தன' என்றற்குச்

சொல்லியது.

(இ-ள்.) மாலை உழக்கும் துயர்
மடலொடு-மாலைப்பொழுதின்கண் அனு
பவிக்கும் துயரினையும் அதற்கு மருந்தாய மடலினையும்,
(முன்னறியேன்):
(இது பொழுது எனக்கு), தொடலை
குறுந்தொடி-மாலைபோலத் தொடர்ந்த
சிறுவளையினையுடையாள், தந்தாள்—; (எ - று.)

காமம் எனைப்பொழுதுகளினும் உளதேனும்
மாலைக்கண் மலர்தலுடை
மையின் 'மாலையுழக்குந்துயர்' என்றும், மடலும்
அதுபற்றி வந்ததாகலின்
அவ்விழிவும் அவளாற்றரப்பட்டதென்றும், அவடான் நீ கூறியதே கூறும்
இளமையளென்பது தோன்ற 'தொடலைக்குறுந்தொடி' என்றுங் கூறினன்.
அப்பெயர் - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த வன்மொழித்தொகை.
இவை அவடந்தனவாகலின், நின்னால் நீங்குமென்பது கருத்து.

(கு - ரை.) இதுவும், தலைவன் பாங்கியினிடம் கூறிய கிளவி. "காலை

யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலைமலருமிந்நோய்'' என்ற குறளாலும்

கஉசுஉ - ஆம்

அதிகாரம்.—நாணுத்துறவுரைத்தல் சுஉ

மாலைக்காலத்துக் காமநோய் மலருந்தன்மையதாதல் புலனும். அதுபற்றி -
காமம்பற்றி. அவ்விழிவும் - மடலேறும்இழிவும். குறுந்தொடிஎன்பது - பண்
புத்தொகையாயினும், தொடலைக்குறுந்தொடியென்ற தொடரில், தொடலை
யென்பது, குறுந்தொடி யென்பதனோடு உவமைத்தொகைப்பொருளில்
தொடர்ந்து அன்மொழியாய் வந்ததனல், அத்தொடர் - உவமைத்தொகைப்
புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாம். தலைவிதந்தனவே துயரும் மடலு
மாதலால், அவளுடைய பாங்கியான உன்னால்தான் இவை நீங்கு மென்
கின்றான். ''படரும் பனையீன்றமாவுஞ் சுடரிழை, நல்கியாணல்கியவை''
என்ற கலித்தொகை, இங்கு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது.
(ரு)

ககஙகூ. மடலூர்தல் யாமத்து முள்ளுவேன்
படலொல்லா பேதைக்கென் கண்.

மன்ற

* மடலூரும் பொழுது இற்றைக்குங்
கழிந்ததென்றட்குச் சொல்லியது.

(இ - ள்.) பேதைக்கு என் கண் படல் ஒல்லா - (கின்)பேதைகாரணமாக
என் கண்கள் ஒருகாலுந்
துயிறலைப்பொருந்தா;(அதனால்),யாமத்துஉம் மன்ற
மடல் ஊர்தல் உள்ளுவேன்-(எல்லாருந்துயிலும்)
இடையாமத்தும் (யானிரு
ந்து) மடலூர்தலையே கருதாநிற்பேன்; (எ - று.)

பேதையென்றது பருவம்பற்றியன்று,
மடமைபற்றி. இனிக் குறை
முடிப்பது நாளையென வேண்டா வென்பதாம்.

(கு - ரை.) துயிறலை - தூங்குதலென்றசெயலை.
பேதை - இங்கே அறி
யாமை யுடையாள்: தன்னேயையறிந்து
தணிக்கா திருத்தல்பற்றி, தலைவி
யைப் பேதையென்கின்றான். பேதையென்பது
பருவப்பெயராக வருவது
உண்டு: அப்பருவத்திற்கு வயதெல்லை, ஐந்து முதல் எழு
வரையிலும், என்

கண்கள் பேதைக்காகப்படலொல்லா என்றமையால், என்குறையை உடனே
முடிக்கவேண்டுமேயன்றி, நாளையென்று சொல்லி நாளைக்கடத்தலாகாதென்
பது, பெறப்படும். (கூ)

ககஙஎ.

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

பேதைக்கு என்கண் படலொல்லா வென்பதுபற்றி, 'அறிவிலராய
மகளிரினும் அஃதுடையராய ஆடவரன்றே ஆற்றற்பாலர்' என்றாட்குச்
சொல்லியது.

(இ - ள்.) கடல் அன்ன காமம் உழந்துஉம் மடல் ஏறா பெண்ணின் -
கடல்போலக் கரையற்ற காமநோயினையனுபவித்தும் மடலூர்தலைச் செய்
யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புப்போல, பெருந்தக்கது - மிக்க தகுதி
யினையுடைய பிறப்பு, இல் - உலகத்தில் இல்லை; (எ - று.)

ஏ

பிறப்புவிசேடத்தால் அவ்வடக்கம்

எனக்கில்லையாகாகின்றது: நீ யஃ
தறிகின்றிலை யென்பதாம். இத்துணையுந்

தலைமகன்கூற்று: மேற்றலைமகள்

கூற்று.

* பி - ம்: மடலூரும்பொழுதை இற்றைக்கொழிந் தூரென்றுட்கு.
*—6



(கு - ரை.) கீழ்ச்செய்யுளில், தலைமகன் 'என்கண்படல் ஒல்லா' என்றான்: அதுபற்றி, பாங்கி 'அறிவிலராகியமகளிரினும் அஃதுடைய ஆடவ ரன்றே ஆற்றுதற்கு உரியவர்' என்றாளாக, 'மடலேறுந்தன்மை பெண்டிரிடமே யிருத்தலால் ஆடவரினும் அவரே ஆற்றுபவர்: அவர்பிறப்பே தகுதி யுடையது' என்று தலைவன்கூறுகின்ற கிளவி, இது. மடலூர்தலென்பது ஆட வர்க்கேயுரியதென்றும், மடலூர்வேனென்று சொல்லுதலோடுகிற்பது மக ளிர்க்குரிய தென்றும் அறிக.

" ஊர்வேன்மடலையொ ழிவே ன் ம டநாண ம்,"

" உலகறிய வூர்வ ன் நான்,
முன்னிமுளைத்தெழுந்தோங்கியொளிபரந்த, மன்னியபூம்பெண்ணைமடல்," "பெருந்தெருவே, யூராரிகழிலுமூராதொழியேனன்,
வாரார்பூம்பெண்ணைமடல்" என்பனமுதலனவாக இலக்கியங்கள் வருவனவும், "எத்திணை மருங்கினு மகடூஉ மடன்மேற், பொற்புடை நெறிமையின்மையான"

என்ற தொல்காப்பியச்சூத்திரமும், அங்கு, 'கடலன்னகாமத்தராயினும் பெண்டிர், மடலூரார்மைந்தர்மேலெ ன்ப - மடலூர்தல், காட்டுகேன் வம்மின் கலிவஞ்சியார்கோமான், வேட்டமாமேற் கொண்டபோழ்து என்றாராலோவெனின், இது மடலேற்றன்று: ஏறுவலெனக் கூறிய துணையேயாம்' என்ற நச்சினார்க்கினியருரையும் காண்க.

இனி,பன்னிருபாட்டியலுடையார் மகளிர்மடலேறாரென்றும், ஆனால், கடவுளரைத் தலைவராகவைத்துப்பாடுமிடத்து அவர் மடலேறுவதாகக் கூறப்படுமென்றும் சொல்லுவர்: இதனை "மடன்மாப்பெண்டிரேறா ரேறுவர், கடவுளர் தலைவராய்வருங்காலே" என்பதனா லறிக. பிறப்பு விசேடத்தால் - ஆணாய்ப்பிறந்திருத்தலினாலென்றபடி. அவ்வடக்கம் - மகளிர்க்கு உள்ள தான மடலேறாமலிருத்தலாகிய அடக்கம். "எண்ணில்காமமெரிப்பினு மேற் செலாப், பெண்ணின்மிக்கதுபெண்ணலதில்லையே" என்ற சிந்தாமணி, இச் செய்யுளோடு ஒப்புநோக்கத்தக்கது. முதல் ஏழுபாடல்கள் தலைமகன் கூற் றும், இனிமூன்றுபாடல்களும் தலைவிகூற்றுமாம்.

(எ)

கககூ௮. நிறையரியர் மன்னவரிய ரென்னாது காம

மறைபிறந்து மன்று படும்.

காப்புச்சிறைமிக்குக் காமம் பெருகியவழிச்

சொல்லியது.

(இ - ள்.) நிறை அரியர் (என்றது)-(இவர்) நிறையால் (நாம்)மீதூர்தற் கரியரென்று அஞ்சுதல்செய்யாது, மன் அளியர் என்றது-மிகவும் அளிக்கத் தக்காரென் றிரங்குதல் செய்யாது,—காமம்-மகளிர் காமமும், மறை இறந்து- (அவர்) மறைத்தலைக்கடந்து, மன்றுபடும் - மன்றின்கண்ணே வெளிப்படுவதா யிருந்தது; (எ - று.)

என்றதென்பது முன்றுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. எச்சவும்மை, விகாரத்தாற்றொக்கது. மன்றென்பது, தந்தைதன்னையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார்காமத்தியல்பு கூறுவாள்போன்று, தன் காமம் பெருகிய வாறும், இனி அறத்தொடுநிற்றல்வேண்டுமென்பதும் குறிப் பாற் கூறியவாறாயிற்று,

க்கசு - ஆம்

அதிகாரம்.—நாணுத்துறவுரைத்தல் சாங

(கு - ரை.) காப்புச்சிறை - காவலாகிய சிறை. சிறையாவது-ஒருவரை அவர்விருப்பின்படிசெல்லாது தடுத்துவைப்பது. நிறை - மனவடக்கமென் னுங் குணம். நிறைமிக்கவராதலால் நம்மால் மீதூர்தற்கரியரென்றும், மிகவும் அளிக்கத்தக்காரென்றும் கருதாமையால், காமமானது மகளிரால்

மறைக்கப்படுந்தன்மையைக்கடந்து மன்றில்வெளிப்படுவதாய்விட்டதென்று, தன்காமம் மிக்கதன்மையைக் கூறுகின்றாள். அளியரென்னாது என்ற இடத்திலுள்ள என்னாது என்பது நிறையரியரென்னாது என்று முன்னும் கூட்டப்பட்டவாறு காண்க. காமம் என்பதன்முன் மகளிரென்பது வருவிக்கப்பட்டது. மகளிர் என்றுவருவிக்கப்பட்டதனோடு தொடர்ந்த காமம் என்பதன்பின் 'ஆடவர்காமமேயன்றி' என இறந்ததுதழுவிய எச்சப்பொருளைத்தருகிற உம்மை விகாரத்தால்தொக்கதென்க. மன்று என்பது - சபையாதலால், தோழிமார்முதலியவரோடு அடங்கிநில்லாமல், இனி, தந்தைதன்னையரும் உணரவேண்டிய தன்மையைப்பெறுமென்பாள் 'மன்றுபடும்' என்றாள். தன்னையர் - தன் உடன்பிறந்தார். தோழி அறத்தொடுநிற்கவேண்டுமிடம் இன்னவையென்பதை "காப்புக்கைமிக்குக் காமம்பெருகினும், நொதுமலர் வரையும் பருவமாயினும், வரைவெதிர் கொள்ளாது தமரவண்மறுப்பினு, மவனுறுதஞ்சுங்காலமாயினும், அங்காலிடத்து மெய்ந்நாணொரீஇ, யறத்தொடு நிற்ற றேழிக்குரித்தே" என்பது, இறையனாகப்பொருள். (அ)

கக௩௬. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

இதுவுமது.

(இ - ள்.) 'எல்லார்உம் அறிகிலார் - (யான் முன் அடங்கிநிற்றலான்) எல்லாரும் (என்னை) அறிதலிலர்: (இனியவ்வாறு நில்லாது யானே வெளிப்பட்டறிவிப்பல்)', என்று - என்றுகருதி,—என் காமம்—, மறுகில்-(இவ்வூர்) மறுகின்கண்ணே, மருண்டு மறுகும் - மயங்கிச் சுழலாநின்றது; (எ - று.)

மயங்குதல் - அம்பலாதல். மறுகுதல் - அலராதல். அம்பலுமலருமாயிற்று: இனி, அறத்தொடுநிற்றல்வேண்டுமென்பதாம்.

அறிவிலாரென் பதூஉம் பாடம்.

(கு - ரை.) அறிவிலாரெல்லாருமென்று மறுகும் என்றதனால், இனி அவ்வாறுகில்லாதபடி யானே வெளிப்பட்டறிவிப்பேனென்று கருதினமை பெறப்படும். மறுகு-வீதி. "அம்பலுமலருங்களவு" என்ற களவியற்சூத்திரத்தி னுரையில், "அம்பலென்பது-சொல்நிகழாதே முகிழ்முகிழ்த்துச்சொல்வதா யிற்று; இன்னதன் கண்ணதென்பது அயலறியலாகா தென்பது. அலரென் பது-இன்னானோடு இன்னாளிடை இதுபோலும்பட்டதென விளங்கச் சொல்லி நிற்பது. அம்பலென்பது-பெரும்போதாய்ச் சிறிதுநிற்க அலருமெனநிற்வது: அலரென்பது அப்பெரும்போது தாதும் அல்லியும்வெளிப்பட மலர்ந்தாற் போல நிற்கும் நிலைமை" என்றுகூறியிருப்பதும், "சிலரறிந்து புறங்கூறலும் பழியும்அம்பல்", "பலரறிந்தலர் தூற்றல். ..அலர்" என்று பிங்கலந்தை கூறுவதும் காண்க.

(கூ)



ககசo. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து, 'யான்நிற்குமாறென்னை' என்று

நகையாடிய தோழியோடு புலந்து தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) யாம் கண்ணின் காண - யாம் (கேட்குமாறுயன்றிக்) கண்ணாற்

காணுமாறு, (எம்மை), அறிவில்லார் நகுப-அறிவிலார் நகாநின்றார்: (அவரங்

ஙனஞ் செய்கின்றது), யாம் பட்ட - யாமுற்ற நோய்கள், தாம் படா ஆறு -

தாமும் உறாமையான்; (எ - று.)

கண்ணினென்றது, மூன் கண்டறியாமையுணரநின்றது. அறத்தொடு

நின்றமையறியாது வரைவுமாட்சிமைப்படுகின்றிலளெனப் புலக்கின்றாளாக

லின், ஏதிலாளாக்கிக் கூறினள். இது, நகாநின்று சேட்படுக்குந்தோழிக்குத்

தலைமகன் கூறியதாங்கால், அதிகாரத்திற்கு ஏலாமை யறிக.

(குறிப் - ரை.) செவிலி - தலைமகளை வளர்த்த தாய். பாங்கி செவிலிக்கு

அறத்தொடு நின்றாளென்க. [அறத்தொடுநிற்றல் - தலைவியின் களவொழுக்கத்தைத்தெரிவித்தல்.] அங்ஙன் செவிலிக்கு அறத்தொடுநின்றமையை யறியாத தலைவியினிடம் 'நான் நிற்கவேண்டியவிதம் யாது?'என்று பாங்கி நகை

யாடினளாக,அந்தப்பாங்கியைநோக்கித் தலைவி'இவள் வரைவுமாட்சிமைப்படு கின்றிலள்'என்று மனப்பிணக்குக்கொண்டு கூறிய கிளவி, இது.[வரைவுமாட்சிமைப்படுதல்-வரைவுநிகழுமாறு அதற்குஏற்றசெயலில் மிக்கவூக்கங்கொண்டிருத்தல்.] அறிவில்லார் நகுப என்று இந்தக்குறளிற் கூறியது-பாங்கி நகுவதைச் சுட்டியாகும்: பாங்கியின்மீது மனப்பிணக்குக்கொண்டு தலைவி கூறுவதனால், அந்தப்பாங்கியை அயலாரைக் கூறுவதுபோல 'அறிவில்லார்' என்று கூறுகின்றாள். இதுவரையிற் பாங்கி தன் கண்ணெதிர்நின்று பரிகாசச்சிரிப்புச் சிரித்திராமையால், தன்னெதிரில் பரிகாசச்சிரிப்புச் சிரித்ததை'கண்ணிற் காண நகுப' என்று தலைவி யெடுத்துக்கூறுகின்றாள். இனி இந்தக்குறளைத் தலைவனைச்சேட்படுக்கும் [சேட்படுக்கும் - களவுக் கூட்டத்துக்கு இயையாது அகற்றுகின்ற] பாங்கியைநோக்கி, தலைவன், 'இவள் என்னைப்பற்றிச்சிரியாநின்றாள்' என்று கூறிய கிளவியாகக் கொள்ளின், நாணுத்துறவுரைத்தல் என்ற இந்த அதிகாரத்துக்கு அது பொருந்தாதென மறுக்கின்றனர். (கO)

## ககரு - ஆம்

# அதிகாரம்.—அலரறிவுறுத்தல்.

அஃதாவது - களவொழுக்கம் வேண்டிய தலைமகன் பிறர்கூறுகின்றஅலர் தனக்குஆகின்றவாற்றைத் தோழிக்கு

அறிவுறுத்தலும்,வரைவாக உடன்போக்
காக ஒன்று வேண்டிய தலைமகளும் தோழியும் அவ்வலரை அவன்றனக்கு அறி
வுறுத்தலுமாம். இது, நாணுத்துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துற
வுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) பிறர்கூறுகின்ற அலர் தனக்கு ஆகின்றவாறு - தலைவியைப்
பற்றிப் பிறர்சொல்லிக்கொள்கின்ற தூற்றும்பழிமொழி தனக்கு அனுகூல
மாக வாவதை: விரைவில் வெளிப்படையாகத் தலைவியை மணக்கலாமென்ற

## ககரு - ஆம் அதிகாரம்.—அலரறிவுறுத்தல்

சரு

காரணத்தால், அந்த அலர் தலைமகனுக்கு அனுகூலமானதாகும். வரைவையோ அல்லது கணவனுடன் அவன்
ஊர்க்குச் செல்வதையோ இவற்றுள் ஒன்றை வேண்டினர்
தலைமகளும் தோழியும் என்க. அவ்வலரை - ஊரில்
அலர்பரந்திருக்கின்றது என்ற அவ்விஷயத்தை.
அதிகாரமுறைமைக்குக் காரணம், நாணுத்துறந்தவழியே
அலரறிவுறுத்தல் நிகழு மென்பது.

ககசக. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

அல்லதுறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி

அலர் கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.

(இ - ள்.) (மடந்தையொடெம்மிடை நட்பு), அலர் எழ - (ஊரின்கண்) அலரா யெழுதலான், ஆர் உயிர் - (அவளைப்பெறாது வருந்தும் என்) அரிய உயிர், நிற்கும்-(பெற்றதுபோன்று) நிலைபெறும்; அதனை - அந்நிலைபேற்றை, பாக்கியத்தால் - தெய்வத்தால், (யானே யறிவதல்லது), பலர்-(கூறுகின்ற) பலரும், அறியார்—; (எ - று.)

அல்லகுறிப்பட்டுத் தலைமகளை எய்தப்பெறாத வருத்தமெல்லாந்தோன்ற 'அரியவுயிர்'என்றும், அங்ஙனம் அரியாளை எளியளாக்கிவெடுக்கின்றமையின், அஃது அவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாகின்ற தென்பான் 'அலரெழவாருயிர்நிற்கும்' என்றும், பற்றுக்கோடாதலை அவ்வேதிலாரறியில் தூற்றுதொழிவர், ஒழியவே ஆருயிர்போமாகலான் அவரறியாதொழிகின்றது தெய்வத்தாலென்றுங் கூறினான். முற்றும்மை, விகாரத்தாற்றொக்கது.

(கு - ரை.) அல்லதுறிப்படுதல் - குறியல்லாதகுறியிலே மயங்குதல். தலைமகன் இரவுக்குறியிலே தலைமகளுடையகூட்டத்தை நாடி வருமிடத்துப் பற்பல அடையாளங்கள் தலைவனால் நிகழ்த்தப்படும்: அவை - புனலொலிப் படுத்தல்

புள்ளெழுப்புதல் முதலியன. இம்மனம் தலைவன் தன்வரவை அறிவிக்கச்செய்யுங் குறிகள் அத்தலைவன்செய்கையாலன்றி முதிர்ந்தகாய்கனிகள் காற்றால்விழுந்து நீரில் ஒலியெழும்பல், வேற்றுப்புட்கள்வந்த அச்சத்தாற் பறவைகள்கலைதல் முதலியவைகளால் நிகழுமிடத்தும் அவைகளைத் தலைமகன் வரவு குறிப்பனவாகக் கொண்டு தோழி தலைமகளைக்குறியல்லாத அவை நிகழ்ந்தபோது குறியிடத்துச்செலுத்தித் தவறுதலும் உண்டு: இதுவே அல்ல குறிப்படுத்தலாம்: இங்ஙன் அல்லகுறிகளால்தவறிய தோழி அவனிணு காமை யுணர்ந்துபோந்து மனையகம் புக்கபின்னை அவன் வந்து அக்குறி செய்யும்: செய்தக்கால் இரண்டாவது கொண்டுபோகல் ஆகாதன்றே: என்னை? சிறிது முன்னுகப்போனரன்றே: அக்கை [அவ்விடத்துப்] புடைபெயராமைப் போகின்றாரென்று உற்றார்பின்னின்று ஆராய்தலா னென்பது. பிற்றை ஞான்று - மறுநாள். நிலைபேற்றை - உடம்புவிட்டுநீங்காது உயிர்நிலைத்திருப்பதை. எடுக்கின்றமையின்-பலருமுரக்கக்கூறுவதனுல். அஃது-அடைதற்கரிய வளை எளியளாக்கி ஊரரலரெடுத்துக்கூறுதல். பற்றுக்கோடு-ஆதாரம். பலர் என்பதன்பின் முற்றும்மைவிகாரத்தால் தொக்கதென்க.

•

அலர்தூற்றுவரின்

எண்ணம் கருத்தவேண்டுமென்பதே யாதலால், அது உயிர்நிற்றற்குப்பற்றுக் கோடாதலறிந்தால் தூற்றுதொழிவரென் க.பாக்கியத்தாலென்பதன்பொருள், தெய்வத்தால் என்பது.

(க)

ககசஉ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

இதுவுமது.

(இ - ள்.) மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது - மலர்போலுங் கண்ணையுடையாளது எய்தற்கருமையறியாது,—இ வூர் அலர் எமக்கு ஈந்தது - இவ்வூர் (அவளையெளியளாக்கி அவளோடு) அலர்கூறலை எமக்கு உபகரித்தது; (எ - று.)

அருமை, அல்லகுறிப்பாட்டானும் இடையீடுகளானும் ஆயது. ஈந்ததென்றான், தனக்குப் பற்றுக்கோடாகலின். அலர்கூறுவாரை அவர்செய்த உதவிபற்றி 'இவ்வூர்' என்றான்.

(கு - ரை.) அல்லகுறிப்படுதலும் களவுப்புணர்ச்சிக்கு இடையீடேயாதலால், இடையீடுகளானும் என்பதற்கு -

தாய்துஞ்சாமை நாய்துஞ்சாமை
ஊர்துஞ்சாமை காவலர்கடுகுதல் நிலவுவெளிப்படுதல்
முதலிய வேறுஇடை
யூறுகளானும் என்க:இவை, வருந்தொழிற்கருமை
யெனப்படும். "அல்லகுறி
வருந்தொழிற்கருமையென்றாங்கு, எல்லிக்குறியிடை
யீடிருவகைத்தாகும்"
என்பதனுல், இரவுக்குறியிடையீடு
இருவகையதாதலறிக. அல்லகுறியில்
தாம் குறியிடத்துவந்துநின்றும் தலைவியும் தலைவனும்
தம்முட் சந்தியாமற்
போவரென்றும், வருந்தொழிற்கருமையில் குறியிடத்து
அவரதுவருகையே
நிகழாது என்றும் இவ்விரண்டற்கும் வேறுபாடு
உணர்க. ஈந்தது என்று
இழிந்தோர்க்கு மிக்கோர் உபகரித்ததாகக் கூறியது,
தன்னுயிரைத்தாங்குத
ற்கு அது பற்றுக்கோடாதலா லாகும். அலர்கூறுவாரை
இவ்வூர் என்றது -
மகிழ்ந்துகூறுவதாகும்: இது, சொல்லுவான்
குறிப்பினுற் கொண்ட கருத்து.

ககசரு. உறுஅதோ வூரறிந்த கௌவை
யதனைப்
பெறுஅது பெற்றன்ன நீர்த்து.

இதுவுமது.

(இ - ள்.) ஊர் அறிந்த கௌவை

உறாது ஓ-(எங்கட்குக் கூட்டமுண்மை)
இவ்வூரறிதலான் விளைந்த அலர் (எனக்கு)
உறுவதொன்றன்றோ! அதனை
பெறாது பெற்று அன்ன நீர்த்து - (அதுகேட்ட என்மனம்) அக்கூட்டத்தைப்
பெறாதிருந்தே பெற்றாற்போலும் நீர்மையையுடைத்து
ஆகலான்; (எ - று.)

பெற்றன்ன நீர்மை-பெற்றவழியுளதா மின்பம்போலுமின்பமுடைமை.

நீர்த்தென்பதற்கேற்ற மனமென்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது.

(கு - ரை.) உறுவதொன்றன்றோ-தக்கதொன்றன்றோ. பெற்றுஅன்ன-பெற்றால் (அதை) ஒத்த. நீர்த்துஎன்ற வினைமுற்றிற்குஎற்ப, 'என்மனம்' என்ற எழுவாய், வருவிக்கப்பட்டதென்க. (௩)



௧௧௪௪.

கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

இதுவுமது.

(இ - ள்.) காமம் கவ்வையால்
கவ்விது-(என்)காமம்(இவ்வூரெடுக்கின்ற),
அலரானே அலர்தலையுடைத்தாயிற்று; அது இன்று எல் -
அவ்வலரில்லையா யின், தன்மை இழந்து-தன்னியல்பிழந்து,
தவ்வென்னும்-சுருங்கும்; (எ-று.)

அலர்தல் - மேன்மேன் மிகுதல்.
செவ்வையுடையதனைச் செவ்விதென்
றாற்போல, கவ்வையுடையதனை 'கவ்விது' என்றார்.
இயல்பு - இன்பம்பயத்
தல். 'தவ்வென்னும்' என்பது குறிப்புமொழி; "நூல்கால்
யாத்த மாலைவெண்
குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" எ
ன்புழியும் அது.

(கு - ரை.) செவ்விதென்பதைச் செவ்வையென்றத
னடியாய்பிறந்த
தாகக்கொண்டனராதலால், செவ்வையென்பதனடியாகச்
செவ்விது என்ற
குறிப்புமுற்று வருதல்போல, கவ்வையென்பதனடியாகக்
கவ்விது என்ற
குறிப்புமுற்று வந்ததாகக்கூறினர். இப்போது அலருக்கு
இயல்பாவது-இன்
பம்பயத்தலாகுதல். தவ்வென்னுமென்பது,
சுருங்குதலைக்காட்டும் குறிப்பு
மொழி. "நூல்கால்யாத்த" என்னும் மேற்கோள்,
பத்துப்பாட்டினுள்ஒன்

ருகிய நெடுநல்வாடையில் 184, 185-வரிகளாக அமைந்தது: மேற்கோளின்

பொருள்:—நூல் - நூலாலே, கால் யாத்த - சட்டத்தைக் கட்டின, மாலே - முத்துமாலையையுடைய, வெண்குடை—,—தவ்வென்று-சுருங்கி, அசைஇ - அசைந்து, தாழ் துளி - பெய்கின்ற மழையை, மறைப்ப - மேல்விழவொட்டாது தடுக்கஎன்பது: (தவ்வென்று* என்பதற்கு - தவ்வென்று ஓசைப்பட்டு என்றுபொருள் கூறினர், நச்சினார்க்கினியர்.) என்புழியும் - என்ற இடத்தும்.

அது - தவ்வென்பது சுருங்குதலாகிய குறிப்பையுணர்த்துவது. (௫)

கககூரு. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

இதுவுமது.

(இ - ள்.) களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று - (கள்ளுண்பார்க்குக்) களிக்குந்தோறுங் கள்ளுண்டல் இனிதாமாறுபோல,—காமம் வெளிப்படுந் தோறும் இனிது - (எனக்குக்) காமம் அலராந்தோறும் இனிதாகாநின்றது.

வேட்கப்பட்டற்றாலென்பது, வேட்டற்றாலென நின்றது. வேட்கை

மிகுதியால் அலரும் இன்பஞ்செய்யாநின்றதென்பதாம்.

(கு - ரை.) வேட்ட - வேட்கப்பட்ட: செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினை. வேட்டஅற்று - வேட்கப்பட்ட [விரும்பப்பட்ட] அத் தன்மையது; வேட்டுஅற்றுஎன்று பிரிப்பினுமாம். வேட்கைமிகுதியால் - அவாவின் மிகுதியினால்.

(ரு)

கககரு. கண்டது மன்னு மொருநாள் அலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.



இடையீடுகளானும் அல்லதறியானுந் தலைமகனையெய்தப்பெறாத தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச்சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.

(இ - ள்.) கண்டது ஒருநாள் - (யான் காதலரைக்)கண்ணுறப்பெற்றது ஒருஞான்றே; அலர் திங்களை பாம்புகொண்டற்று - (அதனினாய) அலர் (அவ் வளவிற்றன்றித்) திங்களைப்

பாம்புகொண்டஅலர் போன்று உலகெங்கும் பரந்தது; (எ - று.)

காரியத்தைக் காரணமாக வுபசரித்து 'பாம்புகொண்டற்று' என்றாள்.

இருவழியும், மன்னும் உம்மையும் அசைநிலை.

காட்சியின்றியும் அலர்பரக் கின்றஇவ்வொழுக்கம் இனியாகாது, வரைந்துகோடல்வேண்டு மென்பதாம்.

(கு - ரை.) தலைமகனைத் தலைவி எய்தப்பெறுமைக்கு அல்லகுறியோ, அல்லதுவேறுஇடையீடோ, இவ்விரண்டில் ஒன்றுகாரணமாம். சிறைப்புறம்தோழி தலைவியர்க்குள் நிகழுஞ்செய்திகளைத் தலைவன் மறைந்தறிதற்கு அனுகூலமாய்க் காவல்மனைப்புறமாயுள்ள ஒதுக்கிடம். பாம்புகொள்ளுதல் - காரணம்: அதனால்தோன்றிய அலர் பரத்தல் - காரியம்: இங்கே, பாம்புகொண் டற்று என்பது பாம்புகொண்டதனாலான அலர் பரந்தாற்போலும் என்ற காரியத்தைத் தெரிவித்தலால், இது காரியத்தைக் காரணமாக உபசரித்த தாம். அலர் - பழிச்சொல். பூமியின் நிழல் சந்திரன்மீது சில காலத்துவிழுவ தனைப் பாம்புகொண்டதாகக்கூறுதல், புராணவழக்கு. இருவழியும்-கண்டது மன்னும் அலர்மன்னும் என்ற இரண்டிடத்தும். காட்சிஇன்றியும்-(தாம்)கண் ணுற்காணுதல் இல்லையாகவும். (௬)

ககசஎ. ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொல் னீராக நீளுமிந் நோய்.

வரைவுநீட ஆற்றளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானுதலறிந்த தோழி 'ஊரவரலரும் அன்னைசோல்லும் நோக்கி யாற்றல்வேண்டும்'எனச் சோல்லெடுப்பியவழி, அவள் சோல்லியது.

(இ - ள்.) இ நோய் - இக்காமநோயாகிய பயிர்,—ஊரவர் கௌவை எரு ஆக - இவ்வூரின்மகளிரெடுக்கின்ற அலர் எருவாக, அன்னை சொல் நீர் ஆக- (அதுகேட்டு) அன்னை(வெகுண்டு)சொல்லுகின்ற வெஞ்சொல் நீராக, நீளும்- வளராநின்றது; (எ - று.)

ஊரவரென்பது தொழிலான் ஆணொழித்துநின்றது. ஏகதேசவுருவகம். சுருங்குதற்கு ஏதுவாவன தாமே, விரிதற்கேதுவாகாநின்றன வென்பதாம். வரைவானுதல் பயன்.

(கு - ரை.) வரைவுநீட - தலைவன்வரைந்துகொள்வது காலதாமதப்பட. ஆற்றளாய - பொறுதவளான. சொல் எடுப்பியவழி - சொல்லை எடுத்தகுரலாற் கூறியபோது. 'ஊரவர்' என்பது-ஆண்பால் பெண்பால் என்ற இரண்டு பாற்கும் பொதுவாயினும், கௌவையெடுத்தலென்ற தொழில் மகளிர்க்கே யுரியதாதலால், ஆண்களையொழித்து மகளிரையே காட்டிற்று: ஒன்றொழி போதுச்சோல். ஊரவர்கௌவையை எருவாகவும், அன்னைசொல்லை நீராகவும் உருவகஞ்செய்ததற்கு ஏற்ப, காமநோயைப் பயிராக உருவகஞ்செய்யா



மையால், இது - ஏகதேசவுருவகமாகும்: ஊரவர்கௌவையினாலும் அன்னையின் வெஞ்சொல்லினாலும் என்காமநோய் சுருங்கவேண்டியிருக்க, அவை என்காமநோய்மிகுதற்கே காரணமாயின என்று, தன்கருத்தைச் சிறைப்புறத்தானாய தலைவன்கேட்கத் தலைவி கூறுகின்றாளென்க. இங்ஙனங் கூறுவதன் பயன், விரைவில் தலைமகன் வரைவானுதலென்பது. ஊரவர் கௌவை சிலநாள் நிகழும்: எருவும் சிலகால் இடப்படும்: நீர் அடிக்கடி பாய்ச்சப்படும்: அன்னை அடிக்கடி வெகுண்டு வெஞ்சொல் கூறுவள்: ஆதலால், ஊரவர் கௌவையை யெருவாகவும், அன்னைசொல்லை நீராகவும் உருவகஞ்செய்தன

ளன்க. "ஊரவர்கௌவையெருவிட்டு அன்னைசொ
ன்னீர்ப்படுத்து, ஈர நெல்வித்திமுளைத்தநெஞ்சப்பெருஞ்செய்
யுள்,பேரமர்காதல்கடல்புரையவிளைவித்த, காரமர்மேனி
நங்கண்ணன் தோழீகடியனே" என்ற நம்மாழ்வார்
பாசுரத்தில், இக்குறளின் சொல்லும் பொருளும்
அமைதலோடு பின்னும்
விஸ்தரித்துக் கூறப்பட்டிருத்தல் காண்க.

(எ)

கக௪௭. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற்
காம நுதுப்பே மெனல்.

கௌவையாற்

இதுவுமது.

(இ-ள்.) கௌவையால் காமம் நுதுப்பேம்
எனல்-(ஏதிலாரெடுக்கின்ற)
அலரால்(நாம்)காமத்தை யவித்து மென்று கருதுதல்,—நெய்யால் எரி நுதுப்பேம் என்ற அற்று-நெய்யாலெரியையவித்துமென்று கருதுதலோடொக்கும்.

மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன. கிளர்தற்காரணமாய அலரால், அவித்தல்கூடாதென்பதாம்.

(கு - ரை.) உவமை கிளர்த்தல்முடியுமேயன்றி அவித்தல்முடியாதென்பதை, விளக்கிற்று. நெய்யால் கௌவையால் என்ற இடங்களில் மூன்றனுருபுகள், கருவிப்பொருளனவென்க. (அ)

கக௪௮. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

வரைவிடைவைத்துப் பிரிவின்கணாற்றாளாய தலைமகள்,
அவன்வந்து சிறைப்புறத்தானாதலறிந்து 'அலரஞ்சியாற்றல் வேண்டும்'
என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) அஞ்சல் ஓம்பு என்றார் (தம்மை யெதிர்ப்பட்டஞான்று 'நின்னிற்பிரியேன்) அஞ்சலோம்பு' என்றவர் தாமே, பலர்நாண-(இன்றுகண்டார்)

பலரும் நாணும்வகை, நீத்தக்கடை - (நம்மைத்) துறந்தபின், அலர் நாண ஒல்வதூஉ-(நாம் ஏதிலார் கூறும்) அலருக்கு நாணக்கூடுமோ? கூடாது; (எ-று.)

நாணவென்னும் வினையெச்சம், ஒல்வதென்னுந்தொழிற்பெயருள் ஒல்லு தற்றொழிலோடு முடிந்தது. கண்டார் நாணுநிலைமையமாய யாம் நாணுதல் யாண்டையதென்பதாம்.

(கு - ரை.) வரைவிடைவைத்துப்பிரிவு -

வரைதலையிடையிலேயிட்டுப்,
பொருள்தேடும்நிமித்தம்பிரிந்த பிரிவு.
அலரஞ்சி யாற்றல்வேண்டுமென்று தோழி

தலைவிக்குக் கூறினாளென்க. எதிர்ப்பட்டஞான்று -
*—7

சந்தித்த அப்



போது. நின்னிற்பிரியேன் என்று தலைவன்கூறினான்:

இங்ஙனம் கூறுவது; பிரிவு என்பது ஒன்று உண்டு என்று தலைமகளுக்கு உணர்த்தவேண்டியென்பர்.

தஞ்சைவாணன் கோவை உரைகாரர் 'பிரியேன் என்னுங் கிளவியில் 'தரி யேன் நிற்பிரியினும்' என்று கூறியவா றென்னையெனின்,—இங்ஙனங் கூறா விடின், 'பிரிந்து வருகென்றல்' என்று அடுத்த கிளவி வருதலின், பிரியேனெ

ன்று முன்சொல்லி உடனே
பிரிந்துவருவேனெனக்கூறின், தலைவன் பொய்ய

னெனத் தோன்றித் தலைவியிறந்துபடும். அதனால், பிரியே னென்றவுடனே பிரிவையும் அறிவுறுத்திக்கூறினானென்பது' என்று கூறியது ஈண்டு நோக்குக.

கண்டார்பலருநாண - என்னிலையைக்கண்ட அருளுடையரான பலரும் மனமொடுங்கிநிற்க. அஞ்சலோம்பென்றார்-"நின்னிற்பிரியலெ னஞ்சலோம் பென்னும், நன்னர்மொழி" என்பது, கலித்தொகை. நீத்தக்கடை-எதிர்கால வினை யெச்சம். ஒல்வது என்பதை ஒன்றன்பால்முற்றாகக்கொள்ளாமல் வினை யாலணையும்பெயராகக்கொண்டனர் பரிமேலழகர். எதிர்காலவொன்றன்பால் முற்று செய்யுமென்னும் வாய்பாட்டால்தான் வரு மென்பது ஒருசாரார் கொள்கை யெனத் தோ ன்றுகின்றது. தொழிற்பெயரென்பது - தொழிலடி யாகப்பிறந்த பெயரென்ற காரணத்தால், வினையாலணையும்பெயரைக் காட் டும். நிலைமையமாய-நிலையையுடையோமாகிய. யாண்டையது-எங்கு உள்ளது? நாணுதல்நம்மிடத்து இல்லையென்றவாறு. (௧)

௧௧௫௦. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்

கௌவை யெடுக்குமிவ் வூர்.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.

(இ - ள்.) யாம் வேண்டும் கௌவை இ வூர் எடுக்கும் - (உடன்போகற் கேதுவாகனோக்கி)யாம்(பண்டே)விரும்புவதாய அலரை இவ்வூர் தானேயெடா

கின்றது: காதலர்தாம் வேண்டின் நல்குவர்
வேண்டியக்கால் (அதனை) இனிதின்நேர்வர்:

- இனிக் காதலர்தாமும் யாம்
(அதனால் இவ்வலர் நமக்கு நன்

ருய் வந்தது); (எ - று.)

எச்சவும்மை, விகாரத்தாற்றொக்கது. நங்கட்காதலுடைமையின் மறு றென்பதுதோன்றக்'காதலர்'என்றாள். இவ்விருபதுபாட்டும் புணர்தனிமித்தம்.

(கு - ரை.) உடன்போக்குநயப்ப - உடன்போக்கைவிரும்பும்படி. அலர் உடன்போக்குக்கு ஏதுவா மென்க. பண்டே - முன்பே. அதனை-அவ்வுடன் போக்கை. நேர்வர்-உடன்படுவர். தாம் என்பதனீற்றில் யாமேயன்றிக் காத லரும் என்ற பொருள் தரும் எதிரதுதழுவியஎச்சவும்மை விகாரத்தால்தொக்க தென்க. இங்கு 'காதலர்' என்பது - நமதுவேண்டுகோளை மறுமைக்கேற்ற பண்பையுடையவர் என்ற கருத்தைக் குறிப்பதனால்,கருத்துடையபடைகோளி யாம். இவ்விருபதுபாட்டு - "காமமுழந்து" என்பதுமுதலாகவுள்ள இருபது பாடல்கள். (௧௦)

அலரறிவுறுத்தல் முற்றிற்று.

களவியல் முற்றிற்று.

௧௧௬ - ஆம் அதிகாரம்.—பிரிவாற்றாமை

௫௧

இரண்டாவது

## கற்பியல்.

இனிக் கற்புப் பதினெட்டதிகாரத்தாற் கூறுவான்
ஹொடங்கி, முதற்
கட் பிரிவாற்றுமை கூறுகின்றார்.

(கு - ரை.) கீழ் ஏழதிகாரத்திற்
களவுப்புணர்ச்சியைப்பற்றிக் கூறிய
ஆசிரியர், இதுமுதற் பதினெட்டுஅதிகாரங்களால்
கற்பைப்பற்றிக் கூறு
கின்றாரென்க. அகப்பொருள், களவு கற்பு என்னும் இந்த
இரண்டு கைகோள்
களாக வுள்ளமை யறிக. கற்பியலென்பது -
கற்பைப்பற்றிய இயலென்று
விரியும். கற்பாவது-கொண்டானிற்சிறந்த தெய்வம் இன்று
எனவும் அவனை
இன்னவாறு வழிபடுக எனவும் இருமுதுகுரவர்
[பெற்றோர்] கற்பித்தலா
னும், அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் கடவுளர்
இவர்களிடத்து ஒழு
கும் ஒழுக்கத்தைத் தலைமகன் கற்பித்தலானும்,
வேதத்தினும் சடங்கினும்
விதித்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு
துறவறத்துச் செல்லுந்
துணையும் இல்லறம் நிகழ்த்துதலானும்,
கொண்டதலைவனை இன்னவாறு
பாதுகாப்பாயெனவும் அவற்கு நீஇன்னவாறு
குற்றேவல்செய்தொழுகு என

வும் அங்கியங்கடவுள் சான்றாக மந்திரவகையாற் கற்பிக்கப்படுதலானும்,கற்பு எனப்படுவதாயிற்றென்பர். "முற்படப்புணராத சொல்லின்மையிற், கற்பெனப்படுவது களவின்வழித்தே" என்று கூறுவதனால் இந்தக்கற்பு களவுப் புணர்ச்சிக்குப் பின்பு நிகழ்வதாகவே புலனெறிவழக்கம் [புலன் நெறி வழக்கம் - நூல் நெறிகளால் வழங்குவது] செய்யப்படுமென்று தெரிகின்றது. கற்பில் பெரும்பான்மை பிரிவே நூல்களிற் கூறப்படுவதனால், முதலிற் பிரிவாற்றாமையைப்பற்றிக் கூறுகின்றாரென்க.

## ககசு - ஆம் அதிகாரம் —பிரிவாற்றாமை

அஃதாவது-வரைந்தெய்தியபின் தலைமகன் அறம்பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினுந் தலைமகளைப் பிரிந்து செல்லும்; செல்லுஞான்று அப்பிரிவினை அவளாற்றாளாந் தன்மை. அஃது ஈண்டுப் பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழிகூறலும், அவடனக்குத் தலைமகடானே அவன்குறிப்பா னுணர்ந்துகூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்குந்தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலும் என நால்வகையாற் கூறப்படும்.

(கு - ரை.) பிரிவாற்றாமை யென்பது - பிரிவினை யாற்றாளாந்தன்மை யென்று பொருள்படும்: இரண்டாம்வேற்றுமைத் தொகை. வரைந்து எய்திய பின் - மணஞ்செய்துகொண்டு (தலைவியை) அடைந்தபின். ஓதற்பிரிவு காவற் பிரிவு பகைதணிவினைப்பிரிவு துணைவயிற்பிரிவு பொருள்வயிற்பிரிவு பரத்தையிற்பிரிவு என்ற கற்பில்நிகழும்பிரிவு ஆறனுள் முதலநான்கும் அறத்தின் பொருட்டும், பொருள்வயிற்பிரிவு - பொருளின்பொருட்டும், பரத்தையிற் பிரிவு-இன்பத்தின்பொருட்டும் நிகழ்வனவாம். பொருளின்பொருட்டுப் பிரி



தல் - தான் தேடிய பொருளைக்கொண்டு இல்லறம் நடத்துதலே உத்தமமாதலாலென்க. 'இன்பத்தின் பொருட்டுப் பரத்தைவயிற்பிரிதல்-தலைமகளை

வரைந்தெய்தியபின்னர் வைகலும் பாலே நுகர்வான் இடையே புளிங்காடியையும் நுகர்ந்து அதனினிமையை யறிந்தாற்போல அவள்நுகர்ச்சி யினிமை அறிதற்குப் புறப்பெண்டிர்மாட்டுப் பிரியாநிற்றல்: அல்லதூஉம், பண்ணும் பாடலும் முதலாயினகாட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால், தான் எல்லார்க்குந் தலைவனாதலின் அவர்க்கும் இன்பஞ்செய்யப் பிரியாநிற்றலென்றுமாம்' என்பர் பேராசிரியர். 'பரத்தையிற்பிரிவு என்பது தலைவன் பரத்தையின்மேற் காதலாய்த் தலைவியைப்பிரிந்து பரத்தையர்சேரியிற் போதல்: பரத்தையிற் பிரிவு என்று ஓதவே, "பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின், மாண்டவறிவினவர்" என்பதனால் தலைவன் அறிவிலனும்: தலைவியிடத்து அன்பும் இலனும்: பெருமையும் இலனும்: பட்டியுமாம் எனின்,—அற்றன்று; அரசுரிமையனாதலின், அவ்வரசுரிமைக்குப் பரத்தையரினும் வரைதற்குரியராய்த் தொன்றுதொட்டு நடக்கும் முறைமையராயும் வரையாத உரிமையராய்ச் சேரியின்கணுறைவாரு மாகி அவரும் பிறந்த ஞான்று தொட்டு இவற்கு என வரித்திருக்கப் படுதலானும், அவரைநீக்குதல் தகுதியின்மையானும், பரத்தையிற்பிரிதல் குற்றம் அன்று எனக் கொள்க. அன்றியும் காலைக்கடன்கழித்தலும், உலகத்திருந்து நாடுகாவற்றொழில் செலுத்தலும், விருந்துடன் அடிசில் கைதொடலும், நாவலரோடு கல்விபயிறலும், ஆடல்பாடல்களிற் களித்தலும், மடவாரோடு கூடலும், துயிறலும், துயிலுணர்ந்து தேவர்ப்பராவலுமாகிய காலவரையறை யெட்டினுள் ஆடல்பாடற் காலம் ஒன்று ஆதலானும், அதற்குரியர் பரத்தையராதலானும், அதற்குரிய காலத்தில் அவரிடத்தில் மனஞ்செல்லுதல் இயல்பு ஆதலானும், பரத்தையிற் பிரிதலாற் குற்றமின்று எனக் கொள்க. ஆயின், பரத்தையர்சேரியிற் செல்லுமாறு என்னையெனின்,—அவர்பலரோடும் விளையாடற்பொருட்டும், அவருட் புணர்தற்குஉரியாரைப் புணர்தற்பொருட்டும் பரத்தையர்சேரியிற் செல்லுமென்றுணர்க', 'புறத்தொழுக்கு என்பதற்குப் பொருள் - பரத்தையரிடத்து ஒழுகும் ஒழுக்கம்.......வடநூலார் புறத்தைப் பரமென்று கூறுவராதலால, பரத்தையரென்னுஞ் சொற்குப் புறமுடையவரென்னும் பொருள்கூற நின்றவாறு உணர்க. புறமுடைய ரென்பது என்னையெனின், இவரின்பம் இன்பமன்று என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் வரைவின்மகளிர் என்னும் அதிகாரத்தால் இன்பத்திற்குப் புறம் இவரின்பமென்று கூறியவாற்றானுணர்க' என்று தஞ்சைவாணனுரைகாரர்கூறியனவும் இங்குக் காணத்தக்

கனு. சேயிடை-வெகுதூரம்: ஆயிடை - அவ்விடம்: அண்மையான இடம். அறம்பொருள்களின் பொருட்டுப் பிரிவது சேயிடையென்றும், இன்பம் பொருட்டுப் பிரிவது ஆயிடையென்றும் கொள்க. இவை பிரிந்தபின்செல்லுமிடத்தைக்காட்டும். செல்லுஞான்று - செல்லும்போது. அவடனக்கு - தோழிக்கு.

## ககசு - ஆம்

## அதிகாரம்.—பிரிவாற்றுமை ருரு

ககருக. செல்லாமை யுண்டேல் லெனக்குரை மற்றுநின்

வல்வரவு வாழ்வார்க் குரை.

'பிரிந்து கடிதின்வருவல்'

என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

(இ-ள்.) செல்லாமை உண்டு ஏல்-(நீ) எம்மைப் பிரியாமையுண்டாயின்,

(அதனை), எனக்கு உரை - எனக்குச்சொல்: மற்று - அஃதொழிய, நின் வல் வரவு-(பிரிந்துபோய்) நின்விரைந்து வருதல், (சொல்வையாயின்),(அதனை), வாழ்வார்க்கு உரை - (அப்பொழுது) உயிர்வாழ்வார்க்குச் சொல்; (எ - று.)

தலைமகளையொழித்து 'எனக்கு'என்றாள், 'தான் அவள்'என்னும் வேற்று
மையின்மையின். அக்காலமெல்லாம் ஆற்றியிருந்து அவ்வரவு காணவல்லளல்லள்: பிரிந்தபொழுதே இறந்துபடு மென்பதாம். அழுங்குவித்தல், பயன். இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைப்பாரு முளர்.

(கு-ரை.) செல்லாமை-(பிரிந்து) போகாமை: எனவே, பிரியாமையாம். வல்வரவு - விரைந்து (மீண்டு) வருகை. தலைமகளுக்கு என்ன வேண்டிய இடத்து 'தான் அவள்' என்ற வேறுபாடுஇல்லாமல் கூறுவது தோழிக்கு இயல்பு ஆதலால், தலைமகளுக்கு என்னாது 'எனக்கு என்றாள்' என்றார்: 'தலைவரும் விழுமநிலையெடுத்துரைப்பினும்,......ஒன்றித்தோன்றுந தோழி மேன'' என்ற இலக்கணம்பற்றிவந்தது, இது. அக்காலம் எல்லாம் - நீ பிரிந்துசென்றிருக்கப் போகும் அந்தக்காலவரையறை முழுதும். அவ்வரவு - தலைமகனை நீ மீண்டுவரும் அவ்வருகை. வாழ்வார்க்கு என்றமையால் இவள் அத்துணைக்காலம் வாழ்ந்திருக்கமாட்டாளென்ற கருத்துத்தொனிக்கு மென்பார், பிரிந்தபொழுதேயிறந்துபடு மென்பதாமென்று கருத்துக்கூறினர். இந்தக்குறளில், தலைவன் பொருளீட்டச் சென்று விரைவில் மீண்டு வருவேனென்றபோது நீ செல்லவேண்டா என்று வெளிப்படையாக மறுத்துச் சொல்லாமல், 'வல்வரவுவாழ்வார்க்குரை' என்று உடன்பாட்டுவினைமூலமாகப் பெறவைத்தது - விலக்கணி யாகும்: தண்டியாசிரியர் முன்னவிலக்கணியிற்கூறிய நால்வகை விலக்கில், இதனைக் காரியவிலக்கு என்னலாம். வடநூலார் ஆட்சேபாலங்கார மென்பர். இம்மன்குறிப்பாற் கூறுதற்குப் பயன், தலைவன் செயலை அழுங்குவித்தல் [விலக்குதல்] ஆகும்: பிரிந்தால், தலைவி யிறப்பாள் என்பதை ''எந்நாளோ நெடுந்தகாய்நீசெல்வது, அந்நாள் கொண்டிறக்குமிவ ளரும்பெறலுயிரே'' என்ற கலித்தொகையடிகள் கூறுவதுங் காண்க. தலைமகளின் கூற்று [பேச்சு] ஆக்கி உரைத்தலும் உண்டு என்க.(க)

கக௫உ. இன்க ணுடைத்தவர் பார்வல்

பிரிவஞ்சும்

புன்க ணுடைத்தாற் புணர்வு.

பிரிவு தலைமகன்குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) அவர் பார்வல் - (தழையுங்கண்ணியுங்கொண்டு பின்னின்ற ஞான்று) அவர்நோக்குமாத்திரமும், இன்கண் உடைத்து - (புணர்ச்சி குறித் தமையான் நமக்கு) இன்பமுடைத்தாயிருக்கும்; புணர்வு - (இன்று அப்



புணர்ச்சிதான் நிகழாநிற்கவும்) அது, பிரிவு அஞ்சும் புன்கண் உடைத்து -

பிரிவரென்றஞ்சும்

அச்சத்தினையுடைத்தாயிற்று:(அவரன்பின்நிலைமை இது).

பார்வலென்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது

புன்கணென்னுங் காரியப்பெயர்,

காரணத்தின்மேலாயிற்று. அவ்வச்சத்தினை

யுடைத்தாதலாவது - ''முள்ளுறழ் மூளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்

ளினு மகிழ்செயு மெனவுரைத்து மமையாரென்,

ஒளிழை திருத்து''ம்
பண்டையிற் சிறப்பால், அவன் பிரிதற்குறிப்புக்காட்டி
அச்சஞ்செய்தலுடை
மை. அழுங்குவித்தல், பயன்.
(கு - ரை.) தழை - இலைதளிர்
முதலியவற்றாலியன்ற உடை விசேடம்.
கண்ணி-முடிமாலை.
அவர்நோக்கு-அந்தத்தலைவரின்பார்வை. பின் புணர்வு
என வருவதனால், முதலிலுள்ள பார்வல் என்பது -
தழையும் கண்ணியுங்
கொண்டு தன்குறைதோன்றப் பின்னின்ற பின்னிலைக்
காலத்துப்பார்வை
யைக் காட்டும். பிரிவச்சந்தோன்றுங் காலத்து
மலர்ந்தநோக்கமின்றிக் கண்
கள் புல்லியவாய்க் காணப்படுமாதலால், புன்கண் -
காரியப்பெயர்: அது,
புல்லியவாய்க் கண்கள் தோன்றக் காரணமான அச்சத்தைக் காட்டிற்று:
ஆகவே, காரியப்பெயர் காரணத்தைக் காட்டிய உபசாரவழக்கின்பாற்படும்.
''முள்ளுறழ்''என்று தொடங்கும் அடிகள், கலித்தொகையில் பாலைக்கலி -
௩ - ஆம் பாடலிலுள்ளது:
இதன்பொருள்:—(காதலர்),—முள் உறழ் - முள்
ளோடுமாறுபடுகின்ற முனையினையுடைய, முளை எயிறு - (நாணலின்) முளை
போலும் பற்களிடத்து, ஊறும்-(விடாமல்) சுரக்கின்ற, அமிழ்து - அமிருதம்
போலும், தீ நீரை-இனிய நீரைக்குறித்து, கள்ளின் உம் மகிழ்செயும் என
உரைத்து உம்-(இதைப்பருகினல் இது)கள்ளைக்காட்டிலும் மகிழ்ச்சியைத்
தரும் என்று சொல்லியும், அமையார் ஆய் - வேட்கைதணியப்பெறாதவராய்,
—என் ஒள் இழை திருத்தும் - என்னுடைய ஒள்ளிய பூண்கள் நிலைகுலைந்த
வற்றைப் பழையநிலைகளிலே கிடக்கும்படி திருத்துகின்ற என்பது. பண்டை

யின் சிறப்பால் - முன்னிருந்த நிலைமையினும் (அன்பு) மேம்பட்டுள்ளதனல். முன்னிருந்ததை விடமிக்கு அன்புகாட்டினுனுமின் அது வேறு ஒருகருத்தைக் கொண்டதாகி, பிரிதலைக்குறிப்பித்துத் தலைவிக்கு அச்சஞ்செய்யு மென்க. பண்டையில்சிறப்பால் என்றபாடத்துக்கு - முன்புஇல்லாத சிறந்த தன்மையினுல் என்க. (ஊ)

ககருரு. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

இதுவுமது.

(இ - ள்.) அறிவு உடையார் கண் உம்-(பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரிவாற்ருமையும்) அறிதலுடையராய காதலர்கண்ணும், ஓர் இடத்து பிரிவு உண்மையான் - ஓரோவழிப் பிரிவு நிகழ்தலான்,—தேற்றம் - (அவர் சொல்லும் தலையளியும் பற்றி நம்மாட்டுஅன்புடையரெனத் தேறும்) தேற்றம், அரிது - அரிதாயிருந்தது; (எ - று.)



அரோ - அசைநிலை. உம்மை - உயர்வுசிறப்பின்கண் வந்தது.

(கு - ரை.) அறிவுடையாரென்றது - காதலரை.
அறிவு - அறிதல்:
இது செயப்படுபொருளை வேண்டியிருத்தலால், பிரியேனென்ற தஞ்சொல்லையும் நமக்குள்ள பிரிவுபொறுக்கமாட்டாமைக் குணத்தையும் என்ற செயப்படு பொருள் வருவித்துக்கொண்டார். நம்முடைய நிலையையும் அறிந்து பிரியே
னென்று தாமும்
சொல்லியிருந்தும் இப்போது அவர்பிரிவரென்பது குறிப்

பாற் பெறப்படுதலால், அவரை நம்மிடத்து அன்புடையவரென்று நம்புவது கூடாததாயிருக்கின்றதென்கின்றாள் தலைவியென்க. தலையளி - உத்தமமான அன்பு: முகமலர்ந்து இனியன கூறவல்ல அன்பு. (ரு)

கக௫௪. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

இதுவுமது.

(இ - ள்.) அளித்து - (எதிர்ப்பட்டஞான்றே) தலையளிசெய்து, அஞ்சல் என்றவர் - (நின்னிற்பிரியேன்) அஞ்சலென்றவர்தாமே, நீப்பின்-பின் பிரிவராயின், (அவர்க்கன்றி), தெளித்த சொல்-(அவர்)தெளிவித்தசொல்லை, தேறியார்க்கு - (மெய்யெனத்)தெளிந்தார்க்கு, தவறு உண்டோ - குற்றமுண்டோ? (எ - று.)

தேறியாரென்பது - தன்னைப் பிறர்போற் கூறல். சொல்லுஞ் செயலு மொவ்வாமைக்குற்றம், அவர்க்கு எய்தும்: அஃது எய்தாவகை யழுங்குவி யென்பது கருத்து.

(கு - ரை.) எதிர்ப்பட்டஞான்றே - எதிர்ப்பட்ட அப்போதே. "நின்னிற் பிரியலெனஞ்சலோம்பென்னும், நன்னர்மொழியும்" என்பது கலித்தொகை. பிரியேனென்று சொன்னவர் பிரிந்தால், பிரிந்தவர்மீது குற்றம் நிற்குமேயன்றி அவர்சொல்லை நம்பியவர்க்குக் குற்றமில்லை யென்க. தேறியேற்கு எனத் தன்மையிடத்தாற் சொல்லவேண்டியிருக்க, தேறியார்க்கு என்று படர்க்கையாற்கூறியதனுல், தன்னைப் பிறர்போற் கூறுதலென்றார். தேறியார்க் குண்டோ தவறு என்ற வினு, 'அவர் சொல்லியசொல்லும் அவர் செய்கையும் ஒன்றோடொன்று ஒவ்வாதுமாறுபடுகின்ற குற்றம் அவர்க்கு வந்திடுமாதலால், அக்குற்றம் அவரைச் சேர்ந்திடாது: அவரைச் செலவழுங்

குவி' என்று, தோழியினிடம் தலைவி கூறியதாகக் கருத்துக் காண்க. (௪)

௧௧௫௫. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

இதுவுமது.

(இ - ள்.) ஓம்பின்-(என்னுயிரைச் செல்லாமற்)காத்தியாயின், அமைந்தார்-(அதனையாளுதற்கு)அமைந்தாருடைய, பிரிவு-செலவினை, ஓம்பல்-அழுங்குவிப்பாயாக; மற்று அவர் நீங்கின்-அழுங்குவிப்பாரின்றி அவர்செல்வராயின், (அவராலாளப்பட்டவுயிருஞ் செல்லும்; சென்றால் பின்), புணர்வு அரிது - (அவரைக்) கூடுதல் (எனக்கு) அரிதாம்; (எ - று.)





ஆளுதற்கமைதல் - இறைவராதற்குத் தெய்வத்தாலேற்புடையராதல் மற்று - வினைமாற்றின்கண் வந்தது.

(கு - ரை.) அழுங்குவிப்பாயாக - விலக்குவாயாக. இறைவராதற்கு - தலைவராதற்கு. மற்று என்பது - அழுங்குவிப்பதற்குமாறாக நிகழும் நீங்குதற்றொழிலைப்பற்றிச் சொல்லும்போது வந்ததனால், வினைமாற்றும். (௫)

௧௧௫௬. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்துசொல்லிய தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்.) அவர்-(நம்களவுக்கடுமையறிந்த) தலைவர்தாமே, (நம்முனின்று), பிரிவு - தம்பிரிவினை, உரைக்கும் - உணர்த்தும், வன்கண்ணர் ஆயின்-வன்கண்மையுடையராயின்,—(அத்தன்மையார் பின்பு நம்மாற்றாமையறிந்து வந்து), நல்குவர் என்னும் நசை-தலையளிசெய்வரென்றிருக்கு மாசை, அரிது-

விடப்படும்; (எ - று.)

அருமை - பயன்படுதலில்லாமை.

கூடியிருந்தே அன்பின்றிப் பிரி
வெண்ணுதலும் உணர்த்தலும்
வல்லராயினர் பிரிந்துபோய் அன்புடையராய்
நம்மை நினைத்துவந்துநல்குதல் யாண்டைய
பயன்.
தென்பதாம். அழுங்குவித்தல்,

(கு - ரை.) கவவுக்கடுமை - விருப்பத்தின்முதிர்வு.
முயக்கத்தின்கண்
ஊற்றம் என்றலும் உண்டு. தலையளி - மிக்க அன்பு.
வன்கண்மை-கொடுமை.

'அருமை' என்று எடுத்தது - 'அரிது' என்று வந்துள்ள குறிப்புமுற்றின் பகுதியாகும்: இதன்பொருள், பயன்படுதலின்மையென்பது: எனவே, நல்குவரென்னும் நசைஅரிது - நல்குவரென்று அவரைப்பற்றி எதிர்பார்த்திருப்பது பயனின்று என்றவாறு. கூடியிருக்கும்போதே பிரிவுகருதி அதனையுணர்த்துதற்கும் ஏற்ற மனவலிமைபடைத்தவர் பிரிந்தபின்பு அன்புகொண்டு நம்மை நினைந்து மீண்டுவந்து அருள்புரிவரென்று கருதுவதிற் பயனில்லை யென்க. நல்குதல் - அருள்செய்தல். யாண்டையது - எங்கேயுள்ளது? இல்லையென்றபடி. (சு)

கக௫எ. துறைவன் றுறந்தமை தூற்றுகொன் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

இதுவுமது.

(இ - ள்.) துறைவன்—, துறந்தமை-(என்னைப்) பிரியலுற்றமையை, (அவனுணர்த்தாமல் தாமேயுணர்ந்து), முன் கை இறை - (என்) முன்கையினிறையினின்றும், இறவாநின்ற வளை - கழலாநின்ற வளைகள், (எனக்கு),

னூற்றுகொல்-அறிவியாவோ? (அவனுணர்த்தவுணர்ந்தவந்து நீ யறிவித்தல் வேண்டுமோ?) (எ - று.)

முன்னேநிகழ்ந்தமையின் 'துறந்தமை'என்றும், கேட்ட துணையான் மெலிந்து ஆற்றாமையின் 'இறவாநின்ற' என்றும் கூறினாள். அழுங்குவித்து

## கஙஎ - ஆம் அதிகாரம்.—பிரிவாற்றாமை

ருஎ

வந்து கூறற்பாலையல்லையாய நீயும் இவ்வளைகள் செய்தனவேசெய்தாயெனப் புலந்து கூறியவாறு.

(கு - ரை.) துறைவன் கடல்துறைக்குஉரியவன்: இது,நெய்தனிலத்துத்தலைவனைக் காட்டும். இது இரங்கற்பொருளதாதலால், 'துறைவன்' என்றது. இறை - முன்னங்கையில் வளையல்தங்கும் இடம். கைவளை கழலுதற்குமுன் தலைவர் தன்னைவிட்டு நீங்குவது நிகழ்தலால், 'துறந்தமை' என்று இறந்தகாலத்தாற் கூறியது. கேட்ட துணையான் - தலைவனுடைய பிரிவைக் கேட்டஅளவாலே, செலவழுங்குவித்து வந்து கூறற்பாலை அல்லையாய நீ - தலைமகனைச் செலவழுங்குவித்தல் செய்யவேண்டுமேதவிர, அவன்செல்வதாகக்கூறியதை இங்குவந்து கூறத்தக்கவளல்லையாகிய நீ என்று தலைவி

தோழியைப் பார்த்துக் கூறுகின்றாள். தலைவன்
பிரிவுணர்த்தினால் அவனைச்
செலவழுங்குவியாது என்வளைகள்
என்முன்னங்கையைவிட்டு நீங்குதல்
மூலமாக அவன் பிரிவை யுணர்த்துகின்றன:
அதுபோலத்தான் நீயுஞ் செய்தா
யென்று தலைவி பாங்கியின்மீது பிணக்கந்தோன்றக்
கூறுகின்றாள். (எ)

கஅருஅ. இன்னா தினனில்லூர் வாழ்த
லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.
இதுவுமது.

(இ-ள்.) இனன் இல் ஊர் வாழ்தல்-(மகளிர்க்குத்
தங்குறிப்பு அறியுந்)
தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்தல்,
இன்னாது—; (அதன்மேலும்),
இனியார் பிரிவு-(தங்) காதலரைப்பிரிதல், அதனினும்
இன்னாது—; (எ-று.)
தலைவன் செலவினையழுங்குவித்து வாராது
உடன்பட்டுவந்தமைபற்றிப்
புலக்கின்றாளாகலின், 'இனனில்லூர்'என்றாள்.
உலகியல் கூறுவாள்போன்று
தனக்கு அவ்விரண்டு முண்மை கூறியவாறு.

(கு - ரை.) செலவினை அழுங்குவித்து -
செல்லுவனைத்விலக்கி. உடம்

பட்டு-பிரிதற்கு இணங்கி. இனன்-இனமாயிருப்பவர்: குறிப்பறிந்து தொழில்
புரிபவர். அவ்விரண்டும் - இனனில்லூர் வாழ்தலாலாகிய இன்னுமை,
இனியார்ப்பிரிதலாலாகிய இன்னுமை.

(அ)

கக௫௯. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

'காமம் தீயேபோன்று தான்நின்றவிடத்தைச் சுடுமாகலான் நீயாற்றல்வேண்டும்'என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) தீ—, தொடின் சுடின் (சுடல்) அல்லது - (தன்னைத்) தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது, காமம் நோய்போல - காமமாகியநோய்போல,
விடின்-(தன்னை) அகன்றால், சுடல் ஆற்றும் ஓ - (தப்பாது) சுடுதலை வற்றோ?
[மாட்டாது;] (எ - று.)

சுடுமாயினென்பது, மந்திரமருந்துகளால் தம்பிக்கப்படாதாயி னென்ற
வாறு. காமத்திற்கு அதுவுமில்லையென்பாள், வாளா
* 2
'சுடல்'என்றாள். அகறல்-



நுகராமை. சுடலென்பது முன்னும் கூட்டப்பட்டது.

தீயினுங்கொடியதனை
யான் ஆற்றுமாறென்னை யென்பதாம்.

(கு - ரை.) சுடுதலை வற்றோ - சுடுதற்கு ஏற்ற வல்லமையுடையதோ? என்றபடி. தொடினல்லது என்றாலே போதுமாயிருக்க, தொடிற் சுடினல்லது என்றுகூறியது - சுடுவதானுற் சுடுமென்ற கருத்தது என்றார்; சுடுமாயின்என்று சுடுதலைப்பற்றி ஐயப்படவேண்டிய காரணம், தீ மந்திரத்தாலும், மருந்துகளாலும் சுடாமல் தடுக்கப்படுதலுண்டு என்பதாகும். தம்பிக்கப்படாதாயின் - தடுக்கப்படாதாயின். அதுவும்-மந்திரமருந்துகளால் தம்பிக்கச்செய்தலும். அகறல் என்பது 'விடின்' என்பதன் பகுதியாகிய விடு என்பதன் பொருளாகும்; இங்கே, விடுதல் - நுகராதிருத்தல் என்பது. இரண்டாம் அடியிலுள்ள சுடல்என்பது, முதலடியிலும் 'சுடின் சுடல் அல்லது' என்று கூட்டப்பட்டது. "நீங்கிற்றெறூஉம்...தீ" என்று கீழேகூறியிருத்தலும் காண்க. விடிற்சுடுந்தன்மையதாதலால், காமத்தைத் தீயினும் கொடியது என்றது. ஆற்றுமாறு - பொறுக்கும் விதம்.

(௯)

௧௧௯௦.

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

'தலைவியர்பலரும் பிரிவாற்றியிருப்பர்: அது நீ செய்கின்றிலை' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) (நீ சொல்லுகின்றதொக்கும்): அரிது ஆற்றி-பிரிவுணர்த்திய வழி அதற்கு உடம்பட்டு, (பிரியுங்கால்

நிகழும்); அல்லல் நோய் - அல்லல் நோயினையும், நீக்கி—, பிரிவு ஆற்றி-(பிரிந்தால்) அப்பிரிவுதன்னையும்ஆற்றி, பின் இருந்து-பின்னுமிருந்து, வாழ்வார்-உயிர்வாழும் மகளிர், பலர் - (உலகத்துப்) பலர்; (எ - று.)

பண்டையிற்சிறப்பத் தலையளிபெற்று இன்புறுகின்ற எல்லைக்கண்ணே அஃதுஇழந்துதுன்புறுதற்குஉடம்படுதல் அரியதொன்றாகலின் அரியதனைச் செய்தேன்றும், செல்லுந்தேயத்து அவர்க்குயாது நிகழுமென்றும், வருந்துணையும் யாமாற்றியிருக்குமாறென்னென்றும், அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்தெய்துமென்றும், இவ்வாற்றானிகழுங் கவலை மனத்து நீங்காதாகலான் 'அல்லனோய் நீக்கி' என்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழுங் காமவேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்றலென்றிவைமுதலாக வந்து அதனை வளர்ப்பனவும் ஆற்றல் அரியவாகலின் 'பிரிவாற்றி' என்றும், தங் காதலரை இன்றியமையா மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னு மிருந்து உயிர்வாழ்வார் ஒருவருமில்லையென்பது குறிப்பாற்றோன்ற 'பின் னிருந்துவாழ்வார்பலர்' என்றுங் கூறினாள். அரிதென்பது-வினைக்குறிப்புப் பெயர். பிரிவின்கணிகழ்வனவற்றைப் பிரிவென்றாள். செய்து, நீக்கி, ஆற்றி யென்பன - ஓசைவகையான், அவ்வவற்றதருமை புணர நின்றன. சிறப் பும்மை, விகாரத்தாற்றொக்கது. யானும் இறந்துபடுவலென்பது கருத்து.

(கு-ரை.) நீ சொல்லுகின்ற தொக்கும் என்பது,

பாதியுடன்பாட்டைத் தெரிவிப்பதென்று முன்னரே எழுதப்பட்டது. பிரிவுணர்த்தியவழி அதற்கு

ககள் - ஆம்

அதிகாரம்.—படர்மெலிந்திரங்கல் ருக

உடன்பட்டு என்பது - அரிதாற்றி என்பதன் பொருள். உடன்பட்டு - சம்ம

தித்து. அல்லல்நோய் - கவலையையுண்டாக்கும் மனைவியாதி. பண்டையிற்

சிறப்ப - முன்னினும் மிகுதியாக. தலையளி - தலைமகனுடைய உத்தமமான

அன்பு. இன்புறுகின்ற-இன்பத்தைப்பெறுகின்ற. எல்லைக்கண்-காலத்திலே.

அஃது-இன்பத்தையனுபவித்தலை. அல்லல்நோயை விளைப்பது - 'செல்லுந்

தேயத்து' என்று தொடங்கி 'மனத்து நீங்காதாகலான்' என்பதுவரையில்.

செல்லுந்தேயத்து-(பிரிந்ததலைவர்) செல்லுகின்றதேசத்திலே. அவர்க்கு யாது

நிகழும் - அத்தலைவர்க்கு என்னநேருமோ? வருந்துணையும் - தலைவர் மீண்டு

வரும் வரையும். ஆற்றியிருக்கும் ஆறு - பிரிவுத்துன்பத்தைப் பொறுத்

திருக்கும்வகை. அவ்வரவு - தலைவர் மீண்டுவருகை.

பிரிந்தோர்க்கு அகத்துக்
காமவேதனையும்,புறத்தே மதிமுதலிய
காமோத்தீபகப்பொருள்கள் செய்வன
வும்,ஆற்ற அரியன என்க: ஆதலால், அவற்றை யாற்றுத
லரியன என்பார்
'பிரிவாற்றி' என்றாரென்க. முதலாகஎன்பதனால்,
மாலைக்காலம் கடலோசை
முதலியனகொள்க.
("தென்றற்கும் வீணைக்கும் சேமணிக்குங் கோகிலத்துக்,
கன்றிற்கமைக்காழிக்கம்புலிக்கு—நின்றாற்றும், அன்
னைக்கு மாரற்கயர்ந்தா
ளென்றன்னமே, யென்னைக்குமாரற்கியம்பு" என்ற
இரத்தினச்சுருக்கம்
இங்குக் காணத்தக்கது.) அதனை - காமத்தை.
இன்றியமையா - பிரிந்திருக்க
மாட்டாத என்றபடி. வினைக்குறிப்புப் பெயர் - குறிப்பு
வினையாலணையும்
பெயர். "பிரிவாற்றி" என்ற இடத்து பிரிவு என்பது -
பிரிவில் அகத்து நிக
ழும் காமவேதனையையும், புறத்தே துன்புறுத்தும்
தென்றல் முதலியன
வற்றையும் காட்டுதலால், தொழிலாகுபெயர். அரிது
ஆற்றி என்பதற்கு -
அரியவற்றைச் செய்து என்று பொருளாதலால், ஆற்றி
யென்பதற்குப் பதி

லாக, செய்து என்றார். ஆற்றி நீக்கி ஆற்றிஎன்பன ஓசைவேறுபாட்டால்,

ஆற்றுதல் முதலியவை செய்தற்கு அரியன என்ற பொருளை யுணர்த்தின.

'வாழ்வார்பலர்'என்ற தொடரும், ஓசைவேறுபாட்டால், ஒருவருமில்லை

யென்ற பொருளைக் குறிப்பிக்கும். பிரிவு என்பதற்குப்பின், அது மிகவும்

ஆற்றுதற்கு அரியது என்னும் உயர்வுசிறப்புப்பொருளைத்தரவல்ல உயர்வு

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

(௧0)

## ௧௧௭ - ஆம்

## அதிகாரம்.—படர்மெலிந்திரங்கல்.

அது படரான்மெலிந்திரங்கலென விரியும். அஃதாவது - பிரிவாற்று

ளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின் அந்

நினைவான் மெலிந்திரங்குதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு-ரை.) படர் - துன்பம்: இங்குத் துன்பத்தை எப்பொழுதும்நினைத்த

லென்ற பொருளது. பிரிவாற்றாமை கூறியபின்,

அப்பிரிவாற்றாத துன்பத்
திணைநினைந்து மெலிந்திரங்குவதைக் கூறுகின்றாரென்று அதிகாரமுறைமை
யையுணர்க.

௧௧௬௧. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.



## காமநோயை வெளிப்படுத்தல்

நின்நாணுக்கேலாதென்ற
தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) நோயை யான் மறைப்பேன் - இந்நோயை(ப்பிறரறிதலஞ்சி)
யான் மறையாநின்றேன்; (நிற்பவும்), இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர்
போல மிகும்-இஃது(அந்நாண்வரை நில்லாது நீர் வேண்டுமென்று)இறைப்ப
வர்க்கு ஊற்றுநீர்மிகுமாறுபோல் மிகாநின்றது; (எ - று.)

'அம்மறைத்தலாற் பயனென்?' என்பதுபட நின்றமையின், 'மன்' ஒழி
யிசைக்கண் வந்தது. "இஃதோ செல்வர்க்கொத்தனென்யான்" என்புழிப்
போல ஈண்டுச் சுட்டுப்பெயரீறு திரிந்துநின்றது.

இஃதோர் நோயையென்று
பாடமோதுவாருமுளர்; அது பாடமன்மை யறிக. இனி, அதற்கடுத்தது நீ
செயல்வேண்டு மென்பதாம்.

(கு - ரை.) அறிதனுணி - அறிதற்குக்கூசி. நாண்வரை-நாணின் எல்லை
யில். நில்லாது - அடங்கி நில்லாமல். இறைக்க இறைக்க ஊற்று நீர் சுரப்
பது போல மறைக்கமறைக்கக் காமநோய் மேன்மேலுந் தோன்றுமென்ற
வாறு. மன் என்பது - (மேன்மேன்மிகுதலால்) மறைப்பதிற் பயனில்லை
யென்னும் பொருளைத் தருதலால், ஒழியிசைப்பொருளது. "இஃதோ செல்
வர்க்கொத்தனென்யான்" என்ற மேற்கோளுள்ள இடம், விளங்கவில்லை.
இஃதென்னுஞ் சுட்டுப்பெயர் இஃதோ என்று திரிந்துவருதற்கு மேற்கோள்
காட்டப்பட்டுள்ளது:
இதன்பொருள்:—இஃது-இவ்விஷயத்தில், யான் செல்
வர்க்கு ஒத்தனென் என்பது. ஒன்று என்ற எண்ணுப்பெயர்முன் மெய்யெழு
த்துவரின் 'ஒரு' என்று ஆகுமென்பது "முதனிலை யெண்ணின்முன்" என்ற
தொல்காப்பியச் சூத்திரத்தாற் பெறப்படுதலால்,

"இஃதோர்நோயை" என்ப
தைப் பாடமன்மையறிக என்று கண்டிக்கின்றார். அதற்கு
அடுத்தது - மேன்
மேல்மிகும் நோயைப் போக்குதற்கு ஏற்ற செயலை.

(க)

கசகூஉ. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய்
செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

'ஈண்டையாரறியாமன் மறைத்தல், ஆண்டையாரறியத்தூதுவிடுதல் என்னும் இரண்டனுள் ஒன்றுசெயல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) இநோயை கரத்தல் உம் ஆற்றேன் -
இந்நோயை (ஈண்டை
யாரறியாமல்)மறைத்தலும் வல்லேனாகின்றிலேன்;
(ஆகாக்கால்),நோய் செய்
தார்க்கு உரைத்தல்உம் நாணு தரும்-நோய்செய்தவர்க்குரைக்க வெனின் அதுவும் (எனக்கு)நாணினைத் தாராநின்றது: (இனி என்செய்கோ?) (எ - று.)

ஒருகாலைக் கொருகான் மிகுதலின்
'கரத்தலுமாற்றேன்' என்றும், சேயி
டைச் சென்றவர்க்கு இதுசொல்லித் தூதுவிட்டால் இன்னுமிருந்தேனென்பது பயக்குமென்னும் கருத்தால் 'நாணுத்தரும்' என்றும் கூறினாள்.

(கு-ரை.) ஈண்டையார்-இக்குள்ளார்: ஊரவர். ஆண்டையார்-அங்கிருப்பவர்: தலைவர். மறைத்தலும் - மறைத்தலையும்: மறைத்தற்கும் என்றபடி. ஒருகாலைக் கொருகால் - ஒருவேளைக்கு ஒருவேளை. சேயிடைச் சென்றவர்க்கு -

கசஎ - ஆம் அதிகாரம்.—படர்மெலிந்திரங்கல்

(என்னைப் பிரிந்து) வெகுதூரஞ் சென்றிருப்பவர்க்கு.
இது - காமநோயை.
பயக்கும் - பெறப்படும்.

(உ)

கககூடு. காமமு நாணு முயிர்காவாத்
தூங்குமென்
னோனு வுடம்பி னகத்து.

இதுவுமது.

(இ - ள்.) காமம்உம் நாண்உம் - காமநோயும்
(அதனைச்செய்தவர்க்கு
உரைக்க வொல்லாத) நாணும், நோனு-(தம்மைப்)
பொறாத, என் உடம்பின்
அகத்து - என்னுடம்பின்கண்ணே, உயிர் காஆ தூங்கும்-உயிர்காத்தண்டாக (அதனிருநிலையினுந்) தூங்காநின்றன; (எ - று.)

பொறுமை, மெலிவானயது. தூங்குமென்பது,
ஒன்றிஞென்று மிகாது
இரண்டும் ஒத்தசீர வென்பது தோன்ற நின்றது. தூதுவிடவும் ஒழியவும் பண்ணுவனவாய காமநாண்கள் தம்முளொத்து உயிரினை இறுவியாநின்றன: யான் அவற்றுள் ஒன்றின்கண் நிற்கமாட்டாமையின், இஃது இற்றேவிடு மென்பதாம்.

(கு - ரை.) என்னுடலால் தாங்கமாட்டாதநிலையில்
உயிரே காவடித்

தண்டாகக்கொண்டு அதன் ஒருபுறத்துக் காமமும்
மற்றொருபுறத்து நாண
மும் தொங்குகின்றன என்கிறாள். பொறாமை - தாங்கமுடியாமை: இது மெலிவினால் ஆகியது. ஒத்தசீர - ஒத்த அளவின என்றபடி. துதுவிடப் பண்ணும், காமம்: அதனை ஒழியச்செய்யும், நாண்: இறவியாநின்றன-பாரத்
தால் முறியும்படி அழுத்துகின்றன: இஃது - உயிர்.
இற்றேவிடும்-முறிந்தே
விடும்: அழிந்திடுமென்றபடி. "நலிதருங் காமமுங்
கௌவையு மென்றிவ்,
வலிதி னுயிர்காவாத் தூங்கி யாங்கென்னை, நலியும் விழும
மிரண்டு" என்ற
கலித்தொகை, இங்குக் காணத்தக்கது.

(ந)

கக௱௩. காமக் கடன்மன்னு முண்டே
யதுநீந்து
மேமப் புணைமன்னு மில்.

தலைவியர் 'காமக்கடற்படார்: படினும், அதனை ஏற்றபுணையால் நீந்திக் கடப்பர்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) உண்டு காமங்கடல்ஏ - (யாவர்க்கும் உளவாய்வருகின்ற இவ்விரண்டனுள்ளும் எனக்கு)உண்டாகின்றது காமக்கடலே; அது நீந்தும் ஏமம் புணை - அதனை நீந்தும் அரணாகிய புணை, இல் - இல்லை; (எ - று.)

இருவழியும் மன்னும் உம்மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணை யாகற்பாலையாய நீயும் ஆயிற்றிலை யென்பது கருத்து.

(கு - ரை.) யாவர்க்கும் - பிரிந்தநிலையிலுள்ள

எல்லாத்தலைவியர்க்கும்.

இவ்விரண்டனுள் - காமக்கடல், அதனை நீந்தும்புணை என்ற இவ்விரண்டற்

குள்ளே. அரண் - பாதுகாவல். இதற்கு - இந்தக் காமக்கடலைக் கடத்தற்கு.

புணையில்லை யென்றதனால், தூதாகச் செல்லுதற்கு உரிய நீயும் இக்காலத்து

உதவுகின்றாயில்லையென்பது, இந்தக் குறளின் கருத்து.

(௯)

௬௨ திருக்குறள்

கககூரு. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

தூதுவிடாமைநோக்கித் தோழியோடு புலந்து சொல்லியது.

(இ - ள்.) நட்பினுள் துயர் வரவு ஆற்றுபவர்-இன்பஞ்செய்தற்குரியநட்பின்கண்ணே துன்பவரவினைச் செய்யவல்லவர், துப்பின் எவன் ஆவர் கொல்-

(துன்பஞ்செய்தற்குரிய) பகைமைக்கண்

என் செய்வர்கொல்லோ? (எ - று.)

துப்புப் பகையுமாதல் "துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய,

னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன்" என்பதனானு மறிக. அப்பகை

மை ஈண்டுக்காணாமையின் அவர்செய்வதும் அறியப்பெற்றிலேமென்பதுபட நின்றமையின்,'மன்'ஒழியிசைக்கண் வந்தது. துயர்வருதலை விலக்கலாயிருக்க அதுசெய்கின்றிலை யெனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக்கி யும் பிறளாக்கியுங் கூறினாள்.

(குடை ரை.) துப்பு என்பது இங்குப் பகை

என்ற பொருளில் வருதற்கு

"துப்பெதிர்ந்தோர்க்கே" என்று தொடங்கும் மேற்கோள் காட்டப்பட்டது.

இம்மேற்கோளில், மேல் நட்பெதிர்ந்தோர்க்குஎன

வருவதனால், முதலில் வந்

துள்ள துப்பெதிர்ந்தோர்க்கு என்பதில், துப்பு என்பது நட்புக்குமாறான

பகைமையென்ற பொருளதாதல் பெறப்படும்:
இம்மேற்கோளின் பொருள்:—

துப்பு - பகைமையோடு, எதிர்ந்தோர்க்கு-எதிரிட்டவர்க்கு, உள்ளா-மனத்தி

னால்நினைக்கவும் முடியாத, சேய்மையன் -வெகுதூரமான இடத்திலுள்ளவன் [கிட்டுதற்கு அரியவன்]: நட்பு - சினேகத்தோடு, எதிர்ந்தோர்க்கு - எதி ரிட்டவர்க்கு, அம் கை அண்மையன் - உள்ளங்கைபோலச் சமீபத்திலுள்ளா

னென்பது. தோழியினிடம் பகைமையில்லாமையால்,
'அப்பகைமை ஈண்டுக்

காணாமையின்' என்றது. அவர் - பகைவர். தோழியைத்
துயர்வரவு செய்தவ

ளென்று கூறியதற்குக்காரணம், துயர்வருதலை அவள்
விலக்கவேண்டியவளா

யிருக்க அதுசெய்யாமையா லென்க. புலக்கின்றமையின் -
சினந்து கூறுவத

னால். இன்பஞ்செய்தற்கு உரிய நட்பின்கண்ணே

துன்பவரவினைச் செய்ய
வல்லவர் என்று படர்க்கையாகக் கூறியது - தோழியைச் சுட்டும்: அது
பற்றியே 'பிறளாக்கியும்' என்றது.
(ரு)
ககசுரு.

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

'காமந்தானின்பமுற்றாக்கு அதனினும் துன்பமும் வரும்' என்று
தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்.) காமம் இன்பம் கடல்-காமம் (புணர்வரவின்பஞ்செய்யுங்கால்)
அவ்வின்பம் கடல்போலப் பெரிதாம்; மற்று அஃது அடுங்கால் - இனி அது
தானே (பிரிவால்) துன்பஞ்செய்யுங்கால், துன்பம்-அத்துன்பம், அதனின்
பெரிது - அக்கடலினும் பெரிதாம்; (எ - று.)

மற்று, வினைமாற்றின்கண் வந்தது. அடுங்காலென வர்த்தமையின், மறு
தலையெச்சம் வருவிக்கப்பட்டது.
பெற்றவின்பத்தோடொத்துவரின் ஆற்ற

லாம்; இஃது அதனதளவன் றென்பது கருத்து.

ககள - ஆம் அதிகாரம்.—

படர்மெலிந்திரங்கல் சுங.

(கு - ரை.) அதுதானே - அந்தக்காமமே.
அக்கடலினும்-அந்தக் கடல்
போன்ற இன்பத்தைக் காட்டிலும். மற்று என்பது
முதலிற்கூறிய இன்பம்
கடலின் பெரிதாதலென்பதை மாற்றியதனால்,
வினைமாற்றும். மறுத்லெயச்
சம் - இன்பஞ்செய்யுங்கால் என்பது. இஃது -
இத்துன்பம். (சு)

ககசுஎ. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

'காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படும்'
என்றட்குத்
சொல்லியது.

(இ - ள்.) காமம் கடும்புனல் நீந்திக் கரை
காணேன் - காமமாகிய கடலை (நீந்தாதேனல்லேன்)
நீந்தியும் (அதற்குக்) கரைகாண்கின்றிலேன்:
(அக்காலமைக்காலத்தான் எல்லாருந் துயிலும்
அரையிருளாயிற்று):யாமத்து

உம் - அவ்வரையிருட்கண்ணும், யானேஉளேன் - (அதற்குஒருதுணையின்றி) யானே (யாயினேன்: ஆயும் இறந்துபட்டுய்ந்து போகாது) உளேனாகின்றேன்: (ஈதொரு தீவினைப்பயனிருந்தவாறென்:) (எ - று.)

கடுமை, ஈண்டு மிகுதிக்கணின்றது. உம்மை, முன்னுங்கூட்டப்பட்டது. யானேயாயினேனென்பது நீ துணையாயிற்றிலையென்னுங் குறிப்பிற்று.

(கு - ரை.) அதற்கு - அந்தக்காமக்கடற்கு. ஆயும்-யான்ஒருத்தியாகவேயிருந்தும். இறந்துபட்டு உய்ந்துபோகாது - இறந்தொழிந்து காமக்கடலினின்று தப்பிப்போகாமல். கடும்புனலென்ற இடத்து, கடுமை-மிகுதியென்ற பொருளது. யாமத்தும் என்ற இடத்து உம்மை, நீந்தியும் என்று முன்னரும் கூட்டப்பட்டமை காண்க. யாமத்தும்யானேயுளேன் என்று கூறுபவளின் குறிப்பு, அந்தக்காலத்து நீ துணையாயிற்றிலை யென்பது.

(எ)

கககூ௪.

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

இரவின்கொடுமைசொல்லி யிரங்கியது.

(இ - ள்.) இரா அளித்து - இவ்விரா அளித்தாயிருந்தது;மன் உயிர் எல்லாம் துயிற்றி - உலகத்து

நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாந் தானே
துயிலப்பண்ணுதலான், என் அல்லது துணை
இல்லை-என்னையல்லது வேறு துணையுடைத்தாயிற்றில்லை; (எ
- று.)

துயிற்றியெனத் திரிந்துநின்ற வினையெச்சம்,
அவாய்நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது.
துணையோடொன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு
இறந்துபடுமெல்லையேனும் என்னையே
துணையாகக்கோடலின் அறிவின்றென்பதுபற்றி 'அளித்து'
என்றார்; இகழ்ச்சிக்குறிப்பு.

(கு - ரை.) துயிற்றி என்பது வேறுவினைமுதல்
வினையைக்கொண்டு முடிதலால் திரிந்துநின்ற
வினையெச்சமென்றார்: துயிற்ற என்பதன் திரிபு என்க.
அது துணையென்பதன்பின் அவாய்நிலையான் வந்த
உடைத்தாயிற்று என்பதில் 'உடைத்தா'
என்ற வினைப்பகுதியோடு முடியும். துணையோடு
ஒன்றுகின்ற - துணையோடுபொருந்துகின்ற: என்றது,

ஆணும்பெண்ணுமா



கிக் கூடியுள்ள என்றவாறு. அளித்து என்பதன்பொருள்
- அளிசெய்யத்தக்
கது என்பது. இறந்துபடும்

நிலைமையிலுள்ள தன்னைத் துணையாகக் கொண்ட அறிவின்மையற்றி, இருளை 'அளித்து' என்கிறாள்.
இது இகழ்ச்சியைப் புலப்படுத்தும்.

(அ)

கக௯௬. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய
நெடிய கழியு மிரா.

விந்நா

இதுவுமது.

(இ - ள்.) (காதலரொடு நாம் இன்புற்றமுன்னாள்களிற் குறியவாய்), இந்நாள் - (அவர்பிரிவு ஆற்றேமாகின்ற) இந்நாள்களிலே, நெடிய கழியும் - நெடியவாய்ச்செல்கின்ற, இரா-கங்குல்கள்,—கொடியார் கொடுமையின் தாம் கொடிய - அக்கொடியாரது கொடுமைக்குமேலே தாம் கொடுமைசெய்யா நின்றன; (எ - று.)

தன்னாற்றாமை கருதாது பிரிதலின், 'கொடியார்' என்றாள். கொடுமை - கடிதின்வாராது நீட்டித்தல். அவர்பிரிவானும் நீட்டிப்பானு முன்தாய ஆற்றாமைக்குக் கண்ணோடாமைமேலும், பண்டையின்

நெடியவாய்க் கொடியவாகா
நின்றனவென்பதாம்.

(கு - ரை.) இந்நாள்களிலே - காதலரைப்பிரிந்த இந்நாள்களிலே.
கொடியாரென்று கணவரைக்கூறியது - தலைவியின் ஆற்றாமையைப்பற்றிச்
சற்றுங்கருதாமல் அவர்பிரிந்ததனால்:
அக்கொடியாரிடத்துள்ள கொடுமைச்
செயல் - காலநீட்டித்தல். கடிதின் - விரைவில்.
கொடியார் கொடுமையின்
இராக்கொடியஎன்றது - கணவரைப்பிரிந்ததனாலும் அவர் கடிதின்வராமல் நீட்டித்தலாலும் எனக்குத்தோன்றிய ஆற்றாமைக்குக் கருணைசெய்யவேண்டியிருக்க அதனைச்செய்யாமையோடு தான் முன்னிலும் நீட்டிப்பது பற்றியாகும். பிரிந்துவருந்தும் நாள்கள்பலவாதலால் 'இரா கொடிய' என்று பன்மையாற்கூறியது. கண்ணோடாமை-தாட்சிணியங்கொள்ளாமை. பிரிந்தார்க்கு இரவு நீட்டித்துத்தோன்றுமாதலால் 'நெடியகழியுமிரா' என்றதென்க:

''இற்றைநீடிரவொன்று அஞ்சுகத்தைவிளக்கும்'' என்ற திருவேங்கடத்தந்தாதியையும், ''ஊழிபல வோரிரவாயிற்றோ வென்னும்'' ''கொடிதிரா வென்னும்'' என்னும் நளவெண்பாவையும் காண்க.

(கூ)
ககஎ0.

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

'நின்கண்கள் போழுது அழிகின்றனவாகலின்
அழற்பாலையல்ல'
என்றற்குச் சொல்லியது.

(இ - ள்.) உள்ளம் போன்று
தேயத்து, செல்கிற்பின் - (கடிதிற்)

- மனம்போல, உள்வழி - காதலருள்ள
செல்லவல்லனவாயின்,—என் கண் நீர்
வெள்ளம் நீந்தல - என் கண்கள் (இங்ஙனம்) வெள்ளமாகிய
தந்நீரை நீந்தா.

அது மாட்டாமையின் இனி அவற்றிற்கு நீந்துதலேயுள்ளதென்பதுபட
நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. மனத்திற்குச் செலவாவது

ககஅ - ஆம்

அதிகாரம்.—கண்விதுப்பழிதல் சுரு

நினைவேயாகலின் 'உள்ளம்போன்று' என்றும், மெய்க்கு
நடந்துசெல்லவேண்டு
தலிற் கண்கள் அதனொடுசென்று காதலரைக்காண்டல்
கூடாதென்னுங்
கருத்தால் 'செல்கிற்பின்' என்றும் கூறினாள். இதனான்,
வருகின்ற அதிகார
முன் தோற்றுவாய் செய்யப்பட்டது.

(கு - ரை.) மனமானது காதலர்
சென்றவிடத்துச்செல்லவல்லது: கண்
என்பது உடலைவிட்டுச் செல்லவல்லதன்று: ஆகவே,
உடலுள்ளவிடத்தே
இடந்துவருந்தவேண்டுவதே கண்ணாற் செயக்கூடிய
தென்கிருள். காதலர் -
அன்பிற்குப்பாத்திரமான கணவர். அது -
காதலருள்ளதேயத்துக் கடிதிற்
செல்லுதலை. மாட்டாமையின் - செய்யமாட்டாமையால்.
அவற்றிற்கு - கண்
களுக்கு. உள்ளத்திற்கு உள்வழிச் செலவாவது -
அவர்சென்ற தேயத்தை
நினைப்பது. அதனெடு - அவ்வுடலோடு. வருகின்ற
அதிகாரம் - கண்விதுப்
பழிதல். பிரிவுத்துயரினை நினைத்தலால்
மெலிந்திரங்குந் தலைவி கணவனைக்
காணும் வேட்கையாலழிகின்றளென்று அடுத்துக்கூறுவது
அதிகார முறை
மை யென்பது இக்குத்தோன்றுமாறு காண்க.
(௧௦)

## ௧௧அ - ஆம்

## அதிகாரம்.—கண்விதுப்பழிதல்.

அஃதாவது-கண்கள் தங்காட்சிவிதுப்பான்
வருந்துதல். காட்சிவிதுப்பு-
தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது

படரான்மெலிந்தவழி நிகழ்வதாக

லின், படர்மெலிந்திரங்கலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) விதுப்பு - இங்கு, வேட்கையால் விரைதல். கண்கட்கு விதுப்பு - கணவரைக் காணவேண்டுமென்றுகொண்டு விரைதலாம். கண் விதுப்பு - ஆறும்வேற்றுமைத்தொகை. விதுப்பு - 'விதும்பு' என்ற முதனிலை அடியாகப்பிறந்த தொழிற்பெயர். (விதும்புதல் - விரைதல் ஆசைப்படுதல் நடுங்குதல் என்ற பொருளது.) பிரிவுத்துயரால் பிரிந்தபொருளை இடைவிடாது நினைந்து மெலிந்திரங்குவார்க்கு, அப்பொருளைக் காணவேண்டுமென்று கண்வேட்கைகொண்டுவிரைதலினால் வருந்துதல் நிகழுமாதலால், இது, படர்மெலிந்திரங்கலின்பின் வைக்கப்பட்டது என்க.

கக௭க.

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

'நின்கண்கள் கலுழ்ந்து தம் மழுத இழவாநின்றன: நீ ஆற்றல்வேண்டும்' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) தண்டா நோய் யாம் கண்டது-இத்தணியாநோயை யாமறிந்தது, தாம் காட்ட - தாம் (எமக்குக்

காதலரைக்)காட்டலானன்றோ? கண் -
(அன்று அத்தொழிலவாய)கண்கள், கலுழ்வது - (இன்று எம்மைக் காட்டச்
சொல்லி) அழுகின்றது, எவன் கொல் - என்கருதி? (எ - று.)
காட்டவென்பதற்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்
றுந் தாமே காட்டுதலல்லது யாம் காட்டுதல் யாண்டையய தென்பதாம்.
(கு - ரை.) தணியாநோய்என்றது - தண்டாநோய் என்பதன்பொருள்.
முதலினுள்ள தாம்-அசை. இரண்டாவதாக வந்துள்ள தாம்-கண்கள், அன்று-



காதலர் எதிர்ப்பட்ட அந்நாள். அத்தொழிலவாய - காட்சித்தொழிலே யுடை
யனவான. காட்ட என்றதற்கு ஏற்றசெயப்படுபொருள் 'காதலரை' என்பது.
கண்டது என்பதன் பொருள், அறிந்தது என்பது. இன்றும்-இப்பொழுதும்,
காட்சியென்பது கண்ணாகிய பொறியின்மூலமாகவே நிகழ்வதாதலால், யாம்

அக்கண்கட்குக் கணவரைக் காட்டுவது எங்ஙன் நிகழும்? நிகழாதன்றே!

என்றவாறு.

(க)

கககஉ. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்

பைத லுழப்ப தெவன்.

இதுவுமது.

(இ - ள்.) தெரிந்து உணரா - (மேல்விளைவதனை) ஆராய்ந்தறியாது,

நோக்கிய-(அன்று காதலரை)நோக்கின்ற, உண் கண்-உண்கண்கள், பரிந்து

உணரா - (இன்று இது நம்மால்வந்ததாகலிற் பொறுத்தல் வேண்டுமெனக்)

கூறுபடுத்துணராது, பைதல் உழப்பது-துன்பமுழப்பது, எவன்-என்கருதி?

விளைவது-பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்குஅரியராய் வருத்

துதல். முன்னே வருவதறிந்து அதுகாவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்த

லன்றே யுள்ளது: அதுவுஞ் செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கை யென்

பதாம்.

(கு - ரை.) இன்று - கணவரைப்பிரிந்துள்ள

இக்காலத்து. இது - இவ்
வருத்தம். கூறபடுத்துணராது - பகுத்தறியாது. துன்பம் உழப்பது - வருத்தம் அனுபவிப்பது. பிரிந்துபோயவர் - பிரிந்துபோன காதலர். அது - அவ்வருத்தம். கழிமடம்-மிக்கஅறியாமை. ஒருசெயலை நிகழ்த்தும்போது அதனால் விளையக்கூடியபயனை ஆராய்ந்துசெய்யவேண்டும்: அங்ஙன் ஆராய்ந்து செய்யாது அதனால் தீப்பயன்விளைந்தபோது அதற்குவருந்துவது மிக்கமடமைச் செயலாதலால், 'பரிந்துணராப்பைதலுழப்பதெவன்' என்றது: (பரிந்துணர்தல் - பகுத்துணர்தல்.) "எற்றென்றிரங்குவ செய்யற்க செய்வானேல், மற்றன்னசெய்யாமைநன்று" என்றது, இங்குக் கருதத்தக்கது. (உ)

ககஎங. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

இதுவுமது.

(இ - ள்.) தாம்-இக்கண்கள், கதுமென நோக்கி - (அன்று காதலரைத் தாமே)விரைந்துநோக்கி, (இன்றும்), தாமே கலுழும்-தாமேயிருந்தழுகின்ற, இது—, நக தக்கது உடைத்து-(நம்மாற்)சிரிக்கத்தக்க வியல்பினையுடைத்து.

கண்களென்பது அதிகாரத்தான் வந்தது. இதுவென்றது - மேற்கூறிய கழிமடச் செய்கையை. அது, வருமுன்னர்க் காப்பார்க்கு நகைவிளைக்குமாகலான், 'நகத்தக்கதுடைத்து' என்றாள்.

(கு - ரை.) அதிகாரத்தான் - இது, கண்விதுப்பழிதல் என்ற அதிகாரமாதலால். மேற்கூறிய - இக்குறளில் இது என்ற சுட்டிற்கு முன்னே கூறிய. இது என்ற சுட்டு, கதுமெனத் தாம் நோக்கித் தாமே கலுழ்தலாகிய

ககஅ - ஆம்
அதிகாரம்.—கண்விதுப்பழிதல் கள்

கழிமடச்செய்கையைக் குறிக்கும்:

இரண்டாஞ்செய்யுளி னுரையிற்கூறிய
கழிமடச்செய்கையைக் குறிக்குமென்பாருமுளர்.
காமப்பித்துக் கொண்டு சொல்பவளின்
பேச்சுஆதலால், கண்ணையும் தன்னையும் வேறுபடுத்தி, தான்
வருமுன்னர்க்காப்பா ளாகவும், கண்
அவ்வாறுஉள்ளதன்றாகவும் கொண்டு கூறுகின்றாளென்க.

(௩)

கக௭௪. பெயலாற்றா நீருலந்த வுண்க
ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து.
இதுவுமது.

(இ - ள்.) உண் கண் - உண்கண்கள்,—(அன்று), உயல் ஆற்றா -(யான்) உய்யமாட்டாமைக் கேதுவாய, உய்வு இல் நோய் - ஒழிவில்லாத நோயை, என்கண் நிறுத்து - என்கண்ணே நிறுத்தி,—(தாமும்), பெயல் ஆற்றா - அழுதலைமாட்டாவண்ணம், நீர் உலந்த-நீர் வற்றிவிட்டன; (எ-று.)

நிறுத்தல் - பிரிதலும் பின்கூடாமையுமுடையாரைக் காட்டி அதனால் நிலைபெறச் செய்தல். முன் எனக்கு இன்னாதனசெய்தலால், பின் தமக்கின்னாதன தாமே வந்தன வென்பதாம்.

(கு - ரை.) உய்யமாட்டாமைக்கு - உயிரோடுபிழைத்திராமைக்கு. தாமும் - கண்களும். பிரிந்தால் விரைவிற் கூடுவாரைக் காட்டினால், பிரிவு நோய் நிலைத்திராது: அங்ஙனன்றிப் பிரிந்து பின் கூடாமையுமுடையாரைக் கண்கள் காட்டி, அதனாற்

பிரிவுநோயை ஒழியாவண்ணம் நிலைநிறுத்தின; இப்படி முன்னே எனக்குத் தீங்குசெய்யவே, அத்தீப்பயனால் இப்போது அக்கண்களே அழவும்முடியாதவாறு நீர்வற்றிக்கிடக்கின்றன என்று கண்களைப் பழிக்கின்றாள்: "பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற்றமக்கின்னா, பிற்பகல் தாமேவரும்" என்பது முதலியன காண்க.

(௪)

கஎ௫. படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

இதுவுமது.

(இ - ள்.) (எனக்கு), கடல் ஆற்றா - கடலுஞ்சிறிதாம்வண்ணம் பெரிதாய, காமம் நோய் - காமநோயை, செய்த—, என் கண்-என்கண்கள், (அத் தீவினையால்), படல் ஆற்றா - (தாமுந்) துயில்கிலவாய், பைதல் உழக்கும் - துன்பத்தையு முழவாநின்றன; (எ - று.)

காமநோய் காட்சியான்வந்த தாகலின், அதனைக் கண்களே செய்ததாக்கிக் கூறினாள். துன்பம் அழுதலாயது.

(கு - ரை.) கடல் ஆற்றா - கடலுந்தாங்கமாட்டாத: எனவே, கடலினும் மிக்கஎன்றபொருளாம்: அக்கருத்தையொட்டி 'கடலும் சிறிதாம்வண்ணம்' என்றது. காட்சி - தலைமகனைக்காணுதல்: காணுதற்குக் காரணம் கண்ணேயாதலால், காமநோய் அதன்மூலமாகவே வந்ததாம். பைதலென்பதன் பொருள் - துன்பம்: கண்கட்குத் துன்பம்,

அழுதலாலானதாகும். (ரு)



கக௪ச. ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

இதுவுமது.

(இ - ள்.) எமக்கு இ நோய் செய்த-எமக்கு இக்காமநோயினைச் செய்த, கண் தாம் - கண்கடாமும், இதன் பட்டது-இத்துயிலாதழுதற் கண்ணே பட்டது, ஓஒ இனிதே - மிகவும் இனிதாயிற்று; (எ - று.)

ஓவென்பது மிகுதிப்பொருட்கண்வந்த குறிப்புச்சொல் தம்மால் வருத்த முற்ற எமக்கு அது தீர்ந்தாற்போன்ற தென்பதாம்.

(கு - ரை.) தம்மால் - கண்களால். எமக்குமுன்னே வருத்தத்தை யுண்டாக்கின கண்கட்கு இப்போது துயிலாது அழுகை நேர்ந்ததுகருத, என் வருத்தந்தீர்ந்தாற்போல் இனிதாகாநின்றதென்கிறாள். தீங்கு இழைத்தவர்க்குத் தீங்குநேரின் அதனால் தம்தீங்கு நீங்கினாற்போன்றுமகிழும் உலகவழக்கு இங்குக் கருதத்தக்கது.

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

இதுவுமது.

(இ - ள்.) விழைந்து—, இழைந்து - உண்ணெகிழ்ந்து, வேண்டி - விடாதே, அவர் கண்ட - (அன்று) அவரைக் கண்ட, கண் - கண்கள், (இன்று இத்துயிலாதழுங்கலாய துன்பத்தினை), உழந்து உழந்து—, உள்நீர் அறுக - தம்மகத்துள்ள நீர் அற்றேபோக; (எ - று.)

அடுக்கு, இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது.

(கு - ரை.) வேண்டிக்கண்டஎன்பதன் கருத்து - இடைவிடாதேகண்ட என்பது: ஒருபொருளினிடத்து விருப்பம் மிக்கிருந்தால், அப்பொருளை இடைவிடாதே காணுதல் இயல்பாதலறிக. அழுங்கலாய-வருந்துவதாகிய. அடுக்கு-'உழந்துழந்து' என்ற இடத்திலுள்ளது. கண்ணாகிய இடத்து நிகழ்பொருளாகிய நீரின் தொழிலான அறுதலைக் கண்ணின்மேலேற்றி, 'கண் அறுக' என்றது: இது, இடத்துநிகழ்பொருளின் தொழிலை இடத்தின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்காம். அறுக என்ற வியங்கோள்-சபித்தற்பொருளில் வந்தது.(எ)

ககஎஅ. பேணாது பெட்டா ருளர்மன்னோ
மற்றவர்க்
காணா தமைவில கண்.

'காதலர்

•

பிரிந்துபோயினாரல்லர்; அவர் ஈண்டுளர்: அவரைக்காணுமளவும் நீ ஆற்றல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) பேணாது பெட்டார் உளர்-(நெஞ்சால்) விழையாதுவைத்துச் (சொன்மாத்திரத்தால்) விழைந்தவர் (இவ்விடத்தே)உளர்;(அவ்வுண்மையாற் பயன் யாது?) அவர் - அவரை, கண் - கண்கள், காணாது அமைகின்றன வில்லையாயின; (எ - று.)

அமைவில-காண

கஎஅ - ஆம் அதிகாரம்.—கண்விதுப்பழிதல்

சுகூ

செயலாற்பிரிந்து நின்றமையின் 'பேணாது' என்றும், முன்னலம்பாராட்டிப் பிரிவச்சமும் வன்புறையுங் கூறினாராகலின் 'பெட்டார்' என்றுங் கூறினாள்.

மன்-ஒழியிசைக்கண் வந்தது. மற்று, வினைமாற்றின்கண் வந்தது. ஓகாரம்-அசைநிலை. யான் ஆற்றவுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன வென்பதாம். இனிக்கொண்கனை யென்று பாடமாயின், என்கண்கள் தம் மைக்காணாதமைகின்ற கொண்கனைத் தாம் காணாதமைகின்றனவில்லை: இவ்வாறே தம்மையொருவர்

விழையாதிருக்கத் தாம் அவரைவிழைந்தார் உலகத் துளரோ என்றுரைக்க. இதற்கு, மன் - அசைநிலை.

(கு - ரை.) தலைவியைத் தேற்றுதற்காகத் தோழி தலைமகனைப்பற்றி 'பிரிந்து வெகுதூரஞ் சென்றாரல்லர்: அண்மையிடத்தேதான் உள்ளார்: ஆதலால், விரைவில் வந்திடுவர்' என்ற கருத்தால், இவ்விடத்தே உளரென்று ணெக. பெட்டாருளர் என்ற சொற்சேர்க்கையால், இவ்விடத்தே யென்பது கருத்துப்பொருளாகப் பெறப்படும். விழையாது-விரும்பாதிருந்து: வைத்து- துணை வினை. அமைகின்றனவில்லை சாந்தமாகஅடங்கி நிற்பனவல்ல: மிகவும் வருந்துகின்றன என்றபடி. நலம்பாராட்டல்-தலைமகளைப்புணர்ந்தபின், புணராதமுன்நின்ற வேட்கை அதிகரித்தலால் தலைமகளின் அழகைப்பாராட்டிக் கூறும் ஓர் அகத்துறை. பிரிவச்சம் - பிரிவினையஞ்சுதல்: அது - தலைமகன் தான் பிரிய அஞ்சுவதும், தலைமகளைப் பிரிவு அஞ்சுவித்தலும். இது ஓர் அகத்துறை. தலைமகன் 'நின்னிற்பிரியேன், பிரியின் ஆற்றேன்' என்று இவ்வாறு பிரிவச்சத்தை யுணர்த்துமென்ப. வன்புறையென்பது - 'தலைமகன்பிரிந்திடுவனோ?' என்று தலைமகள்ஐயுற்றபோது, தலைமகன் அவளது ஐயந்தீர வற்புறுத்திக்கூறும் அகத்துறை. நலம்பாராட்டல் முதலிய கூறியதனால், தலைவரைச் சொன்மாத்திரத்தாற் பெட்டாரென்றது. உளர்என்பதன் பின் உள்ள 'மன்'

என்பது - அவர் அண்மையிலிருந்தும் பயனில்லை யென்ற பொருளைக் குறிப்பித்தலால், ஒழியிசையாம். மற்று என்பது-உளர் என்னும் வினையைமாற்றி எம்வரையில் இலர் என்ற பொருளைத் தந்ததனுல், வினை மாற்றாயிற்று. யான் ஆற்றவும் - தலைவரைப்பிரிந்த நான் பொறுத்திருந்தேனாகவும், மற்றவர் என்ற இடத்துக் கொண்கனை யென்றுபாடமாயின், அப்போது, கொண்கனைக் காணுது அமைவில: (இங்ஙன்), பேணுது - (ஒருவர் தம்மை) விரும்பாதிருக்க, பெட்டார்உளர்ஓ - (தாம் அவரை) விரும்புபவர் (உலகத்து) உளரோ? என்று உரையாம்: இதற்கு - இவ்விரண்டாமுரைக்கு.

கக௭௯. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை யாரஞ ருற்றன கண்.

'நீயும் ஆற்றி நின்கண்களுந் துயில்வனவாதல்வேண்டும்' என்ற

தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) வாரா கால் துஞ்சா-(காதலர்) வாராதஞான்று (அவர் வரவு பார்த்துத்) துயிலா: வரின் துஞ்சா-வந்தஞான்று(அவர்பிரிவஞ்சித்) துயிலா:

(ஆகலான்), ஆயிடை - அவ்விருவழியும், கண் - (என்)கண்கள், ஆர் அஞர் உற்றன - பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய; (எ - று.)

ஆயிடையெனச் சுட்டு நீண்டது. இனி, அவற்றிற்குத் துயில் ஒரு ஞான்றுமில்லை யென்பதாம்.

(கு - ரை.) அவ்விருவழியும்-வாராதகாலம் வந்தகாலம் என்ற இரண்டு காலத்தும்.

(௯)

௧௧௮௦. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

'காதலரைஇவ்வூர் இயற்பழியாமல், அவர்கொடுமையைமறைக்கவேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) எம்போல் அறைபறை கண்ணார் - எம்மைப்போலும் அறை பறையாகிய கண்ணினையுடையார், அகத்து-(தம்)நெஞ்சின் கணடக்கிய,மறை பெறல் - மறையையறிதல், ஊரார்க்கு - இவ் ஊரின்கணுள்ளார்க்கு, அரிது அன்று - எளிது; (எ - று.)

மறையென்றது,ஈண்டு

மறைக்கப்படுவதனை.அகத்துநிகழ்வதனைப் புறத்துள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலான் ஒற்றுமையுண்மையின், 'அறை பறையாகிய கண' என்றாள். இங்ஙனஞ் செய்யுள்விகாரமாக்காது, 'அறை பறைக் கண்ணார்'என்று பாடமோதுவாரு முளர். யான் மறைக்கவும், இவை வெளிப்படுத்தாநின்றன வென்பதாம்,

(கு - ரை.) அறை பறைஆகிய - அறையப்படும் பறையின் தன்மையையுடையதாகிய. பறையென்பது - அகத்துநிகழும் விஷயத்தை யாவர்க்கும் தெரிவிப்பதுபோல் உள்ளேநிகழ்ந்த இரகசியத்தைக் கண்கள் வெளிப்படுத்துமென்க. கண்ணை அறைகின்றபறையோடு அபேதப்படுத்தி அறை பறைகண் என்றது, பறையின்தன்மை கண்ணிடத்தும் இருத்தலால். பறை கண்என்பது-இருபெயரொட்டுப் பண்புத்தொகை யாதலால், 'பறைக்கண்' என்று மிகவேண்டும்: அங்ஙன் மிகாதது - செய்யுள் விகாரம்: இச்செய்யுள் விகாரத்தைக் கொள்ளாது 'பறைக்கண்' என்று வலிமிகப் பாடங் கொள்வாரு முளரென்றார்.

(கo)

கககூ - ஆம்

# அதிகாரம்.—பசப்புறுபருவரல்.

அது பசப்புற்ற பருவரலென விரியும். அஃதாவது பசப்புறுதலானுய
வருத்தம். இதனை "பந்தெறிந்தவயா" என்பதுபோலக் கொள்க. பசப்பா
வது-பிரிவாற்ருமையான் வருவதோர்
நிறவேறுபாடு.இது,தலைமகனைக்காணப்
பெருதவழி நிகழ்வதாகலின், கண்விதுப்பழிதலின்பின்
வைக்கப்பட்டது.

(கு - ரை.) பசப்பையுறுதலாலான துன்பம் என்று பொருள். உறுபரு
வரல் - வினைத்தொகை: காலங்கரந்த பெயரெச்சமாகிய 'உறு' என்பதனை விரிக்கும்போது உற்ற என்று விரியும்: பந்து எறிந்த அயா என்பது - பந்தை எறிந்ததனுலான தளர்ச்சி எனக் காரணப்பொருட்டாயிருப்பதுபோல், காலங்



கரந்தபெயரெச்சமாகிய'உறு'என்பதும்உறுதலாலான எனக்காரணப்பொருட் டாம். "விண்டோய் வரைப்பந்தெறிந்த வயாவிட" என்று, கலித்தொகையில் குறிஞ்சிக்கலியில் நான்காவதுபாடலில் வந்துள்ளது.

தலைவி தலைவனைக் காணாமையாற் பசப்புற்று அதனால் ஆன பருவரலைக் கூறும் இந்த அதிகாரம், தலைவனைக் காணாதஇடத்து நிகழும் கண்விதுப்பழிதலின்பின் இருத்தற்கு ஏற்கும்.

கக௮௧. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்

பண்பியார்க் குரைக்கோ பிற.

முன் பிரிவுடம்பட்ட தலைமகள் அஃதாற்றாது பசந்தவழித்

தன்னுள்ளே சொல்லியது.

(இ-ள்.) நயந்தவர்க்கு - (என்னை)நயந்தவர்க்கு, நல்காமை நேர்ந்தேன் -
(அதுபொழுது) பிரிவையுடம்பட்ட நான், பசந்த என் பண்பு-(அதனை யாற்றாது இதுபொழுது) பசந்த என் னியல்பினை, யார்க்கு உரைக்குஓ - யார்க் குச் சொல்வேன்?
(எ - று.)

பிறவென்பது,அசைநிலை. உடம்படாவழி ஒழிதல்குறித்துப் பிரிவுணர்த் தினராகலின் அவரன்புடைய ரென்னுங் கருத்தான் 'நயந்தவர்' என்றும், இதுவேயுடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலின் இனி அவரைக் கூடுத லரிதென்னுங் கருத்தான் 'நல்காமை' என்றும், முன்னருடம்படுதலும் பின்னராற்றாது பசத்தலும் பிறர்செய்தன வல்ல வென்பாள் 'பசந்தவென்பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தினை இனி யொருவருக்குச்சொல் லலும் பழியாமென்னுங் கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றுங் கூறினள்.

(கு - ரை.) அஃது ஆற்றாது -
பிரிவைத்தாங்கமாட்டாமல். பசந்தவழி-
நிறவேறுபாட்டையடைந்தபோது. உடம்படாவழி-பிரிவுக்குச்
சம்மதியாவிட் டால். ஒழிதல்-உயிரொழிதல்.
பெருமகிழ்ச்சியை இடைவிடாது நினைப்பின், அதனையும்
உயிர் தாங்கமாட்டாதென்பர். மேலும் பிரிவுநிகழும் -
பின்னும் தலைவருடைய பிரிவுத்
தொடர்ச்சிப்பட்டிருக்கும். அருளாமை என்ற
பொருளையுடைய நல்காமை யென்பது-இங்கு அதன்
காரியமாகிய பிரிவைக்
காட்டிற்று: காரணப்பெயர் காரியப்பொருளில்வந்த
உபசாரவழக்கு என்னலாம். பண்பியார் - குற்றியலிகரம்;
அலகுபெறாது வந்தது. (க)

கக௯௨. அவர்தந்தா ரென்னுந் தகையா
லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.
ஆற்றளெனக்கவன்ற தோழிக்கு 'ஆற்றுவல்'
என்பதுபடச்
சொல்லியது.

(இ - ள்.)
(யான் ஆற்றியுளேனாகவும்),—பசப்பு-இப்பசப்புத்தான்,—தந்
தார் அவர் என்னும் தகையால்-(என்னை)உண்டாக்கினார்
அவரென்னும் பெருமிதத்தான், என் மேனிமேல்
இவர்ந்து ஊரும் - என்மேனியை மேற்கொண்டு
செலுத்தாநின்றது; (எ - று.)

''குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா
விவர்ந்து செல்ல'' என்
புழியும் இவர்தல் இப்பொருட்டாத லறிக. இஃது
உரிமைபற்றி யூர்கின்றது,
இதற்கு நீ கவலல்வேண்டா வென்பதாம்.
(கு-ரை.) தந்தாரென்பதன் பொருள்,
உண்டாக்கினரென்பது. என்னை
யென்ற தன்மை, பசப்பைக் காட்டும். தகை-தருக்கு
இவர்தந்து-ஒருசொல்:
இதில், தா - துணைவினை. ''குருதிகொப்புளிக்கும்'' என்ற
தொடங்கும் மேற்
கோள், சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், க - இல்
உள்ளது. இதன்
பொருள்:—குருதிகொப்புளிக்கும் - (பகைவரின்)
இரத்தத்தை வெளிக்கக்கு
கின்ற, வேலான்-வேற்படையையுடைய சீவகன், கூந்தல்
- (பிடரியின்கண்)
மயிரையுடைய, மா - குதிரையை, இவர்ந்துசெல்ல -
மேற்கொண்டுசெல்ல
என்பது: இம்மேற்கோளிலும் இவர்தலென்பது
மேற்கொள்ளுதலென்ற
பொருளையுடையதாதல் காண்க. இஃது - பசப்பு.
உரிமைபற்றி - சுதந்திரம்

பாராட்டி

(உ)

கக௩௯. சாயலு நாணு மவர்கொண்டார்
நோயும் பசலையுந் தந்து.

கைம்மாறு

'அழகும் நாணும் அழியாமல் நீ யாற்றல்வேண்டும்' என்ற
தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.)

கைம்மாறு - (பிரிகின்ற ஞான்றே அவ்விரண்டற்குந்) தலைமாறாக, நோய் உம் - இக்காமநோயினையும், பசலை உம்-பசலையையும், தந்து-
(எனக்குத்) தந்து,—சாயல் உம் - (என்) மேனியழகினையும், நாண் உம் -
நாணினையும், அவர் கொண்டார் - அவர் கொண்டுபோயினர்; (எ - று.)

எதிர்நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலைமாறாயிற்று. இனி, அவர் தந்தாலல்லது அவை யுளவாகலும் இவை யிலவாகலுங் கூடாவென்பதாம்.

(கு - ரை.) பிரிகின்ற ஞான்றே - பிரிகின்றபொழுதே. அவ்விரண்டற்கும் - அழகு நாண் என்ற அந்த இரண்டுக்கும். தலைமாறாக-பிரதியாக. பசலை-
பசப்பு: பிரிவுத்துயரினால் உடலில் தோன்றும்
நிறவேறுபாடு. நாணைக்
கொண்டு அதற்குப்பதிலாகக் காமநோயையும்

சாயலைக்கொண்டு அதற்குப்
பதிலாகப் பசலையையும் தந்தார் என்று முதலடியில்
நிற்கும் பெயர்கள் பின்
னிரண்டடிகளில் நிற்கும் பெயர்களோடு மாறி
இயைதலால், எதிர்நிரனிறைப்
பொருள்கோளாம். சிறந்த இரண்டுபொருளைக்கொண்டு
அதற்குமாறாக இர
ண்டு இழிபொருளைக் கொடுத்ததாக, இந்தக்குறளிற்
கூறியிருப்பது, பரிவருத்
தனையணி யெனப்படும் மாற்றுநிலையணியாம்.
பசலையென்பது உடலின் நிற
வேறுபாடு ஆதலால் அழகுக்கு அது மாறுபட்டதாகலாம்:
நோய் நாணுக்கு
எப்படி மாறுபட்டதாகலாமெனின்?—நாணத்தால்
காமநோயை அடக்குந்
தோறும் அஃது மிகுதலால், நாண் காமநோய்க்கு
மாறானதாகும். (ங)

கக வுச. உள்ளுவன் மன்யா னுரைப்ப
குள்ளம் பிறவோ பசப்பு.

தவர்திறமாற்

கககூ - ஆம்

அதிகாரம் —பசப்புறுபருவரல் எங

'பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்றிறங்களையும்
அறிதியாகலின் நீட்டியாது வருவர்' என்றவழிச் சொல்லியது.

(இ-ள்.) (அவர்சொற்களை), யான்—, உள்ளுவன்-(மனத்தால்) நினையா
நிற்பேன்: உரைப்பது-(வாக்கால்)உரைப்பதும், அவர் திறம் - அவர் நற்றிறங் களையே; (அங்ஙனஞ் செய்யாநிற்கவும்), பசப்பு - பசப்பு (வந்துநின்றது):
கள்ளம் - (இது) வஞ்சனையாயிருந்தது; (எ - று.)

'பிற'வும் 'ஓ' வும்-அசைநிலை. மெய் மற்றை மனவாக்குக்களின் வழித்
தாகலின் அதன்கண்ணும் வரற்பாற் றன்றாயிருக்க வந்தமையின், இதன்
செயல் கள்ளமாயிருந்ததெனத் தானாற்றுகின்றமை கூறியவாறாயிற்று.

(கு - ரை.) என்றவழி - என்று தோழி சொல்லியபோது. சொல்லி
யது என்பதற்கு, 'தலைவி' என்று எழுவாய் வருவிக்க. 'உள்ளுவன்' என்ப
தற்கு ஏற்ற செயப்படுபொருளாகிய 'அவர் சொற்களை' என்பது, வருவிக்
கப்பட்டது. 'மன்' என்பது - உள்ளுவதாற்பயனில்லை யென்றதருத்தைத்
தோற்றுவித்தலின், ஒழியிசைப்பொருளதென்னலாம். திறம்

- குணம். ஆல்-
தேற்றப்பொருளது. மனத்தினால் தலைவர்சொற்களை நினைத்தலும் வாயால்
அவர்திறத்தை யுரைத்தலும் செய்யாநிற்க, அம்மனோவாக்குக்களின் அதீன
மாகவுள்ள மெய்யில்[உடம்பில்]பிரிவினாலாகிய பசப்பு வரக் காரணமில்லையே:
அது வந்தது என்னமாயமோ? என்கிறான்: இதனால், தலைவி தான் ஆற்றுகின்றமையைப்
புலப்படுத்துகின்றாளென்க. அதன் கண்ணும் - உடம்பினிடத் தும்; வரற்பாற்றன்று-வருதற்கு உரியதன்று: வந்தமையின் என்பதற்குமுன்
'பசப்பு' என வருவிக்க. இதன் - இந்தப்பசப்பின். தான் - தலைவி. (௪)

கக௮ரு. உவக்காணெங் காதலர் செல்வா
ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

'காதலர் பிரிந்தணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை' என்ற
தோழிக்கு முன்னிகழ்ந்தது கூறியது.
(இ - ள்.) எம்
காதலர் - (பண்டும்) நங்காதலர், உவக்காண் செல்வார் - உங்கேசெல்வாராக, என் மேனி பசப்பு ஊர்வது—, இவக்காண் - இங்கே

யன்றோ! (அப்பெற்றியது இன்று பிறிதொன்றாமோ?) (எ - று.)

'உவக்காண்', 'இவக்காண்' என்பன - ஒட்டிநின்ற இடைச்சொற்கள்.

தேயவண்மையாற் காலவண்மை கருதப்பட்டது. அவர்செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளின்செலவும் வரவும்போல்வது அறிந்துவைத்து, அறியா தாய்போல நீ சொல்லுகின்றதென்னை யென்பதாம்.

(கு - ரை.) அணித்தாயிருக்கவும் - சமீபமான இடத்திலிருக்கவும். பண்டும் - முன்பும். உங்கே - வெகுதூரமும் வெகுசமீபமுமாகாத நடுத்தரமான இடம். இங்கே - இவ்விடத்தே. உவக்காண், இவக்காண் என்பன - 'உ', 'இ' என்ற சுட்டிடைச்சொற்களை யொட்டித்தோன்றிய இடைச்சொற்கள்: இவற்றுள், காண் - முன்னிலையசையென்னலாம். உவக்காண் என்பது - வெகு தூரமல்லாதவிடத்தே என்ற தேயத்தின்

*—10

அண்மைப்பொருளது: அதனால்,



அத்தலைவர் பிரிந்து வெகுகாலமாகவில்லை யென்ற

கருத்தும் பெறப்படு
மென்றார். பகல்போக இரவுவர இடையிட்டகாலம்
எத்துணைச் சிறியதோ,
அத்துணைச் சிறியதே அவர்பிரிதற்கும் மேனியில்
பசப்புவருதற்கும்
இடைப்பட்ட காலம் என்க.
(௫)

கககூ. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற்
கொண்கன்

முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

இதுவுமது.

(இ - ள்.) விளக்கு - விளக்கினது, அற்றம் பார்க்கும்
- மெலிவுபார்த்து
நெருங்கிவரும், இருளே போல்- இருளேபோல, கொண்கன்
முயக்கு-கொண்
கன் முயக்கினது, அற்றம் பார்க்கும்-மெலிவுபார்த்து
நெருங்கிவரும், பசப்பு-
இப்பசப்பு; (எ - று.)

பார்க்குமென்பன, இலக்கணச்சொல். முன்
பிரியாதிருக்கவுந் தனக்கு
அவகாசம்பார்த்து வரும் பசப்புப் பிரிவுபெற்றால்
என்செய்யாதென்பதாம்.

(கு - ரை.) மெலிவு-சோர்ந்ததன்மை. இருளுக்கும்
பசப்புக்கும் பார்த்த
லென்பது நிகழா தாதலால், 'பார்க்கும்' என்பது

இரண்டிடத்தும் இலக்
கணச்சொல் எனப்பட்டது: பெற்றிட்டதனல் தோன்றும்
என்றபொருளது
என்னலாம். அவகாசம் - ஏற்ற இடம். இச்செய்யுளில்,
அற்றம் என்பது -
சோர்ந்தநிலை யென்ற பொருளது: முயக்கந்
தளர்ந்தநிலையிலும் வரும் பசப்பு,
பிரிவே நிகழின் என்னபாடுபடுத்தாது என்பது,
இக்குறளின் கருத்தென்க.

கக௮எ. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே
னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

இதுவுமது.

(இ - ள்.) புல்லிக் கிடந்தேன் - (முன்னொரு ஞான்று
காதலரைப்) புல்
லிக்கிடந்த யான், (அறியாது),
புடைபெயர்ந்தேன் —: அவ்வளவில் - அப்
புடைபெயர்ந்தவளவிலே, பசப்பு—, அள்ளிக்கொள்வற்று
- அள்ளிக்கொள்
வதுபோல வந்து செறிந்தது; (எ - று.)

*கொள்வதென்பது குறைந்துநின்றது.
அள்ளிக்கொள்வது - அள்ளிக்
கொள்ளப்படும் பொருள். அப்புடைபெயர்ச்சி
மாத்திரத்துக்கு அவ்வாறாயது,
இப்பிரிவின்கணுமாறு சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(கு - ரை.) புல்லிக்கிடந்த - தழுவிக்கிடந்த. புடைபெயர்தல்-அம்முயக்கம் சற்று விலகப்பெறுதல்: தழுவியது சிறிதுநெகிழுமிடத்து இறுகத்தழுவக் கையையெடுத்து மீண்டும் தொழில் நிகழ்த்தவேண்டுதலால் இவ்வாறு கூறியது. கொள்வது என்பது-கொள்வெனக்குறைந்து நின்றது: 'அள்ளிக்கோள் வது'என மேல் வருதலால், கொள்வெனக் குறைந்துநின்றது கொள்வதென்ற சொல் என்பது பெறப்படும். ஊன்றிநோக்க, இந்தக் கொள்வது - வினையாலணையும் பெயராதலறியலாம். இனி, ஒருசாரார் கொளவென்பது குறைந்து நின்றது என்றுபாடம் ஓதுவர்: அதற்குக் கொளவற்றுஎன்பது கொள்வற்று

---

* பி - ம்;—கொள்வெனக்குறைந்து நின்றது.





என்று அகரங் குறைந்துவந்ததென்க: இப்பாடத்தில், கொளஎன்பது-கொள் வதுஎன்ற தொழிற்பெயர்ப் பொருளதென்க: "அறஞ்செயவிரும்பு" என்பதில், செயஎன்பது செய்வது என்று பொருள்படுதல் போல. மற்றொருசாரார் கொளலென்பது குறைந்து நின்றதெனப் பாடம் ஓதுவர்: அதற்குப்பொருள்கொள்என்ற

பகுதியினடியாப் பிறந்தொழிற்பெயர்ச்சொல் குறைந்துவந்த தென்பது. இந்தத்திருக்குறளில், பின்வரும் ஐதிகியம், மாணாக்கர் கவனித் தற்குஉரியது: அது வருமாறு:—நஞ்சீயர் முதலிய அடியார்கள் பலருடனே பட்டர் பெரியதிரு வோலக்கமாக வீற்றிருந்து திருவாய்மொழி வியாக்கி யானம் உபந்யசிக்கிறபோது "என்னீர்மை கண்டிரங்கி யிது தகாதென்னாத, என்னீலமுகில்வண்ணற்கு" என்ற இடம் வந்தவளவிலே, ஒரு புலவர் "தலைவன் தலைவியைப் பிரியாதிருக்கிறநிலையில் அவள் வருந்தா ளாதலாலும், அவன் அவளைப் பிரிந்திருக்கின்றபொழுது அவள் படும் வருத்தத்தை அவன் காண வகையில்லை யாகையாலும், 'என்னீர்மைகண்டிரங்கி' என்றல் பொருந்துமோ? 'என்னீர்மைகேட்டிரங்கி' என்றலன்றோ பொருந்துவது?" என்று ஆக்ஷேபிக்க, அதற்குப் பட்டர் தோட்ட கை விட்டவளவிலே தலைவியின் உடம்பு நிறம்மாறி வெளுத்தலைக் கண்டால், தலைவன், இவளைத் தான் பிரியத்தகா தென்று நினைக்கவேண்டாவோ? "ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க, பாசி யற்றே பசலை காதலர், தொடுவுழித் தொடுவுழி நீங்கி, விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்பதுபோன்றுள்ள தமிழ்வழக்குக்களை அறியீரோ?'என்று விடைகூறி அந்த ஆசங்கையை நீக்கியருளினரென்பது. (எ)

கக௨௫. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

'நீ இங்ஙனம் பசக்கற்பாலையல்லை' என்ற
தோழியோடு

புலந்து சொல்லியது.

(இ - ள்.) இவள்—, பசந்தாள் என்பது அல்லால் - (ஆற்றியிராது) பசந்தாளென்று (என்னைப்) பழிகூறுவதல்லது, இவளை—, அவர்—, துறந் தார் - துறந்துபோயினார், என்பார் இல் - என்று (அவரைக்) கூறுவாரொருவருமில்லை; (எ - று.)

என்பாரென வேறுபடுத்துக்கூறினாள், தன்னையே நெருங்குதல் பற்றிப் புலக்கின்றமையின்.

(கு - ரை.) புலந்து-பிணக்குக்கொண்டு. அவரைக்கூறுவார்-தலைவரைப் பழிகூறுவார். 'தோழியைக்குறித்துச் சொல்லும்போது துறந்தாரவரென்பாரென்று பிறரைக் கூறுமாறுபோல வேறுபடுத்தலாமோ?'என்று ஓர் வினாவை யெழுப்பி அதற்குச் சமாதானம் 'தன்னையே நெருங்குதல் பற்றிப்புலக்கின்றமையின்' என்பதனால் கூறுகின்றார். தோழி தலைவியைப் பழிமொழி கொண்டு நெருக்குகின்றாளென்க.

(அ)

கக௨௬. பசக்கமற் பட்டாங்கென் மேனி
நன்னிலைய ராவ ரெனின்.

நயப்பித்தார்

இதுவுமது.

(இ-ள்.) நயப்பித்தார்-(இப்பிரிவை யானே) உடம்படும்வகை சொல்லி
யவர், நல் நிலையர் ஆவர் எனின்-( இன்று நின்கருத்தான்)நல்ல நிலையினராவ
ராயின்,—என்மேனி—, பட்டாங்கு பசக்க-பட்டதுபடப் பசப்பதாக;(எ-று.)

நன்னிலையராதல் - நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல். பட்டாங்
காகவென ஆக்கம் *விரித்துரைக்க. 'முன் இப்பிரிவின் கொடுமையறியாத
என்னை இதற்குடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவேவேண்டுவது: என்
மேனியும் பசப்பும் யாதுசெய்யினென்?' என்பதுபட நின்றமையின், மன்
ஒழியிசைக்கண்வந்தது.

(கு - ரை.) நயப்பித்தார்-நயக்க [விரும்ப]ச் செய்தவர்: உடம்படும்வகை
சொல்லியவர் என்றபடி. 'பசக்கமன் பட்டாங்கு என்மேனி' என்றஇடத்து நீ
வேண்டுவது என்னைப் பிரிவையுடம்படுத்தியவர் நல்லவராகவேண்டுவது
ஒன்றே: அது கைகூடின்,பின்னை என்உடம்போ அல்லது

பசப்போ எப்படி
யாயின் உனக்குஎன்? அதைப்பற்றி யாதும் கவலை உனக்கு
இல்லை யென்னுங்
கருத்துப்படுவதால், மன் -ஒழியிசைப்பொருளது.
பட்டாங்கு என்பதன்பின்
'ஆக' என்று ஆக்கச்சொல் வருவிக்கப்பட்டது.
(கூ)

ககக0. பசப்பெனப் பேர்பெறுத னன்றே
நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்.

தலைமகளாற்றுதற்பொருட்டுத் தோழி
தலைமகனையியற் பழித்தவழி
அவள் இயற்பட மொழிந்தது.

(இ - ள்.) நயப்பித்தார்-(அன்று
தாம்)குறைநயப்பித்துக் கூடினவர்க்கு,
நல்காமை - (இன்று) நல்காமையை, தூற்றார் எனின் -
(நட்டார்) தூற்றரா
யின்,—பசப்பு என பேர்பெறுதல் நன்
று-(பசப்புஉற்றாளென வேற்றுமையா
னன்றிப்) பசப்புத்தானுயினளென (ஒற்றுமையால்
தாஞ்சொல்ல) அப்
பெயரைப் பெறுதல் (எனக்கு) நன்று; (எ - று.)
நட்டாரென்பது, அவாய்நிலையான் வந்தது.
இயற்பழித்தல்பொருது
புலக்கின்றாளாகலின், இகழ்ச்சிக்குறிப்பாற் கூறினாள்.

அவரை அருளிலரென்
ஞாது இன்னும்பசந்தாளிவளென்கையே யான் ஆற்றும்
நெறியாவதென்பதாம்.
(கு - ரை.) குறைநயப்பித்து-தம்குறைகளையேற்குமா
று சொல்லி. தலை
வரைத்தூற்றுவிட்டால், எனக்கும் பசப்புக்கும்
பேதமாகப் பசப்புடையவள்
என்று என்னைக்கூறுது, பசப்புக்கும் எனக்கும்
வேறுபாடு இன்றி பசப்பு
என்றே என்னைப் பேரிட்டுக்கூறினும் நன்றே யென்கிருள்
தலைவி. தூற்றூர்
என்ற முற்று எழுவாயை வேண்டுதலால், நட்டார்
என்பது வருவிக்கப்பட்
டது. இயற்பழிக்கும் தோழியின்மீது புலந்து
'தூற்றூர்' என்று தலைவி கூறுத
லால், அதற்கு ஏற்ற எழுவாய் அத்தோழியின்
இகழ்ச்சியைப் புலப்படுத்தும்
'நட்டார்' என்பதே. அவரியல்பைப் பழித்துக்கூறுது
பசந்தாளென்று என்
மீதுகுறைகூறின், அதுவே யான் பிரிவுத்துயராற்றும்
வழியென்பதாம். (௭௦)

---

* பி - ம்:—வருவித்துரைக்க.

கஉ0 - ஆம்

# அதிகாரம்.—தனிப்படர்மிகுதி.

அது தனியாகிய படர்மிகுதியென விரியும். அஃதாவது - படர்மிகுதி தலைவன் கணின்றித் *தன் கண்ணேயாதல் கூறுதல். அறமும் பொருளுநோக்கிப் பிரிதலின் அவன் கண் இல்லையாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட்கு உரியதாகலின், பசப்புறுபருவரலின்பின் வைக்கப்பட்டது.

(கு-ரை.) படர்மிகுதி-பிரிவுத்துயர்மிகுவன. 'தனி'என்பதன் பொருள்- தலைவன் கணின்றியென்பது. தன் கண்ணே - தன்னிடத்தே. தனிப்படர் மிகுதியென்ற தொடர், தனிமையாகிய படர்மிகுதியைக்கூறும் அதிகாரத்திற்குஆகிவந்தது ஆகுபெயர். அறநோக்கிப் பிரிவு-கற்பில் தலைவனுக்கு நிகழும் அறுவகைப்பிரிவுகளில் ஓதற்பிரிவு பொருள்வயிற்பிரிவு பரத்தையிற் பிரிவு என்பனதவிர, மற்றை காவற்பிரிவு பகைதணிவினைப்பிரிவு வேந்தற் குற்றுழிப் பிரிவு என்றமூன்றும் அறநோக்கிப்பிரியும் பிரிவு ஆம்: ஓதற்பிரிவு-அறமும் பொருளும் நோக்கிப்பிரியும் பிரிவு ஆம். பொருள்வயிற்பிரிவு-பொருளைநோக்கிப் பிரியும் பிரிவு ஆம். பரத்தையிற்பிரிவு - இன்பம்நோக்கிப் பிரியும் பிரிவு ஆம்.

கககூக. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

'காதலரும் நின்னினுமாற்றாராய்க் கடிதின்வருவர்: நீஅவரோடு
பேரின்பம்நுகர்தி' என்று தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) தாம் வீழ்வார் தம் வீழ பெற்றவர் - தம்மாற்காதலிக்கப் படுங் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர்,—பெற்றாரே - பெற்றா ரன்றே: காமத்து - காமநுகர்ச்சியென்னும், காழ் இல் - பரலில்லாத, கனி - கனியை; (எ - று.)

காமம்-ஆகுபெயர். அத்து, அல்வழிக்கண் வந்தது. முன்னை நல்வினை இல்வழிப் பெறப்படாமையின் 'பெற்றார்' என்றும், அவராற் றடையின்றி நுகரப்படுதலின் 'காழில்கனி' என்றுங் கூறினள். நங்காதலர் பிரிதலே யன்றிப் பின் வாராமையு முடைமையின், அக்கனி யாம் பெற்றிலே மென்ப தாயிற்று.

(கு - ரை.) நின்னினும் ஆற்றாராய் - உன்னைக்காட்டிலும் பிரிவுத்துய ரைத் தாங்கமாட்டாதவராய். தாம் வீழ்வார் தம் வீழப்பெற்றவர் - எவரை விரும்புகின்றார்களோ விரும்பப்பட்ட அவரால் காதலிக்கப்படும் மகளிர். காமம் என்பது - காமநுகர்ச்சிக்கு ஆகுபெயர். காமத்துக் காழில்கனி என்றவிடத்துக் காமமாகிய காழில்கனி என்று விரிதலால், காமத்து என்றஇடத்து அத்துச்சாரியை அல்வழிப்புணர்ச்சியில் இருபெயரொட்டில் வந்த தெனக. 'பெற்றார்' என்று பெறுதலின் அருமை தோன்றக் கூறியது, தாம் விரும்புமவ ரால் காதலிக்கப்படுதலென்பது, முன்னை

நல்வினையினாலேயே முடியுமாதலால். அவரால் - தாம் விரும்பிய புருஷரால் விரும்பப்பெற்ற மகளிரால்.

---

* பி - ம்:—தன் கண்ணதே .



காழில்கனி, நுகர்தற்கு இடையீடில்லை யென்பதை விளக்கும்உவமை. 'பெற்
றாரே' என்றது, தனக்கு நுகர அது கிடைக்கவில்லை யென்ற குறையைக்
குறிப்பிக்கும்.

(க)

கககூஉ. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால்
வீழ்வா ரளிக்கு மளி.

வீழ்வார்க்கு

இதுவுமது.

(இ-ள்.) வீழ்வார்க்கு-(அறமும் பொருளும் நோக்கிப் பிரிந்தால் தம்மை)
இன்றியமையா மகளிர்க்கு, வீழ்வார் - (அவரை) இன்றியமையாக்கணவர்,
அளிக்கும் - (அளவறிந்து வந்து) செய்யும்,
அளி-தலையளி,—வாழ்வார்க்கு -

(தன்னையே நோக்கி) உயிர்வாழ்வார்க்கு, வானம்—,
பயந்து அற்று-அளவறி
ந்து பெய்தாற்போலும்; (எ - று.)
நக்காதலர் நம்மை விழையாமையின் அத்தலையளி
யில்லை யாகலான்,
மழைவறந்துழி அதனுன் வாழ்வார்போல இறந்துபடுதலே
நமக்குள்ளதென்
பதாம்.
(கு - ரை.) தம்மை இன்றியமையா மகளிர் -
பிரிந்த அக்கணவரை
வேண்டிநிற்கும் மகளிர். தன்னையே - வானத்தையே.
அதனுன் - மழையால்.
'அதனுன் வாழாதார்போல' என்றுபாடமாயின்,
அதனுன் - மழைவறத்த
லால் என்க.
(உ)
கககூ. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந ரென்னுஞ் செருக்கு.
இதுவுமது.
(இ - ள்.) வீழுநர் - (தாம்) விழையுங் கணவரான்,
வீழப்படுவார்க்கு -
விழையப்படுமகளிர்க்கு, அமையுமே - ஏற்புடைத்து:
வாழுநம் என்னும்
செருக்கு - (காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து
கடிதின் வருவர், வர்

தால் நாம் இன்புற்று) வாழ்துமென்றிருக்குந் தருக்கு; (எ - று.)

நாம் அவரான் வீழப்படாமையின், நமக்கமைவது இறந்துபாடென்பதாம்.

(கு-ரை.) வீழப்படுவார்க்கமையுமே என்றதனால், அங்ஙனம் நாம் காதல ரால்வீழ [விரும்ப]ப் படவில்லை யாதலால், வாழுநமென்னுஞ் செருக்கின்றி, இறந்துபாடே நமக்கு அமைவதா மென்கிருள். (ரு)

கக௯௪.

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

'காதலரை யியற்பழித்தலையஞ்சி அவரருளின்மை மறைத்த நீ

கடவுட் கற்பினை யாகலிற் கற்புடைமகளிரால் நன்கு மதிக்கப்படுதி' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.)

தாம வீழ்வார் - வீழப்படுவார்-(கற்புடைமகளிரால்) நன்குமதிக்கப்படுவாரும்,

தாம் விரும்புங்கணவரான், வீழப்படார் எனின் - விரும்பப் படாராயின், கெழீஇஇலர் - தீவினையாட்டியர்; (எ - று.)

கஉ0 - ஆம்

அதிகாரம்.—தனிப்படர்மிகுதி எகூ

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

கெழீஇயின்மை-நல்வினையின்மை:

அஃது அருத்தாபத்தியாற் றீவினையுடைமையாயிற்று. தீவினையுடையேற்கு

அந்நன்குமதிப்பாற் பயனில்லை யென்பதாம்.

(கு - ரை.) கணவன் பிரிவுத்துயருறுத்தவும் அக்கணவனை இயற்பழித்

தற்கு அஞ்சி அவர் இப்போது அருளுண்மையால்தான் பிரிந்துள்ளார் என்று

இங்ஙன் கூறுகின்ற நீ தெய்வக்கற்புடையாயெனக் கற்புடைமகளிரால் நன்கு

மதிக்கப்படுவாயென்றதோழிக்கு, தலைவி, 'நான் காதலித்த கணவரால் விரும்

பப்பெறுத தீவினையாட்டி' என்று தன்னைவெறுத்துக் கூறுகின்றாள். வீழப்படு

வார் என்றது-கற்புடையவரால் மதிக்கப்படும் மகளிரை. இதன்பின் உயர்வு

சிறப்புப் பொருளைத் தரும் உம்மை தொக்கது. கெழீ - நல்வினை: இச்சொல்

இன்னிசைதர நீண்டு அளபெடுத்தது: கெழியிலர் - நல்வினையில்லாதவர்:

எனவே, அருத்தாபத்தியால் தீவினையுடையா ரென்றுயிற்று. படர்க்கை யாற் சொல்லினும், தலைவி தன்னைப்பற்றியே கூறுவதால், கணவனால் வீழப் படாமையால் கற்புடையார்மதிப்பால் எனக்குப் பயனில்லையென்ற கருத் துப்படக் கூறுகின்றாள்.

(௪)

கககூரு. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

'அவர்மேற் காதலுடைமையின் அவர் கருத்தறிந்தாற்றிஙய்' என்ற தோழிக்குச் சோல்லியது.

(இ - ள்.) நாம் காதல் கொண்டார் - நம்மாற்காதல்செய்யப்பட்டவர், நமக்கு எவன் செய்ப-நமக்கு என்ன இன்பத்தைச் செய்வர்? தாம் காதல் கொள்ளாக் கடை-(அவ்வாறே) தாமும் (நங்கட்)காதல் செய்யாவழி: (எ-று.)

எச்சவும்மை, விகாரத்தாற்றொக்கது. அக்காதலுடைமையால் நாம் பெற் றது துன்பமே யென்பதாம்.

(கு - ரை.) நாம் எவ்வாறு அவரிடத்துக் காதல்கொண்டுள்ளோமோ, அவ்வாறே அவரும் நம்மிடம் காதல்கொண்டிருப்பின், இங்ஙன் பிரிவுத்துயர் நலியவிடார்: அங்ஙன் அவர் காதல்கொள்ளாமையால், அவர்மீது நமக்குள்ள காதலால் நாம் துன்பமே பெறுமாறு ஆயிற்றென்றவாறு. 'தாம்' என்பதன் பின் நாமேயன்றி அவர் தாமும் என்ற பொருள் தரும் இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கதென்க.

(ரு)

கககரு. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

இதுவுமது.

(இ - ள்.) (மகளிர் ஆடவரென்னுமிருதலையினும்), காமம் - வேட்கை, ஒரு தலையான் இன்னாது - ஒருதலைக்கண்ணேயாயின் (அஃது) இன்னாது; கா போல - காவினது பாரம்போல, இருதலையான் உம் இனிது - இருதலைக்கண்ணு மொப்பின் (அஃது) இனிது; (எ - று.)

மூன்றனுருபுகள், ஏழன்பொருண்மைக்கண் வந்தன. கா - ஆகுபெயர்

என்மாட்டுண்டாயவேட்கை அவர்மாட்டுமுண்டாயின், யான் இவ்வாறு துன்ப

முழத்தல் கூடுமோ வென்பதாம்.

(கு - ரை.) இருதலையினும் வேட்கை-ஈரிடத்தும் ஒத்திருக்கவேண்டிய

காதல். 'தலையான்' என்றவற்றிலுள்ள மூன்றனுருபுகள், ஏழனுருபு ஆகப்

பொருள்படுவதால், வேற்றுமைமயக்கம். கா என்பது - காத்தண்டின்பாரத்

துக்கு ஆகியது, இடவாகுபெயர். துன்பமுழத்தல் கூடுமோ - துன்பத்தை

யனுபவித்தல் நிகழுமோ?

(௬)

௧௧௯௭.

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம

னொருவர்க ணின்றொழுகு வான்.

இதுவுமது.

(இ - ள்.) (காமநுகர்தற்குரிய இருவரிடத்தும் ஒப்பநிற்றலொழிந்து),

ஒருவர்கணின்று-ஒருவரிடத்தேநின்று, ஒழுகுவான்-பொருகின்ற, காமன்-

காமக்கடவுள், பருவரல்உம்- அவ்விடத்துப்)பசப்பாலுய

பருவரலும, பைதல
உம் - படர்மிகுதியும், காணான்கொல்
- அறியான்கொலோ! (எ - று.)
விழைவும் வெறுப்புமின்றி எல்லார்கண்ணும் நிகழ்ந்தனவறிதற்குரிய
கடவுளும் என்கண் வேறுபட்டான்: இனி யானுய்யுமாறென்னையென்பதாம்.
(கு - ரை.) ஒழுகுவான் - தன் காரியத்தை நடத்துபவன். விழைவு -
விருப்பம். காமன் பருவரலும் பைதலும் அறிந்திருப்பின், என்னைத் துய
ருறுத்துவது போல அவரையும் துயருறுத்துவனே: அங்ஙன் துயருறுத்த
விலனே யென்றவாறு.
(எ)
கககூ. வீழ்வாரி னின்சொற் பெறூஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.
தலைமகன் தூதுவரக்காணாது சொல்லியது.
(இ-ள்.) வீழ்வாரின்-(தம்மால்) விரும்பப்படுங் காதலர் திறத்து நின்றும்,
இன்சொல் பெறாது - ஓரின்சொல்லளவும்பெறாதே, வாழ்வாரின் -- (பிரி
வாற்றி) உயிர்வாழ்கின்ற மகளிர்போல, வன்கணார்-வன்கண்மை யுடையார்,

உலகத்து இல் - இவ்வுலகத்தில்லை; (எ - று.)
காதலர்திறத்துச்சொல் யாதானும் எனக்கு இனிதென்னுங் கருத்தால்,
'இன்சொல்' என்றாள். இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. யான் வன்
கண்ணேனாகலின், அதுவும் பெறாது உயிர்வாழாநின்றே னென்பதாம்.

(கு - ரை.) காதலர்திறத்து நின்றும் ஓர் இன்சொல் - காதலரிடத்து
நின்றும் வரும் ஓர்இனியசொல். வன்கண்மை - கொடுமை. இன்சொல்
என்பதன்பின் இழிவுசிறப்பும்மை தொக்கதென்க. வன்கண்ணேன் -
கொடுமையுடையேன். அதுவும் - இன்சொல்லும்.

(அ)

கககூ௯. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

## கஉக - ஆம்
## அதிகாரம் — நினைந்தவர்புலம்பல் அக

இதுவுமது.

(இ - ள்.) நசைஇயார் - (என்னால்) நச்சப்பட்டகாதலர், நல்கார் எனின்

உம்-(என் மாட்டு) அன்பிலரேயாயினும்,—அவர் மாட்டு இசைஉம்-அவர்திறத்து

யாதானுமோர்சொல்லும், செவிக்கு இனிய - (என்)செவிக்கு இனியவாம்.

இழிவுசிறப்பும்மை, அவர் வாரலரென்னுஞ் சொல்லாயினும் அமையு

மென்பதுபட நின்றது. அதுவும் பெற்றிலேனென்பதாம்.

(கு - ரை.) இசை - சொல்: இது இப்பொருளில்வருதலை "இசைதிரிந்

திசைப்பினும்" என்ற தொல்காப்பியத்துப் பொருளியலிலுங் காண்க. இசை

யென்றதன்பின், உம்மை-இழிவுசிறப்புப்பொருளது. வாரலரென்னும் சொல்

லாயினும் - வரமாட்டாரென்ற சொல்லாவது. (கூ)

கஉ00

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

தலைமகன் தூதுவரப்பெறாது தான் தூதுவிடக்கருதியாள்*

நெஞ்சோடு சொல்லியது.

(இ - ள்.) உறார்க்கு - (நின்னோடு) உறாதார்க்கு, உறு நோய்-(நின்) உறு

நோயை, உரைப்பாய்-உரைக்கலுற்ற, நெஞ்சு-நெஞ்சே!—(நீ ஆற்றாயாயினும்

அரிதாய அதனையொழிந்து), கடலை செறாய் - (நினைக்குத் துயரஞ்செய்கின்ற)

கடலைத் தூர்க்கமுயல்வாயாக: (அஃதெளிது); (எ - று.)

உரைக்கலுற்றது அளவிறந்தநோயாகலானும், கேட்பார் உறவிலராகலா

னும், அது முடிவதொன்றன்று,முடிந்தாலும் பயனில்லையென்பது கருதாது

முயலாநின்றாயென்னுங் குறிப்பான் 'வாழிய' என்றாள்.

(கு - ரை.) பிரிந்துசென்ற தலைமகன்,தான், 'இன்னபோது மீண்டு வரு

வேன்' என்று தூதுமூலமாகவும் அறிவிக்காத நிலையில் அவனிடத்துத் தூது

விடக்கருதிய தலைவி தன்நெஞ்சொடுகூறியது இது. உறாதார்க்கு-உறவில்லா

தார்க்கு. உறுநோய்-மிக்கநோய்: இதனையே அளவிறந்தநோய் என்று விரிக்

கின்றார். அது - அந்நோய் உரைப்பது. அது முடிந்தாலும் பயனில்லை

என்பதை, 'கடலைத்தூர்க்க முயல்வாயாக' என்பதனாற் பெறவைத்தார்.

தூதாகப்போய் நோய்சொல்லி முடிப்பதனைவிடத் துன்பஞ்செய்யுங்கடலைத்

தூர்ப்பது எளிது என்கிறாள்.

## கஉக - ஆம்

## அதிகாரம்.—நினைந்தவர்புலம்பல்.

அஃதாவது - முன்கூடியஞான்றை யின்பத்தினை நினைந்து தலைமகள்

தனிமையெய்தலும், பாசறைக்கண் தலைமகன் றனிமையெய்தலுமாம். இவ்

வாறு இருவர்க்கும் பொதுவாதல்பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. இது, படர்மிகுதி தன்கண்ணதாக நினைந்த தலைமகட்கும் உரித்தாகலின், அவ்

வியைபுபற்றித் தனிப்படர்மிகுதியின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) முன்கூடியஞான்றை இன்பத்தினை-முன்னே கூடியபோது

பெற்ற இன்பத்தை.
தனிமையெய்தல்-தனிமையாலான துன்பத்தை யடை

தல். தனிமை-ஆகுபெயர். 'புலம்பேதனிமை' என்ற
*
தொல்காப்பிய வுரியியற்

சூத்திரத்துக்குஏற்ப,புலம்பல் என்பதற்குத் தனிமையெய்த லென்று பொருள்
கூறப்பட்டது. பாசறை-படைவீடு: பகைமேற் சென்றோருறையுமிடம். 'முன்
கூடிய ஞான்றை இன்பத்தினை நினைந்து' என்ற தொடர், பாசறைக்கண் தலை
மகன் என்றதன் முன்னும் இயையும். தலைவன் ஒப்பிகந்தவனெனப்படுத
லால் இவனுக்குப் பகையாவாரின்மையால், இத் தலைவன் பாசறைக்கட்
சென்றானெனின், இப்பிரிவு, துணைவயிற்பிரிவு ஆகவேண்டும்: துணைவயிற்
பிரிவுகுறித்துத் தஞ்சைவாணன்கோவை யுரைகாரர் கூறுவது:—'நண்பாகிய
வேந்தனுக்குப் பகைவேந்தரால்இடையூறுற்றவழி அவ்விடையூறுதீர்த்தற்குத் தலைமகன் துணையாகப்பிரிதல். தன்னுழையரில் ஒருவனைப் படைகூட்டிச்
செல்லவிடாது தான் போதல்வேண்டுமென்பது என்னையெனின்,—நட்பு
மிக்கால் தானே அவனுமிருத்தலின் அவன்கருமம் தன்கருமமா யெண்ணி
விரைவினை மூந்து அப்பகைநீக்கத் தானேபோயினனெனக்கொள்க'என்பது.
நினைந்தவன்புலம்பல் அல்லது நினைந்தவள் புலம்பல் என்று ஒருமைப்
பாலாற்கூறாது நினைந்தவரிபுலம்பல் என்று

பன்மைப்பாலாற் கூறியது -

இப்புலம்பல் தலைவன் தலைவி என்ற இருபாலார்க்கும் பொதுவாதலா லாகும்.

இது - நினைந்தவர் புலம்பல். படர்மிகுதி தன்கண்ணதாக நினைந்த -

துன்பம் மிகுதல் தன்னிடத்தில்தான் உள்ளதாகக்கருதிய. தனிப்படர்மிகுதி

தன்னிடத்தேயுள்ளதாகக்கருதும் தலைவிக்கும் இந்த நினைந்தவர்புலம்பல்

என்பது உள்ளதனுல், அவ்வியைபுபற்றி, இது தனிப்படர்மிகுதியின்பின்

வைக்கப்பட்ட தெனை, அதிகாரமுறைமைக்கு இயைபு காண்க.

கஉ0க. உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்

கள்ளினுங் காம மினிது.

தூதாய்ச்சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.

(இ - ள்.) உள்ளின் உம் - (முன்கூடியஞான்றை யின்பத்தினைப் பிரிந்

துழி) நினைந்தாலும், தீரா - (அதுபொழுது பெற்றாற்போல) நீங்காத, பெரு

மகிழ் செய்தலால் - மிக்கமகிழ்ச்சியைத் தருதலால்,—கள்ளின் உம் - (உண்

டுழியல்லது *மகிழ் செய்யாத) கள்ளினும், காமம்—, இனிது - இன்பம்

பயத்தலுடைத்து; (எ - று.)

தன்றனிமையுந் தலைமகளை மறவாமையுங் கூறியவாறு.

(கு - ரை.) தூதாய்ச்சென்ற - தூதாய்ச் செல்லப்போகின்ற: விரைவிற் செல்வானென்பதுபற்றி இறந்தகாலத்தாற் கூறியது. பிரிந்துழி - பிரிந்த போது. உண்டுழி - பருகியபோது: 'உண்' - இங்கே பொதுவினை. (க)

கஉ0உ.

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

இதுவுமது.

(இ - ள்.) தாம் வீழ்வார் - தம்மால் விரும்பப்படுவாரை, நினைப்ப - (பிரிவின்கண்) நினைத்தால், †(அந்நினை ...ார்க்கு அப்பிரிவான்), வருவது ஒன்று

* பி - ம்: மகிழ்ச்சி † அந்நினைந்தவர்க்கு

கஉக - ஆம்

அதிகாரம்.—நினைந்தவர்புலம்பல் ௩௫

இல் - வருவதோர் துன்பமில்லையாம்; (அதனால்), காமம்—, எனைத்து -

எத்துணையேனும், இனிது ஒன்றேகாண்—; (எ - று.)
புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்ப
வினிதென்பான், 'எனைத்துமினிது'
என்றான். சிறப்பும்மை
விகாரத்தாற்றொக்கது. தான் ஆற்றியவகை கூறியவாறு.
(கு - ரை.) 'எனைத்தொன்றினிது' என்று தலைவன்
கூறியது, புணர்ந்த
போதன்றிப் பிரிந்தபோதும் விரும்பப்படுவாரை
நினைத்தால் பிரிவுத்துன்பம்
வாராது இன்பமே யுண்டாவதால் என்க.

(உ)

கஉ0௩. நினைப்பவர் போன்று நினையார்கொ
றும்மல்
சினைப்பது போன்று கெடும்.
தலைமகனை நினைந்து வருந்துகின்றதலைமகள்
தோழிக்குச் சொல்லியது.
(இ - ள்.) தும்மல் - (எனக்குத்)தும்மல், சினைப்பது
போன்று-எழுவது
போன்று, (தோன்றி), கெடும் - கெடாநின்றது:
(அதனால்), நினைப்பவர்
போன்று - (காதலர் என்னை) நினைப்பார்போன்று,
நினையார் கொல் - நினை
யாராகல் வேண்டும்; (எ - று.)
சினைத்தல் - அரும்புதல். செய்மைக்கண்ணராய

கேளிர் நினைந்துழி அந்
நினைக்கப்பட்டார்க்குத் தும்ம றோன்றுமென்னு
முலகியல்பற்றி, தலைமக
னெடுத்துக்கொண்ட வினை முடிவதுபோன்று
முடியாமை யுணர்ந்தாள்
சொல்லியதாயிற்று.

(கு - ரை.) சேய்மைக் கண்ணராய -
வெகுதூரத்தி லிருப்பவராகிய.
கேளிர்-சுற்றத்தார். நினைந்துழி-நினைந்தபோது.
வெகுதூரஞ்சென்ற சுற்றத்
தார் நினைப்பின், நினைக்கப்பட்டார்க்குத் தும்மல்
தோன்று மென்ப. எடுத்
துக்கொண்ட - மேற்கொண்ட. தும்மல் வருவதுபோன்ற
குறிகள் தோன்றி
யும் அது வராமையால், தலைமகன் மேற்கொண்டவினை
முடிவதுபோலத்
தோன்றியும் இன்னும் முடியாமையை யுணர்ந்தாள்.
முடிந்தால், நம்மை
நினைந்து மீண்டுவருவான் தலைவன்; இன்னும்
முடிவதுபோன்று முடிந்திடா
மையால், நினைப்பதுபோன்று தும்மல் கெட்டது
என்கிறாள். (ரு)

கஉ0௪. யாமு *முளங்கொ லவர்நெஞ்சத்
தெந்நெஞ்சத்

தோழ வுளரே யவர்.

இதுவுமது.

(இ - ள்.) எம் நெஞ்சத்து - எம்முடைய நெஞ்சத்து,
அவர் ஓ உளர் ஏ -
அவர் எப்பொழுதும்உளரேயாயிராநி
ன்றார்;(அவ்வகையே), அவர் நெஞ்சத்து-
அவருடைய நெஞ்சத்தும், யாம் உம் உளம் கொல் -
(ஆகேமோ?) (எ - று.)
யாமும் உளமாதுமோ? ஓகாரவிடைச்சொல்,

ஈண்டிடைவிடாமை யுணர்த்திநின்றது. உளமா
யும் வினைமுடியாமையின் வாராராயினரோ, அது
முடிந்தும் இலமாகலின்
வாராராயினரோவென்பது கருத்து.

---

* பி - ம்: உளேங்கொல்

(கு - ரை.) கொல் - ஐயம். உளம்ஆதுமோ - இருப்போமாவோமோ? ஓகாரம் - 'எந்நெஞ்சத்தோ' என்ற இடத்திலுள்ளது. எப்பொழுதும் என்பது, 'ஓ' என்பதன்பொருள். ஒன்று இன்னும் வினைமுடிந்திடாமையாயிருக்கவேண்டும்: அன்றி, எம்மைப்பற்றிய எண்ணமே அவருக்கு இல்லாமவிருக்கவேண்டும்: இவ்விரண்டில் ஒன்றுதான் தலைவர் வாராமைக்குக் காரணமாகவேண்டு மென்கிறாள். இலமாகலின் - யாம் அவர்நெஞ்சத்து இல்லாமையால்: எம்மைப்பற்றித் தலைவர் மறந்திட்டதனால் என்றபடி. (௪)

கஉ0ரு.

தநெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல்.

இதுவுமது.

(இ - ள்.) தம் நெஞ்சத்து-தம்முடைய நெஞ்சின்கண்ணே, (யாஞ்செல்லாமல்), எம்மை கடி கொண்டார்-எம்மைக் காவல்கொண்ட காதலர், (தாம்), எம் நெஞ்சத்து-எம்முடையநெஞ்சின்கண், ஓவா வரல் - ஒழியாது வருதலை, நாணார்கொல் - நாணார்கொல்லோ? (எ - று.)

ஒருவரைத் தங்கண்வருதற்கு ஒருகாலும் உடம்படாது தாம் அவர்கட் பலகாலுஞ் சேறல் நாணுடையார் செயலன்மையின், 'நாணார்கொல்'என்றாள்.

(கு - ரை.) நெஞ்சின்கண்ணே யாம் செல்லாமல் எம்மைக் காவல் கொண்ட காதலர் - எம்மைச்சிறிதும் தம்மனத்தாற்

சிந்தியாத கணவர் என்ற

படி. தான் காதலரை இடைவிடாது எண்ணமிடுதலை, 'என்னெஞ்சத்து ஓவா

வரல்' என்கிறாள் தலைவி. தங்கண் வருதற்கு-தம்மிடத்தில் வருவதற்கு. ஒரு

காலும் உடம்படாது - ஒருபோதுஞ் சம்மதியாமல். சேறல் - செல்லுதல்.(ரு)

கஉ0௬. மற்றியா
னுற்றநா

ளென்னுளேன் மன்னோ வவரொடியா
னுள்ள வுளேன்.

'அவரோடு புணர்ந்தஞான்றையின்பத்தை நினைந்து இறந்துபாடு

எய்தாநின்றாய்: அது மறத்தல்வேண்டும்' என்றாட்குச் சொல்லியது.

(இ - ள்.) யான்—, அவரொடு—, உற்ற நாள் - புணர்ந்த ஞான்றை

யின்பத்தை, உள்ள - நினைதலான், (இத்துன்பவெள்ளத்தும்), உளேன் -

உயிர்வாழ்கின்றேன்; மற்று யான் என் உளேன் - அது இன்றாயின் வேறெனத்

தால் உயிர்வாழ்வேன்? (எ - று.)

நாள் - ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுள, அவைபெற்றிலேனென்

பதுபட நின்றமையின், மன் - ஒழியிசைக்கண் வந்தது.
அவை அவன்றாது
வருதல், தன்றாதுசேறன் முதலாயின.
அவையாவுமின்மையின், இதுவல்
லது எனக்குப் பற்றுக்கோடில்லை யென்பது கருத்து.

•(கு - ரை.) புணர்ந்தஞான்றை இன்பத்தை -
புணர்ந்தபோது தோன்
றிய சுகத்தை. அது - புணர்ந்தபோதைய இன்பத்தை
நினைத்தல். என்
உளேன் - எதனால் உளனாவேன்? நாள் என்பது -
அந்நாளைய இன்பத்தைக்
காட்டுதலால், ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறு
உபாயம் பெற்றிலே
னென்ற கருத்தை 'மன்' என்பது தெரிவிப்பது காண்க;
அங்ஙன்தெரிவிக்

க௨க - ஆம்

அதிகாரம்.—நினைந்தவர்புலம்பல் அரு

கும்பொருள், ஒழியிசையாகும். இதுவல்லது - புணர்ந்தநா
ளைய இன்பத்தை
நினைப்பதல்லது.

(சு)

கஉ0எ. மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியே

னுள்ளினு முள்ளஞ் சுடும்.

இதுவுமது.

(இ - ள்.) மறப்பு அறியேன் - (அவ்வின்பத்தை) மறத்தலறியேனாய், உள்ளின் உம்-(இன்று) உள்ளாநிற்கவும், (பிரிவு), உள்ளம்சுடும்-(என்) உள்ளத்தைச்சுடாநின்றது: (அங்ஙனம் பிரிவாற்றாத யான்), மறப்பின் - மறந்தால், எவன் ஆவன் - (இறந்துபடாது) உளேனாவது எத்தால்? (எ - று.)

*செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. மன் - ஈண்டும் அதுபட நின்று, ஒழியிசையாயிற்று. கொல் - அசைநிலை.

(கு - ரை.) அவ்வின்பத்தை - முன்கூடிய ஞான்றை யின்பத்தை. செயப்படுபொருள் - (பாங்கியின் எண்ணப்படி மறத்தற்கு உரிய) இன்பத்தை யென்பது. இந்த அதிகாரம், முன்கூடிய ஞான்றை யின்பத்தினை நினைந்து தலைவன் தலைவியரென்ற இருவரும் புலம்பலாகிய [தனிமையாகிய] நினைந்தவர்புலம்ப லென்பது ஆகலால், அதற்கு ஏற்ப, மறப்பறியேன் என்பதற்கு - முன்கூடிய ஞான்றையின்பத்தைச் சுட்டும் 'அவ்வின்பத்தை' என்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.

'ஈண்டும்'என்றது,கீழ்க்குறளிற்போல என்ற குறிப்பினது. அதுபட - 'உயிர்வாழ்தற்கு வேறு உபாயங்களுமுள: அவை பெற்றிலேன்' என்ற பொருள்பட.

(எ)

கஉ0௪. எனைத்து நினைப்பினுங் காயா
ரனைத்தன்றோ

காதலர் செய்யுஞ் சிறப்பு.

'இத்துன்பமறிந்து வந்து காதலர்
நினக்குஇன்பஞ்செய்வர்'

என்றாட்குச் சொல்லியது.

(இ - ள்.) எனைத்து - (தம்மை யான்) எத்துணையும், நினைப்பின் உம் - (மிக்)நினைந்தாலும், காயார் - (அதற்கு) வெகுளார்; காதலர் செய்யும் சிறப்பு- காதலர்(எனக்குச்)செய்யுமின்பமாவது, அனைத்து அன்றோ-அவ்வளவன்றோ?

வெகுளாமை-அதற்குடன்பட்டு நெஞ்சின்கணிற்றல் தனக்கு அவ்வின்பத்திற் சிறந்ததின்மையின், அதனை 'சிறப்பு' என்றாள். 'காதலர் நம்மாட்டருள்' என்றும், 'செய்யுங்குணம்' என்றும் பாடமோதுவாருமுளர். தோழி கூறிய அதனைக் குறிப்பான் இகழ்ந்து கூறியவாறு.

(கு-ரை.)

இத்துன்பம்-பிரிவினால் நீ படுகின்ற இத்தத்துன்பம். அதற்கு-அங்ஙனம் யான் மிக நினைத்தற்கு. அவ்வின்பத்தின் - தன்நெஞ்சில் காதலர் இடைவிடாது நிற்றலாகிய அந்த இன்பத்தைவிட. சிறப்பு என்பது - சிறத்தலையுடைய இன்பத்துக்கு, ஆகுபெயரென்க. 'காதலர் செய்யுஞ் சிறப்பு' என்றவிடத்து, ஒருசாரார் 'காதலர்

நம்மாட் டருள்'என் றும், வேறொருசாரார்

* பி - ம்: மறக்கப்படுவது



'காதலர் செய்யுங் குணம்' என்றும் பாடமோதுவர். காதலர் இத்துன்ப
மறிந்துவந்து இன்பஞ்செய்யாரென்ற தோழியை நோக்கி, தலைவி, 'நம்காத
லரை யான் எத்துணை நினைத்தாலும் காயாமல் [கோபியாமல்] இருக்கின்
றாரே: இதுவே, அவர் நமக்குச் செய்கின்ற சிறப்பு' என்று அவள்பேச்சைக்
குறிப்பாக இகழ்ந்து கூறுகின்றாளென்க.

(அ)

•கஉ0க. விளியுமெ னின்னுயிர் வேறல்லமென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.
தலைமகன்றூது வரக் காணாது வருந்துகின்றள்
வப்புறுத்துத் தோழிக்குச் சொல்லியது.
(இ - ள்.) வேறு அல்லம் என்பார் - (முன்பெல்லாம் நாமிருவரும்)
வேறல்லமென்று சொல்லுவாரது, அளி இன்மை - அளியின்மையை, ஆற்ற

நினைந்து - மிகவும் நினைந்து,—என் இன் உயிர்-எனது யும் - கழிகின்றது; (எ - று.)

இனியவுயிர், விளி

அளியின்மை - பின்வருவராகலுமாய்ப் பிரிதலும், பிரிந்துவாராமையும்,

ஆண்டுநின்றுழித் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவாற்றல்வேண்டுமென

வற்புறுத்தாட்கு 'என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று; அவரன்பின்மைக்கு'

என எதிரழிந்து கூறியவாறு.

(கு - ரை.) வற்புறுத்தும் - 'தலைவர் விரைவில் வருவர்: நீ ஆற்றியிரு'

என்று உறுதியாகச் சொல்லுகிற. 'ஆற்றியிரு' என்று வற்புறுத்துக் கூறுவதும்

வன்புறை யெனப்படும். "எல்லாவாயிலுங் கிழவோன்பிரிவயிற், பல்லாற்

றானும் வன்புறை குறித்தன்று" என்ற களவியற்சூத்திரமுங் காண்க. தலை

மகன் தூது வாராதது வருந்துகின்றாளாய தலைவி தோழிக்குச் சொல்லி

யது என்க. சொல்லுவாரது - சொல்லுந்தன்மையராயிருந்த கணவருடைய.

அளியின்மை - கருணையில்லாமை. பின் வருவராகலுமாய்ப் பிரிதல்-பின்னே

வருவேனென்று சொல்லிப்பிரிதல். ஆண்டு நின்றுழி - சென்ற

தேயத்துத் தங்கியபோது. 'பிரிவாற்றல்வேண்டும்'
என்று வற்புறுத்திய
தோழிக்கு, 'யான்பிரிவாற்றித் தான் இருக்கின்றேன்:
பிரிவிற்கு அன்று என்
உயிர் கழிகின்றது: அவருடைய அன்பு
இன்மைக்காகத்தான் கழிகின்றது'
என்று, தலைவி, எதிராக மனமழிந்து கூறியகிளவி
இது. "பண்டுநாம்,
வேறல்ல மென்பதொன்றுண்டால்" என்ற
கலித்தொகை, முதலடியிற்
கிரணத்தக்கது.

(கூ)

கஉக O. விடாஅது சென்றாரைக் கண்ணினாற்
காணப்
படாஅதி வாழி மதி.

வன்புறையெதிரழிந்தாள் காமமிக்க கழிபடராற்
சொல்லியது.

(இ - ள்.) மதி - மதியே! விடாது -
(என்நெஞ்சின்) இடைவிடாதிரு
ந்தே, சென்றாரை - விட்டுப்போயினாரை,
கண்ணினால் - (யான் என்) கண்ணள
வானுயினும்,
காண-எதிர்ப்படும்வகை, படாதி-(நீ)படாதொழிவாயாக;
(எ-று.)

கஉஉ - ஆம் அதிகாரம்.—கனவுநிலையுரைத்தல்

௲ள

கண்ணளவா னெதிர்ப்படுதலாவது-மதி இருவரானும் நோக்கப்படுதலின் இருவர்கண்ணும் அதன்கண்ணே சேர்தல். முதலொடு சினைக்கொற்றுமை யுண்மையின் 'சென்றாரைக் காண'என்றும், குறையுறுகின்றாளாகலின் 'வாழி' என்றுங் கூறினாள். இனிப் படாதென்பது பாடமாயின், கனவிடைக்கண்ணினாற் காணுமாறு மதிபடுகின்றதில்லையென அதனாற் றுயில்பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு, வாழியென்பது-அசைநிலை.

(கு - ரை.) தோழியின் வன்புறைக்கு எதிரழிந்த தலைவியின் காமமிக்க கழிபடர் கிளவியாகும், இது. காமம் மிக்க-(பிரிவினால்) காதல்விஞ்சுவதனால், கழி - மிக, படர் - துன்புறுகின்ற, கிளவி யென்க. 'காமமிக்க கழிபடர் கிளவியென்பது தலைமகனைக் காணலுற்று வருந்தாநின்ற தலைமகள் தனது வேட்கைமிகுவாற் கேளாதவற்றைக் கேட்பனவாகவிளித்து ...கூறுநிற்றல்' என்பர், பேராசிரியர். கண்ணினாற் காணுதல் - கண்ணினா லெதிர்ப்படுதல்; அதாவது - கணவனது கண் பதிந்த மதியினிடத்தே தலைவியின்கண்ணும் சேர்தல்: நேரே தலைவன் தலைவியர் இருவரும் காணவிட்டாலும், சந்திரன் மூலமாக இருவர்

கண்களுக்கும் சேர்க்கை நிகழ்தலறிக: ஸ்ரீவால்மீகிபகவானும் ஸ்ரீராமாயணத்தில் "சந்த்ரே த்ருஷ்டி ஸமாகம:" [சந்திரன் மூலமாகக் கண்களுக்குக் கலவி]" என்று பிரிந்தார் வார்த்தையில் அருளியிருத்தல் காண்க. முதலென்றது - தலைவனை: சினை யென்றது - அவனுடையகண்களை. அவனுடைய கண் பட்ட சந்திரனது இடத்துத் தலைவியின் கண் படுவதுமூலமாகத் தலைவன் கண்ணோடு தலைவியின் கண்ணுக்குச் சம்பந்தம் நிகழ்தலால், 'சென்றார் [தலைவர்] கண்ணைக் காண' என்று ஒருவாறு கூறலாம்: அங்ஙனன்றி, 'சென்றாரைக்காண' என்றே கூறியது, முதலோடு சினைக்கு உள்ள ஒற்றுமை யா லென்க. குறையுறுகின்றாள் - குறைபெறுமாறு வேண்டுகின்றாள். படாதி- அஸ்தமியாதிருப்பாயாக. 'படாதி' என்ற இடத்து, படாது என்று பாடமாயின், சென்றாரை, கண்ணினால் காண - (கனவிலே) கண்ணினாற் காணுமாறு, மதி படாது - சந்திரன் அஸ்தமியாமலிருக்கின்றானென்று பதப்பொருள். சந்திரன் அஸ்தமியாது காமோத்தீபகப்பொருளாய் வாட்டுவதனால், நான் துயில்பெறுவதில்லை: அதனால், கனவிடையாவது காணக்கூடிய காதலரைக் காணாது வருந்துகின்றேனென்று தலைவி கூறியதாகக் கொள்க. கூற்று - பேச்சு. இந்தப்பாட்டில், மதியென்ற சொற்கு ஏற்ப, படாது என்ற ஒன்றன்பான்முற்று அமைந்தது.

(௧0)

கஉஉ - ஆம

# அதிகாரம்.—கனவுநிலையுரைத்தல்.

அஃதாவது-தலைமகள் தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு நனவின்கண் நினைவுமிகுதியாற் கண்டதாகலின், இது, நினைந்தவர்புலம்பலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) நனவு - சொப்பனசுழுத்தியவஸ்தைகளுக்கு வேறாகிய சாக்கிராவஸ்தை: (இதற்கு எதிர்த்தட்டானது - கனவு.) நனவிற்கண்டன, நினைப்பின் மிகுதியாற் கனவிற் காணப்படும்: ஆகவே, நினைப்பின் மிகுதியாற்



காணுங் கனவுநிலையுரைத்தல், நினைந்தவர்புலம்பலின்பின் வைக்கப்பட்டதென, அதிகாரமுறைமைக்குக் காரணங் காண்க.

கஉகக. காதலர் தூதொடு வந்த கனவினுக்
யாதுசெய் வேன்கொல் விருந்து.

தலைமகன்றூது வரக்கண்டாள் சொல்லியது.

(இ - ள்.) காதலர் தூதொடு - (யான் வருந்துகின்றதறிந்து அது தீரக்) காதலர் விடுத்த தூதினைக்கொண்டு, வந்த-என் மாட்டுவந்த, கனவினுக்கு—, விருந்து யாது செய்வேன்-(யான்) விருந்தாக யாதனைச் செய்வேன்? (எ - று.)

விருந்தென்றது விருந்திற்குச்செய்யும் *உபசாரத்தினை. அது கனவிற்கு

ஒன்று காணுமையின், 'யாது செய்வேன்' என்றாள்.

(கு - ரை.) தலைமகன் தூதுவரக் கண்டாள் - தலைமகன் தூதுவரக் கனவு கண்டவள். புதுமையென்ற பொருளுள்ள விருந்து என்பது - இங்கு, புதிய ராகவந்தார்க்கு ஆகி, பிறகு அவர்க்குச்செய்யும் உபசாரத்திற்கு ஆயிற்று: இருமடியாகுபெயர். அது - விருந்தினர்க்குச் செய்யும் உபசாரம். 'கனவிற்கு ஒன்று' என்ற இடத்து 'கனவிலொன்றுகாணுமையான்' என்றும் பாடமுண்டு.

கஉகஉ. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்

குயலுண்மை சாற்றுவேன் மன்.

தூதுவிடக்கருதியாள் சொல்லியது.

(இ - ள்.) கயல் உண் கண்-(துஞ்சாது வருந்துகின்ற என்)கயல்போலு முண்கண்கள், யான் இரப்ப துஞ்சின் - யான் இரந்தால் துஞ்சுமாயின்,— கலந்தார்க்கு - (கனவிடைக் காதலரைக் காண்பேன், கண்டால்) அவர்க்கு, உயல் உண்மை - (யான்) ஆற்றியுளேனாய தன்மையை, சாற்றுவேன் - (யானே) விரியச்சொல்வேன்; (எ - று.)

'கயலுண்கண்' என்றாள், கழிந்த நலத்திற்கிரங்கி. உயல் - காமநோய்க்

குத் தப்புதல். தூதர்க்குச்சொல்லாது யாம் அடக்குவனவும், சொல்லுவனவற்
றுள்ளுஞ் சுருக்குவனவற்றின் பரப்பும் தோன்றச் சொல்வேனென்னுங் கருத்
தால் 'சாற்றுவேன்' என்றாள். இனி, அவையுந்துஞ்சா சாற்றலுங்கூடா தென்பதுபட நின்றமையின், 'மன்'-ஒழியிசைக்கண் வந்தது. முன்னுங் கண்டாள் கூற்றாகலின், கனவுநிலையுரைத்தலாயிற்று.

(கு - ரை.) தலைவி பிரிந்தநிலையிற் புன்கண்மைபடைத்துள்ள தன்கண்களை 'கயலுண்கண்' என்று கூறாளாதலால், 'கழிந்த நலத்திற்குஇரங்கி, கயலுண்கண்' என்றாளென்றார். கழிந்த நலம் - (கண்களுக்குக் கணவரைக்கூடிய நிலையில் இருந்ததாய்ப் பின் பிரிவினாற்)போய்விட்ட அழகு. 'சாற்றுவேன்' என்ற சொல்லின் ஆற்றலால், தூதரிடம் சொல்லாது அடக்குவனவும் தூதரிடம் சுருக்கிச்சொல்பவற்றின் பரப்பும் தோன்றுமாறு கூறுவேனென்பது பெறப்படுமென்க. அவையும் - கண்களும். சாற்றலும்-யான் பொறுத்திருக்

* பி - ம்:—உபகாரத்தினை.

கஉஉ - ஆம்

அதிகாரம்.—கனவுநிலையுரைத்தல் ௮௬

இன்ற தன்மையைத் தலைவர்க்குச் சொல்லுதலும். இந்தச்செய்யுள் - கனவு
நிலையுரைத்தல் ஆமாறு என்னை? துஞ்சினால்

சாற்றுவேன் என்று அன்றோ

இதிலுள்ளது எனின்,—முன்னே கனவுகண்டுள்ளாளான தலைவியின் இளவி

யாதலால், இதுவும்
கனவின்நிலையுரைத்தலிற்சேர்ந்ததேயா மென்று சமா

தானங் கூறியமை காண்க.

(உ)

கஉகரு. நனவினு னல்கா தவரைக் கனவினாற்

காண்டலி னுண்டென் னுயிர்.

ஆற்றலோனைக் கவன்றட்த 'ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது.

(இ - ள்.) நனவினுன் - நனவின்கண்வந்து,
நல்காதவரை - தலையளி

செய்யாதாரை, கனவினால் காண்டலின் - (யான்)
கனவின்கட்கண்ட காட்சி

யானே, என் உயிர் உண்டு - என்னுயிருண்டாகா
நின்றது; (எ - று.)

மூன்றனுருபுகள், ஏழன்பொருண்மைக்கண் வந்தன.
அக்காட்சியானே

யானாற்றியுளேனாகின்றேன், நீ கவலல் வேண்டா
வென்பதாம்.

(கு - ரை.) ஆற்றுளெனக் கவன்றட்கு - தலைவி
பிரிவுத்துயரை யாற்ற

மாட்டாளென்று வருந்திய தோழிக்கு. ஆற்றுவல் - துயர்தாங்குவேன். நன

விஞல், கனவிஞல்என்ற இடங்களிலுள்ளன, மூன்ரும்வேற்றுமையுருபுகள்:

இவைகள் ஏழாம்வேற்றுமைப் பொருளில்வந்தன ஆதலின் வேற்றுமை

மயக்கம். அக்காட்சியானே - கனவிற்கண்ட அத்தக் காட்சியால் தான். (ரு)

கஉகச. கனவிஞ னுண்டாகுங் காம நனவிஞ
னல்காரை நாடித் தரற்கு.

இதுவுமது.

(இ - ள்.) நனவிஞன்-நனவின்கண்வந்து, நல்காரை-தலையளிசெய்யா

தாரை, (அவர்சென்றுழி), நாடி - நாடிக்கொண்டுவந்து, (கனவு), தரற்கு -

தருதலான்,—கனவிஞன் - அக்கனவின்கண்ணே, காமம் உண்டாகும் -

(எனக்கு) இன்பமுண்டாகின்றது; (எ - று.)

காமம் - ஆகுபெயர். நான்காவது, மூன்றன்பொருண்மைக்கண் வந்தது.

இயல்பான் நல்காதவரை அவர்சென்ற தேயமறிந்துசென்று கொண்டுவந்து

தந்து நல்குவித்த கனவால் யான் ஆற்றுவ லென்பதாம்.

(கு - ரை.) நனவின்கண்வந்து காதலர் தலைபளிசெய்தல், பிரிவுக்கு

முன்புஎன்க. சென்றுழி - சென்றஇடத்து. காமம் என்பது - இக்குப்

புணர்ச்சியின்பத்தைக் காட்டுதலால், ஆகுபெயர். தரற்குஎன்றஇடத்து நான்

கனுருபு தாலாலென மூன்றனுருபின்பொருளில் வந்தமை காண்க: வேற்றுமைமயக்கம். இயல்பான் - தம்முடைய நல்ல சுபாவத்தினால்.

இது, நல்கு

வித்த - அருள்புரியுமாறுசெய்வித்த. ஆற்றுவல்-பிரிவுத்துயர் பொறுப்பேன்.

கஉகரு. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்

கண்ட பொழுதே யினிது.

*—12



இதுவுமது.

(இ - ள்.) நனவினான் கண்டது உம் (இனிது) ஆங்கே - (முன்) நன

வின்கண் (அவரைக்) கண்டு நுகர்ந்தஇன்பந்தானும் இனிதாயிற்று அப்

பொழுதே:கனவுஉம் தான் கண்ட பொழுதெ இனிது-(இன்று)கனவின்கட்

கண்டு நுகர்ந்த வின்பமும் அக்கண்டபொழுதே யினிதாயிற்று; (அதனுன்
எனக்கு இரண்டும் ஒத்தன); (எ - று.)
இனிதென்பது முன்னுங் கூட்டப்பட்டது. கனவு-ஆகுபெயர். முன்னும்
யான் பெற்ற திவ்வளவே: இன்னும் அதுகொண்டாற்றுவ லென்பதாம்.

(கு - ரை.) இனிது என்று இரண்டாமடியிலுள்ள முற்று, நனவிற்
கண்டதூஉம் இனிது என முன்னுங்கூட்டப்பட்டது. இரண்டும் - நனவும்
கனவும். 'கனவிற்கண்டதும் இனிது, நனவிற்கண்டதும் இனிது' என்று
கூறியதற்குக் கருத்து, எனக்குக் கனவோடு நனவோடுவாசியில்லையென்பது.
கனவு என்பது - இங்கே கனவிற்கண்டு நுகர்ந்த இன்பம் என்ற பொருளைத்
கருதலால், ஆகுபெயராம். முன்னும் - காதலர் என்னைப்பிரியாதமுன்பும்.
இவ்வளவே - இவ்வளவு இன்பமே. இன்னும் - காதலரைப்பிரிந்த இனியும்.
அதுகொண்டு - அவ்வளவான இ ன்பத்தைக்கொண்டு. (ரு)

கஉகசு. நனவென வொன்றில்லை யாயிற் கனவினுற்
காதலர் நீங்கலர் மன்.

இதுவுமது.

(இ - ள்.) நனவு என-நனவென்று
சொல்லப்படுகின்ற, ஒன்று - ஒரு
பாவி ,
இல்லையாயின்—,—கனவினுல்-கனவின்கண்வந்துகூடிய,
காதலர்—,
நீங்கலர் - (என்னைப்) பிரியார்; (எ - று.)

ஒன்றென்பது, அதன்கொடுமை விளக்கிநின்றது.
அஃது இடையே
புகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்த
தென்பதுபட நின்றமையின்,
'மன்' ஒழியிசைக்கண் வந்தது. கனவிற்பெற்று
ஆற்றுகின்றமை கூறியவாறு.

(கு - ரை.) ஒன்று - கொடுமையிலொப்பற்றது
அதன் - நனவின். அஃது - நனவு. கனவிற்பெற்று

என்னுங் குறிப்பினது.
- கனவிலே காதலரைக்
கூடுவதைப்பெற்று. கனவினுல் - கனவின்கண் என்ற
வந்ததால், வேற்றுமை மயக்கம்.
ஏழன்பொருளில்

(சு)
கஉ கள.

நனவினு னல்காக் கொடியார் கனவினு
னென்னெம்மைப் பீழிப் பது.

விழித்துழிக் காணுளாயினுள்
கனவிற்கூட்டம்நினைந்து ஆற்றளாய்ச்
சொல்லியது.

(இ - ள்.) (ஒருஞான்றும்), நனவினுன் - நனவின்கண்வந்து, நல்கா - தலையளிசெய்யாத, கொடியார் - கொடியவர்,—கனவினுன் - (நாடோறும்) கனவின்கண்வந்து, எம்மை பீழிப்பது - நம்மை வருத்துவது, என் - எவ்வியைபுபற்றி? (எ - று.)

## கஉஉ - ஆம்

## அதிகாரம்.—கனவுநிலையுரைத்தல் கூக

பிரிதலும் பின் நினைந்துவாராமையும்நோக்கி 'கொடியார்' என்றும்; கனவிற்றேண்மேலராய் விழித்துழிக் கரத்தலின் அதனானுந் துன்பமாகா நின்றதென்பாள் 'பீழிப்பது' என்றுங் கூறினுள். *நனவினில்லது கனவினு மில்லையென்பர், அதுகண்டில மென்பதாம்.

(கு - ரை.) ஒருஞான்றும் - ஒருபோதும். எவ்வியைபுபற்றி - என்ன சம்பந்தத்தினுல். காதலரைக் கொடியாரென்றது - பிரிதல்நோக்கியும், பிரிந்த பின் தன்னை நினைந்துவாராமைநோக்கியும். பீழிக்கும்விதத்தை விளக்குவது, 'கனவிற்றேண்மேலராய்' என்பது முதலுள்ள சொற்றொடர். "துஞ்சுங்காற் றேண்மேலராகி" என்று மேற்குறளில் கூறியிருத்தலுங் காண்க. "நீணகர்

ங்றையாற்று ணினையுநள் வதிந்தக்கால், தோண்மேலாயெனநின்னை மதிக்கு மன்மதித்தாங்கே,நனவெனப் புல்லுங்காற் காணாளாய்க் கண்டது,கனவென வுணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே'' என்ற கலித்தொகையும் இங்குக்காணத் தக்கது. பீழிப்பது—பீடிப்பது. நனவின் இல்லது-நனவிற் காணப்படாதது. நனவில் காதலர் தலையளிசெய்தவிலர்: கனவில் தோண்மேலராய்க் கூடித் தலையளிசெய்கின்றார்: அதனால், நனவிலில்லாதது கனவிற்காண்டவில்லை யென்று உலகோர் சொல்வது என்மட்டும் காணப்படவில்லையென்று ஆற்று ளாய தலைவி கூறுகின்றாள். (எ)

கஉகஅ. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து.

தான் ஆற்றுதற்பொருட்டுத்

தலைமகனையியற்பழித்தாட்கு
இயற்பட மொழிந்தது.

(இ-ள்.) (என்நெஞ்சவிடாதுறைகின்ற காதலர்), துஞ்சுங்கால்-(யான்) துஞ்சும்பொழுது வந்து, தோள் மேலர் ஆகி-(என்) தோண்மேலராய், விழிக் குங்கால்-(பின்)விழிக்கும்பொழுது, விரைந்து—, நெஞ்சத்தர்ஆவர்-(பழைய) நெஞ்சின்கண்ணராவர்; (எ - று.)

கலவிவிட்டு மறையுங் கடுமைபற்றி 'விரைந்து' என்றாள். ஒருகாலும் என்னின் நீங்கியறியாதாரை நீ நோவற்பாலையல்லை யென்பதாம்.

(கு - ரை.) தான் - தலைவி. இயற்பழித்தல் - காதலர் அன்பிலரென்று பழித்துப்பேசுதல். தலைவியாற்றுதற்குத் தோழி இயற்பழித்தா ளென்க. இயற்பழித்தாள் - பாங்கி. நனவில் நெஞ்சிலுள்ளார்: கனவில் தோண்மேலர்: இப்படி கனவு நனவுஎன்ற இரண்டிலும் என்னைவிட்டு நீ நோதற்கு உரியாயல்லையென்கின்றாள்: "ஓஒ கடலே,

நீங்காத காதலரை

தெற்றெனக் கண்
ணுள்ளே தோன்றவிமையெடுத்துப், பற்றுவே னென்றியான் விழிக்குங்
கான் மற்றுமென், நெஞ்சத்துளோடி யொளித்தாங்கே துஞ்சாநோய்,
செய்யுமறனில்லவன்'' என்ற கலித்தொகை, இங்குக்காணத்தக்கது. (அ)

கஉகக. நனவினு னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

* பி - ம்: நனவினல்லது



இதுவுமது.

(இ - ள்.) கனவினன் காதலர் காணாதவர்-(தமக்கு ஒரு காதலரின்மை
யின் அவரைக்) கனவிற்கண்டறியாத
மகளிர்,—நனவினன் - (தாம் அறிய)
நனவின்கண் வந்து, நல்காரை - நல்காத நங் காதலரை, நோவர் - (அன்பில
ரென) நோவாநிற்பர்; (எ - று.)

• இயற்பழித்தபொழுது புலக்கின்றாளாகலின், அயன்மைதோன்றக்
கூறினாள். தமக்குங் காதலருளராய் அவரைக் கனவிற் கண்டறிவாராயின்,
நங்காதலர் கனவின்கணுற்றி நல்குதலறிந்து நோவாரென்பதாம்.

(கு - ரை.) கனவிற்கண்டறியாத மகளிர் என்றது - பாங்கியை. பாங்
கியை, 'காதலர்க்காணுதவர்' என்று உலகியலில் வைத்துக் கூறியதனுல்,
அயன்மைதோன்றக் கூறினுள் என்ருர். இனி, நன்மைதோன்றக் கூறினுள்
என்றபாடத்துக்கு 'நனவினுல் நல்காரை நோவர்' என்ற தொடரில், காதலர்
கனவில் எனக்குநல்குகின்ருர் என்பது பெறப்படுதலால், நன்மைதோன்றக்
கூறினுளென்ருர் என்க. 'பன்மைதோன்றக் கூறினுள்' என்று இங்குப்பாட
மோதுவாருமுளர்:அந்தப்பாடத்திற்கு, 'மகளிர்'என்று பாங்கியொருத்தியைப்
பன்மைவாய்பாடு வெளிப்படக் கூறியது, செறலினுலாகுமென்க: "உவப்
பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணையிழிக்
கினுமியல்பே" என்பர், நன்னூலார்.

(கூ)
கஉஉ0 .

நனவினு னந்நீத்தா ரென்பர் கனவினுற்
காணுர்கொ லிவ்வூ ரவர்.

இதுவுமது.

(இ - ள்.) இ ஊரவர் - இவ்வூரின் மகளிர்; நனவினுன் - நனவின் கண்,

நம் நீத்தார் என்பர் - நம்மை நீத்தாரென்று (நங்காதலரைக் கொடுமை) கூறு

நிற்பர்: கனவினுல் - (அவர்) கனவின்கண் (நீங்காது வருதல்), காணுர்கொல்-

கண்டறியாரோ? (எ - று.)

என்னெடு தன்னிடை வேற்றுமையின்றாயின் யான் கண்டது தானுங்

கண்டு அமையும்: அது காணுது அவரைக் கொடுமைகூறுகின்றமையின் அயலா

ளேயா மென்னுங் கருத்தால், 'இவ்வூரவர்' என்றாள்.

(கு - ரை.) பாங்கிக்குத் தலைவியோடு வேற்றுமையில்லையாயின், தலைவி

கனவிற் கண்ட காதலர் வருகையை அவளுங் கண்டு அடங்கியிருத்தல் கூடும்:

அது காணுமையால், பாங்கியை அயலாளாகக்கொண்டு, புலவிதோன்ற 'இவ்

வூரவர்' என்று தலைவி கூறுகின்றாளென்க.

(கo)

## கஉரு - ஆம்

## அதிகாரம்.—பொழுதுகண்டிரங்கல்.

அஃதாவது - மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகளிரங்கு

தல். "கனுழுந்துறுத வினையில்லை" என்பதுபற்றிப்

பகற்பொழுதாற்றியிருந்

தாட்கு உரியதாகலின், இது கனவுநிலை யுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) பொழுது - இங்கே, மாலைப்பொழுது. வந்துழி - வந்த

போது. கனுமுந்துறுதவினை யில்லையென்பது, "கல்லாதான் கண்ட கழிநுட்

# ௧௨௩ - ஆம் அதிகாரம்.—பொழுதுகண்டிரங்கல்

௬௩

பங்கற்றூர்முற், சொல்லுங்காற் சோர்வு படுதலால்-நல்லாய், வினுமுந்துறுத வுரையில்லையில்லைக், கனுமுந்துறுதவினை" என்ற பழமொழிப்பாடலில் உள்ளது. இதன்பொருள் - கனவின்முற்படாத காரியமில்லை யென்பது: பின்னால் நிகழுமது கனவில் முந்துறத்தோன்றும் என்பது, இதன்கருத்து. மேல் நிகழுமது கனவில் தெரியு மாதலால், அக்கனவிற்குரிய இராப்போது வரும் வரையில் தலைவி ஆற்றியிருந்தாளென்க. கனவுநிலையுரைத்தல் பகற்பொழுதில் நிகழ, அதன்பின் மாலைப்பொழுது வர, அது கண்டு இரங்குவாள் என்பது பற்றி, கனவுநிலையுரைத்தலின்பின் பொழுதுகண்டிரங்கல் வைக்கப்பட்டதென அதிகாரமுறைமை காண்க.

௧௨௨௧. மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

பொழுதொடு புலந்து சொல்லியது.

(இ - ள்.) பொழுது - பொழுதே!
களின்வந்த) மாலையோவெனின் அல்லை;

நீ—, மாலை அல்லை - (முன்னாள்
மணந்தார் உயிர் உண்ணும் வேலை-
(இருந்தவாற்றான் அந்நாட் காதலரை)மணந்த
க்காலமாயிருந்தாய்; (எ - று.)
மகளிருயிரையுண்ணும் இறுதி

முன்னாள் - கூடியிருந்த நாள். அந்நாண் மணந்தாரெனவே, பின்பிரிந்தாராதல் பெறுதும். வாழியென்பது-குறிப்புச்சொல். "வாலிழை மகளிருயிர்ப் பொதி யவிழ்க்கும் காலை" என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. *மாலைநீயல்லை எனவும் பாடம். வேலையென்பது - ஆகுபெயர். வேலையென்பதற்கு வேலாயிருந்தாயென்பாருமுளர்.

(கு - ரை.) பொழுதொடு - மாலைப்பொழுதோடு. புலந்து - மாறுபாடு கொண்டு. இருந்த ஆற்றான் - நீ இருந்தநிலைமையைக் கருதுமிடத்து. அந் நாள் காதலரை மணந்த - கணவரைமுன்பு கூடி இப்போது பிரிந்துள்ள என்றபடி. பிரிந்தாருயிருண்ணும் நீ ஒழியவேணுமென்ற குறிப்புப்பொருள் தோன்ற, வாழி என்றதனால், 'வாழியென்பது குறிப்புச்சொல்' என்றார். "வாலிழை" என்று தொடங்கும்மேற்கோள், கலித்தொகை, நெய்தற்கலி,

2-ஆஞ் செய்யுளிலுள்ளது: இதன்பொருள்:—வால்இழை மகளிர் - தூய்மையான அணிகலையணிந்த மகளிரின், உயிர் - உயிரை, பொதி அவிழ்க்கும் - (அவ்வுயிரைப்) பொதிந்துள்ள உடலினின்று போக்குகின்ற, காலை - காலம்

என்பது. இதில், மாலைக்காலத்தைக் காலமென்றுபொருளுள்ள பொதுப் பெயராற் கூறியதுபோல, இந்தக் குறளிலும் மாலைக்காலத்தைப் பொதுப் பெயராகிய 'பொழுது' என்ற சொல்லாற் கூறினரென்க. வேலை - வேலா

என்ற வடசொல்லின் திரிபு: எல்லையென்ற பொருளது: இது-மகளிருயிர்க்கு இறுதிக்காலமாகிய எல்லைக்காலத்தைக் காட்டுதலால், ஆகுபெயர்: இடவாகு

* மாலைநீயல்லை யெனவும் பாடம் என்ற

இந்தவாக்கியம், மதுரைத் தமிழ்ச்சங்கப் பத்திராசிரியர் பதிப்பிற் காணப்படுவது.



பெயரென்னலாம். முடிவு என்ற பொருளதான வேலையென்னுங் காரியப்

பெயர் அதற்குக்காரணமான காலத்திற்கு ஆகுதலால், காரியவாகுபெயரென்

பாருமுளர்: இனி, வேலையென்பதை 'வேல்'என்ற பகுதியினடியாகப்பிறந்த

முன்னிலைக்குறிப்புமுற்றாகக் கொள்ளின், வேலாய் [வேற்படைபோன்று

துன்பஞ்செய்வதாகி] இருந்தாயென்று பொருளாம். (க)

௧௨௨௨. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்

வன்கண்ண தோநின் றுணை.

தன்னுட்கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.

(இ - ள்.) மருள் மாலை - மயங்கியமாலாய்!

புன் கண்ணை - (நீயும் எம்
போலப்)புன்கணுடையையாயிருந்தாய்: நின்
துணை-நின் றுணையும், எம் கேள்
போல் - எந்துணைபோல, வன்கண்ணதுஒ -
வன்கண்மையுடையதோ?
[கூறுவாயாக]; (எ - று.)

மயங்குதல் - பகலுமிரவுந் தம்முள்ளே விரவுதல்; கலங்குதலுந்தோன்ற
நின்றது. புன்கண் - ஒளியிழத்தல்; அதுபற்றித் துணையுமுண்டாக்கிக் கூறி
னாள். எச்சவும்மை,விகாரத்தாற் றொக்கது. எமக்குத் துன்பஞ்செய்தாய், நீயு
மின்பமுற்றிலையென்னுங் குறிப்பால் 'வாழி' என்றாள்.

(கு - ரை.) தன்னுட்கையாற்றை - தன்னிடத்துள்ள செயலற்ற தன்
மையை: கையாறு - செயலறுந் துன்பம். அதன்மேல் - மாலைப்போதின்மேல்.
மயங்கிய - (பகலும்இரவும்) கலந்த. மாலைச்சந்தி காலைச்சந்திஎன்ற இரண்டு
சந்திகளும், பகலும் இரவும் சந்திக்குங் காலமாதலறிக. விரவுதல்-கலத்தல்.
மருளுதலென்பதன்பொருள் மயங்குதலென்பது: அச்சொல்லுக்குக் கலங்குத
லென்றும் பொருளுண்டாதலால், கலங்குதலுந் தோன்றநின்றதென்றார்:
கலங்குதல் - தெளிவின்றியிருத்தல். புன்கண்ணை - புன்கண்ணையுடையாய்:

ஒளியிழத்தலையுடையா யென்றபடி: முன்னிலையொருமைக் குறிப்பு முற்று. மாலைக்குத் தன்போல் புன்கணுடைமை கூறியதனுல், அதற்குத் தன்னைப் போல் துணையுடைமையையும் உண்டாக்கி, 'நின் துணை எம்துணைபோல வன்கண்ணதோ' என்றும் வினவுகின்ருள். வன்கண்ண து-வன்கண்மையென்பதனடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று: வன்கண்மை - கொடுமை.
''புன்கண்கூர்மாலைப்
பெறுதியால்'' என்ற

புலம்புமென் கண்ணேபோல், துன்பமுழவாய் துயிலப்
சிலப்பதிகாரம், ஈண்டு நோக்கத்தக்கது. (உ)

கஉஉரு. பனியரும்பிப் பைதல்கொண்

மாலை துனியரும்பித்
துனபம வளர வரும.
ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குச்
சொல்லியது.
(இ
மெய்தி,

- ள்.) பனி அரும்பி-(காதலர்கூடிய நாளெல்லாம் என்முன்) நடுக்க பைதல்கொள் - பசந்துவந்த, மாலை—, துனி அரும்பி -.(இந்நாள் எனக்கு) இறந்துபாடு வந்துதோன்றி, துன்பம் வளர - (அதற்குளதாம்) துன்பம் (ஒருகாலைக்கொருகால்) மிக, வரும் - வாராநின்றது; (எ - று.)

கஉரு - ஆம் அதிகாரம்.—பொழுதுகண்டிரங்கல்

கூடு

குளிர்ச்சிதோன்ற மயங்கிவரு மாலையென்னுஞ்
செம்பொருள்,*ஈண்டுக் குறிப்புணர நின்றது. துனி -
உயிர்வாழ்தற்கண் வெறுப்பு. அதனால், யான்

ž ற் று ா ் றென்னை யென்பது, குறிப்பெச்சம்.

(கு - ரை.) ஆற்றவேண்டுமென்ற பாங்கிக்கு, எ
ன்னால் பிரிவுத்துயர் ஆற்றமுடியாதென்றுகூறிய கிளவி,
இது. நடுக்கமெய்திஎன்பது-பனியரும்பி என்பதன்பொருள்.
அதற்கு-இறந்துபாட்டுக்கு. பனிஅரும்பி பைதல் கொள் மாலை
என்றதொடர்க்கு-குளிர்ச்சிதோன்ற மயங்கிவருதலைக்கொண்ட
மாலைக் காலம்என்பது, நேர்மையானபொருள்:
இந்தப்பனியரும்பிப் பைதல்கொள் மாலை என்ற தொடரிற்
பெறப்படுங் குறிப்புப்பொருள் - (யான் காதலரோடு கூடிய
நாளெல்லாம் என்முன்)நடுக்கமெய்திப்
பசந்து[நிறம்வேறுபட்டு] வந்த மாலை யென்பது;
.இப்பொருளும், இத்தொடரில் தோன்றுதல் காண்க. உயிர்
வாழ்தலில் வெறுப்புஎன்ற பொருளுள்ள துனியென்பது,
இலக்கணையால், இறந்துபாடு என்ற பொருளது. அதனால் -
இறந்துபாட்டுத் துன்பம்வளர மாலைக்காலம் வருவதனால்.

(ந)

கஉஉச. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

இதுவுமது.

(இ - ள்.) (காதலருள்ள பொழுதெல்லாம் என்னுயிர்
தளிர்ப்ப வந்த), மாலை—, காதலர் இல் வழி - அவரில்லாத

இப்பொழுது, (அஃதொழிந்து
நிற்றலேயன்றி),கொலைக்களத்து ஏதிலர்
போல-கொல்லுங்களரியிற் கொலை
ஞர் வருமாறுபோல,
வரும்-(அவ்வுயிரைக்கோடற்கு)வாராநின்றது; (எ-று.)

ஏதிலர் - அருள்யாதுமில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ்செய்து வந்த பொழுதும், இன்று என்மேற்பகையாய்த் துன்பஞ்செய்து வாராநின்றது: இனி யான் ஆற்றுமாறென்னை யென்பதாம்.

(கு - ரை.) 'காதலரில்வழி மாலை கொலைக்களத்தேதிலர்போலவரும்' என்றதனால், அந்தமாலைப்போது காதலர் பிரியாதிருந்தநிலையில் என்னுயிர் தளிர்ப்பவரும் என்பது பெறப்படுமாறு அறிக. அஃதுஒழிந்து-உயிர்தளிர்ப்ப வருதலொழிந்து. கொல்லுங்களரி - கொலைக்களம். இன்பஞ் செய்துவந்த பொழுதும் - இன்பம் செய்துவந்த மாலைக்காலமும்.

(௪)

கஉஉரு. காலைக்குச் செய்தநன் றென்கொ
லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

இதுவுமது.

(இ - ள்.) (காலையும் மாலையும் அவர்
கூடியஞான்றுபோலாது இஞ்
ஞான்று வேறுபட்டு வாராநின்றன: அவற்றுள்), யான்—, காலைக்கு செய்த
நன்று என் - காலைக்குச் செய்த உபகாரம் யாது?
மாலைக்கு செய்த பகை
எவன் - மாலைக்குச்செய்த அபகாரம் யாது? (எ - று.)

---

* பி - ம்; இக்குறிப்புணர்கின்றது.



கூடியஞான்று பிரிவரென்றஞ்சப்பண்ணிய காலை அஃதொழிந்து இஞ்
ஞான்று கங்குல்வெள்ளத்திற்குக் கரையாய் வாராநின்றதென்னுங் கருத்தால்
'நன்றெனகொல்' என்றும், கூடியஞான்று இன்பஞ்செய்துவந்த மாலை அஃ
தொழிந்து இஞ்ஞான்று அளவிறன்பஞ்செய்யாநின்றதென்னும் கருத்தால்
'பகையெவன் என்றுங் கூறினாள். பகை - ஆகுபெயர். தன்னோடொத்த காலை

பேலாது மாலை தன்கொடுமையாற்
றுன்பஞ்செய்யாநின்ற தென்பதாம்.

(கு - ரை.) கூடியஞான்றுபோலாது - கூடியிருந்தசமயத்திலிருந்ததை

யொத்திராமல். இஞ்ஞான்று - (பிரிந்துள்ள) இப்போது. கூடியஞான்று,

காலை காதலர் பிரிவரென்றஞ்சப்பண்ணிற்று: மாலை இன்பம் பயந்தது: பிரிந்த

இப்போது காலை அச்சமுண்டாக்குதலைத் தவிர்ந்து அளவிறந்த துன்பஞ்செய்

யுங் கங்குல்வெள்ளத்திற்குக் கரையாய்நின்று உதவுகின்றது: மாலைக்

காலமோ காலைபோலவன்றி அளவில்லாத துன்பஞ்செய்கின்றது: மாலை

மாறுபட்டமைபற்றி, என்னல் பிரிவுத்துயராற்றமுடியாதென்று தலைவி கூறு

கின்றாளென்க. பகை - பகைவர்செய்யும் அபகாரத்திற்கு ஆனது, காரண

வாகுபெயர். இக்குறளின் கருத்து 'தன்னேடொத்த' என்று தொடங்கும்

வாக்கியத்திலுள்ளது. சொல்இரண்டும் அசை.

(ரு)

கஉஉசு. மாலைநோய் செய்தன் மணந்தா
ரகலாத

காலை யறிந்த திலேன்.

'இன்று இன்னையாகின்ற நீ, அன்று அவர்பிரிவிற்கு உடம்பட்டதென்னை?'

என்றட்குச் சொல்லியது.

(இ - ள்.) மாலை - (முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ்செய்து

போந்த) மாலை, நோய் செய்தல் - (இன்று பகையாய்த்) துன்பஞ்செய்தலை,

மணந்தார் அகலாத காலை - காதலர் பிரிதற்குமுன்னே, அறிந்தது இலேன் -

அறியப்பெற்றிலேன்! (எ - று.)

இங்ஙனம் வேறுபடுத லறிந்திலேன்: அறிந்தேனாயின், அவர்பிரிவிற்கு

உடம்படே னென்பதாம்.

(கு - ரை.) இன்னையாகின்ற -

இப்படிப்பட்டவளாகின்ற: பிரிவுத்துய

ருக்கு ஆற்றாதவளாகின்ற: இங்ஙனம்வேறுபடுதல் - காதலர்கூடியகாலத்து

எனக்குநட்பாய்இன்பஞ்செய்த மாலைப்போது பிரிந்தகாலத்துப் பகையாய்த்

துன்பஞ்செய்யுமாறு இங்ஙன் நிலைமாறுதல்.

(சு)

கஉஉஎ. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

'மாலைப்பொழுதின்கண் இனையையாதற்குக் காரணமென்னை?' என்றற்குச் சொல்லியது.

(இ-ள்.) இ நோய்-இக்காமநோயாகிய பூ,—காலை அரும்பி-காலைப்பொழுதின்க ணரும்பி, பகல் எல்லாம் போது ஆகி-பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் (முதிர்ந்து), மாலை மலரும் - மாலைப்பொழுதின்கண் மலராநிற்கும். கஉ௲ - ஆம் அதிகாரம்.—பொழுதுகண்டிரங்கல் கூஎ

துயிலெழுந்த பொழுதாகலிற் கனவின்கட்கூட்ட நினைந்தாற்றுதல் பற்றி 'காலையரும்பி' என்றும், பின் பொழுது செலச்செல அதுமறந்து பிரிவுள்ளி யாற்றுளாதல்பற்றி 'பகலெல்லாம் போதாகி'என்றும், தத்தந்துணை யை யுள்ளிவந்துசேரும் விலங்குகளையும் மக்களையுங்கண்டு தான் அக்காலத்தின் நுகர்ந்த இன்பம் நினைந்து ஆற்றாமைமிகுதிபற்றி 'மாலைமலரும்'என்றுங் கூறினள். பூப்போல இந்நோய் காலவயத்த தாகாநின்றதென்பது உருவகத் தாற் பெறப்பட்டது.

ஏகதேசவுருவகம்.

(கு - ரை.) இனையயாதற்கு - இங்ஙனம் ஆற்றாதவளாதற்கு. கனவின் கட்கூட்டம் - கனவிலே கணவனோடுசேர்தல். பிரிவுள்ளி - பிரிவைநினைந்து. ஆற்றளாதல் - ஆற்றாமையையுடையவளாதல். தத்தம் துணையை யுள்ளிதம்தமக்குத் துணையாகவுள்ள மனைவியை நினைந்து. வந்துசேரும் - இருப்பிடத்திற்கு வந்துசேர்கிற. அக்காலத்தில் நுகர்ந்தஇன்பம் - கணவனோடுகூடி யிருந்த காலத்திலனுபவித்த இன்பம். ஆற்றாமை - பிரிவுத்துயரைத்தாங்க மாட்டாமை. மிகுதி - மிகுதல். காலவயத்தது - காலத்தின் வசப்பட்டது. பூ காலையில் அரும்பிப் பகலிற் பெரும்போதாகி மாலை மலரும் இயல்பினதாதலால், காலவயத்ததாம். இந்நோய் - காமநோய். காமநோய்க்கு அரும்பு ஆதல் பெரும்போதுஆதல் மலராதல் என்ற நிலைகள் கூறியதற்குஏற்ப, அந் நோயைப் பூ என்றது - ஏகதேசவுருவகமாம். (எ)

கஉஉஅ.

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

இதுவுமது.

(இ - ள்.) (முன்னெல்லாம் இனியதாய்ப்போந்த), ஆயன் குழல்—, (இதுபொழுது) அழல் போலும் மாலைக்கு-அழல்போலச்சுடுவதாய மாலைக்கு,

தூதுஆகி- தூதுமாய், (அது
வந்தென்னைக்கொல்வுழி),—கொல்லும் படை - கொல்லும்
படையுமாயிற்று; (எ - று.)

பின்னின்ற போலுமென்பது, உரையசை.
முன்னரே வரவுணர்த்தலிற் றூதாயிற்று;
கோறற்கருவியாகலிற் படையாயிற்று. தானே சுடவல்ல
மாலை, இத்துணையும் பெற்றால் என்செய்யாதென்பதாம்.

(கு - ரை.) முன்னெல்லாம் -
காதலரோடுகூடியிருந்தபோதெல்லாம். இதுபொழுது -
பிரிந்துள்ள இப்போது. அது - மாலைக்காலம். கொல்வுழி -
கொல்லும்போது. போலும் என்றசொல் இரண்டனுள்,
முன்னது - உவமவாசகம்: பின்னது - உரையசை:
வாக்கியாலங்காரம். ஆயன்குழல் மாலைக்
காலத்தொடக்கத்தே ஊதப்படுதலால்,
மாலைக்காலம்வருதலை யுணர்த்துந் தூதாகிப் பிரிந்தாரை
வருத்தும் காமோத்தீபகமாகும்: "தீங்குழலீருமாலோ"
என்பது, நம்மாழ்வார்பாசுரம்; "ஆயர்வாய்வேயோசுழல்"
என்றதும் காண்க. தலைவியாகிய தன்னுயிரை
வாட்டுதற்குக் கருவியாயிருத்தலால், கொல்லும்
படையென்றது. கோறற்கருவி - கொல்லும்ஆயுதம்.
இத்துணையும் - ஆயன் குழலாகிய துணையையும்.

*—13

(அ)

கஉஉகூ. பதிமருண்டு பைத லுழக்கு
மாலை படர்தரும் போழ்து.

மதிமருண்டு

இதுவுமது.

(இ - ள்.) (இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயுழந்தேன்);

மதி மருண்டு - (இனிக் கண்டாரும்) மதிமருளும் வகை, மாலை—,படர்தரும்

போழ்து - வரும்போது, பதி - இப்பதியெல்லாம், மருண்டு-மயங்கி, பைதல்

உழக்கும் - நோயுழக்கும்; (எ - று.)

மதிமருளவென்பது மதிமருண்டெனத் திரிந்துநின்றது. கூற்றமாகக்

கருதிக் கூறினாளாகலின் 'மாலை படர்தரும்போழ்து' என்றாள் யான் இறந்து

படுவலென்பதாம். மாலை மயங்கிவரும்போழ்து என்மதி நிலைகலங்கி நோ

யுழக்குமென்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.)

இதற்குமுன்னெல்லாம் - மாலைக்காலம்வருதற்கு முன்னி

ருந்த காலமெல்லாம். யானே -

நான்தனியேயென்றபடி. பதி - இவ்வூரி

லுள்ளார்; என்றது, தன்னிடம் அன்புள்ள ஊராரை: ஊரார் துன்புறக்கார
ணம், தலைவியாகிய இவள் இறந்துபடுதலாலென்க. மாலைவருவதை ஒரு கூற்றம் [கூற்றம் - யமன்] வருவதாகக் கருதினு ளாதலால், அக்குறிப்புத் தோன்ற மாலைப்போழ்தென்னுது 'மாலை படர்தரும் போழ்து' என்கின்றுளென்க. இக்குறளின் கருத்துக்கூறுவது 'யான் இறந்துபடுவலென்பதாம்'
என்ற வாக்கியம். இறந்துபடுவல் - இறந்தொழிவேன். இனி, இக்குறளுக்கு
வேறோருரைவருமாறு:—மாலை - மாலைப்போது, மருண்டு - மயங்கி, படர்
தரும் போழ்து - வரும் போழ்து, மதி - (என்) புத்தி, பதி மருண்டு - நிலை
கலங்கி, பைதல்உழக்கும் - நோயையனுபவிக்குமென்பது. நிலைகலங்கியென்
பது - பதி மருண்டு என்பதன்பொருள். பதியென்பது நிலையென்னும்
பொருள தாதலை "பதியிற் கலங்கியமீன் (ககககூ)" என்ற குறளடியிலுங்
காண்க.

(கூ)
கஉாடுO .

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

இதுவுமது.

(இ - ள்.) (காதலர்பிரிவைப் பொறுத்து), மாயா என் உயிர் - இறந்து
படாதிருந்த என்னுயிர்,—(இன்று),பொருள் மாலே ஆளரை - பொருளியல்பே
தமக்கியல்பாகவுடையவரை, உள்ளி - நினைந்து, மருள் மாலே - இம்மயக்கு
மாலேக்கண்ணே, மாயும் - இறந்துபடாநின்றது; (ஏ - று.)

குறித்தபருவங் கழியவும் பொருண்முடிவுநோக்கி வாராமையிற் சொல்
வேறுபடாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல் பாயினர்: காலம்
இதுவாயிற்று: இனி நீ சொல்கின்றவாற்றாற் பயனில்லை
யென்பதாம்.

(கு - ரை.) குறித்தபருவம் - என்னேப்பிரியும்போது இன்னகாலத்து
வருவேனென்று குறிப்பிட்டுக் கூறிய காலம். கழியவும் - நீங்கவும். பொருள்

க௨௪ - ஆம்
அதிகாரம்.—உறுப்புநலனழிதல் ௬௬ முடிவு -
இவ்வளவுபொருள்சம்பாதிக்கவேண்டுமென்று தம்மனத்துக்

குறித்த பொருளினெல்லையளவு. குறித்தபருவங்கழியவும் காதவர் பொருளீட்டுதலிற் காலங்கழித்துக்கொண்டு மீண்டு வராதிருத்தல்பற்றி, காதலமை, சொற்பிற ழாமையா கிய தம்மியல்பு ஒழிந்தவராய்ப் பொருளியல்பானவர் என்றது. பொருளியல்பு - பொருளையீட்ட மேன்மேல் முயலும் இயல்பு. "மாலை யியல்பே" என்பது தொல்காப்பியத்து உரியியற் சூத்திரம். காலம் இது ஆயிற்று - அவர் குறித்த பருவம் போய் வேறொருபருவமும் வந்திட்டது என்றபடி.

(௧௦)

## ௧௨௪ - ஆம்

## அதிகாரம்.—உறுப்புநலனழிதல்.

அஃதாவது-தலைமகள்தன் கண்ணும் தோளும் நுதலும் முதலாய அவயவங்கள் தம்மழகழிதல். இஃது இரக்கமிக்குழி நிகழ்வ தாகலின், பொழுது கண்டிரங்கலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) உறுப்பு - அவயவம். நலன் - அழகு. இரக்கம் - தலைவன் பிரிவிற்கு இரங்குதல்; பிரிவினலான இரக்கம் மிகுந்த பொழுது உறுப்பு நலனழியுமாத லால், 'உறுப்புநலனழிதல்' என்ற இவ்வதிகாரம் பொழுதுகண்டிரங்கலின்பின் வைக்கப்பட்டது என அதிகாரமுறைமைக்குக் காரணங் காண்க.

கஉ௲௧. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி

நறுமலர் நாணின கண்.

ஆற்றாமைமிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

(இ - ள்.) சிறுமை நமக்கு ஒழிய - இவ்வாற்றாமை நங்கண்ணே நிற்ப, (தாம்),சேண் சென்றார்-சேணிடைச்சென்ற காதலரை,உள்ளி-(நீ) நினைந்தழு தலால்,—கண் - (நின்) கண்கள், ( ஒளியிழந்து), நறு மலர் நாணின - (முன்றமக்கு நாணிய)நறுமலர்கட்கு(இன்று தாம்) நாணிவிட்டன; (எ - று.)

நமக்கென்பது, வேற்றுமைமயக்கம். உள்ளவென்பது உள்ளியெனத் திரிந்து நின்றது. உள்ளுதலென் பது காரணப்பெயர் காரியத்திற்காய வாகு பெயர். 'இவைகண்டார் அவரைக் கொடுமைகூறுவர்: நீ யாற்றல் வேண்டும்' என்பது கருத்து.

(கு - ரை.) 'நறுமலர்க்குக் கண் நாணின' என்ற வாக்கியத்தினால், முன்பு கண்கட்கு அவை நாணின என்ற பொருள் தொனித்தல் காண்க. மற்றும், கீழ் 'நலம்புனைந்துரைத்தல்'என்ற அதிகாரத்து "காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு, மாணிழைகண் ணொவ்வே மென்று" என்ற குறளும் நோக்கத்தக்கது. நமக்கு என்ற நான் கனுருபு-நம்மிடத்து என்று ஏழனுருபின்

பொருளில் வந்ததனுல், வேற்றுமைமயக்கமாம். தன்வினைமுதல் வினையோடு முடிதற்குரிய 'உள்ளி' என்ற வினையெச்சம், பிறவினைமுதல் வினையான 'நாணின' என்றதனேடு இயைதலால், பிறவினைமுதல்வினையோடும் இயைதற்குரிய 'உள்ள'என்ற செயவெனெச்சத்தின் திரிபு

•

எனப்பட்டது. உள்ளுத 4.00 திருக்

குறள்

லென்பது உள்ளியமுதல் என்று உள்ளுதலின்காரியமான அழுதலைத் தெரி

வித்தலால், காரணம் காரியத்திற்கு ஆகிவந்தது: பகுதியாவும் தொழிற்

பெயர்ப் பொருளன என்ற கொள்கைபற்றியும், உள்ளி யென்ற வினையெச்

சத்தில் தொழிற்பெயர்ப்பொருளதான உள்ளென்ற பகுதியே காரியப்

பொருட்டு ஆவதுபற்றியும், காரணப்பெயர் காரியத்திற்கு ஆய ஆகுபெய

ரென்றது. இவை - விண்கண்கள் ஒளியிழந்ததும், நறுமலர்க்கு நாணியது

மா கிய இச்செய்கைகள். "திருநலந்தோற்றுளை , இகழ்மலர்க் கண்ணளாத்

துறப்பாய்" என்ற கலித்தொகைப்பகுதி, இக்குக் கருதத்தக்கது. அவரைக்

கொடுமைகூறுதல் - தலைமகனைப்பற்றி 'தயையில்லாதவன்: நம்பவைத்து ஏமாற்றுபவன்' என்றாற் போன்ற கொடுஞ்சொற்களைச் சொல்லுதல். (க)

கஉருஉ. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.

இதுவுமது.

(இ - ள்.) பசந்து - பசப்பெய்தன்மேல், பனிவாரும் - நீர்வார்கின்ற, கண் - (நின்) கண்கள், —நயந்தவர்-(நம்மால்)நயக்கப்பட்டவரது, நல்காமை- நல்காமையை, சொல்லுவ போலும்-(பிறர்க்குச்) சொல்லுவபோலாநின்றன, (இனி நீ யாற்றல் வேண்டும்); (எ - று.)

சொல்லுவபோறல் - அதனை அவருணர்தற்கு அனுமானமாதல். நயந்தவர்க்கென்று பாடமோதுவாரு முளர்.

(கு - ரை.) பசப்பெய்தல் - இங்கே, பிரிவாற்றாமையான் அடைந்த நிறவேறுபாட்டால் ஒளியிழத்தலைப்பெறுதல். நீர்வார்கின்ற - நீர்பெருகுகின்ற. நல்காமை - அருள்புரியாமை. அவர் - பிறர். பசந்த கண்களினின்று நீர்வார்

தல், காதலர் அருள்செய்யாமையை ஊகித்தறிதற்கு ஏதுவாதலால், பசந்து பனிவாருங்கண் நயந்தவர் நல்காமை சொல்லுவபோலு மென்றாள்: தன்மைத் தற்குறிப்பேற்றவணி. பரிமேலழகருரையில், அனுமானம், ஏது என்னும் பொருளது. நயந்தவரென்றவிடத்து 'நயந்தவர்க்கு' என்ற பாடத்தில், நல்காமை - காதலரருளாமையை, நயந்தவர்க்கு - (நம்மிடத்து) அன்புடைய சுற்றத்தார்க்கு, சொல்லுவபோலு மென்க. (௨)

கஉ௫௫. ※தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

இதுவுமது.

(இ - ள்.) மணந்த நாள் - (காதலர்) மணந்தஞான்று, வீங்கிய - (இன்ப மிகுதியாற்)பூரித்த, தோள் - (நின்)தோள்கள்,—தணந்தமை - (இன்று)அவர் பிரிந்தமையை, சால அறிவிப்பபோலும்-விளங்க உணர்த்துவபோல மெலியா நின்றன: (இது தகாது); (எ - று.)

அன்றும் அவ்வாறு பூரித்து இன்றும் இவ்வாறு மெலிந்தால், இரண்டுங்

கண்டவர், கடிதினறிந்து அவரைத் தகவின்மை கூறுவ ரென்பதாம்.

* தணந்தாள் என்று பாடங்கொண்டாரு முளர்.



(கு - ரை.) தணந்தமை - பிரிந்தமை. மணந்தஞான்று - கூடியபோது. மணந்தநாள் வீங்கியதோள் தணந்தமை சாலவறிவிப்பபோலும் என்றதனால், தோள்கள் தணந்தமையறிவிப்பது மெலிவினு லென்க. இரண்டும் - பூரித்தல் மெலிதல் இரண்டும். அவரை - காதலரை. தகவின்மை - தகுதியின்மை; உயர்குணமின்மை. இதுவும், தன்மைத்தற்குறிப்பேற்றவணியே. ''வண்ணம் பசந்து புலம்புறுகாலை, புணர்ந்தபோலவுறுப்பினைக் கிழவி, புணர்ந்தவகையிற்புணர்க்கவும் பெறுமே'' என்ற தொல்காப்பியப் பொருளியற் சூத்திரத்தில் இக்குறள் உதாரணமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. (உ)

கஉ௩ச. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

(இ - ள்.) (அன்றும்), துணை நீங்கி - துணைவர்நீங்குதலான், (அவராற் பெற்ற செயற்கையழகேயன்றி), தொல் கவின் வாடிய - பழைய இயற்கையழகும்இழந்த, தோள் - இத்தோள்கள்,—(இன்று

அதற்குமேலே), பணை நீங்கி - (தம்)பெருமையிழந்து, பைந்தொடி சோரும் - வளை கழலாநின்றன: (இவை இங்ஙனஞ் செயற்பாலவல்ல); (எ - று.)

பெருமையிழத்தல் - மெலிதல். பைந்தொடி - பசிய பொன்னாற்செய்த தொடி. சோருமென்னும் வளைத்தொழில், தோண்மேனின்றது. அன்றும் பிரிந்தாரென்று அவரன்பின்மையுணர்த்தி, இன்றுங் குறித்தபருவத்து வந்திலரென்று அவர் பொய்ம்மை யுணர்த்தாநின்றன; இனி அவற்றைக் கூறுகின்றார்மேற் குறையுண்டோ வென்பதாம்.

(கு-ரை.) தொல்கவின்வாடிய என்றதனால், அவராற்பெற்ற செயற்கை யழகு அழிந்தமையும் பெறப்படும். அதற்குமேலே-அழகையிழந்ததற்குமேலும். பணை - பருத்திருக்குந்தன்மை. தோள் தொடி சோரும் - இடத்து நிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்டது: உபசாரவழக்கு. அவற்றை - தலைவருடைய அன்பு இல்லாமையையும் பொய்ம்மையையும். தொல்கவின்வாடிய தோள்கள் அவரன்பின்மையையும், அத்தோள்கள் பணை நீங்கித் தொடிசோர்தல் அவர் பொய்ம்மையையும் முறையே யுணர்த்துதல் அறிக.

(௬)

கஉ௬௫. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

(இ - ள்.) (கவவுக்கை நெகிழினும் ஆற்றாதாட்கு

இக்காலநீட்டித்து என்னுமென்று நினையாத), கொடியார் - கொடியாரது, கொடுமை - கொடுமையை,
உரைக்கும்-(தாமே) சொல்லாநின்றன: தொடியொடு தொல் கவின் வாடிய-வளைகளுங் கழன்று பழைய இயற்கையழகுமிழந்த, தோள்-இத்தோள்கள்; (இனி, அதனை யாம் மறைக்குமாறென்னை?) (எ - று.) க்0உ

திருக்குறள்

உரைக்குமென்பது, அப்பொருண்மைதோன்ற நின்ற குறிப்புச்சொல்.
ஒடு, வேறுவினைக்கண் வந்தது. அவரொடுகலந்த தோள் களே சொல்லுவன
வாகுல், அயலார்சொல்லுதல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.
(கு - ரை.) கவவுக்கை-தழுவிய கை. தொடியொடு கவின் வாடிய தோள்
என்றதனுல், தொடிகழன்று அழகுகெட்ட தோள் என்று உரைக்கப்பட்டது.
அதனை-கொடியாரது கொடுமையை. தோளுக்கு உரைத்தலென்பது இல்லா
மையால், உரைக்கும் என்பது - வாய்விட்டுச்சொன்னுற்போல அறிவிக்கும்
என்ற பொருளில் வந்தது: அதனுல்
அச்சொல்லை,'அப்பொருண்மைதோன்ற நின்ற

குறிப்புச்சொல்' என்றார். தொடிவாடுதல் - தொடிகழலுதல்: கவின்
வாடுதல் - அழகுகெடுதல்: ஆகவே, வாடுதல் தொடிக்கு வேறுபடுதலால்,
தொடியொடு என்ற இடத்து ஒடு-ஒரே வினையினுடனிகழ்ச்சியில் வாராமல்
வேறுவினைக்கண் வந்ததென்றார். தொடிகழன்று அழகிழந்த தோள்களே அக்
காதலரின்கொடுமையை யுரைக்குமென்றதனால், 'அயலார் அவரதுகொடுமை
சொல்லுதல் சொல்லவேண்டுமோ?' என்றபொருள், கைமுதிகநியாயத்தாற்
பெறப்படுமாறு அறிக. [கைமுதிகநியாயமானது - (மலையைவிழுங்கின மகா
தேவன் கதவைவிழுங்கினனென்பது கூறவேண்டுமோ? என்றாற்போல) ஒரு
பொருளைக்கூறியதனால் மற்றொருபொருள் எளிதிற் சித்தித்தலைத்தெரிப்பது.] "கொடியோர் கொடுமைசுடும்" என்று தொல்காப்பியத்துக் கற்பியலில் வரு
கின்றது.

(ரு)

கஉரு௫. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடியரெனக்கூறன் றொந்து.

தான்ஆற்றுதற்பொருட்டு இயற்பழித்த தோழிக்குத்

தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) (யான் ஆற்றவும் என்வயத்தவன்றி),
தொடியொடு தோள்
நெகிழ - தொடிகள் கழலுமாறு தோள்கள்மெலிய,—(அவற்றைக் அவரை—, கொடியர் என கூறல் நொந்து - கொடியரெனக்

கண்டு நீ),
கூறுதலைப்
பொறாது, நோவல் - (யான் என்னுள்ளே) நோவாநின்றேன்;
(எ - று.)

ஒடு-மேல்வந்தபொருண்மைத்து. யான்
ஆற்றேனாகின்றது அவர் வாராததற்கன்று, நீ கூறுகின்றதற் கென்பதாம்.

(கு - ரை.) தான் - தலைவி. மேல்வந்த -
கீழ்க்குறளில்வந்த. இங்கும் ஒடு - வேறுவினையொடு.
தொடிக்கு நெகிழ்தல் கழலுதல்; தோளுக்கு நெகிழ்
தல் மெலிதல். என்னுடைய ஆற்றாமைக்குக் காரணம் நீ அக்காதலரைக்குறி த்து இயற்பழித்துக்கூறுதலே; அக்காதலர் வாராமையன்று என்பது, இக் குறளின் கருத்து.

(சு)

கூஉஎ. பாடு பெறுதியோ நெஞ்சே
வாடுதோட் பூச லுரைத்து.
கொடியார்க்கென்

அவ்வியற்பழிப்புப் பொறாது தன்னெஞ்சிற்குச்
சொல்லியது.

(இ - ள்.) நெஞ்சே-! கொடியார்க்கு - (இவள்) கொடியாரென்கின்ற வர்க்கு, (நீ சென்று), என் வாடு தோள் பூசல் - என் மெலிகின்ற தோளி

கஉசு - ஆம்

அதிகாரம்.—உறுப்புநலனழிதல் கஎ௬

னால் விளைகின்ற ஆரவாரத்தை, உரைத்து - சொல்லி, பாடு பெறுதி ஓ -
ஒருமேம்பாடெய்தவல்லையோ? (வல்லையாயின்
அதனையொப்பதில்லை); (எ-று.)
கொடியார்க்கென்பது கொடியரல்லரென்பது
தோன்றகின்ற குறிப்புச்
சொல். வாடுதோளென்பதும்; அவை தாமே
வாடாநின்றனவென்பது தோன்ற
நின்றது. பூசல் - ஆகுபெயர். அஃது, அவள்
தோள்நோக்கி யியற்பழித்தன்
மேலும், அதனால் தனக்காற்றாமைமிகன்மேலும் நின்றது.
நின்னுரைகேட்ட
லும் அவர் வருவர்: வந்தால் இவையெல்லாம்நீங்கும்: நீக்க,
அஃதெனக்குக்
காலத்தினாற்செய்த நன்றியா மாகலின்
அதன்பயனெல்லா மெய்துதி
என்னுங் கருத்தாற் 'பாடுபெறுதியோ' என்றாள்.
(கு - ரை.) பொறாது - பொறுக்காமல். வாடு

தோள் - மெலிகின்ற
தோள். கொடியார்க்கு என்று இக்குத் தலைவி
காதலரைக் கூறுவது -
'பிறர் கொடியாரென்று என்காதலரைக் கூறுகின்றனர்:
அவர் இயற்கையிற்
கொடியரல்லர்' என்ற குறிப்பினது என்க. வாடு
தோள் - காதலரின்
பிரிவால் வாடியதன்று: இயற்கையாகவே வாடியது
என்பது தோன்ற
நின்றது: இவ்வாறுகொண்டது, சொல்லுவாளின்
குறிப்புப்பற்றியாகும்.
பூசல் - ஆரவாரம்: இங்கே, ஆரவாரத்திற்குக் காரணமான
இயற்பழித்தலை
யும், ஆற்றாமை மிகலையும் காட்டுதலால்,
காரியவாகுபெயர். இவையெல் வாம் -
தலைமகனையியற்பழித்தல், தோள்வாடுதல், கண்கள் அழுதல்,
நாணு
தல் என்பன. அதன்பயன் - அந்நன்றியின்பயன்.

(எ)

கஉ௩௮. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

வினைமுடித்து மீடலுற்ற தலைமகன் முன்னிகழ்ந்தது
நினைந்து
தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) முயங்கிய கைகளை-(தன்னையிறுக)முயங்கிய கைகளை, ஊக்க-
(இவட்கு நோமென்று கருதி ஒருஞான்றுயான்
)நெகிழ்ந்தேனாக,—(அத்துணை
யும் பொறாது), பைந் தொடி பேதை-பைந்தொடிகளை யணிந்த பேதையது,
நுதல்—, பசந்தது—: (அப்பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற்கு யாது
செய்யுமோ?) (எ - று.)

இனிக் கடிதிற் செல்லவேண்டுமென்பது கருத்து.

(கு - ரை.) ஊக்க - நெகிழ்த்த. அத்துணையும் - அச்சிறுகாலவளவு பிரி
வினையும். நுதல் - நெற்றி. பசந்தது - ஒளியிழந்தது. கடிதில் - விரைவில்.
கீழ் 'பசப்புறு பருவரல்' என்ற அதிகாரத்துத் தலைவிகூற்றாகவந்த ஏழாம்
குறளும் அதன் உரையும் ஈண்டு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கன. (அ)

கஉ௩௯. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

இதுவுமது.

(இ - ள்.) (அங்ஙனங் கைகளை யூக்குதலான்), முயக்கிடை - அம்முயக்
கிடையே, தண் வளி-சிறுகாற்று, போழ-நுழைந்ததாக,—(அத்துணை யிடை

யீடும் பொருது), பேதை - பேதையுடைய, பெரு மழை கண்-பெரியமழைக்

கண்கள், பசப்புற்ற - பசப்புற்றன; (அத்தன்மையனவான கண்கள் மலைக

ளும் காடும் நாடுமாய இவ்விடையீடுகளையெல்லாம் யாங்ஙனம் பொறுத்தன!)

தண்மை-ஈண்டு மென்மைமேனின்றது. போழவென்றது, உடம்பிரண்

டும் ஒன்ருனதுதோன்ற நின்றது. மழை - குளிர்ச்சி.

(கு - ரை.) முயக்கு-தழுவுகை. ஊக்குதலால் - நெகிழ்த்தலால். இடை

யீடு-நடுவில்உள்ளபொருள்:செயலுக்குத் தடையாவது. ஒன்ருயிருந்த தலைவன்

தலைவியரின் உடம்பிடையே புகுந்ததனுல் 'போழ்'என்றது. மலைகளும் காடும்

நாடுமாய இடையீடுகள் என்றது - தலைவன் பலமலைகளையும், காடுகளையும்,

நாடுகளையும் கடந்து வினை முடிக்கச் சென்ருனதலால். (கூ)

கஉசo. கண்ணின் பசப்போ பருவரலெய்தின்றே

யொண்ணுதல் செய்தது கண்டு.

இதுவுமது.

(இ - ள்.) (தண்வளிபோழவந்த), கண்ணின் பசப்பு—, பருவரல் எய்தின்று - துன்பமுற்றது: ஒள் நுதல் செய்தது கண்டு - (தனக்கயலாய) ஒண்ணுதல் விளைத்த பசப்பைக் கண்டு; (எ - று.)

அது கைகளையூக்க அவ்வளவிற் பசந்தது: யான் கைகளையும்ஊக்கி மெய்களும்நீங்கிச் சிறுகாற்று ஊடறுக்குந்துணையும் பசந்திலனெனத் தன்வன்மையும், அதன்மென்மையுங் கருதி வெள்கிற்றென்பதாம்: ஆகவே, அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற்பட்டு நலனழியும், யாங்கடிதிற் சேறுமென்பது கருத்தாயிற்று.

(கு-ரை.) கைகளையூக்க அவ்வளவில் அது பசந்தது என இயைக்க: அது - நுதல். இதனைக் கீழ் எட்டாம் குறள் நோக்கியறிக. 'யான்...சிறுகாற்று ஊடறுக்குந்துணையும் பசந்திலன்'என்பது, கண்ணினுடைய உட்கோள். இதனைக் கீழ்க்குறளினு லறிக. யாம் கடிதிற்சேறும் என்று தலைமகன் தன்னுள்ளத்தை

நோக்கிக் கூறுகின்றாளென்க. சேறும் - செல்லுவோம்.
ஒள் நுதல் - ஒள்ளிய
நெற்றி. ஓ - அசைநிலை.
(கo)

## கஉ௫ - ஆம்

## அதிகாரம்.—நெஞ்சொடுகிளத்தல்.

அஃதாவது-ஆற்றாமை மீதூரத் தனக்கோர்
பற்றுக்கோடு காணாத தலை
மகள் தன்னெஞ்சொடு செய் திறனறியாது சொல்லுதல்.
இஃது, உறுப்புக்
கள் தங்கலனழிந்தவழி நிகழ்வ தாகலின்,
உறுப்புநலனழிதலின்பின் வைக்கப்
பட்டது.

(ஞ - ரை.) ஆற்றாமை மீதூர - ஆறியிருக்கமாட்டாத
நிலைமைமிக. பற்
றுக்கோடு - ஆதரவு. செய் திறன் - செய்யவேண்டிய வகை.
இஃது - நெஞ்
சொடுகிளத்தல்.

கஉசக. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

யெனைத்தொன்று கஉ௫ - ஆ'ம்
அதிகாரம்.—நெஞ்சோடுகிளத்தல் கo௫

தன்னாற்றமை தீருந் திறன் நாடியது.

(இ - ள்.) நெஞ்சே—!எவ்வம் நோய் தீர்க்கும் மருந்து ஒன்று - இவ்

வெவ்வநோயினைத் தீர்க்குமருந்தாவதொன்றனை, (யான் அறியு மாற்ற

விலன்): எனைத்து ஒன்றும் நினைத்து சொல்லாய் - எத்தன்மையது

யாதொன்றாயினும் (நீ) அறிந்து (எனக்குச்) சொல்; (எ - று.)

எவ்வம் - ஒன்றானுந் தீராமை. உயிரினுஞ்சிறந்த நாணினை விட்டுச்

செய்வது யாதொன்றாயினு மென்பாள், 'எனைத்தொன்றும்' என்றாள்.

(கு - ரை.) திறன் நாடியது - வகையை யாராய்ந்தது. எத்தன்மையது

யாதொன்றாயினும் - எப்படிப்பட்ட தன்மையையுடையதாயினும் யாதாவது

ஒன்றை. இங்கு 'எனைத்து' என்றது - நோய் தீர்க்குமருந்து எப்படிப்பட்ட

தன்மையையுடையதா யிருந்தாலும் என்றபடி: உயிரினுஞ்சிறந்த நாணை விட்

டிட்டுச் செய்வதாயினும் அதுவும் ஏற்குமென்ற கருத்தது. "தாயிற்சிறந்

தன்று நாண் தையலாருக் கந்நாண்டகைசால், வேயிற்சிறந்த மென்றோளி

திண்கற்பின் விழுமிதன்று'' என்ற திருக்கோவையாரும், "நாணுகற்பு

என்னும் இரண்டல்லவே அவள் கண்ணுள்ள: அவற்றுள், நாணிற் கற்பு

வலியுடைத்து: என்னை வலியுடையவாறு எனின்?—உயிரினுஞ் சிறந்தன்று

நாணே நாணினும், செயிர்தீர்காட்சிக் கற்புச்சிறந்தன்று என்பவாகலான், நாண் அழியினும் கற்பழியாமை

க்காணத்தக்கன.

நினைக்கும்'' என்ற களவியலுரையும் இங்கு

(க)

கஉசஉ. காதலவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

தலைமகனைக் காண்டற்கண் வேட்கைமிகுதியாற் சொல்லியது. (இ - ள்.) என் நெஞ்சு - என்னெஞ்சே! வாழி - வாழ்வாயாக: அவர்

காதல் இலர் ஆக - அவர் (நங்கட்) காதலிலராகவும், நீ நோவது-நீ (அவர்வரவு

நோக்கி) வருந்துதற்கேது, பேதைமை - (நின்) பேதைமையே: (பிறிதில்லை).

நம்மை நினையாமையின், நங்கட் காதலில ரென்பதறியலாம்: அஃதறி

யாமை மேலும், அவர்பாற்செல்லக் கருதாது அவர்வரவுபார்த்து வருந்தாநின்

ருய்: இது நீ செய்துகொள்ளுகின்ற தென்னும் கருத்தால் 'பேதைமை' என்ருள். வாழி-இகழ்ச்சிக்குறிப்பு. யாம் அவர்பாற்சேறலே அறிவாவதென்பதாம்.

(கு - ரை.) வேட்கை - விருப்பம். பேதைமை - அறியாமை. அஃது - தலைவர் நம்மிடத்துக் காதலில ரென்பதை. நீ செய்துகொள்ளுகின்றது - நீயே உனக்கு விளைத்துக்கொள்கின்ற தீங்குஎன்றபடி. பேதைமையை நெஞ்சுக்குக்கூறி, அடுத்து வாழியென்றது - பேதைமையையுடைய நீ வாழ வேண்டுவது அவசிய மென்று இகழ்ச்சியைக் குறிக்கும். காதலர் வாராமைக்கு நோவது பேதைமை யென்றதனால், நாம் அவரிடத்துச்செல்லுதலே அறிவு என்பது பெறப்படுதல் காண்க. (உ)

கஉசரு. இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில்.

*—14



இதுவுமது.

(இ - ள்.) நெஞ்சே—! இருந்து - (அவர்பாற்செல்வதுஞ்செய்யாது ஈண்டிறந்துபடுவதுஞ் செய்யாது) இருந்து, உள்ளி - (அவர்வரவு) நினைந்து, பரிதல் என் -(நீ)வருந்துகின்றதென்னை? பைதல் நோய் செய்தார்கண் - இப்

பையுளோய் செய்தார்மாட்டு, பரிந்து உள்ளல் - (நமக்கு) இரங்கி(வரக்)கருது

தல்; இல் - உண்டாகாது; (எ - று.)

நம்மாட்டருளுடையரன்மையிற் றமாக வாரார்: நாஞ் சேறலே இனித்

தகுவதென்பதாம்.

(கு - ரை.) இருந்து என்பதன் கருத்துப்பொருள் - 'அவர்பாற் செல்வ

துஞ் செய்யாது ஈண்டுஇறந்துபடுவதுஞ்செய்யாதிருந்து' என்பது. உள்ளி

யென்பதற்கு 'அவர்வரவு' என்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.

பையுளோய் - துன்பநோய்: பைதல் - துன்பம். வரக்கருதுதல்-(நாம் உள்ள

இடத்து அவர்) வருமாறு நினைத்தல்.

(௫)

௧௨௪௪. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்

தின்னு மவர்க்காண லுற்று.

இதுவுமது.

(இ - ள்.) நெஞ்சே—! (நீ அவர்பாற் சேறலுற்றாயின்), கண் உம்

கொள சேறி - இக்கண்களையும் உடன்கொண்

டுசெல்வாயாக; (அன்றி நீயே

சேறியாயின்), இவை—, (தாம் காட்சிவிதுப்பினால்), அவர் காணல் உற்று -

அவரைக் காண்டல்வேண்டி, என்னை தின்னும் - (நீ காட்டென்று) என்

னைத் தின்பனபோன்று நலியாநிற்கும்; (எ - று.)

கொண்டென்பது கொளவெனத் திரிந்துநின்றது. தின்னுமென்பது,

இலக்கணைக்குறிப்பு. அந்நலிவு தீர்க்கவேண்டுமென்பதாம்: என்றது, தான்

சேறல் குறித்து.

(கு - ரை.)

சேறலுற்றாயாயின்-போகப்பொருந்தினையானால். சேறி-செல்

வாய். இவை - கண்கள். காட்சி விதுப்பினால் - காதலரைக்காணுதலினுள்ள

விரைவினால். கண்ணுக்குத் தின்பதென்ற தொழிலில்லாமையால், தின்னு

மென்பது - அத்தின்னுதலைச் செய்யுமென்றபொருளைக் காட்டாமல் தின்பது

போன்ற நலிவு செய்யு மென்னும் பொருளை இலக்கணை யாற் குறித்தலால்,

இலக்கணைக்குறிப்பு என்றார். அந்நலிவு - கண்கள்செய்யுந் துன்பத்தை.

என்றது - அங்கலிவு நீ தீர்க்கவேண்டும் என்று கூறியது. குறித்து - கருதி.

"உண்டற்குரிய வல்லாப் பொருளை, யுண்டனபோலக் கூறலுமரபே" என்ற

தொல்காப்பியச் சூத்திரத்தில் 'உம்மையாற் பிறதொழில்பற்றி வருவனவுங்

கொள்க' என்றுகூறி, இக்குறள் ஆங்குக் காட்டப்பட்டுள்ளது. (சு)

கஉசரு. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா

முற்றா லுறாஅ தவர்.

க்உரு - ஆம்

அதிகாரம்.—நெஞ்சொடுகிளத்தல் கoள்

இதுவுமது.

(இ - ள்.) நெஞ்சே—! யாம் உற்றால் - யாம் (தம்மை) உற, உறாதவர் - (தாம்) உறாத காதலரை, செற்றார் என-வெறுத்தாரென்றுகருதி, கைவிடல் உண்டோ - (புலந்து) கைவிட்டிருக்கும் வலி நமக்குண்டோ? (இல்லை); (எ-று.)

உறுதல் - அன்புபடுதல். அவ்வலியின்மையின் அவர்பாற் செல்வதே நமக்குத் தகுவதென்பதாம்.

(கு - ரை.) தம்மையுற - காதலராகிய அவரிடத்து அன்புற்றிருக்க. புலந்து - பிணக்கங்கொண்டு.

(ரு)

கஉ௪௬. கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற்
பொய்க்காய்வு காய்திஎன் னெஞ்சு.

புலந்துணராய்

தலைமகன் கொடுமைநினைந்து செலவு உடன்படாத நெஞ்சினைக் கழறியது.

(இ - ள்.) என் நெஞ்சு - என்னெஞ்சே! கலந்து உணர்த்தும் காதலர் கண்டால் - (யான் தம்மொடு புலந்தால் அப்புலவியைக்) கலவிதன்னானே நீக்கவல்ல காதலரைக் கண்டால், புலந்து-(பொய்யேயாயினும் ஒருகாற்) புலந்து, உணராய்-(பின் அதனை) நீங்கமாட்டாய்; பொய் காய்வு காய்தி-(அதுவும் மாட்டாத நீ இப்பொழுது அவர் கொடியரெனப்) பொய்க்காய்வு காயாநின்றாய்: (இனி இதனை யொழிந்து அவர்பாற்செல்லத் துணிவாயாக); (எ - று.)

கலத்தலானென்னும் பொருட்டாய கலக்கவென்பது திரிந்து நின்றது.

அதனானுணர்த்தலாவது-கலவியின்பத்தைக் காட்டி அதனான் மயக்கிப் புலவிக்குறிப்பினை யொழித்தல். பொய்க்காய்வு - நிலையில் வெறுப்பு. கண்டால் மாட்டாத நீ, காணாதவழி வெறுக்கின்றதனாற் பயனில்லை

யென்பதாம்.

(கு - ரை.) நெஞ்சினைக் கழறியது - நெஞ்சைத் தலைவியிடித்துக் கூறியது. கலந்துணர்த்தும் - கலவியாற்போக்குகிற என்றபடி. 'பொய்க்காய்வு காய்தி' என்று மேல்வருவதால், புலந்து என்பது பொய்யாகப் புலந்து என்பதைக் காட்டிற்று. அதுவும்மாட்டாத - பொய்யாகவும் புலக்கமாட்டாத.

இதனை - பொய்க்காய்வை. கலந்து - பிறவினைமுதல்வினையைக் கொண்டு முடிதற்கு ஏற்ற 'கலக்க' என்பதன் திரிபு. புலவிக்குறிப்பு - ஊடற்குறிப்பு.

கண்டால் - கணவரைநேரிற்கண்டபோது. மாட்டாத-பொய்யாகவும் புலக்க மாட்டாத. காணாதவழி - கணவரைக் காணாதபோது.

(சு)

கஉசஎ. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே

யானோ பொறேனிவ் விரண்டு.

நாண் தடுத்தலின் அச்சேலவுஒழிவாள் சோல்லியது.

(இ - ள்.) நல் நெஞ்சே - நல்லநெஞ்சே! ஒன்று காமம் விடு - ஒன்றின் (நாண்விடமாட்டாயாயிற்)காமவேட்கையை விடு; (ஒன்று) நாண் விடு - ஒன்

றின் (அது விடமாட்டாயாயின்) நாணினை விடு: (அன்றியே இரண்டும்
விடாமை நின் கருத்தாயின்), இரண்டு யான் ஓ
பொறேன்-(ஒன்றற் கொன்று
மறுதலையாய) இவ்விரண்டனையும் உடன்றாங்கும் மதுகை
யான் இலன்.

கூப்டு திருக்குறள்

யாஞேவென்னும் பிரிநிலை, நீ பொறுப்பினு
மென்பது படநின்றது. நன்
னெஞ்சேயென்றது, இரண்டையும் விடாது
பெண்மையை நிலைபெறுத்த
லின், நல்லையென்னுங் குறிப்பிற்று: அது நன்றே
யெனினும் என் னுயிருண்
டாதல் சாலாமையின், அதற்கு ஆகின்றிலே
னென்பதாம். முற்றும்மை
விகாரத்தாற் றொக்கது.

(கு - ரை.) அச்செலவு - கணவனை நோக்கித் தான் செல்லுதல். அது -
காமவேட்கை. இரண்டும்-காமவேட்கை நாண் என்ற
இரண்டையும். உடன்
தாங்கும் - ஒருசேரத் தாங்கவல்ல. மதுகை-வலிமை. நீ
யென்றது - நெஞ்சை.
இரண்டையும் - காமவேட்கை நாண் என்ற

இரண்டனையும். அது - இரண்
டையும் விடாமலிருப்பது. உயிருண்டாதல் - உயிர் உட
லிலே இருப்பது.
சாலாமையின் - அமையாமையினால். அதற்கு -
காமவேட்கை நாண் என்ற
இரண்டையும் ஒருசேரக்கொண்டிருத்தற்கு.
ஆகின்றிலேன்-ஏற்றவளாகின்றி
லேன். முற்றும்மை, இவ்விரண்டு என்றதன்பின் தொக்க
தென்க. (எ)

கஉசஅ. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரி
ந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) என் நெஞ்சு - என்னெஞ்சே! அவர்
பரிந்து நல்கார் என்று -
அவர் (இவ்வாற்றாமையையறியாமையின்) நொந்துவந்து
தலையளிசெய்யா
ராயினாரென்று கருதி, (அஃதறிவித்தற் பொருட்டு),
பிரிந்தவர் பின் ஏங்கி
செல்வாய் - (நம்மைப்) பிரிந்துபோயவர்பின்
ஏங்கிச்செலலுற்ற நீ, பேதை -
யாதுமறியாய்; (எ - று.)
ஆற்றாமைகண்டுவைத்தும் நல்காதுபோயினரைக்
காணாதவழிச் சென்று
அறிவித்ததுணையானே நல்கவருவ ரென்பது

என்றாள்.

கருதினமையின் 'பேதை'

(கு - ரை.) அஃது - ஆற்றாமையை. ஆற்றாமைகண்டுவைத்தும்-பிரிவிலாதிருக்கமாட்டாமையை நேரே பார்த்திருந்தும். காணாதவழி - ஆற்றாமையைக் காணாதவிடத்து. அறிவித்த துணையானே - அறிவித்த அளவில். (அ)

கஉசகூ. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) என் நெஞ்சு - என்நெஞ்சே! காதலவர் உள்ளத்தார் ஆக - காதலர் நின்னகத்தாராக, (முன்பெல்லாம் கண்டுவைத்து), (இப்பொழுது), நீ—, உள்ளி யாருழை சேறி - புறத்துத் தேடிச் செல்கின்றது யாரிடத்து?

உள்ளமென்புழி, அம் - பகுதிப்பொருள்விகுதி. நின்னகத்திருக்கின்றவரை அஃதறியாது புறத்துத்தேடிச் சேறல் நகையுடைத்து: அதனை யொழியென்பதாம்.

(கு - ரை.) யாருழைச் சேறி-கணவரிடத்துச் செல்லவேணுமென்றால், அவர் உள்ளத்துள் இருக்கின்றாரே: வெளியே அவரைத் தேடிச்செல்வது

கஉகூ - ஆம் அதிகாரம்.—நிறையழிதல்

கப்கூ

எவ்வாறு என்றபடி. உள் என்பதே மனத்தைக்

காட்டலால், உள்ளம் என்ப

தில், அம் - பகுதிப்பொருள்விகுதி யென்றார்.

(கூ)

கஉருO. துன்னாத் துறந்தாரை நெஞ்சத்

துடையேமா

வின்னு மிழத்துங் கவின்.
அவரை மறந்தாற்றல்வேண்டுமென்பதுபடச்
சொல்லியது.

(இ - ள்.) துன்னத் துறந்தாரை - (நம்மைக்) கூடாவண்ணந் துறந்து போயினாரை, (நாம்), நெஞ்சத்து உடையேம்ஆ - நம்மகத்துடையேமாக, இன்னும் கவின் இழத்தும் - முன்னிழந்த புறக்கவினேயன்றி நின்ற அகக்கவினுமிழப்பேம்; (எ - று.)

"குன்றி, னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்" என்புழிப்போல, நெஞ்சென்பது-ஈண்டும் அகப்பொருட்டாய் நின்றது. அவர் நம்மைத் துன்னத் துறந்தாராகவும், நாம் அவரை மறத்தன்மாட்டேமாகவும், போன மெய்க் கவினேயன்றி நின்ற நிறையு மிழப்பே மென்பதாம். ௭

(கு - ரை.) மறந்து ஆற்றல்-மறந்து ஆறியிருத்தல். 'நெஞ்சத்துடையேமா இன்னும் கவினிழத்தும்' என்றதில், மறந்தால் இனிக் கவினிழவோ மென்பது பெறப்படுதலால், இக்குறள், அவரை மறந்தாற்றல் வேண்டுமென் பதுபடச் சொல்லியதாம். புறக்கவின் - உடம்பினழகு.

அகக்கவின் - நிறை.
"குன்றின்" என்று தொடங்கும் மேற்கோள், குறுந்தொகை, கடவுள்வாழ்த்தி
லுள்ளது: இதன்பொருள்:—குன்றின் - கிரௌஞ்சமலையின், நெஞ்சு - உள்
ளிடம், பக - பிளவுபட, எறிந்த-வீசிய, அம் சுடர்-அழகிய ஒளியையுடைய,
நெடுவேல் என்க. துன்னுமல்-நெருங்காமல். நெருங்காமல் துறந்தவராயிருந்
தும் அவரை நாம் மறக்கமாட்டாமற்போனல், முன்னர்ப்போன மெய்க்
கவினேயன்றி, உள்ளத்தின் கவினுகிய நிறையும் போமென்பதாம்: (கவின் -
அழகு.) மேல் நிறையழிதல் என்பதற்குத் தோற்றுவாய் செய்தவாறு காண்க.
இழத்தும் - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று.

(௬௦)

கஉ௬ - ஆம்

## அதிகாரம்.—நிறையழிதல்.

அஃதாவது - தலைமகள் மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கைமிகுதி
யான் அடக்கமாட்டாது வாய்விடுதல்:
"நிறையெனப்படுவது மறை பிறரறி
யாமை" என்றார், பிறரும். அஃது அழிதற்காரணம் நெஞ்சொடுகிளந்தமையின்,

இது நெஞ்சொடுகிளத்தலின்பின் வைக்கப்பட்டது.
(கு - ரை.) வேட்கைமிகுதியான்-காதல் விஞ்சியதனால். "நிறையெனப் படுவது மறை பிறரறியாமை" என்ற மேற்கோள், கலித்தொகை, நெய்தற்கலியில், 16-ஆம் பாடலிலுள்ளது. இதன் பொருள்-நிறையென்று சொல்லப்படுவது, மறைந்ததொருகாரியம் பிறரறியாமலொழுகுதல்: நிறை - மனோதிடமெனவும்படும்; அத்தன்மையழிதல், நிறையழிதலாம், அஃது - நிறை.
ஆற்றாமை மீதூர நெஞ்சொடு சொல்லுபவள் வேட்கைமிகுதியால் நிறையழிந்துகூறுவளென்ற காரணம்பற்றி, நெஞ்சொடுகிளத்தலின்பின், நிறையழிதல் வைக்கப்பட்டதென்று அதிகாரமுறைமைக்குக் காரணங் காண்க.

கக0 திருக்குறள்

கஉருக.

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

'நாணும் நிறையுமழியாமை

நீயாற்றல் வேண்டும்' என்ற

தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) நாணு தாழ் வீழ்த்த - நாணாகிய தாழினைக் கோத்த, நிறை என்னும் கதவு - நிறையென்னுங் கதவினை, காமம் கணிச்சி உடைக்கும் - காமவேட்கையாகிய கணிச்சி முறியாநின்றது: (இனி அவை நிற்றலுமில்லை: யான் ஆற்றலுமில்லை); (எ - று.)

கணிச்சி - குந்தாலி. நாணுள்ள ளவும் நிறையழியாதாகலின் அதனைத் தாழாக்கியும், அகத்துக்கிடந்தன பிறர்கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலின் தன் காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினாள்.

(கு - ரை.) தாழ் - தாழ்ப்பாள். கணிச்சி - குந்தாலி: மரம் முதலியவற்றைப் பிளக்கக்கூடிய ஒருவகை இரும்புப்படை. அவை - நாணும் நிறையும். அதனை - நாணை. உருவகவணி. (க)

கஉருஉ. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

'நெஞ்சின்கட்டோன்றிய காமம்
நெஞ்சாலடக்கப்படும்'
என்றட்குச் சொல்லியது.

(இ - ள்.) யாமத்துஉம்-(எல்லாருந்
தொழிலொழியும்) இடையாமத்தும்,
என் நெஞ்சத்தை—, (ஒறுத்து), தொழில் ஆளும் -
தொழில்கொள்ளா
நின்றது: (ஆகலால்), காமம் என ஒன்று - காமமென்று
சொல்லப்பட்ட
வொன்று, கண் இன்று - கண்ணோட்ட மின்றாயிருந்தது;
(எ - று.)

ஓ வென்பது, இரக்கக்குறிப்பு.
தொழிலின் கண்ணேயாடல் - தலைமகன்
பாற்செலவிடுத்தல். *தாயைப் பணிகோடல் உலகிய
லன்மையின் 'காமமென
வொன்று' என்றும், அது தன்னைக் கொள்கின்றது
அளவறியாது கோடலிற்
'கண்ணின்று' என்றுங் கூறினாள். அடக்கப்படாமை
கூறியவாறு.

(கு - ரை.) 'ஆளும்' என்பதற்கும் 'காமம்' என்பது
எழுவாய். தொழி
லாடல் - தொழிலின் கண்ணே செலுத்துதல். காமம்
என்பது நெஞ்சத்தி
னின்று தோன்றியதாதலால், காமத்துக்கு நெஞ்சம்
தாயாகும். தாயை வேலை

வாங்குதல் உலகியலன்று ஆதலால், உலகியலுக்கு மாறாகத் தாயைப் பணி கொள்ளும் காமத்தின் கொடுமைதோன்ற 'காமமெனவொன்று' என்றார்.

காமம் நெஞ்சைக் கணவனிடம் செலுத்துவதால், அது, தாயைப்பணி கொள்வதாகும். அது தன்னைக் கொள்ளுகின்றது-நெஞ்சைப்பணிகொள்வது.

அது - காமம், தன்னை - நெஞ்சையென்றலும் உண்டு. காமத்தின் அடக்கப் படாத்தன்மை, இக்குறளிற் கூறப்பட்டது.

(உ)

* பி - ம்: தாதையைத் தொழில் கோடல்



கஉருங. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

'மகளிர்காமம் மறைக்கப்படும்' என்றாட்குச் சொல்லியது.

(இ - ள்.) காமத்தை யான் மறைப்பேன் - இக்காமத்தை யான் (என்னுள்ளே) மறைக்கக்கருதுவேன்; (அதனால்), குறிப்பு இன்றி - (இஃது என்) கருத்தின் வாராது, தும்மல்போல்—,

தோன்றிவிடும்-வெளிப்பட்டோவிடா
நின்றது; (எ - று.)

மன் - ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் - இரங்கற்கண் வந்தது. தும்ம லடங்காதாற்போல, அடங்குகின்ற தில்லை யென்பதாம்.

*

(கு - ரை.) மறைப்பேன்மன் என்றவிடத்து, 'மன்' என்பது - யான் மறைக்கக்கருதினேனாயினும் அது என்னால் முடியவில்லை யென்று ஒழிந்த பொருளைத் தருதலால்,ஒழியிசை. இரங்கற்கண் வந்தது என்றவிடத்துப் பிரி நிலைக்கண்வந்தது என்றும் பாடமுண்டு: இந்தப்பாடத்துக்கு—யானோ என்ற இடத்து ஓகாரம், மற்றையோரினும் தன்னைப்பிரித்தலால், பிரிநிலை யென்க:

1247-ஆம் குறளினுரையில் 'யானோ என்னும் பிரிநிலை' என்றதும் காண்க.

காமம், தும்மல்போலவே அடங்காது வெளிப்பட்டுவிடுகின்ற தென்றவாறு.

௧௨௫௪. நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும்.

இதுவுமது.

(இ-ள்.) (இன்றினுங் கெல்லாம்), யான் நிறை உடையேன் என்பேன்-யான் (என்னை) நிறையுடையேனென்று கருதியிருந்தேன்: † அதனாலென்?)

இன்று என்காமம்—, மறை இறந்து - மறைத்தலைக் கடந்து, மன்று படும் -

மன்றின்கண் வெளிப்படா நின்றது; (எ - று.)

மன்னும் ஓவும், மேலவற்றின்கண் வந்தன.

மன்றுபடுதல்-பலருமறிதல்.

இனி என்வரைத்தன்றென்பதாம்.

(கு - ரை.) இன்றினூங்கெல்லாம் - இதற்குமுன்பெல்லாம். மேலவற்

றின்கண் - மேற்குறளில் [மூன்றாங்குறளில்] வந்த ஒழியிசை இரங்கல்

அல்லது பிரிநிலைப்பொருள்களில். நிறையுடையேனென்பேன் மன் என்ற

இடத்து 'மன்' - நிறையுடையே னல்லேனென்ற பொருளைத் தெரிவித்த

லால், ஒழியிசை. என்வரைத்தன்று-என் எல்லைக்கு உட்பட்டதன்று: என்னை

மீறிவிட்டது என்றவாறு.

(௪)

௧௨௫௫. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ

யுற்றா ரறிவதொன் றன்று.

'நம்மைமறந்தாரை நாமும் மறக்கற்பாலம்'

என்றாட்குச் சொல்லியது.

(இ - ள்.) செற்றார் பின்

செல்லா-தம்மையகன்றுசென்றார் பின் செல்

வாது (தாமும்) அகன்றுநிற்கும்,
பெருந்தகைமை-நிறையுடைமை,—காமநோய்

* இங்கே நிறப்பன் மன் என்றும் பாடம் என்று சிலபிரதிகளில் ஒரு வாக்கியம் காணப்படுகின்றது.

† பி - ம்: (அதனுன்),



உற்றூர் அறிவது ஒன்று அன்று-காமநோயினை (யுறுதார் அறிவதொன்றன்றி)

உற்றார் அறிவதொன் றன்று; (எ - று.)

இன்பத்தொடுகழியுங்காலத்தைத் துன்பத்தொடுகழியுமாறு செய்தலின் 'செற்றார்'என்றாள். பின்சேறல்-மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை - ஈண்டாகுபெயர். காமநோயுற்றார் - மானமுடையார். நன்றென வுணரார்மாட்டுஞ் சென்றேநிற்கும் யான் அறிவதொன் றன் றென்பதாம்.

(கு - ரை.) மறக்கற்பாலம் - மறத்தற்குரியோம். என்றற்கு - என்று கூறியபாங்கிக்கு. தலைவிசொல்லியது, இது. கோபிப்பவர் என்ற காரணம் பற்றி, 'செற்றார்'என்பது பகைவரைக் காட்டும். பின்செல்லாது என்று வருவதனால், செற்றார் என்பதற்குப் பகைவரென்ற பதப்பொருளைக் கூறாது 'தம்மை யகன்றுசென்றார்' என்றது. 'காதலரைச் செற்றாரென்னலாமோ?' என்று ஓராசங்கைதோன்ற, அதற்குப்பரிகாரமாக, 'இன்பத்தொடு கழியுங் காலத்தைத் துன்பத்தொடு கழியுமாறு செய்தலிற் செற்றாரென்றாள்'என்றது. பெருந்தகைமை - பெருமைக்குணம்: அப்பண்பைக்கொண்ட நிறையுடைமைக்கு ஆகியதனால், பண்பாகுபெயராம். நன்று என உணரார்மாட்டும் - நன்மையென்பதை உணராதவரிடத்தும். செற்றார் பின்செல்லுதலால், தலைவி, தன்னை 'நன்றென

கிறாள். அறிவதொன் றன்று

வுணரார்மாட்டுஞ் சென்றே நிற்கும்யான்' என் என்பதற்குமுன், 'நிறையுடைமை' என்பதனை வருவிக்க. (௬)

கஉருசு. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.

இதுவுமது.

(இ-ள்.) செற்றவர்பின்-(என்னை) அகன்று சென்றார் பின்னே, சேறல்

வேண்டி - (யான்) சேறலைவேண்டுதலான்,—என்னை

உற்ற துயர்—,எற்று-

எத்தன்மையது! அளித்து - சாலநன்று; (எ - று.)

செற்றவரென்றது,ஈண்டும்

அப்பொருட்டு. வேண்டவென்பது வேண்டி

யெனத் திரிந்துநின்றது. அளித்தென்பது,

இகழ்ச்சிக்குறிப்பு. இக்காமநோய்

யான் சொல்லவுங் கேட்கவுமாவதொன்றன்று,

சாலக்கொடிதென்பதாம்.

(கு - ரை.) இந்தக்குறளில், துயர் என்றது -

காமநோயை. அப்பொரு

ட்டு - பகைவர் என்னும் பொருளது. துயரை 'அளித்து'

என்றது - இகழ்ச்சி

யைப் புலப்படுத்தலால், இகழ்ச்சிக்குறிப்பு ஆகும். ஆரோ -

ஈற்றசை. (கூ)

கஉ௫௭. நாணென வொன்றோ வறியலங்

காமத்தாற்

பேணியார் பெட்ப செயின்.

பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனோடு

'நீ புலவாமைக்குக் காரணம் யாது?'

நிறையழிவாற் கூடிய தலைமகள்

என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ-ள்.) பேணியார்-(நம்மால்)விரும்பப்பட்டவர்(வந்து), காமத்தால்—,

பெட்ப செயின் - (நாம்) விரும்பியவற்றைச் செய்யுமளவில், நாண் என

ஒன்றாவ அறியலம் - நாணென்றொன்றையும் அறியமாட்டேமாயிருந்தேம்.

பேணியாரென, செயப்படுபொருள்
வினைமுதல்போலக் கூறப்பட்டது.
விரும்பியன - வேட்கைமிகவினாற் கருதியிருந்த
கலவிகள். நாண் - பரத்தை
யர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல்.
ஒன்றென்பது ஈண்டுச் சிறி
தென்னும் பொருட்டு. இழிவுசிறப்பும்மை,
விகாரத்தாற்றொக்கது. நிறையழி
வான் அறியாது கூடிய தன் குற்றம் நோக்கி, அவளை யு
முளப்படுத்தாள்.

(கு - ரை.) நிறையழிவான் - உள்ளத்திலுள்ள
விஷயங்களைப் பிறரறி
யாமலடக்குங் குணங்கெடுதலால்: மனோதைரியத்தை
யிழந்ததனால் என்ற
படி. கூடிய-புலவிகொள்ளாமற் கூடப்பெற்ற.
பேணியார் என்பது-பேணப்
பட்டவரைக் காட்டுதலால், செயப்படுபொருள்
வினைமுதல்போலக் கூறப்
பட்டதென்றது. 'விரும்பியன' என்பது 'பெட்ப'
என்பதன் பொருளின்
அநுவாதம். பரத்தையர் தோய்ந்த - வேசியரைச்
சேர்ந்த. ஒன்று என்றதன்

பின் இழிவுசிறப்பும்மை, விகாரத்தால் தொக்கதென்க.
ஓ-அசை: தெரிகிலே
யென்பாருமுளர். அறியல னென்றது அறியலம்
என்றது - தன் நிறை
யழிவினால் அக்காதலனிடத்துப் புலவிகொள்ளாது
கூடிய குற்றத்திற்குத்
துணையாகப் பாங்கியையும் உளப்படுத்தும்பொருட்டு.

(எ)

கஉருவ. பன்மாயக் கள்வன் பணிமொழி
பெண்மை யுடைக்கும் படை.

யன்றோநம்

(இ - ள்.)

இதுவுமது.

நம் பெண்மை உடைக்கும் படை - நம்நிறையாகியஅரணை
யழிக்குந் தானை,—பல் மாயம் கள்வன்-பல
பொய்களைவல்ல கள்வனுடைய,
பணிமொழி அன்றோ - தாழ்ந்தசொற்களன்றோ!

(ஆனபின் அதுநிற்குமாறு
என்னை?) (எ - று.)

பெண்மை, ஈண்டுத் தலைமைபற்றி

நிறைமேனின்றது. வந்தாற் புலக்கக்
கடவேமென்றும், புலந்தால் அவன்சொற்களானுஞ்

செயல்களாலும் நீங்கே
மென்றும், இவை முதலாக
எண்ணிக்கொண்டிருந்தனயாவுங் காணுது கல
விக்கண் தன்னினும்முற்படும் வகை வந்துதோன்றிஞ
னென்பாள், 'பன்
மாயக் கள்வன்' என்ருள். பணிமொழி-நம்மினுந் தான்
அன்புமிகுதியுடைய
ஞகச் சொல்லுஞ் சொற்கள். அவன்
அத்தன்மையஞக.சொற்கள் அவையாக,
நங் நிறை அழியாதொழியுமோ வென்பதாம்.
(கு - ரை.) அரண் - காவலாகிய மதிள். தானை -
சேனை: இது, படை
என்பதன் பொருள். மாயம் என்பதன் பொருள் -
பொய்கள் என்பது. பணி
மொழி - பணிவுதோன்றக்கூறும் மொழி: அதனை
'தாழ்ந்தசொற்கள்' என்று
விளக்கிஞர்.அது-நிறை.பெண்மை-மகடூஉக்குணம்:நாண்
மடம் அச்சம் முதலா
கப் பெண்குணம் பலவாக இருப்பினும், தலைமைபற்றியும்
அதிகாரம் நிறை
யழிதலாலும் பெண்மையென்பது-இங்கே, நிறையைக்
காட்டிற்று. நீங்கேம்
என்பதற்கு'புலவியை'என்ற செயப்படுபொருளைக்
கூட்டிக்கொள்க.காணுது-
(பிரிந்தகாதலர் வந்தபோது) எதிர்நில்லாமல்.

தன்னினும் முற்படும் வகை -
காதலராகிய அவர்தன்னினும் யான் முற்படும்படி.

*—15

அவன் - தலைவன். அத்



தன்மையனாக - பன்மாயக்கள்வனாக.
சொற்கள்-அத்தலைவன் கூறுஞ் சொற்கள். அவையாக - பணிமொழியாக. பணிமொழி - வினைத்தொகை. இக்குறளில், பணிமொழியைப் படையாக உருவகஞ்செய்ததற்கு ஏற்க,பெண்மையை யரணாக உருவகஞ் செய்யாததனால், ஏகதேசவுருவகம். (அ)

கஉடுகூ. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு.

இதுவுமது.

(இ - ள்.) புலப்பல் என சென்றேன் - (அவர் வந்தபொழுது) புலக்கக் கடவேனென்று கருதி (முன் நில்லாது பிறிதோரிடத்து)ப் போயினேன்;

(போயும்), நெஞ்சம் - (என்) நெஞ்சம்,
(நிறையினில்லாது அறைபோய்),
கலத்தல் உறுவது கண்டு - (அவரோடு)
கலத்தலொருடங்குதலையறிந்து, புல்லி
னேன் - (இனி அது வாயாதென்று) புல்லினேன்; (எ - று.)

வாயர்மை - புலத்தற்கருவியாய நெஞ்சுதானே கலத்தற்கருவியாய் நிற்றலின், அது முடியாமை.

(கு - ரை.) புலப்பலெனச் சென்றேன் என்றதனால், அவர்முன் நில்லாது வேறிடத்துக்குப்போனமை பெறப்படும். அறைபோய் - கீழறுக்கப்பட்டு: தலைவர்வசப்பட்டு. அது-புலத்தல். வாயாது - முடியாது. "புலப்பேன் யானென்பேன் மனக்கிலையேயவற் காணிற், கலப்பேனென்னு மிக்கையறு நெஞ்சே" என்ற கலித்தொகை, இங்குக் காணத்தக்கது. (கூ)

**கஉகூ0. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க்**
**புணர்ந்தூடி நிற்பே மெனல்.**
**குண்டோ**

இதுவுமது.

(இ-ள்.) நிணம் தீயில் இட்டு அன்ன
நெஞ்சினார்க்கு-நிணத்தைத் தீயின்
கண்ணேயிட்டால் (அஃது உருகுமாறு போல)த் தங்காதலரைக் கண்டால் நிறையழிந்துஉருகும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு, புணர்ந்து ஊடி நிற்பேம்
எனல் - (அவர்) புணர (யாம்) ஊடி (ப்பின்பு
உணராது அந்நிலையே) நிற்கக்
கடவேமென்று கருதுதல், உண்டோ - உண்டாகுமோ?
(ஆகாது); (எ - று.)

புணர்தல் - ஈண்டு மிக நணுகுதல்;
எதிர்ப்படலுமாம். புணர வென்பது
புணர்ந்தெனத் திரிந்துநின்றது. யான் அத்தன்மையே
னாகலின், எனக்கு
அஃதில்லையாயிற் றென்பதாம்.

(கு - ரை.) நிணம் - உடலிலுள்ள எழுவகைத்
தாதுக்களில் ஒன்று:
கொழுப்பு என்பர்.
உணராது - ஊடல்நிலையினின்று நீங்காது. நணுகுதல் -
சமீபித்தல். அத்தன்மையேன் - நிணத்தைத்
அஃது - ஊடிநிற்பேமெனல்.

தீயிலிட்டன்ன நெஞ்சினேன்.

(கO)

## கஉள - ஆம்

## அதிகாரம்.—அவர்வயின்விதும்பல்.

அஃதாவது - சேய்டைப்பிரிவின்கண் தலைமகனுந் தலைமகளும்
வேட்கை
மிகவினுன் ஒருவரையொருவர் காண்டற்கு விரைதல்.

தலைமகன் பிரிவும் தலை

க்உள் - ஆம்

மகளாற்றுமையும் அதிகாரப்பட்டுவருகின்றமையின், இருவரையுஞ்சுட்டிப்
பொதுவாகிய பன்மைப்பாலாற் கூறினர். பிறரெல்லாம் இதனைத் தலை
மகனை நினைந்து தலைமகள்விதுப்புறலென்றார்: சுட்டுப்பெயர் சொல்லுவான்
குறிப்பொடு*கூடிய பொருளுணர்த்துவதல்லது தான் ஒன்றற்குப் பெயராகா
மையானும், கவிக்கூற்றாய அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற்பன்மையாற்
கூறப்படாமையானும்,அஃது உரையன்மை யறிக. இதனுள் தலைமகள்கூற்று
நிறையழிவால் நிகழ்ந்த தாகலின், அவ்வியைபுபற்றி நிறையழிதலின்பின்
வைக்கப்பட்டது.

(கு - ரை.) அவர்வயின்-தலைவன் தலைவியென்னும் அவர் இருவரிடத்
தும் நிகழ்கின்ற, விதும்பல் - வேட்கையால் தோன்றும் விரைவு. சேயிடைப்
பிரிவின்கண் - வெகுதூரஞ்சென்றிடுவதனல் நேர்ந்த பிரிவில். இந்தக்
கற்பியலில் முதல்தொடங்கி பிரிவும் ஆற்றுமையுமே அதிகாரங்களில்

தொடர்ச்சியாய்ச் சொல்லப்பட்டுவருதல் காண்க. இருவரையுஞ்சுட்டிப் பன்மைப்பாலாற் கூறியதென்றது-'அவர்வயின்'என்பதனை. 'அவர்'என்பது ஒருவர்க்குப் பெயராகாமை யறிக. அதிகாரப்பெயர் கவியாலிடப்பட்டதாதலால் 'கவிக்கூற்றாய அதிகாரத்து' என்றது. அவர் என்று தலைமகனை உயர்த்தற்கண் கவி பன்மையாற் கூறினதாகக் கொள்ளலாமெனின்,--பொதுப்படக் கூறவேண்டிய இடத்து உயர்த்தற்குக் காரணமில்லாமையாற் பொருந்தாதாமென்றார். இவ்வதிகாரத்தில் தலைமகள்கூற்று தலைமகன் கூற்று என்ற இரண்டும் வரினும் முதலில் வரும் தலைமகளின் கூற்று நிறையழிவால் நிகழ்வதாகையால், நிறையழிதலின்பின் இவ்வதிகாரம் வைக்கப்பட்டதென அதிகாரமுறைறமைக்குக் காரணங் காண்க.

கஉசுக. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

தலைமகள் காண்டல்விதுப்பிறாற் சொல்லியது.

(இ - ள்.) அவர் சென்ற நாள் ஒற்றி-அவர்(நம்மைப் பிரிந்து)போய நாள்

கள் (சுவரின் கணிலைழத்தவற்றைத்) தொட்டு எண்ணுதலான், விரல் தேய்ந்த -

(என்) விரல்கள் தேய்ந்தன; (அதுவேயன்றி அவர்வரும் வழிபார்த்து), கண்

உம் வாள் அற்று புற்கென்ற - (என்) கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின;

(இவ்வாறும் அவர்வரவு உண்டாயிற்றில்லை); (எ - று.)

நாள் - ஆகுபெயர். புல்லியவாதல் - நுண்ணியகாணமாட்டாமை. ஒற்ற

வென்பது ஒற்றியெனத் திரிந்துநின்றது. இனி யான் காணுமாறென்னை

யென்பதாம். நாளெண்ணலும் வழிபார்த்தலும் ஒருகாற் செய்தொழியாது

இடையின்றிச்செய்தலான், விதுப்பாயிற்று.

(கு - ரை.) சுவரின் கணிழைத்தவற்றை-சுவரிலிட்ட அடையாளங்களை.

கணவனைப்பிரிந்தமகளிர் கணவன் தம்மைவிட்டுச்சென்ற நாட்களைக் குறியிட்

டுக் கணக்கிடும் வழக்கம் பண்டைக்காலத்திருந்த தென்பதை "நெடுஞ்சுவர்

---

* பி - ம்: கூடிப்

நாள்பலவெழுதிச்; செவ்விரல்சிவந்த வவ்வரிக்குடைச்சூல், அணங்கெழி லரிவையர்'' என்ற பதிற்றுப்பத்தினுலும், "பண்ணீர்மொழியிவளைப் பையுளெய்தப் பனித்தடங்க, ணுண்ணீருக வொளிவாடிட நீடுசென்ருர் சென்றநாள், எண்ணீர்மையி னிலனுங் குழியும் விர லிட்டறவே'' என்ற திருக்கோவையாரினுலும் அறியலாம். இச்செய்யுளில், நாள் - அந்நாளிற் சுவரிற்செய்த அடையாளங்களைக் காட்டுதலால், ஆகுபெயர். புற்கென்ற - பலவின்பால் வினைமுற்று. ஒற்றியென்பது, பிறவினைமுதல்வினையான தேய்தலோடு இயைதலால், அதற்கேற்ற ஒற்ற எனச் செயவெனெச்சத்திரிபெனக் கொள்ளப்பட்டது. கண்கள் வாளற்றுப்புற்கென்றஆனமையால், காணும்வகையேயற்ற தென்றது என்க. இடையின்றி - தொழிலற்றவேளையில்லாமல்: எப்போதும் என்றபடி. விதுப்பு - விரைதல். (௫)

கஉ௬உ. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து.

'ஆற்றுமைமிகுதலின் இடையின்றிநினைக்கற்பாலையல்லை: சிறிது மறக்கல்வேண்டும்' என்ற தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) இலங்கு இழாய் - விளங்காநின்ற இழையினையுடையாய்! இன்று மறப்பின் - (காதலரை) இன்று (யான்) மறப்பேனுயின்,—மேல் - மேலும், காரிகை நீத்து - காரிகை(என்னை) நீப்ப, என் தோள்—, கலம் கழியும் - வளை கழல்வனவாய்; (எ - று.)

இலங்கிழாயென்பது, இதற்கு நீ யாதும் பரியலையென்னுங் குறிப்பிற்று. இன்று-யான் இறந்துபடுகின்றவின்று. மேலும்-மறுபிறப்பினும். எச்சவும்மை, விகாரத்தாற்றொக்கது. நீப்பவென்பது நீத்தெனத் திரிக்துநின்றது. மென்னும் இடத்துநிகழ்பொருளின்றெழில், இடத்தின்மேனின்றது.

இவ்

வெல்லைக்கணினைந்தால் மறுமைக்கண்
அவ ரை யெய்தி யின்புறல ா ம், அதனுன்
மறக்கற்பாலனல்லே னென்பதாம்.

(கு - ரை.) இழை - ஆபரணம். காரிகை - அழகு. நீப்ப - விட்டுநீங்க. இதற்கு - அழகுநீங்கத் தோள்வளை கழலுதற்கு. இலங்கிழாய் என்பதற்கு-

விளங்குகின்ற ஆபரணங்களையுடையவளே! என்று பொருளாதலால், அத்தொடர், 'நான் பிரிவுத்துயர்கொண்டு வருந்தாநிற்க, நீ ஆபரணம்பூண்டு விளங்குகின்றாயே! என் துயர்க்குப் பரியவேண்டாவோ!' என்ற பொருளைக் குறிப்பிக்கு மென்கிரூர். இன்றளன்று கீழ்வந்ததைத் தழுவும் இறந்தது தழுவிய எச்சவும்மை 'மேல்' என்பதன்பின் தொக்க தென்க. நீத்து—நீப்ப: எச்சத்திரிபு. தோள் என்ற இடத்தில் நிகழும்பொருளாகிய கலம் [வளை] என்பதன் தொழிலாகிய கழியு மென்பதை, தோளின்மே லேற்றி, 'தோள் கலங்கழியும்' என்றது. இங்கு, 'தோள்' என்பது "தோளுற்றூர் தெய்வம்" என்ற இடத்துப்போலக் கையென்ற பொருளதென்னலாம். இன்று காதலரை மறந்தேனுயின் மறுபிறப்பினும் அக்காதலரை எய்தமுடியாது: இம்மைக்கண் நினைந்தாலே மறுமைக்கண் அவரைப் பெற்று இன்புறலா

கஉள் - ஆம்

அதிகாரம்.—அவர்வயின்விதுப்பல் ககள்

மாதலால், அவரை மறக்கவில்லே னென்பதாம்.
"தீவினைவந்திடிற் சென்று
சென்று, பிறப்பானடுப்பினும் பின்னுர் துன்னத்தகும்

பெற்றியரே" என்று

திருக்கோவையார் கூறுவது, இங்கு அறியத்தக்கது.

(உ)

கஉகூரு. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்

வரனசைஇ யின்னு முளேன்.

இதுவுமது.

(இ - ள்.) உரன் நசைஇ-(இன்பநுகர்தலை நச்சாது)வேறலை நச்சி, (நாம் துணையாதலையிகழ்ந்து), உள்ளம் துணை ஆக - (தம்)ஊக்கந்துணையாக, சென்றார் - போயினார், வரல் நசைஇ - (அவற்றையிகழ்ந்து ஈண்டு) வருதலை நச்சுதலான், இன்னும் உளேன்-(யான்)இவ்வெல்லையினும் உளேனாயினேன்; (எ-று.)

உரனென்பது - ஆகுபெயர். அந்நசையா னுயிர்வாழாநின்றேன்: அஃ தில்லையாயின் இறந்துபடுவலென்பதாம்.

(கு - ரை.) எல்லை - காலவெல்லை. வலிமையென்னும் பொருளுள்ள உரனென்பது, அதனாலாகும் வேறலைக் காட்டுதலால்,

காரணவாகுபெயர்:

வேறல்-பகை வெல்லுதல். அவற்றை - வேறலையும் ஊக்கத்தையும். நச்சு

தல் - விரும்புதல்.

(கூ)

கஉகூச. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) (நீங்கியகாமத்தராய்),

பிரிந்தார்-(நம்மைப்)பிரிந்துபோயவர்,

(மேல்), கூடிய காமம் - கூடிய காமத்துடனே, வரவு - (நங்கண்) வருதலை,

உள்ளி-நினைந்து,—என் நெஞ்சு—,(வருத்தமொழிந்து), கோடு கொடு ஏறும்-

(மேன்மேற்) பனைத்தெழாநின்றது; (எ - று.)

வினைவயிற்பிரிவுழிக் காமவின்பம்நோக்காமையும் அது முடிந்துழி

அதுவே நோக்கலுந் தலைமகற்கு இயல்பாகலின், கூடியகாமமொடென்றாள்.

ஒடுவுருபு, விகாரத்தாற்றொக்கது.
கோடுகொண்டேறலாகிய மரத்தது

தொழில், நெஞ்சின்மே லேற்றப்பட்டது.

கொண்டென்பது குறைந்து

நின்றது. அஃது உள்ளிற்றிலே னாயின், இறந்துபடுவ லென்பதாம்.

(கு-ரை.) வினைவயிற்பிரிவுழி - போரின்பொருட்டுப் பிரியும்போது

அதுவே - காமவின்பத்தையே. 'ஒடு' உருபு தொக்கது, 'காமம்' என்பதனீற்

றில். கோடுகொண்டேறல் - பணைத்தெழுதல்: இது மரத்தின்தொழில்: இது

நெஞ்சின்மேலேற்றிக்கூறப்பட்டது:ஒன்றன்தொழிலை மற்றொன்றன்மேலேற்

றிக்கூறிய உபசாரவழக்கு எனப்படும். கொடு-கொண்டு என்பதன் தொகுத்

தல். அஃது உள்ளிற்றிலேன் ஆயின்-பிரிந்தவரின்வரவை நினையேனாயின்.(௪)

௧௨௬௫.

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு.



தலைமகன்வரவுகூறி 'ஆற்றயாய்ப் பசக்கற்பாலையல்லை' என்ற

(இ - ள்.) கண் ஆர கொண்கனை காண்க -
(என்) கண்கள் ஆரும் வகை
(என்) கொண்கனை (யான்) காண்பேனாக:
கண்டபின் - (அங்ஙனம்) கண்டபின்,
என் மெல் தோள் பசப்பு நீங்கும் - என்
மெல்லியதோளின்கட் பசப்பு
(த் தானே) நீங்கும்: (எ - று.)
காண்கவென்பது, ஈண்டு வேண்
டிக்கோடற்பொருட்டு. அது வேண்டு
மென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண்
வந்தது. கேட்ட
துணையான் நீங்காதென்பதாம்.
(கு - ரை.) ஆரும் வகை - நிரம்பும்படி:
திருப்தியடையும்படி. காண்க
வென்பது - வியங்கோள்: அது,
வேண்டிக்கோடற்பொருளில் வந்ததென்க.
கேட்டதனோடு நில்லாது காணவும்வேண்டுமென்ற
பொருளைத் தருவதனால்,
'மன்' - ஒழியிசையாம். கேட்டதுணையான் -
கேட்டமாத்திரத்தால். நீங்காது
என்பதற்கு 'பசப்பு' என எழுவாய் வருவிக்க.
(ரு)
கஉகூகூ.

வருகமற் கொண்கனொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட.

இதுவுமது.

(இ - ள்.) கொண்கன் ஒருநாள் வருக -
(இத்துணை நாளும் வாராக்)
கொண்கன் ஒருநாள் (என்கண்) வருவானாக: பைதல்
நோய் எல்லாம் கெட
பருகுவன் - (வந்தாற்) பையுளைச்செய்கின்ற
இந்நோயெல்லாங்கெட (அவ்
வமிழ்தத்தை வாயில்களைந்தானும்) பருகக்கடவேன்; (எ
- று.)

வருகவென்பதற்கும் மன்னென்பதற்கும்
மேலுரைத்தவாறே கொள்க.
அக்குறிப்பு, அவ்வொருநாளைக்குள்ளே
இனி வரக்கடவ நோய்களுங் கெடுப்ப
லென்பதாம்.

(கு-ரை.) என்கண்-என்னிடத்து. பையுள்-துன்பம்.

இந்நோயென்பது-
காமநோயை. அவ்வமிழ்தத்தையென்பது - கணவனை.
வாயில்களைந்தானும்-
ஐம்பொறிகளானும். மேலென்றது - ஐந்தாவதுகுறளில்
என்றவாறு. வருக
என்ற வியங்கோள் ஈண்டும் வேண்டிக் கோடற்பொருட்டு

என்க. கேட்டத்
ஞேடுசில்லாமல், வரவும்வேண்டுமென்ற கருத்தை
விளக்கியதனுல், இந்தக்
குறளிலும் 'மன்' - ஒழியிசையாம். அக்குறிப்பு -
ஒருநாள்வருகஎன்ற குறிப்பு.

கஉகூஎ. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ
கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

இதுவுமது.

(இ - ள்.) கண் அன்ன கேளிர் வரின் -
கண்போற்சிறந்த கேளிர் வரு
வராயின்,—புலப்பேன்கொல்-(அவர்வரவு
நீட்டித்தமைநோக்கி யான்) புலக்
கக் கடவேனே? புல்லுவேன்கொல்-(அன்றி
என்ஞற்ருமை நோக்கிப்) புல்
லக் கடவேனே? கலப்பேன்கொல்-(அவ்விரண்டும்
வேண்டுதலான் அவ்விரு
செயல்களையும்)விரவக்கடவேனே? (யாது
செய்யக்கடவேன்?) (எ - று.)

## கஉஎ - ஆம்

## அதிகாரம்.—அவர்வயின்விதும்பல் ககக

புலவியும் புல்லலும் ஒருபொழுதின்கண்
விரவாமையின் 'கலப்பேன்

கொல்' என்றாள். மூன்றனையுஞ் செய்தல் கருத்தாகலின், விதுப்பாயிற்று.

இனிக் கலப்பேன்கொலென்பதற்கு

*ஒருபுதுமைசெய்யாது பிரியாதநாட் போலக் கலந்தொழுகுவேனோ என்று உரைப்பாருமுளர்.

(கு - ரை.) வரவு நீட்டித்தமை - வரக் காலந் தாழ்த்தமை. புலக்க - பிணக்கங்கொள்ள. புல்ல - தழுவிக்கொள்ள. அவ்விருசெயல்களை - புலத்தல் புல்லல்என்னும் இரண்டு செய்கைகளையும். விரவ - (ஒன்றாகக்) கலந்து செய்ய. புலத்தல் புல்லல்என்ற இரண்டுசெயல்களும் ஒரேவேளையில் கலந்து நிகழாவாகையால், 'கலப்பேன் கோல்' என்று ஐயப்பட்டுக்கூறவேண்டுவதாயிற்று. ஒருபுதுமை - ஒருவேறுபட்டதன்மை: ஊடலுடையாள் போன்று நடித்தலென்பர்.

(எ)

கஉகூடு. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து மாலை யயர்கம் விருந்து.

●

வேந்தற்குற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுடிவுநீட்டித்துழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே

சொல்லியது.

(இ - ள்.) வேந்தன் வினை கலந்து வென்றீக-வேந்தன் வினைசெய்தலைப் புரிந்து வெல்வானாக: மனை கலந்து மாலை விருந்து அயர்கம்-(யாமும்) மனைவியைச் சென்றுகூடி (ஆண்டை) மாலைப்பொழுதிற்கு விருந்தயர்வேமாக; (எ-று.)

மனையென்பது - ஈண்டாகுபெயர்: "மங்கல மென்ப மனைமாட்சி" என்புழிப்போல.

அலங்கரித்தல்

வினைசெய்தற்கண் வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கோடல் முதலிய இன்மையின், 'மனைகலந்து மாலைக்கு விருந்தயர்கம்' என்றான். நான்கனுருபு, விகாரத்தாற்றொக்கது. இது வினைமுடியாமுன்கூறலான், விதுப்பாயிற்று. பிறரெல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைத்தார்: தலைமகனைக் கூறாது வேந்தன்வெல்க என்றும், மனைகலந்து என்றும், மாலைப்பொழுதின்கண் விருந்தயர்கம் என்றும் வந்த அவ்வுரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று.

(கு-ரை.) வேந்தற்குற்றுழி-ஒருவேந்தன் மாற்றானவேந்தனால் வருத்த முற்றுவந்து அடைந்தபோது. வினைமுடிவு - போர்முடித்தல். நீட்டித்துழி -

காலதாமதமானபோது. வென்றீக—வெல்க: வியங்கோள் வினைத்திரிசொல்.

விருந்தயர்கம் - விருந்துகொண்டாடுவேம், தன்மைப் பன்மைமுற்று. மனை யென்பது - மனையிலிருப்பாளைக் காட்டியதனால், இடவாகுபெயர். மனை யென்பது மனைவியைக் காட்டுவதற்கு மேற்கோள், "மங்கலமென்ப மனை மாட்சி" என்பது: இது, இந்தத்திருக்குறளில், வாழ்க்கைத்துணைநல மென் னும் அதிகாரத்தின் 10 - ஆம் பாடலி லுள்ளது: இதன் பொருள்:—மனையா ளின் நற்குணநற்செய்கைகளை (ஒருவனுக்கு) நன்மையென்று சொல்லுவர்.

வினைசெய்தற்கண்-போர்வினை நிகழும்போது. வினைமுற்றி வென்று மீண்டு வந்தால், அங்ஙனம் மீண்டுவருபவரை எதிர்கொள்ளுதலும், நகருக்கு அலங்க

---

* பி - ம்: ஒருமை புதுமைசெய்யாது.



ரித்தலும் நிகழுமென்க. மாலை விருந்தயர்கம் என்றவிடத்து

, மாலைக்கு விருந்

தயர்கம் என்றுபொருள்படுவதனுல்,
நான்கனுருபு விகாரத்தால்தொக்க தென்

ருர். மாலைக்கு விருந்தினைச் செய்தல்
- மாலைப்பொழுதிற்கு நேற்றுஇல்லாத

புதுமையைச் செய்தல். போர்வினைமுடியுமுன்
கூறுவதால், விதுப்பு

ஆகும். தலைமகள் கூற்ருயின், தலைமகன் வெல்க
என்றல்லது வேந்தன்வெல்க

என்றும், மனை(வி)யுடன் கலந்து மாலைப்பொழுதின்கண்
விருந்தயர்கம் என்

றும் வருதற்குப் பொருத்தமில்லை யாதலால்,
அங்ஙன் வந்ததே இது தலைமக

ளின் கூற்று அன்று என்பதற்குஏற்ற சான்ரு மென்க.
அது - தலைமகன்

கூற்றென்பது. கரி - சாட்சி. "தூதுவந்தன்றே தோழி,
துயரறுகிளவியோ

டயர்ந்தீகம் விருந்தே" என்ற கலித்தொகை, ஒருசார்
நோக்கத்தக்கது. (அ)

கஉகூகூ. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

சேட்சென்ருர்

இதுவுமது.

(இ-ள்.) சேண் சென்றூர் -
சேணிடைச்சென்ற(தம்)காதலர்,வரு நாள்-
மீண்டுவரக்குறித்த நாளை, வைத்து-உட்கொண்டு,
ஏங்குபவர்க்கு-(அது வருந்
துணையும் உயிர்தாங்கி)வருந்தும் மகளிர்க்கு,—ஒருநாள்
ஏழுநாள்போல் செல்
லும் - ஒருநாள் பலநாள்போல நெடிதாகக்காட்டும்; (எ -
று.)

ஏழென்பது, அதற்குமேலாய மிக்க
பன்மை குறித்துநின்றது: "ஒருவர்
கூறை யெழுவ ருடுத்து" என்றாற்போல.
தலைமகள்வருத்தம் பிறர்மேலிட்டுக்
கூறியவாறு. இதனுன், இதுவுந் தலைமகள்
கூற்றாகாமையறிக. இருநா
ளென்று பாடமோதுவாரு முளர்.

(கு - ரை.) சேணிடை - வெகுதூரமான இடத்தில். அது - மீண்டுவரக் குறித்தநாள். வருந்துணையும் - வருமளவும். ஏழுநாள் என்றது - மிக்க பலநாளென்பதைக் குறிப்பிக்குமெனக. எடுத்தமேற்கோளின்பொருள்:—ஒருவர் கூறை யெழுவருடுத்து - ஒருத்தராடையைப் பலருடுத்து என்பது: இம்மேற் கோளுள்ள இடம் விளங்கவில்லை. சென்றார் வருநாள் வைத்தேங்குபவர்க்கு ஒருநாள் எழுநாள்போற்செல்லும் என்று பிறர்மேலிட்டுக் கூறினுலும், தலைமகள் வருத்தமே இதில் விளங்கும். தலைமகள்வருத்தத்தைத் தலைவன் கூறுகின்றானென்றுகொள்வதே இங்குப் பொருத்தமாதல் காண்க. ஏழுநாள் என்பதற்குப் பதிலாக, 'இருநாள்' என்று
பாடமோதுவாருமுளர். இருநாள் -
பெரிதாகத்தோன்றுகின்ற நாள்.

(கூ)

கஉஎ0. பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னு

முள்ள முடைந்துக்கக் கால்.

இதுவுமது.

(இ - ள்.) (காதலி நம் பிரிவினையாற்றாது), உள்ளம் உடைந்து உக்கக் கால் - உள்ளமுடைந்து இறந்துபட்டவழி, பெறின் என் - (நம்மைப்) பெறக்கடவளாயினென்? பெற்றக்கால் என் - (அதுவன்றியே) பெற்றாலென்? உறின் என் - (அதுவன்றியே) மெய்யுறக்கலந்தாற்றானென்? (இவையொன்றானும் பயனில்லை); (எ - று.)

## கஉஎ - ஆம்

## அதிகாரம்.—அவர்வயின்விதும்பல் கஉக

இம்மூன்றும் உடம்பொடுபுணர்த்துக் கூறப்பட்டன, அதன்மேலும் முன்னை வழக்குண்மையின். அதற்கு முன்னே யான் செல்லவேண்டுமென் பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. இது தலைமகள் கூற்றாயவழி இரங்க லாவதல்லது விதுப்பாகாமை யறிக.

(கு-ரை.) தலைவி இறந்துபடுவதை வெளிப்படையாகக் கூறாமல், 'உள்ளமுடைந்துக்கக்கால்' என்பதனாற் குறிப்பித்தானென்க. இந்தக்குறளின் விசேடவுரையில், 'இம்மூன்றும் உடம்பொடுபுணர்த்துக்

கூறப்பட்டன, அதன்மேலும் முன்னை

வழக்குண்மையின்' என்றசொற்றொடர்க்குப் பொருள்

விளங்காமையால், பாஷாகவிசேகரர் - சேதுஸம்ஸ்தாந

வித்வான் ஸ்ரீ. உ. வே. ரா. ராகவய்யங்கார் ஸ்வாமிகளை

வினவ, அந்தஸ்வாமி அருளிய விடை

வருமாறு:—"குறளில், உக்கக்கால் என்பதற்கு -

இறந்துபட்டவழி என்றதனால், உள்ளது உடம்புதான்

என்று கருதி, 'பெறினென், பெற்றக் கால் என், உறின்என்'

என்ற இம்மூன்றும் உடம்பொடு சேர்த்துக் கூறப்பட்டன

எனக் கொண்டவராவர்: 'அதன்மேலும் முன்னை

வழக்குண்மையின்'

என்புழி, அதன்மேலும்என்றது அவ்வுடம்பின்மேலும்என்றவாறு: முன்னை வழக்குஎன்பது உயிருள்ளபோழ்தின்வழக்குஎன்றவாறு: உண்மையின் என்பது நூலினும்உலகத்தினும்உண்டாதலால் என்றவாறு: 'உயிர்நீத் தொரு மகன் கிடந்தானெனவும்', "படுமகன் கிடக்கைகாணூஉ" எனவும் வருவன

காண்க. இக்குறளில் இறந்துபட்டவழிப் பெறக்கடவளானால் என்றுகூறினாராதலால், இக்கருத்து எளிதிலறியலாம். இறந்துபட்டவழி உடம்புபெறக்கடவதானால் என்பதன்றோ இயைபுடைத்தெனின்,—அற்றன்று: அவ்வுடம்பின் மேலும் இறத்தற்குமுன்னை வழக்கு நிகழ்தலுண்டென்று விளக்கினாரென்க. என்னிடமுள்ள பரிமேலழகருரைப்பழைய ஏட்டில், உடம்போடுகூறப்பட்டன என்றேயுள்ளது. இதனால், இஃது உத்தியன்று என்பது தெரியப்படும். ஏன் ஏட்டில், உறினென் என்பதற்கு - மெய்யுறக் கலந்தாற்றான் என்? மெய்யுறக் கலவாதொழியினென்? என்று கூறப்பட்டுள்ளது" என்பது. இனி, ஒருசாரார் இந்தக்குறளில் அசைநிலையாகிய 'ஆம்' என்பது மூன்றுவந்திருப்பதைச் சமர்த்திக்கவந்தது இந்தவாக்கியமென்பர். அவர் உரைக்குமாறு ஆமென்பது மூன்றும் ஒருகுறட்பாவிற் கூறப்பட்டன: மூன்றற்குமேலும் ஓர் அசைச்சொல்லைச் சேர்த்துக்கூறலும் செய்யுள்வழக்கிலுண்டு என்பது. மற்றொருசாரார், உத்தியாகவேகொண்டு பொருள் கூறுவது பொருந்துமா என்பதனையும் ஆராய்க.

உள்ளமுடைந்துக்கக்கால் தலைமகள் பெறக்கடவளாதல் முதலியவற்றாற் பயனின்று ஆதலால், அதற்குமுன்னமே செல்லவேண்டுமென்றானென்க: இதில் காட்சிவிரைவு விளக்குதலால், இது விதுப்பாகும். இங்ஙனன்றி, தலைவி தலைமகனைப்பற்றிக் கூறியதாகக் கொள்ளின், 'உள்ளமுடைந்துக்கக்கால் பெறினென்னாம்' எனக் கூறுதல், இரங்குதலிற்சேர்வதன்றி விதுப்பாகாமை காண்க: ஆகவே, இப்பாடலையும் கீழிரண்டுபாடல்களைப் போலவே தலைவன்கூற்றாகக்கொள்ளுவதே பொருத்தமாம். (௧௦)



## ௧௨அ - ஆம்
## அதிகாரம்.—குறிப்பறிவுறுத்தல்.

அஃதாவது-தலைமகன் தலைமகள் தோழி என்றிவர் ஒருவர் குறிப்பினை

யொருவர்க்கு அறிவுறுத்தல். இது பிரிந்துபோய
தலைமகன் வந்து கூடியவழி
நிகழ்வதாகலின், அவர்வயின்விதும்பலின்பின்
வைக்கப்பட்டது.

(கு - ரை.) என்றிவர் - என்றஇவர். அறிவுறுத்தல்
- தெரிவித்தல். இங்

தக்*குறிப்பறிவுறுத்தல் பிரிந்துபோனதலைமகன் விருப்புக்கொண்டு வந்து கூடியபோதுநிகழ்வதாதலால், அவர்வயின்விதும்பலின்பின் வைக்கப்பட்டது.

கஉஎக. கரப்பினுங் கையிகந் தொல்லாநின்

னுண்க

ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

பிரிந்துகூடிய தலைமகன் வேட்கைமிகவினாற்
புதுவது பன்னாளும்

பாராட்ட, தலைமகள் 'இது ஒன்று உடைத்து' என
அஞ்சியவழி

அதனை அவன்குறிப்பானறிந்து அவன் அவட்குச்
சொல்லியது.

(இ-ள்.) கரப்பின்உம் - (நீ சொல்லாது)
மறைத்தாயாயினும், ஒல்லா -

(அதற்கு) உடம்படாதே, கையிகந்து-(நின்னைக்)
கைகடந்து, நின் உண்கண்-

நின்னுண்கண்களே, (எனக்கு), உரைக்கல் உறுவது
ஒன்று - சொல்லலுறுவ

தொரு காரியம், உண்டு-உண்டாயிராநின்றது: (இனி
அதனை நீயே தெளியச்

சொல்வாயாக); (எ - று.)

கரத்தல் - நாணடக்குதல். தன்கட் பிரிதற்குறிப்புளதாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன் பிரியாமைக் குறிப்பறிவுறுத்தவாறு.

(கு - ரை.) வேட்கைமிகவினால் - ஆசையின்மிகுதியினால். புதுவது பல நாளும் பாராட்ட - பலநாள்களும் (புணர்ச்சித்தொழிலைப்) புதிது புதிதாகப் பாராட்ட. இது - இவ்வன் (இத்தலைவன்) பாராட்டுவது. ஒன்று உடைத்து- (பிரிதலாகிய) ஒருகருத்தையுடையதுபோலும். அதற்கு உடம்படாதே-அந்த மறைத்தற்றொழிற்கு உடம்படாமலே. அறிவுறுத்தவாறு - அறிவுறுத்தியபடி. மறைக்கும் பிரிவுத்துயரைக் கண்கள் புலப்படுத்து மென்பதனை "எவ்வநோ யென்னையு மறைத்தாண்மன், வென்றவே னுதியேய்க்கும் விறனல னிழந் தினி, நின்று நீருகக்கலுழ நெடும்பெருங்கணல்லாக்கால்" என்ற கலித் தொகையாலும் அறிக.

(க)

கஉஎஉ.

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.

நாணால் அவள் அதுசொல்லாளாயவழி அவன் தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்.) கண் நிறைந்த காரிகை -
(என்) கண்ணிறைந்த அழகினையும்,
காம்பு ஏர் தோள் - வேயையொத்த தோளினையுமுடைய,
பேதைக்கு-(நின்)
பேதைக்கு, பெண் நிறைந்த நீர்மை பெரிது -
பெண்பாலாரிடத்து நிறைந்த
மடமை (அவ்வளவன்றி) மிகுந்தது; (எ - று.)

இலதாயபிரிவினைத்தன்கணேற்றி அதற்குஅஞ்சுதலான்,
இவ்வாறுகூறினான்.

கஉ௯ - ஆம்
அதிகாரம்.—குறிப்பறிவுறுத்தல் கஉ௩

(கு - ரை.) அது - பிரிவச்சத்தை. தன்கண் -
(தலைவனாகிய) தன்
னிடத்து. அதற்கு - பிரிவிற்கு. பெண்பாலார்க்கு
மடமை இயற்கையென்
பதை "நுண்ணுணர்வுடையோர் நூலொடுபழகினும்,
பெண்ணறிவென்பது
பெரும் பேதைமைத்தே" என்றதனாலும் அறியலாம்.
இந்தத்திருக்குறளை
"களவலராயினும்" என்றுதொடங்கும்

தொல்காப்பியக்களவியற்சூத்திரத்தில்
"அளவுமிகத்தோன்றினும்"என்பதற்கு உதாரணமாக எடுத்துக்காட்டி,'இது, கதிர்ப்புக்கண்டு செவிலி தானேகூறியது' என்றனர், நச்சினார்க்கினியர். (உ) கஉளரு.

மணியுட் டிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியுட் டிகழ்வதொன் றுண்டு.

இதுவுமது.

(இ - ள்.) மணியுள் திகழ்தரும் நூல்போல் - (கோக்கப்பட்ட) பளிக்கு மணியகத்துக் கிடந்து புறத்துப்புலனும் நூல்போல, மடந்தை அணியுள் திகழ்வது-இம்மடந்தையது அணியகத்துக் கிடந்து புறத்துப்புலனுகின்றது, ஒன்று உண்டு - ஒரு குறிப்புண்டு; (எ - று.)

அணி - புணர்ச்சியானுய அழகு. அதனகத்துக் கிடத்தலாவது, அத ஞேடு உடனிகழ்தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். அதனை யான் அறி கின்றிலேன், நீயறிந்துகூறல்வேண்டுமென்பது கருத்து.

(கு-ரை.) பாடலிலுள்ள அணிஎன்பதற்கு - புணர்ச்சியானுய அழகுஎன விரிவுகூறியவாறு. உடன்நிகழ்தற்பாலதன்றி வைத்து - உடன் நிகழ்தற்கு உரியதாகாதிருந்தே. இந்தப்பாடலை, 'இது, காமத்தால் நிகழ்ந்த பொலிவினைச் செவிலி தானே கூறியது' என்றனர் நச்சினார்க்கினியர்: (தொல்.

களவி-115).
'மணியிற்றிசழ்தரு', 'அணியிற்றிகழ்வது'என்றும் பாடமுண்டு.

கஉஎச. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற்
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

பேதை

இதுவுமது.

(இ - ள்.) முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல் - முகையது (முகிழ்ப்பினுளதாய்) புறத்துப்புலனாகாத நாற்றம்போல,—பேதை - (நின்) பேதை,நகை மொக்குள் உள்ளது-(என்னொடு நகக்கருதும்)நகையது முகிழ்ப்பினுளதாகிப் புறத்துப்புலனாகாதது, ஒன்று உண்டு-ஓர் குறிப்புண்டு; (எ - று.)

முகிழ்ப்பு - முதிர்ச்சியாற் புடைபடுதல். நகை - புணர்ச்சியின்பத்தானிகழ்வது.

(கு - ரை.) முகை - பூவின்மொட்டு. புடைபடுதல்-(மலர்தற்குமுன்னே) பருத்துநிற்கும்நிலை. இந்தக்குறள் தொல்காப்பியத்து மெய்ப்பாட்டியலில் நகுநயமறைத்தலென்னும் மெய்ப்பாட்டிற்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது: நகுநயமறைத்தலாவது - தலைமகன்கட்டோன்றிய குறிப்புக்களான் அதற்கு

ஏதுவாகிய நயனுடைமை
மனத்திற்பிறந்தவழியும் நகாதுவிற்றல். (சு)

கஉஎடு.

செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.



இதுவுமது.

(இ - ள்.) செறி தொடி - நெருங்கிய வளைகளையுடையாள், செய்து - (என்கணில்லாததொன்றனை) உட்கொண்டு, (அதுகாரணமாக), இறந்த கள்ளம்-(என்னை) மறைத்துப்போன குறிப்பு, உறு துயர் தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து-(என்) மிக்கதுயரத்தைத்தீர்க்கும் மருந்தாவதொன்றனையுடைத்து.

உட்கொண்டது-பிரிவு. கள்ளம் - ஆகுபெயர். மறைத்தற்குறிப்பு-தானும் *உடன்போக்குட் கொண்டது. உறுதுயர் - நன்றுசெய்யத் தீக்கு விளைதலானும் அதுதான் தீர்திறம் பெருமையானும் உளதாயது.

மருந்து - அப்பிரி
வின்மை தோழியாற்றெளிவித்தல். நீ
அதுசெய்தல்வேண்டுமென்பதாம்.
(கு-ரை.) செறி
தொடி-வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்
தொகை. செய்து - ஐயத்தைச்செய்து:
பிரிவையெண்ணியென்க. இங்கு,
குறிப்பு-உடன்போகற்குறிப்பு. கள்ளம் என்பது
கள்ளத்தினால் நிகழுங் குறிப்
பைக் காட்டுதலால், ஆகுபெயர். தானும் உடன்போக்கு
உட்கொண்டது-'இவ்
விடத்தைவிட்டு நீங்கிச்செல்வதாயிருந்தால் என்னைவிட்டு
அகலாதே: நானும்
உன்னுடன் வருவேன்' என்று உடன்போக்குக்கு
ஒருப்பட்டிருத்தலை யுட்
கொண்டது. வேட்கைமிகவினாற் புணர்ச்சியைப்பாராட்ட
அதுகாரணமாகப்
பிரிவச்சம் விளைதலைக்கருதி, நன்றுசெய்யத்
தீங்குவிளைதல் என்றது. அது
தான் - பிரிவச்சந்தான்.
அதுசெய்தல்-தலைவியைப்பிரிவின்மைதெளிவித்தல்.

கஉஎரு. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த
லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

தலைமகன்குறிப்பறிந்த தலைமகள், அதனை, அதுதெளிவிக்கச்

சென்ற

(இ - ள்.) (காதலர் வந்து தம்பிரிவினானுய
துன்பத்தினை), பெரிது
ஆற்றி - மிகவுமாற்றி, பெட்ப - (நாம்)மகிழும்வண்ணம், கலத்தல்-கலக்கின்ற கலவி,—(இருந்தவாற்றான்), (மேலும் அத்துன்பத்தினை), அரிது ஆற்றி - அரிதாகவாற்றியிருந்து, அன்பு இன்மை - அவரன்பின்மையை, சூழ்வது உடைத்து - நினையுந்தன்மையுடைத்து; (எ - று.)

பிரிதற்குறிப்பினாற் செய்கின்றதாகலான், முடிவில்
இன்னாதாகின்ற
தென்பதாம்.

(கு - ரை.) தலைமகன்குறிப்பு - பிரிதற்குறிப்பு.
அதனை - அந்தத்தலை
மகன்குறிப்பினை: இது, அறிவுறுத்தது என்பதனோடு
இயையும். அது தெளி விக்க - அப்பிரிவின்மையைத்
தெளிவிக்க. மிகவும் ஆற்றி - மிகவும் தணித்து.
அத்துன்பத்தினை - அப்பிரிவுத்துன்பத்தினை.
பிரிதற்குறிப்பினால் செய்கின்
றது என்பது கலவியை. 'இன்னாதாகின்றது'
மகிழும்வண்ணங் கலக்கின்ற கலவியென்பது.

என்பதற்கு எழுவாய், நாம்

(சு)

கஉஎஎ. தண்ணந் துறைவன் றணந்தமை
நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

* பி - ம்: தானும் உடன்போதற்குக் கொண்டது.

க்உ௪ - ஆம்

அதிகாரம் —குறிப்பறிவுறுத்தல் க௨௫

இதுவுமது.

(இ - ள்.) தண்ணந் துறைவன் தணந்தமை-குளிர்ந்த துறையை யுடையவன் (நம்மை மெய்யாற்கூடியிருந்தே மனத்தாற்) பிரிந்தமையை, (அவன் குறிப்பானறிதற்குரிய), நம்மினும்—,வளை முன்னம் உணர்ந்த - இவ்வளைகள் முன்னேயறிந்தன; (எ - று.)

கருத்துநிகழ்ந்த தாகலின் 'தணந்தமை' என்றும், யான் தெளியவுணர் தற்குமுன்னே தோள்கண் மெலிந்தன வென்பாள் அதனை வளைமேலேற்றி அதுதன்னை புணர்வுடைத்தாக்கியுங் கூறினாள்.

(கு - ரை.) கருத்து நிகழ்ந்ததாகலின் - பிரியவேணுமென்ற எண்ணம் தோன்றியுள்ளதாதலால். தெளிய-நிச்சயமாக. அதுதன்னை-அவ்வளையை. வளையை உணர்ச்சியையுடைய பொருளாகக் கூறிய நயங்காண்க. (எ)

க௨எ௪. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

இதுவுமது.

(இ - ள்.) எம் காதலர்—, சென்றார் நெருநற்று -

பிரிந்துபோயினர் நெருநற்றே: யாம் உம் மேனி பசந்து எழுநாளேம் - (அப்பிரிவிற்கு) யாமும் மேனிபசந்து எழுநாளுடையமாயினேம்; (எ - று.)

நெருநற்றுச்செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்டதென்பாள் 'நெருநற்றுச் சென்றார்' என்றும், அதனை யையுற்றுச்செல்கின்றது எழுநாளுண்டாகலின் அன்றே மேனிபசந்ததென்பாள் 'மேனிபசந்தெழுநாளேம்' என்றுங் கூறினாள். இவ்வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிப்பினையுணர்த்தி நின்றது.

(கு - ரை.) நெருநற்றே - நேற்றே. இன்னுந் தலைவர் பிரிந்துசெல்ல வில்லை யாகவும், அவர்செய்த தலையளியால் இனி விரைவிற் பிரிவரென்று முன்னமே தலைவி தெளிந்திட்டாளாதலால், அத்தெளிவை விளக்க'நெருநற்றுச் சென்றார்' என்றதென்க. பிரிவைப்பற்றி ஐயுற்று எழுநாளாயிற்றென்பதை விளக்க, 'யாமுமெழுநாளேம் மேனிபசந்து' என்றதென்றார். மேனி, தான் பசந்ததனால் தலைவன் பிரிவுக்குறிப்பை எழுநாள்கட்குமுன்னமே யுணர்த்தி நின்றதென்க.

(அ)

கஉ௭௯. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யஃதாண் டவள்செய் தது.

யடிநோக்கி

தலைமகள்குறிப்பு அறிந்த தோழி அதனைத் தலைமகற்கு அறிவித்தது.

(இ-ள்.) (யான் அதுதெளிவித்தவழித் தெளியாது),—தொடி நோக்கி(அவர் பிரிய யான் ஈண்டிருப்பின் இவைநில்லா

எனத் தன்)தொடியை நோக்கி, மெல் தோள்
உம் நோக்கி - (அதற்கேதுவாக இவைமெலியுமெனத் தன்)
மென்றோள்களையும் நோக்கி, அடி
நோக்கி-(பின்னிவ் விரண்டும் நிகழா மல்
நீர் நடந்துகாத்தல்வேண்டு
மெனத் தன்) அடியையும்நோக்கி, ஆண்டு அவள் செய்தது
அஃது - அங்ஙனம் அவள்செய்த குறிப்பு உடன்போக்கா
யிருந்தது; (எ - று.)



செய்தகுறிப்பு - செய்தற்கேதுவாய குறிப்பு.
அஃதென்றாள் "செறி
தொடி செய்திறந்தகள்ளம்" என்றானாகலின்.
பிரிதற்குறிப்புண்டாயின், அஃ
தழுங்குதல் பயன்.

(கு - ரை.) தலைமகள் குறிப்பு-தலைவனுடன்
செல்வது. அதனை-உடன்
போக்கை. அது-பிரிவச்சம். தொடியை
முதலில்நோக்கியது - யான் பிரிந்து
இங்குத்தானே யிருப்பின் இவை
நில்லாவென்பதையும், தோளை நோக்கி
யது - தொடி நிற்காதபடி தோள்கள் மெலியு

மென்பதையும், தன் அடி

நோக்கியது - வளைகழலாமலும் தோள்மெலியாமலுமிருத்தற்கு நீவிர் கணவனுடன் செல்லுவதே நல்ல உபாயம், நடந்துசெல்லும் இவ்வுதவிபுரிய வேண்டும் என்பதையும் குறிப்பிக்குமென்க. "செறிதொடி செய்திறந்த கள்ளம்"

என்று கீழ் 5 - ம் குறளில் உடன்போக்குக் கூறப்பட்டமையால், அதனை

"அஃது" என்று இங்குச்சுட்டினார். அஃது அழுங்குதல் - பிரிதற்குறிப்பு

உண்டாகாவண்ணம் தலைமகனைத் தடுத்தல். இங்குத் தலைவன்பிரிவையுணர்

ந்து அதனைத்தடுக்கக் குறிப்பாலுணர்த்தியதாகவந்தது - கரவுவெளிப்படுப்

பணி: பிஹிதாலங்கார மெனப்படும்.

(கூ)

கஉ௩௦.

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

தலைமகன் பிரியாமைக்குறிப்பினைத்

தோழிக்கறிவுறுத்தது.

(இ - ள்.) (மகளிர்), காமநோய் - (தங்) காமநோயினை, (தோழியர்க்கும்

வாயாற்சொல்லாது), கண்ணினால் சொல்லி—, (அதுதீர்க்க வேண்டுமென்று

அவரையிரவாது), இரவு-(உடன்போதல்குறித்துத்

தம்மடியினை:)இரத்தல்,—
பெண்ணினுல் பெண்மை உடைத்து என்ப - (தமக்கியல்பாகிய) பெண்மை மேலும் ஓர் பெண்மையுடைத்தென்று சொல்லுவர் (அறிந்தோர்); (எ - று.)

தலைமகளது உடன்போதற்றுணிபு தோழியாற் றெளிந்தானுகலின், தன் பிரிவின்மைக்குறிப்பினை யறிவுறுப்பான், அவள்பெண்மையினைப் பிறர்மே லிட்டு வியந்துகூறியவாறு.

(கு - ரை.) தலைமகன் பிரியாமைக் குறிப்பு - பிரிந்து தான் தனியே செல்லாமல் தலைவியையும் உடனழைத்துக்கொண்டே போதற்குறிப்பு. அது- காமநோய். அவரை - தோழியரை. துணிபு - உறுதி. தலைவி உடன்வருதற்கு இசைந்து இருத்தலைத் தோழியால் உணர்ந்த தலைவன், தன்னுடன் தலைவி வருதற்கு இசைதலால் தன் பிரியாக்குறிப்பினை அறிவிக்க "பெண்ணினுற் பெண்மையுடைத்தென்ப" என்று அவள்பெண்மையை வியக்கின்றுனென்க.

## கஉகூ - ஆம்

## அதிகாரம்.—புணர்ச்சிவிதும்பல்.

அஃதாவது - தலைமகனுந் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல்.

மேற் புணர்ச்சிமிகுதிபற்றித் தலைமகன் பிரிதற்குறிப்பறிவுறுத்தத் தலைமகள், அவன்மாட்டேநிகழாது வேட்கை மிகவினுற் பின்னுந் தன்கண்ணே நிகழ்த லான், இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

(கு - ரை.) மேல் - முன்னைய அதிகாரத்தில்: அதாவது கஉஅ - ஆவது அதிகாரத்தில். அறிவுறுத்த - அறிவிக்க. அவன்மாட்டே நிகழாது - தலைவனிடத்து நிகழும் பிரிதற்குறிப்பைக்கருதாது. தன்கண்ணே நிகழ்தலால்-தன் கண்ணுள்ள புணர்ச்சிவிதும்பலிலே கருத்துச்செல்லுதலால்.

கஉ௩க. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

'பிரிதற்குறிப்பினனாகியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாது?' என நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) உள்ள களித்தல் உம்-நினைத்தலானே களிப்பெய்தலும்; காணமகிழ்தல்உம் - கண்டதனானே மகிழ்வெய்தலும், கள்ளுக்கு இல் - கள்ளுண்டார்க்கில்லை: காமத்திற்கு உண்டு - காமமுடையார்க்குண்டு; (எ-று.)

களித்தல் - உணர்வழியாதது. மகிழ்தல் - அஃதழிந்தது. இவ்விரண்டும் உண்டுழியல்லதின்மையின் 'கள்ளுக்கில்' என்றான். உண்டென்பது, இறுதி விளக்கு. அப்பெற்றித்தாய காமமுடைய யான், புலத்தல் யாண்டையதென்பதாம்.

(கு - ரை.) பிரிதற் குறிப்பினனாகியானோடு - பிரிதற்குறிப்பையுடைய வனான தலைவனோடு. உணர்வழியாத உள்ளங்கிளர்தல் களித்தலென்றும், உணர்வழிய உள்ளங்கிளர்தல் மகிழ்தலென்றும், களித்தல் மகிழ்தல் என்ற இரண்டற்கும் வேறுபாடு காட்டுகின்றார்; இவ்விரண்டும் - களித்தலும் மகிழ்தலும். உண்டுழியல்லது - கள்ளைப்பருகியபோது அல்லாமல். உண்டு என்று

இறுதியில் நிற்குஞ்சொல், இந்தக்குறளுக்குப் பொருளுரைக்கும்போது காமத்திற்கு உள்ளக்களித்தலும் உண்டு, காணமகிழ்தலும் உண்டு என்று இடையே சென்று இயைக்கதனால், இறுதிவிளக்கு என்றார்: இது, விளக்கணியின்வகையாகும். வடமொழியில், இந்த விளக்கணி, தீபகாலங்காரமெனப்படும். அப்பெற்றித்தாய - உள்ளக்களித்தலும் காணமகிழ்தலு முடையதாகிய. (க)

கஉ௩உ. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின்.

இதுவுமது.

(இ - ள்.) (மகளிர்க்கு), காமம்—, பனை துணை உம் - பனையளவினும், நிறைய வரின் - மிகவுண்டாமாயின், (அவரால்), (தங்காதலரோடு), தினை துணை உம் - தினையளவும், ஊடாமை-ஊடுதல்செய்யாமை, வேண்டும்-வேண்டப்படும்; (எ - று.)

பனைத்துணையுமென்புழி, ஐந்தனுருபு விகாரத்தாற்றொக்கது. ஊடின் வருத்தமிகுமெனப்பிறர்க்குறுதிகூறுவாள்போன்று, தன்விதுப்புக்கூறியவாறு.

(கு - ரை.) அவரால் - மகளிரால். தினை பனை என்பன, அளவைக்காட்டும். பனைத்துணையினும் என்று வைத்துக்கொண்டு பொருள்கூறியதால், பனைத்துணையு மென்புழி, ஐந்தனுருபு விகாரத்தால் தொக்கதென்றார். 'ஊடாமை வேண்டும்' என்றதனால், ஊடின் வருத்தம் மிகுமென்பது பெறப்



படுமாதலால், ஊடின் வருத்தமிகுமெனப் பிறர்க்குறுதி தன் விதுப்புக் கூறியவாறென்றது.

கூறுவாள்போன்று

(உ)

கஉ௲ரு, பேணுது பெட்பவே செய்யினுங்
கொண்கனைக்

காணு தமையல கண்.

இதுவுமது.

(இ - ள்.) பேணுது பெட்பவ செய்யின் உம்-(நம்மை) அவமதித்து (த் தான்) வேண்டியனவே செய்யுமாயினும், கொண்கனை—, கண் - (என்) கண்கள், காணுது அமையல - காணுதமைகின்றனவில்லை; (எ - று.)

தன்விதுப்புக் கண்கண்மே லேற்றப்பட்டது.
* அத்தன்மையேன் அவனெடு புலக்குமாறென்னை யென்பதாம்.

(கு-ரை.) பேணுது என்பதன்பொருள் 'அவமதித்து' என்பது. கொண்

கன் - கணவன். தன்விதுப்பை - தன்விரைவை.
'கொண்கனைக் காணுதமை யல கண்'என்றதனல், தலைவி தன்னுடைய விதுப்பைக் கண்களின்மேலேற்

றிக் கூறியதென்ருர்: முதலின் தொழிலைச் சினைமேலேற்றிக்கூறிய உபசார

வழக்கின்பாற்படும். அத்தன்மையேன் - கண்களாற்காணுது அமைகில்லா

தேன். "நீ, மாணுசெயினு மறுத்தாங்கே நின்வயிற், காணினெகிழு மென்

னெஞ்சாயினென் னுற்றாய், பேணாய்நீ பெட்பச்செயல்"
என்ற கலித்தொகை யடிகள், இக்குறளில் நோக்கத்தக்கன.

(ந)

கஉ௯ச. ஊடற்கட்
கூடற்கட்

சென்றேன்மற் றோழி யதுமறந்து
சென்றதென் னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) தோழி - தோழீ! ஊடற்கண் சென்றேன் - (காதலரைக் காணுமுன் அவர்செய்த தவற்றைத் தன்னொடுநினைந்து யான் அவரோடு) ஊடுதற்கண்ணே சென்றேன்: (கண்டபின்), என்னெஞ்சு—, அது மறந்து-அதனை மறந்து, கூடற்கண் சென்றது - கூடுதற்கண்ணே சென்றது; (எ - று.)

சேறனிகழ்தல் நினைத்தநெஞ்சிற்கு மொத்தலின், 'அதுமறந்து' என்றாள். அச்செலவாற் பயனென்னென்பதுபட நின்றமையின், மன் - ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், அது முடிந்ததில்லை யென்பதாம்.

(கு - ரை.) தன்னொடுநினைந்து-நெஞ்சினோடு சூழ்ந்து. அதனைமறந்து - முன்னர் ஊடுதற்குச்சூழ்ந்ததை மறந்து என்றபடி. சேறல் - கூடுதற்குச் செல்லுதல். 'சென்றேன்மன்' என்ற இடத்துள்ள 'மன்'-என் சேறலிற் பய னில்லையென்ற பொருளைக் குறிப்பித்தலால், ஒழியிசையாமெனக. அவ் வெல்லையில் - பிணங்கும்போது. அறைபோகலின் - வஞ்சனைவழியாற் பிரிக் கப்பட்டு அவர் வசமாதலால். அது - பிணங்குதல். "புலப்பேன் யானென் பேன் மனக்கிலையே

யவக்காணிற், கலப்பேனென்னுமிக் கையறு நெஞ்சே",
"ஊடுவே னென்பேன் மன் அந்நிலையேயவர்காணிற்,
கூடுவேனென்னுமிக் கொள்கையினெஞ்சே" என்ற
கலித்தொகையடிகள், இங்குக் காணத்தக்கன.

* பி - ம்: அத்தன்மையானொடு

கஉகூ - ஆம்

அதிகாரம்.—புணர்ச்சிவிதும்பல் கஉகூ

கஉ௪ரு.

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

இதுவுமது.

(இ - ள்.) (முன்னெல்லாங் கண்டிருந்தும்), எழுதும் கால் - எழுதுங் காலத்து, கோல் - அஞ்சனக்கோலினியல்பு, காணா - காணமாட்டாத, கண்ணே போல் - கண்ணேபோல, கொண்கன் பழி - கொண்கனது தவறு, (காணாத விடத்தெல்லாங் கண்டிருந்து), கண்டவிடத்து காணேன் - (அவனைக்) கண்ட விடத்துக் காணமாட்டேன்; (எ - று.)

கோல் - ஆகுபெயர். இயல்பு - கருமை. என்னியல்பு இதுவாகலின், மேலும் அது முடியாதென்பதாம்.

(கு - ரை.) எழுதுதல் - (கண்ணுக்கு) மையிடுதல். அஞ்சனக்கோல் - கண்ணிற்கு மைதீட்டுங்கோல். காணாத இடத்தெல்லாம்-கணவனைக் காணாத போதெல்லாம். கோல் என்பது கோலினியல்பைக்காட்டுதலால், ஆகுபெயர்: இது, முதலாகுபெயரிலடங்கும். மேலும் - கண்டபின்பும். அது-கணவனோடு பிணங்குதல்.

(ஞ) கஉஅரு. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற் காணேன் றவறல் லவை.

இதுவுமது.

(இ - ள்.) காணுங்கால் - (கொண்கனை யான்)காணும்பொழுது, தவறு ஆய (அவன்)தவறாயவற்றை, காணேன் - காண்கின்றிலேன்: காணாக்கால் - காணாதபொழுது, தவறு அல்லவை-அவையேயல்லது பிறவற்றை, காணேன்-காண்கின்றிலேன்; (எ - று.)

செயப்படுபொருள், அதிகாரத்தான் வந்தது. முன்பு நான் நின்னொடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணாமையிற் புலக்கிலேனென்பதாம்.

(கு - ரை.) அவையேயல்லது-தவற்றையல்லது. காணுங்கால், காணாக்கால் என்றவற்றிற்குச் செயப்படுபொருள், கொண்கனையென்பது; இது, கீழ்க் குறளில் 'கொண்கன் பழிகாணேன்' என்று கொண்கனது பழிகாணுமை அதிகாரப்பட்டு நிற்றலால், அவ்வதிகாரம்பற்றி வந்ததென்க. இதுபொழுது-கணவனைக்கண்ட இப்போது.

கணவனோடு புலவாமைக்குக் காரணம், சொல்லிய
தவறுகளைக் கணவனைக்கண்டபோது காணாமையென்க.
(௬)

கஉ௮எ. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

இதுவுமது.

(இ - ள்.) உய்த்தல் அறிந்து - (தம்மை)
ஈர்த்துக்கொண்டுபோத லறி
ந்துவைத்து, புனல் - ஒழுகுகின்ற புனலுள், பாய்பவர் போல் - பாய்வார்
செயல்போல, பொய்த்தல் அறிந்து - (புலவி)முடிவுபோகாமை யறிந்து
வைத்து, புலந்து என் - (கொண்கனோடு) புலந்துபெறுவதென்? (எ - று.)

*—17



பாய்பவரென்பது-ஆகுபெயர். பொய்த்தல் -
புரைபடுதல். புலந்தாலும்
பயனில்லையென்பதாம். பொய்த்தலறிந்தேனென்பது
பாடமாயின், உய்த்த
லறிய ஓடுநீருட் பாய்வார்போல,முடிவறியப்
பண்டொருகாற் புலந்து முடியா
மையறிந்தேன்: இனி அது செயற்பாற்றன்றென

வுரைக்க.

(கு-ரை.) ஈர்த்துக்கொண்டுபோதல்-இழுத்துக்கொண்டுபோதல். ஒழுகு கின்ற-பெருக்கெடுத்திருக்கின்ற. புனலுள்-வெள்ளநீரில். பாய்பவரென்பது அவரதுசெயலைக் காட்டுதலால், பொருளாகுபெயர். புரைபடுதல் - பழுது படுதல். முடிவறிய - புலவியின் முடிவையறியுமாறு.
அது-புலவி முடிவறிய
முயலுதல்.
(எ)

கஉ௯௩. இளித்தக்க வின்னா செயினுங்
கள்ளற்றே கள்வநின் மார்பு.
களித்தார்க்குக்

தலைமகள் புணர்ச்சிவிதுப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

(இ-ள்.) கள்வ - வஞ்சகா! களித்தார்க்கு - (தன்னை யுண்டு) களித் தார்க்கு, இளி தக்க இன்னாசெயின் உம்-*இளிவரத்தக்க இன்னாதவற்றைச் செய்யினும், (அவரால் மேன்மேல் விரும்பப்படுவதாய), கள் அற்று - கள்ளைப் போலும், நின்மார்பு - (எங்கட்கு) நின்மார்பு; (எ - று.)

அவ்வின்னாதன -
நாணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மையென் றிவை முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச்
செய்யுமாயினும், எங்களால் மேன்மேல் விரும்பப்படா நின்றதென்பதாம்.

கள்வவென்றதும் அதுநோக்கி.

(கு - ரை.) இளிவரத்தக்க இன்னாதவற்றைச் செய்யினும் மேன்மேல் விரும்பப்படுதலில், மார்பிற்குக் கள் உவமை. இளிவரத்தக்க - எளிமை

புண்டாகத்தக்க. 'இளித்தக்க இன்ஞு' என்ற மூலபாடத்தில் வந்ததை விவரிக்கின்ஞர் 'அவ்வின்ஞதன' என்று தொடங்கி. விரும்பப்படாநின்றது என்பதற்கு எழுவாய், மார்பு என்பது. இளித்தக்க இன்ஞுசெயினும் மேன்மேல் விரும்பப்படுதல் நோக்கி, 'கள்வா' என்று விளித்தது. (அ)

கஉ௯௬. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

உணர்ப்புவயின்வாராவூடற்கட் டலைமகன்

சொல்லியது.

(இ - ள்.) காமம் - காமவின்பம், மலரின்உம்
மெல்லிது-மலரினும்மெல்

லிதாயிருக்கும்: (அங்ஙனம் மெல்லிதாதலையறிந்து),
அதன்செவ்வி - அதன்

செவ்வியை, தலைப்படுவார் - பெறுவார், சிலர் -
(உலகத்துச்)சிலர்; (எ - று.)

தொட்டதுணையானே மணச்செவ்வியழிவதாய மலர்
எல்லாவற்றினும்

மெல்லி தென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண்
வந்தது.* குறிப்பும்,

வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும்
ஒருகாலத்தின் கண்ணே யொத்து

நுகர்தற்குரியார் இருவர் அதற்கேற்ற இடனுங் காலமும்
உபகரணங்களும்

---

* பி - ம்: இளிவாகத்தக்க

கூடி நுகரவேண்டுதலின் 'அதன்செவ்வி தலைப்படுவார் சிலர்' என்றும், அவற்றுள் யாதானுமொன்றனுற் சிறிது வேறுபடினும் வாடுதலின் 'மலரினுமெல்லிது' என்றுங் கூறினன். குறிப்பு ஒவ்வாமையின் யான் அது பெறுகின்றிலேனென்பதாம். தலைமகளூடல்தீர்வது பயன்.

(கு - ரை.) உணர்ப்புவயின் வாரா ஊடல் - தலைவனால் தெளிவிக்கப் படுந் தன்மைக்கணில்லாத ஊடல். "உணர்ப்பு வயின் வாரா வூடலுற்றோள் வயின், உணர்த்தல்வேண்டிய கிழவோன்" என்று தொல்காப்பியத்துக் கற் பியலில் கூ - ஆஞ் சூத்திரத்தில் வருகின்றது. "உணர்ப்புவரை யிறப்பினுஞ் செயற்குறி பிழைப்பினும், புலத்தலுமூடலுங் கிழவோற்குரிய" என்ற தொல் காப்பியச் சூத்திரப்படி புலத்தல்தோன்றக் கிழவன் [தலைமகன்] கூறுகின் ருன்: அடுத்தசெய்யுளும் இத்தன்மையதே. "உணர்ப்புவயின் வாரா வூட ரோன்றிற், புலத்தரூனே கிழவற்கும் வரையார்" என்ற இறையனாகப் பொருட் சூத்திரத்தையும் ஈண்டு நோக்குக. அதன்செவ்வி-காமவின்பத்தின் நலனை. தொட்ட துணையானே - தொட்ட மாத்திரத்தால். உம்மை, 'மலரி னும்' என்ற இடத்து உள்ளது. குறிப்பு-மனக்கருத்து. உபகரணங்கள்-வேண்டிய கருவிகள்: அவை-மெல்லணை மலர் சாந்து தென்றற்காற்று நிலா என்ற இவை போன்றவை. அவற்றுள்-இடம் முதலியவற்றுள். குறிப்பு ஒவ்வாமை யின் - தலைமகன் எண்ணம் ஏற்றிராமையால். அது - காமவின்பம். (க)

கஉகூ0. கண்ணிற் றுனித்தே கலங்கினள் புல்லுத

லென்னினுந் தான்விதுப் புற்று.

இதுவுமது.

(இ - ள்.) (காதலி முன்னொருஞான்று புல்லல்விதுப்பினாற்சென்ற என்னொடு), கண்ணின் துனித்து - (தன்) கண் மாத்திரத்தானூடி, புல்லுதல் என்னின்உம் தான் விதுப்புற்று-புல்லுதலை என்னினுந் தான் விதும்பலால், (அது தன்னையும் அப்பொழுதே மறந்து), கலங்கினாள்-கூடிவிட்டாள்; (அதனால், யான் இத்தன்மையேனாகவும் விதுப்பின்றி யூடிநிற்கின்ற இவள் அவ ளல்லள்); (எ - று.)

கண்மாத்திரத்தானூடல்-சொன்னிகழ்ச்சியின்றி அது சிவந்ததுணையே யாதல். அவளாயின், இங்ஙனமூடற்கண் நீடாளென்பது பயன்.

(கு - ரை.) காதலி - மனைவி. புல்லல்விதுப்பினால் - தழுவுகையிலுள்ள விரைவினால். விதும்பலால் - விரைதலால். அது தன்னை யும்-கண்மாத்திரத்தா னூடியதையும். இத்தன்மையேனாகவும் - இப்படி வருத்தமுற்றிருப்பவனாக இருக்கவும். விதுப்பின்றி-புணர்ச்சிவிரைவு இல்லாமல். சொல்நிகழ்ச்சியின்றி- வெகுண்டுகூறுஞ் சொல் நிகழ்தலில்லாமல். அது-கண். புல்லுதலில் என்னினுந்தான் விதுப்புறுதலால், 'கண்ணிற்றுனித்தே கலங்கினாள்' என்று இங்குத் தலைவியின் முன்னையநிலையைத் தலைவன் கூறியது-அவளாயின் ஊடற்கண் நீடாள் என்று

தெரிவித்தல்மூலமாகத் தலைவியின்பிணக்குத் தீர்க்கவேண்டி.



## கஉ௰ - ஆம் அதிகாரம்.—நெஞ்சொடுபுலத்தல்.

அஃதாவது - காரணமுண்டாயவழியும் புலக்கக்கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்

(கு - ரை.) நெஞ்சொடு-(புணர்ச்சி விதும்புகின்ற)

நெஞ்சுடனே. புலத்

தல் - புலவிகொள்ளுதல். நெஞ்சின் புணர்ச்சிவிதும்பல் கீழ்க்கூறப்பட்டதனால், அங்ஙனமான நெஞ்சுடனே புலத்தல் அதன்பின் கூறப்பட்டதென அதிகாரமுறைமை காண்க.

கஉகக. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு

மெவனெஞ்சே

நீயெமக் காகா தது.

தலைமகன்கட் டவறுண்டாயவழியும் புலவிகருதாத நெஞ்சிற்குத்

## தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) நெஞ்சே—! அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டுவைம்-அவருடையநெஞ்சு (நம்மை நினையாது) அவர்க்குஆய்நிற்றல் கண்டுவைத்தும், நீ எமக்கு ஆகாதது எவன் - நீ எமக்காய்நில்லாது அவரை நினைத்தற்காரணம் யாது? (எ - று.)

அவர்க்காதல் - அவர்கருதியதற்கு உடம்படுதல். எமக்காகாததென்றது, புலவிக்குடம்படாமையை. ஒருகருமத்தைத் தாமாகஅறிந்துசெய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினுஞ் செய்வர்: நீ அதுவுஞ்செய்கின்றிலையென்பதாம்,

(கு - ரை.) அவர்கருதியதற்கு - அவர் நினைத்தசெயலுக்கு: பொருள்வயிற்பிரிவு என்றாற்போன்றவற்றிற்கு. தலைவர் நெஞ்சு அவர்க்கு ஆதலைக் கண்டுவைத்தும் பின்னும் எமக்கு நீ ஆகின்றிலையே யென்று தன் நெஞ்சொடு கூறுகின்றா ளென்க. (க)

கஉகூஉ. உறாஅ தவர்க்*கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.

(இ - ள்.)

இதுவுமது.

என்நெஞ்சு - என்னெஞ்சே! (மேலும்), உறாதவர் கண்ட கண்ணும் - (நம்மாட்டு)அன்புடையராகாதவரை உள்ளவாறறிந்தவிடத்தும், செறார் என-(நாஞ் சென்றால்)வெகுளாரென்பதுபற்றி, அவரை சேறி-(நீ) அவர்மாட்டுச் செல்லாநின்றாய்:( இப்பெற்றியது மேலும் ஓரறியாமையுண்டோ)? (எ-று.)

அவரையென்பது வேற்றுமைமயக்கம். பழங்கண்ணோட்டம்பற்றி வெகுளாரென்பது கந்தாகச் †சென்றாய்; நீ கருதியது முடியுமோவென்பதாம்.

(கு - ரை.) மேலும்-அவர்நெஞ்சு அவர்க்காதல்மேலும். அவரை என்ற இரண்டாம்வேற்றுமை - அவர்மாட்டு என்று ஏழாம்வேற்றுமைப்பொருளைத் தருதலால், வேற்றுமைமயக்கமாம். பழங்கண்ணோட்டம் - பழையதாட்சிணியம். கந்தாக - பற்றுக்கோடாக. கருதியது - நினைத்தது: அவரைக் கூடுத லென்பது; சென்றாற் கோபியாரென் றெண்ணியது என்றலும் உண்டு. (உ)*

* பி - ம்: கண்டக்கண் என்று பாடமிருக்கலாம். † சென்றால்,

கங0 - ஆம்

அதிகாரம்.—நெஞ்சோடுபுலத்தல் கஙஙு

கஉகூங.

கெட்டார்க்கு நட்டாரில லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

இதுவுமது.

(இ - ள்.) நெஞ்சே—!(என்மாட்டுநில்லாது), நீ—,பெட்டாங்கு-விரும் பியவாறே, அவர்பின் செலல் - அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம்,— கெட்டார்க்கு நட்டார் இல் என்பது ஓ - கெட்டார்க்கு நட்டார் (உலகத்து) இல்லையென்னும் நினைவோ? (நின்னியல்போ? கூறுவாயாக); (எ - று.)

என்னைவிட்டு அவர்மாட்டுச் சேறல் நீ

பண்டேபயின்றதென்பாள் 'பெட் டாங்கு' என்றும், தான் இதுபொழுது மானமில்ளாகலின் 'கெட்டார்க்கு' என்றுங் கூறிஞள். பின்னென்பது,ஈண்டு இடப்பொருட்டு. செலவென்பது- ஆகுபெயர். "ஒல்கிடத் துலப்பிலா

வுணர்விலார் தொடர்பு" ஆயிற்று, நின் ருெடர்பென்பதாம்.

(கு-ரை.) என்மாட்டு-என்னிடத்து. பெட்டாங்கு என்பதன் பொருள் - விரும்பியவாறே என்பது: பெட்ட ஆங்கு எனப்பிரிக்க. நட்டார்-நண்பர். பண்டேபயின்றது - முன்னரே பழகினது. இதுபொழுது - இப்போது. மானம்-மனத்துமேம்பாடு: நாமென்று தன்னைச் சிறப்பாகஎண்ணும் எண்ணம். அவர்பின் என்ற இடத்துள்ள 'பின்' என்பது - இங்கே பின்னிட மென்ற பொருளது: இது, காலப்பொருட்டாயும் வரும். செலல் என்னுங் காரியப்
பெயர்-செல்லுதற்குக் காரணமென்னும் பொருளைத் தந்ததனுல், காரியவாகு பெயர். "ஒல்கிடத் துலப்பிலா வுணர்விலார் தொடர்பு" என்று, கலித் தொகை, பாலைக் கலி, உ௬-ஆம் பாட்டில் வந்துள்ளது. இதன்பொருள்:— ஒல்கு இடத்து - தளர்வுநேர்ந்தபோது, உலப்பு இலா - உதவுதலில்லாத, உணர்வு இலார் - அறிவில்லாருடைய, தொடர்பு-உறவு என்பது. "முட்டின் ருெருவருடைய பொழுதின்கண், அட்டிற்றுத் தின்பவராயிரவாரபவே, கட்டவர்தார்மார்ப கலி யூழிக்காலத்துக், கெட்டார்க்கு நட்டாரோ வில்" என்பது, பழமொழிப் பாடல்: 'கெட்டார்க்கு நட்டாரில்' என்ற பழமொழி யைத் தலைவி எடுத்துக் காட்டுகின்ருளென்க. (௩)

கஉகூச.

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

இதுவுமது.

(இ - ள்.) நெஞ்சே—! (நீ அவரைக் கண்டபொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர்தவறு நோக்கி), துனி செய்து - (முன் புலவியையுண்டாக்கி),மற்று துவ்வாய்-(அதனையளவறிந்து பின்)நுகரக்கருதாய்:(ஆகலான்), இனி—, அன்ன - அப்பெற்றிப்பட்டவற்றை, நின்னொடு சூழ்வார் யார் - நின்னோடெண்ணுவார் யார்? (யான் அதுசெய்யேன்); (எ - று.)

அப்பெற்றிப்பட்டன - புலக்குந் திறங்கள்.

காணென்பது, உரையசை. மற்று - வினைமாற்றின்கண்வந்தது. முன்னெல்லாம் புலப்பதாகவெண்ணி யிருந்து பின் புணர்ச்சிவிதும்பலின், இவ்வாறு கூறினள்.

(கு-ரை.) கணவனைக் கண்டபோது புலவிகொண்டு அப்புலவியை அளவறிந்து செலுத்திப் பின் இன்பத்தை நுகரவேண்டுவது முறைமையாயிருக்க, தன்னெஞ்சு கணவனைக் கண்டபோதே முன்புலப்பதாகக்கருதியதை மறந்திட்டு இன்பம்நுகரக் கருதுவதனால் அதனோடு பிணங்கிக்கூறுகின்றாளென்க. மற்று என்பது - துனிசெய்தலென்னும் வினையையொழித்துத் துனி செய்யாமை யென்னும் வினையைத் தந்து நிற்றலால், வினைமாற்றும். முன்னெல்லாம் - கணவனைக் காண்பதற்குமுன்னே யெல்லாம். புணர்ச்சிவிதும்பல் - புணர்ச்சிக்கு விரைதல்.

(௯) கஉகூ௫. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு

மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது.

(இ-ள்.) பெறாமை அஞ்சும் - (காதலரைப் பெறாத ஞான்று) அப்பெறாமைக்கு அஞ்சாநின்றது; பெறின் பிரிவு அஞ்சும்-பெற்றக்கால் வரக்கடவ பிரிவினையுட்கொண்டு அதற்குஅஞ்சாநின்றது: (ஆகலான்), என் நெஞ்சு - என்னெஞ்சம், அறா இடும்பைத்து-(எஞ்ஞான்றும்)நீங்காதவிடும்பையையுடைத்

தாயிற்று; (எ - று.)

காதலரைப் பெற்றுவைத்துக் கலவியிழத்தல்

உறுதியன்றென்னுங்

கருத்தான் வாயில் நேர்கின்றாளாகலின் 'பெறுமையஞ்சும்' என்றும், கலவியாராமையின் இன்னும் இவர்பிரிவராயின் யாது செய்துமென்பது நிகழ்த

லின் 'பெறிற்பிரிவஞ்சும்' என்றும், இவ்விரண்டுமல்லது 'எஞ்ஞான்றும் அறாவிடும்பைத்து' என்றுங் கூறினாள்.

பிறிதின்மையின்

(கு - ரை.) "கொளைவல்பாணன் பாடினி கூத்தர், இளைஞர் கண்டோ ரிருவகைப்பாங்கர், பாகன் பாங்கி செவிலியறிவர், காமக்கிழத்தி காதற் புதல்வன், விருந்தாற்றுமை என்றிவை யூடல், மருந்தாய்த் தீர்க்கும் வாயில்களாகும்" என்ற நாற்கவிராஜநம்பியகப் பொருள்விளக்கச் சூத்திரத்தினால், ஊடலில் வாயிலாதற்குரியாரை யறிக. இடும்பை-துன்பம். வாயில் நேர்கின்றாள்-வாயிற்கு உடன்படுகின்றாள்.

ஆராமையின்-திருப்திபெறவாமையால். இரண்டு மல்லது - காதலரைப் பெறுமைக்கஞ்சுதல் காதலரைப்பெற்றக்கால் அவர் பிரிவிற்கஞ்சுதல் என்ற இரண்டுமல்லாமல்.

(௫)

கஉகூகூ. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத் தினிய விருந்ததென் னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) என் நெஞ்சு இருந்தது - என்னெஞ்சு ஈண்டிருந்தது,—
தனிய இருந்து - (காதலரைப்) பிரிந்திருந்து, நினைத்தக்கால் - (அவர்
கொடுமைகளை யான் தன்னொடு) நினைத்தக்கால், (அவ்வளவறிந்து), என்னை
தினிய - என்னைத் தின்பதுபோன்று துன்பஞ்செய்தற்கே; (எ - று.)

கந௦ - ஆம்

அதிகாரம்.—நெஞ்சோடுபுலத்தல் கஙரு

என்மாட்டிருந்தது, அன்று அவர்கொடுமைகளை யுட்கொண்டு எனக்காற்
ருமைசெய்தற்கே; இன்று அவைநோக்கி அவரொடு புலத்தற்கன்றென்பதாம்.

(கு-ரை.) ஈண்டு இருந்தது-இங்கே [என்னுடலில்] இருந்தது. அன்று-
பிரிந்த அப்போது. இன்று - கணவர்வந்துள்ள இப்போது. அவை - அக்
கொடுமைகளை.

(க)

கஉகூஎ. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்

மாணு மடநெஞ்சிற் பட்டு.

இதுவுமது.

(இ - ள்.) அவர் மறக்கல்லா-(தன்னை மறந்த) காதலரை(த் தான்)மறக்க மாட்டாத, என் மாணு மடநெஞ்சில் - என் மாட்சிமையில்லாத மடநெஞ் சுடனே, பட்டு-கூடி, நாண் உம் மறந்தேன் - (என்னுயிரினுஞ்சிறந்த) நாண் தன்னையும் மறந்துவிட்டேன்; (எ - று.)

மாணுமை - ஒருநிலையினில்லாமை. மடமை-கண்டவழி நினைந்து காணு வழி மறக்குந் தவற்றைக் காணுவழிநினைந்து கண்டவழி மறத்தல். நாண் - எஞ்ஞான்றுங் கூடியொழுகினும் அஞ்ஞான்று கண்டார்போன்று ஒடுங்குதல். கண்டபொழுதே புணர்ச்சிவிதும்பலின், அதனை யுமறந்தேனென்றாள்.

(கு-ரை.) நெஞ்சுக்கு ஒருநிலையில் நில்லாமை-காதலரைக்காணுதபோது அவருடைய கொடுமைகளைநினைந்து அவர்மீதுசினத்தலும் கண்டபோது அவற்றைமறந்து அவரைக் கூடநினைத்தலும். அதனை - நாணை. (எ)

கஉகூஅ.

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற

முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

இதுவுமது.

(இ - ள்.) உயிர் காதல் நெஞ்சு - உயிர்மேற் காதலையுடைய (என்)
நெஞ்சு, எள்ளின் - (நம்மை யெள்ளிச்சென்றாரென்று நாமும்) எள்ளுவே
மாயின், இளிவு ஆம் என்று எண்ணி - (பின் நமக்கு) இளிவாமென்று கருதி,
அவர் திறம் உள்ளும் - அவர்திறத்தினையே நினையாநின்றது; (எ - று.)
எள்ளுதல் - வாயின்மறுத்தல். இளிவு
- வழிபடாமையானும், பிரிவாற்
றாமையானும்,
நாணும் நிறையும் முதலிய இழத்தலானும் உளதாவது. திறம்-
வாயினேர்தலும் வருதலும் கூடலும் முதலாயின.
இளிவிற்கஞ்சுதலானும்
இறந்துபடமாட்டாமையானும் கூடக் கருதாநின்ற
தென்பதாம்.
(கு - ரை.) எள்ளி - இகழ்ந்து, உபேட்சித்து.
வழிபடாமை - அனு
சரித்து நடவாமை. திறம் - செயல். 'உயிர்க்காதல்
நெஞ்சு' என்றதனால், இறந்துபடமாட்டாமையானுங்
கூடுதற்குக் கருதாநின்றதென்கிறாள். ௧௨௯௮.

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.



உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன் சொல்லியது.

(இ - ள்.) துன்பத்திற்கு - (ஒருவர்க்குத்) துன்பம் வந்துழி அது நீக்கு தற்கு, தாம் உடைய நெஞ்சம் - தாம் உரித்தாகப் பெற்ற (தம்முடைய) நெஞ்சம், துணை அல்வழி-துணையாகாவழி, துணை ஆவார் யாரே - (வேறு) துணையாவார் ஒருவருமில்லை; (எ - று.)

•ஈண்டுத் துன்பமாவது-ஊடலுணர்ப்புவயின் வாராமை: அதற்கு நெஞ்சந் துணையாகாமையாவது-அவளை யன்பிலளென்றொழியாது கூடற்கண்ணே விதும்பல். ஒருதுணையுமின்மையின், இஃது உற்றுவிடுதலேயுள்ளதென்பதாம்.

(கு - ரை.) துன்பம் வந்துழி - துன்பம்நேரிட்டபோது. உரித்தாக - உரிமையுடையதாக, சுவாதீனமாக. துணையாகாவழி - துணையாகாவிட்டால். உணர்ப்புவயின்வாரா ஊடல் - தீர்க்கமுடியுமாறு நிகழா [தீர்க்கமுடியாத]

ஊடல். இஃது - இத்துன்பம். உற்றுவிடுதலே - அனுபவித்தலே. "உணர்ப்புவயின்வாரா வூடலுற்றோன் புலத்தலுளே கிழவற்கும் வரையார்" என்ற இறையனாரகப்பொருள், இங்குக் காணத்தக்கது. "உடனிகழ்கின்ற சகார்த்தாதி" என்ற பிரயோகவிவேகப்பாவின் உரையில் 'ஆதிசத்தத்தால், பூவிற் குச்சென்றான், துன்பத்திற்கு யாரேதுணையாவார், மறத்திற்கு மஃதேதுணை, பிணிக்குமருந்து என்பவற்றின்கண்
பறிக்க நீக்க என நடுவேபெய்து பொருளுரைத்துத்

துமர்த்தம் என்பதுக்கொள்க' என்றது, இங்கேயறிக. குற்றிய லிகரம் அலகுபெறாது வந்தது.

(கூ)

கங00. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

இதுவுமது.

(இ-ள்.) தாம் உடைய நெஞ்சம் தமர் அல் வழி-தாம் உரித்தாகவுடைய நெஞ்சம் (ஒருவர்க்குத்) தமரல்லாவழி,—ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம் - அயலார் தமரல்லராதல் சொல்லவேண்டுமோ? (எ - று.)

பிறளொருத்தியைக் காதலி யென்று கருதி என்னெஞ்சே என்னை வருத்தாநின்றபின், அப்பிறள் புலக்கின்ற தெளிதென்பதாம்.

(கு - ரை) தமர்-சுற்றம். பிறள் - ஊடலினால் தன்மை வேறுபட்டவள். காதலி-நம்மிடம் விருப்பமுள்ளவள். "தஞ்சக்கிளவி யெண்மைப்பொருட்டே" என்ற தொல்காப்பியத்து இடையியற் சூத்திரத்தால், தஞ்சம் என்பது எளிது என்ற பொருளதாதல் வெளியாம்: ஆதலால், தமரல்லராதல் தஞ்சம் என்பதற்கு-தமரல்லராவது எளிது என்று பொருளாமாதலால், அப்பொருளின் கருத்தாக, 'தமரல்லராதல் சொல்லவேண்டுமோ?' என்றார்.

(கo)

## கஙக - ஆம்

## அதிகாரம்.—புலவி.

அஃதாவது-இருவர்நெஞ்சும் புணர்ச்சிவிதும்பாது புலக்கக் கருதியவழி ஒருவரோடொருவர் புலத்தல். அதி

காரமுறைமையும், இதனானே விளங்கும்.

## ௧௩௧ - ஆம் அதிகாரம்.—புலவி ௧௩௦௭

(கு - ரை.) இருவர்-தலைவன் தலைவி என்ற இவ்விருவருடைய. விதும்பாது - விரையாமல். புலக்க-பிணக்குக்கொள்ள. கருதியவழி-நினைந்தபோது.

௧௩௦௧. புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது.

வாயிலாகச்சென்ற தோழி தலைமகள் வாயினேர்தற்பொருட்டு
அவளோடு நகையாடிச் சொல்லியது.

(இ - ள்.) அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம் - (அங்ஙனம் புலந்தாற்) காதலரெய்தும் அல்லல் நோயினை (யாம்)சிறிது காணக்கடவேம்; புல்லாது இரா - (நீ அவரை விரைந்துசென்று)புல்லாதே (இத்தொழிலை மேலிட்டுக்கொண்டு) இருந்து, புலத்தை - புலப்பாயாக; (எ - று.)

அல்லல்நோய் - துன்பத்தைச் செய்யும் காமநோய். சிறிதென்றாள், புலவியை நீளவிடலாகாதென்பதுபற்றி. புலத்தை யென்புழி ஐகாரம்,"கடம்பூண் டொருகானீவந்தை" என்புழிப்போல முன்னிலைவினை விகுதி. புலத்தி யென்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக் கண்டு அவள்வழியளாய்நின்று, 'நாமுற்ற வருத்தம் அவருஞ் சிறிதுற்றறிதல் வேண்டும்'என நகையாடி நேர்வித்தவாறு.

(கு-ரை.) வாயிலாக-கணவனோடு தலைவியைப் பொருந்தவிடுதற்கு உரிய தூதாக. இத்தொழிலை - புணர்ச்சிக்கு இடங்கொடாமையாகிய இச்செயலை. நீள - வெகுகாலம் இருக்க. "கடம் பூண்டு" என்று தொடங்கும் மேற்கோள், கலித்தொகை, குறிஞ்சிக்கலி, ௨௭ - இல் உள்ளது: இதன்பொருள்:—கடம் பூண்டு - கடனாகப்பூண்டு, ஒருகால்—, நீ வந்தை - நீவருவாய் என்பது: இந்த வந்தையென்பது-வருவாயென்று பொருள்பட, அதில் ஐ என்பது முன்னிலை

விகுதியாவதுபோல, புலத்தை யென்பது புலப்பாயென்று பொருள்பட, ஐ விகுதி-முன்னிலைக்கண் வந்ததென்க. வாயிலாகவந்த பாங்கி, வாயில் நேர்வித்தற்காக, தலைவியின் புலவிக்குறிப்புக்கண்டு அவள் வழியளாய் நிற்பவள் போலப் பாவித்து நாம் உற்றவருத்தம் அத்தலைவரும் அடையவேண்டுமென்று சொல்லி நின்று நகையாடினா ளென்க. நேர்வித்தல் - உடன்படுவித்தல். (க)

௧௩௦௨. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

புலவியொழிந்து வாயினேரும்வகை அவள் சொல்லியது.

(இ - ள்.) புலவி—, (கலவி இன்பஞ்செயற்கு வேண்டுமளவிற்றாதல்), உப்பு அமைந்(த)து அற்று-உப்பு(த் துய்ப்பனவற்றை இன்சுவைய வாக்கற்கு) வேண்டுமளவிற்றாதல்போலும்; சிறிது நீளவிடல் - (இனி அதனை யவ்வளவிற்) சிறிது மிகவிடுதல், அது மிக்கு அற்று - அவ்வுப்பு அளவின் மிக்காற் போலும்; (எ - று.)

நீளவிடல்-* அளவறிந்துணராது கலவிமேலெழுந்த குறிப்பு அழுங்குமளவுஞ் † செய்தல். சிறிது நீளவிடலாகாதென்றாள், நேர்விக்கின்றாளாகலின். உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்றானாற்போலப் புலவிமிக்கவழிக் கலவி இன்பமின்றா மென்றமையின், இது பண்புவமை.

பி - ம்: * அளவறிந்தொழியாது † செலுத்தல்.

*—18



(கு - ரை.) துய்ப்பனவற்றை-உண்ணும் உணவுகளை. அழுங்குமளவும் - கெடுமளவும். உப்பின்சுவையையும் சுவைகெடுதலையும் உவமையாகக் கூறியதனால், இது, பண்புவமை. (உ)

௧௩௦௩. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

பரத்தையரிடத்தினின்றும் வந்த
தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது.

(இ - ள்.) தம்மை புலந்தாரை-தம்மைப்பெறுது புலந்தமகளிரை, புல்லாவிடல் - புலவி நீக்கிக் கலவாது (ஆடவர்) சேறல்,—அலந்தாரை-(பண்டே) துன்பமுற்றழிந்தாரை, அல்லல் நோய் செய்து அற்று-(அதன்மேலும்) மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும்; (எ - று.)

பிறர்பாற்சேறலின் நும்மைப்பெறுது புலந்துடியிருக்கின்ற பரத்தையரைப்போய்ப் புலவிநீக்கிப் புல்லீராயின், அவராற்று ரென்பதாம்.

(கு - ரை.) தம்மை - தலைவரை. சேறல் - வேற்றிடத்துச்செல்லுதல். பிறர் என்றது-தலைமகளாகிய தன்னை. புல்லீராயின்-தழுவாது விட்டீராயின். அவர்-பரத்தையர். உம்மைப் பெருமையாற் பிணங்கிய பரத்தையரின் பிணக்கைத்தீர்த்துப் புணராது எம்பாற்சேறல் தகாதென்று தலைவி புலந்து சொல்லுகிறு ளென்க.

(ங)

## கங0௪. ஊடி யவரை யுணராமை வாடிய வள்ளி முதலரிந் தற்று.

இதுவுமது.

(இ - ள்.) ஊடியவரை உணராமை - (நும்மோடு) ஊடிய பரத்தையரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல்,—வாடிய வள்ளி - (பண்டே நீர்பெறுது) வாடிய கொடியை, முதல் அரிந்து அற்று - அடியிலேயறுத்தாற்போலும்.

நீர் பரத்தையரிடத்தி ராயவழி எம்புதல்வரைக் கண்டு ஆற்றியிருக்கற்பாலமாய யாம் நும்மோடூடுதற்குரியமல்லம்: அன்மையின், எம்மையுணர்த்தல்வேண்டா; உரியராயூடிய பரத்தையரையே உணர்த்தல்வேண்டுவது: அதனல், ஆண்டுச்சென்மி னென்பதாம்.

(கு - ரை.) நீர்பெறுது-தண்ணீர் பாய்ச்சப்பெறுமல். இடத்திர்-இடத்திலேயிருப்பவர். உணர்த்தல்-புலவிநீக்குதல். ஆண்டு-அங்குத்தானே. வள்ளி-வல்லீயென்ற வடசொல்லின் திரிபு. (௪)

## கங0ரு. நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை பூவன்ன கண்ணு ரகத்து.

தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) நலம் தகை நல்லவர்க்கு ஏர்-நற்குணங்களாற் றகுதியுடைய ராய தலைவர்க்கும் அழகாவது,—பூ அன்ன கண்ணார் அகத்து புல தகை-தம் பூவன்ன கண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவிமிகுதியன்றே; (எ - று.)

சிறப்பும்மை, விகாரத்தாற்றொக்கது.

தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான், 'நலத்தகை நல்லவர்க்கும்' என்றான். அழகு - இன்பப்பயனைத் தலைப் படுதல். தான் நுகர்ந்தவின்பத்திற்கேதுவாகியபுலவியை

வியந்துகூறியவாறு. கஙக - ஆம் அதிகாரம்.—புலவி

கஙக௯

(கு - ரை.) நல்லவர்க்கு என்பதன்பின் உயர்வுசிறப்புப்பொருளைத்

தரும் உம்மை, செய்யுள்விகாரத்தால் தொக்க தென்க. தவறு - தலைவியின்

திறத்துப் பிழை. தலைப்படுதல்-பெறுதல். இன்பஞ் சிறந்துதோன்றுதற்குக்

காரணம் புலவியே யாதலால், இன்பத்திற்கு ஏதுவாகிய புலவி யென்றது.

புலத் தகை - புலவிமிகுதி: புல - முதனிலைத் தொழிற்பெயர். (ரு)

கஙOசா. துனியும் புலவியு மில்லாயிற் காமங்

கனியுங் கருக்காயு மற்று.

இதுவுமது.

(இ - ள்.) துனிஉம் புலவிஉம் இல் ஆயின் - முதிர்ந்த கலாமாகிய துனி
யும் இளையகலாமாகிய புலவியும் இல்லையாயின், காமம்—,—கனிஉம் கருக்
காய் உம் அற்று - செவ்விமுதிர்ந்தபழமும் இளங்காயும்போலும்; (எ - று.)

மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவும் *இனிமை
செய்யாதாகலிற் றுனியில்லையாயிற் கனியற்றென்றும், கட்டிளமைத்தாய
காய் நுகருஞ்செவ்வித்தன்றாகலிற் புலவியில்லையாயிற் கருக்காயற்றென்றுங்
கூறினான். இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு.

(கு - ரை.) கனி - அளவுக்கு விஞ்சிக் கனிந்தபழம். இனிமைசெய்யும்
முதிர்ந்தகலாமாகிய துனியாக இல்லையானல், காமவின்பம் பக்குவத்திற்கு
மேற்பட்டுப் பழுத்திட்ட கனியைப்போன்று இன்பம் பயவாதாம்; அவ்வாறே
இன்பஞ்செய்கின்ற புலவி யில்லையாயின், அக்காமவின்பம் நுகருஞ்செவ்வித்

தல்லாத கருக்காய்போன்று இன்பஞ்செய்யாதா மென்றவாறு. இறும்
எல்லைத்து - பதனழியும் பருவத்திலுள்ளது. கட்டிளமைத்தாய - மிகவும்
இளமையுடையதாகிய: முதிராத என்றபடி. செவ்வி-பக்குவநிலை. கருக்காய்-

பிஞ்சாயிருக்கின்ற காய். இவ்விரண்டும் - (முதிராத) துனியும் (முதிர்ந்த) புலவியும்; 'முதிர்ந்த துனியாயவழித் துன்பம்பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம்பயவாமையானும், இரண்டற்குமிடையாகிய வளவறிந்து' என்று "ஊடுதல்" (கங0) என்ற குறளிற் கூறுவதுங் காண்க. (சு)

கஙOஎ. ஊடலி னுண்டாங்கொர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

இதுவுமது.

(இ - ள்.) புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று - (இனிப்) புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்று கருதலான், ஊடலின் ஓர் துன்பம் உண்டு - (இன்பத்திற்கு இன்றியமையாத) ஊடலின்கண்ணேயும் ஒருதுன்பம் நிகழும்; (எ - று)

என்றென்னுமெச்சத்திற்குக் கருதலானென்பது வருவிக்கப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கொல்லென்பதனை நீடுவதென்பதனுடனுங் கூட்டுக. ஆங்கென்பது, அசைநிலை. ஊடல், கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு.

---

* இனிமைசெய்தலின் என்றபாடம் அமைவுறுவதாகத் தோன்றவில்லை.

(கு - ரை.) என்று என்பது சொல்லெச்சமாதலால், என்று கருதலான் என்று உரைக்கப்பட்டது. ஊடலின் என்பதன் பின் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கதென்க. அன்றஎன்பதன்பின்உள்ள 'கொல்' என்பது,'நீடுவது கொல், அன்று கொல்'என இரண்டிடத்துங் கூட்டப்பட்டது காண்க. புணர்ச்சி நீட்டிக்கும் - புணர்ச்சிநிகழுங்காலம் நீட்டிக்குமோ என்றவாறு. புணர்ச்சி நீட்டிக்குமோ என்று ஓரையந்தோன்றுவதால்தான் ஊடலினும் ஓர் துன்பமுண்டென்றது. (எ)

கங0அ. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

உணர்ப்புவயின்வாரா வூடற்கண் தலைமகன் தலைமகளோடு
புலந்து சொல்லியது.

(இ - ள்.) (இவர் நம்பொருட்டாக), நொந்தார்என்று—, அஃது - அந்நோவினை, அறியும்—, காதலர்-அன்புடையாரை, இல்லாவழி-பெறாவழி;— நோதல் மற்று எவன் - (ஒருவர்) நோகின்றதனாற் பயனென்? (எ - று.)

அறிதல் - ஈண்டு ஊடலையினிதுணர்தல். மற்று, வினைமாற்றின்கண்வந்தது. 'இவள் நங்காதலியல்லள்: ஆன்மையின் இந்நோவறியாள்: அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயனில்லை' எனத் தன்னுற்றமை புணர்த்தியவாறு.

(கு - ரை.) உணர்ப்புவயின்வாரா ஊடல் - நீக்குவித்தாலும் நீங்காத ஊடல். நம்காதல்நோயை யறிவதற்குத்தக்கவாறு காதலைத் தலைவி கொள்ளாவிட்டால், அத்தலைவியை நோவதனாற் பயனென்? அவள் நம்மாட்டுக் காதலுடையவளல்லளே. என்று புலந்துகூறியவாறு. மற்றுஎன்பது-நோதல்என்ற வினையைத்தவிர்த்து நோவாமையென்ற வினையைத் தழுவுதலால், வினைமாற்றும். (அ)

கங0கூ. நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

இதுவுமது.

(இ - ள்.) நீர்உம் நிழலது ஏ இனிது-(உயிர்க்கு இன்றியமையாத)நீரும் நிழலின்கண்ணதே இனிதாவது: (ஏனை வெயிலின்கண்ணது ஆகாது); (அதுபோல),புலவி உம் - (கலவிக்கு இன்றியமையாத) புலவியும், வீழுநர்கண் ஏ

இனிது-அன்புடையார்கண்ணே இனிதாவது: (ஏனையன்பிலார்கண் ஆகாது).

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகந்தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர், ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையு முடையராவார்: இவள் நம்மாட்டு அவ்விரண்டுமின்மையின் இப்புலவிதானும் இன்னாதாகா நின்றதென்பதாம்.

(கு - ரை.) அவ்விரண்டும் -
ஆற்றாமைக்குநோதலும், கூடுதற்கண் வேட்கையும்.
இன்னாதாகாநின்றது - துன்பந்தரத்தக்கதாயிருந்தது.
(கூ)

கஙகO. ஊட லுணங்க விடுவாரோ
டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

கஙஉ - ஆம் அதிகாரம்.—புலவிநுணுக்கம்

கசக

இதுவுமது.

(இ-ள்.) ஊடல் உணங்க - (தாம்) ஊடற்கண்ணே

மெலியாநிற்கவும்,

விடுவாரோடு - விட்டிருக்கவல்லாரோடு, கூடுவேம் கூடக்கடவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது,

என்பது என் நெஞ்சம் - (பிறிதில்லை); (எ - று.)
அவா - (தன்) அவாவே: அன்புமருளுமில்லாதாரை
உடையரென்றும் அவரோடியாங் கூடுவ
மென்றுங் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார்செய வாகலின்,
மென்பதவா' என்றான்; காரியம் காரணமாக வுபசரிக்கப்பட்டது.
டம், முடியாதென்பதாம்.
'கூடுவே
இக்கூட்
(கு - ரை.) தாம்-தலைவி. ஊடற்கண்ணே
மெலியாகிற்கவும் - ஊடலை மேற்கொண்டதனால் மெலிவைக்
கொண்டவளாக இருக்கவும். விட்டிருக்க வல்லார் -
கணவனைச்சேராது பிரிந்திருக்கவல்ல மகளிர்: மகளிர்
என்றது -
இங்கே, தலைவியை. கூடுதலில் அவாவுற்றார்செயலாகிய கூடுவேமென்பதனை அதற்குக்காரணமாகிய அவாவாகவே கொண்டு, 'கூடுவேமென்பது அவா' என்று கூறியமையால், இது, காரியங் காரணமாக உபசரிக்கப்பட்டதாம்.
அவா - பேராசை.
(௪௦)

## ௧௩௨ - ஆம் அதிகாரம்.—புலவி நுணுக்கம்.

அது, புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது-தலைமகனுந் தலைமகளும் ஓரமளிக்கட் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்காரணமில்லையாகவும் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுளதாக வுட்கொண்டு அதனை யவன்மேலேற்றி அவன் புலத்தல் காரணத்தினுணுக்கம் காரியத்தின்மேனின்றது. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) ஓர் அமளிக்கண் - ஒருபடுக்கையில். புலத்தல் - பிணக்கங்கொள்ளுதல். கைம்மிகுதலால் - எல்லைகடந்திருத்தலால். நுண்ணியகாரணம்-சூட்சுமமாகக்கவனித்தால் புலத்தற்குரியதான காரணம். உட்கொண்டு-நினைத்து. அதனை - அக்காரணத்தை: அவன்மேலேற்றி - அந்தக்காதலன் செய்தானாகக் கற்பித்து. புலவி - காரியம்: புலத்தற்குக்காரணம் காதல்ன்மேலேற்றிய நுண்ணிய தவறு: அக்காரணத்தின் நுணுக்கத்தைக் காரியமாகிய புலவியின்மே லேற்றி, 'புலவிநுணுக்கம்' என்றது: இது, காரணத்தின்பண்பைக் காரியத்தின்மேலேற்றிக் கூறிய உபசாரவழக்காம்.

௧௩௧௧. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

உலாப்போய்வந்ததலைமகன் பள்ளியிடத்தானாகத் தலைமகள் சொல்லியது.

(இ - ள்.) பரத்த-பரத்தமை யுடையாய்! (நின்னை), பெண் இயலார் எல்லார் உம் - பெண்ணியல்பினை யுடையார் யாவரும், கண்ணில் - (தங்) கண்ணால், பொது உண்பர்-பொதுவாகவுண்பர்: (அதனால்), நின் மார்பு - (அவர் மிச்சிலாய) நின்மார்பினை, நண்ணேன் - பொருந்தேன்; (எ - று.)

கற்பு நாண் முதலிய நற்குணங்களின்மையிற் பரத்தையர்க்குள்ளது பெண்ணியற்கைமாத்திரமேயென்னுங் கருத்தால் 'பெண்ணியலார்' என்றாள்.



பொதுவாகவுண்டல் - தஞ்சேரிச்செலவின்
முறையானன்றிஒருகாலத்தொரு

ங்கு நோக்குதல்: அதுவும் ஓர் குற்றம். தான்
நோக்கியின்புற்றவாறே அவரும்
நோக்கியின்புறவ ரென ஆசங்கித்து அவர்பாற்
நுணுக்கமாயிற்று.
பொருமையெய்துதலின்,
(கு - ரை.) உலாப்போய்வந்த தலைமகன் படுக்கையில்
வந்திருக்கையில்
தலைமகள் புலந்துசொல்லியது, இது. மகளிர்க்கு
இருத்தற்குரிய உத்தம
குணங்களாகிய கற்பு நாண் முதலியன இன்றி,
பரத்தையரிடத்து பெண்
தன்மைமாத்திரம் இருக்கின்றதென்ற கருத்து,
அவர்களைப் பெண்ணியலா
ரென்றதனாற் பெறப்படும். பொதுவாகக் கண்ணுலுண்டல் -
பரத்தையர்சேரி
யில் தலைவன் உலாப்போம்போது யாவரும்
ஒருங்கேபார்த்தல். அங்ஙனம்
அவர்கள்கண்டது
தலைவற்குக்குற்றமாகஏறிட்டுச்சொல்லுகின்றாள். தலைவனை
நோக்கித் தலைவி எவ்வாறு இன்புற்றாளோ, அவ்வாறே
அந்தப்பரத்தையரும்
தலைவன்மார்பைப் பார்த்து இன்புறவரென்று ஆசங்கித்து
[—சந்தேகித்து]
அவர்களிடம்பொருமையடைந்து கூறியதாதலால், இது ‘

புலவி நுணுக்கமாம்.

கங்கஉ.

ஊடி யிருந்தேமாத் தும்மினர் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

தலைமகன் நீக்கத்துச் சென்ற தோழிக்குத்
தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது
கூறியது.

(இ-ள்.) ஊடி இருந்தேம் ஆ - (யாம் தம்மோடு)
ஊடியுரையாடா திருந்
தேமாக, தும்மினர்- காதலர்) தும்மினர்: யாம் தம்மை நீடு
வாழ்க என்பாக்கு
அறிந்து - (அது நீங்கித்) தம்மை
நீடுவாழ்கென்றுரையாடுவேமாகக் கருதி.

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான்,
உரையாடல் வேண்டிற் றென்பதாம். இயல்பாணிகழ்ந்த
லின், நுணுக்கமாயிற்று.

தும்மலைக் குறிப்பானிகழ்ந்ததாகக் கோட

(கு - ரை.) தலைவி
தம்மோடு - தலைவரோடு.

தன்னைச் செருக்குத்தோன்ற யாம் என்கின்றாள்.
படுக்கையில் யான் தலைவரோடு ஊடிப்பேசாதிருக்
கையில் பேசவேணுமென்று கருதித் தும்மினர்: இது தலைவர்செய்த குற்ற
மென்கிறாள்: இங்ஙன் தலைவி கூறுதலால், புலவிநுணுக்கமாம். ஒருவ

ரெதிரில் அன்பிற்குரியார் தும்மும்போது மற்றவர் 'தீர்க்காயுசு' என்று கூறுதல், இக்காலத்திலும் மரபாகவுள்ளது: அதன்பொருள் நீடுவாழவேணுமென்பது. இந்தமரபு; இங்கே அறியத்தக்கது.

(உ)

கதுகரு.

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

தலைமகளது புலவிக்குறிப்பினைக் கண்டு 'நீயிர்கூடியொழுகா நிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாது?' என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

(இ-ள்.) (யான்), கோடு பூ சூடினு உம்-கோடுதலைச்செய்யும் மாலையைச் சூடினேனாயினும்,—ஒருத்தியை காட்டிய சூடினீர் என்று-(நும்மாற்)காதலிக் கப்பட்டாளொருத்திக்கு இப்பூவணிகாட்டல்வேண்டி சூடினீரென்று, காயும்.
வெகுளாநிற்கும்; (இத்தன்மையாட்கு ஒரு காரணம் வேண்டுமோ?) (எ - று.)

கதுஉ - ஆம்

கோடென்பது, முதனிலைத் தொழிற்பெயர். பூ - ஆகுபெயர். வளையமாகச் சூடினுமென்பதாம்; "கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்" என்றார் பிறரும். இனி அம்மருதநிலத்துப்பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப்பூவைச் சூடினேனாயினும் ஈண்டையாள் பிறளொருத்திக்கு அவ்வேற்றுப் பூவணி காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளு மெனினு மமையும்.

(கு - ரை.)

கூடியொழுகாநிற்கவும்-சேர்ந்திருக்கையிலும். இது-புலவி) கோட்டுப்பூ - கோடுதலைச்செய்யும் மாலை: வளையமாலை யென்றபடி. வளைய மாலையை யான் சூடினேனாயினும் பூவணியை நும்மாற் காதலிக்கப்பட்டாட்குக் காட்டவே யான்சூடினேனென்று ஊடுகின்றாளென்கிறான். கோடு என்ற பகுதியே தொழிற்பெயர்ப்பொருளையுடையதாய், கோடுதல் [வளைதல்] என்ற பொருளைத் தந்தது. பூ என்பது - பூவினாலியன்ற மாலைக்குக் காரணவாகுபெயர். கோடு - வளையமென்றபொருளில் வருதற்கு மேற்கோள் "கோட்டங்கண்ணியும் கொடுந்திரையாடையும்" என்பது: இந்தமேற்கோள் புறநானூற்றில் உ௭௫ - இல் உள்ளது. இதன்பொருள், கோட்டங்கண்ணியும் - வளையமாகிய மாலையும், கொடுந்திரையாடையும் - வளைந்த திரையாடையும் என்பது. இனி இந்தக்குறளில் வேறோருரை:—கோட்டுப்பூ சூடின் உம்-(மருதநிலத்துப்பூவன்றி வேற்று நிலத்து) மரத்தின்கிளையில் தோன்றிய பூவைச்சூடினாலும் என்பது. பூ-கோட்டுப்பூ நீர்ப்பூ நிலப்பூ கொடிப்பூ என்று

நால்வகைப்பட்டிருக்கும்: மருதநிலம் நீர்ப்பூ மிக்கது என்பது, இங்கே கருது

தற்கு உரியது. மருதநிலத்துப் பூவன்றி என்றது, அதிகாரம் புலவிநுணுக்க மாதலாலென்க: மருதத்திற்கு ஊடல் உரிப்பொருளாதலறிக. ஈண்டையாள் - இங்கேயிருப்பவள். (௩)

கஙகச. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

இதுவுமது.

(இ - ள்.) யாரின் உம் காதலம் என்றேனா -(காமநுகர்தற்குரிய இருவ ராயினுர் யாவரினும் யாம் மிக்க காதலையுடையேமென்பது கருதி) யாரினும் காதலமென்றே

னாக,—(நின்றோழி அதுகருதாது),(என்னாற்காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கட்காதலுடையே

னென்றேனாகக்கருதி), யாரின் உம் யாரின் உம் என்று ஊடினாள் - (அம்மகளிர்) யாரினும் யாரினும் (எங்கண் காதலுடையராயினீர்) என்று சொல்லிப் புலந்தாள்; (எ - று.)

தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யான் அன்புமிகுதியாற்சொல்லியதனைக் கருத்துவேறுபடக்கொண்டதல்லது 'பிறிது காரணமில்லை யென்பதாம்.

(கு - ரை.) நின்றோழி என்று தலைவன்சொன்னது -

யென்றது - தலைவியை. யாரினும் காதலம்
உலகத்துக் காமவின்பம் நுகர்தற்குரிய ஆண்
பெண்களாகி இரட்டையராய யாவரினும் இரட்டையராகிய
நாம் மிக்க அன்புடையோம் என்ற பொருளது. தலைவி
அதற்குக் கொண்டபொருள் - நான்
காமித்த பெண்பாலார் பலருள்ளும் உன்னிடத்து

மிக்க காதலுடையேனென் கஉசஉ



பது. ஆகவே, தலைவிகொண்டபொருளில், காதலம்
என்றஇடத்துப் பன்மை உயர்ச்சிபற்றிவந்ததாகும்.
யாரினும் காதலம் என்பதற்கு வேறு பொருள்
கொண்டதனாற்பிணங்கினளென்று, பாங்கிக்குத் தலைவன்
அறிவிக்கின்றான். யாரினும் என்ற அடுக்கு, புலந்தமை
காட்டும். (அ)

கஙகரு.

இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

இதுவுமது.

(இ-ள்.) (காதன்மிகுதியான்), இம்மை பிறப்பில்
பிரியலம் என்றேன் ஆ-இம்மையாகிய
பிறப்பின்கண்(யாம்)பிரியேமென்று சொன்னேனாக, (அத
னான் ஏனைமறுமையாகிய பிறப்பின்கட் பிரிவலென்னும்

குறிப்பினேனாகக் கருதி), கண் நிறை நீர்
கொண்டனள்-(அவள் தன்) கண்ணிறைந்த நீரினைக்
கொண்டாள்; (எ - று.)

வெளிப்படுசொல்லைக் குறிப்புச்சொல்லாகக்
கொள்கின்றதல்லது, என் பாற் றவறில்லை யென்பதாம்.

(கு - ரை.) வெளிப்படுசொல் - வேறு குறிப்புப்பொருளைக் கொள்ளாத சொல்: அது இங்கே, இம்மைப்பிறப்பிற் பிரியலன் என்றது: அச்சொற்றொடரை மறுமைப் பிறப்பிற் பிரிவேன் என்று குறிப்புப்பொருள்கொண்டுள்ளதாக என்மீது குற்றங்கற்பித்து, கண்ணிறைய நீரைக்கொண்டனள் உன்தோழி யென்று தலைவன் பாங்கியிடம் சொல்லுகிறான். பிரியலம்-தனித் தன்மைப்பன்மை.

(ரு)

கருகரு. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ
ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

இதுவுமது.

(இ - ள்.) உள்ளினேன் என்றேன் - (பிரிந்தகாலத்து நின்னை யிடையின்றி நினைந்தேனென்னுங்கருத்தால் யான்)உள்ளினேனென்றேன்; (என, அதனை ஒருகால் மறந்து பின் நினைந்தேனென்றதாகக்கருதி), மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள்-என்னை (இடையே)மறந்தீரென்று சொல்லி முன் புல்லுதற்கமைந்தவள் அஃதொழிந்து புலத்தற்கமைந்தாள்; (எ - று.)

மற்று,வினைமாற்றின் கண்வந்தது.
அருத்தாபத்திவகையான், மறத்தலையுட்கொண்டு
புலந்தாளென்பதாம்.

(கு-ரை.) உள்ளினேன் என்பது-சிந்தித்துக்கொண்டேயிருந்தேனென்றும், மறந்துபோக மீண்டும்

நினைந்தேனென்றும் இருபொருள்தாற்கு உரி .யது.
புல்லுதற்கு-தழுவுதற்கு. மற்றுஎன்பது உள்ளினேன் என்ற
வினையை மாற்றிமறத்தல்தொழிலைக் காட்டுவதால்.
வினைமாற்றும். உள்ளினேன்என்ப தற்கு நினைத்தேனென்று
பொருள்கொள்ளுமிடத்து மறந்ததையே நினைக்க
வேண்டுமாதலால், மறந்தமை அருத்தாபத்தியாற்
பெறப்படும். (கூ).

கஙகஎ. வழுத்தினாடும்மினேனாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

கஙஉ - ஆம்

அதிகாரம்.—புலவிநுணுக்கம் கசரு

இதுவுமது.

(இ - ள்.)
(கூடியிருக்கின்றவள்), தும்மினேன் ஆக-யான் தும்மினேனாக,
வழுத்தினாள் - (தன் னியற்கை பற்றி) வாழ்த்தினாள்: அழித்து
(அங்ஙனம் வாழ்த் தியதானே) மறித்து, யார் உள்ளி
தும்மினீர் என்று அழுதாள் - (நும்மை நினைத்து
வருந்துகின்ற மகளிருள்) யாவர் நினைத்தலாற்
றும்மினீரென்று
சொல்லிப் புலந்தழுதாள்; (எ - று.)
வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின்,

'அழித்து' என்றான். அன்புடையார் நினைத்தவழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மலுண்டாமென்பது மகளிர் வழக்கு. இவ்வழக்கை உள்வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம்.

(கு - ரை.) தும்மும்போது வாழ்த்துதல் மரபு என்பது, முன்னரே கூறப்பட்டது. மறித்து-மீண்டும். அன்புடையார் நினைந்தால் தும்மல் தோன்றும் என்கின்ற ஓர் கொள்கைபற்றி, தலைமகன் தும்மியபோது நும்மாற் காதலிக்கப்பட்டாருள் யாவள் உம்மை நினைந்தாளோ என்றுசொல்லிப் புலந்தாள் தலைவியென்றனன். இவ்வழக்கு-உண்மையான கொள்கையல்லாதது:வேறு காரணத்தாலும் தும்மல் தோன்றுமாதலால் இங்ஙனம்கூறியது. (எ)

கங்கஅ.

தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

இதுவுமது.

(இ-ள்.) தும்மு செறுப்ப-(எனக்குத் தும்மல் தோன்றியவழி யாருள்ளித் தும்மினீரென்று புலத்தலையஞ்சி) அதனை (யான் அடக்கினேன்; அங்ஙனம்) அடக்கவும்,— நுமர் உள்ளல்-நும்மை நினைத்தலை, எம்மை—, மறைத்திரோ என்று - மறைக்கலுற்றீரோவென்று சொல்லி, அழுதாள் - புலந்தழுதாள்; (எ - று.)

தும்முவென்பது, முதனிலைத் தொழிற்பெயர். செறுப்பவென்புழி இறந்தது தழீஇயவெச்சவும்மை, விகாரத்தாற்றொக்கது. எம்மையென்பது நும்மோடு யாதுமியைபில்லாத வெம்மை என்பதுபட நின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காகுவென்ப. தும்மினுங்குற்றம், ஒழியினுங் குற்றமாயக் காற் செயற்பாலது யாதென்பதாம்.

(கு - ரை.) தும்முச் செறுப்ப-தும்மலை வெளிப்படாமல் யான் அடக்க: அடக்கியதற்குக்காரணம், யார் நும்மை நினைத்தலால் தும்மினீரோ என்று தலைவிபுலப்பாளே யென்பதனாலாகும். அதையுணர்ந்து நும்மைச் சேர்ந்த மகளிர் நும்மைநினைத்தலை மறைக்கவே தும்மலையடக்கினீ ரென்று புலந்தாளென்க. 'செறுப்ப' என்ற இடத்து எஞ்சிநின்ற எச்சவும்மை, தும்மினது பொருட்டு அழுததேயன்றி எனக் கீழ்க்குறளிற்கூறியதைத் தழுவுதலால், இறந்ததுதழுவிய எச்சமாம். எம்மையென்பது சொல்லுவான்குறிப்பினால் நும்மோடியைபில்லாத எம்மைக்குறித்து என்று பொருள்தந்ததனால், இசையெச்சம்: "'ஆக்கும்பிரதிபத்துடனே'' என்று தொடங்கும் பிரயோகவிவேகச் செய்யுளில், ''இனி அலங்காரநூலார் இசையெச்சத்தைக் காகு என்பர்: அதற்கு உதாரணம் நுமருள்ளவெம்மைமறைத்திரோ என்பதாம். அது, சொல்லுங்கால், முகவிகாரமாதல் சொல்விகாரமாதல் தோன்ற நிற்கும்'' என்று கூறியுள்ளது.

*—19



திருக்குறள்.

கங்கக.

தன்னை யுணர்த்தினுங் காயும்
பிறர்க்குநீர் ராகுதி ரென்று.

பிறர்க்குநீ

(இ-ள்.) தன்னை

இதுவுமது.

உணர்த்தின் உம் சாயும்-(இவ்வாற்றானூடிய) தன்னை (யான் பணிந்து)உணர்த்துங்காலும் வெகுளாநிற்கும்: பிறர்க்குஉம் நீர் இ நீரர் ஆகுதிர் என்று-பிறமகளிர்க்கும் அவரூடியவழி இவ்வாறே பணிந்துணர்த்தும்

நீர்மையையுடையீராகுதிரென்று சொல்லி; (எ - று.)

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பதுபற்றி என்மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன்: பணிய, அதுதானும் புலத்தற்கேதுவாய்

முடிந்தது: இனி யிவண்மாட்டுச் செய்யத்தகுவதியாதென்பதாம்.

(கு - ரை.) பணிந்து உணர்த்துங்காலும் - வணங்கிப் பிணக்கு நீக்கப் பார்த்தாலும். தலைவன் பணிவனென்பதை - "மனைவியுயர்வுங் கிழவோன் பணிவு நினையுங்காலைப் புலவியுளுரிய" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தாலும் அறிக. "தப்பினேனென்றடி சேர்தலுமுண்டு" என்ற கலித்தொகையையும், "சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடியைத், தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்" என்ற நளவெண்பாவையும், "ஓங்கிய வேலான் பணியவும்" என்ற புறப்பொருள் வெண்பாமாலையடியையும் காண்க. (௯)

கூ௨௦. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

இதுவுமது.

(இ - ள்.) இருந்து - (என்சொற்களுஞ் செயல்களும்பற்றித் தான்

வெகுடலான் அவற்றை) ஒழிந்திருந்து, நினைத்து நோக்கின் உம் - (தன்னவ

யவங்களதொப்பின்மையை) நினைந்து அவற்றையே நோக்கினும், காயும் - (என்னை) வெகுளாநிற்கும்; அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று - என்னவயவமனைத்தும் நோக்கினீர் (அவற்றதொப்புமையான்) எம் மகளிரை நினைந்தென்று சொல்லி; (எ - று.)

யான் எல்லாவவயவங்களானும் ஒருத்தியோடொத்தல் கூடாமையின் ஒன்றுவொருவராகப் பலரையும் நினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யான் அறியச்சொல்லுமினென்னும் கருத்தால் 'அனைத்துநோக்கினீர் யாருள்ளி' என்றாள். வாளாவிருத்தலுங் குற்றமாயிற்றென்பதாம்.

(கு - ரை.) தன் அவயவங்கள் து - தலைவியின் உறுப்புக்களினுடைய. பிரிந்தோர் ஒப்புமைப்பொருளைப்பார்த்து ஆற்றியிருத்தலும் உண்டு ஆதலால், நம்மாற்காதலிக்கப்பட்ட மகளிரின் அவயவத்தை ஒக்குமென்றகாரணத்தாலேயே நோக்கினீர் என்று சொல்லி ஊடினாள். ஒன்றுவொருவராகப்பலரை நினைக்கவேண்டும் - கண்ணால் ஒருத்தியோடு ஒப்பேன்: மூக்கால் ஒருத்தியோடு ஒப்பேன், வாயால் ஒருத்தியோடு ஒப்பேன்: இங்ஙன் என்னுறுப்புக்களைத் தையும் நோக்கிநோக்கிப் பலரையும் நினைந்தீராகவேண்டும் என்றபடி. நீர் நினைந்த பலமகளிரையும் கூறுகஎன்று புலந்துகூறினாளென்க. வாளாஇருத்தலும் - சொற்களும் செயலும் இன்றி வெறுமனேயிருத்தலும், (௧0)

## ௧௩௩ - ஆம்

## அதிகாரம்.—ஊடலுவகை.

அஃதாவது - அப்பெற்றித்தாய ஊடலால் தமக்குக்கூடலின்பஞ் சிறந்துழி அச்சிறப்பிற்கேதுவாய

அவ்வூடலைத் தலைமகளுவத்தலும் தலைமகனுவத் தலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

(கு - ரை.) அப்பெற்றித்தாய - ஏறிட்டறியதவற்றைக் காரணமாகக் கொண்டு பிணக்குக் கொள்ளுந்தன்மையதாகிய.

•

கஙஉக. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்டதோழி

அங்ஙனம் நீ புலக்கின்றதென்னையென்றற்கு அவள் சொல்லியது.

(இ - ள்.) அவர்க்கு தவறு இல்லை ஆயின் உம்-அவர்மாட்டுத்தவறில்லையாயினும்,—அவர் அளிக்கும் ஆறு-(நமக்கு) அவர் தலையளி செய்கின்றவாறு, ஊடுதல் வல்லது - (அவரோடு) ஊடுதலை விளைக்கவற்றாகின்றது; (எ - று.)

அவர்க்கென்பது, வேற்றுமைமயக்கம். அளவிறந்தவின்பத்தராகலின்

யானெய்தற்பாலதாய இத்தலையளி ஒழிந்தாருமெய்துவரெனக்கருதி அது பொறாமையான் ஊடல்நிகழாநின்றதென்பதாம்.

(கு - ரை.) தலையளி - மிக்கஅன்பு. அவர்க்குஎன்பது - அவர்மாட்டு என்றஏழனுருபுப்பொருளைத் தந்ததனால், வேற்றுமைமயக்கமாம். ஒழிந்தாரும்- என்னைத்தவிர்ந்த மகளிரும். கருதி - ஐயப்பட்டு. (க)

கருஉ௨. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

'புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க அஃதிழந்து புலவியான் வருந்துவதென்னை?' என்றற்கு அவள் சொல்லியது.

(இ - ள்.) ஊடலின் தோன்றும் சிறு துனி - ஊடலேதுவாக (நங்கண்) தோன்றுகின்ற சிறியதுனிதன்னால், நல் அளி வாடின் உம்-(காதலர் செய்யும்) நல்லதலையளி வாடுமாயினும், பாடு பெறும் - பெருமையெய்தும்; (எ - று.)

தவறின்றி நிகழ்கின்றவூடல் கடிதினீங்கலின் அத்துன்பமூனில்லாதென்பாள் 'சிறுதுனி' என்றும், ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்வளி வாடாதென்பாள் 'வாடினும்'என்றும், பின்னே பேரின்பம்பயக்குமென்பாள் 'பாடுபெறும்' என்றுங் கூறினாள். அது வருத்தமெனப்படாதென்பதாம்.

(கு. - ரை.) கீழ்ச்செய்யுளில், அவரளிக்குமாறு ஊடுதல் வல்லது என்ற தொடரில், ஊடுதல் அவரைத் தலையளிசெய்யுமாறு வல்லதுஎன்றபொருளைத் தருவதாகக்கொண்டு, பாங்கி மீண்டும் வினவ, தலைவி கூறுகின்றாளென்க. புலவாக்காலும் - புலவிகொள்ளாவிட்டாலும். தவறின்றி - தலைவரிடத்தில் தவறில்லாதிருக்க. ஆராமை - காதலடங்காமை. வாடினும், உம்மை - ஐயப் பொருளது. அது - சிறுதுனி. (உ)

கருஉ௩. புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.



இதுவுமது.

(இ - ள்.) நிலத்தொடு நீர் இயைந்து அன்னாரகத்து - நிலத்தொடு நீர் கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர்மாட்டு, புலத்தலின் - புலத்தல் போல,—புத்தேள் நாடு உண்டு

ஓ-(நமக்கு)இன்பந்தருவதொரு புத்தேளுலக
முண்டோ? (இல்லை); (எ - று.)
நீர்தான் நின்றநிலத்தியல்பிற்றாமாறுபோலக்
காதலருந் தாங் கூடிய
மகளிரியல்பினராகலான் அதுபற்றி அவரோடு
புலவிநிகழுமென்பாள் 'நிலத்
தொடுநீரியைந்தன்னாரகத்து' என்றும், அவர் நமக்கும்
அன்னராகலின் அப்
புலவி பின்னே பேரின்பம் பயவாநின்றமைதன்பாள்
'புலத்தலிற் புத்தேளு
டுண்டோ' என்றுங் கூறினாள். உவமம், பயன்பற்றி
வந்தது.
(கு - ரை.) நீர் நிலத்தியல்பாயிருப்பதுபோலத்
தலைவரும் தாம் கூடும்
மகளிரியல்பினரென்பது, 'நிலத்தொடு நீரியைந்தன்னார்'
என்பதன் கருத்து.

நமக்கும்அன்னர் - நம்மோடு கூடும்பொழுதும் நம்மியல்பினர். நிலத்தொடு சேர்ந்த நீரும் நிலத்தின் தன்மையதாதல்போல மகளிரொடுகூடிய தலைவரும் அம்மகளிரினியல்பினரென்றகூறிய இந்தஉவமை,பயன் விளைத்தல்பற்றிவந்ததாதலால், பயனுவமம். புத்தேள்நாடு - தேவருலகு. (௩)

கஉ௬௪. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.

'அப்புலவி இனி யாதான் நீங்கும்?' என்றாட்குச் சொல்லியது.

(இ-ள்.) புல்லி-(காதலரைப்) புல்லிக்கொண்டு,
விடா-(பின்) விடாமைக்
கேதுவாகிய, புலவியுள் - அப்புலவிக்கண்ணே, தோன்றும்

- உளதாம்: என்
உள்ளம் உடைக்கும்
படை-(அதன்மேற்சென்ற என்னுள்ளத்தைக்) கெடுக்கும்
படைக்கலம்; (எ - று.)

புலவியுளென்னுமேழாவது, வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. என்னுள்ள முடைக்கும் படைக்கலமென்றது, வணக்கத்தையும் பணிமொழியையும். படைக்கலம் என்றாள், அவற்றான் அப்புலவியுள்ள மழிதலின். புலவி நீங்குந் திறங் கூறியவாறு.

(கு - ரை.) புலவி கலவியின்பத்தை மிகுவிக்குமாதலால், அந்தப்புலவியை, 'புல்லிவிடாப் புலவி' என்றது. புலவியுண்டாம்போது புலவியிற் சென்ற மனத்தை யுடைக்கும் படையும் உடன்தோன்றுமென்கிறாளென்க. புலவியென்பதன் ஈற்றில் ஏழனுருபு தொக்குள்ளது: இதன்பொருளை வினைநிகழ்ச்சியென்றார். படைதோன்றுதலாகிய வினைநிகழ்வது புலத்தல்தொழில் நிகழும்போது ஆதலால், இது வினைநிகழ்ச்சியெனப்பட்டது. இங்ஙன் வருவது வடமொழியில் சதிசத்தமி யெனப்படுமென்ப: "உடனிகழ்கின்ற" என்று தொடக்கும்பிரயோகவிவேகச் செய்யுளினுரையில், "சதிசத்தமியைத் தொல்காப்பியர் வினைசெய்யிடமென்பர்: பரிமேலழகர் வினைநிகழ்ச்சியென்பர்" என்று கூறியதும், தொல்காப்பியவுரையில் "வினைசெய்யிடத்தினின்" என்பதற்குத் தட்டுப்புடைக்கண் வந்தான் என்று உதாரணங்காட்டியிருப்பதுங்காண்க. புலவிநீங்குந்திறம் - புலவிநீங்கும்வகை. (௪)

கநூ௫. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

கங்ங -

ஆம் அதிகாரம்.—ஊடலுவகை கசகூ

தலைமகளையுடனிக்கிக் கூடிய தலைமகன்

கழியுவகையனுய்த்
தன்னுள்ளே சொல்லியது.

(இ - ள்.) தவறு இலர் ஆயின் உம்-(ஆடவர் தங்கண்)தவறிலராயினும்,

(உடையார்போல ஊடப்பட்டு), தாம் வீழ்வார் மெல்தோள் அகறலின் - தாம்

விரும்பும் மகளிருடைய மெல்லியதோள்களைக் கூடப்பெறாத வெல்லைக்கண்,

ஆங்குஒன்றுஉடைத்து-(அவர்க்கு)அப்பெற்றியதோரின்பம்பயத்தலுடைத்து.

உடையராயக்கால் இறந்தவின்பத்தோடு வருமின்பமும்எய்துவராகலின்

அது மிக நன்று: மற்றையிலராயக்காலும் வருமின்பத்தை யிகழ்ந்ததில்லை

யென்னுங் கருத்தால், தவறிலராயினு மாங்கொன்றுடைத்தென்றான். ஊட

லினுயவின்பம் அளவிறத்தலிற் கூறற்கரிதென்பான், அப்பெற்றிய தொன்

றென்றான். தவறின்றியூடியதூஉம் எனக்கின்பமாயிற்றென்பதாம்.

(கு-ரை.) கழியுவகை-மிக்கமகிழ்ச்சி. கூடப்பெறாத எல்லைக்கண் - கூடப்

பெறாத நிலையேற்பட்டவிடத்து. இன்பம்பயத்தலுடையது, அவ்வூடலின்பின்

கூடிய கூடலென்க.மேற்குறளில் புணர்தலினூடலினிதுஎன்பதை விரிக்கு

மிடத்து அகன்று கூடும்வழி ஆராததுமாய்ப்
பேரின்பத்ததுமாம் என்று விவ

ரங்கூறுவதும், அதற்கு உபமானம்
அமைந்திருக்கும்வகையும் நோக்குக.

உடையராயக்கால் - தவறுடையரானால். இறந்த இன்பம் - கழிந்த இன்பம்.

இலராயக்காலும்-தவறில்லாதபோதும். வருமின்பத்தை - தவறுடையார்க்கு வரும் இன்பத்தை. அப்பெற்றியதொன்று-அப்படிப்பட்டதொன்று. இன்னபடியுள்ளதென்று வாயாற்கூறமுடியாத தொன்று.

கஙஉசு. உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.

(ரு)

இதுவுமது.

(இ - ள்.) (உயிர்க்கு), உணலின் உம் - மேலுண்பதனினும், உண்டது அறல் - முன்னுண்டதறுதல், இனிது - இன்பந்தரும்; (அதுபோல), காமம்-காமத்திற்கு, புணர்தலின்-மேற்புணர்தலினும், ஊடல்-(முன்னைத்தவறுபற்றி) ஊடுதல், இனிது - இன்பந்தரும்; (எ - று.)

காமத்திற்கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற்றொக்கன. பசித்துண்ணும்வழி மிகவுண்ணலுமாய் இன்சுவைத்துமாம்: அதுபோல, அகன்று கூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம் பற்றிக்கூறியவாறு.

(கு - ரை.) அறுதல்-ஜீரணித்தல்.

காமம்—காமத்திற்கு: இங்கே, இன்
சாரியையும், நான்கனுருபும் தொக்கனவென்க.
ஆராததுமாய்-போதுமென்ற

திருப்திபிறவாததாய்.

கஙஉஎ. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
(கு)

கூடலிற் காணப் படும்.

இதுவுமது.

(இ - ள்.) (காமநுகர்தற்குரிய இருவருள்), ஊடலில் தோற்றவர் - ஊடலின்கட்டோற்றவர், வென்றார் - வென்றாராவர்; அது கூடலில் காணப் படும் - அஃது (அப்பொழுதறியப்படாதாயினும் பின்னைப்) புணர்ச்சியின்கண் (அவரால்)அறியப்படும்; (எ - று.)



தோற்றவர்-எதிர்தலாற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கட் பேரின்ட

மெய்தலின் வென்றாராயினர். மன்னும் உம்மும், அசைநிலை. யான் அத

பொழுது சாய்தலின், இதுபொழுது பேரின்பம்பெற்றேனென்பதாம்.

(கு - ரை.) அவரால்-ஊடலில்தோற்றவரால். எதிர்தலாற்றாது சாய்ந்தவர் - எதிர்த்துநிற்கமாட்டாமற் பணிந்தவர். அதுபொழுது - ஊடல்நிகழ்ந்த பொழுது. இதுபொழுது - கூடல் நிகழ்ந்தபொழுது. (எ

கஙஉஅ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

இதுவுமது.

(இ - ள்.) (இதுபொழுது இவள்), நுதல் வெயர்ப்ப-நுதல் வெயர்க்கும் வகை, கூடலில் தோன்றிய-கலவியின் கணுளதாய, உப்பு-இனிமையை, ஊடி பெறுகுவம் கொல் ஓ - (இன்னுமொருகால்) இவளூடி யாம்பெறவல்லேமோ?

கலவியுது விசேடம்பற்றி 'நுதல்வெயர்ப்ப' என்றான்.

இனிமை-கண்டு
கேட்டுண்டுயிர்த்துற்றறிதலானுப வின்பம்.
பெற்றதன் சிறப்புக் கூறியவாறு.

இனி அப்பேறு கூடாதெனப்

(கு - ரை.) இனிமை-இங்கே, ஐம்பொறிகளாலும் நுகரப்படும்இன்பம்: அதனைத்தெரிவிக்கவே, கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறிதலின் வாய இன்பம் என்றாராயிற்று. "கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும்"என்பது, கீழ் 1101-ஆம் குறளிலுள்ளது. நுதல் வெயர்த்தல், 'புருஷாயிதம்' எனப்படும் புணர்ச்சியிற் பிறக்குமென்பர். அப்பேறு - அவ்வினிமையைப்பெறுதல். (அ)

கூ௩௧௯. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

இதுவுமது.

(இ-ள்.) ஒளி இழை-ஒளியிழையினையுடையாள், ஊடுகமன்-(இன்னும் எம்மோடு)ஊடுவாளாக;(அங்ஙனம் அவளூடி நிற்றற்கும்), (அதனை யுணர்த்து தற்பொருட்டு), யாம் இரப்ப யாம் இரந்து நிற்றற்கும், (காலம்பெறும்வகை), இரா நீடுக மன் - இவ்விரவு விடியாது நீட்டித்தல் வேண்டுக; (எ - று.)

ஊடுக நீடுகவென்பன, வேண்டிக்கோடற்பொருள். மன்னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள், அசைநிலை. கூட்டலின் ஊடலேயமையுமென்பதாம்.

(கு - ரை.) வியங்கோள்கள், வேண்டிக்கோடற்பொருளன. "கழிவே யாக்கமொழியிசைக்கிளவியென்,றம்மூன்றென்ப மன்னைச் சொல்லே" என்பது, தொல்காப்பியம். மன்-ஆக்கப்பொருளதாதலால்தான், ஊடுக என்பது ஊடுவாளாக எனவும், நீடுகஎன்பது நீள்வதாகஎனவும் பொருள்பட்டன என்க. மன் என்பவற்றின் பின்னுள்ள ஓகாரங்கள் அசைநிலைப் பொருளன என்றார். (க)

கஙௌ௰. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.

இதுவுமது.

(இ-ள்.)காமத்திற்குஇன்பம் ஊடுதல்-காமநுகர்ச்சிக்கின்பமாவது(அதனை நுகர்தற்குரியராவார் ஆராமைபற்றித் தம்முளூடுதல்: அதற்கு இன்பம் - அவ்

## கஙங - ஆம் அதிகாரம். — ஊடலுவகை

கருக

வூடுதற்கின்பமாவது, கூடி முயங்க பெறின் - (அதனையளவறிந்து நீங்கித் தம்முட்)கூடி முயங்குதல் கூடுமாயின், (அம்முயக்கம்); (எ - று.)

கூடுதல்-ஒத்தவளவினராதல். முதிர்ந்ததனியாய வழித் துன்பம்பயத்தலானும், முதிராதபுலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்குமிடையாகிய அளவறிந்து நீங்குத லரிதென்பதுபற்றி 'கூடிமுயங்கப் பெறின்' என்றான். அவ்விரண்டின்பமும், யான் பெற்றேனென்பதாம்.

(கு - ரை.) அதனை - அக்காமவின்பத்தை. ஆராமை - அடங்காமை. அதனை-அப்பிணக்கை. அளவறிந்துநீங்கி-கொள்ளவேண்டிய அளவுகொண்டு மிகாதபடி அப்பிணக்கைநீக்கி. புலவி - முதிராதஊடல். முதிர்ந்த ஊடல் -

துனி: இவ்விரண்டற்கும் இடைப்பட்டநிலைமையில் ஊடல் நிகழவேண்டு மென்க. அவ்விரண்டின்பம் - காமவின்பம், ஊடலின்பம் என்பன. (௪௦)

ஈண்டுப் பிரிவினை வடநூன்மதம்பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப் புலவியென நால்வகைத்தாக்கிக் கூறினர். அவற்றுட் செலவு பிரிவாற்றாமை யுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கல் முதல் நிறையழிதலீறு யவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின்விதும்பன்முதற் புணர்ச்சிவிதும்பலீறு யவற்றுள்ளும், புலவி நெஞ்சொடுபுலத்தன்முதல் ஊடலுவகையீறுயவற்றுள்ளுங் கண்டுகொள்க. அஃதேல், வடநூலார் இவற்றுடனே சாபத்தினாய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத்தென்றாராலெனின்,—அஃது அறம் பொருளின்பமென்னும் பயன்களுள் ஒன்று பற்றிய பிரிவன்மையானும், முனிவராணையான் ஒருகாலத்தோர் குற்றத்துளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண்டொழிக்கப்பட்டதென்க.

(கு - ரை.) பிரிவு-விப்ரலம்பஶ்ருங்காரம்: அதனை, வட நூலார் நான்காகப்பகுத்துள்ளார்: அவற்றுள் செலவு என்பது-ப்ரவாஸம் எனவும், புலவி - ஈர்ஷ்யா எனவும், விதுப்பு-அ[பி]லாஷமெனவும், ஆற்றாமை-விரஹம் எனவும்படும்: ஒருசாரார் ஆற்றாமையைக் கருணமென்பர். பிரிவினைக்கூறும், கற்பியலுள், செலவு-பிரிவாற்றாமையென்ற ஓரதிகாரத்தாலும், ஆற்றாமை-படர் மெலிந்திரங்கல்முதல் நிறையழிதலீறாகிய

பத்து அதிகாரங்களாலும், விதுப்பு- அவர்வயின் விதும்பல்முதல் புணர்ச்சிவிதும்பலீறாகிய மூன்றதிகாரங்களாலும், புலவி - நெஞ்சொடுபுலத்தல்முதல் ஊடலுவகையீறாகவுள்ள நான்கு அதிகாரங்களாலும் கூறப்பட்டன என, பிரிவு, செலவுமுதலிய நான்கனுள் அடங்கும்வகையைக் காட்டினர் பரிமேலழகர்.

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.

# திருக்குறள் முற்றிற்று.

---

## திருக்குறள் காமத்துப்பாலின் செய்யுண் முதற்குறிப்பகராதி.

# காமத்துப்பாலின் அரும்பதவகராதி முதலியன.

அரும்பதவகராதி முதலியன கருள்

---

திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகிய

# திருவள்ளுவ மாலை.

க.—அசரீரி.

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல்.

(இ - ள்.) திரு தகு தெய்வம் தக்க தெய்வத்தன்மையையு முடைய,

- அருட்செல்வத்தையும் (அதற்குத்) திருவள்ளுவரோடு—, உருதகு நல் பலகை - (அவரிருத்தற்குத் தனது) உருவத்தினாலே தக்க நல்ல சங்கப்பல கையிடத்து, உருத்திரசன்மர்—, ஒக்க இருக்க என உரைத்து - சமானரா யிருக்கக்கடவரென்றுசொல்லி, வானில் - ஆகாசத்திலிருந்து, ஒருக்க - (அவ் விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம்) ஒற்றுமைசெய்யும்படி, ஓர் சொல் - ஒருவாக்கியம், ஓவென்றது - ஓவென்று இரைந்தெழுந்தது; (எ - று.)

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்" என்பவாகலின், திருவென்ற தற்கு அப்பொருளுரைக்கப்பட்டது. தெய்வத்தன்மை - தெய்வத்தி னவதார மாய் விளங்குகை. தெய்வத்தன்மை இல்லார்க்கு அருளுளதாயினும் அத னாலே பெரும்பயன் விளையாமையின், தகுதிசொல்லப்பட்டது. திருவள்ளுவ ரென்னும் பெயருள் திருவென்பது உயர்வையும் வள்ளுவரென்பது வண் மையையுடையரென்பதையும் விளக்கிநின்றனவாகலின், அது வேதத்தில் இலைமறைகாய்கள்போற் பலவிடங்களினும் மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களையெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத்தருள் செய்தவரென்னுங் காரணம்பற்றிவந்த பெயராயிற்று. வள்—முதனிலை, அர் இறுதிநிலை, உ - சாரியை. அம்முதனிலைக்குப் பொருள் - ஈகை. உருத்திர சன்மர் - உருத்திரனால் அடைந்த ஜந்மத்தை யுடையவரென விரியும்: அவர் முருகக்கடவுளது திருவவதாரமாய் வணிகர் மரபிற்றோன்றிய மூங்கைப் பிள்ளையார். அசரீரி - அருவமாயெங்கு நிறைந்துள்ள முதற்றெய்வம். அரங் கேற்றத் தொடங்கியகாலத்துத் தெய்வப்புலவரோடு ஒப்பவிருந்து கேட்டற் குத் தகுதியுடையோர் யாரென யாவரும் எண்ணமுற்று நின்றவழி, இவ் வசரீரி வாக்கியம் பிறந்தது. என்றதெனப் படர்க்கை வினையாகக் கூறலின்,

ஆண்டு நின்றகேட்ட புலவர்களுள் ஒருவர் அதனை செய்தன ரென்றறிக.

இங்ஙனம் பாடலாகச்

(க)



உ.—நாமகள்.

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(இ - ள்.) கூடாரை எள்ளிய வென்றி இலங்கு இலை வேல் மாற-பகை

வரை (ப்புறங்கொடுக்கச்செய்து) இகழ்ந்தவெற்றியை உண்டாக்கி விளங்கா

நின்ற இலைபோலுந் தகட்டுவடிவாயுள்ள வேற்படையையுடைய பாண்டிய

ராசனே! நாடா - (உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும்வழியை)

நாடி, முதல் - படைப்புக்காலத்திலே, நான்முகன் நாவில் - பிரமனது நாவி விருந்து, நான்மறை பாடா-இருக்குமுதலாகிய நான்கு வேதங்களையும் பாடி, இடை - (இதற்கும் அதற்கும்) நடுவானகாலத்திலே, பாரதம் பகர்ந்தேன் -

பாரதமாகிய வேதத்தைச்சொல்லினேன்: பின் - (அதற்குப்) பிற்பட்ட இக் காலத்திலே, என் வாக்கு—,வள்ளுவன் வாயது - (திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லி) வள்ளுவன்வாயின்கண்ணதாயிற்று; (எ - று.)

வேதமும் சந்தோரூபமாகையால் பாடா என்றாள். தன்கணவனுகலின் நான்முகனுவி லிருந்தென்றும், அவனவதாரமாகலின் வள்ளுவன் வாயதென் வாக்கு என்றும் கூறினாள். பாரதம் வியாசரைக்கொண்டு சொல்லப்பட்டது. இதனால், நான்மறை - பூர்வவேதமும், பாரதம் மத்தியவேதமும், திருக்குறள் - உத்தரவேதமும் என்றதாயிற்று. பூர்வவேதம் பின் வியாசராலே நான்காக வகுக்கப்பட்டமைபற்றி நான்மறையெனப்பட்டது. அன்றி நானெனப் பிரித்து எழுவாயாக்கினுமாம். வேதம் மூவகைத்தென்பதூஉம், இவற்றது தோற்றமுறையால் இது வாக்கியப்பிரமாணத்திற் சிறப்புடைத்தென்பதூஉம் சொல்லியபடி. (உ)

ங.—இறையனார்.

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

(இ-ள்.) மன் புலவன் வள்ளுவன் வாய்சொல் - புலவர்க்கரசனாகிய வள்ளுவன்வாயிற் பிறந்த திருக்குறளானது, என்றும் யாணர் புலராது-எக்காலத்துந் தன்னழகுகெடாமல், நாள் செல்லுகினும் நின்று அலர்ந்து-நெடுங்காலங் கழியினும் நிலைபெற்று மலர்ந்து,தேன் பிலிற்று நீர்மைத்து ஆய்-தேனைச்சொரிகின்ற குணமுடையதாய் (விளங்குமாதலால்), குன்றாத செந்தளிர் கற்பகத்

இன்-குறைவுபடாத செய்யதளிர்களையுடைய கற்பகத்தினது, தெய்வத் திரு

மலர்போன்ம்-தெய்வத்தன்மைபொருந்திய

உயர்வாகியமலர்போலும்; (எ-று.)

திருவள்ளுவ மாலை 3

திருக்குறளுக்கு, அழகு - சொன்முடிபு பொருண்முடிபின் குணங்களும், அலர்தல் - எங்கும் பரவுதலும், தேன்பிலிற்றல் - இருமையின்பங்களும் விளைத்தலுமாம். சொல்—ஆகுபெயர். இறையனார் கடவுளாகலின், இனி இதிற் சிறப்பதொன் றுளதாவதின் றென்னுந் துணிவு தோன்ற என்றும் என்றும், பின்னும் அதனை வலியுறுத்தற்கு நாட்செல்லுகினுநின்று என்றும் வாழ்த்துப்பொருள்பட இவ்வாறு கூறினர். இஃதழியாது நின்று பெருகிப் பயன்படுமாறு சொல்லியபடி.

(௩)

ச.—உக்கிரப்பெருவழுதியார்.

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்

றான்மறைந்து வள்ளுவனாய்த்

தந்துரைத்த— நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி.

•

(இ - ள்.) வள்ளுவனாய்—, தான்மறைந்து - தனது திருமேனியை மறைத்து, நான்மறையின் மெய்ப்பொருளை - நான்கு வேதங்களி னுண்மைப் பொருளை, தந்து - (இவ்வுலகத்திலே) கொணர்ந்து, முப்பொருள்ஆ - (அறம் பொருளின்பமென்னு) முப்பாற்பொருளதாக, நான்முகத்தோன்-பிரமனால், உரைத்த - திருவாய்மலர்ந்தருளப்பட்ட, நூல் - நூலினது, முறையை - புத்தகத்தை, சென்னி வந்திக்க - (எனது)தலையானது தொழக்கடவது: வாய் வாழ்த்துக - வாயானது வாழ்த்தக்கடவது: நல் நெஞ்சம் சிந்திக்க - நல்ல மனமானது நினைக்கக்கடவது: செவி கேட்க - காதுகளானவை கேட்கக் கடவன; (எ - று.)

முப்பொருள் —ஆகுபெயர். இவ்வேதப்பொருள் ஆதியிலே வேதஞ் சொல்லியோனாலேயே சொல்லப்பட்டமையால் உலகத்துச் சமயாசாரியர்களாலும், பிறராலும் ஒன்றற்கொன்று மாறாகக்கொள்ளப்பட்ட பொருள்கள் போல்வ தன்றென்பது தோன்ற மெய்ப்பொருளென்றார். கலையுணர் புலமையிற் றலைமையோனாகி விதிமுறைவழாது முதுநிலம்புரக்கும் பெருந்தகை யுக்கிரப்பெருவழுதி

யென்னுர் தன்னிகரில்லாமன்னவர்பெருமான் தான் மேற்கொண்டசிறப்பைப் பலரும் அறிந்துமேற்கொள்ள இவ்வாறு வழிபாடு கூறினன், "மன்னனெப்படி மன்னுயிரப்படி" ஆகலின். இப்புத்தகத்தை முன்னே பூசித்து மெய்ம் மொழி மனங்களால் வணக்கஞ்செய்து பின் கேட்க வேண்டுமென்று சொல்லியபடி.

(௪)

ரு.—கபிலர்.

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட

பனையளவு

காட்டும் படித்தால்—மனையளகு

வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனா

வெள்ளைக் குறட்பாவிரி.



(இ - ள்.) மனை அளகு வள்ளைக்கு உறங்கும் வளம் நாட - மனையில் வளர்க்கப்படுகின்ற பறவைப்பேடுகள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்கு

கின்ற வளம்பொருந்திய நாட்டையுடைய அரசனே!

வள்ளுவனார் வெள்ளைக் குறட்பா விரி - திருவள்ளுவரால் அருளிச்செய்யப்பட்ட குறள்வெண்பா (மிகப்பெரியபொருளைத்) தன்னுட்கொண்டு காட்டுதல்,—தினை அளவு

போதா சிறு புல் நீர் - தினையரிசியினளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின்கணுள்ள பனி நீரானது, நீண்ட பனை அளவு காட்டும் படித்து - உயர்ந்த பனையினளவான அதன் சாயையைத் தன்னுட்கொண்டுகாட்டுங் குணம்போலுள்ள குணத்தை யுடைத்து; (எ - று.)

பனை—ஆகுபெயர். ஆல் - அசை.

பறவை-கிளிமுதலியவை. உலக்கைப் பாட்டு - மகளிர் பரிமளப்பொடி இடிக்கின்றபோது பாடும்பாட்டு. விரி-விரித்தல். எப்படி மிகச்சிறிய பனித்துளியிலே மிகப்பெரிய பனைமரத்தின் சாயை அடங்கிவிளங்குகின்றதோ, அப்படியே மிகச்சிறிய இக்குறள்வெண்பாவில் மிகப்பெரிய பொருள் அடங்கிவிளங்குகின்றதென்பதாம். இது சுருங்கியிருந்தும் விரிவானபொருளை விளக்குமாறு சொல்லியபடி. இதுமுதலியன சங்கத்துப்புலவராலே பாடப்பட்டன. (௫)

சூ.—பரணர்.

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்

ஞால முழுது நயந்தளந்தான்—வா
லறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால்
வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

(இ - ள்.) மாலும் - திருமாலும், குறள்ஆய் - குறளாய்ப்பிறந்து, வளர்ந்து—, இரண்டு மாண் அடியால்-இரண்டுபெரிய அடிகளால், ஞாலம் முழுதும்- உலகமனைத்தையும், நயந்து அளந்தான் - விரும்பி அளந்தான்; வால்அறிவின் வள்ளுவரும் - மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும், தம் குறள்வெண்பா அடியால் - தம்மினின்றுந்தோன்றி (அந்நிலைநிற்கின்ற) வெண்பாக்குறளின் (இரண்டுசிறிய) அடிகளால், வையத்தார் உள்ளுவ எல்லாம் - அவ்வுலகமனைத்தினுமுள்ளோரால் நினைக்கப்பட்டவற்றை யெல்லாம், ஓர்ந்து அளந்தார் - ஆராய்ந்து அளந்தார்; (எ - று.)

உம்மையிரண்டும்-முறையே தேவரிற்பெரியோனாகியவென்னும், மனிதரிற்சிறியராய்க்காணப்பட்ட வென்றும் பொருள்படநின்றன. உவமானத்திலே வளர்தலும் பெருமையும் சொல்லுதலால் உவமேயத்திலே அவற்றுக்கு முரணாகிய நிலைநிற்றலும் சிறுமையும் வருவிக்கப்பட்டன. மாலுக்குத் தானே குறளாதலும் பின்பு அந்நிலைநில்லாது வளர்தலும் பேரடிகளால் அளவுபட்ட உலகத்தையளத்தலும், திருவள்ளுவருக்குத் தம்மினின்றுங் குறளை உண்டாக்குதலும், அது தன்னிலைநிற்றலும், அதன் சிற்றடிகளால் அளவுபடாத நினைப்பின் விடயங்களை அளத்தலும் சொல்லப்படுதலால் வேற்றுமையறிக. நினைக்

கப்பட்டனவெல்லாம் இதனகத்து அளவுசெய்யப்பட்டமை சொல்லியபடி.



எ.—நக்கீரர்.

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லாறு வறமுதலா வந்நான்கு—மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

(இ - ள்.) தானே முழுது உணர்ந்து - தாமே (வேதப்பொருள்) அனைத்தையும் அறிந்து, தண் தமிழின் - தண்ணிய தமிழின்கண், வெண்குறளால் - குறள்வெண்பாக்களால், ஆறு அறம் முதல் ஆம் அந்நான்கும் - விட்டுநீங்குதல்கூடாத அறம் முதலாகிய அந்நான்கு பொருள்களையும், ஏனோருக்கு - அவற்றையறியாதவர்களுக்கு, (அவர் எளிதினறிய), ஊழின் - முறையால், உரைத்தாற்கும் - சொல்லியருளிய திருவள்ளுவர்க்கும், ஒள் நீர் முகிலுக்கும்- ஒள்ளிய நீரைத்தந்த மேகத்துக்கும், உலகு - இவ்வுலகமானது, மற்று என் ஆற்றும் - எதிர்நன்றியாது செய்யும்? (செயக்கிடந்தது ஒன்றும் இல்லை.) வாழி- (அவரும் அதுவும்) வாழ்க; (எ - று.)

ஆறுமை - நீங்காமை. தானே முழுதுணர்ந்தெனவே ஆசாரியரா யிருந்து பிறர்அறிவிக்க அறிந்திலரென்றதாயிற்று. முழுதுமென்னு மும்மை தொக்கது. ஒண்மை - இனிமைமேல் நின்றது. முறை - நூலின் முப்பொருள்

கவின் கிடக்கையொழுங்கு. நாயனார் கொடைச்சிறப்புச் சொல்லியபடி. (எ)

அ.—மாமூலனார்.

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
றிறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

(இ-ள்.) அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அந்நான்கின் திறம் - அறமுதலாகச் சொல்லப்பட்ட அவ்வேதப்பொருள்களாகிய நான்கனது கூறுபாட்டையும், தெரிந்து-அறிந்து, செப்பிய-(உலகத்தார்க்குச்) சொல்லிய, தேவை-தேவனை, மறந்தேயும்-மறந்தாயினும், வள்ளுவன் என்பான் - (ஒருமனிதனாக உட்கொண்டு) வள்ளுவனென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின் அவன், பேதை-அறிவில்லாதவனாவன்: அவன் வாய் சொல்-அவனது வாயிற்பிறந்த அச்சொல்லை, அறிவுடையார்—,கொள்ளார் - கொள்ளமாட்டார்; (எ-று.)

அறமுதலியவற்றின் கூறுபாடு - அவற்றினது தொகைவகைவிரிகள்.

மறந்தேயும் என்றதனால், நினைப்புடன் சொல்லுவோன் பேதையிற் பேதையா மென்றதாயிற்று. முன்னும் பின்னுமுள்ள பாட்டுக்களில்

இப்பெயர் தெய்வத்

தன்மையைக் குறிப்பிக்கும்படி நன்கு மதித்து உயர்த்திச்சொல்லப்படுதலால், ஒருமனிதனை வுட்கொண்டென்பது வருவிக்கப்பட்டது: அன்றி, ஒலிக்குறிப்

பினாலே, சாதியிழிவுதோன்ற வள்ளுவனென்பா னெனினு மமையும். இக்

குறிப்பொலியை வடநூலார் காகுசுரமென்பர். தெய்வப்புலவரை அவமதிப்பி

னிழிவு சொல்லியபடி.

(அ) 6

திருவள்ளுவ மாலை

சூ.—கல்லாடர்.

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென

வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.

(இ - ள்.) ஆறு சமயத்தார் - அறுவகைமதத்தோருள், ஒன்றே பொருள் எனின் - (ஒருமதத்தார் தமதுநூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய)

பொருள்கள்
தோர் தமது

ஒன்றேயென்று நாட்டுவ ராயின், வேறு என்ப - (மற்றொருமதத் நூலிலே அதனை மறுத்து அவை) வேறாமென்று நாட்டுவர்: வேறுஎன்னின் - (அப்படி) வேறென்றுநாட்டின், அன்று என்ப-(பின்னொரு மதத்தோர் அதனை) அன்றென்றுமறுப்பர்: (ஆதலால் சமய நூல்களெல்லாம் இவ்வாறு மறுக்கப்படுகின்றன : வள்ளுவனார் முப்பான் மொழிந்த மொழி - திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்ட நூலை, நன்று என - நன் றென்று கொள்ளுதற்கு, எப்பாலவரும் - எவ்வகைப்பட்ட பகுதியோரும், இயைப - உடன்படுவார், (எ - று.)

மொழி - ஆகுபெயர். ஆறுமதமாவன - வியாசமதம், சைமினிமதம், பதஞ்சலிமதம், கபிலமதம், கணாதமதம், அக்ஷபாதமதம்; அன்றிச் சைவ வைணவமுதலியவற்றைக் கூறினுமாம். எச்சமயத்தாருமென்னாது எப்பால வரும் என்றதனால், வேதத்துக்கு உட்பட்ட சமயத்தாரேயன்றிப் புறப்பட்ட சைனம், பௌத்தம், முதலிய மதத்தாரும், பலவகைப்பட்ட சாதியாரும், தேசத்தாரும், காலத்தாரும், பிறரும் தழுவப்படுதலறிக. இதுவே பொது வேத மென்றபடி. (கூ)

கo.—சீத்தலைச் சாத்தனார்.

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

(இ - ள்.) வள்ளுவர்-திருவள்ளுவரது, பா முறை தேர் முப்பால்-பாக்க ளின் (முன்பின்) முறைதெரிதற்கிடனாகிய திருக்குறளானது,—மும்மலையும்-

(கொல்லிமலை நேரிமலை பொதியமலை எனப்படுகின்ற) மூன்றுமலைகளையும், மூந்நாடும் - (குடநாடு புனனாடு தென்னாடு எனப்படுகின்ற) மூன்றுநாடுகளையும், மூந்நதியும் - (பொருநைநதி காவிரிநதி வையைநதி எனப்படுகின்ற) மூன்று நதிகளையும், முப்பதியும் - (கருவூர் உறையூர் மதுரை எனப்படுகின்ற) மூன்று பதிகளையும், மும்முரசும் - (மங்கலமுரசு வெற்றிமுரசு கொடைமுரசு எனப்படுகின்ற) மூன்று முரசுகளையும், முத்தமிழும் - (இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் எனப்படுகின்ற) மூன்றுதமிழ்களையும், முக்கொடியும் - (விற் கொடி புலிக்கொடி மீனக்கொடி எனப்படுகின்ற) மூன்று கொடிகளையும்,



மும்மாவும் - (கனவட்டம் பாடலம் கோரம் எனப்படுகின்ற) மூன்று குதிரை களையும், தாம் உடைய மன்னர் - தாம்முறையேயுடைய(சேரசோழபாண்டியர் எனப்படுகின்ற) மூவரசருடையவும், தட முடிமேல் - பெரிய முடிகளின் மேலே (கொள்ளப்பட்ட), தார்

அன்றோ - மாலையன்றோ? (எ - று.)

அன்றோவென்றது பலரறிதேற்றம். முப்பால் - ஆகுபெயர். மும்முரசும் முத்தமிழும் அம்மூவரசர்க்கும் பொதுமையவாயினும் இம்முறையுரிமை அவர் குடிமரபிற் கியைந்தனபோலும். அரசர்மூவரும் மேற்கொண்ட சிறப்புச் சொல்லியபடி.

(௧௦)

## கக.—மருந்துவன்றமோதாஞர்.

சீந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

(இ - ள்.) காந்தி மலை குத்து மால் யானை - (தன்பகையென) வெகுண்டு மலையைக்குத்துகின்ற பெரிய களிறுபோலுள்ள வரசனே! சீந்தி நீர்க்கண்டம் - சீந்திநீர்ச் சருக்கரையையும், தெறி சுக்கு - சிதைக்கப்பட்ட சுக்கையும், தேன் அளாய் - தேனோடு கலந்து, மோந்தபின்—, (அதனால்), யார்க்கும் - (தலைக்குத்துடையோர்)யாவர்க்கும், தலைக்குத்து—, இல் - இல்லையாகும்: வள்ளுவர் முப்பாலால்—, சாத்தற்கு - சீத்தலைச்சாத்தனார்க்கு, தலைக்குத்து—, தீர்வு - இல்லையாயிற்று; (எ - று.)

யானைபோல்பவனை யானை யெனலால் ஆகுபெயர்.

முன் கேட்கப்பட்ட நூல்களிலெல்லாம் பலசொற்குற்றங்களும் பொருட்குற்றங்களும் கண்டு பொறுமல் தலையில் அறைந்துகொண்டு வந்தமையால் புண்பட்டுக் குத்தல் உண்டாயிருந்தது; இதன்கண் ஓர் குற்றமுங் காணப்பெறுமையால் அது நீங்கிற்றென்க. எப்படி அம்மூன்று சரக்கும் அதற்குமருந்தாமோ, அப்படியே இதற்கு இம்மூன்றுபாலும் மருந்தாயின வென்பதாம். தீர்வென்னுந் தொழிற்பெயர் முற்றுப்பொருளில் வந்தது. இதன் குற்றமற்ற விளங்குகை சொல்லியபடி.

(கக)

கசு.—நாகன் றேவனார்.

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை

வேளா தொழிதல் வியப்பன்று—வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார்.

(இ - ள்.) தாள் ஆர் மலர்பொய்கை - நாளத்தோடுபொருந்திய தாமரை மலர்களையுடைய ஒருகுளத்து நீரின்கண்ணே, குடைவார் - மூழ்குவோர், தாம்-,தண்ணீரை - (வேறு)தண்ணீரை, வேளாது ஒழிதல் - விரும்பாதொழிதல், வியப்பு அன்று - வியப்பைச் செய்வதன்று: வள்ளுவனார் முப்பால்



மொழி-திருவள்ளுவரது முப்பால்களையுடையநூலின் கண்ணே, மூழ்குவார்—, தாம்—,வாளா - வீணாக, அப்பால்—,ஒருபாவை - ஒருநூலை, ஆய்பவோ - விரும்புவாரோ?(விரும்பார் ஆதலின் இதுவே வியப்பைச்செய்வதாம்):(எ-று.)

தாளார் மலரெனலால், தாமரைமல ரெனப்பட்டது.

வியப்பைச்செய் வதை வியப்பு என்றார். மூழ்குதல் - இங்கே கருத்துமுழுதும் அழுந்திநிற்றன்மேனின்றது. மொழி - ஆகுபெயர். ஓகாரம் - எதிர்மறை. விரும்புதலாகிய காரணத்தை ஆய்பவோ எனக் காரியமாக உபசரித்தார். அதுவியப்பன்று என்றமையாலே, இது வியப்பென்றதாயிற்று. உயர்வானபொருள் பெற்றோர்க்கு அதினிழிவான பொருளையும் பெறவிரும்புதல் இயல்பாயிருக்க, குளிர்ச்சி இன்சுவை நறுமணமுதலிய குணங்களாலே சிறந்த ஒரு தாமரைக் குளத்து நீரைப் பெற்றோர்க்கு அதனொற்றானே அமைதிபெற்று வேறுதண்ணீரைப் பெற விரும்பாமை வியப்பைச் செய்வதாயிற்று. ஆயினும் இதுகாறும் ஒருநூலைக் கற்றோர்க்கு வேறுநூலைக்கற்க விரும்புதலன்றி விரும்பாமை யில்லாதிருக்க இப்போது உளதாகலின் இதுவே பெருவியப்பைச் செய்வதென்றதாயிற்று. இதனால் இந்நூலகத்து எந்நூற் பொருளும் அடங்கியிருக்கின்றமை குறிப்பிக்கப்பட்டது. பல நூல்களையும் கற்கவிரும்புவோர்க்கு இஃதொன்றே அமைதல் சொல்லியபடி. (கஉ)

கந.—அரிசில்கிழார்.

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

(இ - ள்.) பரந்த பொருள் எல்லாம் - (வேதத்திலே) ஒன்றோடொன்று மயங்கிநின்ற நால்வகைப் பொருள்களையும், பார் அறிய - இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு, வேறு தெரிந்து - வேறாகப்பிரித்து, திறம்தொறும் சேர - (அது அது தனது தனது) வகையோடு சேரும்படி, சுருங்கிய சொல்லால் - சில சொற்களால், பொருள் விளங்க - கருத்துத்தோன்றும்படி, விரித்துச் சொல்லுதல் - விரியும்படி வைத்துச்சொல்லுதல், வல்லார் - வல்லவர், வள்ளுவர் அல்லால்-, ஆர்-, (ஒருவரும்? இல்லை); (எ - று.)

பார் - ஆகுபெயர். திறம் - அறம்முதலியவற்றின் கூறுபாடு. சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தன்முதலிய அழகுகள் எப்படி இவரால் அமைக்கப்பட்டனவோ, அப்படி பிறரால் அமைக்கப்படுதல் கூடாமை காட்டியதாயிற்று. நூலுக்கும் நாயனுர்க்கும் தகுதி சொல்லியபடி. (கங)

### கச.—பொன்முடியார்.

காணின்ற தொங்கலாய் காசிபனுர் தந்ததுமுன்
கூநின் றளந்த குறளென்ப—நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனுர்
தாநின் றளந்த குறள்.



(இ - ள்.) கான் நின்ற தொங்கலாய் - மணந் தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டியராசனே! முன் - முற்காலத்திலே, காசிபனுர் தந்தது - காசிபராலே தரப்பட்டகுறளை, கூ நின்று-மண்ணின் கண்ணே நின்று, அளந்த - (உலகத்தை) அளந்த, குறள் என்ப - குறளென்று சொல்லுவர்; தாம் நின்று - தாம் (இங்கே) எழுந்தருளி, வள்ளுவனுர் அளந்த குறள் - திருவள்ளுவராலே தரப்பட்டகுறள், நூல் முறையான் - நூலின்முறையோடு கூடி, வான் நின்று - விண்ணின் கண்ணே நின்றும், மண் நின்று - மண்ணின் கண்ணே நின்றும், அளந்தது - (உலகத்தை) அளந்தது; (எ - று.)

கு-கூஎன நீண்டது. ஆனுருபு ஒடுவுருபின்பொருளில்வந்தது. அக்குறள் வஞ்சித்துப் பெற்றளத்தலால் நூன்முறையோடு கூடாததாயிற்று. இக் குறளுக்கு ஒலிவடிவும் வரிவடிவுமென இரண்டு வடிவுண்மையால், ஒலிவடிவுக்கிடம் வானுதலின் வானின்று என்றும், வரிவடிவுக்கிடம் மண்ணுதலின்

மண்ணின் றுளன் றும் கூறினர். இக்குறளுக்கு நான்முறையோடு கூடலும் வானிற்றலும் மிகுத்துச்சொல்லி வேற்றுமை செய்யப்பட்டது. மூன்மாலும் என்னும் பாட்டிலே நாயனர்க்கும் மாலுக்கும், இப்பாட்டிலே திருக்குறளுக்கும் மாலவதாரக்குறளுக்கும் ஒப்புமை குறித்துச் சொல்லலால் வேறுபாடாம். உலகத்துப் பொருளெல்லாம் இஃதளத்தற்சிறப்புச் சொல்லியபடி.

கடு.—கோதமனர்.

ஆற்ற லழியுமென் றந்தணர்க ணான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா—ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனர் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று.

(இ - ள்.) அந்தணர்கள்—, நான்மறையை - நான்கு வேதங்களையும், உரைத்து - வாய்ப்பாடமாக, போற்றி-காப்பாற்றி, ஆற்றல் அழியும் என்று - (ஏட்டின்கண் எழுதிவைத்தால் வலியில்லாரும் ஓதுவாராதலின் இவற்றின்) வலிமைகுறையுமென்று, ஏட்டின்புறத்து - ஏட்டின்கண், எழுதார் - எழுதார்கள்: வள்ளுவனர் முப்பாலை - திருவள்ளுவரது திருக்குறளை, ஏட்டு எழுதி - ஏட்டின்கணெழுதிவைத்து, வல்லுநரும் - வலியுடையவரும், வல்லாரும் - வலியில்லாரும், சொல்லிடினும் - ஓதினலும், ஆற்றல் சோர்வு இன்று - வலிமைகுறைதலில்லை; (எ - று.)

அவ்வேதத்துக்கு உதாத்தம் அனுதாத்தம் சுவரிதமென்னுஞ் சுரங்களின் வழுவாம லோதல்வேண்டுமென்னும் விதியுளதாதலின், அதற்குத் தகுதியுடைய அந்தணரே அதிகாரிகளாயினர்; இதற்கு அஃதில்லாமையால் யாவரும் அதிகாரிகளாவரென்றறிக. சொல்லிடினும் என்றதனல் பொருளுணர்ச்சிக்கும் இதற்கும் வலிமை வேண்டுமென்பது பெறப்பட்டது. ஆற்றல்-சோர் செறிவின்றிட்பம். இங்ஙனங்கூறவே அவ்வேதம் சொல்லின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம் இவ்வேதம் பொருளின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம் பெறப்பட்டன. ஓதப்படுதலின் அவ்வேதத்தினும் இது சிறப்புடைமை சொல்லியபடி. (கரு)

கசா.—நத்தத்தனார்.

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூ லுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

(இ - ள்.) பாயிரத்தினோடு - பாயிர நான்கதிகாரங்களோடு, ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும் - (சேர்ந்து தொகையாகிய) அரிய ஆயிரத்து முந்நூற்றுமுப்பது குறள் வெண்பாக்களையும், பகர்ந்ததற்பின் - ஓதியுணர்ந்தபின்பு,—போய் ஒருத்தர் வாய்-போய் ஒருவரது வாயாலே, கேட்க - கேட்டறிதற்கு, நூல் உளவோ - வேறு நூல்கள் இருக்கின்றனவோ? [இல்லை என்றபடி]: மன்னு தமிழ்ப்புலவர்ஆய் - நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியோராகி, கேட்க-(பிறர் தம்மிடத்துவந்து) கேட்கும்படி, வீற்றிருக்கல் ஆம் - சிறப்பாகவிருக்கலாம்; (எ - று.)

வீற்றிருத்தல் - ஒரு சபைநடுவிலே உயர்வாகிய ஆதனத்தில் ஏறியிருத்தல். இவற்றுட் பலவகைப்பட்ட நூல்களின் கருத்துக்களெல்லாம் விளங்கி நிற்றலின், கேட்கநூலுளவோ என்றார். புலவராய்எனவே, புலமை நிரம்புதற்கு இவை ஆயிரத்து முந்நூற்று முப்பதுகுறள்களும் போதுமென்பது பெறப்பட்டது. ஓதியோர்க்கு வரும் இம்மைப்பயன் சொல்லியபடி. (கசா)

களை.—முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்.

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா வலரினு மில்.

(இ - ள்.) வள்ளுவனார் முப்பாலின் மிக்க - திருவள்ளுவரது திருக்குறளின்மேற்பட்ட, மொழி - நூலொன்று, உண்டு என பகர்வார் - உளதென்று சொல்லவல்லவர், எப்பாவலரினும் - எவ்வகைப்பட்ட புலவருள்ளும், இல் - இல்லை: (ஆதலால்), செயற்பால - (நாம் இந்நூலைக்குறித்துச்)செயக்கடவன, உள்ளுதல் - (நாம் இதன்பொருளைச்) சிந்தித்துக்கொள்ளுதலும், உள்ளி உரைத்தல் - சிந்தித்து (ப் பிறர்க்கு அதனை) ச்சொல்லுதலும், உரைத்த அதனை தெள்ளுதல் அன்றே - (பிறராலே) சொல்லப்பட்ட அதனைத்

தெளிதலும் அன்றே; (எ - று.)

மொழி—ஆகுபெயர். ஒப்பது வடமொழிவேதமிருத்தலின் மிக்க மொழிஎன்றும், தமிழின்மாத்திரமன்றி வடமொழி முதலியவற்றினுள்ள புலவரையுந் தழுவுதற்கு எப்பாவலரினும் என்றும், அறிவொப்புக் காண்டற்கு உரைத்ததனைத் தெள்ளுதல் என்றும் கூறினர். உள்ளுதலெனவே கேட்டலும், தெளிதலெனவே அவ்வாறொழுகலும் அடங்கின. இது பயிற்சி செய்தொழுகுமாறு சொல்லியபடி.

(கஎ



கஅ.—ஆசிரியர் நல்லந்துவனார்.

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா வலரினு மில்.

(இ - ள்.) சாற்றிய பல்கலைஉம் - (அறிவுடையோரால்) சொல்லப் பட்ட பலநூல்களாலும், தப்பா அரு மறைஉம் - தப்பாத அரிய வேதத்தி ஞலும், போற்றி - காப்பாற்றிவைத்திருந்து, உரைத்த - (உலகத்தார்க்குச்) சொல்லப்பட்ட, பொருள் எல்லாம் - விடயங்களெல்லாம், தோற்ற - (தன் னிடத்தே) காட்டும்படி, முப்பால் மொழிந்த - திருக்குறளைச்சொல்லிய, முதற்பாவலர் ஒப்பார் - திருவள்ளுவரை யொப்பவர், எப்பாவலரினும் - எவ் வகைப்பட்ட பாவலருள்ளும், இல் - இல்லை; (எ - று.)

தம்மாலே சொல்லப்பட்டவற்றில் வழுவுறுமையால் தப்பா என்றும், பொருளுணர்தற்கே யன்றி ஓதுதற்கும் எளிதன்றாதலின் அரு என்றும் விசேடணஞ் செய்யப்பட்டது. எப்பாவலரினுமில் - இதற்கு முன்னுரைக்கப் பட்டபடியே கொள்க. முதற்பாவலர் - முதன்மையையுடைய பாவலர்; நால் வகைப் பாக்களில் வெண்பாக்களும் அவற்றுள்ளும் குறள்வெண்பாவும் தலைமை பெற்றுநிற்றலின், அக்குறள்வெண்பாவால் நூல்செய்த வல்லமை யுடையரென்றுமாம். புலமையிலே நாயனுருக்கு ஒப்பின்மை சொல்லியபடி.

கக௯.—கீரந்தையார்.

தப்பா முதற்பாவாற் றூமாண்ட பாடலினன்
முப்பாலி னாற்பான் மொழிந்தவ—ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

(இ - ள்.) எப்பாலும் வை வைத்த கூர் வேல் வழுதி - எவ்விடத்திலும் கூர்மைவைத்த சிறப்புப்பொருந்திய வேலையுடைய பாண்டியராசன், மனம் மகிழ - மனங்களிக்க, தப்பா - (சொல்லப்பட்டபொருள்) வழுவாமல், முதற் பாவால்-முதன்மையுடைய பாவாகிய குறள்வெண்பாக்களாலே, தாம் மாண்ட பாடலினால் - தாம் மாட்சிபெற்ற பாடற்றொழிலினாலே, முப்பாலின்-மூன்று பால்களிலே, நாற்பால் - (அறம்முதலிய) நான்கு பகுதிப்பொருள்களையும், மொழிந்தவர் - திருவாய்மலர்ந்தவர், தெய்வத்திருவள்ளுவர்-தெய்வத்தன்மை பொருந்திய திருவள்ளுவநாயனார்; (எ - று.)

கூர் - சிறப்பு. நான்கனுள் மூன்றடங்குவதன்றி மூன்றனுள் நான் கடங்காமையின், வியந்து கூறப்பட்டதாயிற்று. நூல்செய்த சிறப்பும் அதனால் அரசனை மகிழ்வித்தமையும் சொல்லியபடி.

(கக)

## ௨௦.—சிறுமேதாவியார்.

வீடொன்று பாயிர நான்கு விளங்கற
நாடிய முப்பத்து மூன்றொன் றாழ்—கூடுபொரு



ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

(இ - ள்.) வள்ளுவர் சொன்ன வகை - திருவள்ளுவராலே சொல்லப் பட்ட திருக்குறளின் அதிகாரவகை, பாயிரம் நான்கு—பாயிரம் நான்கதி காரத்தையுடையது: அறம் முப்பத்து மூன்று - அறம் முப்பத்து மூன்றதி காரத்தை யுடையது: ஊழ் ஒன்று - ஊழ் ஓரதிகாரத்தை யுடையது: பொருள் எழுபது - பொருள் எழுபததிகாரத்தை யுடையது: இன்பம் இரு பதிற்றைந்து - காமம் இருபத்தைந் ததிகாரத்தை யுடையது; (எ - று.)

அறத்துப்பாலுளடங்காது அதனை விட்டு நூற்கெல்லாம் பொதுவாய் நிற்றலின் வீடொன்றுபாயிரமென்றும், இம்மை மறுமை வீடுமூன்றும் பயத் தற் சிறப்பிற்றாய் மூன்றனுண் முதனிற்றலின் விளங்கறமென்றும், யாவர்க்

கும் பொதுப்படநாடித் தொகுக்கப்பட்ட அறத்தின் கூறுபாடு இவையேயாக லின் நாடிய முப்பத்துமூன்றுஎன்றும், முன்னின்ற அறமும் பின்னின்ற இன்பமும் கைகூடுதற்குத் துணையாய் நிற்றலின் கூடுபொருள்என்றும், அப்பொருளின் பாகுபாடுகளெல்லாம் இவற்றினடங்குதலின் எள்ளிலெழு பதுஎன்றும் கூறினர். எள்ளல் - இகழ்தல். சில பழைய நூல்களிலே சிலவற்றைச் சாதியாரும் சமயத்தாரும் மிகுத்தும் குறைத்தும் வேறுபடுத்த லால் அப்படிப்பட்ட வேறுபாடு இதற்கும் வரினும் வருமென்று ஆசங்கித்து

இதனதிகாரங்களுக்கு இங்ஙனந் தொகைசெய்தார். பின் இவ்வாறு தொகை செய்யப்பட்டு வருவனவற்றிற்கும் இதுவே கருத்தாகக் கொள்க. முப்பால் களுக்கும் அதிகாரத்தொகை சொல்லியபடி. (௨०)

உக.—நல்கூர்வேள்வியார்.

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப—விப்பக்க
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

(இ - ள்.) உப்பக்கம் நோக்கி - வடதிசை குறித்துச்சென்று, உபகேசி தோள் மணந்தான் - நப்பின்னைப் பிராட்டியினது தோளைமணந்த கண்ண பிரானை, உத்தரம் மா மதுரைக்கு-வடமதுரைக்கு, அச்சுஎன்ப-ஆதாரமென்று சொல்லுவர்: இப்பக்கம் - இப்பக்கத்தைக்குறித்து, மாதானுபங்கி - மாதானு பங்கி யெனப்படுகின்ற, மறு இல் புலம்-குற்றமற்ற புலமையாகிய(தேனைச்சொரி கின்ற), செந்நாப் போதார் - செவ்விய நாவாகிய மலரையுடையவர், புனல் கூடற்கு-நீர்வளத்தையுடைய தென்மதுரைக்கு, அச்சு-ஆதாரமாவர்; (எ - று.)

உபகேசி யென்பதற்கு ஈண்டியைபுநோக்கி நப்பின்னைப்பிராட்டி யென்று பொருளுரைக்கப்பட்டது. உபகேசி—கூந்தலழகுடையாள். நேமி நாத வுரையாசிரியர் "பாலே திணையே" என்னுஞ் செய்யுளில் "உபகேசி யாவாள் — நப்பின்னைப் பிராட்டியார்" என்றனர். இப்பிராட்டியார் கண் ணன் மனைவியர்களுள் ஒருவர். மாதா அனுபங்கி - மாதாவை சிகராகக் கொண்டு நடக்கின்ற ஒழுங்கினனெனப்படுதலின், அவள் பிள்ளைமே லருள்



செய்தல் போல் இவர் உலகத்தார்மேல் அருள்செய்தல் சொல்லப்பட்ட

தாயிற்று. மாதானுபங்கி என்று தொடர்க்கு - செருக்கை எப்போதும் ஒழிந்தவன் என்றும் கூறுவர். நாப்போ தென்றதற்கேற்பப் புலமையிலே தேன் ஆரோபிக்கப் பட்டது. அச்சுபோற் ருங்குதலால் அச்சுஎன்ருர். நாயனுராலே திங்கட் குடையுடைச் சீர்சால் வழுதியும் சங்கப்புலவருந் தழைத்தினி தோங்கிய மதுரைக்கு உண்டான சிறப்புச்சொல்லியபடி. (உக)

உஉ.—தொடித்தலை விழுத்தண்டினர்.

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள்.

(இ - ள்.) அறம் (திறம்) நான்கு - (பாயிரம் இல்லறம் துறவறம் ஊழ் என) அறப்பாலி னுட்பிரிவுகள்நான்கும், அறி பொருள் (திறம்) ஏழ்-(அரசு அமைச்சு அரண் கூழ் படை நட்பு ஒழிபு என) அறியப்பட்ட பொருட்பாலினுட்பிரிவுகள் ஏழும், ஒன்று - பொருந்திய, காமம் திறம் மூன்று என பகுதி செய்து - ஆண்பால் பெண்பால் அவ்விருபால்என காமத்துப்பாலினுட்பிரிவுகண் மூன்றுமாகப் பகுதிசெய்து, பெறல் அரிய நாலும்-பெறுதற்கரிய (அறம் பொரு ளின்பம்வீடு எனப்படுகிற) நான்கு பொருள்களையும், மொழிந்த - சொல்லிய, பெருநாவலரே—,ஒழிந்த பொருள் - (அவற்றுள் அடங்காது) ஒழிந்தபொருள் (உளதாயின் அதனை), நன்கு உணர்வார்போலும் - நன்ருக அறியவல்லவர்போலும்; (எ - று.)

திறமென்றது - அறமுதலியவற்ருேடுங் கூட்டப்பட்டது. நாவலரே என்றமையால், பிறரால் அறியப்படுவ தன்றென்றதாயிற்று. முப்பாலியற் ருேகையும் இவற்றினடங்காதது ஒன்றில்லையென்பதும் சொல்லியபடி.(உஉ)

உங.—வெள்ளி வீதியார்.

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில்.

(இ - ள்.) செய்யா மொழிக்கும் - (ஒருவராலே) செய்யப்படாத மொழி

யாகிய வேதத்துக்கும், திருவள்ளுவர் மொழிந்த - திருவள்ளுவரால் அருளிச் செய்யப்பட்ட, பொய்யா மொழிக்கும் - (தன்வழியி னொழுகுவோர்க்குப் பயன் விளைவிலே) பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும், பொருள், ஒன்றே—: ஆராயின் - ஆராயுமிடத்து, செய்யா அதற்கு உரியர் - செய்யப் படாத அவ்வேதமோதுதற்குரியவர், அந்தணரே—: ஏனை இதற்கு உரியர் அல்லாதார் - பொய்படாத இத்திருக்குறளோதுதற்கு உரியவரல்லாதவர், இல் - (உலகத்தில்) இல்லை; (எ - று.)

பூர்வவேதத்தை நித்தியமென்பார்மதம்பற்றிச் செய்யாமொழி என்றார்.

அது வடமொழியும் இது தென்மொழியுமாய் நின்று சில வேறுபாடுடையன 14

திருவள்ளுவ மாலை

போற் றேன்றினும் நுண்ணுணர்வா னோக்குவார்க்குக் கருத்து வேறுபடா மையின், பொருளொன்றேஎனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினார். செய்யாமொழி, பொய்யாமொழி—அன்மொழித்தொகைகள். இதற்குரிய ரல்லாதா ரில்லென்றதனாலும் பொதுவேதமாத லறிக. அதற்கும் இதற்கும் பொருள் வேறேவென்றும் இதனையோதற் கதிகாரிகளாவார் யாவரோவென் றும் நிகழ்கின்ற ஐய மொழித்தபடி.

(உரு)

உசு.—மாங்குடி மருதனார்.

ஓதற்கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோ
ருள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

(இ - ள்.) வள்ளுவர் வாய்மொழி - திருவள்ளுவரது வாயினின்றுந் தோன்றிய திருக்குறளினது, மாண்பு - மாட்சிமையைச் சொல்லின், (அது), ஓதற்கு எளிது ஆய் - ஓதப்படுதற்கெளிய சொற்களை யுடையதாகியும், உணர்தற்கு அரிது ஆகி - அறியப்படுதற்கரிய பொருள்களை யுடையதாகியும்,
வேதம் பொருள் ஆய் - வேதமெனப்படுகின்ற பொருளாகியும், மிக விளங்கி- (அவ்வேதத்தின்) மிகவிளங்கி, தீது அற்றோர் - குற்றமற்றோர்கள், உள்ளு தொறு உள்ளுதொறு - நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும், உள்ளம் - (அவர்களுடைய) மனத்தை, உருக்கும் - கரைக்கும்; (எ - று.)

ஓதற்கெளிதாய் எனவே நவின்றோர்க்கினிமை நன்மொழி புணர்த்தல் களும், உணர்தற்கரிதாகி எனவே ஆழமுடைமையும், வேதப்பொருளாய் எனவே விழுமியது பயத்தலும் பிறவுமாகிய அழகுகளி னமைதி சொல்லப் பட்டதாயிற்று. தீதற்றோர் - பொருளாராய்ச்சிக்கேற்ற நுண்ணறிவுடையோர். உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளமுருக்கும் எனவே, முன் காணப்பட்டதினும் பின் காணப்படும் பொருள் சிறந்தும் விரிந்துந் தோன்றுதலுடைமை பெறப் பட்டது. இதனது அற்புதமான குணமுடைமைச் சிறப்புச் சொல்லியபடி.

உடு.—எறிச்சலூர் மலாடனூர்.

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—வாய

* அறத்துப்பா ஞல்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

(இ - ள்.) வள்ளுவனார்—, ஆய்ந்து - (அவ்வேதத்தின் கருத்துக்களை) ஆராய்ந்து, நூலின்திறத்து - (தம்மாலே செய்யப்பட்ட) நூலினது திறத்திற்குத்தக்க, பால் - நன்மையுடைமையால், தேர்ந்து-(இவையே உரியவையென்று) தெரிந்து, பாயிரம் நான்கு - பாயிரம் நான்கதிகாரமும், இல்லறம் இருபான் - இல்லறவியல் இருபததிகாரமும், துறவறம் பன்மூன்று - துறவறவியல் பதின்மூன்றதிகாரமும், ஊழ் ஒன்றுஆக - ஊழ் ஓரதிகாரமும்ஆக,

* பி - ம்: அறத்துப்பான் முப்பானெட்டா மென்றுரைத்தார்



ஆய - கூடிய, நால்வகை ஆ - (பாயிரமுதலிய) நால்வகையுடைத்தாக, அறத்துப்பால் - அறத்துப்பாலை, உரைத்தார் - கூறினார்; (எ - று.)

மூப்பாற் பொருள்களினும் முத்திக்குக் காரணமாதற் சிறப்புடைமையின் தூயதுறவறம் என்றார். துப்பு-நன்மை. அது எல்லா வருணச்சிரமங்களுக்கும் பொதுவாயிருக்கை. அறப்பாலிய லதிகாரத்தொகை சொல்லியபடி. (உ௫)

**உசு.—போக்கியார்.**

அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
துருவல் லரணிரண்டொன் றொண்கூ—ழிருவிய
றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை.

(இ - ள்.) அரசு இயல்—, ஐயைந்து-இருபத்தைந்து: அமைச்சு இயல்—, ஈரைந்து-பத்து: அரண் இரண்டு—: கூழ் ஒன்று—: திண்படை இரு இயல்—: நட்புப்பதினேழ்—: குடிபதின்மூன்று—: எண்பொருள் - எண்ணப்பட்ட பொருட்பாலுக்கு, இவை ஏழாம் - இவ்வியல்களேழாம்; (எ - று.)

இத்தொகைகளோடு அதிகாரமுடையதென்பது கூட்டுக. அரணுக்கு உருத்திட்பம் சிறத்தலின் உருவல்லரண் என்றும், பொருளுடையார்க்கே ஒளி அமைவதாதலின் ஒண்பொருள் என்றும், படைக்குக் கடும்போரிற் பின்

கொடாததிண்மை யுரித்தாதலின் திண்படை என்றும் கூறினர். பிற்காலத்தார் அமைச்சுமுதலிய வைந்தனையும் அங்கவியலென ஓரியலாக்கியும் வழங்குப. பொருட்பாவிய லதிகாரத்தொகை சொல்லியபடி. இந்தப்பாட்டு, நுண்பொருண்மாலையில், "அரசியலையைந் தமைச்சியலீரைந், துரை நாடரண் பொருளொவ்வொன் றுரைசால், படையிரண்டு நட்புப் - பதினேழ் பன் மூன்று, குடியெழுபான் ருெக்கபொருட் கூறு" எனக்காணப்படுகின்றது.

உஎ.—மோசிகீரனர்.

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்ருகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனர் நன்கு. *

(இ - ள்.) ஆண்பால் ஏழ்—: பெண்பால் ஆறிரண்டு—: அடுத்து அன்பு பூண் பால் - (ஒருவரையொருவர்) அடுத்து அன்பைப்பூணுதற்பகுதியுடைய, இருபால் - அவ்விருபால், ஓர் ஆறு ஆக—, மாண்பு ஆய காமத்தின் பக்கம் - மாட்சியான காமத்துப்பாலி னியல்கள்,ஒரு மூன்று ஆக—,நாமத்தின்-பெயர் பெற்ற, வள்ளுவனர்—,நன்கு கட்டுரைத்தார் - நன்கு கூறினர்; (எ - று.) இவையே பொருளிலக்கணத்துக்கமையக் களவியல் கற்பியலென விரண்டாக்கப்பட்டன. இத்தொகைகளுக்கும் மூன்கூறப்பட்டது கொள்க. காமத்துப்பா லியலதிகாரத் தொகை சொல்லியபடி. (உஎ)

* இப்பாட்டை யடுத்துப் பின்வரும்பாடல் நுண்பொருன்மாலையில் எழுதப் பட்டுள்ளது: வருமாறு:—புணர்தல்பிரிதற் பொருள் களவுகற்பென், றுணருமிருகூறுமுரைக்கிற் - புணரும், களவேழுமூன்றுகற்பிவையை யைந்தா, அளவுறுகாமத்துப்பாலாம்,



உஅ.—காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனர்.

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன்.

(இ - ள்.) அதிகாரம்—, நூறும் ஐயாறு மூன்றும்ஆ— நூற்று முப்பத்து மூன்றாக, மெய்யாய வேதப்பொருள்—,பொய்யாது விளங்க - பொய்யுறாது விளக்கும்படி, அம் தாமரைமேல் அயன் - அழகிய தாமரைமலர்மேல் வீற்றிருக்கின்ற நான்முகக்கடவுள், தான் வள்ளுவன் ஆகி—,உலகிற்கு தந்தான் - உலகத்தார்க்குத் (தமிழிற் செய்து) தந்தான்; (எ - று.)

உலகு - இங்கே மக்களை யுணர்த்திநின்றது. மெய்யாய வேதப்பொருள் பொய்யாது விளங்கவெனவே, இதற்குமுன் மெய்யாய பொருள் பொய்யாய் மறைந்தும்,பொய்யாயபொருள் மெய்யாய் விளங்கியும் கிடந்தமை சொல்லப்பட்டதாயிற்று. அதிகாரத்தொகையோடு நூற்பொருளியல்பு சொல்லியபடி.

உகூ.—மதுரைத் தமிழ் நாகனார்.

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்—சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

(இ - ள்.) எல்லாப்பொருளும் - (பலவகை நூல்களாலுஞ் சொல்லப்பட்ட) எல்லாப்பொருளும், இதன்பால் உள - இந்நூலகத்தடங்கி யிருக்கின்றன: இதன்பால் இல்லாத எப்பொருளும் - இதனிடத்தில்லாத யாதொரு பொருளும், இல்லை - (எந்நூலகத்தும்) இல்லை: (ஆதலால்), சொல்லால் பரந்த பாவால் - சொல்லளவினாலே விரிந்தநூல்களால், பயன் என் - பயன் யாது? வள்ளுவனார் சுரந்த பா - திருவள்ளுவராலே தரப்பட்ட இந்நூலொன்றே, வையத்துணை - மண்ணுலகத்தாருக்குத் துணையாதலமையும்; (எ - று.)

எல்லாப்பொருள்களுமாவன - முதல் வழி சார்பென மூவகைப்பட்ட அறநூல் பொருணூல் இன்பநூல் வீட்டுநூல் என்பவற்றிற் செம்பொருள் ஆக்கப்பொருள் குறிப்புப்பொருளென இம்மூவகையாற் சொள்ளக்கிடந்த காட்சிப்பொருள்களும் கருத்துப்பொருள்களுமாம்: தொழிலும் பண்பும் ஓரோவழிப்பொருளெனக் கேற்புடைமையின் அவையும் இவற்றுள் அடங்குமா

றிக. பின்னும் அதனை வலியுறுத்தற்கு இதன்பாலில்லாத வெப்பொருளு மில்லை என்றார். சொல்லாற்பரந்த எனவே அவைபொருளாற் பரப்பின்மை பெறப்பட்டது. பரத்தல் - பதினாயிரம் நூறாயிரம்முதலிய கிரந்தவளவையால் விரிதல். சொல்லாற் பரந்த நூல்களை ஆய்வோர் மலையகழ்ந்து எலிபிடித்தல் போல் மிகவருந்திச் சிறுபயன் கொள்ளுதலால் என்பயன் என்றார். ஆல் - அசை. பா, வையம் - ஆகுபெயர்கள். சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையோர்க்கு விதிவிலக்குகள்முற்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கண்டு



தெளியுமாறு உணர்த்தித் தடுமாற்றந் தீர்த்தலின், வையத்துணை என்றார். முற் றொருங்குணரவிழைவார்க்கு இஃது இன்றியமையாச் சிறப்பிற்றென்றபடி.

௩௦.—பாரதம்பாடியபெருந்தேவனார்.

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர் தாஞ் செப்பவரு—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

(இ - ள்.) † பாரதம் சீராமகதை - பாரதம் பழைய சீராமகதையையும், மனு பண்டைமறை - மனுஸ்மிருதி பழைய வேதத்தையும், நேர்வன-ஒப்பன வாகும்; எப்பொருளும் - எவ்வகைப்பட்ட பொருள்களையும், யாரும்-எவ்வகை

யோரும், இயல்பின் - (அவற்றின்)தன்மையோடு, அறிவுற-அறிய, செப்பிய- (அவர்க்குச்)சொல்லும்படிக்கு, வள்ளுவர்-திருவள்ளுவர், செப்ப வரு-சொல்ல லால்வந்த, முப்பாற்கு - திருக்குறளுக்கு, நிகர் - உவமானமாகத்தக்கது, இல்லை - ஒன்றில்லை; (எ - று.)

மற்று-அசை. அறிதற்கரிய வேதாந்தப்பொருளு மென்றற்கு எப்பொருளும் என்றும், உயர்குலத்தாரேயன்றி ஏனையோருமென்றற்கு யாரும் என்றும், ஐயந்திரிபின்றி யறியவென்றற்கு இயல்பினறிவுற என்றும், இதுவே சுருதி குரு இரண்டுமாமென்றற்கு செப்பிய என்றும் கூறினர். பண்டை என்பது சீராமகதைக்குங் கூட்டுக: கதாரூபமாயிருந்து பாரதராமாயணமெனவும், விதிரூபமாயிருந்து சுருதிஸ்மிருதி யெனவும் கூட்டிச்சொல்லப்படுதலால், உவமான உபமேயங்களாத லறிக. எப்பொருளும் யாருமியல்பினறிவுறச் செப்புதல் வேதத்திற் கின்மையால், முன் முப்பாலின் மிக்கமொழி என்ற அதனாற் பெறப்பட்ட வேதத்தினொப்புமையை மறுத்தபடி.

(௩௦)

௩௧.—உருத்திரசன்மகண்ணர்.

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்<br>
துணச்சுரக்குந் தாய்முலை பொன்பால்—பிணக்கிலா<br>
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்<br>
காய்தொறு மூறு மறிவு.

(இ - ள்.) மணல் கிளைக்க - மணலைத் தோண்டுந்தோறும், நீர் ஊறும் -

நீர்பெருகும்: மைந்தர்கள் வாய் வைத்து உண -
புதல்வர்கள் வாய்வைத்து உண்ணுந்தோறும், தாய் முலை -
தாயினது முலைக்கண், ஒள் பால் சுரக்கும் -
நல்லபால்பெருகும்: (அவைபோல), பிணக்கு இலா வாய்மொழி - பிணங்குதற்கு ஏதுவில்லாத வாய்மைச்சொல்லையுடைய, வள்ளுவர் முப்பால் - திரு
வள்ளுவரது திருக்குறளை, ஆய்தொறும் - ஆராயுந்தோறும், மதி புலவோர்க்கு; அறிவுடைய புலவர்க்கு, அறிவு ஊறும் - அறிவுவளரும்; (எ - று.)

† பாரதமும் சிராம கதையும் மனுதருமசாஸ்திரமும் பழையவேதமும் முப்பாலுக்கு ஒப்பாவனவாம்; வேறு நூல்கள் ஒப்பாதலில்லை என்று பொருள் கூறுவாருமுண்டு.



கற்பிதமாகிய சாதிசமயங்களின் மானம்பற்றி உள்ளதை இல்லதாகவும், இல்லதை உள்ளதாகவும், சிறிதைப் பெரிதாகவும் பெரிதைச் சிறிதாகவும், தீயதை நல்லதாகவும் நல்லதைத் தீயதாகவும் புனைந்து பிறர் பிணங்கும்படி சொல்லப்பட்டதல்லாமையால்,பிணக்கிலாவாய்மொழி என்றார். மதிப்புலவோர்க் கறிவூறும் எனவே, அவர் அவ்வறிவைக்கொண்டு பிறர்க்கெல்லாம் விதிவிலக்குகளைக் கற்பித்தல்வேண்டு மென்றதாயிற்று. இதனைச் சிலகாற் பயிற்லினமையாது பலகாலும் பயிற்சி செயல்வேண்டு மென்றபடி. (௩க)

## ௫௨.—பெருஞ்சித்திரனார்.

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா முரைத்ததனற்

றாதவிழ் தார்மாற தாமே
வேதமே மேதக் கன.

தமைப்பயந்த

(இ - ள்.) தாது அவிழ் தார் மாற - பொடியொடு விரிந்த
யுடைய பாண்டியராசனே! ஏதம் இல் வள்ளுவர்-குற்றமில்லாத

பூமாலையை

திருவள்ளு

வர், இன் குறள் வெண்பாவினல் - இனிய குறள்வெண்பாக்களாலே, ஓதிய-
(நான்குவேதங்களாலுஞ்) சொல்லப்பட்ட, ஒள் பொருள் எல்லாம் - ஒள்ளிய

பொருள்களையெல்லாம், உரைத்ததனல் - சொல்லினமையால், மேதக்கன -
மேம்பாட்டுக்குத்தக்கவை; தாமே - அக்குறள் வெண்பாக்களோ? தமை
பயந்த வேதமே - (முதனூலாய் நின்று) அவற்றைப் பயந்த
வேதங்களோ? (நீ சொல்வாயாக); (எ - று.)

தாம் தம்மை எனப்பட்டவை, அவை அவற்றை
என்னும் பொருளைத்

த்ந்து நின்றன.

ரெதிரிகளாலே

ஏகாரம் இரண்டும் வினா. பிறநூலாசிரியர்க்கெல்லாம் அவமறக்கப்பட்டு வரும் குற்றம்போல்வது இவற்கு இல்லையென்றற்கு ஏதமில் வள்ளுவர் என்றும், தாம் குறியவாய் நின்று கற்போர்க்கு வருத்தம் விளையாமைபற்றி இன்குறள் என்றும், உணர்வுடையோராலே விரும்பப்பட்ட நற்குணமுடைமைபற்றி ஒண்பொருள் என்றும் கூறினார். நூலாசிரியர்க்கும் நூலுக்கும், நூனுதலிய பொருளுக்கும், தகுதிதோன்றச் சொல்லப்பட்ட விசேடணகுணங்களாலே இவ்வேதம் அவ்வேதத்தினுஞ் சிறப்புடைமை குறிப்பித்தபடி.

(௩௨)

## ௩௩.—நரிவெரூஉத்தலையார்.

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன்—மன்பதகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

(இ - ள்.) இன்பம் பொருள் அறம் வீடு இன்பம் முதலிய இந்நாற்பொருளியல்புகளையும்,

என்னும் இரண்கும் -
மன்பதைகட்கு - மக்கட்

பரப்புக்கு, முன்பு - அக்காலத்தில், அறியச்சொன்ன - அறியும் வண்ணஞ் சொல்லப்பட்ட, முது மொழி நூல் - பழமொழிவேதமானது, உள்ள அரிது என்று - ஓதியுணரப்படுதற் கரிதென்று, வள்ளுவர்—, அவை -



அவற்றை, உலகம் கொள்ள - உலகத்தார்

எளிதினுணரும்படி, குறள் - திருக்குறளை, மொழிந்தார் - சொல்லினார்; (எ - று.)

முன்பறிய எனவே உற்சர்ப்பிணியாகலின் அக்காலத்தோர்க்கு உணர் தற்கேற்ற ஆயுணீட்சியும் உணர்வுவலியும் இருந்தன வென்பதூஉம், அவ சர்ப்பிணியாகலின் இக்காலத்தோர்க்கு

அவையிலவென்பதூஉம், பெறப்பட் டன. இவ்விரண்டும் அவாவறுத்தன் முதற் பாட்டுரையிற் காண்க. தேய வழக்கிற்படாததும் விருத்திக்கற்போர்க்கு மாத்திரம் புலப்படுவதுமாய் எல்லா மொழிகட்கும் முற்பட்டுக் கடவுள்மொழியாய் நிற்றலின், முதுமொழி என்றார். அறமுதலிய நான்கும் பிரிவுபட்டுத் தோன்றாமையை யுடைத்தாதலின் உள்ளஅரிதாயிற்று. பழையவேதமுளதாகவும் வேறிதுசொல்லுதற்குக் காரண

முணர்த்தியபடி. (கூகூ)

கசா.—மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார்.

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப—னிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங் கிருண்மா லைக்கும் பெயர்.

(இ - ள்.) பூமேல் - பூவுலகின்கண்ணே, புலவர் திருவள்ளுவர் அன்றி - புலவரெனத் திருவள்ளுவரையன்றி, சிலவர் புலவர் என செப்பல் - வேறு சிலரையும் புலவரென்று சொல்லுதல்,—மாலை - மாலையென்பது, நிலவு பிறங்கு ஒளி மாலைக்கும் பெயர் - நிலவால் விளங்குகின்ற ஒளியையுடைய அந்திக்கும் பெயராக, மற்றும்—, கறங்கு இருள் மாலைக்கும் பெயர்-சூழ்கின்ற விருளையுடைய அந்திக்கும்பெயராக, செப்பல்-சொல்லுதல்போலும்; (எ-று.)

செப்பல் என்றது, பின்னுங் கூட்டப்பட்டது.

புலமையாவது-பலவேறு வகைப்பட்ட நூலுணர்ச்சிகளை யெல்லாம் ஒருங்கே கொண்ட பேரறிவுடைமையாம். உயர்வொப்பற்ற இவரது புலமையைக்குறித்து நோக்குங்கால் ஏனையோர் புலமை புலமையன்றாய் முடிதலின் இவ்வாறு கூறினர். புலவ ரென்பது, நாயனர்க்கே காரணப்பெயரா மென்றபடி. (கசா)

கரு.—மதுரையறுவைவாணிகன் இளவேட்டனர்.

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு

யன்பதைக் கெல்லா மனமகிழ—வன்பொழியா
துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்

வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

(இ - ள்.) இன்பமும் துன்பமும் என்னும் இவை - (பின்வரக்கடவன வாய) சுகமுந் துக்கமுமெனப்பட்ட இவற்றினுடைய, இரண்டும்-இருவகைக் காரணங்களையும், உள்ளி உணர - ஆராய்ந்தறியவும், அன்பு ஒழியாது - (தம் மேல்) அன்பு நீங்காமல், மனம் மகிழ - உள்ளங்களிகூரவும், மன்பதைக்கு எல்லாம் - மக்கட் பரப்புக்கெல்லாம், ஓது சீர் வள்ளுவர் - புகழப்படுஞ் சீரையுடைய திருவள்ளுவர், வாயுறைவாழ்த்து - வாயுறைவாழ்த்தாக, உரைத்தார் - (திருக்குறளைச்) சொல்லினார்; (எ - று.)



இன்பத்தின் காரணம் விதிக்குறளாலும், துன்பத்தின் காரணம் விலக்குக்குறளாலும் சொல்லப்பட்டன. முன்பறிதற்குப்பயன் அவற்றைச் செய்தலும் தவிர்தலுமாம். வேண்டுவனவெல்லாந் தொகுத்துணர்த்தலின் மன

மகிழ்தல் சொல்லப்பட்டது. அவ்வேதம்போலாது பலர்க்கும் உபயோகியாகச் சொல்லவின் மன்பதைக்கெல்லாம் என்ருர். வாயுறைவாழ்த்தி னியல்பு "வாயுறை வாழ்த்தே வயங்க நாடின், வேம்புங்கடுவும் போல வெஞ்சொற், ருங்குத லின்றி வழிநனி பயக்குமென், ரோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தாலறிக. எதிர்காலவிளைவுணர்ச்சி பயத்தல் சொல்லியபடி.

(ங௫)

## ங௬.—கவிசாகரப்பெருந்தேவனார்.

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக் கமரும்ப
றேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

(இ - ள்.) பூவிற்கு தாமரை - மலர்களுக்குள்ளே தாமரைமலரும், பொன்னுக்கு சாம்புனதம் - பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன்னும், ஆவிற்கு அருமுனி ஆ-பசுக்களுக்குள்ளே காமதேனுவும், யானைக்கு அம(ர)ர் உம்பல் - யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவில் திருமால் என - தேவர் களுக்குள்ளே திருமாலும்போல, பாவிற்கு வள்ளுவர் வெண்பா - நூல்களுக் குள்ளே திருவள்ளுவரது குறள்வெண்பா, சிறந்தது—, என்ப - என்று (அறி வுடையோர்) சொல்லுவர்; (எ - று.)

ஏ - அசை. பா - ஆகுபெயர். பொன்-ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புனதம் என நால்வகைப்படும். காமதேனு வசிட்டமுனியிடத்துள்ளதாக வின் அருமுனியா

என்றூர். உவமானமுகத்தால், இஃது, பலநூல்களினும் சிறந்துநிற்கின்ற மாட்சிமை சொல்லியபடி. (அமரும்பல் - தொகுத்தல். அமரும்பலென்று பாடமோதுவாரு முளர்.)

(௩௬)

## ௩௭.—மதுரைப்பெருமருதனூர்.

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனு
ரோதவழுக் கற்ற துலகு.

(இ - ள்.) அறத்திறம் - அறத்தின் கூறுபாடு, முப்பத்தெட்டால் - முப் பத்தெட் டதிகாரங்களாலும், பொருள் திறம்-பொருட்கூறுபாடு, எழுபதால்- எழுபது அதிகாரங்களாலும், இன்பத்திறம் - காமத்தின் கூறுபாடு, இருபத்தைந்தால் - இருபத்தைந் ததிகாரங்களாலும், தெளிய - தெளியும்பொருட்டு, முறைமையால் - (காரணகாரிய) ஒழுங்கால், வேதம் விழுப்பொருளை - வேதத்தினுயர்வாகிய பொருளை, வெண் குறளால் - குறள்வெண்பாக்களால், வள்ளுவனுர்—, ஓத - ஓதலால்,—உலகு - உலகமானது, வழுக்கு அற்றது - வழுவுதலினின்றும் நீங்கிற்று; (எ - று.)

திறமும் ஆலும் முன்னுங்கூட்டப்பட்டன. உயர்வாகியபொருள் - கரும காண்டம் பிரமகாண்ட மிரண்டினுள்ளுஞ் சிறந்தபொருள். வழுக்குதல் - விதியை விலக்கென்றும் விலக்கை விதியென்றும் கோடல். உலகு - மக்களை யுணர்த்தி நின்றது. துணிவுபற்றி, அற்றது என இறந்தகாலத்தாற் கூறினார். முன்னதின்வேறுபட்ட முப்பால்களி னதிகாரத்தொகைகளோடு உலகிற்கு விளையும் நன்மை சொல்லியபடி. (௩௭)

௩அ.—கோவூர்க்கிழார்.

அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

(இ - ள்.) அறம் முதல் நான்கும் - அறம்முதலிய நான்குபொருளையும்,

அகல் இடத்தோர் எல்லாம்-பரந்த மண்ணுலகத்திலுள்ளோரெல்லாம், திறம்

உற தேர்ந்து - வகைப்பட ஆராய்ந்து, தெளிய - கலக்கந்தீர, குறள் வெண்

பா பன்னிய-குறள்வெண்பாக்களாலே சொல்லப்பட்ட,வள்ளுவனார்-திருவள்

ளுவ நாயனாரது, பால் முறை - முப்பால்களையுடைய புத்தகத்தின்கண்ணே,

முன்னை முதுவோர் மொழி - முற்காலத்துள்ள பெரியோரது நூல்களுக்கு,

நேர் ஒவ்வாது - சேர்தல் பொருந்தாது; (எ - று.)

மொழி - ஆகுபெயர். பெரியோராவார் - வடமொழியிலும் தென்மொ

ழியிலும் பிறமொழிகளிலும் நூல்செய்த முனிவரும்,
புலவரும், பிறரும். அந்
நூல்களாவன - மனுமுதலியோராலே செய்யப்பட்ட
அறநூன் முதலியன.
இதன் புத்தகத்தில் முன்னூல்களி லொன்றும்
சேர்க்கப்படுதற்குத்தகுவதன்
றென்று சொல்லியபடி.

(௩அ)

௩௯.—உறையூர்*முதுகூற்றனார்.

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்

குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு.

(இ - ள்.) தேவில் சிறந்த திருவள்ளுவர் -
தெய்வத்தன்மையாற் சிறந்த
திருவள்ளுவரது, குறள்வெண்பாவில் சிறந்திடு -
குறள்வெண்பாக்களோடு
கூடிச் சிறந்துதோன்றுநின்ற, முப்பால்-முப்பால்களையும்,
பகரார்-ஓதாரது,
நாவிற்கு - வாக்கிற்கு, உயல் இல்லை -
(இன்சொற்சொல்லி) வாழ்தலுண்டா
காது: சொல்சுவை ஓர்வு இல்லை - (மனத்திற்குச்)

சொற்களின் சுவையை

அறிதலுண்டாகாது: மற்றும்-இவையன்றியும், செயல் இல்லை-(காயத்துக்கு) நல்லொழுக்கமுண்டாகாது, என்னும் திரு-என்றுசினைத்துத் திருமகள் அவரிடத் துச் சேராள்; (எ - று.)

சுவையோர்தற்கும் செயலுக்கும் உரிய மனமும் காயமும் வருவிக்கப்

பட்டன. திருமகள் சேராமையாகிய காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

* பி - ம்: முறுகூத்தனர்.



ஓதார்க்குளவாசாமை கூறவே, ஓதுவோர்க்கு இவையுளவாதலின் வாக்கிற்குக் கடுஞ்சொல் பொய் கோள் பயனில்கூறல்களும், மனத்திற்குப் பிறனில்விழை

தல் பிறன்பொருள்விழைதல் பிறன்பொருட்குக் கேடெண்ணல் பிறவுயிர்க் கிறுதி யெண்ணல்களும், காயத்திற்குப் பிறன்மனைபுணர்தல் உயிர்க்கொலை செய்தல் பழியூணுணல் பிறர்பொருள் வெளவல்களும் ஆகிய குற்றங்களெல்லாம் நீங்குமென்பதும் பெறப்பட்டது. அறவின்பங்கட்குக் காரணமாதற் சிறப்புடைய பொருட்பேறு இஃதோதலின் உளதா மென்றபடி.

(௩௧) ௪௦.—இழிகட் பெருங்கண்ணனார்.

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற—மும்மையின்
வீடவற்றி னான்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடினாரின் குறள்வெண் பா.

(இ - ள்.) இம்மை மறுமை இரண்டும் - இகபரங்கட்காவனவிரண்டையும், எழுமைக்கும் - (வினைப்பயன்றொடர்தற்குரிய) எழ்பிறப்பிற்குமாக, செம்மை நெறியின் - செவ்வையான வழியால், தெளிவு பெற - (யாவரும்) தெளிவு பெறவும், மும்மையின் - (அறம்பொருளின்பமென்னு) முப்பால்களுள், அவற்றின் - அம்முப்பாற்பொருள்களோடு, வீடு - வீடுமாகிய, நான்கின் விதி - நாற்பொருள்களது விதிகளும், வழங்க - வழங்கவும், வள்ளுவனார்—, இன்குறள் வெண்பா - இனியகுறள்வெண்பாவை, பாடினர்—; (எ - று.)

செவ்வையானவழி - விதியும், பத்தியும், ஞானமும், நோயாளிக்கு மருந்தும் அநுபானமும் பத்தியமும் போல் ஒன்றற்கொன்று முரணாது கூடிநிற்கும்வழி. வீட்டுவிதி துறவறத்திற் காண்க. இம்மை, மறுமை, வீடு மூன்றும் பயக்குமாறு சொல்லியபடி. (சுO)

சக.—செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்.

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார்.

(இ - ள்.) (மக்களுக்கு), ஆவனவும் - ஆவனவற்றையும், ஆகாதனவும் - ஆகாதவற்றையும், அறிவு உடையார் யாவரும்—, எடுத்து இயம்ப - (இனி

இதிலிருந்து)எடுத்துச்சொல்லுதற்கு, வல்லார் - வல்லவராவார்: (ஆதலால்), தேவர் திருவள்ளுவர் - தேவராகிய திருவள்ளுவராலே, செப்பியவே-சொல் லப்பட்டவற்றையே, பொருவு இல் ஒழுக்கம் பூண்டார் - ஒப்பில்லாத ஒழுக் கித்தை மேற்கொண்டவர், செய்வார்—; (எ - று.)

இங்ஙனங்கூறவே அவ்வேதத்திலிருந்துள்ளவா றெடுத்துச்சொல்லுதல் அறிவுடையார்க்கு முடியாமையால் ஒழுக்கம் பூண்டார்க்கு அதன்கண்ணே

சொல்லப்பட்டபடி வழுவாமற் செய்தல் கூடாமை காட்டப்பட்டது. தாம், உம் - அசைகள். ஆவன - இன்பத்தைத்தருவன. ஆகாதன - துன்பத்தைத்



தருவன. ஒப்பில்லாத வொழுக்கம் - கொல்லாமைமுதலியன. போதகாசிரிய ருக்கும், கேட்டொழுகுவோர்க்கும் வரும் நன்மை சொல்லியபடி.

௪௨.—செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்.

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா—ராதலா
லுள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

(இ - ள்.) வேதப்பொருளை—, உலகோர் ஓத - உலகத்தார் ஓதியுண ரும்பொருட்டு, விரகால் - உபாயத்தால், விரித்து—, தமிழால் - தமிழ் மொழியி னாலே, உரைசெய்தார் - சொல்லியருளினார்: ஆதலால்—, உள்ளுநர் உள்ளும் பொருள் எல்லாம் - நினைப்பவர் நினைக்கும்பொருள்களெல்லாம், வள்ளுவர் வாய்மொழி மாட்டு - திருவள்ளுவர் திருவாயிற் பிறந்த திருக்குறளின் கண்ணே,

உண்டு என்ப - உண்டென்று (அறிவுடையோர்) சொல்லுவர்; (எ - று.)

உபாயத்தால் விரித்தல் - சொற்சுருக்கத்தால் ஓதற்கெளிதென மன வெழுச்சியுண்டாக்கிக் கற்போரது அறிவளவிற் கேற்பப் பொருளளவு விரிய வைத்தல். நினைக்கப்படும் பொருள்களெல்லாம் இதன்கண்ணே இக்காரணத் தால் தோன்றுகின்றன வென்றுகூறியபடி.

(சஉ.)

சங.—வண்ணக்கஞ்சாத்தனார்.

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனு
ரோது குறட்பா வுடைத்து.

(இ - ள்.) ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து-வடமொழியையும் தென் மொழியையு மாராய்ந்து, இதனின் இது சீரியது என்று-இதைக்காட்டிலும் இது சிறப்புடைத்தென்று, ஒன்றை செப்ப அரிது - ஒன்றைத் தெரிந்து சொல்லுதல் கூடாது: ஆரியம் - வடமொழி, வேதமுடைத்து—: தமிழ்—, திருவள்ளுவனார் ஓது குறட்பா உடைத்து—:(ஆதலால்); (எ - று.)

ஆல் - அசை. வடமொழியும் தென்மொழியும் பிறமொழிகள்போலாது பாணினியாரும் அகத்தியனரு முதலாகிய முனிவர்களாலே செய்யப்பட்ட இலக்கண நூல்களாலே சீர்திருத்திசித்தல் முதலிய குணங்களுடைமையா லும், அது பிராகிருத

முதலியவற்றுக்குப் போல் இஃது ஆந்திரமுதலியவற் றுக்கு முதலாய் நிற்றலானும், ஒன்றற்கொன்று குறைபாடுடைத்தன்றேனும் வேதமுடைமைபற்றி வடமொழிக்குச் சொல்லப்பட்ட உயர்வு தென்மொழிக் கண்ணே திருக்குறள் உண்டாதலின் இனி யில்லையென்றற்கு இதனினிது சீரியதொன் றொன்றைச் செப்பரிது என்றார். இத்திருக்குறளாலே வடமொழி யோடு தென்மொழிக்கு ஒப்புமைநிறைவு சொல்லியபடி. (௨௩)

௨௪.—காத்தூர்க்கிழார்.

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதனான்குஞ் சாலு—மருமறைக



ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

(இ - ள்.) அருமறைகள் ஐந்தும் - (இருக்குமுதற் பாரதமீறாகிய) அரிய வேதங்க ளைந்தும், சமயநூல் ஆறும் - (அவ்வேதத்தின்

வழிப்பட்ட) சமய நூல்களாறும், நம் வள்ளுவனார் - நம்முடைய திருவள்ளுவரால், புந்தி மொழிந்த பொருள் - உ (உலகத்தார்க்குப்) புத்தியாகச் சொல்லப்பட்ட நூலிலடங்கும்: (ஆதலால்), ஒருவர்—, இருகுறளே - (ஒருவிகற்பமும் இருவிகற்பமுமாகிய) இருவகைக் குறள்களையுமே, முப்பாலின் - முப்பால்களில், ஓதும்-அத்தியய னஞ்செய்து அறியப்படுகின்ற, தருமம் முதல் நான்கும் - அறமுதலிய நாற்பொருள்களும், சாலும் - (அவருக்குப்) போதும்; (எ - று.)

ஒருவனுக்கே ஐந்தும் ஓதியுணர முடிவுபோகாது வேறுவேறான அதிகாரிகளுடையைபற்றி அருமறைகளைந்தும் என்றார். சமயநூலாறும் ஒன்றே பொருள் என்னும் பாட்டுரையிற் காண்க. நமக்கெல்லாம் அறிவொழுக்கங் கொளுத்தி நல்வழிப்படுத்தவந்த பரமாசாரியர் இவரேயென்னு முரிமை தோன்றற்கு நம்வள்ளுவனார் என்றார். மறைகளைந்துஞ் சமயநூலாறும் நம்
வள்ளுவனார் புந்திமொழிந்த பொருள் எனலால், அவை பலவற்றினும் வேறு வேறு வகைப்பட்டுச் சிறந்துநின்ற கருத்துக்களெல்லாம் இவ்வொரு நூற் கண்ணே அடங்கிநிற்கின்றமை சொல்லப்பட்டதாயிற்று. பொருள் - ஆகு பெயர். ஒருவரெனப் பொதுப்படக்கூறலால் இதனை யோதுதற்குப் பெண்

பாலாருக்கும் அதிகாரமுண்டென்பது கொள்ளப்பட்டது. இவ்வொரு நூலோதி யுணர்ந்தோர் அருமறைகளைந்துஞ்சமயநூலாறும் ஓதியுணர்ந்தோ

ரர்வ ரென்றபடி.

(௯௪)

௯௫.—நச்சுமனூர்.

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ண—மிழுக்கின்றி
யென்றெவர் செய்தன வெல்லா மியம்பின

வின்றிவ ரின்குறள்வெண் பா.

(இ - ள்.) எழுத்து அசை சீர் அடி சொல் பொருள் யாப்பு வழுக்குஇல் வனப்பு அணி வண்ணம் - எழுத்து முதல் வண்ணமீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள், இழுக்கு இன்றி - வழுவுதலில்லாமல், என்று எவர் செய்தன எக்காலத்தில் எவரால் எவை செய்யப்பட்டன, எல்லாம் - அவை யெல்லாம், இன்று இவர் இன் குறள்வெண்பா - இக்காலத்து இத்திருவள்ளுவ ராலே செய்யப்பட்ட இவ்வினிய குறள்வெண் பாக்களில், இயம்பின - சொல் லப்பட்டன; (எ - று.)

வனப்பு - அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு,

புலன், இழைபு. அணி - சொல்லணி, பொருளணி, ஒலியணி. வண்ணம் - குறிலகவற்றூங்கிசை வண்ணமுதலியன. ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொரு பாவலர் ஒவ்வொரு குணத்தினாலே சிறந்து விளங்க நூல் செய்தனர். இவரோ



வெனின், எல்லாக்குணங்களாலும் நிறைந்து சிறந்து விளங்கச்செய்தமையின் இவ்வாறு கூறினார். இதன் பாக்களின் சிறப்புச்சொல்லியபடி. (௫)

## ௫௬.—அக்காரக்கனிநச்சுமனார்.

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரம்பு நீர்மைத் தெனினுந்—தொலைவிலா
வானூர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூ னயத்தின் பயன்.

(இ - ள்.) (மதியமும் முப்பானூலும்), கலை - பதினாறுகலைகளாலும் அறுபத்துநாலு கலைகளாலும், நிரம்பி - நிறைந்து, காண்டற்கு - நோக்குதற்கு, [ஆராய்ச்சி செய்தற்கு என்றபடி], இனிதாகி—, கண்ணின் நிலை - முகக்கண்ணினிலையில் (அகக்கண்ணினிலையில்), நிரம்பும் - நிரம்புகின்ற, நீர்மைத்து எனினும் - தன்மையுடைத்தாயினும் [குணமுடைத்தாயினும்], வள்ளுவர் முப்பால் நூல்-திருவள்ளுவரது முப்பால்நூலினது, நயத்து - நயத்தால் விளைவதாகிய, இன் பயன் - இனியபயனானது, தொலைவு இலா வான் ஊர்

மதியம் தனக்கு - ஒழிவின்றி ஆகாசத்தின்கண்ணே

த்து, உண்டோ—? (எ - று.)

திரிகின்ற மதியினிட

மதியந்தனக்கென்றது வேற்றுமை மயக்கம்.

மாகக்கொள்ளுதற்கு ஏற்புடைத்தல்லாத வானை

ஓகாரம்-எதிர்மறை. ஆதார

ஆதாரமாகக் கோடலின்

இழிவுதோன்ற, தொலைவிலா வானூர் மதியம் என்றார். நயம்

- மறப்படாமை மழுங்காமை குறைவுறாமை முதலியன.

பயன் - இம்மை மறுமை வீட்டின்

பங்கள். ஒப்புமை சொல்லுதற்கு நூல்களில் ஒன்றும்

இன்மையால் ஏனைப் பொருள் பலவற்றினுஞ் சிறந்த

மதியையாயினுஞ் சொல்லுது மெனப் புகின்

அதுவும் இதனுல் தகுவதன்றென்றபடி.

(சசு)

## சஎ.—நப்பாலத்தனுர்.

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனு ரேற்றினா் வையத்து வாழ்வார்க

ளுள்ளிரு ணீக்கும் விளக்கு.

(இ - ள்.) அறம்—, தகளி - அகலும், பொருள்—, திரி - திரியும், இன்பு—, நெய் - நெய்யும், செஞ்சொல்—, தீ - நெருப்பும், குறும்பா - குறட்பா,

தண்டு - தண்டும், ஆ - ஆக, வள்ளுவனார் —, வையத்து வாழ்வார்கள் - பூமி யின்கண்ணே வாழ்வோரது, உள் இருள் - அகத்திருளை, நீக்கும் - ஒழிப்ப தாகிய, விளக்கு —, ஏற்றினார் —; (எ - று.)

ஆன்றல் - மேம்படுதல். அகத்திருள் - அஞ்ஞானம். தீச்சுடர் - தகளி முதலியவற்றோடு கூடிப் புறத்திருளைக்கெடுத்தலெப்படியோ அப்படி நாயனார் திருவாயிற் பிறந்த செஞ்சொல் அற முதலியவற்றோடுகூடி அகத்திருளைக் கெடுத்தலின் இங்ஙனம் உருவகஞ் செயலாயிற்று. மனையகத் தேற்றப் படுகிற விளக்கு அம்மனை யகத் துள் ளார்க்கு மாத்திரமே உபயோகியாய் நிற்றலாலும், அகத்திருளைக் கெடுக்கவல்லது அன்மையாலும் இஃது உலகத்து



வாழ்வோர் பலர்க்கும் உபயோகியாய் நிற்றலாலும், அகத்திருள் கெடுத்தலா லும், அதனின் இது பலகோடிமடங்கு மிக்குச்சிறந்து நிற்கின்றமை புணர்த் தியபடி. (௬எ)

௬அ.—தலபதிநாயனார்.

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிரு டள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரு மொக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

(இ - ள்.) உள்ளக்கமலம் மலர்த்தி - நெஞ்சமாகிய தாமரைமலரை மலர் த்தி, உளத்து உள்ள - (மக்களது) அகத்திலுள்ள, தள்ளற்கு அரிய இருள் -

(பிறிதொன்றனுலே) நீக்கப்படாத அஞ்ஞான விருளை, தள்ளுதலால் - நீக்கு
தலால், வள்ளுவனுர் வெள்ளைக் குறட்பாவும் - திருவள்ளுவரது குறள்வெண்
பாவும், வெம் கதிரும் - (புறத்துத் தாமரைமலரை மலர்த்திப் புறத்திருளை
நீக்குகின்ற) சூரியனும், குணத்தைக்கொண்டு - அச்செய்கையைக்கொண்டு,
ஒக்குமெனக்கொள்ளத்தகும்—; (எ - று.)

செயலும் தொழிற்பண்பெனப்படுதலின், குணமெனப்பட்டது; அது
மலர்த்தலும்,தள்ளுதலும்ஆம். குணத்தைக்கொண்டெனவே செயப்படுபொரு
ளைக்கொண்டு ஒக்குமெனக் கொள்ளத்தகாதென்றதாயிற்று. உலகுக்கெல்லாம்
பேரொளியாகிய சூரியனும் இதற்கு ஒருபுடையொப்பாமென்றபடி. (சஅ)

சகூ.—தேனீக்குடிக்கீரனுர்.

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயின பொய்யல்லா
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலிற்
றெய்வத் திருவள் ளுவர்செய் தியகுறளால்

வையத்து வாழ்வார் மனத்து.

(இ - ள்.) தெய்வத் திருவள்ளுவர்—, முப்பாலின் - மூன்றுபால்களு

டையதாக, செப்பிய குறளால் - சொல்லப்பட்ட குறள்நூலைக் கேட்டறித

லால், வையத்து வாழ்வார் மனத்து—, பொய்ப்பால - பொய்யின் பகுதியிற்

பட்டவை யெல்லாம், பொய்யே ஆய்போயின—:பொய் அல்லா பொய்ம்மை யல்லாத, மெய்ப்பால - மெய்யின் பகுதியிற்பட்டவை யெல்லாம், மெய்யே யாய் விளங்கின—; (எ - று.)

குறளால் பொய்ப்பால பொய்யேயாய்ப் போயின மெய்ப்பால மெய்யே யாய் விளங்கின எனவே, இதற்கு முன்னெல்லாம் உண்மை துணியப்படாமையின் பொய்ப்பால மெய்ப்பாலபோன் மேற்கொள்ளப்பட்டும், மெய்ப்பால பொய்ப்பாலபோற் கைவிடப்பட்டும் மயங்கிக்கிடந்தன வென்றதாயிற்று.

இதன் மெய்யுணர்வு பயத்தற் சிறப்புச் சொல்லியபடி.

(சுக)

ருo.—கோடிஞாழன் மாணி பூதனார்.

அறனறிந்தே மான்ற பொருளறிந்தே மின்பின்
றிறனறிந்தேம் வீடு தெளிந்தே—மறனெறிந்த

திருவள்ளுவ மாலை

வள்ளார் நெடுமாற வள்ளுவனார்
கேளா தனவெல்லாங் கேட்டு.

தம்வாயாற்

(இ - ள்.) மறன் எறிந்த வாளார் நெடுமாற - பகைவரையெறிந்த வாட்படை தங்கிய வீரரேக்கும் பாண்டியனே! வள்ளுவனார்தம் வாயால்—, கேளாதனஎல்லாம் - (இதற்குமுன்) கேட்கப்பட்டிலாதவை யெல்லாம், கேட்டு - (இப்போது)கேட்டு, அறன் திறமறிந்தேம்—: ஆன்ற-சிறந்த, பொருள் திறம் அறிந்தேம்—:இன்பின் திறன் அறிந்தேம்—: வீட்டுத் திறன் தெளிந்தேம்—.

திறன் - கூறுபாடு: அஃது அறம்முதலியவற்றோடுங் கூட்டப்பட்டது. மறன்-ஆகுபெயர். கேளாதன - பிறநூலாசிரியர்க் கெல்லாம் அறிந்து சொல் லுதற்கு எட்டாதிருந்த அறமுதலியவற்றி னுட்பங்கள். இம்மை மறுமை வீடுகளைக்குறித் துணர்தற்குரிய உறுதிப்பொருணான்கு முணர்தலின் இனி யாதொன்றானுங் குறைவில்லை யென்றபடி. (௩௦)

௫௧.—கவுணியனார்.

சிந்தைக் கினிய செவிக்கினிய

வாய்க்கினிய

வந்த விருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்

பன்னிய வின்குறள் வெண்பா.

(இ - ள்.) முந்திய நல் நெறி - முற்பட்டதாகிய நல்வழியை, நாமறிய—, நாப்புலமை வள்ளுவனார் - நாவால்விளங்குகின்ற புலமையையுடைய திருவள்ளுவநாயனாரால், பன்னிய - சொல்லப்பட்ட, இன் குறள் வெண்பா - இனிய குறள் வெண்பாக்கள், சிந்தைக்கு இனிய - (நினைத்தால்) மனத்திற் கின்பஞ்செய்வன: செவிக்கு இனிய - (கேட்டால்) காதுக்கின்பஞ் செய்வன: வாய்க்கு இனிய - (ஓதினால்) வாய்க்கின்பஞ்செய்வன: வந்த இரு வினைக்கு தொடர்ந்து வருகின்ற இருவினைகளாகிய நோய்களுக்கு, மாமருந்து - பெரிய மருந்துகளாவன; (எ - று.)

குறட்பாவை மருந்தென்றமைக்கு ஏற்க வினையை நோயென்றமையால், ஏகதேசரூபகம். நல்வினையும் பிறவிக்கு ஏதுவாகலால் இருவினை என்றார். முற்பட்டநல்வழி - நன்மக்களுக்கு அநாதியா

யமைந்துள்ளது: அது சமயத்

தாரத பலவகைப்பட்ட கற்பனையினாலே மறைபட்டு நின்றமையின் நாமறிய என்றார். இந்நூலின் பாக்களைச்சிந்தித்தல் முதலியன செய்யுங்காலும் சொற்பொருள் நயங்களாலே இன்பம் விளைத்துத் தெய்வத்தன்மையால் வினைத்துயரும் ஒழிக்குமென்றபடி.

(௫க)

௫உ.—மதுரைப் பாலாசிரியனார்.

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத்—தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோ
ருள்ளிரு ணீக்கு மொளி.



(இ - ள்.) வெள்ளி வியாழம் விளக்கு இரவி வெள் திங்கள் - சுக்கிரன் குரு சூரியன் சந்திரன் எனப்படுகின்ற இவ்வொளிகள், புற இருளை—, பொள்ளென நீக்கும்-விரைவிலே நீக்கும்:(ஆதலின் இவை புறவிருணீக்குதற்கு உண்டாகிய ஒளிகளாம்): தெள்ளிய - முற்றுணர்ந்த, வள்ளுவர் இன் குறள் வெண்பா - திருவள்ளுவநாயனாரது இனியகுறள் வெண்பா, அகிலத்தோர் - உலகத்தோரது, உள் இருள் நீக்கும்-உள்ளிருளை நீக்குதற் குண்டாகிய, ஒளி - ஒளியாம்; (எ - று.)

இங்ஙனங்கூறவே புறத்திருளுக்கு அவை பலவுள, அகத்திருளுக்கு இஃதொன்றே யுளதென்றதாயிற்று: அவற்றுள் ஒன்றாலும் நீக்கப்படாத அகத்திருளை நீக்கவல்லதாதலின் இதற்கு எவ்வாற்றானும்

ஒப்பதொன்றின் றென் றபு டி.

(௫உ)

௫௩.—ஆலங்குடிவங்கனார்.

"வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்
தெள்ளமுதின் றீஞ்சுவையு மொவ்வாதாற்—றெள்ளமுத
முண்டறிவார் தேவ ருலகடைய வுண்ணுமால்
வண்டமிழின் முப்பான் மகிழ்ந்து.

(இ-ள்.) வள்ளுவர் பாட்டின் வளம்-திருவள்ளுவரது பாட்டினது தீஞ் சுவையை, உரைக்கின் - சொல்லுமிடத்து, வாய் மடுக்கும் தெள் அமுதின் - உண்ணப்படுகின்ற தெள்ளிய அமுதினது, தீம் சுவைஉம் - தித்திப்பாகிய சுவையும், ஒவ்வாது - ஒப்பாகாது: தெள் அமுதம் உண்டு - அத்தெள்ளிய வமுதையுண்டு, அறிவார் - (அதன் சுவையை) அறிபவர், தேவர்—, வள் தமிழின் - வளம்பொருந்திய தமிழின் கண்ணதாகிய, முப்பால் - முப்பாலாகிய அதின் மும்மடி சிறந்தபாலை, மகிழ்ந்து—, உலகு அடைய - எல்லா வுலகத்தாரும், உண்ணும் - உண்டு தீஞ்சுவையறிவார்; (எ - று.)

வளம் - ஆகுபெயர். ஆல் - அசை. அவ் வமிர்தம் வாயுட்பெய்தவழி நாவிற் பட்ட சிறிது பொழுதளவே தீஞ்சுவைபயப்பது. இப்பாட்டு செஞ்

சின்க ணிலைபெற்று ஒழிவின்றித் தீஞ்சுவைபயத்தலின் ஒவ்வாது என்றார். முப்பால் - சிலிஷ்டரூபகம். இனி எவ்வுலகத்தாருக்குங் கருமபூமியாகிய இவ்வுலகத்துட்டோன்றி மெய்ப்பொரு ளுணர்ந்தன்றி வீட்டின்பம் பெறுதல் கூடாமையின் உலகடைய உண்ணும் என்றார். அன்றி அவ்வுலகத்துத் தேவர்களும் தமது மேற்பட்ட வறிவினாலே இதனது உயர் வொப்பற்ற குணத்தை அறிந்து முக்கிய பிரமாணமாகக்கொண்டு மகிழ்கூர்வரென்பதுபற்றி அங்ஙனங் கூறினாரெனினுமமையும். இஃது இவ்வுலகத்தார்க்கேயன்றி அவ்வுலகத்தார்க்கும் பயன்படுமாறு சொல்லியபடி. (௫௩

திருத்தணிகைச் சரவணப் பெருமாளைய ரியற்றிய உரையுடன்

திருவள்ளுவமாலை முற்றிற்று.

---




ஆர். ஜீ. பிரஸ், ஜீ. டி. மதராஸ்.

